Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

॥ ஓம் ஸ்ரீபரமாத்மநே நம: ॥ 800

# ஸ்ரீமத் பகவத்கீதா

## தத்வவிவேசனீ

### (மூலம் – பதவுரை – பொழிப்புரை – விளக்கவுரை)

श्रीमद्भगवद्गीता तत्त्वविवेचनी ( तमिल )

யத்ர யோகே$_3$ஶ்வர: க்ருஷ்ணோ யத்ர பார்தோ$_2$ த$_4$நுர்த$_4$ர: ।
தத்ர ஸ்ரீர்விஜயோ பூ$_4$திர்த்$_4$ருவா நீதிர்மதிர்மம ॥




ஸ்ரீ ஜயதயால் கோயந்தகா

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

அனைத்து அறநூல்களினின்றும் பிழிந்தெடுக்கப்பட்ட ஒப்பற்ற சிறந்த கருப்பஞ்சாறு ஸ்ரீமத் பகவத்கீதை. எண்ணற்ற அறநெறி நூல்க்ளின் ஒரு கருவூலம் இதுவே எனினும் மிகையன்று. கீதையை ஒருவன் நன்கு தெளிவாகப் புரிந்து கொள்வானேயானால் அவனுக்கு எல்லா அறநூல்களின் அறிவும் தானே வந்தமையும். வேறு ஒரு முயற்சி தேவையில்லை.

**'ஸர்வஶாஸ்த்ரமயீ கீ₃தா' (பீ₄ஷ்ம. 43/2)** – 'அனைத்து அறநூல்களையும் தன்னுள்ளே கொண்டது பகவத்கீதை' என்றல்லவா ஸ்ரீமஹாபாரதம் பகரும். இங்ஙனம் கூறுவதும் போதாது. ஏனெனில், அனைத்து நூல்களும் வேதங்களினின்றும் தோன்றியவை; வேதங்களோ, பிரும்மதேவனின் முகத்தினின்றும் வெளிவந்தவை. பிரும்மதேவனோ, பகவானின் உந்தித்தாமரையிலே உதித்தவன். இவ்வாறு சாஸ்திரங்கட்கும், ஸ்ரீபகவானுக்கும் இடையே பெருத்த இடைவெளி உள்ளது. ஆனால், கீதையோ பகவானின் திருமுகத் தாமரையினின்றும் வெளிப்போந்தது. ஆகவே, இது அனைத்து சாஸ்திரங்களினும் மேம்பட்டதெனின் மிகையாகாது. ஸ்ரீபகவான் வேதவியாசரே கூறுகிறார்—

**கீ₃தா ஸுகீ₃தா கர்தவ்யா**
**கிமந்யை: ஶாஸ்த்ரஸங்க்₃ரஹை: ।**
**யா ஸ்வயம் பத்₃மநாப₄ஸ்ய**
**முக₂பத்₃மாத்₃விநி:ஸ்ருதா ॥**
**(மஹா. பீ₄ஷ்ம. 43/1)**

'கீதையையே நன்கு கேட்டு, படித்து, பாடி பிறருக்குக் கூறி, மனத்தில் தேக்கி வைத்துக் கொள்ளவேண்டும். பிற நூல்கள் எதற்கு? ஏனெனில், இது பகவான் ஸ்ரீபத்மநாபனின் திருமுகத் தாமரையிலிருந்து வெளிவந்தது அல்லவா!'

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

॥ ஓம் பரமாத்மநே நம: ॥

800

# ஸ்ரீமத் பகவத்கீதா

## தத்வவிவேசனீ — தமிழ் விரிவுரை

( श्रीमद्भगवद्गीता तत्त्वविवेचनी तमिल )




ஸ்ரீ ஜயதயால் கோயந்த்கா

கீதா பிரஸ், கோரக்பூர் — 273005. (உ.பி.)



CC-0. In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

*Books are also available at—*
Gita Press Sales Depot, Gita Press Mansion, 8/1M, Racecourse
COIMBATORE (Tamilnadu) © 0422-3202521

Translated by : Swamynath Atreyar Tanjavoor

Fortieth Reprint 2009 8,000
Total 3,99,500

❖ **Price : Rs. 100**
**(One Hundred Rupees only)**

ISBN 81-293-0058-3

Printed & Published by :
**Gita Press, Gorakhpur—273005 (INDIA)**
(a unit of Gobind Bhavan-Karyalaya, Kolkata)
Phone - (0551) 2334721, 2331250; Fax : (0551) 2336997
e-mail : **booksales@gitapress.org** website : **www.gitapress.org**
[ 800 ]

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

# பதிப்புரை

கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்
எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே
— திருவாய்மொழி

கண்ணபெருமானின் திருவாய்மொழியாக தர்மக்ஷேத்ரம் ஆகிய குருக்ஷேத்ரப் போர்க்களத்தில் பிறந்தது ஸ்ரீமத்பகவத்கீதை. எதிரணியில் வந்து நின்ற உற்றார்–உறவினரையும், ஆசான்–சான்றோர்களையும் கண்டு மதி மயங்கிய அர்ஜுனன் போரிட மாட்டேன் எனப் பின்வாங்கியதும் அவரது மனக்கலக்கத்தையகற்றி, அவருக்கு புத்தி புகட்டிச் செயல்பட வைத்து, ஞானம் ஊட்டிய அற்புத க்ரந்தம் கீதை.

ஸ்ரீசங்கரர், ஸ்ரீராமானுஜர், ஸ்ரீமத்வர் போன்ற சமயாசார்யர்கள் விரிவான வ்யாக்யானம் எழுதி விளக்கியுள்ள ஸ்ரீமத்பகவத்கீதை இன்றளவும் மக்கள் உள்ளத்தில் தனியிடம் பெற்றுத் தன்னிகரில்லா ஞானக்கருவூலமாக விளங்கி, ஆன்மிக மேன்மை பெற ஓர் அரிய வழிகாட்டியாகத் திகழ்ந்து, எவர்க்கும் அன்றாட வாழ்க்கையில் தோன்றும் அனைத்துச் சிக்கல்களையும் அழகாகத் தீர்த்து வைக்கும் அதிசய நண்பனாக இருந்துதவி, த்யாகம் – புலனடக்கம் போன்ற தத்வநெறிகளுக்கும், செயல் வேகம் – பக்தி மார்க்கம் – ஞானயோகம் ஆகிய ஸாதனை முறைகளுக்கும், குண–கர்ம அடிப்படையில் அமைந்த படைப்பு ரஹஸ்யத்திற்கும் தனிப்பெரும் விளக்க நூலாகச் சுடர்கிறது.

வடபுலத்தில் இந்த திவ்ய உபதேசத்தை மக்களிடையே பரப்புதலையே தம் தலையாய பணியாகக் கொண்டு, இந்நூலின் பெயரையே பூண்டு இயங்கி வருவோர் கீதாப்ரஸ் (கோரக்புர்) ஸ்தாபனத்தினர் ஆவர்.

இந்நிறுவனத்தின் ஸ்தாபகர் ஸ்ரீ ஜயதயால் கோயந்தகா அவர்கள் கீதையைக் கற்றுணர்ந்து, தம் வாழ்நாள் முழுதும் எம்பெருமானின் திவ்ய வசனம் வழங்கும் பேரானந்தத்திலேயே ஆழ்ந்திருந்த பெரியார் ஆவார். அவர் ஆக்கிய நூல்தான் 'தத்வவிவேசனி' என்ற பெயரில் அமைந்த ஸ்ரீமத்பகவத்கீதையின் ஹிந்தி விளக்கவுரை. நூலாசிரியர் ஆழ்ந்த பக்தியோடும், பக்தியில் தோய்ந்த அறிவு நுணுக்கத்தோடும், அந்நுணுக்கத்தில் விளைந்த ஞானத் தெளிவுடனும் எம்பெருமானின் திருவாக்கையணுகி, ஆய்ந்து, படிப்போர்க்கு வரக்கூடிய ஐயப்பாடுகளுக்கு விளக்கம் தந்து, விடை பகர்ந்துள்ள முறை வாசிப்போர்க்கு ஓர் இனிய அனுபவமாகும். கேள்வி–பதில் வடிவில் அமைந்துள்ள இந்நூலில் அரிய கருத்துக்களுக்கும், உயரிய தத்வங்களுக்கும் மட்டுமின்றி, நூலில் வரும் சொற்களுக்கும் ஏன் எழுத்துக்களுக்கும் கூட, ஆங்காங்கே நூலாசிரியர் அழகிய விளக்கம் தருகிறார். இடையிடையே மஹாபாரதம், ராமாயணம், புராணங்கள், ஸ்ம்ருதிகள், உபநிஷத், யோகஸூத்ரம் போன்ற க்ரந்தங்களிலிருந்து கதைகளையும், கருத்துக்களையும் நூலாசிரியர் கையாள்வது உரைக்குச் சுவை கூட்டித் தெளிவு தருகிறது.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஹிந்தி மொழியில் ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகளுக்கு முன் வெளியான இந்நூல் பிற மொழிகளிலும் மாற்றம் செய்யப்பட்டு நம் பாரதச் சிந்தனை வளத்திற்கும், ஆன்மிக மேம்பாட்டிற்கும் உதவி வந்துள்ளது. தற்போது உங்கள் கரங்களில் திகழும் இந்நூல் கீதை–தத்வவிவேசனியின் தமிழ்ப் பதிப்பாகும்.

மூலத்தின் கருத்துக்களை அவ்வண்ணமே தமிழில் வழங்குவதற்கு தஞ்சை ப்ரம்மஸ்ரீ ஸ்வாமிநாத ஆத்ரேயன் அவர்கள் எடுத்த பெருமுயற்சியின் புத்தக வடிவமே இத்தமிழ் நூல். மூல ஹிந்தி விளக்கவுரை நூலில் இல்லாத பதவுரை ஒவ்வொரு ச்லோகத்திற்கும் தமிழ்ப் பதிப்பில் தரப்பட்டுள்ளமை இத்தமிழ் நூலின் சிறப்பம்சமாகும்.

**சந்திகள்**

தமிழ்ச்சொல்லும் வடசொல்லும் அல்லது வடசொல்லும் தமிழ்ச்சொல்லும் புணரும்போது ஒற்றுக்கள் மிகுமா, மிகாவா என்பது பற்றி இலக்கணத்தில் விதிகள் இல்லை. எனினும் தமிழ்ச்சொல் முதற்சொல்லாக இருந்து வருசொல் வடசொல்லானால் க, ச, த, ப வர்க்கங்களில் முதல் எழுத்துக்களுக்கு மட்டும் ஒற்று மிகும் என்றும், ஒலி வேறுபாடுள்ள மற்ற மூன்று எழுத்துக்களுக்கும் ஒற்று மிகாது என்றும் நெறிப்படுத்தியுள்ளோம். இதன்மூலம் ஸம்ஸ்க்ருதச் சொற்களின் ஓசை சிறிதும் கெடாமல் காப்பாற்றப்பட்டுள்ளது. ஸம்ஸ்க்ருதச் சொல் முதற்சொல்லாகவும், தமிழ்ச்சொல் வருசொல்லாகவும் இருந்தால் தமிழ் இலக்கணப் புணர்ச்சி விதிகள் பின்பற்றப்பட்டுள்ளன.

**தமிழ் உரையில் ஸம்ஸ்க்ருதச் சொற்கள்**

ஸம்ஸ்க்ருதச் சொற்களின் ஓசை கெடக்கூடாது என்பதற்காகவும், இலக்கண ரீதியாகச் சொற்களை அறிந்துகொள்வதற்காகவும் மூலவடிவங்கள் தரப் பெற்றுள்ளன. பகவான் திருவாய் மலர்ந்த சொற்களை அதே வடிவத்தில் முடிந்தவரை உச்சரிப்பது மந்த்ரம் போலப் பயன் தரும் என்று கருதுகிறோம். விளக்கவுரையில் கூடியவரை தமிழ்ச்சொற்களையே பயன்படுத்தியுள்ளோம்.

**கலைச்சொற்கள்**

கீதையில் வரும் பல கலைச்சொற்களைத் தமிழில் மொழிபெயர்க்காமல் அப்படியே கொடுத்துள்ளோம். இதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன. ஒன்று மூலத்தில் வரும் பல கலைச்சொற்களின் பொருள்கள் வாசகர்களுக்குத் தெளிவாக விளங்குபவையாக உள்ளன. உதாரணம்:– கர்மம், ஞானம், யோகம், ரஹஸ்யம், தத்வம் முதலியன. இரண்டாவது காரணம் இவற்றிற்கு ஸமமான பொருளைத் தரும் தமிழ்ச்சொற்கள் கிடைக்கப் பெறவில்லை என்பது. ஒரு கலைச்சொல்லுக்குத் தமிழில் இடத்துக்கேற்றபடி வெவ்வேறு சொல்லைத் தரவேண்டிய நிலை ஏற்பட்டதால் கலைச்சொற்கள் அப்படியே தரப்பட்டுள்ளன. எனினும் அத்தகைய ஸம்ஸ்க்ருதக் கலைச்சொற்களுக்குத் தமிழ் அர்த்தங்கள் பின்னிணைப்பாகத் தரப்பட்டுள்ளன. வாசகர்கள் இடம்நோக்கித் தகுந்த சொல்லைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டுகிறோம்.

**மொழிபெயர்ப்பு நடை**

திரு. ஜயதயால் கோயந்தகாவின் அருமையான விளக்கவுரையின் தமிழாக்கம் மூலச் சுவை குன்றாமலிருக்க வேண்டும் என்பதற்காகவே பெரும்பாலும் வாக்கியம் வாக்கியமாக அப்படியே மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. அதனால் பல இடங்களில் விளக்கவுரையில் ஹிந்தி மொழியின் நடைப்போக்கு அமைந்துவிட்டது தவிர்க்க முடியாததாகிவிட்டது. முடிந்தவரை கருத்து மாறக்கூடாத வகையில் தமிழ்நடை பின்பற்றப்பட்டுள்ளது. விளக்கவுரையின் ‘பாவம்’



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மாறக்கூடாது என்பது எம் கொள்கையாதலால் விளக்கவுரை முழுமையான தமிழ் வடிவத்தைப் பெறவில்லை. பதவுரையில் மூல ச்லோகத்தில் இல்லாத சொற்கள் வாக்கியம் முழுமை பெறும் நோக்கத்திலும், விளக்கத்திற்காகவும் அடைப்புக்குறிக்குள் தரப்பட்டுள்ளன.

**எழுத்து வடிவங்கள்**

மூலநூல் ஸம்ஸ்க்ருத ச்லோகங்களும், ஹிந்தி விளக்கவுரையும் கொண்டது. இத்தமிழ்ப் பதிப்பில் மூல ச்லோகங்களை தேவநாகரி எழுத்துக்களிலேயே தந்து, அடுத்துத் தமிழ் எழுத்துக்களிலும் வெளியிட்டிருக்கிறோம். ஆயினும், தமிழில் க, ச, ட, த, ப என்பனவற்றின் வர்க்கங்களில் ஒரே எழுத்துத்தான் உள்ளதால், இதர மூன்று ஒலிகளையும் குறிப்பிட 2, 3, 4 எனும் இலக்கங்களைக் கூடச் சேர்த்து, அவ்வொலிகளை உணர்த்தும் பழைய வழக்கத்தை இங்கு நாங்களும் கைக்கொண்டுள்ளோம். தேவநாகரி எழுத்துக்கள் தெரியாத அன்பர்கள் அன்புகூர்ந்து கூடிய வரையில் அவ்வொலிகளைச் செவ்வனே உச்சரிக்கத் தெரிந்து கொண்டு, சரியாக ச்லோகங்களைப் படித்துப் பயன் பெறவேண்டும் என்பது எம் பணிவான வேண்டுகோள். அதேபோல், ஸ, ஷ, ஹ, ஜ, க்ஷ என்ற ஸம்ஸ்க்ருத ஒலியுள்ள எழுத்துக்களை அவ்வாறே இந்நூலில் ஆண்டுள்ளோம். சகோதரன், மகாத்மா, சமூகம் என்றெல்லாம் இன்றைய வழக்குப்படி எழுதாமல், திருத்தமாக ஸஹோதரன், மஹாத்மா, ஸமூஹம் என்றே குறிப்பிடுகிறோம். கிருஷ்ணன் என்று இன்று பெரும்பாலும் வழங்குவதை க்ருஷ்ணன் என்று வெளியிடுகிறோம்.

எனவே கீதை பயிலும் அன்பர்கள் அன்புடன் இந்த எழுத்து வடிவங்களை மூலச்சொற்களுக்கு ஒத்தவை என ஏற்றுக்கொண்டு, திருத்தமாகப் படித்து, செவ்வனே பொருள் உணர்ந்து, நித்யபாராயணம் செய்து, அவர்தம் வாழ்க்கையிலும் ஐயனின் திவ்ய வாக்கைக் கைக்கொண்டு, கண்ணபெருமானின் பரம அனுக்ரஹத்திற்குப் பாத்ரமாகி உய்யவேண்டும் என கீதாசார்யனையே இறைஞ்சுகிறோம்.

நாடீர் நாள்தோறும் வாடா மலர்கொண்டு
பாடீர் அவன் நாமம் வீடே பெறலாமே

— திருவாய்மொழி

வெளியிடுவோர்,
கீதாப்ரஸ், கோரக்பூர்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஸ்ரீஹரி:

# தேவநாகரி எழுத்துக்கள்

வடமொழிச் சொற்களைப் பிழையின்றி உச்சரிக்க உதவியாக, ஆங்கில எழுத்துக்களின் துணைகொண்டு, 2, 3, 4 என்ற குறியீடுகளுடன் வடமொழி எழுத்துக்களுக்கு நிகரான தமிழ் ஒலி வடிவங்கள் தரப்பட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| க | $க_2$ | $க_3$ | $க_4$ |
| ka | kha | ga | gha |
| ச | $ச_2$ | ஜ | ஜ̣ |
| ca | cha | ja | jha |
| ட | $ட_2$ | $ட_3$ | $ட_4$ |
| ta | tta | da | dda |
| த | $த_2$ | $த_3$ | $த_4$ |
| tha | thha | dha | dhha |
| ப | $ப_2$ | $ப_3$ | $ப_4$ |
| pa | pha | ba | bha |
| ஷ | ஸ | ஜ்ஞ | க்ஷ |
| sha | sa | gna | ksha |

'ஶ' என்ற எழுத்து பிசகு, கசடு என்ற சொற்களில் வரும் 'ச'வைப்போல ஒலிக்கும்.

ஸம்ஸ்க்ருத ச்லோகங்களில் சில இடங்களில் 'ऽ' அல்லது 'ऽऽ' என்ற குறியீடுகளைக் காணலாம். இதற்கு அவக்ரஹம் என்று பெயர். அந்த இடத்தில் 'அ', 'ஆ' என்ற எழுத்துக்கள் தொக்கி நிற்கின்றன என்பது பொருள். 'ऽ' என்னும் இடத்தில் 'அ' என்ற எழுத்தும், 'ऽऽ' என்ற இடத்தில் 'ஆ' என்ற எழுத்தும் மறைந்துள்ளன.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஸ்ரீஹரி:

# கீதா-தத்வவிவேசனீ உரையுடன் கூடிய ஸ்ரீமத்பகவத்கீதையின்

## பொருளடக்கம்


| வரிசை எண் | பொருள் | பக்கம் எண் |
|---|---|---|
| அ) | பணிவான வேண்டுகோள் | 13–35 |
| ஆ) | கீதையின் பெருமை | 35 |
| இ) | ஸ்ரீ ஜயதயால் கோயந்தகா அவர்களின் அறிவுரை | 36–37 |
| ஈ) | பாராயண விதி | 38–39 |

### முதல் அத்யாயம்

| | | |
|---|---|---|
| 1. | அத்யாயத்தின் பெயரும், சுருக்கமும் | 41–42 |
| 2. | முதல் அத்யாயத்தின் பொருத்தம்; கீதையின் தொடக்கத்தில் மஹாபாரதப் போரின் ஆரம்ப வரலாறு | 43–44 |
| 3. | த்ருதராஷ்டிரரின் கேள்வி | 45 |
| 4. | தர்மக்ஷேத்ரமான குருக்ஷேத்ரம் பற்றிய குறிப்பு; துர்யோதனன் த்ரோணாசாரியரிடம் செல்லுதல் | 45–46 |
| 5. | துர்யோதனன் பாண்டவப் படையை வர்ணித்தல் | 47–48 |
| 6. | யுயுதானன், விராடன், த்ருபதன் இவர்களின் அறிமுகம் | 49–50 |
| 7. | த்ருஷ்டகேது, சேகிதானன், காசிராஜன், புருஜித், குந்திபோஜன், சைப்யன், யுதாமன்யு, அபிமன்யு, த்ரௌபதி குமாரர்கள் இவர்களின் அறிமுகம் | 50–51 |
| 8. | மஹாரதிகளின் இலக்கணம்; த்ரோணர், பீஷ்மர், கர்ணன், க்ருபர், அச்வத்தாமா, விகர்ணன், பூரிச்ரவஸ் என்ற கௌரவப் படை பிரமுகர்களின் அறிமுகம் | 51–56 |
| 9. | துர்யோதனன் தன் தரப்பைச் சார்ந்த வீரர்களைப் புகழ்தல். பீஷ்மர் சங்கம் முழக்குதல் | 56–59 |
| 10. | அர்ஜுனனுடைய பெரும் ரதம், கொடி, ஹ்ருஷீகேசன் பெயர் விளக்கம்; பாஞ்சஜந்யம், தேவதத்தம் என்னும் சங்கங்கள், சிகண்டியின் அறிமுகம்; இருதரப்புவீரர்களும் சங்கம் முழக்குதல் | 59–64 |
| 11. | அர்ஜுனன் கேட்டுக் கொண்டவாறு பகவான் இருபடைகளுக்குமிடையே ரதத்தைக் கொண்டு நிறுத்துதல்; அர்ஜுனன் எல்லோரையும் பார்வையிடுதல் ('குடாகேச:' விளக்கம் 67) | 64–67 |
| 12. | இருபுறமும் தம் உற்றார்-உறவினரைப் பார்த்து, அவர்கள் மரணமுறுவார்களே எனக் கருதி அர்ஜுனன் வருந்துதல்; குலநாசம், தர்மநாசம், வர்ணக்கலப்பு முதலிய தீய விளைவுகளைக் கூறுதல் – வில்லையும், அம்பையும் துறந்து அர்ஜுனன் உட்கார்தல் (ஆததாயியின் இலக்கணங்கள்; அவனைக் கொல்வது தவறன்று என்ற விளக்கம் 75) | 68–83 |
| 13. | அத்யாய முடிவுரை விளக்கம் | 83–84 |

### இரண்டாவது அத்யாயம்

| | | |
|---|---|---|
| 14. | அத்யாயத்தின் பெயர்; சுருக்கம்; பொருத்தம் | 85–87 |
| 15. | பகவான் ஊக்குவித்த பிறகும் அர்ஜுனன் போருக்கு முனையாதது. செய்வதறியாது பகவானிடம் தக்க வழிகாட்ட வேண்டுதல், யுத்தம் செய்யேன் என்று உட்கார்தல் (சீடனின் இலக்கணங்கள் 95–96) | 88–97 |
| 16. | பகவான் ஆத்மதத்வத்தை நிரூபித்தல்; ஸாங்க்யயோக நோக்கில் அர்ஜுனனைப் போர் செய்ய ஊக்கமளித்தல் | 98–119 |
| 17. | க்ஷத்ரிய தர்மத்தைக் கருதியும் தர்மயுத்தம் செய்யத்தான் வேண்டும் என்று அர்ஜுனனை பகவான் ஊக்குவித்தல் | 119–125 |


CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai




| வரிசை எண் | பொருள் | பக்கம் எண் |
| --- | --- | --- |
| 18. | காம்ய கர்மத்தின் தாழ்வையும், நிஷ்காம கர்மத்தின் சிறப்பையும் கூறி, அர்ஜுனனைக் கர்மயோகம் செய்யத் தூண்டுதல் . . . . . . . . | 125–145 |
| 19. | யோகம், யோகி – சொற்கள் பல பொருட்களில் உபயோகப்படுதல் . . . . . . . | 146–147 |
| 20. | அர்ஜுனன் வேண்டிக் கொண்டபடி பகவான் ஸ்திதப்ரக்ஞனுடைய இலக்கணங்கள்; ஸ்திதப்ரக்ஞனின் நிலையை அடைவதற்கான ஸாதனங்கள்; ஸ்திதப்ரக்ஞ நிலையின் பயன் கூறுதல் . . . . . . . . | 147–175 |


## மூன்றாவது அத்யாயம்


| | | |
| --- | --- | --- |
| 21. | அத்யாயத்தின் பெயர்; சுருக்கம்; பொருத்தம் . . . . . . . . | 177–178 |
| 22. | அர்ஜுனனின் வேண்டுகோளுக்கிணங்க ஸாங்க்ய, கர்மயோக நிஷ்டைகள் பற்றிய விவரங்களைக் கூறி, பகவான் அர்ஜுனனுக்குக் கடமையைச் செய் என்று ஆணையிடுதல் . . . . . . . . | 179–191 |
| 23. | யக்ஞத்திற்கான கர்மத்தின் பெருமை; யக்ஞ சக்ர வர்ணனை; கடமையைச் செய்ய வலியுறுத்தல் . . . . . . . . | 192–203 |
| 24. | ஞானி கர்மம் செய்ய வேண்டியதில்லையாயினும் உலகத்திற்கு வழிகாட்டியாக ஞானியும், பகவானுமே கடமைகளைச் செய்கிறார்கள் என்பது; அஞ்ஞானி, ஞானி இவர்களின் இலக்கணங்கள்; விருப்பு-வெறுப்பற்றுக் கடமையாற்றத் தூண்டுதல்; ராஜா திலீபன், ஶிபி, ப்ரஹ்லாதன் இவர்களின் உதாரணங்கள். | 203–234 |
| 25. | அர்ஜுனன் கேள்வி; காமத்தின் வடிவத்தையும், இருப்பிடத்தையும் கூறி, அதை ஒழிக்க பகவான் கட்டளையிடுதல் . . . . . . . . | 234–248 |
| | (காமம் ஜீவனை மோஹிக்கச் செய்வது பற்றி விளக்க சேதனஸிம்மனின் கதை 240–241) | |
| | (மஹாபாஹு – சொல் விளக்கம் 248) | |


## நான்காவது அத்யாயம்


| | | |
| --- | --- | --- |
| 26. | அத்யாயத்தின் பெயர்; சுருக்கம்; பொருத்தம் . . . . . . . . | 249–250 |
| 27. | பகவான் கர்மயோகம் பற்றிய முன்னோர் வழிமுறையைச் சுட்டிக்காட்டுதல். | 250–254 |
| 28. | அர்ஜுனனுடைய கேள்விக்கு விடையாக பகவான் அவதார ரஹஸ்யம், நால்வர்ண வகுப்பு; கர்மரஹஸ்யம்; பெரியோர் பெருமை இவை பற்றிக் கூறுதல். | 254–283 |
| 29. | பற்பல யக்ஞங்களின் வர்ணனை . . . . . . . . | 284–302 |
| 30. | ஞானத்தின் பெருமை . . . . . . . . | 302–318 |
| | (ஞானம் என்ற சொல் கீதையில் பல பொருட்களில் பயன்படுதல் 315–316) | |


## ஐந்தாவது அத்யாயம்


| | | |
| --- | --- | --- |
| 31. | அத்யாயத்தின் பெயர்; சுருக்கம்; பொருத்தம் . . . . . . . . | 319–320 |
| 32. | அர்ஜுனன் கேள்வி; பகவான் கூறும் ஸாங்க்ய யோக, கர்மயோக நிர்ணயம்; ஸாங்க்ய யோகி, கர்மயோகி இவர்களின் இலக்கணங்கள்; பெருமை . . . . . . . | 320–335 |
| 33. | ஸாங்க்ய யோகம்; ஸாங்க்யயோகியின் நிலையை நிரூபித்தல் . . . . . . . . | 336–355 |
| | (நரன் என்ற சொல் விளக்கம் 351) | |
| | (ரிஷி என்ற சொல் விளக்கம் 355) | |
| 34. | இரண்டு நிஷ்டைகளிலுமுள்ள ஸாதகர்களுக்குரிய த்யான யோக வர்ணனை; பகவான் யக்ஞங்களை ஏற்பவர், ஸர்வலோக மஹேசுவரன், நண்பர் என்றறிதலின் பயன் பரமசாந்தி என்று கூறுதல் . . . . . . . . | 356–363 |


## ஆறாவது அத்யாயம்


| | | |
| --- | --- | --- |
| 35. | அத்யாயத்தின் பெயர்; சுருக்கம்; பொருத்தம் . . . . . . . . | 365–366 |


CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai




| வரிசை எண் | பொருள் | பக்கம் எண் |
|---|---|---|
| 36. | கர்மயோகியின் பெருமை; யோகாரூடனின் இலக்கணம்; தன்னைத் தானே உயர்த்திக் கொள்ளத் தூண்டுதல்; பகவானை அடைந்தவனின் இலக்கணம். . . | 367–378 |
| 37. | த்யானயோகம், அதன் பயன் இவற்றின் வர்ணனை . . . . . . . . . . . . . . . (சிவபெருமான், பகவான் விஷ்ணு, ஸ்ரீராமன், ஸ்ரீக்ருஷ்ணன் இவர்களின் த்யானம் 387–388) (ப்ரம்மா கன்றுகளையும், சிறுவர்களையும் மறைத்தல். கோபிகைகளின் பெருமை. யசோதைக்குக் கண்ணன் தன் வாயில் விசுவரூபம் காட்டுதல்; ஸ்ரீராமன் காகபுசுண்டிக்குத் தம் வயிற்றில் விசுவரூபம் காட்டுதல் ஆகிய கதைகள் 410–414) | 379–419 |
| 38. | அர்ஜுனனின் கேள்விக்கு விடையாக, மனவடக்கம், யோகப்ரஷ்டனின் கதி இவற்றின் வர்ணனை . . . . . . . . . . . . . . . . . . . . . . . . | 420–438 |
| 39. | யோகியின் பெருமை. யோகி ஆவாய் என்ற ஆணை. உள்ளத்தில் பகவானைப் பூஜிக்கும் யோகியின் மிகச் சிறந்த பெருமை . . . . . . . . . . . . . . . | 438–442 |
| | **ஏழாவது அத்யாயம்** | |
| 40. | மூன்று ஷட்கங்களின் விளக்கம்; அத்யாயத்தின் பெயர்; சுருக்கம்; பொருத்தம் | 443–445 |
| 41. | விஞ்ஞானத்துடன் கூடிய ஞானத்தின் பெருமை; பகவத் ஸ்வரூபத்தின் தத்வ ஞானம் கிடைப்பது அரிது என்று விளக்குதல்; பகவானின் அபரா, பரா ப்ரக்ருதிகளின் தன்மை; அவற்றிலிருந்து எல்லா ப்ராணிகளின் உற்பத்தி; அனைத்திற்கும் பகவான் ஆதி காரணம்; பகவானுடைய ஸமக்ர (அனைத்து) உருவ விளக்கம் . . . . . . . . . . . . . . . . . . . . . . . . | 445–458 |
| 42. | அஸுர இயல்புடைய மனிதரின் நிந்தை; பலதரப்பட்ட பகவத் பக்தர்களைப் புகழ்ந்துரைத்தல்; பிற தெய்வங்களின் உபாஸனை பற்றிய வர்ணனை . . . . . (பக்த த்ருவன், த்ரௌபதி, உத்தவர், ப்ரஹலாதன் ஆகியோரின் கதைச் சுருக்கம் 460–463) | 458–473 |
| 43. | பகவானின் ப்ரபாவம் அறியாமையின் காரணம்; முழுமையான ஸ்வரூபத்தை உணர்ந்தவரின் பெருமை . . . . . . . . . . . . . . . . . . . . . . . . | 473–482 |
| | **எட்டாவது அத்யாயம்** | |
| 44. | அத்யாயத்தின் பெயர்; சுருக்கம்; பொருத்தம் . . . . . . . . . . . . . . . . | 483–484 |
| 45. | அர்ஜுனன் கேள்வி; பகவான் – ப்ரம்மம், அத்யாத்மம், கர்மம், அதிபூதம், அதிதைவம், அதியக்ஞம் என்பன பற்றிக் கூறுதல். மரணத்தறுவாயில் உள்ள நிலையின் பெருமையை நிரூபித்தல் . . . . . . . . . . . . . . . . . . | 484–493 |
| 46. | ஸகுண–நிராகார ஸ்வரூபத்தை த்யானிக்கும் யோகிகளுக்கும், நிர்குண–நிராகார ப்ரம்மத்தை உபாஸிப்பவர்களுக்கும் மரணத்தறுவாயில் ஏற்படும் கதியின் வர்ணனை . . . . . . . . . . . . . . . . . . . . . . . . | 494–503 |
| 47. | பகவத் பக்தியின் பெருமை; கல்ப வர்ணனை; எல்லா உபாஸகர்களும் சென்றடையும் பரமதாமத்தை அடைவிக்கும் பக்தி வடிவான ஸாதனங்கள் பற்றிய வர்ணனை . . . . . . . . . . . . . . . . . . . . . . . . | 504–515 |
| 48. | சுக்ல–க்ருஷ்ண மார்க்கங்களின் வர்ணனை . . . . . . . . . . . . . . . . | 515–526 |
| | **ஒன்பதாவது அத்யாயம்** | |
| 49. | அத்யாயத்தின் பெயர்; சுருக்கம்; பொருத்தம் . . . . . . . . . . . . . . . . | 527–528 |
| 50. | விஞ்ஞானத்துடன் கூடிய ஞானம்; பகவானுடைய ஐசுவர்யத்தின் பெருமை; உலகம் தோன்றியதன் வர்ணனை . . . . . . . . . . . . . . . . | 528–541 |
| 51. | பகவானுடைய ப்ரபாவத்தை அறியாமையால், அவரைப் புறக்கணிப்பவர்களை இகழ்ந்து கூறுதல்; பக்தியின் பெருமை; ஸமக்ர ஸ்வரூபம், அதன் பெருமை பற்றிய வர்ணனை; ஸ்வர்கத்தை விரும்புபவரின் கதி . . . . . . . . . . | 541–557 |


CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



| வரிசை எண் | பொருள் | பக்கம் எண் |
|---|---|---|
| | (ஸ்ரீக்ருஷ்ணனின் பெருமை பற்றி ப்ரம்மா தேவர்களுக்குச் செய்த உபதேசம் 542–543) | |
| 52. | அநன்ய பக்தியின் பெருமை . . . . . . . . . . | 557–596 |
| | (விதுரர், குசேலர், த்ரௌபதி, கஜேந்த்ரன், சபரி, ரந்திதேவர் இவர்களின் கதைச் சுருக்கங்கள் 565–574) | |
| | (பில்வமங்களர் (லீலா சுகர்) சரிதம் 581–585) | |
| | (குஹன், யாக பத்னிகள், ஸமாதி வைசியன், ஸஞ்ஜயன் இவர்களின் கதைச் சுருக்கங்கள் 586–589) | |
| | (ஸுதீக்ஷ்ணர், ராஜரிஷி அம்பரீஷர் ஆகியோரின் சரிதம் 591–593) | |


## பத்தாவது அத்யாயம்

| வரிசை எண் | பொருள் | பக்கம் எண் |
|---|---|---|
| 53. | அத்யாயத்தின் பெயர்; சுருக்கம்; பொருத்தம் . . . . . . . . . . | 597 |
| 54. | பகவானுடைய விபூதி, யோகசக்தி இவற்றின் விளக்கம். அவற்றை அறிவதன் பயன் . . . . . . . . . . | 598–609 |
| | (ஸப்தரிஷிகள், தேவரிஷிகள் இவர்களின் இலக்கணங்கள்; பெயர்கள்; செயல்கள் 603) | |
| | (மரீசி, அங்கிரஸ், அத்ரி, புலஸ்த்யர், புலஹர், க்ரது, வஸிஷ்டர் ஆகியோரின் கதைகள்; ஸத்ஸங்கத்தின் பெருமை 604–607) | |
| | (யுகம், மந்வந்தரம், கல்பம் இவற்றின் காலக்கணக்கு 607–608) | |
| 55. | பக்தியின் விளக்கம்; பக்தியின் ப்ரபாவம் . . . . . . . . . . | 610–614 |
| 56. | அர்ஜுனன் பகவானைத் துதித்தல், விபூதி யோகசக்திகளை விளக்க வேண்டுதல். | 615–624 |
| | (ரிஷிகள் பற்றிய விவரங்கள்; தேவரிஷிகளின் இலக்கணம்; பீஷ்மர், துர்யோதனனுக்கு ஸ்ரீக்ருஷ்ணனின் ப்ரபாவத்தைக் கூறுதல் 616) | |
| | (தேவரிஷி நாரதர், அஸிதர், தேவலர் – கதைகள் 617–618) | |
| | (வேதவ்யாஸரின் பெருமை; ஸ்ரீக்ருஷ்ணனின் பெருமை பற்றிப் பல மஹரிஷிகள் மனம் விட்டுக் கூறியவை 619–620) | |
| 57. | பகவானது விபூதிகள் – யோக சக்தி பற்றிய வர்ணனை . . . . . . . . . . | 625–654 |
| | (ருத்ரர், வஸுக்கள் முதலிய விபூதிகள் பற்றிய சுருக்கம்; வாயு புராணத்திற்கிணங்க வெவ்வேறு அதிகாரி வர்க்கத்தின் குறிப்பு; நாற்பத்தொன்பது மருத்துக்களின் பெயர்கள் 625–627) | |
| | (பன்னிரண்டு ஆதித்யர்களின் பெயர்கள்; மருத்கணங்களின் உற்பத்தி 627–628) | |
| | (பதினொரு ருத்ரர்களின் பெயர்கள்; குபேரன் கதைச் சுருக்கம் 629–630) | |
| | (எட்டு வஸுக்களின் பெயர்கள்; ப்ருஹஸ்பதி, ஸ்கந்தர் பற்றிய சுருக்கமான அறிமுகம் 630–631) | |
| | (மஹரிஷி இலக்கணம்; முக்யமான பத்து மஹரிஷிகளின் பெயர்கள். ப்ருகுவின் கதை ஜபயக்ஞத்தின் பெருமை 632–633) | |
| | (அரச மரத்தின் பெருமை 633–634) | |
| | (கந்தர்வர்கள் பற்றிய குறிப்பு. சித்ரரதன் பெருமை. ஸித்தர்களின் நிலை; கபிலர் கதை 634–635) | |
| | (ஆதிசேஷனின் பெருமை 637) | |
| | (ஏழு பித்ருக்களின் பெயர்; யமராஜன் பற்றிய குறிப்பு; பக்தன் கீர்த்திமானின் கதை 637–638) | |
| | (கங்கையின் பெருமை; தோற்றம் 640–641) | |
| | (ஸமாஸம் (தொகை, தொடர்) பற்றிய சுருக்கமான அறிமுகம்; த்வந்த்வ ஸமாஸத்தின் (உம்மைத்தொகையின்) தனிச்சிறப்பு 642) | |
| | (கால ஸ்வரூபத்தைப் பற்றிய ஆராய்ச்சி 643) | |


CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai




| வரிசை எண் | பொருள் | பக்கம் எண் |
|---|---|---|
| | (ப்ருஹத் ஸாமம் பற்றிய குறிப்பு; காயத்ரியின் பெருமை 645–646) | |
| | (கேநோபநிஷத நிகழ்ச்சி – யக்ஷ உருவம் எடுத்த ப்ரம்மத்தினால் தேவர்கள் அடைந்த அவமானம் 647–648) | |
| | (அர்ஜுனனின் பெருமை; சுக்ராசார்யர் பற்றிய சுருக்கமான அறிமுகம் 649–650) | |


## பதினொன்றாவது அத்யாயம்


| | | |
|---|---|---|
| 58. | அத்யாயத்தின் பெயர்; சுருக்கம்; பொருத்தம் | 655–656 |
| 59. | விசுவரூப தர்சனம் காட்டும்படி அர்ஜுனனின் வேண்டுகோள் | 656–660 |
| 60. | பகவான் விசுவரூபத்தை விளக்குதல்; தெய்விகப் பார்வை அளித்தல் | 661–665 |
| | (அச்வினிகுமாரர்கள் பற்றிய குறிப்பு 662) | |
| 61. | ஸஞ்ஜயன் விசுவரூபத்தை வர்ணித்தல் | 666–671 |
| 62. | அர்ஜுனன் கண்ட விசுவரூபம்; துதி | 671–688 |
| | (ஸாத்யர்கள், விச்வேதேவர்கள் பற்றிய குறிப்பு 679–680) | |
| 63. | பகவான் தம் ப்ரபாவம் கூறுதல்; அர்ஜுனனைப் போர் புரிய உற்சாகமூட்டுதல். | 688–693 |
| | (ஜயத்ரதன் பற்றிய குறிப்பு 692) | |
| | (அர்ஜுனன் கிரீடீ என்ற பெயர் பெற்றமை 693) | |
| 64. | அர்ஜுனன் பகவானைத் துதித்தல்; நான்கு கைகளுடன் தர்சனம் அளிக்க வேண்டுகோள் | 694–708 |
| 65. | பகவான் விசுவரூபத்தின் பெருமையைக் கூறுதல்; நான்கு கைகள் கூடிய ஸ்வரூப தர்சனம்; ஸ்ரீக்ருஷ்ணனுடைய இயல்பான தோற்றம் | 708–711 |
| 66. | பகவானின் நான்கு கை ஸ்வரூபத்தின் பெருமை; அநன்ய பக்தியின் விளக்கம். | 712–718 |


## பன்னிரண்டாவது அத்யாயம்


| | | |
|---|---|---|
| 67. | அத்யாயத்தின் பெயர்; சுருக்கம்; பொருத்தம் | 719–720 |
| 68. | அர்ஜுனன் கேள்வி; உருவமுள்ள–உருவமற்ற ஸ்வரூபத்தை உபாஸிப்பவர் பெருமை; பகவானை அடையப் பல ஸாதனைகள் | 720–737 |
| | (கோபிகைகள் பகவானை உள்ளத்தில் நிலைநிறுத்திய பெருமை 722) | |
| 69. | பகவானை அடைந்துவிட்ட பக்தர்களின் இலக்கணம் | 737–749 |
| 70. | மிகச்சிறந்த பகவத் பக்தர்களான ஸாதகர்களின் நிலை | 749–750 |


## பதின்மூன்றாவது அத்யாயம்


| | | |
|---|---|---|
| 71. | அத்யாயத்தின் பெயர்; சுருக்கம்; பொருத்தம் | 751–752 |
| 72. | க்ஷேத்ரம்; க்ஷேத்ரக்ஞன்; ஞானம்–க்ஞேயம் (அறியத்தக்கது) பற்றிய வர்ணனை. | 752–774 |
| 73. | ஞானம், ப்ரக்ருதி, புருஷர்கள் – பற்றிய வர்ணனை | 775–795 |
| | (ஸாதன சதுஷ்டயம் – நான்குவிதமான ஸாதனைகள், ஷட் ஸம்பத்தி – ஸாதகனுக்கு இன்றியமையாத ஆறு விசேஷ குணங்கள் இவை பற்றிய விளக்கம் 782–784) | |


## பதினான்காவது அத்யாயம்


| | | |
|---|---|---|
| 74. | அத்யாயத்தின் பெயர்; சுருக்கம்; பொருத்தம் | 797–798 |
| 75. | ஞானத்தின் பெருமை; ப்ரக்ருதி–புருஷன் மூலம் படைப்பு – இதன் வர்ணனை. | 798–801 |
| 76. | ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களை வெவ்வேறு வகைகளில் வர்ணித்தல் | 802–816 |
| | (குணப்பெருக்கத்தின் பத்துக் காரணங்கள் 807) | |


CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai




| வரிசை எண் | பொருள் | பக்கம் எண் |
|---|---|---|
| 77. | குணாதீத நிலையடைவதற்கான உபாயம்; அவர் இலக்கணம், பகவான் பெருமை இவற்றின் வர்ணனை | 816–828 |
| | **பதினைந்தாவது அத்யாயம்** | |
| 78. | அத்யாயத்தின் பெயர்; சுருக்கம்; பொருத்தம் | 829–830 |
| 79. | ஸம்ஸார மரத்தின் வர்ணனை; பகவானை அடையச் செய்யும் ஸாதனை; பரமதாமம் என்பது பற்றிய குறிப்பு | 830–839 |
| 80. | ஜீவாத்மா பற்றிய குறிப்பு | 839–844 |
| 81. | பகவானின் ப்ரபாவம்; ஸ்வரூபம், க்ஷரன், அக்ஷரன், புருஷோத்தம விளக்கம். | 844–854 |
| | **பதினாறாவது அத்யாயம்** | |
| 82. | அத்யாயத்தின் பெயர்; சுருக்கம்; பொருத்தம் | 855–856 |
| 83. | தெய்வ அஸுர ஸம்பத் விளக்கம் | 856–863 |
| 84. | அஸுர ஸம்பத்துடையவர்களின் இலக்கணங்கள்; அவர்களின் வீழ்ச்சி | 863–875 |
| 85. | காமம், க்ரோதம், லோபம் என்கிற நரக வாயிலைத் தவிர்க்க உபதேசம்; சாஸ்த்ர முறைப்படி கடமைகளை ஆற்றத் தூண்டுதல் | 876–879 |
| | **பதினேழாவது அத்யாயம்** | |
| 86. | அத்யாயத்தின் பெயர்; சுருக்கம்; பொருத்தம் | 881–882 |
| 87. | ச்ரத்தைக்கும், அறநூல் நெறிக்கும் விரோதமாகத் தவம் செய்பவர்கள் பற்றிய குறிப்பு | 882–888 |
| 88. | முக்குணங்களுக்கு ஏற்ப உணவு, யக்ஞம், தவம், தானம் இவற்றின் வேற்றுமை. | 889–906 |
| 89. | 'ஓம் தத் ஸத்' என்பதன் விளக்கம் | 906–911 |
| | **பதினெட்டாவது அத்யாயம்** | |
| 90. | அத்யாயத்தின் பெயர்; சுருக்கம்; பொருத்தம் | 913–915 |
| 91. | அர்ஜுனன் கேள்வி; பகவான் கூறும் த்யாக தத்வம் நிர்ணயம் | 915–928 |
| 92. | ஸாங்க்ய ஸித்தாந்தத்தின்படி கர்மத்தின் காரணங்கள் கூறுதல் | 928–936 |
| 93. | முக்குணங்களுக்கேற்ப ஞானம், கர்மம், கர்த்தா, புத்தி, த்ருதி, ஸுகம் இவற்றின் வேற்றுமை | 936–962 |
| | (தர்மத்தின் பெருமை, தயை, அஹிம்ஸை இவற்றின் விளக்கம் 950–953) | |
| 94. | வர்ண தர்மங்களும், அவற்றின் பயன்களும் | 962–982 |
| | (விசுவாமித்ரர், வஸிஷ்டர் இவர்களின் கதைகள் 965–966) | |
| | (பாட்டனார் பீஷ்மரின் கதை 967–971) | |
| | (துலாதார வைசியரின் கதை 973) | |
| | (வர்ணாசிரம தர்மங்களைப் பின்பற்றுவதன் அவசியம் 974–977) | |
| 95. | ஞான நிஷ்டை விளக்கம் | 982–990 |
| 96. | பக்தியுடன் கூடிய கர்மயோக வர்ணனை; சரணாகதியின் பெருமை; பகவான் தம்மைத் தஞ்சமடையுமாறு அர்ஜுனனுக்குக் கட்டளையிடுதல் | 990–1008 |
| | (அர்ஜுனனின் பெருமை; பகவானுக்கு அவரிடமுள்ள பேரன்பு 1004–1007) | |
| 97. | ஸ்ரீமத்பகவத்கீதையின் பெருமை | 1008–1022 |
| 98. | ஸ்ரீமத்பகவத்கீதை மங்கல ஆரத்தி | 1023 |


* * * * *

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

# பணிவான வேண்டுகோள்

த்வமேவ மாதா ச பிதா த்வமேவ த்வமேவ ப$_3$ந்து$_4$ர்ச ஸகா$_2$ த்வமேவ ।
த்வமேவ வித்$_3$யா த்$_3$ரவிணம் த்வமேவ த்வமேவ ஸர்வம் மம தே$_3$வதே$_3$வ ॥

ஆருயிர் அன்னையும் நீயே, அருமைத் தந்தையும் நீயே,
உறவும் சுற்றமும் நீயே, உற்ற நண்பனும் நீயே,
கற்கும் கல்வியும் நீயே, சேர்க்கும் செல்வமும் நீயே,
அனைத்தும் ஆன என்றன், ஆதிதேவனும் நீயே!

வஸுதே$_3$வஸுதம் தே$_3$வம் கம்ஸசாணூரமர்த$_3$நம் ।
தே$_3$வகீபரமாநந்த$_3$ம் க்ருஷ்ணம் வந்தே$_3$ ஜக$_3$த்$_3$கு$_3$ரும் ॥

வஸுதேவன் மைந்தனும், கம்ஸனையும், சாணூரனையும் உருக்குலைத்துக் கொன்றவரும், தேவகிக்குப் பரமானந்தம் அளிப்பவரும், ஜகத்குருவானவரும், தெய்வமானவருமான ஸ்ரீக்ருஷ்ணனை வணங்குகிறேன்.

## கீதையின் பெருமை

ஸ்ரீமத்பகவத்கீதை ஸாக்ஷாத் ஸ்ரீபகவானுடைய திருவாய்மொழி. அதன் பெருமை எல்லையற்றது; அளவற்றது. அதை உள்ளபடி வர்ணிக்க யாராலும் முடியாது. ஆதிசேஷன், சிவபெருமான், மஹாகணபதி ஆகியவரும்கூட இதன் பெருமையை முழுமையாகக் கூற முடியாது என்றால் மனிதர்களைப் பற்றிச் சொல்வானேன்? இதிஹாஸங்களிலும், புராணங்களிலும் ஆங்காங்கு இதன் பெருமையைப் பாடியிருக்கிறார்கள். இப்படி இதுவரை கூறியுள்ள பெருமை அவ்வளவையும் ஒன்று திரட்டினால் கூட அதன் பெருமை இவ்வளவுதான் என்று கூற முடியாமலிருக்க, அதன் பெருமையை முழுமையாகக் கூறிவிட முடியும் என்பது எங்ஙனம் பொருந்தும்? ஒரு விஷயத்தை நன்கு விவரிக்க முடியுமானால் அதை அளவற்றது என்று எங்ஙனம் கூற முடியும்? அளவுக்குள் அடங்கியதாகத்தானே இருக்க முடியும்?

கீதை உயர்ந்த ரஹஸ்யங்கள்‡ பொதிந்த நூல். இதில் எல்லா வேதங்களின் ஸாரமும் திரட்டிக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதன் அமைப்பு எளிமையும், அழகும் பொருந்தியது. சிறிது காலப் பயிற்சியினாலேயே யாரும் இதை எளிதாகப் புரிந்து கொள்ளலாம். ஆனால், இதன் கருத்துக்கள் ஆழம் மிக்கவை; உட்பொருள் பொதிந்தவை. ஒருவர் வாழ்க்கை முழுவதும் இடைவிடாது இதைப் படித்துக் கொண்டே இருந்தாலும் இதை முழுமையாகக் கற்றுத் தேர்ந்துவிட்டதாக நினைக்க முடியாது. நாள்தோறும் புதிய புதிய கருத்துக்கள் தோன்றிக் கொண்டே இருக்கும். அதனால் கீதை என்றும் புதிதாகவே திகழ்கிறது. இவ்விதம் ஒரே முனைப்புடன் நம்பிக்கையும், பக்தியும் கொண்டு ஆராய்ந்து கொண்டே இருந்தால், இதனுடைய ஒவ்வொரு சொல்லிலும் நுண்ணிய ரஹஸ்யங்கள் பொங்கி வருவதை நேரிடையாக அனுபவிக்கலாம். பகவானுடைய கல்யாண குணங்கள், ப்ரபாவங்கள்,

‡ உயர்ந்த ஆன்மிகத் தத்வங்களை 'ரஹஸ்யம்' என்று குறிப்பிடுவார்கள். தகுதியும், நாட்டமும் உடையவர்களுக்குத் தனிமையில் உபதேசிக்கப்பட வேண்டியவை நிறைந்த பெரு நூல் என்பதால் ரஹஸ்யம், குஹ்யம் என்று விவரிக்கப்படுகின்றது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸ்வரூபம், தத்வம், ரஹஸ்யம், உபாஸனை, கர்மம், ஞானம் இவற்றைப் பற்றியெல்லாம் கீதாசாஸ்த்ரத்தில் கூறப்பட்டுள்ளவாறு வேறு எந்த ஒரு நூலிலும் ஒருங்கே காண்பது அரிது. பகவத்கீதைக்கு இணையான நூலே கிடையாது. நன்னெறி புகட்டாத ஒரு சொல் கூட கீதையில் கிடையாது. கீதையில் எந்த ஒரு சொல்லும் வெறும் சுவையூட்டுவதற்காக மட்டுமே அமைந்ததில்லை. இதில் வருகின்ற அத்தனை விஷயங்களும் உண்மையானவை. ஸத்ய ஸ்வரூபனான பகவானுடைய பேச்சிலே சுவையைக் கற்பனை செய்து பார்ப்பது அவரது சொல்லை அவமதிப்பது போலாகும்.

கீதையில் எல்லா சாஸ்த்ரங்களும் அடங்கும். எல்லா சாஸ்த்ரங்களுமே கண்ட முடிவுகளின் ஸாரம் இதில் நிறைந்திருக்கின்றது. எல்லா சாஸ்த்ரங்களுக்கும் இது கருவூலம் என்று சொன்னால் அது மிகையன்று. கீதா சாஸ்த்ரத்தை ஒருவன் தெளிவாகப் புரிந்து கொண்டுவிட்டால் பிற சாஸ்த்ரங்களில் உள்ள தத்வங்களின் அறிவு, தானே வந்து அமையும். அதற்காகத் தனியாக உழைக்க வேண்டியதில்லை.

மஹாபாரதத்தில், 'ஸர்வஶாஸ்த்ரமயீ கீ₃தா' (பீ₄ஷ்ம. 43/2) என்று கூறப்படுகிறது. இவ்வளவு சொன்னாலும் போதாது. எல்லா சாஸ்த்ரங்களும் வேதங்களினின்றும் தோன்றியவை. வேதங்கள் ப்ரம்மதேவனின் திருமுகத்திலிருந்து வெளிவந்தவை. அந்த ப்ரம்மதேவன் பகவானுடைய உந்தித்தாமரையில் உதித்தவன். இவ்வாறு சாஸ்த்ரங்களுக்கும், பகவானுக்கும் இடையே மிக அதிகமான இடைவெளி உள்ளது. ஆனால் கீதையோ ஸாக்ஷாத் பகவானுடைய முகத்தாமரையிலிருந்து நேராக வெளி வந்தது. ஆகவே மற்ற சாஸ்த்ரங்களைவிடச் சிறந்தது என்று கூறுவதில் மிகை ஒன்றுமில்லை. பகவான் வேதவ்யாஸரே கூறுகிறார்—

கீ₃தா ஸுகீ₃தா கர்தவ்யா கிமந்யை: ஶாஸ்த்ரஸங்க்₃ரஹை: ।
யா ஸ்வயம் பத்₃மநாப₄ஸ்ய முக₂பத்₃மாத்₃விநி:ஸ்ருதா ॥

(மஹா. பீ₄ஷ்ம. 43/1)

கீதையை நல்ல முறையில் கேட்க வேண்டும், பாட வேண்டும், படிக்க வேண்டும், கற்பிக்க வேண்டும், மனனம் செய்ய வேண்டும், மனதில் தரிக்க வேண்டும். கீதை பகவான் பத்மநாபனின் முகத்தாமரையிலிருந்து வெளிவந்தது. எனவே, கீதையைச் செவ்வனே ஓதுதல் வேண்டும். பிற சாஸ்த்ர நூல்கள் எதற்கு?

இந்த ச்லோகத்தில் 'பத்மநாப:' என்ற சொல் வருகிறது. எல்லா சாஸ்த்ரங்களுக்கும் ஆணிவேரான வேதங்களைத் தம் முகத்திலிருந்து வெளியிட்ட அந்த ப்ரம்மதேவரே பகவானின் உந்தித்தாமரையிலிருந்து உதித்தவர். அந்த பகவானுடைய திருவாயிலிருந்து வெளி வந்தது கீதை என்பது கருத்து.

கீதை கங்கையைக் காட்டிலும் சிறந்தது. கங்கையில் நீராடுவதற்குப் பயன் முக்தி என்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. கங்கையில் நீராடுபவன் வேண்டுமானால் முக்தி அடையலாம். அவன் பிறரைக் கரையேற்ற முடியாது. ஆனால் கீதை வடிவான கங்கையில் மூழ்கி எழுபவன் தான் மட்டும் முக்தியைப் பெறுவதில்லை. பிறரையும் கரையேற்றும் தகுதி படைத்தவன் ஆகிறான். கங்கை பகவானுடைய திருவடித் தாமரையிலிருந்து பெருகியது. ஆனால் கீதை ஸாக்ஷாத் பகவானுடைய திருமுகத் தாமரையிலிருந்து வெளிவந்தது. கங்கைக்குச் சென்று அதில் நீராடுபவனுக்கு மட்டுமே கங்கை முக்தியை அளிக்கிறது. கீதையோ ஒவ்வொரு வீடாகச் சென்று அங்குள்ளவருக்கு முக்தி மார்க்கத்தை போதிக்கிறது. ஆகவே கீதை கங்கையைக் காட்டிலும் சிறந்தது.

கீதை காயத்ரியை விடச் சிறந்தது. காயத்ரி ஜபம் செய்தால் மனிதன் முக்தி பெறுவான். அது சரிதான். காயத்ரியை ஜபம் செய்பவன் ஒருவன் மட்டுமே முக்தி பெற முடியும். கீதாபாராயணம் செய்பவன் தானும் கரையேறிப் பிறரையும் கரையேற்றுவானே! முக்தியை அளிக்கும் பகவானே அவனைச் சார்ந்து விடுகிறான் என்றால் அப்புறம் முக்தியைப் பற்றிச்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



சொல்வதற்கு என்ன இருக்கிறது? முக்தி அவனுடைய திருவடித் தூசியில் வாழ்ந்து கொண்டிருக்கிறது. அவன் முக்தியெனும் சத்திரத்தைத் திறந்து விடுகிறான்.

கீதை பகவானைவிடப் பெருமை வாய்ந்தது என்று சொல்வோமேயானால் அதுவும் மிகையாகாது. அவரே சொல்கிறார்—

கீ₃தாஸ்ரயே஽ஹம் திஷ்ட₂ாமி கீ₃தா மே சோத்தமம் க்₃ருஹம் ।
கீ₃தாஜ்ஞானமுபாஸ்ரித்ய த்ரீந்லோகாந் பாலயாம்யஹம் ॥

(வராஹபுராணம்)

(கீதையை அண்டி நான் வாழ்கிறேன். கீதைதான் என்னுடைய சிறந்த வீடு. கீதையின் ஞானத்தைக் கைக்கொண்டு நான் மூவுலகங்களையும் காக்கிறேன்.)

இதைத் தவிர கீதையிலேயே பகவான் மனம் விட்டுக் கூறுகிறார்— 'இந்த கீதை என்ற ஆணையை நிறைவேற்றுபவர் ஐயமின்றி முக்தி பெறுவர்' (3/31). இது மட்டுமன்று. 'இதை ஒருவர் கருத்தூன்றிப் படித்தாலே போதும். அவர் செய்யும் ஞான யக்ஞத்தால் நான் வழிபடப்பட்டவனாக ஆவேன்' (18/70) என்கிறார். கீதையை ஊன்றிப் படிப்பதற்கே இவ்வளவு பெருமை உண்டென்றால், அதில் கூறியுள்ளபடி ஒருவர் வாழ ஆரம்பித்துவிட்டால் – இதன் ரஹஸ்யத்தை பக்தர்கள் மனதில் ஊன்றச் செய்துவிட்டால் – அவர்களிடையே விரிவாகப் பரவச் செய்துவிட்டால், அவரைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? அவர் என் ஆருயிர் அன்பர் ஆவார் என்று பறைசாற்றுகிறாரே! பகவானுடைய உயிரைவிட ப்ரியமானவர் என்று சொல்வதுகூட மிகையாகாது. பகவான் இப்படிப்பட்ட பக்தர்களுக்குக் கட்டுப்பட்டு விடுகிறார்.

தங்களுடைய ஸித்தாந்தங்களை (கொள்கைகளை)க் கடைப்பிடித்து ஒழுகுபவர்களிடம் எவ்வளவு ப்ரியம் நற்குணமுள்ள பெரியோர்களுக்கு இருக்கிறதோ, அவ்வளவு ப்ரியம் தங்கள் உயிர் மீது கூட அவர்களுக்கு இல்லை என்பதை நாம் காண்கிறோம். கீதையோ பகவானுடைய ரஹஸ்யங்கள் பொதிந்த முக்யமான கட்டளை. இதை ஒருவர் ஏற்றுக் கடைப்பிடிக்கிறார் என்றால் அவரை பகவான் தம் உயிரைவிட அதிகமாக நேசிப்பதில் வியப்பென்ன?

கீதை பகவானுடைய மூச்சுக் காற்று. பகவானுடைய இதயம், பகவானுடைய சொல்லாலான வடிவம். ஒருவருடைய உள்ளத்தில் கீதை, சொல்லில் கீதை, செயலில் கீதை, புலன்களிலும், உடலிலும் ஸாக்ஷாத் கீதை என்று இப்படி அழகுற அமைந்து விட்டால், அவர் ஸாக்ஷாத் கீதையின் வடிவினர்தான். அவரை தர்சனம் செய்வது, தொடுவது, அவருடன் உரையாடுவது, அவரை நினைப்பது இவை பிறரைக்கூடத் தூய்மையாக்கிவிடும் என்றால் கீதையின் ஆணையைக் கடைப்பிடிப்பவரைப் பற்றிக் கேட்பானேன்? உண்மையில் கீதைக்கு இணையாக உலகில் யக்ஞத்தையோ, தானத்தையோ, தவத்தையோ, புண்ய தீர்த்தத்தையோ, வ்ரதத்தையோ, அடக்கத்தையோ, உபவாஸம் முதலிய நற்பழக்கங்களையோ சொல்ல முடியாது.

கீதை ஸாக்ஷாத் பகவான் ஸ்ரீக்ருஷ்ணனுடைய முகத்தாமரையிலிருந்து வெளி வந்த திருவாய்மொழியாகும். இதைத் தொகுத்தவர் ஸ்ரீவ்யாஸ பகவான். பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் தம் உபதேசங்களின் எவ்வளவு பகுதிகளை ச்லோகங்கள் வாயிலாக வெளியிட்டாரோ, அவற்றை உள்ளது உள்ளவாறே ஸ்ரீவ்யாஸர் அப்படியே தம் நூலில் பதித்து விட்டார். பகவான் கூறிய சில வசன உபதேசங்களை ச்லோகங்களாகச் செய்து அதோடு சேர்த்துக் கொண்டு, அர்ஜுனன், ஸஞ்ஜயன், த்ருதராஷ்ட்ரர் இவர்கள் தங்கள் முறையில் கூறிய அனைத்தையும் கூட ச்லோகங்களாகச் செய்து அவற்றையும் சேர்த்துக் கொண்டார். ஆக இந்த எழுநூறு ச்லோகங்களான முழு நூலும் பதினெட்டு அத்யாயங்களாகப் பிரிக்கப்பட்டு மஹாபாரதத்தில் சேர்ந்துள்ளது. இன்று இவ்வுபதேசங்கள் நமக்கு இந்த வடிவில் கிடைத்துள்ளன.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



## கீதையின் உட்கருத்து

கீதை ஆழம் காண முடியாத ஞானக்கடல். இதற்குள் எல்லையில்லா ஞானக் கருவூலம் நிரம்பி நிற்கிறது. இதன் தத்வத்தைத் தெளிவாகச் சொல்வதற்குத் திக்கெல்லாம் சென்று தம் புலமையினால் வெற்றி பெற்ற அரிய பெரிய வித்வான்கள், ஆராய்ச்சியாளர்கள், மஹாத்மாக்கள் ஆகியவர்கள்கூடத் தங்கள் சொற்களால் இதன் தத்வத்தை விளக்க இயலாமல் போய் விடுகிறது. ஏனெனில் இதன் ரஹஸ்யத்தை முழுமையாக அறிந்தவர் ஸ்ரீக்ருஷ்ணன் ஒருவர்தாம். அவருக்குப் பிறகு இதைத் தொகுத்த வேதவ்யாஸரைச் சொல்லலாம். அடுத்து இதனைச் செவிமடுத்த அர்ஜுனனைச் சொல்லலாம். இத்தகைய ஆழம் காண முடியாத ரஹஸ்யமயமான கீதையின் கருத்தையும், பெருமையையும் என்னைப் போன்றவர் புரிந்து கொள்வது என்பது ஒரு ஸாதாரணப் பறவை எல்லையில்லா ஆகாயத்தைப் பறந்து அளந்துவிட முனைவது போலத்தான்.

கீதை எண்ணிலடங்காக் கருத்துக்கள் கொண்ட ஆழமான கடல். கடலின் ஆழத்தில் மூழ்கி மூழ்கி எழுந்தால் ரத்னங்களைக் கண்டெடுப்பதுபோல கீதையாகிய கடலின் ஆழத்தில் மூழ்கி எழுந்திருப்பதால், ஞான வேட்கை உள்ளவர்களுக்குப் புத்தம் புதியனவும், தனிச்சிறப்பு உள்ளவையுமான கருத்துக்கள் வடிவான ரத்னக் குவியல்கள் கிடைக்கும். ஆகாயத்தில் கருடனும் பறக்கிறது; கொசுவும் பறக்கிறது. அவ்வாறே (கீதையிலிருந்து) எல்லோரும் தங்கள் தங்கள் கருத்துக்களுக்கு ஏற்பச் சில அனுபவங்களைப் பெற்றே வருகிறார்கள்.

ஆகவே ஆராய்ந்து பார்க்கும்போது, அநாதிகாலமாக அஞ்ஞானத்தால் கட்டுண்டு, ஸம்ஸாரக் கடலில் அமிழ்ந்து வரும் ஜீவன் பரமாத்மாவை அடையச் செய்வதுதான் கீதையின் முக்ய நோக்கம் என்று தெரிய வருகிறது. அதற்கான உபாயங்களைக் கீதை கூறுகிறது. அவற்றைக் கடைப்பிடித்துத் தம் உலகியல் கடமைகளை மனிதர் சரிவர ஆற்றிக் கொண்டு, பரமாத்மாவை அடைய முடியும். பரமார்த்த தத்வத்தை நடைமுறையில் கையாளும் அற்புதமான உத்தியை கீதை புகட்டுகிறது. தகுதிக்கேற்றவாறும், திறமைக்கேற்றவாறும் அவரவருக்குரிய இரண்டு நிஷ்டைகளை கீதை எடுத்துக்காட்டுகிறது. அவையாவன: (1) ஞான நிஷ்டை அதாவது ஸாங்க்யயோகம், (2) யோக நிஷ்டை அதாவது கர்மயோகம் (3/3).

இங்கு ஒரு கேள்வி எழுகிறது. ஸாதாரணமாக எல்லா சாஸ்த்ரங்களிலும் பகவானை அடைவதற்கு (1) கர்மம், (2) உபாஸனை, (3) ஞானம் என்ற மூன்று முக்யமான வழிகள் காட்டப்படுகின்றன. கீதையில் மட்டும் இந்நிலையில் எப்படி இரண்டே நிஷ்டைகள் சொல்லப்படுகின்றன. கீதைக்கு பக்தி ஸித்தாந்தத்தில் மதிப்பு இல்லையா? பெரும்பாலோர் கீதை பக்தியையே சிறப்பாக எடுத்துக் கூறுவதாகக் கொள்கிறார்களே! பகவானும் பக்தியின் பெருமையை ஆங்காங்கு தெளிவாகச் சொல்லியிருக்கிறாரே (6/47). பக்தியின் மூலம் பகவானை அடைவது எளிது என்கிறாரே (8/14) என்ற கேள்வி எழுகிறது.

அதற்குப் பதில் இதுதான். சாஸ்த்ரங்களில் கர்மம், ஞானம் என்ற இரண்டைத் தவிர மூன்றாவதாக உபாஸனை என்று சொல்லப்படுகிறதே, அது இந்த இரண்டிற்குள் அடங்கும். பகவானும் தானும் வேறல்ல, ஒன்றே என்ற பாவனையுடன் செய்யும் உபாஸனை ஸாங்க்ய நிஷ்டையில் அடங்கும். ஒருவர் பகவானைத் தமக்கு வேறாக எண்ணிக் கர்ம மார்க்கத்தில் ஈடுபடுகிறாரே, அது யோக நிஷ்டையில் அடங்கும். ஸாங்க்ய நிஷ்டைக்கும், யோக நிஷ்டைக்கும் இதுதான் முக்யமான வேறுபாடு. இவ்வாறே 13/24ல் த்யானத்தினால் மட்டும் பகவானை அடைந்துவிடலாம் என்று கூறப்பட்டுள்ளது. அந்த த்யானயோகம் பகவானும் தானும் ஒன்று என்ற பாவனையுடன் செய்யப்படுமானால், ஸாங்க்ய நிஷ்டையில் அடங்கும். தான் வேறு பகவான் வேறு என்ற நோக்கில் செய்யப்படுமானால், அது 'யோக நிஷ்டை'யில் உள்ளடங்கியது. கீதை, பகவானை அடைவதற்கு முக்ய ஸாதனமாக பக்தியைக் கூறுகிறது என்று மக்கள் நினைப்பது சரிதான். கீதையில் பக்திக்கு மிக உயர்ந்த ஸ்தானம் கொடுக்கப்பட்டுள்ளது. அநேக இடங்களில் பகவான் அர்ஜுனனை பக்தன் ஆகிவிடுமாறு ஆணையிடுகிறார் (9/34; 12/8; 18/57,65,66). ஆனால் கீதை நிஷ்டைகள் என்று

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இரண்டைத்தான் மதிக்கிறது. இவ்விரண்டில் பக்தி என்பது யோக நிஷ்டையில் உள்ளடங்கியது. ஏனெனில் பக்தியில் பகவான் வேறு, பக்தன் வேறு என்ற த்வைத பாவனை உள்ளது. பக்தி, யோக நிஷ்டையில் அடங்கியது என்பது யுக்திக்குப் பொருந்தாத விஷயமன்று. யோக நிஷ்டையில் பக்தி எவ்விதம் அடங்கியுள்ளதென்பது பற்றி மேலே ஆராயப் போகிறோம். நிற்க!

கீதையில் பஜனை–பூஜையால் மட்டுமே அல்லது த்யானத்தினால் மட்டுமே தம்மை அடைந்துவிடலாம் என்று பகவான் கூறுகிறார். அதற்கு என்ன பொருள்? யோக நிஷ்டையை முழுமையாகக் கடைப்பிடித்தால், பகவத் ப்ராப்தி நிச்சயமே. அதன் பகுதிகளுள் ஏதேனும் ஒன்றைக் கடைப்பிடித்தாலும்கூட பகவானை அடைந்துவிடலாம். பகவான் ஜீவர்களுக்கு இவ்வளவு சுலபமாகத் தம்மை ஆக்கியுள்ளது அவரது திருவருளேயாகும்.

மேலும் கீதையில் வரும் ஞானம், கர்மம் என்ற சொற்கள் என்னென்ன பொருள்களில் வருகின்றன என்பதே மிகவும் உட்பொருள் பொதிந்த ஆழமான விஷயம். கீதையில் வரும் கர்மமும், கர்மயோகமும், அதே போன்று ஞானமும், ஞானயோகமும் ஒன்றல்ல. கீதையின்படி சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்கள் – ஞான நிஷ்டை, யோக நிஷ்டை என்ற இருநோக்குகளிலும் இருக்க முடியும். கர்மங்களுக்கு ஞான நிஷ்டையில் விரோதம் கிடையாது. யோக நிஷ்டையிலோ கர்மங்களைச் சரிவர ஆற்றுவதே சிறந்த ஸாதனம் என ஏற்கப்பட்டுள்ளது (6/3). மாறாகக் கர்மங்களைச் செய்யாமல் கைவிடுவது பகவத் ப்ராப்திக்கு இடைஞ்சல் எனக் கருதப்படுகிறது (3/4). 2/47 முதல் 2/51 வரையிலும், 3/19லும், 4/42லும் அர்ஜுனனை 'யோக நிஷ்டையில் நிலை பெற்றுக் கர்மங்களைச் செய்' என்று ஆணையிடுகிறார். அதுபோல 3/28லும், 5/8,9,13வது ச்லோகங்களிலும் ஸாங்க்ய (அதாவது ஞான) நிஷ்டையில் நிலைபெற்றுக் கர்மங்கள் செய்வது பற்றிக் கூறுகிறார். காம்ய கர்மங்களுக்கு இரண்டு நிஷ்டைகளிலுமே இடம் இல்லை. காம்ய கர்மங்களில் ஈடுபடுபவர்களை பகவான் கீழ்த்தர அறிவுடையோர் எனக் கூறியுள்ளார் (2/42–44,49; 7/20–23; 9/20,21,23,24).

கீதையில் ஞானம் என்ற சொல்லுக்கு ஞானயோகம் என்று மட்டும் பொருள் அன்று. அதன் பயனாக விளையும் தத்வஞானம் என்றும் பொருள். அதுதான் எல்லா ஸாதனைகளுக்கும் பயன். ஞானநிஷ்டைக்கும், யோக நிஷ்டைக்கும் எது பயனோ, அதையும் உண்மை ஞானம் (தத்வஞானம்) என்று கூறுவர். அதுவும் ஞானம் என்ற சொல்லாலே குறிப்பிடப்பட்டுள்ளது. 4/24லும், 4/25ன் பின்பாதியிலும் ஞானயோகம் பற்றிக் கூறுகிறார். 4/36 முதல் 39 வரை ஞானத்தின் பயனான தத்வஞானம் பெறுவது பற்றிக் கூறுகிறார். இவ்விதம் மற்ற இடங்களிலும் ஸந்தர்பத்திற்கேற்றவாறு பொருள் காண வேண்டும்.

இனி ஸாங்க்ய நிஷ்டை என்றால் என்ன? யோக நிஷ்டை என்றால் என்ன? இவற்றினிடையே என்ன வேறுபாடு? இரண்டும் தனித்தனி வழிகளா? ஒன்றையொன்று சார்ந்து நிற்குமா? இந்த நிஷ்டைகளுக்குத் தகுதி பெறுகிறவர் யார் என்பன பற்றிச் சுருக்கமாக ஆராய்வோம்.

## ஞான நிஷ்டை (ஸாங்க்யயோகம்), யோக நிஷ்டை (கர்மயோகம்) – இவற்றின் தன்மை

*(1)* **ஞான நிஷ்டை:** உலகில் உள்ள பொருட்கள் எல்லாம் கானல் நீரைப் போலவும், கனவுகளில் காணப்படுவன போலவும் மாயத் தோற்றங்களே; மாயையின் செயல் வடிவமானவை; முக்குணங்களின் விரிவுகள். அக்குணங்களே அந்தந்த குணங்களில் விரவி இருக்கின்றன. இவ்விதம் அறிந்து கொண்டு மனம், உடல், புலன்களின் மூலம் ஆக்கப் பெறும் எல்லாச் செயல்களிலும் தான் கர்த்தா (செய்பவன்) என்ற அபிமானம் இல்லாது (5/8,9), எங்கும் நிறை பரம்பொருளான ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்ம ஸ்வரூபத்தில் இரண்டற ஒன்றிநின்று ஸத் சித் ஆனந்தமயனான வாஸுதேவனைத் தவிர வேறொன்றுக்கும் 'இருப்பு'

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



என்பதே கிடையாது *(13/30)* என்ற நிலை தான் ஸாங்க்ய நிஷ்டை. ஞானயோகம், கர்மஸந்யாஸம் என்றெல்லாம் இதற்குப் பெயர்.

*(2)* **யோக நிஷ்டை:** உலகில் உள்ளவை எல்லாமே பகவானுடையவை என்று அறியவேண்டும். நம் செயல்கள் வெற்றி பெற்றாலும், வெற்றி பெறாவிட்டாலும், ஸமநிலையில் இருக்க வேண்டும். எதிலும் பற்றின்றி, பயனைக் கருதாமல் பகவானின் ஆணை என்று எல்லாக் கர்மங்களையும் ஆற்றவேண்டும் *(2/47–51)*. அல்லது நம்பிக்கையுடனும், பக்தியுடனும் மனம், சொல், உடல் எல்லாவற்றுடனும் பகவானைத் தஞ்சம் அடைந்துவிட வேண்டும். அவருடைய திருநாமங்கள், கல்யாண குணங்கள், ப்ரபாவங்கள் இவற்றுடன் கூட அவருடைய ஸ்வரூபத்தைச் சிந்தித்திருக்க வேண்டும் *(6/47)*. இது யோக நிஷ்டை. இதையே பகவான் ஸமத்வயோகம், புத்தியோகம், ததர்த்த கர்மம், மதர்த்த கர்மம், ஸாத்விக த்யாகம் முதலிய பெயர்களால் குறிப்பிடுகிறார்.

யோக நிஷ்டையில் ஸாமான்ய ரூபத்திலும், முக்யமாகவும் பக்தி இருக்கத்தான் இருக்கிறது. கீதையில் சொல்லப்படுகிற யோக நிஷ்டை பக்திக்குப் புறம்பானதன்று. பக்தி என்ற சொல்லோ, பகவான் என்ற சொல்லோ வராவிட்டாலும்கூட *(2/47–51)* பகவானுடைய ஆணையின்படி நடக்கவேண்டும் என்னும்போது பக்தியும் அங்குச் சேரத்தான் சேர்கிறது.

ஞான நிஷ்டையின் ஸாதனைக்கு பகவான் பல யுக்திகளைக் கூறுகிறார். அவை எல்லாவற்றிற்கும் பயன் ஸத் சித் ஆனந்தமயனான பரமாத்மாவை அடைவதுதான். ஞானயோகத்தில் உட்பிரிவுகள் பல இருந்தாலும் அவற்றில் நான்கு முக்யமானவை.

*(1)* உள்ளதெல்லாம் பரப்ரம்மமே.

*(2)* காணப்படுவனவெல்லாம் மாயைப் பொருட்களே. உண்மையில் ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்மம் தவிர வேறொன்றும் இல்லை.

*(3)* தோன்றுவனவெல்லாம் என் ஸ்வரூபம்தான், நானே அவை.

*(4)* தோற்றமெல்லாம் மாயைதான், அழியக்கூடியவை. உண்மையில் இல்லவே இல்லை. நித்யனான உணர்வுள்ள ஒன்றே ஒன்றுதான் ஆத்மா. அதுதான் நான்.

இப்படி நான்குவிதமான உட்பிரிவுகளில் முதல் இரண்டும் 'தத்த்வமஸி' என்ற உபநிஷத் மஹாவாக்கியத்தில் உள்ள 'தத்' என்ற சொல்லின் விளக்கமாகவும், பின் இரண்டும் 'த்வம்' என்பதன் விளக்கமாகவும் அமைகின்றன. இதை இவ்வாறு விளக்கலாம்.

*(1)* சராசரமான இந்த உலகில் காணப்படுவன எல்லாம் ப்ரம்மமே. ஒரு பொருள் கூட ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தைத் தவிர வேறானதன்று. கர்மம், கர்மத்திற்குரிய கருவிகளும், பொருட்களும், கர்மத்தைச் செய்பவன் எல்லாமே ப்ரம்மம்தான் *(4/24)*. எப்படிக் கடலில் மிதக்கின்ற பனிக்கட்டிகளின் உள்ளும், புறமும் எங்கும் நீரே நிறைந்திருக்கிறதோ, நீரைத் தவிர வேறொன்றும் இல்லையோ அதுபோல எல்லாவிதமான சராசரங்களான ப்ராணிகளின் உள்ளும், புறமும் ஒரே பரமாத்மாதான் நிறைந்துள்ளார். அந்த அனைத்து ப்ராணிகளின் வடிவங்களிலும் ப்ரம்மமேதான் இருக்கிறது *(13/15)*.

*(2)* காணப்படுவனவெல்லாம் மாயைத் தோற்றங்களே, நிலையற்றவை, அழியக்கூடியவை, அவை இல்லவே இல்லை என்றும், இவற்றிற்கு ஆதாரம் ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவைத் தவிர வேறொன்றும் இல்லை என்றும் அறிந்து கொண்டு மனதையும், புத்தியையும் ப்ரம்ம மயமாக்கிப் பரமாத்மாவிடமே ஒன்றி நின்று அந்த நேரிடை அனுபவத்தின் மூலம் ப்ரம்மத்துடன் ஐக்யமாகிவிடுவது *(5/17)*.

*(3)* சராசரமெல்லாம் ப்ரம்மம்தான். அந்த ப்ரம்மம் நான்தான். இவையெல்லாம் என் ஸ்வரூபமே என்று ஆராய்ந்து சராசரங்களனைத்தும் தனது ஆத்மாவே என்று பாவிப்பது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இப்படி ஸாதனை புரிபவரின் நோக்கில் ப்ரம்மம் ஒன்றைத் தவிர வேறொன்றுக்கும் இருப்பே கிடையாது. தம்முடைய விஞ்ஞான ஆனந்தமயமான ஸ்வரூபத்தில் ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டிருப்பார் (5/24, 6/27, 18/54).

(4) மாயையினால் உருவாகி முக்குணங்களின் விளைவுகளான பொருட்களாகத் தோற்றமளிக்கின்றனவே -- இவற்றிற்கும், இவற்றின் செயற்பாட்டிற்கும், தமக்கும் எத்தகைய ஸம்பந்தமும் இல்லை. இவையெல்லாம் அழியக்கூடியன. எப்பொழுதும் இல்லாதன என்று அறிந்து, எல்லாம் வாஸ்தவத்தில் இல்லாதவை என்று ஒதுக்கி, எப்பொழுதும் உள்ள ஆத்மாவின் அனுபவத்தைப் பெறுவது (13/27,34).

இந்த நிலையை அடைவதற்கு பகவான் கீதையில் பல யுக்திகளையும், உபாயங்களையும் ஆங்காங்கே ஸாதகனுக்குச் சொல்கிறார். ஆத்மா என்பவன் மட்டுமே பார்க்கிறவன், ஸாக்ஷீ, சேதநன் (உணர்வு உள்ளவன்), நித்யன் (என்றுமுள்ளவன்). மேலும் உடல் முதலிய காணப்படுவன எல்லாமே ஜடங்கள், வெறும் தோற்றங்கள், அநித்யமானவை. ஆதலால் அவை 'அஸத்'. ஆத்மா ஒன்றுதான் இருப்பது, 'ஸத்'. இதை உறுதிப்படுத்தவே பகவான் 2/11 முதல் 2/30 வரை ஆத்மா நித்யன், சுத்தன், விழிப்புள்ளவன், உருவமற்றவன், விகாரமற்றவன், செயலற்றவன், குணங்களுக்கு அப்பாற்பட்டவன் என்றெல்லாம் வர்ணித்துச் சொல்கிறார். பகவான் வேறு தான் வேறு என்ற பேதபாவனையின்றி ஸாதனை புரிபவர் ஆத்மாவின் ஸ்வரூபத்தை இவ்விதம் உணர்ந்து ஸாதனை புரிந்தால், ஆத்மாவைக் காண்கிறார் (அதாவது ஆத்மானுபவம் பெறுகிறார்). எந்தச் செயல் நடைபெறுகிறதோ, அது குணங்களால் குணங்களில் ஏற்படுவது. ஆத்மாவுக்கும், அதற்கும் ஸம்பந்தமில்லை (5/8,9; 14/19). ஆத்மா ஏதும் செய்வதுமில்லை (கர்த்தா அல்ல), செய்விப்பதும் இல்லை. இவ்விதம் உணர்ந்து அவர் எப்பொழுதும் தன்னிடமே – ஆத்மாவிடமே – மிகுந்த ஆனந்தத்தை அனுபவிக்கிறார் (5/13).

மேலே சொன்ன ஞானயோக ஸாதனை முறைகள் நான்கில் முதல் இரண்டும் ப்ரம்மத்தை ('தத்த்வமஸி' என்று) உபாஸனை செய்வதாகும். மூன்றும், நான்கும் 'நானே ப்ரம்மம்' (அஹம் ப்ரஹ்மாஸ்மி) என்று அஹங்க்ரஹ உபாஸனை செய்வதாகும்.

இங்கே ஒரு கேள்வி: மேலே சொன்ன நான்கு ஸாதனைகளைப் புரியவேண்டியது வ்யுத்தான அவஸ்தை நேரத்திலா? அல்லது வ்யவஹார தசையிலா? அல்லது இந்த இரண்டு அவஸ்தைகளிலும் செய்ய வேண்டுமா? இதற்குப் பதில் இதுதான். மேலே சொன்ன நான்காவது – ஸாதனை முற்றிய நிலையில் 5/9ல் கூறப்பட்டபடி ஸாதனை புரிவது வ்யவஹார தசையில் (ப்ரபஞ்சம் தெரிகின்ற நேரத்தில்) செய்யப்படுவது. மேலே சொன்ன இரண்டாவது – ஸாதனையின் ஆரம்பத்தில் 5/17ல் கூறியபடி ஸாதனை புரிவது த்யான காலத்தில். மற்றவற்றை அநேகமாக இரண்டு நிலைகளிலும் புரியலாம்.

இங்கே ஒரு கேள்வியைக் கேட்கலாம். 'முதல் ஸாதனையிலேயே வாஸுதேவனே எல்லாம்' (வாஸுதேவ: ஸர்வம்) என்று காணப்படுவதெல்லாம் வாஸுதேவனுடைய ஸ்வரூபமே (7/19). மேலும் 'ஸர்வபூதஸ்திதம் யோ மாம் பஜத்யேகத்வமாஸ்தித:' (6/31) – எவன் ஒன்றிய உணர்வில் உறுதிபெற்று அனைத்து உயிரினங்களிலும் ஆத்மாவாக விளங்கும் ஸத் சித் ஆனந்தமயமான வாஸுதேவனான என்னை வழிபடுகிறானோ என்பன பற்றி ஏன் இங்குக் குறிப்பிடவில்லை என்றால் இவ்விரண்டு ச்லோகங்களும் பக்தியைப் பற்றிக் கூறும் ஸந்தர்பத்தில் வருவன. பக்தி மூலம் பகவானை அடைந்துவிட்டவனைப் பற்றிப் பேசுவன. எனவே, இவற்றை இந்தக் கட்டத்தில் குறிப்பிடவில்லை. ஆனால் எவரேனும் இவற்றை ஞானம் பற்றியதாகக் கொண்டு, இவற்றின்படி ஸாதனை புரிய விரும்பினால் அவ்வாறு செய்யத் தடை ஏதுமில்லை.

இவ்விதம் ஸாங்க்ய நிஷ்டையை நான்குவிதங்களாகப் பிரித்துச் சொன்னோம். அதுபோல யோக நிஷ்டையையும் மூன்றுவிதமாகப் பிரிக்கலாம்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



(1) கர்மத்தை முக்யமாகக் கொண்டுள்ள கர்மயோகம்.

(2) பக்தி கலந்த கர்மயோகம்.

(3) பக்தியை முக்யமாகக் கொண்ட கர்மயோகம்.

(1) எல்லாக் கர்மங்களிலும், உலகியல் பொருட்களிலும் பயனையும், பற்றையும் முழுமையாக த்யாகம் செய்துவிட்டு, தமது வர்ணம், ஆசிரமம் இவற்றிற்கேற்ப சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளை ஆற்றவேண்டும். இதுதான் கர்மத்தை முக்யமாகக் கொண்ட கர்மயோகம். இதைப் பற்றிச் சொல்லும்போது பகவான் சில இடங்களில் பயனை மாத்திரம் த்யாகம் செய்யவேண்டும் என்கிறார் (5/12, 6/1, 12/11, 18/11). சில இடங்களில் பற்றை தயாகம் செய்யவேண்டும் என்கிறார் (3/19; 6/4). மற்றும் சில இடங்களில் பயன், பற்று இரண்டையும் த்யாகம் செய்யவேண்டும் என்கிறார் (2/47,48; 18/6,9). பயனை த்யாகம் செய்யவேண்டும் என்று சொல்லுமிடத்தில் பற்றையும் த்யாகம் செய்யவேண்டும் என்று சேர்த்து அறிந்து கொள்ளவேண்டும். அதுபோலப் பற்றை த்யாகம் செய்யவேண்டும் என்ற இடத்தில் பயனையும் த்யாகம் செய்யவேண்டும் என்று அறிந்து கொள்ளவேண்டும். பயனையும், பற்றையும் அறவே த்யாகம் செய்தால்தான் கர்மயோக ஸாதனை முழுமையாகப் புரிந்ததாக ஆகும்.

(2) பக்தி கலந்த கர்மயோகம் என்பதில் 'அகில ப்ரபஞ்சத்திலும் பகவான் நிறைந்திருக்கிறார்' என்ற நினைப்போடு, தன் வர்ணத்துக்குரிய கடமைகளைச் செய்து அவரையே வழிபடுதல் கூறப்படுகிறது. ஆகவே, இதை பக்தி கலந்த கர்மயோகம் எனலாம் (18/46).

(3) பக்தியை முக்யமாகக் கொண்ட கர்மயோகம்: இதில் இரண்டு உட்பிரிவுகள் உண்டு. (அ) பகவானுக்கு அர்ப்பணம் என்ற கர்மம். (ஆ) பகவானுக்காகச் செய்யப்படும் கர்மம்.

(அ) பகவானுக்கு அர்ப்பணம் என்ற கர்மம்கூட இரு வகைகளில் செய்யப்படும். மமகாரம், பற்று, பயனில் கருத்து இவற்றை த்யாகம் செய்து, இவையெல்லாம் பகவானுடையவை; நானும் பகவானுடையவன்; என் மூலம் நடைபெறும் செயலும் பகவான் செய்வதே; பகவான் தம் கைப்பாவை போல என்னை ஆட்டுவிக்கிறார் என்ற எண்ணத்துடன், அவருடைய ஆணைப்படி பகவானுடைய த்ருப்திக்காகவே சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகள் ஆற்றப் பெறுகின்றன (3/30; 12/6; 18/57,66).

இது தவிர வேறு விதமாக பகவானுக்கு அர்ப்பணம் செய்யக் கூடிய கர்மம் உண்டு. வேறு ஒரு லக்ஷ்யத்துடன் ஒரு கர்மத்தைச் செய்துவிட்டு முடிவில் அதை பகவானுக்கு அர்ப்பணம் செய்வது; கர்மம் செய்து கொண்டிருக்கும் போதே இடையில் பகவானுக்கே அர்ப்பணம் செய்வது; கர்மம் முடிந்ததும் பகவானுக்கு அர்ப்பணம் செய்வது அல்லது கர்மத்தின் பயனை பகவானுக்கு அர்ப்பணம் செய்வது. இதுவும் பகவானுக்கு அர்ப்பணம் செய்வதன் ஆரம்பநிலையே. இவ்வாறு செய்யச் செய்ய மேலே கூறிய முழுமையான பகவத் அர்ப்பண நிலை வந்துவிடும்.

(ஆ) பகவானுக்காகச் செய்யப்படும் கர்மங்களும் இரு வகைப்படும்.

1) சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளை, பகவானை அடைவதற்காக, பகவானின் அன்பைப் பெறுவதற்காக அல்லது பகவானுடைய த்ருப்திக்காக, பகவானுடைய ஆணைப்படி செய்கிறோம் என்று நினைத்துச் செய்வதும் ஒருவிதத்தில் பகவானுக்காகச் செய்யப்படும் கடமையே.

2) மற்றொன்று பகவானிடம் உள்ள பக்தியினால், ப்ரேமையினால், தானே மனமுவந்து பகவானின் விக்ரஹம் முதலியவற்றிற்குப் பூஜை செய்வது, உபசாரம் செய்வது, நாம பஜனை செய்வது, த்யானம் செய்வது முதலிய உபாஸனைகள். இவையும் வெளிப்பார்வையிலும்கூட பகவான் ஸம்பந்தமாக பகவானுக்காகவே செய்யப்படுபவை. ஆகவே இவ்விரண்டும் பகவதர்த்த கர்மத்திற்கு உட்பட்டவை (பகவானுக்காகவே செய்யப்படுபவை). இவற்றை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பகவான் 'மத்கர்மம்' என்றும், 'மதர்த்த கர்மம்' என்றும் பெயரிட்டுக் கூறுகிறார் *(11/55; 12/10)*.

இதைத்தான் அநன்ய பக்தி என்றும், பக்தியோகம் என்றும் கூறுவர் *(8/14,22; 9/13,14,22,30,34; 10/9; 13/10; 14/26)*. இதுகூட பகவானுக்கு அர்ப்பணம் என்ற கர்மம், பகவானுக்காகச் செய்யப்படும் கர்மம் என்ற இரண்டு வகையிலும் சேரும். இவையெல்லாவற்றிற்கும் பயன் பகவானை அடைவதுதான்.

இங்கே ஒரு கேள்வி: யோக நிஷ்டை தனியாகவே பகவானை அடையச் செய்யுமா? அல்லது ஞானநிஷ்டையின் ஒரு பகுதியாக இருந்து பகவானை அடையச் செய்யுமா? இதற்குப் பதில் கீதையின் பிரகாரம் இரண்டுமே என்பதுதான். அதாவது யோக நிஷ்டை தனியாகவும் பகவானிடம் கொண்டு சேர்க்கும். மோக்ஷம் அடையத் தனியாகவே உதவும் என்று கொள்ளப்படுகிறது. அத்துடன் ஞான நிஷ்டைக்கு உதவியாக இருந்தும், பகவானிடம் கொண்டு சேர்க்கும். ஸாதகன் விரும்பினால் ஞான நிஷ்டையின் உதவியின்றியே நேரே கர்மயோக நிஷ்டையில் ஊன்றி நின்று பரமஸித்தியைப் பெற முடியும். அல்லது கர்மயோக நிஷ்டையின் மூலம் ஞான நிஷ்டையைப் பெற்று, பிறகு அந்த ஞான நிஷ்டையின் மூலமும் பகவானை அடைய முடியும். இவை இரண்டில் எதைக் கடைப்பிடிக்கலாம் என்பது ஸாதகனின் விருப்பத்தை பொறுத்தது. யோக நிஷ்டை என்பது தனியான, சுதந்திரமான ஸாதனை என்று பகவான் *5/4,5; 13/24*வது ச்லோகங்களில் தெளிவாகச் சொல்லியிருக்கிறார். பகவானிடம் உள்ளத்தை நிலைநிறுத்தி பகவானுக்காகவே கர்மங்களைச் செய்பவனுக்கு பகவானுடைய க்ருபையாலே பகவான் கிடைத்துவிடுகிறார். இதையும் பகவான் பல இடங்களில் கூறுகிறார் *(8/7; 11/54,55; 12/6–8)*.

இதுபோலவே நிஷ்காம கர்மமும், உபாஸனையும்கூட ஞான நிஷ்டையின் பகுதிகளாக அமைந்துவிட முடியும் *(5/6; 14/26)*. ஆனால் ஞானயோகம் பகவானுடன் இரண்டற ஒன்றிவிடுகின்ற உபாஸனை. யோக நிஷ்டைக்கு அல்லது பக்தியோகத்திற்கு உதவியாக அது அமைய முடியாது. ஏனெனில் பக்தியோகத்திலும், கர்மயோகத்திலும் ஸாதகன் வேறு, பகவான் வேறு என்ற பாவனை ஊடுருவி நிற்கும். ஆனால் ஞான நிஷ்டையில் ஸாதனை புரிபவன் ஸாதனையின் நடுவில் தன் கருத்து மாறுவதாலோ, ஆர்வம் மாறுவதாலோ ஞான நிஷ்டையை விட்டுவிட்டு யோக நிஷ்டை புரிய ஆரம்பிக்கலாம். அது வேறு விஷயம்.

எவரேனும் கர்மயோக ஸாதனை புரிந்து பிறகு ஸாங்க்ய யோக ஸாதனை மூலம் ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவை அடைவதற்கு முறை என்ன என்று கேட்கலாம். இதை அறிந்து கொள்ளும் பொருட்டு, அது த்யாகம் என்ற பெயரால் ஏழு படிகளாகப் பிரித்துக் கூறப்பட்டுள்ளது. அவற்றை வரிசையாகப் பார்ப்போம்:–

## (1) தகாத செயல்களை முற்றும் துறத்தல்

திருட்டு, விபசாரம், பொய், கபடம், சூது, பலாத்காரம், ஹிம்ஸை, தகாததை உண்பது, தடுமாற்றம் முதலிய சாஸ்த்ரங்களில் தடுக்கப்பட்ட கீழ்ச் செயல்களை மனம், சொல், உடலினால் செய்யாமலேயே இருக்கவேண்டும். இது முதல் நிலையிலுள்ள த்யாகம்.

## (2) காம்ய (பயனில் ஆசை கொண்ட) கர்மங்களைத் துறத்தல்

மனைவி, மக்கள், செல்வம் முதலிய ப்ரியமான பொருட்களை அடைவதற்காகவும், நோய் முதலிய தொல்லைகள் நீங்குவதற்காகவும் செய்யப்படும் யாகம், தானம், தவம், உபாஸனை இவையெல்லாம் காம்ய கர்மங்கள். இவற்றைத் தன்னலம் கருதிச் செய்யாமல் இருக்கவேண்டும். இது இரண்டாவது நிலையிலுள்ள த்யாகம். ஆனால் உலகியலிலோ, சாஸ்த்ர முறைப்படியோ எதிர்பாராது வந்தமைந்த ஒரு கர்மம், பார்ப்பதற்குப் பயனைத் தரக்கூடியதாகத் தோன்றி, ஆனால் அதைச் செய்யாததால் யாருக்காவது கஷ்டமோ அல்லது

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கர்ம உபாஸனைத் தொடரில் எவ்விதமாவது இடையூறோ வருமேயானால், தன்னலத்தை விட்டுவிட்டு உலக நன்மைக்காக அதைச் செய்தால் அது காம்ய கர்மமன்று.

## (3) வேட்கையை முற்றும் துறத்தல்

ப்ராரப்தத்தின் வசமாக வந்து சேரும் மானம், தற்பெருமை, புகழ், மனைவி, மக்கள், செல்வம் முதலிய அநித்யமான பொருட்கள் மேன்மேலும் வளரவேண்டும் என்ற வேட்கை பகவானை அடைவதற்குத் தடை (இடையூறு) என்று உணர்ந்து, அவற்றை த்யாகம் செய்யவேண்டும். இது த்யாகத்தின் மூன்றாவது நிலை.

## (4) தன்னலத்திற்காகப் பிறரைத் தனக்குத் தொண்டு செய்யத் தூண்டுதலை ஒழித்தல்

தன்னுடைய ஸுகத்திற்காகப் பிறரிடம் செல்வம் முதலியவற்றையோ, அவர்களது ஊழியத்தையோ எதிர்பார்ப்பது, கேட்டுப் பெறுவது, கேட்காமல் இருந்தாலும் அவர்களாகக் கொடுப்பதை ஏற்றுக் கொள்வது, இவ்விதம் பிறரைக் கொண்டு தன் தேவைகளையும், விருப்பங்களையும் நிறைவேற்றிக் கொள்ள விரும்புவது – இவற்றை அறவே த்யாகம் செய்யவேண்டும். இது த்யாகத்தின் நான்காவது நிலையாகும்.

ஏதாவது ஒரு சமயத்தில் பிறர் நமக்கு உடலால் உழைக்க வேண்டிய வாய்ப்பு நேரலாம். அவர்கள் இடும் உணவை ஏற்கும்படி நேரலாம். அவற்றைத் தவிர்ப்பதால் எவருக்காவது மனத்தாங்கல் நேரிடலாம். அல்லது உலகிற்கான வழிமுறைகளில் இடையூறு ஏற்படலாம். அப்பொழுது தன்னலம் இல்லாது அவர்களுடைய த்ருப்திக்காக அவர்களுடைய ஊழியத்தை ஏற்றுக் கொள்வது தவறன்று. ஏனென்றால் மனைவி–மக்கள், சேவகர்களின் பணிகளைப் புறக்கணிப்பதோ, அவர்கள் அன்புடன் அளிக்கும் உணவு முதலியவற்றை ஏற்றுக் கொள்ளாமல் இருப்பதோ, அவர்கள் உள்ளத்திற்குக் கஷ்டத்தை விளைவிக்கலாம். உலகியல் நெறிமுறைகள் பாதிக்கப்படலாம்.

## (5) கடமைகளைச் செய்வதில் சோம்பலையும், பயனில் நாட்டத்தையும் அறவே விட்டொழித்தல்

பகவானிடம் பக்தி செலுத்துதல், தேவபூஜை, தாய்–தந்தையர் மற்றும் குருமார்களுக்குப் பணிவிடை, யாகம், தானம், தவம் முதலிய வர்ணாசிரமங்களை அனுஸரித்த கடமைகளையும், வாழ்க்கையை நடத்துவதற்கும், உடலைப் பேணுவதற்கும் உரிய உண்பது, அருந்துவது ஆகிய கடமைகளையும் ஆற்றும்போது சோம்பலுக்கு இடம் கொடுக்கக் கூடாது. சிறிதுகூடப் பயனைக் கருதக் கூடாது. இது த்யாகத்தின் ஐந்தாவது படி.

## (6) உலகியல் பொருட்கள், செய்கைகள் அனைத்திலும் மமதை, ஈடுபாடு இவையிரண்டையும் துறத்தல்

செல்வம், வீடு, துணிமணிகள், மனைவி–மக்கள், நண்பர்கள், சுற்றத்தார் மற்றும் மானம், தற்பெருமை, புகழ் என்ற பலவிதமான இவ்வுலக, பரலோக போகப் பொருட்கள் எத்தனை உண்டோ அத்தனையும் நொடியில் அழியக் கூடியவை, அநித்யமானவை என்றறிந்து, அவற்றில் அகந்தையும், நாட்டமும் இல்லாது ஒன்றேயான பரமாத்மாவிடம், தூயதான ப்ரேமையுடன் மனம், சொல், உடல் இவற்றின் மூலம் ஆக்கப் பெறும் செயல்களிலும், உடலின் மீதும் துளிகூட மமகாரமும், பற்றும் இல்லாதிருத்தல் த்யாகத்தின் ஆறாவது நிலையாம்.

இந்த ஆறாவது நிலையிலுள்ள த்யாகம் செய்தவருக்கு உலகியலில் உள்ள எல்லாப் பொருட்களிலும் வைராக்யம் உண்டாகி, அன்பே வடிவமாகிய பகவானிடம் அநன்ய ப்ரேமை உண்டாகும். ஆகவே, பகவானுடைய கல்யாண குணங்கள், ப்ரபாவங்கள், ரஹஸ்யங்கள் நிறைந்த தூயதான ப்ரேமையை விஷயமாகக் கொண்ட கதைகளைக் கேட்பது, சொல்வது,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மனனம் செய்வது, தனிமையில் அமர்ந்து இடைவிடாது பகவானை பஜனம் செய்வது, த்யானம் செய்வது, சாஸ்த்ரங்களின் மர்மங்களை ஆராய்வது ஆகியவற்றில் ஆவல் உண்டாகும். சிற்றின்பங்களில் ஈடுபட்டவர்களுடன் கூடி விளையாட்டு, கேளிக்கை, வேடிக்கை, அசட்டை, பிற நிந்தை, சிற்றின்ப போகம் முதலிய வீணான செயல்களில் தமது அருமையான விலைமதிப்பற்ற நேரத்தை ஒரு கணம்கூடச் செலவழிப்பது பிடிக்காமல் போகும். அவர்களுடைய செயல்கள் எல்லாம் பகவானுடைய ஸ்வரூபம், திருநாமங்கள் இவற்றின் சிந்தனையிலேயே விழைந்து பற்றின்றி பகவானுக்காக ஆனவையாகவே மலரும். இது கர்மயோக ஸாதனை. இந்த ஸாதனையைச் செய்யச் செய்ய ஸாதகன் பரமாத்மாவினுடைய அருளினால் பகவானுடைய ஸ்வரூபத்தைத் தத்வரீதியாக உணர்ந்து அழிவற்ற பரமபதத்தை அடைவான் (18/56).

ஸாங்க்யயோகத்தின் மூலம் பரமாத்மாவை ஒருவன் அடைய விரும்பினாலும், மேலே சொன்ன ஸாதனைகளைப் புரிந்த பிறகு கீழே கூறப்படும் ஏழாவது நிலையில் உள்ள முறைப்படி ஸாங்க்யயோக ஸாதனை புரியவேண்டும்.

## (7) உலகியல், உடல், கர்மங்கள் இவற்றின் நுண்ணிய வாஸனைகளையும் (முன் தொடர்புகளையும்), அஹம்பாவத்தையும் (நான் எனும் எண்ணத்தையும்) முற்றும் துறத்தல்

உலகியல் பொருட்கள் அனைத்தும் மாயையின் செயற்பாடுகளே. எனவே அநித்யமானவை. ஒன்றேயான ஸத் சித் ஆனந்தமயனான பரமாத்மாதான் எங்கும் ஸமமாக நிறைந்திருக்கிறார் என்ற திடநிச்சயம் கொண்டு உடல் உட்பட எல்லா உலகியல் பொருட்களிலும், செயல்களிலும் ஏற்பட்டிருக்கும் வாஸனைகள் வெளிப்படையாக மறைந்தாலும், உள்ளே ஒட்டிக் கொண்டிருக்கும் நுண்ணிய வாஸனைகளை அறவே ஒழிக்கவேண்டும். உள்ளத்தில் மனப்பதிவாகப் பதிந்திருக்கும் அவற்றின் சித்திரங்களையும் அழிக்கவேண்டும். உடலிலும் தான் என்ற அஹங்காரம் அழியவேண்டும். மனம், சொல், உடல்களால் ஆக்கப் பெறுகின்ற செயல்களுக்கு நான் கர்த்தா அல்லவே அல்ல என்று உறுதியான எண்ணம் கொள்ளவேண்டும். இவ்விதம் வாஸனையையும், அஹங்காரத்தையும் துறந்து ஒன்றேயான ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்ம ஸ்வரூபத்தில் இரண்டற ஒன்றாக இடைவிடாது ஒன்றியிருக்கவேண்டும். இது த்யாகத்தின் ஏழாவது நிலை.

இவ்விதம் ஸாதனை புரியும் ஒரு ஸாதகன், அதே நேரத்தில் ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவை ஸுகமாக அடைகிறான் (6/28). மேலே சொன்னவிதம் கர்மயோகத்தைக் கடைப்பிடிக்காமல் நேரே ஆரம்பத்திலேயே ஸாங்க்யயோக ஸாதனையில் இறங்குபவன் பரமாத்மாவை மிகவும் அல்லல்பட்டு அடைகிறான்.

'ஸந்ந்யாஸஸ்து மஹாபா₃ஹோ து₃:க₂மாப்துமயோக₃த:' (5/6)

இங்கே ஒரு கேள்வி. ஒரு ஸாதகன் ஒரே நேரத்தில் இரண்டு நிஷ்டைகளையும் கடைப்பிடிக்க முடியுமா, முடியாதா? முடியாதென்றால் ஏன்? இதற்குப் பதில் – ஸாங்க்யயோகம், கர்மயோகம் இரண்டையும் ஒரே நேரத்தில் ஒருவரால் கடைப்பிடிக்க முடியாது. ஏனெனில் கர்மயோகி கர்மத்தில் ஈடுபடும்போது கர்மத்தையும், கர்ம பயனையும், பரமாத்மாவையும், தன்னையும் வெவ்வேறென மதித்துக் கர்மத்தின் பயனையும், பற்றையும் மனப்பூர்வமாக த்யாகம் செய்து, பகவானுக்காக என்றோ அல்லது பகவானுக்கு அர்ப்பணம் என்ற எண்ணத்தாலோ கர்மத்தைச் செய்கிறான் (3/30; 5/10; 11/55; 12/10; 18/56,57). ஸாங்க்யயோகியோ மாயையில் உண்டான குணங்கள் எல்லாமே குணங்களில் இயங்குகின்றன. அல்லது புலன்கள் புலன்களின் பொருட்களில் ஈடுபடுகின்றன என்று எண்ணி மனதாலும், உடலாலும், புலன்களாலும் ஆக்கப்பெறும் செயல்களுக்குத் தான் கர்த்தா என்ற அஹந்தை இல்லாது, எங்கும் நிறை பரம்பொருளான பரமாத்மாவிடம் இரண்டறக் கலந்து நிற்கிறான் (3/28; 5/13; 13/29; 14/19,20; 18/49–55). கர்மயோகி தன்னைக் கர்த்தாவாகக் கணிக்கிறான்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



(5/11). ஸாங்க்யயோகி தன்னைக் கர்த்தா என்று நினைப்பதில்லை (5/8,9). கர்மயோகி தான் செய்யும் கர்மங்களை பகவானுக்கு அர்ப்பணம் செய்கிறான் (9/27,28). ஸாங்க்யயோகியோ மனம், புலன்களினால் நடைபெறும் அஹந்தை இல்லாச் செயல்களைக் கர்மம் என்றே ஏற்பதில்லை (18/17). கர்மயோகி பரமாத்மாவைத் தன்னிலிருந்து வேறாக மதிக்கிறான் (12/10). ஸாங்க்யயோகி எப்போதும் பேதமற்ற நிலையை மதிக்கிறான் (18/20). கர்மயோகி ப்ரக்ருதியையும், ப்ரக்ருதியில் உண்டானவற்றையும் இருப்பதாக ஏற்கிறான் (18/61). ஸாங்க்யயோகி ப்ரம்மம் தவிர வேறொன்றுக்கும் 'இருப்பு' உள்ளதென்று நினைப்பதில்லை (13/30). கர்மயோகி கர்மம் உண்டு, கர்மத்திற்குப் பயன் உண்டு என்று நினைக்கிறான். ஸாங்க்யயோகியோ ப்ரம்மம் தவிரக் கர்மமோ, கர்மத்தின் பயனோ கிடையாது என நினைக்கிறான். அப்படித் தோன்றுவனவற்றில் தனக்கு ஸம்பந்தம் இல்லை என நினைக்கிறான். இவ்விதம் இருவருக்கும் மதிப்பீட்டிலும், ஸாதனை முறையிலும் கிழக்கு, மேற்கு போன்ற பெருத்த இடைவெளி உண்டு. இந்த நிலையில் இரண்டு நிஷ்டைகளையும் ஒரே நேரத்தில் ஒரு மனிதன் பின்பற்றுவது என்பது முடியாத செயல். ஒருவன் பாரத பூமியிலிருந்து நியூயார்க் போக வேண்டுமானால் ஒன்று கிழக்கு முகமாகவே செல்ல வேண்டும். அல்லது மேற்கு முகமாகவே சென்று கொண்டிருந்தாலும் நியூயார்க்கை அடையலாம். அதுபோலவே ஸாங்க்யயோகிக்கும், கர்மயோகிக்கும் ஸாதனை முறைகளில் வேறுபாடு இருந்தாலும் ஏதாவது ஒன்றை விடாது பிடித்துக் கொண்டு முன்னேறினால் இருவருமே ஒரே லக்ஷ்யமான பரமாத்மாவை விரைவில் அடைந்து விடலாம் (5/4).

## அதிகாரி (தகுதிபெற்றவர்)

கீதையில் சொல்லப்படும் ஸாங்க்யயோகத்தையும், கர்மயோகத்தையும் கடைப்பிடிக்கும் தகுதியுள்ளவர் யார் என்ற கேள்வி எழுகிறது. எல்லா வர்ணங்களிலும், எல்லா ஆசிரமங்களிலும் உள்ளவர்களும், எல்லா ஜாதியினரும் இவற்றைக் கடைப்பிடிக்கலாமா அல்லது குறிப்பிட்ட வர்ணத்தார், ஆசிரமத்தார், ஜாதியினர்தான் இந்த ஸாதனைகளைப் புரிய முடியுமா? கீதையில் காட்டப்பட்டுள்ள வழிமுறை எல்லாவிதங்களிலும் இந்திய நாட்டைச் சார்ந்ததாகவும், பண்டைய முனிவர்களால் கைக்கொள்ளப்பட்டதாகவும் இருப்பினும், கீதையின் போதனைகளைப் பற்றிச் சிந்தித்துப் பார்த்தால், கீதை கூறும் ஸாதனைகளின்படி ஒழுகுவதற்குத் தகுதி மனித குலம் முழுவதற்குமே உண்டு என்பது விளங்கும். ஜகத்குருவான பகவான் செய்த உபதேசம் மனித இனத்திற்கே உரியது. குறிப்பிட்ட வர்ணத்தாருக்கோ, ஆசிரமத்தாருக்கோ குறிப்பாகச் சொல்லப்பட்டதன்று. இதுதான் கீதையின் தனிச்சிறப்பு. பகவான் ஆங்காங்கு தன் உபதேசத்தினிடையே 'மாநவ:', 'நர:', 'தேஹப்ருத்', 'தேஹீ' என்ற மனிதர்க்குரிய பொதுவான சொற்களையே உபயோகித்து இதைத் தெளிவாக விளக்கி இருக்கிறார். ஸாங்க்யயோகத்தின் முக்ய ஸாதனை பற்றிப் பேசும்போது, பகவான் 'தேஹீ' என்று சொல்லி மனிதர் எல்லோருக்கும் அதற்குத் தகுதியுண்டு என்று காட்டுகிறார் (5/13). இதுபோலத் தெளிவான சொற்களால், 'மனிதன் தனக்கு சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளை ஆற்றி நீக்கமற நிறைந்து நிற்கும் பரமாத்மாவை அடையலாம்' என்கிறார் (18/46). அதுபோலப் பெண்கள், நான்காம் வர்ணத்தவர், ஈனப்பிறவியில் பிறந்தவர்கூட பக்தி செய்யத் தகுதியுள்ளவர் என்கிறார் (9/32). பகவான் தனிப்பட்ட ஸாதனை பற்றிப் பேசுகிற போதும், அந்த ஸாதனையைப் பற்றிக் குறிப்பிடும் இடங்களிலும், ஏதோ ஒரு வர்ணத்தாருக்கோ, ஆசிரமத்தாருக்கோ, ஜாதிக்காரருக்கோதான் தகுதியுண்டு; மற்றவர்க்கில்லை என்று சொல்லவே இல்லை.

இவ்வளவு சொன்ன பிறகும் ஒன்று நினைவில் இருக்க வேண்டும். எல்லாக் கர்மங்களும் எல்லோருக்கும் பயன்படுவன அல்ல. அதனால்தான் பகவான் வர்ண தர்மத்தை வலியுறுத்திச் சொல்கிறார். எந்த வர்ணத்திற்கு எந்தக் கடமை விதிக்கப்பட்டதோ, அதை அந்த வர்ணத்தாரே

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கடைப்பிடிக்க வேண்டும். மற்றவர் செய்யக் கூடாது. இதை மனதில் வைத்துக் கவனத்துடன் கர்மத்தைச் செய்யவேண்டும். இவ்வாறு வர்ண தர்மத்தின்படி விதிக்கப்பட்ட கடமைகளைத் தத்தம் தகுதிக்கும், விருப்பத்திற்கும் ஏற்ப மனிதர் எல்லோரும் ஆற்றவேண்டும். வர்ண தர்மத்தைத் தவிரவும் பிற மனிதப் பண்புகள் – நன்னடத்தை, பகவத் பக்தி ஆகிய வழிமுறைகளையும் எல்லோரும் கடைப்பிடிக்க வேண்டும்.

ஸாங்க்யயோக ஸாதனை புரிவதற்கான தகுதி ஸந்யாஸிகளைத் தவிர மற்ற ஆசிரமத்தாருக்குக் கிடையாது என்று சிலர் நினைக்கிறார்கள். இது யுக்திக்குப் பொருந்தாது. பகவான் ஸாங்க்யயோக நோக்கிலும்கூடப் போர் புரியுமாறு அர்ஜுனனுக்கு ஆணையிடுகிறார் *(2/18)*. ஸாங்க்யயோகம் ஸந்யாஸிக்கு மட்டும்தான் உகந்தது என்று பகவான் நினைத்திருந்தால் அர்ஜுனனை அந்த நிலையில்கூடப் போர் புரிய ஆணையிட்டிருக்க மாட்டார். ஸந்யாஸ ஆசிரமத்தில் உள்ளவர்கள் எந்தவிதக் கர்மங்களையும் செய்யவேண்டாம் என்னும்போது போர் என்ற கோரச் செயலைப் பற்றிய ப்ரஸ்தாபம் எப்படி வரும்? அர்ஜுனனோ ஸந்யாஸி அல்லர். அவனைப் பார்த்து ஞானிகளிடம் சென்று ஞானம் பெறுவாயாக என்று உபதேசிக்கிறார் *(4/34)*.

மேலும் 3/4ல் கர்மங்களைச் செய்யாமல் துறப்பதால் ஸாங்க்யயோகம் கைகூடாது என்று கூறுகிறார். ஸாங்க்யயோகத்திற்குத் தகுதியுள்ளவர் ஸந்யாஸிகள் மட்டும்தான் என்று பகவான் நினைத்திருந்தால் ஸாங்க்யயோகி கர்மங்களைச் செய்யாமல் விட்டுவிட வேண்டும் என்று கூறியிருப்பார். கர்மங்களைச் செய்யாமல் விட்டால் மட்டும் ஸாங்க்யயோகம் கூடி வராது என்று கூறியிருக்க மாட்டார். இது மட்டுமன்று. 13/7 முதல் 11 வரை ஞான ஸாதனை பற்றிக் கூறும்போது மனைவி–மக்கள், செல்வம், வீடு இவற்றில் பற்றையும், மமகாரத்தையும் த்யாகம் செய்வதை ஒரு ஸாதனையாகச் சொல்கிறார் – **'அஸக்திரநபி₄ஷ்வங்க₃: புத்ரதா₃ரக்₃ருஹாதி₃ஷு'**. மனைவி–மக்கள், செல்வம், வீடு இவற்றில் தொடர்பு இருந்தால்தானே, அவற்றைக் குறித்த பற்று மற்றும் மமதை இவற்றை த்யாகம் செய்ய வேண்டும் என்று சொல்ல வேண்டி வரும். ஸந்யாஸ ஆசிரமத்தில்தான் இவற்றின் தொடர்பு கிடையாதே! இந்த நிலையில் ஸந்யாஸிகளுக்கு மட்டும்தான் ஞானயோக ஸாதனையில் தகுதி உண்டு என்றால், அவர்களுக்கு இந்தப் பற்று, மமகாரம் ஆகியவற்றை த்யாகம் செய்யவேண்டும் என்று சொல்லத் தேவையில்லை.

மூன்றாவது விஷயம் – பதினெட்டாவது அத்யாயத்தில் அர்ஜுனன் முக்யமாக ஸந்யாஸம், த்யாகம் இவற்றைப் பற்றிக் கேள்வி கேட்கிறார். அங்கு ஸந்யாஸம் என்ற இடத்தில் ஸாங்க்யயோகத்தையே வர்ணிக்கிறார் *(13 முதல் 40 வரை)*. ஸந்யாஸ ஆசிரமத்தைப் பற்றிய பேச்சே இல்லை. ஸந்யாஸம் என்ற சொல்லுக்கு ஸந்யாஸ ஆசிரமம் என்ற பொருளோ அல்லது ஸாங்க்யயோகத்திற்குத் தகுதி பெற்றவர் ஸந்யாஸிதான் என்ற எண்ணமோ, பகவானிடம் இருந்திருந்தால் அதை இங்கு அவர் தெளிவாகச் சொல்லியிருப்பார். ஆகவே ஸாங்க்யயோகத்தில் ஈடுபடுவதற்கு ஸந்யாஸி, இல்லறத்தார் இருவருக்கும் தகுதி ஸமம்தான் என்பது தெளிவு. ஸாங்க்யயோக ஸாதனை புரிவதற்கு ஸந்யாஸ ஆசிரமத்தில் ஸௌகர்யங்கள் அதிகம். இந்த நோக்கில் இல்லறத்தைக் காட்டிலும் ஸாங்க்யயோக ஸாதனை புரிவதற்கு ஸந்யாஸ ஆசிரமம் அதிகப் பொருத்தமானது என்று கூற இயலும்.

கர்மயோக ஸாதனையில் கர்மம் முக்யமானது. தனது வர்ணத்திற்கு ஏற்பட்ட கடமைகளை ஆற்றியே தீரவேண்டும் என்ற கட்டாயம் உண்டு *(3/8; 18/45,46)*. அது மட்டுமன்று. கடமைகளை ஆற்றாமல் விடுவது கர்மயோகத்திற்குத் தடை ஆகும் *(3/4)*. ஆகவே ஸந்யாஸ ஆசிரமத்தில் கர்மத்திற்கு முக்யத்வம் உள்ள கர்மயோகத்தைக் கடைப்பிடிப்பது ஸாத்யமன்று. ஏனெனில் ஸந்யாஸ ஆசிரமத்தில் பொருட்களையும், யாகம், தானம் முதலிய கர்மங்களையும் துறக்க வேண்டியிருக்கிறது. ஆனால் பகவானை பக்தி செய்வது எல்லா ஆசிரமங்களிலும் முடியும். எனவே, பக்தியை முக்யமாகக் கொண்ட கர்மயோகத்தை எல்லா ஆசிரமத்தாரும் கடைப்பிடிக்கலாம்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



சிலருக்கு கீதை பற்றி ஒரு தவறான எண்ணம் இருக்கிறது. கீதை ஸாதுக்களுக்கும், ஸந்யாஸிகளுக்கும்தான் உரியது. அது இல்லறத்தாருக்கு உபயோகப்படாது என்று நினைத்து கீதையைப் படித்துவிட்டு இல்லறத்தைத் துறந்து விடுவார்களோ என்று பயந்து சிறுவர்களுக்கு கீதை கற்றுத்தர அஞ்சுகிறார்கள். இது முற்றிலும் தவறான கருத்து. மேலே சொன்னவற்றைக் கவனித்தால் இது தவறு என்பது புரியும். மோஹத்தின் காரணமாக தம்முடைய க்ஷத்ரிய தர்மத்தை விடுத்துப் பிச்சை எடுத்துப் பிழைப்பேன் என்று துணிந்துவிட்ட அர்ஜுனனுக்கு இந்த ரஹஸ்யம் நிறைந்த கீதையை உபதேசம் செய்து, பகவான் அர்ஜுனனை வாழ்க்கை முழுவதும் இல்லறத்தில் ஈடுபடுத்திக் கடமைகளை ஆற்றச் செய்தார் என்றால் இந்த கீதையில் இத்தகைய விபரீதமான கருத்து எப்படி இருக்க முடியும் என்பதை ஆலோசிக்க வேண்டும். இது மட்டுமன்று. கீதையை உபதேசித்த பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் இந்த பூமியில் அவதாரம் எடுத்து, தாம் இருந்தவரை கடமைகளைச் சரிவர ஆற்றி வந்தார். நல்லோரைக் காத்துத் தீயோரை மாய்த்துக் கரையேற்றி, அறம் ஓங்கச் செய்தார். தர்மத்தை நிலைநாட்டினார். அது மட்டுமன்று. அவரே கூறுகிறார்: "நான் கவனமாகக் கடமைகளை ஆற்றாமல் விட்டால் மக்கள் என்னைப் பின்பற்றித் தம் கடமைகளை ஆற்றாது சோம்பேறிகளாகி விடுவர். உலகக் கட்டுக்கோப்பு சீர்குலைந்துவிடும். அதற்கான பொறுப்பு என் தலை மீது விழும்" *(3/23,24)* என்கிறார். இதிலிருந்து கீதை ஸந்யாஸிகளுக்காக மட்டும் ஏற்பட்டதன்று. எல்லா வர்ணத்தாருக்கும், ஆசிரமத்தாருக்கும் பொதுவானது என்பது புரியும். எல்லோரும் தத்தம் வர்ணாசிரமத்திற்குரிய கடமைகளைக் கடைப்பிடித்து ஸாங்க்யம் அல்லது யோகம் என்ற இரண்டு நிஷ்டைகளில் தமது தகுதிக்கேற்றவாறு ஒன்றில் நிலைத்து ஸாதனை புரியவேண்டும் என்பதுதான் முடிவு.

## கீதையில் பக்தி

கீதையில் பக்தி, ஞானம், கர்மம் அனைத்துமே தெளிவாக ஆராயப்பட்டுள்ளன. எல்லா வழிகளிலும் செல்பவர்களுக்கு இங்கு விருப்பம்போல வேண்டியன கிடைக்கும். ஆனால், அர்ஜுனன் பகவானுடைய பக்தன். எல்லா விஷயங்களையும் விளக்குகின்ற பகவான், பக்தி ப்ரதானமான கர்மயோகத்தைத்தான் அர்ஜுனன் கடைப்பிடிக்க வேண்டுமென்று வலியுறுத்துகிறார் *(3/30; 8/7; 12/8; 18/57,62,65,66)*. சிற்சில இடங்களில் கர்மத்தைச் செய்யவேண்டும் என்றும் கூறுகிறார் *(2/48,50; 3/8,9,19; 4/42; 6/46; 11/33,34)*. அங்கு கூடப் பிற இடங்களிலிருந்து பக்தியை இணைத்துக் கொள்ளத்தான் வேண்டும். 4/34ல் அர்ஜுனனை பகவான் ஞானிகளிடம் சென்று ஞானம் பெற்றுக் கொள் என்று கூறும் போதும் ஞானத்தைப் பெறும் முறையை அர்ஜுனனுக்கு எச்சரிக்கையாகவே கூறுகிறார். உண்மையில் பகவானுடைய எண்ணம் அர்ஜுனன் வேறொருவரிடம் சென்று ஞானம் பெற்று வரவேண்டும் என்பதற்காக அவரை அனுப்புவது அன்று. அர்ஜுனனும் எங்கும் சென்று ஞானம் பெற்று வரவில்லை. ஆரம்பம், முடிவு (உபக்ரமம், உபஸம்ஹாரம்) என்ற வகையில் பார்த்தாலும் கீதையின் முடிவு ஶரணாகதியில்தான் உள்ளது. அதற்காகவே 'அஶோச்யாநந்வஶோசஸ்த்வம்' *(2/11)* என்று கீதா உபதேசத்தை ஆரம்பிக்கிறார். இந்த ஆரம்பத்தின் வித்து 'கார்பண்யதோ³ஷோபஹதஸ்வபா⁴வ:' *(2/7)* என்கிற அர்ஜுனனின் கூற்றில் உள்ளது. 'ப்ரபந்நம்' *(2/7)* என்பதில் ஶரணாகதியின் பொருள் தெளிவாகத் தெரிகிறது. ஆகவே 'ஸர்வத⁴ர்மாந் பரித்யஜ்ய' *(18/66)* என்று ஶரணாகதியில்தான் தம் உபதேசத்தை நிறைவு செய்கிறார்.

கீதையில் பக்தியைப் பற்றிப் பேசாத ஓர் அத்யாயம் கூடக் கிடையாது. (உ-ம்) *2/61; 3/30; 4/11; 5/29; 6/47; 7/14; 8/14; 9/34; 10/9; 11/54; 12/2; 13/10; 14/26; 15/19; 16/1* (இதில் 'ஜ்ஞாநயோக³வ்யவஸ்தி²தி:' என்று பகவான் த்யானம் செய்வது பற்றிச் சொல்கிறார்), *17/27; 18/66.* ஒவ்வொரு அத்யாயத்திலும் பக்தி பற்றிச் சொல்கிறார். அத்யாயம் ஏழு முதல் பன்னிரண்டு வரை பக்தியோகமே நிறைந்து இருக்கிறது. ஆகவே, அந்த ஆறு அத்யாயங்களை மட்டும் பக்தி ப்ரதானம் என்றே கூறுகின்றனர். இங்கு உதாரணத்திற்காக ஒவ்வொரு அத்யாயத்திலும் ஒவ்வொரு ச்லோகம் எடுத்துக் காட்டப்பட்டது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இவ்விதம் ஞானத்தைப் பற்றிச் சிறப்பாகப் பேசும் ச்லோகங்களும் பல அத்யாயங்களில் வருகின்றன. உதாரணமாக 2/29; 3/28; 4/24; 5/13; 6/29; 8/13; 9/15; 12/3; 13/34; 14/19; 18/49 – இந்த ச்லோகங்களைக் கவனிக்கவும். இவற்றோடு 2,5,13,14,18வது அத்யாயங்களில் ஞானம் பற்றிச் சிறப்புரைகள் அதிகம் காணக் கிடைக்கின்றன.

கீதையில் பக்தியையும், ஞானத்தையும் பற்றிய ரஹஸ்யங்கள் வெளிப்படுத்தப்பட்டுள்ள அளவு கர்மத்தின் ரஹஸ்யங்களும் வெளிப்படையாகச் சொல்லப்பட்டுள்ளன. 2/39–53, 3/4–35, 4/13–32, 5/2–7, 6/1–4 ஆகிய ச்லோகங்களில் கர்மத்தின் ரஹஸ்யங்களே நிரம்பியுள்ளன. அதிலும் 2/47, 4/16,17,18 ஆகிய ச்லோகங்களில் கர்ம ரஹஸ்யம் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளது. மற்ற இடங்களிலும் கர்மத்தைப் பற்றிய விவரங்களைக் காணலாம்.

இங்கு முன்னுரையில் அதிக இடமின்மையால் மேலும் சான்றுகள் காட்டப்படவில்லை. கீதையில் பக்தி மட்டுமன்று. ஞானம், கர்மம், பக்தி மூன்றுமே நன்றாக விளக்கப்பட்டுள்ளன.

## ஸகுண–நிர்குண உபாஸனையும், தத்வமும்

தான் வேறு பரமாத்மா வேறு என்று நினைத்தும் உபாஸனை செய்யலாம். தானும், பரமாத்மாவும் ஒன்றே என்றும் உபாஸனை செய்யலாம். இரண்டுக்கும் பயன் ஒன்றுதான் என்று முன்பே சொன்னோம். பகவானை வேறு என்று உபாஸிப்பவனுக்கு பகவான் உருவம் உள்ளவராக தர்சனம் அளிக்கிறார். இவ்வுடல் பிரிந்த பிறகு பக்தன் பகவானின் பரமபதத்தை அடைவான். ஆனால் அபேத பாவனையுடன் உபாஸனை புரிபவன், தானே ப்ரம்மம் ஆகிவிடுகிறான். அவன் போவதும் இல்லை, வருவதும் இல்லை என்று சொன்னால் இரண்டுக்கும் பயன் ஒன்றுதான் என்று எப்படிச் சொல்ல முடியும் என்ற கேள்வி உண்டு. கேள்வியும் சரிதான். அதற்குப் பதிலும் உண்டு. இரண்டையும் எப்படிப் பொருத்துவது என்பதை இனி விவரிப்போம்.

ஸாதனைக் காலத்தில் ஸாதகன் எந்த மனப்பாங்குடனும், ச்ரத்தையுடனும் பரமாத்மாவை உபாஸிக்கிறானோ, அதை அனுஸரித்து அவன் பரமாத்மாவை அடைகிறான். இரண்டறக் கலந்து தன்னையே பரமாத்மாவாகப் பாவித்து உபாஸனை செய்பவனுக்கு இரண்டறக் கலந்துவிட்ட ப்ரம்மநிலை கிடைத்துவிடுகிறது. பகவான் உபாஸிக்கப்பட வேண்டியவர், வேறானவர் என்று கருதி உபாஸிப்பவனுக்கு பகவானும் தனியாக நின்று காட்சியருளுகிறார். ஸாதகனுடைய கொள்கைப்படி பகவான் வெவ்வேறு ஸ்வரூபங்களில் அவனால் அடையப் பெறுகிறார்.

பேத உபாஸனை, அபேத உபாஸனை இரண்டுமே பகவானுக்குரிய உபாஸனைகள்தாம். ஏனெனில், பகவான் ஸகுணர்–நிர்குணர், உருவமுள்ளவர்–உருவமற்றவர், வெளிப்பட்டவர்–தோன்றா நிலையிலிருப்பவர். எல்லாமே அவர்தான். பரமாத்மாவை நிர்குணர் என்றும், உருவமற்றவர் என்றும் நினைப்பவனுக்கு அப்படியே விளங்குகிறார் (12/3). ஸகுணர் ஆனால் உருவமற்றவர் என்பவனுக்கு அப்படியே விளங்குகிறார் (8/9). ஸர்வவல்லமை படைத்தவர்; எல்லாவற்றிற்கும் ஆதாரமானவர்; எங்கும் நிறைந்தவர்; எல்லோரையும்விடச் சிறந்தவர்; எல்லாவித கல்யாண குணங்களும் நிறைந்தவர் (15/15,17,19‡) என்று நினைப்பவர்களுக்கு ஸகல குணங்களும் நிறைந்தவராகக் காட்சி அளிக்கிறார். எவன் பகவானை எல்லாமாகவும் கொண்டாடுகிறானோ, அவனுக்கு அவர் எல்லாமானவர் (7/7–12; 9/16–19). எவன் பகவானை ஸகுணராகவும், உருவமுள்ளவராகவும் பாவிக்கிறானோ, அவனுக்கு பகவான் அந்தந்த உருவமுள்ளவராகக் காட்சி அளிக்கிறார் (4/8, 9/26).

மேலே கூறியது பொருத்தம்தான். ஆயினும் அடிப்படைக் கேள்விக்குச் சரியான பதில் சொல்லவில்லை. ஸந்தேஹம் அப்படியே தொடர்கிறது. பகவான் வெவ்வேறு ரூபங்களில் தர்சனம் கொடுப்பாரானால் எல்லோருக்கும் ஒரேவிதமான பயன் என்பது எப்படிப்

‡ மேலே சொன்ன ச்லோகங்களில் பகவானுடைய சிறப்பான பண்புகள் வர்ணிக்கப்படுகின்றன. அதனால்தான் 15/15ன் உரையில் 'அபோஹநம்' என்ற சொல்லுக்குப் பொருள் அறிவு. நினைவு இவற்றின் அழிவு என்று கூறாமல் ஸந்தேஹம், விபரீத எண்ணங்களைப் போக்குதல் என்று கூறுகிறோம்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொருந்தும் என்பதுதான் ஸந்தேஹம். இதற்குப் பதில் பரமாத்மா ஸாதகனுக்கு அவனுடைய மனப்பாங்குக்கு ஏற்றவாறு அருள்வார். பிறகு, பகவானுடைய உண்மையான தத்வத்தை அறிந்த பிறகு அதை வாய்விட்டுச் சொல்ல முடியாது. சொற்களால் விவரிக்க முடியாது. பேதமாகவோ, அபேதமாகவோ எவ்விதமாகப் பரமாத்மாவை உபாஸித்தாலும், அதன் முடிவான பயன் ஒன்றாகத்தான் இருக்க முடியும். இதைத் தெளிவாகத் தெரிவிக்கவே பகவான் அபேத உபாஸகர்களுக்குத் தம்மை அடைவது பயன் என்று கூறினார் (12/4; 14/19; 18/55). பேதோபாஸனை செய்பவன் ப்ரம்மத்தை அடைவான் என்றார் (14/26). நிரந்தரமான அமைதியை அடைவான் (9/31). ப்ரம்மத்தை அறிவான் (7/29). அழிவற்ற சாச்வதப் பதத்தை அடைவான் (18/56) என்றெல்லாம் கூறினார். அபேத உபாஸனைக்கும், பேத உபாஸனைக்கும் ஒரே பயன்தான் என்பதைத்தான் இப்படிப் பல முறைகளில் சொன்னார்.

பேதோபாஸகனோ, அபேதோபாஸகனோ அடையவேண்டிய நிலை – உண்மைப் பொருள் ஒன்றுதான். அதைத்தான் பரமஶாந்தி, ஶாஶ்வத நிலை (18/62), பரமதாமம் (15/6), அம்ருதம் (13/12), மாம் (என்னை) (9/34), பரமகதி (8/13), ஸம்ஸித்தி (18/45), அவ்யயபதம் (அழிவற்ற இடம்) (15/5), ப்ரஹ்ம நிர்வாணம் (5/24), நிர்வாண பரமஶாந்தி (6/15) என்று ஆங்காங்கே தனித்தனிப் பெயரிட்டு அழைக்கிறார். இவற்றைத் தவிர வேறு சொற்களும் கீதையின் அந்த முடிவான பயனைக் குறிப்பிடப் பயன்படுத்தப்படுகின்றன. எல்லா ஸாதனைகளுக்கும் பயன் அந்தப் பரம்பொருள் என்று சொல்வதைத் தவிர வேறு ஒன்றும் சொல்ல இயலாது. அது சொல்லுக்கு அப்பாற்பட்டது. அதை அடைந்தவருக்குத்தான் அது என்ன என்பது தெரியும். அவரும் வாய்விட்டுச் சொல்ல முடியாது. அதோ என்று மரக்கிளையில் (இல்லாத) சந்த்ரனைக் காண்பிப்பதுபோல, அதன்பால் திசைகாட்டத்தான் முடியும். ஆகவே, எல்லா ஸாதனைகளாலும் பெறக்கூடிய பயனான முக்யப் பொருள் அந்த பரமாத்மா ஒருவர்தான் என்பது யுக்திக்கும் பொருத்தம்தான்.

பரமாத்மாவின் இந்த உண்மைத் தத்வம் உலகியலுக்கு அப்பாற்பட்டது; மிகவும் ரஹஸ்யமானது; மறைத்துப் போற்றப்பட வேண்டியது. யார் அதை அடைந்துவிட்டாரோ அவர் அதை அறிவார். இப்படிச் சொல்வதுகூட அதைப் பற்றித் திசை காட்டுவதுதான். யுக்தியுடன் ஆராய்ந்து பார்த்தால் இப்படிச் சொல்வதும் பொருந்தாது.

## கீதையில் ஸமபாவனை

கீதையில் ஸமபாவனை முக்யமாகப் பேசப்படுகிறது. பகவானை அடைந்தவனுடைய உரைகல் இந்த ஸமபாவனைதான். ஞானம், கர்மம், பக்தி என்ற மூன்று வழிகளிலும் ஸாதனைக்கு அவசியமானது ஸமபாவனைதான். இந்த மூன்று வழிகளாலும் பரமாத்மாவை அடைந்துவிட்டவர்களுக்குத் தனிப்பட்ட இலக்கணம் இந்த ஸமபாவனைதான். ஸாதனையும் ஸமபாவனையில்லாமல் பூர்த்தியாகாது. அது இல்லாமல் ஸித்தியும் ஏற்படாது. ஸமபாவனை இல்லாதவன் எப்படி ஸித்தன் ஆகமுடியும்? 'ஸமது$_3$:க$_2$ஸுக$_2$ம்' என்ற சொல்லைக் கொண்டு ஞானமார்க்க ஸாதகர்களில் ஸமபாவனை உள்ளவருக்குத்தான் அம்ருதத்வம் (இறவாப் பெருநிலை) கிடைக்கும் (2/15) என்று சொல்லப்படுகிறது. அவன்தான் முக்திக்குத் தகுதி பெறுகிறான் என்கிறார். 'ஸித்$_3$த்$_4$யஸித்$_3$த்$_4$யோ: ஸமோ பூ$_4$த்வா ஸமத்வம் யோக$_3$ உச்யதே' (2/48). ஸித்தி, அஸித்திகளில் ஸமமாக இருக்கவேண்டும். ஸமத்வமேதான் யோகம் என்று கர்மயோக ஸாதனை புரிபவரும் ஸமபாவனையுடன் கர்மம் செய்யவேண்டும் என்று ஆணையிடுகிறார். பக்திமார்க்க ஸாதகரும் இந்தப் பண்புகளை மேற்கொள்ள வேண்டும் என்று கூறுகிறார் (12/20). இவ்விதமே குணாதீதனான ஸித்த ஞானயோகியின் இலக்கணங்களில் ஸமத்வத்தை முக்யமாகக் கூறியுள்ளார் (14/24,25). ஸித்த கர்மயோகியைத்தான் ஸமபுத்தியுள்ளவன் என்கிறார் (6/7–9). ஸித்த பக்தர்களின் இலக்கணத்திலும் ஸமத்வம் காணப்படுகிறது (12/18,19). இந்த ஸமபாவனை என்ற தத்வத்தை எளிய முறையில் புலப்படுத்துவதற்காக பகவான் கீதையில் எல்லா ப்ராணிகளிலும், செயல்களிலும், மனப்பாங்கிலும், பொருட்களிலும் ஸமபாவனையைப் பலவிதமாக விளக்கி இருக்கிறார். அதாவது—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



## மனிதர்களிடையே ஸமத்வம்

ஸுஹ்ருந்மித்ரார்யுதா₃ஸீநமத₄யஸ்த₂த்₃வேஷ்யப₃ந்து₄ஷு ।
ஸாது₄ஷ்வபி ச பாபேஷு ஸமபு₃த்₄திர்விஶிஷ்யதே ॥ (6/9)

நண்பர்கள், பகைவர்கள், ஒருசார்பற்றவர், நன்மனம் படைத்தவர், நல்லோர், மத்தியஸ்தர், வெறுக்கத்தக்கவர், உறவினர்கள், தீயோர்கள், இவர்களிடமும்கூட ஸமபாவனை வைத்திருப்பவன் சாலச் சிறந்தவன்.

## மனிதர்களிடமும், விலங்குகளிடமும் ஸமபாவனை

வித்₃யாவிநயஸம்பந்நே ப்₃ராஹ்மணே க₃வி ஹஸ்திநி ।
ஶுநி சைவ ஶ்வபாகே ச பண்டி₃தா: ஸமத₃ர்ஶிந: ॥ (5/18)

கல்வியும், பணிவும் உடைய அந்தணனையும், பசுவையும், யானையையும், நாயையும் மேலும் சண்டாளனையும் கூட ஞானிகள் ஸமமாகப் பார்ப்பார்கள்.

## எல்லா உயிரினங்களிடமும் ஸமபாவனை

ஆத்மௌபம்யேந ஸர்வத்ர ஸமம் பஶ்யதி யோऽர்ஜுந ।
ஸுக₂ம் வா யதி₃ வா து₃:க₂ம் ஸ யோகீ₃ பரமோ மத: ॥ (6/32)

அர்ஜுன! எந்த ஒரு யோகி தன்னைப் போல அனைத்து உயிரினங்களையும் ஸமமாகப் பார்க்கிறானோ, மேலும் ஸுகத்தையும், துக்கத்தையும் அனைத்திலும் ஸமமாகப் பார்க்கிறானோ, அவனே சிறந்த யோகியாகக் கருதப்படுகிறான்.

பல இடங்களில் ஸ்ரீபகவான் தனி மனிதர், செயல், பொருட்கள், மனப்பாங்கு இவற்றில் ஸமபாவனையையும் சேர்த்தே கூறுகிறார்—

ஸம: ஶத்ரௌ ச மித்ரே ச தத₂ா மாநாபமாநயோ: ।
ஶீதோஷ்ணஸுக₂து₃:கே₂ஷு ஸம: ஸங்க₃விவர்ஜித: ॥ (12/18)

பகைவரிடமும், நண்பரிடமும், பெருமையிலும், சிறுமையிலும், தட்பத்திலும், வெப்பத்திலும், ஸுகத்திலும், துக்கத்திலும் ஸம புத்தியுடன் பற்றற்று இருக்கிறவனே பக்தன்.

இங்கு பகைவர்–நண்பர் என்ற தொடர் தனி மனிதர்களைக் குறிக்கிறது. மானம்–அவமானம் என்பது பிறரால் ஏற்படும் செயல்கள். தட்பம்–வெப்பம் என்பது பொருட்களின் தன்மைகளை விளக்குகின்றது. ஸுகம்–துக்கம் என்பது மனப்பாங்கைக் குறிக்கிறது.

ஸமது₃:க₂ஸுக₂: ஸ்வஸ்த₂: ஸமலோஷ்டாஶ்மகாஞ்சந: ।
துல்யப்ரியாப்ரியோ தீ₄ரஸ்துல்யநிந்தா₃த்மஸம்ஸ்துதி: ॥ (14/24)

எப்பொழுதும் இடைவிடாது ஆத்ம ஸ்வரூபத்திலேயே உள்ளவன்; இன்ப–துன்பங்களை ஸமமாகக் கருதுபவன்; மண்ணையும், கல்லையும், பொன்னையும் ஸமமாகக் கருதுபவன்; வேண்டியவனையும், வேண்டாதவனையும் ஸமமாகக் கணிப்பவன்; தனக்கு வரும் இகழ்ச்சியையும், புகழ்ச்சியையும் ஒன்றெனக் கருதுபவன் (அவனே குணாதீதன்).

இதில் ஸுக–துக்கம் என்பது மனப்பாங்கு; பொன்னும், மண்ணும் பொருட்கள்; இகழ்ச்சியும், புகழ்ச்சியும் பிறரால் ஏற்படுவன, வேண்டியது, வேண்டாதது என்பவை ப்ராணிகள், மனப்பாங்கு, பொருள், பிறர் செயல் இவை எல்லாவற்றையும் குறிக்கின்றன.

இவ்விதம் எங்கும் ஸமநோக்குடையவர், நடைமுறையில் வெறும் பேச்சில் நான், எனது என்று சொன்னாலும் எல்லாவற்றிலும் ஸமமாகப் பழகுவார். முழுமையான ப்ரபஞ்சத்திலும் இப்படி ஸமபாவனை இருந்துவிட்டால், அவர் ஸமத்வ புத்தியுடையவர். அவரே உண்மையான ஸாம்யவாதி (ஸம தர்மத்தைக் கடைப்பிடிப்பவர்).

கீதையின் ஸாம்யவாதத்திற்கும், இன்று பேசப்படும் ஸாம்யவாதத்திற்கும் மிகுந்த வேறுபாடு உண்டு.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



| இன்றைய ஸாம்யவாதி | கீதையின் ஸாம்யவாதி |
|---|---|
| 1. பகவானுக்கு விரோதமானவர். | 1. எங்கும் பகவானைப் பார்ப்பவர். |
| 2. தர்மத்தை அழிப்பவர். | 2. ஒவ்வொரு நிலையிலும் தர்மத்தைப் பேணுபவர். |
| 3. ஹிம்ஸையே உருவானவர். | 3. அஹிம்ஸையின் ஆதர்ச . புருஷர். |
| 4. தன்னலவாதி. | 4. தன்னலத்தைத் தன்னிடம் அணுகவே விட மாட்டார். |
| 5. உணவு, உடைப் பழக்கங்களில் வெளிப்படையாக ஸமபாவனை காட்டிவிட்டு உள்ளத்தில் வேற்றுமை பாராட்டுவார். | 5. உணவு, ஸ்பர்சம் இவற்றில் சாஸ்த்ர முறைப்படி உலகியலில் சில வேற்றுமைகளைப் பாராட்டினாலும் உள்ளத்தில் வேற்றுமை பாராட்டுவதில்லை. மேலும் எங்கும் பரமாத்மாவையே ஸமமாகப் பார்ப்பதற்கு வழி காட்டுகிறார். |
| 6. லக்ஷ்யம் உலகாயதப் பொருளை அடைவதே. | 6. லக்ஷ்யம் பரம்பொருளை அடைவதே. |
| 7. தன் கட்சியில் பிடிப்பும், பிறரைப் பொருட்படுத்தாமையும் உண்டு. | 7. அபிமானமே கிடையாது, எங்கும் பரமாத்மாவையே பார்த்து எல்லோரையும் மதிப்பார். |
| 8. வெளி நடத்தை முக்யம். | 8. உள்ள மனப்பாங்குதான் முக்யம். |
| 9. உலகியல் இன்பத்தில் நாட்டம். | 9. ஆன்மிக ஸுகத்தில் நாட்டம். |
| 10. பிறர் செல்வத்திலும், கொள்கையிலும், கருத்திலும் பொறாமை. | 10. ஸமமான பரந்த மனப்பான்மை. |
| 11. விருப்பு—வெறுப்பு உண்டு. | 11. எல்லோரிடமும் விருப்பு—வெறுப்பில்லாத ஸமமான நடைமுறை. |

## ஜீவர்களின் கதி

ஜீவர்களுடைய குணங்களுக்கும், கர்மங்களுக்கும் ஏற்பச் சிறந்தது, நடுத்தரமானது, தாழ்ந்தது என்று மூன்றுவிதமான கதிகள் அவர்களுக்கு ஏற்படுகின்றன என்று கீதையில் கூறப்படுகிறது. கர்மயோகம், ஞானயோகம் என்ற நோக்கில் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளையும், உபாஸனையையும் செய்கின்ற ஸாதகர்களின் கதி 8/24ல் கூறப்பட்டது. அவர்களில் யோக ப்ரஷ்டர்களின் கதி 6/40 முதல் 6/45 வரை கூறப்படுகிறது. இறந்த பிறகு அவர்கள் ஸ்வர்கம் முதலிய லோகங்களை அடைகிறார்கள். வெகுகாலம் அந்த தேவலோகங்களில் ஸுகத்தை அனுபவித்துவிட்டு நல்ல நடத்தையுள்ள சீமான்களின் வீட்டில் பிறப்பார்கள். அல்லது ஸ்வர்கம் புகாமல் யோகிகளின் குலத்தில் பிறப்பார்கள். அங்கு முன் செய்த பயிற்சியின் விளைவாக யோக ஸாதனையில் ஈடுபட்டுப் பரமகதியை அடைவார்கள் என்று கூறப்படுகிறது.

விதிக்கப்பட்ட கடமைகளையோ, உபாஸனையையோ பயனில் பற்று வைத்துச் செய்பவர்களின் கதி 9/20,21களில் கூறப்படுகிறது. அங்கு ஸ்வர்கத்தை விரும்பி யக்ஞம் முதலான வேதத்தில் கூறப்பட்ட கர்மங்களைச் செய்பவர்கள் ஸ்வர்கலோகத்திலுள்ள போகங்களைப் பெறுவார்கள். புண்யங்கள் தீர்ந்ததும் மறுபடியும் மனித உலகிற்குத் தள்ளப்படுவார்கள் என்று கூறப்படுகிறது. அவர்கள் எவ்விதம், எவ்வழியில் ஸ்வர்கத்தை அடைவார்கள் என்பதைப் பற்றி 8/25ன் உரையில் விரிவாகக் காணலாம்.

14/14,15,18வது ச்லோகங்களில் பொதுவாக எல்லோருடைய கதியும் சுருக்கமாகக் கூறப்படுகிறது. ஸத்வகுணம் மிகுந்து இறப்பவர்கள் உத்தமலோகத்தை அடைவார்கள். ரஜோகுணம் மிகுந்து இறப்பவர்கள் மனித உலகில் பிறப்பார்கள். தமோகுணம் மிகுந்து

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இறப்பவர்கள் விலங்கு, பக்ஷி, புழு, பூச்சி, மரம், செடி, கொடி முதலிய ஈனப்பிறவிகளாகப் பிறப்பார்கள். ஸத்வகுணமுடையோர் இறந்ததும் மேல் உலகங்களிலும், ரஜோ குணமுடையோர் இறந்ததும் மனித உலகிலும், தமோகுணமுடையோர் இறந்ததும் நரகத்திலும், மேலும் புழு-பூச்சி முதலிய ஈனப்பிறவிகளிலும் பிறக்கிறார்கள். 16/19,20 ச்லோகங்களில் அஸுர ப்ரக்ருதி உடைய தாமஸ மனிதர்களைப் பற்றிக் கூறும்போது, 'அவர்களை நான் மறுபடியும், மறுபடியும் அஸுரப்பிறவிகளிலும், இழிந்த நாய், பன்றி முதலிய பிறவிகளிலும் வீழ்த்துகிறேன். பிறகு அவர்கள் கோர நரகத்தில் வீழ்வார்கள்' என்று கூறுகிறார். இவ்வாறு, இன்னும் பல இடங்களில் குணங்களுக்கும், கர்மங்களுக்கும் ஏற்றவாறு கீதையில் ஜீவர்களின் போக்கை விவரிக்கிறார். ஸாங்க்யயோகம், கர்மயோகம் இவற்றின் பயனாக முக்தி கிடைக்கிறது என்ற ஸந்தர்பங்களில் முக்தர்களின் கதியை ஆங்காங்கே விரிவாகக் கூறுகிறார். ஜீவன்முக்தர் எங்கும் போவதும் இல்லை, வருவதும் இல்லை. அவர் இங்கேயே பரமாத்மாவை அடைவார்.

## கீதை கூறும் சில முக்யமான விஷயங்கள்

### (1) குணங்களை அடையாளம் கண்டு கொள்வது

கீதையில் ஸாத்விக, ராஜஸ, தாமஸப் பொருட்கள், மனப்பாங்குகள், செயல்கள் இவை முக்யமாக இனம் பிரித்துக் கூறப்படுகின்றன. அவை வருமாறு—

அ) எந்த மனப்பாங்கில், செயலில் தன்னலம் சிறிதுகூட இல்லையோ, பற்றும், மமகாரமும் இல்லையோ, எதன் பயன் பகவானை அடைவதோ அது ஸாத்விகம் ஆகும்.

ஆ) எந்த மனப்பாங்கில் அல்லது செயலில் பேராசை, தன்னலம், பற்று இவை உள்ளனவோ, எதன் பயன் கணப்பொழுது ஏற்படும் உலகியல் இன்பமோ, விளைவில் துயரமோ அது ராஜஸம் ஆகும்.

இ) எந்த மனப்பாங்கில் அல்லது செயலில் ஹிம்ஸை, மோஹம், தடுமாற்றம் உள்ளனவோ, எதன் விளைவுகள் துன்பமும், அஞ்ஞானமுமோ அது தாமஸம் ஆகும்.

இவ்விதம் மூன்றுவிதமான மனப்பாங்குகள், செயல்கள் இவற்றின் வேறுபாடுகளைக் கூறி, பகவான் ஸாத்விகமான மனப்பாங்கையும், செயல்களையும் ஏற்றுக் கொள்ளவேண்டும் என்றும், ராஜஸ, தாமஸ மனப்பாங்கையும், செயல்களையும் தவிர்க்கவேண்டும் என்றும் ஆணையிடுகிறார்.

### (2) கீதையில் நடத்தையைக் காட்டிலும் மனப்பாங்கிற்குத்தான் முக்யத்வம்

உயர்ந்த நடத்தை, உயர்ந்த உள்ளப்பாங்கு இரண்டுமே மேன்மைக்குக் காரணம் என்றாலும் மனப்பாங்குக்குத்தான் கீதையில் முக்யத்வம் கொடுக்கப்படுகிறது. 2,12,14வது அத்யாயங்களின் முடிவில் வரிசையாக ஸ்திதப்ரக்ஞன், பக்தன், குணாதீதன் இவர்களின் இலக்கணங்களைக் கூறும் இடங்களில் மனப்பாங்குக்குத்தான் முக்யத்வம் கொடுக்கப்படுகிறது (2/55–71; 12/13–19; 14/22–25 ச்லோகங்களைப் பார்க்கவும்). 2,14வது அத்யாயங்களில் அர்ஜுனன் நடத்தையை முக்யமாகக் கருதிக் கேள்வி கேட்கிறார். ஆனால் பகவான் அதற்கு மனப்பாங்கிற்கு முக்யத்வம் அளித்து விடை அளிக்கிறார்.

கீதையின் கருத்துப்படி பயனில் கருத்துடன் செய்யப்படும் யாகம், தானம், தவம், ஸேவை, பூஜை என்ற மிகச் சிறந்த கார்யங்களைக் காட்டிலும் நிஷ்காமமாகச் செய்யப்படுகின்ற போர், வாணிபம், விவசாயம், சில்பம், ஸேவை முதலிய சிறிய சிறிய செயல்கள்கூட முக்தியை அளிக்கக்கூடியனவாகையால் சிறந்தவை (2/40,49; 12/12; 18/46). 4/24 முதல் 32 வரை கூறப்பட்டுள்ள பலவிதமான யக்ஞம் என்ற ஸாதனைகளில்கூட மனப்பாங்குதான் முக்திக்குக் காரணம் எனக் கூறப்படுகிறது.

## கீதையும், வேதமும்

கீதை வேதங்களுக்குச் சிறப்பான மதிப்புக் கொடுக்கிறது. பகவான் தம்மையே ஸகல வேதங்களாலும் அறியத்தக்கவர்; தாமே வேதாந்தத்தை வகுப்பவர்; வேதங்களை அறிந்தவர்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



என்று கூறி, வேதங்களின் பெருமையை உயர்த்திப் பேசுகிறார் (15/15). ஸம்ஸாரத்தை அரச மரமாக உருவகப்படுத்திக் கூறும்போது, 'வேருடன் கூடிய அந்த மரத்தின் தத்வத்தை அறிந்தவனே உண்மையில் வேதத்தின் தத்வமறிந்தவன்' என்று கூறுகிறார் (15/1). ப்ரபஞ்சத்திற்குக் காரணமான பரமாத்மாவுடன் கூட உலகின் உண்மை ஸ்வரூபத்தைத் தத்வரீதியாக அறிவதுதான் வேதங்களின் உட்கருத்து. 'வேதங்களில் எது வகுத்துப் பிரித்துச் சொல்லப்பட்டிருக்கிறதோ, அதையே நான் கூறுகிறேன்' (13/4) என்கிறார். இப்படித்தாம் சொல்வதற்கெல்லாம் சான்றாக வேதங்களை எடுத்துக்காட்டி பகவான் வேதங்களின் பெருமையை உயர்த்துகிறார். ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம் மூன்றும் தமது ஸ்வரூபமே என்று கூறி, மேலும் மதிப்பு அளிக்கிறார் (9/17). வேதங்கள் தம்மிடமிருந்தே வெளிப்பட்டன (3/15; 17/23) என்கிறார். பரமாத்மாவை அடைவதற்கான பல வழிகள் வேதங்களில் கூறப்பட்டுள்ளன (4/32). என்கிறார். வேதங்களில் வெறும் போகங்களைப் பெறும் ஸாதனங்கள் மட்டும் கூறப்படவில்லை. அப்படிச் சில விவேகமற்றவர்கள் நினைக்கிறார்கள். மாறாகத் தம்மை அடைவதற்கு ஒன்றல்ல, இரண்டல்ல, பல ஸாதனைகள் நிறைந்துள்ளன என்பதை பகவான் தெளிவாக விளக்கியுள்ளார். பகவான் பரமபதம் என்ற தம் ஸ்வரூபத்தை வர்ணிக்கும்போது வேதமறிந்தவர்கள், அதை 'அக்ஷரம்' (ஓம்) என்பார்கள் (8/11) என்று கூறுகிறார். ஆகவே, வேதங்களில் காம்ய கர்மங்கள் மூலம் அடையத்தக்க இவ்வுலக, பரலோக நிலையற்ற போகங்களின் விளக்கம் மட்டும் கூறப்படவில்லை. பரமாத்மாவின் அழியாத பெருநிலை பற்றிய தெளிவான விளக்கமும் உண்டு என்பது தெரிகிறது. இதிலிருந்து பகவான் வேதங்களுக்குச் சிறந்த மதிப்பளிக்கிறார் என்பதை அறியலாம்.

இங்கு ஒரு ஸந்தேஹம் எழுகிறது. பிறகு ஏன் பல இடங்களில் பகவான் வேதங்களைக் குறை கூறுகிறார்? உதாரணமாக, காம்ய கர்மம் செய்பவர்களை வேதவாதங்களில் ஈடுபடுகின்ற அவிவேகிகள் (2/42) என்று கூறுகிறாரே! வேதங்கள் முக்குணங்களால் ஆன உலகியல் போகங்களையும், ஸாதனைகளையும் கூறுகின்றன. அவற்றில் விருப்புக் கொள்ளாதே என்று அர்ஜுனனை எச்சரிக்கின்றாரே (2/45). மூன்று வேதங்களில் கூறப்பட்ட கர்மங்களை அடிப்படையாகக் கொண்டு ஆசையுடன் கர்மம் செய்பவர்கள் திரும்பத் திரும்பப் பிறந்து இறப்பார்கள். ஸம்ஸாரச் சுழலில் சிக்குவார்கள் (9/21) என்றெல்லாம் கூறுகிறாரே, அது எப்படிப் பொருந்தும்? இதற்குப் பதில்: மேலே சொன்ன கூற்றுகள் வேதங்களை இகழ்வது போலத்தான் தோன்றுகின்றன. உண்மையில் அவை வேத நிந்தை அல்ல. பயனில் கருத்துள்ள கர்மத்தைவிட நிஷ்காம கர்மத்திற்குத்தான் கீதையில் அதிகப் பெருமை கொடுக்கப்பட்டிருக்கிறது. பகவானை அடைவதற்கு அதுவே சிறந்த வழி, அவசியமானது என்றும் கூறுகிறார். ஆகவே, அதைவிடப் பயனில் கருத்துள்ள கர்மம் தாழ்ந்தது, அழிவது, சிற்றின்பத்தை அளிப்பது, விலக்கத்தக்கது என்றுதான் கூறுகிறார். செய்யத்தகாத பாவ கர்மங்களைப்போல அவற்றை இகழவில்லை. வேதங்களின் பயனைக் கடந்து செல்ல வேண்டுமென்பதற்குப் பொருள், காம்ய கர்மங்களை விலக்க வேண்டும் என்பதுதான் (8/28). ஆகவே, கீதையில் வேத நிந்தை கிடையாது. ஆங்காங்கு வேதங்களின் பெருமைதான் கூறப்படுகிறது.

## கீதை மற்றும் ஸாங்க்ய தர்சனம், யோக தர்சனம்

கீதையில் ஸாங்க்யம் என்ற சொல் வருகிறது. அதற்குக் கபில முனிவரால் வகுக்கப்பட்ட ஸாங்க்ய சாஸ்த்ரம் என்று பொருள் என்று சிலர் நினைக்கிறார்கள். ஆனால் அது யுக்திக்குப் பொருந்தாது. கீதையில் தொடர்ந்து 13/19,20,21வது ச்லோகங்களிலும், மற்ற இடங்களிலும் ப்ரக்ருதி, புருஷன் என்ற சொற்கள் சேர்ந்தே வருகின்றன. இவை ஸாங்க்ய சாஸ்த்ரங்களில் வரும் முக்யமான சொற்கள். இதனால் கீதைக்குக் கபிலருடைய ஸாங்க்ய சாஸ்த்ரம் ஏற்புடையது என்று நினைக்கிறார்கள். அதுபோல 'யோக' என்ற சொல்லும் பதஞ்ஜலியின் யோக சாஸ்த்ரச் சொல்லாக நினைக்கிறார்கள். ஐந்தாவது அத்யாயத்தின் ஆரம்பத்திலும், மற்ற இடங்களிலும் ஸாங்க்யம் மற்றும் யோகம் என்ற சொற்கள் சேர்ந்தே

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வருகின்றன. ஆகவே, இவை முறையே கபில ஸாங்க்யம் என்றும், பாதஞ்ஜல யோகமென்றும் நினைக்கிறார்கள். ஆனால், இது யுக்திக்குப் பொருந்தாது. கீதையில் கூறப்படும் ஸாங்க்யம் கபில ஸாங்க்யமன்று. கீதையில் கூறப்படும் யோகம் பதஞ்ஜலி யோகமுமன்று.

கீழே வருவனவற்றைக் கவனித்தால் இவை தெளிவாகத் தெரியும்.

(1) கீதையில் ஈசுவரனுக்கு என்ன மதிப்பீடோ, அந்த மதிப்பீடு ஸாங்க்ய தர்சனத்திற்கு ஒப்புதல் அன்று.

(2) ப்ரக்ருதி என்ற சொல் கீதையில் பல இடங்களில் வந்தாலும், கீதையின் ப்ரக்ருதிக்கும், ஸாங்க்யத்தில் வரும் ப்ரக்ருதிக்கும் மிகுந்த வேற்றுமை உண்டு. கபில ஸாங்க்யத்தின் ப்ரக்ருதி முக்குணங்களின் ஸமமான நிலையைக் கூறும். கீதையின் ப்ரக்ருதி முக்குணங்களுக்கும் காரணமானது. குணங்கள் ப்ரக்ருதியின் விளைவுகள் *(14/5)*. ஸாங்க்ய சாஸ்த்ரம் ப்ரக்ருதியை அநாதி – நித்யம் என்கிறது. கீதை ப்ரக்ருதியை அநாதி *(13/19)* என்று சொன்னாலும் நித்யம் என்று கூறுவதில்லை.

(3) கீதையின் 'புருஷனு'க்கும், ஸாங்க்ய சாஸ்த்ர 'புருஷனு'க்கும் இடையே மிகுந்த வேறுபாடு உண்டு. கபில மதத்தில் புருஷர்கள் பலர் உண்டு. கீதையில் வரும் ஸாங்க்ய புருஷன் ஒருவனே *(13/22,30; 18/20)*.

(4) கீதையில் கூறப்படும் முக்திக்கும், ஸாங்க்ய சாஸ்த்ரத்தில் கூறப்படும் முக்திக்கும் மிகுந்த வேற்றுமை உண்டு. ஸாங்க்ய மதத்தில் துக்கங்கள் முழுவதும் அழிவதே 'முக்தி' எனப்படும். கீதையின் முக்தியில் துக்கங்கள் அறவே முடிந்துவிடும் என்பது மட்டுமல்ல; பரமானந்த ஸ்வரூபனான பகவானை அடைவதும் உண்டு *(6/21,22)*.

(5) மேலே சொன்ன ஸித்தாந்த வேற்றுமை தவிர, பதஞ்ஜலியின் யோகசாஸ்த்ரத்தில் 'யோக' என்ற சொல்லுக்கு 'மனதின் செயல்பாட்டைத் தடை செய்வது' என்று பொருள். ஆனால் கீதையில் 'யோகம்' என்ற சொல் ஸந்தர்பத்தை அனுசரித்துப் பல பொருட்களில் உபயோகப்படுகிறது. *(2/53 உரையில் விவரம் காண்க.)*

இவ்விதம் கீதை மற்றும் ஸாங்க்ய தர்சனம், யோக தர்சனம் இவற்றின் இடையே நிறைய ஸித்தாந்த வேறுபாடுகள் உள்ளன.

## இந்த உரையின் பயன்

வெகுநாட்களாகவே பல நண்பர்கள், நான் என் கருத்துக்களுக்கு ஏற்றவாறு கீதைக்கு ஒரு விரிவான உரை எழுதவேண்டுமென வற்புறுத்தி வந்தார்கள். கீதைக்கு மதிப்பிற்குரிய பல ஆசார்யர்கள், ஸாதுக்கள், மஹாத்மாக்கள், சாஸ்த்ரங்களின் மர்மம் அறிந்தவர்களான வித்வான்கள் எழுதியுள்ள பல பாஷ்யங்கள், சிற்றுரைகள், பேருரைகள் ஏற்கனவே உள்ளன. அவை எல்லாமே பெருமதிப்புடையனவே. எல்லோரும் தத்தம் கண்ணோட்டத்தில் கீதையின் மர்மத்தை விளக்கி இருக்கிறார்கள். ஆனால் அவை பெரும்பாலும் ஸம்ஸ்க்ருதத்தில் உள்ளன. அறிஞர்களுக்கே புரியக்கூடியவை. ஆகவே எளிய மொழியில் எல்லோருக்கும் புரியும்படியாக, பயன்படும்படியாக கீதையின் உட்கருத்தை விளக்கி நான் ஓர் உரை எழுதவேண்டும் என நண்பர்கள் விரும்பினார்கள். இந்த நோக்கத்துடன், இதனால் எல்லோரையும் விட எனக்குத்தான் பயன் அதிகம் என்று நினைத்து, இக்கார்யத்தில் இறங்கினேன். ஆனால் மேலெழுந்தவாரியாக இது எவ்வளவு எளிது என்று தோன்றியதோ, கார்யத்தில் இறங்கின பிறகுதான், இது எவ்வளவு கடினமானது என்பது புரிந்தது.

என்னுடைய ஆற்றலையும், தகுதியையும் கணித்துப் பார்த்தால், இந்த என் முயற்சி தகுதிக்கு மீறிய துணிச்சல்தான் என்பது புரியும். பிறப்பினால் நான் ஒரு வைசியன். கல்வி,



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அறிவு என்ற நோக்கிலும் நான் மிகவும் தகுதியற்றவன். எல்லோரும் மதித்துப் போற்றுகின்ற கீதை என்ற மஹத்தான நூலுக்கு உரை எழுத நான் தகுதியற்றவன்தான். பகவானுடைய உபதேசம் முழுவதையும் அறிந்து கொள்வது என்பது ஒருபுறம் இருக்கட்டும். அதில் நூறில் ஒரு பங்காவது எனக்குத் தெரியுமா என்றால் அதுவே என்னுடைய தகுதிக்கு மீறிய செயல்தான். பகவானுடைய உபதேசத்தைச் சிறிதேனும் புரிந்து கொண்டு அதைச் செயலாக்குவது என்பது கடினமான கார்யம்தான். பகவான் யாருக்கு அந்தத் தனிப்பட்ட க்ருபை புரிகிறாரோ, அவருக்கு அது ஸாத்யம் ஆகலாம். உபதேசம் முழுவதையும் கைக்கொள்வது என்பது எங்கே? யாராவது ஒருவர் ஏதாவது ஒரு கீதா ச்லோகத்தின் கருத்தை ஏற்று அதன்படி தன் வாழ்க்கையை நடத்தி வந்தால், அந்த மனிதரைக் கொண்டாடத்தான் வேண்டும். அவருடைய திருவடிகளில் பல கோடி முறை நான் வீழ்ந்து வணங்குகிறேன். கீதையை விரித்துரைப்பதற்கும் அவர்களே தகுதி பெற்றவர்கள்.

நிற்க. என்னுடைய முயற்சி எல்லாவிதத்திலும் தகுதிக்கு மீறிய சிறுபிள்ளைத்தனமான ஸாஹஸம்தான். ஆனால், இந்த முறையில் கீதையின் உட்கருத்தைப் பற்றிச் சிந்திக்க வாய்ப்புக் கிடைத்ததே! பகவானுடைய திவ்ய உபதேசங்களை மனனம் செய்ய நேர்ந்ததே! ஆத்ம விஷயமாகச் சிந்திக்க முனைந்தோமே! வாழ்க்கையின் இந்த சமயம் நற்செயலில் ஈடுபட்டதே! அதற்காக இந்த அளவு நான் கொடுத்து வைத்தவன் என்று நினைக்கிறேன். இதனால் எனக்கு கீதையைப் பற்றிய அறிவு பெருகியது. பல தவறான கருத்துக்கள் களையப்பட்டன. ஆயினும் பலவிடங்களில் தவறுகள் நேர்ந்திருக்கலாம். ஏனெனில் கீதையின் உட்கருத்தில் நூறில் ஒரு பங்காவது நான் அறிவேன் என்று கூடச் சொல்லிக் கொள்ள முடியாது. கீதையின் உண்மைக் கருத்தை பகவான்தான் அறிவார். சிறிதளவு அர்ஜுனன் அறிந்திருக்கலாம். அவருக்காகத்தானே பகவானே கீதையைத் திருவாய் மலர்ந்து அருளினார். அல்லது பரமாத்மாவை அடைந்துவிட்டவர்கள், பகவானுடைய க்ருபையைப் பூரணமாக அனுபவித்தவர்கள் கொஞ்சம் அறியலாம். இவ்விஷயத்தில் நான் என்ன சொல்ல? மதிப்பிற்குரிய, பூஜிக்கத்தக்க பெரியோர்கள் கீதைக்கு விரிவுரைகள் எழுதியிருக்கிறார்களே – அவர்களுக்கெல்லாம் நான் கடன்பட்டிருக்கிறேன். நன்றியுடையவனாகவும் இருக்கிறேன். இந்த உரை எழுத அந்த பாஷ்யங்களின் மற்றும் உரைகளின் உதவியை நாடி இருக்கிறேன். ஆகவே, வணக்கத்திற்குரிய பெரியோர்களின் திருவடிகளில் நன்றியுடன் இதயபூர்வமாய்க் கோடிகோடி வணக்கங்களைச் செய்கிறேன். நமஸ்கரிக்கிறேன்.

இதைப் பற்றித் தயக்கமின்றி ஒன்று கூறுவேன். இது முழுமையான உரை அன்று. பகவானுடைய கருத்தை விளக்குவது ஒருபுறம் இருக்கட்டும். அதைப் புரிந்து கொள்வதிலேயே பல இடங்களில் தவறுகள் இருக்கலாம். பல இடங்களில் நேர்மாறான கருத்துக்கள் வந்திருக்கலாம். அந்தத் தவறுகளுக்காகக் கருணைக்கடலான பகவானிடமும், கீதையன்பர்களிடமும் கைகூப்பி மன்னிப்புக் கேட்கிறேன். நான் எழுதியது என் சிறிய புத்திக்கு ஏற்றவாறுதான். இப்படி என்னுடைய சிற்றறிவை வெளிப்படுத்துகின்ற சிறுபிள்ளைத்தனத்தை அறிஞர்கள் மன்னிக்க வேண்டும்.

இவ்வுரையில் எந்த ஆசார்யர்களுடைய கருத்துக்களையோ, உரையாளர்களுடைய கருத்துக்களையோ எடுத்து ஆளவும் இல்லை, விமர்சிக்கவும் இல்லை, கண்டிக்கவும் இல்லை. ஆனால், என் கருத்தைக் கூறுமிடத்துப் பிறர் கருத்துக்கு வேறுபாடு இருந்தால், அதற்கும் நான் மன்னிப்புக் கேட்கிறேன். கண்டனம் செய்வதோ, கொண்டாடுவதோ, ஒரு ஸித்தாந்தத்துடன் மற்றொரு ஸித்தாந்தத்தை ஒப்பிட்டு நோக்குவதோ என்னுடைய நோக்கமன்று. கூடியவரை முன்னுக்குப்பின் முரணில்லாமல் உரை எழுதப்பட்டிருக்கிறது. ஆயினும் உரையின் வடிவம் வளர்ந்து விட்டபடியால் எங்கேயாவது இந்தக் குறை ஏற்பட்டிருக்கலாம். இப்புத்தகத்தைப் படிக்கும் அறிஞர்கள் இவ்விதம் இருக்கும் குறையைச் சுட்டிக்காட்டி எழுதக்கோருகிறேன்.

இவ்வுரையை எழுதுவதற்கு, மதிப்பிற்குரிய மஹானுபாவர்கள், நண்பர்கள், உறவினர்கள் எனக்கு விலைமதிப்பற்ற உதவி செய்திருக்கிறார்கள். இன்றைய வழிமுறையில் அவர்களுடைய பெயர்களைக் குறிப்பிடுவது அவசியமானாலும், அப்படிச் செய்தால் அது



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அவர்களுக்குத் தொல்லையாக இருக்கும். அவர்களுடன் கூட எனக்கு உள்ள ஸம்பந்தத்தைக் கூறும்போது என்னைப் பற்றியும் பெருமையாகச் சொல்லிக் கொள்வதாக முடியும். அதனால், அவர்களுடைய பெயர்களைக் குறிப்பிடவில்லை. அவர்கள் மனமுவந்து எனக்கு உதவி செய்திராவிட்டால், இந்த உரை இவ்விதம் வெளி வந்திருக்காது என்று மட்டும் கூறுகிறேன்.

இந்த ஸ்ரீமத்பகவத்கீதா தத்வவிவேசனீ உரைநூலுக்கு ஸ்ரீமத்பகவத்கீதையின் மிக முக்யமான ஸம்ஸ்க்ருத பாஷ்யங்களிலிருந்தும், சிற்றுரைகளிலிருந்தும் மற்றும் கீழ்க்காணும் நூல்களிலிருந்தும் உதவி பெறப்பட்டது.

ருக்வேதஸம்ஹிதை, ஐதரேய ப்ராம்மணம், சதபத ப்ராம்மணம், ஈஶ, கேந, கட, முண்டக, தைத்திரீய, சாந்தோக்ய, ப்ருஹதாரண்யக, ஶ்வேதாஶ்வதர, ப்ரம்ம, நாராயண. ப்ருஹஜ்ஜாபால உபநிஷத்துக்கள், பதஞ்ஜலியோக தர்ஶனம், ஸாங்க்யகாரிகை, மனு, வஸிஷ்ட, ஸம்வர்த்த, ப்ருஹத்யோகியாக்ஞவல்க்ய, ஶங்க, அத்ரி ஸ்ம்ருதிகள், உத்தரகீதை, ஸ்ரீமத்பாகவதம், அக்நி, வாயு, வாராஹ, கருட, மார்க்கண்டேய, ப்ரம்மவைவர்த்த, ஸ்கந்த, ப்ருஹத்தர்ம, மத்ஸ்ய, ப்ரம்மாண்ட, ஶிவ, பத்ம, ப்ரம்ம, விஷ்ணு, கூர்ம புராணங்கள், ஸ்ரீமத் தேவீபாகவதம், மஹாபாரதம், ஹரிவம்சம், ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம், நாரத பக்தி ஸூத்ரம், ஶாண்டில்யஸூத்ரம், ஸூர்யஸித்தாந்தம், ஸ்ரீராமசரிதமாநஸம், விநயபத்ரிகா, க்ருஷ்ணகர்ணாம்ருதம், பக்தமாலா முதலிய பலபல.

பணிவுள்ள,
ஜயதயால் கோயந்தகா

--- * * * ---

## ஸ்ரீமஹாபாரதத்திலே ஸ்ரீமத்பகவத்கீதையின் பெருமை

கீ₃தா ஸுகீ₃தா கர்தவ்யா கிமந்யை: ஶாஸ்த்ரஸங்க்₃ரஹை: ।
யா ஸ்வயம் பத்₃மநாப₄ஸ்ய முக₂பத்₃மாத்₃விநி:ஸ்ருதா ॥
ஸர்வஶாஸ்த்ரமயீ கீ₃தா ஸர்வதே₃வமயோ ஹரி: ।
ஸர்வதீர்த₂மயீ க₃ங்கா₃ ஸர்வவேத₃மயோ மநு: ॥
கீ₃தா க₃ங்கா₃ ச கா₃யத்ரீ கோ₃விந்தே₃தி ஹ்ருதி₃ ஸ்தி₂தே ।
சதுர்க₃காரஸம்யுக்தே புநர்ஜந்ம ந வித்₃யதே ॥
பா₄ரதாம்ருதஸர்வஸ்வகீ₃தாயா மதி₂தஸ்ய ச ।
ஸாரமுத்₃த்₄ருத்ய க்ருஷ்ணேந அர்ஜுநஸ்ய முகே₂ ஹுதம் ॥
(மஹாபா₄ரதம், பீ₄ஷ்மபர்வம் 43/1,2,3,5)

வேறு சாஸ்த்ரங்கள் எதற்கு? ஸ்ரீமத்பகவத்கீதையை மட்டும் படித்தால் போதுமே! ஏனெனில் இது ஸாக்ஷாத் ஸ்ரீபகவான் பத்மநாபனின் திருமுகத்தாமரையிலிருந்து வெளிவந்ததாயிற்றே! கீதையிலே அனைத்து சாஸ்த்ரங்களும் அடக்கம். ஸ்ரீஹரியோ அனைத்து தேவர்களுக்கும் இருப்பிடம். கங்கையுள் எல்லா புண்ய தீர்த்தங்களும் அடக்கம். மனு நூலோ வேதத்தின் ஸாரம். கீதை, கங்கை, காயத்ரி, கோவிந்தன் என்கிற நான்கு 'க₃' காரங்கள் எவன் மனதில் பதிந்துள்ளனவோ அவனுக்கு மறுபிறவியே கிடையாது. ஸ்ரீமஹாபாரதமாகிற அமுதக் கடலைக் கடைந்து, அதன் ஸாரமாகிய கீதையை எடுத்து ஸ்ரீக்ருஷ்ணன் அர்ஜுனனுக்கு ஊட்டினார்.

* * * * *



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ॐ

श्रीपरमात्मने नमः

शास्त्रोंका अवलोकन और महापुरुषोंके वचनोंका श्रवण करके मैं इस निर्णयपर पहुँचा कि संसारमें श्रीमद्भगवद्गीताके समान कल्याणके लिये कोई भी उपयोगी ग्रन्थ नहीं है। गीतामें ज्ञानयोग, ध्यानयोग, कर्मयोग, भक्तियोग, आदि जितने भी साधन बतलाये गये हैं, उनमेंसे कोई भी साधन अपनी श्रद्धा, रुचि और योग्यताके अनुसार करनेसे मनुष्यका शीघ्र कल्याण हो सकता है।

अतएव उपर्युक्त साधनोंका तथा परमात्माका तत्त्व रहस्य जाननेके लिये महापुरुषोंका और उनके अभावमें उच्चकोटिके साधकोंका श्रद्धा, प्रेमपूर्वक सङ्ग करनेकी विशेष चेष्टा रखते हुवे गीताका अर्थ और भावसहित मनन करने तथा उसके अनुसार अपना जीवन बनानेके लिये प्राण पर्यन्त प्रयत्न करना चाहिये।

निवेदक—

कार्तिक शुक्ला १२ २००६ — जयदयाल गोयन्दका।

गुं॰ बांकुड़ा

அர்ப்பணித்தவர்

ஸ்ரீ ஜயதயால் கோயந்தகா

விக்ரம ஸம்வத் 2006 (அக்டோபர் 1950)
கார்த்திக சுக்லத்வாதசீ.
பாங்குடா.(ராஜஸ்தான்)



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

# ஸ்ரீ ஜயதயால் கோயந்தகா அவர்களின் அறிவுரை

சாஸ்த்ரங்களை ஊன்றிப் படித்தும், பெரியோர்களின் சொல்லமுதம் கேட்டும் நான் கற்றுக் கொண்ட தீர்மானமான விஷயம் — உலகில் ஸ்ரீமத் பகவத்கீதையைப் போன்று மேன்மை தரக் கூடிய நூல் வேறு ஒன்றும் கிடையாது என்பதுதான். கீதையில் ஞானயோகம், த்யானயோகம், கர்மயோகம், பக்தியோகம் முதலிய எத்தனை ஸாதனைகள் கூறப்பட்டுள்ளனவோ, அவற்றில் ஏதாவது ஒன்றைத் தன்னுடைய நம்பிக்கை, பற்று, தகுதி இவற்றிற்கேற்பக் கடைப்பிடிப்பதால் விரைவாக மனிதன் மேன்மை அடைவான். ஆகவே, மேலே சொன்ன ஸாதனைகளையும், பரமாத்மாவின் தத்வ ரஹஸ்யங்களையும் தெரிந்து கொள்வதற்காகப் பெரியோர்களை நாடவேண்டும். அவர்கள் கிடைக்காவிட்டால் மிக உயர்ந்த நிலையை அடைந்த ஸாதகர்களை ச்ரத்தையுடனும், ப்ரேமையுடனும் அணுகுவதற்கு முயற்சி செய்து, கீதையின் பொருளையும், கருத்தையும் மனனம் செய்து, அதன்படி தன் வாழ்க்கை முறையை அமைத்துக் கொள்வதற்கு மனிதன் உயிர் உள்ளவரை முயன்று கொண்டே இருக்கவேண்டும்.

விக்ரம ஸம்வத் 2006 (அக்டோபர் 1950)

கார்த்திக சுக்லத்வாதசீ.

பாங்குடா.(ராஜஸ்தான்)

அர்ப்பணிப்பவர்

ஜயதயால் கோயந்தகா

निवेदक—

जयदयाल गोयन्दका



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

# பாராயண விதி4:

ஓம் அஸ்ய ஸ்ரீமத்3ப4க3வத்3கீ3தாமாலாமந்த்ரஸ்ய ப4க3வாந்வேத3வ்யாஸ ருஷி: । அநுஷ்டுப் ச2ந்த3: । ஸ்ரீக்ருஷ்ண: பரமாத்மா தே3வதா । அஶோச்யாநந்வஶோசஸ்த்வம் ப்ரஜ்ஞாவாதா3ம்ஶ்ச பா4ஷஸே இதி பீ3ஜம் ॥ ஸர்வத4ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ இதி ஶக்தி: ॥ அஹம் த்வா ஸர்வபாபேப்4யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச இதி கீலகம் ॥

## அத2 கரந்யாஸ:

நைநம் சி2ந்த3ந்தி ஶஸ்த்ராணி நைநம் த3ஹதி பாவக இத்யங்கு3ஷ்டா2ப்4யாம் நம: ॥ ந சைநம் க்லேத3யந்த்யாபோ ந ஶோஷயதி மாருத இதி தர்ஜநீப்4யாம் நம: ॥ அச்சே2த்3யோऽயமதா3ஹ்யோऽயமக்லேத்3யோऽஶோஷ்ய ஏவ ச இதி மத்4யமாப்4யாம் நம: ॥ நித்ய: ஸர்வக3த: ஸ்தா2ணுரசலோऽயம் ஸநாதந இத்யநாமிகாப்4யாம் நம: ॥ பஶ்ய மே பார்த2 ரூபாணி ஶதஶோऽத2 ஸஹஸ்ரஶ இதி கநிஷ்டி2காப்4யாம் நம: ॥ நாநாவிதா4நி தி3வ்யாநி நாநாவர்ணாக்ருதீநி ச இதி கரதலகர்ப்ருஷ்டா2ப்4யாம் நம: ॥ இதி கரந்யாஸ: ॥

## அத2 ஹ்ருத3யாதி3ந்யாஸ:

நைநம் சி2ந்த3ந்தி ஶஸ்த்ராணி நைநம் த3ஹதி பாவக இதி ஹ்ருத3யாய நம: ॥ ந சைநம் க்லேத3யந்த்யாபோ ந ஶோஷயதி மாருத இதி ஶிரஸே ஸ்வாஹா ॥ அச்சே2த்3யோऽயமதா3ஹ்யோऽயமக்லேத்3யோऽஶோஷ்ய ஏவ ச இதி ஶிகா2யை வஷட் ॥ நித்ய: ஸர்வக3த: ஸ்தா2ணுரசலோऽயம் ஸநாதந இதி கவசாய ஹும் ॥ பஶ்ய மே பார்த2 ரூபாணி ஶதஶோऽத2 ஸஹஸ்ரஶ இதி நேத்ரத்ரயாய வௌஷட் ॥ நாநாவிதா4நி தி3வ்யாநி நாநாவர்ணாக்ருதீநி ச இதி அஸ்த்ராய ப2ட் ॥

ஸ்ரீக்ருஷ்ணப்ரீத்யர்தே2 பாடே2 விநியோக3: ॥

## அத2 த்4யாநம்

ஓம் பார்தா2ய ப்ரதிபோ3தி4தாம் ப4க3வதா நாராயணேந ஸ்வயம்
வ்யாஸேந க்3ரதி2தாம் புராணமுநிநா மத்4யேமஹாபா4ரதம் ।
அத்3வைதாம்ருதவர்ஷிணீம் ப4க3வதீமஷ்டாத3ஶாத்4யாயிநீ-
மம்ப3 த்வாமநுஸந்த3தா4மி ப4க3வத்3கீ3தே ப4வத்3வேஷிணீம் ॥ 1 ॥

நமோऽஸ்து தே வ்யாஸ விஶாலபு3த்3தே4 பு2ல்லாரவிந்தா3யதபத்ரநேத்ர ।
யேந த்வயா பா4ரததைலபூர்ண: ப்ரஜ்வாலிதோ ஜ்ஞாநமய: ப்ரதீ3ப: ॥ 2 ॥

ப்ரபந்நபாரிஜாதாய தோத்ரவேத்ரைகபாணயே ।
ஜ்ஞாநமுத்3ராய க்ருஷ்ணாய கீ3தாம்ருதது3ஹே நம: ॥ 3 ॥

வஸுதே3வஸுதம் தே3வம் கம்ஸசாணூரமர்த3நம் ।
தே3வகீபரமாநந்த3ம் க்ருஷ்ணம் வந்தே3 ஜக3த்3கு3ரும் ॥ 4 ॥

பீ4ஷ்மத்3ரோணதடா ஜயத்3ரத2ஜலா கா3ந்தா4ரநீலோத்பலா
ஶல்யக்3ராஹவதீ க்ருபேண வஹநீ கர்ணேந வேலாகுலா ।
அஶ்வத்தா2மவிகர்ணகோ4ரமகரா து3ர்யோத4நாவர்திநீ
ஸோத்தீர்ணா க2லு பாண்ட3வை ரணநதீ கைவர்தக: கேஶவ: ॥ 5 ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பாராஶர்யவச:ஸரோஜமமலம் கீ₃தார்த₂க₃ந்தோ₄த்கடம்
நாநாக்₂யாநககேஸரம் ஹரிகத₂ாஸம்போ₃த₄நாபோ₃தி₄தம் ।
லோகே ஸஜ்ஜநஷட்பதை₃ரஹரஹ: பேபீயமாநம் முதா₃
பூ₄யாத்₃ப₄ாரதபங்கஜம் கலிமலப்ரத்₄வம்ஸி ந: ஶ்ரேயஸே ॥ 6 ॥

மூகம் கரோதி வாசாலம் பங்கு₃ம் லங்க₄யதே கி₃ரிம் ।
யத்க்ருபா தமஹம் வந்தே₃ பரமாநந்த₃மாத₄வம் ॥ 7 ॥

ஶாந்தாகாரம் பு₄ஜக₃ஶயநம் பத்₃மநாப₄ம் ஸுரேஶம்
விஶ்வாதா₄ரம் க₃க₃நஸத்₃ருஶம் மேக₄வர்ணம் ஶுப₄ாங்க₃ம் ।
லக்ஷ்மீகாந்தம் கமலநயநம் யோகி₃ஹ்ருத்₃த்₄யாநக₃ம்யம்
வந்தே₃ விஷ்ணும் ப₄வப₄யஹரம் ஸர்வலோகைகநாத₂ம் ॥

யம் ப்₃ரஹ்மா வருணேந்த்₃ரருத்₃ரமருத: ஸ்துந்வந்தி தி₃வ்யை: ஸ்தவைர்—
வேதை₃: ஸாங்க₃பத₃க்ரமோபநிஷதை₃ர் கா₃யந்தி யம் ஸாமகா₃: ।
த்₄யாநாவஸ்தி₂ததத்₃க₃தேந மநஸா பஶ்யந்தி யம் யோகி₃நோ
யஸ்யாந்தம் ந விது₃: ஸுராஸுரக₃ணா தே₃வாய தஸ்மை நம: ॥

வம்ஶீவிபூ₄ஷிதகராந்நவநீரத₃ாப₄ாத் பீதாம்ப₃ராத₃ருணபி₃ம்ப₃ப₂லாத₄ரோஷ்ட₂ாத் ।
பூர்ணேந்து₃ஸுந்த₃ரமுக₂ாத₃ரவிந்த₃நேத்ராத் க்ருஷ்ணாத்பரம் கிமபி தத்₃த்வமஹம் ந ஜாநே ॥

## அத₂ கீ₃தாமாஹாத்ம்யம்

கீ₃தாஶாஸ்த்ரமித₃ம் புண்யம் ய: படே₂த்ப்ரயத: புமாந் ।
விஷ்ணோ: பத₃மவாப்நோதி ப₄யஶோகாதி₃வர்ஜித: ॥ 1 ॥

கீ₃தாத்₄யயநஶீலஸ்ய ப்ராணாயாமபரஸ்ய ச ।
நைவ ஸந்தி ஹி பாபாநி பூர்வஜந்மக்ருதாநி ச ॥ 2 ॥

மலநிர்மோசநம் பும்ஸாம் ஜலஸ்நாநம் தி₃நே தி₃நே ।
ஸக்ருத்₃கீ₃தாம்ப₄ஸி ஸ்நாநம் ஸம்ஸாரமலநாஶநம் ॥ 3 ॥

கீ₃தா ஸுகீ₃தா கர்தவ்யா கிமந்யை: ஶாஸ்த்ரவிஸ்தரை: ।
யா ஸ்வயம் பத்₃மநாப₄ஸ்ய முக₂பத்₃மாத்₃விநி:ஸ்ருதா ॥ 4 ॥

ப₄ாரதாம்ருதஸர்வஸ்வம் விஷ்ணோர்வக்த்ராத்₃விநி:ஸ்ருதம் ।
கீ₃தாக₃ங்கோ₃த₃கம் பீத்வா புநர்ஜந்ம ந வித்₃யதே ॥ 5 ॥

ஸர்வோபநிஷதோ₃ கா₃வோ தோ₃க்₃தா₄ கோ₃பாலநந்த₃ந: ।
பார்தோ₂ வத்ஸ: ஸுதீ₄ர்போ₄க்தா து₃க்₃த₄ம் கீ₃தாம்ருதம் மஹத் ॥ 6 ॥

ஏகம் ஶாஸ்த்ரம் தே₃வகீபுத்ரகீ₃த—
மேகோ தே₃வோ தே₃வகீபுத்ர ஏவ ।
ஏகோ மந்த்ரஸ்தஸ்ய நாமாநி யாநி
கர்மாப்யேகம் தஸ்ய தே₃வஸ்ய ஸேவா ॥ 7 ॥

* * * * *

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

॥ ஓம் ஶ்ரீபரமாத்மநே நம: ॥

ஓம் பூர்ணமத₃: பூர்ணமித₃ம் பூர்ணாத்பூர்ணமுத₃ச்யதே ।
பூர்ணஸ்ய பூர்ணமாதா₃ய பூர்ணமேவாவஶிஷ்யதே ॥

வஸுதே₃வஸுதம் தே₃வம் கம்ஸசாணூரமர்த₃நம் ।
தே₃வகீபரமாநந்த₃ம் க்ருஷ்ணம் வந்தே₃ ஜக₃த்₃கு₃ரும் ॥

நாராயணம் நமஸ்க்ருத்ய நரம் சைவ நரோத்தமம் ।
தே₃வீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜயமுதீ₃ரயேத் ॥

# ஶ்ரீமத்பகவத்கீதை

## (தத்வவிவேசனீ – ஹிந்தி விளக்கவுரையின் தமிழாக்கம்)

## அத₂ ப்ரத₂மோऽத்₄யாய:

## முதல் அத்யாயம்

## அர்ஜுந விஷாத யோகம்

**அத்யாயத்தின் பெயர்** அர்ஜுனனை நிமித்தமாகக் கொண்டு ஶ்ரீபகவான் ஶ்ரீபகவத்கீதை என்ற பெயரில் அகில உலகிற்கும் ஓர் அரிய உபதேசம் செய்தார். அதன் முகவுரையாக இந்த முதல் அத்யாயம் அமைகிறது. இதில் இரு பக்கங்களிலும் ப்ரதான வீரர்கள் கூடியிருப்பதைக் குறிப்பிட்ட பிறகு உற்றார்-உறவினர்களுடைய அழிவு ஏற்படுமே என்ற ஐயத்தினால் கலக்கம் ஏற்பட்டு, அதனால் அர்ஜுனனுக்கு வருத்தம் உண்டாவது முக்யமாக வர்ணிக்கப்படுகிறது. நல்ல சேர்க்கை கிடைக்குமேயானால், உலக இன்பங்களில் வைராக்யம் பெறுவதன் மூலமாக, இவ்வித வருத்தம்கூட மேலான நலனை நோக்கி வழிகாட்டிச் செல்வதாக ஆகிறது. அதனால், இதனுடைய பெயர் 'அர்ஜுந விஷாத‡ யோகம்' என்று வைக்கப்பட்டிருக்கிறது.

**அத்யாயச் சுருக்கம்** முதல் ச்லோகத்தில் த்ருதராஷ்ட்ரர், ஸஞ்ஜயனிடம் யுத்தத்தைப் பற்றிய விவரத்தைக் கேட்கிறார். இதற்குப் பதிலாக 2ல் த்ரோணாசார்யரிடம் சென்று துர்யோதனன் உரையாட ஆரம்பித்த விவரத்தை ஸஞ்ஜயன் கூறுகிறார். 3ல் துர்யோதனன், விசாலமான பாண்டவ ஸேனையைப் பார்க்கும்படி த்ரோணாசார்யரிடம் கூறிவிட்டு, 4 முதல் 6 வரை அந்தப் பாண்டவ ஸேனையில் உள்ள முக்யமான வீரர்களின் பெயர்களைக் கூறுகிறான். 7ல் 'நம்முடைய ஸேனையில் உள்ள முக்ய

‡ விஷாதம் — மனச்சோர்வு, துக்கம்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



படைத்தலைவர்களைத் தெரிந்து கொள்ளுங்கள்' என்று, அவரிடமே கூறுகிறான் துர்யோதனன். 8, 9ல் அவர்களில் சிலருடைய பெயர்களைக் கூறி, அவர்களது பராக்ரமம், போர்த்திறமை இவற்றை எடுத்துக் கூறுகிறான். 10ல் 'நம்முடைய படையை யாரும் வெல்ல முடியாது. பாண்டவர் படை நம்முடையதைக் காட்டிலும் பலம் குறைந்தது' என்று கூறியபின், 11ல் வீரர்கள் அனைவரையும் பார்த்து, 'எல்லா முனைகளிலும் பீஷ்மரைப் பாதுகாக்க வேண்டும்' என்று வேண்டுகோள் விடுக்கிறான். 12ல் பீஷ்மர் சங்கு முழங்குவது பற்றியும், 13ல் கௌரவர் படையில் சங்கு, பேரிகை, தம்பட்டம், பறை, கொம்பு முதலியவை ஒருங்கே முழங்குகின்றன என்றும் ஸஞ்ஜயன் கூறுகிறார். 14 முதல் 18 வரை வரிசையாக பகவான் ஸ்ரீக்ருஷ்ணன், அர்ஜுனன், பீமஸேனன், யுதிஷ்டிரன், நகுலன், ஸஹதேவன், பாண்டவர் படையில் மற்ற சிறந்த வீரர்கள் தத்தம் சங்குகளை முழங்குவது கூறப்படுகிறது. 19ல் சங்கு முழக்கத்தின் பயங்கர ஒலி விண்ணிலும், மண்ணிலும் எதிரொலித்ததன் விளைவாக துர்யோதனன் முதலானோர் கலங்குகின்றனர் என்று கூறப்படுகிறது. 20, 21ல் த்ருதராஷ்ட்ர குமாரர்களின் யுத்த முனைப்பைப் பார்த்து அர்ஜுனன் தம் ரதத்தை இரு படைகளுக்கும் மத்தியில் கொண்டு போய் நிறுத்தும்படி ஸ்ரீக்ருஷ்ணனிடம் கூறுகிறார். 22, 23ல் படைகள் முழுவதையும் பார்வையிடும்வரை ரதத்தை அங்கேயே நிறுத்தி வைக்குமாறு சைகையினால் குறிப்பிட்டு, அனைவரையும் பார்க்க வேண்டும் என்ற தம் விருப்பத்தை வெளியிடுகிறார். 24, 25ல் அர்ஜுனனது வேண்டுகோளுக்கு இணங்க, ரதத்தை இரு படைகளுக்கும் இடையே கொண்டு போய் நிறுத்தி, ஸ்ரீக்ருஷ்ணன் 'யுத்தத்திற்காக ஒன்றாகக் கூடியிருக்கும் கௌரவர்களைப் பார்' என்கிறார். பிறகு 30 வரை எங்கும் தம்முடையவர்களே கூடியிருப்பதைப் பார்த்து அர்ஜுனன் கலங்குவதும், அவர் சோகமுற்றிருப்பதும் கூறப்படுகின்றன. 31ல் யுத்தத்தின் முடிவு விபரீதம் ஆகலாம் என்கிறார். 32, 33ல் அர்ஜுனன் வெற்றி கொள்வதிலோ, அரச ஸுகத்திலோ தமக்கு விருப்பு இல்லை என்று யுக்தியுடன் கூடிய வாதங்களை எடுத்துரைக்கிறார். 34, 35ல் ஆசார்யர் முதலியவர்களைக் குறிப்பிட்டு, 'நானே அடிபட்டு விழுந்தாலும், மூவுலகு அரசு கிடைத்தாலும்கூட, இந்த ஆசார்யர்கள், தந்தை, தனயர் ஆகிய நம் உற்றாரை வதைக்க விரும்பவில்லை' என்று குறிப்பிட்டு, 36, 37ல் 'உறவினர்களான துர்யோதனாதியர் ‡ஆததாயிகளாக இருந்தாலும்கூட, அவர்களைக் கொல்வதால் பாவம்தான் ஏற்படும். ஸுகமோ, மகிழ்ச்சியோ ஏற்படாது' என்கிறார். 38, 39ல் குலநாசம், மித்ர த்ரோஹம் (நண்பனுக்குக் கெடுதி செய்வது) இவற்றினால் ஏற்படக்கூடிய பாவங்களிலிருந்து மீள்வதற்கு யுத்தம் செய்யாமல் இருப்பதே நல்லது என்று கூறிவிட்டு, 40 முதல் 44 வரை குலநாசத்தினால் ஏற்படும் தீமைகளை விரிவாக விளக்குகிறார். 45, 46ல் ராஜ்யத்திலும், ஸுகத்திலும் ஆசை கொண்டு தம் உற்றார்களைக் கொல்வதற்காகச் செய்யப்படும் இப்போரில் ஈடுபட்டுப் பாவம் செய்ய ஆரம்பிக்கிறோமே என்று வருந்தி, இதைக் காட்டிலும் துர்யோதனாதியர் நம்மைக் கொல்வது மேல் என்றும், 47ல் 'ஆகவே, நான் யுத்தம் செய்யமாட்டேன்' என்றும் தீர்மானித்து, சோகத்தில் ஆழ்ந்த அர்ஜுனன் ஆயுதங்களைக்

‡ ஆததாயீ — கொடிய பாவத்தைச் செய்தவன்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



களைந்துவிட்டு ரதத்தில் உட்கார்ந்துவிட்டார் என்று கூறி ஸஞ்ஜயன் அத்யாயத்தை முடிக்கிறார்.

பொருத்தம்: மஹாபாரதத்தில் கீதை உபதேசம் செய்ய வேண்டிய ஸந்தர்ப விளக்கம் இனி கூறப்படுகிறது—

பாண்டவர்கள் ராஜஸூய யாகம் செய்தபோது, அவர்களுடைய அளவற்ற செல்வத்தைக் கண்டு துர்யோதனன் உள்ளத்தில் மிகுந்த பொறாமை ஏற்பட்டது. சகுனி முதலானோரின் ஒப்புதலைப் பெற்று துர்யோதனன் யுதிஷ்டிரரைச் சூதாட்டத்திற்கு அழைத்தான். வஞ்சனை மூலம் அவரை வென்று, அவர்களுடைய செல்வம் அனைத்தையும் கவர்ந்து கொண்டான். யுதிஷ்டிரர் முதலிய ஐவரும் த்ரௌபதியுடன்கூடப் பன்னிரண்டு ஆண்டுகள் வனத்தில் வசிக்கவேண்டும்; பின்னர் ஓராண்டு யாரும் கண்டுபிடிக்க முடியாதபடி மறைந்து வசிக்கவேண்டும்; இவ்விதம் பதின்மூன்றாண்டுகள் முடியும்வரை துர்யோதனன் ராஜ்யம் முழுவதையும் ஆளவேண்டும்; அஞ்ஞாதவாஸத்தின்போது பாண்டவர்கள் யாருக்கும் புலப்படாமல் ஓராண்டு முழுவதையும் கழித்து முடித்துவிட்டால், பதின்மூன்றாண்டுகளுக்குப் பிறகு பாண்டவர்களின் ராஜ்யம் அவர்களுக்குத் திருப்பி அளிக்கப்படும் என்று சூதாட்டத்தின் முடிவில் தீர்மானம் செய்யப் பட்டது. பதின்மூன்றாண்டுகள் கழித்துப் பாண்டவர்கள் தமது ராஜ்யத்தைக் கேட்டபோது, துர்யோதனன் திருப்பிக் கொடுப்பதற்கு அடியோடு மறுத்துவிட்டான். அவனுக்கு அறிவுரை கூறுவதற்காக த்ருபத ராஜன் அறிவிலும், வயதிலும் முதிர்ந்த தம் புரோஹிதரை அனுப்பினார். அவரது அறிவுரை ஒன்றையும் துர்யோதனன் கேட்கவில்லை. பிறகு இரு தரப்பிலும் யுத்த ஏற்பாடுகள் தொடங்கின.

போரில் பகவான் ஸ்ரீக்ருஷ்ணனுடைய உதவியைப் பெறுவதற்காக துர்யோதனன் த்வாரகை சென்றான். அன்றைய தினமே அர்ஜுனனும் அங்கு போய்ச் சேர்ந்தார். இருவரும் அங்கு பகவான் தம் மாளிகையில் தூங்குகிறார் என்றறிந்தனர். அவர் தூங்குமிடத்தில் துர்யோதனன் தலைமாட்டில் ஒரு விலையுயர்ந்த ஆஸனத்தில் அமர்ந்து கொண்டான். அர்ஜுனன் இரு கைகளையும் கூப்பிக் கொண்டு, வணக்கத்துடன் பகவானுடைய திருவடியின் அருகில் நின்று கொண்டிருந்தார். கண்ணன் கண் விழித்ததும் எதிரே நின்று கொண்டிருந்த அர்ஜுனனைப் பார்த்தார். பிறகு பின்னால் திரும்பிய பொழுது தலைமாட்டில் அமர்ந்திருந்த துர்யோதனன் தென்பட்டான். கண்ணன் இருவரையும் வரவேற்று உபசரித்து அவர்கள் வந்த காரணத்தைக் கேட்டார். அப்பொழுது துர்யோதனன்— "உங்களுக்கு என்னிடமும், அர்ஜுனனிடமும் அன்பு ஓரேவிதம் உள்ளது. இருவரும் உங்களுடைய உறவினர்கள். உங்களைக் காண நான் முன்னால் வந்தேன். முன்னால் வந்தவனுக்குத்தான் நல்லோர் உதவி செய்வார்கள் என்ற முறை உண்டு. அகில பூமண்டலத்திலும் உள்ள பெரியோர்களில் நீங்கள் மிகச் சிறந்தவர்; மதிப்பிற்குரியவர். ஆகவே, நீங்கள் எனக்குத்தான் உதவி புரியவேண்டும்" என்றான். பகவான் கூறினார்— "நீங்கள்தான் முதலில் வந்தீர்கள். இதில் ஸந்தேஹம் இல்லை. ஆனால் நான் அர்ஜுனனைத்தான் முதலில் பார்த்தேன். ஆகவே நான் இருவருக்கும் உதவி செய்வேன். ஆனால் சாஸ்த்ர முறைப்படி சிறுவர்களின் விருப்பத்தை முதலில் நிறைவேற்றுவதுதான் உசிதம்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஆகவே முதலில் அர்ஜுனன் விருப்பத்தைத்தான் நிறைவேற்ற வேண்டும். நான் இரண்டுவிதமாக உதவி செய்வேன். ஒரு பக்கம் என்னுடைய வலிமைமிக்க நாராயணீ ஸேனை சேரும். மறுபக்கம் யுத்தம் செய்யமாட்டேன் என்ற சபதத்துடன் நான் தனியாகச் சேர்வேன், ஆயுதம் எடுக்கமாட்டேன். அர்ஜுன! தர்மப்படி உன் விருப்பத்திற்கு முன்னுரிமை உண்டு. ஆகவே உனக்கு எது விருப்பமோ, அதைக் கேள்." உடனே அர்ஜுனன், பகைவர்களை அழிக்கும் நாராயணனான பகவான் ஸ்ரீக்ருஷ்ணனையே யாசித்தார். பிறகு துர்யோதனன் நாராயணீ ஸேனையைக் கேட்டான். அதை ஏற்றுக் கொண்டு, அவன் த்ருப்தியுடன் ஹஸ்தினாபுரம் திரும்பிச் சென்றான்.

இதற்குப் பிறகு பகவான் அர்ஜுனனைப் பார்த்து "அர்ஜுன! நான் யுத்தமே செய்யமாட்டேன் என்றபோதும், எந்த நோக்கத்தில் நாராயணீ ஸேனையை விரும்பாமல், என்னை மட்டும் விரும்பினாய்?" என்று வினவினார்

அர்ஜுனன் கூறினார்— "பகவானே! நீங்கள் தனியாகவே அனைவரையும் அழிக்க வல்லவர். நான் வெறும் படையை வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறேன்? தவிரப் பல நாட்களாக எனக்குள் ஓர் ஆசை – நீங்கள் எனக்குத் தேரோட்டியாக வேண்டும் என்று. இந்தப் பெரும் போரில் நீங்கள் என் விருப்பத்தைக் கட்டாயம் பூர்த்தி செய்யவேண்டும்." பக்தவத்ஸலனான பகவான், அர்ஜுனன் விருப்பப்படி அவருடைய ரதத்தின் குதிரைகளை ஓட்டும் பணியை ஏற்றார். இவ்விதம் பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் அர்ஜுனனுடைய தேரோட்டியானார். யுத்த ஆரம்பத்தில் குருக்ஷேத்ரத்தில் அவருக்கு கீதையின் மூலம் திவ்ய உபதேசம் செய்தார். நிற்க.

துர்யோதனனும், அர்ஜுனனும் த்வாரகையிலிருந்து திரும்பிய பிறகு இருபடைகளும் அவரவரிடத்தில் கூடின. அப்போது ஸ்ரீக்ருஷ்ணன் தாமே ஹஸ்தினாபுரம் சென்று துர்யோதனனுக்குப் பலவிதமாக அறிவுரை கூற முனைந்தார். துர்யோதனன் தெளிவாகக் கூறிவிட்டான்— 'நான் உயிரோடு இருக்கும்வரை பாண்டவர்கள் அரசைப் பெறமுடியாது; ஊசிமுனை அளவு நிலம்கூடப் பாண்டவர்களுக்குக் கொடுக்கமாட்டேன்' (மஹாபாரதம், உத்யோக பர்வம் 127/22-25). அப்போது தமக்கு ந்யாயமாகக் கிடைக்கவேண்டிய சொத்தை அடைவதற்காக, தாயார் குந்தியின் ஆணையுடனும், பகவான் ஸ்ரீக்ருஷ்ணனின் தூண்டுதலினாலும், 'யுத்தம் செய்வது தர்மம்தான்' என்று தீர்மானித்துப் பாண்டவர்கள் போர் செய்யத் துணிந்தனர்.

இருபடைகளும் யுத்தத்திற்குத் தயார் ஆகிவிட்டன. பகவான் வேதவ்யாஸர் த்ருதராஷ்ட்ரரிடம் சென்று— 'நீ கொடிய யுத்தத்தைப் பார்க்க விரும்பினால், உனக்கு தெய்விகக் கண்கள் தருகிறேன்' என்று கூறினார். "ப்ரம்மரிஷிகளில் சிறந்தவரே! என் கண்களால் குலம் இவ்வாறு அழிவதைக் காண நான் விரும்பவில்லை. ஆயினும் யுத்தத்தின் முழு நிகழ்ச்சிகளையும் நன்கு கேட்க விரும்புகிறேன்" என்று த்ருதராஷ்ட்ரர் கூறினார்.

பிறகு மஹரிஷி வேதவ்யாஸர் ஸஞ்ஜயனுக்கு தெய்விகப் பார்வை அளித்துவிட்டு, த்ருதராஷ்ட்ரரிடம்— "இந்த ஸஞ்ஜயன் உனக்கு யுத்தச் செய்திகளனைத்தையும் கூறுவார். யுத்தத்தில் நடக்கும் எல்லா நிகழ்ச்சிகளையும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நேரில் பார்க்கவும், கேட்கவும், அறியவும் ஸஞ்ஜயனால் முடியும். முன்னும்-பின்னும், பகலிலும்-இரவிலும், மறைவாகவோ-வெளிப்படையாகவோ, அவரவர்கள் மனதில் வகுக்கும் திட்டங்களானாலும் சரி, செயல்களானாலும் சரி, எதையும் இவரிடமிருந்து மறைக்க முடியாது. அவற்றை அவ்வப்பொழுதே உள்ளது உள்ளவாறே அறிந்து கொள்வார். இவரது உடலை எந்த ஆயுதமும் தாக்காது. இவருக்குச் சிறிதும் களைப்பே தோன்றாது. எது நிகழ வேண்டுமோ, அது நிகழத்தான் போகிறது. இப்படி அனைத்தும் அழிவதை யாராலும் தடுக்க முடியாது. இறுதியில் தர்மமே வெல்லும்" என்று கூறியருளினார்.

வேதவ்யாஸ மஹரிஷி சென்ற பிறகு த்ருதராஷ்ட்ரர் ஸஞ்ஜயனை வினவினார். ஸஞ்ஜயன் பூமியின் பற்பல தீவுகளைப் பற்றிய செய்திகளையெல்லாம் கூறினார். அதனிடையே பாரத வர்ஷத்தைப் பற்றியும் வர்ணித்தார். கௌரவர்—பாண்டவர்களிடையே போர் மூண்டது, தொடர்ந்து பத்து நாட்கள் வரை யுத்தம் நடந்தது. பாட்டனார் பீஷ்மர் போர்க்களத்தில் ரதத்திலிருந்து வீழ்த்தப்பட்டார். எதிர்பாராதவிதமாக பீஷ்மர் அடிபட்டு வீழ்ந்த செய்தியை ஸஞ்ஜயன் கூறக் கேட்ட த்ருதராஷ்ட்ரர் மிகவும் வருந்தினார் (மஹா. பீஷ்ம. 13). யுத்தத்தில் நடந்தவற்றையெல்லாம் மிக விரிவாகக் கூறும்படி ஸஞ்ஜயனைக் கேட்டார். ஸஞ்ஜயன், இருபுறத்துப் படைகளும் வ்யூஹம் வகுத்து நின்ற விவரமனைத்தும் கூறினார். பிறகு த்ருதராஷ்ட்ரர் 'ஆரம்பத்திலிருந்து இதுவரை நடந்த எல்லாவற்றையும் விளக்கமாகச் சொல்' என்றார். இங்குதான் பகவத் கீதையின் முதல் அத்யாயம் துவங்குகிறது. மஹாபாரதம் பீஷ்ம பர்வத்தில் இது இருபத்தைந்தாவது அத்யாயம். இதன் ஆரம்பத்தில் த்ருதராஷ்ட்ரர் ஸஞ்ஜயனைக் கேட்கிறார்—

धृतराष्ट्र उवाच

धर्मक्षेत्रे कुरुक्षेत्रे समवेता युयुत्सवः।
मामकाः पाण्डवाश्चैव किमकुर्वत सञ्जय॥ १॥

த்₄ருதராஷ்ட்ர உவாச

த₄ர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ: ।
மாமகா: பாண்ட₃வாஸ்சைவ கிமகுர்வத ஸஞ்ஜய ॥ 1 ॥

த்₄ருதராஷ்ட்ர உவாச — த்ருதராஷ்ட்ரர் சொன்னார்: **ஸஞ்ஜய** — ஸஞ்ஜய! **த₄ர்மக்ஷேத்ரே** — தர்மபூமியான, **குருக்ஷேத்ரே** — குருக்ஷேத்ரத்தில், **ஸமவேதா:** — ஒருங்கே கூடியிருந்தவர்களும், **யுயுத்ஸவ:** — யுத்தம் செய்ய விரும்பியவர்களுமான, **மாமகா:** — என்னுடையவர்களும், **பாண்ட₃வா: ச ஏவ** — பாண்டுவின் புதல்வர்களும், **கிம்** — என்ன, **அகுர்வத** — செய்தார்கள்?

த்ருதராஷ்ட்ரர் சொன்னார்: ஸஞ்ஜய! தர்மபூமியான குருக்ஷேத்ரத்தில் ஒருங்கே கூடியிருந்தவர்களும், யுத்தம் செய்ய விரும்பியவர்களுமான என்னுடையவர்களும், பாண்டுவின் புதல்வர்களும் என்ன செய்தார்கள்?'

**கேள்வி:** குருக்ஷேத்ரம் என்று எந்த இடத்திற்குப் பெயர்? அதை தர்மக்ஷேத்ரம் என்று ஏன் சொல்ல வேண்டும்?

**பதில்:** மஹாபாரதம் வன பர்வம் 83வது அத்யாயத்திலும், சல்ய பர்வம் 53வது அத்யாயத்திலும் குருக்ஷேத்ரத்தின் பெருமை விசேஷமாக விளக்கப்படுகிறது. அது ஸரஸ்வதீ

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நதியின் தென்புறத்திலும், த்ருஷத்வதீ நதியின் வடபுறத்திலும் உள்ள இடைப்பட்ட பகுதியில் இருக்கிறது என்று கூறப்படுகிறது. அதன் நீள, அகலம் ஐந்துக்கு ஐந்து யோஜனை தூரம் என்று கூறுகிறார்கள். இந்த இடம் அம்பாலாவுக்குத் தெற்கேயும், டில்லிக்கு வடக்கேயும் உள்ளது. இப்பொழுதும் குருக்ஷேத்ரம் என்ற இடம் அங்கே உள்ளது. இதற்கு மற்றொரு பெயர் ஸமந்தபஞ்சகம் என்பது. சதபதப்ராஹ்மணம் முதலிய நூல்களில், 'இங்கு அக்னி, இந்த்ரன், ப்ரம்மா முதலிய தேவர்கள் தவம் செய்தார்கள். குரு மஹாராஜனும் இங்கே உயரிய தவம் செய்தான். இங்கே இறப்பவர்கள் உத்தம கதியைப் பெறுகிறார்கள்' என்று கூறப்படுகிறது. இவை தவிர வேறு பல காரணங்களுக்காகவும் இது 'தர்மக்ஷேத்ரம்' என்றும், 'புண்யக்ஷேத்ரம்' என்றும் கூறப்படுகிறது.

**கேள்வி:** த்ருதராஷ்ட்ரர் 'மாமகா:' (என்னுடையவர்கள்) என்று யாரைக் குறிப்பிடுகிறார்? பாண்டவர்கள் என்று எவரைக் குறிப்பிடுகிறார்? அந்தச் சொற்களோடு, 'ஸமவேதா:' என்றும், 'யுயுத்ஸவ:' என்றும் அடைமொழிகளோடு 'கிம் அகுர்வத' என்று கேட்கிறார். அதன் கருத்து என்ன?

**பதில்:** 'மாமகா:' என்ற சொல்லினால் த்ருதராஷ்ட்ரர் தம் கட்சியைச் சார்ந்த அனைத்து யுத்த வீரர்களையும் துர்யோதனன் முதலான தம் நூற்றொரு குமாரர் களையும் சேர்த்துக் குறிப்பிடுகிறார். பாண்டவர் என்ற சொல்லினால் யுதிஷ்டிரர் கட்சியைச் சார்ந்த அனைத்து வீரர்களையும், யுதிஷ்டிரர் முதலான ஐந்து ஸஹோதரர்களையும் குறிப்பிடுகிறார். 'ஸமவேதா:', 'யுயுத்ஸவ:' என்ற உரிச்சொற்களோடு 'கிம் அகுர்வத' என்ற கேள்வியினால், த்ருதராஷ்ட்ரர், சென்ற பத்து நாட்களில் நடந்த பயங்கரமான போரின் முழு விவரத்தையும் தெரிந்து கொள்ள விரும்பினார். 'யுத்தத்திற்காக ஒன்றுகூடிய அனைவரும் போரை எவ்விதம் தொடங்கினார்கள்? யார் யாரோடு பொருதனர்? யார், யாரால், எவ்விதம், எவ்வாறு, எப்பொழுது அடிபட்டு மடிந்தனர்?' முதலான கேள்விகளைக் கேட்டார்.

பாட்டனார் பீஷ்மரின் வீழ்ச்சி வரை நடந்தவற்றை முன்பே த்ருதராஷ்ட்ரர் கேட்டு அறிந்து கொண்டுவிட்டார். ஆகவே, தர்மக்ஷேத்ரத்தின் மஹிமையினால் என் குமாரர்களுக்கு அறிவு திருந்தி இருக்குமோ? அவர்கள் பாண்டவர்களுக்கு உரியதைக் கொடுத்து, யுத்தம் செய்யாமல் இருந்திருப்பார்களோ அல்லது தர்ம புத்ரரே தர்மக்ஷேத்ர மஹிமையினால் உந்தப்பட்டு யுத்தத்திலிருந்து விலகி இருப்பாரோ? இதுவரை இரண்டு படைகளும் நின்று கொண்டுதான் இருக்கின்றனவா? யுத்தம் நடக்கவே இல்லையா? யுத்தம் நடந்திருந்தால் அதன் விளைவு என்ன என்று கேட்கும் அவருக்கு யுத்தச் செய்திகள் எவையும் தெரியா என்பது இந்தக் கேள்விக்குப் பொருளன்று.

**பொருத்தம்:** த்ருதராஷ்ட்ரர் வினவியதும் ஸஞ்ஜயன் கூறுகிறார்—

सञ्जय उवाच

**दृष्ट्वा तु पाण्डवानीकं व्यूढं दुर्योधनस्तदा।**
**आचार्यमुपसङ्गम्य राजा वचनमब्रवीत्॥ २ ॥**

ஸஞ்ஜய உவாச

**த்₃ருஷ்ட்வா து பாண்ட₃வாநீகம் வ்யூட₄ம் து₃ர்யோத₄நஸ்தத₃ா ।**
**ஆசார்யமுபஸங்க₃ம்ய ராஜா வசநமப்₃ரவீத் ॥ 2 ॥**

**ஸஞ்ஜய உவாச** – ஸஞ்ஜயன் சொன்னார்: **தத₃ா** – அப்பொழுது, **ராஜா து₃ர்யோத₄ந:** – ராஜா துர்யோதனன், **வ்யூட₄ம்** – அணி வகுத்து நிறுத்தப்பட்டிருந்த, **பாண்ட₃வாநீகம்** – பாண்டவர் படையை, **த்₃ருஷ்ட்வா து** – பார்த்ததும், **ஆசார்யம்** – த்ரோணாசார்யரை, **உபஸங்க₃ம்ய** – அணுகி, **வசநம்** – (இந்த) வார்த்தையை, **அப்₃ரவீத்** – கூறலானான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸஞ்ஜயன் சொன்னார்: 'அப்பொழுது ராஜா துர்யோதனன் அணிவகுத்து நிறுத்தப் பட்டிருந்த பாண்டவர் படையைப் பார்த்ததும் குருவாகிய த்ரோணாசார்யரை அணுகி இந்த வார்த்தையைக் கூறலானான்.'

**கேள்வி:** துர்யோதனனை 'ராஜா' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** துர்யோதனனை 'ராஜா' என்று ஸஞ்ஜயன் கூறுவதற்குப் பல கருத்துக்கள் இருக்கலாம்.

அ. துர்யோதனன் மாவீரன்; அரசியல் அறிவு நிறைந்தவன்; அரசாட்சியில் அனைத்தையும் அவனே செய்து வந்தான்.

ஆ. ஸாதுக்கள் அனைவருக்கும் மரியாதை கொடுப்பார்கள். ஸஞ்ஜயனும் ஸாது ஸ்வபாவம் படைத்தவர்.

இ. தம்முடைய மகன் மரியாதை தரும் அடைமொழிகளால் குறிப்பிடப்படுவதைக் கேட்டு, தந்தையான த்ருதராஷ்ட்ரர் மகிழ்ச்சி அடையலாம்.

**கேள்வி:** 'அணிவகுத்து நிறுத்தப்பட்டிருந்த பாண்டவர் படையைக் கண்ட துர்யோதனன், த்ரோணாசார்யரை அணுகினான்' – இதற்கு என்ன பொருள்?

**பதில்:** பாண்டவரின் அணிவகுப்பு அவ்வளவு விசித்திரமான முறையில் அமைந்திருந்தது. அதைப் பார்த்து துர்யோதனன் வியப்படைந்தான். அதைர்யமடைந்த அவன், அதை எடுத்துக் கூறுவதற்காக த்ரோணரிடம் ஓடினான். பாண்டவர் படையின் அணிவகுப்பைப் பார்த்து, அதைப் பற்றிக் கேள்விப்பட்டு தனுர் வேதத்தில் சிறந்த அறிவு பெற்ற குருதேவர் த்ரோணர் அதைக்காட்டிலும் மேன்மையாகத் தம் படையை விசித்திரமான முறையில் அணிவகுக்கும்படி பாட்டனாருக்கு எடுத்துக் கூறுவார் என்று துர்யோதனன் எண்ணினான்.

**கேள்வி:** அரசனான துர்யோதனன் ஏன் படைத்தலைவரிடம் தானே சென்றான்? படைத்தலைவரைத் தன்னிடம் அழைத்து அனைத்துச் செய்திகளையும் சொல்லி அறிவுறுத்தியிருக்கலாமே?

**பதில்:** பாட்டனார் பீஷ்மர்தான் கௌரவப் படைக்கு ப்ரதானமான படைத்தலைவர். ஆனாலும் கௌரவப் படையில் குருவான த்ரோணாசார்யருக்கு உயர்ந்த ஸ்தானம் உண்டு. மிகுந்த பொறுப்பும் உண்டு. படை அணிவகுப்பில் எந்தப் படைத்தலைவருக்கு எந்த இடம் அளிக்கப்பட்டிருக்கிறதோ, அவரை அங்கிருந்து அழைப்பதோ, அகற்றுவதோ முறையன்று. அணிவகுப்பில் குழப்பம் ஏற்படும். ஆகவே த்ரோணாசார்யரை அவருக்கு அளிக்கப்பட்ட பகுதியிலிருந்து அகற்றாமல் தானே அங்கு போவதுதான் உசிதம் என்று துர்யோதனன் நினைத்தான். மேலும் த்ரோணாசார்யர் வயதிலும், அறிவிலும் மூத்தவர்; தனக்கு ஆசார்யர்; மதிப்பிற்குரியவர்; தற்சமயம் அவரால் கார்யம் ஆகவேண்டும். ஆகவே அவரைப் பெருமைப்படுத்தி, அவருடைய அன்பைப் பெறுவதுதான் தனக்கு நல்லது என்று நினைத்தான். மிகச்சிறந்த அறநெறிப்படி எல்லோருக்கும் மதிப்புக் கொடுத்துப் பணிவுடன் நடந்து கொள்வதுதான் முறை. அரசியலில் புத்திசாலியானவன் தன் கார்யம் நிறைவேறுவதற்காகப் பிறரைப் பெருமைப்படுத்தத்தான் வேண்டும். இத்தனையையும் கவனித்தால் துர்யோதனன் த்ரோணரிடம் சென்றது முறையானதுதான் என்பது தெளிவாகும்.

**பொருத்தம்:** த்ரோணாசார்யரிடம் துர்யோதனன் கூறியதை இனி கூறுகிறார்—

पश्यैतां पाण्डुपुत्राणामाचार्य महतीं चमूम्।
व्यूढां द्रुपदपुत्रेण तव शिष्येण धीमता॥ ३॥

பஶ்யைதாம் பாண்டு₃புத்ராணாமாசார்ய மஹதீம் சமூம் ।
வ்யூட₄ாம் த்₃ருபத₃புத்ரேண தவ ஶிஷ்யேண தீ₄மதா ॥ 3 ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ஆசார்ய** – ஆசார்யரே! **தவ** – உங்களுடைய, **தீ₄மதா** – புத்திசாலியான, **ஶிஷ்யேண** – சிஷ்யனான, **த்₃ருபத₃ புத்ரேண** – த்ருபதனின் குமாரன் த்ருஷ்டத்யும்னனால், **வ்யூட₄ாம்** – அணி வகுக்கப்பட்ட, **பாண்டு₃புத்ராணாம்** – பாண்டு புத்ரர்களின், **ஏதாம்** – இந்த, **மஹதீம்** – மிகப்பெரிய, **சமூம்** – படையை, **பஶ்ய** – பாருங்கள்.

ஆசார்யரே! உங்களுடைய புத்திசாலி சிஷ்யனான த்ருபதனின் குமாரன் த்ருஷ்டத்யும்னனால் அணிவகுக்கப்பட்ட பாண்டு புத்ரர்களின் இந்த மிகப்பெரிய படையைப் பாருங்கள்.

**கேள்வி:** 'த்ருஷ்டத்யும்னன் த்ருபதரின் குமாரன். உங்கள் சிஷ்யன். புத்திசாலி' என்று துர்யோதனன் என்ன அபிப்ராயத்தோடு கூறினான்?

**பதில்:** துர்யோதனன் அரசியல் சூழ்ச்சியில் மிகவும் கெட்டிக்காரன். த்ருஷ்டத்யும்னன் மீது பழிவாங்கும் எண்ணத்தையும், பாண்டவர்களைப் பற்றிய கெட்ட எண்ணத்தையும் த்ரோணரிடம் ஏற்படுத்தி, அவரை மிகவும் வெறி கொள்ளச் செய்வதற்காக, த்ருஷ்டத்யும்னனை த்ருபத புத்ரன் என்றும், புத்திசாலியான உங்கள் சிஷ்யன் என்றும் குறிப்பிட்டான். இந்தச் சொற்களின் மூலம் அவன் அவருக்கு இப்படியும் அறிவுறுத்தினான்: "பாருங்கள்! த்ருபதன் உங்களிடம் முன்பு தவறாக நடந்து கொண்டான். பிறகு உங்களை வதம் செய்வதற்காகவே யாகம் செய்து த்ருஷ்டத்யும்னனை மகனாகப் பெற்றான். த்ருஷ்டத்யும்னனுக்குச் சூழ்ச்சிகள் எல்லாம் தெரிகின்றன. நீங்களோ இவ்வளவு எளிமையாக இருக்கிறீர்கள். உங்களைக் கொல்வதற்காகவே பிறந்தவன். உங்களிடமே வில்வித்தை கற்றிருக்கிறான். அது மட்டுமன்று; அவனுடைய புத்திசாலித்தனத்தைப் பாருங்கள்! உங்கள் எல்லோரையும் திணற வைக்கும்படியான அழகான அணிவகுப்பு ஒன்றைச் செய்திருக்கிறான். இத்தகையவனைப் பாண்டவர்கள் தலைமை ஸேனாதிபதியாகப் பட்டம் கட்டியிருக்கிறார்கள். இப்பொழுது நாம் வெற்றிபெற என்ன செய்ய வேண்டுமென்று நீங்களே யோசித்துப் பாருங்கள்!"

**கேள்வி:** கௌரவ ஸேனை பதினொன்று அக்ஷௌஹிணீ என்றும், பாண்டவ ஸேனை வெறும் ஏழு அக்ஷௌஹிணீ என்றும் இருக்கும்போது துர்யோதனன் எதிர்ப்படையை ஏன் மிகப் பெரியது (மஹதீ) என்று சொல்கிறான்? அதைப் பாருங்கள் – என்று ஆசார்யரை ஏன் வற்புறுத்துகிறான்?

**பதில்:** எண்ணிக்கையில் குறைந்ததாக இருந்தாலும் வஜ்ர வ்யூஹ அமைப்பினால் அது பெரியதாகத் தெரிகிறது. மற்றொரு விஷயமும் உண்டு. எண்ணிக்கையில் அது குறைந்ததாக இருந்தாலும் அது கட்டுப்பாடு நிறைந்ததாக இருக்கிறது. ஆகவே, அது மிகுந்த சக்தி வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. இதனால் துர்யோதனன் 'இத்தகைய அணிவகுப்பில் கட்டுப்பாட்டுடன் விளங்கும் பெரிய படையைப் பாருங்கள். நாம் எப்படி வெற்றி பெறுவோமோ, அதற்குத்தக்க உபாயத்தைச் சிந்தியுங்கள்' என்று கூறுகிறான்.

**பொருத்தம்:** பாண்டவ ஸேனையின் அணிவகுப்பைக் காட்டிவிட்டு, துர்யோதனன் அடுத்த மூன்று ச்லோகங்களில் பாண்டவர் படையில் உள்ள சிறந்த மஹாரதிகளின் பெயர்களைக் கூறுகிறான்—

अत्र शूरा महेष्वासा भीमार्जुनसमा युधि।
युयुधानो विराटश्च द्रुपदश्च महारथः ॥ ४ ॥

धृष्टकेतुश्चेकितानः काशिराजश्च वीर्यवान्।
पुरुजित्कुन्तिभोजश्च शैब्यश्च नरपुङ्गवः ॥ ५ ॥

युधामन्युश्च विक्रान्त उत्तमौजाश्च वीर्यवान्।
सौभद्रो द्रौपदेयाश्च सर्व एव महारथाः ॥ ६ ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அத்ர ஶூரா மஹேஷ்வாஸா பீ₄மார்ஜுநஸமா யுதி₄ ।**

**யுயுதா₄நோ விராடஸ்ச த்₃ருபத₃ஸ்ச மஹாரத₂: ॥ 4 ॥**

**த்₄ருஷ்டகேதுஸ்சேகிதாந: காஸிராஜஸ்ச வீர்யவாந் ।**

**புருஜித்குந்திபோ₄ஜஸ்ச ஸைப்₃யஸ்ச நரபுங்க₃வ: ॥ 5 ॥**

**யுதா₄மந்யுஸ்ச விக்ராந்த உத்தமௌஜாஸ்ச வீர்யவாந் ।**

**ஸௌப₄த்₃ரோ த்₃ரௌபதே₃யாஸ்ச ஸர்வ ஏவ மஹாரதா₂: ॥ 6 ॥**

**அத்ர** – இந்தப் படையில், **மஹேஷ்வாஸா:** – பெரிய பெரிய வில்லாளிகள், **யுதி₄** – யுத்தத்தில், **பீ₄ம அர்ஜுநஸமா:** – பீமனுக்கும், அர்ஜுனனுக்கும் ஈடான, **ஶூரா:** – வீரர்கள், **யுயுதா₄ந:** – ஸாத்யகியும், **விராட: ச** – விராடனும், **மஹாரத₂:** – மஹாரதியான, **த்₃ருபத₃: ச** – ராஜா த்ருபதனும், **த்₄ருஷ்டகேது:** – த்ருஷ்டகேதுவும், **சேகிதாந: ச** – சேகிதானனும், **வீர்யவாந்** – பலசாலியான, **காஸிராஜ:** – காசிராஜனும், **புருஜித்** – புருஜித்தும், **குந்திபோ₄ஜ: ச** – குந்திபோஜனும், **நரபுங்க₃வ:** – மனிதர்களிற்சிறந்த, **ஸைப்₃ய: ச** – சைப்யனும், **விக்ராந்த:** – பராக்ரமம் மிகுந்த, **யுதா₄மன்யு: ச** – யுதாமன்யுவும், **வீர்யவாந்** – பலசாலியான, **உத்தமௌஜா: ச** – உத்தமௌஜாவும், **ஸௌப₄த்₃ர:** – ஸுபத்ரையின் குமாரன் அபிமன்யுவும், **ச** – அவ்வாறே, **த்₃ரௌபதே₃யா:** – த்ரௌபதியின் ஐந்து புதல்வர்களும், **ஸர்வே ஏவ** – அவர்கள் எல்லோருமே, **மஹாரதா₂:** – மஹாரதிகளாக, **(ஸந்தி** – இருக்கிறார்கள்).

இந்தப் படையில் பெரிய பெரிய வில்லாளிகள் யுத்தத்தில் பீமனுக்கும், அர்ஜுனனுக்கும் ஈடான வீரர்கள் ஸாத்யகியும், விராடனும், மஹாரதியான ராஜா த்ருபதனும், த்ருஷ்டகேதுவும், சேகிதானனும், பலசாலியான காசிராஜனும், புருஜித்தும், குந்திபோஜனும், மனிதர்களிற் சிறந்த சைப்யனும், பராக்ரமம் மிகுந்த யுதாமன்யுவும், பலசாலியான உத்தமௌஜாவும், ஸுபத்ரையின் குமாரன் அபிமன்யுவும் அவ்வாறே த்ரௌபதியின் ஐந்து புதல்வர்களும் – அவர்கள் எல்லோருமே மஹாரதிகளாக இருக்கிறார்கள்.

**கேள்வி:** 'அத்ர' என்ற சொல் எந்தப் பொருளில் இங்கு உபயோகப்படுத்தப்படுகிறது?

**பதில்:** 'அத்ர' என்ற சொல் பாண்டவர் படை என்ற பொருளில் கூறப்படுகிறது.

**கேள்வி:** 'யுதி' என்ற சொல், 'அத்ர' என்பதுடன் அல்லாமல், 'பீமார்ஜுநஸமா:' என்பதுடன் ஏன் சேர்க்கப்பட்டிருக்கிறது?

**பதில்:** யுத்தம் இன்னும் ஆரம்பிக்கவில்லை. ஆகவே 'அத்ர', 'யுதி' – 'இந்த யுத்தத்தில்' என்று சொல்ல முடியாது. இதற்கு முன் பாண்டவர் ஸேனை பற்றித்தான் பேசப்படுகிறது. ஆகவே 'அத்ர' (இந்த) என்று அதைத்தான் குறிப்பிட முடியும். ஆகவே 'படையில்' என்று சேர்ப்பதற்கு அவசியமில்லை. 'யுத்தத்தில்' என்ற சொல்லை 'பீமார்ஜுநஸமா:' – 'பீமன், அர்ஜுனனுக்கு ஸமானமானவர்கள்' என்ற சொல்லோடு சேர்த்தால்தான் இங்கே குறிப்பிட்ட பெயர்களுக்கு உரியவர்கள் வீரத்திலும், போர் முறையிலும் பீம–அர்ஜுனர்களுக்கு ஸமானமானவர்கள் – என்பது பொருத்தமாக இருக்கிறது.

**கேள்வி:** யுயுதானன், விராடன், த்ருபதன், த்ருஷ்டகேது, சேகிதானன், காஸிராஜன், புருஜித், குந்திபோஜன், ஸைப்யன், யுதாமன்யு, உத்தமௌஜா இவர்கள் யார்?

**பதில்:** **யுயுதானன்** – அர்ஜுனனுடைய சிஷ்யன். ஸாத்யகிக்கு யுயுதானன் என்றும் பெயர் உண்டு (மஹா. உத்யோக பர்வம் *81/5–8*). இவன் யாதவ வம்சத்து அரசன் 'ஶினி' என்பவரின் மகன் (மஹா. த்ரோண பர்வம் *144/17–19*); ஶ்ரீக்ருஷ்ணனைச் சார்ந்தவன்; பலம்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மிகுந்தவன்; அதிரதி. இவன் மஹாபாரத யுத்தத்தில் இறக்கவில்லை. யாதவர்களுக்குள் ஏற்பட்ட யுத்தத்தில் அடிபட்டு இறந்தான். யுயுதானன் என்ற பெயர் கொண்ட வேறு ஒரு யாதவ வம்சத்து வீரனும் உண்டு (மஹா. உத்யோக பர்வம் 152/6).

**விராடன்** — மத்ஸ்ய தேசத்து அறவழி ஒழுகிய அரசர். பாண்டவர்கள் ஓராண்டு இவரது மாளிகையில் மறைந்து வாழ்ந்தார்கள். இவருடைய பெண் உத்தரையை அர்ஜுனனுடைய மகன் அபிமன்யு மணந்தான். மஹாபாரத யுத்தத்தில் இவரும், உத்தரன், ச்வேதன், சங்கன் என்ற இவருடைய மூன்று மகன்களும் அடிபட்டு இறந்தனர்.

**த்ருபதன்** — இவர் பாஞ்சால தேசத்து அரசர். 'ப்ருஷத்' என்பவரின் குமாரர். ப்ருஷத்தும், பரத்வாஜ முனிவரும் நண்பர்கள். இளமையில் த்ருபதனும் பரத்வாஜ முனிவரின் ஆசிரமத்தில் இருந்தார். அதனால் பரத்வாஜருடைய குமாரர் த்ரோணருடன் இவருக்கு நட்பு உண்டாயிற்று. ப்ருஷத் பரலோகம் போனபிறகு த்ருபதன் அரசர் ஆனார். அப்பொழுது ஒரு நாள் த்ரோணர் அவரிடம் சென்று நட்புரிமை கொண்டாடினார். த்ருபதனுக்கு அது பிடிக்கவில்லை. த்ரோணர் வேதனையுற்றுத் திரும்பினார். த்ரோணர் கௌரவர்களுக்கும், பாண்டவர்களுக்கும் வில்வித்தை கற்பித்த பிறகு குருதக்ஷிணை என்ற முறையில் அர்ஜுனனைக் கொண்டு த்ருபதனை வென்று, தமக்கு ஏற்பட்ட அவமானத்தைத் தீர்த்துக் கொண்டார். த்ருபதனுடைய பாதி ராஜ்யத்தை எடுத்துக் கொண்டார். த்ருபதன் மேலெழுந்தவாரியாக த்ரோணருடன் அன்பு காட்டினார். மனதிற்குள் கொந்தளிப்பு இருந்தது. யாஜர், உபயாஜர் என்ற ரிஷிகளைக் கொண்டு த்ரோணரைக் கொல்லக்கூடிய மகனை அடைய வேண்டுமென்று யாகம் செய்வித்தார் த்ருபதன். அந்த யாகவேதியிலிருந்து த்ருஷ்டத்யும்னனும், க்ருஷ்ணையும் தோன்றினார்கள். இந்த க்ருஷ்ணைதான் 'த்ரௌபதி', 'யாஜ்ஞஸேனீ' என்று புகழ் பெற்றாள். சுயம்வரத்தில் வெற்றி பெற்றுப் பாண்டவர்கள் அவளை மணந்தார்கள். த்ருபத ராஜர் பெரிய சூரவீரர்; மஹாரதி. மஹாபாரத யுத்தத்தில் த்ரோணர் கையால் இவருக்கு மரணம் ஏற்பட்டது (மஹா. த்ரோண பர்வம் 186).

**த்ருஷ்டகேது** — சேதி நாட்டு அரசன்; சிசுபாலனின் மகன். மஹாபாரத யுத்தத்தில் இவனை த்ரோணர் வதைத்தார் (மஹா. த்ரோண பர்வம் 125).

**சேகிதானன்** — வ்ருஷ்ணி வம்சத்தைச் சேர்ந்த யாதவன் (மஹா. பீஷ்ம பர்வம் 84/20); சூரவீரன்; மஹாரதி. பாண்டவர்களின் ஏழு அக்ஷௌஹிணீ படைக்குரிய ஏழு ஸேனாபதிகளில் ஒருவன் (மஹா. உத்யோக பர்வம் 151). இவனை மஹாபாரத யுத்தத்தில் துர்யோதனன் கொன்றான் (மஹா. சல்ய பர்வம் 12).

**காசிராஜன்** — காசிக்கு அரசன்; பெரிய வீரன்; மஹாரதி. இவன் பெயர் சரியாகத் தெரியவில்லை. மஹாபாரதம், உத்யோக பர்வம் 171ல் காசிராஜனின் பெயர் 'ஸேனாபிந்து' என்றும், 'க்ரோதஹந்தா' என்றும் கூறப்படுகிறது. கர்ண பர்வம் 6வது அத்யாயத்தில் காசிராஜனின் மரணம் கூறப்படுகிறது. அங்கு அவன் பெயர் 'அபிபூ' என்று கூறப்படுகிறது.

**புருஜித், குந்திபோஜன்** — இருவரும் குந்தியின் ஸஹோதரர்கள். யுதிஷ்டிரர் முதலானவர்களுக்கு அம்மான்கள். இருவரையும் மஹாபாரத யுத்தத்தில் த்ரோணர் கொன்றார் (மஹா. கர்ண பர்வம் 6/22,23).

**சைப்யன்** — இவர் யுதிஷ்டிரரின் மாமனார். இவர் பெண் தேவிகாவை யுதிஷ்டிரர் மணந்தார் (மஹா. ஆதி பர்வம் 95); மனிதர்களில் சிறந்தவர்; பெரிய யுத்த வீரர். அதனால் 'நரபுங்கவர்' என்று கூறப்படுகிறார்.

**யுதாமன்யு, உத்தமௌஜா** — இருவரும் ஸஹோதரர்கள். பாஞ்சால தேசத்து ராஜகுமாரர்கள் (மஹா. த்ரோண பர்வம் 130). முதலில் அர்ஜுனனின் ரதத்திற்கு சக்ரக்காப்பாளர்களாக நியமிக்கப்பட்டார்கள் (மஹா. பீஷ்ம பர்வம் 15/19). இவர்கள் சிறந்த வீரர்கள்; பலம் மிகுந்தவர்கள். ஆகவே, இவர்களுக்கு 'விக்ராந்த' என்றும், 'வீர்யவான்' என்றும் முறையே அடைமொழிகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இரவில் இவர்கள் உறங்கிக்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கொண்டிருந்தபோது இவர்களை அச்வத்தாமா கொன்றுவிட்டான். (மஹா. ஸௌப்திக பர்வம் 8/34-37).

**கேள்வி:** அபிமன்யு யார்?

**பதில்:** அர்ஜுனன், பகவான் க்ருஷ்ணனுடைய ஸஹோதரி ஸுபத்ரையை மணந்தார். அவள் கர்பத்தில் அபிமன்யு பிறந்தான். மத்ஸ்ய நாட்டு அரசன் விராடனுடைய பெண் உத்தரையை அபிமன்யு மணந்தான். தன் தகப்பனாரான அர்ஜுனனிடமும், அம்மான் மகன் ப்ரத்யும்னனிடமும் வில்வித்தை கற்றான். நிகரற்ற வீரன். மஹாபாரத யுத்தத்தில் த்ரோணர் ஒரு நாள் சக்ரவ்யூஹம் அமைத்தார். பாண்டவர் அணியைச் சேர்ந்த யுதிஷ்டிரர், பீமன், நகுலன், ஸஹதேவன், விராடன், த்ருபதன், த்ருஷ்டத்யும்னன் முதலிய எவரும் உள்ளே நுழைய முடியாதவாறு அவ்வளவு திறமையாக அந்த சக்ரவ்யூஹம் அமைந்திருந்தது. ஜயத்ரதன் எல்லோரையும் விரட்டிவிட்டான். அர்ஜுனன் வேறோரிடத்தில் யுத்தத்தில் முனைந்திருந்தார். அன்று வீர இளைஞனான அபிமன்யு தனியாக அந்த வ்யூஹத்தை உடைத்துக் கொண்டு உள்ளே நுழைந்துவிட்டான். எண்ணற்ற வீரர்களைக் கொன்று குவித்தான். தன் நிகரற்ற வீரத்தைக் காண்பித்தான். த்ரோணர், க்ருபாசார்யர், கர்ணன், அச்வத்தாமா, ப்ருஹத்பலன், க்ருதவர்மா என்ற ஆறு மஹாரதிகள் சேர்ந்து அந்யாயமாக அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். அந்த நிலையிலும் தனியாக நின்று அபிமன்யு பல வீரர்களைக் கொன்றான். முடிவில் துச்சாஸனனின் மகன் கதாயுதத்தால் அபிமன்யுவின் தலையில் ஓங்கி அடித்தான். அதனால் அவன் மரணம் அடைந்தான் (மஹா. த்ரோண பர்வம் 49). 'பரீக்ஷித்' மஹாராஜன் அபிமன்யுவின் புதல்வன்.

**கேள்வி:** த்ரௌபதியின் ஐந்து குமாரர்கள் யார் யார்?

**பதில்:** ப்ரதிவிந்த்யன், ஸுதஸோமன், ச்ருதகர்மா, சதானீகன், ச்ருதஸேனன் — இவர்கள் ஐவரும் முறையே யுதிஷ்டிரர், பீமஸேனன், அர்ஜுனன், நகுலன், ஸஹதேவன் இவர்களுக்கு த்ரௌபதியிடம் பிறந்தவர்கள் (மஹா. ஆதி பர்வம் 220/79,80). இரவில் தூங்கும்போது இவர்களை அச்வத்தாமா கொன்றுவிட்டான் (மஹா. ஸௌப்திக பர்வம் 8).

**கேள்வி:** 'ஸர்வ ஏவ மஹாரதா:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** சாஸ்த்ரங்களிலும், சஸ்த்ர (வில்) வித்தையிலும் தேர்ந்த நிபுணர்களை, நிகரற்றவர்களை மஹாரதீ என்று கூறுவார்கள். இவர்கள் தனியாகப் பதினாயிரம் வில்லாளி வீரர்களை யுத்தத்தில் நடத்திச் செல்வார்கள்.

ஏகோ த₃சஸஹஸ்ராணி யோத₄யேத்₃யஸ்து த₄ந்விநாம் ।
சஸ்த்ரசாஸ்த்ரப்ரவீணச்ச மஹாரத₂ இதி ஸ்ம்ருத: ॥

துர்யோதனன் யார் யாரைப் பெயர் குறிப்பிட்டு இங்கே கூறினானோ, அவர்கள் அனைவரும் மஹாரதிகள். மஹாபாரதம் உத்யோக பர்வம் 169–172 அத்யாயங்களில் இந்த எல்லா வீரர்களுடைய பராக்ரமமும் தனித்தனியாக, விரிவாக வர்ணிக்கப்படுகிறது. அங்கும் இவர்கள் அதிரதி என்றும், மஹாரதி என்றும் கூறப்படுகின்றனர். இவர்களைத் தவிரப் பாண்டவர் படையில் இன்னும் பல மஹாரதிகள் இருந்தனர். அவர்களுடைய பெயர்களும் அங்கே கூறப்படுகின்றன. இங்கு 'ஸர்வே' என்ற சொல்லினால் துர்யோதனன் அவர்களையும் குறிப்பிடுவதாகக் கொள்ளவேண்டும்.

**பொருத்தம்:** பாண்டவர் படையின் ப்ரதான யுத்த வீரர்களின் பெயர்களைக் கூறிவிட்டு, துர்யோதனன் த்ரோணாசார்யரிடம் தன் படையில் கூடியிருக்கும் ப்ரதான வீரர்களை அறிந்து கொள்ளும்படி வேண்டுகிறான்—

**अस्माकं तु विशिष्टा ये तान्निबोध द्विजोत्तम।**
**नायका मम सैन्यस्य संज्ञार्थं तान्ब्रवीमि ते॥ ७॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அஸ்மாகம் து விஸிஷ்டா யே தாந்நிபோ₃த₄ த்₃விஜோத்தம ।**

**நாயகா மம ஸைந்யஸ்ய ஸம்ஜ்ஞார்த₂ம் தாந்ப்₃ரவீமி தே ॥ 7 ॥**

**த்₃விஜோத்தம** – அந்தணர்களிற்சிறந்தவரே! **அஸ்மாகம்** – நமது அணியில், **து** – கூட, **யே விஸிஷ்டா:** – எந்த ப்ரதான யுத்த வீரர்கள், (**ஸந்தி** – இருக்கிறார்களோ), **தாந்** – அவர்களை, **நிபோ₃த₄** – தெரிந்து கொள்ளுங்கள். **மம** – என்னுடைய, **ஸைந்யஸ்ய** – படையின், **நாயகா:** – படைத்தலைவர்களான, **தாந்** – அவர்களைப் பற்றி, **தே** – உங்களுடைய, **ஸம்ஜ்ஞார்த₂ம்** – கவனத்திற்காக, **ப்₃ரவீமி** – சொல்கிறேன்.

அந்தணர்களிற் சிறந்தவரே! நமது அணியில்கூட ப்ரதான யுத்த வீரர்கள் யார் யார் இருக்கிறார்களோ அவர்களைத் தெரிந்து கொள்ளுங்கள். என்னுடைய படையின் தலைவர்களான அவர்களைப் பற்றி நீங்கள் தெரிந்து கொள்வதற்காகச் சொல்கிறேன்.

**கேள்வி:** 'து' என்ற சொல்லை 'அஸ்மாகம்' என்ற சொல்லுடன் இணைத்துக் கூறுவதன் பொருள் என்ன?

**பதில்:** 'து' என்றால் 'கூட' என்று பொருள். பாண்டவர் படையில் மட்டுமல்ல; நம்முடைய படையிலும்கூடப் பெரிய பெரிய வீரர்கள் இருக்கிறார்கள் என்று துர்யோதனன் எடுத்துக்காட்ட விரும்புகிறான்.

**கேள்வி:** 'விஸிஷ்டா:' என்பது யாரைக் குறிக்கும்? 'நிபோத' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** நம்முடைய படையிலும் அனைவரையும்விடச் சிறந்த வீரர், தீரர், பலமுள்ளவர், புத்திசாலி, ஸாஹஸம் புரிபவர், பராக்ரமம் உள்ளவர், ஒளிமிக்கவர், வில்வித்தையில் தேர்ந்தவர்கள் இருக்கிறார்கள் என்பதை 'விஸிஷ்டா:' என்ற சொல்லினால் துர்யோதனன் குறிப்பிடுகிறான். நம்முடைய படையிலும் மிகச் சிறந்த சூரவீரர்களுக்குக் குறைவில்லை. அவர்களில் சிலரைக் குறிப்பிட்டுச் சொல்கிறேன். நீங்கள் அவர்களை நன்றாகத் தெரிந்து கொள்ளவேண்டும் என்று 'நிபோத' – 'என் வாயிலாகக் கேளுங்கள்' என்று கூறுகிறான்.

**பொருத்தம்:** இப்பொழுது இரு ச்லோகங்களில் துர்யோதனன் தன் அணியில் உள்ள ப்ரதான வீரர்களின் பெயர்களைக் குறிப்பிட்டு மற்ற வீரர்களோடு சேர்த்து அவர்களைப் புகழ்கிறான்—

**भवान्भीष्मश्च कर्णश्च कृपश्च समितिञ्जयः।**
**अश्वत्थामा विकर्णश्च सौमदत्तिस्तथैव च॥८॥**

**ப₄வாந்பீ₄ஷ்மஸ்ச கர்ணஸ்ச க்ருபஸ்ச ஸமிதிஞ்ஜய: ।**

**அஸ்வத்த₂ாமா விகர்ணஸ்ச ஸௌமத₃த்திஸ்ததை₂வ ச ॥ 8 ॥**

**ப₄வாந் ச** – தாங்களும் (த்ரோணாசார்யர்), **பீ₄ஷ்ம: ச** – பாட்டனார் பீஷ்மரும், **கர்ண: ச** – கர்ணனும், **ஸமிதிஞ்ஜய:** – யுத்தங்களில் வெற்றியே பெறுகின்ற, **க்ருப: ச** – க்ருபாசார்யரும், **தத₂ா ஏவ** – அவ்வாறே, **அஸ்வத்த₂ாமா** – அஸ்வத்தாமாவும், **விகர்ண: ச** – விகர்ணனும், **ஸௌமத₃த்தி:** – ஸோமதத்தனின் மகன் பூரிஸ்ரவஸ்ஸும்,

தாங்களும் (த்ரோணாசார்யர்), பாட்டனார் பீஷ்மரும், கர்ணனும், யுத்தங்களில் வெற்றியே பெறுகின்ற க்ருபாசார்யரும், அவ்வாறே அஸ்வத்தாமாவும், விகர்ணனும், ஸோமதத்தனின் மகன் பூரிஸ்ரவஸ்ஸும்,

**கேள்வி:** த்ரோணாசார்யர் யார்? துர்யோதனன் அனைத்து வீரர்களுக்கும் முன்னால் அவரை 'நீங்கள்' என்று குறிப்பிட்டு அவர் பெயரை எதற்காகக் கூறினான்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** த்ரோணாசார்யர் பரத்வாஜ மஹரிஷியின் புதல்வர். இவர் அக்னிவேஶ்ய மஹரிஷியிடமும், ஸ்ரீ பரஶுராமரிடமும் எல்லா அஸ்த்ர-ஶஸ்த்ரங்களுடைய ரஹஸ்யங்களையும், ப்ரயோகங்களையும் கற்றார். அவர் வேதங்கள், வேதாங்கங்களை முற்றிலும் அறிந்தவர்; பெரிய தவசீலர்; முழுமையாக தனுர்வேதம், அஸ்த்ர-ஶஸ்த்ர வித்யைகளின் மர்மம் அறிந்தவர்; அனுபவம் உள்ளவர்; யுத்தக்கலையில் சிறந்த நிபுணர்; ஸாஹஸம் நிறைந்தவர்; அதிரதீயான வீரர்; ப்ரம்மாஸ்த்ரம், ஆக்னேய அஸ்த்ரம் முதலிய விசித்ரமான அஸ்த்ரங்களின் ப்ரயோகத்தை நன்கு அறிந்தவர். யுத்தகளத்தில் அவர் தம் பூரண சக்தியோடு முனைந்து நிற்குங்கால் அவரை யாராலும் வெல்ல முடியாது. இவர் 'ஶரத்வான்' என்ற மஹரிஷியின் பெண் 'க்ருபி'யை மணந்து கொண்டார். இவளிடம் பிறந்தவன்தான் அஶ்வத்தாமா. த்ரோணர் த்ருபதராஜனின் பால்ய கால நண்பர். ஒரு சமயம் இவர் த்ருபதனிடம் சென்று, 'ப்ரிய நண்பனே!' என்று அழைத்தார். அவர் செல்வச் செருக்கினால் த்ரோணரை அவமதித்துவிட்டார். 'என்னைப் போன்ற செல்வம் படைத்த அரசனுக்கு உன்னைப் போன்ற செல்வமற்ற தரித்திரனுடைய நட்பு எவ்விதமும் இருக்க முடியாது' என்றார். த்ருபதன் இவ்வாறு தம்மை அவமதித்ததால் த்ரோணருடைய உள்ளத்தில் மிகுந்த வேதனை ஏற்பட்டது. அவர் ஹஸ்தினாபுரம் சென்று தம் மைத்துனர் க்ருபாசார்யருடன் தங்க ஆரம்பித்தார். அங்கு இவருக்குப் பாட்டனார் பீஷ்மருடைய அறிமுகம் ஏற்பட்டது. அவர் கௌரவ, பாண்டவ குமாரர்களுக்குக் கல்வி அளிக்கும்படி த்ரோணரை நியமித்தார். கல்வி அளித்து முடித்தபிறகு குருதக்ஷிணை என்ற முறையில் த்ரோணர் த்ருபத ராஜனைப் பிடித்துக் கொண்டு வருமாறு சிஷ்யர்களைப் பணித்தார். மஹாத்மாவான அர்ஜுனனால்தான் குருவின் இந்த ஆணையை நிறைவேற்ற முடிந்தது. த்ருபதனை யுத்தகளத்தில் தோற்கடித்து மந்திரிகளுடன்கூட அவரைப் பிடித்துக் கொண்டு வந்தார். த்ரோணர் அவரை உயிரோடு விட்டுவிட்டார். ஆனால், அவருடைய ராஜ்யத்தில் கங்கையின் வடபுறப் பகுதியை எடுத்துக் கொண்டார். த்ரோணர் மஹாபாரத யுத்தத்தில் ஐந்து நாட்கள் ஸேனாபதியாக இருந்தார். பயங்கரமான யுத்தம் புரிந்தார். முடிவில் தம் குமாரன் அஶ்வத்தாமா இறந்துவிட்டான் என்ற தவறான செய்தியைக் கேட்டு ஆயுதங்களை த்யாகம் செய்து, ஸமாதியில் அமர்ந்து பகவானை த்யானம் செய்தார். இவர் தாமே உயிர் த்யாகம் செய்தவுடன் இவருடைய ஜோதிமய ஸ்வரூபம் ஒளி மிகுந்து ஆகாயமெங்கும் பரவி நிறைந்தது. இந்த நிலையில் த்ருஷ்டத்யும்னன் கூரான வாளினால் அவருடைய தலையைக் கொய்தான்.

துர்யோதனன் இங்கு 'நீங்கள்' என்று முதலில் இவரைக் குறிப்பிட்டுச் சொன்னது, த்ரோணர் த்ருப்திப்படட்டும் என்ற எண்ணத்தினால். அதனால், தன் அணியில் மேலும் உற்சாகத்தோடு யுத்தம் புரிவார் என்ற எண்ணத்தினாலும், தனக்குக் கல்வி கற்பித்தவர் என்ற மரியாதையாலும் அனைவருக்கும் முதலில் அவரை 'நீங்கள்' என்று குறிப்பிட்டுச் சொன்னது முறையானதுதான்.

**கேள்வி:** பீஷ்மர் யார்?

**பதில்:** பீஷ்மர் ஶந்தனு மஹாராஜனின் குமாரர். பாகீரதியான கங்கையிடம் பிறந்தவர். இவர் 'த்யோ' — என்ற பெயர் கொண்ட ஒன்பதாவது வஸுவின் அவதாரம் (மஹா. ஶாந்தி பர்வம் 50/26). இவருடைய முதல் பெயர் 'தேவவ்ரதர்'. தம் தந்தைக்கு ஸத்யவதியைத் திருமணம் செய்விப்பதற்காக அவளுடைய வளர்ப்புத் தந்தையின் ஆணைக்குக் கட்டுப்பட்டுப் பொங்கும் காளைப்பருவத்தில் 'உயிருள்ளவரை நான் திருமணம் செய்து கொள்ள மாட்டேன்; அரச பதவியையும் த்யாகம் செய்வேன்' என்று பீஷண (பயங்கர) ப்ரதிக்ஞை செய்தார். இந்த பீஷண ப்ரதிக்ஞையின் காரணமாக இவருக்கு 'பீஷ்மர்' என்ற பெயர் வந்தது. ஸாதாரணமாக மனித வர்க்கத்திற்கே மிகவும் பிடித்தமான ஸ்த்ரீ ஸுகத்தையும், ராஜ்ய ஸுகத்தையும் தந்தையின் ஸுகத்திற்காக இவர் அடியோடு த்யாகம் செய்தார். இதனால் மிகவும் த்ருப்தி அடைந்த இவருடைய தந்தை 'உன்னுடைய விருப்பமில்லாமல் ம்ருத்யு (மரணம்) உன்னை அண்டாது' என்று வரமளித்தார். இவர் இளமையிலிருந்தே ப்ரம்மசாரி; மிகவும் பொலிவு உள்ளவர்; அஸ்த்ரங்கள், சாஸ்த்ரங்கள் இரண்டிலும் கரை கண்டவர்; அனுபவம் உள்ளவர்;

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பழுத்த ஞானி; பெரிய வீரர்; உறுதியான தீர்மானம் உடைய மஹாபுருஷர். இவரிடம் சூரத்தனம், வீரத்தனம், த்யாகம், ஸஹிப்புத்தன்மை, பொறுமை, தயவு, புலனடக்கம், மனவடக்கம், ஸத்யம், அஹிம்ஸை, ஸந்தோஷம், அமைதி, பலம், பொலிவு, ந்யாயத்தில் நேயம், பணிவு, உதார மனப்பான்மை, அனைவரின் அன்பையும் பெறுவது, தெளிவாகப் பேசுவது, ஸாஹஸம், ப்ரம்மசர்யம், வைராக்யம், ஞானம், விஞ்ஞானம், தாய்-தந்தையரிடம் பக்தி, ஆசார்ய பக்தி முதலிய எல்லா நற்பண்புகளும் முழுமையாக மலர்ந்திருந்தன. பகவானுடைய பக்தியே அவருடைய வாழ்க்கையில் நிறைந்திருந்தது. இவர் பகவான் ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஸ்வரூபத்தையும், தத்வத்தையும் நன்கு அறிந்தவர்; ஸ்ரீக்ருஷ்ணன் ஒருவரிடமே ஈடுபாடு உள்ளவர்; ச்ரத்தையும், பரம ப்ரேமையும் கொண்டவர்; பக்தர். மஹாபாரத யுத்தத்தில் இவருக்கு ஈடு கொடுக்கும்படியான மற்றொரு வீரரே கிடையாது. இவர் துர்யோதனனின் முன்னிலையில் ஒரு ப்ரதிக்ஞை செய்தார்: 'நான் ஐந்து பாண்டவர்களையும் ஒருபோதும் கொல்ல மாட்டேன். எனினும் ஒவ்வொரு நாளும் பதினாயிரம் வீரர்களை யுத்தத்தில் வதம் செய்வேன்' (மஹா. உத்யோக பர்வம் 156/21). இவர் கௌரவர் கட்சியில் ப்ரதான ஸேனாபதியாகப் பத்து நாட்கள் பதவி வகித்து கோர யுத்தம் புரிந்தார். அதற்குப் பிறகு அம்புப்படுக்கையில் வீழ்ந்திருந்தபடியே எல்லோருக்கும் அரிய ஞான உபதேசம் செய்தார். உத்தராயணம் வந்த பிறகு தம் இச்சைப்படி உடலை நீத்தார்.

**கேள்வி:** *கர்ணன் யார்?*

**பதில்:** கர்ணன் குந்தியின் மகன். சூரியதேவருடைய அருளினால் குந்தி கன்னியாக இருந்தபோதே அவள் வயிற்றில் பிறந்தவன். குந்தி இவனைப் பெட்டியில் வைத்து நதியில் விட்டுவிட்டாள். ஆனால், பாக்யவசமாக இவன் இறக்கவில்லை. தண்ணீரில் மிதந்து கொண்டே அந்தப் பெட்டி ஹஸ்தினாபுரம் சேர்ந்தது. 'அதிரதன்' என்ற பெயர் கொண்ட தேரோட்டி இவனைத் தன் வீட்டிற்கு எடுத்துச் சென்றான். அவன் மனைவி ராதை இவனை வளர்த்தாள். கர்ணன் இவர்களின் மகனென்றே அனைவரும் நினைத்தனர். கவசம், குண்டலம் என்ற உயர்ந்த அணிகளை அணிந்து கொண்டே இவன் பிறந்தான். ஆகவே அதிரதன் இவனுக்கு 'வஸுஷேணன்' (செல்வத்தோடு கூடியவன்; ஆபரணங்களோடு கூடியவன்) என்று பெயர் வைத்தான். இவன் த்ரோணாசார்யரிடமும், பரசுராமரிடமும் அஸ்த்ர, சஸ்த்ர வித்தைகளைப் பயின்றான். சாஸ்த்ரம், சஸ்த்ரம் என்ற இரண்டிலும் தேர்ச்சி பெற்ற பெரிய பண்டிதனாகவும், அனுபவம் பெற்றவனாகவும் இருந்தான். சஸ்த்ர வித்தையிலும், யுத்தக் கலையிலும் இவன் அர்ஜுனனுக்கு நிகராக விளங்கினான்.

துர்யோதனனுடன் இவனுக்கு நெருங்கிய நட்பு ஏற்பட்டது. அவன், இவனை அங்க தேசத்திற்கு அரசனாக்கினான். உடல், பொருள், மனம், ஆவிகளால் துர்யோதனனின் நன்மையிலேயே தன்னை ஈடுபடுத்திக் கொண்டான். அவனுக்கு ஹிதத்தையே மனதில் நினைத்தான். தாயார் குந்தியும், பகவான் க்ருஷ்ணனும் அவனுடைய பிறவி ரஹஸ்யத்தை எடுத்துச் சொன்ன பிறகுகூட இவன் துர்யோதனன் அணியை விட்டு விலகிப் பாண்டவர் அணியில் சேர இணங்கவில்லை. இவனுடைய கொடைத் தன்மைக்கு ஈடு இணை கிடையாது. தினந்தோறும் அவன் சூரியனையே உபாஸித்தான். அப்போது யார் எது கேட்டாலும், மகிழ்ச்சியோடு அவர்களுக்குக் கொடுப்பான். ஒரு நாள் தேவராஜன் இந்த்ரன் ஓர் அந்தணர் வேஷம் பூண்டு, அர்ஜுனனுடைய நன்மைக்காக இவனுடைய உடலுடன்கூடப் பிறவியிலேயே ஒட்டிக் கொண்டிருந்த கவச-குண்டலங்களைக் கேட்டான். கர்ணன் முழு மனதுடன் அதே கணம் கவச-குண்டலங்களைப் பிய்த்துக் கொடுத்தான். அதற்குப் பதிலாக இந்த்ரன் அவனுக்கு வீரர்களைக் கொல்லக்கூடிய வீண் போகாத சக்தி ஆயுதத்தைக் கொடுத்தான். மஹாபாரத யுத்தத்தின்போது கர்ணன் அதை ப்ரயோகம் செய்து பீமஸேனனின் வீரகுமாரனான கடோத்கசனைக் கொன்றான். த்ரோணாசார்யருக்குப் பிறகு கர்ணன் மஹாபாரத யுத்தத்தில் இரண்டு நாட்கள் ப்ரதானப் படைத்தலைவனாக இருந்தான். அர்ஜுனன் அவனைக் கொன்றார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** க்ருபாசார்யர் யார்?

**பதில்:** இவர் கௌதம வம்சத்தினரான 'ஶரத்வான்' என்ற மஹரிஷியின் புதல்வர்; வில்வித்தையில் கரைகண்டவர்; அனுபவம் உள்ளவர். இவருடைய ஸஹோதரியின் பெயர் க்ருபீ. சந்தனு மஹாராஜன் க்ருபையுடன் இவர்களை வளர்த்தார். அதனால், இவருக்கு 'க்ருபன்' என்றும், இவருடைய ஸஹோதரிக்கு 'க்ருபீ' என்றும் பெயர் வந்தது. இவர் வேத சாஸ்த்ரங்களை அறிந்தவர்; தர்மாத்மா; நற்பண்புகளும், நல்லொழுக்கமும் படைத்தவர். த்ரோணாசார்யர் வருவதற்கு முன்னால் இவர்தான் கௌரவ, பாண்டவ குமாரர்களுக்கும், யாதவர் முதலானவருக்கும் வில்வித்தைப் பயிற்சி அளித்தார். அனைத்து கௌரவப் படையும் அழிந்த பிறகும் இவர் ஜீவித்திருந்து பரீக்ஷித்துக்கு வில்வித்தைப் பயிற்சி அளித்தார். இவர் பெரும் வீரர்; எதிராளிகளை வெற்றி கொள்வதில் நிபுணர். இதனால் இவருக்கு 'ஸமிதிஞ்ஜயர்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது.

**கேள்வி:** அஶ்வத்தாமா யார்?

**பதில்:** அஶ்வத்தாமா த்ரோணரின் புத்ரன்; சஸ்த்ர, அஸ்த்ர வித்தைகளில் கைதேர்ந்தவன்; யுத்தக் கலையில் தேர்ச்சி பெற்றவன்; சூரவீரன்; மஹாரதி. இவன் தன் தந்தை த்ரோணாசார்யரிடமே யுத்தக் கல்வி பெற்றான்.

**கேள்வி:** விகர்ணன் யார்?

**பதில்:** த்ருதராஷ்ட்ரருடைய நூறு புதல்வர்களில் ஒருவன் விகர்ணன். இவன் பெரிய தர்மாத்மா; வீரன்; மஹாரதி. கௌரவர்களின் அரசவையில் கொடுமைப்படுத்தப்பட்ட த்ரௌபதி, அனைவரையும் பார்த்து, 'நான் தோற்றுவிட்டேனா? இல்லையா' என்று கேள்வி எழுப்பினபோது, விதுரரைத் தவிர மற்றவர் யாவரும் பேசாமல் இருந்தார்கள். விகர்ணன் ஒருவன் மட்டுமே எழுந்து நின்று ஆவேசமிக்க பேச்சினால் ந்யாயத்தையும், தர்மத்தையும் தெளிவாக எடுத்துச் சொல்லி, 'த்ரௌபதியின் கேள்விக்குப் பதில் சொல்லாமல் மௌனம் ஸாதிப்பது பெருத்த அந்யாயம். த்ரௌபதியை நாம் ஜயிக்கவில்லை என்று எனக்கு நன்றாகத் தெரிகிறது' என்று முழங்கினான் (மஹா. ஸபா பர்வம் 67/18-25).

**கேள்வி:** 'ஸௌமதத்தி' யார்?

**பதில்:** ஸோமதத்தனின் குமாரர் பூரிஶ்ரவஸ் என்பவர்தான் 'ஸௌமதத்தி'. ஶந்தனு மஹாராஜனின் மூத்த ஸஹோதரர் பாஹ்லீகரின் பேரர் பூரிஶ்ரவஸ்; மிகுந்த தர்மசீலர்; யுத்தக் கலையில் தேர்ச்சி பெற்றவர்; சூரவீரர்; மஹாரதி. நிறைய தக்ஷிணைகள் கொடுத்துப் பல யாகங்கள் செய்தவர். மஹாபாரத யுத்தத்தில் ஸாத்யகி இவரைக் கொன்றான்.

**கேள்வி:** 'ததா' என்றும், 'ஏவ' என்றும் கூறுவதன் பொருள் என்ன?

**பதில்:** அஶ்வத்தாமா, விகர்ணன், பூரிஶ்ரவஸ் இவர்கள் அனைவருமே க்ருபாசார்யரைப் போல யுத்தத்தில் வெற்றி பெறுபவர்கள் என்று பொருள்.

**अन्ये च बहवः शूरा मदर्थे त्यक्तजीविताः।**
**नानाशस्त्रप्रहरणाः सर्वे युद्धविशारदाः ॥ ९ ॥**

**அந்யே ச ப₃ஹவ: ஶூரா மத₃ர்தே₂ த்யக்தஜீவிதா: ।**

**நாநாஶஸ்த்ரப்ரஹரணா: ஸர்வே யுத்₃த₄விஶாரதா₃: ॥ 9 ॥**

**மத₃ர்தே₂** — எனக்காக, **த்யக்தஜீவிதா:** — உயிராசையை விட்டவர்களான, **அந்யே** — வேறு, **ப₃ஹவ:** — பல, **ஶூரா: ச** — சூரவீரர்களும், **நாநா ஶஸ்த்ர ப்ரஹரணா:** — பற்பல அஸ்த்ர-ஶஸ்த்ரங்களுடன் தயாராக நிற்கின்ற, **ஸர்வே** — அனைவருமே, **யுத்₃த₄ விஶாரதா₃:** — யுத்தத்தில் திறமை பெற்றவர்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



எனக்காக உயிராசையை விட்டவர்களான வேறு பல சூரவீரர்களும், பற்பல அஸ்த்ர-ஶஸ்த்ரங்களுடன் தயாராக நிற்கின்ற அனைவருமே யுத்தத்தில் திறமைப் பெற்றவர்கள்.

**கேள்வி:** இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

**பதில்:** இதற்கு முன்னால் ஶல்யன், பாஹ்லீகர், பகதத்தர், க்ருதவர்மா, ஜயத்ரதர் முதலான மஹாரதிகளைப் பற்றிச் சொல்லவில்லை. அவர்களை இவ்விதம் குறிப்புக்காட்டி துர்யோதனன் சொல்கிறான்: "நான் சொன்னவர்களைத் தவிர இன்னும் பல யுத்த வீரர்கள் உள்ளனர். அவர்கள் வாள், கதாயுதம், த்ரிசூலம் போன்ற கையில் பிடித்தபடி தாக்குதற்கான ஆயுதங்கள் தாங்கியவர்கள். அம்பு, தோமரம், சக்தி முதலிய வீசியெறியக் கூடிய அஸ்த்ரங்களையும் வைத்திருக்கிறார்கள். யுத்த முறையில் மிகவும் தேர்ச்சி பெற்ற மஹாரதிகள் அனைவரும் எனக்காக உயிரை விடுவதற்கும் துணிந்து விட்டவர்கள். ஆகவே, உயிர் போகும் கணம்வரை எனக்காகக் கடுமையாகப் போர் புரிவார்கள் என்பதை நீங்கள் நம்பலாம்."

**பொருத்தம்: தன்னைச் சார்ந்த மஹாரதிகளான வீரர்களின் பெருமையைச் சொல்லிவிட்டுத் தற்போது துர்யோதனன் இரு படைகளையும் ஒப்பிட்டு, தன் படை பாண்டவர் படையைக் காட்டிலும் சக்தி மிகுந்தது, சிறந்தது என்று கூறுகிறான்—**

**अपर्याप्तं तदस्माकं बलं भीष्माभिरक्षितम्।**
**पर्याप्तं त्विदमेतेषां बलं भीमाभिरक्षितम्॥ १०॥**

**அபர்யாப்தம் தத₃ஸ்மாகம் ப₃லம் பீ₄ஷ்மாபி₄ரக்ஷிதம் ।**
**பர்யாப்தம் த்வித₃மேதேஷாம் ப₃லம் பீ₄மாபி₄ரக்ஷிதம் ॥ 10 ॥**

**பீ₄ஷ்மாபி₄ரக்ஷிதம்** – பாட்டனார் பீஷ்மரால் காக்கப்படும், **அஸ்மாகம்** – நமது, **தத்** – அந்த, **ப₃லம்** – படை, **அபர்யாப்தம்** – எல்லாவிதங்களாலும் (எதிரிகளால்) வெல்ல இயலாதது. **து** – ஆனால், **பீ₄மாபி₄ரக்ஷிதம்** – பீமனால் கட்டிக் காக்கப்படும், **ஏதேஷாம்** – இவர்களுடைய, **இத₃ம்** – இந்த, **ப₃லம்** – படை, **பர்யாப்தம்** – (நம்மால்) எளிதில் வெல்லப்படக்கூடியது.

பாட்டனார் பீஷ்மரால் காக்கப்படும் நமது படை எல்லாவிதங்களிலும் எதிரிகளால் வெல்ல இயலாதது. ஆனால் பீமனால் கட்டிக் காக்கப்படும் இவர்களுடைய படை நம்மால் எளிதில் வெல்லப்படக்கூடியது.

**கேள்வி:** துர்யோதனன் தன் ஸேனை பாட்டனார் பீஷ்மரால் காக்கப்படுவதால் வெற்றி கொள்ள முடியாதது என்று என்ன கருத்தில் சொல்கிறான்?

**பதில்:** இவ்விதம் துர்யோதனன் காரணம் காட்டித் தன் படையின் பெருமையை நிரூபிக்கிறான். அவன் சொல்வது என்னவென்றால் தனது படை முன் சொன்ன மஹாரதிகள் நிரம்பியது என்பது மட்டுமன்று; பரசுராமர் போன்ற யுத்த வீரர்களைக்கூட எதிர்க்கக் கூடியவரும், பூமண்டலத்திலேயே நிகரற்றவருமான பாட்டனார் பீஷ்மரால் காக்கப்படுகிறது. எண்ணிக்கையிலும் பாண்டவர் படையைக் காட்டிலும் நான்கு அக்ஷௌஹிணிகள் அதிகமானது. இத்தகைய படையை வெற்றி கொள்வது யாருக்கும் எளிதன்று. எல்லாவிதங்களிலும் அளவுக்கு அடங்காதது. தேவைக்கு மேலும் பல மடங்கு அதிகமான சக்தி படைத்தது. அதனால் எவ்விதத்திலும் வெல்ல முடியாதது. மஹாபாரதம் உத்யோக பர்வம் 55வது அத்யாயத்தில் துர்யோதனன் த்ருதராஷ்ட்ரரிடம் தன் படைபலத்தை வர்ணிக்கும் ஸந்தர்பத்திலும் இதே பெயர்களைக் குறிப்பிட்டு, இவர்கள் பீஷ்மருடைய பாதுகாப்பில் உள்ளனர் என்று பெருமையாகச் சொல்கிறான். மேலும் தெளிவாக விளக்குகிறான்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



குணஹீநம் பரேஷாஞ்ச பஹு பஶ்யாமி பாரத ।
குணோதயம் பஹுகுணமாத்மநஶ்ச விஶாம்பதே ॥

(மஹா. உத்யோக பர்வம் 55/67)

'பரத குலத்தரசனே! எதிரிகளின் படை பெரும்பாலும் திறமையற்றது என்று கணிக்கிறேன். நமது படை திறமைமிக்கது. மேலும், முடிவாக நமது நலனை வளர்க்கக் கூடியது என்று நினைக்கிறேன். ஆகவே, நான் தோற்றுப் போவதற்கு ஒரு காரணமுமில்லை.' இவ்விதமே பீஷ்ம பர்வத்தில் துர்யோதனன் த்ரோணாசார்யரிடம் மறுபடியும் தன் படையை வர்ணிக்கும்போது இது போன்ற ச்லோகத்தைச் சொல்லியிருக்கிறான் (மஹா. பீஷ்ம. 51/6). அதற்கு முன்ச்லோகத்தில் இவ்வாறு கூறுகிறான்—

ஏகைகஶ: ஸமர்தா ஹி யூயம் ஸர்வே மஹாரதா: ।
பாண்டுபுத்ராந் ரணே ஹந்தும் ஸஸைந்யாந் கிமு ஸம்ஹதா: ॥

(மஹா. பீஷ்ம பர்வம் 51/5)

"நீங்கள் அனைவரும் மஹாரதிகள். உங்களில் ஒவ்வொருவரும் தனித்தனியாகவே படையுடன் கூடிய பாண்டவர்களை அழிக்கக் கூடிய திறமையுடையவர்கள். நீங்கள் எல்லோரும் சேர்ந்தால், அவர்களை ஒழித்து விடுவீர்கள் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?"

ஆகவே, இங்கு 'அபர்யாப்தம்' (வெற்றி பெறுவது எளிதன்று) என்று தன் படையின் பெருமையை விளக்குகிறான். மேலே சொல்லப்பட்ட இடங்களிலும்கூடத் தன் அணியைச் சார்ந்த யுத்த வீரர்களுக்கு உற்சாகம் ஊட்டுவதற்காகச் சொன்னான் என்பதுதான் உசிதம்; ஸந்தர்பத்திற்கும் ஏற்றது.

**கேள்வி:** பாண்டவ ஸேனை பீமனால் காக்கப்படுகிறது என்றும், வெற்றி பெற எளிதானது என்றும் சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** இதன் மூலம் துர்யோதனன் அது வலிமை குறைந்தது என்பதை உறுதிப்படுத்துகிறான். தங்களது படைக்கு பீஷ்மர் காப்பாளராக இருக்கிறார். அந்தப் படைக்கு பீமன் காப்பாளன். அவன் உடல் வலிமை பெற்றவனாயினும் பீஷ்மரோடு ஒப்பிட்டுப் பார்க்க முடியாதவன். யுத்த நெறிகளில் சிறந்து, சஸ்த்ர–சாஸ்த்ரங்களில் தேர்ச்சி பெற்று, மதிநுட்பம் நிறைந்த பீஷ்மர் எங்கே? தனுர்வித்தையில் தேர்ச்சியில்லாத ஸாமான்ய அறிவுள்ள பீமன் எங்கே? ஆகையால், அவனுடைய படை அளவுக்குட்பட்ட சக்தி படைத்ததுதான். அதை நாம் எளிதில் வெற்றி கொள்ளமுடியும்.

**பொருத்தம்:** இவ்விதம் பீஷ்மரால் காக்கப்படும் நமது படை வெற்றி கொள்ள முடியாதது என்று சொல்லி துர்யோதனன், எல்லாப் பக்கங்களிலும் பீஷ்மருக்குப் பாதுகாப்பு அளிக்கவேண்டும் என்று த்ரோணாசார்யர் முதலான எல்லா மஹாரதிகளையும் கேட்டுக் கொள்கிறான்—

**अयनेषु च सर्वेषु यथाभागमवस्थिताः ।**
**भीष्ममेवाभिरक्षन्तु भवन्तः सर्व एव हि ॥ ११ ॥**

அயநேஷு ச ஸர்வேஷு யதாபாகமவஸ்திதா: ।
பீஷ்மமேவாபிரக்ஷந்து பவந்த: ஸர்வ ஏவ ஹி ॥ 11 ॥

ஸர்வேஷு – அனைத்து, அயநேஷு ச – போர்முனைகளிலும், யதாபாகம் – தத்தம் இடத்தில், அவஸ்திதா: – இருந்தபடியே, பவந்த: – நீங்கள், ஸர்வே ஏவ – எல்லோருமே, ஹி – தவறாமல், பீஷ்மம் ஏவ – பாட்டனார் பீஷ்மரையே, அபிரக்ஷந்து – (நாற்புறங்களிலும்) காப்பாற்றுங்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அனைத்துப் போர் முனைகளிலும் தத்தம் இடத்தில் இருந்தபடியே நீங்கள் எல்லோருமே தவறாமல் பாட்டனார் பீஷ்மரையே நாற்புறங்களிலும் காப்பாற்றுங்கள்."

**கேள்வி:** இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

**பதில்:** பாட்டனார் பீஷ்மர் தம்மைத் தாமே காத்துக் கொள்வதில் திறமையுள்ளவர்தான். இது துர்யோதனனுக்கு நன்றாகத் தெரியும். ஆனால், "த்ருபத புத்ரனான சிகண்டி முதலில் பெண்ணாக இருந்தான். பிறகு ஆணாகி இருக்கிறான். பெண்ணாக அவன் பிறந்ததனால் அவனை இன்னும் நான் பெண்ணாகவே மதிக்கிறேன். பெண்ணின் மேல் வீரபுருஷர்கள் ஆயுதம் தொடுக்க மாட்டார்கள். அவன் என் எதிரில் வந்தால் நான் அவன்மீது ஆயுதம் செலுத்த மாட்டேன்" என்று பீஷ்மர் முதலிலேயே சொல்லிவிட்டார். ஆகவே, படைகள் அனைத்தும் ஒன்று திரண்ட பின்னர், முதலிலேயே துர்யோதனன் போர் வீரர் அனைவரிடமும், துச்சாஸனனிடமும் எச்சரிக்கை செய்து, வெகு விரிவாக இந்த விஷயத்தை எடுத்துச் சொல்லியிருக்கிறான் (மஹா. பீஷ்ம பர்வம் 15/14-20). இங்கும் அதே பயத்தை எதிர்நோக்கி துர்யோதனன் தன் அணியைச் சார்ந்த எல்லா மஹாரதிகளையும் வேண்டிக் கொள்கிறான்— "நீங்கள் எந்த வ்யூஹ முனையில் எவ்விடம் இடம் பெறுவீர்களோ, அனைவரும் அங்கேயே திடமாக நிலைத்து நில்லுங்கள். முழுக் கவனத்துடன் இருங்கள். நமது வ்யூஹத்தில் எந்த நுழைவாயில் மூலமாவது சிகண்டி புகுந்து பாட்டனார் பீஷ்மரின் எதிரில் வந்துவிடக் கூடாது. அப்படி வந்தால் உடனே சிகண்டியை அடித்து விரட்டுவதற்குத் தயாராக இருங்கள். நீங்கள் சிகண்டியிடமிருந்து பீஷ்மரைக் காப்பாற்றி விட்டால் நமக்கு வேறு எந்த பயமும் கிடையாது. மற்ற எல்லா மஹாரதிகளையும் தோல்வியடையச் செய்வது பீஷ்மருக்கு மிகவும் எளிதான கார்யம்" என்பது கருத்து.

**பொருத்தம்:** இவ்வாறு துர்யோதனன் தன் அணியைச் சேர்ந்த மஹாரதிகளின் பெருமைகளை – முக்யமாகப் பாட்டனார் பீஷ்மருடைய பெருமையை எடுத்துச் சொன்னதை த்ருதராஷ்ட்ரருக்குச் சொல்லிவிட்டு, ஸஞ்ஜயன் அடுத்து வரும் நிகழ்ச்சிகளைக் கூறுகிறார்—

तस्य सञ्जनयन्हर्षं कुरुवृद्धः पितामहः।
सिंहनादं विनद्योच्चैः शङ्खं दध्मौ प्रतापवान्॥ १२॥

**தஸ்ய ஸஞ்ஜநயந்ஹர்ஷம் குருவ்ருத்த₄: பிதாமஹ: ।**
**ஸிம்ஹநாத₃ம் விநத்₃யோச்சை: ஶங்க₂ம் த₃த்₄மௌ ப்ரதாபவாந் ॥ 12 ॥**

**குருவ்ருத்₃த₄:** – கௌரவர்களில் முதியவரானவரும், **ப்ரதாபவாந்** – மிக்க ப்ரதாப முடையவருமான, **பிதாமஹ:** – பாட்டனார் பீஷ்மர், **தஸ்ய** – துர்யோதனனின் (உள்ளத்தில்), **ஹர்ஷம்** – மகிழ்ச்சியை, **ஸஞ்ஜநயந்** – உண்டு பண்ணுகின்ற வகையில், **ஸிம்ஹநாத₃ம்** – சிங்க கர்ஜனையைப் போன்று, **உச்சை:** – உரக்க, **விநத்₃ய** – கர்ஜித்து, **ஶங்க₂ம்** – சங்கை, **த₃த்₄மௌ** – முழக்கினார்.

கௌரவர்களில் முதியவரானவரும் மிக்க ப்ரதாபமுடையவருமான பாட்டனார் பீஷ்மர் துர்யோதனனின் உள்ளத்தில் மகிழ்ச்சியை உண்டு பண்ணுகின்ற வகையில் சிங்க கர்ஜனையைப் போன்று உரக்கக் கர்ஜித்து சங்கை முழக்கினார்.

**கேள்வி:** இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

**பதில்:** பாட்டனார் பீஷ்மர் குரு வம்சத்தில் பாஹ்லீகரைத் தவிர மற்றவர்களைக் காட்டிலும் பெரியவர். கௌரவர்களிடமும், பாண்டவர்களிடமும் ஒரேவிதமான உறவு உடையவர். பாட்டனார் என்ற முறையில் இரு அணியினருடைய வணக்கத்திற்கும் உரியவர். அதனால்தான் ஸஞ்ஜயன் அவரை 'குருவ்ருத்தர்' (குரு வம்சத்தில் முதியவர்), 'பிதாமஹர்'

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



(பாட்டனார்) என்று குறிப்பிடுகிறார். வயதில் முதியவரானாலும் பொலிவு, பலம், பராக்ரமம், வீர்யம், திறமைகளில் இளம் வாலிபர்களைக் காட்டிலும் சிறந்தவர். ஆகவே, அவரை 'ப்ரதாபவான்' என்று கூறுகிறார். பாட்டனார் பீஷ்மர், த்ரோணாசார்யரின் பக்கலில் துர்யோதனன் நின்று கொண்டு பாண்டவர் படையைக் கண்டு திகைத்துக் கவலைப்படுவதைப் பார்த்தார். "தன்னுடைய கவலையை மறைத்துக் கொண்டு யுத்த வீரர்களுக்கு உற்சாகமூட்டுவதற்காக, தன் படையைப் பற்றிப் பெருமையாகப் பேசுகிறான். த்ரோணாசார்யர் போன்ற மஹாரதிகள் பாட்டனாரைக் காப்பாற்ற வேண்டும் என்று வேண்டுகோள் விடுக்கிறான்" என்பதையும் உணர்ந்து கொண்டார். அப்போது தமது ப்ரபாவத்தை வெளிப்படுத்தி அவனை த்ருப்திப்படுத்த வேண்டும் என்ற எண்ணத்தாலும், ப்ரதான தளபதி என்ற முறையிலும், எல்லாப் படைகளுக்கும் யுத்த ஆரம்பத்தைப் பறைசாற்றும் முறையிலும் சங்கெடுத்து சிங்கநாதம் போன்று ஓங்கி முழக்கினார்.

**ततः शङ्खाश्च भेर्यश्च पणवानकगोमुखाः।**
**सहसैवाभ्यहन्यन्त स शब्दस्तुमुलोऽभवत्॥ १३॥**

**தத: ஶங்க₂ாஶ்ச பே₄ர்யஶ்ச பணவாநககோ₃முகா₂: ।**

**ஸஹஸைவாப்₄யஹந்யந்த ஸ ஶப்₃த₃ஸ்துமுலோऽப₄வத் ॥ 13 ॥**

**தத:** – இதற்குப் பிறகு, **ஶங்க₂ா: ச** – சங்குகளும், **பே₄ர்யா: ச** – பேரிகைகளும், **பணவ ஆநக கோ₃முகா₂:** – தம்பட்டம், பறை, கொம்பு முதலிய வாத்யங்களும், **ஸஹஸா ஏவ** – ஒருங்கே, **அப்₄யஹந்யந்த** – முழங்கின. **ஸ:** – அந்த, **ஶப்₃த₃:** – ஒலி, **துமுல:** – மிகவும் பயங்கரமாக, **அப₄வத்** – இருந்தது.

இதற்குப் பிறகு சங்குகளும், பேரிகளும், தம்பட்டம், பறை, கொம்பு முதலிய வாத்யங்களும் ஒருங்கே முழங்கின. அந்த ஒலி மிகவும் பயங்கரமாக இருந்தது.

**கேள்வி:** இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

**பதில்:** பாட்டனார் பீஷ்மர் சிங்க கர்ஜனை போல சங்கு முழங்கிப் போர்த் துவக்கத்தை கோஷித்தவுடன் நாற்புறமும் உற்சாகம் பரவியது. எல்லாப் படைகளிலும், எல்லாப் பக்கங்களிலிருந்தும் சங்கு முதலிய விதவிதமான போர் முரசுகள் முழங்கின. ஒரே சமயத்தில் அவை எழுப்பிய ஒலி பயங்கரமாக ஆகாயத்தில் எதிரொலித்தது.

**பொருத்தம்: யுத்தத்திற்காகக் களத்தில் கூடியபிறகு 'என்னுடைய புதல்வர்களும், பாண்டுவினுடைய புதல்வர்களும் என்ன செய்தார்கள்?' என்று த்ருதராஷ்ட்ரர் கேட்டார் இதற்கு விடையாக ஸஞ்ஜயன் இதுகாறும் த்ருதராஷ்ட்ரருடைய படையினரின் செய்தியைக் கூறினார். பாண்டவர்கள் என்ன செய்தார்கள் என்பதை அடுத்த ஐந்து ச்லோகங்களில் கூறுகிறார்—**

**ततः श्वेतैर्हयैर्युक्ते महति स्यन्दने स्थितौ।**
**माधवः पाण्डवश्चैव दिव्यौ शङ्खौ प्रदध्मतुः॥ १४॥**

**தத: ஶ்வேதைர்ஹயைர்யுக்தே மஹதி ஸ்யந்த₃நே ஸ்தி₂தௌ ।**

**மாத₄வ: பாண்ட₃வஶ்சைவ தி₃வ்யௌ ஶங்கௌ₂ ப்ரத₃த்₄மது: ॥ 14 ॥**

**தத:** – இதற்குப் பிறகு, **ஶ்வேதை: ஹயை:** – வெள்ளைக் குதிரைகள், **யுக்தே** – பூட்டப்பட்ட, **மஹதி** – உயர்ந்த, **ஸ்யந்த₃நே** – தேரில் (ரதத்தில்), **ஸ்தி₂தௌ** – அமர்ந்திருந்த, **மாத₄வ:** – ஶ்ரீக்ருஷ்ண பரமாத்மாவும், **பாண்ட₃வ: ச ஏவ** – அர்ஜுனனும், **தி₃வ்யௌ** – தெய்விகமான, **ஶங்கௌ₂** – சங்குகளை, **ப்ரத₃த்₄மது:** – முழக்கினார்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இதற்குப் பிறகு வெள்ளைக் குதிரைகள் பூட்டப்பட்ட உயர்ந்த தேரில் அமர்ந்திருந்த ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவும், அர்ஜுனனும் தெய்விகமான சங்குகளை முழக்கினார்கள்.

**கேள்வி:** இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

**பதில்:** அர்ஜுனனுடைய ரதம் மிகவும் விசாலமானது; சிறந்தது. அது தங்கத்தால் வேயப்பட்டு பொலிவுடன் ப்ரகாசமாக பளபளவென்று உறுதியானதாகவும் பெரிதாகவும் மிகவும் அழகாகவும் இருந்தது. அதன் மேல் பல குஞ்சலங்களும் தொங்கும் தோரணக் கொடிகளும் பறந்தன. மிகவும் திடமான, விசாலமான சக்ரங்கள் அமைந்திருந்தன. உயரத்தில் கொடி மின்னல் போல மின்னியது. அதில் சந்த்ரன், நக்ஷத்ரங்கள் பொறிக்கப்பட்டிருந்தன. அதில் ஸ்ரீஹனுமான் வீற்றிருந்தார். கொடியைப் பற்றி ஸஞ்ஜயன் துர்யோதனனிடம் சொல்லியிருந்தார்: "அந்தக் கொடி குறுக்கும், நெடுக்குமாக ஒரு யோஜனை தூரம் பரவிப் பறந்தது. ஆகாயத்தில் வானவில் பலவித வர்ணங்களில் ஜ்வலிப்பது போல, அந்தக் கொடியிலும் வர்ண ஜாலங்கள் ஜ்வலித்தன. இவ்வளவு விசாலமாகப் பறந்தாலும் அதில் பளு கிடையாது. அதற்குத் தங்கு தடை கிடையாது. மரங்களின் மேல் அது கிளைகளினால் தடைபடாமல் செல்கின்றது. மரங்கள் அதைத் தொடக்கூட முடியவில்லை." மிக அழகான, நன்கு அலங்கரிக்கப்பட்ட, நன்கு பயிற்சி அளிக்கப்பட்ட, பலம் மிகுந்த, மிகவும் வேகமாக ஓடக்கூடிய, நான்கு வெள்ளை நிற தெய்விகக் குதிரைகள் பூட்டின ரதம். 'சித்ரரதன்' என்ற கந்தர்வன் தன்னிடமிருந்த நூறு திவ்ய குதிரைகளில் நான்கினை அர்ஜுனனுக்குக் கொடுத்தான். இவற்றில் எத்தனை கொலையுண்டாலும் எப்பொழுதும் நூறாகவே அவை இருக்கும்; குறைவதில்லை. பூமியிலும், வானிலும், ஸ்வர்கத்திலும் செல்லக்கூடியவை. அந்த ரதமும் அப்படிப்பட்டது (மஹா. உத்யோக பர்வம் 56). காண்டவ வனம் எரிந்தபோது அக்னிதேவன் த்ருப்தி அடைந்து அர்ஜுனனுக்கு இந்த ரதத்தை அளித்தான் (மஹா. ஆதி பர்வம் 225). இத்தகைய பெரிய ரதத்தில் விளங்கிய பகவான் ஸ்ரீக்ருஷ்ணனும், வீரர்களில் சிறந்த அர்ஜுனனும், பாட்டனார் பீஷ்மரோடுகூட கௌரவப் படை முழங்கிய சங்கொலி, மற்ற யுத்த முரசுகள் இவற்றைக் கேட்டு, இவர்களும் யுத்த ஆரம்ப முழக்கம் செய்யும் நோக்கத்துடன் தம் சங்குகளை முழங்கினார்கள். பகவானுடைய, அர்ஜுனனுடைய சங்குகள் ஸாமான்யமானவை அல்ல; அற்புதமானவை; பொலிவு மிகுந்தவை; உலகியலுக்கு அப்பாற்பட்டவை. அதனால் தெய்விகமானவை என்று சொல்லப்படுகின்றன.

**पाञ्चजन्यं हृषीकेशो देवदत्तं धनञ्जयः।**
**पौण्ड्रं दध्मौ महाशङ्खं भीमकर्मा वृकोदरः॥ १५॥**

**பாஞ்சஜந்யம் ஹ்ருஷீகேஶோ தே₃வத₃த்தம் த₄நஞ்ஜய: ।**
**பௌண்ட்₃ரம் த₃த்₄மௌ மஹாஶங்க₂ம் பீ₄மகர்மா வ்ருகோத₃ர: ॥ 15 ॥**

**ஹ்ருஷீகேஶ:** – ஸ்ரீக்ருஷ்ண பகவான், **பாஞ்சஜந்யம்** – பாஞ்சஜன்யம் என்ற பெயர் கொண்ட, (**ஶங்க₂ம்** – சங்கை), **த₃த்₄மௌ** – முழக்கினார். **த₄நஞ்ஜய:** – அர்ஜுனன், **தே₃வத₃த்தம்** – தேவதத்தம் என்ற பெயர் கொண்ட, (**ஶங்க₂ம் த₃த்₄மௌ** – சங்கை முழக்கினார்). **பீ₄மகர்மா** – பயங்கரச் செயல் புரியும், **வ்ருகோத₃ர:** – பீமஸேனன், **பௌண்ட்₃ரம்** – பௌண்ட்ரம் என்று பெயருள்ள, **மஹாஶங்க₂ம்** – பெரிய சங்கை (முழக்கினார்).

ஸ்ரீக்ருஷ்ண பகவான் பாஞ்சஜன்யம் என்ற பெயர் கொண்ட சங்கை முழக்கினார். அர்ஜுனன் தேவதத்தம் என்ற பெயர் கொண்ட சங்கை முழக்கினார். பயங்கரச் செயல் புரியும் பீமஸேனன் பௌண்ட்ரம் என்று பெயருள்ள பெரிய சங்கை முழக்கினார்.

**கேள்வி:** பகவானுடைய 'ஹ்ருஷீகேஶன்' என்ற பெயருக்கு என்ன பொருள்? அவருக்கு 'பாஞ்சஜன்யம்' என்ற சங்கு எங்கிருந்து கிடைத்தது?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** 'ஹ்ருஷீகம்' என்றால் புலன்கள். அவற்றை ஆள்பவன் ஹ்ருஷீகேசன்.‡ மேலும் மகிழ்ச்சி, ஸுகம், ஸுகமயமான ஐசுவர்யங்கள் இவற்றுக்கு இருப்பிடமானவரையும் ஹ்ருஷீகேசன் என்று சொல்வார்கள்.§ பகவான் புலன்களை ஆள்பவனாகவும் இருக்கிறார். மகிழ்ச்சி, ஸுகம், பரமைசுவர்யத்தின் கருவூலமாகவும் உள்ளார். ஆகவே, அவர் 'ஹ்ருஷீகேசன்' என்று பெயர் பெறுகிறார். 'பஞ்சஜனன்' என்ற பெயருடன் சங்கு உருவத்தில் இருந்த ஒரு தைத்யனைக் கொன்று பகவான் அவனைச் சங்கு உருவத்தில் தம்மிடம் சேர்த்துக் கொண்டார். அதனால், அந்த சங்குக்கு 'பாஞ்சஜன்யம்' என்ற பெயர் வந்தது (ஹரிவம்சம் *2/33/17*).

**கேள்வி:** அர்ஜுனனுக்கு 'தனஞ்ஜயன்' என்று எப்படிப் பெயர் வந்தது? அவர் 'தேவதத்தம்' என்ற சங்கை எங்கிருந்து பெற்றார்?

**பதில்:** ராஜஸூய யாகம் நடந்தபோது அர்ஜுனன் பல அரசர்களை ஜயித்து அளவற்ற செல்வத்தைக் கொண்டு வந்தார். அதனால் அவருக்கு 'தனஞ்ஜயன்' என்ற ஒரு பெயர் வந்தது. அவர் நிவாதகவசர் முதலிய தைத்யர்களுடன் போரிட்டபோது, இந்த்ரன் 'தேவதத்தம்' என்ற சங்கை அர்ஜுனனுக்கு அளித்தார் (மஹா. வன பர்வம் *174/5*). அந்த சங்கத்தின் பயங்கர நாதம் எதிரிப் படைகளை நடுங்க வைப்பதாக இருந்தது.

**கேள்வி:** பீமஸேனனுக்கு 'பீமகர்மா' என்றும், 'வ்ருகோதரன்' (ஓநாயின் வயிற்றைப் போன்ற வயிற்றை உடையவன்) என்றும் எப்படிப் பெயர் வந்தது? அவருடைய 'பௌண்ட்ரம்' என்ற சங்கு 'மஹாசங்கம்' என்று ஏன் கூறப்பட்டுள்ளது?

**பதில்:** பீமஸேனன் மிகுந்த பலவான். அவருடைய செயல்கள் பார்ப்பவர், கேட்பவர்களுடைய மனதில் பயத்தை உண்டாக்கின. அதனால், அவர் 'பீமகர்மா' என்று பெயர் பெற்றார். அவர் அதிகமாக உணவு உண்பவர். அத்தனையும் ஜீரணிக்கும் சக்தியும் அவருக்கு இருந்தது. அதனால், அவருக்கு 'வ்ருகோதரன்' என்ற பெயரும் ஏற்பட்டது. அவருடைய சங்கு மிகப் பெரியது. அதன் ஓசையும் அதிகம். ஆகவே, அது 'மஹாசங்கம்' என்று கூறப்பட்டுள்ளது.

**अनन्तविजयं राजा कुन्तीपुत्रो युधिष्ठिरः।**
**नकुलः सहदेवश्च सुघोषमणिपुष्पकौ ॥ १६ ॥**

**அநந்தவிஜயம் ராஜா குந்தீபுத்ரோ யுதி$_4$ஷ்டி$_2$ர: ।**
**நகுல: ஸஹதே$_3$வஶ்ச ஸுகோ$_4$ஷமணிபுஷ்பகௌ ॥ 16 ॥**

**குந்தீபுத்ர:** – குந்தியின் மகனான, **ராஜா யுதி$_4$ஷ்டி$_2$ர:** – அரசர் யுதிஷ்டிரர், **அநந்தவிஜயம்** – அநந்தவிஜயம் என்று பெயர் கொண்ட சங்கையும், **நகுல: ஸஹதே$_3$வ:**

---

‡ ஹ்ருஷீகாணீந்த்$_3$ரியாண்யாஹுஸ்தேஷாமீஶோ யதோ ப$_4$வாந் ।
ஹ்ருஷீகேஶஸ்ததோ விஷ்ணோ க்$_2$யாதோ தே$_3$வேஷு கேஶவ ॥
(ஹரிவம்ஶம் 279/46)

விஷ்ணுவே! ஹ்ருஷீகம் என்றால் புலன்கள் ஆகும். நீங்கள் அவற்றிற்கு ஈசன். ஆள்பவன். ஆகவே கேசவ! நீங்கள் தேவர்களுக்குள் ஹ்ருஷீகேசன் என்ற புகழ் பெற்றிருக்கிறீர்கள்

§ ஹர்ஷாத் ஸுக$_2$ாத் ஸுகை$_2$ஶ்வர்யாத் ஹ்ருஷீகேஶத்வமஶ்நுதே ॥
(மஹா. உத்$_3$யோக$_3$ பர்வம் 70/9)

ஹர்ஷ (ஹ்ருஷீ), ஸுக (க), ஸுகமய ஐஶ்வர்ய (ஈச) – என்ற காரணத்தால் ஸ்ரீக்ருஷ்ணன் ஹ்ருஷீகேசன் என்ற பெயர் பெற்றுள்ளார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ச – நகுலனும், ஸஹதேவனும், ஸுகோ₄ஷ மணிபுஷ்பகௌ – ஸுகோஷம், மணிபுஷ்பகம் என்று பெயர் கொண்ட சங்குகளையும் (முழக்கினார்கள்).

குந்தியின் மகனான அரசர் யுதிஷ்டிரர் அநந்த விஜயம் என்று பெயர் கொண்ட சங்கையும், நகுலனும், சகதேவனும், ஸுகோஷம், மணிபுஷ்பகம் என்று பெயர் கொண்ட சங்குகளையும் முழக்கினார்கள்.

**கேள்வி:** யுதிஷ்டிரரைக் குந்திபுத்ரர் என்றும், அரசர் என்றும் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மஹாராஜா பாண்டுவின் ஐந்து புத்ரர்களில் யுதிஷ்டிரர், பீமன், அர்ஜுனன் மூவரும் குந்தியிடம் பிறந்தவர்கள். நகுலனும், ஸஹதேவனும் மாத்ரியிடம் பிறந்தவர்கள். இந்த ச்லோகத்தில் நகுல-ஸஹதேவர்களின் பெயர்களும் வருகின்றன. யுதிஷ்டிரருக்கும், நகுல-ஸஹதேவர்களுக்கும் தாய்மார் வேறு என்று தெரிவிப்பதற்காக யுதிஷ்டிரரைக் குந்திபுத்ரன் என்று குறிப்பிட்டார். தற்சமயம் ராஜ்யம் இழந்து இருந்தபோதிலும் முன்பு யுதிஷ்டிரர் ராஜஸூய யாகத்தின்போது, எல்லா அரசர்களையும் வென்று சக்ரவர்த்தி ஆகி ஸாம்ராஜ்யத்தை நிறுவியவர். மேலே, மறுபடியும் அவரே அரசராவார் என்ற நம்பிக்கை ஸஞ்ஜயனுக்கு உண்டு. அவருடைய உடலில் அரசச் சின்னங்கள் உள்ளன. இக்காரணங்களால் அவரை அரசர் என்று சொன்னார்.

**काश्यश्च परमेष्वासः शिखण्डी च महारथः।**
**धृष्टद्युम्नो विराटश्च सात्यकिश्चापराजितः॥ १७॥**
**द्रुपदो द्रौपदेयाश्च सर्वशः पृथिवीपते।**
**सौभद्रश्च महाबाहुः शङ्खान्दध्मुः पृथक् पृथक्॥ १८॥**

**காஶ்யஶ்ச பரமேஷ்வாஸ: ஶிக₂ண்டீ₃ ச மஹாரத₂: ।**
**த்₄ருஷ்டத்₃யும்னோ விராடஶ்ச ஸாத்யகிஶ்சாபராஜித: ॥ 17 ॥**
**த்₃ருபதோ₃ த்₃ரௌபதே₃யாஶ்ச ஸர்வஶ: ப்ருதி₂வீபதே ।**
**ஸௌப₄த்₃ரஶ்ச மஹாபா₃ஹு: ஶங்கா₂ந்த₃த்₄மு: ப்ருத₂க் ப்ருத₂க் ॥ 18 ॥**

**ப்ருதி₂வீபதே** – அரசனே! **பரமேஷ்வாஸ:** – சிறந்த வில்லாளியான, **காஶ்ய: ச** – காசிராஜனும், **மஹாரத₂:** – மஹாரதியான, **ஶிக₂ண்டீ₃ ச** – சிகண்டியும், **த்₄ருஷ்டத்₃யும்ந: ச** – த்ருஷ்டத்யும்னனும், **விராட: ச** – விராட மன்னனும், **அபராஜித:** – தோல்வி காணாத, **ஸாத்யகி:** – ஸாத்யகியும், **த்₃ருபத₃: ச** – த்ருபதராஜனும், **த்₃ரௌபதே₃யா: ச** – த்ரௌபதியின் ஐந்து புதல்வர்களும், **மஹாபா₃ஹு:** – நீண்ட புஜங்கள் உடைய, **ஸௌப₄த்₃ர:** – ஸுபத்ரையின் குமாரன் அபிமன்யுவும் (இவர்கள் எல்லோரும்), **ஸர்வஶ:** – எல்லாப் பக்கங்களிலிருந்தும், **ப்ருத₂க் ப்ருத₂க்** – தனித்தனியாக, **ஶங்கா₂ந்** – சங்குகளை, **த₃த்₄மு:** – முழக்கினார்கள்.

அரசனே! சிறந்த வில்லாளியான காசிராஜனும், மஹாரதியான சிகண்டியும், த்ருஷ்டத்யும்னனும், விராட மன்னனும், தோல்வி காணாத ஸாத்யகியும், த்ருபத ராஜனும், த்ரௌபதியின் ஐந்து புதல்வர்களும், நீண்ட புஜங்கள் உடைய ஸுபத்ரையின் குமாரன் அபிமன்யுவும் இவர்கள் எல்லோரும் எல்லாப் பக்கங்களிலிருந்தும் தனித்தனியாக சங்குகளை முழக்கினார்கள்.

**கேள்வி:** காஶிராஜன், த்ருஷ்டத்யும்னன், விராடன், ஸாத்யகி, த்ருபதன், த்ரௌபதியின் ஐந்து குமாரர்கள், அபிமன்யு இவர்களைப் பற்றி முன் ஸந்தர்பத்தில் அறிமுகம் ஆயிற்று. சிகண்டி யார்? அவன் எப்படிப் பிறந்தான்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பதில்: சிகண்டி, த்ருஷ்டத்யும்னன் இருவரும் த்ருபத ராஜனின் குமாரர்கள், சிகண்டி மூத்தவன்; த்ருஷ்டத்யும்னன் இளையவன். ராஜா த்ருபதனுக்கு மக்கட்செல்வம் இல்லாதிருந்தபோது, குழந்தையை அடைய வேண்டி விரைவில் த்ருப்தி அடையும் சிவபிரானை வழிபட்டார். சிவபிரான் ப்ரஸன்னமானார். அரசர் குழந்தை வேண்டுமென்று வேண்டினார். சிவபிரான் சொன்னார்: 'உனக்கு ஒரு பெண் பிறக்கும்.' த்ருபதராஜன் சொன்னார்: 'ஸ்வாமி! எனக்குப் பெண் வேண்டாம். மகன்தான் எனக்கு வேண்டும்.' அதன்பேரில் சிவபிரான்: 'அந்தப் பெண்ணே பின்னால் ஆண்மகனாக ஆவாள்' என்று அருள் புரிந்தார். இந்த வரத்தின் பயனாக அரசன் த்ருபதனுக்கு ஒரு பெண் பிறந்தாள். அரசனுக்குச் சிவபெருமான் சொல்லில் பூரண நம்பிக்கை இருந்தது. ஆகவே அரசன், 'தனக்கு மகன் பிறந்திருக்கிறான்' என்ற செய்தியையே பரவச் செய்தார். ராணியும் பெண் என்ற செய்தியை மறைத்து, உண்மை எவருக்கும் தெரியாதவாறு செய்தாள். அவளுக்கு சிகண்டி என்று ஆணின் பெயரையே வைத்தார்கள். அவளுக்கு அரசகுமாரன் போல அலங்காரம் செய்து, ஆடை ஆபரணங்கள் அணிவித்தார்கள். கல்வியும் புகட்டப்பட்டது. தக்க வயதில் தசார்ண தேசத்து அரசன் ஹிரண்யவர்மாவின் பெண்ணுடன் அவளுக்கு விவாஹமும் நடந்தது. ஹிரண்யவர்மாவின் பெண் புக்ககம் வந்த பிறகுதான் அவளுக்குத் தன் கணவன் சிகண்டி புருஷன் அல்லன், பெண் என்பது தெரிந்தது. மிகவும் வருத்தமடைந்தாள். தன் பணிப்பெண்கள் வாயிலாகத் தன் தந்தைக்குச் செய்தி அனுப்பினாள். ஹிரண்யவர்ம ராஜனுக்கு மிகுந்த கோபம் உண்டாயிற்று. த்ருபத நாட்டை முற்றுகையிட்டு அவரைக் கொல்வது என்று தீர்மானித்தான். இதைக் கேள்விப்பட்டு த்ருபத ராஜன் யுத்தத்திலிருந்து தப்புவதற்காக ஈசுவர பூஜை செய்ய ஆரம்பித்தார். ஆண்வேடம் பூண்ட அந்தப் பெண்ணுக்குத் தன் காரணமாகத் தகப்பனாருக்கு இவ்வளவு பெரிய பயங்கரமான ஆபத்து வந்துவிட்டதே என்று மிகவும் வருத்தம் ஏற்பட்டது. ப்ராண த்யாகம் செய்து கொள்வது என்ற முடிவுடன் வீட்டை விட்டுக் கிளம்பிக் காட்டை அடைந்தாள். 'ஸ்தூணாகர்ணன்' என்ற தெய்விக சக்தி படைத்த யக்ஷனை அங்குச் சந்தித்தாள். யக்ஷன் மனது உருகிச் சில நாட்களுக்கு மட்டும் தன் ஆண்மையை அவளுக்கு அளித்து, பதிலாக அவளது பெண்மையை ஏற்றான். இவ்விதமாக சிகண்டி ஆணாக ஆகி வீடு திரும்பினாள். தாய்-தந்தையருக்கு ஆறுதல் அளித்தாள். மாமனார் ஹிரண்யவர்மாவுக்குத் தன் ஆண்மையை நிரூபித்து, ஸமாதானப்படுத்தினாள். குபேரனுடைய சாபத்தினால் ஸ்தூணாகர்ணனுக்கு வாழ்நாள் முழுவதும் பெண்ணாகவே இருக்கும்படி ஆயிற்று. அதனால் சிகண்டிக்கு ஆண்மையை யக்ஷனுக்குத் திருப்பித் தரும்படியான அவசியம் ஏற்படவில்லை. அவள் புருஷனாகவே ஆகிவிட்டாள். பாட்டனார் பீஷ்மருக்கு இந்த வ்ருத்தாந்தம் தெரியும். அதனால்தான் அவர் அவன் மீது ஆயுதம் தொடுக்க மாட்டேன் என்றார். சிகண்டி சூரன், வீரன், மஹாரதி. இவனை முன் வைத்துத்தான் அர்ஜுனன் பீஷ்மரை அடித்து வீழ்த்தினார்.

**கேள்வி:** இவர்கள் எல்லோரும் தனித்தனியாக சங்கு முழக்கினார்கள் என்று சொல்வதில் ஏதாவது முக்யக் கருத்து உண்டா?

பதில்: 'ஸர்வஶ:' (எல்லோரும்) என்று சொல்வதன் மூலம் ஸ்ரீக்ருஷ்ணன், ஐந்து பாண்டவர்கள், காசிராஜன் முதலிய இங்கே குறிக்கப்பட்ட ப்ரதான யுத்த வீரர்களைத் தவிர, பாண்டவர் படையில் உள்ள ரதிகள், மஹாரதிகள், அதிரதிகளான வீரர்கள் அனைவரும் தங்கள் சங்குகளை முழக்கினர் என்பதுதான் இங்கு முக்யக் கருத்து.

**பொருத்தம்: பகவானான ஸ்ரீக்ருஷ்ணனும், அர்ஜுனனும், பிறகு பாண்டவப் படையின் மற்ற சூரவீரர்களும் தங்கள் சங்குகளை முழக்கினார்கள். அந்த சங்கு முழக்கத்தைப் பற்றிச் சொல்லிவிட்டு, அந்த சங்கு முழக்கத்தின் விளைவு என்ன என்பதை ஸஞ்ஜயன் சொல்கிறார்—**

**स घोषो धार्तराष्ट्राणां हृदयानि व्यदारयत्।**
**नभश्च पृथिवीं चैव तुमुलो व्यनुनादयन्॥ १९॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ஸ கோ₄ஷோ தா₄ர்தராஷ்ட்ராணாம் ஹ்ருத₃யாநி வ்யதா₃ரயத் ।**
**நப₄ஶ்ச ப்ருதி₂வீம் சைவ துமுலோ வ்யநுநாத₃யந் ॥ 19 ॥**

**ச** – மேலும், **ஸ:** – அந்த, **துமுல:** – பயங்கர, **கோ₄ஷ:** – ஒலி, **நப₄:** – ஆகாயத்தையும், **ப்ருதி₂வீம் ச ஏவ** – பூமியையும், **வ்யநுநாத₃யந்** – எதிரொலிக்கச் செய்து, **தா₄ர்தராஷ்ட்ராணாம்** – த்ருதராஷ்ட்ரரின் (அதாவது உங்கள்) அணியினரின், **ஹ்ருத₃யாநி** – இதயங்களை, **வ்யதா₃ரயத்** – பிளக்கச் செய்தது.

மேலும், அந்த பயங்கர ஒலி ஆகாயத்தையும் பூமியையும் எதிரொலிக்கச் செய்து, த்ருதராஷ்ட்ரரின் (அதாவது உங்கள்) அணியினரின் இதயங்களைப் பிளக்கச் செய்தது.

**கேள்வி:** இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

**பதில்:** பாண்டவப் படையின் எல்லா வீரர்களும் ஒரே நேரத்தில் சங்குகளை முழக்கவே, அந்தப் பேரொலி எங்கும் பரவியது; தேய்வுறாமல் கனமாக இருந்தது; ஓங்கி இருந்தது; அச்சமூட்டுவதாக இருந்தது; ஆகாயமும், பூமியும் அளாவி இருந்தது. இவ்விதம் நாற்புறமும் அந்த கோரமான பேரொலி சூழ்ந்திருந்ததால், எங்கும் எதிரொலி ஏற்பட்டது. அந்த எதிரொலி ஆகாயத்தையும், பூமியையும் முட்டிற்று. இதைக் கேட்டவுடனேயே துர்யோதனன் முதலான த்ருதராஷ்ட்ர புத்ரர்கள், அவர்களுடைய அணியைச் சார்ந்த மற்றவர்கள் இதயங்களில் மிகவும் பயம் உண்டாயிற்று. அவர்கள் இதயத்திரைகளே கிழிந்துவிடும் போல ஆகிவிட்டது.

**பொருத்தம்:** பாண்டவர்களுடைய சங்கு முழக்கத்தினால் கௌரவ வீரர்கள் **கலங்கிவிட்டார்கள் என்று வர்ணித்துவிட்டு, மேலே நான்கு ச்லோகங்களில் பகவான் ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்த்து அர்ஜுனன் உற்சாகத்துடன் பேசியதை வர்ணிக்கிறார்—**

**अथ व्यवस्थितान्दृष्ट्वा धार्तराष्ट्रान् कपिध्वजः।**
**प्रवृत्ते शस्त्रसम्पाते धनुरुद्यम्य पाण्डवः॥ २०॥**
**हृषीकेशं तदा वाक्यमिदमाह महीपते।**
*अर्जुन उवाच*
**सेनयोरुभयोर्मध्ये रथं स्थापय मेऽच्युत॥ २१॥**

**அத₂ வ்யவஸ்தி₂தாந்த்₃ருஷ்ட்வா தா₄ர்தராஷ்ட்ராந் கபித்₄வஜ: ।**
**ப்ரவ்ருத்தே ஶஸ்த்ரஸம்பாதே த₄நுருத்₃யம்ய பாண்ட₃வ: ॥ 20 ॥**
**ஹ்ருஷீகேஶம் தத₃ா வாக்யமித₃மாஹ மஹீபதே ।**
அர்ஜுந உவாச
**ஸேநயோருப₄யோர்மத்₄யே ரத₂ம் ஸ்தா₂பய மேऽச்யுத ॥ 21 ॥**

**மஹீபதே** – அரசே! **அத₂** – இதன் பின்னர், **கபித்₄வஜ:** – ஹனுமக்கொடியை உடைய, **பாண்ட₃வ:** – அர்ஜுனன், **வ்யவஸ்தி₂தாந்** – அணிவகுத்துப் போர் புரியத் தயாராய் நிற்கின்ற, **தா₄ர்தராஷ்ட்ராந்** – த்ருதராஷ்ட்ர குமாரர்களையும், அவர்களைச் சார்ந்தவர்களையும், **த்₃ருஷ்ட்வா** – பார்த்து, **தத₃ா** – அப்பொழுது, **ஶஸ்த்ரஸம்பாதே ப்ரவ்ருத்தே** – ஆயுதங்களை விடுக்க முனைகின்றபோது, **த₄நு:** – வில்லை, **உத்₃யம்ய** – நிமிர்த்திக் கொண்டு, **ஹ்ருஷீகேஶம்** – ஹ்ருஷீகேசனான பகவான் ஸ்ரீக்ருஷ்ணனிடம், **இத₃ம்** – இந்த, **வாக்யம்** – வசனத்தை, **ஆஹ** – கூறினார். **அர்ஜுந உவாச** – அர்ஜுனன் சொன்னார்: **அச்யுத** – அச்யுத! **மே** – என்னுடைய, **ரத₂ம்** – ரதத்தை, **உப₄யோ:** – இரண்டு, **ஸேநயோ:** – படைகளுக்கும், **மத்₄யே** – நடுவில், **ஸ்தா₂பய** – நிறுத்துங்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai




प्रजापतिकी शिक्षा

**Preachings of Prajāpati**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai




अनन्य चिन्तनका फल

**Undivided devotion fructified**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அரசே! இதன் பின்னர், ஹனுமக்கொடியை உடைய அர்ஜுனன் அணிவகுத்துப் போர் புரியத் தயாராய் நிற்கின்ற த்ருதராஷ்ட்ர குமாரர்களையும், அவர்களைச் சார்ந்தவர்களையும் பார்த்து, அப்பொழுது ஆயுதங்களை விடுக்க முனைகின்றபோது வில்லை நிமிர்த்திக் கொண்டு ஹ்ருஷீகேசனான பகவான் ஸ்ரீக்ருஷ்ணனிடம் இந்த வசனத்தைக் கூறினார். "அச்யுத! என்னுடைய ரதத்தை இரண்டு படைகளுக்கும் நடுவில் நிறுத்துங்கள்."

**கேள்வி:** அர்ஜுனனை 'கபித்வஜன்' என்று ஏன் சொல்கிறார்?

**பதில்:** மஹாவீரனான ஹனுமான் பீமஸேனனுக்கு வாக்குக் கொடுத்திருந்தார் (மஹா. வன பர்வம் 151/17-18). அதனால், அவர் அர்ஜுனனுடைய விசாலமான கொடியில் விளங்கினார். யுத்தத்தில் அவ்வப்பொழுது பயங்கரமாக கர்ஜனை புரிந்தார் (மஹா. பீஷ்ம பர்வம் 52/18). இதை த்ருதராஷ்ட்ரருக்கு நினைவூட்டுவதற்காகவே ஸஞ்ஜயன் அர்ஜுனனுக்கு 'கபித்வஜன்' என்ற அடைமொழி கொடுக்கிறார்.

**கேள்வி:** அர்ஜுனன் அணிவகுத்து நிற்கின்ற த்ருதராஷ்ட்ரரின் தரப்பைச் சார்ந்த வீரர்களைப் பார்த்து ஆயுத ப்ரயோகம் செய்யத் தயாராக இருக்கும்போது வில்லை நிமிர்த்தினான் - என்று கூறுவதை விளக்க வேண்டும்.

**பதில்:** துர்யோதனன் முதலான ஸஹோதரர்களும், கௌரவர் அணியைச் சார்ந்த அனைத்து வீரர்களும் யுத்தத்திற்காக வீறு கொண்டு நிற்பதையும், ஆயுதம் எய்வதற்காக முழுவதும் தயாராக இருப்பதையும் பார்த்து, அர்ஜுனனுக்கும் உள்ளத்தில் வீர உணர்ச்சி பொங்கி எழுந்தது. உடனே தனது காண்டீவத்தை நிமிர்த்தினான்.

**கேள்வி:** ஸஞ்ஜயன் ஏன் இங்கே மறுபடியும் 'ஹ்ருஷீகேசன்' என்று பகவானைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** புலன்களை ஆட்டிப்படைக்கும் ஸாக்ஷாத் பரமேசுவரனாகிய க்ருஷ்ணன் அர்ஜுனனுடைய ரதத்தில் தேரோட்டியாக அமர்ந்து இருக்கிறாரே, அவருடன் போர் புரிந்து நீங்கள் வெற்றி பெறலாம் என நினைக்கிறீர்களே, எவ்வளவு அறியாமை உங்களுக்கு - என்று த்ருதராஷ்ட்ரரிடம் குறிப்பிட்டுக் காட்டுவதற்காக பகவானை 'ஹ்ருஷீகேசன்' என்று ஸஞ்ஜயன் சொல்கிறார்.

**கேள்வி:** 'என்னுடைய ரதத்தை இரு படைகளுக்கும் நடுவில் கொண்டு நிறுத்துங்கள்' - என்று சொல்லும்போது அர்ஜுனன் பகவானை 'அச்யுத' என்ற பெயரால் அழைக்கிறாரே, அதற்கு என்ன காரணம்?

**பதில்:** எவருக்கு எந்த நேரத்திலும், எந்த நிகழ்ச்சியிலும் தோல்வி-வீழ்ச்சி என்பது கிடையாதோ, எவர் தமது ஸ்வரூபத்திலிருந்தும், சக்தியிலிருந்தும், பெருமையிலிருந்தும் எப்பொழுதும் வழுவாதவரோ, அவரை 'அச்யுதன்' என்ற பொருளுள்ள பெயரால் அழைக்கிறார்கள். இந்தப் பெயரைச் சொல்லி அழைக்கும் அர்ஜுனன், பகவானுடைய பெருமையையும், ஸ்வரூபத்தையும் பற்றி நான் அறிந்திருக்கிறேன் என்று வெளியிடுகிறார். அவர் சொல்கிறார்: 'நீங்கள் இப்பொழுது ரதம் ஓட்டினால் என்ன? உண்மையில் நீங்கள் எந்த நிலையிலும் ஸாக்ஷாத் பரமேசுவரன்தான்!'

**यावदेतान्निरीक्षेऽहं योद्धुकामानवस्थितान् ।**
**कैर्मया सह योद्धव्यमस्मिन्रणसमुद्यमे ॥ २२ ॥**

**யாவதே₃தாந்நிரீக்ஷேऽஹம் யோத்₃து₄காமாநவஸ்தி₂தாந் ।**
**கைர்மயா ஸஹ யோத்₃த₄வ்யமஸ்மிந்ரணஸமுத்₃யமே ॥ 22 ॥**

அஸ்மிந் - இந்த, ரணஸமுத்₃யமே - போர் முயற்சியில், மயா - என்னால், கை: ஸஹ - எவரெவருடன், யோத்₃த₄வ்யம் - போரிட நேருமோ (அந்த), யோத்₃து₄



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**காமாந்** – யுத்தம் செய்யும் ஆசையுடன், **அவஸ்தி₂தாந்** – அணிவகுத்து நிற்கும், **ஏதாந்** – இந்த எதிரிப்படை வீரர்களை, **யாவத்** – எவ்வளவு நேரம், **அஹம்** – நான், **நிரீக்ஷே** – பார்ப்பேனோ (அவ்வளவு நேரம் ரதத்தை நிறுத்தி வையுங்கள்).

இந்தப் போர் முயற்சியில் என்னால் எவரெவருடன் போரிட நேருமோ, யுத்தம் செய்யும் ஆசையுடன் அணிவகுத்து நிற்கும் இந்த எதிரிப்படை வீரர்களை எவ்வளவு நேரம் நான் பார்ப்பேனோ, அவ்வளவு நேரம் ரதத்தை நிறுத்தி வையுங்கள்.

**கேள்வி:** இந்த ச்லோகத்தை விளக்க வேண்டும்.

**பதில்:** அர்ஜுனன் பகவான் ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்த்துச் சொல்கிறார்: "நீங்கள் ரதத்தை இரு படைகளுக்கும் நடுவில் ஓரிடத்தில் கொண்டு நிறுத்துங்கள். நான் எங்கிருந்து பார்த்தால் என்னை எதிர்த்து வீறு கொண்டு நிற்கும் எல்லா வீரர்களையும் நன்கு பார்க்க முடியுமோ, அதற்கு எவ்வளவு நேரமாகுமோ, அதுவரை நிறுத்துங்கள். இந்த யுத்தம் என்ற இக்கட்டான தருணத்தில் நானே எந்தெந்த வீரர்களுடன் போரிட நேரும் என்பதை அறிய விரும்புகிறேன்."

**योत्स्यमानानवेक्षेऽहं य एतेऽत्र समागताः ।**
**धार्तराष्ट्रस्य दुर्बुद्धेर्युद्धे प्रियचिकीर्षवः ॥ २३ ॥**

**யோத்ஸ்யமாநாநவேக்ஷே஽ஹம் ய ஏதே஽த்ர ஸமாக₃தா: ।**
**தா₄ர்தராஷ்ட்ரஸ்ய து₃ர்பு₃த்₃தே₄ர்யுத்₃தே₄ ப்ரியசிகீர்ஷவ: ॥ 23 ॥**

**து₃ர்பு₃த்₃தே₄:** – தீய புத்தியுடைய, **தா₄ர்தராஷ்ட்ரஸ்ய** – துர்யோதனனுக்கு, **யுத்₃தே₄** – யுத்தத்தில், **ப்ரியசிகீர்ஷவ:** – நலனைச் செய்ய விரும்பி, **யே** – எந்தெந்த, **ஏதே** – அரசர்கள், **அத்ர** – இந்தப் படையில், **ஸமாக₃தா:** – வந்து கூடியிருக்கிறார்களோ (அந்த), **யோத்ஸ்யமாநாந்** – போர்புரியப் போகிறவர்களை, **அஹம்** – நான், **அவேக்ஷே** – பார்க்கிறேன்.

தீய புத்தியுடைய துர்யோதனனுக்கு யுத்தத்தில் நலனைச் செய்ய விரும்பி எந்தெந்த அரசர்கள் இந்தப் படையில் வந்து கூடியிருக்கிறார்களோ போர் புரியப் போகிற அவர்களை நான் பார்க்கிறேன்."

**கேள்வி:** அர்ஜுனன் துர்யோதனனைத் தீய புத்தியுள்ளவன் என்று ஏன் சொல்கிறார்?

**பதில்:** பன்னிரண்டு ஆண்டுகள் வனவாசமும், ஓராண்டு அஞ்ஞாதவாசமும் (மறைந்து வாழ்தல்) ஆகப் பதின்மூன்று வருஷங்கள் கழிந்த பிறகு ராஜ்யத்தைப் பாண்டவர்களுக்குத் திருப்பிக் கொடுத்துவிடுவது என்பது முன்பே முடிவான விஷயம். அதுவரை கௌரவர்கள் கையில் காப்பீடாக ராஜ்யம் வைக்கப்பட்டிருந்தது. துர்யோதனன் அதை விழுங்கிவிடலாம் என்ற அந்யாய நோக்கத்துடன் திருப்பிக் கொடுக்க மறுத்துவிட்டான். இது தவிர துர்யோதனன் பாண்டவர்களுக்குப் பல அந்யாயங்களும், அட்டூழியங்களும் செய்திருக்கிறான். ஆனால் கடைசியாக இது பொறுக்கவே முடியாததாகிவிட்டது. துர்யோதனனுடைய இந்தக் கொடிய எண்ணத்தை நினைத்துத்தான் அவனைத் தீய புத்தியுடையவன் என்று அர்ஜுனன் கூறுகிறார்.

**கேள்வி:** 'இந்தப் போரில் துர்யோதனனுடைய நலனை விரும்பி அரசர்கள் கூடியிருக்கிறார்கள். அப்படிப் போரிடக் கூடியவர்களை எல்லாம் நான் பார்க்கிறேன்' என்று அர்ஜுனன் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தீய புத்தியுள்ள துர்யோதனனுடைய அந்யாயங்களையும், கொடிய செயல்களையும் உலகமே அறியும். அப்படி இருந்தும்கூட அவனுக்கு உதவி செய்ய



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வந்திருக்கிறார்களே அரசர்கள், அவர்களுடைய புத்தியும் கெட்டுப் போய்விட்டது என்று அர்ஜுனன் நினைக்கிறார். அதனாலேயே இவர்கள் வெளிப்படையாகவே துர்யோதனனுடைய அந்யாயங்களை ஆமோதிக்கும் வகையில் இங்கே கூடியுள்ளனர். தம்முடைய தற்பெருமையைக் காட்டி அவன் முதுகைத் தட்டிக் கொடுத்துப் புகழ்கிறார்கள். இப்படி உதவி செய்ய முன் வந்திருப்பவர்கள் அவனுக்குத் தீங்கே இழைக்கிறார்கள். தம்மைப் பெரிய வீரர்களாக நினைத்துக் கொண்டு இந்தப் போருக்காக உற்சாகமாக வந்து நிற்கிறார்களே அவர்கள் யார், எவர் என்று நான் தெரிந்து கொள்கிறேன். பிறகு, யுத்தகளத்தில், அந்யாயத்திற்கும், அதர்மத்திற்கும் துணை போவதனால் ஏற்படும் விளைவைச் சுவைக்க வைக்கிறேன்.

**பொருத்தம்: இவ்விதம் அர்ஜுனன் பேசியவுடன் கண்ணபிரான் என்ன செய்தார் என்பதை மேலே இரண்டு ச்லோகங்களால் ஸஞ்ஜயன் வர்ணிக்கிறார்—**

सञ्जय उवाच

**एवमुक्तो हृषीकेशो गुडाकेशेन भारत।**
**सेनयोरुभयोर्मध्ये स्थापयित्वा रथोत्तमम्॥ २४॥**

**भीष्मद्रोणप्रमुखतः सर्वेषां च महीक्षितम्।**
**उवाच पार्थ पश्यैतान्समवेतान्कुरूनिति॥ २५॥**

ஸஞ்ஜய உவாச

**ஏவமுக்தோ ஹ்ருஷீகேஶோ கு₃டா₃கேஶேந ப₄ாரத ।**

**ஸேநயோருப₄யோர்மத்₄யே ஸ்த₂ாபயித்வா ரதோ₂த்தமம் ॥ 24 ॥**

**பீ₄ஷ்மத்₃ரோணப்ரமுக₂த: ஸர்வேஷாம் ச மஹீக்ஷிதாம் ।**

**உவாச பார்த₂ பஶ்யைதாந் ஸமவேதாந்குரூநிதி ॥ 25 ॥**

**ஸஞ்ஜய உவாச** – ஸஞ்ஜயன் கூறினார்: **ப₄ாரத** – த்ருதராஷ்ட்ரரே! **கு₃டா₃கேஶேந** – அர்ஜுனனால், **ஏவம்** – இப்படி, **உக்த:** – சொல்லப்பட்ட, **ஹ்ருஷீகேஶ:** – ஸ்ரீக்ருஷ்ணன், **உப₄யோ:** – இரண்டு, **ஸேநயோ:** – படைகளுக்கும், **மத்₄யே** – இடையில், **பீ₄ஷ்ம த்₃ரோண ப்ரமுக₂த:** – பீஷ்மருக்கும், த்ரோணருக்கும் முன்பும், **ஸர்வேஷாம்** – அனைத்து, **மஹீக்ஷிதாம் ச** – அரசர்களுக்கு முன்பாகவும், **ரதோ₂த்தமம்** – உயர்ந்த ரதத்தை, **ஸ்த₂ாபயித்வா** – கொண்டு நிறுத்தி, **பார்த₂** – பார்த்தனே! **ஸமவேதாந்** – (யுத்தத்திற்காக) ஒருங்கே கூடியிருக்கும், **ஏதாந்** – இந்த, **குரூந்** – கௌரவர்களை, **பஶ்ய** – பார், **இதி** – என்று, **உவாச** – கூறினார்.

ஸஞ்ஜயன் கூறினார்: "த்ருதராஷ்ட்ரரே! அர்ஜுனனால் இப்படிச் சொல்லப்பட்ட ஸ்ரீக்ருஷ்ணன் இரண்டு படைகளுக்கும் இடையில் பீஷ்மருக்கும் த்ரோணருக்கும் முன்பும், அனைத்து அரசர்களுக்கு முன்பாகவும் உயர்ந்த ரதத்தைக் கொண்டு நிறுத்தி, 'பார்த்த! யுத்தத்திற்காக ஒருங்கே கூடியிருக்கும் இந்த கௌரவர்களைப் பார்' என்று கூறினார்.

**கேள்வி:** 'குடாகேஶன்' என்றால் என்ன பொருள்? இங்கு அர்ஜுனனை குடாகேசன் என்று ஸஞ்ஜயன் ஏன் கூறுகிறார்?

**பதில்:** 'குடாகா' – தூக்கம். தூக்கத்தை ஜயித்தவன், அதன்மீது தன் அதிகாரத்தை நிலைநாட்டுபவன் 'குடாகேஶன்'. அர்ஜுனன் தூக்கத்தை ஜயித்தவர். அவரால் தூங்காமல் இருந்துவிட முடியும். தூக்கம் அவரைத் துன்புறுத்துவதில்லை. அர்ஜுனன் ஒருபொழுதும் சோம்பலுக்கு ஆட்படுவதில்லை; கவனமாகவும், விழிப்புடனும் இருக்கிறார் என்று சொல்லிக்



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



காட்டி, 'உமது புத்ரர்கள் அவரை எப்படி வெற்றி கொள்வார்கள்?' என்று த்ருதராஷ்ட்ரருக்கு ஸஞ்ஜயன் உணர்த்துகிறார்.

**கேள்வி:** 'யுத்தத்திற்காகக் கூடியிருக்கும் இந்த கௌரவர்களைப் பார்' என்று பகவான் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "அர்ஜுன! 'எல்லோரையும் நான் நன்றாகப் பார்க்கும் வரையில் ரதத்தை அங்கேயே நிறுத்தி வையுங்கள்' என்று நீ சொன்னபடியே எங்கிருந்து எல்லோரையும் நன்றாகப் பார்க்க முடியுமோ, அந்த இடத்தில் கொண்டு வந்து நான் ரதத்தை நிறுத்திவிட்டேன். ரதம் அசையாமல் நிற்கும். எவ்வளவு நேரம் பார்க்க வேண்டுமோ, அவ்வளவு நேரம் நீ நன்றாகப் பார்" என்பது கருத்து.

'கௌரவர்களைப் பார். எல்லோரும் உன்னுடைய உறவினர்கள். நன்கு பார்த்துக் கொள்!' என்று சொல்லி, பகவான் அர்ஜுனனுடைய உள்ளத்தில் மறைந்திருந்த பந்தபாசத்தை எழுப்பி விடுகிறார். அர்ஜுனன் பந்தபாசத்தை நினைத்துத் தமது பலவீனத்தைக் கருணையுடன் வெளிப்படுத்துவதற்கு இந்தச் சொல் வித்துப் போல் ஆகிவிட்டது. அர்ஜுனனை நிமித்தமாக வைத்துக் கொண்டு உலக நன்மைக்காகவே பகவான், தாமே இந்தச் சொற்களால் அர்ஜுனனுடைய உள்ளத்தில் இப்படி ஓர் எண்ணத்தை உண்டு பண்ணி, அவரை யுத்தம் செய்ய மறுக்கும்படி செய்கிறார். அதன் விளைவாக ஸாக்ஷாத் பகவானுடைய முகத்தாமரையிலிருந்து மூவுலகையும் புனிதமாக்கும் திவ்யமான கீதை என்ற அமுதத்தின் இனிய பெருக்கு வெளிப்பட்டது. எல்லையில்லாக் காலம்வரை அது மக்களுக்குக் கணக்கற்ற பரம மங்களத்தைக் கொடுத்துக் கொண்டே இருக்கும்.

**பொருத்தம்:** பகவான் ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஆணையைக் கேட்டு அர்ஜுனன் என்ன செய்தார் என்பதை அடுத்துக் கூறுகிறார்—

तत्रापश्यत्स्थितान् पार्थः पितॄनथ पितामहान्।
आचार्यान्मातुलान्भ्रातॄन्पुत्रान्पौत्रान्सखींस्तथा ॥ २६ ॥
श्वशुरान्सुहृदश्चैव सेनयोरुभयोरपि।

**தத்ராபஶ்யத்ஸ்தி$_2$தாந் பார்த$_2$: பித்ரூநத$_2$ பிதாமஹாந் ।**
**ஆசார்யாந்மாதுலாந்ப்$_4$ராத்ரூந்புத்ராந்பௌத்ராந்ஸகீ$_2$ம்ஸ்தத$_2$ா ॥ 26 ॥**
**ஶ்வஶுராந் ஸுஹ்ருத$_3$ஶ்சைவ ஸேநயோருப$_4$யோரபி ।**

**அத$_2$** – இதற்குப் பிறகு, **பார்த$_2$:** – ப்ருதையின் குமாரனான அர்ஜுனன், **தத்ர** – அங்கு, **உப$_4$யோ:** – இரண்டு, **ஸேநயோ: ஏவ** – படைகளிலேயும், **ஸ்தி$_2$தாந்** – நிற்கின்ற, **பித்ரூந்** – பெரியப்பா மற்றும் சிற்றப்பாக்களையும், **பிதாமஹாந்** – தாத்தா, முப்பாட்டனார்களையும், **ஆசார்யாந்** – குருநாதர்களையும், **மாதுலாந்** – அம்மான்களையும், **ப்$_4$ராத்ரூந்** – ஸஹோதரர்களையும், **புத்ராந்** – புதல்வர்களையும், **பௌத்ராந்** – பேரன்களையும், **தத$_2$ா** – மற்றும், **ஸகீ$_2$ந்** – நண்பர்களையும், **ஶ்வஶுராந் ச** – மாமனார்களையும், **ஸுஹ்ருத$_3$: அபி** – அன்பர்களையும், **அபஶ்யத்** – பார்த்தார்.

இதற்குப் பிறகு ப்ருதையின் (குந்தியின்) குமாரனான அர்ஜுனன் அங்கு இரண்டு படைகளிலேயும் நிற்கின்ற பெரியப்பா சிற்றப்பாக்களையும், தாத்தா முப்பாட்டனார்களையும், குருநாதர்களையும், அம்மான்களையும், ஸஹோதரர்களையும், புதல்வர்களையும், பேரன்களையும் மற்றும் நண்பர்களையும், மாமனார்களையும், அன்பர்களையும் பார்த்தார்.

**கேள்வி:** இந்த ஒன்றரை ச்லோகத்தை விளக்க வேண்டும்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** பகவானுடைய ஆணை பெற்ற அர்ஜுனன் இரண்டு படைகளிலும் இருந்த எல்லா உறவினர்களையும் பார்த்தார். அங்கே தந்தையைப் போன்றே மதிக்கத்தக்க பூரிச்ரவஸ் போன்ற தந்தையின் ஸஹோதரர்கள் இருந்தார்கள். பீஷ்மர், ஸோமதத்தர், பாஹ்லீகர் ஆகிய பாட்டனார், முப்பாட்டனார்கள்; த்ரோணாசார்யர், க்ருபாசார்யர் போன்ற குருநாதர்கள்; புருஜித், குந்திபோஜன், சல்யன் போன்ற அம்மான்கள்; அபிமன்யு, ப்ரதிவிந்த்யன், கடோத்கசன், லக்ஷ்மணன் ஆகிய தம்முடைய, தம் ஸஹோதரர்களுடைய புத்ரர்கள்; லக்ஷ்மணனுடைய குமாரர்களான தமது பேரர்கள்; தம்முடன் விளையாடின பல மித்ரர்கள்; த்ருபதன், சைப்யன் போன்ற மாமனார்கள் ஆகியவர்களும் இருந்தனர். ப்ரதி உபகாரத்தை எதிர்பாராது உதவி செய்ய வந்திருக்கும் அன்பர்கள் பலரும் இருந்தார்கள்.

**பொருத்தம்:** இப்படி எல்லோரும் கூடியிருப்பதைப் பார்த்த அர்ஜுனன் என்ன செய்தார்? அதைச் சொல்கிறார்—

**तान्समीक्ष्य स कौन्तेयः सर्वान्बन्धूनवस्थितान्॥ २७॥**
**कृपया परयाविष्टो विषीदन्निदमब्रवीत्।**

**தாந்ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேய: ஸர்வாந்பந்தூநவஸ்திதாந் ॥ 27 ॥**

**க்ருபயா பரயாவிஷ்டோ விஷீதந்நிதமப்ரவீத் ।**

**அவஸ்திதாந்** – கூடியிருந்த, **தாந்** – அந்த, **ஸர்வாந்** – அனைத்து, **பந்தூந்** – உறவினர்களையும், **ஸமீக்ஷ்ய** – நன்கு பார்த்து, **ஸ:** – அந்த, **கௌந்தேய:** – குந்தியின் மகனான அர்ஜுனன், **பரயா** – மிகுந்த, **க்ருபயா** – இரக்கத்தோடு, **ஆவிஷ்ட:** – கூடியவனாக, **விஷீதந்** – வருத்தம் கொண்டு, **இதம்** – இதை, **அப்ரவீத்** – பேசலுற்றார்.

கூடியிருந்த அந்த அனைத்து உறவினர்களையும் நன்கு பார்த்த அந்தக் குந்தியின் மகனான அர்ஜுனன் மிகுந்த இரக்கத்தோடு கூடியவனாக வருத்தம் கொண்டு இதைப் பேசலுற்றார்.

**கேள்வி:** 'கூடியிருந்த அனைத்து உறவினர்களையும்' என்று யாரைக் குறிப்பிடுகிறார் அர்ஜுனன்?

**பதில்:** முன் ஒன்றரை ச்லோகங்களில் அர்ஜுனன் தம் தந்தை, பாட்டனார் முதலிய பெரியோர்களைப் பார்த்தார் என்று சொல்லி முடித்துவிட்டார். அவர்களைத் தவிரத் தெளிவாக உறவுமுறை சொல்லப்படாத மற்றவர்கள் த்ருஷ்டத்யும்னன், சிகண்டி, ஸுரதன் முதலிய மைத்துனர்கள், ஜயத்ரதன் போன்ற ஸஹோதரி புருஷர்கள், இன்னும் மற்ற உறவினர்கள் இரண்டு படைகளிலும் கூடியிருக்கிறார்கள் என்பதை ஸஞ்ஜயன் சுட்டிக் காட்டுகிறார்.

**கேள்வி:** 'அர்ஜுனன் மிகுந்த கருணையோடு கூடியிருந்தார்' என்றால் என்ன கருத்து?

**பதில்:** அர்ஜுனன் நாற்புறமும் சூழ்ந்திருந்த உறவினர்களைப் பார்த்து இவர்கள் எல்லோருக்கும் இந்தப் போரில் மரணம் ஸம்பவிக்குமே என்று நினைத்தார். உறவினர்களின் மீது இருந்த பற்றின் காரணமாக அவர் உள்ளம் நடுங்கியது. அவர் உள்ளத்தில் போருக்கு எதிராக ஒருவிதமான கருணையோடுகூடிய கோழைத்தனம் மிகவும் பலமாக எழுந்தது. இதைத்தான் 'மிகுந்த கருணை' என்று ஸஞ்ஜயன் கூறுகிறார். இந்தக் கோழைத்தனம் மேலிட்டதனால் அர்ஜுனன் க்ஷத்ரியனுக்குரிய வீர ஸ்வபாவத்தை மறந்து மிகுந்த குழப்பத்தை அடைந்தார். இதுதான் அவர் கருணைக்கு ஆட்பட்டார் என்பதன் பொருள்.

**கேள்வி:** 'இதம்' என்று அர்ஜுனனுடைய எந்தச் சொல்லை எடுத்துக் கொள்வது?

**பதில்:** அடுத்து வரும் ச்லோகம் முதல் 46வது ச்லோகம் வரை அவர் சொல்லப் போவதையெல்லாம் 'இதம்' என்ற சொல் குறிக்கிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பொருத்தம்:** பந்தபாசத்தினால் அர்ஜுனனுக்கு என்ன நிலை ஏற்பட்டதோ, அதை இனிவரும் இரண்டரை ச்லோகங்களில் வர்ணிக்கிறார்—

अर्जुन उवाच

**दृष्ट्वेमं स्वजनं कृष्ण युयुत्सुं समुपस्थितम्॥ २८॥**

**सीदन्ति मम गात्राणि मुखं च परिशुष्यति।**

**वेपथुश्च शरीरे मे रोमहर्षश्च जायते॥ २९॥**

அர்ஜுந உவாச

**த்₃ருஷ்ட்வேமம் ஸ்வஜநம் க்ருஷ்ண யுயுத்ஸும் ஸமுபஸ்தி₂தம் ॥ 28 ॥**

**ஸீத₃ந்தி மம கா₃த்ராணி முக₂ம் ச பரிஶுஷ்யதி ।**

**வேபது₂ஶ்ச ஶரீரே மே ரோமஹர்ஷஶ்ச ஜாயதே ॥ 29 ॥**

**அர்ஜுந உவாச** – அர்ஜுனன் சொன்னார்: **க்ருஷ்ண** – க்ருஷ்ண! **ஸமுபஸ்தி₂தம்** – (போர்க்களத்தில்) ஒருங்கு கூடி நின்று, **யுயுத்ஸும்** – போர் புரிய விரும்புகின்ற, **இமம்** – இந்த, **ஸ்வஜநம்** – உறவினரின் கூட்டத்தை, **த்₃ருஷ்ட்வா** – பார்த்து, **மம** – என், **கா₃த்ராணி** – அங்கங்கள், **ஸீத₃ந்தி** – சோர்வு அடைகின்றன. **முக₂ம் ச** – வாயும், **பரிஶுஷ்யதி** – உலர்கிறது. **ச** – அவ்வாறே, **மே** – என், **ஶரீரே** – உடலில், **வேபது₂:** – நடுக்கம், **ஜாயதே** – ஏற்படுகின்றது. **ரோமஹர்ஷ: ச** – மயிர்ச்சிலிர்ப்பும், (**ஜாயதே** – ஏற்படுகின்றது).

அர்ஜுனன் சொன்னார்: "க்ருஷ்ண! போர்க்களத்தில் ஒருங்கு கூடி நின்று போர் புரிய விரும்புகின்ற இந்த உறவினரின் கூட்டத்தைப் பார்த்து என் அங்கங்கள் சோர்வடைகின்றன. வாயும் உலர்கிறது. அவ்வாறே என் உடலில் நடுக்கம் ஏற்படுகின்றது. மயிர்ச்சிலிர்ப்பும் ஏற்படுகின்றது.

**கேள்வி:** அர்ஜுனன் இப்படிச் சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** இந்தப் பெரிய போரின் விளைவு பயங்கரமாக இருக்கும். இங்குள்ள நெருங்கிய, தூரத்து, உற்றார்–உறவினர், மிக வேண்டிய நண்பர்கள் என் கண்ணெதிரே நிற்கிறார்களே. இவர்கள் மரணத்தின் வாயில் நுழைந்து விடுவார்கள். இதை நினைத்தால் உயிர்நிலையான இடங்களில் வேதனை ஏற்படுகிறது. என் உள்ளத்தில் பயங்கரமான தாபமும், பயமும் உண்டாகி வேதனைப்படுகிறேன். அதனால் உடலுக்கு இந்த அவலநிலை ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது.

**गाण्डीवं स्रंसते हस्तात्त्वक्चैव परिदह्यते।**

**न च शक्नोम्यवस्थातुं भ्रमतीव च मे मनः॥ ३०॥**

**கா₃ண்டீ₃வம் ஸ்ரம்ஸதே ஹஸ்தாத்த்வக்சைவ பரித₃ஹ்யதே ।**

**ந ச ஶக்நோம்யவஸ்தா₂தும் ப்₄ரமதீவ ச மே மந: ॥ 30 ॥**

**ஹஸ்தாத்** – கையிலிருந்து, **கா₃ண்டீ₃வம்** – காண்டீவ வில், **ஸ்ரம்ஸதே** – நழுவிக் கொண்டிருக்கிறது. **ச** – மேலும், **த்வக் ஏவ** – சருமத்திலும், **பரித₃ஹ்யதே** – மிகவும் எரிச்சல் உண்டாகிறது. **மே** – என்னுடைய, **மந: ச** – மனமும், **ப்₄ரமதி இவ** – குழப்பம் அடைவது போல் உள்ளது. (**அத:** – ஆகவே நான்), **அவஸ்தா₂தும் ச** – நிற்பதற்கும் கூட, **ந ஶக்நோமி** – இயலாதவனாக இருக்கிறேன்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy.

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கையிலிருந்து காண்டீவ வில் நழுவிக் கொண்டிருக்கிறது. மேலும் சருமத்திலும் மிகவும் எரிச்சல் உண்டாகிறது. என்னுடைய மனதும் குழப்பம் அடைவதுபோல் உள்ளது. ஆகவே நான் நிற்பதற்குக்கூட இயலாதவனாக இருக்கிறேன்.

**கேள்வி:** இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

**பதில்:** கருணையினால் உண்டான கோழைத்தனத்தால் அர்ஜுனன் வருந்தத்தக்க நிலையை அடைந்தார். அதை வெளியிட்டுச் சொல்கிறார்: "என்னுடைய அங்கங்கள் எல்லாம் தளர்கின்றன. காண்டீவத்தைத் தூக்குவதற்குக்கூடக் கையில் வலுவே இல்லை. அதில் நாணேற்றி அம்பைப் பூட்டுவது எங்கே? அதை என்னால் தாங்கி நிற்கக்கூட முடியவில்லையே! அது கையைவிட்டு நழுவுகிறதே! போரின் விளைவை நினைத்தால் என் மனம் கொதிக்கிறது. என் சருமத்தில் எரிச்சல்போல இருக்கிறது. மனதில் உள்ள தீவிரமான வேதனையினால் எந்த விஷயத்திலும் நிலைத்து ஆலோசிக்க முடியவில்லை. என் மூளை குழம்புகிறது. அப்படியே மயக்கமடைந்து விழுந்து விடுவேனோ என்று தோன்றுகிறது."

**கேள்வி:** அர்ஜுனனுடைய காண்டீவம் எத்தகையது? அது அவருக்கு எப்படிக் கிடைத்தது?

**பதில்:** அர்ஜுனனுடைய காண்டீவம் தெய்விகமானது. அதன் உயரம் பனைமரத்தளவுள்ளது (மஹா. உத்யோக. 161). உத்தரகுமாரனுக்கு காண்டீவத்தைப் பற்றி அறிமுகம் செய்து வைக்கும்போது ப்ருஹன்னளை உருவத்தில் இருந்த அர்ஜுனன் பின்வருமாறு சொல்லியிருக்கிறார்: "இது அர்ஜுனனுடைய உலகப் புகழ்பெற்ற வில். இதற்குத் தங்கக்கவசம் உண்டு. இது எல்லா ஆயுதங்களைக் காட்டிலும் சிறந்தது. லக்ஷம் ஆயுதங்களுக்கு ஸமமான சக்தி உடையது. இந்த வில்லின் உதவியால்தான் அர்ஜுனன் தேவர்களையும், மனிதர்களையும் வென்றார். இது விசித்ரமானது; பல வர்ணங்கள் கொண்டது; அற்புதமானது; ம்ருதுவானது; மிகப் பெரியது. இதை தேவர்கள், தானவர்கள், கந்தர்வர்கள் வெகுகாலம் பூஜித்திருக்கிறார்கள். இந்தச் சிறப்பான, தெய்விகமான வில்லை ப்ரம்மதேவன் ஆயிரம் வருஷங்களும், ப்ரஜாபதி ஐநூற்று மூன்று வருஷங்களும், இந்த்ரன் எண்பத்தைந்து வருஷங்களும், சந்த்ரன் ஐநூறு வருஷங்களும், வருணதேவன் நூறு வருஷங்களும் வைத்துக் கொண்டிருந்தார்கள் (மஹா. விராட. 43). அர்ஜுனன் காண்டவவனத்தை எரித்து அக்னிதேவருக்கு ஸமர்ப்பித்தபோது அக்னி பகவான், வருணன் மூலம் அர்ஜுனனுக்கு இந்த வில்லைக் கொடுக்கச் செய்தார் (மஹா. ஆதி. 225)."

**பொருத்தம்:** தமது வருத்தமுற்ற நிலையைச் சொல்லிவிட்டு, தமது கருத்துப்படி போர் செய்வது உசிதமன்று என்பதை அர்ஜுனன் உறுதிபடச் சொல்கிறார்—

निमित्तानि च पश्यामि विपरीतानि केशव।
न च श्रेयोऽनुपश्यामि हत्वा स्वजनमाहवे॥ ३१॥

**நிமித்தாநி ச பஸ்யாமி விபரீதாநி கேஸவ ।**
**ந ச ஸ்ரேயோऽநுபஸ்யாமி ஹத்வா ஸ்வஜநமாஹவே ॥ 31 ॥**

**கேஸவ** – கேசவ! **விபரீதாநி** – கெடுதல்களை விளைவிக்கக்கூடிய, **நிமித்தாநி ச** – சகுனங்களையும், **பஸ்யாமி** – காண்கிறேன். **ஆஹவே** – போரில், **ஸ்வஜநம்** – நம் உறவினர்களை, **ஹத்வா** – கொன்று (கொல்வதால்), **ஸ்ரேய: ச** – (எந்த) மேன்மையையும், **ந அநுபஸ்யாமி** – (நான்) காணவில்லை.

கேசவ! கெடுதல்களை விளைவிக்கக்கூடிய சகுனங்களையும் காண்கிறேன். போரில் நம் உறவினர்களைக் கொன்று எந்த மேன்மையையும் நான் காணவில்லை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'நான் கெடுதல்களை விளைவிக்கக்கூடிய அறிகுறிகளைக் காண்கிறேன்' என்றால் என்ன கருத்து?

**பதில்:** எந்தச் செயலுக்கும் விளைவு எவ்வாறு அமையும் என்பது பற்றிக் குறிப்புக் காட்டும் சகுனம் முதலியவற்றை லக்ஷணம் – அறிகுறி என்று சொல்வார்கள். ச்லோகத்தில் வரும் 'நிமித்தாநி' என்ற சொல்லுக்கு இதுதான் பொருள். ஏற்படக் கூடாத நேரத்தில் க்ரஹணம் உண்டாவது, பூமியில் நடுக்கம் ஏற்படுவது, ஆகாயத்திலிருந்து நக்ஷத்ரங்கள் உதிர்வது ஆகிய கெட்ட சகுனங்கள் தோன்றுவதிலிருந்து இந்தப் போரின் முடிவு நன்மையாக இருக்காது என்று தெரிகிறது. ஆகையால், எனக்குத் தெரிந்தவரை போர் புரியாமல் இருப்பதுதான் நல்லது என்று அர்ஜுனன் தெரிவிக்கிறார்.

**கேள்வி:** 'போரில் நம் உறவினரைக் கொல்வதால் எந்த மேன்மையும் உண்டாகாது' என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** நம் கூடப் பிறந்தவர்களையும், உறவினர்களையும் போரில் கொல்வதால் எந்தவிதமான நன்மையும் உண்டாகும் என்று தோன்றவில்லை. ஏனெனில் முதலில் நம் மக்களைக் கொல்வதால் மனதில் பச்சாதாபம் ஏற்படும்; மனம் கலங்கும். அடுத்தபடியாக, அந்த உறவினர் இல்லையே என்ற துயரம் வாழ்க்கை முழுவதும் தொடரும். மூன்றாவதாக அவர்களைக் கொல்வதால் கொடிய பாவம் உண்டாகும். இந்நோக்குகளிலே பார்க்கும் போது நமக்கு இவ்வுலகிலும் நன்மை இல்லை; பரலோகத்திலும் நன்மை இல்லை. ஆகவே தம் கருத்துப்படி யுத்தம் செய்வது எவ்விதத்திலும் உசிதமில்லை என்று அர்ஜுனன் நினைக்கிறார்.

**பொருத்தம்: தம் உற்றாரைக் கொல்வதால் எவ்விதத்திலும் நன்மையில்லை என்று சொன்னதற்கு மேலும் வலிவு ஊட்டுகிறார் அர்ஜுனன்.**

**न काङ्क्षे विजयं कृष्ण न च राज्यं सुखानि च।**
**किं नो राज्येन गोविन्द किं भोगैर्जीवितेन वा॥ ३२॥**

**ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண ந ச ராஜ்யம் ஸுக₂ாநி ச ।**

**கிம் நோ ராஜ்யேந கோ₃விந்த₃ கிம் பே₄ாகை₃ர்ஜீவிதேந வா ॥ 32 ॥**

**க்ருஷ்ண** – க்ருஷ்ண! (நான்), **விஜயம்** – வெற்றியை, **ந காங்க்ஷே** – விரும்பவில்லை. **ராஜ்யம் ச** – ராஜ்யத்தையும், **ந (காங்க்ஷே)** – விரும்பவில்லை. **ஸுக₂ாநி ச** – ஸுகங்களையும், (**ந காங்க்ஷே** – விரும்பவில்லை). **கோ₃விந்த₃** – கோவிந்த! **ந:** – நமக்கு (இத்தகைய), **ராஜ்யேந** – ராஜ்யத்தினால், **கிம்** – என்ன பயன்? **வா** – அல்லது (இத்தகைய), **பே₄ாகை₃:** – ஸுக போகங்களாலோ, **ஜீவிதேந** – உயிரோடு வாழ்வதாலோ கூட, **கிம்** – என்ன (பயன்)?

க்ருஷ்ண! நான் வெற்றியை விரும்பவில்லை. ராஜ்யத்தையும் விரும்பவில்லை. ஸுகங்களையும் விரும்பவில்லை. கோவிந்த! நமக்கு இத்தகைய ராஜ்யத்தினால் என்ன பயன்? அல்லது இத்தகைய ஸுகபோகங்களாலோ உயிரோடு வாழ்வதாலோகூட என்ன பயன்?

**கேள்வி:** அர்ஜுனன் இப்படிச் சொல்வதை விளக்கவேண்டும்.

**பதில்:** அர்ஜுனன் தம் மனநிலையைச் சித்திரம்போல வரைந்து காட்டுகிறார் – "க்ருஷ்ண! நம்முடைய உறவினர்களைக் கொன்ற பிறகு கிடைக்கும் வெற்றியோ, ராஜ்யமோ, ஸுகமோ எனக்குச் சிறிதுகூடப் பிடிக்கவில்லை. இவர்களைக் கொன்றால் நமக்கு இவ்வுலகிலோ, பரலோகத்திலோ தாபம்தான் உண்டாகும் என்று தோன்றுகிறது. பிறகு ஏன் யுத்தம் செய்ய வேண்டும்? ஏன் இவர்களைக் கொல்ல வேண்டும்? இந்த ராஜ்யத்தினாலும், ஸுகபோகங்களாலும் என்ன கிடைக்கப் போகிறது? என் எண்ணத்தில் இவர்களைக் கொன்றுவிட்டு உயிரோடு வாழ்வதுகூட லாபமில்லை."

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பொருத்தம்:** தம் உறவினர்களைக் கொன்று அதன்மூலம் கிடைக்கும் ராஜ்யம், போகம் முதலியவற்றை விரும்பாததற்கு அர்ஜுனன் காரணம் கூறுகிறார்—

**येषामर्थे काङ्क्षितं नो राज्यं भोगाः सुखानि च।**
**त इमेऽवस्थिता युद्धे प्राणांस्त्यक्त्वा धनानि च॥३३॥**

**யேஷாமர்தே₂ காங்க்ஷிதம் நோ ராஜ்யம் பே₄ாக₃ா: ஸுக₂ாநி ச ।**

**த இமே஽வஸ்தி₂தா யுத்₃தே₄ ப்ராணாம்ஸ்த்யக்த்வா த₄நாநி ச ॥ 33 ॥**

**ந:** – நமக்கு, **யேஷாம் அர்தே₂** – எவர்களுக்காக, **ராஜ்யம்** – அரசும், **பே₄ாக₃ா: ச** – போகங்களும், **ஸுக₂ாநி** – ஸுகங்களும், **காங்க்ஷிதம்** – விரும்பத்தக்கனவோ, **தே இமே** – அத்தகைய இவர்களே, **த₄நாநி** – செல்வத்தையும், **ப்ராணாந் ச** – உயிர் மேலுள்ள ஆசையையும், **த்யக்த்வா** – துறந்து, **யுத்₃தே₄** – யுத்தத்தில், **அவஸ்தி₂தா:** – நிற்கிறார்கள்.

நமக்கு, எவர்களுக்காக அரசும் போகங்களும் ஸுகங்களும் விரும்பத்தக்கனவோ அத்தகைய இவர்களே செல்வத்தையும் உயிர் மேலுள்ள ஆசையையும் துறந்து யுத்தத்தில் நிற்கிறார்கள்.

**கேள்வி:** அர்ஜுனன் இப்படிச் சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** அர்ஜுனன் சொல்கிறார்: "என் சொந்த நுகர்ச்சிக்காக ராஜ்யமோ, போகமோ, ஸுகங்களோ தேவையில்லை. இவற்றால் நிலையான ஆனந்தம் கிடையாது என்றும் எனக்குத் தெரியும். இவை நிலைத்து நிற்பவையும் அல்ல. ஸஹோதரர், உறவினர் முதலியவர்களுக்காகத்தான் நான் ராஜ்யம் முதலியவற்றை விரும்பினேன். ஆனால் அவர்களோ போரில் உயிரை த்யாகம் செய்யத் தயாராகக் கூடி நிற்கிறார்கள் என்பதைப் பார்க்கிறேன். இவர்கள் எல்லோரும் இறந்துவிட்டால் பிறகு கிடைக்கும் ராஜ்யமோ, போகமோ, ஸுகமோ யாருக்கு வேண்டும்? ஆகவே, எவ்விதத்திலும் யுத்தம் செய்வது உசிதமன்று."

**பொருத்தம்:** இவ்விதம் யுத்தம் செய்வது உசிதமன்று என்று நிரூபித்துவிட்டு, மேலே, யுத்தத்தில் உயிரை விடுவதற்காகத் தயாராகக் கூடியிருக்கும் தம் உறவினர்கள் யார் யார் என்பதைச் சுருக்கமாக வர்ணிக்கிறார்—

**आचार्याः पितरः पुत्रास्तथैव च पितामहाः।**
**मातुलाः श्वशुराः पौत्राः श्यालाः सम्बन्धिनस्तथा॥३४॥**

**ஆசார்யா: பிதர: புத்ராஸ்ததை₂வ ச பிதாமஹா: ।**

**மாதுலா: ஶ்வஶுரா: பௌத்ரா: ஶ்யாலா: ஸம்ப₃ந்தி₄நஸ்தத₂ா ॥ 34 ॥**

**ஆசார்யா:** – ஆசார்யர்கள், **பிதர:** – பெரியப்பா, சிற்றப்பாக்கள், **புத்ரா:** – மகன்கள், **தத₂ா ஏவ ச** – அவ்விதமே, **பிதாமஹா:** – பாட்டனார்கள், **மாதுலா:** – அம்மான்கள், **ஶ்வஶுரா:** – மாமனார்கள், **பௌத்ரா:** – பேரர்கள், **ஶ்யாலா:** – மைத்துனர்கள், **தத₂ா** – மற்றும், **ஸம்ப₃ந்தி₄ந:** – உறவினர்கள் (இங்கே கூடியிருக்கிறார்கள்).

ஆசார்யர்கள், பெரியப்பா சிற்றப்பாக்கள், மகன்கள், அவ்விதமே பாட்டனார்கள், அம்மான்கள், மாமனார்கள், பேரர்கள், மைத்துனர்கள் மற்றும் உறவினர்கள் இங்கே கூடியிருக்கிறார்கள்.

**கேள்வி:** அர்ஜுனன், இப்படி உறவினர்களின் பெயரைக் கூறி, என்ன சொல்ல விரும்புகிறார்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** ஆசார்யர், சிற்றப்பா, பெரியப்பா, உறவினர்கள் பற்றிச் சுருக்கமாக முன்னே சொல்லியாகிவிட்டது. இங்கு மைத்துனர்களான த்ருஷ்டத்யும்னன், சிகண்டி, ஸுரதன் முதலியவர்களையும், உறவினர்களான ஜயத்ரதன் முதலானோரையும் குறிப்பிட்டு, "உலகியலில் அன்புள்ள உறவினர்களுக்காகவே ஸுகபோகப் பொருட்களைச் சேர்ப்பது வழக்கம். அவர்களையே கொன்றுவிட்ட பிறகு ராஜ்ய போகங்களை அடைவதால் என்னதான் பயன்? இந்த ராஜ்ய போகங்கள் துக்கத்திற்கே காரணமாகும்" என்று கூற விரும்புகிறார் அர்ஜுனன்.

**பொருத்தம்:** படையில் எதிரில் நிற்கும் சூரவீரர்களுடன் தம் உறவைக் கூறிவிட்டு, எக்காரணம் கொண்டும் அவர்களைக் கொல்வதில் தமக்கு விருப்பமில்லை என்பதை அர்ஜுனன் வெளிப்படுத்துகிறார்—

**एतान्न हन्तुमिच्छामि घ्नतोऽपि मधुसूदन।**
**अपि त्रैलोक्यराज्यस्य हेतोः किं नु महीकृते॥ ३५॥**

**ஏதாந்ந ஹந்துமிச்சாமி க்நதோऽபி மதுஸூதந ।**
**அபி த்ரைலோக்யராஜ்யஸ்ய ஹேதோ: கிம் நு மஹீக்ருதே ॥ 35 ॥**

**மதுஸூதந** – மதுஸூதன! **க்நத: அபி** – என்னைக் கொன்றாலும், **த்ரைலோக்ய ராஜ்யஸ்ய ஹேதோ: அபி** – மூவுலகங்களிலும் உள்ள ராஜ்யங்களின் அரசாட்சி என்ற காரணத்திற்காகக் கூட (நான்), **ஏதாந்** – இவர்கள் எல்லோரையும், **ஹந்தும்** – கொல்ல, **ந இச்சாமி** – விரும்பவில்லை. (பிறகு), **மஹீக்ருதே** – பூவுலகுக்காக, **கிம் நு** – (கொல்ல விரும்பவில்லை என்பதைச்) சொல்லவும் வேண்டுமா?

மதுஸூதன! என்னைக் கொன்றாலும் மூவுலகங்களிலும் உள்ள ராஜ்யங்களின் அரசாட்சி என்ற காரணத்திற்காகக்கூட நான் இவர்கள் எல்லோரையும் கொல்ல விரும்பவில்லை. பிறகு இப்பூவுலகுக்காகக் கொல்ல விரும்பவில்லை என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

**கேள்வி:** இருதரப்புப் படைகளிலுமுள்ள உறவினர்களில் அர்ஜுனன் தரப்பில் உள்ளவர்கள் அவரைக் கொல்வார்கள் என்று கற்பனைகூடச் செய்ய முடியாதே! அப்படியிருக்க 'இவர்கள் என்னைக் கொன்றாலும்கூட நான் இவர்களைக் கொல்ல விரும்பவில்லை' என்று அர்ஜுனன் ஏன் கூறுகிறார்?

**பதில்:** இவ்வாறு அர்ஜுனன் கூறுவதன் கருத்து என்னவெனில்:- என் தரப்பில் உள்ளவர்களைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். ஆனால் எதிர்த்தரப்பில் உள்ள உறவினர்கள் நான் போரிலிருந்து விலகினால் என்னைக் கொல்ல விரும்பாமல் இருக்கலாம். ஏனெனில் அவர்கள் ஆட்சி பீடத்தின் பேராசையாலல்லவா போர் புரிய முனைந்துள்ளனர். நாமே அரசு ஆசையைத் துறந்து போரிலிருந்து விலகுவோமானால், அப்பொழுது அவர்கள் யாரையும் கொல்ல எக்காரணமும் இருக்க முடியாது. ஆனால் அப்படியிருந்தும் ஒருகால் அவர்களில் யாராவது என்னைக் கொல்ல விரும்புவாரேயாகில், அப்படி என்னைக் கொல்ல வருபவர்களையும் நான் கொல்ல மாட்டேன்.

**கேள்வி:** 'மூவுலக அரசாட்சிக்காகக்கூட அல்ல என்றால் இந்தப் பூவுலக அரசாட்சி பற்றி என்ன' என்பதன் கருத்து என்ன?

**பதில்:** பூவுலக அரசாட்சி, அது வழங்கும் ஸுகம் – இருக்கட்டும். இவர்களைக் கொல்வதால் மூவுலக அரசாட்சி ஒருவித இடையூறுமில்லாமல் கிடைக்குமானால்கூட,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அதற்காக இந்த ஆசார்யர் முதலானோரை – உறவினரைக் கொல்ல விரும்பவில்லை என்பது கருத்து.

**பொருத்தம்:** ஏன் மூவுலக அரசாட்சிக்காகக்கூட அவர்களை நீ கொல்ல விரும்பவில்லை என்று கேட்டால், அதற்குப் பதிலாகத் தம் உறவினர்களைக் கொல்வதால் லாபமில்லை; பாவமும் உண்டாகும் என்று கூறித் தம் கருத்துக்கு ந்யாயம் கற்பிக்கிறார்—

**निहत्य धार्तराष्ट्रान्नः का प्रीतिः स्याज्जनार्दन।**
**पापमेवाश्रयेदस्मान्हत्वैतानाततायिनः ॥३६॥**

***நிஹத்ய த₄ார்தராஷ்ட்ராந்ந: கா ப்ரீதி: ஸ்யாஜ்ஜநார்த₃ந ।***
***பாபமேவாஶ்ரயேத₃ஸ்மாந்ஹத்வைதாநாததாயிந: ॥ 36 ॥***

**ஜநார்த₃ந** – ஜனார்தன! **த₄ார்தராஷ்ட்ராந்** – த்ருதராஷ்ட்ர குமாரர்களை, **நிஹத்ய** – கொன்று, **ந:** – நமக்கு, **கா** – என்ன, **ப்ரீதி:** – மகிழ்ச்சி, **ஸ்யாத்** – ஏற்படப் போகிறது? **ஏதாந்** – இந்த, **ஆததாயிந:** – படுபாவிகளை, **ஹத்வா** – கொன்றால், **அஸ்மாந்** – நம்மை, **பாபம் ஏவ** – பாவம்தான், **ஆஶ்ரயேத்** – வந்தடையும்.

ஜனார்தன! த்ருதராஷ்ட்ர குமாரர்களைக் கொன்று நமக்கு என்ன மகிழ்ச்சி ஏற்படப் போகிறது? இந்தப் படுபாவிகளைக் கொன்றால் நம்மைப் பாவம்தான் வந்தடையும்.

**கேள்வி:** 'த்ருதராஷ்ட்ர புத்ரர்களைக் கொன்றால் நமக்கு என்ன மகிழ்ச்சி ஏற்படும்' என்று கேட்பதன் பொருள் என்ன?

**பதில்:** அர்ஜுனன் சொல்கிறார்: "எதிரணியில் நிற்கும் த்ருதராஷ்ட்ர புத்ரர்களையும், அவர்களுடைய கூட்டாளிகளையும் கொல்வதால் இவ்வுலகிலோ, பரலோகத்திலோ நமக்கு எவ்விதமான இஷ்ட ஸித்தியும் ஏற்படாது. விரும்பிய பொருள் கிடைக்காதபோது மகிழ்ச்சி என்பது எப்படி ஏற்படும்? ஆகவே, எந்த நோக்கில் பார்த்தாலும் இவர்களைக் கொல்ல நான் விரும்பவில்லை."

**கேள்வி:** ஸ்ம்ருதி நூலோர் தெளிவான சொற்களில் இவ்விதம் சொல்கிறார்கள்—

**ஆததாயிநமாயாந்தம் ஹந்யாதே₃வாவிசாரயந் ।**
**நாததாயிவதே₄ தோ₃ஷோ ஹந்துர்ப₄வதி கஶ்சந ।**

*(மநுஸ்ம்ருதி 8/350,351)*

தனக்குக் கெடுதி செய்ய வேண்டும் என்ற நோக்கத்தோடு எதிரே வரும் ஆததாயியை ஆலோசியாமல் கொன்றுவிட வேண்டும். ஆததாயியைக் கொல்வதால் கொல்பவனுக்கு ஒரு குற்றமும் ஏற்படாது.

வஸிஷ்ட ஸ்ம்ருதி ஆததாயியின் இலக்கணத்தைப் பின்வருமாறு கூறுகிறது—

**அக்₃நிதோ₃ க₃ரத₃ஶ்சைவ ஶஸ்த்ரபாணிர்த₄நாபஹ: ।**
**க்ஷேத்ரதா₃ராபஹர்தா ச ஷடே₃தே ஹ்யாததாயிந: ॥**

*(3/19)*

*(1)* தீ வைப்பவன், *(2)* விஷம் கொடுப்பவன், *(3)* ஆயுதமெடுத்துக் கொல்ல வருபவன், *(4)* செல்வத்தைப் பறித்துக் கொள்பவன், *(5)* நிலத்தைப் பறித்துக் கொள்பவன், *(6)* மனைவியைப் பறிப்பவன் – இந்த ஆறு பேர்களும் ஆததாயி எனப்படுவர்.

துர்யோதனாதிகளுக்கு இந்த ஆததாயியின் இலக்கணங்கள் முற்றும் பொருந்துகின்றன. அரக்கு மாளிகையில் நெருப்பு வைத்துப் பாண்டவர்களை உயிரோடு கொளுத்த முயன்றார்கள். பீமஸேனனின் உணவில் விஷத்தைக் கலந்தார்கள். கையில் ஆயுதம் எடுத்துக்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கொல்லத் தயாராக இருக்கிறார்கள். சூதாட்டத்தில் வஞ்சனை புரிந்து பாண்டவர்களின் அனைத்துச் செல்வத்தையும், முழு ராஜ்யத்தையும் பறித்துக் கொண்டார்கள். அந்யாயமாக த்ரௌபதியை ஸபையில் இழுத்து வந்து பெரும் அவமானத்தைச் செய்தார்கள். மேலும் ஜயத்ரதன் அவளை அபகரித்துக் கொண்டு போனான். மேலே சொல்லப்பட்ட அத்தனை குற்றங்களையும் செய்துள்ள படுபாவிகளைக் கொன்றால் பாவமே ஸம்பவிக்கும் – என்று அர்ஜுனன் ஏன் சொல்கிறார்?

**பதில்:** ஸ்ம்ருதி எழுதியவர்கள் கருத்துப்படி படுபாவிகளைக் கொல்வது பாவமாகாது. இதில் ஸந்தேஹமே இல்லை. துர்யோதனாதியர் படுபாவிகள்தாம் என்பதும் கருத்து வேற்றுமை இல்லாத உண்மைதான். ஆனால் வேறு ஒரு இடத்தில் ஸ்ம்ருதிபடைத்தோர் இப்படியும் சொல்லி இருக்கிறார்கள்.

ஸ ஏவ பாபிஷ்ட₂தமோ ய: குர்யாத் குலநாஶநம் ।

'எவன் தன் குலத்தை அழிக்கிறானோ, அவன் எல்லோரைக் காட்டிலும் மிக மிகக் கொடிய பாவி.'

முன் சொன்ன பொதுவான வாக்கியத்தைக் காட்டிலும் இந்த வாக்கியம் உயர்ந்த தர்மத்தைச் சொல்கிறது என்று அறிந்து அர்ஜுனன் சொல்கிறார்: "த்ருதராஷ்ட்ர புத்ரர்கள் படுபாவிகள் ஆனாலும் நம் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். ஆகவே, இவர்களைக் கொல்வது நமக்குப் பாவம்தான். ஒருவிதமான லாபமுமில்லை. இந்த நிலையில் இவர்களை நான் கொல்ல விரும்பவில்லை." அர்ஜுனன் இந்த அத்யாயத்தின் முடிவு வரை இதே கருத்தைத் தெளிவுபடுத்துகிறார்.

**பொருத்தம்: உற்றாரைக் கொல்வது எவ்விதத்திலும் கேடுதான் என்று சொல்லி, அர்ஜுனன் தம் முடிவை வெளிப்படுத்துகிறார்—**

**तस्मान्नार्हा वयं हन्तुं धार्तराष्ट्रान्स्वबान्धवान्।**
**स्वजनं हि कथं हत्वा सुखिनः स्याम माधव॥ ३७॥**

**தஸ்மாந்நார்ஹா வயம் ஹந்தும் தா₄ர்தராஷ்ட்ராந் ஸ்வபா₃ந்த₄வாந் ।**
**ஸ்வஜநம் ஹி கத₂ம் ஹத்வா ஸுகி₂ந: ஸ்யாம மாத₄வ ॥ 37 ॥**

**தஸ்மாத்** – ஆகவே, **மாத₄வ** – மாதவ! **ஸ்வபா₃ந்த₄வாந்** – நம் உறவினர்களான, **தா₄ர்தராஷ்ட்ராந்** – த்ருதராஷ்ட்ர குமாரர்களை, **ஹந்தும்** – கொல்வதற்கு, **வயம் ந அர்ஹா:** – நாம் தக்கவரல்லர். (நாம் அவர்களைக் கொல்வது சரியன்று). **ஹி** – ஏனெனில், **ஸ்வஜநம்** – நம் உறவினர்களை, **ஹத்வா** – கொன்று (நாம்), **கத₂ம்** – எப்படி, **ஸுகி₂ந:** – ஸுகமுள்ளவர்களாக, **ஸ்யாம** – இருப்போம்?

ஆகவே மாதவ! நம் உறவினர்களான த்ருதராஷ்ட்ர குமாரர்களைக் கொல்வதற்கு நாம் தக்கவரல்லர். நாம் அவர்களைக் கொல்வது சரியன்று. ஏனெனில் நம் குடும்பத்தினரைக் கொன்று நாம் எப்படி ஸுகமுள்ளவர்களாக இருப்போம்?

**கேள்வி:** இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

**பதில்:** இந்த ச்லோகத்தில் 'தஸ்மாத்' என்று கூறுவதன் மூலம் அர்ஜுனன் ஒன்றைத் தெளிவுபடுத்துகிறார்: "என் மனநிலையைப் பொறுத்தும் இவ்விதம் தோன்றுகிறது. யுத்தம் செய்ய வேண்டாம் என்பது இதுவரை சொன்ன காரணங்களாலும், மேலும் எனக்குத் தோன்றும் கருத்துக்களாலும் உறுதியாகிறது. துர்யோதனன் முதலான சுற்றத்தாரைக் கொல்வது முற்றிலும் முறையற்றது. குடும்பத்தினரைக் கொன்று இவ்வுலகிலோ, பரலோகத்திலோ எவ்வித நன்மையையும் பெற முடியும் என்ற நம்பிக்கையே இல்லை. ஆகவே, நான் யுத்தம் செய்ய விரும்பவில்லை."

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொருத்தம்: குலநாசத்தால் ஏற்படும் குற்றம் என்பது இரு அணியினர்க்கும் ஸமானம்தான். இந்தப் பாவத்தை நினைத்து துர்யோதனன் முதலானோர் யுத்தத்திலிருந்து விலகாமல் இருக்கும்போது, உனக்கு மட்டும் ஏன் இவ்வளவு கவலை என்ற கேள்விக்கு அர்ஜுனன் இரண்டு ச்லோகங்களின் மூலம் பதில் சொல்கிறார்—

यद्यप्येते न पश्यन्ति लोभोपहतचेतसः।
कुलक्षयकृतं दोषं मित्रद्रोहे च पातकम्॥ ३८॥
कथं न ज्ञेयमस्माभिः पापादस्मान्निवर्तितुम्।
कुलक्षयकृतं दोषं प्रपश्यद्भिर्जनार्दन॥ ३९॥

யத்₃யப்யேதே ந பஶ்யந்தி லோபோ₄பஹததசேதஸ: ।
குலக்ஷயக்ருதம் தோ₃ஷம் மித்ரத்₃ரோஹே ச பாதகம் ॥ 38 ॥
கத₂ம் ந ஜ்ஞேயமஸ்மாபி₄: பாபாத₃ஸ்மாந்நிவர்திதும் ।
குலக்ஷயக்ருதம் தோ₃ஷம் ப்ரபஶ்யத்₃பி₄ர்ஜநார்த₃ந ॥ 39 ॥

லோப உபஹத சேதஸ: – பேராசையால் மதியிழந்த, ஏதே – இவர்கள், குலக்ஷய க்ருதம் – குலநாசத்தினால் ஏற்படும், தோ₃ஷம் – குற்றத்தை(யும்), மித்ரத்₃ரோஹே – நண்பர்களுக்குக் கெடுதல் செய்வதால் ஏற்படும், பாதகம் ச – பாவத்தையும், யத்₃யபி ந பஶ்யந்தி – பார்ப்பதில்லையாயினும் (அறிந்து கொள்ளாவிடினும்), ஜநார்த₃ந – ஜனார்தன! குலக்ஷயக்ருதம் – குலநாசத்தினால் ஏற்படும், தோ₃ஷம் – குற்றத்தை, ப்ரபஶ்யத்₃பி₄: – நன்கு உணர்கின்ற, அஸ்மாபி₄: – நம்மால் (நாம்), அஸ்மாத் – இந்த, பாபாத் – பாவச் செயலிலிருந்து, நிவர்திதும் – விலகுவது பற்றி, கத₂ம் – ஏன், ந ஜ்ஞேயம் – ஆலோசிக்காமல் இருக்கவேண்டும்? (ஆலோசிக்கவே வேண்டும்).

பேராசையால் மதியிழந்த இவர்கள் குலநாசத்தினால் ஏற்படும் குற்றத்தையும் நண்பர்களுக்குக் கெடுதல் செய்வதால் ஏற்படும் பாவத்தையும் பார்ப்பதில்லையாயினும், ஜனார்தன! குலநாசத்தினால் ஏற்படும் குற்றத்தை நன்கு உணர்கின்ற நாம் இந்தப் பாவச் செயலிலிருந்து விலகுவது பற்றி ஏன் ஆலோசிக்காமல் இருக்கவேண்டும்? (ஆலோசிக்கவே வேண்டும்).

கேள்வி: இந்த இரண்டு ச்லோகங்களின் தெளிவான கருத்து என்ன?

பதில்: நிச்சயமாக துர்யோதனாதியர் செய்வது மிகவும் முறையற்றதுதான். ஆனால், அவர்களுக்கு இது பெரிய விஷயம் அன்று. பேராசை பிடித்தவர்களுக்கு மனதில் விவேகம் அழிந்துவிடும். அதனால், இவர்கள் குலநாசத்தினால் என்னவெல்லாம் தீங்குகள்–தீய விளைவுகள் ஏற்படும் என்று எண்ணிப் பார்க்க மாட்டார்கள். இரு படைகளிலும் ஒன்று கூடி இருக்கும் பந்துவர்க்கங்கள், நண்பர்கள், ஒருவருக்கொருவர் விரோதம் பாராட்டி ஒருவர் மற்றவரைக் கொல்வது எவ்வளவு பயங்கரமான பாவம்? என்பதை அவர்கள் சிந்திக்க மாட்டார்கள். ஆனால், நாம் பேராசையினால் விவேகத்தை இழக்கவில்லையே. குலநாசத்தினால் ஏற்படும் பாவம் நமக்கு நன்றாகத் தெரிகிறதே! நன்கு தெரிந்தும்கூடப் பாவச் செயலில் ஏன் இறங்க வேண்டும்? இதை எண்ணிப் பார்த்து நாம் போரிலிருந்து விலகத்தான் வேண்டும் என்பது கருத்து.

பொருத்தம்: குலநாசத்தினால் என்னென்ன குற்றங்கள் ஏற்படும் என்பதை அர்ஜுனன் கூறுகிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



कुलक्षये प्रणश्यन्ति कुलधर्माः सनातनाः ।
धर्मे नष्टे कुलं कृत्स्नमधर्मोऽभिभवत्युत ॥ ४० ॥

குலக்ஷயே ப்ரணஶ்யந்தி குலத₄ர்மா: ஸநாதநா: ।
த₄ர்மே நஷ்டே குலம் க்ருத்ஸ்நமத₄ர்மோঽபி₄ப₄வத்யுத ॥ 40 ॥

**குலக்ஷயே** – குலநாசத்தினால், **ஸநாதநா:** – தொன்றுதொட்டு வருகின்ற, **குலத₄ர்மா:** – குலதர்மங்கள், **ப்ரணஶ்யந்தி** – அழிந்துவிடுகின்றன. **த₄ர்மே** – தர்மம், **நஷ்டே** – அழிந்த பிறகு, **க்ருத்ஸ்நம் குலம்** – குலம் முழுவதிலும், **அத₄ர்ம: உத** – அதர்மமும், **அபி₄ப₄வதி** – வெகுவாகப் பரவுகிறது.

குலநாசத்தினால் தொன்றுதொட்டு வருகின்ற குலதர்மங்கள் அழிந்து விடுகின்றன. தர்மம் அழிந்த பிறகு குலம் முழுவதிலும் அதர்மமும் வெகுவாகப் பரவுகிறது.

**கேள்வி:** தொன்றுதொட்டு வருகிற குலதர்மங்கள் என்றால் எவை? குலநாசம் ஏற்படுவதால் அவை எப்படி அழியும்?

**பதில்:** அவரவர்கள் குலத்தில் தலைமுறை தலைமுறையாக நடைமுறையில் இருந்து வரும் மங்களமானதும், சிறந்ததுமான கட்டுப்பாடுகள் நல்ல நடத்தைகளைக் காப்பாற்றி வருகின்றன. அதனால் குலத்தில் உள்ள ஆண், பெண்களிடம் அதர்மம் நுழைவதில்லை. அந்த மங்களமான சிறந்த கட்டுப்பாடுகளைத்தான் தொன்றுதொட்டு வருகின்ற குலதர்மங்கள் என்று சொல்கிறார். குலம் அழிந்தால் இந்தக் குலதர்மத்தை அறிந்தவர்கள் – அடுத்த தலைமுறைக்கு எடுத்துக்காட்டும் பெரியோர்கள் இல்லாமல் போகிறார்கள். அப்போது எஞ்சியுள்ள சிறுவர்களிடமும், பெண்களிடமும் தர்மம் இயல்பாக அமையாது.

**கேள்வி:** 'தர்மம் அழிந்தால் குலம் முழுவதும் அதர்மமே வெகுவாகப் பரவிவிடும்' என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** மனிதன் அதர்மத்திலிருந்து தப்புவதற்கு ஐந்து காரணங்கள் உள்ளன. அவை தர்மத்தைக் காப்பாற்றிக் கொடுக்கும். (1) கடவுளிடம் உள்ள பயம், (2) சாஸ்த்ரத்தின் உத்தரவு, (3) குலப்பழக்கம் கெட்டுவிடுமே என்ற பயம், (4) அரசாங்கச் சட்டம், (5) உடலுக்கும், பொருளுக்கும் ஏற்படும் அழிவில் பயம். இவற்றில் கடவுளும், சாஸ்த்ரமும் உண்மைதான் என்றாலும் அவை ச்ரத்தையை (நம்பிக்கையை)ப் பொறுத்தவை. நேரிடைக் காரணங்கள் அல்ல. அரசாங்கச் சட்டம்தான் மக்களுக்கு முக்யமான காப்பாக உள்ளது. பொதுவாக, அதிகாரம் கையில் உள்ளவர்கள் தர்மத்தை மதிப்பதில்லை. உடலுக்கும், பொருளுக்கும் தீமை ஏற்படும் என்ற பயம்தான் பெரும்பாலும் தனிப்பட்டோருக்கு இருக்கிறது. ஆனால், குலக்கட்டுப்பாடு என்பது குலம் அனைத்துக்கும் ஒரு காப்பாக இருக்கிறது. எந்த ஸமுதாயத்திலோ, குலத்திலோ நெடுநாள் பழக்கமாக வந்திருக்கும் மங்களமானதும், சிறந்ததுமான கட்டுப்பாடுகள் குலைந்துவிட்டால், அந்த ஸமுதாயமும், குலமும் கடிவாளம் இல்லாத குதிரைகள்போலத் தத்தம் விருப்பப்படி போக ஆரம்பித்துவிடும். அப்புறம் ஒரு கட்டுப்பாட்டையும் ஏற்காததும், வெறிபிடித்ததுமான அந்த ஸமூஹத்தைச் சேர்ந்தவன் தறிகெட்டவன் ஆகிறான். எந்த ஸமுதாயத்தில், குலத்தில் மனிதர்களிடையே இப்படித் தறிகெட்டதன்மை முளைக்கிறதோ அந்த ஸமுதாயத்தில், குலத்தில் தானாகவே பாவம் பரவிவிடும்.

**பொருத்தம்:** 'இப்படி எங்கும் பாவம் பரவிவிட்டால் என்ன ஆகும்?' என்பதை அர்ஜுனன் மேலே சொல்கிறார்—

अधर्माभिभवात्कृष्ण प्रदुष्यन्ति कुलस्त्रियः ।
स्त्रीषु दुष्टासु वार्ष्णेय जायते वर्णसङ्करः ॥ ४१ ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அத₄ர்மாபி₄ப₄வாத்க்ருஷ்ண ப்ரது₃ஷ்யந்தி குலஸ்த்ரிய: ।**
**ஸ்த்ரீஷு து₃ஷ்டாஸு வார்ஷ்ணேய ஜாயதே வர்ணஸங்கர: ॥ 41 ॥**

**க்ருஷ்ண** – க்ருஷ்ண! **அத₄ர்ம அபி₄ப₄வாத்** – அதர்மம் அதிகமாகப் பெருகுவதால், **குலஸ்த்ரிய:** – குலப்பெண்கள், **ப்ரது₃ஷ்யந்தி** – நடத்தை கெட்டுப் போவார்கள். (மேலும்), **வார்ஷ்ணேய** – வார்ஷ்ணேய! **ஸ்த்ரீஷு** – பெண்கள், **து₃ஷ்டாஸு** – நடத்தை கெட்டுப் போனால், **வர்ணஸங்கர:** – வர்ணக்கலப்பு, **ஜாயதே** – உண்டாகிவிடுகிறது.

க்ருஷ்ண! அதர்மம் அதிகமாகப் பெருகுவதால் குலப்பெண்கள் நடத்தை கெட்டுப் போவார்கள். மேலும் வார்ஷ்ணேய! பெண்கள் நடத்தை கெட்டுப் போனால் வர்ணக்கலப்பு உண்டாகிவிடுகிறது.

**கேள்வி:** இந்த ச்லோகத்திற்கு என்ன தாத்பர்யம்?

**பதில்:** குலதர்மம் அழிந்துவிட்டால் குலத்தில் உள்ள ஸ்த்ரீ–புருஷர்கள் குல மரியாதைக்கும், ஸமூஹ மரியாதைக்கும் கட்டுப்படாமல் நடத்தைக் கெட்டு விடுவார்கள். அவர்களுடைய எல்லாச் செயல்களிலும் அதர்மங்கள் நிறைந்தே இருக்கும். இதனால் பாவம் மேலும் வளர்ந்து ஸமுதாயம் முழுவதும் பரவிவிடும். எங்கும் பாவம் பரவிவிடுவதால் ஸமுதாயத்தில் உள்ள ஸ்த்ரீ புருஷர்களின் கருத்தில், எந்தக் கட்டுப்பாட்டிற்கும் மதிப்பு இருக்காது. அவற்றைப் பாதுகாப்பது இருக்கட்டும்; அவற்றை அறிவதற்குக்கூட முயற்சி செய்ய மாட்டார்கள். யாராவது எடுத்துச் சொன்னாலும், அவர்களைப் பரிஹாஸம் செய்வார்கள்; அல்லது வெறுப்பார்கள். இந்த நிலையில் ஸமுதாய தர்மத்தைக் காப்பாற்றுவதற்கு ஆதாரம் புனிதமான ஸதி தர்மம்தான். அதுவும் அழிந்துவிடும். ஸதி தர்மத்தின் பெருமையை இழந்த பிறகு பரிசுத்தமான குடும்பத்து ஸ்த்ரீகள் வெறுக்கத்தக்க விபசார தோஷத்திற்கு ஆளாவார்கள். பல வகுப்பினருடன் பழக்கம் ஏற்பட்டுவிடும். தாய்–தந்தையர் மாறுபட்ட வர்ணத்தினர் ஆவதால், அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் குலக்கலப்புக்கு ஆளாகிவிடுகிறார்கள். இப்படிக் குலத்தின் பரம்பரையாக வந்த புனிதத்தன்மை முழுவதும் எளிதாக நாசமாகிவிடும்.

**பொருத்தம்:** குலக்கலப்பினால் குழந்தைகள் பிறப்பதால் உண்டாகும் தீமைகளை எடுத்துச் சொல்கிறார் அர்ஜுனன்—

**सङ्करो नरकायैव कुलघ्नानां कुलस्य च।**
**पतन्ति पितरो ह्येषां लुप्तपिण्डोदकक्रियाः ॥ ४२ ॥**

**ஸங்கரோ நரகாயைவ குலக்₄நாநாம் குலஸ்ய ச ।**
**பதந்தி பிதரோ ஹ்யேஷாம் லுப்தபிண்டோ₃த₃கக்ரியா: ॥ 42 ॥**

**ஸங்கர:** – வர்ணக்கலப்பு, **குலக்₄நாநாம்** – குல நாசம் செய்தவர்களையும், **குலஸ்ய ச** – குலத்தையும், **நரகாய ஏவ** – நரகத்திற்கே அழைத்துச் செல்லக்கூடியது, **ஏஷாம்** – இவர்களுடைய, **பிதர: ஹி** – முன்னோர்கள் கூட, **லுப்த பிண்ட₃ உத₃க க்ரியா:** – பிண்டம், நீர்க்கடன் அதாவது ச்ராத்தம், தர்ப்பணம் இவற்றை இழந்து, **பதந்தி** – வீழ்ச்சியடைவார்கள்.

வர்ணக்கலப்பு குலநாசம் செய்தவர்களையும் குலத்தையும் நரகத்திற்கே அழைத்துச் செல்லக்கூடியது. இவர்களுடைய முன்னோர்கள் கூட பிண்டம், நீர்க்கடன் அதாவது ச்ராத்தம் தர்ப்பணம் இவற்றை இழந்து வீழ்ச்சியடைவார்கள்.

**கேள்வி:** 'குலக்₄ந:' யார்? 'குலஸ்ய ச' என்று சொல்வதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** யுத்தம் முதலியவற்றில் குலத்தை அழிப்பவர்கள் 'குலக்ந:' ஆவார்கள். 'குலஸ்ய ச' என்றதால், குலக்கலப்பில் பிறந்த ஸந்ததி அந்தக் குலத்தை அழித்தவர்களை மட்டுமின்றிக் குலம் முழுவதையுமே சேர்த்து நரகத்தில் கொண்டு விட்டுவிடும் என்பது கருத்து.

**கேள்வி:** 'ச்ராத்த-தர்ப்பணம் இழந்தவர்களாகப் பித்ருக்களும் வீழ்ச்சி அடைவார்கள்' என்றால் என்ன கருத்து?

**பதில்:** ச்ராத்தத்தில் பிண்டம் வைக்கப்படுவதும், பித்ருக்களை உத்தேசித்து அந்தணர்களுக்கு அன்னமிடுவதும்தான் 'பிண்டக்ரியா'. தர்ப்பணத்தில் எள்ளும், நீரும் விடுவதுதான் 'உதகக்ரியா'. இரண்டும் சேர்ந்து 'பிண்டோதகக்ரியா' – அதாவது ச்ராத்த-தர்ப்பணங்கள். சாஸ்த்ரம், குலக்கட்டுப்பாடு இவற்றை அறிந்து மதிப்பவர்கள் ச்ராத்த-தர்ப்பணங்களைச் செய்கிறார்கள். ஆனால் குலநாசம் செய்தவர்களின் குலங்களில் குலதர்மம் அழிந்துவிட்டால் குலக்கலப்பு ஏற்பட்டு விடுகிறது. இவ்வாறு அதர்மத்தில் பிறந்து அதர்மத்தினால் சூழப்பட்டதனால் முதலில், ச்ராத்த-தர்ப்பணங்கள் முதலிய செயல்களைச் செய்யத் தெரிந்தவர்கள் இருக்க மாட்டார்கள். யாராவது எடுத்துச் சொன்னால்கூட ச்ரத்தை ஏற்படாததால், அவர்கள் ச்ராத்தம் செய்வதில்லை என்பது மட்டுமன்று. அப்படிச் செய்தாலும் சாஸ்த்ர முறை மீறப்பட்டு விட்டபடியால், அது பித்ருக்களுக்குப் போய்ச் சேருவதில்லை. இவ்வாறு ஸந்ததிகள் மூலம் கிடைக்கவேண்டிய பிண்டம், ஜலம் ஆகியவை கிடைக்காததால் முன்னோர்கள் வீழ்கிறார்கள்.

**பொருத்தம்:** குலக்கலப்பிற்குக் காரணமான தோஷங்களால் என்ன தீமை என்பதை அடுத்துக் கூறுகிறார்—

**दोषैरेतैः कुलघ्नानां वर्णसङ्करकारकैः ।**
**उत्साद्यन्ते जातिधर्माः कुलधर्माश्च शाश्वताः ॥ ४३ ॥**

**தோ₃ஷைரேதை: குலக்₄நாநாம் வர்ணஸங்கரகாரகை: ।**
**உத்ஸாத்₃யந்தே ஜாதித₄ர்மா: குலத₄ர்மாஶ்ச ஶாஶ்வதா: ॥ 43 ॥**

**குலக்₄நாநாம்** – குலநாசம் செய்பவர்களின், **ஏதை:** – இந்த, **வர்ண ஸங்கர காரகை:** – வர்ணக்கலப்பு ஏற்படுத்துகின்ற, **தோ₃ஷை:** – குற்றங்களினால், **ஶாஶ்வதா:** – தொன்றுதொட்டு வருகின்ற, **குலத₄ர்மா:** – குலதர்மங்களும், **ஜாதி த₄ர்மா: ச** – ஜாதி தர்மங்களும், **உத்ஸாத்₃யந்தே** – அழிந்து விடுகின்றன.

குலநாசம் செய்பவர்களின் இந்த வர்ணக்கலப்பு ஏற்படுத்துகின்ற குற்றங்களினால் தொன்றுதொட்டு வருகின்ற குலதர்மங்களும், ஜாதி தர்மங்களும் அழிந்து விடுகின்றன.

**கேள்வி:** 'இப்படி வர்ணக்கலப்புக்குக் காரணமான தோஷங்கள்' என்று எந்த தோஷங்களைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** மேலே சொன்ன சொற்களில் அந்தக் குலக்கலப்புக்குக் காரணமான தோஷங்கள் பற்றிக் கூறப்பட்டது. அவையாவன: (1) குலநாசம், (2) குலநாசத்தினால் குலதர்ம நாசம், (3) பாவங்கள் அதிகமாவது, (4) பாவங்கள் அதிகமாவதால் குலப்பெண்கள் விபசாரம் முதலிய தோஷங்களுக்கு ஆளாவது – இந்த நான்கும்தான் குலக்கலப்புக்குக் காரணங்கள்.

**கேள்வி:** ஸநாதன குலதர்மம், ஜாதி தர்மம் இவற்றினிடையே என்ன வித்யாஸம்? மேலே சொன்ன தோஷங்களால் இவை எப்படி அழியும்?

**பதில்:** வம்ச பரம்பரையாக வழிவந்த நன்னடத்தைகளின் கட்டுப்பாடுகளே ஸநாதனமான குலதர்மங்கள். 40வது ச்லோகத்தில் இவை 'ஸநாதநா:' என்று கூறப்பட்டிருக்கின்றன. இங்கே 'ஶாஶ்வதா:' (என்றுமுள்ளவை) என்று அவற்றைச்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



சொல்கிறார். வேத சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டவை வர்ணதர்மங்கள். அவையே ஜாதி தர்மங்கள். குலத்தினுடைய சிறந்த கட்டுப்பாடுகளை அறிந்து அவற்றின்படி நடப்பவர்களான பெரிய முதியோர்கள் இல்லாதபடியால், குலதர்மம் அழியும்போது குலக்கலப்புக்குக் காரணமான தோஷங்கள் வளர்கின்றன. அத்தகைய தோஷங்கள் பெருகிவிட்டால் ஜாதி தர்மங்களும் அழிந்துவிடுகின்றன. பிற வர்ணங்களின் கலப்பின் மூலம் உண்டான ஸந்ததிகளிடம் வர்ண தர்மங்கள் இரா. இப்படிக் குலக்கலப்புக்குக் காரணமான தோஷங்களால் இந்த தர்மங்கள் வேரற்றுப் போகின்றன.

**பொருத்தம்: குலதர்மமும், ஜாதி தர்மமும் அழிந்தால் என்ன தீங்கு ஏற்படும் என்பதை அடுத்துச் சொல்கிறார்—**

उत्सन्नकुलधर्माणां मनुष्याणां जनार्दन।
नरकेऽनियतं वासो भवतीत्यनुशुश्रुम॥ ४४॥

**உத்ஸந்நகுலத₄ர்மாணாம் மநுஷ்யாணாம் ஜநார்த₃ந ।**
**நரகேऽநியதம் வாஸோ ப₄வதீத்யநுஶுஶ்ரும ॥ 44 ॥**

**ஜநார்த₃ந** – ஜனார்தன! **உத்ஸந்ந குலத₄ர்மாணாம்** – குலதர்மங்கள் அடியோடு அழிந்துவிட்டபின், **மநுஷ்யாணாம்** – மனிதர்களுக்கு, **அநியதம்** – அளவற்ற காலம் வரை, **நரகே வாஸ:** – நரக வாஸம், **ப₄வதி** – ஏற்படுகிறது, **இதி** – என்று, **அநுஶுஶ்ரும** – (நாம்) கேள்விப்பட்டிருக்கிறோம்.

ஜனார்தன! குலதர்மங்கள் அடியோடு அழிந்துவிட்டபின் மனிதர்களுக்கு அளவற்ற காலம் வரை நரகவாஸம் ஏற்படுகிறது என்று நாம் கேள்விப்பட்டிருக்கிறோம்.

கேள்வி: இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

பதில்: எவர்களுடைய குலதர்மமும், ஜாதிதர்மமும் அழிக்கப்பட்டுவிட்டனவோ, அதர்மத்தில் வீழ்ந்துவிட்ட அத்தகைய மனிதர்கள் பாவங்களின் பயனாக வெகுகாலம் கும்பீபாகம், ரௌரவம் ஆகிய பயங்கரமான நரகங்களில் வீழ்ந்து பற்பலவிதமான யமயாதனைகளை (யமதண்டனைகளை) அனுபவிக்க வேண்டியிருக்கும். இவ்வாறு நம்முடைய முன்னோர்கள் வாயிலாக அறிந்து உள்ளோம். ஆகவே, குலநாசத்திற்குரிய செயலை ஒருபொழுதும் செய்யக் கூடாது.

**பொருத்தம்: இப்படித் தம் உறவினரைக் கொலை செய்வதால் ஏற்படும் கெடுதல்களை வர்ணித்துவிட்டு, மேலே அர்ஜுனன் யுத்த முயற்சி என்ற தம் செயல் பற்றிய வருத்தத்தை வெளியிடுகிறார்—**

अहो बत महत्पापं कर्तुं व्यवसिता वयम्।
यद्राज्यसुखलोभेन हन्तुं स्वजनमुद्यताः॥ ४५॥

**அஹோ ப₃த மஹத்பாபம் கர்தும் வ்யவஸிதா வயம் ।**
**யத்₃ராஜ்யஸுக₂லோபே₄ந ஹந்தும் ஸ்வஜநமுத்₃யதா: ॥ 45 ॥**

**அஹோ** – அந்தோ! **ப₃த** – பாவம்! **வயம்** – நாம் (அறிவு பெற்றிருந்தும்), **மஹத்** – பெரும், **பாபம்** – பாவம், **கர்தும்** – செய்வதற்கு, **வ்யவஸிதா:** – முனைந்து இருக்கிறோம். **யத்** – ஏனெனில், **ராஜ்யஸுக₂ லோபே₄ந** – ராஜ்யம், ஸுகம் இவற்றிற்கு ஆசைப்பட்டு, **ஸ்வஜநம்** – நம் உறவினர்களையே, **ஹந்தும்** – கொல்வதற்கு, **உத்₃யதா:** – முனைந்து விட்டோம்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அந்தோ பாவம்! நாம் அறிவு பெற்றிருந்தும் பெரும் பாவம் செய்வதற்கு முனைந்து இருக்கிறோம். ஏனெனில் ராஜ்யம், ஸுகம் இவற்றிற்கு ஆசைப்பட்டு நம் உறவினர்களையே கொல்வதற்கு முனைந்துவிட்டோம்.

**கேள்வி:** 'நாம் பெரும் பாவம் செய்யத் தயாராகிவிட்டோம்' என்று சொல்வதற்கு முன் 'அஹோ' என்றும், 'பத' என்றும் சொல்கிறாரே, அதற்கு என்ன பொருள்?

**பதில்:** 'அஹோ' என்றால் ஆச்சர்யம். 'பத' என்றால் மிகப் பெரிய துயரம். அந்தோ! தர்மாத்மாக்கள் என்றும், அறிவுடையோர் என்றும் கருதப்படும் நாம் கூட இத்தகைய பாவச் செயலில் முனைவது எவ்விதத்திலும் உசிதமாகாது. நாமே இத்தகைய பாவத்தைச் செய்ய நிச்சயித்துவிட்டோம். 'என்ன ஆச்சர்யம்! என்ன கஷ்டம்!' என்று அர்ஜுனன் கூறுகிறார்.

**கேள்வி:** 'ராஜ்யத்திற்காகவும், ஸுகபோகத்திற்காகவும் நம் உறவினரைக் கொல்லவும் முனைந்து விட்டோமே' என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** நாம் ராஜ்யத்திற்கும், ஸுகத்திற்கும் ஆசைப்பட்டு இவ்விதம் தயாரானது மிகப் பெரிய தவறு என்பதை அர்ஜுனன் சுட்டிக் காட்டுகிறார்.

**பொருத்தம்:** இப்படிப் பச்சாதாபம் அடைந்து அர்ஜுனன் தமது தீர்மானத்தை வெளியிடுகிறார்—

**यदि मामप्रतीकारमशस्त्रं शस्त्रपाणयः ।**
**धार्तराष्ट्रा रणे हन्युस्तन्मे क्षेमतरं भवेत् ॥ ४६ ॥**

**யதி₃ மாமப்ரதீகாரமஶஸ்த்ரம் ஶஸ்த்ரபாணய: ।**
**தா₄ர்தராஷ்ட்ரா ரணே ஹந்யுஸ்தந்மே க்ஷேமதரம் ப₄வேத் ॥ 46 ॥**

***அஶஸ்த்ரம்*** – ஆயுதமின்றியும், ***அப்ரதீகாரம்*** – எதிர்த்துப் போரிடாமலும் (இருக்கின்ற), ***மாம்*** – என்னை, ***ஶஸ்த்ரபாணய:*** – கையில் ஆயுதம் தாங்கிய, ***தா₄ர்தராஷ்ட்ரா:*** – த்ருதராஷ்ட்ர குமாரர்கள், ***ரணே*** – போரில், ***யதி₃ ஹந்யு:*** – கொன்றாலும், ***தத்*** – அது (கொல்லப்படுவதும்), ***மே*** – எனக்கு, ***க்ஷேமதரம்*** – அதிக நன்மை பயப்பதாகவே, ***ப₄வேத்*** – ஆகிவிடும்.

ஆயுதமின்றியும், எதிர்த்துப் போரிடாமலும் இருக்கின்ற என்னைக் கையில் ஆயுதம் தாங்கிய த்ருதராஷ்ட்ர குமாரர்கள் போரில் கொன்றாலும் அதுவும் எனக்கு அதிக நன்மை பயப்பதாகவே ஆகிவிடும்."

**கேள்வி:** இந்த ச்லோகத்திற்கு என்ன கருத்து?

**பதில்:** இப்படிப் போர் முழக்கம் செய்தபிறகுகூட நான் ஆயுதங்களை த்யாகம் செய்து விடுவேன். அவர்களின் எந்தச் செயலுக்கும் எதிராக நான் எதுவும் செய்ய மாட்டேன். அப்போது அவர்கள் அநேகமாக யுத்தம் செய்யாமல் இருக்கலாம். அதனால் நம்மவர்களுக்கெல்லாம் காப்பு ஏற்படலாம். அவர்கள் இவ்வாறு செய்யாமல், நான் ஆயுதமில்லாமல் யுத்தத்திலிருந்து விலகி இருப்பதை அறிந்து என்னைக் கொன்றாலும், அந்த மரணம்கூட எனக்கு நலனை அளிக்கும். ஏனெனில் இதனால் குலத்தை அழிக்கிற, கொடிய பாவத்திலிருந்து நான் மீண்டுவிடுவேன். அடுத்ததாக நம்முடைய உறவினர்கள், ஸம்பந்திகள் முதலியோருக்கும் காப்புக் கிடைக்கும். மூன்றாவதாக, குலத்தைக் காப்பாற்றுவது என்ற பெரிய புண்யத்தின் பயனாக பரமபதத்தை எளிதாக அடைவேன் என்பது கருத்து.

அர்ஜுனன் இவ்வாறு எதிர்த்துப் போரிடாமல் மேலே கூறியவாறு இறப்பதால் குலத்திற்குக் காப்பும், தமக்கு மங்களமும் நிச்சயம் என்று நினைக்கிறார். அதனால் அத்தகைய மரணம் போர் செய்வதைக் காட்டிலும் அதிக நலத்தை அளிப்பது (க்ஷேமதரம்) என்கிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பொருத்தம்:** பகவான் ஸ்ரீக்ருஷ்ணனிடம் இவ்வளவும் சொல்லிவிட்டு அர்ஜுனன் என்ன செய்தார் என்ற கேள்விக்கு விடையாக, அர்ஜுனனுடைய நிலையை விவரித்து ஸஞ்ஜயன் சொல்கிறார்—

सञ्जय उवाच

**एवमुक्त्वार्जुनः सङ्ख्ये रथोपस्थ उपाविशत्।**
**विसृज्य सशरं चापं शोकसंविग्नमानसः ॥ ४७ ॥**

ஸஞ்ஜய உவாச

**ஏவமுக்த்வார்ஜுந: ஸங்க்₂யே ரதே₂ாபஸ்த₂ உபாவிஶத் ।**

**விஸ்ருஜ்ய ஸஶரம் சாபம் ஶோகஸம்விக்₃நமாநஸ: ॥ 47 ॥**

**ஸஞ்ஜய உவாச** – ஸஞ்ஜயன் சொன்னார்: **ஸங்க்₂யே** – போர்க்களத்தில், **ஶோக ஸம்விக்₃ந மாநஸ:** – சோகத்தினால் கலங்கிய மனதுடைய, **அர்ஜுந:** – அர்ஜுனன், **ஏவம்** – இவ்விதம், **உக்த்வா** – சொல்லி, **ஸஶரம்** – அம்புகளுடன், **சாபம்** – வில்லை, **விஸ்ருஜ்ய** – எறிந்துவிட்டு, **ரதே₂ாபஸ்தே₂** – தேர்த்தட்டில், **உபாவிஶத்** – உட்கார்ந்து விட்டார்.

ஸஞ்ஜயன் சொன்னார்: 'போர்க்களத்தில் சோகத்தினால் கலங்கிய மனதுடைய அர்ஜுனன் இவ்விதம் சொல்லி அம்புகளுடன் வில்லை எறிந்துவிட்டுத் தேர்த்தட்டில் உட்கார்ந்துவிட்டார்.'

**கேள்வி:** இந்த ச்லோகத்தில் ஸஞ்ஜயன் சொல்லும் கருத்து என்ன?

**பதில்:** சோகத்தில் ஆழ்ந்த அர்ஜுனன் பகவானிடம் இவ்வளவு செய்திகளையும் சொல்லிவிட்டு, காண்டீவ வில்லையும், அம்புகளையும் துறந்துவிட்டுத் தேர்த்தட்டில் பின்புறத்தில் சென்று மௌனமாக உட்கார்ந்துவிட்டார். பலவிதக் கவலைகளில் ஆழ்ந்தார். அவர் உள்ளத்தில் குலநாசம், அதனால் ஏற்படும் பயங்கரமான பாவங்கள், அந்தப் பாவங்களின் கொடூரமான விளைவுகளான சித்திரங்கள் தோன்றின. அவர் முகத்தில் துயரம் பரவியிருந்தது. கண்கள் சோகத்தினால் கலங்கின.

ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे-
श्रीकृष्णार्जुन-संवादेऽर्जुनविषादयोगो नाम प्रथमोऽध्याय: ॥ १ ॥

**ஓம் தத்ஸதி₃தி ஸ்ரீமத்₃ப₄க₃வத்₃கீ₃தாஸூபநிஷத்ஸு ப்₃ரஹ்மவித்₃யாயாம்**

**யோக₃ஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே₃**

**அர்ஜுநவிஷாத₃யோகோ₃ நாம ப்ரத₂மோऽத்₄யாய: ॥ 1 ॥**

**ஓம் தத் ஸத் – ப்ரம்ம வித்யை, யோக ஶாஸ்த்ரம், உபநிஷத்து எனப்படும் ஸ்ரீமத்பகவத்கீதையாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலில் 'அர்ஜுந விஷாத யோகம்' எனப் பெயர் படைத்த முதல் அத்யாயம் நிறைவுற்றது.**

ஒவ்வொரு அத்யாயத்தின் முடிவிலும் மேலே சொன்னவாறு முத்தாய்ப்பு (புஷ்பிகா) வைக்கப்பட்டிருக்கிறது. இதில் ஸ்ரீமத்பகவத்கீதையின் பெருமை, மஹிமை எல்லாம் வெளிப்படுகின்றன. ஓம் தத் ஸத் — என்பது பகவானுடைய ஸாரமான, பவித்ரமான திருநாமம் *(17/23)*. பகவானே நேரிடையாக அவருடைய முகத்தாமரையிலிருந்து வெளியிட்டதால் **'ஸ்ரீமத்பகவத்கீதை'** என்று இதற்குப் பெயர். இதில் உபநிஷத்துக்களின்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸாரமான தத்வங்கள் தொகுத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. மேலும், இதுவே ஓர் உபநிஷத் ஆகும். அதனால், இது உபநிஷத் என்று சொல்லப்பட்டிருக்கிறது. நிர்குண, நிராகாரமான பரமாத்மாவின் பரம தத்வத்தை நேரிடையாக அடையச் செய்வதால் 'ப்ரஹ்மவித்யா' எனப்படுகிறது. கர்மயோகம் என்று யோகத்தின் பெயருடன் சேர்த்துச் சொல்லப்படுகிற நிஷ்காம கர்மத்தைப் பற்றிச் சொல்வதால், இது யோக சாஸ்த்ரம் எனப்படும்; ஸாக்ஷாத் பரமபுருஷனான பகவான் ஸ்ரீக்ருஷ்ணனுக்கும், சிறந்த பக்தனான அர்ஜுனனுக்கும் இடையே நடந்த உரையாடல் இது; இதன் ஒவ்வொரு அத்யாயத்திலும் ஜீவனைப் பரமாத்மாவிடம் சேர்க்கின்ற மார்க்கம் 'யோகம்' என்ற பெயரில் வர்ணிக்கப்படுகிறது; இந்த முதல் உரையாடல் 'அர்ஜுந விஷாத யோகம்' என்று கூறப்படுகிறது. இவ்வாறே ஒவ்வொரு அத்யாயத்தின் முடிவிலும் அத்யாயத்தின் பெயர் ஒரு யோகம் என்று குறிப்பிடப்படுகிறது.

* * * * *



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

## அத₂ த்₃விதீயோऽத்₄யாய:

# இரண்டாவது அத்யாயம்

### ஸாங்க்யயோகம்

**அத்யாயத்தின் பெயர்**

இந்த அத்யாயத்தில் பகவானிடம் ஶரணமடைந்த அர்ஜுனன் தம் சோகம் தீர உள்ள ஒரே உபாயம் என்ன என்று அவரைக் கேட்கிறார். அதற்கு விடையாக முப்பதாவது ச்லோகம் வரை ஆத்ம தத்வத்தை பகவான் முதன்முதலாக விளக்குகிறார். ஸாங்க்யயோக ஸாதனையில் ஆத்ம தத்வம் பற்றிக் கேட்பதும், சிந்திப்பதும், த்யானம் செய்வதும் முக்யமானவை. இந்த அத்யாயத்தில் 30வது ச்லோகத்திற்கு மேல் ஸ்வதர்மத்தைப் பிறகு எடுத்துச் சொல்லிக் கர்மயோகத்தின் ஸ்வரூபத்தையும் விளக்குகிறார். ஆனாலும் உபதேசத்தின் ஆரம்பம் ஸாங்க்யயோகத்தில் நேர்வதாலும், மற்ற அத்யாயங்களைக் காட்டிலும் இந்த அத்யாயத்தில் ஆத்ம தத்வ உபதேசம் விளக்கமாகக் கூறப்பட்டிருப்பதாலும் இந்த அத்யாயத்திற்கு 'ஸாங்க்யயோகம்' என்ற பெயர் அமைந்தது.

**அத்யாயச் சுருக்கம்**

ச்லோகம் 1ல் ஸஞ்ஜயன் அர்ஜுனனுடைய துயரத்தை வர்ணிக்கிறார். 2, 3ல் பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் அர்ஜுனனுடைய மோஹமும், கோழைத்தனமும் கலந்த துயரத்தை நிந்தித்து யுத்தம் செய்ய உற்சாகமூட்டுகிறார். 4, 5ல் பீஷ்மர், த்ரோணர் போன்ற பெரியோர்களைக் கொல்வதைக் காட்டிலும் பிச்சை எடுத்து வாழ்வது மேல் என்கிறார் அர்ஜுனன். 6ல் யுத்தம் செய்வதா, வேண்டாமா என்பதில் ஸந்தேஹம் தெரிவிக்கிறார். 7ல் மோஹம், கோழைத்தனம் இவற்றின் குறைகளை வர்ணித்துவிட்டு பகவானை ஶரணமடைந்து, 'எனக்கு மேன்மை தரக்கூடிய உபதேசம் செய்யுங்கள்' என்று வேண்டுகிறார். 8ல் 'பகையற்ற மூவுலக அரசு என் சோகத்தைத் தீர்க்காது' என்று சொல்லி வைராக்யத்தை வெளியிடுகிறார். 9, 10ல் அர்ஜுனன் யுத்தம் செய்யமாட்டேன் என்று மௌனமாக இருப்பதையும், ஸ்ரீக்ருஷ்ணன் புன்னகையுடன் பேச ஆரம்பித்ததையும் ஸஞ்ஜயன் கூறுகிறார். 11ல் பகவான் உபதேசம் செய்ய ஆரம்பிக்கிறார். 12, 13ல் ஆத்மா நித்யமானவன்; மாறுதலற்றவன் என்று நிரூபித்து, 14ல் எல்லா போகங்களும் அநித்யம், ஆகவே ஸுக-துக்கம் முதலான இரட்டைகளைப் பொறுத்துக் கொள்ளவேண்டும் என்கிறார். 15ல் இந்த ஸஹிப்புத் தன்மையே மோக்ஷமடையக் காரணமாக அமையும் என்கிறார். 16ல் ஸத்-அஸத் இவற்றின் இலக்கணத்தைக் கூறி, 17ல் ஸத்தின் ஸ்வரூபம், 18ல்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அஸத்தின் ஸ்வரூபம் இவற்றைக் கூறி, 'யுத்தம் செய்' என்று ஸ்ரீக்ருஷ்ணன் ஆணையிடுகிறார். 19ல் ஆத்மா இறப்பதாக நினைப்பதும், ஆத்மாவை ஒருவன் கொல்கிறான் என்று நினைப்பதும் அஞ்ஞானியின் இயல்பு என்று கூறி, 20ல் பிறப்பு முதலிய ஆறுவித விகாரங்கள் அற்றவன் ஆத்மா என்றும், 21ல் ஆத்மாவை அறிந்தவன் ஒருவரையும் கொல்வதுமில்லை, கொல்லச் செய்வதுமில்லை என்றும் கூறுகிறார். பிறகு, 22ல் மனிதன் உடை மாற்றுவதை உதாரணமாக எடுத்துக் காட்டி வேறு உடல் பெறுவதன் தத்வத்தை விளக்குகிறார். 23 முதல் 25 வரை ஆத்மா வெட்டுப்படாதது; எரிக்கப்படாதது; நனைக்கப்படாதது; உலர வைக்க முடியாதது; நித்யமானது; எங்கும் நிறைந்தது; நிலைத்து நிற்பது; அசையாதது; ஸநாதனமானது; வெளிப்படையாகத் தோன்றாதது; எண்ணத்திற்கு அப்பாற்பட்டது; மாறுதலற்றது. ஆத்மா உடலை மாற்றுவதற்காக வருந்துவது உசிதமன்று என்று தீர்மானமாகச் சொல்கிறார். 26, 27ல் ஆத்மா பிறந்து இறப்பதாக நினைத்தாலும்கூட, 28ல் அநித்யமான சரீரத்திற்காகக்கூட வருந்துவது உசிதமன்று என்று கூறுகிறார். 29ல் ஆத்ம தத்வத்தைப் பார்ப்பவன், சொல்பவன், கேட்பவன் அரிது என உறுதிபடக் கூறி, 30ல் ஆத்ம தத்வத்தை அழிக்க முடியாது, ஆகையால் எந்த ப்ராணிக்காகவும் வருந்துவது உசிதமன்று என்பதை நிலைநாட்டுகிறார். 31 முதல் 36 வரை க்ஷத்ரிய தர்மம் என்ற முறையிலும் யுத்தம் செய்வது அர்ஜுனனுடைய ஸ்வதர்மம் என்று சொல்லி, அதை விடுவது எவ்விதத்திலும் உசிதமன்று என்று நிரூபிக்கிறார். 37ல் யுத்தம் இவ்வுலகிலும், பரலோகத்திலும் நன்மை பயப்பது என்று கூறி, அர்ஜுனனை 'யுத்தத்திற்குத் தயார் ஆவாய்' என்று ஆணையிடுகிறார். 38ல் ஸமத்வம்தான் யுத்தம் முதலிய கர்மங்களில் பாவம் ஒட்டாமைக்குரிய உபாயம் என்று சொல்லி, 39ல் கர்மபந்தத்தை விலக்கும் கர்மயோக விஷயமான ஸமபுத்தியை வர்ணிக்கத் தொடங்குகிறார். 40ல் கர்மயோகத்தின் மஹிமையை எடுத்துக் கூறி, 41ல் தீர்மானமான புத்தி, தீர்மானமான எண்ணமில்லாமலும் விவேகமில்லாமலும் செயல்களின் பயனை விரும்புபவர்களுடைய புத்தி இவற்றின் வேறுபாட்டை எடுத்துச் சொல்லி, 42 முதல் 44 வரை ஸ்வர்கத்தை விரும்பி காம்ய கர்மம் செய்பவர்களின் இயல்பைக் கூறுகிறார். 45ல் அர்ஜுனனை 'காமமற்று, இன்ப-துன்பம் போன்ற இரட்டைகளற்று நித்யமான ஸத் என்கிற பரமாத்ம தத்வத்தில் நிலைபெற்று யோக க்ஷேமத்தில் மனம் வைக்காது புலன்களை அடக்கியவனாக இரு' என்று கூறுகிறார். 46ல் வேதங்களில் கூறப்பட்ட கர்மங்களின் பயனாகக் கிடைக்கக் கூடிய ஸுகபோகங்களால் ப்ரம்மஞானியான ப்ராம்மணனுக்கு எவ்வித ப்ரயோஜனமுமில்லை என்று கூறி, 47ல் கர்மயோகத்தின் ஸ்வரூபத்தை ஸூத்ர ரூபத்தில் எடுத்துக் கூறுகிறார். 48ல் யோகம் என்ற சொல்லை விளக்குவது ஸமத்வம்தான் என்று கூறி, 49ல் ஸமபுத்தியைக் காட்டிலும் காம்ய கர்மம் மிகவும் துச்சமானது, பயனைக் கருதுபவன் மிகவும் இரங்கத்தக்கவன் என்று கூறுகிறார். 50, 51ல் ஸமபுத்தியோடு கூடிய கர்மயோகியின் பெருமையைக் கூறி, அர்ஜுனனைக் கர்மயோகத்தில் ஈடுபடுமாறு ஆணையிடுகிறார். ஸமபாவனையின் பயன் எவ்விதக் குறையுமற்ற பதவியான பரமபதத்தைப் பெறுவதே என்கிறார். 52, 53ல் வைராக்யத்துடன் புத்தியைத் தூய்மையாகவும், தெளிவாகவும், அசைவற்றதாகவும் வைத்துக் கொண்டால் பரமாத்மாவை அடைந்துவிடலாம் என்கிறார். 54ல் அர்ஜுனன்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸ்திர புத்தியுள்ளவனைப் பற்றி நான்கு கேள்விகள் கேட்கிறார். 55ல் முதல் கேள்விக்கும், 56, 57ல் இரண்டாவது கேள்விக்கும், 58ல் மூன்றாவது கேள்விக்கும் சுருக்கமாகப் பதில் கூறி, 55 முதல் 58 வரை அனைத்து ஆசைகளையும் களைந்து வெளி ஸாதனைகளைக் கோராமல் ஆத்மாவிடமே எப்பொழுதும் ஒன்றியிருப்பது, துக்கங்களில் கலங்காமல் இருப்பது, ஸுகங்களில் ஆசை கொள்ளாமல் இருப்பது, பற்று, பயம், கோபம் இவை முற்றிலும் அற்றிருப்பது, நல்லது-கெட்டது நேரும்போது மகிழ்ச்சி-துயரம், விருப்பு-வெறுப்பு இவற்றை அடையாதிருப்பது, எல்லாப் புலன்களையும் போகங்களிலிருந்து விலக்கித் தன்வசத்தில் வைத்துக் கொள்ளுவது முதலிய ஸ்திர புத்தியுள்ளவனின் இலக்கணங்களைக் கூறுகிறார். 59ல் புலன்கள் மூலம் போக நுகர்ச்சிப் பொருட்களை ஏற்காவிட்டாலும், அவற்றின்பாலுள்ள விருப்பம் விலகுவதில்லை; அது பரமாத்ம தர்சனம் ஏற்பட்டால்தான் விலகும் என்று கூறுகிறார். 60ல் புலன்கள் அதிக வலிமையுள்ளவை என்று கூறுகிறார். 61ல் மனதையும், புலன்களையும் அடக்கி பகவானிடம் சரணடைவதைப் பற்றிக் கூறி, புலன்களை வென்றவனுடைய பெருமையைக் கூறுகிறார். 62, 63ல் போக விஷயங்களை நினைப்பதால் படிப்படியாக வீழ்ச்சி அடைவதைப் பற்றிக் கூறுகிறார். 64, 65ல் விருப்பு-வெறுப்பின்றிக் கர்மங்களைச் செய்பவன் உள்ளத்தெளிவு பெறுகிறான்; அவனுடைய துயரங்கள் அழிகின்றன; விரைவில் அவனுடைய புத்தி உறுதிப்படுகிறது என்று கூறுகிறார். 66ல் அயுக்தன் (புலன்களை வசப்படுத்தாதவன்) சிறந்த புத்தி, பகவானுடைய நினைவு, அமைதி, ஸுகம் இவற்றைப் பெறமாட்டான் என்று கூறுகிறார். 67ல் காற்று, கப்பல் இவற்றின் உதாரணத்தைச் சொல்லி மனதோடு சேர்ந்த ஒவ்வொரு புலனும், புத்தியைத் தன்வசத்தில் கொண்டு போய் விடுகின்றன என்று கூறுகிறார். 68ல் புலன்கள் வசப்பட்டிருந்தால் அவன்தான் உண்மையில் ஸ்திர புத்தியுள்ளவன் என்று கூறிய பிறகு, 69ல் ஸாதாரண மனிதனுக்கு ப்ரம்மானந்தம் இரவு போன்றது; தத்வமறிந்த யோகிக்கு விஷய ஸுகம் இரவு போன்றது என்று கூறுகிறார். 70ல் கடலை உவமையாகக் கூறி ஞானியான மஹாபுருஷனின் பெருமையைக் கூறுகிறார். 71ல் காமம், பற்று, மமதை, அஹங்காரமின்றி நடமாடும் புருஷன் மேலான அமைதியைப் பெறுகிறான் என்று கூறுகிறார். 72ல் அந்த ப்ரம்ம நிலையின் பெருமையைக் கூறி அத்யாயத்தை முடிக்கிறார்.

**முன் அத்யாயத்துடன் இவ்வத்யாயத்திற்குப் பொருத்தம்:** முதல் அத்யாயத்தில் கீதா உபதேசத்திற்கு முன்னுரையாக, இரண்டு படைகளுடைய மஹாரதிகள் சங்குகளை முழக்கியதையும், அர்ஜுனன் இரு படைகளுக்குமிடையே தமது ரதத்தை நிறுத்தும்படிக் கூறியதையும், இரண்டு படைகளிலும் தம் உற்றார்-உறவினர்கள் கூடியிருப்பதைப் பார்த்து சோகம், மோஹம் அடைந்த அர்ஜுனன் யுத்தத்திலிருந்து விலகும் எண்ணத்துடன் ஆயுதங்களைக் கைவிட்டு, மிகுந்த கலக்கத்துடன் உட்கார்ந்து விட்டதையும் கூறி அந்த அத்யாயத்தை முடித்தார். இந்த நிலையில் பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் அர்ஜுனனிடம் என்ன கூறினார்? எவ்விதம் அவரை மறுபடியும் யுத்தம் செய்யத் தூண்டினார்? இவ்வளவையும் கூறுவதற்கு அவசியம் நேர்ந்தமையால் ஸஞ்ஜயன் அர்ஜுனனுடைய நிலையை எடுத்துக் கூறி இரண்டாவது அத்யாயத்தைத் தொடங்குகிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



सञ्जय उवाच

तं तथा कृपयाविष्टमश्रुपूर्णाकुलेक्षणम्।
विषीदन्तमिदं वाक्यमुवाच मधुसूदनः ॥ १ ॥

ஸஞ்ஜய உவாச

தம் தத₂ா க்ருபயாவிஷ்டமஶ்ருபூர்ணாகுலேக்ஷணம் ।
விஷீத₃ந்தமித₃ம் வாக்யமுவாச மது₄ஸூத₃ந: ॥ 1 ॥

**ஸஞ்ஜய உவாச** – ஸஞ்ஜயன் கூறினார்: **தத₂ா** – அவ்விதம், **க்ருபயா** – இரக்கத்துடன், **ஆவிஷ்டம்** – நிறைந்து, **அஶ்ருபூர்ண ஆகுல ஈக்ஷணம்** – நீர் நிரம்பிக் கலங்கிய கண்களுடன், **விஷீத₃ந்தம்** – சோகத்தோடு கூடிய, **தம்** – அந்த அர்ஜுனனிடம், **மது₄ஸூத₃ந:** – பகவான் மதுஸூதனன், **இத₃ம்** – இந்த, **வாக்யம்** – வார்த்தையை, **உவாச** – கூறினார்.

ஸஞ்ஜயன் கூறினார்: "அவ்விதம் இரக்கம் நிறைந்து நீர் நிரம்பிக் கலங்கிய கண்களுடன் சோகத்தோடு கூடிய அந்த அர்ஜுனனிடம் பகவான் மதுஸூதனன் இவ்வாறு கூறினார்."

**கேள்வி:** 'தம்' என்று யாரைக் குறிப்பிடுகிறார்? 'க்ருபயாவிஷ்டம்', 'அஶ்ருபூர்ண ஆகுல ஈக்ஷணம்', 'விஷீதந்தம்' என்ற அடைமொழிகளின் கருத்து என்ன?

**பதில்:** முதல் அத்யாயத்தின் முடிவில் 'சோகத்தில் ஆழ்ந்து அர்ஜுனன் உட்கார்ந்து விட்டார்' என்று கூறப்பட்டது. 'அர்ஜுனனை'த்தான் இங்கே 'தம்' என்ற சொல் குறிக்கிறது. அடைமொழிகள் அவர் நிலையை விளக்குகின்றன. முதல் அத்யாயத்தில் விஸ்தாரமாகக் கூறப்பட்ட விஷயம்தான் இங்கு. உற்றார்-உறவினரிடம் உள்ள பரிவினால், மிகவும் கோழையாகிக் கண்களில் நீர் மல்கி உறவினர்களுக்கு நாசமேற்படுமே என்று கவலை அடைந்தும், அவர்களைக் கொன்றால் பயங்கரமான பாவம் ஏற்படுமே என்றும் சோகமடைந்துவிட்ட அர்ஜுனனைப் பார்த்து பகவான் பேசுகிறார்.

**கேள்வி:** இங்கு 'மதுஸூதனன்' என்று பகவானைக் கூறுவதன் பொருள் என்ன? 'இதம் வாக்யம்' என்றால் என்ன கருத்து?

**பதில்:** பகவானை 'மதுஸூதனன்' என்று கூறியும், 'வாக்யம்' என்பதற்கு 'இதம்' என்ற அடைமொழி கொடுத்தும் ஸஞ்ஜயன் த்ருதராஷ்ட்ரரை எச்சரிக்கிறார். பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் முன்பு தேவர்களுக்கு இன்னல் விளைவித்த 'மது' என்ற அஸுரனைக் கொன்றுவிட்டார். அதனால் அவருக்கு 'மதுஸூதனன்' என்ற பெயர் வந்தது. அந்த பகவான், யுத்தத்திலிருந்து பின்வாங்கும் அர்ஜுனனுக்கு இனி கூறப்போகும் வாக்கியங்களால் யுத்தத்திற்காக உற்சாகமூட்டுகிறார். இந்த நிலையில் உங்கள் புதல்வர்களுக்கு எப்படி வெற்றி கிடைக்கும்? உங்கள் புதல்வர்கள் தர்மத்தை மீறுபவர்கள். தர்மத்தை மீறுபவர்களை அழிப்பதுதான் பகவானுடைய கார்யம். ஆகவே, உங்கள் புதல்வர்களுக்கு அறிவுரை கூறி, இப்பொழுதாவது ஸமாதானம் செய்து கொண்டீர்களானால், அவர்கள் அழிவதைத் தடுக்கலாம் என்று எச்சரிக்கிறார்.‡

श्रीभगवानुवाच

कुतस्त्वा कश्मलमिदं विषमे समुपस्थितम्।
अनार्यजुष्टमस्वर्ग्यमकीर्तिकरमर्जुन ॥ २ ॥

‡ இங்கு ஒன்றை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். பத்து நாட்கள் யுத்தம் நடந்த பிறகு த்ருதராஷ்ட்ரருக்கு ஸஞ்ஜயன் இவ்விதம் கூறுகிறார்– 'இப்பொழுதாவது ஸமாதானம் செய்து கொள்ளுங்கள்.' அதாவது மீதியுள்ள குடும்பத்தைக் காப்பதற்காகவாவது இப்படிப் பத்து நாட்கள் கடந்த பிறகும்கூட ஸமாதானம் செய்து கொள்ளலாம். இதுதான் புத்திசாலித்தனம் என்பது அபிப்ராயம்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸ்ரீப₄க₃வானுவாச

**குதஸ்த்வா கஸ்மலமித₃ம் விஷமே ஸமுபஸ்தி₂தம் ।**

**அநார்யஜுஷ்டமஸ்வர்க்₃யமகீர்திகரமர்ஜுந ॥ 2 ॥**

**ஸ்ரீப₄க₃வானுவாச** – ஸ்ரீபகவான் கூறினார்: **அர்ஜுந** – அர்ஜுன! **த்வா** – உன்னை, **விஷமே** – தகாத சமயத்தில், **இத₃ம்** – இந்த, **கஸ்மலம்** – மோஹம், **குத:** – எந்தக் காரணத்தினால், **ஸமுபஸ்தி₂தம்** – வந்தடைந்தது? **(யத:** – ஏனெனில்), **அநார்யஜுஷ்டம்** – இது சான்றோர்களால் கடைப்பிடிக்கப்படாதது; **அஸ்வர்க்₃யம்** – ஸ்வர்கத்தை அளிக்காதது; மேலும், **அகீர்திகரம்** – புகழையும் தரவல்லதன்று.

ஸ்ரீபகவான் கூறினார்: அர்ஜுன! தகாத சமயத்தில் இந்த மோஹம் எந்தக் காரணத்தினால் உன்னை வந்தடைந்தது? ஏனெனில் இது சான்றோர்களால் கடைப்பிடிக்கப்படாதது; ஸ்வர்கத்தை அளிக்காதது; மேலும் புகழையும் தரவல்லதன்று.

**கேள்வி:** 'இதம் கஸ்மலம்' என்பது எதைக் குறிப்பிடுகிறது? 'உனக்குத் தகாத சமயத்தில் இந்த மோஹம் எப்படி வந்தது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'இதம் கஸ்மலம்' என்பது அர்ஜுனனுக்கு மோஹத்தால் ஏற்பட்ட சோகத்தையும், கோழைத்தனத்தையும் குறிப்பிடுகிறது. இப்படி அதட்டிக் கொண்டு ஆச்சர்யத்துடன் அர்ஜுனனைப் பார்த்து பகவான் கேட்கிறார். இந்தத் தகாத சமயத்தில், அதாவது கோழைத்தனத்திற்கும், துயரத்திற்கும் ஒவ்வாத இந்த யுத்தகளத்தில் — சரியாக யுத்தம் ஆரம்பிக்கும் நேரத்தில் — பெரிய பெரிய மஹாரதிகளை எளிதாகத் தோற்கடிக்கக் கூடிய உன்னைப் போன்ற சூரவீரனுக்குக் கொஞ்சமும் இருக்கக் கூடாத இந்தக் கோழைத்தனம் எப்படி வந்தது?

**கேள்வி:** இந்தக் கோழைத்தனம் சான்றோர்களுக்கு உகந்ததன்று. 'அநார்யஜுஷ்டம்', 'அஸ்வர்க்யம்', 'அகீர்திகரம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தாம் ஆச்சர்யப்பட்டதை பகவான் இப்படி விளக்குகிறார். "உனக்கு இப்போது ஏற்பட்டிருக்கும் மனப்பாங்கு சான்றோர்களால் ஏற்கப்படாதது; ஸ்வர்கத்தையும் அளிக்காதது; புகழையும் தரவல்லதன்று; உனக்கு மோக்ஷமும் கிடைக்காது; தர்மமும் ஸித்திக்காது; பொருளும், போகமும் கிட்டா. புத்திசாலியான நீ இந்த நேரத்தில் இந்தக் கோழைத்தனத்தை எப்படி அடைந்தாய்?"

**क्लैब्यं मा स्म गमः पार्थ नैतत्त्वय्युपपद्यते।**

**क्षुद्रं हृदयदौर्बल्यं त्यक्त्वोत्तिष्ठ परन्तप॥ ३॥**

**க்லைப்₃யம் மா ஸ்ம க₃ம: பார்த₂ நைதத்த்வய்யுபபத்₃யதே ।**

**க்ஷுத்₃ரம் ஹ்ருத₃யதௌ₃ர்ப₃ல்யம் த்யக்த்வோத்திஷ்ட₂ பரந்தப ॥ 3 ॥**

**பார்த₂** – அர்ஜுன! **க்லைப்₃யம்** – அலியின் தன்மையை, **மா ஸ்ம க₃ம:** – அடையாதே **த்வயி** – உனக்கு, **ஏதத்** – இது, **ந உபபத்₃யதே** – பொருத்தமானதன்று. **பரந்தப** – பரந்தப! (எதிரிகளை வாட்டுபவனே), **க்ஷுத்₃ரம்** – இழிந்த, **ஹ்ருத₃ய தௌ₃ர்ப₃ல்யம்** – உள்ளத்தின் தளர்ச்சியை, **த்யக்த்வா** – விடுத்து, **உத்திஷ்ட₂** – போருக்காக எழுந்து நில்.

'அர்ஜுன! அலியின் தன்மையை அடையாதே. உனக்கு இது பொருத்தமானதன்று. பரந்தப! (எதிரிகளை வாட்டுபவனே) இழிந்த உள்ளத்தின் தளர்ச்சியை விடுத்துப் போருக்காக எழுந்து நில்.'

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'பார்த$_2$' என விளித்ததுடன், 'அலியின் தன்மையை அடையாதே. உனக்கு இது ஏற்புடையதன்று' என்று கூறுவதன் பொருள் என்ன?

**பதில்:** குந்திக்கு ப்ருதை என்று வேறொரு பெயர் உண்டு. குந்தி வீரத்தாய். கௌரவ–பாண்டவர்களுக்கு இடையே ஸமாதானம் செய்து வைப்பதற்காக ஸ்ரீக்ருஷ்ணன் தூதனாக ஹஸ்தினாபுரம் சென்றிருந்தபோது, தம்முடைய அத்தை குந்தியைச் சந்தித்தார். அப்போது குந்திதேவி, ஸ்ரீக்ருஷ்ணன் மூலமாக வீரமிக்க செய்தி சொல்லி அனுப்பினாள். அதன் மூலம் விதுலா, அவள் மகன் ஸஞ்ஜயன் இவர்களை உதாரணம் காட்டி அர்ஜுனனுக்கு யுத்தம் செய்ய உற்சாகம் ஊட்டினாள். இங்கு பகவான் அர்ஜுனனை, 'பார்த$_2$' (ப்ருதையின் மகனே) என்றழைத்து, தாயார் குந்திதேவி கூறிய க்ஷத்ரியருக்கு உசிதமான செய்தியை நினைவுறுத்தி, மேலே கூறிய இரு வாக்கியங்களின் மூலம் 'நீ வீரத்தாயின் வீரமகன்; உன் உள்ளத்தில் இந்தக் கோழைத்தனம் இருப்பது முற்றிலும் தவறு' என்று குறிப்பிடுகிறார். மாபெரும் மஹாரதிகளின் உள்ளங்களையெல்லாம் நிலைகுலையச் செய்யும் உன்னுடைய ஒப்பற்ற வீரம் எங்கே? இந்த வருந்தத்தக்க கோழைத்தனம் எங்கே? உன் உடலில் ரோமங்கள் சிலிர்க்கின்றன; உடல் நடுங்குகிறது; காண்டீவம் நழுவி விழுகிறது; மனம் துயரத்தில் ஆழ்ந்துவிட்டது; தலை சுற்றுகிறது. இத்தகைய கோழைத்தனம் உனக்கு எவ்விதத்திலும், எக்காலத்திலும் ஒவ்வாதது.

**கேள்வி:** 'பரந்தப' என்று அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** சத்ருக்களுக்குத் தாபத்தைக் கொடுப்பவன் 'பரந்தபன்'. "நீ சத்ருக்களுக்குத் தாபத்தை அளிப்பவன் என்பது ப்ரஸித்தமாயிற்றே! நிவாதகவசர் போன்ற எல்லையற்ற சக்தி பெற்ற தானவர்களை எளிதாகத் தோற்கடித்தவன் ஆயிற்றே! இன்று இப்படி உன்னுடைய க்ஷத்ரிய ஸ்வபாவத்திற்குப் புறம்பாக ஆண்மையற்றவர்களின் கோழைத்தனத்தை ஏற்றுக் கொண்டு எதிரிகளுக்கு மகிழ்ச்சியை உண்டாக்குகிறாயே!" என்கிறார் பகவான்.

**கேள்வி:** 'க்ஷுத்ரம்' என்ற அடைமொழியுடன் கூடிய 'ஹ்ருதயதௌர்பல்யம்' என்பதன் கருத்து என்ன? 'அதை விட்டுவிட்டு யுத்தத்திற்காக எழுந்திரு' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "போருக்கு அஞ்சும் கோழைகளுக்கே உரியதும், சூரர்கள் அறவே தவிர்க்க வேண்டியதுமாகிய இத்தகைய இழிந்த பலவீனம் உன்னையொத்த மாவீரனுடைய உள்ளத்தில் தலையெடுப்பது எவ்விதத்திலும் உகந்ததன்று. ஆகவே, உடனே இதை விட்டுவிட்டு யுத்தத்திற்காக நிமிர்ந்து எழுந்து நில்" என்று கூறுகிறார்.

**பொருத்தம்:** பகவான் இவ்வாறு கூறியதும், குருமார்களை எதிர்த்து யுத்தம் புரிவது உசிதமன்று என்று இரண்டு ச்லோகங்களில் தம் தீர்மானத்தை அர்ஜுனன் கூறுகிறார்—

अर्जुन उवाच

**कथं भीष्ममहं सङ्ख्ये द्रोणं च मधुसूदन।**
**इषुभिः प्रति योत्स्यामि पूजार्हावरिसूदन॥४॥**

அர்ஜுந உவாச

**கத$_2$ம் பீ$_4$ஷ்மமஹம் ஸங்க்$_2$யே த்$_3$ரோணம் ச மது$_4$ஸூத$_3$ந ।**
**இஷுபி$_4$: ப்ரதி யோத்ஸ்யாமி பூஜார்ஹாவரிஸூத$_3$ந ॥ 4 ॥**

**அர்ஜுந உவாச** – அர்ஜுனன் கூறினார்: **மது$_4$ஸூத$_3$ந** – மதுஸூதன! **அஹம்** – நான், **ஸங்க்$_2$யே** – போர்க்களத்தில், **கத$_2$ம்** – எவ்வாறு, **இஷுபி$_4$:** – அம்புகளினால், **பீ$_4$ஷ்மம்** – பாட்டனார் பீஷ்மரையும், **த்$_3$ரோணம் ச** – ஆசார்யர் த்ரோணரையும், **ப்ரதி**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**யோத்ஸ்யாமி** – எதிர்த்துப் போரிடுவேன்? (**யத:** – ஏனெனில்), **அரிஸூத₃ந** – பகைவர்களை அழிப்பவனே! (**தௌ** – அவர்கள் இருவருமே), **பூஜார்ஹௌ** – பூஜிக்கத் தக்கவர்கள்.

அர்ஜுனன் கூறினார்: 'மதுஸூதன! நான் போர்க்களத்தில் எவ்வாறு அம்புகளினால் பாட்டனார் பீஷ்மரையும், ஆசார்யர் த்ரோணரையும் எதிர்த்துப் போரிடுவேன்? ஏனெனில் பகைவர்களை அழிப்பவனே! அவர்கள் இருவருமே பூஜிக்கத்தக்கவர்கள்.

**கேள்வி:** 'அரிஸூதந' என்றும், 'மதுஸூதந' என்றும் ஸ்ரீக்ருஷ்ணனை அழைத்து 'கதம்' என்று கேட்பதன் பொருள் என்ன?

**பதில்:** 'மது' என்ற தைத்யனைக் கொன்றதனால் ஸ்ரீக்ருஷ்ணனை மதுஸூதனன் என்பார்கள். சத்ருக்களை அழிப்பவராதலின் அரிஸூதனன் என்பார்கள். இந்த இரண்டு பெயர்களால் பகவானை விளித்து, 'கதம்' (எப்படி) என்ற சொல்லைப் பயன்படுத்தி, அர்ஜுனன் தம் ஆச்சர்ய உணர்ச்சியை வெளிப்படுத்துகிறார். "நீங்கள் பாட்டனாரான பீஷ்மருடனும், குருநாதர் த்ரோணருடனும் போர் புரியும்படி தூண்டுகிறீர்களே, அவர்கள் தைத்யர்களுமல்லர்; சத்ருக்களும் அல்லரே. மாறாக, அவர்கள் பூஜிக்கத்தக்கவர்கள். உங்கள் இயல்பான குணத்துக்கு விரோதமாக, 'இந்தப் பெரியோர்களை எதிர்த்து யுத்தம் செய்' என்று எப்படிக் கூறுகிறீர்கள்? இந்தக் கொடிய பாவத்தை நான் எப்படிச் செய்வேன்?" என்று கேட்கிறார் அர்ஜுனன்.

**கேள்வி:** 'இஷுபி:' என்று ஏன் கூறுகிறார்?

**பதில்:** 'இஷு' எனில் அம்பு. சொல்லால்கூடப் பெரியோர்களைத் துச்சமாகப் பேசுவது பாவம் என்று கூறப்படுகிறது. அவர்களின் மேல் கூரான அம்புகளை ஏவி எப்படி யுத்தம் புரிவேன்? நீங்கள் ஏன் இந்தக் கோரமான பாவச் செயலில் என்னை ஈடுபடுத்துகிறீர்கள்? – என்று அர்ஜுனன் கேட்கிறார்.

गुरूनहत्वा हि महानुभावान् श्रेयो भोक्तुं भैक्ष्यमपीह लोके।
हत्वार्थकामांस्तु गुरूनिहैव भुञ्जीय भोगान्रुधिरप्रदिग्धान्॥५॥

**கு₃ரூநஹத்வா ஹி மஹாநுப₄ாவாந்**
**ஶ்ரேயோ போ₄க்தும் பை₄க்ஷ்யமபீஹ லோகே ।**
**ஹத்வார்த₂காமாம்ஸ்து கு₃ரூநிஹைவ**
**பு₄ஞ்ஜீய போ₄கா₃ந் ருதி₄ரப்ரதி₃க்₃தா₄ந் ॥ 5 ॥**

**மஹாநுப₄ாவாந்** – மேன்மை பொருந்திய, **கு₃ரூந்** – ஆசார்யர்களை, **அஹத்வா** – கொல்லாமல், **இஹ லோகே** – இவ்வுலகில், **பை₄க்ஷ்யம் அபி** – பிச்சை எடுப்பதால் கிடைக்கும் அன்னத்தைக்கூட, **போ₄க்தும்** – உண்பது, **ஶ்ரேய:** – மேன்மையைத் தரும். **ஹி** – ஏனெனில், **கு₃ரூந்** – ஆசார்யர்களை, **ஹத்வா (அபி)** – கொன்றாலும், **இஹ** – இவ்வுலகில், **ருதி₄ர ப்ரதி₃க்₃தா₄ந்** – இரத்தம் கலந்த, **அர்த₂ காமாந்** – செல்வம், காம்ய வஸ்துக்கள் இவற்றின் வடிவிலுள்ள, **போ₄கா₃ந் ஏவ து** – போகங்களைத்தான், **பு₄ஞ்ஜீய** – அனுபவிக்கப் போகிறேன்.

மேன்மை பொருந்திய ஆசார்யர்களைக் கொல்வதைவிட, இவ்வுலகில் பிச்சை எடுப்பதால் கிடைக்கும் அன்னத்தைக்கூட உண்பது மேன்மையைத் தரும். ஏனெனில் ஆசார்யர்களைக் கொன்றாலும் இவ்வுலகில் இரத்தம் கலந்த செல்வம், காம்ய வஸ்துக்கள் இவற்றின் வடிவிலுள்ள போகங்களைத்தான் அனுபவிக்கப் போகிறேன்.

**கேள்வி:** 'மஹாநுபாவாந் குரூந்' என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** துர்யோதனனது படையில் த்ரோணாசார்யர், க்ருபாசார்யர் போன்ற அர்ஜுனனுடைய குருமார்கள், பாஹ்லீகர், பீஷ்மர், ஸோமதத்தர், பூரிஶ்ரவஸ், சல்யன் முதலிய உதார மனமுடைய பெரியோர்கள் இருக்கிறார்கள். மதிப்பிற்குரிய அவர்களுக்கு 'மஹாநுபாவாந்' என்ற அடைமொழி கொடுத்து, 'மஹாநுபாவாந் குரூந்' என்று குறிப்பிடுகிறார் அர்ஜுனன்.

**கேள்வி:** 'பைக்ஷ்யம் அபி' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** க்ஷத்ரியர்கள் பிச்சை எடுக்கக் கூடாது. அதை உண்டு உடலை வளர்க்கக் கூடாது. அது நிந்திக்கத்தக்கது என்ற கட்டுப்பாடு இருந்தாலும்கூடப் பெரியோர்களைக் கொன்று ராஜ்ய போகத்தை அனுபவிப்பதைக் காட்டிலும், இந்த நிந்திக்கத்தக்க செயல்கூட நல்லதுதான் என்று அர்ஜுனன் கருதுகிறார்.

**கேள்வி:** 'அர்த்தகாமாந்', 'ருதிரப்ரதிக்தாந்', 'போகாந்' என்றும், இவற்றுடன் 'ஏவ' என்றும் சேர்த்துக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பெரியோர்களைக் கொல்வது என்பது முற்றிலும் முறையற்றது. அவ்வாறு அவர்களைக் கொன்றுகூட பெறப் போவது என்ன? மோக்ஷமன்று; தர்மமுமன்று. இவ்வுலகத்தில் பெறக்கூடிய செல்வமும், அற்ப காம வடிவான போகங்கள்தானே? இவற்றின் மதிப்பு பெரியோர்கள் உயிரோடு இருப்பதற்கு ஈடாகாது. அந்த போகங்கள்கூட பெரியோர்களைக் கொன்று பெறப்படுவதால், அவை ரத்தக்கறை படிந்தவை. ஆகவே, அந்த போகங்களைப் பெறுவதற்காகப் பெரியோரைக் கொல்வது ஒருபொழுதும் உசிதமன்று.

**கேள்வி:** 'அர்த்தகாமாந்' என்ற சொல்லை 'குரூந்' என்ற சொல்லுக்கு அடைமொழியாகக் கொண்டால் என்ன தவறு?

**பதில்:** 'குரூந்' என்ற சொல்லுக்கு 'மஹாநுபாவாந்' என்ற அடைமொழி கொடுக்கப்படாமலிருந்தால், 'அர்த்தகாமாந்' என்ற அடைமொழியைச் சேர்த்துக் கொள்ளலாம். ஆனால் இதே ச்லோகத்தில்தான் அவர்களை 'மேன்மை பொருந்திய ஆசார்யர்கள்' என்று அர்ஜுனன் கூறியிருக்கிறார். தொடர்ந்து, அவர்கள் 'அர்த்தகாமாந்' (பொருளில் ஆசையுள்ளவர்கள்) என்று கூறுவது எப்படிப் பொருந்தும்? இரண்டு அடைமொழிகளும் ஒன்றுக்கொன்று முரணாக அல்லவா அமையும்? ஆகவே, 'அர்த்தகாமாந்' என்ற சொல்லை, 'குரூந்' என்ற சொல்லுக்கு அடைமொழியாக ஏற்கக் கூடாது.

**பொருத்தம்: இவ்விதம் தம் தீர்மானத்தை வெளியிட்ட பிறகும்கூட அர்ஜுனனுக்கு த்ருப்தி ஏற்படவில்லை. தம்முடைய தீர்மானத்தில் ஐயம் ஏற்பட்டுவிட்டது. ஆகவே மேலும் கூறுகிறார்—**

न चैतद्विद्मः कतरन्नो गरीयो यद्वा जयेम यदि वा नो जयेयुः ।
यानेव हत्वा न जिजीविषामस्तेऽवस्थिताः प्रमुखे धार्तराष्ट्राः ॥ ६ ॥

**ந சைதத்$_3$வித்$_3$ம: கதரந்நோ க$_3$ரீயோ**
**யத்$_3$வா ஜயேம யதி$_3$ வா நோ ஜயேயு: ।**
**யாநேவ ஹத்வா ந ஜிஜீவிஷாம—**
**ஸ்தேऽவஸ்தி$_2$தா: ப்ரமுகே$_2$ த$_4$ார்தராஷ்ட்ரா: ॥ 6 ॥**

**ந:** — நமக்கு (போரிடுவதா, வேண்டாமா என்ற), **கதரத்** — இவ்விரண்டில் எது, **க$_3$ரீய:** — சிறந்தது? **யத் வா ஜயேம** — அல்லது (நாம்) அவர்களை வெற்றி கொள்வோமா? **யதி$_3$ வா** — அல்லது, **ந:** — நம்மை, **ஜயேயு:** — (அவர்கள்) வென்று விடுவார்களா? **ஏதத் ச** — இதையும், **ந வித்$_3$ம:** — அறியோம். **யாந்** — எவர்களை, **ஹத்வா** — கொன்று, **ந ஜிஜீவிஷாம:** — (நாம்) வாழக்கூட விரும்பவில்லையோ

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



(நம்மவர்களான), தே – அந்த, த₄ார்தராஷ்ட்ரா: ஏவ – த்ருதராஷ்ட்ர குமாரர்களே, ப்ரமுகே₂ – நம் முன்னே, அவஸ்தி₂தா: – (நம்மை எதிர்த்து) நிற்கிறார்கள்.

போரிடுவதா, வேண்டாமா என்ற இவ்விரண்டில் நமக்கு எது சிறந்தது? அல்லது நாம் அவர்களை வெற்றி கொள்வோமா? அல்லது நம்மை அவர்கள் வென்று விடுவார்களா? இதையும் அறியோம். எவர்களைக் கொன்று நாம் வாழக்கூட விரும்பவில்லையோ நம்மவர்களான அந்த த்ருதராஷ்ட்ர குமாரர்களே நம் முன்னே நம்மை எதிர்த்து நிற்கிறார்கள்.

**கேள்வி:** 'யுத்தம் செய்வது சிறந்ததா, செய்யாமல் இருப்பது சிறந்ததா? இது நமக்குத் தெரியவில்லையே' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** நாம் என்ன செய்தால் நன்மை அடைவோம் — யுத்தம் செய்வதா, யுத்தத்திலிருந்து விலகுவதா — இவ்விஷயத்தைத் தீர்மானிக்க முடியவில்லை. யுத்தம் செய்வதோ க்ஷத்ரிய தர்மம். ஆனால், அதன் பயனாக விளைவதோ குலநாசம். குலநாசம் பெரிய தோஷம் என்று கூறப்படுகிறது. என்ன செய்யலாம்?

**கேள்வி:** 'நாம் வெற்றி கொள்வோமா, அவர்கள் நம்மை வென்று விடுவார்களா' இந்த வாக்கியத்தின் பொருள் என்ன?

**பதில்:** 'யுத்தம் செய்வதே நல்லது என்று நாம் முடிவுக்கு வந்து யுத்தத்தில் இறங்கினாலும், நமக்கு வெற்றி கிடைக்குமா, அல்லது அவர்களுக்கு வெற்றி கிடைக்குமா? — என்பதும் புரியவில்லை' என்று அர்ஜுனன் நினைக்கிறார்.

**கேள்வி:** 'எவர்களைக் கொன்று நாம் உயிர் வாழக் கூட விரும்பவில்லையோ, நம்மவர்களான அந்த த்ருதராஷ்ட்ர புத்ரர்கள் அல்லவா எதிரே நிற்கிறார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "யுத்தத்தில் நாமே ஜயிப்போம் என்று வைத்துக் கொண்டாலும்கூட, யுத்தம் செய்வது சரி என்று தோன்றவில்லை. எவர்களைக் கொன்று நாம் வாழ விரும்பவில்லையோ, அந்த நமது ஸஹோதரர்களான துர்யோதனாதியர் அல்லவா இறப்பதற்காக நம் முன்னே நிற்கிறார்கள்! ஆகவே, நாம் வெற்றி பெற்றாலும், அந்த வெற்றி இவர்களைக் கொன்றுதானே கிடைக்கும்? எனவே, நாம் எதைச் செய்தால் உசிதமாகும் என்பதை நிர்ணயிக்க முடியவில்லையே" என்று நினைக்கிறார் அர்ஜுனன்.

**பொருத்தம்: செய்யவேண்டியது என்ன என்பதைத் தீர்மானிக்க முடியாத நிலையில் அர்ஜுனன் பகவானைச் சரணடைகிறார். 'நான் என்ன செய்யவேண்டும் என்பதை முடிவாகக் கூறுங்கள்' என்று கண்ணனிடம் ப்ரார்த்திக்கிறார்—**

**कार्पण्यदोषोपहतस्वभावः पृच्छामि त्वां धर्मसम्मूढचेताः।**
**यच्छ्रेयः स्यान्निश्चितं ब्रूहि तन्मे शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम्॥ ७॥**

**கார்பண்யதோ₃ஷோபஹதஸ்வப₄ாவ:**
**ப்ருச்ச₂ாமி த்வாம் த₄ர்மஸம்மூட₄சேதா: ।**
**யச்ச்₂ரேய: ஸ்யாந்நிஸ்சிதம் ப்₃ரூஹி தந்மே**
**ஶிஷ்யஸ்தேऽஹம் ஶாதி₄ மாம் த்வாம் ப்ரபந்நம் ॥ 7 ॥**

**கார்பண்ய தோ₃ஷ உபஹத ஸ்வப₄ாவ:** – கோழைத்தனத்தினால் சீரழிந்த ஸ்வபாவம் கொண்டவனும், **த₄ர்ம ஸம்மூட₄ சேதா:** – தர்ம விஷயத்தில் குழம்பிய மனமுடையவனுமான (நான்), **த்வாம்** – உங்களிடம், **ப்ருச்ச₂ாமி** – கேட்கிறேன். (கேட்பதென்னவென்றால்),

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**யத்** – எந்த (ஸாதனை), **நிஸ்சிதம்** – உறுதியாக, **ஸ்ரேய: ஸ்யாத்** – மேன்மை பயக்கக் கூடுமோ, **தத்** – அதை, **மே** – எனக்கு, **ப்₃ரூஹி** – கூறுங்கள். (ஏனெனில்), **அஹம்** – நான், **தே** – உங்களுடைய, **ஶிஷ்ய:** – சீடன். (ஆகவே), **த்வாம்** – உங்களை, **ப்ரபந்நம்** – சரணடைந்த, **மாம்** – எனக்கு, **ஶாதி₄** – அறிவுரை கூறுங்கள்.

கோழைத்தனத்தினால் சீரழிந்த ஸ்வபாவம் கொண்டவனும் தர்ம விஷயத்தில் குழம்பிய மனதுடையவனுமான நான் உங்களிடம் கேட்பதென்னவென்றால் எந்த ஸாதனை உறுதியாக மேன்மை பயக்கக்கூடுமோ அதை எனக்குக் கூறுங்கள். நான் உங்களுடைய சீடன். ஆகவே உங்களைச் சரணடைந்த எனக்கு அறிவுரை கூறுங்கள்.

**கேள்வி:** கார்பண்யதோஷம் என்றால் என்ன? 'உபஹததஸ்வபாவ:' என்றால் என்ன?

**பதில்:** 'க்ருபண' என்ற சொல்லுக்குப் பல பொருள்கள் உண்டு.

(1) போதுமான செல்வ வசதி படைத்த ஒருவன் செல்வத்தில் மிகுந்த பற்றுக் கொண்டு பேராசையுடன் தானமளிக்கும் போதும், தானே ஸுகபோகங்களை அனுபவிக்கும்போதும் ந்யாயமாகச் செலவழிக்க மனமில்லாமல் ஒரு காசுகூடச் செலவழிப்பதில்லையோ, அந்தக் கருமியை க்ருபணன் என்பார்கள்.

(2) மனித வாழ்க்கையில் சாஸ்த்ர ஸம்மதமான — நல்லோர், பெரியோர்கள் ஏற்றுக் கொண்ட முக்யமான லக்ஷ்யம் — 'பகவானுடைய தத்வம் அறிந்து, அவரை அடைய முயற்சி செய்வது' என்பது. இந்த லக்ஷ்யத்தை மறந்து உலக ஸுகபோகங்களில் தன் வாழ்வை வீணடிக்கும் அறிவிலியை க்ருபணன் என்று சொல்வது உண்டு.

ப்ருஹதாரண்யக உபநிஷத் 3/8/10ல் கூறப்படுகிறது—

**யோ வா ஏதத₃க்ஷரம் கா₃ர்க்₃யவிதி₃த்வாऽஸ்மால்லோகாத்ப்ரைதி ஸ க்ருபண: ।**

"கார்கி! இந்த அழிவற்ற பரமாத்மாவை அறிந்து கொள்ளாமல் இவ்வுலகிலிருந்து இறந்து மறைபவன் க்ருபணன்."

போகத்திலும், அதற்கு வேண்டிய செல்வத்திலும், அதன் பயனிலும் ஈடுபாடுள்ளவர்களை 'க்ருபணன்' என்று பகவானும் கூறுகிறார் ('க்ருபணா: ப₂லஹேதவ:' 2/49).

(3) ஸாதாரணமாக இரங்கத்தக்க நிலையில் உள்ளவனையும் 'க்ருபணன்' என்று கூறுவது உண்டு. ஆனால் அர்ஜுனனிடம் காணப்படும் க்ருபணத்தன்மை கருமித்தனமுமன்று, போகப் பற்றுமன்று. ஏனெனில், அர்ஜுனன் இயல்பாகவே மிகவும் உதார மனமுடையவர்; வாரி வாரிக் கொடுப்பவர்; புலன்களை அடக்கியவர். இங்கு "நான் எனக்காக வெற்றியையோ, அரசையோ, ஸுகபோகங்களையோ விரும்பவில்லை. யாருக்கு இவை வேண்டுமோ, அவர்கள் அனைவரும் நம் பந்துக்கள். அவர்கள் இங்கே யுத்தத்தில் உயிரை விடுவதற்குத் தயாராக வந்திருக்கிறார்களே. இந்த பூமி என்ன? மூவுலக அரசு கிடைப்பதாக இருந்தாலும் அதற்காக துர்யோதனாதியரை மாய்க்க விரும்பமாட்டேன்" (1/32–35) என்று வெளிப்படையாகக் கூறிவிட்டார். 'ஸமஸ்த பூமண்டலங்களின் அரசு பகையின்றிக் கிடைத்தாலும், தேவர்களுக்கே அதிபதியாக நான் ஆனாலும், என்னைத் துயரற்றவனாக ஆக்க முடியாது' (2/8) என்றும் கூறிவிட்டார். இவ்வளவு த்யாகம் செய்யத் தயாராகிவிட்டவர் கருமி அல்லர். போகப் பற்று உடையவரும் அல்லர். மேலும் இப்படிப் பொருள் கொள்வது இந்த ஸந்தர்பத்திற்குப் பொருந்தாது.

அர்ஜுனனுக்கு ஏற்பட்டிருக்கும் க்ருபணத்தனம் ஒருவிதமான இழிந்த நிலைதான். அது கருணையுடன் கூடிய கோழைத்தன வடிவிலும், சோக வடிவிலும் வெளிப்படுகிறது. ஸஞ்ஜயன் முதலாவது ச்லோகத்திலேயே, 'கருணைக்கு ஆட்பட்டு' என்று கூறி, இந்தக் கோழைத்தனத்தைச் சுட்டிக்காட்டி விட்டார். மூன்றாவது ச்லோகத்தில் பகவானும் 'அலித்தனம்' என்று கூறி இந்தக் கருத்தையே வலுப்படுத்தியிருக்கிறார். ஆகவே, இங்கு அர்ஜுனனுக்கு ஏற்பட்டிருக்கும் க்ருபணத்தனமென்பது உறவினர்களின்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அழிவு வருமே என்ற கருணையோடு கூடிய கோழைத்தனம்தான் என்பது நன்றாகப் புலப்படுகிறது.

அர்ஜுனன் ஒரு லக்ஷ்ய க்ஷத்ரியன். இயற்கையாகவே சூரன், வீரன். அவருக்குக் கோழைத்தனம் கிடையாது. எப்படியோ இப்பொழுது தாழ்வு மனநிலை உண்டாகிவிட்டது என்பதைத்தான் 'கோழைத்தனம்' என்ற தோஷம் அவர் இயல்பைத் தாக்கிவிட்டது என்கிறார்.

இந்த க்ருபணத்தனம் என்ற தோஷத்தினால் அவருடைய ஒப்பற்ற சூரத்தனம், வீரத்தனம், தைர்யம், சாதுர்யம், ஸாஹஸம், பராக்ரமம் முதலிய க்ஷத்ரிய இயல்புகள் அழிந்துவிட்டன போல ஆகிவிட்டன. அதனால்தான் அவர் அங்கங்கள் வெலவெலத்து விட்டன; வாய் உலர்ந்துவிட்டது; உடலில் எரிச்சலும், நடுக்கமும் ஏற்பட்டுவிட்டன; மனம் குழம்பிவிட்டது. கருணையுடன் கூடிய கோழைத்தனம் சூழ்ந்ததாலே அர்ஜுனன் தம்மிடம் இயற்கைக்கு விரோதமான இந்தக் குறிகளைக் கண்டு, 'க்ருபணத்தனத்தினால் என் இயல்பு பாதிக்கப்பட்டுவிட்டது' என்று கூறுகிறார்.

**கேள்வி:** *'தர்மஸம்மூடசேதா:' என்று தம்மைப் பற்றி அர்ஜுனன் ஏன் கூறிக் கொள்கிறார்?*

**பதில்:** தர்மம் எது? அதர்மம் எது? செய்யவேண்டியது என்ன? செய்யத்தகாதது என்ன? இவற்றைப் பற்றிச் சரியான முடிவு செய்ய முடியாமல் தம் உள்ளம் மயங்குகிறது என்று கூறுகிறார் அர்ஜுனன். அர்ஜுனனுடைய உள்ளம் தற்போது பெரிய தர்ம ஸங்கடத்தில் ஆழ்ந்துவிட்டது. ஒருபுறம் குடிமக்களைக் காப்பது, சொத்துக்களைக் காப்பது என்ற நோக்கில் யுத்தம் செய்வது க்ஷத்ரிய தர்மம்தான். அதில் ஈடுபட வேண்டியது உசிதம்தான் என்றும் நினைக்கிறார். மறுபுறம் அவருடைய உள்ளத்தில் ஏற்பட்டிருக்கும் க்ருபணத்தன்மை யுத்தத்தின் பலவித பயங்கர விளைவுகளைக் காட்டி, பிச்சை எடுக்கலாமா, ஸந்யாஸம் கொள்ளலாமா, காட்டுக்கு ஓடிவிடலாமா என்றெல்லாம் நினைக்க வைக்கிறது. மனதிலே உள்ள அளவற்ற கருணை, புத்தியை ஒருவிதத் தீர்மானத்தையும் செய்யவிடாது, என்ன செய்வது என்று தீர்மானிக்க முடியாமல் திகைக்க வைக்கிறது.

**கேள்வி:** *'நிஶ்சிதம் ஶ்ரேய:' என்பதற்கு என்ன பொருள்?*

**பதில்:** கௌரவர் தரப்புப் படையை பீஷ்மர், த்ரோணர், கர்ணன் போன்ற உலகப் புகழ்பெற்ற – வெல்ல முடியாத சூரவீரர்கள் கட்டிக் காக்கிறார்களே. தமது படையைக் காட்டிலும் எதிரிப்படை அளவில் பெரியதாயிற்றே. அதைக் கண்டு அர்ஜுனன் பயந்திருக்கலாம் என்றோ, போரில் தமக்கு வெற்றி கிடைக்காது என்று அர்ஜுனனுக்கு நிராசை ஏற்பட்டுவிட்டது என்றோ, தமக்கு யுத்தம் செய்தால் நன்மையா, செய்யாவிட்டால் நன்மையா என்றெல்லாம் யோசித்து இங்கு எது ச்ரேயஸ் (நன்மை) என்றும், தமது வெற்றி–தோல்விகளில் எது நிச்சயம் என்றும் அர்ஜுனன் பகவானிடம் கேட்கிறார் என்றோ இப்படி எவ்விதமும் சொல்வதற்கு இங்கே இடமில்லை. இந்நிலையில் அவருடைய உள்ளத்தில் பந்தபாசம் விழித்துக் கொண்டுவிட்டது. பந்துக்கள் அழிந்துவிடுவார்களே! பெரிய பாவம் ஏற்படுமே! இது நம்முடைய நன்மைக்குக் குந்தகம் ஆயிற்றே என்ற கலக்கம் ஒருபுறம். க்ஷத்ரியனுக்குரிய தர்மமான யுத்தத்தை த்யாகம் செய்யலாமா? அது அதர்மம் ஆகிவிடுமோ? அது என் மேன்மைக்கு ஊறு ஆகுமோ என்ற ஐயம் மறுபுறம். அதனால்தான் நிச்சயமான ச்ரேயஸ் என்ன என்று கேட்கிறார். இந்தக் கேள்வி வெற்றி–தோல்வியைப் பற்றியதன்று. அவருடைய லக்ஷ்யம் பகவானை அடைவது என்பதுதான். 'பகவானே! என்ன செய்ய வேண்டுமென்பதை என்னால் தீர்மானிக்க முடியவில்லை. நீங்களே தீர்மானித்துக் கூறுங்கள். எனக்கு உயர்ந்த ச்ரேயஸுக்கான ஸாதனம் எது?' என்று அர்ஜுனன் கேட்கிறார்.

**கேள்வி:** *'நான் உங்கள் சீடன். ஶரணமடைந்த எனக்கு புத்திமதி கூறுங்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** அர்ஜுனன் பகவானுடைய ப்ரியமான நண்பர். ஆத்ம தத்வ விஷயமான பேச்சு வேறு. ஆனால் நடைமுறையில் அர்ஜுனனுக்கும், பகவானுக்கும் உள்ள பழக்கம் எல்லா

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இடங்களிலும் ஸமானமானவர்களிடையே உள்ளது போன்றதாகும். உண்பது, அருந்துவது, உறங்குவது, போவது, வருவது எதிலும் பகவான் அவருடன் ஸமமாகத்தான் பழகுகிறார். பகவான் உயர்ந்தவர் என்று மனதில் நம்பிக்கையும், மரியாதையும் இருந்தாலும் அர்ஜுனன் பகவானுடன் ஸமமாகத்தான் பழகுகிறார். இன்று அர்ஜுனனுக்குத் தமது வருந்தத்தக்க நிலையை நினைத்துப் பார்த்தவுடன் பகவானை ஸமமாக நினைப்பதற்கான தகுதி தமக்கு இல்லை என்ற அனுபவம் ஏற்படுகிறது. ஸமமாகப் பழகினால் ஆலோசனை கிடைக்கலாம்; உபதேசம் கிடைக்காது. தூண்டுதல் பெறலாம்; 'இப்படிச் செய்' என்ற ஆணை கிடைக்காது. "எனக்கு அறிவுரையோ, தூண்டுதலோ போதாது. எனக்கு ஒரு குரு வேண்டும். அவர் உபதேசம் எனக்கு வேண்டும். அவர் 'இப்படிச் செய்' என்று ஆணையிட வேண்டும். 'இதுதான் உனக்கு ச்ரேயஸ்' என்று வழிகாட்டுபவர் வேண்டும். என்னுடைய சோக, மோஹங்களைக் களைந்து பரம மங்களமான நிலையை அடையச் செய்யவேண்டும். ஸ்ரீக்ருஷ்ணனைக் காட்டிலும் சிறந்த குருநாதர் எங்கே கிடைப்பார்? ஆனால், குருநாதன் உபதேசரூபமான அமுதமழை, சிஷ்யன் என்ற வயலில்தானே பொழியும்" என்று நினைக்கிறார். ஆகவே அர்ஜுனன் 'பகவானே! நான் உங்கள் சீடன்' என்று கூறுகிறார்.

சீடர்கள் பலவிதம். தன் குருவிடம் உபதேசமும் பெற்றுக் கொண்டு தன் திறமையில் செருக்குக் கொள்பவனுக்கோ, குருவைத் தவிர மற்றொருவரிடம் விசுவாஸம் கொள்பவனுக்கோ குரு க்ருபையின் உண்மையான லாபம் கிடைக்காது. இங்கு அர்ஜுனன், 'நான் உங்கள் சீடன்' என்று கூறுவதுடன் நிறுத்திக் கொள்ளவில்லை. 'வேறு புகல் எனக்குக் கிடையாது' என்ற மனதிடத்துடன் கூறுகிறார்: 'பகவானே! நான் உங்களுக்கு சிஷ்யன் மட்டுமல்ல. உங்களைச் சரணடைகிறேன்.' 'ப்ரபந்ந' என்று கூறுவதற்குப் பொருள் இதுதான். பகவான் எவ்விதத்திலும் உயர்ந்தவர், சக்தி படைத்தவர் என்று உணர்ந்து, அவரிடம் தன்னை முழுமையாக ஸமர்ப்பித்துக் கொள்வதைத்தான் 'ஶரணாகதி' என்றும், 'ஆத்மநிக்ஷேபம்' என்றும், 'ஆத்மஸமர்ப்பணம்' என்றும் கூறுவர். ஸர்வ வல்லமை படைத்தவர்; அனைத்துமறிந்தவர்; அனைவரது உள்ளத்திலும் உறைபவர்; அளவற்ற நற்குணங்களின் கரையற்ற கடல்; எல்லாவற்றிற்கும் அதிபதி; ஐசுவர்யம், இனிமை, தர்மம், சூரத்தனம், ஞானம், வைராக்யம் முதலியவற்றின் கொள்கலன்; க்லேசம், கர்மம், ஸந்தேஹம், கலக்கம் இவற்றை அழிப்பவர்; மிகவும் ப்ரேமை உடையவர்; உற்ற நண்பர்; நம்முடையவர்; குருநாதன்; பரமேசுவரன் என்று பகவானை நம்ப வேண்டும். தனக்குப் புகலிடமில்லை; பிடித்துக் கொள்பவர் இல்லை; தனக்கு புத்தி இல்லை; பலமில்லை; திண்மை இல்லை என்று தன்னைப் பற்றி நினைக்க வேண்டும். பகவானையே தாங்குபவராகவும், பிடிப்பாகவும், ஞானம், சக்தி, திண்மை, ஶரணாகதனிடம் ஒப்பற்ற அன்பு முதலியன உடையவராகவும், திடமாக வேறொன்றும் வேண்டாம் என்று பொறுப்பை ஒப்புவித்துத் தம்மை எப்பொழுதுமே அவருடைய திருவடிகளில் கிடத்திவிடுவது, கண்கொட்டாமல் அவருடைய அழகான நிலவு போன்ற முகத்தை தர்சனம் செய்வது, பொம்மலாட்டப் பொம்மைபோல எப்பொழுதும் அவர் ஆட்டுவித்தபடி ஆடுவது, அவரையே இடையறாது நினைத்துக் கொண்டிருப்பது - இவைதான் ப்ரபன்னன் ஆவது என்பது. பகவானிடம் இப்படி ப்ரபன்னன் ஆகிவிடுவோம் என்று அர்ஜுனன் விரும்புகிறார். இந்த பாவனையில் மூழ்கி அவர் கூறுகிறார்: 'பகவானே! நான் உங்கள் சீடன். உங்களைச் சரணடைந்தேன். எனக்கு புத்திமதி கூறுங்கள்.' 'தே' (உங்களுடைய), 'த்வாம்' (உங்களை) என்ற சொற்களைப் பயன்படுத்தி இதையே கூறுகிறார். எல்லாவற்றிலும் உயர்ந்த உண்மையான ஶரணாகதி என்ற பாவனை, 18/65, 18/66களில் பகவானுடைய மிகுந்த ரஹஸ்யமான உபதேசத்தின் விளைவாக ஏற்படப் போகிறது. அர்ஜுனன் அங்கே கூறுகிறபடி, 'நீங்கள் கூறியபடி கேட்கிறேன்' என்று சொல்வதுடன் கீதா உபதேசம் நிறைவு பெறுகிறது. உண்மையில் இந்த ச்லோகத்திலிருந்துதான் (2/7) கீதையின் ஸாதனை ஆரம்பம் ஆகிறது. உபதேசத்திற்கு இதுவே வித்து. 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய' (18/66) என்ற ச்லோகம் இந்த ஸாதனைகள் முற்றிலும் ஸித்தியடையும் இடம்; அதுவே முடிவு.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பொருத்தம்: புத்திமதி கூறுங்கள் என்று ப்ரார்த்தனை செய்த அர்ஜுனன் இப்படி ப்ரார்த்தனை செய்ய நேர்ந்ததற்குக் காரணமான தம் மனநிலையை வெளிப்படுத்துகிறார்—**

न हि प्रपश्यामि ममापनुद्याद् यच्छोकमुच्छोषणमिन्द्रियाणाम् ।
अवाप्य भूमावसपत्नमृद्धं राज्यं सुराणामपि चाधिपत्यम् ॥ ८ ॥

**ந ஹி ப்ரபஶ்யாமி மமாபநுத்₃யாத்₃**
**யச்சே₂ாகமுச்சே₂ாஷணமிந்த்₃ரியாணாம் ।**
**அவாப்ய பூ₄மாவஸபத்நம்ருத்₃த₄ம்**
**ராஜ்யம் ஸுராணாமபி சாதி₄பத்யம் ॥ 8 ॥**

**ஹி** – ஏனெனில், **பூ₄மௌ** – பூவுலகில், **அஸபத்நம்** – எதிரிகளற்ற, **ருத்₃த₄ம்** – தனதான்யங்கள் நிறைந்த, **ராஜ்யம் ச** – ராஜ்யத்தையும், **ஸுராணாம்** – தேவர்களுக்கு, **ஆதி₄பத்யம்** – அதிபதியாக இருப்பதையும், **அவாப்ய அபி** – அடைந்தாலும்கூட, **யத்** – எது, **மம** – என்னுடைய, **இந்த்₃ரியாணாம்** – புலன்களை, **உச்சே₂ாஷணம்** – வாட வைக்கின்ற, **ஶோகம்** – சோகத்தை, **அபநுத்₃யாத்** – போக்கடிக்குமோ, (**தத்** – அதை), **ந ப்ரபஶ்யாமி** – (நான்) காணவில்லை.

ஏனெனில் பூவுலகில் எதிரிகளற்ற தனதான்யங்கள் நிறைந்த ராஜ்யத்தையும், தேவர்களுக்கு அதிபதியாக இருப்பதையும் அடைந்தாலும்கூட எது என்னுடைய புலன்களை வாட வைக்கின்ற சோகத்தைப் போக்கடிக்குமோ அதை நான் காணவில்லை.'

**கேள்வி:** அர்ஜுனன் இந்த ச்லோகத்தில் என்ன கூறுகிறார்?

**பதில்:** முன் ச்லோகத்தில் அர்ஜுனன் 'புத்திமதி கூறுங்கள்' என்றார். "நீங்கள் முதலில், 'யுத்தம் செய்வாயாக' என்று கூறினீர்கள். அந்த யுத்தத்தினால் அதிக பட்சமாகக் கிடைக்கக் கூடியது வெற்றிதானே? அது கிடைத்தால் எதிரிகளின்றி அரசாளலாம். மேலும் ஆலோசித்துப் பார்த்ததில் தேவர்களின் ஆதிபத்யம் கிட்டினாலும்கூட என் புலன்களை வாட்டி வதைக்கும் சோகத்தை அது அழிக்கவல்லது அன்று என்று தெரிகிறது. ஆகவே, எனக்கு நிச்சயமான ஒரு உபாயம் கூறுங்கள். என்னுடைய புலன்களை வாட்டுகின்ற சோகத்தை விலக்கி, நான் எப்போதும் ஸுகமாக இருக்க வழி கூறுங்கள்" என்று அர்ஜுனன் கேட்கிறார்.

**பொருத்தம்: இதற்குப் பிறகு அர்ஜுனன் என்ன செய்தார் என்பதை இனி ஸஞ்ஜயன் கூறுகிறார்—**

सञ्जय उवाच

एवमुक्त्वा हृषीकेशं गुडाकेशः परन्तप ।
न योत्स्य इति गोविन्दमुक्त्वा तूष्णीं बभूव ह ॥ ९ ॥

ஸஞ்ஜய உவாச

**ஏவமுக்த்வா ஹ்ருஷீகேஶம் கு₃டா₃கேஶ: பரந்தப ।**
**ந யோத்ஸ்ய இதி கோ₃விந்த₃முக்த்வா தூஷ்ணீம் ப₃பூ₄வ ஹ ॥ 9 ॥**

**பரந்தப** – அரசே! **கு₃டா₃கேஶ:** – **ஸஞ்ஜய உவாச** – ஸஞ்ஜயன் கூறினார்: உறக்கத்தை வென்ற அர்ஜுனன், **ஹ்ருஷீகேஶம்** – அந்தர்யாமியான ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவிடம், **ஏவம்** – இவ்வாறு, **உக்த்வா** – கூறிவிட்டு (பின்), **கோ₃விந்த₃ம்** – ஸ்ரீகோவிந்தனிடம், **ந யோத்ஸ்யே** – போர்புரிய மாட்டேன், **இதி** – என்று, **ஹ** – தெளிவாக, **உக்த்வா** – கூறி, **தூஷ்ணீம்** – மௌனமாக, **ப₃பூ₄வ** – ஆகிவிட்டார்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸஞ்ஜயன் கூறினார்: "அரசே! உறக்கத்தை வென்ற அர்ஜுனன் அந்தர்யாமியான ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவிடம் இவ்வாறு கூறிவிட்டு, பின் ஸ்ரீகோவிந்தனிடம் போர் புரிய மாட்டேன் என்று தெளிவாகக் கூறி மௌனமாக ஆகிவிட்டார்."

**கேள்வி:** இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

**பதில்:** ஸஞ்ஜயன், த்ருதராஷ்ட்ரரிடம், 'அர்ஜுனன் மேலே சொன்னவாறு பகவானைச் சரணடைந்து அறிவுரை தருமாறு கேட்டு ப்ரார்த்தித்த பிறகு, 'நான் யுத்தம் செய்யமாட்டேன்' என்று சொல்லி மௌனமானார்' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'கோவிந்த' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** **'கோ₃பி₄ர்வேத₃வாக்யைர்வித்₃யதே லப்₄யதே இதி கோ₃விந்த₃:'** (வேத வாக்கியங்களால் அடையப்படுபவன் கோவிந்தன்). இதன்படி வேதவாக்கியங்களால் பகவானுடைய ஸ்வரூபத்தை அறிய முடிகிறது. அவருக்கு அதனால் கோவிந்தன் என்று பெயர். கீதையில்கூட ஸ்ரீக்ருஷ்ணன் சொல்கிறார்: 'எல்லா வேதங்களாலும் அறியப்படுபவன் நானே.' – **'வேதை₃ஸ்ச ஸர்வைரஹமேவ வேத்₃ய:'** *(15/15).*

**பொருத்தம்: இவ்விதம் அர்ஜுனன் கூறி முடித்தபிறகு பகவான் என்ன செய்தார் என்பதை ஸஞ்ஜயன் விளக்குகிறார்—**

**तमुवाच हृषीकेशः प्रहसन्निव भारत।**
**सेनयोरुभयोर्मध्ये विषीदन्तमिदं वचः॥ १०॥**

**தமுவாச ஹ்ருஷீகேஸ: ப்ரஹஸந்நிவ ப₄ாரத ।**

**ஸேநயோருப₄யோர்மத்₄யே விஷீத₃ந்தமித₃ம் வச: ॥ 10 ॥**

**ப₄ாரத** – பரதகுலத்தோன்றலே! த்ருதராஷ்ட்ரரே! **ஹ்ருஷீகேஸ:** – அந்தர்யாமியான ஸ்ரீக்ருஷ்ணன், **உப₄யோ:** – இரண்டு, **ஸேநயோ:** – படைகளுக்கும், **மத்₄யே** – நடுவில், **விஷீத₃ந் தம்** – துயரப்பட்டுக் கொண்டிருக்கும், **தம்** – அர்ஜுனனிடம், **ப்ரஹஸந் இவ** – சிரித்தாற்போல, **இத₃ம்** – இந்த, **வச:** – வார்த்தைகளை, **உவாச** – கூறினார்.

பரதகுலத்தோன்றலே! த்ருதராஷ்ட்ரரே! அந்தர்யாமியான ஸ்ரீக்ருஷ்ணன் இரண்டு படைகளுக்கும் நடுவில் துயரப்பட்டுக் கொண்டிருக்கும் அர்ஜுனனிடம் சிரித்தாற்போல இந்த வார்த்தைகளைக் கூறினார்.

**கேள்வி:** 'உபயோ: ஸேநயோ: மத்யே விஷீதந்தம்', 'தம்' என்பதற்கு என்ன பொருள்?

**பதில்:** எந்த அர்ஜுனன் முன்பு மிகவும் ஸாஹஸத்துடன் தமது ரதத்தை இருபடைகளுக்கும் இடையே கொண்டு நிறுத்துங்கள் என்று பகவானிடம் சொன்னாரோ, அதே அர்ஜுனன் இப்போது இருபடைகளிலும் கூடியிருக்கும் உறவினர் கூட்டத்தைப் பார்த்து மோஹமடைந்து கலங்குகிறார். அவரைப் பார்த்து ஸ்ரீக்ருஷ்ணன் பேசலுற்றார்.

**கேள்வி:** 'சிரித்தாற்போல இவ்வார்த்தைகளைச் சொல்கிறார்' என்றால் என்ன கருத்து?

**பதில்:** 'பகவான் என்ன சொன்னார்? எந்தக் கருத்தில் கூறினார்?' என்று ஸஞ்ஜயன் இப்படிக் கோடி காட்டுகிறார்: "அர்ஜுனன் சூரவீரத்தனத்தை வெளியிட வேண்டியதற்குப் பதிலாக மேலே சொன்னவாறு வருந்திக் கொண்டிருக்கிறானே; என்னைச் சரணடைந்து புத்திமதி கேட்கிறானே! என் தீர்மானத்தைத் தெரிந்து கொள்வதற்கு முன்னமேயே யுத்தம் செய்யமாட்டேன் என்று முழக்கம் செய்துவிட்டானே! இவையெல்லாம் எத்தகைய தவறு!" என்று பகவான் மனதிற்குள் எண்ணிச் சிரித்துக் கொண்டு இனி வருமாறு கூறுகிறார்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பொருத்தம்:** மேலே சொன்னவாறு கவலையுற்ற அர்ஜுனன் பகவானைச் சரணடைந்து தம்முடைய ஆழ்ந்த சோகம் எப்படித் தீரும் என்று உபாயம் கேட்கிறார். இவ்வுலகிலும், பரலோகத்திலும் ராஜ்ய ஸுகத்தைப் பெற்றும் இந்த சோகத்திலிருந்து மீள முடியும் என்று தோன்றவில்லை – என்று சொன்னவுடன், அர்ஜுனன் தமது உபதேசத்திற்குத் தகுதி பெற்றுவிட்டார் என்று கணித்து, அவருடைய கலக்கத்தையும், சோகத்தையும் முற்றிலுமாகப் போக்கிவிடும் உத்தேசத்தோடு பகவான் முதலில், 'அழிவற்ற நித்ய வஸ்து எது? அழியக்கூடிய அநித்ய வஸ்து எது?' என்று விளக்குவதன் மூலம், ஸாங்க்யயோக ரீதியில்கூட யுத்தம் புரிவது அவசியம்தான் என்று நிரூபிப்பதற்காக ஸாங்க்ய நிஷ்டையை வர்ணிக்கிறார்—

श्रीभगवानुवाच

अशोच्यानन्वशोचस्त्वं प्रज्ञावादांश्च भाषसे।
गतासूनगतासूंश्च नानुशोचन्ति पण्डिताः ॥ ११ ॥

ஸ்ரீப$_4$க$_3$வாநுவாச

அஸோச்யாநந்வஸோசஸ்த்வம் ப்ரஜ்ஞாவாத$_3$ாம்ஸ்ச ப$_4$ாஷஸே ।

க$_3$தாஸூநக$_3$தாஸூம்ஸ்ச நாநுஸோசந்தி பண்டி$_3$தா: ॥ 11 ॥

**ஸ்ரீப$_4$க$_3$வாநுவாச** – ஸ்ரீபகவான் கூறினார்: **த்வம்** – நீ, **அஸோச்யாந்** – துக்கப்படத்தகாத மனிதர்களின் பொருட்டு, **அந்வஸோச:** – வருந்துகிறாய். **ச** – மேலும், **ப்ரஜ்ஞாவாத$_3$ாந்** – பண்டிதர்களைப் போன்று, **ப$_4$ாஷஸே** – பேசுகிறாய். (ஆனால்), **க$_3$தாஸூந்** – உயிர் போனவர்களுக்காகவும், **அக$_3$தாஸூந் ச** – உயிர் போகாதவர்களுக்காகவும், **பண்டி$_3$தா:** – பண்டிதர்கள், **ந அநுஸோசந்தி** – வருந்துவதில்லை.

ஸ்ரீபகவான் கூறினார்: "நீ துக்கப்படத்தகாத மனிதர்களின் பொருட்டு வருந்துகிறாய். மேலும் பண்டிதர்களைப் போன்று பேசுகிறாய். ஆனால் உயிர் போனவர்களுக்காகவும் உயிர் போகாதவர்களுக்காவும் பண்டிதர்கள் வருந்துவதில்லை.

**கேள்வி:** அர்ஜுனனுடைய எந்தச் சொற்களை மனதில் கொண்டு பகவான் 'துயரப்பட வேண்டாதவர்களுக்காகத் துயரப்படுகிறாய்' என்று கூறுகிறார்?

**பதில்:** இரு படைகளிலும் தம் சிற்றப்பா, பெரியப்பா, தாத்தா, உறவினர்கள், ஆசார்யர்கள் முதலியவர்களைப் பார்த்து அவர்கள் அழிந்துவிடுவார்களே என்று கவலைப்பட்டு வருந்திக் கொண்டிருக்கும் அர்ஜுனன், முதல் அத்யாயத்தில் 28, 29, 30வது ச்லோகங்களில் தம் நிலையை வர்ணிக்கிறார். 45வது ச்லோகத்தில், தாம் யுத்தத்திற்கு முனைந்துவிட்டது பற்றி வருந்துகிறார். 47வது ச்லோகத்தில் ஸஞ்ஜயன் அவர் நிலையை வர்ணிக்கிறார். இவற்றைக் குறிப்பாகக் கொண்டு, 'எவர்களுக்காகத் துயரப்பட வேண்டாமோ, அவர்களுக்காக நீ துயரப்படுகிறாய்' என்று இங்கு ஆரம்பிக்கும் பகவானின் உபதேசம் 18/66ல் முடிகிறது.

**கேள்வி:** அர்ஜுனனுடைய எந்தச் சொற்களின் ஆதாரத்தில், 'நீ பண்டிதர்களைப்போல் பேசுகிறாய்' என்று ஸ்ரீக்ருஷ்ணன் கூறினார்?

**பதில்:** முதல் அத்யாயம் ச்லோகம் 31 முதல் 44 வரையிலும், இரண்டாவது அத்யாயம் ச்லோகம் 4 முதல் 6 வரையிலும் அர்ஜுனன் குலநாசத்தினால் ஏற்படும் பெரிய பாவங்களை எடுத்துக்காட்டி, அஹங்காரத்துடன் துர்யோதனன் முதலானோர்களின் இழிந்த குணத்தையும், எது தர்மம் என்றறிந்த தமது நிலையையும் கூறி, பலவிதமான யுக்திகளினால் யுத்தம் செய்வது சரியன்று என்று நிரூபித்தார். அவ்வளவு பேச்சையும் குறித்துத்தான் 'பண்டிதர்கள் போலப் பேசுகிறாய்' என்று பகவான் கூறினார்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'கதாஸூந்', 'அகதாஸூந்' என்று எவரைக் குறிப்பிடுகிறார்? 'அவர்களுக்காக அறிஞர்கள் வருந்த மாட்டார்கள்' என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** 'கதாஸு' — உயிர் போனவர்கள். 'அகதாஸு' — உயிர் போகாதவர்கள். அவர்களுக்காக அறிஞர்கள் வருந்துவதில்லை என்று பகவான் கூறுவதற்கு இதுதான் கருத்து: உன் தந்தை, பாட்டனார் முதலியோர் இறந்து பரலோகம் போய்விட்டார்கள். அந்த பித்ருக்களை நினைத்துக் கவலைப்படுகிறாய். யுத்தத்தின் விளைவாக நம்முடைய குலம் அழிந்துவிடுமே, வர்ணஸங்கரம் (வர்ணக்கலப்புப்) பரவிவிடுமே, நம்முடைய பித்ருக்கள் நரகத்தில் வீழ்ச்சி அடைவார்களே என்றெல்லாம் போனவர்களைப் பற்றி வருந்துகிறாய். எதிரே நின்று கொண்டிருக்கும் உற்றார்-உறவினர்களையும் பற்றிக் கவலைப்படுகிறாய். இவர்கள் இல்லாமல் ராஜ்யத்தையும், போகங்களையும் பெற்று என்ன செய்யப் போகிறோம் என்று கலங்குகிறாய். குலம் அழிந்தால் பெண்கள் கெட்டுவிடுவார்களே என்று பயப்படுகிறாய். இவ்விதமாகப் பண்டிதர்கள் கவலைப்படுவதில்லை. ஏனெனில், பண்டிதர்களின் நோக்கில் ஸத் சித் ஆனந்தமயமான பரம்பொருள் ஒன்றுதான் அழியாதது; என்றும் இருப்பது (ஸத்). அதைத் தவிர வேறு வஸ்துவே கிடையாது. அதுவே எல்லாவற்றிற்கும் ஆத்மா. அதற்கு எவ்விதத்திலும் நாசம் ஏற்படாது. சரீரம் அழியக் கூடியது; அநித்யம். அது சாச்வதமாக இருக்க முடியாது. உடலுக்கும், ஆத்மாவுக்கும் உள்ள தொடர்பு, சேர்வது-பிரிவதெல்லாம் வ்யவஹார நோக்கில் தவிர்க்க முடியாது போனாலும் உண்மையில் கனவுபோலக் கற்பனையானது. பின் ஏன் வருந்த வேண்டும்? நீயோ வருந்துகிறாய். ஆகவே, நீ உண்மையில் அறிஞன் அல்லன். அறிஞனைப் போலப் பேசுகிறாய்; அவ்வளவுதான்.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில், 'பீஷ்மர் முதலான உறவினர்களைப் பற்றி வருத்தப்பட வேண்டியது உசிதமன்று. ஆனால் நீ வருந்துகிறாய்' என்று பகவான் கூறினார். அவர்களைப் பற்றி வருந்துவதில் என்ன தவறு என்ற கேள்வி பிறக்கிறது. இதற்காக முதலில் பகவான் ஆத்மா நித்யமானது என்று நன்றாக எடுத்துரைத்து, ஆத்மா என்ற நோக்கில் அவர்களுக்காக வருந்த வேண்டியதில்லை என்பதை நிரூபிக்கிறார்—

**न त्वेवाहं जातु नासं न त्वं नेमे जनाधिपाः।**
**न चैव न भविष्यामः सर्वे वयमतः परम्॥ १२॥**

**ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதி₄பா: ।**
**ந சைவ ந ப₄விஷ்யாம: ஸர்வே வயமத: பரம் ॥ 12 ॥**

**(ஏவம்** – இவ்விதம்), **அஹம்** – நான், **ஜாது** – எப்பொழுதாவது, **ந து ஆஸம்** – இருந்ததில்லை (என்பது), **ந ஏவ** – இல்லவே இல்லை; **த்வம்** – நீ(யும்), **ந (ஆஸீ:)** – இருந்ததில்லை; **இமே** – இந்த, **ஜநாதி₄பா: ச** – அரசர்களும், **ந (ஆஸந்)** – இருந்ததில்லை, **ஏவ** – என்பதும், **(ந** – இல்லை); **அத: பரம்** – இனி மேலும், **வயம் ஸர்வே** – நாம் அனைவரும், **ந ப₄விஷ்யாம:** – இருக்கப் போவதில்லை என்பதும், **ந** – இல்லை.

இவ்விதம் நான் எப்பொழுதாவது இருந்ததில்லை என்பது இல்லவே இல்லை; நீயும் இருந்ததில்லை; இந்த அரசர்களும் இருந்ததில்லை என்பதும் இல்லை; இனி மேலும் நாம் அனைவரும் இருக்கப் போவதில்லை என்பதும் இல்லை.

**கேள்வி:** பகவான் இப்படிக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவான் இந்த ச்லோகத்தில், ஆத்மா என்ற நிலையில் அனைவரும் அழிவற்றவர்கள் என்பதை நிரூபிக்கிறார். ஆகவே, "நீ எவர் அழிந்து விடுவார்கள் என்று நினைக்கிறாயோ, அவர்கள் அனைவரும், நீயும், நானும் கூட இல்லாமல் போக மாட்டோம். இந்த உடல் தோன்றுவதற்கு முன்னும் நாம் அனைவரும் இருந்தோம். இந்த உடல் அழிந்த



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பிறகும் நாம் இருப்போம். உடல் அழிவதால் ஆத்மா நாசமுறாது. ஆகவே, நசித்து விடுவார்களோ என்று ஐயப்படுவதும், வருந்துவதும் உசிதமல்ல" என்று கூறுகிறார்.

பொருத்தம்: **இவ்விதம் ஆத்மா நித்யம் என்பதை நிரூபித்து, அது மாறுதலற்றது என்றும் கூறி, ஆத்மாவுக்காக வருந்தத் தேவையில்லை என்றும் உறுதிபடக் கூறுகிறார்—**

देहिनोऽस्मिन्यथा देहे कौमारं यौवनं जरा।
तथा देहान्तरप्राप्तिर्धीरस्तत्र न मुह्यति ॥ १३ ॥

**தேஹிநோऽஸ்மிந்யதா² தேஹே கௌமாரம் யௌவநம் ஜரா ।**

**ததா² தேஹாந்தரப்ராப்திர்தீ⁴ரஸ்தத்ர ந முஹ்யதி ॥ 13 ॥**

**யதா²** – எப்படி, **தேஹிந:** – ஜீவாத்மாவுக்கு, **அஸ்மிந்** – இந்த, **தேஹே** – உடலில், **கௌமாரம்** – இளமையும், **யௌவநம்** – வாலிபப்பருவமும், **ஜரா** – முதுமையும் (வருகின்றனவோ), **ததா²** – அவ்வாறே, **தேஹாந்தரப்ராப்தி:** – வேறு உடலும் வந்து சேர்கிறது. **தத்ர** – அவ்விஷயத்தில், **தீ⁴ர:** – தீர புருஷன், **ந முஹ்யதி** – கலங்குவதில்லை.

எப்படி ஜீவாத்மாவுக்கு இந்த உடலில் இளமையும் வாலிபப்பருவமும் முதுமையும் வருகின்றனவோ அவ்வாறே வேறு உடலும் வந்து சேர்கிறது. அவ்விஷயத்தில் தீரபுருஷன் கலங்குவதில்லை.

**கேள்வி:** பகவான் இந்த ச்லோகத்தில் இப்படிக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஆத்மா மாறுதல் (விகாரம்) அடைகிறது என்று கருதி ஓர் உடலை விட்டு மறு உடலுக்குப் போகும்போதும், வரும்போதும் அதற்குக் கஷ்டம் ஏற்படுகிறது என்று நினைத்து அஞ்ஞானிகள் வருத்தம் அடைகிறார்கள். அது தவறு என்று பகவான் கூறுகிறார். எப்படி ஒரு ஜீவனுக்கு இளமை, பிறகு யௌவனம், பிறகு கிழத்தனம் வரும்போதெல்லாம், உண்மையில் ஆத்மாவில் ஒரு மாறுதலும் ஏற்படாமல் பருஉடலில்தான் அம்மாறுதல்கள் ஏற்படுகின்றனவோ, அதுபோல ஓர் உடலிலிருந்து மறு உடலுக்குப் போவதெல்லாம் ஆத்மாவுக்கு ஏற்படுவதில்லை; ஸூக்ஷ்ம சரீரத்திற்குத்தான். அவை ஆத்மாவின் மேல் சுமத்தப்படுகின்றன. ஆகவே, இந்த உண்மையை அறியாத மக்கள் வேறு உடலை அடைவதில் வருத்தப்படுகிறார்கள்; தீரர்கள் வருத்தப்படுவதில்லை. ஏனெனில், அவர்களைப் பொறுத்தவரையில் ஆத்மாவுக்கும், உடலுக்கும் ஒரு ஸம்பந்தமும் இல்லை. ஆகவே, நீ வருந்துவது உசிதமன்று என்று பகவான் உணர்த்துகிறார்.

பொருத்தம்: **முன் ச்லோகங்களில் பகவான், ஆத்மா நித்யம் என்றும், விகாரமற்றதென்றும் கூறி, அதற்காக வருத்தப்பட வேண்டியதில்லை என்று நிரூபித்தார். ஆத்மா நித்யமானாலும், விகாரமற்றதானாலும் உற்றார்-உறவினரோடு ஏற்படும் சேர்க்கை-பிரிவு இவற்றால் ஸுக-துக்கங்கள் நேரிடையாக உண்டாகத்தானே செய்கின்றன? ஆகவே, சோகப்படாமல் எப்படி இருக்க முடியும் என்ற கேள்வி எழுகிறது. அதற்கு மேற்படி சேர்க்கை-பிரிவு எல்லாம்கூட அநித்யம்தான் என்று கூறி, அவற்றைப் பொறுத்துக் கொள்ள வேண்டும் என்று ஆணையிடுகிறார்—**

मात्रास्पर्शास्तु कौन्तेय शीतोष्णसुखदुःखदाः।
आगमापायिनोऽनित्यास्तांस्तितिक्षस्व भारत ॥ १४ ॥

**மாத்ராஸ்பர்ஶாஸ்து கௌந்தேய ஶீதோஷ்ணஸுக²து³:க²தா³: ।**

**ஆக³மாபாயிநோऽநித்யாஸ்தாம்ஸ்திதிக்ஷஸ்வ ப⁴ாரத ॥ 14 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கௌந்தேய** – குந்தியின் மைந்தனே! **ஶீத உஷ்ண ஸுக₂து₃:க₂தா₃:** – தட்பவெப்பம் மற்றும் ஸுகதுக்கங்களைக் கொடுக்கக்கூடிய, **மாத்ராஸ்பர்ஶா: து** – புலன்களுடன் போக விஷயங்களின் சேர்க்கைகள், **ஆக₃மாபாயிந:** – உண்டாகி அழிபவை; **அநித்யா:** – அநித்யமானவை. (ஆகவே), **ப₄ாரத** – பாரத! **தாந்** – அவற்றை (நீ), **திதிக்ஷஸ்வ** – பொறுத்துக் கொள்.

குந்தியின் மைந்தனே! தட்பவெப்பம் மேலும் ஸுகதுக்கங்களைக் கொடுக்கக்கூடிய புலன்களுடன், போக விஷயங்களின் சேர்க்கைகள் உண்டாகி அழிபவை; அநித்யமானவை. ஆகவே பாரத! அவற்றை நீ பொறுத்துக் கொள்.

**கேள்வி:** 'மாத்ராஸ்பர்ஶா:' என்ற சொல்லுக்கு விளக்கம் என்ன?

**பதில்:** எதன் மூலமாக ஒரு பொருளின் அளவு கிடைக்கிறதோ, அதன் வடிவத்தை அறிகிறோமோ, அதற்குப் பெயர் 'மாத்ரா'. ஆகவே, இங்கே புலன்களுடன் சேர்ந்த மனதையும், எல்லாப் புலன்களையும் 'மாத்ரா' என்ற சொல் குறிக்கும். அதன் ஸ்பர்சம் என்றால் ஸம்பந்தம் (சேர்க்கை). மனதோடுகூடச் சேர்ந்த புலன்கள் ஒலி, தொடுதல், உருவம், சுவை, மணம் என்னும் அந்தந்த அனுபவப் பொருட்களோடு சேரும்போது கிடைக்கும் ஸம்பந்தங்களை 'மாத்ராஸ்பர்ஶா:' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'ஶீதோஷ்ணஸுகது:கதா:' என்பதற்கு என்ன அபிப்ராயம்?

**பதில்:** தட்ப-வெப்பம், ஸுக-துக்கம் என்ற சொற்கள் எல்லா இரட்டைகளையும் குறிக்கும். பொருளுக்கும், புலன்களுக்கும் ஏற்படும் ஸம்பந்தத்தை (சேர்க்கையை) 'ஶீதோஷ்ண-ஸுகது:கதா:' (தட்ப-வெப்பம், ஸுக-துக்கம் அளிப்பவை) என்று குறிப்பிடுகிறார். எல்லாப் பொருட்களும் புலன்களுடன் ஸம்பந்தப்பட்டவுடன் தட்ப-வெப்பம், விருப்பு-வெறுப்பு, மகிழ்ச்சி-துயரம், ஸுகம்-துக்கம், அனுகூலம்-ப்ரதிகூலம் ஆகிய இரட்டைகளை மனதில் தோற்றுவிக்கின்றன. அப்படி ஏற்பட்ட சேர்க்கை நித்யமானது என்ற புத்தியினாலே மனதில் பல விகாரங்கள் ஏற்படுகின்றன. ஆகவே, அது அநித்யமானது என்று அறிந்து கொண்டால் அதன் சேர்க்கையால் உன்னிடம் எந்தவித மனவிகாரங்களும் ஏற்படா.

**கேள்வி:** புலன்களிடம் போகப் பொருட்கள் வந்து சேர்வதை, உண்டாகி அழிவது, அநித்யம் என்று கூறி, அவற்றைப் பொறுத்துக் கொள்ள வேண்டும் என்று ஆணையிடுவதற்கு என்ன பொருள்?

**பதில்:** புலன்களுடன் போகப் பொருட்கள் சேர்வதால் ஸுகமும், துக்கமும் ஏற்படுகின்றன. அந்தச் சேர்க்கையும் கூட நொடியில் மறையக் கூடியது. இதில் ஒரு துளி கூட உண்மையான ஸுகம் இல்லை. அவற்றைப் பொறுத்துக் கொள். அவை அநித்யம் என்றறிந்து அவை வந்தாலும், போனாலும் விருப்பு-வெறுப்புகளையோ, மகிழ்ச்சி-துன்பங்களையோ அடையாதே. உற்றார்-உறவினரின் சேர்க்கை கூட இப்படித்தான். மனமும் புலன்களும் சேர்ந்து மற்ற பொருட்களுடன் கூடி விலகுவது போலத்தான் உறவினருடன் கூடிப் பிரிவதும். ஆகவே, எல்லாவிதமான சேர்க்கையினாலும், பிரிவினாலும் ஏற்படும் ஸுக-துக்கங்களையும் பொறுத்துக் கொள்வாயாக – என்று பகவான் கூறுகிறார். இதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

**பொருத்தம்:** இவற்றைப் பொறுத்துக் கொள்வதால் என்ன லாபம் என்பதை இனிச் சொல்கிறார்—

यं हि न व्यथयन्त्येते पुरुषं पुरुषर्षभ।
समदुःखसुखं धीरं सोऽमृतत्वाय कल्पते॥ १५॥

**யம் ஹி ந வ்யத₂யந்த்யேதே புருஷம் புருஷர்ஷப₄ ।**
**ஸமது₃:க₂ஸுக₂ம் தீ₄ரம் ஸோऽம்ருதத்வாய கல்பதே ॥ 15 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ஹி** – ஏனெனில், **புருஷர்ஷப₄** – புருஷர்களில் சிறந்தவனே! **ஸமது₃:க₂ஸுக₂ம்** – ஸுகதுக்கங்களை ஸமமாக ஏற்கின்ற, **யம்** – எந்த, **தீ₄ரம்** – தீரனான, **புருஷம்** – மனிதனை, **ஏதே** – இவை (புலன்கள் மற்றும் போகங்களின் சேர்க்கை), **ந வ்யத₂யந்தி** – கலங்க வைப்பதில்லையோ, **ஸ:** – அவன், **அம்ருதத்வாய** – மோக்ஷத்திற்கு, **கல்பதே** – தகுதி பெறுகிறான்.

ஏனெனில் புருஷர்களில் சிறந்தவனே! ஸுகதுக்கங்களை ஸமமாக ஏற்கின்ற எந்த தீரனான மனிதனை புலன்கள் மற்றும் போக விஷயங்களின் சேர்க்கை கலங்க வைப்பதில்லையோ அவன் மோக்ஷத்திற்குத் தகுதி பெறுகிறான்.

**கேள்வி:** *'ஹி' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** புலன்களுடன் பொருட்கள் வந்து சேர்வதை எதற்காகப் பொறுத்துக் கொள்ள வேண்டும் என்பதன் காரணம் இந்த ச்லோகத்தில் கூறப்படுகிறது. இதைத்தான் 'ஹி' என்ற சொல் குறிக்கிறது.

**கேள்வி:** *'புருஷர்ஷப' என்று அழைப்பதற்கு என்ன பொருள்?*

**பதில்:** 'ருஷப' என்னும் சொல் சிறந்ததைக் குறிக்கும். புருஷர்களில் சூரவீரன் புருஷர்ஷபன். இங்கு அர்ஜுனனை 'புருஷர்ஷப' என்று அழைக்கிறார். 'நீ சூரவீரனாயிற்றே. பொறுத்துக் கொள்வது உனக்கு ஸ்வபாவமாக அமைந்திருக்கிறதே. ஆகவே, இயல்பாகவே நீ இவையனைத்தையும் பொறுத்துக் கொள்ள முடியும்' என்று கூறுகிறார்.

**கேள்வி:** *'தீரம்' என்ற சொல் எதைக் குறிக்கிறது?*

**பதில்:** பரமாத்மாவை அடைந்தவனையே 'தீரன்' என்று பெரும்பாலும் கூறுவது வழக்கம். ஆனால், சில இடங்களில் பரமாத்மாவை அடையத் தகுதி பெற்றவனையும் தீரன் என்று கூறுகிறார். இங்கே ஸாங்க்யயோக ஸாதனையில் தேர்ச்சி பெற்று முற்றிய ஸாதகனை 'தீரம்' என்ற சொல் உணர்த்துகிறது.

**கேள்வி:** *'ஸுகதுக்கங்களை ஸமமாக பாவிப்பவன்' என்றால் என்ன பொருள்?*

**பதில்:** தீர புருஷனின் இலக்கணத்தை இவ்விதம் கூறுகிறார். ஸுகத்தையும், துக்கத்தையும் பேதபாவனையின்றி ஒன்றாகவே ஏற்று, அவற்றை அநித்யம் என்று உணர்ந்து, அந்த இரட்டைகளில் விகாரம் அடையாதவனே தீரன். அவன்தான் இவற்றைப் பொறுத்துக் கொள்ள சக்தி உள்ளவன்.

**கேள்வி:** *'ஏதே', 'ந வ்யதயந்தி' என்பதன் பொருள் என்ன?*

**பதில்:** பொருட்களுடன் புலன்கள் கூடுவதை 'மாத்ராஸ்பர்ஶா:' என்று முன் ச்லோகத்தில் கூறினார். 'ஏதே' என்ற சொல் இவற்றைக் குறிக்கும். 'இவை பாதிப்பதில்லை' என்றால் பொருட்கள் கூடிப் பிரிவதில் விருப்பு–வெறுப்புகளோ, மகிழ்ச்சி–துன்பங்களோ அடையாமல் பழக்கிக் கொண்டுவிடுகின்ற ஸாதகன், இந்த நிலையை அடைந்த பிறகு எந்தப் புலனுடன் எந்தப் பொருள் கூடினாலும் மனம் கலங்குவதில்லை. மனதில் எந்தவிதமான விகாரமும் அடைவதில்லை. இத்தகையவன் தீரனாகிறான், ஸுகதுக்கங்களை ஸமமாக பாவிப்பவன் ஆகிறான்.

**கேள்வி:** *'அவன் மோக்ஷத்திற்குத் தகுதி பெறுகிறான்' என்றால் என்ன பொருள்?*

**பதில்:** மேலே கூறப்பட்ட ஸமபாவனையுள்ள தீரன் பரமாத்மாவை அடையத்தக்க வனாகிறான். அவனுக்கு விரைவில் நேரிடையாக பகவானுடன் ஒன்றிவிடும் நிலை கிட்டிவிடும்.

**பொருத்தம்:** *12, 13*வது ச்லோகங்களில் ஆத்மா நித்யன்; விகாரமற்றவன் என்றும், *14*வது ச்லோகத்தில் புலன்களுடன் பொருட்கள் கூடுவது அநித்யம் என்றும் பகவான் கூறினார். ஆத்மா எப்படி நித்யவஸ்து? இந்தச் சேர்க்கை எப்படி அநித்யம்? இதை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



விளக்கவில்லை. இந்த ச்லோகத்தில் நித்ய, அநித்ய வஸ்துக்களை விளக்குவதற்காக இரண்டுக்கும் இலக்கணங்கள் கூறுகிறார்—

नासतो विद्यते भावो नाभावो विद्यते सतः।
उभयोरपि दृष्टोऽन्तस्त्वनयोस्तत्त्वदर्शिभिः॥ १६॥

நாஸதோ வித்₃யதே ப₄ாவோ நாப₄ாவோ வித்₃யதே ஸத: ।
உப₄யோரபி த்₃ருஷ்டோऽந்தஸ்த்வநயோஸ்தத்த்வத₃ர்ஶிபி₄: ॥ 16 ॥

**அஸத:** – இல்லாததற்கு, **ப₄ாவ:** – இருப்பது என்பது, **ந வித்₃யதே** – இல்லை. **து** – மேலும், **ஸத:** – உண்மையாக இருப்பதற்கு, **அப₄ாவ:** – இல்லாமை என்பதும், **ந வித்₃யதே** – இல்லை. **அநயோ:** – இந்த, **உப₄யோரபி** – இரண்டின், **அந்த:** – தத்வம், **தத்த்வத₃ர்ஶிபி₄:** – தத்வ ஞானிகளால், **த்₃ருஷ்ட:** – கண்டறியப்பட்டது.

இல்லாததற்கு இருப்பது என்பது இல்லை. மேலும் உண்மையாக இருப்பதற்கு இல்லாமை என்பதும் இல்லை. இந்த இரண்டின் தத்வம் தத்வ ஞானிகளால் கண்டறியப்பட்டது.

**கேள்வி:** *'அஸத:' என்றால் எது? அதற்கு இருப்பு இல்லை – என்றால் என்ன பொருள்?*

**பதில்:** மாறிக் கொண்டே இருக்கக்கூடிய உடல், புலன்கள், புலன் நுகர் பொருட்கள் மற்றும் ஜடப் பொருட்கள் அனைத்தும் 'அஸத:' எனப்படும். அதற்கு 'இருப்பு' இல்லை என்றால், அவை எப்பொழுது இருப்பதாகத் தோன்றுகின்றனவோ, அதற்கு முன்பும் இருந்ததில்லை; பின்பும் இருக்கப் போவதில்லை; இருப்பதாகத் தோன்றும் போதுகூட அவை உண்மையில் இல்லை. ஆகையால் பீஷ்மர் முதலிய உறவினர்களின் உடல்களாகிய ஜட வஸ்துக்கள் அழிந்துவிடும் என்று நீ வருந்துகிறாயே, அது உசிதமன்று.

**கேள்வி:** *'ஸத:' என்றால் என்ன? 'அதற்கு இல்லாமை என்பதும் இல்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** 'ஸத:' என்ற சொல் பரமாத்ம தத்வத்தைக் குறிக்கிறது. அது எங்கும் நிறைந்தது; நித்யமானது. அது இல்லாமல் போவதில்லை. எந்தக் காரணத்தினாலும் அது மாறுபடுவதோ, இல்லாமல் போவதோ கிடையாது. அது எப்பொழுதும் ஒரே சீரானது; துண்டுபடாதது; விகாரப்படாதது. பீஷ்மர் முதலானோரின் ஆத்மா அழிந்துவிடுமே என்று நினைத்து வருந்துகிறாயே, அப்படி வருந்துவது உசிதமன்று.

**கேள்வி:** *இவ்விரண்டின் தத்வங்களை ஞானிகள் கண்டுள்ளார்கள் என்றால் என்ன கருத்து?*

**பதில்:** 'இவ்விரண்டும்' என்று அஸத், ஸத் இரண்டையும் குறிப்பிடுகிறார். தத்வமறிந்த ஞானிகள் இவற்றை ஆராய்ந்து தீர்மானத்திற்கு வந்துவிட்டார்கள். எது மாறிக் கொண்டே இருக்குமோ, எல்லாக் காலங்களிலும் இருப்பதில்லையோ அல்லது அழியுமோ அது அஸத். அதாவது அஸத்தான வஸ்து இருப்பது என்பது முடியாத கார்யம். எந்த நிலையிலும், எக்காரணத்தாலும் எதற்கு மாறுபாடோ, அழிவோ கிடையாதோ, எது எப்பொழுதும் இருக்குமோ அது ஸத். ஸத்தான பொருள் அழிவதே இல்லை. இதுவே தத்வமறிந்த ஞானிகள் ஆராய்ச்சியில் கண்டறிந்த உண்மை.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் 'ஸத்' என்பது 'இல்லாமல் போவதில்லை' என்று கூறினார். அந்த 'ஸத்' என்பது எது என்ற கேள்விக்குப் பதில் கூறுகிறார்—

अविनाशि तु तद्विद्धि येन सर्वमिदं ततम्।
विनाशमव्ययस्यास्य न कश्चित्कर्तुमर्हति॥ १७॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அவிநாஶி து தத்₃வித்₃தி₄ யேந ஸர்வமித₃ம் ததம் ।**
**விநாஶமவ்யயஸ்யாஸ்ய ந கஶ்சித்கர்துமர்ஹதி ॥ 17 ॥**

**அவிநாஶி து** – அழிவற்றதுதான் என்று, **தத்** – அதை, **வித்₃தி₄** – அறிந்து கொள். **யேந** – எதனால், **இத₃ம் ஸர்வம்** – காணப்படும் பொருட்கள் அனைத்தும், **ததம்** – வ்யாபிக்கப்பட்டிருக்கிறதோ, **அஸ்ய** – அந்த, **அவ்யயஸ்ய** – அழிவற்றதற்கு, **விநாஶம்** – அழிவை, **கர்தும்** – உண்டாக்குவதற்கு, **கஶ்சித்** – எவரும், **ந அர்ஹதி** – ஆற்றல் பெற்றவரல்லர்.

அழிவற்றதுதான் என்று அதை அறிந்து கொள். எதனால் காணப்படும் பொருட்கள் அனைத்தும் வ்யாபிக்கப்பட்டிருக்கிறதோ, அந்த அழிவற்றதற்கு, அழிவை உண்டாக்குவதற்கு எவரும் ஆற்றல் பெற்றவரல்லர்.

**கேள்வி:** *'இதம் ஸர்வம்' (இந்த எல்லாம்) என்றால் எது? அது எதனால் வ்யாபிக்கப்பட்டிருக்கிறது? அப்படி வ்யாபிக்கும் வஸ்து அழிவற்றது என்று கூறுவதற்கு என்ன பொருள்?*

**பதில்:** உடல், புலன்கள், மனம், போகப் பொருட்கள், அனுபவிக்கும் இடம் மற்றும் எல்லா ஜடங்களும் 'இந்த எல்லாம்' என்ற சொல்லுக்குப் பொருள் ஆகும். இந்த ஜடப் பொருட்கள் அனைத்தும் சேதனனான பரமாத்ம தத்வத்தினால் வ்யாபிக்கப்பட்டிருக்கின்றன. பரமாத்ம தத்வம் அழிவற்றது. முன் ச்லோகத்தில் 'ஸத்' என்பதற்கு என்ன இலக்கணம் கூறப்பட்டதோ, அதன்படி ஞானிகள் எதை 'ஸத்' என்று நிச்சயம் செய்தார்களோ, அந்த பரமாத்மாவே 'அவிநாசி' (அழிவற்றவர்) என்ற பெயரால் அழைக்கப்படுகிறார்.

**கேள்வி:** *'அழிவற்ற இதை யாரும் அழிக்க முடியாது' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** ஆகாயத்தினால் மேகம் போல இந்தப் பரமாத்ம தத்வத்தினால் ஜடவர்க்கம் அனைத்தும் சூழப்பட்டுள்ளது. ஆகவே, அந்த ஜடவர்க்கத்தைச் சார்ந்த எதுவும் பரமாத்மாவை அழிக்க முடியாது. எப்பொழுதும் இருந்து கொண்டே இருக்கக் கூடிய அது ஒன்றே 'ஸத்' ஆகும்.

**பொருத்தம்:** **இவ்விதம் 'ஸத்' என்பதற்கு விளக்கம் கொடுத்துவிட்டு, மேலே 'அஸத்' என்றால் என்ன என்பதை விளக்குகிறார்—**

**अन्तवन्त इमे देहा नित्यस्योक्ताः शरीरिणः ।**
**अनाशिनोऽप्रमेयस्य तस्माद्युध्यस्व भारत ॥ १८ ॥**

**அந்தவந்த இமே தே₃ஹா நித்யஸ்யோக்தா: ஶரீரிண: ।**
**அநாஶிநோऽப்ரமேயஸ்ய தஸ்மாத்₃யுத்₄யஸ்வ ப₄ாரத ॥ 18 ॥**

**அநாஶிந:** – அழிவற்ற, **அப்ரமேயஸ்ய** – விளக்க முடியாத, **நித்யஸ்ய** – நித்யமான, **ஶரீரிண:** – ஜீவாத்மாவினுடைய, **இமே** – இந்த, **தே₃ஹா:** – அனைத்து உடல்களும், **அந்தவந்த:** – அழியக்கூடியவையாக, **உக்தா:** – கூறப்பட்டுள்ளன. **தஸ்மாத்** – ஆகவே, **ப₄ாரத** – பரதகுலத்தோன்றலே! அர்ஜுன! (நீ), **யுத்₄யஸ்வ** – போர்புரிவாயாக.

அழிவற்ற, விளக்க முடியாத, நித்யமான ஜீவாத்மாவினுடைய இந்த அனைத்து உடல்களும் அழியக்கூடியவையாகக் கூறப்பட்டுள்ளன. ஆகவே பரதகுலத்தோன்றலே! அர்ஜுன! நீ போர்புரிவாயாக.

**கேள்வி:** *'இமே தேஹா:' என்றால் எவை? அவை அழிவுள்ளவை என்று கூறுவதன் கருத்து என்ன?*

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இந்த உடல்கள் என்று அனைத்து உடல்களையும் குறிப்பிட்டு, அவை அஸத் என்று (வாஸ்தவத்தில் இல்லாதவை) விளக்குவதற்காக முடிவுள்ளவை என்று கூறுகிறார். மனம், புலன்களுடன் கூடிய அனைத்து உடல்களும் அழியக்கூடியவை. கனவில் காணப்படும் சரீரங்களும் அகில உலகமும் வாஸ்தவத்தில் இல்லாவிட்டால்கூட இருப்பதுபோல் தோற்றம் அளிக்கின்றன. அதுபோலவே இந்த அனைத்து உடல்களும் உண்மையில் இல்லாவிட்டால் கூட அஞ்ஞானத்தினால் இருப்பது போலத் தோன்றுகின்றன. உண்மையில் அனைத்துக்கும் 'இருப்பு' கிடையாது. ஆகவே, இவற்றிற்கு அழிவு நிச்சயமாக ஏற்படும். இவற்றிற்காக வருந்துவது வீணே.

**கேள்வி:** 'தேஹா:' (உடல்கள்) என்று பன்மையிலும், 'ஶரீரிண:' (ஜீவாத்மா) என்று ஒருமையிலும் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எல்லா உடல்களிலும் ஒரே ஆத்மாதான் இருக்கிறது. சரீரங்கள் வெவ்வேறாக இருப்பதால் அவற்றில் உள்ள ஆத்மாவும் வெவ்வேறு என்று அறியாமையினால் தோன்றுகிறது. உண்மையில் வெவ்வேறு அல்ல என்பது கருத்து.

**கேள்வி:** 'ஶரீரிண:' (சரீரத்தை உடையவன்) என்ற சொல் யாரைக் குறிக்கிறது? 'நித்யஸ்ய', 'அநாஶிந:', 'அப்ரமேயஸ்ய' என்ற அடைமொழிகள் கொடுப்பதற்கும், அவனை உடலுடன் ஸம்பந்தப்படுத்தியும் காட்டுவதன் நோக்கம் என்ன?

**பதில்:** முன் ச்லோகத்தில் 'ஸத்' எல்லா ஜடப்பொருட்களிலும் வ்யாபித்திருக்கிறது என்று கூறினார். அந்த 'ஸத்'தான் இங்கே 'ஶரீரீ' (உடலை உடையவன்) என்று கூறப்படுகிறது. அந்த ஸத் தத்வமும், ஶரீரியும் ஒன்றுதான் என்று காட்டவே இம்மூன்று அடைமொழிகளும் பயன்படுத்தப்படுகின்றன. உடலை உடையவன் என்று சொல்லி, உடலுடன் ஆத்மாவுக்கு ஏற்படும் ஸம்பந்தத்தைக் குறிப்பிடுகிறார். ஆகவே, சரீரத்தில் உள்ள ஆத்மாவும், 'ஸத்'தான பரமாத்மாவும் ஒன்றுதான் என்று விளக்கப்படுகிறது. வ்யவஹார நோக்கில் வெவ்வேறு உடல்களை ஏற்று, அவற்றுடன் ஸம்பந்தம் உள்ள ஆத்மா வெவ்வேறாகத் தோன்றுகிறான். உண்மையில் வெவ்வேறு அல்ல. ஒரே சேதனமான தத்வம்தான் அது. தூங்கும்போது ஏற்படும் கனவினால் தோற்றுவிக்கப்பட்ட உலகில் கனவு காண்பவனைத் தவிர வேறு யாரும் இல்லை. கனவில் காணப்படும் பற்பலவும் தூக்கத்தினால் உண்டானவை. விழித்துக் கொண்ட பிறகு, தான் மட்டுமே இருந்தது தெரிந்து விடுகிறது. அதுபோல வெளியே தோன்றும் பற்பலவும் அஞ்ஞானத்தினால் உண்டானவை. ஞானம் பிறந்துவிட்டால் 'பற்பல' என்பது ஒழிந்துவிடும்.

**கேள்வி:** 'தஸ்மாத்' என்று காரணத்தைக் காட்டி யுத்தம் செய் என்று ஆணையிடுவதன் பொருள் என்ன?

**பதில்:** உடல் அழியக்கூடியது; அதன் அழிவு தவிர்க்க முடியாதது என்பதும், ஆத்மா நித்யமானவன்; அவனுக்கு அழிவே கிடையாது என்பதும் தீர்மானமாகத் தெரிகிறது. ஆகவே போரை நினைத்துக் கொஞ்சம்கூட வருத்தப்படக் காரணமில்லை என்று தெளிவுபடுத்த, நீ யுத்தத்திலிருந்து பின்வாங்குவது சரியன்று என்று இடித்துரைக்கிறார்.

**பொருத்தம்: முன் ச்லோகத்தில் பகவான், ஆத்மா நித்யன் என்றும், விகாரமற்றவன் என்றும் நிரூபித்து அர்ஜுனனை 'யுத்தம் செய்வாயாக' என்று ஆணையிட்டார். 'நான் இவர்களைக் கொல்ல விரும்பவில்லை. அவர்கள் என்னைக் கொன்றால் அதுவே எனக்கு மேன்மை தரும்' என்று அர்ஜுனன் சொன்னதற்கு நேரிடையாகப் பதில் கூறவில்லை. ஆகவே, அடுத்த ச்லோகங்களில் தெளிவாக 'ஆத்மா' இறப்பதாகவோ அல்லது கொல்வதாகவோ நினைப்பது 'அஞ்ஞானம்தான்' என்று கூறி, அதற்கு ஸமாதானம் கூறுகிறார்—**

य एनं वेत्ति हन्तारं यश्चैनं मन्यते हतम्।
उभौ तौ न विजानीतो नायं हन्ति न हन्यते॥ १९॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ய ஏநம் வேத்தி ஹந்தாரம் யஶ்சைநம் மந்யதே ஹதம் ।

உபௌ₄ தௌ ந விஜாநீதோ நாயம் ஹந்தி ந ஹந்யதே ॥ 19 ॥ ‡

**ய:** – எவன், **ஏநம்** – இந்த ஆத்மாவை, **ஹந்தாரம்** – கொல்பவனாக, **வேத்தி** – நினைக்கிறானோ, **ச** – மற்றும், **ய:** – எவன், **ஏநம்** – இந்த ஆத்மாவை, **ஹதம்** – கொல்லப்பட்டவனாக, **மந்யதே** – நினைக்கிறானோ, **தௌ** – அந்த, **உபௌ₄** – இருவருமே, **ந விஜாநீத:** – அறியாதவர்கள். (ஏனெனில்), **அயம்** – இந்த ஆத்மா (உண்மையில்), **ந ஹந்தி** – யாரையும் கொல்வதில்லை, **ந ஹந்யதே** – யாராலும் கொல்லப்படுவதுமில்லை.

எவன் இந்த ஆத்மாவைக் கொல்பவனாக நினைக்கிறானோ மற்றும் எவன் இந்த ஆத்மாவைக் கொல்லப்பட்டவனாக நினைக்கிறானோ அந்த இருவருமே அறியாதவர்கள். ஏனெனில் இந்த ஆத்மா உண்மையில் யாரையும் கொல்வதுமில்லை; யாராலும் கொல்லப்படுவதுமில்லை.

**கேள்வி:** 'ஆத்மா இறப்பதும் இல்லை, யாரையும் கொல்வதும் இல்லை' என்றால் கொல்பவனோ, கொல்லப்படுபவனோ யார்?

**பதில்:** கண்ணுக்குப் புலப்படுகின்ற ஸ்தூல சரீரத்திலிருந்து ஸூக்ஷ்ம சரீரம் (நுட்பமான உடல்) பிரிவதுதான் மரணம். இறப்பது ஸ்தூல சரீரம்தான். அதனால்தான் முன்னமே 'அந்தவந்த இமே தேஹா:' (இவ்வுடல்கள் முடிவுள்ளவை) என்று கூறப்பட்டது. மனம், புத்தியுடன் கூடிய எந்த ஸ்தூல சரீரத்தின் செய்கையினால், மற்றொரு ஸ்தூல சரீரத்திலிருந்து உயிர்ப்பிரிவு ஏற்படுகிறதோ, அவனைக் கொல்பவன் என்று கூறுகிறோம். ஆகவே கொல்வதும் சரீரம்தான்; ஆத்மா அன்று. உடலின் தன்மைகளை தன் மேல் ஏறிட்டுக் கொண்டு அஞ்ஞானி ஆத்மாவைக் 'கொல்பவன்' (கர்த்தா) என்று நினைக்கிறான் (3/27). அதனால், அவற்றின் பயன்களை அவன் அனுபவிக்க வேண்டியதாகிறது.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் ஆத்மாவை யாரும் கொல்ல முடியாது என்று கூறினார். ஏன் கொல்ல முடியாது, அதற்கு என்ன காரணம் என்ற கேள்வி எழுகிறது. அதற்கு விடையாக பகவான் ஆத்மாவில் எந்தவிதமான மாறுதல்களும் கிடையா என்று அதன் ஸ்வரூபத்தைக் கூறுகிறார்—

न जायते म्रियते वा कदाचिन्नायं भूत्वा भविता वा न भूयः।
अजो नित्यः शाश्वतोऽयं पुराणो न हन्यते हन्यमाने शरीरे॥२०॥

ந ஜாயதே ம்ரியதே வா கதா₃சிந்—
நாயம் பூ₄த்வா ப₄விதா வா ந பூ₄ய: ।
அஜோ நித்ய: ஶாஶ்வதோऽயம் புராணோ
ந ஹந்யதே ஹந்யமாநே ஶரீரே ॥ 20 ॥

**அயம்** – இந்த ஆத்மா, **கதா₃சித்** – ஒருபொழுதும், **ந ஜாயதே** – பிறப்பதும் இல்லை. **வா** – அன்றியும், **ந ம்ரியதே** – இறப்பதும் இல்லை. **வா** – அவ்வாறே, **பூ₄த்வா** – முன்

‡ (கட உபநிஷத்தில் இதே கருத்துள்ள மந்த்ரம் கிட்டத்தட்ட இதே வடிவத்தில் காணப்படுகிறது.)

ஹந்தா சேந்மந்யதே ஹந்தும் ஹதஶ்சேந்மந்யதே ஹதம் ।
உபௌ₄ தௌ ந விஜாநீதோ நாயம் ஹந்தி ந ஹந்யதே ॥
(கடோ₂பநிஷத்₃ 1/2/19)

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உண்டாகி, **பூ₄ய:** – பிறகு, ந ப₄விதா – ஏற்படக்கூடியது என்பதும் இல்லை. (ஏனெனில்), **அயம்** – இந்த (ஆத்மா), **அஜ:** – பிறப்பற்றவன், **நித்ய:** – நித்யமானவன், **ஶாஶ்வத:** – எக்காலத்திலும் உள்ளவன், **புராண:** – பழமையானவன். **ஶரீரே** – உடல், **ஹந்யமானே** – கொல்லப்படும் போதும் (இந்த ஆத்மா), **ந ஹந்யதே** – கொல்லப்படுவதில்லை.

இந்த ஆத்மா ஒருபொழுதும் பிறப்பதும் இல்லை. அன்றியும் இறப்பதும் இல்லை. அவ்வாறே முன் உண்டாகிப் பிறகு ஏற்படக்கூடியது என்பதும் இல்லை. ஏனெனில் இந்த ஆத்மா பிறப்பற்றவன்; நித்யமானவன்; எக்காலத்திலும் உள்ளவன்; பழமையானவன். உடல் கொல்லப்படும் போதும் இந்த ஆத்மா கொல்லப்படுவதில்லை.

**கேள்வி:** 'ந ஜாயதே ம்ரியதே' என்ற இரு வினைச்சொற்களின் கருத்து என்ன?

**பதில்:** 'உண்டாவது', 'அழிவது' என்கிற முதலும், முடிவும் ஆகின்ற இரண்டு விகாரங்களும் ஆத்மாவிற்கு இல்லையென்று கூறி, 'உண்டாவது' முதலிய ஆறு விகாரங்களும் இல்லை என்பதை உறுதி செய்கிறார். அதன்பின் ஒவ்வொரு விகாரமும் கிடையா என்று கூறுவதற்காகத் தனித்தனியாகச் சொற்களையும் உபயோகிக்கிறார்.

**கேள்வி:** 'தோன்றுதல்' முதலிய பொருளின் ஆறு மாறுதல்கள் எவையெவை? இந்த ச்லோகத்தில் எந்தெந்த வார்த்தைகளின் மூலமாக ஆத்மாவிற்கு இம்மாறுதல்கள் இல்லை என்று உறுதிப்படுத்துகிறார்?

**பதில்:** எந்தப் பொருளுக்கும் ஆறு விகாரங்கள் உண்டு. அவை, 1) உற்பத்தி – உண்டாவது, 2) அஸ்தித்வ – உண்டான பிறகு இருப்பது, 3) வ்ருத்தி – வளர்வது, 4) விபரிணாமம் – மாறுவது, 5) அபக்ஷயம் – தேய்வது, 6) விநாஶம் – அழிவது என்பனவாகும். இவற்றில் 1) ஆத்மா 'அஜ:' – பிறப்பற்றவன் என்று கூறியதால் உற்பத்தி விகாரம் இல்லை. 2) 'அயம் பூத்வா பூய: ந பவிதா' – அதாவது இவன் பிறப்பெடுத்துப் பிறகு இருப்பவனாக இல்லை. ஆனால் ஸ்வபாவத்திலேயே ஸத் என்பதால், அஸ்தித்வம் என்ற இரண்டாவது விகாரமில்லை. 3) 'புராண:' – பழமையானவன், எப்போதும் ஒரேவிதமாக இருப்பவன் என்பதால் வளர்ச்சி என்ற மூன்றாவது விகாரம் கிடையாது. 4) 'ஶாஶ்வத:' – எப்பொழுதும் ஒரே நிலையில் இருப்பவன் என்றும் கூறுவதால், மாறுவது என்ற நான்காவது விகாரம் இல்லை. 5) 'நித்ய:' – இடையறாது இருப்பவன் என்பதால் அவனுக்குத் தேய்மானம் என்ற விகாரம் கிடையாது. 6) 'சரீரே ஹந்யமானே ந ஹந்யதே' – சரீரம் கொல்லப்பட்டாலும் அவன் கொல்லப்படுவதில்லை என்பதால் அழிவு என்ற ஆறாவது விகாரம் இல்லை. இவ்வாறு இந்த ஆறு விகாரங்களும் ஆத்மாவிற்கு இல்லை என்று விளக்கப்பட்டது.

**பொருத்தம்:** 19வது ச்லோகத்தில் ஆத்மா யாரையும் கொல்வதில்லை; யாராலும் கொல்லப்படுவதும் இல்லை என்று கூறினார். அதற்கு ஏற்றபடி 20வது ச்லோகத்தில் ஆத்மாவிற்கு விகாரங்களே கிடையாதாகையால், அவனைக் கொல்ல முடியாது என்று நிரூபித்தார். அவன் யாரையும் கொல்வதில்லை என்பதை இனி விளக்குகிறார்—

**वेदाविनाशिनं नित्यं य एनमजमव्ययम्।**
**कथं स पुरुषः पार्थ कं घातयति हन्ति कम्॥ २१॥**

**வேத₃ாவிநாஶிநம் நித்யம் ய ஏநமஜமவ்யயம் ।**

**கத₂ம் ஸ புருஷ: பார்த₂ கம் க₄ாதயதி ஹந்தி கம் ॥ 21 ॥**

பார்த₂ – ப்ருதையின் மைந்தனே அர்ஜுன! **ய: புருஷ:** – எந்த மனிதன், **ஏநம்** – இந்த ஆத்மாவை, **அவிநாஶிநம்** – அழிவற்றவன், **நித்யம்** – நித்யமானவன், **அஜம்** – பிறப்பற்றவன், **அவ்யயம்** – மாறுதலற்றவன் (என்று), **வேத₃** – அறிகிறானோ, **ஸ:** –

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அவன், கத₂ம் – எவ்வாறு, கம் – யாரை, க₄ாதயதி – கொல்லச் செய்கிறான்? (கத₂ம் – எப்படி), கம் – யாரை, ஹந்தி – கொல்கிறான்?

ப்ருதையின் (குந்தியின்) மைந்தனே அர்ஜுன! எந்த மனிதன் இந்த ஆத்மாவை அழிவற்றவன்; நித்யமானவன்; பிறப்பற்றவன்; மாறுதலற்றவன் என்று அறிகிறானோ அவன் எவ்வாறு யாரைக் கொல்லச் செய்கிறான்? எப்படி யாரைக் கொல்கிறான்?

**கேள்வி:** இந்த ச்லோகத்தில் பகவான் என்ன சொல்கிறார்?

**பதில்:** எவன் ஒருவன் ஆத்ம ஸ்வரூபத்தின் உண்மையை அறிகிறானோ, ஆத்மா பிறப்பற்றவன்; அழிவற்றவன்; தேய்மானம் இல்லாதவன்; நித்யன் என்ற அனுபவம் எவனுக்கு ஏற்படுகிறதோ, அவன் யாரை எப்படிக் கொல்வான்? எப்படிப் பிறரைக் கொல்விக்கிறான்? மனம், புத்தி, புலன்களோடு கூடின ஸ்தூல சரீரத்தின்மூலம் ஆத்ம தத்வத்தின் மற்றொரு ஸ்தூல சரீரத்தைக் கொல்லும்போது, நான் அவனைக் கொல்கிறேன் என்றோ, பிறரைவிட்டுக் கொல்லச் செய்கிறேன் என்றோ எப்படி நினைப்பான்? அவனுடைய ஞானத்தில் எங்கும் ஆத்ம தத்வமே நிறைந்திருக்கிறது — என்றுதானே துலங்கும். அது வதைப்பதும் இல்லை; வதைக்கச் செய்வதும் இல்லை; அழிப்பதுமில்லை; அழிக்கப்படுவதும் இல்லை. ஆகவே கொல்வது, கொல்லச் செய்வது, கொல்லப்படுவது எல்லாமே அஞ்ஞானத்தினால் ஆத்மாவின் செயல்களாக எண்ணப்படுகின்றன. உண்மையில் அப்படி இல்லை. ஆகவே யாருக்காகவும் எவ்விதமும் சோகப்படவேண்டியது இல்லை.

**பொருத்தம்:** இங்கு ஒரு கேள்வி பிறக்கிறது. ஆத்மா நித்யமானவன். அவன் என்றும் அழிவதில்லை. அதற்காக வருந்தத் தேவையில்லை. உடல் அழியக்கூடியது. அது அழிவது நிச்சயம். அதற்காகவும் வருந்த வேண்டியதில்லை. இதெல்லாம் சரிதான். ஆனால், ஆத்மா ஓர் உடலைவிட்டுப் பிரிந்து மறு உடலுடன் ஸம்பந்தம் கொள்ளும்போது மிகவும் துன்பமாக இருக்கிறதே – அதற்காக வருந்தாமல் இருக்க முடியுமா? அது எப்படி அநுசிதம் ஆகும்? இதைப் பற்றிக் கூறுகிறார்—

वासांसि जीर्णानि यथा विहाय नवानि गृह्णाति नरोऽपराणि।
तथा शरीराणि विहाय जीर्णान्यन्यानि संयाति नवानि देही॥ २२॥

**வாஸாம்ஸி ஜீர்ணாநி யத₂ா விஹாய**
**நவாநி க்₃ருஹ்ணாதி நரோऽபராணி ।**
**தத₂ா ஶரீராணி விஹாய ஜீர்ணா–**
**ந்யந்யாநி ஸம்யாதி நவாநி தே₃ஹீ ॥ 22 ॥**

யத₂ா – எப்படி, நர: – மனிதன், ஜீர்ணாநி – (நைந்துபோன) பழைய, வாஸாம்ஸி – துணிகளை, விஹாய – நீத்துவிட்டு, அபராணி – வேறு, நவாநி – புதிய (துணிகளை), க்₃ருஹ்ணாதி – எடுத்துக் கொள்கிறானோ, தத₂ா – அவ்வாறே, தே₃ஹீ – ஜீவாத்மா, ஜீர்ணாநி – (நைந்துபோன) பழைய, ஶரீராணி – உடல்களை, விஹாய – நீத்துவிட்டு, அந்யாநி – வேறு, நவாநி – புதிய (உடல்களை), ஸம்யாதி – அடைகிறான்.

எப்படி மனிதன் நைந்துபோன பழைய துணிகளை நீத்துவிட்டு வேறு புதிய துணிகளை எடுத்துக் கொள்கிறானோ, அவ்வாறே ஜீவாத்மா நைந்துபோன பழைய உடல்களை நீத்து விட்டு வேறு புதிய உடல்களை அடைகிறான்.

**கேள்வி:** பழைய துணிகளைக் களைந்து புதிய துணிகளை உடுத்துவதில் மனிதனுக்கு ஸுகம் இருக்கிறது. பழைய உடலைவிடுவதோ, புதிய உடலைச் சேர்வதோ துன்பமாக அல்லவா இருக்கிறது? எப்படி இந்த உதாரணம் பொருந்தும்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** பழைய உடலை விடுவதோ, புதிய உடலில் புகுவதோ அஞ்ஞானிக்குத்தான் துன்பமாக இருக்கும். விவேகமுள்ளவனுக்கு அப்படி அன்று. தாய், குழந்தைக்குப் பழைய அழுக்கான உடுப்பைக் கழற்றிவிட்டுப் புதியதை அணிவிக்கிறாள். அப்போது குழந்தை அழுகிறது. ஆனால், தாயார் குழந்தை அழுவதைப் பொருட்படுத்துவதில்லை. குழந்தைக்கு ஹிதம் என்று புதியதை மாற்றிக் கொடுக்கிறாள். அதுபோல பகவானும், ஜீவனுக்கு ஹிதமாக அவன் அழுவதைக் கவனியாமல், அவன் உடலை மாற்றிக் கொடுக்கிறார். ஆகவே, இந்த உதாரணம் முற்றும் பொருந்தும்.

**கேள்வி:** இங்கே உடலுக்கு 'ஜீர்ணானி' என்ற அடைமொழி கொடுக்கிறார். ஆனால் கிழவனான பிறகுதான் (உடல் நலிந்த பிறகுதான்) மனிதன் இறப்பான் என்று விதியில்லை. நல்ல வாலிபப்பருவத்திலும், குழந்தைப்பருவத்திலும்கூட இறக்கிறான். ஆகவே, இந்த உதாரணம் யுக்திக்குப் பொருந்தாது.

**பதில்:** இங்கே 'ஜீர்ணானி' என்பதற்கு எண்பது அல்லது நூறு வயது ஆனபிறகு என்ற கருத்து இல்லை. முன்வினைப்பயனாக ஒருவன் குழந்தைப்பருவத்திலோ, இளமையிலோ எந்த வயதிலும் இறக்கலாம். அதுவே அவனுக்கு ஆயுள். 'உடல் நலிந்துவிட்டது' என்பதற்கு ஆயுள் முடிந்துவிட்டது என்று பொருள். ஆகவே, இந்த உதாரணம் சாலப் பொருந்தும்.

**கேள்வி:** இங்கு 'வாஸாம்ஸி' என்றும், 'ஶரீராணி' என்றும் பன்மையில் கூறப்படுகின்றன. உடைமாற்றிக் கொள்பவன் ஒரே சமயத்தில் மூன்று, நான்கு உடைகளை (வேஷ்டி, அங்கவஸ்த்ரம் முதலியவற்றை) மாற்றிக் கொள்கிறான். ஆகவே, அங்கு பன்மை சரியாக இருக்கிறது. ஆனால், ஜீவாத்மா ஒரு சமயத்தில் ஒரு உடலை உகுத்து விட்டு, உடன் வேறு ஓர் உடலைத்தானே பெறுகிறான். ஒரே சமயத்தில் பல உடல்களை விடுவதோ, பெறுவதோ கிடையாதே! இங்கு உடல்கள் என்ற பன்மை எப்படிப் பொருந்தும்?

**பதில்:** (அ) ஜீவன் இதுவரை எவ்வளவு உடல்களை விட்டுப் புதிய உடல்களை அடைந்திருக்கிறானோ, அவற்றுக்குக் கணக்குக் கிடையாது. வரும் காலத்திலும், ப்ரம்ம ஞானம் ஏற்படும்வரை இன்னும் எத்தனைப் பழைய உடல்களை விட்டுப் புதிய உடல்களை அடையப் போகிறானோ, அதுவும் தெரியாது. ஆகவே பன்மை சரிதான். (ஆ) ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்று ஒவ்வொரு ஜீவனுக்கும் மூன்று உடல்கள் உள. ஜீவன் இந்த உடலைவிட்டு அடுத்த உடலை அடையும்போது இந்த மூன்று உடல்களும் மாறுகின்றன. மனிதன் எப்படிச் செயல்படுகிறானோ, அதற்கு ஏற்றவாறு ஸ்வபாவம் மாறுகிறது. ஸத்வம், ராஜஸம், தாமஸம் ஆகிய குணங்களில் ஏற்றத்தாழ்வினால் ஒவ்வொருவருக்கும் குணமயமான, அவனுக்கே உரித்தான, தனித்தன்மையுடைய வ்யஷ்டி ப்ரக்ருதி அமைகிறதே, அது காரண சரீரம். இதையே ஸ்வபாவம் என்றழைக்கிறார்கள். ஸ்வபாவத்திற்கு ஏற்றவாறுதான் இறக்கும்போது மனதில் எண்ணமும் உண்டாகிறது. அதன்படிதான் அவனுக்கு ஸூக்ஷ்ம சரீரம் அமைகிறது. காரணம், ஸூக்ஷ்மம் என்ற இந்த இரண்டு சரீரங்களுடன் இந்த உடலைவிட்டுப் பிரிந்த பின்னர், ஸூக்ஷ்மத்திற்கு ஏற்றவாறு அடுத்த பிறவியில் ஸ்தூல சரீரத்தைப் பெறுகிறான் (காரண சரீரத்திற்கு ஏற்றவாறு அடுத்த உடலில் ஸ்வபாவம் அமைகிறது). ஆகவே ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்கள் மாறுகின்றனவாதலால் பன்மை இங்குப் பொருத்தம்தான்.

**கேள்வி:** ஆத்மாவோ அசையாதவன்; அவனுக்குப் போக்குவரத்து கிடையாது. எனவே, ஜீவாத்மா (தேஹீ) அடுத்த உடலைப் போய்ச் சேர்கிறான் என்று சொல்வது எப்படிப் பொருந்தும்?

**பதில்:** உண்மையில் ஆத்மா அசைவற்றவன்; செயலற்றவன்தான். எந்த நிலையிலும் அவனுக்குப் போக்குவரத்து கிடையாதுதான். ஆனால், ஒரு குடத்தை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குக் கொண்டு போகும்போது அதற்குள் இருக்கும் ஆகாயம் போகவில்லையானாலும், குடத்தின் ஸம்பந்தத்தினால் அது போவதாக நினைக்கிறோம். அதுபோல ஸூக்ஷ்ம சரீரம் போகும்போது அத்துடன் இணைந்த ஆத்மாவும் போவதாகத் தோன்றுகிறது. இதையே உலகத்தார் புரிந்து கொள்ளும் வகையில் உயிர் (ஜீவன்) வந்து

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



போவதாகக் கற்பனை செய்து கூறப்பட்டது. இங்கு 'தேஹீ' (சரீரத்தை உடையவன்) என்றால் தேஹாபிமானம் கொண்ட சேதனன் என்று பொருள். ஆகவே, தேஹத்தின் ஸம்பந்தத்தால் அவனிடம் போக்குவரத்து என்ற தோற்றம் ஏற்படுகிறது. இதையே தேஹீ அடுத்த உடலை அடைகிறான் என்று சொல்கிறார்.

**கேள்வி:** துணிகளைச் சொல்லும்போது 'க்ருஹ்ணாதி' என்றும், உடலைப் பற்றிச் சொல்லும்போது 'ஸம்யாதி' என்றும் கூறுகிறாரே. ஏன் இந்த மாறுபாடு?

**பதில்:** 'க்ருஹ்ணாதி' என்பதன் முக்ய பொருள் 'ஏற்பது' என்பதாகும். 'ஸம்யாதி' என்பதன் முக்ய பொருள் 'செல்லுதல்' என்பதாகும். துணியை ஏற்று அணிகிறான். எனவே, 'க்ருஹ்ணாதி' என்ற சொல் பொருந்தும். உடலை விட்டு இன்னொரு உடலைச் சென்று அடைவதாகத் தோன்றுகிறது. எனவே, 'ஸம்யாதி' என்ற சொல் பொருந்தும்.

**கேள்வி:** 'நர:' என்றும், 'தேஹீ' என்றும் ஏன் சொல்கிறார்? ஒரு சொல்லே போதுமே?

**பதில்:** 'நர:' என்பது மனிதனை மட்டும் குறிக்கும். 'தேஹீ' என்பது எல்லா உயிரினங்களையும் குறிக்கும். இரண்டும் பொருள் பொதிந்தவை. ஆடையை அணிவது, நைந்தது என்று துறத்தல் இவற்றை மனிதன்தான் செய்கிறான்; மற்ற ப்ராணிகள் அல்ல. ஆகவே, அங்கு நரனைச் சொன்னார். ஆனால், உடல்களின் போக்குவரத்து தேஹாபிமானம் கொண்ட எல்லா ஜீவர்களுக்கும் உண்டு. ஆகவே, அங்கு 'தேஹீ' என்று சொன்னார். அதனால் ஆடையைப் பற்றிச் சொல்லும்போது 'நரன்' என்றும், உடலைப் பற்றிச் சொல்லும் போது 'தேஹீ' என்றும் கூறுகிறார்.

**பொருத்தம்:** இப்படி ஓர் உடலைவிட்டு மறு உடலை அடைவதற்கு வருந்த வேண்டாம் என்று சொல்லிவிட்டு, ஆத்மாவின் ஸ்வரூபம் எளிதாகப் புரியாதாகையால், மேலும் மூன்று ச்லோகங்களில் வேறு வழியில் ஆத்மா நித்யனென்றும், உருவமற்றவனென்றும், விகாரமற்றவனென்றும் நிரூபித்து, எனவே அவன் அழிவான் என்று நினைத்து வருந்துவது உசிதமன்று என்று கூறுகிறார்—

**नैनं छिन्दन्ति शस्त्राणि नैनं दहति पावकः ।**
**न चैनं क्लेदयन्त्यापो न शोषयति मारुतः ॥ २३ ॥**

**நைநம் சிந்த₂ந்தி ஶஸ்த்ராணி நைநம் த₃ஹதி பாவக: ।**
**ந சைநம் க்லேத₃யந்த்யாபோ ந ஶோஷயதி மாருத: ॥ 23 ॥**

**ஏநம்** – இந்த ஆத்மாவை, **ஶஸ்த்ராணி** – ஆயுதங்கள், **ந சிந்த₂ந்தி** – வெட்டுவதில்லை. **ஏநம்** – இவனை, **பாவக:** – நெருப்பு, **ந த₃ஹதி** – எரிப்பதில்லை. **ஏநம்** – இவனை, **ஆப:** – தண்ணீர், **ந க்லேத₃யந்தி** – நனைப்பதில்லை. **ச** – மேலும், **மாருத:** – காற்று, **ந ஶோஷயதி** – உலர வைப்பதில்லை.

இந்த ஆத்மாவை ஆயுதங்கள் வெட்டுவதில்லை. இவனை நெருப்பு எரிப்பதில்லை. இவனைத் தண்ணீர் நனைப்பதில்லை. மேலும் காற்று உலர வைப்பதில்லை.

**கேள்வி:** இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

**பதில்:** அர்ஜுனன் ஆயுதங்களைக் கொண்டு பெரியோர்களையும், உற்றார்–உறவினர்களையும் தாக்கினால் அவர்கள் அழிந்து போவார்களே என்று வருத்தப்படுகிறார். அவர் வருத்தத்தை அகற்றுவதற்காகவே பகவான் இந்த ச்லோகத்தில், 'மண் முதலிய நான்கு பூதங்களும் ஆத்மாவை நாசம் செய்யும் சக்தி படைத்தவையல்ல; ஆத்மா விகாரமற்றவன்; நித்யமானவன்; உருவமற்றவன்' என்பதை விளக்குகிறார். ஆயுதங்களால் உடலை வெட்டினாலும் ஆத்மா வெட்டுப்படுவதில்லை. அக்னியஸ்த்ரத்தை ப்ரயோகம் செய்து உடலைப் பொசுக்கினாலும் ஆத்மா எரிந்து போவதில்லை. வருணாஸ்த்ரம் மூலம் உடலை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நனைத்தாலும் ஆத்மா நனைவதில்லை. வாயு அஸ்த்ரம் மூலமாக உடலை வற்ற வைத்தாலும் ஆத்மா வறண்டு போவதில்லை. உடல் அநித்யமானது; உருவம் உள்ளது. ஆத்மா நித்யமானவன்; உருவமற்றவன். ஆகவே, ப்ருத்வீ, வாயு, அக்னி, ஜலம் இவற்றின் தத்வத்தினால் ஆகிய எந்தவிதமான அஸ்த்ரசஸ்த்ரங்களை ப்ரயோகம் செய்தாலும், ஆத்மாவுக்கு அழிவை ஏற்படுத்த முடியாது.

**अच्छेद्योऽयमदाह्योऽयमक्लेद्योऽशोष्य एव च।**
**नित्यः सर्वगतः स्थाणुरचलोऽयं सनातनः॥ २४॥**

**அச்சேத்₃யோऽயமதா₃ஹ்யோऽயமக்லேத்₃யோऽஶோஷ்ய ஏவ ச ।**

**நித்ய: ஸர்வக₃த: ஸ்தா₂ணுரசலோऽயம் ஸநாதந: ॥ 24 ॥**

**அயம்** – இந்த ஆத்மா, **அச்சேத்₃ய:** – வெட்டுப்பட முடியாதவன். **அயம்** – இந்த ஆத்மா, **அதா₃ஹ்ய:** – எரிக்கப்பட முடியாதவன், **அக்லேத்₃ய:** – நனைக்கப்பட முடியாதவன். **ச** – மேலும், **ஏவ** – ஸந்தேஹமின்றி, **அஶோஷ்ய:** – உலர்த்தப்பட முடியாதவன். (மற்றும்), **அயம்** – இந்த ஆத்மா, **நித்ய:** – நித்யமானவன், **ஸர்வக₃த:** – எங்கும் நிறைந்தவன், **அசல:** – இயக்கமற்றவன், **ஸ்தா₂ணு:** – ஸ்திரமாக இருப்பவன். (மேலும்), **ஸநாதந:** – ஶாஸ்வதமானவன்.

இந்த ஆத்மா வெட்டுப்பட முடியாதவன்; எரிக்கப்பட முடியாதவன்; நனைக்கப்பட முடியாதவன்; மேலும் ஸந்தேஹமின்றி உலர்த்தப்பட முடியாதவன்; மற்றும் இந்த ஆத்மா நித்யமானவன்; எங்கும் நிறைந்தவன்; இயக்கமற்றவன்; ஸ்திரமாக இருப்பவன்; ஶாஸ்வதமானவன்.

**கேள்வி:** முன் ச்லோகத்தில் ஆயுதங்களால் அழிக்க முடியாதவன் என்றெல்லாம் சொல்லிவிட்டாரே. மறுபடியும் இந்த ச்லோகத்தில் இரண்டாவது தடவையாக வெட்டுப்படாதவன்; எரிக்கப்படாதவன்; நனைக்கப்படாதவன்; உலர்த்தப்படாதவன் என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த ச்லோகத்தில் அப்படி வெட்டுப்பட முடியாதவன் என்று கூறுவதற்கெல்லாம் காரணம் கூறுகிறார். ஆத்மா வெட்டுப்படாதவன், எரிபடாதவன், நனையாதவன், உலர்த்தப்பட முடியாதவன்; அவன் துண்டுபடாதவன்; புலப்படாதவன்; ஒரே அனுபவத்தைத் தரக்கூடியவன்; விகாரமற்றவன். ஆகவே அவனை அழிப்பதற்கு சஸ்த்ரம் முதலியவற்றிற்குச் சக்தி கிடையாது.

**கேள்வி:** வெட்டுப்படாதவன் என்றெல்லாம் சொல்லி ஆத்மா நித்யன் என்று நிரூபித்தாகிவிட்டதே. மறுபடியும் 'நித்யன், எங்கும் நிறைந்தவன், ஸநாதனமானவன்' என்றெல்லாம் சொல்வானேன்?

**பதில்:** வெட்டுப்படாதவன் முதலிய சொற்களால் கூறப்பட்ட அழியாத்தன்மை ஆகாசத்திற்கும் கூறப்படலாம். ஆகாசம் எல்லா பூதங்களுக்கும் காரணம். எங்கும் அது வ்யாபித்திருக்கிறது. ஆகவே, மண் தத்வத்தினால் ஏற்பட்ட ஆயுதங்கள் ஆகாசத்தை வெட்ட முடியாது; நெருப்பினால் அதைச் சுட முடியாது; நீரினால் அதை நனைக்க முடியாது; காற்றினால் உலர வைக்க முடியாது. ஆத்மா அழிவற்றவன் என்பதற்கும், ஆகாசம் அழிக்கப்பட முடியாதது என்பதற்கும் மிகவும் வித்யாஸம் உண்டு. இதை நிரூபிப்பதற்காகவே, 'ஆத்மா நித்யன்; எங்கும் நிறைந்தவன்; ஸநாதனமானவன்' என்று கூறினார். ஆகாசம் நித்யம் அன்று. மஹாப்ரளயத்தில் அதற்கும் அழிவுண்டு. ஆத்மாவுக்கு எக்காலத்திலும் அழிவு கிடையாது. ஆகவே அவன் நித்யன். ஆகாசம் எங்கும் நிறை பொருள் அன்று. தன்னளவில் மட்டுமே ஆகாசம் நிறைந்திருக்கிறது. ஆனால் ஆத்மா எங்கும் நிறைந்தவன். ஆகாசம் ஸநாதனம் அன்று; என்றும் இருப்பதும் அன்று. அதற்கு ஆரம்பம் உண்டு. ஆத்மாவுக்கு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஆரம்பம் கிடையாது. இப்படி மேலே சொன்ன சொற்களால் ஆகாசத்திற்கும், ஆத்மாவுக்கும் உள்ள வேறுபாடுகளைச் சுட்டிக் காட்டினார்.

**கேள்வி:** 'ஆத்மா ஸ்திரமாக இருப்பவன், அசைவற்றவன்' என்பதன் கருத்து என்ன?

**பதில்:** ஆத்மா அசைவதோ, நகருவதோ கிடையாது. இருந்த இடத்தைவிட்டு நகராத வஸ்து அசையலாம். ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்வது 'செல்லுதல்' ஆகும். இந்த இரண்டு செயல்களும் ஆத்மாவுக்குக் கிடையாது. அவன் அசைவதும் இல்லை; நகருவதும் இல்லை. ஏனெனில் அவன் எங்கும் நிறைந்திருக்கிறான். அவன் இல்லாத இடமே இல்லை.

अव्यक्तोऽयमचिन्त्योऽयमविकार्योऽयमुच्यते ।
तस्मादेवं विदित्वैनं नानुशोचितुमर्हसि ॥ २५ ॥

**அவ்யக்தோऽயமசிந்த்யோऽயமவிகார்யோऽயமுச்யதே ।**
**தஸ்மாதே₃வம் விதி₃த்வைநம் நாநுஶோசிதுமர்ஹஸி ॥ 25 ॥**

**அயம்** – இந்த ஆத்மா, **அவ்யக்த:** – புலன்களுக்கும் புலப்படாதவன்; **அயம்** – இந்த ஆத்மா, **அசிந்த்ய:** – மனதால் சிந்திக்க முடியாதவன்; (மேலும்), **அயம்** – இந்த ஆத்மா, **அவிகார்ய:** – மாறுதல் இல்லாதவன் (என்று), **உச்யதே** – கூறப்படுகிறது. **தஸ்மாத்** – ஆகையால் (அர்ஜுன!), **ஏநம்** – இந்த ஆத்மாவை, **ஏவம்** – மேலே கூறியவாறு, **விதி₃த்வா** – அறிந்து கொண்டு (நீ), **அநுஶோசிதும்** – வருத்தப்படுவது, **ந அர்ஹஸி** – நன்றன்று.

இந்த ஆத்மா புலன்களுக்கும் புலப்படாதவன்; மனதால் சிந்திக்க முடியாதவன்; மேலும் மாறுதல் இல்லாதவன் என்று கூறப்படுகிறது. ஆகையால் அர்ஜுன! இந்த ஆத்மாவை மேலே கூறியவாறு அறிந்து கொண்டு நீ வருத்தப்படுவது உசிதமில்லை.

**கேள்வி:** ஆத்மாவை 'அவ்யக்த:' என்றும், 'அசிந்த்ய:' என்றும் சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** ஆத்மாவைப் புலன்கள் மூலம் அறிய முடியாது. ஏனெனில், அவன் 'அவ்யக்த:' (புலன்களுக்குப் புலப்படாதவன்). ஆத்மாவை மனதினாலும் நினைக்க முடியாது. அதனால், அவனை 'அசிந்த்ய:' (மனதால் சிந்திக்க முடியாதவன்) என்று சொன்னார்.

**கேள்வி:** ஆத்மா 'அவிகார்ய:' (மாறுதல் இல்லாதவன்) என்று சொல்வதற்கு என்ன பொருள்?

**பதில்:** ஆத்மா மாறுதல் இல்லாதவன் என்று கூறுவதால், ஆத்மாவின் தனித்தன்மையை எடுத்துரைக்கிறார். ப்ரக்ருதியும் அவ்யக்தம்தான். புலன்கள், மனம் எல்லாம் ப்ரக்ருதியின் வெளிப்பாடுகள். அவை தமக்குக் காரணமான ப்ரக்ருதியை விளக்கச் சக்தியற்றவை. ஆகவே ப்ரக்ருதியும்கூடப் புலப்படக் கூடியது அன்று; எண்ணத்திற்கும் அகப்பட்டதன்று; ஆனால் விகாரமற்றதன்று. விகாரமடையக் கூடியது. ஆத்மாவுக்கு எந்த நிலையிலும் விகாரம் ஏற்படாது. ஆகவே, ப்ரக்ருதியிலிருந்து ஆத்மா முற்றிலும் வேறுபட்டவன்.

**கேள்வி:** 'இந்த ஆத்மாவை மேற்சொன்னவாறு அறிந்து கொண்டுவிட்டால், நீ சோகப்பட வேண்டியதில்லை' என்று கூறுவதற்கு என்ன பொருள்?

**பதில்:** ஆத்மா மேலே கூறியபடி நித்யமானவன்; எங்கும் நிறைந்தவன்; அசையாதவன்; ஸநாதனமானவன்; புலன்களுக்குத் தோன்றாதவன்; எண்ணத்திற்கு அகப்படாதவன்; விகாரமற்றவன் என்று தெரிந்து கொண்ட பிறகு அதன் பொருட்டு சோகப்பட வேண்டி இராது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொருத்தம்: மேலே சொன்ன ச்லோகங்களில் ஆத்மா பிறப்பற்றவன், அழிவற்றவன் என்றெல்லாம் சொல்லி, அதற்காக வருந்த வேண்டியதில்லை என்று பகவான் சொன்னார். அடுத்த இரு ச்லோகங்களில் ஆத்மாவுக்குப் பிறப்பு உண்டு, இறப்பு உண்டு என்று ஒரு பேச்சுக்கு வைத்துக் கொண்டாலும், அதற்காக வருந்துவது உசிதமன்று என்று வலியுறுத்துகிறார்—

**अथ चैनं नित्यजातं नित्यं वा मन्यसे मृतम्।**
**तथापि त्वं महाबाहो नैवं शोचितुमर्हसि॥ २६॥**

**அத₂ சைநம் நித்யஜாதம் நித்யம் வா மந்யஸே ம்ருதம் ।**

**தத₂ாபி த்வம் மஹாப₃ாஹோ நைவம் ஶோசிதுமர்ஹஸி ॥ 26 ॥**

**அத₂ ச** – ஆயினும், **த்வம்** – நீ, **ஏநம்** – இந்த ஆத்மாவை, **நித்யஜாதம்** – எப்பொழுதும் பிறந்து கொண்டேயிருப்பவன், **வா** – அவ்வாறே, **நித்யம்** – எப்பொழுதும், **ம்ருதம்** – இறந்து கொண்டே இருப்பவன் (என்று), **மந்யஸே** – கருதினால், **தத₂ாபி** – அப்படியானாலும்கூட, **மஹாப₃ாஹோ** – நீண்ட கைகளை உடையோனே! (நீ), **ஏவம்** – இவ்வாறு, **ஶோசிதும்** – வருத்தப்படுவது, **ந அர்ஹஸி** – நன்றன்று.

ஆயினும் இந்த ஆத்மாவை எப்பொழுதும் பிறந்து கொண்டேயிருப்பவன். அவ்வாறே எப்பொழுதும் இறந்து கொண்டே இருப்பவன் என்று நீ கருதினாலும்கூட நீண்ட கைகளை உடையோனே! நீ இவ்வாறு வருத்தப்படுவது தக்கதன்று.

**கேள்வி:** *'அத', 'ச' என்று சொல்வதன் பொருள் என்ன? 'ஆத்மா பிறப்பதாகவும், இறப்பதாகவும் நினைத்தாயானால் நீ வருந்தத் தேவையில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** 'அத', 'ச' என்றால், ஒரு பேச்சுக்கு – வ்யவஹாரத்திற்காக வைத்துக் கொள்வது என்று பொருள். உண்மையில் ஆத்மாவுக்குப் பிறப்பும், இறப்பும் இல்லை. ஆனால், ஆத்மா பிறப்பதாகவும், இறப்பதாகவும் நீ நினைத்துக் கொண்டாலும் அதாவது உடலுடன் கூடப் பிறந்து இறப்பதாக நினைத்துக் கொண்டாலும், (முன் அத்யாயத்தில் 28 முதல் 47வது ச்லோகம் வரை கூறியபடி) நீ வருந்த வேண்டாம்.

**जातस्य हि ध्रुवो मृत्युर्ध्रुवं जन्म मृतस्य च।**
**तस्मादपरिहार्येऽर्थे न त्वं शोचितुमर्हसि॥ २७॥**

**ஜாதஸ்ய ஹி த்₄ருவோ ம்ருத்யுர்த்₄ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச ।**

**தஸ்மாத₃பரிஹார்யே஽ர்தே₂ ந த்வம் ஶோசிதுமர்ஹஸி ॥ 27 ॥**

**ஹி** – ஏனெனில் (இதன்படி), **ஜாதஸ்ய** – பிறந்தவனுக்கு, **ம்ருத்யு:** – இறப்பு, **த்₄ருவ:** – நிச்சயமானது. **ம்ருதஸ்ய ச** – இறந்தவனுக்கும், **ஜந்ம** – பிறப்பு, **த்₄ருவம்** – நிச்சயம். **தஸ்மாத்** – ஆகவே, **அபரிஹார்யே அர்தே₂** – தவிர்ப்பதற்கான உபாயமே இல்லாத விஷயத்தில், **த்வம்** – நீ, **ஶோசிதும்** – துயரப்படுவது, **ந அர்ஹஸி** – நன்றன்று.

ஏனெனில் இதன்படி பிறந்தவனுக்கு இறப்பு நிச்சயமானது. இறந்தவனுக்கும் பிறப்பு நிச்சயம். ஆகவே தவிர்ப்பதற்கான உபாயமே இல்லாத விஷயத்தில் நீ துயரப்படுவது தக்கதன்று.

**கேள்வி:** *'ஹி' (ஏனெனில்) என்றால் என்ன கருத்து?*

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** ஏனெனில் என்று தொடங்கிக் காரணத்தைக் கூறுகிறார். முன் ச்லோகத்தில் எந்த அபிப்ராயத்தில் பகவான் வருந்த வேண்டியதில்லை என்று சொன்னாரோ, அந்த அபிப்ராயத்தை யுக்திபூர்வமாக நிரூபிக்கிறார்.

**கேள்வி:** எவனுக்குப் பிறப்பு உண்டோ, அவனுக்கு இறப்பு நிச்சயம். அது சரி. பிறந்தவன் எப்பொழுதும் இருப்பதில்லை. இதை எல்லோரும் அறிவார்கள். ஆனால், இறந்தவன் பிறக்கத்தான் செய்கிறான் என்று எப்படி உறுதியாகக் கூற முடியும்? மோக்ஷமடைந்தவனுக்கு மறுபிறவி கிடையாது என்பது ப்ரஸித்தமாயிற்றே. (4/9, 5/17, 8/15,16,21.....)

**பதில்:** இங்கு உண்மையான ஸித்தாந்தத்தைப் பற்றி பகவான் பேசவில்லை. பகவான் அஞ்ஞானிகளின் நோக்கில் இப்படிப் பேசுகிறார். அவர்கள் ஆத்மா பிறந்து, இறப்பதாக நினைக்கிறார்கள். அவர்களின் அபிப்ராயப்படி இறக்கும் தன்மையுடையவன் பிறக்கத்தான் செய்வான் என்பது நிச்சயம். அவர்களின் கருத்துப்படி மோக்ஷம் என்பது யாருக்கும் கிடையாது. மோக்ஷம் உண்டு என்று ஏற்றுக் கொள்பவர்கள் வாஸ்தவமான ஸித்தாந்தப்படி ஆத்மா பிறக்கிறான்–இறக்கிறான் என்றெல்லாம் கருத மாட்டார்கள். பிறப்பு–இறப்புகள் அஞ்ஞானத்தினால்தான் தோன்றுகின்றன என்று கருதுவார்கள்.

**கேள்வி:** 'ஆகையால் தவிர்க்க முடியாத விஷயத்தில்' என்றால் என்ன பொருள்? ஏன் அவர்கள் விஷயத்தில் வருந்தக் கூடாது?

**பதில்:** 'ஆகையால்' என்று கூறுவதன் மூலம் காரணத்தைக் குறிப்பிடுகிறார். மேற்கூறிய கருத்துப்படி ஆத்மா பிறக்கிறான்–இறக்கிறான் என்று தீர்மானமாகிவிட்டபடியால் அது தவிர்க்க முடியாதது ஆகிவிடுகிறது. அதை மாற்றுவதும் முடியாத கார்யம். எந்த உபாயமும் இல்லாத விஷயத்தில் வருத்தப்பட்டு என்ன பயன்? ஆகவே இந்த நோக்கிலும் நீ வருந்துவது உசிதமன்று.

**பொருத்தம்:** முன் ச்லோகங்களால் ஆத்மா நித்யமானவன்; பிறப்பற்றவன்; அழிவற்றவன் என்று நினைப்பவர்கள், ஆத்மா பிறக்கிறான்; இறக்கிறான் என்று நினைப்பவர்கள் – இந்த இரு தரப்பினர் கருத்துப்படியும் ஆத்மாவுக்காக வருத்தப்பட வேண்டியதில்லை என்று நிரூபிக்கப்பட்டது. அடுத்த ச்லோகத்தில் உயிரினங்களின் உடல்களுக்காகவும் வருந்த வேண்டியதில்லை என்று கூறுகிறார்—

**अव्यक्तादीनि भूतानि व्यक्तमध्यानि भारत।**
**अव्यक्तनिधनान्येव तत्र का परिदेवना॥ २८॥**

**அவ்யக்தாதீ₃நி பூ₄தாநி வ்யக்தமத்₄யாநி பா₄ரத ।**

**அவ்யக்தநித₄நாந்யேவ தத்ர கா பரிதே₃வநா ॥ 28 ॥**

**பா₄ரத** – அர்ஜுன! **பூ₄தாநி** – எல்லா உயிரினங்களும், **அவ்யக்தாதீ₃நி** – பிறப்பிற்குமுன் தென்படாதவையாக இருந்தன. (மேலும்), **அவ்யக்தநித₄நாநி ஏவ** – இறப்பிற்குப் பின்னும் தென்படாமலே போகக்கூடியன. **வ்யக்தமத்₄யாநி** – நடுவில் (மட்டுமே) தென்படுகின்றன. (பிறகு), **தத்ர** – இந்நிலையில், **கா பரிதே₃வநா** – ஏன் வருத்தப்பட வேண்டும்?

அர்ஜுன! எல்லா உயிரினங்களும் பிறப்பிற்குமுன் தென்படாதவையாக இருந்தன. மேலும் இறப்பிற்குப் பின்னும் தென்படாமலே போகக்கூடியன. நடுவில் மட்டுமே தென்படுகின்றன. பிறகு இந்நிலையில் ஏன் வருத்தப்பட வேண்டும்?

**கேள்வி:** ச்லோகத்தில் 'பூ₄தாநி' என்று எதைக் கூறுகிறார்? அவற்றை முன் காணப்படாதவை, பின்னும் காணப்படாதவை, நடுவில் காணப்படுபவை என்று ஏன் கூறுகிறார்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** 'பூதாநி' என்ற சொல் உயிரினங்கள் அனைத்தையும் குறிக்கும். முன் காணப்படாதவை என்றால் பிறப்பதற்கு முன் அவற்றுக்கு இப்பொழுது உண்டாகியிருக்கும் ஸ்தூல உடலுடன் ஸம்பந்தமில்லை. பின் காணப்படாதவை என்றால் இறந்தபின் இந்த ஸ்தூல உடல்களுடன் உள்ள ஸம்பந்தம் விட்டுப்போய் விடுகிறது என்று பொருள். நடுவில் காணப்படுபவை என்றால் பிறப்பிலிருந்து இறப்பு வரைதான் இவை காணப்படுகின்றன; இந்த உடல்களுடன் ஸம்பந்தப்படுகின்றன என்று பொருள்.

**கேள்வி:** 'இந்த நிலையில் ஏன் வருத்தம் கொள்ளவேண்டும்' என்றால் என்ன கருத்து?

**பதில்:** எப்படிக் கனவினால் ஏற்படும் படைப்பு (ஸ்வப்ன ஸ்ருஷ்டி) கனவிற்கு முன்பும் இல்லையோ, பின்பும் இருக்காதோ, கனவு உள்ள காலத்தில் மட்டும் மனிதனுடன் தொடர்பு உள்ளது போலத் தோன்றுகிறதோ, அதேபோல எந்த சரீரங்களுடன் நடுவில் மட்டும் ஸம்பந்தம் உள்ளது போலத் தோன்றுகிறதோ, அது நித்யமான ஸம்பந்தமன்று. அதற்காக ஏன் வருந்த வேண்டும்? மஹாபாரதம் ஸ்த்ரீ பர்வத்தில் இரண்டாவது அத்யாயத்தில் விதுரரும் இந்தச் செய்தியைச் சொல்கிறார்—

அத₃ர்ஶநாத₃ாபதிதா: புநஶ்சாத₃ர்ஶநம் க₃தா: ।
நைதே தவ ந தேஷாம் த்வம் தத்ர கா பரிதே₃வநா ॥ *13* ॥

எவர்களை நீ உன்னைச் சேர்ந்தவர்கள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயோ அவர்கள் எல்லோரும் மறைவிலிருந்து வந்தவர்கள். அதாவது பிறப்பதற்கு முன் வெளிப்படாதவர்களாக இருந்தார்கள். மறுபடியும் மறைந்துவிட்டார்கள். ஆகையால் உண்மையில் இவர்கள் உனக்குச் சொந்தமானவர்கள் அல்லர். நீ இவர்களுக்குச் சொந்தமானவனும் அல்ல. அதற்காக என்ன கவலை?

**பொருத்தம்:** ஆத்மதத்வத்தைப் புரிந்து கொள்வது எளிதன்று. ஆகையால், அதைத் தெளிவாக உணர்த்துவதற்காக பகவான் மேற்கூறிய ச்லோகங்களால் பலமுறைகளைக் கையாண்டு அதன் ஸ்வரூபத்தை வர்ணித்தார். அடுத்த ச்லோகத்தில் ஆத்மதத்வம் என்பதை அறிவதோ, வர்ணிப்பதோ, கேட்பதோ, உலகியலார்க்கு அப்பாற்பட்டது, எளிதன்று என்று கூறுகிறார்—

आश्चर्यवत्पश्यति कश्चिदेनमाश्चर्यवद्वदति तथैव चान्यः।
आश्चर्यवच्चैनमन्यः शृणोति श्रुत्वाप्येनं वेद न चैव कश्चित्॥ २९॥

**ஆஶ்சர்யவத்பஶ்யதி கஶ்சிதே₃நம்**
**ஆஶ்சர்யவத்₃வத₃தி ததை₂வ சாந்ய: ।**
**ஆஶ்சர்யவச்சைநமந்ய: ஶ்ருணோதி**
**ஶ்ருத்வாப்யேநம் வேத₃ ந சைவ கஶ்சித் ॥ 29 ॥ ‡**

கஶ்சித் – யாரோ ஒரு மஹாபுருஷன்தான், ஏநம் – இந்த ஆத்மாவை, ஆஶ்சர்யவத் – ஆச்சர்யம் போல, பஶ்யதி – பார்க்கிறான். ச – மேலும், தத₂ா ஏவ – அவ்வாறே,

---

‡ இதே ச்லோகத்திற்கு ஒத்தாற்போலக் கடோபநிஷத்திலும் ஒரு மந்த்ரம் வருகிறது—
ஶ்ரவணாயாபி ப₃ஹுபி₄ர்யோ ந லப்₄ய: ஶ்ருண்வந்தோऽபி ப₃ஹவோ யம் ந வித₃ு: ।
ஆஶ்சர்யோ வக்தா குஶலோऽஸ்ய லப்₃த₄ாऽऽஶ்சர்யோ ஜ்ஞாதா குஶலாநுஶிஷ்ட: ॥
(1/2/7)

ஆத்மதத்வம் என்பது பல பேர்களுக்குக் கேட்கக்கூடக் கிடைக்காது. கேட்ட பலர் கூடப் புரிந்து கொள்ளவில்லை. ஆத்மாவைப் பற்றிப் பேசுபவனே வியப்புக்குரியவன். அதுபோல அவனை அறிந்து அடைந்தவனும் வியப்புக்குரியவன். யாரோ ஒருவன் ஆத்மாவைப் பற்றித் தேர்ச்சி பெற்ற குருமுகமாகக் கேட்டுத் தெரிந்திருந்தால்கூட வியப்புக்குரியவன்தான் (அரிதானவன் என்று பொருள்).

CC-0:In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அந்ய:** – வேறு ஒரு மஹாபுருஷன்தான் இந்தத் தத்வத்தை, **ஆஶ்சர்யவத்** – ஆச்சர்யம் போல, **வததி** – வர்ணிக்கிறான். ச – மற்றும், **அந்ய:** – வேறொருவன் (தகுதி பெற்றவன்தான்), **ஏநம்** – ஆத்மாவை, **ஆஶ்சர்யவத்** – ஆச்சர்யம் போல, **ஶ்ருணோதி** – கேட்கிறான். ச – மேலும், **கஶ்சித்** – யாராவது ஒருவன், **ஶ்ருத்வா அபி** – கேட்டாலும், **ஏநம்** – ஆத்மாவை, **ந ஏவ வேத** – அறியவே மாட்டான்.

யாரோ ஒரு மஹாபுருஷன்தான் இந்த ஆத்மாவை ஆச்சர்யமாகப் பார்க்கிறான். மேலும் அவ்வாறே வேறு ஒரு மஹாபுருஷன்தான் இந்தத் தத்வத்தை ஆச்சர்யமாக வர்ணிக்கிறான். மற்றும் வேறொரு தகுதி பெற்றவன்தான் ஆத்மாவை ஆச்சர்யமாகக் கேட்கிறான். மேலும் யாராவது ஒருவன் அப்படிக் கேட்டாலும் ஆத்மாவை அறியவே மாட்டான்.

**கேள்வி:** 'யாரோ ஒருவன்' இவனை ஆச்சர்யமாகப் பார்க்கிறான் என்றால் என்ன பொருள்?

**பதில்:** பகவான் சொல்கிறார் — ஆத்ம தத்வம் ஆச்சர்யமயமானது. ஆகவே, அதைப் பார்ப்பவன் உலகில் மிகவும் அரிதானவன். அவனும் ஆச்சர்யம் போலத்தான் பார்க்கிறான். ஸாதாரணமாக மனிதன் உலகியல் பொருளை மனம், புத்தி, புலன் இவற்றின் மூலம் 'இது' என்று கண்டறிகிறான். ஆத்மாவை அவ்விதமாகப் பார்ப்பது இயலாத கார்யம். ஆத்ம தத்வம் அற்புதமானது; உலகியலுக்கு அப்பாற்பட்டது. சேதனனான ஆத்மா ஒன்றுதான் இருக்கிறான். வேறொன்றும் இல்லவே இல்லை என்று சொல்லும்பொழுது ஆத்மா தன்னையே தான் பார்த்துக் கொள்கிறான். அவ்வாறு பார்க்கும்போது பார்க்கிறவன், பார்க்கப்படுவது, பார்ப்பது என்ற மூன்று நிலைகள் (த்ரிபுடி) அற்றுப்போய் விடுகின்றன. அதைத்தான் ஆச்சர்யமாகப் பார்க்கிறான் என்று சொல்கிறார்.

**கேள்வி:** 'அதுபோல ஆச்சர்யமாக இதை வர்ணிக்கிறான்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** ஆத்மஸாக்ஷாத்காரம் பெற்ற ப்ரம்ம நிஷ்டனான ஞானி தன் அனுபவத்தைப் பிறருக்குத் தெரிவிக்க வேண்டும் என்பதற்காக ஆத்மாவின் ஸ்வரூபத்தை வர்ணிக்க முடியாது. எந்த மஹாபுருஷர்கள் பரமாத்ம தத்வத்தை நன்கு அறிந்தவர்களோ, வேத சாஸ்த்ரங்களைக் கற்றுத் தேர்ந்தவர்களோ அவர்கள்தான் ஆத்மாவை வர்ணிக்க முடியும். அப்படி அவர்கள் வர்ணிப்பதுகூட ஆச்சர்யமாக இருக்கும். அதாவது, ஒருவனுக்குப் புரிய வைக்க வேண்டும் என்பதற்காக எப்படி ஓர் உலகியல் பொருளைப் பற்றி விளக்கம் கூறுகிறோமோ, அப்படி ஆத்மாவைப் பற்றி விளக்கம் கொடுக்க முடியாது. அதைப் பற்றிய வர்ணனையும் உலகியலுக்கு அப்பாற்பட்டதாக, அற்புதமாக இருக்கும்.

எத்தனை உதாரணங்களைக் காட்டி ஆத்மதத்வத்தை விளக்கினாலும், அவற்றில் எந்த ஓர் உதாரணமும் பூரணமாக ஆத்மதத்வத்தைத் திறம்பட விளக்காது. ஏதோ ஓர் அம்சம்தான் உதாரணங்களின் மூலம் விளக்கம் பெறும். ஏனெனில், ஆத்மாவுக்கு இணையான வேறொன்று கிடையவே கிடையாது. இந்த நிலையில் எந்த உதாரணம் முழுமையாக நிகர் ஆக முடியும்? ஆனாலும், 'இப்படி உள்ளது; இப்படி அல்ல' என்று பலவித ஆச்சர்யமான அடையாளங்களைக் காட்டி மஹாபுருஷர்கள் அதைக் குறிப்பிடுகிறார்கள். இதைத்தான் ஆச்சர்யமான வர்ணனை என்கிறோம். உண்மையில் ஆத்மதத்வம் சொற்களுக்கு அகப்படாதது. எந்தத் தெளிவான உரையாலும் அதை விவரிக்க முடியாது.

**கேள்வி:** 'மற்றொருவன் இதை ஆச்சர்யமாகக் கேட்கிறான் என்றால்' என்ன பொருள்?

**பதில்:** இப்படி ஆத்மாவைப் பற்றிய விளக்கத்தை மிகவும் நன்னடத்தையுள்ளவனும், பரிசுத்தமான மனமுடையவனும், கேட்பதில் ஊக்கமுள்ளவனுமான, ஆஸ்திகனான ஒருவன் கேட்கக் கிடைப்பது மிகவும் அரிது. அவன் கேட்பதும் ஆச்சர்யமாகவே இருக்கும். இதுவரை எந்தப் பொருட்களை ஸத்யமென்றும், ஸுகமளிப்பவையென்றும், அழகானவையென்றும் அறிந்திருந்தானோ, எவன் உடல் முதலியவற்றையே தான் என்று பாவித்தானோ, அவன்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இப்போது, 'அவையெல்லாம் அநித்யம்; அழியக்கூடியவை; துன்பம் தருபவை; ஜடமானவை. அவற்றைக் காட்டிலும் ஆத்மா வேறானவன்; வேறு தன்மை படைத்தவன்' என்று கேட்கும்போது ஆச்சர்யப்படுகிறான். அந்தத் தத்வத்தைப் பற்றி அவன் இதற்கு முன் கேள்விப்பட்டதில்லை; அறிந்ததில்லை. உலகியல் பொருட்களோடு ஆத்ம தத்வத்தை ஒப்பிட முடியாது என்று சொல்லும்போது அவன் அதை அற்புதம் என்று நினைக்கிறான். அந்தத் தத்வத்தைப் பற்றித் தன்னை மறந்து முழு மனதோடு மெய்மறந்து கேட்கிறான். அவன் மனமும், புலன்களும் வேறு ஒன்றிலும் ஈடுபடுவதில்லை. இதுதான் ஆச்சர்யமாகக் கேட்பது என்பதாகும்.

**கேள்வி:** *'யாராவது ஒருவன் கேட்டாலும் இதை அறிய மாட்டான்' என்று சொல்வதன் கருத்து என்ன?*

**பதில்:** எவன் உள்ளத்தில் முழுமையான ச்ரத்தையும், ஊக்கமும், ஆஸ்திக பாவமும் இல்லையோ, எவனுடைய புத்தி சுத்தமாகவும், நுட்பமாகவும் இல்லையோ, அவன் ஆத்ம தத்வத்தைக் கேட்டாலும் ஸந்தேஹப்படுவான், விபரீதமாக எண்ணுவான். இதன் ஸ்வரூபத்தை உள்ளபடி உணரமாட்டான். ஆகவே தகுதியற்றவன் ஆத்ம தத்வத்தை உணர்வது மிகவும் அரிது.

**கேள்வி:** *'ஆச்சர்யம் போல' என்ற சொல் ஆத்மாவுக்கு அடைமொழியா அல்லது பார்ப்பவன், கேட்பவன், சொல்பவன் என்ற சொற்களுக்கு அடைமொழியா அல்லது பார்ப்பது, சொல்வது, கேட்பது என்ற வினைச்சொற்களுக்கு அடைமொழியா?*

**பதில்:** ஆச்சர்யம் என்ற சொல் பார்ப்பது, சொல்வது, கேட்பது இவற்றிற்கு அடைமொழி. ஆகவே பார்ப்பவன், சொல்பவன், கேட்பவன் ஆகியோரையும் சாரும். இது இவ்வினைகளுக்குரிய செயப்படு பொருளுக்கும் பொருந்தும்.

**பொருத்தம்:** இவ்விதம் ஆத்ம தத்வத்தைப் பார்ப்பது, சொல்வது, கேட்பது, உலகியலுக்கு அப்பாற்பட்டது; அரிது என்று எடுத்துரைத்து, ஆத்மா என்றுமே வதைக்கப்பட முடியாதவன். ஆகவே, எந்த உயிரினத்திற்காகவும் வருத்தப்படுவது உசிதமன்று என்று சொல்லி, பகவான் ஸாங்க்யயோகம் என்ற ப்ரகரணத்தை நிறைவு செய்கிறார்—

**देही नित्यमवध्योऽयं देहे सर्वस्य भारत।**
**तस्मात्सर्वाणि भूतानि न त्वं शोचितुमर्हसि॥ ३०॥**

**தே₃ஹீ நித்யமவத்₄யோऽயம் தே₃ஹே ஸர்வஸ்ய ப₄ாரத ।**
**தஸ்மாத்ஸர்வாணி பூ₄தாநி ந த்வம் ஶோசிதுமர்ஹஸி ॥ 30 ॥**

*ப₄ாரத* – அர்ஜுன! *அயம்* – இந்த, *தே₃ஹீ* – ஆத்மா, *ஸர்வஸ்ய* – எல்லோருடைய, *தே₃ஹே* – உடலிலும், *நித்யம்* – எப்பொழுதும், *அவத்₄ய:* – கொல்லப்பட முடியாதவன். *தஸ்மாத்* – ஆகவே, *ஸர்வாணி* – எல்லா, *பூ₄தாநி* – உயிரினங்களுக்காகவும், *த்வம்* – நீ, *ஶோசிதும்* – வருந்துவது, *ந அர்ஹஸி* – நன்றன்று.

அர்ஜுன! இந்த ஆத்மா எல்லோருடைய உடலிலும் எப்பொழுதும் கொல்லப்பட முடியாதவன். ஆகவே எல்லா உயிரினங்களுக்காகவும் நீ வருந்துவது தகுந்ததன்று.

**கேள்வி:** *'இந்த ஆத்மா எல்லா உடலிலும் எப்பொழுதுமே கொல்லப்பட முடியாதவன்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** எல்லா உயிரினங்களுக்கும் எவ்வளவு உடல்கள் உளவோ, அவ்வளவு உடல்களிலும் இருப்பது ஒரே ஆத்மாதான். உடல்கள் வேறுபட்டமையால் அஞ்ஞானத்தினால் ஆத்மா வெவ்வேறு என்ற தோற்றம் ஏற்படுகிறது. உண்மையில் வேறு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வேறு அல்ல. அந்த ஆத்மா என்றும் கொல்லப்பட முடியாதவன். எந்தவிதமான கருவியும் அவனை அழிக்க முடியாது என்பது கருத்து.

**கேள்வி:** 'இந்தக் காரணத்தினால் நீ எல்லா உயிரினங்களுக்காகவும் வருந்தத் தேவையில்லை' என்று சொல்வதற்கு என்ன பொருள்?

**பதில்:** இந்த ஸந்தர்பத்தில் 'ஆத்மா அழிவற்றவன். அவனை யாராலும் அழிக்க முடியாது. ஆகவே, நீ எந்த உயிரினத்திற்காகவும் வருந்த வேண்டியதில்லை. எந்தக் காலத்திலும், எந்தக் கருவியாலும் ஆத்மாவுக்கு நாசம் ஏற்படாது' என்ற விஷயம் விளக்கமாகச் சொல்லப்பட்டு விட்டபடியால், யாரேனும் அழிந்து விடுவாரோ என்று ஸந்தேஹப்பட்டு, வருந்தாமல் யுத்தத்திற்கு நீ தயார் ஆகவேண்டும் என்று பொருள்.

**பொருத்தம்: இதுவரை பகவான் ஸாங்க்யயோகத்தை (ஞானயோகத்தை) எடுத்துச் சொல்லி, பல யுக்திகளின் மூலம் நித்யமான, சுத்தமான, ஞான வடிவான, ஸமமான, விகாரமற்ற, கர்த்தா அல்லாத ஆத்மா ஒன்றுதான் வாஸ்தவத்தில் உள்ளது (ஸத்) என்றும், அந்த ஆத்மாவின் இரண்டற்ற தன்மை, நித்யத்தன்மை, அழிவற்ற தன்மை முதலியவற்றை நிரூபித்து, உடல்கள் அழியக்கூடியவை என்றும், ஆத்மாவுக்காகவோ, உடலுக்காகவோ அல்லது உடலும், ஆத்மாவும் பிரிவதற்காகவோ வருந்துவது உசிதமன்று என்றும் நிரூபித்தார். இடையே ஆத்மா பிறப்பு-இறப்பு உடையவன் என்று நினைப்பவன் கூட வருந்தத் தேவையில்லை என்று கூறி, அர்ஜுனனை யுத்தம் செய்யத் தூண்டினார். அடுத்து வரும் ஏழு ச்லோகங்களில் க்ஷத்ரிய தர்மப்படியும் வருந்துவது உசிதமன்று என்று கூறி, அர்ஜுனனை யுத்தத்திற்கு உற்சாகப்படுத்துகிறார்—**

स्वधर्ममपि चावेक्ष्य न विकम्पितुमर्हसि।
धर्म्याद्धि युद्धाच्छ्रेयोऽन्यत्क्षत्रियस्य न विद्यते॥ ३१॥

**ஸ்வத₄ர்மமபி சாவேக்ஷ்ய ந விகம்பிதுமர்ஹஸி ।**
**த₄ர்ம்யாத்₃தி₄ யுத்₃தா₄ச்ச்₂ரேயோऽந்யத்க்ஷத்ரியஸ்ய ந வித்₃யதே ॥ 31 ॥**

ச – அவ்வாறே, **ஸ்வத₄ர்மம்** – தன்னுடைய தர்மம் என்று, **அவேக்ஷ்ய அபி** – பார்த்தாலும், **விகம்பிதும் ந அர்ஹஸி** – நீ பயப்படக் கூடாது. **ஹி** – ஏனெனில், **க்ஷத்ரியஸ்ய** – க்ஷத்ரியனுக்கு, **த₄ர்ம்யாத்** – தர்ம ஸம்மதமான, **யுத்₃தா₄த்** – போரைக் காட்டிலும், **அந்யத்** – வேறு (ஒரு), **ச்₂ரேய:** – மேன்மை தரும் கடமை, **ந வித்₃யதே** – கிடையாது.

அவ்வாறே தன்னுடைய தர்மம் என்று பார்த்தாலும் நீ பயப்படக் கூடாது. ஏனெனில் க்ஷத்ரியனுக்கு தர்ம ஸம்மதமானப் போரைக் காட்டிலும் வேறு ஒரு மேன்மை தரும் கடமை கிடையாது.

**கேள்வி:** 'அபி' என்று என்ன கருத்தில் கூறுகிறார்?

**பதில்:** ஆத்மா நித்யன் உடல் அநித்யம் என்று அறிந்து கொண்டபிறகு வருத்தப் படுவதோ, யுத்தத்தின் விளைவுகளை நினைத்து பயப்படுவதோ சரியன்று என்பது மட்டுமன்று. இதைப்பற்றி நான் உனக்குத் தெளிவாகச் சொல்லிவிட்டேன். மேலும், உன்னுடைய வர்ணதர்மமான க்ஷத்ரிய தர்மத்தை நினைத்துப் பார். அதன்படி பார்த்தாலும் நீ பயப்படுவது சரியன்று. யுத்தத்தில் பின்வாங்காமல் இருப்பது க்ஷத்ரியனுக்கு இயல்பான தர்மம் (18/43).

**கேள்வி:** 'ஹி' என்றால் என்ன?

**பதில்:** 'ஹி' என்ற சொல் காரணம் காட்டுவது. ஏன் பயப்படக் கூடாது என்பதற்கு ச்லோகத்தின் பின் பாதியில் அழுத்தம் கொடுக்கிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** க்ஷத்ரியனுக்கு தர்மத்திற்காகப் போராடுவதைக் காட்டிலும் வேறு ஒரு மேன்மை கிடையாது என்பதற்கு என்ன பொருள்?

**பதில்:** எந்த யுத்தமானது, அநீதி அல்லது பேராசையால் ஆரம்பிக்கப்படவில்லையோ, எதில் அந்யாயச் செயல்கள் செய்யப்பட மாட்டாவோ, ஆனால் எது தர்மத்துக்கு இசைந்ததோ, கடமை என்ற எண்ணத்தோடு செய்யப்படுகிறதோ, ந்யாயத்திற்காகச் செய்யப்படுகிறதோ, அத்தகைய யுத்தம் க்ஷத்ரியனுக்கு மற்ற அனைத்து அறங்களைக் காட்டிலும் அதிக நன்மையைச் செய்யக் கூடியது. க்ஷத்ரியனுக்கு அதைக் காட்டிலும் மேன்மை அளிக்கக் கூடிய வேறு தர்மம் கிடையாது. ஏனெனில், தர்மமயமான யுத்தத்தில் இறக்கும் க்ஷத்ரியன் எளிதாகவே இஷ்டம் போல ஸ்வர்கத்தையோ, மோக்ஷத்தையோ அடையலாம்.

**यदृच्छया चोपपन्नं स्वर्गद्वारमपावृतम् ।**
**सुखिनः क्षत्रियाः पार्थ लभन्ते युद्धमीदृशम् ॥ ३२ ॥**

**யத்₃ருச்ச₂யா சோபபந்நம் ஸ்வர்க₃த்₃வாரமபாவ்ருதம் ।**

**ஸுகி₂ந: க்ஷத்ரியா: பார்த₂ லப₄ந்தே யுத்₃த₄மீத்₃ருஶம் ॥ 32 ॥**

**பார்த₂** – பார்த்த! **யத்₃ருச்ச₂யா** – தானாகவே, **உபபந்நம்** – நேர்ந்திருக்கிறதும், **அபாவ்ருதம் ச** – திறந்து வைக்கப்பட்டுள்ளதுமான, **ஸ்வர்க₃த்₃வாரம்** – ஸ்வர்கவாயில் வடிவான, **ஈத்₃ருஶம்** – இத்தகைய, **யுத்₃த₄ம்** – யுத்தத்தை, **ஸுகி₂ந:** – பாக்யமுடைய, **க்ஷத்ரியா:** – க்ஷத்ரியர்கள் (தான்), **லப₄ந்தே** – அடைகிறார்கள்.

பார்த்த! தானாகவே நேர்ந்திருக்கிறதும் திறந்து வைக்கப்பட்டுள்ளதுமான ஸ்வர்கவாயில் வடிவான இத்தகைய யுத்தத்தை பாக்யமுடைய க்ஷத்ரியர்கள்தான் அடைகிறார்கள்.

**கேள்வி:** 'பார்த₂' என்று அர்ஜுனனை அழைப்பதன் பொருள் என்ன?

**பதில்:** பகவான் ஹஸ்தினாபுரம் போய்விட்டுத் திரும்பும்போது பாண்டவர்களின் தாயார் ப்ருதா அல்லது குந்திதேவி ஒரு செய்தி சொல்லி அனுப்பினாள். அதை அர்ஜுனனுக்கு நினைவுபடுத்துகிறார்.

**ஏதத்₃த₄நஞ்ஜயோ வாச்யோ நித்யோத்₃யுக்தோ வ்ருகோத₃ர: ॥**
**யத₃ர்த₂ம் க்ஷத்ரியா ஸூதே தஸ்ய காலோऽயமாக₃த: ।**

(மஹா. உத்₃யோக₃ பர்வம் 137/9,10)

'எந்த ஒரு மஹத்தான செயலை எதிர்பார்த்து, ஒரு க்ஷத்ரியத் தாய் மகனைப் பெற்றெடுக்கிறாளோ, அந்த உன்னதமான நேரம் இதோ வந்துவிட்டது' என்று அர்ஜுனனிடமும், எப்போதுமே துடித்துக் கொண்டிருக்கும் பீமனிடமும் கூறவேண்டும்.

**கேள்வி:** 'தானாக வந்த யுத்தம்' என்றும், 'ஸ்வர்கவாசல் திறந்திருக்கிறது' என்றும் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அர்ஜுன! நீயாகவே உன் மனமறிந்து இந்த யுத்தத்தைத் தேடிப் போகவில்லை. ஸமாதானம் செய்து கொள்வதற்காக நீங்கள் மிகவும் முயற்சி செய்தீர்கள். தன்னிடம் ஒப்புவித்திருந்த ராஜ்யத்தை யுத்தம் செய்யாமல் திருப்பிக் கொடுக்க துர்யோதனன் ஒத்து வரவில்லையே. அவன் தெளிவாக, 'ஓர் ஊசிமுனை நிலம் கூடக் கொடுக்கமாட்டேன்' என்று சொல்லிவிட்டான் அல்லவா!

**யாவத்₃தி₄ தீக்ஷ்ணயா ஸூச்யா வித்₄யேத₃க்₃ரேண கேஶவ ।**
**தாவத₃ப்யபரித்யாஜ்யம் பூ₄மேர்ந: பாண்ட₃வாந்ப்ரதி ॥**

(மஹா. உத்₃யோக₃ பர்வம் 127/25)

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அப்பொழுதுதானே, வேறு வழியில்லாமல் நீங்கள் யுத்தம் செய்ய முனைய வேண்டி வந்தது. ஆகவே, நீங்கள் கோராமல் தானாக வந்து சேர்ந்தது இந்த யுத்தம். இது திறந்து வைக்கப்பட்ட ஸ்வர்கவாசல். அதாவது இத்தகைய தர்ம யுத்தத்தில் போர் செய்து இறப்பவன் நேரே ஸ்வர்கம் போய்ச் சேர்கிறான். அவன் போகிற வழியில் அவனை யாரும் தடை செய்ய முடியாது என்பது பொருள்.

**கேள்வி:** இத்தகைய யுத்தத்தை பாக்யமுள்ள க்ஷத்ரியர்கள்தான் பெறுவார்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "இத்தகைய தர்ம யுத்தம் தானாகவே 'செய்யவேண்டிய கடமை' என்ற வடிவில் வந்திருக்கிறது. திறந்து வைக்கப்பட்ட ஸ்வர்கவாசல் போன்ற இத்தகைய ஸந்தர்பம் ஒவ்வொரு க்ஷத்ரியனுக்கும் எளிதில் கிட்டாது. பெரிய பாக்யம் செய்திருக்கும் க்ஷத்ரியனுக்குத்தான் கிடைக்கும். ஆகவே, நீங்கள் பெற்ற பெரும்பேறு இது. இது எளிதாகக் கிடைத்திருக்கிறது. ஆகவே, நீ இதிலிருந்து விலகக் கூடாது" என்று பகவான் காட்டுகிறார்.

**பொருத்தம்: இத்தகைய தர்ம யுத்தத்தில் ஈடுபடுவதால் ஏற்படும் மேன்மையையும், அதைத் துறப்பதால் ஏற்படும் கேட்டினையும் எடுத்துச் சொல்லி, பகவான் அர்ஜுனனை யுத்தம் செய்ய ஊக்கமூட்டுகிறார்—**

**अथ चेत्त्वमिमं धर्म्यं सङ्ग्रामं न करिष्यसि।**
**ततः स्वधर्मं कीर्तिं च हित्वा पापमवाप्स्यसि ॥ ३३ ॥**

**அத₂ சேத்த்வமிமம் த₄ர்ம்யம் ஸங்க்₃ராமம் ந கரிஷ்யஸி ।**
**தத: ஸ்வத₄ர்மம் கீர்திம் ச ஹித்வா பாபமவாப்ஸ்யஸி ॥ 33 ॥**

**அத₂** – ஆகவே, **இமம்** – இந்த, **த₄ர்ம்யம்** – தர்மத்தோடு கூடிய, **ஸங்க்₃ராமம்** – யுத்தத்தை, **த்வம்** – நீ, **ந கரிஷ்யஸி சேத்** – செய்யவில்லையானால், **தத:** – அப்போது, **ஸ்வத₄ர்மம்** – ஸ்வதர்மத்தையும், **கீர்திம் ச** – புகழையும், **ஹித்வா** – இழந்து, **பாபம்** – பாவத்தை, **அவாப்ஸ்யஸி** – அடைவாய்.

ஆகவே, இந்த தர்மத்தோடு கூடிய யுத்தத்தை நீ செய்யவில்லையானால் அப்போது ஸ்வதர்மத்தையும் புகழையும் இழந்து பாவத்தை அடைவாய்.

**கேள்வி:** 'அத' என்றால் என்ன பொருள்?

**பதில்:** 'ஆகவே' என்று கூறி வேறு முறையில் பார்த்தாலும் நீ யுத்தம் செய்யத்தான் வேண்டும் என்று வற்புறுத்துகிறார்.

**கேள்வி:** இந்த யுத்தம் தர்மமானது. நீ யுத்தம் செய்யாவிடில் ஸ்வதர்மத்தையும், புகழையும் இழந்து பாவத்தை அடைவாய் என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த யுத்தம் தர்ம யுத்தமாகையால் நீ கட்டாயமாகச் செய்துதான் ஆகவேண்டும். இந்த விஷயம் உனக்குத் தெளிவாக்கப்பட்டுவிட்டது. ஆகவே, எக்காரணத்தினாலாவது நீ யுத்தம் செய்யாவிட்டால், நீ ஸ்வதர்மத்தை விட்டவன் ஆவாய். அதுமட்டுமன்று. நிவாதகவசர்கள் போன்ற அஸுரர்களுடன் போர் புரிந்து பெற்ற வெற்றி, பகவான் மஹாதேவருடன் யுத்தம் செய்து நீ அருள் பெற்றது, இவை காரணமாக உலகில் பரவியிருக்கும் உன் புகழ் எல்லாம் அழிந்துவிடும். செய்யவேண்டிய கடமையிலிருந்து நழுவினதால் பாவமும் உன்னைச் சாரும். பாவம் வந்துவிடுமே என்று பயந்து யுத்தத்தைத் தவிர்ப்பதாகச் சொல்லும் நீ, பாவத்தையே அடைவாய். பயத்தினால் யுத்தத்திலிருந்து பின்வாங்குவது முற்றிலும் ந்யாயமற்றது; ஒவ்வாதது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**अकीर्तिं चापि भूतानि कथयिष्यन्ति तेऽव्ययाम्।**
**सम्भावितस्य चाकीर्तिर्मरणादतिरिच्यते ॥ ३४ ॥**

**அகீர்திம் சாபி பூ₄தாநி கத₂யிஷ்யந்தி தேऽவ்யயாம் ।**

**ஸம்ப₄ாவிதஸ்ய சாகீர்திர்மரணாத₃திரிச்யதே ॥ 34 ॥**

**ச** – மேலும், **பூ₄தாநி** – அனைவரும், **தே** – உன்னுடைய, **அவ்யயாம்** – நீண்ட காலம் இருக்கக்கூடிய, **அகீர்திம் அபி** – இகழ்ச்சியைப் பற்றிக்கூட, **கத₂யிஷ்யந்தி** – பேசுவார்கள். **ச** – மேலும், **ஸம்ப₄ாவிதஸ்ய** – கௌரவம் உடையவனுக்கு, **அகீர்தி:** – இகழ்ச்சி, **மரணாத்** – மரணத்தைக் காட்டிலும், **அதிரிச்யதே** – அதிகமான துன்பத்தைக் கொடுக்கக் கூடியது.

மேலும் அனைவரும் உன்னுடைய நீண்ட காலம் இருக்கக்கூடிய இகழ்ச்சியைப் பற்றிக் கூடப் பேசுவார்கள். மேலும் கௌரவம் உடையவனுக்கு இகழ்ச்சி மரணத்தைக் காட்டிலும் அதிகமான துன்பத்தைக் கொடுக்கக் கூடியது.

**கேள்வி:** 'அபி' என்று சொல்லி நீண்ட நாட்களுக்கு எல்லா மக்களும் உன்னைப் பற்றிப் பொல்லாங்கு கூறிக் கொண்டிருப்பார்கள் – என்று பகவான் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "நீ ஸ்வதர்மத்தையும், புகழையும் இழப்பதோடு பாவத்தையும் அடைவாய். அது மட்டுமன்று; தேவர்கள், ரிஷிகள், மனிதர்களான எல்லா உலகத்தாரும் உன்னைப் பலவாறு நிந்திப்பார்கள். அந்த நிந்தை கொஞ்ச நாட்களில் மறைந்துவிடும் என்று நினைக்காதே. வெகுகாலம் வரை அந்த நிந்தை இருந்து கொண்டே இருக்கும். ஆகவே, நீ யுத்தம் செய்வதைத் தவிர்க்கக் கூடாது" என்று பகவான் கூறுகிறார்.

**கேள்வி:** 'மதிப்பிற்குரியவனுக்கு ஏற்படும் இகழ்ச்சி மரணத்தைக் காட்டிலும் அதிக பாதகமானது' என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** 'இகழ்ந்தால் இகழட்டுமே! நமக்கென்ன நஷ்டம்?' என்று நீ நினைத்தால், அது சரியன்று. உலகத்தில் புகழ் பெற்றவர்கள், பெரியவர் என்ற மதிப்புப் பெற்றவர்கள் இகழ்ச்சிக்கு ஆளானால், அது மரணத்தைக் காட்டிலும் மிகவும் துயரத்தைக் கொடுக்கக் கூடியது. அவ்வளவு கொடுமையான இகழ்ச்சியை உன்னால் பொறுத்துக் கொள்ள முடியாது. ஏனெனில், உலகில் நீ சூரவீரன் என்று பெயர் பெற்றுவிட்டாய். ஸ்வர்கம் முதல் பாதாளம் வரை உன் புகழ் பரவி இருக்கிறது என்பது கருத்து.

**भयाद्रणादुपरतं मंस्यन्ते त्वां महारथाः।**
**येषां च त्वं बहुमतो भूत्वा यास्यसि लाघवम्॥ ३५ ॥**

**ப₄யாத்₃ரணாது₃பரதம் மம்ஸ்யந்தே த்வாம் மஹாரத₂ா: ।**

**யேஷாம் ச த்வம் ப₃ஹுமதோ பூ₄த்வா யாஸ்யஸி லாக₄வம் ॥ 35 ॥**

**ச** – மேலும், **யேஷாம்** – எவர்களுடைய (பார்வையில் – கருத்தில்), **த்வம்** – நீ (முன்னர்), **ப₃ஹுமத:** – மிகவும் பெருமை பெற்றவனாக, **பூ₄த்வா** – இருந்துவிட்டு (இப்பொழுது), **லாக₄வம்** – தாழ்வை, **யாஸ்யஸி** – அடைவாயோ, **மஹாரத₂ா:** – அந்த மஹாரதிகள், **த்வாம்** – உன்னை, **ப₄யாத்** – பயத்தினால், **ரணாத்** – யுத்தத்திலிருந்து, **உபரதம்** – பின்வாங்கியவனாக, **மம்ஸ்யந்தே** – நினைப்பார்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மேலும் எவர்களுடைய பார்வையில் நீ முன்னர் மிகவும் பெருமை பெற்றவனாக இருந்துவிட்டு இப்பொழுது தாழ்வை அடைவாயோ, அந்த மஹாரதிகள் உன்னை பயத்தினால் யுத்தத்திலிருந்து பின் வாங்கியவனாக நினைப்பார்கள்.

**கேள்வி:** எவர்கள் உன்னை மதித்தார்களோ, அவர்களுடைய மதிப்பை இழந்து இகழ்ச்சியும் அடைவாய் — என்றால் என்ன பொருள்?

**பதில்:** பீஷ்மர், த்ரோணர், சல்யன், விராடன், த்ருபதன், ஸாத்யகீ, த்ருஷ்டத்யும்னன் போன்ற மஹாரதிகள் உன்னிடம் பெருமதிப்பு வைத்திருக்கிறார்கள். நீ பெரிய சூரவீரன், பெரிய போராளி, தர்மாத்மா என்றெல்லாம் மதிக்கிறார்கள். நீ யுத்தம் புரியாவிட்டால் அவர்கள் பார்வையில் நீ வீழ்ச்சி அடைவாய். அவர்கள் உன்னைக் கோழை என்று நினைப்பார்கள் என்பது பொருள்.

**கேள்வி:** நீ பயத்தினால் யுத்தத்தை விட்டு விலகிவிட்டாய் என்று மஹாரதிகள் நினைப்பார்கள் — என்று கூறுவதன் பொருள் என்ன?

**பதில்:** மஹாரதிகளின் பார்வையில் நீ வீழ்ச்சியடைவாய் என்று சொன்னதையே இப்படி விளக்குகிறார். அர்ஜுனன் தம் உறவினர்பால் ஏற்பட்ட கருணையினாலோ, யுத்தம் செய்வது பாவம் என்று நினைத்தோ யுத்தத்தை விட்டு ஒதுங்குகிறார் என்று மஹாரதிகள் ஏற்கமாட்டார்கள். நீ பயந்து போய் உன் உயிரைக் காத்துக் கொள்வதற்காக யுத்தத்திலிருந்து விலகுகிறாய் என்றுதான் நினைப்பார்கள். இந்த நிலையில் நீ யுத்தத்தைத் தவிர்ப்பது எவ்விதத்திலும் உசிதமன்று.

**अवाच्यवादांश्च बहून्वदिष्यन्ति तवाहिताः।**
**निन्दन्तस्तव सामर्थ्यं ततो दुःखतरं नु किम्॥ ३६॥**

**அவாச்யவாதாம்ஸ்ச பஹூந்வதிஷ்யந்தி தவாஹிதா: ।**

**நிந்தந்தஸ்தவ ஸாமர்த்யம் ததோ து:கதரம் நு கிம் ॥ 36 ॥**

**தவ** – உன்னுடைய, **அஹிதா:** – எதிரிகள், **தவ** – உன்னுடைய, **ஸாமர்த்யம்** – திறமையை, **நிந்தந்த:** – நிந்தித்து, **பஹூந்** – பலவிதமான, **அவாச்யவாதாந் ச** – கூறத்தகாத வார்த்தைகளையும், **வதிஷ்யந்தி** – கூறுவார்கள். **தத:** – அதைவிட, **து:கதரம்** – அதிகத் துயரம் (கொடுக்கக்கூடியது), **கிம் நு** – வேறு என்ன இருக்கும்?

உன்னுடைய எதிரிகள் உன்னுடைய திறமையை நிந்தித்துப் பலவிதமான கூறத்தகாத வார்த்தைகளையும் கூறுவார்கள். அதைவிட அதிகத் துயரம் கொடுக்கக்கூடியது வேறு என்ன இருக்கும்?

**கேள்வி:** 34வது ச்லோகத்திலேயே 'எல்லோரும் உன்னை நிந்திப்பார்கள்' என்று சொல்லிவிட்டாரே? உன்னுடைய எதிரிகள் உன்னுடைய திறமையை நிந்தித்து, சொல்லத்தகாத வார்த்தைகளால் இகழ்வார்கள் என்று மறுபடியும் சொல்வதில் என்ன விசேஷமான கருத்து இருக்கிறது?

**பதில்:** 34வது ச்லோகத்தில் பொது மக்கள் நிந்திப்பார்கள் என்று சொன்னார். இங்கு துர்யோதனன் முதலிய எதிரிகள் உன்னைக் கண்டபடி வசைபாடுவார்கள் என்று கூறுகிறார். பொது மக்கள் பேசும் அவதூறு மிகவும் மானமுள்ளவர்களுக்குத்தான் அதிகமான துன்பம் அளிக்கும். எல்லோரும் அதைப் பொருட்படுத்தமாட்டார்கள். ஆனால், எதிரிகள் முகத்திற்கு எதிரேயே கண்டபடி வசைபாடுவது என்பது ஸாதாரண மக்களுக்கே பொறுக்க முடியாத விஷயம். உன்னைப் போன்ற வீரர்களுக்கோ மிகவும் கொடியது. இதுவரை உன்னை சூரவீரனாக மதித்துவிட்டு இன்று கோழை என்று உலகத்தார் சொல்வார்கள் என்பது மட்டுமன்று, உனக்குத் தீங்கு நினைப்பவர்களும், உனக்குக் கேடு ஏற்பட்டால்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மகிழ்பவர்களுமாகிய எதிரிகளான துர்யோதனன் முதலானோர் உன்னுடைய பலபராக்ரமம், யுத்தத் திறமை இவற்றைக் குறைத்துக் கூறிச் சொல்லம்புகளை வீசுவார்கள். 'அர்ஜுனன் என்றைக்கு வீரனாக இருந்தான். பிறவியிலேயே அவன் அலிதானே! ஐயே! அவன் காண்டீவத்தைப் பார், வீரத்தையும் பார்' என்று கூறுவார்கள்.

**கேள்வி:** 'இதைக் காட்டிலும் அதிக துக்கம் என்ன வரப்போகிறது?' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** யுத்தம் செய்யாமல் இருப்பதால் தீயவிளைவு ஏற்படும் என்பதைக் கண்ணன் ஸ்தாபிக்கிறார். இதைக்காட்டிலும் உனக்கு என்ன அதிகமான துக்கம் வேண்டும்? ஆகவே யுத்தம் செய்யாமல் விலகுவது ஸுகமென்றும், யுத்தம் செய்வது துக்கம் என்றும் நினைப்பது மிகப் பெரிய தவறு. யுத்தத்தைத் தவிர்ப்பதால்தான் உனக்கு மிகவும் துக்கம் உண்டாகும்.

**பொருத்தம்:** மேற்சொன்னவாறு பல காரணங்களைக் கூறி யுத்தம் செய்யாவிட்டால் பல கெடுதல்கள் ஏற்படும் என்று விளக்கிய பிறகு, யுத்தம் செய்வதால் இரண்டுவிதமாகவும் மேன்மையுண்டு என்று காட்டி, அர்ஜுனனை 'யுத்தத்திற்குத் தயார் ஆவாய்' என்று பகவான் கட்டளையிடுகிறார்—

**हतो वा प्राप्स्यसि स्वर्गं जित्वा वा भोक्ष्यसे महीम्।**
**तस्मादुत्तिष्ठ कौन्तेय युद्धाय कृतनिश्चयः॥ ३७॥**

**ஹதோ வா ப்ராப்ஸ்யஸி ஸ்வர்க₃ம் ஜித்வா வா போ₄க்ஷ்யஸே மஹீம் ।**
**தஸ்மாதுத்திஷ்ட₂ கௌந்தேய யுத்₃தா₄ய க்ருதநிஸ்சய: ॥ 37 ॥**

**ஹத: வா** – கொல்லப்பட்டாலோ, **ஸ்வர்க₃ம்** – ஸ்வர்கத்தை, **ப்ராப்ஸ்யஸி** – அடைவாய். **ஜித்வா வா** – வெற்றி பெற்றாலோ, **மஹீம்** – புவியை, **போ₄க்ஷ்யஸே** – அனுபவிப்பாய். **தஸ்மாத்** – ஆகையினால், **கௌந்தேய** – அர்ஜுன! (நீ), **யுத்₃தா₄ய** – யுத்தத்தின் பொருட்டு, **க்ருதநிஸ்சய:** – உறுதியாக நிச்சயித்துக் கொண்டு, **உத்திஷ்ட₂** – எழுந்திரு.

கொல்லப்பட்டாலோ ஸ்வர்கத்தை அடைவாய். வெற்றி பெற்றாலோ புவியை அனுபவிப்பாய். ஆகையினால் அர்ஜுன! நீ யுத்தத்தின் பொருட்டு உறுதியாக நிச்சயித்துக் கொண்டு எழுந்திரு.

**கேள்வி:** இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

**பதில்:** ஆறாவது ச்லோகத்தில், 'யுத்தம் செய்வது நல்லதா, செய்யாமல் இருப்பது நல்லதா, யுத்தத்தில் நமக்கு வெற்றி கிடைக்குமா, எதிரிகளுக்கு வெற்றி கிடைக்குமா — என்ற விஷயங்களை ஆராய்ந்து என்னால் தீர்மானிக்க முடியவில்லை' என்று அர்ஜுனன் சொன்னார். இதற்கு இங்கே பகவான் பதில் சொல்கிறார்— "யுத்தம் செய்து இறந்தாலும் சரி, வெற்றி பெற்றாலும் சரி. இரண்டுவிதத்திலும் உனக்கு லாபம்தான். ஆகவே, யுத்தம் செய்வதே உனக்குச் சிறந்தது" என்று ஸ்தாபிக்கிறார். "யுத்தத்தில் உனது எதிரிகளுக்கு வெற்றி கிட்டி நீ இறப்பாயானால் அதுவும் நல்லதுதான். ஏனெனில் யுத்தம் செய்து உயிரை விடுவதால் நீ ஸ்வர்கம் போவாய். நீ வெற்றி பெற்றால் இவ்வுலகில் ராஜ்ய ஸுகத்தைப் பெறுவாய். ஆகவே இரண்டுவிதமாகப் பார்த்தாலும் யுத்தம் செய்வதே மேல். ஆகவே யுத்தத்திற்காகக் கச்சம் கட்டிக் கொண்டு முனைந்து புறப்படு."

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் பகவான் யுத்தத்தின் பயனாக ஸ்வர்க போகமோ, ராஜ்ய போகமோ கிடைக்கும் என்றார். அர்ஜுனன்தான் முன்னாலேயே சொல்லி விட்டாரே! 'இவ்வுலக ஆட்சி என்ன? மூவுலக ஆட்சியே எனக்குக் கிடைக்குமானாலும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நான் குலநாசத்தை ஆதரிக்கமாட்டேன்' என்று கூறிவிட்டாரே! ராஜ்ய ஸுகம், ஸ்வர்க ஸுகம் இரண்டும் விரும்பாதவன் எவ்விதம் யுத்தம் செய்யவேண்டும் என்பதை மேலே எடுத்துச் சொல்கிறார்—

**सुखदुःखे समे कृत्वा लाभालाभौ जयाजयौ।**
**ततो युद्धाय युज्यस्व नैवं पापमवाप्स्यसि॥ ३८॥**

**ஸுக₂து₃:கே₂ ஸமே க்ருத்வா லாப₄ாலாபெ₄ள ஜயாஜயெள ।**
**ததோ யுத்₃த₄ாய யுஜ்யஸ்வ நைவம் பாபமவாப்ஸ்யஸி ॥ 38 ॥**

**ஜயாஜயெள** – வெற்றி–தோல்விகளையும், **லாப₄ாலாபெ₄ள** – லாப–நஷ்டங்களையும், **ஸுக₂து₃:கே₂** – ஸுக–துக்கங்களையும், **ஸமே** – ஸமமாக, **க்ருத்வா** – கருதி, **தத:** – அதற்குப்பின், **யுத்₃த₄ாய** – யுத்தத்திற்கு, **யுஜ்யஸ்வ** – தயாராவாயாக. **ஏவம்** – இவ்விதம் (யுத்தம் செய்வதால் நீ), **பாபம்** – பாவத்தை, **ந அவாப்ஸ்யஸி** – அடைய மாட்டாய்.

வெற்றி–தோல்விகளையும், லாப–நஷ்டங்களையும், ஸுக–துக்கங்களையும் ஸமமாகக் கருதி அதற்குப்பின் யுத்தத்திற்குத் தயாராவாயாக. இவ்விதம் யுத்தம் செய்வதால் நீ பாவத்தை அடையமாட்டாய்.

**கேள்வி:** *வெற்றி–தோல்வி, லாப–நஷ்டம், ஸுக–துக்கம் இவற்றை ஸமமாகக் கொள்வது எப்படி?*

**பதில்:** போரில் ஏற்படும் வெற்றி–தோல்விகளிலும், லாப–நஷ்டங்களிலும், ஸுக–துக்கங்களிலும் பேதபுத்தி தோன்றக் கூடாது. அதாவது, போரில் ஏற்படும் வெற்றி–தோல்விகளினால் மனதில் விருப்பு–வெறுப்போ, இன்ப–துன்பமோ போன்ற மாறுதல்கள் உண்டாகக் கூடாது. அவற்றை ஸமமாகக் கருத வேண்டும்.

**கேள்வி:** *'ஸமபாவனை பெற்ற பிறகு யுத்தத்திற்குத் தயார் ஆவாய்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** "உனக்கு ராஜ்ய ஸுகத்திலோ, ஸ்வர்கத்திலோ விருப்பமில்லாவிட்டால்கூட, யுத்தத்தைப் பற்றி உனக்கு ஏற்பட்டிருக்கிற விபரீதமான அபிப்ராயத்தை அறவே விட்டுவிட்டு, மேலே கூறியபடி யுத்தத்தின் ஒவ்வொரு விளைவிலும் ஸமபாவனை பெற்று நீ யுத்தம் செய்யவேண்டும். இத்தகைய யுத்தம் உனக்கு எப்பொழுதும் நிலைக்கக் கூடிய மேலான அமைதியைக் கொடுக்கும்" என்று பகவான் கூறுகிறார்.

**கேள்வி:** *'இவ்விதம் யுத்தம் செய்வதால் உனக்குப் பாவம் நேரிடாது' என்று கூறுவதன் பொருள் என்ன?*

**பதில்:** 'தன் பந்துவர்க்கங்களைக் கொல்வதால் பாவம் உண்டாகும். ஆகவே, யுத்தம் செய்யாமல் இருப்பதுதான் சரி' (1/36,39,45) என்ற அர்ஜுனனுடைய முடிவிற்கு பகவான் இவ்விதம் பதில் கூறுகிறார். 'மேற்கூறிய (நான் கூறிய) மனப்பாங்குடன் யுத்தம் செய்வதால் பாவம் சிறிதளவு கூட உன்னைத் தீண்டாது. நீ செய்யும் செய்கையினால் விளையும் நல்லதோ, கெட்டதோ உன்னைக் கட்டுப்படுத்தாது. நற்செயலாலோ, தீய செயலாலோ ஏற்படக்கூடிய கர்ம பந்தத்திலிருந்து முற்றிலும் விடுபடுவாய்' என்கிறார் பகவான்.

**பொருத்தம்:** இதுவரை பகவான் ஸாங்க்யயோக ரீதியிலும், க்ஷத்ரிய தர்ம ரீதியிலும் யுத்தத்தின் அவசியத்தை வற்புறுத்திக் கூறி, 'ஸமபாவனையுடன் யுத்தம் செய்வாயாக' என்று ஆணையிட்டார். அடுத்து, கர்மயோக ஸித்தாந்த ரீதியிலும் யுத்தம் அவசியம் செய்யத்தான் வேண்டும் என்று கூறுவதற்காகக் கர்மயோகத்தைப் பற்றி விவரிப்பதற்கு ஒரு முன்னுரை கூறுகிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**एषा तेऽभिहिता साङ्ख्ये बुद्धिर्योगे त्विमां शृणु।**
**बुद्ध्या युक्तो यया पार्थ कर्मबन्धं प्रहास्यसि॥ ३९॥**

**ஏஷா தேऽபி₄ஹிதா ஸாங்க்₂யே பு₃த்தி₄ர்யோகே₃ த்விமாம் ஶ்ருணு ।**

**பு₃த்₃த்₄யா யுக்தோ யயா பார்த₂ கர்மப₃ந்த₄ம் ப்ரஹாஸ்யஸி ॥ 39 ॥**

**பார்த₂** – பார்த்த! **ஏஷா** – இந்த, **பு₃த்தி₄:** – புத்தி, **தே** – உனக்கு, **ஸாங்க்₂யே** – ஞானயோக விஷயத்தில், **அபி₄ஹிதா** – கூறப்பட்டது. **து** – இனி, **இமாம்** – இதனை, **யோகே₃** – கர்மயோக விஷயத்தில், **ஶ்ருணு** – கேள். **யயா** – அந்த, **பு₃த்₃த்₄யா யுக்த:** – புத்தியோடு கூடியவனாக ஆகி, **கர்மப₃ந்த₄ம்** – கர்மபந்தத்தை, **ப்ரஹாஸ்யஸி** – முழுமையாக விலக்கி விடுவாய். அதாவது முற்றிலும் அழித்து விடுவாய்.

பார்த்த! இந்த புத்தி உனக்கு ஞானயோக விஷயத்தில் கூறப்பட்டது. இனி இதனைக் கர்மயோக விஷயத்தில் கேள். அந்த புத்தியோடு கூடியவனாக ஆகி கர்மபந்தத்தை முழுமையாக விலக்கி விடுவாய். அதாவது முற்றிலும் அழித்து விடுவாய்.

**கேள்வி:** *'ஏஷா புத்தி:' என்று எதைக் குறிப்பிடுகிறார்? 'இது உனக்கு ஞானயோக விஷயத்தில் சொல்லப்பட்டது' என்றால் என்ன கருத்து?*

**பதில்:** முன் ச்லோகத்தில் பகவான் ஸமபாவனையுடன் யுத்தம் செய்வாயாக என்று சொன்னாரே, அந்த ஸமத்வம்தான் 'இந்த புத்தி' என்று இங்கே கூறப்படுகிறது. 'ஏஷா' (இந்த) என்பது அண்மையில் உள்ளதையே குறிக்கும். ஞானயோக ஸாதனையினால் ஸமபாவனை எப்படி ஏற்படும்? ஞானயோகி ஆத்மாவின் உண்மை ஸ்வரூபத்தை விவேகத்தினால் அறிந்து, ஸமபாவனை பெற்று வர்ணாசிரமத்திற்கு உரிய கடமைகளை எப்படி ஆற்றவேண்டும் என்ற விஷயங்கள் ச்லோகம் 11 முதல் 30 வரை சொல்லப்பட்டன.

**கேள்வி:** *ச்லோகம் 11 முதல் 30 வரை இந்த ஸமபாவனை எவ்விதம் சொல்லப்பட்டது?*

**பதில்:** ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை அறியாததால்தான் மனிதனுக்கு எல்லாவற்றிலும் நேர்மாறான கருத்துக்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை அறிந்த பிறகு அவன் பார்வையில் ஆத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் வேற்றுமை இருக்காது. ஒரே ஸத், சித், ஆனந்தமயமான ப்ரம்மத்தைத் தவிர வேறு எதற்கும் இருப்பு – 'ஸத்தா' என்பது கிடையாது. ஆகவே, அப்போது எதிலும் வேற்றுமை தோன்றாது. அதற்காகத்தான் பகவான் 11வது ச்லோகத்தில், ப்ரமையிலிருந்து தோன்றும் தவறான எண்ணம் அல்லது பேதபுத்தியின் காரணமாக இறப்பதிலும், உயிரோடு இருப்பதிலும் துக்கப்படுவது உசிதமன்று. அந்த சோகத்தைத் தவிர்க்க வேண்டும் என்று சொன்னார். 12, 13வது ச்லோகங்களில், 'ஆத்மதத்வம் நித்யமானது; ஒன்றிலும் ஒட்டாதது. ப்ராணிகள் இறப்பதிலும், உயிரோடு இருப்பதிலும் காணப்படும் பேதம் அஞ்ஞானத்தினால் விளைவது; ஆத்மஞானியான தீரபுருஷனுக்கு இந்த பேதபுத்தி இருக்காது. ஏனெனில், ஆத்மதத்வம் எங்கும் ஸமமானது; விகாரமற்றது; நித்யமானது' என்று கூறினார். பிறகு, தட்ப-வெப்பம், ஸுக-துக்கம் ஆகிய இரட்டைகளால் ஏற்படும் பேதபுத்தியை ஒளி, தொடுதல் ஆகிய போக விஷயங்களே தருகின்றன. இவை அநித்யமானவை. அவற்றைப் பொறுத்துக் கொள்ளவேண்டும். ஸமபாவனையுடன் இருக்கவேண்டும் *(2/14)*. இப்படி ஸுகதுக்கங்களில் ஸமபாவனையுடன் இருப்பவனின் பெருமையைச் சொல்லி, அவன் பரமாத்மாவை அடைய ஏற்றவன் என்று சொன்னார் *(2/15)*. பிறகு ஸத்யமான பொருள் எது, அஸத்யமான பொருள் எது என்பதை முடிவாக எடுத்துச் சொல்லி, 'யுத்தம் செய்வாயாக' என்று ஆணையிட்டார் *(2/16–18)*. அடுத்து வரும் ச்லோகங்களில், 'கொல்பவனாகவும், கொல்லப்படுபவனாகவும் ஆத்மாவை நினைப்பவன் அஞ்ஞானி' என்றார். "ஆத்மதத்வம் விகாரமற்றது; கர்த்தா அன்று;

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நித்யமானது. உடலின் அழிவினால் ஆத்மாவுக்கு நாசம் கிடையாது. ஆகவே இறப்பிலும், உயிரோடு இருப்பதிலும் ஏற்படும் தவறான எண்ணம் காரணமாக நீ எந்த உயிரினத்திற்காகவும் வருத்தப்படுவது சரியன்று" என்று கூறுகிறார் *(2/19-30)*. இப்படி மேலே சொல்லப்பட்ட ஸந்தர்பத்தில் ஸத்யமான வஸ்து எது, அஸத்யமான வஸ்து எது என்பதைப் பிரித்துக் காட்டி, ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை அறிவதால் ஸமபாவனை ஏற்படும் என்பது விளக்கப்பட்டது.

**கேள்வி:** 'இமாம்' என்ற சொல் எந்த புத்தியைக் குறிக்கிறது? 'இப்போது இதைக் கர்ம யோக விஷயத்தில் தெரிந்து கொள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த ச்லோகத்தில் உள்ள 'இமாம்' என்ற சொல்லுக்கு முன் ச்லோகத்தில் கூறப்பட்ட 'ஸமபாவனை உள்ள புத்தி' என்றுதான் பொருள். ஆதலால், இங்கு ஸமபாவனை கர்மயோக ஸாதனையினால் எப்படிக் கிடைக்கும்? கர்மயோகிக்கு எந்த மாதிரியான ஸமபாவனை இருக்க வேண்டும்? அந்த ஸமபாவனையின் பயன் என்ன? – இவற்றைச் சொல்கிறேன் என்கிறார். இதுபற்றி எல்லா விஷயங்களையும் அடுத்த ச்லோகத்தில் உனக்குச் சொல்ல ஆரம்பிக்கிறேன்; நீ கவனமாகக் கேள் — என்கிறார்.

**கேள்வி:** அப்படியானால் *31* முதல் *37* வரை உள்ள விஷயம் இடையிலே எப்படி வந்தது?

**பதில்:** இனி கூறப் போகும் விஷயத்தை அர்ஜுனனுக்கு அறிவுறுத்துவதற்காகத்தான் இந்த ப்ரஸ்தாபம் வந்தது. 'அர்ஜுன! நீ க்ஷத்ரியன். யுத்தம் செய்வது உன்னுடைய ஸ்வதர்மம். அதை எக்காரணத்தைக் கொண்டும் தவிர்ப்பது முறையன்று. அதைச் செய்வதுதான் உனக்கு மேன்மை தரும்.' 38வது ச்லோகத்தில் யுத்தம் செய்துதான் ஆகவேண்டியது என்ற முடிவுக்கு வந்தபிறகு, அதை எந்த நோக்கில் செய்தால் அது உன்னை பந்தப்படுத்தாதோ அவ்வாறு செய்ய வேண்டும். ஞானயோகம், கர்மயோகம் இரண்டிலுமே ஸமபாவனை இருப்பது மிக அவசியம் என்பதைக் கூறவே இரண்டுக்கும் இடையே, இடைக்கழியில் வைத்த தீபம் எப்படி உள்ளும், புறமும் வெளிச்சம் காட்டுமோ, அதுபோல நடுவில் சொன்னார்.

**கேள்வி:** 'கர்ம பந்தம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? மேலே சொன்ன ஸமபுத்தியினால் அதை அழிப்பது எப்படி?

**பதில்:** முன் பல பிறவிகளில் செய்த நல்லதும், தீயதுமான வினைகளின் ஸம்ஸ்காரத்தினால் இந்த ஜீவன் பந்தப்பட்டிருக்கிறது. இந்த மனிதப்பிறவியிலும் அஹங்காரம், மமகாரம், பற்றுதல், பயனில் ஆசை இவற்றால் மேலும் பல புதிய கர்மங்களைச் செய்வதால் இந்த பந்தம் மேலும் வலுப்பெறுகிறது. இந்த ஜீவன் மேலும் பிறப்பு, இறப்பு என்ற சுழலில் உழலுதலுக்குக் காரணமான பல முன் பிறவிகளில் சேர்ந்த நல்லதும், தீயதுமான ஸம்ஸ்காரத் தொகுப்பையே 'கர்மபந்தம்' என்கிறார். கர்மயோகத்தின் முறையில் எல்லாக் கர்மங்களிலும் மமகாரம், பற்று, பயனில் உள்ள ஆசை இவற்றை விட்டு, கர்மம் சரியான பயன் தருமா, தராதா என்ற கவலையை விட்டு, ஸமபாவனையுடன் விருப்பு-வெறுப்பு, மகிழ்ச்சி-துன்பம் முதலிய விகாரங்களுக்காட்படாமல் கடமையைச் செய்ய வேண்டும். இப்படிச் செய்தால் இப்பிறவியிலும், பல முன் பிறவிகளிலும் செய்த கர்மங்களுக்கும் இனிமேல் செய்யப் போகும் கர்மங்களுக்கும் பயனை உண்டாக்கும் திறமை அழிந்துவிடுகிறது. வறுக்கப்பட்ட தான்யங்கள் முளைவிடாது போவது போலாகி விடுகின்றன. இதுதான் ஸமபுத்தியினால் கர்மபந்தம் முற்றிலும் விலகுகிறது என்பதன் பொருள்.

**பொருத்தம்:** இப்படிக் கர்மயோகத்திற்கு முகவுரை கூறி, அதன் ரஹஸ்யமான பெருமையை எடுத்துச் சொல்கிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



एषा तेऽभिहिता साङ्ख्ये बुद्धिर्योगे त्विमां शृणु।
बुद्ध्या युक्तो यया पार्थ कर्मबन्धं प्रहास्यसि ॥ ३९ ॥

ஏஷா தே஽பி₄ஹிதா ஸாங்க்₂யே பு₃த்₃தி₄ர்யோகே₃ த்₃விமாம் ஶ்ருணு ।
பு₃த்₃த்₄யா யுக்தோ யயா பார்த₂ கர்மப₃ந்த₄ம் ப்ரஹாஸ்யஸி ॥ 39 ॥

**பார்த₂** – பார்த்த! **ஏஷா** – இந்த, **பு₃த்₃தி₄:** – புத்தி, **தே** – உனக்கு, **ஸாங்க்₂யே** – ஞானயோக விஷயத்தில், **அபி₄ஹிதா** – கூறப்பட்டது. **து** – இனி, **இமாம்** – இதனை, **யோகே₃** – கர்மயோக விஷயத்தில், **ஶ்ருணு** – கேள். **யயா** – அந்த, **பு₃த்₃த்₄யா யுக்த:** – புத்தியோடு கூடியவனாக ஆகி, **கர்மப₃ந்த₄ம்** – கர்மபந்தத்தை, **ப்ரஹாஸ்யஸி** – முழுமையாக விலக்கி விடுவாய். அதாவது முற்றிலும் அழித்து விடுவாய்.

பார்த்த! இந்த புத்தி உனக்கு ஞானயோக விஷயத்தில் கூறப்பட்டது. இனி இதனைக் கர்மயோக விஷயத்தில் கேள். அந்த புத்தியோடு கூடியவனாக ஆகி கர்மபந்தத்தை முழுமையாக விலக்கி விடுவாய். அதாவது முற்றிலும் அழித்து விடுவாய்.

**கேள்வி:** 'ஏஷா புத்தி:' என்று எதைக் குறிப்பிடுகிறார்? 'இது உனக்கு ஞானயோக விஷயத்தில் சொல்லப்பட்டது' என்றால் என்ன கருத்து?

**பதில்:** முன் ச்லோகத்தில் பகவான் ஸமபாவனையுடன் யுத்தம் செய்வாயாக என்று சொன்னாரே, அந்த ஸமத்வம்தான் 'இந்த புத்தி' என்று இங்கே கூறப்படுகிறது. 'ஏஷா' (இந்த) என்பது அண்மையில் உள்ளதையே குறிக்கும். ஞானயோக ஸாதனையினால் ஸமபாவனை எப்படி ஏற்படும்? ஞானயோகி ஆத்மாவின் உண்மை ஸ்வரூபத்தை விவேகத்தினால் அறிந்து, ஸமபாவனை பெற்று வர்ணாசிரமத்திற்கு உரிய கடமைகளை எப்படி ஆற்றவேண்டும் என்ற விஷயங்கள் ச்லோகம் 11 முதல் 30 வரை சொல்லப்பட்டன.

**கேள்வி:** ச்லோகம் 11 முதல் 30 வரை இந்த ஸமபாவனை எவ்விதம் சொல்லப்பட்டது?

**பதில்:** ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை அறியாததால்தான் மனிதனுக்கு எல்லாவற்றிலும் நேர்மாறான கருத்துக்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை அறிந்த பிறகு அவன் பார்வையில் ஆத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் வேற்றுமை இருக்காது. ஒரே ஸத், சித், ஆனந்தமயமான ப்ரம்மத்தைத் தவிர வேறு எதற்கும் இருப்பு – 'ஸத்தா' என்பது கிடையாது. ஆகவே, அப்போது எதிலும் வேற்றுமை தோன்றாது. அதற்காகத்தான் பகவான் 11வது ச்லோகத்தில், ப்ரமையிலிருந்து தோன்றும் தவறான எண்ணம் அல்லது பேதபுத்தியின் காரணமாக இறப்பதிலும், உயிரோடு இருப்பதிலும் துக்கப்படுவது உசிதமன்று. அந்த சோகத்தைத் தவிர்க்க வேண்டும் என்று சொன்னார். 12, 13வது ச்லோகங்களில், 'ஆத்மதத்வம் நித்யமானது; ஒன்றிலும் ஒட்டாதது. ப்ராணிகள் இறப்பதிலும், உயிரோடு இருப்பதிலும் காணப்படும் பேதம் அஞ்ஞானத்தினால் விளைவது; ஆத்மஞானியான தீரபுருஷனுக்கு இந்த பேதபுத்தி இருக்காது. ஏனெனில், ஆத்மதத்வம் எங்கும் ஸமமானது; விகாரமற்றது; நித்யமானது' என்று கூறினார். பிறகு, தட்ப-வெப்பம், ஸுக-துக்கம் ஆகிய இரட்டைகளால் ஏற்படும் பேதபுத்தியை ஒளி, தொடுதல் ஆகிய போக விஷயங்களே தருகின்றன. இவை அநித்யமானவை. அவற்றைப் பொறுத்துக் கொள்ளவேண்டும். ஸமபாவனையுடன் இருக்கவேண்டும் (2/14). இப்படி ஸுகதுக்கங்களில் ஸமபாவனையுடன் இருப்பவனின் பெருமையைச் சொல்லி, அவன் பரமாத்மாவை அடைய ஏற்றவன் என்று சொன்னார் (2/15). பிறகு ஸத்யமான பொருள் எது, அஸத்யமான பொருள் எது என்பதை முடிவாக எடுத்துச் சொல்லி, 'யுத்தம் செய்வாயாக' என்று ஆணையிட்டார் (2/16–18). அடுத்து வரும் ச்லோகங்களில், 'கொல்பவனாகவும், கொல்லப்படுபவனாகவும் ஆத்மாவை நினைப்பவன் அஞ்ஞானி' என்றார். "ஆத்மதத்வம் விகாரமற்றது; கர்த்தா அன்று;

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நித்யமானது. உடலின் அழிவினால் ஆத்மாவுக்கு நாசம் கிடையாது. ஆகவே இறப்பிலும், உயிரோடு இருப்பதிலும் ஏற்படும் தவறான எண்ணம் காரணமாக நீ எந்த உயிரினத்திற்காகவும் வருத்தப்படுவது சரியன்று" என்று கூறுகிறார் (2/19-30). இப்படி மேலே சொல்லப்பட்ட ஸந்தர்பத்தில் ஸத்யமான வஸ்து எது, அஸத்யமான வஸ்து எது என்பதைப் பிரித்துக் காட்டி, ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை அறிவதால் ஸமபாவனை ஏற்படும் என்பது விளக்கப்பட்டது.

**கேள்வி:** 'இமாம்' என்ற சொல் எந்த புத்தியைக் குறிக்கிறது? 'இப்போது இதைக் கர்ம யோக விஷயத்தில் தெரிந்து கொள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த ச்லோகத்தில் உள்ள 'இமாம்' என்ற சொல்லுக்கு முன் ச்லோகத்தில் கூறப்பட்ட 'ஸமபாவனை உள்ள புத்தி' என்றுதான் பொருள். ஆதலால், இங்கு ஸமபாவனை கர்மயோக ஸாதனையினால் எப்படிக் கிடைக்கும்? கர்மயோகிக்கு எந்த மாதிரியான ஸமபாவனை இருக்க வேண்டும்? அந்த ஸமபாவனையின் பயன் என்ன? - இவற்றைச் சொல்கிறேன் என்கிறார். இதுபற்றி எல்லா விஷயங்களையும் அடுத்த ச்லோகத்தில் உனக்குச் சொல்ல ஆரம்பிக்கிறேன்; நீ கவனமாகக் கேள் — என்கிறார்.

**கேள்வி:** அப்படியானால் 31 முதல் 37 வரை உள்ள விஷயம் இடையிலே எப்படி வந்தது?

**பதில்:** இனி கூறப் போகும் விஷயத்தை அர்ஜுனனுக்கு அறிவுறுத்துவதற்காகத்தான் இந்த ப்ரஸ்தாபம் வந்தது. 'அர்ஜுன! நீ க்ஷத்ரியன். யுத்தம் செய்வது உன்னுடைய ஸ்வதர்மம். அதை எக்காரணத்தைக் கொண்டும் தவிர்ப்பது முறையன்று. அதைச் செய்வதுதான் உனக்கு மேன்மை தரும்.' 38வது ச்லோகத்தில் யுத்தம் செய்துதான் ஆகவேண்டியது என்ற முடிவுக்கு வந்தபிறகு, அதை எந்த நோக்கில் செய்தால் அது உன்னை பந்தப்படுத்தாதோ அவ்வாறு செய்ய வேண்டும். ஞானயோகம், கர்மயோகம் இரண்டிலுமே ஸமபாவனை இருப்பது மிக அவசியம் என்பதைக் கூறவே இரண்டுக்கும் இடையே, இடைக்கழியில் வைத்த தீபம் எப்படி உள்ளும், புறமும் வெளிச்சம் காட்டுமோ, அதுபோல நடுவில் சொன்னார்.

**கேள்வி:** 'கர்ம பந்தம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? மேலே சொன்ன ஸமபுத்தியினால் அதை அழிப்பது எப்படி?

**பதில்:** முன் பல பிறவிகளில் செய்த நல்லதும், தீயதுமான வினைகளின் ஸம்ஸ்காரத்தினால் இந்த ஜீவன் பந்தப்பட்டிருக்கிறது. இந்த மனிதப்பிறவியிலும் அஹங்காரம், மமகாரம், பற்றுதல், பயனில் ஆசை இவற்றால் மேலும் பல புதிய கர்மங்களைச் செய்வதால் இந்த பந்தம் மேலும் வலுப்பெறுகிறது. இந்த ஜீவன் மேலும் பிறப்பு, இறப்பு என்ற சுழலில் உழலுதலுக்குக் காரணமான பல முன் பிறவிகளில் சேர்ந்த நல்லதும், தீயதுமான ஸம்ஸ்காரத் தொகுப்பையே 'கர்மபந்தம்' என்கிறார். கர்மயோகத்தின் முறையில் எல்லாக் கர்மங்களிலும் மமகாரம், பற்று, பயனில் உள்ள ஆசை இவற்றை விட்டு, கர்மம் சரியான பயன் தருமா, தராதா என்ற கவலையை விட்டு, ஸமபாவனையுடன் விருப்பு-வெறுப்பு, மகிழ்ச்சி-துன்பம் முதலிய விகாரங்களுக்காட்படாமல் கடமையைச் செய்ய வேண்டும். இப்படிச் செய்தால் இப்பிறவியிலும், பல முன் பிறவிகளிலும் செய்த கர்மங்களுக்கும் இனிமேல் செய்யப் போகும் கர்மங்களுக்கும் பயனை உண்டாக்கும் திறமை அழிந்துவிடுகிறது. வறுக்கப்பட்ட தான்யங்கள் முளைவிடாது போவது போலாகி விடுகின்றன. இதுதான் ஸமபுத்தியினால் கர்மபந்தம் முற்றிலும் விலகுகிறது என்பதன் பொருள்.

**பொருத்தம்:** இப்படிக் கர்மயோகத்திற்கு முகவுரை கூறி, அதன் ரஹஸ்யமான பெருமையை எடுத்துச் சொல்கிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते।**
**स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात्॥४०॥**

**நேஹாபி₄க்ரமநாஶோऽஸ்தி ப்ரத்யவாயோ ந வித்₃யதே ।**
**ஸ்வல்பமப்யஸ்ய த₄ர்மஸ்ய த்ராயதே மஹதோ ப₄யாத் ॥ 40 ॥**

**இஹ** – இந்தக் கர்மயோகத்தில், **அபி₄க்ரமநாஶ:** – ஆரம்பம் அதாவது விதை அழிவது என்பது, **ந அஸ்தி** – இல்லை. **ப்ரத்யவாய:** – நேரெதிரான விளைவும், **ந வித்₃யதே** – இல்லை. **அஸ்ய த₄ர்மஸ்ய** – இந்தக் கர்மயோகம் என்கிற தர்மத்தை, **ஸ்வல்பம் அபி** – சிறிதளவு கைக்கொள்வதும் கூட, **மஹத:** – பெரியதான, **ப₄யாத்** – பிறப்பு, இறப்பு என்ற பயத்திலிருந்து, **த்ராயதே** – காப்பாற்றுகிறது.

இந்தக் கர்மயோகத்தில் ஆரம்பம் அதாவது விதை அழிவது என்பது இல்லை. நேரெதிரான விளைவும் இல்லை. இந்தக் கர்மயோகம் என்கிற தர்மத்தைச் சிறிதளவு கைக்கொள்வதும்கூடப் பெரியதான பிறப்பு, இறப்பு என்ற பயத்திலிருந்து காப்பாற்றுகிறது.

**கேள்வி:** 'இந்தக் கர்மயோகத்தில் ஆரம்பம் அழிவதில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இந்தக் கர்மயோகத்தில் ஸாதனை செய்ய முனைந்து, அதை முழுமையாகச் செய்து முடிப்பதற்கு முன் மனிதன் அதை நடுவில் விட்டு விடுகிறான் என்று வைத்துக் கொள்வோம். விவசாயம் செய்பவன் நிலத்தில் விதை விதைத்துவிட்டு, அதற்குத் தண்ணீர் பாய்ச்சிக் காப்பாற்றாமல் விட்டுவிட்டால் அந்த விதை வீணாகிவிடுகிறது. அதுபோலன்றிக் கர்மயோகத்தை ஆரம்பித்துத் தொடராமல் விட்டுவிட்டால் அது அழிவதில்லை. அந்த ஆரம்பத்தின் ஸம்ஸ்காரம் (மனப்பதிவு) ஸாதகனின் உள்ளத்தில் ஊன்றிவிடுகிறது. அடுத்த பிறவியில்கூட அது பலவந்தமாக அந்த ஸாதனையில் ஈடுபடுத்துகிறது (6/43,44). அது அழிவதில்லை. ஆகவே, பகவான் கர்மயோகத்தை, 'ஸத்' என்று கூறுகிறார் (17/27).

**கேள்வி:** இதில் 'ப்ரத்யவாய:' அதாவது, 'நேர்மாறான விளைவு ஏற்படுவது என்ற தோஷமும் கிடையாது' என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** பயனைக் கருதிக் கர்மம் செய்தால் அங்கு நல்ல அல்லது தீய பயன் நேரும். கர்மயோகத்தில் பயன் வேண்டும் என்ற எண்ணமே இல்லை. அதனால் விபரீதமான பயன் ஏற்படுவதற்கு வாய்ப்பே இல்லை. பயனைக் கருதி தெய்வத்திற்கோ, பித்ருக்களுக்கோ, மனிதர்களுக்கோ ஸேவை செய்யும்போது தவறு நேர்ந்தால் அவர்கள் கோபம் கொள்ளக் காரணம் உண்டு. அதனால் ஸாதகனுக்குத் தீங்கு நேரலாம். ஆனால் தன்னலம் கருதாத யாகம், தானம், தவம், ஸேவை முதலிய கடமைகளில் குறை ஏற்பட்டாலும் விபரீத விளைவாகத் தீங்கு நேராது. நோய் குணமாவதற்காக ஒருவன் மருந்து சாப்பிடுகிறான். அந்த மருந்து ஒத்துக் கொள்ளாவிட்டால் நோய் நீங்காதது மட்டுமன்று; மாறாக நோய் முற்றிவிடுவதும் உண்டு. அதுபோல கர்மயோக ஸாதனையில் விபரீத விளைவு உண்டாகாது (6/40). அதாவது, அந்த ஸாதனை முற்றுப் பெறாததனால் இப்பிறவியில் அந்த ஸாதகனுக்குப் பரமபதம் கிடைக்காவிட்டாலும், ஸாதனையைக் கடைப்பிடிப்பவனுக்கு முன்வினைப் பயனாகவும், இப்பிறவியிலேயே கர்மயோகத்தில் தவிர்க்க முடியாமல் நேரிடும் ஹிம்ஸை முதலியவற்றின் பயனாகவும், விலங்கு-பறவை இனங்களில் பிறவியோ, நரக வாஸமோ ஏற்படாது. முன் செய்த புண்யங்களின் விளைவால் இவ்வுலகிலோ, பரலோகத்திலோ கிடைக்கும் ஸுகபோகத்தில் தடையும் ஏற்படாது. அவன் புண்யவான்களின் உத்தம லோகத்தை அடைந்து, அங்கு வெகுநாட்கள் வாழ்ந்து மறுபடியும் தூய செல்வந்தர்களின் வீட்டிலே பிறப்பான். அல்லது யோகிகளின் குலத்தில் பிறப்பான். முன் பழக்கத்தினால் மறுபடியும் அதே ஸாதனையில் ஈடுபடுவான் (6/41–44).

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ப்ரத்யவாயோ ந வித்யதே' என்பதற்குக் கர்மயோகத்தில இடையூறோ, தடையோ ஏற்படாது என்று பொருள் சொன்னால் என்ன தவறு?

**பதில்:** முன்வினைப் பாவத்தின் காரணமாகவும், போகங்கள் காரணமாகவும், அவ்வாறே ஸாதனையில் தவறு செய்பவர்கள், விஷய ஸுகங்களில் ஈடுபட்டவர்கள், நாஸ்திகர்கள் இவர்களுடைய சேர்க்கையினாலும் இடையூறுகள் நேரலாம். ஆனால், பயனைக் கருதாது ஆற்றப்படும் கடமைகளின் விளைவு தீயதாக இருக்காது. ஆகவே, நேரெதிரான விளைவான் தோஷம் ஏற்படாது என்று கொள்வதே ந்யாயம்.

**கேள்வி:** 'அஸ்ய தர்மஸ்ய' என்றால் என்ன பொருள்?

**பதில்:** முன் ச்லோகத்தில் யோகம் என்ற சொல்லால் விளக்கப்பட்ட கர்மயோகம் என்று பொருள்.

**கேள்வி:** கர்மயோகம் என்றால் என்ன?

**பதில்:** சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட உயர்ந்த கடமைகளே 'கர்மம்' எனப்படும். ஸமபாவனையே 'யோகம்' (2/48). ஆகவே, மமகாரம்–ஆஸக்தி, காமம்–க்ரோதம், பேராசை–மோஹம் இவை இல்லாமல் ஸமபாவனையுடன் தனது வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை இவற்றிற்கேற்ப சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளை ஆற்றுவதுதான் கர்மயோகம். இதையே ஸமத்வயோகம், புத்தியோகம், 'ததர்த்தகர்ம', 'மதர்த்தகர்ம', 'மத்கர்ம' என்றெல்லாம் பகவான் சொல்கிறார்.

**கேள்வி:** 'இந்தக் கர்மயோகத்தில் சிறு ஸாதனைகூடப் பெரிய பயத்திலிருந்து ஸாதகனைக் காக்கும்' என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** இந்தக் கர்மயோகத்தின் ஸாதனை முடிவு வரை போய்ச் சேருமானால் (நிறைவு பெறுமானால்), அது அந்த ஸாதகனை அதே கணத்தில் பரப்ரம்மமாகிய ப்ரமாத்மாவிடம் சேர்க்கும். ஆகவே, பூர்ண ஸாதனையைப் பற்றி வேறு என்ன சொல்ல? ஆனால், யாராவது ஒருவன் இந்தக் கர்மயோக ஸாதனையில் ஒரு சிறு அம்சத்தைச் செய்தாலும் சரி, அதாவது ஸமபாவனையில் முழுவதும் நிலைத்து நில்லாமல் ஓரளவு ஸமபாவனையுடன் கடமைகளைச் செவ்வனே ஆற்றினாலும் சரி, அந்தச் சிறு ஸமபாவனைகூட, உயிர் பிரியும் காலத்தில் உறுதியாக இருந்தால், அதே கணத்தில் அவனை ப்ரம்ம நிர்வாணத்தை அடையச் செய்யும் (2/72). இல்லாவிட்டால் அது அடுத்த பிறவிகளில் அந்த ஸாதகனை அதே ஸாதனையைத் தொடரச் செய்து பரமகதியை அடையச் செய்யும் (6/41–45). இவ்விதம் ஸந்தர்பத்திற்கு ஏற்ப அவனுக்கு அவசியம் மேன்மை கிடைக்கத்தான் செய்கிறது. மாறாக, பயனில் பற்றுடன் எத்தனை ஆயிரம் ஆண்டுகள் எவ்வளவு பெரிய பெரிய யாகங்கள், தானங்கள், தவங்கள், புண்யஸ்தல வாஸம், வ்ரதம், உபவாஸம் முதலியவை செய்தாலும் மனிதன் ஸம்ஸாரச் சுழலிலிருந்து வெளியேற முடியாது. ஆனால் ஸமபாவனையுடன் செய்யப்படும் சாஸ்த்ர முறைக்கேற்ப பிக்ஷை எடுத்தல், போர்த்தொழில், வேளாண்மை, வணிகம், தொண்டு, சில்பம் ஆகிய வாழ்க்கை நடத்துவதற்காகச் செய்யப்படும் சிறு தொழில்கள்கூட முழுமனதுடன் நிஷ்காமமாகச் செய்யப்பட்டால் அவனை ஒரு கணத்தில் ஸம்ஸாரத்திலிருந்து கரை ஏற்றிவிடும். ஆகவே, நல்ல கார்யங்களில் செயலைக் காட்டிலும் மனப்பாங்குதான் முக்யம்.

**கேள்வி:** இந்தக் கர்மயோகம் சிறிது ஆரம்பித்துப் பெருகின பிறகுதானே பெரிய பயத்திலிருந்து காப்பாற்றும்? பின் சிறிதேயான ஸமபாவனைக்கு என்ன பெருமை?

**பதில்** பயனைக் கருதாது செயலாற்றுவதன் விளைவு ஸம்ஸாரத்திலிருந்து கரை ஏற்றிவிடுதல் அப்படிக் கரையேற்றாமல் அது பலனற்றுப் போவதும் இல்லை. வேறு பயனைத் தருவதும் இல்லை. முடிவில் ஸாதகனை முழுமையாக நிஷ்காம மனமுடையவனாக ஆக்கி அவனைக் கரையேற்றி விடுகிறது. அதுதான் சிறிதேயான ஸமபாவத்தின் மஹிமை.

**கேள்வி:** கர்மயோகத்தில் சிறிது முயற்சி கூடப் பெரிய பயத்திலிருந்து காப்பாற்றுமானால், கர்மயோகத்தைப் பூரணமாக ஸாதிப்பதற்கு என்ன அவசியம்?



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



*பதில்:* கர்மயோகத்தில் சிறிது முயற்சிகூடக் காப்பாற்றத்தான் செய்கிறது. இதில் ஸந்தேஹமே இல்லை. ஆனால் அப்படி எப்போது செய்யும் என்ற கால நிர்ணயம் கிடையாது. இப்பிறவியிலேயே செய்யுமா, அல்லது அடுத்த பிறவிகளிலா என்று தெரியாது. ஏனெனில், அந்தச் சிறு ஸாதனை பெருகி முழுமை பெற்றுத்தான் கரையேற்றும். ஆகவே நலனை, மங்களத்தை விரைவில் அடைய விரும்புபவன், முயற்சியுடன் கூடியவன், அதே முனைப்புடனும், உற்சாகத்துடனும் முழுமையாக ஸமத்வபாவனை அடைய ஆவன செய்யவேண்டும்.

*கேள்வி:* 'பெரிய பயம்' என்று எதைச் சொல்கிறார்? அதிலிருந்து காப்பாற்றப்படுவது என்றால் என்ன?

*பதில்:* ப்ராணிகளுக்கு எல்லா பயங்களைக் காட்டிலும் பெரியது மரண பயம். முடிவற்ற காலம் வரை மறுபடியும் மறுபடியும் பிறப்பதும், இறப்பதும் பெரிய பயம்தான். இந்தப் பிறப்பு-இறப்பு என்ற பெரிய பயத்தை பகவான், இனிவரும் அத்யாயத்தில் 'ம்ருத்யு ஸம்ஸார ஸாகரம்' (மரணம் என்ற ஸம்ஸாரக் கடல்) (12/7) என்று கூறுகிறார். கடலில் அலைகள் ஓயாமல் எழுகின்றன. அதுபோல இந்த ஸம்ஸாரக் கடலில் பிறப்பு-இறப்பு என்ற முடிவற்ற அலைகள் எழுந்து வீழ்கின்றன. கடலின் அலைகளை ஒருகால் எண்ணினாலும் எண்ணிவிடலாம்; பரமாத்மாவின் உண்மை அறிவு ஏற்படாதவரை எத்தனை தடவை இறக்க வேண்டியிருக்கும் என்பதை யாராலும் கணக்கிட முடியாது. இந்த மரணம் என்ற ஸம்ஸாரக் கடலிலிருந்து கரை ஏறுவது என்பது, பிறப்பு-இறப்பு இவற்றிலிருந்து முற்றிலும் விடுபட்டு, ப்ரபஞ்சத்திலிருந்து அறவே ஒதுங்கி, ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்துடன் ஒன்றிவிடுவதுதான் பெரிய பயத்திலிருந்து மீட்புப் பெறுவது ஆகும்.

*பொருத்தம்:* **இவ்விதம் கர்மயோகத்தின் பெருமையை விளக்கி, அதை எப்படிக் கடைப்பிடிப்பது என்று கூறுவதற்காக — முதலில் கர்மயோகத்திற்கு மிகவும் தேவையான, தேர்ச்சி பெற்ற கர்மயோகியினுடைய உறுதியான, நிலையான ஸமபுத்திக்கும், கர்மயோகத்திற்கு ஊறு விளைவிக்கக் கூடிய காம்ய கர்மம் செய்பவர்களின் வெவ்வேறான மற்ற புத்திகளுக்கும் உள்ள மாறுபாட்டை வர்ணிக்கிறார்—**

**व्यवसायात्मिका बुद्धिरेकेह कुरुनन्दन।**
**बहुशाखा ह्यनन्ताश्च बुद्धयोऽव्यवसायिनाम्॥ ४१॥**

**வ்யவஸாயாத்மிகா பு₃த்₃தி₄ரேகேஹ குருநந்த₃ந ।**
**ப₃ஹுஶாகா₂ ஹ்யநந்தாஶ்ச பு₃த்₃த₄யோऽவ்யவஸாயிநாம் ॥ 41 ॥**

**குருநந்த₃ந** – அர்ஜுன! **இஹ** – இந்தக் கர்மயோகத்தில், **வ்யவஸாயாத்மிகா** – தீர்மானமான, **பு₃த்₃தி₄:** – புத்தி, ஏகா – ஒன்றுதான் (இருக்கிறது). **அவ்யவஸாயிநாம்** – (ஆனால்) ஒரு விஷயத்திலும் நிச்சய புத்தி இல்லாத, விவேகமற்ற, பயனில் ஆசையுள்ள மனிதர்களுடைய, **பு₃த்₃த₄ய:** – புத்திகள், **ஹி** – நிச்சயமாக, **ப₃ஹுஶாகா₂:** – பலநோக்கங்களுடையனவாகவும், **அநந்தா: ச** – முடிவற்றவையாகவும் (இருக்கின்றன).

அர்ஜுன! இந்தக் கர்மயோகத்தில் தீர்மானமான புத்தி ஒன்றுதான் இருக்கிறது. ஆனால் ஒரு விஷயத்திலும் நிச்சய புத்தி இல்லாத, விவேகமற்ற, பயனில் ஆசையுள்ள மனிதர்களுடைய புத்திகள் நிச்சயமாகப் பலநோக்கங்களுடையனவாகவும் முடிவற்றவையாகவும் இருக்கின்றன.

*கேள்வி:* 'வ்யவஸாயாத்மிகா புத்தி:' என்று எதைக் குறிப்பிடுகிறார்? அது ஒன்றுதான் என்று கூறுவதன் கருத்து என்ன?

*பதில்:* அசைக்க முடியாத, திடமான தீர்மானம்தான் புத்தி. 39வது ச்லோகத்தில் இந்த புத்தியின் பயனாகக் கர்மபந்தத்திலிருந்து விடுதலை கிடைக்கும் என்று கூறப்பட்டது.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அந்த நிலையான ஸமபாவனையான நிச்சய புத்தியைத்தான் இங்கே 'வ்யவஸாயாத்மிகா புத்தி:' என்று கூறுகிறார். இந்த ப்ரகரணத்தில் பல இடங்களிலும் 'புத்தி' என்ற சொல் இதே பொருளில் வருகிறது. இதில் ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்மம் ஒன்றே ஒன்றுதான் ஸத்யம் என்ற நிச்சயம்தான், 'அந்த புத்தி ஒன்றுதான்' என்று சொல்வதன் கருத்தாகும். பலவித போகங்களைப் பெறும் ஆசைகளும், அவற்றை அடையும் உபாயங்களும் இந்த நிச்சய புத்தியில் இடம் பெறமாட்டா. இதையே ஸ்திரபுத்தி என்றும், ஸமபுத்தி என்றும் கூறுகிறார்.

**கேள்வி:** 'அவ்யவஸாயிநாம்' என்ற சொல் எத்தகைய மனிதர்களைக் குறிக்கிறது? அவர்களுடைய புத்தி பல நோக்கங்களுடையது. ஆகவே, அது பலவிதமாக, முடிவற்று இருக்கும் – என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேலே சொல்லப்பட்ட நிச்சய புத்தியற்றவனுக்கு அஞ்ஞானத்தினால் ஏற்படும் விபரீதமான பாவனைக்கு ஆட்பட்ட மனம், மோஹம் மேலிட்டு, விவேகமற்றுப் பலவித போகங்களில் ஈடுபடலாம். இத்தகையவனை 'அவ்யவஸாயீ' (தீர்மானமற்றவன்) என்று கூறுகிறார். அவனுடைய புத்தி, பல நோக்கங்கள் கொண்டது என்றும், முடிவற்றது என்றும் கூறுகிறார். பயனை எதிர்பார்த்து யாகம் முதலிய கர்மங்களைச் செய்பவர்களுக்குப் பலவிதமான லக்ஷ்யங்கள் உண்டு. ஏதோ ஒரு போகத்திற்கு ஆசைப்பட்டு ஒரு கர்மத்தைச் செய்கிறான். வேறு ஒரு போகத்திற்கு ஆசைப்பட்டு வேறு கர்மம் செய்கிறான். இது தவிர ஏதோ ஒரு லக்ஷ்யத்திற்காகச் செய்யப்படும் கர்மத்தில் கூடப் பலவித போகங்களை எதிர்பார்க்கிறான். உலகியலில் எல்லாப் பொருட்களிலும், நிகழ்ச்சிகளிலும் வெவ்வேறு கருத்துக்கள் கொள்கிறான். சிலவற்றை ப்ரியமானது என்று நினைக்கிறான்; சிலவற்றை வெறுக்கிறான். ஒரு பொருளில் ஒரு பகுதி ப்ரியமானதாகிறது; வேறு பகுதி வேண்டாததாகிறது. இப்படி உலகில் எல்லாவற்றிலும், மனிதர்களிடமும், நிகழ்ச்சிகளிலும் பலவிதமான மாறுபட்ட கருத்துக்களும், அவற்றில் உட்பிரிவினைகளும் ஏற்படுகின்றன.

**பொருத்தம்:** இவ்விதம் கர்மயோகி அவசியமாகக் கடைப்பிடிக்க வேண்டிய, நிச்சய புத்தியையும், த்யாகம் செய்யப்பட வேண்டிய, வேட்கைகள் நிறைந்த மனிதர்களின் புத்திகளின் ஸ்வரூபத்தையும் விளக்கிச் சொல்லி, இனி வரும் மூன்று ச்லோகங்களில் போகப் பற்றுள்ள மனப்பான்மையை விடவேண்டும் என்று சொல்வதற்காக, போகப் பற்றுள்ள மனிதர்களின் ஸ்வபாவம், கொள்கை, பழக்க வழக்கங்கள், நடத்தை ஆகியவற்றை வர்ணிக்கிறார்—

यामिमां पुष्पितां वाचं प्रवदन्त्यविपश्चितः।
वेदवादरताः पार्थ नान्यदस्तीति वादिनः॥ ४२॥
कामात्मानः स्वर्गपरा जन्मकर्मफलप्रदाम्।
क्रियाविशेषबहुलां भोगैश्वर्यगतिं प्रति॥ ४३॥
भोगैश्वर्यप्रसक्तानां तयापहृतचेतसाम्।
व्यवसायात्मिका बुद्धिः समाधौ न विधीयते॥ ४४॥

**யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவத₃ந்த்யவிபஶ்சித: ।**
**வேத₃வாத₃ரதா: பார்த₂ நாந்யத₃ஸ்தீதி வாதி₃ந: ॥ 42 ॥**
**காமாத்மாந: ஸ்வர்க₃பரா ஜந்மகர்மப₂லப்ரத₃ாம் ।**
**க்ரியாவிஶேஷப₃ஹுலாம் போ₄கைஶ்வர்யக₃திம் ப்ரதி ॥ 43 ॥**
**போ₄கைஶ்வர்யப்ரஸக்தாநாம் தயாபஹ்ருதசேதஸாம் ।**
**வ்யவஸாயாத்மிகா பு₃த்₃தி₄: ஸமாதௌ₄ ந விதீ₄யதே ॥ 44 ॥**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பார்த₂** – அர்ஜுன! **காமாத்மாந:** – போகங்களில் மூழ்கியவர்களான, **வேத₃வாத₃ரதா:** – கர்மங்களின் பயன்களைப் புகழ்ந்துரைக்கும் வேதவாக்கியங்களிலேயே ப்ரியம் வைத்தவர்களான, **ஸ்வர்க₃பரா:** – ஸ்வர்கமே மேலானது என்று நினைப்பவர்களான, **அந்யத்** – ஸ்வர்கம் தவிர மேலான பொருள் வேறொன்றும், **ந அஸ்தி** – இல்லை, **இதி** – என்று, **வாதி₃ந:** – வாதம் செய்கின்றவர்களான, **அவிபஶ்சித:** – அறிவிலிகள், **ஜந்மகர்மப₂லப்ரத₃ாம்** – கர்மங்களின் பயனான பிறவியை அளிக்கின்ற, **போ₄க₃ ஐஶ்வர்யக₃திம் ப்ரதி** – போகங்கள் மற்றும் செல்வங்கள் பெறுவதற்குரிய, **க்ரியாவிஶேஷப₃ஹுலாம்** – பல வகையான கர்மங்களைக் கூறுகின்ற, **புஷ்பிதாம்** – மலர்போலக் கவர்ச்சியுள்ள, **இமாம்** – இவ்விதமான, **யாம் வாசம்** – எந்தப் பேச்சை, **ப்ரவத₃ந்தி** – எடுத்துப் பேசுகிறார்களோ, **தயா** – அந்தப் பேச்சினால், **அபஹ்ருத சேதஸாம்** – மனம் அபஹரிக்கப்பட்டு, **போ₄க₃ ஐஶ்வர்யப்ரஸக்தாநாம்** – போகத்திலும், செல்வத்திலும் மிகுந்த பற்றுள்ளவர்களுக்கு, **ஸமாதௌ₄** – பரமாத்மாவிடம், **வ்யவஸாயாத்மிகா பு₃த்₃தி₄:** – நிச்சயமான கருத்துள்ள புத்தி, **ந விதீ₄யதே** – நிலைபெற்றிருப்பதில்லை.

அர்ஜுன! போகங்களில் மூழ்கியவர்களும், ஸ்வர்கமே மேலானது என்று நினைப்பவர்களும், கர்மங்களின் பயன்களைப் புகழ்ந்துரைக்கும் வேதவாக்கியங்களிலேயே ப்ரியம் வைத்து வேறொன்றும் இல்லை என்று வாதம் செய்கின்றவர்களுமான அறிவிலிகள் கர்மங்களின் பயனான பிறவியை அளிக்கின்ற போகங்கள் மற்றும் செல்வங்கள் பெறுவதற்குரிய பல வகையான கர்மங்களைக் கூறுகின்ற மலர்போலக் கவர்ச்சியுள்ள எந்தப் பேச்சை எடுத்துப் பேசுகிறார்களோ அந்தப் பேச்சினால் மனம் அபஹரிக்கப்பட்டு போகத்திலும், செல்வத்திலும் மிகுந்த பற்றுள்ளவர்களுக்கு பரமாத்மாவிடம் நிச்சயமான கருத்துள்ள புத்தி நிலைபெற்றிருப்பதில்லை.

**கேள்வி:** 'காமாத்மாந:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** காமங்கள் என்றால் ஸுகபோகங்கள். அவற்றில் முழுமையாகப் பற்றுக் கொண்டு, எப்பொழுதும் அவற்றைப் பற்றியே நினைத்துக் கொண்டு, அவற்றிலேயே மூழ்கி, அவற்றில் தன் மனிதத்தன்மையை மறந்து விடும் போகப்பற்றுள்ளவர்களை 'காமாத்மாந:' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'வேதவாதரதா:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** இவ்வுலகிலும், பரலோகத்திலும் பெறக் கூடிய ஸுகபோகங்களை அடைவதற்காகப் பற்பல மாறுபட்ட காம்ய கர்மங்களின் முறைகள் வேதங்களில் கூறப்பட்டுள்ளன. அந்தக் கர்மங்களுக்கு வெவ்வேறு பயன்கள் கூறப்பட்டுள்ளன. வேதங்களில் காணப்படும் அந்த வசனங்களிலும், அவை கூறும் கர்மபயன்களான போகங்களிலும் முற்றிலும் பற்றுக் கொண்டவர்களை 'வேதவாதரதா:' என்று கூறுகிறார். உலகியலில் வைராக்யம் ஏற்படுத்தக் கூடியவையும், பரமாத்ம ஸ்வரூபத்தை வர்ணிக்கக் கூடியவையுமான வசனங்களும் வேதங்களில் உள்ளன. அந்த வசனங்களை ஏற்பவர்களை, இங்கு 'வேதவாதரதா:' என்று கூறவில்லை. அந்த வசனங்களில் ப்ரியம் உண்டாகி அவற்றின் பொருள் அறிந்தவர்கள் 'ஸ்வர்கத்தை அடைவதே வாழ்க்கைக் குறிக்கோள். இதைக் காட்டிலும் அடைய வேண்டியது வேறொன்றுமில்லை' என்று கூறமாட்டார்கள். எல்லா வேதங்களின் உண்மையான தாத்பர்யம் பரமாத்மாவின் ஸ்வரூபத்தைச் சொல்வதுதான். வேதங்களிலிருந்து தெரிந்து கொள்ளவேண்டியது பரமாத்மா ஒன்றுதான் (15/15) என்ற ரஹஸ்யத்தை அறியாமல் வேதங்களில் சொல்லப்பட்ட காம்ய கர்மங்களில் ஈடுபடுபவர்களைத்தான் 'வேதவாதரதா:' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'ஸ்வர்கபரா:' என்றால் என்ன பொருள்?



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** ஸ்வர்கம்தான் மனிதன் பெற வேண்டிய பெரும்பேறு என்று நினைப்பவனுடைய புத்தியில் ஸ்வர்கத்தைக் காட்டிலும் சிறந்த வஸ்துவே கிடையாது என்றுதான் தீர்மானம் இருக்குமே தவிர, பரமாத்ம ஸாதனைகளில் புத்தி செல்லாது. இவர்களை 'ஸ்வர்கபரா:' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'நாந்யதஸ்தீதி வாதிந:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** விவேகமற்ற மனிதர்கள் போகங்களிலேயே திளைத்திருப்பார்கள். அவர்களுடைய நோக்கில் மனைவி, புத்ரன், செல்வம், மானம், பெருமை, புகழ் ஆகிய இவ்வுலகியல் ஸுகங்களையும், ஸ்வர்கம் முதலிய பரலோக ஸுகங்களையும் தவிர, வேறான மோக்ஷம் என்று ஒன்று இல்லை. அதற்காக முயற்சி செய்வானேன்? ஸ்வர்கத்தை அடைவதே எல்லாவற்றைக் காட்டிலும் சிறந்த லக்ஷ்யம். வேதங்களின் முடிவான கருத்தே இதுதான் என்று நினைத்து இதையே ப்ரசாரம் செய்வார்கள். இவர்களைத்தான் இங்கே 'நாந்யதஸ்தீதி வாதிந:' (வேறொன்றுமில்லை என்போர்) என்று கூறுகிறார்.

**கேள்வி:** இத்தகைய மனிதர்களை 'அவிபஶ்சித:' என்று ஏன் கூறுகிறார்?

**பதில்:** அவர்களை 'அறிவிலிகள்' என்று கூறுவதன் மூலம் பகவான், 'ஸத்ய-அஸத்ய வஸ்துக்களைப் பற்றி ஆராய்ந்து தங்களுடைய கடமையை நிச்சயம் செய்வார்களேயானால், இவ்வித போகங்களில் சிக்கிக் கொள்ளமாட்டார்கள்' என்று தெரிவிக்கிறார். ஆகவே, மனிதர்கள் விவேகத்தோடு தங்களுடைய கடமை என்ன என்பதை நிச்சயம்செய்து கொள்ள வேண்டும்.

**கேள்வி:** 'இமாம்', 'யாம்', 'புஷ்பிதாம்', 'வாசம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தன்னை அறிஞனாக நினைத்துக் கொள்பவன், பிறரைப் பார்த்துச் சொல்வான்— 'ஸ்வர்கத்தில் கிடைக்கும் போகங்களைக் காட்டிலும் வேறொன்றும் இல்லை.' பிறப்பு என்ற பயனைக் கொடுக்கும் இந்த வேத வாக்யம் சொல்பவன், கேட்பவன் இருவர் மனதையும் கவர்கிறது. ஆனால் அந்த வேத வசனத்தில் உண்மையான பெருமை ஒன்றும் இல்லை. அது அழியக் கூடிய போகங்களின் பெயரளவில் அற்ப ஸுகமளிக்கக் கூடிய தன்மையை வர்ணிக்கிறது. அது மணமற்ற பூவரசம் பூப்போலப் பார்வைக்குக் கவர்ச்சியாக இருக்கிறது. ஆகவே, உலகியல் மனிதர்கள் அதன் கவர்ச்சியில் மனதைப் பறிகொடுத்து விடுகிறார்கள் என்று கூறுகிறார்.

**கேள்வி:** இங்கு 'வ்யவஸாயாத்மிகா புத்தி:' என்று எதைச் சொல்கிறார்? ச்லோகத்தில் வரும் ஸமாதி என்ற சொல்லுக்குப் பரமாத்மா என்று எப்படிப் பொருள் கொள்ளலாம்? மேலே சொன்ன பூப்போலக் கவர்ச்சியான சொற்களில் மயங்கி போகங்களிலும், செல்வங்களிலும் மிகுந்த பற்றுடையவர்களுக்குப் பரமாத்மாவிடம் நிச்சயமான புத்தி ஏற்படாது – என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 41வது ச்லோகத்தில் இலக்கணம் கூறப்பட்ட நிச்சயபுத்தியைத்தான் 'வ்யவஸாயாத்மிகா புத்தி:' என்கிறார். புத்தி எதில் நிலை பெறுகிறதோ அது ஸமாதி — 'ஸமாதீயதே அஸ்மிந் புத்தி: இதி ஸமாதி:'. இந்த விளக்கத்தை அனுஸரித்து ஸமாதி என்றால் பரமாத்மா என்று இங்கே கூறினார். மனிதர்களின் மனம் போகங்களிலும், ஐசுவர்யத்திலும் முற்றிலும் பற்றுக் கொண்டுவிட்டபடியால் எப்பொழுதும் சஞ்சலப்பட்டுக் கொண்டே சுயநலம் மிக்கதாக இருக்கும். ஆகவே இவர்களுக்குப் பரமாத்மாவிடம் அசைக்க முடியாத ஸ்திரமான புத்தி இருக்காது என்று கூறுகிறார்.

**பொருத்தம்:** **இவ்விதம் போகத்திலும், ஐசுவர்யத்திலும் ஈடுபட்ட, பயனில் நோக்கங்கொண்ட மனிதர்களுக்கு நிச்சயபுத்தி இல்லாத நிலையைச் சொல்லிக் கர்மயோகத்தைப் பற்றி உபதேசம் செய்யும் நோக்கத்துடன், போகங்களிலும், ஐசுவர்யத்திலும் பற்றற்று ஸமபாவனையுடன் இருக்கவேண்டும் என்று பகவான் அர்ஜுனனுக்குக் கூறுகிறார்—**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



त्रैगुण्यविषया वेदा निस्त्रैगुण्यो भवार्जुन।
निर्द्वन्द्वो नित्यसत्त्वस्थो निर्योगक्षेम आत्मवान्॥ ४५॥

த்ரைகு₃ண்யவிஷயா வேதா₃ நிஸ்த்ரைகு₃ண்யோ ப₄வார்ஜுந ।

நிர்த்₃வந்த்₃வோ நித்யஸத்த்வஸ்தோ₂ நிர்யோக₃க்ஷேம ஆத்மவாந் ॥ 45 ॥

**அர்ஜுந** – அர்ஜுன! **வேதா₃:** – வேதங்கள் (மேலே கூறியவிதம்), **த்ரைகு₃ண்ய-விஷயா:** – முக்குணங்களின் செயல்களான போகங்களையும், அவற்றின் ஸாதனை முறைகளையும் பற்றிக் கூறுபவை. (ஆகவே நீ), **நிஸ்த்ரைகு₃ண்ய:** – அந்த போகங்களிலும், அவற்றின் ஸாதனங்களிலும் பற்றுக் கொள்ளாதவனாக, **நிர்த்₃வந்த்₃வ:** – மகிழ்ச்சி–துயரம் முதலிய இரட்டைகளுக்கு ஆட்படாதவனாக, **நித்யஸத்த்வஸ்த₂:** – நித்யப் பொருளான பரமாத்மாவிடம் நிலைபெற்று, **நிர்யோக₃க்ஷேம:** – யோகக்ஷேமத்தை (பொருள் சேர்ப்பது, காப்பது என்பதை) விரும்பாதவனாக, **ஆத்மவாந்** – தனக்கு வசப்பட்ட மனமுடையவனாக, **ப₄வ** – ஆகக்கடவாய்.

அர்ஜுன! வேதங்கள் மேலே கூறியவிதம் முக்குணங்களின் செயல்களான போகங்களையும், அவற்றின் ஸாதனை முறைகளையும் பற்றிக் கூறுபவை. ஆகவே நீ அந்த போகங்களிலும், அவற்றின் ஸாதனங்களிலும் பற்றுக் கொள்ளாதவனாக, மகிழ்ச்சி–துயரம் முதலிய இரட்டைகளுக்கு ஆட்படாதவனாக, நித்யப் பொருளான பரமாத்மாவிடம் நிலைபெற்று யோகக்ஷேமத்தை – பொருள் சேர்ப்பது, காப்பது என்பதை விரும்பாதவனாகத் தன்க்கு வசப்பட்ட மனமுடையவனாக ஆகக்கடவாய்.

**கேள்வி:** 'த்ரைகுண்யவிஷயா:' என்று கூறுவதற்கு என்ன பொருள்? வேதங்கள் 'முக்குணங்களாலானவை பற்றிச் சொல்கின்றன' என்று கூறுவதற்கு என்ன கருத்து?

**பதில்:** ஸத்வம், ரஜஸ், தமஸ் இம்மூன்று குணங்களாலானவற்றை 'த்ரைகுண்யங்கள்' என்று கூறுகிறார். எல்லா போகங்களும், செல்வங்களும் அவற்றைப் பெற்றுத்தரக் கூடிய கர்மங்களும் – எல்லாம் த்ரைகுண்யங்கள். எவற்றில் இந்தக் கர்மங்களின் அங்கங்கள், உபாங்கங்கள் இவற்றின் வர்ணனை உள்ளதோ, அவை த்ரைகுண்ய விஷயங்களான வேதப்பகுதி. வேதங்களில் இத்தகைய கர்ம காண்டம்தான் அதிகம் இருப்பதால் வேதங்கள் 'த்ரைகுண்யங்களைப் பொருளாக கொண்டுள்ளன' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'நிஸ்த்ரைகுண்யன் ஆவாய்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** முக்குணங்களால் ஆனவையான இவ்வுலகத்திய, பரலோகத்திய போகங்கள் அனைத்திலும், அவற்றின் ஸாதனங்களான கர்மங்களிலும் மமதை (என்னுடையது என்ற எண்ணம்), ருசி, பயனில் பற்று முதலியவற்றை அறவே தவிர்த்தவன் 'நிஸ்த்ரைகுண்யன்' எனப்படுகிறான். கர்மங்களைச் செய்யாமல் விடுபவனை இங்கு நிஸ்த்ரைகுண்யன் என்று சொல்லவில்லை. ஒரு கார்யமும் செய்யாமலும், ஒருவித அனுபவமும் பெறாமலும் மனிதன் இருக்க முடியாது (3/5). இந்த உடல் கூட முக்குணங்களினால் ஆனதுதான். இதை த்யாகம் செய்ய முடியாது. ஆகவே உடலிலும், அதன் மூலம் செய்யப்படும் கர்மங்களிலும் கர்த்தா என்ற எண்ணமும், அவற்றின் பயன்களில் நம்முடையது, நமக்கு வேண்டும் என்ற எண்ணமும் கொள்ளாமல் இருப்பதுதான் 'நிஸ்த்ரைகுண்யநிலை' (முக்குணங்களின் செயல்களில் அகப்படாத நிலை) என்று பொருள்.

**கேள்வி:** 'த்வந்த்வம்' என்றால் என்ன? அவை 'அற்று இருப்பது' என்றால் என்ன?

**பதில்:** இன்பம்–துன்பம், லாபம்–நஷ்டம், புகழ்ச்சி–இகழ்ச்சி, மானம்–அவ்மானம், அனுகூலம்–ப்ரதிகூலம் முதலிய ஒன்றுக்கொன்று முரணான இருவகைகளைச் சேர்த்து இரட்டை (த்வந்த்வம்) என்று கூறுவர். இவை கூடுவதிலும், பிரிவதிலும் மனம் ஒரேவிதம்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இருப்பது – தடுமாறாமலும், கலங்காமலும் இருப்பது – மகிழ்ச்சி–துயரம், விருப்பு–வெறுப்புக் கொள்ளாமல் இருப்பதுதான் இரட்டைகளுக்கு ஆட்படாமல் இருப்பது.

**கேள்வி:** 'நித்யஸத்த்வம்' என்றால் எது? அதில் நிலைத்திருப்பது என்றால் என்ன பொருள்?

**பதில்:** ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவே நித்ய ஸத் – எப்பொழுதும் உள்ளவர். அவரது தன்மை நித்யஸத்வம். அத்தகைய நித்யமான, அழிவற்ற, எல்லாமறிந்த, பரமபுருஷனான, பரமேசுவரனுடைய ஸ்வரூபத்தை எப்பொழுதும் இடைவிடாமல் சிந்தனை செய்து கொண்டு அதிலேயே அசையாது மனம் நிலைத்து நிற்பவன்தான் நித்யஸத்வஸ்தன்.

**கேள்வி:** 'நித்யஸத்த்வஸ்த:' என்பதற்கு எப்பொழுதும் ஸத்வ குணத்தில் நிலைத்திருப்பவன் என்று பொருள் கூறினால் என்ன?

**பதில்:** அப்படியும் பொருள் கூறலாம். இதில் ஒரு தவறும் இல்லை. ஆனால், மேலே சொன்ன பொருளில்தான் அதைவிடச் சிறந்த கருத்து இருக்கிறது. ஏனெனில் கர்மயோகத்தின் முடிவான பயன் எல்லா குணங்களையும் கடந்து பரமாத்மாவிடம் நிலை பெறுவதுதான் என்று கூறப்பட்டுள்ளது.

**கேள்வி:** 'யோகக்ஷேம:' என்றால் என்ன? 'அர்ஜுனனை, நீ யோக க்ஷேமங்களை விரும்பாதவனாக ஆவாய்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இதற்கு முன் பெறாததைப் பெறுவது 'யோகம்'. பெற்றதைக் காப்பது 'க்ஷேமம்'. உலகியல் போகங்களில் ஆசையைத் துறந்த பிறகும் கூட உடல் வாழ்வு நடப்பதற்காக மனிதனுக்கு யோக க்ஷேமத்தில் சிறிது விருப்பம் இருக்கும். அந்தச் சிறு விருப்பத்தையும் விட்டு விடவேண்டும் என்று 'நிர்யோகக்ஷேம:' என்ற சொல்லால் அர்ஜுனனுக்கு ஆணையிடுகிறார். 'கர்த்தா என்ற அபிமானத்தையும், அந்தக் கர்மத்தில் மமகாரத்தையும் அறவே விட்டு ஒழித்துவிடு. எந்தப் பொருளையும் அடைவதற்கும், அதைக் காப்பதற்கும் ஆசைப்படாதே' என்கிறார்.

**கேள்வி:** 'ஆத்மவாந்' என்றால் என்ன பொருள்? அர்ஜுனனை, 'ஆத்மவான் ஆவாய்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** புலன்களுடன் கூடிய மனதையும், உடலையும் சேர்த்து இங்கு ஆத்மா என்று கூறுகிறார். மனம், புத்தி, புலன்கள் நம் வசத்தில் இல்லாதவரை இவை நம்முடையவை ஆகா; சத்ருக்கள் ஆகின்றன. இவற்றை வசப்படுத்தாதவன் ஆத்மவான் அல்லன். மனம், புத்தி, புலன்களைத் தன் கட்டுப்பாட்டில் நெருக்கி வைத்திருப்பவனே ஆத்மவான். மனம், புத்தி, புலன்கள் அடங்காதவனுக்கு ஸமத்வயோகம் கிடைப்பது மிகவும் கடினம். மனம், புத்தி, புலன்களைக் கட்டுப்படுத்தியவன் ஸாதனை புரிவதால் அவனுக்கு எளிதாக ஸமத்வயோகம் கிட்டும். ஆகவே, பகவான் அர்ஜுனனை, 'நீ ஆத்மவான் ஆகவேண்டும்' என்று ஆணையிடுகிறார்.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில், 'எல்லா வேதங்களும் முக்குணங்களால் ஆனவை பற்றிக் கூறுகின்றன. நீ இந்த முக்குணங்களால் ஆனவையான எல்லா போகங்களிலும், அவற்றுக்கான ஸாதனைகளிலும் ஆசையைத் துறக்க வேண்டும்' என்று பகவான் அர்ஜுனனுக்குச் சொன்னார். அடுத்து வரும் ச்லோகத்தில் அதன் பயனான ப்ரம்மஞானத்தின் பெருமையைக் கூறுகிறார்—

**यावानर्थ उदपाने सर्वतः सम्प्लुतोदके ।**
**तावान्सर्वेषु वेदेषु ब्राह्मणस्य विजानतः ॥ ४६ ॥**

**யாவாநர்த₂ உத₃பாநே ஸர்வத: ஸம்ப்லுதோத₃கே ।**

**தாவாந்ஸர்வேஷு வேதே₃ஷு ப்₃ராஹ்மணஸ்ய விஜாநத: ॥ 46 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ஸர்வத:** – எல்லாப் புறங்களிலும், **ஸம்ப்லுத உத₃கே** – நிறைந்த நீர்நிலையை, (**ப்ராப்தே ஸதி** – அடைந்த பிறகு), **உத₃பாநே** – சிறிய நீர்நிலையினால் (மனிதனுக்கு), **யாவாந்** – எவ்வளவு, **அர்த₂:** – பயன், (**அஸ்தி** – இருக்கிறதோ), **விஜாநத:** – (ப்ரம்மத்தை) தத்வரீதியாக அறிந்த, **ப்₃ராஹ்மணஸ்ய** – ப்ராம்மணனுக்கு, **ஸர்வேஷு** – அனைத்து, **வேதே₃ஷு** – வேதங்களினாலும், **தாவாந்** – அவ்வளவு பயன்தான் கிடைக்கும். (பெரிய நீர்நிலையை அடைந்தவனுக்குக் கிணறு, குளம் போன்ற சிறிய நீர்நிலைகள் தேவையற்றுப் போவதுபோல் ப்ரம்மானந்தத்தைப் பெற்ற பிறகு, ஆனந்தத்தைப் பெறுவதற்காக வேதங்கள் தேவைப்படுவதில்லை.

எல்லாப் புறங்களிலும் நிறைந்த நீர்நிலையை அடைந்த பிறகு சிறிய நீர்நிலையினால் மனிதனுக்கு எவ்வளவு பயன் இருக்கிறதோ ப்ரம்மத்தை தத்வரீதியாக அறிந்த ப்ராம்மணனுக்கு அனைத்து வேதங்களினாலும் அவ்வளவு பயன்தான் கிடைக்கும். பெரிய நீர்நிலையை அடைந்தவனுக்குக் கிணறு, குளம் போன்ற சிறிய நீர்நிலைகள் தேவையற்றுப்போவது போல் ப்ரம்மானந்தத்தைப் பெற்ற பிறகு, ஆனந்தத்தைப் பெறுவதற்காக வேதங்கள் தேவைப்படுவதில்லை.

**கேள்வி:** இந்த ச்லோகத்தில் நீர்நிலைகளின் உதாரணத்தினால் என்ன விஷயத்தை விளக்குகிறார்?

**பதில்:** பகவான் நீர்நிலைகளின் உவமை கூறி ஞானி மஹாத்மாக்களின் நிறைந்த த்ருப்தியை வர்ணிக்கிறார். அமுதம் போன்ற இனிமையான, நன்மை செய்யக்கூடிய, ஆழமான ஜலம் நிறைந்த, பெரிய நீர்நிலையை அடைந்துவிட்டவனுக்கு ஓடை, கிணறு, குளம் ஆகிய சிறு நீர்நிலைகளினால் எவ்விதப் பயனும் இல்லையோ, நீரினால் ஆகக்கூடிய எல்லாத் தேவைகளும் பூர்த்தி ஆகின்றனவோ, அதுபோல, எல்லா போகங்களிலும் பற்று, தனது என்ற எண்ணங்களை த்யாகம் செய்து, ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவை அறிந்து கொண்டவனுக்குப் பரமானந்தக் கடலான பூரண ப்ரம்மமான பரமாத்ம ஸ்வரூபம் கிடைத்து விடுகிறது. ஆனந்தம் கிடைப்பதற்காக வேதங்களில் கூறப்படுகின்ற கர்மங்களினால் அடையக் கூடிய பயன்களான போகங்களினால் ஒருவித பயனும் இல்லை. அவன் பூர்ணகாமனாக அதாவது எல்லா ஆசைகளும் நிறைவேறினவனாக, எப்பொழுதும் த்ருப்தியுடையவனாக ஆகிறான். இந்த நிலையை அடைவதற்காக மனிதன் வேதங்களில் சொல்லப்பட்ட கர்மங்களின் பயன்களில் கர்த்தா என்ற எண்ணம், அவற்றின் பயன்களில் ஆசை இவற்றை அறவே துறந்து முழுமையாக 'நிஸ்த்ரைகுண்யன்' ஆகவேண்டும்.

**கேள்வி:** எங்கும் நிறைந்த நீர்நிலையை அடைந்தாலும்கூட மனிதனுக்கு எவ்வளவு தேவையோ, அவ்வளவுதான் அவன் எடுத்துக் கொள்வான். அதுபோல ப்ரம்மத்தை அறிந்தவன் தனது தேவைக்கு ஏற்ற அளவு வேதங்களின் பகுதிகளை ஏற்றுக் கொள்கிறான் என்று பொருள் கூறினால் என்ன தவறு?

**பதில்:** இப்படியும் பொருள் கூறலாம். தவறு ஒன்றும் இல்லை. ஆனால், மேலே சொன்ன பொருள் மேலும் அழகாக இருக்கிறது. ஏனென்றால், ப்ரம்மத்தை அடைந்துவிட்ட ஞானிக்கு உலகில் எவ்விதப் பயனும் இல்லை (3/18) என்று கூறப்பட்டிருக்கிறது.

**பொருத்தம்:** இவ்விதம் ஸமபுத்தி என்னும் கர்மயோகம், அதன் பயன் ஆகியவற்றின் பெருமையை எடுத்துச் சொல்லி, அடுத்த இரண்டு ச்லோகங்களில், கர்மயோகத்தின் ஸ்வரூபத்தையும், அர்ஜுனன் கர்மயோகத்தில் நிலை பெற்றுக் கடமைகளை ஆற்றவேண்டும் என்றும் பகவான் கூறுகிறார்—

कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन।
मा कर्मफलहेतुर्भूर्मा ते सङ्गोऽस्त्वकर्मणि ॥ ४७ ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கர்மண்யேவாதி₄காரஸ்தே மா ப₂லேஷு கதா₃சந ।**
**மா கர்மப₂லஹேதுர்பூ₄ர்மா தே ஸங்கோ₃ऽஸ்த்வகர்மணி ॥ 47 ॥**

**தே** – உனக்கு, **கர்மணி ஏவ** – கர்மங்களை ஆற்றுவதில்தான், **அதி₄கார:** – பொறுப்பு உண்டு. (அவற்றின்), **ப₂லேஷு** – பயன்களில், **கதா₃சந** – ஒருகாலும், **மா** – உரிமையில்லை. (ஆகவே நீ), **கர்மப₂லஹேது:** – கர்மங்களின் பயன்களைக் கோருவதற்குக் காரணமாக, **மா பூ₄:** – ஆகாதே. (மேலும்), **தே** – உனக்கு, **அகர்மணி** – கர்மங்களை ஆற்றாமல் இருப்பதிலும், **ஸங்க₃:** – பற்று, **மா அஸ்து** – இருக்கக்கூடாது.

உனக்குக் கர்மங்களை ஆற்றுவதில்தான் பொறுப்பு உண்டு. அவற்றின் பயன்களில் ஒருகாலும் உரிமையில்லை. ஆகவே நீ கர்மங்களின் பயன்களைக் கோருவதற்குக் காரணமாக ஆகாதே. மேலும் உனக்குக் கர்மங்களை ஆற்றாமல் இருப்பதிலும் பற்று இருக்கக்கூடாது.

**கேள்வி:** இங்கே 'கர்மணி' என்ற சொல் எதைக் குறிக்கிறது? 'உனக்குக் கர்மங்களை ஆற்றுவதில்தான் பொறுப்பு உண்டு' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை இவற்றிற்கு ஏற்றவாறு மனிதனுக்குக் கர்மங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. அந்தக் கர்மங்களைக் 'கர்மணி' என்ற சொல் குறிக்கிறது. சாஸ்த்ரங்களில் செய்யக்கூடாது என்று கூறப்பட்ட பாவச் செயல்களைக் 'கர்மணி' என்ற சொல் குறிக்காது. ஏனெனில், பாவ கர்மங்களைச் செய்ய அவசியமோ, பொறுப்போ மனிதனுக்குக் கிடையாது. விருப்பு–வெறுப்புகளினால் உந்தப்பட்டு அவற்றில் ஈடுபடுகிறான். அது அவனுடைய பொறுப்பில்லாத செய்கை. அதனால் அத்தகைய செயல்கள் புரிபவனுக்கு நரகம் முதலிய துன்பங்களை அனுபவிக்கக் கூடிய தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது.

இங்கு, 'உனக்குக் கர்மங்களை ஆற்றுவதில்தான் பொறுப்பு' என்று கூறுகின்ற பகவானுடைய அபிப்ராயம் வருமாறு– *(1)* இந்த மனித உடலில்தான் ஜீவனுக்குப் புதிய கர்மங்கள் செய்ய சுதந்திரம் அளிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, அவன் தன் பொறுப்புக்கு ஏற்றவாறு பகவானுடைய கட்டளையை ஏற்று நிறைவேற்ற வேண்டும். அந்தக் கர்மங்களில் 'நாம் செய்கிறோம்' என்ற ஒட்டுதல் – பற்று இருக்கக் கூடாது. அந்தக் கர்மங்களை ஆற்றுவதைப் பரமாத்மாவை அடைவதற்கு ஸாதனமாகக் கருதவேண்டும். அப்பொழுது எளிதாகப் பரமாத்மாவை அடைந்துவிடலாம். மனிதப்பிறவி கிடைத்திருப்பதால் உனக்குக் கர்மங்களை ஆற்றும் பொறுப்பு உண்டு. ஆகவே, இந்தப் பொறுப்பை நல்லவிதத்தில் பயன்படுத்த வேண்டும்.

*(2)* மனிதனுக்குக் கர்மங்களை ஆற்றத்தான் பொறுப்பு உண்டு. அவற்றைச் செய்யாமல் விடுவதற்கு அவனுக்கு சுதந்திரம் கிடையாது. அவன் அஹங்காரத்தினால், பிடிவாதமாகக் கர்மங்களைச் செய்யாமல் விட்டுவிடலாம் என்றாலும் கூட அவனால் விட்டுவிட முடியாது *(3/5)*. ஏனெனில், அவனுடைய ஸ்வபாவம் வலுவில் ஏதாவது ஒன்றைச் செய்து கொண்டே இருக்கச் செய்யும் *(3/33, 18/59,60)*. இந்த நிலையில் அவனுடைய பொறுப்பை நிறைவேற்றாமல், தனக்குக் கொடுக்கப்பட்ட உரிமையைத் தவறாகப் பயன்படுத்தினால், விதிக்கப்பட்ட கர்மங்களை விட்டுவிடுவதால் சாஸ்த்ர விதிகளை மீறியதற்கான தண்டனையை அனுபவிக்க நேரிடும். ஆகவே, நீ ஆற்றவேண்டிய கர்மங்களை ஆற்றத்தான் வேண்டும், தவிர்க்கக் கூடாது.

*(3)* அரசாங்கம் மக்களைக் காப்பதற்காகவும், தற்காப்புக்காகவும் சில அதிகாரிகளுக்குப் பலவிதமான ஆயுதங்களை வழங்குகிறது. அவற்றை வைத்துக் கொள்ளவும், கையாளவும், பொறுப்பு அளித்திருக்கிறது. அவற்றைக் கையாளுவதற்குரிய சட்டதிட்டங்களையும் விதித்திருக்கிறது. எந்த அதிகாரியாவது அந்தப் பொறுப்பைத் தவறாக உபயோகித்தால் அவருக்குத் தண்டனை அளிக்கிறது. அந்தப் பொறுப்பை அவரிடமிருந்து பிடுங்கிக் கொள்கிறது. அதுபோலவே ஜனன--மரணம் என்ற ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பெறுவதற்காகவும், பிறருக்கு நன்மை செய்வதற்காகவும் ஜீவனுக்கு மனம், புத்தி, புலன்களுடன் கூடிய இந்த மனித சரீரத்தை அளித்து, அதன் மூலம் புதுச் செயல்கள் செய்ய விசேஷமான சலுகை அளிக்கப்பட்டிருக்கிறது. அவன் இந்தச் சலுகையை நல்லவிதத்தில் பயன்படுத்தினால் கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெற்றுப் பரமபதத்தை அடைகிறான். எவன் இந்தச் சலுகையைத் தவறாகப் பயன்படுத்துகிறானோ, அவன் தண்டனை பெறுகிறான். அவனிடமிருந்து அந்தப் பொறுப்பும் பிடுங்கப்படுகிறது. அதாவது மறுபடியும் பன்றி, நாய் ஆகிய பிறவிகளைப் பெறுவான். இந்த ரஹஸ்யத்தை அறிந்து மனிதன் தன் பொறுப்பை நல்லமுறையில் நிறைவேற்ற வேண்டும்.

**கேள்வி:** 'கர்மங்களின் பயன்களில் உனக்கு ஒருகாலும் உரிமை கிடையாது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனிதனுக்கு, தான் செய்த கர்மங்களின் பயன்களைப் பெறுவதற்கு ஒருபொழுதிலும் எந்தவிதத்திலும் சுதந்திரம் கிடையாது என்று பொருள். எந்தக் கர்மத்திற்கு என்ன பயன்? அந்தப் பயன் எப்பிறவியில் கிடைக்கும்? எந்த முறையில் கிடைக்கும் என்று அவன் அறியமாட்டான். தன் விருப்பப்படி தான் விரும்பும் காலத்தில் அவற்றைப் பெறவும் முடியாது. அவற்றிலிருந்து தப்பவும் முடியாது. மனிதன் விரும்புவது ஒன்று; ஆனால் அவனுக்குக் கிடைப்பது வேறு ஒன்று. அநேக மனிதர்கள் பலவித போகங்களை அடைய ஆசைப்படுகிறார்கள். அவற்றை அடையும் ஸந்தர்பம் நேர்வது அவர்கள் கையில் இல்லை. அநேகவிதமான சேர்க்கைகளையும், பிரிவுகளையும் அவர்கள் விரும்புவது இல்லை. ஆனாலும், நிர்பந்தமாகவும் ஏற்படத் தானே செய்கிறது! கர்மங்களின் பயன்களை விதிப்பது பகவானின் கையில் உள்ளது. மனிதனுடைய உபாயங்கள் எவையும் அவரிடம் செல்லா. புத்ர பாக்யம் வேண்டும் என்று கோரி, சாஸ்த்ர விதிப்படி யாகங்களை அவற்றிற்குரிய ஸகல அங்கங்களுடன் முறை வழுவாது செய்து முடிக்கலாம். அவற்றின் பயனும் அவனுக்கு நிச்சயம் உண்டு என்பதும் விதிக்கப்பட்டிருக்கிறது. அப்படி ஆசைப்பட்ட மனிதன் அந்தக் கர்மத்தைச் செய்யலாம். ஆனால் அதன் பயனைப் பெறுவது கர்மம் செய்பவனின் கையில் இல்லை. அதை அளிப்பது தெய்வம். இந்த வஸ்து வேண்டும், இந்தச் செல்வம் வேண்டும், இப்படிப் பெருமை, புகழ் வேண்டும், ஸ்வர்கம் வேண்டும் என்றெல்லாம் ஆசைப்படுவது ஒருவித அஞ்ஞானம்தான். இவையெல்லாம் துச்சமானவை. சிறிது காலம் ஸுகம் தருபவை. அந்த ஸுகமும் உண்மையான ஸுகம் அன்று. ஆகவே எந்தப் பயனையும் விரும்புவது கூடாது.

**கேள்வி:** மோக்ஷத்திற்குக் கூட ஆசைப்படக் கூடாதா?

**பதில்:** மோக்ஷம் வேண்டும் என்ற ஆசை மங்களமானதால் மோக்ஷத்தை அடைவதற்கு உதவி ஆகிறது. இந்த ஆசைகூட இல்லாமல் இருப்பது உத்தமம்தான். பகவானுடைய தத்வமும், ரஹஸ்யமும் உண்மையில் தெரிந்து கொள்ளாமல் மோக்ஷத்தில் கூட ஆசை இல்லாமல் இருப்பதோடு, ஈசன் ஆணை என்ற முறையில் பயனைக் கருதாது கர்மங்களைச் செய்துதான் ஆகவேண்டும் என்று ஆற்ற முனைவது கடினமான காரியம்தான். ஆகவே, மோக்ஷத்தில் ஆசை வைப்பது தவறன்று. மோக்ஷத்தில் கூட ஆசையில்லாத நிலையில் விரைவிலே மோக்ஷம் பெறலாம் என்ற எண்ணத்தில் கூட மோக்ஷ ஆசை மறைந்து இருக்கத்தான் செய்கிறது.

**கேள்வி:** கர்மத்தின் பயன்களுக்குக் காரணமாவது என்றால் என்ன? அர்ஜுனனிடம், 'நீ கர்மத்தின் பயன்கள் கோருவதற்குக் காரணம் ஆகாதே' என்று கூறுவதன் பொருள் என்ன?

**பதில்:** மனம், புத்தி, புலன்கள் மூலமாக சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களிலும், அவற்றின் பயன்களிலும் தான் செய்வதாகக் கருதும் எண்ணம் (மமதை), பற்று (ஆஸக்தி), அச்செயல்களில் உள்ள நுண்ணிய விருப்பம் (வாஸனா), எதிர்பார்த்தல் ஆகிய இவை கர்மங்களின் பயன்களுக்குக் காரணம் ஆகும். மேலே சொன்னவிதம் கர்மங்களிலும், பயன்களிலும் பற்றுள்ளவனுக்குத்தான் அந்தப் பயன்கள் கிட்டும். கர்மங்களிலும், அவற்றின் பயன்களிலும் 'நாம் செய்கிறோம்' என்ற ஆஸக்தியையும், 'பயன்கள் நமக்கு வேண்டும்' என்ற ஆசையையும் அறவே ஒழித்தவனுக்கு அந்தப் பயன்கள் கிட்டா (18/12). கர்மத்தின் பயனுக்கு உடந்தை ஆகாதே என்று அர்ஜுனனுக்கு ஆணையிடும் பகவான், 'உத்தமமான அமைதி

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பெறுவதன் பொருட்டு நீ ஆற்ற வேண்டிய கர்மங்களில் கர்த்தா என்ற அபிமானம், பற்று, பயனில் கருத்து என்ற ஆசைகளை விட்டுவிடு' என்று கூறுகிறார்.

**கேள்வி:** மேலே சொன்னவிதம் 'தான்–தனது' என்ற எண்ணங்களை, ஆசைகளைத் துறந்து கர்மங்களைச் செய்பவன் பாவச் செயல்களின் பயன்களுக்கும் காரணம் ஆகமாட்டானா?

**பதில்:** மேலே சொன்னவிதம் கர்மங்களை ஆற்றுபவன் எந்தவிதமான செயல்களின் பயன்களுக்கும் காரணம் ஆகமாட்டான். அவன் செய்த நல்லதும்–கெட்டதுமான கார்யங்கள் பயனளிக்கும் சக்தியை இழந்து விடுகின்றன. ஏனெனில் பாவ கர்மங்களைச் செய்யத் தூண்டுவது ஆசை. ஆகவே ஆசை, நாம் செய்கிறோம் என்ற எண்ணம், விருப்பம் இவையில்லாமல் போனபிறகு அவன் புதிதாகப் பாவச் செயல்கள் புரியவே மாட்டான். முன்னால் செய்யப்பட்ட பாவங்களும் இப்பொழுது செய்கின்ற பற்றற்ற கர்மங்களின் ப்ரபாவத்தினால் சாம்பலாகிவிடுகின்றன. இக்காரணத்தினால் அவன் பாவச் செயல்களின் பயன்களுக்குக் காரணம் ஆகமாட்டான். நல்ல கர்மங்களின் பயன்களையும் துறந்து விடுகிறான். அவற்றின் பயன்களுக்கும் காரணம் ஆகமாட்டான். இவ்விதம் கர்மங்களை ஆற்றுபவனுடைய எல்லாக் கர்மங்களும் மறைந்துவிடுகின்றன *(4/23)*. அவன் மாறுதலற்ற உயர்ந்த பதவியை அடைவான் *(2/51)*.

**கேள்வி:** 'உனக்குக் கர்மம் செய்யாமல் இருப்பதிலும் விருப்பம் ஏற்படக் கூடாது' என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களைப் புரிவதற்கு மாறாகத் தடை செய்யப்பட்ட கார்யங்களைச் செய்வது, செயலாற்றும் உரிமையைத் தவறாக உபயோகப்படுத்துவது ஆகும். அதுபோல வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை இவற்றுக்கு ஏற்றவாறு எவனுக்கு எந்தக் கர்மம் விதிக்கப்பட்டிருக்கிறதோ, அதைச் செய்யாமல் இருப்பதுகூட உரிமையைத் தவறாக உபயோகப்படுத்துவது ஆகும். விதிக்கப்பட்ட கர்மங்களை ஆற்றாமல் இருப்பது எவ்விதத்திலும் ந்யாயமன்று. இதை மோஹத்தினால் த்யாகம் செய்வது தாமஸ த்யாகம் *(18/7)* ஆகும். உடல் நோகும் என்று பயந்து த்யாகம் செய்வது ராஜஸ த்யாகம் ஆகும் *(18/8)*. விதிக்கப்பட்ட கர்மங்களை ஆற்றாமல் மனிதன் கர்மயோகத்தில் ஸித்தி பெற முடியாது *(3/4)*. ஆகவே, எக்காரணம் கொண்டும் விதிக்கப்பட்ட கர்மங்களை ஆற்றாமல் விடுவதற்கு நீ விரும்பக் கூடாது என்பது கருத்து.

**பொருத்தம்: முன் ச்லோகத்தில் 'நீ கர்மங்களின் பயன்களுக்குக் காரணமாகக் கூடாது. கர்மம் செய்யாமல் விடுவதற்கும் உனக்குச் சலுகை கிடையாது. கர்மங்களைச் செய்யாமல் நீ விடக் கூடாது' என்று பகவான் சொன்னார். அப்படியானால் கர்மங்களை எவ்விதம் செய்யவேண்டும் என்ற கேள்வி எழுகிறது. அதற்கு அடுத்த ச்லோகத்தில் பதில் சொல்கிறார்—**

**योगस्थः कुरु कर्माणि सङ्गं त्यक्त्वा धनञ्जय।**
**सिद्ध्यसिद्ध्योः समो भूत्वा समत्वं योग उच्यते॥४८॥**

**யோக$_3$ஸ்த$_2$: குரு கர்மாணி ஸங்க$_3$ம் த்யக்த்வா த$_4$நஞ்ஜய ।**
**ஸித்$_3$த்$_4$யஸித்$_3$த்$_4$யோ: ஸமோ பூ$_4$த்வா ஸமத்வம் யோக$_3$ உச்யதே ॥ 48 ॥**

**த$_4$நஞ்ஜய** – அர்ஜுன! **ஸங்க$_3$ம்** – பற்றினை, **த்யக்த்வா** – துறந்து (மேலும்), **ஸித்$_3$தி$_4$ அஸித்$_3$த்$_4$யோ:** – கைகூடுவது, கைகூடாமலிருப்பது என்பதில், **ஸம:** – ஸமநோக்குடையவனாக, **பூ$_4$த்வா** – இருந்து, **யோக$_3$ஸ்த$_2$:** – யோகத்தில் நிலைபெற்று, **கர்மாணி** – செய்யவேண்டிய கர்மங்களை, **குரு** – செய். **ஸமத்வம்** – ஸமபாவனை (தான்), **யோக$_3$:** – யோகம் (என்று), **உச்யதே** – கூறப்படுகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அர்ஜுன! பற்றினைத் துறந்து மேலும் கைகூடுவது, கைகூடாமலிருப்பது என்பதில் ஸமநோக்குடையவனாக இருந்து, யோகத்தில் நிலைபெற்றுச் செய்யவேண்டிய கர்மங்களைச் செய். ஸமபாவனைதான் யோகம் என்று கூறப்படுகிறது.

**கேள்வி:** கர்மத்தில் கைகூடுவது, கைகூடாதது (ஸித்தி, அஸித்தி) என்பவனவற்றில் ஸமபாவனை வந்துவிட்டால் தானாகவே செய்கிற கர்மத்தில் பற்று (ஆஸக்தி) விட்டு விடுகிறது. ஆஸக்தியை விடவேண்டுமென்று அர்ஜுனனுக்குத் தனியாகச் சொல்வானேன்?

**பதில்:** இந்த ச்லோகத்தில் பகவான் கர்மயோகத்தை ஸாதகன் எப்படிக் கடைப்பிடிக்க வேண்டும் என்று அதன் முறையைக் கூறுகிறார். கர்மயோக ஸாதகன் கர்மத்திலும், அதன் பயனிலும், பற்றை த்யாகம் செய்யவேண்டும். அப்பொழுது, அவனுக்கு அந்தக் கர்மத்தில் விருப்பு-வெறுப்பும், அதனால் உண்டாகும் மகிழ்ச்சி-துயரமும் ஏற்படா. இப்படியானால்தான் அவன் வெற்றி-தோல்விகளை ஸமமாக நோக்குவான். மகிழ்ச்சி-துயரம் இவற்றிற்குக் காரணமான விருப்பு-வெறுப்பு முதலிய குறைகள் உள்ள வரை ஸித்தி, அஸித்திகளில் அவனுக்கு ஸமபாவனை இருக்காது. செய்யவேண்டிய கர்மம் சரியாக நிறைவேறியதா, இல்லையா, அது அனுகூலமாக முடியுமா, ப்ரதிகூலமாக முடியுமா? - என்பதில் ஸமபாவனை ஏற்பட்டுவிட்டால் முடிவில் அவற்றில் விருப்பு-வெறுப்புகள் உண்டாகா. ஆகவே, ஆஸக்தியை த்யாகம் செய்வதற்கும், ஸமபாவனைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. ஒன்றுக்கொன்று உதவியாக அமைகின்றன. ஆகவே, பகவான் இங்கு ஆஸக்தியை த்யாகம் செய்து ஸித்தி, அஸித்திகளில் ஸமபாவனையைப் பெற்றுக் கர்மங்களை ஆற்றவேண்டும் என்று கூறுகிறார்.

**கேள்வி:** ஸமத்வம்தான் யோகம் என்றால், ஸித்தி, அஸித்திகளில் ஸமபாவனையுடன் கர்மம் செய்வதில் அது அடங்கிவிடுமே? பிறகு 'யோகத்தில் நிலைபெற்று' என்று தனியாகச் சொல்வானேன்?

**பதில்:** செயல்கள் கைகூடும்போதும், கைகூடாதபோதும், ஒரேவிதமான மனப்பாங்கை (ஸமபாவனையை)க் கைக் கொள்ளக் கொள்ள, மனிதனுக்கு அந்த ஸமபாவனை திடமாகிறது. ஸமபாவனை திடமாவதுதான் கர்மயோகத்தின் எல்லை. 'யோகத்தில் நிலைபெற்றுக் கர்மத்தைச் செய்' என்று சொல்லும்போது, கர்மம் சரிவர நிறைவேறியதா, இல்லையா என்று கர்மத்தின் பயனில் மாத்திரம் ஸமபாவனை வந்தால் போதாது. முன்னாலேயே ஒவ்வொரு பொருளிலும், ஒவ்வொரு செயலிலும், அதன் பயனிலும், எந்த ப்ராணியிடத்திலும் விருப்பு-வெறுப்புக் கொள்ளாமல் என்றுமே ஸமபாவனையுடன் இருக்கவேண்டும் என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'ஸமத்வம்தான் யோகம்' எனப்படுகிறது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவான், இந்த இடத்தில் 'யோக:' என்ற பரிபாஷைச் சொல்லுக்கு விளக்கமான பொருள் கூறுகிறார் – ஸமத்வம்தான் யோகம் என்று. அதாவது ஸமத்வத்தின் பெயர் யோகம். எந்த ஸாதனை மூலமாகவாவது ஸமபாவனை பெற்றுவிட்டால் அவன் யோகி ஆவான். ஆகவே, நீ கர்மயோகி ஆகவேண்டுமானால், ஸமபாவனையில் நிலைபெற்று கார்யம் செய்ய வேண்டும் என்று கூறுகிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் கர்மயோகத்தின் முறையைக் கூறிப் பயனில் பற்றுடன செய்யும் கர்மத்தை இழித்தும், ஸமபாவனை என்ற புத்தியோகத்தைப் புகழ்ந்தும் சொல்லி, அர்ஜுனனை புத்தியோகத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று ஆணையிடுகிறார்—

दूरेण ह्यवरं कर्म बुद्धियोगाद्धनञ्जय।
बुद्धौ शरणमन्विच्छ कृपणाः फलहेतवः॥ ४९॥

தூ₃ரேண ஹ்யவரம் கர்ம பு₃த்₃தி₄யோகா₃த்₃த₄நஞ்ஜய ।
பு₃த்₃தௌ₄ ஶரணமந்விச்ச₂ க்ருபணா: ப₂லஹேதவ: ॥ 49 ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பு₃த்₃தி₄யோக₃ாத்** – (இந்த ஸமபாவனையான) புத்தியோகத்தைக் காட்டிலும், **கர்ம** – பயன் கருதிச் செய்யப்படும் கர்மம், **தூ₃ரேண** – மிகவும், **அவரம்** – தாழ்ந்த ரகத்தைச் சேர்ந்தது. **(அத:** – ஆகவே), **த₄நஞ்ஜய** – அர்ஜுன! **பு₃த்₃தௌ₄** – ஸமபுத்தியில், **ஶரணம்** – தஞ்சம், **அந்விச்ச₂** – அடைவாய். **ஹி** – ஏனெனில், **ப₂லஹேதவ:** – பலனுக்குத் தம்மைக் காரணமாக்கிக் கொள்கிறவர்கள், **க்ருபணா:** – இரக்கத்துக்குரியவர்கள்.

இந்த ஸமபாவனையான புத்தியோகத்தைக் காட்டிலும் பயன் கருதிச் செய்யப்படும் கர்மம் மிகவும் தாழ்ந்த ரகத்தைச் சேர்ந்தது? ஆகவே அர்ஜுன! ஸமபுத்தியில் தஞ்சம் அடைவாய். ஏனெனில் பலனுக்குத் தம்மைக் காரணமாக்கிக் கொள்கிறவர்கள் இரக்கத்துக்குரியவர்கள்.

**கேள்வி:** 'புத்தியோகம்' என்றால் கர்மயோகமா? ஞானயோகமா?

**பதில்:** மமதை, பற்றுதல், ஆசை இவற்றைத் துறந்து ஸமபுத்தியுடன் ஆற்றவேண்டிய கடமைகளைச் செய்வதே கர்மயோகம். அதையே இங்கு புத்தியோகம் என்று கூறுகிறார். ஏனெனில் 39வது ச்லோகத்தில், 'யோகே த்விமாம் ஶ்ருணு' – 'இப்பொழுது நீ என்னிடம் இந்த புத்தியைக் கர்மயோக விஷயத்தில் கேள்' என்று பகவான் கர்மயோகத்தைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தார். ஆகவே, இங்கு புத்தியோகம் என்பதற்கு ஞானயோகம் என்று பொருள் சொல்வது இந்த ஸந்தர்பத்திற்குப் பொருந்தாது. இது தவிர, இந்த ச்லோகத்தில் பயனை விரும்புபவனை 'க்ருபணன்' என்று கூறுகிறார். அடுத்த ச்லோகத்தில் புத்தியோகம் உள்ளவனைப் புகழ்ந்து பேசுகிறார். அர்ஜுனனை நோக்கிக் 'கர்மயோகத்தில் ஈடுபடுவாயாக' என்று ஆணையிடுகிறார். புத்தியோகம் உள்ளவன் கர்மத்தின் பயனை த்யாகம் செய்து அனாமயபதத்தை (மாறுதல்கள் அற்ற உயர்நிலை) அடைவான் (2/51) என்று சொல்கிறார். ஆகவே, இந்த ஸந்தர்பத்திற்கு விரோதமாக புத்தியோகம் என்ற சொல்லுக்கு ஞானயோகம் என்ற பொருள் பொருந்தாது. ஏனெனில், கர்மத்தின் பயனை த்யாகம் செய்து அனாமயபதத்தை ஞானயோகி அடைவான் என்று கூறமுடியாது. ஏனெனில் ஞானயோகி தன்னைக் கர்த்தா என்றே நினைப்பதில்லையே! பின் அவன் கர்மத்தின் பயனை த்யாகம் செய்வது என்ற பேச்சே கிடையாது.

**கேள்வி:** 'புத்தியோகத்தைக் காட்டிலும் பயனைக் கருதிக் கர்மம் செய்வது மிகவும் தாழ்ந்தது' என்று கூறுவதற்கு என்ன பொருள்? இங்கு கர்மம் என்ற சொல்லுக்குத் 'தடை செய்யப்பட்ட கார்யம்' என்று பொருள் சொன்னால் என்ன தவறு?

**பதில்:** பயனைக் கருதிச் செய்யப்படும் கர்மங்களின் பயன்கள் அழியக்கூடியவை. கணநேர இன்பம் தருபவை. ஆனால், கர்மயோகத்தின் பயனாகப் பரமாத்மாவையே அடைந்துவிடலாம். ஆகவே இரண்டுக்கும் இடையே பகல்–இரவு போல மிகுந்த வேறுபாடு உண்டு. அதனால்தான் பயன் கருதிக் கர்மம் செய்வது, புத்தியோகத்தை விடத் தாழ்ந்தது என்று பகவான் கூறுகிறார். இங்கு 'கர்மம்' என்ற சொல்லுக்குத் 'தடை செய்யப்பட்ட பாவச் செயல்' என்று பொருள் கொள்ளக் கூடாது. அக்கர்மம் முக்காலும் தவிர்க்கப்பட வேண்டியது. அதன் பயனாகப் பெரிய துயரம் ஏற்படும். அதை புத்தியோகத்தோடு சீர்தூக்கிப் பார்ப்பதோ, அதைக்காட்டிலும் சிறந்தது என்று கூறுவதோ சரியன்று.

**கேள்வி:** 'புத்தௌ' என்ற சொல் எதைக் குறிக்கிறது? 'அதையே தஞ்சம் அடைவாய்' என்று அர்ஜுனனிடம் கூறுவதற்கு என்ன கருத்து?

**பதில்:** இது ஸமபுத்தியைப் பற்றிப் பேசும் ஸந்தர்பம். அதைத்தான் புத்தி என்று கூறுகிறார். 'உட்கார்ந்தாலும், எழுந்தாலும், நடந்தாலும், அலைந்தாலும், தூங்கினாலும், விழித்தாலும் ஒவ்வொரு செய்கையிலும் நீ ஸமபாவனையுடன் இருக்க முயற்சி செய்வாயாக. இதுவே மங்களத்தைப் பெறுவதற்கு எளிதான உபாயம்' என்றும், 'அதையே தஞ்சம் அடைவாய்' என்றும் பகவான் கூறுகிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** கர்மத்தின் பயனுக்குக் காரணமாக ஆகிறவன் இரங்கத்தக்கவன் என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** 'கர்மத்திலும், கர்மத்தின் பயனிலும் மமகாரம், பற்றுதல், விருப்பம் கொண்டு வினை செய்து, கர்மபலனை அடைய விரும்புபவர்கள் தீனர்கள்; இரக்கத்துக்குரியவர்கள்; நீ அப்படி ஆகாதே' என்று சுட்டிக்காட்டுகிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் 'ஸமபாவனையை ஏற்றுக் கொள்வாய்' என்று ஆணையிட்டு, இனிவரும் இரண்டு ச்லோகங்களில் ஸமத்வ புத்தியுள்ள மஹாபுருஷர்களைப் புகழ்ந்து, பகவான் அர்ஜுனனைக் கர்மயோகத்தைக் கடைப்பிடிப்பாய் என்று மறுபடியும் கூறி, அதன் பயனை விளக்குகிறார்—

**बुद्धियुक्तो जहातीह उभे सुकृतदुष्कृते।**
**तस्माद्योगाय युज्यस्व योगः कर्मसु कौशलम्॥५०॥**

**புத்₃தி₄யுக்தோ ஜஹாதீஹ உபே₄ ஸுக்ருதது₃ஷ்க்ருதே ।**
**தஸ்மாத்₃யோக₃ாய யுஜ்யஸ்வ யோக₃: கர்மஸு கௌஶலம் ॥ 50 ॥**

**புத்₃தி₄யுக்த:** – ஸமபுத்தியுடையவன், **ஸுக்ருத து₃ஷ்க்ருதே** – புண்ய பாவங்கள் என்ற, **உபே₄** – இரண்டையும், **இஹ** – இவ்வுலகிலேயே, **ஜஹாதி** – விட்டுவிடுகிறான்; அதாவது அவற்றிலிருந்து விடுபடுகிறான். **தஸ்மாத்** – இதனால் (நீ), **யோக₃ாய** – ஸமத்வ யோகத்தில், **யுஜ்யஸ்வ** – ஈடுபட்டிரு. (இந்த), **யோக₃:** – ஸமத்வரூபயோகம் (தான்), **கர்மஸு** – கடமையை ஆற்றுவதில், **கௌஶலம்** – திறமையாகும் (கர்மபந்தத்திலிருந்து விடுபடுவதற்கு உபாயமாகும்).

ஸமபுத்தியுடையவன் புண்ய பாவங்கள் என்ற இரண்டையும் இவ்வுலகிலேயே விட்டு விடுகிறான்; அதாவது அவற்றிலிருந்து விடுபடுகிறான். இதனால் நீ ஸமத்வ யோகத்தில் ஈடுபட்டிரு. இந்த ஸமத்வரூப யோகம்தான் கடமையை ஆற்றுவதில் திறமையாகும் – கர்மபந்தத்திலிருந்து விடுபடுவதற்கு உபாயமாகும்.

**கேள்வி:** 'ஸமபுத்தியுடையவன் புண்யம், பாவம் இரண்டையும் இவ்வுலகிலேயே விட்டுவிடுவான்' என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** பல முற்பிறவிகளிலும், இப்பிறவியிலும் செய்த எவ்வளவு புண்ய கர்மங்கள், பாவ கர்மங்கள் உண்டோ அவை ஸம்ஸ்காரங்களாக, பதிவுகளாக உள்ளத்தில் சேர்க்கப்பட்டு இருக்கின்றன. ஸமபுத்தியுடைய கர்மயோகி அவ்வளவு கர்மங்களையும் இவ்வுலகிலேயே த்யாகம் செய்கிறான். அதாவது இப்பிறவியிலேயே எல்லாக் கர்மங்களிலிருந்தும் விடுதலை பெறுகிறான். அவனுக்கும், அக்கர்மங்களுக்கும் எவ்வித ஸம்பந்தமும் இருக்காது. ஆகவே, அவை மறுபிறவியைத் தரா. ஏனெனில், தன்னலம் கருதாது உலக நன்மைக்காகவே செய்யப்படும் கர்மங்களினால் அவனுடைய எல்லாக் கர்மங்களும் மறைந்து விடுகின்றன (4/23). இவ்விதம் அவன் செய்கின்ற புண்ய பாவ கர்மங்களும் விலகிவிடுகின்றன. ஏனெனில் பாவ கர்மங்களை அவன் செய்யவே மாட்டான். சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட புண்ய கர்மங்களிலும் பயனைக் கருதாமையால் அந்தக் கர்மங்கள் 'அகர்மங்கள்' ஆகின்றன (4/20). ஆகவே, அவற்றிலிருந்தும் விடுதலை பெறுகிறான்.

**கேள்வி:** 'அதனால் நீ ஸமத்வ யோகத்தில் ஈடுபட்டிரு' என்றால் என்ன பொருள்?

**பதில்:** 'ஸமபுத்தியில் நிலைத்து நிற்கின்ற கர்மயோகி ஜீவன்முக்தன் ஆகிறான். நீயும் அவ்வாறு ஆவாயாக' என்று பொருள்.

**கேள்வி:** 'இந்த ஸமத்வயோகமே கடமைகளை ஆற்றுவதில் உள்ள திறமை ஆகும்' என்றால் என்ன பொருள்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இயற்கையாகவே எந்தக் கர்மமும் பந்தத்திற்குத்தான் காரணமாகும். கர்மம் செய்யாமல் மனிதன் இருக்க முடியாது. ஏதாவது ஒன்றைச் செய்யத்தான் வேண்டியிருக்கிறது. இந்த நிலையில் கர்மங்களிலிருந்து விடுதலை பெறுவதற்கு மிகச் சிறந்ததும், நல்லதுமான உபாயம் இந்த ஸமத்வயோகம்தான். ஆகவே, ஸமத்வ புத்தியுடையவன் கர்மம் செய்தாலும் ஸமத்வ யோகத்தின் ப்ரபாவத்தினால், சக்தியினால், அந்தக் கர்மம் அவனை பந்தப்படுத்துவதில்லை. ஆகவே, செயல்களில் 'யோகம்' என்பதே திறமையாகும். ஸாதனை காலத்தில் ஸமபுத்தியோடு கர்மத்தைச் செய்வதற்கு முயற்சி செய்யப்படுகிறது. ஸித்தி நிலையில் ஸமத்வ புத்தி முற்றிலும் நிலைபெற்றதாகிறது என்று பொருள்.

**कर्मजं बुद्धियुक्ता हि फलं त्यक्त्वा मनीषिणः।**
**जन्मबन्धविनिर्मुक्ताः पदं गच्छन्त्यनामयम्॥ ५१॥**

**கர்மஜம் பு₃த்₃தி₄யுக்தா ஹி ப₂லம் த்யக்த்வா மநீஷிண: ।**

**ஜந்மப₃ந்த₄விநிர்முக்தா: பத₃ம் க₃ச்ச₂ந்த்யநாமயம் ॥ 51 ॥**

**ஹி** – ஏனெனில், **பு₃த்₃தி₄யுக்தா:** – ஸமபுத்தியுடைய, **மநீஷிண:** – ஞானிகள், **கர்மஜம்** – கர்மத்தினால் உண்டாகும், **ப₂லம்** – பயனை, **த்யக்த்வா** – த்யாகம் செய்து, **ஜந்ம ப₃ந்த₄ விநிர்முக்தா:** – பிறப்பு என்ற பந்தத்திலிருந்து விடுபட்டு, **அநாமயம்** – மாறுதல்களற்ற, **பத₃ம்** – பரமபதத்தை, **க₃ச்ச₂ந்தி** – அடைகிறார்கள்.

ஏனெனில் ஸமபுத்தியுடைய ஞானிகள் கர்மத்தினால் உண்டாகும் பயனை த்யாகம் செய்து, பிறப்பு என்ற பந்தத்திலிருந்து விடுபட்டு மாறுதல்களற்ற பரமபதத்தை அடைகிறார்கள்.

**கேள்வி:** 'ஹி' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** 'காரணம் என்னவென்றால்' என்று பொருள். ஸமபுத்தியுடன்கூடக் கர்மங்களைச் செய்வது எந்தக் காரணத்தினால் திறமை ஆகும் என்பது இந்த ச்லோகத்தில் விளக்கப்படுகிறது என்று பொருள்.

**கேள்வி:** 'புத்தியுக்தா:' என்றால் யார்? அவர்களை 'மநீஷிண:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** முன் சொல்லப்பட்ட ஸமபுத்தியுடையவர்களை – ஸமபாவனையில் அசையாத நிலை பெற்ற கர்மயோகிகளை 'புத்தியுக்தா:' என்று கூறுகிறார். இப்படி நேராக அவர்களை 'மநீஷிண:' என்று குறிப்பிட்டு, ஸமத்வ புத்தியுடன் கூடத் தம் மனிதப்பிறவியைப் பயனுள்ளதாகச் செய்து கொள்பவர்கள்தான் உண்மையில் புத்திசாலிகள் – ஞானிகள். முக்திக்கு – விடுதலைக்கு நுழைவாயிலாக இருக்கும் இந்த மனிதப் பிறவியைப் பெற்றும்கூட போகங்களில் வீழ்பவர்கள் புத்திசாலிகள் அல்லர் (5/22) என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'அந்த ஸமபுத்தியுடையவர்கள் கர்மங்களிலிருந்து உண்டாகும் பயன்களை த்யாகம் செய்து பிறவி என்ற தளையிலிருந்து விடுபடுகிறார்கள்' என்றால் என்ன?

**பதில்:** ஸமத்வ யோகத்தின் ப்ரபாவத்தினால் அவர்கள் இப்பிறவியிலும், பல முற்பிறவிகளிலும் செய்த கர்மங்களின் பயன்களின் தொடர்பிலிருந்து துண்டிக்கப்பட்டுத் திரும்பத் திரும்பப் பிறப்பு-இறப்பு என்ற ஸம்ஸார சக்ரத்தின் சுழலிலிருந்து நிரந்தரமாக விடுதலை பெறுகிறார்கள். இதுதான் கர்மங்களினால் உண்டாகும் விளைவுகளிலிருந்து விடுதலை பெறுவதாகும். ஏனெனில் முக்குணங்களின் விளைவுகளான உலகியல் பொருட்களின்பால் ஏற்படும் பற்றுதான் மறுபிறவிக்குக் காரணம் (13/21). அது அவர்களிடம் அறவே அற்றுவிடும். அதனால் அவர்களுக்கு மறுபிறவி கிடையாது.

**கேள்வி:** 'இவர்கள் மாறுதல்களற்ற பரமபதத்தை அடைவார்கள்' என்றால் என்ன பொருள்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** எங்கு விருப்பு-வெறுப்பு என்ற க்லேசங்களோ, நல்லது-கெட்டது என்ற கர்மங்களோ, மகிழ்ச்சி-துயரம் என்ற விகாரங்களோ, மற்ற தோஷங்களோ அறவே இல்லையோ, எது இந்த ப்ரக்ருதி - அதன் விளைவுகளுக்கு அப்பாற்பட்டதோ, எது பகவானைத் தவிர வேறில்லாத பரமதாமமோ, எங்கு சென்றவன் திரும்பி வருவதில்லையோ, அந்தப் பரமதாமத்திற்கு அநாமயம் என்று பெயர். ஆகவே, பகவானுடைய பரமபதத்தை அடைவது ஸத் சித் ஆனந்தமயமான குணமற்ற-உருவமற்ற பரப்ரம்மத்துடனோ ஸகல கல்யாண குணங்களும் திவ்யத் திருமேனியும் பெற்ற பரமாத்மாவுடனோ ஐக்யமாகிவிடுவது, பரமகதியை அடைவது, அம்ருதத்வத்தை அடைவது எல்லாமே ஒரே நிலையைக் குறிக்கும் சொற்கள். உண்மையில் அவற்றின் நிலையில் வேற்றுமை ஏதும் இல்லை. வேற்றுமை ஸாதகனின் மனப்பாங்கில்தான் உண்டாகிறது.

**பொருத்தம்:** கர்மயோகத்தைக் கடைப்பிடிப்பதால் அநாமயபதம் கிடைக்கும் என்று பகவான் சொன்னார். அதன்பேரில் அந்த அநாமயபதம் தமக்கு எப்போது எப்படிக் கிடைக்கும் என்று அர்ஜுனனுக்கு ஓர் ஆவல் தோன்றுகிறது. அடுத்து வரும் இரண்டு ச்லோகங்களால் பகவான் இது பற்றிக் கூறுகிறார்—

**यदा ते मोहकलिलं बुद्धिर्व्यतितरिष्यति।**
**तदा गन्तासि निर्वेदं श्रोतव्यस्य श्रुतस्य च॥५२॥**

**யதா₃ தே மோஹகலிலம் பு₃த்₃தி₄ர்வ்யதிதரிஷ்யதி ।**
**தத₃ா க₃ந்தாஸி நிர்வேத₃ம் ஶ்ரோதவ்யஸ்ய ஶ்ருதஸ்ய ச ॥ 52 ॥**

**யத₃ா** – எப்பொழுது, **தே** – உன்னுடைய, **பு₃த்₃தி₄:** – புத்தி, **மோஹகலிலம்** – மோஹம் என்ற சேற்றை, **வ்யதிதரிஷ்யதி** – முற்றிலுமாகக் கடந்துவிடுகிறதோ, **தத₃ா** – அப்பொழுது (நீ), **ஶ்ருதஸ்ய** – கேட்டவை பற்றியும், **ஶ்ரோதவ்யஸ்ய ச** – கேட்கப் படுகிறவை பற்றியும் (இவ்வுலக, பரலோகங்களில் ஏற்படும் அனைத்து போகங்களிலிருந்தும்), **நிர்வேத₃ம்** – வைராக்யத்தை, **க₃ந்தாஸி** – அடைவாய்.

எப்பொழுது உன்னுடைய புத்தி மோஹம் என்ற சேற்றை முற்றிலுமாகக் கடந்து விடுகிறதோ, அப்பொழுது நீ கேட்டது பற்றியும், கேட்கப்படுகிறவை பற்றியும், இவ்வுலக, பரலோகங்களில் ஏற்படும் அனைத்து போகங்களிலிருந்தும் வைராக்யத்தை அடைவாய்.

**கேள்வி:** *'மோஹகலிலம்' என்றால் என்ன? அதை புத்தி எப்படிக் கடக்கும்?*

**பதில்:** உற்றார்-உறவினர்கள் கொல்லப்படுவார்களே என்ற கவலையினால் பாசத்தின் காரணமாக அர்ஜுனனுடைய உள்ளத்தில் ஒரு மோஹம் (சஞ்சலம்) உண்டாகி இருக்கிறது. இதே அத்யாயத்தின் இரண்டாவது ச்லோகத்தில் இதைக் 'கஶ்மலம்' என்று குறிப்பிட்டார். அதையே 'கலிலம்' (சேறு) என்கிறார். இந்தச் சேற்றின் காரணமாக தர்ம விஷயத்தில் மனம் மழுங்கிப் போய்த் தாம் என்ன செய்யவேண்டும் என்பது தெரியாமல் திகைக்கிறார். இந்த 'மோஹகலிலம்' என்பது ஒருவிதமான மனத்திரை; அழுக்கு; புத்தியை ஒரு தீர்மானமான முடிவுக்குச் செலுத்தவிடாமல் தடுத்துத் தனக்குள்ளேயே உழலச் செய்கிறது.

ஸத்ஸங்கத்தினால் விவேகம் பெற்று நித்யம் எது, அநித்யம் எது, செய்யவேண்டியது எது, செய்யத்தகாதது எது என்று தீர்மானித்து பயனில் நோக்கம், கர்த்தா என்ற மனப்பான்மை, ஆசை முதலியவற்றை விட்டொழித்து பகவானிடமே முழுமையாக ஈடுபட்டு, நிஷ்காமமாகக் கடமைகளை ஆற்றிக் கொண்டே இருந்தால் இந்தத் திரை-அழுக்கு விலகி அழியும். இதுதான் புத்தி மோஹமாகிற சகதியைக் கடப்பது என்று கூறப்படுகிறது.

**கேள்வி:** *'ஶ்ருத', 'ஶ்ரோதவ்ய' என்ற இரண்டு சொற்களுக்கும் என்ன பொருள்? அவற்றினால் எப்படி வைராக்யத்தைப் பெற முடியும்?*

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இவ்வுலகிலும், பரலோகங்களிலும் போகங்கள், ஐசுவர்யங்கள் முதலியவை என்னென்ன என்று இன்றுவரை கேட்டும் பார்த்தும் அனுபவித்தும் இருக்கிறோமோ, அவையெல்லாம் 'ஶ்ருத' – கேட்டவை. இனிமேல் வருங்காலத்தில் எவற்றைப் பார்க்கவும், கேட்கவும், அனுபவிக்கவும் முடியுமோ, அவையெல்லாம் 'ஶ்ரோதவ்ய' – கேட்கப்பட வேண்டியவை. இவையெல்லாமே துயரத்திற்குக் காரணம்; அழியக்கூடியவை என்றறிந்து அவற்றில் பற்றற்று இருப்பதுதான் வைராக்யம். மோஹமழிந்த பிறகு உன்னுடைய புத்தி நல்லபடியாக இயல்பான நிலையை எய்தும்போது இவ்வுலகிலும், பரலோகத்திலும் கிடைக்கக்கூடிய அழியும் பொருட்களில் உண்மையான வைராக்யம் ஏற்படும் என்று கூறுகிறார்.

**श्रुतिविप्रतिपन्ना ते यदा स्थास्यति निश्चला।**
**समाधावचला बुद्धिस्तदा योगमवाप्स्यसि॥ ५३॥**

**ஶ்ருதிவிப்ரதிபந்நா தே யத₃ா ஸ்த₂ாஸ்யதி நிஸ்சலா ।**

**ஸமாத₄ாவசலா பு₃த்₃தி₄ஸ்தத₃ா யோக₃மவாப்ஸ்யஸி ॥ 53 ॥**

**ஶ்ருதிவிப்ரதிபந்நா** – பற்பல வசனங்களைக் கேட்டு சஞ்சலமாகியுள்ள, **தே** – உன்னுடைய, **பு₃த்₃தி₄:** – புத்தி, **யத₃ா** – எப்பொழுது, **ஸமாதௌ₄** – பரமாத்மாவிடம், **நிஸ்சலா** – அசையாமல் (மேலும்), **அசலா** – திடமாக, **ஸ்த₂ாஸ்யதி** – நிலைபெறுகிறதோ, **தத₃ா** – அப்பொழுது, **யோக₃ம்** – யோகத்தை, **அவாப்ஸ்யஸி** – அடைவாய் (நீ பரமாத்மாவிடம் நிரந்தரமாக ஒன்றிவிடுவாய்).

பற்பல வசனங்களைக் கேட்டு சஞ்சலமாகியுள்ள உன்னுடைய புத்தி எப்பொழுது பரமாத்மாவிடம் அசையாமல் மேலும் திடமாக நிலை பெறுகிறதோ அப்பொழுது யோகத்தை அடைவாய் – நீ பரமாத்மாவிடம் நிரந்தரமாக ஒன்றிவிடுவாய்."

**கேள்வி:** 'ஶ்ருதிவிப்ரதிபந்நா புத்தி:' என்றால் என்ன?

**பதில்:** இவ்வுலகிலும், பரலோகத்திலும் கிடைக்கக்கூடிய போகங்கள் செல்வங்கள். அவற்றைப் பெறும் ஸாதனங்கள் இவற்றைப் பற்றியெல்லாம் பற்பல செய்திகளைக் கேட்டுக் கேட்டு புத்தி நிலையாக இல்லாமல் சிதறுகிறது. அதனால் அது ஒரு தீர்மானத்திற்கு வரமுடியாமல் திகைக்கிறது. இப்போது ஒன்று நல்லதென்று படுகிறது. சற்று நேரம் கழித்து வேறொன்று நல்லதென்று படுகிறது. எதிலும் தடுமாற்றம் உண்டாகிறது. நிச்சய புத்தி இல்லை. இதைத்தான் 'பற்பல வசனங்களைக் கேட்டுத் தடுமாறின புத்தி' என்கிறார். இது புத்தியின் தடுமாற்றக் கோளாறு.

**கேள்வி:** 'புத்தி பரமாத்மாவிடம் அசையாமல் திடமாக நிலைபெறுவது' என்றால் என்ன?

**பதில்:** மோஹம் என்ற சகதியைக் கடந்து இவ்வுலக, பரலோக போகங்களில் முழுமையாக வைராக்யம் அடைந்து புத்தித் தடுமாற்றம் இல்லாதவனாகத் தன்னை ஆக்கிக் கொண்டு, பரமாத்மா ஒருவரையே திடமாக, அசையாமல் சிந்தனை செய்வதுதான் பரமாத்மாவிடம் அசையாமல் திடமாக நிலைபெறுவது என்பதன் பொருள்.

**கேள்வி:** அப்பொழுது யோகத்தை அடைவது என்றால் என்ன?

**பதில்:** இங்கே 'யோகம்' என்றால் பரமாத்மாவிடம் நித்யமாக, பூர்ணமாக ஒன்றிவிடுவது என்று பொருள். ஏனென்றால் இது அழுக்கு, தடுமாற்றம், திரை என்ற தோஷங்கள் இல்லாததும், விவேகமும் வைராக்யமும் நிறைந்ததும், பரமாத்மாவிடம் அசைவற்று நிலைத்திருப்பதுமாகிய புத்தியின் விளைவாகக் கிடைக்கப் பெறுகிறது. இனி அர்ஜுனன் பரமாத்மாவிடம் ஒன்றிவிடுகிற ஸ்திதப்ரக்ஞனின் இலக்கணம் பற்றிக் கேட்கப் போகிறார். ஆகவே இங்கே 'யோகம்' என்ற சொல்லுக்கு இதுதான் பொருள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 50வது ச்லோகத்தில் யோகம் என்ற சொல்லுக்கு ஸமத்வம் என்று பொருள் சொன்னார். இங்கே யோகம் என்றால் 'பரமாத்மாவை அடைவது' என்று பொருள் சொல்கிறார். இதன் கருத்து என்ன?

**பதில்:** அங்கு யோகம் என்பது ஸாதனை பற்றிய விஷயம் கூறப்பட்டுள்ளது. இங்கு 'ஸ்திர புத்தி' ஆன பிறகு அதன் பயனாகப் பெறப்படும் யோகத்தைப் பற்றிய பேச்சு. ஆகவே, இங்கு யோகம் என்ற சொல் பரமாத்மாவிடம் அடையப் பெறும் ஐக்யத்தைக் குறிக்கிறது. கீதையில் யோகம் என்ற சொல்லும், யோகி என்ற சொல்லும் கீழே குறிப்பிட்டவாறு அந்தந்த ஸந்தர்பத்திற்கு ஏற்றபடி பல பொருட்களில் உபயோகப்படுத்தப்பட்டுள்ளன. அவற்றில் சில உதாரணங்களைக் காட்டுவோம்.

## யோகம்

(1) கர்மயோகம் (6/3) – இங்கு யோகத்தில் தேர்ச்சி பெற விரும்பும் கர்மயோகி என்ன செய்ய வேண்டுமென்பது கூறப்படுகிறது. ஆகவே, இங்கு 'யோகம்' என்ற சொல்லுக்குக் கர்மயோகம் என்று பொருள்.

(2) த்யானயோகம் (6/19) – காற்று வீசாத இடத்தில் உள்ள தீபச்சுடர் போல புத்தி நிலைத்து நிற்க வேண்டிய விஷயம் விளக்கப்படுகிறது. இங்கு யோகம் என்றால் த்யானயோகம்.

(3) ஸமத்வயோகம் (2/48) – யோகத்தில் நிலைபெற்று ஆஸக்தி அற்று வெற்றி–தோல்விகளில் ஸமபுத்தியுடன் கர்மங்களைச் செய்ய வேண்டும் என்று கூறும் ஸந்தர்பம். இங்கு யோகம் என்றால் ஸமத்வம்.

(4) பகவானின் பெருமையாகிற யோகம் (9/5) – பகவானுடைய ஆச்சர்யப்படத்தக்க பெருமை பேசப்படுகிறது. ஆகவே, இங்கு யோகம் என்றால் பகவானுடைய சக்தி அல்லது பெருமை என்று பொருள்.

(5) பக்தியோகம் (14/26) – இடைவிடாமல், சிந்தை சிதறாது, பகவானை வழிபடுவது பற்றி இங்குப் பேச்சு. ஆகவே, இங்கு யோகம் என்றால் பக்தியோகம். இங்கு பக்தியோகம் என்ற சொல்லே வருகிறது.

(6) அஷ்டாங்கயோகம் (4/28) – இங்கு 'யோகம்' என்ற சொல்லுக்கு ஸாங்க்யயோகமோ, கர்மயோகமோ பொருள் அன்று. அவை இரண்டும் விரிவானவை. யாகம் – யக்ஞம் என்ற பெயரால் குறிப்பிடப்படும் சில ஸாதனங்கள் இந்த இரண்டு யோகங்களில் அடங்கிவிடுகின்றன. ஆகவே, இங்கு 'யோகம்' என்ற சொல்லுக்கு அஷ்டாங்கயோகம் என்று பொருள் கொள்வதே சரியாகும் என்று தெரிகிறது.

(7) ஸாங்க்யயோகம் (13/24) – இங்கு ஸாங்க்ய என்ற அடைமொழியுடனேயே யோகம் என்று சொல் வருகிறது. ஆகவே, இங்கு ஸாங்க்யயோகம் என்று பொருள். இப்படி மற்ற இடங்களிலும் ஸந்தர்பத்திற்கு ஏற்றவாறு பொருள் கொள்ள வேண்டும்.

## யோகி

(1) ஈசுவரன் (10/17) – பகவான் ஸ்ரீக்ருஷ்ணனை யோகி என்று அர்ஜுனன் அழைக்கிறார். ஆகவே, இங்கு யோகி என்றால் ஈசுவரன் என்று பொருள்.

(2) ஆத்மஞானி (6/32) – தனக்கு ஸமமாக எல்லோரையும் பாவிக்க வேண்டுமென்று கூறுவதால் இங்கு யோகி என்றால் ஆத்மஞானி என்று பொருள்.

(3) ஸித்த பக்தன் (12/14) – பரமாத்மாவிடம் மனம், புத்தி இவற்றை அர்ப்பணம் செய்தவன் என் பக்தன் என்ற அடைமொழியுடன் கூறுவதால் யோகி என்ற சொல் ஸித்தனான பக்தனைக் குறிக்கிறது.

(4) கர்மயோகி (5/11) – பற்றுதலைத் துறந்து ஆத்மசுத்திக்காகக் கர்மங்களைச் செய்பவனைப் பற்றிக் கூறுவதால் இங்கு யோகி என்ற சொல் கர்மயோகியைக் குறிப்பிடுகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



*(5) ஸாங்க்யயோகி (5/24)* – ப்ரம்மத்துடன் இரண்டறக் கலந்து விடுகிறான் என்று இதற்குப் பயன் கூறுவதால் இங்கு யோகி என்ற சொல் ஸாங்க்யயோகியைக் குறிக்கிறது.

*(6) பக்தியோகி (8/14)* – வேறொன்றும் நினையாமல் எப்பொழுதும் இடைவிடாது பகவானை நினைப்பதைப் பற்றிக் கூறுவதால் இங்கு யோகி என்ற சொல் பக்தியோகியைக் கூறுகிறது.

*(7) ஸாதகயோகி (6/45)* – பரம கதியை அடையும் முயற்சி பற்றிப் பேசுவதால் இங்கு யோகி என்ற பதம் ஸாதகயோகியைக் குறிக்கும்.

*(8) த்யானயோகி (6/10)* – தனிமையில் அமர்ந்து மனதை ஒருமைப்படுத்தி ஆத்மாவைப் பரமாத்மாவிடம் ஒன்றச் செய்ய வேண்டும் என்று தூண்டுவதால், இங்கே யோகி என்றால் த்யானயோகி என்று பொருள்.

*(9) ஸகாமகர்மீ (பற்றுடன் கர்மம் செய்பவன்) (8/25)* – மீண்டும் பிறவி எடுப்பதைப் பற்றிக் கூறுவதால் இங்கு யோகி என்பவன் பற்றுடன் கர்மங்கள் செய்பவன் ஆகிறான்.

**பொருத்தம்:** **முன் ச்லோகத்தில், 'மோஹ சகதியைக் கடந்து இவ்வுலக, பரலோக போகங்களைக் கடந்தவனாக நீ ஆனால், உன் புத்தி பகவானிடம் அசையாமல் நிலைபெறும். நீ பரமாத்மாவை அடைவாய்' என்று பகவான் அர்ஜுனனுக்குச் சொன்னார். அப்படி பரமாத்மாவை அடைந்தவனான ஸ்திதப்ரக்ஞனுடைய இலக்கணம், நடத்தை பற்றித் தெரிந்து கொள்ளும் விருப்பத்துடன் அர்ஜுனன் கேட்கிறார்—**

अर्जुन उवाच

**स्थितप्रज्ञस्य का भाषा समाधिस्थस्य केशव।**
**स्थितधीः किं प्रभाषेत किमासीत व्रजेत किम्॥ ५४॥**

அர்ஜுந உவாச

**ஸ்தி₂தப்ரஜ்ஞஸ்ய கா ப₄ாஷா ஸமாதி₄ஸ்த₂ஸ்ய கேஶவ ।**
**ஸ்தி₂ததீ₄: கிம் ப்ரப₄ாஷேத கிமாஸீத வ்ரஜேத கிம் ॥ 54 ॥**

*அர்ஜுந உவாச* – அர்ஜுனன் கூறினார்: **கேஶவ** – கேஶவ! **ஸமாதி₄ஸ்த₂ஸ்ய ஸ்தி₂தப்ரஜ்ஞஸ்ய** – ஸமாதியில் நிலைபெற்றுப் பரமாத்மாவை அடைந்த ஸ்திர புத்தியுள்ளவனின், **ப₄ாஷா கா** – இலக்கணம் என்ன? (இந்த), **ஸ்தி₂ததீ₄:** – ஸ்திர புத்தியுள்ள புருஷன், **கிம்** – எப்படி, **ப்ரப₄ாஷேத** – பேசுவான்? **கிம்** – எப்படி, **ஆஸீத** – உட்காருவான்? (மேலும்), **கிம்** – எப்படி, **வ்ரஜேத** – நடப்பான்?

அர்ஜுனன் கூறினார்: 'கேஶவ! ஸமாதியில் நிலைபெற்றுப் பரமாத்மாவை அடைந்த ஸ்திர புத்தியுள்ளவனின் இலக்கணம் என்ன? இந்த ஸ்திர புத்தியுள்ள புருஷன் எப்படிப் பேசுவான்? எப்படி உட்காருவான்? மேலும் எப்படி நடப்பான்?'

**கேள்வி:** இங்கு 'கேஶவ' என்று அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** க, அ, ஈஶ, வ என்ற நான்கும் சேர்ந்து 'கேஶவ' என்றாகிறது. க – ப்ரம்மா, அ – விஷ்ணு, ஈஶ – சிவன் இவர்கள் மூவரும் யாருடைய வ – வபு – ஒரே ஸ்வரூபமோ அவரை 'கேஶவன்' என்பர். அதாவது 'கேஶவ' என்று அழைத்து, 'நீங்கள் அகில உலகங்களையும் படைத்துக் காத்துத் தம்முள் அடக்கிக் கொள்ளும் ஸர்வசக்தி படைத்தவராயிற்றே! அனைத்துமறிந்த ஸாக்ஷாத் பரமாத்மாவாயிற்றே! ஆகவே, நீங்கள்தான் என் கேள்விகளுக்குச் சரியான பதில் அளிக்க முடியும்' என்ற கருத்தை அர்ஜுனன் வெளியிடுகிறார்.

**கேள்வி:** 'ஸமாதியில் நிலைத்த ஸ்திதப்ரக்ஞன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** முன் ச்லோகத்தில், 'உன்னுடைய புத்தி எப்பொழுது ஸமாதியில் அதாவது, பகவானிடம் நிலைத்து நிற்குமோ, அப்பொழுது யோகத்தை அடைவாய்' என்று பகவான் அர்ஜுனனுக்குச் சொன்னார். அதன்படி இங்கே அர்ஜுனன் அந்தத் தேர்ச்சி பெற்ற மஹாபுருஷனின் இலக்கணத்தை அறிய விரும்புகிறார். பரமாத்மாவை அடைந்துவிட்டவன், மற்றும் பரமாத்மாவிடம் எப்பொழுதும் ஸ்திரமான புத்தியுடையவனுடைய அடையாளங்கள் என்ன? இக்கருத்தைத் தெளிவுபடுத்தவே, 'ஸமாதியில் நிலைபெற்றவனான ஸ்திதப்ரக்ஞன்' என்று அர்ஜுனன் கூறுகிறார்.

**கேள்வி:** 'ஸமாதியில் நிலைபெற்ற' என்று சொன்னால், அந்த ஸித்த புருஷன் செயல்பட்டுக் கொண்டிருக்கும் நிலையா, செயலற்றிருக்கும் நிலையா?

**பதில்:** இரண்டு நிலைகளிலும் உள்ள ஸ்திதப்ரக்ஞனைப் பற்றித்தான் அர்ஜுனன் கேட்கிறார். என்ன பேசுவான்? எப்படி நடப்பான் என்ற கேள்வி செயல்படும் ஸ்திதப்ரக்ஞனையும், எப்படி அமர்வான் என்ற கேள்வி செயலற்ற ஸ்திதப்ரக்ஞனையும் பற்றியவை.

**கேள்வி:** 'பாஷா' என்றால் வாக்கு என்றுதானே பொருள். இங்கே, 'லக்ஷணம்' (இலக்கணம்) என்று பொருள் கொள்வானேன்?

**பதில்:** ஸ்திதப்ரக்ஞன் எப்படிப் பேசுவான் என்பது தனிக் கேள்வியாக அடுத்து வருகிறது. ஆகவே, இங்கே 'பாஷா' என்ற சொல்லுக்கு வாக்கு என்று பொருள் கூறாமல், ஒரு பொருளின் இலக்கணம் என்று பொருள் கூறப்பட்டது. 'ப$_4$ராஷ்யதே கத்$_2$யதே அநயா இதி ப$_4$ராஷா'. எதன் மூலமாகப் பொருளின் ஸ்வரூபம் விளக்கப்படுகிறதோ, அது 'பாஷா'. நடைமுறைப் பேச்சில் பரிபாஷா என்ற சொல்லின் பொருளே இதற்கும் கூறப்பட்டது. ஆகவே, பாஷா என்ற சொல் இங்கே இலக்கணம் என்ற பொருளில்தான் உபயோகிக்கப்பட்டிருக்கிறது.

**கேள்வி:** ஸ்திர புத்தியுள்ளவன் எப்படிப் பேசுவான்? எப்படி உட்காருவான்? எப்படி நடப்பான் என்ற கேள்விகளுக்கு ஸாதாரணமாகப் பேசுவது, உட்காருவது, நடப்பது பற்றிக் கேட்கிறார் என்று பொருளா? வேறு தனிப்பட்ட பொருள் உண்டா?

**பதில்:** பரமாத்மாவை அடைந்த ஸித்த புருஷன் எல்லா வகைகளிலும் தனிச்சிறப்புக் கொண்டவனாக இருப்பான். ஆகவே, அவனுடைய ஸாதாரணமான பேச்சு, உட்காருவது, நடப்பது எல்லாமே மாறுபட்டிருக்கும். ஆயினும், இங்கு ஸாதாரணப் பேச்சு, நடைமுறை, உட்கார்வது பற்றிய பேச்சு அன்று. அவர்கள் இப்படிச் செய்யும்போது அவர்களுடைய மனப்பாங்கு எப்படி இருக்கும்? பேசும்போது அவர் மனதில் நினைப்பது என்ன? செயலாற்றாமல் உட்கார்ந்திருக்கும்போது அவருடைய நிலை என்ன? 'நடக்கும்போது' என்றால் அவர் எவ்விதம் பழகுவார் என்ற அவருடைய மனோபாவத்தைப் பற்றிய கேள்விகள் இவை.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் அர்ஜுனன் பரமாத்மாவுடன் ஐக்யமாகிவிட்ட ஸித்தயோகியைப் பற்றி நான்கு கேள்விகள் கேட்டார். இந்த நான்கு கேள்விகளுக்கும் பதில், இந்த அத்யாயத்தின் முடிவு வரை பகவான் சொல்கிறார். இடையில் ஸந்தர்பத்திற்கேற்பப் பல விஷயங்களையும் கூறுகிறார். அடுத்த ச்லோகத்தில் முதல் கேள்விக்குப் பதில் சுருக்கமாகச் சொல்கிறார்—

श्रीभगवानुवाच

प्रजहाति यदा कामान्सर्वान्पार्थ मनोगतान्।
आत्मन्येवात्मना तुष्टः स्थितप्रज्ञस्तदोच्यते ॥ ५५ ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸ்ரீப₄க₃வானுவாச

**ப்ரஜஹாதி யதா₃ காமாந்ஸர்வாந்பார்த₂ மநோக₃தாந் ।**
**ஆத்மந்யேவாத்மநா துஷ்ட: ஸ்தி₂தப்ரஜ்ஞஸ்ததோ₃ச்யதே ॥ 55 ॥**

**ஸ்ரீப₄க₃வானுவாச** – ஸ்ரீபகவான் கூறினார்: **பார்த₂** – அர்ஜுன! **யதா₃** – எப்பொழுது (இந்த மனிதன்), **மநோக₃தாந்** – மனதிலுள்ள, **ஸர்வாந்** – எல்லா, **காமாந்** – ஆசைகளையும், **ப்ரஜஹாதி** – அறவே துறக்கிறானோ (மேலும்), **ஆத்மநா** – ஆத்மாவினால், **ஆத்மநி ஏவ** – ஆத்மாவிடமே, **துஷ்ட:** – ஆனந்தமாக இருக்கிறானோ, **ததா₃** – அப்பொழுது (அவன்), **ஸ்தி₂தப்ரஜ்ஞ:** – ஸ்திதப்ரக்ஞன் (என்று), **உச்யதே** – கூறப்படுகிறான்.

ஸ்ரீபகவான் கூறினார்: அர்ஜுன! எப்பொழுது இந்த மனிதன் மனதிலுள்ள எல்லா ஆசைகளையும் அறவே துறக்கிறானோ, மேலும் ஆத்மாவினால் ஆத்மாவிடமே ஆனந்தமாக இருக்கிறானோ, அப்பொழுது அவன் ஸ்திதப்ரக்ஞன் என்று கூறப்படுகிறான்.

**கேள்வி:** 'ஸர்வாந் காமாந்' (எல்லா ஆசைகளையும்) என்றால் எவை? அவற்றை அறவே துறப்பது எப்படி?

**பதில்:** இவ்வுலகிலோ, பரலோகத்திலோ உள்ள பொருட்களை அடைய விரும்பும் போதோ, இழக்கும் போதோ எக்காரணம் கொண்டும் லேசான அல்லது தீவிரமான ஆசைகள் மனிதனுடைய உள்ளத்தில் ஏற்படத்தான் செய்கின்றன. எல்லாவற்றையும் சேர்த்து 'ஸர்வாந் காமாந்' என்று கூறுகிறார். இவற்றில் முன் அனுபவத்தினால் உண்டான வாஸனை, புதியதில் ஆவல், விருப்பம், பேராசை என்று பல பேதங்கள் உண்டு. இவையனைத்தையும் அறவே ஒழிக்க வேண்டும்.

**கேள்வி:** வாஸனா, ஸ்ப்ருஹா, இச்சா, த்ருஷ்ணா என்பனவற்றில் என்ன வேறுபாடு?

**பதில்:** உடல், மனைவி, மக்கள், செல்வம், மானம், புகழ் ஆகிய அனுகூலமான பொருட்களைப் பெறுவதிலும், ப்ரதிகூலங்களை அழிக்க வேண்டும் என்பதிலும், விருப்பு–வெறுப்புகளின் விளைவான நுட்பமான (அதாவது, வெளிப்படையாகத் தோன்றாத) ஆசை – வாஸனை எனப்படும். அனுகூலமான வஸ்துக்கள் தன்னிடம் இல்லையென்று உணரும்போது மனதில் அந்தப் பொருட்கள் அவசியம் வேண்டும் என்றும், அவை இல்லாமல் கார்யம் நடக்காது என்றும் தோன்றக் கூடிய தேவையின் உணர்வு – ஸ்ப்ருஹா எனப்படும். இது வாஸனையின் முதிர்ச்சியில் ஏற்படுவது. நம்மிடம் இல்லாதது கிடைப்பதிலோ, ப்ரதிகூலமான பொருளைத் தவிர்ப்பதிலோ, கிடைக்காமல் போவதிலோ ஏற்படும் பேராவல் – இச்சா (விருப்பம்). இது வாஸனையின் வெளிப்பாடு. மனைவி, மக்கள், செல்வம் ஆகியவற்றில் தற்போது உள்ளது போதாதென்று மேலும் மேலும் வளர்த்துக் கொள்வது பேராசை – த்ருஷ்ணா. இதுதான் காமத்தின் ஸ்தூலமான உருவம்.

**கேள்வி:** மனதில் உள்ள காமங்கள் என்றால் என்ன?

**பதில்:** காமங்களின் இருப்பிடம் மனம் (3/40). ஆகவே புத்தியுடன் கூடவே மனம் பரமாத்மாவிடம் அசையாமல் நிலை பெற்றுவிட்டால், அந்த ஆசைகள் அனைத்தும் அழிந்துவிடும். ஸாதகனுடைய மனதிலிருந்து ஆசைகள் அனைத்தும் அகலாதவரை, அவனுடைய புத்தி ஸ்திரப்படாது என்று அறிய வேண்டும்.

**கேள்வி:** 'ஆத்மந்யேவாத்மநா துஷ்ட:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** மனதில் உள்ள ஸகல ஆசைகளும் அறவே இல்லாமற்போன பிறகு, கண்ணுக்குப் புலப்படும் உலகத்திற்கு முற்றும் அப்பாற்பட்டதும், நித்யமானதும், சுத்தமானதும், அறிவு மயமானதும் ஆன பரமாத்மாவினுடைய உண்மையான ஸ்வரூபத்தை நேரிலே உணர்ந்து, அதிலேயே த்ருப்தி அடைந்தவன்தான் 'தனக்குத் தானே ஸந்தோஷமாக இருப்பவன்'. 3/17ல்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மஹாபுருஷனின் இலக்கணம் கூறும் போது, 'ஆத்மாவிடமே த்ருப்தியும், ஆத்மாவிடமே ஸந்தோஷமும் உள்ளவன்' என்று கூறுகிறார்.

**கேள்வி:** அந்த நிலையில் அவன் ஸ்திதப்ரக்ஞன் எனப்படுகிறான் என்றால் என்ன பொருள்?

**பதில்:** கர்மயோக ஸாதனையைச் செய்து மேலே சொன்ன நிலையை யோகி எட்டிவிட்டால், அவனுடைய புத்தி பரமாத்மாவில் அசையாது நிலைத்துவிட்டது; அந்த யோகி பரமாத்மாவை அடைந்து விட்டான் என்று தெரிந்து கொள்ள வேண்டும். அவன்தான் ஸ்திதப்ரக்ஞன்.

**பொருத்தம்: ஸ்திதப்ரக்ஞனைப் பற்றி அர்ஜுனன் நான்கு கேள்விகள் கேட்டார். அதில் முதல் கேள்வி மிகவும் விரிவானது. அதிலேயே மற்ற மூன்று கேள்விகளும் அடங்கிவிடும். அப்படிப் பார்க்கப் போனால், இந்த அத்யாயத்தின் முடிவு வரை ஒரே கேள்விக்குத்தான் பதில் சொன்னதாக ஆகும். ஆனால், மற்ற மூன்று கேள்விகளும் தனிப்பட்டவை என்று புரிந்து கொள்வதற்காக இனிவரும் இரண்டு ச்லோகங்களில் ஸ்திதப்ரக்ஞன் எப்படிப் பேசுவான் என்ற இரண்டாவது கேள்விக்குப் பதில் கூறுகிறார்—**

**दुःखेष्वनुद्विग्नमनाः सुखेषु विगतस्पृहः ।**
**वीतरागभयक्रोधः स्थितधीर्मुनिरुच्यते ॥ ५६ ॥**

**து$_3$:கே$_2$ஷ்வநுத்$_3$விக்$_3$நமநா: ஸுகே$_2$ஷு விக$_3$தஸ்ப்ருஹ: ।**
**வீதராக$_3$ப$_4$யக்ரோத$_4$: ஸ்தி$_2$ததீ$_4$ர்முநிருச்யதே ॥ 56 ॥**

**து$_3$:கே$_2$ஷு** – துன்பங்கள் நேர்கையில், **அநுத்$_3$விக்$_3$நமநா:** – எவனுடைய மனம் கலங்குவது இல்லையோ, **ஸுகே$_2$ஷு விக$_3$தஸ்ப்ருஹ:** – ஸுகங்களை அடையும்போது அவற்றில் சிறிதுகூட ஆசை கொள்வதில்லையோ, **வீத ராக$_3$ ப$_4$ய க்ரோத$_4$:** – எவனுக்கு விருப்பு, பயம், கோபம் இவை முற்றும் அற்றுப்போயினவோ (அத்தகைய), **முநி:** – முனிவன், **ஸ்தி$_2$ததீ$_4$:** – ஸ்திதப்ரக்ஞன் (என்று), **உச்யதே** – கூறப்படுகிறான்.

**துன்பங்கள் நேர்கையில் எவனுடைய மனம் கலங்குவது இல்லையோ, ஸுகங்களை அடையும்போது அவற்றில் சிறிதுகூட ஆசை கொள்வதில்லையோ எவனுக்கு விருப்பு, பயம், கோபம் இவை முற்றும் அற்றுப்போயினவோ அத்தகைய முனிவன் ஸ்திதப்ரக்ஞன் என்று கூறப்படுகிறான்.**

**கேள்வி:** 'து:கேஷு அநுத்விக்நமநா:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** ஸ்திர புத்தியுள்ள மனிதனின் மனதில் உணர்ச்சி பொங்குதல் – கொதிப்பு எக்காலத்திலும் கொஞ்சம்கூட இருக்காது. எவருடைய புத்தி பரமாத்மாவிடம் நிலைபெற்றுவிட்டதோ பரமாத்மாவை அடைந்துவிட்ட அந்த மாமனிதனுடைய ஸ்திர நிலையைச் சிறிய துயரங்கள் என்ன, மிகப் பெரிய துயரங்கள் கூடக் கலைக்கமாட்டா (6/22). ஆயுதங்கொண்டு உடலை வெட்டினாலும், மிகவும் பொறுக்க முடியாத தட்ப-வெப்பம் ஆனாலும், மழை மின்னல் முதலியவற்றால் உடலுக்குக் கஷ்டம் வந்தாலும், மிகவும் கடுமையான வ்யாதியினால் வேதனை ஏற்பட்டாலும், அன்புள்ளவர்களை எதிர்பாராமல் பிரிய நேரிட்டாலும், காரணமில்லாமல் உலகியலில் அவமானம் ஏற்பட்டாலும், புறக்கணிப்பு-நிந்தைகள் நேர்ந்தாலும், மற்றும் எந்தப் பெரிய துயரங்கள் ஒரே நேரத்தில் வந்தாலும், அவனுடைய உள்ளத்தில் கொஞ்சம்கூடப் பாதிப்பை அவை விளைவிக்கா. அதனால், அவன் பேச்சில் சிறிதுகூட உணர்ச்சி வேகம் இருக்காது. ஆனால் உலகத்தின் நன்மைக்காக, அவனுடைய உடலிலோ, பேச்சிலோ உணர்ச்சி வேகம் வெளிப்பட்டாலும், அவை உண்மையில் உணர்ச்சி வேகமன்று.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ஸுகேஷு விகதஸ்ப்ருஹ:' என்றால் என்ன?

**பதில்:** ஸ்திர புத்தியுள்ளவனுடைய உள்ளத்தில் ஆசை என்ற தோஷமே இருக்காது என்று பொருள். அவன் துக்கத்திலும், ஸுகத்திலும் எப்பொழுதும் ஸமமாக இருப்பவன் *(12/13, 14/24)*. எப்படி மிகப் பெரிய துக்கம்கூட அவனைத் தடுமாற வைப்பதில்லையோ, அப்படி மிகப் பெரிய மகிழ்ச்சிகூட அவன் மனதில் எந்தவிதமான ஆசையையும் தோற்றுவிப்பதில்லை. அதனால், அவனுடைய பேச்சில் எந்தவிதமான ஆவலும் இல்லாமற்போய்விடும். லோக க்ஷேமத்திற்காக ஏதாவது ஆசையை வெளியிட்டாலும் உண்மையில் அது ஆசை அன்று.

**கேள்வி:** 'வீத ராக பய க்ரோத:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** ஸ்திதப்ரக்ஞனுடைய உள்ளத்திலும், வாக்கிலும் பற்றோ, பயமோ, கோபமோ இருக்காது. எந்த நிலையிலும் எது நடந்தாலும், அவனுடைய உள்ளத்தில் எந்தவிதமான பற்றும் உண்டாகாது. எந்தவிதமான பயமும் ஏற்படாது, கோபமும் வராது. அதுபோல அவனுடைய பேச்சிலும் பற்று, பயம், கோபம் இல்லாமல் அமைதியும், இனிமையும் இருக்கும். உலகின் நன்மைக்காக அவர்களுடைய பேச்சில் பற்று, பயம், க்ரோதம் வெளிப்பட்டாலும், உண்மையில் அவர்களுடைய மனதிலோ, பேச்சிலோ எந்தவிதமான விகாரமும் உண்டாகாது. சில தீரபுருஷர்களால் கூடப் பேச்சில் பற்று, பயம், கோபம் தெரியாமல் பேச முடியும். ஆனால் உள்ளத்தில் அந்த விகாரங்கள் இல்லவே இல்லை என்று சொல்ல முடியாது. அதனால்தான் ஸ்திதப்ரக்ஞன் எப்படிப் பேசுவான் என்ற கேள்விக்கு விடையாக, 'மேலெழுந்தவாரியான பேச்சில் மட்டும் அன்று, உள்ளத்திலும் அப்படிப்பட்ட விகாரங்கள் இரா' என்று பகவான் கூறுகிறார். ஆகவே ஸ்திதப்ரக்ஞனின் வார்த்தைகளும், உண்மையில் அவர்களுடைய மனத்திற்கு ஒத்தவாறு விகாரமற்று சுத்தமாக இருக்கும் என்பதை அறிய வேண்டும்.

**கேள்வி:** 'இப்படிப்பட்ட முனிவரை ஸ்திர புத்தியுள்ளவன் என்று சொல்வார்கள்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** மேலே குறிப்பிட்ட இலக்கணங்களோடு கூடிய யோகிதான் உண்மையில் முனிவர்; அதாவது பேச்சை அடக்கி மௌனமாக இருப்பவர். அவரே ஸ்திர புத்தியுடையவர். உள்ளத்திலும், புலன்களிலும் விகாரங்கள் இருப்பின் ஒருவர் பேச்சை அடக்கி மௌனமாக இருந்தாலும் அவர் ஸ்திதப்ரக்ஞனல்லர்.

**यः सर्वत्रानभिस्नेहस्तत्तत्प्राप्य शुभाशुभम्।**
**नाभिनन्दति न द्वेष्टि तस्य प्रज्ञा प्रतिष्ठिता॥५७॥**

**ய: ஸர்வத்ராநபி₄ஸ்நேஹஸ்தத்தத்ப்ராப்ய ஶுப₄ாஶுப₄ம் ।**

**நாபி₄நந்த₃தி ந த்₃வேஷ்டி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டி₂தா ॥ 57 ॥**

**ய:** – எவன் ஒருவன், **ஸர்வத்ர** – அனைத்திலும், **அநபி₄ஸ்நேஹ:** – பாசம் வைக்காமல், **தத்தத்** – அந்தந்த, **ஶுப₄ அஶுப₄ம்** – நல்ல அல்லது கெட்ட பொருளை, **ப்ராப்ய** – அடைந்து, **ந அபி₄நந்த₃தி** – மகிழ்வதுமில்லையோ, **ந த்₃வேஷ்டி** – வெறுப்பதுமில்லையோ, **தஸ்ய** – அவனுடைய, **ப்ரஜ்ஞா** – புத்தி, **ப்ரதிஷ்டி₂தா** – ஸ்திரமானது.

எவன் ஒருவன் அனைத்திலும் பாசம் வைக்காமல் அந்தந்த நல்ல அல்லது கெட்ட பொருளை அடைந்து மகிழ்வதுமில்லையோ, வெறுப்பதுமில்லையோ அவனுடைய புத்தி ஸ்திரமானது.

**கேள்வி:** 'ஸர்வத்ர அநபிஸ்நேஹ:' என்றால் என்ன பொருள்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** ஸ்திதப்ரக்ஞனான யோகிக்குத் தன்னுடையது என்ற அபிமானத்துடன் கூடிய உலகியல் பாசம் அறவே இல்லாமற்போய்விடும். உலகியலில் ஸாதாரண மனிதர்கள் மனைவி, மக்கள், அண்ணன்-தம்பிகள், குடும்பத்தில் உள்ளவர்கள், நண்பர்கள் இவர்களிடம், நம்முடையவர்கள் என்ற பாசம் வைத்து இரவு-பகலாக அவர்களை மோஹித்து இருப்பார்கள். அவர்களுடைய ஒவ்வொரு சொல்லிலும் மோஹத்தோடு கூடிய பேச்சு வெளிவந்து கொண்டிருக்கும். ஸ்திதப்ரக்ஞன் இவ்விதம் செய்யமாட்டான். அவனுக்கு எந்த ப்ராணியிடமும் தன்னுடையது என்ற பாசமும், ப்ரேமையும் இரா. ஆகவே, அவனுடைய பேச்சிலும் தன்னுடையது என்ற பாசம் இல்லாமல் உண்மையான அன்பு மட்டும் இருக்கும். பாசம்தான் காமக்ரோதங்கள் ஆகிய விகாரங்களுக்கு ஆணிவேர். பாசமற்றுப்போனால் மற்ற விகாரங்களும் அழியும் என்பதை அறிய வேண்டும்.

**கேள்வி:** *'ஶுப அஶுபம்' (நல்லவை, கெட்டவை) எவை? 'தத் தத்' (அந்தந்த) என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** நல்லவை என்பவை அவரவருக்கு ப்ரியமானதும், அனுகூலமானதும் ஆகும். கெட்டவை என்பவை அவரவருக்குப் பிடிக்காததும், ப்ரதிகூலமானதும் ஆகும். ஆகவே நல்லது, கெட்டது என்பது பொருட்களைச் சார்ந்தது அன்று. அவரவரின் மனோபாவத்தைப் பொறுத்தது. உண்மையில் ஸ்திதப்ரக்ஞனான யோகிக்கு உலகியலில் எந்தப் பொருளிலும் அனுகூலம் என்று பிடித்தமோ, ப்ரதிகூலம் என்று வேண்டாமையோ கிடையாது. உலக நடைமுறையில் ஒருவன் மனதிற்கோ, புலன்களுக்கோ, உடலுக்கோ அனுகூலமானதை நல்லதென்றும், ப்ரதிகூலமானதைக் கெட்டதென்றும் நினைக்கிறான். ஆகவே, இங்கு நல்லது-கெட்டது என்று சொல்வது உலகியல் நடைமுறையை ஒட்டித்தான். அவற்றை 'அந்தந்த' என்று கூறி உலகியலில் அனுகூல, ப்ரதிகூலப் பொருட்கள் பல உள்ளன. அவற்றில் எவ்வெவற்றுடன் யோகிக்கு ஸம்பந்தம் ஏற்படுகிறதோ, அவ்வவற்றின் சேர்க்கையினால், அவர் மனப்பாங்கு எப்படி இருக்கும் என்பதையே இங்கே சொல்கிறார்.

**கேள்வி:** *'ந அபிநந்ததி' (மகிழ்வதில்லை) என்றால் என்ன பொருள்?*

**பதில்:** உலகியலில் மனதிற்கு அனுகூலமான வஸ்து கிடைத்தால் ஸாதாரண மனிதனுக்குப் பெருமகிழ்ச்சி ஏற்படுகிறது. அந்த மகிழ்ச்சியில் மூழ்கிச் சொற்களால் தன் த்ருப்தியை வெளிப்படுத்தி, அந்தப் பொருளைப் புகழ்கிறான். ஸ்திதப்ரக்ஞனுக்கு மிகவும் அனுகூலமான வஸ்துவின் ஸம்பந்தம் ஏற்பட்டால்கூட அவனுடைய உள்ளத்தில் சிறிதுகூட மகிழ்ச்சிப் பரவசம் என்ற மாறுதல் ஏற்படுவதில்லை *(5/20)*. இக்காரணத்தினால் அவனுடைய சொல்லிலும் அந்தப் பொருளைப் .பற்றிய மகிழ்ச்சி கலந்த புகழ் வெளிப்படாது. எந்த அனுகூலமான பொருளையும், மனிதனையும் மகிழ்ச்சி பொங்கக் கொண்டாட மாட்டான். உலகின் நன்மைக்காக எதையாவது, யாரையாவது அவன் பாராட்டினால் அது மகிழ்ச்சியின் வெளிப்பாடு அன்று.

**கேள்வி:** *'ந த்வேஷ்டி' (வெறுப்பதும் இல்லை) என்றால் என்ன பொருள்?*

**பதில்:** அனுகூலமான பொருளைப் பெற்றால் ஸாதாரண மனிதனுக்கு மிகப் பெரிய மகிழ்ச்சி ஏற்படுவதுபோல ப்ரதிகூலமான வஸ்து வந்து சேர்ந்தால், அதை வெறுக்கிறான். அவன் உள்ளத்தில் கொந்தளிப்பு உண்டாகிறது. அவனுடைய பேச்சில் அதைப் பற்றி வெறுப்பு நிறைந்த இகழ்ச்சி வெளிப்படுகிறது. ஆனால் மிகவும் ப்ரதிகூலமானது வந்தாலும், ஸ்திதப்ரக்ஞனுடைய உள்ளத்தில் சிறிதுகூட வெறுப்பு ஏற்படாது. அந்தப் பொருள் வந்துவிட்டதே என்று மனதில் எவ்விதமான விகாரமும் ஏற்படாது. ஒவ்வொரு பொருளையும் அடையும்போது அவனுடைய மனம் ஸமபாவனையும், அமைதியும், விகாரமற்ற தன்மையும் பெற்றிருக்கும் *(5/20)*. ஆகவே, அவன் எந்தவிதமான ப்ரதிகூலமான பொருளையும் வெறுத்து இகழ்வதில்லை. இத்தகைய மஹாபுருஷனுடைய பேச்சில் உலகின் நன்மையின் பொருட்டு எந்தப் பொருளைப் பற்றியாவது கெட்டது என்று இகழ்ச்சி வெளிப்படுமானால், அது உண்மையில் இகழ்ச்சியன்று. ஏனெனில், அவனுக்கு எதனிடத்திலும் வெறுப்புக் கிடையாது.

**கேள்வி:** *'அவனுடைய புத்தி ஸ்திரமானது' என்று சொல்வதன் கருத்து என்ன?*

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** எந்த மஹாபுருஷனுக்கு மேலே சொன்ன இலக்கணங்கள் பொருந்துமோ, எப்பொருள் கிடைத்தாலும், எப்பொருளை இழந்தாலும், எது நடந்தாலும் எவருடைய உள்ளமும், புலன்களும் சிறிதுகூட எந்தவிதமான விகாரமும் அடையாவோ, அவர்தான் ஸ்திதப்ரக்ஞன் என்று அறியவும்.

**கேள்வி:** இந்த இரண்டு ச்லோகங்களிலும் 'பேச்சு' என்ற வார்த்தையே வெளிப்படையாக வரவில்லை. அப்படி இருக்கும்போது, ஸ்திதப்ரக்ஞன் எப்படிப் பேசுவான் என்ற கேள்விக்குப் பதிலாக இதை எப்படி ஏற்றுக் கொள்ள முடியும்?

**பதில்:** ஸ்திதப்ரக்ஞனுடைய பேச்சு ஸாதாரண மனிதனுடைய பேச்சைப்போல் இருக்காது என்று முதலிலேயே கூறியிருக்கிறார். திமிர் பிடித்தவன், பாசாங்குக்காரன் இவர்கள்கூட மனப்பாடம் செய்து மிகவும் நல்ல பேச்சுப் பேச முடியும். இங்கு உண்மையில் மனப்பாங்குக்குத்தான் முக்யத்வம் கொடுக்கப்படுகிறது. இந்த இரண்டு ச்லோகங்களில் கூறப்பட்ட மனப்பாங்கு அமைந்தவனுக்கு, அதை ஒட்டியே பேச்சு வெளிப்படும் என்று கூறுவதுதான் பகவானுடைய கருத்து. ஆகவே பேச்சைப் பற்றி வெளிப்படையாகக் கூறாமல் மனப்பாங்கை மட்டும் எடுத்துச் சொன்னார்.

**பொருத்தம்: ஸ்திதப்ரக்ஞன் எப்படிப் பேசுவான் என்ற இரண்டாவது கேள்விக்குப் பதில் கூறிவிட்டு, பகவான் இப்போது அவன் எப்படி அமர்ந்திருப்பான் என்ற மூன்றாவது கேள்விக்குப் பதில் கூறும் வகையில் 'ஸ்திதப்ரக்ஞனுடைய புலன்கள் அவனுக்கு வசப்பட்டிருக்கும்; உலகியல் பொருட்களில் பற்றற்று அவற்றிலிருந்து விலகியிருக்கும். இதுதான் ஸ்திதப்ரக்ஞன் அமர்ந்திருப்பதன் பொருள்' என்று இனி கூறப் போகிறார்—**

**यदा संहरते चायं कूर्मोऽङ्गानीव सर्वशः।**
**इन्द्रियाणीन्द्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता॥५८॥**

**யதா₃ ஸம்ஹரதே சாயம் கூர்மோऽங்கா₃நீவ ஸர்வஶ: ।**

**இந்த்₃ரியாணீந்த்₃ரியார்தே₂ப்₄யஸ்தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டி₂தா ॥ 58 ॥**

**கூர்ம:** — ஆமை, **ஸர்வஶ: ச** — எல்லாப் பக்கங்களிலிருந்தும், **அங்கா₃நி** — தனது உறுப்புக்களை, **ஸம்ஹரதே இவ** — உள்ளிழுத்துக் கொள்வதுபோல, **யதா₃** — எப்போது, **அயம்** — இந்த மனிதன், **இந்த்₃ரிய அர்தே₂ப்₄ய:** — புலன்நுகர் பொருட்களிலிருந்து, **இந்த்₃ரியாணி** — புலன்களை, (**ஸம்ஹரதே** — முற்றிலும் இழுத்துக் கொள்கிறானோ, **ததா₃** — அப்போது), **தஸ்ய** — அவனுடைய, **ப்ரஜ்ஞா** — புத்தி, **ப்ரதிஷ்டி₂தா** — ஸ்திரமானது (என்று புரிந்து கொள்ள வேண்டும்).

ஆமை எல்லாப் பக்கங்களிலிருந்தும் தனது உறுப்புக்களை உள்ளிழுத்துக் கொள்வதுபோல எப்போது இந்த மனிதன் புலன்நுகர் பொருட்களிலிருந்து புலன்களை முற்றிலும் இழுத்துக் கொள்கிறானோ, அப்போது அவனுடைய புத்தி ஸ்திரமானது என்று புரிந்து கொள்ள வேண்டும்.

**கேள்வி:** 'புலன்களை போகப் பொருட்களிலிருந்து ஆமைபோல இழுத்துக் கொள்வது எப்படி' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஆமை தனது உடல் உறுப்புகள் அனைத்தையும் எல்லாப் பக்கங்களிலிருந்தும் ஒடுக்கிக் கொண்டுவிடும். அதுபோல ஸமாதிநிலையில் தன் வசப்பட்ட எல்லாப் புலன்களையும், அவற்றின் செயல்களான பார்ப்பது முதலியவற்றையும் போகப் பொருட்களில் ஈடுபடாமல் விலக்கிக் கொள்ளுதல்; எந்தப் புலனும் எந்த போகப் பொருளாலும் ஈர்க்கப்படாமல் கவனமாகக் கண்காணித்தல்; அந்தப் புலன்களில் மனதையும், புத்தியையும், தடுமாறச் செய்யும் சக்தி நிலைக்காமல் பார்த்துக் கொள்ளுதல்;

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இவைதான் ஆமைபோல் புலன்களை போகப் பொருட்களிலிருந்து இழுத்துக் கொள்வதாகும். மேலெழுந்தவாரியாகக் கண்களை மூடிக் கொள்வதுபோல், புலன்களின் போக ஸ்தானங்களை அடைத்துவிட்டால்கூட, புலன்களின் இயக்கம் போகப் பொருட்களை நோக்கி ஓடிக் கொண்டுதான் இருக்கும். அதனால்தான் ஸாதாரண மனிதர்கள் கனவிலும், மனோராஜ்யத்திலும் (கற்பனையிலும்) புலன்களால் அனுபவிக்கக் கூடியவற்றை அனுபவிக்கிறார்கள். இங்கு 'ஸர்வஶ:' – எல்லாவிதங்களிலும் புலன்களை இழுத்துக் கொள்ள வேண்டும் என்று கூறி எப்படியும் ஓடாதவாறு மீட்க வேண்டும் என்று வலியுறுத்துகிறார்.

**கேள்வி:** 'அவன் புத்தி ஸ்திரமானது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எவனுடைய புலன்கள் எல்லாவிதங்களிலும் கட்டுப்பட்டுவிட்டனவோ, எவற்றுக்கு மனதையும், புத்தியையும் போகப் பொருட்களின்பால் ஈர்க்கும் சக்தி அழிந்துவிட்டதோ, இப்படி வசப்பட்ட புலன்களை போகப் பொருட்களிலிருந்து முற்றிலுமாகத் தன்பால் இழுத்துக் கொண்டவனுடைய புத்தி ஸ்திரப்படும். எவனுக்குப் புலன்கள் வசப்படவில்லையோ, அவனுடைய புத்தி ஸ்திரப்படாது. ஏனெனில், புலன்கள் மனதையும், புத்தியையும் பலாத்காரமாகப் பொருட்களை அனுபவிக்க வைத்துவிடும்.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் மூன்றாவது கேள்வியான ஸ்திதப்ரக்ஞன் எப்படி உட்காருவான் என்பதற்குப் பதில் சொன்னார். அதில் எழும் ஸந்தேஹங்களுக்கு ஸமாதானம் சொல்வதற்காக, மற்ற விதங்களில் புலன்களை அடக்குவதைக் காட்டிலும் ஸ்திதப்ரக்ஞன் புலன்களை அடக்கும் முறை மாறுபட்டது என்பதை எடுத்துக் காட்டுகிறார்—

**विषया विनिवर्तन्ते निराहारस्य देहिनः ।**
**रसवर्जं रसोऽप्यस्य परं दृष्ट्वा निवर्तते ॥ ५९ ॥**

**விஷயா விநிவர்தந்தே நிராஹாரஸ்ய தே₃ஹிந: ।**
**ரஸவர்ஜம் ரஸோऽப்யஸ்ய பரம் த்₃ருஷ்ட்வா நிவர்ததே ॥ 59 ॥**

**நிராஹாரஸ்ய** – (புலன்களின் மூலம்) போகப் பொருட்களை ஏற்றுக் கொள்ளாத, **தே₃ஹிந:** – மனிதனுடைய, **விஷயா:** – புலன்நுகர் பொருட்கள்தான், **விநிவர்தந்தே** – விலகுகின்றன. (ஆனால் அவற்றில் தங்கியுள்ள), **ரஸவர்ஜம்** – பற்று விலகுவதில்லை. **அஸ்ய** – இந்த ஸ்திதப்ரக்ஞனுக்கோ, **ரஸ: அபி** – அப்பற்றும், **பரம்** – பரமாத்மாவை, **த்₃ருஷ்ட்வா** – தர்சித்த பிறகு, **நிவர்ததே** – விலகிவிடுகிறது.

புலன்களின் மூலம் போகப் பொருட்களை ஏற்றுக் கொள்ளாத மனிதனுடைய புலன்நுகர் பொருட்கள்தான் விலகுகின்றன. ஆனால் அவற்றில் தங்கியுள்ள பற்று விலகுவதில்லை. இந்த ஸ்திதப்ரக்ஞனுக்கோ பரமாத்மாவை தர்சித்த பிறகு அப்பற்றும் விலகிவிடுகிறது.

**கேள்வி:** இங்கு 'நிராஹாரஸ்ய தேஹிந:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உலகில் தனக்கு உணவு வேண்டாம் என்று ஒதுக்கியவனை 'நிராஹார:' (உபவாஸம் இருப்பவன்) என்று கூறுகிறோம். இங்கு உணவு உட்கொள்ளாதவனை மட்டும் நிராஹாரன் என்று கூறவில்லை. போகப் பொருட்கள் அனைத்தின் அனுபவங்களையும் துறந்தவன் என்று பொருள். அதற்காகத்தான் 'விஷயா:' என்று பன்மையில் கூறுகிறார். உணவைத் துறப்பதால் நாக்கை மட்டும் அடக்கினதாக ஆகிறது. கேட்பது, தீண்டுவது, பார்ப்பது, முகர்வது முதலியவற்றிலிருந்து விலகிவிடுவது இல்லை. எந்தப் புலன் எதை நுகருமோ, அது அந்தப் புலனுக்கு உணவு. இந்த நோக்கத்தில் வெளிப்புலன்களால் நுகரப்படும் எல்லாப் போகப் பொருட்களையும் தவிர்ப்பது என்பதையே 'நிராஹார:' என்ற

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


சொல் குறிக்கிறது. இப்படியான தேஹாபிமானம் உள்ள மனிதனைத்தான், 'நிராஹாரஸ்ய' என்ற அடைமொழியோடு கூடிய 'தேஹிந:' என்ற சொல் குறிப்பிடுகிறது.

**கேள்வி:** இத்தகையவனுக்கு போகப் பொருட்கள்தான் விலகுகின்றன; அவற்றில் உள்ள பற்று விலகவில்லை என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** போகப் பொருட்களைத் துறக்கும் அஞ்ஞானியானவன், ஆமை தனது உடல் உறுப்புகளை ஒடுக்கிக் கொள்வதுபோல, மேலெழுந்தவாரியாக போகப் பொருட்களிலிருந்து புலன்களை மீட்கிறானே தவிர, அவனுக்கு அந்த போகப் பொருட்களில் உள்ள பற்று அற்றுப் போவதில்லை; இருக்கத்தான் செய்கிறது. புலன் துடிப்புகள் போகப் பொருட்கள்பால் ஓடிக் கொண்டுதான் இருக்கின்றன. ஆகவே, அவனுடைய மனம் ஸ்திரப்படுவதில்லை. இங்கே கூறப்பட்டுள்ள உதாரணங்களின் மூலம் இந்த விஷயம் நன்கு விளக்கமாகும். நோய், மரணபயம் அல்லது வேறு காரணங்களால், போக விருப்பமுள்ள மனிதன் ஏதோ ஒன்றையோ பல போகங்களையோ துறக்கிறான். எப்படி, எப்போது, எந்த போகத்தைத் துறக்கிறானோ, அப்போது அந்தப் பொருள் விலகுகிறது. அதுபோல எல்லாப் போகங்களையும் துறந்தால், எல்லாப் பொருட்களும் விலகுகின்றன. இப்படி அவை விலகுவதற்குக் காரணம் பிடிவாதமோ, பயமோ, வேறு காரணமோ இருக்கலாம். அதனால், உண்மையில் அதில் அவனுக்குள்ள பற்று விலகிவிட்டது என்று சொல்ல முடியாது.

ஆஷாடபூதி, தான் புலன்களை வென்றவன் என்று பிறர் நினைக்கும் பொருட்டு, பிறருக்குக் காட்டுவதற்காக, மேலெழுந்தவாரியாக, சிலசமயம் பத்துப் புலன்களுக்கும் உரியதான கேட்பது முதலிய போகங்களைத் துறக்கலாம். மேற்பார்வைக்கு அவன் அவற்றைத் துறந்துவிட்டதாகத் தோன்றும். ஆனால், அவற்றில் உள்ள பற்றின் காரணமாக அவனுடைய மனம், புலன்களுக்குரிய போகங்களை நினைத்துக் கொண்டுதான் இருக்கும் (3/6). ஆகவே, அவற்றில் பற்று தொடர்ந்து இருந்து கொண்டிருக்கிறது.

உலகியல் இன்பங்களை நுகர விரும்பும் மனிதன் அணிமா முதலிய ஸித்திகள் பெறுவதற்காகவோ, வேறுவிதமான உலகியல் இன்பத்தை அனுபவிப்பதற்காகவோ த்யானத்தில் அமர்ந்துவிடலாம், ஸமாதியிலும் அமர்ந்துவிடலாம். அப்பொழுது பத்துப் புலன்களும் போகங்களைத் துறந்திருக்கலாம். மனதால்கூட அவற்றை நினையாமல் இருக்கலாம். ஆனால், போகங்களில் உள்ள பற்று அவனிடம் தங்கி இருக்கத்தான் இருக்கிறது, அகலவில்லை. இவ்விதம் போகங்களைத் துறப்பதால் புலன் நுகர் பொருட்கள் விலகுகின்றனவேயொழிய மனநிலையில் அவற்றில் உள்ள பற்று போகவில்லை, இதுதான் கருத்து.

**கேள்வி:** இங்கு 'ரஸம்' என்ற சொல்லுக்குச் சுவைப்பது, மனம் மூலமாக ரஸிப்பது என்று பொருள் வைத்துக் கொள்வோம். ரஸம் போகவில்லை என்றால் போகங்களைப் புலன்களின் மூலம் அனுபவிக்காவிட்டாலும் மனதால் நினைத்து ஸந்தோஷப்படுகிறான் என்று சொன்னால் என்ன தவறு?

**பதில்:** ரஸம் என்ற சொல்லுக்கு அப்படியும் பொருள் கொள்ளலாம். ஆனால் சுவைப்பது என்பது ஆஸக்தி (பற்று) இருந்தால்தானே ஏற்படும்? ஆகவே, மனதால் சுவைப்பதும் ஆஸக்தியில் (பற்றில்) அடங்கிவிடுகிறது. மற்றொன்று, போகங்களை மனதால் நினைத்துச் சுவைப்பதைக்கூட, பரமாத்ம அனுபவம் ஏற்படுவதற்கு முன்னால் பிடிவாதம் மூலமாகவோ, விவேகத்தினாலோ, அவற்றில் ஸுகமில்லை என்று தெரிவதனாலோகூடத் தடுத்துவிடலாம். ஆனால் பரமாத்ம அனுபவம் பெற்ற பிறகு போகங்களின் மூல காரணமான பற்றே அற்றுவிடுகிறது. அவனுக்கு பரமாத்மாவைத் தன் சொந்த அனுபவத்தில் அடையப் பெற்றதில்தான், அவரை அடைந்ததில்தான் மனநிறைவு ஏற்பட்டிருக்குமே தவிர, மனதிலிருந்து போகப் பொருள் மீதான ஆசையை அகற்றுவதால் அன்று. ரஸம் என்பதற்கு முதலில் சொன்ன பற்று என்ற பொருள்தான் பொருந்தும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

**கேள்வி:** 'அஸ்ய' என்ற சொல் யாரைக் குறிக்கிறது? 'இவனுக்கு, பற்றுகூடப் பரமாத்மாவின் நேரிடை அனுபவம் கிடைத்தவுடன் அகன்றுவிடும்' என்று கூறுவதன் பொருள் என்ன?

**பதில்:** இந்த ஸந்தர்பத்தில் பேசப்படும் ஸ்திதப்ரக்ஞனையே 'இவன்' என்று இங்கே குறிக்கிறார். அந்த ஸ்திதப்ரக்ஞனான யோகி பரமானந்தக் கடலில் பரமாத்மாவை நேரிலே அனுபவிப்பதால், அவனுக்கு உலகியல் பொருள் ஒன்றிலும் சிறிதுகூடப் பற்று இருக்காது. ஏனெனில் உலகியல் பொருட்களில் பற்றுக்குக் காரணம் அவித்யை.‡ பரமாத்மாவின் நேரிடை அனுபவம் கிடைத்தவுடன் அந்த அஞ்ஞானம் அற்றுவிடும். ஸாதாரண மக்களுக்கு மோஹம் காரணமாகப் புலன்கள் மூலம் நுகரப்படும் போகங்களில் இன்பம் கிடைக்கிறது என்ற தோற்றம் ஏற்படுகிறது. அதனால் அவற்றில் பற்று ஏற்படுகிறது. உண்மையில் அவற்றில் துளிகூட ஸுகமில்லை. ஏதோ சிறிது ஸுகம் இருப்பதான தோற்றம்கூடப் பரமானந்த ஸ்வரூபமான பரமாத்மாவின் ஆனந்தத்தின் ஒரு திவலைதான்; பிரதிபலிப்புத்தான். நள்ளிரவில் பளிச்சென்று மினுக்கும் நக்ஷத்ரங்கள் ப்ரகாசமாகத் தெரிவதுகூட சூரியனின் ஒளியில் ஒரு துளிதானே! சூரியன் உதயமாகிவிட்டால், நக்ஷத்ரங்களின் ஒளி மறைந்து விடுகிறதல்லவா! அதுபோல உலகியல் பொருட்களால் ஏற்படும் இன்பம்கூட ஆனந்தமயமான பரமாத்மாவின் ஆனந்தத்தின் ஒரு திவலைதான். ஆகவே பரமாத்ம ஆனந்தத்தைப் பெற்றுவிட்டவனுக்கு உலகியல் இன்பங்களில் இன்பம் என்ற தோற்றம்கூட ஏற்படாது (2/69). அவற்றில் பற்றும் சிறிதுகூட ஏற்படாது.

ஏனெனில் பரமாத்மா என்னும் வஸ்து அற்புதமானது; உலகியலைக் கடந்தது; தெய்விகக் கவர்ச்சியுள்ளது. அதை அடைந்துவிட்டால் அதில் ஒன்றி மோஹித்து அதாகவே ஆகிவிடுகிறான். தான் என்ற நினைவையே இழந்துவிடுகிறான். பிறகு மற்றப் பொருளைப் பற்றிய நினைவு ஏது? ஆகவே, பரமாத்மாவினுடைய நேரிடை அனுபவத்தினால் ஆஸக்தி (பற்று) அறவே ஒழிந்துவிடுகிறது. இப்படிப் பற்று அற்றுவிட்டபடியால் ஸ்திதப்ரக்ஞன் வெளிப்படையாகப் புலன்களை மட்டும் அடக்கவில்லை. அடியோடு அவனது பற்றும் அழிந்துவிடுகிறது. இதுவே ஸ்திதப்ரக்ஞனின் தனித்தன்மை.

**பொருத்தம்:** பற்று அழியாமல், புலன்கள் அடங்காமல் இருந்தால் என்ன கேடு விளையும் என்பதை இனி கூறப்போகிறார்—

**यततो ह्यपि कौन्तेय पुरुषस्य विपश्चितः।**
**इन्द्रियाणि प्रमाथीनि हरन्ति प्रसभं मनः॥६०॥**

**யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஸ்சித: ।**
**இந்த்$_3$ரியாணி ப்ரமாதீ$_2$நி ஹரந்தி ப்ரஸப$_4$ம் மந: ॥ 60 ॥**

*கௌந்தேய* – அர்ஜுன! *ஹி* – பற்று அழியாததால், *ப்ரமாதீ$_2$நி* – கலக்குபவையான, *இந்த்$_3$ரியாணி* – புலன்கள், *யதத:* – முயற்சியுள்ள, *விபஸ்சித:* – புத்திசாலியான,

---

‡ அவித்$_3$யாஸ்மிதாராக$_3$த்$_3$வேஷாபி நிவேஶா: க்லேஶா: ।

(யோக$_3$ஸூத்ரம் 2/3)

அஞ்ஞானம், அஸ்மிதா (சித்–ஜட முடிச்சு – ஜடப் பொருளும் சித்பொருளும் ஒன்று என்ற நினைப்பு), ருசி, வெறுப்பு, மரணபயம் இவை ஐந்தும் க்லேசங்கள், வருத்தம் தருபவை.

அவித்$_3$யா க்ஷேத்ரமுத்தரேஷாம் . . . . . . . . . . . . . . . . . . ।

(யோக$_3$ஸூத்ரம் 2/4)

மேலே சொன்ன ஐந்தில் முதலாவதான அஞ்ஞானம் மற்ற நான்கிற்கும் பிறப்பிடம். அதாவது, அஞ்ஞானத்திலிருந்துதான் ராக–த்வேஷங்கள் உண்டாகின்றன.

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai
CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**புருஷஸ்ய** – மனிதனின், **மந: அபி** – மனதைக்கூட, **ப்ரஸப₄ம்** – பலவந்தமாக, **ஹரந்தி** – இழுத்துச் சென்றுவிடுகின்றன.

அர்ஜுன! பற்று அழியாததால் கலக்குபவையான புலன்கள் முயற்சியுள்ள புத்திசாலியான மனிதனின் மனதைக்கூட பலவந்தமாக இழுத்துச் சென்று விடுகின்றன.

**கேள்வி:** 'ஹி' என்றால் என்ன கருத்து?

**பதில்:** இடைக்கழியில் வைக்கப்பட்ட விளக்கு உள்ளும், புறமும் வெளிச்சம் தருவதுபோல 'ஹி' என்ற சொல், முன் ச்லோகத்துடனும், அடுத்த ச்லோகத்துடனும் தொடர்பு கொள்கிறது. முன் ச்லோகத்தில் வெளிப்படையாகப் புலன்களை போகப் பொருட்களிலிருந்து மீட்பதால் பொருட்கள்தான் விலகுகின்றனவே தவிர, அவற்றில் உள்ள பற்று போகாது என்று கூறினார். பற்று நீங்காவிட்டால் என்ன தவறு என்ற கேள்வி எழுகிறது. இதற்கு இந்த ச்லோகத்தில் பதில் கூறப்படுகிறது. மனிதனுக்கு போகங்களில் பற்று உள்ளவரை, அதன் காரணமாக அவனுடைய புலன்கள் அவனைப் பலவந்தமாக போகங்களில் ஈடுபடுத்துகின்றன. அதனால், அவனுடைய மனத்துடன் சேர்ந்த புத்தி பரமாத்ம ஸ்வரூபத்தில் ஸ்திரமாக இருக்க முடிவதில்லை. இப்படிப் புலன்கள் பலவந்தமாக மனிதனுடைய மனதை இழுத்துச் செல்வதால், 'எல்லாப் புலன்களையும் தன் வசத்தில் வைத்துக் கொண்டு மனிதன் மனதை அடக்கி என்னையே பற்றிக் கொண்டு த்யானத்தில் நிலைத்து இருக்க வேண்டும்' என்று அடுத்த ச்லோகத்தில் பகவான் சொல்லப் போகிறார். ஆகவே 'ஹி' (ஏனென்றால்) என்ற இந்தச் சொல் முன்னும், பின்னும் உள்ள ச்லோகங்களுடன் இந்த ச்லோகத்தினுடைய தொடர்பைக் கூறுகிறது.

**கேள்வி:** 'இந்திரியாணி ப்ரமாதீநி' (புலன்கள் கலக்கும் தன்மையுடையன) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனிதனுடைய புலன்கள் வசப்படாதவரை, போகங்களில் பற்று உள்ளவரை, புலன்கள் மனிதனுடைய மனதில் திரும்பத் திரும்ப போக ஸுகங்களில் ஆசையைத் தோற்றுவித்து, மனதை நிலைக்கவிடாமல் கடைந்து கொண்டே இருக்கும் என்பது கருத்து.

**கேள்வி:** 'யதத:', 'விபஸ்சித:' என்ற சொற்களுடன் இணைந்த 'புருஷஸ்ய' என்பது யாரைக் குறிக்கும்? மேலும் 'அபி' என்பதன் கருத்து யாது?

**பதில்:** மனிதன் சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட விஷயங்களைச் சற்றுச் சிந்தித்து, விவேகத்தினால் ஆராய்ந்து, போக விஷயங்களில் உள்ள குறைபாடுகளை உணர்ந்து கொள்கிறான். ஆகவே, புலன்களை அவற்றிலிருந்து திருப்ப முயற்சி செய்கிறான். ஆனால், போகங்களில் உள்ள பற்று அழியாதபடியால் அவனுக்குப் புலன்கள் வசப்படுவதில்லை. இதைத்தான் 'முயற்சியுள்ள புத்திசாலிக்குக் கூட' என்று சொல்லி, கலக்கும் தன்மையுடையவையான புலன்கள் போகப் பற்று மூலமாக இத்தகைய புத்திசாலியாகவும், விவேகியாகவும் உள்ள முயற்சியுள்ள மனிதனுடைய மனதைக் கூட பலவந்தமாக போகங்களுக்கு ஆட்படுத்துகின்றன என்றால் ஸாதாரண மக்களைப் பற்றிக் கேட்பானேன் என்று கூறுகிறார். ஆகவே ஸ்திதப்ரக்ஞனாக ஆக விரும்புபவன் முதலில் பற்றை அறவே ஒழிக்க வேண்டும். பிறகு புலன்களைத் தன் வசத்தில் வைத்துக் கொள்ளத் தீவிர முயற்சி செய்ய வேண்டும்.

**பொருத்தம்: இவ்விதம் புலன்களை அடக்குவதன் அவசியத்தை விளக்கிய பின்னர் ஸாதகன் என்ன செய்யவேண்டும் என்பதை எடுத்துச் சொல்லுகையில், புலன்களை அடக்குவதே ஸ்திதப்ரக்ஞ நிலைக்கு முதல் காரணமாக அமைகிறது என்று பகவான் கூறுகிறார்—**

तानि सर्वाणि संयम्य युक्त आसीत मत्परः।
वशे हि यस्येन्द्रियाणि तस्य प्रज्ञा प्रतिष्ठिता॥ ६१॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர: ।**

**வஶே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥ 61 ॥**

**தாநி** – அந்த, **ஸர்வாணி** – அனைத்துப் புலன்களையும், **ஸம்யம்ய** – வசப்படுத்தி, **யுக்த:** – ஒருமுகப்படுத்திய சித்தமுடையவன், **மத்பர:** – என்னையே பரமகதியாகக் கொண்டு, **ஆஸீத** – (த்யானத்தில்) அமர வேண்டும். **ஹி** – ஏனெனில், **யஸ்ய** – எவனுடைய, **இந்த்ரியாணி** – புலன்கள், **வஶே** – வசப்பட்டு இருக்கின்றனவோ, **தஸ்ய** – அவனுடைய, **ப்ரஜ்ஞா** – புத்தி, **ப்ரதிஷ்டிதா** – ஸ்திரமாகிறது.

அந்த அனைத்துப் புலன்களையும் வசப்படுத்தி ஒருமுகப்படுத்திய சித்தமுடையவன் என்னையே பரமகதியாகக் கொண்டு த்யானத்தில் அமர வேண்டும். ஏனெனில் எவனுடைய புலன்கள் வசப்பட்டு இருக்கின்றனவோ, அவனுடைய புத்தி ஸ்திரமாகிறது.

**கேள்வி:** *இங்கு 'இந்த்ரியாணி' என்பதுடன் 'ஸர்வாணி' என்ற அடைமொழி கொடுப்பதன் கருத்து என்ன?*

**பதில்:** எல்லாப் புலன்களையும் வசத்தில் வைத்துக் கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான் 'எல்லா' என்ற அடைமொழியைக் கொடுத்திருக்கிறார். ஏனெனில் புலன்களில் ஒன்று அடங்காவிட்டால்கூட, அது மனிதனுடைய மனதையும், புத்தியையும் பேதலிக்கச் செய்துவிடும் (2/67); ஸாதனைக்கு ஊறு விளைவிக்கும். ஆகவே, பரமாத்மாவை அடைய விரும்புகிறவன் ஒன்றுவிடாமல் எல்லாப் புலன்களையும் தன் வசத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

**கேள்வி:** *'மனதை ஒருமுகப்படுத்தி பகவானையே பரமகதியாகக் கொண்டு த்யானத்தில் அமரவேண்டும்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** புலன்கள் வசப்பட்ட பிறகுகூட மனம் வசப்படாமல், போகப் பொருட்களை நினைத்துக் கொண்டே இருந்தால் ஸாதகன் முயற்சியில் வீழ்ச்சி அடைவான். மனமும், புத்தியும் பரமாத்மாவின் ஆதாரம் இல்லாததால் இவை ஸ்திரப்பட மாட்டா. இதற்காகத்தான் 'மனம் நிலைத்து நிற்க பகவானே பரமகதி என்ற உறுதி கொண்டு த்யானத்தில் அமர வேண்டும்' என்று கூறுகிறார். 6வது அத்யாயத்தில் த்யானயோக ஸந்தர்பத்தில் இதே விஷயம் சொல்லப்படுகிறது (6/14). இவ்விதம் மனதையும், புலன்களையும் வசத்தில் வைத்துக் கொண்டு பரமாத்மாவை த்யானித்து அமர்ந்துவிட்ட மனிதனுடைய புத்தி ஸ்திரப்படும். அவன் விரைவிலேயே பரமாத்மாவை அடைந்துவிடுவான்.

**கேள்வி:** *'புலன்கள் அடங்கியவனுக்குத்தான் புத்தி ஸ்திரப்படும்' என்பதன் கருத்து என்ன?*

**பதில்:** ச்லோகத்தின் முன் பாதியில் புலன்களை வசப்படுத்தி, மனதை அடக்கி, பகவானையே குறிக்கோளாகக் கொண்டு த்யானத்தில் அமரவேண்டும் என்று சொன்னார். பின்பாதியில் அதற்கான காரணத்தை எடுத்துச் சொல்கிறார். மமகாரம், போகப் பற்று, ஆசை இவற்றைத் துறந்து, மனதையும், புலன்களையும் அடக்கி புத்தியைப் பரமாத்மாவிடம் நிலைநிறுத்த வேண்டும். ஏனெனில் மனதோடுகூடப் புலன்களை வசத்தில் வைத்தவனுக்குத்தான் – அந்த ஸாதகனுக்குத்தான் – புத்தி ஸ்திரப்படும். மனதோடுகூடப் புலன்கள் வசப்படாதவனுக்கு புத்தி ஸ்திரப்படாது. ஆகவே மனதையும், புலன்களையும் அடக்குவது ஸாதகனுக்கு மிக மிக அவசியமான கார்யம்.

**பொருத்தம்: மேலே சொன்னவிதம் மனதோடுகூடப் புலன்களை வசப்படுத்தாமலும், பகவானையே லக்ஷ்யமாக நினைக்காமலும் இருந்தால் என்ன கேடு விளையும் என்பதை இனிவரும் இரண்டு ச்லோகங்களில் கூறுகிறார்—**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ध्यायतो विषयान्पुंसः सङ्गस्तेषूपजायते।**
**सङ्गात्सञ्जायते कामः कामात्क्रोधोऽभिजायते॥ ६२॥**

**த்₄யாயதோ விஷயாந்பும்ஸ: ஸங்க₃ஸ்தேஷூபஜாயதே ।**
**ஸங்கா₃த்ஸஞ்ஜாயதே காம: காமாத்க்ரோதோ₄ऽபி₄ஜாயதே ॥ 62 ॥**

**விஷயாந்** – புலன்நுகர் பொருட்களை, **த்₄யாயத:** – சிந்தித்துக் கொண்டிருக்கின்ற, **பும்ஸ:** – மனிதனுக்கு, **தேஷு** – அவ்விஷயங்களில், **ஸங்க₃:** – பற்று, **உபஜாயதே** – ஏற்படுகிறது. **ஸங்கா₃த்** – பற்றுதலிலிருந்து, **காம:** – ஆசை, **ஸஞ்ஜாயதே** – உண்டாகிறது. **காமாத்** – ஆசையிலிருந்து (ஆசைக்கு இடையூறு வருவதனால்), **க்ரோத₄:** – கோபம், **அபி₄ஜாயதே** – உண்டாகிறது.

புலன்நுகர் பொருட்களைச் சிந்தித்துக் கொண்டிருக்கின்ற மனிதனுக்கு அவ்விஷயங்களில் பற்று ஏற்படுகிறது. பற்றுதலிலிருந்து ஆசை உண்டாகிறது. ஆசையிலிருந்து (ஆசைக்கு இடையூறு வருவதனால்) கோபம் உண்டாகிறது.

**கேள்வி:** 'போக விஷயங்களைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருப்பவனுக்கு அவற்றில் பற்று ஏற்படுகிறது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உலக போகங்கள் ஸுகம் தருபவை, அனுபவிக்கத்தக்கவை என்ற எண்ணம் உடையவனுக்கு, மனம் தன் வசப்படாதவனுக்கு – பரமாத்ம சிந்தனை செய்யாதவனுக்கு – பரமாத்மாவிடம் ப்ரேமையும், அவரே துணை என்ற உறுதியும் இல்லாமையால், அவன் மனதில் புலன்களின் மூலமாக போகப் பொருட்களின் சிந்தனை ஏற்பட்டுக் கொண்டே இருக்கிறது. இப்படி போகப் பொருட்களை நினைத்துக் கொண்டேயிருப்பதால், அவற்றின் மேல் ஆழ்ந்த பற்று ஏற்பட்டு விடுகிறது. பிறகு அவன் கைவசத்தில் ஒன்றுமில்லை. மனம் சஞ்சலம் அடைந்துவிடுகிறது என்பது கருத்து.

**கேள்வி:** போக விஷயங்களை நினைப்பவர் எல்லோருக்கும் மனதில் பற்றுப் பிறந்துவிடுமா?

**பதில்:** பரமாத்மாவை அடைந்துவிட்டவர்களுக்கு போக விஷயங்களைப் பற்றிய நினைவினால் பற்று உண்டாகிவிடும் என்ற பிரச்னையே இல்லை. பரம புருஷனைப் பார்த்ததும் போக ரஸம் விலகிவிடும். 'பரம் த்ருஷ்ட்வா நிவர்ததே'. அத்தகையவர்களுக்குப் பற்று அடியோடு இருக்காது என்று பகவான் சொல்லிவிட்டார். அவர்களைத் தவிர மற்ற எல்லோருக்கும் குறைவாகவோ, அதிகமாகவோ பற்று ஏற்படக் கூடும்.

**கேள்வி:** 'பற்றினால் ஆசை உண்டாகும், ஆசையினால் கோபம் உண்டாகும்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** போக விஷயங்களை நினைத்து நினைத்து மனிதனுக்கு அவற்றில் ஆழமான பற்று ஏற்பட்ட பிறகு, அவனுடைய மனதில் அத்தகைய பலவிதமான போகங்களை அனுபவிக்க வேண்டுமென்ற தீவிர ஆசை விழித்துக் கொள்கிறது. இதைத்தான் பற்றினால் ஆசை ஏற்பட்டு என்று சொல்கிறார். அந்த ஆசை நிறைவேறுவதில் தடங்கல் ஏற்பட்டால், அந்தத் தடங்கலினால் பிறரிடம் த்வேஷ புத்தி உண்டாகி அதனால் கோபம் உண்டாகும். இதைத்தான் 'ஆசையினால் க்ரோதம் உண்டாகும்' என்று சொல்கிறார்.

**क्रोधाद्भवति सम्मोहः सम्मोहात्स्मृतिविभ्रमः।**
**स्मृतिभ्रंशाद् बुद्धिनाशो बुद्धिनाशात्प्रणश्यति॥ ६३॥**

**க்ரோதா₄த்₃ப₄வதி ஸம்மோஹ: ஸம்மோஹாத்ஸ்ம்ருதிவிப்₄ரம: ।**
**ஸ்ம்ருதிப்₄ரம்ஶாத்₃ பு₃த்₃தி₄நாஶோ பு₃த்₃தி₄நாஶாத்ப்ரணஶ்யதி ॥ 63 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**க்ரோத₄ாத்** – கோபத்திலிருந்து (கோபத்தினால்), **ஸம்மோஹ:** – மிகுந்த அறிவின்மை, **ப₄வதி** – உண்டாகிறது. **ஸம்மோஹாத்** – அறிவின்மையால், **ஸ்ம்ருதிவிப்₄ரம:** – நினைவுத் தடுமாற்றம் (உண்டாகிறது). **ஸ்ம்ருதிப்₄ரம்ஶாத்** – நினைவு தடுமாறுவதனால், **பு₃த்₃தி₄நாஶ:** – புத்தி அதாவது விவேகத்தின் அழிவு (உண்டாகிறது). **பு₃த்₃தி₄நாஶாத்** – விவேகம் அழிவதனால் (மனிதன் தன் நிலையிலிருந்து), **ப்ரணஶ்யதி** – வீழ்ச்சியடைகிறான்.

கோபத்தினால் மிகுந்த அறிவின்மை ஏற்படும். அறிவின்மையால் நினைவுத் தடுமாற்றம் உண்டாகிறது. நினைவு தடுமாறுவதனால் புத்தி அதாவது விவேகத்தின் அழிவு உண்டாகிறது. விவேகம் அழிவதனால் மனிதன் தன் நிலையிலிருந்து வீழ்ச்சியடைகிறான்.

**கேள்வி:** கோபத்தினால் உண்டாகும் அறிவற்ற தன்மை எப்படி இருக்கும்?

**பதில்:** மனிதனுடைய மனதில் கோபத்தின் வேகம் வந்துவிட்டால், உடன் அவன் தன் விவேக சக்தியை இழந்துவிடுகிறான். அவன் முன்பின் யோசிப்பதில்லை. கோபத்திற்கு ஆட்பட்டவுடன், 'என்ன செய்கிறோம்? இதன் விளைவு என்ன?' என்பதை ஆலோசிக்க மாட்டான். இதுதான் கோபத்தினால் ஏற்படும் அறிவற்ற தன்மை.

**கேள்வி:** ஸம்மோஹத்தினால் (மிகுந்த அறிவற்ற தன்மையால்) நினைவு பிசகுவது எப்படி?

**பதில்:** க்ரோதத்தின் காரணமாக மனிதனுடைய மனதில் அறிவற்ற நிலை வளர்ந்துவிட்டால் அப்பொழுது அவனுடைய நினைவாற்றல் மழுங்கிவிடுகிறது. 'யாரோடு நமக்கு என்ன உறவு? நாம் என்ன செய்ய வேண்டும்? என்ன செய்யக் கூடாது? இந்தக் கார்யத்தை எப்படிச் செய்ய வேண்டும்? இப்பொழுது என்ன செய்து கொண்டிருக்கிறோம்?' ஆகியவை நினைவில் இருப்பதில்லை. அதனால் முன்னால் தீர ஆலோசித்து முடிவு செய்தவற்றைச் செயலாற்ற முடியாமல் அவன் நினைவு முற்றிலும் சிதறிவிடுகிறது. இதுதான் அறிவு மழுங்குவதனால் ஏற்படும் நினைவுத் தடுமாற்றம்.

**கேள்வி:** 'நினைவுத் தடுமாற்றத்தினால் புத்தி மழுங்கிவிடுகிறது. இப்படி புத்தி மழுங்கிவிடுவதால் மனிதன் வீழ்ச்சி அடைகிறான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேலே சொன்னவிதம் நினைவு சிதறிவிட்டால் செய்ய வேண்டியவை, செய்யவேண்டாதவை ஆகியவற்றை உள்ளத்தில் தீர்மானம் செய்ய முடியாமல் போவதுதான் புத்தி மழுங்கிவிடுகிறது என்பதாகும். இவ்வாறு புத்தி மயங்கியவன் செய்ய வேண்டியதைச் செய்யாமல், செய்யத்தகாததைச் செய்ய முனைவான். அவனுடைய நடத்தையில் கசப்பு, கடுமை, கோழைத்தனம், ஹிம்ஸை, பழிவாங்குதல், இயலாமை, மெத்தனம், மூடத்தனம் முதலிய குறைபாடுகள் நேர்கின்றன. அதனால் அவன் வீழ்ச்சி அடைகிறான். முன் இருந்த நிலையிலிருந்து நழுவிவிடுகிறான். இறந்தபிறகு பலவித நீசப்பிறவிகளில் பிறக்கிறான் அல்லது நரகத்தில் வீழ்கிறான். இதுதான் புத்தி நாசத்தினால் ஏற்படும் வீழ்ச்சி என்பது கருத்து.

**பொருத்தம்:** இவ்விதம் மனதோடு புலன்களை அடக்கி வைத்துக் கொள்ளாதவன் படிப்படியாக வீழ்ச்சி அடையும் முறையைச் சொல்லிவிட்டு, இனி ஸ்திதப்ரக்ஞன் எப்படி நடந்து கொள்வான் என்ற நான்காவது கேள்விக்குப் பதில் சொல்லத் துவங்கி, முதலில் இரண்டு ச்லோகங்களில் மனமும், புலன்களும் வசப்பட்ட ஸாதகன் உலகியல் விஷயங்களில் எப்படி நடந்து கொள்கிறான், அதன் விளைவு என்ன என்பதை பகவான் சொல்கிறார்—

**रागद्वेषवियुक्तैस्तु विषयानिन्द्रियैश्चरन्।**
**आत्मवश्यैर्विधेयात्मा प्रसादमधिगच्छति ॥ ६४ ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ராக₃த்₃வேஷவியுக்தைஸ்து விஷயாநிந்த்₃ரியைஸ்சரந் ।**
**ஆத்மவஶ்யைர்விதே₄யாத்மா ப்ரஸாத₃மதி₄க₃ச்ச₂தி ॥ 64 ॥**

**து** – ஆனால், **விதே₄யாத்மா** – தன்வசப்பட்ட மனதுடைய ஸாதகன், **ராக₃த்₃வேஷ வியுக்தை:** – விருப்பு–வெறுப்புகளின்றி, **ஆத்மவஶ்யை:** – தன்னால் வசப்படுத்தப்பட்டு விட்ட, **இந்த்₃ரியை:** – புலன்கள் மூலம், **விஷயாந்** – போக விஷயங்களில், **சரந்** – ஸஞ்சரித்துக் கொண்டு, **ப்ரஸாத₃ம்** – உள்ளத்தெளிவை, **அதி₄க₃ச்ச₂தி** – அடைகிறான்.

ஆனால் தன் வசப்பட்ட மனதுடைய ஸாதகன் விருப்பு–வெறுப்புகளின்றித் தன்னால் வசப்படுத்தப்பட்டுவிட்ட புலன்கள் மூலம் போக விஷயங்களில் ஸஞ்சரித்துக் கொண்டு உள்ளத்தெளிவை அடைகிறான்.

**கேள்வி:** 'து' (ஆனால்) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** முன் ச்லோகத்தில் மனம், புலன்கள் கட்டுப்படாதவனுக்கு, போகங்களில் ஈடுபட்டவனுக்கு ஏற்படும் வீழ்ச்சியை எடுத்துச் சொன்னார். இனிவரும் இரண்டு ச்லோகங்களில், அதற்கு மாறாக மனம், புலன்கள் கட்டுப்பட்டவனுடைய – வைராக்யமுள்ள ஸாதகனுடைய – மேன்மையை எடுத்துச் சொல்வதற்காக 'ஆனால்' என்று ஆரம்பிக்கிறார். இந்த மாறுபாட்டை எடுத்துக்காட்டுகிறது 'ஆனால்' என்னும் சொல்.

**கேள்வி:** 'விதேயாத்மா' என்ற சொல் எத்தகைய ஸாதகனைக் குறிக்கிறது?

**பதில்:** எவனுடைய உள்ளம் நன்றாக வசப்படுத்தப்பட்டுவிட்டதோ, அத்தகைய ஸாதகனைக் குறிக்கிறது.

**கேள்வி:** 'இத்தகைய ஸாதகன் தன்னால் வசப்படுத்தப்பட்டுவிட்ட புலன்களைக் கொண்டு விருப்பு–வெறுப்புகள் அற்றுப் பொருட்களில் ஸஞ்சரிக்கிறான்' என்பதற்கு என்ன பொருள்?

**பதில்:** ஸாதாரண மனிதனுடைய புலன்கள் சுதந்திரமானவை; அவை அவனுக்குக் கட்டுப்பட்டவை அல்ல. அவற்றில் விருப்பு–வெறுப்புகள் நிறைந்து இருக்கின்றன. இதன் காரணமாக அந்தப் புலன்களுடைய போக்கில் போகங்களை அனுபவிப்பவன் உசிதமா, உசிதமில்லையா என்று ஆராயாமல், எந்த வழியிலாவது போகப் பொருட்களைச் சேர்ப்பதிலும், அவற்றை அனுபவிப்பதிலும் ஈடுபடுகிறான். அந்த போகங்களில் தன் விருப்பு–வெறுப்புக் காரணமாக இன்பத்தையும், துன்பத்தையும் அடைந்து கொண்டே இருக்கிறான். அவனுக்கு ஆத்மானந்தம் கிட்டுவதில்லை. ஆனால், முன்பு குறிப்பிடப்பட்ட ஸாதகனுடைய புலன்கள் அவனுக்குக் கட்டுப்பட்டிருக்கின்றன. அவனுக்கு அவற்றில் விருப்பு–வெறுப்புகள் கிடையா. இதன் காரணமாக அவன் தனது வர்ணம், ஆசிரமம், சூழ்நிலை இவற்றிற்கேற்ப, தன் தகுதியின் மூலமாகக் கிடைக்கும் போகங்களில் விருப்பு–வெறுப்பின்றி ஸஞ்சரிக்கிறான். அவன் கேட்பது, பார்ப்பது, உண்பது, அருந்துவது, உட்காருவது, எழுந்திருப்பது, பேசுவது, சொல்வது, நடப்பது, சுற்றுவது, தூங்குவது, விழித்திருப்பது முதலிய புலன்களின் எல்லாச் செயல்களும் கட்டுப்பாட்டுடனும், சாஸ்த்ர முறைப்படியும் அமைகின்றன. அவனுடைய எந்தச் செயலிலும் விருப்பு–வெறுப்புகள், காம–க்ரோதங்கள், பேராசை ஆகியவை இரா. 'தனக்கு வசப்பட்ட, விருப்பு–வெறுப்பு அற்ற புலன்களைக் கொண்டு போக விஷயங்களில் ஸஞ்சரிப்பது என்பது' இதுதான்.

**கேள்வி:** முன் 59வது ச்லோகத்தில் பரமாத்மாவை நேரிடையாக அனுபவிக்காதவரையில் பற்று அழியாது என்று கூறினார். இங்கு விருப்பு–வெறுப்பின்றி விஷயங்களில் ஸஞ்சரிப்பவனுக்கு மனதில் தெளிவு உண்டாகும் என்கிறார். இதனால், பரமாத்மாவை அடைவதற்கு முன்புகூட விருப்பு–வெறுப்புகள் அழிய முடியும் என்று தோன்றுகிறது. இரண்டும் முரணாகத் தோன்றுகின்றனவே? எப்படி இரண்டையும் ஒன்றுபடுத்தலாம்? இதற்கு என்ன ஸமாதானம் கூறலாம்?



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இரண்டிலும் முரண்பாடு ஒன்றுமில்லை. ஏனெனில் 59வது ச்லோகத்தில் விருப்பு-வெறுப்புகள் அறவே ஒழிந்த நிலை கூறப்பட்டது. இங்கு விருப்பு-வெறுப்புகள் அற்ற புலன்களோடு விஷயங்களில் ஸஞ்சரிப்பது (விஷயங்களை அனுபவிப்பது) பற்றிக் கூறி, அந்த விருப்பு-வெறுப்புகள் அறவே விலகுவதற்கான வழிமுறை கூறப்படுகிறது. 3/40ல் புலன்கள், மனம், புத்தி இம்மூன்றும் ஆசையின் இருப்பிடம் என்று கூறுகிறார். புலன்களில் விருப்பு-வெறுப்புகள் இல்லாவிட்டாலும், மனதிலும், புத்தியிலும், நுண்ணிய வடிவில் விருப்பு-வெறுப்புகள் இருக்கக்கூடும். ஆனால் 59வது ச்லோகத்தில் ஸ்திதப்ரக்ஞனிடம் விருப்பு-வெறுப்புகள் அறவே இரா என்று கூறுகிறார். அங்குப் புலன்களிடம் மட்டும் விருப்பு-வெறுப்புகள் இரா என்ற ப்ரஸ்தாபம் இல்லை.

**கேள்வி:** (1) புலன்களுடன் அவற்றால் நுகரப்படும் பொருட்களும் சேர்வதைத் தடுப்பது — அதாவது, வெளிப்படையாகப் பொருட்களைத் துறப்பது, (2) புலன்களை அடக்குவது, (3) புலன்களிலிருந்தே விருப்பு-வெறுப்புகளை அகற்றுவது — இம்மூன்றில் சிறந்தது எது? பகவானை அடைவதில் எது மிகவும் உதவுகிறது?

**பதில்:** பகவானை அடைவதற்கு மூன்றுமே உதவுபவைதான். இவற்றில் வெளிப்படையாக விஷயபோகங்களைத் துறப்பதைக் காட்டிலும் புலன்களை அடக்குவது சிறந்தது. புலன்களை அடக்குவதைக் காட்டிலும் புலன்களுடைய விருப்பு-வெறுப்புகளை அகற்றுவது பகவானை அடைவதற்கு மிகவும் உதவியாகவும், சிறந்ததாகவும் ஆகிறது. போக விஷயங்களைத் துறப்பது பகவானை அடைவதற்கு உதவி செய்யும். ஆனாலும் புலன்களை அடக்காமலோ, விருப்பு-வெறுப்புகளை அகற்றாமலோ, போக விஷயங்களைத் துறப்பது மட்டும் விஷயங்களை அறவே துறந்தது ஆகாது. அதனால் ஒரு ஸித்தியும் கிட்டாது. போக விஷயங்களைத் துறக்காமல் புலன்களை அடக்க முடியாது என்பதுமில்லை. ஏனெனில், பகவானுடைய பூஜை, ஸேவை, ஜபம், விவேகம், வைராக்யம் முதலிய மற்ற உபாயங்களால்கூட சிரமமின்றி எளிதாகப் புலன்களை அடக்கிவிடலாம். இவ்விதம் புலன்கள் அடங்கின பிறகு எளிதாக போக விஷயங்களைத் துறந்துவிட முடியும். எவனுடைய புலன்கள் வசப்பட்டுவிட்டனவோ, அவன் எப்பொழுது வேண்டுமானாலும், எந்த விஷயபோகத்தைத் துறக்க விரும்புகிறானோ, அந்த போக விஷயத்தைத் துறந்துவிட இயலும். ஆகுவே, வெளியிலுள்ள போக விஷயங்களைத் துறப்பதைக் காட்டிலும் புலன்களை அடக்குவது சிறந்தது.

அதுபோலப் புலன்களை அடக்குவதும் பகவானை அடைவதற்கு ஸஹாயம் செய்யும். ஆனால், புலன்கள் விருப்பு-வெறுப்புகளைத் துறக்காதவரை புலன்களை மாத்திரம் அடக்குவது முழுமையாக போகப்பற்றுகளை விலக்கி, உண்மையில் பகவானை அடையச் செய்யாது. மற்றொன்று, போக விஷயங்களைத் துறந்தால் மாத்திரமே, அவ்விதமே புலன்கள் வசப்பட்டால் மட்டுமே புலன்களுடைய விருப்பு-வெறுப்புகள் அகலும் என்பதும் இல்லை. ஸத்ஸங்கம், சாஸ்த்ரங்களின் படிப்பு, ஆராய்ச்சி இவற்றால் உலகியல் இன்பங்கள் அநித்யமானவை என்பது விளங்கி விட்டால் பகவானுடைய க்ருபையாலும், பஜனை, த்யானம் முதலியவற்றாலும் விருப்பு-வெறுப்புகளை அழித்துவிட முடியும். இவ்வாறு எவனுடைய புலன்களில் விருப்பு-வெறுப்புகள் அழிந்துவிட்டனவோ, அவனுக்கு வெளியிலுள்ள போக விஷயங்களைத் துறப்பதும், புலன்களை அடக்குவதும் எளிதாகிவிடும். ஒருவனுக்குப் போக விஷயங்களில் விருப்பு-வெறுப்புகள் இல்லாமற்போய்விட்டால் அவன் வெளிப்படையாக போக விஷயங்களைத் துறக்காமல் அவற்றில் ஸஞ்சரித்தாலும் பரமாத்மாவை அடைந்து விடமுடியும். ஆகவே, புலன்கள் விருப்பு-வெறுப்புகள் அற்று இருப்பது, போக விஷயங்களைத் துறப்பதைக் காட்டிலும், புலன்களை அடக்குவதைக் காட்டிலும் சிறந்தது.

**கேள்வி:** 'ப்ரஸாதம்' என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** வசப்பட்டுவிட்ட புலன்களின் துணையோடு விருப்பு-வெறுப்புகளின்றி உலக வ்யவஹாரங்களில் நடந்து கொள்ளும் ஸாதகனுடைய மனம் சுத்தமாகவும், தெளிவாகவும்



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


இருக்கும். இதன் காரணமாக அவனுக்கு ஆத்ம ஸுகமும், சாந்தியும் கிடைக்கும் (18/37). அந்த ஸுகத்தையும், சாந்தியையும்தான் இங்கு ப்ரஸாதம் என்று சொல்கிறார். இந்த ஸுகத்திற்கும், சாந்திக்கும் காரணமான மனதின் பரிசுத்த நிலையையும், பகவானுக்கு அர்ப்பணம் செய்யப்படும் வஸ்து மனதைப் பரிசுத்தப்படுத்துவதால் அதையும் ப்ரஸாதம் என்கிறோம். ஆனால், அடுத்த ச்லோகத்தில் மேலே கூறப்பட்டவனை 'ப்ரஸந்நசேதஸ:' என்று கூறுவதால், இங்கு ப்ரஸாதம் என்பது உள்ளத்தில் ஏற்படும் ஆத்மானந்தத் தெளிவே என்று கூறுவது பொருந்தும்.

**प्रसादे सर्वदुःखानां हानिरस्योपजायते।**
**प्रसन्नचेतसो ह्याशु बुद्धिः पर्यवतिष्ठते॥ ६५॥**

**ப்ரஸாதே₃ ஸர்வது₃:க₂ாநாம் ஹாநிரஸ்யோபஜாயதே ।**
**ப்ரஸந்நசேதஸோ ஹ்யாஶு பு₃த்₃தி₄: பர்யவதிஷ்ட₂தே ॥ 65 ॥**

**ப்ரஸாதே₃** — உள்ளத்தெளிவு ஏற்பட்டுவிட்டால், **அஸ்ய** — இவனுடைய, **ஸர்வ-து₃:க₂ாநாம்** — எல்லா துக்கங்களுக்கும், **ஹாநி:** — அழிவு, **உபஜாயதே** — ஏற்பட்டுவிடும். **ப்ரஸந்ந சேதஸ:** — தெளிவடைந்த மனமுள்ள கர்மயோகியின், **பு₃த்₃தி₄:** — புத்தி, **ஆஶு ஹி** — விரைவிலேயே, **பர்யவதிஷ்ட₂தே** — (எல்லா விஷயங்களிலிருந்தும் விலகிப் பரமாத்மா ஒன்றிலேயே) நன்கு ஸ்திரமாகிவிடுகிறது.

உள்ளத்தெளிவு ஏற்பட்டுவிட்டால் இவனுடைய எல்லாத் துக்கங்களுக்கும் அழிவு ஏற்பட்டுவிடும். தெளிவடைந்த மனமுள்ள கர்மயோகியின் புத்தி விரைவிலேயே எல்லா விஷயங்களிலிருந்தும் விலகிப் பரமாத்மா ஒன்றிலேயே நன்கு ஸ்திரமாகிவிடுகிறது.

**கேள்வி:** உள்ளம் தெளிவு அடைந்துவிட்டால் எல்லா துக்கங்களுக்கும் அழிவு எப்படி ஏற்படும்?

**பதில்:** செய்யும் பாவங்களின் காரணமாகத்தான் மனிதனுக்குத் துன்பம் நேர்கிறது. கர்மயோக ஸாதனையினால் ஸகல பாவங்களும் அழிகின்றன; மனம் பரிசுத்தமாகிறது. அவ்விதம் பரிசுத்தமான மனதில்தான் மேலே சொன்ன ஸாத்விகமான அமைதி உண்டாகும். ஆகவே, ஸாத்விகமான அமைதியினால் எல்லா துக்கங்களும் அழியும் என்பது ந்யாயம்தான் (18/36,37).

**கேள்வி:** 'எல்லா துக்கங்களும்' என்றால் எவை? அவை அழிவது என்றால் என்ன?

**பதில்:** அனுகூலமானவை விலகுவதாலும், ப்ரதிகூலமானவை வந்து சேர்வதாலும், உடலாலும், தெய்வச் செயலாலும், பஞ்சபூதங்களாலும் உண்டாகும் அதாவது ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் ஆகிய பலவிதமான துன்பங்கள் உலக வாழ்வில் ஈடுபட்டுள்ள மனிதர்களுக்கு நேர்கின்றன. அவை எல்லாவற்றையும்தான் துக்கங்கள் என்று கூறுகிறார். மேலே சொல்லப்பட்ட ஸாதகன் ஆத்மாவில் ஏற்படும் ஸாத்விக அமைதி பெற்ற பிறகு, எந்தப் பொருள் கிடைத்தாலும், கை நழுவினாலும் சிறிதுகூடத் துக்கம் அடையமாட்டான். அவன் எப்பொழுதும் ஆனந்தத்தில் மூழ்கி இருப்பான். இதுதான் துக்கம் முழுவதும் நீங்கப் பெற்ற நிலையாகும்.

**கேள்வி:** 'தெளிவடைந்த மனமுடைய யோகியின் புத்தி விரைவிலேயே எல்லா விஷயங்களிலிருந்தும் விலகிப் பரமாத்மாவிடமே ஊன்றிவிடும்' என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** உள்ளம் பரிசுத்தமாகி ஸாதகன் ஆத்மாவின் அமைதியை அடைந்துவிட்டால் அப்பொழுது அவனுடைய மனம் கணநேரம்கூட அந்த ஸுகத்தையும், சாந்தியையும் இழக்காது. இக்காரணத்தால் அவனது உள்ளத்தின் ஓட்டங்கள் நாற்புறமும் சிதறாமல் அடங்கிவிடுகின்றன. அவனுடைய புத்தி விரைவிலேயே பரமாத்மாவிடம் நிலைபெற்று


CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



விடுகிறது. பிறகு அவனுடைய நினைவில் ஒரே ஒரு ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவைத் தவிர வேறு வஸ்து இருக்காது.

**கேள்வி:** அர்ஜுனனுடைய கேள்வி ஸ்திதப்ரக்ஞனைப் பற்றியது. இங்கு பதிலோ ஸாதகனைப் பற்றியதாக இருக்கிறது. இந்த ஸாதனையின் பயன் மனம் அமைதியடைந்து விரைவில் புத்தி நிலைப்படுகிறது என்று கூறப்படுகிறது. ஆகவே, இதை அர்ஜுனனுடைய 4வது கேள்விக்குப் பதிலாக எப்படிச் சொல்லலாம்?

**பதில்:** அர்ஜுனன் ஸாதகனைப் பற்றிக் கேட்கவில்லைதான். ஆனால் அர்ஜுனனோ ஒரு ஸாதகர். அவர் ஸித்தி பெற வேண்டும் என்பது பகவானின் விருப்பம். ஆகவே, அவருக்கு எளிதாகப் புரியவைக்கும் வகையில், பகவான் ஸாதகனைப் பற்றிச் சொல்லி, முடிவில் 71வது ச்லோகத்தில் ஸித்தி கைகூடிய ஸ்திதப்ரக்ஞனில் முடிக்கிறார். அர்ஜுனனுடைய கேள்விக்கு முழுப் பதிலும் அத்யாயம் முடிவு பெறும் இடத்தில் கிடைக்கிறது. அதற்கு முன்னுரையாக இந்த ச்லோகங்கள் வருகின்றன. ஆகவே, அர்ஜுனனுடைய நான்காவது கேள்விக்குப் பதில் இங்கே ஆரம்பம் ஆகிறது என்று கொள்ளவேண்டும். அதுதான் சரி.

**பொருத்தம்: இவ்விதம் மனதையும், புலன்களையும் வசப்படுத்தி போகத்தில் பற்றற்றுப் புலன்களோடு செயல்படும் ஸாதகனுக்கு ஸுகம், சாந்தி, ஸ்திதப்ரக்ஞ நிலை இவை கிடைக்கப் பெறுகின்றன என்று கூறி, இனி இரண்டு ச்லோகங்களால் இதற்கு மாறாகப் புலன்கள் வசப்படாமல் போகங்களில் ஈடுபட்டவனுக்கு ஸுகமும், சாந்தியும் இல்லை என்று விளக்கி, போகப் பொருட்களின் ஸம்பந்தத்தால் அவனுடைய புத்தி தடுமாறுவதை விளக்கிக் கூறுகிறார்—**

नास्ति बुद्धिरयुक्तस्य न चायुक्तस्य भावना।
न चाभावयतः शान्तिरशान्तस्य कुतः सुखम्॥ ६६॥

**நாஸ்தி புத்₃தி₄ரயுக்தஸ்ய ந சாயுக்தஸ்ய பா₄வநா ।**

**ந சாபா₄வயத: ஶாந்திரஶாந்தஸ்ய குத: ஸுக₂ம் ॥ 66 ॥**

***அயுக்தஸ்ய*** — மனதையும், புலன்களையும் வெற்றி கொள்ளாதவனுக்கு, ***புத்₃தி₄: ந அஸ்தி*** — (நிச்சயமான) புத்தி இருக்காது. ***அயுக்தஸ்ய*** — உறுதியான புத்தியற்றவனுக்கு (மனதில்), ***பா₄வநா ச*** — பாவனையும், ***ந*** — தோன்றாது. ***ச*** — அவ்வாறே, ***அபா₄வயத:*** — பாவனையற்றவனுக்கு, ***ஶாந்தி: ந*** — அமைதியும் கிடைக்காது. ***அஶாந்தஸ்ய*** — அமைதியற்றவனுக்கு, ***ஸுக₂ம்*** — ஸுகம், ***குத:*** — ஏது?

மனதையும், புலன்களையும் வெற்றி கொள்ளாதவனுக்கு நிச்சயமான புத்தி இருக்காது. உறுதியான புத்தியற்றவனுக்கு மனதில் பாவனையும் தோன்றாது. அவ்வாறே பாவனை யற்றவனுக்கு அமைதியும் கிடைக்காது. அமைதியற்றவனுக்கு ஸுகம் ஏது?

**கேள்வி:** 'அயுக்தன்' என்ற சொல் யாரைக் குறிக்கிறது?

**பதில்:** அச்சொல் மனதையும், புலன்களையும் அடக்காதவனைக் குறிக்கிறது; அவ்வாறே எவனுடைய புலன்கள் போகங்களில் மிகுந்த பற்று கொண்டு அவற்றில் ஈடுபடுகின்றனவோ, அத்தகைய விவேகமற்ற மனிதனையும் 'அயுக்தன்' என்னும் சொல் குறிக்கிறது.

**கேள்வி:** 'அயுக்தனுக்கு நிச்சயமான புத்தி இருக்காது' என்றால் என்ன பொருள்?

**பதில்:** 41வது ச்லோகத்தில் விளக்கப்பட்ட உறுதியான புத்தி அவனிடம் இருக்காது. பலவித போகங்களில் பற்றும், ஆசையும் கொண்டு மனம் தடுமாறிக் கொண்டே இருக்கும். அதனால், அவன் தான் செய்யவேண்டியதைப் பற்றி உறுதியாகத் தீர்மானித்து பகவானுடைய ஸ்வரூபத்தில் புத்தியை உறுதியாக நிலைநிறுத்தச் சக்தியற்றவன் ஆகிறான்.

**கேள்வி:** 'அயுக்தனுடைய உள்ளத்தில் பாவனை இருக்காது' என்றால் என்ன பொருள்?



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


**பதில்:** மனத்திற்கும், புலன்களுக்கும் அடங்கிப் போய், போகத்தில் ஆழ்ந்த மனிதனிடம் 'உறுதியான புத்தி' இருக்காது என்று சொல்லவும் வேண்டுமா? அவனிடம் பாவனையும் இருக்காது. பரமாத்மாவின் ஸ்வரூபத்தில் புத்தி நிலைநிற்பது (பாவனை) இருக்கட்டும். போக விஷயங்களில் பற்று இருப்பதன் காரணமாக, அவன் பரமாத்மாவைப் பற்றி நினைப்பதுகூட ஸாத்யமன்று. அவன் உள்ளம் எப்பொழுதும் போகத்திலேயே திளைத்துக் கொண்டிருக்கும்.

**கேள்வி:** 'பாவனை அற்றவனுக்கு சாந்தி கிட்டாது' என்றால் என்ன பொருள்?

**பதில்:** பரமானந்தமயமான, சாந்திக் கடலான பரமாத்மாவின் சிந்தனை இல்லாததால் அயுக்தனான மனிதனுடைய மனம் எப்பொழுதும் தடுமாறிக் கொண்டே இருக்கும். விருப்பு-வெறுப்புகள், காம-க்ரோதங்கள், பேராசை, பொறாமை இவற்றின் காரணமாக மனதில் எரிச்சலும், கலக்கமும் இருந்து கொண்டே இருக்கும். அதனால், அவனுக்கு சாந்தி கிடைக்காது.

**கேள்வி:** 'அமைதியற்றவனுக்கு ஏது ஸுகம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** உள்ளத்தில் சாந்தி ஏற்படாமல் எங்கும், எந்நிலையிலும், எந்த உபாயத்தாலும் மனிதனுக்கு உண்மையான ஸுகம் கிடைக்காது. போகப் பொருட்களும், புலன்களும் ஒன்று சேரும்போது, அவ்வாறே தூக்கம், சோம்பல், தடுமாற்றம் இவற்றிலும் ப்ரமையினால் ஸுகம் போலத் தோற்றம் ஏற்படுகிறதே அது உண்மையில் ஸுகம் அன்று. அது துன்பத்திற்குக் காரணமாவதால் துக்கமே ஆகும்.

**इन्द्रियाणां हि चरतां यन्मनोऽनु विधीयते।**
**तदस्य हरति प्रज्ञां वायुर्नावमिवाम्भसि॥ ६७॥**

**இந்த்₃ரியாணாம் ஹி சரதாம் யந்மநோऽநு விதீ₄யதே ।**

**தத₃ஸ்ய ஹரதி ப்ரஜ்ஞாம் வாயுர்நாவமிவாம்ப₄ஸி ॥ 67 ॥**

**ஹி** – ஏனெனில், **அம்ப₄ஸி** – நீரில் (போய்க் கொண்டிருக்கும்), **நாவம்** – ஓடத்தை, **வாயு:** – காற்று, **ஹரதி இவ** – அடித்துக் கொண்டு போவது போல, **சரதாம்** – போகங்களில் ஸஞ்சரிக்கின்ற, **இந்த்₃ரியாணாம்** – புலன்களில், **யத்** – எந்த ஒரு புலனுடன் கூட, **மந:** – மனம், **அநு விதீ₄யதே** – ஒட்டி இருக்கிறதோ, **தத்** – அந்த ஒரே புலன், **அஸ்ய** – (மனம் வசப்படாத) இந்த மனிதனின், **ப்ரஜ்ஞாம்** – புத்தியை, (**ஹரதி** – கவர்ந்து செல்கிறது).

ஏனெனில் நீரில் போய்க் கொண்டிருக்கும் ஓடத்தைக் காற்று அடித்துக் கொண்டு போவதுபோல போகங்களில் ஸஞ்சரிக்கின்ற புலன்களில் எந்த ஒரு புலனுடன் மனம் ஒட்டி இருக்கிறதோ அந்த ஒரே புலன் மனம் வசப்படாத இந்த மனிதனின் புத்தியைக் கவர்ந்து செல்கிறது.

**கேள்வி:** 'ஹி' என்றால் என்ன?

**பதில்:** முன் ச்லோகத்தில் அயுக்தனான மனிதனுக்கு சலனமற்ற புத்தியும், பாவனையும், சாந்தியும், ஸுகமும் கிடைக்கா என்றார். அதை விளக்குவதற்காக, அவையெல்லாம் எப்படி இல்லாமல் போகின்றன என்பதை இந்த ச்லோகத்தில் கூறுகிறார் என்று பொருள்.

**கேள்வி:** வெள்ளத்தில் போகும் ஓடம், காற்று என்ற உதாரணத்தினால் இங்கு என்ன விளக்கம் தருகிறார்?

**பதில்:** இங்கு ஓடம்தான் புத்தி. காற்றுதான் மனத்துடன் கூடியிருக்கும் ஒரு புலன். ஓடம் செல்லும் நீர்நிலைதான் ஸம்ஸார ரூபமான கடல். அந்தக் கடலில் உள்ள நீர்தான் போகங்கள். நீரில், தான் போக வேண்டிய இடத்திற்குப் போய்க் கொண்டிருக்கும் ஓடத்தைப் பெருங்காற்று இரண்டுவிதமாகத் தடுமாறச் செய்கிறது. போகும் வழியிலிருந்து திசை

CC-0.In.Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



திருப்புகிறது. அல்லது பயங்கர அலைகளில் மூழ்கடித்து விடுகிறது. திறமை வாய்ந்த ஓடக்காரன் அந்தக் காற்றின் வேகத்தைத் தனக்கு அனுகூலமாகச் செய்து கொண்டு விட்டால் காற்று ஓடத்தைத் திசை திருப்ப முடியாது. போக வேண்டிய இடத்திற்குக் கொண்டு போய்ச் சேர்க்கும். இவ்விதம் மனமும், புலன்களும் வசப்படாதவன் தன் புத்தியைப் பரமாத்மாவிடம் நிலைநிறுத்த விரும்பினாலும்கூட, அவனுடைய புலன்கள் மனதை இழுத்துக் கொண்டு புத்தியை இரண்டுவிதமாகத் தடுமாறச் செய்கின்றன. புத்தி என்னும் ஓடத்தைப் பரமாத்மாவிடமிருந்து வெகுதூரம் விலக்கிக் கொண்டுபோய்ப் பலவிதமான போகங்களைப் பற்றி நினைக்கும்படி புலன்கள் செய்து விடுகின்றன அல்லது அந்த பயங்கர அலைகளில் மூழ்கடித்துப் பாவங்கள் செய்யத் தூண்டி வீழ்த்திவிடுகின்றன. மனமும், புலன்களும் வசப்பட்டவனுடைய புத்தியை மனதோடு ஒட்டிய புலன்கள் தடுமாற வைக்க முடியாது. புத்தி என்ற படகு, பரமாத்மா என்ற கரைக்குப் போய்ச் சேர உதவி செய்கின்றது. 64,65வது ச்லோகங்களில் இதே விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது.

**கேள்வி:** எல்லாப் புலன்களும் சேர்ந்து புத்தியைத் தடுமாற வைக்கின்றன என்று சொல்லாமல் ஒரு புலன், புத்தியைத் தடுமாற வைக்கிறது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இதிலிருந்து புலன்களின் பெருந்திறன் தெரிகிறது. எல்லாப் புலன்களும் சேர்ந்து கொண்டால் மனிதனுடைய புத்தி தடுமாறுகிறது என்று சொல்லவும் வேண்டுமா? எந்த ஒரு புலனுடன் மனம் கூடுகிறதோ, அந்த ஒரு புலன் மட்டுமே புத்தியை போகத்தில் திளைக்க வைத்துத் தடுமாற வைக்கிறது. காதினால் மட்டும் இனிய சப்தம் கேட்டு மான் திகைத்துப் போய், வேடன் விரித்த வலையில் விழுகிறது. பெண் யானையைத் தீண்டும் இன்பத்தில் ஆண் யானை பள்ளத்தில் வீழ்கிறது. கண்ணினால் மட்டும் ஒளியைப் பார்த்த விட்டில்பூச்சி விளக்கில் விழுந்துவிடுகிறது. நாக்கினால் மட்டும் தூண்டிற்புழுவைத் தீண்டின மீன் தூண்டிலில் அகப்பட்டு விடுகிறது. மூக்கினால் மட்டும் மணத்தை நுகர்ந்த வண்டு கூம்பும் மலரில் சிக்கிக் கொள்கிறது. இவ்விதம் ஒரே ஒரு புலனுக்கு வசப்பட்ட காரணத்தினாலேயே இவை தம் உயிருக்கு ஆபத்தை ஏற்படுத்திக் கொள்கின்றன. அதுபோல மனிதனுடைய புத்தியும் ஒரே ஒரு புலன் மூலம்கூட நிலை பிறழக்கூடும்.

**கேள்வி:** எந்தப் புலன் ஈர்க்கிறதோ, அந்தப் புலன் புத்தியைக் கவர்ந்துவிடுகிறது என்று கூறுகிறார். எந்த மனம் புலனுடன் கூடுகிறதோ அந்த மனம் என்று கூறினால் என்ன?

**பதில்:** புலன்கள் என்று பன்மையில் ஆரம்பித்து அவற்றில் எந்த ஒன்றுடன் மனம் கூடுகிறதோ, அந்தப் புலன் என்று பிரித்துக் காட்டுகிறார். எது, அது என்ற சொற்கள் ஒன்றுக்கொன்று ஒரே பொருளைச் சுட்டிக்காட்டுவன. 'அநுவிதீயதே' — ஒட்டுகிறது. எது ஒட்டுகிறது? புலன் ஒட்டுகிறது. எதனுடன் ஒட்டுகிறது? மனத்துடன் ஒட்டுகிறது. இந்த வாக்கியத்தில் எழுவாய் புலன். எந்தப் புலன் மனத்துடன் ஒட்டுகிறதோ, அந்தப் புலன் புத்தியைக் கவர்கிறது என்று அடுத்த வாக்கியத்திலும் அது என்று புலன் எழுவாயாகக் குறிப்பிடப்படுகிறது. (ஸம்ஸ்க்ருத இலக்கணத்தின்படி இங்குச் சற்று மாறுதலான ப்ரயோகம் காணப்படுகிறது). அடுத்த ச்லோகத்திலும் 'தஸ்மாத்' — 'புலன்களை வசப்படுத்திய புத்தி ஸ்திரமாக உள்ள காரணத்தினால்' என்று கூறப் போகிறார். ஆகவே, இங்கு எது, அது என்ற சொற்கள், ஒரு புலனைத்தான் குறிப்பிடுகின்றன; மனதை அல்ல. இதுதான் யுக்திக்குப் பொருந்தும்.

**கேள்வி:** தனிப்பட்ட மனதிற்கோ, தனிப்பட்ட புலனுக்கோ புத்தியைக் கவரும் சக்தி உண்டா, இல்லையா?

**பதில்:** மனத்துடன் கூடாத புலன் புத்தியைக் கவர முடியாது. ஆனாலும், புலன்களின் உதவி இல்லாமலேயே மனம் தனியாகவே புத்தியைக் கவர முடியும்.

**பொருத்தம்: இவ்விதம் அயுக்த மனிதனுடைய புத்தி பிறழும் விதம் பற்றிக் கூறி, இனி மறுபடியும் ஸ்திதப்ரக்ஞனாக ஆவதற்கு எல்லாவிதங்களிலும் புலன்களை அடக்குதலின் தவிர்க்கவொண்ணாத அவசியத்தை வற்புறுத்தி, ஸ்திதப்ரக்ஞனின் நிலையை வர்ணிக்கிறார்—**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



तस्माद्यस्य महाबाहो निगृहीतानि सर्वशः।
इन्द्रियाणीन्द्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६८ ॥

**தஸ்மாத்₃யஸ்ய மஹாப₃ாஹோ நிக்₃ருஹீதாநி ஸர்வஶ: ।**
**இந்த்₃ரியாணீந்த்₃ரியார்தே₂ப்₄யஸ்தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டி₂தா ॥ 68 ॥**

**தஸ்மாத்** – ஆகையால், **மஹாப₃ாஹோ** – நீண்ட புஜங்கள் உடையவனே! **யஸ்ய** – எந்த மனிதனுடைய, **இந்த்₃ரியாணி** – புலன்கள், **இந்த்₃ரிய அர்தே₂ப்₄ய:** – புலன்களுக்குரிய போகப் பொருட்களிலிருந்து, **ஸர்வஶ:** – எல்லாவிதங்களிலும், **நிக்₃ருஹீதாநி** – மீட்கப்பட்டு விட்டனவோ, **தஸ்ய** – அவனுடைய, **ப்ரஜ்ஞா** – புத்தி, **ப்ரதிஷ்டி₂தா** – ஸ்திரமானது.

ஆகையால் நீண்ட புஜங்கள் உடையவனே! (அர்ஜுன!) எந்த மனிதனுடைய புலன்கள் புலன்களுக்குரிய போகப் பொருட்களிலிருந்து எல்லா விதங்களிலும் மீட்கப்பட்டுவிட்டனவோ, அவனுடைய புத்தி ஸ்திரமானது.

**கேள்வி:** 'தஸ்மாத்' (ஆகையால்) என்றால் என்ன பொருள்?

**பதில்:** முன் ச்லோகத்தில் மனதும், புலன்களும் வசப்படாமல் போகத்தில் பற்றுள்ள மனிதனுடைய புலன்கள், அவனுடைய மனதை போகப் பொருட்கள்பால் ஈர்த்து புத்தியைத் தடுமாற வைக்கும்; நிலைக்கவிடாது என்று சொன்னார். ஆகவே மனதையும், புலன்களையும் அடக்கவேண்டும் என்பதற்காக 'தஸ்மாத்' (ஆகையால்) என்று ஆரம்பிக்கிறார்.

**கேள்வி:** 'மஹாபாஹோ' (நீண்ட புஜங்களுடையோனே) என்று அர்ஜுனனை அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** எவனுடைய புஜங்கள் நீண்டு, உறுதியாகவும், பலமுள்ளனவாகவும் இருக்கின்றனவோ, அவனை நீண்ட புஜங்களுடையவன், பலசாலி என்று கூறுவார்கள். இவ்வாறு விளித்து அர்ஜுனனை சூரவீரன் என்று உணர்த்துகிறார். 'நீ பெரிய சூரவீரனாயிற்றே! ஆகவே, புலன்களையும், மனதையும் அடக்குவது உனக்குப் பெரிய விஷயமன்று' என்று சுட்டிக் காட்டுகிறார்.

**கேள்வி:** புலன்களை போகப் பொருட்களிலிருந்து எல்லா விதங்களிலும் மீட்பது என்றால் என்ன பொருள்?

**பதில்:** காது முதலிய புலன்கள் மூலம் ஒலி முதலிய புலன்நுகர் பொருட்கள் என்னவெல்லாம் உண்டோ, அவற்றில் தடையில்லாமல் திளைப்பது புலன்களின் இயற்கை. ஏனெனில் அனாதிகாலமாக ஜீவன் இந்தப் புலன்களின் மூலம் போகங்களை அனுபவித்து வந்திருக்கிறான். ஆகவே, புலன்களுக்கு இவற்றில் பற்று இயல்பாக உண்டு. புலன்களின் இந்த இயல்பான செயல்பாட்டை அறவே தடுத்து நிறுத்துவது, போகங்களில் ஈடுபடும் அவற்றின் ஸ்வபாவத்தை மாற்றுவது, அவற்றிற்கு போக ருசியை இல்லாமற்செய்வது, மனம், புத்திகளைத் தடுமாற வைக்கும் திறனை அகற்றுவது இவையே புலன்களை 'போகப் பொருட்களிலிருந்து எல்லா வகையிலும் மீட்பது' என்பதன் பொருள். இவ்வாறு புலன்களை வசப்படுத்திவிட்டால் அவனுடைய த்யான காலத்தில் அவனால் புலன்களின் செயல்களைத் துறந்துவிட முடிகிறது. ஒரு புலனாலும், ஒரு போகத்தையும் நுகர இயலாது. தன்னுடைய நுட்பமான இயக்கத்தினால்கூட மனதில் சலனத்தை உண்டு பண்ணாது. அப்போது அவன் மனம் அவன் த்யானித்த பகவத் ஸ்வரூபமாகவே ஆகிவிடுகிறது. த்யானம் கலைந்த அவன் விழிப்புநிலைக்கு வந்த பிறகும்கூட, பார்த்தல், கேட்டல் ஆகிய புலன்களின் செயல்களை அவன் செய்தாலும், அப்புலன்கள் பற்றின்றி, ஒரு எல்லை வரை, எது தகுதி வாய்ந்ததோ, அந்த ஒலி முதலியவற்றை ஏற்கின்றன. எந்த போகப் பொருள் மீதும் அவனுடைய மனதை ஈர்க்கும் திறன் புலனுக்கு இருக்காது; அது மனதை அனுஸரித்தே செயல்படும். உலக

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நன்மைக்காக எந்தப் புலனைக் கொண்டு எதுவரை சாஸ்த்ர ஸம்மதமான பொருளை ஏற்பது ந்யாயம் என்று ஸ்திதப்ரக்ஞன் கருதுகிறானோ, அந்தப் புலன் அதுவரை அந்தப் பொருளை ஏற்கிறது. அதற்கு மாறாக எந்தப் புலனும் எந்த போகப் பொருளையும் தீண்டாது. இவ்விதம் புலன்களைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்துவிட்டால், புலன்களின் சுதந்திர வேகம் முழுவதும் அழிந்துவிடும். புலன்கள் மனத்துக்கு அனுகூலமாகச் செயற்படும். இதுதான் புலன்களை போகப்பொருட்களிலிருந்து எல்லா வகைகளிலும் மீட்பது ஆகும்.

**கேள்வி:** 58வது ச்லோகத்திலும், இந்த ச்லோகத்திலும் பின்பாதி ஒரேவிதம் அமைந்திருக்கிறது. முன் பாதியில் அங்கு இழுத்துக் கொள்கிறான் – 'ஸம்ஹரதே' என்று வருகிறது. இங்கு மீட்டுக் கொள்ளவேண்டும் – 'நிக்ருஹீதாநி' என்று வருகிறது. இரண்டுக்கும் என்ன வித்யாஸம்?

**பதில்:** 58வது ச்லோகத்தில் 'கிமாஸீத' (ஸ்திதப்ரக்ஞன் எப்படி உட்காருவான்?) என்ற அர்ஜுனனது மூன்றாவது கேள்விக்கு பகவான் பதில் கூறுகிறார். ஸ்திதப்ரக்ஞன் எப்படிச் செயலற்று இருப்பான் என்பதை அங்கே விளக்குகிறார். அதற்காக அங்கு ஆமையின் செயலை உதாரணமாகக் காட்டுகிறார். இழுத்துக் கொள்கிறான் என்று புலன்களிலிருந்து விலக்குவதைக் கூறுகிறார். வெளிப்படையாகப் புலன்களை போகப் பொருட்களிலிருந்து மீட்பது (கண்களை மூடிக் கொண்டோ, காதுகளைப் பொத்திக் கொண்டோ) ஸாதாரண மனிதனும் செய்யக் கூடியதுதான். ஆனால் ஸ்திதப்ரக்ஞன், புலன்களை இழுத்துக் கொள்வதில் ஒரு தனித்தன்மை இருக்கிறது. அதுவே ஸ்திதப்ரக்ஞனுடைய அடையாளம். பற்றுதலற்று மனதையும், புலன்களையும் அடக்குவது அங்கே கூடுதலாக அமைகிறது. இங்கு பகவான் ஸ்திதப்ரக்ஞனுடைய முதிர்ந்த இயல்பான நிலையை வர்ணிக்கிறார். ஆகவே 'நிக்ருஹீதாநி' (மீட்கப்பட்ட) என்ற சொல்லை உபயோகிக்கிறார். பற்றே அற்றுப்போனால்தான் இப்படிப் புலன்கள் அடங்கிப் போகும். 'எவ்வகையிலும் முற்றிலும் அடக்கப்பட்ட' என்ற கருத்தைக் கூறும் அடைமொழியான 'ஸர்வஶ:' என்பதையும், 'நி' என்ற உபஸர்க்கத்தையும் கவனிக்கவேண்டும். உண்மையில் 58வது ச்லோகத்தில் சொன்ன கருத்துக்கும், இங்குச் சொல்லப்படும் கருத்துக்கும் வேறுபாடு இல்லை. ஆயினும் அங்குச் செயலற்றுப் போன நிலையும், இங்கு எப்பொழுதும் இயல்பாக அமைந்த நிலையும் கூறப்படுகின்றன. இதுதான் வேறுபாடு.

**கேள்வி:** 'அவனுடைய புத்தி ஸ்திரமானது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனமுடன்கூடிய புலன்கள் மேற்சொன்னவாறு வசமாகிவிட்டவனுடைய புத்திதான் ஸ்திரப்படும். மனமும், புலன்களும் வசப்படாதவனுடைய புத்தி ஸ்திரமாக இருக்காது என்று பொருள்.

**பொருத்தம்:** இவ்விதம் மனதையும், புலன்களையும் அடக்காவிட்டால் ஏற்படும் தீமையையும், அடக்கினால் ஏற்படும் நன்மையையும் கூறினார். ஸ்திதப்ரக்ஞ நிலையை அடைவதற்கு விருப்பு-வெறுப்புகளை விலக்கவேண்டும். மனதையும், புலன்களையும் அடக்கவேண்டும் என்று இவற்றின் அவசியத்தை எடுத்துக் கூறினார். அடுத்து, போகங்களில் ஈடுபட்ட ஸாதாரண மனிதனுக்கும், மனதையும், புலன்களையும் அடக்கிப் பரமாத்மாவை அடைந்துவிட்ட ஸ்திதப்ரக்ஞனான மஹாபுருஷனுக்கும் உள்ள வித்யாஸத்தை இரவு, பகல் என்ற உதாரணத்தின் மூலம் எடுத்துக்காட்டி, அவனுடைய இயல்பான நிலையை விளக்குகிறார்—

**या निशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी।**
**यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः॥६९॥**

**யா நிஶா ஸர்வபூ₄தாநாம் தஸ்யாம் ஜாக₃ர்தி ஸம்யமீ ।**
**யஸ்யாம் ஜாக்₃ரதி பூ₄தாநி ஸா நிஶா பஶ்யதோ முநே: ॥ 69 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ஸர்வபூதாநாம்** – அனைத்து உயிரினங்களுக்கும், **யா** – எது, **நிஶா** – இரவுபோல இருக்கிறதோ, **தஸ்யாம்** – அந்த நித்யமான ஞானவடிவான பரமானந்தத்தை அடைவதில், **ஸம்யமீ** – ஸ்திதப்ரக்ஞனான யோகி, **ஜாகர்தி** – விழித்திருக்கிறான். (மேலும்), **யஸ்யாம்** – எதில் (அழியும் தன்மையுடைய உலகியல் இன்பங்களை அடைவதில்), **பூதாநி** – அனைத்து உயிரினங்களும், **ஜாக்ரதி** – விழித்திருக்கின்றனவோ, **பஶ்யத:** – பரமாத்மாவின் தத்வத்தை உணர்கின்ற, **முநே:** – முனிவருக்கு, **ஸா** – அது, **நிஶா** – இரவுபோல ஆகின்றது.

அனைத்து உயிரினங்களுக்கும் எது இரவுபோல இருக்கிறதோ, அந்த நித்யமான ஞானவடிவான பரமானந்தத்தை அடைவதில் ஸ்திதப்ரக்ஞனான யோகி விழித்திருக்கிறான். மேலும் எதில் அழியும் தன்மையுடைய உலகியல் இன்பங்களை அடைவதில் அனைத்து உயிரினங்களும் விழித்திருக்கின்றனவோ பரமாத்மாவின் தத்வத்தை உணர்கின்ற முனிவருக்கு அது இரவுபோல ஆகின்றது.

**கேள்வி:** 'ஸம்யமீ' என்று யாரைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** மனதையும், புலன்களையும் அடக்கிப் பரமாத்மாவை அடைந்துவிட்டவனை – இந்த ஸந்தர்பத்தில் ஸ்திதப்ரக்ஞன் என்று வர்ணிக்கப்படுகிறவனைக் குறிப்பது 'ஸம்யமீ' என்ற சொல். ஏனெனில், ச்லோகத்தின் பின்பாதியில் இவனையே ஞானி என்ற பொருள் கொண்ட 'பஶ்யத:' என்ற சொல்லால் குறிப்பிடுகிறார்.

**கேள்வி:** எல்லா ப்ராணிகளுக்கும் இரவு போல எது உள்ளது? அதில் ஸ்திதப்ரக்ஞன் விழித்திருக்கிறான் – என்றால் என்ன பொருள்?

**பதில்:** அஞ்ஞானியுடைய அனுபவத்திற்கும், ஞானியின் அனுபவத்திற்கும் இடையே இரவிற்கும், பகலிற்கும் உள்ளது போன்று மிகுந்த வேறுபாடு உண்டு. இதை விளக்குவதற்காகத்தான் இரவு என்று அஞ்ஞானியின் நிலையையும், பகல் என்று ஞானியின் நிலையையும் உருவகப்படுத்திக் காட்டுகிறார். ஆகவே, இங்கு இரவு என்றால் சூரியன் மறைந்த பிறகு ஏற்படும் இரவு என்று பொருள் அன்று. வெளிச்சம் நிறைந்த பகல் ஆந்தையின் கண்களுடைய தோஷத்தினால் இருள்மயமாகத் தெரிகிறது. அதுபோல அனாதியாக ஏற்பட்ட அஞ்ஞானம் என்ற திரை மனக்கண்களின் விவேகம், விஞ்ஞானம் என்ற ப்ரகாசத்திறனை மறைக்கிறது. அதனால் விவேகமற்ற மனிதன் தானே ஒளிமயமாய் விளங்குகிற – என்றும் அறிவுமயமான – பரமானந்தமயமான பரமாத்மாவைக் காண முடிவதில்லை. அந்தப் பரமாத்மானுபவம் என்ற சூரியன் ப்ரகாசித்துவிட்டால் பரம சாந்தியும், நித்யமான ஆனந்தமும் நேரிடையாக அனுபவிக்கக் கிடைக்கின்றன. அது உண்மையில் பகலைப்போல ப்ரகாசம் நிறைந்ததாக இருந்தாலும்கூட பரமாத்மாவின் கல்யாண குணங்கள், ப்ரபாவம், ரஹஸ்யம், தத்வம் அறியாத அஞ்ஞானிக்கு இரவாக அல்லது இரவு போல ஆகிறது. அவனுக்குப் பரமானந்த விஷயம் பற்றி எதுவுமே தெரியாது. பரமானந்த விஷய அனுபவம் பெறாமல் தூங்கிவிடுகிறான். இந்த பரமாத்ம அனுபவம் ஸகல ஸாதாரண ப்ராணிகளுக்கும் இரவாக வர்ணிக்கப்படுகிறது. பரமாத்மாவை அடைந்துவிட்டவனுக்கு இந்த இரவு பகல் போல ஆகிறது. ஸ்திதப்ரக்ஞனான புருஷன் பரமாத்ம ஸ்வரூபத்தை நேரிடையாக அனுபவித்து, அதிலேயே நிலைத்து விடுகிறான். இதுவே, மற்ற ப்ராணிகளின் இரவில் ஞானி விழித்திருக்கிறான் என்பதன் பொருள்.

**கேள்வி:** எல்லா உயிர்களும் விழித்திருக்கின்றன என்றால் என்ன பொருள்? எதில் எல்லா உயிர்களும் விழித்திருக்கின்றனவோ, அது பரமாத்ம தத்வம் அறிந்த முனிவருக்கு இரவுபோல என்றால் என்ன பொருள்?

**பதில்:** இவ்வுலகிலும், மேலுலகிலும் அனுபவிக்கக்கூடிய எல்லா போகங்களும் அழியக்கூடியவை; கணநேரத்தவை; அநித்யமானவை; துக்கமயமானவை. ஆயினும், அனாதியான இருள்மயமான அஞ்ஞானத்தின் காரணமாக அந்த போகங்களில் பற்றுள்ள மனிதன் அவற்றை நித்யம் என்றும், ஸுகம் என்றும் நினைக்கிறான். அவனுடைய கருத்தில்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



போகங்களைக் காட்டிலும் சிறந்த ஸுகமே கிடையாது. இப்படி போகங்களில் பற்று வைத்து அவற்றைப் பெறும் முயற்சியிலே முனைகிறான். அவற்றை அடைந்துவிட்டால் ஆனந்தத்தை அனுபவிக்கிறான். இதுதான் ஸாதாரண ப்ராணிகளின் விழிப்பு. ஆனால், புலன்களும் போக விஷயங்களும் சேர்வதாலும், அவ்வாறே மதிமயக்கத்தினாலும், சோம்பலினாலும், தூக்கத்தினாலும் ஏற்படும் ஸுகம் இரவுக்கு ஸமானமாகிறது; அஞ்ஞான வடிவமான இருட்டாகிறது. ஆகவே, உண்மையில் இதுதான் இரவு. ஆயினும், அஞ்ஞானியான மனிதன் இதைப் பகல் என்று தவறாக நினைத்து விழித்துக் கொண்டிருக்கிறான். ஆழ்ந்த தூக்கத்தில் உள்ளவன் கனவு காணும்போது 'நான் விழித்திருக்கிறேன்' என்று நினைக்கிறான் அல்லவா? அதுபோல. ஆனால், பரமாத்மாவின் தத்வமறிந்த ஞானி தன் அனுபவத்தில் தூக்கத்திலிருந்து விழித்தவன் கனவில் கண்டவற்றோடு ஸம்பந்தமற்று இருப்பதுபோல, ஒரே ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவைத் தவிர வேறு ஒரு பொருளுக்கும் ஸத்தா — இருப்பு என்பது இல்லை என்று அறிந்து, உள்ளது போன்று தோற்றமளிக்கும் இந்த உலகத்தின் அதிஷ்டானமான பரமாத்ம தத்வத்தையே காண்கிறான். ஆகவே, அவனுக்கு அனைத்து உலகியல் போகங்களும், புலனின்பங்களும் இரவு போன்றவை.

**பொருத்தம்:** இவ்விதம் பகல், இரவு உருவகத்தின் மூலம் ஞானி, அஞ்ஞானி இவர்களின் நிலைகளை விளக்கிவிட்டு, அடுத்துக் கடலை உவமையாகக் காட்டி ஞானி பரமானந்த நிலையில் எப்படி இருக்கிறான் என்றும், போகங்களை விரும்புகின்ற அஞ்ஞானிக்கு அந்த சாந்தி கிடைக்காது என்றும் கூறுகிறார்—

आपूर्यमाणमचलप्रतिष्ठं समुद्रमापः प्रविशन्ति यद्वत्।
तद्वत्कामा यं प्रविशन्ति सर्वे स शान्तिमाप्नोति न कामकामी ॥७०॥

**ஆபூர்யமாணமசலப்ரதிஷ்டம்**
**ஸமுத்ரமாப: ப்ரவிஶந்தி யத்வத் ।**
**தத்வத்காமா யம் ப்ரவிஶந்தி ஸர்வே**
**ஸ ஶாந்திமாப்நோதி ந காமகாமீ ॥ 70 ॥**

**யத்வத்** – எவ்விதம், **ஆபூர்யமாணம்** – எல்லாப் பக்கங்களிலிலும் நீர் நிறைந்தும், **அசலப்ரதிஷ்டம்** – அசைவில்லாமலும் இருக்கும், **ஸமுத்ரம்** – கடலை (கடலில்), **ஆப:** – பல ஆறுகள் (அதைக் கலங்கச் செய்யாமலேயே), **ப்ரவிஶந்தி** – கலந்து விடுகின்றனவோ, **தத்வத்** – அதேபோல, **யம்** – ஸ்திதப்ரக்ஞனான மனிதனை, **ஸர்வே** – அனைத்து, **காமா:** – போகங்களும், **ப்ரவிஶந்தி** – (எவ்வித மாறுதலும் உண்டு பண்ணாமலேயே) வந்து அடைகின்றன. **ஸ:** – அவனே, **ஶாந்திம்** – மேலான அமைதியை, **ஆப்நோதி** – அடைகிறான். **காமகாமீ** – போகங்களை விரும்புபவன், **ந** – (அமைதியை) அடைவதில்லை.

எவ்விதம் எல்லாப் பக்கங்களிலிலும் நீர் நிறைந்தும் அசைவில்லாமலும் இருக்கும் கடலில் பல ஆறுகள் அதைக் கலங்கச் செய்யாமலேயே கலந்து விடுகின்றனவோ, அதேபோல ஸ்திதப்ரக்ஞனான மனிதனை அனைத்து போகங்களும் எவ்வித மாறுதலும் உண்டு பண்ணாமலேயே வந்து அடைகின்றன. அவனே மேலான அமைதியை அடைகிறான். போகங்களை விரும்புபவன் அமைதியை அடைவதில்லை.

***கேள்வி:*** *ஸ்திதப்ரக்ஞனான ஞானிக்குக் கடலை உவமையாகக் காட்டி என்ன கருத்தைச் சொல்கிறார்?*

***பதில்:*** ஒரு ஜடப்பொருளை உவமையாகக் காட்டி ஸ்திதப்ரக்ஞனுடைய உண்மையான நிலையை முழுமையாக வர்ணிப்பது இயலாத கார்யம். ஆனாலும் உவமையின் வாயிலாக அந்த நிலையின் ஒரு சிறு அம்சத்தை விளக்க முடியும். கடல், நீர் நிறைந்து ஆழமாக

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இருக்கிறது. அதுபோல ஸ்திதப்ரக்ஞன் அளவற்ற ஆனந்தத்தால் நிறைந்து இருக்கிறான். எப்படி கடலுக்குத் தண்ணீர் தேவையில்லையோ, அதுபோல ஸ்திதப்ரக்ஞனுக்கும் உலகியல் போகங்கள் சிறிதுகூடத் தேவையில்லை. அவன் விரும்பிய மிகச்சிறந்த பேற்றைப் பெற்றுவிட்டவன். மேலும் எவ்வளவு தண்ணீர் வந்து சேர்ந்தாலும் கடல் பொங்குவதில்லை. எவ்வளவு பெரிய புயல் வீசினாலும், எவ்வளவு நதிகளின் வெள்ளம் கரைபுரண்டு ஓடிவந்து விழுந்தாலும் கடல் தன் நிலை குலைவதில்லை; எல்லை மீறுவதில்லை; நிறைந்து வழிவதில்லை. அதுபோல பரமாத்ம ஸ்வரூபத்தில் நிலைபெற்ற யோகி பெரிய பெரிய உலகியல் ஸுகதுக்கங்கள் வந்து தாக்கினாலும் தன் நிலை குலைவதில்லை. அவன் ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவில் எப்பொழுதும் இடைவிடாது உறுதியாக/ ஒரே ஆனந்தரஸத்தில் நிலை பெற்றிருக்கிறான்.

**கேள்வி:** 'ஸர்வே காமா:' (எல்லாக் காமங்களும்) என்றால் அவை எவை? அவை கடலில் நீர் பாய்வதுபோல ஸ்திதப்ரக்ஞனிடம் வந்து சேர்கின்றன என்றால் என்ன பொருள்?

**பதில்:** இங்கு 'காம' என்ற சொல்லுக்கு ஆசை என்று பொருள் அன்று. ஆசைப்படும் பொருள். இங்கு 'ஸர்வே' என்ற அடைமொழியுடன் கூடிய 'காமா:' என்ற பதம், 'காம்யந்தே இதி காமா:' அதாவது 'எதற்காக ஆசை உண்டாகிறதோ, அது காமம்' என்ற பொருளில் கூறப்படுகிறது. புலன்களால் நுகரப்படுபவை எல்லாம் காமங்கள். ஸ்திதப்ரக்ஞனுக்குப் புலன்களால் நுகரக்கூடிய காமங்கள் அறவே கிடையா. ஆகவே, அவை பிரவேசிக்கின்றன என்று சொல்வது பொருந்தாது. மேலும் நீர் தேவை இல்லாமலே கடல் நிறைந்திருந்த போதிலும், தண்ணீர் வந்து கொண்டே இருக்கிறது. இவ்வாறு ஆறுகளிலோ, ஏரிகளிலோ தண்ணீர் வந்து சேர்ந்தால் வெள்ளப்பெருக்கு ஏற்படும். அதுபோல் கடலில் எந்த மாற்றத்தையும் உண்டு பண்ணாமல் அந்தத் தண்ணீரெல்லாம் வந்தடைந்து நீரோட்டங்கள் மறைந்து விடுகின்றன. அதுபோல ஸ்திதப்ரக்ஞனுக்கு உலகியல் போகங்கள் சிறிதுகூடத் தேவையில்லை. ஆனாலும் ப்ராரப்தத்தினால் பலவித போகங்கள் வந்து சேர்கின்றன. அவனுடைய மனம், புத்தி, புலன்கள் முன்வினை (ப்ராரப்தம்) காரணமாகப் பலவிதமான அனுகூலமான, ப்ரதிகூலமான விஷயங்களுக்கு ஆட்படலாம். அந்த போகங்கள் அவனிடம் மகிழ்ச்சியையோ, துயரத்தையோ, விருப்பையோ, வெறுப்பையோ, காமத்தையோ, க்ரோதத்தையோ, பேராசையையோ, மோஹத்தையோ, பயத்தையோ, கொந்தளிப்பையோ, மற்ற எந்தவிதமான விகாரத்தையோ ஏற்படுத்தி, அவனுடைய உறுதிப்பாட்டிலிருந்தும், சாஸ்த்ர முறையிலிருந்தும் சிறிதுகூட வழுவச் செய்யா. அவை வந்து சேர்வதால் அவனுடைய நிலையில் சிறிதுகூட மாற்றம் ஏற்படாது; கொந்தளிப்பு ஏற்படாது. அவன் பரமானந்தமயமான பரமாத்ம ஸ்வரூபத்தில் ஒன்றிப் பரமாத்மாவாகவே ஆகிவிடுகிறான். இதுதான் கடலில் நீர் சேர்ந்து மறைவதுபோல ஸ்திதப்ரக்ஞனிடம் போகங்கள் வந்து சேர்ந்தாலும் அவை மறைந்துவிடும். அவன் கலங்காத நிலையில் இருப்பான் என்பதன் பொருள்.

**கேள்வி:** 'அவனே பரம சாந்தியை அடைவான்; போகங்களை விரும்புபவன் அடையமாட்டான்' என்பதன் கருத்து என்ன?

**பதில்:** மேலே சொன்னவிதம் பூர்ணகாமனாகி விட்டவனுக்கு, வேறு எந்தவிதமான போகமும் சிறிதுகூடத் தேவையில்லை – அவனிடம் மற்ற போகங்கள் தாமாக வந்து மறைந்துவிடுகின்றன. அவன் தானாக எந்த போகத்தையும் தேடமாட்டான். அவனே பரமசாந்தியை அடைவான். போகங்களில் விருப்பமுள்ளவன் எக்காலத்திலும் சாந்தியைப் பெற முடியாது. ஏனெனில், அவன் உள்ளம் இடைவிடாது பலவித போக காமங்களால் சஞ்சலப்பட்டுக் கொண்டே இருக்கும். மனதில் சஞ்சலம் இருந்தால் சாந்தி இருக்க முடியாது. அடிக்கடி கவலையும், எரிச்சலும், சோகமும் அவனிடம் குடி கொள்ளும்.

**கேள்வி:** 58வது ச்லோகம் முதல் இதுவரை அர்ஜுனனுடைய மூன்றாவது கேள்விக்குப் பதிலாக வைத்துக் கொண்டால் என்ன தவறு? ஏனெனில், இந்த ச்லோகத்தில் கடலை உவமையாகக் காட்டி உறுதியான நிலையைத்தானே கூறுகிறார்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** மூன்றாவது கேள்விக்குப் பதிலாக இதைக் கொள்ள முடியாது. மூன்றாவது கேள்விக்குப் பதில் 58ல் ஆரம்பித்து 61ல் முடிந்துவிட்டது. இதனாலேயே அதில் 'ஆஸீத' – அமர்வான் என்ற சொல் வந்திருக்கிறது. அதற்குப் பிறகு தொடர்ந்து 62,63வது ச்லோகங்களில் போக விஷயங்களால் விளையக்கூடிய வீழ்ச்சியைச் சொல்லி, 64வது ச்லோகத்தில் நான்காவது கேள்விக்கான பதில் துவங்குகிறது. 'சரந்' – விஷய போகங்களில் ஸஞ்சரித்துக் கொண்டு என்று சொல்வதிலிருந்து இது தெளிவாகிறது. இதன் தொடர்ச்சியாகப் படகு உவமையைக் கூறி, போகங்களில் ஈடுபட்ட அயுக்த மனிதனின் ஸஞ்சரிக்கின்ற புலன்களில் ஏதாவது ஒன்று மாத்திரம் கூட புத்தியை இழுத்துச் செல்வதையும் சொல்கிறார். இங்கும் 'சரதாம்' – ஸஞ்சரிக்கின்ற என்ற சொல் வருகிறது. இது தவிர இந்த ச்லோகத்தில் 'ஸர்வே காமா: ப்ரவிஶந்தி' – எல்லா போகப் பொருட்களும் நுழைகின்றன என்று கூறுகிறார். செயலற்ற நிலையில் நுழைவாயில்களெல்லாம் அடைபட்டுவிடும். அங்குப் புலன்கள் விஷயங்களில் ஸஞ்சரிப்பதே இல்லை. இங்குப் புலன்களின் இயக்கம் உண்டு. அதனால் போகங்கள் நுழைவது ஸாத்யமே. பரமாத்மாவில் நிலைத்து நிற்கிறான். ஆனால் நடத்தையில் அவன் செயலற்று இருக்கவில்லை. ஆகவே, இது நான்காம் கேள்விக்குரிய பதில் என்று கொள்வதுதான் யுக்திக்குப் பொருந்துகிறது.

**பொருத்தம்:** ஸ்திதப்ரக்ஞன் எப்படி நடந்து கொள்வான் என்ற நான்காவது கேள்வியில் பரமாத்மாவை அடைந்தவனைப் பற்றித்தான் அர்ஜுனன் கேட்டார். ஆனால் கேள்வி நடத்தை பற்றியதாகையால் அதற்கு விடையாக ச்லோகம் 64 முதல் இதுவரை, எவ்விதம் நடந்து கொள்பவன் விரைவில் ஸ்திதப்ரக்ஞனாவான்? யார் ஆகமாட்டான்? மனிதன் எப்போது ஸ்திதப்ரக்ஞன் ஆவான்? அப்போது அவன் நிலை என்ன ஆகிய விஷயங்களையெல்லாம் சொன்னார். இப்போது நான்காவது கேள்விக்குத் தெளிவான விடையளித்து ஸ்திதப்ரக்ஞனின் நடத்தையை விவரிக்கிறார்—

**विहाय कामान्यः सर्वान्पुमांश्चरति निःस्पृहः ।**
**निर्ममो निरहङ्कारः स शान्तिमधिगच्छति ॥ ७१ ॥**

**விஹாய காமாந்ய: ஸர்வாந்புமாம்ஶ்சரதி நி:ஸ்ப்ருஹ: ।**
**நிர்மமோ நிரஹங்கார: ஸ ஶாந்திமதி$_4$க$_3$ச்ச$_2$தி ॥ 71 ॥**

**ய: புமாந்** – எந்த மனிதன், **ஸர்வாந்** – அனைத்து, **காமாந்** – விருப்பங்களையும், **விஹாய** – துறந்துவிட்டு, **நிர்மம:** – மமதை இல்லாதவனாக, **நிரஹங்கார:** – அஹங்காரமற்றவனாக, **நி:ஸ்ப்ருஹ:** – சிறிதளவு ஆசையும் இல்லாதவனாக, **சரதி** – ஸஞ்சரிக்கிறானோ, **ஸ:** – அவனே, **ஶாந்திம்** – அமைதியை, **அதி$_4$க$_3$ச்ச$_2$தி** – அடைகிறான் (அதாவது அவனே சாந்தியைப் பெற்றவன்).

எந்த மனிதன் அனைத்து விருப்பங்களையும் துறந்துவிட்டு மமதை இல்லாதவனாக, அஹங்காரமற்றவனாக, சிறிதளவு ஆசையும் இல்லாதவனாக ஸஞ்சரிக்கிறானோ, அவனே அமைதியை அடைகிறான். அதாவது அவனே சாந்தியைப் பெற்றவன்.

**கேள்வி:** 'ஸர்வாந் காமாந்' (எல்லாக் காமங்களையும்) என்று எவற்றைக் குறிப்பிடுகிறார்? அவற்றைத் துறப்பது என்றால் என்ன?

**பதில்:** இவ்வுலகிலும், மேலுலகிலும் அடையக்கூடிய ஸகல போகங்களையும் பற்றிய எல்லாவிதமான ஆசைகளையும் என்று பொருள். இந்த எல்லாவிதமான போகங்களையும் பற்றிய எல்லாக் காமங்களையும் முற்றிலும் அறவே துறக்கவேண்டுமென்று பொருள். இங்குக் காமங்கள் என்ற சொல் ஒலி முதலிய விஷயங்களைக் குறிப்பதன்று. ஏனெனில், அர்ஜுனனுடைய நான்காவது கேள்விக்கு இது விடை. ஸ்திதப்ரக்ஞனுடைய நடத்தையைப்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பற்றியது. இங்கு 'காம' என்ற சொல்லுக்கு ஒலி முதலிய விஷயங்கள் என்று பொருள் கொண்டால், அவற்றை அறவே ஒழித்துவிட்டு ஸஞ்சரிப்பது ஸாத்யமன்று.

**கேள்வி:** 'நிரஹங்கார:', 'நிர்மம:', 'நி:ஸ்ப்ருஹ:' என்ற மூன்று சொற்களுக்கும் என்னென்ன பொருள்? இப்படி இருந்து ஸஞ்சரிப்பது எப்படி?

**பதில்:** மனம், புத்தி, புலன்களுடன் கூடிய உடலில், ஸாதாரண அஞ்ஞானியான மனிதனுக்கு 'தான்' என்ற அபிமானம் உள்ளது. இதன் காரணமாக உடலையே தன் ஸ்வரூபமாக எண்ணி, நான் என்று சொல்லிக் கொள்கிறான். உடலைத் தவிர வேறுபட்டவனாகத் தன்னை நினைப்பதில்லை. உடலுக்கு இன்ப–துன்பங்கள் வந்தாலும் தனக்கு வந்ததாக நினைக்கிறான். இப்படி உடலை நான் என்று நினைப்பதற்குப் பெயர் அஹங்காரம். உடலில் நான் என்ற நினைப்பை அறவே தவிர்ப்பவன்தான் 'நிரஹங்கார:' (அஹங்காரம் அற்றவன்).

மனம், புத்தி, புலன்கள் இவை கூடிய உடலிலும், அந்த உடலுடன் உறவு கொண்டுள்ள மனைவி–மக்கள், அண்ணன்–தம்பிகள், உற்றார்–உறவினர், வீடு, செல்வம், ஐசுவர்யம் முதலியவற்றிலும், உடலால் செய்யப்படும் செயல்களிலும், செயல்களால் விளையக் கூடிய பயன்களான போகங்களிலும் ஸாதாரண மனிதனுக்குத் தனது, தனக்கு உரியது என்ற எண்ணம் இருக்கிறது. இதுதான் மமகாரம். இதை அறவே ஒழித்தவன் 'நிர்மம:' (மமகாரமற்றவன்).

அனுகூலமான ஒன்று இல்லாமல் போய்விட்டால் மனதில் அந்த ஒன்று கட்டாயம் வேண்டும் என்ற எண்ணம் ஏற்படுகிறது. அது இல்லாவிட்டால் கார்யம் நடைபெறாது என்று தன்னிடம் இல்லாத, தனக்குத் தேவையான பொருளைத் தீவிரமாக விரும்புவதுதான் ஸ்ப்ருஹா. இந்த அபேக்ஷை (எதிர்பார்ப்பு) காமத்தின் நுண்ணிய உருவம். ஆகவே, அனைத்துக் காமங்களையும் தவிர்ப்பது என்று சொன்ன பிறகும், இதைத் தனியாகக் குறிப்பிடுகிறார்.

இவ்விதம் அஹங்காரம், மமகாரம், ஸ்ப்ருஹா (ஆசை) இல்லாமல் தனது வர்ணம், ஆசிரமம், ஸ்வபாவம், சூழ்நிலை இவற்றிற்கு ஏற்றவாறு உலகத்தின் நலனுக்காக போகப் பொருட்களில் ஸஞ்சரிப்பது என்பது, அதாவது பார்ப்பது, கேட்பது, உண்பது, அருந்துவது, தூங்குவது, விழிப்பது முதலியவற்றை சாஸ்த்ர முறைப்படி செய்வதுதான், எல்லாக் காமங்களும் அற்று, அஹங்கார, மமகார, ஸ்ப்ருஹா இல்லாமல் உலகில் செயல்படுவதாகும்.

**கேள்வி:** இங்கே 'நி:ஸ்ப்ருஹ:' என்ற சொல்லுக்குப் 'பற்றற்றவன்' என்று பொருள் கூறினால் என்ன தவறு?

**பதில்:** ஸ்ப்ருஹா என்பது பற்றின் விளைவு (பற்று வைத்துள்ள பொருளில் ஸ்ப்ருஹா ஏற்படுகிறது). ஆகவே 'ஸ்ப்ருஹா' என்று சொன்னால் பற்று என்று பொருள் கொள்வதில் தவறில்லை. ஆயினும், ஸ்ப்ருஹா என்பதற்கு நுண்ணிய ஆசை என்ற பொருள்தான் சரியானது; பற்று அன்று. ஆகவே, பற்று என்று சொல்லாமல் ஸ்ப்ருஹா என்பது ஆசையின் நுண்ணிய உருவம் என்று சொல்வதுதான் பொருந்தும்.

**கேள்வி:** ஆசை, ஸ்ப்ருஹா இரண்டும் அற்று என்று சொன்னபிறகு, மறுபடியும் 'நிர்மம:' – மமகாரமற்றவன் என்றும், 'நிரஹங்கார:' – அஹங்காரமற்றவன் என்றும் தனியாகச் சொல்வானேன்?

**பதில்:** இங்கு முழுமையாக சாந்தி பெற்றவனின் நிலை வர்ணிக்கப்படுகிறது. ஆகவே, ஆசையற்று, ஸ்ப்ருஹா அற்று என்று சொன்ன பிறகும் 'நிர்மம:', 'நிரஹங்கார:' என்று தனியாகச் சொல்லப்படுகின்றன. ஏனெனில் காமமும், ஸ்ப்ருஹாவும் அநேகமாக அற்றுப்போனாலும்கூட மனிதன் தான் காமமற்றவன். தனக்கு ஸ்ப்ருஹா கூடக் கிடையாது என்று அஹங்காரத்தையும், மமகாரத்தையும் மனதில் வைத்திருக்கலாம். அவன் ஸித்த புருஷன் – தேர்ந்த ஸ்திதப்ரக்ஞன் ஆகமாட்டான். காமமற்று, ஸ்ப்ருஹா அற்று, மமகாரம் அற்றுப் போனாலும், அஹங்காரம் சிறிதேனும் இருந்தாலும், அவன் ஸித்தபுருஷன் ஆகமாட்டான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அஹங்காரம் அழிந்தால்தான் மற்றவை எல்லாம் அழியும். எல்லாவற்றிற்கும் காரணமான அஹங்காரம் எஞ்சி இருக்கும்வரை காமம், ஸ்ப்ருஹா, மமகாரங்கள் ஏதாவது ஒரு உருவத்தில் தலைதூக்கத்தான் செய்யும். சிறிதளவாவது காமமோ, ஸ்ப்ருஹாவோ, மமகாரமோ, அஹங்காரமோ இருக்கும்வரை முழுமையான சாந்தி கிடைக்காது. இங்கும் 'ஶாந்திம் அதிகச்சதி' என்ற வாக்கியம் பூரணமான சாந்தியைப் பெறுவதைத்தான் கூறுகிறது. இத்தகைய பூர்ணமான, நித்யமான சாந்தி மமகாரமும், அஹங்காரமும் இருக்கும்வரை கிடைக்காது. இந்த விஷயத்தை வலியுறுத்தத்தான் காமமற்று, ஸ்ப்ருஹா அற்று என்று சொன்னபிறகும் கூட 'நிர்மம:', 'நிரஹங்கார:' என்று தனியாக மறுபடியும் சொல்வது உசிதமாகிறது.

**கேள்வி:** எல்லாவற்றிற்கும் காரணம் அஹங்காரம்தான் என்று சொல்லிவிட்டதால், 'நிரஹங்கார:' (அஹங்காரமற்று) என்று சொன்னாலே போதுமே? காமமற்று, ஸ்ப்ருஹா அற்று, மமகாரமற்று என்றெல்லாம் சொல்வானேன்?

**பதில்:** அஹங்காரம் போய்விட்டால் காமம், ஸ்ப்ருஹா, மமகாரம் போய்விடும் என்பது உண்மைதான். அஹங்காரம்தான் இவற்றிற்கெல்லாம் மூலகாரணம். காரணம் அழிந்தால் கார்யம் உண்டாகாது என்பது தானாகவே நிரூபணமாகிறது. ஆயினும், தெளிவாக விளக்க வேண்டுமென்பதற்காக இந்தச் சொற்களை உபயோகித்தார்.

**கேள்வி:** அவனே சாந்தியை அடைகிறான் – என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த ச்லோகத்தில் பரமாத்மாவை அடைந்துவிட்ட ஸித்தபுருஷனின் நடத்தையைப் பற்றிக் கூறி, அர்ஜுனன் ஸ்திதப்ரக்ஞனைப் பற்றிக் கேட்ட நான்காவது கேள்விக்கு விடை அளிக்கிறார். ஆகவே, பற்றற்று உலகில் நடமாடும் புருஷன்தான் பரமசாந்தி ஸ்வரூபமான பரமாத்மாவை அடைந்துவிட்ட ஸ்திதப்ரக்ஞன் ஆவான் என்று விளக்குகிறார்.

**பொருத்தம்: இவ்விதம் அர்ஜுனனுடைய நான்கு கேள்விகளுக்கும் விடையளித்த பிறகு, இனி ஸ்திதப்ரக்ஞனின் பெருமையைக் கூறி அத்யாயத்தை முடிக்கிறார்—**

**एषा ब्राह्मी स्थितिः पार्थ नैनां प्राप्य विमुह्यति ।**
**स्थित्वास्यामन्तकालेऽपि ब्रह्मनिर्वाणमृच्छति ॥ ७२ ॥**

**ஏஷா ப்₃ராஹ்மீ ஸ்தி₂தி: பார்த₂ நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி ।**

**ஸ்தி₂த்வாஸ்யாமந்தகாலேऽபி ப்₃ரஹ்மநிர்வாணம்ருச்ச₂தி ॥ 72 ॥**

**பார்த₂** – அர்ஜுன! **ஏஷா** – இதுதான், **ப்₃ராஹ்மீ ஸ்தி₂தி:** – ப்ரம்மத்தை அடைந்தவனின் நிலை, **ஏநாம்** – இதை, **ப்ராப்ய** – அடைந்தபின் (யோகி ஒருபோதும்), **ந விமுஹ்யதி** – மோஹமடைவதில்லை. (மேலும்), **அந்தகாலே அபி** – உயிர் பிரியும் நேரத்திலும், **அஸ்யாம்** – இந்த ப்ரம்ம நிலையிலேயே, **ஸ்தி₂த்வா** – நிலை பெற்று, **ப்₃ரஹ்மநிர்வாணம்** – ப்ரம்மானந்தத்தை, **ருச்ச₂தி** – அடைகிறான்.

அர்ஜுன! இதுதான் ப்ரம்மத்தை அடைந்தவனின் நிலை. இதை அடைந்தபின் யோகி ஒருபோதும் மோஹமடைவதில்லை. மேலும் உயிர் பிரியும் நேரத்திலும் இந்த ப்ரம்ம நிலையிலேயே நிலை பெற்று ப்ரம்மானந்தத்தை அடைகிறான்."

**கேள்வி:** இதுதான் 'ஏஷா ப்ராஹ்மீ ஸ்திதி:' (ப்ரம்மத்தை அடைந்தவனின் நிலை) என்று எந்த நிலையைச் சொல்கிறார்? அதை அடைவது என்றால் என்ன?

**பதில்:** ப்ரம்மத்தைப் பற்றிய நிலையே 'ப்ராஹ்மீ ஸ்திதி:'. இந்த விஷயம் இங்கே சொல்லப்பட்டதால் 'இந்த' ப்ரம்ம நிலை என்கிறார். ஆகவே, இங்கு அர்ஜுனன் கேட்ட கேள்விகளுக்கு விடையாக 55வது ச்லோகம் முதல் இதுவரை ஸ்திதப்ரக்ஞனுடைய எந்த நிலையை ஆங்காங்கு வர்ணித்தாரோ, ப்ரம்மத்தை அடைந்த மஹாபுருஷனுடைய நிலை எதுவோ, அதையே 'இந்த ப்ரம்ம நிலை' என்று கூறுகிறார். மேலே சொன்னவிதம்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அஹங்காரம், மமகாரம், பற்று, ஸ்ப்ருஹா, காமங்கள் அற்று, மனதில் எந்த விகாரமுமற்று, சலனமற்று ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்ம ஸ்வரூபத்தில் எப்பொழுதும் இடைவிடாது மூழ்கி இருப்பதே இந்த நிலையை அடைந்துவிட்டதன் பொருள்.

**கேள்வி:** 'இந்த நிலையை அடைந்த யோகிக்கு மோஹம் இருக்காது' என்பதன் பொருள் என்ன?

**பதில்:** ப்ரம்மம் என்றால் என்ன? ஈசுவரன் யார்? ப்ரபஞ்சம் எது? மாயை என்றால் என்ன? இவற்றிடையே ஒன்றுக்கொன்று என்ன ஸம்பந்தம்? நான் யார்? எங்கிருந்து வந்தேன்? நான் செய்ய வேண்டியது என்ன? நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன் முதலிய விஷயங்களைப் பற்றிய உண்மை அறிவு இல்லாமல் இருப்பதே மோஹம். இந்த மோஹம் ஜீவனுக்கு அனாதிகாலமாக உள்ளது. அதனால்தான் இவன் ஸம்ஸார சக்ரத்தில் சுழல்கிறான். ஆனால் அஹங்காரம், மமகாரம், பற்று, ஆசைகள் விலகி, மனிதன் மேலே சொன்ன ப்ரம்ம நிலையை அடையும்போது, அவனுடன் அனாதிக்காலமாகத் தொடர்ந்து வந்த மோஹம் அடியோடு அழிந்து போகிறது. மறுபடியும் அது தோன்றாது.

**கேள்வி:** 'உயிர் பிரியும் நேரத்திலும் இந்த ப்ரம்ம நிலையில் நிலைபெற்றிருக்கும் யோகி ப்ரம்மானந்தத்தை அடைவான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனிதன் உயிரோடு இருக்கும்போதே இந்த நிலையை எட்டி விட்டானானால், அவனைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? அவன் ப்ரம்மானந்தத்தை அடைந்துவிட்ட ஜீவன் முக்தன். எவனொருவன் பற்பல ஸாதனைகள் புரிந்து இந்த ப்ரம்ம நிலையில் நிலைத்து நிற்கிறானோ, அல்லது தற்செயலாக மரணகாலத்தில் ப்ரம்ம நிலையில் நிலைபெறுகிறானோ, அதாவது அஹங்காரம், மமகாரம், பற்று, ஸ்ப்ருஹா, காமங்கள் அற்று உறுதியாக பரமாத்ம ஸ்வரூபத்தில் நிலைபெறுகிறானோ, அவனும் ப்ரம்மானந்தத்தை அடைகிறான்.

**கேள்வி:** ஸாதகனான கர்மயோகி ச்ரத்தையுள்ளவனானாலும், மரண காலத்தில் அவன் மனம் ஏதாவது ஒரு காரணத்தினால் ஸமபாவனையில் ஸ்திரமாக இல்லாவிட்டால், அவனுடைய கதி என்ன?

**பதில்:** மரண காலத்தில் இருக்கும் ஸமபாவனை அந்த ஸாதகனை அக்கணமே கரையேற்றிவிடும். ஆனால், மரண காலத்தில் ஸமபாவனையிலிருந்து அவன் மனம் பிறழ்ந்து இருந்தால், அவனுடைய பயிற்சியும், ஸாதனையும் வீண் போகா. அவன் யோகத்தில் நழுவியவனுடைய கதியை அடைவான். ஸமபாவனையின் ஸம்ஸ்காரத்தினால் (மனப்பதிவினால்) அவன் அடுத்த பிறவியில் அதன்பால் ஈர்க்கப்படுவான் (6/40–44). பிறகு பரமாத்மாவை அடைந்து விடுவான்.

ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
साङ्ख्ययोगो नाम द्वितीयोऽध्यायः ॥ २ ॥

**ஓம் தத்ஸதிதி ஶ்ரீமத்₃ப₄க₃வத்₃கீ₃தாஸூபநிஷத்ஸு ப்₃ரஹ்மவித்₃யாயாம்**
**யோக₃ஶாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே₃ ஸாங்க்₂யயோகோ₃**
**நாம த்₃விதீயோऽத்₄யாய: ॥ 2 ॥**

**ஓம் தத் ஸத் – ப்ரம்ம வித்யை, யோக ஶாஸ்த்ரம், உபநிஷத்**
**எனப்படும் ஶ்ரீமத்பகவத்கீதையாகிய ஶ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே**
**நிகழ்ந்த உரையாடலில் 'ஸாங்க்யயோகம்' எனப் பெயர் படைத்த**
**இரண்டாவது அத்யாயம் நிறைவுற்றது.**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

# அத₂ த்ருதீயோऽத்₄யாய:

# மூன்றாவது அத்யாயம்

## கர்மயோகம்

**அத்யாயத்தின் பெயர்**

இந்த அத்யாயத்தில், விதிக்கப்பட்ட கடமைகளை அவசியம் ஆற்றியே தீரவேண்டும் என்பது பலவித காரணங்களுடன் விளக்கப்படுகிறது. ஒவ்வொரு மனிதனும், அவனவனுடைய வர்ண, ஆசிரமங்களுக்கு ஏற்றவாறு விதிக்கப்பட்ட கடமைகளை எப்படி ஆற்றவேண்டும்? ஏன் செய்யவேண்டும்? செய்யாவிட்டால் என்ன தீமை? செய்வதால் என்ன நன்மை? எந்த கர்மம் பந்தப்படுத்தும்? எது முக்தியை அளிக்கும் முதலிய விவரங்கள் நன்கு விளக்கப்படுகின்றன. இவ்விதம் இந்த அத்யாயத்தில் கர்மயோகம் பற்றிய பல விளக்கங்கள் மற்ற அத்யாயங்களைக் காட்டிலும் அதிகமாகவும், விரிவாகவும் கூறப்படுகின்றன. மற்ற விஷயங்கள் மிகக் குறைவாகவும், சுருக்கமாகவும் கூறப்படுகின்றன. ஆகவே, இந்த அத்யாயத்தின் பெயர் 'கர்மயோகம்' ஆகும்.

**அத்யாயச் சுருக்கம்**

பகவானுடைய கருத்தைச் சரிவரப் புரிந்து கொள்ளாத காரணத்தால் ச்லோகம் 1,2ல் அர்ஜுனன் பகவானிடம், 'எனக்கு ஓரே முடிவாக நன்மைக்கான ஸாதனையைக் கூறுங்கள்' என்று குறை காண்பதுபோல் கேட்கிறார். 3ல் அதற்கு விடையாக, பகவான் இரண்டு நிஷ்டைகளைக் கூறுகிறார். 4ல் எந்த நிஷ்டையிலும் கர்மத்தைச் செய்யாமல் விடக்கூடாது என்று உறுதி செய்கிறார். 5ல் கணநேரம்கூட ஒருவன் ஏதாவது செயல் புரியாமல் இருக்க முடியாது என்று கூறி, 6ல் வெளிப்பார்வைக்குப் புலன்களை அடக்கியதாகப் பாசாங்கு செய்து, போகங்களை நினைத்துக் கொண்டிருப்பவன் கபட வேஷதாரி ஆவான் என்று கூறி, 7ல் மனம் மற்றும் புலன்களை அடக்கி, புலன்களின் ருசியை அகற்றிக் கடமைகளை ஆற்றுபவனுடைய பெருமையையும் பேசுகிறார். 8, 9ல் கர்மங்களைச் செய்யாமல் விடுவதைக் காட்டிலும், அவற்றைச் செய்வதே மேல் என்று கூறி, 'செயல் புரியாமல் அன்றாட வாழ்க்கையே நடைபெறாது, ஆகவே, சுயநலம் பாராட்டாமல், விதிக்கப்பட்ட கடமைகளைப் பற்றின்றி ஆற்றவேண்டும்' என்று ஆணையிடுகிறார். 10 முதல் 12 வரை ப்ரஜாபதியின் ஆணையாகையால் கடமைகளை ஆற்ற வேண்டும் என்று கூறி, 13ல் யக்ஞங்களில் மிகுந்ததை உண்பதால் பாவங்கள் விலகும் என்றும், யக்ஞம் செய்யாதவன் பாவி ஆவான் என்றும் கூறுகிறார். 14, 15ல் படைப்புச் சக்ரத்தை வர்ணித்து எங்கும் நிறைந்துள்ள பகவான் யக்ஞம் என்ற ஸாதனையில் நிலையாக இருக்கிறார் என்று காட்டுகிறார். 16ல் அந்தப் படைப்புச் சக்ரத்தை மீறுபவனை நிந்திக்கிறார். 17, 18ல் ஆத்ம ஞானி ஆற்ற வேண்டிய கடமை ஒன்றுமில்லை; கடமையைச்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



செய்தாலும், செய்யாவிட்டாலும் அவனுக்குப் பயன் ஒன்றுமில்லை என்று கூறுகிறார். 19ல் மேலே சொன்ன காரணங்களால் கடமைகளை ஆற்றத்தான் வேண்டும் என்றும், நிஷ்காம கர்மத்தின் பயன் பரமாத்மாவை அடைவதே என்றும் சொல்லி, அர்ஜுனனிடம், 'பற்றற்றுக் கடமையை ஆற்றுவாயாக' என்று ஆணையிடுகிறார். 20ல் ஜனகர் முதலானோர் கடமைகளை ஆற்றியே ஸித்தி பெற்றனர் என்று சான்று காட்டி, அதுபோல உலக நன்மைக்காகவும் கடமைகளை ஆற்றுவது அவசியம் என்று கூறி, அது பயனுள்ளதுதான் என்றும் கூறுகிறார். 21ல் சான்றோர்களின் நடத்தை, உபதேசங்கள் இவற்றையே மக்கள் பின்பற்றுகின்றனர் என்று கூறி, 22, 23, 24ல் பகவான் தம்மையே எடுத்துக்காட்டாகக் கூறி, கர்மம் செய்வதால் லாபமும், செய்யாவிட்டால் நஷ்டமும் விளையும் என்று கூறுகிறார். 25, 26ல் ஞானியும்கூட உலகிற்கு எடுத்துக்காட்டாகத் தாமும் கடமைகளை ஆற்றிப் பிறரையும் ஆற்றச் செய்யவேண்டும் என்கிறார். 27, 28ல் கர்மத்தில் ஈடுபட்ட மக்கள்கூட்டத்தைக் காட்டிலும் ஸாங்க்யயோகி வித்யாஸமானவன் என்று கூறுகிறார். 29ல் ஞானி ஸாதாரண மனிதர்களின் ச்ரத்தையைக் குறைக்கக் கூடாது என்று கூறுகிறார். 30ல் ஆசை, மமகாரம், வருத்தம் இவையின்றி, 'பகவானுக்கு அர்ப்பணம் செய்கிறோம் என்ற மனத்துடன் யுத்தம் செய்வாயாக' என்று ஆணையிட்டு, 31ல் இந்த ஸித்தாந்தத்தின்படி நடப்பதில் ச்ரத்தையுடையவன் முக்தி அடைவான் என்றும், 32ல் அவ்வாறு செய்யாமல், அதில் குற்றம் காண்பவன் வீழ்ச்சி அடைவான் என்றும் கூறுகிறார். 33ல் இயல்புக்கு ஏற்றவாறு கர்மம் செய்யாமல் இருக்க முடியாது என்றும், 34ல் அவற்றில் விருப்பு-வெறுப்பற்று இருக்க வேண்டும் என்றும், 35ல் பிறர் தர்மத்தைக் கைக்கொள்வதைக் காட்டிலும், ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பதுதான் சிறந்தது, பிறர் தர்மம் பயத்தைத் தரும் என்றும் கூறுகிறார். 36ல் அர்ஜுனன், 'மனிதன் எதனால் பலவந்தமாகப் பாவம் செய்யத் தூண்டப்படுகிறான்?' என்று கேட்கிறார். 37ல் காமம் என்ற எதிரிதான் எல்லாப் பாவச் செயல்களுக்கும் காரணம் என்று பதிலுரைத்து, 38 முதல் 41 வரை அந்தக் காமம் நெருப்பைப் போல அனுபவித்துத் தணிக்க முடியாதது; ஞானத்தை மறைப்பது; அது பெரும் பகைவன் என்றும் விளக்கி, காமத்தின் இருப்பிடங்களைச் சொல்லிப் புலன்களை அடக்கி அவற்றை அழிக்க வேண்டும் என்கிறார். 42ல் புலன்கள், மனம், புத்தி இவற்றைக் காட்டிலும் ஆத்மா மிகச்சிறந்தது என்று கூறி, 43ல் புத்தியினால் மனதை அடக்கிக் காமத்தை அழிக்கவேண்டுமென்று ஆணையிட்டு, அத்யாயத்தை முடிக்கிறார்.

**முன் அத்யாயத்துடன் இவ்வத்யாயத்திற்குப் பொருத்தம்:** இரண்டாவது அத்யாயத்தில் பகவான் 'அசோச்யாநந்வசோசஸ்த்வம்' (2/11) என்று ஆரம்பித்து 'தே₃ஹீ நித்யமவத்₄யோऽயம்' (2/30) என்பது வரை ஆத்ம தத்வத்தை நிரூபணம் செய்து 'ஸாங்க்யயோகம்' கூறினார். 'பு₃த்₃தி₄ர்யோகே₃ த்விமாம் ச்ருணு' (2/39) என்று ஆரம்பித்து, 'தத₃ா யோக₃மவாப்ஸ்யஸி' (2/53) வரை 'ஸமபுத்தி' என்ற கர்மயோகத்தை வர்ணித்தார். அடுத்து 54வது ச்லோகத்திலிருந்து அத்யாய முடிவு வரை அர்ஜுனன் கேட்ட கேள்விக்கு விடையாக, ஸமபுத்தியாகிற கர்மயோகத்தின் மூலம் பகவானை அடைந்துவிட்ட ஸ்திதப்ரக்ஞன் என்ற ஸித்த புருஷனுடைய இலக்கணம், நடத்தை, பெருமைகள் இவற்றைச் சொன்னார். அப்போது

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கர்மயோகத்தின் பெருமையை எடுத்துச் சொல்லி, 47, 48ல் கர்மயோகத்தின் ஸ்வரூபத்தைக் கூறி, அர்ஜுனனிடம், 'கர்மயோகத்தில் ஈடுபடு' என்று ஆணையிட்டார். 49ல் ஸமபுத்தியாகிய கர்மயோகத்தைக் காட்டிலும் பயனில் விருப்பம் கொண்டு கர்மம் செய்வது இழிவானது என்று கூறினார். 50ல் ஸமபுத்தியுள்ளவனைப் புகழ்ந்து அர்ஜுனனைக் கர்மயோகத்தில் ஈடுபடச் சொல்கிறார். 51ல் ஸமபுத்தியுடையவன் மிக்குயர் நிலையை அடைவான் என்கிறார். இதைக் கேட்ட அர்ஜுனன் அவருடைய உண்மையான கருத்தைப் புரிந்து கொள்ளாமல், 'புத்தி' என்று சொன்னதை 'ஞானம்' என்று தவறாகப் புரிந்து கொண்டு, கர்மத்தைக் காட்டிலும் ஞானம் சிறந்தது என்று பகவான் கூறுவதாக நினைக்கிறார். இவ்வாறு பகவான் பணித்தது தெளிவின்றிச் சற்றே குழப்புவது போலத் தோன்றுகிறது. ஆகவே, எது தமக்கு நன்மை அளிக்கும் என்பதை விளக்க வேண்டுமென அர்ஜுனன் இந்த அத்யாயத்தில் கேட்கிறார்—

अर्जुन उवाच

ज्यायसी चेत्कर्मणस्ते मता बुद्धिर्जनार्दन।
तत्किं कर्मणि घोरे मां नियोजयसि केशव॥ १ ॥

அர்ஜுந உவாச

ஜ்யாயஸீ சேத்கர்மணஸ்தே மதா பு₃த்₃தி₄ர்ஜநார்த₃ந ।
தத்கிம் கர்மணி கோ₄ரே மாம் நியோஜயஸி கேஶவ ॥ 1 ॥

**அர்ஜுந உவாச** – அர்ஜுனன் சொன்னார்: **ஜநார்த₃ந** – ஜனார்தன! **கர்மண:** – கர்மத்தைக் காட்டிலும், **பு₃த்₃தி₄:** – ஞானம், **ஜ்யாயஸீ** – சிறந்தது (என்று), **தே** – உங்களால், **மதா சேத்** – கருதப்பட்டால், **கேஶவ** – கேசவ! **தத்** – பின்னர், **மாம்** – என்னை, **கோ₄ரே** – பயங்கரமான, **கர்மணி** – கர்மத்தில், **கிம்** – ஏன், **நியோஜயஸி** – ஈடுபடுத்துகிறீர்கள்?

அர்ஜுனன் சொன்னார்: "ஜனார்தன! கர்மத்தைக் காட்டிலும் ஞானம் சிறந்தது என்று உங்களால் கருதப்பட்டால் கேசவ! பின்னர் என்னை பயங்கரமான கர்மத்தில் ஏன் ஈடுபடுத்துகிறீர்கள்?

**கேள்வி:** 'கர்மத்தைக் காட்டிலும் ஞானம் சிறந்தது' என்று இதற்குமுன் பகவான் எங்கே கூறியிருக்கிறார்? அப்படிக் கூறியிராவிட்டால் அர்ஜுனனின் கேள்விக்கு அடிப்படை என்ன?

**பதில்:** பகவான் அப்படிக் கூறவேயில்லை. 'தூ₃ரேண ஹி அவரம் கர்ம பு₃த்₃தி₄யோகா₃த் த₄நஞ்ஜய' (2/49) என்ற பகவானது சொற்களின் மர்மத்தையும், தத்வத்தையும் அர்ஜுனன் தவறாகப் புரிந்து கொண்டுவிட்டார். ஞானத்தையே 'புத்தியோகம்' என்றும், அந்த ஞானயோகத்தைக் காட்டிலும் கர்மம் மிகவும் இழிவானது என்றும் பகவான் சொல்வதாக நினைக்கிறார். உண்மையில் அங்கு இடம்பெறும் 'புத்தியோகம்' என்ற சொல்லுக்கு 'ஞானம்' என்பது பொருளன்று. ஸமபுத்தியுடன் கூடிய கர்மயோகத்தைச் சொல்கிறது. பயன் கருதிச் செய்யப்படும் கர்மத்தையே அங்கே 'கர்மம்' என்ற சொல் குறிக்கிறது. 'க்ருபணா: ப₂லஹேதவ:' (பயனில் கருத்துள்ளவர்கள் இரங்கத்தக்கவர்கள்) என்றும் அதே ச்லோகத்தில் கூறப்பட்டுள்ளது. பயன் கருதிச் செய்யப்படும் கர்மங்கள் இழிவானவை. ஆகவே, 'பு₃த்₃தெ₄ள ஶரணமந்விச்ச₂' (ஸமபுத்தியுடன் கூடிய கர்மயோகத்தைச் சரணடைவாயாக; ஏற்றுக் கொள்வாயாக) என்று ஆணையிடுகிறார். அர்ஜுனன் இந்தத் தத்வத்தைப் புரிந்து கொள்ளாததால், மேலே சொன்னவாறு கேள்வி கேட்க நேர்ந்தது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'புத்திதான் சிறந்தது' என்று அர்ஜுனன் கூறுமிடத்திலும், புத்தி என்ற சொல்லுக்கு 'ஸமபுத்தி என்ற கர்மயோகம்' என்று ஏன் பொருள் கொள்ளக் கூடாது?

**பதில்:** இது அர்ஜுனனுடைய கேள்வி. அவர் பகவானுடைய சொற்களின் உண்மையான தாத்பர்யத்தை அறியவில்லை. புத்தியென்றால் ஞானமென்று தவறாகப் புரிந்து கொண்டதால்தான், மேலே சொன்னவாறு கேள்வி கேட்கிறார். அர்ஜுனன் கேள்வி கேட்கும்போது புத்தி என்ற சொல்லுக்கு ஸமபுத்தியாகிற கர்மயோகம் என்று புரிந்து கொண்டிருந்தாரானால், இந்தக் கேள்வியே எழாது. அர்ஜுனன், புத்தி என்றால் ஞானம் என்று நினைத்ததால்தான், அர்ஜுனனது கருத்துப்படி, இங்கு 'புத்தி' என்ற சொல்லுக்கு 'ஞானம்' என்று பொருள் கூறப்பட்டது.

**கேள்வி:** 'என்னை ஏன் பயங்கரமான கர்மத்தில் ஈடுபடுத்துகிறீர்கள்?' என்ற கேள்விக்கு என்ன கருத்து?

**பதில்:** அர்ஜுனன், பகவானுடைய அபிப்ராயத்தைச் சரிவரப் புரிந்து கொள்ளாமல் எந்தக் கர்மத்தைத் தாழ்ந்தது என்று பகவானே சொன்னாரோ, அதே கர்மத்தில், 'தஸ்மாத்$_3$யுத்$_4$யஸ்வ ப$_4$ாரத' (யுத்த கர்மத்தில் ஈடுபடுவாய்) என்றும், 'கர்மண்யே-வாதி$_4$காரஸ்தே' (கர்மத்தைச் செய்வது மட்டும் உன் பொறுப்பு) என்றும், 'யோகஸ்$_3$ஸ்த$_2$: குரு கர்மாணி' (யோகத்தில் நிலை பெற்றுக் கர்மங்களைச் செய்) என்றும் கட்டளையிட்டு, 'என்னை ஏன் கர்மத்தில் ஈடுபடுத்துகிறார்?' என்று நினைக்கிறார். ஆகவே, அர்ஜுனன் பகவானிடம், 'இந்த பயங்கரமான யுத்தத்தில் ஏன் என்னை ஈடுபடுத்துகிறீர்கள்?' என்று கேட்கிறார்.

**கேள்வி:** இங்கு பகவானை 'ஜநார்தந' என்றும், 'கேஶவ' என்றும் அழைப்பதற்குத் தனிப்பட்ட கருத்து உண்டா?

**பதில்:** தம்முடைய விருப்பங்கள் நிறைவேற வேண்டும் என்று அனைவராலும் வேண்டப்படுகிறவர், 'ஜநார்தனர்' (ஸர்வைர்ஜனைரர்த்$_3$யதே யாச்யதே ஸ்வாபி$_4$லஷித-ஸித்$_3$த$_4$யே இதி ஜநார்த$_3$ந:). 'க' – ப்ரம்மா; 'அ' – விஷ்ணு; 'ஈஶ' – மகேசன்; இம்மூவரும் யாருடைய 'வ' – வபு அதாவது ஒரே வடிவமோ அவரே 'கேஶவர்' ஆவார். பகவானை இப்பெயர்களினால் அழைக்கும் அர்ஜுனன், "நான் உங்களைச் சரணடைந்துவிட்டேன். நான் என்ன செய்யவேண்டும் என்பதைத் தெரிவியுங்கள். இதை முன்னமே வேண்டிக் கொண்டுவிட்டேன் (2/7). மறுபடியும் வேண்டுகிறேன். ஏனெனில், நீங்கள் ஸாக்ஷாத் பரமேசுவரன் (பரதத்வம்)." இப்படி வேண்டி, 'ஶரணாகதி அடைந்த ஒருவனுக்கு உங்களுடைய தீர்மானமான கருத்தைக் கூறி, அருள் புரியவேண்டும்' என்று குறிப்பிட விரும்புகிறார்.

**व्यामिश्रेणेव वाक्येन बुद्धिं मोहयसीव मे।**
**तदेकं वद निश्चित्य येन श्रेयोऽहमाप्नुयाम्॥ २॥**

**வ்யாமிஸ்ரேணேவ வாக்யேந பு$_3$த்$_3$தி$_4$ம் மோஹயஸீவ மே ।**

**ததே$_3$கம் வத$_3$ நிஸ்சித்ய யேந ஸ்ரேயோऽஹமாப்நுயாம் ॥ 2 ॥**

**வ்யாமிஸ்ரேண இவ** – குழம்பியது போன்ற, **வாக்யேந** – பேச்சினால், **மே பு$_3$த்$_3$தி$_4$ம்** – என் புத்தியை, **மோஹயஸி இவ** – கலக்குகிறீர்கள் போலிருக்கிறதே! **யேந** – எதனால், **அஹம்** – நான், **ஸ்ரேய:** – மேன்மையை, **ஆப்நுயாம்** – அடைவேனோ, **தத் ஏகம்** – அந்த ஒன்றை, **நிஸ்சித்ய** – தீர்மானித்து, **வத$_3$** – கூறுங்கள்.

குழம்பியது போன்ற பேச்சினால் என் புத்தியைக் கலக்குகிறீர்கள் போலிருக்கிறதே! எதனால் நான் மேன்மையை அடைவேனோ அந்த ஒன்றைத் தீர்மானித்துக் கூறுங்கள்."

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'குழம்பியது போன்ற சொற்களினால், என் புத்தியைக் கலக்குகிறீர்கள் போலிருக்கிறதே' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எந்த வாக்கியத்தில் ஒரு ஸாதனம் நிச்சயமாகவும், தெளிவாகவும் சொல்லப்படாமல் பலவிதமான கருத்துக்கள் கலந்து பேசப்படுகின்றதோ, அந்த வாக்கியம் 'குழம்பியது' எனப்படும். இத்தகைய குழம்பியது போன்ற சொற்களால், கேட்பவனுடைய புத்தி ஒரு முடிவுக்கும் வரமுடியாமல் தடுமாறுகிறது. பகவானுடைய வசனங்களின் தாத்பர்யத்தைப் புரிந்து கொள்ளாமையினால்தான் அர்ஜுனனுக்கு அவருடைய சொற்கள் குழப்பம் தருபவை போலத் தோன்றுகின்றன. 'ஏனெனில் புத்தியோகத்தைக் காட்டிலும் கர்மம் மிகவும் இழிவானது; நீ புத்தியைச் சரணடைவாயாக' (2/49) என்ற வாக்கியத்திலிருந்து ஞானத்தின் பெருமையையும், கர்மங்களின் இழிவையும் பகவான் சொல்லி, 'ஞானத்தைக் கடைப்பிடிப்பாய்' என்று எனக்கு ஆணையிடுகிறார் என்றும், புத்தியோகத்தை ஏற்றவன் புண்ய பாவங்களை இங்கேயே விட்டுவிடுகிறான் (2/50) என்ற வாக்கியத்தின் மூலம் புண்ய பாவங்களான கர்மங்களைச் செய்யாமல் விடுபவன் புத்தியோகி என்றும் பகவான் சொல்வதாக அர்ஜுனன் நினைக்கிறார். இதற்கு மாறாக, 'உனக்குக் கர்மம் செய்வதற்குத்தான் பொறுப்பு' (2/47). 'நீ யோகத்தில் நிலைபெற்றுக் கர்மங்களைச் செய்' (2/48) என்ற இந்த வாக்கியங்களால் பகவான் என்னைக் கர்மத்தில் ஈடுபடுத்துகிறார். இது தவிர 'முக்குணங்களைக் கடந்து நில்; ஆத்மவானாக இரு' (2/45) என்ற வாக்கியங்களில் கர்மத்தின் த்யாகத்தைக் கூறுகிறார் என்றும், 'தஸ்மாத்₃யுத்₄யஸ்வ ப₄ாரத' (2/18) (ஆகவே யுத்தம் செய்வாயாக), 'ததோ யுத்₃த₄ாய யுஜ்யஸ்வ' (2/38) (ஆகவே யுத்தத்திற்கு ஆயத்தம் ஆகுக), 'தஸ்மாத்₃யோக₃ாய யுஜ்யஸ்வ' (2/50) (நீ யோகத்திற்குத் தயாராகுக) என்ற வாக்கியங்களில், பகவான் கர்மங்களைச் செய்யத் தூண்டுகிறார் என்றும் அர்ஜுனன் நினைக்கிறார். இவ்விதம் மேலே சொன்ன சொற்கள் அவருக்கு முரண்பாடு உள்ளவையாகத் தோன்றுகின்றன. மேலும் 'குழம்பியது போல' என்றும், 'கலக்குகிறீர்கள் போலும்' என்றும் சொல்வதிலிருந்து அர்ஜுனன் தம் அறியாமையை உணர்ந்தே பேசுகிறார் என்பதும் தெரிகிறது. "உண்மையில் நீங்கள் தெளிவாகவே, தனித்தனியாக ஸாதனங்களைச் சொல்லி வருகிறீர்கள். ஒன்றையும் கலந்து சொல்லவில்லை. எனக்கு மிகவும் ப்ரியமானவர். என் நன்மையையே கோரி உபதேசம் செய்கிறீர்கள். என் புத்தியைக் குழப்ப வேண்டும் என்பதற்காக அல்ல. என் குழப்பத்தைத் தீர்ப்பதற்காகத்தான் இவ்வளவு உபதேசமும் செய்து வருகிறீர்கள். என் அறியாமை காரணமாக எனக்குத்தான் புரியவில்லை; ஏதோ நீங்கள் முன்னுக்குப்பின் முரணாகப் பேசுவது போலவும், என் புத்தியைக் குழப்புவது போலவும் தோன்றுகின்றது" என்கிறார் அர்ஜுனன்.

**கேள்வி:** பகவான் 2/49,50வது ச்லோகங்களில் சொன்னதைக் கேட்டு இவ்விதக் குழப்பம் அர்ஜுனனுக்கு வந்திருக்குமானால், 2/53வது ச்லோகத்தில், பகவான் பேசி முடித்தவுடன், இந்தக் கேள்வியை அர்ஜுனன் எழுப்பி இருக்கலாமே? நடுவில் இவ்வளவு இடைவெளி ஏன்?

**பதில்:** உண்மைதான். அர்ஜுனனுக்கு அப்பொழுதே இந்தக் குழப்பம் ஏற்பட்டுவிட்டது. அதனால் 2/54வது ச்லோகத்தில் அவர் இந்தக் கேள்வியை எழுப்பி இருக்கவேண்டியதுதான். ஆனால் 2/53வது ச்லோகத்தில், "உன்னுடைய புத்தியானது மோஹம் என்ற சேற்றைத் தாண்டிவிட்டால், உன் புத்தி பரமாத்மாவிடம் திடமாக நிலைபெற்றுவிட்டால், நீ பரமாத்மாவுடன் ஐக்யமாகிவிடுவாய்" என்று பகவான் சொன்னார். இதைக் கேட்டதும், அர்ஜுனனுக்குப் பரமாத்மாவை அடைந்துவிட்ட ஸ்திதப்ரக்ஞனுடைய இலக்கணம், நடத்தைகள் முதலியனவெல்லாம் பற்றி அறிந்து கொள்ள அதிகமான ஆவல் உண்டாயிற்று. இதன் காரணமாக அவர் தமது முதல் ஸந்தேஹத்தை மனதில் வைத்துக் கொண்டு, உடனடியாக ஸ்திதப்ரக்ஞனைப் பற்றிக் கேள்வி கேட்டார். இதற்கான பதில் கிடைத்ததும், குழப்பம் பற்றிய தம் ஐயத்தை வெளியிடுகிறார். மாறாக, தமது முதலாவது ஸந்தேஹத்தைப் பற்றி உடன் கேள்வி கேட்டிருந்தாரானால் ஸ்திதப்ரக்ஞனைப் பற்றிய பேச்சுக்கு அதிக இடைவெளி ஏற்பட்டிருக்கும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'எதனால் எனக்கு மேன்மை ஏற்படுமோ, அந்த ஓர் உபாயத்தை நிச்சயமாகத் தீர்மானித்துக் கூறுங்கள்' என்று அர்ஜுனன் கேட்பதற்கு என்ன கருத்து?

**பதில்:** "நீங்கள் இதுவரை சொன்ன உபதேசங்கள் குழப்புவன போல் தோன்றியதால் நான் என்ன செய்யவேண்டும் என்பதைத் தீர்மானிக்க முடியவில்லை. என்னை யுத்தம் செய்யத் தூண்டுகிறீர்களா அல்லது எல்லாச் செயல்களையும் விட்டுவிடச் சொல்கிறீர்களா? யுத்தம்தான் செய்யவேண்டுமென்பீர்களானால் எவ்விதம் செய்ய வேண்டும்? செயல்களை விட்டுவிட வேண்டுமென்பீர்களானால், அவற்றை விடுத்த பிறகு, நான் என்ன செய்யவேண்டும்? ஆகவே, நீங்கள் இவற்றை நன்றாக ஆலோசித்து, நான் இன்னதுதான் செய்யவேண்டுமென்று ஒரு ஸாதனத்தைக் குறிப்பிட்டுச் சொல்லுங்கள். அதை ஏற்று நான் மேன்மை அடையவேண்டும்" என்று அர்ஜுனன் கேட்கிறார்.

**கேள்வி:** இங்கு 'ஶ்ரேய:' என்ற சொல்லுக்கு 'மேன்மை' என்று பொருள் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ச்ரேயஸ்ஸை அடைவது என்றால் இவ்வுலகிலோ, பரலோகத்திலோ அடையக் கூடிய போகங்களை அடைவது என்று அர்ஜுனன் நினைக்கவில்லை. 'எதிர்ப்பே அற்ற ராஜ்யமோ, தேவர்களுக்கும் அதிபதி ஆகும் பேறோ என் துயரைத் தீர்க்காது' (2/8) என்று அர்ஜுனன் கூறிவிட்டார். ஆகவே, மேன்மை என்ற சொல்லாலே, இந்த சோக மோஹங்களை அறவே அகற்றி, நிலையான சாந்தியை அளித்து, நித்ய ஆனந்தத்தைத் தரும் பரம்பொருளை அடைவது என்பதைத்தான் சொல்கிறார். ஆகவே, 'ஶ்ரேய:' என்ற சொல்லுக்கு 'மேன்மை' என்று பொருள் கூறப்பட்டது.

**பொருத்தம்:** இவ்விதம் அர்ஜுனன் கேட்டவுடன் முதலில் அவருடைய கேள்விக்கு விடையளிக்கும் முறையில், 'என்னுடைய சொற்களில் குழப்பம் இல்லை. அவை மிகவும் தெளிவானவை; ஒவ்வொரு விஷயமும் தனித்தனியாக விளக்கப்பட்டுள்ளன' என்று சொல்லி, அர்ஜுனன் செய்ய வேண்டிய தீர்மானமான கடமையாக, பக்தியை ப்ரதானமாகக் கொண்ட கர்மயோகத்தை பகவான் விளக்குகிறார்—

श्रीभगवानुवाच

**लोकेऽस्मिन्द्विविधा निष्ठा पुरा प्रोक्ता मयानघ।**
**ज्ञानयोगेन साङ्ख्यानां कर्मयोगेन योगिनाम्॥ ३॥**

ஶ்ரீப₄க₃வாநுவாச

**லோகேऽஸ்மிந்த்₃விவித₄ா நிஷ்ட₂ா புரா ப்ரோக்தா மயாநக₄ ।**

**ஜ்ஞாநயோகே₃ந ஸாங்க்₂யாநாம் கர்மயோகே₃ந யோகி₃நாம் ॥ 3 ॥**

**ஶ்ரீப₄க₃வாநுவாச** – ஶ்ரீபகவான் கூறினார்: **அநக₄** – பாவமற்றவனே! **அஸ்மிந் லோகே** – இவ்வுலகில், **மயா** – என்னால், **த்₃விவித₄ா நிஷ்ட₂ா** – இருவகைகள் கொண்ட நிஷ்டை, **புரா** – முன்பே, **ப்ரோக்தா** – கூறப்பட்டது. (அவற்றில்), **ஸாங்க்₂யாநாம்** – ஸாங்க்ய யோகிகளுக்கு நிஷ்டை, **ஜ்ஞாநயோகே₃ந** – ஞானயோகத்தினாலும், **யோகி₃நாம்** – யோகிகளுக்கு நிஷ்டை, **கர்மயோகே₃ந** – கர்மயோகத்தினாலும் (அமைகிறது).

ஶ்ரீபகவான் கூறினார்: "பாவமற்றவனே! இவ்வுலகில் என்னால் இருவகைகள் கொண்ட நிஷ்டை முன்பே கூறப்பட்டது. அவற்றில் ஸாங்க்ய யோகிகளுக்கு நிஷ்டை ஞானயோகத்தினாலும் யோகிகளுக்கு நிஷ்டை கர்மயோகத்தினாலும் அமைகிறது.

**கேள்வி:** 'இவ்வுலகில்' – என்றால் எது?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இம்மானிட உலகில் என்று பொருள். ஞானயோகமும், கர்மயோகமும் மனிதர்களுக்கே உரிய ஸாதனை முறைகள்.

**கேள்வி:** 'நிஷ்டா' என்றால் என்ன? அது இருவிதம் என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** 'நிஷ்டா' என்றால் உறுதியான நிலை என்று பொருள். அது இருவிதம் என்றால், முக்யமாக ஸாதனங்களின் நிலை இருவகைப்படும் என்று பொருள். ஒரு மனநிலையில் மனிதன் தன் ஆத்மாவுக்கும், பரமாத்மாவுக்கும் வேற்றுமை இல்லை; தான் ப்ரம்மத்தைத் தவிர வேறல்ல என்று கருதுகிறான். மற்றொரு நிலையில் பரமாத்மா ஸர்வ வல்லமை படைத்தவர்; அகில உலகங்களையும் படைப்பவர்; அழிப்பவர்; தலைவர் என்றும், தன்னை அந்தப் பரமாத்மாவுக்கு ஊழியனாகவும் நினைக்கிறான்.

ப்ரக்ருதியில் உண்டான குணங்களே அந்த குணங்களில் செயல்படுகின்றன *(3/28)*. இவற்றிற்கும், எனக்கும் ஒரு சிறிதும் தொடர்பில்லை என்று அறிந்து, மனம், புலன்கள், உடல் இவற்றினால் ஏற்படும் செயல்களுக்குத் தான் கர்த்தா அல்லன் என்றிருப்பது; எந்தச் செய்கையிலும், அதன் பயனிலும் சிறிதுகூட அஹங்காரம், மமகாரம், பற்று, ஆசை கொள்ளாமல் இருப்பது; ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தைத் தவிரத் தான் வேறல்லன் என்று உணர்ந்து, இடைவிடாது பரமாத்மாவுடன் ஒன்றியிருப்பது; அதாவது ப்ரம்மமாகவே இருப்பது *(5/24, 6/27)* என்பதுதான் முதல் நிஷ்டை. இதற்கு ஞான நிஷ்டை என்று பெயர். இந்த நிலையை அடைந்த பிறகு அந்த யோகி மகிழ்ச்சி, சோகம், ஆசை இவற்றைக் கடந்தவனாகிவிடுகிறான். அவனுக்கு எங்கும் ஸமநோக்கு ஏற்பட்டுவிடுகிறது *(18/54)*. அப்போது அவன் அகில உலகத்தையும் கனவு போல, ஆத்மாவில் கற்பனை செய்யப்பட்டதாகப் பார்க்கிறான். ஆத்மாவே எங்கும் நிறைந்திருப்பதாகக் காண்கிறான் *(6/29)*. இந்த நிஷ்டையின் பயன் பரமாத்மாவின் உண்மை ஸ்வரூபத்தை உள்ளவாறே அறிவதாகும். இது ஞானயோக நிஷ்டை.

வர்ணம், ஆசிரமம், தன் இயல்பு, சூழ்நிலை இவற்றுக்கு ஏற்ப மனிதன் செய்தேயாக வேண்டும் என்று சாஸ்த்ரங்கள் விதிக்கும் கடமைகளை – சாஸ்த்ர விதிக்கு உட்பட்ட இயற்கையான கடமைகளை ந்யாயமாகவே ஆற்றவேண்டியதுதான் என்று ஏற்றுக் கொண்டு அவற்றை ஆற்றுவது; அந்தக் கர்மங்களிலும், அவற்றின் பயன்களிலும் மமகாரம், பற்று, ஆசை இவற்றை அறவே துறந்து ஒவ்வொரு கர்மமும் ஸித்தி பெற்றதா, இல்லையா என்பதிலும், அதன் பயனிலும் எப்பொழுதும் ஸமபுத்தியுடன் இருப்பது *(2/47,48)*; மேலும் புலன்களின் போகங்களிலும், அவற்றின் செயல்களிலும் பற்றற்றிருப்பது; அனைத்து ஸங்கல்பங்களையும் துறந்து யோகாரூடனாக இருப்பது *(6/4)* முதலியவைதான் கர்மயோக நிஷ்டை. பகவான் ஸர்வ வல்லமை படைத்தவர்; எல்லாவற்றிற்கும் ஆதாரமானவர்; எங்கும் நிறைந்தவர்; எல்லோருக்கும் உற்ற நண்பர்; எல்லாவற்றையும் தூண்டுபவர் — என்றறிந்து தன்னை முற்றிலும் அவருடைய ஊழியனாகக் கருதி, எல்லாச் செயல்களையும், அவற்றின் பயன்களையும் அவருக்கே ஸமர்ப்பணம் செய்வது *(3/30, 9/27,28)*; அவருடைய ஆணைக்கும், தூண்டுதலுக்கும் இணங்க, தான் செய்வதெல்லாம் அவருக்குரிய பூஜை என்ற கருத்துடன் அவற்றை எப்படிச் செய்ய வைக்கிறாரோ, அப்படியே எல்லாக் கடமைகளையும் ஆற்றுவது; அந்தக் கர்மங்களிலும், அவற்றின் பயன்களிலும் சிறிதுகூட மமகாரம், பற்று, ஆசை வைக்காமல் இருப்பது; பகவானுடைய திட்டப்படி எது நடந்தாலும் எப்பொழுதும் மகிழ்ச்சியுடன் இருப்பது; இடைவிடாது அவருடைய நாமகீர்த்தனம், குணம், பெருமை, ஸ்வரூபம் இவற்றைச் சிந்திப்பது *(10/9, 12/6, 18/57)* இவைதான் பக்தி ப்ரதானமான கர்மயோக நிஷ்டை. மேற்கூறிய கர்மயோகத்தில் நிஷ்டை பெற்றவனுக்கு விருப்பு–வெறுப்புகள், காம–க்ரோதங்கள் முதலிய குற்றங்கள் அகன்று எங்குமே ஸமபுத்தி ஏற்பட்டுவிடும். ஏனெனில், எல்லோர் உள்ளத்திலும் தன் ஸ்வாமி அமர்ந்திருக்கிறார் என்று காண்கிறான் *(15/15, 18/61)*. அகில உலகையும் பகவானுடைய ஸ்வரூபமாகவே அறிவான் *(7/7–12, 9/16–19)*. பகவானை அடைவதுதான் இந்த நிஷ்டையின் பயன்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'இருவிதமான நிஷ்டையைப் பற்றி முன்பே நான் சொல்லியிருக்கிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த இருவித நிஷ்டையை நான் உனக்கு இன்றுதான் முதன்முதலாகக் கூறுகிறேன் என்பதில்லை. படைப்பின் ஆரம்பத்திலேயும், அதற்குப்பின் பற்பல அவதாரங்களிலும், இந்த இருவித நிஷ்டையின் ஸ்வரூபத்தைத் தனித்தனியாகப் பிரித்துக் கூறிவிட்டேன். அதுபோல உனக்கும் 2/11 முதல் 2/30 வரை, இரண்டற்ற ஆத்மாவின் ஸ்வரூபத்தை விளக்கி, ஸாங்க்யயோக ரீதியில் நீ யுத்தம் செய்யவேண்டியதுதான் என்று கூறினேன் (2/18). மேலும் 2/39ல் யோக விஷயமான புத்தியை எடுத்துச் சொல்கிறேன் என்று ஆரம்பித்து, 2/40 முதல் 2/53 வரை கர்மயோகத்தையும், அதன் பயனையும் வர்ணித்து, 'இந்த யோகத்தில் நிலைபெற்று யுத்தம் முதலிய கடமைகளை ஆற்றவேண்டும்' என்று கூறினேன் (2/47-50). இந்த இரண்டையும் பிரித்துக் காட்டுவதற்காக 2/39ல் 'இதற்கு முன்னால் ஸாங்க்ய விஷயமாக உபதேசம் செய்தேன். இனி யோக விஷயமான உபதேசம் செய்வேன் என்று தெளிவாகக் கூறியிருக்கிறேன். ஆகவே, என் வார்த்தைகளில் குழப்பம் ஒன்றும் இல்லை' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'அநக' என்று அழைப்பதன் பொருள் என்ன?

**பதில்:** பாவமற்றவன் — அநகன். அர்ஜுனனை 'அநக' என்று பகவான் அழைக்கிறார். 'பாவம் உள்ளவன் எந்த நிஷ்டைக்கும் தகுதியற்றவன். நீயோ பாவமற்றவன். ஆகவே, நீ எளிதாக இந்த நிஷ்டைகளை அடைந்துவிடலாம். இதற்காகத்தான் நான் உனக்கு இவற்றைக் கூறுகிறேன்' என்று பொருள்.

**கேள்வி:** ஸாங்க்ய யோகிகளுடைய நிஷ்டை ஞானயோகத்தினாலும், யோகிகளுடைய நிஷ்டை கர்மயோகத்தினாலும் அமைவதாகச் சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த இருவிதமான நிஷ்டைகளில், ஸாங்க்ய யோகிகளுக்கு ஏற்படக் கூடிய நிஷ்டை ஞானயோகப் பயிற்சியினால், உடலில், 'தான்' என்ற அபிமானத்தைத் துறந்த பிறகுதான் ஏற்படும். கர்மயோக ஸாதனைகளைப் புரிந்து கொண்டிருக்கும்போதே, கர்மங்களிலும், அவற்றின் பயன்களிலும் மமகாரம், பற்று, ஆசை இவற்றைத் துறந்து, வெற்றி-தோல்விகளில் ஸமபாவனை வந்தபிறகு, கர்மயோகிக்கு நிஷ்டை அமையும். மேலே சொன்ன இந்த இரண்டுவிதமான நிஷ்டைகளுக்கும் தகுதி முன்பதிவான ஸம்ஸ்காரங்கள் ச்ரத்தை, ருசி இவற்றுக்கு ஏற்பத் தனித்தனியாக அமையும். இவையிரண்டும் ஒன்றுக்கொன்று தொடர்பற்றவை.

**கேள்வி:** ஞானயோகம், கர்மயோகம் என்ற இரண்டு ஸாதனைகளையும் ஒருங்கே செய்கிறவனுக்கு எந்த நிஷ்டை ஸித்திக்கும்?

**பதில்:** இவை இரண்டும் ஒன்றுக்கொன்று மாறானவை. ஒரு மனிதன் ஒரே நேரத்தில் இரண்டு ஸாதனைகளையும் புரிய முடியாது. ஏனெனில், ஸாங்க்ய யோக ஸாதனையில் ஆத்மா, பரமாத்மா என்ற பேதமில்லாமல், பரமாத்மாவினுடைய நிர்குணமான, உருவமற்ற, ஸத் சித் ஆனந்தமயமான ஸ்வரூபத்தையே சிந்தனை செய்து கொண்டு இருப்பான். கர்மயோகத்தில் பயனில் பற்றுதலைத் துறந்து, கடமைகளை ஆற்றிக் கொண்டு, பகவானை எங்கும் நிறைந்தவராகவும், ஸர்வ வல்லமை படைத்தவராகவும், எல்லாவற்றிற்கும் ஆண்டவராகவும் அறிந்து, அவருடைய திருநாமகீர்த்தனம், குணங்கள், பெருமை, ஸ்வரூபம் இவற்றை உபாஸிப்பவனாகத் தன்னைப் பிரித்துக் கொண்டு சிந்தனை செய்கிறான். ஆகவே, இரண்டையும் ஒரே நேரத்தில் கடைப்பிடிக்க இயலாது என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் 'ஸாங்க்ய நிஷ்டை' ஞானயோகத்தினால் ஸாதிக்கப்படும், 'யோக நிஷ்டை' கர்மயோகத்தினால் ஸாதிக்கப்படும் என்று கூறினார். அதை வலியுறுத்துவதற்காகக் கடமைகளைச் சிறிதும் ஆற்றாமல் த்யாகம் செய்வது எந்த நிஷ்டைக்கும் உதவாது என்று இங்கே கூறுகிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



न कर्मणामनारम्भान्नैष्कर्म्यं पुरुषोऽश्नुते ।
न च सन्न्यसनादेव सिद्धिं समधिगच्छति ॥ ४ ॥

ந கர்மணாமநாரம்ப₄ாந்நைஷ்கர்ம்யம் புருஷோऽஸ்நுதே ।
ந ச ஸந்ந்யஸநாதே₃வ ஸித்₃தி₄ம் ஸமதி₄க₃ச்ச₂தி ॥ 4 ॥

**புருஷ:** – மனிதன், **கர்மணாம் அநாரம்ப₄ாத்** – கர்மங்களைச் செய்ய ஆரம்பிக்காமல் இருப்பதாலேயே, **நைஷ்கர்ம்யம்** – நிஷ்கர்ம நிலையை (கர்மயோக நிஷ்டையை), **ந அஶ்நுதே** – அடைவதில்லை. **ஸந்ந்யஸநாத் ஏவ** – (கர்மங்களைச் செய்யாமல்) துறப்பதாலேயே, **ஸித்₃தி₄ம் ச** – ஸித்தியை அதாவது ஸாங்க்யயோக நிஷ்டையையும், **ந ஸமதி₄க₃ச்ச₂தி** – பெறுவதில்லை.

மனிதன் கர்மங்களைச் செய்ய ஆரம்பிக்காமல் இருப்பதாலேயே நிஷ்கர்ம நிலையை – கர்மயோக நிஷ்டையை அடைவதில்லை. கர்மங்களைச் செய்யாமல் துறப்பதாலேயே ஸித்தியை அதாவது ஸாங்க்யயோக நிஷ்டையையும் பெறுவதில்லை.

**கேள்வி:** 'நைஷ்கர்ம்யம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? மனிதன் கடமைகளை ஆற்ற ஆரம்பிக்காமல் நைஷ்கர்ம்யத்தை அடைய முடியாது என்றால் என்ன பொருள்?

**பதில்:** கர்மயோகத்தின் பழுத்த நிலை என்பது முன் ச்லோக உரையில் 'யோகநிஷ்டா' என்ற பெயரில் சொல்லப்பட்டது. அதுவே 'நைஷ்கர்ம்யம்'. இந்த நிஷ்டையை எய்தியவன் எல்லாக் கடமைகளையும் ஆற்றிக் கொண்டே இருந்தாலும், அவற்றிலிருந்து முற்றிலும் விடுதலை பெறுகிறான். அவனுடைய செயல்கள் பந்தத்திற்குக் காரணமாவதில்லை (4/22,41). இக்காரணத்தினால் அந்த நிலையை 'நைஷ்கர்ம்யம்' என்று சொல்வர். இந்த நிலை மனிதன் பற்றற்றுக் கடமைகளை ஆற்றுவதால் அடையக் கூடியது. கடமைகளை ஆற்றாமல் அடையக் கூடியதன்று. ஆகவே, கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெறுவதற்கேற்ற உபாயம், கடமைகளை ஆற்றாமல் விடுவதன்று; அவற்றைப் பற்றில்லாமல், தவறாமல் ஆற்றுவதுதான். இதையே கடமைகளை ஆற்ற ஆரம்பிக்காமல் இருப்பதால் நைஷ்கர்ம்யத்தை அடைய முடியாது என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'கர்மயோகம்' என்பது கடமைகளை ஆற்றுவதுதானே? அதில் கடமைகளை ஆற்ற ஆரம்பிக்காமல் இருப்பது என்ற ஐயத்திற்கே இடமில்லையே! பின் எதற்குக் கர்மங்களை ஆரம்பிக்காமல் நைஷ்கர்ம்யத்தை அடைய முடியாது என்று கூறுகிறார்? இதைச் சொல்வதற்கு அவசியம் என்ன?

**பதில்:** 'கர்மங்களின் பயன்களையும், பற்றையும் துறந்துவிடு' என்று பகவான் அர்ஜுனனுக்குச் சொல்கிறார். அதன் பயன் கர்மபந்தத்திலிருந்து விடுதலை என்று கூறுகிறார் (2/51). இதிலிருந்து 'நான் கர்மம் செய்யாவிட்டாலும் கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெற்றுவிடலாமே?' என்று அவர் நினைத்துக் கொள்ளலாம். கர்மம் செய்தால்தானே கர்மபந்தம்; பின் கர்மம் செய்யத் தேவை என்ன? இந்தக் குழப்பத்தைத் தீர்ப்பதற்காகத்தான் முதலில் கர்மயோகத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்தபோது பகவான் 'மா தே ஸங்கோ₃ऽஸ்த்வகர்மணி' (2/47) (கர்மம் செய்யாமல் இருப்பதில் உனக்கு ஈடுபாடு கூடாது) என்றும், அப்படியே 6வது அத்யாயத்திலும், 'யோகத்தில் முன்னேற விரும்புபவனுக்குக் கர்மங்களைச் செய்வதுதான் 'யோகாரூடன்' (யோகத்தில் தேர்ச்சி பெற்றவன்) ஆவதற்கு உபாயம்' (6/3) என்றும் சொல்கிறார். ஆகவே, உடற்சோர்வு என்ற பயத்தினாலோ, வேறு எந்தவிதமான விருப்பத்தாலோ, மனிதனுக்குச் செயல்படாமை என்ற குற்றம் வந்துவிடும். அது கர்மயோகத்திற்கு இடையூறு என்பதை வலியுறுத்தவே இவ்விதம் சொல்கிறார்.

**கேள்வி:** இங்கே 'ஸித்தி' என்றால் என்ன? கர்மங்களைச் செய்யாமல் விடுவதால் ஸித்தி கிடைக்காது என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பதில்: ஸித்தி என்றால், ஞானயோகம் பழுத்த நிலை. இதை முன் ச்லோகத்தின் விரிவுரையில் 'ஞானநிஷ்டா' என்று கூறினார். இதன் பயன் தத்வ ஞானம் பெறுவது. அதைத்தான் ஸித்தி என்று இங்கே கூறுகிறார். இந்த நிலையை எட்டிவிட்ட ஸாதகன் ப்ரம்ம நிலையை அடைகிறான். அவன் பார்வையில் ஆத்மாவுக்கும், பரமாத்மாவுக்கும் இடையே சிறிதுகூட பேதம் இருக்காது. அவன் தானே ப்ரம்மம் ஆகிவிடுவான். அதனால் அதை 'ஸித்தி' என்று கூறுகிறார். இந்த ஞானயோக ஸித்தி என்பது, தனது வர்ணாசிரமத்திற்கு ஏற்றவாறு விதிக்கப்பட்ட கடமைகளில் கர்த்தா என்ற அபிமானத்தைத் துறந்து, ஸகல போகங்களிலும் மமகாரம், பற்றுதல், ஆசைகளை விடுத்து, தான் வேறென்ற எண்ணம் தொலைந்து, இடைவிடாமல் பரமாத்ம ஸ்வரூப சிந்தனை செய்வதில் தேர்ச்சி பெறுகின்ற நிலை. கர்மங்களைச் செய்யாது விடுவதால் மட்டும் இது கிடைக்காது. ஏனெனில் அஹங்காரம், மமகாரம், பற்று இவை அழியாமல் மனிதன், தான் வேறென்ற எண்ணம் அகன்று பரமாத்மாவில் நிலை பெற முடியாது. ஆனால் மனம், புத்தி, உடல் இவற்றால் ஆற்றப்படும் செயல்களில் தன்னைக் கர்த்தா என்று கருதாமல், தனித்துப் பார்வையாளன் (ஸாக்ஷி) போல இருப்பதால் *(14/19)* மேலே சொன்ன நிலையைப் பெறலாம். ஆகவே, ஸாங்க்யயோகியும் வர்ணாசிரமங்களுக்கு உரிய கடமைகளை விடுவதற்கு முயற்சி செய்யாமல், அவற்றில் கர்த்தா என்ற அபிமானம், மமகாரம், பற்று, ஆசைகள் இல்லாமல் இருக்கவேண்டும். இந்தக் கருத்தை விளக்குவதற்காகவே இங்கே 'கர்மங்களை விடுவதால் மட்டும் ஸித்தி பெற முடியாது' என்று கூறுகிறார்.

கேள்வி: 'அநாரம்பாத்', 'ஸந்ந்யஸநாத்' என்ற இரு சொற்களும் வெவ்வேறு கருத்துக்களைக் கூறுகின்றனவா அல்லது ஒரே கருத்தையா? வெவ்வேறு கருத்துக்களைக் கூறுகின்றன என்றால் என்ன வேறுபாடு?

பதில்: இரு சொற்களும் இங்கு வெவ்வேறு கருத்துக்களில்தான் உபயோகிக்கப் பட்டுள்ளன. 'ஆரம்பிக்காமல் இருப்பது' என்ற தொடரினால் கர்மயோகி தனக்கு விதிக்கப்பட்ட கடமைகளைச் செய்யாமல் இருப்பது யோகநிஷ்டைக்குத் தடங்கல் ஆகும் என்று கூறுகிறார். ஆனால் 'ஸந்ந்யஸநாத்' என்று சொல்லும்போது ஸாங்க்யயோகி கர்மங்களைச் செய்யாமல் விட்டுவிட்டால், ஸாங்க்ய நிஷ்டையைப் பெறுவதற்கு அது தடை ஆகாது. ஆனால், கர்மங்களை விடுவதால் மட்டும் ஸித்தி கிடைக்காது; ஸித்தியை அடைவதற்கு அவன் 'தான் கர்த்தா' என்ற அபிமானத்தை விடுத்து ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்துடன் அபேதமான நிலையில் இருப்பது அவசியம் என்று காட்டுகிறார். ஆகவே கர்மங்களைச் செய்யாமல் விடுவது முக்யமல்ல. உள்ளார்ந்த த்யாகம் முக்யம். கர்மயோகிக்கோ கர்மங்களை முழுமையாக விடக் கூடாது என்றே விதிக்கப்பட்டுள்ளது. இதுதான் இரு சொற்களுக்கும் உள்ள வேறுபாடு.

பொருத்தம்: இவ்விதம் கர்மயோகி கடமைகளைத் தவிர்த்தால், அது யோகநிஷ்டையை அடைவதில் இடையூறு என்றும், ஸாங்க்யயோகி ஸித்தியடைவதில் வெளிப்படையான கர்மங்களை விட்டுவிடுவது என்பது அவ்வளவு முக்யமல்ல என்றும் கூறினார். அர்ஜுனன் கடமைகளை ஆற்றத்தான் வேண்டுமென்பதற்குப் பற்பல காரணங்களைக் கூறி, கர்மத்தைச் செய்துதான் ஆகவேண்டும் என்று முடிவு கூறுவதற்காக, முதலில் கர்மங்களை அறவே விட்டுவிடுவது என்பது முடியாத செயல் என்று கூறுகிறார்—

न हि कश्चित्क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत्।
कार्यते ह्यवशः कर्म सर्वः प्रकृतिजैर्गुणैः ॥ ५ ॥

ந ஹி கஸ்சித்க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத் ।
கார்யதே ஹ்யவஸ: கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜைர்குணை: ॥ 5 ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


**ஹி** – ஸந்தேஹமின்றி, **கஶ்சித்** – எந்த ஒருவனும், **ஜாது** – எக்காலத்திலும், **க்ஷணம் அபி** – ஒருகணம் கூட, **அகர்மக்ருத்** – செயல் புரியாமல், **ந திஷ்டதி** – இருப்பதில்லை. **ஹி** – ஏனெனில், **ஸர்வ:** – மனித ஸமுதாயம் அனைத்தும், **ப்ரக்ருதிஜை: குணை:** – ப்ரக்ருதியிலிருந்து உண்டான குணங்களால், **அவஶ:** – தன் வசமிழந்து, **கர்ம கார்யதே** – (வேறு வழியின்றி) செயல் செய்யத் தூண்டப்படுகிறது.

ஸந்தேஹமின்றி எந்த ஒருவனும் எக்காலத்திலும் ஒருகணம்கூடச் செயல் புரியாமல் இருப்பதில்லை. ஏனெனில் மனித ஸமுதாயம் அனைத்தும் ப்ரக்ருதியிலிருந்து உண்டான குணங்களால் தன்வசமிழந்து வேறு வழியின்றிச் செயல் செய்யத் தூண்டப்படுகிறது.

**கேள்வி:** 'எந்த மனிதனும், எக்காலத்திலும் ஒரு கணம் கூடச் செயல்புரியாமல் இருக்க முடியாது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எழுந்திருப்பது, உட்காருவது, உண்பது, அருந்துவது, தூங்குவது, விழிப்பது, நினைப்பது, சிந்திப்பது, கனவு காண்பது, த்யானம் செய்வது, ஸமாதியில் அமர்வது எல்லாமே செயல்கள்தாம். ஆகவே உடல் உள்ளவரை மனிதன் தன் இயல்புக்கு ஏற்றவாறு ஏதாவது செயல் செய்து கொண்டுதான் இருப்பான். எந்த மனிதனும் ஒரு கணம்கூட ஏதாவது ஒரு வகையில் செயல்புரியாமல் இருக்க முடியாது. ஆனால் அவற்றில் 'நான் கர்த்தா' என்ற எண்ணத்தைத் துறக்கலாம். மமகாரம், பற்று, பயனைக் கருதுதல் இவற்றை த்யாகம் செய்யலாம். இப்படிச் செய்வதுதான் அவற்றை முழுமையாக த்யாகம் செய்வது என்பதன் பொருள்.

**கேள்வி:** 'ஒருவன்' என்ற சொல்லில் குணாதீதனான புருஷனும் அடக்கமா, இல்லையா?

**பதில்:** குணாதீதனான ஞானிக்கு குணங்களுடனோ, அவற்றின் செயல்களுடனோ ஒரு ஸம்பந்தமும் இல்லை. அவன் குணங்களுக்கு வசப்பட்டுச் செயல் புரிகிறான் என்பதில்லை. ஆகவே, 'ஒருவன்' என்ற சொல்லில் குணாதீதன் அடங்கவில்லை. ஆனாலும், மனம், புத்தி, புலன்களுடன் கூடிய அவனுடைய உடல் உலகத்தார் கண்களில் தென்படுகிறதே. அதன் மூலம் அவனுடைய, மற்றும் உலகத்தாருடைய ப்ராரப்தத்திற்கு ஏற்றவாறு பெயரளவில் செயல் நடந்து கொண்டிருக்கலாம். ஆனால், அவனிடம் 'தான் கர்த்தா' என்ற அபிமானமில்லாதபடியால், அந்தச் செயல்கள் உண்மையில் செயல்களாகா. அவனுடைய மனம், புத்தி, புலன்களுடன் கூடிய உடலையும், 'ஒருவன்' என்று சொல்வதில் தவறில்லை. ஏனெனில் அவை குணங்களின் செயல்களானபடியால் குணங்களுக்கப்பாற்பட்டவையல்ல. ஆனால் உடலை முழுவதும் கடந்து நிற்கும்போதுதான் ஞானி குணாதீதன் ஆகிறான்.

**கேள்வி:** 'ஸர்வ:' என்ற சொல் யாரைக் குறிக்கிறது? அவர்கள் குணங்களுக்கு வசப்பட்டு, செயல்களைச் செய்ய வேண்டியிருக்கிறது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஸர்வ:' என்ற சொல்லில் எல்லா ப்ராணிகளும் அடக்கம். ஆனால் இங்கு முக்யமாக மனித ஸமுதாயத்தையே இச்சொல் குறிப்பிடுகிறது. ஏனெனில் கர்மங்களுக்கு மனிதன்தான் பொறுப்பு ஆகிறான். முற்பிறவிகளில் செய்யப்பட்ட கர்மங்களின் ஸம்ஸ்காரத்தினால் அமைந்த ஸ்வபாவத்திற்கு இணங்கச் செயல்களில் ஈடுபடுகிறான். இதையே குணங்களுக்கு வசப்பட்டுச் செயல்களைச் செய்ய வேண்டியிருக்கிறது என்று கூறுகிறார்.

**கேள்வி:** ப்ரக்ருதியில் உண்டான குணங்கள் என்றால் என்ன?

**பதில்:** ஸாங்க்ய சாஸ்த்ரத்தில் முக்குணங்கள் ஸமமாக இருக்கும் நிலையை 'ப்ரக்ருதி' என்று கூறுகிறார்கள். ஆனால் பகவானுடைய அபிப்ராயத்தில், முக்குணங்களும் ப்ரக்ருதியின் விளைவுகளே. இதைத் தெளிவாக்குவதற்காகத்தான் ப்ரக்ருதியில் உண்டான என்ற அடைமொழி இடுகிறார். இதே மாதிரி சில இடங்களில், 'ப்ரக்ருதிஸம்பவாந்' *(13/19)*, 'ப்ரக்ருதிஜாந்' *(13/21)*, 'ப்ரக்ருதிஸம்பவா:' *(14/5)*, 'ப்ரக்ருதிஜை:' *(18/40)* என்ற அடைமொழிகளைக் கூறி, குணங்கள் ப்ரக்ருதியின் விளைவுகள் என்பதை உறுதிப்படுத்துகிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** இங்கே 'ப்ரக்ருதி' என்ற சொல் எதைக் குறிக்கிறது?

**பதில்:** எல்லாக் குணங்களும் அவற்றின் விரிவுகளும் சேர்ந்த இந்த ஜடமான, காணப்படுகின்ற ப்ரபஞ்சத்திற்குக் காரணமான பகவானுடைய அநாதியான மூலப்ரக்ருதியைத்தான் இங்கே 'ப்ரக்ருதி' என்கிறார். இதையே 'அவ்யக்தம்' என்றும், 'அவ்யாக்ருதம்' என்றும், 'மஹத்ப்ரஹ்மம்' என்றும் கூறுவர்.

**பொருத்தம்: மனிதன் கணநேரம் கூடச் செயல் புரியாமல் இருக்க முடியாது என்று முன் ச்லோகத்தில் கூறினார். புலன்களின் இயக்கத்தைப் பிடிவாதமாகத் தடுத்து நிறுத்தியும் மனிதன் செயல்களைத் துறக்க முடியுமே என்ற ஸந்தேஹம் எழுகிறது. இப்படி மேலெழுந்தவாரியாகச் செயல்கள் புரியாமல் இருப்பது கர்மங்களை த்யாகம் செய்வது ஆகாது என்று இனிச் சொல்ல ஆரம்பிக்கிறார்—**

**कर्मेन्द्रियाणि संयम्य य आस्ते मनसा स्मरन्।**
**इन्द्रियार्थान्विमूढात्मा मिथ्याचारः स उच्यते॥ ६॥**

**கர்மேந்த்₃ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மநஸா ஸ்மரந் ।**

**இந்த்₃ரியார்தா₂ந்விமூட₄ாத்மா மித்₂யாசார: ஸ உச்யதே ॥ 6 ॥**

**ய: விமூட₄ாத்மா** – அறிவிலியான எவன், **கர்மேந்த்₃ரியாணி** – புலன்கள் அனைத்தையும் வலுவில் (வெளித்தோற்றத்தில்), **ஸம்யம்ய** – அடக்கிவிட்டு, **மநஸா** – மனதினால், **இந்த்₃ரியார்தா₂ந்** – (அந்தப்) புலன்நுகர் பொருட்களை, **ஸ்மரந் ஆஸ்தே** – நினைத்துக் கொண்டிருக்கிறானோ, **ஸ:** – அவன், **மித்₂யாசார:** – பொய் நடத்தையுள்ளவன் (ஆஷாடபூதி), **உச்யதே** – (எனக்) கூறப்படுகிறான்.

அறிவிலியான எவன் புலன்கள் அனைத்தையும் வலுவில் – வெளித்தோற்றத்தில் அடக்கி விட்டு மனதினால் அந்தப் புலன்நுகர் பொருட்களை நினைத்துக் கொண்டிருக்கிறானோ, அவன் பொய் நடத்தையுள்ளவன் – ஆஷாடபூதி எனக் கூறப்படுகிறான்.

**கேள்வி:** இங்கு 'கர்மேந்த்ரியங்கள்' என்ற சொல் எவற்றைக் குறிப்பிடுகிறது? அவற்றை வலுவில் கட்டுப்படுத்துவது என்றால் என்ன?

**பதில்:** இங்கு 'கர்மேந்த்ரிய' என்ற சொல் பரிபாஷைச் சொல்லாக உபயோகப் படுத்தப்படவில்லை. மனிதன் உலகியலில் செயல்படுகின்ற எல்லாப் பொறிகளையும், புலன்களையும் அது குறிக்கும். காது, சருமம், கண், நாக்கு, மூக்கு, வாய், கை, கால், ஆண்–பெண் குறி, புட்டம் என்ற பத்துப் பொறிகளையுமே அது குறிக்கிறது. கீதையில் எங்குமே காது, கண் முதலியவற்றை ஞானேந்த்ரியங்கள் (அறிவுப்புலன்கள்) என்று தனிப்படக் கூறவில்லை. மேலும் இங்கு 'கர்மேந்த்ரியம்' என்ற சொல்லுக்கு, வாக்கு முதலிய ஐந்து புலன்களை மட்டும் பொருளாகக் கொண்டால், காது, கண்களை அடக்க வேண்டும் என்பது விட்டுப் போய் விடுகிறது. அப்பொழுது காது, கண்களை உபயோகப்படுத்துபவனைக் கபட வேஷக்காரன் என்று சொல்ல முடியாமல் போய்விடும். வாக்கு முதலிய ஐந்து புலன்களை அடக்குவது போலக் கண், காதுகள் இவற்றை அடக்குவதையும் சேர்த்துச் சொன்னால்தான், இங்கே கூறப்படும் வலுவில் அடக்கி வைத்த செயலற்ற தன்மை முழுமை பெறும். பகவான் அவ்வாறு ஏதும் கூறவில்லை. அடுத்த ச்லோகத்தில் கர்மேந்த்ரியங்க்ளினால் கர்மயோகத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று சொல்கிறார். அது கை, கால்கள் என்ற கர்மேந்த்ரியங்களால் மட்டும் நடைபெறாது. அங்கு எல்லாப் புலன்களின் கட்டுப்பாடும் தேவைப்படுகின்றது. ஆகவே, இங்கே 'கர்மேந்த்ரியம்' என்ற சொல்லுக்கு எந்தெந்தப் புலன்களால் எல்லாச் செயல்களும் நடைபெறுமோ, அத்தனைப் புலன்களையும் சேர்த்தே பொருள் கொள்ள வேண்டும். கேட்பது, பார்ப்பது முதலிய செயல்களை வலுவில் தடுப்பதே இங்கே கூறப்படும் புலனடக்கம்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** ஒரு ஸாதகன் பகவானை த்யானம் செய்யவேண்டும் என்பதற்காகவும், புலன்களை வசப்படுத்துவதற்காகவும், போகப்பொருட்களிலிருந்து புலன்களைத் தடுத்து நிறுத்தினாலும், வசப்படாத அவனுடைய மனம் போகப் பொருளைச் சிந்திக்குமானால் அவனும் வேஷதாரிதானா?

**பதில்:** அவன் வேஷதாரி அல்லன்; ஸாதகன்தான். ஏனெனில், வேஷதாரியைப் போல அவனுடைய லக்ஷ்யம் போகப்பொருட்களைச் சிந்திப்பது அன்று. அவன் மனதையும் வசப்படுத்தத்தான் விழைகிறான். ஆயினும் பழக்கம், பற்று, ஸம்ஸ்காரம் இவற்றால் மனம் தானாகக் கட்டுப்படாமல், போக விஷயங்கள்பால் ஓடுகிறது. அதில் அவனுடைய தவறு எதுவுமில்லை. ஸாதனை ஆரம்பத்தில் இப்படி நேர்வது இயற்கைதான்.

**கேள்வி:** இங்கு 'ஸம்யம்ய' என்ற சொல்லுக்கு 'வசப்படுத்தி' என்று பொருள் கூறினால் என்ன?

**பதில்:** புலன்களை வசப்படுத்தியவன் வேஷதாரி ஆகமாட்டான். புலன்களை வசப்படுத்துவது யோகத்தின் அங்கம் ஆயிற்றே! புலன்களை வசப்படுத்தாமல் மேலெழுந்தவாரியாக வலுவில் தடை செய்வதே இங்கு 'ஸம்யம்ய' என்ற சொல்லுக்குப் பொருள்.

**கேள்வி:** 'புலன் நுகர் பொருட்கள்' என்றால் எவை?

**பதில்:** பத்துப் பொறி புலன்களால் நுகரப்படும் அனைத்துப் பொருட்களும் அந்தச் சொல்லின் பொருள். 5/9ல் இதே பொருளில்தான் 'இந்த்ரியார்த்தேஷு' என்ற சொல் உபயோகப்படுத்தப்படுகிறது.

**கேள்வி:** அவன் 'பொய் நடத்தையுள்ளவன்' என்றால் என்ன கருத்து?

**பதில்:** மேலே சொன்னபடி வெளிப்படையாக மட்டும் புலன்களை அடக்குபவன், மீன்களை ஏமாற்றுவதற்காக அசையாமல் காத்திருக்கும் கபட எண்ணமுள்ள கொக்கைப் போன்று வேஷம் போடுகிறான். வெளிப்படையாக ஒரு கருத்தை வெளியிட்டு, மனதில் வேறு கருத்தைக் கொள்பவன் கபட வேஷக்காரன். அவனே, இந்த ச்லோகத்தில் 'பொய் நடத்தையுள்ளவன்' என்று கூறப்படுகிறான்.

**பொருத்தம்: இவ்விதம் வெளிப்படையாகப் புலன்களைத் தடை செய்பவனை, 'பொய் நடத்தையுள்ளவன்' என்று கூறி, பற்றை த்யாகம் செய்து பயனில் விருப்பமில்லாமல் கடமைகளை ஆற்றுபவன் யோகி என்று அவன் பெருமையைக் கூறுகிறார்—**

**यस्त्विन्द्रियाणि मनसा नियम्यारभतेऽर्जुन।**
**कर्मेन्द्रियैः कर्मयोगमसक्तः स विशिष्यते॥७॥**

**யஸ்த்விந்த்₃ரியாணி மநஸா நியம்யாரப₄தேऽர்ஜுந ।**

**கர்மேந்த்₃ரியை: கர்மயோக₃மஸக்த: ஸ விஶிஷ்யதே ॥ 7 ॥**

**து** – ஆனால், **அர்ஜுந** – அர்ஜுன! **ய:** – எவனொருவன், **மநஸா** – மனதினால், **இந்த்₃ரியாணி** – புலன்களை, **நியம்ய** – வசப்படுத்தி, **அஸக்த:** – பற்றில்லாதவனாக, **கர்மேந்த்₃ரியை:** – எல்லாப் புலன்களாலும், **கர்மயோக₃ம்** – கர்மயோகத்தை, **ஆரப₄தே** – கடைப்பிடிக்கிறானோ, **ஸ:** – அவனே, **விஶிஷ்யதே** – சிறந்தவன்.

ஆனால் அர்ஜுன! எவனொருவன் மனதினால் புலன்களை வசப்படுத்திப் பற்றில்லாதவனாக எல்லாப் புலன்களாலும் கர்மயோகத்தைக் கடைப்பிடிக்கிறானோ அவனே சிறந்தவன்.

**கேள்வி:** 'து' என்றால் என்ன கருத்து?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** வெளிப்படையாகச் செயல்களை விட்டுவிடுபவனைக் காட்டிலும், செயல்களில் ஈடுபட்டுக் கொண்டு, அதே நேரத்தில் புலன்களைத் தன்வசத்தில் வைத்திருக்கும் யோகி, மாறுபட்டவன் என்று காட்டுவதற்காக, 'து' என்று ஆரம்பிக்கிறார்.

**கேள்வி:** இங்கு 'இந்த்ரியாணி' என்ற சொல்லும், 'கர்மேந்த்ரியை:' என்ற சொல்லும் எந்தப் புலன்களைக் குறிக்கின்றன?

**பதில்:** இங்கு இரு சொற்களும் எல்லாப் பொறி புலன்களையும் குறிப்பிடுகின்றன. ஐம்புலன்களை மட்டும் வசப்படுத்தினால் எல்லாப் புலன்களையும் வசப்படுத்தியது ஆகாது. ஐம்புலன்களால் மட்டும் கர்மயோகம் நடைபெறாது. பார்ப்பது, கேட்பது முதலியன இன்றிக் கர்மயோகத்தை ஆற்றுவது ஸாத்யமில்லை. ஆகவே, மேலே சொன்ன இரு சொற்களாலும் அனைத்துப் புலன்களையுமே குறிப்பிடுவதாகக் கொள்ள வேண்டும். 3/41ல் கூடப் 'புலன்களை அடக்கி' என்னும்போது எல்லாப் புலன்களையும் வசப்படுத்துவதைத்தான் குறிக்கிறார்.

**கேள்வி:** இங்கே 'நியம்ய' என்ற சொல்லுக்கு 'வசப்படுத்தி' என்ற பொருள் கொள்ளாமல் 'தடுத்து' என்று பொருள் கொண்டால் என்ன தவறு?

**பதில்:** 'தடுத்து' என்ற பொருள் இங்கே சரியாகப் பொருந்தாது. ஏனெனில், புலன்களைத் தடைப்படுத்தினால் அவை கர்மயோகத்தைச் செய்யமுடியாது.

**கேள்வி:** எல்லாப் புலன்களாலும் கர்மயோகத்தைக் கடைப்பிடிப்பது என்றால் என்ன?

**பதில்:** விதிக்கப்பட்ட கடமைகளை ஆற்றும்போது, அவற்றின் பயனான இவ்வுலக, பரலோக போகங்களில் விருப்பு-வெறுப்புகளை த்யாகம் செய்து, செய்த கர்மத்தின் வெற்றி-தோல்விகளில் ஸமபாவனையுடன் இருந்து, தன் வசப்பட்டுவிட்ட புலன்களின் மூலம் ஒலி முதலிய விஷயங்களை ஏற்று, யாகம், தானம், தவம், அத்யயனம், கற்பித்தல், மக்களைக் காப்பது, கொடுக்கல்-வாங்கல் செய்வது, மக்களுக்கு ஸேவை, உண்பது, உடுப்பது, தூங்குவது, விழிப்பது, நடப்பது, திரிவது, உட்காருவது, எழுந்திருப்பது முதலிய புலன்களால் ஆகக் கூடிய எல்லாச் செயல்களையும் சாஸ்த்ர முறைப்படி செய்து கொண்டே இருப்பதுதான், 'புலன்களால் கர்மயோகத்தைக் கடைப்பிடிப்பது' என்பதன் பொருள். 2/64ல், 'இதன் பயனாக மனத்தெளிவை அடையலாம்; துயரங்கள் எல்லாம் அழியும்' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**கேள்வி:** 'அவனே சிறந்தவன்' என்றால் என்ன பொருள்? அதாவது, முன் ச்லோகத்தில் சொல்லப்பட்ட பொய் நடத்தையுள்ளவனைக் காட்டிலும் சிறந்தவன் என்று பொருளா?

**பதில்:** கர்மயோகி எல்லா ஸாதாரண மனிதர்களைக் காட்டிலும் சிறந்தவன் என்று பெருமையாகக் கூறுகிறார். பொய்யொழுக்கமுடையோனைக் காட்டிலும் சிறந்தவன் என்று கூறுவது பொருந்தாது. முன் ச்லோகத்தில் சொல்லப்பட்டவன் அஸுரஸம்பத்துடைய கபடன். அவனைக் காட்டிலும் பயனில் கருத்துடன் நல்ல கார்யம் செய்பவன் மிகச் சிறந்தவன். மேலும், தெய்வ ஸம்பத்தோடு கூடிய கர்மயோகியையும், பொய் நடத்தையுள்ளவனையும் ஒப்பிடுவது வேசியைக் காட்டிலும் பதிவ்ரதை உயர்ந்தவள் என்று கூறுவதை ஒக்கும். கர்மயோகி வேஷதாரியை விடச் சிறந்தவன் என்று உயர்வு தோன்றக் கூறுவது, அவனை இகழ்வதே ஆகும். ஆகவே, இங்கே கர்மயோகி சிறந்தவன் என்பதற்கு அனைவரிலும் சிறந்தவன் என்று பொருள் கொள்வதே ந்யாயம். இங்கே கர்மயோகியின் பெருமையைத்தான் பேசுகிறார்.

பொருத்தம்: **'ஏன் என்னை பயங்கரமான கர்மத்தில் ஈடுபடுத்துகிறீர்கள்?' என்று அர்ஜுனன் கேட்டார். அதற்கு விடையாக, வெளிப்படையாகக் கர்மத்தைச் செய்யாமல் தவிர்ப்பவனைப் பொய் நடத்தையுள்ளவன் என்று நிந்தித்து, உண்மையான கர்மயோகியைப் புகழ்ந்து, 'நீ கர்மம் செய்வாயாக' என்று ஆணையிடுகிறார்—**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**नियतं कुरु कर्म त्वं कर्म ज्यायो ह्यकर्मणः।**
**शरीरयात्रापि च ते न प्रसिद्ध्येदकर्मणः॥ ८॥**

**நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண: ।**

**ஶரீரயாத்ராபி ச தே ந ப்ரஸித்₃த்₄யேத₃கர்மண: ॥ 8 ॥**

**த்வம்** – நீ, **நியதம் கர்ம** – சாஸ்த்ரங்களால் விதிக்கப்பட்ட கர்மங்களை, **குரு** – ஆற்றுவாயாக. **ஹி** – ஏனெனில், **அகர்மண:** – கர்மங்கள் செய்யாமல் இருப்பதைக் காட்டிலும், **கர்ம** – கர்மங்களை ஆற்றுவது, **ஜ்யாய:** – சிறந்தது. **ச** – மேலும், **அகர்மண:** – கர்மம் செய்யாமல் இருப்பதால், **தே** – உனக்கு, **ஶரீரயாத்ரா அபி** – உடலைப் பேணுவதுகூட, **ந ப்ரஸித்₃த்₄யேத்** – ஸாத்யமாகாது.

நீ சாஸ்த்ரங்களால் விதிக்கப்பட்ட கர்மங்களை ஆற்றுவாயாக. ஏனெனில் கர்மங்கள் செய்யாமல் இருப்பதைக் காட்டிலும் கர்மங்களை ஆற்றுவது சிறந்தது. மேலும் கர்மம் செய்யாமல் இருப்பதால், உனக்கு உடலைப் பேணுவதுகூட ஸாத்யமாகாது.

**கேள்வி:** 'நியதம் கர்ம' என்றால் என்ன? 'அதைச் செய்' என்று ஆணையிடுவதன் கருத்து என்ன?

**பதில்:** வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை இவற்றிற்கேற்ப மனிதனுக்கு சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டு, ஸ்வதர்மங்களாகிவிட்ட கடமைகள் அனைத்தும் 'நியதம் கர்ம' ஆகும். 'அதைச் செய்வாய்' என்று ஆணையிட்டதைச் சரிவரப் புரிந்து கொள்ளாத அர்ஜுனன், 'நான் என்ன செய்ய வேண்டுமென்பதை முரண்பாடின்றிக் குறிப்பிட்டுச் சொல்லுங்கள்' என்று கேட்டதால், அந்த முரண்பாட்டை பகவான் நீக்குகிறார்.

"உனது விருப்பப்படியே உறுதியாக நீ என்ன செய்யவேண்டும் என்பதை உனக்குச் சொல்கிறேன். மேலே சொன்ன காரணங்களால் கர்மங்களைச் செய்யாமலே விடுவது என்பது உனக்கு ஹிதமன்று. ஆகவே, சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளை நீ ஆற்றித்தான் ஆகவேண்டும். யுத்தம் செய்வது உன்னுடைய ஸ்வதர்மம். மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது அது ஹிம்ஸை – கோரமானது என்று தோன்றினாலும், உண்மையில் அது உனக்கு கோரமான கர்மம் அன்று. பற்றற்று நீ யுத்தம் புரிந்தால் அது உனக்கு மேன்மை தரும். ஆகவே, நீ ஐயம் துறந்து யுத்தம் புரிய எழுந்திரு" என்று பகவான் கூறுகிறார்.

**கேள்வி:** 'கர்மம் செய்யாமல் விடுவதைக் காட்டிலும் கர்மம் செய்வது மேல்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கர்மம் செய்வதைக் காட்டிலும் கர்மம் செய்யாமல் இருப்பது மேல் என்பது பகவானின் கருத்து என்று அர்ஜுனன் நினைத்தார். பகவானது கருத்து அதுவன்று. பகவான் இங்கே அதைக் கூறுவதன் மூலம் அர்ஜுனனுடைய இக்குழப்பத்தைப் போக்குகிறார். விதிக்கப்பட்ட கடமைகளை ஆற்றுவதால், மனிதனுடைய மனம் தூய்மையடைகிறது. பாவங்களுக்குப் பரிஹாரம் ஏற்படுகிறது. கடமைகளை ஆற்றாமல் விட்டால் பாவம் வந்து சேர்கிறது. தூக்கம், சோம்பல், தடுமாற்றம் இவை ஏற்பட்டு, வீழ்ச்சி ஏற்படுகிறது (14/18). ஆகவே, கர்மம் செய்யாமல் இருப்பதைவிடக் கர்மம் செய்வது மிக மிக மேல். பற்றுடனோ, பாவ பரிஹாரமாகவோ கடமைகளை ஆற்றுவது கூடக் கடமைகளை ஆற்றாமல் விடுவதைக் காட்டிலும் சிறந்தது என்னும்போது பற்றற்றுச் செய்வது மிகச் சிறந்தது என்று சொல்லவும் வேண்டுமா?

**கேள்வி:** 'செயலாற்றாமல் இருந்தால் உன் அன்றாட வாழ்க்கையே நடைபெறாது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஒன்றுமே செய்யாமல் மனிதன் வாழவே முடியாது. வாழ்க்கை நடைபெறுவதற்காக ஏதாவது செய்து கொண்டுதான் இருக்கவேண்டும். இந்த நிலையில்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



விதிக்கப்பட்ட கர்மங்களை விட்டுவிட்டால், வீழ்ச்சி என்பது இயல்பாகவே நேரும். ஆகவே, கர்மம் செய்யாமல் இருப்பதைவிடக் கர்மம் செய்வதே எல்லாவிதங்களிலும் உத்தமம் ஆகும்.

**பொருத்தம்: சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளான யாகம், தானம், தவம் முதலிய புண்ய கர்மங்கள் கூட பந்தத்திற்குக் காரணம் ஆகும் என்று சொல்கிறார்களே? அப்படியிருக்கும்போது கர்மம் செய்யாமல் விடுவதைக் காட்டிலும் கர்மம் செய்வது மேல் என்பது எப்படி ஆகும் என்பது குறித்துச் சொல்கிறார்—**

**यज्ञार्थात्कर्मणोऽन्यत्र लोकोऽयं कर्मबन्धनः।**
**तदर्थं कर्म कौन्तेय मुक्तसङ्गः समाचर॥ ९॥**

**யஜ்ஞார்த₂ாத்கர்மணோऽந்யத்ர லோகோऽயம் கர்மப₃ந்த₄ந: ।**
**தத₃ர்த₂ம் கர்ம கௌந்தேய முக்தஸங்க₃: ஸமாசர ॥ ९ ॥**

**யஜ்ஞார்த₂ாத்** – யாகத்தின் பொருட்டுச் செய்யப்படுகின்ற, **கர்மண:** – கர்மம் தவிர, **அந்யத்ர** – வேறு செயல்களில் (ஈடுபடுவதனாலேயே), **அயம் லோக:** – இம்மனித ஸமுதாயம், **கர்மப₃ந்த₄ந:** – கர்மங்களால் பந்தப்படுகிறது. **கௌந்தேய** – அர்ஜுன! **முக்தஸங்க₃:** – பற்றுதல் இல்லாமல், **தத₃ர்த₂ம்** – அந்த யாகத்தின் பொருட்டே, **கர்ம** – கடமையை, **ஸமாசர** – நன்கு ஆற்றுவாயாக.

யாகத்தின் பொருட்டுச் செய்யப்படுகின்ற கர்மம் தவிர வேறு செயல்களில் ஈடுபடுவதனாலேயே இம்மனித ஸமுதாயம் கர்மங்களால் பந்தப்படுகிறது. (ஆகையால்) அர்ஜுன! பற்றுதல் இல்லாமல் அந்த யாகத்தின் பொருட்டே கடமையை நன்கு ஆற்றுவாயாக.

**கேள்வி:** 'யாகத்திற்காகச் செய்யப்படும் கர்மங்கள் நீங்கலாக, பிற கர்மங்களால் மனித ஸமுதாயம் பந்தப்படுகிறது' என்றால் என்ன கருத்து?

**பதில்:** பகவான் கூறுவதாவது— யக்ஞத்தைத் தொடர்ந்து காக்கவேண்டும் என்பதற்காக மனிதன் செய்ய வேண்டியதாக விதிக்கப்பட்ட கடமைகள், பற்று இல்லாமலும், பயனைக் கருதாமலும் செய்யப்படுவதால், சாஸ்த்ரம் விதித்துள்ள அக்கர்மங்கள் பிணைப்புக்குக் காரணம் ஆக மாட்டா. அப்படிக் கடமைகளை ஆற்றுவதால் மனிதனுடைய மனம் பரிசுத்தம் அடைகிறது. அவன் பரமாத்மாவை அடைகிறான். இப்படி உலக நன்மைக்காக ஆற்றப்படும் கடமைகளைத் தவிர, மற்ற புண்ய-பாவ கர்மங்கள் எல்லாம் மறுபிறவிக்குக் காரணமாவதால், பந்தத்தை ஏற்படுத்துகின்றன. மனிதன் தன்னலம் பேணி நல்லதோ, கெட்டதோ செய்தால், அதன் பயனை அனுபவிப்பதற்காக ஊழ்வினைப்படி பலவித யோனிகளில் பிறக்க வேண்டியதாகிறது. திரும்பத் திரும்பப் பிறந்து இறப்பதுதான் 'பந்தம்' எனப்படும். பற்றுடன் செய்யப்படும் புண்ய கர்மங்களிலும், பாவ கர்மங்களிலும் ஈடுபட்டவன், அந்தக் கர்மங்களின் வழியே பந்தப்படுகிறான். ஆகவே, மனிதன் கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெற வேண்டுமானால் பற்றற்று, 'கடமையைச் செய்யத்தான் வேண்டும்' என்ற எண்ணத்துடன் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்யவேண்டும்.

**கேள்வி:** 'அயம் லோக:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** மனிதனுக்குத்தான் கர்மம் செய்யும் பொறுப்பு உள்ளது. மனிதப் பிறவியில் செய்த கர்மங்களின் பயனை அனுபவிப்பதற்குத்தான் பலவேறு பிறவிகள் ஏற்படுகின்றன. அப்பிறவிகளில் செய்யப்படும் செயல்கள், புதிய பாவ-புண்ய கர்மங்களை உண்டுபண்ண மாட்டா. ஆகவே மற்றப் பிறவிகளில் ஆற்றப்படும் செயல்கள் பந்தத்திற்குக் காரணம் ஆகா. மனிதப்பிறவியில் செய்யப்படும் கர்மம்தான் பந்தத்திற்குக் காரணம் ஆகிறது. இதைத்தான் 'அயம் லோக:' (மனித ஸமுதாயம்) என்ற சொல் குறிக்கிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'நீ பற்றைத் துறந்து யாகத்தின் பொருட்டுச் செய்யவேண்டிய கடமையை நல்லமுறையில் செய்வாயாக' என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** யாகம் என்ற கருத்துடன், பற்றைத் துறந்து, செய்யப்படும் கர்மம் மனிதனை பந்தப்படுத்தாது. மாறாக, அவனால் முன்னர் சேர்த்து வைக்கப்பட்டுள்ள பாவ-புண்யங்களும் மறைந்து போகின்றன (4/23). ஆகவே, நீ மமகாரம், பற்று இவற்றை அறவே ஒழித்து, 'சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளின் வழிமுறையை நாம் காத்து, அடுத்த தலைமுறைக்குக் கொடுக்க வேண்டும்' என்ற லக்ஷ்யத்தோடு, நிஷ்காமமாக எல்லாக் கர்மங்களையும் உற்சாகமாகச் செவ்வனே செய்யவேண்டும்.

**கேள்வி:** 'முக்தஸங்க:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** கர்மங்களிலும், அவற்றின் பயன்களிலும் பற்றும், மமகாரமும் அற்றுக் கர்மம் செய்பவன் முக்தஸங்கன். கர்மத்தின் பயனைத் துறக்கும்போதே, கர்மங்களிலும், அவற்றின் பயன்களிலும் மமகாரத்தையும், பற்றையும் துறக்க வேண்டும் என்பது கருத்து.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் யாகத்தின் நிமித்தமாகச் செய்யப்படும் கர்மம் பந்தப்படுத்தாது என்று கூறினார். யாகம் என்றால் என்ன என்ற கேள்வி எழுகிறது. அதை ஏன் செய்யவேண்டும்? யாகத்தின் நிமித்தம் செய்யப்படும் கர்மம் ஏன் பந்தப்படுத்தாது? – இவற்றை விளக்குவதற்காக பகவான் ப்ரம்மாவின் வசனங்களைச் சான்றாகக் காட்டுகிறார்—

**सहयज्ञाः प्रजाः सृष्ट्वा पुरोवाच प्रजापतिः।**
**अनेन प्रसविष्यध्वमेष वोऽस्त्विष्टकामधुक्॥ १०॥**

**ஸஹயஜ்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி: ।**

**அநேந ப்ரஸவிஷ்யத்₄வமேஷ வோ஽ஸ்த்விஷ்டகாமது₄க் ॥ 10 ॥**

**புரா** – கல்பத்தின் ஆரம்பத்தில், **ப்ரஜாபதி:** – ப்ரஜைகளின் தலைவரான ப்ரம்மதேவன், **ஸஹயஜ்ஞா:** – யாகங்களுடன், **ப்ரஜா:** – மக்களை, **ஸ்ருஷ்ட்வா** – படைத்து, **உவாச** – கூறினார். (**யூயம்** – நீங்கள்), **அநேந** – இந்த வேள்வியின் மூலம், **ப்ரஸவிஷ்யத்₄வம்** – பல்கிப் பெருகுங்கள். **ஏஷ:** – இந்த வேள்வி, **வ:** – உங்களுக்கு, **இஷ்டகாமது₄க்** – (நீங்கள்) விரும்பிய போகத்தைத் தருவதாக, **அஸ்து** – ஆகட்டும்.

கல்பத்தின் ஆரம்பத்தில் ப்ரஜைகளின் தலைவரான ப்ரம்மதேவன் யாகங்களுடன் மக்களைப் படைத்துவிட்டுக் கூறினார்: "நீங்கள் இந்த வேள்வியின் மூலம் பல்கிப் பெருகுங்கள். இந்த வேள்வி உங்களுக்கு நீங்கள் விரும்பிய போகத்தைத் தருவதாக ஆகட்டும்.

**கேள்வி:** 'யாகங்களோடு கூடவே ப்ரஜைகளைப் படைத்து' என்றும், 'இந்த வேள்வியின் மூலம்' என்றும் கூறுவதன் பொருள் என்ன?

**பதில்:** வர்ணம், ஆசிரமத்திற்குத் தக்கவாறு சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட யாகம், தானம், தவம், ஸேவை முதலிய கர்மங்களால் ஸித்தியளிக்கக் கூடிய ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பதில் உள்ள பொறுப்புகளைக் கூறும் முன் ச்லோகத்தில், 'அயம் லோக:' என்று வர்ணிக்கப்பட்ட அந்த மனிதர்களைத்தான் 'ஸஹயஜ்ஞா: ப்ரஜா:' என்ற சொற்கள் குறிக்கின்றன. அவர்களுக்கு வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை இவற்றிற்கு ஏற்றவாறு வெவ்வேறாக யாகங்கள், தானம், தவம், ப்ராணாயாமம், புலனடக்கம், அத்யயனம், கற்பிப்பது, மக்களைக் காப்பது, போரிடுவது, உழுது பயிரிடுவது, வியாபாரம், ஸேவை முதலிய ஆற்ற வேண்டிய கடமைகளால் ஸித்திக்கக் கூடியது ஸ்வதர்மம் என்பதான வேள்வி. அதைத்தான் 'இந்த வேள்வியின் மூலம்' என்ற சொல்லால் குறிக்கிறார்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'நீங்கள் இந்த யாகங்களின் மூலம் பல்கிப் பெருகுங்கள். யாகம் உங்களுக்கு வேண்டிய போகங்களை அளிக்கும்' என்பதற்கு என்ன பொருள்?

**பதில்:** பகவான் ப்ரஜாபதியான ப்ரம்மதேவர் மனிதர்களை நோக்கி, "உங்களுக்காக இந்த ஸ்வதர்ம ரூபமான யக்ஞத்தைப் படைத்திருக்கிறேன். இதை முழுமையாக நிறைவேற்றினால் நீங்கள் மேன்மை பெறுவீர்கள்; நீங்கள் வீழ்ச்சி அடைய மாட்டீர்கள்; நீங்கள் இப்பொழுது இருக்கும் நிலையிலிருந்து மேம்பாடு அடைவீர்கள்; இந்த யாகம் உங்களுக்கு இவ்வுலகிலும் கூட, எல்லாத் தேவைகளையும் பூர்த்தி செய்யும்" என்று ஆசி அளித்தார் என்பது பொருள்.

**देवान्भावयतानेन ते देवा भावयन्तु वः ।**
**परस्परं भावयन्तः श्रेयः परमवाप्स्यथ ॥ ११ ॥**

**தே₃வாந்ப₄ாவயதாநேந தே தே₃வா ப₄ாவயந்து வ: ।**

**பரஸ்பரம் ப₄ாவயந்த: ஶ்ரேய: பரமவாப்ஸ்யத₂ ॥ 11 ॥**

**அநேந** – இந்த வேள்வியினால், **தே₃வாந்** – தேவதைகளை, **ப₄ாவயத** – வளரச் செய்யுங்கள். **தே தே₃வா:** – அந்த தேவதைகள், **வ:** – உங்களை, **ப₄ாவயந்து** – வளரச் செய்யட்டும். (**ஏவம்** – தன்னலம் கருதாத தன்மையுடன்), **பரஸ்பரம் ப₄ாவயந்த:** – ஒருவர் மற்றொருவரை வளரச் செய்து, (**யூயம்** – நீங்கள்), **பரம் ஶ்ரேய:** – மேலான நன்மையை, **அவாப்ஸ்யத₂** – அடைவீர்களாக.

இந்த வேள்வியினால் தேவதைகளை வளரச் செய்யுங்கள். அந்த தேவதைகள் உங்களை வளரச் செய்யட்டும். தன்னலம் கருதாத தன்மையுடன் ஒருவர் மற்றொருவரை வளரச் செய்து நீங்கள் மேலான நன்மையை அடைவீர்களாக.

**கேள்வி:** 'அநேந' (இதனால்) என்றால், எதனால்? தேவதைகளை வளரச் செய்வது எப்படி?

**பதில்:** இங்கு வேள்வி பற்றிய பேச்சு நடைபெறுவதால், அந்த ஸ்வதர்மம் என்ற வேள்வியே 'அநேந' என்ற சொல்லுக்குப் பொருள். ஆனால் வேள்வி என்பது வேத மந்த்ரங்களை உச்சரித்து அக்னியில் ஹோமம் செய்யும் யாகம் மட்டும் அன்று. முன் சொல்லப்பட்ட ஸ்வதர்மங்களான தானம், தவம் முதலிய தவறாமல், கட்டாயம் செய்ய வேண்டிய கடமைகள் அனைத்தையும் இச்சொல் குறிக்கிறது. அவை அனைத்தையும் சேர்த்துப் பேசுவதாகவே இந்த ஹோமம் எனப்படும் யாகம் என்ற சொல்லைக் கொள்ளவேண்டும். ஹோமம் என்ற வேள்வி மூலம் தேவதைகளுக்கு ஹவிஸைச் சேர்ப்பித்து, அவர்களது தேவைகளைப் பூர்த்தி செய்து போஷிப்பதுதான் அவர்களை வளரும்படி செய்வது ஆகும் என்று தெரிந்து கொள்ளவேண்டும். இப்படி இந்த வர்ணனை ஒரு குறிப்பாக மட்டும் இருப்பதால் வேள்வி என்பதற்கு 'ஸ்வதர்மம்' என்று பொருள் கொள்ளவேண்டும். தத்தம் வர்ணம், ஆசிரமம் இவற்றுக்கு ஏற்றவாறு விதிக்கப்பட்ட கடமைகளை ஆற்றவேண்டும். அவற்றால் ரிஷிகள், பித்ருக்கள், பூத-ப்ரேதங்கள், மனிதர்கள், விலங்குகள், பறவைகள் ஆகிய எல்லா ப்ராணிகளுக்கும் ஸுகம் கிடைக்கச் செய்யவேண்டும். அவற்றை இப்படி வளர்த்தலும் இந்த ஸ்வதர்மத்தில் அடங்கும்.

**கேள்வி:** 'அந்த தேவர்கள் உங்களை வளரச் செய்யட்டும்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** 'எவ்விதம் வேள்வியைச் செய்து தேவதைகளை போஷிப்பது உங்களுடைய கடமையாகுமோ, அதுபோல உங்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்து, உங்களை வளரச் செய்தலும் தேவதைகளின் கடமை ஆகும். நீங்களும் உங்கள் கடமைகளை ஆற்றுங்கள் என்று நான் அவர்களுக்கு இதையே உபதேசிக்கிறேன்' என்கிறார் பகவான்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'தன்னலம் கருதாது ஒருவர் மற்றொருவரை வளரச் செய்து மேலான நிலையைப் பெறுவீர்களாக' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ப்ரம்மதேவன் கூறுகிறார்: "இவ்விதம் தத்தம் நலனைக் கருதாது, ஒருவரையொருவர் வளப்படுத்துவதற்காகவே உங்கள் கடமைகளை ஆற்றுவதன் மூலம் நீங்கள் இவ்வுலகியல் மேன்மையைப் பெறுவதோடுகூட மஹோன்னத நிலையான மோக்ஷத்தையும் அடைவீர்கள்." ப்ரம்மதேவன், "தேவதைகளே! மனிதர்கள் உங்களுக்கு ஸேவை, பூஜை, வேள்வி செய்யாவிட்டாலும், கடமை என நினைத்து அவர்களுக்கு வளர்ச்சியை அளியுங்கள்" என்று தேவதைகளுக்கு ஆணையிடுகிறார்.

அவர், "தேவதைகளின் மேம்பாட்டுக்காகவும், போஷணைக்காகவும் நீங்கள் தன்னலத்தை த்யாகம் செய்து, தேவதைகளுக்கு ஸேவை, பூஜை, வேள்வி செய்யுங்கள் இது தவிர மற்ற ரிஷிகள், பித்ருக்கள், மனிதர்கள், விலங்கு-பறவைகள், புழு-பூச்சிகள் ஆகிய எல்லா ஜீவர்களுக்கும் தன்னலம் கருதாது ஸ்வதர்மத்தைக் கடைப்பிடித்து ஸுகம் அளியுங்கள்" என்று மனிதர்களுக்கு ஆணையிடுகிறார்.

**इष्टान्भोगान्हि वो देवा दास्यन्ते यज्ञभाविताः।**
**तैर्दत्तानप्रदायैभ्यो यो भुङ्क्ते स्तेन एव सः॥१२॥**

**இஷ்டாந்பே₄ாகா₃ந்ஹி வோ தே₃வா தா₃ஸ்யந்தே யஜ்ஞப₄ாவிதா: ।**

**தைர்த₃த்தாநப்ரதா₃யைப்₄யோ யோ பு₄ங்க்தே ஸ்தேந ஏவ ஸ: ॥ 12 ॥**

**யஜ்ஞப₄ாவிதா:** – வேள்வியினால் வளர்ச்சியடைந்த, **தே₃வா:** – தேவதைகள், **வ:** – உங்களுக்கு (கேட்காமலேயே), **இஷ்டாந் பே₄ாகா₃ந்** – விரும்பிய போகங்களை, **ஹி** – நிச்சயமாக, **தா₃ஸ்யந்தே** – கொடுப்பார்கள். (இவ்விதம்), **தை: த₃த்தாந்** – அவர்களால் கொடுக்கப்பட்ட போகங்களை, **ஏப்₄ய:** – அவர்களுக்கு, **அப்ரதா₃ய** – அர்ப்பணம் செய்யாமல், **ய:** – எவன் ஒருவன், **பு₄ங்க்தே** – அனுபவிக்கிறானோ, **ஸ:** – அவன், **ஸ்தேந: ஏவ** – திருடனே.

வேள்வியினால் வளர்ச்சியடைந்த தேவதைகள் உங்களுக்குக் கேட்காமலேயே விரும்பிய போகங்களை நிச்சயமாகக் கொடுப்பார்கள். இவ்விதம் அவர்களால் கொடுக்கப்பட்ட போகங்களை அவர்களுக்கு அர்ப்பணம் செய்யாமல் எவனொருவன் அனுபவிக்கிறானோ அவன் திருடனே.

**கேள்வி:** 'வேள்வியினால் வளர்ச்சியுற்ற தேவதைகள் விரும்பிய போகங்களை நிச்சயம் உங்களுக்குக் கொடுத்துக் கொண்டே இருப்பார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** நீங்கள் உங்கள் கடமைகளைத் தவறாது ஆற்றிக் கொண்டே இருக்கவேண்டும். பிறகு உங்களுடைய வேள்விகளினால் வளர்ச்சியுற்ற தேவதைகள் உங்களுக்கு எப்பொழுதும் ஸுகபோகங்களையும், வாழ்க்கை நடத்துவதற்குத் தேவையானவற்றையும் கொடுத்துக் கொண்டே இருப்பார்கள். இதில் ஸந்தேஹமே இல்லை. ஏனெனில் தமது கடமையைச் செய்தே ஆகவேண்டும் என்ற பொறுப்பு தேவர்களுக்கு உள்ளது.

**கேள்வி:** 'அவர்கள் கொடுக்கும் போகங்களை அவர்களுக்கு அர்ப்பணம் செய்யாமல் அனுபவிப்பவன் திருடன்தான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இதுவரை ப்ரஜாபதி சொன்னதையெல்லாம் எடுத்துச் சொன்னார் பகவான். இவ்விதம் ப்ரம்மதேவனின் உபதேசத்தின்படி அந்த தேவதைகள் படைப்பின் ஆரம்பம் முதலே மனிதர்களுக்கு ஸுகத்தை அளிப்பதற்காகவே, அவர்களுடைய தேவையைப் பூர்த்தி செய்வதற்காகவே, விலங்கு-பறவைகள், மூலிகைகள், மரங்கள், புல் இவற்றோடு கூட



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



எல்லோரையும் போஷணை செய்து வருகிறார்கள். அன்னம், தண்ணீர், பூக்கள், பழங்கள், தாதுக்கள் முதலிய மனிதனுக்கு உபயோகப்படக் கூடிய எல்லாப் பொருட்களையும் அளித்து வருகிறார்கள். அந்தப் பொருட்கள் அனைத்தையும் அந்த தேவதைகளுக்கு அர்ப்பணித்துக் கடன் தீர்க்காமல், அவர்களுடைய ந்யாயமான உரிமைகளை அவர்களுக்கு அர்ப்பணம் செய்யாமல் தானே தன் தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளும் மனிதன் செய்ந்நன்றி கொன்றவன் – திருடன். அன்போடு பேணி வளர்த்த பெற்றோர்களுக்கு யாதொரு பணிவிடையும் செய்யாமல், அவர்கள் இறந்த பிறகும் அவர்களுக்கான ச்ராத்தம்–தர்ப்பணம் செய்யாமல் விடுகின்ற மகனையும், உதவி செய்தவருக்கு முடிந்தவரை பதிலுதவி செய்யாதவனையும், தத்தெடுத்துக் கொண்ட பெற்றோரின் செல்வத்தை மட்டும் அனுபவித்துக் கொண்டு, அவர்களுக்குப் பணிவிடை செய்யாத ஒருவனையும் இவனோடு ஒப்பிடலாம்.

**கேள்வி:** மனிதர்களால் த்ருப்தி செய்யப்பட்ட தேவதைகள் அவர்களுக்குத் தேவையான போகங்களை அளிக்கிறார்கள். இப்படிச் சொல்லும்போது தேவதைகளிடமிருந்து பெற்றுக் கொண்ட அந்த போகங்களுக்குப் பதிலாக மனிதன் எதையும் செய்யாவிட்டால் அவனைத் திருடன் என்று எவ்வாறு கருத முடியும்?

**பதில்:** படைப்பின் துவக்கத்திலிருந்தே மனிதன் வேள்விகள் மூலம் தேவதைகளை த்ருப்திப்படுத்தி வருகிறான். தேவர்கள் மனிதர்களுக்கு இஷ்ட போகங்களை அளித்துக் கொண்டு வருகிறார்கள். இப்படி ஒரு தொடர்ச்சி படைப்பின் துவக்கத்திலிருந்தே நடந்து வருகிறது. இந்தத் தொடர்ச்சியான கொடுக்கல்–வாங்கலில் முதலில் வேள்விகள் புரிந்து தேவதைகளை த்ருப்திப்படுத்தி, தாங்களும் பயனடைந்து வந்த மனிதர்கள் திருடர்கள் அல்லர். ஆனால் பிறர் செய்த வேள்வியின் காரணமாகப் பொதுவான பயனாக தேவதைகளிடமிருந்து உலகிற்குக் கிடைக்கும் போகங்களை அனுபவித்துவிட்டு, தேவதைகளுக்கு வேள்வி செய்யாதவர்களை மட்டுமே திருடர்கள் என்று சொல்வது சரிதான். யாரோ ஒருவன் வளர்த்த பசுவின் பாலைக் குடித்துவிட்டு, "பசுவை வளர்த்தவன் ஒரு மனிதன்தானே! நானும் மனிதன்தானே! அதனால் எனக்கும் பாலில் உரிமை உண்டு" என்று நினைப்பவன் திருடனாகக் கருதப்படுவதுபோல, வேறு யாரோ ஒரு மனிதர் செய்த வேள்வி மூலம் த்ருப்தியடைந்த தேவர்களின் மூலம் ஸுக–போகங்களையடைந்து, பதிலாக அவர்களுக்கு ஒன்றையும் அர்ப்பணம் செய்யாமல் அனுபவிப்பவன் திருடனாகத்தான் கருதப்பட வேண்டும்.

**பொருத்தம்: இவ்விதம் ப்ரம்மதேவனின் சொற்களைச் சான்றாகக் காட்டி, வேள்விகளை அவசியம் செய்யத்தான் வேண்டும் என்று பகவான் நிரூபித்தார். அப்படிக் கடமைகளை ஆற்றாதவன் திருடன் என்று அவனை இகழ்ந்தார். இனி கடமை ஆற்றுபவனைக் கொண்டாடி, அவனுக்கு மாறாகத் தன் உடலைப் பேணுவதற்காகச் செயலாற்றுபவனைப் பாவி என்று நிந்திக்கிறார்—**

**यज्ञशिष्टाशिनः सन्तो मुच्यन्ते सर्वकिल्बिषैः ।**
**भुञ्जते ते त्वघं पापा ये पचन्त्यात्मकारणात् ॥ १३ ॥**

**யஜ்ஞஶிஷ்டாஶிந: ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பி₃ஷை: ।**
**பு₄ஞ்ஜதே தே த்வக₄ம் பாபா யே பசந்த்யாத்மகாரணாத் ॥ 13 ॥**

**யஜ்ஞஶிஷ்டாஶிந:** – வேள்வியில் எஞ்சிய உணவை உண்கின்ற, **ஸந்த:** – சான்றோர்கள், **ஸர்வ கில்பி₃ஷை:** – எல்லாப் பாவங்களிலிருந்தும், **முச்யந்தே** – விடுபடுகிறார்கள். (ஆனால்), **யே பாபா:** – எந்தப் பாவிகள், **ஆத்மகாரணாத்** – தம் உடலைப் பேணுவதற்காகவே, **பசந்தி** – உணவைச் சமைக்கிறார்களோ, **தே து** – அவர்கள், **அக₄ம்** – பாவத்தையே, **பு₄ஞ்ஜதே** – உண்கிறார்கள்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வேள்வியில் எஞ்சிய உணவை உண்கின்ற சான்றோர்கள் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள். ஆனால் எந்தப் பாவிகள் தம் உடலைப் பேணுவதற்காகவே உணவைச் சமைக்கிறார்களோ, அவர்கள் பாவத்தையே உண்கிறார்கள்.

**கேள்வி:** 'வேள்வியில் எஞ்சியதை உண்பவர்கள்' என்று யாரைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** இங்கே வேள்வி என்ற சொல் முக்யமாக ஐம்பெரும் வேள்விகளைக் குறிக்கும். பகவான் சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட அந்த நற்கருமங்களைப் பற்றித்தான் பேசுகிறார். இவை பல கர்மங்களினால் அடையக் கூடியவை. படைப்புத் தொழிலைத் திறம்பட நடத்துவதிலும், படைத்த உயிரினங்களைச் சரிவர வளர்த்துப் போஷிப்பதிலும் ஐந்து வகையினருக்குள் பரஸ்பரத் தொடர்பு உள்ளது. (1) தேவதைகள், (2) ரிஷிகள், (3) பித்ருக்கள், (4) மனிதர்கள், (5) மற்ற ப்ராணிகள். ஐவர்களின் பரஸ்பர ஒத்துழைப்பினால்தான் எல்லோருக்கும் போஷணை ஏற்படுகிறது. தேவதைகள் அகில உலகத்திற்கும் வேண்டிய போகங்களைத் தருகிறார்கள். ரிஷிகளும், மஹரிஷிகளும் எல்லோருக்கும் ஞானம் வழங்குகிறார்கள். பித்ருக்கள் ஸந்ததிகளை வளர்த்துப் பேணி நலனைச் செய்கிறார்கள். மனிதன் தன் கடமைகளை ஆற்றுவதன் மூலம் எல்லோருக்கும் ஸேவை புரிகிறான். விலங்கு-பறவைகள், மரங்கள் போன்ற தாவரங்கள் எல்லாம் எல்லோருக்கும் ஸுக ஸாதனங்களாகத் தம்மை அர்ப்பணிக்கின்றன. இந்த ஐவரினுள்ளும் தகுதியும், திறமையும், வசதிகளும் உள்ள மனிதனுக்குத்தான் எல்லோரையும் பேணிக்காக்கும் பொறுப்பு உள்ளது. அதனால் அறநூல் முறைப்படி விதிக்கப்பட்ட கடமைகளை ஆற்றி எல்லோருக்கும் ஸேவை செய்கிறான். உலக ஸேவைக்காக சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட கடமைகளைத்தான் ஐம்பெரும் வேள்விகள் என்று கூறுகிறோம்.‡ மனிதன் எதை ஸம்பாதித்தாலும், அதில் இவர்களுக்கும் பங்கு கொடுக்க வேண்டும். ஏனெனில், அவன் இவர்களுடைய உதவியினாலும், ஒத்துழைப்பினாலும்தான் அவற்றைப் பெறுகிறான். ஆகவே, மனிதன் இந்த வேள்விகளைச் செய்துதான் ஆகவேண்டும். இப்படி வேள்வி செய்த பிறகு மீதமுள்ள அன்னத்தை அதாவது மீதமுள்ளவற்றைத் தனக்குக் கிடைக்க வேண்டியதாக ஏற்று அனுபவிப்பவனை சாஸ்த்ர வல்லுநர்கள் 'அமுதம் உண்பவன்' என்கிறார்கள். எவன் இப்படிச் செய்யவில்லையோ — பிறர் சொத்தைக் கவர்ந்து தனக்காகவே சேர்த்து உண்கிறானோ — அவன் பாவத்தையே உண்கிறான். பலவிதச் செயல்களின் மூலம் ஈட்டப்பட்ட பொருட்கள் அக்னியில் சமைத்த பிறகே உணவாகின்றன. அது அக்னியில் ஆஹுதி செய்யப்படாவிட்டால், தேவயக்ஞம், பலிவைச்வதேவம் ஆகியன நிறைவேறியதாகா. அதனால், இங்கு வேள்வி, பலிவைச்வதேவம் இவற்றுக்கு முதன்மை கொடுக்கப்பட்டுள்ளது. ஆனால் ஹோமம், பலிவைச்வதேவம் என்ற செயலினாலேயே ஐம்பெரும் வேள்விகள் முடிந்து விடுவதில்லை. தன்னுடைய வருவாயில், மேலே சொன்ன ஐவருக்கும் தக்கபடி எஞ்சியதைப் பங்கு அளித்துவிட்டு, மிகுந்ததை அனுபவிப்பவனை 'வேள்வியில் எஞ்சியதை உண்பவன்' என்று கூறுகிறார். இப்படித் தன்னலம் கருதாத கர்மயோகிகளை 'யஜ்ஞஶிஷ்டாஶிந:' என்ற சொல் குறிக்கிறது.

**கேள்வி:** 'ஸந்த:' (சான்றோர்கள்) என்ற சொல் ஸாதகர்களைக் குறிப்பிடுகிறதா, ஸித்த புருஷர்களைக் குறிப்பிடுகிறதா?

**பதில்:** ஸாதகர்களையே குறிக்கிறது. ஏனெனில் ஸித்த புருஷர்களுக்குப் பாவம் கிடையாது. இங்கே பாவங்களிலிருந்து விடுதலை பெறுவது பற்றிப் பேசப்படுகிறது.

---

‡ பாடே$_2$ா ஹோமஶ்சாதித$_2$நாம் ஸபர்யா தர்பணம் ப$_3$லி: ।
அமீ பஞ்ச மஹாயஜ்ஞா ப்$_3$ரஹ்மயஜ்ஞாதி$_3$நாமகா: ॥

(1) அற நூல்களைப் படிப்பது (ப்ரம்மயக்ஞம், ரிஷியக்ஞம்), (2) ஹோமம் (தேவயக்ஞம்), (3) அதிதிகள் உபசாரம் (மனிதயக்ஞம்), (4) ச்ராத்த தர்ப்பணங்கள் (பித்ருயக்ஞம்), (5) ப்ராணிகள் அனைத்தையும் மனதில் கொண்டு உணவு அளிப்பது (பூதயக்ஞம்). இவையே ப்ரம்மயக்ஞம் முதலிய ப்ரஸித்தமான ஐம்பெரும் வேள்விகள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ஸந்த:' (சான்றோர்கள்) என்ற சொல் ஏன் ஸித்த புருஷர்களைக் குறிக்காது? ஸித்த புருஷர்கள் வேள்வி புரிவதில்லையா?

**பதில்:** ஸித்த புருஷர்களும் சான்றோர்தான். ஆனால் இந்த ஸந்தர்பத்தில், சான்றோர் என்ற சொல்லுக்கு, 'தன்னலம் கருதாது கடமைகளை ஆற்றும் ஸாதகன்' என்றுதான் பொருள். ஸித்த புருஷர்களும் வேள்விகள் செய்கிறார்கள். அது பாவங்களிலிருந்து விடுதலை பெறுவதற்காக அன்று. உலகத்துக்கு வழிகாட்டுவதற்காக இயல்பாகவே செய்கிறார்கள்.

**கேள்வி:** 'எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுதலை பெறுவார்கள்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** முன்வினைப் பாவங்கள் மனிதனிடம் சேர்ந்துள்ளன. நிகழ்காலத்தில் உயிர் வாழ்வதற்காகச் செய்யப்படும் ந்யாயமான பொருளீட்டலிலும் தவிர்க்க முடியாதபடி பாவங்கள் நேரும். 'ஸர்வாரம்ப$_4$ா ஹி தோ$_3$ஷேண தூ$_4$மேநாக்$_3$நிரிவாவ்ருதா:' (18/48) – நெருப்பில் புகை சூழ்வது போல எல்லாச் செயல்களிலும் குற்றங்கள் இருக்கத்தான் இருக்கும். இந்த ந்யாயப்படி ஹோமம், மக்களைக் காப்பது, யுத்தம், உழுது பயிரிடுதல், வியாபாரம், சிற்பம் செதுக்குவது முதலிய உயிர் வாழ்வதற்கு வேண்டிய செய்கைகளில் (சிறிதளவாவது) ஹிம்ஸை இருக்கத்தான் இருக்கும். இல்லறத்தானின் வீட்டில் ஒவ்வொரு நாளும் உரல், அம்மி ஆட்டுக்கல், அடுப்பு, நீர்த்தொட்டி, விளக்குமாறு இவை மூலம் ஹிம்ஸை ஏற்படத்தான் செய்கிறது.‡ இவை தவிர, தவறுகளாலும், பிற காரணங்களாலும் பலவித பாவங்கள் நேருகின்றன. எவன் தன்னலம் கருதாது உலக ஸேவை என்ற கருத்தோடு, எல்லா ஜீவர்களுக்கும் ஸுகம் அளிப்பதற்காக ஐம்பெரும் வேள்வி முதலியவற்றைச் செய்கிறானோ, இதெல்லாம் உயிரோடிருப்பதற்கு ப்ரயோஜனம் என்று மதிக்கிறானோ, தான் ந்யாயமாக ஈட்டிய பொருளைக் கொண்டு, தன்னால் முடிந்தவரை அவரவர்கள் தேவைக்கு ஏற்றபடி, 'ஸேவை' என்ற வேள்வியைச் செய்து விட்டு, அதில் மிச்சப்படும் அன்னத்தையும் கூடப் பிறருக்கு ஸேவை செய்வதற்காகவே உயிரோடு இருக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு, ப்ரஸாதமாக ஏற்றுக் கொள்கிறானோ – அத்தகைய ஸாது, முன் செய்த, இப்பொழுது நேர்கின்ற ஸகல பாவங்களிலிருந்தும் விடுதலை பெற்று, ப்ரம்மபதத்தை அடைவான் (4/31). இத்தகைய ஸாதகனையே இங்கு 'நல்லோர்' என்று கூறுகிறார். 'எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுதலை' என்பதற்கு மேலே சொன்னவாறு பொருள் கொள்ளவேண்டும்.

தான் ஸுகபோகங்களை அடைய வேண்டும் என்பதற்காக, அறநூல்களில் கூறியபடி கர்மங்களைச் செய்து, ப்ராயச்சித்தம் என்ற கருத்துடன் நாள்தோறும் ஹோமம், பலிவைச்வதேவ கர்மங்களைச் செய்வதன் மூலம், எல்லோருக்கும் தன் சொத்தில் உரிய பங்கைக் கொடுக்கின்ற பயனில் விருப்பமுள்ளவனும், வீட்டில் நாள்தோறும் நேர்ந்துவிடும் ஐந்து பாவங்களிலிருந்தும் விடுதலை பெறுகிறான். இங்கே கர்த்தாவிற்கு 'ஸந்த:' என்றும், 'கில்பிஷை:' என்பதற்கு 'ஸர்வ' என்றும் அடைமொழி வருவதால், பயனைக் கருதாது ஐந்து வேள்விகளையும் செய்யும் நல்லோன் செய்த, செய்கின்ற, அனைத்துப் பாவங்களிலிருந்தும் விடுபடுகிறான் என்று அறிந்து கொள்ள வேண்டும்.

**கேள்வி:** தன் உடலை வளர்ப்பதற்காக மட்டும் சமைத்து உண்பவனைப் பாவி என்றும், அவன் உணவைப் பாவம் என்றும் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** சமைத்து உண்பது என்ற சொல் புலன்களால் அனுபவிக்கப்படும் ஸகல போகங்களையும் சேர்த்தே குறிக்கிறது. இந்த போகங்களை ஸம்பாதித்து, இந்த வேள்விகளின் மிச்சத்தை நிஷ்காமமாக உலக நன்மையை மட்டும் கருதி அனுபவிக்கிறவன் மேலே சொன்னவாறு பாவங்களிலிருந்து விடுதலை பெறுகிறான். எல்லோருக்கும் உரிய பாகங்களை வகுத்துக் கொடுத்துவிட்டு, தான் ஸம்பாதித்ததை விருப்பத்தோடு அனுபவிக்கிறவனும், பாவி

‡ கண்ட$_3$நீ பேஷணீ சுல்லீ உத$_3$கும்பீ$_4$ ச மார்ஜநீ ।
பஞ்ச ஸூநா க்ருஹஸ்த$_2$ஸ்ய வர்தந்தேऽஹரஹ: ஸதா$_3$ ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அல்லன். ஆனால், தன் ஸுகத்திற்காகவும், தன் உடல் போஷணைக்காகவும், புலன்களின் த்ருப்திக்காகவும் போகங்களை ஸம்பாதித்து, அவற்றைத் தானே அனுபவிக்கிறவன் பாவச் செயல்களைச் செய்து, பாவத்தை ஸம்பாதித்து, பாவத்தையே அனுபவிக்கிறான். அவனுடைய செயல்கள் வேள்விக்காக அல்ல; அவன் தன் வருமானத்திலிருந்து மற்றவர்க்குரிய பங்கையும் வழங்கவில்லை. அதனால் அவனுடைய வருமானம், ஸுகபோகம் இரண்டுமே பாவமயம். அவனைப் பாவி என்றும், அவன் போகங்களைப் பாவம் என்றும் மனுஸ்ம்ருதி *(3/118)* கூறுகிறது.‡

**பொருத்தம்: இந்த வேள்வியைச் செய்யாவிட்டால் என்ன தவறு என்ற கேள்வி எழுகிறது. அதற்கு விடையாக, படைப்புச் சக்ரத்தைக் காக்க, வேள்வி அவசியம் செய்யத்தான் வேண்டுமென்று மேலே நிரூபிக்கிறார்—**

**अन्नाद्भवन्ति भूतानि पर्जन्यादन्नसम्भवः।**
**यज्ञाद्भवति पर्जन्यो यज्ञः कर्मसमुद्भवः॥ १४॥**

**कर्म ब्रह्मोद्भवं विद्धि ब्रह्माक्षरसमुद्भवम्।**
**तस्मात्सर्वगतं ब्रह्म नित्यं यज्ञे प्रतिष्ठितम्॥ १५॥**

**அந்நாத்₃ப₄வந்தி பூ₄தாநி பர்ஜந்யாத₃ந்நஸம்ப₄வ: ।**
**யஜ்ஞாத்₃ப₄வதி பர்ஜந்யோ யஜ்ஞ: கர்மஸமுத்₃ப₄வ: ॥ 14 ॥**
**கர்ம ப்₃ரஹ்மோத்₃ப₄வம் வித்₃தி₄ ப்₃ரஹ்மாக்ஷரஸமுத்₃ப₄வம் ।**
**தஸ்மாத்ஸர்வக₃தம் ப்₃ரஹ்ம நித்யம் யஜ்ஞே ப்ரதிஷ்டி₂தம் ॥ 15 ॥**

**பூ₄தாநி** – உயிரினங்களனைத்தும், **அந்நாத்** – உணவிலிருந்து, **ப₄வந்தி** – உண்டாகின்றன. **பர்ஜந்யாத்** – மழையிலிருந்து, **அந்நஸம்ப₄வ:** – உணவின் உற்பத்தி ஏற்படுகிறது. **பர்ஜந்ய:** – மழை, **யஜ்ஞாத்** – வேள்வியிலிருந்து, **ப₄வதி** – உண்டாகிறது. **யஜ்ஞ:** – வேள்வி, **கர்மஸமுத்₃ப₄வ:** – விதிக்கப்பட்ட கர்மங்களிலிருந்து உண்டாகிறது. **கர்ம** – கர்மங்களின் தொகுப்பு, **ப்₃ரஹ்மோத்₃ப₄வம்** – வேதத்தில் உண்டாவது. (மேலும்), **ப்₃ரஹ்ம** – வேதம், **அக்ஷரஸமுத்₃ப₄வம்** – அழிவற்ற பரமாத்மாவிடம் தோன்றியது, **வித்₃தி₄** – (என்று) தெரிந்து கொள். **தஸ்மாத்** – ஆகவே (இதிலிருந்து தெரிவதென்னவெனில்), **ஸர்வக₃தம்** – எங்கும் நிறைந்த, **ப்₃ரஹ்ம** – அழிவற்ற பரப்ரம்ம பரமாத்மா, **நித்யம்** – எப்பொழுதும், **யஜ்ஞே** – வேள்வியில், **ப்ரதிஷ்டி₂தம்** – நிலை பெற்றிருக்கிறார்.

**உயிரினங்களனைத்தும் உணவிலிருந்து உண்டாகின்றன. மழையிலிருந்து உணவின் உற்பத்தி ஏற்படுகிறது. மழை வேள்வியிலிருந்து உண்டாகிறது. வேள்வி விதிக்கப்பட்ட கர்மங்களிலிருந்து உண்டாகிறது. கர்மங்களின் தொகுப்பு வேதத்தில் உண்டாவது. மேலும் வேதம் அழிவற்ற பரமாத்மாவிடம் தோன்றியது என்று தெரிந்து கொள். ஆகவே எங்கும் நிறைந்த அழிவற்ற பரப்ரம்ம பரமாத்மா எப்பொழுதும் வேள்வியில் நிலைபெற்றிருக்கிறார் (என்பது இதிலிருந்தே தெரிகிறது).**

**கேள்வி:** *'அன்னம்' என்றால் என்ன? எல்லா ப்ராணிகளும் அன்னத்திலிருந்து உண்டாகின்றன என்றால் என்ன பொருள்?*

---

‡ அக₄ம் ஸ கேவலம் பு₄ங்க்தே ய: பசத்யாத்மகாரணாத் ।
(தனக்காகவே உணவு சமைப்பவன் பாவத்தை மட்டுமே உண்கிறான்.)

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இங்கு 'அன்னம்' என்ற சொல் விரிவான பொருள் உடையது. வெறும் அரிசி, கோதுமை, கடலை, பருப்பு இவை மட்டும் அன்னம் அல்ல. ஸ்தூலமானதும், நுண்ணியதுமான விதவிதமான உணவுப் பொருட்களினால் வெவ்வேறு ப்ராணிகளின் உடலுக்கு ஊட்டம் தரும் உணவு வகையனைத்தையும் 'அன்னம்' என்ற சொல் குறிக்கிறது. ஆகவே, எல்லா ப்ராணிகளும் அன்னத்திலிருந்து உண்டாகின்றன என்று கூறுகிறார். அதாவது உணவுப் பண்டங்களால்தான் எல்லா ப்ராணிகளின் உடல்களிலும் உதிரம்-வீர்யம் உண்டாகின்றன. அந்த உதிர-வீர்யச் சேர்க்கையினால் வெவ்வேறு ப்ராணிகள் பிறக்கின்றன. பிறந்த பிறகு, அவற்றின் வளர்ச்சியும் உணவுப் பொருட்களாலேயே ஏற்படுகிறது. ஆகவே, எல்லாவிதத்திலும் ப்ராணிகளின் பிறப்பு, வளர்ப்பு, போஷணை இவையனைத்திற்கும் காரணம் அன்னம்தான். வேதமும் சொல்கிறது 'அந்நாத்$_3$த்$_4$யேவ க$_2$ல்விமாநி பூ$_4$தாநி ஜாயந்தே அந்நேந ஜாதாநி ஜீவந்தி' (தைத்திரீய உபநிஷத்$_3$ 3/2). எல்லா ப்ராணிகளும் அன்னத்திலிருந்து உண்டாகின்றன; அன்னத்தினாலேயே வாழ்கின்றன.

**கேள்வி:** அன்னம் மழையிலிருந்து உண்டாகிறது என்று கூறுவதன் பொருள் என்ன?

**பதில்:** உலகில் பருப்பொருளாகவும், நுண்ணியதாகவும் உள்ள உணவு வகைகள் யாவும் உண்டாவதற்குத் தண்ணீர்தான் முக்ய காரணம். ஏனெனில் ஸ்தூலமாகவும், நுண்ணியதாக வும் ஜலத்தின் ஸம்பந்தம் எங்கும் விரவி இருக்கிறது. ஜலத்திற்கு ஆதாரம் மழை.

**கேள்வி:** 'மழை வேள்வியினால் உண்டாகிறது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** படைப்பில் உள்ள ஜீவர்கள் அனைத்திலும் மனிதன் தனிப்பட்டவன். அவன்மீது எல்லா ப்ராணிகளுடைய வளர்ப்பு, போஷணை இவற்றின் பொறுப்பும் சுமத்தப் பட்டிருக்கிறது. மனிதன் தன்னுடைய இந்தப் பொறுப்பை உணர்ந்து, எல்லா ப்ராணிகளும் உயிர் வாழும் பொருட்டு, மனதினாலும், சொல்லாலும், உடலாலும் எந்தச் செயல்களைப் புரிகிறானோ, அந்தச் செயல்களால் நிறைவேறக்கூடிய நல்ல கர்மங்களை 'யக்ஞம்' என்று கூறுகிறார்கள். இந்த வேள்வியில் ஹோமம், தானம், தவம், வாழ்க்கை ஆகிய கடமைகளும் அடங்கும். யாகத்தில் ஹோமம்தான் முக்யமானதால், சாஸ்த்ரங்கள், 'அக்னியில் ஆஹுதி செய்வதால் மழை பொழிகின்றது. மழையினால் உணவுப் பொருள் உற்பத்தியாகி, அதன் மூலம் ப்ரஜைகள் உண்டாகிறார்கள்' என்று கூறினாலும், 'யக்ஞம்' என்ற சொல்லுக்கு 'ஹோமம்' என்ற பொருள் மட்டும் இங்கே குறிப்பிடப்படவில்லை. உலக நன்மைக்காகச் செய்யப்படும் எல்லாச் செயல்களுமே, அவற்றினால் நிறைவேறும் எல்லா ஸத்கர்மங்களுமே 'யக்ஞம்' என்று அழைக்கப்படுகின்றன.

'மழை வேள்வியினால் உண்டாகிறது' என்றால், மனிதர்கள் புரியும் கடமையைச் செய்தல் என்ற வேள்வியிலிருந்து மழை பொழிகிறது என்று பொருள். 'இன்ன தேசத்தில் ஹோமம் என்ற வேள்வி நடைபெறவில்லையே? அங்கு ஏன் மழை பொழிகிறது?' என்று நாம் கேட்போம். அங்கும்கூட ஏதாவது நல்ல கார்யங்கள் உலக நன்மைக்காக நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கின்றன என்பதுதான் இதற்குப் பதில். படைப்பின் ஆரம்பத்திலிருந்தே வேள்விகள் நடைபெறுகின்றன. அவற்றின் பயனாக அங்கு மழை பொழிகிறது. எதுவரை முன்பு செய்த வேள்விகள் சேமிக்கப்பட்டிருக்கின்றனவோ, அவை முடியவில்லையோ, அதுவரை மழை பொழியும். ஆனால் மனிதன் வேள்வி புரிவதை நிறுத்திவிட்டால், அந்தச் சேமிப்புக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து தீர்ந்துவிடும். பிறகு மழை பொழியாது. அதன் பயனாகப் படைக்கப்பட்ட ப்ராணிகள் உயிர் வாழ்வதும், போஷணையும் கடினமாகும். ஆகவே, கடமைகளை ஆற்றுவது என்ற வேள்வியை மனிதன் செய்யத்தான் வேண்டும்.

**கேள்வி:** வேள்வி, 'விதிக்கப்பட்ட கர்மத்தினால்' உண்டாகிறது என்பதன் கருத்து என்ன?

**பதில்:** வெவ்வேறு மனிதர்களுக்கு அவரவர் வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை மாறுதல் இவற்றிற்கேற்பப் பலவிதமான வேள்விகள் சாஸ்த்ரங்களில் சொல்லப்படுகின்றன. அவையனைத்தும் மனம், புலன்கள், உடல்களின் செயல்களால் இயற்றப்படவேண்டியவை.

CC-0.In Public Domain: Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கார்யங்களைச் செய்யாமல் வேள்விகள் நிறைவேறுவதில்லை. 4/32ல் இது விளக்கமாகச் சொல்லப்படுகிறது.

**கேள்வி:** *கர்மம், ப்ரம்மத்திலிருந்து உண்டாகிறது என்னுமிடத்தில் 'ப்ரம்ம' என்ற சொல் எதைக் குறிக்கிறது? கர்மம் அதிலிருந்து உண்டாகிறது என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** கீதையில் 'ப்ரம்ம' என்ற சொல்லுக்கு ஸந்தர்பத்திற்கு ஏற்றவாறு, பரமாத்மா *(8/3,24)*, ப்ரக்ருதி *(14/3,4)*, ப்ரம்மதேவன் *(8/17, 11/37)*, வேதம் *(4/32, 17/24)*, ப்ராம்மணன் *(18/42)* என்று பல பொருள் உள்ளன. இது கர்மங்களின் உற்பத்தியைப் பற்றிச் சொல்லும் இடம். விதிக்கப்பட்ட கடமைகளைப் பற்றி மனிதன் வேதத்திலிருந்தும், அதை ஒட்டிய சாஸ்த்ரங்களிலிருந்தும் அறிந்து கொள்கிறான். ஆகவே, இங்கு 'ப்ரம்ம' என்ற சொல்லுக்கு வேதம் என்று பொருள் கொள்ள வேண்டும். இது தவிர, இந்த ப்ரம்மம் அழிவற்றதிலிருந்து உண்டாவதாகக் கூறப்படுகிறது. அதனாலும் 'ப்ரம்ம' என்ற சொல்லின் பொருள் வேதம் என்று கொள்வதே சரி. ஏனெனில் பரமாத்மாதான் அழிவற்றவர்; ப்ரக்ருதி அனாதியானது. பரமாத்மாவும், ப்ரக்ருதியும் அக்ஷரத்திலிருந்து உண்டானவை என்று சொல்வது பொருந்தாது; ப்ரம்மாவைப் பற்றியும், ப்ராம்மணனைப் பற்றியும் இங்கு பேச்சு இல்லை; ஆகவே, கர்மம் என்பது 'ப்ரம்ம' என்பதன் பொருளான வேதங்களிலிருந்து உண்டாகிறது என்று கூறி, எந்த மனிதன், எந்த வேளையில், எப்படி, என்ன செய்ய வேண்டும் என்பது வேதங்களிலிருந்தும், அதையொட்டிய சாஸ்த்ரங்களிலிருந்தும் அறியக்கூடியது; அவற்றினால்தான் வேள்வி நிறைவேறுகிறது; இப்படிப்பட்ட கர்மங்களை வேதங்களிலிருந்தும், அவை சார்ந்த சாஸ்த்ரங்களிலிருந்தும் அறிதல் வேண்டும். ஆகவே, வேள்வி செய்வதற்காக ஒவ்வொரு மனிதனும் தன் கடமைகளை அறிந்து கொள்ள வேண்டும் என்று கூறுகிறார்.

**கேள்வி:** *'வேதங்கள் அக்ஷரத்திலிருந்து உற்பத்தியாகின்றன' என்று கூறுவதன் கருத்து என்ன? ஏனென்றால், வேதம் அனாதி என்று கருதப்படுகிறதே?*

**பதில்:** பரப்ரம்மமான பரமேசுவரன் நித்யன். இதனால் அவருடைய கோட்பாடுகளான வேதங்களும் நித்யமானவை. இதில் சிறிதும் ஐயமில்லை. ஆகவே, இங்கு வேதங்கள் பரமேசுவரனிடமிருந்து உண்டாயின என்றால், வேதங்கள் அதற்கு முன் இல்லை; பிறகு உண்டாயின என்று அர்த்தமில்லை. படைப்பின் ஆரம்பத்தின்போது பரமாத்மாவோடுகூட வேதமும் வெளிப்பட்டது. ப்ரளய காலத்தில் பரமாத்மாவிடமே அடங்கி விடுகிறது. வேதம் மனிதப் படைப்பன்று. யாரோ ஒரு மனிதன் தன் சிந்தனையினால் உருவாக்கியதன்று. இதைத் தெளிவாக்குவதற்காகத்தான் இங்கு 'வேதங்கள் அழியாத ப்ரம்மத்திலிருந்து உண்டாயின' என்று கூறுகிறார். இதிலிருந்து வேதங்கள் அனாதி என்று தெரிகிறது. *17/23*லும் வேதங்கள் பரமாத்மாவிடமிருந்து உண்டாயின என்று கூறப்படுகிறது.

**கேள்வி:** *'எங்கும் நிறைந்த பரப்ரம்மம்' என்று எதைக் கூறுகிறார்? 'தஸ்மாத்' (ஆதலால்) 'அது வேள்வியில் நிலைபெற்றிருக்கிறது' என்றால் என்ன பொருள்?*

**பதில்:** எங்கும் நிறைந்த ப்ரம்மம் என்றால் எங்கும் விரவியிருக்கின்ற, எல்லா வல்லமைகளும் படைத்த, எல்லாவற்றிற்கும் ஆதாரமான பரமேசுவரன் என்று பொருள். 'ஆதலால்' என்றால் பரமேசுவரன் வேள்வியில் நிலைபெற்றிருப்பவராதலால் என்று பொருள். வேள்வி முறைகளைத் தொகுத்துரைக்கும் வேதம் பகவானின் வாக்கு. ஆகவே அதில் சொல்லப்பட்ட முறைப்படி செய்யப்படும் வேள்வியில், எல்லா வேள்விகளுக்கும் தலைவரான, எங்கும் நிறைந்திருக்கின்ற பரமேசுவரன், எப்பொழுதும் விளங்குகிறார். அதாவது வேள்வி பகவானுடைய ஸ்வரூபம். ஆகவே, ஒவ்வொரு மனிதனும் பகவானை அடைய பகவானது ஆணைப்படி தன் கடமைகளை ஆற்றவேண்டும்.

**பொருத்தம்:** இவ்விதம் 'படைப்புச் சக்ரத்தின் நியதி வேள்வியில் நிலை பெற்றிருக்கிறது; பரமாத்மா வேள்வியில் நிலைபெற்றிருக்கிறார்' என்று சொல்லி, இனி வேள்வி என்ற ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று உறுதிப்படுத்துவதற்காக,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



படைப்புச் சக்ரத்திற்கு அனுகூலமாக நடக்காதவன் அதாவது தன் கடமையைச் செய்யாதவன் நிந்தைக்குரியவன் என்று கூறுகிறார்—

एवं प्रवर्तितं चक्रं नानुवर्तयतीह यः।
अघायुरिन्द्रियारामो मोघं पार्थ स जीवति॥ १६ ॥

ஏவம் ப்ரவர்திதம் சக்ரம் நாநுவர்தயதீஹ ய: ।
அக₄ாயுரிந்த்₃ரியாராமோ மோக₄ம் பார்த₂ ஸ ஜீவதி ॥ 16 ॥

**பார்த₂** – பார்த்த! **ய:** – எவனொருவன், **இஹ** – இவ்வுலகில், **ஏவம்** – இவ்வாறு, **ப்ரவர்திதம் சக்ரம்** – பரம்பரையாகத் தொடங்கி வைக்கப்பட்ட படைப்புச் சக்ரத்திற்கு அனுகூலமாக, **ந அநுவர்தயதி** – பின்பற்றி நடக்கவில்லையோ (அதாவது தன் கடமையை ஆற்றவில்லையோ), **இந்த்₃ரியாராம:** – புலன்கள் மூலம் போகங்களில் இன்புற்றிருக்கும், **ஸ: அக₄ாயு:** – அந்தப் பாவ வாழ்க்கையுடையவன், **மோக₄ம்** – வீணே, **ஜீவதி** – வாழ்கிறான்.

பார்த்த! எவனொருவன் இவ்வுலகில் இவ்வாறு பரம்பரையாகத் தொடங்கி வைக்கப்பட்ட படைப்புச் சக்ரத்திற்கு அனுகூலமாகப் பின்பற்றி நடக்கவில்லையோ – தன் கடமையை ஆற்றவில்லையோ, புலன்கள் மூலம் போகங்களில் இன்புற்றிருக்கும் அந்தப் பாவ வாழ்க்கை யுடையவன் வீணே வாழ்கிறான்.

**கேள்வி:** 'சக்ரம்' என்றால் என்ன? 'இவ்வாறு பரம்பரையாகத் தொடங்கி வைக்கப்பட்ட' என்றால் என்ன? அதற்கு அனுகூலமாக நடப்பது எப்படி?

**பதில்:** 14வது ச்லோகத்தின்படி, 'சக்ரம்' (வட்டம்) என்பது படைப்பின் தொடர்ச்சியைக் கூறுகிறது. ஏனெனில், மனிதன் செய்கின்ற சாஸ்த்ரமுறைப்படியான செயல்களால் வேள்வி உண்டாகிறது. வேள்வியிலிருந்து மழை, மழையிலிருந்து அன்னம், அன்னத்திலிருந்து உயிரினங்கள், உயிரினங்களிலடங்கிய மனிதன் செய்யும் செயல்களால் வேள்வி, வேள்வியிலிருந்து மழை – என்று படைப்புத் தொடர்ச்சி என்றுமே சக்ரமாகச் சுழன்று வருகிறது. இதைக் குறிப்பதற்காகத்தான் இங்கே 'இவ்வாறு பரம்பரையாகத் தொடங்கி வைக்கப்பட்ட சக்ரம்' என்று சொல்கிறார். தத்தம் வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை இவற்றிற்கேற்றவாறு எது ஸ்வதர்மமோ, அதை நிறைவேற்றும் பொறுப்பு உள்ளவருக்குத் தம் கடமையைக் கவனமாக ஆற்றுவதே அந்தச் சக்ரத்திற்கு அனுகூலமாக நடப்பது என்பதன் பொருள். ஆகவே பற்றுதல், ஆசை இவற்றை த்யாகம் செய்து, முற்றிலும் இந்தப் படைப்புச் சக்ரத்தின் சரியான ஓட்டத்திற்கு அனுகூலமாக நடப்பதற்காகவே, ஒரு யோகி தம் கடமைகளை ஆற்றுகிறார். அதில் சிறிதுகூட அவருக்கு சுயநலம் இல்லை. அவர் அந்த ஸ்வதர்மமாகிற வேள்வியில் நிலைபெற்றிருக்கிற பரமாத்மாவை அடைந்துவிடுவார்.

**கேள்வி:** இந்தப் படைப்புச் சக்ரத்திற்கு அனுகூலமாக நடக்காதவன் 'இந்த்ரியாராம:' (புலன் நுகர்ச்சியில் சுவை காண்பவன்); 'அகாயு:' (பாவமே ஆயுளாகக் கொண்டவன்) – அவன் வாழ்க்கை வீணே என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தன்னுடைய கடமையை ஆற்றாமல் இருப்பதுதான் படைப்புச் சக்ரத்திற்கு அனுகூலமின்மை. தன் கடமையை மறந்து, போகங்களில் பற்றுதலுடன் எப்பொழுதும் புலன்களின் மூலம் போகங்களில் சுவை காண்பவன், எவ்விதத்திலாவது போகங்களைப் பெற்று, புலன்களை த்ருப்தி பண்ணுவதே லக்ஷ்யமாகக் கொண்டவன், 'இந்த்ரியாராம:' என்றழைக்கப்படுவான்.

இவ்விதம் தன் கடமையைத் துறந்த மனிதன் போகங்களில் உள்ள ஆசையினால் மனம் போனபடி நடந்து கொள்கிறான். தன்னலத்திலேயே ஊறி இருப்பதனால், பிறருக்கு விளையும் நன்மை-தீமைகளைச் சிறிதும் கவனியாதிருந்து, பிறரிடம் தவறான விளைவுகளைத்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தோற்றுவித்துப் படைப்பின் சீரான ஓட்டத்திற்கு இடையூறு விளைவிக்கிறான். இப்படி இருப்பதால் எல்லா ப்ராணிகளுக்கும் துன்பம் அளிக்கிறான். ஆகவே, தனது கடமையை ஆற்றாமல் படைப்பில் தடுமாற்றம் ஏற்படச் செய்யும் மனிதன் மிகப் பெரிய குற்றத்திற்கு ஆளாகிறான். அவன் தன்னலம் நிறைவேறுவதற்காக வாழ்க்கை முழுவதும் அந்யாயமாகச் செல்வம் ஈட்டுகிறான். அதனால் அவன் ஆயுள் பாவம் நிறைந்ததாகிறது. அவன் 'அகாயு' எனப்படுகிறான்.

உலகில் தன் கடமைகளை ஆற்றுவதன் மூலம் எல்லா ப்ராணிகளும் ஸுகம் அடைய வேண்டும் என்பதற்காகக் கர்மங்களைச் செய்து பரம மங்களமான பகவானை அடைவது என்ற உயரிய லக்ஷ்யத்தை அந்த மனிதன் அடையாமல் போகிறான். தன்னுடைய விலைமதிப்பிட முடியாத அருமையான மனித வாழ்க்கையை விஷய போகங்களில் ஈடுபட்டு வீணாக இழக்கிறான். அதனால், அவன் வாழ்வது வீண் என்று கூறுகிறார்.

**பொருத்தம்: மேலே சொன்னவிதம் படைப்புச் சக்ரத்தை அனுஸரித்து நடக்க வேண்டிய பொறுப்பு, எந்தத் தரத்தில் உள்ள மனிதனுக்கு இருக்கிறது என்ற கேள்வி பிறக்கிறது. பரமாத்மாவை அடைந்துவிட்ட ஸித்த புருஷனைத் தவிரப் படைப்புடன் பற்றிக் கொண்டிருக்கிற எல்லா மனிதர்களுக்கும் தத்தம் கடமைகளை ஆற்றவேண்டிய பொறுப்பு இருக்கிறது என்பதைத் தெரிவிப்பதற்காக அடுத்து வரும் இரண்டு ச்லோகங்களில் ஞானிக்குக் கடமைகள் எவையுமில்லை என்றும், அதற்குக் காரணமும் கூறுகிறார்—**

**यस्त्वात्मरतिरेव स्यादात्मतृप्तश्च मानवः।**
**आत्मन्येव च सन्तुष्टस्तस्य कार्यं न विद्यते॥१७॥**

**யஸ்த்வாத்₃மரதிரேவ ஸ்யாத₃த்மத்ருப்தஸ்ச மாநவ: ।**

**ஆத்மந்யேவ ச ஸந்துஷ்டஸ்தஸ்ய கார்யம் ந வித்₃யதே ॥ 17 ॥**

**து** – ஆனால், **ய: மாநவ:** – எந்த மனிதன், **ஆத்மரதி: ஏவ** – ஆத்மாவிலேயே இன்புற்றிருப்பவனாகவும், **ச** – மேலும், **ஆத்மத்ருப்த: ச** – ஆத்மாவிலேயே த்ருப்தி கொண்டவனாகவும், **ஆத்மநி ஏவ** – ஆத்மாவிலேயே, **ஸந்துஷ்ட:** – மகிழ்பவனாகவும், **ஸ்யாத்** – இருக்கிறானோ, **தஸ்ய** – அவனுக்கு, **கார்யம்** – செய்ய வேண்டிய செயல் எதுவும், **ந வித்₃யதே** – இல்லை.

ஆனால் எந்த மனிதன் ஆத்மாவிலேயே இன்புற்றிருப்பவனாகவும் மேலும் ஆத்மா விலேயே த்ருப்தி கொண்டவனாகவும் ஆத்மாவிலேயே மகிழ்பவனாகவும் இருக்கிறானோ, அவனுக்குச் செய்ய வேண்டிய செயல் எதுவும் இல்லை.

**கேள்வி:** 'து' என்றால் என்ன பொருள்?

**பதில்:** முன் ச்லோகத்தில், 'மனிதன் ஸ்வதர்மம் என்ற கடமைகளை அவசியம் ஆற்றவேண்டும்; தம் கடமைகளை ஆற்றாதவன் பாவி; அவன் வாழ்வு வீணே' என்று கூறினார். இப்படிப்பட்ட மனிதர்களிடமிருந்து வேறுபட்ட, சாஸ்த்ர விதிகளிலிருந்து மேலுயர்ந்துவிட்ட மாமனிதர்களான ஞானிகளைத் தனித்துக் காட்டி, அவர்கள் நிலையை வர்ணிக்கும் பொருட்டு, இங்கு 'து' (ஆனால்) என்ற சொல் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது.

**கேள்வி:** 'ஆத்ம ரதி:', 'ஆத்ம த்ருப்த:', 'ஆத்மநி ஏவ ஸந்துஷ்ட:' – என்ற மூன்று அடைமொழிகளுக்கு உரியவன் எவன்? அவனை 'மனிதன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேலே கூறப்பட்ட அடைமொழிகளுக்கு உரியவன் ஸத் சித் ஆனந்தமயமான பூர்ண ப்ரம்மமான பரமாத்மாவை அடைந்த, 'மஹாத்மா ஆன ஞானி மனிதன்' என்று குறிப்பிட்டு ஒவ்வொரு மனிதனும் ஸாதனைகள் புரிந்தால் இப்பேற்றைப் பெற முடியும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பரமாத்ம நிலையை எய்துவதற்கு எல்லா மனிதர்களுக்கும் உரிமை உண்டு என்று வலியுறுத்துகிறார்.

**கேள்வி:** 'ஆத்மாவிலேயே இன்புற்றிருப்பவனாக' என்று அழுத்தம் கொடுப்பதன் கருத்து என்ன?

**பதில்:** பரமாத்மாவை அடைந்துவிட்ட ஞானிக்குக் காணப்படும் அகில ப்ரபஞ்சமும், தூங்கி விழித்தவனுக்குக் கனவில் கண்டதுபோல ஆகிவிடும். ஆகவே, அவனுக்கு உலகியல் பொருள் எதிலும் சிறிதுகூட விருப்பம் இருக்காது. உலகியல் பொருள் ஒன்றிலும் அவன் திளைக்க மாட்டான். ஒரே பரமாத்மாவில் வேற்றுமையற்று அவன் நிலைபெறுவான். இதன் காரணமாக அவனுடைய மனமும், புத்தியும் உலகியலில் மகிழ்ச்சி கொள்ளமாட்டா. அவை பரமாத்ம ஸ்வரூபத்தையே நிச்சய புத்தியுடன் இயல்பாகச் சிந்தித்துக் கொண்டிருக்கும். இதுவே 'ஆத்மாவில் இன்புற்றிருப்பது' என்பதன் பொருள்.

**கேள்வி:** 'ஆத்மாவிலேயே த்ருப்தி அடைந்தவன்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** பரமாத்மாவை அடைந்துவிட்டவன் பூர்ணகாமன் — எல்லாத் தேவைகளையும் பூரணமாகப் பெற்றவன் ஆகிவிடுகிறான். உலகில் பெற வேண்டியது எதுவும் அவனுக்கு இல்லை. உலகியல் பொருள் ஒன்றும் சிறிதுகூட அவனுக்கு அவசியம் இல்லை. அவன் பரமாத்ம ஸ்வரூபத்திலேயே வேறு சிந்தனையற்று நிலைத்து நின்று த்ருப்தி அடைகிறான்.

**கேள்வி:** 'ஆத்மாவிலேயே மகிழ்பவன்' என்றால் என்ன?

**பதில்:** பரமாத்மாவை அடைந்துவிட்டவன் எப்பொழுதும் இடைவிடாமல் பரமாத்மாவிடமே நிம்மதியாக இருப்பான். உலகத்தின் எந்தக் கவர்ச்சியும் அவனைத் தன்பால் ஈர்க்காது. எக்காரணம் கொண்டும், எது நேர்ந்தாலும் சிறிதுகூட அவனுக்கு வருத்தம் ஏற்படாது. உலகியல் பொருள் எதனுடனும் அவனுக்கு ஸம்பந்தம் இராது. அவன் எப்பொழுதும் மகிழ்ச்சி, துயரம் என்ற விகாரங்களுக்கு அப்பால் நின்று, ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவிடம் இடைவிடாது மகிழ்ந்து இருப்பான்.

**கேள்வி:** 'அவன் செய்யவேண்டியது ஏதுமில்லை' என்றால் என்ன பொருள்?

**பதில்:** மேலே சொன்ன அடைமொழிகளுக்குரிய மஹாபுருஷன் பரமாத்மாவை அடைந்துவிட்டவன். அவன் செய்யவேண்டியதெல்லாம் செய்து முடித்தாயிற்று. அதாவது, அவன் 'க்ருதக்ருத்யன்' ஆகிவிட்டான். மனிதனுக்கு விதிக்கப்பட்ட கடமைகளுக்கெல்லாம் பயன் பரம கல்யாண ஸ்வரூபமான பரமாத்மாவை அடைவதுதானே! அந்தப் பயன் கிட்டிய பிறகு அவன் செய்யவேண்டியது எதுவும் எஞ்சி நிற்கவில்லை. அதாவது, அவன் செய்யவேண்டியதெல்லாம் செய்து முடித்தாயிற்று என்று பொருள்.

**கேள்வி:** ஞானியான மஹாபுருஷர் எந்த ஒரு கர்மமும் செய்ய மாட்டாரா?

**பதில்:** ஞானிக்கு மனத்துடனும், புலன்களுடனும் தொடர்பு அற்றுப் போய்விடும். ஆகவே, உண்மையில் அவர் எதுவும் செய்வதில்லை. ஆனாலும், உலகத்தார் பார்வையில் அவருடைய மனம், புத்தி, புலன்கள், முன் பழக்கத்தினால், ப்ராரப்தத்தின்படி சாஸ்த்ர முறைப்படியான கர்மங்களைச் செய்து கொண்டிருக்கும். இத்தகைய கர்மங்களில் மமகாரமோ, அபிமானமோ, பற்றுதலோ, ஆசையோ அவருக்கு இராததால், அவர் செய்வது புனிதமாகவும், மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாகவும் ஆகும். ஆயினும்கூட, அவர்களை சாஸ்த்ரங்களின் விதிமுறைகள் எவையும் கட்டுப்படுத்தா என்பதை நினைவில் கொள்ளவேண்டும்.

नैव तस्य कृतेनार्थो नाकृतेनेह कश्चन।
न चास्य सर्वभूतेषु कश्चिदर्थव्यपाश्रयः ॥ १८ ॥

நைவ தஸ்ய க்ருதேநார்தே₂ா நாக்ருதேநேஹ கஸ்சந ।
ந சாஸ்ய ஸர்வபூ₄தேஷு கஸ்சித₃ர்த₂வ்யபாஸ்ரய: ॥ 18 ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**தஸ்ய** – அந்த (மாமனிதனுக்கு), **இஹ** – இவ்வுலகில், **க்ருதேந** – கர்மங்களைச் செய்வதாலும், **கஸ்சந** – எந்தவிதமான, **அர்த₂:** ந – பயனும் இல்லை. **அக்ருதேந ஏவ** – கர்மங்களைச் செய்யாவிட்டாலும், **(அர்த₂:)** ந – ஒரு பயனுமில்லை. ச – அவ்வாறே, **ஸர்வபூ₄தேஷு** – உயிரினங்கள் அனைத்திலும் (எதிலுமே), **அஸ்ய** – அவனுக்கு, **அர்த₂வ்யபாஸ்ரய:** – தனக்காக ஆக வேண்டியது என்ற தொடர்பு, **கஸ்சித்** – சிறிதுகூட, ந – இல்லை.

அந்த மாமனிதன் இவ்வுலகில் கர்மங்களைச் செய்வதாலும் எந்தவிதமான பயனும் இல்லை. கர்மங்களைச் செய்யாவிட்டாலும் ஒரு பயனுமில்லை. அவ்வாறே உயிரினங்கள் அனைத்திலும் எதிலுமே அவனுக்குத் தனக்காக ஆக வேண்டியது என்ற தொடர்பு சிறிதுகூட இல்லை.

**கேள்வி:** *'அந்த மஹாபுருஷன் கர்மம் செய்வதனாலோ, செய்யாமல் இருப்பதனாலோ அவருக்கு ஒரு பிரயோஜனமுமில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** முன் ச்லோகத்தில் ஞானிக்குக் கடமைகள் கிடையா என்று சொன்னார். அதைத் திடப்படுத்துவதற்காக இந்த ச்லோகத்தில் அதற்குரிய காரணத்தைக் கூறுகிறார். அந்த மஹாபுருஷன் எப்பொழுதும் பகவானுடைய ஸ்வரூபத்திலேயே மகிழ்ந்து இருப்பதால் அவருக்கு எந்தக் கர்மத்தினாலும் உலகிலோ, பரலோகத்திலோ அடைய வேண்டிய பயன் எதுவும் மிச்சம் இல்லை. அவருடைய தேவைகள் எல்லாம் பூர்த்தி ஆகிவிட்டன. அவர் அடைய வேண்டுவது ஒன்றுமில்லை. ஆகவே அவருக்கு எந்தக் கர்மமும் விதிக்கப்படவில்லை. அவர் சாஸ்த்ர விதிகளிலிருந்து விலக்குப் பெற்றுவிட்டார். மனம், புலன்கள் கூடிய அவருடைய உடலின் மூலம் ஏதாவது செயல் புரிய நேர்ந்தால் சாஸ்த்ரங்கள் அந்தக் கர்மங்களை த்யாகம் செய்துவிடலாம் என்றும் சொல்லவில்லை. அவர் செய்யாமல் விட்டுவிட்டால், அவற்றைச் செய்யத்தான் வேண்டும் என்றும் விதிக்கவில்லை.

ஆகவே ஞானம் பெற்றபிறகு, ஜீவன்முக்தி என்ற ஸுகம் பெறுவதற்காகக் கர்மங்களை விடவேண்டுமா, செய்யவேண்டுமா என்று ஞானி நினைத்துக் கூடப் பார்க்க வேண்டியதில்லை. ஏனெனில் ஞானம் பெற்ற பிறகு, மனத்திற்கும், புலன்களுக்கும் இன்பம் என்பது துச்சமான விஷயம். அதிலும் அவருக்கு ஸம்பந்தமில்லை. அவர் எப்போதும் நித்யானந்தத்தில் மூழ்கியிருப்பார். அவரே ஆனந்த ஸ்வரூபமாக இருப்பார். ஆக ஏதோ ஒரு ஸுகத்தை அடைவதற்காக 'செய்வது அல்லது விடுவது' என்ற செயல் உள்ளதாக நினைப்பவன் உண்மையில் ஞானி அல்லன். ஏதோவொரு சிறந்த நிலையையே ஞானநிலை என்று எண்ணிக் கொண்டு தன்னை ஞானியாக நினைப்பவனே அவன். 17வது ச்லோகத்தில் சொல்லப்பட்ட இலக்கணத்திற்குரிய ஞானி இப்படி நினைக்க மாட்டார். இவ்விஷயத்தை உறுதிபடச் சொல்வதற்கே பகவான் உத்தர கீதையில் கூறுகிறார்—

**ஜ்ஞாநாம்ருதேந த்ருப்தஸ்ய க்ருதக்ருத்யஸ்ய யோகி₃ந: ।**
**ந சாஸ்தி கிஞ்சித்கர்தவ்யமஸ்தி சேந்ந ஸ தத்த்வவித் ॥** *(1/22)*

ஞானம் என்ற அமுதத்தையே பருகி த்ருப்தி அடைந்து க்ருதக்ருத்யன் ஆனவனுக்குச் செய்யவேண்டிய கார்யம் ஒன்றுமில்லை. அப்படிச் செய்யவேண்டியதிருப்பின் அவன் தத்வஞானி அல்லன்.

**கேள்வி:** *'எல்லா ப்ராணிகளினாலும் ஞானிக்குத் தமக்கென ஆக வேண்டுவது ஏதும் கிடையாது' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** ஞானிக்குக் கர்மம் செய்வதாலோ, செய்யாததாலோ ப்ரயோஜனம் ஏதுமில்லை. அதுபோல அவருக்குத் தாவரங்களிடமிருந்தும், ப்ராணிகளிடமிருந்தும் எந்தவிதமான தேவையும், ப்ரயோஜனமும் கிடையா. தேஹாபிமானம் அறவே ஒழியாதவனுக்கும், பரமாத்மாவை அடைவதற்காக ஸாதனை புரிபவனுக்கும், தன் ஸுகத்திற்காக எதையும் விரும்பாவிட்டாலும் வாழ்க்கை நடைபெறுவதற்காக மற்ற ப்ராணிகளிடம் சிறிதேனும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தன்னலம் சார்ந்த தொடர்பு இருக்கலாம். ஆகவே அவன் சாஸ்த்ர முறைப்படி கர்மங்களைச் செய்யவேண்டியது அல்லது விடவேண்டியது என்ற நியதிக்குக் கட்டுப்படவேண்டியிருக்கும். ஆனால் ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவை அடைந்துவிட்ட ஞானி, சரீர அபிமானம் இல்லாதபடியால் தம் வாழ்க்கையைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. இந்த நிலையில் அவருடைய வாழ்க்கை ப்ராரப்தத்திற்கேற்றவாறு, தானே நடைபெறுகிறது. ஆகவே அவருக்கு எந்த ப்ராணியினாலும், எந்தவிதத்திலும் அவரது நலத்திற்காக ஆகவேண்டியது ஏதுமில்லை. ஆகவேதான், அவர் செய்யவேண்டியது மீதம் ஒன்றுமில்லை. அவர் முழுமையாக 'க்ருதக்ருதயர்' ஆகிவிடுகிறார்.

**கேள்வி:** அப்படியானால் அவர் ஏன் 'கர்மம்' செய்கிறார்?

**பதில்:** அவர் ஒன்றும் செய்வதில்லை. ப்ராரப்தத்தை அனுஸரித்து உலக த்ருஷ்டியில், உலகத்திற்கு எடுத்துக்காட்டாக அவர் மூலம் ஏதோ க்ரியைகள் நடைபெறுகின்றன. உண்மையில் அவருக்கு அந்தக் கர்மங்களுடன் எந்தவித ஸம்பந்தமுமில்லை. ஆகவே அந்தச் செயல்களைக் கர்மங்கள் என்றே கருதக் கூடாது.

**பொருத்தம்:** இதுவரை பகவான் பல காரணங்களைக் கூறி, மனிதன் பரம ச்ரேயஸ்ஸான பரமாத்மாவை அடையும்வரை ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிக்கத்தான் வேண்டும். வர்ணாசிரமங்களுக்கு ஏற்றபடி விதிக்கப்பட்ட கடமைகளைத் தன்னலம் கருதாது ஆற்றத்தான் வேண்டும்; பரமாத்மாவை அடைந்து விட்டவனுக்கு எவ்விதக் கடமையும் இல்லாவிட்டாலும் உலகத்திற்கு எடுத்துக்காட்டாக, அவனுடைய மனம், புலன்கள் மூலமாக, ப்ராரப்த வினைக்கேற்றபடி கர்மம் நடைபெறுகிறது என்று விளக்கினார். இதுகாறும் கூறப்பட்டவற்றைக் குறிக்கோளாகக் கொண்டு 'பற்றின்றிக் கடமை ஆற்று' என்று பகவான் அர்ஜுனனுக்கு ஆணையிடுகிறார்—

**तस्मादसक्तः सततं कार्यं कर्म समाचर।**
**असक्तो ह्याचरन्कर्म परमाप्नोति पूरुषः॥१९॥**

**தஸ்மாதஸக்த: ஸததம் கார்யம் கர்ம ஸமாசர ।**

**அஸக்தோ ஹ்யாசரந்கர்ம பரமாப்நோதி பூருஷ: ॥ 19 ॥**

**தஸ்மாத்** – ஆகவே, **அஸக்த:** – பற்றின்றி, **ஸததம்** – எப்பொழுதும், **கார்யம் கர்ம** – ஆற்ற வேண்டிய கடமையை, **ஸமாசர** – செவ்வனே நிறைவேற்றிக் கொண்டிரு. **ஹி** – ஏனெனில், **அஸக்த:** – பற்றின்றி, **கர்ம** – கர்மங்களை, **ஆசரந்** – செய்கின்ற, **பூருஷ:** – மனிதன், **பரம்** – பரமாத்மாவை, **ஆப்நோதி** – அடைகிறான்.

ஆகவே பற்றின்றி எப்பொழுதும் ஆற்ற வேண்டிய கடமையைச் செவ்வனே நிறைவேற்றிக் கொண்டிரு. ஏனெனில் பற்றின்றிக் கர்மங்களைச் செய்கின்ற மனிதன் பரமாத்மாவை அடைகிறான்.

**கேள்வி:** 'தஸ்மாத்' என்றால் என்ன?

**பதில்:** 'ஆகவே' என்று பொருள். அது முன் ச்லோகத் தொடர்பைக் கூறுகிறது. இதுகாறும் சொன்னவற்றால் ஸ்வதர்மத்தைக் கடைப்பிடித்தேயாக வேண்டும் என்பதற்கான காரணங்களை நீ ஆராய்ந்து பார்த்தால், எவ்விதத்திலும் ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பதுதான் உனக்கு நலம் என்பது தெளிவாகும். ஆகவே நீ உன் வர்ண தர்மத்திற்கு ஏற்றவாறு கடமையைச் செய்யத்தான் வேண்டும் என்று பொருள்.

**கேள்வி:** 'அஸக்த:' என்றால் என்ன?

**பதில்:** எல்லாக் கர்மங்களையும் செய்வதிலும், அவற்றின் பயனாகக் கிடைக்கும் போகங்களிலும் பற்றுதலை விட்டுக் கடமையை ஆற்ற வேண்டுமென்று பகவான்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அர்ஜுனனுக்கு ஆணையிடுகிறார். பற்றுதலை விடவேண்டும் என்று சொன்னதில் ஆசையை விடவேண்டும் என்பதும் அடங்கி இருக்கிறது. ஏனெனில் பற்றுதலிலிருந்துதான் ஆசை பிறக்கிறது (2/62). ஆகவே பயனில் விருப்பத்தைத் துறத்தல் இங்கே தனியாகச் சொல்லப்படவில்லை.

**கேள்வி:** 'ஸததம்' (எப்பொழுதும்) என்று ஏன் கூறுகிறார்?

**பதில்:** எந்த மனிதனும் கணநேரம்கூடக் கர்மம் செய்யாமல் இருக்க முடியாது (3/5) என்று பகவான் முன்பே சொல்லிவிட்டார். மனிதன் ஏதாவது செய்து கொண்டுதான் இருப்பான் என்பது அதிலிருந்து தெரிகிறது. ஆகவே, 'எப்பொழுதும்' என்ற சொல்லின் மூலம் 'நீ எப்பொழுதும் எதையாவது செய்து கொண்டிருந்தாலும், அத்தனை கர்மங்களிலும், அவற்றின் பயன்களிலும் பற்றுதலின்றி அவற்றைச் செய்வாயாக. எந்த சமயத்திலும், எந்தச் செயலிலும் பற்றுடன் ஈடுபடாதே' என்று உணர்த்துகிறார்.

**கேள்வி:** 'கர்ம' என்ற சொல்லோடு 'கார்யம்' என்ற அடைமொழியை ஏன் சேர்க்கிறார்?

**பதில்:** வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை இவற்றுக்கேற்றவாறு எந்தக் கடமையை ஆற்றவேண்டுமோ, அதைத்தான் நீ செய்யவேண்டும். பிறருக்கு விதிக்கப்பட்ட கர்மத்தையும், விலக்கப்பட்ட செயல்களையும், வீணானவற்றையும், காம்ய கர்மங்களையும் செய்யக் கூடாது.

**கேள்வி:** 'ஸமாசர' (செவ்வனே செய்) என்பதன் கருத்து என்ன?

**பதில்:** செய்யவேண்டியதை ஸம் – திருத்தமாக, ஆசர – செய்யவேண்டும் என்று பொருள். கவனமாக, முறைப்படி, தகுதிக்கேற்றவாறு செய்யவேண்டும். இப்படிச் செய்யாமல் அலக்ஷ்யமாகவோ, விதிமுறைகளை மீறியோ, உனக்குத் தகுதியில்லாததையோ, நீ செய்தால் அவற்றில் குறை ஏற்பட்டு, அதனால் மேன்மையடைவதில் தாமதம் ஏற்படும்.

**கேள்வி:** பற்றில்லாமல் கடமையை ஆற்றுபவன் பரமாத்மாவை அடைவான் என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** பகவான் இதன் மூலம் மேற்கூறிய கர்மயோகத்தின் பயனைக் கூறுகிறார்: "முன் சொன்னவாறு பற்றினைத் துறந்து கடமைகளைச் செவ்வனே ஆற்றுபவன் கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெற்றுப் பரமபுருஷனான பரமாத்மாவை அடைந்து விடுகிறான். கர்மயோகத்திற்கு அவ்வளவு பெருமை உண்டு. ஆகவே நீ எல்லாக் கடமைகளையும் முன் சொன்னவாறு செய்யத்தான் வேண்டும்."

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் பற்றற்றுக் கடமையை ஆற்றுபவன் பரமாத்மாவை அடைவான் என்று சொன்னாரல்லவா? அதை மேலும் வலியுறுத்துவதற்காக ஜனகர் முதலானவர்களைச் சான்று காட்டி, கடமைகளை ஆற்றுவதே ஏற்றது என்பதை மறுபடியும் அர்ஜுனனுக்குச் சொல்கிறார்—

**कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः।**
**लोकसङ्ग्रहमेवापि सम्पश्यन्कर्तुमर्हसि ॥ २० ॥**

**கர்மணைவ ஹி ஸம்ஸித்₃தி₄மாஸ்தி₂தா ஜநகாத₃ய: ।**

**லோகஸங்க்₃ரஹமேவாபி ஸம்பஶ்யந்கர்துமர்ஹஸி ॥ 20 ॥**

**ஜநகாத₃ய: ஹி** – ஜனகர் முதலிய ஞானிகளும், **கர்மணா ஏவ** – பற்றின்றிக் கர்மங்களைச் செய்ததன் மூலமே, **ஸம்ஸித்₃தி₄ம்** – சிறந்த பேற்றை, **ஆஸ்தி₂தா:** – அடைந்தனர். (அவ்விதமே), **லோகஸங்க்₃ரஹம்** – உலகத்திற்கு வழிகாட்டுவது (என்பதை), **ஸம்பஶ்யந்** – நன்கு மனதில் கொண்டு, **(த்வம்) அபி** – நீயும், **கர்தும் ஏவ** – கர்மங்களைச் செய்வதுதான், **அர்ஹஸி** – உனக்கு உரிய செயலாகும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஜனகர் முதலிய ஞானிகளும் பற்றின்றிக் கர்மங்களைச் செய்ததன் மூலமே சிறந்த பேற்றை அடைந்தனர். அவ்விதமே உலகத்திற்கு வழிகாட்டுவது என்பதை நன்கு மனதில் கொண்டு நீயும் கர்மங்களைச் செய்வதுதான் உனக்கு உரிய செயலாகும்.

**கேள்வி:** *ஜனகர் முதலானவர்கள் யார்? அவர்களும் கர்மயோகத்தினால் பரமஸித்தியை அடைந்துவிட்டார்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** பகவான் இந்த கீதையை உபதேசம் செய்த காலம் வரை, ஜனகரைப் போலவே மமகாரம், பற்று, ஆசை இவற்றை த்யாகம் செய்து, பரமாத்மாவை அடைவதற்காக மட்டும் கர்மம் செய்தவர்களான அச்வபதி, இக்ஷ்வாகு, ப்ரஹ்லாதன், அம்பரீஷன் முதலான மஹாபுருஷர்களை 'ஜனகர் முதலானோர்' என்று குறிப்பிடுகிறார். முன் ச்லோகத்தில் 'பற்றற்றவன் பரமாத்மாவை அடைவான்' என்று சொன்னார். அதற்குச் சான்று காட்டி வலியுறுத்துவதற்காக, இங்கே இந்தச் செய்தியைச் சொல்கிறார். முற்காலத்தில் ஜனகர் முதலான மிக முக்யமான மஹாபுருஷர்களும் பற்றற்றுக் கர்மங்களை ஆற்றி, பரம ஸித்தியைப் பெற்றனர். இதுவரை பல பெரியோர்கள் மமகாரம், ஆஸக்தி, வேட்கைகளைத் துறந்து கர்மயோகத்தின் வழியாகப் பரமாத்மாவை அடைந்துவிட்டார்கள்; இது புதிய செய்தி அன்று என்பது கருத்து. ஆகவே இது, பரமாத்மாவை அடைவதற்கு வேறொன்றைச் சார்ந்திராத உறுதியான வழி. இதில் சிறிதுகூட ஸந்தேஹத்திற்கு இடமில்லை.

**கேள்வி:** *பரமாத்மாவை தத்வஞானத்தினால்தானே அடைய முடியும்? இங்கே 'பற்றற்றுக் கடமையைச் செய்வது பரமாத்மாவை அடைய வழி' என்று சொல்கிறாரே. இதன் கருத்து என்ன?*

**பதில்:** பற்றற்றுக் கர்மங்களை ஆற்றுவதால் மனம் பரிசுத்தம் ஆகப் பெற்றவருக்குப் பரமாத்மாவினுடைய க்ருபையினால், தானாகவே தத்வஞானம் கிடைக்கும் (4/38). அப்படி கர்மயோகியான முனிவர் அதே கணத்தில் பரமாத்மாவை அடைவார் (5/6). ஆகவே, இங்கே பற்றற்றுக் கர்மங்களையாற்றுவது பரமாத்மாவை அடைய வழி என்று கூறுகிறார்.

**கேள்வி:** *'உலகத்திற்கு வழிகாட்டுவது' என்று எதைச் சொல்கிறார்? உலகிற்கு வழிகாட்டும் நோக்கத்துடனாவது கர்மங்களை ஆற்றுவது ஏற்றது என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** படைப்பு முறையைச் சரியாக நடத்திச் செல்வது, அதன் கட்டுப்பாட்டில் எவ்விதத் தடையும் ஏற்படுத்தாமல் அதற்குத் துணைபோவது – இவை உலகத்திற்கு வழிகாட்டும் மார்க்கம் என்கிறார். அதாவது எல்லா ப்ராணிகளுடையவும் வளர்ப்பு–காப்பு இவற்றின் பொறுப்பு மனிதனுக்கு உள்ளது. ஆகவே தனது வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை இவற்றுக்கேற்றவாறு தனக்கு விதிக்கப்பட்ட கடமைகளைச் செவ்வனே ஆற்றி, பிறருக்குத் தான் வழிகாட்டியாக இருந்து, தீய குணங்களையும், தீய நடத்தைகளையும் அகற்றி, அவர்களை ஸ்வதர்மத்தில் நிலைபெறச் செய்வதுதான், உலகிற்கு வழிகாட்டும் முறை என்கிறார்.

இங்கு, அர்ஜுனன் உலகுக்கு வழிகாட்டும் முறையிலாவது கர்மங்களைச் செவ்வனே ஆற்றவேண்டும் என்று கூறும் பகவான், "மங்களத்தை விரும்பும் மனிதன் பரமச்ரேயஸ்ஸான பரமேசுவரனை அடைவதற்காகப் பற்றற்றுக் கர்மங்களையாற்றுவது அவசியம் ஆகும். இது தவிர உலகிற்கு வழிகாட்டுவதற்காகவும், மனிதன் கர்மங்களை ஆற்றிக் கொண்டே இருக்கவேண்டும். ஆகவே நான் உலகிற்கு வழிகாட்டியாக இந்தக் கர்மத்தை ஆற்றாவிட்டால், உலகத்தினர் என்னைப் பின்பற்றித் தமது கர்மங்களை ஆற்றத் தவறுவார்கள். அதனால் படைப்பில் கிளர்ச்சி ஏற்படும்; கட்டுப்பாட்டில் தவறு ஏற்படும். ஆகவே, படைப்பின் சீரமைப்பைக் கட்டிக் காப்பதற்காக 'நான் என் கர்மங்களை ஆற்றத்தான் வேண்டும்' என்று நினைத்து, நீயும் கர்மங்களை ஆற்றவேண்டும். அவற்றைச் செய்யாமல் விடுவது உனக்கு எவ்விதத்திலும் ஏற்றதன்று" என்று கூறுகிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** பரமாத்மாவை அடைந்துவிட்ட ஞானி மட்டும் உலகத்திற்கு வழிகாட்டியாக நடக்கவேண்டுமா? ஸாதகனும் அவ்வாறே நடக்க முடியுமா?

**பதில்:** ஞானி தமக்காகச் செய்ய வேண்டியது எதுவுமில்லை. ஆகவே அவர் செய்வதெல்லாம் உலகிற்கு வழிகாட்டத்தான். அந்த ஞானியை வழிகாட்டியாகக் கொண்டு, ஸாதகனும் உலகிற்கு வழிகாட்டியாகத் தன் கர்மங்களை ஆற்றவேண்டும். ஸாதகன் பூரணமாக உலகிற்கு வழிகாட்டியாகக் கர்மங்களைச் செய்ய முடியாதுதான். அவனுக்கு அஞ்ஞானம் முழுவதும் விலகாதபடியால் ஏதாவது ஓர் அம்சத்தில் அவனுக்குத் தன்னலம் இருக்கத்தான் இருக்கும். தன்னலம் சிறிதே இருந்தாலும்கூட அவன் செய்வது உலகத்திற்கு வழிகாட்டியாக அமைய முடியாது.

**கேள்வி:** ஞானி செய்யவேண்டியது ஒன்றுமில்லையானால், அதனால் அவர் நோக்கில் கர்மத்திற்கு ஒரு பெருமையும் இல்லையானால், அவர் உலகிற்கு வழிகாட்டியாகக் கடமை ஆற்றுவது வெறும் பகட்டாகத்தானே இருக்கும்?

**பதில்:** ஞானியால் எதுவும் செய்யப்பட வேண்டியதில்லை; ஆனாலும் அவர் செய்வது வெறும் பகட்டாக இராது. மனதில் கர்மத்தைப் பற்றிய பெருமையான எண்ணமில்லாமல் மேலெழுந்தவாரியாக, உலகத்திற்கு வெளிப்படையாகக் காட்டுவதற்காகக் கர்மம் செய்வது ஒருவிதப் பகட்டுத்தான். ஞானியிடம் இவ்விதப் பகட்டு இருக்காது. 'நாம் சரியாகச் செய்யவேண்டும்; ச்ரத்தையுடன் செய்யவேண்டும்; உலகம் நம்மைக் கவனித்து நாம் செய்கிறபடியேதான் செய்யும். ஆகவே சரியாகச் செய்யவேண்டும்' என்றுதான் ஞானி செய்வார். அதில் பகட்டு இருக்காது; பற்று இருக்காது; ஆசை இருக்காது; அஹங்காரம் இருக்காது. ஞானி எந்த பாவனையுடன் கர்மம் செய்கிறார் என்பது மற்றவருக்குப் புரியாது. ஆகவே அவர் கர்மங்களை ஆற்றுவது மிகவும் தனிப்பட்டதாக இருக்கும்.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் பகவான் அர்ஜுனனை உலகத்திற்கு வழிகாட்டியாக, கடமைகளைச் செய்வது உசிதம் என்று சொன்னார். கடமைகளை ஆற்றுவது எப்படி உலகிற்கு வழிகாட்டும் என்ற கேள்வி பிறக்கிறது. அதை விளக்குகிறார்—

**यद्यदाचरति श्रेष्ठस्तत्तदेवेतरो जनः ।**
**स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ॥ २१ ॥**

**யத்₃யத₃ாசரதி ஶ்ரேஷ்ட₂ஸ்தத்ததே₃வேதரோ ஜந: ।**

**ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்தத₃நுவர்ததே ॥ 21 ॥**

**ஶ்ரேஷ்ட₂:** – உயர்ந்த மனிதன், **யத் யத்** – எதை எதை, **ஆசரதி** – செய்கிறானோ, **இதர: ஜந:** – ஏனையோரும், **தத் தத் ஏவ** – அதை அதையே (செய்வர்). **ஸ:** – அவன், **யத்** – எதை, **ப்ரமாணம்** – சான்றாக, **குருதே** – எடுத்துக்காட்டுகிறானோ, **லோக:** – மனித ஸமுதாயம் அனைத்தும், **தத்** – அதையே, **அநுவர்ததே** – பின்பற்றி நடக்கிறது.

உயர்ந்த மனிதன் எதை எதைச் செய்கிறானோ ஏனையோரும் அதை அதையே செய்வர். அவன் எதைச் சான்றாக எடுத்துக்காட்டுகிறானோ மனித ஸமுதாயம் அனைத்தும் அதையே பின்பற்றி நடக்கிறது.

**கேள்வி:** 'ஶ்ரேஷ்ட:' என்றால் யார்?

**பதில்:** நல்ல குணங்களும், நல்ல நடத்தைகளும் அமைந்ததன் காரணமாக தர்மாத்மா என்று சிலர் புகழ் பெறுகிறார்கள். உலகில் பெரும்பாலான மக்கள் அவரிடம் ச்ரத்தையும், விசுவாஸமும் கொள்கிறார்கள். இப்படிப்பட்ட புகழ் பெற்ற மதிப்பிற்குரிய மஹாத்மாக்களைத்தான் சிறந்தவர் என்று கூறுகிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'உயர்ந்தவர் செய்வதையே ஏனையோரும் பின்பற்றுவர்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** முன் சொன்ன மஹாத்மா தமது வர்ணாசிரம தர்மத்தைச் செவ்வனே அனுஷ்டானம் செய்பவரானால், மற்றவர்களும் அவரைப் பார்த்துத் தமது வர்ணாசிரம தர்மங்களைக் கடைப்பிடிப்பதில் ச்ரத்தையுடன் ஈடுபடுவார்கள். ஆகவே படைப்பின் சீரமைப்பு அழகான முறையில் நடைபெறும். ஒருவித இடையூறும் இராது. ஆனால் ஒரு தர்மாத்மாவான ஞானி தமது வர்ணாசிரம தர்மத்தை விட்டுவிடுவாரேயானால், உலகத்தார் மீதும் அதன் பாதிப்பு ஏற்படும். 'கர்மங்களினால் பயனில்லை. கர்மங்களில் ஸாரமிருந்தால் இத்தகைய மஹாத்மா அதை விடுவாரா?' என்று நினைத்து, அந்த மஹாபுருஷரைப் பார்த்துத் தாமும் தமது வர்ணாசிரமத்திற்கு உரிய தர்மத்தை விட்டு விடுவார்கள். இப்படி நடந்தால் உலகில் பெரும் குழப்பம் ஏற்படும்; எல்லாக் கட்டுப்பாடுகளும் சிதறிவிடும். இதற்காகத்தான் மஹாத்மாக்கள் உலகத்திற்கு வழிகாட்டியாக இருக்கவேண்டும் என்ற கருத்தோடு, தமது வர்ணாசிரம தர்மத்திற்குத் தக்கபடி பொறுப்புடன் எல்லாக் கர்மங்களையும் செய்ய வேண்டும். கர்மங்களை அலக்ஷ்யப்படுத்துவதோ, விட்டுவிடுவதோ கூடாது என்பது வலியுறுத்தப்படுகிறது.

**கேள்வி:** அவர் தம் செய்கையாலே எதைச் சான்று என்று எடுத்துக் காட்டுகிறாரோ, அதற்குத் தக்கபடி மனித ஸமுதாயம் நடந்து கொள்ளும் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** சிறந்தவர்கள் தமது நடத்தையினாலேயே உலகிற்குப் பாடம் புகட்டி, எந்த விஷயத்தைச் சரி என்று எடுத்துக்காட்டுகிறார்களோ, அதாவது மக்களின் மனதில் நம்பிக்கையை ஏற்படுத்துகிறார்களோ, 'இந்தக் கர்மத்தை இப்படிப்பட்டவன் இப்படிச் செய்யவேண்டும், இந்தக் கர்மத்தை இப்படிப்பட்டவன் இப்படிச் செய்யக் கூடாது' என்று வழிகாட்டுகிறார்களோ, அதற்குத் தக்கபடி பொதுவாக மனிதர்கள் நடந்து கொள்வார்கள். ஆகவே மதிக்கத்தக்க பெரியோர்களுக்குப் படைப்பின் சீரமைப்பு சரியாக நடைபெறுவதில் மிகவும் பொறுப்பு உள்ளது. தாமே செய்வதன்மூலம் உலகிற்குப் பாடம் கற்பித்து, அவரவர்களை அவரவர் கடமைகளில் ஈடுபடுத்த வேண்டும். மேலும் அவர்களுடைய உபதேசத்தினாலும், நடத்தைகளினாலும் உலகத்தின் நடைமுறைக் கட்டுப்பாடு காக்கப்பட வேண்டும்; வர்ணாசிரம தர்மமோ, மனிதப் பண்போ சிறிதுகூடக் குலையக் கூடாது; அவரவர் கடமைகளில் அவரவர்க்கு ருசியும், ச்ரத்தையும் குறையக் கூடாது என்பதில் கவனம் இருக்கவேண்டும்.

**கேள்வி:** மஹாபுருஷர்கள் எப்படி நடக்கிறார்களோ, அப்படி மற்றவர்கள் நடப்பார்கள் என்று சொன்னாலே போதுமே! அவர்கள் எதைச் சான்று என்று தீர்மானிக்கிறார்களோ, அதையே உலகம் ஏற்றுக் கொள்ளும் என்று சொல்வானேன்?

**பதில்:** உலகில் எல்லோருக்கும் ஒரேவிதமான கடமைகள் அமைவதில்லை. நாடு, ஸமுதாயம், தத்தம் வர்ணாசிரமம், ஸந்தர்பம், நிலைமை இவற்றிற்கேற்றவாறு கடமைகள் மாறுபடும். மிகச் சிறந்த மஹாபுருஷர்கள் எல்லோருடைய கடமைகளையும் அனுஷ்டித்துக் காட்டவேண்டும் என்பது நடைபெறாது. ஆகவே உயர்ந்த மஹாபுருஷர்கள் வேதங்களிலும், உலகியலிலும் காணப்படும் கர்மங்களைத் தமது சொற்களினால் சான்றாகக் காட்டுவார்களேயானால், அவற்றை மக்கள் ஏற்று அவற்றைப் பின்பற்றுவார்கள். இதற்காகத்தான் அப்படிச் சொன்னார்.

**பொருத்தம்:** பகவான் இவ்விதம் மஹாபுருஷர்களின் நடத்தை உலகத்தாருக்கு வழிகாட்டி ஆகும் என்று கூறி, பின்வரும் மூன்று ச்லோகங்களில் தம்மையே முன்னுதாரணமாகக் காட்டி, வர்ணாசிரமங்களுக்குரிய கர்மங்களை ஆற்றுவதன் அவசியத்தை வற்புறுத்துகிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किञ्चन।**
**नानवाप्तमवाप्तव्यं वर्त एव च कर्मणि॥२२॥**

**ந மே பார்த₂ாஸ்தி கர்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந ।**

**நாநவாப்தமவாப்தவ்யம் வர்த ஏவ ச கர்மணி ॥ 22 ॥**

**பார்த₂** – அர்ஜுன! **மே** – எனக்கு, **த்ரிஷு லோகேஷு** – மூவுலகங்களிலும், **கர்தவ்யம்** – செய்ய வேண்டிய கடமை, **கிஞ்சந ந அஸ்தி** – ஒன்றுமில்லை. **அவாப்தவ்யம்** – அடைய வேண்டியது எதுவும், **அநவாப்தம் ச ந** – அடையப் படாமலுமில்லை. (ஆயினுங்கூட நான்), **கர்மணி ஏவ** – கர்மத்திலேயேதான், **வர்தே** – ஈடுபட்டுள்ளேன்.

அர்ஜுன! எனக்கு மூவுலகங்களிலும் செய்ய வேண்டிய கடமை ஒன்றுமில்லை. அடைய வேண்டியது எதுவும் அடையப்படாமலுமில்லை. ஆயினுங்கூட நான் கர்மத்திலேயேதான் ஈடுபட்டுள்ளேன்.

**கேள்வி:** அர்ஜுனனை 'பார்த₂' என்று அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** ப்ருதா, குந்தி என்று குந்திக்கு இரண்டு பெயர்கள். இளமையில் அவர் தம் தந்தை சூரஸேனன் வீட்டில் இருந்தவரை அவருக்குப் பெயர் 'ப்ருதா'; அரசன் குந்திபோஜனுக்குத் தத்துப் பெண்ணாகச் சென்றபோது 'குந்தி' என்ற பெயர் வந்தது. மாதாவின் இந்தப் பெயரின் தொடர்பினால் அர்ஜுனனுக்குப் பார்த்தன், கௌந்தேயன் என்ற பெயர்கள் வந்தன. பகவான் அர்ஜுனனைத் தமது கடமையில் ஈடுபடுத்தும்போது மிகுந்த நேசத்துடனும், அன்புடனும், தமது உறவு முறையைச் சுட்டிக்காட்டும் 'பார்த₂' (அத்தை மகனே) என்ற பெயரினால் கூப்பிட்டு, 'என் அத்தானே! உன்னுடைய் பெருமைக்குக் குறைவான செயலில் உன்னை ஈடுபடுத்தமாட்டேன். நீ என் அத்தானல்லவா? நான் எதைச் செய்கிறேனோ, மேலும் எது உனக்கு மங்களத்தை நல்குமோ, அதையே கூறுகிறேன்' என்று சுட்டிக்காட்டுகிறார்.

**கேள்வி:** 'மூவுலகங்களிலும் நான் செய்ய வேண்டியது எதுவுமில்லை' என்று ஏன் கூறுகிறார்?

**பதில்:** ஸாதாரண மனிதனுக்கு இவ்வுலகோடு மட்டும்தான் ஸம்பந்தம் உண்டு. தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நான்குவிதப் பயன்களுக்காக அவன் செய்ய வேண்டியதெல்லாம் இவ்வுலகிலேயே முடிந்துவிடும். நான் ஸாதாரண மனிதனல்லன். எல்லோருக்கும் கடமைகளை விதிக்கின்ற பரமேசுவரன். ஆகவே மேலுலகம், பூவுலகம், கீழுலகம் என்ற மூவுலகிலும் எனக்குச் செல்வாக்கு உண்டு. ஆயினும் எவ்வுலகிலும் நான் செய்ய வேண்டிய கடமை ஒன்றும் மீதம் இல்லை.

**கேள்வி:** 'எனக்கு இம்மூவுலகிலும் அடையத்தக்கது எதுவும் அடையப்படாமலில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இவ்வுலகம் என்ன? மூவுலகிலும் நான் பெறவேண்டும் என்ற ஒரு பொருளும் கிடையாது. எனக்குக் கிடைக்காதது என்று ஒன்றுமில்லை. நான் ஸர்வேசுவரன். தேவைகள் நிறைவுற்றவன்; எல்லாவற்றையும் படைப்பவன் என்பது பொருள்.

**கேள்வி:** ஆயினும் நான் கர்மங்களை ஆற்றிக் கொண்டுதான் இருக்கிறேன் என்று கூறுவதற்கு என்ன பொருள்?

**பதில்:** 'எனக்கு ஒரு பொருளும் தேவை இல்லை. நான் செய்யவேண்டிய கடமைகளும் ஒன்றும் இல்லை. உலகத்திற்கு வழிகாட்டியாக இருக்கவேண்டுமே என்ற எண்ணத்தினால்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உலக மாந்தர் மீது கொண்ட கருணையினால் கர்மங்களில் ஈடுபடுகிறேன். நான் கர்மங்களைச் செய்யாமல் விடுவதில்லை' என்று பகவான் தம் நிலையை விளக்கினார். இனி மனிதர்கள் எக்காரணம் பற்றியும் தம் கர்மங்களை விடக்கூடாது என்பதைப் பின்வருமாறு கூறுகிறார். எந்த மனிதனும், "எனக்கு எந்தப் பொருளிலும் பற்று இல்லை; போகங்களிலும் பற்று இல்லை; கர்மங்கள் செய்வதால் கிடைக்கும் பயனிலும் விருப்பமில்லை. அப்படியிருக்க நான் ஏன் கர்மம் செய்ய வேண்டும்? எனக்குப் பரமபதம் கிட்டிவிட்டதே. இனிக் கர்மங்களைச் செய்வதற்கான அவசியம் என்ன?" என்று நினைத்துக் கர்மங்களைத் தவிர்க்கக்கூடாது. வேறு காரணங்களுக்காகக் கர்மம் செய்ய வேண்டியதில்லையாயினும், உலகிற்கு எடுத்துக்காட்டுவதற்காகவாவது கடமைகளை ஆற்றத்தான் வேண்டும்.

**यदि ह्यहं न वर्तेयं जातु कर्मण्यतन्द्रितः ।**
**मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥ २३ ॥**

**யதி₃ ஹ்யஹம் ந வர்தேயம் ஜாது கர்மண்யதந்த்₃ரித: ।**

**மம வர்த்மாநுவர்தந்தே மநுஷ்யா: பார்த₂ ஸர்வஶ: ॥ 23 ॥**

**ஹி** – ஏனெனில், **பார்த₂** – பார்த்த! **ஜாது** – ஒருகால், **அஹம்** – நான், **அதந்த்₃ரித:** – கவனத்துடன், **கர்மணி** – கர்மங்களில், **யதி₃ ந வர்தேயம்** – ஈடுபடாமல் இருந்தால் (பெரிய தீங்கு விளையும். ஏனெனில்), **மநுஷ்யா:** – மனிதர்கள், **ஸர்வஶ:** – எல்லாவிதங்களிலும், **மம** – என்னுடைய, **வர்த்ம** – வழியையே, **அநுவர்தந்தே** – பின்பற்றுகிறார்கள்.

ஏனெனில் பார்த்த! ஒருகால் நான் கவனத்துடன் கர்மங்களில் ஈடுபடாமல் இருந்தால் பெரிய தீங்கு விளையும். ஏனெனில் மனிதர்கள் எல்லாவிதங்களிலும் என்னுடைய வழியையே பின்பற்றுகிறார்கள்.

**கேள்வி:** 'ஹி' என்றால் என்ன?

**பதில்:** முதல் ச்லோகத்தில் பகவான் 'எனக்குக் கடமைகள் எவையும் கிடையா. ஆயினும் கர்மங்களை ஆற்றுகிறேன்' என்று சொன்னார். அதன்மேல் 'உங்களுக்குக் கடமைகள் இல்லையானால், நீங்கள் ஏன் கர்மம் செய்கிறீர்கள்?' என்ற கேள்வி எழுகிறது. ஆகவே இரண்டு ச்லோகங்களில், பகவான் தாம் கர்மங்களைச் செய்வதற்கான காரணத்தைக் கூறுகிறார் என்று பொருள்.

**கேள்வி:** 'யதி', 'ஜாது' என்பதற்கு என்ன பொருள்?

**பதில்:** "என்னுடைய அவதாரம் தர்மத்தை நிலைநாட்டுவதற்காகத்தான். ஆகவே நான் ஒருகால் மிகவும் கவனமாக, முழுமையாக எல்லாக் கர்மங்களையும் செய்யாவிட்டால் அல்லது அவற்றை அலக்ஷ்யப்படுத்தினால் என்ன ஆவது? அப்படி நடக்காதுதான்" என்கிறார். ஆயினும் தாம் கடமைகளை ஆற்றவேண்டியதற்குக் காரணம் கூறும் வகையில், "நான் கவனமாகக் கர்மங்களில் ஈடுபடாவிட்டால் மிகப் பெரிய கேடு விளையும். ஏனெனில் அகில உலகத்திற்கும் படைப்பாளி நான்; நடத்துபவன் நான்; அழித்து அடக்கிக் கொள்பவனும் நான். நான் மர்யாதா புருஷோத்தமன். மனித தர்மத்தின் எல்லையைக் காப்பவன். கவனமற்று இருந்தால் படைப்புச் சக்ரம் சுழலுவதில் மிகப்பெரும் குழப்பம் ஏற்படும்" என்றும் கூறுகிறார்.

**கேள்வி:** 'மனிதர்கள் எல்லாவிதங்களிலும் என் வழியைப் பின்பற்றுகிறவர்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** "நான் மிகுந்த சக்தி படைத்தவன்; சிறந்தவன்; மர்யாதா புருஷோத்தமன் என்று என்னைப் பற்றிப் பலரும் அறிந்து கொண்டிருக்கிறார்கள். ஆகவே நான் எக்கர்மத்தை எவ்விதம் செய்கிறேனோ, அவ்வாறே ஏனையோரும் செய்வர். இந்த நிலையில் நான் கடமைகளை அலக்ஷ்யப்படுத்தினால் – அவற்றில் கவனத்துடன் ஈடுபடாவிட்டால், உலகமும் அதே போன்று நடக்க ஆரம்பிக்கும். அதனால் உலக மாந்தர் அற்ப உலக இன்பங்களை இழப்பதோடு, உயர்ந்த ஆன்மிக மேன்மையிலிருந்தும் வஞ்சிக்கப்படுவர். ஆகவே உலகத்தார் கர்மங்கள் ஆற்றவேண்டிய வழியைக் காட்டுவதற்காக, நான் எல்லாக் கர்மங்களிலும் மிகுந்த கவனத்தோடு, முறைப்படி ஈடுபடுகிறேன். ஒருபொழுதும் எங்கும் சிறிதுகூடக் கவனக்குறைவாக நான் நடந்து கொள்வதில்லை" என்று பகவான் கூறுகிறார்.

**उत्सीदेयुरिमे लोका न कुर्यां कर्म चेदहम्।**
**सङ्करस्य च कर्ता स्यामुपहन्यामिमाः प्रजाः॥ २४॥**

**உத்ஸீதே₃யுரிமே லோகா ந குர்யாம் கர்ம சேத₃ஹம் ।**

**ஸங்கரஸ்ய ச கர்தா ஸ்யாமுபஹந்யாமிமா: ப்ரஜா: ॥ 24 ॥**

**அஹம்** – நான், **கர்ம** – கர்மங்களை, **ந குர்யாம் சேத்** – செய்யாமல்விட்டால், **இமே லோகா:** – இம்மனிதர்கள் அனைவரும், **உத்ஸீதே₃யு:** – சீர்குலைந்து போவார்கள். **ச** – மேலும் (நான்), **ஸங்கரஸ்ய கர்தா** – சீர்குலைவு செய்கிறவனாகவும், **இமா: ப்ரஜா:** – இம்மாந்தர் அனைவரையும், **உபஹந்யாம்** – அழிப்பவனாகவும், **ஸ்யாம்** – ஆவேன்.

நான் கர்மங்களைச் செய்யாமல்விட்டால் இம்மனிதர்கள் அனைவரும் சீர்குலைந்து போவார்கள். மேலும் நான் சீர்குலைவு செய்கிறவனாகவும் இம்மாந்தர் அனைவரையும் அழிப்பவனாகவும் ஆவேன்.

**கேள்வி:** *'நான் கர்மங்களைச் செய்யாவிட்டால்' என்று சொல்வதன் அவசியம் என்ன? 'நான் கவனமாகக் கர்மங்களில் ஈடுபடாவிட்டால்' என்று முன் ச்லோகத்திலேயேதான் சொல்லிவிட்டாரே? மறுபடியும் இங்கே சொல்வானேன்?*

**பதில்:** முன் ச்லோகத்தில், 'நான் கவனமாகக் கர்மங்களில் ஈடுபடாவிட்டால்' என்று சொல்லி, கவனத்தோடுகூட விதிப்படி ஏற்பட்ட கர்மங்களைச் செய்யாவிட்டால் நேரும் தீங்கு பற்றிச் சொன்னார். இந்த ச்லோகத்தில், 'நான் ஒரு கார்யமும் செய்யாவிட்டால்' என்று சொல்லி, கர்மங்களைச் செய்யாமல் இருப்பதால், அதாவது அவற்றை த்யாகம் செய்வதால், நேரும் தீங்கு பற்றிக் கூறுகிறார். ஆகவே இது மறுபடியும் ஒரே விஷயத்தைச் சொன்னதாகாது. இரண்டு ச்லோகங்களிலும் தனித்தனியான கருத்துக்கள் கூறப்பட்டிருக்கின்றன.

**கேள்வி:** *'நான் கர்மம் செய்யாவிட்டால், இம்மனிதர்கள் சீர்குலைந்து போவார்கள்' என்று பகவான் கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** "நான் கர்மங்களைச் செய்யாவிட்டால், சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்கள் வீணானவை என்று நினைத்து, மற்றவர்கள் என்னைப் பின்பற்றி, அவற்றைச் செய்யாமல் விட்டுவிடுவார்கள். விருப்பு-வெறுப்புகளுக்குட்பட்டு, ப்ரக்ருதியின் வெள்ளத்தில் வீழ்ந்து, மனம் போனபடி கெட்ட செயல்களில் இறங்கிவிடுவார்கள். ஒருவன் செய்வதையே மற்றவனும் பின்பற்றுவான். ஆக எல்லோரும் தன்னலம் பேணுபவர்களாகக் கெட்ட நடத்தை உடையவர்களாகக் கட்டுமீறிப் போய் விடுவார்கள். உலகியல் போகங்களில் மூழ்கி, தான் விரும்பியதைப் பெறுவதற்காக, ஒருவன் மற்றொருவனுக்குக் கேடு விளையுமே என்பதைப் பொருட்படுத்தாமல் அந்யாயமாக, சாஸ்த்ர விரோதமான, உலகத்தை அழிக்கக்கூடிய பாவகர்மங்களைச் செய்வான். இதன் பயனாக மனிதப் பிறவியே சிதைந்து போய்விடும். இறந்த பிறகும்கூட அவன் கீழ்ப்பிறவிகளில் பிறக்கவோ, நரகங்களில் விழவோ நேரும்" இவ்வாறு பகவான் விளக்கம் கூறுகிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'நான் சீர்குலைவு செய்தவன் ஆவேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கு 'சீர்குலைவு' என்பது எல்லாவிதமான குழப்பங்களையும் குறிக்கும். "வர்ணம், ஆசிரமம், ஜாதி, ஸமுதாயம், இயல்பு, நாடு, காலம், ராஜ்யம், சூழ்நிலை இவற்றிற்கேற்றவாறு அவரவரும் தனித்தனியாகக் கடைப்பிடிக்க வேண்டிய ஸ்வதர்மங்கள் உள்ளன. கட்டுப்பாட்டோடு தத்தம் ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிக்காமல், சாஸ்த்ர முறையை மீறி நடந்தால் எல்லா ஏற்பாடுகளும் கெட்டுவிடும். எல்லா தர்மங்களும் குழப்பமாக ஆகிவிடும். அதாவது சீர்குலைந்துவிடும். இதன் காரணமாக அனைவரும் தத்தம் கர்மங்களிலிருந்து வழுவிக் கீழ்நிலையை அடைவார்கள். அதனால் அவர்களுடைய ஸ்வதர்மம், கடமை, ஜாதி இவை அழிந்து மனிதப் பண்பே முற்றிலும் அற்றுப் போய்விடும். ஆகவே, நான் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களை முற்றிலும் கைவிட்டால், அதன் பயனாக என்னுடைய நடத்தையின் மூலம் இவ்வுலகத்தாரை, கர்மங்களை விடச்செய்து, இவர்களுடைய ஸ்வதர்மத்தை நாசம் செய்யக்கூடிய குழப்பத்தை உண்டாக்கியவன் ஆவேன்" என்கிறார் பகவான்.

**கேள்வி:** 'இத்தனை மக்களையும் அழிப்பவனாக ஆவேன்' என்று கூறுவதற்கு என்ன பொருள்?

**பதில்:** "கடமைகளை மீறிவிடுவதால் மக்களிடையே பலவிதமான குழப்பங்கள் பரவுகின்றன. அப்போது மனிதர்கள் போகத்தில் ஆழ்ந்தவர்களாக, தன்னலத்தில் மூழ்கி, விவேகம் இழந்து வெவ்வேறு உபாயங்களால் ஒருவரையொருவர் அடித்துக் கொண்டு அழிந்து போவார்கள். தம்முடைய மிகவும் அற்பமான கணநேரத்து ஸுகத்திற்காகப் பிறரை அழிப்பதில் கொஞ்சம்கூடத் தயங்க மாட்டார்கள். இப்படி அட்டூழியம் மலிந்ததும் பலவிதமான, இயற்கையான விபத்துகள் உடனேயே வர ஆரம்பிக்கின்றன. அதன் விளைவாக ப்ராணிகளுக்குத் தேவையான குடிநீரும், உணவும், உயிர் வாழ்வதற்கு இன்றியமையாத பொருட்களும் அநேகமாக அழிந்துவிடும். நாற்புறமும் வைசூரி, வறட்சி, வெள்ளம், பஞ்சம், தீ விபத்து, பூகம்பம், எரி நட்சத்திரம் விழுதல் போன்ற பயங்கரக் கொடுமைகள் நேரும். இதனால் எல்லா ப்ராணிகளுக்கும் அழிவு ஏற்படும். இப்படி எல்லா ப்ராணிகளின் அழிவிற்கும் காரணமாவேன்" என்று பகவான் கூறுகிறார். 'அதாவது, நான் சாஸ்த்ர முறைப்படி கர்மங்களைச் செய்யாமல் விட்டுவிட்டால் மேலே சொன்னபடி உலகம் கட்டுமீறிச் செயல்பட்டு எல்லா ப்ராணிகளும் அழிவதற்குப் பொறுப்பு ஆவேன்' என்கிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் மூன்று ச்லோகங்களிலும் கர்மங்களை, கவனமாகச் செய்யாமல் விட்டுவிடுவதாலும், கர்மங்களை அறவே துறப்பதாலும் உண்டாகும் விளைவுகளைச் சுட்டிக்காட்டி, தம்மையே ஓர் உதாரணமாகக் காட்டி, எல்லோரும் உலகத்திற்கு வழிகாட்டுவதற்காகத் தமக்கு விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்யவேண்டும் என்பதைக் கூறி, மேற்குறித்தவாறு உலகுக்கு வழிகாட்டுதல் என்ற கோணத்தில் ஞானிகளும், கர்மங்களைச் செய்யத்தான் வேண்டும் என்று அடுத்ததாகக் கூறுகிறார்—

सक्ताः कर्मण्यविद्वांसो यथा कुर्वन्ति भारत।
कुर्याद्विद्वांस्तथासक्तश्चिकीर्षुर्लोकसङ्ग्रहम् ॥२५॥

**ஸக்தா: கர்மண்யவித்₃வாம்ஸோ யதா₂ குர்வந்தி பா₄ரத ।**
**குர்யாத்₃வித்₃வாம்ஸ்ததா₂ஸக்தஸ்சிகீர்ஷுர்லோகஸங்க்₃ரஹம் ॥ 25 ॥**

**பா₄ரத** — பரதகுலத் தோன்றலே! **கர்மணி** — கர்மங்களில், **ஸக்தா:** — பற்றுக் கொண்ட, **அவித்₃வாம்ஸ:** — அஞ்ஞானிகள், **யதா₂ குர்வந்தி** — எவ்விதம் கர்மங்களைச் செய்கிறார்களோ, **அஸக்த:** — பற்றில்லாத, **வித்₃வாந்** — தத்வஞானியும், **லோகஸங்க்₃ரஹம்** — உலகத்திற்கு வழிகாட்டுதலை, **சிகீர்ஷு:** — செய்ய விரும்பி, **ததா₂** — அவ்விதமே, **குர்யாத்** — (கர்மங்கள்) செய்யவேண்டும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பரதகுலத் தோன்றலே! கர்மங்களில் பற்றுக் கொண்ட அஞ்ஞானிகள் எவ்விதம் கர்மங்களைச் செய்கிறார்களோ பற்றில்லாத தத்வஞானியும் உலகத்திற்கு வழிகாட்டுதலைச் செய்ய விரும்பி அவ்விதமே கர்மங்கள் செய்யவேண்டும்.

**கேள்வி:** 'கர்மணி' என்று இங்கே எதைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை இவற்றுக்கேற்றவாறு சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்கள் அனைத்தும், 'கர்மம்' என்ற சொல்லில் அடங்கும். ஏனெனில், அஞ்ஞானிகளை இவ்விதக் கர்மங்களில் ஈடுபடச் செய்யவேண்டும் என்று பகவான் உத்தரவிடுகிறார். அவர்களைப்போல் ஞானியும் கர்மத்தில் ஈடுபடவேண்டும் என்று தூண்டுகிறார். இவற்றில் தடுக்கப்பட்ட தீய செயல்கள், வீணான கார்யங்கள் அடங்கா.

**கேள்வி:** 'கர்மத்தில் பற்றுள்ளவர்கள்' என்று கூறப்படும் அஞ்ஞானிகள் எந்தத் தரத்தில் உள்ளவர்கள்?

**பதில்:** 'அஞ்ஞானிகள்' என்ற சொல் சாஸ்த்ரங்களிலும், சாஸ்த்ரங்கள் விதிக்கின்ற கர்மங்களிலும், அவற்றின் பயன்களிலும் ச்ரத்தை, நம்பிக்கை, ப்ரேமை, பற்று இவற்றைக் கொண்டு சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களை விதிமுறைப்படி, தமது தகுதிக்கேற்றவாறு அனுஷ்டானம் செய்கின்ற, பயனில் பற்றுடன் கர்மத்தில் தீவிரப் பிடிப்புள்ளவர்களைக் குறிக்கிறது. இவர்களுக்குக் கர்மங்களிலும், அவற்றின் பயனிலும் தீவிரப் பிடிப்பு உள்ளபடியால், பரம மங்களத்தை அளிக்கக்கூடிய ஸாத்விகமான கர்மயோகத்தைக் கடைப்பிடிப்பவர்கள் என்ற உயர்ந்த நிலையிலும் சேரமாட்டார்கள். ச்ரத்தையுடன், சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்பவர்கள் என்பதால், அஸுர-ராக்ஷஸ இயல்புடன் பிறரை வசப்படுத்துதல், மயக்குதல் போன்ற பாவகரமான செயல்களைச் செய்யும் தமோ குணம் நிறைந்தவர்களாகவும் கருதப்பட மாட்டார்கள். இவர்களை ஸத்வகுணம் கலந்த, ராஜஸ குணம் மிக்கவர்களின் நிலையில் வைத்துத்தான் பேச வேண்டும். இவர்களைப் பற்றி 2/42 முதல் 2/44 வரையிலும் 'அவிபஸ்சித:' (அறியாதவர்கள்) என்ற சொல்லாலும், 7/20 முதல் 7/23 வரையிலும் 'அல்பமேத₄ஸாம்' (அற்ப புத்தியுள்ளவர்கள்) என்ற சொல்லாலும், 9/20,21,23,24 ச்லோகங்களில் 'அந்யதே₃வதா ப₄க்தா:' (மற்ற தேவதைகளிடம் பக்தியுள்ளவர்கள்) என்றும் கூறியுள்ளார்.

**கேள்வி:** 'யதா', 'ததா' என்ற சொற்களை பகவான் உபயோகப்படுத்துவதன் கருத்து என்ன?

**பதில்:** இயல்பான நேசம், பற்றுதல், வருங்காலத்தில் ஸுகம் கிடைக்கும் என்ற ஆசை இவற்றால் உந்தப்பட்ட தாயானவள், உண்மையான, இதயபூர்வமான ஈடுபாடு, உற்சாகம், ஊக்கம் இவற்றோடு தன் குழந்தையைச் சீராட்டிப் பேணுகிறாள். அவளைப்போல் வேறொருவர் செய்ய முடியாது. அதுபோல் கர்மங்களிலும், அவற்றின் பயன்களிலும் இயல்பான பற்றுக் கொண்டு அவற்றை விதிக்கின்ற சாஸ்த்ரங்களில் நம்பிக்கையுடனும், உண்மையான ஈடுபாட்டுடனும், ச்ரத்தையுடனும், விதிப்படியும் கர்மங்களை முழுமையாகச் செய்கிறவனைப்போல, சாஸ்த்ரங்களில் நம்பிக்கையோ, சாஸ்த்ரங்கள் விதிக்கும் கர்மங்களில் ஈடுபாடோ இல்லாதவன் சாஸ்த்ரங்கள் விதித்த கர்மங்களில் இறங்கமாட்டான். ஆகவே 'யதா', 'ததா' என்று கூறி அஹங்காரம், மமகாரம், பற்று, ஆசை அறவே இல்லாவிட்டாலும், ஞானிகள் உலகத்திற்கு வழிகாட்டியாக, கர்மத்தில் பற்றுள்ளவர்களைப்போல, அறநூல்கள் விதித்த கடமைகளை விதிமுறைப்படி முழுமையாகச் செய்ய வேண்டும் என்ற கருத்தை வற்புறுத்துகிறார்.

**கேள்வி:** இங்கு 'வித்வாந்' என்ற சொல்லுக்குத் தத்வஞானி என்று கூறாமல் சாஸ்த்ரமறிந்தவன் என்று பொருள் கொண்டால் என்ன தவறு?

**பதில்:** இங்கு 'வித்வாந்' என்ற சொல்லுக்கு 'அஸக்த:' (பற்றற்றவன்) என்று அடைமொழி கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே இது வெறும் சாஸ்த்ரம் படித்தவனைக்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



குறிப்பிடாது. சாஸ்த்ரம் படித்ததால் மட்டும் ஒருவன் உலகில் பற்று இல்லாதவனாவான் என்று சொல்ல முடியாது.

**கேள்வி:** 'உலகத்திற்கு வழிகாட்ட வேண்டும் என்று நினைப்பவர்' என்று கூறுவதிலிருந்தே ஞானிக்கும் விருப்பம் உண்டு என்று தெரிகிறது. இது சரிதானா?

**பதில்:** ஆம். ஞானிக்கு இத்தகைய விருப்பம் இருக்கும். அது முற்றிலும் வித்யாஸமானது. ஒருவித இச்சையும் இல்லாதவரிடம் உள்ள இந்த இச்சையின் இயல்பு என்ன? இதை விளக்கிக் கூறமுடியாது. அவருடைய இச்சை ஸாதாரணமாகக் கர்மத்தில் ஈடுபட்டிருக்கும் உலகியல் மனிதனுடையதைப் போன்றதன்று என்று இவ்வளவுதான் கூற முடியும். இப்படிப்பட்ட இச்சை பகவானுக்கும் உண்டு. இந்த இச்சை உண்மையில் 'இச்சையே' அன்று. 'உலகத்திற்கு வழிகாட்டியாக இருக்க வேண்டும் என்ற விருப்பமுள்ளவன்' என்ற சொல்லுக்கு, 'அவனைப் பார்த்து, உலகத்தினர் தம் கடமைகளிலிருந்து நழுவி வீணாகிவிடக் கூடாது என்ற நோக்கத்தோடு, உலக நன்மைக்காக மட்டும் தேவையான கர்மத்தைச் செய்பவன்' என்றுதான் பொருள் கொள்ள வேண்டும். இதுதவிர அவர்கள் செய்யும் கர்மத்திற்கு வேறு நோக்கம் இல்லை.

**न बुद्धिभेदं जनयेदज्ञानां कर्मसङ्गिनाम्।**
**जोषयेत्सर्वकर्माणि विद्वान्युक्तः समाचरन्॥ २६॥**

**ந புத்₃தி₄பே₄த₃ம் ஜநயேத₃ஜ்ஞாநாம் கர்மஸங்கி₃நாம் ।**
**ஜோஷயேத்ஸர்வகர்மாணி வித்₃வாந்யுக்த: ஸமாசரந் ॥ 26 ॥**

**யுக்த: வித்₃வாந்** – பரமாத்ம ஸ்வரூபத்தில் நிலைத்து நிற்கின்ற ஞானி, **கர்மஸங்கி₃நாம்** – சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களைப் பற்றோடு செய்யும், **அஜ்ஞாநாம்** – அஞ்ஞானிகளின், **புத்₃தி₄பே₄த₃ம்** – புத்தியில் குழப்பத்தை அதாவது கர்மங்களையாற்றுவதில் ச்ரத்தையின்மையை, **ந ஜநயேத்** – உண்டாக்கக் கூடாது. (மாறாகத் தானும்), **ஸர்வகர்மாணி** – சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களை, **ஸமாசரந்** – செவ்வனே ஆற்றி, **ஜோஷயேத்** – அவர்களையும் செய்யச் செய்யவேண்டும்.

பரமாத்ம ஸ்வரூபத்தில் நிலைத்து நிற்கின்ற ஞானி சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களைப் பற்றோடு செய்யும் அஞ்ஞானிகளின் புத்தியில் குழப்பத்தை அதாவது கர்மங்களையாற்றுவதில் ச்ரத்தையின்மையை உண்டாக்கக் கூடாது. மாறாகத் தானும் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களைச் செவ்வனே ஆற்றி அவர்களையும் செய்யச் செய்யவேண்டும்.

**கேள்வி:** 'யுக்த:', 'வித்வாந்' என்ற சொற்களின் கருத்து என்ன?

**பதில்:** அந்த இரண்டு சொற்களும் முன் ச்லோகத்தில் வர்ணிக்கப்பட்டபடி பரமாத்ம ஸ்வரூபத்தில் நிலைபெற்று, உலகியலில் பற்றற்று இருக்கும் தத்வஞானியைக் குறிக்கின்றன.

**கேள்வி:** சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களில் பற்றோடு ஈடுபடும் அஞ்ஞானிகளுடைய புத்தியில் தடுமாற்றம் விளைவிக்கக் கூடாது என்று கூறுவதன் கருத்து என்ன? இப்படிப்பட்டவனுக்கு, தத்வஞானம் பற்றியோ, கர்மயோகம் பற்றியோ விளக்கம் தரக் கூடாதா?

**பதில்:** யாருடைய மனதிலாவது ஸந்தேஹத்தையோ, 'இப்படிச் செய்யலாமா, அப்படிச் செய்யலாமா' என்ற தடுமாற்றத்தையோ உண்டு பண்ணுவதுதான் புத்தியைக் குழப்புவது ஆகும். கர்மத்தில் பற்றோடு ஈடுபட்டவர்களிடம், அந்தக் கர்மங்களிலோ, கர்மத்தை விதிக்கும் சாஸ்த்ரங்களிலோ, அவற்றின் பயனாக விளையும் போகங்களிலோ நம்பிக்கை இருக்கிறது. அந்த நம்பிக்கையைத் தகர்ப்பது கூடாது. அவர்கள் மனதில்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


கர்மங்களிலும், சாஸ்த்ரங்களிலும் ஊக்கக் குறைவை உண்டாக்கக் கூடாது. அப்படிச் செய்வது குழப்பத்தைத்தான் உண்டாக்கும். அதனால் பகவான் ஞானிகளைப் பார்த்து, கர்மங்களில் ஈடுபாடு கொண்ட 'அஞ்ஞானிகளின் உள்ளத்தில் குழப்பத்தை உண்டாக்காதீர்கள்' என்று எச்சரிக்கிறார். கர்மங்களில் ஈடுபட்டுள்ள அஞ்ஞானிகளைப் பார்த்து, 'பயனைக் கருதாது கடமைகளைச் செய்யுங்கள்' என்றோ தத்வஞானம் பற்றியோ உபதேசிக்கும்போது, ஞானிகள் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். அதாவது தமது நடத்தையினாலோ, உபதேசத்தினாலோ அஞ்ஞானிகள் உள்ளத்தில் கடமைகளை ஆற்றுவதிலோ, சாஸ்த்ர நம்பிக்கையிலோ ச்ரத்தையைக் குறைக்கும்படியான ஸந்தேஹத்தை உண்டு பண்ணாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். ஏனெனில் அவர்கள் பயனில் கருத்துடனும், ச்ரத்தையுடனும் செய்து வருகிற கர்மங்களை, ஞானத்தின் பேராலும், பலனில் ஆசையில்லை என்ற எண்ணத்தாலும் செய்யாமல் விட்டு விடுவார்கள். இதன் பயனாக அவர்கள் மேன்மையடைவதற்குப் பதிலாக, இப்போது இருக்கும் நிலையிலிருந்து வழுவி, வீழ்ச்சி அடைவார்கள். ஆகவே, அஞ்ஞானிகளுக்கு ஞானோபதேசம் செய்யக் கூடாது என்பதோ, பயனைக் கருதாது கர்மம் செய்ய வேண்டியதை எடுத்துச் சொல்லக் கூடாது என்பதோ, பகவானுடைய கருத்து அன்று. அவர் சொல்வதற்கு இதுதான் பொருள்: தத்வஞானத்தை அடைவதற்காகவோ, தத்வஞானத்தை அடைந்த பிறகோ கர்மம் செய்யவேண்டிய அவசியமில்லை என்ற எண்ணத்தை அஞ்ஞானிகளின் உள்ளத்தில் உருவாக்கக் கூடாது; கர்மத்தினால் உண்டாகும் பயன் வேண்டாம் என்றால், கர்மங்களைச் செய்யாமல் விட்டுவிடலாம் என்ற எண்ணத்தையும் உருவாக்கக் கூடாது. அதுபோல, பயனைக் கருதிக் கர்மங்களைச் செய்து ஸ்வர்கத்தை அடைவதுதான் வாழ்க்கையின் பரமலக்ஷ்யம்; அதைக் காட்டிலும் மனிதன் செய்ய வேண்டிய சிறந்த கார்யம் வேறொன்றுமில்லை என்ற எண்ணத்துக்கும் இடம் தரக் கூடாது. பின், ஞானி என்ன செய்ய வேண்டுமென்றால் தம்முடைய நடத்தையாலும், உபதேசத்தாலும் அஞ்ஞானிகளின் உள்ளத்திலிருந்து ஆசையையும், பயனில் பற்றையும் விலக்கி, முன் போல ச்ரத்தையுடனும், ஊக்கத்துடனும் கர்மங்களில் ஈடுபடுமாறு செய்யவேண்டும்.

**கேள்வி:** கர்மத்தில் ருசியுள்ளவர்களான அஞ்ஞானிகள்தான் முன்பிருந்தே கர்மங்களில் ஈடுபட்டிருக்கிறார்களே! அப்படியிருக்கும்போது வித்வான் தானும் கர்மங்களை ஆற்றி, அவ்வாறே அவர்களையும் ஈடுபடுத்த வேண்டும் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அஞ்ஞானிகள் கர்மங்களில் ஆர்வத்துடன் ஈடுபட்டுக் கொண்டிருப்பது உண்மைதான். ஆனால் அவர்கள் தத்வஞானம் பெறுவது, பயனில் கருத்தைத் துறப்பது இவை பற்றிக் கூறும்போது, அவற்றை மிகவும் தெளிவாகவும், தவறான கருத்து உண்டாகாமலும் எடுத்துச் சொல்ல வேண்டும். அதனால் அவர்கள் 'தத்வஞானம் பெறுவதற்கோ, பயனில் உள்ள பற்று மறைவதற்கோ கர்மம் செய்யத் தேவையில்லை. அது தாழ்ந்தது' என்று தவறாகப் புரிந்து கொள்ளலாம். இதனால் கர்மங்களைச் செய்யாமல் விடுவதில் அவர்களுக்கு மோஹத்தினால் பற்று அதிகமாகிவிடும். முடிவில், மோஹத்தினால், விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்யாமல் விட்டுவிட்டு, சோம்பலுக்கும், தடுமாற்றத்திற்கும் ஆட்படுவார்கள். ஆகவேதான் பகவான் ஞானியைப் பார்த்துக் கூறுகிறார்: "நீங்கள் பற்றில்லாத மனப்பான்மையோடு முழுமையாகக் கர்மங்களைச் செவ்வனே செய்து காட்டி, எல்லோர் மனதிலும் ஒரு நல்ல லக்ஷ்யத்தை உருவாக்க வேண்டும். அதனால் யாருடைய மனதிலும், விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்வதில் ஊக்கமின்மையும், ருசியின்மையும் உண்டாக்காமல் – நிஷ்காமமாக – 'தான் கர்த்தா' என்ற அபிமானமில்லாமல் விதிப்படி கர்மங்களை அனைவரும் செய்யுமாறு செய்து, தாம் பெற்ற மனிதப்பிறவியைப் பயனுள்ளதாக்கும்படி வழிகாட்ட வேண்டும்."

**பொருத்தம்: இவ்விதம் இரண்டு ச்லோகங்களில், ஞானி உலகத்திற்கு வழிகாட்டியாக சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளை ஆற்றவேண்டும் என்று கூறி, அடுத்த இரு**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ச்லோகங்களில் கர்மத்தில் பற்றுதலுள்ள ஜன ஸமுதாயத்தினின்றும் ஸாங்க்யயோகியின் தனித்தன்மையை எடுத்துக் காட்டுகிறார்—

प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः।
अहङ्कारविमूढात्मा कर्ताहमिति मन्यते ॥ २७ ॥

ப்ரக்ருதே: க்ரியமாணாநி கு₃ணை: கர்மாணி ஸர்வஶ: ।
அஹங்காரவிமூட₄ாத்மா கர்தாஹமிதி மந்யதே ॥ 27 ॥

**கர்மாணி** – எல்லாச் செயல்களும், **ஸர்வஶ:** – எல்லாவிதங்களிலும், **ப்ரக்ருதே:** – ப்ரக்ருதியின், **கு₃ணை:** – குணங்களால், **க்ரியமாணாநி** – செய்யப்படுகின்றன. (ஆயினும்), **அஹங்கார விமூட₄ாத்மா** – அஹங்காரத்தால் மழுங்கிய அறிவை உடைய அஞ்ஞானி, **அஹம் கர்தா** – 'நான் கர்த்தா', **இதி மந்யதே** – என்று நினைத்துக் கொள்கிறான்.

எல்லாச் செயல்களும் எல்லாவிதங்களிலும் ப்ரக்ருதியின் குணங்களால் செய்யப்படுகின்றன. ஆயினும் அஹங்காரத்தால் மழுங்கிய அறிவை உடைய அஞ்ஞானி 'நான் கர்த்தா' என்று நினைத்துக் கொள்கிறான்.

**கேள்வி:** 'எல்லாச் செயல்களும், எல்லாவிதங்களிலும், ப்ரக்ருதியின் குணங்களால்தான் ஆற்றப்படுகின்றன' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ப்ரக்ருதியில் உண்டான ஸத்வ, ரஜஸ், தமஸ் ஆகிய மூன்று குணங்கள்தான் மனம், புத்தி, அஹங்காரம், ஐம்பெரும் ஸூக்ஷ்ம பூதங்கள், காது முதலான பத்துப் புலன்கள், ஒலி முதலான ஐந்து புலன்நுகர் பொருட்கள் – ஆக இருபத்துமூன்று தத்வங்களாக மாறுகின்றன. இவையெல்லாம் ப்ரக்ருதியின் குணங்கள். இவற்றில் அந்தக்கரணமும், புலன்களும் விஷயங்களை க்ரஹிக்கின்றன. இது எப்படியென்றால், ஒரு விஷயத்தை முடிவு செய்தல் புத்தியினுடைய செயல்; ஒரு விஷயம் குறித்துச் சிந்தித்தல் மனதின் செயல்; ஒலியைக் கேட்பது செவியினுடையது; பொருளைத் தொடுவது சருமத்தினுடையது; உருவத்தைப் பார்ப்பது கண்களுடையது; சுவையைச் சுவைத்துப் பார்ப்பது நாக்கினுடையது; மணத்தை முகர்வது மூக்கினுடையது; சொற்களைப் பேசுவது வாக்கினுடையது; ஒரு பொருளைப் பற்றுவது கையினுடையது; நடை கால்களினுடையது; மல–மூத்திரங்களை வெளிப்படுத்துவது புட்டம், ஆண்–பெண் குறிகள் இவற்றினுடையது ஆகும். இப்படி யாவும் நடக்கின்றன. மேலே சொன்ன வாக்கியத்தினால் பகவான் உணர்த்துவது: 'உலகியலில் என்னென்ன செயல்கள் நடக்கின்றனவோ, அவையெல்லாம் மேலே சொல்லியபடி முக்குணங்களாலேயே நடக்கின்றன. குணமும் உருவமுமற்ற ஆத்மாவுக்கும், குணங்களுக்கும் உண்மையில் ஒரு ஸம்பந்தமுமில்லை.' என்பதே.

**கேள்வி:** 'அஹங்காரவிமூடாத்மா' என்று எவனைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** ப்ரக்ருதியின் விளைவான முன் சொன்ன புத்தி, அஹங்காரம், மனம், ஐம்பெரும் பூதங்கள், புலன்கள், விஷயங்கள் என்ற இருபத்து மூன்று தத்வங்களின் தொகுப்பான சரீரத்தில், 'தான்' என்ற நினைவு, அதாவது எதிலும் 'நான்' என்று உறுதியாக நினைப்பதுதான் 'அஹங்காரம்'. இந்த அஹங்காரம் அனாதியானது. இக்காரணத்தால் மனித மனம் மிகவும் மோஹத்தை அடைகிறது. விவேக சக்தி மழுங்குகிறது. ஆத்மா எது, அனாத்மா எது என்று பிரித்துப் பார்த்து, தன்னை சரீரத்திற்கு வேறான, தூயதான ஆத்மா அல்லது பரமாத்மாவினுடைய ஶாஶ்வதமான அம்சம் என்று அறியாத அஞ்ஞானியைத்தான் இங்கே 'அஹங்காரவிமூடாத்மா' என்கிறார். பற்றற்று, விவேகத்துடன் கர்மம் புரியும் ஸாதகனை இங்கே 'அஹங்காரவிமூடாத்மா' என்று சொல்லவில்லை என்பதை ஊன்றிக் கவனிக்க வேண்டும். ஏனெனில் அவன் உள்ளம் அஹங்கார மயக்கமற்றது. மாறாக அஹங்காரத்தை அழிக்கும் முயற்சியில் அவன் முனைந்திருக்கிறான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


**கேள்வி:** அஞ்ஞானி தன்னைக் 'கர்த்தா' என்று நினைக்கிறான் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உண்மையில் ஆத்மாவுக்குக் கர்மங்களோடு ஸம்பந்தம் இல்லாதபோதிலும், அஞ்ஞானி இருபத்து மூன்று தத்வங்கள் அடங்கிய இவ்வுடலில், தான் என்னும் அபிமானம் கொண்டு, அதன் மூலமாக (உடல் மூலமாக)ச் செய்யப்படும் கர்மங்களுடன் தன் ஸம்பந்தத்தை உறுதிப்படுத்தி, தன்னையே அந்தக் கர்மங்களைச் செய்பவனாக எண்ணிக் கொள்கிறான். அதாவது, 'நான் நிச்சயம் செய்கிறேன்; நான் ஸங்கல்பிக்கிறேன்; நான் கேட்கிறேன், பார்க்கிறேன், சாப்பிடுகிறேன்' என்று ஒவ்வொரு செயலும் தன்னாலேயே செய்யப்படுவதாக நினைத்துக் கொள்கிறான். இதன் காரணமாகவே செயல்களோடு அவனுக்கு பந்தம் ஏற்படுகிறது. மேலும், அந்தச் செயல்களின் பயனை அனுபவிப்பதற்காக மீண்டும் மீண்டும் அவன் பிறப்பு-இறப்பாகிற ஸம்ஸார சக்ரத்தில் உழல நேர்கிறது.

**तत्त्ववित्तु महाबाहो गुणकर्मविभागयोः ।**
**गुणा गुणेषु वर्तन्त इति मत्वा न सज्जते ॥ २८ ॥**

**தத்த்வவித்து மஹாபா₃ஹோ கு₃ணகர்மவிபா₄க₃யோ: ।**

**கு₃ணா கு₃ணேஷு வர்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே ॥ 28 ॥**

**து** – ஆனால், **மஹாபா₃ஹோ** – நீண்ட புஜங்கள் உடையவனே! **கு₃ணகர்ம விபா₄க₃யோ:** – குணங்களின் பிரிவு, கர்மங்களின் பிரிவு இவற்றின், **தத்த்வவித்** – தத்வம் அறிந்த ஞானயோகி, **கு₃ணா:** – குணங்கள் அனைத்தும், **கு₃ணேஷு** – குணங்களில், **வர்தந்தே** – செயல்படுகின்றன, **இதி** – என்று, **மத்வா** – அறிந்து, **ந ஸஜ்ஜதே** – (அவற்றில்) பற்றுக் கொள்ளாதிருக்கிறான்.

ஆனால் நீண்ட புஜங்கள் உடையவனே! குணங்களின் பிரிவு, கர்மங்களின் பிரிவு – இவற்றின் தத்வம் அறிந்த ஞானயோகி குணங்கள் அனைத்தும் குணங்களில் செயல்படுகின்றன என்று அறிந்து அவற்றில் பற்றுக் கொள்ளாதிருக்கிறான்.

**கேள்வி:** 'து' (ஆனால்) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 27வது ச்லோகத்தில் சொல்லப்பட்ட அஞ்ஞானியின் நிலையிலிருந்து தத்வஞானியின் நிலை மிகவும் வித்யாஸமானது என்பதைச் சுட்டிக்காட்டவே, 'து' என்று சொல்லப்பட்டது.

**கேள்வி:** 'குணங்களின் பிரிவு, கர்மங்களின் பிரிவு' என்றால் என்ன? 'அவற்றின் தத்வத்தை அறிவது' என்றால் என்ன?

**பதில்:** ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களின் விளைவுகளாக இருபத்து மூன்று தத்வங்கள் உள்ளன என்று முன் ச்லோக உரையில் சொன்னோம். அந்த இருபத்து மூன்று தத்வங்களின் தொகுப்புத்தான் குணங்களின் பிரிவு. இது மட்டுமன்று. மனதில் ஸாத்விக, ராஜஸ, தாமஸ எண்ணங்கள் உள்ளன. அவற்றின் தொடர்பினால் மனிதனுடைய செயல்களும், ஸாத்விகமாகவும், ராஜஸமாகவும், தாமஸமாகவும் அமைகின்றனவாதலால், ஒருவனை ஸாத்விகன் என்றும், இன்னொருவனை ராஜஸன் என்றும், மற்றொருவனைத் தாமஸன் என்றும் சொல்கிறோம். இப்படியான மனப்போக்குகளும், 'குணங்களின் பிரிவு' என்பதில் அடங்குவனவே.

மேலே சொல்லப்பட்ட குணப்பிரிவினால், வெவ்வேறாக என்னென்ன கர்மங்கள் செய்யப்படுகின்றனவோ, அவற்றைப் பற்றி முந்தைய ச்லோகத்தின் உரையில் விளக்கப்பட்டுள்ளது. எந்தக் கர்மங்களில் 'நானே கர்த்தா' என்ற அபிமானமும்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பற்றுதலும் ஏற்படுவதால் மனிதனுக்கு பந்தம் உண்டாகிறதோ, அந்த எல்லாச் செயல்களின் தொகுப்பும்தான் 'கர்மங்களின் பிரிவு' ஆகும். மேற்கூறிய குணப் பிரிவுகளும், கர்மப்பிரிவுகளும் ப்ரக்ருதியின் விளைவுகளே. அதனாலேயே, இவை எல்லாம் ஜடமானவை; தோன்றி மறைபவை. மேலும், மாறும் தன்மையுடையவை; மாயாமயமானவை; இல்லாதவை; இருப்பவைபோலத் தோன்றும் கனவு போன்றவை. இந்தக் குணப்பிரிவு, கர்மப்பிரிவு இவற்றிற்கு முற்றிலும் அப்பாற்பட்டவன் ஆத்மா. ஆத்மாவுக்கு இவற்றுடன் சிறிதுகூடத் தொடர்பு இல்லை. ஆத்மா குணமற்றவன், உருவமற்றவன், விகாரமற்றவன், நித்யமானவன், சுத்தமானவன், விடுபட்டிருப்பவன், அறிவே உருவானவன். இந்தத் தத்வத்தை நன்கு அறிவதுதான் குணப்பிரிவு, கர்மப்பிரிவு இவற்றை அறிந்ததற்கு அடையாளம்.

**கேள்வி:** குணப் பிரிவு, கர்மப்பிரிவு இவற்றின் தத்வம் அறிந்தவரான ஞானி, குணங்கள் குணங்களில் செயல்படுகின்றன என்று அறிந்து அவற்றில் பற்றுக்கொள்ள மாட்டார் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேலே சொன்னவிதம் குணப்பிரிவு, கர்மப்பிரிவு இவற்றின் தத்வம் அறிந்த ஸாங்க்ய யோகி மனம், புத்தி, புலன்கள், உடல் இவற்றால் ஏற்படும் ஒவ்வொரு செயலிலும், 'குணங்களின் விளைவுகளான மனம், புத்தி, புலன்கள் என்ற கருவிகள் குணங்களின் விரிவுகளான அந்தந்த விஷயங்களில் இயங்குகின்றன. எனக்கு இவற்றுடன் ஸம்பந்தமில்லை' என்று அறிவார். இக்காரணத்தினால் அவர் கர்மத்தில் பற்றுதலோ, அதன் பயனில் விருப்பமோ கொள்ளமாட்டார். அதாவது எந்தக் கர்மத்துடனும், அதன் பயனுடனும் தம்மை எவ்விதத்திலும் ஒட்டிக் கொள்ளமாட்டார். புலன்கள், உடல்கள் ஆகியவை அநித்யம், ஜடம், விகாரமடைவன, அழிபவை என்று அறிவார். தம்மை எப்பொழுதும் நித்யர், சுத்தர், அறிவாளி, விகாரமற்றவர், கர்த்தா அல்லர், எவ்விதத்திலும் எங்கும் ஒட்டாதவர் என்றும் அறிவார். 5/8,9லும், 14/19லும் இதையே சொல்கிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் கர்மப் பற்றுடைய மனிதனுக்கும், ஸாங்க்யயோகிக்கும் உள்ள வேற்றுமையைச் சொல்லி, ஆத்ம தத்வத்தைப் பூரணமாக உபதேசிக்கக் கூடிய மஹா புருஷர்களைப் பார்த்து, 'கர்மத்தைப் பற்றுடன் செய்கிற அஞ்ஞானிகளைத் தடுமாறச் செய்யாதீர்கள்' என்று கூறுகிறார்—

**प्रकृतेर्गुणसम्मूढाः सज्जन्ते गुणकर्मसु।**
**तानकृत्स्नविदो मन्दान्कृत्स्नविन्न विचालयेत्॥ २९॥**

**ப்ரக்ருதேர்கு₃ணஸம்மூட₄ா: ஸஜ்ஜந்தே கு₃ணகர்மஸு ।**

**தாநக்ருத்ஸ்நவிதே₃ா மந்த₃ாந்க்ருத்ஸ்நவிந்ந விசாலயேத் ॥ 29 ॥**

**ப்ரக்ருதே:** – ப்ரக்ருதியில் உண்டான, **கு₃ணஸம்மூட₄ா:** – குணங்களால் மிக்க மயக்கம் அடைந்துள்ள மனிதர்கள், **கு₃ணகர்மஸு** – குணங்களிலும், கர்மங்களிலும், **ஸஜ்ஜந்தே** – ஈடுபடுகிறார்கள். **தாந்** – அந்த, **அக்ருத்ஸ்நவித₃:** – முற்றும் அறிந்திராத, **மந்த₃ாந்** – குறைமதியுடைய அஞ்ஞானிகளை, **க்ருத்ஸ்நவித்** – முழுமையான அறிவு பெற்றுள்ள ஞானி, **ந விசாலயேத்** – தடுமாறச் செய்யலாகாது.

ப்ரக்ருதியில் உண்டான குணங்களால் மிக்க மயக்கம் அடைந்துள்ள மனிதர்கள் குணங்களிலும் கர்மங்களிலும் ஈடுபடுகிறார்கள். முற்றும் அறிந்திராத குறைமதியுடைய அந்த அஞ்ஞானிகளை முழுமையான அறிவு பெற்றுள்ள ஞானி தடுமாறச் செய்யலாகாது.

**கேள்வி:** 'ப்ரக்ருதே: குணஸம்மூடா:' என்று எந்தத் தரத்தில் உள்ள மனிதர்களைக் குறிப்பிடுகிறார்? அவர்கள் குணங்களிலும், கர்மங்களிலும் பற்றுக் கொண்டிருக்கிறார்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** 25,26வது ச்லோகங்களில் கர்மங்களில் ஈடுபட்ட அஞ்ஞானிகளைப் பற்றிச் சொன்னார். அவர்கள் இவ்வுலகிலும், மேலுலகத்திலும் கிடைக்கக்கூடிய போகங்களில் உள்ள ஆசையினால், நம்பிக்கையுடனும், பற்றுடனும் கர்மங்களில் ஈடுபட்டவர்கள்; ஸத்வகுணம் கலந்த ரஜோகுணம் உடையவர்கள்; பயனில் விருப்பத்துடன் பெருமுயற்சியோடு கர்மங்களைச் செய்கிறவர்கள். இவர்களைத்தான் 'ப்ரக்ருதே: குணஸம்மூடா:' என்று குறிப்பிடுகிறார். ஏனெனில் பரமாத்மாவை அடைய வேண்டுமென்று ஸாதனை புரிபவர்கள் முற்றிலும் ஸத்வகுணமுடையவர்களே. அவர்கள் ப்ரக்ருதியின் குணங்களுக்கு வசப்பட்டவர்கள் அல்லர். ஆனால், தடை செய்யப்பட்ட கார்யங்களைச் செய்கின்ற தமோகுணமுள்ளவர்களுக்கு சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களில் ச்ரத்தை கிடையாது; அவர்கள் அவற்றைச் செய்வதுமில்லை. சாஸ்த்ர விதிப்படி செய்ய வேண்டிய கர்மங்களிலிருந்து அவர்களைக் கலைப்பது என்ற பேச்சுக்கே இடமில்லை. ஆகவே, இதற்கு மாறாக, தாமஸ குணமுள்ளவர்களுக்கு சாஸ்த்ரங்களில் நம்பிக்கை உண்டாக்கி, தடை செய்யப்பட்ட கார்யங்களைச் செய்யாமல் தடுத்து, விதிக்கப்பட்ட கர்மங்களை ஆற்றும்படி செய்வது அவசியமாகும். பயனில் பற்றுள்ளவர்கள், குணங்களிலும், கர்மங்களிலும் ஈடுபட்டிருக்கிறார்கள். அவற்றில் மோஹமடைந்திருக்கும் காரணத்தினால் அவர்களுக்கு ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்ட ஸுகத்தைப் பற்றிய அறிவு கிடையாது. உலகியல் ஸுகங்களே எல்லாவற்றிலும் சிறந்தவை என்று நினைக்கிறார்கள். ஆகவே குணங்களின் விளைவுகளான போகங்களிலும், அவற்றை அடைவிக்கின்ற உபாயங்களான கர்மங்களிலும் மட்டுமே ஈடுபடுகிறார்கள். அவர்கள் அந்த குணங்களின் பந்தத்திலிருந்து விடுபட விரும்புவதுமில்லை; முயல்வதுமில்லை.

**கேள்வி:** 'தாந் அக்ருத்ஸ்நவித: மந்தாந்' – 'அந்த முற்றும் அறிந்திராத, குறைமதியுடைய அஞ்ஞானிகளை' என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** இந்தச் சொற்களால், மேலே சொன்ன வகையினரான கர்மப்பயனில் பற்றுள்ளவர்கள் உண்மையான தத்வத்தை அறியாதபோதிலும், சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளிலும், அவற்றின் பயன்களிலும் ச்ரத்தையும், நம்பிக்கையும் பூண்டு இருப்பதால், ஓரளவு அறிவு உடையவர்களே. ஆகவே, அதர்மத்தை தர்மம் என்றும், தர்மத்தை அதர்மம் என்றும் கருதி மனம் போனபடி நடக்கும் தாமஸ குணம் உடையவர்களைக் காட்டிலும் இவர்கள் மிகவும் சிறந்தவர்கள்; முற்றிலும் புத்தியற்றவர்கள் அல்லர். குறைமதி உடையவர்கள். அதனால்தான் அவர்களுடைய கர்மங்களின் பயன் பரமாத்மாவை அடைவது என்றில்லாமல் அழியக் கூடிய போகங்களையடைதல் என்றாகிறது.

**கேள்வி:** 'க்ருத்ஸ்நவித்' என்று யாரைச் சொல்கிறார்? அவர்கள் அஞ்ஞானிகளைத் தடுமாறச் செய்யக் கூடாது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** முன் சொன்னவிதம் குணப்பிரிவு, கர்மப்பிரிவு இவற்றின் தத்வங்களை முழுமையாக உணர்ந்து, பரமாத்ம ஸ்வரூபத்தையும் முழுமையாக உள்ளபடி அறிந்து கொண்ட ஞானியை 'எல்லாமறிந்தவர்' என்று கூறுகிறார். அவர் அஞ்ஞானிகளைத் தடுமாறச் செய்யக் கூடாது என்கிறார். கர்மத்தில் பற்றும், தகுதியும் உடைய மனிதர்களைப் பார்த்து, 'கர்மம் மிகவும் பாடுபட்டுச் செய்யக் கூடியது. கர்மத்தில் என்ன இருக்கிறது? இவ்வுலகமே பொய்யானது. கர்மங்கள் அனைத்துமே பந்தப்படுத்தும்' என்றெல்லாம் உபதேசம் செய்து சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களிலிருந்து அவர்களை விலக்குவது – அவர்களுக்குள்ள ருசியையும், ச்ரத்தையையும் குறைப்பது உசிதமல்ல. ஏனெனில், இவ்விதம் செய்வதால் அவர்கள் வீழ்ச்சியுறலாம். ஆகவே சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களிலும், அவற்றை விதிக்கும் சாஸ்த்ரங்களிலும், அவற்றின் பயன்களிலும், அவர்களுக்கு உள்ள நம்பிக்கையைத் திடமாக்கி, அவர்களுக்கு உண்மையான தத்வத்தையும் போதிக்க வேண்டும். மேலும் அவர்களுடைய மமகாரம், பற்று, பயன்களில் ஆசை இவற்றை அகற்றி, ச்ரத்தையுடனும், தைர்யத்துடனும், உத்ஸாஹத்துடனும் ஸாத்விக கர்மங்களைச் செய்வது (18/23) அல்லது

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸாத்விகமாக அவற்றை த்யாகம் செய்வது (18/9) இவற்றிற்கு வழிகாட்ட வேண்டும். அப்படிச் செய்தால் அவர்கள் எளிதில் தத்வத்தை உணர்வர்.

பொருத்தம்: அர்ஜுனனுடைய வேண்டுகோளின்படி, அவருக்கு நிச்சயமாக மங்களத்தை அளிக்கக் கூடிய ஒரு ஸாதனத்தை உபதேசிக்கவேண்டும் என்ற எண்ணத்துடன், நான்காவது ச்லோகம் முதல் பகவான் இதுவரை சொன்னதாவது: 'மனிதன் எந்த நிலையில் இருந்தாலும் தனது வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை இவற்றிற்கேற்றவாறு விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்து கொண்டுதான் இருக்க வேண்டும்.' இதை நிருபிப்பதற்காக முன் ச்லோகங்களில் வரிசையாகக் கீழ்க்கண்ட விஷயங்களைக் கூறினார்—

(1) கர்மம் செய்யாமல் நைஷ்கர்ம்யம் என்பதான கர்மநிஷ்டை கிடைக்காது (3/4).
(2) கர்மங்களைச் செய்யாமல் விடுவதால் மட்டும் ஞான நிஷ்டை பெற முடியாது (3/4).
(3) ஒரு கணம்கூட மனிதன் செயல் ஆற்றாமல் இருக்க முடியாது (3/5).
(4) வெளிப்படையாகக் கர்மங்களை ஆற்றாமல் விட்டுவிட்டு, மனதில் அவற்றின் பயன்களான போகங்களையே நினைத்துக் கொண்டிருப்பது, போலி நடத்தை ஆகும் (3/6).
(5) மனதையும், புலன்களையும் வசப்படுத்திப் பற்றற்றுக் கர்மங்களை ஆற்றுபவன் சிறந்தவன் (3/7).
(6) கர்மங்களைச் செய்யாமல் இருப்பதைக் காட்டிலும், கர்மங்களைச் செய்வதே மேல் (3/8).
(7) செயல் ஆற்றாமல் இருந்தால் அன்றாட வாழ்க்கை நடைபெறாது (3/8).
(8) வேள்வியாகச் செய்யப்படும் கர்மம் பந்தப்படுத்தாது; மோக்ஷத்தை அளிக்கும் (3/9).
(9) கர்மம் செய் என்பது ப்ரஜாபதியின் ஆணை. தன்னலம் கருதாது அதை ஏற்பதே மேன்மையைக் கொடுக்கும் (3/10,11).
(10) கடமைகளை ஆற்றாமல் அவற்றின் பயன்களை அனுபவிப்பவன் திருடன் (3/12).
(11) கடமைகளை ஆற்றி, வேள்வியில் மிகுந்ததை உடல் பேணுவதற்காக உண்பவன் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடுகிறான் (3/13).
(12) வேள்விகளைப் புரியாமல், உடலைப் பேணுவதற்காக மட்டும் அன்னம் சமைப்பவன் பாவியாவான் (3/13).
(13) கடமைகளை ஆற்றாமல் விட்டுவிட்டுப் படைப்புச் சக்ரத்திற்குத் தடை போடுபவனுடைய வாழ்க்கை வீண்; பாவமயமானது (3/16).
(14) பற்றற்றுக் கர்மம் செய்வதால் பரமாத்மாவை அடையலாம் (3/19).
(15) முன்பு ஜனகர் முதலானோரும் கர்மங்களை ஆற்றித்தான் பேறு பெற்றார்கள் (3/20).
(16) உலகத்தார், மேன்மக்களான பெரியோர்களின் வழியைப் பின்பற்றுவர். ஆகவே பெரியோர்களும் கர்மங்களை ஆற்றத்தான் வேண்டும் (3/21).
(17) பகவானுக்குக் கர்மங்களே கிடையா. ஆயினும் அவரும் உலகிற்கு வழிகாட்டியாகக் கர்மங்களை ஆற்றுகிறார் (3/22).
(18) ஞானிக்கும் கடமைகள் கிடையா. அவரும் உலகத்திற்கு வழிகாட்டியாகக் கர்மங்களை ஆற்றத்தான் வேண்டும் (3/25).

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


(19) ஞானி கர்மங்களைச் செய்யாமல் விட்டுவிட்டோ, கர்மங்களைச் செய்யாமல் விடலாம் என்று உபதேசம் செய்தோ எவ்விதத்திலும் மக்களைக் கடமைகளிலிருந்து வழுவச் செய்யக் கூடாது. ஞானி தானும் கர்மங்களை ஆற்றி மற்றவர்களையும் ஊக்குவிக்க வேண்டும் (3/26).

(20) விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்யாமல் விட்டுவிடுவதற்கு மக்களுக்கு உபதேசம் செய்து, கர்மத்தில் ஈடுபட்ட மனிதர்களைக் கலைக்காமல் இருப்பதுதான் ஞானிகளுக்கு உசிதம் ஆகும் (3/29).

இவ்விதம் கர்மங்களை ஆற்ற வேண்டும் என்று வற்புறுத்தி இரண்டாவது ச்லோகத்தில் கூறப்பட்ட அர்ஜுனனுடைய வேண்டுகோளுக்கு இணங்க, அவனுக்குப் பரம மங்களத்திற்குரிய நிச்சயமான, எல்லாவற்றிற்கும் மேலான ஸாதனத்தைக் கூறி, 'யுத்தம் செய்வாய்' என்று ஆணையிடுகிறார்—

**मयि सर्वाणि कर्माणि सन्न्यस्याध्यात्मचेतसा।**
**निराशीर्निर्ममो भूत्वा युध्यस्व विगतज्वरः॥ ३०॥**

**மயி ஸர்வாணி கர்மாணி ஸந்ந்யஸ்யாத்₄யாத்மசேதஸா ।**
**நிராஶீர்நிர்மமோ பூ₄த்வா யுத்₄யஸ்வ விக₃தஜ்வர: ॥ 30 ॥**

**அத்₄யாத்மசேதஸா** – அந்தர்யாமியான பரமாத்மாவாகிய என்னிடம் ஒன்றிய மனத்துடன், **ஸர்வாணி கர்மாணி** – எல்லாக் கர்மங்களையும், **மயி** – என்னிடம், **ஸந்ந்யஸ்ய** – அர்ப்பணம் செய்துவிட்டு, **நிராஶீ:** – ஆசையற்றவனாக, **நிர்மம:** – மமகாரமற்றவனாக (மேலும்), **விக₃தஜ்வர:** – தாபமற்றவனாக, **பூ₄த்வா** – ஆகி, **யுத்₄யஸ்வ** – யுத்தம் செய்.

அந்தர்யாமியான பரமாத்மாவாகிய என்னிடம் ஒன்றிய மனத்துடன் எல்லாக் கர்மங்களை யும் என்னிடம் அர்ப்பணம் செய்துவிட்டு ஆசையற்றவனாக மமகாரமற்றவனாக மேலும் தாபமற்றவனாக ஆகி யுத்தம் செய்.

**கேள்வி:** 'அத்யாத்மசேதஸா' என்னுமிடத்தில் 'சேதஸ்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? அத்துடன் எல்லாக் கர்மங்களையும் பகவானிடம் ஒப்புவிப்பது எவ்விதம்?

**பதில்:** எங்கும் அந்தர்யாமியாக விளங்கும் பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், ஸ்வரூபம் இவற்றை அறிந்து கொள்ளவேண்டும். அவற்றில் நம்பிக்கை இருக்கவேண்டும். எப்பொழுதும் இவ்விஷயங்களையே இடைவிடாது சிந்தித்துக் கொண்டிருக்கும் உள்ளத்தைத்தான் இங்கு 'சேதஸ்' என்ற சொல்லால் குறிப்பிடுகிறார். இவ்விதம் "பகவான் எல்லா வல்லமைகளும் படைத்தவர்; எல்லாவற்றிற்கும் ஆதாரமானவர்; எங்கும் நிறைந்தவர்; எல்லாம் அறிந்தவர்; எல்லாவற்றையும் ஆளுபவர்; எல்லோராலும் அடையத்தக்கவர்; எல்லோராலும் அடைக்கலம் பற்றத் தகுந்தவர்; எல்லோருக்கும் ஹிதத்தை விரும்புபவர்; மிகவும் ப்ரியமானவர்; உற்ற நண்பர்; மிகவும் கருணையுள்ளவர்" என்றெல்லாம் உள்ளத்தினால் உணர்ந்து தன்னுடைய உள்ளத்தையும், புலன்களோடு கூடிய உடலையும், அவற்றின் மூலம் செய்யப்படும் கர்மங்களையும், உலகில் உள்ள எல்லாப் பொருட்களையும் பகவானுடையவை என்று உணர்ந்து, அவற்றில் மமகாரம், பற்று இவற்றை முற்றும் துறந்துவிட வேண்டும். 'எனக்கு எதையும் செய்யச் சக்தி இல்லை. பகவான்தான் எல்லாவிதமான சக்தியையும் அளித்து என் மூலம் தம் விருப்பப்படி, என் தகுதிக்கேற்றபடி எல்லாக் கர்மங்களையும் ஆற்றச் செய்கிறார். நான் அவருடைய கைப்பாவை மட்டுமே' என்று தன்னை பகவானுக்கு அடிமையாக உணர்ந்து, பகவானுடைய ஆணைப்படி, அவருக்காகவே அவருடைய தூண்டுதலினாலே பொம்மலாட்ட பொம்மை போல அப்படியே செய்வோம்; அந்தக் கர்மங்களிலோ, அவற்றின் பயன்களிலோ எவ்விதமான மனத் தொடர்பும் வேண்டாம்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



எல்லாம் பகவானுடையதே என்ற மனப்பக்குவம் பெற்றவனைத்தான் இங்கு 'அந்தர்யாமியான பகவானிடம் ஈடுபட்ட மனத்துடன் பகவானுக்காகக் கர்மங்களை ஆற்றி ஸமர்ப்பணம் செய்கிறவன்' என்று கூறுகிறார். இவ்விதம் பகவானிடத்தில் எல்லாக் கர்மங்களையும் ஒப்புவித்தலைப் பற்றி 12/6லும், 18/57லும், 66லும் கூறுகிறார்.

**கேள்வி:** மேலே சொன்னவிதம் கர்மங்களனைத்தையும் பகவானிடம் ஸமர்ப்பணம் செய்த பிறகு, ஆசை, மமகாரம், துயரம் இவை தாமாகவே அழிந்து விடுமே! ஆசை, மமகாரம், துயரம் இவற்றை விட்டுவிட்டு யுத்தம் செய் என்று சொல்வானேன்?

**பதில்:** பகவானிடம் நிலைநிறுத்திய மனதோடு எல்லாக் கர்மங்களையும் பகவானிடம் ஸமர்ப்பணம் செய்துவிட்டால், ஆசை, மமகாரம், துயரம் இல்லாமற்போகும். இதைத் தெளிவுறச் சொல்வதற்காகத்தான் இங்கு பகவான், அர்ஜுனனை 'ஆசை, மமகாரம், துயரம் இவற்றை விட்டொழித்து யுத்தம் செய்' என்று கூறுகிறார். 'நீ கர்மங்களை ஆற்றிவிட்டு அவற்றின் சுமையை என்னிடம் விட்டுவிடு. எல்லாவிதமான ஆசை, மமகாரம், விருப்பு-வெறுப்பு, மகிழ்ச்சி-துயரம் ஆகிய விகாரங்களும் அற்று என்னுடைய ஆணைப்படி யுத்தம் செய்' என்று ஆணையிடுகிறார். ஆகவே கர்மங்களை ஆற்றும் போதோ, அவற்றின் பயன்களைத் துய்க்கும் போதோ, எதுவரையில் ஸாதகனுக்கு, அந்தக் கர்மங்களில் அல்லது புலன் நுகர்ச்சியில், மமகாரம், பற்று அல்லது ஆசை இருக்கிறதோ அல்லது அவனுடைய உள்ளத்தில் விருப்பு-வெறுப்பு, மகிழ்ச்சி-துயரம் முதலிய மாற்றங்கள் ஏற்படுகின்றனவோ, அதுவரை அவனுடைய அனைத்துக் கர்மங்களும் பகவானிடம் அர்ப்பணிக்கப்படவில்லை என்று பொருள்.

**பொருத்தம்: இவ்விதம் அவரது மேன்மைக்கு என, ஒரு தீர்மானமான ஸாதனத்தைக் கூறி, 'யுத்தம் செய்வாயாக' என்று ஆணையிட்டு, அப்படிச் செய்வதன் பயனைக் கூறுகிறார்—**

**ये मे मतमिदं नित्यमनुतिष्ठन्ति मानवाः।**
**श्रद्धावन्तोऽनसूयन्तो मुच्यन्ते तेऽपि कर्मभिः॥ ३१॥**

**யே மே மதமித₃ம் நித்யமநுதிஷ்ட₂ந்தி மாநவா: ।**
**ஶ்ரத்₃த₄ாவந்தோऽநஸூயந்தோ முச்யந்தே தேऽபி கர்மபி₄: ॥ 31 ॥**

**யே மாநவா:** — எந்த மனிதர்கள், **அநஸூயந்த:** — குற்றங்குறை காணாதவர்களாக, **ஶ்ரத்₃த₄ாவந்த:** — ச்ரத்தை உடையவர்களாக, **மே** — என்னுடைய, **இத₃ம் மதம்** — இக்கொள்கையை, **நித்யம்** — எப்பொழுதும், **அநுதிஷ்ட₂ந்தி** — பின்பற்றுகிறார்களோ, **தே அபி** — அவர்களும், **கர்மபி₄:** — அனைத்துக் கர்மங்களிலிருந்தும், **முச்யந்தே** — விடுபடுகிறார்கள்.

எந்த மனிதர்கள் குற்றங்குறை காணாதவர்களாக, ச்ரத்தை உடையவர்களாக என்னுடைய இக்கொள்கையை எப்பொழுதும் பின்பற்றுகிறார்களோ அவர்களும் அனைத்துக் கர்மங்களி லிருந்தும் விடுபடுகிறார்கள்.

**கேள்வி:** 'யே மாநவா:' (எந்த மனிதர்கள்) என்றால் யார்?

**பதில்:** மேற்கூறிய இந்த ஸாதனை தனிப்பட்ட ஒரு ஜாதிக்கோ, ஒரு மனிதனுக்கோ ஒதுக்கப்படவில்லை. மனிதர் அனைவர்க்கும் இதில் பொறுப்பு உண்டு. ஒவ்வொரு வர்ணம், ஆசிரமம், ஜாதி, ஸமுதாயத்தைச் சேர்ந்த எல்லா மனிதர்களும் அவரவர்கட்கு விதிக்கப்பட்ட கடமைகளை மேலே சொன்னவாறு செய்து, பகவானுக்கு ஸமர்ப்பணம் செய்து இந்த ஸாதனை புரியலாம் என்பது கருத்து.

**கேள்வி:** 'ஶ்ரத்தாவந்த:', 'அநஸூயந்த:' என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பதில்: 'என்னிடம் குற்றம் காண்பவர்களும், என்னை ஸாக்ஷாத் பகவான் என்று புரிந்து கொள்ளாமல், ஸாதாரண மனிதன்தான் என்று நினைப்பவர்களும், என்னிடம் நம்பிக்கை கொள்ளாதவர்களும் இந்த ஸாதனைக்குத் தகுதியற்றவர்கள். என்னிடம் எவ்விதமான தவறான எண்ணமும் கொள்ளாதவர்களும், எப்பொழுதும் ச்ரத்தையும், பக்தியும் உள்ளவர்களுமே இந்த ஸாதனைக்குத் தகுதி பெற்றவர். ஆகவே, இந்த ஸாதனை புரிய விரும்புகிறவர்களுக்கு மேலே சொன்ன குணநலன்கள் இருக்கவேண்டும். இவை இல்லையென்றால் இந்த ஸாதனையைக் கைக்கொள்ள முடியாது என்பது மட்டுமல்ல; புரிந்து கொள்ளவே முடியாது என்று கூறுகிறார்.

கேள்வி: 'நித்யம் மதம் அநுதிஷ்டந்தி' என்றால் என்ன பொருள்? 'நித்யம்' (எப்போதும்) என்ற சொல்லை 'மதம்' (கொள்கை) என்ற சொல்லோடு சேர்ப்பதா அல்லது 'அநுதிஷ்டந்தி' (பின்பற்றுகிறார்கள்) என்ற சொல்லோடு சேர்ப்பதா?

பதில்: பகவானுடைய 'மதம்' (கொள்கை) நித்யமானது; மாறுபடாதது. இதைச் சொல்ல வேண்டியதே இல்லை. ஆகவே 'நித்யம்' (எப்பொழுதும்) என்ற சொல்லை 'அநுதிஷ்டந்தி' (பின்பற்றுகிறார்கள்) என்ற சொல்லுடன் சேர்ப்பதுதான் மிகவும் பொருள் படைத்ததாகும். மேலே சொல்லப்பட்ட ஸாதகன் எல்லாக் கர்மங்களையும் செய்து எப்பொழுதும் பகவானிடமே ஸமர்ப்பிக்க வேண்டும். எல்லாச் செயல்களையும் இந்த மனப்பக்குவத்துடன் ஆற்ற வேண்டும்.

கேள்வி: 'அபி' என்ற பதத்தைச் சேர்த்து அவர்களும் கர்ம பந்தங்களிலிருந்து விடுபடுகிறார்கள் என்றால் என்ன பொருள்?

பதில்: "இந்த ஸாதனை புரியும் மற்றவர்களும், எல்லாக் கர்மங்களிலிருந்தும், அதாவது பிறப்பு-இறப்பு என்ற கர்மபந்தத்திலிருந்து முற்றிலுமாக விடுபடுவார்கள்; பரம மங்களமான என்னை அடைவார்கள் என்றால், உன்னைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா?" என்று பொருள்.

பொருத்தம்: இப்படி பகவான் தம் கொள்கையைப் பின்பற்றுபவர்களுக்கு ஏற்படும் பயன் பற்றிக் கூறி, அதை ஏற்காவிட்டால் ஏற்படும் தீமை பற்றியும் சொல்கிறார்—

ये त्वेतदभ्यसूयन्तो नानुतिष्ठन्ति मे मतम्।
सर्वज्ञानविमूढांस्तान्विद्धि नष्टानचेतसः ॥ ३२ ॥

யே த்வேதத₃ப்₄யஸூயந்தோ நாநுதிஷ்ட₂ந்தி மே மதம் ।
ஸர்வஜ்ஞாநவிமூட₄ாம்ஸ்தாந்வித்₃தி₄ நஷ்டாநசேதஸ: ॥ 32 ॥

து – ஆனால், யே – எந்த மனிதர்கள் (என்னிடம்), அப்₄யஸூயந்த: – குறை காண்பவர்களாக, மே – என்னுடைய, ஏதத் – இந்த, மதம் – கருத்தை, ந அநுதிஷ்ட₂ந்தி – ஏற்று நடப்பதில்லையோ, தாந் அசேதஸ: – அந்த மூடர்களை, ஸர்வஜ்ஞாநவிமூட₄ாந் – முழுமையான ஞானத்தில் அறிவு மயக்கம் அடைந்தவர்கள் என்றும், நஷ்டாந் – சீரழிந்து போனவர்கள் என்றும், வித்₃தி₄ – அறிந்து கொள்.

ஆனால் எந்த மனிதர்கள் என்னிடம் குறை காண்பவர்களாக என்னுடைய இந்தக் கருத்தை ஏற்று நடப்பதில்லையோ, அந்த மூடர்களை முழுமையான ஞானத்தில் அறிவு மயக்கம் அடைந்தவர்கள் என்றும், சீரழிந்து போனவர்கள் என்றும் அறிந்து கொள்.

கேள்வி: 'து' (ஆனால்) என்றால் என்ன கருத்து?

பதில்: முன் ச்லோகத்தில் விவரிக்கப்பட்ட ஸாதகனிடமிருந்து முற்றிலும் வேறுபட்ட மனிதனின் போக்கை இந்த ச்லோகத்தில் சொல்வதற்காக, 'ஆனால்' என்று ஆரம்பிக்கிறார்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'பகவானிடம் குறைகண்டு, அவருடைய கருத்தை ஏற்காமல் இருப்பது' என்றால் என்ன?

**பதில்:** பகவானை ஸாதாரண மனிதனாக நினைப்பது; மற்றவர்களிடம், "இவர்தாம் பூஜைகள் பெறவேண்டும் என்பதற்காக இப்படி உபதேசம் செய்கிறார். எல்லாக் கர்மங்களையும் செய்துவிட்டு இவருக்கு ஸமர்ப்பணம் செய்ய வேண்டுமாமே! அதனால் மனிதர் கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெறலாமாமே! இப்படி ஒரு நாளும் நடக்காது" என்றெல்லாம் பேசுவது; இத்தகைய எண்ணங்களோடு பகவான் சொன்னபடி கேட்காமல் மமகாரம், பற்றுதல், ஆசைகளைத் துறக்காமல் இருப்பது; கர்மங்களைச் செய்து பகவானுக்கு ஸமர்ப்பணம் செய்யாமல், தன்னிஷ்டப்படி தான்தோன்றித்தனமாகச் செயல்கள் புரிவது; சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளை ஆற்றாமல் இருப்பது; இவையெல்லாம்தான் பகவானிடம் குறைகண்டு அவருடைய கருத்துப்படி நடக்காமல் இருப்பதற்கு அடையாளமாகும்.

**கேள்வி:** 'அசேதஸ:' என்று எந்தத் தரத்து மனிதர்களைக் குறிப்பிடுகிறார்? அவர்கள் முழுமையான ஞானத்தில் அறிவு மயக்கமுற்றவர்கள் (மூடர்கள்); சீரழிந்து போனவர்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கறை படிந்த, கட்டுப்பாடற்ற மனம் கொண்டவர்களும், விவேகமற்றவர்களுமான இத்தகைய தாமஸ குணம் மிகுந்த மூடர்களைத்தான் 'அசேதஸ:' என்று கூறுகிறார். அவர்கள் முற்றிலும் அறிவற்றவர்கள்; வீணாகப் போனவர்கள். அவர்களுடைய புத்தி விபரீதமாகச் செயல்படும். உலகியலிலும், பரலோக விஷயங்களிலும் தேவையான ஸுக ஸாதனங்களைத் தாறுமாறாகப் புரிந்து கொண்டு, விபரீதமாக நடந்து கொள்வார்கள். நல்லதைத் தீயதென்றும், தீயதை நல்லதென்றும் நினைப்பார்கள். இவற்றின் பயனாக அவர்களுக்கு உலகியலிலும், பரலோக விஷயத்திலும் வீழ்ச்சியே ஏற்படும். அவர்கள் இருக்கும் நிலையிலிருந்து நழுவித் தாழ்ந்து விடுவார்கள். இறந்த பிறகு அவர்கள் தம் வினைப்பயன்களை அனுபவிப்பதற்காகப் பன்றி, நாய் போன்ற இழிந்த பிறவிகளை எடுக்க நேரிடும். அல்லது கோரமான நரகங்களில் பயங்கரத் தண்டனை அனுபவிக்க நேரிடும்.

**பொருத்தம்: முன் ச்லோகத்தில் பகவானுடைய கருத்துப்படி நடக்காதவர்கள் கெட்டு அழிவார்கள் என்று சொன்னார். ஒருவன் பகவானுடைய கருத்தின்படி செயல்படாமலும், கடமைகளைச் செய்யாமலும் பிடிவாதமாக விட்டுவிட்டால் என்ன தீங்கு விளையும் என்ற கேள்வி பிறக்கிறது. அதற்கு விடை கூறுகிறார்—**

**सदृशं चेष्टते स्वस्याः प्रकृतेर्ज्ञानवानपि।**
**प्रकृतिं यान्ति भूतानि निग्रहः किं करिष्यति॥ ३३॥**

**ஸத்₃ருʼஶம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர்ஜ்ஞாநவாநபி ।**

**ப்ரக்ருதிம் யாந்தி பூ₄தாநி நிக்₃ரஹ: கிம் கரிஷ்யதி ॥ 33 ॥**

**பூ₄தாநி** – எல்லா உயிரினங்களும், **ப்ரக்ருதிம்** – இயல்பை, **யாந்தி** – அடைகின்றன (அதாவது தம் இயல்புக்கேற்றவாறு தம்வசம் இன்றிச் செயல் புரிகின்றன). **ஜ்ஞாநவாந் அபி** – ஞானியும், **ஸ்வஸ்யா:** – தமது, **ப்ரக்ருதே:** **ஸத்₃ருʼஶம்** – இயல்புக்கு ஏற்றவாறு, **சேஷ்டதே** – செயல் புரிகிறார் (என்றால் இதில் ஒருவரது), **நிக்₃ரஹ:** – பலவந்தமான பிடிவாதம், **கிம்** – என்ன, **கரிஷ்யதி** – செய்யும்?

எல்லா உயிரினங்களும் இயல்பை அடைகின்றன – அதாவது தம் இயல்புக்கேற்றவாறு தம்வசம் இன்றிச் செயல் புரிகின்றன. ஞானியும் தமது இயல்புக்கு ஏற்றவாறு செயல் புரிகிறார் என்றால் இதில் ஒருவரது பலவந்தமான பிடிவாதம் என்ன செய்யும்?



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'எல்லா உயிரினங்களும் தம் இயற்கைப்படி நடக்கின்றன' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இயற்கையாகவே கடலை நோக்கிச் செல்லும் நதியின் ஓட்டத்தை எப்படி வலுவில் நிறுத்த முடியாதோ, அதுபோல எல்லா உயிரினங்களும் தத்தம் இயற்கைக்கு ஏற்றவாறு நடந்து கொள்கின்றன. இயற்கையான போக்கில் இழுக்கப்பட்டுச் செல்கின்றன. எந்த ஒரு மனிதனும் பிடிவாதமாக ஒரு வேலையும் செய்யாமல் இருக்க முடியாது. ஆனால் அணைகட்டி ஆற்றின் போக்கை வேறு திசையில் திருப்புவது போல, மனிதனும் தனது லக்ஷ்யத்தையும், தன் நடத்தைகளையும் மாற்றிக் கொண்டு, விருப்பு-வெறுப்புகளைத் துறந்து, தன் செயல்களைப் பரமாத்மாவை அடைவதற்கு உதவுவதாகச் செய்ய முடியும்.

**கேள்வி:** இங்கு 'ப்ரக்ருதி' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** பல்வேறு முன்பிறவிகளில் செய்த வினைகளின் பயனாக வெளிப்படுகின்ற ஸம்ஸ்காரம் அதாவது மனப்பதிவுக்குத்தான் 'ப்ரக்ருதி' என்று பெயர்.

**கேள்வி:** இங்கு 'ஜ்ஞாநவாந்' என்று யாரைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** பரமாத்மாவின் உண்மைத் தத்வத்தை அறிந்து கொண்டு, பகவானை அடைந்துவிட்ட மஹாபுருஷனை 'ஜ்ஞாநவாந்' (ஞானவான்) என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'அபி' (அவனும்) என்றால் என்ன பொருள்?

**பதில்:** எல்லாக் குணங்களையும் கடந்த ஞானிகூடத் தம் இயற்கைக்குக் கட்டுப்பட்டு நடக்கிறார் என்றால், அஞ்ஞானி இயற்கைக்கு ஆட்படுவதில் என்ன வியப்பு? அஞ்ஞானி தன் இயற்கையின் ஓட்டத்தைப் பிடிவாதமாக எப்படித் தடை செய்ய முடியும்?

**கேள்வி:** பரமாத்மாவை அடைந்துவிட்ட ஞானிகளின் இயல்புகள் வெவ்வேறாக இருக்குமா?

**பதில்:** ஆம். எல்லோருக்குமே இயல்புகள் வேறுவேறாகத்தான் இருக்கும். முன்பு செய்த ஸாதனைகள், ப்ராரப்தம் இவற்றின் ஏற்றத்தாழ்வினால் இயல்புகளில் வேறுபாடு இருப்பது தவிர்க்க முடியாதது.

**கேள்வி:** ஞானிக்கு முன்வினை தந்த ஸம்ஸ்காரங்களின் பாதிப்பு இருக்குமா? இருக்காதெனில் ஞானியும் தம் ஸ்வபாவத்திற்கு ஏற்றவாறு செயல் புரிகிறார் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உண்மையில், முன்வினையின் ஸம்ஸ்காரங்கள் ஞானிக்கு எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்தா. அவர் எவ்விதச் செயல்களையும் தாமே முனைந்து செய்வதில்லை. ஆனால் அவருடைய உள்ளத்தில் உள்ள முன்வினை ஸம்ஸ்காரங்களுக்கு ஏற்ப, அவருடைய புத்தி, மனம், புலன்கள் ஆகியவை ப்ராரப்தத்தை அனுபவிப்பதற்காகவும், உலகத்திற்கு வழிகாட்டவும், 'தான் கர்த்தா' என்ற எண்ணமில்லாமல், செயல்களில் ஈடுபட்டுக் கொண்டுதான் இருக்கும். உலகப் பார்வையில் அந்தச் செயல்களை, அந்த ஞானி செய்வதாகத் தோன்றும். இதைத்தான் ஞானி தம் ஸ்வபாவத்திற்கு ஏற்றவாறு செயல் புரிகிறார் என்று கூறுகிறார். ஞானியின் செய்கைகள் கர்த்தா என்ற எண்ணமில்லாமல், விருப்பு-வெறுப்புகள், அஹங்காரம், மமகாரம் இவை அறவே அற்று வெறும் செயல்களாக நடைபெறுகின்றன. இதைத்தான் 'சேஷ்டா' என்று சொல்கிறார். 'கர்மம்' என்ற பெயரில்லை.

**கேள்வி:** ஞானியின் உள்ளத்தில் விருப்பு-வெறுப்பு, மகிழ்ச்சி-துயரம் என்ற விகாரங்களே கிடையாவா அல்லது அவற்றுடன் அவர்க்குத் தொடர்பு கிடையாதா? 'தம் உள்ளத்துடன் ஞானிக்குத் தொடர்பின்மையால், அவர் உள்ளத்தில் மேற்படி விகாரங்கள் உண்டாகா' என்றால் புலனடக்கம், மன அடக்கம், பொறுமை, தயை, ஸந்தோஷம் முதலிய நற்பண்புகளும் அவருக்கு இருக்கக் கூடாதே!

**பதில்:** ஞானிக்கு அவரது உள்ளத்துடன் தொடர்பு இல்லை என்று சொல்லும்போது அந்த உள்ளத்தில் ஏற்படும் விகாரங்களோ, நற்குணங்களோ அவருடன் எப்படித்



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தொடர்பு கொள்ளும்? அவர் உள்ளம் மிகவும் பரிசுத்தம் ஆகிவிடுகிறது. இடைவிடாமல் பரமாத்மாவின் ஸ்வரூபத்தையே சிந்தனை செய்து, மனதில் மலம், விக்ஷேபம், ஆவரணம் (அழுக்கு, தடுமாற்றம், திரை) என்ற மூன்று மலங்களும் முழுமையாக அகன்றுவிடுவதால், அவர் பரமாத்மாவை அடைந்துவிடுகிறார். அதனால் அவர் உள்ளத்தில் அஞ்ஞானத்தின் காரணமாக அஹங்காரம், மமகாரம், விருப்பு-வெறுப்புகள், மகிழ்ச்சி-துயரம், டம்பம், கபடம், காமம், க்ரோதம், பேராசை, மோஹம் முதலிய விகாரங்கள் உண்டாவதில்லை; இருப்பதும் இல்லை. அத்தகைய ஞானியின் அப்பழுக்கற்ற – பரிசுத்தமான உள்ளத்தில், ஸமபாவனை, ஸந்தோஷம், தயை, பொறுமை, ஆவலின்மை, அமைதி முதலிய நற்பண்புகள் தாமாகவே மலர்கின்றன. அவற்றிற்கேற்றபடி உலகத்திற்கு வழிகாட்டியாக அவருடைய மனம், புலன்கள், உடல் ஆகியவை சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளைத் தாமே ஆற்றுகின்றன. தீய குணங்களோ, தீய நடத்தைகளோ முற்றிலும் இரா.

**கேள்வி:** இதிஹாஸ புராணங்களில் பலவிதமான கதைகள் காணப்படுகின்றன. ஞானிகளான ஸித்த புருஷர்களுடைய உள்ளத்தில் காம க்ரோதங்கள் தோன்றின; புலன்கள் அவற்றிற்கேற்றபடி செயல்பட்டன என்றெல்லாம் வருகின்றனவே. அவற்றைப் பற்றி என்ன நினைப்பது?

**பதில்:** உதாரணங்களைக் காட்டிலும் சாஸ்த்ரங்களின் விதிவாக்யம் வலிவுள்ளது. செய்யவேண்டும் என்ற விதியைக் காட்டிலும் செய்யக்கூடாது என்ற தடை வலிவுள்ளது. இதிஹாஸங்களிலும், புராணங்களிலும் வரும் உதாரணங்களின் நுட்பத்தை அறிந்து கொள்வது மிக மிகக் கடினமான கார்யம். ஆகவே யாருடைய மனதிலாவது காமக்ரோதம் முதலிய தீய குணங்கள் வெளிப்படுமானால், அவர்கள் அவற்றின்படி செயல்படுவார்களானால், அவர்கள் பகவானை அடைந்துவிட்ட ஞானிகள் அல்லர் என்றுதான் கொள்ள வேண்டும். ஏனெனில் சாஸ்த்ரங்களில் எந்த இடத்திலும் ஞானிகளுக்குக் காமக்ரோதங்கள் இருக்கலாம் என்ற சலுகை கொடுக்கப்படவில்லை. அவை இருக்கவே கூடாது என்பதுதான் விதிவிலக்கற்ற சாஸ்த்ர விதி. கீதையிலும் மஹாபுருஷர்களின் இலக்கணம் கூறுமிடங்களிலெல்லாம் விருப்பு-வெறுப்புகள், காம-க்ரோதங்கள் முதலிய தீய குணங்கள் ஞானிகளிடம் இரா என்றுதான் சொல்லப்பட்டுள்ளது *(5/26,28; 12/17)*. ஆம், உலகத்திற்கு வழிகாட்டுவதற்கான அவசியம் ஏற்படும்போது, அவர்கள் நாடக நடிகரைப்போல இவ்விதமாகச் செயல்பட்டால், அந்தச் செயல்கள் நிச்சயமாகக் குற்றமானவை என்று கருதப்படக் கூடாது.

**கேள்வி:** 'இதில் ஒருவனது பலவந்தமான பிடிவாதம் என்ன செய்யும்?' என்ற கேள்விக்கு என்ன கருத்து?

**பதில்:** எவனும் பிடிவாதமாக ஒருகணம்கூடச் செயல்படாமல் இருக்க முடியாது *(3/5)*. ப்ரக்ருதி அவனை ஏதாவது செயலில் ஈடுபடுத்தத்தான் செய்யும் *(18/59,60)*. ஆகவே மனிதன் விதிக்கப்பட்ட கடமைகளைச் செய்யாமல் இருப்பதனால், கர்மபந்தத்திலிருந்து விடுபடலாம் என்ற பிடிவாதம் இல்லாமல், இயற்கையாக ஏற்படும் செயல்களை ஆற்றிக் கொண்டே, கர்மபந்தத்திலிருந்து விடுபட முயலவேண்டும். இம்முறையில்தான் மனிதன் வெற்றி பெறமுடியும். விதிக்கப்பட்ட கடமைகளை ஆற்றாமல் விட்டுவிட்டால் அவன், தான்தோன்றித்தனமாக நடந்து முன்னைக் காட்டிலும் இறுக்கமாகக் கர்மபந்தத்தில் சிக்கிக் கொள்வான்; வீழ்ச்சி அடைவான். (ப்ரக்ருதியை எதிர்த்து மனிதனின் பிடிவாதம் வெற்றி பெறாது என்பது கருத்து.)

**கேள்வி:** எல்லோருமே இயற்கையின்படியே செயல்களில் ஈடுபடுவார்களேயானால், மனிதனுக்குச் சுதந்திரம் சிறிதும் இல்லை. பின் இப்படிச் செய், இப்படிச் செய்யாதே என்று சொல்லுகின்ற சாஸ்த்ரங்களினால் என்ன உபயோகம்? இயற்கையின்படி மனிதன் நல்லதையோ, கெட்டதையோ செய்யத்தான் செய்வான். மேலும் அதற்கேற்றபடி அவனுடைய இயற்கை உறுதிப்பட்டுவிடும். இந்த நிலையில் மனிதன் முன்னேறுவது எப்படி?



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பதில்: சாஸ்த்ர விரோதமான இழி செயல்களுக்குக் காரணம் விருப்பு-வெறுப்புகள். சாஸ்த்ர முறைப்படி கடமைகளை ஆற்றுவதற்கு, ச்ரத்தை, பக்தி முதலிய நற்பண்புகள் முக்ய காரணம். விருப்பு-வெறுப்பு, காம-க்ரோதம் முதலிய தீய குணங்களைத் தவிர்ப்பதிலும், ச்ரத்தை, பக்தி போன்ற நற்குணங்களை வளர்த்துக் கொள்வதிலும் மனிதனுக்குச் சுதந்திரம் உண்டு. ஆகவே தீய பண்புகளை விலக்கி, பகவானிடத்திலும், சாஸ்த்ரங்களிலும் நம்பிக்கை, ச்ரத்தை, பக்தி இவற்றோடு, பகவானுக்கு த்ருப்தி ஏற்படும் வகையில் கடமைகளை ஆற்றவேண்டும். இந்த லக்ஷ்யத்தை முன்னே வைத்துச் செயலில் ஈடுபடுபவர்கள் தீய செயல்களில் ஈடுபட மாட்டார்கள்; அவர்கள் மூலம் நல்ல செயல்கள் தாமே நிகழும். அவை மோக்ஷத்தை அளிக்குமே தவிர பந்தப்படுத்தா. அதாவது செயல்களைத் தடுப்பதில் மனிதனுக்குச் சுதந்திரம் இல்லை. அவன் செயல் புரியும்படிதான் நேரும். ஆனால் நற்பண்புகளை வளர்த்துக் கொள்வதற்கும், அவற்றின் மூலம் தன்னை மேம்படுத்திக் கொள்வதற்கும் எல்லோருக்கும் சுதந்திரம் உண்டு. இப்படி எந்தெந்தச் செயல்களில் இயல்புகளை வெற்றி கொள்கிறானோ, அவை தாமாகவே பரிசுத்தம் அடைகின்றன. ஆகவே பகவானைச் சரணடைந்து தன்னுடைய ஸ்வபாவத்தை மேம்படுத்திக் கொள்வதன் மூலம் முன்னேற்றம் பெறலாம்.

பொருத்தம்: இவ்விதம் அவரவர் இயல்புக்கேற்றவாறு கர்மம் செய்ய வேண்டின், கர்மபந்தத்திலிருந்து எவ்விதம் விடுதலை பெறுவது என்ற கேள்விக்கு விடை கூறுகிறார்—

**इन्द्रियस्येन्द्रियस्यार्थे रागद्वेषौ व्यवस्थितौ।**
**तयोर्न वशमागच्छेत्तौ ह्यस्य परिपन्थिनौ॥ ३४॥**

**இந்த்₃ரியஸ்யேந்த்₃ரியஸ்யார்தே₂ ராக₃த்₃வேஷௌ வ்யவஸ்தி₂தௌ ।**
**தயோர்ந வஶமாக₃ச்சே₂த்தௌ ஹ்யஸ்ய பரிபந்தி₂நௌ ॥ 34 ॥**

**இந்த்₃ரியஸ்ய இந்த்₃ரியஸ்ய அர்தே₂** – ஒவ்வொரு புலனுக்குரிய நுகர்ச்சிப் பொருளிலும், **ராக₃ த்₃வேஷௌ** – விருப்பு-வெறுப்புகள், **வ்யவஸ்தி₂தௌ** – மறைந்து இருக்கின்றன. (மனிதன்), **தயோ:** – அவ்விரண்டின், **வஶம் ந ஆக₃ச்சே₂த்** – பிடியில் அகப்படக் கூடாது. **ஹி** – ஏனெனில், **தௌ** – அவ்விரண்டும்தான், **அஸ்ய** – இவனுடைய, **பரிபந்தி₂நௌ** – (மேன்மைப் பாதையில்) இடையூறு விளைவிக்கும் பெரும் எதிரிகள்.

ஒவ்வொரு புலனுக்குரிய நுகர்ச்சிப் பொருளிலும் விருப்பு-வெறுப்புகள் மறைந்து இருக்கின்றன. மனிதன் அவ்விரண்டின் பிடியிலும் அகப்படக் கூடாது. ஏனெனில் அவ்விரண்டும்தான் இவனுடைய மேன்மைப் பாதையில் இடையூறு விளைவிக்கும் பெரும் எதிரிகள்.

கேள்வி: 'இந்த்ரியஸ்ய' (புலனுக்குரிய) என்ற சொல்லை இருமுறை கூறி, அதை 'அர்தே' என்ற சொல்லுடன் சேர்ப்பதன் கருத்து என்ன?

பதில்: கண், காது முதலிய அறிவுப் புலன்கள், சொல் முதலிய செயற்புலன்கள், மனம் இவை எல்லாவற்றையும் ஒன்றாக சேர்த்துக் காட்டுவதற்காகவும், மற்றும் ஒவ்வொரு புலனுக்கும் தனித்தனி போகப் பொருட்களில் உள்ள தனித்தனி விருப்பு-வெறுப்புகளைப் பிரித்துக் காட்டுவதற்காகவும் 'இந்த்ரியஸ்ய' (புலனுக்குரிய) என்ற சொல்லை இரு முறை கூறினார். மனதோடு கூடிய புலன்களுக்கு எவ்வளவு போகப் பொருட்கள் உள்ளனவோ, அப்புலன்கள் எவையுடன் கூடிப் பிரிகின்றனவோ, அவை எல்லாவற்றிலும் தனித்தனியாக விருப்பு-வெறுப்புகள் மறைந்து இருக்கின்றன.

கேள்வி: 'புலன் நுகர்ச்சிப் பொருளில், புலனுடைய விருப்பு-வெறுப்பு மறைந்திருக்கின்றன' என்று சொன்னால் என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இப்படித் திரித்துப் பொருள் கூறினால் பொருள் சரியாக விளங்காது. புலன்கள் பல. அவற்றின் போகப் பொருட்கள் பல. ஒரே புலனுக்குரிய போக விஷயத்தில் ஒரே புலனுக்கு மட்டும் விருப்பு-வெறுப்பு இருக்கும் என்று எப்படிச் சொல்வது? ஆகவே ஒவ்வொரு புலனுக்கும் என்பதற்கு எல்லாப் புலன்களுக்கும் என்று பொருள் கொள்வதுதான் பொருந்தும்.

**கேள்வி:** ஒவ்வொரு புலனுக்குரிய நுகர்ச்சிப் பொருளிலும் இரண்டும் எப்படி உள்ளடங்கி இருக்கும்? அவ் விருப்பு-வெறுப்புகளுக்கு வசப்படக் கூடாது என்றால் என்ன?

**பதில்:** எந்தப் பொருள் அல்லது ப்ராணி எந்த ஸந்தர்பத்தில் மனத்திற்கு இன்பமளிப்பதாகத் தோன்றுகிறதோ, எது அவனுக்கு அனுகூலமாக இருக்கிறதோ, அதில் அவனுக்குப் பற்று உண்டாகிறது. இதைத்தான் விருப்பு என்று கூறுகிறோம். எது எந்த ஸந்தர்பத்தில் துன்பத்தைக் கொடுப்பதாகத் தோன்றுகிறதோ, எது ப்ரதிகூலமாக உள்ளதோ அதில் அவனுக்கு அந்த நேரத்தில் வெறுப்பு ஏற்படுகிறது. உண்மையில் எந்த வஸ்துவிலும் ஸுகமோ, துக்கமோ கிடையாது. மனிதன் நினைத்துக் கொள்கிறபடி ஒருவனுக்கு ஒரு பொருள் இன்பம் அளிப்பதாகத் தோன்றுகிறது. அதுவே மற்றவனுக்குத் துன்பம் அளிப்பதாகத் தோன்றுகிறது. அதுபோல ஒருவனுக்கே ஒரு சமயத்தில் ஒரு பொருள் இன்பமளிக்கிறது. வேறொரு சமயத்தில் அதுவே துன்பம் அளிப்பதாகத் தோன்றுகிறது. ஆகவே ஒவ்வொரு போகப் பொருளிலும் விருப்பு-வெறுப்புகள் உள்ளடங்கியுள்ளன. அல்லது புலனுக்குரிய விஷயங்களில் விருப்பு, வெறுப்பு இரண்டுமே உள்ளன. அவற்றை அடையும்போதும், அவை விலகும்போதும் அவ்வப்போது விருப்பு-வெறுப்புகள் உண்டாவதாகக் காணப்படுகிறது.

ஆகவே சாஸ்த்ரங்களால் விதிக்கப்பட்ட கடமைகளை ஆற்றும்போது மனதோடும், புலன்களோடும் போகப் பொருட்கள் சேரும்போதோ, விலகும்போதோ எந்தப் பொருளிலும், ப்ராணியிடத்திலும், செயலிலும், நிகழ்ச்சியிலும் நமக்கு ப்ரியமானது, வெறுப்புக்குரியது என்ற எண்ணம் கொள்ளாமல், வெற்றி-தோல்வி, ஸித்தி-அஸித்தி, லாப-நஷ்டம் இவற்றில் ஸமபாவனையோடு இருப்பதும், சிறிதுகூட மகிழ்ச்சியோ, துயரமோ அடையாமல் இருப்பதும்தான் விருப்பு-வெறுப்புகளுக்கு வசப்படாமல் இருப்பது ஆகும். ஏனெனில் விருப்பு-வெறுப்புகளுக்கு ஆட்படுவதால்தான், மனிதனுக்கு எல்லாவற்றிலும் தவறான கருத்து ஏற்பட்டு, உள்ளத்தில் மகிழ்ச்சி-துயரம் முதலிய மாற்றங்கள் ஏற்படுகின்றன. ஆகவே, மனிதன் பகவானை ஶரணமடைந்து விருப்பு-வெறுப்புகளைக் கடக்க வேண்டும்.

**கேள்வி:** 'விருப்பு-வெறுப்புகள் மனிதனுடைய மேன்மைப் பாதையில் இடையூறு விளைவிக்கும் மிகப் பெரிய எதிரிகள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனிதன் அஞ்ஞானத்தினால் விருப்பு-வெறுப்புகளுக்கு ஆட்பட்டு, அழியும் போகப் பொருட்களை ஸுகத்திற்குக் காரணம் என்று நினைத்து, மேன்மைக்குரிய பாதையிலிருந்து விலகி விடுகிறான். விருப்பு-வெறுப்புகள் ஸாதகனை ஏமாற்றி, போக விஷயங்களில் ஈடுபடுத்துகின்றன. மேன்மைக்குரிய பாதையில் இடையூறு விளைவிக்கின்றன. மனிதப் பிறவி என்ற விலைமதிப்பற்ற செல்வத்தைக் கொள்ளையிடுகின்றன. இதன் காரணமாக அவனை மனிதப் பிறவியின் உன்னதமான பேற்றை அடையவிடாமல் செய்து, விருப்பு-வெறுப்புகளினால் போகப் பொருட்களுக்காக ஸ்வதர்மத்திலிருந்து நழுவச் செய்து, பிற தர்மத்தில் ஈடுபடுத்தி, பற்பல தடை செய்யப்பட்ட செயல்களில் ஆழ்த்துகின்றன. இதன் பயனாக மனிதன் இறந்தபிறகும்கூட வீழ்ச்சியை அடைகிறான். ஆகவே இவற்றை வழிப்பறிக்காரர்கள், அதாவது நல்வழியில் இடையூறு செய்யும் எதிரிகள் என்று சொல்கிறார்.

**கேள்வி:** இந்த விருப்பு-வெறுப்புகள் ஸாதகனுடைய மேன்மைக்கு எப்படித் தடையாகின்றன?

**பதில்:** தான் போய்ச் சேர வேண்டிய இடத்துக்குப் போவதற்காகச் சாலையில் செல்லும் ஒருவனுக்கு, வழியில் இடையூறு செய்யும் வழிப்பறிக்காரர்களுடன் சந்திப்பு ஏற்பட்டு,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அவர்கள் அவனுடன் நண்பர்கள் போலப் பேசி, வண்டிக்காரன் முதலியோருடன் கூடி, அவர்கள் மூலமாக, அவனுடைய விவேகத்தில் மயக்கம் உண்டாக்கி, பொய்யான இன்பங்களிடம் அவனுக்கு ஆசையைத் தூண்டிவிட்டு, தம்முடைய பேச்சில் சிக்க வைத்து, அவன் போய்ச் சேரவேண்டிய இடத்தை நோக்கிப் போகவிடாமல், மாறாகக் காட்டுக்குள் அழைத்துச் சென்று, அவனுடைய பொருட்கள் அனைத்தையும் கொள்ளையடித்து, அவனை ஓர் ஆழமான பள்ளத்தில் தள்ளிவிட்டுப் போனால் எப்படியோ, அப்படியே இந்த விருப்பு-வெறுப்புகள் மேன்மையான பாதையில் செல்லும் ஸாதகனைச் சந்தித்து, நட்புணர்ச்சியைக் காட்டி, அவனுடைய மனம், புலன்களில் புகுந்து, அவனுடைய விவேக சக்தியை அழித்து, உலகியல் புலன் நுகர்ச்சிகளில் இன்பம் சுவைக்கும் ஆசையைத் தூண்டிவிட்டு, பாவச் செயல்களில் ஈடுபடச் செய்து விடுகின்றன. அதனால் அவனுடைய ஸாதனை முறை பயனற்றதாகிறது. பாவங்களின் பயனாக அவன் கோர நரகங்களில் வீழ்ந்து பயங்கரமான துக்கங்களை அனுபவிக்க நேரிடுகிறது.

**பொருத்தம்:** இந்த யுத்தம் என்ற கோரச் செயல் புரியாமல் பிச்சை எடுத்து வாழ்க்கை நடத்தி, அமைதியான செயல்களில் ஈடுபட்டால் எளிதாக விருப்பு-வெறுப்புகளைக் கடந்து விடலாமே! எதற்கு 'என்னை யுத்தம் செய்யச் சொல்லி ஆணையிடுகிறார்' என்று அர்ஜுனன் நினைக்கலாம். இதற்கு பகவான் பதில் கூறுகிறார்—

**श्रेयान्स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात्।**
**स्वधर्मे निधनं श्रेयः परधर्मो भयावहः॥ ३५॥**

**ஶ்ரேயாந்ஸ்வத₄ர்மோ விகு₃ண: பரத₄ர்மாத்ஸ்வநுஷ்டி₂தாத் ।**
**ஸ்வத₄ர்மே நித₄நம் ஶ்ரேய: பரத₄ர்மோ ப₄யாவஹ: ॥ 35 ॥**

**ஸ்வநுஷ்டி₂தாத்** – நன்கு கடைப்பிடிக்கப்பட்ட, **பரத₄ர்மாத்** – பிறருடைய தர்மத்தைக் காட்டிலும், **விகு₃ண:** – குணக்குறைவிருப்பினும், **ஸ்வத₄ர்ம:** – தன்னுடைய தர்மம், **ஶ்ரேயாந்** – மிகவும் உயர்ந்தது. **ஸ்வத₄ர்மே** – ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பதில், **நித₄நம்** – இறப்பதும், **ஶ்ரேய:** – மேன்மையே தரும். **பரத₄ர்ம:** – பிறருடைய தர்மம், **ப₄யாவஹ:** – பயத்தை விளைவிக்கும்.

நன்கு கடைப்பிடிக்கப்பட்ட பிறருடைய தர்மத்தைக் காட்டிலும் குணக்குறைவிருப்பினும் தன்னுடைய தர்மம் மிகவும் உயர்ந்தது. ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பதில் இறப்பதும் மேன்மையே தரும். பிறருடைய தர்மம் பயத்தை விளைவிக்கும்."

**கேள்வி:** 'ஸ்வநுஷ்டிதாத் பரதர்மாத்' என்று எதைச் சொல்கிறார்? அதைக் காட்டிலும் குணமற்ற ஸ்வதர்மம் சிறந்தது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த வாக்கியத்தில் பிறர் தர்மம், ஸ்வதர்மம் இவை இரண்டையும் ஒப்பிடுகிறார். பரதர்மம் என்பதற்கு 'நன்கு கடைப்பிடிக்கப்பட்ட' என்றும், ஸ்வதர்மம் என்பதற்கு 'குணமில்லாத' என்றும் அடைமொழிகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதாவது பிறருடைய தர்மத்தை, 'நற்குணங்கள் நிரம்பிய, நன்கு அனுஷ்டிக்கப்பட்ட' என்றும், தன்னுடைய தர்மத்தை, 'குணமற்ற, அனுஷ்டிப்பதில் குறையுடைய' என்றும் கூறப்பட்டுள்ள மாறுபட்ட அடைமொழிகளை இங்குக் கவனிக்க வேண்டும். மேலும் வைசியர், க்ஷத்ரியர் இவர்களுடைய தர்மங்களைக் காட்டிலும் ப்ராம்மணனுடைய தர்மத்தில் விசேஷமாக அஹிம்ஸை முதலிய நற்பண்புகள் அதிகம் உள்ளன. அதுபோல இல்லறத்தானுடைய தர்மங்களைக் காட்டிலும் ஸந்யாஸ தர்மத்தில் நற்பண்புகள் அதிகமாகக் காணப்படுகின்றன. நான்காம் வர்ணத்தவருடையதைக் காட்டிலும் வைசிய, க்ஷத்ரிய கர்மங்களில் சில பெருமையுடையவை என்பதையும் கருத்தில் கொள்ள வேண்டும். சிலருடைய கர்மங்களில் இயற்கையாகவே

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நற்பண்புகள் மிகுந்துள்ளன; ஆதலால் சிறந்தவை. அவற்றை நன்றாகவும் கடைப்பிடித்து விடலாம் என்று நினைத்து அவற்றைக் கடைப்பிடிக்க விரும்புபவர்களுக்கு அவை விதிக்கப்படவில்லை. அவை பிறருக்கு விதிக்கப்பட்டவை. நன்றாகக் கடைப்பிடிக்கப் பட்டவையாகவும், நற்பண்புகள் மிகுந்தவையாகவும் உள்ள பிற கர்மங்களை இங்கே 'பரதர்மாத்', 'ஸ்வநுஷ்டிதாத்' என்ற சொற்களால் கூறுகிறார். மேலே சொன்ன தரம் மிகுந்த பிறர் தர்மத்தைக் காட்டிலும் தரம் தாழ்ந்த ஸ்வதர்மம் சிறந்தது. பார்வைக்கு அழகற்றவனாகவும், குணமற்றவனாகவும் கணவன் இருந்தாலும், கணவனுக்குப் பணிவிடை செய்வதுதான் மனைவிக்கு மேன்மை தரும் என்பது போல என்று அறியவேண்டும். பார்வைக்கு குணமற்றது போலக் காணப்படும் ஸ்வதர்மம் கடைப்பிடிப்பதில் குற்றம் குறை இருந்தாலும்கூட அவனுக்கு மேன்மை தரக்கூடியது என்னும் போது, நற்பண்புகள் நிறைந்த ஸ்வதர்மம் முழுமையாகக் கடைப்பிடிக்கவும் முடிந்துவிட்டால் அதன் பெருமை பற்றிச் சொல்லவும் வேண்டுமா?

**கேள்வி:** ஸ்வதர்மம் என்றால் எது?

**பதில்:** வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை இவற்றிற்கேற்றவாறு எவருக்கு எந்தக் கடமை சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டிருக்கின்றதோ, அவருக்கு அது ஸ்வதர்மம். பொய், கபடம், திருட்டு, ஹிம்ஸை, ஏமாற்றுதல், விபசாரம் முதலிய தீய செயல்கள் எவருக்கும் ஸ்வதர்மம் அல்ல. மேலும் பயன் கருதிச் செய்யப்படும் காம்ய கர்மங்களும் கட்டாயம் செய்யப்படவேண்டிய கர்மம் அல்ல. அதனால் அவை யாருடைய ஸ்வதர்மமாகவும் கருதப்படவில்லை. இவை தவிர எந்த வர்ண, ஆசிரமத்தில் உள்ளவருக்கு எந்தத் தனிப்பட்ட தர்மங்கள் சொல்லப்பட்டு இருக்கின்றனவோ, எவை ஒரு வகுப்பினரைத் தவிரப் பிற வர்ண, ஆசிரமத்தவர்களுக்கு இல்லையோ, அவை அந்த அந்த வர்ண ஆசிரமத்தவர்களுக்குத் தனித்தனியே ஸ்வதர்மங்கள். இருபிறப்பாளர்களுக்கு வேதாத்யயனம், யக்ஞம் முதலிய கர்மங்களே விதிக்கப்பட்டுள்ளன. இவை இருபிறப்பாளர்களுக்கே ஸ்வதர்மம் ஆகும். மேலும் எல்லா வர்ண, ஆசிரமத்தைச் சேர்ந்த ஆண், பெண்களுக்கும் தகுதிகளாவன: கடவுள் பக்தி, உண்மை பேசுதல், பெற்றோருக்குப் பணிவிடை செய்தல், மனம்-புலன் கட்டுப்பாடு, ப்ரம்மசர்யம், அஹிம்ஸை, திருடாமை, த்ருப்தி கொள்ளுதல், கருணை, தானம், பொறுமை, தூய்மை ஆகியவை ஆகும். இவை எல்லோருக்கும் பொதுவான ஸ்வதர்மமாகும்.

**கேள்வி:** எந்த மனித ஸமுதாயத்தில் வர்ணாசிரம ஏற்பாடு இல்லையோ, மேலும் எவர்கள் வைதிகமான ஸநாதன தர்மத்தை ஏற்றுக் கொள்ளவில்லையோ, அவர்கள் விஷயத்தில் ஸ்வதர்மம்-பரதர்மம் என்ற நியமம் எவ்வாறு வகுத்துக் கூறமுடியும்?

**பதில்:** உண்மையில் வர்ணாசிரம முறை எல்லா மனித ஸமுதாயத்திலும் இருந்திருக்கத்தான் வேண்டும். வைதிகமான ஸநாதன தர்மம் எல்லோராலும் மதிக்கத்தக்கதுதான். ஆகவே எந்த மனித ஸமுதாயத்தில் வர்ணாசிரமக் கட்டுப்பாடு இல்லையோ, அவர்களிடையே ஸ்வதர்மம், பரதர்மம் என்ற நிர்ணயம் செய்வது கடினம்தான். ஆயினும் தற்சமயம் தர்மத்துக்கு ஸங்கடம் ஏற்பட்டிருக்கிறது. 'கீதையில் மனித ஜாதி முழுவதற்குமாக மேன்மைக்கான வழி சொல்லப்பட்டிருக்கிறது' என்ற எண்ணத்தோடு பார்த்தால், பின்வருமாறு ஒரு முறை வகுக்கப்படலாம். எந்த மனிதனுக்கு, எந்த ஸமுதாயத்தில், எந்த ஜாதியில் பிறப்பு ஏற்படுகிறதோ, எந்தப் பெற்றோரின் வீர்யத்தினால் அவனுடைய உடல் அமைகிறதோ, பிறந்தது முதல் தன் கடமையை அறியும் வரை எந்தெந்த மனப்பதிவுகளில் அவனுடைய வளர்ப்பும், பராமரிப்பும் அமைகின்றனவோ, அவற்றுடன் முற்பிறவியின் எத்தகைய ஸம்ஸ்காரங்களும் (மனப்பதிவுகளும்) சேர்கின்றனவோ, இவ்வளவுக்கும் ஏற்றவாறு அவரவர்க்கு மனப்பாங்கு அமைகிறது. அந்த இயல்புக்கு ஏற்றவாறு அவன் வாழ்க்கையில், செயல்களில் ஈடுபடுகிறான். ஆகவே எந்த ஜன ஸமுதாயத்தில் வர்ணாசிரமக் கட்டுப்பாடு இல்லையோ, அந்த ஸமுதாயத்தினர்கள் கூட அந்த ஸமுதாயத்தின்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



முன்னோர்களான பெரியோர்கள் விதித்திருக்கும் கடமைகள் இவ்வுலக வாழ்க்கைக்காகவும், பரலோக இன்பத்திற்காகவும் பெரியோர்களால் தங்களுக்கு விதிக்கப்பட்டவை என்று உணர்ந்து, அவற்றை முழு மனதோடு கடைப்பிடிக்கத்தான் வேண்டும். அது பிறருடைய தர்ம அனுஷ்டானத்திற்கு இடையூறாக இருக்கக் கூடாது. மனித ஜாதிக்கே உரிய பொதுவான தர்மங்களாகக் கருதப்படுபவையே அவர்களுக்கு ஸ்வதர்மம். அவற்றிற்கு மாறாக, பிறருக்கு விதிக்கப்பட்டவையும், இவர்களுக்கு விதிக்கப்படாதவையும் பரதர்மம் ஆகும்.

**கேள்வி:** *'ஸ்வதர்ம:' என்ற சொல்லுக்கு, 'விகுண:' என்ற அடைமொழி கொடுப்பதன் கருத்து என்ன?*

**பதில்:** 'விகுண:' என்ற சொல்லுக்கு குணக்குறைவுடைய என்று பொருள். யுத்தம் புரிவது, துஷ்டர்களைத் தண்டிப்பது முதலியவை க்ஷத்ரியர்களுடைய ஸ்வதர்மம். அதில் அஹிம்ஸை, அமைதி முதலிய பண்புகள் குறைந்து காணப்படுகின்றன. அதுபோல வைசிய தர்மமான வேளாண்மை முதலிய கடமைகளில் ஹிம்ஸை முதலிய குறைகள் காணப்படுகின்றன. ப்ராம்மணனுக்கு விதிக்கப்பட்ட சாந்திமயமான கர்மங்களை இவற்றோடு ஒப்பிட்டுப் பார்த்தால் க்ஷத்ரிய, வைசிய தர்மங்கள் குணம் குறைந்தவையாகத் தோன்றும். அதுபோல நான்காம் வர்ணத்தவரின் ஸ்வதர்மம் க்ஷத்ரிய, வைசிய தர்மங்களைக் காட்டிலும் குணம் குறைந்தவையாகத் தோன்றும்; தரம் குறைந்தவையாகத் தோன்றும். அந்த தர்மங்களைக் கடைப்பிடிப்பதில் குறை இருக்கலாம்; அவற்றைச் செய்யாமல் விட்டும் போகலாம். ஆகவே, அவரவருக்கு விதிக்கப்பட்ட ஸ்வதர்மங்களில் இயல்பான குற்றம் குறை – செயல்பாட்டில் குறை இருந்தாலும், பிற தர்மங்களைக் காட்டிலும் அவை மேன்மை அளிப்பவை. இதைத்தான், 'ஸ்வதர்ம:' என்பதோடு சேர்ந்த 'விகுண:' என்ற அடைமொழி கூறுகிறது.

**கேள்வி:** *தனது தர்மத்தில் மரணமே நேர்ந்தாலும், அது மேன்மை தரும் என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** எவ்விதமான இடையூறுகளும் வராமல் வாழ்நாள் முழுவதும் ஸ்வதர்மத்தைக் கடைப்பிடித்தவன், தன் விருப்பப்படி ஸ்வர்கத்தையோ, மோக்ஷத்தையோ அடைவான் என்பதில் ஐயமில்லை. இடையூறு வந்தும்கூட அவன் ஸ்வதர்மத்திலிருந்து வழுவாமல் உறுதியாக இருந்துவந்தால் அவனுக்கு மரணமே ஏற்பட்டாலும், அது மேன்மையையே தரும். இதிஹாஸங்களிலும், புராணங்களிலும் இப்படிப் பல உதாரணங்கள் கிடைக்கின்றன. ஸ்வதர்மத்தைக் கைவிடாமல் கடைப்பிடித்து, அதனால் மரணம் வரை கஷ்டங்களை ஏற்பவர்களுக்கு நற்கதி கிடைத்தது என்றெல்லாம் புராணங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன.

திலீபன் என்ற அரசன் க்ஷத்ரிய தர்மத்தைக் கடைப்பிடித்து, ஒரு பசுவைக் காப்பதற்காகத் தன் உடலையே சிங்கத்திற்கு அர்ப்பணம் செய்ய முனைந்து, தன் விருப்பத்தை அடைந்தான்; 'சிபி' என்ற அரசன், 'அடைக்கலம் புகுந்ததைக் காப்பது' என்ற ஸ்வதர்மத்தைக் கடைப்பிடித்து, ஒரு புறாவைக் காப்பதற்காக, அதைத் துரத்தி வந்த பருந்திற்குத் தன் உடலின் மாம்ஸத்தையே வெட்டிக் கொடுத்து இறப்பதற்கும் துணிந்தான். அதனால் அவனுக்கு மேன்மையே கிடைத்தது. பக்தி என்ற ஸ்வதர்மத்தைக் காப்பதற்காக ப்ரஹ்லாதன் மரணத்திற்கொப்பான பல கொடுமைகளை மகிழ்ச்சியுடன் ஏற்றான். அதனால் மேன்மையே கிடைத்தது. இப்படிப் பல உதாரணங்களைப் பார்க்கலாம். மஹாபாரதம் ஸ்வர்காரோஹண பர்வம் (5/63) சொல்கிறது—

**ந ஜாது காமாந்ந ப₄யாந்ந லோப₄த்₃த₄ர்மம் த்யஜேஜ்ஜீவிதஸ்யாபி ஹேதோ: ।**
**நித்யோ த₄ர்ம: ஸுக₂து₃:கே₂ த்வநித்யே ஜீவோ நித்யோ ஹேதுரஸ்ய த்வநித்ய: ॥**

காமத்தினாலோ, பயத்தினாலோ, பேராசையினாலோ, உயிரைக் காப்பதற்காகவோ மனிதன் எக்காலத்திலும் ஸ்வதர்மத்தை விடக் கூடாது. ஏனெனில் தர்மம் நித்யமானது; ஸுகமும், துக்கமும் நிலையற்றவை; ஜீவன் நித்யன். வாழ்வின் காரணம் அழியக் கூடியது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஆகவே மரணபயம் வரும்போதுகூட மனிதன் சிரித்துக் கொண்டே மரணத்தை வரவேற்க வேண்டும். ஆனால் ஸ்வதர்மத்தை எக்காரணத்தைக் கொண்டும் விடக்கூடாது. இதில்தான் அவனுடைய எல்லாவிதமான மேன்மைகளும் உள்ளன.

**கேள்வி:** 'பிறருடைய தர்மம் பயத்தைக் கொடுக்கும்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பிறருடைய தர்மத்தைக் கடைப்பிடிக்கும் போது, அது எளிதாக இருக்கலாம். இருப்பினும், உண்மையில் அது பயத்தையே கொடுக்கும்.

உதாரணமாக — நான்காம் வர்ணத்தவரும், வைசியரும் அந்தணர்தம் தர்மங்களைக் கடைப்பிடிப்பதில் ஈடுபடுவார்களேயானால், அவர்களுடைய தொழிலைக் கெடுப்பது என்ற குற்றம் காரணமாகப் பாவத்திற்கு ஆளாகிறார்கள். அதன் பயனாக நரகத்தை அனுபவிக்க நேரிடுகிறது. அதுபோல ப்ராம்மணரோ, க்ஷத்ரியரோ, வைசியர் முதலானோரின் தர்மத்தைக் கடைப்பிடித்தால், அவர்கள் தம் குலதர்மத்திலிருந்து வீழ்கிறார்கள். ஆபத்துக்காலம் தவிர்ந்த மற்ற நேரத்தில் பிற தர்மத்தைக் கடைப்பிடித்த பாவத்திற்கும் ஆளாகிறார்கள். ஆசிரம தர்மங்கள், மற்ற தர்மங்கள் விஷயத்திலும் இம்மாதிரியே புரிந்து கொள்ள வேண்டும். ஆகவே எவருக்கும் தம் மேன்மைக்காகப் பிற தர்மத்தைக் கடைப்பிடிக்கத் தேவையில்லை. வெளிப்பார்வைக்குப் பிற தர்மம் உயர்வுள்ளதாகத் தோன்றலாம்; ஆனால் அது யாருக்கு விதிக்கப்பட்டதோ அவர்களுக்குத்தான் மேன்மையைத் தரும். மற்றவருக்கு பயம் அளிக்கும். மங்களத்தை அளிக்காது.‡

**பொருத்தம்: 'ஸ்வதர்மத்தைக் கடைப்பிடித்தால்தான் மேன்மையுறலாம். பர தர்மங்களைக் கடைப்பிடிப்பதோ, தடை செய்யப்பட்ட பாவச் செயல்களைப் புரிவதோ எல்லாவிதத்திலும் தீங்கு விளைவிக்கும். இதை நன்றாகப் புரிந்து கொண்ட பிறகும் மனிதன் தன் விருப்பத்திற்கும், ஆராய்ச்சிக்கும், ஸ்வதர்மத்திற்கும் விரோதமாகப் பாவச் செயல்களில் ஈடுபடுவது ஏன்?' என்று அர்ஜுனன் தெரிந்து கொள்ள விரும்புகிறார்—**

अर्जुन उवाच

**अथ केन प्रयुक्तोऽयं पापं चरति पूरुषः।**
**अनिच्छन्नपि वार्ष्णेय बलादिव नियोजितः॥ ३६॥**

*அர்ஜுந உவாச*

***அத$_2$ கேந ப்ரயுக்தோऽயம் பாபம் சரதி பூருஷ: ।***

***அநிச்ச$_2$ந்நபி வார்ஷ்ணேய ப$_3$லாதி$_3$வ நியோஜித: ॥ 36 ॥***

*அர்ஜுந உவாச* — அர்ஜுனன் கூறினார்: **வார்ஷ்ணேய** — க்ருஷ்ண! **அத$_2$** — பின், **அயம்** — இந்த, **பூருஷ:** — மனிதன், **அநிச்ச$_2$ந் அபி** — தான் விரும்பாவிட்டாலும், **ப$_3$லாத்** — பலவந்தமாக, **நியோஜித: இவ** — தூண்டப்பட்டவன்போல, **கேந** — எதனால், **ப்ரயுக்த:** — ஏவப்பட்டு, **பாபம்** — பாவத்தை, **சரதி** — செய்கிறான்?

அர்ஜுனன் கூறினார்: 'க்ருஷ்ண! பின் இந்த மனிதன் தான் விரும்பாவிட்டாலும் பலவந்தமாகத் தூண்டப்பட்டவன்போல எதனால் ஏவப்பட்டுப் பாவத்தைச் செய்கிறான்?'

---

‡ மநுஸ்ம்ருதி (10/97)யிலும் இதே செய்தி கூறப்பட்டிருக்கிறது—

வரம் ஸ்வத$_4$ர்மோ விகு$_3$ணோ ந பாரக்ய: ஸ்வநுஷ்டி$_2$த: ।
பரத$_4$ர்மேண ஜீவந் ஹி ஸத்$_3$ய: பததி ஜாதித: ॥

குணமற்றதாயினும் ஸ்வதர்மம் சிறந்தது, நன்றாக அனுஷ்டித்தாலும் பிறதர்மம் சிறந்தது அன்று. பிற தர்மத்தைக் கடைப்பிடித்து வாழ்பவன் தன் நிலையிலிருந்து உடனே வீழ்ச்சி அடைகிறான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** இந்த ச்லோகத்தில் அர்ஜுனன் கேட்பதன் பொருள் என்ன?

**பதில்:** கவனத்துடன் முயற்சி செய்யும் புத்திசாலியான மனிதனுடைய மனதையும்கூடப் புலன்கள் வலுவில் தடுமாறச் செய்கின்றன (2/60) என்று பகவான் முதலிலேயே சொல்லியிருக்கிறார். உலகியலிலும் நாம் பார்க்கிறோம்: புத்தியும், விவேகமும் உள்ளவன், நேரிடையாகவும், அனுமானத்தினாலும் பாவங்களால் விளையும் கேடுகளைப் பார்த்து, ஆராய்ந்து அவற்றில் ஈடுபடுவது தவறு என்று உணர்கிறான். ஆகவே விருப்பத்தோடு அவன் பாவச் செயல்களில் இறங்குவதில்லை. ஆயினும் நோயாளி, உடலுக்கு ஒவ்வாததைச் சபலம் காரணமாக உண்பதுபோல, தானறியாமல் வலுவில் பாவச் செயலில் ஈடுபடுகிறான். மனிதனை வலுவில் பாவச் செயலில் ஈடுபடுத்துவது யார்? பகவானே மனிதர்களைப் பாவச் செயல்களில் தள்ளுகிறாரா? அதனால்தான் அவர்கள் அவற்றிலிருந்து மீள முடியவில்லையா? அல்லது ப்ராரப்தத்திற்குக் கட்டுப்பட்டு அவர்கள் பாவம் செய்ய நேர்கின்றதா? அல்லது வேறு காரணம் உண்டா? என்கிற மேற்குறித்த கேள்விகளைக் கேட்டு, அர்ஜுனன் பகவான் மூலம் தெளிவுபெற விரும்புகிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் அர்ஜுனன் கேட்டதற்கு பகவான் பதில் சொல்கிறார்—

श्रीभगवानुवाच

**काम एष क्रोध एष रजोगुणसमुद्भवः।**
**महाशनो महापाप्मा विद्ध्येनमिह वैरिणम्॥ ३७॥**

ஸ்ரீப$_4$க$_3$வாநுவாச

**காம ஏஷ க்ரோத$_4$ ஏஷ ரஜோகு$_3$ணஸமுத்$_3$ப$_4$வ: ।**
**மஹாஶநோ மஹாபாப்மா வித்$_3$த்$_4$யேநமிஹ வைரிணம் ॥ 37 ॥**

**ஸ்ரீப$_4$க$_3$வாநுவாச** – ஸ்ரீபகவான் கூறினார்: **ரஜோகு$_3$ணஸமுத்$_3$ப$_4$வ:** – ரஜோ குணத்திலிருந்து உண்டாகிய, **ஏஷ: காம:** – இந்த காமம்தான், **க்ரோத$_4$:** – கோபமாகும். **ஏஷ:** – இது, **மஹாஶந:** – பெருந்தீனிக்காரன் (அதாவது போகங்களில் 'போதும்' என்ற எண்ணமில்லாதவன். மேலும்), **மஹாபாப்மா** – பெரிய பாவி, **ஏநம்** – இதையே, **இஹ** – இந்த விஷயத்தில், **வைரிணம்** – பகைவனாக, **வித்$_3$தி$_4$** – அறிந்து கொள்.

ஸ்ரீபகவான் கூறினார்: 'ரஜோ குணத்திலிருந்து உண்டாகிய இந்த காமம்தான் கோபமாகும். இது பெருந்தீனிக்காரன். போகங்களில் 'போதும்' என்ற எண்ணமில்லாதவன். மேலும் பெரிய பாவி. இதையே இந்த விஷயத்தில் பகைவனாக அறிந்து கொள்.

**கேள்வி:** 'காம:', 'க்ரோத:' இவற்றுடன் 'ஏஷ:' (இந்த) என்று இருமுறை கூறுவதன் கருத்து என்ன? 'ரஜோகுணஸமுத்பவ:' என்பது எந்தச் சொல்லுடன் சேர்கிறது?

**பதில்:** 34வது ச்லோகத்தில் ஒவ்வொரு புலனுக்கும் போகப் பொருளிடம் உள்ள விருப்பு–வெறுப்புகள்தான் மனிதனைச் சூறையாடும் கொள்ளைக்காரர்கள் என்று சொன்னாரே, அவற்றின் ஸ்தூல உருவங்கள்தாம் காமமும், க்ரோதமும். இவற்றில் காமம் முக்கியமானது. அது விருப்பத்தின் ஸ்தூலரூபம். அதிலிருந்துதான் க்ரோதம் உண்டாகிறது (2/62). இதைக் காண்பிப்பதற்காகத்தான், 'காம:', 'க்ரோத:' என்ற சொற்களுடன் 'ஏஷ:' (இந்த) என்ற சொல்லை இருமுறை கூறியிருக்கிறார். விருப்பத்தில் உண்டாவது காமம். விருப்பம் என்பது ரஜோகுணத்தின் விளைவு. ஆகவே 'ரஜோகுணத்திலிருந்து உண்டாகிய' என்ற அடைமொழி காமம் என்ற சொல்லுடன் சேர்கிறது.

**கேள்வி:** காமம், க்ரோதம் இரண்டுமே மனிதனுக்குப் பகைவர்கள். ஆனால் பகவான் முதலில் இரண்டையும் சொல்லிவிட்டுப் பிறகு தனியாகக் காமத்தை மட்டும் பகைவனாகக் கொள் என்று ஏன் சொல்கிறார்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** காமத்திலிருந்து க்ரோதம் உண்டாகிறது என்று முன்னால் சொல்லியாகிவிட்டது. ஆகவே காமம் அழிந்தால் அத்துடன் க்ரோதமும் தானாகவே அழிந்துவிடும். அதனால் பகவான் இந்த ஸந்தர்பத்தில் காமத்தையே குறிப்பிட்டுச் சொன்னார். ஆனால், 'பாவங்களுக்குக் காரணம் காமம் மட்டும்தான்; க்ரோதத்திற்கு ஸம்பந்தமில்லை' என்று யாரும் நினைத்துவிடக் கூடாது என்பதற்காக, இந்த விஷயத்தின் தொடக்கத்திலேயே காமத்துடன் க்ரோதத்தையும் சேர்த்துச் சொன்னார்.

**கேள்வி:** *காமம் ரஜோகுணத்திலிருந்து உண்டாகிறதா? விருப்பத்திலிருந்து உண்டாகிறதா?*

**பதில்:** ரஜோகுணத்தினால் விருப்பமும், விருப்பத்தினால் ரஜோகுணமும் வளர்கின்றன. ஆகவே இரண்டும் ஒன்றே (14/7). எனவே காமம் உண்டாவதற்கு ரஜோகுணம், விருப்பம் இரண்டுமே காரணங்கள்.

**கேள்வி:** *காமத்தைப் பெருந்தீனிக்காரன் என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** ஸுகபோகங்களை அனுபவிக்க அனுபவிக்கக் காமம் பெருகுகிறதே தவிர, 'போதும்' என்று ஓய்வதில்லை. நெய்யும், விறகும் சேரச்சேரத் தீ வளர்வது போல, மனிதன் போகங்களை எவ்வளவு அதிகமாக அனுபவித்தாலும், மேலும் மேலும் அதிகமாகவே போகங்களில் பேராசை உண்டாகிவிடுகிறது. ஆகவே, போகங்களாகிற ஆசையைக் காட்டி, 'ஸாம', 'தான' நீதி முறைகளால், காமம் என்ற எதிரியை வெற்றி கொள்ளலாம் என்று யாரும், ஒருபோதும் நினைக்க வேண்டாம்; 'தண்ட' நீதியையே இதற்கு உபயோகிக்க வேண்டும்.

**கேள்வி:** *காமத்தை 'மஹாபாப்மா' என்கிறாரே! ஏன்?*

**பதில்:** எல்லாத் தீமைகளுக்கும் காரணம் இந்தக் காமம்தான். மனிதனுடைய விருப்பம் இல்லாமலே அவனைப் பாவச் செயல்களில் ஈடுபடுத்துவது ப்ராரப்தமோ, ஈசுவரனோ அல்ல; காமம்தான் பலவிதமான நுகர்ச்சிகளில் பற்றுதலை உண்டாக்கி, அவனைப் பலவந்தமாகப் பாவங்களில் ஈடுபடச் செய்கிறது. ஆகையால், அது மஹாபாவி எனப்படுகிறது.

**கேள்வி:** *'இதையே இங்கு பகைவன் என்று அறிந்து கொள்வாய்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** எது வலுவிலே ஒரு சூழ்நிலையை உண்டாக்கி அதனால் பெரிய துயரத்தையோ, மரணத்தையோ விளைவிக்கிறதோ, அதை எதிரி என்று அறிந்துகொண்டு உடனுக்குடன் அதை அழிக்கத்தான் வேண்டும். இந்தக் காமம் மனிதனை அவன் விருப்பம் இல்லாமலேயே வலுவில் பாவ வழியில் இழுத்துச் சென்று, பிறப்பு-இறப்பு என்பதும் நரக யாதனை என்பதுமான பெரிய துக்கங்களுக்கு ஆளாக்குகிறது. ஆகவே ஆன்மிகப் பாதையில் இது பெரிய எதிரி என்று அறிய வேண்டும். ஈசுவரன் மிகவும் தயவுடையவர்; மக்களுக்கு நண்பர். அவர் எவரையேனும் பாவச் செயலில் இழுத்து விடுவாரா? ப்ராரப்தம் என்பது முன்வினைகளின் பயனை அனுபவிக்கச் செய்யுமே தவிர, பாவம் செய்யத் தூண்டும் திறன் அதற்குக் கிடையாது. ஆகவே பாவம் செய்யத் தூண்டும் எதிரி வேறு யாருமல்ல; இந்தக் காமம்தான்.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் எல்லாக் கேடுகளுக்கும் காரணமானதும்; விருப்பமில்லாமலே மனிதனைப் பாவம் செய்யத் தூண்டுவதும் காமமே என்று சொன்னார். இந்தக் காமம் எப்படிப் பாவம் செய்யத் தூண்டுகிறது என்ற கேள்வி பிறக்கிறது. ஆகவே மூன்று ச்லோகங்களில் காமம் மனிதனுடைய அறிவை மறைத்து, அவனைக் குருடாக்கி, பாவக் குழியில் தள்ளிவிடுகிறது என்று கூறுகிறார்—

**धूमेनाव्रियते वह्निर्यथादर्शो मलेन च।**
**यथोल्बेनावृतो गर्भस्तथा तेनेदमावृतम्॥ ३८॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**தூ₄மேநாவ்ரியதே வஹ்நிர்யதா₂தர்ஸோ மலேந ச ।**
**யதோ₂ல்பேநாவ்ருதோ க₃ர்ப₄ஸ்ததா₂ தேநேத₃மாவ்ருதம் ॥ 38 ॥**

**யதா₂** – எவ்விதம், **தூ₄மேந** – புகையால், **வஹ்நி:** – நெருப்பும், **மலேந** – அழுக்கினால், **ஆத₃ர்ஶ: ச** – கண்ணாடியும், **ஆவ்ரியதே** – மறைக்கப்படுகிறதோ (மேலும்), **யதா₂** – எவ்விதம், **உல்பே₃ந** – கருப்பையினால் (தசைமூட்டத்தினால்), **க₃ர்ப₄:** – கரு, **ஆவ்ருத:** – மறைக்கப்படுகிறதோ, **ததா₂** – அவ்விதமே, **தேந** – அந்தக் காமத்தினால், **இத₃ம்** – இந்த (ஞானம்), **ஆவ்ருதம்** – மறைக்கப்பட்டிருக்கிறது.

எவ்விதம் புகையால் நெருப்பும், அழுக்கினால் கண்ணாடியும் மறைக்கப்படுகின்றனவோ மேலும் எவ்விதம் கருப்பையினால் – தசைமூட்டத்தினால் கரு மறைக்கப்படுகிறதோ, அவ்விதமே அந்தக் காமத்தினால் இந்த ஞானம் மறைக்கப்பட்டிருக்கிறது.

**கேள்வி:** புகை, அழுக்கு, தசை மூட்டம் (கருப்பை) இம்மூன்றையும் உதாரணமாகக் காட்டி, காமம் அறிவை மறைப்பதாகக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இந்தக் காமம்தான், மல, விக்ஷேப, ஆவரணங்களாகிய மூன்று மலங்களாகப் பரிணமித்து, மனிதனுடைய ஞானத்தை மூடி வைத்திருக்கிறது. இங்குப் புகையானது விக்ஷேபம் என்கின்ற மனத்தடுமாற்றத்தைக் குறிக்கிறது. புகை இங்குமங்கும் சூழ்ந்து கொண்டே தீக்கொழுந்தை மறைத்து விடுகிறது. அதுபோல விக்ஷேபம் என்ற தடுமாற்றம் சஞ்சலமாக இருந்து கொண்டே அறிவை மழுங்கச் செய்கிறது. மனம் ஒருமுனைப்போடு இல்லாவிட்டால் அறிவு ப்ரகாசிக்காது; மழுங்கிவிடும். கண்ணாடியில் படியும் அழுக்கின் நிலையில் மலம் என்ற குற்றம் வருகிறது. கண்ணாடியின் மேலே அழுக்குப் படிவதால் ப்ரதிபிம்பம் அதில் தெரிவதில்லை. அதுபோல, பாவங்களால் அந்தக்கரணத்தில் அழுக்குப் பிடித்துவிட்டால், அந்த மனதில் உண்மையும் உறைவதில்லை. செய்யவேண்டிய கடமைகளும் நன்றாகப் புரிவதில்லை. அதனால் மனிதன் தெளிவாக ஆலோசிக்க முடிவதில்லை. தசை மூட்டம் என்ற நிலையில் ஆவரணம் என்ற திரையை வைத்துக் காட்டுகிறார். கர்பத்தை எப்பொழுதும் தசைத்திரை மூடிக் கொண்டிருக்கிறது. அதில் கருப்பொருளைச் சிறிதுகூடக் காண முடிவதில்லை. அதுபோல ஆவரணம் என்ற திரை அறிவை மூடி விடுகிறது. அஞ்ஞானத்தினால் மோஹமடைந்த உள்ளம் கொண்டவன் தூக்கம், சோம்பல் போன்ற ஸுகத் தோற்றங்களில் வீழ்ந்து, எதையும் ஆராய்வதில்லை.

இந்தக் காமம் மனிதனுடைய உள்ளத்தில் பலவித போகங்களில் பேராசையை வளர்த்து, அவன் மனதைத் தடுமாற வைக்கிறது. பலவிதமான பாவச் செயல்களையும் செய்யத் தூண்டி, மனதில் அழுக்கைச் சேர்க்கிறது. தூக்கம், சோம்பல், செயலூக்கமின்மை இவையே ஸுகம் என்று மதியை மயக்கி, அவனை விவேகமற்றவனாக ஆக்கிவிடுகிறது. இவ்வாறு காமம் அவனுடைய அறிவை மூன்றுவிதமாக மறைத்திருக்கிறது என்று மூன்று உதாரணங்களால் தெளிவுபடுத்துகிறார்.

**கேள்வி:** இங்கு 'தேந' என்பதால் காமத்தையும், 'இதம்' என்பதால் ஞானத்தையும் எந்த அடிப்படையில் கூறுகிறார்?

**பதில்:** இதற்கு முன் ச்லோகத்தில் காமத்தைப் பகைவன் என்று சொன்னார். அடுத்து வரும் ச்லோகத்தில் காமத்தினால் அறிவு சூழப்படுகிறது என்று தெளிவாகக் கூறுகிறார். ஆகவே இந்த ச்லோகத்தில் 'தேந' என்றால் காமமென்றும், 'இதம்' என்றால் ஞானமென்றும் பொருள் கூறப்பட்டது.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் வரும் 'தேந' காமமென்றும், 'இதம்' ஞானம் என்றும் தெளிவாகக் கூறி, அடுத்த ச்லோகத்தில் காமமானது தீயைப்போல எப்பொழுதும் த்ருப்தி அடையாதது என்று கூறுகிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**आवृतं ज्ञानमेतेन ज्ञानिनो नित्यवैरिणा।**
**कामरूपेण कौन्तेय दुष्पूरेणानलेन च॥ ३९॥**

**ஆவ்ருதம் ஜ்ஞாநமேதேந ஜ்ஞாநிநோ நித்யவைரிணா ।**

**காமரூபேண கௌந்தேய து₃ஷ்பூரேணாநலேந ச ॥ 39 ॥**

ச – மேலும், **கௌந்தேய** – அர்ஜுன! **து₃ஷ்பூரேண** – த்ருப்தி அடையாத, **அநலேந** – நெருப்பைப் போன்றதும், **காமரூபேண** – காமம் என்ற வடிவத்தில் உள்ளதும், **ஜ்ஞாநிந:** – ஞானிகளுக்கு, **நித்ய வைரிணா** – என்றுமே பகைவனுமாகிய, **ஏதேந** – இந்தக் காமத்தினால், **ஜ்ஞாநம்** – (மனிதனுடைய) ஞானம், **ஆவ்ருதம்** – மறைக்கப்பட்டிருக்கிறது.

மேலும் அர்ஜுன! த்ருப்தி அடையாத நெருப்பைப் போன்றதும் காமம் என்ற வடிவத்தில் உள்ளதும் ஞானிகளுக்கு என்றுமே பகைவனுமாகிய இந்தக் காமத்தினால் மனிதனுடைய ஞானம் மறைக்கப்பட்டிருக்கிறது.

**கேள்வி:** ஒருபொழுதும் த்ருப்தி அடையாத நெருப்பு (துஷ்பூரேண அநலேந) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஸம்ஸ்க்ருதத்தில், 'அலம்' என்றால் போதும் என்று பொருள். போதும் என்று தணியாதது அநலம் – நெருப்பு. நெருப்பில் எத்தனை நெய்யும், விறகும் போட்டாலும், அது ஒருபொழுதும் த்ருப்தி அடைவதில்லை. ஆகவே அதற்கு அநலம் என்று பெயர். நெருப்பு நிரப்ப முடியாதது. மேலே சொன்ன இரு அடைமொழிகளைக் காமத்திற்குச் சொல்லி அது போதுமென்று தணியாது; அதை நிரப்பவும் முடியாது என்று விளக்குகிறார். போகங்களை அனுபவிக்க அனுபவிக்க மனிதனுடைய பேராசை, நெருப்புப் போல வளர்ந்து கொண்டே இருக்குமே தவிரத் தணியாது; த்ருப்தி அடையாது. 'யயாதி' என்ற அரசன் நிறைய போகங்களை அனுபவித்த பிறகும் த்ருப்தி அடையாமல் கடைசியில் சொல்கிறான்—

**ந ஜாது காம: காமாநாமுபபோ₄கே₃ந ஶாம்யதி ।**
**ஹவிஷா க்ருஷ்ணவர்த்மேவ பூ₄ய ஏவாபி₄வர்த₄தே ॥**

**(ஸ்ரீமத்₃பா₄க₃வதம் 9/19/14)**

போகங்களை அனுபவித்துக் காமம் எப்பொழுதும் தணிவதில்லை. மாறாக நெய் ஆஹுதி செய்யப்படும் அக்னியைப்போல மேலும் அதிகமாக வளர்ந்து கொண்டே போகிறது.

**கேள்வி:** இங்கு 'ஞானிகள்' என்று யாரைக் குறிப்பிடுகிறார்? காமம் அவர்களுக்கு நித்ய சத்ரு என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கு 'ஞானி' என்றால் உண்மை அறிவு பெறுவதற்காக ஸாதனை புரியும் விவேகமுள்ள ஸாதகர் என்று பொருள். இந்தக் காமம் என்ற பகைவன் அந்த ஸாதகர்களுடைய உள்ளத்தில் விவேகம், வைராக்யம், பற்றற்ற தன்மை இவற்றை நிலைக்க விடுவதில்லை; ஸாதனைகளில் இடையூறு செய்யக்கூடியவன், ஞானிகளுக்கு என்றுமே பகைவன். உண்மையில் இந்தக் காமம் எல்லோரையுமே கீழே தள்ளிவிடும். ஆகவே எல்லோருக்குமே சத்ருதான். ஆனால் விவேகமற்றவன் விஷய போகங்களை அனுபவிக்கும்போது அவற்றில் ஸுகம் என்ற நினைப்பு இருப்பதன் காரணமாக, இந்தக் காமத்தை நண்பன் என்று தவறாகக் கருதுகிறான். ஆனால் இதன் உண்மையறிந்த விவேகிகள் இதை நேரிடையாகவே தீங்கு விளைவிப்பது என்று அறிவார்கள். ஆகவே அவிவேகிகளுக்கு எப்பொழுதுமே சத்ரு என்று சொல்லாமல் ஞானிகளுக்கு என்று சொன்னார்.

**கேள்வி:** இங்கு 'காமரூபேண' என்ற சொல் எந்தக் காமத்தைக் குறிக்கிறது?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பதில்: எந்தக் காமம் கெட்ட குணங்களின் தொகுதியில் உள்ளதோ, எதை விடவேண்டுமென்று ஆங்காங்கே கீதையில் (2/71, 6/24) சொல்கிறாரோ, 16வது அத்யாயத்தில் எதை நரக வாயில் (16/21) என்று சொல்கிறாரோ, உலகியல் போகங்களில் உள்ள அந்தப் பேராசையைத்தான் காமம் என்கிறார். 'பகவானை அடையவேண்டும்; நாம ஜபம் செய்யவேண்டும்; த்யானம் செய்ய வேண்டும்; ஸாத்விகமான கர்மங்களை அனுஷ்டிக்க வேண்டும்' என்பன போன்ற மங்களமான நல்ல விருப்பங்கள், காமமல்ல. அவை மனிதனுடைய மேன்மைக்குக் காரணமாகின்றன; விஷய போகங்களில் உள்ள ஆசையை அழிக்கின்றன. அவை ஸாதகனுக்குப் பகையாக ஆகுமா? ஆகாது. உலகியல் இஷ்ட போகங்கள் வந்து குவியவும், விருப்பமில்லாதவை அகலவும் கொள்ளும் விருப்பத்தையே கீதை காமம் என்கிறது. 34வது ச்லோகத்திலும், மற்ற இடங்களிலும் 'ராகம்', 'ஸங்கம்' என்ற சொற்கள் காமத்தை உண்டாக்கும் போக ருசியைக் குறிப்பிடுகின்றன; பகவானிடம் கொள்ளும் பேரன்பைக் குறிப்பிடவில்லை என்று அறிய வேண்டும்.

கேள்வி: இங்கு 'ஞானம்' என்ற சொல் எதைக் குறிப்பிடுகிறது? அது காமத்தினால் மறைக்கப்பட்டிருக்கிறது என்பதன் கருத்து என்ன?

பதில்: இங்கு 'ஞானம்' என்றால், பரமாத்மாவைப் பற்றிய உண்மையான அறிவு. அது காமத்தினால் மூடப்பட்டிருக்கிறது என்று சொல்வதன் மூலம் சுட்டிக்காட்டப்படும் கருத்து யாதெனில், தசை மூட்டத்தினால் கர்பம் மூடப்பட்டிருந்தாலும் குழந்தை அந்தத் தசை மூட்டத்தைக் கிழித்துக் கொண்டு வெளிவருவது போன்றும், நெருப்பு குபீரென்று ஒளி வீசித் தன்னைச் சூழ்ந்துள்ள புகையை அழிப்பது போன்றும், ஸாதுக்களின் ஸங்கத்தினாலும், சாஸ்த்ரங்களின் உபதேசத்தினாலும் பரமாத்மாவைப் பற்றிய ஞானத்தில் விழிப்பு ஏற்படுங்கால், காமத்தால் சூழப்பட்டிருந்தாலும், பரமாத்மாவைப் பற்றிய உண்மையான அறிவானது காமத்தை அழித்துக் கொண்டு தானாகவே ஒளி வீசி நிற்கிறது. ஆகவே காமம் அதைக் கவிந்திருந்தாலும், உண்மையில் ஞானத்தைக் காட்டிலும் காமம் எல்லாவிதத்திலும் வலிவற்றதுதான்.

**பொருத்தம்: இவ்விதம் காமத்தின் மூலம் ஞானத்திற்கு மறைப்பு ஏற்படுவதை விளக்கி, அந்தக் காமத்தை அழிக்க உபாயம் கூறும் நோக்கத்துடன் அது இருக்கும் இடம், அது எப்படி ஜீவனை மோஹிக்க வைக்கிறது என்பதை விளக்குகிறார்—**

**इन्द्रियाणि मनो बुद्धिरस्याधिष्ठानमुच्यते।**
**एतैर्विमोहयत्येष ज्ञानमावृत्य देहिनम्॥४०॥**

**இந்த்₃ரியாணி மனோ பு₃த்₃தி₄ரஸ்யாதி₄ஷ்டா₂நமுச்யதே ।**
**ஏதைர்விமோஹயத்யேஷ ஜ்ஞாநமாவ்ருத்ய தே₃ஹிநம் ॥ 40 ॥**

**இந்த்₃ரியாணி** – புலன்கள், **மந:** – மனம், **பு₃த்₃தி₄:** – புத்தி (இவையெல்லாம்), **அஸ்ய** – இந்தக் காமத்தின், **அதி₄ஷ்டா₂நம்** – இருப்பிடம் (என்று), **உச்யதே** – சொல்லப்படுகிறது. **ஏஷ:** – இந்தக் காமம்தான், **ஏதை:** – இவற்றால் (இந்த மனம், புத்தி, புலன்களைக் கொண்டு), **ஜ்ஞாநம்** – ஞானத்தை, **ஆவ்ருத்ய** – மறைத்து, **தே₃ஹிநம்** – ஜீவாத்மாவை, **விமோஹயதி** – மோஹத்திற்கு உட்படுத்துகிறது.

புலன்கள், மனம், புத்தி இவையெல்லாம் இந்தக் காமத்தின் இருப்பிடம் என்று சொல்லப்படுகிறது. இந்தக் காமம்தான் மனம், புத்தி, புலன்களைக் கொண்டு ஞானத்தை மறைத்து ஜீவாத்மாவை மோஹத்திற்கு உட்படுத்துகிறது.

கேள்வி: 'புலன்கள், மனம், புத்தி இவையெல்லாம் காமத்தின் இருப்பிடங்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** மனம், புத்தி, புலன்கள் மனிதனுடைய அதிகாரத்திற்கு உட்படாமையால் அவற்றின் மீது காமம் ஆட்சி செலுத்துகிறது. ஆகவே மேன்மையை விரும்பும் மனிதன் மனம், புத்தி, புலன்களிலிருந்து விரைவாக இந்தச் சத்ருவான காமத்தை வெளியே விரட்டி அழித்துவிட வேண்டும். அல்லது அங்கேயே தடுத்துத் தலையெடுக்காமல் மாய்க்க வேண்டும், இல்லையென்றால் இது வீட்டிற்குள் புகுந்துவிட்ட பகைவனைப் போல, மனித வாழ்க்கையென்ற விலைமதிப்பற்ற செல்வத்தை அழித்துவிடும்.

**கேள்வி:** 'மனம், புத்தி, புலன்களின் மூலம் காமம் ஞானத்தை மறைத்து ஜீவனை மயக்கத்தில் ஆழ்த்துகிறது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இந்தக் காமம் மனிதனுடைய மனம், புத்தி, புலன்களில் புகுந்து அவனது விவேக சக்தியை மழுங்கச் செய்து, போகங்களில் ஸுகம் உள்ளது என்று ஆசை காட்டி, பாவச் செயல்களில் ஈடுபடுத்துகிறது. அதனால் மனிதனுக்கு வீழ்ச்சி ஏற்படுகிறது. ஆகவே விரைவில் விழிப்புணர்வு கொள்ள வேண்டும்.

ஓர் உதாரணம் மூலம் இந்த விஷயத்தை ஒரு கதை போலக் கற்பித்துச் சொல்வோம். சேதனஸிம்மன் என்ற ஓர் அரசன் இருந்தான். அவனுடைய முதலமைச்சனின் பெயர் ஞானஸாகரன். முதலமைச்சனின் ஆணைக்கு உட்பட்ட ஒரு துணை அமைச்சன் இருந்தான். அவன் பெயர் சஞ்சலஸிம்மன். சேதனஸிம்மன் தன் அமைச்சர்களுடன் மத்யபுரி என்னும் தலைநகரத்தில் இருந்து கொண்டு ஆண்டு வந்தான். ராஜ்யத்திற்குப் பத்து மாவட்டங்கள். ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு மாவட்ட அதிகாரியுண்டு. அரசன் மிகவும் விவேகம் உள்ளவன்; செயல் திறனுடையவன்; நல்ல நடத்தை உடையவன். அவனுடைய அரசாட்சியில் மக்கள் ஸுகமாக வாழ்ந்தார்கள். நாடு நாள்தோறும் முன்னேற்றமடைந்து வந்தது. ஒரு சமயம் அந்நாட்டிற்கு ஜகன்மோஹன் என்னும் மாபெரும் வஞ்சகன் வந்தான். அவன் சூழ்ச்சி மிக்கவன். ஜகஜாலப்புரட்டன். உள்ளத்தில் விஷம் நிறைந்திருந்தாலும், அவனுடைய பேச்சு மிக இனிமையாக இருக்கும். அவன் யாரையும் பேச்சினால் மயக்கி விடுவான். அவன் ஒரு வணிகன் போன்று வேடம் பூண்டு ஒவ்வொரு மாவட்ட அதிகாரியையும் சந்தித்து, அவரவர்களிடம் அவரவர் ஆட்சிக்குட்பட்ட இடத்தில் தன் வியாபாரத்தை நடத்த அனுமதி கேட்டான். மாவட்ட அதிகாரிகளுக்கு நிறைய ஆசை காட்டினான். அவ்வாசைகளைப் பூர்த்தி செய்தான். அவர்கள் அவனுடைய ஆசை வலையில் வீழ்ந்தார்கள். ஆனால் அவர்களும் தங்கள் மேலதிகாரிகளின் அனுமதியின்றி ஒன்றும் செய்ய முடியவில்லை. அந்த மாயாஜால வணிகன் ஜகன்மோஹன் விரும்பியபடி, அவர்கள் எல்லோரும் சேர்ந்து, அவனைத் தமக்கு மேலதிகாரியான துணை அமைச்சன் சஞ்சலஸிம்மனிடம் அழைத்துச் சென்றார்கள். வஞ்சக வியாபாரியான ஜகன்மோஹன், சஞ்சலஸிம்மனையும் பேராசை காட்டி மயக்கினான். சஞ்சலஸிம்மனும் ஜகன்மோஹனுடைய இனிய வார்த்தைகளில் சிக்கிவிட்டான். சஞ்சலஸிம்மன் தனக்கு மேலதிகாரியான ஞானஸாகரனிடம் ஜகன்மோஹனை அழைத்துச் சென்றான். ஞானஸாகரன் அறிவாளிதான். ஆனால் அவன் உள்ளத்தில் உறுதியில்லை. நன்றாக ஆராய்ந்து சரியான முடிவு எடுக்க அவனால் இயலவில்லை. ஆகவே அவன் சஞ்சலஸிம்மன் மற்றும் அவனுக்குக் கீழ்ப்பட்ட பத்து மாவட்ட அதிகாரிகளின் யோசனைகளுக்கு இணங்கினான். அவர்கள் ஜகன்மோஹனிடமிருந்து கையூட்டுப் பெற ஆரம்பித்தனர். அந்த சஞ்சலஸிம்மனுடைய மற்றும் அவனுக்குட்பட்ட மாவட்ட அதிகாரி களுடைய சொற்களில் நம்பிக்கை வைத்து ஞானஸாகரனும் இப்போது ஜகஜாலப்புரட்டன் ஜகன்மோஹனுடைய வலையில் வீழ்ந்தான். அவனுக்கு 'உரிமம்' கொடுக்க இசைந்தான். ஆனால் மன்னன் சேதனஸிம்மனின் ஒப்புதல் இன்றி, நாடு முழுவதற்கும் அனுமதி தர முடியாது. ஆகவே ஜகன்மோஹனுடைய தூண்டுதலால் அவனை அரசனிடம் அழைத்துச் சென்றான் ஞானஸாகரன். ஜகன்மோஹன் மிகவும் தந்திரசாலி. அவன் அரசனுக்கே பல பேராசைகளைக் காட்டினான். அரசனையும் பேராசை பிடித்துக் கொண்டது. அரசன் ஜகன்மோஹனுக்குத் தன் நாட்டில் எல்லா இடங்களிலும் தடையில்லாமல் வியாபாரம் செய்யவும், கிடங்குகள் அமைக்கவும் அனுமதி அளித்தான். ஜகன்மோஹன் மாவட்ட அதிகாரிகளுக்கும், இரண்டு அமைச்சர்களுக்கும் பணம் கொடுத்துவிட்டு நாடு முழுவதிலும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தன் வலையை விரித்தான். அவனுடைய செல்வாக்கு நாடு முழுவதும் பரவியது. அவன் ஒரு தடையுமின்றி மக்களைக் கொள்ளையடிக்க ஆரம்பித்தான். மாவட்ட அதிகாரிகளோடு, இரு அமைச்சர்களும் பேராசை பிடித்தலைந்தார்கள். ஜகன்மோஹன் அரசனுக்குக்கூடக் கொள்ளையில் பங்கு கொடுத்துத் தன்வசப்படுத்திக் கொண்டு விட்டான். அவனுடைய சூழ்ச்சி, வஞ்சனை, இனிய பேச்சு இவை அரசனையும், போகத்தில் ருசியுள்ள எல்லா அதிகாரிகளையும் தீய வழிகளில் இழுத்துச் சென்று, அவர்களை சக்தியற்றவர்களாக ஆக்கி, செயலிழக்கச் செய்து, தீய செயல்களில் அவர்களுக்குத் தணியாத ஆர்வமுண்டாக்கிவிட்டன. வெகுவிரைவிலேயே நாட்டின் செல்வத்தையெல்லாம் சூறையாடித் தன் செல்வாக்கைப் பெருக்கிக் கொண்டு நாடு முழுவதிலும் தன் அதிகாரத்தைச் செலுத்தத் தொடங்கினான் ஜகன்மோஹன். இவ்விதம் அரசனின் செல்வமனைத்தையும் பிடுங்கிக் கொண்டு, முடிவில் அரசனையும் கைது செய்து சிறையில் அடைத்துவிட்டான். இதுதான் கதை. இதன் விளக்கத்தைக் கீழ்க்கண்டவாறு அறிய வேண்டும்.

மன்னன் சேதனஸிம்மன் — 'ஜீவாத்மா'; முதலமைச்சன் ஞானஸாகரன் — 'புத்தி'; துணை அமைச்சன் சஞ்சலஸிம்மன் — 'மனம்'; தலைநகரம் மத்யபுரி — 'இதயம்'; பத்து மாவட்ட அதிகாரிகள் — 'பத்துப் புலன்கள்'; பத்து மாவட்டங்கள் — 'புலன்கள் செயல்படும் பத்து இடங்கள்'; வஞ்சகன் ஜகன்மோஹன் — 'காமம்'; அவன் காட்டிய பேராசை — 'போகங்கள்'; விஷய போகங்களில் சிக்கவைத்து, ஜீவாத்மாவை உண்மையான ஸுகத்தை நோக்கிச் செல்லும் பாதையிலிருந்து விலக்குவதுதான் அதைக் கொள்ளையடிப்பது ஆகும். அவனுடைய அறிவைத் திரை போட்டு மூடி, அவனை மயக்கத்தில் ஆழ்த்தி, மனிதப் பிறவியின் பரம லாபத்திலிருந்து — பரமாத்மாவை அடைவதிலிருந்து வஞ்சித்து விடுவதுதான் அரசனைக் கைதியாக்கிச் சிறையில் தள்ளுவது.

அதாவது மனித மேன்மைக்கு விரோதியான, ஜயிக்க முடியாத சத்ருவான காமம் புலன்கள், மனது, புத்தி இவற்றைச் சிற்றின்ப போகங்கள் என்ற பொய்யான ஸுகங்களில் ஆசை காட்டி, அவற்றின்மேல் தன் அதிகாரத்தைச் செலுத்தி, மனது, புத்தி, புலன்கள் இவற்றின் மூலம் சிற்றின்ப ஸுகத்தின் ஆசையினால் ஜீவாத்மாவினுடைய ஞானத்தை மறைத்து, மோஹம் சூழ்ந்த ஸம்ஸாரம் என்ற சிறையில் அடைத்து விடுகிறது. பரமாத்மாவை அடைவது என்ற செல்வத்தை, அவனிடமிருந்து வஞ்சித்து, விலைமதிப்புடைய மனித வாழ்க்கையைப் பாழாக்கிவிடுகிறது.

**பொருத்தம்: இவ்விதம் காமம் என்ற சத்ருவின் அட்டூழியத்தையும், அது எந்தெந்த இடங்களில் ஒளிந்திருந்து இப்படி அட்டூழியம் செய்கிறது என்பதையும் எடுத்துக்காட்டி, இப்பொழுது பகவான் அந்தக் காமம் என்ற சத்ருவை அழிப்பதற்கு யுக்தி சொல்லி, 'அதைக் கொன்று விடு' என்று அர்ஜுனனுக்கு ஆணையிடுகிறார்—**

**तस्मात्त्वमिन्द्रियाण्यादौ नियम्य भरतर्षभ।**
**पाप्मानं प्रजहि ह्येनं ज्ञानविज्ञाननाशनम्॥४१॥**

**தஸ்மாத்த்வமிந்த்₃ரியாண்யாதௌ₃ நியம்ய ப₄ரதர்ஷப₄ ।**

**பாப்மாநம் ப்ரஜஹி ஹ்யேநம் ஜ்ஞாநவிஜ்ஞாநநாஶநம் ॥ 41 ॥**

**தஸ்மாத்** — ஆகவே, **ப₄ரதர்ஷப₄** — அர்ஜுன! **த்வம்** — நீ, **ஆதௌ₃** — முதலில், **இந்த்₃ரியாணி** — புலன்களை, **நியம்ய** — வசப்படுத்தி, **ஜ்ஞாந விஜ்ஞாந நாஶநம்** — ஞானத்தையும், விஞ்ஞானத்தையும் அழிக்கின்ற, **ஏநம் பாப்மாநம்** — இந்தப் பெரும் பாவியான காமத்தை, **ஹி** — நிச்சயமாக, **ப்ரஜஹி** — வீறுடன் ஒழித்துவிடு.

ஆகவே அர்ஜுன! நீ முதலில் புலன்களை வசப்படுத்தி ஞானத்தையும், விஞ்ஞானத்தையும் அழிக்கின்ற இந்தப் பெரும் பாவியான காமத்தை நிச்சயமாக வீறுடன் ஒழித்துவிடு.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'தஸ்மாத்', 'ஆதௌ' என்ற இரண்டு சொற்களைக் கூறி, 'ஆகவே முதலில் புலன்களை வசப்படுத்து' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** காமம்தான் எல்லாக் கேடுகளுக்கும் அடிப்படை. அது முதலில் புலன்களில் நுழைந்து, அவற்றின் மூலம் மனம், புத்தியை மயக்கி, ஜீவாத்மாவையும் மயக்குகிறது. அது தங்குமிடம் மனம், புத்தி, புலன்கள் ஆகியவை. ஆகவே, முதலில் புலன்களை உன் அதிகாரத்தின் கீழ்க்கொணர்ந்து, இந்தக் காமம் என்ற எதிரியைக் கட்டாயம் அழிக்க வேண்டும். அது தங்குமிடங்களை இழுத்து மூடுவதாலேயே இந்தக் காமம் என்ற சத்ருவை அழிப்பது எளிதாகும். 'ஆகவே முதலில் புலன்களை வசப்படுத்து. பிறகு மனதைத் தடுத்து நிறுத்து' என்கிறார்.

**கேள்வி:** புலன்களை எந்த உபாயத்தினால் வசப்படுத்தலாம்?

**பதில்:** பயிற்சியினாலும், வைராக்யத்தினாலும் புலன்களை வசப்படுத்த முடியும். இந்த இரண்டு உபாயங்கள்தாம் மனதை வசப்படுத்த உபயோகப்படும் *(6/35)*. போகப் பொருட்களுடன் புலன்கள் சேர்வதால் உண்டாவது ராஜஸ ஸுகம் *(18/38)*. தூக்கம், சோம்பல், மயக்கம் இவற்றில் ஏற்படுவது தாமஸ ஸுகம் *(18/39)*. இவை இரண்டுமே உண்மையில் ஸுகமல்ல. கணநேரத்தவை; அழியக்கூடியவை; துன்பம் தருபவை என்றறிந்து இவ்வுலகம் மற்றும் பரலோகங்களில் கிடைக்கும் ஸகல போகங்களையும் துறப்பதுதான் வைராக்யம். பரமாத்மாவின் நாமம், ரூபம், குணம், சரித்ரம் முதலியவற்றைக் கேட்பது, பாடுவது, சிந்திப்பது முதலியனவற்றிலும், தன்னலம் கருதாது உலக நன்மைக்கான கார்யங்களிலும் புலன்களை ஈடுபடுத்துவது; உறுதியோடு புலன்களின் ஈடுபாடுகளை சாஸ்த்ர முறைக்குக் கட்டுப்படுத்துவது; அவற்றைத் தம் போக்குப்படி போகவிடாமல் தடுப்பது இவையெல்லாம் பயிற்சிகள். இந்த வைராக்யம், பயிற்சி இரண்டினாலும் புலன்களையும், மனதையும் வசப்படுத்த முடியும்.

**கேள்வி:** 'ஞானம்', 'விஞ்ஞானம்' என்ற சொற்களுக்கு இங்கே என்ன பொருள்? காமம் இவற்றை அழித்துவிடும் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவானுடைய நிர்குண, நிராகாரமான தத்வத்தின் பெருமை, மஹிமை, ரஹஸ்யம் இவற்றை உள்ளபடி அறிவது 'ஞானம்'. குணங்களோடு கூடியதும், உருவமற்றதுமான பகவத் ஸ்வரூபம் அல்லது தெய்வத் திருமேனி பெற்ற பகவத் தத்வத்தின் லீலை, ரஹஸ்யம், கல்யாண குணங்கள், மஹிமை, பெருமை இவற்றைப் பற்றிய உண்மையான அறிவு 'விஞ்ஞானம்' எனப்படும். இந்த ஞானத்தையும், விஞ்ஞானத்தையும் உள்ளபடி பெறுவதற்காக, உள்ளத்தில் ஏற்படுகின்ற தீவிர ஆவலை, இந்தப் பெரிய எதிரியான காமம், தன்னுடைய மயக்கும் சக்தியினால், எப்பொழுதும் அழுத்தி வைத்து விடுகிறது. அதாவது ஆவலின் விழிப்பிலிருந்து தோன்றும் ஞான, விஞ்ஞான ஸாதனைகளில் தடைகளை ஏற்படுத்துகிறது; இதனால், அவை வெளிப்படாமல் போகின்றன. அதனாலேயே காமம், அவற்றை அழிக்கும் சக்தி என்று கூறப்பட்டிருக்கிறது. நாசம் என்ற சொல்லுக்கு இரண்டு பொருட்கள் உள்ளன. ஒன்று வெளிப்படாமல் செய்வது; மற்றொன்று இல்லாமல் செய்வது. இங்கு நாசம் என்ற சொல் வெளிப்படாமல் செய்வது என்ற பொருளில் வருகிறது. ஏனெனில் முன் ச்லோகத்தில் ஞானம், காமத்தால் மறைக்கப்படுகிறது என்றுதான் கூறினார். ஞானத்தையும், விஞ்ஞானத்தையும் வேரோடு அழிப்பதற்குக் காமத்திடம் சக்தி இல்லை. ஏனெனில் காமமே அஞ்ஞானத்திலிருந்துதான் உண்டாகிறது. ஆகவே ஞானமோ, விஞ்ஞானமோ ஒரு தடவை வெளிப்பட்டுவிட்டால் அஞ்ஞானம் வேரோடு அழிந்து விடுகிறது. பிறகு ஞானம், விஞ்ஞானம் இவை அழிவது என்ற பேச்சுக்கே இடமில்லை.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் புலன்களை வசப்படுத்தி, காமம் என்ற சத்ருவை அழிக்கவேண்டும் என்றார். காமம்தான் மனம், புத்தி, புலன்கள் இவற்றின்மேல் அதிகாரம் செலுத்துகிறதே; அவற்றின் மூலம் ஜீவாத்மாவையே மயக்கி வைத்திருக்கிறதே; இந்த நிலையில் புலன்களை வசப்படுத்திக் காமத்தை அழிப்பது எப்படி என்ற ஸந்தேஹம்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஏற்படலாம். அதற்காக ஆத்மாவின் உண்மை ஸ்வரூபத்தைச் சுட்டிக்காட்டி, ஆத்மாவின் பலத்தை நினைவுபடுத்துகிறார்—

**इन्द्रियाणि पराण्याहुरिन्द्रियेभ्यः परं मनः।**
**मनसस्तु परा बुद्धिर्यो बुद्धेः परतस्तु सः॥४२॥**

**இந்த்₃ரியாணி பராண்யாஹுரிந்த்₃ரியேப்₄ய: பரம் மந: ।**
**மநஸஸ்து பரா பு₃த்₃தி₄ர்யோ பு₃த்₃தே₄: பரதஸ்து ஸ: ॥ 42 ॥**

**இந்த்₃ரியாணி** – புலன்கள், **பராணி** – (உடலைக் காட்டிலும்) மேலானவை என்று, **ஆஹு:** – கூறுகிறார்கள். (அவை உயர்ந்தவை, பலமுள்ளவை, நுண்ணியவை). **இந்த்₃ரியேப்₄ய:** – இந்தப் புலன்களைக் காட்டிலும், **மந:** – மனம், **பரம்** – மேலானது. **மநஸ: து** – மனதைக் காட்டிலும், **பு₃த்₃தி₄:** – புத்தி, **பரா** – மேலானது. **து** – மேலும், **ய:** – எது, **பு₃த்₃தே₄:** – புத்தியைக் காட்டிலும், **பரத:** – மிகவும் மேலானதோ, **ஸ:** – அதுவே (ஆத்மா).

புலன்கள் உடலைக் காட்டிலும் மேலானவை என்று கூறுகிறார்கள். அவை உயர்ந்தவை; பலமுள்ளவை; நுண்ணியவை. இந்தப் புலன்களைக் காட்டிலும் மனம் மேலானது. மனதைக் காட்டிலும் புத்தி மேலானது. மேலும் எது புத்தியைக் காட்டிலும் மிகவும் மேலானதோ அதுவே ஆத்மா.

**கேள்வி:** புலன்கள் ஸ்தூல உடலைக் காட்டிலும் சிறந்தவை என்று சொல்கிறார்கள். இக்கூற்றுக்கு என்ன ஆதாரம்?

**பதில்:** கடோபநிஷத் உடலைத் தேர் என்றும், புலன்களைக் குதிரைகள் என்றும் *(1/3/3,4)* கூறுகிறது. தேரைக் காட்டிலும் குதிரைகள் மேலானவை; சேதனம் உள்ளவை; தேரைத் தம் இஷ்டப்படி இழுத்துச் செல்லக் கூடியவை. அதுபோல, புலன்கள் ஸ்தூலமான உடலை நடத்திச் செல்கின்றன. ஆகவே உடலைக் காட்டிலும் சிறந்தவை புலன்கள். ஸ்தூல சரீரம் கண்களுக்குப் புலப்படுகிறது. புலன்கள் பார்வைக்குப் புலப்படவில்லை; அவை நுண்ணியவையும் கூட. மேலும் பரு உடலைவிடப் புலன்கள் சிறந்தவை; நுண்ணியவை; பலம் மிகுந்தவை என்பது கண்கூடு.

**கேள்வி:** கடோபநிஷத்தில் புலன்களைக் காட்டிலும், அர்த்தங்கள் (சுவை முதலான ஐந்து தன்மாத்ரைகள்) மேலானவை; தன்மாத்ரைகளைக் காட்டிலும் மனம் மேலானது; மனதைக் காட்டிலும் புத்தி மேலானது; புத்தியைவிட மஹத்தத்வம் மேலானது. ஸமஷ்டிபுத்தியாகிய மஹத்தத்வத்தைக் காட்டிலும் அவ்யக்தம் மேலானது. அவ்யக்தத்தைவிடப் புருஷன் மேலானவன். அவனைவிட மேலானது, நுண்ணியது வேறொன்றுமில்லை. இதுவே முடிவான எல்லை. இது முடிவாக அடைய வேண்டியது *(1/3/10,11)* என்று கூறப்பட்டுள்ளது. ஆனால், இங்கு பகவான் தன்மாத்ரை, மஹத்தத்வம், அவ்யக்தம் இவற்றை விட்டுவிட்டாரே! என்ன கருத்து?

**பதில்:** பகவான் இந்த இடத்தில் ஸாரமான தத்வத்தைப் பற்றிப் பேசுகிறார். ஆகவே அந்த மூன்றையும் குறிப்பிடவில்லை. காமத்தை அழிப்பதற்கு அர்த்தம் (தன்மாத்ரை) மஹத்தத்வம், அவ்யக்தம் இவற்றின் மேன்மை பற்றிச் சொல்லத் தேவையுமில்லை. ஆத்மாவின் பெருமையைச் சொன்னால் போதும்.

**கேள்வி:** கடோபநிஷத்தில் புலன்களைக் காட்டிலும் அர்த்தங்கள் மேலானவை என்று என்ன கருத்தில் சொல்லப்படுகிறது?

**பதில்:** அங்கு அர்த்தம் என்ற சொல்லுக்குத் தன்மாத்ரை என்று பொருள். ஐந்து தன்மாத்ரைகளும் புலன்களைவிட நுண்ணியவை. ஆகவே, அவை மேலானவை என்று சொல்வது சரிதான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'புலன்களைக் காட்டிலும் மனம் மேலானது. மனதைக் காட்டிலும் புத்தி மேலானது, நுண்ணியது, பலம் மிகுந்தது' என்று இங்கு பகவான் கூறுகிறார். ஆனால் இரண்டாம் அத்யாயத்தில், 'முயற்சியுள்ள புத்திசாலியான மனிதனுடைய மனதைக்கூட, கலக்கக் கூடிய புலன்கள் வலுவிலே இழுத்துச் சென்றுவிடும்' (2/60) என்றும், 'போகங்களில் ஈடுபட்டிருக்கும் ஒரு புலனோடு மனமும் சேர்ந்துவிட்டால், அந்த ஒரு புலன் கூட மனித புத்தியை இழுத்துச் சென்றுவிடும்' (2/67) என்றும் சொன்னார். இந்த வாக்யங்களிலிருந்து மனதைக் காட்டிலும் புலன்கள் பலமுள்ளவை என்பது நிச்சயமாகிறது. அதுபோல, புத்தியைவிட மனதின் ஒத்துழைப்புப் பெற்ற புலன்கள் பலம் மிகுந்தவை என்பதும் நிச்சயமாகிறது. இப்படி முன்னுக்குப்பின் முரணாகத் தோன்றுகிறதே! இதற்கு என்ன ஸமாதானம்?

**பதில்:** கடோபநிஷத்தில் தேர் உருவகத்தின் மூலம் — 'ஆத்மா தேருக்கு உடையவன்; புத்திதான் தேரோட்டி; உடல்தான் ரதம்; மனம்தான் கடிவாளம்; புலன்கள்தான் குதிரைகள்; ஒலி முதலிய நுகர்பொருள் ஐந்தும் குதிரைகள் போகும் வழி' — என்று விளக்கம் தரப்பட்டது.‡ உண்மையில் தேரின் உரிமையாளனுக்கு அடங்கினவன்தான் தேரோட்டி; தேரோட்டிக்கு அடங்கினது கடிவாளம்; கடிவாளத்திற்கு அடங்கினவை குதிரைகள் என்பதுதான் சரியானாலும், புத்தியாகிய தேரோட்டி விவேகமற்று, மனம் என்ற கடிவாளத்தை முறைப்படி கட்டுக்குள் வைத்திராவிட்டால், ஜீவாத்மாவாகிய அந்த ரதத்திற்குரியவனின் குதிரைகளான புலன்கள் தறிகெட்டு ஓடும். துஷ்டக் குதிரைகள் போல வலுவில் விஷய போகங்கள் என்ற படு குழியில் கொண்டு தள்ளும்.§ புத்தியும், மனமும், புலன்களும் ஜீவாத்மாவுக்கு அடங்காமல் ஜீவாத்மா தன் திறமையை மறந்து அவற்றிற்கு வசப்பட்டிருக்கும் வரை புலன்கள், மனதையும், புத்தியையும் ஏமாற்றி எல்லாவற்றையும் வலுவிலே தவறான மார்க்கத்தில் இழுத்துச் சென்றுவிடும். அதாவது புலன்கள் முதலில் விஷய போகங்களைக் காட்டி மனதைத் தமக்கு அனுகூலமாக்கிக் கொண்டுவிடும். மனமும், புலன்களும் சேர்ந்து புத்தியைத் தமக்கு அனுகூலமாக்கிக் கொண்டுவிடும். இவையெல்லாம் சேர்ந்து ஆத்மாவைத் தமக்கு அதீனமாகச் செய்துவிடும். ஆனால் உண்மையில் புலன்களைக் காட்டிலும் மனம், மனதைவிட புத்தி, எல்லாவற்றையும்விட ஆத்மாதான் பலம் மிக்கது. இதைத்தான் கடோபநிஷத் சொல்கிறது— புத்தியாகிய தேரோட்டி விவேகத்துடன் மனம் என்ற கடிவாளத்தை உறுதியுடன்

---

‡ ஆத்மாநம் ரதி$_2$நம் வித்$_3$தி$_4$ ஶரீரம் ரத$_2$மேவ து ।
பு$_3$த்$_3$தி$_4$ம் து ஸாரதி$_2$ம் வித்$_3$தி$_4$ மந: ப்ரக்$_3$ரஹமேவ ச ॥
இந்த்$_3$ரியாணி ஹயாநாஹுர்விஷயாம்ஸ்தேஷு கோ$_3$சராந் ।
ஆத்மேந்த்$_3$ரியமநோயுக்தம் போ$_4$க்தேத்யாஹுர்மநீஷிண: ॥

(கடோ$_2$பநிஷத்$_3$ 1/3/3,4)

ஆத்மாவே தேருக்கு உடையவன், உடல் ரதம், புத்தி தேரோட்டி, மனம் கடிவாளம் – என்று அறிவாயாக. விவேகிகள் புலன்களைக் குதிரைகள் என்றும் போக விஷயங்களை அவற்றின் மார்க்கம் என்றும் கூறுகிறார்கள். உடல், புலன்கள், மனதோடு கூடிய ஆத்மாவை 'அனுபவிக்கிறவன்' என்று கூறுகிறார்கள்.

§ யஸ்த்வவிஜ்ஞாநவாந் ப$_4$வத்யயுக்தேந மநஸா ஸதா$_3$ ।
தஸ்யேந்த்$_3$ரியாண்யவஶ்யாநி து$_3$ஷ்டாஶ்வா இவ ஸாரதே$_2$: ॥
யஸ்த்வவிஜ்ஞாநவாந் ப$_4$வத்யமநஸ்க: ஸதா$_3$ஶுசி: ।
ந ஸ தத்பத$_3$மாப்நோதி ஸம்ஸாரம் சாதி$_4$க$_3$ச்ச$_2$தி ॥

(கடோ$_2$பநிஷத்$_3$ (1/3/5,7)

புத்தியாகிய தேரோட்டி எப்பொழுதும் விவேகம் இல்லாதவனாகவும், மனக்கட்டுப்பாடு இல்லாதவனாகவும் இருந்துவிட்டால், அவனுடைய புலன்களும், தேரோட்டிக்கு அடங்காத துஷ்டக் குதிரைகளைப் போல அவனுக்கு அடங்கா. புத்தியாகிய தேரோட்டி விஞ்ஞானமற்று மனம் கட்டுப்படாமலும், பரிசுத்தம் இல்லாமலும் இருந்தால் அந்தப் பேற்றைப் பெறமாட்டான். ஸம்ஸாரத்தைத்தான் அடைவான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இழுத்துப் பிடித்தால், அவனுடைய புலன்களாகிற குதிரைகள் நல்ல குதிரைகளைப் போல வசப்பட்டுவிடும். அப்படியே மனம், புத்தி, புலன்களோடு கூடிய அந்தப் பரிசுத்தமான ஆத்மாவான மனிதன் திரும்பி வராத பரமபதத்தை அடைகிறான்.‡ கீதையிலும்கூட மனம், புத்தி, புலன் இவற்றை ஜயித்தவனே ஆத்மாவுக்கு நண்பன் என்றும், மனம், புலன்கள், புத்தி இவற்றை ஜயிக்காதவன் ஆத்மாவுக்குப் பகைவன் (6/6) என்றும் கூறுகிறார். ஆகவே புலன்களை ஜயிக்காவிட்டால் அவை மனம், புத்திகளைக் காட்டிலும் பலமற்றவையாயினும் அதிக வலிமை பெற்றுவிடும். இதே கருத்தைத்தான் இரண்டாம் அத்யாயத்திலும் சொன்னார். இங்கும் அதன் உண்மை நிலை கூறப்படுகிறது. ஆகவே முன்னுக்குப்பின் முரண்பாடு எதுவும் இல்லை.

**கேள்வி:** இங்கு 'பரத:' என்பதற்கு மிகவும் மேலானது என்று ஏன் பொருள் கூற வேண்டும்?

**பதில்:** கடோபநிஷத்தில் இவ்விஷயம் வருகிறது. அங்கு 'புத்தியைவிட மஹத்தத்வம். அதைவிட அவ்யக்தம். அதைவிட புருஷன் மேலானவன். அதுவே எல்லை. அதுவே அடையத்தக்கது' என்று கூறப்படுகிறது.§ அதைக் கொண்டுதான் 'பரத:' என்பதற்கு மிகவும் மேலானது என்று பொருள் கூறப்பட்டது. ஆத்மா எல்லாவற்றிற்கும் ஆதாரம். காரணம், ப்ரகாசப்படுத்துவது, தூண்டுவது, நுண்ணியது, எங்கும் நிறைந்தது, சிறந்தது, பலம் மிக்கது. ஆகவே அது மிகவும் மேலானது என்று சொல்வது சரிதான்.

**கேள்வி:** இப்பொழுது காமம் பற்றிய பேச்சு நடந்து கொண்டிருக்கிறது. முன் ச்லோகத்தில், காமத்தை அழிக்க வேண்டும் என்று பகவான் சொன்னார். ஆகவே இந்த ச்லோகத்தில் 'ஸ:' (அது) என்பது காமம் என்பதைக் குறிப்பதாகக் கொண்டால், என்ன தவறு?

**பதில்:** காமத்தை ஒழிக்க வேண்டிய பேச்சு உள்ள ஸந்தர்பம்தான் இது. ஆனால் அது மேலானது என்று சொல்லவேண்டிய ஸந்தர்பம் இல்லை. அதை அழிக்கக்கூடிய சக்தி ஆத்மாவிடம் உள்ளது. மனிதன் தன்னுடைய ஆத்மபலத்தை உணர்ந்து, புத்தி, மனம், புலன்கள் இவற்றின்மேல் தன் பூர்ண அதிகாரத்தைச் செலுத்துவானேயானால், இயல்பாகவே காமத்தை ஜயிக்க முடியும் என்று கூறுவதற்காகத்தான் இந்த ச்லோகம் வருகிறது. புலன்கள்,

---

‡ யஸ்து விஜ்ஞாநவாந் ப$_4$வதி யுக்தேந மநஸா ஸதா$_3$ ।
தஸ்யேந்த்$_3$ரியாணி வச்யாநி ஸத$_3$ச்வா இவ ஸாரதே$_2$: ॥
யஸ்து விஜ்ஞாநவாந் ப$_4$வதி ஸமநஸ்க: ஸதா$_3$ சுசி: ।
ஸ து தத்பத$_3$மாப்நோதி யஸ்மாத்$_3$பூ$_4$யோ ந ஜாயதே ॥
(கடோ$_2$பநிஷத்$_3$ 1/3/6,8)

ஆனால், எவனுடைய புத்தி என்னும் தேரோட்டி விவேகத்துடனும், மனக்கட்டுபாட்டுடனும் உள்ளானோ, அவனுடைய எல்லாப் புலன்களும், தேரோட்டியின் நல்ல பயிற்சி பெற்ற குதிரைகளைப் போல வசப்பட்டுவிடுகின்றன. எவன் விஞ்ஞானம் உள்ளவனோ, கட்டுப்பட்ட மனமுடையவனோ எப்பொழுதும் பரிசுத்தனாக இருக்கிறானோ அவன் பரமபதத்தை அடைவான். அவனுக்கு மறுபிறவி கிடையாது.

§ இந்த்$_3$ரியேப்$_4$ய: பரா ஹ்யர்தா$_2$ அர்தே$_2$ப்$_4$யச்ச பரம் மந: ।
மநஸஸ்து பரா பு$_3$த்$_3$தி$_4$ர்பு$_3$த்$_3$தே$_4$ராத்மா மஹாந் பர: ॥
மஹத: பரமவ்யக்தமவ்யக்தாத்புருஷ: பர: ।
புருஷாந்ந பரம் கிஞ்சித் ஸா காஷ்டா$_2$ ஸா பரா க$_3$தி: ॥
(கடோ$_2$பநிஷத்$_3$ 1/3/10,11)

புலன்களைவிட (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் முதலிய) தன்மாத்ரைகள் மேலானவை; நுண்ணியவை; பலம் மிகுந்தவை. அவற்றைக் காட்டிலும் மனம் மேலானது. மனதைவிட புத்தி மேலானது. புத்தியை விட ஆத்மா (மஹத்தத்வமாகிற ஸமஷ்டி புத்தி) மேலானது. அதைவிட அவ்யக்தம் (மூலப்ரக்ருதி) மேலானது. அதைவிட புருஷன் மேலானவன்; புருஷனுக்கு மேலானது கிடையாது. அதுதான் எல்லை. அதுவே அடையத்தக்கது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மனம், புத்தி இவற்றைக் காட்டிலும் 'காமம்' பலம் மிக்கது என்று சொல்லிவிட்டால், அவற்றைக் கொண்டு காமத்தை அழிக்க வேண்டும் என்று சொல்வது பொருந்தாது. தவிர 'ஸ:' (அது) என்பது காமம் என்று நினைப்பது கடோபநிஷத்தின் கருத்துக்கும் கூட விரோதமானது. ஆகவே 'ஸ:' (அது) என்பது காமமன்று. இரண்டாவது அத்யாயத்தில் 'ருசி' கூட அந்த மேலான பரமாத்மாவைப் பார்த்து விலகிவிடும் (2/59) என்று கூறினாரே, அந்தப் பரதத்வம் அதாவது நித்யமான தூய ஞான வடிவமான பரமாத்மாதான் 'ஸ:' (அது) என்பதற்குப் பொருள்.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் வர்ணித்தபடி ஆத்மா அனைத்திலும் மேலானவன் என்று உணர்ந்து, காமம் என்ற சத்ருவை அழிக்க வேண்டும் என்று ஆணையிடுகிறார்—

**एवं बुद्धेः परं बुद्ध्वा संस्तभ्यात्मानमात्मना।**
**जहि शत्रुं महाबाहो कामरूपं दुरासदम्॥ ४३॥**

**ஏவம் பு₃த்₃தே₄: பரம் பு₃த்₃த்₄வா ஸம்ஸ்தப்₄யாத்மாநமாத்மநா ।**
**ஜஹி ஶத்ரும் மஹாபா₃ஹோ காமரூபம் து₃ராஸத₃ம் ॥ 43 ॥**

**ஏவம்** – இவ்விதம், **பு₃த்₃தே₄: பரம்** – புத்தியைக் காட்டிலும் ஆத்மா மிகவும் மேலானவன், நுண்ணியவன், பலமுள்ளவன் என்று, **பு₃த்₃த்₄வா** – அறிந்து, **ஆத்மநா** – புத்தியினால், **ஆத்மாநம்** – மனதை, **ஸம்ஸ்தப்₄ய** – வசப்படுத்தி, **மஹாபா₃ஹோ** – நீண்ட புஜங்களுடையவனே! **காமரூபம்** – காமம் என்ற, **து₃ராஸத₃ம்** – வெற்றி கொள்ள முடியாத, **ஶத்ரும்** – சத்ருவை, **ஜஹி** – கொன்றுவிடு.

நீண்ட புஜங்களுடையவனே! இவ்விதம் புத்தியைக் காட்டிலும் ஆத்மா மிகவும் மேலானவன்; நுண்ணியவன்; பலம் உள்ளவன் என்று அறிந்து புத்தியினால் மனதை வசப்படுத்தி, காமம் என்ற வெற்றி கொள்ள முடியாத சத்ருவைக் கொன்றுவிடு."

**கேள்வி:** 'புத்தியைவிட ஆத்மா சிறந்தது என்று அறிந்து காமத்தைக் கொன்றுவிடு' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனிதனுடைய அறிவு அநாதிகாலமாக அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டிருக்கிறது. இதன் காரணமாக மனிதன் ஆத்மஸ்வரூபத்தை மறந்திருக்கிறான். தான் எல்லாவற்றிலும் மேலானவனாக இருந்தும், தன் சக்தியை மறந்து, காமம் என்ற சத்ருவிடம் வசப்பட்டுவிட்டான். ஆத்மா மேலானவன் என்பது உலகில் ப்ரஸித்தி பெற்ற விஷயம். சாஸ்த்ரங்களும் அப்படியே கூறுகின்றன. இவற்றைக் கேட்ட பிறகு கூட, உண்மையில் ஆத்மா சிறந்தவன் என்று நினைப்பதில்லை. ஆத்மாவின் உண்மை ஸ்வரூபத்தை அறிந்திருந்தால், ராகம், காமம் என்பவை தாமாகவே அழிந்துவிடும். ஆகவே ஆத்மஸ்வரூபத்தை அறிவதே காமத்தை அழிப்பதற்குச் சிறந்த உபாயம். இதற்காகத்தான் பகவான் புத்தியைவிட ஆத்மா மிகச் சிறந்தவன் என்று அறிந்து காமத்தை அழிப்பாய் என்று கூறுகிறார். ஆத்ம தத்வம் மிகவும் ரஹஸ்யமானது. மாமனிதர்களால் தெளிவாக்கப்பட்ட பின்னரும், யாரோ ஒரு நுண்ணறிவாளனான மனிதனே, இதை அறிந்து கொள்ள முடியும். கடோபநிஷத்திலும், "எல்லா பூதங்களுக்கும் உள்ளே அது மறைந்திருக்கிறது; இந்த ஆத்மா வெளிப்படையாகத் தெரியாது. நுண்ணிய கூர்மையான புத்தியுடையவர்களாலேயே இதை அறிய முடியும்" என்று சொல்லப்பட்டிருக்கிறது.‡

‡ ஏஷ ஸர்வேஷு பூ₄தேஷு கூ₃டோ₄த்மா ந ப்ரகாஶதே ।
த்₃ருஶ்யதே த்வக்₃ர்யயா பு₃த்₃த்₄யா ஸூக்ஷ்மயா ஸூக்ஷ்மத₃ர்ஶிபி₄: ॥
(கடோ₂பநிஷத்₃ 1/3/12)

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** இங்கு 'ஆத்மாநம்' என்றால் 'மனதை' என்றும், 'ஆத்மநா' என்றால் 'புத்தியினால்' என்றும் பொருள் கூறக் காரணம் என்ன?

**பதில்:** உடல், புலன்கள், மனம், புத்தி, ஜீவன் இவையெல்லாவற்றையும் ஆத்மா என்ற சொல் குறிக்கிறது. இவற்றில் முதன்முதலாகப் புலன்களை வசப்படுத்த வேண்டும் என்று 41வது ச்லோகத்தில் சொன்னார். உடல், புலன்களுக்குள் அடக்கம். ஜீவாத்மாதான் வசப்படுத்துபவன். எஞ்சியுள்ளவை மனமும், புத்தியும். புத்தி, மனதைக் காட்டிலும் மேலானது என்று சொல்லியாயிற்று. ஆகவே புத்தியினால் மனதை வசப்படுத்த முடியும். அதனால் 'ஆத்மாநம்' – மனதை, 'ஆத்மநா' – புத்தியினால் வசப்படுத்து என்று பொருள் கூறப்பட்டது.

**கேள்வி:** புத்தியினால் மனதை வசப்படுத்துவது எப்படி?

**பதில்:** பகவான் 6/35ல் மனதை வசப்படுத்துவதற்கு அப்யாஸமும், வைராக்யமும் இரு உபாயங்கள் என்று கூறுகிறார். ஒவ்வொரு புலனுடைய போகப் பொருளிலும் மனிதனுக்கு இயற்கையாகவே விருப்பு–வெறுப்புகள் உள்ளன. போகப் பொருட்களுடன் புலன்கள் சேரும்போது விருப்பு–வெறுப்புகள் ஏற்படும். அப்போது கவனமாக, புத்தியைக் கொண்டு ஆராய்ந்து, விருப்பு–வெறுப்புக்கு ஆளாகாமல் பார்த்துக் கொண்டால், அவை கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்துவிடும். அறிவினால் ஆராய்ந்து புலன்களுக்கு உரிய போக வஸ்துக்களினால் துன்பமும், குற்றங்குறைகளும் வருகின்றன என்று அடிக்கடி எடுத்துக்காட்டி, மனதிலிருந்து அந்த போகப் பொருட்களில் உள்ள ருசியை நீக்கி, வைராக்யத்தை உண்டாக்க வேண்டும். நடைமுறையில் தன்னலத்தை த்யாகம் செய்யவேண்டும். த்யானம் செய்யும்போது பகவானைப் பற்றிய நினைவுகளில் ஊன்றித் திளைக்க முயலவேண்டும். மனதை போகங்களில் ஈடுபடாமல் திருப்பிப் பரமேசுவரனிடம் நிலை கொள்ளும்படி திரும்பத் திரும்ப ஏவுதலே பயிற்சியாகும்.

**கேள்வி:** 'ஆத்மாதான் அனைத்திலும் ஆற்றல் மிக்கவன் என்றால் புத்தியைக் கொண்டு மனதை வசப்படுத்திக் காமத்தை அழித்துவிடு' என்று பகவான் ஏன் கூறவேண்டும்? ஆத்மாவே காமம் என்ற பெரும் பகைவனை அழித்துவிடலாமே!

**பதில்:** ஆத்மா எல்லையற்ற பலமுடையவன்தான். அவன் காமத்தை அழித்துவிட முடியும். உண்மையில், அவனிடமிருந்து பலம் பெற்றுத்தான் எல்லோரும் ஆற்றல் உடையவர்களாகவும், செயல்படுகிறவர்களாகவும் இருக்கிறார்கள். ஆனால் ஆத்மா தன் அளவற்ற பலத்தை மறந்து இருக்கிறானே! மிகவும் சக்தியுடைய ஒரு சக்ரவர்த்தி அஞ்ஞானத்தினால் தன் பலத்தை மறந்து தன்னைக் காட்டிலும் மிகவும் பலஹீனனான, அற்பனான ஓர் ஊழியனிடம் சிக்கிக் கொண்டு, அவனுக்கு 'ஆமாம்' போட்டுக் கொண்டிருப்பது போல, தன் பணியாட்களைப் போன்ற புத்தி, மனம், புலன்கள் இவற்றிடம் அகப்பட்டுக் கொண்டு, ஆத்மா காமத்தினால் தூண்டப்பட்டு, ஒரு கட்டுப்பாடுமின்றி அவற்றை மௌனமாக அனுமதித்து அலையவிடுகிறான். ஆகவே புத்தி, மனம், புலன்கள் இவற்றில் ஒளிந்து கொண்டிருக்கும் காமம் ஜீவாத்மாவை ஏமாற்றி, ஸம்ஸாரத்தில் வீழ்த்துகிறது. ஆத்மா தன் ஸ்வரூபத்தை அறிந்து, தன் சக்தியை உணர்ந்து புத்தி, மனம், புலன்கள் இவற்றை அடக்கி ஆண்டால், அவை போகிற போக்கிற்குப் போக விடாமல் தடுத்துவிட்டால், திருடன் போல உள்ளே ஒளிந்து கொண்டிருக்கிற காமத்தை வெளியே போகும்படி வலுவில் ஆணையிட்டுவிட்டால், அப்புறம் புத்திக்கோ, மனதிற்கோ, புலன்களுக்கோ ஒரு சக்தியும் கிடையாது. அவை ஒன்றும் செய்ய முடியாவிடில், காமத்திற்கும் அங்கு வேலை இல்லை. ஒரு கணம்கூட அது நிலைக்க முடியாது. ஆத்மாவிடமிருந்தே இருப்பு, ஊக்கம், சக்தி முதலியவற்றையும் ஆத்மபலத்தினாலேயே பலமும் பெற்ற மனம், புத்தி முதலியன ஆத்மாவையே அமுத்தித் தம்போக்குப்படி நடத்துகின்றன என்பதை நினைத்துப் பார்த்தால் வியப்பாகத்தான் இருக்கிறது. ஆகவே, ஆத்மா தன் ஸ்வரூபத்தையும், சக்தியையும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உணர வேண்டும். புத்தி, மனம், புலன்கள் இவற்றைத் தன்வசத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். இவற்றில் காமம் தங்குவதால்தான், அவை கட்டுக்கடங்காமல் போகின்றன. இவற்றை வசப்படுத்திவிட்டால் காமம் தானாகவே அழிந்துவிடும். ஆத்மா உண்மையில் செயலில் ஈடுபடாததுதான். ஆனாலும் காமத்தை அழிப்பதற்கு இது ஒன்றே உபாயம். ஆகையால் புத்தியின் மூலம் மனதை வசப்படுத்தி, காமத்தை அழிக்க வேண்டும் என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'காமம்' என்ற சத்ருவை ஜயிக்க முடியாது என்று ஏன் கூறுகிறார்?

**பதில்:** உண்மையில் காமத்திற்குப் பலமே கிடையாது. அது ஆத்மாவினிடமிருந்து பலம் பெற்று வளர்ந்த புத்தி, மனம், புலன்கள் இவற்றிடம் வாழ்வதற்கு இடம் பெற்றுவிட்டபடியால் அவற்றின் பலத்தினால் தானும் பலம் பெற்றுவிடுகிறது. புத்தி, மனம், புலன்கள் இம்மூன்றும் ஆத்மாவுக்குக் கட்டுப்படாதவரை அவற்றின் துணை கொண்டு ஆத்மாவின் பலத்தைக் காமம் பெற்று விடுகிறது. அதனால்தான் காமம் மிகவும் பலமுள்ளதாகிறது. எனவே அதை வெல்ல முடியாது என்று கூறுகிறார். காமத்தை வெல்ல முடியாது என்ற நிலை, ஆத்மா தன் ஸ்வரூபத்தை அறிந்து புத்தி, மனம், புலன்கள் இவற்றை அடக்காதவரைதான் இருக்கும்.

**கேள்வி:** 'நீண்ட புஜமுடையோனே' என்று அர்ஜுனனை அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** நீண்ட புஜமுடையோன் என்றால் பராக்ரமம் மிகுந்தவன் என்று பொருள். பகவான் காமத்தை ஜயிக்க முடியாது என்று கூறும்போதே அர்ஜுனனை, 'மஹாபாஹோ' என்று அழைத்து ஆத்மாவின் அளவற்ற பலத்தை நினைவூட்டுகிறார். "எல்லாவிதமான, முடிவற்ற, நினைத்துப் பார்க்க முடியாத தெய்விக சக்தியெல்லாம் என்னிடம் உள்ளன. அவற்றின் ஒரு திவலை பெற்று தேவதைகளும், லோகபாலகர்களும், அகில உலகத்தையும் நடத்திச் செல்கிறார்கள். அந்த சக்தியின் கோடியில் ஒரு பங்கு பெற்று, ஜீவன் அளவற்ற சக்தியைப் பெருக்கிக் கொள்ளலாம். அப்படிப்பட்ட நான் உனக்குக் காமத்தை வெற்றி கொள்ள சக்தி இருக்கிறது என்று உறுதியாகக் கூறுகிறேன். காமம் எவ்வளவுதான் ஜயிக்க முடியாத, அடக்கமுடியாத சத்ருவாக இருக்கட்டுமே! நீ வெகு எளிதாக அதை அழித்து வெற்றி பெற முடியும்" என்ற கருத்துடன் பகவான் அர்ஜுனனை 'மஹாபாஹோ' என்று அழைக்கிறார்.

ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
कर्मयोगो नाम तृतीयोऽध्याय: ॥ ३ ॥

ஓம் தத்ஸதி₃தி ஸ்ரீமத்₃ப₄க₃வத்₃கீ₃தாஸூபநிஷத்ஸு
ப்₃ரஹ்மவித்₃யாயாம் யோக₃ஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே₃
கர்மயோகோ₃ நாம த்ருதீயோऽத்₄யாய: ॥ 3 ॥

ஓம் தத் ஸத் – ப்ரம்ம வித்யை, யோக ஶாஸ்த்ரம், உபநிஷத்
எனப்படும் ஸ்ரீமத்பகவத்கீதையாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே
நிகழ்ந்த உரையாடலில் 'கர்மயோகம்' எனப் பெயர் படைத்த
மூன்றாவது அத்யாயம் நிறைவுற்றது.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

## அத₂ சதுர்தே₂ாऽத்₄யாய:

# நான்காவது அத்யாயம்

## ஞானகர்மஸந்யாஸயோகம்

**அத்யாயத்தின் பெயர்**

இங்கு 'ஞானம்' என்றால் ப்ரம்மஞானம். 'கர்மம்' என்றால் கர்மயோகம், அதாவது யோக மார்க்கம்; 'ஸந்யாஸம்' என்றால் ஸாங்க்யயோகம், அதாவது ஞான மார்க்கம். விவேக ஞானமும், சாஸ்த்ர ஞானமும் 'ஞானம்' என்ற சொல்லில் அடக்கம். இந்த நான்காவது அத்யாயத்தில், பகவான் தாம் அவதரித்த ரஹஸ்யத்தையும், தத்வத்தோடுகூடக் கர்மயோகத்தையும், ஸந்யாஸ யோகத்தையும் கூறி, இவை எல்லாவற்றுக்கும் பயனான பரமாத்மாவினுடைய உண்மையான ஞானத்தைப் பற்றிப் பேசுகிறார். ஆகவே இந்த அத்யாயத்தின் பெயர் 'ஞானகர்மஸந்யாஸயோகம்' என்பதாகும்.

**அத்யாயச் சுருக்கம்**

இந்த அத்யாயத்தில் பகவான் ச்லோகம் 1, 2ல் கர்மயோகத்தின் பரம்பரை பற்றிக் கூறி, 3ல் அதன் பெருமையைக் கூறுகிறார். 4ல் அர்ஜுனன் பகவானிடம் பிறப்பு பற்றிக் கேட்கிறார். இதற்குப் பதிலாக 5ல் 'எனக்கும், உனக்கும் பல பிறவிகள் ஆகிவிட்டன. அவற்றை நானறிவேன். நீ அறியமாட்டாய்' என்கிறார் பகவான். 6 முதல் 8 வரை தம் அவதாரத்தின் தத்வம், ரஹஸ்யம், காலம், நிமித்தம் இவை பற்றிச் சொல்கிறார். 9, 10ல் பகவானுடைய அவதாரம், சரித்திரம் இவை தெய்விகமானவை என்றும், தம்மைச் சார்ந்து நின்றால் அதன் பயனாகத் தம்மையே அடையலாம் என்றும் கூறுகிறார். 11ல் என்னைப் போற்றுகிறவர்களை நானும் அவ்விதமே அணுகுகிறேன் என்று கூறுகிறார். 12ல் மற்ற தெய்வங்களைப் பூஜிப்பதால் உலகியல் நன்மைகள் விரைவில் கிடைக்கும் என்றும், 13, 14ல் நானே அகில உலகத்தையும் படைத்தேன்; ஆயினும் கர்த்தா அல்லன். என்னுடைய செயல்கள் தெய்விகமானவை என்றறிந்தால் கர்மபந்தம் ஏற்படாது என்றும் கூறி, 15ல் மோக்ஷத்தில் நாட்டம் கொண்ட முன்னோர்களைப் போல, நீயும் நிஷ்காமமாகக் கர்மங்களைச் செய் என்று அர்ஜுனனுக்கு ஆணையிடுகிறார். 16 முதல் 18 வரை கர்மங்களின் ரஹஸ்யம் அறிந்து கொள்வது கடினமானது; ஆனால் அவசியம் அறிய வேண்டியது; கர்மத்தில் அகர்மம், அகர்மத்தில் கர்மம் என்று பார்ப்பவன் பெருமைக்குரியவன் என்றும் கூறி, 19 முதல் 23 வரை கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் பார்க்கும் மாமனிதர்கள் – ஸாதகர்களுடைய வெவ்வேறு இலக்கணம், நடத்தை, பெருமைகள் இவற்றையும் கூறுகிறார். 24 முதல் 30 வரை ப்ரம்மயக்ஞம், தேவயக்ஞம், வேற்றுமையற்ற பார்வை என்ற யக்ஞம் முதலிய யக்ஞங்களைக் கூறி, இப்படிப்பட்ட யக்ஞம் செய்பவர்கள் யக்ஞத்தை அறிகிறவர்கள், பாவமற்று இருப்பார்கள் என்றும், 31ல் யாகத்தில் மிகுந்த அமுதத்தை அனுவிப்பவர்கள் ஸநாதன ப்ரம்மத்தை அடைவார்கள்; யாகம் செய்யாதவர்கள் இஹத்திலும், பரத்திலும் ஸுகம் அடையமாட்டார்கள் என்றும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கூறுகிறார். 32ல் எல்லா யாகங்களும் க்ரியைகளால் ஆக்கப்படுகின்றன என்றுரைத்து, 33ல் த்ரவிய யக்ஞத்தைக் காட்டிலும் ஞானயக்ஞம் சிறந்தது என்றும், 34, 35ல் அர்ஜுனனிடம் ஞானியான மஹாத்மாக்களை நாடிச் சென்று தத்வஞானம் பெறலாம் என்றும் கூறி, அதன் பெருமையைப் புகழ்கிறார். 36ல் ஞானப் படகு ஏறிப் பாவக்கடலைக் கடக்கலாம் என்றும், 37ல் ஞானம் நெருப்பைப்போல அனைத்துக் கர்மங்களையும் எரித்துவிடும் என்றும், 38ல் ஞானத்தின் சிறப்பான புனித தத்வத்தைக் கூறி, பரிசுத்தமான உள்ளமுடைய கர்மயோகி தானாகத் தத்வ ஞானம் பெறுவான் என்றும், 39ல் ச்ரத்தை முதலிய நற்பண்புகளை உடைய மனிதன் ஞானத்தைப் பெறத்தகுதி பெற்றவனாகி அதற்குப் பயனாக மேலான சாந்தியைப் பெறுவான் என்றும் கூறி, 40ல் அறிவற்ற, ச்ரத்தையற்ற, ஸந்தேஹம் கொண்ட மனிதனை இகழ்கிறார். 41ல் 'ஐயமில்லாத கர்மயோகி கர்மபந்தத்திலிருந்து விடுபடுவான்' என்றெல்லாம் சொல்லி, 42ல் 'அர்ஜுன! நீ ஞானம் என்ற வாள் கொண்டு அஞ்ஞானத்தினால் உண்டாகும் ஸந்தேஹத்தை அறவே அறுத்தெறிந்து, கர்மயோகத்தில் நிலைத்து, யுத்தம் புரிவாயாக' என்று ஆணையிட்டு அத்யாயத்தை முடிக்கிறார்.

**முன் அத்யாயத்துடன் இவ்வத்யாயத்திற்குப் பொருத்தம்:** மூன்றாவது அத்யாயம் 4 முதல் 29 வரை பகவான், விதிக்கப்பட்ட கடமைகளைச் செய்யத்தான் வேண்டும் என்பதைப் பலவிதமாக எடுத்துக் கூறி, 30வது ச்லோகத்தில் "பக்தி ப்ரதானமான கர்மயோக விதிப்படி மமகாரம், பற்று, ஆசை இவற்றை அறவே துறந்து, 'பகவானுக்கு அர்ப்பணம்' என்ற நினைவோடு கடமைகளைச் செய்" என்று ஆணையிடுகிறார். பிறகு 31 முதல் 35 வரை அந்த ஸித்தாந்த முறையில் கர்மத்தைச் செய்கிறவர்களைப் புகழ்ந்து, செய்யாதவர்களை நிந்தித்து, விருப்பு-வெறுப்புகளுக்கு உட்படாமல் ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்றார். 36ல் அர்ஜுனன் கேட்டதன்பேரில், 37 முதல் அத்யாயம் முடியும் வரை, காமம்தான் எல்லாக் கேடுகளுக்கும் மூலகாரணம் என்றும், புத்தியின் துணை கொண்டு புலன்களையும், மனதையும் அடக்கிக் காமத்தை அழிக்கவேண்டும் என்றும் அர்ஜுனனுக்கு ஆணையிட்டார். ஆயினும் கர்மயோகம் மிகவும் சிக்கலானது. ஆகவே, பகவான் மறுபடியும் அதைப் பற்றி மேலும் பல விஷயங்களைச் சொல்ல ஆரம்பித்து முதல் மூன்று ச்லோகங்களில் அந்தக் கர்மயோகத்தின் பரம்பரை பற்றிச் சொல்லி, அது அநாதியானது என்றும் புகழ்கிறார்.

श्रीभगवानुवाच

**इमं विवस्वते योगं प्रोक्तवानहमव्ययम्।**
**विवस्वान्मनवे प्राह मनुरिक्ष्वाकवेऽब्रवीत्॥ १॥**

ஸ்ரீப₄க₃வாநுவாச

**இமம் விவஸ்வதே யோக₃ம் ப்ரோக்தவாநஹமவ்யயம் ।**

**விவஸ்வாந்மநவே ப்ராஹ மநுரிக்ஷ்வாகவேঽப்₃ரவீத் ॥ 1 ॥**

**ஸ்ரீப₄க₃வாநுவாச** – ஸ்ரீபகவான் சொன்னார்: **அஹம்** – நான், **இமம்** – இந்த, **அவ்யயம்** – அழிவற்ற, **யோக₃ம்** – யோகத்தை, **விவஸ்வதே** – சூரியனுக்கு, **ப்ரோக்தவாந்** – சொன்னேன். **விவஸ்வாந்** – சூரியன் (தன் புதல்வனான), **மநவே** –

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வைவஸ்வத மனுவுக்கு, **ப்ராஹ** – சொன்னார். **மநு:** – மனு (தன் குமாரனான), **இக்ஷ்வாகவே** – இக்ஷ்வாகு மன்னனுக்கு, **அப்₂ரவீத்** – சொன்னார்.

**ஸ்ரீபகவான் சொன்னார்:** "நான் இந்த அழிவற்ற யோகத்தை சூரியனுக்குச் சொன்னேன். சூரியன் தன் புதல்வனான வைவஸ்வத மனுவுக்குச் சொன்னார். மனு தன் குமாரனான இக்ஷ்வாகு மன்னனுக்குச் சொன்னார்.

**கேள்வி:** *இங்கு 'இமம் யோகம்' என்று எதைக் குறிப்பிடுகிறார்? கர்மயோகத்தையா, ஸாங்க்யயோகத்தையா?*

**பதில்:** 2/39ல் கர்மயோகத்தைப் பற்றிச் சொல்ல ஆரம்பிக்கிறேன் என்று கூறி, பகவான் அந்த அத்யாயத்தின் முடிவு வரை கர்மயோகத்தை நன்றாக எடுத்துச் சொன்னார். பிறகு மூன்றாவது அத்யாயத்தில் அர்ஜுனன் கேட்ட கேள்விகளுக்குப் பதிலாக, கர்மம் செய்வதன் அவசியத்தைப் பல யுக்திகளால் நிரூபித்து, 30வது ச்லோகத்தில் 'பக்தியோடு கூடிய கர்மயோகத்தை அனுஸரித்து, யுத்தம் செய்வாயாக' என்று ஆணையிட்டார். இந்தக் கர்மயோகத்தில் மனதைக் கட்டுப்படுத்துவது மிகவும் அவசியமானது என்று கூறி அத்யாயத்தின் முடிவில், புத்தியைக் கொண்டு மனதை அடக்கி, 'காமம் என்ற சத்ருவைக் கொல்வாய்' என்று கூறினார்.

ஆகவே மூன்றாவது அத்யாயத்தின் முடிவு வரை பிரிவு, உட்பிரிவுகளோடு கூடிய கர்மயோகத்தைப் பற்றித்தான் சொல்கிறார் என்று தெரிகிறது. ஆகவே 'இமம்' என்று இங்கே ஆரம்பிப்பது கர்மயோகத்தைத்தான் என்று கொள்ள வேண்டும். எனவே 'இந்த யோகம்' என்பது கர்மயோகத்தையே குறிக்கிறது.

இது தவிர, இந்த யோகத்தினுடைய பரம்பரையைக் கூறும் பகவான், சூரியன், மனு இவர்களின் பெயரைக் குறிப்பிடுகிறார். இவர்கள் இல்லறத்தார் ஆயினும், கர்மயோகிகள்தான். 4/15லும், முன்பு வாழ்ந்த மோக்ஷத்தில் விருப்பம் கொண்ட பெரியோர்களின் உதாரணம் காட்டி, அர்ஜுனனிடம் 'கடமையைச் செய்' என்று ஆணையிடுகிறார். இதனாலும் 'இந்த யோகம்' என்பது கர்மயோகத்தைத்தான் குறிக்கிறது என்று கொள்வதுதான் பொருத்தம்.

**கேள்வி:** *மூன்றாவது அத்யாயத்தின் முடிவில் 'ஆத்மாநம் ஆத்மநா ஸம்ஸ்தப்ய' (ஆத்மாவினாலேயே ஆத்மாவை நிலைநிறுத்தி) என்று கூறுவதிலிருந்து 'ஸமாதியில் நிலை பெறுவாய்' என்று கூறுவதாகத் தெரிகிறதே. 'யோகம்' என்பதற்கு ஸம்ஸ்க்ருத இலக்கணப்படி 'ஸமாதி' என்று பொருள் சொல்லலாமே. ஆகவே இங்கு யோகம் என்றால், மனம், புலன்களை அடக்கி ஸமாதியில் நிலைத்திருப்பது என்று பொருள் கொண்டால் என்ன தவறு?*

**பதில்:** 'ஆத்மாவின் மூலம் ஆத்மாவை அடக்கி – அதாவது புத்தியினால் மனதை அடக்கி, காமம் என்ற வெல்ல முடியாத பகைவனைக் கொல்வாய்' என்று கூறுகிறார். கர்மயோகத்தில் நிஷ்காம பாவம் முக்யமானது. ஆகவே காமத்தை அழித்தால்தான் அது ஸாத்யம். மனதையும், புலன்களையும் அடக்க வேண்டியது கர்மயோகிக்கு மிகவும் அவசியமான கார்யம் (2/64). ஆகவே புத்தியினால் மனம், புலன்களை அடக்குவதும், காமத்தை அழிப்பதும் கர்மயோகத்தின் அங்கங்கள். மேலே சொன்ன கேள்விக்கு விடையாக, பகவான் கர்மயோகத்தைத்தான் ஸாதனமாகச் சொல்கிறார். ஆகவே இங்கு யோகம் என்ற சொல்லுக்கு ஹடயோகமும் சரியான பொருள் அன்று. ஸமாதியோகமும் சரியான பொருள் அன்று. கர்மயோகம்தான் சரியான பொருள்.

**கேள்வி:** *'நான் இதை சூரியனுக்குச் சொன்னேன்; அவர் மனுவுக்குச் சொன்னார்; மனு இக்ஷ்வாகுவுக்குச் சொன்னார்' என்று இங்கே எதற்குக் கூறுகிறார்?*

**பதில்:** இந்த யோகம் தலைமுறை தலைமுறையாகத் தொன்றுதொட்டு வருகிறது என்று கூறியும், இந்த யோகத்தை உலகத்தில் முதன்முதலாக க்ஷத்ரியர்கள்தாம் பெற்றனர் என்பதைச் சுட்டிக்காட்டியும், கர்மயோகம் அநாதியானது என்றும் பகவான் நிரூபிக்கிறார்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**एवं परम्पराप्राप्तमिमं राजर्षयो विदुः।**
**स कालेनेह महता योगो नष्टः परन्तप ॥ २ ॥**

**ஏவம் பரம்பராப்ராப்தமிமம் ராஜர்ஷயோ விது₃: ।**
**ஸ காலேநேஹ மஹதா யோகோ₃ நஷ்ட: பரந்தப ॥ 2 ॥**

**பரந்தப** – பரந்தப அர்ஜுன! **ஏவம்** – இவ்விதம், **பரம்பராப்ராப்தம்** – வழி வழியாக வந்த, **இமம்** – இந்த யோகத்தை, **ராஜர்ஷய:** – ராஜரிஷிகள், **விது₃:** – அறிந்திருந்தார்கள். **ஸ:** – அந்த, **யோக₃:** – யோகம், **மஹதா காலேந** – வெகுகாலமாக, **இஹ** – இவ்வுலகில், **நஷ்ட:** – மறைந்தாற்போல் ஆகிவிட்டது.

பரந்தப அர்ஜுன! இவ்விதம் வழி வழியாக வந்த இந்த யோகத்தை ராஜரிஷிகள் அறிந்திருந்தார்கள். அந்த யோகம் வெகுகாலமாக இவ்வுலகில் மறைந்தாற்போல் ஆகிவிட்டது.

**கேள்வி:** 'இவ்விதம் வழி வழியாக வந்த இந்த யோகத்தை ராஜரிஷிகள் அறிந்தார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஒருவர் மற்றொருவருக்குச் சொல்லிப் பல தலைமுறைகள் வரை பெருமையான அரசர்கள் இந்தக் கர்மயோகத்தைக் கடைப்பிடித்து வந்தார்கள். அப்பொழுது இதைத் தெரிந்து கொள்வது எளிதாக இருந்தது. ஆனால், 'இப்பொழுது அப்படி அன்று' என்று பகவான் எடுத்துக் காட்டுகிறார்.

**கேள்வி:** 'ராஜரிஷி' என்றால் யார்?

**பதில்:** அரசராகவும் இருந்து, ரிஷியாகவும் இருந்தவர்கள் ராஜரிஷிகள். அதாவது அரசராக இருந்து வேதமந்த்ரங்களின் உட்பொருள் அறிந்தவர்கள் ராஜரிஷிகள் என்று பொருள்.

**கேள்வி:** ராஜரிஷிகள் இந்த யோகத்தை அறிந்தவர்கள் என்றால், மற்றவர்கள் அறியவில்லை என்று பொருளா?

**பதில்:** அப்படி அன்று. பிறர் அறியக் கூடாது என்று தடை ஒன்றுமில்லையே. ஆனால் கர்மயோகத்தின் தத்வம் தெரிந்து கொண்டவர்களில் முக்யமானவர்கள் ராஜரிஷிகள் என்று சொல்லலாம். இதிஹாஸங்களில் ஏனையோரும் ராஜரிஷிகளிடமிருந்து கர்மயோகத்தின் தத்வத்தை அறிந்து கொண்டார்கள் என்று சொல்லப்படுகிறது. இங்கு பகவான் சொல்வதற்கு இதுதான் கருத்து. அதாவது, 'முதலிலிருந்தே அரசர்கள் கர்மயோகத்தைக் கடைப்பிடித்து வந்தார்கள். நீயும் ராஜ வம்சத்தைச் சேர்ந்தவனாயிற்றே. உனக்கும் இதில் பொறுப்பு உண்டு. உனக்கு இது எளிதும்கூட' என்று பொருள்.

**கேள்வி:** 'வெகுகாலமாக இந்த யோகம் பெரும்பாலும் இவ்வுலகில் மறைந்தாற்போல் ஆகிவிட்டது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எதுவரை இந்தப் பரம்பரை வழிவழியாக வந்ததோ, அதுவரை கர்மயோகத்திற்கு இவ்வுலகில் ப்ரசாரம் இருந்தது. பிறகு உலகத்தினரிடையே போகங்களில் பற்றுதல் வளர வளர, கர்மயோகத்தில் பொறுப்பாக ஈடுபட்டவர்களின் எண்ணிக்கையும் குறைய ஆரம்பித்தது. முடிவில் கர்மயோகத்தின் மங்களமான பரம்பரை சீரழிந்துவிட்டது. ஆகவே அதன் தத்வம் அறிந்தவர்களோ, கடைப்பிடிப்பவர்களோ வெகுகாலமாகவே அரிதாகிவிட்டார்கள்.

**கேள்வி:** முதல் ச்லோகத்தில் 'அவ்யயம் யோகம்' என்றால், அழியாத யோகம் என்று கூறுகிறார். இந்த ச்லோகத்தில் அது மறைந்தாற்போல் ஆகிவிட்டது என்று கூறுகிறார். அது அழிவற்றதானால் அது அழிந்திருக்கக் கூடாது. அழிந்துவிட்டால் அதை அழியாதது என்று எப்படிக் கூறலாம்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** பரமாத்மாவை அடையக்கூடிய ஸாதனங்களான கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் முதலிய எல்லாமே அழிவற்றவை. இவை ஒருநாளும் இல்லாமல் போக மாட்டா. பரமேசுவரனும் நித்யமானவராகையால், அவரை அடையக் கூடிய உபாயமாக, அவரே ஏற்படுத்திய, அநாதியான வழிகள் அநித்யமாகப் போய்விடா. ப்ரபஞ்சம் படைக்கப் படும்பொழுதெல்லாம் பகவானுடைய எல்லா விதிமுறைகளும் கூடவே வெளிப்படுகின்றன; ப்ரளயம் ஏற்படும்பொழுது அவை மறைந்தும் விடுகின்றன. ஆனால் எப்பொழுதும் அவை அழிவதில்லை. அதுபோல இந்தக் கர்மயோகமும் அநாதியானதுதான். இதைத்தான் முன் ச்லோகத்தில் 'அவ்யயம்' என்று சொன்னார். இந்த ச்லோகத்தில் வெகுநாட்களாக இவ்வுலகில் மறைந்தது போல ஆகிவிட்டது என்றால், அதை அறிந்து அனுஷ்டிப்பவர்கள் இல்லாதபடியால் அழிந்ததுபோல ஆகிவிட்டது, வெளிப்படையாகத் தெரியவில்லை. மறைந்தது போல ஆகிவிட்டது என்று பொருளே தவிர, அறவே இல்லாமல் போய்விட்டது என்று பொருள் அன்று. ஏனெனில், உள்ள பொருள் (ஸத்) எப்பொழுதும் இல்லாமல் போகாது. படைப்பின் ஆரம்பத்தில், முன் ச்லோகத்தில் சொன்னபடி, பகவானுடன் இது தோன்றியது. பிறகு இடையில் பலவித காரணங்களால், எப்பொழுதாவது, இது மறைந்தது போல ப்ரகாசமில்லாமல் இருக்கிறது. பிறகு மலரவும் செய்கிறது. இப்படியே தொடர்ந்து ப்ரளய காலத்தில் பகவானிடம் அடங்கிவிடுகிறது. இதைத்தான் அவ்வப்பொழுது நாசம் ஆவதென்று, அதாவது காணப்படாமலே போகிறது என்று சொல்கிறார். உண்மையில் அது அழிவற்றதாதலால் எந்தக் காலத்திலும் இல்லாமை என்பது கிடையாது.

**स एवायं मया तेऽद्य योगः प्रोक्तः पुरातनः।**
**भक्तोऽसि मे सखा चेति रहस्यं ह्येतदुत्तमम्॥ ३॥**

**ஸ ஏவாயம் மயா தேऽத்₃ய யோக₃: ப்ரோக்த: புராதந: ।**

**ப₄க்தோऽஸி மே ஸகா₂ சேதி ரஹஸ்யம் ஹ்யேதது₃த்தமம் ॥ 3 ॥**

**(த்வம் – நீ), மே** – என்னுடைய, **ப₄க்த:** – பக்தனும், **ஸகா₂ ச அஸி** – உற்ற நண்பனும் ஆவாய். **இதி** – ஆகவே, **ஸ: ஏவ** – அதே, **புராதந:** – பழமையான, **அயம்** – இந்த, **யோக₃:** – யோகம், **அத்₃ய** – இன்று, **மயா** – என்னால், **தே** – உனக்கு, **ப்ரோக்த:** – சொல்லப்பட்டது. **ஹி** – ஏனெனில், **ஏதத்** – இந்த யோகம், **உத்தமம்** – மிகச் சிறந்தது, **ரஹஸ்யம்** – ரஹஸ்யமானது (அதாவது மறைத்துக் காப்பாற்றப்பட வேண்டியது).

நீ என்னுடைய பக்தனும் உற்ற நண்பனும் ஆவாய். ஆகவே அதே பழமையான இந்த யோகம் இன்று என்னால் உனக்குச் சொல்லப்பட்டது. ஏனெனில் இந்த யோகம் மிகச் சிறந்தது; ரஹஸ்யமானது. அதாவது மறைத்துக் காப்பாற்றப்பட வேண்டியது."

**கேள்வி:** 'நீ என்னுடைய பக்தன், உற்ற நண்பன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** நீ வெகுகாலமாகத் தொடர்ந்து என்னைப் பின்பற்றி வரும் பக்தனாக இருக்கிறாய். மேலும் இனிய நண்பனாகவும் இருக்கிறாய். ஆகவே எல்லோரிடமும் சொல்லாமல் வைத்திருக்கும் பரம ரஹஸ்யத்தை உன்னிடம் வெளியிடுகிறேன். ஒவ்வொரு மனிதனிடமும் போய் ரஹஸ்யத்தை வெளியிடலாகாது என்பது கருத்து.

**கேள்வி:** 'இது அதே பழமையான யோகம். இதை இன்று உனக்குச் சொன்னேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஸ: ஏவ புராதந:' என்று சொல்வதிலிருந்து இது பழமையானது என்றும், அநாதியானது என்றும் தெரிகிறது. 'உனக்கு' என்பதால் நீ இதைத் தெரிந்து கொள்ளத் தகுதியுடையவன் என்றும், 'இன்று' என்பதால் இந்த யோகத்தை உனக்குச் சொல்ல வேண்டிய நேரம் வந்துவிட்டது என்றும் பொருள். நான் முன்பு சூரியனுக்குரைத்ததை – பரம்பரையாகத் தொன்றுதொட்டு, இடையறாது வந்து கொண்டிருக்கும் அந்தப் பழமையான யோகத்தை –

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



"இன்று இந்த யுத்தகளத்தில், நீ மிகவும் கலக்கமுற்றிருக்கிறாய்; ஆனாலும் என்னைச் சரணடைந்துவிட்டாய். உனக்கு இந்த சோகத்தைப் போக்கி மங்களம் அளிக்க வேண்டும் என்று கருதி, நான் உனக்குச் சொன்னேன். ஶரணாகதியோடு கூட உன் உள்ளத்தின் அடித்தளத்தில் கலக்கத்துடன் கூடிய 'அறியவேண்டும்' என்ற விருப்பமும் உனக்கு இருக்கிறது. இந்த அறிவுப் பசிதான், மனிதனுக்கு ஞானம் பெறத் தகுதி அளிக்கிறது. இப்பொழுது உனக்குத் தகுதி வந்துவிட்டது என்பதை நீ நிரூபித்துவிட்டாய் (2/7). இதற்கு முன் இப்படிச் செய்ததில்லை. அதனால் உனக்கு, இப்போது இந்த ரஹஸ்யத்தை வெளியிடுகிறேன்" என்று பகவான் கூறுகிறார்.

**கேள்வி:** 'இது மிகவும் உத்தமமான ரஹஸ்யம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** "இந்த யோகம், எல்லாவிதமான துக்கங்களிலிருந்தும், பந்தங்களிலிருந்தும் உன்னை விடுவித்து, பரமானந்த ஸ்வரூபமான, பரமாத்மாவான என்னிடம் எளிதாகக் கொண்டு சேர்க்கிறது. ஆகவே இது மிகவும் உத்தமமானது. ரஹஸ்யமானது. அது மட்டுமன்று. நானே சூரியன் முதலானோருக்கு முன்பு உபதேசம் செய்தேன். இன்று நான் உனக்குச் சொல்கிறேன். நீ என்னுடைய பக்தன்" என்றும், "நான் என் ஈசுவரத் தன்மையை வெளிப்படுத்திவிட்டேன். இதுவும் மிகவும் ரஹஸ்யமான விஷயம். தகுதியில்லாதவனிடம் எப்பொழுதும் வெளியிடக் கூடாது" என்றும் கூறுகிறார்.

**பொருத்தம்:** மேலே சொன்ன வர்ணனையில், எவருக்கும் இயல்பாக ஒரு ஸந்தேஹம் தோன்றும். ஸ்ரீக்ருஷ்ணனோ இப்போது த்வாபரயுகத்தில் அவதரித்திருக்கிறார். சூரியதேவன், மனு, இக்ஷ்வாகு முதலானவர்கள் எத்தனையோ காலத்துக்கு முன்பு இருந்தவர்கள். சூரியனுக்கு அப்போதே இந்த யோகத்தை எப்படி உபதேசம் செய்திருக்க முடியும்? இதை விளக்குவதன் வாயிலாகத் தமது அவதார ரஹஸ்யத்தையும் பகவான் சொல்லட்டும் என்று நினைத்து, அர்ஜுனன் கேட்கிறார்—

अर्जुन उवाच

**अपरं भवतो जन्म परं जन्म विवस्वतः ।**
**कथमेतद्विजानीयां त्वमादौ प्रोक्तवानिति ॥ ४ ॥**

அர்ஜுந உவாச

**அபரம் ப₄வதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வத: ।**
**கத₂மேதத்₃விஜாநீயாம் த்வமாதௌ₃ ப்ரோக்தவாநிதி ॥ 4 ॥**

**அர்ஜுந உவாச** – அர்ஜுனன் கூறினார்: **ப₄வத:** – உங்களுடைய, **ஜந்ம** – பிறப்பு, **அபரம்** – பிற்காலத்தது (அதாவது அண்மையில் நிகழ்ந்தது). **விவஸ்வத:** – சூரியனுடைய, **ஜந்ம** – பிறப்பு, **பரம்** – வெகுகாலத்துக்கு முன்பு ஏற்பட்டது (அதாவது கல்பத்தின் ஆதியிலேயே ஏற்பட்டுவிட்டது). **த்வம்** – நீங்கள், **ஆதௌ₃** – கல்பத்தின் ஆதியில், **ப்ரோக்தவாந்** – சூரியனுக்கு இந்த யோகத்தைக் கூறினீர்கள், **இதி ஏதத்** – என்ற இந்த விஷயத்தை, **கத₂ம்** – எவ்வாறு, **விஜாநீயாம்** – புரிந்து கொள்வது (நம்புவது)?

அர்ஜுனன் கூறினார்: 'உங்களுடைய பிறப்பு அண்மையில் நிகழ்ந்தது. சூரியனுடைய பிறப்பு வெகுகாலத்துக்கு முன்பு ஏற்பட்டது (கல்பத்தின் ஆதியிலேயே ஏற்பட்டுவிட்டது). நீங்கள் கல்பத்தின் ஆதியில் சூரியனுக்கு இந்த யோகத்தைக் கூறினீர்கள் என்ற இந்த விஷயத்தை எவ்வாறு புரிந்து கொள்வது (நம்புவது)?'

**கேள்வி:** இந்த ச்லோகத்தில் அர்ஜுனனின் கேள்விக்கு என்ன பொருள்?

**பதில்:** ஸ்ரீக்ருஷ்ணன் ஸாதாரண மனிதர் அல்லர். தெய்விகமான மானுடப் பிறவி பெற்ற, எல்லா வல்லமையும் படைத்த, பூரண ப்ரம்மமான பரமாத்மாதான் என்று

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அர்ஜுனனுக்கு முன்பே தெரியும். ஏனெனில் ராஜஸூய யாகத்தில், பீஷ்மரிடமிருந்து பகவானது மஹிமையைக் கேட்டறிந்து கொண்டுவிட்டார் (மஹா. ஸபா. 38/23,29). மற்ற மஹரிஷிகளிடமிருந்தும் இந்த விஷயம் பற்றிப் பல செய்திகள் காதில் விழுந்திருக்கின்றன. அதனால்தான் காட்டில் இருக்கும்போது, தாமே பகவானின் பெருமை பற்றி இது விஷயமாகச் சர்ச்சை புரிந்திருக்கிறார் (மஹா. வன. 12/11–43). தவிரவும், சிசுபாலவதம் போன்ற பல நிகழ்ச்சிகளில், பகவானுடைய மனிதத் தன்மைக்கு மீறிய அற்புதங்களைக் கண்கூடாகப் பார்த்திருக்கிறார். ஆயினும், பகவானுடைய திருவாயிலிருந்து அவருடைய அவதார ரஹஸ்யத்தைத் தெரிந்து கொள்ளவும், பொதுவாக மனிதர்களின் மனதில் ஏற்படும் ஸந்தேஹங்களைத் தீர்க்கவும் ஆசை கொண்டு அர்ஜுனன் இப்படிக் கேட்கிறார்: "உங்கள் பிறப்பு இப்பொழுதுதானே சில ஆண்டுகளுக்கு முன்பு மதுராபுரியில் நிகழ்ந்தது. இதை அநேகமாக எல்லோரும் அறிவார்களே! சூரியனுடைய பிறப்பு உலகப் படைப்பின் ஆரம்பத்திலேயே ஏற்பட்டதாயிற்றே. அவர் அதிதியின் கர்பத்தில் உதித்தவராயிற்றே. இதன் உண்மையைத் தெரிந்து கொள்ளாமல் நீங்கள் சூரியனுக்கு உபதேசித்தது இதுதான் என்பதை எப்படி நான் ஏற்றுக் கொள்வது? சூரியனிடமிருந்து இந்தப் பரம்பரை வளர்ந்தது என்றும் எப்படி அறிவது? ஆகவே தயவு செய்து இந்த ரஹஸ்யத்தை வெளியிட்டு, என்னைப் பேறு பெற்றவன் ஆக்குங்கள்" என்று அர்ஜுனன் வேண்டுகிறார்.

**பொருத்தம்: இவ்வாறு அர்ஜுனன் கேட்ட பிறகு, தமது அவதார ரஹஸ்யத்தை வெளியிடும் நோக்கத்துடன், 'நான் எல்லாம் அறிந்தவன்' என்று பகவான் கூற ஆரம்பிக்கிறார்—**

श्रीभगवानुवाच

**बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन।**
**तान्यहं वेद सर्वाणि न त्वं वेत्थ परन्तप॥५॥**

ஸ்ரீப₄க₃வாநுவாச

**ப₃ஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந ।**
**தாந்யஹம் வேத₃ ஸர்வாணி ந த்வம் வேத்த₂ பரந்தப ॥ 5 ॥**

**ஸ்ரீப₄க₃வாநுவாச** – ஸ்ரீபகவான் சொன்னார்: **பரந்தப அர்ஜுந** – பரந்தப (எதிரிகளை வாட்டும்) அர்ஜுன! **மே** – எனக்கும், **தவ ச** – உனக்கும், **ப₃ஹூநி** – பல, **ஜந்மாநி** – பிறவிகள், **வ்யதீதாநி** – கழிந்துவிட்டன. **தாநி ஸர்வாணி** – அவை எல்லாவற்றையும், **த்வம்** – நீ, **ந வேத்த₂** – அறியமாட்டாய். **அஹம்** – நான், **வேத₃** – அறிவேன்.

ஸ்ரீபகவான் சொன்னார்: "எதிரிகளை வாட்டும் அர்ஜுன! எனக்கும் உனக்கும் பல பிறவிகள் கழிந்துவிட்டன. அவை எல்லாவற்றையும் நீ அறியமாட்டாய். நான் அறிவேன்.

**கேள்வி:** 'எனக்கும், உனக்கும் பல பிறவிகள் கழிந்துவிட்டன' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "நீயும், நானும் இப்பொழுதுதான் பிறந்திருக்கிறோம். இதற்குமுன் இல்லை என்று நினைக்காதே. நாமனைவரும் அநாதியானவர்கள்; நித்யமானவர்கள். எனது நித்யமான ஸ்வரூபம் இருக்கவே இருக்கிறது. அது தவிர, மத்ஸ்யம், கூர்மம், வராஹம், நரஸிம்ஹன், வாமனன் முதலிய பல உருவங்களில் நான் முன்பு வெளிப்பட்டிருக்கிறேன். நான் மதுராபுரியில் பிறந்திருப்பது தற்காலத்தில் நடந்ததாயினும், இதற்கு முன் பலவித ரூபங்களில் ஏற்பட்ட பிறவிகளில் பலவிதமாக, எண்ணற்றவர்களுக்கு நான் உபதேசம் செய்திருக்கிறேன். ஆகவே, நான் இப்போது சொன்ன யோகத்தை முன்பே சூரியனுக்கும் சொல்லியிருக்கிறேன் என்பது நடந்திருக்காது என்றோ, ஆச்சர்யம் என்றோ நினைக்காதே. கல்பத்தின்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தொடக்கத்தில், நான் நாராயணனாக இருந்து சூரியனுக்கு இந்த யோகத்தை உபதேசித்தேன்" என்று பகவான் கூறுகிறார்.

**கேள்வி:** 'அவையெல்லாம் நீ அறியமாட்டாய், நான் அறிவேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இப்படி பகவான் தாம் எல்லாமறிந்தவர் என்பதையும், ஜீவர்கள் சிற்றறிவு படைத்தவர்கள் என்பதையும் கோடிட்டுக் காண்பிக்கிறார். "நான் எந்தெந்தக் காரணங்களுக்காக, எந்தெந்த உருவங்களில் வெளிப்பட்டு, எந்தெந்தக் காலங்களில், என்னென்ன லீலைகள் புரிந்திருக்கிறேனோ, அத்தனையையும் நீ ஸர்வக்ஞனாக இல்லாததால் அறியமாட்டாய். உனக்கு உன்னுடையவும், என்னுடையவுமான முற்பிறவிகளின் நினைவு கிடையாது. அதனால்தான் இப்படிக் கேள்வி கேட்கிறாய். எனக்கு உலகில் நடப்பது எதுவும் தெரியாமல் போகாது. நடந்தது, நடப்பது, நடக்கப்போவது எல்லாமே எனக்குத் தற்போது நடப்பது போலக் கண்கூடு. நான் எல்லா ஜீவர்கள் பற்றியும், அவர்களுடைய எல்லாச் செய்திகளைப் பற்றியும் நன்றாக அறிவேன் (7/26). ஏனெனில் நான் எல்லாம் அறிந்தவன். நான் கல்பத்தின் ஆரம்பத்தில், சூரியனுக்கு இந்த யோகத்தை உபதேசித்தேன் என்று கூறுவதில் நீ சிறிதும் ஸந்தேஹப்பட வேண்டியதில்லை" என்று பகவான் கூறுகிறார்.

**பொருத்தம்:** பகவான் இப்படிச் சொன்னதைக் கேட்டு, "எனக்கும், உங்களுக்கும் பல பிறவிகள் ஏற்பட்டுவிட்டனவெனில், உங்கள் பிறவி எப்படிப்பட்டது? என்னுடையவும், மற்றவர்களுடையவுமான பிறப்பு எவ்விதம்?" என்று அர்ஜுனன் சிந்திக்கிறார் என்று நினைத்து, அதை விளக்குவதற்காக பகவான் தம் அவதார தத்வத்தைக் கூறுகிறார்—

**अजोऽपि सन्नव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन्।**
**प्रकृतिं स्वामधिष्ठाय सम्भवाम्यात्ममायया ॥ ६ ॥**

**அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூ₄தாநாமீஶ்வரோऽபி ஸந் ।**

**ப்ரக்ருதிம் ஸ்வாமதி₄ஷ்ட₂าய ஸம்ப₄வாம்யாத்மமாயயா ॥ 6 ॥**

(**அஹம்** – நான்), **அஜ:** – பிறப்பற்றவனாகவும், **அவ்யயாத்மா** – அழிவற்றவனாகவும், **ஸந் அபி** – இருந்தும்கூட, **பூ₄தாநாம்** – எல்லா உயிரினங்களுக்கும், **ஈஶ்வர:** – ஈசுவரனாக, **ஸந் அபி** – இருந்தும்கூட, **ஸ்வாம்** – என்னுடைய, **ப்ரக்ருதிம்** – ப்ரக்ருதியை, **அதி₄ஷ்ட₂ாய** – வசப்படுத்திக் கொண்டு, **ஆத்மமாயயா** – என்னுடைய யோக மாயையினால், **ஸம்ப₄வாமி** – வெளிப்படுகிறேன்.

நான் பிறப்பற்றவனாகவும் அழிவற்றவனாகவும் எல்லா உயிரினங்களுக்கும் ஈசுவரனாக இருந்தும்கூட, என்னுடைய ப்ரக்ருதியை வசப்படுத்திக் கொண்டு என்னுடைய யோக மாயையினால் வெளிப்படுகிறேன்.

**கேள்வி:** 'அஜ:, அவ்யயாத்மா, பூதாநாமீஶ்வர:, அபி, ஸந்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** நான் பிறப்பற்றவன், அழிவற்றவன். அதாவது எனக்குப் பிறப்பும், அழிவும் எப்பொழுதுமே கிடையா. ஆயினும், நானும் ஸாதாரண மனிதன் போலப் பிறப்பவனாகவும், இறப்பவனாகவும் தோன்றுகிறேன். இதே மாதிரி நான் எல்லா உயிரினங்களுக்கும் ஈசுவரன் ஆயினும் கூட ஒரு ஸாதாரண மனிதன் போலத் தோற்றமளிக்கிறேன். என்னுடைய அவதார ரஹஸ்யத்தை அறியாத மாந்தர், மத்ஸ்யம், கூர்மம், வராஹம், மனிதன் முதலிய உருவங்களில் நான் அவதாரம் செய்யும்போது பிறந்ததாகவும், நான் மறையும்போது அவை அழிந்ததாகவும் நினைக்கிறார்கள். அந்தந்த ஸ்வரூபங்களில் என் திவ்ய லீலைகளைக் காட்டும்போது, தம்மைப் போன்ற ஸாதாரணப் பிறவியாக்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நினைத்து என்னை அவமதிக்கிறார்கள் (9/11). அப் பேதைகளுக்கு எல்லா வல்லமைகளும் படைத்த, எல்லோருக்கும் ஆண்டவனான நித்ய, சுத்த, புத்த, முக்த ஸ்வபாவனான ஸாக்ஷாத் பூர்ண ப்ரம்ம பரமாத்மாவே உலகின் நன்மைக்காக, இவ்விதம் அவதாரம் செய்து, திவ்ய லீலை புரிகிறார் என்பது தெரியாது. ஏனெனில் அப்போது நான் யோகமாயை என்ற திரையில் ஒளிந்து கொள்வேன் (7/25).

**கேள்வி:** இங்கு 'ஸ்வாம்' என்கிற அடைமொழியுடன் கூடிய 'ப்ரக்ருதிம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? 'ஆத்மமாயயா' என்று எதைக் குறிக்கிறார்? இவை இரண்டிற்குமுள்ள வேறுபாடு என்ன?

**பதில்:** 'மூலப்ரக்ருதி' பகவானுடைய சக்தியாக விளங்குகிறது என்று 9/7,8களில் கூறுகிறார். 14வது அத்யாயத்தில் 'மஹத்ப்ரஹ்ம' என்று குறிப்பிடும் மூலப்ரக்ருதியையே இங்கு 'ஸ்வாம் ப்ரக்ருதிம்' என்கிறார். பகவான் தமது அகில உலகையும் தாங்குகின்ற, அந்த அஸாதாரணமான யோகசக்தியினால், பலவித ஸ்வரூபங்கள் எடுத்து, உலகத்தார் முன்னிலையில் வெளிப்படுகிறார். அந்த யோக சக்தியில் மறைந்திருப்பதால் உலகம் அவரை அடையாளம் கண்டு கொள்வதில்லை. 7/25ல் 'யோகமாயா' என்று சொல்வதைத்தான், இங்கு 'ஆத்மமாயயா' என்கிறார். மூலப்ரக்ருதியைத் தமக்குட்படுத்தி, தமது யோகசக்தியின் மூலம் பகவான் அவதரிக்கிறார்; 'மூலப்ரக்ருதி' என்பது பகவானுடைய ப்ரபஞ்சத்தைப் படைக்கின்ற சக்தி. பகவானுடைய யோகமாயை என்பதோ அவருடைய மிகப் பெருமை வாய்ந்த ஐசுவர்ய சக்தி. இதுதான் இந்த இரண்டுக்குமுள்ள வித்யாஸம்.

**கேள்வி:** 'நான் என் ப்ரக்ருதியை வசப்படுத்தி என்னுடைய யோகமாயையாலே வெளிப்படுகிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தம் பிறவி, மற்றப் பிறவிகளைக் காட்டிலும் முற்றிலும் மாறுபட்டது என்பதை விளக்குகிறார்: ஜீவர்கள் ப்ரக்ருதிக்கு உட்பட்டவர்கள். தம் வினைப்பயனுக்கு ஏற்றபடி நல்லதும், தீயதுமான பிறவிகளில் பிறப்பெடுக்கிறார்கள். ஸுகதுக்கங்களை அனுபவிக்கிறார்கள். எனது பிறவி அப்படியன்று. நான் மூலப்ரக்ருதியை ஆள்கிறேன். நானாக யோகமாயையினால் அவ்வப்போது தோன்றி, தெய்விகமான லீலைகளைப் புரிவதற்காக என்னிஷ்டப்படியும், தேவைக்கேற்றபடியும் ஸ்வரூபங்களை எடுத்துக் கொள்கிறேன். இந்த என் பிறவி, என் இச்சைப்படி தெய்விகமாக ஏற்படுவது. ஜீவர்களைப் போலக் கர்மவினையின் பயனாக ஏற்படுவதன்று.

**கேள்வி:** ஸாதாரண ஜீவராசிகள் பிறந்து இறப்பதற்கும், பகவான் அவதரித்து மறைவதற்கும் என்ன வித்யாஸம்?

**பதில்:** ஸாதாரண ஜீவர்களுக்குப் பிறப்பு-இறப்பு, அவர்களது கர்மவினையை அனுஸரித்து ஏற்படுகிறது. அவர்களுடைய இஷ்டப்படி அன்று. அவர்கள் தாயின் கர்பத்திலும், தாயின் வயிற்றிலிருந்து வெளிவரும்போதும் துன்புற நேர்கிறது. பிறகு சிறிது, சிறிதாக வளர்ந்து, உடல் நலிவுற்று, இறக்க நேர்கிறது. மறுபடியும் கர்மவினைப்படி மறுபிறவி ஏற்படுகிறது. ஆனால் பகவானின் அவதாரமும், மறைவும் மிகவும் மாறுபட்டவை. அவர் இஷ்டப்படி நடப்பவை, அவர் விரும்பினால், தாம் விரும்பும்போது, விரும்பும் இடத்தில், விரும்பும் உருவத்தில் அவதாரம் செய்வார்; அப்படியே மறையவும் செய்வார். தம் விருப்பப்படி வடிவத்தைப் பெரிதாகவும், சிறிதாகவும் செய்து கொள்ள அவரால் முடியும். ஏனெனில் அவர் ப்ரக்ருதிக்குக் கட்டுப்பட்டவர் அல்லர். ப்ரக்ருதிதான் அவருடைய விருப்பத்திற்கு உட்படவேண்டும். அர்ஜுனனின் வேண்டுகோளின்படி பகவான் விசுவரூபம் எடுத்தார்; பின்னர் அதை மறைத்துக் கொண்டு நான்கு திருக்கரங்களுடன் தோன்றினார்; அதற்குப் பிறகு ஸாதாரண மனித உருவத்தில் காட்சி அளித்தார் (11வது அத்யாயம்). ஒரே அவதாரத்தில் ஓர் உருவத்தில் வெளிப்படுவது, முன்பிருந்த உருவத்தை மறைத்துக் கொள்வது என்பது பிறப்பு-இறப்பு ஆகாததுபோல பகவான் ஓர் உருவத்தில் தோன்றி, மறைவதும் பிறப்பு-இறப்பு ஆகா. அது லீலைதான்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** பகவான் ஸ்ரீக்ருஷ்ணன், தாயார் தேவகியின் கர்பத்திலிருந்து ஸாதாரண மனிதப்பிறவி போலத்தானே பிறந்திருக்க வேண்டும்? பின் ஸாதாரண மனிதப்பிறவிக்கும், பகவானின் அவதாரத்திற்கும் என்ன வேற்றுமை?

**பதில்:** அப்படி அன்று. ஸ்ரீமத்பாகவதத்தில் அந்தப் பகுதியைப் பார்த்தால், இந்த ஸந்தேஹம் தானாகவே நீங்கிவிடும். அங்கு ஸ்ரீசுகர் சொல்கிறார்: "அப்போது அன்னை தேவகி தன் முன்னால் சங்கம், சக்ரம், கதாயுதம், தாமரை இவற்றைத் தாங்கி, கிரீட குண்டலதாரியாக நான்கு புஜங்களோடு, தெய்விக ஸ்வரூபத்தில் வெளிப்பட்ட பகவானைப் பார்த்தாள்; துதித்தாள். பிறகு பகவானைப் பார்த்து ப்ரார்த்தித்தாள்:

உபஸம்ஹர விஶ்வாத்மந்நதோ₃ ரூபமலௌகிகம் ।
ஶங்க₂சக்ரக₃தா₃பத்₃மஶ்ரியா ஜுஷ்டம் சதுர்பு₄ஜம் ॥

(10/3/30)

'அகில உலகமானவனே! உன்னுடைய சங்கம், சக்ரம், கதாயுதம், தாமரை முதலியவற்றுடன் விளங்கும் உலகியலுக்கு அப்பாற்பட்ட இத்தெய்விகமான உருவத்தை மறைத்துக் கொள்' என்று வேண்டினாள்." இதைக் கேட்டு பகவான் தேவகிக்குத் தம் அவதார ரஹஸ்யத்தைக் கூறினார்—

இத்யுக்த்வாऽऽஸீத்₃த₄ரிஸ்தூஷ்ணீம் ப₄க₃வாநாத்மமாயயா ।
பித்ரோ: ஸம்பஶ்யதோ: ஸத்₃யோ ப₃பூ₄வ ப்ராக்ருத: ஶிஶு: ॥

(ஸ்ரீமத்₃பா₄க₃வதம் 10/3/46)

இங்ஙனம் பகவான் கூறிவிட்டு தேவகீ-வஸுதேவர் பார்த்துக் கொண்டிருக்கும் போதே, தம் யோகமாயா சக்தியினால் குழந்தையானார்.

ஆகவே ஸாதாரண மனித சிசுக்களைப் போல, தாயாரான தேவகியின் கர்பத்திலிருந்து அவர் வெளிவரவில்லை. அவர் தாமாகவே தோன்றினார். பிறப்பு எடுப்பது என்ற லீலையைப் புரிய ஶ்வப்பதற்காக, ஸாதாரண மனிதக் குழந்தையைப் போலப் பத்து மாதங்கள் தேவகியின் கர்பத்தில் இருந்தது போலவும், பிறகு பிறந்தது போலவும் காட்டினார்.

**பொருத்தம்:** இப்படி பகவானின் வாயிலாக, அவருடைய பிறப்பின் தத்வத்தைக் கேட்ட பிறகு, 'நீங்கள் எவ்வெப்பொழுது, எந்தெந்தக் காரணங்களுக்காக இவ்விதம் அவதாரம் செய்தீர்கள்?' என்ற அர்ஜுனனுடைய கேள்வியை ஊகித்து, மேலே இரண்டு ச்லோகங்களில் அவதாரத்திற்கான காரணம், ஸந்தர்பம், லக்ஷ்யம் இவற்றைக் கூறுகிறார்—

**यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत।**
**अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम्॥ ७॥**

**யதா₃ யதா₃ ஹி த₄ர்மஸ்ய க்₃லாநிர்ப₄வதி பா₄ரத ।**
**அப்₄யுத்தா₂நமத₄ர்மஸ்ய ததா₃த்மாநம் ஸ்ருஜாம்யஹம் ॥ 7 ॥**

பா₄ரத – பரதகுலத் தோன்றலே! யதா₃ யதா₃ – எப்போதெல்லாம், த₄ர்மஸ்ய – தர்மத்திற்கு, க்₃லாநி: – குறைவும், அத₄ர்மஸ்ய – அதர்மத்தின், அப்₄யுத்தா₂நம் – ஓங்குதலும், ப₄வதி – ஏற்படுகின்றனவோ, ததா₃ ஹி – அப்போதெல்லாம், அஹம் – நான், ஆத்மாநம் – என்னை, ஸ்ருஜாமி – தோற்றுவிக்கிறேன் (அதாவது மக்கள் முன்னே காணக்கூடிய உருவத்துடன் வெளிப்படுகிறேன்).

பரதகுலத்தோன்றலே! எப்போதெல்லாம் தர்மத்திற்குக் குறைவும் அதர்மத்தின் ஓங்குதலும் ஏற்படுகின்றனவோ அப்போதெல்லாம் நான் என்னைத் தோற்றுவிக்கிறேன். அதாவது மக்கள் முன்னே காணக்கூடிய உருவத்துடன் வெளிப்படுகிறேன்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'யதா யதா' என்று இருமுறை கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவானுடைய அவதாரத்திற்கு ஒரு குறிப்பிட்ட காலம் கிடையாது. இந்த யுகத்தில், இந்த வருஷத்தில், இந்த மாதத்தில், இந்த நாளில், இப்படி அவதரிக்க வேண்டும் என்ற நியதியோ, ஒரு யுகத்தில் இத்தனை முறைதான் அவதரிக்க வேண்டும் என்ற நியதியோ கிடையா. அதைத்தான் 'எப்போதெல்லாம்' என்ற சொல் குறிக்கிறது. தர்மம் சீரழிந்து, அதர்மம் ஓங்கும்போது பகவான், தாம் அவதரிக்க வேண்டியதை உணர்கிறார். அப்பொழுது அவதரிக்கிறார்.

**கேள்வி:** தர்மம் குறைந்து, அதர்மம் ஓங்குவது எவ்வாறு? அதற்காக பகவான் அவதரிக்கிறார் என்றால் எப்படி?

**பதில்:** தர்மத்திற்கு எவ்விதமான கேடு விளைந்தால் பிறக்கலாம் என்பதும், எவ்விதமான பாவம் மிகுந்தால் பிறக்கலாம் என்பதும், பகவானுக்குத்தான் தெரியும். மனிதர் இதை ஒருவாறு ஊகிக்கலாமே தவிரத் தீர்மானிக்க முடியாது. ரிஷிகளைப் போல தர்மசீலர், பக்தர், நல்ல நடத்தை உள்ளவர்கள் மீதும், தவறு செய்யாத பலஹீனமான ப்ராணிகளிடமும், வலிமை மிகுந்த கொடுமையாளர்கள் அக்ரமமாக நடந்து கொண்டால், அதன் காரணமாக மனிதர்களிடையே நற்பண்புகள், நன்னடத்தைகள் குறைந்து போய், கெட்ட குணங்களும், அட்டூழியங்களும் அதிகமானால், தர்மம் சீரழிந்து அதர்மம் தலைதூக்கிவிட்டது என்று பொருள் என்பதாக அனுமானிக்கலாம். க்ருதயுகத்தில், ஹிரண்யகசிபுவின் ஆட்சியில் தீய குணங்களும், தீய நடத்தைகளும் மலிந்து வளர்ந்தன. ஸாதுக்களுக்கும், குற்றமற்றவர்களுக்கும் இன்னல் நேர்ந்தது. ஸாதுக்கள் த்யானம், ஜபம், தவம், பூஜை, பாராயணம், யாகம், தானம் முதலிய நற்செயல்களும், உபாஸனைகளும் செய்ய முடியாமல் தடை ஏற்பட்டது. தேவர்கள், அவர்களது ஸ்தானங்களிலிருந்து அடித்து விரட்டப்பட்டார்கள். ப்ரஹ்லாதன் போன்ற பக்தர்கள் ஒரு தவறும் செய்யாதிருந்தபோதும், அவர்களுக்கும் பலவிதமான கொடுமைகள் இழைக்கப்பட்டன. அப்போதுதான் பகவான் நரஸிம்ஹ ஸ்வரூபத்தில் அவதரித்து, பக்தனான ப்ரஹ்லாதனைக் காப்பாற்றி, தர்மத்தை நிலைநாட்டினார். இப்படித்தான் மற்ற அவதாரங்களிலும் நடந்தன.

**परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम्।**
**धर्मसंस्थापनार्थाय सम्भवामि युगे युगे॥८॥**

**பரித்ராணாய ஸாதூ$_4$நாம் விநாஶாய ச து$_3$ஷ்க்ருதாம் ।**

**த$_4$ர்மஸம்ஸ்த$_2$ாபநார்த$_2$ாய ஸம்ப$_4$வாமி யுகே$_3$ யுகே$_3$ ॥ 8 ॥**

**ஸாதூ$_4$நாம்** – ஸாதுக்களை, **பரித்ராணாய** – கடைத்தேற்றுவதற்காகவும் (காப்பதற்காகவும்), **து$_3$ஷ்க்ருதாம்** – பாவச் செயல்களைச் செய்கிறவர்களை, **விநாஶாய ச** – அழிப்பதற்காகவும், **த$_4$ர்மஸம்ஸ்த$_2$ாபநார்த$_2$ாய** – தர்மத்தை நன்கு நிலைநாட்டுவதற்காகவும் (நான்), **யுகே$_3$ யுகே$_3$** – யுகந்தோறும், **ஸம்ப$_4$வாமி** – வெளிப்பட்டுக் கொண்டு இருக்கின்றேன்.

ஸாதுக்களைக் கடைத்தேற்றுவதற்காகவும் (காப்பதற்காகவும்), பாவச் செயல்களைச் செய்கிறவர்களை அழிப்பதற்காகவும், தர்மத்தை நன்கு நிலைநாட்டுவதற்காகவும் நான் யுகந்தோறும் வெளிப்பட்டுக் கொண்டு இருக்கின்றேன்.

**கேள்வி:** 'ஸாதுக்கள்' என்று எப்படிப்பட்ட மனிதர்களைக் குறிப்பிடுகிறார்? 'அவர்களைக் கடைத்தேற்றுவது' என்றால் என்ன?

**பதில்:** அஹிம்ஸை, ஸத்யம், திருடாமை, ப்ரம்மசர்யம் முதலிய பொதுவான மனித தர்மங்களையும், யாகம், தானம், தவம், கற்பித்தல், மக்களைக் காப்பது முதலான தத்தம் வர்ணாசிரமங்களுக்குரிய ஸ்வதர்மங்களையும் நல்ல முறையில் கடைப்பிடிப்பவர்களையும்,



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பிறருக்கு நன்மை செய்யும் இயல்பு கொண்டவர்களையும், நற்பண்புகளின் கருவூலமானவர்களையும், நன்னடத்தை உள்ளவர்களையும், ச்ரத்தையுடனும், ப்ரேமையுடனும் பகவானுடைய திருநாமம், திருஉருவம், திருக்கல்யாண குணங்கள், ப்ரபாவம், லீலை முதலியவற்றைக் கேட்பது, கீர்த்தனம் செய்வது, நினைவு கூர்வது முதலியவற்றைச் செய்யும் பக்தர்களையும் 'ஸாதுக்கள்' என்கிறார். அவர்களுக்குக் கொடியவர்களான, தீயநடத்தை உள்ளவர்கள் பயங்கரமாகக் கொடுமைகளை இழைத்தால், அந்தக் கொடுமைகளிலிருந்து அவர்களை மீட்பது, அவர்களுக்கு நல்ல நிலைமையை அளிப்பது, தாமே தர்சனம் கொடுத்து அவர்களுடைய முன்வினைப் பாவங்களை அகற்றுவது, அவர்களுக்கு மங்களம் அளிப்பது, தம் திவ்ய லீலைகளைக் காட்டுவது, அவற்றைக் கேட்பது, நினைவுகூர்வது மற்றும் கீர்த்தனம் என்பதான, எளிய முறையில் மக்களுக்கு உய்யும் பாதையைக் காட்டுவது முதலிய அனைத்து விஷயங்களும், 'ஸாதுக்களைக் கடைத்தேற்றுவது' ஆகும்.

**கேள்வி:** 'துஷ்க்ருதாம்' என்றால் எத்தகைய மனிதர்களைக் குறிக்கும்? மேலும் அவர்களை அழிப்பது என்றால் என்ன?

**பதில்:** ஒரு தவறும் செய்யாத, நன்னடத்தையுள்ள, பகவானுடைய பக்தர்களுக்குக் கொடுமை இழைப்பவர்கள்; பொய், கபடம், திருட்டு, விபசாரம் முதலிய துர்குணங்களும், கெட்ட நடத்தைகளும் உள்ளவர்கள்; பலவிதமாக அந்யாயம் புரிந்து பொருள் சேர்ப்பவர்கள்; நாஸ்திகர்கள்; பகவானுக்கும், வேத சாஸ்த்ரங்களுக்கும் விரோதமாக நடப்பவர்கள் இப்படிப்பட்ட அஸுர இயல்பு உடையவர்களைத்தான் 'துஷ்க்ருதாம்' என்ற சொல் குறிப்பிடுகிறது. இத்தகைய கொடியோர்களின் தீய பழக்கங்களைக் களைவதற்காகவும், அவர்களுடைய பாவங்களைத் தீர்ப்பதற்காகவும், அவர்களுக்குத் தண்டனை அளிப்பது, யுத்தம் செய்தோ அல்லது வேறு வழியிலோ அவர்களை அவர்தம் உடலிருந்து பிரித்துவிடுவது – இவை துஷ்டர்களை நாசம் செய்வதில் அடங்கும்.

**கேள்வி:** பகவான் தனிப்பெருங்கருணையாளர் ஆயிற்றே! அவர் கொடியவர்களுக்கு அறிவுரை கூறி, அவர்களது இயல்பை ஏன் மாற்றக் கூடாது? இவ்விதம் தண்டனை அளிப்பானேன்?

**பதில்:** அவர்களுக்குத் தண்டனை அளிப்பதும், அஸுர உடலிலிருந்து அவர்களை விடுவிப்பதும், பகவானுடைய அருட்செயல்களே. அந்த தண்டனையினாலும், வதத்தினாலும் அவர்களுடைய பாவத்தைத்தான் போக்குகிறார். ஆகவே பகவான் தண்டனை அளிக்கிறார் என்பதால் பகவானுடைய க்ருபைக்கு எள்ளளவு கூடக் குறைவு ஏற்பட்டுவிட்டது என்று நினைக்கக் கூடாது. குழந்தைக்குக் கையிலோ, காலிலோ கொப்புளம், கட்டி வந்தால், பெற்றோர் முதலில் மருந்து கொடுத்துப் பார்க்கிறார்கள்; அப்படியும் அது தீராவிட்டால், தாமதம் செய்வதால் இந்த விஷம் மற்ற உறுப்புக்களுக்கும் பரவும் என்று தெரிந்தவுடன் மற்ற உறுப்புக்களைக் காப்பாற்றும் நோக்கத்துடன், விஷம்பட்ட அந்த உறுப்பில் அறுவை சிகிச்சை செய்ய அனுமதிக்கிறார்கள்; அல்லது வெட்டி எடுக்கவே அனுமதிக்கிறார்கள் என்றால், இதற்குக் காரணம் அவர்களுக்குக் குழந்தையிடம் உள்ள பரிவுதானே! அதுபோலவே, பகவானும் துஷ்டர்களுடைய துஷ்ட குணங்களைக் களைவதற்காக, முதலில் (துர்யோதனனுக்கு அறிவுரை கூறியதுபோல) நீதியை எடுத்துக் கூறுகிறார். தண்டனை நேரும் என்றும் அச்சுறுத்துகிறார். இவை பயனளிக்காது போய், அவர்களுடைய கொடுமைகள் மேலும் வளரும்போது, அவர்களை வதம் செய்து, அவர்களுடைய பாவத்தின் பலனை அனுபவிக்கச் செய்கிறார். சிலர் முற்பிறவியில் புண்ய கர்மங்கள் செய்திருக்கலாம். பின்னர் இப்பிறவியில் கெட்ட சேர்க்கையினால் பாவச் செயலில் இறங்கியிருக்கலாம். அவர்களைத் தம் கையாலேயே வதம் செய்து உய்விக்கிறார். இத்தனை செயல்களிலும் பகவானுடைய கருணைதான் நிறைந்திருக்கிறது.

**கேள்வி:** 'தர்மத்தை நன்கு நிலைநாட்டுவது' என்றால் எப்படி?

**பதில்:** பகவான் தாமே சாஸ்த்ர முறைப்படி தர்மங்களைச் செயல்முறையில் அனுஷ்டித்துக் காட்டுவார்; பலவிதங்களில் தர்மத்தின் பெருமையை எடுத்துக் காட்டுவார்;



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மக்களின் உள்ளங்களில் பதியும் வகையில் மிகவும் கவரக்கூடிய சொற்களால் உபதேசமும் செய்வார்; ஆணையிடுவார். எல்லோருடைய உள்ளங்களிலும் வேதங்கள், சாஸ்த்ரங்கள், மறுமை இவற்றிலும், மற்றும் பெரியோர்கள்பாலும் அவர் ச்ரத்தையையும், நம்பிக்கையையும் ஊட்டுவார். நற்பண்புகளிலும், நல்ல நடத்தைகளிலும் நம்பிக்கையையும், ப்ரேமையையும் ஊட்டி வழிகாட்டுவார். மக்களிடம் இவற்றில் திடமான உறுதியை வளர்ப்பார். இவ்வழிகளில் பகவான் தர்மத்தை நன்கு நிலைநாட்டுவார்.

**கேள்வி:** நல்லோர்களைக் காப்பது, துஷ்டர்களை அழிப்பது, தர்மத்தை நிலைநாட்டுவது என்ற மூன்றுக்கும் சேர்ந்தாற்போலத் தேவை ஏற்படும்போதுதான் பகவான் அவதரிப்பாரா? ஏதாவது ஒன்றிரண்டு காரணத்திற்காகக்கூட அவதரிப்பாரா?

**பதில்:** மூன்றும் சேர்ந்தால்தான் அவதாரம் செய்யவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. ஏதோ ஒரு லக்ஷ்யத்திற்காகவும் கூட பகவான் அவதரித்திருக்கிறார்.

**கேள்வி:** பகவான் ஸர்வ வல்லமை படைத்தவர் ஆயிற்றே! அவதாரம் எடுக்காமலே கூட இக்கார்யங்களை சாதிக்கலாமே! அவதாரம் செய்வதற்கு அவசியம் என்ன?

**பதில்:** இது முற்றிலும் சரிதான். பகவான் அவதாரம் எடுக்காமலே, அனாயாஸமாக எல்லாம் செய்ய முடியும்; செய்யவும் செய்கிறார். ஆனால் மக்களிடம் உள்ள பரிவினால் "அவர்கள் தர்சனம் செய்யட்டுமே; நம்மைத் தொட்டுப் பார்க்கட்டுமே; நம்மோடு பேசட்டுமே; எளிதாக நம்மை அண்டி ஆனந்தம் அடையட்டுமே" என்று மக்கள் மேன்மை பெற வாய்ப்பு அளிப்பதற்காகவும், பரம ப்ரேமையுள்ள பக்தர்கள் தமது தெய்விகமான லீலைகளை அனுபவிக்கட்டுமே என்ற க்ருபையினாலும், திவ்யமங்கள ஸ்வரூபங்களில் வெளிப்படுகிறார். அந்த அவதாரங்களில் எடுத்த ஸ்வரூபங்களையும், திருக்கல்யாண குணங்களையும், ப்ரபாவங்களையும், திருநாமங்களையும், பெருமைகளையும், திவ்ய லீலைகளையும் கேட்டும், பாடியும், நினைத்தும், மகிழ்ந்தும் எளிதாக ஸம்ஸாரக் கடலைக் கடந்து கரையேறட்டும் என்பது பகவானின் திருவுள்ளம். இவை அவதாரம் செய்யாமல் ஈடேறா.

**கேள்வி:** 'நான் யுகந்தோறும் அவதரிக்கிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'நான் ஒவ்வொரு யுகத்திலும், அந்தந்த யுகதர்மங்கள் நடைபெறுதலைவிடத் தர்மத்திற்குக் கேடு மட்டுமே அதிகமாகும் பொழுது, தேவைக்கேற்பத் திரும்பத் திரும்ப அவதரிக்கிறேன். இது ஒரு யுகத்தில் ஒரு முறைதான் அவதாரம் நிகழ வேண்டும் என்ற கட்டாயம் இல்லை' என்று கூறுகிறார்.

**பொருத்தம்: இவ்விதம் பகவான், தமது தெய்விக அவதாரங்களின் ஸந்தர்பம், காரணம், லக்ஷ்யம் இவற்றை விளக்கி, அப்படிப்பட்ட அவதாரங்களும், லீலைகளும் தெய்விகமானவையே என்பதைத் தத்வரீதியாக உணர்வதன் பயனை அடுத்ததாகக் கூறுகிறார்—**

जन्म कर्म च मे दिव्यमेवं यो वेत्ति तत्त्वतः।
त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन॥ ९॥

**ஜந்ம கர்ம ச மே தி₃வ்யமேவம் யோ வேத்தி தத்த்வத: ।**

**த்யக்த்வா தே₃ஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந ॥ 9 ॥**

**அர்ஜுந** – அர்ஜுன! **மே** – என்னுடைய, **ஜந்ம** – பிறப்பும், **கர்ம ச** – செயலும், **தி₃வ்யம்** – தெய்விகமானவை (அப்பழுக்கற்றவை; உலகியலுக்கு அப்பாற்பட்டவை). **ஏவம்** – இவ்விதம், **ய:** – எவன், **தத்த்வத:** – தத்வரீதியாக, **வேத்தி** – அறிந்து கொள்கிறானோ, **ஸ:** – அவன், **தே₃ஹம்** – உடலை, **த்யக்த்வா** – துறந்து, **புந:** – மறுபடியும், **ஜந்ம** – பிறவியை, **ந ஏதி** – அடைவதில்லை. (ஆனால்), **மாம்** – என்னையே, **ஏதி** – அடைந்துவிடுகிறான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அர்ஜுன! என்னுடைய பிறப்பும் செயலும் தெய்விகமானவை; அப்பழுக்கற்றவை; உலகியலுக்கு அப்பாற்பட்டவை. இவ்விதம் எவன் தத்வரீதியாக அறிந்து கொள்கிறானோ அவன் உடலைத் துறந்து மறுபடியும் பிறவியை அடைவதில்லை. ஆனால் என்னையே அடைந்துவிடுகிறான்.

**கேள்வி:** 'பகவானின் பிறப்பு தெய்விகமானது என்பதைத் தத்வரீதியாக அறிவது' என்றால் என்ன?

**பதில்:** எல்லா வல்லமையும் படைத்த, பூரண ப்ரம்மம் ஆகிய பகவான், உண்மையில் பிறப்புக்கும், இறப்புக்கும் அப்பாற்பட்டவர். மற்ற ஜீவர்களுடையதைப் போன்றதன்று அவருடைய பிறப்பு. அவர் தம்முடைய பக்தர்களுக்கு அருள் புரிவதற்காகவும், தம்முடைய தெய்விகமான லீலைகளினால் அவர்களுடைய மனதைத் தம்பால் ஈர்த்து, அவர்கள் தம்மை தர்சனம் செய்வது, தொட்டு வணங்குவது, நெருங்கிப் பேசுவது முதலியவற்றுக்கு வாய்ப்பளித்து ஸுகமளிப்பதற்காகவும், உலகில் தமது புகழ் பரவி, அதைக் கேட்டுக் கீர்த்தனம் செய்து, நினைத்து நினைத்து, மனம் பரிசுத்தமாகி, மக்களின் பாவங்கள் விலகுவதற்காகவும், உலகத்தில் பாவம் செய்பவர்களை அழிப்பதற்காகவும், தர்மத்தை நிலைநாட்டுவதற்காகவும்தான் அவதார லீலைகள் செய்கிறார். இவ்விதம் பகவானின் லீலைகள் அடங்கிய அவதாரம் குற்றமற்றதும், உலகியலைக் கடந்ததுமாகும். உலகத்தினரது மங்களத்தின் பொருட்டுத்தான் பகவான் இவ்விதம் மனிதர் முதலிய பிறவிகளில் உலகத்தார் முன் வெளிப்படுகிறார். ஆயினும், பகவானுடைய திருவடிவம் ஐம்பெரும் பூதங்களால் ஆனது அன்று. தெய்விகமான, சுத்தசின்மயமான, ஒளியே உருவமான, பரிசுத்தமான, உலகியலுக்கு அப்பாற்பட்டதான ஸ்வரூபம்தான் அவருடையது. அவருடைய பிறவிக்கு ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களோ, கர்மத்தின் ஸம்ஸ்காரங்களோ காரணமன்று. அவர் மாயைக்குட்பட்டுப் பிறவி பெறுபவர் அல்லர். பகவான் தாமே, தம் ப்ரக்ருதியை ஆட்கொண்டு, யோக சக்தியினால் மனிதர் முதலான உருவங்களில், உலகத்தின்பால் கருணை காரணமாக அவதரிக்கிறார். இவை அவதார தத்வங்கள். இவற்றில் சிறிது கூட ஐயமோ, 'இப்படியெல்லாம் இருக்காது' என்ற எண்ணமோ, 'இவையெல்லாம் பொய்' என்ற முரணான எண்ணமோ கொள்ளாமல் பூரண நம்பிக்கை கொள்ளவேண்டும். உருவத்துடன் வெளிப்பட்ட பகவானை, ஸாதாரண மானுடப் பிறவியாகக் கருதாமல், "எல்லா வல்லமைகளும் படைத்தவர்; எல்லாவற்றிற்கும் ஈசுவரர்; எல்லோர் உள்ளங்களிலும் உறைபவர்; ஸாக்ஷாத் ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்மம்" என்று அறிவதே, 'தத்வரீதியாக அவதாரங்களின் தெய்விகத் தன்மையை உணர்வது' ஆகும். இதைத்தான் இந்த அத்யாயத்தின் ஆறாவது ச்லோகம் விளக்குகிறது. *7/24,25, 9/11,12*களில் இந்தத் தத்வங்களை அறியாமல் பகவானை ஸாதாரண மனிதப் பிறவியாக நினைப்பவர்களை இகழ்கிறார். *10/3*ல் இந்தத் தத்வமறிந்தவர்களைப் புகழ்கிறார்.

இப்படி பகவானின் அவதாரம் தெய்விகமானது என்ற தத்வம் அறிந்தவர்களுக்கு, அவருடைய பிரிவு ஒருகணம் கூடப் பொறுக்க முடியாதது. பகவானிடம் மிகுந்த ச்ரத்தையும், ஒரே குறியான அநன்ய ப்ரேமையும் கொண்டு, அவர்கள் வேறொன்றையும் நினையாமல் பகவானையே அநன்ய சிந்தனை செய்கிறார்கள்.

**கேள்வி:** பகவானுடைய செயல்கள் தெய்விகமானவை என்பதைத் தத்வரீதியாக உணர்வது எப்படி?

**பதில்:** பகவான் நிகழ்த்தும் படைப்பு, அவதார லீலைகள் முதலிய செயல்களில் எல்லாம் சிறிது கூட அவருக்கும், சுயநலத்திற்கும் ஸம்பந்தம் இல்லை. உலகத்தாருக்கு அருள்பாலிப்பதற்காகவே, மனிதன் முதலிய அவதாரங்களில், பலவிதமான செயல்களைச் செய்கிறார் (*3/22,23*). பகவான் தம் ப்ரக்ருதியின் வழியாக எல்லாச் செயல்களையும் புரிந்தாலும், அவற்றில் 'தாம் கர்த்தா' என்ற அபிமானமில்லாமையால், அவர் செய்வதுமில்லை, பந்தப்படுவதுமில்லை. பகவானுக்கு அந்தக் கர்மங்களின் பயனில் சிறிது

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கூட ஸ்ப்ருஹா (பற்று) கிடையாது (4/13,14). அவர் மூலம் ஏற்படும் செயல்கள் எல்லாம் உலக நன்மைக்காகவே நேர்பவை (4/8). ஒவ்வொரு செயலிலும் உலக நன்மை நிறைந்திருக்கிறது. அவர் அனந்த கோடி ப்ரம்மாண்டங்களுக்கு ஆண்டவனாக இருந்தபோதிலும், அனைத்து ஜீவராசிகளோடும், கர்வமில்லாமல், தயையுடனும், ப்ரேமையுடனும் ஸமமாகப் பழகுகிறார் (9/29). அவரை யார் எவ்விதம் வழிபடுகிறாரோ, பகவானும் அப்படியே அவரை அணுகுகிறார் (4/11). அநன்ய பக்தர்களுடைய யோக க்ஷேமங்களைத் தாமே நிறைவேற்றுகிறார் (9/22). அவர்களுக்கு தெய்விக அறிவு புகட்டுகிறார் (10/10,11). பக்தி என்ற படகில் ஏற்றி, பக்தர்களை ஸம்ஸாரக் கடலிலிருந்து விரைவில் கரை சேர்ப்பதற்காகத் தாமே படகோட்டி ஆகிறார் (12/7). இவ்விதம் பகவானுடைய செயல்கள் எல்லாம் அஹங்காரம், பற்று, ஆசை முதலிய மாசுகள் அறவே அற்றவை; நிர்மலமானவை; பரிசுத்தமானவை; உலகத்தோரின் மங்களத்திற்காகவே நடைபெறுபவை; உலகத்தில் நீதி, தர்மம், சுத்தமான ப்ரேமை, பக்தி முதலியவற்றை ப்ரசாரம் செய்வதற்காகவே நிகழ்பவை. இவ்வளவு கார்யங்களில் ஈடுபட்டாலும், பகவானுக்கு அந்தக் கர்மங்களில் சிறிது கூட ஸம்பந்தம் கிடையாது. அவர் அவற்றிற்கு அப்பாற்பட்டவர்; கர்த்தா அல்லர். இதை நன்றாக உணர்வது, இதில் சிறிது கூட, 'இப்படி இருக்காது. இதெல்லாம் பொய்' என்று எண்ணாமல் இருப்பது, பூரணமாக இவற்றை அப்படியே நம்புவது – இவைதாம் பகவானுடைய செயல்கள் தெய்விகமானவை என்று உணர்வதற்கு அடையாளம். இப்படி அறிந்து கொண்டவர்களுடைய செயல்கள் கூடப் பரிசுத்தமாகவும், உலகியலுக்கு அப்பாற்பட்டதாகவும் இருக்கும். அதாவது அவர்களும் எல்லோருடனும் தயவு, ஸமபாவனை, தர்மம், நீதி, வினயம், தன்னலமற்ற ப்ரேமை இவற்றுடன் பழகுவார்கள்.

**கேள்வி:** பகவானுடைய அவதாரம், பகவானுடைய செயல் என்ற இரண்டையும் தெய்விகமானவை என்று தெரிந்து கொண்டால்தான், பகவானை அடைய முடியுமா, ஒன்றை அறிந்தாலே போதுமா?

**பதில்:** இரண்டில் ஒன்றைப் புரிந்துகொண்டாலே போதும், பகவானை அடையலாம் (4/14, 10/3). இரண்டையும் புரிந்து கொண்டு விட்டால் பகவானை அடையலாம் என்று சொல்லவும் வேண்டுமா?

**கேள்வி:** 'இப்படி அறிந்து கொண்டவர்களுக்கு மறுபிறவி கிடையாது; என்னையே அடைவார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'மறுபிறவி இல்லையென்றால், அவர் என்ன ஆவார்' என்ற கேள்விக்கு விடையாகவே, பகவான் 'அவர் என்னை அடைவார்' என்கிறார். பகவானை அடைந்து விட்டவருக்கு மறுபிறவி கிடையாது. இதுவே ஸித்தாந்தம் (8/16).

**கேள்வி:** பகவானுடைய அவதாரம், செயல்கள் தெய்விகமானவை என்று அறிந்து கொண்டவர்கள் தங்களுடைய உடல் அழிந்த பிறகுதான், பகவானை அடைய முடியுமா? இப்பிறவியிலேயே, உயிரோடு இருக்கும் போதே அடைய முடியாதா?

**பதில்:** இப்பிறவியில் உயிரோடு இருக்கும்போதே, அந்தப் பேறு கிடைக்காதென்பதில்லை. பகவானுடைய பிறப்பும், செயலும் தெய்விகமானவை என்று முழுமையாக உணர்ந்தவருக்கு, அதே கணம் பகவான் ப்ரத்யக்ஷம் ஆகிறார். அவ்வாறு உணர்ந்தவருக்கு அவர்கள் இறந்த பிறகு மறுபிறவி கிடையாது. அவர்கள் பகவானுடைய பரமபதத்தை அடைவார்கள் என்ற கூடுதல் குறிப்பை எடுத்துச் சொல்வதற்காகவே, 'உடலை விட்டபிறகு என்னையே அடைவார்கள்' என்று கூறுகிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் பகவானுடைய அவதாரம், செயல்கள் தெய்விகமானவை எனத் தத்வரீதியாக அறிவதற்குப் பயன் கூறப்பட்டதே, அது அநாதியாக வழி வழியாகக் கிடைத்து வருகிறது என்பதைத் தெளிவுபடுத்துவதற்காக, அடுத்த ச்லோகத்தை பகவான் கூறுகிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



वीतरागभयक्रोधा मन्मया मामुपाश्रिताः।
बहवो ज्ञानतपसा पूता मद्भावमागताः॥ १०॥

வீதராக₃ப₄யக்ரோத₄ா மந்மயா மாமுபாஶ்ரிதா: ।
ப₃ஹவோ ஜ்ஞாநதபஸா பூதா மத்₃ப₄ாவமாக₃தா: ॥ 10 ॥

**வீத ராக₃ ப₄ய க்ரோத₄ா:** – ராகம் (விருப்பம்), பயம், கோபம் இவை அறவே யற்றவர்களும், **மந்மயா:** – வேறெதிலும் நாட்டமில்லாமல் என்னிடமே ப்ரேமையுடன் ஒன்றியவர்களும், **மாம் உபாஶ்ரிதா:** – என்னையே புகலாகக் கொண்டவர்களுமான, **ப₃ஹவ:** – பலரும், **ஜ்ஞாநதபஸா** – (மேற்கூறிய) ஞானம் என்னும் தவத்தினால், **பூதா:** – தூயவர்களாகி, **மத்₃ப₄ாவம்** – என் ஸ்வரூபத்தை, **ஆக₃தா:** – அடைந்திருக்கிறார்கள்.

ராகம் (விருப்பம்), பயம், கோபம் இவை அறவேயற்றவர்களும், வேறெதிலும் நாட்டமில்லாமல் என்னிடமே ப்ரேமையுடன் ஒன்றியவர்களும், என்னையே புகலாகக் கொண்டவர்களுமான பலரும் மேற்கூறிய ஞானம் என்னும் தவத்தினால் தூயவர்களாகி என் ஸ்வரூபத்தை அடைந்திருக்கிறார்கள்.

**கேள்வி:** 'வீத ராக பய க்ரோதா:' என்ற சொல் யாரைக் குறிக்கிறது? இங்கே இந்த அடைமொழி இடுவதன் குறிப்பு என்ன?

**பதில்:** ஆசைதான் ராகம். துயரம் நேருமோ என்று மனதில் உண்டாகும் பதற்றம்தான் பயம். தனக்குத் தீங்கு விளைவித்தவர் மீதும், நீதிக்கு விரோதமாகவோ, தன் மனப்பாங்குக்கு விரோதமாகவோ நடப்பவர் மீதும் ஆத்திரம் கொள்வது க்ரோதம். இந்த மூன்று விகாரங்களும் அறவே அற்றுப் போனவர்களை 'வீத ராக பய க்ரோதா:' என்கிறார். பகவானுடைய தெய்விகமான பிறப்பையும், செயல்களின் தத்வத்தையும் உண்மையாக அறிந்து கொண்டவர்களுக்கு, பகவானிடத்தில் அநன்ய ப்ரேமை பெருகும். ஆகவே பகவானைத் தவிர வேறு எதிலும் அவர்களுக்குச் சிறிது கூட ஆசை இருக்காது. பகவானுடைய தத்வத்தை அறிந்து கொண்டமையால், அவர்களுக்கு எங்கும் பகவானுடைய நேரிடை அனுபவம் கிடைக்கும். எங்கும் பகவான் இருக்கிறார் என்ற அனுபவத்தினால், அவர்கள் ஒருபோதும் எதற்காகவும் பயப்பட மாட்டார்கள். அவர்களுக்கு யாரால் எது நேர்ந்தாலும் அது பகவானுடைய விருப்பப்படி நடக்கிறது என்றும், உலகியலில் என்ன நடந்தாலும் அது பகவானுடைய லீலையே என்றும் அறிவார்கள். ஆகவே எக்காரணம் கொண்டும் அவர்களுடைய உள்ளத்தில் க்ரோதம் உண்டாகாது. இப்படி பகவானுடைய பிறப்பையும், செயல்களையும் பற்றிய உட்பொருளை அறிந்து கொண்ட பக்தர்களிடம் பகவானுடைய அருளினால் எல்லாத் தீய இயல்புகளும் அறவே அற்றுப் போய்விடும். இந்தக் கருத்தை விளக்குவதற்காகவே, இங்கு 'வீத ராக பய க்ரோதா:' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டிருக்கிறது.

**கேள்வி:** 'மந்மயா:' என்றால் என்ன?

**பதில்:** பகவானிடத்தில் வேறொன்றிலும் பற்றிலாப் பேரன்பு உண்டான காரணத்தினால், அவர்களுக்கு எங்கும் பகவானே தெரிவார். அவர்களை 'மந்மயா:' என்ற சொல் குறிப்பிடுகிறது. பகவானுடைய பிறப்பையும், செயல்களையும் தெய்விகமானவை என்று உணர்ந்து கொண்டு, பகவானைப் புரிந்து கொள்ளும் ஞானிகளான பக்தர்களுக்கு பகவானிடம் அநன்ய ப்ரேமை உண்டாகிறது. அவர்கள் இடைவிடாமல் பகவானிடமே ஒன்றிவிடுகிறார்கள். எங்கும் பகவானையே காண்கிறார்கள்.

**கேள்வி:** 'மாம் உபாஶ்ரிதா:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** எவர்கள் பகவானைச் சரண் அடைகிறார்களோ, பகவானிடமே தம் பொறுப்பை ஒப்புவிக்கிறார்களோ, பகவானிடமே ஸந்தோஷமாக மனதை ஈடுபடுத்துகிறார்களோ, எவர்கள் தமக்காக எந்தக் கார்யமும் செய்வதில்லையோ, 'எல்லாமே பகவானுடையவை' என்று மதித்து, அவருடைய ஆணையை நிறைவேற்றும் நோக்கத்துடன், அவருக்கு ஸேவை என்று கருதி, எல்லாக் கடமைகளையும் ஆற்றுகிறார்களோ, அவர்களை 'மாம் உபாஸ்ரிதா:' என்ற சொல் கூறுகிறது. எவ்விதத்திலும் பகவானையே ஸரணமாகப்பற்றி, அவரிடமே தம் பொறுப்புகளை ஒப்புவித்துக் கவலையற்றிருக்கக் கூடிய ஞானிகளான பகவத் பக்தர்களிடம் ஸரணாகதி என்ற தத்வம் முழுமையாக மலர்ந்திருக்கிறது.

**கேள்வி:** 'ஜ்ஞாநதபஸா' என்ற சொல்லுக்கு, 'ஆத்ம ஞானமாகிய தவம்' என்ற பொருள் கொள்ளாமல், 'பகவானுடைய பிறவியும், செயல்களும் தெய்விகமானவை என்ற ஞானம்' என்று பொருள் கூறுவதன் கருத்து என்ன? அப்படிப்பட்ட ஞானத் தவத்தினால் பரிசுத்தமாகி பகவானுடைய ஸ்வரூபத்தை அடைவார்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கு ஸாங்க்யயோகம் பற்றிய பேச்சு இல்லை; பக்தி பற்றிப் பேசும் ஸந்தர்பம். முன் ச்லோகத்தில் பகவானுடைய பிறப்பு–செயல்களை தெய்விகமென அறிவதால், பகவானை அடையலாம் என்று கூறினார். அதை ப்ரமாணமாகக் கொண்டது இந்த ச்லோகம். ஆகவே இந்த ச்லோகத்தில் 'ஜ்ஞாநதபஸா' என்ற பதத்திற்கு 'ஆத்ம ஞானம்' என்பது பொருள் அன்று. பகவானுடைய பிறப்பு, கர்மம் – தெய்விகமானவை என்று அறிந்து கொள்வதையே ஞானம் என்று கொள்ள வேண்டும். இப்படிப்பட்ட ஞானத் தவத்தின் ப்ரபாவத்தினால் பகவானிடம் 'அநந்ய ப்ரேமை' உண்டாகிறது. பக்தனுடைய எல்லாப் பாவங்களும், தாபங்களும் அழிகின்றன. உள்ளத்திலிருந்து எல்லாவிதமான தீய இயல்புகளும் ஒழிந்து விடுகின்றன. அவனுடைய செயல்கள் அனைத்தும் பகவானுடைய செயல்கள் போன்றே தெய்விகமாகின்றன. அவன் எப்பொழுதும் பகவானை விட்டு விலகுவதில்லை. அவனுக்கு எப்பொழுதும் பகவான் ப்ரத்யக்ஷமாக இருக்கிறார். இதுதான் ஞானத் தவத்தினால் பெறும் பரிசுத்தமான நிலை. அதன் மூலம் பகவானை அடைந்து விடலாம்.

**பொருத்தம்:** முன் ச்லோகங்களில், 'எனது பிறப்பும், செயல்களும் தெய்விகமானவை என்று அறிந்து, அநன்ய ப்ரேமை கொண்ட பக்தர்கள் என்னை அடைவார்கள்' என்று கூறினார். பகவான் எப்படி, எந்த முறையில் அவர்களுக்குக் கிடைக்கிறார் என்ற கேள்வி பிறக்கிறது. அதற்கு இங்கே விடையளிக்கிறார்—

**ये यथा मां प्रपद्यन्ते तांस्तथैव भजाम्यहम्।**
**मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः॥ ११॥**

**யே யதா₂ மாம் ப்ரபத்₃யந்தே தாம்ஸ்ததை₂வ ப₄ஜாம்யஹம் ।**
**மம வர்த்மாநுவர்தந்தே மநுஷ்யா: பார்த₂ ஸர்வஸ₂: ॥ 11 ॥**

**பார்த₂** – அர்ஜுன! **யே** – எந்த பக்தர்கள், **மாம்** – என்னை, **யதா₂** – எவ்விதம், **ப்ரபத்₃யந்தே** – வழிபடுகிறார்களோ (அடைய விரும்புகிறார்களோ), **அஹம்** – நானும், **தாந்** – அவர்களை, **ததா₂ ஏவ** – அதற்கேற்பவே, **ப₄ஜாமி** – அணுகுகிறேன் (அருள்புரிகிறேன். ஏனெனில்), **மநுஷ்யா:** – எல்லா மனிதர்களும், **ஸர்வஸ₂:** – எல்லா (பல்வேறு) விதங்களிலும், **மம** – என்னுடைய, **வர்த்ம** – வழியை, **அநுவர்தந்தே** – பின்பற்றுகிறார்கள்.

அர்ஜுன! எந்த பக்தர்கள் என்னை எவ்விதம் வழிபடுகிறார்களோ நானும் அவர்களை அதற்கேற்பவே அணுகுகிறேன் (அருள்புரிகிறேன்). ஏனெனில் எல்லா மனிதர்களும் பல்வேறு விதங்களிலும் என்னுடைய வழியைப் பின்பற்றுகிறார்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'பக்தர்கள் என்னை எவ்விதம் வழிபடுகிறார்களோ, அவர்களை அவ்விதமே நான் அணுகுகிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "எனது பக்தர்கள் என்னை வழிபடுவதில் பல வகையுண்டு. தத்தம் விருப்பத்திற்கேற்றவாறு, என்னுடைய வெவ்வேறு ஸ்வரூபங்களில் பக்தர்கள் ஈடுபடுகிறார்கள். அவர்களுடைய ஈடுபாட்டிற்கேற்றவாறு என்னை வழிபடுகிறார்கள். ஆகவே, நானும் அவர்களது பாவனைக்கேற்றவாறு, அந்தந்த ஸ்வரூபங்களில் தர்சனம் அளிக்கிறேன். நான்கு திருக்கரங்களுடன் கூடிய விஷ்ணுவை உபாஸிப்பவர்களுக்கு ஸ்ரீவிஷ்ணு ஸ்வரூபத்திலும், ஸ்ரீராம ஸ்வரூபத்தை உபாஸனை செய்பவர்களுக்கு ஸ்ரீராம ஸ்வரூபத்திலும், ஸ்ரீக்ருஷ்ண ஸ்வரூபத்தை உபாஸிப்பவர்களுக்கு ஸ்ரீக்ருஷ்ண ஸ்வரூபத்திலும், சிவபெருமானை உபாஸிப்பவர்களுக்கு சிவ ஸ்வரூபத்திலும், தேவி ஸ்வரூபத்தில் உபாஸிப்பவர்களுக்கு தேவி ஸ்வரூபத்திலும், உருவமற்ற எங்கும் நிறை பரம்பொருளாக உபாஸிப்பவர்களுக்கு எங்கும் நிறை பரம்பொருளாகவும் அனுபவம் அளிக்கிறேன். இவ்விதமே மத்ஸ்யம், கூர்மம், நரஸிம்ஹர், வாமனர் முதலிய பற்பல அவதார ஸ்வரூபங்களை உபாஸிப்பவர்களுக்கு, அந்தந்த ஸ்வரூபங்களிலும் தர்சனம் கொடுத்து அவர்களைக் கரையேற்றுகிறேன். இது தவிர அவர்கள் எந்தெந்த முறையில், எந்தெந்த பாவனையில் வழிபடுகிறார்களோ, அதே முறையில் அந்தந்த ஸ்வரூபத்தை அனுஸரித்து, தர்சனம் அளிக்கிறேன். என்னைச் சிந்தனை செய்பவர்களை, நானும் அப்படியே சிந்தனை செய்கிறேன். என்னை அடையத் துடிப்பவர்களுக்காக, நானும் துடிக்கிறேன். எவர் என் பிரிவைத் தாங்காமல் தவிக்கிறார்களோ, அவர்கள் பிரிவை நானும் தாங்கமாட்டேன். தம்முடைய எல்லா உடைமைகளையும் என்னிடம் ஒப்புவித்து விடுபவர்களுக்கு, நான் என்னுடைய எல்லா உடைமைகளையும் அர்ப்பணம் செய்துவிடுவேன். இடைச்சிறுவர்கள் போல என்னுடன் தோழமை கொள்பவர்களுக்குத் தோழனாவேன். நந்தபாபா, அன்னை யசோதையைப்போல என்னைக் குழந்தையாக பாவித்து, என்னிடம் ஈடுபடுகிறவர்களுக்குக் குழந்தையாகவே நான் ஆகிவிடுவேன்; ருக்மிணியைப் போல என்னைக் கணவனாக பாவிப்பவர்களுக்குக் கணவனாகவும், ஹனுமானைப் போல என்னை ஸ்வாமி என்று மதித்து ஸேவை செய்பவர்களுக்கு நான் ஸ்வாமியாகவும், கோபிகைகளைப் போல என்னிடம் மாதுர்ய பாவம் கொண்டு அன்பு செலுத்துகிறவர்களுக்குக் காதலனாகவும் நடந்து கொண்டு, அவர்களுக்கு மங்களத்தை அருள்வேன்; தெய்விக லீலாரஸாம்ருதத்தை அனுபவிக்க வைப்பேன்" என்று பகவான் கூறுகிறார்.

**கேள்வி:** 'மனிதர்கள் எல்லாவிதத்திலும் என் வழியையே பின்பற்றுவார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "மக்கள் என்னைப் பின்பற்றுகிறார்கள். ஆகவே, நான் அன்புடனும், நட்புணர்வுடனும் நடந்து கொண்டால், மற்றவர்களும் என்னைப் பார்த்துத் தன்னலமின்றி, ஒருவர் மற்றொருவருடன் முறையாக அன்புடனும், நட்புணர்வுடனும் பழகுவார்கள் என்று சுட்டிக் காட்டுகிறார். இந்த நீதியை உலகில் ப்ரசாரம் செய்வதற்காகக் கூட, நான் இப்படி நடந்து கொள்வது கடமையாகிறது. ஏனெனில் உலகில் தர்மத்தை நிலைநாட்டு வதற்காகத்தானே நான் அவதரித்திருக்கிறேன்" *(4/8)* என்கிறார் பகவான்.

**பொருத்தம்:** அப்படியானால், மக்கள் ஏன் பகவானைப் பூஜிக்காமல் மற்ற தெய்வங்களை உபாஸிக்கிறார்கள் என்ற கேள்வி பிறக்கிறது. அதற்கு விடை கூறுகிறார்—

काङ्क्षन्तः कर्मणां सिद्धिं यजन्त इह देवताः।
क्षिप्रं हि मानुषे लोके सिद्धिर्भवति कर्मजा॥ १२॥

**காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்₃தி₄ம் யஜந்த இஹ தே₃வதா: ।**
**க்ஷிப்ரம் ஹி மாநுஷே லோகே ஸித்₃தி₄ர்ப₄வதி கர்மஜா ॥ 12 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**இஹ** – இந்த, **மாநுஷே லோகே** – மானிட உலகில், **கர்மணாம்** – கர்மங்களின், **ஸித்₃தி₄ம்** – பயனை, **காங்க்ஷந்த:** – விரும்புபவர்கள், **தே₃வதா:** – தேவதைகளை, **யஜந்தே** – வழிபடுவார்கள். **ஹி** – ஏனெனில் (அவர்களுக்கு), **கர்மஜா** – கர்மங்களினால் விளையும், **ஸித்₃தி₄:** – பயன், **க்ஷிப்ரம்** – விரைவில், **ப₄வதி** – கிடைத்துவிடுகிறது.

இந்த மானிட உலகில் கர்மங்களின் பயனை விரும்புபவர்கள் தேவதைகளை வழிபடுவார்கள். ஏனெனில் அவர்களுக்கு கர்மங்களினால் விளையும் பயன் விரைவில் கிடைத்துவிடுகிறது.

**கேள்வி:** 'இஹ மாநுஷே லோகே' என்பதற்கு என்ன பொருள்?

**பதில்:** யாகம் முதலிய கர்மங்களினால், இந்த்ரன் முதலான தேவதைகளை உபாஸிக்கும் பொறுப்பு மனிதப் பிறவி பெற்றவர்களுக்குத்தான் உண்டு; மற்ற பிறவிகளுக்குக் கிடையாது என்ற கருத்தை விளக்குவதற்காகவே 'இஹ மாநுஷே லோகே' என்று கூறுகிறார்.

**கேள்வி:** கர்ம பயன்களை விரும்புபவர்கள் தேவதைகளைப் பூஜிக்கிறார்கள். ஏனெனில் கர்மங்களினால் உண்டாகும் ஸித்தி–பயன் அவர்களுக்கு விரைவில் கிடைக்கிறது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "உலகியல் போகங்களில் ஈடுபாடு உள்ளவர்கள் தம் கர்மங்களின் பயனை மனைவி, மக்கள், செல்வம், வீடு, கௌரவம், பெருமை என்ற ரீதியில் பெற விரும்புபவர்கள். இவர்களது விவேக ஞானம் பலவித கர்ம வாஸனைகளால் மறைக்கப்பட்டுவிட்டதால், அவர்கள் என்னை உபாஸிக்காமல், உலகியல் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காக, இந்த்ரன் முதலான தேவதைகளை உபாஸித்துக் கொண்டிருக்கிறார்கள் (7/20,21,22; 9/23,24). ஏனெனில் அந்த தேவதைகளைப் பூஜை செய்பவர்களுக்கு, அவர்கள் செய்யும் கர்மங்களின் பயன் உடனே கிடைக்கிறது. தம்மை உபாஸிப்பவர்களுக்குத் தாம் அளிக்கும் போகங்கள் நன்மை தருமா, தீங்கு விளைவிக்குமா என்று சிந்திக்காமல், அவற்றை அளிப்பது மற்ற தேவதைகளின் இயல்பு; அவர்கள் கர்மம் சரிவர அனுஷ்டிக்கப்பட்டதா, அதன் பிரிவு, உட்பிரிவுகள் குறைவற நிறைவேறினவா என்று மட்டும்தான் கவனிப்பார்கள்; அவற்றின் பயனைத் தங்களுடைய அதிகாரத்திற்கு உட்பட்ட அளவில், அந்தச் செயலுக்குகந்தபடி அளிப்பார்கள்; நான் அப்படிச் செய்வதில்லை. என்னுடைய பக்தர்களுக்கு உண்மையில் எது ஹிதம், எது அஹிதம் என்பதை ஆலோசித்து, பக்திக்குப் பயனை நானே நிர்ணயம் செய்வேன். என்னுடைய பக்தன் பயனில் பற்றுடன் என்னை பூஜித்தானேயானால், அவனுடைய அந்த விருப்பத்தைப் பூர்த்தி செய்வதும் உண்டு. அப்படிப் பூர்த்தி செய்யும்போதே, அவனுக்கு விஷய போகங்களில் ருசியற்றுப் போகும்படியாக, அவற்றிற்கும் மேலான ஆனந்தத்தைக் கொடுத்து, அந்தச் சிற்றின்பங்களில் வைராக்யத்தை உண்டு பண்ணி, என்னிடம் ப்ரேமையையும், நம்பிக்கையையும் அதிகம் ஆக்குவேன். அதனால் உலகியலில் ஊறிப் போன மக்களுக்கு என்னுடைய பக்தியின் பயன் விரைவில் கிடைப்பதாகத் தெரிவதில்லை. அந்த மந்தபுத்தியுடைய மக்கள் கர்மங்களின் பயன் உடனே கிடைக்க வேண்டுமென்று விரும்பி, மற்ற தேவதைகளைப் பூஜித்துக் கொண்டிருக்கிறார்கள்" என்கிறார் பகவான்.

**பொருத்தம்:** 9வது ச்லோகத்தில் பகவானுடைய தெய்விகமான பிறப்பு, செயல்கள் இவற்றைத் தத்வரீதியாக அறிவதன் பயன் பகவானை அடைவது எனப்பட்டது. அதற்கு முன் பகவானுடைய பிறப்பு தெய்விகமானது என்பது நன்றாக விளக்கப்பட்டது. ஆனால் பகவானுடைய செயல்கள் தெய்விகமானவை என்பதைத் தெளிவாக விளக்கவில்லை. அடுத்த இரண்டு ச்லோகங்களில் பகவான் தாம் செய்யும் படைப்பு முதலிய செயல்களில் தமக்குக் கர்த்தா என்ற எண்ணம், பாரபக்ஷம், ஆசை இவை கிடையா என்பதை எடுத்துக்காட்டி, அவை தெய்விகமானவை என்பதை விளக்குகிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**चातुर्वर्ण्यं मया सृष्टं गुणकर्मविभागशः।**
**तस्य कर्तारमपि मां विद्ध्यकर्तारमव्ययम्॥ १३॥**

**சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் கு₃ணகர்மவிப₄ாக₃ஶ: ।**
**தஸ்ய கர்தாரமபி மாம் வித்₃த்₄யகர்தாரமவ்யயம் ॥ 13 ॥**

**சாதுர்வர்ண்யம்** – வேதியர், வேந்தர், வணிகர், வேளாளர் என்ற நான்கு வர்ணங்கள் கொண்ட ஸமூஹம், **கு₃ணகர்மவிப₄ாக₃ஶ:** – குணங்களையும், கர்மங்களையும் ஒட்டிய பிரிவுகளாக, **மயா** – என்னால், **ஸ்ருஷ்டம்** – படைக்கப்பட்டது. (இங்ஙனம்), **தஸ்ய** – அந்த (படைப்பு முதலிய செயல்களைச் செய்யும்), **கர்தாரம் அபி** – கர்த்தாவாக இருந்தபோதிலும், **அவ்யயம்** – அழிவற்ற (பரமேசுவரனாகிய), **மாம்** – என்னை (உண்மையில்), **அகர்தாரம்** – கர்த்தா அல்லன் என்றே, **வித்₃தி₄** – (நீ) அறிவாயாக.

வேதியர் வேந்தர் வணிகர் வேளாளர் என்ற நான்கு வர்ணங்கள் கொண்ட ஸமூஹம் குணங்களையும் கர்மங்களையும் ஒட்டிய பிரிவுகளாக என்னால் படைக்கப்பட்டது. இங்ஙனம் அந்தப் படைப்பு முதலிய செயல்களைச் செய்யும் கர்த்தாவாக இருந்தபோதிலும் அழிவற்ற பரமேசுவரனாகிய என்னை உண்மையில் கர்த்தா அல்லன் என்றே நீ அறிவாயாக.

**கேள்வி:** குணகர்மங்கள் என்றால் என்ன? 'அவற்றைப் பிரித்து, அவற்றிற்கேற்றவாறு நான்கு வர்ணங்களின் ஸமூஹத்தை நான் படைத்தேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தொன்றுதொட்டு ஜீவர்கள் பல பிறவிகளில் கர்மம் செய்து கொண்டே இருக்கிறார்கள். அவை எல்லாவற்றின் பயனையும் அனுபவித்திருக்க மாட்டார்கள். அவற்றையொட்டி அவர்களுக்கு ஸத்வகுணம், ரஜோகுணம், தமோகுணம் இவை கூடவோ, குறைவாகவோ அமையும். பகவான் மனிதர்களைப் படைக்கும்போது, அவர்களுடைய குணங்கள், கர்மங்கள் இவற்றிற்கேற்றவாறு, அந்தணர் முதலிய வர்ண வகுப்புகளில் பிறவியை அளிக்கிறார். ஸத்வகுணம் அதிகமாக இருப்பவர்களை ப்ராம்மண வர்ணத்தில் பிறக்க வைக்கிறார். ஸத்வகுணம் கலந்த ரஜோகுணம் அதிகம் உள்ளவர்களை க்ஷத்ரியராகவும், தமோகுணம் கலந்த ரஜோகுணம் அதிகம் உள்ளவர்களை வைசியர்களாகவும், ரஜோகுணம் கலந்த தமோகுணம் மிக்கவர்களை நான்காம் வர்ணத்திலும் பிறக்க வைக்கிறார். இவ்விதம் பிரிக்கப்பட்ட வர்ணங்களுக்கேற்றவாறு, அவர்கள் ஸ்வபாவத்திற்கேற்றபடி, அவர்களுக்கு எது ஸாத்யமாகுமோ, அப்படிப்பட்ட கர்மங்களையும் விதிக்கிறார். அதாவது புலன் அடக்கம், மன அடக்கம் முதலியவற்றிற்குத் தேவையான கர்மங்களை ப்ராம்மணர்களுக்கும், சூரவீரத்தனத்திற்கு ஏற்ற கர்மங்களை க்ஷத்ரியர்களுக்கும், உழவுத்தொழில், பசு பராமரிப்பு முதலிய கர்மங்களை வைசியர்களுக்கும், ஸேவையை நான்காம் வர்ணத்தவருக்கும் அமைத்துக் கொடுக்கிறார் *(18/41–44)*. இவ்விதம் குணகர்மப் பிரிவுகளுக்கேற்றபடி கர்மங்களைப் பிரித்துக் கொடுத்து, பகவான் நான்கு வகையான வர்ணங்களை அமைக்கிறார். இந்த ஏற்பாடு உலகில் சரிவர நடந்து வருகிறது. ஒரே வர்ணத்தில் பிறந்த ஆண், பெண்களுக்கு ஸந்ததிகள் பிறந்து வளரும்போது வர்ணம் சுத்தமாக இருக்கிறது. ஒரு குலத்தவர் வேறு வர்ணத்துப் பெண்ணை மணந்து, வர்ணக்கலப்பு ஆகாதவரை, இந்த ஏற்பாட்டில் ஒரு குறைபாடும் இல்லை. ஆங்காங்கு சிறு கலப்பு ஏற்பட்டாலும், இந்த வர்ண ஏற்பாடு ஏற்றத் தாழ்வோடு இன்னும் இருந்து கொண்டுதான் இருக்கிறது.

விளக்கவுரையின் இப்பகுதி கர்மங்கள், உபாஸனைகளைப் பற்றியது. மனிதர்களுக்கு மட்டுமே இவற்றில் பொறுப்பு இருப்பதால், மனிதர்களையே மனதில் கொண்டு இந்த விஷயம் சொல்லப்பட்டது. இதிலிருந்து தேவர்கள், பித்ருக்கள், விலங்குகள் விஷயத்திலும், பகவான் அந்தந்த ஜீவர்களுடைய குணங்கள், கர்மங்கள் இவற்றிற்கு ஏற்றவாறு பிறவிகளை அமைக்கிறார் என்று தெரிந்து கொள்ளவேண்டும். ஆகவே இந்தப் படைப்பு, அமைப்பு இவற்றில் பகவானுக்கு எந்தவிதமான சார்போ, வஞ்சனையோ கிடையாது என்பதை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உணர்த்துவதற்காகத்தான், 'என்னால் ஏற்படுத்தப்பட்ட இந்த வர்ணப் பிரிவு என்பது அவரவர்களுடைய குணங்கள், கர்மங்கள் இவற்றிற்கு ஏற்றவாறு அமைக்கப்பட்டது' என்று கூறுகிறார்.

**கேள்வி:** ப்ராம்மணர் முதலிய வர்ணப்பிரிவுகளை, அவர்களுடைய பிறவியினால் கணிக்கவேண்டுமா? அல்லது அவர்களுடைய செயலைக் கொண்டு கணிக்கவேண்டுமா?

**பதில்:** பிறப்பு, செயல் இரண்டுமே வர்ணப்பிரிவிற்குத் துணை நிற்பவைதான். ஆகவே ஒரு வர்ணத்தினர் என்று முழுமையாக நிர்ணயிக்கப் பிறப்பு, செயல்கள் இரண்டையும் சேர்த்துத்தான் கணிக்கவேண்டும். ஆயினும் பிறப்பை வைத்துத்தான் ப்ராம்மணர் முதலிய வர்ணப்பிரிவு நடந்து வருகிறது என்று அறியவேண்டும். ஏனெனில் இவை இரண்டில் பிறவிக்குத்தான் முதன்மை கொடுக்கப்பட்டு வருகிறது. பெற்றோர்கள் ஒரே வர்ணத்தவராக இருந்து பிறவியில் கலப்பு ஏற்படாவிட்டால், இயற்கையாகவே கர்மங்களிலும் கலப்பு ஏற்படாது. ஆனாலும் சேர்க்கை, உணவு, கல்விப் பயிற்சி ஆகியவற்றின் தோஷத்தினால் கர்மங்களை ஆற்றுவதில் கொஞ்சம் குறைவு ஏற்படலாம். ஆயினும் பிறவியினால் வர்ணத்தை ஏற்றுக் கொண்டால், வர்ணத் தூய்மை காப்பாற்றப்படலாம். ஆயினும் செயலும் குற்றமற்றதாக இருக்கவேண்டும் என்ற நியதியில், தவறுவதற்குச் சலுகை கிடையாது. கர்மங்களை ஆற்றுவது என்பது முழுமையாக இல்லாமல் போய்விட்டால், பிறவியினால் ஏற்பட்ட வர்ணத் தூய்மையைக் காப்பாற்றுவது மிகவும் கடினம். ஆகவே வயிற்றுப் பிழைப்பு, திருமணம் முதலிய உலகியல் நடைமுறைகளுக்காக வர்ண வகுப்பில் பிறப்புக்கு முக்யத்வம் கொடுத்துவிட்டு, ஆத்ம மேன்மைக்குரிய விஷயங்களில் கர்மங்களுக்குத்தான் முக்யத்வம் கொடுக்கவேண்டும். ஏனெனில் ப்ராம்மண வகுப்பில் பிறந்தவனாயினும், அவனுடைய செயல் ப்ராம்மணனுக்குரியதாக இல்லாவிட்டால், அவனுக்கு ஆன்மிக மேன்மை கிடைக்காது. அதே போல் எல்லோருக்கும் பொதுவான புலன் அடக்கம், மனவடக்கம் முதலியவற்றைக் கடைப்பிடித்து, நல்லொழுக்கம் உள்ள நான்காம் வர்ணத்தவன், யாகம் செய்ய ஆரம்பித்துத் தன் வாழ்க்கையை நடத்த ஆரம்பித்தால் அவனுக்குப் பாவம்தான் ஸம்பவிக்கும்.

**கேள்வி:** தற்காலம் இந்த வர்ண அமைப்பு என்ற ஏற்பாடு சிதறிவிட்டதே. இந்த நிலையில் பிறப்பினால் வர்ணத்தைக் கண்டு கொள்ளாமல், மனிதர்களுடைய நடத்தையை வைத்து, அவர்கள் இன்ன வர்ணத்தவர்கள் என்று ஏற்றுக் கொண்டால் என்ன தவறு?

**பதில்:** இப்படி ஏற்பது சரியன்று. முதலாவதாக, வர்ண ஏற்பாட்டில் சிறிது தளர்ச்சி ஏற்பட்டிருந்தாலும், முழுமையாக அழிந்துவிட்டது என்று கூறமுடியாது. இரண்டாவதாக, ஜீவர்கள் முன்வினைப் பயனை அனுபவிக்கவேண்டும் என்று ஈசுவரன், அவர்களின் முன்வினைக்கேற்றவாறு அந்தந்த வர்ணங்களில் பிறப்பளிக்கிறார். பகவானின் இந்த ஏற்பாட்டை மாற்ற மனிதனுக்கு உரிமையில்லை. மூன்றாவதாக, நடத்தையை மட்டும் வைத்து இன்ன வர்ணத்தவர் என்று தீர்மானிப்பதும் முடியாத செயல். ஒரே பெற்றோர்களுக்குப் பிறந்த பிள்ளைகளின் நடத்தையிலேயே மிகுந்த மாற்றத்தைக் காண்கிறோம். ஒரே மனிதன் ஒரு நாளில் ஒரு சமயம் ப்ராம்மணன் போலவும், வேறொரு சமயம் மற்ற வர்ணத்தவர் போலவும் நடந்து கொள்கிறான். இந்த நிலையில் எப்படி வர்ணத்தை நிர்ணயிப்பது? தாழ்வை எவர்தான் ஏற்றுக் கொள்வார்? இதனால் உணவுப்பழக்கத்திலும், திருமணம் முதலியவற்றிலும் குழப்பம் ஏற்படும். கடைசியில், வர்ண அமைப்பு தலைகீழாக மாறிவிடும். வர்ண ஏற்பாடு என்பதே குலைந்து போய்விடும். ஆகவே செயலினால் மட்டும் வர்ண வகுப்பைத் தீர்மானிப்பது சரியன்று.

**கேள்வி:** பதினான்காவது அத்யாயத்தில், உயிர் பிரியும்போது, அவர்களுக்கு ஸத்வகுணம் அதிகமிருந்தால், அவர்கள் தேவர்களாகவும், ரஜோகுணம் மிகுந்திருந்தால் மனிதர்களாகவும், தமோகுணம் அதிகமிருந்தால் புழு-பூச்சி, மிருகம்-பறவைகள், செடி-கொடிகள் முதலியனவாகவும் பிறவி பெறுவர் என்று சொல்கிறார். இங்கோ ஸத்வகுணம் மிகுந்தவன் ப்ராம்மணனாகவும், ரஜோகுணம் மிகுந்தவன் க்ஷத்ரியனாகவும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பிறப்பான் என்ற முறையில் பிரித்துக் கூறுகிறார். அதற்கும், இதற்கும் முரண்பாடு தெரிகிறதே, ஏன்?

**பதில்:** உண்மையில் முரண்பாடு ஒன்றுமில்லை. ராஜஸ ஸ்வபாவம் உள்ளவர்கள் ரஜோகுணம் மிகுந்திருக்கும்போது இறந்தால், மனிதர்களாகப் பிறப்பார்கள் என்பது உண்மைதான். இதிலிருந்து மனிதப்பிறவியில் ரஜோகுணம் முக்யமாக இருக்கும் என்பது தெரிகிறது. ஆனால் ரஜோகுணம் மிகுந்த மனிதப் பிறவியில் பிறந்தவர்கள் எல்லோரும் ஒரேவிதமான குணம் உடையவர்கள் அல்லவே. அவர்களுடைய குணநலன்களில் பலவிதமான ஏற்றத்தாழ்வுகள் உண்டு. அவற்றிற்குத்தக்கபடி, ஸத்வகுணம் மிகுந்தவர்கள் ப்ராம்மணர்களாக வும், ஸத்வம் கலந்த ரஜோகுணம் மிகுந்தவர்கள் க்ஷத்ரியர்களாகவும், தமோகுணம் கலந்த ரஜோகுணம் மிகுந்தவர்கள் வைசியர்களாகவும், ரஜோகுணம் கலந்த தமோகுணம் மிகுந்தவர்கள் நான்காம் வர்ணத்தவராகவும், ஸத்வ, ரஜோகுணம் கொஞ்சம் கூட இல்லாமல் தமோகுணம் மட்டும் உள்ளவர்கள் அதற்கும் தாழ்ந்த பிறவிகளிலும் பிறக்கிறார்கள்.

**கேள்வி:** *9/10ல் ப்ரக்ருதிதான் அகில உலகத்தையும் படைக்கிறது என்று பகவான் கூறுகிறார். இங்கே, தாமே படைப்பதாகக் கூறுகிறாரே, இந்த முரண்பாட்டுக்கு என்ன ஸமாதானம்?*

**பதில்:** இதில் முரண்பாடு ஒன்றுமில்லை. அந்த ச்லோகத்தில் கூட ப்ரக்ருதி மட்டும் உலகத்தைப் படைப்பதாகச் சொல்லவில்லை. தமது தலைமையில் ப்ரக்ருதியின் மூலம் படைப்பு நடைபெறுவதாகத்தான் சொல்கிறார். ப்ரக்ருதி ஜடமானது; பகவானுடைய உதவியின்றி, குண கர்மங்களை வகுத்து அமைப்பதற்கும், படைப்பதற்கும் அதற்குத் திறமை இல்லவே இல்லை. ஆகவே கீதையில், 'ப்ரக்ருதி படைக்கிறது' என்று சொல்லப்படும் இடங்களிலெல்லாம் பகவானுடைய தலைமையில் அவருடைய ஏவலுக்குக் கட்டுப்பட்டு ப்ரக்ருதி படைக்கிறது என்றுதான் பொருள். எங்கெல்லாம் பகவான் படைப்பதாகச் சொல்லப்படுகிறதோ, அங்குகூட பகவான் தாமே படைப்பதில்லை; ப்ரக்ருதியின் மூலமாகத்தான் படைக்கிறார் என்று பொருள் கொள்ளவேண்டும்.

**கேள்வி:** *'உலகத்தைப் படைத்தல் முதலியன செய்பவனானாலும் நான் கர்த்தா அல்லன் என்று அறிந்து கொள்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** இதன் மூலம் பகவானுடைய செயல் தெய்விகமானது என்று அறிந்து கொள்ளவேண்டும். அதாவது பகவானுடைய எந்தச் செயலிலும் கர்த்தா என்ற எண்ணமோ, விருப்பு–வெறுப்போ கிடையா. பகவான் அவற்றுக்கு முற்றிலும் அப்பாற்பட்டவர். பகவானது முன்னிலையில் ப்ரக்ருதிதான் எல்லா வேலைகளையும் செய்கிறது. பேச்சு வழக்கில் பகவான் கர்த்தா என்று வந்துவிட்டாலும், உண்மையில் பகவான் எதிலும் சாராமல் தனித்து இருக்கிறார். செயல்களில் அவருக்கு ஒரு ஸம்பந்தமுமில்லை (9/9,10). இதைத்தான் இங்கே கூறுகிறார். பயனில் கருத்தின்றி கர்த்தா என்று தம்மை நினைத்துக் கொள்ளாமல், செயல்படும் ஞானிகூடக் கர்மங்களின் கர்த்தா அல்லர்; கர்மங்களின் பயன்கள் அவரை ஒட்டா என்றால் பகவானைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? ஆகவே, பகவானுடைய செயல் முற்றிலும் உலகியலுக்கு அப்பாற்பட்டது.

**न मां कर्माणि लिम्पन्ति न मे कर्मफले स्पृहा ।**
**इति मां योऽभिजानाति कर्मभिर्न स बध्यते ॥ १४ ॥**

**ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மப₂லே ஸ்ப்ருஹா ।**

**இதி மாம் யோऽபி₄ஜாநாதி கர்மபி₄ர்ந ஸ ப₃த்₄யதே ॥ 14 ॥**

கர்மப₂லே – கர்மங்களின் பயன்களில், மே – எனக்கு, ஸ்ப்ருஹா – ஆசை, ந – இல்லை. (ஆகவே), மாம் – என்னை, கர்மாணி – கர்மங்கள், ந லிம்பந்தி – ஒட்டுவதில்லை. இதி – இவ்விதம், ய: – எந்த மனிதன், மாம் – என்னை,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அபிஜாநாதி** – தத்வரீதியாக அறிந்து கொள்கிறானோ, **ஸ:** – அவனும், **கர்மபி₄:** – கர்மங்களால், **ந பத்₄யதே** – கட்டப்படுவதில்லை.

கர்மங்களின் பயன்களில் எனக்கு ஆசையில்லை. ஆகவே என்னைக் கர்மங்கள் ஒட்டுவதில்லை. இவ்விதம் எந்த மனிதன் என்னைத் தத்வரீதியாக அறிந்து கொள்கிறானோ, அவனும் கர்மங்களால் கட்டப்படுவதில்லை.

**கேள்வி:** 'கர்மங்கள் ஒட்டுவதென்றால் என்ன? கர்மங்களின் பயன்களில் எனக்கு ஆசை கிடையாது. ஆகவே என்னிடம் கர்மங்கள் ஒட்டா' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கர்மம் செய்பவர்களின் உள்ளத்தில் பற்று, மமகாரம், பயனில் கருத்து, அஹங்காரம் இவை இருப்பதால், அவர்கள் செய்த கர்மங்கள் ஸம்ஸ்காரங்களாக – மனப்பதிவுகளாக அவர்களுடைய உள்ளங்களில் உறைகின்றன. அவற்றிற்கேற்றாற்போல, மறுபிறவியும் புண்ய பாவங்களுக்குரியவையான ஸுகதுக்கங்களும் கிடைக்கின்றன. இதுதான், 'கர்மம் ஒட்டிக் கொள்கிறது' என்பதன் பொருள். "கர்மங்களின் பயனாக ஏற்படும் எந்தவிதமான போகங்களிலும் எனக்குப் பற்று இல்லை. நான் ஒரு பொருளையும் விரும்பவில்லை (3/22). என்னால் ஆகும் கர்மங்கள் யாவும் மமகாரம், பற்று, பயனில் கருத்து, நான் கர்த்தா என்ற எண்ணம் இவை இல்லாமல் உலக நன்மைக்காகவே (4/8) நடப்பவை. எனக்கும், அவற்றிற்கும் ஸம்பந்தமில்லை. இக்காரணத்தினால் என் செயல்கள் அனைத்தும் தெய்விகமானவை. ஆகவே அவை என்னை ஒட்டா. அதாவது 'என்னை பந்தப்படுத்தா'" என்று கூறுகிறார்.

**கேள்வி:** மேலே சொன்னவிதம் பகவானைத் தத்வரீதியாக உணர்வது என்றால் என்ன? அப்படி உணர்ந்தவனுக்கு ஏன் கர்மபந்தம் கிடையாது?

**பதில்:** மேலே சொன்னபடி உலகப்படைப்பு முதலிய கர்மம் செய்தபோதிலும் பகவானுக்கு அந்தக் கர்மத்தில் எந்தவிதத் தொடர்பும் கிடையாது. செயல்களில் பாரபக்ஷம் சிறிதுகூட இல்லை. கர்மத்தின் பயன்களில் சற்றும் பற்றோ, மமகாரமோ, ஆசையோ கிடையாது. ஆகவே அவை அவரைக் கட்டுப்படுத்தமாட்டா என்று அறிந்து கொள்வதுதான் தத்வரீதியாக பகவானை அறிவது. இப்படி பகவானுடைய செயல்களின் ரஹஸ்யத்தை உள்ளபடி அறிந்த மஹாத்மாக்களின் செயல்களும், பகவானைப் போல மமகாரம், பற்று, பயனில் கருத்து, அஹங்காரம் இவையின்றி உலகத்திற்கு வழிகாட்டியாக மட்டும் அமையும். அவரை அவருடைய கர்மம் பந்தப்படுத்தாது. ஆகவே, தாம் செய்யும் கர்மங்களில் பற்றும், பயனில் ஆசையும், மமகாரமும், அஹங்காரமும் உள்ளவர்களுக்கு பகவானின் செயல்கள் தெய்விகமானவை என்பது புரியாது.

**பொருத்தம்:** இவ்விதம் பகவான் தம் செயல்கள் திவ்யமானவை என்பதையும், இந்தத் தத்வமறிந்தவரின் பெருமையையும் கூறி, மோக்ஷத்தை விரும்புபவர்களை உதாரணம் காட்டி அவர்களைப் போலப் பயன் விரும்பாது கர்மம் செய்யவேண்டுமென அர்ஜுனனுக்கு ஆணையிடுகிறார்—

**एवं ज्ञात्वा कृतं कर्म पूर्वैरपि मुमुक्षुभिः।**
**कुरु कर्मैव तस्मात्त्वं पूर्वैः पूर्वतरं कृतम्॥ १५॥**

**ஏவம் ஜ்ஞாத்வா க்ருதம் கர்ம பூர்வைரபி முமுக்ஷுபி₄: ।**

**குரு கர்மைவ தஸ்மாத்த்வம் பூர்வை: பூர்வதரம் க்ருதம் ॥ 15 ॥**

**பூர்வை:** – முற்காலத்திலிருந்த, **முமுக்ஷுபி₄: அபி** – மோக்ஷத்தில் நாட்டமுடையவர்களாலும், **ஏவம்** – இவ்விதம், **ஜ்ஞாத்வா** – அறிந்து, **கர்ம** – கர்மம், **க்ருதம்** – செய்யப்பட்டது. **தஸ்மாத்** – ஆகவே, **த்வம்** – நீயும், **பூர்வை:** – முன்னோர்களால்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பூர்வதரம் க்ருதம்** — தொன்றுதொட்டுச் செய்யப்பட்டு வருகின்ற, **கர்ம ஏவ** — கர்மங்களையே, **குரு** — செய்வாயாக.

முற்காலத்திலிருந்த மோக்ஷத்தில் நாட்டமுடையவர்களாலும் இவ்விதம் அறிந்து கர்மம் செய்யப்பட்டது. ஆகவே நீயும் முன்னோர்களால் தொன்றுதொட்டுச் செய்யப்பட்டு வருகின்ற கர்மங்களைச் செய்வாயாக.

**கேள்வி:** 'முமுக்ஷு' (மோக்ஷத்தில் நாட்டமுடையவர்கள்) யார்? முன்னோர்களான அவர்களை உதாரணம் காட்டி இந்த ச்லோகத்தில் என்ன விஷயம் சொல்கிறார்?

**பதில்:** பிறப்பு-இறப்பு என்ற ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட்டு, பரமானந்த ஸ்வரூபமான பரமாத்மாவை அடைய விரும்புபவனும், ஸம்ஸார போகங்கள் துக்கமயமானவை, நொடி நேரத்தவை என்று உணர்ந்து, அவற்றில் வைராக்யம் கொள்பவனும், இவ்வுலக போகங்களிலும், பரலோக போகங்களிலும் விருப்பமற்றவனுமான ஒருவனை 'முமுக்ஷு' என்கிறார். அர்ஜுனனும் மோக்ஷத்தை விரும்புபவர்தான். அவர் தாம் கர்மம் செய்தால் கட்டுப்படுவோமோ என்று பயந்து, ஸ்வதர்மமான கடமைகளைக் கூடச் செய்யாமல் விடுவதற்கு விரும்புகிறார். ஆகவே பகவான் முற்காலத்திய முமுக்ஷுக்களை உதாரணம் காட்டி உண்மையை விளக்குகிறார். அதாவது, "கர்மங்களைச் செய்யாமல் விடுவதனால், பந்தத்திலிருந்து விடுதலை கிடைக்காது. அதனால்தான் முமுக்ஷுக்கள்கூட எனது செயல்களின் தெய்விகத் தன்மையை உணர்ந்து, என்னைப் போலக் கர்மங்களில் பற்று, மமகாரம், பயனில் கருத்து, அஹங்காரம் இவற்றை விடுத்து, நிஷ்காமமாக, தம் வர்ணாசிரமங்களுக்கு உரிய கர்மங்களைச் செய்து வந்தார்கள். ஆகவே, நீயும் கர்மபந்தத்திலிருந்து விடுதலையை விரும்பினால், முன்னோர்களைப் போல, நிஷ்காமமாக ஸ்வதர்மமான கடமைகளை ஆற்றித்தான் ஆகவேண்டும்; அவற்றை விடலாகாது" என்று கூறுகிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் அர்ஜுனனுக்கு 'நிஷ்காமமாகக் கர்மங்களை ஆற்று' என்று ஆணையிட்டார். எது கர்மம்? எது அகர்மம் என்பதை அறியாமல் நிஷ்காமமாக மனிதன் கர்மங்களை ஆற்ற முடியாதே! ஆகவே பகவான் மமகாரம், பற்று, பயனில் ஆசை, அஹங்காரம் இவையின்றிச் செய்யப்படும் தெய்விகமான கர்மங்களின் தத்வத்தை நன்றாக விளக்குவதற்காக, கர்ம தத்வம் என்பது அறிய முடியாதது என்றுரைத்து, அதை அறிவதன் பெருமையை விளக்குவதாக உறுதி கூறுகிறார்—

**किं कर्म किमकर्मेति कवयोऽप्यत्र मोहिताः।**
**तत्ते कर्म प्रवक्ष्यामि यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात्॥ १६॥**

**கிம் கர்ம கிமகர்மேதி கவயோऽப்யத்ர மோஹிதா: ।**
**தத்தே கர்ம ப்ரவக்ஷ்யாமி யஜ்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽஶுப₄ாத் ॥ 16 ॥**

**கர்ம** — கர்மம் (என்றால்), **கிம்** — என்ன? **அகர்ம** — அகர்மம் (என்றால்), **கிம்** — என்ன, **இதி** — என்று, **அத்ர** — தீர்மானிப்பதில், **கவய: அபி** — அறிவாளிகள் கூட, **மோஹிதா:** — திகைக்கிறார்கள். (ஆகவே), **யத்** — எதை, **ஜ்ஞாத்வா** — அறிந்து கொண்டபின்னர் (நீ), **அஶுப₄ாத்** — அமங்களத்திலிருந்து (கர்மபந்தங்களிலிருந்து), **மோக்ஷ்யஸே** — விடுபடுவாயோ, **தத்** — அந்த, **கர்ம** — கர்மத்தின் தத்வத்தை (நான்), **தே** — உனக்கு, **ப்ரவக்ஷ்யாமி** — (நீ நன்கு உணருமாறு) சொல்லப் போகிறேன்.

கர்மம் என்றால் என்ன? அகர்மம் என்றால் என்ன என்று தீர்மானிப்பதில் அறிவாளிகள் கூடத் திகைக்கிறார்கள். ஆகவே எதை அறிந்து கொண்டபின்னர் நீ அமங்களத்திலிருந்து

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



– கர்மபந்தங்களிலிருந்து விடுபடுவாயோ, அந்த கர்மத்தின் தத்வத்தை நீ நன்கு உணருமாறு நான் உனக்குச் சொல்லப் போகிறேன்.

**கேள்வி:** 'கவய:' என்று யாரைக் குறிப்பிடுகிறார்? 'அவர்கள் கர்மம் எது, அகர்மம் எது என்று தீர்மானிப்பதில் திகைப்பு அடைகிறார்கள்' என்று எதைக் குறிப்பிடுகிறார்? 'அவர்கள் கூட' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** சாஸ்த்ரங்களை அறிந்து தேர்ச்சி பெற்ற அறிஞர்களை, 'கவய:' என்று கூறுகிறார். சாஸ்த்ரங்களில் பல வகையாகக் கர்மங்களின் தத்வங்கள் விளக்கப்பட்டிருக்கின்றன. அவற்றைக் கற்றறிந்த பிறகு கூட புத்தி ஒரு தீர்மானத்திற்கு வர முடியாமல் திகைக்கிறது. இந்த எண்ணத்துடன் இப்படிச் செய்யப்பட்ட செயல் கர்மமா அல்லது கர்மத்தை விடுவதுதான் கர்மமா? அப்படியே அந்த எண்ணத்துடன் அப்படிச் செய்யப்பட்ட கர்மமோ, அதன் த்யாகமோ அகர்மமா என்ற விஷயத்தில்தான் திகைப்பு ஏற்படுகிறது. ஆகவே அதைத் தீர்மானிக்க முடியவில்லை. சாஸ்த்ர ஞானத்தில் தேர்ச்சி பெற்ற அறிஞர்கள்கூட இந்த விஷயத்தில் திகைக்கிறார்கள் என்றால் அதாவது சரியான முடிவுக்கு வரமுடியவில்லை என்றால் ஸாதாரண மனிதர்களுக்கு என்ன தெரியும்? அவர்களுக்குக் கர்ம தத்வம் புரியவே புரியாது.

**கேள்வி:** இங்கே பகவான், 'கர்ம தத்வத்தை விளக்குகிறேன்' என்பது இந்த அத்யாயத்தில் எங்கே கூறப்படுகிறது? அதைத் தத்வரீதியாக அறிவது எப்படி? அதை அறிந்து கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெறுவது எப்படி?

**பதில்:** மேலே சொன்ன கர்ம தத்வ விளக்கம் 4/18 முதல் 4/32 வரை கூறப்படுகிறது. எத்தகைய எண்ணத்துடன் செய்யப்பட்ட கர்மம் அல்லது விடப்பட்ட கர்மம் மறுபிறவி அளிக்கக்கூடிய பந்தத்தில் ஆழ்த்தும்? எந்த எண்ணத்துடன் செய்யப்பட்ட கர்மம் அல்லது விடப்பட்ட கர்மம் மறுபிறவிக்குக் காரணம் ஆகாமல் முக்திக்குக் காரணமாகும் என்று விளக்கமாக அறிவதுதான் கர்ம தத்வத்தைத் தத்வரீதியாக அறிவதன் பொருள். இப்படி அறிந்து கொண்ட மனிதன் செய்யும் எந்தக் கார்யமும், செய்யாத எந்தக் கார்யமும் அவனை பந்தப்படுத்தாது. அவன் செய்வதெல்லாம் பற்று, மமகாரம், பயனில் கருத்து, அஹங்காரம் இவையின்றி, பகவானுக்காகவோ, உலகத்திற்கு வழிகாட்டும் முறையிலோ அமையும். ஆகவே மேலே சொன்ன கர்ம தத்வத்தை அறிந்தவன் கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெறுவான்.

**பொருத்தம்:** பொதுவாக, மனிதர்கள் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளே கர்மங்கள்; அவற்றைச் செய்யாமல் விடுவதுதான் அகர்மம் என்று ஏற்று கொள்வார்களே! இதில் திகைப்பு அடைவதற்கு என்ன இருக்கிறது? இதற்குமேல் தெரிந்து கொள்ள வேண்டியது என்ன இருக்கிறது என்று தோன்றலாம். 'ஆனால் இவ்வளவு தெரிந்து கொண்டால் மட்டும் கர்மம், அகர்மம் இவற்றை நிர்ணயிக்க முடியாது. கர்மத்தின் தத்வத்தை நுட்பமாக அறிந்து கொள்ள வேண்டும்' என்று மேலும் அறிவுறுத்துகிறார்—

**कर्मणो ह्यपि बोद्धव्यं बोद्धव्यं च विकर्मणः।**
**अकर्मणश्च बोद्धव्यं गहना कर्मणो गतिः॥१७॥**

**கர்மணோ ஹ்யபி போ₃த்₃த₄வ்யம் போ₃த்₃த₄வ்யம் ச விகர்மண: ।**
**அகர்மணஶ்ச போ₃த்₃த₄வ்யம் க₃ஹநா கர்மணோ க₃தி: ॥ 17 ॥**

**கர்மண: அபி** – கர்மத்தினுடைய (ஸ்வரூபமும்), **போ₃த்₃த₄வ்யம்** – அறியப்பட வேண்டும். **ச** – மேலும், **அகர்மண:** – அகர்மத்தினுடைய (ஸ்வரூபமும்), **போ₃த்₃த₄வ்யம்** – அறியப்பட வேண்டும். **ச** – அவ்விதமே, **விகர்மண:** – விகர்மத்தின் (ஸ்வரூபமும்), **போ₃த்₃த₄வ்யம்** – அறியப்பட வேண்டும். **ஹி** – ஏனென்றால், **கர்மண:** – கர்மத்தின், **க₃தி:** – போக்கு, **க₃ஹநா** – ஆழமானது; (அறிய முடியாதது).

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கர்மத்தினுடைய ஸ்வரூபமும் அறியப்பட வேண்டும். மேலும் அகர்மத்தினுடைய ஸ்வரூபமும் அறியப்பட வேண்டும். அவ்விதமே விகர்மத்தின் ஸ்வரூபமும் அறியப்பட வேண்டும். ஏனென்றால் கர்மத்தின் போக்கு ஆழமானது; அறிய முடியாதது.

**கேள்வி:** 'கர்மத்தின் ஸ்வரூபத்தையும் அறியவேண்டும்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஸாதாரணமான மக்கள் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளுக்குப் பெயர் 'கர்மம்' என்று அறிந்திருப்பார்கள். இவ்வளவு அறிந்ததால் மட்டும் கர்மத்தின் தத்வத்தை அறிந்ததாக ஆகாது. ஏனெனில் அதை ஆற்றுவதில் மனப்பாங்கின் வேற்றுமையால், அதன் ஸ்வரூபமே வெவ்வேறாகிவிடுகிறது. ஆகவே எந்த எண்ணத்துடன், எவ்விதத்தில் செய்யப்படும், எந்தச் செயல் கர்மம்? எந்த நிலையில் உள்ள, எந்த மனிதன் சாஸ்த்ர முறைகளில் சொல்லப்பட்ட கர்மத்தை, எவ்விதம் செய்யவேண்டும் என்பது பற்றி சாஸ்த்ரங்களை முழுமையாகக் கற்றுத் தேர்ந்த மஹாத்மாக்கள்தான் நன்கு அறிவார்கள். ஆகவே தன்னுடைய பொறுப்புக்குத் தக்கபடி வர்ணாசிரமங்களுக்குரிய கடமைகளை ஆற்றுவதற்கு, மேலே சொன்ன தத்வம் அறிந்தவர்களிடம் அந்தக் கர்மங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளவேண்டும். அவர்களின் ஆணைப்படி அவர்கள் குறிப்பிட்ட வழியில் கடமைகளை ஆற்றவேண்டும்.

**கேள்வி:** அகர்மத்தின் ஸ்வரூபத்தைப் பற்றியும் தெரிந்து கொள்ளவேண்டும் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பொதுவாக மனிதர்கள் மனதாலும், வாக்காலும், உடலாலும் செய்யக் கூடியவற்றைச் செய்யாமல் விடுவது அகர்மம் என்று நினைத்துக் கொண்டிருப்பார்கள். இது மட்டும் அறிந்தால், அகர்மத்தின் நுட்பத்தை அறிந்ததாக ஆகாது. மனோபாவத்தின் மாறுபாட்டினால் இப்படிப்பட்ட அகர்மம் என்பது கர்மமாகவும் ஆகலாம். விகர்மமாகவும் ஆகலாம். உலகத்தினர் எதைக் கர்மம் என்று நினைக்கிறார்களோ, அது கூட அகர்மமாகவோ, விகர்மமாகவோ ஆகலாம். ஆகவே எந்த மனோபாவத்துடன், எவ்விதம் செய்யப்பட்ட, எந்தச் செயல் செய்வது அல்லது அதைச் செய்யாமல் விடுவது அகர்மம் ஆகும் என்பதோ அல்லது எந்த நிலையில், எந்த மனிதன், எவ்விதம் அதைக் கடைப்பிடிக்க வேண்டும் என்ற விஷயமோ தத்வமறிந்த மஹாபுருஷருக்குத்தான் சரிவரத் தெரியும். ஆகவே கர்மபந்தத்திலிருந்து விடுதலை விரும்பும் மனிதர், அப்படிப்பட்ட மஹாபுருஷர்களிடமிருந்து அகர்மத்தின் நுட்பத்தையும் நன்றாக அறிந்து கொண்டு, அவர்கள் சொல்கிறபடி ஸாதனை புரியவேண்டும்.

**கேள்வி:** விகர்மத்தைப் பற்றியும் தெரிந்து கொள்ளவேண்டும் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பொதுவாக மக்கள் பொய், சூது, திருட்டு, விபசாரம், ஹிம்ஸை முதலிய பாவச் செயல்களைத்தான் விகர்மம் என்று நினைப்பார்கள். இது அனைவரும் அறிந்த விஷயம். ஆனால் இதை அறிந்ததால் மட்டும் விகர்மத்தின் முழு ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்ததாக ஆகாது. ஏனெனில் சாஸ்த்ரத்தின் தத்வம் அறியாத அஞ்ஞானி, புண்யத்தைப் பாவம் என்று நினைக்கலாம்; பாவத்தைப் புண்யம் என்றும் நினைக்கலாம். வர்ணம், ஆசிரமம், பொறுப்பு இவற்றின் மாறுபாட்டினால், ஒருவருக்கு விதிக்கப்பட்ட கடமை (கர்மம்), மற்றவருக்குத் தடை செய்யப்பட்டதாக இருக்கும்; பாவமாகும்; விகர்மம் ஆகும். எல்லா வர்ணத்தாருக்கும், ஸேவை செய்து வாழ்க்கை நடத்துவது என்ற கடமை நான்காம் வர்ணத்தாருக்கு விதிக்கப் பட்டிருக்கிறது. ஆனால் அது ப்ராம்மணருக்குத் தடை செய்யப்பட்டது. வேதம் அத்யயனம் செய்து, யாகம் செய்து, கொடுத்ததை ஏற்றுக் கொண்டு வாழவேண்டும் என்பது ப்ராம்மணனுக்கு விதிக்கப்பட்ட கடமை; மற்றவர்களுக்குப் பாவமாகும். இல்லறத்தானுக்கு ந்யாயமாகப் பொருள் ஈட்டுவதும், உரிய காலத்தில் மனையாளுடன் உறவு கொள்வதும் தர்மமாகும். ஆனால், ஸந்யாஸிக்குப் பெண்ணையோ, பொன்னையோ காண்பதும், தொடுவதும் கூடப் பாவம். ஆகவே பொய், சூது, திருட்டு, விபசாரம், ஹிம்ஸை இவை போன்ற எல்லோருக்குமே தடை செய்யப்பட்டவையான பாவச் செயல்களும், இவை தவிரப் பொறுப்பு மாறுபாட்டினால் வெவ்வேறு மனிதர்களுக்குத் தடை செய்யப்பட்டவையும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



விகர்மத்துள் அடங்கும். இவையனைத்தையும் தவிர்ப்பதற்காகவே விகர்மத்தின் ஸ்வரூபத்தை நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும். இந்த விகர்மத்தைப் பற்றியும் தத்வம் அறிந்த மாமனிதர்களே சரியான விளக்கம் தரவல்லவர்கள்.

**கேள்வி:** "'ஹி' (ஏனெனில்) கர்மத்தின் போக்கு சிக்கலானது" என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஹி' என்பது இங்கே காரணத்தைக் குறிக்கிறது. கர்மத்தின் தத்வம் சிக்கலானது என்ற காரணத்தினால் கர்மம் எது, அகர்மம் எது, விகர்மம் எது என்று நிர்ணயிப்பது எல்லோராலும் முடியாத கார்யம். கல்வியினாலும், புத்தியினாலும் அறிவாளிகளாக உள்ளவர்கள் கூடச் சில சமயங்களில் இவற்றைத் தீர்மானிக்க முடியாமல் இருப்பார்கள். ஆகவே, கர்மத்தின் நுட்பமறிந்த மாமனிதர்களின் மூலமே இவற்றின் தத்வத்தைத் தெரிந்து கொள்ளவேண்டும்.

**பொருத்தம்:** இவ்விதம் கேட்பவரின் உள்ளத்தில் ருசியையும், ச்ரத்தையையும் ஊக்குவிப்பதற்காக, 'கர்ம தத்வம் சிக்கலானது, அறியவேண்டியது' என்று கூறி, தம் உறுதிமொழிக்கேற்ப, பகவான் கர்மத்தின் தத்வத்தை விளக்குகிறார்—

कर्मण्यकर्म यः पश्येदकर्मणि च कर्म यः।
स बुद्धिमान्मनुष्येषु स युक्तः कृत्स्नकर्मकृत्॥ १८॥

**கர்மண்யகர்ம ய: பஶ்யேத₃கர்மணி ச கர்ம ய: ।**
**ஸ பு₃த்₃தி₄மாந்மநுஷ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்நகர்மக்ருத் ॥ 18 ॥**

**ய:** — எந்த மனிதன், **கர்மணி** — கர்மத்தில், **அகர்ம** — அகர்மத்தை, **பஶ்யேத்** — பார்க்கிறானோ, **ச** — மேலும், **ய:** — எவன், **அகர்மணி** — அகர்மத்தில், **கர்ம** — கர்மத்தை (பார்க்கிறானோ), **ஸ:** — அவன், **மநுஷ்யேஷு** — மனிதர்களில், **பு₃த்₃தி₄மாந்** — புத்திமான். (மேலும்), **ஸ:** — அந்த, **யுக்த:** — யோகி, **க்ருத்ஸ்நகர்மக்ருத்** — அனைத்துக் கர்மங்களையும் செய்கிறவன் (ஆகிறான்).

எந்த மனிதன் கர்மத்தில் அகர்மத்தைப் பார்க்கிறானோ மேலும் எவன் அகர்மத்தில் கர்மத்தைப் பார்க்கிறானோ, அவன் மனிதர்களில் புத்திமான். மேலும் அந்த யோகி அனைத்துக் கர்மங்களையும் செய்கிறவன் ஆகிறான்.

**கேள்வி:** கர்மத்தில் அகர்மத்தைக் காண்பது எப்படி? இப்படிக் காண்பவன் மனிதர்களில் புத்திமான், யோகி, எல்லாக் கர்மங்களையும் செய்கிறவன் ஆவான் என்பது எங்ஙனம்?

**பதில்:** உலக வழக்கில் மனதாலும், புத்தியாலும், புலன்களாலும், உடலாலும் ஏற்படும் இயக்கங்களைத்தான் செயல்கள் என்று கூறுவர். இவற்றில் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டவற்றைக் கடமைகள் (கர்மங்கள்) என்பர். சாஸ்த்ரங்களில் தடை செய்யப்பட்ட பாவச் செயல்களை விகர்மங்கள் என்பர். ஆனால் சாஸ்த்ரங்களில் எல்லோருக்கும் தடை செய்யப்பட்ட பாவச் செயல்கள் எல்லோராலும் தவிர்க்கப்பட வேண்டியவை. ஆகவே அவற்றைப் பற்றிய பேச்சு இங்கு இல்லை. எனவே இங்கு சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட — மனிதன் ஆற்றவேண்டிய கடமைகளில் — கர்மங்களில் 'அகர்மம்' என்ற பாவனை வரவேண்டுமென்றால் என்ன? இது பற்றித்தான் இங்கு ஆராய்ச்சி செய்யப்படுகிறது. யாகம், தானம், தவம் முதலிய வர்ணாசிரம தர்மங்களில், அவரவருக்கு விதிக்கப்பட்ட கர்மங்களை ஆற்றுவதுடன் உலக வாழ்க்கைக்காகவும், உடல்நலம் பேணுவதற்காகவும், சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்கள் அனைத்திலும் பற்று, பயனில் கருத்து, மமகாரம், அஹங்காரம் இவற்றை த்யாகம் செய்வதால், அவை இவ்வுலகிலோ, பரலோகத்திலோ ஸுகதுக்கங்களான பயன்களை விளைவிக்கமாட்டா. ஆதலால் அவை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மறுபிறவிக்குக் காரணமாகா. மாறாக அவை மனிதனின் முன்செய்த நல்வினை, தீவினைகளை அழித்து, அவற்றின் பயன்கள் இவனைத் தீண்டாதவாறு செய்து, இவனை ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுவிக்கின்றன. இந்த நுட்பத்தை அறிவதுதான் கர்மத்தில் அகர்மத்தைக் காண்பது என்பதன் பொருள். இவ்விதம் கர்மத்தில் அகர்மத்தைக் காண்பவன் பற்று, பயனில் கருத்து, மமகாரம் இவற்றை த்யாகம் செய்து, விதிக்கப்பட்ட கடமைகளைச் சரிவர ஆற்றுவான். அவன் கர்மம் செய்தாலும்கூட அவை அவனிடம் ஒட்டா. ஆகவே அவன் மனிதர்களுள் அறிவுமிக்கவன்; பரமாத்மாவை அடைந்தவன்; எனவே யோகி. அவன் செய்யவேண்டியது மீதம் ஒன்றுமில்லை. ஆகவே அவன் க்ருதக்ருத்யன்; எல்லாக் கர்மங்களையும் ஆற்றி முடித்தவன்.

**கேள்வி:** அகர்மத்தில் கர்மத்தைக் காண்பது எப்படி? இப்படிக் காண்பவன் மனிதர்களுக்குள் அறிவுமிக்கவன், யோகி, எல்லாக் கர்மங்களையும் செய்து முடித்தவன் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உலக வழக்கில் மனம், வாக்கு, உடல் இவற்றின் இயக்கத்தைத் தவிர்ப்பதே — இவை இயங்காமல் இருப்பதே 'அகர்மம்' என்று நினைக்கிறார்கள். இந்த த்யாகம் என்ற அகர்மம் கூடப் பற்று, பயனில் கருத்து, மமகாரம், அஹங்காரம் இவற்றோடு செய்யப்பட்டால், மறுபிறவிக்குக் காரணம் ஆகும். இவை அகர்மம் அல்ல என்பது மட்டுமன்று. செய்யவேண்டிய கடமைகளை இகழ்வதாலும், பகட்டாகச் செய்வதாலும் இவை விகர்மம் (பாவங்கள்) ஆகின்றன. இந்த நுட்பத்தை அறிந்தவன்தான் அகர்மத்தில் கர்மத்தைப் பார்ப்பவன். இத்தகையவன் எந்தவிதமான வர்ணாசிரமத்திற்குரிய கர்மங்களையும் உடலுக்குச் சிரமமாயிற்றே என்ற காரணத்தாலோ, விருப்பு-வெறுப்புகளாலோ, மோஹத்தாலோ, மானம், பெருமை, புகழ் என்ற பயன்களைக் கருதியோ த்யாகம் செய்யமாட்டான். ஆகவே, அவன் கடமைகளிலிருந்து வழுவுவதும் இல்லை. எந்தவிதமான த்யாகத்திலும் மமகாரம், பற்று, பயனில் கருத்து, அஹங்காரம் இவை ஒட்டாமல் இருப்பதால் மறுபிறவியும் பெறமாட்டான். ஆகவே அவன் மனிதர்களில் புத்திசாலியானவன். அவன் பரமாத்மாவுடன் ஒன்றிவிடுகிறான். ஆகவே யோகி. அவன் ஆற்றவேண்டிய கடமை ஒன்றும் மீதமில்லை. ஆகவே அவன் அனைத்துக் கர்மங்களையும் செய்கிறவன்.

**கேள்வி:** "கர்மம் என்றால் இப்பொழுது செய்யப்படும் கர்மம். விகர்மம் என்றால் முன்பு செய்யப்பட்ட, பலவகைப்பட்ட கர்மங்களின் தொகுதியான 'ஸஞ்சித கர்மம்'. அகர்மம் என்றால் 'ப்ராரப்த கர்மம்' என்று பொருள் கொண்டு, 'க்ரியமாண கர்மங்களை' (தற்போது செய்யும் செயல்களை)ச் செய்யும்போது, இவையே எதிர்காலத்தில் ப்ராரப்த கர்மங்களாக (அகர்மங்களாக) ஆகிப் பல போக வடிவில் நிற்கும் என்பதே கர்மத்தில் அகர்மத்தைக் காண்பது என்றும், ப்ராரப்த பயன்களை அனுபவிக்கும் நேரத்தில் அந்த இன்ப, துன்பங்களை முன்பு செய்த க்ரியமாண கர்மத்தின் பயன்கள் என்று உணர்ந்துகொள்வதையே அகர்மத்தில் கர்மத்தைக் காண்பது என்றும் எடுத்துக் கொண்டு, பாவ கர்மங்களை விலக்கி சாஸ்த்ரம் விதிக்கும் கர்மங்களைச் செய்ய வேண்டும்" என்று கருதினால் என்ன குறைபாடு? ஏனெனில் ஸஞ்சிதம், க்ரியமாணம், ப்ராரப்தம் இவை மூன்றும் கர்மங்களின் மூவகைகளாக ப்ரஸித்தி பெற்றவையாயிற்றே!

**பதில்:** அது சரிதான். இப்படிக் கருதுவது நல்ல பயனை அளிக்கலாம். புத்திசாலித்தனமாகவும் இருக்கலாம். இப்படிப் பொருள் கொண்டால் 'கவயோऽப்யத்ர மோஹிதா:' (ஞானிகளும் இந்த விஷயத்தில் குழப்பம் அடைகிறார்கள்), 'க₃ஹனா கர்மணோ க₃தி:' (கர்மத்தின் போக்கு சிக்கலானது); 'யஜ்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽஶுப₄ாத்' (இதை அறிந்து அமங்களத்திலிருந்து விடுபடுவாய்); 'ஸ யுக்த: க்ருத்ஸ்நகர்மக்ருத்' (அவன் யோகி. எல்லாக் கடமைகளையும் செய்கிறவன்); 'தமாஹு: பண்டி₃தம் பு₃தா₄:' (அவனை அறிவாளி என்று அறிஞர்கள் கூறுகிறார்கள்); 'நைவ கிஞ்சித்கரோதி ஸ:' (அவன் ஒன்றும் செய்வதில்லை) என்ற வாக்கியங்கள் பொருந்தாமல் போய்விடும். இப்படிப் பொருள் கொள்வது ஓரளவு பயனளிப்பதாயினும், ஸந்தர்பத்திற்கு முரண்பட்டது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் காண்கின்ற ஸாதகன்கூட முக்தன் ஆவானா அல்லது ஸித்தபுருஷனால்தான் இப்படிப் பார்க்க முடியுமா?

**பதில்:** முக்தபுருஷனுக்கு எது நடைமுறையோ, அதுவே ஸாதகன் கடைப்பிடிக்க வேண்டிய முறையாகும். ஆகவே முக்தி அடைந்தவன், இயல்பாகவே இந்தத் தத்வத்தை அறியலாம். ஸாதகன் அந்த முக்தி அடைந்தவனிடம் உபதேசம் பெற்று, ஸாதனை புரிந்து முக்தி அடைவான். இதனால்தான் பகவான் இங்கே 'நான் உனக்குக் கர்மத்தின் தத்வத்தை உபதேசிக்கிறேன். இதை அறிந்து, நீ கர்மபந்தத்திலிருந்து விடுபடுவாய்' என்று சொல்கிறார்.

**பொருத்தம்: இவ்விதம் கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் காண்பவனுடைய பெருமையை எடுத்துச் சொல்லி, அடுத்த ஐந்து ச்லோகங்களில் வெவ்வேறு முறைகளில் கர்மத்தில் அகர்மத்தைக் காண்பது, அகர்மத்தில் கர்மத்தைக் காண்பது என்ற முறையில் கடமையை ஆற்றுபவர்களான ஸித்த புருஷர்களும், ஸாதகர்களும், பற்றின்றி இருப்பவர்கள் என்று எடுத்துச் சொல்லி விளக்குகிறார்—**

**यस्य सर्वे समारम्भाः कामसङ्कल्पवर्जिताः ।**
**ज्ञानाग्निदग्धकर्माणं तमाहुः पण्डितं बुधाः ॥ १९ ॥**

**யஸ்ய ஸர்வே ஸமாரம்ப₄ா: காமஸங்கல்பவர்ஜிதா: ।**

**ஜ்ஞாநாக்₃நித₃க்₃த₄கர்மாணம் தமாஹு: பண்டி₃தம் பு₃த₄ா: ॥ 19 ॥**

**யஸ்ய** – எவனுடைய, **ஸர்வே** – (சாஸ்த்ரங்களுக்கு ஸம்மதமான) அனைத்து, **ஸமாரம்ப₄ா:** – கர்மங்கள், **காம ஸங்கல்ப வர்ஜிதா:** – ஆசையையும், ஸங்கல்பத்தையும் (மமகாரம் முதலியவற்றை) துறந்து செய்யப்படுகின்றனவோ, **ஜ்ஞாந அக்₃நி த₃க்₃த₄ கர்மாணம்** – எவனுடைய கர்மங்கள் அனைத்தும் ஞானம் என்ற தீயில் எரிந்து சாம்பலாகி விட்டனவோ, **தம்** – அந்த மாமனிதனை, **பு₃த₄ா:** – ஞானிகளும் கூட, **பண்டி₃தம்** – பண்டிதன் என்று, **ஆஹு:** – அழைக்கிறார்கள்.

எவனுடைய, சாஸ்த்ரங்களுக்கு ஸம்மதமான அனைத்துக் கர்மங்கள் ஆசையையும் ஸங்கல்பத்தையும் (மமகாரம் முதலியவற்றை) துறந்து செய்யப்படுகின்றனவோ, எவனுடைய கர்மங்கள் அனைத்தும் ஞானம் என்ற தீயில் எரிந்து சாம்பலாகி விட்டனவோ, அந்த மாமனிதனை ஞானிகளும் கூடப் பண்டிதன் என்று அழைக்கிறார்கள்.

**கேள்வி:** 'ஸமாரம்பா:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? அத்துடன் 'ஸர்வே' என்று சேர்த்துக் கூறுவதன் கருத்து யாது?

**பதில்:** வர்ணாசிரமம், சூழ்நிலை இவற்றிற்கேற்றவாறு யாகம், தானம், தவம் மற்றும் அன்றாட வாழ்க்கை, உடலைப் பேணுதல் இவற்றிற்காக சாஸ்த்ரங்களில் அவரவர்களுக்கு விதிக்கப்பட்ட கடமைகள் அனைத்தும் 'ஸர்வே ஸமாரம்பா:' என்ற சொல்லினால் குறிப்பிடப்படுகின்றன. செயல் அனைத்தையும் 'ஆரம்பா:' என்பார்கள். ஞானிகளின் செயல் சாஸ்த்ரங்களுக்கு விரோதமாகவோ, வீணானதாகவோ இராது. இதைக் குறிப்பிடத்தான் 'ஆரம்பா:' என்ற சொல்லுக்கு முன் 'ஸம்' என்ற உபஸர்க்கத்தைச் சேர்த்திருக்கிறார். மேலும், ஸாதனைக் காலத்தில் மனிதர்களுடைய அனைத்துக் கர்மங்களும் ஆசை இல்லாமலோ, திட்டமிடுவது இல்லாமலோ நடைபெறுவதில்லை. ஏதாவது சிலவற்றில் ஆசையும், திட்டமும் இருக்கும். ஆனால் ஸாதனையில் முன்னேற முன்னேற, ஸாதகன் ஸித்தன் ஆகிறான். அந்த மஹாபுருஷனுடைய செயல்களில், ஆசையும், திட்டங்களும் அறவே அற்றுப் போய்விடும். அவருடைய எந்தச் செயலும், ஆசையுடனும், திட்டத்துடனும் கூடவோ, சாஸ்த்ர விரோதமாகவோ இருக்காது. இதையே 'ஸர்வே ஸமாரம்பா:' என்கிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'காமஸங்கல்பவர்ஜிதா:' என்ற தொடரில் வரும் 'காம, ஸங்கல்ப' என்ற சொற்களுக்கு என்ன பொருள்? இவை இல்லாத செயல்கள் எவை?

**பதில்:** மனைவி, மக்கள், செல்வம், வீடு, மதிப்பு, பெருமை, புகழ், ஸ்வர்க ஸுகம் முதலிய இவ்வுலகத்திய தவிர பரலோகத்திய போகங்கள் எவற்றிலேனும் கொஞ்சமாவது ஏற்படும் ஆசைதான் 'காம' என்ற சொல்லுக்குப் பொருள். எந்த விஷயத்தையும் மமகாரம், அஹங்காரம், விருப்பு-வெறுப்புக்கள், கவர்ச்சி என்ற உள்ளக்கிளர்ச்சியுடன் நினைப்பது 'ஸங்கல்பம்' ஆகும். ஸங்கல்பம் ஆசைக்குக் காரணம்; ஆசை ஸங்கல்பத்தின் விளைவு. போக விஷயங்களை நினைப்பதால்தான் அவற்றில் பற்று பிறக்கிறது. அது ஆசையாக வளர்கிறது (2/62). எந்தச் செயல்களில், ஒரு பொருளை அடைவதற்கும், தவிர்ப்பதற்கும் சிறிது கூட ஆசை இல்லையோ, எவற்றில் மமகாரம், அஹங்காரம், பற்று முதலியன சிறிதுகூட இல்லையோ, எவை உலகத்தின் நன்மைக்காகவே ஆற்றப்படுகின்றனவோ, அவையே காமமும், ஸங்கல்பமுமற்ற கர்மங்கள்.

**கேள்வி:** ச்லோகத்தில் வருகின்ற 'ஸங்கல்ப' என்ற சொல்லுக்குத் 'துடிப்பு' என்று பொருள் கூறினால் என்ன?

**பதில்:** எந்தச் செயலும் துடிப்பு இல்லாமல் நடைபெறாது. முதலில் துடிப்பு, பிறகு மனமும், வாக்கும், உடலும் செயல்படுகின்றன. மற்ற கர்மங்கள் இருக்கட்டும். துடிப்பு இல்லாமல் உண்பது, அருந்துவது, நடப்பது, சுற்றுவது முதலிய உடலைப் பேணுவதற்குரிய செயல்கள் கூட நடைபெறா. அப்படியிருக்கும்போது இந்த ச்லோகத்தில் சொல்லப்பட்ட சாஸ்த்ர ஸம்மதமான கர்மங்கள் எப்படி நடைபெறும்? ஆகவே ஸங்கல்பம் என்றால் ஸ்புரணா (துடிப்பு) என்று மட்டும் பொருள் கொள்வது பொருந்தாது.

**கேள்வி:** 'ஜ்ஞாநாக்நிதக்தகர்மாணம்' என்ற தொடரில் 'ஜ்ஞாநாக்நி' என்றால் என்ன? அதன் மூலம் கர்மங்கள் பொசுங்கிப் போவது எப்படி?

**பதில்:** ஒரு ஸாதனம் புரிந்து அதனால் பரமாத்மாவின் உண்மைத்தத்வம் புரிந்துவிட்டால், அந்த ஞானத்திற்குப் பெயர் 'ஞானத்தீ' என்பதாகும். தீ விறகுகளைச் சாம்பல் ஆக்குவதுபோல, ஞானத்தீ அனைத்துக் கர்மங்களையும் பொசுக்கிவிடும் (4/37). இவ்விதம் தீயை உவமை காட்டி 'ஜ்ஞாநாக்நி' என்ற பெயரைச் சொல்கிறார். தீயில் வறுக்கப்பட்ட விதைகள் முளைவிடும் சக்தியை இழந்து, பெயரளவில் விதைகளாவது போல, 'ஜ்ஞானம்' என்ற தீயில் வறுபட்ட கர்மங்களுக்குப் பயனை விளைவிக்கும் சக்தி அறவே ஒழிந்து விடுகிறது. இதைத்தான் ஞானத்தீயில் சாம்பலானவை என்கிறார்.

**கேள்வி:** இங்கு 'புதா:' என்று யாரைக் குறிப்பிடுகிறார்? மேலே சொன்ன 'ஞானத்தீயில் எரிக்கப்பட்ட கர்மங்களுடையவனை'ப் 'பண்டிதன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'புதா:' என்றால் தத்வம் அறிந்த மஹாபுருஷர்கள் — ஞானியர் என்று பொருள். அவர்கள் மேலே சொல்லப்பட்டவனைப் பண்டிதன் என்று கூறுவர். இவ்விதம் ஸித்தனான யோகியின் பெருமை கூறப்படுகிறது. உட்கருத்து என்னவென்றால் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களில் மமகாரம், பற்று, அஹங்காரம் இல்லாமல், தனக்கு எவ்விதமான ப்ரயோஜனமும் இல்லாவிட்டாலும், அவற்றைத் தவிர்க்காமல் உலகிற்கு வழிகாட்டும் பொருட்டு, முறையோடு செவ்வனே செய்வதுதான் தீரம், வீரம், கம்பீரம், அறிவுடைமை இவற்றைக் கொண்டவனின் செயலாகும். ஆகவே ஞானியர் அவனைப் பண்டிதன் - தத்வமறிந்த பெருமகன் (மஹாத்மா) எனக் கொண்டாடுகின்றனர்.

त्यक्त्वा कर्मफलासङ्गं नित्यतृप्तो निराश्रयः ।
कर्मण्यभिप्रवृत्तोऽपि नैव किञ्चित्करोति सः ॥ २० ॥

த்யக்த்வா கர்மப₂லாஸங்க₃ம் நித்யத்ருப்தோ நிராஶ்ரய: ।
கர்மண்யபி₄ப்ரவ்ருத்தோऽபி நைவ கிஞ்சித்கரோதி ஸ: ॥ 20 ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கர்மப₂லாஸங்க₃ம்** – அனைத்துக் கர்மங்களிலும், அவற்றின் பயன்களிலும் பற்றை, **த்யக்த்வா** – (முற்றிலும்) துறந்து, **நிராஶ்ரய:** – உலகியல் சார்பு இல்லாதவனாகவும், **நித்யத்ருப்த:** – பரமாத்மாவில் எப்பொழுதும் த்ருப்தி உள்ளவனாகவும் (எவன் ஆகிறானோ), **ஸ:** – அவன், **கர்மணி** – கர்மத்தில், **அபி₄ப்ரவ்ருத்த: அபி** – நன்கு ஈடுபட்டாலும்கூட (உண்மையில்), **கிஞ்சித் ஏவ** – சிறிதளவு கூட (எக்கார்யத்தையும்), **ந கரோதி** – செய்வதேயில்லை.

அனைத்துக் கர்மங்களிலும் அவற்றின் பயன்களிலும் பற்றை முற்றிலும் துறந்து உலகியல் சார்பு இல்லாதவனாகவும் பரமாத்மாவில் எப்பொழுதும் த்ருப்தி உள்ளவனாகவும் எவன் ஆகிறானோ, அவன் கர்மத்தில் நன்கு ஈடுபட்டாலும்கூட உண்மையில் சிறிதளவுகூட எக்கார்யத்தையும் செய்வதேயில்லை.

**கேள்வி:** எல்லாக் கர்மங்களிலும், அவற்றின் பயன்களிலும் ஆஸக்தியைத் துறந்து விடுவது என்றால் என்ன?

**பதில்:** யாகம், தானம், தவம் இவை தவிர, அன்றாட வாழ்க்கைக்காகவும், உடலைப் பேணுவதற்காகவும் சாஸ்த்ரங்கள் விதிக்கும் கர்மங்கள் அனைத்திலும் மனிதனுக்கு இயல்பாகவே பற்றுதல் உண்டாகிறது. ஆகவே அவற்றைச் செய்யாமல் அவனால் இருக்க முடியாது. அப்படி அந்தக் கர்மங்களைச் செய்யும்போது, அவற்றிலேயே மூழ்கிவிடுகிறான். பகவானுடைய நினைவும், மற்ற நினைவுகளும் கூட மழுங்கி விடுகின்றன. இப்படி ஆவதற்குக் காரணம் கர்மத்தில் உள்ள பற்றுதல்தான். இந்தப் பற்றுதல் அறவே இருக்கக் கூடாது. எந்தச் செயலிலும் மனம் சிறிதுகூடப் பற்றுக் கொள்ளக் கூடாது. இதுதான் கர்மத்தில் பற்றுதலைத் துறந்து விடுவது என்பதன் பொருள். அந்தக் கர்மங்களைச் செய்வதால் விளையக்கூடிய பயன்கள் இவ்வுலகிலோ, பரலோகத்திலோ எவ்வளவு உண்டோ, அவ்வளவு போகங்களிலும் சிறிதுகூட மமகாரம், ஆஸக்தி, ஆசை இவை இருக்கக் கூடாது. இதுதான் கர்மத்தின் பயனில் ஆஸக்தியைத் துறந்து விடுவதாகும்.

**கேள்வி:** இவ்விதம் ஆஸக்தியைத் துறந்து 'நிராஶ்ரயனாகவும்', 'நித்யத்ருப்தனாகவும்' ஆவது என்றால் என்ன?

**பதில்:** பற்றுதலை அறவே ஒழித்துவிட்டு, உடலில் நான், எனது என்ற எண்ணத்தைத் துறந்து விடுவதும் உலகியல் பொருட்களையோ, மனிதர்களையோ சார்ந்திராமல், அதாவது இவர்களினால்தான் நம் தேவை நிறைவேறுகிறது; இவர்கள்தான் ஆதாரம்; இவையில்லாமல் நம் கார்யம் நடைபெறாது என்ற எண்ணங்கள் இல்லாமல் இருப்பதும் 'நிராஶ்ரய:' என்ற சொல்லுக்குப் பொருள். இப்படி ஆனபிறகு மனிதனுக்கு உலகியல் பொருள் எதுவும் தேவைப்படாது. அவன் பூர்ண காமன் ஆகிவிடுகிறான். ப்ரம்மானந்த ஸ்வரூபமான பரமாத்மாவை அடைகிறான். இக்காரணத்தினால் அவன் எப்பொழுதும் ஆனந்தத்திலேயே மூழ்கி இருக்கிறான். எந்த நிகழ்ச்சி நடந்தாலும் அவனுடைய இந்த நிலையில் சிறிதும் மாற்றம் ஏற்படாது. இதுதான் அவன் நித்யத்ருப்தனாக இருக்கும் நிலை.

**கேள்வி:** 'கர்மணி அபி₄ப்ரவ்ருத்த: அபி ந ஏவ கிஞ்சித்கரோதி ஸ:' இந்த வாக்கியத்தில் 'அபி₄', 'அபி', 'ஏவ' இவற்றைக் கூறியதன் பொருள் என்ன?

**பதில்:** 'கர்மணி அபி₄ப்ரவ்ருத்த:' என்றால், தன்னுடைய வர்ணாசிரமத்திற்கேற்றவாறு சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட எல்லாவிதமான கர்மங்களையும் நன்றாக, கவனமாக, விவேகத்துடன், எதையும் விடாமல் செய்பவன் என்று பொருள். 'அபி' (அவன் கூட) என்றால் மமகாரம், அஹங்காரம், பயனில் கருத்து உள்ள மனிதன் கர்மங்களைச் செய்யாமல் துறந்தாலும் கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெறமாட்டான். ஆனால், மேலே சொன்னவிதம் நித்யத்ருப்தன் கர்மங்களில் ஈடுபட்டாலும் அவன் பந்தப்படமாட்டான். கட்டுப்படவே மாட்டான். 'ஏவ' என்ற அழுத்தத்திற்கு அந்தக் கார்யங்களில் அவனுக்குச் சிறிதுகூட ஸம்பந்தமில்லை என்று பொருள். அவன் எல்லாக் கார்யங்களையும் செய்தாலும், அவன் அகர்த்தாதான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இதுவரை கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் காணும் முக்தன் பூர்ணகாமனாக இருப்பதால் அவன் செய்யவேண்டியது எதுவுமில்லை (3/17). அவனுக்கு எப்பொருளும், எவ்விதத்திலும் தேவையில்லை. அவன் எந்தக் கர்மம் செய்தாலும், செய்யாமல் விலகி இருந்தாலும், எல்லாமே சாஸ்த்ர ஸம்மதம்தான். பற்றில்லாமல் உலகுக்கு வழிகாட்டவே எதுவும் செய்கிறான். ஆகவே அவன் செய்வது கர்மம் அன்று என்று தெளிவாகச் சொல்லப்பட்டது.

பொருத்தம்: மேலே சொன்ன ச்லோகங்களினால் மமகாரம், பற்று, பயனில் கருத்து, அஹங்காரம் இவற்றைத் துறந்து உலகிற்கு வழிகாட்டியாக, சாஸ்த்ர ஸம்மதமான யாகம், தானம், தவம் முதலிய கர்மங்களைச் செய்தாலும், ஞானி ஒன்றும் செய்தவனாக ஆகமாட்டான்; ஆகவே அவனுக்குக் கர்மபந்தம் கிடையாது என்ற விஷயம் தெளிவாயிற்று. இங்கு ஒரு கேள்வி எழுகிறது. ஞானியை உதாரணமாகக் கொண்டு, மேலே சொன்னவிதம் கர்மம் செய்யும் ஸாதகன் நித்ய, நைமித்திகக் கர்மங்களை த்யாகம் செய்வதில்லை. நிஷ்காமமாக சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட எல்லாவிதமான கடமைகளையும் ஆற்றுகிறான். அதனால் அவனுக்கு ஒரு பாவமுமில்லை. ஆனால் ஒரு ஸாதகன் சாஸ்த்ர விதிகளின்படி, யாகம், தானம் முதலிய கர்மங்களைச் செய்யாமல், உடல் வாழ்வதற்காக மட்டும் அவசியமான உடல் சுத்தி, குளியல், உணவு உண்பது என்ற கார்யங்களை மட்டும் செய்தால் அவன் பாவத்திற்கு ஆளாவான் அல்லவா? இந்த ஸந்தேஹத்தைப் போக்குகிறார்—

निराशीर्यतचित्तात्मा त्यक्तसर्वपरिग्रहः ।
शारीरं केवलं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥ २१ ॥

நிராஶீர்யதசித்தாத்மா த்யக்தஸர்வபரிக்₃ரஹ: ।
ஶாரீரம் கேவலம் கர்ம குர்வந்நாப்நோதி கில்பி₃ஷம் ॥ 21 ॥

**யதசித்தாத்மா** – மனம், புலன்கள் அடங்கிய இந்த உடலை வென்று, **த்யக்த ஸர்வ பரிக்₃ரஹ:** – ஸகல போகப் பொருட்களையும் துறந்து, **நிராஶீ:** – எதையும் விரும்பாமல் இருப்பவன், **கேவலம் ஶாரீரம் கர்ம** – உடலைப் பேணுவதற்குரிய செயலை மட்டும், **குர்வந்** – செய்து கொண்டிருந்தாலும் கூட, **கில்பி₃ஷம்** – பாவத்தை, **ந ஆப்நோதி** – அடைவதில்லை.

மனம், புலன்கள் அடங்கிய இந்த உடலை வென்று ஸகல போகப் பொருட்களையும் துறந்து எதையும் விரும்பாமல் இருப்பவன் உடலைப் பேணுவதற்குரிய செயலை மட்டும் செய்து கொண்டிருந்தாலும் கூடப் பாவத்தை அடைவதில்லை.

**கேள்வி:** 'நிராஶீ:', 'யதசித்தாத்மா', 'த்யக்தஸர்வபரிக்ரஹ:' – இந்த மூன்று அடைமொழிகளுக்கு என்ன பொருள்?

**பதில்:** எவனுக்கு உலகியல் பொருள் எதுவும் தேவை இல்லையோ, எவன் தன் ஸுகத்திற்காக எந்தச் செயலையும், எந்த மனிதனையும் நாடுவதில்லையோ, எவன் எல்லாவிதமான இச்சை, பற்றுதல், வாஸனை முதலியவற்றை அறவே துறந்துவிட்டானோ, அவனை 'நிராஶீ:' என்று குறிப்பிடுகிறார். எவனுடைய மனம், புலன்கள், உடல் இவை அவன் வசப்பட்டிருக்கின்றனவோ, அதாவது எவனுடைய மனம், புலன்களில் விருப்பு-வெறுப்புகள் இல்லையோ, அதனால் ஒலி முதலிய புலன் விஷயங்களில் தொடர்பு இல்லையோ, எவனுடைய உடல் அவன் சொன்னவண்ணம் நடந்து கொள்கிறதோ, அவன் இல்லறத்தானாயினும், ஸந்யாஸி ஆயினும் 'யதசித்தாத்மா' எனப்படுவான். எவனுக்கு எந்தப் பொருளிலும் 'தன்னுடையது' என்ற அபிமானம்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இல்லையோ, எந்தப் போகப் பொருளையும் சேர்த்து வைப்பது என்பதை விட்டுவிடுகிறானோ, அப்படிப்பட்ட ஸந்யாஸி 'த்யக்தஸர்வபரிக்ரஹன்'. அதுபோல மற்ற ஆசிரமத்தில் உள்ளவனும் மேலே சொன்னவிதம் 'தனது' என்ற மனப்பான்மை இல்லாமல் இருந்தால், அவனும் 'த்யக்தஸர்வபரிக்ரஹன்' தான்.

இம்மூன்று அடைமொழிகளையும் சேர்ப்பதன் கருத்து என்னவென்றால், இவ்விதம் வெளிப்பொருட்களின் ஸம்பந்தத்தை அறுத்துக் கொண்டு, எப்பொழுதும் இடைவிடாமல் உள்ளே இருக்கும் அந்தர்யாமியிடமே, ஸந்தோஷமாக இருப்பவன் ஸாங்க்யயோகி. அவன் யாக-தானங்கள் செய்யாமல், உடல் வாழ்வதற்குரிய உணவு உண்பது, நீர் அருந்துவது முதலிய செயல்களை மட்டும் செய்து வந்தாலும், அவன் பாவத்திற்கு . ஆளாகமாட்டான் என்பது கருத்து. ஏனெனில் அவன் பற்றுதலுடனோ, பயன் கருதியோ, அஹங்காரத்தினாலோ, மோஹத்தினாலோ த்யாகம் செய்யவில்லை. அது பற்று, அஹங்காரம், பயனில் கருத்து இவற்றை அறவே ஒழித்து, சாஸ்த்ர ஸம்மதமாகச் செய்யப்பட்ட த்யாகம். அவனே எவ்விதத்திலும் உலகிற்கு நன்மை செய்பவன்.

**கேள்வி:** 'ஶாரீரம் கேவலம் கர்ம' என்பது எது? 'கில்பிஷம்' என்றால் என்ன? அதை அடைவதில்லை என்றால் என்ன பொருள்?

**பதில்:** நீராடி உடலைச் சுத்தமாக வைத்துக் கொள்வது, உண்பது, அருந்துவது, படுப்பது முதலிய உடலைப் பேணுவதற்குரிய செயல்களை 'ஶாரீரம் கேவலம் கர்ம' என்ற சொற்களால் குறிப்பிடுகிறார். யாகம், தானம், தவம் முதலியவற்றைச் செய்யாமல் விட்டதால் ஏற்படக் கூடிய ப்ரத்யவாயம் (பாபம்), உடலைப் பேணுவதில் ஏற்படும் தவிர்க்க முடியாத சில சிறிய ஹிம்ஸைகள் இவற்றை 'கில்பிஷம்' என்ற சொல் குறிக்கிறது. மேலே சொல்லப்பட்டவன் யாகம் முதலிய கர்மங்களைச் செய்யாமல்விட்ட பாவத்தையும் அடைய மாட்டான்; உடலைப் பேணும் செயல்களினால் உண்டாகும் பாவமும் அவனை ஒட்டாது. இதைத்தான், 'கில்பிஷத்தை அடையமாட்டான்' என்று கூறுகிறார்.

**பொருத்தம்:** மேலே சொன்ன ச்லோகங்களில் பரமாத்மாவை அடைந்துவிட்ட மஹாபுருஷர்களுக்குக் கர்மம் செய்வதாலும், செய்யாமல் விடுவதாலும் ஒரு ப்ரயோஜனமும் இல்லை. ஞானயோக ஸாதகன் ஏற்பதோ, விடுவதோ சாஸ்த்ர ஸம்மதமானது; பற்றற்றது; மமகாரமற்றது. அவன் கடமையை ஆற்றினாலும், விட்டாலும் கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெறுவான் என்று தெளிவாக்கப்பட்டது. அடுத்து, கர்மத்தில் அகர்மத்தைக் காண்பவன், அதாவது கர்மம் செய்யும் கர்மயோகி கூடக் 'கர்மபந்தத்திற்கு' ஆட்படமாட்டான் என்று கூறுகிறார்—

**यदृच्छालाभसन्तुष्टो द्वन्द्वातीतो विमत्सरः।**
**समः सिद्धावसिद्धौ च कृत्वापि न निबध्यते॥२२॥**

**யத்$_3$ருச்ச$_2$ாலாப$_4$ஸந்துஷ்டோ த்$_3$வந்த்$_3$வாதீதோ விமத்ஸர: ।**
**ஸம: ஸித்$_3$த$_4$ாவஸித்$_3$தெ$_4$ள ச க்ருத்வாபி ந நிப$_3$த்$_4$யதே ॥ 22 ॥**

**யத்$_3$ருச்ச$_2$ா லாப$_4$ ஸந்துஷ்ட:** – தான் விரும்பாவிடினும், தானாகவே கிடைத்ததில் எப்பொழுதும் ஸந்தோஷம் உள்ளவனாகவும், **விமத்ஸர:** – பொறாமை அறவே அற்றவனாகவும், **த்$_3$வந்த்$_3$வாதீத:** – மகிழ்ச்சி-துயரம் முதலிய இரட்டைகளுக்கு முற்றிலும் அப்பாற்பட்டவனாகவும் (இவ்வாறே), **ஸித்$_3$தெ$_4$ள** – செய்த கார்யம் கைகூடினாலும், **அஸித்$_3$தெ$_4$ள ச** – கைகூடாவிட்டாலும், **ஸம:** – ஸமபாவனையுடன் உள்ள கர்மயோகி, **க்ருத்வா அபி** – (கர்மங்களைச்) செய்தாலும் (அவற்றினால்), **ந நிப$_3$த்$_4$யதே** – கட்டப்படுவதில்லை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தான் விரும்பாவிடினும் தானாகவே கிடைத்ததில் எப்பொழுதும் ஸந்தோஷம் உள்ளவனாகவும், பொறாமை அறவே அற்றவனாகவும், மகிழ்ச்சி-துயரம் முதலிய இரட்டைகளுக்கு முற்றிலும் அப்பாற்பட்டவனாகவும், செய்த கார்யம் கைகூடினாலும் கைகூடாவிட்டாலும் ஸமபாவனையுடன் உள்ள கர்மயோகி கர்மங்களைச் செய்தாலும் அவற்றினால் கட்டப்படுவதில்லை.

**கேள்வி:** 'யத்ருச்சாலாப:' என்றால் என்ன? அதில் ஸந்துஷ்டனாக இருப்பது எப்படி?

**பதில்:** தன் விருப்பமின்றி, பிறர் விருப்பத்தினாலும், ப்ராரப்தத்தின்படியும் அனுகூலமாகவோ, ப்ரதிகூலமாகவோ தானாகக் கிடைப்பது 'யத்ருச்சாலாபம்'. எது கிடைத்தாலும், எப்பொழுதும் ஆனந்தமாக இருக்க வேண்டும். அனுகூலமான பொருள் கிடைத்தால் அதில் விருப்புக் கொள்வது, அதைப் பெருக்குவதில் மேலும் ஊக்கம் கொள்வது, ப்ரதிகூலமான பொருள் கிடைத்தால் வெறுப்பது, அது தொலைந்தால் நலம் என்று நினைப்பது இந்த இரண்டுவிதமான பாவனையும் இல்லாமல் இரண்டுமே ப்ராரப்த வசத்தாலோ, பகவானுடைய ஏற்பாட்டினாலோ கிடைத்தவை என்று அமைதியாக, மலர்ந்த உள்ளத்துடன் இருப்பவனை 'யத்ருச்சலாப ஸந்துஷ்டன்' எனக் கூறியுள்ளார்.

**கேள்வி:** 'விமத்ஸர:' என்றால் என்ன பொருள்? எதற்காக இப்படிச் சொல்கிறார்?

**பதில்:** கல்வி, அறிவு, செல்வம், மதிப்பு, பெருமை இவற்றாலோ, வேறு பொருள் அல்லது குணம் இவற்றின் காரணத்தினாலோ பிறருடைய மேன்மையைக் கண்டு சிறிதும் பொறாமைப்படாமல் இருப்பவன் 'விமத்ஸரன்'. தன்னையே வித்வானாகவும், அறிவாளியாகவும் நினைப்பவனிடம் கூட, உள்ளத்தில் பொறாமை மறைந்திருக்கும். தனக்கு ப்ரியமானவர்கள், நண்பர்கள்-உறவினர்கள் ஆகியவர்களிடமும் கூட இந்தப் பொறாமை மனப்பான்மை எழும். கர்மயோகியானவன் மகிழ்ச்சி-துயரம் முதலிய இரட்டைகளைக் கடந்தவனாகவும், பொறாமையற்றவனாகவும் இருக்கவேண்டும். இவனே 'விமத்ஸரன்' ஆவான்.

**கேள்வி:** 'இரட்டைகளைக் கடந்தவன்' என்றால் என்ன?

**பதில்:** மகிழ்ச்சி-துயரம், விருப்பு-வெறுப்பு என்று ஒன்றுக்கொன்று முரண்பட்டவை இரட்டைகள் எனப்படும். அவற்றில் ஒட்டாதிருத்தல் அதாவது அப்படிப்பட்ட விகாரங்களை மனதிலிருந்து அறவே ஒழிப்பதுதான் 'இரட்டைகளைக் கடப்பது' ஆகும்.

**கேள்வி:** செயல் கைகூடினாலும், கைகூடாவிட்டாலும் ஸமமாக இருப்பது என்பதற்கு என்ன பொருள்?

**பதில்:** ஆற்றவேண்டிய கடமைகளான யாகம், தானம், தவம் முதலியவை இடையூறின்றி, முறைப்படி நிறைவேறினால் அவை ஸித்தி (கை கூடிவிட்டன) என்று பொருள். இடையூறு நேர்ந்து சரிவர நிறைவேறாமற்போவது 'அஸித்தி' எனப்படும். அதுபோல, எந்த லக்ஷ்யத்தோடு கடமை ஆற்றப்பட்டதோ, அந்த லக்ஷ்யம் நிறைவேறினால் 'ஸித்தி' எனப்படும். அந்த லக்ஷ்யம் நிறைவேறாமற்போனால் 'அஸித்தி' எனப்படும். இவற்றில் வேறுபாடு காணாமல் இருப்பதுதான் ஸித்தி, அஸித்திகளில் 'ஸமபாவனை'. கை கூடினால் மகிழ்ச்சியும், கை கூடாவிட்டால் துயரமும் ஏற்படக் கூடாது. இரண்டிலும் ஒரே மனதாக அமைதி அடைவது என்று பொருள்.

**கேள்வி:** 'இத்தகையவன் கர்மங்களைச் செய்தாலும் பந்தப்பட மாட்டான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கர்மம் செய்வது மனிதனுடைய பொறுப்பு (2/47). யாக(கர்ம)ங்களோடுகூட மனிதனைப் படைத்து ப்ரம்மா கடமைகளைச் செய் என்று ஆணையிட்டார் (3/10). அதன்படி கடமைகளைச் செய்யாவிட்டால் பாவி ஆவான் (3/16). மனிதன் செயல்கள் செய்யாமல் இருக்கவே முடியாது (3/5). தத்தம் இயல்புக்கு ஏற்ப எல்லோருமே ஏதாவது செய்து கொண்டுதான் இருக்க வேண்டியிருக்கிறது. ஆகவே உடல் தேவைகளுக்காக மட்டும் இயங்கி,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வெளிப்பொருட்களை ஏற்காமல் வாழும் ஸாங்க்யயோகி மற்ற கர்மங்களைச் செய்யாமல் விட்டாலும், கர்மம் செய்யாத பாவத்திற்கு ஆளாகமாட்டான். அதுபோல் கர்மயோகி விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்தாலும் பந்தப்படமாட்டான்.

**பொருத்தம்: மேலே சொன்னவிதம் செய்யப்படும் கடமைகள் பந்தப்படுத்துவதில்லை என்பது மட்டும்தானா, வேறு பெருமையும் உண்டா என்ற கேள்விக்கு விடையளிக்கிறார்—**

**गतसङ्गस्य मुक्तस्य ज्ञानावस्थितचेतसः ।**
**यज्ञायाचरतः कर्म समग्रं प्रविलीयते ॥ २३ ॥**

**க₃தஸங்க₃ஸ்ய முக்தஸ்ய ஜ்ஞாநாவஸ்தி₂தசேதஸ: ।**
**யஜ்ஞாயாசரத: கர்ம ஸமக்₃ரம் ப்ரவிலீயதே ॥ 23 ॥**

**க₃தஸங்க₃ஸ்ய** – எவன் உலகப்பற்றை அறவே ஒழித்து, **முக்தஸ்ய** – உடற்பற்று, மமதை இவற்றையும் அறவே ஒழித்து, **ஜ்ஞாநாவஸ்தி₂தசேதஸ:** – பரமாத்ம ஞானத்தில் மனதை நிலைநிறுத்தி, **யஜ்ஞாய** – யாகத்திற்காகவே, **ஆசரத:** – கர்மங்களை ஆற்றுகிறானோ (அவனுடைய), **ஸமக்₃ரம் கர்ம** – கர்மம் முழுவதும், **ப்ரவிலீயதே** – அழிந்து போய்விடுகிறது.

எவன் உலகப்பற்று, உடற்பற்று, மமதை இவற்றை அறவே ஒழித்துப் பரமாத்ம ஞானத்தில் மனதை நிலைநிறுத்தி யாகத்திற்காகவே கர்மங்களை ஆற்றுகிறானோ அவனுடைய கர்மம் முழுவதும் அழிந்து போய்விடுகிறது.

**கேள்வி:** 'பற்று அறவே ஒழிவது' என்றால் என்ன? 'கதஸங்கஸ்ய' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** கர்மங்களிலும், அவற்றின் பயன்களான போகங்களிலும் சிறிதுகூடப் பற்றுதலோ, ஆவலோ, ஆசையோ இல்லாமல் இருப்பதுதான் 'பற்று அறவே ஒழிவது' என்பதன் பொருள். இவ்விதம் பற்றழிந்த கர்மயோகியை 'கதஸங்கன்' என்கிறார். இதே கருத்தை முன் ச்லோகத்தில் கர்மத்திலும், அதன் பயனிலும் பற்றை த்யாகம் செய்து கர்மம் கைகூடினாலும், கை கூடாவிட்டாலும் ஸமபாவனையுடன் இருப்பது என்று கூறினார்.

**கேள்வி:** 'முக்தஸ்ய' என்றால் என்ன பொருள்?

**பதில்:** எவனுக்கு உள்ளம், புலன்கள் இவற்றின் கூட்டான சரீரத்தில் சிறிதுகூட 'உடலே நான்' என்ற எண்ணமோ, 'உடல் எனது' என்ற பாசமோ இல்லையோ, அவனே அதாவது உடற்பற்றை அறவே ஒழித்த அந்த ஞானயோகிதான் 'முக்தன்'.

**கேள்வி:** 'ஜ்ஞாநாவஸ்திதசேதஸ:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** எங்கும் பரம்பொருளான ப்ரம்மமே நிறைந்திருக்கிறது என்று உணர்வதனால், ஒவ்வொரு செயலிலும் இடைவிடாது பரமாத்ம ஞானத்திலேயே லயித்திருக்கும் ஞானயோகி என்று பொருள்.

**கேள்வி:** 'யஜ்ஞாய ஆசரத:' என்ற தொடரில், 'யக்ஞம்' என்றால் என்ன? அதன் பொருட்டுக் கர்மம் செய்வது என்றால் என்ன?

**பதில்:** அவரவருடைய வர்ணம், ஆசிரமம், சூழ்நிலை இவற்றிற்கேற்றவாறு அவர்வர்க்கு ஆற்றவேண்டியதாக சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகள் 'யக்ஞங்கள்' ஆகும். அந்தக் கடமைகளை ஆற்றுவதற்காகக் கார்யங்கள் செய்வதுதான் யக்ஞம் எனப்படும். அதாவது சிறிதுகூடத் தன்னலம் பாராட்டாமல், உலக வழிகாட்டுதலின் பொருட்டு யாகம் செய்வது என்ற தொன்றுதொட்டு வந்த பழக்கத்தைக் கடைப்பிடித்துக் கர்மங்களைச் செய்வது என்று பொருள். 3/9ல் 'யஜ்ஞார்த்தாத் கர்மண:' என்ற தொடருக்கும் இதுதான் பொருள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ஸமக்ரம் கர்ம' என்று எந்தக் கர்மங்களைக் குறிப்பிடுகிறார்? அவை அழிந்து விடுகின்றன என்றால் என்ன பொருள்?

**பதில்:** இப்பிறவியிலும், முற்பிறவிகளிலும் செய்யப்பட்ட கர்மங்கள் ஸம்ஸ்காரங்களாக – மனப்பதிவுகளாக மனிதர்களின் மனதில் எவ்வளவு சேர்த்து வைக்கப்பட்டிருக்கின்றனவோ, மேலும் அவற்றின் தொடர்பாக மேலே சொன்னவிதம் புதிதாகவும் எவ்வளவு கர்மங்கள் செய்யப்படுகின்றனவோ, இவையெல்லாவற்றையும் தொகுத்து 'ஸமக்ரம் கர்ம' என்று கூறுகிறார். அவை அத்தனையும் அற்றுப் போய்விடும். அதாவது அவற்றிற்குச் சிறிதுகூடக் கட்டுப்படுத்தக் கூடிய சக்தி இருக்காது என்பதே 'அழிவது' என்பதன் பொருள். மேலே சொன்னவிதம் கர்மம் செய்பவனின் கர்மங்கள் அவனை பந்தப்படுத்தா என்பது மட்டுமன்று; ஒரு வைக்கோல் சுருளில் பட்ட நெருப்பு பெரிய வைக்கோல்போரில் பிடித்து, அந்தச் சுருளும், அந்த வைக்கோல்போரும் சேர்ந்தே அழிந்துவிடுவதுபோலப் பற்று, பயனில் கருத்து, மமகாரம், அபிமானம் இவை த்யாகம் என்கிற அக்னியில், இப்பொழுது செய்த கர்மங்களையும், முன்வினைகளையும் சேர்த்துக் கொண்டு சாம்பலாக நீற்றுப் போய்விடும். பின் எந்தக் கர்மத்திலும், எவ்விதப் பயனையும் விளைவிக்கக் கூடிய சக்தி அவற்றிற்கு இருக்காது என்பது கருத்து.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் யாகத்தின் பொருட்டுச் செய்யும், மனிதனுடைய எல்லாக் கர்மங்களும் கரைந்து போய்விடும் என்று சொன்னார். அங்கு அக்னியில் செய்யப்படும் ஹோமம்தான் யாகம்; அதற்காகச் செய்யப்படும் கர்மம்தான் யாகத்தின் பொருட்டுச் செய்யப்படும் கர்மம் என்று மட்டும் பொருள் அன்று. அவரவர் வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை இவற்றிற்குத் தக்கபடி, அவரவருக்கு விதிக்கப்பட்ட கடமைகளே அவரவருக்கு யக்ஞம். அதைக் காப்பதற்காகச் செய்யப்படும் செயல்களை, தன்னலம் கருதாது உலக வழிகாட்டுதலின் பொருட்டுச் செய்வதுதான் யக்ஞத்திற்கான கர்மம் எனப்படும். இதை நன்றாகத் தெளிவுபடுத்துவதற்காக, இனி வரும் ஏழு ச்லோகங்களில் வெவ்வேறு யோகிகளால், பரமாத்மாவை அடைவதற்கு ஸாதனமாக சாஸ்த்ரங்களில் கூறப்பட்டபடி செய்யப்படுவனவற்றை 'யாகங்கள்' எனும் பெயரால் வர்ணிக்கிறார்—

**ब्रह्मार्पणं ब्रह्म हविर्ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम्।**
**ब्रह्मैव तेन गन्तव्यं ब्रह्मकर्मसमाधिना॥ २४॥**

**ப்₃ரஹ்மார்பணம் ப்₃ரஹ்ம ஹவிர்ப்₃ரஹ்மாக்₃னௌ ப்₃ரஹ்மணா ஹுதம் ।**
**ப்₃ரஹ்மைவ தேந க₃ந்தவ்யம் ப்₃ரஹ்மகர்மஸமாதி₄நா ॥ 24 ॥**

**அர்பணம்** –-வேள்வியில் உபயோகிக்கப்படும் ஸ்ருவம் என்னும் ஹோமக்கரண்டி முதலிய உபகரணங்களும், **ப்₃ரஹ்ம** – ப்ரம்மம்தான். **ஹவி:** – ஹோமம் செய்யப்படும் த்ரவ்யமும், **ப்₃ரஹ்ம** – ப்ரம்மம்தான். **ப்₃ரஹ்மணா** – ப்ரம்மமேயான கர்த்தா மூலம், **ப்₃ரஹ்மாக்₃னௌ** – ப்ரம்மம் ஆகிய அக்னியில், **ஹுதம்** – ஆஹுதி செய்வது என்ற செயலும் (ப்ரம்மம்தான்). **ப்₃ரஹ்மகர்மஸமாதி₄நா தேந** – ப்ரம்மம் ஆகிய செயலில் ஊன்றி நிற்கின்ற அந்த யோகியினால், **க₃ந்தவ்யம்** – அடையத்தக்க பயனும், **ப்₃ரஹ்ம ஏவ** – ப்ரம்மமேதான்.

வேள்வியில் உபயோகிக்கப்படும் ஸ்ருவம் என்னும் ஹோமக்கரண்டி முதலிய உபகரணங்களும் ப்ரம்மம்தான். ஹோமம் செய்யப்படும் த்ரவ்யமும் ப்ரம்மம்தான். ப்ரம்மமேயான கர்த்தா மூலம் ப்ரம்மம் ஆகிய அக்னியில் ஆஹுதி செய்வது என்ற செயலும் ப்ரம்மம்தான். ப்ரம்மம் ஆகிய செயலில் ஊன்றி நிற்கின்ற அந்த யோகியினால் அடையத்தக்க பயனும் ப்ரம்மமேதான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** இந்த ச்லோகத்தில் 'யஜ்ஞம்' என்ற உருவகத்தின் கருத்து என்ன?

**பதில்:** சாந்தோக்ய உபநிஷத்தில் 3/14/1ல் 'ஸர்வம் க₂ல்வித₃ம் ப்₃ரஹ்ம' (இவையனைத்தும் ப்ரம்மம் தானே!) என்று சொன்னபடி, எங்கும் ப்ரம்மத்தைக் காண்பது என்ற ஸாதனத்திற்கு யக்ஞம் என்ற உருவகம் இந்த ச்லோகத்தில் ஆளப்பட்டிருக்கிறது. கர்த்தா, கர்மம், த்ரவ்யம், கருவி என்று வெவ்வேறாகத் தோன்றும் அனைத்துப் பொருட்களும் ப்ரம்மம் என்று பார்க்கும் பழக்கம் இருக்கிறதே, இந்தப் பழக்கமாகிற கர்மம் கூடப் பரமாத்மாவை அடைய ஸாதனமாவதால் அதுவும் யக்ஞம் எனப்படும்.

இந்த யக்ஞத்தில் ஸ்ருவம் முதலிய கருவிகள், ஹோமத்ரவ்யங்கள், ஹோமம் செய்பவன். மேலும் ஹோமம் எனும் செயல் – இவை வெவ்வேறு பொருட்களல்ல. அவன் பார்வையில் எல்லாமே ப்ரம்மம்தான். இப்படிப்பட்ட யக்ஞம் செய்யும் யோகி, மனம், புத்தி முதலியவற்றினால் அகில ப்ரபஞ்சத்தையும் ப்ரம்மமாகவே காணும் பயிற்சியை மேற்கொள்கிறார். அவர் தம்மையோ, அப்பொருட்களையோ, இந்தப் பயிற்சி என்ற செயலையோ, மற்ற எதையுமே ப்ரம்மத்தைத் தவிர வேறாகக் கருதுவதில்லை. எல்லாவற்றையும் ப்ரம்மமாகவே பார்க்கிறார். ஆகவே அவருக்கு அவற்றில் எந்தவிதமான பேத புத்தியும் இருக்காது.

**கேள்வி:** இந்த உருவகத்தில் 'அர்பணம்' என்ற சொல்லுக்கு 'ஹோமம் செய்வது' என்ற செயல் என்று பொருள் கொண்டால் என்ன?

**பதில்:** பின்னால் 'ஹுதம்' என்ற சொல் வருகிறது. அதற்கு ஹோமம் என்ற செயல் என்று பொருள். ஆகவே 'அர்பணம்' என்ற சொல்லுக்கும் ஹோமம் என்ற செயல் என்று பொருள் சொன்னால் கூறியதைக் கூறல் என்ற குற்றம் நேரும். 9/16ல் 'ஹுதம்' என்ற சொல்லுக்கு, ஹோமம் என்ற செயல் என்ற பொருள்தான் வருகிறது. 'அர்ப்யதே அநேந' எதைக் கொண்டு ஒரு த்ரவ்யத்தை அக்னிக்கு அர்ப்பணம் செய்கிறோமோ அந்தக் கருவி என்று பொருள் கொள்வதற்கு ஸம்ஸ்க்ருத இலக்கணம் இணங்குகிறது. ஆகவே 'அர்பணம்' என்ற சொல், எதன் மூலமாக நெய் முதலிய த்ரவ்யங்கள் ஹோமம் செய்யப்படுகின்றனவோ, அந்த ஸ்ருவம் முதலிய பாத்ரங்களைக் குறிக்கிறது என்று கொள்ள வேண்டும்.

**கேள்வி:** ப்ரமமாகிற செயலில் ஊன்றியிருப்பது என்றால் என்ன பொருள்? அவ்வாறு செய்யப்பட்ட கர்மங்களினால் அடையும் பயனும் ப்ரம்மம்தான் என்று சொல்வதற்கு என்ன பொருள்?

**பதில்:** இடைவிடாது எங்கும் ப்ரம்மம் என்று நினைப்பது, எதையும் ப்ரம்மத்தைத் தவிர வேறாக நினைக்காமல் இருப்பது – இதுதான் ப்ரம்ம கர்மத்தில் ஊன்றியிருப்பதன் பொருள். இத்தகைய ஸாதனையின் பயன், ஸந்தேஹமின்றி பரப்ரம்மமான பரமாத்மாவை அடைவதுதான்; இவ்வாறு ஸாதனை புரிகிறவனுக்கு வேறு பயன் கிடையாது, இதைத்தான் 'கர்மத்தின் மூலம் கிடைக்கக் கூடிய பயனும் ப்ரம்மம்தான்' என்று கூறுகிறார்.

**பொருத்தம்: இவ்விதம் 'ப்ரம்ம கர்மம்' என்ற யக்ஞத்தை வர்ணித்துவிட்டு, இனி தேவ பூஜையும் யக்ஞம்தான் என்றும், ஆத்மா, பரமாத்மா இரண்டையும் ஒன்றாகக் காண்பதும் யக்ஞம்தான் என்றும் சொல்கிறார்—**

**दैवमेवापरे यज्ञं योगिनः पर्युपासते।**
**ब्रह्माग्नावपरे यज्ञं यज्ञेनैवोपजुह्वति ॥ २५ ॥**

**தை₃வமேவாபரே யஜ்ஞம் யோகி₃ந: பர்யுபாஸதே ।**

**ப்₃ரஹ்மாக்₃நாவபரே யஜ்ஞம் யஜ்ஞேநைவோபஜுஹ்வதி ॥ 25 ॥**

அபரே – மற்றும் சில, யோகி₃ந: – யோகியர், தை₃வம் – தேவ பூஜை என்னும், யஜ்ஞம் ஏவ – யாகத்தையே, பர்யுபாஸதே – செவ்வனே செய்கிறார்கள். அபரே –

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மற்றும் சில யோகியர், **ப்₃ரஹ்மாக்₃நௌ** – பரப்ரம்ம பரமாத்மா வடிவான அக்னியில் (தானும் ப்ரம்மமும் வெவ்வேறு என்ற பாவனையின்றி) **யஜ்ஞேந ஏவ** – யாகத்தின் மூலமே, **யஜ்ஞம்** – (ஆத்மரூபமான) யாகத்தை, **உபஜுஹ்வதி** – ஹோமம் செய்கிறார்கள்.

சில யோகியர் தேவ பூஜை என்னும் யாகத்தையே செவ்வனே செய்கிறார்கள். மற்றும் சில யோகியர் பரப்ரம்ம பரமாத்மா வடிவான அக்னியில் தானும் ப்ரம்மமும் வெவ்வேறு என்ற பாவனையின்றி யாகத்தின் மூலமே ஆத்மரூபமான யாகத்தை ஹோமம் செய்கிறார்கள்.

**கேள்வி:** இங்கு 'யோகிந:' என்ற சொல்லால் எந்த யோகிகளைக் குறிப்பிடுகிறார்? அத்துடன் 'அபரே' என்கிற அடைமொழியை ஏன் சொல்கிறார்?

**பதில்:** இங்கு யோகிகள் என்ற சொல் மமகாரம், பற்று, பயனில் கருத்து இவற்றை விட்டு, சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட யாகம் முதலிய கடமைகளைச் செய்யும் ஸாதகர்களைக் குறிக்கிறது. இவர்களையும், முன் ச்லோகத்தில் சொல்லப்பட்ட, ப்ரம்ம கர்மங்கள் செய்பவர்களையும் என்று பிரித்துக் காட்டவே 'அபரே' என்று குறிப்பிடுகிறார். இவர்களுடைய ஸாதனை வேறு; முன் சொன்னவர்களின் ஸாதனை வேறு. இந்த ஸாதனைகளுக்குத் தகுதி பெற்றவர்களும் வெவ்வேறானவர்கள் என்பதை 'அபரே' என்பதனால் பிரித்துக் காட்டுகிறார்.

**கேள்வி:** 'தைவம்' எனும் அடைமொழியுடன் 'யக்ஞம்' என்ற சொல் எதைக் குறிக்கிறது? அதைச் சரிவரச் செய்வது எப்படி? இந்த ச்லோகத்தின் முதற்பாதியில் பகவான் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ப்ரம்மா, சிவன், சக்தி, கணேசன், சூரியன், சந்த்ரன், இந்த்ரன், வருணன் என்று சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட தெய்வங்களுக்காக ஹோமம் செய்வது, பூஜை செய்வது, மந்த்ரஜபம் செய்வது, அவர்களின் பொருட்டு தானம் செய்வது, அன்னதானம் செய்வது முதலிய கார்யங்கள் அனைத்தும் 'தெய்வ யக்ஞம்' என்ற சொல்லால் குறிப்பிடப்படுகின்றன. இவற்றைக் கடமை என்று கருதி மமகாரம், பற்று, பயனில் கருத்து இவற்றை விடுத்துப் பரமாத்மாவை அடைவதுதான் ஒரே லக்ஷ்யம் என்ற குறிக்கோளுடன் ச்ரத்தையுடனும், பக்தியுடனும் சாஸ்த்ர முறைப்படி முழுமையாகச் செய்வதுதான் தெய்வ யக்ஞத்தைச் சரிவரச் செய்வதாகும். இந்த ச்லோகத்தின் முதல் பாதியில் இவ்விதம் தெய்வத்தை உபாஸிப்பவனின் செயலும் யக்ஞத்திற்காக ஆக்கப்படும் கர்மத்தில் அடங்கும் என்பதைச் சொல்கிறார்.

**கேள்வி:** ப்ரம்மம் என்ற அக்னியில் யாகத்தின் மூலம் யாகத்தை ஹோமம் செய்வது என்றால் என்ன?

**பதில்:** அநாதியாக ஊறிப்போன அஞ்ஞானத்தின் காரணமாக, சரீரத் தொடர்பினால், ஆத்மா வேறு, பரமாத்மா வேறு என்ற வேற்றுமை அநாதி காலமாகக் காணப்படுகிறது. இந்த அஞ்ஞானத்தினால் உண்டான வேற்றுமைத் தோற்றத்தை ஞானாப்யாஸத்தினால் அழிக்கவேண்டும். அதாவது ஆசார்யருடைய உபதேசத்தினாலும், சாஸ்த்ரங்களைக் கற்பதாலும் ஏற்பட்ட தத்வ ஞானத்தை இடைவிடாது சிந்தித்து, மனதில் நிலைபெறச் செய்து நித்யமான, விஞ்ஞானம், ஆனந்தம் இவையேயான, குணங்களுக்கு அப்பாற்பட்ட பரப்ரம்மமான பரமாத்மாவிடம் வேற்றுமையற்று ஆத்மாவை இரண்டற ஐக்யப்படுத்துவதுதான் – லயமடையச் செய்வதுதான் ப்ரம்மமாகிற அக்னியில் யாகத்தின் வழியாக யாகத்தை ஹோமம் செய்வதாகும். இவ்விதம் யாகம் செய்யும் ஞானயோகியின் பார்வையில் நிர்குண–நிராகாரமான, ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தைத் தவிரத் தனக்கோ, பிறவற்றிற்கோ சிறிதுகூட இருப்பு இல்லை. முக்குணங்களின் சேர்க்கையான உலகியலில் சிறிதுகூட ஸம்பந்தம் இல்லை. அவருக்கு ப்ரபஞ்சம் என்பது அறவே கிடையாது.

**கேள்வி:** முன் ச்லோகத்தில் வர்ணிக்கப்பட்ட ப்ரம்ம கர்மத்திற்கும், இங்கே கூறப்படும் வேற்றுமையற்ற நிலை என்ற யாகத்திற்கும் என்ன வேறுபாடு?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இரண்டு ஸாதனைகளும் ஸாங்க்யயோகிக்குரியவைதாம். இரண்டிலும் அக்னி என்ற உருவகத்தில் பரப்ரம்மமாகிய பரமாத்மாதான் குறிப்பிடப்படுகிறார். ஆகவே இரண்டும் ஒன்று போலத் தோன்றலாம். இரண்டின் பயனும் ஒன்றுதான்; வேற்றுமையற்று ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்ம ஸ்வரூபத்தை அடைவதுதான். ஆகவே உண்மையில் இரண்டிற்கும் வித்யாஸம் ஒன்றுமில்லை. ஸாதனை முறையில்தான் வேற்றுமை. அதை விளக்குவதற்குத்தான் இரண்டையும் தனித்தனியாக வர்ணித்திருக்கிறார். முன் ச்லோகத்தில் 'ஸர்வம் க₂ல்வித₃ம் ப்₃ரஹ்ம' (சா₂ந்தோ₃க்₃யம் 3/14/1) என்ற வசனப்படி காண்பவையெல்லாம் ப்ரம்மம் என்று பாவிக்கவேண்டும் என்ற ஸாதனை கூறப்பட்டது. இந்த ச்லோகத்தில் கூறப்பட்ட இந்த ஸாதனையில், ப்ரம்மத்துக்கும், காணப்படும் ப்ரபஞ்சத்திற்கும் ஸம்பந்தமில்லை என்ற உண்மையையறிந்து ஆத்மாவும், பரமாத்மாவும் ஒன்றுதான் என்ற ஐக்யபாவனையைப் பெறுவது கூறப்படுகிறது.

**பொருத்தம்:** இவ்விதம் தெய்வயக்ஞம், அபேத தர்சனம் என்கிற யக்ஞம் இவற்றைக் கூறிவிட்டு, அடுத்த ச்லோகத்தில் புலனடக்கம் என்ற யக்ஞம், புலன்களுக்குரிய போகப் பொருட்களை ஹோமம் செய்வது என்ற யக்ஞம் பற்றிக் கூறுகிறார்—

**श्रोत्रादीनीन्द्रियाण्यन्ये संयमाग्निषु जुह्वति।**
**शब्दादीन्विषयानन्य इन्द्रियाग्निषु जुह्वति॥ २६॥**

**ஶ்ரோத்ராதீ₃நீந்த்₃ரியாண்யந்யே ஸம்யமாக்₃நிஷு ஜுஹ்வதி ।**
**ஶப்₃தா₃தீ₃ந்விஷயாநந்ய இந்த்₃ரியாக்₃நிஷு ஜுஹ்வதி ॥ 26 ॥**

**அந்யே** – வேறு சில யோகிகள், **ஶ்ரோத்ராதீ₃நி** – காது முதலிய, **இந்த்₃ரியாணி** – எல்லாப் புலன்களையும், **ஸம்யமாக்₃நிஷு** – அடக்கம் என்னும் அக்னிகளில், **ஜுஹ்வதி** – ஹோமம் செய்கிறார்கள். **அந்யே** – மற்றும் சில யோகிகள், **ஶப்₃தா₃தீ₃ந்** – ஒலி முதலிய, **விஷயாந்** – எல்லாப் புலன்நுகர் பொருட்களையும், **இந்த்₃ரியாக்₃நிஷு** – புலன்கள் என்னும் அக்னிகளில், **ஜுஹ்வதி** – ஹோமம் செய்கிறார்கள்.

வேறு சில யோகிகள் காது முதலிய எல்லாப் புலன்களையும் அடக்கம் என்னும் அக்னிகளில் ஹோமம் செய்கிறார்கள். மற்றும் சில யோகிகள் ஒலி முதலிய எல்லாப் புலன்நுகர் பொருட்களையும் புலன்கள் என்னும் அக்னிகளில் ஹோமம் செய்கிறார்கள்.

**கேள்வி:** 'ஸம்யமத்தை' (புலனடக்கத்தை) அக்னி என்றும், அதைப் பன்மையிலும் குறிப்பிடுவதன் கருத்து என்ன?

**பதில்:** புலனடக்கம் என்ற ஸாதனையை யக்ஞம் என்று உருவகப்படுத்துவதற்காக, இங்கு 'ஸம்யமத்தை' அக்னி என்கிறார். ஒவ்வொரு புலனையும் தனித்தனியாக அடக்க வேண்டுமாதலால், அதைத் தெளிவுபடுத்தி விளக்குவதற்காக, ஒவ்வொரு புலனடக்கத்தையும் தனிப்படுத்தி 'ஸம்யமாக்₃நிஷு' என்று பன்மையில் கூறுகிறார்.

**கேள்வி:** 'ஸம்யமம் என்ற அக்னிகளில் காது முதலிய புலன்களை ஹோமம் செய்வது' என்றால் என்ன?

**பதில்:** இரண்டாம் அத்யாயத்தில் புலன்கள் மனதைக் கலக்கக் கூடியவை, இவை வலுவில் ஸாதகனுடைய மனதை இழுத்துச் சென்றுவிடும் என்று சொன்னார் (2/60). ஆகவே எல்லாப் புலன்களையும் வசப்படுத்துவது அதாவது அவற்றின் சுதந்திரத்தை அழிப்பது; மனதைத் தடுமாறவைக்கும் அவற்றின் சக்தியை அழிப்பது; உலகியல் போகங்களில் அவை திரியாமல் தடுப்பது – இச்செயல்கள்தாம் புலன்களை ஸம்யமம் என்ற அக்னிகளில் ஹோமம் செய்வதாகும். அதாவது காது, சருமம், கண்கள், நாக்கு, மூக்கு இவற்றை வசப்படுத்திச் சுருக்கிக் கொள்வது. காது ஒலியைக் கேட்பதையும், சருமம் தட்ப–வெட்ப உணர்வு பெறுவதையும், கண் உருவத்தைப் பார்ப்பதையும், நாக்கு சுவையை உணர்வதையும், நாசி மணத்தை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



முகர்வதையும் விவேகத்தினால் துறப்பதுதான் புலன்களை 'அடக்கம்' என்ற அக்னிகளில் ஹோமம் செய்வதாகும். ஆமை உதாரணத்தின் மூலம் 2/58ல் இது நன்றாக விளக்கப்பட்டது.

**கேள்வி:** 3/6ல் புலனடக்கம் என்பது பொய் ஆசாரம் என்று சொன்னார். அதற்கும் இங்குக் கூறப்படும் புலனடக்கத்திற்கும் என்ன வித்யாஸம்?

**பதில்:** அங்கு புலன்களை, கேட்காமல், பார்க்காமல், உண்ணாமல், அருந்தாமல் வெளிப்படையாகத் தடுப்பது பற்றி மட்டும்தான் கூறப்பட்டது; புலன்களை வசப்படுத்துவது பற்றிய பேச்சு இல்லை. அங்கு மனம், புலன்களுக்குரிய விஷயங்களை நினைப்பது தெளிவாகத் தெரிகிறது. ஆனால் இங்கு அப்படியன்று. இங்கு புலன்களை வசப்படுத்துவதுதான் ஸம்யமம். வசப்பட்ட புலன்களில் மனதை விஷயங்கள்பால் ஈர்க்கும் சக்தி கிடையாது. ஆகவே புலன்களை வசப்படுத்தாமல் பாசாங்காகக் கண்களை மூடிக்கொண்டிருந்தால், மனம் விஷயங்களை நினைத்துக் கொண்டுதான் இருக்கும். பரமாத்மாவை அடைவதற்காகப் புலன்களை வசப்படுத்தி, மனதில் விஷய சிந்தனையை அறவே ஒழித்தால்தான் இடைவிடாது பரமாத்மாவைச் சிந்திக்க முடியும். இதுதான் பகட்டான புலனடக்கத்திற்கும், உண்மையான ஸம்யமத்திற்கும் உள்ள வித்யாஸம்.

**கேள்வி:** ச்லோகத்தின் பின்பாதியில் 'இந்த்ரிய' என்ற சொல்லுடன் 'அக்நி' என்ற சொல்லைச் சேர்ப்பானேன்? 'இந்த்ரியாக்நிஷு' என்று பன்மையில் கூறுவானேன்?

**பதில்:** பற்றற்ற புலன்களைக் கொண்டு நிஷ்காமமாக நுகர்ச்சிப் பொருட்களில் ஈடுபடுவது என்ற ஸாதனையை யக்ஞம் என்று உருவகப்படுத்துவதற்காக 'இந்த்ரிய', 'அக்நி' என்று இரண்டு சொற்களையும் சேர்த்துச் சொன்னார். ஒவ்வொரு புலனும், பற்றற்று, தனித்தனியான விஷயங்களில் ஈடுபடுவதைத் தெளிவாகத் தெரிவிக்கவே இங்கு பன்மையில் கூறுகிறார்.

**கேள்வி:** புலன்களால் நுகரக் கூடிய ஒலி முதலிய விஷயங்களை, 'புலன்கள் என்ற அக்னி'களில் ஹோமம் செய்வது என்றால் என்ன?

**பதில்:** விருப்பு-வெறுப்புகள் அற்ற, வசப்படுத்தப்பட்ட புலன்களைக் கொண்டு வர்ணம், ஆசிரமம், சூழ்நிலை இவற்றையொட்டி, தகுதிக்கேற்பக் கிடைக்கும் புலன் நுகர் பொருட்களை அந்தப் புலன்களில் லயமடையச் செய்வதுதான் இந்த ஹோமம் (2/64). அதாவது புலன்கள் அந்தப் பொருட்களை ஏற்றுக் கொள்ளும்போதோ, மற்ற நேரத்திலோ, உள்ளத்திலோ புலன்களிலோ எந்தவிதமான விகாரமும் உண்டு பண்ணக் கூடிய சக்தி தலையெடுக்கக் கூடாது. இதுதான் போகப் பொருட்களை, 'புலன்கள் என்ற அக்னி'களில் ஹோமம் செய்வதாகும். காது வழியாக நிந்தையோ, புகழோ உள்ளத்தில் புகும்போதும், இவ்விதம் மற்றப் புலன்களில் அனுகூலமானதோ, ப்ரதிகூலமானதோ புகும்போதும், கண்களின் வழியாக நல்லதும் தீயதுமான காட்சிகள் புகும்போதும், நாக்கின் வழியாக ருசியான, ருசியற்ற பொருட்களை உண்ணும் போதும் இப்படியே மற்ற புலன்கள் மூலமாகவும் அந்தந்த நுகர்ச்சிப் பொருட்களை நுகரும்போதும், ப்ராரப்தத்தின் காரணமாக இவை நேர்கின்றன என்று உணர்ந்து, அவற்றில் ஒட்டாமல் மனதில் ஸமபாவனையுடன் இருக்க வேண்டும்; பேதபுத்தியால் உண்டாக்கப்பட்ட விருப்பு-வெறுப்பு, மகிழ்ச்சி-துயரங்களை அடையக்கூடாது; அதாவது அந்த போகங்களில் மனதையோ, புலன்களையோ விகாரப் படுத்தும் சக்தியை அழித்து, புலன்களில் லயமடையச் செய்வதுதான் போகப் பொருட்களைப் புலன்களில் ஹோமம் செய்வது என்பதற்குப் பொருள். ஏனெனில் புலன்களுக்குரிய விஷயங்களில் பற்று, ஸுகம், கவர்ச்சி என்ற புத்தி இல்லாமையினால், அந்த போகங்கள் ஸாதகனிடம் தம் தாக்கத்தை ஏற்படுத்தா. அவை தீயினில் தூசாகப் பொசுங்கிவிடும்.

**பொருத்தம்: இனி ஆத்மஸம்யமயோகம் என்ற யக்ஞத்தை விளக்குகிறார்—**

**सर्वाणीन्द्रियकर्माणि प्राणकर्माणि चापरे।**
**आत्मसंयमयोगाग्नौ जुह्वति ज्ञानदीपिते॥ २७॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ஸர்வாணீந்த்₃ரியகர்மாணி ப்ராணகர்மாணி சாபரே ।**

**ஆத்மஸம்யமயோக₃க்₃நௌ ஜுஹ்வதி ஜ்ஞாநதீ₃பிதே ॥ 27 ॥**

**அபரே** – வேறு சில யோகிகள், **ஸர்வாணி இந்த்₃ரியகர்மாணி** – புலன்களின் செயல்களனைத்தையும், **ப்ராணகர்மாணி ச** – ப்ராணன்களின் செயல்களனைத்தையும், **ஜ்ஞாநதீ₃பிதே** – ஞானத்தினால் ஒளிபெற்ற, **ஆத்ம ஸம்யம யோக₃ அக்₃நௌ** – 'ஆத்மஸம்யமயோகம்' என்னும் அக்னியில், **ஜுஹ்வதி** – ஹோமம் செய்கிறார்கள். (இங்கே ஹோமம் செய்வதென்பது ஸத் சித் ஆனந்த ஸ்வரூபம் ஆகிய பரமாத்மாவைத் தவிர வேறெதையும் சிந்தியாதிருத்தலாகும்).

வேறு சில யோகிகள் புலன்களின் செயல்களனைத்தையும் ப்ராணன்களின் செயல் களனைத்தையும் ஞானத்தினால் ஒளிபெற்ற 'ஆத்மஸம்யமயோகம்' என்னும் அக்னியில் ஹோமம் செய்கிறார்கள். இங்கே ஹோமம் செய்வதென்பது ஸத் சித் ஆனந்தஸ்வரூபம் ஆகிய பரமாத்மாவைத் தவிர வேறெதையும் சிந்தியாதிருத்தலாகும்.

**கேள்வி:** 'ஆத்மஸம்யமயோகம்' என்பது என்ன? அத்துடன் 'அக்நி' என்கிற பதத்தை ஏன் சேர்த்துக் கூறுகிறார்? அது ஞானத்தினால் ஒளிர்கிறது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஆத்மஸம்யமயோகம்' என்பது ஸமாதியோகம். அந்த ஸமாதியோகத்தை யக்ஞம் என்று உருவகப்படுத்துவதற்காக அத்தோடு 'அக்நி' என்ற சொல்லைச் சேர்க்கிறார். ஸுஷுப்தி என்ற ஆழ்ந்த உறக்கத்திலிருந்து ஸமாதிநிலை மாறுபட்டது என்பதைக் குறிக்கவே, அதாவது ஸமாதி நிலையில் விவேக விஞ்ஞானம் விழித்திருக்கிறது; 'சூன்யதா' (எதையுமே உணராமல் போவது) ஸமாதியன்று என்பதை அறிவிப்பதற்காகவே, யக்ஞம் என்று உருவகப்படுத்தப்பட்ட ஸமாதி யோகத்தை, ஒளிவிட்டுப் ப்ரகாசிக்கிற நெருப்பைப் போல், ஞானத்தினால் அது ஒளிர்வதை 'ஜ்ஞாநதீபிதே' என்ற சொல்லினால் விளக்குகிறார்.

**கேள்வி:** மேற்சொன்ன ஸமாதியோகம் என்பது என்ன? அதில் புலன்களின் எல்லாச் செய்கைகளையும், ப்ராணன்களின் எல்லாச் செயல்களையும் ஹோமம் செய்வது என்றால் என்ன?

**பதில்:** எந்த ஸ்வரூபத்தை த்யானம் செய்கிறோமோ, அதில் மனதை நிலைநிறுத்துவது த்யானயோகம். இது இருவகைப்படும். ஒன்று ப்ராணன்களையும் அதாவது மூச்சையும், புலன்களையும் அடக்கி, அதற்குப் பிறகு அந்த ஸ்வரூபத்தில் மனதைத் தேக்கி வைப்பதாகும். மற்றொன்றில், முதலில் மனதை த்யானிக்கும் ஸ்வரூபத்தில் நிலைக்க வைத்து அதில் மூழ்க மூழ்க மனம் ஒருமுனைப்புடன் அந்த த்யானத்தில் ஒன்றிவிடுகிறது. இப்படி த்யானம் திடமான பிறகு அந்த ஸ்வரூபத்தில் மனம் கட்டுப்பட்டு விடுகிறது. இதுதான் ஸமாதி நிலை – ஸமாதியோகம். இந்த ஸமாதி நிலையில் ப்ராணன்களுடைய சலனங்களும், புலன்களுடைய வேலைகளும் அறவே ஓய்ந்து போகின்றன. இங்கே கூறப்படுவது இரண்டாவது த்யானயோக வகை. ஆகவே பரமாத்மாவினுடைய ஸகுணமான உருவமுள்ள ஸ்வரூபத்திலோ, நிர்குணமான உருவமற்ற ஸ்வரூபத்திலோ, தமது பாவனைக்கேற்றவாறு முறைப்படி மனதைக் கட்டுப்படுத்துவதுதான் ஸமாதியோகம்.

இம்முறையிலான த்யானயோகத்தில் மனதை அடக்கிய பிறகு, புலன்களின் செய்கைகளான பார்ப்பது, கேட்பது, முகர்வது, தொடுவது, சுவைப்பது, எடுப்பது, விடுவது, பேசுவது, போவது, வருவது இவையும், மூச்சு விடுவது, உள்ளிழுப்பது, பெருமூச்சு விடுவது, ஸ்தம்பித்து விடுவது என்ற ப்ராணன்களின் செய்கைகளும் தாமாகவே ஓய்ந்து போய்விட, ஸமாதியில் திளைத்திருப்பதுதான் ஆத்மஸம்யமயோகம் என்ற அக்னியில் புலன்களுடைய, ப்ராணன்களுடைய எல்லாச் செய்கைகளையும் ஹோமம் செய்வதாகும்.

**பொருத்தம்: இவ்விதம் ஸமாதியோக ஸாதனையை யக்ஞமாக உருவகப்படுத்திக் காட்டிவிட்டு, இனி த்ரவ்ய யக்ஞம், தபோ யக்ஞம், யோக யக்ஞம், சாஸ்த்ர அத்யயனம் என்ற ஞான யக்ஞம் இவற்றைச் சுருக்கமாகச் சொல்கிறார்—**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



द्रव्ययज्ञास्तपोयज्ञा योगयज्ञास्तथापरे ।
स्वाध्यायज्ञानयज्ञाश्च यतयः संशितव्रताः ॥ २८ ॥

**த்₃ரவ்யயஜ்ஞாஸ்தபோயஜ்ஞா யோக₃யஜ்ஞாஸ்தத₂ாபரே ।**

**ஸ்வாத்₄யாயஜ்ஞாநயஜ்ஞாஸ்ச யதய: ஸம்ஸிதவ்ரதா: ॥ 28 ॥**

அபரே – வேறு சிலர், **த்₃ரவ்யயஜ்ஞா:** – த்ரவ்யங்களைக் கொண்டு யாகம் செய்பவர்கள்; **தபோயஜ்ஞா:** – (சிலர்) தவம் என்னும் யாகம் செய்பவர்கள்; **தத₂ா** – அவ்வாறே (மற்றும் சிலர்), **யோக₃யஜ்ஞா:** – அஷ்டாங்க யோக வடிவான யாகம் செய்பவர்கள்; **ச** – மேலும், **ஸம்ஸிதவ்ரதா:** – அஹிம்ஸை முதலிய தீவிரக் கொள்கையோடு கூடி, **யதய:** – முயற்சி செய்பவர்கள்; **ஸ்வாத்₄யாய ஜ்ஞாநயஜ்ஞா:** – ஸ்வாத்யாய வடிவான ஞான யக்ஞத்தைச் செய்பவர்கள் ஆவர்.

வேறு சிலர் த்ரவ்யங்களைக் கொண்டு யாகம் செய்கிறவர்கள்; சிலர் தவம் என்னும் யாகம் செய்பவர்கள்; அவ்வாறே மற்றும் சிலர் அஷ்டாங்க யோக வடிவான யாகம் செய்பவர்கள்; மேலும் அஹிம்ஸை முதலிய தீவிரக் கொள்கையோடு கூடி முயற்சி செய்பவர்கள் ஸ்வாத்யாய வடிவான ஞான யக்ஞத்தைச் செய்பவர்கள் ஆவர்.

**கேள்வி:** த்ரவ்யம் தொடர்பான யக்ஞம் என்றால் என்ன? இதைச் செய்ய யாருக்குத் தகுதி உண்டு? 'த்ரவ்யயஜ்ஞா:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அவரவர்களுடைய வர்ணதர்மத்திற்கேற்றவாறு ந்யாயமாக ஸம்பாதித்த செல்வத்தை, மமகாரம், பற்று, பயனில் கருத்து இவற்றைத் துறந்து, தத்தம் தகுதிக்கேற்றபடி உலகத்தின் ஸேவைக்காகச் செலவழிப்பது – அதாவது குளம், கிணறு, கோயில், தர்மசாலை முதலியவை கட்டுவது, பசித்திருப்பவர்கள், அநாதைகள், நோயாளிகள், துயருற்றோர், செயலற்றவர்கள், பிச்சைக்காரர்கள் முதலிய மக்களுக்கு வேண்டிய அளவு உண்டி, உடை, நீர், மருந்து, புத்தகங்கள் முதலிய பொருட்களை வழங்குவது, கற்றறிந்து ஒழுக்கமுள்ளவர்களாகவும், வேத விற்பன்னர்களாகவும் இருந்து தம் கடமைகளைத் தவறாது ஆற்றிவரும் அந்தணர்களுக்குப் பசு, பூமி, ஆடை, ஆபரணங்கள் முதலியவற்றை அவர்களின் தகுதிக்கேற்றவாறு தம் சக்திக்கு ஏற்ப தானம் செய்வது, இவ்விதம் மற்ற ப்ராணிகளும் நன்றாக வாழ்வதற்குரிய வசதியினை அளிக்கச் செலவழிப்பது இவையெல்லாம் த்ரவ்ய யக்ஞங்கள். இந்த யக்ஞத்தைச் செய்வதற்கான தகுதி, இல்லறத்தார்களுக்குத்தான் உண்டு. ஏனெனில் செல்வம் ஸம்பாதித்து, அதைப் பிறர் பொருட்டுச் செலவழிக்கும் பொறுப்பு, ஸந்யாஸம் முதலிய மற்ற ஆசிரமத்தில் உள்ளவர்களுக்குக் கிடையாது. பரமாத்மாவை அடையும் நோக்கத்துடன் உலகத்தாரின் ஸேவைக்காகச் செல்வத்தைச் செலவழிப்பதற்காகத் தன்னலம் கருதாது கர்மம் செய்வதுதான் த்ரவ்ய யக்ஞம். அதுவும் யாகத்திற்குரிய கர்மம் செய்வதில் அடங்கும் என்பது பகவானின் கூற்று.

**கேள்வி:** 'தபோயஜ்ஞம்' என்றால் என்ன? இதற்குத் தகுதி பெற்றவர் யார்?

**பதில்:** பரமாத்மாவை அடைய வேண்டும் என்ற குறிக்கோளுடன் மனம், புலன்களைப் பரிசுத்தப்படுத்துவதற்காக மமகாரம், பற்று, பயனில் கருத்து இவற்றைத் துறந்து, வ்ரதங்கள், நோன்பு இவற்றை மேற்கொள்வது, அறத்தைக் காப்பதில் நேரும் இன்னல்களைப் பொறுப்பது, மௌனமாக இருப்பது, தீ, வெப்பம், காற்று இவற்றின் தாக்குதல்களைத் தாங்கிக் கொள்வது, ஒரு வஸ்த்ரம் அல்லது இரண்டு வஸ்த்ரங்களுக்கு மேல் அதிகமானதை த்யாகம் செய்வது, அன்னத்தை விடுத்துப் பழம், பால் இவற்றை உண்டு உடலைப் பேணுவது, கூட்டத்திலிருந்து ஒதுங்கிக் காட்டில் வாழ்வது முதலிய சாஸ்த்ர விதிகளுக்குட்பட்ட கட்டுப்பாடுகளைத் தானாகப் பொறுமையுடன் ஏற்றுக் கொள்வது 'தபோயக்ஞம்' ஆகும். இதில் வானப்ரஸ்தம் என்ற மூன்றாவது ஆசிரமத்தில் உள்ளவர்களுக்கு முழுத் தகுதி உண்டு.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மற்ற ஆசிரமத்தவர்களும் சாஸ்த்ர முறைப்படி அவரவர்களுடைய தகுதிக்கேற்றவாறு இதைக் கடைப்பிடிக்கலாம்.

**கேள்வி:** 'யோகயக்ஞம்' என்றால் என்ன? 'யோகயஜ்ஞா:' என்ற தொடருக்கு என்ன பொருள்?

**பதில்:** 'யோகயக்ஞம்' என்ற சொல்லுக்குப் பொருள் பகவானுக்குத்தான் தெரியும். இதற்குரிய தனிப்பட்ட இலக்கணம் இங்கே கூறப்படவில்லை. மனதின் போக்கை அடக்குவது என்ற அஷ்டாங்க யோகத்தைத்தான் யோகயக்ஞம் என்று கூறுகிறார் என்று ஊகிக்கலாம். பல ஸாதகர்கள் பரமாத்மாவை அடைவதற்காகப் பற்று, பயனில் கருத்து, மமகாரம் இவற்றைத் துறந்து இந்த அஷ்டாங்கயோகம் என்ற யக்ஞத்தை அனுஷ்டிக்கிறார்கள். அவர்களை 'யோகயஜ்ஞா:' என்ற சொல் குறிப்பிடுகிறது. அந்த 'யோக ஸாதனை' என்ற சொல்லும் யக்ஞத்திற்குரிய கர்மத்தில் அடக்கம். ஆகவே அவர்களுடைய எல்லாக் கர்மங்களும் லயமடையவே, ஸநாதனமான ப்ரம்மத்தை அவர்கள் அடைகிறார்கள்.

**கேள்வி:** மேலே சொன்ன அஷ்டாங்க யோகத்தின் எட்டு அங்கங்கள் யாவை?

**பதில்:** பதஞ்ஜலி முனிவரின் யோகஸூத்ரங்கள் என்ற யோக தர்சனத்தில் இவற்றின் விளக்கம் வருமாறு—

**யமநியமாஸநப்ராணாயாமப்ரத்யாஹாரத₄ாரணாத்₄யாநஸமாத₄யோऽஷ்டாவங்கா₃நி ।** *(2/29)*

*(1)* யமம், *(2)* நியமம், *(3)* ஆஸனம், *(4)* ப்ராணாயாமம், *(5)* ப்ரத்யாஹாரம், *(6)* தாரணா, *(7)* த்யானம், *(8)* ஸமாதி – இந்த எட்டும் யோகத்தின் அங்கங்கள். இவற்றில் முதல் ஐந்தும் வெளிப்படையாகச் செய்யக்கூடிய ஸாதனைகள். அவையாவன்: *(1)* யமம், *(2)* நியமம், *(3)* ஆஸனம், *(4)* ப்ராணாயாமம், *(5)* ப்ரத்யாஹாரம். மற்ற மூன்றும் உள்ளத்து ஸாதனைகள். *(1)* தாரணா, *(2)* த்யானம், *(3)* ஸமாதி இம்மூன்றுக்கும் மொத்தமாக ஸம்யமம் என்று பெயர். 'த்ரயமேகத்ர ஸம்யம:' (யோக₃. 3/4).

இனி யமம் முதலியவற்றை ஒவ்வொன்றாக விளக்குவோம்.

***(1) யமம்:–***

**அஹிம்ஸாஸத்யாஸ்தேயப்₃ரஹ்மசர்யாபரிக்₃ரஹா யமா: ।** (யோக₃. 2/30)

க. அஹிம்ஸை – எந்த ப்ராணிக்கும், எவ்விதத்திலும் சிறிது கூடத் தொல்லை கொடுக்காமல் இருப்பது.

ங. ஸத்யம் – நல்லெண்ணத்துடன், கபடமில்லாமல் இனிய சொற்களில் உண்மை பேசுவது.

ச. அஸ்தேயம் – திருடாமை. எவ்விதத்திலும் பிறருடைய உரிமைகளையும், உடைமைகளையும் திருடாமல் இருப்பது. பிறருடைய சொத்தை அபஹரிக்காமல் இருப்பது.

ஞ. ப்ரஹ்மசர்யம் – மனம், வாக்கு, உடலினால் எந்த நிலையிலும், எவ்விதமான சிற்றின்பங்களையும் நுகராமல் இருப்பது.

ட. அபரிக்ரஹம் – உடலைப் பேணுவதற்கு வேண்டியவற்றைத் தவிரப் பிற போகப் பொருட்களைச் சேர்த்துக் கொள்ளாமல் இருப்பது.

இந்த ஐந்தும் யமம் என்பதில் அடங்கும்.

***(2) நியமம்:–***

**ஶௌசஸந்தோஷதப:ஸ்வாத்₄யாயேஶ்வரப்ரணித₄ாநாநி நியமா: ।** (யோக₃. 2/32)

க. ஶௌசம்: உள்ளும், புறமும் எப்பொழுதும் தூய்மையாக வைத்துக் கொள்வது.

ங. ஸந்தோஷம்: ப்ரியமானது, ப்ரியமில்லாதது, ஸுகம், துக்கம் முதலியவை நேரும்போது எப்பொழுதும் மலர்ந்த முகத்துடன் இருப்பது.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ச. தவம்: ஏகாதசி முதலிய வ்ரதங்கள், உபவாஸங்களை மேற்கொள்வது.

ஞ. ஸ்வாத்யாயம்: மேன்மைக்கு வழிகாட்டக் கூடிய நூல்களைக் கற்பது; பகவந் நாமம் சொல்வது; பகவத் குணங்களைப் பாடுவது.

ட. ஈம்வரப்ரணிதாநம்: அனைத்தையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்து, அவர் ஆணைகளை நிறைவேற்றுவது. அதாவது கடமைகளை ஆற்றுவது.

இவை ஐந்தும் நியமங்கள்.

*(3)* **ஆஸநம்:–**

**ஸ்தி$_2$ரஸுக$_2$மாஸநம்** *(யோக$_3$. 2/46)*

எப்படி உட்கார்ந்தால் ஸுகமாக இருக்குமோ, அவ்வாறு அசைவின்றி உட்கார்வது.‡

*(4)* **ப்ராணாயாமம்:–**

**தஸ்மிந் ஸதி ம்வாஸப்ரம்வாஸயோர்க$_3$திவிச்சே$_2$த$_3$: ப்ராணாயாம: ।**

*(யோக$_3$. 2/49)*

ஆஸனம் நிலைத்தபிறகு மூச்சு இழுப்பதையும் விடுவதையும் தடுப்பது ப்ராணாயாமம். வெளிக்காற்றை உள்ளிழுப்பது ம்வாஸம். உள்காற்றை வெளித்தள்ளுவது ப்ரம்வாஸம். இவை இரண்டையும் தடுப்பது ப்ராணாயாமம்.

**ப$_3$ாஹ்யாப்$_4$யந்தரஸ்தம்ப$_4$வ்ருத்திர்–**
**தே$_3$மகாலஸங்க்$_2$யாபி$_4$: பரித்$_3$ருஷ்டோ தீ$_3$ர்க$_4$ஸூக்ஷ்ம: ।**

*(யோக$_3$. 2/50)*

தேசம், காலம், எண்ணிக்கை (கால அளவு) இவற்றின் ஸம்பந்தத்தால், பாஹ்ய, ஆப்யந்தர, ஸ்தம்பவ்ருத்தி என்று உள்ள மூன்றுவிதமான ப்ராணாயாமங்கள் தீர்க்கம் என்றும், ஸூக்ஷ்மம் என்றும் சொல்லப்படும்.

உள்ளேயிருக்கும் மூச்சுக்காற்றை வெளியே விட்டுத் தடுத்து நிறுத்துவதற்கு பாஹ்யகும்பகம் என்று பெயர். இதன் முறை வருமாறு: எட்டு தடவை ஓம் என்று கூறும் நேரத்தில் மெதுவாக மூச்சுக் காற்றை வெளியே விட்டு (ரேசகம்), பதினாறு தடவை கூறும் நேரம் வரை வெளியே தடுத்து நிறுத்துவது (கும்பகம்); பிறகு நான்கு முறை ஓம் என்று கூறும் நேரத்தில் உள்ளிழுப்பது (பூரகம்). இவ்வாறு ரேசகம், பூரகத்தோடு வெளியே கும்பகம் செய்தலை பாஹ்யவ்ருத்தி ப்ராணாயாமம் (வெளியே மூச்சுக் காற்றை நிறுத்தும் ப்ராணயாமம்) என்பர்.

வெளியே தள்ளிய மூச்சுக்காற்றை உள்ளே இழுத்துத் தடுத்து நிறுத்துவது ஆப்யந்தரகும்பகம். இதன் முறை வருமாறு: நான்கு தடவை ஓம்காரம் உச்சரிக்கும் நேரத்தில் மூச்சை உள்ளிழுத்து, பதினாறு தடவை சொல்லும் நேரம் வரை மூச்சை உள்ளே நிறுத்தி வைத்து, பிறகு எட்டு தடவை சொல்லும் நேரத்தில் வெளியே தள்ளவேண்டும். இப்படி உள்ளே இழுத்து பூரகம் செய்து, வெளியே தள்ளி ரேசகம் செய்து, உள்ளே கும்பகம் செய்வது ஆப்யந்தரவ்ருத்தி ப்ராணாயாமம் ஆகும்.

வெளியிலோ, உள்ளேயோ ஸௌகர்யம் போல மூச்சை நிறுத்தி வைப்பது ஸ்தம்பவ்ருத்தி ப்ராணாயாமம் ஆகும். நான்கு ஓம்காரங்களால் பூரகம் செய்து, எட்டு ஓம்காரங்களில் ரேசகம் செய்வது. இவ்விதம் மாற்றி மாற்றிப் பூரக, ரேசகங்கள் செய்து மெதுவாக உள்ளேயோ, வெளியிலோ ச்ரமமின்றி ஸுகமாக மூச்சைத் தடுத்து வெகுநேரம்

‡ ஆஸனங்கள் பலவிதம். அவற்றில் ஆத்ம ஸம்யமம் செய்ய விரும்பும் ஸாதகனுக்கு ஸித்தாஸனம், பத்மாஸனம், ஸ்வஸ்திகாஸனம் மூன்றும் உகந்தவை. இவற்றில் எந்த ஆஸனமானாலும் முதுகுத் தண்டு, கழுத்து, தலை இவை நேர் கோட்டில் இருக்கவேண்டும். பார்வை மூக்கு நுனியில் அல்லது புருவமத்தியில் குறிப்பாக இருக்கவேண்டும். சோம்பல் தாக்காமல் இருந்தால், கண்களை மூடி உட்கார்ந்து கொள்ளலாம். எவருக்கு, எந்த ஆஸனத்தில் நீண்ட நேரம் ஸுகமாக அமர முடியுமோ, அவருக்கு அந்த ஆஸனம் உகந்தது; உத்தமமானது.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நிறுத்தி வைப்பது ஸ்தம்பவ்ருத்தி ப்ராணாயாமம். இப்படி மூன்றுவிதமானவை ப்ராணாயாமங்கள்.

இவை தவிரப் பல முறைகள் உண்டு. எத்தனை ஓம்கார எண்ணிக்கையுடன், எத்தனை நேரம் பூரகத்தைச் செய்ய முடியுமோ, அத்தனை ஓம்கார எண்ணிக்கையுடன் அத்தனை நேரம் ரேசகத்திலும், கும்பகத்திலும் நிற்கலாம்.

ப்ராணவாயுவானது கொப்பூழ், இதயம், கழுத்து, மூக்கு இவற்றின் உள்புறம் வரை உள்ளே ஸஞ்சரிக்கும். இதற்கு ஆப்யந்தர தேசம் – உள் இடம் என்று பெயர். மூக்கு நுனியிலிருந்து பதினாறு அங்குல நீளம் வரை பாஹ்ய தேசம் – வெளி இடம் – ப்ராணனின் வெளி ஸஞ்சாரம். ஒரு ஸாதகன் பூரக ப்ராணாயாமம் செய்யும்போது, கொப்பூழ் வரை மூச்சு இழுத்து, மூக்கு நுனியிலிருந்து பதினாறு அங்குலம் வரை மூச்சை வெளியே விட முடியும். இன்னொரு ஸாதகன் இதயம் வரை மூச்சை இழுத்து, வெளியே பன்னிரண்டு அங்குலம் தள்ளலாம். மற்றொரு ஸாதகன் கழுத்து வரை மூச்சை இழுத்து வெளியே எட்டு அங்குலம் தள்ளலாம். வேறொரு ஸாதகன் மூக்கின் மேல்மட்டம் வரை இழுத்து வெளியே நான்கு அங்குலங்கள் தள்ளலாம். இவர்களில் முன்னவர்களைக் காட்டிலும் பின்னவர்களுடைய ப்ராணாயாமம் ஸூக்ஷ்மமானது. பின்னவர்களைக் காட்டிலும் முன்னவர்களுடைய ப்ராணாயாமம் தீர்க்கமானது.

ப்ராணாயாமத்தில் எண் கணக்கு, காலக்கணக்கு இரண்டுக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதால் இவற்றில் தடுமாற்றம் ஏற்படக் கூடாது. நான்கு ஓம்காரங்கள் சொல்ல ஒரு விநாடி நேரம் ஆகுமானால், பதினாறு ஓம்காரங்கள் சொல்லக் கும்பகம் செய்யும்போது நான்கு விநாடிகளும், எட்டு ஓம்கார நேரம் ரேசகம் செய்யும்போது இரண்டு விநாடி நேரமும் ஆகவேண்டும். மந்த்ரத்தை எண்ணுவதுதான் ஸங்க்யா என்றும், மாத்ரா என்றும் சொல்லப்படும். அதற்கு ஆகும் நேரம் காலம் எனப்படும். ஸுகமாக, சிரமமின்றி ஸாதகன் மேலே சொன்ன காலத்தையும், மாத்ரைகளையும் இருமடங்கு, மும்முடங்கு, நான்கு மடங்கு என்று முடிந்த வரை வளர்த்துக் கொண்டே போகலாம். காலத்தினுடைய, மாத்ரைகளுடைய அதிகம், குறைவு இவற்றினால் ப்ராணாயாமம் நீண்டது என்றும், நுண்ணியது என்றும் வைத்துக் கொள்ளவேண்டும்.

பா$_3$ஹ்யாப்$_4$யந்தரவிஷயாக்ஷேபீ சதுர்த$_2$: । (யோக$_3$. 2/51)

ஒலி, தொடுதல், வடிவம், சுவை, மணம் என்பவை புலன்களின் வெளி விஷயங்கள்; தீர்மானிப்பது, அதை மாற்றுவது (ஸங்கல்பம், விகல்பம்) முதலியவை மனதின் வேலைகள்; இவற்றைத் தவிர்ப்பதனால் — கவனியாமல் விடுவதனால் — அவற்றைப் பற்றிய சிந்தனையே இல்லாமல் இருப்பதால் மூச்சு தானாகவே ஓய்ந்து விடுவது உண்டு. இதுதான் நான்காவது ப்ராணாயாமம்.

முன் ஸூத்ரத்தில் மூச்சை நிறுத்துவதால், மனம் அடங்குவதை ஸம்யமம் என்று சொன்னார். இங்கு மனம், புலன்கள் ஓய்வதால், மூச்சு தானாக அடங்குவது பற்றிச் சொல்கிறார். இங்கு மூச்சை வெளியே நிறுத்துவதா, உள்ளே நிறுத்துவதா என்ற வரையறை இல்லை. எங்கு வேண்டுமானாலும் நிற்கலாம். காலம், எண் என்ற கணக்கும் கிடையாது.

**(5) ப்ரத்யாஹாரம்:–**

**ஸ்வவிஷயாஸம்ப்ரயோகே$_3$ சித்தஸ்வரூபாநுகார இவேந்த்$_3$ரியாணாம் ப்ரத்யாஹார: ।**
**(யோக$_3$. 2/54)**

புலன்கள் தம் போகப் பொருட்களிலிருந்து விலகி ஓய்ந்து போய் சித்தத்திலேயே அடங்கிவிடும் நிலை ப்ரத்யாஹாரம்.

**(6) தாரணா:–**

தே$_3$ஶப$_3$ந்த$_4$ஶ்சித்தஸ்ய தா$_4$ரணா । (யோக$_3$. 3/1)

சித்தத்தை ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் வெகுநேரம் நிலைக்க வைப்பது தாரணா. அதாவது ஸ்தூலமாகவோ, ஸூக்ஷ்மமாகவோ வெளியிலோ, உள்ளத்திலோ குறிப்பிட்ட

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



விஷயத்தில் ஒருமுனைப்புடன் தொடர்ந்து சிந்திக்கும்படி செய்து சித்தத்தை நிலை நிறுத்தி ஈடுபட வைத்தல் தாரணையாகும். இங்கே பரமாத்மாவைப் பற்றிய பேச்சு. ஆகவே இப்படி மனம் உறைவது, த்யானம் செய்வது, ஸமாதியில் அமர்வது இவையனைத்தும் பகவானிடமே செய்யவேண்டும்.

**(7) த்யானம்:-**

**தத்ர ப்ரத்யயைகதானதா த்₄யாநம் ।** (யோக₃. 3/2)

மேலே சொன்னபடி மனத்திற்குகந்த பரமாத்மாவிடம் மனதைத் தொடர்ந்து, முனைப்புடன் வெகுநேரம் உறைய வைப்பது த்யானம். அதாவது கங்கா ப்ரவாஹம் போல, எண்ணெய் ஒழுக்குப் போல இடைவிடாமல் தொடர்ந்து மனதை பகவானிடம் லயிக்க வைப்பது த்யானம்.

**(8) ஸமாதி:-**

**ததே₃வார்த₂மாத்ரநிர்ப₄ாஸம் ஸ்வரூபஶூந்யமிவ ஸமாதி₄ ।** (யோக₃. 3/3)

அப்படி த்யானம் செய்யும்போது த்யானிக்கப்படுகிற ஸ்வரூபம்தான் தெரிகிறதே தவிர நாம் த்யானம் செய்கிறோம் என்ற உணர்ச்சியும் மறைந்து போனது போலத் தோன்றுகிறது. த்யானத்தில் பரமாத்மா மட்டுமே விளங்குகிறார். இது ஸமாதி நிலை. த்யானம் தொடரத் தொடர, யோகியின் மனம், த்யானிக்கும் பொருளாகவே முழுமை பெற்றுவிடுகிறது. தன்னையே இழந்து விடுகிறது. த்யானிக்கப்படும் பரமாத்மாவில் ஒன்றிவிடுகிறது. அந்தப் பரமாத்மாவைத் தவிரத் தான் என்ற அறிவே இல்லை. இதுவே ஸமாதி நிலை.

த்யான நிலையில், த்யானம் என்ற செயல்; த்யானத்திற்குரிய பரம்பொருள்; த்யானம் செய்பவன் என்ற மூன்றும் (த்ரிபுடி) துலங்குகின்றன. ஸமாதி நிலையில் த்யானிக்கப்படும் பொருள் மட்டும்தான் விளங்குகிறது. அதாவது இம்மூன்றும் ஒன்றாகி விடுகின்றன. இதுவரை யோக சாஸ்த்ர தத்வங்கள் சுருக்கமாகக் கூறப்பட்டன.

**கேள்வி:** 27வது ச்லோகத்தில் 'ஆத்மஸம்யம யோகம்' என்ற யக்ஞம் பற்றிக் கூறியதற்கும், இதற்கும் என்ன வித்யாஸம்?

**பதில்:** அங்கு அந்தரங்க ஸாதனைகளான தாரணை, த்யானம், ஸமாதிகள் மட்டும் முக்யமாகக் கொள்ளப்படுகின்றன. வெளிப்படையான யம, நியம, ஆஸன, ப்ராணாயாம, ப்ரத்யாஹாரங்களைப் பற்றி இல்லை. அவை தாமாக அந்த மூன்றுக்குள் அடங்கிவிடுகின்றன. இங்கு எல்லா ஸாதனங்களையும் பிரித்து வரிசைப்படுத்திக் கூறுகிறார்.

**கேள்வி:** இங்கு யோகம் என்ற சொல்லுக்கு கர்மயோகத்தையோ, ஞானயோகத்தையோ கொள்ளாமல் அஷ்டாங்க யோகம் என்று ஏன் பொருள் கொள்ள வேண்டும்?

**பதில்:** பகவானை அடைவது என்ற லக்ஷ்யத்திற்கு ஸாதனமாக அமைவதால், இங்கு எல்லா யக்ஞங்களும் கர்மயோகம், ஞானயோகம் என்ற இரண்டிலும் அடங்கிவிட்டன. ஆகவே இதுவும் இந்த இரண்டு நிஷ்டைகளில் உள்ளடக்கம்தான். ஆகவே இங்கு 'யோகம்' என்ற சொல்லுக்குக் கர்மயோகம் என்றோ, ஞானயோகம் என்றோ மட்டும் பொருள் கொள்ள முடியாது.

**கேள்வி:** 'யதய:' என்ற சொல்லுக்கு (நான்காவது ஆசிரமத்தைச் சேர்ந்த) ஸந்யாஸிகள் என்று பொருள் கூறாமல், முயற்சியுடையவர்கள் என்று ஏன் பொருள் கொள்ளவேண்டும்?

**பதில்:** ஸ்வாத்யாயம் – சாஸ்த்ராத்யயனம் என்ற ஞான யக்ஞமானது எல்லா ஆசிரமத்திற்கும் பொதுவானது; ஸந்யாஸிகளுக்கு மட்டுமன்று. ஆகவே 'யதய:' என்ற சொல்லுக்கு, முயற்சியுள்ளவர்கள் என்று பொருள் கூறப்பட்டது. ஸந்யாஸ ஆசிரமத்தில், இல்லறத்தாரைப் போல நித்ய, நைமித்திகமான கர்மானுஷ்டானமோ, உயிர் வாழ்வதற்கான கர்மமோ செய்ய வேண்டியதில்லை. ஆக, இவர்கள் அத்யயனம் அதிகமாகச் செய்யலாம். அவர்களும் முயற்சி உள்ளவர்களாக இருந்தால்தான் இப்படிச் செய்யமுடியும். ஆகவே 'யதய:' என்ற சொல்லுக்கு முயற்சியுடையார் என்று பொருள் கூறுவதுதான் சரியாக இருக்கும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தவிர, ப்ரம்மசர்ய ஆசிரமத்தில் அத்யயனத்திற்குத்தான் முக்யத்வம். சாஸ்த்ராத்யயனம் என்ற ஞானயக்ஞம் செய்பவர்களைக் குறித்துத்தான் 'யதய:' என்ற சொல் இங்கு உபயோகிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே அதன் பொருள் 'ஸந்யாஸி' என்று கூறப்படவில்லை.

**கேள்வி:** 'ஸம்ஷிதவ்ரதா:' என்றால் என்ன பொருள்? இந்தச் சொல்லை 'யதய:' என்ற சொல்லுக்கு அடைமொழியாகக் கொள்ளாமல், முன்பாதியில் சொல்லப்பட்ட தவயக்ஞம் செய்வோரை விடுத்து, பிற வ்ரதம் உடையவர்கள் என்று சொன்னால் என்ன?

**பதில்:** அஹிம்ஸை, ஸத்யம், திருடாமை, ப்ரம்மசர்யம், தேவைக்கதிகமாகச் சேர்க்காதிருத்தல் முதலிய நல்லொழுக்கம் உள்ளவர்களும், விருப்பு, வெறுப்பு, செருக்கு என்ற குறைகள் இல்லாதவர்களும் 'ஸம்ஷிதவ்ரதா:' ஆவார்கள். இந்தச் சொல்லில் யக்ஞம் என்ற சொல் வரவில்லை. இங்கு வேறுவிதமான யக்ஞம் என்று கொள்வதற்கு இடமில்லை. ஆகவே 'யதய:' என்ற சொல்லுக்கு அடைமொழியாகக் கூறுவதுதான் பொருந்தும்.

**கேள்வி:** 'ஸ்வாத்யாய ஜ்ஞானயஜ்ஞம்' என்றால் என்ன? 'ஸ்வாத்யாய யஜ்ஞம்' என்று மட்டும் சொல்லாமல் 'ஸ்வாத்யாய ஜ்ஞானயஜ்ஞம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவானுடைய தத்வம், குணங்கள், ப்ரபாவங்கள், சரிதங்கள், அவருடைய உருவமுள்ள-உருவமற்ற, குணமுள்ள-நிர்குணமான ஸ்வரூபங்கள் சொல்லப்பட்டிருக்கும் நூல்களைக் கற்பது, பகவானுடைய ஸ்தோத்ரபாராயணம், பகவானுடைய நாமகுண கீர்த்தனங்கள், வேதங்கள், வேதாங்கங்கள் இவற்றைக் கற்பது, இவையெல்லாம் 'ஸ்வாத்யாயம்' என்ற சொல்லில் அடங்கும். இவற்றைப் பொருள் தெரிந்து கற்பது, மேலும் மமகாரம், பற்று, பயனில் கருத்து இவை இல்லாமல் கற்பதுதான் 'ஸ்வாத்யாய ஜ்ஞானயஜ்ஞம்' ஆகும். ஸ்வாத்யாயம் என்ற சொல்லோடு ஞானம் என்ற சொல்லை இணைப்பதன் கருத்து: ஸ்வாத்யாய வடிவமாகக் கற்பது கூட ஞான யக்ஞம்தான். அதனால்தான் கீதையைக் கற்பதற்கும் பகவான் 'ஞானயக்ஞம்' *(18/70)* என்ற பெயர் கொடுத்திருக்கிறார்.

பொருத்தம்: **த்ரவ்ய யக்ஞம் முதலிய நான்குவிதமான யக்ஞங்களைச் சுருக்கமாகச் சொல்லிவிட்டு, இனி இரண்டு ச்லோகங்களில் ப்ராணாயாமம் என்ற யக்ஞங்களை வர்ணித்து எல்லா வகை யக்ஞங்களையும் செய்பவர்களான ஸாதகர்களைப் புகழ்கிறார்—**

**अपाने जुह्वति प्राणं प्राणेऽपानं तथापरे।**
**प्राणापानगती रुद्ध्वा प्राणायामपरायणाः॥ २९॥**
**अपरे नियताहाराः प्राणान्प्राणेषु जुह्वति।**
**सर्वेऽप्येते यज्ञविदो यज्ञक्षपितकल्मषाः॥ ३०॥**

**அபாநே ஜுஹ்வதி ப்ராணம் ப்ராணேऽபாநம் ததா₂பரே ।**
**ப்ராணாபாநக₃தீ ருத்₃த்₄வா ப்ராணாயாமபராயணா: ॥ 29 ॥**
**அபரே நியதாஹாரா: ப்ராணாந்ப்ராணேஷு ஜுஹ்வதி ।**
**ஸர்வேऽப்யேதே யஜ்ஞவிதோ₃ யஜ்ஞக்ஷபிதகல்மஷா: ॥ 30 ॥**

**அபரே** — மற்றும் சில யோகிகள், **அபாநே** — அபான வாயுவில், **ப்ராணம்** — ப்ராண வாயுவை, **ஜுஹ்வதி** — ஹோமம் செய்கிறார்கள். **ததா₂** — அதே போன்று (வேறு சில யோகியர்), **ப்ராணே** — ப்ராண வாயுவில், **அபாநம்** — அபான வாயுவை ஹோமம் செய்கிறார்கள். **அபரே** — மற்றும் சிலர், **நியதாஹாரா:** — முறையாக உணவு உண்பவர்களாக, **ப்ராணாயாம பராயணா:** — ப்ராணாயாமத்தில் ஈடுபட்டவர்களாக, **ப்ராணாபாநக₃தீ** — ப்ராணன், அபானன் இவற்றின் ஸஞ்சாரத்தை, **ருத்₃த்₄வா** — கட்டுப் படுத்தி, **ப்ராணாந்** — ப்ராணன்களை, **ப்ராணேஷு** — ப்ராணன்களிலேயே, **ஜுஹ்வதி** —

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஹோமம் செய்கிறார்கள். **ஏதே** – இந்த, **ஸர்வே அபி** – (ஸாதகர்கள்) அனைவரும்கூட, **யஜ்ஞ க்ஷபித கல்மஷா:** – யாகத்தினால் பாவங்களை அழித்தவர்கள், **யஜ்ஞவித₃:** – யக்ஞங்களை அறிந்தவர்கள்.

மற்றும் சில யோகிகள் அபான வாயுவில் ப்ராண வாயுவை ஹோமம் செய்கிறார்கள். அதே போன்று வேறு சில யோகியர் ப்ராணவாயுவில் அபான வாயுவை ஹோமம் செய்கிறார்கள். மற்றும் சிலர் முறையாக உணவு உண்பவர்களாக ப்ராணாயாமத்தில் ஈடுபட்டவர்களாக ப்ராணன், அபானன் இவற்றின் ஸஞ்சாரத்தைக் கட்டுப்படுத்தி ப்ராணன்களை ப்ராணன்களிலேயே ஹோமம் செய்கிறார்கள். இந்த ஸாதகர்கள் அனைவரும் யாகத்தினால் பாவங்களை அழித்தவர்கள்; யக்ஞங்களை அறிந்தவர்கள்.

**கேள்வி:** இங்கு 'ஜுஹ்வதி' என்ற வினைச்சொல்லின் கருத்து என்ன?

**பதில்:** ப்ராணாயாமம் என்ற ஸாதனைக்கு யக்ஞ உருவகம் கொடுப்பதற்காக 'ஜுஹ்வதி' (ஹோமம் செய்கிறார்கள்) என்று கூறுகிறார். அதாவது ப்ராணாயாமம் செய்வது கூட ஒரு யக்ஞம்தான் என்பது பொருள். மமகாரம், பற்று, பயனில் கருத்து இவற்றைத் துறந்து பரமாத்மாவை அடையவேண்டும் என்ற நோக்கத்துடன் ப்ராணாயாமம் செய்வதுகூட யக்ஞத்திற்கான கர்மம்தான். ஆகவே அது மனிதனைக் கர்மபந்தத்திலிருந்து விடுவித்துப் பரமாத்மாவிடம் கொண்டு சேர்க்கும்.

**கேள்வி:** அபான வாயுவில் ப்ராண வாயுவை ஹோமம் செய்வது எப்படி?

**பதில்:** 'யோகம்' மிகவும் புரியாத விஷயம்; சிக்கலானது. பயிற்சியும், அனுபவமும் உள்ளவர்கள்தான் இதை அறியமுடியும்; விளக்கவும் முடியும். இவ்விஷயத்தில் இங்கே சொல்லப் போவதை சாஸ்த்ரீயமான முறையில் யுக்திகளைக் கூறி விளக்க முயற்சி செய்கிறோம். சாஸ்த்ரங்களில் ப்ராணாயாமம் பற்றிய பலமுறைகள் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றில் எதைக் குறிப்பிட்டு பகவான் இங்கு பேசுகிறார் என்பது அவருக்குத்தான் தெரியும். ஒரு விஷயம் கவனத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். சாஸ்த்ரங்களில், அபானனின் இடம் புட்டம் என்றும், ப்ராணனின் இடம் ஹ்ருதயம் என்றும் சொல்லப்படுகின்றன. வெளிக்காற்று உள்ளே செல்வது ஶ்வாஸம். இதுதான் அபானனின் ஸஞ்சாரம். ஏனெனில் அபானனின் இடம் கீழே உள்ளது. வெளிக்காற்று உள்ளே நுழைந்து கீழே செல்கிறது. அதேமாதிரி உள்ளிருக்கும் வாயுவை வெளியே தள்ளுவது ப்ரஶ்வாஸமாகும். இது ப்ராணனின் ஸஞ்சாரம். ப்ராணனுக்கு இடம் மேலே. உள்ளே உள்ள காற்றை மூக்கு வழியாக வெளிப்படுத்தும்போது, அதன் ஸஞ்சாரம் உடலின் கீழிருந்து மேலே போகிறது. மேற்குறித்த ப்ராணாயாமம் என்ற யாகத்தில், அக்னியாக அபான வாயுவும், அதில் ஹோமம் செய்யப்படும் த்ரவ்யமாக ப்ராணவாயுவும் இருக்கின்றன. ஆகவே பூரக ப்ராணாயாமம் செய்யும்போது, அபான வாயுவில் ப்ராணவாயு ஹோமம் செய்யப்படுகிறது. ஏனெனில் ஸாதகன் பூரக ப்ராணாயாமம் செய்யும்போது வெளிக்காற்றை மூக்கு வழியாக உடலில் இழுத்துக் கொள்கிறான். அப்பொழுது அந்த வெளிக்காற்று இதயத்தில் உள்ள ப்ராணவாயுவைச் சேர்த்துக் கொண்டு கொப்பூழில் உள்ள அபான வாயுவில் லயம் அடைகிறது. இந்த ஸாதனையில் திரும்பத் திரும்ப வெளிக்காற்று உள்ளே இழுத்துத் தடுத்து நிறுத்தப்படுகிறது. ஆகவே இது உள்கும்பகம் (ஆப்யந்தர கும்பகம்) என்றும் கூறப்படுகிறது.

**கேள்வி:** 'ப்ராணவாயுவில் அபான வாயுவை ஹோமம் செய்வது' என்றால் என்ன?

**பதில்:** இந்த இரண்டாவதான ப்ராணாயாமம் என்ற யாகத்தில், ப்ராணவாயு அக்னியாகவும், அபானவாயு ஹோமத்ரவ்யமாகவும் இருக்கின்றன. ரேசகப்ராணாயாமம் செய்வதுதான், ப்ராண வாயுவில் அபான வாயுவை ஹோமம் செய்வதாகும். ஏனெனில் ஸாதகன் ரேசகப்ராயாணாமம் செய்யும்போது, அவன் உள்ளே இருக்கும் வாயுவை மூக்கின் வழியாக உடலிலிருந்து வெளிப்படுத்தித் தடுத்து நிறுத்துகிறான். அப்போது முதலில் உள்ளே இருந்த ப்ராணவாயு வெளியே வந்து நின்றுவிடுகிறது. உடன் அபான வாயுவும் வெளிப்பட்டு, ப்ராண வாயுவில் லயமடைகிறது. இந்த ஸாதனையில் மீண்டும் மீண்டும் உள்ளிருக்கும் வாயு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வெளியே பலமுறை தள்ளப்பட்டு, வெளியே நிறுத்தி வைக்கப்படுகிறது. இதனால் இது வெளிக் கும்பகம் (பாஹ்யகும்பகம்) என்று சொல்லப்படும்.

**கேள்வி:** 'நியதாஹாரா:' அளவோடு உணவை ஏற்பவர் என்ற அடைமொழியின் கருத்து என்ன?

**பதில்:** யோக சாஸ்த்ரத்தில் கூறிய முறைப்படி, ப்ராணாயாமத்திற்கு உதவியான, ஸாத்விகமான (17/8) உணவை அளவோடு உண்பவன் என்று பொருள். அதாவது யோக சாஸ்த்ரத்தில் கூறியபடி அளவுக்கு அதிகமாகவும் உண்ணக்கூடாது; பட்டினியும் கிடக்கக் கூடாது. இவ்வித உணவுக்கட்டுப்பாடு உள்ளவர்களே 'நியதாஹாரா:'. முறையான உணவு உண்பவர்களுக்குத்தான் யோகம் ஸித்திக்கும் (6/17). அதிகம் உண்பவனுக்கும், பட்டினி கிடப்பவனுக்கும் யோகம் ஸித்திக்காது (6/16).

**கேள்வி:** 'ப்ராணாயாம பராயணா:' என்ற அடைமொழிக்கு என்ன பொருள்?

**பதில்:** ப்ராண ஸஞ்சாரத்தைக் கட்டுப்படுத்தும் முயற்சியுடன், இதையே பரமாத்மாவை அடைய முக்ய ஸாதனமாகக் கொள்பவர்கள் 'ப்ராணாயாம பராயணா:' ஆவர்.

**கேள்வி:** இந்த 'நியதாஹாரா:', 'ப்ராணாயாம பராயாணா:' என்ற அடைமொழிகளை மூன்றுவிதமாகவும் ப்ராணாயாமம் செய்பவர்களுக்குப் பொருந்துவதாகக் கொள்ளாமல், ப்ராணன்களில் ப்ராணனை ஹோமம் செய்பவர்களுக்கும் மட்டும் பொருந்துவதாகக் கூறுவதன் கருத்து என்ன? மற்ற இரண்டு ஸாதகர்கள் 'நியதாஹாரா:' மற்றும் 'ப்ராணாயாம பராயணா:' என்றோ இருக்க வேண்டாமா?

**பதில்:** மேலே கூறப்பட்ட ப்ராணாயாமமாகிய யக்ஞம் செய்யும் எல்லா யோகிகளையும் உணவுக் கட்டுப்பாடுடைய ப்ராணாயாம பராயணர்கள் என்று கூறலாம். ஆகவே இவ்விரண்டு அடைமொழிகளையும் எல்லோருக்கும் கூறுவதில் தவறொன்றும் இல்லை. ஆனால் இந்த அடைமொழிகள் மூன்றாவது ஸாதகனைக் குறிப்பிடும் இடத்தில் சேர்ந்து இருப்பதால், உரையில் கும்பகம் செய்பவர்களுக்கு மட்டும் பொருந்துவதாகக் கூறப்பட்டது. ப்ராணனை அபானனில் ஹோமம் செய்யும் உள்கும்பகக்காரர்களுக்கும், அபானனை ப்ராணனில் ஹோமம் செய்யும் வெளிக்கும்பகக்காரர்களுக்கும் கூட இந்த அடைமொழிகள் பொருந்துவதாகக் கொள்ளலாம்.

**கேள்வி:** ச்லோகம் 30ல் 'ப்ராணன்' என்ற சொல் பன்மையில் இருப்பது ஏன்? ப்ராணன், அபானன் இவற்றின் ஸஞ்சாரத்தைத் தடைசெய்து, ப்ராணன்களை ப்ராணன்களில் ஹோமம் செய்வது என்றால் என்ன?

**பதில்:** உடலில் ஸஞ்சரிக்கும் வாயு ஐந்துவிதமாகும். (1) ப்ராணன், (2) அபானன், (3) ஸமானன், (4) உதானன், (5) வ்யானன். இவற்றில் ப்ராணனுக்கு இடம் இதயம், அபானனுக்குப் புட்டம், ஸமானனுக்கு கொப்பூழ், உதானனுக்குக் கழுத்து, வ்யானனுக்கு உடல் முழுவதும் இடங்கள். இந்த ஐந்துவிதமான வாயுக்களைப் பஞ்சப்ராணன்கள் என்று கூறுவர். அதனால்தான் இங்கு ஐந்து ப்ராணன்களையும் வென்று இவற்றைத் தடுத்து நிறுத்தும் ஸாதனையை யாகம் என்று உருவகப்படுத்துவதற்காக ப்ராணன்கள் என்று பன்மையில் உபயோகப்படுத்தினார். இந்த ஸாதனையில் அக்னி, த்ரவ்யம் என்ற இரண்டாகவும் ப்ராணன்களே ஆகின்றன. எந்த ப்ராணாயாமத்தில் ப்ராணன், அபானன் இவற்றின் ஸஞ்சாரம் தடைசெய்யப்பட்டு நிறுத்தப்பட்டிருக்கிறதோ, அதாவது பூரகமுமல்லாமல், ரேசகமுமல்லாமல் மூச்சு இழுப்பு, மூச்சு விடுதல் இரண்டுமின்றி ப்ராணன், அபானன் முதலான ஐந்தையும் அவற்றின் இடத்திலேயே தடுத்து நிறுத்தியாகிறதோ, அந்த யாகத்தில் ப்ராண, அபான ஸஞ்சாரங்களைத் தடுத்து ப்ராணன்களை ப்ராணன்களில் ஹோமம் செய்வது நடைபெறுகிறது என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். இந்த ஸாதனையில் வெளி வாயுவை உள்ளே இழுப்பதுமில்லை; உள்வாயுவை வெளிப்படுத்துவதுமில்லை. அந்தந்த வாயுக்களை அந்தந்த இடங்களில் நிறுத்துவது நடைபெறுகிறது. இதனால் இது 'கேவலகும்பகம்' என்று கூறப்படுகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** மேலே சொல்லப்பட்ட மூன்றுவிதமான ப்ராணாயாமங்களுடன் கூட, ஜபம் செய்வது அவசியமா, இல்லையா? அவசியமானால் ஓம்கார ஜபமா? மற்ற ஏதாவது பகவந்நாம ஜபமா?

**பதில்:** ஓம்காரம் ஸத் சித் ஆனந்தமயமான பூரண ப்ரம்மத்தைச் சொல்வது (17/23). எந்தவிதமான நல்ல கார்யத்தைச் செய்ய ஆரம்பித்தாலும் இதை உச்சரிப்பது அவசியம்; உத்தமம் (17/24). ஆகவே, இங்கு கூறப்பட்ட யாகங்கள் அனைத்திலும் பகவந்நாம ஜபமும் சேர்ந்தே இடம் பெறுகிறது. ஆம், ஓம்காரத்தின் இடத்தில் ஸ்ரீராம, ஸ்ரீக்ருஷ்ண, ஸ்ரீசிவ முதலிய பகவந்நாமங்களில் யாருக்கு எது பிடிக்குமோ, எதில் ருசியும், ச்ரத்தையும் உள்ளதோ, அந்த நாமத்தைச் சொல்லலாம். ஏனெனில், பரமாத்மாவினுடைய எந்த நாமமும், ச்ரத்தையையும், நம்பிக்கையையும் பொறுத்துப் பயனளிக்கக் கூடியதுதான். இங்கு எல்லா ஸாதனைகளும் யக்ஞம் என்ற உருவகத்தில் கூறப்பட்டுள்ளன. மந்த்ரமில்லாத யக்ஞம் தாமஸமானது (17/13). ஆகவே மந்த்ரத்தின் இடத்தில் பகவந்நாமத்தைச் சொல்வது மிகவும் அவசியம். மேலே சொல்லப்பட்ட ப்ராணாயாமம் என்கிற யாகத்தில் ஒன்று, இரண்டு, மூன்று என்ற எண்ணிக்கைகளை விரலை மடக்குவதாலும், மாத்ரை முதலிய கணக்குகள் பண்ணிக்கொண்டே இருப்பதாலும் மந்த்ரஜபம் குறைவுபடுகிறது. ஆகவே அது ஸாத்விக யக்ஞம் ஆகாது. ஆகவே ப்ராணாயாம யக்ஞத்தில் நாமஜபம் மிகவும் அவசியம். கூடவே இஷ்ட தெய்வத்தை த்யானம் செய்யவும் வேண்டும்.

**கேள்வி:** மேலே சொன்ன ஸாதனை புரிபவர்கள் 'யாகத்தின் மூலம் பாவங்களை அழிக்கிறார்கள், யக்ஞங்களை அறிகிறார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 23வது ச்லோகத்தில் யக்ஞத்தின் பொருட்டுக் கர்மங்களை அனுஷ்டிப்பவர்களுடைய கர்மங்கள் அனைத்தும் லயமடைகின்றன என்று சொன்னதைத்தான் இங்குத் தெளிவாக விளக்குகிறார். 24வது ச்லோகம் முதல் இதுவரை, எந்த யாக அனுஷ்டானம் பண்ணுபவர்களைப் பற்றிச் சொல்லியிருக்கிறதோ, அவர்கள் எல்லோரும் மமகாரம், பற்று, பயனில் கருத்து இவையில்லாமல் யக்ஞத்திற்காகக் கடமைகளையாற்றி, அவற்றின் மூலம் முன்வினையான, மனப்பதிவுகளான ஸம்ஸ்காரங்கள் ஆகிய நல்லதும், தீயதுமான கர்மங்களை அழிக்கிறார்கள். இவர்களே யக்ஞத்தின் தத்வம் அறிந்தவர்கள். ஆனால் மேலே சொன்ன ஸாதனைகளைப் பயனில் கருத்துக் கொண்டு, உலகியல் போகம் பெறுவதற்காகச் செய்பவர்கள் கர்மங்களைச் செய்யாமல் விட்டவர்களைக் காட்டிலும் மேலானவர்களானாலும் யக்ஞத்தின் தத்வம் அறிந்து யக்ஞத்திற்காகக் கடமை செய்தவர்கள் ஆகமாட்டார்கள். ஆகவே அவர்கள் கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெறமாட்டார்கள்.

**பொருத்தம்: இவ்விதம் யக்ஞம் செய்பவர்களின் பெருமையைப் பேசி, அந்த யக்ஞங்களைப் புரிவதால் விளையும் லாபத்தையும், செய்யாமல் விட்டால் நேரும் தீங்கையும் விளக்கி, பகவான் மேலே சொன்னபடி யாகங்கள் செய்யவேண்டிய அவசியத்தை நிரூபிக்கிறார்—**

**यज्ञशिष्टामृतभुजो यान्ति ब्रह्म सनातनम्।**
**नायं लोकोऽस्त्ययज्ञस्य कुतोऽन्यः कुरुसत्तम॥ ३१॥**

**யஜ்ஞஶிஷ்டாம்ருதபு₄ஜோ யாந்தி ப்₃ரஹ்ம ஸநாதநம் ।**

**நாயம் லோகோऽஸ்த்யயஜ்ஞஸ்ய குதோऽந்ய: குருஸத்தம ॥ 31 ॥**

குருஸத்தம – குரு வம்சத்தில் சிறந்தவனான அர்ஜுன! **யஜ்ஞ ஶிஷ்ட அம்ருத புஜ:** – யக்ஞத்தில் எஞ்சிய அமுதத்தைப் பருகுகின்ற (யோகிகள்), **ஸநாதநம்** – ஶாஸ்வதமான, **ப்₃ரஹ்ம** – பரப்ரம்ம பரமாத்மாவை, **யாந்தி** – அடைகிறார்கள். **அயஜ்ஞஸ்ய** – யக்ஞம் செய்யாதவருக்கு, **அயம் லோக:** – மனித உலகமே (இவ்வுலகமே ஸுகமளிப்பதாக), **ந அஸ்தி** – இல்லை. (அப்படியிருக்க), **அந்ய:** – பரலோகம், **குத:** – எப்படி (ஸுகமளிக்கும்)?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



குரு வம்சத்தில் சிறந்தவனான அர்ஜுன! யக்ஞத்தில் எஞ்சிய அமுதத்தைப் பருகுகின்ற யோகிகள் ஶாஸ்வதமான பரப்ரம்ம பரமாத்மாவை அடைகிறார்கள். யக்ஞம் செய்யாதவருக்கு (மனித உலகமே) இவ்வுலகமே ஸுகமளிப்பதாக இல்லை. அப்படியிருக்கப் பரலோகம் எப்படி ஸுகமளிக்கும்?

**கேள்வி:** யக்ஞத்தில் எஞ்சிய அமுதம் என்றால் என்ன? அதைப் பருகுதல் என்றால் என்ன?

**பதில்:** உலக வழக்கில், தேவதைகளுக்காக அக்னியில் நெய் முதலிய த்ரவ்யங்களை ஹோமம் செய்வது 'யாகம்' ஆகும். அதில் மிகுந்ததை ப்ரஸாதமாக உண்பது உண்டு. அதுதான் யக்ஞத்தில் மிஞ்சிய அமுதம். இவ்விதமே ஸ்ம்ருதிகாரர்கள் ஐந்து மஹாயக்ஞங்களைப் பற்றிக் கூறுகிறார்கள். அதாவது தெய்வம், ரிஷிகள், முன்னோர்கள், மனிதர்கள், மற்ற உயிரினங்கள் இவர்களுக்குத் தம் சக்திக்கேற்றவாறு முறைப்படி உணவைப் பகுத்தளித்தபிறகு மீதமுள்ளதை யாகத்தின் மீதமான அமுதம் என்பர். ஆனால் இங்கு பகவான் யாகங்களின் பேரால் பரமாத்மாவை அடைதற்கான ஞானம், ஸம்யமம், தவம், யோகம், சாஸ்த்ரங்களைக் கற்பது, ப்ராணாயாமம் முதலிய ஸாதனங்களைக் கூறுகிறார். இவற்றுக்கும், உணவுக்கும் ஸம்பந்தம் இல்லை. ஆகவே மேலே சொன்ன ஸாதனைகளைச் சரிவரக் கடைப்பிடித்து, ஸாதகர்களுடைய உட்புலன்கள் தூய்மை பெற்று, அதனால் பெறும் ப்ரஸாதமான மன அமைதியை (2/64,65; 18/36,37) 'யக்ஞத்தில் எஞ்சிய அமுதம்' என்று கொள்ள வேண்டும். ஏனெனில் அவை அமுதமயமான பரமாத்மாவை அடையும் உபாயங்கள். அப்படி பரிசுத்தமான மனநிலையில் உண்டாகும் ஸுகத்தில் எப்பொழுதும் த்ருப்தி அடைவதே இங்குச் சொல்லப்பட்ட 'அமுத அனுபவம்' (அமுதத்தைப் பருகுதல்) ஆகும்.

**கேள்வி:** மேலே சொன்ன பரமாத்மாவை அடைவதற்கான ஸாதனைகளைப் புரிகின்ற ஸாதகர்களுக்குப் பரமாத்ம லாபம் இப்பிறவியிலேயே உண்டா? அல்லது அடுத்துவரும் பிறவிகளிலா?

**பதில்:** இது அவரவர் ஸாதனையின் நிலையைப் பொறுத்தது. ஸாதனையில் மன ஈடுபாடு குறைவற்று இருப்பவருக்கு, இதே பிறவியில் வெகுவிரைவில் ஸநாதன ப்ரம்மத்துடன் ஐக்யம் கிடைத்துவிடும். ஸாதனையில் குறைபாடுள்ளவருக்கு, அந்தக் குறை நீங்கிய பிறகு அது கிடைக்கும். ஆனால் மேலே சொன்ன ஸாதனை வீண் போவதில்லை. இந்த ஸாதகர்களுக்கு பரமாத்ம ப்ராப்தியென்ற லாபம் அவசியம் உண்டு (6/40). இதை உறுதி செய்வதற்காகவே பொதுவாக இங்கே இத்தகைய ஸாதகர்கள் ஸநாதனமான ப்ரம்மத்தை அடைவர் என்று சொன்னார்.

**கேள்வி:** ஸநாதன ப்ரம்மத்தை அடைவதென்றால் ஸகுண ப்ரம்மத்தை அடைவதா, அல்லது நிர்குண ப்ரம்மத்தையா?

**பதில்:** ஸகுண ப்ரம்மம், நிர்குண ப்ரம்மம் என்று இரண்டு இல்லை. ஸத் சித் ஆனந்தமயமான பரமேசுவரன்தான் ஸகுண ப்ரம்மம்; அவரே நிர்குண ப்ரம்மமுமாவார். அவரவர் பாவனை, நம்பிக்கைக்கு ஏற்றாற்போல, ஸாதகர்களுடைய பார்வையில் ஸகுணம் என்றும், நிர்குணம் என்றும் வேறுபாடு தோன்றுகிறது; அது உண்மையன்று. ஸநாதன ப்ரம்ம நிலையை எட்டினபிறகு எந்த வேறுபாடும் இருக்காது.

**கேள்வி:** இங்கு 'அயஜ்ஞஸ்ய' என்ற சொல் யாரைக் குறிக்கிறது? அவனுக்கு இவ்வுலகமே ஸுகமளிக்காது. பரலோகம் எப்படி அளிக்கும் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேற்கூறிய யக்ஞங்களில் அதாவது ஸாதனைகளில் ஒன்றையோ அல்லது சாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ள பற்பலவிதமான, மற்ற யக்ஞங்களில் ஒன்றையோ, எந்தவிதத்திலும் செய்யத் தவறும் ஒருவன் மனிதப்பிறவியின் கடமையை ஆற்றத் தவறிவிடுகிறான். அவனை 'அயஜ்ஞஸ்ய' என்ற சொல் குறிக்கிறது. அவனுக்கு இவ்வுலகமே ஸுகமளிக்காது எனில், பரலோகம் எப்படி ஸுகம் அளிக்கும்? மேலே சொன்ன யக்ஞங்களைச் செய்யத் தகுதி பெற்றபிறகு கூட, அவற்றில் ஈடுபடாததால், அவனுக்கு முக்தியே

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கிடைக்காது என்பது மட்டுமன்று; ஸ்வர்கமும் கிடைக்காது. முக்திக்கு வழியான இந்த மனிதப் பிறவியில் மனஅமைதியும் கிடைக்காது. பரதத்வ ஸாதனையில் ஈடுபடாத மனிதனை, எப்பொழுதும் இடைவிடாமல் பலவிதக் கவலைகள் நெருப்புக்கொழுந்தாகச் சூழ்ந்து வாட்டும். பிறகு துன்பத்தை மட்டும் அனுபவிக்கக் கூடிய பிறவிகளில் ஆழ்த்தும். அப்பிறவிகளில் மேன்மைக்குரிய செயல்களைச் செய்ய முடியாதென்பது மட்டுமன்று; அமைதியும் கிட்டாது. மனிதப்பிறவியில் செய்த புண்ய பாவப் பயன்களைத்தான் ஏனைய பிறவிகளில் அனுபவிக்க முடியும். ஆகவே, இந்த மனிதப் பிறவியில் கடமைகளைச் செய்யத் தவறுபவர்களுக்கு எப்பிறவியிலும் ஸுகம் கிடையாது.

**கேள்வி:** இவ்வுலகில் சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட உத்தம கர்மங்களைச் செய்யாமல் இருப்பவர்களுக்கும், சாஸ்த்ர விபரீதமாக நடப்பவர்களுக்கும் கூட மனைவி-மக்கள், செல்வம், மதிப்பு, பெருமை, கீர்த்தி முதலிய விருப்பமான நலன்கள் கிடைத்து ஸுகமாக இருப்பதைப் பார்க்கிறோமே! அப்படியிருக்க யக்ஞம் செய்யாதவருக்கு இவ்வுலக ஸுகம் இல்லை என்று சொல்வது எப்படி?

**பதில்:** மேலே சொன்ன விருப்பமான நலன்கள் பெற்று அவர்கள் ஸுகமாக இருப்பது கூட முன்பு சாஸ்த்ர முறைப்படி செய்யப்பட்ட புண்ய கர்மங்களின் பயன்தான்; பாவச் செயல்களின் பயன்கள் அல்ல. இந்த ஸுகங்கள் இப்பிறவியில் செய்த பாவ கர்மங்களின் பயன் என்றோ, புண்ய கர்மங்களைச் செய்யாமல் விட்டதன் பயன் என்றோ நினைக்கவே கூடாது. மேலும் மேற்படி ஸுகங்கள் உண்மையில் ஸுகங்களும் அல்ல. அதனால்தான் பரமாத்மாவை அடைவதற்கு முக்ய ஸாதனமான இந்த மனிதப்பிறவி கிடைத்தும், ஸாத்விகமான, ஸத்யமான ஸுகத்தைப் பெறாமல், அறியாமையினால், பலவிதமான போக வாஸனைகளினால் ஈர்க்கப்பட்டுத் துன்பத்திலும், கவலையிலும் ஆழ்ந்து போகிறான். பகவானின் அபிப்ராயம் இதுவே.

**கேள்வி:** மகன் தாய்-தந்தையருக்கு ஸேவை செய்யவேண்டும்; மனைவி கணவனுக்கு ஸேவை புரியவேண்டும். சிஷ்யன் குருவிற்கு ஸேவை புரியவேண்டும். இப்படி சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட பல கடமைகள் யக்ஞத்திற்கான கர்மங்களில் அடங்குமா இல்லையா? அத்தகைய கடமைகளை ஆற்றுபவர்கள் ஸநாதனமான ப்ரம்மத்தை அடைய முடியுமா, முடியாதா?

**பதில்:** மேலே சொன்ன கடமைகள் அனைத்தும் ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பதில் அடங்கும். இத்தகைய ஸ்வதர்மத்தைக் கடைப்பிடித்தல் என்ற யக்ஞத்தின் தொடர்ச்சி நன்கு காக்கப்பட வேண்டும் என்ற பகவானின் கட்டளையையேற்றுக் கொண்டு, தன்னலம் கருதாமல் செய்யப்படும் போர், வேளாண்மை, வணிகம் முதலியவை யக்ஞ கர்மத்தில் அடங்கும். அதைச் செய்பவர்கள் ஸநாதன ப்ரம்மத்தை அடைவது போலவே, மகன் தாய்-தந்தையரைப் பேணுவது, சிஷ்யன் குருவிற்கு ஸேவை செய்வது, மனைவி கணவனைப் பரமாத்மாவாகவே கருதி அவருக்கு ஸேவை செய்வது, இவர்கள் பணிவிடைக்குரியோரின் ஸுகத்திற்காகவே தன்னலம் கருதாது உழைப்பது - இவையெல்லாமே யக்ஞத்திற்கான கர்மங்கள்தாம். அவற்றால் மனிதன் ஸநாதன ப்ரம்மத்தை அடைவான் என்று சொல்லவும் வேண்டுமா?

**கேள்வி:** இந்த ஸந்தர்பத்தில் வெவ்வேறு யக்ஞங்களின் பெயர்களைச் சொல்லி, வெவ்வேறு ஸாதனைகள் கூறப்பட்டன. இவை ஞானயோகிகளுக்கு உரியனவா அல்லது கர்மயோகிகளுக்கா?

**பதில்:** 24வது ச்லோகத்தில் சொல்லப்பட்ட ப்ரம்மயக்ஞம், 25வது ச்லோகத்தின் பின்பாதியில் கூறப்பட்ட ஆத்மா, பரமாத்மாக்களின் அபேத தர்சன யக்ஞம் - இவையிரண்டும் ஞானயோகிகளுக்கு உரியவை. ஏனெனில் அந்த ஸாதகர்கள் ப்ரம்மத்தைத் தவிர வேறானவர் அல்லர். கர்மயோகி இவற்றைக் கடைப்பிடிக்க முடியாது. இவை தவிர, மற்ற எல்லா யக்ஞங்களையும் ஞானயோகியும் செய்யலாம்; கர்மயோகியும் செய்யலாம். இவற்றில் எந்தவிதமான தடையும் இல்லை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொருத்தம்: 16வது ச்லோகத்தில் பகவான் அர்ஜுனனைப் பார்த்து 'உனக்குக் கர்ம தத்வத்தைச் சொல்வேன். அதனால் நீ பாவத்திலிருந்து விடுபடுவாய்' என்று கூறியபடி 18வது ச்லோகம் முதல் இதுவரை கர்ம தத்வத்தை விளக்கி, இந்த ச்லோகத்தில் அதைத் தலைக்கட்டுகிறார்—

एवं बहुविधा यज्ञा वितता ब्रह्मणो मुखे।
कर्मजान्विद्धि तान्सर्वानेवं ज्ञात्वा विमोक्ष्यसे॥ ३२॥

**ஏவம் ப₃ஹுவித₄ா யஜ்ஞா விததா ப்₃ரஹ்மணோ முகே₂ ।**
**கர்மஜாந்வித்₃தி₄ தாந்ஸர்வாநேவம் ஜ்ஞாத்வா விமோக்ஷ்யஸே ॥ 32 ॥**

**ஏவம்** – இவ்விதம் (இன்னும்), **ப₃ஹுவித₄ா:** – அநேகவிதமான, **யஜ்ஞா:** – யக்ஞங்கள், **ப்₃ரஹ்மண: முகே₂** – வேதங்களில், **விததா:** – விரிவாகக் கூறப்பட்டுள்ளன. **தாந் ஸர்வாந்** – அவை எல்லாவற்றையும், **கர்மஜாந்** – மனம், புலன்கள், உடல் ஆகியவற்றால் செய்து நிறைவேற்றப்பட வேண்டியவை என்று, **வித்₃தி₄** – (நீ) அறிந்து கொள். **ஏவம் ஜ்ஞாத்வா** – இவ்வாறு தத்வரீதியாக அறிந்து (அவற்றைக் கடைப்பிடிப்பதன் மூலம் நீ கர்மபந்தத்திலிருந்து முற்றிலும்), **விமோக்ஷ்யஸே** – விடுதலை பெறுவாய்.

இவ்விதம் இன்னும் அநேகவிதமான யக்ஞங்கள் வேதங்களில் விரிவாகக் கூறப் பட்டுள்ளன. அவை எல்லாம் மனம், புலன்கள், உடல் ஆகியவற்றால் செய்து நிறைவேற்றப்பட வேண்டியவை என்று நீ அறிந்து கொள். இவ்வாறு தத்வரீதியாக அறிந்து அவற்றைக் கடைப்பிடிப்பதன் மூலம் நீ கர்மபந்தத்திலிருந்து முற்றிலும் விடுதலை பெறுவாய்.

**கேள்வி:** 'இவ்விதம் இன்னும் பலவிதமான யக்ஞங்கள் வேதங்களில் கூறப்பட்டிருக் கின்றன' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இதுவரை ஸாதனைகள் என்ற முறையில், எந்த யக்ஞங்களைக் குறிப்பிட்டேனோ, அவ்வளவுதான் என்றில்லை. இன்னும் ப்ரதீக உபாஸனை (உருவ வழிபாடு) முதலிய ப்ரம்மத்தை அடையும் பலவிதமான உபாயங்கள் வேதங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. செருக்கு, மமகாரம், பற்று, பயனில் விருப்பம் இவற்றைத் துறந்து, அந்த ஸாதனைகளை நிறைவேற்றும் ஸாதகர்கள் அனைவரும் யக்ஞத்தின் பொருட்டுக் கடமை ஆற்றுபவர்கள்தாம். ஆகவே மேலே சொன்ன யக்ஞங்களைச் செய்பவர்களைப் போல அவர்களும் கர்மபந்தத் திலிருந்து விடுதலை பெற்று, ஸநாதன ப்ரம்மத்தை அடைவார்கள் என்று கூறுகிறார்.

**கேள்வி:** இங்கு 'ப்ரஹ்ம' என்ற சொல்லுக்கு வேதம் என்று பொருள் கூறப்பட்டது. ப்ரம்மாவின் வாய்மொழி அல்லது பரமாத்மாவின் வாய்மொழி என்று கூறினால் என்ன? ஏனெனில் ப்ரஜாபதியான ப்ரம்மா யக்ஞங்களோடு கூட ப்ரஜைகளைப் படைத்தார் (3/10) என்றும், பரமேசுவரனால் வேதங்கள், யக்ஞங்கள், ப்ராம்மணர்கள் படைக்கப்பட்டனர் (17/23) என்றும் சொல்லப்பட்டிருக்கிறதே!

**பதில்:** ப்ரஜாபதியான ப்ரம்மா பரமாத்மாவிடம்தான் உண்டானார். ஆகவே வேதங்கள், ப்ராம்மணர்கள், யக்ஞம் முதலியவை ப்ரம்மாவிடமிருந்து தோன்றின என்றோ, பரமாத்மாவிலிருந்தே உண்டாயின என்றோ, எப்படிச் சொன்னாலும் எல்லாம் ஒன்றுதான். அதுபோல வெவ்வேறு யக்ஞங்கள் விரிவாக வேதங்களில் கூறப்பட்டுள்ளன. வேதங்கள் ப்ரம்மாவின் முகத்திலிருந்து வெளிப்பட்டன. ப்ரம்மா பரமாத்மாவிடமிருந்தே உண்டானார். இக்காரணங்களால் யக்ஞங்கள் பரமாத்மாவிடமிருந்தோ, ப்ரம்மாவிடமிருந்தோ, வேதங்களிலிருந்தோ பிறந்தன என்று கூறுவது எல்லாம் ஒன்றுதான். 3/15ல் யக்ஞங்கள் வேதங்களிலிருந்து உண்டாயின என்று கூறப்பட்டது. அவற்றின் விரிவும் வேதங்களிலேயே காணப்படுகின்றது. ஆகவே இங்கு 'ப்ரஹ்ம' என்ற சொல்லுக்கு வேதம் என்று பொருள் சொன்னது சரிதான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'இவை அனைத்தையும் நீ மனம், புலன்கள், உடல் இவற்றினால் செய்து நிறைவேற்றவேண்டும் என்று அறிந்து கொள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இப்படிச் சொல்வதன் மூலம் பகவான் மூன்று விஷயங்களை அறிய வேண்டும் என்று உணர்த்துகிறார். (1) இங்கு ஸாதனை என்ற முறையில் சொல்லப்பட்ட யக்ஞங்கள், இவை தவிர சாஸ்த்ரங்களில் செய்யவேண்டியதாகக் கூறப்பட்ட கடமைகள் இவையெல்லாமே மனம், புலன்கள், உடல் இவற்றினால் செய்யப்பட வேண்டியவை. அவற்றில் சில மனதினாலும், சில மனம், புலன்களாலும், மற்றும் சில மனம், புலன்கள், உடலினாலும் ஆற்றப்பட வேண்டியவை. இவை மூன்றின் ஸம்பந்தமில்லாமல் ஆற்றக்கூடிய யக்ஞங்களே கிடையா. ஆகவே ஸாதகன், உடல், புலன் மற்றும் ப்ராணன்களின் செயலையோ, ஸங்கல்பம், விகல்பம் போன்ற மனதின் செயலையோ த்யாகம் செய்யும் எந்த த்யாக வடிவான ஸாதனையையும் கர்மமாகவே கருதவேண்டும். மேலும் அந்த த்யாகத்தையும், பயனில் ஆசையின்றி, பற்றற்று, மமகாரமற்றுச் செய்யவேண்டும். இல்லாவிடில் அதுவும் பந்தத்திற்குக் காரணமாகிவிடலாம்.

(2) 'யக்ஞம்' என்ற பெயரால் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளும், பரமாத்மாவை அடைவதற்காகக் கூறப்பட்ட ஸாதனைகளும் வெவ்வேறானவை. அனைத்துமே ப்ரக்ருதியின் விளைவான மனம், புலன்கள், உடலால் ஆகக்கூடியவை. இவற்றோடு ஆத்மாவுக்கு ஸம்பந்தமே இல்லை. ஆகவே இவற்றைச் செய்யும்போது ஞானயோகி 'தான் கர்த்தா' என்ற அபிமானம் கொள்ளக் கூடாது.

(3) மனம், புலன்கள், உடல் இவற்றின் செய்கையாகிய கர்மங்களின்றிப் பரமாத்மாவை அடைவதோ, கர்மபந்தத்திலிருந்து விடுபடுவதோ முடியாது (3/4). மனம், புலன்கள், உடல் இவற்றின் உதவியின்றி, கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெறுவதற்காகச் சொல்லப்பட்ட உபாயங்கள் எவற்றையுமே கடைப்பிடிக்க முடியாது. ஆகவே பரமாத்மாவை அடையவும், கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெறவும் விரும்புபவர்கள் மமகாரம், அபிமானம், பற்று, பயனில் கருத்து இவற்றைத் துறந்து, மேற்கூறியவற்றில் ஏதாவது ஒரு ஸாதனையை அவசியம் முயற்சியுடன் செய்யத்தான் வேண்டும்.

**கேள்வி:** 'இவ்விதம் தத்வரீதியாக அறிந்து, நீ கர்மபந்தத்திலிருந்து முற்றிலும் விடுதலை பெறுவாய்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ச்லோகம் 18 முதல் இதுவரை சொல்லப்பட்ட கர்ம தத்வங்களை அறிந்து, அதன்மூலம் அனைத்து யக்ஞங்களையும் தத்வரீதியாக உணர்ந்து, நீ கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெறுவாய். ஏனெனில், இவ்வாறு தத்வம் உணர்ந்து செய்யப்படும் கர்மங்கள் பந்தத்திற்குக் காரணமாகா என்பது மட்டுமன்று; அவை முன்வினையால் சேர்ந்துள்ள செயல்களையும் அழித்து, மோக்ஷத்தையும் அளிக்கும் என்பது கருத்து.

**பொருத்தம்:** **இதுவரை பகவான் பலவிதமான யக்ஞங்களை வர்ணித்தார். இவை தவிர வேறு பல யக்ஞங்கள் வேத சாஸ்த்ரங்களில் கூறப்பட்டிருக்கின்றன என்றும் சொன்னார். இவற்றில் எந்த யக்ஞம் சிறந்தது என்ற கேள்வி பிறக்கிறது. இதற்கு விடை அளிக்கிறார்—**

**श्रेयान्द्रव्यमयाद्यज्ञाज्ज्ञानयज्ञः परन्तप ।**
**सर्वं कर्माखिलं पार्थ ज्ञाने परिसमाप्यते ॥ ३३ ॥**

**ஶ்ரேயாந்த்₃ரவ்யமயாத்₃யஜ்ஞாஜ்ஜ்ஞாநயஜ்ஞ: பரந்தப ।**

**ஸர்வம் கர்மாகி₂லம் பார்த₂ ஜ்ஞாநே பரிஸமாப்யதே ॥ 33 ॥**

**பரந்தப பார்த₂** – பரந்தப அர்ஜுன! **த்₃ரவ்யமயாத்** – த்ரவ்யங்களால் நிறைவேற்றக் கூடிய, **யஜ்ஞாத்** – யக்ஞத்தைவிட, **ஜ்ஞாநயஜ்ஞ:** – ஞான யக்ஞம், **ஶ்ரேயாந்** – மிகவும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



சிறந்தது. (ஏனெனில்), **அகி॒லம் கர்ம** – என்னென்ன கர்மங்கள் உண்டோ, **ஸர்வம்** – அந்தக் கர்மங்கள் அனைத்தும், **ஜ்ஞாநே** – ஞானத்தில், **பரிஸமாப்யதே** – நிறைவு பெறுகின்றன.

பரந்தப அர்ஜுன! த்ரவ்யங்களால் நிறைவேற்றக்கூடிய யக்ஞத்தைவிட ஞானயக்ஞம் மிகவும் சிறந்தது. ஏனெனில் என்னென்ன கர்மங்கள் உண்டோ அந்தக் கர்மங்கள் அனைத்தும் ஞானத்தில் நிறைவு பெறுகின்றன.

**கேள்வி:** இங்கு 'த்ரவ்யயஜ்ஞம்' என்றால் என்ன? 'ஜ்ஞாநயஜ்ஞம்' என்றால் என்ன? த்ரவ்யயக்ஞத்தைவிட ஞானயக்ஞம் சிறந்தது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** த்ரவ்யங்கள் அதாவது உலகியல் பொருட்கள் முக்யமாகத் தேவைப்படும் யக்ஞம் 'த்ரவ்யயஜ்ஞம்' எனப்படும். அக்னியில் நெய், சர்க்கரை, தயிர், பால், எள், அரிசி, உலர்ந்த பழம், சந்தனம், கற்பூரம், அகில், மணமுள்ள மூலிகைகள், அன்னம் இவற்றை விதிப்படி ஹோமம் செய்வது, தானம் கொடுப்பது, பரோபகாரமாகக் கிணறு, ஓடை, குளம் வெட்டுவது, தர்மசாலைகள் கட்டுவது, பலிவைச்வதேவம் செய்வது என்று உலகியல் பொருட்களைப் பயன்படுத்தி, சாஸ்த்ரமுறைப்படி செய்யப்படும் நல்ல செயல்கள் எல்லாமே த்ரவ்ய யக்ஞங்கள்தாம். மேற்கூறிய ஸாதனைகளில் இவை தெய்வயக்ஞம் என்றும், அனுபவ விஷயங்களை அர்ப்பணம் செய்கின்ற யக்ஞம் என்றும், த்ரவ்யயக்ஞம் என்றும் கூறப்பட்டுள்ளன. இவை தவிர, விவேகம், ஆராய்ச்சி முதலிய ஆத்ம ஸம்பந்தமான ஞானத்துடன் கூடிய ஸாதனைகள் அனைத்தும் ஞானயக்ஞத்தில் அடங்கும். இங்கு த்ரவ்ய யக்ஞத்தைக் காட்டிலும் ஞானயக்ஞம் சிறந்தது என்றால், ஸாதகர்கள் தம் பொறுப்புக்கு ஏற்றவாறு சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட அக்னிஹோத்ரம், ஸாதுக்களுக்கு அன்னம் இடுதல், தானம் இவற்றைச் செய்யாமல், ஆத்மஸம்யமம், சாஸ்த்ரங்களைப் படிப்பது, தத்வ ஆராய்ச்சி, யோகஸாதனை முதலிய விவேகம், விஞ்ஞானம் ஸம்பந்தப்பட்ட நற்செயல்களுள் ஒன்றில் ஈடுபட்டிருந்தால், அவனை நல்ல கார்யங்களைச் செய்யாமல் விட்டவனாக நினைக்கக் கூடாது. அவன் முன்னதைக் காட்டிலும் சிறந்த செயலைச் செய்பவனாகவே நினைக்க வேண்டும். ஏனெனில் த்ரவ்யயக்ஞம் கூட மமகாரம், பற்று, பயனில் கருத்து இவற்றைத் துறந்து ஞானத்தோடு செய்தால்தான் முக்திக்குக் காரணமாகின்றது. இல்லாவிட்டால் பந்தத்திற்குக் காரணமாகின்றது. மேலே சொன்ன ஞான ஸாதனைகளில் ஈடுபட்டவர்கள் அனுபவ விஷயங்களையே முற்றிலுமாகத் துறந்து விடுகிறார்கள். அவர்களுடைய செயல்களில் ஹிம்ஸை முதலியன அறவே இல்லை. ஆகவே அவை உத்தமமானவை என்று பொருள். தத்வ ஞானத்தைப் பெறுவதில் பாவனைதான் முக்யம்; உலகியல் பொருட்களின் தேவையில்லை. ஆகவே த்ரவ்ய யக்ஞத்தைக் காட்டிலும், ஞானயக்ஞம் சிறந்தது என்று சொன்னார்.

**கேள்வி:** இங்கு 'அகிலம்', 'ஸர்வம்' என்ற அடைமொழிகளோடு கூறப்படும் 'கர்ம' என்ற சொல் எதைக் குறிக்கிறது? 'முழுமையான எல்லாக் கர்மங்களும் ஞானத்தில் முடிகின்றன' என்று கூறுவதன் பொருள் என்ன?

**பதில்:** மேலே கூறப்பட்ட பலவிதமான ஸாதனைகள் என்ற கர்மங்கள், இவை தவிர வேத சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட நல்ல கர்மங்கள் *(4/32)* இவை எல்லாம் சேர்ந்ததே 'அகிலம் ஸர்வம் கர்ம' என்பதன் பொருள் ஆகும்.

(அகிலம் என்றால் என்னென்ன கர்மங்கள் உண்டோ அவை என்று பொருள். ஸர்வம் என்றால் அவை எல்லாம் என்று பொருள்.) இத்தனை ஸாதனைகளுக்கும் மிகப் பெரிய பயன் பரமாத்மாவைப் பற்றி உள்ளபடி அறிந்து கொள்வதுதான். அப்படி உள்ளபடி அறிவதன் மூலம் பரமாத்மாவை அடைந்தபிறகு, மேலும் அடைய வேண்டியது எதுவும் மீதமில்லை என்று கூறுகிறார்.

**கேள்வி:** இந்த ச்லோகத்தில் வரும் 'ஜ்ஞாநயஜ்ஞம்', 'ஜ்ஞாநம்' இரண்டுக்கும் பொருள் ஒன்றுதானா, வெவ்வேறா?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** வெவ்வேறுதான். 'ஞானயக்ஞம்' என்பதில் வரும் ஞானம் என்ற சொல்லுக்கு, ப்ரம்மத்தை உள்ளபடி அறிவதற்காகச் செய்யப்படும் விவேகம், ஆராய்ச்சி, ஸம்யமம் முதலிய ஸாதனைகள் என்று பொருள். இரண்டாம் பாதியில் வரும் ஞானம் என்ற சொல்லுக்குப் பரமாத்மாவைப் பற்றிய உண்மை அறிவு – அந்த ஸாதனைகளின் பயனான தத்வஞானம் என்று பொருள். இவ்விதம் இரண்டுக்கும் பொருள் வேறுபாடு உண்டு.

**பொருத்தம்:** இவ்விதம் ஞானயக்ஞம், அதன் பயனான பரமாத்ம தத்வஞானம் இவற்றின் பெருமைகளைக் கூறி, அடுத்து இரண்டு ச்லோகங்களால் 'ஞானத்தைப் பெறுவாயாக' என்று அர்ஜுனனுக்கு ஆணையிட்டு, அதைப் பெறும் வழியையும், பயனையும் கூறுகிறார்—

तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया।
उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः ॥ ३४ ॥

தத்₃வித்₃தி₄ ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா ।
உபதே₃க்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ்தத்த்வத₃ர்ஶிந: ॥ 34 ॥

**தத்** – அந்த ஞானத்தை (தத்வதர்சிகளான ஞானிகளை அணுகி), **வித்₃தி₄** – அறிந்துகொள். (அவர்களை), **ப்ரணிபாதேந** – ஸாஷ்டாங்கமாகத் தரையில் விழுந்து வணங்குவதாலும், **ஸேவயா** – ஸேவை செய்வதாலும், **பரிப்ரஶ்நேந** – (கபடமில்லாமல்) நேர்மையாகக் கேள்வி கேட்பதாலும், **தே** – அந்த, **தத்த்வத₃ர்ஶிந:** – பரமாத்ம தத்வத்தை நன்கு அறிந்துள்ள, **ஜ்ஞாநிந:** – மஹாத்மாக்களான ஞானிகள் (உனக்கு அந்த), **ஜ்ஞாநம்** – தத்வ ஞானத்தை, **உபதே₃க்ஷ்யந்தி** – உபதேசிப்பார்கள்.

அந்த ஞானத்தைத் தத்வதர்சிகளான ஞானிகளை அணுகி அறிந்துகொள். அவர்களை ஸாஷ்டாங்கமாகத் தரையில் விழுந்து வணங்குவதாலும், ஸேவை செய்வதாலும், கபடமில்லாமல் நேர்மையாகக் கேள்வி கேட்பதாலும், அந்த பரமாத்ம தத்வத்தை நன்கு அறிந்துள்ள மஹாத்மாக்களான ஞானிகள் உனக்கு அந்தத் தத்வ ஞானத்தை உபதேசிப்பார்கள்.

**கேள்வி:** இந்த ச்லோகத்தில் 'தத்' என்று எதைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** எல்லா ஸாதனைகளுக்கும் உரிய பயனை, முன் ச்லோகத்தில் புகழ்ந்துரைத்த தத்வஞானத்தை, பரமாத்மாவைப் பற்றிய அந்த உண்மை அறிவை 'தத்' என்ற சொல் குறிப்பிடுகிறது.

**கேள்வி:** 'அந்த ஞானத்தைப் பெறுவதற்காக' என்றால் என்ன?

**பதில்:** பரமாத்மாவைப் பற்றிய உண்மை அறிவைப் பெறாமல் மனிதன், பிறப்பு-இறப்பு என்ற கர்ம பந்தத்திலிருந்து விடுதலை பெறமுடியாது. ஆகவே கட்டாயம் அந்த ஞானத்தைப் பெற வேண்டும் என்று பொருள்.

**கேள்வி:** 'தத்வம் உணர்ந்த ஞானிகளிடமிருந்து ஞானம் பெறவேண்டும்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவான் அடிக்கடி பரமாத்ம தத்வத்தை எடுத்துக் கூறியும்கூட, அர்ஜுனன் அதை அறிந்து கொள்ளாததால் அவனிடம் ச்ரத்தைக் குறைவு இருபபது தெரிகிறது. மேலும் ச்ரத்தை வளர்வதற்காக மற்ற ஞானிகளிடம் சென்று ஞானம் பெறுமாறு பகர்கிறார்.

**கேள்வி:** 'ப்ரணிபாத' என்றால் என்ன?

**பதில்:** ச்ரத்தையுடனும், பக்தியுடனும், நேர்மையுடனும், ஸாஷ்டாங்கமாகத் தரையில் வீழ்ந்து வணங்குவது 'ப்ரணிபாதம்' ஆகும்.

**கேள்வி:** 'ஸேவா' என்றால் என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** ச்ரத்தையுடனும், பக்தியுடனும் பெரியோர்களை அணுகுவது, அவர்களது கட்டளைகளை நிறைவேற்றுவது, அவர்களின் உள்ளம் அறிந்து எல்லாவிதத்திலும் அவர்கள் மனமகிழுமாறு ஊழியம் செய்வது இவையெல்லாம் ஸேவையில் அடங்கும்.

**கேள்வி:** 'பரிப்ரச்ந' என்றால் என்ன?

**பதில்:** பரமாத்ம தத்வத்தை உள்ளபடி அறியவேண்டும் என்ற ஆவலோடு, ச்ரத்தையுடனும், பக்தியுடனும் குருவினிடம் கேள்வி கேட்பது 'பரிப்ரச்ந'மாகும். அதாவது 'நான் யார்? மாயை என்றால் என்ன? பரமாத்மாவின் ஸ்வரூபம் என்ன? எனக்கும், பரமாத்மாவுக்கும் என்ன ஸம்பந்தம்? பந்தம் என்றால் என்ன? மோக்ஷம் என்றால் என்ன? எவ்விதம் ஸாதனை புரிந்தால் பரமாத்மாவை அடையலாம்?' இப்படி ஆத்மாவைப் பற்றி எல்லா விஷயங்களிலும் ச்ரத்தையுடனும், பக்தியுடனும், பணிவுடனும், நேர்மையுடனும் கபடமின்றிக் கேள்வி கேட்பது 'பரிப்ரச்நம்' ஆகும். தர்க்கம் புரிவதோ, விதண்டாவாதம் செய்வதோ 'பரிப்ரச்நம்' அல்ல.

**கேள்வி:** 'வணங்குவதாலும், ஸேவை புரிவதாலும், நேர்மையாகக் கேள்வி கேட்பதாலும் பெரியோர்கள் உனக்குத் தத்வத்தை உபதேசிப்பார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன? இவ்வாறு ஸேவை முதலியன செய்யாவிட்டால் ஞானிகள் உபதேசிக்க மாட்டார்களா?

**பதில்:** தத்வஞானத்தைப் பெறுவதில் ச்ரத்தை, பக்தி, கபடமின்மை இவை அவசியம் என்று வலியுறுத்துவதுதான் பகவானின் அபிப்ராயம். ச்ரத்தையும், பக்தியும் இல்லாதவனுக்குச் செய்யப்படும் உபதேசம் மனதில் ஏறாது. பிறரது வணக்கம், பணிவிடை, மரியாதை இவற்றால் அவர்களுக்கு ஆகவேண்டியது ஒன்றும் இல்லாவிடினும், தனக்கு எல்லாம் தெரியும் என்ற செருக்குடனும், முரட்டுத்தனத்துடனும், 'இவருக்குத் தெரிகிறதா பார்ப்போம்' என்ற எண்ணத்துடனும், கபடமாகவும் கேள்வி கேட்பவர்களுக்குத் தத்வஞானம் பற்றிக் கூறப் பெரியோர்கள் முன்வர மாட்டார்கள். ஆகவே தத்வஞானம் பெற விரும்புபவன் ச்ரத்தையுடனும், பக்தியுடனும் பெரியோர்களை அண்டி, அவர்களிடம் தன்னை ஒப்புவித்து, அவர்களுக்கு ஸேவை புரிந்து, அவர்களாக விரும்பிச் சொல்லும்வரை காத்திருந்து, அவர்களிடம் பரமாத்மாவைப் பற்றிக் கேட்க வேண்டும். இப்படி நடந்தால், கன்றைப் பார்த்த பசுவுக்கு மடியில் பால் சுரப்பது போல, அந்தத் தகுதி பெற்ற சீடனுக்கு உபதேசம் செய்ய வேண்டும் என்ற உவகை ஞானியின் உள்ளத்தில் கடல் போலப் பொங்கி எழும். இதைத்தான் வேதமும் கூறுகிறது: **'தத்₃விஜ்ஞானார்த₂ம் ஸ கு₃ருமேவாபி₄க₃ச்சே₂த் ஸமித்பாணி: ச்ரோத்ரியம் ப்₃ரஹ்மநிஷ்ட₂ம்'** (முண்ட₃கோபநிஷத்₃ 1/2/12). தத்வத்தை அறிய விரும்பும் ஸாதகன் சக்திக்கேற்றவாறு ஸமித் முதலிய காணிக்கைகளை ஏந்தி, கர்வமின்றி வேத சாஸ்த்ரங்களை அறிந்த, ப்ரம்மத்தில் நிலைபெற்ற குருநாதரை அணுகவேண்டும்.

**கேள்வி:** 'ஜ்ஞாநிந:' (மஹாத்மாக்களான ஞானிகள்) என்பதற்கு 'தத்வதர்சிந:' என்று அடைமொழி கொடுப்பதும், பன்மையில் கூறுவதும் ஏன்?

**பதில்:** பரமாத்மாவின் தத்வத்தை உள்ளபடி நன்றாக உணர்ந்த, வேதம் அறிந்த பெரியோர்கள்தான் அந்த தத்வஞானத்தை உபதேசிக்க முடியும். சாஸ்த்ரம் மட்டும் படித்தவன் உபதேசம் செய்ய முடியாது. பன்மை இங்கு மரியாதையைக் குறிக்கிறது. ஞானிகள் பலர் கூடி உனக்கு உபதேசிப்பார்கள் என்பது பொருளன்று.

**यज्ज्ञात्वा न पुनर्मोहमेवं यास्यसि पाण्डव।**
**येन भूतान्यशेषेण द्रक्ष्यस्यात्मन्यथो मयि॥ ३५॥**

**யஜ்ஜ்ஞாத்வா ந புநர்மோஹமேவம் யாஸ்யஸி பாண்ட₃வ ।**

**யேந பூ₄தாந்யஶேஷேண த்₃ரக்ஷ்யஸ்யாத்மந்யதோ₂ மயி ॥ 35 ॥**

**யத்** – எதை (எந்த ஞானத்தை), **ஜ்ஞாத்வா** – அறிந்து கொண்டபின்னர், **புந:** – திரும்பவும் (நீ), **ஏவம்** – இவ்விதமான, **மோஹம்** – குழப்பத்தை, **ந யாஸ்யஸி** –

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அடையமாட்டாயோ, **பாண்ட₃வ** – அர்ஜுன! **யேந** – அந்த (தத்வ ஞானத்தினால்), **பூ₄தாநி** – சராசரங்கள் அனைத்தையும், **அஶேஷேண** – மீதமின்றி (முதலில்), **ஆத்மநி** – தன்னிடமும், **அதோ₂** – பிறகு, **மயி** – ஸத் சித் ஆனந்தமயனான என்னிடமும், **த்₃ரக்ஷ்யஸி** – காண்பாய்.

எந்த ஞானத்தை அறிந்து கொண்டபின்னர் திரும்பவும் நீ இவ்விதமான குழப்பத்தை அடையமாட்டாயோ, அர்ஜுன! அந்தத் தத்வ ஞானத்தினால் சராசரங்கள் அனைத்தையும் மீதமின்றி முதலில் தன்னிடமும் பிறகு ஸத் சித் ஆனந்தமயனான என்னிடமும் காண்பாய்.

**கேள்வி:** இங்கு 'யத்' என்று எதைக் குறிப்பிடுகிறார்? அதை அறிவது என்பது என்ன? 'பிறகு இவ்விதம் மோஹமடைய மாட்டாய்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'யத்' என்றால் முன் ச்லோகத்தில் சொல்லப்பட்டபடி ஞானியால் உபதேசிக்கப்படும் தத்வஞானம் என்று பொருள். அந்த உபதேசத்தின்படி பரமாத்ம ஸ்வரூபத்தை நன்கு, நேரிடையாக உணர்வதே அந்த ஞானத்தைப் பெறுவது என்பதன் பொருள். இப்பொழுது 'அர்ஜுன! நீ எந்த மோஹத்தினால் சோகத்தில் ஆழ்ந்திருக்கிறாயோ (1/28–47; 2/6,8), பெரியோர்கள் உபதேசித்த ஞானம் பெற்றபிறகு, மறுபடியும் நீ அந்த மோஹத்தில் கலங்கமாட்டாய்' என்பது 'மோஹத்திற்கு ஆட்படமாட்டாய்' என்று கூறுவதன் பொருள். ஏனெனில், இரவில் பரவிய இருள் ஆதவன் உதயமானவுடன் இல்லாமல் போய் விடுவதைப்போல, பரமாத்மாவை உள்ளபடி அறிந்த பிறகு, 'நான் யார்? உலகம் எப்படிப்பட்டது? மாயை என்றால் என்ன? ப்ரம்மம் என்றால் என்ன?' முதலியவற்றைப் பற்றித் தெரிந்து கொள்ளவேண்டியது எதுவும் எஞ்சியிராது. அதன் பயனாக உடலை ஆத்மா என்று நினைத்து அத்துடன் தொடர்பு கொண்ட ஜீவர்களிடமும், பொருட்களிடமும் மமகாரம், உடல் பிறந்து இறப்பதால் ஆத்மாவும் பிறந்து இறப்பதாக நினைத்து அவற்றின் சேர்க்கை, பிரிவுகளால் ஸுக-துக்கமடைவது, வேறு காரணங்களுக்காக விருப்பு-வெறுப்புகள், மகிழ்ச்சி-துயரம் அடைவது ஆகிய மோஹத்தினால் ஏற்படும் குழப்பங்கள் எவையும் சிறிதும் இரா. உலகியலில் கதிரவன் உதித்து மறைவதும் உண்டு; இருள் சூழ்ந்து பின்னர் மறைவதும் உண்டு. ஆனால் ஞானசூரியன் உதித்த பிறகு எப்பொழுதும் அஸ்தமனம் ஆவதில்லை. பரமாத்மாவைப் பற்றிய தத்வஞானம் நித்யமானது; அழியாதது; அசைக்க முடியாதது. ஆகவே பரமாத்ம ஞானம் பெற்றபிறகு மோஹம், குழப்பம் உண்டாகா. ஈசாவாஸ்யோபநிஷத் (7) கூறுகிறது—

**யஸ்மிந் ஸர்வாணி பூ₄தாந்யாத்மைவாபூ₄த்₃விஜாநத: ।**
**தத்ர கோ மோஹ: க: ஶோக ஏகத்வமநுபஶ்யத: ॥**

எப்பொழுது தத்வமறிந்தவனுக்கு எல்லாமே ஆத்மஸ்வரூபம் ஆகிவிடுகின்றனவோ, அப்பொழுது ஒன்றையே காணும் அவனுக்கு ஏது குழப்பம், ஏது துயரம்? அதாவது ஒன்றும் ஏற்பட முடியாது.

**கேள்வி:** ஞானத்தின் வாயிலாக எல்லா உயிரினங்களையும் மீதமின்றித் தன்னிடமே அடங்கியதாகப் பார்ப்பது எப்படி?

**பதில்:** மஹாத்மாவிடம் பரமாத்ம ஞான உபதேசம் பெற்று, 'ஆத்மா எங்கும் நிறைந்தது; எல்லையற்றது' என்று அறிந்து, எல்லா ப்ராணிகளிடமும் பேதபுத்தி அகன்று, அனைத்தையும் தானாகவே பார்க்கவேண்டும். எவ்விதம் கனவில் ஆழ்ந்தவன் விழித்தபிறகு, கனவில் கண்டதையெல்லாம் தன்னிடமே பார்த்ததாகவும், தன்னைத் தவிர வேறொன்றும் இருக்கவில்லையென்றும் உணர்ந்து கொள்வதுபோல, அகில உலகமும் தன்னிலும் வேறன்று, தன்னிடமே அடக்கம் என்று அறிந்து, எல்லாவற்றையும் மீதமின்றி, ஆத்மாவில் உள்ளதாக ஆத்மஞானி பார்க்கிறான் (6/29). இவ்விதம் ஆத்மஞானம் பெற்றபிறகு மனிதனுக்கு சோகமும், மோஹமும் என்றும் இரா.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** இவ்விதம் ஆத்மதர்சனம் பெற்றபிறகு சராசரங்களனைத்தையும், உயிரினங்களையும், ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தில் பார்ப்பது எப்படி?

**பதில்:** சராசரங்களனைத்தையும் ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவில் பார்ப்பது என்பது முன் சொன்ன ஆத்மதர்சனத்தின் பயனாகும். இதுவே பரமபதத்தை அடைவது – நிர்வாண ப்ரம்மத்தை அடைவது – பரமாத்மாவில் இரண்டறக் கலந்துவிடுவது என்பதற்கெல்லாம் பொருள். இந்த நிலையை அடைந்தவனுக்கு அஹம் (நான்) என்பது அறவே ஒழிந்துவிடும். அந்த யோகி பரமாத்மாவினிடமிருந்து பிரிந்து தனியாக நிற்கமாட்டான். ஸத் சித் ஆனந்த ப்ரம்மமாகவே ஆகிவிடுவான். அவன் பரமாத்மாவிடமே எல்லாவற்றையும் பார்ப்பான் என்பது கூட சாஸ்த்ர முறைப்படி கூறப்பட்டதே தவிர, உண்மையில் பார்க்கிறவன், பார்க்கப்படும் பொருள், பார்வை என்ற பேதமே இருக்காது. யார் பார்க்கிறான்? யாரைப் பார்க்கிறான்? எதுவுமே கிடையாதே. இந்த நிலை சொல்லுக்கு அப்பாற்பட்டது. சொல்லால் வெறும் குறிப்பு மட்டும் காட்டப்பட்டது. உலகநோக்கில் அந்த ஞானிக்கு மனம், புத்தி, உடல் ஆகியவை இருக்கலாம். அவன் ஸத் சித் ஆனந்த மயமான ப்ரம்மத்தில் எல்லாவற்றையும் பார்க்கிறான் என்று சொல்லலாம். ஏனெனில் நீரில் பனிக்கட்டியும், விண்ணில் மேகமும், பொன்னில் அணிகலன்களும் உண்மையில் நீராகவே, வெளியாகவே, பொன்னாகவே இருப்பதுபோல ஞானியின் நோக்கில் உலகம் அனைத்தும் ப்ரம்மமே. சராசரங்களனைத்தும் ப்ரம்மத்தைத் தவிர வேறாக இரா. யோகி 'ப்ரம்மபூதன்' ஆகிறான் (6/27). யோகி 'யோக₃யுக்தாத்மா' ஆகிறான் (6/29). எங்கும் ஸமதர்சனம் பெற்றவன், எல்லா உயிரினங்களையும் ஆத்மாவில் இருப்பதாகப் பார்க்கிறான்; எல்லா உயிரினங்களிலும் ஆத்மாவைக் காண்கிறான். இங்கே 'த்₃ரக்ஷ்யஸி ஆத்மநி' என்று கூறப்படுவது முதல்நிலை. அந்த முதல்நிலையின் பயனாக ஏற்டுவதுதான் 6/28ல் கூறப்படும் ப்ரம்மஸம்ஸ்பர்சம் என்ற உயர்ந்த ஆன்மிக ஸுகம். அதைத்தான் 'அதோ மயி' என்று இங்கே கூறுகிறார். எல்லாவற்றையும் தன்னில் பார்ப்பது முதல் நிலை. பரமாத்மாவிடம் பார்ப்பது இரண்டாவது நிலை; 6/27, 6/29ல் கூறப்படுவது முதல் நிலை. 6/28ல் கூறப்படுவது இரண்டாவது நிலை; 18வது அத்யாயத்திலும் ஞானயோகத்தை வர்ணிக்குங்கால் 54ல் யோகி ப்ரம்மபூதன் ஆகிறான் என்று முதல்நிலையையும், 55ல் பராபக்தியின்மூலம் பரமாத்மாவில் புகுந்து கலந்து விடுகிறான் என்று இந்த இரண்டாவது நிலையையும் கூறுகிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் பெரியோரிடம் தத்வஞானம் பெறவேண்டியதையும், அதன் பயனையும் கூறி, அதன் பெருமையை மேலே கூறுகிறார்—

**अपि चेदसि पापेभ्यः सर्वेभ्यः पापकृत्तमः ।**
**सर्वं ज्ञानप्लवेनैव वृजिनं सन्तरिष्यसि ॥ ३६ ॥**

**அபி சேத₃ஸி பாபேப்₄ய: ஸர்வேப்₄ய: பாபக்ருத்தம: ।**
**ஸர்வம் ஜ்ஞாநப்லவேநைவ வ்ருஜிநம் ஸந்தரிஷ்யஸி ॥ 36 ॥**

**ஸர்வேப்₄ய:** – மற்ற எல்லா, **பாபேப்₄ய: அபி** – பாவம் செய்தவர்களைக் காட்டி லும், **பாபக்ருத்தம:** – அதிகமான பாவத்தைச் செய்தவனாக, **அஸி சேத்** – ஒருகால் நீ இருந்தாலும் கூட, **ஜ்ஞாநப்லவேந** – ஞானம் என்னும் படகினால், **ஏவ** – ஸந்தேஹமின்றி, **ஸர்வம் வ்ருஜிநம்** – பாவக்கடல் முழுவதையும், **ஸந்தரிஷ்யஸி** – நன்கு கடந்துவிடுவாய்.

மற்ற எல்லா பாவம் செய்தவர்களைக் காட்டிலும் அதிகமான பாவத்தைச் செய்தவனாக நீ ஒருகால் இருந்தாலும்கூட ஞானம் என்னும் படகினால் ஸந்தேஹமின்றி பாவக்கடல் முழுவதையும் நன்கு கடந்துவிடுவாய்.

**கேள்வி:** இந்த ச்லோகத்தில் 'சேத், அபி' என்ற சொற்களைக் கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பதில்: பகவான் கூறுகிறார்: "உண்மையில் நீ பாவி அல்ல. தெய்வ ஸம்பத்திற்குரிய லக்ஷணம் பெற்றவன் (16/5). மேலும் நீ என் ப்ரிய பக்தன்; நண்பன் (4/3). உன்னிடம் பாவம் எப்படி இருக்க முடியும்? ஆகவே ஒரு பேச்சுக்காக அதாவது பாவிகளனைவரிலும் நீ அதிகப் பாவம் செய்தவன் என்று வைத்துக் கொண்டாலும், இந்த ஞானம் என்ற படகில் ஏறி, கடல் போன்ற ஆழ்ந்த பாவங்களை முயற்சியின்றிக் கடந்து விடுவாய். எவ்வளவு பெரிய பாவமாயினும் உன்னை அது தீண்டாது" என்று ஞானத்தின் ப்ரபாவத்தையும், பெருமையையும் கூறுகிறார்.

கேள்வி: உள்ளத்தூய்மையற்ற, இந்த ஞானம் பெறவே தகுதியுள்ளவன் என்று கூடக் கருத முடியாத, மிகப் பெரிய பாவி ஒருவன் இந்த ஞானப் படகில் ஏறிப் பாவங்களை எப்படிக் கடக்க முடியும்?

பதில்: 'பாவி ஆயினும்' என்பது ஒரு பேச்சுக்குத்தான். பாவிக்கு ஞானம் பெறத் தகுதி கிடையாது; அவனுக்கு 'ஞானப்படகு' கிடைத்தற்கரியதுதான் என்பது உண்மையாயினும், பகவானுடைய க்ருபையினாலோ, பெரியோர்களுடைய க்ருபையினாலோ, அவனுக்கு ஞானம் கிடைத்துவிட்டால், அவன் பாவியாயினும் அக்கணமே பாவத்திலிருந்து விடுதலை அடைவான் என்பது பொருள்.

கேள்வி: 'பாவங்களைக் கடப்பது' என்ற பேச்சு இங்கே எப்படி வந்தது? ஏனெனில் பற்றுடன் புண்யகர்மம் செய்வதுகூட பந்தத்திற்குக் காரணமாகிவிடுகிறதே!

பதில்: புண்யகர்மம் கூடப் பயனில் பற்றுடன் செய்யப்பட்டால் பந்தத்திற்குக் காரணம் ஆகும்; கர்மபந்தம் அனைத்தும் விலகினால்தான் பாவங்களிலிருந்து விடுதலை அடைய முடியும் என்பது சரிதான். ஆனால் புண்யகர்மங்களைச் செய்யாமல் விடுவதற்கு மனிதனுக்குச் சுதந்திரம் உண்டு. அவற்றின் பயனையும் அவன் நினைத்தால் துறந்துவிடலாம். ஆனால் ஞானம் பெறாமல் பாவங்களைக் கடப்பது என்பது அவன் கையில் இல்லை. ஆகவே பாவங்களைக் கடக்கிறான் என்று சொல்லும்போது, 'புண்யகர்மங்களின் பந்தத்திலிருந்தும் விடுபடுகிறான்' என்பதும் அதற்குள் அடங்கிவிடுகிறது.

கேள்வி: ஞானப்படகு ஏறிப் பாவக்கடலை முழுமையாகக் கடப்பது எப்படி?

பதில்: படகில் அமர்ந்தவன், ஆழமான கடலில் போய்க் கொண்டே அக்கரை சேர்ந்து விடுகிறான். அது போன்று ஞானத்தில் நிலை பெற்றவன் தான் உலகியலில் ஒட்டாதவன், விகாரமடையாதவன், நித்யன், முடிவற்றவன் என்று உணர்ந்துவிட்டால், அந்த ஞானத்தினால் பல முற்பிறவிகளில் செய்த பாவக்குவியலைத் தாண்டி, எல்லாவிதமான கர்மபந்தங்களிலிருந்தும் விடுதலை பெறுகிறான். இதுதான் ஞானப்படகில் ஏறிப் பாவக் கடலை நன்கு கடக்கிறான் என்பதன் பொருளாகும்.

கேள்வி: இந்த ச்லோகத்தில் 'ஏவ' என்று அழுத்தமாகச் சொல்வதன் கருத்து என்ன?

பதில்: 'ஏவ' என்றால் நிச்சயமாக – ஐயமின்றி என்று பொருள். பொதுவாக மரப்படகில் பயணம் செய்பவன், படகு உடைந்தோ, ஓட்டை ஏற்பட்டோ, புயற்காற்றால் பாறையில் மோதுண்டோ படகுடன் மூழ்கி விடலாம். ஆனால் ஞானப்படகில் ஏறியவன் பாவங்களைக் கடப்பதில் சிறிதும் ஐயமில்லை; அவனுக்கு வீழ்ச்சியே கிடையாது என்பது பொருள்.

பொருத்தம்: எவ்விதமான எடுத்துக்காட்டும் பரமாத்மாவின் விஷயத்தில் முழுமையாகப் பொருந்துவதில்லை. ஓரளவு தெளிவுபடுத்துவதற்குத்தான் பயன்படுகிறது. ஆகவே முன் ச்லோகத்தில் சொன்ன ஞானத்தின் பெருமையை நெருப்பின் உதாரணம் கூறி, மேலும் விளக்குகிறார்—

**यथैधांसि समिद्धोऽग्निर्भस्मसात्कुरुतेऽर्जुन।**
**ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा॥ ३७॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy.

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**யதை₂த₄ாம்ஸி ஸமித்₃தே₄ாऽக்₃நிர்ப₄ஸ்மஸாத்குருதேऽர்ஜுந ।**
**ஜ்ஞாநாக்₃நி: ஸர்வகர்மாணி ப₄ஸ்மஸாத்குருதே தத₂ா ॥ 37 ॥**

**அர்ஜுந** – அர்ஜுன! **யத₂ா** – எப்படி, **ஸமித்₃த₄:** – கொழுந்து விட்டெரியும், **அக்₃நி:** – நெருப்பு, **ஏத₄ாம்ஸி** – விறகுகளை, **ப₄ஸ்மஸாத்** – சாம்பலாக, **குருதே** – செய்கிறதோ, **தத₂ா** – அதே போன்று, **ஜ்ஞாநாக்₃நி:** – ஞானம் என்னும் நெருப்பு, **ஸர்வகர்மாணி** – எல்லாக் கர்மங்களையும், **ப₄ஸ்மஸாத்** – சாம்பலாக, **குருதே** – செய்கிறது.

அர்ஜுன! எப்படி கொழுந்து விட்டெரியும் நெருப்பு விறகுகளைச் சாம்பலாகச் செய்கிறதோ, அதே போன்று ஞானம் என்னும் நெருப்பு எல்லாக் கர்மங்களையும் சாம்பலாகச் செய்கிறது.

**கேள்வி:** இந்த ச்லோகத்தில் நெருப்பை உதாரணம் காட்டி ஞானம் என்ற நெருப்பு எல்லாக் கர்மங்களையும் பொசுக்கிவிடும் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கொழுந்துவிட்டு எரியும் நெருப்பு விறகுகளனைத்தையும் பொசுக்கிவிடுவதுபோல தத்வஞானம் என்ற நெருப்பு நல்லதும், தீயதுமான அனைத்துக் கர்மங்களையும், அதாவது அவற்றின் பயனான ஸுக–துக்கங்களையும், அவற்றிற்குக் காரணமான அவித்யை, அஹங்காரம், மமகாரம், விருப்பு–வெறுப்பு முதலிய எல்லா விகாரங்களோடும் சேர்த்து முற்றிலும் அழித்துவிடும். முண்டகோபநிஷத் 2/2/8ல் கூறுகிறது:

**பி₄த்₃யதே ஹ்ருத₃யக்₃ரந்தி₂ஸ்சி₂த்₃யந்தே ஸர்வஸம்ஶயா: ।**
**க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந்த்₃ருஷ்டே பராவரே ॥**

**இதன் பொருள்:** கார்ய காரண ரூபமான அந்தப் பரமாத்மாவைப் பார்த்தவனுக்கு, ஜட–சேதனங்களின் ஒருமித்த வடிவான இதய முடிச்சு அவிழ்ந்து, உடல் முதலியவற்றில் அஞ்ஞானத்தினால் ஏற்படும் ஆத்மா என்ற அபிமானம் முதலிய எல்லா ஐயங்களும், தவறான முடிவுகளும் தீர்ந்துவிடும், கர்மங்களும், அனைத்துப் பயன்களோடு அழிந்துவிடும். பிறகு பரமாத்மா பற்றிய உண்மையான அறிவில் எவ்வித ஸந்தேஹமும், குழப்பமும் இரா. 4/19ல் சொன்ன 'ஜ்ஞாநாக்நிதக்தகர்மாணம்' என்பதற்கும் இதுதான் பொருள்.

இப்பிறவியிலும், முற்பிறவிகளிலும் செய்யப்பட்ட கர்மங்கள் மனப்பதிவுகளாக – ஸம்ஸ்காரங்களாக உள்ளத்தில் ஒன்று சேர்ந்திருக்கின்றன. அவற்றிற்கு 'ஸஞ்சிதம்' என்று பெயர். அவற்றில் இப்பிறவியில் பயனளிக்க ஆரம்பத்திருக்கும் கர்மங்களுக்கு 'ப்ராரப்தம்' என்று பெயர். இப்பொழுது செய்யப்படும் கர்மங்களுக்கு 'க்ரியமாணம்' அல்லது 'ஆகாமி' என்று பெயர். தத்வஞானம் என்ற நெருப்பு பற்றினால், முன்வினை மனப்பதிவுகள் எல்லாம் பொசுங்கிவிடும். ஆனால் மனம், புத்தி, உடலுடன் ஆத்மாவுக்குத் தொடர்பில்லை என்ற ஞானம் ஒருவனுக்குத் தோன்றிய பின்னர், மனம், புத்தி, உடல் இவற்றுடன் ப்ராரப்த கர்மத்தின் பயனான ஸுக–துக்கங்களின் தொடர்பு ஏற்பட்டாலும், அவனது மனதில் மகிழ்ச்சி, துயரம் என்ற விகாரங்களை ஏற்படுத்தா. ஆகவே இவ்விதம் ப்ராரப்தமும் அழிந்து விடுகிறது. இப்பொழுது செய்யப்படும் கர்மங்களில் 'நான் கர்த்தா' என்ற அபிமானமும், மமகாரமும், பற்றும், வாஸனையும் அழிந்து போய்விட்டதால், அவை மனப்பதிவுகளை ஏற்படுத்தா. எனவே அவை கர்மங்களே அல்ல.

இவ்விதம் அவனுடைய கர்மங்களனைத்தும் நாசமடைகின்றன. கர்மங்கள் அழிந்துவிட்டால் அவற்றின் பயன் எப்படி இருக்கக் கூடும்? மனப்பதிவுகளே ஏற்படாதபோது விருப்பு–வெறுப்புகள், மகிழ்ச்சி–துயரங்கள் என்ற விகாரங்கள் எப்படி ஏற்படும்? ஆகவே எல்லா விகாரங்களும், கர்ம பயன்களும் கர்மங்களுடன் சேர்ந்து அழிந்துவிடும்.

**பொருத்தம்:** இவ்விதம் ச்லோகம் 34 முதல் இதுவரை தத்வஞானியரான பெரியோர்களுக்குப் பணிவிடை முதலியன செய்து தத்வஞானம் பெற வேண்டும் என்று கூறி, அதன் பயன், பெருமையையெல்லாம் பகவான் விவரித்தார். ஞானிகளான

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பெரியோர்களிடமிருந்து கேட்டறிதல் (ச்ரவணம்), முறைப்படி சிந்தித்தல் (மனனம்), நிதித்யாஸனம் முதலிய ஞானயோகப்பயிற்சிகளினால்தான் இந்தத் தத்வஞானத்தைப் பெற முடியுமா அல்லது இதை அடைய வேறு மார்க்கம் உண்டா என்ற கேள்வி எழுகிறது. அடுத்த ச்லோகத்தில், மேலும் தத்வஞானத்தின் பெருமை பகர்ந்து கர்மயோகத்தின் மூலமாகவும் அந்த ஞானம் தானாகவே பிறக்கும் என்று கூறுகிறார்—

न हि ज्ञानेन सदृशं पवित्रमिह विद्यते।
तत्स्वयं योगसंसिद्धः कालेनात्मनि विन्दति ॥ ३८ ॥

ந ஹி ஜ்ஞாநேந ஸத்₃ருஶம் பவித்ரமிஹ வித்₃யதே ।
தத்ஸ்வயம் யோக₃ஸம்ஸித்₃த₄: காலேநாத்மநி விந்த₃தி ॥ 38 ॥

**இஹ** – இவ்வுலகில், **ஜ்ஞாநேந** – ஞானத்திற்கு, **ஸத்₃ருஶம்** – நிகராக, **பவித்ரம்** – பரிசுத்தம் செய்யக்கூடியது, **ஹி** – ஸந்தேஹமின்றி, **ந வித்₃யதே** – (எதுவும்) இல்லை. **தத்** – அந்த ஞானத்தை, **காலேந** – நெடுங்காலமாக, **யோக₃ஸம்ஸித்₃த₄:** – (கடைப்பிடித்த) கர்மயோகத்தின் மூலம் உள்ளத்தூய்மையடைந்த மனிதன், **ஸ்வயம்** – தனக்குத் தானே, **ஆத்மநி** – ஆத்மாவினிடம், **விந்த₃தி** – எய்தப் பெறுகிறான்.

இவ்வுலகில் ஞானத்திற்கு நிகராகப் பரிசுத்தம் செய்யக்கூடியது ஸந்தேஹமின்றி எதுவும் இல்லை. அந்த ஞானத்தை நெடுங்காலமாகக் கடைப்பிடித்த கர்மயோகத்தின் மூலம் உள்ளத்தூய்மையடைந்த மனிதன் தனக்குத் தானே ஆத்மாவினிடம் எய்தப் பெறுகிறான்.

**கேள்வி:** 'இவ்வுலகில் ஞானம் போலப் பரிசுத்தப்படுத்துவது எதுவும் இல்லவே இல்லை' என்று ஐயமறக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** யாகம், தானம், தவம், பெரியோர்களுக்குப் பணிவிடை, பகவானுக்குப் பூஜை, வ்ரதம், உபவாஸம், ப்ராணாயாமம், மனவடக்கம், புலனடக்கம், ஸம்யமம், ஜபம், த்யானம் போன்ற மனிதனைப் பரிசுத்தனாக்கும் ஸாதனங்கள் பல உலகில் உள்ளன. கங்கை, யமுனை, த்ரிவேணி, காவேரி போன்ற புண்ய தீர்த்தங்களும் மனிதனுடைய பாவங்களைப் போக்கித் தூய்மை செய்கின்றன. ஆனால் இவற்றில் ஒன்றுகூட ஞானத்திற்கு ஈடாகாது. ஏனெனில் இவையெல்லாமே தத்வஞானத்திற்கு ஸாதனங்கள்தான். தத்வஞானமே அவற்றின் பயன். இவையெல்லாம் தத்வஞானமுண்டாக உதவி செய்பவை என்ற கருத்தில்தான் பவித்ரமானவை என்று கருதுகிறோம். ஆகவே மனிதன் பரமாத்மாவின் உண்மை ஸ்வரூபத்தை உணர்வதன் மூலம், அவனிடமுள்ள பொய், கபடம், சூது, திருட்டு, சுற்பழிப்பு முதலிய பாவச் செயல்களும், விருப்பு–வெறுப்பு, மகிழ்ச்சி–துயரம், அஹங்காரம்–மமகாரங்கள் ஆகிய மன விகாரங்களும், அஞ்ஞானமும் அறவே அழிந்து, அவன் பரிசுத்தனாகிவிடுகிறான். அவனுடைய மனம், புலன்கள், உடல் இவையும் மிகவும் புனிதமாகின்றன. இக்காரணத்தினால் இத்தகைய மஹாபுருஷனை ச்ரத்தையுடன் பார்ப்பதாலும், தொடுவதாலும், வணங்குவதாலும், நினைப்பதாலும், அவனுடன் உரையாடுவதாலும் மற்றவர்களும் புனிதமடைகின்றனர். ஆகவே உலகில் பரமாத்ம தத்வஞானத்திற்கு ஈடான பவித்ரமான பொருள் வேறொன்றும் இல்லவே இல்லை என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'இஹ' (இவ்வுலகில்) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'இஹ' (இவ்வுலகில்) என்ற சொல்லினால் விளக்கப்படும் கருத்தாவது – ப்ரக்ருதியின் விளைவான இவ்வுலகில், ஞானத்திற்கு நிகரான பொருள் வேறொன்றுமில்லை; ஞானத்தைப்போல் புனிதப்படுத்தும் திறன் வேறொன்றுக்கும் கிடையாது. ஆனால் ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்ட, எங்கும் நிறைந்த, ஸர்வ வல்லமை படைத்த, எல்லா உலகையும் கட்டி ஆள்கின்ற, குணங்களின் கடலான, ஸகுண–நிர்குணமான, ஸாகார–நிராகாரமான, பரமேசுவரனான, அனைவரிடமும் தோழமை கொண்ட, அனைத்துக்கும் ஆதாரமான, பரம

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பவித்ரமான, அந்தப் பரமாத்மாவை அடையச் செய்வதால்தான் ஞானத்தைப் 'பவித்ரமானது' என்று கூறுகிறோம். ஆனால் இந்த ஞானம், பரமாத்மாவைக் காட்டிலும் பவித்ரமானதன்று. ஏனெனில் பரமாத்மாவிற்கு நிகராக ஒன்றுமில்லை என்னும்போது, அவரிலும் மிக்கது எப்படி இருக்க முடியும்? அர்ஜுனனும் சொல்கிறார்: **'பரம் ப்₃ரஹ்ம பரம் த₄ாம பவித்ரம் பரமம் ப₄வாந்'** *(10/12)*. நீங்கள்தான் பரப்ரம்மம்; அடையக்கூடிய உயர்ந்த நிலை; மிகவும் பவித்ரமானவர். பீஷ்மரும் சொல்கிறார்: **'பவித்ராணாம் பவித்ரம் யோ மங்க₃ளாநாம் ச மங்க₃ளம்'** அதாவது பரிசுத்தம் செய்பவர்களைக் காட்டிலும் பரிசுத்தமானவர்; மங்களமான எல்லோரைக் காட்டிலும் மங்களமானவர் *(மஹா. அநு. 149/10)*.

**கேள்வி:** *'யோகஸம்ஸித்த:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? 'அவன் தனக்குத் தானாகவே அந்த ஞானத்தைப் பெறுவான்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** பல காலம் கர்மயோகத்தைக் கடைப்பிடித்து விருப்பு–வெறுப்புகள் விலகியதால் மனத்தூய்மை பெற்றுவிட்டவனும், கர்மயோகத்தில் ஸித்தி பெற்றவனும், செயல் அனைத்தையும் மமகாரம், பற்று, பயனில் கருத்து இவையின்றி பகவானின் ஆணைப்படி பகவானுக்காகவே செய்பவனும் 'யோகஸம்ஸித்தன்' ஆவான். அந்த யோகஸம்ஸித்தனைத் தானாகவே ஞானம் வந்து அடையும். அதாவது அவன் தன்னுடைய ஸாதனையில் முழுமையாக எல்லை வரை சென்றவன், அதே கணம் பகவானுடைய அருளினால் அவன் உள்ளத்தில் தானாகவே ஞானம் ஒளி வீசுவதைப் பார்ப்பவன். ஞானத்தைப் பெறுவதற்காக அவன் வேறு எந்த முயற்சியையும் மேற்கொள்ள அவசியம் இல்லை. ஞானத்தை அடைவதற்காக ஞானிகளை அண்டியிருக்க வேண்டியதுமில்லை. வேறு எவ்விதமான ஸாதனையோ, உதவியோ இன்றி, கர்மயோக ஸாதனையினாலேயே அவனுக்கு, பகவானுடைய க்ருபையினால் ஞானம் தானாகவே மலரும்.

**பொருத்தம்: இவ்விதம் தத்வஞானத்தின் பெருமையையும் அதை அடையும் உபாயமாக ஞானயோகம், கர்மயோகம் இரண்டையும் கூறி, அப்படி ஞானம் பெறுபவனின் தகுதிகளைக் கூறி ஞானத்தின் பயன் பரமசாந்திதான் என்று விளக்குகிறார்—**

**श्रद्धावाँल्लभते ज्ञानं तत्परः संयतेन्द्रियः ।**
**ज्ञानं लब्ध्वा परां शान्तिमचिरेणाधिगच्छति ॥ ३९ ॥**

**ஸ்₂ரத்₃தா₄வாந்லப₄தே ஜ்ஞாநம் தத்பர: ஸம்யதேந்த்₃ரிய: ।**

**ஜ்ஞாநம் லப்₃த்₄வா பராம் ஸா₂ந்திமசிரேணாதி₄க₃ச்ச₂தி ॥ 39 ॥**

**ஸம்யதேந்த்₃ரிய:** – புலன்களை அடக்கி வெற்றி கொண்ட, **தத்பர:** – ஸாதனையிலேயே ஒன்றிய, **ஸ்₂ரத்₃தா₄வாந்** – ச்ரத்தை உடைய மனிதன், **ஜ்ஞாநம் லப₄தே** – ஞானத்தைப் பெறுகிறான். **ஜ்ஞாநம்** – ஞானத்தை, **லப்₃த்₄வா** – பெற்று (அவன்), **அசிரேண** – தாமதமின்றி அதே கணத்தில் (பகவானை அடைவது என்ற), **பராம் ஸா₂ந்திம்** – பரமசாந்தியை, **அதி₄க₃ச்ச₂தி** – பெறுகிறான்.

புலன்களை அடக்கி வெற்றி கொண்டு ஸாதனையிலேயே ஒன்றிய ச்ரத்தை உடைய மனிதன் ஞானத்தைப் பெறுகிறான். ஞானத்தைப் பெற்று அவன் தாமதமின்றி அதே கணத்தில் பகவானை அடைவது என்ற பரமசாந்தியைப் பெறுகிறான்.

**கேள்வி:** *'ஸ்₂ரத்தாவாந்' என்று யாரைக் குறிப்பிடுகிறார்? அவன் 'ஞானத்தைப் பெறுகிறான்' என்றால் என்ன பொருள்?*

**பதில்:** வேதம், சாஸ்த்ரம், பகவான், பெரியோர்கள் இவர்களின் சொற்களிலும், பரலோகத்திலும், நேரில் பார்ப்பது போன்ற நம்பிக்கையும், மேலும் அவர்கள் போற்றத்தக்க உத்தமர்கள் என்ற பாவனையும்தான் ச்ரத்தை எனப்படும். இந்த ச்ரத்தை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உடையவன் ச்ரத்தாவான். இப்படி ச்ரத்தையுள்ளவன்தான் மஹாத்மாக்களை அணுகி, வணங்கி, ஸேவை புரிந்து, பணிவுடன் கேள்வி கேட்டு, அவர்களிடம் உபதேசம் பெற்று, ஞானயோக ஸாதனையாலோ, கர்மயோக ஸாதனையாலோ தத்வஞானம் பெறமுடியும். ச்ரத்தையில்லாதவனுக்கு அந்த ஞானம் கிட்டாது.

**கேள்வி:** ச்ரத்தையில்லாமல் கூட மனிதர் பெரியோர்களை அண்டி, வணங்கி, ஸேவை செய்து கேள்வி கேட்கலாமே! ஞானம் பெறுவதற்கு ச்ரத்தை முக்யம் என்று கூறுவதற்கு என்ன கருத்து?

**பதில்:** ச்ரத்தையின்றிப் பெரியோர்களைப் பரீக்ஷித்துப் பார்க்கலாம் என்ற நோக்கத்துடனோ, தான் கற்றிருப்பதைப் பறைசாற்றுவதற்காகவோ, பெருமை, புகழுக்காகவோ, பகட்டுக்காகவோ, பெரியோர்களை அண்டி வணங்கி ஸேவை செய்து கேள்வி கேட்கலாம். ஆனால் அவர்களுக்கு இதனால் ஞானம் கிட்டாது. ச்ரத்தையின்றிச் செய்யப்படும் யாகம், தானம், தவம் முதலிய எல்லா ஸாதனங்களும் வீண்தான் (17/28) எனக் கூறப்பட்டுள்ளது. ஆகவே ஞானம் பெறுவதற்கு முக்ய ஸாதனமான ச்ரத்தை எவ்வளவுக்கெவ்வளவு அதிகம் உள்ளதோ அவ்வளவுக்கவ்வளவு விரைவாக, அந்த ஸாதனை ஞானத்தை உதிக்கச் செய்யும்.

**கேள்வி:** ஞானத்தைப் பெறுவதற்கு ச்ரத்தை முக்யமானால் அதையும் கூறிவிட்டு, மேலே 'தத்பர:' (அதிலேயே ஒன்றியவன்) என்றும் அடைமொழி கொடுப்பானேன்?

**பதில்:** ஸாதனையில் குறியாக இருப்பது கூட ச்ரத்தையினால்தான். ச்ரத்தைக்கு உரைகல் ஸாதனையில் ஒருமைப்பாடு. ச்ரத்தை குறைந்திருந்தால் ஸாதனையில் குறைபாடும், சோம்பேறித்தனமும் கூடிவிடும். ஆகவே ஸாதனையில் பயிற்சி ஒருமைப்பாட்டுடன் அமையாது. ச்ரத்தையின் உண்மையறியாதவர், மேலெழுந்தவாரியாகத் தாம் காட்டும் ஈடுபாட்டைக் கூட ச்ரத்தை என்று பெரிதாக நினைத்து விடுவர். ஆனால், அதனால் கார்யம் நிறைவேறாது. அப்பொழுது அவர்கள் தமது ஸாதனையில் ஒருமைப்பாடு அற்ற குறையைக் கவனியாது, ச்ரத்தையிருந்தும் கூட, பகவானை அடைய முடியவில்லை என்று நினைப்பார்கள். இப்படி நினைப்பது தவறு. ஸாதனையில் எவ்வளவு ச்ரத்தை உள்ளதோ, அவ்வளவுதான் அதில் ஒன்றிய தன்மையும் இருக்கும். ஒருவன் பணத்திற்கு ஆசைப்படுகிறான். ஏதோ ஒரு வியாபாரம் செய்கிறான். இந்த வியாபாரத்தினால் தனக்குச் செல்வம் கிடைக்கும் என்ற நம்பிக்கையினால் அவன் அதிலேயே குறியாக ஈடுபடுகிறான். உண்பது, அருந்துவது, தூங்குவது, ஓய்வு கொள்வது, இவற்றைக் கூடப் புறக்கணிக்கிறான். உடல் ச்ரமத்தைப் பாராட்டுவதில்லை. இந்தக் கஷ்டங்களைக் கஷ்டங்களாகவே நினைப்பதில்லை. மேன்மேலும் செல்வம் பெருகுவதால் மனதில் த்ருப்தி அடைகிறான். அதுபோல மற்ற எல்லா விஷயங்களிலும் நம்பிக்கை இருந்தால்தான் அதில் ஒருமைப்பாடு ஏற்படுகிறது. ஒப்பற்ற சாந்தியையும், ஆனந்தத்தையும் அளிக்கின்ற நித்யமான, விஞ்ஞான, ஆனந்தச்செறிவான, ஒளிமயமான பரமாத்மாவை அடைவதற்கு நேரிடை உபாயமான பரமாத்ம தத்வஞானத்திலும் அதன் ஸாதனத்திலும், ச்ரத்தையும், நம்பிக்கையும் உண்டான பிறகுதான், அதில் ஒருமைப்பாடு ஏற்படுவது இயல்பாக அமையும். ஸாதனை புரிவதில் ஒருமைப்பாடு குறைவாக இருந்தால், ச்ரத்தையும், நம்பிக்கையும் குறைவு என்று அறியவேண்டும். இதைத் தெளிய வைப்பதற்காகத்தான் 'ஶ்ரத்தாவாந்' என்பதற்கு அடைமொழியாக 'தத்பர:' என்ற சொல் சேர்க்கப்பட்டிருக்கிறது.

**கேள்வி:** ச்ரத்தையும், ஒருமைப்பாடும் இருந்தால் ஞானம் ஏற்படத் தடை ஒன்றுமில்லையானால், 'ஶ்ரத்தாவாந்' என்பதற்கு 'ஸம்யதேந்த்ரிய:' என்று மற்றோர் அடைமொழி கொடுப்பானேன்?

**பதில்:** ச்ரத்தையுடன் முழுமையாக ஈடுபட்டுவிட்டால் பாவங்கள் அழிந்து, உலகியல் போகங்களில் வைராக்யம் ஏற்பட்டு, மனமுடன் கூடிய புலன்கள் தாமாக அடங்கிவிடும்; பரமாத்மாவின் உண்மை அறிவும் ஏற்பட்டுவிடும் என்பதில் ஸந்தேஹமே இல்லை. ஆனால் இந்த ரஹஸ்யத்தை உணராத ஸாதகன் கொஞ்சம் முயற்சி செய்தவுடன், ஏதோ முழுமையாக

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஈடுபட்டுவிட்டாற்போல நினைத்துக் கொண்டு, அதிலே வெற்றி கிடைக்கவில்லையே என்று நிராசை அடைந்து, முயற்சியைக் கைவிட்டு விடுகிறான். இப்படி நழுவாமல் ஸாதகன் கவனமாக இருக்க வேண்டுமென்பதற்காகத்தான் 'ஸம்யதேந்த்ரிய:' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டிருக்கிறது. அதாவது புலன்களும், மனமும் கட்டுப்படும்வரை ச்ரத்தையுடன், முழுமூச்சுடன், மேலும் மேலும் தீவிரமான முயற்சியில் ஈடுபட்டுக் கொண்டே இருக்கவேண்டும். ஏனெனில் ச்ரத்தையுடன் கூடிய முழு முயற்சிக்கு உரைகல் புலன்களின் கட்டுப்பாடே. எவ்வளவுக்கெவ்வளவு ச்ரத்தையும், முயற்சியும் தீவிரமாகின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு மனமும், புலன்களும் கட்டுப்படுகின்றன. மனமும், புலன்களும் கட்டுப்படுவது எந்த அளவு குறைகின்றதோ, அந்த அளவு ஸாதனையில் ஈடுபாடு குறையும். ஸாதனையில் ஈடுபாடு குறைந்தால், அது ச்ரத்தையின் குறைவுதான் என்று தெரிந்து கொள்ளவேண்டும். இதற்காகத்தான் 'ஸம்யதேந்த்ரிய:' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டிருக்கிறது.

**கேள்வி:** 'ஞானம் பெற்றவுடன் தாமதமின்றி அதே கணத்தில் பகவானை அடைவது என்ற பரமசாந்தியைப் பெறுவான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஆதவன் உதித்த அக்கணமே இருள் விலகி எல்லாப் பொருட்களும் கண்களுக்கு விளங்குவதுபோல, பரமாத்ம தத்வஞானம் ஏற்படுகின்ற அதே கணத்தில், அஞ்ஞானம் விலகிப் பரமாத்மாவை அடைந்துவிடுகிறான் (5/16). அஞ்ஞானமும், அதன் விளைவான கர்மவாஸனை, விருப்பு-வெறுப்பு, மகிழ்ச்சி-துயரம் முதலிய விகாரங்களும், நல்லதும், தீயதுமான கர்மவினைகளும் அறவே ஒழிவது, தத்வஞானம் கிட்டுவது, பரமாத்ம ஐக்யம் இம்மூன்றும் ஒரே நேரத்தில் ஏற்படுகின்றன. விஞ்ஞான, ஆனந்த, ஒளிமயமான பரமாத்மாவை அடைவதுதான் 'பரமசாந்தி' என்ற பெயரால் அழைக்கப்படுகிறது.

**பொருத்தம்:** இவ்விதம் ச்ரத்தையுடையவனுக்கு ஞானம் பெறுவதும் அந்த ஞானத்திலிருந்து, பரமசாந்தியை அடைவதும் பயன் என்று கூறி, ச்ரத்தையும், விவேகமும் இல்லாது ஸந்தேஹப்படுபவனை இகழ்கிறார்—

**अज्ञश्चाश्रद्दधानश्च संशयात्मा विनश्यति।**
**नायं लोकोऽस्ति न परो न सुखं संशयात्मनः॥४०॥**

**அஜ்ஞஶ்சாஶ்ரத்₃த₃தா₄நஶ்ச ஸம்ஶயாத்மா விநஶ்யதி ।**

**நாயம் லோகோऽஸ்தி ந பரோ ந ஸுக₂ம் ஸம்ஶயாத்மந: ॥ 40 ॥**

**அஜ்ஞ: ச** — விவேகமற்றவனும், **அஶ்ரத்₃த₃தா₄ந: ச** — ச்ரத்தை இல்லாதவனுமான, **ஸம்ஶயாத்மா** — ஸந்தேஹமுடையவன், **விநஶ்யதி** — பகவத் விஷயத்தில் தத்வஞானம் பெறாமல் வீணாக அழிவான். **ஸம்ஶயாத்மந:** — (இந்த) ஸந்தேஹமுடையவனுக்கு, **அயம் லோக:** — இவ்வுலகம், **ந அஸ்தி** — இல்லை, **பர: ந** — பரலோகமும் இல்லை, **ஸுக₂ம் ச ந** — ஸுகமும் கிடையாது.

விவேகமற்றவனும் ச்ரத்தை இல்லாதவனுமான ஸந்தேஹமுடையவன் பகவத் விஷயத்தில் தத்வஞானம் பெறாமல் வீணாக அழிவான். இந்த ஸந்தேஹமுடையவனுக்கு இவ்வுலகம் இல்லை. பரலோகமும் இல்லை. ஸுகமும் கிடையாது.

**கேள்வி:** 'அஜ்ஞ:', 'அஶ்ரத்ததாந:' என்ற இரண்டு அடைமொழிகளின் பொருள் என்ன? 'ஸம்ஶயாத்மா' என்றால் யார்? அவன் வீணாக அழிவான் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உண்மை எது? பொய் எது? ஆத்மா எது? அநாத்மா எது என்று பகுத்தறியும் சக்தி இல்லாமையால், எதைச் செய்யலாம், எதைச் செய்யக் கூடாது என்ற முடிவுக்கு வர இயலாத விவேகமற்றவனை 'அஜ்ஞ:' என்ற சொல் குறிப்பிடுகிறது. ஈசுவரன், பரலோகம்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அவற்றை அடையும் உபாயம், அவற்றைக் கூறும் சாஸ்த்ரங்கள், பெரியோர்கள், அவர்கள் கூறும் ஸாதனங்கள், அவற்றினால் ஏற்படும் பயன் இவற்றில் நம்பிக்கையற்றவனே 'அம்ரத்ததாந:'. ஈசுவரன், பரலோகம் ஆகிய எந்த விஷயத்திலும் ஒரு நிச்சய புத்தியில்லாமல் எதிலும் ஸந்தேஹப்படுபவன் 'ஸம்ஶயாத்மா'. விவேகமும், நம்பிக்கையும் இல்லாத இத்தகைய ஸந்தேஹ ப்ராணியைப் பற்றித் தொகுத்துக் கூறுகிறார். அவன் பகவத் விஷயத்தில் தத்வஞானம் பெறாமல் அழிவான். வேதங்களிலும், சாஸ்த்ரங்களிலும், பெரியோர்களிடமும் அவர்கள் சொல்வதிலும், அவர்கள் கூறும் ஸாதனங்களிலும், சரியான அறிவு ஏற்படாத காரணத்தாலும், அறிந்த சிறிதிலும் நம்பிக்கை ஏற்படாத காரணத்தாலும், ஒவ்வொரு விஷயத்திலும் ஸந்தேஹப்பட்டுக் கொண்டே இருப்பான். எதைச் செய்வது என்பது புரியாமல் எதிலும் ஸந்தேஹப்பட்டுக் கொண்டு தன் வாழ்க்கையை வீணாக்கிக் கொள்வான். அதனால், தான் பெற வேண்டிய நன்மைகளை இழப்பான். ஆனால் ஒவ்வொன்றையும் பகுத்தறியும் சக்தி படைத்தவனோ அல்லது வேதம், சாஸ்த்ரம் இவற்றிலும், பெரியோர்களிடத்தும் நம்பிக்கை கொண்டவனோ மேலே சொன்னவிதம் சீரழியமாட்டான்; மாறாகப் பெரியோர்தம் உதவியினால், அர்ஜுனன் போல, தன் ஸந்தேஹங்களைப் போக்கிக் கொண்டு, கடமைகளை ஆற்றுவதில் பூரணமாக ஈடுபடுவான். செய்யவேண்டியதைச் செய்த நிம்மதியுடன் மனிதப்பிறவி பெற்ற பயனை அடைவான். விவேகமில்லாதவனுக்கு ச்ரத்தை மட்டும் இருந்தாலும் போதும். அந்த ச்ரத்தையின் காரணமாகப் பெரியோர்கள் சொன்னபடி கேட்டு, ஸந்தேஹங்களை விலக்கி ஸாதனங்களில் ஈடுபடுவான். அவனுக்கும் அவர்களுடைய அருளினால் மங்களம் உண்டாகும் *(13/25)*. ஒருவனுக்கு ச்ரத்தையும், விவேகமும் ஏற்படாதவரை எந்த ஸந்தேஹமும் தீர்வதற்கு வேறு உபாயமே இல்லை. எனவே அவன் வீழ்ச்சியையே அடைவான்.

**கேள்வி:** *'ஸந்தேஹமுடையவனுக்கு இவ்வுலகமில்லை; பரலோகமுமில்லை; ஸுகமுமில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** ஸந்தேஹமுடையவன் உண்மையறிவு பெறான் என்பது மட்டுமன்று. ஸந்தேஹமுள்ளவரை, அதை அழிக்காதவரை, அவன் இம்மையில் இந்த மனிதப் பிறவியில் இருந்தும் செல்வம், புகழ் முதலியவற்றையும் பெறமாட்டான்; இறந்தபிறகு, மறுமையில் ஸ்வர்கம் முதலியவற்றையும் பெறமாட்டான். உலகியல் ஸுகமும் அவனுக்குக் கிட்டாது. ஸந்தேஹமிருக்கும்வரை ஒரு முடிவுக்கும் வரமாட்டான். அவனுக்கு எதிலும் வெற்றி கிட்டாது. ஆகவே மனிதன் விவேகத்தினாலும், நம்பிக்கையினாலும் ஸந்தேஹத்தை அறவே ஒழிக்கவேண்டும்.

**பொருத்தம்:** இவ்விதம் விவேகமின்மை, ச்ரத்தையின்மை, ஸந்தேஹம் ஆகியன ஞானம் பெறுவதற்குத் தடையாகும் என்று கூறி, விவேகத்தினால் ஸந்தேஹத்தை ஒழித்து, கர்மயோகத்தில் அர்ஜுனனை உற்சாகத்துடன் ஈடுபடுத்துவதற்காக, ஸந்தேஹமின்றிப் புலன்களை அடக்கியவனான கர்மயோகியைப் புகழ்கிறார்—

**योगसन्न्यस्तकर्माणं ज्ञानसंछिन्नसंशयम् ।**
**आत्मवन्तं न कर्माणि निबध्नन्ति धनञ्जय ॥ ४१ ॥**

**யோகஸந்ந்யஸ்தகர்மாணம் ஜ்ஞாநஸஞ்சி₂ந்நஸம்ஶயம் ।**
**ஆத்மவந்தம் ந கர்மாணி நிப₃த்₄நந்தி த₄நஞ்ஜய ॥ 41 ॥**

*த₄நஞ்ஜய* – அர்ஜுன! *யோக₃ ஸந்ந்யஸ்த கர்மாணம்* – கர்மயோக முறைப்படி கர்மங்கள் அனைத்தையும் (நிறைவேற்றி), பரமாத்மாவிடம் அர்ப்பணம் செய்து, *ஜ்ஞாந ஸஞ்சி₂ந்ந ஸம்ஶயம்* – விவேக ஞானத்தினால் ஸந்தேஹங்களைப் போக்கிக் கொண்டு, *ஆத்மவந்தம்* – மனதைத் தன்வசமாக்கிக் கொண்டுவிட்டவனை, *கர்மாணி* – கர்மங்கள், *ந நிப₃த்₄நந்தி* – கட்டுப்படுத்துவதில்லை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அர்ஜுன! கர்மயோக முறைப்படி கர்மங்கள் அனைத்தையும் நிறைவேற்றிப் பரமாத்மா விடம் அர்ப்பணம் செய்து விவேக ஞானத்தினால் ஸந்தேஹங்களைப் போக்கிக் கொண்டு மனதைத் தன்வசமாக்கிக் கொண்டுவிட்டவனைக் கர்மங்கள் கட்டுப்படுத்துவதில்லை.

**கேள்வி:** 'யோகஸந்யஸ்தகர்மாணம்' என்ற தொடரில் 'யோகம்' என்ற சொல்லுக்கு ஞானயோகம் என்று பொருள் கொண்டு, ஞானயோகத்தைக் கொண்டு, சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட கர்மங்களை த்யாகம் செய்பவன் என்று பொருள் கொண்டால் என்ன தவறு?

**பதில்:** இங்கே கர்மங்களைச் செய்யாமல் த்யாகம் செய்யும்படி சொல்லும் ஸந்தர்பமில்லை. இங்கே பகவான் 'யோகத்தின் வழியாகக் கர்மங்களை ஸந்யாஸம் செய்யும் மனிதனைக் கர்மங்கள் கட்டுப்படுத்தா' என்று கூறுகிறார். அடுத்த ச்லோகத்தில் 'ஆகவே' என்று ஆரம்பித்து, இதை லக்ஷ்யமாகக் காட்டி, அர்ஜுனனை 'யோகத்தில் நிலைபெற்று யுத்தம் செய்வாயாக' என்று ஆணையிடுகிறார். இந்த ச்லோகத்தில் 'யோகஸந்யஸ்தகர்மாணம்' என்ற தொடருக்கு 'கர்மங்களைச் செய்யாமல் த்யாகம் செய்வது' பகவானின் கருத்தாக இருந்தால் பகவான் இவ்வாறு சொல்லமாட்டார். ஆகவே இங்கு யோகஸந்யஸ்தகர்மாணம் என்ற சொல்லுக்குக் கர்மங்களைச் செய்யாமலே த்யாகம் செய்பவன் என்று பொருள் கொள்ளக் கூடாது. கர்மயோக முறையில் எல்லாக் கடமைகளையும் ஆற்றி, அவற்றில் பயனில் விருப்பம், மமகாரம், பற்று, ஆசை இவற்றை அறவே துறந்து, பகவானுக்கு அர்ப்பணம் செய்துவிடும் த்யாகியைத்தான் குறிப்பிடுகிறார் (3/30, 5/10) என்று கொள்ளவேண்டும். இந்த ஸந்தர்பத்திற்கு இதுதான் ஏற்ற பொருள்.

**கேள்வி:** 'ஜ்ஞாநஸம்சிந்நஸம்ஶயம்' என்ற தொடரில் ஞானம் என்றால் எது? கீதையில் ஞானம் என்ற சொல் எந்தெந்த ச்லோகங்களில் எந்தெந்த அர்த்தங்களில் விவரிக்கப்பட்டுள்ளது?

**பதில்:** மேலே சொன்ன தொடரில் எந்த ஒரு பொருளைப் பற்றியும் விவேகத்தினால் ஆராய்ந்து, ஸந்தேஹம் தீர்ந்து, முடிவுக்கு வரக்கூடிய விவேக சக்தியை 'ஞானம்' என்ற சொல் குறிக்கிறது. 'ஜ்ஞாநம்' என்ற ஸம்ஸ்க்ருதச் சொல், ஸம்ஸ்க்ருத இலக்கணப்படி 'ஜ்ஞா அவபோதநே' (அறிந்து கொள்ளுதல்) என்பதையே குறிக்கும். கீதையில் இடத்திற்கேற்றவாறு 'ஜ்ஞாநம்' என்ற சொல் பல பொருட்களில் உபயோகப்படுகிறது.

(1) 12/12ல் ஞானத்தைக் காட்டிலும் த்யானம், அதைக் காட்டிலும் கர்மத்தின் பயனை த்யாகம் செய்வது சிறந்தது என்று கூறியுள்ளார். இக்காரணத்தினால் அங்கு 'ஞானம்' என்ற சொல்லுக்கு, சாஸ்த்ரங்கள் அல்லது பெரியோர்கள் வாயிலாகக் கிடைக்கும் விவேக புத்தி என்று பொருள்.

(2) 13/17ல் அறியத்தக்க பொருள் என்ற பொருளில் ஞானம் என்ற சொல் வருகிறது. ஆகவே ஞானமென்றால் அங்கு நித்யமான, ஞான வடிவான, ஆனந்தமயமான பரமாத்மா என்று பொருள்.

(3) 18/42ல் ப்ராம்மணர்களின் இயல்பான கடமைகளைக் கூறும் சாஸ்த்ரங்களைக் கற்பது, கற்பிப்பது என்ற பொருளில் ஞானம் என்ற சொல் வருகிறது.

(4) 4/36லிருந்து 4/39 வரை வரும் 'ஜ்ஞாநம்' என்பதற்கு, பரமாத்ம தத்வஞானம் என்று பொருள். ஏனெனில் இது எல்லாக் கர்மங்களையும் பொசுக்கிவிடக் கூடியது; எல்லாப் பாவங்களிலிருந்தும் கரை ஏற்றக்கூடியது; எல்லாவற்றைக் காட்டிலும் பவித்ரமானது; யோகஸித்தியின் பயனான பரமசாந்திக்குக் காரணமானது என்று சொல்லப்படுகிறது. 5/16லும் பரமாத்ம ஸ்வரூபத்தை நேரிடையாக தர்சிக்க வைப்பது என்றும், 14/1,2லும் எல்லா ஞானங்களைக் காட்டிலும் சிறந்தது என்றும் கூறப்படுவதால் அங்கெல்லாம் 'ஞானம்' என்பதற்குப் பரம தத்வஞானம் என்றுதான் பொருள். மற்ற இடங்களிலும் ஸந்தர்பத்தை அனுஸரித்து இப்படிப் பொருள் கொள்ளலாம்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



(5) 18/21ல் 'பொருட்கள் வெவ்வேறானவை; ஜீவர்கள் வெவ்வேறானவை' என்றறிவது ராஜஸ ஞானம் ஆகும்.

(6) 13/11ல் தத்வஞானங்களின் ஸாதனத் தொகுப்பு என்று 'ஞான'த்திற்குப் பொருள்.

(7) 3/3ல் யோக என்ற சொல்லுடன் ஞானம் என்பது வருவதால் அங்கு ஞானயோகம் அதாவது ஸாங்க்யயோகம் என்று பொருள். இவ்விதம் இன்னும் சில இடங்களில் ஸந்தர்பத்திற்கேற்றவாறு ஞானம் என்பது ஸாங்க்யயோகத்தைக் குறிக்கும். மேலும் பல இடங்களில் ஞானம் என்ற சொல் வேறு பல பொருள்களிலும் வருவதை ஆங்காங்கே பார்த்தறியலாம்.

**கேள்வி:** 'ஜ்ஞாநஸம்சிந்நஸம்ஶயம்' என்ற தொடரில் 'ஞானம்' என்பதற்கு, 'தத்வஞானம்' என்று பொருள் கொண்டால் என்ன தவறு?

**பதில்:** தத்வ ஞானம் பெற்றுவிட்டால் எல்லா ஸந்தேஹங்களும் அடியோடு தீர்ந்துவிடும். அக்கணமே பரமாத்மாவை அடைந்துவிடலாம். பரமாத்மாவை அடைவதற்காக வேறு எந்த ஸாதனையும் புரியவேண்டியதில்லை. ஆகவே இங்கு ஞானம் என்பதற்குத் தத்வஞானம் என்று பொருள் கூறுவது சரியன்று. தத்வஞானம் என்பது கர்மயோகத்தின் பயன். அடுத்த ச்லோகத்தில் பகவான் அர்ஜுனனை ஞானத்தின் மூலம், அஞ்ஞானத்தினால் உண்டான ஸந்தேஹத்தை அழித்துக் கர்மயோகத்தில் நிலை பெறுமாறு சொல்கிறார். ஆகவே இங்கு 'விவேக ஞானம்' என்று பொருள் கொள்வதுதான் சரி ஆகும்.

**கேள்வி:** விவேக ஞானத்தினால் எல்லா ஸந்தேஹங்களையும் அழிப்பது என்றால் என்ன பொருள்?

**பதில்:** ஈசுவரன் இருக்கிறாரா, இல்லையா? எப்படி இருக்கிறார்? பரலோகம் என்பது உண்டா, இல்லையா? இருந்தால் எப்படி இருக்கிறது? எங்கே இருக்கிறது? உடல், மனம், புலன்கள், புத்தி இவையெல்லாம் ஆத்மாவா? ஆத்மாவைத் தவிர வேறானவையா? அவை ஜடங்களா? சேதனங்களா? எங்கும் நிறைந்தவையா? குறிப்பிட்ட இடத்தில் உள்ளவையா? 'கர்த்தா' – 'அனுபவிக்கிறவன்' என்று ஜீவனைக் கொள்வதா, அல்லது ப்ரக்ருதியைக் கொள்வதா? ஆத்மா ஒன்றா, பலவா? ஒன்றானால் எப்படி உள்ளது? பலவானால் எப்படி இருக்கும்? ஜீவன் சுதந்திரமுடையவனா, கட்டுப்பட்டவனா? கட்டுப்பட்டவனானால் யாருக்கு? எப்படி? கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெறுவதற்காகக் கர்மங்களைச் செய்யாமல் விடுவது சரியா? அல்லது கர்மயோக முறைப்படி செய்வது சரியா? அல்லது ஸாங்க்யயோக முறைப்ப்டி ஸாதனை புரிவது நல்லதா? என்று எத்தனை வகையான ஸந்தேஹங்கள், யுக்தியுடன் ஆராய்ச்சி செய்கின்ற மனிதனுடைய புத்தியில் ஏற்படுமோ, அவையெல்லாம் 'ஸம்ஶயம்' எனப்படும்.

இந்த எல்லா ஸந்தேஹங்களையும் விவேக ஞானத்தின் மூலம் ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வருவது; அதாவது எந்த விஷயத்திலும் ஸந்தேஹமில்லாமல் இருப்பது, தான் செய்ய வேண்டியதைத் தீர்மானிப்பது – இவைதான் 'ஜ்ஞாநஸம்சிந்நஸம்ஶயம்' என்பதற்குப் பொருள்.

**கேள்வி:** 'ஆத்மவந்தம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** ஆத்மா என்று கூறக்கூடிய புலன்களுடன் சேர்ந்த மனதை முழுமையாகத் தன்வசப்படுத்தியவனுக்கு 'ஆத்மவந்தம்' என்ற சொல் கூறப்பட்டுள்ளது.

**கேள்வி:** 'மேலே சொன்ன அடைமொழிகளுடன் கூடியவனைக் கர்மங்கள் பந்தப்படுத்தா' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அத்தகையவனால் சாஸ்த்ர முறைப்படி கடைப்பிடிக்கப்பட்ட கர்மங்கள், மமகாரம், பற்று, ஆசை இவற்றைத் துறந்து செய்யப்படுவதால், அந்தக் கர்மங்களில் பந்தப்படுத்தும் சக்தி இருக்காது என்று பொருள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பொருத்தம்:** இவ்விதம் கர்மயோகியின் பெருமை கூறி, அர்ஜுனனிடம் 'கர்மயோகத்தில் நிலைபெற்று யுத்தம் செய்வாயாக' என்று ஆணையிட்டு, பகவான் அத்யாயத்தை நிறைவு செய்கிறார்—

**तस्मादज्ञानसम्भूतं हृत्स्थं ज्ञानासिनात्मनः।**
**छित्त्वैनं संशयं योगमातिष्ठोत्तिष्ठ भारत॥ ४२॥**

**தஸ்மாத₃ஜ்ஞாநஸம்பூ₄தம் ஹ்ருத்ஸ்த₂ம் ஜ்ஞாநாஸிநாத்மந: ।**

**சி₂த்த்வைநம் ஸம்ஶயம் யோக₃மாதிஷ்டோ₂த்திஷ்ட₂ ப₄ாரத ॥ 42 ॥**

**தஸ்மாத்** – ஆகவே, **ப₄ாரத** – பரதகுலத்தோன்றலே, அர்ஜுன! (நீ), **ஹ்ருத்ஸ்த₂ம்** – உள்ளத்தில் இருக்கும், **அஜ்ஞாந ஸம்பூ₄தம்** – அஞ்ஞானத்தில் உண்டான, **ஆத்மந:** – உன்னுடைய, **ஏநம் ஸம்ஶயம்** – இந்த ஸந்தேஹத்தை, **ஜ்ஞாந அஸிநா** – விவேக ஞானம் என்ற வாளினால், **சி₂த்த்வா** – சிதைத்து, **யோக₃ம்** – ஸமத்வயோகம் என்ற கர்மயோகத்தில், **ஆதிஷ்ட₂** – நிலைத்து நில். (மேலும் யுத்தத்திற்காக), **உத்திஷ்ட₂** – எழுந்திரு.

ஆகவே 'பரதகுலத்தோன்றலே, அர்ஜுன! நீ உள்ளத்தில் இருக்கும் அஞ்ஞானத்தில் உண்டான உன்னுடைய இந்த ஸந்தேஹத்தை விவேக ஞானம் என்ற வாளினால் சிதைத்து ஸமத்வயோகம் என்ற கர்மயோகத்தில் நிலைத்து நில். மேலும் யுத்தத்திற்காக எழுந்திரு.'

**கேள்வி:** 'தஸ்மாத்' என்று கூறுவதற்கு என்ன பொருள்?

**பதில்:** முன் ச்லோகத்தில் கர்மயோகத்தில் நிலைபெற்றவன் கர்ம பந்தத்திலிருந்து விடுபடுவான் என்று கூறினார். அக்காரணத்தினால் 'நீயும் கர்மயோகத்தில் நிலைபெறுவாய்' என்று அர்ஜுனனை உத்ஸாஹப்படுத்துகிறார் என்று பொருள்.

**கேள்வி:** அர்ஜுனனை 'பாரத' என்று அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** ராஜரிஷியான பரதன் வரலாற்றை நினைவுபடுத்துகிறார். பரதன் மிகப் பெரிய கர்மயோகி; ஸாதனைகளில் தீவிர ஈடுபாடு உடையவர்; உற்சாகமுடையவர்; அவருடைய குலத்தில் பிறந்த நீ, அவரைப் போல, வீரம், தைர்யம், உறுதியோடு கடமையை ஆற்றுவதில் ஒன்றி இருப்பாயாக என்று அறிவுறுத்துகிறார்.

**கேள்வி:** 'ஏநம் ஸம்ஶயம்' என்பது எந்த ஸந்தேஹத்தைக் குறிக்கிறது? 'அஜ்ஞாநஸம்பூதம், ஹ்ருத்ஸ்தம்' என்ற அடைமொழிகளுக்கு என்ன பொருள்?

**பதில்:** 41வது ச்லோகத்தில் 'ஜ்ஞாநஸம்சிந்நஸம்ஶயம்' என்ற தொடரினால் எந்த ஸந்தேஹத்தை எடுத்துக் கூறினாரோ, அந்த ஸந்தேஹம் விரிவாக உரையில் விளக்கப்பட்டது. அதைத்தான் 'ஏநம் ஸம்ஶயம்' என்று கூறுகிறார். 'இது அஞ்ஞானத்தினால் உண்டானது' என்றால் இந்த ஸந்தேஹத்திற்குக் காரணம் விவேகமின்மை என்று பொருள். விவேகத்தினால் விவேகமின்மையைக் களைந்து, அத்துடன் ஸந்தேஹத்தையும் அழிக்கவேண்டும். 'உள்ளத்தில் உள்ளது' என்றால் இந்த ஸந்தேஹத்தின் உற்பத்தி ஸ்தானம் இதயம் அதாவது உள்ளம். எவனுடைய உள்ளம் வசப்படுத்தப்பட்டிருக்கிறதோ, அவனுக்கு இந்த ஸந்தேஹத்தைத் தீர்த்துக் கொள்வது எளிதான செயல்.

**கேள்வி:** அர்ஜுனனைப் பார்த்து 'இந்த ஸந்தேஹத்தைச் சிதைத்துக் கொள்' என்று கூறுவதற்கு என்ன பொருள்? அர்ஜுனனுடைய உள்ளத்திலும் இவ்வித ஸந்தேஹம் உள்ளதா?

**பதில்:** முதலில் அர்ஜுனன் யுத்தம் செய்வது உசிதம் என்றுதான் யுத்தத்திற்குத் தயார் ஆகி யுத்தகளத்தில் வந்திருக்கிறார். தம்முடைய ரதத்தை இரு ஸேனைகளுக்கும் மத்தியில் கொண்டு வந்து நிறுத்துமாறு பகவானை வேண்டுகிறார். பிறகு அவர் இரண்டு ஸேனைகளிலும் தமது உறவுமுறையார் கூடி, இறப்பதற்குத் தயாராக வந்து நிற்பதைப் பார்க்கிறார். மோஹமடைந்து கவலையில் ஆழ்ந்துவிடுகிறார். 'யுத்தம் செய்வது பாவம்'

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



என்று நினைக்கிறார் (1/28–47). யுத்தம் செய்வது ந்யாயம்தான் என்று பகவான் எடுத்துக் கூறின பிறகும் கூட (2/3) தாம் செய்யவேண்டியதை அவரால் தீர்மானிக்க முடியவில்லை. என்ன செய்வது என்று புரியாமல், "நான் பெரியோர்களை எதிர்த்து எப்படிப் போர் புரிவேன்? (2/4) நான் எது செய்வது நல்லது? யாருக்கு வெற்றி கிடைக்கும் என்பதும் தெரியவில்லை (2/6) எனக்கு எது மங்களத்தைக் கொடுக்குமோ, அதை எனக்கு எடுத்துச் சொல்லுங்கள். என் உள்ளம் குழம்பியிருக்கிறது" (2/7) என்று சொல்கிறார். இதிலிருந்து அர்ஜுனனுடைய உள்ளத்தில் ஸந்தேஹம் உள்ளது என்பது நன்றாகத் தெரிகிறது. அவருடைய விவேக சக்தி மோஹத்தினால் மழுங்கி இருக்கிறது; அதனால், என்ன செய்யவேண்டும் என்பதை அவரால் தீர்மானிக்க முடியவில்லை. தவிர ஆறாவது அத்யாயத்தில் அர்ஜுனன் கூறுகிறார்: 'என் ஸந்தேஹத்தைத் தீர்க்க உங்களால்தான் முடியும்' (6/39). கீதை உபதேசம் கேட்ட பிறகு சொல்கிறார்: 'என் ஸந்தேஹங்கள் தீர்ந்துவிட்டன' (18/73). பகவானும் கூட ஆங்காங்கு (8/7, 12/8) 'இதில் ஸந்தேஹமில்லை. இவ்விஷயத்தில் ஸந்தேஹப்படாதே' என்று கூறுகிறார். ஆகவே அர்ஜுனனுடைய உள்ளத்தில் ஸந்தேஹமிருந்தது; அதன் காரணமாகத்தான் ஸ்வதர்மமாகிய யுத்தத்தைத் தவிர்ப்பதற்கும் தயாராகிவிட்டார் என்பது தெரிகிறது. ஆகவே, பகவான் இங்கு 'உன் உள்ளத்தில் உள்ள ஸந்தேஹத்தைத் தீர்த்துக் கொள். நான் என்ன ஆணையிடுகிறேனோ, அதில் எவ்விதமான ஐயமுமின்றி, அதை ஏற்று நடத்துவதற்குத் தயாராவாய்' என்கிறார்.

**கேள்வி:** இங்கு அர்ஜுனனைத் தமது உள்ளத்தில் உள்ள ஸந்தேஹத்தைத் தீர்த்துக் கொள்ளும்படி கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'நீ என்னுடைய பக்தன், நண்பன். பிறர் உள்ளத்தில் ஸந்தேஹம் இருந்தால் தீர்த்துவைக்க வேண்டிய நீ இப்படி ஸந்தேஹப்படுவது அழகன்று. அப்படிப் பிறர் ஸந்தேஹத்தைத் தீர்க்க முடியாவிட்டாலும், உன்னுடைய ஸந்தேஹத்தையாவது தீர்த்துக் கொள்ளலாமே!' என்கிறார் பகவான்.

**கேள்வி:** 'யோகத்தில் நிலைத்து நில்; யுத்தத்திற்காக எழுந்திரு' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'நான் சொல்வதெல்லாம் உன்னுடைய நன்மைக்காகத்தான். ஆகவே அதில் ஸந்தேஹம் கொள்ளாமல், நான் சொல்கிறபடி கர்மயோகத்தில் நிலைத்து நின்று, யுத்தத்திற்குத் தயாராவாயாக. அதனால் உனக்கு எல்லாவிதத்திலும் மங்களமுண்டாகும்' என்று இந்த அத்யாயத்திற்கு முடிவுரை போன்று பகவான் சொல்கிறார்.

ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे ज्ञानकर्मसन्न्यासयोगो नाम चतुर्थोऽध्याय: ॥ ४ ॥

**ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம் யோகஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே ஜ்ஞாநகர்மஸந்ந்யாஸயோகோ நாம சதுர்தோऽத்யாய: ॥ 4 ॥**

**ஓம் தத் ஸத் – ப்ரம்ம வித்யை, யோக ஶாஸ்த்ரம், உபநிஷத் எனப்படும் ஸ்ரீமத்பகவத்கீதையாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலில் 'ஞானகர்மஸந்யாஸயோகம்' எனப் பெயர் படைத்த நான்காவது அத்யாயம் நிறைவுற்றது.**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

# அத₂ பஞ்சமோऽத்₄யாய:

# ஐந்தாவது அத்யாயம்

## கர்மஸந்யாஸயோகம்

**அத்யாயத்தின் பெயர்** இந்த ஐந்தாவது அத்யாயத்தில், 'கர்மயோக நிஷ்டை', 'ஸாங்க்யயோக நிஷ்டை' இவற்றின் விளக்கம் கொடுக்கப்படுகிறது. ஸாங்க்யயோகத்திற்கு மற்றொரு பெயர் 'ஸந்யாஸம்'. ஆகவே இந்த அத்யாயத்திற்கு, 'கர்மஸந்யாஸயோகம்' என்று பெயர் வைக்கப்பட்டிருக்கிறது.

**அத்யாயச் சுருக்கம்** முதல் ச்லோகத்தில், 'ஸாங்க்யயோகம், கர்மயோகம் இவற்றில் எது சிறந்தது' என்ற அர்ஜுனனின் கேள்விக்கு, 2ல் பகவான் பதில் அளிக்கும் வாயிலாக, ஸாங்க்யயோகம், கர்மயோகம் இரண்டுமே மேன்மை அளிக்கக் கூடியவை; கர்ம ஸந்யாஸத்தைக் காட்டிலும் கர்மயோகம் சிறந்தது என்றும், 3ல் கர்மயோகியின் பெருமையைக் கூறி, 4, 5ல் ஸாங்க்யயோகம், கர்மயோகம் இரண்டிற்கும் பயன் ஒன்றேயாதலால், இரண்டுமே ஒன்றுதான் என்று நிரூபிக்கிறார். 6ல் கர்மயோகமின்றி ஸாங்க்யயோகத்தைக் கடைப்பிடிப்பது கடினம் என்றும், கர்மயோகத்தில் தாமதமின்றிப் பரமாத்மாவை அடைய முடியும் என்றும், 7ல் கர்மயோகிக்கு எந்த விஷயத்திலும் ஒட்டுதல் கிடையாது என்றும், 8, 9ல் ஸாங்க்யயோகியிடம் 'நான் கர்த்தா' என்ற எண்ணம் இல்லை என்றும் நிரூபிக்கிறார். 10, 11ல் 'பகவானுக்கு அர்ப்பணம்' என்னும் நினைவோடு, கர்மத்தைச் செய்பவர்கள், 'கர்மமே முக்யம்' என்ற எண்ணம் உடைய கர்மயோகி ஆகியோரைப் புகழ்ந்து, கர்மயோகியின் செயல்கள் ஆத்மசுத்திக்குக் காரணமாகின்றன என்று கூறுகிறார். 12ல் கர்மயோகிக்கு நிலையான சாந்தியும், பயனில் விருப்பம் கொண்டு கர்மங்களைச் செய்பவர்களுக்கு பந்தமும் ஏற்படும் என்றும், 13ல் ஸாங்க்யயோகியின் நிலையையும், 14, 15ல் 'கர்மம்', 'கர்த்தா', 'கர்மபயனோடு ஒட்டுதல்' ஆகியவற்றை பகவான் படைப்பதில்லை; எவருடைய புண்ய பாவங்களையும் அவர் ஏற்பதில்லை; அஞ்ஞானத்தால் ஞானம் மூடப்பட்டிருப்பதால், எல்லா ஜீவர்களும் மோஹம் அடைந்திருக்கிறார்கள் என்றும், 16ல் ஞானத்தின் பெருமையையும் கூறி, 17ல் ஞானயோகமே முடிவான ஸாதனை என்று விளக்குகிறார். பின்னர், 18 முதல் 20 வரை, பரமாத்மாவில் இரண்டறக் கலந்துவிட்ட மஹாபுருஷர்களின் ஸமத்வபாவனையையும், நிலையையும் விளக்கி, அவர்கள் பரகதியை அடைவதை விவரிக்கிறார். 21ல் குறையாத ஆனந்தத்தை அடைவதற்கான ஸாதனமும், அதை அடைவதையும் சொல்கிறார். 22ல் 'போகங்கள் துக்கத்திற்குக் காரணம்' என்றும், அழியக்கூடியவை என்றும், விவேகியான மனிதன் அவற்றில் பற்றுதல் கொள்ளலாகாது என்றும், 23ல் காமக்ரோதங்களின் தாக்குதலைப் பொறுத்துக் கொள்ளக் கூடியவனை 'யோகி'

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



என்றும், 'ஸுகமுடையவன்' என்றும் சொல்கிறார். 24 முதல் 26 வரையில் ஸாங்க்யயோகியின் முடிவான நிலையும், ப்ரம்ம நிர்வாணத்தை அடைந்த ஞானிகளான மஹாபுருஷர்களின் இலக்கணமும், 27, 28ல் பயனோடு கூடிய த்யானயோகத்தின் சுருக்கமான விளக்கமும், இறுதியாக 29ல் "தாமே எல்லா யாகங்களையும் ஏற்பவர்; அகில உலகத்தையும் ஆள்பவர்; அனைத்து ப்ராணிகளுக்கும் உற்ற நண்பர்" என்று அறிந்து கொள்வதன் பயன் மேலான சாந்தியை அடைவதே என்று கூறி அத்யாயத்தை நிறைவு செய்கிறார்.

முன் அத்யாயத்துடன் இவ்வத்யாயத்திற்குப் பொருத்தம்: மூன்றாவது, நான்காவது அத்யாயங்களில் பகவானுடைய திருவாயிலிருந்து, கர்மயோகத்தின் பெருமையை அர்ஜுனன் பலவாறாகக் கேட்டறிந்தார். அத்துடன், அப்படிச் செய்வதற்கான தூண்டுதலையும், ஆணையையும் பெற்றார். கூடவே, 'கர்ம யோகத்தின் மூலமாக பகவத் ஸ்வரூப தத்வஞானம் தானாகவே ஏற்படுகிறது' (4/38) என்பதையும் கேட்டறிந்தார். நான்காவது அத்யாயத்தின் இறுதியிலும், அவருக்கு பகவானிடமிருந்து கர்மயோகமே செய்யவேண்டும் என்ற ஆணையும் கிடைத்தது. ஆனால் இடையிடையே அவர் பகவானின் திருவாயிலிருந்தே, 'ப்$_3$ரஹ்மார்பணம் ப்$_3$ரஹ்ம ஹவி:'; 'ப்$_3$ரஹ்மாக்$_3$நாவபரே யஜ்ஞம் யஜ்ஞேநைவோபஜுஹ்வதி'; 'தத்$_3$வித்$_3$தி$_4$ ப்ரணிபாதேந' என்றெல்லாம் ஞானயோகத்தை, அதாவது கர்ம ஸந்யாஸத்தைப் புகழ்வதையும் கேட்டார். இதனால் அர்ஜுனனுக்கு இந்த இரண்டில் எந்த ஸாதனம் சிறந்தது என்ற முடிவுக்கு வரமுடியவில்லை. பகவானே இதற்கு முடிவு சொல்லட்டும் என்ற கருத்துடன் அர்ஜுனன் கேள்வி கேட்கிறார்—

अर्जुन उवाच

सन्न्यासं कर्मणां कृष्ण पुनर्योगं च शंससि।
यच्छ्रेय एतयोरेकं तन्मे ब्रूहि सुनिश्चितम्॥ १॥

அர்ஜுந உவாச

ஸந்ந்யாஸம் கர்மணாம் க்ருஷ்ண புநர்யோக$_3$ம் ச ஶம்ஸஸி ।
யச்ச்$_2$ரேய ஏதயோரேகம் தந்மே ப்$_3$ரூஹி ஸுநிஶ்சிதம் ॥ 1 ॥

*அர்ஜுந உவாச* — அர்ஜுனன் சொன்னார்: **க்ருஷ்ண** — க்ருஷ்ண! (நீங்கள்), **கர்மணாம்** — கர்மங்களுடைய, **ஸந்ந்யாஸம்** — ஸந்யாஸத்தைப் பற்றியும், **புந:** — பின்னர், **யோக$_3$ம் ச** — கர்மயோகத்தைப் பற்றியும், **ஶம்ஸஸி** — புகழ்ந்து பேசுகிறீர்கள். (ஆகையால்), **ஏதயோ:** — இவை இரண்டில், **யத் ஏகம்** — எந்த ஒன்று, **மே** — எனக்கு, **ஸுநிஶ்சிதம்** — நிச்சயமாக, **ஶ்ரேய:** — மேன்மையைத் தரக் கூடியதோ, **தத்** — அதை, **ப்$_3$ரூஹி** — சொல்லுங்கள்.

அர்ஜுனன் சொன்னார்: 'க்ருஷ்ண! நீங்கள் கர்மங்களுடைய ஸந்யாஸத்தைப் பற்றியும், பின்னர் கர்மயோகத்தைப் பற்றியும் புகழ்ந்து பேசுகிறீர்கள். ஆகையால் இவை இரண்டில் எந்த ஒன்று எனக்கு நிச்சயமாக மேன்மையைத் தரக்கூடியதோ அதைச் சொல்லுங்கள்.

கேள்வி: 'க்ருஷ்ண' என்று அழைப்பதன் கருத்து என்ன?

பதில்: 'க்ருஷ்' என்ற ஸம்ஸ்க்ருத வினைச்சொல்லுக்கு ஈர்ப்பது, இழுப்பது என்று பொருள். 'ண' என்றால் ஆனந்தம். 'க்ருஷ்ணன்' என்றால் பரமானந்தஸ்வரூபன் என்று

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொருள். ஆகவே அனைத்தையும் தம்பால் ஈர்க்கிறார். ஆகவே 'க்ருஷ்ண' என்று அழைத்து, "பகவானே! நீங்கள் எல்லா வல்லமையும் படைத்தவர்; எல்லாமறிந்தவர்; பரமேசுவரன். ஆகவே, உங்களால் மட்டுமே என்னுடைய கேள்விக்குப் பதில் சொல்ல முடியும்" என்று குறிப்பிடுகிறார்.

**கேள்வி:** இங்கு 'கர்மஸந்யாஸம்' என்ற சொல்லுக்குக் கர்மங்களைச் செய்யாமல் விடுவது என்பதுதான் பொருளா?

**பதில்:** இல்லை; நான்காவது அத்யாயத்தில் பகவான் ஓர் இடத்தில்கூட கர்மங்களைச் செய்யாமல் விட்டுவிடுவது சிறந்தது என்று கூறவில்லை. இப்படிச் செய்யும்படி அர்ஜுனனுக்கு ஆணையிடவும் இல்லை. மாறாக ஆங்காங்கு, 'பற்றற்றுக் கடமைகளை ஆற்று' என்றுதான் கூறுகிறார் (4/15,42). ஆகவே 'கர்மஸந்யாஸம்' என்றால் 'கர்மங்களைச் செய்யாமல் விடுவது' என்று பொருள் அன்று. 'கர்மஸந்யாஸம்' என்றால், எல்லாக் கர்மங்களையும், 'செய்பவன் நான்' என்ற எண்ணமில்லாமல், 'குணங்கள் குணங்களின் செயல்களில் ஈடுபடுகின்றன' (3/28) என்று உணர வேண்டும் என்று பொருள். மேலும் எப்பொழுதும் பரமாத்மாவில் ஒன்றி லயித்து நின்று, எங்கும் ப்ரம்மத்தைப் பார்ப்பதுதான் 'ஞானயோகம்' (4/24). இதுவே 'கர்மஸந்யாஸம்'. நான்காவது அத்யாயத்தில் இவ்விதமான ஞானயோகத்தைத்தான், பகவான் கொண்டாடி இருக்கிறார். அதனாலேதான் அர்ஜுனன் இக்கேள்வியைக் கேட்கிறார்.

பகவான் இதற்குப் பதில் சொல்கையில், 'ஸந்யாஸம்', 'கர்மயோகம்' இரண்டுமே மிகவும் மேன்மையைத் தருபவை என்கிறார். ச்லோகங்கள் 4,5ல் இந்த ஸந்யாஸத்தையே 'ஸாங்க்யம்' என்கிறார். 6ல் இதையே 'ஸந்யாஸம்' என்று கூறி, இங்கு கர்மஸந்யாஸம் என்பதன் பொருள் 'ஸாங்க்யயோகம்', அதாவது 'ஞானயோகம்'; 'கர்மங்களைச் செய்யாமல் விடுவது அல்ல' என்பதைத் தெளிவுபடுத்தியிருக்கிறார். மேலும் பகவானுடைய கருத்தில் செயல்களைத் துறப்பதால் மட்டும் நன்மை கிடைக்காது (3/4). அத்துடன் கர்மங்களை முற்றிலுமாகச் செய்யாமல் இருப்பதும் ஸாத்யமில்லை (3/5, 18/11). ஆகவே 'கர்மஸந்யாஸம்' என்றால், 'ஞானயோகம்' என்றுதான் கொள்ள வேண்டும். கர்மங்களைச் செய்யாமல் விடுவது என்று பொருள் அன்று.

**கேள்வி:** மூன்றாவது அத்யாயத்தின் ஆரம்பத்தில் 'ஞானயோகம், கர்மயோகம் இவற்றில் மேன்மை தரக்கூடிய ஒரு ஸாதனத்தைக் கூறுங்கள்' என்று அர்ஜுனன் கேட்டார். அதே கேள்வியை இங்கே திரும்பவும் கேட்கிறாரே. இதன் பொருள் என்ன?

**பதில்:** அங்கு அர்ஜுனன் ஞானயோகம், கர்மயோகம் பற்றிக் கேட்கவில்லை. "உங்கள் அபிப்ராயத்தில் கர்மத்தைக் காட்டிலும் ஞானம் சிறந்ததானால், என்னை ஏன் பயங்கரமான கர்மத்தில் ஈடுபடுத்துகிறீர்கள்? உங்கள் பேச்சை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. உங்கள் பேச்சு என்னைக் குழப்புவது போல இருக்கிறது. அதனால் ஒன்றை நிச்சயமாகக் கூறுங்கள்" என்று கேட்டார். இங்கு அர்ஜுனனின் கேள்வி வேறுவிதமானது. 'கர்மத்தைக் காட்டிலும் ஞானம் சிறந்தது' என்று அர்ஜுனன் நினைக்கவில்லை. பகவான் பேச்சில் குழப்பத்தையும் காணவில்லை. 'நீங்கள் ஞானயோகத்தையும், கர்மயோகத்தையும் ஒருங்கே புகழ்கிறீர்கள். அவை வேறு வேறானவை என்றும் சொல்கிறீர்கள் (3/3). இவை இரண்டில் எனக்கு எது சிறந்த ஸாதனம்?' என்று கேட்கிறார். ஆகவே அர்ஜுனன் மூன்றாவது அத்யாயத்தில் கேட்ட கேள்வியைத் திரும்பவும் கேட்கவில்லை.

**கேள்வி:** 3/19, 3/30, 4/15, 4/42வது ச்லோகங்களில் பகவான் அர்ஜுனனுக்குத் தெளிவாகக் 'கர்மயோகத்தைக் கடைப்பிடிப்பாய்' என்றுதான் கூறிவிட்டாரே! மறுபடியும் கேட்பதன் நோக்கம் என்ன?

**பதில்:** இது சரிதான். ஆயினும் 4/24 முதல் 30 வரையில், கர்மயோகம், ஞானயோகம் இருவகைகளிலும் வெவ்வேறு ஸாதனங்களை 'யாகம்' என்ற பெயரில் கூறினார். அதன்



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இடையே த்ரவ்யயக்ஞத்தைக் காட்டிலும் ஞானயக்ஞம் சிறந்தது என்றார் (4/33). 'தத்வமறிந்த ஞானிகளை அண்டி ஞானோபதேசம் பெற்றுக் கொள், அதுதான் சிறந்தது' என்றார் (4/34,35). மேலும் 'கர்மயோகத்தில் தேர்ச்சி பெற்றவன் தத்வஞானத்தைத் தானாகவே பெறுவான்' (4/38) என்றும் கூறினார். இவ்விதம் இரண்டு ஸாதனங்களும் சிறந்தவை என்று கேட்டறிந்த அர்ஜுனன், தான் எதைக் கைக்கொள்வது என்று தீர்மானிக்க முடியாமல், பகவான் எதை உறுதியாக நினைக்கிறார் என்பதைத் தெரிந்து கொள்ளவே கேட்கிறார். இங்கு அர்ஜுனன் பகவானிடம் தெளிவாகக் கேட்க விரும்புவது என்னவென்றால், "ஆனந்தமயனான க்ருஷ்ண! தத்வஞானத்தை தத்வமறிந்த பெரியோர்களை அணுகி ச்ரவணம், மனனம் முதலிய ஸாதனைகள் புரிந்து, ஞானயோகத்தைக் கைக்கொள்ளட்டுமா? அல்லது பலனில் கருத்து இல்லாமல் கர்மங்களைச் செய்து, பகவானுக்கு அர்ப்பணம் செய்வது என்கின்ற கர்மயோகத்தைக் கைக்கொள்ளட்டுமா?" என்பதே.

**பொருத்தம்:** அர்ஜுனனின் இந்தக் கேள்விக்கு பகவான் பதில் அளிக்கிறார்—

श्रीभगवानुवाच

**संन्यासः कर्मयोगश्च निःश्रेयसकरावुभौ।**
**तयोस्तु कर्मसन्न्यासात्कर्मयोगो विशिष्यते॥ २॥**

ஸ்ரீப₄க₃வானுவாச

**ஸந்ந்யாஸ: கர்மயோக₃ஶ்ச நி:ஶ்ரேயஸகராவுபௌ₄ ।**
**தயோஸ்து கர்மஸந்ந்யாஸாத்கர்மயோகோ₃ விஶிஷ்யதே ॥ 2 ॥**

**ஸ்ரீப₄க₃வானுவாச** — ஸ்ரீபகவான் சொன்னார்: **ஸந்ந்யாஸ:** — கர்ம ஸந்யாஸம், **கர்மயோக₃:** — கர்மயோகம், **உபௌ₄ ச** — இரண்டுமே, **நி:ஶ்ரேயஸகரௌ** — மிகவும் மேன்மையளிப்பவைதான். **து** — ஆயினும், **தயோ:** — இவ்விரண்டிலும், **கர்மஸந்ந்யாஸாத்** — கர்ம ஸந்யாஸத்தைக் காட்டிலும், **கர்மயோக₃:** — கர்மயோகம் (ஸாதனை முறையில் எளிதானதால்), **விஶிஷ்யதே** — சிறந்தது.

ஸ்ரீபகவான் சொன்னார்:'கர்ம ஸந்யாஸம், கர்மயோகம் இரண்டுமே மிகவும் மேன்மையளிப்பவைதான். ஆயினும் இவ்விரண்டிலும் கர்ம ஸந்யாஸத்தைக் காட்டிலும் கர்மயோகம் ஸாதனை முறையில் எளிதானதால் சிறந்தது.

**கேள்வி:** இங்கு 'ஸந்ந்யாஸம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** 'ஸம்' என்ற உபஸர்கம் 'நல்ல முறையில்' என்று பொருள்படும். 'ந்யாஸ' என்றால் த்யாகம் செய்வது. எனவே 'ஸந்யாஸம்' என்றால் நன்றாக த்யாகம் செய்வது; முழுமையாக த்யாகம் செய்வது என்று பொருள். அதாவது மனம், சொல், உடல் இவற்றால் ஆகக்கூடிய எல்லாச் செயல்களிலும், 'தான் கர்த்தா' என்ற அபிமானத்தை விட்டு, உடலிலும், மற்ற உலகியலிலும் அஹங்காரம், மமகாரம் இவற்றை முற்றிலும் துறப்பதுதான் ஸந்யாஸம். கீதையில் ஸந்யாஸம், ஸந்யாஸி என்ற சொற்கள் ஸந்தர்பத்திற்கு ஏற்றவாறு பல பொருட்களில் உபயோகப்படுத்தப்படுகின்றன. சில இடங்களில் கர்மங்களை பகவானுக்கு அர்ப்பணம் செய்வதை 'ஸந்யாஸம்' என்று கூறுகிறார் (3/30, 12/6, 18/57). இன்னோரிடத்தில் பயனை விரும்பிச் செய்யப்படும் கர்மத்தை த்யாகம் செய்வது (18/2) என்றும், பிறிதோரிடத்தில் மனதால் கர்மத்தைத் துறப்பது (5/13) என்றும், கர்மயோகம் (6/2) என்றும், வேறு சில இடங்களில் கர்மங்களைச் செய்யாமல் விடுவது (3/4, 18/7) என்றும், இன்னும் சில இடங்களில் ஸாங்க்யயோகம் அதாவது ஞான நிஷ்டை (5/6, 18/49) என்றும் சொல்லியிருக்கிறார். இதுபோலச் சில இடங்களில் கர்மயோகியை 'ஸந்ந்யாஸீ' (6/1, 18/12) என்றும், 'ஸந்ந்யாஸயோகயுக்தாத்மா' (9/28) என்றும் சொல்கிறார். ஆகவே, கீதையில் எல்லா



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இடங்களிலும், 'ஸந்யாஸம்' என்ற சொல் ஒரே பொருளில் வரவில்லை. ஸந்தர்பத்திற்கு ஏற்றவாறு வெவ்வேறு பொருட்களில் வருகிறது. இங்கு ஸாங்க்யயோகம், கர்மயோகம் இவை இரண்டையும் ஒப்பிட்டுப் பார்த்து விமர்சனம் செய்யப்படுகிறது. பகவான் *5/4, 5/5* ச்லோகங்களில், 'ஸந்யாஸம்' என்றால் ஸாங்க்யம் என்று தெளிவாகக் கூறுகிறார். ஆகவே, இங்கு ஸாங்க்யயோகத்தையே ஸந்யாஸம் என்ற சொல்லுக்குப் பொருளாகக் கொள்ளவேண்டும்.

**கேள்வி:** *ஸந்யாஸம் (ஸாங்க்யயோகம்), கர்மயோகம் இரண்டும் மேன்மை தரவல்லவை என்று பகவான் கூறுவதற்கு, இரண்டும் சேர்ந்துதான் மேன்மை தரும் என்று பொருள் கூறினால் என்ன?*

**பதில்:** ஸாங்க்யயோகம், கர்மயோகம் இரண்டையும் ஒரே நேரத்தில் ஒரு ஸாதகன் கடைப்பிடிக்க முடியாது. ஏனெனில்,

| கர்மயோகி | ஸாங்க்யயோகி |
|---|---|
| *1.* ஸாதனை புரியும் நேரத்தில் கர்மத்தையும், கர்மத்தின் பயனையும், பரமாத்மாவையும், தன்னையும் வெவ்வேறாகப் பார்த்துப் பற்றுதலையும், பயனையும் விலக்கி பகவானுக்கு அர்ப்பணம் எனும் புத்தியுடன் கர்மம் செய்கிறான் *(3/30; 5/10; 9/27,28; 12/10; 18/56,57).* | *1.* மாயையினால் உண்டான எல்லா குணங்களும் குணங்களில் செயல் படுகின்றன *(3/28)* அல்லது புலன்கள் புலன்களுக்குரிய பொருட்களில் ஈடுபடுகின்றன *(5/8,9)* என்று அறிந்து மனம், புலன்கள், உடல் இவற்றால் ஆகும் எல்லாச் செயல்களிலும் 'தான் கர்த்தா' என்ற அபிமானமின்றி முழுமையாக, ஸர்வவ்யாபியான ஸத் சித் ஆனந்தமயனான பரமாத்மாவின் ஸ்வரூபத்திலேயே ஒன்றிவிடுகிறான். |
| *2.* தன்னைக் கர்த்தா என்று நினைக்கிறான் *(5/11).* | *2.* தன்னைக் கர்த்தா என்று நினைப்பதில்லை *(5/8,9).* |
| *3.* தான் செய்த கர்மங்களை பகவானுக்கு அர்ப்பணம் செய்கிறான் *(9/27,28).* | *3.* மனம், புலன்களால் ஆகும் செயல்களில் 'நான் செய்கிறேன்' என்ற நினைப்பு இல்லாததால், கர்மம் என்றே நினைப்பதில்லை *(18/17).* |
| *4.* பரமாத்மாவைத் தன்னிலிருந்து வேறாக நினைக்கிறான் *(12/6,7).* | *4.* பரமாத்மா வேறு, தான் வேறு என்று நினைப்பதில்லை *(18/20).* |
| *5.* ப்ரக்ருதியும் அதன் விளைவான பொருட்களும் இருப்பதாக நினைக்கிறான் *(18/61).* | *5.* ப்ரம்மத்தைத் தவிர வேறு பொருளுக்கு இருப்பே இல்லை என்று நினைக்கிறான் *(13/30).* |
| *6.* கர்மம் உண்டு, கர்மத்திற்குப் பயனும் உண்டு என்று நினைக்கிறான். | *6.* ப்ரம்மத்தைத் தவிரக் கர்மமோ, கர்மபலனோ இருப்பதாகவே நினைப்பதில்லை. மேலும், அவற்றோடு தனக்குத் தொடர்பு இருப்பதாகவும் நினைப்பதில்லை. |

இவ்விதம் இருவருக்கும் ஸாதனை முறையிலும், மனப்பாங்கிலும் கிழக்கு–மேற்கு போன்ற பெரிய வேறுபாடு இருக்கிறது. இந்த நிலையில் இரண்டு நிஷ்டைகளுடைய ஸாதனைகளையும் ஒருவன் ஒரே சமயத்தில் கைக்கொள்ள முடியாது. தவிர இரண்டும்



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



சேர்ந்தே மேன்மை அளிக்கும் என்று இருந்தால், அர்ஜுனன், 'இவை இரண்டில் எது சிறந்தது? மேன்மையளிக்கக் கூடிய தீர்மானமான ஸாதனம் எது? எனக்குச் சொல்லுங்கள்' என்று கேட்பதும் பொருந்தாது. மேலும் பகவான் கர்மஸந்யாஸத்தைக் காட்டிலும் கர்மயோகம் சிறந்தது என்றும், ஸாங்க்ய யோகி அடையும் பேற்றையே கர்மயோகியும் பெறுவான் என்றும் கூறுவதும் பொருந்தாது போய்விடும். ஆகவே இரண்டு நிஷ்டைகளும் வெவ்வேறானவை. இரண்டினுடைய பயனும் உண்மையறிவின் மூலம் பரமகல்யாணரூபமான பரமாத்மாவை அடைவதுதான் என்றாலும், ஸாதகனுடைய தகுதிக்கேற்றவாறு ஸாதனை எளிதாக அமைய வேண்டியதைக் கருதி, அர்ஜுனனுக்கு ஸாங்க்யயோகத்தைக் காட்டிலும் கர்மயோகம் சிறந்தது என்று கூறுகிறார்.

**கேள்வி:** ஸந்யாஸம் (ஞானயோகம்), கர்மயோகம் இரண்டும் தனித்தனியாகவே, ஒன்றை ஒன்று சாராமலே, மிக்க மேன்மையை அளிக்கக்கூடியவை என்னும்போது, இங்கு 'ஸாங்க்யயோக'த்தைக் காட்டிலும் 'கர்மயோகம்' உயர்ந்தது என்று பகவான் ஏன் கூறினார்?

**பதில்:** கர்மயோகி கர்மம் செய்து கொண்டே இருந்தாலும் எப்பொழுதும் அவன் ஸந்யாஸிதான். அவன் ஸுகமாகவும், அனாயாஸமாகவும் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுகிறான் (5/3). விரைவில் பரமாத்மாவை அடைந்து விடுகிறான் (5/6). ஒவ்வொரு நிலையிலும் பகவான் அவனைக் காக்கிறார் (9/22). கர்மயோகத்தைச் சிறிதளவே கடைப்பிடித்தாலும் பிறப்பு, இறப்பு என்ற பெரிய பயத்திலிருந்து தப்பிவிடலாம் (2/40). ஆனால் ஞானயோக ஸாதனம் கஷ்டமானது (12/5). முதலில் கர்மயோகத்தைக் கடைப்பிடிக்காமல் ஞானயோகம் செய்வதும் கடினம்தான் (5/6). இக்காரணங்களால் ஞானயோகத்தைக் காட்டிலும் கர்மயோகம் சிறந்தது என்கிறார்.

**பொருத்தம்: ஸாங்க்யயோகத்தைக் காட்டிலும் கர்மயோகம் சிறந்தது என்றார். இதை உறுதிப்படுத்தும் பொருட்டு இங்கு கர்மயோகியைப் புகழ்கிறார்—**

**ज्ञेयः स नित्यसन्न्यासी यो न द्वेष्टि न काङ्क्षति।**
**निर्द्वन्द्वो हि महाबाहो सुखं बन्धात्प्रमुच्यते॥ ३॥**

**ஜ்ஞேய: ஸ நித்யஸந்ந்யாஸீ யோ ந த்₃வேஷ்டி ந காங்க்ஷதி ।**

**நிர்த்₃வந்த்₃வோ ஹி மஹாபா₃ஹோ ஸுக₂ம் ப₃ந்த₄ாத்ப்ரமுச்யதே ॥ 3 ॥**

**மஹாபா₃ஹோ** – அர்ஜுன! **ய:** – எவன், **ந த்₃வேஷ்டி** – எதையும் வெறுப்பதில்லையோ, **ந காங்க்ஷதி** – எதையும் விரும்புவதில்லையோ, **ஸ:** – அந்த கர்மயோகி, **நித்யஸந்ந்யாஸீ** – எப்பொழுதும் ஸந்யாஸியேதான் என்று, **ஜ்ஞேய:** – அறியத்தக்கவன். **ஹி** – ஏனெனில், **நிர்த்₃வந்த்₃வ:** – விருப்பு–வெறுப்பு எனும் இரட்டைகள் அற்றவன், **ஸுக₂ம்** – எளிதாகவே, **ப₃ந்த₄ாத்** – ஸம்ஸார பந்தத்திலிருந்து, **ப்ரமுச்யதே** – விடுதலை பெறுகிறான்.

அர்ஜுன! எவன் எதையும் வெறுப்பதில்லையோ, எதையும் விரும்புவதில்லையோ அந்த கர்மயோகி எப்பொழுதும் ஸந்யாஸியேதான் என்று அறியத்தக்கவன். ஏனெனில் விருப்பு–வெறுப்பு எனும் இரட்டைகள் அற்றவன் எளிதாகவே ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை பெறுகிறான்.

**கேள்வி:** இங்கு 'கர்மயோகியை நித்ய ஸந்யாஸி' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கர்மயோகி எவரிடமும் வெறுப்புக் கொள்வதில்லை, எந்தப் பொருளையும் விரும்புவதுமில்லை. இரட்டைகளுக்கு முற்றிலும் அப்பாற்பட்டவன் ஆகிறான். உண்மையில் 'ஸந்யாஸம்' என்று இந்நிலைக்குத்தான் பெயர். விருப்பு–வெறுப்பற்றவன்தான் உண்மையான ஸந்யாஸி. அவன் ஸந்யாஸ ஆசிரமத்தை ஏற்றுக் கொள்ள வேண்டியதில்லை.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸாங்க்யயோகத்தில் ஈடுபடவும் தேவையில்லை. ஆகவே இங்கு கர்மயோகியை 'நித்ய ஸந்யாஸி' என்று கூறி, "எல்லாக் கர்மங்களையும் செய்து கொண்டிருந்தாலும், அவன் எப்போதும் ஸந்யாஸியே. மேலும், அவன் ஸுகமாகவும், எளிதாகவும் கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெறுவான்" என்று அவனுடைய பெருமையை வெளிப்படுத்துகிறார்.

**கேள்வி:** கர்மயோகி கர்மபந்தத்திலிருந்து எப்படி இனிதே விடுதலை பெறுவான்?

**பதில்:** மனிதனுக்குத் தன் முன்னேற்றத்தில் தடையாக இருப்பவை விருப்பு-வெறுப்புகள்தான். இவற்றாலேதான் அவன் கர்மபந்தத்தில் சிக்குகிறான். கர்மயோகி விருப்பு-வெறுப்பற்று, பகவானுக்காகக் கடமைகளை ஆற்றுகிறான். பகவானுடைய க்ருபையினால் எளிதாகக் கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெறுகிறான்.

**கேள்வி:** 'பந்தத்திலிருந்து விடுதலை' என்று எதைச் சொல்கிறார்கள்?

**பதில்:** அஞ்ஞானத்தினால் செய்யப்படும் நல்லவும், தீயவுமான செயல்களும், அவற்றின் பயன்களுமே பந்தங்கள். இவற்றிற்கு ஆட்பட்டு இருப்பதாலேயே ஜீவன் ஓயாமல் பிறப்பு, இறப்பாகிய சக்ரத்தில் சுழன்று கொண்டிருக்கிறான். இந்தப் பிறப்பு, இறப்பு என்ற ஸம்ஸாரத்திலிருந்து நிரந்தரமாக விடுபடுவதுதான் பந்தத்திலிருந்து விடுதலை ஆகும்.

**பொருத்தம்:** ஸாதனை முறை எளிதாக இருப்பதால், ஸாங்க்யயோகத்தைக் காட்டிலும் கர்மயோகம் சிறந்தது என்று விளக்கிவிட்டு, இரண்டாவது ச்லோகத்தில் இரண்டு நிஷ்டைகளுக்கும் பயன் 'நி:ஸ்ரேயஸ்' அதாவது 'பரமகல்யாணம்' என்ற ஒன்றேதான் என்று கூறினார். அதற்கேற்ப இரண்டு ச்லோகங்களில் இரண்டு நிஷ்டைகளின் பயனும் ஒன்றுதான் என்று நிரூபிக்கிறார்—

**साङ्ख्ययोगौ पृथग्बालाः प्रवदन्ति न पण्डिताः।**
**एकमप्यास्थितः सम्यगुभयोर्विन्दते फलम्॥४॥**

**ஸாங்க்₂யயோகௌ₃ ப்ருத₂க்₃பா₃லா: ப்ரவத₃ந்தி ந பண்டி₃தா: ।**
**ஏகமப்யாஸ்தி₂த:ஸம்யகு₃ப₄யோர்விந்த₃தே ப₂லம் ॥ 4 ॥**

**ஸாங்க்₂யயோகௌ₃** – மேலே கூறிய ஸந்யாஸமும், கர்மயோகமும், **ப்ருத₂க்** – வெவ்வேறு (பயன் தரக்கூடியவை) என்று, **பா₃லா:** – அறியாதவர்கள், **ப்ரவத₃ந்தி** – கூறுகிறார்கள். **பண்டி₃தா: ந** – அறிஞர்கள் அப்படி (ச்சொல்வதில்லை. ஏனெனில்), **ஏகம் அபி** – இவற்றில் ஒன்றையாவது, **ஸம்யக் ஆஸ்தி₂த:** – உறுதியாகப் பற்றிக் கொண்டுள்ள மனிதன், **உப₄யோ: ப₂லம்** – இரண்டினுடைய பயனான (பரமாத்மாவை), **விந்த₃தே** – அடைகிறான்.

மேலே கூறிய ஸந்யாஸமும் கர்மயோகமும் வெவ்வேறு பயன் தரக்கூடியவை என்று அறியாதவர்கள் கூறுகிறார்கள். அறிஞர்கள் அப்படிச் சொல்வதில்லை. ஏனெனில் இவற்றில் ஒன்றையாவது உறுதியாகப் பற்றிக் கொண்டுள்ள மனிதன் இரண்டினுடைய பயனான பரமாத்மாவை அடைகிறான்.

**கேள்வி:** 'ஸாங்க்யயோகமும், கர்மயோகமும் வெவ்வேறானவை என்று கூறுபவர்களை அறியாதவர்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஸாங்க்யயோகம், கர்மயோகம் இரண்டுமே பரமாத்ம தத்வஞானத்தை அளித்து பரமபதத்தை அடைவிக்கும் உபாயங்கள்தாம். இரண்டிற்கும் பயன் ஒன்றே என்று இருக்கும்போது, கர்மயோகத்தின் பயன் வேறு, ஸாங்க்யயோகத்தின் பயன் வேறு என்று கற்பனை செய்துகொண்டு இரண்டு ஸாதனங்களும் வேறுபட்டவை என்று கருதுபவர்கள் அறியாதவர்கள். இரண்டு ஸாதனைகளிலும் முறை வேறானாலும் பயன் ஒன்றாவதால் உண்மையில் இரண்டும் ஒன்றே.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** பரமார்த்த ஞானத்தின் மூலமாகப் பரமபதத்தை அடைவது கர்மயோகத்தின் பயன் என்று கூறுவது சரியே. ஏனென்றால், "என்னை அடைவதற்கான அந்த புத்தியோகத்தை நான் அவர்களுக்குக் கொடுக்கிறேன் *(10/10)*. அவர்கள்பால் இரக்கம் கொண்டே, நான் ஞானரூபமான விளக்கின் மூலமாக, அவர்களுடைய அஞ்ஞானமாகிய இருளைப் போக்குகிறேன் *(10/11)*. கர்மயோகத்தினால் மனத்தூய்மை பெற்றுத் தானாகவே அந்த ஞானத்தை அடைகிறான் *(4/38)*." இவை போன்ற பகவானின் சொற்களால் இது நிரூபணமாகிறது. ஆனால் ஸாங்க்யயோகம் என்றாலே தத்வஞானம்தான். அதற்குப் பயன் தத்வஞானத்தின் மூலமாக மோக்ஷத்தை அடைவது என்பதை எப்படி ஒப்புக் கொள்ள முடியும்?

**பதில்:** பரமாத்ம தத்வஞானத்திற்கு 'ஸாங்க்யயோகம்' என்று பெயர் அன்று. தத்வஞானிகளிடமிருந்து பெற்ற உபதேசத்தினால், செய்யப்படும் ஸாதனங்களுக்குத்தான் அப்பெயர். *13/24*ல் த்யானயோகம், ஸாங்க்யயோகம், கர்மயோகம் இம்மூன்றுமே ஆத்மதர்சனம் பெறுவதற்கான, தனித்தனியான, மற்றொன்றைச் சார்ந்திராத ஸாதனங்கள் என்று கூறுகிறார். ஆகவே ஸாங்க்யயோகத்தின் பயனான பரமாத்ம தத்வஞானத்தின் மூலமாக மோக்ஷமடையலாம் என்று கூறுவது சரிதான். *18/49* முதல் *55* வரை ஞான நிஷ்டையைப் பற்றிக் கூறி, ப்ரம்மபூதனாக ஆனபிறகு, அதாவது ப்ரம்மத்திடம் இரண்டறக் கலந்து ஸாங்க்யயோகத்தை அடைந்துவிட்ட பிறகு, அதன் பயனாகத் தத்வஞானம் என்ற பராபக்தி என்னும் பரமாத்மாவின் ஸ்வரூபத்தை உள்ளபடியே அறிந்து பரமாத்மாவை அடைவதுதான் 'மோக்ஷம்' என்று கூறப்படுகிறது. ஸாங்க்யயோக ஸாதனையினால், உண்மை அறிவு ஏற்படுகிறது. அப்போது மோக்ஷம் கிட்டுகிறது என்பது இதனால் தெளிவாகத் தெரிகிறது.

**கேள்வி:** 'பண்டிதன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பரதத்வம் பற்றிய உண்மை அறிவு 'பண்டா' எனப்படும். அது உள்ளவன் 'பண்டிதன்'. உண்மையறிவுள்ள பெரியோர் 'பண்டிதர்' ஆவர்.

**கேள்வி:** ஒரு நிஷ்டையிலேயே முழுமையாக உறுதியோடு இருந்தால் இரண்டு நிஷ்டைக்குமான பயனை எவ்வாறு பெறமுடியும்?

**பதில்:** இரண்டு நிஷ்டைகளுக்கும் பயன் ஒன்றுதான். அதாவது பகவானைப் பற்றிய உண்மை அறிவின் மூலம் பகவானை அடைவதுதான். ஆகவே ஒன்றில் முழுமையாக நிலைபெற்றுவிட்டால் இரண்டினுடைய பயனையும் பெற்றுவிடலாம். கர்மயோகத்தின் பயன் ஸாங்க்யயோகம்; ஸாங்க்யயோகத்தின் பயன் பரமாத்மாவை அடைவது என்று இருந்தால் இரண்டுக்கும் பயன் வேறாகிவிடும். அதனால் இப்படிச் சொல்வது பொருந்தாது. ஏனெனில் ஸாங்க்யயோகத்தினால் பூரண நிலைபெற்றவன், கர்மயோகத்தின் பயனான ஸாங்க்ய யோகத்தை முன்பே பெற்றுவிட்டான். பிறகு கர்மயோகத்தின் பயனாக என்ன கிடைக்கப் போகிறது? மேலும், கர்மயோகத்தில் நிலைபெற்றவன் அதன் பயனான ஸாங்க்யயோகத்திலும் நிலைபெற்ற பிறகுதான் பரமாத்மாவை அடைய முடியும் என்றால் அது ஸாங்க்யயோகத்தின் பயன்தானே? அப்பொழுது ஏதாவது ஒரு நிஷ்டையில் இரண்டின் பயனையும் பெறுவான் என்று சொல்வது எப்படிப் பொருந்தும்? ஆகவே, இரண்டு நிஷ்டைகளும் ஒன்றையொன்று சார்ந்திராதவை. ஆயினும் இரண்டுக்கும் பயன் ஒன்றுதான். இப்படிச் சொன்னால்தான் பகவானுடைய சொல் அர்த்தமுள்ளதாகும். அதாவது இரண்டில் ஒரு நிஷ்டையை நன்றாகக் கடைப்பிடித்தாலும், இரண்டின் பயனையும் பெறலாம். *13/24*ல் கூட பகவான் இரண்டிற்கும் பகவானை அடைவதுதான் பயன்; இரண்டுமே பகவானை அடைவதற்கான சுதந்திரமான ஸாதனங்கள் என்று கூறுகிறார்.

**கேள்வி:** முதல் ச்லோகத்தில் அர்ஜுனன் 'கர்மஸந்யாஸம்', 'கர்மயோகம்' என்ற பெயரில் கேள்வி கேட்டார். இரண்டாவது ச்லோகத்தில் பகவானும் அதே பெயரில் இரண்டும் மேன்மையளிக்கக் கூடியவை என்று பதில் கூறினார். அதே ஸந்தர்பத்தில் ஸாங்க்யம், யோகம் என்ற பெயர்களில், இரண்டிற்கும் பயன் ஒன்றே என்றும் கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** கர்மஸந்யாஸம் என்றால் கர்மங்களைச் செய்யாமல் விடுவது என்றும், கர்மயோகம் என்றால் எப்படியாவது கர்மங்கள் செய்வதென்றும் தவறான எண்ணம் கொள்கிறார்களே. அதைத் தவிர்ப்பதற்காகவே 'கர்மஸந்யாஸம்' என்றால் ஸாங்க்யயோகம் என்றும், 'கர்மயோகம்' என்றால் செயல்களின் ஸித்தி, அஸித்திகளில் ஸமபாவனையெனும் 'யோகம்' (2/48) என்றும் பொருள் – என்று தெளிவுபடுத்தவே மாற்றுச் சொற்களை உபயோகப்படுத்துகிறார். ஆகவே மாற்றுச் சொற்களால் புதிய கருத்து கூறப்படவில்லை.

**கேள்வி:** 'அபி' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இரண்டில் ஒன்றைச் சரிவரக் கடைப்பிடித்தாலும், அது பயனைக் கொடுக்கும் என்று பொருள். நல்லமுறையில் செய்யப்படுமேயானால், இரண்டு ஸாதனைகளும் தமது பயனைக் கொடுப்பதில் முற்றிலும் சுதந்திரமான சக்தியுடையவை என்ற கருத்தையே 'அபி' என்ற சொல் குறிக்கிறது.

**यत्साङ्ख्यैः प्राप्यते स्थानं तद्योगैरपि गम्यते।**
**एकं साङ्ख्यं च योगं च यः पश्यति स पश्यति॥५॥**

**யத்ஸாங்க்₂யை: ப்ராப்யதே ஸ்த₂ாநம் தத்₃யோகை₃ரபி க₃ம்யதே ।**

**ஏகம் ஸாங்க்₂யம் ச யோக₃ம் ச ய: பஶ்யதி ஸ பஶ்யதி ॥ 5 ॥**

**ஸாங்க்₂யை:** – ஞானயோகிகளால், **யத் ஸ்த₂ாநம்** – எந்த பரமபதம், **ப்ராப்யதே** – அடையப்படுகிறதோ, **தத்** – அதுவே, **யோகை₃: அபி** – கர்மயோகிகளாலும், **க₃ம்யதே** – அடையப்படுகிறது. (ஆகவே), **ய:** – எவன் ஒருவன், **ஸாங்க்₂யம்** – ஞானயோகம், **யோக₃ம் ச** – கர்மயோகம், **ஏகம்** – (இரண்டும் ஒரே பயனைக் கொடுக்கக் கூடிய) ஒன்றென, **பஶ்யதி** – காண்கிறானோ, **ஸ: ச** – அவனே (உண்மையை), **பஶ்யதி** – காண்கிறான்.

ஞானயோகிகளால் எந்த பரமபதம் அடையப்படுகிறதோ அதுவே கர்மயோகிகளாலும் அடையப்படுகிறது. ஆகவே எவனொருவன் ஞானயோகம் கர்மயோகம் இரண்டும் ஒரே பயனைக் கொடுக்கக்கூடிய ஒன்றெனக் காண்கிறானோ அவனே உண்மையைக் காண்கிறான்.

**கேள்வி:** ஸாங்க்யயோகமும், கர்மயோகமும் ஒன்றையொன்று சார்ந்திராத முற்றிலும் தனியான வழிகள். இரண்டாவது ச்லோக விரிவுரையில் கூறப்பட்டது போல, இரண்டிற்கும் ஸாதனை முறையில் கிழக்கு-மேற்கு போல, அவ்வளவு மாறுபாடு உண்டு என்றால், இருவகை ஸாதகர்களுக்கும் பயன் மட்டும் எப்படி ஒன்றாக இருக்க முடியும்?

**பதில்:** அமெரிக்கா போக விரும்புபவன் பாரத பூமியிலிருந்து கிழக்கே போய்க் கொண்டிருந்தாலும் அமெரிக்காவை அடையலாம். மேற்கே போய்க் கொண்டிருந்தாலும் அமெரிக்காவை அடையலாம். அதுபோல ஸாதனை முறையில் ஸாங்க்யயோக, கர்மயோகங்களிடையே ஸாதனையில் வேறுபாடு இருந்தாலும் மனிதன் ஏதாவது ஒன்றைத் திடமாகப் பற்றிக் கொண்டுவிட்டானானால், இரண்டினுடைய ஒரே உயர்ந்த லக்ஷ்யமான பரமாத்மாவை அடைந்து விடலாம்.

**பொருத்தம்:** ஸாங்க்யயோகம், கர்மயோகம் இரண்டிற்கும் பயன் ஒன்று என்று சொல்லிவிட்டு, இனி கர்மயோகத்தில் ஸாதனை முறையில் உள்ள தனிப்பட்ட பெருமையை எடுத்துக் கூறுகிறார்—

**सन्न्यासस्तु महाबाहो दुःखमाप्तुमयोगतः।**
**योगयुक्तो मुनिर्ब्रह्म नचिरेणाधिगच्छति॥६॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ஸந்ந்யாஸஸ்து மஹாபா₃ஹோ து₃:க₂மாப்துமயோக₃த: ।**
**யோக₃யுக்தோ முநிர்ப்₃ரஹ்ம நசிரேணாதி₄க₃ச்ச₂தி ॥ 6 ॥**

**து** – ஆனால், **மஹாபா₃ஹோ** – நீண்ட புஜமுடைய அர்ஜுன! **அயோக₃த:** – கர்மயோகத்தைக் கடைப்பிடிக்காமலேயே, **ஸந்ந்யாஸ:** – ஸந்யாஸ நிலையை (அதாவது மனம், புலன்கள், உடல் மூலம் நடைபெறக்கூடிய எல்லாச் செயல்களிலும், தான் கர்த்தா என்ற எண்ணத்தை த்யாகம் செய்வது), **ஆப்தும்** – அடைவது, **து₃:க₂ம்** – மிகக் கடினமானது. (மேலும்), **முநி:** – பகவத் ஸ்வரூபத்தைச் சிந்தித்திருக்கும், **யோக₃யுக்த:** – கர்மயோகி, **ப்₃ரஹ்ம** – பரப்ரம்ம பரமாத்மாவை, **நசிரேண** – விரைவிலேயே, **அதி₄க₃ச்ச₂தி** – அடைந்து விடுகிறான்.

ஆனால் நீண்ட புஜமுடைய அர்ஜுன! கர்மயோகத்தைக் கடைப்பிடிக்காமலேயே ஸந்யாஸ நிலையை (மனம், புலன்கள், உடல் மூலம் நடைபெறக்கூடிய எல்லாச் செயல்களிலும் தான் கர்த்தா என்ற எண்ணத்தை த்யாகம் செய்வது) அடைவது மிகக் கடினமானது. மேலும் பகவத் ஸ்வரூபத்தைச் சிந்தித்திருக்கும் கர்மயோகி பரப்ரம்ம பரமாத்மாவை விரைவிலேயே அடைந்து விடுகிறான்.

**கேள்வி:** 'து' என்றால் என்ன பொருள்?

**பதில்:** ஸந்யாஸம் (ஸாங்க்யயோகம்), கர்மயோகம் இரண்டிற்கும் பயன் ஒன்றுதான். ஆனால் ஸாதனையில் கர்மயோகத்தைக் காட்டிலும் ஸாங்க்யயோகம் கடினமானது என்பதைத் 'து' (ஆனால்) என்ற சொல் பிரித்துக் காட்டுகிறது.

**கேள்வி:** அர்ஜுனனை 'மஹாபாஹோ' என்று அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** நீண்ட புஜங்கள் உள்ளவனை 'மஹாபாஹு' என்கிறார்கள். ஸஹோதரர்களையும், நண்பர்களையும்கூட 'பாஹு' என்று கூறுவதுண்டு. ஆகவே பகவான் இப்படி அழைப்பதன் மூலமாக மேலே சொல்லப்பட்ட கருத்தை உணர்த்தி, அர்ஜுனனுக்கு ஆர்வமூட்டுகிறார். 'உனக்கு ஸஹோதரனாக பெரிய தர்மாத்மாவான யுதிஷ்டிரரும், நண்பனாக ஸாக்ஷாத் பகவானாகிய நானும் இருக்கும்பொழுது உனக்கு ஏன் கவலை? உனக்கு எல்லாமே எளிதில் நிறைவேறும்' என்பது கருத்து.

**கேள்வி:** ஸாங்க்யயோகம், கர்மயோகம் இரண்டுமே தனித்தனி மார்க்கங்கள் என்னும்போது, கர்மயோகத்தைக் கடைப்பிடிக்காமல் ஸந்யாஸத்தை அடைவது கடினம் என்று ஏன் கூறுகிறார்?

**பதில்:** தனித்தனியான ஸாதனங்களாக இருந்தபோதிலும் இரண்டிலும் ஒன்று எளிது, மற்றது கடினம் என்ற வேறுபாடு இருக்கிறது. அதைத் தெளிவாகக் காட்டவே பகவான் இப்படிச் சொல்கிறார். ஒருவனுக்கு மோக்ஷமடைய விருப்பம் இருக்கிறது. அவன், "காணப்படும் இவ்வுலகம் கனவைப்போலப் பொய்யானது; ஒன்றேயான ப்ரம்மம்தான் ஸத்யம். இவ்வுலகம் அனைத்தும் மாயையினால் ப்ரம்மத்தின் மீது ஏறிட்டுரைக்கப்பட்டுள்ளது. உண்மையில் வேறு எதுவும் ஸத் என்பதாக இல்லவே இல்லை" என்று நினைக்கிறான். ஆனால் அவனுடைய உள்ளத்தில் தூய்மை இல்லை. விருப்பு-வெறுப்புகள், காம-க்ரோதங்கள் எல்லாம் உள்ளன. அவன் உள்ளத்தைத் தூய்மைப்படுத்த முயற்சி செய்யாமல் தன்னுடைய நினைப்பை மட்டும் நம்பிக் கொண்டு ஸாங்க்யயோகத்தைக் கடைப்பிடிக்க விரும்பினானேயானால், அவனால் 2/11-30, 18/49-55 ஆகிய ச்லோகங்களிலே கூறப்பட்டுள்ள ஸாங்க்ய நிஷ்டையை எளிதாக அடைய முடியாது. உடலில், 'நான்' என்ற அஹம்பாவமும், போகங்களில் ஈடுபாடும், அனுகூல-ப்ரதிகூலங்களால் விருப்பு-வெறுப்புகளும் உள்ள வரையில், ஞான நிஷ்டையில் ஸாதனை புரிவது, அதாவது எல்லாச் செயல்களிலும் 'நான் கர்த்தா' என்ற அபிமானத்தைத் துறப்பது முடியாத கார்யம். அதைத் துறந்த பிறகு அல்லவா, ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவிடம், தான் வேறு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



என்ற பாகுபாடின்றி இடைவிடாது ஒன்றுதல் இயலும்? இதைப் புரிந்து கொள்வதுகூடக் கடினம். இதைத் தவிர மனம் அசுத்தமாக இருப்பதால், மோஹம் கொண்டு ஜகத்தை ஆட்டிப் படைப்பவரும், நாம் செய்யும் கர்மங்களுக்குப் பயனை அளிப்பவருமான பகவானிடத்திலும், ஸ்வர்கம், நரகம் போன்ற வினைப்பயன்களிலும், நம்பிக்கை வைக்காது, பாடுபட்டுக் கர்மங்களை ஏன் செய்யவேண்டும் என்று நினைத்து நல்ல கர்மங்களைச் செய்யாமல் விட்டுவிடுவான். போகங்களின் ருசியினால் பாவமாகிற செயல்களில் ஈடுபட்டு, மேன்மை வழியிலிருந்து விலகி விடுவான். ஆகவே ஸாங்க்ய யோகம்தான் பரமாத்மாவை அடைவதற்குரிய ஒரே வழி என்று கருதும் ஸாதகன், ஸாங்க்யயோக ஸாதனையில் புகுமுன், நிஷ்காமமாக யக்ஞம், தானம், தவம் முதலிய நல்ல கர்மங்களைச் செய்து, தன் மனதில் உள்ள விருப்பு, வெறுப்பு முதலிய மாசுகளை விலக்கித் தூய்மையடையச் செய்த பிறகுதான், அவன் ஸாங்க்யயோக ஸாதனையைத் தடங்கலின்றிக் கடைப்பிடிக்க முடியும். அப்பொழுது எளிதாக அதில் வெற்றியும் கிடைக்கும். இதையெல்லாம் கருத்தில் கொண்டுதான் இங்கு 'கர்மயோகமில்லாமல் ஸந்யாஸம் பெறுவது கடினம்' என்று சொன்னார்.

**கேள்வி:** 'முநி:' என்ற அடைமொழியுடன் 'யோகயுக்த:' என்று யாரைக் குறிக்கிறார்? அவன் பரப்ரம்ம பரமாத்மாவை விரைவிலேயே அடைந்துவிடுவது எங்ஙனம்?

**பதில்:** அனைத்தையும் பகவானுடையது என்று எண்ணி வெற்றி–தோல்விகளில் ஸமபாவனையுடன், பற்றுதலையும், பயனில் விருப்பத்தையும் துறந்து, பகவானுடைய ஆணையின்படி, விதிக்கப்பட்ட எல்லாக் கடமைகளையும் செய்து கொண்டு, ச்ரத்தை, பக்தியுடன் நாமம், குணம், ப்ரபாவத்தோடு கூடிய ஸ்ரீபகவானுடைய திருவுருவத்தைச் சிந்தனை செய்து கொண்டு இருக்கிற பக்தி நிறைந்த கர்மயோகியைக் குறிப்பதற்காக, 'முநி:' என்ற அடைமொழியோடு கூட 'யோகயுக்த:' என்ற சொல் வந்துள்ளது. அவன் கர்மயோகத்தில் ஈடுபட்டவனாக இருப்பதால், பகவானுடைய க்ருபையினால், உண்மையறிவு பெற்று விரைவில் பரப்ரம்மமான பரமாத்மாவை அடைந்து விடுகிறான்.

**கேள்வி:** இங்கு 'முநி:' என்ற சொல்லுக்குச் 'சொல்லைக் கட்டுப்படுத்தியவன் அல்லது புலன்களை வெற்றி கொண்ட ஸாதகன்' என்று பொருள் கொண்டால் என்ன தவறு?

**பதில்:** பகவானுடைய ஸ்வரூபத்தைச் சிந்திக்கும் கர்மயோகி என்று பொருள் கொண்டுவிட்டால், அவன் சொல்லைக் கட்டுப்படுத்தியவனாகவும், புலன்களை வென்றவனாகவும் இருப்பான் என்று சொல்ல வேண்டியதே இல்லை.

**கேள்வி:** இங்கு 'ப்ரஹ்ம' என்ற சொல் ஸகுண பரமேசுவரனைக் குறிக்கிறதா? நிர்குண பரமாத்மாவையா?

**பதில்:** ஸகுண பரமேசுவரன் என்பதும், நிர்குண பரமாத்மா என்பதும் உண்மையில் வெவ்வேறல்ல. ஒரே பரமாத்மாவின் இரு வடிவங்கள். ஆகவே 'ப்ரஹ்ம' என்ற சொல்லுக்கு ஸகுண பரமேசுவரனையும், நிர்குண பரமாத்மாவையும் பொருளாகக் கொள்ளலாம்.

**பொருத்தம்:** மேலே சொன்ன கர்மயோகியின் இலக்கணங்களைக் கூறி அவனிடம் கர்மங்கள் ஒட்டா என்று இனிக் கூறுகிறார்—

**योगयुक्तो विशुद्धात्मा विजितात्मा जितेन्द्रियः ।**
**सर्वभूतात्मभूतात्मा कुर्वन्नपि न लिप्यते ॥ ७ ॥**

**யோக₃யுக்தோ விஶுத்₃த₄ாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்₃ரிய: ।**
**ஸர்வபூ₄தாத்மபூ₄தாத்மா குர்வந்நபி ந லிப்யதே ॥ 7 ॥**

**விஜிதாத்மா** — மனக்கட்டுப்பாடுடையவனும், **ஜிதேந்த்₃ரிய:** — புலன்களை வென்றவனும், **விஶுத்₃த₄ாத்மா** — மனத்தூய்மை உள்ளவனும், **ஸர்வ பூ₄தாத்ம பூ₄தாத்மா** — எல்லா உயிரினங்களுக்கும் ஆத்மாவான பரமாத்மாவைத் தன் ஆத்மா என்று உணர்ந்தவனுமான,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**யோக₃யுக்த:** – கர்மயோகி, **குர்வந் அபி** – கர்மங்களைச் செய்து கொண்டிருந்தாலும், **ந லிப்யதே** – அவற்றில் ஒட்டுவதில்லை.

மனக்கட்டுப்பாடுடையவனும் புலன்களை வென்றவனும் மனத்தூய்மை உள்ளவனும் எல்லா உயிரினங்களுக்கும் ஆத்மாவான பரமாத்மாவைத் தன் ஆத்மா என்று உணர்ந்தவனுமான கர்மயோகி கர்மங்களைச் செய்து கொண்டிருந்தாலும் அவற்றில் ஒட்டுவதில்லை.

**கேள்வி:** 'யோகயுக்த:' என்ற சொல்லுக்கு 'விஜிதாத்மா', 'ஜிதேந்த்ரிய:', 'விசு₂த்தாத்மா' என்று மூன்று அடைமொழிகள் கொடுத்திருப்பதன் கருத்து என்ன?

**பதில்:** மனமும், புலன்களும் ஸாதகனுக்குக் கட்டுப்படாவிட்டால், இயற்கையாகவே அவனுக்கு போகங்களில் ஈடுபாடு உண்டாகும். மனதில் விருப்பு, வெறுப்பு முதலிய மாசு இருக்கும் வரை, ஸித்தி, அஸித்திகளில் ஸமபாவனை வருவது கடினம். ஆகவே மனமும், புலன்களும் நன்றாகக் கட்டுப்படாதவரை, மனம் முழுவதும் பரிசுத்தமானதாக ஆகாது. அதுவரை ஸாதகனை உண்மையான கர்மயோகி என்று சொல்ல முடியாது. இந்த எல்லா குணநலன்களும் உள்ளவனே முழுமையான கர்மயோகி. மேலும் அவன்தான் விரைவிலேயே ப்ரம்மத்தை அடைவான் என்பதை மேலே சொன்ன அடைமொழிகள் உணர்த்துகின்றன.

**கேள்வி:** 'ஸர்வபூதாத்மபூதாத்மா' என்ற தொடருக்கு என்ன பொருள்?

**பதில்:** ப்ரம்மா முதல் புல்-பூண்டு ஈறாக எல்லா உயிர்களிலும் ஆத்மாவாக உள்ள பகவானே தன்னிடமும் ஆத்மாவாகி, அந்தர்யாமியாக விளங்குகிறார் என்ற உணர்வு கொண்டு, அவருடைய தூண்டுதலுக்கேற்பச் செயல்களில் ஈடுபடுபவனும், பகவானைத் தவிர உடல், மனம், புத்தி முதலிய பிற எந்தப் பொருளிடத்திலும் 'தன்னுடையது' என்ற எண்ணம் (மமத்வம்) இல்லாதவனுமே 'ஸர்வபூதாத்மபூதாத்மா' எனப்படுகிறான்.

**கேள்வி:** 'அபி' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஸாங்க்யயோகி எந்த ஒரு செயலுக்கும், தன்னைக் கர்த்தாவாக நினைப்பதில்லை. அவனுடைய மனம், புத்தி, புலன்கள் எல்லாச் செயல்களிலும் ஈடுபட்டாலும், அவன், "நான் எதுவுமே செய்வதில்லை, முக்குணங்களின் வேலை இது. இவற்றிற்கும், எனக்கும் ஸம்பந்தமில்லை" என்று நினைக்கிறான். ஆகவே செயல்கள் அவனிடம் ஒட்டா என்பது சரிதான். ஆனால் தன்னைக் கர்த்தாவாக நினைக்கும் கர்மயோகி கூட, பகவானுடைய ஆணையின் பேரில், பகவானுக்காக எல்லாக் கர்மங்களையும் செய்வதால், அந்த கர்மங்களின் பயனில் ஆசையும், பற்றும் இல்லாததால், அவனையும் அந்தக் கர்மங்கள் கட்டுப்படுத்தா. இதுதான் கர்மயோகியின் தனிப்பெருமை. இதைத்தான் 'அபி' என்ற சொல் குறிக்கிறது.

**பொருத்தம்:** இரண்டாவது ச்லோகத்தில் கர்மயோகத்திற்கும், ஸாங்க்யயோகத்திற்கும் பயன் ஒன்றுதான் என்று சுருக்கமாகக் கூறி, ஸாங்க்யயோகத்தைக் காட்டிலும் கர்மயோகம் எளிதானது என்ற காரணத்தினால், கர்மயோகம் சிறந்தது என்று சொன்னார். மேலும் 3ல் கர்மயோகியின் பெருமை கூறி, 4,5ல் இரண்டிற்கும் பயன் ஒன்றே என்றும், ஆனால் இரண்டும் ஒன்றிலிருந்து மற்றொன்று தனித்து இருப்பவை என்றும் தெளிவுற விளக்கினார். அதற்குப் பிறகு 6வது ச்லோகத்தின் முன்பாதியில் கர்மயோகம் இன்றி ஸாங்க்யயோகத்தைக் கைக்கொள்வது கடினம் என்று கூறி, பின்பாதியில் கர்மயோகம் எளிதென்று கூறி, 7ல் கர்மயோகியின் இலக்கணம் கூறினார். இதனால் பயனில் இரண்டும் ஒன்றானாலும், ஸாதனையில் தமக்குள் வேறுபட்டவை என்பது தெளிவாயிற்று. ஆகவே அவை இரண்டும் எத்தன்மையன என்று சொல்வதற்காக, முதலில் 8,9ல் ஸாங்க்யயோகியின் உலகியல் நடைமுறையை விளக்குகிறார்—

नैव किञ्चित्करोमीति युक्तो मन्येत तत्त्ववित्।
पश्यञ्शृण्वन्स्पृशञ्जिघ्रन्नश्नन्गच्छन्स्वपञ्श्वसन् ॥८॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



प्रलपन्विसृजन्गृह्णन्नुन्मिषन्निमिषन्नपि ।
इन्द्रियाणीन्द्रियार्थेषु वर्तन्त इति धारयन् ॥ ९ ॥

**நைவ கிஞ்சித்கரோமீதி யுக்தோ மந்யேத தத்த்வவித் ।**
**பஶ்யந் ஶ்ருண்வந் ஸ்ப்ருஶந் ஜிக்₄ரந் அஶ்நந் க₃ச்ச₂ந் ஸ்வபந் ஶ்வஸந் ॥ 8 ॥**
**ப்ரலபந் விஸ்ருஜந் க்₃ருஹ்ணந் உந்மிஷந் நிமிஷந்நபி ।**
**இந்த்₃ரியாணீந்த்₃ரியார்தே₂ஷு வர்தந்த இதி தா₄ரயந் ॥ 9 ॥**

**தத்த்வவித்** – தத்வமறிந்த, **யுக்த:** – ஸாங்க்யயோகி(யோ), **பஶ்யந்** – பார்த்தாலும், **ஶ்ருண்வந்** – கேட்டாலும், **ஸ்ப்ருஶந்** – தொட்டாலும், **ஜிக்₄ரந்** – முகர்ந்தாலும், **அஶ்நந்** – உணவு உண்டாலும், **க₃ச்ச₂ந்** – நடந்து சென்றாலும், **ஸ்வபந்** – உறங்கினாலும், **ஶ்வஸந்** – மூச்சுவிட்டாலும், **ப்ரலபந்** – பேசினாலும், **விஸ்ருஜந்** – கழித்தாலும், **க்₃ருஹ்ணந்** – பற்றினாலும், **உந்மிஷந்** – கண்களைத் திறந்தாலும், **நிமிஷந் அபி** – மூடினாலும் கூட, **இந்த்₃ரியாணி** – எல்லாப் புலன்களும், **இந்த்₃ரியார்தே₂ஷு** – (தத்தம் புலன்களுக்குரிய) பொருட்களில், **வர்தந்தே** – செயல்படுகின்றன, **இதி** – என்று (இவ்வாறு) **தா₄ரயந்** – உணர்ந்து கொண்டு, **கிஞ்சித் ஏவ** – ஸந்தேஹமின்றி எதையும், **ந கரோமி** – (நான்) செய்வதேயில்லை, **இதி மந்யேத** – என்று நினைக்க வேண்டும்.

தத்வமறிந்த ஸாங்க்ய யோகியோ பார்த்தாலும், கேட்டாலும், தொட்டாலும், முகர்ந்தாலும், உணவு உண்டாலும், நடந்து சென்றாலும், உறங்கினாலும், மூச்சுவிட்டாலும், பேசினாலும், கழித்தாலும், பற்றினாலும், கண்களைத் திறந்தாலும், மூடினாலும்கூட எல்லாப் புலன்களும் தத்தம் புலன்களுக்குரிய பொருட்களில் செயல்படுகின்றன என்று உணர்ந்து கொண்டு ஸந்தேஹமின்றி எதையும் நான் செய்வதேயில்லை என்று நினைக்க வேண்டும்.

**கேள்வி:** 'தத்த்வவித்', 'யுக்த:' என்று இரு சொற்கள் கூறுகின்ற கருத்து என்ன?

**பதில்:** காணப்படும் ப்ரபஞ்சம் முழுவதும் நொடியில் அழிவதாகவும், அநித்யமாகவும் இருப்பதால், அது கானல் நீரில் காணப்படும் நீர் அல்லது கனவில் தோன்றும் உலகம் போல மாயமானது. ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மம் ஒன்றே ஸத்யமானது. அதன் மேல் மாயையினால் இந்த ப்ரபஞ்சம் ஏறிடப்பட்டிருக்கிறது. இவ்விதம் நித்யம் எது? அநித்யம் எது என்று பகுத்தறிந்து, இடைவிடாது நிர்குணமான, உருவமற்ற, ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்மத்தில் இரண்டறக் கலந்து நிற்பவன்தான் தத்வமறிந்த யோகி. ஸாங்க்யயோக ஸாதனை புரிபவன் இப்படித்தான் ஆகவேண்டும். இதை உணர்த்துவதன் பொருட்டே, மேற்குறித்த இரண்டு சொற்களும் கொடுக்கப்பட்டுள்ளன.

**கேள்வி:** இங்கு, 'பார்ப்பது, கேட்பது முதலிய எல்லாச் செயல்களையும் செய்து கொண்டிருந்தாலும், நான் எதுவும் செய்வதில்லை' என்று சொல்வதில் என்ன கருத்து?

**பதில்:** கனவிலிருந்து விழித்துக் கொண்ட மனிதன், கனவில் தோன்றிய உடல், மனம், ப்ராணன் மற்றும் புலன்கள் வாயிலாக என்னென்ன கார்யங்கள் தன்னால் நடந்ததாகத் தோன்றினவோ, உண்மையில் அந்தச் செயல்கள் நிகழவும் இல்லை; மேலும் அவற்றுடன் தனக்குச் சிறிதளவும் தொடர்பு இல்லை என்று அறிந்து கொள்கிறான். அவ்விதமே தத்வத்தை அறிந்து கொண்டு, மாறுதலற்றதும், செயல்படாததுமான பரமாத்மாவிடம், பேதமற்ற பாவனையுடன் இருக்கும் ஸாங்க்யயோகி, "ஞானேந்த்ரியங்கள், கர்மேந்த்ரியங்கள், ப்ராணன், மனம் முதலியன மூலம் உலகியலில் செய்யப்படுகின்ற, பார்த்தல், கேட்டல் போன்ற எல்லாச் செயல்களையும் செய்யும் காலத்தில், இவையெல்லாம் மாயாமயமான மனம், ப்ராணன், புலன்களே தத்தம் மாயாமயமான விஷயங்களில் ஈடுபட்டுச் செய்கின்றன. உண்மையில் எதுவும் நடந்து

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கொண்டிருக்கவும் இல்லை; தனக்கு இவற்றுடன் சிறிதளவு தொடர்பும் இல்லை" என்று அறிந்து கொள்ள வேண்டும்.

**கேள்வி:** அப்படியானால் விருப்பு-வெறுப்பு, காமம்-க்ரோதம் முதலிய குற்றங்களை உடையவர்களும், தங்களுடைய கருத்தின்படி, தாங்கள் ஸாங்க்யயோகி ஆகிவிட்டதாக நினைத்துக் கொண்டு, 'மனம், புலன்கள் வாயிலாக எந்த நல்ல, தீய செயல்கள் நிகழ்கின்றனவோ, அவற்றோடு தங்களுக்குச் சிறிதும் தொடர்பு இல்லை' என்று சொல்ல முடியுமே! இப்படிப்பட்ட நிலையில் உண்மையான ஸாங்க்யயோகியை அடையாளம் கண்டு கொள்வது எப்படி?

**பதில்:** வெறும் வார்த்தையளவில் சொல்வதனால் மட்டுமே யாரும் ஸாங்க்யயோகியாக ஆகிவிட முடியாது. கர்மங்களோடு அவனுடைய தொடர்பும் விட்டுப் போகாது. உண்மையான ஸாங்க்யயோகியின் ஞானத்தில் உள்ளபடியே, ப்ரபஞ்சமனைத்தும் கனவுபோல மாயத்தோற்றம் என்பது தெரியும். அதனால் அவனுக்கு எதிலும் சிறிதளவுகூடப் பற்று இருக்காது. விருப்பு-வெறுப்புகள் கொஞ்சம்கூட இரா. காமம், க்ரோதம், பேராசை, மோஹம், அஹங்காரம் ஆகிய தோஷங்கள் அவனிடம் சிறிதுகூட இரா. ஆகவே விலக்கப்பட்ட தீய கார்யத்தைச் செய்யத் தூண்டுதலே இல்லாத காரணத்தால், அந்த நிலையில் பரிசுத்தமான அவனுடைய மனமும், புலன்களும் என்ன செய்தாலும், அது சாஸ்த்ரத்திற்கு ஒத்ததாகவும், உலக நன்மைக்காகவுமே ஆகும். உண்மையான ஸாங்க்யயோகிக்கு இதுதான் அடையாளம். எதுவரையில் தன்னுள்ளத்தில் விருப்பு-வெறுப்புகளும், காம-க்ரோதங்களும் சிறிதளவாவது உள்ளதாகத் தெரிய வருகின்றனவோ, அதுவரை ஸாங்க்யயோக ஸாதகன் 'தன் ஸாதனையில் குறைபாடுள்ளது' என்று அறியவேண்டும்.

**கேள்வி:** ஸாங்க்யயோகி உடலைப் பேணுவதற்காக மட்டுமே உண்பது, அருந்துவது முதலிய அவசியமான செயல்களைச் செய்வாரா? அல்லது வர்ணாசிரமங்களுக்கு ஏற்ப, சாஸ்த்ரத்திற்கு ஒத்ததான எல்லாக் கர்மங்களையும் செய்வாரா?

**பதில்:** அப்படி ஒன்றும் கட்டாயம் இல்லை. வர்ணம், ஆசிரமம், ஸ்வபாவம், ப்ராரப்தம், சேர்க்கை, பழக்கம் இவற்றில் மாறுபாடு இருக்குமாதலால், ஸாங்க்யயோகிகளின் செயல்கள் ஒரேவிதமாக இரா. 'பார்த்தல்', 'கேட்டல்', 'தொடுதல்', 'முகர்தல்', 'உண்ணுதல்' ஆகிய ஐந்து சொற்களாலும், கண், காது, சருமம், மூக்கு, நாக்கு ஆகிய ஐந்து அறிவுப் புலன்களுடைய எல்லாச் செயல்களும் முறையே சொல்லப்பட்டிருக்கின்றன. நடத்தல், கைப்பற்றுதல், உரைத்தல் என்பதால் கால், கை, வாய் இவற்றின் செயல்களும் மற்றும் வெளிப்படுத்துதல் என்பதால் புட்டம், பால்குறிகளின் செயல்களும், இவ்விதமான ஐந்து செயற்புலன்களின் செயல்களும் சொல்லப்பட்டு இருக்கின்றன. மூச்சுவிடுதல் என்னும் சொல் ப்ராண-அபானன் முதலிய ஐந்து ப்ராணன்களுடைய செயல்களைக் குறிக்கிறது. அவ்விதமே கண்களைத் திறத்தல், மூடுதல் ஆகிய சொற்கள் கூர்மம் முதலிய ஐந்து வகையான வாயுக்களின் செயல்களைக் குறிப்பன. மேலும் 'உறங்குதல்' அந்தக்கரணத்தின் செயலைக் குறிப்பது. இவ்விதம் அனைத்துப் புலன்கள், ப்ராணன், அந்தக்கரணத்தின் செயல்கள் எடுத்துக்காட்டப்பட்டிருப்பதால், ஸாங்க்யயோகி மூலமாக அவனுடைய வர்ண, ஆசிரம, இயற்கை, ப்ராரப்தம் இவற்றின் சேர்க்கைக்கேற்ப, உடலைப் பேணுவதற்காகவும், உலக நன்மைக்காகவும், சாஸ்த்ரத்திற்கு ஒத்ததான உண்பது, அருந்துவது, வியாபாரம், உபதேசம், எழுதுதல், படித்தல், கேட்டல், நினைத்தல் ஆகிய எல்லாக் கார்யங்களும் நிகழ்கின்றன.

**கேள்வி:** 3/28ல், 'குணங்கள் குணங்களில் செயல்படுகின்றன' என்கிறார். 13/29ல், 'எல்லாச் செயல்களும் ப்ரக்ருதியின் மூலம் நடைபெறுகின்றன' என்று கூறுகிறார். இங்கு, 'புலன்கள், புலன்களுக்குரிய பொருட்களில் இயங்குகின்றன' என்கிறார். இப்படி மூன்றுவிதமாகக் கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** புலன்களும், அவற்றிற்குரிய பொருட்களும், ஸத்வம் முதலிய முக்குணங்களின் விளைவுகள். முக்குணங்களும் ப்ரக்ருதியின் விளைவுகள். ஆகவே எல்லாக் கர்மங்களும் ப்ரக்ருதியினால் நடைபெறுகின்றன என்றாலும், குணங்களில் குணங்கள் செயல்படுகின்றன என்றாலும், புலன்கள் புலன்களுக்குரிய விஷயங்களில் இயங்குகின்றன என்றாலும் எல்லாம் ஒன்றுதான். ஸித்தாந்தத்தை வலுப்படுத்துவதற்காக, ஒரே விஷயம் ஸந்தர்பத்திற்கு ஏற்றவாறு மூன்றுவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

**கேள்வி:** புலன்களின் செயல்களோடு ப்ராணனும், மனமும் செய்யும் செயல்களையும் சேர்த்துச் சொல்வதால், 'புலன்கள் புலன்களுக்குரிய பொருட்களில் இயங்குகின்றன' என்பதை மட்டும் எப்படி ஏற்றுக் கொள்வது?

**பதில்:** செயல்களில் புலன்களுக்குத்தான் முக்யத்வம். ப்ராணனும் 'புலன்கள்' என்ற பெயரால் விளக்கப்பட்டுள்ளது. மனமும், உள்ளுறையும் கருவியாதலால் புலனேயாகும். இவ்விதம், 'புலன்' என்ற சொல்லால், எல்லாவற்றையும் சேர்த்துச் சொன்னதாக ஆகிறது. ஆகவே இதில் தவறில்லை.

**கேள்வி:** இங்கு 'ஏவ' என்ற சொல் என்ன கருத்தில் உபயோகப்படுத்தப்பட்டுள்ளது?

**பதில்:** 'கர்த்தா என்ற எண்ணம் சிறிதுகூட இருக்கக் கூடாது' என்பதை வலியுறுத்துவதற்காகவே 'ஏவ' என்று அழுத்தமாகச் சொல்கிறார். ஸாங்க்யயோகி சிறிதளவுகூடத் தன்னைக் கர்த்தாவாக நினைக்கக் கூடாது.

**பொருத்தம்:** இவ்விதம் ஸாங்க்யயோகியின் ஸாதனை முறையைக் கூறிவிட்டு, இனி 10,11ல் கர்மயோகியின் ஸாதனையையும், அதன் பயனையும் விளக்குகிறார்—

**ब्रह्मण्याधाय कर्माणि सङ्गं त्यक्त्वा करोति यः।**
**लिप्यते न स पापेन पद्मपत्रमिवाम्भसा॥ १०॥**

**ப்$_3$ரஹ்மண்யாத$_4$ய கர்மாணி ஸங்க$_3$ம் த்யக்த்வா கரோதி ய: ।**
**லிப்யதே ந ஸ பாபேந பத்$_3$மபத்ரமிவாம்ப$_4$ஸா ॥ 10 ॥**

**ய:** – எவன், **கர்மாணி** – அனைத்துக் கர்மங்களையும், **ப்$_3$ரஹ்மணி** – பரமாத்மாவிடம், **ஆத$_4$ய** – அர்ப்பணம் செய்து, **ஸங்க$_3$ம்** – (உலகியல்) பற்றுதலை, **த்யக்த்வா** – துறந்து, **கரோதி** – கர்மங்களைச் செய்கிறானோ, **ஸ:** – அவன், **அம்ப$_4$ஸா** – தண்ணீரில், **பத்$_3$மபத்ரம் இவ** – தாமரை இலை ஒட்டாமல் இருப்பதுபோல, **பாபேந** – பாவத்தினால், **ந லிப்யதே** – பாதிக்கப்படுவதில்லை.

எவன் அனைத்துக் கர்மங்களையும் பரமாத்மாவிடம் அர்ப்பணம் செய்து உலகியல் பற்றுதலைத் துறந்து கர்மங்களைச் செய்கிறானோ, அவன் தண்ணீரில் தாமரை இலை ஒட்டாமல் இருப்பதுபோலப் பாவத்தினால் பாதிக்கப்படுவதில்லை.

**கேள்வி:** 'எல்லாக் கர்மங்களையும் பரமாத்மாவிடம் ஸமர்ப்பணம் பண்ணுவது' என்றால் என்ன?

**பதில்:** பகவானிடம் பக்தி, தேவர்களுக்குப் பூஜை, தாய்-தந்தையர் முதலிய பெரியோர்களுக்கு ஸேவை, யாகம், தானம், தவம், வர்ணாசிரம தர்மத்திற்கு உட்பட்டுச் செல்வம் தேடுவது, உடல் பேணுவதற்குரிய கார்யங்கள் எல்லாவற்றையும் சாஸ்த்ர முறைப்படி மமகாரமின்றி, எல்லாம் பகவானுடையவை; அவருக்காக, அவர் ஆணைப்படி, அவர் விருப்பப்படி, அவர் செய்விக்கும் விதத்தில் செய்கிறோம் என்று, பொம்மலாட்ட பொம்மையைப் போலச் செயல் புரிவதுதான், பரமாத்மாவிடம் எல்லாக் கர்மங்களையும் அர்ப்பணம் செய்வதாகும்.

**கேள்வி:** பற்றைத் துறந்து கர்மங்களைச் செய்வது என்றால் என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** மனைவி, மக்கள், செல்வம், வீடு ஆகிய போகப் பொருட்கள் எல்லாவற்றிலும், ஸ்வர்கம் முதலிய மேலுலகங்களிலும், உடலிலும், செய்கின்ற செயல்களிலும், மதிப்பு, பெருமை, புகழ் முதலிய எல்லாவற்றிலும், பற்றை ஒழித்து, மேலே சொன்னவிதம் கடமைகளை ஆற்றுவதே, 'பற்றைத் துறந்து கர்மங்களைச் செய்வதாகும்'.

**கேள்வி:** கர்மயோகி சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட நல்ல கர்மங்களைச் செய்கிறான். பாவ கர்மங்கள் செய்வதே இல்லை. பாவ கர்மம் செய்யாதபோது, பாவம் அவனை ஒட்டும் என்று நினைப்பதற்கே இடமேயில்லை. அப்படியிருக்க 'அவனைப் பாவம் ஒட்டாது' என்று இங்கே கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** விதிக்கப்பட்ட கர்மங்கள்கூட முற்றிலும் குற்றமற்றவை அல்ல. எக்கார்யத்திலும் சிற்றுயிர்களுக்குத் தீங்கு ஏற்படக் கூடுமாதலால், சிறிது பாவம் ஏற்படவே செய்யும். இதைத்தான் பகவானும், '*ஸர்வாரம்ப₄ா ஹி தோ₃ஷேண தூ₄மேநாக்₃நிரிவாவ்ருதா:*' (18/48). 'எல்லாச் செயல்களையும், நெருப்பைப் புகை சூழ்வதுபோலக் குற்றம் சூழ்ந்துதான் இருக்கும்' என்கிறார். ஆகவே பயனில் விருப்பும், பற்றுதலும் கொண்டு ஸுகபோகத்திற்காகவோ, இன்பவாழ்விற்காகவோ கர்மம் செய்கிறவன் பாவத்திலிருந்து தப்ப முடியாது. ஆசையும், பற்றுதலும்தான் மனிதனைக் கட்டுப்படுத்துகின்றன. ஆகவே ஆசையும், பற்றுதலும் சிறிதுகூட இல்லாதவன்தான், கடமையை ஆற்றும்போது நேரும் சிறிது பாவம் கூட ஒட்டாதவனாக இருப்பான் என்று கூறுகிறார்.

**कायेन मनसा बुद्ध्या केवलैरिन्द्रियैरपि।**
**योगिनः कर्म कुर्वन्ति सङ्गं त्यक्त्वात्मशुद्धये॥ ११॥**

**காயேந மநஸா பு₃த்₃த்₄யா கேவலைரிந்த்₃ரியைரபி ।**
**யோகி₃ந: கர்ம குர்வந்தி ஸங்க₃ம் த்யக்த்வாத்மஶுத்₃த₄யே ॥ 11 ॥**

**யோகி₃ந:** – கர்மயோகிகள் (மமகாரமின்றி), **கேவலை:** – வெறும், **இந்த்₃ரியை:** – புலன்களாலும், **மநஸா** – மனதாலும், **பு₃த்₃த்₄யா** – புத்தியினாலும், **காயேந அபி** – உடலாலும்கூட, **ஸங்க₃ம் த்யக்த்வா** – பற்றைத் துறந்து, **ஆத்மஶுத்₃த₄யே** – மனத்தூய்மையை அடையும் பொருட்டு, **கர்ம** – கர்மத்தை, **குர்வந்தி** – செய்கிறார்கள்.

கர்மயோகிகள் மமகாரமின்றி வெறும் புலன்களாலும், மனதாலும், புத்தியினாலும், உடலாலும்கூடப் பற்றைத் துறந்து மனத்தூய்மையை அடையும் பொருட்டு கர்மத்தைச் செய்கிறார்கள்.

**கேள்வி:** இங்கு 'கேவலை:' என்ற அடைமொழியின் கருத்து என்ன? இதனைப் புலன்களோடு மட்டும் சேர்த்துக் கொள்ள வேண்டுமா? அல்லது மனம், புத்தி, உடலோடும் சேர்த்துக் கொள்ளலாமா?

**பதில்:** 'கேவலை:' என்பது மமகாரம் இன்மையைக் குறிப்பிடுகிறது. இங்கு அது புலன்களுக்கு அடைமொழியாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆயினும் மனம், புத்தி, உடலோடும் இதைச் சேர்த்துக் கொள்ளவேண்டும். கர்மயோகி மனம், புத்தி, உடல்களைத் தன்னுடையவை என்று நினைப்பதில்லை. இவையெல்லாம் பகவானுடையவை என நினைக்கிறான். உலகியலில் தன்னலம் பாராட்டாமல் நிஷ்காமமாக, பகவானுடைய உந்துதலுக்குக் கட்டுப்பட்டு, அவர் செய்விக்கும் வகையில், எல்லாக் கடமைகளையும் செய்கிறான்.

**கேள்வி:** 'எல்லாக் கர்மங்களையும் ப்ரம்மத்திடம் அர்ப்பணம் செய்து, பற்றில்லாமல் அவற்றைச் செய்யவேண்டும்' என்று 10வது ச்லோகத்திலேயே பகவான் சொல்லிவிட்டாரே! மறுபடியும் 'பற்றுதலை விட்டுவிட்டு' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கர்மங்களை 'ப்ரம்மத்திடம் அர்ப்பணம் செய்' என்றும், 'பற்றுதலைத் துறந்து விடு' என்றும் பகவான் முதலில் சொல்லிவிட்டார். ஆனால் அங்கே பக்தியை முக்யமாகக்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கொண்ட கர்மயோகியைப் பற்றிக் கூறினார். இதே அத்யாயத்தில் 8,9வது ச்லோகங்களில், ஸாங்க்யயோகியின் மனம், புத்தி, புலன்கள், ப்ராணன், உடல் இவற்றின் மூலம் ஆற்றப்படும் கர்மங்கள் எவ்வாறு அமைகின்றன என்று சொன்னார். அது போல, இங்கே கர்மத்தை முக்யமாகக் கொண்ட கர்மயோகியின் செயல்கள் எவ்வித மனப்பாங்குடன் அமையவேண்டும் என்பதை விளக்குவதற்காக, மனம், புத்தி, புலன்கள், உடல்களிலும், அவற்றின் இயக்கங்களிலும் மமகாரம், பற்றுதலின்றி மனத்தூய்மைக்காகவே கர்மயோகி கர்மம் செய்யவேண்டுமென்று கூறுகிறார். இப்படிக் கர்மத்தின் அடிப்படையில் ஈடுபடும் கர்மயோகியின் செயலின் தன்மையையும், மனப்பாங்கையும் சொல்லும் முறையில் பற்றினைத் துறக்கவேண்டும் என்கிறார்.

**பொருத்தம்: இவ்விதம் பக்தி ப்ரதானமான கர்மயோகி கர்மங்களைச் செய்யும்போது அவனிடம் பாவம் ஒட்டாது. கர்ம ப்ரதானமான கர்மயோகத்தினால் மனம் பரிசுத்தமாகும் என்று பிரித்துச் சொன்ன பிறகுகூட ஒரு கேள்வி எழலாம். கர்மயோகத்திற்கு மனம் தூய்மை பெறுவது மட்டும்தான் பயனா? அல்லது வேறு பயனும் உண்டா? இவ்விதமாகக் கர்மத்தைச் செய்யாமல், பற்றுடன் நல்ல கார்யம் செய்தால் என்ன தீங்கு விளையும்? இந்த விஷயத்தைத் தெளிவாகத் தெரிவிப்பதற்காக, பகவான் அடுத்துக் கூறுகிறார்—**

**युक्तः कर्मफलं त्यक्त्वा शान्तिमाप्नोति नैष्ठिकीम्।**
**अयुक्तः कामकारेण फले सक्तो निबध्यते॥ १२॥**

**யுக்த: கர்மப₂லம் த்யக்த்வா ஶாந்திமாப்நோதி நைஷ்டி₂கீம் ।**
**அயுக்த: காமகாரேண ப₂லே ஸக்தோ நிப₃த்₄யதே ॥ 12 ॥**

**யுக்த:** – கர்மயோகி, **கர்மப₂லம்** – கர்மத்தின் பயனை, **த்யக்த்வா** – துறந்து, **நைஷ்டி₂கீம்** – பகவானை அடைவது என்கிற, **ஶாந்திம்** – அமைதியை, **ஆப்நோதி** – பெறுகிறான். (ஆனால்), **அயுக்த:** – பயனில் பற்றுடையவன், **காமகாரேண** – ஆசையின் உந்துதலினால், **ப₂லே** – பயனில், **ஸக்த:** – பற்றுக் கொண்டு, **நிப₃த்₄யதே** – தளைக்கப்படுகிறான்.

கர்மயோகி, கர்மத்தின் பயனைத் துறந்து பகவானை அடைவது என்கிற அமைதியைப் பெறுகிறான். ஆனால் பயனில் பற்றுடையவன் ஆசையின் உந்துதலினால் பயனில் பற்றுக் கொண்டு தளைக்கப்படுகிறான்.

**கேள்வி:** 8வது ச்லோகத்தில் 'யுக்த:' என்ற சொல்லுக்கு ஸாங்க்யயோகி என்று பொருள் கூறப்பட்டது. இங்கு கர்மயோகி என்று பொருள் கூறுவானேன்?

**பதில்:** ஒரு சொல்லுக்குப் பொருள் ஸந்தர்பத்திற்கு ஏற்றவாறு அமையும். இந்த முறையில் கீதையில் 'யுக்த:' என்ற சொல் ஸந்தர்பத்திற்கு ஏற்றவாறு, வெவ்வேறு பொருள்களில் வருகிறது. 'யுக்த' என்ற சொல் 'யுஜ்' என்ற வேர்ச் சொல்லிலிருந்து உண்டாகிறது. அதன் பொருள் 'சேர்தல்' என்பதாகும். 'யுக்த:' என்றால் 2/61ல் புலன் அடக்கமுள்ளவன்; 6/8ல் பகவானை அடைந்துவிட்ட தத்வஞானி; 6/17ல் உசிதமான உணவு நடைமுறை; 6/18ல் த்யானயோகி; 7/22ல் ச்ரத்தையுடன் கூடினவன்; 5/8ல் ஸாங்க்யயோகி என்றும் பல பொருள்கள் உண்டு. அங்கே புலன்கள் அனைத்தும் அவ்வவற்றின் பொருட்களில் இயங்குகின்றன என்றறிந்து, 'தான் கர்த்தா அல்ல' என்ற தத்வமறிந்தவனை 'யுக்த:' என்ற சொல் குறிப்பதால் ஸாங்க்யயோகி என்று பொருள்படுகிறது. ஆனால், இங்கு கர்மத்தின் பயனை த்யாகம் செய்து என்று கூறுமிடத்தில் வருகிறபடியால், அது கர்மயோகி என்று பொருள்படும்.

**கேள்வி:** 'நைஷ்டிகீ ஶாந்தி' என்ற தொடருக்கு 'பகவானை அடைவதாகிய சாந்தி' என்று பொருள் கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


**பதில்:** 'நைஷ்டிகீ' என்றால் 'நிஷ்டையிலிருந்து தோன்றிய' என்று பொருள். இதை அனுஸரித்து, கர்மயோகத்தில் உறுதியுடன் நிலைபெற்று, பகவானை அடைவது எனும் பேரமைதி நிலைதான் 'நைஷ்டிகீ ஶாந்தி' ஆகும்.

**கேள்வி:** 'அயுக்த' என்ற சொல்லுக்கு, 'தடுமாறினவன்' அல்லது 'சோம்பேறி', 'கர்மத்தில் ஈடுபடாதவன்' என்று பொருள் கூறாமல், பயனில் பற்றுடையவன் என்று கூறுவானேன்?

**பதில்:** ஆசையினால் பயனில் கருத்துடையவன் என்று ச்லோகத்தில் வருவதால் இங்கு 'அயுக்த' என்ற சொல்லுக்குப் பயனில் பற்றுடையவன் என்று பொருள் கொள்வதே உசிதம்.

**கேள்வி:** இங்கு 'பந்தம்' என்றால் என்ன?

**பதில்:** பயனில் கருத்துடன் கடமைகளை ஆற்றுவதால், அவற்றின் பயனாக, தெய்வ-மனிதப் பிறவிகளில் மாறி மாறிப் பிறப்பது என்று பொருள்.

**பொருத்தம்: கர்மயோகி கர்மத்தின் பயனில் கட்டுப்படாமல் பரமாத்மாவை அடைவது என்ற சாந்தியைப் பெறுகிறான். பயனில் பற்றுள்ளவன் பிறப்பு, இறப்புச் சுழலில் சிக்குகிறான் என்று கூறினார். ஸாங்க்யயோகி என்ன ஆவான் என்பதை இனிச் சொல்கிறார்—**

**सर्वकर्माणि मनसा सन्न्यस्यास्ते सुखं वशी।**
**नवद्वारे पुरे देही नैव कुर्वन्न कारयन्॥ १३॥**

**ஸர்வகர்மாணி மனஸா ஸந்ந்யஸ்யாஸ்தே ஸுக₂ம் வஶீ ।**
**நவத்₃வாரே புரே தே₃ஹீ நைவ குர்வந்ந காரயந் ॥ 13 ॥**

**வஶீ** – மனதைத் தன்வசப்படுத்தி ஸாங்க்யயோகத்தைக் கடைப்பிடிக்கின்ற, **தே₃ஹீ** – மனிதன், **ந குர்வந்** – (தான்) செய்யாமலும், **ந காரயந் ஏவ** – செய்விக்காமலுமே, **நவத்₃வாரே** – ஒன்பது வாயில்களுடைய உடலாகிய, **புரே** – வீட்டில், **ஸர்வகர்மாணி** – எல்லாச் செயல்களையும், **மனஸா** – மனதால், **ஸந்ந்யஸ்ய** – துறந்து, **ஸுக₂ம்** – (ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்ம ஸ்வரூபத்தில்) ஆனந்தமயமாக, **ஆஸ்தே** – ஆழ்ந்து இருக்கிறான்.

மனதைத் தன்வசப்படுத்தி ஸாங்க்ய யோகத்தைக் கடைப்பிடிக்கின்ற மனிதன் தான் செய்யாமலும் செய்விக்காமலுமே ஒன்பது வாயில்களுடைய உடலாகிய வீட்டில் எல்லாச் செயல்களையும் மனதால் துறந்து ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்ம ஸ்வரூபத்தில் ஆனந்தமயமாக ஆழ்ந்து இருக்கிறான்.

**கேள்வி:** ஸாங்க்யயோகிக்குத்தான் உடல், புலன்கள், மனம் எல்லாம் மாயத்தோற்றம் ஆயிற்றே. அவற்றுடன் அவனுக்கு ஸம்பந்தமே இல்லையே! அப்படி இருக்க அவனை 'தேஹீ' (தேஹம் உடையவன்); 'வஶீ' (வசப்படுத்தியவன்) என்றெல்லாம் கூறுவானேன்?

**பதில்:** உண்மைதான். ஸாங்க்யயோகி தன் நிலையில், உடல், புலன்கள், மனம் இவற்றுடன் ஸம்பந்தம் வைத்துக் கொள்ளவில்லை. எப்பொழுதும் ஸத் சித் ஆனந்த மயமான பரமாத்மாவிடம் இரண்டறக் கலந்து நிற்கிறான். ஆயினும் உலகத்தார் அவனை உடல் ஸம்பந்தமுடையவனாக நினைப்பதனாலேயே அவனை 'தேஹீ' என்கிறார். இப்படியே 14/20லும் குணாதீதனையும் 'தேஹீ' என்று கூறுகிறார். உலகப் பார்வையில் அவனுடைய மனம், புலன்கள், புத்தியெல்லாம் குறிப்பிட்ட கட்டுப்பாட்டுடன் சாஸ்த்ரத்துக்கு ஒத்த முறையில் உலக நன்மைக்காகவே செயல்படுகின்றன என்பதைக் குறிக்கவே 'வஶீ' என்கிறார்.

**கேள்வி:** இங்கு 'ஏவ' என்ற சொல், எந்தக் கருத்தைச் சுட்டிக்காட்டுகிறது?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** ஸாங்க்யயோகிக்கு உடலிலும், புலன்களிலும் அஹங்காரம் இல்லாதபடியால், அவை செயல்படும்போது, அவன் கர்த்தா ஆவதில்லை. மமகாரம் இல்லாததால் அவன் அவற்றைச் செய்விப்பவனாகவும் ஆவதில்லை. ஸாங்க்யயோகிக்கு அஹங்காரம், மமகாரம் அறவே கிடையாது. ஆகவே, எவ்விதத்திலும் உடல், புலன்கள், மனம் இவற்றின் செயல்களில் தன்னைக் கர்த்தா என்றும், இயக்குபவன் என்றும் நினைத்துக் கொள்வதே இல்லை என்று கூறுகிறார்.

**கேள்வி:** இங்கு 'நவத்வாரே புரே ஆஸ்தே' (ஒன்பது வாயில்கள் உள்ள வீட்டில் வாழ்கிறான்) என்று பொருள் கூறாமல், 'நவத்₃வாரே புரே ஸர்வகர்மாணி மநஸா ஸந்யஸ்ய' (ஒன்பது வாயில்களுள்ள உடலாகிய வீட்டில் எல்லாச் செயல்களையும் மனதால் துறந்து) என்று சொற்களைச் சேர்த்துப் பொருள் கொள்வதன் கருத்து என்ன?

**பதில்:** ஒன்பது வாயில்கள் உள்ள தேஹமாகிய வீட்டில் ஸாங்க்யயோகி இருக்கிறான் என்பதில் பெருமைக்குரிய விஷயம் ஒன்றுமில்லை. இப்படிச் சொல்வது அவனுடைய நிலைக்கு எதிரானது. உடலாகிற வீட்டிலேதான் ஸாதாரண மனிதனும் இருக்கிறான். ஸாங்க்யயோகிக்கு இதில் என்ன பெருமை இருக்கிறது? உடல் என்ற வீட்டில், புலன்கள் முதலிய ப்ரக்ருதிப் பொருட்களில், கர்மங்களைத் துறப்பதைச் சுட்டிக் காட்டுவதன் மூலம், ஸாங்க்யயோகியின் தனிச்சிறப்பு வெளியாகிறது. ஏனெனில் ஸாங்க்யயோகிதான் இப்படிச் செய்ய முடியும். ஸாதாரண மனிதன் செய்ய முடியாது. அதனால் இப்படிப் பொருள் கொள்வதே முறையாகும்.

**கேள்வி:** 'புலன்களின் செயல்களைப் புலன்களில் துறந்து' என்று சொல்லாமல் 'ஒன்பது வாயில்கள் உள்ள வீட்டில் துறந்து' என்று ஏன் கூறுகிறார்?

**பதில்:** இரு கண்கள், இரு காதுகள், இரு நாசி த்வாரங்கள், ஒரு வாய் என்ற ஏழு வாயில்கள் மேலே. பால்குறி, புட்டம் என்று இரு வாயில்கள் கீழே. புலன்களுடன் கூடிய இந்த பிண்ட சரீரத்தில் இந்த ஒன்பது வாயில்களைக் குறிப்பிட்டுச் சொல்வதால், 'கர்மங்களைப் புலன்களிலேயே விட்டுவிடுவது' என்பதுதான் தாத்பர்யம். ஏனென்றால் புலன்கள் முதலிய எல்லாவற்றிற்கும் உடல்தான் ஆதாரம். ஆகவே உடலில் விடுவது என்று சொல்வதில் புதிய இரண்டாவது கருத்து ஒன்றுமில்லை. 8,9வது ச்லோகங்களில் சொன்னவையே இங்கும் கூறப்படுகின்றன. சொற்கள்தான் வேறுபட்டவை. அங்கு புலன்களின் செயல்கள். இங்கு புலன்களின் இடங்கள் கூறப்பட்டன. இவ்வளவுதான் வேறுபாடு. உட்கருத்தில் மாறுபாடு இல்லை.

**கேள்வி:** 'மனதிலிருந்து கர்மங்களைத் துறப்பது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எல்லாக் கர்மங்களையும் விட்டுவிட்டால், மனிதனுடைய அன்றாட வாழ்க்கைகூட நடக்காது. ஆகவேதான் விவேகத்தோடு 'செய்கிறேன் – செய்விக்கிறேன்' என்ற எண்ணத்தை விலக்குவதுதான் ஸாங்க்யயோகியின் த்யாகம் ஆகும். இக்கருத்தைத் தெளிவாகக் காட்டுவதற்காகவே, மனதிலிருந்து கர்மங்களைத் துறக்க வேண்டும் என்று சொல்லப்பட்டு இருக்கிறது.

**கேள்வி:** ச்லோகத்திற்குப் பொருள் உரைக்கையில் 'ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்ம ஸ்வரூபத்தில் ஆழ்ந்து இருக்கிறான்' என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் ச்லோகத்தில் இப்படிப்பட்ட சொற்கள் எவையும் இல்லை. அப்படி இருக்கும்போது பொருளுரைக்கையில் ஏன் இந்த வாக்கியத்தைச் சேர்க்க வேண்டும்?

**பதில்:** 'ஆஸ்தே' (ஆழ்ந்து இருக்கிறான்) என்ற சொல் வருவதால், 'எங்கு' என்ற கேள்வி எழுகிறது. மூல ச்லோகத்தில் இதற்குரிய சொல் இல்லாதபோதிலும், கருத்துக்கேற்ப வருவித்துச் சொல்வதுதான் முறையாகும். இங்கு ஸாங்க்யயோகியைப் பற்றிய ஸந்தர்பம். ஸாங்க்யயோகி உண்மையில் ஸத் சித் ஆனந்த பரமாத்ம ஸ்வரூபத்தில்தான் ஸுகமாக நிலை கொள்ள முடியும். வேறு எங்கும் அன்று. ஆகவே இந்த வாக்கியம் சேர்க்கப்பட்டு இருக்கிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொருத்தம்: ஆத்மா உண்மையில் கர்மம் செய்வதுமில்லை; புலன்கள் முதலியவற்றால் செய்விப்பதுவும் இல்லை என்று இருக்கும்போது, எல்லா மனிதர்களும் தங்களையே கர்மத்தைச் செய்பவர்களாக ஏன் நினைக்கிறார்கள்? அவர்கள் கர்மபலனை அனுபவிப்பவர்களாக ஏன் ஆகிறார்கள் என்பதற்குப் பதில் கூறுகிறார்—

**न कर्तृत्वं न कर्माणि लोकस्य सृजति प्रभुः।**
**न कर्मफलसंयोगं स्वभावस्तु प्रवर्तते॥ १४॥**

**ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு₄: ।**
**ந கர்மப₂லஸம்யோக₃ம் ஸ்வப₄ாவஸ்து ப்ரவர்ததே ॥ 14 ॥**

**ப்ரபு₄:** – பகவான், **லோகஸ்ய** – மனிதர்களுடைய, **கர்த்ருத்வம்** – கர்த்தா என்னும் தன்மையை, **ந ஸ்ருஜதி** – உண்டுபண்ணுவதில்லை. **கர்மாணி** – கர்மங்களையும், **ந (ஸ்ருஜதி)** – உண்டுபண்ணுவதில்லை. **கர்மப₂லஸம்யோக₃ம்** – கர்மத்தின் பயனோடு சேர்த்து வைத்தலையும், **ந (ஸ்ருஜதி)** – ஏற்படுத்துவதில்லை. **து** – ஆனால், **ஸ்வப₄ாவ:** – இயல்புதான், **ப்ரவர்ததே** – செயல்படுகிறது.

பகவான் மனிதர்களுடைய கர்த்தா என்னும் தன்மையை உண்டு பண்ணுவதில்லை. கர்மங்களையும் உண்டு பண்ணுவதில்லை. கர்மத்தின் பயனோடு சேர்த்து வைத்தலையும் ஏற்படுத்துவதில்லை. ஆனால் இயல்புதான் செயல்படுகிறது.

**கேள்வி:** இங்கு 'ப்ரபு' என்ற சொல் யாரைக் குறிக்கிறது? மனிதர்களுடைய கர்த்தா என்னும் தன்மை, கர்மம், மேலும் கர்மபலனோடு ஒட்டுதல் ஆகியவற்றை உலகத்தைப் படைப்போனாகிய பகவான் செய்வதில்லை என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அகில உலகையும் படைத்துக் காத்துத் தன்னுள் அடக்கிக் கொள்ளும் ஸர்வ வல்லமை படைத்த பகவானை 'ப்ரபு' என்ற சொல் குறிக்கிறது. ஏனெனில் சாஸ்த்ரங்களில் எங்கெல்லாம் ஸ்ருஷ்டி முதலான கர்மங்களைச் செய்கிறவர் என்ற பேச்சு வருகிறதோ, அங்கெல்லாம் அது ஸகுண ப்ரம்மத்தைத்தான் குறிக்கிறது. பகவான் மனிதனிடம் 'தான் செய்பவன்' என்ற எண்ணத்தை உண்டாக்குவதில்லை. மனிதன், தான் செய்யும் கார்யங்களில் கர்த்தா என்ற அபிமானம் கொண்டானானால், அதற்கு பகவான் பொறுப்பு அல்லர். அஞ்ஞானியான மனிதன் அஹங்காரத்திற்கு ஆட்பட்டு, தன்னைக் கர்த்தா என்று நினைக்கிறான் (3/27). நல்ல செயலையோ, தீய செயலையோ, இவன் செய்யவேண்டும் என்று பகவான் திட்டமிடுவதில்லை. இப்படி பகவானே திட்டமிட்டால், 'செய்–செய்யாதே' என்று கூறும் சாஸ்த்ரங்கள் பயனற்றுப் போய்விடும். கர்மபயனின் சேர்க்கையை அமைப்பதும் பகவான் அல்லர். பயன் மனிதனுடைய அஞ்ஞானத்தினால் மனிதனிடம் ஒட்டிக் கொள்கிறது என்று பொருள். சிலர் பயனில் ருசி கொண்டு, தான் கர்த்தா; தனக்கு இன்ன பயன் வேண்டுமென்று நினைத்துக் கர்மத்தைச் செய்து, அதில் ஒட்டிக் கொள்கிறார்கள்.

கர்த்தா, கர்மம், பயன் மூன்றும் பகவானுடைய செயலானால் மனிதன் இவற்றிலிருந்து மீளவே முடியாது. மனிதனைக் கரையேற்றுவதற்கு எந்த வழியும் இல்லாமல் போகும். ஆகவே ஸாதகன் கர்மங்களில் கர்த்தா என்ற அபிமானத்தை முன் சொன்னவாறு ப்ரக்ருதியிடம் தள்ளி (5/8,9) அல்லது பகவானிடம் அர்ப்பணம் செய்து (5/10) அல்லது கர்மத்தின் பயனையும், பற்றுதலையும் அறவே துறந்து (5/12), கர்மங்களிலிருந்து தொடர்பைத் துண்டித்துக் கொள்ளவேண்டும் (4/20). இந்த எல்லாக் கருத்துக்களையும் தெரிவிப்பதற்காகவே பகவான், மனிதனுக்கு 'கர்த்தா' என்ற அபிமானத்தையும், கர்மத்தையும், கர்மத்தின் பயனையும் படைப்பதில்லை என்று இங்கே கூறப்பட்டுள்ளது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** இங்கு இயல்புதான் இயங்குகிறது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஆத்மாவுக்கு, கர்த்தா, கர்மம், கர்மத்தின் பயன் ஆகியவற்றோடு உண்மையில் ஸம்பந்தமில்லை என்றால், பகவானும் இப்படிச் சமத்தவில்லை என்றால், எப்படி இவை தோன்றலாயின என்கிற கேள்விக்கு இதுதான் பதில். ஸத்வ, ரஜஸ், தமோ குணங்கள், விருப்பு-வெறுப்பு முதலிய மனவிகாரங்கள், முன் செய்த நல்லவும், தீயவுமான கர்மங்கள், அவற்றின் மனப்பதிவுகளான ஸம்ஸ்காரங்கள் இவையெல்லாம் சேர்ந்த உருவமான ப்ரக்ருதியே – இயற்கையே எல்லாவற்றையும் செய்கிறது. இந்த இயற்கைக்கு, ஜீவர்களுடன் அநாதிகாலமாகத் தொடர்பு இருக்கிறது. ஆகையால் ஜீவர்களிடம் 'தானே கர்த்தா' என்ற எண்ணம் தொடர்ந்து கொண்டே இருக்கிறது. அதாவது அஹங்காரத்தினால் மயக்கமடைந்து, தங்களையே அவற்றின் 'கர்த்தா' (செய்கிறவன்) என்று நினைத்துக் கொள்கிறார்கள் (3/27). இவ்விதமே கர்மத்துடனும், கர்மபலனுடனும் அவர்களுக்குப் பிணைப்பு உண்டாகி விடுகிறது. அவர்கள் அவற்றினுடைய பந்தத்தில் சிக்கிவிடுகிறார்கள். உண்மையில் ஆத்மாவுக்கு இவற்றுடன் ஒருவித ஸம்பந்தமுமில்லை. இதுவே 'இயல்புதான் இயங்குகிறது' என்பதன் கருத்து.

**பொருத்தம்:** ஸாதகன் எல்லாக் கர்மங்களையும், கர்மபலன்களையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்வதன் மூலம் கர்மபலன்களில் இருந்து தனது தொடர்பைத் துண்டித்துக் கொள்கிறானேயானால், அவனுடைய நல்ல-தீய கர்மங்களின் பயன்களுக்கு பகவான் உரிமையாளராக ஆகிறாரா, இல்லையா என்பதற்குப் பதில் கூறுகிறார்—

**नादत्ते कस्यचित्पापं न चैव सुकृतं विभुः ।**
**अज्ञानेनावृतं ज्ञानं तेन मुह्यन्ति जन्तवः ॥ १५ ॥**

**நாத₃த்தே கஸ்யசித்பாபம் ந சைவ ஸுக்ருதம் விபு₄: ।**

**அஜ்ஞாநேநாவ்ருதம் ஜ்ஞாநம் தேந முஹ்யந்தி ஜந்தவ: ॥ 15 ॥**

**விபு₄:** – எங்கும் நிறைந்த பகவான், **கஸ்யசித்** – யாருடைய, **பாபம்** – பாவச் செயலையும், **ந ஆத₃த்தே** – ஏற்பது இல்லை. **ஸுக்ருதம் ஏவ ச** – நற்செயல்களையும், **ந (ஆத₃த்தே)** – ஏற்பது இல்லை. (ஆனால்), **அஜ்ஞாநேந** – அஞ்ஞானத்தினால், **ஜ்ஞாநம்** – ஞானம், **ஆவ்ருதம்** – மூடப்பட்டிருக்கிறது. **தேந** – அதனால், **ஜந்தவ:** – அஞ்ஞானிகளான எல்லா மனிதர்களும், **முஹ்யந்தி** – மோஹம் அடைகிறார்கள்.

எங்கும் நிறைந்த பகவான் யாருடைய பாவச் செயலையும் ஏற்பது இல்லை. நற்செயல் களையும் ஏற்பது இல்லை. ஆனால் அஞ்ஞானத்தினால் ஞானம் மூடப்பட்டிருக்கிறது. அதனால் அஞ்ஞானிகளான எல்லா மனிதர்களும் மோஹம் அடைகிறார்கள்.

**கேள்வி:** இங்கு 'விபு:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? அவர் யாருடைய புண்ய பாவங்களையும் ஏற்பதில்லை என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'விபு:' என்ற சொல், எல்லோர் இதயத்திலும் விளங்குகின்றவரும் (13/17; 15/15; 18/61), தன்னுடைய ஸங்கல்பத்தின் மூலமாக அனைத்து உலகங்களையும் நடத்திச் செல்கின்றவரும், பேராற்றல் படைத்தவரும், ஸகுணமானவரும், உருவமற்றவருமான பகவானைக் குறிக்கிறது. அவர் யாருடைய புண்ய பாவத்தையும் ஏற்பதில்லை என்று கூறுவதன் கருத்து என்னவென்றால், அவருடைய சக்தியினாலேயே மனிதர்கள் எல்லாக் கர்மங்களையும் செய்கிறார்கள். எல்லோருக்கும் சக்தி, புத்தி, புலன்கள் முதலியவற்றை, அவர்களுடைய கர்மத்துக்கு ஏற்றபடி அவரே அளிக்கிறார். இருப்பினும் அவர், மனிதர்கள் செய்கின்ற கர்மங்களை ஏற்பதில்லை; அதாவது தாமே அந்தக் கர்மங்களின் பயனை ஏற்பதில்லை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** இதே அத்யாயத்தின் முடிவிலும், 9/24லும் பகவான், 'எல்லா வேள்விகளையும், தவங்களையும் நானே அனுபவிக்கிறேன்' என்று சொல்லியிருக்கிறார். பிறகு இங்கு பகவான் யாருடைய நல்ல கர்மத்தையும்கூட ஏற்பதில்லை என்று எப்படிச் சொல்லலாம்?

**பதில்:** எல்லா உலகமும் ஸகுணமான பகவானுடைய உருவமே. அதனால்தான் தேவதைகளுடைய உருவத்தில் பகவான் எல்லா வேள்விகளையும் ஏற்கிறார். ஆனால் இவ்விதமாக இருந்தபோதிலும், உண்மையில் பகவான் கர்மத்திலிருந்தும், கர்மபலனிலிருந்தும் முற்றிலும் தொடர்பு அற்றவர். இதைத் தெளிவாகக் கூறுவதற்காகவே, 'பகவான் யாருடைய புண்ய பாவத்தையும் ஏற்பதில்லை' என்று இங்குச் சொல்லப்பட்டது. கருத்து என்னவென்றால் தேவர், மனிதர் ஆகியோருடைய உருவமாக இருந்து, எல்லா வேள்விகளையும் அனுபவித்தபோதிலும், அவ்விதமே பக்தர்கள் மூலமாக அர்ப்பணிக்கப் படுகின்ற பொருட்கள், செய்கைகள் முதலியவற்றை ஏற்றுக் கொண்டபோதிலும், உண்மையில் அவை எல்லாவற்றிலிருந்தும் தொடர்பற்றவராக இருக்கிறார். அதாவது எவ்வாறு பிறப்பு எடுத்தாலும்கூட பகவான் பிறப்பு இல்லாதவரோ *(4/6)*, படைப்பு முதலிய கார்யங்களைச் செய்தாலும்கூட அவர் கர்த்தா அல்லரோ *(4/13)* அவ்வாறே, இங்கு பகவான் எவருடைய நல்ல கர்மங்களையும் ஏற்றுக் கொள்வதில்லை என்று சொல்வது உசிதம்தான்.

**கேள்வி:** 'அஞ்ஞானத்தினால் ஞானம் மறைக்கப்பட்டு இருக்கிறது. அதனால் அஞ்ஞானிகளான எல்லா மனிதர்களும் மோஹமடைந்துள்ளனர்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கு ஒரு ஐயம் எழக்கூடும். உண்மையில் மனிதரோ, பகவானோ கர்மங்களோடும், அவற்றின் பயன்களோடும் ஸம்பந்தப்படவில்லை என்றால், உலகத்தில் 'நான் இந்தக் கர்மத்தைச் செய்கிறேன். இது என்னுடைய வேலை, எனக்கு இதனுடைய பயன் கிடைக்கும்' என்று மனிதர்கள் சொல்கிறார்களே, அது எப்படி? இந்த ஐயத்தை நீக்குவதற்காக, இவ்விளக்கத்தைக் கூறுகிறார். பன்னெடுங்காலமாக இருக்கின்ற அஞ்ஞானத்தினால் எல்லா ஜீவர்களுக்கும் உண்மையான ஞானம் மறைக்கப்பட்டு இருக்கிறது. ஆகவே அவர்கள் தங்களுடையதும், பகவானுடையதுமான ஸ்வரூபத்தையும், அவ்விதமே கர்மங்களுடைய தத்வத்தையும் அறியாத காரணத்தினால், தன்மேலும், பகவான்மேலும் 'கர்த்தா', 'கர்ம', 'கர்மபலன்' ஆகியவற்றிற்குத் தொடர்பைக் கற்பித்து, மோஹத்திலே ஆழ்ந்து போயிருக்கிறார்கள்.

**ज्ञानेन तु तदज्ञानं येषां नाशितमात्मनः।**
**तेषामादित्यवज्ज्ञानं प्रकाशयति तत्परम्॥ १६॥**

**ஜ்ஞாநேந து தத₃ஜ்ஞாநம் யேஷாம் நாஶிதமாத்மந: ।**
**தேஷாமாதி₃த்யவஜ்ஜ்ஞாநம் ப்ரகாஶயதி தத்பரம் ॥ 16 ॥**

**து** – ஆனால், **யேஷாம்** – எவர்களுடைய, **தத்** – அந்த, **அஜ்ஞாநம்** – அஞ்ஞானம், **ஆத்மந:** – பரமாத்மாவினுடைய, **ஜ்ஞாநேந** – தத்வ ஞானத்தினால், **நாஶிதம்** – அழிக்கப்பட்டதோ, **தேஷாம்** – அவர்களுடைய, **ஜ்ஞாநம்** – (அந்த) ஞானம், **ஆதி₃த்யவத்** – ஆதவன்போல, **தத்பரம்** – ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவை, **ப்ரகாஶயதி** – ப்ரகாசிக்கச் செய்கிறது (அதாவது பரமாத்ம ஸ்வரூபத்தைக் கண்கூடாகக் காட்டித் தருகிறது).

ஆனால் எவர்களுடைய அந்த அஞ்ஞானம் பரமாத்மாவினுடைய தத்வ ஞானத்தினால் அழிக்கப்பட்டதோ அவர்களுடைய அந்த ஞானம் ஆதவன்போல ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவை ப்ரகாசிக்கச் செய்கிறது. பரமாத்ம ஸ்வரூபத்தைக் கண்கூடாகக் காட்டித் தருகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** இங்கு 'து' என்று கூறுவதன் உட்கருத்து என்ன?

**பதில்:** அஞ்ஞானத்தினால் ஞானம் மறைக்கப்பட்டு இருக்கிறது. அதனால் எல்லா மனிதர்களும் மோஹித்துப் போய் இருக்கிறார்கள் என்ற விஷயத்தை, 15வது ச்லோகத்தில் கூறினார். இங்கு அந்த ஸாதாரண மனிதர்களிடமிருந்து, ஆத்மதத்வத்தை அறிந்த ஞானிகளை, 'து' என்ற சொல்லினால் பிரித்துக் காட்டுகிறார்.

**கேள்வி:** இங்கு 'அஜ்ஞாநம்' என்பதுடன் 'தத்' என்ற சொல் சேர்க்கப்பட்டிருப்பதன் கருத்து என்ன?

**பதில்:** 15வது ச்லோகத்தில், அநாதிகாலமாக அஞ்ஞானத்தினால் எல்லா ஜீவர்களுடைய ஞானமும் மறைக்கப்பட்டிருக்கிறது. இதனால் மோஹம் அடைந்த எல்லா மனிதர்களும் ஆத்மா, பரமாத்மா ஆகியவர்களை உள்ளபடி அறியவில்லை என்று அஞ்ஞானத்தை விளக்கினார். அதைத் தான் 'தத் அஜ்ஞாநம்' என்று கூறுகிறார். எவர்கள் பன்னெடுங்காலமாக இருந்து வருகின்ற அஞ்ஞானத்தை, பரமாத்மாவினுடைய உண்மையான ஞானத்தை அறிந்து கொண்டதன் மூலமாக அழித்துவிட்டார்களோ, அவர்கள் மோஹமடைவது இல்லை என்பது கருத்து.

**கேள்வி:** இங்கு ஆதவனை உதாரணமாகக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கதிரவன் கன இருளை முற்றிலுமாக அழித்துக் காணத்தக்கதையெல்லாம் தெளிவுறக் காட்டுவதுபோல, பகவானைப் பற்றிய உண்மை அறிவு அஞ்ஞானத்தை அடியோடு அழித்து, பரமாத்ம ஸ்வரூபத்தைத் தெள்ளென விளக்குகிறது. பகவானுடைய உண்மை ஸ்வரூபத்தை அறிந்தவன் எக்காலத்திலும், எந்த நிலையிலும் அஞ்ஞானமடைவதில்லை.

**பொருத்தம்: உண்மை அறிவினால் பரமாத்மாவை அடைய முடியும் என்று சுருங்கச் சொல்லி, இனி 26வது ச்லோகம் வரை, ஞானயோகத்தின் மூலம் பரமாத்மாவை அடைவதற்குரிய ஸாதனங்கள், பரமாத்மாவை அடைந்துவிட்ட ஸித்தபுருஷர்களின் இலக்கணம், நடத்தை, நிலை, பெருமை இவற்றை விளக்கும் நோக்கத்துடன், முதலில் ஞானயோகத்திற்கான தனிப்பட்ட ஸாதனையின் மூலம் பரமாத்மாவை அடைவது பற்றிச் சொல்கிறார்—**

तद्बुद्धयस्तदात्मानस्तन्निष्ठास्तत्परायणाः ।
गच्छन्त्यपुनरावृत्तिं ज्ञाननिर्धूतकल्मषाः ॥ १७ ॥

**தத்₃பு₃த்₃த₄யஸ்தத₃ாத்மாநஸ்தந்நிஷ்ட₂ாஸ்தத்பராயணா: ।**
**க₃ச்ச₂ந்த்யபுநராவ்ருத்திம் ஜ்ஞாநநிர்தூ₄தகல்மஷா: ॥ 17 ॥**

**தத₃ாத்மாந:** – எவர்களுடைய மனம் பரமாத்மாவில் ஒன்றியிருக்கிறதோ, **தத்₃பு₃த்₃த₄ய:** – எவர்களுடைய புத்தி பரமாத்மாவில் ஒன்றியிருக்கிறதோ, **தந்நிஷ்ட₂ா:** – ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவிடம் எவர்களுக்கு இடையறாத ஐக்ய நிலை இருக்கிறதோ, **தத்பராயணா:** – பகவானை மட்டுமே சார்ந்திருக்கின்ற அத்தகைய மனிதர்கள், **ஜ்ஞாந நிர்தூ₄த கல்மஷா:** – ஞானத்தினால் பாவமற்றவர்களாக ஆகி, **அபுநராவ்ருத்திம்** – மீண்டும் திரும்பி வருதலில்லாத நிலையை அதாவது பிறவாப்பெருநிலையான பரமகதியை, **க₃ச்ச₂ந்தி** – அடைகிறார்கள்.

எவர்களுடைய மனம், புத்தி பரமாத்மாவில் ஒன்றியிருக்கிறதோ, ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவிடம் எவர்களுக்கு இடையறாத ஐக்யநிலை இருக்கிறதோ, பகவானை மட்டுமே சார்ந்திருக்கின்ற அத்தகைய மனிதர்கள் ஞானத்தினால் பாவமற்றவர்களாக ஆகி மீண்டும் திரும்பி வருதலில்லாத நிலையை அதாவது பிறவாப்பெருநிலையான பரமகதியை அடைகிறார்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** மனதைப் பரமாத்மாவிலே லயிக்கச் செய்வது என்றால் என்ன? ஸாங்க்யயோக முறையில் எப்படிப் பயிற்சி செய்தால் மனம் பரமாத்மாவில் லயிக்கும்?

**பதில்:** ஸாங்க்யயோக (ஞானயோக)ப் பயிற்சியில் ஈடுபட்டவன் ஆசார்யர்களிடமிருந்தும், சாஸ்த்ரங்களிலிருந்தும் 'அகில உலகும் மாயத்தோற்றம்' என்றும், 'ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவே ஸத்யம்' என்றும் அறிந்து, ஆத்மாவல்லாத வஸ்துவின் சிந்தனையற்று, மனதைப் பரமாத்மாவிடமே அசையாமல் நிறுத்தி வைப்பதற்காக, அந்த ஆனந்தமய ஸ்வரூபத்தையே நினைக்க வேண்டும். அடிக்கடி பூர்ணானந்தம், அபாரானந்தம், சாந்தானந்தம், கனானந்தம், அசலானந்தம், த்ருவானந்தம், நித்யானந்தம், போதஸ்வரூபானந்தம், ஞானஸ்வரூபானந்தம், பரமானந்தம், மஹானந்தம், அனந்தானந்தம், ஸமானந்தம், அசிந்த்யானந்தம், சின்மயானந்தம், 'ஆனந்தமே ஆனந்தம் நிரம்பியது' என்று ஆனந்தத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லி, 'ஆனந்தத்தைத் தவிர வேறு பொருளே இல்லை' என்பதாக நெஞ்சில் நினைத்து, இடையறாது மனனம் செய்து, ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவிடம் சிதறாத சிந்தனையுடன் ஒன்றி, மனம் அசைவற்றிருப்பதுதான், 'பரமாத்மாவில் லயிப்பது' என்பதாகும்.

**கேள்வி:** 'புத்தி பகவானில் லயிக்கிறது' என்றால் என்ன? மனம் பரமாத்மாவாகவே ஆனபிறகு புத்தி எந்தவிதப் பயிற்சியினால் பரமாத்மாவாகவே ஆகிவிடும்?

**பதில்:** மேலே சொன்னவிதம் மனம் பரமாத்ம மயமாக ஆனபிறகு புத்தியில் ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவினுடைய உண்மை ஸ்வரூபத்தை நேரிடையாகவே காண்பது போன்ற தீர்மானம் ஏற்படும். அந்தத் தீர்மானத்தின் உறுதியில் நிலைத்து த்யானம் செய்து, புத்தி என்ற தனித்தோற்றமில்லாது ஸத் சித் ஆனந்தமயமாகவே ஆகிவிடுவது புத்தி பரமாத்ம மயம் ஆவது ஆகும்.

**கேள்வி:** 'தந்நிஷ்டா:' (தத்+நிஷ்டா:) அதாவது ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவில் ஐக்ய பாவத்தோடு நிலைத்தல் என்பது எப்போது ஏற்படும்? மனம், புத்தி இரண்டும் பக்வானிடம் லயித்த பின்னர், அது எப்படி உண்டாகும்?

**பதில்:** மேலே சொன்னபடி மனமும், புத்தியும் பரமாத்மாவில் ஐக்யமாகாத வரையில், ஸாங்க்யயோகிக்குப் பரமாத்மாவோடு இரண்டற்ற நிலை உண்டாவதில்லை. ஏனெனில் ஆத்மா, பரமாத்மாவில் வேற்றுமை மயக்கத்தைத் தோற்றுவிப்பதற்கு மனமும், புத்தியுமே முக்ய காரணங்களாகும். ஆகவே மேலே கூறியபடி மனமும், புத்தியும் பரமாத்மாவுடன் ஐக்யமான பின்னர், ஸாதகனுடைய பார்வையில் ஆத்மா, பரமாத்மா என்ற வேற்றுமை மயக்கம் அழிகிறது. அப்போது த்யானிப்பவன், த்யானம், த்யானப் பொருள் என்ற 'த்ரிபுடி' அற்றுப்போய் விடுகிறது. ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவாகிய ஒரு பொருள் மட்டுமே தனித்து விளங்கும். இதுதான் ஸாங்க்யயோகியினுடைய 'அதுவாக ஆகுதல்' அதாவது பரமாத்மாவுடன் ஒன்றியிருக்கும் நிலை ஆகும்.

**கேள்வி:** 'தத்பராயணா:' என்ற சொல் எவர்களைக் குறிக்கிறது?

**பதில்:** மேலே சொன்னவிதம் ஆத்மா, பரமாத்மா என்ற வேறுபாடு அகன்று, ஸாங்க்யயோகி ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவில் இரண்டறக் கலந்துவிட்டபோது உண்மையில் பரமாத்மாவைத் தவிர வேறு பொருள் இருக்கிறது என்ற உணர்வே இருக்காது. அவனுடைய மனம், புத்தி, ப்ராணன் முழுவதுமே பரமாத்மாவாகவே இருக்கும். இவ்விதம் ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவின் நேரிடை உணர்வு பெற்று அவரிடம் இரண்டறக் கலந்து நிலைத்து நிற்பவர்களை, 'தத்பராயணா:' என்ற சொல் குறிப்பிடுகிறது.

**கேள்வி:** 'தத்' என்ற சொல்லுக்கு ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மா என்று எப்படிப் பொருள் கொள்ளலாம்?

**பதில்:** முன் ச்லோகத்தில் 'பரம்' என்ற சொல்லுடன், 'தத்' என்ற சொல் இடம் பெறுகிறது. உண்மை அறிவு மூலம் பரமாத்மாவின் நேரிடை அனுபவம் ஏற்படுவது பற்றிக் கூறப்பட்டது. அதையே இந்த ச்லோகத்தில் உள்ள 'தத்' என்ற சொல்லும் குறிப்பிடுவதால்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸந்தர்பத்திற்கு ஏற்றவாறு 'தத்' என்ற சொல்லுக்கு ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மா என்று பொருள் வந்தது.

**கேள்வி:** 'ஜ்ஞாந நிர்தூத கல்மஷா:' என்ற தொடரில் வரும் 'ஜ்ஞாநம்' என்ற சொல் எந்த ஞானத்தைக் குறிக்கிறது? 'நிர்தூத', 'கல்மஷ' என்ற சொற்களுக்கு என்ன பொருள்?

**பதில்:** 16வது ச்லோகத்தில் ஞானம் அஞ்ஞானத்தை அழிக்கும்; பரமாத்மாவை விளக்கும் என்றார். அந்த உண்மை அறிவுதான் இங்கே கூறப்படும் 'ஜ்ஞாநம்'. நல்ல–தீய கர்மங்கள், விருப்பு–வெறுப்பு ஆகிய தீய இயல்புகள், விக்ஷேபம், ஆவரணம் (தடுமாற்றம்–திரை) இவையெல்லாம் கல்மஷங்கள். ஏனெனில் இவையெல்லாம் ஆத்மாவை பந்தப்படுத்துகின்ற பாவங்கள். இவற்றை அறவே ஒழிப்பதை 'நிர்தூத' என்ற சொல் கூறுகிறது. மேலே கூறப்பட்ட ஸாதனை மூலம் அடையப் பெற்ற உண்மையறிவினால், எவனுக்கு மலம், விக்ஷேபம், ஆவரணம் என்ற எல்லாப் பாவங்களும் நீங்கி, சிறிதளவு கூடப் பாவம் எஞ்சுவதில்லையோ, அவன் 'ஜ்ஞாந நிர்தூத கல்மஷ:' எனப்படுவான்.

**கேள்வி:** மீண்டும் திரும்பி வருதலில்லாத பதவியையடைவது என்றால் என்ன?

**பதில்:** எந்த நிலை எய்திய பிறகு யோகி மீண்டும் திரும்புவதில்லையோ, எதைப் 16வது ச்லோகத்தில் 'தத்பரம்' என்ற பெயரால் பகவான் குறிப்பிடுகிறாரோ, கீதையில், எதை 'அக்ஷய ஸுகம்', 'நிர்வாணப்ரம்மம்', 'உத்தமஸுகம்', 'பரமகதி', 'பரமதாமம்', 'அவ்யயபதம்', 'திவ்ய பரமபுருஷன்' என்ற பெயர்களால் பகவான் வர்ணிக்கிறாரோ, உண்மை அறிவின் பயனாக ஏற்பட்ட பரமாத்மாவிடம் ஒன்றிவிட்ட அந்த நிலையே திரும்பி வருதலில்லாப் பதவி ஆகும்.

**பொருத்தம்: பரமாத்மாவை அடையும் ஸாதனத்தைப் பற்றிக் கூறிவிட்டு, பரமாத்மாவை அடைந்துவிட்ட ஸித்த புருஷனின் 'ஸமநிலை'யை வர்ணிக்கிறார்—**

**विद्याविनयसम्पन्ने ब्राह्मणे गवि हस्तिनि।**
**शुनि चैव श्वपाके च पण्डिताः समदर्शिनः ॥ १८ ॥**

**வித்₃யாவிநயஸம்பந்நே ப்₃ராஹ்மணே க₃வி ஹஸ்திநி ।**

**ஶுநி சைவ ஶ்வபாகே ச பண்டி₃தா: ஸமத₃ர்ஶிந: ॥ 18 ॥**

**பண்டி₃தா:** – தத்வஞானிகள், **வித்₃யா விநய ஸம்பந்நே** – கல்வியோடும், பணிவோடும் கூடிய, **ப்₃ராஹ்மணே** – ப்ராம்மணனிடமும், **க₃வி** – பசுவிடமும், **ஹஸ்திநி** – யானையிடமும், **ஶுநி ச** – நாயிடமும், **ஶ்வபாகே ச** – சண்டாளனிடமும்கூட, **ஸமத₃ர்ஶிந: ஏவ** – ஸமநோக்குடையவர்களே (அதாவது ஆத்மாவான பகவான் எல்லோரிடமும் ஸமமாக விளங்குகிறார் எனும் நோக்குடையவர்களே).

தத்வஞானிகள் கல்வியோடும், பணிவோடும் கூடிய ப்ராம்மணனிடமும், பசுவிடமும், யானையிடமும், நாயிடமும், சண்டாளனிடமும்கூட ஸமநோக்குடையவர்களே. (ஆத்மாவான பகவான் எல்லோரிடமும் ஸமமாக விளங்குகிறார் எனும் நோக்குடையவர்களே).

**கேள்வி:** 'பண்டிதா:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** 'தத்வமறிந்த ஸித்த புருஷர்களான மஹாத்மாக்கள்' என்று பொருள்.

**கேள்வி:** 'படிப்பும், பணிவும் உள்ள ப்ராம்மணனையும், யானையையும், பசுவையும், நாயையும், சண்டாளனையும் ஸமமாகப் பார்ப்பது' என்பதன் கருத்து என்ன?

**பதில்:** தத்வமறிந்த ஸித்த புருஷர்களிடம் ஏற்றத்தாழ்வு மனப்பான்மை முற்றிலும் அற்றுப் போகிறது. அவர்களின் பார்வையில் ஒரே ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்ம பரமாத்மாவைத் தவிர வேறு எதற்கும் இருப்பு (ஸத்தா) கிடையாது. அதனால் அவர்களுக்கு எங்கும் ஸமபாவனை ஏற்படும். இதை விளக்குவதற்காகத்தான் மனிதர்களில்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ப்ராம்மணனையும், சண்டாளனையும், விலங்குகளில் சிறந்ததான பசுவையும், நடுவில் உள்ள யானையையும், தாழ்ந்த நாயையும் உதாரணம் காட்டி, தத்வஞானிகளிடம் உள்ள ஸமபாவனையைச் சுட்டிக்காட்டுகிறார். இவற்றினிடையே நடைமுறையில் எல்லோரும் வேற்றுமை பாராட்டத்தான் நேரிடுகிறது. பசுவின் பாலை எல்லோரும் அருந்துவார்கள். நாயின் பாலைக் குடிக்கமாட்டார்கள். யானை மீது சவாரி செய்வார்கள். நாய் மீது சவாரி செய்யமாட்டார்கள். உடலைப் பேணுவதற்காக மிருகங்களுக்கு எது தேவையோ, அது மனிதனுக்கு உணவாகப் பயன்படாது. உயர்ந்த அந்தணரைப் போற்றிப் பூஜிக்க வேண்டும் என்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. சண்டாளனைப் பூஜிக்கச் சொல்லவில்லை. இவ்வளவு வேற்றுமைகள் நடைமுறையில் இருப்பினும், ஞானிகள் ஸமபாவனையுடன் இருப்பார்கள். எப்பொழுதும் எக்காரணத்திற்காகவும் அவர்களிடம் ஏற்றத்தாழ்வு மனப்பான்மை இருக்காது.

**கேள்வி:** எல்லா இடத்திலும் ஸமபாவனை ஏற்பட்டுவிட்ட காரணத்தால் ஞானிகள் எல்லோரிடமும் ஒரே மாதிரியாகப் பழகுவார்களா?

**பதில்:** அப்படியன்று. எல்லோரிடமும் ஒரேவிதம் பழகுவது என்பது எவருக்கும் ஸாத்யமே இல்லை. சாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ள நடைமுறை வேறுபாடுகள் எல்லோரிடமும் உள்ளவைதான். ஞானியும் உலகத்தார்போல அந்தணருடனும், சண்டாளனோடும், பசு, யானை, நாய்களோடும் அவற்றிற்குத்தக்கபடி நல்லமுறையில் நடந்து கொண்டாலும், அவை பரமாத்மா என்ற எண்ணத்தில் ஒரேவிதமாக அன்பு செலுத்துவான். இதுதான் அவனுடைய சிறப்பு.

மனிதன் தன்னுடைய தலை, கை, கால் முதலிய உறுப்புக்களில்கூட அந்தணர், க்ஷத்ரியர், வைச்யர், நான்காம் வர்ணத்தாரிடம் போல வேற்றுமை பாராட்டுகிறான். தலையினாலும், வாயினாலும் ஆகக்கூடியதைக் காலினால் செய்வதில்லை. கைகால்களால் ஆகக்கூடியதைத் தலையால் செய்வதில்லை. அந்த உறுப்புக்களைப் பேணுவதிலும், சுத்தி செய்வதிலும்கூட மாறுபாடு உண்டு. மதிப்பிலும் ஏற்றத்தாழ்வு உண்டு. ஆனால் அவை தன்னுடையவை என்ற எண்ணத்தினால் தலை வலித்தாலும், கால் வலித்தாலும் ஒரேவிதம் துயரப்படுகிறான். எல்லா உடல் உறுப்புக்களிலும் அவனுக்கு அன்பு ஒரேவிதம் இருப்பதால், உறுப்புக்களில் ஏற்றத்தாழ்வு என்கிற பாவனை கிடையாது. அதுபோல, தத்வஞானிகூட எங்கும் ப்ரம்மத்தையே காண்பதால், உலகியலில் அவரவர்க்குத் தக்கபடி மாறுதலாக நடந்து கொண்டாலும், அவர்கள் ஆத்மா ஒன்றே என்ற எண்ணமும், ப்ரேமையும் எங்கும் ஸமமாக இருக்கும். ஆகவே எங்ஙனம் தனது ஏதோவொரு உறுப்பில் அடிபடினும் மனிதன் ஸமபாவனையுடன் அதை குணப்படுத்துவதற்கு முயற்சி செய்கிறானோ, அதுபோலவே தத்வஞானி நடைமுறையில் எந்த ஒரு ஜீவனுக்கோ, ஜீவ ஸமுதாயத்திற்கோ துன்பம் நேரிடினும், எவ்விதமான வேற்றுமையுமின்றி அத்துன்பத்தைப் போக்க முயற்சி செய்வான்.

**பொருத்தம்:** இவ்விதம் தத்வஞானியின் ஸமபாவனையை வர்ணித்துவிட்டு 'இந்த ஸமபாவனையே ப்ரம்மநிலை' என்று கூறி, அதில் நிலைத்திருக்கும் மஹாபுருஷர்களின் பெருமையைக் கூறுகிறார்—

**इहैव तैर्जितः सर्गो येषां साम्ये स्थितं मनः।**
**निर्दोषं हि समं ब्रह्म तस्माद्ब्रह्मणि ते स्थिताः॥१९॥**

**இஹைவ தைர்ஜித: ஸர்கோ³ யேஷாம் ஸாம்யே ஸ்தி²தம் மந: ।**
**நிர்தோ³ஷம் ஹி ஸமம் ப்³ரஹ்ம தஸ்மாத்³ப்³ரஹ்மணி தே ஸ்தி²தா: ॥ 19 ॥**

**யேஷாம் மந:** – எவர்களுடைய மனம், **ஸாம்யே ஸ்தி²தம்** – ஸமபாவனையில் நிலைத்துள்ளதோ, **தை:** – அவர்களால், **இஹ ஏவ** – உயிர் வாழும்போதே (சரீரத்தோடு உள்ள நிலையிலேயே), **ஸர்க:³** – அகில உலகமும், **ஜித:** – வெற்றி கொள்ளப்பட்டது. **ஹி** – ஏனெனில், **ப்³ரஹ்ம** – ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவான பரப்ரம்மம்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**நிர்தோ₃ஷம்** – மாசற்றது, **ஸமம்** – ஸமமானது. **தஸ்மாத்** – ஆகவே, **தே** – அவர்கள், **ப்₃ரஹ்மணி** – ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்திலேயே, **ஸ்தி₂தா:** – நிலைபெற்றிருக்கிறார்கள்.

எவர்களுடைய மனம் ஸமபாவனையில் நிலைத்துள்ளதோ அவர்களால் உயிர் வாழும் போதே (சரீரத்தோடு உள்ள நிலையிலேயே) அகில உலகமும் வெற்றி கொள்ளப்பட்டது. ஏனெனில் ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவான பரப்ரம்மம் மாசற்றது, ஸமமானது. ஆகவே அவர்கள் ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்திலேயே நிலைபெற்றிருக்கிறார்கள்.

**கேள்வி:** 'எவர்களுடைய மனம் ஸமபாவனையில் நிலைத்து நிற்கிறதோ, அவர்கள் இவ்வுலகை வென்று விடுவார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேலே சொன்னவிதம் எவர்களுடைய மனம் ஸமபாவனையில் நிலைத்து நிற்கிறதோ, அதாவது எல்லாவற்றையும் ஸமமாக மதிக்கிறதோ, அவர்கள் இங்கேயே, இப்பிறவிலேயே, இவ்வுலகை வென்றுவிடுவார்கள். அவர்கள் பிறப்பு-இறப்பிலிருந்து முற்றிலுமாக விடுபட்டு, ஜீவன்முக்தர்கள் ஆகிவிடுவார்கள். உலகப் பார்வையில் அவர்கள் உடலில் இருந்தாலும், உண்மையில் அவர்களுக்கு அவ்வுடலுடன் எவ்விதத் தொடர்பும் கிடையாது.

**கேள்வி:** ப்ரம்மத்தை 'மாசற்றது', 'ஸமமானது' என்று கூறுவதன் கருத்து என்ன? 'ஹி' (ஏனெனில்), 'தஸ்மாத்' (ஆகவே) என்ற சொற்கள் எதற்கு?

**பதில்:** ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களில்தான் எல்லா தோஷங்களும் நிறைந்திருக்கின்றன. உலகமனைத்தும் முக்குணங்களின் விளைவுகளாதலால் தோஷ மயமானதே. இக்குணங்களின் சேர்க்கையினால் ஏற்றத்தாழ்வுகள், விருப்பு-வெறுப்புகள், மோஹம் முதலிய எல்லா விகாரங்களும் உண்டாகின்றன. ப்ரம்மம் என்ற பெயரால் அழைக்கப்படும் ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மா முற்றிலும் முக்குணங்களைக் கடந்தவர். ஆகவே அவர் குற்றமற்றவர்; ஸமமானவர். அதுபோல, தத்வஞானியும் முக்குணங்களைக் கடந்தவன். அவனிடம் விருப்பு-வெறுப்புகள், மோஹம், மமகாரம், அஹங்காரம் முதலிய விகாரங்களும், ஏற்றத்தாழ்வு மனப்பான்மை என்ற குறையும் முற்றிலும் அழிந்துபோய் அவன் ஸமபாவனையில், அதாவது பரமாத்மாவில் நிலைத்து நிற்கிறான். 'ஹி', 'தஸ்மாத்' என்பன காரணத்தைக் கூறும் சொற்கள். ஸமபாவனையே ப்ரம்மஸ்வரூபம் ஆனதால், அந்த ஸமபாவனையில் நிலைத்தவர் ப்ரம்மத்தில் நிலை பெறுகிறார். உலகத்தினர் அவர்களை முக்குணங்களுக்கு ஆட்பட்டவர்களாகவும் உலகியலில் உடலோடு இருப்பதாகக் கண்டாலும்கூட, உண்மையில் அவர்கள் ஸமபாவனையில் ஊன்றி நிற்பதால் முக்குணங்களுக்கு ஆட்பட்ட ப்ரபஞ்சத்துடனும், உடலுடனும் அவர்களுக்குத் தொடர்பு கிடையாது. அவர்கள் ப்ரம்மத்தில் நிலைத்து நிற்கிறார்கள்.

**கேள்வி:** தமோகுணமும், ரஜோகுணமும் குற்றங்களின் இருப்பிடம். ஏனெனில் கீதையில் ஆங்காங்கே பகவான் இந்த இரண்டையும் எல்லாத் தீமைகளுக்கும் காரணம் எனக் குறிப்பிட்டு, இவற்றைத் தவிர்க்கவேண்டும் என்கிறார். இங்ஙனமிருக்க பகவானை அடைவதற்குகந்ததான ஸத்வகுணத்தை ரஜஸ், தமோகுணங்களோடு சேர்த்துக் குற்றம் உள்ளதாகக் கூறலாமா?

**பதில்:** ரஜோகுண, தமோகுணங்களைக் காட்டிலும் ஸத்வகுணம் சிறந்ததுதான். மனித மேம்பாட்டிற்கு உதவியாக இருப்பதுதான். ஆயினும் அஹங்காரத்தோடு கூடின ஸுகத்திற்கும், ஞானத்திற்கும் தொடர்புடையதாகையால், அதுவும் பந்தத்திற்குக் காரணமாகும் (14/6) என்கிறார். உண்மையில் முக்குணங்களைக் கடந்தால் ஒழிய, மனிதன் குற்றமற்றவன் ஆகமுடியாது. அவன் முழுமையாக ஸமபாவனையில் நிலை பெறவும் முடியாது. இங்கு குணாதீதனுடைய நிலையைச் சொல்வதால், ஸத்வகுணத்தையும் குறை கூறுவதில் தவறில்லை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொருத்தம்: அடுத்ததாக, நிர்குண, நிராகார ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்துடன் கலந்துவிட்ட, ஸமபாவனையுள்ள, ஸித்த புருஷனுடைய இலக்கணம் கூறுகிறார்—

न प्रहृष्येत्प्रियं प्राप्य नोद्विजेत्प्राप्य चाप्रियम्।
स्थिरबुद्धिरसम्मूढो ब्रह्मविद् ब्रह्मणि स्थितः॥२०॥

ந ப்ரஹ்ருஷ்யேத்ப்ரியம் ப்ராப்ய நோத்₃விஜேத்ப்ராப்ய சாப்ரியம் ।
ஸ்தி₂ரபு₃த்₃தி₄ரஸம்மூட₄ோ ப்₃ரஹ்மவித்₃ ப்₃ரஹ்மணி ஸ்தி₂த: ॥ 20 ॥

**ப்ரியம்** – விருப்பமான பொருளை, **ப்ராப்ய** – அடையும்போது, **ந ப்ரஹ்ருஷ்யேத்** – மகிழ்ச்சியடையாமலும், **ச** – மேலும், **அப்ரியம்** – விரும்பாததை, **ப்ராப்ய** – அடையும்போது, **ந உத்₃விஜேத்** – கலக்கம் அடையாமலும் இருக்கும், **ஸ்தி₂ரபு₃த்₃தி₄:** – நிலைத்த மதியுடைய, **அஸம்மூட₄:** – ஐயம் நீங்கிய, **ப்₃ரஹ்மவித்** – ப்ரம்மஞானி, **ப்₃ரஹ்மணி** – ஸத் சித் ஆனந்தமய பரப்ரம்ம பரமாத்மாவில், **ஸ்தி₂த:** – (எப்பொழுதும் ஒன்றி) நிலைத்து நிற்கிறான்.

விருப்பமான பொருளை அடையும்போது மகிழ்ச்சியடையாமலும் விரும்பாததை அடையும் போது கலக்கம் அடையாமலும் இருக்கும் நிலைத்த மதியுடைய ஐயம் நீங்கிய ப்ரம்மஞானி ஸத் சித் ஆனந்தமய பரப்ரம்ம பரமாத்மாவில் எப்பொழுதும் ஒன்றி நிலைத்து நிற்கிறான்.

**கேள்வி:** விருப்பமான பொருள் கிடைத்தால் மகிழ்வது, விரும்பாதது கிடைத்தால் கலங்குவது என்றால் என்ன?

**பதில்:** மனதிற்கும், புத்திக்கும், புலன்களுக்கும், உடலுக்கும் அனுகூலமாக உள்ள பொருளை ப்ரியம் என்பார்கள். அஞ்ஞானியான மனிதன் அனுகூலமான பொருட்களில் பற்று வைக்கிறான். அவற்றை அடைந்தால் மகிழ்ச்சி அடைகிறான். ஆனால் தத்வஞானிக்கு ஸமபாவனை உள்ளதால், அவனுக்கு ஒரு பொருளிலும் அனுகூலம் என்ற எண்ணம் கிடையாது; பற்றும் கிடையாது. ப்ராரப்தத்தின் பயனாக உடல், மனம், புத்தி, புலன்களுக்கு அனுகூலமான ஏதாவது பொருள் கிடைத்தால், அவன் அதற்காக மகிழ்வதில்லை. ஏனெனில் அவனுக்கு மனம், புலன்கள், உடல் இவற்றில் மமகாரமோ, அஹங்காரமோ, பற்றுதலோ கிடையாது. அதுபோல, ஒரு பொருள் மனம், புத்தி, புலன், உடலுக்கு ப்ரதிகூலமானதானால் அது ப்ரியமற்றதாகிறது. அந்தப் பொருளில் அஞ்ஞானிக்கு த்வேஷம் உண்டாகிறது. ஆகவே அதையடைந்தால் மனிதன் பயப்படுகிறான்; வருத்தமும் அடைகிறான். ஞானிக்கு வெறுப்பு அறவே கிடையாதாகையால், மனம், உடல், புலன், புத்திக்குப் பிடிக்காத பொருள் வந்து சேர்ந்தால், அதற்காக வருந்துவதோ, கலங்குவதோ இல்லை.

**கேள்வி:** 'ஸ்திரபுத்தி:' என்ற அடைமொழியின் கருத்து என்ன?

**பதில்:** தத்வஞானியான ஸித்த புருஷனின் நோக்கில் ப்ரம்மத்தைத் தவிர உலகியல் பொருள் ஒன்றுக்கும் இருப்பு என்பதே கிடையாது. ஆகவே, அவன் புத்தி எப்பொழுதும் ஸ்திரமாக ப்ரம்மத்தில் லயித்திருக்கிறது. உலகத்தார் நோக்கில் பலவிதமான மான-அவமானங்கள், ஸுக-துக்கங்கள் அவனுக்கு நேரலாம். ஆனால் எக்காரணம் கொண்டும் அவனது புத்தி, ப்ரம்ம நிலையிலிருந்து ஒருபொழுதும் விலகியிராது. எந்த நிலையிலும் அவன் ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்திலேயே அசையாமல் நிலைத்திருப்பான்.

**கேள்வி:** 'அஸம்மூட:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** ஞானியின் உள்ளத்தில் ஸந்தேஹம், தடுமாற்றம், மோஹம் இவை சிறிதுகூட இரா. அவருடைய எல்லா ஸந்தேஹங்களும் அஞ்ஞானத்தோடு தீர்ந்துவிடும்.

**கேள்வி:** 'ப்ரஹ்மவித்' என்றால் என்ன பொருள்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்ம தத்வத்தை நன்கு உணர்ந்தவன். 'ப்ரம்மம் என்றால் என்ன? ப்ரபஞ்சமென்றால் என்ன? ப்ரம்மத்திற்கும் ஜகத்திற்கும் என்ன தொடர்பு? ஆத்மா, பரமாத்மா என்றால் என்ன? ஜீவனுக்கும், ஈசுவரனுக்கும் என்ன வேறுபாடு?' ஆகிய ப்ரம்மத்தைப் பற்றிய உண்மைகள் அனைத்தையும் அறிந்தவன்; ப்ரம்மஸ்வரூபத்தை நேரிடையாக உணர்ந்தவன்; அவனே 'ப்ரஹ்மவித்'.

**கேள்வி:** 'ப்ரஹ்மணிஸ்தித:' (ப்ரம்மத்தில் நிலைபெற்றவன்) என்றால் என்ன?

**பதில்:** விழிப்பு, கனவு, ஆழ்ந்த தூக்கம் என்ற மூன்று நிலைகளிலும், 'ப்ரம்மத்திலேயே எப்பொழுதும் ஊன்றி நிற்பவன்' என்று பொருள். எந்த நிலையிலும் அவன் உடலை ஆத்மா என்று நினைக்க மாட்டான். ப்ரம்மத்தோடு அவன் ஒன்றிவிட்ட காரணத்தால் ப்ரம்மத்திடமிருந்து பிரிவு என்பது ஒருபோதும் கிடையாது. எப்பொழுதும், எக்காலத்திலும் ஒரே நிலையில் நிலைத்திருப்பான். அவன்தான் 'ப்ரம்மத்தில் நிலை பெற்றிருப்பவன்' எனப்படுகிறான்.

**பொருத்தம்:** இவ்விதம் ப்ரம்மத்தில் நிலைபெற்ற புருஷனுடைய இலக்கணம் கூறி, இத்தகைய நிலையை அடைவதற்கான ஸாதனம், பயன் இவற்றைக் கூறுகிறார்—

**बाह्यस्पर्शेष्वसक्तात्मा विन्दत्यात्मनि यत्सुखम्।**
**स ब्रह्मयोगयुक्तात्मा सुखमक्षयमश्नुते॥ २१॥**

**பா³ஹ்யஸ்பர்ஶேஷ்வஸக்தாத்மா விந்த³த்யாத்மநி யத்ஸுக²ம் ।**
**ஸ ப்³ரஹ்மயோக³யுக்தாத்மா ஸுக²மக்ஷயமஶ்நுதே ॥ 21 ॥**

**பா³ஹ்ய ஸ்பர்ஶேஷு** – வெளியிலுள்ள புலன்நுகர் பொருட்களில், **அஸக்தாத்மா** – பற்றற்ற மனமுடைய ஸாதகன், **ஆத்மநி** – உள்ளத்தில், **யத் ஸுக²ம்** – த்யானத்தினால் ஏற்படுகின்ற ஸாத்விகமான எந்த ஸுகம் உள்ளதோ, (**தத்** – அதை), **விந்த³தி** – பெறுகிறான். (அதன் பிறகு), **ப்³ரஹ்மயோக³யுக்தாத்மா** – ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்ம பரமாத்மா விடம் த்யானயோகத்தினால் இரண்டறக் கலந்துவிட்ட, **ஸ:** – அவன், **அக்ஷயம்** – அழியாத, **ஸுக²ம்** – ஆனந்தத்தை, **அஶ்நுதே** – அனுபவிக்கிறான்.

வெளியிலுள்ள புலன்நுகர் பொருட்களில் பற்றற்ற மனமுடைய ஸாதகன் உள்ளத்தில் த்யானத்தினால் ஏற்படுகின்ற ஸாத்விகமான எந்த ஸுகம் உள்ளதோ அதைப் பெறுகிறான். அதன் பிறகு ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்ம பரமாத்மாவிடம் த்யானயோகத்தினால் இரண்டறக் கலந்துவிட்ட அவன் அழியாத ஆனந்தத்தை அனுபவிக்கிறான்.

**கேள்வி:** 'பாஹ்யஸ்பர்ஶேஷு அஸக்தாத்மா' என்று யாரைக் கூறுகிறார்?

**பதில்:** ஒலி, தொடுதல், உருவம், ரஸம், மணம் என்ற புலன் நுகர் பொருட்களை 'பாஹ்யஸ்பர்ஶம்' (வெளிப்பொருட்கள்) என்கிறார். விவேகத்தினால் தன்னுடைய மனதிலிருந்து இவற்றில் உள்ள பற்றை அறவே அகற்றி, அவற்றை அனுபவிப்பதில் வைராக்யம் அடைந்து, முழுமையாக ஒய்ந்து விட்டவன், 'வெளிப் பொருட்களிலிருந்து பற்று நீங்கிய மனம் உடையவன், 'பாஹ்யஸ்பர்ஶேஷு அஸக்தாத்மா' எனப்படுகிறான்.

**கேள்வி:** ஆத்மாவில் உள்ள ஆனந்தத்தைப் பெறுவது என்றால் என்ன?

**பதில்:** இங்கே ஆத்மா என்றால் உள்ளம் என்று பொருள். உள்ளத்தில் எங்கும் நிறைந்த ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவை எப்போதும் இடைவிடாது த்யானம் செய்வதால் உண்டாகும் ஸாத்விக ஆனந்தத்தை அனுபவிப்பதையே 'ஆனந்தத்தைப் பெறுவது' என்று கூறுகிறோம். புலன்களால் அடையப் பெறும் போகங்களை ஸுகம் என்று நினைப்பவனுக்கு, இப்படி த்யானத்தினால் ஏற்படும் ஸுகம் கிடைக்காது. வெளியிலுள்ள புலன் நுகர் பொருட்களில் உண்மையில் ஸுகமே இல்லை; ஸுகம் என்பது

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வெறும் தோற்றம்தான். அதனோடு ஒப்பிட்டால் வைராக்யத்தினால் ஏற்படும் ஸுகம் சிறந்ததே. ஆனால் அதைக் காட்டிலும் உபரதியால் விளையும் ஸுகம் மிக உயர்ந்தது. ஆயினும், பரமாத்ம த்யானத்தில் அசையாமல் அமர்ந்து விடுவதால் ஏற்படும் ஸுகம் எல்லாவற்றையும் விடச் சிறந்தது. இதுதான் ஆத்மாவில் நிலை பெற்று ஸுகம் அடைவது என்பதாகும்.

**கேள்வி:** இங்கு 'ப்ரஹ்மயோகயுக்தாத்மா' என்று யாரைக் குறிப்பிடுகிறார்? 'ஸ:' என்று யாரைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** மேற்சொன்னவிதம் புலன்களுக்குரிய ஸகல போகங்களிலும் பற்றுதலற்று, உபரதி (மனம், உலகியல் பொருட்களிலிருந்து விலகுதல்) அடைந்து, பரமாத்ம த்யானத்தில் ஊன்றி நின்று, பேரானந்தத்தை அனுபவிப்பவனை 'ப்ரஹ்மயோகயுக்தாத்மா' என்று குறிப்பிடுகிறார். முன் சொன்ன இரண்டு இலக்கணங்களோடுகூட 'ப்ரஹ்மயோகயுக்தாத்மா' என்ற இந்த இலக்கணத்தையும் சேர்த்துக் கொள்வதற்காக 'அவன்' என்று கூறுகிறார்.

**கேள்வி:** குறையாத ஆனந்தம் எது? அந்த அனுபவம் பெறுவது எப்படி?

**பதில்:** எப்பொழுதும் ஒரே ரஸமாக, பரமானந்த ஸ்வரூபமாக, அழிவற்றதாக இருக்கும் பரமாத்மாவே 'அக்ஷய ஸுகம்' எனப்படுகிறார். எப்பொழுதும் இடைவிடாது த்யானம் செய்து அந்தப் பரமாத்மாவை நேரிடையாகத் தன்னுடன் இரண்டறக் கலந்து கொண்டு விடுவதுதான் அவனுடைய பரமாத்ம அனுபவம்.

இந்த ஸுகம் ஈடு இணையற்றது. உலகியலில் ஸுகத் தோற்றமளிக்கும் எல்லாமே நொடியில் அழியக்கூடியவை; பொருட்படுத்தத் தகாதவை. அதைக்காட்டிலும் வைராக்யம், உபரதி இவற்றினால் ஏற்படும் ஸுகம் த்யானத்தில் விளையும் ஸுகத்திற்கு அடிப்படை ஆவதால் அதிகம் நிலைத்திருக்கும். த்யான ஸுகம் பரமாத்மாவை நேரிடையாகவே அடையக் காரணம் ஆவதால் மற்றவற்றைக் காட்டிலும் அதிகம் நிலைத்திருக்கும். ஆனால் ஸாதனை புரியும் நேரத்தில் இந்த ஸுகங்களை அக்ஷயம் (குறையாதவை) என்று சொல்ல முடியாது. 'அக்ஷய ஆனந்தம்' என்பதே பரமாத்மாவின் வடிவமேதான்.

**பொருத்தம்: இவ்விதம் புலன்கள் போகப் பொருட்களில் உள்ள பற்றுதலைத் துறப்பது பரமாத்மாவை அடைவதற்கு உபாயம் என்று கூறி, இந்த ச்லோகத்தில் புலன்களால் ஏற்படும் போகங்கள் துக்கத்திற்குக் காரணமாவதாலும், அநித்யமானவை என்பதாலும் அவற்றில் பற்றுதலை விடவேண்டும் என்கிறார்—**

**ये हि संस्पर्शजा भोगा दुःखयोनय एव ते।**
**आद्यन्तवन्तः कौन्तेय न तेषु रमते बुधः॥२२॥**

**யே ஹி ஸம்ஸ்பர்ஶஜா பே₄ாக₃ா து₃:க₂யோநய ஏவ தே ।**

**ஆத்₃யந்தவந்த: கௌந்தேய ந தேஷு ரமதே பு₃த₄: ॥ 22 ॥**

**ஸம்ஸ்பர்ஶஜா:** – புலன்களும், புலன்நுகர் பொருட்களும் ஒன்று சேரும்போது ஏற்படும், **யே** – எந்த, **பே₄ாக₃ா:** – போகங்கள் உள்ளனவோ, **தே** – அவை அனைத்தும் (உலகப் பற்றுடையவர்களுக்கு ஸுகமாகத் தோன்றியபோதிலும்), **ஹி** – நிச்சயமாக, **து₃:க₂யோநய: ஏவ** – துக்கத்திற்குக் காரணமாகவே உள்ளன. (மேலும்), **ஆதி₃ அந்தவந்த:** – ஆரம்பமும், முடிவும் கொண்டவை (அநித்யமானவை). (ஆகையால்), **கௌந்தேய** – அர்ஜுன! **பு₃த₄:** – அறிவாளி, **தேஷு** – அவற்றில், **ந ரமதே** – இன்புறுவதில்லை.

புலன்களும், புலன்நுகர் பொருட்களும் ஒன்று சேரும்போது ஏற்படும் போகங்கள் அனைத்தும் உலகப் பற்றுடையவர்களுக்கு ஸுகமாகத் தோன்றிய போதிலும் அவை நிச்சய மாக துக்கத்திற்குக் காரணமாகவே உள்ளன. மேலும் ஆரம்பமும் முடிவும் கொண்டவை. அநித்யமானவை. ஆகையால் அர்ஜுன! அறிவாளி அவற்றில் இன்புறுவதில்லை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** புலன்களும், போகப் பொருட்களும் சேர்ந்து அளிக்கும் ஸுகங்கள் துக்கத்திற்கே காரணமாகும் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** விட்டில்பூச்சி அறிவின்மையால் பின்விளைவையறியாமல் தீபத்தின் ஒளியை ஸுகமென நினைத்து, அதை அடைவதற்காகச் சுற்றிச் சுற்றிப் பறந்து அதில் விழுந்து தன்னையே அழித்துக் கொள்வதுபோல, அஞ்ஞானியான மனிதன், 'போகங்களை ஸுகத்திற்குக் காரண'மென நினைத்து, அதில் பற்று கொண்டு அவற்றை அனுபவிக்க முயன்று, முடிவில் பெரிய துன்பத்தையே அனுபவிக்கிறான். இப்படி போக விஷயங்களை ஸுகத்திற்குக் காரணமென நினைத்து, அவற்றை அனுபவிப்பதில் மேலும் ஈடுபாடு கொள்கிறான். அந்தப் பற்றினால் காம, க்ரோதங்கள் முதலிய தீங்குகள் விளைகின்றன. மேலும் மேலும் பலவிதமான தீய எண்ணங்களும், தீய நடத்தைகளும் வந்து அவனை நாற்புறமும் சூழ்ந்து கொள்கின்றன. முடிவில் அவன் வாழ்க்கையே பாவமயமாகி, அதன் பயனாக இவ்வுலகிலும், பரலோகத்திலும் பலவிதமான கொடிய வேதனைகளை அனுபவிக்க நேரிடுகிறது.

போகங்களை அனுபவிக்கும் நேரத்தில், மனிதன் ப்ரமையினால் சிற்றின்பங்களை ஸுகமென்று கருதுவதால், முடிவில் அவையே அவனுடைய பலம், வீர்யம், ஆயுள், மனம், புத்தி, ப்ராணன், புலன்களின் திறமை இவற்றையெல்லாம் அழித்து, சாஸ்த்ர விரோதமாக நடந்து கொள்ளச் செய்து, பரலோகத்திலும் பயங்கரமான நரகவேதனைகளை அனுபவிக்கச் செய்து பெரிய துயரத்திற்கு ஆளாக்குகிறது.

மேலும் அஞ்ஞானி பிறரிடம் இப்படிப்பட்ட போகப் பொருள் அதிகம் இருப்பதைப் பார்த்து மனதில் பொறாமை கொள்கிறான். அதனால் மனம் வெதும்புகிறான்.

இன்பமயமானது என்று எண்ணி, அனுபவிக்கப்பட்ட புலன் நுகர் பொருட்கள், ஊழ்வினை காரணமாக ஒருகால் கைநழுவிப் போகுமேயானால், அவற்றால் ஏற்பட்ட மனப்பதிவுகள் அடிக்கடி நினைவில் தோன்றி மனிதனைத் துயரத்தில் மூழ்கச் செய்து, அழுது அரற்றி ஏங்கச் செய்கிறது. இவ்வளவையும் ஆலோசித்துப் பார்த்தால் போகப் பொருட்களின் தொடர்பினால் ஏற்படும் அனுபவம் உண்மையில் துன்பமயம்தான். அணுவளவுகூட ஸுகமில்லை என்பது உறுதியாகிறது. அஞ்ஞானத்தில் ஏற்பட்ட ப்ரமையினால் அது ஸுகத்தோற்றத்தை உண்டாக்குகிறது. அதனால்தான் பகவான் அதை துக்கத்திற்கே காரணம் என்கிறார்.

**கேள்வி:** 'போகங்களுக்கு ஆரம்பமும், முடிவும் உள' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** புலன்களால் ஏற்படும் போகங்கள் கனவு போலவும், மின்னல் போலவும் அநித்யமானவை; நொடிப்பொழுதில் அழிபவை என்பதைத்தான், ஆரம்பமும், முடிவும் உள்ளவை என்று கூறுகிறார். உண்மையில் இவற்றில் ஸுகமே இல்லை. ஆனால் அஞ்ஞானத்தால் ஸுகம் ஓரளவு இருக்கத்தான் இருக்கிறது என்று நினைத்தாலும், அதுவும் நெடுநேரம் நிலைக்காது. நொடிப்பொழுதில் முடிந்துவிடும். ஏனெனில் அந்தப் பொருளே அநித்யம்தானே. அதிலிருந்து நிலையான ஸுகம் எப்படிக் கிடைக்கும்? 2/14ல் கூட பகவான், புலன்கள் தரும் இன்பம் தோன்றி அழியக்கூடியவை, அநித்யமானவை என்று கூறியிருக்கிறார்.

**கேள்வி:** இங்கு அர்ஜுனனை 'கௌந்தேய' என்று அழைப்பதற்குப் பொருள் உண்டா?

**பதில்:** அர்ஜுனனுடைய தாயாரான குந்திதேவி மிகுந்த மதிநலம் படைத்தவர்; அடக்கமும், விவேகமும், நுகர் பொருட்களில் வைராக்யமும் உடையவர். பெண்ணாகப் பிறந்தும், வைராக்யத்துடன் தர்மங்களைக் கடைப்பிடிப்பதிலும், பகவானுடைய பக்தியிலும் வாழ்க்கையைக் கழித்தவர். இப்படி குந்தியின் பெருமையைச் சுட்டிக்காட்டி, 'அர்ஜுன! அத்தகைய நெறிபிறழாத குந்தியின் செல்வனாயிற்றே நீ! உனக்குச் சிற்றின்ப போகங்களில் புத்தி போகும் வாய்ப்பே கிடையாதே!' என்று கொண்டாடுகிறார்.

**கேள்வி:** 'அஞ்ஞானியான மனிதன் விஷய போகங்களில் திளைக்கிறான்; ஆனால், விவேகிகள் அவற்றில் திளைக்கமாட்டார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** போகங்கள் உண்மையில் அநித்யமானவை; நொடிப்பொழுதில் மறையக் கூடியவை; துன்பம் தருபவை. இருப்பினும் விவேகமில்லாதவன் இதைப் புரிந்து கொள்ளாமல் அவற்றில் திளைத்துப் பலவிதமான இன்னல்களை அனுபவிக்கிறான். ஆனால் விவேகியான மனிதன் அவை அநித்யமானவை; நொடியில் அழியக்கூடியவை என்றறிந்து, 'அவை காம-க்ரோதம், பாவம்-வேதனை முதலிய தீமைகளை வளர்க்கும்' என்பதை உணர்ந்து அவற்றில் உள்ள பற்றைத் துறப்பதே குறைவற்ற ஸுகம் பெறுவதற்குக் காரணம் என்று அறிகிறான். அதனால், அவன் அவற்றில் திளைப்பதில்லை.

**பொருத்தம்: காம-க்ரோதங்களின் காரணமாக நுகரப்படும் விஷய போகங்கள் துன்பத்திற்குக் காரணம் என்று கூறி, மனிதப்பிறவியின் பெருமையை எடுத்துக் கூறி, எளிதில் வெற்றி கொள்ள முடியாத பகைவரான காம-க்ரோதங்களை இப்பிறவியிலேயே வெற்றி கொள்பவனின் பெருமையைக் கூறுகிறார்—**

**शक्नोतीहैव यः सोढुं प्राक्शरीरविमोक्षणात्।**
**कामक्रोधोद्भवं वेगं स युक्तः स सुखी नरः॥२३॥**

**ஶக்னோதீஹைவ ய: ஸோடு₄ம் ப்ராக்ஶரீரவிமோக்ஷணாத் ।**

**காமக்ரோதோ₄த்₃ப₄வம் வேக₃ம் ஸ யுக்த: ஸ ஸுகீ₂ நர: ॥ 23 ॥**

**ய:** – எந்த ஸாதகன், **இஹ ஏவ** – இம்மனிதப்பிறவியிலேயே, **ஶரீரவிமோக்ஷணாத்** – உடல் அழிவதற்கு, **ப்ராக்** – முன்பே, **காம க்ரோத₄ உத்₃ப₄வம்** – காமத்தினாலும், கோபத்தினாலும் உண்டாகின்ற, **வேக₃ம்** – எழுச்சியை, **ஸோடு₄ம்** – பொறுத்துக் கொள்வதற்கு, **ஶக்னோதி** – திறன் பெற்றுவிட்டானோ, **ஸ: நர:** – அந்த மனிதனே, **யுக்த:** – யோகி. **ஸ:** – அவனே, **ஸுகீ₂** – ஸுகம் பெற்றவன்.

எந்த ஸாதகன் இம்மனிதப் பிறவியிலேயே உடல் அழிவதற்கு முன்பே காமத்தினாலும் கோபத்தினாலும் உண்டாகின்ற எழுச்சியைப் பொறுத்துக் கொள்வதற்குத் திறன் பெற்று விட்டானோ அந்த மனிதனே யோகி. அவனே ஸுகம் பெற்றவன்.

**கேள்வி:** 'இஹ ஏவ' (இம்மனிதப் பிறவியிலேயே) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனிதப்பிறவியின் பெருமையை இவ்விரு சொற்களினால் கூறுகிறார். தேவர் முதலிய பிறவிகளில் உல்லாஸமும், புலன் நுகர்ச்சியும் மிக அதிகமாக இருக்கும். விலங்கினப் பிறவிகள் அறிவீனம் மிக்கனவாக இருக்கும். ஆகவே அப்பிறவிகளில் காம-க்ரோதங்களை வசப்படுத்துவது முடியாத கார்யம். 'இந்தப் பிறவியிலேயே' என்று பகவான் எச்சரிக்கை செய்கிறார். இது தவறினால் மறுபடியும் மனிதப் பிறவி வாய்ப்பது அரிது. இந்த உடல் அழிவதற்குள் இந்த மனித உடலிலேயே ஸாதனைகளில் குறியாக நின்று, காம-க்ரோதங்களின் வேகத்தை மன அமைதியோடு பொறுத்துக் கொள்ளும் ஆற்றல் பெறவேண்டும். அஜாக்ரதையினாலும், அலக்ஷ்யத்தினாலும் இந்த அரிய மனித வாழ்வைச் சிற்றின்பங்களில் கழித்துவிட்டால், பிறகு மிகவும் வருத்தப்பட வேண்டியிருக்கும். கேனோபநிஷத் கூறுகிறது:

**இஹ சேத₃வேதீ₃த₃த₂ ஸத்யமஸ்தி ந சேதி₃ஹாவேதீ₃ந்மஹதீ விநஷ்டி: ।** *(2/5)*

'இந்த மனிதப்பிறவியில் பகவானை அறிந்துவிட்டால் நல்லது. இப்பிறவியில் அறியாமற்போனால் மிகப் பெரிய நஷ்டம்.'

**கேள்வி:** 'ப்ராக் ஶரீரவிமோக்ஷணாத்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உடல் அழியக் கூடியது; அது பிரியப் போவது நிச்சயம். எந்த விநாடியில் உடலைவிட்டுவிட நேரும் என்பதும் நமக்குத் தெரியாது. ஆகவே மரண நேரம் நெருங்கும் முன்னரே காம-க்ரோதங்களை ஜயித்துவிட வேண்டும். மேலும் மேலும் ஸாதனை புரிந்து, காம-க்ரோதமாகிற பெரும் பகைவர்கள் தலைதூக்காதவாறும், நம்முடைய வாழ்க்கையைத்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தடுமாற வைக்காதவாறும் தடுத்து நிறுத்தும் ஆற்றலைப் பெறவேண்டும். கடலில் வந்து கலக்கும் ஆறுகளனைத்தும், வேகத்துடன்கூட அதிலேயே மறைந்து விடுவதுபோல, காம-க்ரோதங்கள் வந்து புகுந்தாலும் வேகம் அழிந்து மறைந்துவிட வேண்டும். அதற்குரிய முயற்சியை மேற்கொள்ள வேண்டும்.

**கேள்வி:** *காம-க்ரோதத்தினால் ஏற்படும் வேகம் எது? அதைப் பொறுத்துக் கொள்ளும் திறமை என்று எதைச் சொல்கிறார்கள்?*

**பதில்:** (ஆணுக்குப்) பெண், (பெண்ணுக்கு) ஆண்; (இருவருக்கும்) மக்கள், செல்வம், வீடு, ஸ்வர்கம் என்று பார்த்தும், கேட்டும் உள்ள மனதிற்கும், புலன்களுக்குமுரிய போகங்களில் ருசி பிறப்பதால் அவற்றை அடையவேண்டும் என்று எழுகின்ற அவாவுக்குக் காமம் என்று பெயர். அதன் காரணமாக உள்ளத்தில் ஏற்படும் பலவிதமான எழுச்சிகள்தான் வேகம். அதுபோல, மனம், புத்தி, புலன்களுக்கு இடையூறாகத் தோன்றும் பொருட்கள் வந்து சேரும் போதும், விரும்பியது கிடைப்பதில் இடையூறு நேரும் போதும், அவற்றிற்குக் காரணமானவற்றில் ஏற்படும் வெறுப்பு, அதனால் மனதில் ஏற்படும் கொந்தளிப்பு – இவையே 'க்ரோதம்' எனப்படும். அந்த க்ரோதத்தினால் மனதில் ஏற்படும் பலவித எழுச்சிகளே க்ரோதத்தின் வேகம் எனப்படும். இந்த மன எழுச்சிகளை அமைதியாக, அதாவது அவற்றினால் உந்தப்பட்டுச் செயலில் இறங்காமல், தடுப்பதற்குரிய சக்தியைப் பெறுவதுதான், இவற்றைப் பொறுத்துக் கொள்வதில் திறமை ஆகும்.

**கேள்வி:** *'யுக்த:' என்ற அடைமொழி இங்கு யாரைக் குறிப்பிடுகிறது?*

**பதில்:** காமக்ரோதங்கள் எனும் பகைவர்களால் பெருமுயற்சி செய்தும் அசைக்க முடியாதவனை, இவற்றின் வேகத்தையடக்கியவனை, மனம், புலன்கள் இவற்றை வசப்படுத்திய ஸாங்க்யயோக ஸாதகனை 'யுக்த:' என்ற அடைமொழியோடு கூறுகிறார்.

**கேள்வி:** *அவன் ஸுகம் பெற்றவன் (ஸுகீ) என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** உலகியலில் எல்லோரும் ஸுகத்தை நாடுகிறார்கள். ஆனால் உண்மையில் ஸுகம் என்ன? அது எப்படிக் கிடைக்கும்? இதைப் புரிந்து கொள்ளாமல், ப்ரமையினால் போகங்களை ஸுகம் என்று நினைத்து, அவற்றைப் பெறுவதற்கு முயல்கிறார்கள். அதற்குத் தடை ஏற்பட்டால் க்ரோதம் அடைகிறார்கள். ஆனால் காம-க்ரோதங்களுக்கு வசப்பட்டவன் ஒரு நாளும் ஸுகம் பெறுவதில்லை. காமத்திற்கு ஆட்பட்டவன் மனைவி-மக்கள், செல்வம்-பெருமை முதலியவற்றை அடைவதற்காகவும், க்ரோதத்திற்கு வசப்பட்டவன் பிறருக்குத் தீங்கு விளைவிப்பதற்காகவும் முயன்று, பலவித பாவச் செயல்களில் ஈடுபடுகிறான். முடிவில் இவ்வுலகில் நோய், துயரம், அவமானம், கெட்ட பெயர், கலக்கம், அச்சம், அமைதியின்மை, கொந்தளிப்பு ஆகிய பலவிதத் தொல்லைகளையும், பரலோகத்தில் நரகத்தையும், மறுபிறவியில் விலங்கு-பறவை, புழு-பூச்சிகளாகப் பிறந்து பற்பல துயரங்களையும் அனுபவிக்கிறான் (16/18-20). இவ்விதம் ஸுகமடையாமல் எப்போதும் துன்பத்தையே அடைகிறான். எவர்கள் போகங்கள் துன்பத்திற்குக் காரணம் என்றும், நொடியில் அழிபவை என்றும் அறிந்து, காம-க்ரோதங்களாகிற பகைவர்களை முற்றிலுமாக வென்று அவற்றின் பிடியிலிருந்து முழுமையாக விடுபடுகிறார்களோ, அவர்கள் எப்போதும் ஸுகமாகவே இருப்பார்கள். இதைத்தான் இப்படிப்பட்டவர்கள் ஸுகம் பெற்றவர்கள் என்று கூறுகிறார்.

**கேள்வி:** *இங்கு 'நர:' (மனிதன்) என்று ஏன் குறிப்பிடுகிறார்?*

**பதில்:** காமம், க்ரோதம் முதலிய துர்குணங்களை வென்று, போகங்களில் வைராக்யம் அடைந்து, உபரதியுடன் ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவை அடைபவன்தான் உண்மையான மனிதன். உடலமைப்பில் ஆணாகவோ, பெண்ணாகவோ இருக்கலாம். அஞ்ஞானத்தில் மோஹமடைந்தவன், பற்றினால் மேற்பார்வைக்கு ஸுகத்தோற்றமுடைய பொருட்களின் கவர்ச்சியில் வீழ்ந்து, பரமாத்மாவை மறந்து, காம க்ரோதங்களுக்கு ஆட்பட்டு, இழிபிறப்புக்களான விலங்கு, பிசாசுகளைப் போல உணவிலும், உறக்கத்திலும், சிற்றின்பத்திலும் திளைத்து சச்சரவுகளில் ஈடுபடுகிறான். அவன் மனிதனே அல்லன்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



விலங்கைக் காட்டிலும் ஈனமான, கொம்பும் வாலும் இல்லாத, அமங்களமான, உலகிற்குத் துன்பமளிக்கின்ற வெறும் பயனற்ற ஒரு ப்ராணியே. பரமாத்மாவை அடைந்துவிட்ட உண்மையான மனிதனை அவனுடைய குணங்களையும், நடத்தைகளையும் ஆதர்சமாகக் கொண்டு, ஸாதகன் காம-க்ரோதங்களை ஜயிக்க முயன்றால், அவனும் நரன்தான் என்று குறிப்பிடுவற்காகவே, இங்கு 'நர:' என்ற சொல் வருகிறது.

**கேள்வி:** காம-க்ரோதங்களை வென்றவனை 'யுக்தன்', 'ஸுகீ' என்கிறார். அவனை ஸாதகன் என்று ஏன் கொள்ள வேண்டும்? 'ஸித்தன்' என்று ஏற்றுக் கொண்டால், என்ன குற்றம்?

**பதில்:** காம-க்ரோதங்களை வென்றுவிட்டதனாலேயே ஒருவன் ஸித்த புருஷன் ஆகிவிட மாட்டான் (16/22). ஸித்த புருஷனிடம் காமம், க்ரோதம் என்பதே இரா. 5/26ல் பகவான் இதைச் சொல்கிறார். ஆனால், இங்கு 'அவன் ஸுகம் பெற்றவன்' என்று மட்டும் சொல்கிறார். அவன் அக்ஷய ஸுகமடைந்த ஸித்த புருஷனானால் பரமஸுகீ என்றோ, வேறு விசேஷமான அடைமொழிகளுடனோ கூறியிருப்பார். இங்கு, அவன் 5/21வது ச்லோகத்தின் முற்பகுதியில் கூறியுள்ளபடி, பரமாத்ம த்யானத்தில் அடையும் ஸாத்விக ஸுகத்தை அனுபவிக்கிறவன். ஆகவே இந்த ச்லோகத்தில் குறிப்பிடப்படுபவன் ஸாதகன் என்று கொள்ளவேண்டும்.

**பொருத்தம்:** மேலே சொன்னபடி, வெளி விஷயங்களால் ஏற்படும் ஸுகபோகங்கள் நொடிப் பொழுதானவை; துக்கத்திற்குக் காரணமானவை என்றறிந்து, அவற்றின் மீதுள்ள பற்றைத் துறந்து, காம-க்ரோதங்களை ஜயித்துவிட்ட ஸாங்க்யயோகியின் முடிவான நிலையை அதன் பயனோடு சேர்த்துக் கூறுகிறார்—

**योऽन्तःसुखोऽन्तरारामस्तथान्तर्ज्योतिरेव यः।**
**स योगी ब्रह्मनिर्वाणं ब्रह्मभूतोऽधिगच्छति॥२४॥**

**யோऽந்த:ஸுகோ₂ऽந்தராராமஸ்தத₂ாந்தர்ஜ்யோதிரேவ ய: ।**
**ஸ யோகீ₃ ப்₃ரஹ்மநிர்வாணம் ப்₃ரஹ்மபூ₄தோऽதி₄க₃ச்ச₂தி ॥ 24 ॥**

**ய:** – எவன், **ஏவ** – உறுதியுடன் தீர்மானம் செய்து கொண்டு, **அந்த:ஸுக₂:** – ஆத்மாவிலேயே ஸுகம் காண்கிறானோ, **அந்தராராம:** – ஆத்மாவிடமே இன்புற்றிருப்பானோ, **தத₂ா** – அவ்விதமே, **ய:** – எவன், **அந்தர்ஜ்யோதி:** – ஆத்மாவிலேயே உள்ளொளி (ஞானம்) பெற்றவனோ, **ஸ:** – அந்த, **ப்₃ரஹ்மபூ₄த:** – ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தில் ஒன்றிவிட்டவனான, **யோகீ₃** – ஸாங்க்யயோகி, **ப்₃ரஹ்மநிர்வாணம்** – அமைதி நிறைந்த ப்ரம்மத்தை, **அதி₄க₃ச்ச₂தி** – அடைகிறான்.

எவன் உறுதியுடன் தீர்மானம் செய்து கொண்டு ஆத்மாவிலேயே ஸுகம் காண்கிறானோ ஆத்மாவிடமே இன்புற்றிருப்பானோ அவ்விதமே எவன் ஆத்மாவிலேயே உள்ளொளி (ஞானம்) பெற்றவனோ ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தில் ஒன்றிவிட்டவனான அந்த ஸாங்க்ய யோகி அமைதி நிறைந்த ப்ரம்மத்தை அடைகிறான்.

**கேள்வி:** 'அந்த:ஸுக:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** 'அந்த:' என்பது அகில ஜகத்துக்குள்ளும் இருக்கும் பரமாத்மாவைக் குறிக்கும். இதற்கு 'உள்ளம்' என்று பொருள் அன்று. எவன் ஒருவன் வெளிப் பொருட்களில் 'போகம்' என்ற உலகியல் ஸுகத்தைக் கனவு போல அநித்யமானது என்றறிந்து, அதை ஸுகம் என்று கருதமாட்டானோ, எல்லாவற்றிற்குள்ளும் இருக்கின்ற பரமானந்த ஸ்வரூபனான பரமாத்மாவையே ஸுகமாக நினைப்பானோ, அவனையே 'அந்த:ஸுக:' அதாவது பரமாத்மாவிலேயே ஸுகத்தை அனுபவிக்கிறவன் என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'அந்தராராம:' (ஆத்மாவிலேயே திளைப்பவன்) என்றால் என்ன பொருள்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** நுகர் பொருட்களினால் ஸுகம் இல்லை என்றறிந்து அவன் அவற்றில் திளைப்பதில்லை. இவற்றில் ருசியற்று, பரமாத்மாவிலேயே திளைத்திருப்பவன் இடைவிடாமல் பரமாத்மாவுடனேயே இரண்டறக் கலந்து, அதே சிந்தனையாக உள்ளவனாதலால், அவனே 'அந்தராராம:' எனப்படுவான்.

**கேள்வி:** 'அந்தர்ஜ்யோதி:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** பரமாத்மா எல்லா ஒளிகளைக் காட்டிலும் பெரிய ஒளி *(13/17)*. அகில உலகமும் அவருடைய ஒளியினால் ப்ரகாசிக்கிறது. எவன் இடைவிடாது, இரண்டற, ஞானஸ்வரூபனான பரமாத்மாவை அனுபவிக்கிறானோ, பரமாத்மாவிடமே நிலைத்திருக்கிறானோ, எவனுடைய பார்வையில் விஞ்ஞான ஆனந்தஸ்வரூபமான பரமாத்மாவைத் தவிர, வெளியே காணப்படும் பொருட்களுக்குத் தனி இருப்பு இல்லையோ, அவன்தான் 'அந்தர்ஜ்யோதி:' (உள்ளொளி பெற்றவன்). எவனுக்குக் காணப்படும் இந்த ப்ரபஞ்சமே ஸத்யமாகத் தோன்றுகிறதோ, தூங்கினவன் கனவு காண்பது போல, எவன் அஞ்ஞானத்திற்கு ஆட்பட்டு, வெளி உலகியலிலேயே மூழ்கி இருக்கிறானோ, அவன் உள்ளொளி பெற்றவன் அல்லன். ஏனெனில் பரம ஞான வடிவமான பரமாத்மா அவனுக்குப் புலப்படமாட்டார்.

**கேள்வி:** 'ஏவ' என்று கூறுவதன் கருத்து என்ன? அதற்கு எந்தச் சொல்லுடன் தொடர்பு உள்ளது?

**பதில்:** 'ஏவ' என்பது பிரிநிலைப் பொருளை (வ்யாவ்ருத்தி – நிச்சயத்தை) உணர்த்துவது. இது 'அந்த:ஸுக:', 'அந்தராராம:', 'அந்தர்ஜ்யோதி:' ஆகிய மூன்றுடனும் தொடர்புடைய சொல் ஆகும். அந்த யோகி பரமாத்மாவிலேயே ஸுகம், ஈடுபாடு, ஞானம் ஆகியவற்றை அனுபவிப்பதால் கண்ணுக்குப் புலப்படும் வெளி உலகத்துடன் அவனுக்கு எவ்வித உறவும் இல்லை.

**கேள்வி:** 'ப்ரஹ்மபூத:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** இந்தச் சொல் ஸாங்க்யயோகிக்கு அடைமொழி. ஸாங்க்யயோக ஸாதனை புரிகின்ற யோகி அஹங்காரம்–மமகாரம், காம–க்ரோதங்கள் என்ற விகாரங்கள் அற்று இடைவிடாது பகவானையே சிந்தனை செய்து, அந்த ப்ரம்மமாகவே ஆகிவிடுகிறான். இந்த இறுதியான ப்ரம்மநிலையை அடைந்த ஸாங்க்யயோகியை 'ப்ரஹ்மபூத:' என்கிறார்.

**கேள்வி:** 'ப்ரஹ்மநிர்வாணம்' என்றால் என்ன பொருள்? அதை அடைவது என்றால் என்ன?

**பதில்:** 'ப்ரஹ்மநிர்வாணம்' என்பது ஸத் சித் ஆனந்தமயமான, நிர்குண, நிராகார, மாறுதலற்ற, சாந்தமான பரமாத்மாவைக் குறிக்கும். இரண்டறக் கலந்து நேரிடையாக ப்ரம்மமாகவே ஆகிவிடுவதுதான் அதனை அடைவது ஆகும். ஸாங்க்யயோகியின் முடிவான நிலையை 'ப்ரஹ்மபூத:' என்ற சொல்லால் குறிப்பிட்டு, அதுவே அதனுடைய பயன் என்கிறார். ப்ருஹதாரண்யகம் கூறுகிறது: 'ப்₃ரஹ்மைவ ஸந் ப்₃ரஹ்மாப்யேதி' *(4/4/6)*. அவன் ப்ரம்மமாகவே ஆகி ப்ரம்மத்தை அடைந்து விடுகிறான். இதையே பரம சாந்தியை அடைவது; அக்ஷய ஸுகத்தை அடைவது; ப்ரம்மத்தை அடைவது; மோக்ஷத்தை அடைவது; பரமகதியை அடைவது என்றெல்லாம் கூறுவர்.

**பொருத்தம்:** இவ்விதம் பரப்ரம்ம பரமாத்ம நிலையை அடைந்தவர்களின் இலக்கணத்தை இரண்டு ச்லோகங்களில் கூறுகிறார்—

**लभन्ते ब्रह्मनिर्वाणमृषयः क्षीणकल्मषाः ।**
**छिन्नद्वैधा यतात्मानः सर्वभूतहिते रताः ॥ २५ ॥**

**லப₄ந்தே ப்₃ரஹ்மநிர்வாணம்ருஷய: க்ஷீணகல்மஷா: ।**
**சி₂ந்நத்₃வைத₄ா யதாத்மாந: ஸர்வபூ₄தஹிதே ரதா: ॥ 25 ॥**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**க்ஷீண கல்மஷா:** – எவர்களுடைய எல்லாப் பாவங்களும் அழிந்துவிட்டனவோ, **சி₂ந்நத்₃வைத₄ா:** – எவர்களுடைய எல்லா ஐயங்களும் ஞானத்தினால் தெளிவாக்கப்பட்டு விட்டனவோ, **ஸர்வபூ₄தஹிதே:** – எவர் அனைத்து உயிரினங்களின் நலனிலும், **ரதா:** – ஈடுபாடு கொண்டவர்களோ (மேலும்), **யதாத்மாந:** – எவர்களுடைய மனம் சஞ்சலமின்றிப் பரமாத்மாவிடமே நிலைத்துள்ளதோ (அந்த), **ருஷய:** – ப்ரம்மத்தை அறிந்தவர்கள், **ப்₃ரஹ்ம-நிர்வாணம்** – ஸத் சித் ஆனந்தமயனான, நிர்குண, நிராகார, பரப்ரம்ம பரமாத்மாவை, **லப₄ந்தே** – அடைகிறார்கள்.

எவர்களுடைய எல்லாப் பாவங்களும் அழிந்துவிட்டனவோ, எவர்களுடைய எல்லா ஐயங்களும் ஞானத்தினால் தெளிவாக்கப்பட்டுவிட்டனவோ, எவர் அனைத்து உயிரினங்களின் நலனிலும் ஈடுபாடு கொண்டவர்களோ, மேலும் எவர்களுடைய மனம் சஞ்சலமின்றிப் பரமாத்மாவிடமே நிலைத்துள்ளதோ அந்த ப்ரம்மத்தை அறிந்தவர்கள் ஸத் சித் ஆனந்த மயனான, நிர்குண, நிராகார, பரப்ரம்ம பரமாத்மாவை அடைகிறார்கள்.

**கேள்வி:** *'க்ஷீணகல்மஷா:' (பாவம் அழிந்துவிட்டவர்கள்) என்று அடைமொழி கொடுப்பதன் கருத்து என்ன?*

**பதில்:** இப்பிறவியிலும், முற்பிறவிகளிலும் செய்த கர்மங்களின் ஸம்ஸ்காரங்கள், விருப்பு-வெறுப்பு முதலிய விகாரங்கள், அவற்றின் மெய்ப்பாடுகள் இவையெல்லாம் உள்ளத்திலே குவிந்து பந்தத்திற்குக் காரணம் ஆகின்றன. ஆகவே, இவையெல்லாம் கல்மஷங்கள் – பாவங்கள். பரமாத்மாவை நேரிடையாக அடைந்ததும், அக்கணமே பாவங்கள் அழிகின்றன. பின் அவருடைய உள்ளத்தில் சிறிது கூட மாசு இருக்காது. இப்படி உள்ளத்து 'மாசு' அகன்றவர்களையே 'க்ஷீணகல்மஷா:' (பாவம் அழிந்துவிட்டவர்கள்) என்கிறார்.

**கேள்வி:** *'சிந்நத்வைத₄ா:' என்றால் என்ன கருத்து?*

**பதில்:** 'த்வைத₄' என்றால் ஐயம். இப்படியோ, அப்படியோ என்று தீர்மானிக்க முடியாத நிலை. இதற்குக் காரணம் அஞ்ஞானம். பரமாத்மாவைப் பற்றி உண்மை அறிவு உண்டாகிவிட்டால் ஸந்தேஹங்கள் அனைத்தும், அவற்றுக்குக் காரணமான அஞ்ஞானத்தோடுகூட அழிந்துவிடும். பரமாத்மாவை அடைந்துவிட்ட நிர்மலமான மனதுடையவனின் உள்ளத்தில் விக்ஷேபம் (தடுமாற்றம்), ஆவரணம் (திரை) முதலிய மாசுகள் இரா. இதையே 'சிந்நத்வைதா:' என்ற அடைமொழியால் கூறுகிறார்.

**கேள்வி:** *'யதாத்மாந:' என்றால் என்ன பொருள்?*

**பதில்:** எவருடைய மனம் வசப்பட்டு, சஞ்சலம் முதலிய குறைபாடுகள் முற்றிலுமாக நீங்கி, பரமாத்ம ஸ்வரூபத்தில் ஐக்யமாகிவிடுகிறதோ, அவரை 'யதாத்மா' என்கிறார்.

**கேள்வி:** *'ஸர்வபூதஹிதே ரதா:' என்றால் என்ன பொருள்?*

**பதில்:** பரமாத்மாவின் நேரிடை அனுபவம் பெற்ற பிறகு, 'தனது-பிறரது' என்ற வேறுபாடு இருக்காது. எல்லா உயிரினங்களிடத்திலும் தானே என்கிற ஆத்மபுத்தி ஏற்படுகிறது. அஞ்ஞானி தன் உடலை ஆத்மா என்று நினைத்து, அதன் நலனில் ஈடுபடுவது போல, ஞானியான மேலான மனிதன் எல்லோரிடமும் ஸமபாவனையுடன் ஆத்மபுத்தி கொண்டு எல்லோருடைய ஹிதத்திற்காகவும் இயல்பாகவே பாடுபடுவான். இதைத்தான் 'ஸர்வபூதஹிதே ரதா:' என்ற தொடர் கூறுகிறது. இப்படிச் சொல்வதுகூட உலகத்தாரின் பார்வையில் ஞானியின் ஆதர்ச வாழ்க்கையைக் கோடி காட்டுவதற்குத்தான். உண்மையில், ஞானியின் நிலையில் ஒன்றேயான ப்ரம்மம் தவிர மற்ற சராசர வஸ்துக்களுக்குத் தனியான இருப்பு என்பதும் இல்லை; தான் அவற்றின் நலனில் ஈடுபாடுள்ளவன் என்ற எண்ணமும் இல்லை.

**கேள்வி:** *இங்கு ரிஷிகள் என்றால் 'ப்ரம்மத்தை அறிந்தவர்கள்' என்று ஏன் பொருள் கொள்ளவேண்டும்?*



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** 'ருஷ்' என்ற வேர்ச்சொல்லுக்கு ஞானம் அல்லது பொருளை உள்ளபடி அறிவது என்று பொருள். இந்த முறையில் பரமாத்ம தத்வத்தை உள்ளபடி அறிந்தவர்கள் ரிஷிகள் ஆவார்கள். ஆகவே, இங்கு ரிஷிகள் என்றால் ப்ரம்மத்தை அறிந்தவர்கள் என்று பொருள் கூறுவது பொருத்தம்தான். பாவம் அழிந்தவர்கள், ஸந்தேஹமற்றவர்கள், வசப்பட்ட மனமுடையவர்கள் என்ற அடைமொழிகளும் இதைத்தான் நிரூபிக்கின்றன. முண்டகோபநிஷத் கூறுகிறது:

பி₄த்₃யதே ஹ்ருத₃யக்₃ரந்தி₂ஶ்சி₂த்₃யந்தே ஸர்வஸம்ஶயா: ।
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந்த்₃ருஷ்டே பராவரே ॥ (2/2/8)

அனைத்து சராசரங்களின் காரண கார்ய ரூபமான பரமாத்மாவை நேரிடையாகக் கண்டுவிட்ட ஞானியினுடைய உள்ளத்தில் உள்ள முடிச்சு அவிழ்ந்து விடுகிறது; அனைத்து ஐயங்களும் நீங்கிவிடுகின்றன; எல்லாச் செயல்களும் அற்றுப் போய் விடுகின்றன.

**कामक्रोधवियुक्तानां यतीनां यतचेतसाम्।**
**अभितो ब्रह्मनिर्वाणं वर्तते विदितात्मनाम्॥ २६॥**

**காமக்ரோத₄வியுக்தாநாம் யதீநாம் யதசேதஸாம் ।**

**அபி₄தோ ப்₃ரஹ்மநிர்வாணம் வர்ததே விதி₃தாத்மநாம் ॥ 26 ॥**

**காம க்ரோத₄ வியுக்தாநாம்** – காமக்ரோதங்கள் விலகிய, **யதசேதஸாம்** – மனதை வசப்படுத்தி வெற்றி கொண்ட, **விதி₃தாத்மநாம்** – பரப்ரம்ம பரமாத்மாவை நேரிடையாக அனுபவித்த, **யதீநாம்** – ஞானிகளுடைய, **அபி₄த:** – நாற்புறங்களிலும், **ப்₃ரஹ்ம-நிர்வாணம்** – அமைதியின் இருப்பிடமாகிய பரப்ரம்ம பரமாத்மாவே, **வர்ததே** – நிறைந்து இருக்கிறார்.

காமக்ரோதங்கள் விலகிய, மனதை வசப்படுத்தி வெற்றி கொண்ட, பரப்ரம்ம பரமாத்மாவை நேரிடையாக அனுபவித்த ஞானிகளுடைய நாற்புறங்களிலும் அமைதியின் இருப்பிடமாகிய பரப்ரம்ம பரமாத்மாவே நிறைந்து இருக்கிறார்.

**கேள்வி:** 'காம-க்ரோதங்கள் விலகிய' என்று கூறுவதன் கருத்து என்ன? ஞானிகளான மஹாத்மாக்கள் மனம் மூலமாகவும், புலன்கள் மூலமாகவும் காம-க்ரோதங்களின் விளைவான செயல்களைப் புரியமாட்டார்களா?

**பதில்:** ஞானி மஹாத்மாக்களின் உள்ளம் எப்பொழுதும் பரிசுத்தமாகவே இருக்கும். அதனால் அவர்களிடம் சிறிதுகூட காம-க்ரோத விகாரங்கள் இருக்கமாட்டா. இப்படிப்பட்ட மஹாத்மாக்களின் மனதாலோ, புலன்களாலோ என்ன செயல் நடந்தாலும், அது இயல்பாகவே பிறருடைய நலனுக்காகவே நடைபெறும். நடைமுறையில் எப்பொழுதாவது அவர்கள் உள்ளத்தில் சாஸ்த்ரங்களுக்கு ஒத்தவாறு ஏதாவது காமமோ, கோபமோ வெளிப்பட்டால், அது ஒரு நாடகத்தில் பாத்திரங்கள் நடிப்பில் ஏறிட்டுக் கொள்ளும் காம-க்ரோத அபிநயம் போல உலக நன்மையின் பொருட்டு அவர்கள் செய்யும் லீலையே.

**கேள்வி:** 'யதி:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** மலம், விக்ஷேபம், ஆவரணம் என்ற மனதின் மும்மலங்கள் ஞானத்திற்கு இடையூறுகள். இம்மூன்றும் ஞானிகளிடம் அறவே இரா. இங்கே காம-க்ரோதங்கள் அற்றவர்கள் மலதோஷம் நீங்கியவர்; மனவடக்கமுடையவர்கள் என்போர் விக்ஷேப தோஷம் நீங்கியவர்கள். ஆத்மாவை உள்ளவாறு அறிந்தவர்கள் என்போர் ஆவரண தோஷம் நீங்கியவர் என்று கூறுகிறார். இம்மூன்றும் நீங்கிவிட்டால் பரமாத்மாவைப் பற்றிய பூரண ஞானம் ஏற்படுகிறது. ஆகவே, இங்கு 'யதி:' என்ற சொல்லுக்கு ஸாங்க்யயோக ஸாதனை மூலம் பரமாத்மாவை அடைந்துவிட்ட ஆத்மஸம்யமம் பெற்ற தத்வஞானி என்று பொருள்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** ஞானிகளைச் சுற்றி எல்லாப்புறங்களிலும் சாந்த பரப்ரம்ம பரமாத்மாவே நிறைந்திருக்கிறார் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பரமாத்மாவை அடைந்துவிட்ட ஞானியான மஹாபுருஷனின் அனுபவத்தில் மேலும்-கீழும், உள்ளும்-புறமும், இங்கும்-அங்கும், எங்கும் நித்யமான, நிரந்தரமான, விஞ்ஞான ஆனந்தமயமான பரப்ரம்ம பரமாத்மாவே இருப்பார். ஒப்பில்லாத பரமாத்மாவைத் தவிர வேறு ஒரு பொருளுக்கும் 'இருப்பு' என்பதே கிடையாது. இதைத்தான் எல்லாப்புறங்களிலும் ப்ரம்மம் நிறைந்திருக்கும் என்று கூறுகிறார்.

**பொருத்தம்:** கர்மயோகம், ஸாங்க்யயோகம் என்ற இரண்டு ஸாதனைகளின் மூலம் பரமாத்மாவை அடைவதையும், அப்படி பரமாத்மாவை அடைந்தவரின் இலக்கணங்களையும் கூறினார். இந்த இருவித ஸாதகர்களுக்கும், வைராக்யத்துடன் மனதையும், புலன்களையும் வசப்படுத்தி த்யானயோக ஸாதனை புரிவது உதவியாக இருக்கும். ஆகவே, த்யானயோகத்தையும், அதன் பயனையும் சுருக்கமாகக் கூறுகிறார்—

**स्पर्शान्कृत्वा बहिर्बाह्यांश्चक्षुश्चैवान्तरे भ्रुवोः।**
**प्राणापानौ समौ कृत्वा नासाभ्यन्तरचारिणौ॥ २७॥**

**यतेन्द्रियमनोबुद्धिर्मुनिर्मोक्षपरायणः।**
**विगतेच्छाभयक्रोधो यः सदा मुक्त एव सः॥ २८॥**

*ஸ்பர்ஶாந்க்ருத்வா ப₃ஹிர்பா₃ஹ்யாம்ஶ்சக்ஷுஶ்சைவாந்தரே ப்₄ருவோ: ।*
*ப்ராணாபாநௌ ஸமௌ க்ருத்வா நாஸாப்₄யந்தரசாரிணௌ ॥ 27 ॥*
*யதேந்த்₃ரியமநோபு₃த்₃தி₄ர்முநிர்மோக்ஷபராயண: ।*
*விக₃தேச்ச₂ாப₄யக்ரோதோ₄ ய: ஸதா₃ முக்த ஏவ ஸ: ॥ 28 ॥*

*பா₃ஹ்யாந் ஸ்பர்ஶாந்* — வெளி விஷய போகங்களை (ச்சிந்தியாமல் அவற்றை), *ப₃ஹி: ஏவ* — வெளியிலேயே, *க்ருத்வா* — தள்ளி, *சக்ஷு:* — கண்களின் பார்வையை, *ப்₄ருவோ:* — இருபுருவங்களின், *அந்தரே* — நடுவிலும், *நாஸாப்₄யந்தர சாரிணௌ* — நாசியின் உள்ளே ஸஞ்சரிக்கின்ற, *ப்ராண அபாநௌ* — ப்ராண, அபான வாயுக்களை, *ஸமௌ க்ருத்வா ச* — ஸமமாக்கி, *யதேந்த்₃ரிய மநோ பு₃த்₃தி₄:* — புலன்கள், மனம், புத்தி இவற்றை அடக்கி, *விக₃த இச்ச₂ா ப₄ய க்ரோத₄:* — ஆசை, பயம், கோபம் இவற்றிலிருந்து முற்றிலும் விடுபட்டு, *மோக்ஷபராயண:* — மோக்ஷத்தில் குறியுள்ள, *ய: முநி:* — பரமாத்மாவையே சிந்தித்துக் கொண்டிருக்கின்ற முனிவனான, *ஸ:* — அவன், *ஸதா₃* — எப்பொழுதும், *முக்த: ஏவ* — விடுதலைப் பெற்றவனே.

வெளி விஷய போகங்களைச் சிந்தியாமல் அவற்றை வெளியிலேயே தள்ளிக் கண்களின் பார்வையை இருபுருவங்களின் நடுவிலும் நாசியின் உள்ளே ஸஞ்சரிக்கின்ற ப்ராண, அபான வாயுக்களை ஸமமாக்கி புலன்கள், மனம், புத்தி இவற்றை அடக்கி ஆசை, பயம், கோபம் இவற்றிலிருந்து முற்றிலும் விடுபட்டு மோக்ஷத்தில் குறியுள்ள பரமாத்மாவையே சிந்தித்துக் கொண்டிருக்கின்ற முனிவனான அவன் எப்பொழுதும் விடுதலைப் பெற்றவனே.

**கேள்வி:** வெளி விஷயங்களை வெளியே தள்ளுவது என்பதன் கருத்து என்ன?

**பதில்:** வெளியேயுள்ள போக விஷயங்களுடன் ஜீவனுக்குத் தொடர்பு பன்னெடுங்காலமாக இருந்து வருகிறது. அவற்றினுடைய பதிவுகள் மனதில் எண்ணற்ற சித்திரங்களாக நிரம்பியுள்ளன. போக விஷயங்களில் ஸுகமும், கவர்ச்சியும் உள்ளன எனும் எண்ணத்தால் மனிதன் போகப் பொருட்களையே நினைத்துக் கொண்டிருக்கிறான். அத்துடன்



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



முன்வினை மனப்பதிவுகளான ஸம்ஸ்காரங்களும் வெளிப்பட்டு, அவன் மனதில் பற்றுதலையும், ஆசைத்தீயையும் வளர்த்து விடுகின்றன. ஆகவே சிறிது நேரம்கூட, அவன் மனம் அமைதியாக இருப்பதில்லை. எப்பொழுதாவது போக விஷயங்களைத் துறந்துவிட்டுத் தனிமையில் த்யானம் செய்ய உட்கார்ந்தால்கூட, அந்த போகப் பொருட்களின் மனப்பதிவு அவன் மனதைவிட்டு அகலுவதில்லை. அதனால், அவன் பரமாத்ம த்யானம் செய்ய முடிவதில்லை. இதற்கு முக்ய காரணம் இடைவிடாமல் மனதில் ஓடும் போக சிந்தனையே. போக விஷயங்கள் ஸுகம் தரும் என்ற எண்ணம் இருக்கும்வரை இந்தச் சிந்தனை அற்றுப் போகாது. ஆகவே விவேகம், வைராக்யம் இவற்றின் உதவியைக் கொண்டு, 'எல்லா வெளி போக விஷயங்களும் கணத்தில் நசிப்பவை; அநித்யமானவை; துக்கமயமானவை; துக்கத்திற்குக் காரணமானவை' என்று அறிந்து, அவற்றின் ஸம்ஸ்காரங்களான மனப்பதிவுச் சித்திரங்களை உள்ளத்திலிருந்து அகற்றிவிட வேண்டும். அவற்றின் நினைவை அறவே அழித்து விடவேண்டும். அப்போதுதான் மனம் நிலைப்படும்; அமைதியையும் பெறும் என்று பகவான் சொல்கிறார்.

**கேள்வி:** *கண்பார்வையைப் புருவமத்தியில் நிறுத்துவது எதற்காக?*

**பதில்:** கண்கள் நாற்புறமும் பார்த்தால் த்யானத்தில் இடையூறு ஏற்படும். கண்களை மூடிக் கொள்வதால் சோம்பலும், தூக்கமும் வரலாம். ஆகவே இப்படிச் சொன்னார். இது தவிர, யோக சாஸ்த்ர முறையின்படியும் ஒரு காரணம் உண்டு. புருவ மத்தியில் இரண்டு இலைகள் கொண்ட ஆக்ஞாசக்ரம் இருக்கிறது. இதன் அருகில் ஏழு உறைகள் (கோசங்கள்) உள்ளன. அவற்றில் கடைசிக் கோசத்தின் பெயர் 'உந்மநீ'. அதை எட்டிவிட்டால் ஜீவன் மறுபிறவி எடுக்கமாட்டான். அதனால்தான் யோகிகள் ஆக்ஞாசக்ரத்தில் பார்வையை நிலைக்க வைக்கிறார்கள்.

**கேள்வி:** *'ப்ராண, அபான வாயுக்கள் நாசியில் ஸஞ்சரிக்கின்றன' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** இங்கு ப்ராணனும், அபானனும் ஸமமாக ஸஞ்சரிக்க வேண்டுமென்று கூறுகிறார். அவற்றைத் தடுக்க வேண்டும் என்று கூறவில்லை. அதற்காகத்தான் நாசியில் ஸஞ்சரிப்பவை என்று கூறுகிறார்.

**கேள்வி:** *ப்ராண, அபான வாயுக்களைச் சீராக வைப்பது எப்படி?*

**பதில்:** ப்ராண, அபான வாயுக்களின் போக்கு இயல்பாகவே தாறுமாறாக இருக்கும். சில சமயம் இடது நாசியில் ஸஞ்சரிக்கும். மற்ற சமயம் வலது நாசியில் ஸஞ்சரிக்கும். இடது நாசியில் ஸஞ்சரிக்கும் போது இடா நாடியில் ஸஞ்சரிப்பதாகவும், வலது நாசியில் ஸஞ்சரிக்கும்போது பிங்களா நாடியில் ஸஞ்சரிப்பதாகவும் சொல்வார்கள். இந்த நிலையில் மனிதனுடைய மனம் சஞ்சலப்பட்டுக் கொண்டுதான் இருக்கும். இப்படித் தாறுமாறாக ஸஞ்சரிக்கும் ப்ராண, அபானன்களை இரு நாசிகளிலும் ஸமமாக ஸஞ்சரிக்க வைப்பதுதான், அவற்றை ஸமப்படுத்துவதாகும். அதாவது ப்ராண, அபானன்களை ஸுஷும்னா நாடியில் செலுத்துவதாகும். ஸுஷும்னா நாடியில் ப்ராண, அபானன்கள் ஸஞ்சரிக்கும்போது ப்ராண, அபான ஸஞ்சாரம் நுட்பமாகவும், சீராகவும் இருக்கும். அப்பொழுது மனதின் சஞ்சலம், அமைதியின்மை ஆகியவை தாமே அழிந்துவிடும். அவன் இயல்பாக பகவானை த்யானம் பண்ணுவான்.

ப்ராண, அபான வாயுக்களை ஸமப்படுத்துவதற்கு வழி:- முதலில் இடது நாசி மூலம் அபான வாயுவை உள்ளே இழுத்து வலது நாசி மூலம் ப்ராண வாயுவை வெளியே தள்ளவேண்டும். பிறகு அபான வாயுவை வலது நாசி மூலம் உள்ளே இழுத்து ப்ராண வாயுவை இடது நாசி மூலம் வெளிப்படுத்தவேண்டும். இவ்விதம் ப்ராண, அபான வாயுக்களைச் சீராக்கும் பயிற்சி செய்யும்போது பகவந்நாமத்தை ஜபம் பண்ணவேண்டும். வாயுவை வெளிப்படுத்தும்போதும், உள்ளிழுக்கும்போதும், சரியான – சீரான – ஒரே

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வினாடிக் கணக்கில் செய்வதுடன் அந்தப் போக்குவரத்தை ஸமமாகவும், கொஞ்சம் கொஞ்சமாக நுட்பமாகவும் செய்யவேண்டும். இவ்விதம் தொடர்ந்து பயிற்சி செய்து மூச்சுவிடுவதும், உள்ளிழுப்பதும், ஸமமாகவும், அமைதியாகவும், நுட்பமாகவும் ஆகிவிடும்போது, மூச்சு வெளியிலே செல்வதோ, உள்ளே கண்டத்திலே வருவதோகூடத் தெரியாது. இதுதான் ப்ராணனும், அபானனும் ஸமமாகவும், நுட்பமாகவும் செல்கின்றன என்பதற்கு அடையாளம்.

**கேள்வி:** புலன்கள், மனம், புத்தி இவற்றை அடக்குவது என்றால் என்ன? அவற்றை எவ்வாறு அடக்க வேண்டும்? எதற்காக ஜயிக்கவேண்டும்?

**பதில்:** புலன்கள் தம் போக்கில் போக விஷயங்களில் அலைந்தாலும், மனம் அலைந்துகொண்டே தன் வழக்கத்தை விடாமல், எதையாவது சிந்தித்துக் கொண்டிருந்தாலும், புத்தி ஒருவிதமான முடிவுக்கும் வராமல் பேதலித்தாலும், இவை கட்டுப்பாடற்றுக் கண்டபடி திரிகின்றன என்று பொருள். விவேகத்துடனும், வைராக்யத்துடனும் பயிற்சி செய்து இவற்றைக் கட்டுக்குள் வசப்படுத்திச் சொன்னபடி நடக்கச் செய்து உள்நோக்குமாறோ, பகவானை நினைக்குமாறோ செய்வதுதான் இவற்றை வெற்றி கொள்வதாகும். இப்படிச் செய்து விட்டால் புலன்கள் தம் இஷ்டப்படி போக விஷயங்களில் திளைக்காமல், நம் இஷ்டப்படி நாம் எங்கு தடுத்து நிறுத்துகிறோமோ, அங்கேயே ஈடுபடும். மனமும் நம் விருப்பப்படி ஒரு குறியில் நிலைத்து நிற்கும். புத்தியும் ஒரு நிலைக்கு வந்து பேதலிக்காமல் இருக்கும். புலன்களைத் தன்வசப்படுத்துவதனால் அதாவது புலனடக்கத்தால் ப்ரத்யாஹாரமும், மனதைத் தன்வசப்படுத்துவதால் அதாவது மனவடக்கத்தால் தாரணையும், புத்தியைத் தன்வசப்படுத்துவதால் அதாவது புத்தியை அசையாது ஓரிடத்திலே நிலை கொள்ளச் செய்வதால் த்யானமும் எளிதாகின்றன. ஆகவே 'த்யானம் செய்தல்' எனும் யோகத்தில் இம்மூன்றையும் தன்வசப்படுத்துவது மிகவும் அவசியம். இதுவே இவற்றை வெற்றி கொள்வது.

**கேள்வி:** 'மோக்ஷபராயண:' என்ற தொடருக்கு என்ன பொருள்?

**பதில்:** பரமாத்மாவை அடைவது, பரமகதி, பரமபதத்தை அடைவது, விடுதலை இவற்றிற்கெல்லாம் 'மோக்ஷம்' என்று பெயர். இந்த நிலை மனதிற்கும், சொல்லுக்கும் எட்டாதது. இந்த நிலையில், மனிதன் எல்லா பந்தங்களிலிருந்தும் முற்றிலுமாக விடுபட்டு, முடிவற்ற, இரண்டற்ற பரம மங்களமயமான, பரம ஆனந்த நிலையை அடைகிறான் என்று சொல்லலாம். 'பரமாத்மாவை அடைவது' என்ற இந்த மோக்ஷத்திற்காக ஒருவன் புலன்கள், மனம், புத்தி இவற்றை முற்றிலும் பரமாத்ம மயமாகவே ஆக்கிவிடுகிறான்; அதே முயற்சியில் இடைவிடாது ஈடுபடுகிறான்; வாழ்க்கையின் லக்ஷ்யமே அதுதான் என்ற உறுதியுடன் இருக்கிறான்; பரமாத்மாவைத் தவிரப் பெறவேண்டியது வேறொன்றுமில்லை என்ற உறுதியுடன் இருக்கிறான்; அவன்தான் மோக்ஷத்தில் குறியுள்ளவன்.

**கேள்வி:** 'முநி:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** 'முநி:' என்றால் சிந்தனையில் ஈடுபட்டவன் என்று பொருள். த்யானம் செய்யும்போது மட்டுமல்ல. நடைமுறை வாழ்க்கையிலும் பரமாத்மாதான் எங்கும் வ்யாபித்து இருக்கிறார் என்ற உறுதியான நம்பிக்கையின் காரணமாகப் பரமாத்மாவையே எப்பொழுதும் சிந்தனை புரிந்து கொண்டிருப்பவர் முனிவர்.

**கேள்வி:** 'விகத இச்சா பய க்ரோத:' (ஆசை, பயம், கோபம் இவை நீங்கியவர்) என்றால் என்ன பொருள்?

**பதில்:** ஏதேனும் ஒரு பொருள் தன்னிடம் இல்லை என்று உணரும்போது அப்பொருளை அடைய ஆசை உண்டாகிறது. தனக்கு வேண்டாதது நடந்துவிடுமோ என்ற ஸந்தேஹத்தால் பயம் உண்டாகிறது. ஆசையில் இடையூறு ஏற்பட்டாலோ, மனம் விரும்பிய செயல் நிறைவேறாவிட்டாலோ கோபம் உண்டாகிறது. மேலே சொன்னபடி, த்யானயோகப் பயிற்சி

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



செய்து ஸித்தி அடைந்து விட்டவனுக்கு, எங்கும், எப்பொழுதும், முற்றிலும் பரமாத்மாவின் அனுபவமே உண்டாவதால், அவன் எந்த ஓர் இடத்திலும் பரமனின் இல்லாமையைக் காண்பதில்லை என்னும்போது, அவனுக்கு ஒரு பொருள் மேல் ஆசை என்பது எப்படி ஏற்படும்? தன்னிடம் இல்லாத பொருளில் அல்லவா ஆசை ஏற்படும்? பரமாத்மா ஒருவரைத் தவிர வேறொரு பொருளே இல்லை என்னும் போது நித்ய – ஸத்ய – ஸநாதன – அனந்த – அவிநாசி – பரமாத்ம அனுபவத்திலிருந்து ஒருபொழுதும் நழுவுவதே இல்லை என்கையில், அவனுக்கு வேண்டாதது வந்துவிடுமோ என்ற பயம் எப்படி ஏற்படும்? மேலும், நித்யமாகவும், பூர்ணமாகவும் உள்ள பரமாத்மாவை அடைந்துவிட்ட காரணத்தால், எவ்வித ஆசையோ, விருப்பமோ இல்லாததால், கோபம் எப்படி – எதன் மேல் – தோன்றும்? ஆகவே, இந்த நிலையில் அவனுடைய உள்ளத்தில் நடைமுறையிலோ, கனவிலோ, எந்த நிலையிலும் அவனுக்கு ஆசையே உண்டாகாது. எந்த ஒரு நிகழ்ச்சியைக் கண்டும் அவன் பயப்படமாட்டான். கோபம் கொள்ளவும் மாட்டான்.

**கேள்வி:** 'ஏவ' என்ற சொல்லின் பொருள் என்ன? 'எப்போதும் அவன் முக்தன்தான். விடுதலை பெற்றவனே' என்பதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஏவ' என்பது உறுதியை வெளியிடுவது. ஸாதனைகளின் மூலம் எந்த மாமனிதன் அவா, பயம், க்ரோதம் இவை சிறிதும் அற்று விளங்குகிறானோ, அவன் மேலே கூறிய த்யானம் செய்யும் போதும், நடைமுறையிலும், உடல் உள்ள போதும், போன பிறகும், எந்நிலையிலும் விடுதலை பெற்றுப் பரமாத்மாவை அடைந்தவனே. இதில் ஐயம் இல்லை என்று பொருள்.

**பொருத்தம்:** அர்ஜுனனுடைய கேள்விக்குப் பதில் சொல்லும் முறையில் பகவான், கர்மயோக-ஸாங்க்யயோகங்களின் உண்மையைத் தெளிவாகக் கூறி, இரண்டு ஸாதனைகள் மூலமாகவும் பரமாத்மாவை அடையலாம் என்றும், ஸித்த புருஷர்களின் இலக்கணங்களையும் கூறினார். பிறகு அந்த இரண்டு நிஷ்டைகளுக்கும் உதவி புரியக்கூடிய த்யானயோகம் பற்றிச் சுருக்கமாகச் சொன்னார். முடிவில், ஒருவன் மனம், புலன்களை அடக்கிக் கர்மயோகத்தையோ, ஸாங்க்யயோகத்தையோ, த்யானயோகத்தையோ ஸாதிப்பது தன்னால் முடியாதென்று தயங்கினால், அவன் எளிதாக பகவானை அடைவதற்குரிய வழியான பக்தியோகத்தைச் சுருக்கமாகச் சொல்கிறார்—

**भोक्तारं यज्ञतपसां सर्वलोकमहेश्वरम्।**
**सुहृदं सर्वभूतानां ज्ञात्वा मां शान्तिमृच्छति॥ २९॥**

**போ₄க்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வலோகமஹேஶ்வரம் ।**
**ஸுஹ்ருத₃ம் ஸர்வபூ₄தாநாம் ஜ்ஞாத்வா மாம் ஶாந்திம்ருச்ச₂தி ॥ 29 ॥**

**மாம்** – (என் பக்தன்) என்னை, **யஜ்ஞதபஸாம்** – எல்லா யாகங்களையும், தவங்களையும், **போ₄க்தாரம்** – ஏற்பவன் (என்றும்), **ஸர்வலோகமஹேஶ்வரம்** – அகில லோக நாயகர்களுக்கும் மேலான ஈசுவரன் (என்றும்), **ஸர்வபூ₄தாநாம்** – அகில சராசர ப்ராணிகளுக்கும், **ஸுஹ்ருத₃ம்** – உற்ற நண்பன் அதாவது தன்னலம் கருதாத அன்பும், அருளும் உடையவன் (என்றும்), **ஜ்ஞாத்வா** – தத்வரீதியாக அறிந்து, **ஶாந்திம்** – மேலான அமைதியை, **ருச்ச₂தி** – அடைகிறான்.

என் பக்தன் என்னை எல்லா யாகங்களையும் தவங்களையும் ஏற்பவன் என்றும் அகில லோக நாயகர்களுக்கும் மேலான ஈசுவரன் என்றும் அகில சராசர ப்ராணிகளுக்கும் உற்ற நண்பன் அதாவது தன்னலம் கருதாத அன்பும் அருளும் உடையவன் என்றும் தத்வரீதியாக அறிந்து மேலான அமைதியை அடைகிறான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'யஜ்ஞம்', 'தவம்' என்றால் என்ன? பகவான் அவற்றை ஏற்கிறார் என்றால் என்ன பொருள்? அப்படி அவரை அறிவதால் மனிதனுக்கு எப்படி சாந்தி கிடைக்கும்?

**பதில்:** அஹிம்ஸை, ஸத்யம், முதலிய நற்பண்புகளைக் கைக்கொள்வது; தெய்வம், ப்ராம்மணர், தாய்-தந்தையர் முதலிய பெரியோர்களை வணங்கிப் பணிவிடை செய்வது; ஏழை-எளியவர்களுக்கும், துயருற்ற உயிரினங்களுக்கும் நட்புடனும், ஆதரவுடனும் தொண்டு செய்வது; அவர்களின் துயரைத் துடைப்பதற்காகச் செய்யப்படும் யக்ஞம், தானம் ஆகிய எல்லா நற்செயல்களும் 'யஜ்ஞம்', 'தவம்' என்ற சொற்களில் அடங்கும். பகவான் எல்லோருக்கும் ஆத்மா (10/20). ஆகவே, அவர்தாம் தெய்வமாகவும், அந்தணராகவும், ஏழை-எளியவராகவும் இருந்து நாம் செய்யும் ஸேவை, பூஜைகளை ஏற்கிறார் என்று நினைக்கவேண்டும் (9/24). பகவானுடைய தத்வத்தையும், ப்ரபாவத்தையும் அறியாத காரணத்தினால்தான், மனிதன் எந்த தேவர்களுக்கும், மனிதர்களுக்கும் பூஜை-தொண்டு செய்கிறானோ, அவர்களே அவற்றை ஏற்கிறார்கள் என்று நினைக்கிறான். அதனால், அவன் செய்யும் பூஜையும், ஸேவையும் அற்பமான, அழியக்கூடிய பயனைப் பெறுகின்றன (7/23). உண்மையான அமைதி கிடைப்பதில்லை. எவன் ஒருவன் பகவானுடைய தத்வத்தையும், ப்ரபாவத்தையும் அறிந்து உணர்கிறானோ, அவன் எல்லோர் உள்ளத்திலும் ஆத்மவடிவாக விளங்கும் பகவானைக் காண்கிறான். இவ்விதம் ப்ராணிகள் அனைத்திலும் பகவான் என்ற எண்ணம் ஊன்றிவிடுவதால், அவர்களுக்கு அவன் தொண்டு செய்யும் போது, "நான் இந்த தெய்வத்திற்கும், அந்தணர்க்கும், இந்த ஏழை-எளியவர்களுக்கும் செய்யும் ஸேவை மிகவும் மதித்துப் போற்றவேண்டிய, பரம ப்ரேமைக்குரிய, எங்கும் நிறைந்த பரமாத்மாவுக்கே செய்வதாகும்" என்ற அனுபவம் பெறுகிறான்.

எவரைச் சிறந்தவராக அல்லது மதிக்கத்தக்கவராக மனிதன் நினைக்கிறானோ, தனக்குச் சிறிதளவாவது எவரிடம் மரியாதையும், பக்தியும், உள்ளார்ந்த உண்மையான அன்பும் இருக்கின்றனவோ, அவருக்குப் பணிவிடை செய்வதில் மிகவும் மகிழ்ச்சியையும், தனிப்பட்ட அமைதியையும் பெறுகிறான். தந்தையிடம் பக்தியுள்ள தனயனோ, மகனிடம் பேரன்பு கொண்ட தாயாரோ, கணவனிடம் அன்பு கொண்ட மனைவியோ அவரவர்க்கு ஸேவை செய்யும்போது சலிப்படைவார்களா? உண்மையான சீடன் அல்லது பின்பற்றிச் செல்கிறவன் தன்னுடைய மதிப்பிற்குரிய குருநாதர் அல்லது உயர்வழி காட்டுகின்ற மஹாத்மாவின் பணிவிடையிலிருந்து ஏதேனும் ஒரு காரணம் பற்றி விலகிவிட விரும்புவானா? ஒருவனோ, ஒருத்தியோ யாரிடமாவது பெருமையும், அன்பும் பெற்று விட்டால், அவர்களுக்கு ஸேவை செய்வதற்காக ஒவ்வொரு கணமும் புதிது புதிதாக உற்சாகம் மேலிட்டுக் கொண்டே இருக்குமல்லவா? எவ்வளவு பணிவிடை செய்தாலும், 'இவ்வளவு குறைவாகத் தானே என்னால் செய்ய முடிகிறது' என்ற எண்ணம்தான் அவர்கள் மனதில் தோன்றும். நாம் செய்வது அவர்களுக்கு உபகாரம் என்று நினைத்துக் கர்வப்பட மாட்டார்கள். 'இப்படி ஸேவை செய்ய ஸந்தர்பம் கிடைத்ததே பெரிய பாக்யம்' என்று மகிழ்வார்கள். இப்படி ஸேவை செய்யச் செய்ய மனதில் பணிவும், உண்மையான வணக்கமும் வளரும். கொஞ்சம் அயர்ந்தாலும் நமக்கு இந்த பாக்யம் நழுவிவிடுமோ என்று பயப்படுவார்கள். இப்படி ஸேவை செய்வதன் மூலம் அவர்களுக்கு அமைதியும், ஆனந்தமும் ஏற்படுவதால் அவர்கள் ஸேவை செய்கிறார்கள். ஆகவே ஸேவை செய்வதில் அலுப்பு அடைவதில்லை. ஏனெனில், அவர்கள் உள்ளம் எப்பொழுதும் ஆனந்தக்கடலில் மூழ்கித் தளும்பிக் கொண்டிருக்கிறது. இந்த ஆனந்தத்திலிருந்து கரையேறாமல் மேலும் மேலும் ஸேவை செய்யவே விழைவார்கள்.

இப்படி உலகியல் மரியாதை, பெருமை, ப்ரேமை என்னும் நோக்கில் ஸேவை செய்வதிலேயே இவ்வளவு உண்மையான ஈடுபாடும், அமைதியும் ஏற்படுமானால், அகில உலகிலும் பகவானையே போற்றத்தக்கவராக, தேவாதிதேவனாக, ஸர்வ வல்லமை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



படைத்தவராக, சிந்தனைக்கு அப்பாற்பட்ட ப்ரபாவங்களின் கொள்கலனாக, தன் பேரன்புக்கு உரியவராக உணர்ந்து, அவரது தூய, இனிய, அமுதமயமான பக்திப் பெருக்கில் முழுதும் மூழ்கிய பகவானது பக்தன் ஒருவன் தன் உயர்ந்த தொண்டுள்ளத்துடனும், உறுதியான நம்பிக்கையுடனும் வழிபட்டால், அவனுக்கு உலகியல் கடந்த எத்தகைய உயர்ந்த, அபூர்வமான, தெய்விகமான மனஅமைதி கிடைக்கும்! இதை யாரே விளக்கவல்லார்! பகவானுடைய திருவருளால் இத்தகைய பேறு பெற்றவனே உண்மையில் இதை உணர முடியும்.

**கேள்வி:** பகவானை 'ஸர்வலோகமஹேச்வர:' (அகில உலக நாயகர்களுக்கும் மேலான ஈசுவரனாக அறிவது) என்றால் என்ன? அப்படியறிந்தவனுக்கு அமைதி எப்படிக் கிட்டுகிறது?

**பதில்:** இந்த்ரன், வருணன், குபேரன், யமன் முதலிய லோகபாலகர்கள், இப்படிப் பல ப்ரம்மாண்டங்களில் அந்தந்த ப்ரம்மாண்டங்களைக் காப்பாற்றி வரும் நாயகர்கள் ஆகிய எல்லோருக்கும் பகவானே தலைவன்; மேலான ஈசுவரன். ச்வேதாச்வதர உபநிஷத் கூறுகிறது: 'தமீச்வராணாம் பரமம் மஹேச்வரம்' (6/7) – 'அந்த ஈசுவரர்களுக்கெல்லாம் ஈசனான பரமாத்மா.' விளக்க முடியாத தமது மாயாசக்தியின் மூலம் பகவான் லீலையாகப் பல கோடி ப்ரம்மாண்டங்களைப் படைத்துக் காத்துத் தன்னுள் அடக்கித் தக்கபடி கட்டுப்பாட்டில் வைத்து, அவற்றிற்கெல்லாம் மேலே தனியாக நிற்கிறார். இப்படி பகவான் ஸகல வல்லமை படைத்தவர்; எல்லாவற்றையும் அடக்கி ஆள்பவர்; எல்லாவற்றிற்கும் தலைவர்; எல்லா ஈசுவரர்களுக்கும் ஈசுவரன் என்று அறியவேண்டும். அதைத்தான் 'ஸர்வலோகமஹேச்வர:' என்ற தொடர் குறிக்கிறது.

இவ்விதம் அறிந்து கொண்ட பக்தன், பகவானுடைய அளவற்ற ப்ரபாவத்தையும், ரஹஸ்யத்தையும் நன்கு உணர்ந்துவிட்டபடியால், ஒரு க்ஷணம்கூட பகவானை மறக்க மாட்டான். அவனுக்கு ஒருபோதும் பயம், கவலை, வேறு சிந்தனைகள் இரா. அவனுடைய அமைதியைக் கெடுக்க, காமக்ரோதங்கள் முதலிய பகைகள் அவனை அணுகமாட்டா. அவனுடைய பார்வையில் பகவானைக் காட்டிலும் பெரியவர் கிடையாது. அந்தச் சிந்தனையில் ஈடுபட்டு இடைவிடாமல் எப்போதும் மேலான அமைதியின் இருப்பிடமாகவும், ஆனந்தத்தின் பெருங்கடலாகவும் உள்ள பகவானின் த்யானத்திலேயே மூழ்கியிருப்பான்.

**கேள்வி:** பகவான் எல்லா ப்ராணிகளுக்கும் உற்ற நண்பனாக எப்படி இருப்பார்? அப்படி பகவான் உற்ற நண்பன் என்று அறிவதால் மனஅமைதி எப்படிக் கிடைக்கிறது?

**பதில்:** அகில உலகிலும் பகவானுக்குக் கிடைக்காத பொருள் என்று ஒன்றும் இல்லை. எதைப் பெறுவதற்காகவும் பகவான் யாரையும் எதிர்பார்க்கத் தேவையில்லை. பகவான் எப்பொழுதும், எவ்விதத்திலும் தம் விருப்பம் நிறைவேறியவர் – பூர்ணகாமன் (3/22). அப்படியிருந்தும், அவர் அருள்வடிவினரான ஒரே காரணத்தினால், இயல்பாகவே எல்லோருக்கும் அருள்புரிந்து நன்மையே செய்கிறார். அடிக்கடி அவதாரம் எடுத்துப் பலவிதமான விசித்திரமான லீலைகளைச் செய்கிறார். அவற்றைப் பாடிப் பாடி மக்கள் கரையேறி விடுகிறார்கள். அவருடைய ஒவ்வொரு செயலிலும் உலக நன்மையே நிறைந்து இருக்கிறது. பகவான் யாரையாவது கொன்றாலும் அல்லது யாருக்காவது தண்டனை கொடுத்தாலும், அதுவும் அவருடைய அருள்தான். இரக்கமும், அன்பும் இல்லாத எந்த ஒரு சட்டமும் அவரிடம் இல்லை. ஆகவே, பகவான் எல்லா உயிரினங்களுக்கும் உற்ற நண்பர் ஆவார்.

உலகத்தினர் இவ்வுண்மையை அறியாததாலேயே, உலகியலில் நல்லது, கெட்டது நேர்ந்தால் ஸுக–துக்கமடைகிறார்கள். அதனால்தான் அவர்களுக்கு அமைதி கிடைப்பதில்லை. இந்த உண்மையை அறிந்து கொண்டவன், "பகவானுக்கு நம்மிடம் காரணமற்ற, இயல்பான பேரன்பு உள்ளது. அவர் எது செய்தாலும், அது நம்முடைய நன்மைக்குத்தான். எந்த நிலையிலும், என்ன நேர்ந்தாலும், அது தனிப்பெருங்கருணையாளராகிய பகவானுடைய ப்ரேமையும், க்ருணையும் கூடிய மங்களமான அருட்செயல்தான்" என்ற நம்பிக்கையோடு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



எப்பொழுதும் மகிழ்ச்சியுடன் இருப்பான். அதனால், அவனுக்கு நிலையான அமைதி கிடைக்கிறது. அந்த சாந்திக்கு இடையூறாக எதுவும் அவனுக்கு நேர முடியாது.

உலகியலில் ஒரு ஸாதாரண மனிதனிடம், சக்தி படைத்த ஓர் உயர் அதிகாரியோ, அரசனோ நட்புக் காட்டினால், அப்படிக் காட்டுவதாக அம்மனிதன் அறிந்தாலும், 'அந்த அதிகாரி – அரசன் மிகவும் சக்தி படைத்தவன்; நமக்கு உண்மையாக ஹிதம் செய்ய விரும்புகிறான்; நம்மைக் காப்பாற்ற விரும்புகிறான்' என்று அவனுக்குத் தெரிந்தாலும், அந்த அரசனோ, அதிகாரியோ முற்றிலும் தன்னலம் அற்றவர்களாகவும், சக்தி வாய்ந்தவர்களாகவும், அனைவருக்கும் யஜமானர்களாகவும் இல்லாதிருப்பினும், அந்த அரசனுடைய நட்பிற்குப் பாத்திரமானவன் தன்னை பாக்யசாலியாக நினைக்கிறான்; கவலையையெல்லாம் மறந்துவிடுகிறான்; ஆனந்தத்தில் மூழ்கிவிடுகிறான். ஸாதாரண அதிகாரி, ஓர் அரசனாக உள்ள வெறும் மனிதன் விஷயத்திலேயே இப்படி ஆனந்தப்படுவானேயானால், ஸர்வவல்லமை படைத்த, ஸர்வலோக மஹேசுவரனான, எல்லோரையும் ஆட்டிப் படைக்கின்ற, எல்லோருக்கும் அந்தர்யாமியான, எல்லோரையும் பார்க்கிறவரான, கற்பனைக்கெட்டாத நற்குணங்களின் எல்லையற்ற பெருங்கடலான மிகவும் பேரன்பு கொண்ட பகவானே தம்மை நமக்கு உற்ற நண்பனாகக் கூறி, நாமும் இந்த விஷயத்தில் நம்பிக்கை வைத்து அவரை நம்முடைய நண்பராகக் கருதினால், நமக்கு எத்தகைய உலகானுபவத்துக்கும் மேற்பட்ட ஆனந்தமும், இதற்கு முன் அனுபவித்திராத அமைதியும் கிடைக்கும் என்பதை எண்ணிப் பார்த்து ஊகிக்க முடியுமா?

**கேள்வி:** இப்படி பகவானை யக்ஞ-தவங்களை ஏற்பவராகவும், ஸர்வலோக மஹேசுவரராகவும், எல்லா ப்ராணிகளுக்கும் உற்ற நண்பராகவும் அறிந்தால்தான் அமைதி கிடைக்குமா? அல்லது இந்த மூன்றில் ஏதாவது ஒன்றை அறிந்தாலும் அமைதி கிடைக்குமா?

**பதில்:** பகவானைப் பற்றி மேலே சொன்ன அடைமொழிகளில் ஏதாவது ஒன்றைப் புரிந்து கொண்டாலும் அமைதி கிடைக்கும். மூன்றையும் புரிந்து கொண்டவனைப் பற்றிக் கேட்பானேன்? ஏனெனில், மேலே சொன்னவற்றுள் ஏதாவது ஒன்றை நன்கு புரிந்து கொண்டாலும் அதற்காகவே பகவானை வேறு சிந்தனையின்றி வழிபடாமல் இருக்கமுடியாது. அவ்வழிபாட்டின் ப்ரபாவத்தால் அவனுக்கு மேலும் பகவானுடைய அருள் மழை பொழிகிறது. அந்த பகவானுடைய பேரருளினாலே அவன் வெகு விரைவில் பகவானுடைய ஸ்வரூபம், ப்ரபாவம், தத்வம், கல்யாண குணங்கள் எல்லாவற்றையும் உணர்ந்து பூர்ணமான அமைதியைப் பெறுவான்.

ஆஹா! அப்பொழுது அவனுக்கு எவ்வளவு ஆனந்தம்! எப்படிப்பட்ட மனஅமைதி கிடைக்கும்! "எல்லா தேவதைகளும், மஹரிஷிகளும் கொண்டாடும் பகவான்; எல்லா யக்ஞ-தவங்களையும் ஏற்பவர்; எல்லா ஈசுவரர்களுக்கும் ஈசுவரர்; அகில ப்ரம்மாண்டங்களுக்கும் ஒரே நாயகர்; அவர் என்னிடம் பேரன்பு கொண்ட நண்பர். அற்பர்களிலும் அற்பனான – தூசு போன்ற நான் எங்கே! எல்லையற்ற, கற்பனைக்கெட்டாத வல்லமைகள் நின்றுறையும் உன்னத மஹேசுவரரான பகவான் எங்கே! என்னைக் காட்டிலும் பேறு பெற்றவர் யார்?" என்று மனிதன் எண்ணுங்கால், அவன் உள்ளத்தில் எத்தகைய நன்றியுணர்வு தோன்றும்! எத்தகைய புனித சிந்தனையோட்டத்தில் நனைந்திருப்பான்? எத்தகைய ஆனந்தப் பெருங்கடலில் மூழ்கி, பகவானின் புனிதத் திருவடிகளில் எப்போதும் திளைத்திருக்க வேண்டும் என எண்ணத் தலைப்படுவான்.

**கேள்வி:** பகவான் எல்லா யக்ஞ-தவங்களையும் ஏற்பவர்; ஸர்வலோக மஹேசுவரர்; எல்லா உயிரினங்களுக்கும் உற்ற நண்பர் என்று அறிவதற்கு என்ன உபாயம்? எந்த ஸாதனை புரிந்து ஒரு ஸாதகன் இவ்விதம் பகவானுடைய ஸ்வரூபம், ப்ரபாவம், தத்வம், கல்யாண குணங்களை நன்கு அறிந்து கொண்டு, அவரைத் தவிர வேறு புகல் கிடையாது என்று அவருடைய பக்தனாக ஆவான்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** ச்ரத்தையுடனும், அன்புடனும் பெரியோர்களை அணுகவேண்டும். ஸத் சாஸ்த்ரங்களைக் கற்றுச் சிந்திக்க வேண்டும். பகவானைச் சரணடைந்து மிகவும் உவகையுடன் ப்ரார்த்திக்க வேண்டும். அவருடைய க்ருபையால்தான், மனிதன் பகவானுடைய ஸ்வரூபம், ப்ரபாவம், தத்வம், கல்யாண குணங்கள் இவற்றை அறிந்து அநன்ய பக்தன் ஆக முடியும்.

**கேள்வி:** இங்கு 'மாம்' (என்னை) என்று பகவான் தம்முடைய எந்த ஸ்வரூபத்தைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** பகவான் பிறப்பற்றவராக, அழிவற்றவராக, எல்லா ப்ராணிகளுக்கும் ஆண்டவனாக இருந்தும்கூட, அவ்வப்போது தமது ப்ரக்ருதியை ஏற்று, லீலை புரிவதற்காக யோகமாயையினால் உலகில் அவதாரம் செய்கிறார். இப்பொழுது ஸ்ரீக்ருஷ்ணனாக அவதரித்து, அர்ஜுனனுக்கு உபதேசம் செய்கிறார். அந்த நிர்குண, ஸகுண, நிராகார, ஸாகாரமான, புலப்படாத-புலப்படும் தன்மை கொண்ட, ஸர்வரூபமுமான பரப்ரம்ம பரமாத்மாவான, அனந்த கல்யாண குணங்களுடன் கூடிய, ஸர்வ வல்லமை படைத்த, எங்கும் நிறைந்த, அனைத்திற்கும் ஆதாரமான, ஸர்வலோக மஹேசுவரரான, நிறைந்த விபூதி, பலம், ஐசுவர்யம் முதலிய குணங்கள் கொண்ட, எல்லோருடைய ஆத்மவடிவான ஸமக்ர பரமேசுவரனைக் குறித்தே 'மாம்' என்ற சொல் கையாளப்பட்டிருக்கிறது.

ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
कर्मसन्न्यासयोगो नाम पञ्चमोऽध्यायः॥ ५ ॥

**ஓம் தத்ஸதி₃தி ஸ்ரீமத்₃ப₄க₃வத்₃கீ₃தாஸூபநிஷத்ஸு ப்₃ரஹ்மவித்₃யாயாம் யோக₃ஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே₃ கர்மஸந்ந்யாஸயோகோ₃ நாம பஞ்சமோऽத்₄யாய: ॥ 5 ॥**

**ஓம் தத் ஸத் – ப்ரம்ம வித்யை, யோக ஶாஸ்த்ரம், உபநிஷத் எனப்படும் ஸ்ரீமத்பகவத்கீதையாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலில் 'கர்மஸந்யாஸயோகம்' எனப் பெயர் படைத்த ஐந்தாவது அத்யாயம் நிறைவுற்றது.**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

# அத$_2$ ஷஷ்டோ$_2$ऽத்$_4$யாய:

# ஆறாவது அத்யாயம்

## ஆத்மஸம்யமயோகம்

**அத்யாயத்தின் பெயர்** கர்மயோகம், ஸாங்க்யயோகம் ஆகிய இரண்டு ஸாதனைகளுக்கும் உதவும் த்யானயோகம் இந்த அத்யாயத்தில் நன்கு விளக்கப்படுகிறது. த்யானயோகத்தில் உடல், புலன்கள், மனம், புத்தி இவற்றை அடக்குவது மிகவும் அவசியம். உடல், புலன்கள், மனம், புத்தி இவையெல்லாம் 'ஆத்மா' என்ற பெயரால் அழைக்கப்படுகின்றன. இவற்றை அடக்குவது பற்றிச் சொல்வதால் இந்த அத்யாயத்திற்கு 'ஆத்மஸம்யமயோகம்' என்று பெயர் வைக்கப்பட்டிருக்கிறது.

**அத்யாயச் சுருக்கம்** முதல் ச்லோகத்தில், பகவான் கர்மயோகியின் பெருமையைக் கூறி, 2ல் ஸந்யாஸமும், கர்மயோகமும் ஒன்று என்று நிரூபித்து, 3ல் கர்மயோக ஸாதனங்களை வர்ணிக்கிறார். 4ல் யோகாரூடனின் இலக்கணம் கூறி, 5ல் யோகாரூட நிலையைப் பெறுவதற்கு மனிதனை உற்சாகப்படுத்தி, செய்ய வேண்டிய கடமைகளைக் கூறுகிறார். 6ல் 'தானே தனக்கு நண்பன்; தானே தனக்குப் பகைவன்' என்று முன்னால் சொல்லப்பட்டதன் ரஹஸ்யத்தை விளக்கி, 7ல் உடல், மனம், புலன்கள் இவற்றை வெற்றி கொள்வதன் பயனைக் கூறுகிறார். 8, 9ல் பரமாத்மாவை அடைந்துவிட்டவனின் இலக்கணத்தையும், பெருமையையும் கூறுகிறார். 10ல் த்யானயோகம் செய்யும்படி தூண்டுதல் செய்து, 11 முதல் 14 வரை வரிசையாக இடம், ஆஸனம் மேலும் த்யானயோக விதிமுறைகளைக் கூறுகிறார். 15ல் த்யானயோகத்தின் பயனைக் கூறி, 16, 17ல் த்யானயோகத்திற்கு உகந்ததான உணவு, உறக்கம், நடைமுறைகள் முதலியவற்றின் விதிமுறைகளையும், அவற்றின் பயனையும் பற்றிக் கூறுகிறார். 18ல் த்யானயோகத்தின் முடிவான நிலையை அடைந்தவனின் இலக்கணத்தைக் கூறி, 19ல் விளக்கின் சுடரை உதாரணமாகக் காட்டி, த்யானயோகியின் உள்ளத்தின் நிலையை வர்ணிக்கிறார். இதற்குப் பிறகு, 20 முதல் 22 வரை த்யானயோகத்தினால் பரமாத்மாவை அடைந்தவனின் நிலையைக் கூறி, 23ல் அந்த நிலைக்குப் பெயர் 'யோகம்' என்று கூறி, அதனை அடையவேண்டும் என்று தூண்டுகிறார். 24, 25ல் அபேத பாவனையுடன், அதாவது ஆத்மாவும், பரமாத்மாவும் ஒன்று என்று பரமாத்மாவையே த்யானிக்கும் முறையைக் கூறி, 26ல் போகப் பொருட்களில் உலவுகின்ற மனதைத் திரும்பத் திரும்பத் தடுத்து நிறுத்தி, பகவானிடம் ஈடுபடுத்த வேண்டும் என்று கூறுகிறார். 27, 28ல் த்யானயோகத்தின் பயனான எல்லையற்ற பரமஸுகத்தை அடைவதை விளக்குகிறார். 29ல் உலக விவகார காலத்தில் ஸாங்க்யயோகியின் நிலையை விளக்கி, 30ல் பக்தியோக ஸாதனை புரிபவனின் முடிவான நிலையையும், அவன் பகவானை எங்கும் காண்பதையும் விவரிக்கிறார். 31ல்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பக்தியின் மூலம் பகவானை அடைவது பற்றியும், 32ல் ஸாங்க்யயோகத்தின் மூலம் பகவானை அடைந்தவனின் இலக்கணத்தையும், பெருமையையும் விளக்கிக் கூறுகிறார். 33ல் அர்ஜுனன் மனதின் சஞ்சலத்தின் காரணமாக ஸமத்வயோகத்தில் நிலைத்திருப்பது கடினமானது என்று கூறி, 34ல் மனதை அடக்குவதும் மிகவும் கடினம் என்கிறார். 35ல் பகவான், அர்ஜுனன் சொன்னதை ஏற்றுக்கொண்டு, மனதை அடக்குவதற்கான உபாயத்தைக் கூறுகிறார். 36ல் மனதை அடக்காவிட்டால் யோகம் கிட்டாது; அடக்கினால் கிட்டும் என்று கூறுகிறார். 37, 38ல் யோகப்ரஷ்டனின் கதியைப் பற்றி அர்ஜுனன் கேட்கிறார். 39ல் ஸந்தேஹத்தைத் தீர்க்க வேண்டுமென அர்ஜுனன் பகவானிடம் வேண்டுகிறார். 40 முதல் 45 வரை அர்ஜுனனுடைய கேள்விகளுக்குப் பதில் அளிக்கும் வகையில், யோகப்ரஷ்டன் தாழ்நிலையை அடையமாட்டான்; ஸ்வர்கம் முதலிய உலகங்களை அடைந்தபின் பரிசுத்தமான செல்வந்தர் வீட்டில் பிறக்கிறான்; மற்றும் வைராக்யம் உள்ள யோகப்ரஷ்டன் ஞானியின் வீட்டில் பிறந்து, முற்பிறவியின் புத்தித் தொடர்பை எளிதாகப் பெறுவான். புனிதமான செல்வந்தர் வீட்டில் பிறந்தவன், முன் பயிற்சியினால் பகவான்பால் ஈர்க்கப்படுவான். யோகத்தைப் பற்றி அறிய விரும்புவதே பெருமைக்குரியது. முடிவில் யோகிகளின் குலத்தில் பிறந்த யோகப்ரஷ்டன் உன்னத நிலையைப் பெறுவான் என்று கூறுகிறார். இதற்குப் பிறகு, 46ல் யோகியின் பெருமையைக் கூறி, அர்ஜுனனை, 'யோகி ஆவாய்' என்று ஆணையிடுகிறார். 47ல் எல்லா யோகிகளைக் காட்டிலும், அநன்ய ப்ரேமையோடும், ச்ரத்தையோடும் பகவானைப் பூஜிக்கும் யோகி சிறந்தவன் என்று யோகியின் பெருமையைக் கூறி, அத்யாயத்தை நிறைவு செய்கிறார்.

**முன் அத்யாயத்துடன் இவ்வத்யாயத்திற்குப் பொருத்தம்:** ஐந்தாவது அத்யாயத்தின் ஆரம்பத்தில், "கர்மஸந்யாஸம் (ஸாங்க்யயோகம்), கர்மயோகம் இந்த இரண்டில் எது எனக்கு நிச்சயமாக மங்களத்தைக் கொடுக்கும்? சொல்லுங்கள்" என்று அர்ஜுனன் பகவானை வேண்டிக் கொண்டார். "இரண்டுமே மங்களத்தை அளிக்கும். இரண்டுக்கும் பயன் ஒன்றுதான். ஆனாலும் கர்மஸந்யாஸத்தைக் காட்டிலும் ஸாதனையில் எளிதானபடியால் கர்மயோகம் சிறந்தது" என்று பகவான் விளக்கிச் சொன்னார். பிறகு, இரண்டு ஸாதனைகளின் ஸ்வரூபம், விதிமுறை, பயன் இவற்றை நன்கு விளக்கி, இவை இரண்டிற்கும் மிகவும் உதவியானதும், பரமாத்மாவை அடைவதற்கான முக்ய உபாயமானதும் ஆன த்யானயோகத்தைச் சுருக்கமாக விளக்கினார். ஆனால், இவ்விரண்டுக்குள் எதைக் கடைப்பிடிப்பது என்பது பற்றி அர்ஜுனனுக்குத் தெளிவான சொற்களில் ஆணையிடவில்லை; த்யானயோகத்தின் பிரிவுகளையும், விரிவாகச் சொல்லவில்லை. அதனால் த்யானயோகத்தை விரிவாக விளக்குவதற்காக ஆறாவது அத்யாயத்தை ஆரம்பிக்கிறார். பக்தி ப்ரதானமான கர்மயோகத்தில் ஈடுபாடு உண்டாக்கும் நோக்கத்துடன் அர்ஜுனனுக்கு முதலில் கர்மயோகத்தின் பெருமையைக் கூறுகிறார்—

श्रीभगवानुवाच

अनाश्रितः कर्मफलं कार्यं कर्म करोति यः।
स सन्न्यासी च योगी च न निरग्निर्न चाक्रियः॥ १॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸ்ரீப₄க₃வானுவாச

**அநாஶ்ரித: கர்மப₂லம் கார்யம் கர்ம கரோதி ய: ।**

**ஸ ஸந்ந்யாஸீ ச யோகீ₃ ச ந நிரக்₃நிர்ந சாக்ரிய: ॥ 1 ॥**

**ஸ்ரீப₄க₃வானுவாச** – ஸ்ரீபகவான் கூறினார்: **ய:** – எவனொருவன், **கர்மப₂லம்** – கர்மத்தின் பயனை, **அநாஶ்ரித:** – சார்ந்திராமல், **கார்யம்** – செய்யவேண்டிய, **கர்ம** – கர்மத்தை, **கரோதி** – செய்கிறானோ, **ஸ:** – அவன், **ஸந்ந்யாஸீ** – ஸந்யாஸியும், **யோகீ₃ ச** – யோகியும் (ஆவான்). **ச** – மேலும், **நிரக்₃நி:** – அக்னி காரியங்களை மட்டும் துறப்பவன், **ந** – (ஸந்யாஸி) ஆகமாட்டான். **அக்ரிய: ச** – செயல்களைச் செய்யாமல் துறப்பவனும், **ந** – (யோகி) ஆகமாட்டான்.

**ஸ்ரீபகவான் கூறினார்:** 'எவனொருவன் கர்மத்தின் பயனைச் சார்ந்திராமல் செய்ய வேண்டிய கர்மத்தைச் செய்கிறானோ, அவன் ஸந்யாஸியும் யோகியும் ஆவான். மேலும் அக்னி காரியங்களை மட்டும் துறப்பவன் ஸந்யாஸி ஆகமாட்டான். செயல்களைச் செய்யாமல் துறப்பவனும் யோகி ஆகமாட்டான்.

**கேள்வி:** இங்கே கர்மத்தின் பயனைச் சார்ந்திருப்பதைத் துறக்க வேண்டும் என்று மட்டும் கூறுகிறார். 'பற்றைத் துறக்க வேண்டும்' என்று சொல்லவில்லை. காரணம் என்ன?

**பதில்:** போகத்திலும், கர்மத்திலும் பற்றுள்ளவனால் கர்மத்தின் பயனைச் சார்ந்திருப்பதை முற்றிலும் ஒதுக்கிவிட முடியாது. பற்று இருந்தால் இயல்பாகக் கர்மத்தின் பயனிலும் ஆசை இருக்கத்தான் இருக்கும். ஆகவே, கர்மத்தின் பயனைச் சார்ந்திருப்பதைத் துறப்பது என்றால், பற்றையும் த்யாகம் செய்யவேண்டும் என்பது தானாகவே சேரும். ஒவ்வோர் இடத்திலும் எல்லாச் சொற்களையும் சேர்த்துச் சொல்ல வேண்டுமென்ற கட்டாயமில்லை. விட்டுப்போன இடங்களில் மற்ற இடங்களில் சொல்லப்பட்டனவற்றையும் சேர்த்து எடுத்துக் கொள்ளவேண்டும். கர்மத்தின் பயனை த்யாகம் செய்யவேண்டுமென்று சொன்ன இடத்தில் பற்றை த்யாகம் செய்வது பற்றிய பேச்சு இல்லையானால் *(2/51; 18/11)*, அங்குப் பற்றின் த்யாகத்தையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். அதுபோலப் பற்றை த்யாகம் செய்யச் சொல்லுமிடத்தில், கர்மத்தின் பயனை த்யாகம் செய்யவேண்டுமென்று சொல்லாவிட்டால் *(3/19; 6/4)*, அங்கே பயனை த்யாகம் செய்வதையும் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

**கேள்வி:** 'கர்மத்தின் பயனைச் சாராமல் இருப்பது' என்றால் என்ன பொருள்?

**பதில்:** மனைவி, மக்கள், செல்வம், மானம், பெருமை முதலிய இவ்வுலக ஸுகங்கள், ஸ்வர்கம் முதலிய பரலோக போகங்கள் எத்தனை உண்டோ, அத்தனையும், 'கர்மபயன்' என்ற சொல்லில் அடங்கும். ஸாதாரண மனிதன் என்ன கார்யம் செய்தாலும், ஏதாவது ஒரு பயன் கருதித்தான் செய்கிறான். இதுதான் ஆச்ரயம் ஆகும். ஆகவே, அவனுடைய செயல்கள், திரும்பத் திரும்பப் பல பிறவிகளை எடுக்கவே வழி செய்கின்றன. ஆக, இவ்வுலக, பரலோக போகங்கள் அனைத்தையும் அநித்யமானவை என்றும், கணநேரத்தவை என்றும், துக்கத்திற்குக் காரணமானவை என்றும் அறிந்து, அவற்றில் மமகாரம், பற்று, பயனில் கருத்து எல்லாவற்றையும் த்யாகம் செய்வதே, 'கர்மத்தின் பயனைச் சாராமல் இருப்பது' என்பது ஆகும்.

**கேள்வி:** செய்யவேண்டிய கர்மங்கள் யாவை? அவற்றை எப்படிச் செய்யவேண்டும்?

**பதில்:** தத்தம் வர்ணாசிரமத்திற்கு ஏற்றவாறு, அறநூல்களில் விதிக்கப்பட்ட கர்மங்கள் அன்றாடம் செய்யப்பட வேண்டியவை. விசேஷ நாட்களில் செய்ய வேண்டியவைகளான யாகம், தானம், தவம், உடலைப் பேணுவதற்கான கார்யம், மேலும் உலக ஸேவைக்கான நற்கார்யம் எல்லாமே செய்யப்பட வேண்டிய கர்மங்கள். அவற்றை முறைப்படி, அவரவர் தகுதிக்கு ஏற்றபடி, சோம்பலின்றி, சக்திக்கேற்றவாறு, செய்யத்தான் வேண்டும் என்ற எண்ணத்துடன் உற்சாகமாக எப்பொழுதும் செய்து கொண்டே இருக்கவேண்டும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'அவன் தான் ஸந்யாஸியும், யோகியும் ஆவான்' என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** இப்படிப்பட்ட கர்மயோகி எல்லா ஸங்கல்பங்களையும் துறந்து விடுகிறான். ஸாங்க்ய–கர்மயோகமாகிற இரண்டு நிஷ்டைகளுடைய இறுதிப் பயனாகிய உண்மையான ஞானத்தை அடைகிறான். ஆகவே, அவன் ஸந்யாஸி–யோகி ஆகிய இருவரின் தன்மையுள்ளவனாகக் கருதப்படுகிறான் என்ற கருத்தை பகவான் சுட்டிக்காட்டுகிறார்.

**கேள்வி:** 'ந நிரக்நி:' (அக்னி கார்யங்களை மட்டும் துறப்பவன் ஸந்யாஸி ஆகமாட்டான்) என்பதன் பொருள் என்ன?

**பதில்:** அக்னியில் செய்யவேண்டிய யாகம் முதலிய கர்மங்களைத் துறந்து, துறவறம் மேற்கொள்பவனை 'நிரக்நி:' என்கிறார். "அக்னியைத் துறந்து ஸந்யாஸத்தை ஏற்றுக் கொண்டும்கூட, ஞானயோக (ஸாங்க்யயோகம்) இலக்கணத்தின்படி ஒழுகாதவன் உண்மையில் ஸந்யாஸி அல்லன். ஏனென்றால், அவன் அக்னியை மட்டும்தான் துறந்துள்ளானே தவிர, எல்லாச் செயல்களிலும், 'தானே கர்த்தா' என்ற அபிமானத்தையும், மமகாரம், பற்று, தேஹாபிமானம் (உடற்பற்று) ஆகியவற்றையும் விட்டுவிடவில்லை" என்ற கருத்தை இங்கு, 'ந நிரக்நி:' என்று கூறுவதன் மூலம் பகவான் சுட்டிக்காட்டுகிறார்.

**கேள்வி:** 'ந ச அக்ரிய:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எல்லாச் செயல்களிலிருந்தும் முற்றிலுமாக ஓய்வு பெற்று, த்யானத்தில் அமர்ந்தவனை 'அக்ரிய:' என்று கூறுவர். எல்லாச் செயல்களையும் விட்டு த்யானத்தில் அமர்ந்திருக்கும்போது கூட, எவனது உள்ளத்தில் அஹங்காரம், மமகாரம், ராகம், த்வேஷம், ஆசை முதலிய மாசுகள் உள்ளனவோ, அவன் உண்மையில் யோகி அல்லன். வெளிப்படையாகச் செயல்களில் ஈடுபடவில்லையே தவிர, மமகாரம், அபிமானம், பற்று, ஆசை, க்ரோதங்கள் இவற்றை விடவில்லையே, ஆகவே அவன் கர்மயோகி ஆகமாட்டான்.

**கேள்வி:** அக்னி கார்யங்களுக்கும், எல்லாச் செயல்களுக்கும் தானே கர்த்தா என்ற அபிமானத்தையும், மமகாரம், பற்று இவற்றையும் முற்றிலுமாகத் துறந்துவிட்டு ஸந்யாஸ ஆசிரமத்தை மேற்கொண்டு, ஞானயோக(ஸாங்க்யயோக)த்திற்குரிய இலக்கணங்கள் (5/8,9,13,24,25,26) அனைத்தும் அமையப் பெற்றவன் ஸந்யாஸி இல்லையா?

**பதில்:** ஏன் இல்லை? இத்தகைய மஹாபுருஷனே லக்ஷ்ய ஸந்யாஸி. இவ்விதமாக ஸந்யாஸிகளின் பெருமையைக் கூறுவதற்காகத்தான், ஞானயோகிக்குரிய இலக்கணங்கள் பொருந்திய மற்ற ஆசிரமத்தில் உள்ளவனையும் 'ஸந்யாஸி' என்று கூறிப் பெருமைப்படுத்துகிறார். இவ்வாறு அவனை ஸந்யாஸி என்று கூறுவதைக் காட்டிலும் வேறு என்ன பெருமை வேண்டும்?

**கேள்வி:** அதுபோல எல்லாச் செயல்களையும் துறந்து, இடைவிடாமல் பகவானுடைய த்யானத்தில் நிலைபெற்ற உள்ளத்தில், மமகாரம், ராகம், த்வேஷம், காமம், க்ரோதம் முதலியவற்றை அறவே நீக்கி எல்லா ஸங்கல்பங்களையும் துறந்த ஸந்யாஸி யோகி ஆகமாட்டானா?

**பதில்:** இப்படி எல்லா ஸங்கல்பங்களையும் துறந்த மஹாத்மா லக்ஷ்ய யோகிதான்.

**பொருத்தம்:** முதல் ச்லோகத்தில் பகவான் கர்மபயனைச் சாராமல், கர்மத்தைச் செய்பவனை ஸந்யாஸி என்றும், யோகி என்றும் சொன்னார் ஸந்யாஸமும், யோகமும் வெவ்வேறு நிலையாக இருக்குமேயானால் ஸாதகன் அவ்விரண்டு நிலைகளையும் ஒருங்கே எப்படி அடைய முடியும் என்ற ஐயம் எழுகிறது. இந்த ஐயத்தை நீக்குவதற்காக, இரண்டாவது ச்லோகத்தில் ஸந்யாஸமும், யோகமும் ஒன்றுதான் என்று நிரூபிக்கிறார்—

**यं सन्न्यासमिति प्राहुर्योगं तं विद्धि पाण्डव।**
**न ह्यसन्न्यस्तसङ्कल्पो योगी भवति कश्चन॥ २॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**யம் ஸந்ந்யாஸமிதி ப்ராஹுர்யோக₃ம் தம் வித்₃தி₄ பாண்ட₃வ ।**
**ந ஹ்யஸந்ந்யஸ்தஸங்கல்போ யோகீ₃ ப₄வதி கஶ்சந ॥ 2 ॥**

**பாண்ட₃வ** – அர்ஜுன! **யம்** – எதை, **ஸந்ந்யாஸம் இதி** – ஸந்யாஸம் என்று, **ப்ராஹு:** – கூறுகிறார்களோ, **தம்** – அதையே (நீ), **யோக₃ம்** – யோகம் (என்று), **வித்₃தி₄** – தெரிந்து கொள். **ஹி** – ஏனெனில், **அஸந்ந்யஸ்த ஸங்கல்ப:** – ஸங்கல்பங்களைத் துறக்காத, **கஶ்சந** – எவனும், **யோகீ₃** – யோகியாக, **ந ப₄வதி** – ஆகமாட்டான்.

அர்ஜுன! எதை ஸந்யாஸம் என்று கூறுகிறார்களோ, அதையே நீ யோகம் என்று தெரிந்து கொள். ஏனெனில் ஸங்கல்பங்களைத் துறக்காத எவனும் யோகியாக ஆகமாட்டான்.

**கேள்வி:** எதை 'ஸந்யாஸம்' என்று கூறுகிறார்களோ, அதையே 'யோகம்' என்று தெரிந்து கொள் – என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கு 'ஸந்யாஸம்' என்ற சொல்லுக்குப் பொருளாவது: உடல், புலன்கள், மனம் இவற்றால் ஆற்றப்படும் எல்லாச் செயல்களிலும், 'தான் கர்த்தா' என்ற எண்ணத்தை அழித்துப் பரமாத்மாவிடம் மட்டுமே இரண்டற்ற நிலைபெறுதல். இது ஸாங்க்ய யோகத்தின் முற்றிய நிலை. 'யோகம்' என்ற சொல்லுக்கு மமகாரம், பற்று, ஆசை இவற்றைத் துறந்து பின்பற்றப்படும் கர்மயோகத்தின் முற்றிய நிலையான 'நைஷ்கர்ம்ய ஸித்தி' என்று பொருள். இரண்டிலும், 'ஸங்கல்பங்கள் அறவே அற்றுப் போகின்றன' என்ற நிலையில், இரண்டும் ஒன்றுதான். ஸாங்க்யயோகி எந்தப் பரப்ரம்ம பரமாத்மாவை அடைகிறானோ, கர்மயோகியும் அதே பரப்ரம்ம பரமாத்மாவை அடைகிறான். இவ்விதம், இரண்டு நிஷ்டைகளிலும் எல்லா ஸங்கல்பங்களையும் முற்றிலும் துறப்பதும், பயனும் ஒன்றாகவே அமைகின்றன.

**கேள்வி:** 'ஸங்கல்பம்' என்றால் என்ன? அதைத் துறப்பது எப்படி?

**பதில்:** மமகாரத்துடனும், ராக-த்வேஷத்துடனும் உலகியல் பொருட்கள்பால் சிந்தனை செய்யும் அந்தக்கரண வ்ருத்திதான் (உள்ளத்தின் போக்கு) ஸங்கல்பம். இந்த மனப்பாங்கை அறவே துறப்பதுதான் 'ஸந்யாஸம்'.

**கேள்வி:** 'ஸங்கல்பத்தைத் துறக்காத எவனும் யோகி ஆகமாட்டான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஸங்கல்பங்களை முழுமையாக த்யாகம் செய்யாத வரையில், மனம் பரமாத்மாவிடம் முழுமையாக லயிக்காது. ஆகவே, ஸங்கல்பங்களை த்யாகம் செய்வது எல்லோருக்கும் அவசியம். தனியான இடத்தில் அமர்ந்து ஆஸனம், ப்ராணாயாமம் மூலம் ஒரு ஸாதகன் பரமாத்ம த்யானப் பயிற்சியைச் செய்கிறான். இன்னொரு ஸாதகன், எப்பொழுதும் பகவானுக்காகவே பகவானுடைய ஆணையென்று, கடமைகளை நிஷ்காமமாகச் செய்கிறான். மூன்றாவது ஸாதகன் அவ்வப்போது பகவானுடைய த்யானப் பயிற்சியையும் செய்கிறான்; நிஷ்காமமாகக் கடமைகளையும் ஆற்றுகிறான். இம்மூவரில் ஒருவர் கூட ஸங்கல்பங்களை அறவே ஒழிக்காவிட்டால், அவர்களை யோகாரூடர்கள் என்றோ, யோகி என்றோ சொல்ல முடியாது. எல்லாக் கர்மங்களிலும், பொருட்களிலும் பற்றற்று, முழுமையாக ஸங்கல்பங்களை த்யாகம் செய்கின்றபோதுதான் ஸாதகன் யோகாரூடனாக ஆக முடியும். ஸாங்க்யயோகியும் மனதில் தோன்றும் ஸங்கல்பங்களை அறவே அற்றுப் போகச் செய்யும்போதுதான், உண்மையான ஸந்யாஸி ஆக முடியும். இதற்காகத்தான் ச்லோகத்தின் முதல் பாதியில் 'இரண்டையும் ஒன்றாகக் கருதவேண்டும்' என்று சொன்னார்.

**பொருத்தம்: கர்மயோகத்தின் பெருமையைச் சொல்லி, அதற்குரிய ஸாதனையைக் கூறுகிறார்—**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



आरुरुक्षोर्मुनेर्योगं कर्म कारणमुच्यते।
योगारूढस्य तस्यैव शमः कारणमुच्यते॥ ३॥

ஆருருக்ஷோர்முநேர்யோக₃ம் கர்ம காரணமுச்யதே ।
யோகா₃ரூட₄ஸ்ய தஸ்யைவ ஶம: காரணமுச்யதே ॥ 3 ॥

**யோக₃ம்** – யோகத்தை, **ஆருருக்ஷோ:** – கடைப்பிடித்து முன்னேற விரும்புகின்ற, **முநே:** – பரம்பொருளைச் சிந்தித்திருக்கின்ற மனிதன் (யோகத்தை அடைவதற்கு), **கர்ம** – நிஷ்காமமாகக் கர்மங்களைச் செய்வதுதான், **காரணம்** – காரணம் (என்று), **உச்யதே** – கூறப்படுகிறது. (இவ்விதம் யோகாரூடன் ஆனபிறகு), **தஸ்ய** – அந்த, **யோகா₃ரூட₄ஸ்ய** – யோகத்தைக் கடைப்பிடிப்பவனுக்கு, **ஶம: ஏவ** – எவ்விதமான ஸங்கல்பங்களும் இல்லா திருத்தல்தான், **காரணம்** – (மேன்மையடைவதற்குக்) காரணம் (என்றும்), **உச்யதே** – கூறப்படுகிறது.

யோகத்தைக் கடைப்பிடித்து முன்னேற விரும்புகின்ற பரம்பொருளைச் சிந்தித்திருக்கின்ற மனிதன் யோகத்தை அடைவதற்கு நிஷ்காமமாகக் கர்மங்களைச் செய்வதுதான் காரணம் என்று கூறப்படுகிறது. இவ்விதம் யோகாரூடன் ஆனபிறகு அந்த யோகத்தைக் கடைப் பிடிப்பவனுக்கு எவ்விதமான ஸங்கல்பங்களும் இல்லாதிருத்தல்தான் மேன்மையடைவதற்குக் காரணம் என்றும் கூறப்படுகிறது.

**கேள்வி:** 'முநே:' என்ற சொல் யாரைக் குறிக்கிறது?

**பதில்:** பரமாத்மாவை அடைவதற்கான வழியாக அமைந்துள்ள யோகாரூட நிலையை அடைய விரும்புகிற மனிதனை 'முநி:' என்ற அடைமொழி மூலம் குறிப்பிடுகிறார். ஆகவே, இதிலிருந்து பரமாத்ம ஸ்வரூபத்தைச் சிந்தனை செய்கிற இயல்புடைய – மனனம் செய்கின்ற ஸாதகனை 'முநி:' என்று தெரிந்து கொள்ளவேண்டும்.

**கேள்வி:** யோகாரூட நிலையை அடைவதற்கு எந்தவிதமான கர்மம் காரணம் ஆகும்?

**பதில்:** வர்ணம், ஆசிரமம், சூழ்நிலை இவற்றிற்கேற்ப அறநூல்களில் சொல்லப்பட்ட கர்மங்கள் எல்லாவற்றையும், அவற்றின் பயனையும், பற்றையும் துறந்து செய்தால், அது யோகாரூட நிலையை அடைவதற்குக் காரணமாக முடியும்.

**கேள்வி:** யோகாரூட நிலையை அடைவதற்குக் கர்மங்களை ஏன் காரணமாகக் கூறவேண்டும்? கர்மங்கள் செய்வதை விட்டுவிட்டுத் தனிமையில் அமர்ந்து பகவானை த்யானிப்பது என்ற பயிற்சியினாலும் யோகாரூட நிலையை அடையலாமே?

**பதில்:** தனிமையில் உட்கார்ந்து பரமாத்ம த்யானப் பயிற்சி செய்வதும் ஒருவிதமான கர்மம் தானே! இப்படி த்யானப் பயிற்சி செய்பவனும், உடல் சுத்தி, ஸ்நானம், உண்பது, உடுப்பது முதலிய உடலியல் செயல்களையும் செய்யத்தானே வேண்டும்; ஆகவே, தனது வர்ணம், ஆசிரமம், தகுதி, நிலைமை ஆகியவற்றிற்கு அனுகூலமாக, எந்த நேரத்தில், எந்தக் கடமையை ஆற்ற வேண்டுமோ, அதன் பயனையும், பற்றினையும் அகற்றி, அதைச் செய்வதுதான் யோகாரூட நிலையை அடைவதற்குக் காரணம் ஆகும் என்று சொல்வது சரிதான். 3/4ல் கூட 'எந்த ஒரு மனிதனும் கர்மங்களை ஆற்றாமல் நைஷ்கர்ம்ய நிலையை அதாவது யோகாரூட நிலையை அடைய முடியாது' என்று சொல்லியிருக்கிறார்.

**கேள்வி:** இங்கு 'ஶம:' என்ற சொல்லுக்குக் கர்மங்களை ஆற்றாமல் அடங்கியிருப்பது என்று பொருள் கூறாமல் ஸங்கல்பங்களே இல்லாமல் போவது என்று கூறுவது எப்படிப் பொருந்தும்?

**பதில்:** இரண்டாவது, நான்காவது ச்லோகங்களில் ஸங்கல்பங்களை த்யாகம் செய்வது என்ற பேச்சுத்தான் வருகிறது. 'ஶம:' என்ற சொல்லுக்கு மனதை வசப்படுத்தி,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அமைதி அடையச் செய்வது என்ற பொருளும் உண்டு. 18/42ல் 'ஶம:' என்ற சொல் இப்பொருளில்தான் வருகிறது. மனம் வசப்பட்டு அமைதி அடைந்தால்தான் ஸங்கல்பங்கள் முற்றிலுமாக அழியும். இதுவன்றிக் கர்மங்களை முற்றிலுமாகத் துறப்பது என்பதும் நடக்கக் கூடியதன்று. ஆகவே, இங்கு 'ஶம:' என்ற சொல்லுக்கு ஸங்கல்பங்களைத் துறப்பது என்ற பொருள்தான் பொருந்தும்.

**கேள்வி:** 'யோகாரூடனுடைய ஶமம் என்பது கர்மங்களுக்குக் காரணம்' என்று சொன்னால் என்ன தவறு?

**பதில்:** 'ஶம:' என்ற சொல் எல்லா ஸங்கல்பங்களும் அற்றுப் போன அமைதியைக் குறிப்பது ஆகும். அது கர்மத்திற்குக் காரணம் ஆகமுடியாது. யோகாரூடன் செய்யும் செயல்களுக்கெல்லாம், அவனுடையதும், உலகத்தாருடையதுமான ப்ராரப்தம்தான் காரணம். ஆகவே 'ஶமம்' கர்மத்திற்குக் காரணம் என்று கூறுவது யுக்திக்குப் பொருந்தாது; பரமாத்மாவை அடைவதற்குக் காரணம் என்று கூறுவதுதான் சரி.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் யோகாரூடன் என்ற சொல் வருகிறது. அவனைப் பற்றிய இலக்கணத்தை அறிய விருப்பம் ஏற்படுவதால் அவனுடைய இலக்கணம் கூறுகிறார்—

**यदा हि नेन्द्रियार्थेषु न कर्मस्वनुषज्जते।**
**सर्वसङ्कल्पसन्न्यासी योगारूढस्तदोच्यते॥४॥**

**யதா₃ ஹி நேந்த்₃ரியார்தே₂ஷு ந கர்மஸ்வநுஷஜ்ஜதே ।**
**ஸர்வஸங்கல்பஸந்ந்யாஸீ யோகா₃ரூட₄ஸ்ததோ₃ச்யதே ॥ 4 ॥**

**யதா₃** – எப்பொழுது, **இந்த்₃ரியார்தே₂ஷு** – புலன்களுக்குரிய போகப் பொருட்களில், **ந அநுஷஜ்ஜதே** – பற்றுக் கொள்வதில்லையோ, **கர்மஸு ஹி** – கர்மங்களிலும், **ந (அநுஷஜ்ஜதே)** – பற்றுக் கொள்வதில்லையோ, **ததா₃** – அப்பொழுது, **ஸர்வஸங்கல்ப ஸந்ந்யாஸீ** – எல்லா ஸங்கல்பங்களையும் துறந்தவனான அவன், **யோகா₃ரூட₄:** – யோகரூடன் (என்று), **உச்யதே** – கூறப்படுகிறான்.

எப்பொழுது புலன்களுக்குரிய போகப் பொருட்களில் பற்றுக் கொள்வதில்லையோ, கர்மங்களிலும் பற்றுக் கொள்வதில்லையோ, அப்பொழுது எல்லா ஸங்கல்பங்களையும் துறந்தவனான அவன் யோகாரூடன் என்று கூறப்படுகிறான்.

**கேள்வி:** இங்கே புலன்களுக்குரிய போகப்பொருட்களிலும், கர்மங்களிலும் பற்றை அகற்றுவது பற்றி மட்டுமே கூறுகிறார். 'ஆசையை அகற்றவேண்டும்' என்று சொல்லவில்லையே! இதற்குக் காரணம் என்ன?

**பதில்:** பற்றிலிருந்து ஆசை பிறக்கிறது (2/62). புலன்களுக்குரிய போகப் பொருட்களிலும், கர்மங்களிலும் பற்று அகன்றுவிட்டால் ஆசை தானாகவே அகன்றுவிடும். காரணம் இல்லாமல் கார்யம் நடைபெறாது. ஆகவே பற்றை அகற்றுவது என்று சொல்லும்போது ஆசையை அகற்றுவது என்பதையும் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

**கேள்வி:** 'ஸர்வ ஸங்கல்ப ஸந்யாஸம்' என்றால் என்ன? எல்லா ஸங்கல்பங்களையும் துறந்த பிறகு, போகப் பொருட்களைத் தீண்டுவதோ, கர்மங்களைச் செய்வதோ எப்படி நடக்கும்?

**பதில்:** 'ஸங்கல்பங்களைத் துறப்பது' என்றால், மனதில் எண்ணத் துடிப்பே உண்டாகாது என்று பொருள் சொன்னால், யோகாரூட நிலையைப் பற்றி விவரிக்கவே முடியாது. அந்த நிலையை அடையாதவன், அதனுடைய தத்வத்தை அறியமாட்டான். எவன் இந்தத் தத்வத்தை அறிந்துவிட்டானோ, அவனால் அதைப் பற்றிச் சொல்ல முடியாது. பிறகு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



யார்தான் வர்ணிப்பர்? இதைத் தவிர, எந்த மாமனிதனுக்கு ஆசை, ஸங்கல்பங்கள் இல்லாமலேயே எல்லாக் கர்மங்களும் செவ்வனே நடைபெறுகின்றனவோ, அவனே 'பண்டிதன்' என்று 4/19ல் தெளிவாகவே கூறினார். அங்கே புகழப்பட்ட மாமனிதன் யோகாரூடன் அல்லன் என்று கூற முடியாது. ஆகவே ஸங்கல்பம் இல்லாவிட்டால் செயல்பட முடியாது என்பது பொருள் அன்று. ஸங்கல்பங்களைத் துறப்பது என்றால், 'மனதில் எண்ணத் துடிப்பும், மன விழிப்பும் இரா' என்று பொருள் அன்று. மமகாரம், பற்று, வெறுப்பு இவற்றுடன் உலகியல் விஷயங்களைச் சிந்தனை செய்வதுதான் ஸங்கல்பம் ஆகும். இப்படிப்பட்ட ஸங்கல்பங்களை முழுமையாக த்யாகம் செய்வதுதான் 'ஸர்வ ஸங்கல்ப ஸந்யாஸம்' ஆகும். இப்படிப்பட்ட த்யாகம் கர்மங்களைச் செவ்வனே செய்வதற்குத் தடை ஆகாது. எவனுடைய புத்தியில் பகவானைத் தவிர வேறு எதனுடைய இருப்பும் தங்கி நிற்க வழி இல்லையோ, அவன் பகவத் பாவனையுடன் பொருட்களை ஏற்கிறான், த்யாகம் செய்கிறான். அச்செயலை ஸங்கல்பத்தினால் உண்டானதாகக் கூற முடியாது. இப்படிப்பட்ட செயல் ஞானிகளான மஹாத்மாக்களுக்கும் செய்ய இயலும். 'எந்தவிதமாகச் செயல்பட்டுக் கொண்டிருந்தாலும், என்னிடமே செயல்படுகிறான்' என்று 6/31ல் இத்தகைய மஹாத்மா பற்றியே பகவான் சொல்கிறார்.

கேள்வி: மனிதன் போகங்களை அடைவதற்காகவே கர்மங்களைச் செய்கிறான், அவற்றில் ஈடுபடுகிறான். எனவே, போக விஷயங்களில் பற்றற்றிருந்தால் மட்டும் போதாதா? அவற்றைப் பெற்றுத் தருகின்ற கர்மங்களிலும் பற்றற்று இருக்கவேண்டும் என்று கூறுவதன் அவசியம் என்ன?

பதில்: போகங்களில் பற்று இல்லாவிட்டாலும், கர்மங்களில் பற்று இருக்கக் கூடும். பயன் விளைவிக்காத, வீணான செயல்களில் மனிதர்கள் பற்றுக் கொண்டிருப்பதையும் காண்கிறோம். ஆகவே, பற்று முற்றிலுமாக அற்றுப் போக வேண்டும் என்பதைச் சுட்டிக்காட்டுவதற்காக இவ்வாறு சொல்லத்தான் வேண்டும்.

பொருத்தம்: பகவானை அடைவதற்கு உபாயமான யோகாரூட நிலையைப் பற்றிக் கூறிவிட்டு, அதை அடைவதற்கான உற்சாகத்தைத் தந்து கொண்டே, மனிதன் செய்யவேண்டிய கடமைகள் என்னவென்று பகவான் கூறுகிறார்—

**उद्धरेदात्मनात्मानं नात्मानमवसादयेत्।**
**आत्मैव ह्यात्मनो बन्धुरात्मैव रिपुरात्मनः॥ ५॥**

**உத்₃த₄ரேத₃ாத்மநாத்மாநம் நாத்மாநமவஸாத₃யேத் ।**

**ஆத்மைவ ஹ்யாத்மநோ ப₃ந்து₄ராத்மைவ ரிபுராத்மந: ॥ 5 ॥**

**ஆத்மநா** – தானே, **ஆத்மாநம்** – தன்னை, **உத்₃த₄ரேத்** – (ஸம்ஸாரக் கடலிலிருந்து) உயர்த்திக் கொள்ள வேண்டும். **ஆத்மாநம்** – தன்னை(த்தானே), **ந அவஸாத₃யேத்** – வீழ்த்திக் கொள்ளக்கூடாது. **ஹி** – ஏனெனில், **ஆத்மா ஏவ** – தானேதான், **ஆத்மந:** – தனக்கு, **ப₃ந்து₄:** – நண்பன். (மேலும்), **ஆத்மா ஏவ** – தானேதான், **ஆத்மந:** – தனக்கு, **ரிபு:** – பகைவன்.

தானே தன்னை ஸம்ஸாரக் கடலிலிருந்து உயர்த்திக் கொள்ள வேண்டும் – தன்னைத்தானே வீழ்த்திக் கொள்ளக்கூடாது. ஏனெனில் தனக்குத் தானேதான் நண்பன். மேலும் தனக்குத் தானேதான் பகைவன்.

கேள்வி: 'தானே தன்னை உயர்த்திக் கொள்ள வேண்டும்' என்று கூறுவதன் கருத்து என்ன? 'தானே தன்னை வீழ்த்திக் கொள்வது' என்றால் என்ன?

பதில்: ஜீவன் பன்னெடுங்காலமாக அஞ்ஞானத்திற்கு ஆட்பட்டு, துன்பமயமான ஸம்ஸாரக் கடலில் சுழன்று கொண்டிருக்கிறான். நல்லவும், தீயவுமான பலவிதப் பிறவிகளில்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



சுழன்று பயங்கரமான பற்பல துன்பங்களை அனுபவிக்கிறான். ஜீவன் துன்பப்படுவதைப் பார்த்து, அருள்மிக்கவரான பகவான், தேவர்களுக்கும் கிட்டாததும், ஸாதனைகளுக்குப் பயன்படுவதுமான மனிதப்பிறவியை அந்த ஜீவனுக்கு அளித்து, ஓர் அரிய வாய்ப்பைத் தருகிறார். அவன் விரும்பினால், ஸாதனைகள் புரிந்து, ஒரே பிறவியில் ஸம்ஸாரக் கடலிலிருந்து விடுபட்டுப் பரமானந்த ஸ்வரூபமான பரமாத்மாவை எளிதாக அடைந்துவிடலாம். ஆகவே, மனிதனாகப் பிறந்தவன் இந்த அருமையான வாய்ப்பை வீணடிக்கக் கூடாது. கர்மயோகம், ஸாங்க்யயோகம், பக்தியோகம் முதலியவற்றில் ஏதாவது ஒரு ஸாதனையில் ஈடுபட்டு, தன் பிறவியைப் பயனுள்ளதாகச் செய்து கொள்ள வேண்டும். இதுதான் 'தன்னைத் தானே உயர்த்திக் கொள்வது' ஆகும்.

இதற்கு மாறாக ராக–த்வேஷங்கள், காம–க்ரோதங்கள், பேராசை, மோஹம் முதலிய மாசுகளில் சிக்கிப் பலவித இழி செயல்களைச் செய்து, அவற்றின் பயனாக மனிதப்பிறவியின் முக்கியக் குறிக்கோளான, 'பகவானை அடைவது' என்பதை விட்டு, பன்றி, நாய் முதலிய பிறவிகளுக்குத் தன்னை ஆளாக்கிக் கொள்வதுதான், 'தன்னை வீழ்த்திக் கொள்வதாகும்'. ஈசாவாஸ்ய உபநிஷத்தில், இப்படிப்பட்ட செயல் தற்கொலைக்கு ஒப்பாகும் என்று சொல்லப்படுகிறது.‡

இங்கு பகவான் தன்னைத் தானே உயர்த்திக் கொள்ள வேண்டுமென்று சொல்லி, "உன்னுடைய ப்ராரப்தம் கெட்டதாக இருக்கிறது என்பதால், உனக்கு மேன்மை கிடைக்காது என்று எண்ணிவிடாதே; உன்னுடைய மேன்மையும், வீழ்ச்சியும் ஊழ்வினையில் இல்லை; உன் கையில்தான் இருக்கிறது. ஸாதனை புரிந்து தாழ்வு என்ற படுகுழியிலிருந்து வெளிப்பட்டு மேன்மையின் உச்சியை அடைவாய்" என்று ஜீவனுக்கு ஆறுதல் கூறுகிறார். ஆகவே, மனிதன் மிகுந்த எச்சரிக்கையுடனும், முயற்சியுடனும் எப்பொழுதும் தன் மேன்மைக்காக இப்பொழுது இருக்கும் நிலையிலிருந்து மேலே உயர்வதற்காக, ராக–த்வேஷம், காம–க்ரோதங்கள், போகங்கள், சோம்பல், வீணான செயல்களில் ஈடுபடுதல், பாவச் செயல்கள் – இவற்றை அறவே விட்டொழித்து, புலனடக்கம், மனவடக்கம், ஸஹிப்புத்தன்மை, விவேகம், வைராக்யம் முதலிய நற்பண்புகளை வளர்த்துக் கொண்டு, போக நினைவுகளை அகற்றி, ச்ரத்தையுடனும், ப்ரேமையுடனும் பகவானையே சிந்தித்து, அதற்கு உதவியாக பஜனை, த்யானம், ஸேவை–ஸத்ஸங்கம் முதலியவற்றில் ஈடுபட்டு, பகவானை அடைய ஸாதனை புரிய வேண்டும். பகவானை அடையும்வரை ஒருகணம்கூட, கொஞ்சம்கூடப் பின்வாங்காமல், விடாமுயற்சியோடு செயல்படவேண்டும். பகவானுடைய அருளின் பலத்தினால் உறுதியும், வீரமும், திடநிச்சயமும் கொண்டு, நழுவாமல், மேலும் மேலும் மேன்மையடையும் வழியில் முன்னேறிக் கொண்டிருக்க வேண்டும். மனிதன் தன் ஸ்வபாவத்தையும், செயலையும் எவ்வளவு சீர்திருத்திக் கொள்கிறானோ, அவ்வளவு உயர்ந்துவிடுவான். ஸ்வபாவத்தையும், செயலையும், தூய்மைப்படுத்துவதே 'உயர்த்திக் கொள்ளுதல்' ஆகும். இதற்கு மாறாக ஸ்வபாவத்திலும், செயலிலும் குற்றங்களை வளர்ப்பது வீழ்ச்சிக்குக் காரணம் ஆகும்.

**கேள்வி:** 'மனிதன் தனக்குத்தானே நண்பன், தனக்குத்தானே பகைவன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனிதன் உலகியலில் பழகுவதால், பற்றுக் கொண்டு யாரை நண்பர்களாக ஏற்கிறானோ, அவர்கள் பந்தத்திற்குக் காரணம் ஆவதால், உண்மையில் நண்பர்களே அல்லர். ஸாதுக்கள், மஹாத்மாக்கள், தன்னலமில்லாத ஸாதகர்கள் – இவர்கள்தான் பந்தத்திலிருந்து

---

‡ அஸுர்யா நாம தே லோகா அந்தே$_4$ந தமஸாவ்ருதா: ।
தாꣳஸ்தே ப்ரேத்யாபி$_4$க$_3$ச்ச$_2$ந்தி யே கே சாத்மஹநோ ஜநா: ॥
(ஈஶோபநிஷத்$_3$ 3)

அவர்கள் நாய், பன்றி முதலிய பிறவிகளிலோ, நரகம் என்கிற அஸுரத்தன்மையுடைய லோகங்களிலோ, அஞ்ஞானமாகிற இருளினால் மூடப்படுகிறார்கள். தற்கொலைக்கொப்பான இந்தச் செயல்களில் ஈடுபடுபவர்கள் இறந்த பிறகு அஸுர லோகத்தை அடைவார்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



விடுபடுவதற்கு உதவியாக இருப்பார்கள். இவர்கள்தாம் உண்மையான நண்பர்கள். ஆனால், முதலில் எவன் மனப்பூர்வமாக அவர்களிடம் ச்ரத்தையும், அன்பும் கொண்டு அவ்விதமே, அவர்களை உண்மையான நண்பர்களாகக் கருதுகிறானோ, அவர்களால் சொல்லப்பட்ட வழியில் செல்கிறானோ, அப்போதுதான் அவர்களுடைய நட்புறவு அவனுக்குக் கிடைக்கும். இந்த ரீதியில் பார்க்கும்போதுதான், தனக்குத் தானேதான் நண்பனாக முடியும் என்பது புரியும். யாரையாவது தன் மனதில் 'பகைவன்' என நினைத்தால், அதனால் தனக்கே கேடு விளையும் என்பதும் புரியும். ஏனெனில் யாரும், எவருக்கும் ஆன்மிக நிலையில் கேடு விளைவிக்க முடியாது. ஆகையால், தானேதான் தனக்குப் பகைவனாக ஆகிறான். உண்மையில் தன் மேன்மைக்காகப் பாடுபடுபவன் தனக்குத் தானே நண்பன். அதற்கு முரணாக நடப்பவன் தனக்குத் தானே பகைவன். தன்னைத் தவிர வேறு நண்பனோ, பகைவனோ இல்லை.

பொருத்தம்: **மனிதன் தனக்குத் தானே நண்பன்; தனக்குத் தானே பகைவன் என்று மேலே சொன்னார். இதனைத் தெளிவுபடுத்துவதற்காக, எந்த இலக்கணங்களோடு கூடியவன் தனக்குத் தானே நண்பன்; எந்த இலக்கணங்களோடு கூடியவன் தனக்குத் தானே பகைவன் என்பதைக் கூறுகிறார்—**

**बन्धुरात्मात्मनस्तस्य येनात्मैवात्मना जितः।**
**अनात्मनस्तु शत्रुत्वे वर्तेतात्मैव शत्रुवत्॥ ६॥**

**பந்து₄ராத்மாத்மநஸ்தஸ்ய யேநாத்மைவாத்மநா ஜித: ।**
**அநாத்மநஸ்து ஶத்ருத்வே வர்தேதாத்மைவ ஶத்ருவத் ॥ 6 ॥**

**யேந ஆத்மநா** – எந்த ஜீவாத்மாவினால், **ஆத்மா** – மனம், புலன்களுடன் கூடிய உடல், **ஜித:** – அடக்கி ஆளப்பட்டிருக்கிறதோ, **தஸ்ய ஆத்மந:** – அந்த ஜீவாத்மாவிற்கு, **ஆத்மா ஏவ** – தனக்குத் தானே (அவனே), **பந்து₄:** – நண்பன். **து** – ஆனால், **அநாத்மந:** – மனம், புலன்களுடன் கூடிய உடலை அடக்கி ஆளாதவன், **ஆத்மா ஏவ** – தனக்குத் தானே, **ஶத்ருவத்** – பகைவனைப்போல, **ஶத்ருத்வே** – பகைமை (தீமை) செய்வதில், **வர்தேத** – செயல்படுவான்.

எந்த ஜீவாத்மாவினால் மனம், புலன்களுடன் கூடிய உடல் அடக்கி ஆளப்பட்டிருக்கிறதோ, அந்த ஜீவாத்மா தனக்குத் தானே நண்பன். ஆனால் மனம், புலன்களுடன் கூடிய உடலை அடக்கி ஆளாதவன் தனக்குத் தானே பகைவனைப்போல பகைமை (தீமை) செய்வதில் செயல்படுவான்.

**கேள்வி:** மனம், புலன்களுடன் கூடிய உடலை அடக்கியாள்வது என்றால் என்ன? அவற்றை எவ்வாறு அடக்கியாள முடியும்? வெற்றியுடன் அடக்கியாளப்பட்ட உடல், மனம், புலன்களின் இலக்கணம் என்ன? இவ்விதமாக இவற்றை வென்று அடக்கிக் கொண்டவன் எப்படித் தனக்குத் தானே நண்பன் ஆகிறான்?

**பதில்:** உடலையும், புலன்களையும், மனதையும் நன்றாகத் தன்வசப்படுத்துவது தான் அவற்றை அடக்கியாள்வது ஆகும். விவேகத்துடன் பயிற்சி செய்வதாலும், வைராக்யத்தினாலும் இவற்றை அடக்க முடியும். பரமாத்மாவை அடைவதற்காக, ஒருவன் தன் உடல், புலன்கள், மனம் முதலியவற்றை ஸாதனையில் ஈடுபடுத்தும்போது அவை எளிதாகவே ஈடுபட்டால், மாறான வழியைத் திரும்பிக்கூடப் பார்க்காமலே இருந்தால், அவனுடைய லக்ஷ்யத்திற்கு அவை வசப்பட்டிருக்கின்றன என்று அறியலாம். உடல், புலன்கள், மனம் இவை தன்வசப்பட்டவன் எளிதாக ஸம்ஸாரக் கடலிலிருந்து தன்னைக் கடைத்தேற்றிக் கொண்டு அக்கரை சேர முடியும். பரமானந்த ஸ்வரூபமான பகவானை அடைந்து, செய்ய வேண்டியதைச் செய்து த்ருப்தியை அடைய முடியும். ஆகவே, இப்படிப்பட்டவன் 'தனக்குத் தானே நண்பன்' ஆகிறான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** உடல், புலன்கள், மனம் இவற்றை அடக்காதவனை 'அநாத்மா' என்று கூறுவதன் கருத்து என்ன? அவன் தன்னிடமே பகைவனைப் போல, பகைமையோடு நடந்து கொள்வான் என்றால் என்ன?

**பதில்:** உடல், புலன்கள், மனம் இவை எல்லாவற்றிற்கும் ஆத்மா என்ற பெயர் உண்டு. அவை ஒருவனுக்கு வசப்படாமல் கட்டுமீறிப் போய்க் கொண்டு இருந்தால், தம் இஷ்டப்படி போகங்களில் ஈடுபட்டுக் கொண்டிருந்தால், அவற்றை ஒருவன் தன்னுடைய லக்ஷ்யத்திற்கு அனுகூலமான நன்மை தரக்கூடிய ஸாதனைகளில் ஈடுபடுத்தாமலிருந்தால், அவன் 'அநாத்மா'; ஆத்மவான் அல்லன்.

இப்படிப்பட்டவன் உடல், புலன்கள், மனம் ஆகியவை போன போக்கில் சென்று, உடம்பு ஏற்றுக் கொள்ளத்தகாததை உண்ணும் நோயாளியைப் போல, தன்னுடைய மேன்மைக்குரிய ஸாதனைக்கு முரணாக நடந்து கொள்கிறான். அவன் அஹங்காரம், மமகாரம், ராக-த்வேஷம், காம-க்ரோதம், பேராசை, மோஹம் இவற்றிற்கு ஆட்பட்டு, கவனமற்று, சோம்பலுற்று, போகங்களில் ஆழ்ந்து, பாவங்கள் புரிந்து, நெருக்கமான பந்தத்தில் கட்டுப்படுகிறான். எப்படி ஒரு பகைவன் நம்முடைய ஸுக ஸாதனங்களைக் கெடுத்து, நம்மைத் துன்பத்தில் ஆழ்த்துகிறானோ, அதுபோல, நமது உடல், புலன்கள், மனம் முதலியன மேன்மைக்குரிய ஸாதனைகளைப் புரியவிடாமல் நம்மை போகங்களில் ஆழ்த்துகின்றன. மீண்டும், மீண்டும் தன்னைத் தானே நரகத்திலும், தாழ்ந்த பிறவிகளிலும் தள்ளி எல்லையில்லாக் காலம் வரை நம்மைத் துயரங்களை அனுபவிக்கச் செய்கின்றன. நம் உடல், புலன்கள், மனம் இவற்றிற்கு நம்மிடம் வெறுப்பு இல்லை. அவை நமக்குக் கெடுதி நினைக்கவில்லை. ஆயினும் அஞ்ஞானத்தினால் மோஹமடைந்த மனிதன், பற்றுதலுக்கு ஆட்பட்டுத் துன்பத்தை ஸுகம் என்றும், நலமில்லாததை நலம் என்றும் நினைத்துத் தன் மேன்மைக்குத் தடையாகத் தானே நடந்து கொள்கிறான். இதைத்தான், 'தனக்குத் தானே பகைவனைப் போல - பகைவன் நடந்து கொள்வதுபோல் நடந்து கொள்வான்' என்று குறிப்பிடுகிறார்.

**பொருத்தம்:** எவன் மனம், புலன் இவற்றோடு கூடிய உடலை வென்றுவிட்டானோ, அவன் தனக்குத்தானே எவ்விதம் நண்பனாகிறான் என்பதைத் தெளிவுபடுத்துவதற்காக, உடல், புலன்கள், மனம் வடிவிலான ஆத்மாவை வசப்படுத்துவதன் பயனைக் கூறுகிறார்—

**जितात्मनः प्रशान्तस्य परमात्मा समाहितः ।**
**शीतोष्णसुखदुःखेषु तथा मानापमानयोः ॥ ७ ॥**

**ஜிதாத்மந: ப்ரஶாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹித: ।**
**ஶீதோஷ்ணஸுக₂து₃:கே₂ஷு தத₂ா மாநாபமாநயோ: ॥ 7 ॥**

***ஶீத உஷ்ண ஸுக₂ து₃:கே₂ஷு*** – தட்ப-வெப்பம், இன்ப-துன்பம் ஆகியவற்றில், ***தத₂ா*** – மேலும், ***மாந அபமாநயோ:*** – மான-அவமானம் இவற்றில், ***ப்ரஶாந்தஸ்ய*** – எவனுடைய மனநிலை மிகவும் அமைதியாக இருக்கிறதோ (அந்த), ***ஜிதாத்மந:*** – தன்னை அடக்கி வெற்றிகொண்ட மனிதனின் ஞானத்தில், ***பரமாத்மா*** – ஸத் சித் ஆனந்தமயனான பரமாத்மா, ***ஸமாஹித:*** – நன்கு நிலைத்து நிற்கிறார். (அதாவது அவனுடைய அறிவில் பரமாத்மாவைத் தவிர வேறு ஒன்றுமே இல்லை).

தட்ப-வெப்பம், இன்ப-துன்பம், மான-அவமானம் ஆகியவற்றில் எவனுடைய மனநிலை மிகவும் அமைதியாக இருக்கிறதோ, தன்னை, அடக்கி வெற்றிகொண்ட அந்த மனிதனின் ஞானத்தில் ஸத் சித் ஆனந்தமயனான பரமாத்மா நன்கு நிலைத்து நிற்கிறார். அதாவது அவனுடைய அறிவில் பரமாத்மாவைத் தவிர வேறு ஒன்றுமே இல்லை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** தட்ப-வெப்பம், இன்ப-துன்பம், மான-அவமானம் இவற்றில் மனநிலை அமைதியாக இருப்பது என்றால் என்ன?

**பதில்:** தட்ப-வெப்பம், இன்ப-துன்பம், மான-அவமானம் என்ற சொற்கள், இவை போன்ற மற்ற இரட்டைகளையும் குறிப்பிடுகின்றன. ஆகவே, இந்த ஸந்தர்பத்தில் உடல், புலன்கள், மனதோடு தொடர்பு கொள்கின்ற உலகியல் பொருட்கள், எண்ணங்கள், நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் சேர்த்துக் கூறுவதாகக் கொள்ள வேண்டும். அனுகூலமாகவோ, ப்ரதிகூலமாகவோ ஆன பொருட்கள், எண்ணங்கள், மனிதர்கள், நிகழ்ச்சிகள் இவை வந்து சேர்வதாலோ, பிரிந்து போவதாலோ மனதில் விருப்பு-வெறுப்பு, மகிழ்ச்சி-துயரம், ஆவல்-பயம், பொறாமை, குற்றம் காண்பது, காமம்-க்ரோதம், தடுமாற்றம் முதலிய எந்த விகாரங்களும் ஏற்படக்கூடாது. எந்த நிலையிலும் மனம் ஸமமாகவும், அமைதியாகவும் இருக்கவேண்டும். இதைத்தான் 'தட்ப-வெப்பம், இன்ப-துன்பம், மான-அவமானம் ஆகிய நிலைகளிலும் மனநிலை அமைதியாக இருப்பது' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'ஜிதாத்மந:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? இது யாரைக் குறிக்கிறது?

**பதில்:** உடல், புலன்கள், மனம் முதலியவற்றை முழுமையாகத் தன்வசப்படுத்தியவன் 'ஜிதாத்மா'. இப்படிப்பட்டவன், எப்பொழுதும், எல்லா நிலைகளிலும் பேரமைதியுடன் விகாரமின்றி (மாறுதலின்றி) இருக்க முடியும். ஸம்ஸாரக் கடலிலிருந்து தன்னை வெளியேற்றிக் கொண்டு பரமாத்மாவை அடைய முடியும். ஆகவே, அவன் தனக்குத் தானே நண்பன். இதைத்தான் 'ஜிதாத்மந:' என்ற சொல் குறிப்பிடுகிறது.

**கேள்வி:** இங்கே 'பரமாத்மா' என்ற சொல் எதைக் குறிப்பிடுகிறது? 'ஸமாஹித:' என்ற சொல்லுக்குப் பொருள் என்ன?

**பதில்:** 'பரமாத்மா' என்ற சொல், ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்மத்தைக் குறிப்பதாகும். மேலே சொல்லப்பட்ட இலக்கணங்கள் பொருந்தியவனுக்குப் பரமாத்மா எப்பொழுதும், எங்கும் நேரிடையாக நன்கு நிலைத்து நிறைந்து விளங்குகிறார் என்பதை 'ஸமாஹித:' என்ற சொல் உணர்த்துகிறது.

**பொருத்தம்:** மனம், புலன்களோடு கூடிய சரீரத்தைத் தன்வசப்படுத்துவதன் பயன் பரமாத்மாவை அடைவது என்று கூறப்பட்டது. ஆகவே, பரமாத்மாவை அடைந்துவிட்ட மனிதனுடைய இலக்கணத்தை அறிய விருப்பம் ஏற்படுவதால், இப்போது இரண்டு ச்லோகங்கள் மூலமாக அவனுடைய இலக்கணங்களை விளக்கி, அவனைப் புகழ்ந்து கூறுகிறார்—

**ज्ञानविज्ञानतृप्तात्मा कूटस्थो विजितेन्द्रियः।**
**युक्त इत्युच्यते योगी समलोष्टाश्मकाञ्चनः॥८॥**

**ஜ்ஞாநவிஜ்ஞாநத்ருப்தாத்மா கூடஸ்தே₂ா விஜிதேந்த்₃ரிய: ।**

**யுக்த இத்யுச்யதே யோகீ₃ ஸமலோஷ்டாஸ்மகாஞ்சந: ॥ 8 ॥**

**ஜ்ஞாந விஜ்ஞாந த்ருப்தாத்மா** – எவரது உள்ளம் ஞானத்தாலும், விஞ்ஞானத்தாலும் நிறைந்து த்ருப்தியாக இருக்கிறதோ, **கூடஸ்த₂:** – எவர் தம் நிலையிலிருந்து எந்தச் சூழ்நிலையிலும் விகாரமின்றி இருக்கிறாரோ, **விஜிதேந்த்₃ரிய:** – எவர் தம் புலன்களை நன்கு அடக்கி வசப்படுத்தியுள்ளாரோ (மேலும்), **ஸம லோஷ்ட அஸ்ம காஞ்சந:** – எவர் மண், கல், பொன் ஆகியவற்றில் ஸமபாவனை கொண்டு உள்ளாரோ, **யோகீ₃** – அந்த யோகி, **யுக்த:** – பகவானை அடைந்தவர், **இதி** – என்று, **உச்யதே** – அழைக்கப்படுகிறார்.

எவரது உள்ளம் ஞானத்தாலும் விஞ்ஞானத்தாலும் நிறைந்து த்ருப்தியாக இருக்கிறதோ, எவர் தம் நிலையிலிருந்து எந்தச் சூழ்நிலையிலும் விகாரமின்றி இருக்கிறாரோ, எவர் தம்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



புலன்களை நன்கு அடக்கி வசப்படுத்தியுள்ளாரோ, மேலும் எவர் மண், கல், பொன் ஆகியவற்றில் ஸமபாவனை கொண்டு உள்ளாரோ, அந்த யோகி பகவானை அடைந்தவர் என்று அழைக்கப்படுகிறார்.

**கேள்வி:** இங்கு 'ஜ்ஞாந விஜ்ஞாந த்ருப்தாத்மா' என்ற சொல் யாரைக் குறிக்கிறது?

**பதில்:** பரமாத்மாவின் நிர்குண, நிராகார தத்வத்தின் ப்ரபாவத்தையும், பெருமையையும், அதன் உட்கருத்தையும் நன்கு அறிவது ஞானம் ஆகும். பரமாத்மாவினுடைய ஸகுண-நிராகார, ஸகுண-ஸாகார தத்வத்தின் லீலை, ரஹஸ்யம், பெருமை, குணம், ப்ரபாவம் முதலியவற்றின் உண்மையான ஞானத்தை 'விஞ்ஞானம்' என்கிறார். எவன் பரமாத்மாவின் நிர்குண-ஸகுண, நிராகார-ஸாகார தத்வங்களை நன்றாக உணர்ந்துள்ளானோ, எவனுடைய உள்ளம் மேலே சொல்லப்பட்ட இரண்டு தத்வங்களையும் உள்ளபடி அறிந்து, மிகவும் நிறைந்து இருக்கிறதோ, எவனுக்கு மேலும் அறியவேண்டியது ஒன்றும் இல்லையோ, அவன்தான் 'ஜ்ஞாந விஜ்ஞாந த்ருப்தாத்மா'.

**கேள்வி:** 'கூடஸ்த:' என்பதற்குப் பொருள் என்ன?

**பதில்:** பொற்கொல்லர்களிடமும், கருமார்களிடமும் உள்ள பட்டடைக்கல்லுக்குக் 'கூடம்' என்று பெயர். அதன் மேல் தங்கம், வெள்ளி, இரும்பை வைத்துச் சுத்தியால் அடிப்பார்கள். ஆனால் பட்டடைக்கல் உறுதியாக இருக்கும். அதுபோல எவன் பலவிதமான துயரங்கள் தாக்கும்போதுகூடத் தன் நிலையில் கொஞ்சம்கூடத் தடுமாறாமல் இருக்கிறானோ, எவனுடைய மனதில் கொஞ்சம்கூட விகாரம் உண்டாவதில்லையோ, எவன் எப்போதும் உறுதியான உணர்வுடன் பரமாத்ம ஸ்வரூபத்தில் நிலைத்துள்ளானோ, அவனைக் 'கூடஸ்தன்' என்கிறார்கள்.

**கேள்வி:** 'விஜிதேந்த்ரிய:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** 'உலகிலுள்ள எல்லா போகப் பொருட்களும் வெறும் மாயைத் தோற்றம்; நொடி நேரத்தவை' என்று உணர்ந்துவிட்டதன் காரணமாக, எவனுக்கு எந்த ஒரு பொருளிலும் சிறிதுகூடப் பற்று இல்லையோ, மேலும் எவனுடைய புலன்கள் போகப் பொருட்களில் எவ்விதச் சுவையையும் உணராமல் அவற்றிடமிருந்து விலகிவிட்டனவோ, அவ்விதமே உலக நன்மைக்காக எவன் தன்னுடைய விருப்பப்படி அவற்றை எந்த இடத்தில் ஈடுபடுத்தினாலும், அவை தம் விருப்பப்படி வேறு எங்கும் செல்லாமல் அங்கேயே ஈடுபடுகின்றனவோ, எவன் மனதில் அவை கலக்கத்தை உண்டு பண்ணுவதில்லையோ, எவனுடைய புலன்கள் அவன் வசத்தில் உள்ளனவோ, அவனே 'விஜிதேந்த்ரியன்' (புலன்களை வென்றவன்) ஆவான்.

**கேள்வி:** 'ஸம லோஷ்ட அஶ்ம காஞ்சந:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** மண், கல், தங்கம் முதலிய எல்லாப் பொருட்களிலும் பரமாத்மா இருக்கிறார் என்ற காரணத்தினால், இம்மூன்றையும் ஸமமாகப் பாவிக்கிறவன். அஞ்ஞானிகளைப்போல் தங்கத்தை விரும்புவதுமில்லை; கல்-மண் முதலியவற்றை வெறுப்பதுமில்லை. எல்லாவற்றையும் ஸமமாக, ஒரே மாதிரியாகக் கருதுபவன் 'ஸம லோஷ்ட அஶ்ம காஞ்சந:' என்றழைக்கப்படுவான்.

**सुहृन्मित्रार्युदासीनमध्यस्थद्वेष्यबन्धुषु ।**
**साधुष्वपि च पापेषु समबुद्धिर्विशिष्यते ॥ ९ ॥**

**ஸுஹ்ருந்மித்ரார்யுத₃ாஸீநமத்₄யஸ்த₂த்₃வேஷ்யப₃ந்து₄ஷு ।**

**ஸாது₄ஷ்வபி ச பாபேஷு ஸமபு₃த்₃தி₄ர்விஶிஷ்யதே ॥ 9 ॥**

**ஸுஹ்ருத் மித்ர அரி உத₃ாஸீந மத்₄யஸ்த₂ த்₃வேஷ்ய ப₃ந்து₄ஷு** – தன்னலம் கருதாது அனைவருக்கும் ஹிதம் செய்பவன், நண்பன், பகைவன், உதாஸீனன் (ஒருசார்பு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மற்றவன்), நடுநிலையிலே நிற்பவன் (இருபிரிவினருக்கும் நன்மையை நாடுபவன்), வெறுக்கத் தக்கவன், உறவினர் ஆகியவர்களிடமும், **ஸாதுஷு ச** – நல்லோர்களிடத்தும், **பாபேஷு அபி** – பாவிகளிடத்தும்கூட, **ஸமபுத்தி:** – ஸமமான பாவனை கொண்டுள்ளவன், **விஸிஷ்யதே** – மிகவும் சிறந்தவன் ஆகிறான்.

தன்னலம் கருதாது அனைவருக்கும் ஹிதம் செய்பவன், நண்பன், பகைவன், உதாஸீனன் (ஒரு சார்புமற்றவன்), நடுநிலையிலே நிற்பவன் (இரு பிரிவினருக்கும் நன்மையை நாடுபவன்), வெறுக்கத்தக்கவன், உறவினர் ஆகியவர்களிடத்தும் நல்லோர்களிடத்தும் பாவிகளிடத்தும்கூட ஸமமான பாவனை கொண்டுள்ளவன் மிகவும் சிறந்தவன் ஆகிறான்.

**கேள்வி:** *'ஸுஹ்ருத்', 'மித்ர' என்பவரிடையே என்ன வித்யாஸம்?*

**பதில்:** ஸுஹ்ருத் – உறவுமுறை, உபகாரம் இவற்றை எதிர்பார்க்காமல் இயற்கையாகவே அன்பும், நலனும் செய்பவன். ஒருவருக்கொருவர் அன்பு கொண்டு தமக்குள் உதவி செய்து கொள்பவன் மித்ரன். அதாவது நண்பன்.

**கேள்வி:** *'அரி' (பகைவன்), 'த்வேஷ்ய' (வெறுக்கத்தக்கவன்) இவர்களிடையே என்ன வித்யாஸம்?*

**பதில்:** ஏதோ ஒரு காரணத்தினால் நமக்குக் கெடுதி செய்ய நினைப்பவன் அரி – சத்ரு. எவன் (எவ்விதக் காரணமுமின்றி) இயல்பாகவே நமக்கு எதிராகச் செயல்படுவதால், வெறுப்புள்ளவனாகிவிட்டானோ, அவன் த்வேஷ்யன் (வெறுக்கத்தக்கவன்).

**கேள்வி:** *'உதாஸீனன்', 'மத்யஸ்தன்' இவர்களிடையே என்ன வித்யாஸம்?*

**பதில்:** தமக்குள் சண்டையிட்டுக் கொண்டிருப்பவர்களை ஸமாதானம் செய்யும் முயற்சி செய்பவனை, ஒரு கட்சியிலும் சேராமல் அவ்விருவரின் நலனுக்காக நீதி கூறுபவனை 'மத்யஸ்தன்' என்கிறார். அவர்களிடம் எவ்விதமான தொடர்பும் கொள்ளாதவனை 'உதாஸீனன்' என்கிறார்.

**கேள்வி:** *'அபி' என்ற சொல்லை உபயோகிப்பதன் கருத்து என்ன?*

**பதில்:** நண்பர்கள், மித்ரர்கள், மத்யஸ்தர்கள், உதாஸீனர்கள், ஸாதுக்கள், நல்ல நடத்தை உள்ளவர்கள், உறவினர்கள் முதலியவர்களிடம் மனிதர்களுக்கு இயல்பாக அன்பு இருக்கலாம். அதுபோல சத்ருக்கள், வெறுப்புள்ளவர்கள், பாவிகள் இவர்களிடம் வெறுப்பும், அருவருப்பும் இருக்கலாம். விவேகிகளுக்கும்கூட மேலே சொன்ன மக்களிடம் இயல்பாகவே, விருப்பு, வெறுப்பு இருப்பது போலக் காணப்படும். இவ்விதம் ஒன்றுக்கொன்று மிகவும் முரண்பட்ட இயல்புடைய மனிதர்களிடம் ராக-த்வேஷமும், வேற்றுமை மனப்பான்மையும் இல்லாதிருத்தல் மிகவும் கடினம். அவர்களிடம்கூட ஸமபாவனை இருந்துவிட்டால் பிறகு மற்ற இடத்திலும் ஸமபாவனை இருக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? இதைத்தான் 'அபி' (கூட) என்ற சொல் குறிக்கிறது.

**கேள்வி:** *'ஸமபுத்தி:' என்றால் என்ன?*

**பதில்:** எங்கும் பரமாத்மா இருக்கிறார் என்ற எண்ணம் இருப்பதால், முன் சொன்ன முற்றிலும் மாறுபட்ட இயல்புடைய மித்ர-சத்ருக்களிடமும், நல்லோர்-தீயோரிடமும் நடத்தை, இயல்பு, செயல் இவற்றின் வேற்றுமைகளால், எவனிடம் எவ்விதத் தாக்கமும் ஏற்படுவதில்லையோ, எவனுடைய புத்தியில் எந்த சமயத்திலும், எந்த ஒரு சூழ்நிலையிலும், எந்த ஒரு காரணத்துக்காகவும் வேற்றுமை உணர்ச்சி தோன்றுவதில்லையோ, அவன் ஸமபுத்தி உடையவன் என்றறிய வேண்டும்.

**பொருத்தம்:** 6வது ச்லோகத்தில் உடல், புலன்கள், மனம்-வடிவான ஆத்மாவை வெற்றி கொண்டவன், தனக்குத்தானே நண்பன் என்றார். 7வது ச்லோகத்தில் இந்த ஜிதாத்மா, பரமாத்மாவை அடைவதைப் பற்றிக் கூறுகிறார். 8,9ல் பரமாத்மாவை அடைந்தவனின் இலக்கணத்தைக் கூறி, அவன் பெருமைகளைப் புகழ்கிறார். பரமாத்மாவை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அடைய ஜிதாத்மா என்ன செய்யவேண்டும்? எந்த ஸாதனையினால் விரைவில் பகவானை அடையலாம் என்பதற்கு விடையாக, த்யானயோகம் பற்றிப் பேச ஆரம்பிக்கிறார்—

**योगी युञ्जीत सततमात्मानं रहसि स्थितः ।**
**एकाकी यतचित्तात्मा निराशीरपरिग्रहः ॥ १० ॥**

**யோகீ₃ யுஞ்ஜீத ஸததமாத்மாநம் ரஹஸி ஸ்தி₂த: ।**
**ஏகாகீ யதசித்தாத்மா நிராஶீரபரிக்₃ரஹ: ॥ 10 ॥**

**யத சித்தாத்மா** – மனம், புலன்களுடன் கூடிய உடலை அடக்கி, **நிராஶீ:** – எதிலும் ஆசையில்லாமல் (மேலும்), **அபரிக்₃ரஹ:** – (தனக்கென்று எதையும்) சேர்த்து வைத்துக் கொள்ளாத, **யோகீ₃** – யோகி, **ஏகாகீ** – தனி ஒருவனாக, **ரஹஸி** – தனியான இடத்தில், **ஸ்தி₂த:** – அமர்ந்து கொண்டு, **ஆத்மாநம்** – ஆத்மாவை, **ஸததம்** – இடைவிடாது, **யுஞ்ஜீத** – (பரமாத்மாவில்) இணைக்கவேண்டும்.

மனம், புலன்களுடன் கூடிய உடலை அடக்கி எதிலும் ஆசையில்லாமல், தனக்கென்று எதையும் சேர்த்து வைத்துக் கொள்ளாத யோகி தனி ஒருவனாகத் தனியான இடத்தில் அமர்ந்து கொண்டு ஆத்மாவை இடைவிடாது பரமாத்மாவில் இணைக்கவேண்டும்.

**கேள்வி:** 'நிராஶீ:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** இவ்வுலகத்திய, பரலோகத்திய போகப் பொருட்கள் எதிலும், எவ்விதத்திலும், எந்த நிலையிலும் சிறிதுகூட விருப்பமோ, எதிர்பார்த்தலோ அற்றவன் 'நிராஶீ:' – ஆசையற்றவன்.

**கேள்வி:** 'அபரிக்ரஹ:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** போகப் பொருட்களைச் சேர்த்து வைத்தல், 'பரிக்ரஹம்' எனப்படும். அவ்வியல்பு இல்லாதவனை 'அபரிக்ரஹ:' என்கிறார். இல்லறத்தானாக இருந்தால், எப்பொருளையும் தனக்கு மட்டும் வேண்டும் என்ற மமகாரத்துடன் (எண்ணத்துடன்) சேர்த்து வைத்துக் கொள்ளக் கூடாது. ப்ரம்மசாரி, வானப்ரஸ்தன், ஸந்யாஸி இவர்கள் எக்காரணத்தைக் கொண்டும் சாஸ்த்ரங்களுக்கு விரோதமாகப் பொருளைச் சேர்ப்பதாகத் தோன்றுவதுபோலக் கூடச் சேர்த்து வைத்துக் கொள்ளக் கூடாது. எந்த ஆசிரமத்தவனாக இருந்தாலும், தனக்கென்று சேர்த்து வைத்துக் கொள்ளாதவன் 'அபரிக்ரஹன்' ஆவான்.

**கேள்வி:** இங்கே 'யோகீ' என்று யாரைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** இங்கு பகவான் த்யானயோகத்தில் ஈடுபடும்படி கூறிக் கொண்டு இருக்கிறார். அதனால் 'யோகீ' என்ற சொல் த்யானயோகத்திற்குத் தகுதி பெற்றவனைக் குறிக்கிறது. ஸித்தி பெற்றுவிட்ட யோகியை அன்று.

**கேள்வி:** 'ஏகாகீ' (தனி ஒருவனாக) என்று ஏன் கூறுகிறார்?

**பதில்:** பல பேர் இருக்குமிடத்தில், 'த்யானப்பயிற்சி' என்பது நடக்காத செயல். வேறொருவர் இருந்தால்கூட உரையாடல் முதலியவற்றின் காரணமாக, த்யானத்திற்கு இடையூறு ஏற்படும். ஆகவே, தனி ஒருவனாக இருந்து த்யானயோகப் பயிற்சி செய்யவேண்டும். இதற்காகத்தான் 'ஏகாகீ' என்று அடைமொழி கொடுக்கிறார்.

**கேள்வி:** 'தனியான இடத்தில் அமர்ந்திருக்கவேண்டும்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** காடு, மலை, குகை முதலிய ஏகாந்தமான இடங்கள் த்யானத்திற்கு உகந்தவை. எங்கே பலபேர்களுடைய நடமாட்டம் இருக்கிறதோ, அது த்யானயோக ஸாதனைக்குரிய இடம் ஆகாது. அதனால் இவ்வாறு சொல்லப்படுகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** இங்கு 'ஆத்மா' என்ற சொல் எதைக் குறிக்கிறது? அதைப் 'பரமாத்மாவிடம் செலுத்துவது' என்றால் என்ன?

**பதில்:** இங்கு ஆத்மா என்ற சொல் மனம், புத்தியாகிற அந்தக்கரணத்தைக் குறிக்கிறது. அதனைப் பரமாத்ம சிந்தனையில் தன்மயமாக ஆழ்த்துவதுதான் 'பரமாத்மாவிடம் செலுத்துவது' ஆகும்.

**கேள்வி:** 'ஸததம்' என்பதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஸததம்' என்ற சொல் 'யுஞ்ஜீத' என்ற வினையின் வினையுரிச்சொல்லாகும். தொடர்ந்திருப்பதைக் காட்டும் சொல்லாகும். த்யானம் செய்யும்பொழுது சிறிதுகூட இடையீடு ஏற்பட்டுவிடக் கூடாது என்பது இதன் கருத்து. இவ்விதம் இடையீடு இல்லாமல் த்யானத்தின் தொடர்ச்சி விட்டுப்போகாத வகையில், பரமாத்மாவை த்யானித்துக் கொண்டே இருக்கவேண்டும் என்பது கருத்து.

**பொருத்தம்: ஜிதாத்மா, த்யானயோக ஸாதனை செய்யவேண்டும் என்று கூறினார். இப்போது அந்த த்யானயோகத்தை விரிவாக விளக்கும் பொருட்டு, முதலில் இடம், ஆஸனம் இவற்றை விளக்குகிறார்—**

**शुचौ देशे प्रतिष्ठाप्य स्थिरमासनमात्मनः ।**
**नात्युच्छ्रितं नातिनीचं चैलाजिनकुशोत्तरम् ॥ ११ ॥**

***ஶுசௌ தே₃ஶே ப்ரதிஷ்ட₂ாப்ய ஸ்தி₂ரமாஸநமாத்மந: ।***
***நாத்யுச்ச்₂ரிதம் நாதிநீசம் சைலாஜிநகுஶோத்தரம் ॥ 11 ॥***

**ஶுசௌ** – தூய்மையான, **தே₃ஶே** – இடத்தில், (தரைமீது), **சைல அஜிந குஶ உத்தரம்** – தர்ப்பை, மான்தோல், துணி இவற்றை ஒன்றன்மேல் ஒன்றாக விரித்து, **ந அத்யுச்ச்₂ரிதம்** – மிக உயரமாக இல்லாமலும், **ந அதிநீசம்** – மிகத்தாழ்வாக இல்லாமலும், **ஆத்மந:** – தன்னுடைய, **ஆஸநம்** – இருக்கையை, **ஸ்தி₂ரம்** – அசைவற்றதாக, **ப்ரதிஷ்ட₂ாப்ய** – அமைத்துக் கொண்டு—

தூய்மையான இடத்தில் தரைமீது தர்ப்பை, மான்தோல், துணி இவற்றை ஒன்றின்மேல் ஒன்றாக விரித்து மிக உயரமாக இல்லாமலும் மிகத்தாழ்வாக இல்லாமலும் தன்னுடைய இருக்கையை அசைவற்றதாக அமைத்துக் கொண்டு—

**கேள்வி:** 'ஶுசௌ தேஶே' என்றால் என்ன கருத்து?

**பதில்:** த்யானயோக ஸாதனை புரியத்தக்க இடம் இயல்பாகவே பரிசுத்தமாக இருக்கவேண்டும். அந்த இடத்தைக் கூட்டித் துடைத்து அல்லது மெழுகித் தூய்மையாகவும், மாசற்றதாகவும் ஆக்கவேண்டும். கங்கை, யமுனை, காவேரி முதலிய புண்ய நதிக்கரை அல்லது மலைக்குகை, தேவாலயம், புனிதத்தலங்கள், பூங்கா, மாசற்ற காற்று வீசுகிற இடங்களில் எது எளிதாகக் கிடைக்கிறதோ, அந்த இடத்தில் தூயதான, புனிதமான, ஏகாந்தமான ஓர் இடத்தை த்யானயோகத்துக்கு ஸாதகன் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

**கேள்வி:** 'ஆஸனம்' மிக் உயரமாகவோ, தாழ்வாகவோ இருக்கக் கூடாது; தர்ப்பம், மான்தோல், துணிகள் விரித்திருக்க வேண்டும் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அமர்வதற்கு வசதியாகப் பலகை அல்லது கல்லினால் செய்யப்பட்ட இடம் ஆஸனம் ஆகும். அந்த இடம் உயரமாக இருந்தால் த்யானத்திற்குத் தடையாகச் சோம்பலோ, தூக்கமோ நேரும்போது தடுமாறி விழுந்து காயம் ஏற்படலாம். மிகவும் தாழ்வாக இருந்தால் தரையின் ஈரம், சூடு, எறும்பு, புழுக்கள் இவற்றால் இடையூறு ஏற்படலாம். ஆகவே ஆஸனம் அதிக உயரமாகவோ, தாழ்வாகவோ இருக்கக் கூடாது. கல் அல்லது பலகையால் ஆன ஆஸனம் சொரசொரப்பாக இருந்தால் அதில் உட்காரும்போது கால்களுககுக் கஷ்டம்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உண்டாகலாம். ஆகவே, அதற்கு மேல் தர்ப்பம், மான்தோல், துணி இவற்றை விரிக்கவேண்டும். மான்தோலுக்குக் கீழே தர்ப்பத்தை விரித்துவிட்டால் அது விரைவில் வீணாகாது. மேலே துணியை விரித்துவிட்டால், அதன் ரோமங்கள் உடலில் ஒட்டா. அதனால்தான் மூன்றுவிதமான விரிப்புகள் இருக்கவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. மான்தோல் – தானாக மரித்த மானுடையதாக இருக்கவேண்டும். வேட்டையாடப்பட்ட மானுடையதாக இருக்கக் கூடாது. ஹிம்ஸையின் மூலம் பெறப்பட்ட மான்தோல் த்யானத்திற்கு உதவாது. (மான்தோல் கிடைக்காத நிலையில் கம்பளி ஆஸனத்தைப் பயன்படுத்தலாம்).

**கேள்வி:** 'ஆத்மந:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** மேலே சொல்லப்பட்ட ஆஸனம் தன்னுடையதாக இருக்கவேண்டும். பிறருடைய ஆஸனத்தில் அமர்ந்து த்யானம் செய்யக் கூடாது என்று பொருள்.

**கேள்வி:** 'ஆஸனம் அசையாமல் இருக்க வேண்டும்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பலகை அல்லது கல்லினால் செய்யப்பட்ட ஆஸனம், பூமியின் மேல் அசையாதபடி இருத்தல் வேண்டும். ஆஸனத்தில் நொடிப்பு அல்லது சரிவு ஏற்பட்டால் த்யானம் கலைந்துவிடக் கூடும்.

**பொருத்தம்:** பரிசுத்தமான இடத்தில் ஆஸனம் அமைத்த பிறகு த்யானயோக ஸாதகன் என்ன செய்யவேண்டும் என்று சொல்கிறார்—

**तत्रैकाग्रं मनः कृत्वा यतचित्तेन्द्रियक्रियः।**
**उपविश्यासने युञ्ज्याद्योगमात्मविशुद्धये॥ १२॥**

**தத்ரைகாக்₃ரம் மந: க்ருத்வா யதசித்தேந்த்₃ரியக்ரிய: ।**
**உபவிஸ்₂யாஸநே யுஞ்ஜ்யாத்₃யோக₃மாத்மவிஸு₂த்₃த₄யே ॥ 12 ॥**

**தத்ர ஆஸநே** – அந்த ஆஸனத்தில், **உபவிஸ்₂ய** – அமர்ந்து கொண்டு, **யதசித்த இந்த்₃ரியக்ரிய:** – மனம், புலன்களின் செயல்களை வசத்தில் வைத்துக்கொண்டு, **மந:** – மனதை, **ஏகாக்₃ரம் க்ருத்வா** – ஒருமுனைப்படுத்தி, **ஆத்மவிஸு₂த்₃த₄யே** – உள்ளத்தூய்மைக்காக, **யோக₃ம்** – யோகத்தை, **யுஞ்ஜ்யாத்** – பயில வேண்டும்.

அந்த ஆஸனத்தில் அமர்ந்து கொண்டு, மனம், புலன்களின் செயல்களை வசத்தில் வைத்துக் கொண்டு மனதை ஒருமுனைப்படுத்தி, உள்ளத்தூய்மைக்காக யோகத்தைப் பயில வேண்டும்.

**கேள்வி:** இங்கு ஆஸனத்தில் உட்காருவதற்கான விசேஷமான முறை பற்றி எதுவும் கூறாமல் 'அமர்ந்து' என்று பொதுவாகச் சொல்லியிருப்பதன் கருத்து என்ன?

**பதில்:** த்யானயோக ஸாதனைக்கு எப்படி உட்கார வேண்டுமோ, அந்த நியமங்களை அடுத்த ச்லோகத்தில் சொல்கிறார். அவற்றை அனுஸரித்து எந்த ஸாதகனுக்கு ஸ்வஸ்திகம், ஸித்தம், பத்மம் முதலிய ஆஸனங்களில் எது வெகுநேரம் அமர்ந்திருப்பதற்கு ஸுகமாக இருக்குமோ, அது அந்த ஸாதகனுக்கு உகந்தது. ஆகவே, இங்கு 'எப்படி உட்கார்வது' என்பது பற்றி விளக்காமல் பொதுப்படையாக 'அமர்ந்து' என்று சொல்லியிருக்கிறார்.

**கேள்வி:** 'யத சித்த இந்த்ரிய க்ரிய:' என்ற தொடருக்கு என்ன பொருள்?

**பதில்:** 'சித்தம்' என்ற சொல் உள்ளம் அதாவது அந்தக்கரணத்தைக் குறிப்பதாகும். மனம்–புத்திகளால் உலகாயத விஷயங்கள் சிந்திக்கப்பட்டு நிச்சயிக்கப்படுகின்றன. முற்றிலுமாக அச்சிந்தனைகளைத் துறந்து அவற்றிலிருந்து ஓய்வு பெறுவதே அந்தக்கரணத்தின் செயற்பாடுகளை வசத்தில் கொண்டு வருவதாகும். அவ்விதமே 'இந்த்ரிய' (புலன்கள்) என்ற சொல், செவி முதலான பத்துப் புலன்களைக் குறிக்கிறது. இவை எல்லாவற்றையும் கேட்டல்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பார்த்தல் முதலானவற்றிலிருந்து தடுப்பதுதான், அவற்றின் செயல்களை வசத்திற்குக் கொண்டு வருதல் ஆகும்.

**கேள்வி:** 'மனதை ஒருமுனைப்படுத்துவது' என்றால் என்ன?

**பதில்:** த்யானிக்கப்படும் பொருள் மீது, மனதின் ஓட்டத்தைச் சிதறவிடாமல் ஈடுபடுத்துவதுதான் அதனை ஒருமுனைப்படுத்துவது ஆகும். இங்கு த்யானிக்கப்பட வேண்டிய பொருள் பரமாத்மாதான். அந்தப் பரமாத்மாவில் மனம் ஒன்றிவிட வேண்டும். இதையே 6/14லும் 'மச்சித்த:' என்ற அடைமொழியால் கூறுகிறார்.

**கேள்வி:** 'உள்ளத்தூய்மைக்காக த்யானயோகப் பயிற்சி செய்யவேண்டும்' என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** த்யானயோகப் பயிற்சியின் நோக்கம் உலகியல் ஸித்திகளைப் பெறுவதாகவோ, ஐசுவர்யத்தைப் பெறுவதாகவோ இருக்கக் கூடாது. பரமாத்மாவை அடையவேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன், மனதில் உள்ள விருப்பு-வெறுப்பு முதலிய குற்றங்களையும், பாவச் செயல்களையும், மனத்தடுமாற்றத்தையும், அஞ்ஞானத்தையும் அழிப்பதற்காகவே த்யானயோகப் பயிற்சி செய்யவேண்டும் என்பது கருத்து.

**கேள்வி:** 'யோகம் பயில்வது' என்றால் என்ன?

**பதில்:** மேலே சொன்னவிதம் ஆஸனத்தில் அமர்ந்து உள்ளம், புலன்களின் செயல்களைத் தன்வசப்படுத்தி மனதைப் பரமேசுவரன்பால் ஈடுபடுத்தி, இடைவிடாது எப்பொழுதும் பரமாத்மாவைச் சிந்திப்பதுதான் யோகம் பயில்வதாகும்.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் ஆஸனத்தில் அமர்ந்து த்யான யோகப்பயிற்சி செய்யவேண்டும் என்று சொன்னார். அதைத் தெளிவுபடுத்துவதற்காக, ஆஸனத்தில் எப்படி அமரவேண்டும்; ஸாதகனின் மனப்பாங்கு எப்படி இருக்கவேண்டும்; அவன் எந்தெந்த நியமங்களைக் கடைப்பிடிக்க வேண்டும்; எவ்விதம் யாரை த்யானம் செய்ய வேண்டும் முதலிய விஷயங்களை அடுத்து இரண்டு ச்லோகங்களால் விளக்குகிறார்—

**समं कायशिरोग्रीवं धारयन्नचलं स्थिरः।**
**सम्प्रेक्ष्य नासिकाग्रं स्वं दिशश्चानवलोकयन्॥ १३॥**

**ஸமம் காயஶிரோக்$_3$ரீவம் த$_4$ாரயந்நசலம் ஸ்தி$_2$ர: ।**
**ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்$_3$ரம் ஸ்வம் தி$_3$ஶஶ்சாநவலோகயந் ॥ 13 ॥**

***காய ஶிரோ க்$_3$ரீவம்*** – உடல், தலை, கழுத்து இவற்றை, ***ஸமம்*** – சீராகவும், ***அசலம் ச*** – அசைவற்றதாகவும், ***த$_4$ாரயந்*** – வைத்துக் கொண்டு, ***ஸ்தி$_2$ர:*** ‡ – அசையாமல் ஸ்திரமாக இருந்துகொண்டு, ***தி$_3$ஶ:*** – மற்ற திசைகளை, ***அநவலோகயந்*** – பாராமல், ***ஸ்வம்*** – தன்னுடைய, ***நாஸிகாக்$_3$ரம்*** – நாசியின் நுனியின்மீது, ***ஸம்ப்ரேக்ஷ்ய*** – பார்வையை ஒருமுனைப்படுத்தி—

உடல், தலை, கழுத்து இவற்றைச் சீராகவும், அசைவற்றதாகவும் வைத்துக் கொண்டு, அசையாமல் ஸ்திரமாக இருந்துகொண்டு மற்ற திசைகளைப் பாராமல் தன்னுடைய நாசியின் நுனியின்மீது பார்வையை ஒருமுனைப்படுத்தி—

**கேள்வி:** உடல், தலை, கழுத்து இவற்றைச் சீராகவும், அசையாமலும் நிலைப்படுத்தி வைத்துக் கொள்வது எப்படி?

‡ பாதஞ்ஜல யோகஸூத்ரம் 2/46ல் 'ஸ்தி$_2$ரஸுக$_2$மாஸநம்' – வெகுநேரம் ஸுகமாக நிலைத்து உட்கார ஸௌகர்யமானது ஆஸனம்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** தொடைக்கு மேல் கழுத்துக்குக் கீழே உள்ள உடலின் பாகத்தைக் 'காயம்' என்கிறார். அதற்கு மேல் உள்ளது கழுத்து, அதற்கு மேல் இருப்பது தலை. இடுப்பும், வயிறும் முன்னோ, பின்னோ, இடதுபுறமோ, வலதுபுறமோ சாயாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். முதுகுத்தண்டை நேராகவும், கழுத்து சாயாமலும், தலையைத் திருப்பாமலும் ஒரே சீராக வைத்துக் கொண்டு அசையாமல் இருக்கவேண்டும். இதுதான் சீராகவும், அசையாமலும் இருப்பதாகும்.

**கேள்வி:** உடல் முதலியவற்றை அசையாமல் வைத்துக் கொள்ள வேண்டும் என்று சொல்லிவிட்டு, மறுபடியும் ஸ்திரமாக இருக்கவேண்டும் என்று சொல்வதில் புதிய கருத்து உண்டா?

**பதில்:** உடல், தலை, கழுத்து இவை ஸமமாகவும், சீராகவும் இருந்தாலும், கைகால்கள் அசையலாம். ஆகவே ஸ்திரமாக இருக்கவேண்டும் என்று சொல்வதற்கு அவசியம் ஏற்படுகிறது. த்யான காலத்தில் கைகால்களை எப்படி வைத்துக் கொள்ள வேண்டுமோ, அப்படி அவை ஸ்திரமாக இருக்கவேண்டும். ஓர் அவயவம் அசைந்தாலும், த்யானத்திற்கு உதவியாகாது. எல்லா அவயவங்களும் அசைவற்று இருக்கவேண்டும் என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'மற்ற திசைகளைப் பார்க்காமல் நாசியின் நுனியில் பார்வையை ஒருமுனைப்படுத்தி' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பார்வை, மூக்கின் நுனியில் நிலையாக இருக்கவேண்டும். கண்களை மூடவும் கூடாது. இங்குமங்கும் பார்வையைச் செலுத்தி மற்ற அவயவங்களையோ, பொருட்களையோ பார்க்கவும் கூடாது. மூக்கு நுனியைக்கூட மனம் ஒன்றிப் பார்க்கவேண்டும் என்பதில்லை. தடுமாற்றம், தூக்கம் ஏற்படக்கூடாது என்பதற்காகப் பார்வையை அங்குச் செலுத்த வேண்டுமே தவிர மனம் பரமேசுவரன்பால் லயித்து இருக்கவேண்டும்; மூக்கின் நுனியில் அன்று.

**கேள்வி:** இவ்விதமாக ஆஸனம் இட்டுக் கொண்டு அமரவேண்டும் என்று ஏன் கூறுகிறார்?

**பதில்:** த்யானயோக ஸாதனையில் தூக்கம், சோம்பல், தடுமாற்றம், தட்பவெப்பம் முதலிய இரட்டைகள் எல்லாம் இடையூறுகள் ஆகும். இந்த மாசுகளிலிருந்து மீள்வதற்கு இது நல்ல உபாயம். உடல், தலை, கழுத்து நேராக நிமிர்ந்து இருப்பதாலும், கண்கள் திறந்திருப்பதாலும், சோம்பலும், தூக்கமும் நம்மை ஆட்கொள்ள மாட்டா. இங்குமங்கும் மற்றப் பொருட்களைப் பாராமல் மூக்கின் நுனியில் பார்வையை நிறுத்தி இருப்பதால், வெளித் தடுமாற்றங்கள் ஏற்படா. ஆஸனம் ஸ்திரமாக அமைந்துவிட்டால், தட்பவெப்பம் முதலிய இரட்டைகளாலும் இடையூறு ஏற்படும் என்ற பயமில்லை. ஆகவே, த்யானயோக ஸாதனை புரியும்போது இவ்விதம் ஆஸனம் போட்டு உட்கார்வது மிகவும் உபயோகமாக இருக்கும். இதற்காகத்தான் பகவான் இப்படிக் கூறுகிறார்.

**கேள்வி:** இந்த மூன்று ச்லோகங்களால் கூறப்பட்ட ஆஸன முறை ஸகுண ப்ரம்ம த்யானத்தின் பொருட்டா அல்லது நிர்குண ப்ரம்ம த்யானத்தின் பொருட்டா?

**பதில்:** த்யானம் ஸகுணத்தைப் பற்றியதாக இருக்கட்டும் அல்லது நிர்குணத்தைப் பற்றியதாக இருக்கட்டும். அது ருசியையும், தகுதியையும் பொறுத்தது. இந்த ஆஸன முறை எல்லோருக்கும் அவசியம்தான்.

**प्रशान्तात्मा विगतभीर्ब्रह्मचारिव्रते स्थितः ।**
**मनः संयम्य मच्चित्तो युक्त आसीत मत्परः ॥ १४ ॥**

**ப்ரஶாந்தாத்மா விக₃தபீ₄ர்ப்₃ரஹ்மசாரிவ்ரதே ஸ்தி₂த: ।**
**மந: ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பர: ॥ 14 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ப்₃ரஹ்மசாரிவ்ரதே ஸ்தி₂த:** – ப்ரம்மசர்ய வ்ரதத்தில் நிலைத்து நின்று, **விக₃தபீ₄:** – அச்சமின்றி, **ப்ரஶாந்தாத்மா** – நன்கு மனஅமைதி பெற்ற, **யுக்த:** – (த்யான காலத்தில்) விழிப்புணர்வோடு கூடிய யோகி, **மந:** – தன் மனதை, **ஸம்யம்ய** – அடக்கி, **மத்சித்த:** – என்னையே மனதில் நினைத்தவனாக, **மத்பர:** – என்னையே அடையத்தக்க சிறந்த கதி எனக் கொண்டு, **ஆஸீத** – நிலைபெற்று இருக்கவேண்டும்.

ப்ரம்மசர்ய வ்ரதத்தில் நிலைத்து நின்று அச்சமின்றி நன்கு மனஅமைதி பெற்ற, த்யானகாலத்தில் விழிப்புணர்வோடு கூடிய யோகி தன் மனதை அடக்கி என்னையே மனதில் நினைத்தவனாக என்னையே அடையத்தக்க சிறந்த கதி எனக் கொண்டு நிலைபெற்று இருக்கவேண்டும்.

**கேள்வி:** இங்கு 'ப்ரம்மசர்ய வ்ரதத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** 'ப்ரம்மசர்யம்' என்பதன் தத்வார்த்தம் வேறொன்றாக இருந்தாலும், உடலின் சுக்லத்தை(விந்துவை)க் கட்டுப்படுத்துவதுதான் அதன் முக்யமான அர்த்தம். அதுவே இந்த ஸந்தர்பத்திற்கும் ஏற்றது. மனித உடலில் சுக்லம் ஒரு விலைமதிக்க முடியாத பொருள். அந்த சுக்லத்தைக் கட்டுப்படுத்தாமல், உடல் வலிமையோ, மன வலிமையோ, ஆத்ம வலிமையோ பெற முடியாது. அந்த வலிமைகளைத் தேக்கி வைக்கவும் முடியாது. ஆகவே ஆரியப்பண்பாட்டின் நான்கு ஆசிரம நிலைகளிலும் முதலாவது ப்ரம்மசர்ய ஆசிரமமே ஆகும். அதுவே மற்ற மூன்று ஆசிரமங்களுக்கும் அடிப்படை. ப்ரம்மசர்ய ஆசிரமத்தில் ப்ரம்மசாரிகளுக்குப் பல கட்டுப்பாடுகள் உண்டு. அந்தக் கட்டுப்பாடுகளைக் கடைப்பிடிப்பது சுக்லத்தைக் காப்பாற்றுவதில் மிகவும் உதவியாக இருக்கும். ப்ரம்மசர்யக் கட்டுப்பாடுகளை மேற்கொண்டு ஒருவன் உண்மையில் சுக்லத்தை நன்கு காப்பாற்றிவிட்டால், அந்த சுக்லத்தின் மூலம் உடலுக்குள் ஒரு தனிப்பட்ட மின்சார சக்தி உண்டாகிறது. அதனால் ஏற்படும் தேஜஸின் காரணமாக ப்ராணனும், மனதின் போக்குகளும் தாமாகவே நிலைத்துவிடும் அளவுக்கு அது ஆற்றல் மிக்கதாக இருக்கிறது. ஒரே முனைப்புடன் த்யானிக்க வேண்டிய பரமாத்மாவின்பால் இயல்பாகவே மனதின் ஓட்டம் திசை திரும்புகிறது. ஒருமுனைப்புடன் மனம் பரமாத்மாவில் லயிப்பதுதான் த்யானம்.

இக்காலத்தில் எவ்வளவு முயன்றாலும் த்யானம் நிலைப்பதில்லை என்பதற்கும், மனம் பகவானிடம் நிலைத்து இருப்பதில்லை என்பதற்கும் முக்யமான காரணம், சுக்லம் கட்டுப்படாததுதான். திருமணம் புரிந்து கொண்டு மனைவியுடன்கூட ஒருவிதக் கட்டுப்பாட்டுடன், அளவோடு உறவாடுவதுகூட ப்ரம்மசர்ய நிலைதான். அதுவும் த்யானத்திற்குப் பெரிதும் உதவும். த்யானயோக ஸாதனை புரியும் வரை முதலிலிருந்தே ப்ரம்மசர்யக் கட்டுப்பாடுகளைத் தளராமல் காப்பாற்றி வருபவனுக்கு விரைவாகவும், எளிதாகவும் த்யானயோகம் பயனளிக்கும்.

மனுஸ்ம்ருதி முதலிய நூல்களிலும், மற்ற சாஸ்த்ரங்களிலும், ப்ரம்மசாரிகள் கடைப்பிடிக்க வேண்டிய கட்டுப்பாடுகள் அழகாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றில் முக்யமானவை – ப்ரம்மசாரி ஒவ்வொரு நாளும் நீராட வேண்டும்; சந்தனம் பூசிக் கொள்ளக் கூடாது; மை தீட்டிக் கொள்ளக் கூடாது; தைலம் தேய்த்துக் கொள்ளக் கூடாது; அத்தர் முதலிய வாஸனைப் பொருட்களைத் தீண்டக் கூடாது; பூமாலை அணியக் கூடாது; ஆடல்பாடல்களில் ஈடுபடக் கூடாது; குடை பிடித்துக் கொள்ளக் கூடாது; கட்டிலில் படுக்கக் கூடாது; சூதாட்டம் ஆடக் கூடாது; பெண்களை ஏறெடுத்தும் பார்க்கக் கூடாது; பெண்களைப் பற்றி வீண்பேச்சுப் பேசக் கூடாது; அளவோடு எளிய உணவை உண்ணவேண்டும்; மிருதுவான துணியை உடுத்தக் கூடாது; தெய்வம், ரிஷிகள், பெரியோர்களுக்குப் பணிவிடை செய்ய வேண்டும்; யாரிடமும் விவாதம் செய்யக் கூடாது; யாரையும் நிந்திக்கக் கூடாது; உண்மை பேச வேண்டும்; யாரையும் அவமதிக்கக் கூடாது; அஹிம்ஸாவ்ரதத்தை முழுமையாகப் பேண வேண்டும்; காம-க்ரோத லோபங்களை அறவே துறக்க வேண்டும்;

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தனியாகப் படுக்க வேண்டும்; சுக்லம் ஒருபொழுதும் வெளிப்படக் கூடாது. இந்தக் கட்டுப்பாடுகளை நன்றாகக் கடைப்பிடிக்க வேண்டும். இது ப்ரம்மசர்ய வ்ரதம். இங்கு ப்ரம்மசர்ய வ்ரதம் என்று பகவான் சொல்வதன் மூலம் ப்ரம்மசர்ய ஆசிரம தர்மங்களையும் சுட்டிக்காட்டுகிறார். மற்ற ஆசிரமங்களில் உள்ளவர்களும் த்யானயோக ஸாதனை புரிய வேண்டுமானால், சுக்லத்தைக் காப்பது மிகவும் அவசியம். சுக்லத்தைக் காப்பாற்றுவதற்கு, மேலே சொன்ன கட்டுப்பாடுகள் மிகவும் உதவியானவை. இதுதான் ப்ரம்மசர்ய வ்ரதம். அதை திடமாகக் கடைப்பிடிப்பதே அதில் நிலைபெறுவதாகும்.

**கேள்வி:** 'விகதபீ:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** எங்கும் பரமாத்மாதான் இருக்கிறார். அந்தப் பரமாத்மாவைத்தான், த்யான யோகி த்யானம் செய்து தர்சிக்க விரும்புகிறான். அவன் பயப்படுவானேன்? ஆகவே, த்யானம் செய்யும்போது, ஸாதகன் பயமில்லாமல் இருக்கவேண்டும். மனதில் சிறிதளவு பயமிருந்தாலும்கூட, தனிமையில் ஜன நடமாட்டம் அற்ற இடத்தில் உட்கார்ந்தால், மனம் தடுமாற்றம் அடையும். ஆகவே, ஸாதகன் அப்பொழுது பகவான் ஸர்வ வல்லமை படைத்தவர்; எங்கும் நிறைந்தவர்; எப்பொழுதும் இருப்பவர்; அவர் எங்கும், எப்பொழுதும் இருக்கிறார்; அவர் இருக்கும்போது என்ன பயம் என்று மனதில் உறுதியாக நம்ப வேண்டும். ஒருகால் ப்ராரப்தத்தின் காரணமாக, த்யானம் செய்யும்போது மரணமே நேரிட்டாலும், அதன் விளைவு மங்களமாகவே இருக்கும். உண்மையான த்யானயோகி இந்த எண்ணத்தில் உறுதி கொள்ளவேண்டும். இதுதான் 'விகதபீ:' என்பதன் பொருள்.

**கேள்வி:** 'ப்ரஶாந்தாத்மா' என்றால் என்ன பொருள்?

**பதில்:** த்யானம் செய்யும்போது, உள்ளத்தில் ராக–த்வேஷம், மகிழ்ச்சி–துயரம், காம–க்ரோதம், தீய நினைவுகள், உலகியல் ஸங்கல்ப–விகல்பங்கள் இவை முற்றிலுமாக அகற்றப்படவேண்டும். வைராக்யத்தினால் மனதை முற்றிலும் தூய்மையாக்கி, அமைதியடையச் செய்து த்யானயோக ஸாதனை புரியவேண்டும். இதுவே மன அமைதி பெற்றவனின் அடையாளம்.

**கேள்வி:** 'யுக்த:' என்ற அடைமொழிக்கு என்ன பொருள்?

**பதில்:** த்யானம் செய்யும்போது ஸாதகன் தூக்கம், சோம்பல், ப்ரமாதம் (கவனமின்மை) முதலிய இடையூறுகளிலிருந்து தப்பித்து நன்கு எச்சரிக்கையாக இருக்க வேண்டும். கொஞ்சம் அயர்ந்தாலும் மனமும், புலன்களும் அவனை ஏமாற்றி த்யானத்தில் பலவிதத் தடங்கல்களை ஏற்படுத்திவிடும். இதைத்தான் 'யுக்த:' (விழிப்புணர்வோடு கூடிய யோகி) என்ற சொல் குறிக்கிறது.

**கேள்வி:** 'மனதை அடக்குவது' என்றால் என்ன?

**பதில்:** ஒரு விஷயத்திலும் நிலை கொள்ளாமல் பலமுறை தடுத்தும்கூட முரட்டுத்தனமாக இருப்பதும், விஷயங்களில் அலைபாய்வதுமே மனதின் இயல்பு. இந்த மனதை நன்றாகத் தடுத்து நிறுத்தாவிட்டால், த்யானயோக ஸாதனை புரிய முடியாது. ஆகவே த்யானம் செய்யும்போது மனதை வெளிப்பொருட்களிலிருந்து முற்றிலுமாகத் தடுத்து, தன்னுடைய லக்ஷ்யத்தில் முழுமையாகக் கொண்டு வருதல், அதாவது பகவானிடம் தன்மயம் ஆகிவிடுவதுதான் மனதை அடக்குவதாகும்.

**கேள்வி:** 'மச்சித்த:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** த்யானிக்கப்படும் பொருளை நோக்கிச் சித்தம் ஒருங்கே முழுமையாக இழைவதுதான் த்யானம் ஆகும். இங்கு த்யானிக்கப்பட வேண்டிய பொருள் எதுவாக இருக்கலாம் என்று கேட்டால், பகவான், 'உன் உள்ளத்தை என்னிடம் ஈடுபடுத்து' என்கிறார். மனம் எந்தப் பொருளில் ப்ரேமை கொண்டிருக்கிறதோ, அந்தப் பொருளில் அது இயல்பாக இணைந்து கொள்ளும். ஆகவே, த்யானயோகி 'பரமாத்மா நமக்கு மிகவும் நன்மையைச் செய்பவர்; உற்ற நண்பர்; நட்புக்குரியவர்' என்று பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், தத்வம், ரஹஸ்யங்கள் இவற்றை அறிந்து ப்ரபஞ்சத்தில் உள்ள பிற பற்றை ஒழித்து



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பகவானையே த்யானப் பொருளாகக் கொள்ள வேண்டும். வேறு நினைவின்றி, சித்தத்தை பகவானிடமே நிலைநிறுத்துகின்ற பயிற்சியை மேற்கொள்ள வேண்டும்.

**கேள்வி:** பகவானையே அடையத்தக்க சிறந்த கதியெனக் கொள்வது எப்படி?

**பதில்:** பகவானைத் தன்னுடைய த்யானத்திற்குப் பொருளாகக் கொண்டு, அவருடைய த்யானத்திலேயே சித்தத்தை ஈடுபடுத்த விரும்புகிறவர்கள், அவரையே புகலாகவும் கொண்டவர்கள்தானே! ஆகவே 'மத்பர:' என்ற சொல்லின் மூலமாக "த்யானயோக ஸாதகன் என்னையே (பகவானையே) அடைய வேண்டிய மேலான நிலை, மிக்குயர்ந்த த்யானத்திற்குரிய செம்பொருள், உயர்ந்த அடைக்கலம், மகேசுவரன், எல்லோரைக் காட்டிலும் பேரன்புக் குரியவன் என்று கருதி, இடைவிடாது என்னையே அண்டியிருந்து, என்னையே தன்னுடைய ஒரே காப்பாளன், உதவியாளன், யஜமானன், உயிர், மூச்சு, சொத்து என்று எண்ணி, என்னுடைய ஒவ்வொரு செயலிலிலும் மகிழ்ச்சியுடன் இருக்கவேண்டும்" என்ற கருத்தை வெளியிடுகிறார். இதற்குப் பெயர்தான் 'பகவானை அடைக்கலமாகக் கொள்வது' ஆகும்.

**கேள்வி:** இங்கே கூறப்படும் த்யானயோகம் ஸகுண பகவானைப் பற்றியதா அல்லது நிர்குண ப்ரம்மம் பற்றியதா? த்யானம் செய்யும்போது பேத பாவத்துடன் அதாவது தான் வேறு, பகவான் வேறு என்ற எண்ணத்துடன் செய்யவேண்டுமா? அல்லது தானும், பகவானும் ஒன்றே என்ற அபேத எண்ணத்துடன் செய்யவேண்டுமா?

**பதில்:** இந்த ச்லோகத்தில் 'மச்சித்த:', 'மத்பர:' என்ற சொற்கள் உள்ளன. ஆகவே, இங்கு நிர்குண ப்ரம்மத்தையும், அபேத பாவ த்யானத்தையும் பற்றிய பேச்சில்லை. அதனால், இங்கு உபாஸிக்கப்படுகிற பரமாத்மா வேறு, உபாஸிக்கிறவன் வேறு என்ற வேற்றுமை உணர்வுடன், ஸகுண பகவானை அணுகும் த்யான முறை கூறப்பட்டிருக்கிறது என்று அறிய வேண்டும்.

**கேள்வி:** இங்கு ஸகுண த்யான முறை சொல்லப்பட்டிருக்கிறது என்பது இருக்கட்டும். ஆனால் இந்த ஸகுண த்யானம் எல்லா வல்லமையும் படைத்த, எல்லாவற்றிற்கும் ஆதாரமான பகவானுடைய நிராகார உருவத்தைப் பற்றியதா அல்லது பரமசிவன், ஸ்ரீவிஷ்ணு, ஸ்ரீராமன், ஸ்ரீக்ருஷ்ணன் போன்ற உருவத்தோடு கூடிய ஏதேனும் ஒரு பகவத் ஸ்வரூபத்தைப் பற்றியதா?

**பதில்:** பகவானுடைய கல்யாண குணங்கள், ப்ரபாவங்கள், தத்வம், ரஹஸ்யம்‡ இவற்றை அறிந்து, மனிதன் தன்னுடைய விருப்பம், இயல்பு, தகுதிக்கேற்றவாறு எந்த

‡ பகவானுடைய கல்யாண குணங்கள், ப்ரபாவம், தத்வம், ரஹஸ்யம் இவ்வளவுதான் என்று அறுதியிட்டுக் கூற முடியாது. இது விஷயமாக எவ்வளவு சொன்னாலும், சூரியனுக்கு தீபாராதனை செய்வது போலத்தான் ஆகும். ஆயினும் பகவானின் குணங்கள் முதலியவற்றில் சிறிதளவாவது நினைப்பது, கேட்பது, கீர்த்தனம் செய்வது மனிதனை மிகவும் தூய்மையாக்கும். இதனால்தான் அவருடைய கல்யாண குணம் முதலியவற்றை நூலாசிரியர்கள் வர்ணிக்கிறார்கள். அந்த நூல்களில் சொல்லப்பட்டவற்றில் கல்யாண குணங்கள் முதலானவற்றை இவ்வாறு அறிந்து கொள்ள வேண்டும்.

முடிவற்றதும், எல்லையற்றதும், முற்றிலும் தனித்தன்மை வாய்ந்ததுமான ஸமபாவனை, அமைதி, இரக்கம், அன்பு, பொறுமை, இனிமை, வாத்ஸல்யம், ஆளுமை, பெருந்தன்மை, நட்பு முதலியவை பகவானுடைய 'கல்யாண குணங்கள்'. முழுமையான ஆற்றல், ஐசுவர்யம், ஆன்மிக ஒளி, சக்தி, ஸாமர்த்யம், நிகழ முடியாததையும் நிகழ்த்திக் காட்டுதல் முதலியன பகவானுடைய 'ப்ரபாவங்கள்'. எவ்விதம் பரமாணு, நீராவி, மேகம், மழைத்துளிகள், பனி முதலியன எல்லாம் தண்ணீர் தானோ, அதுபோல ஸகுண-நிர்குண, ஸாகார-நிராகார, வ்யக்த-அவ்யக்த, ஜட-சேதன, அசையாதன-அசைவன, ஸத்-அஸத் முதலியவை எத்தனை உள்ளனவோ, அவ்விதமே எவை எவற்றிற்கு அப்பாலும் இருக்கின்றனவோ, அவை எல்லாம் பகவானே ஆகும். இது 'தத்வம்'. பகவானைக் காண்பது, அவருடன் உரையாடுவது, அவரைத் தொடுவது, சிந்திப்பது, கீர்த்தனம் செய்வது, அர்ச்சனை செய்வது, வணங்குவது, துதிகளால் போற்றுவது முதலியவற்றால் பாவிகளும்கூட மிகவும் புனிதர்களாக ஆகிவிடுகிறார்கள். பிறப்பற்ற, அழிவில்லாத, ஸர்வலோக மகேசுவரனான, எல்லாம் அறிந்த, முழுமையான சக்தி படைத்தவரும், எல்லோரிடமும் ஸமபாவனையோடு இருக்கிறவருமான பகவானே தெய்விக அவதாரத்தை ஏற்று வெளிப்படுகிறார். மேலும் அவருடைய தெய்விக குணங்கள், ப்ரபாவங்கள், தத்வம் முதலியன உண்மையில் சிந்தனைக்கு எட்டாதவை; எல்லையற்றவை; தெய்விகமானவை. அதாவது அவரைப் பற்றி, அவரைத் தவிர வேறு யாரும் அறியக்கூட முடியாது. இது அவருடைய 'ரஹஸ்யம்' ஆகும்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸ்வரூபத்தில் எளிதாக மனம் லயிக்குமோ, அந்த ஸ்வரூபத்தை த்யானம் செய்யலாம். ஏனெனில், பகவான் ஒருவர் ஆயினும் எல்லா உருவங்களும் அவரேதான். ஆகவே, ஏதோ ஒரு ஸ்வரூபத்தை மட்டும் குறிப்பிட்டு இந்த த்யானயோகம் சொல்லப்படுகிறது என்று நினைத்துக் கொள்ளக் கூடாது.

இப்பொழுது ஸாதகர்களுக்கு உதவியாக, த்யானத்திற்குரிய சில ஸ்வரூபங்களை வர்ணிப்போம்.

## த்யானத்தில் அமர்ந்த பகவான் சிவபெருமானுடைய ஸ்வரூப த்யானம்

ஹிமாலயம் – கௌரிஶங்கர சிகரம் – முற்றிலும் தனிமையான இடம். அங்கு சிவபெருமான் பத்மாஸனத்திலே த்யானத்தில் அமர்ந்திருக்கிறார். அவருடைய திருமேனி வெள்ளைவெளேரென்று இருக்கிறது. அதில் மெல்லிய சிவப்பு நிறம் படர்ந்திருக்கிறது. அவருடைய மேனியின் மேல்பாகம் அசைவற்று நேரே நிமிர்ந்திருக்கிறது. விசாலமான நெற்றியில் விபூதியின் அழகான மூன்று கீற்றுகள் விளங்குகின்றன. சிவந்த சடை மகுடம்போல மேலே தூக்கி ஒரு ஸர்ப்பத்தினால் கட்டப்பட்டிருக்கிறது. இரண்டு காதுகளிலும் ருத்ராக்ஷ மாலைகள். மேலே போர்த்திக் கொண்டிருக்கும் யானைத்தோலின் மீது கழுத்தின் நீல நிறம் பரவிப் பளபளக்கிறது. அவருடைய மூன்று கண்களின் பார்வையும் மூக்கு நுனியில் குறியாக இருக்கிறது. அப்படிக் கவிந்து பார்க்கும் அசைவற்ற கண்களிலிருந்து வீசும் ஒளி அங்கும், இங்கும் பாய்கிறது. இரு கைகளும் மடியில் வைக்கப்பட்டு, விரிந்த தாமரை போலக் காணப்படுகின்றன. அவர் ஸமாதி நிலையில் உடலின் உள்ளே ஸஞ்சரிக்கும் வாயுவைத் தடுத்து நிறுத்தி இருக்கிறார். அவரைப் பார்த்தால் ஆரவாரமில்லாமல் பொழிகின்ற நீருண்டமேகமோ, அலை அடங்கிய அமைதியான பெருங்கடலோ, காற்று இல்லாத இடத்தில் சிதறாத ஜோதிமயமான தீபச்சுடரோ என்று எண்ணத் தோன்றுகிறது.

## பகவான் ஸ்ரீவிஷ்ணுவின் த்யானம்

நம்முடைய உள்ளத்தாமரையிலோ அல்லது நம் எதிரே கொஞ்சம் உயர்ந்த ஒரு பீடத்திலோ சிவந்த ஆயிரம் இதழ்கள் கொண்ட ஒரு தாமரை மேல் பகவான் ஸ்ரீவிஷ்ணு விளங்குகிறார். நீலமேகம் போன்ற மனங்கவர் நீலவண்ணத் திருமேனி; எல்லா அவயவங்களும் பேரெழிலுடன் பலவித அணிகலன்களால் அழகுற மிளிர்கின்றன. அவருடைய மேனியிலிருந்து தெய்விக நறுமணம் பரவுகிறது. மிகவும் அமைதியான, அழகான தாமரை முகம்; நீண்டு அகன்ற மனதைக் கவரும் நான்கு புஜங்கள்; அழகான, கவர்ச்சியான கழுத்து; மிகவும் அழகான, உருண்டையான கன்னம்; மனதைக் கவரும் அழகிய புன்னகை; சிவந்த உதடுகள்; மிக்க அழகான, கூரான நாசி; இரு செவிகளிலும் இலங்கும் இன்னொலி எழுப்பும் மகர குண்டலங்கள்; அழகான முகவாய்; தாமரை போன்ற அகன்ற மலர்ந்த கண்கள். அந்தக் கண்களிலிருந்து இயல்பாக தயை, பேரன்பு, அமைதி, ஸமநோக்கு, ஞானம், ஆனந்தம், ஒளி – எல்லாம் ஓயாமல் பெருகுகின்றன. உயர்ந்த தோள்கள், கார்வண்ண நீலத்தாமரையொத்த வண்ணத்து மேனியில் தங்கநிறமான பீதாம்பரம் அழகாக விளங்குகிறது. லக்ஷ்மியின் இருப்பிடமான மார்பில் ஸ்ரீவத்ஸம் என்ற மறு; வலது மேல் கையில் அழகான ஒளிமிகுந்த கிரணங்களுடன் கூடிய சக்ரம்; வலது கீழ்க் கையில் கௌமோதகி என்ற கதாயுதம்; இடது மேல் கையில் வெற்றி முழக்கம் செய்கின்ற அழகான, வெள்ளை வெளேரென்ற, பாஞ்சஜன்யம் என்ற சங்கம்; இடது கீழ்க் கையில் சிவந்த தாமரை அழகாக விளங்குகிறது. கழுத்தில் ரத்னமயமான ஹாரங்கள்; மார்பில் துளஸியுடன் கூடிய வனமாலை, வைஜயந்திமாலை, கௌஸ்துபமணி இவை அழகுற விளங்குகின்றன. திருவடிகளில் ரத்னங்கள் இழைத்த கலகலவென ஒலிக்கின்ற சிலம்புகள்; திருமுடியில் ப்ரகாசிக்கின்ற கிரீடம்; விசாலமான, மேடான நெற்றியில் அழகான மேல் நோக்கின திலகம்; கைகளில் ரத்ன கடகங்கள்; இடுப்பில் ரத்னம் பதித்த மேகலை; நான்கு புஜங்களிலும் மேல்புறம் அங்கதங்கள்; விரல்களில் ரத்ன மோதிரங்கள்; கன்னங்கரேலென்று சுருள்சுருளான குழற்கற்றை; நாற்புறமும் கோடிக்கணக்கான சூரியர்களைப் போன்ற ஒளி குளிர்ந்து பரவுகிறது. எங்கும் அன்பும், ஆனந்தமுமே கரையற்ற கடலாகப் பொங்கிக் கொண்டு வருகின்றன.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



## பகவான் ஸ்ரீராமருடைய த்யானம்

மிகவும் அழகான, விசாலமான உயர்ந்த ரத்னங்கள் இழைத்த சிங்காதனம்; பகவான் ஸ்ரீராமன் ஸீதாதேவியோடு அதில் வீற்றிருக்கிறார். புது அறுகம்புல் போன்ற பசுமையான நிறம்; தாமரை இதழ் போன்ற அகன்ற கண்கள்; மிக அழகிய முக மண்டலம்; விசாலமான நெற்றியில் மேல்நோக்கிய திலகம்; சுருள்சுருளான கேசங்களின் மேல் சூரியனைப்போல ஒளிவீசும் ரத்ன கிரீடம்; முனிவர்களின் மனதைக்கூடக் கொள்ளை கொள்ளும் பேரெழில்; திவ்ய ஒளிமயமான திருமேனியில் பீதாம்பரம்; கழுத்தில் ரத்ன மாலைகள்; தெய்விகமான மலர் மாலைகள்; மணம் கமழும் சந்தனம்; கைகளில் வில்லும், அம்பும்; சிவந்த உதடுகள்; அதில் மேவும் இனிய புன்னகை ஒளி; இடதுபுறம் ஸீதாதேவி வீற்றிருக்கிறாள்; தங்கத் திருமேனியாள்; நீலவர்ணச் சேலை உடுத்தியிருக்கிறாள். தாமரைக் கையில் விளங்கும் செந்தாமரை; தெய்விகமான ஆபரணங்கள்; எங்கும் காணக் கிடைக்காத மனம் கவரும் காட்சி.

## பகவான் ஸ்ரீக்ருஷ்ணனின் த்யானம்

( 1 )

ப்ருந்தாவனத்தில் யமுனைக்கரை. அசோக மரத்தின் புதிய இலைகளால் வேயப்பட்ட ஒரு கொடி வீடு. அங்கே தன் தோழர்களுடன் விளையாடிக் கொண்டிருக்கிறார் கண்ணன். நீருண்ட மேகத்தையொத்த பளபளப்பான நீலத்திருமேனி; இடுப்பில் தங்கநிறமான பீதாம்பரம்; கழுத்தில் அழகான வனமாலை; அதிலிருந்து மலர்களும், துளஸியும் நறுமணம் வீசுகின்றன; மார்பில் வைஜயந்திமாலை அழகாக விளங்குகிறது; அழகான கன்னங்கரேலென்ற சுருள்சுருளான கேசங்கள் நெற்றியிலும், கன்னங்களிலும் புரள்கின்றன; மூவுலகையும் மயக்கக்கூடிய அழகான தாமரை போன்ற முகம்; மிகவும் இனிய புன்சிரிப்பு; தலையில் ஒய்யாரமான மயில்பீலி; காதுகளில் ரத்னகுண்டலங்களின் ஒளி அழகிய உருண்டையான கன்னங்களில் ப்ரதிபலிக்கின்றது; ஒவ்வொரு அவயவத்திலிருந்தும் அழகு பெருகுகின்றது; காதுகளில் செம்பருத்திப் பூவைச் செருகிக் கொண்டு இருக்கிறார்; உயர்ந்த மலைக்கசிவுகளான தாதுக்களாலும், பல வர்ணங்களிலான இலைத்தளிர்களாலும் உடல் அலங்கரிக்கப் பட்டிருக்கிறது. மார்பில் ஸ்ரீவத்ஸம் என்ற மறு; கழுத்தில் கௌஸ்துபமணி; வளைந்த புருவங்கள்; அழகிய சிவந்த உதடுகள்; தாமரை போன்று அகன்று விளங்கும் ஒய்யாரமான கண்கள்; அவற்றிலிருந்து ஆனந்தமும், பேரன்புமான, மிருதுவான, ஒளிப் பெருக்கு வெளிப்பட்டுப் பார்ப்போரைத் தன்பால் ஈர்த்துக் கொண்டிருக்கின்றது. பார்க்கின்றவர்கள் உள்ளங்களிலெல்லாம் ஆனந்தமும், ப்ரேமையும் கடல்போலப் பொங்கிக் கொண்டிருக்கின்றன. மேனி மூன்று நொடிப்புகளின் மிடுக்கோடு விளங்குகிறது. அவருடைய பரபரப்பான சின்னஞ்சிறு விரல்கள் புல்லாங்குழலின் த்வாரங்களில் மாறி மாறிப் பதிந்து இனிய இசையை எழுப்புகின்றன.

## பகவான் ஸ்ரீக்ருஷ்ணனின் மற்றொரு த்யானம்

( 2 )

குருக்ஷேத்ரத்தில் யுத்தகளம், நாற்புறத்திலும் வீரர்கள் சூழ்ந்திருக்கிறார்கள். அவர்களின் நடுவே அர்ஜுனனுடைய ஒளிமயமான பெரிய ரதம்; ரதத்தின் அகன்ற கொடியில் சந்த்ரனும், நக்ஷத்ரங்களும் ஒளி வீசுகின்றன; அதன் மத்தியில் ஆஞ்ஜநேயர் வீற்றிருக்கிறார்; பக்கத்தில் பல கொடிகள் பறக்கின்றன. ரதத்தின் முன் தட்டில் பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் வீற்றிருக்கிறார். கருநீல வர்ணம்; அழகின் எல்லை; வீரத்தோற்றம்; கவசம் அணிந்திருக்கிறார். திருமேனியில் பீதாம்பரம் அழகு பெற்று விளங்குகிறது. முகமண்டலம் மிகவும் தெளிவாகவும், அமைதியாகவும் காணப்படுகிறது. ஞானத்தின் பேரொளி அவயவங்களிலெல்லாம் பரவி நிற்கிறது. விசாலமான செவ்வரி படர்ந்த கண்களில் ஞானஒளி வீசுகிறது. ஒரு கையில் குதிரைகளின் கடிவாளங்கள்; மற்றொரு கைப் பெருவிரலும், ஆள்காட்டி விரலும் இணைந்து ஞான முத்திரை காட்டுகின்றன. ஆழ்ந்த, அமைதியான பெருமிதத்தோடு அர்ஜுனனுக்கு கீதோபதேசம் நடைபெறுகிறது. உதடுகளில் இனிய புன்னகை மின்னுகிறது. கண்கள், சொல்ல



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



விரும்பும் கருத்துக்களை முன் கூட்டியே தெரிவித்து, அர்ஜுனனுடைய ஸந்தேஹங்களைத் தெளிவித்துக் கொண்டிருக்கின்றன.

**பொருத்தம்:** இவ்வாறு செய்யப்படும் த்யானயோக ஸாதனையின் பயனைக் கூறுகிறார்—

**युञ्जन्नेवं सदात्मानं योगी नियतमानसः ।**
**शान्तिं निर्वाणपरमां मत्संस्थामधिगच्छति ॥ १५ ॥**

**யுஞ்ஜந்நேவம் ஸதா₃த்மாநம் யோகீ₃ நியதமாநஸ: ।**
**ஶாந்திம் நிர்வாணபரமாம் மத்ஸம்ஸ்த₂ாமதி₄க₃ச்ச₂தி ॥ 15 ॥**

**நியதமாநஸ:** – மனதைத் தன்வசப்படுத்திய, **யோகீ₃** – யோகி, **ஏவம்** – இவ்விதம், **ஆத்மாநம்** – ஆத்மாவை, **ஸதா₃** – இடையறாது, **யுஞ்ஜந்** – (பரமேசுவரனான என்னுடைய ஸ்வரூபத்தில்) இணைத்துக் கொண்டு, **மத்ஸம்ஸ்த₂ாம்** – என்னிடம் விளங்குகின்ற, **நிர்வாணபரமாம்** – பரமானந்தத்தின் பெருநிலையாகிய, **ஶாந்திம்** – அமைதியை, **அதி₄க₃ச்ச₂தி** – அடைகிறான்.

மனதைத் தன்வசப்படுத்திய யோகி இவ்விதம் ஆத்மாவை இடையறாது பரமேசுவரனான என்னுடைய ஸ்வரூபத்தில் இணைத்துக் கொண்டு என்னிடம் விளங்குகின்ற பரமானந்தத்தின் பெருநிலையாகிய அமைதியை அடைகிறான்.

**கேள்வி:** இங்கு 'யோகீ' என்ற சொல்லுடன் 'நியதமாநஸ:' என்ற அடைமொழி சேர்க்கப்பட்டிருப்பதன் பொருள் என்ன?

**பதில்:** எவனுடைய மனம், அந்தக்கரணம் நன்கு வசப்பட்டுள்ளனவோ, அவனை 'நியதமாநஸ:' என்கிறார். அவன்தான் மேலே சொன்னவாறு, த்யானயோக ஸாதனையைப் புரிய முடியும். இதைச் சுட்டிக்காட்டுவதற்காக 'யோகீ' என்ற சொல்லுடன் 'நியதமாநஸ:' என்ற அடைமொழியைச் சேர்க்கிறார்.

**கேள்வி:** இவ்விதம் ஆத்மாவை, பரமாத்ம ஸ்வரூபத்தில் இடையறாது இணைப்பது என்றால் என்ன?

**பதில்:** மேலே சொன்னவிதம் மனம், புத்தி இவற்றின் மூலம், எண்ணெய் ஒழுக்குப்போல, இடைவிடாது பகவானுடைய ஸ்வரூபத்தைச் சிந்தித்து, அச்சிந்தனையில் உறுதியாக இருந்து தன்மயமாக்கிவிடுவதுதான் 'ஆத்மாவைப் பரமாத்ம ஸ்வரூபத்திலேயே இணைப்பது' ஆகும்.

**கேள்வி:** 'என்னிடம் விளங்குகின்ற பரமானந்தத்தின் பெருநிலையான அமைதியை அடைகிறான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'நைஷ்டிகீ ஶாந்தி' என்று 5/12லும், 'ஶாஶ்வதீ ஶாந்தி' என்று 9/31லும், 'பரா ஶாந்தி' என்று 18/62லும் பரமாத்மாவை அடைவது; தெய்விகப் பரம்பொருளை அடைவது; பரமகதியை அடைவது என்றெல்லாம் சொல்லப்படுகின்றனவே, அந்த சாந்தியைத்தான் இங்கு விளக்குகிறார். இந்த சாந்தி இணையற்ற, அளவற்ற, ஆனந்தத்தின் எல்லை நிலையாகும். இது பரமதயாளுவான, உற்ற நண்பனான, ஆனந்தக் கருவூலமான, ஆனந்தமயமான பகவானிடம் என்றும் இடைவிடாது நிறைந்து இருக்கிறது. அசையாமலும், உறுதியாகவும் த்யானயோக ஸாதனை புரிபவன் இந்த அமைதியை அடைகிறான்.

**பொருத்தம்:** த்யானயோக முறையையும், பயனையும் கூறினார். இனி த்யானயோகிக்குரிய உணவு, உறக்கம், நடமாட்டம் இவற்றின் நியமங்கள் எப்படி இருக்க வேண்டுமென்பதை இரண்டு ச்லோகங்களில் கூறுகிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



नात्यश्नतस्तु योगोऽस्ति न चैकान्तमनश्नतः ।
न चाति स्वप्नशीलस्य जाग्रतो नैव चार्जुन ॥ १६ ॥

நாத்யஶ்நதஸ்து யோகோ³ऽஸ்தி ந சைகாந்தமநஶ்நத: ।

ந சாதி ஸ்வப்நஶீலஸ்ய ஜாக்³ரதோ நைவ சார்ஜுந ॥ 16 ॥

அர்ஜுந – அர்ஜுன! யோக³: – (இந்த) யோகம், அத்யஶ்நத: து – மிகுதியாக உண்பவனுக்கும், ந அஸ்தி – கைகூடாது. ஏகாந்தம் – அறவே, அநஶ்நத: ச – உண்ணாமல் இருப்பவனுக்கும், ந – கைகூடாது. அதிஸ்வப்நஶீலஸ்ய ச – மிகுதியாக உறங்கும் இயல்புடையவனுக்கும், ந – கைகூடாது. ஜாக்³ரத: ஏவ ச – எப்போதும் விழித்துக் கொண்டேயிருப்பவனுக்கும், ந – கைகூடாது.

அர்ஜுன! இந்த யோகம் மிகுதியாக உண்பவனுக்கும் கைகூடாது. அறவே உண்ணாமல் இருப்பவனுக்கும் கைகூடாது. மிகுதியாக உறங்கும் இயல்புடையவனுக்கும் கைகூடாது. எப்போதும் விழித்துக் கொண்டேயிருப்பவனுக்கும் கைகூடாது.

கேள்வி: இங்கு 'யோகம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

பதில்: பரமாத்மாவை அடைவதற்கான அத்தனை உபாயங்களையும் 'யோகம்' என்று கூறலாம். ஆனால் இது த்யானயோகம் பற்றிய ஸந்தர்பம். ஆகவே, இந்த இடத்தில் 'யோகம்' என்றால் த்யானயோகம் என்று பொருள். அது துயரங்கள் அனைத்தையும் அடியோடு அழித்து, பரமானந்த அமைதிக் கடலான பரமாத்மாவிடம் கொண்டு சேர்க்கும்.

கேள்வி: மிகுதியாக உண்பவனுக்கும், அறவே உண்ணாதவனுக்கும் த்யானயோகம் ஏன் கை கூடாது?

பதில்: அள்ளி அள்ளித் திணித்துச் சாப்பிடுவதால் தூக்கமும், சோம்பலும்தான் அதிகமாகும். ஜீரண சக்தியும் குறையும். இயல்பான ஜீரண சக்திக்கும் அதிகமாக உண்டால் உணவு வயிற்றில் தங்கிப் பலவித நோய்களை உண்டாக்கும். அறவே உண்ணாமல் இருந்தாலும், அவனுடைய புலன்கள், ப்ராணன், மனம் ஆகியன சோர்ந்து போய்விடும். பிறகு ஆஸனத்தில் நிலைத்து உட்கார்ந்திருக்க முடியாது. பரமாத்மாவிடம் மனதைச் செலுத்த முடியாது. இவ்விதம் த்யானப் பயிற்சியில் இடையூறு ஏற்படுகிறது. ஆகவே த்யானயோகி கட்டாயம் எளிதாக ஜீரணிக்கும் அளவுக்கு உண்ணவேண்டும். அதிகமாகவும் உண்ணக் கூடாது; உண்ணாமலே பட்டினி கிடக்கவும் கூடாது.

கேள்வி: மிகுதியாக உறங்குபவனுக்கும், எப்போதும் விழித்திருப்பவனுக்கும் த்யான யோகம் ஏன் ஸித்திக்காது?

பதில்: போதிய அளவு தூங்கினால் உடலில் களைப்பு அகலும். உடலில் புத்துணர்ச்சி உண்டாகும். அளவுக்கு அதிகமாகத் தூங்கினால் தமோகுணம்தான் வளரும். எப்போதும் சோம்பல் சூழ்ந்திருக்கும்; நிலையாக உட்காருவதும் கஷ்டமாக இருக்கும். மேலும், அதிக நேரம் தூங்கினால் மனித வாழ்க்கையின் பொன்னான காலம் வீணாகிவிடுகிறது. அதுபோல் விழித்துக் கொண்டே இருந்தால் களைப்பு மேலிடுகிறது; ஒருகாலும் புத்துணர்ச்சி ஏற்படாது. உடல், புலன்கள், ப்ராணன் இவை சோர்ந்து போய்விடும். உடலில் பலவித வியாதிகள் உண்டாகும். எப்பொழுதும் தூக்கமும், சோம்பலும் தொடர்ந்து இருக்கும். ஆகவே அதிகம் தூங்குவது, எப்போதும் விழித்து இருப்பது இவை இரண்டுமே த்யானயோக ஸாதனைக்கு இடையூறுகள். த்யானயோகத்திற்கு இடையூறு நேராதவாறு த்யானயோகிக்கு உடல்நிலை சீராக இருக்க வேண்டும். இதன் பொருட்டு அவன் தன் உடல்நிலை, இயல்பு, சீர்மை, வயது இவற்றை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். தேவைக்கு அதிகமாகத் தூங்கக் கூடாது. எப்போதும் விழித்திருக்கவும் கூடாது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**युक्ताहारविहारस्य युक्तचेष्टस्य कर्मसु।**
**युक्तस्वप्नावबोधस्य योगो भवति दुःखहा॥ १७॥**

**யுக்தாஹாரவிஹாரஸ்ய யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு ।**
**யுக்தஸ்வப்நாவபோ₃த₄ஸ்ய யோகோ₃ ப₄வதி து₃:க₂ஹா ॥ 17 ॥**

**து₃:க₂ஹா** – துக்கத்தைப் போக்குகின்ற, **யோக₃:** – யோகம், **யுக்த ஆஹார விஹாரஸ்ய** – அளவோடு உண்டு நடமாடுகின்றவனுக்கும், **கர்மஸு** – கர்மங்களில், **யுக்தசேஷ்டஸ்ய** – உரிய முயற்சி செய்கின்றவனுக்கும், **யுக்த ஸ்வப்ந அவபோ₃த₄ஸ்ய** – அளவோடு உறங்கி விழித்திருப்பவனுக்கும் மட்டுமே, **ப₄வதி** – கைகூடுகிறது.

**துக்கத்தைப் போக்குகின்ற யோகம் அளவோடு உண்டு நடமாடுகின்றவனுக்கும் கர்மங்களில் உரிய முயற்சி செய்கின்றவனுக்கும் அளவோடு உறங்கி விழித்திருப்பவனுக்கும் மட்டுமே கைகூடுகிறது.**

**கேள்வி:** 'அளவோடு உண்டு நடமாடுபவன்' யார்?

**பதில்:** உண்கின்ற, பருகுகின்ற பொருட்களுக்கு ஆஹாரம் என்றும், இங்குமங்கும் சுற்றி நடமாடும் செயலுக்கு விஹாரம் என்றும் பெயர். இவை இரண்டையும் தகுந்த முறையில், போதுமான அளவு எவன் ஏற்கிறானோ, அவனை 'யுக்தாஹாரவிஹார:' என்று கூறுவர். உண்கின்ற, பருகுகின்ற பொருட்கள் தன்னுடைய வர்ணத்திற்கும், ஆசிரமத்திற்கும் ஏற்றபடி உண்மையானதும், ந்யாயமானதுமான முறையில் ஸம்பாதிக்கப்பட்டனவாகவும், அறநூல்களுக்கேற்பவும், ஸாத்விகமானவையாகவும் இருக்கவேண்டும் (17/8). ரஜோ குணத்தையும், தமோகுணத்தையும் வளர்ப்பனவாக இருக்கக் கூடாது; தூய்மையாகவும், தன்னுடைய இயல்பு, நிலை, ருசிக்கு முரண்படாதவாறும், யோக ஸாதனையில் உதவுவனவாகவும் இருக்கவேண்டும். அவை அவனுடைய சக்தி, உடல்நலம், ஸாதனை புரிவது இவற்றிற்கு நலம் செய்யப் போதுமான அளவுக்கு இருக்கவேண்டும். இதைப்போல நடமாட்டமும், தனக்கு அவசியமானதும், நலன் பயக்குமளவுக்கும் மட்டுமே இருக்கவேண்டும்.

இவ்விதம், கட்டுப்பாடானதும், பொருத்தமானதுமான உணவினாலும், நடமாட்டத்தினாலும் உடல், புலன்கள், மனம் இவற்றில் ஸத்வகுணம் பெருகுகிறது; அதனால் மாசற்ற தன்மை, மகிழ்ச்சி, விழிப்புணர்ச்சி ஆகியவை பெருகுகின்றன. அதனால் த்யானயோகம் எளிதாகக் கைகூடுகிறது.

**கேள்வி:** 'கர்மங்களில் உரிய முயற்சி செய்கிறவன்' என்றால் என்ன?

**பதில்:** வர்ணம், ஆசிரமம், உடல்நலம், வயது, சூழ்நிலை முதலியவற்றுக்கேற்றவாறு, எவனுக்கு எவ்விதக் கர்மங்கள் சாஸ்த்ரங்களில் கூறப்பட்டிருக்கின்றனவோ, அவற்றிற்குப் பெயர் 'கர்மம்' ஆகும். அந்தக் கர்மங்களைத் தக்க முறையில் தக்க அளவுக்கு, தகுதிக்கேற்றபடி நடத்துவதுதான் கர்மங்களில் உரிய முயற்சி செய்வதாகும். கடவுள் பக்தி, தேவ பூஜை, ஏழை–எளியோர்க்குத் தொண்டு, தாய்–தந்தையர், ஆசிரியர் முதலிய பெரியோர்களுக்குப் பூஜை, வேள்வி, தானம், தவம், வாழ்க்கை ஸம்பந்தமான கர்மம் – அதாவது கல்வி கற்றல்–கற்பித்தல், வணிகம் முதலிய செயல்கள்; ஸ்நானம், சௌசம் முதலிய கர்மங்கள்; இவை போன்ற அனைத்துக் கர்மங்களும் அறநூல்களில் கூறப்பட்டனவாகவும், பெரியோர்களால் அங்கீகரிக்கப்பட்டனவாகவும், வேறொருவருக்குக் கேடு விளைவிக்காமல் தன்னையே சார்ந்திருப்பதில் உதவியாக இருப்பனவாகவும், பிறருக்குக் கஷ்டமோ, சுமையோ கொடுக்காதனவாகவும், த்யான யோகத்திற்கு உதவி செய்வனவாகவும் இருக்கவேண்டும். இந்தச் செயல்களின் அளவும் அவனுக்கு அவசியமானதாக, ந்யாயமானபடி, உடலைப் பேணுவதற்குத் தேவையானதாக இருக்கவேண்டும். அதனால் த்யானயோகத்திற்குப் போதுமான அளவு நேரம் கிடைக்கும். இப்படிச் செய்வதனால் உடல், புலன்கள், மனம் நல்ல நிலையில் இருக்கும்; த்யானயோகம் எளிதாகக் கைகூடும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'அளவோடு உறங்கி, விழித்திருப்பது' என்றால் என்ன?

**பதில்:** பகலில் விழித்திருந்து, இரவின் முன்யாமத்திலும், பின்யாமத்திலும் விழித்திருந்து, நடுவில் இரண்டு யாமங்கள் அதாவது (ஆறு மணி நேரம்) உறங்குவது, போதுமான அளவு தூங்கி விழிப்பதாகும். ஆறு மணி நேரம் தூங்கித்தான் ஆகவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. த்யானயோகி தன்னுடைய இயல்புக்கும், உடல்நிலைக்குமேற்றவாறு கட்டுப்பாடுகளை அமைத்துக் கொள்ளவேண்டும். இரவு ஐந்து அல்லது நான்கு மணி நேரம் தூங்கினாலும் போதும். ஆனால் த்யான காலத்தில் தூக்கம், சோம்பல் – இவை வராமலும், உடல் நலத்தில் எந்தவிதமான குறைவு வராமலும், ஆறு மணி நேரமோ, ஐந்து மணி நேரமோ, நான்கு மணி நேரமோ தூங்க வேண்டும்.

இந்த ச்லோகத்தில் வரும் 'யுக்த' என்ற சொல்லுக்கு, உணவு, நடமாட்டம், கர்மம், தூக்கம், விழிப்பு – இவை சாஸ்த்ரங்களுக்கு முரணாக இராமல், அவனுடைய ஸ்வபாவம், உடல்நலம் இவற்றிற்கு ஏற்றவாறு உகந்ததாகவும், அவசியமான அளவிலும் இருக்கவேண்டும் என்பது பொருள்.

**கேள்வி:** இங்கு 'யோக:' என்ற சொல்லுக்கு 'து:கஹா' (துக்கத்தைப் போக்குகின்ற) என்ற அடைமொழி கொடுப்பதன் கருத்து என்ன?

**பதில்:** த்யானயோகத்தில் ஸித்தி பெற்றுவிட்ட த்யானயோகிக்குப் பரமானந்தமும், பரமசாந்தியும் நிறைந்த எல்லையற்ற கடலான பரமாத்மா கிடைத்துவிடுகிறார். அதனால் அவருடைய துக்கங்களெல்லாம் அவற்றின் வேரோடு, முற்றிலுமாக அழிந்து போய் விடுகின்றன. பிறப்பு–இறப்பு என்ற ஸம்ஸார துக்கத்தை அவர் எந்த நிலையிலும் எதிர் நோக்க வேண்டியே இருக்காது. கனவில்கூட அவருக்குக் கவலை, சோகம், பயம், படபடப்பு இவை உண்டாகா. எவ்விதத்திலும், எந்த நேரமும் ஆனந்தமயமான பெருங்கடலில் ஆழ்ந்திருப்பார். 'துக்கம் அடியோடு ஒழிவது' என்ற இந்தப் பயனைக் குறிப்பிடுவதற்காகவே 'யோக'த்திற்கு 'து:கஹா' என்ற அடைமொழியைக் கொடுக்கிறார்.

**பொருத்தம்:** த்யானயோகத்திற்கு உபயோகமான உணவு, நடமாட்டம் முதலிய கட்டுப்பாடுகளைப் பற்றிச் சொன்ன பிறகு, நிர்குண–நிராகாரத்தை த்யானிக்கும் யோகியின் இறுதியான நிலையின் இலக்கணம் என்று சொல்கிறார்—

**यदा विनियतं चित्तमात्मन्येवावतिष्ठते ।**
**निःस्पृहः सर्वकामेभ्यो युक्त इत्युच्यते तदा ॥ १८ ॥**

**யத₃ா விநியதம் சித்தமாத்மந்யேவாவதிஷ்ட₂தே ।**
**நி:ஸ்ப்ருஹ: ஸர்வகாமேப்₄யோ யுக்த இத்யுச்யதே தத₃ா ॥ 18 ॥**

**விநியதம் சித்தம்** – முற்றிலும் தன் வசப்படுத்தப்பட்டுள்ள உள்ளம், **யத₃ா** – எப்பொழுது, **ஆத்மநி ஏவ** – பரமாத்மாவினிடமே, **அவதிஷ்ட₂தே** – நன்கு நிலைபெற்றிருக்கிறதோ, **தத₃ா** – அப்பொழுது, **ஸர்வகாமேப்₄ய:** – அனைத்து போகங்களிலிருந்தும், **நி:ஸ்ப்ருஹ:** – பற்று நீங்கிய மனிதன், **யுக்த:** – யோகத்தில் முதிர்ந்த நிலைபெற்றவன், **இதி** – என்று, **உச்யதே** – அழைக்கப்படுகிறான்.

முற்றிலும் தன் வசப்படுத்தப்பட்டுள்ள உள்ளம் எப்பொழுது பரமாத்மாவினிடமே நன்கு நிலைபெற்றிருக்கிறதோ அப்பொழுது அனைத்து போகங்களிலிருந்தும் பற்று நீங்கிய மனிதன் யோகத்தில் முதிர்ந்த நிலைபெற்றவன் என்று அழைக்கப்படுகிறான்.

**கேள்வி:** 'சித்தம்' என்ற சொல்லுடன் 'விநியதம்' என்ற அடைமொழியைச் சேர்த்ததன் பயன் என்ன? 'பரமாத்மாவில் நன்கு நிலைத்திருப்பது' என்றால் பொருள் என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** முற்றும் வசப்பட்ட சித்தம்தான் பரமாத்மாவில் அசையாமல் நிலைபெற முடியும். இந்த விஷயத்தைச் சுட்டிக்காட்டுவதற்காகத்தான் 'விநியதம்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டிருக்கிறது. வீணான செயல்களில் ஈடுபடுவது, சோம்பல், பிரமை, விக்ஷேபம் இவை சித்தத்திலிருந்து முற்றிலும் விலகி, அது பரமாத்மாவிடமே அசையாமல் நிலைபெறுவதென்றால், பரமாத்மாவைத் தவிர வேறு ஒரு எண்ணமும் சிறிதுகூட இருக்காது என்று பொருள். இதுவே, 'பரமாத்மாவில் நன்றாக நிலைத்திருப்பது' என்பதாகும்.

**கேள்வி:** 'அனைத்து போகங்களிலிருந்தும் பற்று நீங்கியவன்' என்றால் என்ன?

**பதில்:** பரமசாந்தியான பரமானந்தத்தின் பெருங்கடலான பரமாத்மாவிடமே ஒன்றி நிலை பெற்று விடுவதாலும், இவ்வுலக-மேலுலக போகங்கள் அநித்யமானவை; நொடி நேரத்தவை; நாசமடையக் கூடியவை என்பதால், அவற்றில் முற்றிலுமாக வைராக்யம் ஏற்பட்டுவிட்டதாலும், எந்த உலகியல் பொருளிலும் சிறிதளவுகூடத் தேவையோ, எதிர்பார்ப்போ இல்லாமைதான் 'அனைத்து போகங்களிலிருந்தும் பற்று நீங்குதல்' ஆகும்.

**கேள்வி:** இங்கு 'யுக்த:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** இங்கு 'யுக்த:' என்ற சொல், த்யானயோகத்தின் பூரண நிலையை அடைந்துவிட்டவனைக் குறிக்கும். ஸாதனைகளை இடைவிடாது புரிந்துவிட்ட யோகியிடம், மேலே கூறிய இரண்டு அடையாளங்களும் நன்றாக வெளிப்படுமேயானால், அவன் த்யானயோகத்தின் முதிர்ந்த நிலையை அடைந்துவிட்டான் என்று அறியலாம்.

**பொருத்தம்: வசப்பட்டுவிட்ட சித்தம் த்யான காலத்தில் பரமாத்மாவில் மட்டுமே அசையாமல் நிலைத்து இருக்கும்போது, அந்தச் சித்தத்தின் நிலை எவ்வாறு இருக்கும் என்பதை வர்ணிக்கிறார்—**

**यथा दीपो निवातस्थो नेङ्गते सोपमा स्मृता।**
**योगिनो यतचित्तस्य युञ्जतो योगमात्मनः॥ १९॥**

**யதா₂ தீ₃போ நிவாதஸ்தே₂ா நேங்க₃தே ஸோபமா ஸ்ம்ருதா ।**
**யோகி₃நோ யதசித்தஸ்ய யுஞ்ஜதோ யோக₃மாத்மந: ॥ 19 ॥**

**நிவாதஸ்த₂:** – காற்று வீசாத இடத்தில் இருக்கும், **தீ₃ப:** – விளக்கின் சுடர், **யதா₂** – எப்படி, **ந இங்க₃தே** – அசையாமல் இருக்குமோ, **ஸா உபமா** – அதே உவமை, **ஆத்மந:** – பரமாத்மாவின், **யோக₃ம்** – த்யானத்தில், **யுஞ்ஜத:** – ஈடுபடுகின்ற, **யோகி₃ந:** – யோகியினுடைய, **யதசித்தஸ்ய** – வெற்றி கொள்ளப்பட்ட மனதிற்கும், **(உபமா** – உவமையாக), **ஸ்ம்ருதா** – சொல்லப்பட்டது.

காற்று வீசாத இடத்தில் இருக்கும் விளக்கின் சுடர் எப்படி அசையாமல் இருக்குமோ, அதே உவமை பரமாத்மாவின். த்யானத்தில் ஈடுபடுகின்ற யோகியினுடைய வெற்றி கொள்ளப்பட்ட மனதிற்கும் உவமையாகச் சொல்லப்பட்டது.

**கேள்வி:** இங்கு 'தீபம்' என்றால் எது? அசைவற்று இருப்பதற்கு உவமையாக மலை முதலியவற்றைச் சொல்லாமல் தீபத்தைச் சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** 'தீபம்' என்பது ஒளி வீசுகின்ற விளக்கின் சுடரைக் குறிக்கும். மலை முதலியவற்றிற்கு ஒளி கிடையாது. மேலும், அவை இயல்பாகவே அசையாதவை. அவற்றுடன் மனதை ஒப்பிடுவது இங்குப் பொருந்தாது. தீப ஒளியோ சித்தத்தைப் போன்று ப்ரகாசமாகவும், சஞ்சலமாகவும் இருப்பதால், மனதிற்கு நிகராகிறது. காற்று வீசாத இடத்தில் தீப ஒளி அசையாது. அதுபோல வசப்பட்ட சித்தம் த்யான காலத்தில் சஞ்சலமடையாது இருக்கும். அது அசையாத தீபச்சுடரைப் போல ஸமமாக ஒளி வீசிக் கொண்டிருக்கும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அதனால்தான் மலை முதலிய ஒளியற்ற, அசைவற்ற பொருட்களை உவமையாகக் கொடுக்காமல், தீபச்சுடர் உவமையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

**கேள்வி:** 'சித்த' என்ற சொல்லுடன் 'யத' என்ற சொல்லைச் சேர்க்காமல், வெறுமனே 'சித்தஸ்ய' என்று மட்டும் சொன்னாலும், அதே பொருள் ஏற்படக் கூடுமானாலும், 'யதசித்தஸ்ய' என்ற சொற்பிரயோகம் செய்யப்பட்டிருப்பதன் கருத்து என்ன?

**பதில்:** வசப்படுத்தப்பட்ட (வெற்றி கொள்ளப்பட்ட) சித்தம்தான் பரமாத்ம ஸ்வரூபத்தில் அசையாமல் நிலைத்திருக்கும். வசப்படாத சித்தம் நிலைக்காது என்பதைச் சுட்டிக்காட்டுவதற்காக, 'யத' என்ற சொல் கொடுக்கப்பட்டிருக்கிறது.

**பொருத்தம்:** இவ்விதம் த்யானயோகத்தில் முடிவான நிலையை அடைந்து விட்டவனின் இலக்கணத்தையும், அவன் வெற்றி கொண்ட சித்தத்தின் இலக்கணத்தையும் கூறிய பிறகு, இனி வரும் மூன்று ச்லோகங்களில் த்யானயோகத்தின் மூலமாக ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவை அடைந்துவிட்டவனின் நிலையை விளக்குகிறார்—

**यत्रोपरमते चित्तं निरुद्धं योगसेवया।**
**यत्र चैवात्मनात्मानं पश्यन्नात्मनि तुष्यति॥ २०॥**

**யத்ரோபரமதே சித்தம் நிருத்₄த₄ம் யோக₃ஸேவயா ।**
**யத்ர சைவாத்மநாத்மாநம் பஶ்யந்நாத்மநி துஷ்யதி ॥ 20 ॥**

**யோக₃ஸேவயா** — யோகப்பயிற்சியினால், **நிருத்₄த₄ம்** — கட்டுண்ட, **சித்தம்** — சித்தம், **யத்ர** — எந்த நிலையில், **உபரமதே** — ஒய்ந்து நிற்கிறதோ, **ச** — மேலும், **யத்ர** — எந்த நிலையில் (பரமாத்ம த்யானத்தால் தூய்மை பெற்ற), **ஆத்மநா** — நுண்ணிய புத்தியினால், **ஆத்மாநம்** — பரமாத்மாவை, **பஶ்யந்** — நேரில் கண்டு, **ஆத்மநி ஏவ** — ஸத் சித் ஆனந்தமயனான பரமாத்மாவிலேயே, **துஷ்யதி** — மகிழ்ந்து கொண்டிருக்குமோ—

யோகப்பயிற்சியினால் கட்டுண்ட சித்தம் எந்த நிலையில் ஒய்ந்து நிற்கிறதோ, மேலும் எந்த நிலையில் பரமாத்ம த்யானத்தால் தூய்மை பெற்ற நுண்ணிய புத்தியினால் பரமாத்மாவை நேரில் கண்டு ஸத் சித் ஆனந்தமயனான பரமாத்மாவிலேயே மகிழ்ந்து கொண்டிருக்குமோ—

**கேள்வி:** 'யோகப் பயிற்சியினால் கட்டுண்ட சித்தத்தை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** த்யானயோகப் பயிற்சிதான் யோக ஸேவை. அந்த த்யானயோகப் பயிற்சியைத் தொடர்ந்து செய்து முதிர்ச்சி பெற்ற மனம் பரமாத்மாவிடம் ஒருங்கே நிலைபெறும். அதையே 'நிருத்தம்' (கட்டுண்ட) என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'இப்படிப் பரமாத்ம ஸ்வரூபத்தில் கட்டுண்ட சித்தம் ஒய்வடைவது' என்றால் என்ன?

**பதில்:** யோகியின் சித்தம் பரமாத்ம ஸ்வரூபத்தில் கட்டுப்பட்டு நிலைபெற்று விட்டால், அது உலகியலிலிருந்து முழுமையாக ஒய்வு பெற்றுவிடும். பிறகு, அவனுடைய உள்ளத்தில் உலகியலுக்குக் கொஞ்சமும் இடம் இராது. உலகத்தின் பார்வையில், அவனுடைய சித்தம் ஸமாதி நிலையில் உலகியலிலிருந்து ஒய்வு பெற்றதாகவும், விவஹார காலத்தில் உலகியல் நினைவுடனும் இருப்பதாகத் தோன்றினாலும், உண்மையாக உலகியலில் அவனுக்குக் கொஞ்சம்கூடத் தொடர்பு இருக்காது. இதைத்தான் 'எக்காலத்திலும், எந்நிலையிலும் உலகியலிலிருந்து ஒய்வடைவது' என்று கூறுகிறார்.

**கேள்வி:** இங்கு 'யத்ர' (எந்த நிலையில்) என்று எதைக் குறிப்பிடுகிறார்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** எந்த நிலையில் த்யானயோக ஸாதகன் பரமாத்மாவிடம் ஒன்றிப் போய் விடுகிறானோ, அதாவது அவன் பரமாத்மாவின் தர்சனம் பெறுகிறானோ, மேலும் உலகியலிலிருந்து முற்றிலுமாக அவனுடைய தொடர்பு விட்டுப் போகிறதோ, 23வது ச்லோகத்தில் 'யோகம்' என்ற பெயரால் பகவான் எதை அழைக்கிறாரோ, அந்தச் சிறப்பான நிலையை 'யத்ர' என்ற சொல் இங்கே குறிக்கிறது.

**கேள்வி:** 'ஏவ' என்று அழுத்தம் கொடுப்பதன் கருத்து என்ன?

**பதில்:** பரமாத்மாவை தர்சித்துவிட்டதால் ஏற்பட்ட ஆனந்தத்தைத் தவிர உலகியல் இன்பத்திற்குக் காரணமானவற்றைத் தவிர்ப்பதை அழுத்தமாகச் சொல்வதற்காக, 'ஏவ' என்ற சொல் தரப்பட்டுள்ளது. பரமானந்த, பரமசாந்திக் கடலான பரமாத்மாவின் நேரிடை அனுபவம் பெற்ற யோகி எப்பொழுதும் அதே ஆனந்தத்தில் திளைத்திருப்பார். உலகியல் ஸுகம் எதுவும் அவருக்குத் தேவையில்லை என்பது கருத்து.

**கேள்வி:** பரமாத்மாவின் நேரிடை அனுபவத்தைக் கொடுக்கக் கூடிய த்யானப் பயிற்சியை எவ்விதம் செய்வது?

**பதில்:** தனிமையில் முன் சொன்னவிதம் சௌகர்யமாக அமர்ந்து மனதிலிருந்து ஸகல ஸங்கல்பங்களையும் அகற்றி, கீழ்க்குறித்தபடி தாரணை செய்யவேண்டும். "விஞ்ஞான மயமான, ஆனந்தம் நிரம்பிய பூரணப்ரம்மம் பரமாத்மாதான். அவரைத் தவிர வேறு பொருளே இல்லை. அவரே எங்கும் நிறைந்திருக்கிறார். இப்படி அறிவது கூட அவரேதான். அவரே ஞான வடிவினர். அவர் ஸநாதனர்; மாறுதலற்றவர்; எல்லையற்றவர்; கரை காண முடியாதவர்; அளவற்றவர்; பகுதியற்றவர்; அப்பழுக்கற்றவர். மனம், புத்தி, அஹங்காரம், பார்ப்பவன், பார்ப்பது, பார்க்கப்படுவது என்பதெல்லாம் அவர் மேல் ஏறிடப்பட்ட தோற்றங்கள். உண்மையில் ப்ரம்மத்தின் ஸ்வரூபம் மட்டும் தான் இருக்கிறது. அவர் ஆனந்தமயமானவர்; வர்ணனைக்கு எட்டாதவர். அவருடைய ஸ்வரூபமும் ஆனந்தமயமே; அது குறைவற்ற பூரணம், நித்யம், ஸநாதனம், பிறப்பற்றது, அழிவற்றது, உயர்ந்தது, முடிவானது, ஸத்தானது, சேதனமானது, விஞ்ஞான மயமானது, மாறுதலற்றது, அசைவற்றது, நிலையானது, நோயற்றது, அறிவுமயமானது, முடிவற்றது, சாந்தமானது." இவ்விதம் திரும்பத் திரும்பச் சிந்தனை செய்து, மனதில் உறுதி ஏற்படவேண்டும். அந்த ஆனந்த ஸ்வரூபம் தவிர வேறொன்றும் இல்லை. ஏதாவது ஸங்கல்பம் எழுந்தால் அதுவும் அந்த் ஆனந்தத்தில் எழுந்ததுதான். அதுவும் ஆனந்தமயம்தான். இப்படி ஆனந்தத்தில் கரைந்துவிட வேண்டும். தாரணை செய்து எல்லா ஸங்கல்பங்களும் ஆனந்தமயமான, அறிவுமயமான பரமாத்மாவிடம் மறைந்துவிட்டால், ஆனந்தமயமான பரமாத்ம ஸ்வரூபத்தைத் தவிர வேறு ஸங்கல்பம் ஒன்றும் இராது. ஆகவே, அந்த ஸாதகன் பரமாத்மாவில் அசையாமல் நிலைபெறுவான். இப்படி அன்றாடம் தவறாமல் த்யானம் செய்து, தானும் உலகியலும் இருப்பதுகூட ப்ரம்மத்தைத் தவிர வேறு நிலை அன்று என்ற உணர்வுடன், எப்பொழுது எல்லாமே பரமானந்தமயமாகவும், சாந்திமயமான ப்ரம்மமாகவும் ஆகிறதோ, அப்பொழுது பரமாத்மாவின் நேரிடை அனுபவம் ஸாதகனுக்கு இயல்பாக அமைந்துவிடுகிறது.

**सुखमात्यन्तिकं यत्तद्बुद्धिग्राह्यमतीन्द्रियम्।**
**वेत्ति यत्र न चैवायं स्थितश्चलति तत्त्वतः॥ २१॥**

**ஸுக₂மாத்யந்திகம் யத்தத்₃பு₃த்₃தி₄க்₃ராஹ்யமதீந்த்₃ரியம் ।**
**வேத்தி யத்ர ந சைவாயம் ஸ்தி₂தஸ்சலதி தத்த்வத: ॥ 21 ॥**

**அதீந்த்₃ரியம்** — புலன்களுக்கு அப்பாற்பட்ட, **பு₃த்₃தி₄க்₃ராஹ்யம்** — தூய்மையான நுண்ணிய புத்திக்கு மட்டும் புலப்படும், **யத்** — எந்த, **ஆத்யந்திகம்** — முடிவற்ற, **ஸுக₂ம்** — ஆனந்தம் உண்டோ, **தத்** — அதை, **யத்ர** — எந்த நிலையில், **வேத்தி** — அனுபவிக்கிறானோ, **ச** — மேலும், (**யத்ர** — எந்த நிலையில்), **ஸ்தி₂த:** — நிலைபெற்று,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அயம்** – இந்த யோகி, **தத்த்வத:** – பரமாத்ம ஸ்வரூபத்திலிருந்து, **ந ஏவ சலதி** – விலகுவதே இல்லையோ—

புலன்களுக்கு அப்பாற்பட்ட தூய்மையான நுண்ணிய புத்திக்கு மட்டும் புலப்படும் எந்த முடிவற்ற ஆனந்தம் உண்டோ அதை எந்த நிலையில் அனுபவிக்கிறானோ மேலும் எந்த நிலையில் நிலைபெற்று இந்த யோகி பரமாத்ம ஸ்வரூபத்திலிருந்து விலகுவதே இல்லையோ—

**கேள்வி:** 'ஆத்யந்திகம்', 'அதீந்த்ரியம்', 'புத்திக்ராஹ்யம்' என்று ஸுகத்திற்கு கூறப்பட்ட அடைமொழிகளின் பொருள் என்ன?

**பதில்:** 18/36 முதல் 39 வரை ஸாத்விக, ராஜஸ, தாமஸம் என்ற மூன்றுவிதமான ஸுகங்களைப் பற்றிய விளக்கம் உள்ளது. அவற்றைக் காட்டிலும் பரமாத்ம அனுபவ ஸுகம் முற்றிலும் மாறுபட்டது என்று காட்டுவதற்காகத்தான், மேலே குறிப்பிட்ட மூன்று அடைமொழிகளைக் கொடுத்திருக்கிறார். பரமாத்ம அனுபவ ஸுகம் என்பது உலகியல் ஸுகங்களைப் போல நொடி நேரத்ததோ, அழிவதோ, துயரத்துக்குக் காரணமாவதோ, துன்பம் கலந்ததோ அன்று. அது ஸாத்விக ஸுகத்தைக் காட்டிலும் மிக மேன்மையானது, மாறுபட்டது. எப்பொழுதும் சீராக ஒரே ரஸமாக நிலைத்து நிற்பது. ஏனெனில் அது பரமாத்மாவின் ஸ்வரூபமே. அதைத் தவிர வேறு பொருள் இல்லை. இதைச் சுட்டிக்காட்டுவதற்காக 'ஆத்யந்திகம்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டுள்ளது. போக விஷயங்களால் ஏற்படும் ராஜஸ ஸுகத்தைப்போல இந்த ஸுகம் புலன்களால் அனுபவிக்கப்படுவது அன்று. புலன்களுக்கு அகப்படாத பரப்ரம்மத்தைத்தான் இங்கு ஸுகமென்கிறோம். இதை 'அதீந்த்ரியம்' என்ற அடைமொழி குறிப்பிடுகிறது. அந்த ஸுகம், தானே எப்பொழுதும் அறிவு மயமானது. மாயையின் எல்லைக்கு முற்றிலும் அப்பாற்பட்டதாதலால், புத்திகூட அதை எட்ட முடியாது. இருப்பினும் அழுக்கற்ற தூய கண்ணாடியில் ஆகாயத்தின் ப்ரதிபிம்பம் தானாகவே விழுவதுபோல பஜனை, த்யானம், விவேகம், வைராக்யம் முதலிய பயிற்சிகளினால் அசைவற்றுவிட்ட நுண்ணிய பரிசுத்தமான புத்தியில், அந்த ஆன்மிக ஸுகத்தின் எதிரொளி புத்தியின் முயற்சி எதுவுமில்லாமலே விழுகிறது. அதனால் அதை 'புத்திக்ராஹ்யம்' (புத்தியினால் ஏற்கப்படுவது) என்கிறார்.

பரமாத்ம த்யானத்தினால் உண்டாகும் ஸாத்விக ஸுகம்கூடப் புலன்களுக்கு அப்பாற்பட்டு, புத்தியினால் ஏற்கப்பட்டு, அழிவற்ற ஸுகத்திற்குக் காரணமாவதால், மற்ற உலகியல் ஸுகங்களைக் காட்டிலும் மிகவும் மாறுபட்டதாகும். ஆனால் அது த்யான காலத்தில் மட்டும் இருக்கும். எப்பொழுதும் ஒரே ரஸமாக இருக்காது. சித்தத்தின் ஒரு நிலைதான் அது. ஆகவே, அதை 'ஆத்யந்திகம்' அல்லது 'அக்ஷய ஸுகம்' என்று சொல்வதில்லை. அவ்விதமாக பரமாத்ம ஸ்வரூபத்தை த்யானம் செய்வதன் காரணமாக, த்யான காலத்தில் மட்டும் அனுபவிக்கப்படும் ஸுகம்கூட, த்யானத்தினால் உண்டாகும் ஸுகத்தின் பயனே ஆகும். அதனாலேயே இது அதிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. இவ்வாறு மூன்று அடைமொழிகளைக் கொடுத்து, ஸாத்விக ஸுகத்தைப்போல, இந்த ஸுகம் அனுபவத்திற்கு வரக் கூடியது அன்று என்ற விஷயத்தை இங்கே தெளிவுபடுத்தியிருக்கிறார். அதாவது இந்த ஸுகம் த்யானிப்பவன், த்யானம், த்யானப் பொருள் இவை ஒன்றாக ஆனபின், தானாகவே தோன்றும் பரமாத்மாவினுடைய ஸ்வரூபமே ஆகும்.

**கேள்வி:** 'தத்வத்திலிருந்து விலகுவதில்லை' என்று கூறுவதன் உட்கருத்து என்ன? 'ஏவ' என்று அழுத்திக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தத்வம் என்றால் பரப்ரம்மம். அதிலிருந்து தனித்துப் போகாமல் இருப்பதுதான் 'விலகாமல் இருப்பது' என்பதாகும். பரமாத்மாவின் நேரிடை அனுபவம் பெற்ற பிறகு, யோகி அதிலேயே அசையாமல் நிலைத்து நிற்பதால், ஒருபொழுதும் எந்த நிலையிலும் பரமாத்மாவைப் பிரிந்து இருப்பதில்லை என்ற கருத்தை வெளிப்படுத்துவதற்காகத்தான் 'ஏவ' என்ற சொல் கையாளப்பட்டிருக்கிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः।**
**यस्मिन्स्थितो न दुःखेन गुरुणापि विचाल्यते॥२२॥**

**யம் லப்₄த்₄வா சாபரம் லாப₄ம் மந்யதே நாதி₄கம் தத: ।**

**யஸ்மிந்ஸ்தி₂தோ ந து₃:கே₂ந கு₃ருணாபி விசால்யதே ॥ 22 ॥**

**யம் லாப₄ம்** – பரமாத்மாவை அடைவதாகிற எந்தப் பேற்றை, **லப்₄த்₄வா** – பெற்றதும், **தத:** – அதைக் காட்டிலும், **அபரம்** – வேறொரு பேற்றை, **அதி₄கம்** – உயர்வானதென்று, **ந மந்யதே** – கருதமாட்டானோ, **ச** – மேலும், **யஸ்மிந்** – பரமாத்மாவுடன் ஒன்றிவிட்ட எந்நிலையில், **ஸ்தி₂த:** – நிலைபெற்ற யோகி, **கு₃ருணா** – மிகப்பெரிய, **து₃:கே₂ந அபி** – துயரத்தால்கூட, **ந விசால்யதே** – கலங்க மாட்டானோ—

பரமாத்மாவை அடைவதாகிற எந்தப் பேற்றைப் பெற்றதும் அதைக் காட்டிலும் வேறொரு பேற்றை உயர்வானதென்று கருதமாட்டானோ, மேலும் பரமாத்மாவுடன் ஒன்றிவிட்ட எந்நிலையில் நிலைபெற்ற யோகி மிகப்பெரிய துயரத்தால்கூடக் கலங்கமாட்டானோ—

**கேள்வி:** *இந்த ச்லோகத்தில் 'யம்' என்பது எதைக் குறிக்கிறது? அதை அடைந்த பிறகு அதைக்காட்டிலும் பெரியதாக வேறு பேற்றை நினைக்க மாட்டான் என்று கூறுவானேன்?*

**பதில்:** அடுத்து வரும் ச்லோகத்தில், 'துக்கத்தின் சேர்க்கையிலிருந்து பிரிதல்' என்ற விஷயத்தை, யோகத்தின் பெயரால் சொல்லப் போகிறார். அந்த பரமாத்ம ஸாக்ஷாத்காரரூபமாகிற தனிப்பட்ட நிலையை, 'யம்' என்ற சொல் குறிக்கிறது. இந்த நிலையில், யோகி பரமானந்த பரமசாந்தியின் கருவூலமான பரமாத்மாவை அடைந்துவிடுவதால் அவன் பூர்ணகாமன் ஆகிறான். அவனுடைய பார்வையில் இவ்வுலகிலும், பரலோகத்திலும் அடையக்கூடிய எல்லா போகங்களும், மூவுலக அரசும், ஐசுவர்யமும், உலகளாவிய பெருமையும், புகழும் உலகியல் ஸுகத்திற்கு ஸாதனங்களான இவையனைத்தும் நொடியில் அழிபவை; அநித்யமானவை; ரஸமற்றவை; தவிர்க்கப்பட வேண்டியவை; துச்சமானவை; அற்பமானவை என்று ஆகின்றன. உலகியல் பொருள் எதையும் அவன் பெற விரும்பமாட்டான் என்னும்போது, அவற்றைப் பெரிதாக நினைப்பானா?

**கேள்வி:** *'மிகப் பெரும் துயரத்தால்கூடக் கலங்க மாட்டான்' என்று கூறுவதன் பொருள் என்ன?*

**பதில்:** பரமாத்மாவை அடைந்துவிட்ட யோகிக்கு மிகப் பெரும் போகங்களும், ஐசுவர்யங்களும், ரஸமற்றவையாகவும், துச்சமானவையாகவும் தோன்றுகின்றன. யோகி அவற்றை அடைய விரும்புவதில்லை. அவை கிடைத்தாலும், கைவிட்டுப் போனாலும் லக்ஷ்யம் செய்வதில்லை. தன்னுடைய நிலையிலிருந்து கொஞ்சமும் கலங்குவதில்லை. அதேபோல மிகப் பெரிய துக்கம் வந்தாலும் கலங்காமல் இருப்பான். இங்கு 'து:கேந' என்பதுடன் 'குருணா', 'அபி' என்ற சொற்களைச் சேர்த்து, "ஸாதாரண துக்கங்கள் கிடக்கட்டும். அவற்றை தைர்யமுடையவனும், ஸஹிப்புத்தன்மை உள்ளவனும்கூடத் தாங்கிக் கொள்ள முடியும். இந்த நிலை அடைந்துவிட்ட யோகியோ மிகவும் பயங்கரமான, பொறுக்க முடியாத துக்கங்களிலும் தன்னுடைய நிலையில் முற்றிலும் உறுதியாக, அசையாமல் நிற்கிறான்" என்ற கருத்தை பகவான் உணர்த்த விரும்புகிறார். ஆயுதங்களைக் கொண்டு அவயவங்களை வெட்டினாலும் சரி, மிகவும் பொறுக்க முடியாத குளிரோ, வெப்பமோ, மழையோ, மின்னலோ, உடலுக்குக் கஷ்டம் வருமாறு தாக்கினாலும், பொறுக்க முடியாத நோயின் துன்பமானாலும், மிகவும் ப்ரியத்திற்குப் பாத்திரமான மனிதரோ, பொருளோ தன்னை விட்டுப் பிரிந்தாலும் சரி, உலகியல் காரணமாக அவமானம், நிந்தை, புறக்கணிப்பு ஏற்பட்டாலும், இவை எல்லாமே ஒன்றாகச் சேர்ந்து வந்தாலும், எந்த நிலையிலும் அவன் கலங்குவதில்லை. இதற்குக் காரணம் பரமாத்மாவின் நேரிடை அனுபவம் பெற்ற பிறகு, உண்மையில் அந்த யோகிக்கு இவ்வுடலுடன் எந்தத் தொடர்பும் இருப்பதில்லை. உலகத்தினர்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மட்டும் அது அவனுடைய உடல் என்று நினைக்கிறார்கள். ப்ராரப்தத்தின் காரணமாக அவனுடைய உடல், புலன்கள், மனம் ஆகியவற்றுக்கு, உலகியல் பொருட்களுடன் ஒட்டுதலும், பிரிவும் ஏற்படலாம். தட்ப-வெப்பம், மான-அவமானம், புகழ்-இகழ் முதலிய அனுகூல-ப்ரதிகூலமான போகப் பொருட்கள் வரலாம்; போகலாம். அந்த ஸுக-துக்கங்களுடன் அவன் ஒட்டாமல் இருப்பதால், அவனது உள்ளத்தில் எந்த நிலையிலும், எக்காரணத்திற்காகவும், எந்தவிதமான விகாரமும் கொஞ்சம்கூட ஏற்படுவதில்லை. அவனுக்குப் பரமாத்மாவிடம் அப்படிப்பட்ட நித்யமான, அசைக்க முடியாத நிலை எப்படியும் இருந்து கொண்டே இருக்கும்.

**பொருத்தம்:** 20,21,22வது ச்லோகங்களில் பரமாத்மாவை அடைவது என்ற எந்த நிலையின் பெருமையையும், இலக்கணத்தையும் கூறினாரோ, அந்த நிலைக்குப் பெயர் கூறி அதை அடையவேண்டும் என்று தூண்டுகிறார்—

**तं विद्याद्दुःखसंयोगवियोगं योगसंज्ञितम्।**
**स निश्चयेन योक्तव्यो योगोऽनिर्विण्णचेतसा॥ २३॥**

**தம் வித்₃யாத்₃ து₃:க₂ஸம்யோக₃வியோக₃ம் யோக₃ஸம்ஜ்ஞிதம் ।**
**ஸ நிஸ்சயேந யோக்தவ்யோ யோகோ₃ऽநிர்விண்ணசேதஸா ॥ 23 ॥**

**து₃:க₂ ஸம்யோக₃ வியோக₃ம்** – துன்பமயமான ஸம்ஸாரச் சேர்க்கையிலிருந்து விடுபடுவதும், **யோக₃ஸம்ஜ்ஞிதம்** – யோகம் என்ற பெயர் கொண்டதுமான, **தம்** – அந்த யோகத்தை, **வித்₃யாத்** – அறியவேண்டும். **ஸ: யோக₃:** – அந்த யோகம், **அநிர்விண்ண சேதஸா** – சோர்வற்ற (தைர்யமும், உற்சாகமும் உள்ள) சித்தத்தோடு, **நிஸ்சயேந** – உறுதியுடன், **யோக்தவ்ய:** – ஆற்றப்பட வேண்டும்.

துன்பமயமான ஸம்ஸாரச் சேர்க்கையிலிருந்து விடுபடுவதும் யோகம் என்ற பெயர் கொண்டதுமான அந்த யோகத்தை அறியவேண்டும். அந்த யோகம் சோர்வற்ற தைர்யமும், உற்சாகமும் உள்ள சித்தத்தோடு உறுதியாக ஆற்றப்பட வேண்டும்.

**கேள்வி:** 'துன்பமயமான ஸம்ஸாரச் சேர்க்கையை விடுவது' என்றால் என்ன? அந்த நிலையை அடைந்த யோகி எப்பொழுதும் த்யானத்திலேயே ஆழ்ந்திருப்பானா? அவனுடைய உடல், புலன்கள், அந்தக்கரணம் மூலமாக ஸம்ஸாரச் செயல்கள் நடைபெறாவா?

**பதில்:** துன்பமயமான ஸம்ஸாரச் சுழலிலிருந்து அறவே ஸம்பந்தம் ஒழிந்து போவதுதான், அதன் சேர்க்கையிலிருந்து விடுபடுவது ஆகும். அந்த நிலையில் யோகியின் உடல், புலன்கள், மனம் மூலமாக நடத்தல், திரிதல், பார்த்தல், கேட்டல், எண்ணுதல், நிச்சயம் செய்தல் முதலிய செயல்கள் நிகழவே மாட்டா என்பதில்லை. அவனுடைய உடல், புலன்கள், மனம், புத்தி – எல்லாம் ப்ராரப்தத்தை அனுஸரித்து, எல்லாக் கார்யங்களையும் செய்து கொண்டுதான் இருக்கும். ஆனால், அவனுடைய உணர்வில் பரமாத்மாவைத் தவிர வேறு ஒன்றும் இருக்காது. ஆகையால், அந்தக் கர்மங்களுடன் உண்மையில் அவனுக்கு ஸம்பந்தம் கிடையாது. த்யான காலத்திலும், வ்யுத்தான காலத்திலும் (அதாவது த்யானம் கலைந்து உலக விழிப்புடன் உள்ள காலத்திலும்), அவன் எப்போதும் ஒரேவிதமாகப் பரமாத்மாவிலேயே நிலைத்து இருப்பான்.

**கேள்வி:** 'து:கவியோகம்' (துக்கத்திலிருந்து விடுதலை) என்று மட்டும் சொன்னால் போதாதா? பிறகு 'து:கஸம்யோகவியோகம்' என்றும் கூறி, அதில் 'ஸம்யோக' என்ற கூடுதலான சொல் இருப்பதன் கருத்து என்ன?

**பதில்:** காண்பவன், காணப்படும் பொருள் இவற்றின் சேர்க்கையாகிற ப்ரபஞ்சத்துடன் ஆத்மாவுக்கு அஞ்ஞானத்தினால் தோன்றிய தொடர்பு அநாதிகாலமாக இருந்து வருகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அதுதான் பிறப்பு-இறப்பாகிய துன்பத்திற்கு மூலகாரணம். அது அற்றுப் போனால், துன்பம் அனைத்தும் அறவே அற்றுப் போகும். அந்தத் தொடர்பைத்தான் 'ஸம்யோகம்' என்ற சொல் குறிக்கிறது.

பதஞ்ஜலி யோகஸூத்ரத்தில் கூறப்பட்டுள்ளது: 'ஹேயம் து₃:க₂மநாக₃தம்' (2/16). எதிர்காலத்தில் ஏற்படவிருக்கும் பிறப்பு-இறப்பு என்ற பெரிய துன்பத்திற்கு 'ஹேயம்' என்று பெயர். 'த்₃ரஷ்ட்ருத்₃ருஸ்யயோ: ஸம்யோகோ₃ ஹேயஹேது:' (2/17). காண்பவன், காணப்படும் பொருள் இரண்டும் சேர்வதுதான் ஹேயத்திற்குக் காரணம். 'தஸ்ய ஹேதுரவித்₃யா' (2/24). இந்தச் சேர்க்கைக்குக் காரணம் அஞ்ஞானம். 'தத₃பா₄வாத்ஸம்யோகா₃பா₄வோ ஹாநம் தத்₃ த்₃ருஶே: கைவல்யம்' (2/25). அந்த அஞ்ஞானம் அற்றுப் போனால் காண்பவனுக்கும், காணப்படும் பொருளுக்கும் உள்ள சேர்க்கையும் அற்றுப் போகும். அது 'ஹாநம்' (ஹேயத்தை துறத்தல்) ஆகும். அதாவது பிறப்பு-இறப்பாகிற சுழலிருந்து விடுதலை பெறுதல். இது தான் காண்பவனின் கைவல்ய நிலை என்பது.

**கேள்வி:** 'தம்' என்பதுடன் 'யோகஸம்ஜ்ஞிதம்' என்ற அடைமொழி கொடுத்திருப்பதன் கருத்து என்ன?

**பதில்:** முந்தைய மூன்று ச்லோகங்களில், 'பரமாத்மாவை அடைவது' என்ற நிலையின் பெருமையையும், இலக்கணங்களையும் விளக்கினார். அதற்கு 'யோகம்' என்று பெயர். இதைச் சுட்டிக்காட்டுவதற்காகத் 'தம்' என்பதுடன் 'யோகஸம்ஜ்ஞிதம்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டிருக்கிறது.

**கேள்வி:** 'வித்யாத்' (அறியவேண்டும்) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'யத்ரோபரமதே சித்தம்' (6/20) என்று ஆரம்பித்து இதுவரை எந்த நிலை கூறப்பட்டதோ, அதை அடைவதற்காக ஸித்தர்களான பெரியோர்களை அணுகி, சாஸ்த்ரங்களைக் கற்று, அதன் ஸ்வரூபம், பெருமை, ஸாதனை முறை இவற்றை நன்கு அறியவேண்டும் என்று பொருள்.

**கேள்வி:** 'அநிர்விண்ணசேதஸா' (சோர்வற்ற சித்தத்தோடு) என்று கூறுவானேன்?

**பதில்:** ஸாதனையின் பயனைக் கண்கூடாகக் காண முடியாது. கொஞ்சம் ஸாதனை புரிந்ததும், 'இந்த ஸாதனையை இன்னும் எத்தனை நாட்கள் செய்ய வேண்டுமோ? இது நிறைவேறுமோ? நிறைவேறாதோ?' என்று நினைப்பதுதான் மனச்சோர்வு. அப்படியின்றி தைர்யத்துடனும், உற்சாகத்துடனும் செயல்படுவதை 'அநிர்விண்ணசித்த:' என்கிறார். ஆகவே, ஸாதகன் தன் உள்ளத்திலிருந்து சோர்வை அறவே நீக்கவேண்டும். யோக ஸாதனையில் ருசியையும், உற்சாகத்தையும் குறைக்கின்ற எண்ணங்களைத் தன் சித்தத்தில் தோன்றவிடாமல், இப்படிப்பட்ட உள்ளத்துடன் யோக ஸாதனை புரியவேண்டும்.

**கேள்வி:** 'உறுதியுடன் யோக ஸாதனை செய்யப்படவேண்டும்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** நிச்சயம் (உறுதி) என்ற சொல் நம்பிக்கையையும், ச்ரத்தையையும் இங்கே குறிக்கும். யோக ஸாதனையிலும், அதன் முறையைக் கூறும் சாஸ்த்ரங்களிலும், ஆசிரியர்களிடமும், யோக ஸாதனையின் பயனிலும், முழுமையான ச்ரத்தையையும், நம்பிக்கையையும் யோகி கைக் கொள்ளவேண்டும். 'யோக ஸாதனைதான் தன் வாழ்வின் தலையாய கடமை' என்று கருதி, பரமாத்மாவை அடைவது என்ற யோக ஸித்தியிலேயே மனதைச் செலுத்தி, உறுதியாகவும், ஒரே குறியாகவும் அந்த ஸாதனையில் ஈடுபட்டிருக்க வேண்டும் என்பது கருத்து.

**பொருத்தம்: பரமாத்மாவை அடைந்தவனின் நிலை 'யோகம்' எனப்படும். அதை அவசியம் கடைப்பிடிக்க வேண்டும் என்று சொல்லி, அடுத்த இரண்டு ச்லோகங்களில் அந்த நிலையை அடைய, இரண்டற்ற உணர்வுடன் பரமாத்ம த்யானயோக ஸாதனை செய்யும் முறையைக் கூறுகிறார்—**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**सङ्कल्पप्रभवान्कामांस्त्यक्त्वा सर्वानशेषतः ।**
**मनसैवेन्द्रियग्रामं विनियम्य समन्ततः ॥ २४ ॥**

**ஸங்கல்பப்ரப₄வாந்காமாம்ஸ்த்யக்த்வா ஸர்வாநஶேஷத: ।**
**மநஸைவேந்த்₃ரியக்₃ராமம் விநியம்ய ஸமந்தத: ॥ 24 ॥**

**ஸங்கல்பப்ரப₄வாந்** – ஸங்கல்பத்தினால் உண்டாகக் கூடிய, **ஸர்வாந்** – எல்லா, **காமாந்** – விருப்பங்களையும், **அஶேஷத:** – மீதமின்றி, **த்யக்த்வா** – துறந்து, **மநஸா** – மனதினால், **இந்த்₃ரியக்₃ராமம்** – புலன்களின் கூட்டத்தை, **ஸமந்தத: ஏவ** – எல்லாப் புறங்களிலிருந்தும், **விநியம்ய** – நன்கு அடக்கி—

ஸங்கல்பத்தினால் உண்டாகக் கூடிய எல்லா விருப்பங்களையும் மீதமின்றித் துறந்து மனதினால் புலன்களின் கூட்டத்தை எல்லாப் புறங்களிலிருந்தும் நன்கு அடக்கி—

**கேள்வி:** 'ஸங்கல்பத்திலிருந்து எல்லாக் காமங்களும் உண்டாகின்றன' என்று இங்கே கூறுகிறார். 2/62ல் 'பற்றினால் ஆசைகள் விளைகின்றன' என்று கூறுகிறார். ஏன் இந்த வேறுபாடு?

**பதில்:** அங்கு ஸங்கல்பத்திலிருந்து பற்று, பற்றிலிருந்து ஆசை என்று கூறினார். ஆகவே ஆசைக்கு மூலகாரணம் ஸங்கல்பம் என்றாயிற்று. ஆகவே வேறுபாடு ஒன்றுமில்லை.

**கேள்வி:** 'எல்லா விருப்பங்களும்' என்பவை எவை? அவற்றை மீதமின்றி த்யாகம் செய்வது எப்படி?

**பதில்:** இவ்வுலக, பரலோக போகப் பொருட்களிடம் எவ்வளவு விருப்பங்கள் தீவிரமாகவும், நடுத்தரமாகவும், மந்தமாகவும் உள்ளனவோ, அவை எல்லாவற்றையும் 'ஸர்வாந் காமாந்' என்ற சொல் அறிவிக்கிறது. இவற்றில் ஸ்ப்ருஹா (ஆவல்), இச்சா (விருப்பம்), த்ருஷ்ணா (அடையத்தான் வேண்டும் என்ற ஊக்கம்), ஆஶா (முனைப்பு), வாஸனா (அனுபவித்த பொருளில் தொடரும் பற்று) என்று ஆசையின் எல்லா வகைகளும் அடங்கியுள்ளன. இந்த ஆசை, ஸங்கல்பத்திலிருந்து உண்டாகிறது என்று சொல்லப் பட்டிருக்கிறது. ஆகவே, பற்று கூட இதனுள் அடங்கியதே. 'எல்லா ஆசைகளையும் மீதமின்றித் துறந்து' என்பதற்கு, எந்த ஒரு போகத்திலும் சிறிதுகூட வாஸனையோ, பற்றோ, ஆவலோ, இச்சையோ, பேராசையோ, அடையவேண்டுமென்ற ஊக்கமோ, முனைப்போ இருக்கவிடக் கூடாது என்று பொருள். பாத்திரத்திலிருந்து நெய்யை முழுவதும் அகற்றிவிட்டாலும், பிசுக்கு மீதம் இருக்கும். ஸம்புடத்திலிருந்து கற்பூரம், குங்குமப்பூ, கஸ்தூரி இவற்றை எடுத்துவிட்டாலும், இவற்றின் மணமிருக்கும். அதுபோல ஆசைகளை வெளிப்படையாகத் துறந்துவிட்டாலும், அதன் நுண்ணிய அம்சம் உள்ளத்தில் தங்கியிருக்கும். அந்த நுட்பத்தையும் மீதமின்றி அகற்றிவிட வேண்டும்.

**கேள்வி:** 'மனதினால் புலன்களின் கூட்டத்தை நன்கு அடக்க வேண்டும்' என்றால் என்ன?

**பதில்:** போகப் பொருட்களில் திளைப்பது புலன்களின் இயல்பு. ஆனால், மனமும் இசைந்தால்தான், அவை போகப் பொருட்களில் திளைக்க முடியும். மனம் பலவீனமாக இருந்தால் புலன்கள் அதை பலவந்தமாக இழுத்துச் சென்றுவிடும். ஆனால் நிர்மலமான, திடமான புத்தியின் துணை கொண்டு, மனதை ஒருமுகப்படுத்திவிட்டால், மனதின் துணை கிடைக்காமையால், புலன்கள் போகங்களில் திளைக்க முடியாமல் போய்விடும். இதற்காகத்தான் ச்லோகம் 11 முதல் 13 வரை கூறியபடி, த்யானயோக ஸாதனை புரிவதற்கு ஆஸனத்தில் அமர்ந்த யோகி, விவேகத்தினாலும், வைராக்யத்தினாலும் மனதின் மூலம் எல்லாப் புலன்களையும் வெளிப் பொருட்களிலிருந்து முழுமையாக மீட்டுச் சிறிது கூட

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



போகங்களில் நுழையவிடாமல் தடுத்து, அவற்றை உள்நோக்கித் திருப்ப வேண்டும் என்று கூறினார். இதுதான் மனதினால் புலன்களைத் தடுப்பதாகும்.

**शनैः शनैरुपरमेद्बुद्ध्या धृतिगृहीतया।**
**आत्मसंस्थं मनः कृत्वा न किञ्चिदपि चिन्तयेत्॥ २५॥**

**ஶநை: ஶநைருபரமேத்₃பு₃த்₃த்₄யா த்₄ருதிக்₃ருஹீதயா ।**
**ஆத்மஸம்ஸ்த₂ம் மந: க்ருத்வா ந கிஞ்சித₃பி சிந்தயேத் ॥ 25 ॥**

**ஶநை: ஶநை:** – படிப்படியாக (ப்பயின்று), **உபரமேத்** – (மனதை) உலகியலிலிருந்து ஒதுங்கச் செய்யவேண்டும். **த்₄ருதி க்₃ருஹீதயா** – உறுதிபூண்ட, **பு₃த்₃த்₄யா** – புத்தியினால், **மந:** – மனதை, **ஆத்மஸம்ஸ்த₂ம் க்ருத்வா** – பரமாத்மாவிடம் நிலைபெறச் செய்து, **கிஞ்சித் அபி** – (பரமாத்மாவைத் தவிர) வேறு எதையும், **ந சிந்தயேத்** – நினையாதிருக்க வேண்டும்.

படிப்படியாகப் பயின்று மனதை உலகியலிலிருந்து ஒதுங்கச் செய்ய வேண்டும். உறுதிபூண்ட புத்தியினால் மனதை பரமாத்மாவிடம் நிலைபெறச் செய்து பரமாத்மாவைத் தவிர வேறு எதையும் நினையாதிருக்க வேண்டும்.

**கேள்வி:** 'படிப்படியாக மனதை உலகியலிலிருந்து ஒதுங்கச் செய்வது' எப்படி? 'உறுதிபூண்ட புத்தியினால் மனதைப் பரமாத்மாவில் நிலைபெறச் செய்வது' எப்படி?

**பதில்:** முன் ச்லோகத்தில் மனதின் மூலம் புலன்களை வெளிப் பொருட்களிலிருந்து முழுமையாக மீட்க வேண்டும் என்று சொன்னார். மனம் போக விஷயங்களைப் பற்றிச் சிந்திக்கும் வரை, அது பரமாத்மாவில் ஒருமுனைப்புடன் ஈடுபடாது. புலன்களையும் விஷயங்களிலிருந்து முற்றிலுமாக மீட்கவும் முடியாது. போக விஷயங்களைச் சிந்திப்பது மனதிற்கு அநாதிகாலமாக ஏற்பட்ட பழக்கம். வெகுநாள் பழக்கமான போக சிந்தனையிலிருந்து மனதை மீட்டு, பரமாத்மாவில் இணைய வைக்க வேண்டும். மனதிற்கு ஒரு ஸ்வபாவம் உண்டு. எதைப் பற்றிக் கொள்ளும் பழக்கம் உள்ளதோ, அதுவாகவே ஆகிவிடும். பிறகு அதிலிருந்து எளிதாக அதை மீட்க முடியாது. அதை மீட்பதற்குரிய உபாயம் இதுதான். முதலில் ஏற்பட்ட பழக்கத்தை மாற்றிப் புதுப் பழக்கத்திற்குத் தீவிரமான பயிற்சி அளிக்கவேண்டும். கொஞ்சம்கூடச் சோர்வு அடையக் கூடாது. லக்ஷ்யத்தில் திடமான உறுதி படைத்த புத்தியைக் கொண்டு மனதைத் திருத்தி, அச்சுறுத்தி, தடுத்து, அறிவுறுத்தி, புதுப்பழக்கத்தில் ஊன்ற வைக்க வேண்டும். கொஞ்சம் உறுதி தளர்ந்தாலும், அவசரப்பட்டாலும் செயல் நடைபெறாது. புத்தி திடமாகவும், பயிற்சி இடைவிடாது தொடர்ந்தும் இருந்தால், கொஞ்ச நாட்களில் மனம் பழைய விஷயங்களிலிருந்து முழுமையாக விலகி, புது விஷயத்தில் லயித்து அதுவாகவே ஆகிவிடும். பிறகு அதிலிருந்து நழுவாது. இப்பொழுது உள்ளதுபோல அதிலேயே லயிக்கும். இதைத்தான், பகவான் 'படிப்படியாக மனதை உலகியலிலிருந்து ஒதுங்கச் செய்யவேண்டும்' என்றும், 'உறுதிபூண்ட புத்தியுடன், பரமாத்மாவிடம் இணைய வைக்க வேண்டும்' என்றும் கூறுகிறார். சிறு குழந்தை கையில் கத்தியையோ, கூரான பொருளையோ எடுத்துக் கொண்டுவிட்டால், தாயார் நயந்து, கடிந்து அவசியமானால் அச்சுறுத்தி, மெல்ல மெல்ல அந்தக் கத்தியைப் பறித்துவிடுவதுபோல விவேகமும், வைராக்யமும் உள்ள புத்தியின் துணைகொண்டு உலகியல் போகங்கள் அநித்யம் என்றும், நொடியில் அழியும் என்றும் மனதிற்கு அறிவுறுத்தி, அவற்றில் ஈடுபட்டால் ஏற்படும் பந்தத்தையும், நரகம் முதலிய துன்பங்களையும் சுட்டிக்காட்டி, போகப் பொருட்களின் நினைவுகள் மனதிலிருந்து முற்றிலும் இல்லாததாகச் செய்துவிட வேண்டும். இதுதான் படிப்படியாக உலகியலிலிருந்து ஒதுங்கச் செய்தல் ஆகும்.

மனம் போகப் பொருட்களின் நினைவுகளை முற்றிலுமாகத் துறக்கும் வரை, ஸாதகன் ஒவ்வொரு நாளும் ஆஸனத்தில் அமர்ந்து, முதலில் புலன்களை வெளிப் பொருட்களுக்குப்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பாயாமல் தடுத்து, பிறகு புத்தியின் துணை கொண்டு சிறிது சிறிதாக மனம் அவற்றை நினைக்காமல் இருக்கும்படி தைர்யமான புத்தியுடன்கூடப் பரமாத்மாவில் மனதை நிலைபெறச் செய்ய வேண்டும். பரமாத்மாவின் தத்வத்தையும், ரஹஸ்யத்தையும் புத்தியே அறியாவிட்டால் புத்தியில்கூடப் பற்றும், ஐயமும், தடுமாற்றமும் இருக்கும். அந்த புத்தி உறுதியாக நிலைத்து இருக்காது. திடமில்லாத புத்தி தன் வேகத்தைக் காட்டி, மனதைப் பரமாத்மாவிடம் நிலைபெறச் செய்யவும் முடியாது. ஆகவே ஸத்ஸங்கத்தில் சேர்ந்து, பரமாத்மாவின் தத்வத்தையும், ரஹஸ்யத்தையும் அறிந்து, புத்தியை முதலில் திடப்படுத்த வேண்டும். அப்பொழுது புத்தி ப்ரபஞ்ச விஷயத்தில் ஈடுபாடின்றி, பரமாத்மாவை அனுபவிக்க ஆரம்பிக்கும். அப்பொழுது அவனுடைய பார்வையில் பரமாத்மாவைத் தவிர வேறு ஒன்றும் இராது. அப்போது அந்த புத்தி மனதிலிருந்து மற்ற போக விஷயங்களை முற்றும் அகற்றிவிட்டுப் பரமாத்ம சிந்தனையில் மனதைச் செலுத்தி, முறையாக பரமாத்ம மயமாக ஆக்கிவிடும். இதுதான் திடமான புத்தியுடன் மனதைப் பரமாத்மாவில் நிலைநிறுத்துவது ஆகும்.

**கேள்வி:** 'பரமாத்மாவைத் தவிர வேறு எதையும் நினையாதிருக்க வேண்டும்' என்று கூறுவானேன்?

**பதில்:** மனம் பரமாத்மாவில் ஒடுங்கி, அதுவாகவே ஆகாவிட்டால், அதாவது பரமாத்மாவை அடையாவிட்டால் மனம் த்யானத்திற்குரிய பரமாத்மாவை இடைவிடாமல் ஒன்றியிருப்பது நிச்சயமில்லை. ஆகவே, இதற்குத் தீவிரப் பயிற்சி அவசியம். த்யானம் செய்ய ஸாதகன் ஆஸனத்தில் அமர்ந்து கொண்டு, தீவிரப் பயிற்சியினால் மனம் பரமாத்மாவில் லயிக்கச் செய்யவேண்டும். அது மட்டும் போதாது. மனம் ஒரு கணம்கூடப் பரமாத்ம சிந்தனையைத் தவிர வேறு ஒன்றிலும் பாயாமல் கவனமாக இருக்க வேண்டும். இந்த விழிப்புதான், பயிற்சி திடமாவதற்குச் சிறந்த உதவி செய்யும். ஒவ்வொரு நாளும் த்யானம் செய்யும்போது, பயிற்சி வளர வளர, மனம் வேறெங்கும் அலையாமல், மேலும் மேலும் அதிக நேரம் பரமாத்மாவில் நிலைபெறச் செய்ய வேண்டும்.

**கேள்வி:** த்யான நேரத்தில் மனதை எப்படி பரமாத்ம ஸ்வரூபத்தில் நிலைபெறச் செய்ய வேண்டும்?

**பதில்:** முன் கூறியவாறு பயிற்சி செய்து தனிமையில் அமர்ந்து த்யான நேரத்தில் மனதை முற்றிலும் ஸங்கல்பம் அற்றதாகச் செய்து, பரமாத்ம ஸ்வரூபத்தில் மட்டுமே இணைய வைக்க முயலவேண்டும். மனதில் வேறு எந்த ஒரு பொருளைப் பற்றிய சிந்தனை தோன்றினாலும், அது வெறும் கற்பனைதான் என்றுணர்ந்து, உடனேயே அதை உதற வேண்டும். இப்படிச் சித்தத்தில் தலைதூக்கும் பொருளை உடனுக்குடன் வெளியேற்றி, முறையாக உடல், புலன்கள், மனம், புத்தி இவை இருப்பதாக உள்ள நினைவைக் கூட அகற்ற வேண்டும். இப்படி எல்லாவற்றையும் ஒவ்வொன்றாக அகற்றினால் மனதில் விஷயமே இல்லாமல் வெறுமையாகிவிட்டது போன்ற ஓர் உணர்வு மட்டும் இருக்கும். இதுதான் மங்களமயமானது; பரிசுத்தமானது. ஆனால் திடமான தாரணையின் மூலம் இதையும் விலக்கிவிட வேண்டும். காணப்படும் இந்த ப்ரபஞ்சம் அனைத்தும் அற்றுப்போன பிறகு, இது தானே அடங்கிவிடும். இதற்குப் பிறகு எது மிகுந்திருக்கிறதோ, அதுவே நினைவுக்கெட்டாத தத்வம். அதுதான் தனித்து ஒன்றேயான பரப்ரம்மம். அதற்குத் துணையோ, அடைமொழியோ கிடையாது. எங்கும் பரிபூரணமாக இருக்கும். அதை யாரும் வர்ணிக்கவோ, சிந்தனை செய்யவோ முடியாது. இவ்விதம் புலன்களால் அறியப்படும் ப்ரபஞ்சம் உடல், புலன்கள், மனம், புத்தி, அஹங்காரம் – இவையெல்லாம் இல்லாமல் போய், 'அவையில்லை' என்ற உணர்வும் போய், எண்ணத்திற்கு அப்பாற்பட்ட பரமாத்ம தத்வத்தில் நிலைபெறச் செய்ய முயற்சி செய்யவேண்டும்.

**பொருத்தம்: மனம் பரமாத்மாவில் நிலைத்து, பரமாத்மாவைத் தவிர வேறு எதையும் சிந்தியாது இருக்க வேண்டும் என்று கூறினார். முன் பழக்கத் தொடர்பினால் யாராவது**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஒரு ஸாதகனுடைய மனம் வலுவிலே போக விஷயங்களில் ஈடுபட்டால் என்ன செய்வது என்ற கேள்விக்கு விடை தருகிறார்—

**यतो यतो निश्चरति मनश्चञ्चलमस्थिरम्।**
**ततस्ततो नियम्यैतदात्मन्येव वशं नयेत्॥ २६॥**

**யதோ யதோ நிஶ்சரதி மநஶ்சஞ்சலமஸ்திரம் ।**

**ததஸ்ததோ நியம்யைதத₃ாத்மந்யேவ வஶம் நயேத் ॥ 26 ॥**

(ஆனால்), **ஏதத்** – இந்த, **அஸ்திரம்** – நிலையில்லாத, **சஞ்சலம்** – சஞ்சலமான (அலைந்து கொண்டே இருக்கிற), **மந:** – மனம், **யத: யத:** – எந்தெந்த ஒலி முதலிய விஷயங்களின் காரணமாக உலகில், **நிஶ்சரதி** – அலைகிறதோ, **தத: தத:** – அந்தந்த விஷயங்களிலிருந்து, **நியம்ய** – தடுத்து நிறுத்தி (அதைத் திரும்பத் திரும்ப), **ஆத்மநி ஏவ** – பரமாத்மாவினிடமே, **வஶம் நயேத்** – நிலைபெறச் செய்யவேண்டும்.

ஆனால் இந்த நிலையில்லாத அலைந்து கொண்டே இருக்கிற மனம் எந்தெந்த ஒலி முதலிய விஷயங்களின் காரணமாக உலகில் அலைகிறதோ அந்தந்த விஷயங்களிலிருந்து தடுத்து நிறுத்தி அதைத் திரும்பத் திரும்பப் பரமாத்மாவினிடமே நிலைபெறச் செய்யவேண்டும்.

**கேள்வி:** இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

**பதில்:** மனம் எதிலும் நிலைகொள்ளாதது; மிகவும் சஞ்சலமானது. அது இயல்பாகவே ஒரு கணம்கூட ஒரு விஷயத்தில் நிலையாக இருக்க விரும்புவதில்லை. அதுவும் புதிய பயிற்சியிலிருந்து தப்பி ஓடிக் கொண்டே இருக்கும். ஸாதகன் முழு முயற்சி செய்து மனதைப் பரமாத்மாவிடம் கொண்டு நிறுத்துவான். அது அங்குதான் இருக்கிறது என்று நினைப்பான். அடுத்த கணம் பார்த்தால் அது அங்கே இருக்காது. எவ்வளவு தூரம் ஓடிவிட்டது என்பதைக் கூடக் கண்டுபிடிக்க முடியாது. இதைத்தான் முன் ச்லோகத்தில் ஸாதகன் மிகவும் கவனமாக இருந்து பரமாத்மாவைத் தவிர வேறு எதைப் பற்றியும் மனதில் சிந்தனை எழாமல் பார்த்துக் கொள்ளவேண்டும் என்று சொன்னார். ஆனால் எவ்வளவுதான் கவனமாக இருந்தாலும், ஒரு கணம் வாய்ப்புக் கிடைத்தாலும் மனம் சட்டென்று தப்பி ஓடிவிடும். எங்கு ஓடிற்று, எப்பொழுது ஓடிற்று என்று நினைத்துக் கூடப் பார்க்க முடியாது. பரமாத்மாவை விட்டு மற்ற விஷயங்கள்பால் மனம் ஓடுவதற்கு உண்மையான காரணம் அஞ்ஞானம்தான். அந்த மோஹத்தினால் ஆனந்தமான, சாந்தியின் எல்லையற்ற கடலான, ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவை விட்டுவிட்டு, நொடியில் அழியக்கூடியதும், அநித்யமானதும், துக்கத்தைத் தரக்கூடியதுமான போக விஷயங்கள்பால் மனம் ஓடித் திளைக்கிறது. அஞ்ஞானத்திற்கு அடுத்தபடியே ஆயினும், 'இந்த போக விஷயத்தில் வெகுநாள் பழக்கம்' என்பது தான் ஸாதனைக்கு இடையூறான முக்ய காரணம். ஆகுவே ஸாதகன், வேறு விஷயங்களில் மனம் செல்வதை அறிந்தவுடனேயே மிகவும் கவனத்துடன் எதற்கும் இடம் கொடாது உறுதியுடன் அதைப் பிடித்து நிறுத்திப் பரமாத்மாவிடம் கொண்டு சேர்க்க வேண்டும். மீண்டும், மீண்டும் போக விஷயங்களிலிருந்து மனத்தை மீட்டுப் பரமாத்மாவிடம் கொண்டு சேர்க்கும் பயிற்சியை மேற்கொள்ள வேண்டும். மனம் பலவாறு நயந்து வணங்கிக் கேட்டுக் கொண்டாலும், கெஞ்சினாலும், ஆசை, அன்பு, பயம் காட்டினாலும், அவற்றுக்குச் சிறிதும் இடம் கொடுக்கக் கூடாது. மனதிற்குச் சிறிது இடம் கொடுத்தாலும், அதன் முரட்டுத்தனம் வளர்ந்துவிடும். இந்த நிலையில் மனதிற்குக் கொஞ்சம் இணங்கிவிட்டால் நோயாளிக்கு ஒவ்வாததைக் கொடுத்து விடுவதுபோல – குழந்தையின் கையில் கூரான கத்தியைக் கொடுத்து விடுவதுபோல – கார்யம் கெட்டுவிடும். எச்சரிக்கைதான் இங்கே பெரிய ஸாதனை. இந்த நிலையில் ஸாதகன் கொஞ்சம் எச்சரிக்கை தவறினாலும், சக்தியை இழந்தாலும், அவனுக்கு த்யானயோகம் கைகூடாது. ஆகவே அவன் உறுதியாக, கவனத்துடன் இருக்கவேண்டும். மனத்தை மீண்டும், மீண்டும் விஷயங்களிலிருந்து மீட்டு பகவானிடம் ஈடுபடுத்த வேண்டும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** முன் ச்லோகத்திலும், இதிலும் 'ஆத்மா' என்றால் 'பரமாத்மா' என்று பொருள் கூறுவானேன்?

**பதில்:** ஆத்மா, பரமாத்மா இரண்டும் ஒன்றுதான் என்று கூறுமிடம் இது. இதை விளக்குவதற்காகவே இங்கு ஆத்மா என்றால் பரமாத்மா என்று பொருள் கூறப்பட்டது.

**பொருத்தம்:** சித்தத்தை எல்லாத் திசைகளிலிருந்தும் தடுத்து நிறுத்திப் பரமாத்மாவில் நிலைபெறச் செய்தால் என்ன ஆகும் என்பதை அடுத்து விவரிக்கிறார்—

**प्रशान्तमनसं ह्येनं योगिनं सुखमुत्तमम्।**
**उपैति शान्तरजसं ब्रह्मभूतमकल्मषम्॥ २७॥**

**ப்ரஶாந்தமநஸம் ஹ்யேநம் யோகி₃நம் ஸுக₂முத்தமம் ।**

**உபைதி ஶாந்தரஜஸம் ப்₃ரஹ்மபூ₄தமகல்மஷம் ॥ 27 ॥**

**ஹி** – ஏனெனில், **ப்ரஶாந்தமநஸம்** – மனம் நன்கு அமைதியடைந்தவனும், **அகல்மஷம்** – பாவங்கள் அற்றவனும், **ஶாந்தரஜஸம்** – ரஜோகுணம் (அதாவது உலகியல் ஈடுபாடு) அடங்கியவனும், **ப்₃ரஹ்மபூ₄தம்** – ஸத் சித் ஆனந்தமயனான ப்ரம்மத்திலே ஒன்றியவனும் ஆன, **ஏநம் யோகி₃நம்** – இந்த யோகியை, **உத்தமம் ஸுக₂ம்** – உயரிய ஸுகம் (பேரானந்தம்), **உபைதி** – வந்தடைகிறது.

ஏனெனில் மனம் நன்கு அமைதியடைந்தவனும் பாவங்கள் அற்றவனும் உலகியல் ஈடுபாடு அடங்கியவனும் ஸத் சித் ஆனந்தமயனான ப்ரம்மத்திலே ஒன்றியவனும் ஆன இந்த யோகியை உயரிய ஸுகம் (பேரானந்தம்) வந்தடைகிறது.

**கேள்வி:** 'ப்ரஶாந்தமநஸம்' என்றால் யார்?

**பதில்:** விவேகம், வைராக்யம் இவற்றின் வலிமையினால் போக விஷயங்களைச் சிந்திப்பதை விடுத்து, சஞ்சலம், விக்ஷேபம் (தடுமாற்றம்) இன்றி மனம் ஸ்திரமாகவும் தெளிவாகவும் ஆகி, அதன் பயனாக, பரமாத்மாவின் ஸ்வரூபத்தில் நிலைத்து நின்றுவிட்ட யோகியை 'ப்ரஶாந்தமநா:' என்று சொல்கிறார்.

**கேள்வி:** 'அகல்மஷம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** மனிதனைக் கீழ்நிலைக்கு இழுத்துத் தள்ளும் தமோகுணம், அதன் விளைவான வீணான செயல், சோம்பேறித்தனம், அதிகத் தூக்கம், மோஹம், தீய குணங்கள், தீய நடவடிக்கைகள் முதலிய எவ்வளவு மலங்கள் உண்டோ, அவற்றிற்கு 'கல்மஷம்' என்று பெயர். இக்கல்மஷங்கள் – பாவங்கள் – அறவே அற்றவனை 'அகல்மஷ:' என்கிறார்.

**கேள்வி:** 'அகல்மஷம்' என்பதற்குப் பாவச் செயல்களும், பயனைக் கருதிச் செய்யப்படும் புண்ய கர்மங்களும் இல்லாதவனை – என்று சொன்னால் என்ன தவறு?

**பதில்:** பயனைக் கருதிச் செய்யப்படும் புண்ய கர்மங்கள் இல்லாதவன் என்பது ஶாந்தரஜஸம் என்ற சொல்லில் அடங்கிவிட்டது. ஆகவே, இங்கே பாவ கர்மங்களை மட்டும் அகற்றுவதைத்தான் 'அகல்மஷம்' என்ற சொல் குறிக்கிறது.

**கேள்வி:** 'ஶாந்தரஜஸம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** பற்று, ஆவல், காமம், லோபம், அடையவேண்டுமென்ற ஊக்கம், பயனைக் கருதிச் செய்யப்படும் கர்மங்கள் எல்லாம் ரஜோகுணத்தின் விளைவுகள் (14/7,12). இவை ரஜோகுணத்தை மேலும் வளர்க்கவும் செய்கின்றன. இவையற்றவனை 'ஶாந்தரஜஸம்' என்கிறார். சஞ்சலமயமான விக்ஷேபமும், ரஜோகுணத்தின் செயல்தான். ஆயினும் அதன் விளக்கம் 'ப்ரஶாந்தமநஸம்' என்ற சொல்லில் அடங்கிவிட்டது. ஆகவே, அதை இங்கே மீண்டும் சொல்லவில்லை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ப்ரஹ்மபூதம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** நான் உடல் அல்லன். ஸத் சித் ஆனந்தமயமான 'ப்ரம்மம்' என்ற பாவனையைப் பயிற்சி செய்யச் செய்ய, ஸாதகன் ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவில் திடமாக நிலை பெறுகிறான். இப்படி இரண்டறக் கலந்தவனை 'ப்ரஹ்மபூதம்' என்று கூறுகிறார்.

**கேள்வி:** இந்த 'ப்ரஹ்மபூதம்' என்ற சொல் ஸாதகனைக் குறிக்கிறதா அல்லது ஸித்தபுருஷனைக் குறிக்கிறதா?

**பதில்:** 'ப்ரஹ்மபூதம்' என்ற சொல் அபேத வழியில் செல்கின்ற உயர்ந்தரக ஸாதகனைக் குறிக்கும். இவனிடம் ரஜோகுணமும், தமோகுணமும் அற்றுப் போய்விட்டன. ஆயினும், இவன் குணங்களை முற்றிலுமாகக் கடந்தவன் அல்லன். இவன், தன் நோக்கில், ப்ரம்மத்தின் ஸ்வரூபத்தில் நிலை பெற்றிருக்கிறான். ஆயினும் உண்மையில் ப்ரம்மத்தை இவன் அடையவில்லை. இவ்விதம் ப்ரம்மத்தில் நிலைபெற்றவன் விரைவில் தத்வஞானம் பெற்று ப்ரம்மத்தை அடைகிறான். இக்காரணத்தால்தான் அடுத்த ச்லோகத்தில், 'முடிவற்ற, முழுமையான ஸுகத்தை அடைவது' என்பது இந்நிலையின் பயனாகச் சொல்லப் பட்டிருக்கிறது. இந்த முடிவற்ற, முழுமையான ஸுகத்தை அடைவதுதான் 'ப்ரம்மத்தை அடைவது' ஆகும். 5/24ல் கூட இதே பொருளில்தான் 'ப்ரஹ்மபூத:' என்ற சொல் வருகிறது. அதன் பயனாக நிர்வாண ப்ரம்மத்தை அடைவான் என்று கூறப்பட்டது. 18/54ல் 'ப்ரஹ்மபூதன்' பராபக்தியை (தத்வ ஞானத்தை) அடைவான் என்று கூறிவிட்டு, மேலே பரமாத்மாவை அடைவதைப் பற்றி 18/55ல் கூறுகிறார். ஆகவே, இங்கு 'ப்ரஹ்மபூதம்' என்ற சொல் ஸித்தபுருஷனைக் குறிப்பிடாது.

**கேள்வி:** 'உயரிய ஸுகம் கிடைக்கிறது' என்றால் என்ன பொருள்?

**பதில்:** தமோகுண, ரஜோகுணங்களைக் கடந்து சுத்த ஸத்வத்தில் நிலை கொண்ட ஸாதகன் நித்யமான, விஞ்ஞானமயமான, ஆனந்தமயமான பரமாத்மாவை த்யானம் செய்து, இரண்டறக் கலந்த பிறகு, அவனுக்கு த்யானத்தினால் உண்டாகும் ஸாத்விக ஆனந்தம் கிடைக்கிறது. அதை இங்கே உத்தம ஸுகம் என்று கூறுகிறார். 5/21ன் முதல் பாதியில் ஸுகம் என்றும், 5/24ல் 'அந்த:ஸுக:' என்றும் கூறியதை இங்கு 'உத்தம ஸுகம்' என்கிறார்.

**பொருத்தம்:** பரமாத்மாவிடம் அபேத மனத்துடன் த்யானம் செய்யும் ப்ரம்மபூதனான யோகியின் நிலையைக் கூறி, இப்போது அதன் பயனைக் கூறுகிறார்—

**युञ्जन्नेवं सदात्मानं योगी विगतकल्मषः।**
**सुखेन ब्रह्मसंस्पर्शमत्यन्तं सुखमश्नुते ॥ २८ ॥**

**யுஞ்ஜந்நேவம் ஸதா₃த்மாநம் யோகீ₃ விக₃தகல்மஷ: ।**
**ஸுகே₂ந ப்₃ரஹ்மஸம்ஸ்பர்ஶமத்யந்தம் ஸுக₂மஶ்நுதே ॥ 28 ॥**

**விக₃த கல்மஷ:** – பாவமற்ற, **யோகீ₃** – (இத்தகைய) யோகி, **ஏவம்** – இவ்வாறு, **ஸதா₃** – எப்பொழுதும் (இடைவிடாது), **ஆத்மாநம்** – ஆத்மாவை, **யுஞ்ஜந்** – (பரமாத்மாவிடம்) ஈடுபடுத்தி, **ஸுகே₂ந** – எளிதாக, **ப்₃ரஹ்மஸம்ஸ்பர்ஶம்** – பரப்ரம்ம பரமாத்மாவை அடைவது என்னும், **அத்யந்தம்** – முடிவற்ற (நிறைவான), **ஸுக₂ம்** – ஆனந்தத்தை, **அஶ்நுதே** – அனுபவிக்கிறான்.

பாவமற்ற இத்தகைய யோகி இவ்வாறு எப்பொழுதும் இடைவிடாது ஆத்மாவைப் பரமாத்மாவிடம் ஈடுபடுத்தி எளிதாக பரப்ரம்ம பரமாத்மாவை அடைவது என்னும் முடிவற்ற நிறைவான ஆனந்தத்தை அனுபவிக்கிறான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'விகதகல்மஷ: யோகீ' (பாவமற்ற யோகி) என்று இங்கு யாரைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** முன் ச்லோகத்தில் 'அகல்மஷம்' என்ற சொல்லுக்குச் சொன்ன பொருள்தான் 'விகதகல்மஷ:' என்பதற்கும் ஆகும். இவ்விதம் பாவமற்ற உயர்ந்த நிலையை அடைந்துவிட்ட ஸாதகன், பேதமற்ற உணர்வுடன் பரமாத்ம ஸ்வரூபத்தை த்யானம் செய்கிறான். அவனை 'யோகி' என்று குறிப்பிடுகிறார்.

**கேள்வி:** இவ்வாறு இடைவிடாது, ஆத்மாவைப் பரமாத்மாவில் ஈடுபடுத்துவது என்றால் என்ன?

**பதில்:** 25வது ச்லோகத்தில் சொல்லப்பட்ட ரீதியில், காணும் பொருளின் சிந்தனை அகன்று, உறுதியான முடிவுடன் ஸாதகன் இடைவிடாது அபேத எண்ணத்தோடு பரமாத்மாவில் நிலைத்து நிற்பது – அதாவது ப்ரம்மரூபமாகவே ஆவதுதான், மேலே சொன்னவிதம் ஆத்மாவைப் பரமாத்மாவில் ஈடுபடுத்துவது ஆகும்.

**கேள்வி:** 12/5ல் பரமாத்மாவை அடைவதாகிய நிர்குண உபாஸனை சிரமப்பட்டு அடையப்படுவது என்று கூறுகிறார். இங்கே 'அவ்யக்த பரப்ரம்மத்தை அடைவது ஸுகமாக நடைபெறும்' என்று கூறுகிறாரே. இதற்கு என்ன காரணம்?

**பதில்:** 'தேஹம்தான் நான்' என்று தேஹாபிமானமுள்ளவனுக்கு, அந்த நிர்குண உபாஸனை உண்மையில் மிகவும் கடினமானதுதான். 12வது அத்யாயத்தில் 'தேஹவத்பி:' – தேஹாபிமானம் உள்ளவர்களால் அடைய முடியாது என்று கூறுகிறார். ஆனால், இங்கே 'ப்ரம்மபூதன்' ஆன பிறகு, ஸாதகன் ஸுகமாக ப்ரம்மத்தை அடைகிறான் என்கிறார். ஸாங்க்யயோக ஸாதகன் தேஹாபிமானத்தை விட்டவனாதலால் ப்ரம்மத்தில் நிலை பெறுகிறான். இந்த ஸாதகனுக்கு தேஹாபிமானம் இல்லாதபடியால் ப்ரம்மத்தின் ஸ்வரூபத்தில் பேதமின்றி நிலை பெறுகிறான். அப்பொழுது அவன் ப்ரம்மத்தை ஸுகமாகவே அடைகிறான். ஆகவே, அங்கு கூறும் தகுதி வேறு, இங்கு கூறும் தகுதி வேறு. அதிகார பேதத்தால் இப்படிச் சொல்வது முற்றிலும் சரிதான்.

**கேள்வி:** 'பரப்ரம்ம பரமாத்மாவை அடைவதென்னும் முடிவற்ற ஆனந்தத்தை அனுபவிக்கிறான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உலகியலில் எவற்றையெல்லாம் மிகப்பெரிய ஸுகம் என்று கருதுகிறோமோ, உண்மையில் அவற்றில் எல்லாம் ஸுகமே இல்லை. ஏனெனில், அவற்றில் எதுவும் மற்றெல்லாவற்றையும் விடச் சிறந்ததாகவோ அல்லது எக்காலத்திலும் ஒரேவிதமாகவோ இல்லை. அதனால்தான் வேதம் கூறுகிறது—

**யோ வை பூ$_4$மா தத்ஸுக$_2$ம் நால்பே ஸுக$_2$மஸ்தி, பூ$_4$மைவ ஸுக$_2$ம் பூ$_4$மா த்வேவ விஜிஜ்ஞாஸிதவ்ய:** (ச$_2$ாந்தே$_3$ாக்$_3$ய உபநிஷத்$_3$ 7/23/1)

எது பூமாவோ (எதைக் காட்டிலும் உயர்ந்தது இல்லையோ) அதுவே ஸுகம்; அல்பத்தில் ஸுகம் இல்லை. பூமாவே ஸுகம், பூமாவைப் பற்றி விசேஷமாகத் தெரிந்து கொள்வதற்கு முயற்சி செய்யவேண்டும்.

அல்பம், பூமா என்றால் என்ன என்பதை விளக்கி வேதம் மேலும் கூறுகிறது—

**யத்ர நாந்யத்பச்யதி நாந்யச்ச்$_2$ருணோதி நாந்யத்$_3$விஜாநாதி ஸ பூ$_4$மாऽத$_2$ யத்ராந்யத்பச்யதி அந்யச்ச்$_2$ருணோத்யந்யத்$_3$விஜாநாதி தத$_3$ல்பம் யோ வை பூ$_4$மா தத$_3$ம்ருதமத$_2$ யத$_3$ல்பம் தந்மர்த்யம்** (ச$_2$ாந்தே$_3$ாக்$_3$ய உபநிஷத்$_3$ 7/24/1)

எந்தத் தத்வத்தில் வேறொன்றைப் பார்க்க முடியாதோ, வேறொன்றைக் கேட்க முடியாதோ, வேறொன்றை அறிய முடியாதோ, அது 'பூமா'. எந்த அவித்யையில் வேறொன்றைப் பார்க்கிறானோ, வேறொன்றைக் கேட்கிறானோ, வேறொன்றை அறிகிறானோ, அது 'அல்பம்'. எது பூமாவோ அது அழியாதது; எது அல்பமோ அது அழியக்கூடியது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இன்று இருந்து நாளை அழிவது உண்மையில் ஸுகமன்று. ஆனால் அதில் ஓர் அம்சத்தில் ஸுகம் இருப்பதாகக் கொண்டாலும், அது மிகவும் இழிந்தது; மதிக்கத்தக்கதன்று. யாக்ஞவல்க்ய மஹரிஷி ஸுகங்களைச் சீர்தூக்கிப் பார்த்துச் சொல்கிறார்: "அகில உலக ஸாம்ராஜ்யம், பூவுலகில் உள்ள முழு ஐசுவர்யம், மனைவி-மக்கள், பணம், நிலம், உடல்நலம், பெருமை, புகழ் முதலிய எல்லா போகப் பொருட்களும் எவனிடம் உள்ளனவோ, அவன் மனிதர்களில் எல்லோரைக் காட்டிலும் ஸுகமுள்ளவன். ஏனெனில் மனிதனுடைய கணிப்பில் இதுதான் மிகப் பெரிய ஆனந்தம்; இதைக் காட்டிலும் நூறு மடங்கு பித்ரு லோகத்தில் உள்ள ஆனந்தம்; அதிலும் நூறு மடங்கு கந்தர்வ லோகத்தில் உள்ள ஆனந்தம்; அதிலும் நூறு மடங்கு தங்கள் கர்மத்தின் பயனாக தேவர்களாகி விட்டவர்களின் ஆனந்தம்; அதிலும் நூறு மடங்கு ஆஜான தேவர்களுடைய (தேவர்களாகவே பிறந்தவர்கள்) ஆனந்தம்; அதிலும் நூறு மடங்கு ப்ரஜாபதி லோகத்தில் கிடைக்கும் ஆனந்தம்; அதிலும் நூறு மடங்கு ப்ரம்மலோகத்தில் பெறப்படும் ஆனந்தம். அதுவே, பாவமற்ற ஆசைகளற்ற சுரோத்ரியனின் உயர்ந்த ஆனந்தம். ஏனெனில், வேட்கையற்ற சுரோத்ரியன் ப்ரத்யக்ஷ ப்ரம்ம லோகமே (ப்ருஹதாரண்ய உபநிஷத் 4/3/33). ப்ரம்மத்தை நேரிடையாக அடைந்துவிட்டவனுக்கு இந்த அளப்பரிய, எல்லையற்ற, சிந்தனைக்கு அப்பாற்பட்ட ஆனந்தம் கிடைக்கிறது. அதை வேறு எதனுடனும் ஒப்பிட்டுப் பார்க்க முடியாது. இந்த நிகரற்ற ஆனந்தம் பரப்ரம்ம பரமாத்மாவை அடைந்தவனுக்கு அவனுடைய ஸ்வரூபமாகவே இருக்கிறது."

இந்த முடிவற்ற ஆனந்தத்தைத்தான் 21வது ச்லோகத்தில் 'ஆத்யந்திக ஸுகம்' என்றும், 5/21ல் 'அக்ஷய ஸுகம்' என்றும் சொன்னார்.

**பொருத்தம்: இவ்விதம் அபேத பாவனையுடன் ஸாதனை புரியும் ஸாங்க்யயோகி செய்கின்ற த்யானத்தையும், அதன் பயனையும் கூறிவிட்டு, அவன் நடைமுறை வாழ்க்கையில் எப்படி இருப்பான் என்று கூறுகிறார்—**

**सर्वभूतस्थमात्मानं सर्वभूतानि चात्मनि।**
**ईक्षते योगयुक्तात्मा सर्वत्र समदर्शनः॥ २९॥**

**ஸர்வபூ₄தஸ்த₂மாத்மாநம் ஸர்வபூ₄தாநி சாத்மநி ।**
**ஈக்ஷதே யோக₃யுக்தாத்மா ஸர்வத்ர ஸமத₃ர்ஶந: ॥ 29 ॥**

**யோக₃யுக்தாத்மா** – எங்கும் நிறைந்த சைதன்ய ரூபனான பரமாத்மாவிடம் இரண்டறக் கலந்த நிலை என்னும் யோகத்தோடு கூடிய ஆத்மவானும், **ஸர்வத்ர** – எல்லாவற்றிலும், **ஸமத₃ர்ஶந:** – ஸமநோக்குடையவனுமான யோகி, **ஆத்மாநம்** – ஆத்மாவை, **ஸர்வ–பூ₄தஸ்த₂ம்** – எல்லா சராசரங்களிலும் இருப்பதாகவும், **ச** – மேலும், **ஸர்வபூ₄தாநி** – எல்லா சராசரங்களும், **ஆத்மநி** – ஆத்மாவில் (கற்பிக்கப்பட்டு இருப்பதாகவும்), **ஈக்ஷதே** – காண்கிறான்.‡

எங்கும் நிறைந்த சைதன்ய ரூபனான பரமாத்மாவிடம் இரண்டறக் கலந்த நிலை என்னும் யோகத்தோடு கூடிய ஆத்மவானும் எல்லாவற்றிலும் ஸமநோக்குடையவனுமான யோகி

---

‡ இதே கருத்தை ஈஶாவாஸ்யோபநிஷத் கூறுகிறது—

யஸ்து ஸர்வாணி பூ₄தாந்யாத்மந்யேவாநுபஶ்யதி ।
ஸர்வபூ₄தேஷு சாத்மாநம் ததோ ந விஜுகு₃ப்ஸதே ॥

(மந்த்ரம் 6)

ஆனால், எவன் எல்லா ப்ராணிகளையும் பரமாத்மாவிலும், அப்படியே பரமாத்மாவை எல்லா ப்ராணிகளிலும் பார்க்கிறானோ, அப்பொழுது அவன் யாரிடமும் அருவருப்பு அடைய மாட்டான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஆத்மா எல்லா சராசரங்களிலும் இருப்பதாகவும் மேலும் எல்லா சராசரங்களும் ஆத்மாவில் கற்பிக்கப்பட்டு இருப்பதாகவும் காண்கிறான்.

**கேள்வி:** 'யோகயுக்தாத்மா' என்றால் யார்?

**பதில்:** ஸத் சித் ஆனந்தமயமான நிர்குண-நிராகார ப்ரம்மத்தில் எவன் இரண்டற்ற உணர்வோடு நிலை பெறுகிறானோ, அந்த ப்ரம்மபூத யோகியை இங்கே 'யோகயுக்தாத்மா' என்கிறார். இவனையே 5/21ல் 'ப்ரஹ்மயோகயுக்தாத்மா' என்றும், 5/24, 6/27, 18/54ல் 'ப்ரஹ்மபூதன்' என்றும் சொன்னார்.

**கேள்வி:** எங்கும் ஸமநோக்குடைய யோகி என்றால் என்ன?

**பதில்:** 5/18லும், 6/32லும் ஞானியான மஹாத்மாவின் ஸம தர்சனத்தை விளக்கி இருக்கிறார். அவ்விதம் இந்த யோகி எல்லா உயிரினங்களிடமும், சாஸ்த்ர முறைப்படி நல்லவிதமாக நடந்து கொள்கிறான். எப்பொழுதும் இடைவிடாது எல்லோரிடமும் தன் ஸ்வரூபமான, ஒன்றேயான, அகண்டமான, சேதனமான ஆத்மாவையே காண்கிறான். இதுவே எங்கும் ஸமநோக்குடைய யோகி என்பதன் பொருள்.

**கேள்வி:** 'ஆத்மாவை எல்லா உயிரினங்களிலும் இருப்பதாகவும், எல்லா உயிரினங்களையும் ஆத்மாவில் கற்பிக்கப்பட்டதாகவும் காண்பது' என்றால் என்ன?

**பதில்:** ஈடு இணையற்ற ஒன்றேயான ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்ம பரமாத்மாதான் உண்மையான தத்வம். அதைத் தவிர இவ்வுலகு என்பது எதுவுமில்லை. இந்த ரஹஸ்யத்தை நன்றாக உணர்ந்து, பரமாத்மாவில் இரண்டற்ற நிலையில் நிற்பவன் – கனவில் காணப்படும் பொருட்களுக்கெல்லாம் தானே ஆதாரமாக நிறைந்திருப்பது போல – இரண்டற்ற ஒன்றேயான ஆத்மாதான் அத்தனை வடிவங்களுக்கும் ஆதாரமாக நிறைந்திருக்கிறது; அதைத் தவிர வேறு ஒன்றுமே இல்லை என்று காண்கிறான். இந்த விஷயத்தை மிகவும் நன்றாக அனுபவிப்பதுதான் அனைத்து உயிரினங்களிலும் ஆத்மாவைக் காண்பதாகும். இதைப்போல, அனைத்துச் சராசர ப்ராணிகளையும் ஆத்மாவில் கற்பிக்கப்பட்டதாகப் பார்ப்பது, அதாவது கனவிலிருந்து விழித்துக் கொண்ட மனிதன், 'கனவில் காணப்பட்டவையெல்லாம் கற்பனையே; உண்மை அல்ல. ஆயினும் தோற்றமளித்தன' என்று காண்பது போலவும் அல்லது பலவிதமான கற்பனை செய்கிற மனிதன் கற்பிக்கப்பட்ட காட்சிகளைத் தன்னுடைய ஸங்கல்பத்தின் அடிப்படையில் ஆத்மாவில் காண்கிறானே, அப்படிக் காண்பதுதான் 'எல்லா சராசரங்களையும் ஆத்மாவில் கற்பிக்கப்பட்டிருப்பதாகக் காண்பது' ஆகும். ஆத்மா எல்லா உயிரினங்களிலும் உள்ளது என்ற கருத்தில் 'ஸர்வபூதஸ்தம்' என்று கூறினார். ஆத்மாவில் எல்லா உயிரினங்களும் உள்ளன என்று கூறவில்லை. ஆனால் ஆத்மாவில் எல்லா உயிரினங்களையும் கற்பனையில் காண்கிறான் என்று கூறினார்.

**பொருத்தம்:** இவ்விதம் ஸாங்க்யயோக ஸாதனை புரியும் யோகியையும், அவனுக்கு எங்கும் ஸமதர்சனம் உள்ள கடைசி நிலையையும் சொல்லிவிட்டு, பக்தியோக ஸாதனை புரியும் யோகியின் கடைசி நிலையையும், அவன் எங்கும் பகவானை தர்சனம் செய்வதையும் கூறுகிறார்—

**यो मां पश्यति सर्वत्र सर्वं च मयि पश्यति।**
**तस्याहं न प्रणश्यामि स च मे न प्रणश्यति॥ ३०॥**

**யோ மாம் பஶ்யதி ஸர்வத்ர ஸர்வம் ச மயி பஶ்யதி ।**

**தஸ்யாஹம் ந ப்ரணஶ்யாமி ஸ ச மே ந ப்ரணஶ்யதி ॥ 30 ॥**

**ய:** – எவன், **ஸர்வத்ர** – எல்லா சராசரங்களிலும், **மாம்** – எல்லோருக்கும் ஆத்மாவான வாஸுதேவனான நானே (வ்யாபித்திருப்பதாக), **பஶ்யதி** – பார்க்கிறானோ,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ஸர்வம் ச** – எல்லா சராசரங்களும், **மயி** – வாஸுதேவனான என்னிடம் அடங்கி இருப்பதாக, **பஶ்யதி** – பார்க்கிறானோ, **தஸ்ய** – அவனுக்கு, **அஹம்** – நான், **ந ப்ரணஶ்யாமி** – காணப்படாமல் போவதில்லை. **ஸ: ச** – அவனும், **மே** – எனக்கு, **ந ப்ரணஶ்யதி** – காணப்படாமல் போவதில்லை.

எவன் எல்லா சராசரங்களிலும் எல்லோருக்கும் ஆத்மாவான வாஸுதேவனான நானே வ்யாபித்திருப்பதாகப் பார்க்கிறானோ, எல்லா சராசரங்களும் வாஸுதேவனான என்னிடம் அடங்கி இருப்பதாகப் பார்க்கிறானோ, அவனுக்கு நான் காணப்படாமல் போவதில்லை. அவனும் எனக்குக் காணப்படாமல் போவதில்லை.

**கேள்வி:** *எல்லா சராசரங்களிலும் வாஸுதேவனையும், வாஸுதேவனிடத்தில் எல்லா சராசரங்களையும் பார்ப்பது – என்றால் என்ன?*

**பதில்:** மேகத்தில் ஆகாசமும், ஆகாசத்தில் மேகமும் உள்ளது போல, எல்லா சராசரங்களிலும் வாஸுதேவனும், வாஸுதேவனிடம் எல்லா சராசரங்களும் நிறைந்திருக்கின்றன என்ற அனுபவமே அவ்வாறு பார்ப்பது ஆகும்.

**கேள்வி:** *இப்படிப் பார்ப்பது என்பது பகவான் எல்லாவற்றிற்கும் காரணம். பகவானின் படைப்புகள் ப்ராணிகள் என்ற கார்ய–காரண நோக்கிலா? 'எல்லா ப்ராணிகளும் பகவானில் அடங்கினவை. பகவான் எல்லாவற்றிலும் வ்யாபித்திருக்கிறார்' என்ற வ்யாப்ய–வ்யாபகக் கருத்திலா அல்லது பகவான் எல்லாவற்றிற்கும் ஆதாரம். மற்றவை தாங்கப்படுபவை என்ற 'ஆதார–ஆதேய'க் கருத்திலா?*

**பதில்:** எல்லா நோக்கிலும் இப்படிப் பார்க்க முடியும். ஏனெனில் மேகங்களில் ஆகாசம் காணப்படுவது போல, பகவான் எல்லா சராசரங்களுக்கும் மூல காரணம். அவர் எங்கும் நிறைந்திருக்கிறார். அவர் எல்லாவற்றிற்கும் ஒரே ஆதாரம்.

**கேள்வி:** *பகவான் ஆகாசம் போல எல்லா சராசர உலகுக்கும் மூல காரணமாக இருப்பது எப்படி? எங்கும் நிறைந்தும், எல்லாவற்றிற்கும் ஆதாரமாகவும் எப்படி இருக்கிறார்?*

**பதில்:** 'ஆகாஶாத்$_3$வாயு:, வாயோரக்$_3$நி:, அக்$_3$நேராப:' (தைத்திரீய உபநிஷத்$_3$ 2/1) என்ற ஶ்ருதிக்கு ஏற்ப ஆகாசத்திலிருந்து வாயு உண்டாகிறது. வாயுவிலிருந்து நெருப்பு. நெருப்பிலிருந்து நீர்மயமான மேகம் உண்டாகிறது. ஆகாசம் ஐம்பெரும் பூதங்களில் முதன்மையானது; எல்லாவற்றிற்கும் காரணமானது; காரண வரிசையில் ஆகாசத்திற்கு மூலகாரணம் ப்ரக்ருதி. இந்த ப்ரக்ருதிதான் பரமேசுவரனுடைய தலைமையில் எல்லாவற்றையும் படைக்கிறது. இந்த ப்ரக்ருதி பகவானின் தனிப்பட்ட சக்தி. ஆகவே, பகவானைத் தவிர வேறன்று. இந்த நோக்கில் அகில சராசரங்களும் பகவானிடம் உற்பத்தி ஆனவை. ஆகவே பகவானே எல்லாவற்றிற்கும் மூல காரணம். அவரே கூறியுள்ளார்:

**அஹம் ஸர்வஸ்ய ப்ரப$_4$வோ மத்த: ஸர்வம் ப்ரவர்ததே ।** (10/8)

'நான் எல்லாவற்றையும் தோற்றுவிப்பவன். என்னிடமிருந்துதான் எல்லாம் இயங்குகின்றன.'

இவ்விதம் ஆகாசம் மேகங்களின் எல்லாப் பகுதிகளிலும் முற்றும் நிறைந்து இருப்பதுபோல பகவான் எல்லா ப்ரபஞ்சத்திலும் நிறைந்து இருக்கிறார்.

**மயா ததமித$_3$ம் ஸர்வம் ஜக$_3$த$_3$வ்யக்தமூர்திநா ।** (9/4)

'வெளிப்படையாகத் தெரியாத மூர்த்தியான பரமாத்மாவான என்னால் இந்த உலகம் முழுவதும் வ்யாபிக்கப்பட்டிருக்கிறது.'

மேகங்களுக்கு ஆதாரமாக ஆகாசம் இருக்கிறது. ஆகாசமில்லாவிட்டால் மேகங்கள் எங்கே இருக்கும்? மேகம் மட்டுமென்ன? காற்று, நெருப்பு, தண்ணீர் முதலிய எந்த பூதமுமே ஆகாசத்தின் ஆதாரம் இல்லாமல் இருக்க முடியாது. அதுபோல அகில சராசரங்களுக்கும் பகவான் ஒருவனே பரம ஆதாரம் (10/42).

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** எல்லா உலகிலும் பகவானுடைய ஸாகார (உருவமுள்ள) ஸ்வரூபத்தையும், பகவானுடைய ஸாகார ஸ்வரூபத்தில் உலகம் முழுவதையும் எப்படிப் பார்க்க முடியும்?

**பதில்:** ஒரு பகல் வேஷக்காரன் பலவித வேஷங்கள் பூண்டு வருகிறான். அவனையும், அவனுடைய நடை, உடை, பாவனை, பேச்சு இவற்றையும் அறிந்தவர்கள், அவன் எந்த வேஷத்தில் வந்தாலும் அடையாளம் கண்டு கொள்கிறார்கள். அதுபோல அகில உலகிலும், எத்தனை உருவங்கள் உள்ளனவோ, அத்தனையும் பகவானுடைய வேஷங்களே. நாம் பகவானை அடையாளம் கண்டு கொள்வதில்லை. ஆகவே பகவான் வேறு, அவை வேறு என்று நினைக்கிறோம், அவற்றினிடம் பயப்படுகிறோம், பின்வாங்குகிறோம். அவற்றிற்கு ஸேவை செய்ய விரும்புவதில்லை. ஆனால் உலகில் உள்ள எல்லா உயிரினங்களிலும் பகவானை அடையாளம் கண்டு கொள்பவன், பகவான் எத்தனை உருவம் தரித்தாலும், வெளிப்படையாக, நடைமுறையில் வேற்றுமைகள் தெரிந்தாலும், உள்ளத்தில் அவனைப் பூஜிக்கிறான். நம் தகப்பனாரோ, உற்றார்-உறவினரோ, வேஷம் போட்டுக் கொண்டு வந்தால், அவர்களை நாம் அடையாளம் கண்டு கொண்டுவிட்டால், நாம் அவர்களுக்குப் பணிவிடை செய்யப் பின்வாங்குவோமா? இதைத்தான் கோஸ்வாமி துளஸீதாஸர் சொல்கிறார்:

'ஸீய ராமமய ஸப$_{3}$ ஜக$_{3}$ ஜாநீ ।
கரஉ(ம்) ப்ரநாம ஜோரி ஜுக$_{3}$ பாநீ ॥'

உலகனைத்தும் ஸீதாராம மயம் என்று கண்டு எல்லாவற்றையும் கைகூப்பி வணங்குகிறேன். வ்ரஜ பூமியில் கன்றுகளையும், கோபச் சிறுவர்களையும், அவர்களின் எல்லாப் பொருட்களையும் பலராமர் கண்ணனாகவே பார்த்தார்.‡ அதுபோல வ்ரஜ கோபிகளும் தமது ப்ரேமை நிறைந்த கண்களினால் கண்ணனையே எங்கும் எப்பொழுதும் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.* அதேபோல பக்தனும் எங்கும் பகவான் ஸ்ரீக்ருஷ்ணன்,

---

‡ வ்ரஜ பூமியில் நடந்த ஒரு நிகழ்ச்சி. யமுனைக்கரையில் பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் தம்முடைய நண்பர்களுடன் கூட 'வனபோஜனம்' என்ற கேளிக்கையில் ஈடுபட்டிருக்கிறார். இடுப்பில் புல்லாங்குழலைச் செருகி இருக்கிறார். இடது புறத்தில் ஒரு கொம்பு, ஒரு பிரம்பு, விரல்களின் இடுக்குகளில் எலுமிச்சை முதலிய ஊறுகாய்கள், உள்ளங்கையில் வெண்ணெய்ச் சாத கவளம் இவற்றுடன் நடுவில் கண்ணன் நிற்க, இடைச் சிறுவர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு, சிரிப்பும், கும்மாளமுமாகக் கையில் உள்ள அன்னத்தை ஒருவருக்கொருவர் ஊட்டிக் கொண்டு, அன்பு விருந்தில் திளைத்துக் கொண்டிருக்கிறார்கள். கரையிலிருந்து பசுங்கன்றுகள் வெகுதூரம் ஓடிவிட்டன. அப்பொழுது பகவான் அவற்றைத் தேடுவதற்காகச் சோற்றுக் கவளத்துடன் கரையேறி ஓடுகிறார். இந்தக் காட்சியைப் பார்த்து ப்ரம்மதேவன் மயங்கிவிட்டார். அவர் கன்றுகளையும், சிறுவர்களையும் கவர்ந்து சென்றுவிட்டார். கன்றுகளையும், சிறுவர்களையும் காணாமல், இது ப்ரம்மாவின் செயல் என்று தெரிந்து, சிறுவர்களுடைய, கன்றுகளுடைய அன்னையர் கண்கலங்காமல் இருக்க வேண்டுமென்பதற்காகவும், ப்ரம்மாவுக்கு அறிவுறுத்துவதற்காகவும், பகவான் தாமே கன்றுகளாகவும், சிறுவர்களாகவும், அதே நடை, உடை, பாவனைகளுடன் தோன்றிவிட்டார். எந்தக் கன்று, எந்தச் சிறுவன், எப்படி உடலோ, எப்படிக் கைகால்களோ, எப்படி அவன் கைக் குச்சியோ, கொம்போ, குழலோ, உறியோ, உடையோ, எப்படி இயல்போ, குணமோ, அமைப்போ, வயதோ, பெயரோ, நடை, உடை, பாவனைகளோ, அப்படியே ஸாக்ஷாத் ஆக ஆகிவிட்டார். எல்லாமே ஹரிமயம் என்ற சொல் நிஜமாகிவிட்டது. ஸ்ரீபலராமருக்கு முதலில் ஒன்றும் புரியவில்லை. சிறுவர்களின் அன்னையருக்கோ முன்னைக் காட்டிலும் அவர்களிடம் ப்ரேமை வளர்வதையும், பால் மறந்துவிட்ட கன்றுகளுக்குத் தாய்ப் பசுக்கள் பால் ஊட்டி மிக அதிக அன்பு பாராட்டுவதையும் பார்த்தார். அவருக்கு ஸந்தேஹம் வந்துவிட்டது. அவர்களை ஊன்றிக் கவனித்தார் அப்பொழுது பலராமர், எங்கும் எல்லோரிடமும், கன்றுகளிடமும், சிறுவர்களிடமும், அவர்கள் வைத்திருந்த பொருட்களிலும் சங்கு-சக்ர-கதாதாரியான நான்கு திருக்கரங்கள் கொண்ட பகவானையே பார்த்தார்.

அதேவிதம் ப்ரம்மாவும் எல்லோரிடமும் குழலூதும் கண்ணனைப் பார்த்தார் அவர் பகவானை ஸ்தோத்ரம் செய்து மன்னிப்புக் கேட்டார். (ஸ்ரீமத்பாகவதம் ஸ்கந்தம் 10, அத்யாயம் 13).

* जित देखौं तित स्याममई है।
स्याम कुंज बन जमुना स्यामा, स्याम गगन घन घटा छई है॥
सब रंगनमें स्याम भरो है, लोग कहत यह बात नई है।
हौं बौरी, कै लोगन ही की स्याम पुतरिया बदल गई है॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ராமன், விஷ்ணு, சங்கரன், சக்தி என்று யாருக்கு எவர் இஷ்ட தெய்வமோ, அந்த தெய்வத்தின் உருவமுள்ள ஸ்வரூபத்தை எங்கும் பார்க்க வேண்டும். இதுதான் பகவானுடைய உருவமுள்ள ஸ்வரூபத்தை அகில உலகிலும் பார்ப்பது ஆகும்.

---

चंद्रसार रबिसार स्याम है, मृगमद सार काम बिजई है।
नीलकंठको कंठ स्याम है, मनहुँ स्यामता बेल बई है॥
श्रुतिको अच्छर स्याम देखियत, दीप सिखा पर स्यामतई है।
नर देवनकी कौन कथा है? अलख ब्रह्मछबि स्याममई है॥

ஜித தே₃கெ₂ள(ம்) தித ஸ்யாமமயீ ஹை ।
ஸ்யாம குஞ்ஜ ப₃ந ஜமுநா ஸ்யாமா, ஸ்யாம க₃க₃ந க₄ந க₄டா ச₂ஈ ஹை ॥
ஸப₃ ரங்க₃நமே(ம்) ஸ்யாம ப₄ரோ ஹை, லோக₃ கஹத யஹ ப₃ாத நஈ ஹை ।
ஹௌ(ம்) பெ₃ளரீ, கை லோக₃ந ஹீ கீ ஸ்யாம புதரியா ப₃த₃ல க₃ஈ ஹை ॥
சந்த்₃ரஸார ரபி₃ஸார ஸ்யாம ஹை, ம்ருக₃மத₃ ஸார காம பி₃ஜஈ ஹை ।
நீலகண்ட₂கோ கண்ட₂ ஸ்யாம ஹை, மநஹு(ம்) ஸ்யாமதா பே₃ல ப₃ஈ ஹை ॥
ஶ்ருதிகோ அச்ச₂ர ஸ்யாம தே₃கி₂யத, தீ₃ப ஸிகா₂ பர ஸ்யாமதஈ ஹை ।
நர தே₃வநகீ கௌந கதா₂ ஹை? அலக₂ ப்₃ரஹ்மச₂பி₃ ஸ்யாமமஈ ஹை ॥

எதைக் கண்டாலும் அது கண்ணன் (ஸ்ரீக்ருஷ்ணன்) மயமாக உள்ளது. கோபியர்களுக்கு எங்கும் பகவானின் தர்சனமே காணப்பட்டது என்ற பாவநிலையை வர்ணித்துக் கவி கூறுகிறார்.

பார்வை எங்கு, எதில் செல்கின்றதோ அங்கு, அதில் ச்யாமஸுந்தரனின் காட்சியே அவர்களுக்குத் தென்பட்டது. மலரும், இலையும் அடர்ந்த பூச்செடிகளில், வனத்தில் ஸ்ரீக்ருஷ்ணனின் காட்சி பரவிக் கிடந்தது. யமுனை நதியிலும் கண்ணனின் காட்சிதான். பரந்த வானவெளியிலும், திரண்டு கிடந்த நீருண்ட மேகங்களிலும் கண்ணனின் உருவமே இருந்தது. ஒவ்வொரு அணுவிலும் ச்யாமஸுந்தரனின் காட்சிதான் நிறைந்துள்ளது. மக்கள் இதனால் வியப்படைந்து இது மிகவும் அற்புதமான அஸாதாரணமான நிலையாக உள்ளதே என்று கூறினர். ஒரு கோபிகை கூறினாள். இது என்னவென்று புரியவில்லையே! ஒரு வேளை எனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா? அல்லது மக்கள் அனைவரும் தமது கண்களில் கண்ணன் என்ற கண்ணாடியை மாட்டிக் கொண்டனரா என்ன?

சந்த்ரனின் அமுதமயமான உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் கிரணங்களின் ஒளி வெள்ளத்தைக் காணும் போதும் ச்யாமஸுந்தரனின் தர்சனம்தான் கிடைக்கின்றது (சந்த்ரஸார்). ஊட்டம், சக்தி, தத்வம் நிறைந்துள்ள கதிரவனின் ஒளி வாய்ந்த கிரணங்களிலும் அவரது காட்சியே (ரவிஸார்). கஸ்தூரி மானின் உடலில் இருந்து வெளிப்படும் கஸ்தூரியின் நறுமணத்திலும் ச்யாமஸுந்தரன்தான் காணப்படுகின்றார் (ம்ருகமதஸார்). ராஸக்ரீடை நிகழ்ச்சியின்போது காமத்தை வென்றார் (காமவிஜயீஹை). நீலகண்ட பறவையை (கிளிபோல் இருப்பது; நீலவர்ணம் உடையது)ப் பார்க்கும்போதும் ஸ்ரீக்ருஷ்ணன்தான் தென்படுகிறார். ச்யாமஸுந்தரன் என்று விதைக்கப்பட்ட விதையே, செடியாக, கொடியாகக் காணும் இடம் எல்லாம் விரவிக் கிடக்கின்றது என்று தோன்றுகின்றது. வேதத்தின் எழுத்தில் விளங்குபவனும் அவனே! கொழுந்துவிட்டு எரியும் தீபத்தின் நுனியில் காட்சி தருபவனும் கண்ணனே! வேறு மனிதர்களையோ, தேவர்களையோ பற்றிய பேச்சு இங்கே ஏது? இங்கே காணப்படுவதோ அவ்யக்த பரப்ரம்மம். அதுவே ஸகுண ஸாகார வடிவத்தோடு அசையும், அசையா (சராசரம்) பொருட்களில் காணப்படுகின்றது.

அவ்யக்த நிரஞ்ஜன ப்ரம்மத்தின் காட்சிதான் எங்கும் உள்ளது.

வ்ரஜ கோபியர்களின் பக்தியையும், பாவத்தையும், ஸ்ரீமத்பாகவதம் அழகாக விளக்குகின்றது. பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் தன் பக்தனான உத்தவரை வ்ரஜத்திற்கு அனுப்பும்போது இவ்விதம் பகர்கிறார்—

தா மந்மநஸ்கா மத்ப்ராணா மத₃ர்தே₂ த்யக்ததை₃ஹிகா: ।
மாமேவ த₃யிதம் ப்ரேஷ்ட₂மாத்மாநம் மநஸா க₃தா: ।
யே த்யக்தலோகத₄ர்மாஶ்ச மதர்தே₂ தாந் பி₃ப₄ர்ம்யஹம் ॥
(ஸ்ரீமத்₃பா₄க₃வதம் 10/46/4)

கோபியர்களுடைய மனம் எப்போதும் என்னிடமே திளைத்திருக்கும். நானே அன்புக்குரியவன் என்பதால் அவர்கள் உலகியல் செயல்களை விட்டுவிட்டு அவர்களுடைய மனம், உயிர், ஆத்மா முதலியவற்றை என்னிடம் ஒப்படைத்து விட்டதால், நான் அவர்களைப் பாதுகாக்கிறேன். (ஸ ச மே ந ப்ரணஶ்யதி – அவன் காணாமல் போகமாட்டான் என்பதை ஒப்பு நோக்குக.)

நந்தபாபாவும், அன்னை யசோதையும் உத்தவருக்கு இப்படிச் சொல்கிறார்கள்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இதேபோல அர்ஜுனன் பகவானது திவ்யத் திருமேனியிலும்‡, அன்னை யசோதை குழந்தை கண்ணன் வாயிலும் கண்டனர்.$ மேலும் பக்த காகபுசுண்டியும் குழந்தை ஸ்ரீராமனின் வயிற்றில் அகில உலகையும் கண்டார்.§ இவ்விதம் பகவானது ஏதாவது ஒரு

---

ஸ்மரதாம் க்ருஷ்ணவீர்யாணி லீலாபாங்க₃நிரீக்ஷிதம் ।
ஹஸிதம் ப₄ாஷிதம் சாங்க₃ ஸர்வா ந: ஶிதி₂லா: க்ரியா: ॥
ஸரிச்சை₂ல வநோத்₃தே₃ஶாந் முகுந்த₃பத₃பூ₄ஷிதாந் ।
ஆக்ரீட₃ாநீக்ஷமாணாநாம் மநோ யாதி தத₃ாத்மதாம் ॥

(ஸ்ரீமத்₃ப₄ாக₃வதம் 10/46/21,22)

ஸ்ரீக்ருஷ்ணனின் லீலைகளைக் கண்டவர்களாய், அவனுடைய புன்சிரிப்பையும், பேச்சையும் நினைவு கூர்கின்றவர்களாய், எங்களுடைய செயல்கள் அனைத்தும் சிதிலமடைந்து போயின. ஓடைகள், மலைகள், வனங்கள் என்று முகுந்தனின் பாத ஸ்பர்சத்தால் புனிதமடைந்த இடங்களை எண்ணியும், அவனுடைய லீலைகளைக் கண்டும் எங்கள் மனம் க்ருஷ்ணமயமாகிவிட்டது. எத்திசையில் பார்த்தாலும் கண்களுக்கு க்ருஷ்ணனே காணப்படுகிறான்.

மேலும் உத்தவரிடம் கோபியர்கள் இவ்வாறு கூறலாயினர்:

ஸரிச்சை₂லவநோத்₃தே₃ஶா க₃ாவோ வேணுரவா இமே ।
ஸங்கர்ஷணஸஹாயேந க்ருஷ்ணேநாசரிதா: ப்ரபே₄ா ॥
புந: புந: ஸ்மாரயந்தி நந்த₃கோ₃பஸுதம் ப₃த ।
ஸ்ரீநிகேதைஸ்தத்பத₃கைர்விஸ்மர்தும் நைவ ஶக்நும: ॥
க₃த்யா லலிதயோத₃ாரஹாஸலீலாவலோகநை: ।
மாத்₄வ்யா கி₃ரா ஹ்ருததி₄ய: கத₂ம் தம் விஸ்மராமஹே ॥
ஹே நாத₂ ஹே ரமாநாத₂ வ்ரஜநாத₂ார்திநாஶந ।
மக்₃நமுத்₃த₄ர கோ₃விந்த₃ கோ₃குலம் வ்ருஜிநார்ணவாத் ॥

(ஸ்ரீமத்₃ப₄ாக₃வதம் 10/47/49-52)

"ப்ரபுவே! உத்தவ! இங்குள்ள நதி, மலை, காடு, பசுக்கள், மூங்கிற்காடு ஆகியவை ஸ்ரீக்ருஷ்ணனுடன் தொடர்பு கொண்டவை. இவற்றை அடிக்கடி நினைக்கும்போது, நந்தகோபனின் மைந்தனை, அழகு வண்ணனின் திருவடிச்சுவடு இருக்கையில் எங்களால் எப்படி மறக்க முடியும்? அவனுடைய நளினமான நடை, உதார புன்சிரிப்பு, உதார லீலைகள், மதுரமான சொற்கள் எங்கள் இதயத்தில் ஊறியுள்ளதை எப்படி மறக்க முடியும்?" இவ்வாறு பகவானையே நினைத்து, கண்களில் நீர் ததும்ப— "ஹே நாத! ஹே ரமாநாத! ஹே வ்ரஜநாத! ஹே சங்கடநாசகனே! ஹே கோவிந்த! ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கியுள்ள இந்த கோகுலத்தைத் தாங்களே கரையேற்றுங்கள்" என்று சொல்லி, விரஹ வேதனையினால் அழத் தொடங்கினர். இதை, 'தஸ்யாஹம் ந ப்ரணஶ்யாமி' – 'நானும் காணாமல் போக மாட்டேன்' என்பதற்கு உதாரணமாக அறியவேண்டும்.

‡ கீதையின் பதினொன்றாவது அத்யாயம் காண்க.

$ கண்ணன் சிறு குழந்தையாக இருந்தபோது தன்னுடைய விசித்ரமான பாலலீலைகளால் அன்னை யசோதைக்கும், கோகுலவாஸிகளுக்கும் நிகரற்ற இன்பத்தை அளித்தான். ஒரு நாள் அவன் மண்ணைத் தின்றான். அன்னை அதட்டினாள், 'அட பயலே! வாயைக் காட்டு. நீ மறைந்து ஏன் மண்ணைத் தின்றாய்?' 'அம்மா! என்மேல் உனக்கு நம்பிக்கை இல்லையானால் இங்கே என் வாயைப் பார்' என்று கண்ணன் தன் வாயைத் திறந்து காண்பித்தான். பார்த்துவிட்டு யசோதை திடுக்கிட்டுப் போனாள். கண்ணனுடைய சிறுவாயில் அன்னை, சராசரங்களெல்லாம் – ஜீவர்கள், ஆகாயம், பத்து திக்குகள், மலைகள், தீவுகள், கடல்கள், பூமி, காற்று, நெருப்பு, சந்த்ரன், நக்ஷத்ரங்கள், புலன்களின் அதிபதியான தேவதைகள், புலன்கள், மனம், ஒலி முதலிய விஷயங்கள், மாயையின் முக்குணங்கள், எல்லா ப்ராணிகள், அவற்றின் பலவித உடல்கள், வ்ரஜ மண்டலம் முழுவதையுமே கண்டாள். 'நான் கனவு காண்கிறேனா என்ன?' என்று நினைத்தாள். கடைசியில் பயந்துபோய்க் கண்ணனை வணங்கிச் சரணடைந்தாள். உடன், கண்ணன் தன் மோஹ மாயையை மறுபடியும் விரித்தான். தாயின் அன்பைப் பெருக்கினான். யசோதை குழந்தையை மடியில் தூக்கி வைத்துக் கொண்டு கொஞ்சினாள் (ஸ்ரீமத்பாகவதம் 10/8).

§ காகபுசுண்டி முனிவர் பகவான் ஸ்ரீராமனின் பாலலீலைகளில் ஆனந்தத்தை அடைந்தார். ஒரு நாள் குழந்தை ஸ்ரீராமன் தவழ்ந்து, தவழ்ந்து தன் குஞ்சுக்கைகளால் (காக்கையாக அங்கு வந்த) காகபுசுண்டியைப்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸ்வரூபத்தில் அடங்கியதாக அகில ப்ரபஞ்சத்தையும் பார்க்க வேண்டும். இதுதான் பகவானது ஸகுண ஸ்வரூபத்தில் அகில உலகத்தையும் பார்ப்பது ஆகும்.

**கேள்வி:** 'அவனுக்கு நான் காணப்படாமல் போக மாட்டேன். அவனும் எனக்குக் காணப்படாமல் போகமாட்டான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** முன் கேள்வியின் பதிலில் உள்ளது போல, உலகம் முழுவதிலும் பகவானையும், பகவானிடம் அகில உலகையும் பார்ப்பவனுடைய பார்வையிலிருந்து, பகவான் அகல மாட்டார். பகவானுடைய பார்வையிலிருந்து அவனும் அகல மாட்டான். அதாவது பேரழகு, இனிமை, ஐசுவர்யம், பெருந்தன்மை இவற்றின் எல்லையற்ற கடலான, ரஸமயமான, ஆனந்தமயமான, தேவர்களுக்கும் கிட்டாத, பகவானது ஸத் சித் ஆனந்த ஸ்வரூபத்தினுடைய நேரிடையான தர்சனம் கிடைத்த பிறகு பக்தனுக்கும், பகவானுக்கும் உள்ள பிணைப்பு எப்பொழுதும் இடையீடின்றித் தொடர்ந்து இருக்கிறது என்பது கருத்து.

---

பிடிக்க ஓடினார். அவர் பறந்து போய்விட்டார். குழந்தை அதைப் பிடிப்பதற்காகக் கையை நீட்டியது. காகபுசுண்டி பறந்து பறந்து ப்ரம்மலோகத்திற்கே போய்விட்டார். அங்குகூட பாலராமனின் குஞ்சுக்கைத் தொடர்ந்தது. அவருக்கும், கைகளுக்கும் இரண்டு அங்குல இடைவெளிதான். அவர் எங்கு பறந்தாலும் அங்கெல்லாம் ராமனுடைய குஞ்சுக்கை துரத்தியது. புசுண்டி பயந்து போய்விட்டார். கண்களை மூடினார். பின் கண்களைத் திறந்து பார்த்தார். தான் அயோத்தியில் இருப்பதைக் கண்டார். ஸ்ரீராமனும் சிரித்தார். அவரது வாயில் புசுண்டி நுழைந்தார். அடுத்து நிகழ்ந்ததை அவரே வர்ணிப்பதைக் கேளுங்கள்.

उदर माझ सुनु अंडज राया। देखेउँ बहु ब्रह्मांड निकाया॥
अति बिचित्र तहँ लोक अनेका। रचना अधिक एक ते एका॥
कोटिन्ह चतुरानन गौरीसा। अगनित उडगन रबि रजनीसा॥
अगनित लोकपाल जम काला। अगनित भूधर भूमि बिसाला॥
सागर सरि सर बिपिन अपारा। नाना भाँति सृष्टि बिस्तारा॥
सुर मुनि सिद्ध नाग नर किंनर। चारि प्रकार जीव सचराचर॥
जो नहिं देखा नहिं सुना जो मनहूँ न समाइ॥
सो सब अद्भुत देखेउँ बरनि कवन बिधि जाइ॥
एक एक ब्रह्मांड महुँ रहउँ बरष सत एक।
एहि बिधि देखत फिरउँ मैं अंड कटाह अनेक॥
लोक लोक प्रति भिन्न बिधाता। भिन्न बिष्नु सिव मनु दिसित्राता॥
नर गंधर्ब भूत बेताला। किंनर निसिचर पसु खग ब्याला॥
देव दनुज गन नाना जाती। सकल जीव तहँ आनहिं भाँती॥
महि सरि सागर सर गिरि नाना। सब प्रपंच तहँ आनइ आना॥
अंडकोस प्रति प्रति निज रूपा। देखेउँ जिनस अनेक अनूपा॥
अवधपुरी प्रति भुवन निनारी। सरऊ भिन्न भिन्न नर नारी॥
दसरथ कौसल्या सुनु ताता। बिबिध रूप भरतादिक भ्राता॥
प्रति ब्रह्मांड राम अवतारा। देखउँ बालबिनोद अपारा॥
भिन्न भिन्न मैं दीख सबु अति बिचित्र हरिजान।
अगनित भुवन फिरेउँ प्रभु राम न देखउँ आन॥
सोइ सिसुपन सोइ सोभा सोइ कृपाल रघुबीर।
भुवन भुवन देखत फिरउँ प्रेरित मोह समीर॥
भ्रमत मोहि ब्रह्मांड अनेका। बीते मनहुँ कल्प सत एका॥
फिरत फिरत निज आश्रम आयउँ। तहँ पुनि रहि कछु काल गवाँयउँ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** பகவானுடைய ஸகுண உருவமுள்ள ஸ்வரூபத்தை தர்சனம் செய்வதற்கான ஸாதனையை ஆரம்பத்தில் எந்த முறையில் செய்யவேண்டும்? அந்த ஸாதனையின் முடிவான நிலை எவ்விதம் இருக்கும்?

**பதில்:** முதலில் பகவானுடைய ஸகுண உருவமுள்ள ஸ்வரூபத்தில் நம்பிக்கை ஏற்பட வேண்டும். அதை உபாஸிப்பவன், 'எனது இஷ்ட தெய்வம் ஸர்வவல்லமை படைத்தவர். எல்லோரையும் விடச் சிறந்தவர். அவரே நிர்குணம், ஸகுணம், எல்லாமே அவர்தான்' என்ற

---

निज प्रभु जन्म अवध सुनि पायउँ। निर्भर प्रेम हरषि उठि धायउँ॥
देखउँ जन्म महोत्सव जाई। जेहि बिधि प्रथम कहा मैं गाई॥
राम उदर देखेउँ जग नाना। देखत बनइ न जाइ बखाना॥
तहँ पुनि देखेउँ राम सुजाना। मायापति कृपाल भगवाना॥
करउँ बिचार बहोरि बहोरी। मोह कलिल ब्यापित मति मोरी॥
उभय घरी महँ मैं सब देखा। भयउँ भ्रमित मन मोह बिसेषा॥

देखि कृपाल बिकल मोहि बिहँसे तब रघुबीर।
बिहँसतही मुख बाहेर आयउँ सुनु मतिधीर॥

ஸ்ரீகாகபுசுண்டி முனிவர் கூறுகிறார்: கருட பகவானே! கேளுங்கள். ஸ்ரீபாலராமனான குழந்தையின் வயிற்றில் பல ப்ரம்மாண்டத் தொகுப்புகளைப் பார்த்தேன். மிகவும் விசித்ரமான பல உலகங்கள், ஒன்றுக்கொன்று விசித்ரமான அமைப்புகள், கோடி ப்ரம்ம தேவர்கள், மஹேசுவரர்கள், எண்ணற்ற நக்ஷத்ரங்கள், சூரியர்கள், சந்த்ரர்கள், எண்ணற்ற லோக பாலகர்கள், யமன்கள், காலதேவதைகள், தேவர்கள், எண்ணற்ற மலைகள், விசாலமான பூமிகள், கடல்கள், நதிகள், குளங்கள், எல்லையற்ற காடுகள், பலவிதமான அளவற்ற படைப்பின் விரிவுகள், தேவர்கள், முனிவர்கள், ஸித்தர்கள், நாகர்கள், மனிதர்கள், கின்னரர்கள், நான்குவிதமான உயிரினங்கள் கண்டேன். நான் இதுவரை பார்க்காதவை, கேட்காதவை, மனம் கொள்ளாதவை – எல்லா அற்புதப் படைப்புகளையும் கண்டேன். அதை எப்படி வர்ணிப்பேன்!

ஒவ்வொரு ப்ரம்மாண்டத்தையும் சுற்றிப் பார்க்க நூறு ஆண்டுகள் பிடித்தன. இவ்விதம் பார்த்துக் கொண்டே பல ப்ரம்மாண்டங்களில் சுற்றினேன்.

ஒவ்வொரு உலகத்திலும் தனித்தனி ப்ரம்மாக்கள், தனித்தனி விஷ்ணுக்கள், ருத்ரர்கள், மனுக்கள், திக்பாலகர்கள், மனிதர்கள், கந்தர்வர்கள், பூதங்கள், வேதாளங்கள், கின்னரர்கள், ராக்ஷஸர்கள், பசுக்கள், பக்ஷிகள், பாம்புகள், பல ஜாதிகளைச் சேர்ந்த தேவர்கள், தைத்யர்கள் ஆங்காங்கே வெவ்வேறு விதமாகப் பரவியிருந்தனர். எண்ணற்ற பூமிகள், நதிகள், கடல்கள், குளங்கள், மலை ஆகிய எல்லாப் படைப்புக்களும் அங்கங்கு தனித்தனியாக இருந்தன. ஒவ்வொரு ப்ரம்மாண்டத்திலும் நான் தனித்தனியே என்னுடைய உருவத்தைப் பார்த்தேன். மேலும் பல நிகரற்ற வஸ்துக்களையும் பார்த்தேன். ஒவ்வொரு ப்ரம்மாண்டத்திலும் தனித்தனி விதமான அயோத்யாபுரி. ஸரயு நதி, தனியாக ஆண்-பெண்கள் இருந்தனர். ஐயனே! மேலும் கேளுங்கள். தசரதர், கௌஸல்யா, பரதர் முதலான ஸஹோதரர்கள்கூடத் தனித்தனி. ஒவ்வொரு ப்ரம்மாண்டத்திலும் ராமன் அவதாரம். எண்ணற்ற பாலலீலைகளைப் பார்த்துக் கொண்டு சுற்றினேன்.

விஷ்ணுவின் வாஹனமானவரே! நான் எல்லாவற்றையும் வெவ்வேறாகவும், மிகவும் விசித்திரமானதாகவும் பார்த்தேன். எண்ணற்ற ப்ரம்மாண்டங்களில் சுற்றினேன். ஆனால் ப்ரபு ராமச்சந்த்ரனை வேறு விதமாகக் காணவில்லை. எல்லா இடத்திலும் அதே மாதிரியான குழந்தைத்தனம், அதே அழகு, அதே தயை நிறைந்த ஸ்ரீரகுவீரன். இவ்விதம் மோஹமயமான காற்றின் தூண்டுதலால் பல உலகங்களில் சுற்றினேன். அநேக ப்ரம்மாண்டங்களில் சுற்றி வந்ததில் ஒரு நூறு கல்பகாலம் கழிந்து விட்டதாகத் தோன்றியது. சுற்றித் திரிந்து நான் என்னுடைய ஆசிரமத்திற்கு வந்தேன். அங்குச் சில நாட்கள் கழித்தேன். பிறகு என்னுடைய ப்ரபு அயோத்தியில் அவதாரம் எடுத்துள்ளார் என்று கேள்விப்பட்டவுடன், பக்திப் பெருக்குடன் நான் மகிழ்ச்சியோடு ஓடிச் சென்று, முன்னரே நான் விளக்கியபடி பிறந்தநாள் கொண்டாட்டங்களைக் கண்டேன். ஸ்ரீராமச்சந்த்ரனுடைய வயிற்றில் நான் அநேக உலகங்களைக் கண்டேன். அவற்றைக் கான முடியுமே தவிரச் சொற்களால் வர்ணிக்க முடியாது. அங்கே நான் மீண்டும் மாயையின் யஜமானன் ஆகிய அருளாளனான பகவான் ஸ்ரீராமனைப் பார்த்தேன். நான் மீண்டும் மீண்டும் சிந்தித்துப் பார்த்தேன். என்னுடைய புத்தி மோஹமயமான குழப்பத்தினால் நிரம்பியிருந்தது. இவை எல்லாவற்றையும் இரண்டு நாழிகை நேரத்திலேயே பார்த்தேன். மனதில் தனியான ஒரு மயக்கம் ஏற்பட்டதால் நான் களைப்படைந்தேன். குழப்பம் அடைந்திருந்த என்னைப் பார்த்து அருளாளனாகிய ஸ்ரீரகுவீரன் சிரித்தார். தீரமுடைய கருடன் அவர்களே! கேளுங்கள். அவர் சிரித்தவுடனேயே அவருடைய திருவாயிலிருந்து நான் வெளியே வந்துவிட்டேன் (ராமசரிதமானஸம் உத்தரகாண்டம் தோஹா 79/2 முதல் 82/க வரை).

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உறுதி கொள்ளவேண்டும். தன் இஷ்ட தெய்வத்தைக் காட்டிலும் வேறொருவரைச் சிறந்தவராக நினைத்தால், அவருடைய இஷ்ட தெய்வ உபாஸனையினால் மேலான பலன் கிடைக்காது. பிறகு தன்னுடைய பாவனைக்கேற்ப பகவானது படிமத்தையோ, சித்திரத்தையோ தன் முன்னே வைத்துக் கொண்டு அவரே ப்ரத்யக்ஷம் என்றும், சைதன்யத்தோடு இருப்பதாகவும் பாவித்து மிகவும் ச்ரத்தையுடனும், அன்புடனும் முறைப்படி பூஜை செய்யவேண்டும்; போற்றிப்பாட வேண்டும்; ப்ரார்த்தனை புரிய வேண்டும்; த்யானம் முதலியவை செய்து மேன்மேலும் தன் ப்ரேமையை அவர்பால் பெருக்கிக் கொள்ள வேண்டும். பூஜையில் திடமான ச்ரத்தையோடு, 'எதிரில் இருக்கும் மூர்த்தி ஜடப்பொருளன்று; சைதன்யமுடையது; நடமாடும் தெய்வம்; அந்த பகவான் சிரித்துப் பேசி மகிழ்பவர்; நாம் அர்ப்பணம் பண்ணும் நைவேத்யங்களை எதிரிலேயே ஏற்பவர்' என்று உணரவேண்டும். இப்படி ஸாதகனுக்கு உண்மையான ச்ரத்தை இருந்துவிட்டால், அந்தப் படிமத்திலேயே பகவான் அவருக்கு உணர்வுள்ள அர்ச்சாவதாரம் ஆவார். பலவிதங்களில் தன்னுடைய பக்த வாத்ஸல்யத்தை வெளிப்படுத்தி அனுபவிக்க வைப்பார். அதனால் ஸாதகனுடைய வாழ்க்கை பயனுள்ளதாகவும், ஆனந்தமயமாகவும் ஆகிவிடும்.‡ இதற்குப் பிறகு பகவானுடைய அருளால் அவனுக்குத் தன் இஷ்ட தெய்வத்தின் நேரிடை தர்சனமும் கிடைக்கும். எப்பொழுது கிடைக்கும் என்று காலவரை விதிக்க முடியாது. ஸாதகனுடைய நாட்டமும், பகவானுடைய க்ருபையில் அவனுடைய ஆழ்ந்த நம்பிக்கையும் எவ்வாறு, எந்த அளவிலுள்ளனவோ, அவற்றிற்கேற்றவாறு விரைவாகவோ, காலந்தாழ்ந்தோ, தர்சனம் கிடைக்கலாம். இப்படி நேரிடை தர்சனம் கிடைத்த பிறகு, பகவானுடைய க்ருபையால், இப்பொழுதோ, பின்போ எங்கு இருந்தாலும், எந்த நேரத்திலும், எந்த நிலையிலும், எந்தப் பொருளிலும் தர்சனம் கிடைக்கும். நேரிடையாக பகவானுடைய தர்சனம் கிடைத்த பிறகு ஸாதகனுடைய நிலை என்ன என்பதை பகவானுடைய தர்சனம் பெற்றவனே அறிவான். மற்றவர் எதுவும் சொல்ல முடியாது.

பகவானுடைய தர்சனம் எங்கும் கிடைப்பதற்குரிய ஸாதன முறை கீழ்க்கண்டவாறும் அமையலாம். எந்த ஸ்வரூபத்தில் தனக்கு பக்தி ஏற்படுகிறதோ, அந்த ஸ்வரூபத்தைச் சித்திரத்திலோ, படிமத்திலோ த்யானம் செய்து பூஜை செய்ய வேண்டும். கூடவே தனிமையில் அமர்ந்து ஒவ்வொரு நாளும் ஒரு கட்டுப்பாட்டுடன் த்யானத்தைப் பயிற்சி மூலம் பெருக்கி அந்த ஸ்வரூபத்தில் திடமான தாரணையை உண்டாக்கிக் கொள்ள வேண்டும். இப்படி தாரணை ஏற்பட்டபின் தனிமையான ஓரிடத்தில் அமர்ந்து, கண்களைத் திறந்து வைத்துக் கொண்டு, ஆகாயத்தில் தன் மனதிற்குப் பிடித்த பகவத் ஸ்வரூபத்தைக் கற்பனை செய்து, த்யானப் பயிற்சியினால் பார்க்கவேண்டும். பகவானுடைய க்ருபையினால் நம்பிக்கை, ச்ரத்தை, உறுதியுடன் அடிக்கடி இப்படிப் பார்க்கும் பழக்கம் ஏற்பட்டுவிட்டால், ஆகாயத்தில் தன் இஷ்ட தெய்வம் தோன்றி, புன்சிரிப்புடன் கலகலவென்று பேசுவது போன்று தோன்றும். இது பயிற்சியினால் சாதிக்கக் கூடியது. மனதினுடைய போக்குகள் எல்லாம் தனது இஷ்ட தெய்வத்தைப் பற்றியே இருக்குமேயானால், வேறு சிந்தனை ஒன்றுமின்றி பகவானிடமே லயித்துவிட்டால், அந்த ஸாதகன் எங்கு பகவானைக் காண விரும்பினாலும், அவன் கண்களுக்கு எதிரே இஷ்ட தெய்வம் தோன்றும். இந்தப் பழக்கம் திடமான பிறகு போகும்போதும், வரும்போதும், மரங்கள், இலைகள், மனிதர்கள், பசுக்கள், பக்ஷிகள் முதலிய எவற்றைப் பார்த்தாலும் மனதிலிருந்து அவற்றையகற்றி, அவற்றின் இடத்தில் இஷ்ட தெய்வத்தை த்யானம் செய்து தாரணை ஏற்படுத்த வேண்டும். இப்படிச் செய்து கொண்டே வந்தால், ஸாதகன் ஒவ்வொரு பொருளிலும், அந்தப் பொருளின் இடத்திலும் தன்னுடைய இஷ்ட தெய்வத்தை மானஸிகமாக எளிதாகவே தர்சனம் செய்யும் பேறு பெறலாம். பிறகு பகவத் க்ருபையினால், அவனுக்கு பகவானுடைய மெய்யான தர்சனமும் கிடைக்கும். இதன் பின்னர் அவன் கண்ணெதிரே உள்ளபடியே, எங்கும் பகவானையே காண்பான்.

---

‡ மீராபாயி, ஆழ்வார்கள், நாயன்மார்கள் போன்ற நமக்குச் சற்று முன் காலத்திய பக்தர்களின் வாழ்க்கையில் பகவான் அர்ச்சாவதார மூர்த்தியில் காட்சி கொடுத்திருக்கிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பொருத்தம்:** எங்கும் பகவானைக் காண்பது என்ற ஸாதனையினால் பகவானுடைய நேரிடை அனுபவம் கிடைக்கும் என்று கூறி, பகவானை அடைந்த புருஷனுடைய இலக்கணத்தையும், பெருமையையும் கூறுகிறார்—

**सर्वभूतस्थितं यो मां भजत्येकत्वमास्थितः।**
**सर्वथा वर्तमानोऽपि स योगी मयि वर्तते॥ ३१॥**

**ஸர்வபூ₄தஸ்தி₂தம் யோ மாம் ப₄ஜத்யேகத்வமாஸ்தி₂த: ।**

**ஸர்வதா₂ வர்தமாநோऽபி ஸ யோகீ₃ மயி வர்ததே ॥ 31 ॥**

**ய:** – எவன், **ஏகத்வம்** – ஒன்றிய நிலையில், **ஆஸ்தி₂த:** – நிலைபெற்று, **ஸர்வபூ₄தஸ்தி₂தம்** – அனைத்துச் சராசரங்களிலும் ஆத்மாவாக விளங்கும், **மாம்** – ஸத் சித் ஆனந்தமயனான வாஸுதேவனான என்னை, **ப₄ஜதி** – வழிபடுகிறானோ, **ஸ: யோகீ₃** – அந்த யோகி, **ஸர்வதா₂** – எவ்வகையில், **வர்தமாந: அபி** – செயல்பட்டுக் கொண்டிருந்தாலும், **மயி** – என்னிடத்திலேயே, **வர்ததே** – செயல்பட்டுக் கொண்டிருக்கிறான்.

எவன் ஒன்றிய நிலையில் நிலைபெற்று அனைத்துச் சராசரங்களிலும் ஆத்மாவாக விளங்கும் ஸத் சித் ஆனந்தமயனான வாஸுதேவனான என்னை வழிபடுகிறானோ, அந்த யோகி எவ்வகையில் செயல்பட்டுக் கொண்டிருந்தாலும் என்னிடத்திலேயே செயல்பட்டுக் கொண்டிருக்கிறான். ஏனெனில் அவனுடைய அனுபவத்தில் என்னைத் தவிர வேறொன்றும் இல்லவே இல்லை.

**கேள்வி:** 'ஐக்ய பாவத்தில் (ஒன்றிய நிலையில்) இருப்பது' என்றால் என்ன?

**பதில்:** எப்பொழுதும் எங்கும் தன்னுடைய ஒரே இஷ்ட தெய்வமான பகவானையே த்யானம் செய்து, தான் வேறு என்று நினைக்கும் நிலையை மறந்து பகவானிடமே லயமாகி, அந்த பகவானைத் தவிரத் தன் நினைவே இல்லாத நிலையில் உள்ளவனை 'பகவானை அடைந்து ஐக்யமாகிவிட்டவன்' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'எல்லா உயிரினங்களிடமும் விளங்குகிற பகவானை வழிபடுவது' என்றால் என்ன?

**பதில்:** நீராவி, மேகம், பனிமூட்டம், நீர்த்துளி, பனிக்கட்டி இவற்றில் எங்கும் ஜலமே நிறைந்து இருப்பதுபோல, அகில சராசரங்களிலும் பகவான் நிறைந்திருக்கிறார். இவ்விதம் அறிந்து கொண்டு, கண்கூடாகக் காண்பதுதான் எல்லா உயிரினங்களிலும் இருக்கும் பகவானை வழிபடுவதாகும். இப்படி வழிபாடு செய்பவரை, பகவான் அனைவரிலும் உயர்ந்த மஹாத்மா என்கிறார் (7/19).

**கேள்வி:** 'அந்த யோகி எவ்வகையில் செயல்பட்டுக் கொண்டிருந்தாலும் என்னிடத்திலேயே செயல்பட்டுக் கொண்டிருக்கிறான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவான் வாஸுதேவனை அடைந்துவிட்டவருக்கு எல்லாமே வாஸுதேவனாகவே தெரியும். இந்த நிலையில் அந்த பக்தருடைய உள்ளம், உரை, செயல் இவையனைத்தும், அவருடைய நோக்கில் எல்லாமே ஒன்றேயான பகவானோடு கூடவே இருக்கும். அவன் கைகளால் யாருக்காவது ஸேவை புரிந்தால் அது பகவானுக்குச் செய்யும் ஸேவை ஆகும். யாரிடமாவது இனிமையாக நல்ல வார்த்தை சொன்னால் அவர் பகவானுக்கே ஸுகமளிக்கிறார். யாரைப் பார்த்தாலும் பகவானையே பார்க்கிறார். எங்கே சென்றாலும் பகவானுடன்கூட பகவானிடமே செல்கிறார். இவ்விதம் அவர் எது செய்தாலும் பகவானிடமே, பகவானுடனேயே செய்கிறார். ஆகவே, அவர் இருக்கும் எல்லா நிலைகளும் பகவானுடனேயே இருக்கின்றன என்பது கருத்து.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'எல்லாமே பகவான்' என்ற அனுபவம் ஏற்பட்ட பிறகு, அவருடைய உலகியல் செயற்பாடுகள் முறைப்படி எப்படி நடைபெறும்?

**பதில்:** கத்தி, கத்திரிக்கோல், வாணலி, கம்பி, இரும்புக்கம்பி, சுத்தியல், வாளி, அம்பு எல்லாமே உலோகமானாலும் அவற்றைத் தேவைக்குத்தக்கபடி கையாள்வதுபோல, பகவானை அடைந்துவிட்ட பக்தர், எல்லோருடனும் சாஸ்த்ர முறைப்படி தகுதிக்கேற்றவாறுதான் பழகுவார். ஸாதாரண மனிதனுடைய நடத்தைக்கும், பக்தருடைய நடத்தைக்கும் பெருத்த வேறுபாடு இருப்பது திண்ணம். ஸாதாரண மனிதன் எவ்வளவுதான் நல்லவனாக இருந்தாலும், பிறருடன் மிகவும் எச்சரிக்கையுடன் பழகுகிறவனாக இருந்தாலும், பிறரிடம் பகவான் இருக்கிறான் என்ற எண்ணமில்லாமல் அவர் வேறு ஒருவர் என்ற எண்ணம் மட்டும் இருந்தாலும், தன்னலம் மிகுந்தோ, குறைந்தோ எப்படி இருந்தாலும், அவன் பிறர் நலம் கருதாது நடக்க நேரிடலாம். ஆனால் எங்கும், எப்பொழுதும் பகவானைக் காணும் பக்தரின் செயல்கள் எல்லாம் இயல்பாகவே பிறருக்கு ஹிதமாகவே இருக்கும். அவர் எந்த நிலையிலும் பிறருக்குச் சிறிதளவு கூடத் தீமை பயக்கக்கூடிய எந்தச் செயலையும் செய்யமாட்டார்.‡

**கேள்வி:** 'எவ்விதத்தில் அவன் செயல்பட்டுக் கொண்டிருந்தாலும், என்னிடமே செயல்பட்டுக் கொண்டிருப்பான்' என்பதற்கு 'அவன் நற்செயல்களோ, தீய செயல்களோ, புண்யமோ, பாவமோ எது செய்தாலும் பகவானிடமே இருப்பான்' என்று பொருள் கூறினால் என்ன தவறு?

**பதில்:** இப்படிப் பொருள் கொள்ளக் கூடாது. 'பகவானை அடைந்துவிட்ட மஹாத்மாக்கள் பாவம் செய்வார்கள்' என்பது ஒருபோதும் நடைபெறாது. 'எல்லாத் தீமைகளுக்கும் காரணம் பெரும் பாவம் ஆன காமம்தான்' *(3/37)* என்று பகவான் தெளிவாகக் கூறியுள்ளார். 'இந்தக் காமம் பற்றுதலில் பிறக்கிறது' *(2/62)* என்றும், 'பரமாத்ம தர்சனம் பெற்றுவிட்டால் ஆஸக்தி என்ற பற்றுதல் அறவே அற்றுப் போய்விடும்' *(2/59)* என்றும் சொல்லியிருக்கிறார். இந்த நிலையில் பகவானை அடைந்துவிட்டவன் மூலமாக, தடை செய்யப்பட்ட பாவச் செயல்கள் நடப்பதற்கு வாய்ப்பே இல்லை. இது தவிர, 'உயர்ந்த மனிதன் எப்படி நடந்து கொள்வானோ, மற்றவர்களும் அதையே பின்பற்றுவார்கள்' *(3/21)* என்றும், ஞானியிடம் இயல்பாகவே, இந்தப் பொறுப்பு வந்தமைவதால், அவர்கள் பாவச் செயல்கள் புரிவது நடக்கக் கூடியதன்று என்றும் பகவான் கூறுகிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் பக்தியோகத்தின் மூலம் பகவானை அடைந்துவிட்ட பெரியோர்களின் பெருமையைக் கூறி, அடுத்து ஸாங்க்யயோகத்தின் மூலம் பரமாத்மாவை அடைந்தவரின் ஸமதர்சனத்தையும், அதன் பெருமையையும் கூறுகிறார்—

**आत्मौपम्येन सर्वत्र समं पश्यति योऽर्जुन।**
**सुखं वा यदि वा दुःखं स योगी परमो मतः॥ ३२॥**

**ஆத்மௌபம்யேந ஸர்வத்ர ஸமம் பஶ்யதி யோऽர்ஜுந ।**
**ஸுக$_2$ம் வா யதி$_3$ வா து$_3$:க$_2$ம் ஸ யோகீ$_3$ பரமோ மத: ॥ 32 ॥**

**அர்ஜுந** – அர்ஜுன! **ய:** – எந்த யோகி, **ஸர்வத்ர** – எல்லா சராசரங்களையும், **ஆத்ம ஔபம்யேந** – தன்னைப் போலவே, **ஸமம்** – ஸம நோக்கில், **பஶ்யதி** – பார்க்

---

‡ உமா ஜே ராம சரந ரத பி$_3$க$_3$த காம மத$_3$ க்ரோத$_4$ ।
நிஜ ப்ரபு$_4$மய தே$_3$க$_2$ஹி(ம்) ஜக$_3$த கேஹி ஸந கரஹி(ம்) பி$_3$ரோத$_4$ ॥

பரமேசுவரன் பார்வதியிடம் சொல்கிறார்: உமையே! காமம், மதம், க்ரோதம் இவற்றை விலக்கி, ராமனுடைய சரணங்களில் ஈடுபட்டவர்கள் எங்கும் தன் ப்ரபுவான ராமனையே பார்த்துவிட்டால் யாரிடம் விரோதம் பாராட்டுவார்கள்?



CC-0. In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பொருத்தம்:** எங்கும் பகவானைக் காண்பது என்ற ஸாதனையினால் பகவானுடைய நேரிடை அனுபவம் கிடைக்கும் என்று கூறி, பகவானை அடைந்த புருஷனுடைய இலக்கணத்தையும், பெருமையையும் கூறுகிறார்—

**सर्वभूतस्थितं यो मां भजत्येकत्वमास्थितः ।**
**सर्वथा वर्तमानोऽपि स योगी मयि वर्तते ॥ ३१ ॥**

**ஸர்வபூ₄தஸ்தி₂தம் யோ மாம் ப₄ஜத்யேகத்வமாஸ்தி₂த: ।**

**ஸர்வதா₂ வர்தமாநோऽபி ஸ யோகீ₃ மயி வர்ததே ॥ 31 ॥**

**ய:** – எவன், **ஏகத்வம்** – ஒன்றிய நிலையில், **ஆஸ்தி₂த:** – நிலைபெற்று, **ஸர்வபூ₄தஸ்தி₂தம்** – அனைத்துச் சராசரங்களிலும் ஆத்மாவாக விளங்கும், **மாம்** – ஸத் சித் ஆனந்தமயனான வாஸுதேவனான என்னை, **ப₄ஜதி** – வழிபடுகிறானோ, **ஸ: யோகீ₃** – அந்த யோகி, **ஸர்வதா₂** – எவ்வகையில், **வர்தமாந: அபி** – செயல்பட்டுக் கொண்டிருந்தாலும், **மயி** – என்னிடத்திலேயே, **வர்ததே** – செயல்பட்டுக் கொண்டிருக்கிறான்.

எவன் ஒன்றிய நிலையில் நிலைபெற்று அனைத்துச் சராசரங்களிலும் ஆத்மாவாக விளங்கும் ஸத் சித் ஆனந்தமயனான வாஸுதேவனான என்னை வழிபடுகிறானோ, அந்த யோகி எவ்வகையில் செயல்பட்டுக் கொண்டிருந்தாலும் என்னிடத்திலேயே செயல்பட்டுக் கொண்டிருக்கிறான். ஏனெனில் அவனுடைய அனுபவத்தில் என்னைத் தவிர வேறொன்றும் இல்லவே இல்லை.

**கேள்வி:** 'ஐக்ய பாவத்தில் (ஒன்றிய நிலையில்) இருப்பது' என்றால் என்ன?

**பதில்:** எப்பொழுதும் எங்கும் தன்னுடைய ஒரே இஷ்ட தெய்வமான பகவானையே த்யானம் செய்து, தான் வேறு என்று நினைக்கும் நிலையை மறந்து பகவானிடமே லயமாகி, அந்த பகவானைத் தவிரத் தன் நினைவே இல்லாத நிலையில் உள்ளவனை 'பகவானை அடைந்து ஐக்யமாகிவிட்டவன்' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'எல்லா உயிரினங்களிடமும் விளங்குகிற பகவானை வழிபடுவது' என்றால் என்ன?

**பதில்:** நீராவி, மேகம், பனிமூட்டம், நீர்த்துளி, பனிக்கட்டி இவற்றில் எங்கும் ஜலமே நிறைந்து இருப்பதுபோல, அகில சராசரங்களிலும் பகவான் நிறைந்திருக்கிறார். இவ்விதம் அறிந்து கொண்டு, கண்கூடாகக் காண்பதுதான் எல்லா உயிரினங்களிலும் இருக்கும் பகவானை வழிபடுவதாகும். இப்படி வழிபாடு செய்பவரை, பகவான் அனைவரிலும் உயர்ந்த மஹாத்மா என்கிறார் (7/19).

**கேள்வி:** 'அந்த யோகி எவ்வகையில் செயல்பட்டுக் கொண்டிருந்தாலும் என்னிடத்திலேயே செயல்பட்டுக் கொண்டிருக்கிறான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவான் வாஸுதேவனை அடைந்துவிட்டவருக்கு எல்லாமே வாஸுதேவனாகவே தெரியும். இந்த நிலையில் அந்த பக்தருடைய உள்ளம், உரை, செயல் இவையனைத்தும், அவருடைய நோக்கில் எல்லாமே ஒன்றேயான பகவானோடு கூடவே இருக்கும். அவன் கைகளால் யாருக்காவது ஸேவை புரிந்தால் அது பகவானுக்குச் செய்யும் ஸேவை ஆகும். யாரிடமாவது இனிமையாக நல்ல வார்த்தை சொன்னால் அவர் பகவானுக்கே ஸுகமளிக்கிறார். யாரைப் பார்த்தாலும் பகவானையே பார்க்கிறார். எங்கே சென்றாலும் பகவானுடன்கூட பகவானிடமே செல்கிறார். இவ்விதம் அவர் எது செய்தாலும் பகவானிடமே, பகவானுடனேயே செய்கிறார். ஆகவே, அவர் இருக்கும் எல்லா நிலைகளும் பகவானுடனேயே இருக்கின்றன என்பது கருத்து.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'எல்லாமே பகவான்' என்ற அனுபவம் ஏற்பட்ட பிறகு, அவருடைய உலகியல் செயற்பாடுகள் முறைப்படி எப்படி நடைபெறும்?

**பதில்:** கத்தி, கத்திரிக்கோல், வாணலி, கம்பி, இரும்புக்கம்பி, சுத்தியல், வாளி, அம்பு எல்லாமே உலோகமானாலும் அவற்றைத் தேவைக்குத்தக்கபடி கையாள்வதுபோல, பகவானை அடைந்துவிட்ட பக்தர், எல்லோருடனும் சாஸ்த்ர முறைப்படி தகுதிக்கேற்றவாறுதான் பழகுவார். ஸாதாரண மனிதனுடைய நடத்தைக்கும், பக்தருடைய நடத்தைக்கும் பெருத்த வேறுபாடு இருப்பது திண்ணம். ஸாதாரண மனிதன் எவ்வளவுதான் நல்லவனாக இருந்தாலும், பிறருடன் மிகவும் எச்சரிக்கையுடன் பழகுகிறவனாக இருந்தாலும், பிறரிடம் பகவான் இருக்கிறான் என்ற எண்ணமில்லாமல் அவர் வேறு ஒருவர் என்ற எண்ணம் மட்டும் இருந்தாலும், தன்னலம் மிகுந்தோ, குறைந்தோ எப்படி இருந்தாலும், அவன் பிறர் நலம் கருதாது நடக்க நேரிடலாம். ஆனால் எங்கும், எப்பொழுதும் பகவானைக் காணும் பக்தரின் செயல்கள் எல்லாம் இயல்பாகவே பிறருக்கு ஹிதமாகவே இருக்கும். அவர் எந்த நிலையிலும் பிறருக்குச் சிறிதளவு கூடத் தீமை பயக்கக்கூடிய எந்தச் செயலையும் செய்யமாட்டார்.‡

**கேள்வி:** 'எவ்விதத்தில் அவன் செயல்பட்டுக் கொண்டிருந்தாலும், என்னிடமே செயல்பட்டுக் கொண்டிருப்பான்' என்பதற்கு 'அவன் நற்செயல்களோ, தீய செயல்களோ, புண்யமோ, பாவமோ எது செய்தாலும் பகவானிடமே இருப்பான்' என்று பொருள் கூறினால் என்ன தவறு?

**பதில்:** இப்படிப் பொருள் கொள்ளக் கூடாது. 'பகவானை அடைந்துவிட்ட மஹாத்மாக்கள் பாவம் செய்வார்கள்' என்பது ஒருபோதும் நடைபெறாது. 'எல்லாத் தீமைகளுக்கும் காரணம் பெரும் பாவம் ஆன காமம்தான்' (3/37) என்று பகவான் தெளிவாகக் கூறியுள்ளார். 'இந்தக் காமம் பற்றுதலில் பிறக்கிறது' (2/62) என்றும், 'பரமாத்ம தர்சனம் பெற்றுவிட்டால் ஆஸக்தி என்ற பற்றுதல் அறவே அற்றுப் போய்விடும்' (2/59) என்றும் சொல்லியிருக்கிறார். இந்த நிலையில் பகவானை அடைந்துவிட்டவன் மூலமாக, தடை செய்யப்பட்ட பாவச் செயல்கள் நடப்பதற்கு வாய்ப்பே இல்லை. இது தவிர, 'உயர்ந்த மனிதன் எப்படி நடந்து கொள்வானோ, மற்றவர்களும் அதையே பின்பற்றுவார்கள்' (3/21) என்றும், ஞானியிடம் இயல்பாகவே, இந்தப் பொறுப்பு வந்தமைவதால், அவர்கள் பாவச் செயல்கள் புரிவது நடக்கக் கூடியதன்று என்றும் பகவான் கூறுகிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் பக்தியோகத்தின் மூலம் பகவானை அடைந்துவிட்ட பெரியோர்களின் பெருமையைக் கூறி, அடுத்து ஸாங்க்யயோகத்தின் மூலம் பரமாத்மாவை அடைந்தவரின் ஸமதர்சனத்தையும், அதன் பெருமையையும் கூறுகிறார்—

**आत्मौपम्येन सर्वत्र समं पश्यति योऽर्जुन।**
**सुखं वा यदि वा दुःखं स योगी परमो मतः॥ ३२॥**

**ஆத்மௌபம்யேந ஸர்வத்ர ஸமம் பஶ்யதி யோऽர்ஜுந ।**
**ஸுக$_2$ம் வா யதி$_3$ வா து$_3$:க$_2$ம் ஸ யோகீ$_3$ பரமோ மத: ॥ 32 ॥**

**அர்ஜுந** – அர்ஜுன! **ய:** – எந்த யோகி, **ஸர்வத்ர** – எல்லா சராசரங்களையும், **ஆத்ம ஔபம்யேந** – தன்னைப் போலவே, **ஸமம்** – ஸம நோக்கில், **பஶ்யதி** – பார்க்

---

‡ உமா ஜே ராம சரந ரத பி$_3$க$_3$த காம மத$_3$ க்ரோத$_4$ ।
நிஜ ப்ரபு$_4$மய தே$_3$க$_2$ஹி(ம்) ஜக$_3$த கேஹி ஸந கரஹி(ம்) பி$_3$ரோத$_4$ ॥

பரமேசுவரன் பார்வதியிடம் சொல்கிறார்: உமையே! காமம், மதம், க்ரோதம் இவற்றை விலக்கி, ராமனுடைய சரணங்களில் ஈடுபட்டவர்கள் எங்கும் தன் ப்ரபுவான ராமனையே பார்த்துவிட்டால் யாரிடம் விரோதம் பாராட்டுவார்கள்?



CC-0. In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கிறானோ, வா – மேலும், ஸுக₂ம் – ஸுகத்தையும், யதி₃ வா – அல்லது, து₃:க₂ம் – துக்கத்தையும் (எல்லோருடைய ஸுகங்களையும் துக்கங்களையும் தன்னுடையவை போன்று ஸமமாகப் பார்க்கிறானோ), ஸ: யோகீ₃ – அந்த யோகி, பரம: மத: – உயர்ந்தவனாக மதிக்கப்படுகிறான்.

அர்ஜுன! எந்த யோகி எல்லா சராசரங்களையும் தன்னைப் போலவே ஸமநோக்கில் பார்க்கிறானோ, மேலும் ஸுகத்தையும் துக்கத்தையும் (எல்லோருடைய ஸுகங்களையும் துக்கங்களையும்) தன்னுடையவை போன்று ஸமமாகப் பார்க்கிறானோ, அந்த யோகி உயர்ந்தவனாக மதிக்கப்படுகிறான்.'

**கேள்வி:** 'எல்லா சராசரங்களையும் தன்னைப் போலவே ஸமமாகப் பார்க்கிறான்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** மனிதன் தன்னுடைய எல்லா அவயவங்களிலும், தனது ஆத்மாவை ஸமமாகப் பார்ப்பது போல அகில உலகிலும் உள்ள சராசரங்களையும் தானாகவே ஸமமாகப் பாவிக்க வேண்டும். இதுதான் தன்னைப் போலவே எல்லா உயிரினங்களையும் ஸமமாகப் பார்ப்பது ஆகும்.

**கேள்வி:** அகில உலகிலும் உள்ள சராசரங்கள் எல்லாவற்றினுடைய ஸுகதுக்கங்களையும் தனக்கு நேர்ந்ததைப்போல ஸமமாக பாவிப்பது – என்றால் என்ன?

**பதில்:** தன்னுடைய எல்லா அங்கங்களிலும் ஆத்மபாவனை (தான் என்னும் எண்ணம்) ஸமமாக இருப்பதால் மனிதன் அவற்றுக்கு ஏற்படும் ஸுகதுக்கங்களை ஸமமாகப் பார்க்கிறான். அவ்விதமே எல்லா சராசர உயிரினங்களிலும் ஆத்மபாவனை ஸமமாக ஏற்பட்டுவிட்டதால், அவற்றிடம் காணப்படும் ஸுகதுக்கங்களைத் தனக்கே ஏற்பட்டுவிட்ட ஸுகதுக்கங்களுக்கு நிகராகப் பார்ப்பது என்பதே, 'தன்னுடையதைப் போல எல்லாவற்றினுடைய ஸுகதுக்கங்களையும் ஸமமாகக் காண்பது' ஆகும். எல்லோரிடமும் ஆத்மத்ருஷ்டி (தானே என்ற பாவனை) ஏற்பட்டுவிட்ட காரணத்தினால், உலகில் உள்ள எல்லா உயிரினங்களின் ஆத்மாவாகவும் அவன் ஆகிவிடுகிறான் என்பது கருத்து. உலகில் அவனுக்கு அயலார் என்று எவரும் இருப்பதில்லை. ஆகவே, மனிதன் தனக்குத் தானே ஒருபொழுதும் எவ்விதத்திலும் கொஞ்சம்கூடத் தீங்கிழைத்துக் கொள்ள விரும்ப மாட்டான். இயல்பாகவே இடைவிடாத ஸுகத்தை அடைவதற்காக முயற்சி செய்து கொண்டிருப்பான். மேலும் இப்படிச் செய்வதால், தானே தனக்கு அருள்புரிகிறவனாக எண்ணி, அதற்காக நன்றியை விரும்பமாட்டான்; உதவியை எதிர்பார்க்க மாட்டான்; பெரிய கடமையை ஆற்றிவிட்டோம் என்று எண்ணிச் செருக்கடைய மாட்டான். அவன் தனது ஸுகத்திற்காக முயற்சி செய்யாமல் இருக்கவே முடியாது. இது அவனுடைய இயல்பு. மேற்கூறியவண்ணம் அந்த யோகி உலகனைத்துக்கும் ஒருபொழுதும் எந்தவிதமாகவும் சிறிதளவும்கூடத் துன்பம் கொடுக்காமல், எப்பொழுதும் அதனுடைய ஸுகத்திற்காக இயல்பாகவே முயற்சி செய்கிறான்.

(மேல் நாடுகளில் 'அகில உலக மக்களையும் ஒருவருக்கொருவர் ஸஹோதரர்களாக பாவிக்க வேண்டும்' (Universal Brotherhood) என்பது உயரிய கொள்கையெனப் பேசப்படுகிறது. இது உயர்ந்த விஷயம்தான். ஆனால், உடன்பிறந்தவர் என்ற உறவில், ஏதோ ஓர் அளவில் தன்னலம் இருப்பதால், அதன் காரணமாகச் சச்சரவேற்படத்தான் செய்யும். ஆனால் தன்னுடைய ஆத்மாவே அகில உலகமும் என்ற பாவனை வந்துவிட்டால், 'அவனும் நானே தான்' என்று நினைக்கும்போது தன்னலம் என்று ஒன்று தனியாக இருக்காது. தன்னலம் இல்லாத காரணத்தால், சச்சரவுக்குக் கொஞ்சமும் இடமில்லை. மேல் நாட்டு அறிஞர்களும், கீதையில் இத்தகைய கருத்துக்கள் இருப்பதன் காரணமாக, கீதையின் உபதேசங்களே அனைத்திலும் உயர்ந்தவை என மதிக்கத் தொடங்கியுள்ளனர்.)

**கேள்வி:** இப்படிப் பரமாத்மாவை அடைந்துவிட்ட யோகிகளுக்கு அகில உலகத்தினரின் ஸுகதுக்க அனுபவங்கள் உண்மையாகவே ஏற்படுகின்றனவா அல்லது வெறும் தோற்றம்தானா?


CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இந்த அனுபவங்கள் உண்மை என்றோ, வெறும் தோற்றம் என்றோ சொல்ல முடியாது. அவர்களுடைய நோக்கில் ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவைத் தவிர வேறு ஒரு பொருளுக்கும் 'இருப்பு' என்பதே கிடையாது. ஆகவே வேறொன்றின் அனுபவம் எங்கிருந்து வரும்? வெறும் தோற்றம்தான் என்றால் பிறருக்குத் துக்கம் கொடுக்காமல் இருக்கவும், ஸுகம் தருவதற்கு முயற்சியும் செய்வார்கள் என்பது எப்படிப் பொருந்தும்? அந்த நேரத்தில் அவர்களது மனப்பாங்கு எவ்வாறு இருக்கும்? அவர்களுடைய நோக்கு எவ்வாறிருக்கும் என்பதை அவர்களே அறிவர். எவ்விதம் சொன்னாலும் அதை விளக்கியதாக ஆகாது. ஆயினும் அவர்கள் பரமாத்மாவைத் தவிர வேறாக எதையும் பார்ப்பதில்லை. உலகத்தாரைப்போல அவர்கள் நடந்து கொள்வதும் ஒரு தோற்றமே. ஆயினும் அவர்களின் செய்கை உத்தமமானது; கட்டுக்கோப்பானது; உரிய வரைமுறைகளுக்கு உட்பட்டது என்று ஒருவாறு நாம் அறியலாம்.

**கேள்வி:** உண்மையில் இவை அனுபவம் இல்லாவிட்டால், உலகத்தாரின் நோக்கில் காணப்படும் துக்கங்களை நீக்குவதற்கான முயற்சி அவர் மூலமாக எப்படி நடைபெறும்?

**பதில்:** இதுதான் அவருடைய சிறப்பு. கடமையை மிகச் சிறந்த முறையில் செய்து வந்தாலும் உண்மையில் அச்செயல்களுக்கு இருப்பும் இல்லை; அவருக்கு அவற்றினால் கொஞ்சங்கூடப் பயனும் இல்லை. மேலெழுந்தவாரியாக நாம் இப்படிப் புரிந்து கொள்ளலாம் – சிறு குழந்தைகள் விளையாடும்பொழுது, மிகவும் அற்பமான கற்களுக்காகவும், விளையாட்டுப் பொருட்களுக்காகவும், குச்சிகளுக்காகவும் தமக்குள் சண்டையிடுவர். அறியாமையினால் ஒருவருக்கொருவர் காயம் உண்டாக்கித் துன்புறுவர். அவர்களுடைய இந்தச் சச்சரவு முற்றிலும் வீணானது, அர்த்தமற்றது என்று அறிந்தபோதிலும் அறிவுள்ள மனிதன் அவர்களிடம் சென்று, அவர்களுக்கு நல்ல முறையில் அறிவு புகட்டி வாதங்களைத் தனித்தனியே கேட்டு, அவர்களுடைய துன்பத்தைப் போக்குவதற்காக மிகவும் புத்திசாலித்தனமான முயற்சியை மேற்கொள்வான். அதைப்போலவே, பரமாத்மாவை அடைந்துவிட்ட யோகியும் துக்கத்தில் ஆழ்ந்து இருக்கும் உலகத்தின் துக்கத்தைப் போக்குவதற்கும் முயற்சி செய்கிறார். எந்த மஹாபுருஷர்களுக்கு உலகில் உள்ள செல்வம், மதிப்பு, கௌரவம், புகழ் முதலிய எந்தப் பொருளினாலும் கொஞ்சம்கூடப் பயனில்லையோ, எவருடைய பார்வையில் அடைய வேண்டிய பொருள் என்பது எதுவும் இல்லையோ, எவருக்கு ஒரே பரமாத்மாவைத் தவிர வேறு ஏதும் இருப்பதாக எண்ணமே இல்லையோ, அத்தகையவரது சொல்லுக்கு அடங்காத நிலையை, எந்த ஓர் உதாரணத்தின் மூலமாகவும் விளக்க முடியாது. அவர் விஷயத்தில் எந்த ஓர் உலகியல் உதாரணமும் முழுமையாகப் பொருந்தவே பொருந்தாது. ஏதேனும் ஓர் அம்சத்தைச் சுட்டிக்காட்டுவதற்காகத்தான் உதாரணங்கள் கொடுக்கப்படுகின்றன.

**கேள்வி:** இங்கு யோகியுடன் 'பரம:' என்று அடைமொழி கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'பரம:' என்ற அடைமொழி கொடுப்பதன் மூலம் இங்கே கூறப்படும் யோகியானவர் ஸாதகன் அல்லர், ஸித்தயோகி என்று பகவான் குறிப்பிட்டுக் காட்டுகிறார். பரமாத்மாவை அடைந்துவிட்ட பெரியவர் எந்த வழியை அடைந்தாலும், அவருக்கு ஸமபாவனை மிகவும் முக்யம் என்பதை நினைவிற்கொள்ளவேண்டும். ஆகவே பகவான் பரமாத்மாவை அடைவது பற்றிச் சொல்லுமிடங்களிலெல்லாம் ஸமபாவனைக்கு முதலிடம் தருகிறார். மற்ற நற்பண்புகள் எவ்வளவு இருந்தாலும் ஸமபாவனை இல்லையேல், அவர் இன்னும் பரமாத்மாவை அடையவில்லை என்பது திண்ணம். ஏனெனில் ஸமபாவனையின்றி விருப்பு-வெறுப்புகள் அடியோடு ஒழிந்துவிட்டன என்றோ, எல்லா உயிரினங்களிடமும் இயல்பான அன்பு உண்டாகிவிட்டது என்றோ சொல்ல முடியாது. ஆகவே ஸமபாவனையுள்ளவன்தான் பரமாத்மாவை அடைந்துவிட்ட பரமயோகி என்கிறார்.

**பொருத்தம்: பகவானிடமிருந்து ஸமபாவனை ஸம்பந்தமான உபதேசத்தைக் கேட்ட பிறகு மனதின் சஞ்சலம் காரணமாக, அதில் தன்னுடைய உறுதியான நிலை ஏற்படுவது மிகவும் கடினம் என்று உணர்ந்து அர்ஜுனன் சொல்கிறார்—**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



अर्जुन उवाच

**योऽयं योगस्त्वया प्रोक्तः साम्येन मधुसूदन।**
**एतस्याहं न पश्यामि चञ्चलत्वात्स्थितिं स्थिराम्॥ ३३॥**

அர்ஜுந உவாச

**யோऽயம் யோக₃ஸ்த்வயா ப்ரோக்த: ஸாம்யேந மது₄ஸூத₃ந ।**

**ஏதஸ்யாஹம் ந பஶ்யாமி சஞ்சலத்வாத்ஸ்தி₂திம் ஸ்தி₂ராம் ॥ 33 ॥**

**அர்ஜுந உவாச** – அர்ஜுனன் சொன்னார்: **மது₄ஸூத₃ந** – மதுஸூதன! **அயம்** – இந்த, **யோக₃:** – யோகம், **ஸாம்யேந** – ஸமபாவனையோடு கூடியதென்று, **ய:** – எது, **த்வயா** – உங்களால், **ப்ரோக்த:** – சொல்லப்பட்டதோ, **ஏதஸ்ய** – அந்த யோகத்தினுடைய, **ஸ்தி₂ராம்** – உறுதியான, **ஸ்தி₂திம்** – இருப்பை (நிலையை), **சஞ்சலத்வாத்** – (மனதின்) சஞ்சலத்தினால், **அஹம்** – நான், **ந பஶ்யாமி** – காண(உணர)வில்லை.

அர்ஜுனன் சொன்னார்: 'மதுஸூதன! இந்த யோகம் ஸமபாவனையோடு கூடியதென்று எது உங்களால் சொல்லப்பட்டதோ, அந்த யோகத்தினுடைய உறுதியான நிலையை மனதின் சஞ்சலத்தினால் நான் உணரவில்லை.

**கேள்வி:** 'அயம் யோக:' (இந்த யோகம்) என்று எதைக் கூறுகிறார்?

**பதில்:** கர்மயோகம், பக்தியோகம், த்யானயோகம், ஞானயோகம் முதலிய ஸாதனைகளின் எல்லையாகிய ஸமபாவனையைத் தான் இங்கு 'யோகம்' என்று கூறுகிறார்.

**கேள்வி:** இங்கு யோகம் என்றால் 'த்யானயோகம்' என்று ஏன் வைத்துக் கொள்ளக் கூடாது? ஏனெனில் மனதின் சஞ்சலம், த்யானயோகத்திற்குத்தானே இடையூறாக அமைகிறது?

**பதில்:** 6/28 வரை உள்ள ஸந்தர்பத்துடன் ஒன்றிப் பார்த்தால், த்யானயோகம் என்று கொள்வது சரிதான். ஆனால் 6/31,32வது ச்லோகங்களில் பகவானைச் சேர்ந்து விட்டவர்களுடைய செயற்பாடுகள் பற்றிய வர்ணனை இருக்கிறது. அர்ஜுனனுடைய கேள்வி ஸமத்வத்தைக் குறிப்பாகக் கொண்டு அமைந்திருக்கிறது. இதனால், யோகம் என்ற சொல்லுக்கு இங்கே 'ஸமத்வயோகம்' என்று தான் பொருள்.

**கேள்வி:** 'இந்த ஸமபாவனையின் உறுதியான நிலைக்கு மனதின் சஞ்சலம் இடையூறு ஆகும்' என்று ஏன் சொல்கிறார்?

**பதில்:** சஞ்சலம் என்றால் மனத்தடுமாற்றம் (விக்ஷேபம், சிதறி ஓடுதல்), இந்த மனத்தடுமாற்றத்திற்கு முக்ய காரணம் விருப்பு-வெறுப்புகள். அவை இருக்குமிடத்தில் ஸமபாவனை இருக்க முடியாது. ஏனெனில் விருப்பு-வெறுப்புகள், ஸமபாவனைக்கு நேர் எதிரானவை. ஆகவே ஸமபாவனை நிலைபெறுவதற்கு, மனதின் சஞ்சலம் இடையூறு என்பது கருத்து.

**பொருத்தம்:** ஸமத்வ யோகத்தில் மனச்சஞ்சலம் இடையூறு என்று கூறி, அர்ஜுனன் மனதைக் கட்டுப்படுத்துவது மிகவும் கடினமானது என்று கூறுகிறார்—

**चञ्चलं हि मनः कृष्ण प्रमाथि बलवद्दृढम्।**
**तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम्॥ ३४॥**

**சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாதி₂ ப₃லவத்₃த்₃ருட₄ம் ।**

**தஸ்யாஹம் நிக்₃ரஹம் மந்யே வாயோரிவ ஸுது₃ஷ்கரம் ॥ 34 ॥**

**ஹி** – ஏனெனில், **க்ருஷ்ண** – க்ருஷ்ண! **மந:** – இந்த மனம், **சஞ்சலம்** – எதிலும் நிலைக்காமல் அலையும் தன்மையுடையது, **ப்ரமாதி₂** – புலன்களை மிகவும் கலக்கும்



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தன்மையுடையது, **த்₃ருட₄ம்** – திடமானது, **ப₃லவத்** – வலிமை பொருந்தியது. (ஆகவே), **தஸ்ய** – அதை, **நிக்₃ரஹம்** – அடக்குதல், **வாயோ: இவ** – காற்றைத் தடுத்து நிறுத்துவது போன்று, **ஸுது₃ஷ்கரம்** – மிகவும் கடினமானது (என்று), **அஹம்** – நான், **மந்யே** – நினைக்கிறேன்.

ஏனெனில், க்ருஷ்ண! இந்த மனம் எதிலும் நிலைக்காமல் அலையும் தன்மையுடையது. புலன்களை மிகவும் கலக்கும் தன்மையுடையது. திடமானது. வலிமை பொருந்தியது. ஆகவே அதை அடக்குதல் காற்றைத் தடுத்து நிறுத்துவது போன்று மிகவும் கடினமானது என்று நான் நினைக்கிறேன்.'

**கேள்வி:** *மனச்சஞ்சலத்தைப் பற்றித்தான் அர்ஜுனன் முன் ச்லோகத்திலேயே சொல்லிவிட்டாரே, இங்கு மறுபடியும் சொல்வதற்கு என்ன காரணம்?*

**பதில்:** அங்கே அர்ஜுனன் ஸமத்வ யோகத்தில் உறுதியாக நிலைபெறுவதற்கு மனதின் சஞ்சலத்தை இடையூறு என்று சொன்னார். அப்படியானால், 'மனதை வசப்படுத்து, சஞ்சலம் போய்விடும்' என்று எளிதாக அவனுக்குப் பதில் சொல்லிவிடலாம். அந்த பதிலை எதிர்பார்த்துத்தான் அர்ஜுனன், 'மனதை வசப்படுத்துவது மிகவும் கடினமான செயல்' என்கிறார். இதற்காகவே மறுபடியும் அர்ஜுனன், 'மனம் எதிலும் நிலைக்காமல் அலையும் தன்மையுடையது' என்று கூறுகிறார்.

**கேள்வி:** *'மனம்' என்பதுடன் 'ப்ரமாதி' (கலக்கக் கூடிய) என்ற அடைமொழி கொடுப்பதன் காரணம் என்ன?*

**பதில்:** தீபத்தின் சுடர்போல மனம் சஞ்சலமானது மட்டுமன்று. பால், தயிர் கடையும் மத்தைப் போல உடலையும், புலன்களையும் கடைந்து, கலங்கச் செய்து கொண்டே இருக்கும் இயல்புமுடையதுதான் என்கிறார்.

**கேள்வி:** *2/60ல் புலன்கள் கலக்கக் கூடியவை என்று கூறப்பட்டது; இங்கு மனம் கூறப்படுகிறது. இதற்குக் காரணம் என்ன?*

**பதில்:** போக விஷயங்கள் சேர்வதால் மனம் புலன்களையும், புலன்கள் மனதையும் கலக்குகின்றன. இரண்டும் சேர்ந்து புத்தியைக் கலக்குகின்றன (2/67). ஆகவே இரண்டுமே மிகவும் கலக்கக் கூடியவை. ஆகவே 'ப்ரமாதி' என்று கூறப்படுகிறது.

**கேள்வி:** *'மனம் வலிமை பொருந்தியது' என்று ஏன் கூறுகிறார்?*

**பதில்:** மனம் நிலைத்து நிற்காமல் அலைபாய்ந்து கொண்டே இருக்கும். புலன்களையும், உடலையும் கடைந்து கொண்டே இருக்கும். மதம் பிடித்த யானையைப்போல மிகவும் பலம் கொண்டதும்கூட. மிகவும் மதம் கொண்ட யானையின்மீது அடிக்கடி துறட்டியினால் குத்துவதால், எவ்விதப் பயனும் ஏற்படாது. அது தன் இஷ்டப்படிதான் நடக்கும். இவ்விதம் விவேகம் என்ற அங்குசத்தினால் மனதை அடிக்கடி தாக்கினாலும் பலம் மிகுந்த மனம், போக விஷயங்கள் என்ற திசை தெரியாத காட்டிலிருந்து, வெளியே வர விரும்பாது.

**கேள்வி:** *'மனம் திடமானது' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** இந்த சஞ்சலமானதும், மிகவும் கலக்கக் கூடியதும், வலிமை வாய்ந்ததுமான மனம் உடும்புபோல திடமானதும்கூட. எந்த விஷயத்தில் திளைக்கிறதோ, அதையே உடும்பைப்போல விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டு, அதனுடன் சேர்ந்து அதுவாகவே ஆகிவிடும். 'திடமானது' என்பதற்கு இதுதான் பொருள்.

**கேள்வி:** *'மனதை அடக்குவது, காற்றை அடக்குவதுபோல, மிகவும் கடினமான செயல் என்று நினைக்கிறேன்' என்று அர்ஜுனன் கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** இவ்வளவு சஞ்சலமாகவும், மிகவும் கலக்கக் கூடியதாகவும் இருப்பதால், மனதை அடக்குவது கடினமான செயல். இதை நிரூபிப்பதற்காகக் காற்றை உதாரணமாகக் காட்டுகிறார். 'உடலில் இடைவிடாது ஸஞ்சரிக்கும் ப்ராண வாயுவைப் பிடிவாதம்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஆராய்ச்சி, விவேகம் இவற்றால் அடக்குவது எவ்வளவு கடினமோ, அதுபோல, போகப் பொருட்களில் இடைவிடாது அலைந்து கொண்டிருக்கும் சஞ்சலமானதும், மிகவும் கலக்கக் கூடியதும், பலமானதும், திடமானதுமான மனதைத் தடுத்து நிறுத்துவதும் மிகவும் கடினமான செயல் என்று நினைக்கிறேன்' என்று கூறுகிறார்.

**கேள்வி:** இங்கே 'க்ருஷ்ண' என்று விளிப்பதன் கருத்து என்ன?

**பதில்:** பக்தர்களின் சித்தத்தைத் தம்பால் ஈர்த்துக் கொள்ளும் காரணத்தால் பகவானுக்கு க்ருஷ்ணன் என்று பெயர் வந்தது. அப்பெயரால் பகவானை விளித்து, 'க்ருஷ்ண பகவானே! என் மனம் மிகவும் சஞ்சலமானது. என்னுடைய திறமையினால் இதை அடக்குவது மிகவும் கடினம் என நினைக்கிறேன். உங்களுக்கோ பக்தர்களின் மனதை ஈர்ப்பது இயல்பு; எளிதும்கூட. ஆகவே, க்ருபைகூர்ந்து என் மனதை உங்கள்பால் இழுத்துக் கொள்ளுங்கள்' என்று அர்ஜுனன் வேண்டிக் கொள்கிறார்.

**பொருத்தம்:** மனதை அடக்கும் விஷயத்தில் அர்ஜுனன் கூற்றை ஏற்றுக் கொண்டு பகவான் மனதை வசப்படுத்துவதற்கான உபாயத்தைக் கூறுகிறார்—

श्रीभगवानुवाच

**असंशयं महाबाहो मनो दुर्निग्रहं चलम्।**
**अभ्यासेन तु कौन्तेय वैराग्येण च गृह्यते॥ ३५॥**

ஸ்ரீப₄க₃வானுவாச

**அஸம்ஶயம் மஹாபா₃ஹோ மநோ து₃ர்நிக்₃ரஹம் சலம் ।**
**அப்₄யாஸேந து கௌந்தேய வைராக்₃யேண ச க்₃ருஹ்யதே ॥ 35 ॥‡**

**ஸ்ரீப₄க₃வானுவாச** – ஸ்ரீபகவான் சொன்னார்: **மஹாபா₃ஹோ** – நீண்ட புஜங்களுடையவனே! **அஸம்ஶயம்** – ஸந்தேஹமின்றி, **மந:** – மனம், **சலம்** – சஞ்சலமானதுதான். **து₃ர்நிக்₃ரஹம்** – (இதை) வசப்படுத்துவதும் கடினம்தான். **து** – ஆனால், **கௌந்தேய** – குந்தியின் மகனான அர்ஜுனே! **அப்₄யாஸேந** – அப்யாஸத்தாலும், **வைராக்₃யேண ச** – வைராக்யத்தினாலும், (**மந:** – மனம்), **க்₃ருஹ்யதே** – வசப்படுத்தப்படுகிறது.

ஸ்ரீபகவான் சொன்னார்: "நீண்ட புஜங்களுடையவனே! ஸந்தேஹமின்றி மனம் சஞ்சலமானதுதான். இதை வசப்படுத்துவதும் கடினம்தான். ஆனால் குந்தியின் மகனான அர்ஜுனே! அப்யாஸத்தாலும் வைராக்யத்தினாலும் மனம் வசப்படுத்தப்படுகிறது.

**கேள்வி:** 'ஸந்தேஹமின்றி மனம் சஞ்சலமானது. இதை வசப்படுத்துவது மிகவும் கடினம்தான்' என்று பகவான் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அர்ஜுனன் கூறுவதை பகவான் ஆமோதித்து மனம் சஞ்சலமானது, அடக்க முடியாதது என்பதை ஏற்றுக் கொள்கிறார்.

**கேள்வி:** 'து' (ஆனால்) என்பதன் கருத்து என்ன?

**பதில்:** மனதை வசப்படுத்துவது மிகவும் கடினம். ஆனாலும் அப்யாஸத்தினாலும், வைராக்யத்தினாலும் இதை எளிதாக வசப்படுத்தலாம் என்று நிரூபித்து, ஆறுதல் கூற ஆரம்பிக்கிறார்.

**கேள்வி:** 'அப்யாஸம்' என்றால் என்ன?

---

‡ பதஞ்ஜலியின் யோகஸூத்ரம் இதே கருத்தைக் கூறுகிறது—

'அப்₄யாஸவைராக்₃யாப்₄யாம் தந்நிரோத₄' (1/12)

'பயிற்சியினாலும், வைராக்யத்தினாலும் சித்தத்தின் போக்கு அடக்கப்படுகிறது.'

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** மனதை மற்ற விஷயங்களிலிருந்து திரும்பத் திரும்ப இழுத்து, ஒரு குறிப்பிட்ட இலக்கில் நிலைக்க வைக்கும் – அந்தப் பொருளாகவே ஆக்கும் – அதை அதே லக்ஷ்யப் பொருளில் ஈடுபடுத்தும் முயற்சிதான் இங்கே 'அப்யாஸம்' எனப்படுகிறது. இங்கே பரமாத்மாவிடம் மனதை ஈடுபடுத்துவது பற்றிய பேச்சு. ஆகவே பரமாத்மாவைத் தன் இலக்காக ஆக்கி, மன ஓட்டங்களின் பெருக்கைத் திரும்பத் திரும்ப அவரிடமே ஈடுபடுத்தும் முயற்சிக்கு இங்கு 'அப்யாஸம்' என்று பெயர்.‡

**கேள்வி:** சித்தத்தின் போக்குகளைப் பரமாத்மாவின்பால் திருப்புவதற்குரிய பயிற்சியை எவ்வாறு செய்யவேண்டும்?

**பதில்:** "பரமாத்மாதான் எல்லாவற்றிற்கும் மேலானவர்; ஸர்வ வல்லமை படைத்தவர்; எல்லோரையும் ஆள்பவர்; அனைத்திலும் உயர்ந்த பரம தத்வம்; அவரை அடைவதுதான் வாழ்க்கையின் பரம லக்ஷ்யம்" என்னும் கருத்தை மனதில் உறுதியாக நிலைக்கச் செய்து பயிற்சி செய்யவேண்டும். இதற்குப் பல வழிமுறைகள் சாஸ்த்ரங்களில் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றில் சில—

(1) ச்ரத்தையுடனும், பக்தியுடனும், உறுதி பெற்ற புத்தியின் உதவியுடனும் மனதை மீண்டும் மீண்டும் ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தினிடம் ஈடுபடுத்துகின்ற பயிற்சி செய்தல் (6/26).

(2) எங்கே மனம் சென்றாலும், அங்கே ஸர்வவல்லமை படைத்த தன் இஷ்ட தெய்வமான பரமேசுவரனின் ஸ்வரூபத்தை நினைக்கவேண்டும்.

(3) பகவானை மனதாலேயே பூஜை செய்யப் பயிலவேண்டும்.

(4) பேச்சு, மூச்சு, நாடி, தொண்டை, மனம் இவற்றில் ஏதாவது ஒன்றின் மூலம் எப்பொழுதும் ஸ்ரீராமன், ஸ்ரீக்ருஷ்ணன், சிவன், விஷ்ணு, சூரியன், அம்பாள் முதலிய தேவதைகளின் நாமங்களில் விருப்பமான நாமத்தைப் பரம ப்ரேமையோடும், ச்ரத்தையோடும், 'பரமாத்மாவின் நாமம்தான் அது' என்ற உணர்வுடனும் நிஷ்காமமாகவும் இடைவிடாமல் ஜபிக்க வேண்டும்.

(5) பகவானைப் பற்றிய சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட உபதேசங்களை ச்ரத்தையுடனும், பக்தியுடனும் திரும்பத் திரும்பச் சிந்திக்க வேண்டும். அவற்றை அனுஸரித்து நடக்க வேண்டும்.

(6) பகவானை அடைந்துவிட்ட மஹாத்மாக்களை அணுகி, அவர்களுடைய ஸத்ஸங்கத்தில் அவர்களது அமுதமயமான மொழிகளை ஊக்கத்துடனும், பக்தியுடனும் கேட்க வேண்டும். அவர்கள் சொன்னபடி நடக்க முயல வேண்டும் (13/25).

(7) மனதின் சஞ்சலம் அழிந்து அது பகவானிடமே ஈடுபடவேண்டும் என்று மனமுருகி அடிக்கடி பகவானிடம் ப்ரார்த்தனை செய்யவேண்டும்.

இதைத் தவிர மேலும் பல வழிகள் உண்டு. ஒன்று நினைவில் இருக்கவேண்டும். முயற்சியும், பயிற்சியும் பயன்பெற வேண்டுமானால், மிகுந்த மரியாதை உணர்ச்சியுடன் ஊக்கமும், ஆக்கமும் கொண்டு ஓய்வின்றித் தொடர்ந்து நீண்ட நேரம் பயிற்சி செய்யவேண்டும்.§ இன்று ஒரு ஸாதனை; நாளை அதைவிட்டு வேறொரு ஸாதனை; சில

---

‡ 'தத்ர ஸ்தி$_2$தௌ யத்நோப$_4$யாஸ:' (யோக$_3$ த$_3$ர்ஶநம் 1/13)
அங்கேயே நிலைத்து நிற்க வைக்கும் முயற்சிதான் பயிற்சி.

§ 'ஸ து தீ$_3$ர்க$_4$காலநைரந்தர்யஸத்காராஸேவிதோ த்$_3$ருட$_4$பூ$_4$மி: ।' (யோக$_3$த$_3$ர்ஶநம் 1/14)
'அந்தப் பயிற்சி வெகுநாட்கள் இடைவிடாது மேற்கொள்ளப்பட்டுத் தொடர்ந்து ச்ரத்தையுடன் நடப்பதால் உறுதியான அடிப்படை கொண்டதாகிறது.'

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நாட்களுக்குப் பிறகு மற்றொரு ஸாதனை என்று ஒன்றிலும் பிடிப்பும், நம்பிக்கையுமில்லாமல் இன்று செய்வதை நாளை செய்வதில்லை; மறுபடியும் ஆரம்பிப்பது; மறுபடியும் விடுவது; கொஞ்சநாள் செய்துவிட்டு ஓய்ந்துவிடுவது; உறுதியில்லாமல் போவது என்றிருந்தால், கடைசியில் பயிற்சியை அறவே விட்டுவிடுவதில்தான் போய் முடியும். இந்தவிதமான பயிற்சி பயனளிக்காது.

**கேள்வி:** வைராக்யத்தின் தன்மை என்ன?

**பதில்:** இவ்வுலக, பரலோகத்தைச் சார்ந்த பொருட்களிலுமுள்ள பற்று விலகி, எல்லா விருப்பங்களும் அறவே அழிந்துவிட்டால், அந்த மனப்பாங்கு வைராக்யம் எனப்படும்.‡ வைராக்யமுள்ளவனுடைய சித்தத்தில் ஸுகம் அல்லது துக்கம் இரண்டினாலுமே தனிப்பட்ட விகாரம் (மாறுதல்) ஒன்றும் ஏற்படாது. அவன் அசையாத திடமான உள்ளார்ந்த பற்றின்மை அதாவது முழுமையான வைராக்யம் அடைந்துவிடுகிறான். எந்த நிலையிலும் அவனுடைய சித்தம் எந்தப் பக்கத்திலும் இழுபடாது.

**கேள்வி:** வைராக்யம் எப்படி ஏற்படும்?

**பதில்:** வைராக்யத்திற்குப் பல ஸாதனங்கள் உள்ளன. அவற்றில் சில—

(1) உலகியல் பொருட்களை ஆராய்ந்து அவற்றில் அழகு, அன்பு, ஸுகம் இல்லை என்பதை உணர வேண்டும்.

(2) அவை பிறப்பிறப்பு, மூப்பு, நோய் முதலிய துக்கங்களும், குற்றங்களும் நிறைந்தவை; நிலையற்றவை; பயம் தருபவை என்று அறிய வேண்டும்.

(3) உலக வாழ்க்கை, பகவான் இவ்விரண்டின் தத்வத்தை நிருபிக்கின்ற அறநூல்களைக் கற்கவேண்டும்.

(4) தீவிர வைராக்யம் உள்ள பெரியோர்களுடன் சேர்ந்து கொள்ளவேண்டும். அத்தகைய சேர்க்கை கிடைக்காவிடில் வைராக்யம் நிறைந்த அவர்களுடைய படங்களையும், சரித்ரங்களையும் நினைத்து, மனதில் பதித்துக் கொள்ளவேண்டும்.

(5) உலகில் உள்ள மிகப் பெரிய கட்டிடங்களின் இடிபாடுகளையும், பெரிய நகரங்களும், கிராமங்களும் அழிவதையும் பார்த்து உலகம் கணத்தில் அழியக்கூடியது என்று உணரவேண்டும்.

(6) ப்ரம்மம் ஒன்றே பகுதியற்றது; இரண்டற்றது என்ற ஞானம் பெற்று, மற்றவை எதற்கும் இருப்பே இல்லை என்று அறியவேண்டும்.

(7) தகுதியுள்ள பெரியோர்களிடமிருந்து, பகவானுடைய வர்ணனைக்கடங்காத குணங்கள், ப்ரபாவங்கள், தத்வம், ப்ரேமை, ரஹஸ்யம், அவருடைய லீலா சரித்ரங்கள், தெய்விக அழகு, இனிமை இவற்றைத் திரும்பத் திரும்பக் கேட்டறிந்து, அவற்றில் முற்றும் ஈடுபட்டு, மூழ்கிவிட வேண்டும். இவ்விதம் இன்னும் பல ஸாதனங்கள் உள்ளன.

**கேள்வி:** மனதை வசப்படுத்துவதற்கு அப்யாஸம், வைராக்யம் இரண்டும் வேண்டுமா? ஒன்றே போதுமா?

---

‡ வைராக்யத்தைப் பற்றி இதற்கு ஒப்பப் பதஞ்ஜலியும் யோகஸூத்ரத்தில் கூறுகிறார்—

'த்$_3$ருஷ்டாநுஶ்ரவிகவிஷயவித்ருஷ்ணஸ்ய வஶீகாரஸம்ஜ்ஞா வைராக்$_3$யம் ।' (1/15)

பெண்கள், செல்வம், வீடு, மானம், பெருமை முதலிய இவ்வுலக விஷயங்களிலும், ஸ்வர்கம் முதலிய பரலோக விஷயங்கள் முழுவதிலும், 'அடைந்துதான் ஆகவேண்டு'மென்ற துடிப்புள்ள ஆசையை அகற்றி மனதைத் தன் வசத்தில் வைத்துக் கொண்டிருக்கும் நிலை வைராக்யம்.

'தத்பரம் புருஷக்$_2$யாதேர்கு$_3$ணவைத்ருஷ்ண்யம் ।' (1/16)

இதற்கு மேலே ப்ரக்ருதிக்கு முற்றிலும் அப்பாற்பட்ட பரமாத்ம ஞானத்தினால் முக்குணங்களில் வேட்கையற்று இருப்பது உயர்ந்த வைராக்யம் எனப்படும். அது மிகச் சிறந்தது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இரண்டும் வேண்டும். அப்யாஸம் மன ஓட்டத்தை பகவானை நோக்கி அழைத்துச் செல்லும் அழகிய பாதையாகும். வைராக்யம் அந்த மனப்பெருக்கைப் போகப் பொருட்கள்பால் செல்லாமல் தடுக்கும் அணையாகும். இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று துணை செய்பவை என்பதை நினைவில் கொள்ள வேண்டும். அப்யாஸத்தால் வைராக்யம் அதிகரிக்கும். வைராக்யத்தினால் அப்யாஸத்தில் முன்னேற்றம் ஏற்படும். ஆகவே, ஒன்றைத் திடமாகப் பற்றிக் கொண்டாலும், அதனால் மனம் வசப்படமுடியும்.

**கேள்வி:** அர்ஜுனனை, 'நீண்ட புஜமுடையோனே' என்று இங்கு அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** அர்ஜுனன் உலகப் புகழ்பெற்ற வீரர். தேவர்கள், தானவர்கள், மனிதர்கள் என்ற எல்லாத் தரத்தில் உள்ள மாவீரர்களையும் அர்ஜுனன் தம் தோள்வலிமையினால் வென்றிருக்கிறார். இந்த வீரத்தை நினைவுறுத்தி பகவான் அவருக்கு உற்சாகமூட்டுகிறார் போலும்! 'உன்னைப் போன்ற ஒப்பற்ற வீரன் ஒருவன், 'மனம் இவ்வளவு பலமுள்ளதே' என்று நினைத்து பயப்படவும் தேவையில்லை; உற்சாகத்தை இழப்பதும் சரியன்று; துணிவுடன் கிளம்பு. நீ அதை வெற்றி கொள்ளலாம்.'

**பொருத்தம்:** மனதை வசப்படுத்த பகவான் உபாயங்களைச் சொன்னார். மனதை வசப்படுத்தாவிட்டால், என்ன தீங்கு நேரிடும் என்பதை இனி விளக்குகிறார்—

**असंयतात्मना योगो दुष्प्राप इति मे मतिः।**
**वश्यात्मना तु यतता शक्योऽवाप्तुमुपायतः॥ ३६॥**

**அஸம்யதாத்மநா யோகோ₃ து₃ஷ்ப்ராப இதி மே மதி: ।**
**வஶ்யாத்மநா து யததா ஶக்யோऽவாப்துமுபாயத: ॥ 36 ॥**

**அஸம்யத ஆத்மநா** – மனதை வசப்படுத்த இயலாதவனால், **யோக₃:** – யோகம், **து₃ஷ்ப்ராப:** – அடைய முடியாதது. **து** – ஆனால், **வஶ்ய ஆத்மநா** – மனதை அடக்கிய, **யததா** – முயற்சியுள்ள மனிதனால், **உபாயத:** – பயிற்சியினால், **அவாப்தும்** – யோகத்தை அடைவது, **ஶக்ய:** – ஸாத்யமானது (எளிது), **இதி** – என்பது, **மே மதி:** – என் கருத்து.

மனதை வசப்படுத்த இயலாதவனால் யோகம் அடைய முடியாதது. ஆனால் மனதை அடக்கிய முயற்சியுள்ள மனிதன் பயிற்சியினால் யோகத்தை அடைவது ஸாத்யமானது – எளிது என்பது என் கருத்து."

**கேள்வி:** மனதை வசப்படுத்தாதவனுக்கு ஸமத்வயோகம் பெறுவது ஏன் மிகவும் கடினம்?

**பதில்:** அப்யாஸத்தினாலும், வைராக்யத்தினாலும் வசப்படாத மனதில் விருப்பு-வெறுப்பு இவற்றின் ஆட்சிதான் இருக்கும். விருப்பு-வெறுப்பு இவற்றின் தூண்டுதலுக்கு ஆட்பட்டு, மனம் உலகத்தில் இங்குமங்கும் குரங்கைப் போலப் பாய்ந்து குதிக்கும். போகங்களில் பற்றுக் கொண்ட மனமுடையவனது புத்தியும் பல திசைகளில் விரிந்து ஸ்திரமற்ற தன்மையை அடையும் *(2/41-44)*. இந்த நிலையில் ஸமத்வயோகம் பெறுவது எப்படி? ஆகவே இப்படிக் கூறுகிறார்.

**கேள்வி:** வசப்பட்ட மனதின் இலக்கணம் என்ன?

**பதில்:** மனம் வசப்பட்டுவிட்டால் அதன் சஞ்சலம், பெரிதும் கலக்கும் தன்மை, மிகுந்த வலிமை, முரட்டுப் பிடிவாதம் இவை அகன்றுவிடும். நேர்மையாகவும், எளிமையாகவும், அமைதியாகவும் பின்தொடரும் சீடனைப்போல, சொன்னபடி செய்யும். எப்போது, எங்கே, எத்தனை நேரமானாலும் இரு என்று சொன்னால் அப்படியே அசைவின்றி இருக்கும். அப்படி நீடித்து நிலைத்து இருப்பதில் முரண்டு பிடிக்காது. புலன்களின் இழுப்புக்கு உட்பட்டுப் போக விரும்பாது. தானும் வேறு விருப்புக் கொள்ளாது; சோர்வடையாது; தொல்லை தராது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மிகவும் அமைதியுடன் இஷ்டமான பொருளில் சேர்ந்து இருக்கும். பிறகு தனியாக மனம் என்பது இருக்கிறதா, இல்லையா என்பதே தெரியாமல் போகும். இதுதான் வசப்பட்ட மனதின் உண்மையான இலக்கணம்.

**கேள்வி:** 'து' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனதை வசப்படுத்தாதவனிடமிருந்து வசப்படுத்தியவனைப் பிரித்துக் காட்டுவதற்காக 'து' (ஆனால்) என்று உபயோகிக்கிறார்.

**கேள்வி:** மனதை வசப்படுத்திவிட்டவன் 'முயற்சி உள்ளவனாக' இருக்கவேண்டும் என்று ஏன் கூறுகிறார்?

**பதில்:** மனம் வசப்பட்ட பிறகு, முயற்சி செய்யாமல் இருந்தால், அதாவது மனதை முழுமையாகப் பரமாத்மாவிடம் இணைப்பதற்குரிய தீவிர ஸாதனை புரியாவிட்டால், ஸமத்வயோகம் தானாக வந்துவிடாது. முயற்சியும் வேண்டும் என்பதை வலியுறுத்துவதற்காக இப்படிச் சொல்கிறார்.

**கேள்வி:** மனம் வசப்பட்ட பிறகு, ஸமத்வயோகத்தை அடைய என்ன ஸாதனை புரியவேண்டும்?

**பதில்:** பல ஸாதனைகள் உள்ளன. அவற்றில் சில:

(1) ஆசைகளையும், எல்லா போகப் பொருட்களையும் துறந்து, விவேகம், வைராக்யம் இவற்றின் துணைகொண்டு புனிதமானதும், நிலையானதும், பரம்பொருளை அடையும் முனைப்புடன் கூடியதுமான புத்தியின் மூலமாக மனதை எப்பொழுதும் இடைவிடாது விஞ்ஞான ஆனந்தமயமான பரமாத்மாவின் ஸ்வரூபத்தில் நிலைநிறுத்தி, வேறு எந்தச் சிந்தனையுமற்று இருக்க வேண்டும் (6/25).

(2) அகில உலகுமே உள்ளும், புறமும், மேலும், கீழும் எங்கும் நிறைந்த நித்யமான, விஞ்ஞான, ஆனந்தமயமான பரமாத்மாவின் பரிபூர்ண ஸ்வரூபம்தான். வானில் உள்ள மேகங்களில் மேலும், கீழும், உள்ளும், புறமும் எங்கும் ஆகாசமே (இடைவெளியே) நிறைந்து, அவற்றிற்கு ஆதாரப் பொருளாய் விளங்குவதுபோலத் தானும், தன்னோடுகூட அகில ப்ரம்மாண்டமும், பரமாத்மாவினால் ஊடுருவப் பெற்ற பரமாத்மாவினுடைய ஸ்வரூபமே என்று அறியவேண்டும் (13/15).

(3) உடல், புலன்கள், மனம் இவற்றின் மூலம் நடைபெறும் செயல்கள் யாவும் குணங்களின் மூலமாகவே நடைபெறுகின்றன. அதாவது புலன்கள் அவற்றிற்குரிய நுகர்பொருட்களில் செயல்படுகின்றன என்றறிந்து, அந்த எல்லாச் செயல்களிலிருந்தும் தான் முற்றிலும் வேறானவன் என்று பார்க்க வேண்டும். தான் ஸாக்ஷிதான் என்று நினைக்க வேண்டும். நித்யமான, விஞ்ஞான, ஆனந்தமயமான பரமாத்மாவில் இரண்டறக் கலந்து எல்லாமே ப்ரம்மம்தான் என்ற ஸமஷ்டி புத்தியைக் கொண்டு உருவமற்ற, அநந்த, சேதந ஸ்வரூபத்தில் உள்ளடங்கிய ஸங்கல்பத்தினால் எல்லாமே இயங்குகின்றன என்ற அடிப்படையில், காணப்படுகின்ற ப்ரபஞ்சத்தை நொடியில் அழியக் கூடியது என்று உணர வேண்டும் (5/8,9, 14/19).

(4) பகவானுடைய ஸ்ரீராமன், ஸ்ரீக்ருஷ்ணன், சிவன், விஷ்ணு, ஸூரியன், சக்தி அல்லது விசுவரூபம் இவற்றில் ஏதேனும் ஒரு ஸ்வரூபத்தை எல்லாவற்றிலும் சிறந்தவர்; எல்லாவற்றிலும் அந்தர்யாமி; எங்கும் நிறைந்தவர்; எல்லாம் அறிந்தவர்; ஸர்வவல்லமை படைத்தவர்; மிகுந்த க்ருபை உள்ளவர்; அன்பு முழுமைக்கும் உரியவர் – அவரே பரமாத்மா என்றுணர்ந்து, தனது ருசிக்கேற்றவாறு அந்தத் திருவுருவின் சித்ரத்தையோ, சிலா மூர்த்தியையோ, உலோக மூர்த்தியையோ ப்ரதிஷ்டை செய்யவேண்டும். அல்லது மனதால் தன் இதயத்திலோ அல்லது வெளியிலோ, பகவான் தன் எதிரே தோன்றுகிறார்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



என்று பாவித்து, அந்த மூர்த்தியிடம் மிகுந்த ச்ரத்தையுடனும், பக்தியுடனும் இடைவிடாது மனதைச் செலுத்தி இலை, மலர், கனி இவற்றை ஸமர்ப்பித்துத் தக்க முறையில் உபசாரம், வழிபாடு இவை செய்து நாமஜபம் செய்யவேண்டும்.

(5) வெற்றி-தோல்விகளில் ஸமபாவனை கொண்டு, பற்று, பயனில் விருப்பம் இவற்றை அகற்றியும், சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளை ஆற்றவேண்டும் *(2/48)*.

(6) எல்லாமே பகவானுடையவைதான் என்றுணர்ந்து, அறநூல்களில் விதிக்கப்பட்ட கடமைகளான யக்ஞம், தானம், தவம், ஸேவை முதலியவற்றை ச்ரத்தையுடனும், பக்தியுடனும் பகவானுக்காகவே ஆற்றவேண்டும் *(12/10)*.

(7) எல்லா கடமைகளையும், தன்னையும் பகவானுக்கு ஸமர்ப்பித்து மமகாரம், பற்று இவற்றை அகற்றி, இடைவிடாது பகவானையே நினைத்துக் கொண்டு, கைப்பாவையைப் போல, 'பகவான் ஆட்டி வைத்தபடி ஆடுகிறோம்' என்று மகிழ்ச்சியுடன் கடமைகளை ஆற்றிக் கொண்டே இருக்கவேண்டும் *(18/57)*.

இவை தவிர இன்னும் பல ஸாதனங்களும் உண்டு. மனதை வசப்படுத்துவதற்குரிய ஸாதனைகளை, மனம் வசப்பட்ட பிறகும் ச்ரத்தையுடனும், அன்புடனும் பரமாத்மாவை அடையும் நோக்கத்துடனும் செய்து வந்தால், அவற்றின் மூலம் ஸமத்வயோகத்தை அடைய முடியும்.

**பொருத்தம்:** யோக ஸித்தியை அடைவதற்கு மனதை வசப்படுத்துவது மிகவும் அவசியம் என்று கூறினார். மனம் வசப்படாவிடினும், யோகத்தில் ச்ரத்தை கொண்டு, அதன் மூலமாக பகவானை அடைவதற்காக ஸாதனை புரிகிறவன் இறந்த பிறகு என்ன கதியைப் பெறுகிறான் என்று அறிய விருப்பம் கொண்டு அர்ஜுனன் கேட்கிறார்—

अर्जुन उवाच

**अयतिः श्रद्धयोपेतो योगाच्चलितमानसः।**
**अप्राप्य योगसंसिद्धिं कां गतिं कृष्ण गच्छति॥३७॥**

அர்ஜுந உவாச

**அயதி: ஸ்ரத்₃த₄யோபேதோ யோக₃ாச்சலிதமாநஸ: ।**
**அப்ராப்ய யோக₃ஸம்ஸித்₃தி₄ம் காம் க₃திம் க்ருஷ்ண க₃ச்ச₂தி ॥ 37 ॥**

**அர்ஜுந உவாச** – அர்ஜுனன் சொன்னார்: **க்ருஷ்ண** – க்ருஷ்ண! **ஸ்ரத்₃த₄யா உபேத:** – யோகத்தில் ச்ரத்தை உள்ளவனாக இருந்தும், **அயதி:** – மனஅடக்கம் இல்லாமை யினால் (மரணத்தறுவாயில்), **யோக₃ாத்** – யோகத்திலிருந்து, **சலித மாநஸ:** – மனம் நழுவிய இத்தகைய ஸாதகனான யோகி, **யோக₃ ஸம்ஸித்₃தி₄ம்** – யோகத்தின் பயனை (பகவானின் தர்சனத்தை), **அப்ராப்ய** – அடையப் பெறாது (போனால்), **காம் க₃திம்** – எந்த கதியை, **க₃ச்ச₂தி** – அடைகிறான்?

அர்ஜுனன் சொன்னார்: "க்ருஷ்ண! யோகத்தில் ச்ரத்தை உள்ளவனாக இருந்தும் மனஅடக்கம் இல்லாமையினால் மரணத்தறுவாயில் யோகத்திலிருந்து மனம் நழுவிய இத்தகைய ஸாதகனான யோகி யோகத்தின் பயனை – பகவானின் தர்சனத்தை அடையப் பெறாது போனால் எந்தக் கதியை அடைகிறான்?

**கேள்வி:** இங்கு 'அயதி:' என்ற சொல்லுக்கு 'முயற்சி அற்றவன்' என்று பொருள் கூறாமல், 'மனவடக்கமற்றவன்' என்று ஏன் பொருள் கூற வேண்டும்?

**பதில்:** முன் ச்லோகத்தில் மனம் வசப்படாத 'அஸம்யதாத்மா'வுக்கு யோகம் கிட்டுவது கடினம் என்று சொன்னார். அதிலிருந்து அர்ஜுனனின் கேள்வி எழுகிறது. தவிரவும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ச்ரத்தையுள்ளவனுக்கு முயற்சி இருக்காது என்பது பொருந்தாது. அதுபோலவே வசப்பட்ட மனம் நழுவிப் போகும் என்ற ஐயமும் தோன்றுவதற்கில்லை. ஆகவே 'அயதி:' என்ற சொல்லுக்கு 'முயற்சியற்றவன்' என்று பொருள் கொள்ளாமல், முயற்சி இருந்தும்கூட மனம் வசப்படாத – 'மனவடக்கமில்லாத' ஸாதகன் என்றே பொருள் கொள்ளவேண்டும்.

**கேள்வி:** இங்கு 'யோகம்' என்று எதைக் கூறுகிறார்? அதிலிருந்து மனம் நழுவுவது என்றால் என்ன? ச்ரத்தையுள்ளவனாக இருந்தும் அவனது மனம் யோகத்திலிருந்து நழுவுவதற்கு என்ன காரணம்?

**பதில்:** பரமாத்மாவை அடைவதற்காக ஏற்றுக் கொள்ளப்படும் ஸாங்க்யயோகம், பக்தியோகம், த்யானயோகம், கர்மயோகம் முதலிய ஸாதனைகளின் பயனாக ஏற்படும் ஸமபாவனைதான் இங்கு யோகம் என்ற சொல்லுக்குப் பொருள். உடலிலிருந்து உயிர் பிரியும் போது, ஸமபாவனையிலிருந்தோ, பகவானிடமிருந்தோ மனம் பிரிந்துவிட்டால், மனம் யோகத்திலிருந்து நழுவிவிட்டது என்று பொருள். இப்படி மனம் நழுவுவதற்கு மனச்சஞ்சலம், பற்றுதல், ஆசை, உடல்வேதனை, நினைவிழத்தல் முதலிய பல காரணங்கள் இருக்கக் கூடும்.

**கேள்வி:** 'யோக ஸம்ஸித்தி:' என்ற சொல் எந்த ஸித்தியைக் குறிக்கிறது? 'அதை அடையாமல் போவது' என்றால் என்ன?

**பதில்:** எல்லாவிதமான யோகங்களையும் புரிந்து, அவற்றின் பயனாக ஸமபாவனையும் பெற்று, அதன் பயனாகப் பரமாத்மாவை அடைந்துவிடுவதே யோகஸம்ஸித்தியாகும். இறக்கும்போது ஸமபாவனையாகிய யோகத்திலிருந்தோ, பகவானுடைய சிந்தனையிலிருந்தோ மனம் விலகி விடுவதால் பரமாத்மாவை நேரில் தர்சிக்காமல் போவதுதான் யோகஸம்ஸித்தியை அடையாமல் போவது என்று கூறுகிறார்.

**கேள்வி:** இங்கே 'யோகத்திலிருந்து நழுவிவிடுவது' என்பதற்கு மரண காலத்தில் ஸமபாவனையிலிருந்து நழுவிவிடுவது என்ற பொருள் கொள்ளாமல், ஸாதகன் கர்மயோகம், த்யானயோகம் முதலியவை செய்யும்போதே அந்த ஸாதனைகளை விட்டுவிட்டு விஷயபோகங்களில் ஈடுபடுவானேயானால், அவனுக்கு என்ன கதி ஏற்படும் என்பது அர்ஜுனனுடைய கேள்வியின் கருத்தாக எடுத்துக் கொண்டால் என்ன தவறு?

**பதில்:** அர்ஜுனனுக்கு பகவான் பதில் கூறுமிடத்தில், இறந்த பிறகு ஸாதகன் அடையும் கதியைத்தான் வர்ணிக்கிறார். அந்த ஸாதகனின் அடுத்த பிறவியைப் பற்றித்தான் சொல்கிறார். ஆகவே, அர்ஜுனனின் கேள்வி மரண காலத்தைப் பற்றியதுதான் என்பது தெளிவு. பொதுவாக 'கதி' என்ற சொல்லே இறந்த பிறகு ஏற்படும் விளைவைக் குறிப்பதாகத்தான் வழக்கில் இருந்து வருகிறது. ஆகவே, மரணத்தறுவாயைப் பற்றித்தான் இங்கே பேச்சு என்பதே பொருத்தமாக அமையும்.

**कच्चिन्नोभयविभ्रष्टश्छिन्नाभ्रमिव नश्यति।**
**अप्रतिष्ठो महाबाहो विमूढो ब्रह्मणः पथि॥ ३८॥**

**கச்சிந்நோப$_4$யவிப்$_4$ரஷ்டஶ்சி$_2$ந்நாப்$_4$ரமிவ நஶ்யதி ।**

**அப்ரதிஷ்டோ$_2$ மஹாபா$_3$ஹோ விமூடோ$_4$ ப்$_3$ரஹ்மண: பதி$_2$ ॥ 38 ॥**

**மஹாபா$_3$ஹோ** – அகன்ற தோள்களுடையவனே! **ப்$_3$ரஹ்மண:** – பகவானை அடைகின்ற, **பதி$_2$** – மார்க்கத்தில், **விமூட$_4$:** – (வழி தெரியாமல்) மயங்கி, **அப்ரதிஷ்ட$_2$:** – பிடிப்பு இல்லாத மனிதன், **உப$_4$ய விப்$_4$ரஷ்ட:** – இரண்டு வழிகளினின்றும் நழுவி, **சி$_2$ந்ந அப்$_4$ரம் இவ** – சிதறிய மேகம்போல, **கச்சித் ந நஶ்யதி** – அழிந்து விடமாட்டானா?

அகன்ற தோள்களுடையவனே! பகவானை அடைகின்ற மார்க்கத்தில் வழி தெரியாமல் மயங்கி, பிடிப்பு இல்லாத மனிதன் இரண்டு வழிகளினின்றும் நழுவிச் சிதறிய மேகம்போல அழிந்து விடமாட்டானா?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'பகவானை அடையும் முறையில் வழி தெரியாமல் மயங்கி, பிடிப்பில்லாமல் போவது' என்றால் என்ன?

**பதில்:** மனதின் சஞ்சலத்தினாலும், விவேகம், வைராக்யம் இவற்றின் குறைவினாலும், பகவானை அடைவதற்கான ஸாதனைகளிலிருந்து மனம் நழுவி, அதன் விளைவாகப் பரமாத்மாவை அடைய இயலாமற்போவது ஒருபுறம். பயன்களின் பற்றைத் துறந்துவிட்டபடியால், புண்ய கர்மங்களின் பயனான ஸ்வர்கம் முதலிய உலகங்களும் கிடைக்காமல் போவது மறுபுறம். பகவானை அடைவதற்கு எப்புறம் போவது என்று மனிதன் மயங்கி, ஒரு வழியிலும் பிடிப்பில்லாமல் போவது என்பதன் பொருள் இதுதான்.

**கேள்வி:** 'சிதறிய மேகம் போல இரு வழிகளிலிருந்தும் நழுவி அழிந்து போவது' என்றால் என்ன?

**பதில்:** வாழ்நாள் முழுவதும் பயனைக் கருதாது, கடமைகளை ஆற்றுவதால் ஸ்வர்கம் முதலிய போகங்களும் கிடைக்காமற்போவது ஒருபுறம் இருக்க, கடைசி நேரத்தில் பரமாத்மாவை அடைவதற்குரிய ஸாதனையிலிருந்து மனம் நழுவிவிடுமானால், பகவானை அடைய முடியாமலும் போய்விடுகிறது. பெரிய மேகத்திலிருந்து விலகிய ஒரு சிறு பகுதி, இன்னொரு மேகத்துடன் இணையாமல் தனித்து இருந்துவிட்டால், அது மேலும் சிதறிக் காற்றில் கரைந்துவிடுவதுபோல, ஸாதகன் ஸ்வர்கம் முதலிய மறுமையையும் இழந்து, பரமாத்மாவையும் இழந்து வீணாகிவிடமாட்டானா, அதாவது அதோகதி ஏற்பட்டுவிடாதா என்று அர்ஜுனன் ஐயமுறுகிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் ஸந்தேஹத்தை எடுத்துச் சொல்லி, அதைத் தீர்க்கும்படியாக பகவானை அர்ஜுனன் வேண்டுகிறார்—

**एतन्मे संशयं कृष्ण छेत्तुमर्हस्यशेषतः।**
**त्वदन्यः संशयस्यास्य छेत्ता न ह्युपपद्यते॥ ३९॥**

**ஏதந்மே ஸம்ஶயம் க்ருஷ்ண சே₂த்துமர்ஹஸ்யஶேஷத: ।**

**த்வத₃ந்ய: ஸம்ஶயஸ்யாஸ்ய சே₂த்தா ந ஹ்யுபபத்₃யதே ॥ 39 ॥**

**க்ருஷ்ண** – க்ருஷ்ண! **மே** – என்னுடைய, **ஏதத்** – இந்த, **ஸம்ஶயம்** – ஸந்தேஹத்தை, **அஶேஷத:** – மீதமின்றி, **சே₂த்தும்** – போக்குவதற்கு, **அர்ஹஸி** – (நீங்களே) தகுதியானவர். **ஹி** – ஏனெனில், **அஸ்ய** – இந்த, **ஸம்ஶயஸ்ய** – ஸந்தேஹத்தை, **சே₂த்தா** – போக்குபவர், **த்வத் அந்ய:** – உங்களைத் தவிர வேறொருவர், **ந உபபத்₃யதே** – கிடைப்பது ஸாத்யமில்லை.

க்ருஷ்ண! என்னுடைய இந்த ஸந்தேஹத்தை மீதமின்றிப் போக்குவதற்கு நீங்களே தகுதியானவர். ஏனெனில் இந்த ஸந்தேஹத்தைப் போக்குபவர் உங்களைத் தவிர வேறொருவர் கிடைப்பது ஸாத்யமில்லை."

**கேள்வி:** அர்ஜுனன் இவ்வாறு சொல்வதை விளக்கவேண்டும்.

**பதில்:** மரணத்திற்குப்பின் ஏற்படும் கதியைப் பற்றி, அர்ஜுனன் அறிய விரும்புகிறார். மரணத்திற்குப்பின் ஏற்படும் கதியைப் பற்றி, கர்மங்களுடைய புத்தியினாலோ, தர்க்கத்தினாலோ விடுவிக்க முடியாத ரஹஸ்யம் இது. கர்மங்களுடைய அனைத்து விளைவுகள், படைப்பின் முழுமையான ஒழுங்குமுறைகள், மேலும் எல்லா உலகங்களின் ரஹஸ்யங்கள் – அத்தனையையும் முழுமையாக அறிந்தவர்களே இதையும் அறிய முடியும். வெவ்வேறு உலகங்களில் உள்ள தேவதைகள், எல்லா இடங்களுக்கும் செல்லும் ஆற்றலுடைய ரிஷிகள், முனிவர்கள், தபஸ்விகள், பலவகையான உலகங்களில் நிகழ்பவைகளைப் பார்ப்பதற்கும், அறிவதற்கும் ஆற்றலுள்ள யோகிகள் – இவர்கள் கூட ஓரளவுதான் இந்த விஷயங்களை அறிவர். அவர்கள் அறிவும் ஓர் எல்லைக்கு உட்பட்டதுதான். இதன் முழுமையான ரஹஸ்யத்தை எல்லாவற்றிற்கும் தனியொரு தலைவனாகிய பகவான்தான்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அறிவார். பகவான் ஸ்ரீக்ருஷ்ணனுடைய ப்ரபாவத்தை முன்னமேயே அர்ஜுனன் நன்கு அறிவார். தவிர, பகவானே நான் பல பிறவிகளை அறிந்தவன் *(4/5)*; பிறப்பற்றவன், அழிவற்றவன், எல்லா உயிரினங்களுக்கும் ஈசுவரன் *(4/6)*; குணங்களுக்கும், செயல்களுக்கும் ஏற்றவாறு எல்லோரையும் படைப்பவன் *(4/13)*; ஸர்வலோக மஹேசுவரன் (5வது அத்யாய முடிவு) என்று தம்மைச் சொல்லிக் கொள்கிறார். இதனால் ஸ்ரீக்ருஷ்ணன் பரமாத்மாதான் என்ற நம்பிக்கை அர்ஜுனனுக்கு மேலும் வளர்ந்துவிட்டது. 'உங்களைத் தவிர இந்த ஸந்தேஹத்தைத் தீர்ப்பவர் வேறு யாரும் எனக்குக் கிடைக்க மாட்டார்கள். நீங்கள்தான் இந்த ஸந்தேஹத்தை அடியோடு தீர்க்க முடியும்' என்று கூறுவதன் மூலம் பகவானிடம் தனது நம்பிக்கையை வெளிப்படுத்தி, அவரை வேண்டுகிறார்: "நீங்கள் அனைவருக்கும் அந்தர்யாமி, எல்லாம் அறிந்தவர், ஸர்வவல்லமை படைத்தவர், எல்லாக் கட்டுப்பாடுகளையும் வகுத்தவர். அவற்றிற்கு எல்லோரும் உட்படும்படி நடத்துபவர். நீங்கள் ஸாக்ஷாத் பரமாத்மாதான். பலகோடி ப்ரம்மாண்டங்களில் உள்ள எண்ணற்ற ஜீவர்களுடைய கதிகளின் உட்பொருளை நீங்களே முற்றிலும் அறிவீர்கள். எல்லா உலகங்களிலும், முக்காலங்களிலும் நடக்கக் கூடிய நிகழ்ச்சிகள் அனைத்தும் என்றுமே உங்கள் கண் எதிரே தெரியும். இந்நிலையில் யோகத்திலிருந்து நழுவியவனின் கதியை விளக்குவது உங்களுக்கு மிக எளிய விஷயம். நீங்களோ என் எதிரில் நேரே நிற்கிறீர்கள். பின் நான் யாரிடம் போய்க் கேட்க வேண்டும்? உண்மையில் உங்களைத் தவிர வேறு யார்தான் இதைச் சொல்ல முடியும்? ஆகவே தயவு செய்து இந்த ரஹஸ்யத்தை வெளிப்படுத்தி, என் ஸந்தேஹ வலையைக் கிழித்து எறியுங்கள்."

**பொருத்தம்:** 'யோகத்திலிருந்து நழுவிய ஸாதகன் இருவகையிலும் வீணாக மாட்டானா?' என்ற அர்ஜுனனின் கேள்விக்குப் பதில் கூறுகிறார், பகவான்.

श्रीभगवानुवाच

**पार्थ नैवेह नामुत्र विनाशस्तस्य विद्यते।**
**न हि कल्याणकृत्कश्चिद्दुर्गतिं तात गच्छति॥४०॥**

ஸ்ரீப$_4$க$_3$வாநுவாச

**பார்த$_2$ நைவேஹ நாமுத்ர விநாஶஸ்தஸ்ய வித்$_3$யதே ।**

**ந ஹி கல்யாணக்ருத்கஶ்சித்$_3$து$_3$ர்க$_3$திம் தாத க$_3$ச்ச$_2$தி ॥ 40 ॥**

**ஸ்ரீப$_4$க$_3$வாநுவாச** – ஸ்ரீபகவான் சொன்னார்: **பார்த$_2$** – அர்ஜுன! **தஸ்ய** – அந்த மனிதனுக்கு, **இஹ** – இவ்வுலகில் (இம்மையில்), **விநாஶ:** – அழிவு, **ந வித்$_3$யதே** – இல்லை. **அமுத்ர ஏவ** – மேலுலகிலும் (மறுமையிலும்), **ந** – இல்லை. **தாத** – ப்ரியமானவனே! **ஹி** – ஏனெனில், **கல்யாணக்ருத்** – ஆன்மிக மேம்பாட்டிற்காக (பகவானை அடைவதற்காக ஸாதனை புரியும்), **கஶ்சித்** – எந்த மனிதனும், **து$_3$ர்க$_3$திம்** – தாழ்நிலையை, **ந க$_3$ச்ச$_2$தி** – அடைவதில்லை.

ஸ்ரீபகவான் சொன்னார்: 'அர்ஜுன! அந்த மனிதனுக்கு இவ்வுலகிலோ, மேலுலகிலோ அழிவு இல்லை. ஏனெனில் ப்ரியமானவனே! ஆன்மிக மேம்பாட்டிற்காக – பகவானை அடைவதற்காக ஸாதனை புரியும் எந்த மனிதனும் தாழ்நிலையை அடைவதில்லை.

**கேள்வி:** 'யோகத்திலிருந்து நழுவின ஸாதகன் இவ்வுலகிலும், மேலுலகிலும் அழிவை அடையமாட்டான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இப்போது உள்ள நிலையிலிருந்து தாழ்ந்து போவதுதான் அழிந்து போவது ஆகும். ஆகவே மரணத்திற்குப் பிறகும், அவன் மனிதனாகப் பிறந்தால், அவனுடைய முன் பிறவி நிலையிலிருந்து வீழ்ச்சி ஏற்படாது; மேன்மையே ஏற்படும். ஸ்வர்கம் முதலிய வேறு மேல் உலகங்களில் பிறப்பு ஏற்பட்டால் அங்கும் வீழ்ச்சி ஏற்படாது; மேன்மையே ஏற்படும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இதன் காரணமாக அவனுக்கு இவ்வுலகிலோ, பரலோகத்திலோ எங்குமே அழிவு ஏற்படாது. அவன் எங்கே இருக்கிறானோ, அங்கு இருந்தபடியே பரமாத்மாவை நோக்கிச் செல்லும் வழியில் மேலும் முன்னேறிக் கொண்டே இருப்பான். இரு பக்கங்களிலிருந்தும் அழிவு ஏற்படுமோ என்ற அர்ஜுனனுடைய ஐயத்திற்கு இதன் மூலம் பகவான் சுருக்கமாகப் பதில் கூறுகிறார். அதாவது இந்த உலக போகங்களிலிருந்தோ அல்லது பரலோக போகங்களிலிருந்தோ அவன் வஞ்சிக்கப்படுவதில்லை. மேலும் யோகஸித்தியாகிற பரமாத்மாவை அடைவதிலிருந்தும் வஞ்சிக்கப்படுவதில்லை என்பது கருத்து.

**கேள்வி:** 'ஹி' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? அத்துடன் 'ஆன்மிக மேம்பாட்டிற்காக ஸாதனை புரிபவன் தாழ்நிலையை அடையமாட்டான்' என்று சேர்த்துக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஹி' என்ற சொல் இங்கே காரணத்தைக் குறிப்பிடுவதாகும். மேலே கூறியபடி தன்னுடைய சக்திக்கு ஏற்றவாறு ச்ரத்தையோடுகூட, ஆன்மிக மேன்மைக்காக ஸாதனை செய்யும் ஸாதகனுக்கு, எந்த ஒரு காரணத்தாலும், ஒருபொழுதும் பன்றி, நாய், புழு, பூச்சி முதலிய இழி பிறப்போ அல்லது கும்பீபாகம் முதலிய நரகத்தை அடைவதாகிற தீயகதியோ ஏற்பட முடியாது என்று ஸாதகர்களுக்கு ஆறுதல் கூறுகிறார்.

**கேள்வி:** பகவானை அடைவதற்குரிய கடமைகளைச் செய்பவன் தாழ்நிலையை அடையமாட்டான் என்று எப்படிச் சொல்ல முடியும்? அவனுடைய முன்வினைப் பாவங்கள் இருக்குமே! அவற்றின் பயனாக மரணத்திற்குப் பிறகு தாழ்நிலையை அவன் அடையலாமே!

**பதில்:** முன்வினைப் பாவங்கள் இருந்தாலும், பகவானை அடைவதற்காக, அதாவது தன்னை ஆன்மிகத் துறையில் மேன்மைப்படுத்திக் கொள்வதற்காக, கடமைகளை ஆற்றும் ஸாதகனுக்குத் தாழ்நிலை ஏற்படாது என்பது சரிதான். இப்படி வைத்துக் கொள்வோம். ஒருவன் கடன் வாங்கிவிட்டான். திருப்பிக் கொடுக்கவேண்டும். ஆனால் நம்பிக்கை மோசம் செய்பவன் அல்லன். அவனிடம் உள்ளதையெல்லாம் கடன் கொடுத்தவர்களுக்கு வழங்கிவிட்டான். மேலும் ஸம்பாதிப்பதையும் இப்படியே நல்ல எண்ணத்துடன் கொடுத்துக் கொண்டிருக்கிறான். அவன் கொடுக்கவே விரும்புகிறான். இந்த நிலையில் இரக்கமுள்ள கடன் கொடுத்த எவரும் அவன் மீது வழக்குத் தொடுப்பதில்லை. அவனுக்கு நல்லெண்ணம் இருக்கும் வரையில் வாய்ப்புக் கொடுக்கிறார்கள். இதே மாதிரி பகவானும் தம்மை அடைய ஸாதனை புரிபவனின் தூய மனப்பான்மையைக் கண்டு அவனுடைய பாவவினைகள் மூள்வதைத் தடுத்து, அவனுடைய ஸாதனை முறையில் உள்ள இடையூறுகளை நீக்கி, அவனுடைய பந்தங்களிலிருந்து விடுபடும்படி வாய்ப்பளிக்கிறார். ஸாதாரண மனிதனே கடனாளிக்குக் கடனைத் தீர்க்க அவனுக்குத் தவணையைத் தள்ளிக் கொடுக்கும்போது,. பரமதயாளுவான பகவான் ஸாதகனுக்கு இப்படி வாய்ப்பு அளிப்பதில் என்ன ஆச்சர்யம்?

**கேள்வி:** பரத மஹாராஜன் தம் ஆன்மிக மேம்பாட்டுக்காக ஸாதனை புரிந்து வந்தார். ஆயினும் மரணத்தறுவாயில் ஒரு மானின் இடத்தில் மனதைச் செலுத்தியதால், மான்பிறவி எடுக்கும்படி ஆயிற்றே! இப்படிப் புராணங்களில் கேள்விப்படுகிறோம். ஆத்ம முன்னேற்றத்திற்காக ஸாதனை புரிபவர்கள் இறந்தபிறகு தாழ்நிலை அடைய மாட்டார்கள் என்பது முறையெனில் பரத மஹாராஜனுக்கு இப்படி ஏன் நேர்ந்தது?

**பதில்:** பரத மஹாராஜன் சிறந்த ஸாதகன் என்பதில் ஸந்தேஹமில்லை. ஆனால் இரக்கத்தால் மோஹத்தின் வசப்பட்டு மான்குட்டியிடம் அவருக்குப் பற்றும், மமகாரமும் ஏற்பட்டுவிட்டன. அதனால் மரணத்தறுவாயில் அவருடைய லக்ஷ்யம் தவறிவிட்டது. மான்குட்டியின் நினைவே அவரை ஆட்கொண்டுவிட்டதால், அவர் மானாகப் பிறக்க நேர்ந்தது. ஏனெனில் மரணத்தறுவாயில் எந்த நினைவு உள்ளதோ, அதையே மறுபிறவியில் பெறுவார்கள் என்பது ஒரு வலுவான நியதி (8/6). அதன் விளைவாக பரத மஹாராஜனுக்கு மான்பிறவி ஏற்படத்தான் செய்தது. ஆயினும், அது வீழ்ச்சி எனக் கருதுவதற்கில்லை. ஏனெனில் மான்பிறவியில்கூட அவருக்கு முற்பிறவி பற்றிய நினைவு அகலவில்லை. அந்த

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மான்பிறவியில்கூட அவர் மோஹம், பற்றுதல் இவற்றைத் துறந்து, நல்ல சீரிய ஸாதகர்களைப் போல மிகுந்த விவேகத்துடன் சருகுகளை உண்டு, அடக்கத்துடனும், விவேகத்துடனும் வாழ்ந்து மறுபிறவியிலேயே அந்தணப்பிறவி பெற்று, முற்பிறவியின் பயிற்சியின் வலுவினால் *(6/44)* விரைவாகப் பரமகதியை அடைந்துவிட்டார். ஆகவே, முன் சொன்ன ஸித்தாந்தத்தில் எந்தத் தவறும் இல்லை. இந்த சரித்திரத்திலிருந்து பகவானை அடைவதற்கான லக்ஷ்யத்தை ஒருபொழுதும் கைவிடக்கூடாது என்ற பாடம் கற்கவேண்டும்.

**கேள்வி:** ஆன்மிக மேம்பாட்டுக்காக ஸத்ஸங்கம், பஜனை, த்யானம் முதலிய ஸாதனைகள் புரியும் பல மக்களும் கூடவே பாவச் செயல்களிலும் ஈடுபடுவதைக் காண்கிறோம். அவர்கள் கதி என்ன?

**பதில்:** அவர்களுக்குத் தீய கதி நேராது. சாஸ்த்ரங்களிடமும், மஹாபுருஷர்களிடமும் ச்ரத்தை கொண்டுள்ளவர்களுக்கு, பாவங்களின் விளைவாக, கொடுமையான துக்கங்களும், நரகங்களும் அனுபவிக்க நேரும் என்பதிலும் நம்பிக்கை ஏற்படும். ஆகவே பழைய வாஸனையினால் ஏற்படக்கூடிய பாவச் செயல்களிலிருந்து விடுபட முயற்சி செய்வார்கள். அத்துடன் இறை வழிபாடு, த்யானம் முதலிய பயிற்சிகளையும் செய்து வந்தார்களானால் சித்த சுத்தி ஏற்படும். பிறகு மனதறிந்து அவர்களைப் பாவச் செயல் புரிய வைக்கும் பழைய வாஸனை என்ற காரணம் அழிந்துவிடுகிறது. ஆகவே, ஸ்வபாவமாகப் பாவம் புரிபவர்கள்கூட ஸத்ஸங்கம், வழிபாடுகள் இவற்றில் ஈடுபட்டுவிட்டால், சிறுகச் சிறுகப் பாவச் செயல்களிலிருந்து விடுபட்டு விரைவில் தர்மாத்மா ஆகிவிடுவர். படிப்படியாக அவர்களுக்கு மேன்மையே தவிர, வீழ்ச்சி கிடையாது *(9/30,31)*.

**கேள்வி:** 'தாத' (அன்பனே) என்று அன்புடன் அழைப்பதன் காரணம் என்ன?

**பதில்:** 'அன்பனே அர்ஜுன! நீ எனக்கு மிகவும் இனிய நண்பன், பக்தன். உனக்கு ஏன் பயம்? என்னை அடைவதற்காக ஸாதனை புரிகிறவனுக்குத் தீயகதி நேராது; உத்தமகதிதான் கிடைக்கும் என்றால், உன்னைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா!' என்று அர்ஜுனனுக்கு பகவான் அன்புடன் ஆறுதல் கூறுகிறார்.

**பொருத்தம்:** யோகத்திலிருந்து நழுவியவனுக்குத் தாழ்நிலை கிடையாது என்றால், பின் என்னதான் நேரும் என்று அறிய விரும்பும்போது பகவான் சொல்கிறார்—

**प्राप्य पुण्यकृतां लोकानुषित्वा शाश्वतीः समाः ।**
**शुचीनां श्रीमतां गेहे योगभ्रष्टोऽभिजायते ॥ ४१ ॥**

**ப்ராப்ய புண்யக்ருதாம் லோகானுஷித்வா ஶாஸ்வதீ: ஸமா: ।**
**ஶுசீநாம் ஶ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோऽபிஜாயதே ॥ 41 ॥**

**யோகப்ரஷ்ட:** — யோகத்தினின்றும் வழுவியவன், **புண்யக்ருதாம்** — புண்யம் செய்தவர்களுக்குரிய, **லோகாந்** — ஸ்வர்கம் முதலிய உயர்ந்த உலகங்களை, **ப்ராப்ய** — அடைந்து, **ஶாஸ்வதீ: ஸமா:** — பல்லாண்டுகள் (அங்கு), **உஷித்வா** — வாழ்ந்து (மறுபடியும்), **ஶுசீநாம்** — நல்லொழுக்கமுள்ள, **ஶ்ரீமதாம்** — செல்வந்தர்களுடைய, **கேஹே** — வீட்டில், **அபிஜாயதே** — பிறக்கிறான்.

யோகத்தினின்றும் வழுவியவன் புண்யம் செய்தவர்களுக்குரிய ஸ்வர்கம் முதலிய உயர்ந்த உலகங்களை அடைந்து பல்லாண்டுகள் அங்கு வாழ்ந்து மறுபடியும் நல்லொழுக்கமுள்ள செல்வந்தர்களுடைய வீட்டில் பிறக்கிறான்.

**கேள்வி:** 'யோகப்ரஷ்டன்' (யோகத்தினின்றும் வழுவியவன்) என்றால் யார்?

**பதில்:** ஞானயோகம், பக்தியோகம், த்யானயோகம், கர்மயோகம் முதலிய ஸாதனைகளில் ஈடுபட்டவருடைய மனம் விக்ஷேபத்தாலோ, போகப் பொருட்களில் உள்ள

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ருசியாலோ அல்லது நோய் முதலியவற்றாலோ மரணத்தறுவாயில் அந்த மேலான லக்ஷ்யத்திலிருந்து வழுவிவிடலாம். அவனை 'யோகப்ரஷ்டன்' என்கிறார்.

**கேள்வி:** 'யோகப்ரஷ்டன்' புண்யாத்மாக்களின் உலகங்களில் இருந்துவிட்டு சீமான்களின் வீட்டில் பிறப்பான் என்று இங்கே சொல்கிறார். அதாவது அவன் நரகம் முதலிய உலகங்களையோ அல்லது இழிபிறப்புக்களையோ அடையமாட்டான் என்று தெரிகிறது. ஆனால் புண்யாத்மாவின் ஸ்வர்கம் முதலிய உலகங்களிலும், பணக்காரர்களின் வீடுகளிலும் போகங்கள் நிறையக் கிடைக்குமே? இதன் காரணமாக அந்த போகங்களில் ருசி பிறந்து அவற்றைப் பெறுவதற்காக மறுபடியும் அவன் பாவச் செயல்களில் ஈடுபட நேரிடுமே? இப்படி ஆகிவிட்டால் இரு நிலைகளிலும் அவன் வீழ்வதற்குரிய வழி பிறந்து விடுமே? ஆகவே, இதுவும் ஒருவிதத்தில் தீயகதி என்றுதானே முடிகிறது?

**பதில்:** ம்ருத்யு லோகத்திலிருந்து மேலே ப்ரம்மலோகம் வரை எல்லாமே புண்யலோகங்கள்தாம். யோகப்ரஷ்டன், யோகமாகிய பெரும் புண்யத்தின் ப்ரபாவத்தினால், தீயகதி தரும் போகங்கள் நிறைந்த உலகங்களுக்குப் போக மாட்டான்; மேலும், அவனுடைய தீயகதிக்குக் காரணமாயமையும் தூய்மையற்ற (இழிகுணமும், இழி நடத்தையும் கொண்ட) பணக்காரர்கள் வீட்டிலும் பிறக்க மாட்டான். ஆகையினாலேயே 'ஸ்ரீமதாம்' என்பதுடன் 'ஶுசீநாம்' என்ற அடைமொழியைச் சேர்த்து உயர் குணமும், தூய நடத்தையும் கொண்ட சீமான்களின் வீட்டில் பிறப்பு எடுப்பான் என்று சொல்கிறார். ஆகவே இது எவ்விதத்திலும் தீயகதி அன்று.

**கேள்வி:** பல்லாண்டுகள் புண்யாத்மாக்களின் லோகத்தில் வாழ்வதற்குக் காரணமென்ன?

**பதில்:** போகங்களில் உள்ள பற்றுதான் அந்த உலகங்களில் பல்லாண்டுகள் வாழ்வதற்குக் காரணம். ஏனெனில், கர்மங்களிலும், அவற்றின் பயன்களிலும் மமகாரத்தையும், பற்றுதலையும் வைத்துக் கொள்வதுதான் கர்மங்களின் பயனை அனுபவிப்பதற்குக் காரணம் ஆகின்றது (2/47). ஸாதகனுடைய உள்ளத்தில் பற்று மறைந்துறையும் காலம் வரை, தனது புண்ய கர்மங்களின் பயனை நுகர்வதற்காக அவன் அந்த லோகங்களில் வாழ நேரிடுகிறது. பற்று அதிகம் இருந்தால் நீண்ட காலம் அங்கே இருப்பான். ருசி குறைவாக இருந்தால் சிறிது காலமே அங்கே வாழ நேர்கிறது. போகங்களில் பற்றே இல்லாத சிறந்த வைராக்யமுள்ள யோகப்ரஷ்டர்கள் அந்த போக லோகங்களுக்குச் செல்லாமல், நேரிடையாக யோகிகளின் குலத்திலேயே பிறப்பார்கள்.

**பொருத்தம்:** ஸாதாரண யோகப்ரஷ்டனின் கதியைச் சொன்ன பிறகு, போக ருசியற்ற மிக உயர்ந்த நிலையிலுள்ள யோகப்ரஷ்டனின் மேலான கதியை இனிச் சொல்கிறார்—

**अथवा योगिनामेव कुले भवति धीमताम्।**
**एतद्धि दुर्लभतरं लोके जन्म यदीदृशम्॥ ४२॥**

**அத₂வா யோகி₃நாமேவ குலே ப₄வதி தீ₄மதாம் ।**
**ஏதத்₃தி₄ து₃ர்லப₄தரம் லோகே ஜந்ம யதீ₃த்₃ருஶம் ॥ 42 ॥**

**அத₂வா** – அல்லது (வைராக்யமுள்ள யோகப்ரஷ்டன் அந்த உலகங்களுக்குச் செல்லாமல்), **தீ₄மதாம்** – ஞானிகளான, **யோகி₃நாம்** – யோகிகளுடைய, **குலே ஏவ** – குலத்திலேயே, **ப₄வதி** – பிறக்கிறான். (ஆனால்), **ஈத்₃ருஶம்** – இத்தகைய, **யத்** – எந்த, **ஏதத் ஜந்ம** – இந்தப் பிறப்பு (இருக்கிறதோ), (**தத்** – அது), **லோகே** – இந்த உலகில், **ஹி** – ஐயமின்றி, **து₃ர்லப₄தரம்** – மிகவும் அரிதாகவே உள்ளது.

அல்லது வைராக்யமுள்ள யோகப்ரஷ்டன் அந்த உலகங்களுக்குச் செல்லாமல் ஞானிகளான யோகிகளுடைய குலத்திலேயே பிறக்கிறான். ஆனால் இத்தகைய பிறப்பு இந்த உலகில் ஐயமின்றி மிகவும் அரிதாகவே உள்ளது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'அதவா' (அல்லது) என்று சொல்வானேன்?

**பதில்:** யோகப்ரஷ்டர்களுக்குள் போகத்தில் பற்றுள்ளவர்கள் ஸ்வர்கம் முதலிய மேல் உலகங்களிலும், தூயவர்களான சீமான்கள் வீட்டிலும் பிறவி பெறுவார்கள். ஆனால், வைராக்ய சீலர்கள் எந்த உலகங்களுக்கும் போக மாட்டார்கள்; சீமான்களின் வீட்டிலும் பிறப்பு எடுக்க மாட்டார்கள். அவர்கள் நேரிடையாக ஞானிகளான – ஸித்தர்களான – யோகியரின் வீட்டிலேயே பிறவி பெறுவார்கள். முன் சொன்ன யோகப்ரஷ்டர்களிலிருந்து பிரித்துக் காட்டுவதற்காக 'அதவா' (அல்லது) என்று சொல்கிறார்.

**கேள்வி:** யோகப்ரஷ்டர்கள் எல்லோருமே ஸ்வர்கம் முதலிய மேல் உலகவாஸம் பெறத்தான் வேண்டும். அங்குள்ள ஸுகங்களை அனுபவித்த பிறகு அவர்களில் சிலர் புனிதமான சீமான் வீட்டில் பிறக்கிறார்கள். மற்றும் சிலர் யோகியர் வீட்டில் பிறப்பார்கள். 'அதவா' (அல்லது) என்ற சொல்லுக்கு இவ்வாறு பொருள் கொள்வதில் என்ன தவறு?

**பதில்:** அப்படிப் பொருள் கொள்வது உசிதமன்று. ஏனெனில், போகங்களில் உண்மையான வைராக்யம் உள்ளவர்களுக்கு, ஸ்வர்கம் முதலிய லோகங்களுக்குச் சென்று, பல்லாண்டுகள் அங்கு வாழ்வதும், போகங்களை அனுபவிப்பதும் தண்டனைக்கு நிகராகும். பகவானை அடைய இவ்விதம் தாமதம் ஏற்படுவது வைராக்யத்திற்குத் தக்க பயன் ஆகாது. ஆகவே முதலில் கூறியபடி பொருள் கொள்வதுதான் சரி.

**கேள்வி:** வைராக்யமுள்ள யோகப்ரஷ்டர்கள் யோகிகளின் குலத்தில் பிறப்பர் என்று சொன்னார். ஆகவே, இந்த யோகிகள் இல்லறத்தார்களாகத்தான் இருக்கவேண்டும். பிறப்பு என்பது இல்லறத்தாரிடம் தானே ஏற்படும்? அவர்களுக்கு ஞானிகளான 'தீமதாம்' என்று அடைமொழி கொடுத்திருக்கிறார். அப்படியானால் இல்லறத்தார்கூட ஞானிகளாக இருக்க முடியுமா?

**பதில்:** பகவானுடைய தத்வம் பற்றிய உண்மையறிவு எல்லா ஆசிரமத்தாருக்கும் உண்டாகலாம். கீதையில் இந்த விஷயம் நன்கு நிரூபிக்கப்பட்டிருக்கிறது (3/20, 4/19, 18/56). மற்ற சாஸ்த்ரங்களிலும் இதற்குப் பல உதாரணங்கள் இருக்கின்றன. மஹரிஷிகளான வஸிஷ்டர், யாக்ஞவல்க்யர், வ்யாஸர், ஜனகர், அசுவபதி, ரைக்வர் முதலிய பெரியோர்கள் இல்லறத்தில் இருந்தவாறே ஞானத்தை அடைந்தவர்கள்.

**கேள்வி:** 'யோகிநாம்' என்ற சொல்லிலுள்ள யோகி என்பதற்கு ஞானியான யோகி என்று பொருள் கொள்ளாமல், 'ஸாதக யோகி' என்று பொருள் கொண்டால் என்ன தவறு?

**பதில்:** இப்படிப் பொருள் கொள்வதால் 'தீமதாம்' என்ற சொல் வீணாகிறது. மேலும், 'துர்லபதரம்' என்ற சொல்லின் மூலம், இத்தகைய பிறப்பு புனிதமான சீமான்களின் வீடுகளில் ஏற்படுவதைக் காட்டிலும் மிகவும் அரிது என்பதைச் சுட்டிக்காட்டுகிறார். அதனால் இங்கே, 'தீமதாம்' என்ற அடைமொழியோடு கூடிய 'யோகிநாம்' என்ற சொல்லிலுள்ள 'யோகி' என்ற சொல்லுக்கு 'ஞானியான ஸித்தயோகி' என்று பொருள் கொள்வதுதான் பொருந்தும்.

**கேள்வி:** யோகிகளின் குலத்தில் பிறவி கிடைப்பது மிகவும் அரிது என்று ஏன் கூறுகிறார்?

**பதில்:** யோகிகளின் குலத்தில் பிறப்பதால் பரமாத்மாவை அடைவது என்ற யோக ஸாதனைக்கு எவ்வளவு வசதிகள் கிடைக்குமோ, அவ்வளவு அனுகூலமான வாய்ப்புகள் ஸ்வர்கம் முதலிய லோகங்களிலோ, சீமான்களின் வீட்டிலோ கிடைக்கா. வேறு எந்த இடத்திலும் கிடைக்கா. யோகிகளின் வீட்டில் அதற்குத் தகுந்த சூழ்நிலை அமைந்திருக்கும். அங்கே பிறந்தவன் ஆரம்பத்திலேயே யோக ஸாதனையில் ஈடுபட முடியும். ஞானிகளின் குலங்களில் பிறந்தவன், அஞ்ஞானியாக இருக்கமாட்டான் என்று வேதங்கள் அறுதியிட்டுக்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கூறுகின்றன.‡ மஹாத்மாக்களின் ஸங்கமே அரிது; எளிதில் கிடைக்காதது; வீண்போகாதது என்று சொல்லும்போது, மஹாத்மாக்களின் பெருமை ப்ரபாவம் என்ற நோக்கில் காண்போமேயானால், மஹாத்மாக்களின் குலத்தில் பிறப்பு ஏற்படுவதைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா!§ அதனால் இத்தகைய பிறப்பு கிடைத்தற்கரிது என்பது சரியே.

**பொருத்தம்:** யோகிகளின் குலத்தில் பிறக்கும் யோகப்ரஷ்டனுக்கு, அந்தப் பிறவியில் எத்தகைய நிலை ஏற்படுகிறது என்பதைச் சொல்கிறார்—

**तत्र तं बुद्धिसंयोगं लभते पौर्वदेहिकम्।**
**यतते च ततो भूयः संसिद्धौ कुरुनन्दन॥ ४३॥**

**தத்ர தம் புத்₃தி₄ஸம்யோக₃ம் லப₄தே பௌர்வதே₃ஹிகம் ।**
**யததே ச ததோ பூ₄ய: ஸம்ஸித்₃தௌ₄ குருநந்த₃ந ॥ 43 ॥**

**தத்ர** – அங்கு, **தம் பௌர்வதே₃ஹிகம்** – முற்பிறவியில் சேர்த்து வைக்கப்பட்ட அந்த, **பு₃த்₃தி₄ஸம்யோக₃ம்** – புத்திஸம்யோகத்தை (அதாவது ஸமபுத்தி யோகத்தின் மனப் பதிவுகளை), **லப₄தே** – (எளிதாகவே) பெறுகிறான். **ச** – மேலும், **குருநந்த₃ந** – குருநந்தனான அர்ஜுன! **தத:** – அதனுடைய ப்ரபாவத்தினால், **பூ₄ய:** – மறுபடியும், **ஸம்ஸித்₃தௌ₄** – பரமாத்மாவை அடைகிற வழியில் (முன்னிலும் தீவிரமாக), **யததே** – முயல்கிறான்.

அங்கு முற்பிறவியில் சேர்த்து வைக்கப்பட்ட அந்த புத்திஸம்யோகத்தை – ஸமபுத்தி யோகத்தின் மனப்பதிவுகளை எளிதாகவே பெறுகிறான். மேலும் குருநந்தனான அர்ஜுன! அதனுடைய ப்ரபாவத்தினால் மறுபடியும் பரமாத்மாவை அடைகிற வழியில் முன்னிலும் தீவிரமாக முயல்கிறான்.

**கேள்வி:** 'தத்ர' என்ற சொல் யோகிகளின் குலத்தில் மட்டும் பிறப்பதைக் குறிக்கிறதா அல்லது பவித்ரமான சீமான், ஞானமுடைய யோகி இவர்களுடைய வீட்டில் பிறப்பதையும் குறிக்கிறதா?

**பதில்:** முந்தைய ச்லோகத்தில் யோகிகளின் குலத்தைப் பற்றிச் சொல்லியாகிவிட்டது. அந்தக் குலத்தில் பிறவி எடுப்பதற்குமுன் தேவர் முதலிய சரீரம் எடுப்பதற்கான இடைவெளிகூட இல்லை. யோகிகுலத்தையே 'தத்ர' என்ற சொல் மூலம் இங்கே குறிப்பிடுகிறார் என்று கொள்வதே பொருத்தம் என்று தோன்றுகிறது.

**கேள்வி:** நல்லொழுக்கமுள்ள (புனிதம் நிறைந்த) சீமான்களின் வீட்டில் பிறவியை அடைந்த ஸாதகனுக்கு இந்த புத்திஸம்யோகம் கிடைக்காதா?

**பதில்:** அவர்களும் கூட முன் பயிற்சியின் ப்ரபாவத்தினால் விஷய போகங்களிலிருந்து விலகி, பகவான்பால் ஈர்க்கப்படுவார்கள் என்ற விஷயம் பின்வரும் ச்லோகத்தில் தெளிவாக்கப்படுகிறது.

---

‡ நாஸ்யாப்₃ரஹ்மவித்குலே ப₄வதி ।
தரதி சோகம் தரதி பாப்மாநம் கு₃ஹாக்₃ரந்தி₂ப்₄யோ விமுக்தோऽம்ருதோ ப₄வதி ।
(முண்ட₃கோபநிஷத்₃ 3/2/9)

ப்ரம்மஞானியின் குலத்தில் பிறந்தவன் ப்ரம்மஞானம் இல்லாதவனாக இருக்கமாட்டான். அவன் பாவத்தையும், சோகத்தையும் கடந்து செல்கிறான். இதயப் பிணைப்பிலிருந்து விடுபட்டு அமரன் ஆவான். அதாவது, எப்பொழுதும் பிறப்பு–இறப்பு அற்றவன் ஆவான்.

§ 'மஹத்ஸங்க₃ஸ்து து₃ர்லபோ₄ऽக₃ம்யோऽமோக₄ச்ச ।' (நாரத₃ப₄க்திஸூத்ரம் 39)
மஹான்களுடைய ஸங்கம் அரிதானது. எளிதில் கிடைக்காதது. வீணாகாதது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'முற்பிறவியில் சேர்த்து வைக்கப்பட்ட புத்திஸம்யோகத்தைப் பெறுவது' என்றால் என்ன?

**பதில்:** கர்மயோகம், பக்தியோகம், த்யானயோகம், ஞானயோகம் முதலிய ஸாதனைகளில் ஏதாவது ஒன்றின் மூலம் ஸமபாவனை என்ற யோகம் முற்பிறவியில் கைவரப் பெற்ற அதே அளவு, அடுத்த பிறவியில் முயற்சியின்றியே புத்தியில் துலங்குகின்றது. இதுவே புத்திஸம்யோகத்தைப் பெறுவது ஆகும்.

**கேள்வி:** 'தத:' என்றால் என்ன கருத்து?

**பதில்:** 'தத:' என்ற சொல், இங்கு, 'யோகிகளின் குலத்தில் பிறந்து, அங்கு முந்தைய மனப்பதிவுகளின் தொடர்பு ஏற்படுகிற காரணத்தால், அந்த யோகப்ரஷ்டன் மீண்டும் முயற்சியின்றியே அதற்கு மேலான யோக ஸாதனையில் ஈடுபடுகிறான்' என்ற கருத்தைத் தெரிவிக்கிறது.

**பொருத்தம்:** இனி பவித்ரர்களான (புனிதமான) சீமான்களின் வீட்டில் பிறக்கும் யோகப்ரஷ்டனின் நிலையை விளக்கி, யோகம் பெறும் விருப்பத்தைக் கொண்டாடுகிறார்—

**पूर्वाभ्यासेन तेनैव ह्रियते ह्यवशोऽपि सः।**
**जिज्ञासुरपि योगस्य शब्दब्रह्मातिवर्तते ॥ ४४ ॥**

**பூர்வாப்₄யாஸேந தேநைவ ஹ்ரியதே ஹ்யவஶோऽபி ஸ: ।**
**ஜிஜ்ஞாஸுரபி யோக₃ஸ்ய ஶப்₃த₃ப்₃ரஹ்மாதிவர்ததே ॥ 44 ॥**

**ஸ:** – (சீமான்கள் வீட்டில் பிறவி எடுத்த யோகப்ரஷ்டனான) அவன், **அவஶ: அபி** – தன் வசமிழந்தவனாயினும், **தேந** – அந்த, **பூர்வ அப்₄யாஸேந ஏவ** – முற்பிறப்பின் பயிற்சியினாலேயே, **ஹி** – ஸந்தேஹமின்றி (பகவான்பால்), **ஹ்ரியதே** – ஈர்க்கப்படுகிறான். (**தத₂ா** – அவ்வாறே), **யோக₃ஸ்ய** – ஸமபுத்தியாகிய யோகத்தை, **ஜிஜ்ஞாஸு: அபி** – அறிய விரும்புபவன்கூட, **ஶப்₃த₃ ப்₃ரஹ்ம** – வேதங்களிலே கூறப்பட்டுள்ள பயனை விரும்பிச் செய்யப்படும் கர்மங்களின் பயனை, **அதிவர்ததே** – பொருட்படுத்தாமல் கடந்து சென்று விடுகிறான்.

(சீமான்கள் வீட்டில் பிறவி எடுத்த யோகப்ரஷ்டனான) அவன் தன் வசமிழந்தவனாயினும் அந்த முற்பிறப்பின் பயிற்சியினாலேயே ஸந்தேஹமின்றி பகவான்பால் ஈர்க்கப்படுகிறான். அவ்வாறே ஸமபுத்தியாகிய யோகத்தை அறிய விரும்புபவன்கூட வேதங்களிலே கூறப்பட்டுள்ள பயனை விரும்பிச் செய்யப்படும் கர்மங்களின் பயனைப் பொருட்படுத்தாமல் கடந்து சென்று விடுகிறான்.

**கேள்வி:** 'அவன்' என்ற சொல்லுக்கு இங்கு, 'சீமான் வீட்டில் பிறவி எடுக்கும் யோகப்ரஷ்டன்' என்று ஏன் பொருள் கொள்ள வேண்டும்?

**பதில்:** யோகிகளுடைய குலத்தில் பிறவி எடுக்கும் வைராக்யம் உள்ள மனிதன் போகங்களுக்கு ஆட்படுவானா என்ற ஐயமே ஏற்படுவதற்கில்லை; அதனால் 'அவஶ: அபி' என்று சொல்வது அவனைக் குறிப்பிடுவதாக ஆகாது. இதைத் தவிர, யோகிகளுடைய குலத்தில் எளிதாகவே ஸத்ஸங்கம் ஏற்படுகிற காரணத்தால், அவன் முன்பு பெற்றுள்ள பயிற்சி மட்டுமே பகவானை நோக்கி ஈர்க்கப்படுவதற்குக் காரணம் என்று சொல்வதும் சரியாகாது. ஆகவே, இந்த விளக்கம் சீமான்களின் வீட்டில் பிறவி எடுக்கும் யோகப்ரஷ்டனைப் பற்றியது என்று கொள்வதுதான் சரியாகத் தோன்றுகிறது.

**கேள்வி:** 'அவஶ: அபி' என்று கூறுவதன் பொருள் என்ன?

**பதில்:** பவித்ரர்களானவர்களும், நல்ல பழக்கங்கள் உடையவர்களுமான சீமான்களின் வீட்டில், ஸாதாரணப் பணக்காரர் வீட்டில் உள்ளதுபோல போகங்களில் மூழ்கும் வாய்ப்பு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இருக்காது என்றாலும், அங்கும் கூட ஏதாவது ஒரு காரணத்தினால் யோகப்ரஷ்டனான ஸாதகனுக்கு மனைவி, மக்கள், செல்வம், மதிப்பு, பெருமை முதலிய போகங்களில் ஈடுபாடு ஏற்பட்டுவிட வாய்ப்பு உண்டு. ஆயினும்கூட முற்பிறவியின் ஸம்ஸ்காரத்தினால் பகவானை அடைவதற்குரிய மார்க்கத்தில் அவன் முன்னேறுவான்.

**கேள்வி:** 'பூர்வாப்யாஸேந ஏவ' (முன் பிறவி ஸம்ஸ்காரத்தினாலேயே) என்று அழுத்தமாகக் கூறுவானேன்?

**பதில்:** போகங்களின் வசப்பட்டுள்ளவனை விஷயக் கூட்டத்திலிருந்து விடுவித்து பகவானை நோக்கி ஈர்த்துச் செல்வதில், முந்தைய பிறவிகளின் பயிற்சிப் பதிவுகளே முக்ய காரணங்களாகின்றன. இந்தக் கருத்துடனேயே, 'பூர்வாப்யாஸேந' என்ற சொல்லுடன், 'ஏவ' என்ற சொல் சேர்க்கப்பட்டிருக்கிறது.

**கேள்வி:** 'ஜிஜ்ஞாஸு: அபி' (அறிய விரும்புவனும்கூட) என்று சேர்த்துச் சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஸமபுத்தி' ஆகிய யோகத்தைப் புகழ்வதற்காக இங்கு 'அபி' (கூட) என்று கூறுகிறார். யோகத்தைப் பற்றி அறிய விரும்பி யோகத்தில் ஆர்வத்தோடு, அதை அடைவதற்கு முயற்சி செய்பவன், வேதங்களில் கூறப்பட்டுள்ள காம்ய கர்மங்களின் பயனான இம்மை-மறுமையின் போக நுகர்ச்சி ஸுகங்களைத் தாண்டிச் செல்கிறான் என்றால், பல பிறவிகளில் யோகப்பயிற்சி செய்துள்ள யோகப்ரஷ்டனைப் பற்றிக் கூறவும் வேண்டுமா என்பது கருத்து.

**பொருத்தம்:** இவ்விதம் சீமான்களின் வீட்டில் பிறவி அடைந்த யோகப்ரஷ்டனின் கதியை விவரித்து, யோகத்தை அறிய விரும்புபவனின் பெருமையைக் கூறிவிட்டு, யோகிகளின் குலத்தில் பிறவி எடுக்கும் யோகப்ரஷ்டனின் கதியைப் பற்றி மறுபடியும் சொல்கிறார்—

**प्रयत्नाद्यतमानस्तु योगी संशुद्धकिल्बिषः।**
**अनेकजन्मसंसिद्धस्ततो याति परां गतिम्॥ ४५॥**

**ப்ரயத்நாத்$_3$யதமாநஸ்து யோகீ$_3$ ஸம்ஶுத்$_3$த$_4$கில்பி$_3$ஷ: ।**
**அநேகஜந்மஸம்ஸித்$_3$த$_4$ஸ்ததோ யாதி பராம் க$_3$திம் ॥ 45 ॥**

**து** — ஆனால், **ப்ரயத்நாத்** — முழுமுயற்சியுடன், **யதமாந:** — பயிற்சி செய்யும், **யோகீ$_3$** — யோகியோ, **அநேக ஜந்ம ஸம்ஸித்$_3$த$_4$:** — பல பிறவிகளிலும் ஏற்பட்ட மனப்பதிவுகளின் வலிமையால் இப்பிறவியிலேயே ஸித்தியடைந்து, **ஸம்ஶுத்$_3$த$_4$ கில்பி$_3$ஷ:** — அனைத்துப் பாவங்களும் நீங்கப் பெற்று (பரிசுத்தமாகி), **தத:** — அக்கணமே, **பராம் க$_3$திம்** — உயர்ந்த நிலையை (பரமாத்மாவை), **யாதி** — அடைகிறான்.

ஆனால் முழுமுயற்சியுடன் பயிற்சி செய்யும் யோகியோ பல பிறவிகளில் ஏற்பட்ட மனப்பதிவுகளின் வலிமையால் இப்பிறவியிலேயே ஸித்தியடைந்து அனைத்துப் பாவங்களும் நீங்கப் பெற்று பரிசுத்தமாகி அக்கணமே உயர்ந்த நிலையை (பரமாத்மாவை) அடைகிறான்.

**கேள்வி:** 'து' (ஆனால்) என்பதன் கருத்து என்ன?

**பதில்:** சீமான்களின் வீட்டில் பிறவி எடுத்துள்ளவனையும், யோகத்தைப் பற்றி அறிய விரும்பும் ஸாதகனையும்விட யோகிகளின் குலத்தில் பிறந்த யோகப்ரஷ்டனின் தனிச்சிறப்புள்ள நிலையைச் சுட்டிக்காட்டுவதற்காக 'ஆனால்' என்று ஆரம்பிக்கிறார்.

**கேள்வி:** 'யோகீ' என்பதுடன் 'ப்ரயத்நாத்யதமாந:' (முழுமுயற்சியுடன் பயில்கின்ற) என்ற அடைமொழி கொடுக்கப்பட்டிருப்பதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பதில்: 43வது ச்லோகத்தில், யோகிகளின் குலத்தில் பிறப்பு எடுக்கும் யோகப்ரஷ்டன், அந்தப் பிறவியில் யோக ஸித்தியைப் பெறுவதற்காக அதிக முயற்சி செய்கிறான் என்று சொன்னார். இந்த ச்லோகத்தில் அதே யோகி பரமகதி அடைவதைப் பற்றிக் கூறுகிறார். இந்தத் தொடர்பைத் தெளிவாக்குவதற்காக 'யோகீ' என்பதுடன் 'முழு முயற்சியுடன் பயில்கின்ற' என்ற அடைமொழி கொடுக்கிறார். ஏனெனில், அவனுடைய முயற்சியின் பயனை அந்த ச்லோகத்தில் கூறவில்லை. ஆதலால் இங்கே கூறுகிறார்.

கேள்வி: 'அநேகஜந்மஸம்ஸித்த:' என்று கூறுவதன் கருத்து என்ன?

பதில்: 43வது ச்லோகத்தில் யோகிகளுடைய குலத்தில் பிறப்பு எடுக்கும் யோகப்ரஷ்டன், முந்தைய பிறவிகளில் செய்யப்பட்ட யோகப்பயிற்சிகளின் மனப்பதிவை அடைகிறான் என்று கூறினார். இங்கே அதே விஷயத்தைத் தெளிவுபடுத்துவதற்காக, 'அநேகஜந்மஸம்ஸித்த:' என்ற அடைமொழியைக் கொடுக்கிறார். கடந்த பல பிறவிகளில் செய்யப்பட்ட பயிற்சிகள், இப்பிறவியில் செய்யப்படும் பயிற்சிகள் இரண்டுமே அவனை யோகஸித்தி அடையச் செய்வதில் – ஸாதனையின் எல்லை வரை கொண்டு சேர்ப்பதில் காரணங்கள் ஆகின்றன; ஏனெனில் முந்தைய மனப்பதிவுகளின் பலத்தினாலேயே அவன் தீவிர ஸாதனை முயற்சியோடுகூட இந்த ஜன்மத்தில் ஸாதனை செய்து ஸாதனையின் எல்லையை அடைகிறான் என்பது கருத்து.

கேள்வி: 'ஸம்ஶுத்தகில்பிஷ:' என்ற தொடருக்கு என்ன பொருள்?

பதில்: பாவங்கள் அனைத்தும் கரைந்து போனவனை இந்தச் சொற்றொடர் குறிக்கிறது. இவ்வாறு பயிற்சி செய்கின்ற யோகியிடம் பாவம் சிறிதுகூட இராது என்று பொருள்.

கேள்வி: 'தத:' என்றால் என்ன?

பதில்: 'தத:' என்றால், இங்கு 'அப்போதே' என்று பொருள். ஸாதனையின் எல்லையாகிற முழுமையான ஸித்தியை அடைந்த பிறகு, உடனேயே 'பரமகதியை அடைதல்' என்னும் நிலை ஏற்பட்டு விடுகிறது. பிறகு சிறிதுகூடத் தாமதம் ஏற்படுவதில்லை என்ற கருத்தை 'தத:' என்பது கூறுகிறது.

கேள்வி: 'உயர்ந்த நிலையைப் பெறுவது' என்றால் என்ன?

பதில்: பரப்ரம்மமான பரமாத்மாவை அடைவதுதான் பரமகதியைப் பெறுவது ஆகும். இதையேதான் பரமபதத்தை அடைவது, பரமதாமத்தை அடைவது, நைஷ்டிகீ சாந்தியை அடைவது என்றும் சொல்கிறார்.

பொருத்தம்: யோகப்ரஷ்டனுடைய கதியைப் பற்றிய விவரத்தை முடித்துக் கொண்டு, பகவான் யோகியின் பெருமையைக் கூறி, அர்ஜுனனை 'யோகி ஆவாய்' என்று கட்டளையிடுகிறார்—

**तपस्विभ्योऽधिको योगी ज्ञानिभ्योऽपि मतोऽधिकः।**
**कर्मिभ्यश्चाधिको योगी तस्माद्योगी भवार्जुन ॥ ४६ ॥**

***தபஸ்விப்₄யோऽதி₄கோ யோகீ₃ ஜ்ஞாநிப்₄யோऽபி மதோऽதி₄க: ।***

***கர்மிப்₄யஶ்சாதி₄கோ யோகீ₃ தஸ்மாத்₃யோகீ₃ ப₄வார்ஜுந ॥ 46 ॥***

**யோகீ₃** – யோகியானவன், **தபஸ்விப்₄ய:** – தவம் செய்வோர்களைக் காட்டிலும், **அதி₄க:** – மேலானவன். **ஜ்ஞாநிப்₄ய: அபி** – சாஸ்த்ரங்களை அறிந்தவர்களைக் காட்டிலும், **அதி₄க:** – மேலானவனாக, **மத:** – கருதப்படுகிறான். **ச** – மேலும், **கர்மிப்₄ய:** – பயனில் ஆர்வம் கொண்டு கடமையைச் செய்பவர்களைக் காட்டிலும், **யோகீ₃** – யோகி, **அதி₄க:** – உயர்ந்தவன். **அர்ஜுந** – அர்ஜுன! **தஸ்மாத்** – ஆகையால், **யோகீ₃ ப₄வ** – யோகி ஆவாயாக.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



யோகியானவன் தவம் செய்வோர்களைக் காட்டிலும் மேலானவன். சாஸ்த்ரங்களை அறிந்தவர்களைக் காட்டிலும் மேலானவனாகக் கருதப்படுகிறான். மேலும் பயனில் ஆர்வம் கொண்டு கர்மங்களைச் செய்பவர்களைக் காட்டிலும் யோகி உயர்ந்தவன். அர்ஜுன! ஆகையால் யோகி ஆவாயாக.

**கேள்வி:** 'தபஸ்வீ' என்றால் யார்?

**பதில்:** பயனைக் கருதி, தர்மங்களைக் கடைப்பிடிப்பதற்காகப் புலன்களையடக்கி, செயல்களையோ, போகப் பொருட்களையோ துறந்து மனம், உடல், புலன்கள் ஆகியவற்றிற்கு ஏற்படும் எல்லாத் துயரங்களையும் பொறுத்துக் கொள்வது தவம் ஆகும். அப்படி இருப்பவர் 'தபஸ்வீ'.

**கேள்வி:** இங்கு 'ஜ்ஞாநீ' என்று யாரைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** இங்கு 'ஜ்ஞாநீ' என்பவர் பகவானை அடைந்துவிட்ட தத்வ ஞானி அல்லர். அதேபோல பகவானை அடைவதற்காக ஞானயோக ஸாதனை புரியும் ஞானயோகியும் அல்லர். வெறும் சாஸ்த்ரங்களைப் படித்து குருவிடம் உபதேசம் பெற்று விவேகமுள்ள புத்தியினால் எல்லாப் பொருட்களின் தன்மையையும் புரிந்து கொண்ட நூல்வல்லோரை, 'ஜ்ஞாநீ' என்ற சொல் இங்கே குறிப்பிடுகிறது.

**கேள்வி:** இங்கே 'கர்மீ' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** மனைவி, மக்கள், செல்வம், ஸ்வர்கம் முதலிய பயன்களைக் கருதி, சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டவைகளான யாகம், தானம், பூஜை, ஸேவை முதலிய கர்மங்களைப் பயன் கருதிச் செய்பவனைக் 'கர்மீ' என்று கூறுகிறார்.

**கேள்வி:** தவம் செய்பவர்களும், சாஸ்த்ர ஞானம் பெற முயற்சி செய்பவர்களும்கூடப் பயனைக் கருதித்தானே அவற்றில் ஈடுபடுகிறார்கள்? எனவே அவர்களையும் கர்மிகளில் அடங்கியவர்களாக எண்ணுவதே உசிதம். ஆனால், இவ்வாறு கொள்ளாமல் அவர்களைத் தனியாக ஏன் கூறுகிறார்?

**பதில்:** இங்கே 'கர்மீ' என்ற சொல் அவ்வளவு விரிவான பொருளில் பயன்படுத்தப்பட வில்லை. பயனில் கருத்துடன் சாஸ்த்ர முறைப்படி யாகம், தானம் முதலிய கர்மங்களைச் செய்பவனை மட்டும் 'கர்மீ' என்ற சொல் குறிக்கிறது. இவற்றில் செயற்பாடு அதிகம் இருக்கிறது. தவம் செய்பவர்களுக்குச் செயல்பாடு முக்யமில்லை. மனதையும், புலன்களையும் அடக்க வேண்டியதுதான் அங்கு முக்யம். சாஸ்த்ர ஞானிகளின் விஷயத்தில் சாஸ்த்ர விஷயங்களைப் பற்றிய ஆராய்ச்சியில் அறிவுக்குத்தான் முதன்மை. பகவான் இந்த மாறுபாட்டைக் கருத்தில் கொண்டு, பயனில் ஆர்வம் கொண்டு கடமையைச் செய்பவர்களில் தபஸ்விகளையும், சாஸ்த்ர ஞானிகளையும் சேர்க்காமல், அவர்களைத் தனியாகக் குறிப்பிடுகிறார்.

**கேள்வி:** இந்த ச்லோகத்தில் 'யோகீ' என்று யாரைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** ஞானயோகம், த்யானயோகம், பக்தியோகம், கர்மயோகம் முதலிய ஏதேனும் ஒரு ஸாதனை மூலம், அவற்றின் இறுதி நிலையான 'ஸமத்வயோக'த்தை அடைந்துவிட்டவனை 'யோகீ' என்கிறார்.

**கேள்வி:** ஞானயோகம், கர்மயோகம் என்ற இரண்டு மட்டும் நிஷ்டைகள் என்று கூறப்படுகின்றன. பக்தியோகமும், த்யானயோகமும் இவற்றிலிருந்து வேறான்வையா?

**பதில்:** பக்தியோகம் கர்மயோகத்திலேயே அடங்கும். பக்தியை முக்யமாகக் கொண்டு கர்மம் செய்வதற்கு பக்தியோகம் என்று பெயர். கர்மம் முதன்மை பெறும் யோகம் கர்மயோகம் எனப்படும். இரண்டு நிஷ்டைகளிலும் த்யானயோகம் துணை புரிகிறது. அபேத புத்தியோடு செய்யப்படும் த்யானயோகம் ஞானயோகத்திற்கும், பேத புத்தியோடு செய்யப்படும் த்யானயோகம் கர்மயோகத்திற்கும், உதவியாக இருக்கிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொருத்தம்: முன் ச்லோகத்தில், யோகி அனைவரிலும் சிறந்தவன் என்று கூறி, அர்ஜுனனை 'யோகி ஆவாய்' என்று கட்டளையிட்டார். ஆனால் ஞானயோகம், த்யானயோகம், பக்தியோகம், கர்மயோகம் முதலிய ஸாதனைகளில் அர்ஜுனன் எந்த ஒரு ஸாதனையைக் கைக்கொள்ள வேண்டும் என்பதைத் தெளிவாக்கவில்லை. ஆகவே, தம்மைத் தவிர வேறு ஒன்றிலும் நாட்டம் கொள்ளாமல் தம்மிடமே ப்ரேமை கொண்டுள்ள பக்தியோகியின் பெருமையைக் கூறி, அர்ஜுனனைத் தம்பால் ஈர்க்கிறார்—

**योगिनामपि सर्वेषां मद्गतेनान्तरात्मना।**
**श्रद्धावान्भजते यो मां स मे युक्ततमो मतः॥४७॥**

**யோகிநாமபி ஸர்வேஷாம் மத்₃க₃தேநாந்தராத்மநா ।**

**ஶ்ரத்₃தா₄வாந்ப₄ஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத: ॥ 47 ॥**

**ஸர்வேஷாம்** – அனைத்து, **யோகிநாம் அபி** – யோகிகளிலும், **ய:** – எவன், **ஶ்ரத்₃தா₄வாந்** – ச்ரத்தையுடைய யோகியோ, **மத்₃க₃தேந** – என்னிடம் ஈடுபாடு கொண்ட, **அந்தராத்மநா** – உள்ளத்தால் (மனப்பூர்வமாக), **மாம்** – என்னை, **ப₄ஜதே** – வழிபடுகிறானோ, **ஸ:** – அந்த யோகியே, **மே** – எனக்கு (என்னால்), **யுக்ததம:** – மிகவும் உயர்ந்தவனாக, **மத:** – மதிக்கப்படுகிறான்.

அனைத்து யோகிகளிலும் எவன் ச்ரத்தையுடைய யோகியோ என்னிடம் ஈடுபாடு கொண்ட உள்ளத்தால் (மனப்பூர்வமாக) என்னை வழிபடுகிறானோ, அந்த யோகியே என்னால் மிகவும் உயர்ந்தவனாக மதிக்கப்படுகிறான்."

**கேள்வி:** இங்கு 'யோகிநாம்' என்ற சொல்லுடன், 'அபி' என்றும், 'ஸர்வேஷாம்' என்றும் அடைமொழிகள் கொடுக்கப்பட்டிருப்பதன் கருத்து என்ன?

**பதில்:** 4/24 முதல் 4/30 வரை பகவானை அடைவதற்காக யக்ஞம் என்ற பெயரால் கூறப்பட்ட ஸாதனைகளுக்கும், அவற்றைத் தவிர பகவானை அடைவதற்காக இதுவரை கூறப்பட்ட ஸாதனைகளுக்கும் முடிவான எல்லை நிலம் 'யோகம்' என்பதால், பலவித ஸாதனை புரிகிறவர்களும் பலவிதமான யோகிகள் ஆவர். அவ்வாறு எல்லா வகைப்பட்ட யோகிகளையும் குறிப்பிட்டுக் காட்டுவதற்காகவே இங்கு 'யோகிநாம்' என்ற சொல்லுடன் 'அபி' என்ற சொல்லைப் பயன்படுத்தி, 'ஸர்வேஷாம்' என்ற அடைமொழியைச் சேர்த்திருக்கிறார்.

**கேள்வி:** 'ஶ்ரத்தாவாந்' என்று அழைக்கப்படும் மனிதனின் இலக்கணம் என்ன?

**பதில்:** பகவான் இருக்கிறார் என்பதிலும், அவருடைய அவதாரங்களிலும், அவருடைய உபதேசங்களிலும், சிந்தனைக்கு அப்பாற்பட்டதும், அளவற்றதுமான அவருடைய அனந்த கல்யாண குணங்களிலும், திருநாமங்களிலும், லீலைகளிலும், அவருடைய பெருமை, சக்தி, ப்ரபாவம், ஐசுவர்யம் முதலியவற்றிலும், நேரிடையாக அனுபவம் பெற்றது போன்ற பூரணமான அசைக்க முடியாத நம்பிக்கையுள்ளவனை 'ஶ்ரத்தாவாந்' என்று குறிப்பிடுகிறார்.

**கேள்வி:** 'மத்கதேந' என்ற அடைமொழியோடு கூடிய 'அந்தராத்மா' என்ற சொல் எதைக் குறிக்கிறது?

**பதில்:** என்னையே அனைத்திலும் சிறந்தவனாகவும், எல்லா குணங்களுக்கும் ஆதாரமாகவும், எல்லா வல்லமைகளும் பெற்றவனாகவும், மிகவும் பேரன்புக்கு உரியவனாகவும் அறிந்து கொள்வதால், எவனுக்கு என்னிடம் அநன்ய ப்ரேமை உண்டாகியிருக்கிறதோ, அதனாலேயே எவனுடைய மனம்–புத்தியாகிய அந்தக்கரணம் அசையாமலும், உறுதியாகவும், அநன்ய பாவத்துடனும் என்னிடமே நிலைபெற்றுள்ளதோ,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அந்த அந்தக்கரணத்தை 'மத்கத அந்தராத்மா' (என்னிடம் ஈடுபாடு கொண்ட அந்தராத்மா) என்கிறார்.

**கேள்வி:** இங்கே 'அநன்ய ப்ரேமையுடன்' பகவானிடம் நிலை கொண்டுள்ள மனம்-புத்தியை 'மத்கத அந்தராத்மா' என்று ஏன் சொல்ல வேண்டும்? அச்சம், த்வேஷம் முதலிய காரணங்களாலும்கூட மனம், புத்தி இவை பகவானிடம் அணுக முடியுமே?

**பதில்:** அவ்வாறும் அணுக முடியும். எந்த ஒரு காரணத்தினாலும்கூட பகவானை அணுகி மனம், புத்தியைப் பரமாத்மாவில் ஈடுபடுத்துவதன் பயன் பரம மங்களமே ஆகும். ஆனால், இங்கே பேரன்புடன் பகவானிடம் மனம், புத்தியை ஈடுபடுத்தும் ஸந்தர்பம்; அச்சம், த்வேஷத் தோடு அன்று. ஏனெனில் அச்சம், வெறுப்பு இவற்றுடன் அந்தக்கரணத்தை பகவானிடம் ஈடுபடுத்துபவனை ச்ரத்தை உள்ளவன் என்று சொல்ல முடியாது; பரமயோகி என்றும் மதிக்க முடியாது. இதற்குப் பிறகு ஏழாவது அத்யாயத்தின் தொடக்கத்திலேயே பகவான் 'மய்யாஸக்தமநா:' என்று கூறி, அநன்ய ப்ரேமையைச் சுட்டிக்காட்டி இருக்கிறார். இதைத் தவிர கீதையில் ஆங்காங்கே (7/17; 9/14, 10/10) ப்ரேமையுடன் பகவானிடம் அந்தக்கரணத்தை ஈடுபடுத்துவதைப் புகழ்கிறார். ஆதலால், இங்கு இவ்விதம் கொள்வதே சரியாகும்.

**கேள்வி:** இங்கு 'மாம்' என்ற சொல், பகவானுடைய ஸகுண ஸ்வரூபத்தைக் குறிப்பிடுகிறதா அல்லது நிர்குண ஸ்வரூபத்தையா?

**பதில்:** ஒப்புயர்வற்ற ஞானம், சக்தி, ஐசுவர்யம், வீர்யம், தேஜஸ் முதலியவற்றின் மேலான உறைவிடம்; ஸௌந்தர்யம், மாதுர்யம், ஔதார்யம் இவற்றின் எல்லையற்ற கடல்; பேரிரக்கம் கொண்டவர்; மிக உயர்ந்த நண்பர்; மிகவும் அன்புடையவர்; எண்ணத்திற்கு எட்டாத ஆனந்த திவ்ய ஸ்வரூபன், நித்யன், ஸத்யன், பிறப்பற்றவர், அழிவற்றவர்; எல்லோருக்கும் அந்தர்யாமி; எல்லாமறிந்தவர்; அனைத்து வல்லமையும் உடையவர்; எல்லாவித தெய்விக கல்யாண குணங்களும் உடையவர்; எல்லோருக்கும் ஆத்மா; எண்ணிப் பார்க்க முடியாத பெருமையோடு கூடிய அற்புத லீலைகளைச் செய்பவர்; அனைத்து உலகங்களையும் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றை ப்ரக்ருதியின் மூலமாக லீலையாகவே செய்கிறவர்; ரஸக்கடல், ரஸமயம், ஆனந்தத்தைப் பொழிபவர் ஆகிய இவையனைத்தும் கொண்ட ஸகுண-நிர்குணரூபமான ஸமக்ர ப்ரம்ம புருஷோத்தமனை இங்கே 'மாம்' என்ற சொல் குறிக்கும்.

**கேள்வி:** 'பஜதே' (வழிபடுகிறான்) என்ற வினைச்சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** நாற்புறங்களிலிருந்தும் எல்லா வகைகளிலும் மனதையும், புத்தியையும் இழுத்து, பகவானிடம் செலுத்தி, மிகுந்த ச்ரத்தையுடனும், ப்ரேமையுடனும், நின்றாலும், நடந்தாலும், அமர்ந்தாலும், எழுந்தாலும், புசித்தாலும், பருகினாலும், உறங்கினாலும், விழித்தாலும், எந்த ஒரு செயல் செய்தாலும், தனிமையில் இருந்தாலும், இடைவிடாது **ஸ்ரீ** பகவானை வழிபடுவது 'பஜதே' என்பதன் பொருள் ஆகும்.

**கேள்வி:** 'அவன் என்னால் மிகவும் உயர்ந்தவனாக மதிக்கப்படுபவன்' என்று கூறுவதன் பொருள் என்ன?

**பதில்:** பகவான் தமதன்புக்குரிய பக்தர்களின் பெருமையை விளக்குகிறார்- தபஸ்வி, ஞானி, கர்மி முதலிய அனைவருமே எனக்கு இனியவர்களாயினும், இவர்களனைவரையும் விட, என்னையே அடைவதற்கான ஸாதனை செய்பவர்கள் எனக்கு மிகவும் இனியவர்கள். ஆனால், என்னுடைய ஸமக்ர ரூபத்தை அறிந்து, என்னிடம் அநன்ய ப்ரேமை செலுத்துகிறவன் என்னை மட்டுமே தன்னுடைய உயர்ந்த ப்ரேமைக்குரியவனாக எண்ணி, எந்த ஒரு விஷயத்திலும் ஆசை, எதிர்பார்ப்பு, மதிப்பு இவற்றை வைக்காமல் தன்னுடைய அந்தராத்மாவை இரவு-பகலாக என்னிடமே ஈடுபடுத்தி, தாயை அண்டியிருக்கும் சேயைப்போல, என்னைத் தவிர வேறு ஒருவரையும் அறியவே மாட்டான். அவன்தான் என் இதயத்தின் உயர் செல்வம். குழந்தையன்பினால் நிரம்பிய, இரவு-பகலாகத் தம்முடைய

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அன்புக்குரிய குழந்தைகளைப் பார்த்துக் கொண்டிருப்பதிலேயே ஆராத் ஆனந்தமடைகின்ற, அத்தகைய வாத்ஸல்யமயமான எண்ணற்ற அன்னைகளின் இதயங்களும், சிந்தனைக்கெட்டாத எல்லையற்ற ப்ரேமமயமான என் உள்ளக்கடலின் ஒரு திவலைக்குக்கூட ஸமமாகாது. அத்தகைய அன்பு நிறைந்த தாயுள்ளத்தால் நான் அவனை நோக்கிக் கொண்டே இருக்கிறேன்; அவனுடைய ஒவ்வொரு செயலும் எனக்கு எல்லையற்ற ஸுகத்தைத் தருவதாகிறது. எல்லா உலகங்களிலும், அநாதி காலத்திலிருந்து எத்தனை வகையான என்னென்ன ஆனந்தங்கள் கிடைத்து வந்து கொண்டிருக்கின்றனவோ, அவையெல்லாம் என்னுடைய ஆனந்தக்கடலின் ஒரு துளியோடுகூட ஒப்பிட முடியாதவை. இப்படிப்பட்ட எல்லையற்ற ஆனந்தத்தின் கடக்க முடியாத பெருங்கடலாக இருந்தும்கூட நான் 'மத்கத அந்தராத்மா' ஆகிய எனது பக்தனின் செயலைப் பார்த்துப் பார்த்து, எல்லாவற்றிற்கும் மேலான ஆனந்தத்தை அடைந்து கொண்டே இருக்கிறேன். அவனை எங்ஙனம் பெருமைப்படுத்துவேன்? அவன் நானே; அவனே என் உடைமை. அவனைக் காட்டிலும் மிக இனியவன் எனக்கு வேறு யார் இருக்கிறார்கள்? என் அன்புக்குரியவனே உயர்ந்தவன். ஆகவே, என்னுடைய எண்ணத்தில் அவனே அனைவரிலும் மேலான பக்தன்; அவனே அனைவரிலும் மேலான யோகி.

*ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे*
*आत्मसंयमयोगो नाम षष्ठोऽध्याय: ॥ ६ ॥*

**ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம் யோகஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே ஆத்மஸம்யமயோகோ நாம ஷஷ்டோऽத்யாய: ॥ 6 ॥**

**ஓம் தத் ஸத் – ப்ரம்ம வித்யை, யோக ஶாஸ்த்ரம், உபநிஷத் எனப்படும் ஸ்ரீமத்பகவத்கீதையாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலில் 'ஆத்மஸம்யமயோகம்' எனப் பெயர் படைத்த ஆறாவது அத்யாயம் நிறைவுற்றது.**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

## அத₂ ஸப்தமோऽத்₄யாய:

# ஏழாவது அத்யாயம்

## ஞானவிஞ்ஞானயோகம்

**ஆறு அத்யாயத் தொகுப்புகளின் விளக்கம்**

ஸ்ரீமத்பகவத்கீதையின் பதினெட்டு அத்யாயங்களில் கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் இவை வரிசையாக ஆறு, ஆறு அத்யாயங்கள் கொண்ட மூன்று தொகுப்புகள் (ஷட்கங்கள்) என்று கருதப்படுகின்றன. அந்தந்தத் தொகுப்புகளில் அந்தந்த யோகம்தான் சொல்லப்படுகிறது; வேறு யோகத்தைப் பற்றிய குறிப்பு இல்லை என்று கருத வேண்டாம். ஆனால் எந்தத் தொகுப்பில் எந்த யோகம் முக்யமாகப் பேசப்படுகிறதோ, அதற்கு அந்தப் பெயர் வைக்கப்பட்டிருக்கிறது.

முதல் ஆறு அத்யாயத் தொகுப்பில், முதல் அத்யாயம் ஒரு முன்னுரையாக அமைந்திருக்கிறது. அதில், மேற்கண்ட இந்த யோகங்களில் எது பற்றியும் கூறப்படவில்லை. இரண்டாவது அத்யாயத்தில், 11 முதல் 30 ச்லோகம் வரையில் ஸாங்க்ய (ஞான) யோகத்தைப் பற்றியும், 39வது ச்லோகத்திலிருந்து 3வது அத்யாயத்தின் இறுதிவரை, அநேகமாகக் கர்மயோகத்தின் விரிவான விளக்கமும் தரப்படுகிறது. 4, 5வது அத்யாயங்களில், கர்மயோகம், ஞானயோகம் இவற்றின் விளக்கங்கள் கலந்து காணப்படுகின்றன; அவ்விதமே, 6வது அத்யாயத்தில் முக்யமாக, த்யானயோக வர்ணனை இருக்கிறது. அத்துடன் இடத்திற்கேற்ப, கர்மயோகம் முதலியவற்றின் விளக்கமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. இவ்விதமாக இந்த முதல் ஆறு அத்யாயத் தொகுப்பில் அனைத்து விஷயங்களும் கலந்திருந்தாலும், மற்ற இரு தொகுதிகளைவிடக் கர்மயோக விளக்கம் அதிகமாக இருக்கிறது. இந்தக் கோணத்தில்தான், இத்தொகுதி கர்மயோக விளக்கத்தை முக்யமாகக் கொண்ட தொகுதியாகக் கருதப்படுகிறது.

7வது அத்யாயத்திலிருந்து 12வது அத்யாயம் வரையிலான இரண்டாவது தொகுப்பில், இடத்திற்கேற்ப ஆங்காங்கே மற்ற விஷயங்கள் குறிப்பிடப் பட்டிருந்தாலும், எல்லா அத்யாயங்களிலும் முக்யமாகப் பக்தியோகத்தின் தெளிவான விளக்கம் உள்ளதால், இந்தத் தொகுதியை பக்தியை முக்யமாகக் கொண்ட ஆறு அத்யாயத் தொகுப்பு (ஷட்கம்) என்று கொள்வது பொருத்தமே.

கடைசித் தொகுப்பில் (ஷட்கத்தில்) 13, 14வது அத்யாயங்களில் முற்றிலும் ஞானயோகத்தைப் பற்றிய விஷயம்தான் வருகிறது; 15வது அத்யாயத்தில் பக்தியோகம்; 16வது அத்யாயத்தில் தெய்வ, அஸுர ஸம்பத்துகளின் விளக்கம்; 17வது அத்யாயத்தில் ச்ரத்தை, உணவு, யக்ஞம், தானம், தவம் இவற்றைப் பற்றிய வர்ணனை; 18வது அத்யாயம், கீதையின் முடிவுரையாக, கர்ம, பக்தி, ஞானயோகங்களைப் பற்றிச் சொல்லி ஶரணாகதியை முக்யமாகக் கொண்ட பக்தியோக உபதேசத்துடன் முடிவடைகிறது. இவ்வளவு சொன்னாலும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஞானயோகத்தைப் பற்றி மூன்றாவது தொகுப்பில் கூறப்பட்ட அளவு முதலிரண்டு தொகுப்புகளில் இல்லை. ஆகவே இது ஞானயோகத்தின் ப்ரதானமான தொகுப்பு என்று பெயர் பெற்றது.

**அத்யாயத்தின் பெயர்** பரமாத்மாவின் நிர்குண, நிராகார தத்வங்களின் ப்ரபாவம், பெருமை முதலியவற்றின் முழுமையான விளக்கத்தைப் பெறுவதற்குப் பெயர் 'ஞானம்' ஆகும். குணமுள்ள ஆனால் உருவமற்ற தத்வம் மற்றும் குணமும் உருவமுள்ள தத்வத்தின் லீலை, ரஹஸ்யம், பெருமை, குணம், ப்ரபாவம் ஆகியவற்றின் முழுமையான அறிவுக்குப் பெயர் 'விஞ்ஞானம்' ஆகும். இந்த ஞானவிஞ்ஞானத்தோடு கூடிய பகவானின் ஸ்வரூபத்தை அறிவதுதான், ஸமக்ர பகவானை அறிவதாகும். இந்த அத்யாயத்தில், இத்தகைய ஸமக்ர (முழுமையான) பகவானின் ஸ்வரூபமும், அதனை அறியக் கூடிய தகுதி பெற்றவர்களும், அதற்கான ஸாதனைகளும் விளக்கப்பட்டிருப்பதால், இந்த அத்யாயத்தின் பெயர் 'ஞானவிஞ்ஞானயோகம்' என்று வைக்கப்பட்டிருக்கிறது.

**அத்யாயச் சுருக்கம்** இந்த அத்யாயத்தின் முதல் ச்லோகத்தில், பகவானின் ஸமக்ர (முழுமையான) வடிவத்தின் வர்ணனையைக் கேட்கும்படி, பகவான் அர்ஜுனனுக்குக் கட்டளையிடுகிறார். 2ல் விஞ்ஞானத்தோடு கூடிய ஞானத்தை விளக்குவதாக உறுதி கூறி, அதைப் புகழ்ந்து பேசி, 3ல் பகவானுடைய ஸ்வரூபத்தைத் தத்வரீதியாக அறியக்கூடியவர்கள் மிகவும் அரிது என்பதை நிரூபிக்கிறார். 4, 5ல் தம்முடைய, அபரா, பரா ப்ரக்ருதிகளின் ஸ்வரூபங்களைக் கூறி, 6ல் மேலே கூறப்பட்ட இரண்டு ப்ரக்ருதிகள்தாம், படைக்கப்பட்டுள்ள அனைத்துக்கும் காரணம்; தாமே, எல்லாவற்றுக்கும் மஹாகாரணம் என்று கூறுகிறார். 7ல் அனைத்துலகமும் தம்முடைய வடிவமே என்று கூறி, நூலினால் ஆன மணிமாலையை உதாரணமாகக் கூறுவதன் மூலம் தம்முடைய பரந்த தன்மையைச் சுருங்கக் கூறுகிறார். மறுபடியும், 8 முதல் 12 வரை தம்முடைய எங்கும் நிறைந்து விளங்கும் தன்மையை விரிவாகச் சொல்லி, 13ல் தம்மை (பகவானை)த் தத்வரீதியாக அறியமுடியாததன் காரணத்தைக் கூறி, 14ல் தம்முடைய மாயையைக் கடப்பது மிக மிகக் கடினம் என்றும், அதைக் கடப்பதற்கான வழிமுறைகளையும் தெரிவிக்கிறார். 15ல் பாவிகளான அறிவிலிகள் இறை வழிபாடு செய்வதில்லை என்றும், 16ல் புண்யசாலிகளான (நான்குவித) பக்தர்களைப் பற்றியும் கூறுகிறார். 17ல் ஞானியான பக்தனின் மேன்மையை விளக்கி, 18ல் எல்லா பக்தர்களையும் பெருமை படைத்தோர் எனச் சிறப்பித்து, ஞானியைத் தம்முடைய ஆத்மா என்றும், 19ல் ஞானியான பக்தனைக் காண்பது அரிதென்றும் பகர்கிறார். 20ல் மற்ற தெய்வங்களை உபாஸிப்பவர்களைப் பற்றிக் கூறி, 21ல் மற்ற தெய்வங்களிடம் நம்பிக்கையை நிலைநிறுத்த வேண்டும் என்று விளக்கி, 22ல் அந்த தெய்வங்களை உபாஸிப்பதன் பயனை நிரூபிக்கிறார். 23ல் பிற தேவதைகளை வழிபடுவதால் ஏற்படும் பயன் அழியும் தன்மையுடையது என்றும், தம்மை வழிபடுவதனால் தம்மையே அடையும் மஹத்தான பயன் உண்டாகும் என்றும் கூறுகிறார். 24, 25ல் தம்முடைய குணம், ப்ரபாவம், ஸ்வரூபம் ஆகியவற்றை அறிய இயலாததன் காரணத்தை விளக்கி, 26ல், 'நான் எல்லோரையும் அறிவேன்; ஆனால் யாரும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



என்னை அறிவதில்லை' என்கிறார். 27ல் தம்மை அறிய முடியாததன் காரணத்தைக் கூறி, 28ல் தம்மை வழிபடும் உறுதி வாய்ந்த சிறந்த பக்தனின் லக்ஷணங்களை விரித்துரைக்கிறார். பிறகு, 29ல் பகவானை அடைக்கலமாகக் கொண்டு முயல்பவர்கள் ப்ரம்மத்தை அடைகிறார்கள் என்று கூறி, 30ல் தம்முடைய ஸமக்ர உருவத்தை அறிவதன் பெருஞ்சிறப்பை எடுத்துக் கூறி அத்யாயத்தைத் தலைக்கட்டுகிறார்.

**முன் அத்யாயத்துடன் இவ்வத்யாயத்திற்குப் பொருத்தம்:** ஆறாவது அத்யாயத்தின் கடைசி ச்லோகத்தில், 'அந்தராத்மாவை என்னிடம் நிலைக்க வைத்து, ச்ரத்தையுடனும், ப்ரேமையுடனும் பூஜிப்பவன் எல்லா யோகிகளைக் காட்டிலும் உயர்ந்தவன்' என்று சொன்னார். ஆனால் பகவானுடைய ஸ்வரூப – குண – ப்ரபாவங்களை (விபூதிகளை) அறியாதவரையில் மனிதன் முழு மன ஈடுபாட்டுடன் வழிபடுவது மிகக் கடினமானது. கூடவே அப்படி வழிபடும் முறை பற்றியும் தெரிந்து கொள்ளவேண்டும். ஆகவே, இங்கு குணப்ரபாவங்களுடன்கூடிய தமது ஸமக்ர ஸ்வரூபத்தையும், பல முறைகளுடன் கூடிய பக்தியோகத்தையும் எடுத்துச் சொல்வதற்காக பகவான் ஏழாவது அத்யாயத்தை ஆரம்பிக்கிறார். முதல் இரண்டு ச்லோகங்களில், 'நான் ஞானவிஞ்ஞானத்தைப் பற்றிச் சொல்லப் போகிறேன்; நீ கவனமாகக் கேள்' என்று கூறுகிறார்—

श्रीभगवानुवाच

**मय्यासक्तमनाः पार्थ योगं युञ्जन्मदाश्रयः।**
**असंशयं समग्रं मां यथा ज्ञास्यसि तच्छृणु॥ १॥**

ஶ்ரீப₄க₃வானுவாச

**மய்யாஸக்தமநா: பார்த₂ யோக₃ம் யுஞ்ஜந்மத₃ாஶ்ரய: ।**
**அஸம்ஶயம் ஸமக்₃ரம் மாம் யத₂ா ஜ்ஞாஸ்யஸி தச்ச்₂ருணு ॥ 1 ॥**

**ஶ்ரீப₄க₃வானுவாச** – ஶ்ரீபகவான் சொன்னார்: **பார்த₂** – பார்த்த! **மயி ஆஸக்தமநா:** – என்னிடம் மிகுந்த அன்பும், முழுமையான பற்றும் கொண்ட மனத்துடன், **மத₃ாஶ்ரய:** – என்னையே மேலான கதியாகக் கொண்டு, **யோக₃ம் யுஞ்ஜந்** – யோகத்திலேயே ஒன்றியவனாக, **ஸமக்₃ரம்** – விபூதிகள், பலம், ஐசுவர்யம் முதலிய ஸகல கல்யாண குணங்களுடன் கூடியவனும் எல்லாவற்றிற்கும் ஆத்மாவானவனும் ஆன, **மாம்** – என்னை, **யத₂ா** – எவ்வாறு, **அஸம்ஶயம்** – எவ்வித ஐயமுமின்றி, **ஜ்ஞாஸ்யஸி** – நீ அறிந்து கொள்வாயோ (அவ்வாறு சொல்கிறேன்). **தத்** – அதை, **ஶ்ருணு** – கேள்.

ஶ்ரீபகவான் சொன்னார்: 'பார்த்த! என்னிடம் மிகுந்த அன்பும் முழுமையான ஈடுபாடும் கொண்ட மனத்துடன் என்னையே மேலான கதியாகக் கொண்டு யோகத்திலேயே ஒன்றிய வனாக விபூதிகள், பலம், ஐசுவர்யம் முதலிய ஸகல கல்யாண குணங்களுடன் கூடியவனும் எல்லாவற்றிற்கும் ஆத்மாவானவனும் ஆன என்னை எவ்வாறு எவ்வித ஐயமுமின்றி நீ அறிந்து கொள்வாயோ அவ்வாறு சொல்கிறேன். அதைக் கேள்.

**கேள்வி:** 'மயி ஆஸக்தமநா:' என்று யாரைக் கூறுகிறார்?

**பதில்:** இந்த உலகத்திலும், மேலுலகத்திலும் உள்ள, எந்த ஒரு போகத்திலும் எவருடைய மனதில் சிறிதளவு கூடப் பற்று தங்கவில்லையோ, நீரிலிருந்து சிறிது நேரம் பிரிவு ஏற்பட்டாலும் மிகவும் துன்பத்தை அடையும் மீனைப் போல, விநாடி நேரம் கூட பகவானிடமிருந்து பிரிவு ஏற்பட்டாலும், அவருடைய நினைவு அகன்றாலும் பொறுத்துக்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கொள்ளமுடியாதபடி எவருடைய மனம் எல்லாப் பக்கங்களிலிருந்தும் இழுக்கப்பட்டு உயர்ந்த ப்ரேமைக்குகந்தவரும், எல்லா குணங்களும் நிறைந்தவருமான பகவானிடம் மட்டுமே பெரும் பற்று கொண்டுள்ளதோ, அவரை, 'மயி ஆஸக்தமநா:' என்று பகவான் கூறுகிறார்.

**கேள்வி:** 'மதாம்ரய:' என்று யாரைக் கூறுகிறார்?

**பதில்:** எவன் உலகத்தில் வேறெதையும் தனக்குத் தஞ்சம் எனக் கொள்ளாது, எல்லா ஆசைகள், நம்பிக்கைகளிடமிருந்தும் கவனத்தைத் திருப்பி, பகவானை மட்டுமே அண்டியுள்ளானோ, அனைத்துச் சக்திகளும் உடைய பகவானையே மேலான அடைக்கலம் என்றும், உயர்வான லக்ஷ்யம் என்றும், மேலான கதியென்றும் அறிந்து கொண்டு, அவரிடமே நம்பிக்கை வைத்து, எப்போதும் கவலையற்றிருக்கிறானோ, அவனை 'மதாம்ரய:' என்று பகவான் கூறுகிறார்.

**கேள்வி:** 'யோகம் யுஞ்ஜந்' என்பதன் கருத்து என்ன?

**பதில்:** இது பக்தியோகத்தைப் பற்றிப் பேசும் இடம். ஆகவே, மனதையும், புத்தியையும் அசையாமல் பகவானிடம் நிலைநிறுத்தி, எப்பொழுதும் இடைவிடாது ச்ரத்தையுடனும், பேரன்புடனும் பகவானையே நினைத்திருப்பது என்று பொருள்.

**கேள்வி:** 'விபூதிகள், பலம், ஐசுவர்யம் ஆகிய ஸகல கல்யாண குணங்களுடன் கூடியவனும், ஸகலத்திற்கும் ஆத்மாவானவனும் ஆன என்னை ஸமக்ர பகவானே என்று எவ்வித ஐயமுமின்றி அறிந்து கொள்வது' என்பதன் கருத்து என்ன?

**பதில்:** பகவான் எனப்பட்டவர், இவ்வளவு, அவ்வளவு என்னும் கணக்கிற்குட்பட்டவர் அல்லர்; கோடானுகோடி ப்ரம்மாண்டங்களில் நிறைந்து விளங்குபவர்; அனைத்துமே அவருடைய வடிவம்தாம். இந்த ப்ரம்மாண்டத்திலும் இதற்கு அப்பாலும் உள்ள அனைத்தும் அவரிடமே உள்ளவைதாம்! அவர் நித்யமானவர்; ஸத்யமானவர்; பழைமையானவர்; எல்லாப் பண்புகளும் படைத்தவர்; அனைத்து ஆற்றலும் கொண்டவர்; எல்லாம் அறிந்தவர்; எங்கும் நிறைந்தவர்; அனைத்திற்கும் ஆதாரமானவர்; எல்லா வடிவாகவும் இருப்பவர். அவர் தாமாகவே தம்முடைய யோகமாயையினால் உலக வடிவாக வெளிப்படுகிறார். உண்மையில், அவரை விடுத்து வேறு ஒரு பொருள் இல்லவே இல்லை. வ்யக்தம்–அவ்யக்தம்; ஸகுணம்–நிர்குணம் – எல்லாமே அவர்தான். இவ்விதம் அந்த பகவானுடைய வடிவத்தை, ஐயமின்றியும், தெளிவாகவும் தெரிந்து கொள்வதுதான் 'ஸமக்ர பகவானை ஐயமில்லாமல் அறிந்து கொள்வது' ஆகும்.

**ज्ञानं तेऽहं सविज्ञानमिदं वक्ष्याम्यशेषतः ।**
**यज्ज्ञात्वा नेह भूयोऽन्यज्ज्ञातव्यमवशिष्यते ॥ २ ॥**

**ஜ்ஞாநம் தேऽஹம் ஸவிஜ்ஞாநமித₃ம் வக்ஷ்யாம்யஶேஷத: ।**
**யஜ்ஜ்ஞாத்வா நேஹ பூ₄யோऽந்யஜ்ஜ்ஞாதவ்யமவஶிஷ்யதே ॥ 2 ॥**

**யத்** – எதை, **ஜ்ஞாத்வா** – அறிந்து கொண்டபின், **இஹ** – இவ்வுலகில், **பூ₄ய:** – மேலும், **ஜ்ஞாதவ்யம்** – தெரிந்து கொள்ள வேண்டிய, **அந்யத்** – வேறு ஒன்றும், **ந அவஶிஷ்யதே** – மீதம் இருக்காதோ, **ஸவிஜ்ஞாநம்** – விஞ்ஞானத்துடன் கூடிய, **இத₃ம்** – இந்த, **ஜ்ஞாநம்** – தத்வஞானத்தை, **அஶேஷத:** – முழுமையாக, **அஹம்** – நான், **தே** – உனக்கு, **வக்ஷ்யாமி** – சொல்வேன்.

எதை அறிந்து கொண்டபின் இவ்வுலகில் மேலும் தெரிந்து கொள்ள வேண்டிய வேறு ஒன்றும் மீதம் இருக்காதோ விஞ்ஞானத்துடன் கூடிய இந்தத் தத்வஞானத்தை முழுமையாக நான் உனக்குச் சொல்வேன்.

**கேள்வி:** இங்கு, 'ஞானம், விஞ்ஞானம்' என்பவை எதைக் குறிக்கின்றன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** பகவானுடைய நிர்குண, நிராகார தத்வத்தின் ப்ரபாவம், மாஹாத்ம்யம் (பெருமை), ரஹஸ்யம் இவற்றைத் தெள்ளென அறிவதே 'ஞானம்' எனப்படும். இவ்விதமே, அவருடைய குணமுள்ள ஆனால் உருவமற்ற மற்றும் குணமுள்ள தெய்விக உருவமுள்ள தத்வத்தின் லீலை, ரஹஸ்யம், குணம், பெருமை, ப்ரபாவம் இவற்றினுடைய உண்மை அறிவுதான் 'விஞ்ஞானம்' எனப்படும்.

**கேள்வி:** இந்த ஞானவிஞ்ஞானங்களைப் பற்றி இந்த அத்யாயத்தில் எங்கே சொல்கிறார்?

**பதில்:** இந்த அத்யாயத்தில் சொல்லப்படுபவை எல்லாமே ஞானவிஞ்ஞானங்களைப் பெறுவதற்குரிய ஸாதனைகள்தாம். 13/7லிருந்து 13/11 வரை, ஞான ஸாதனங்களை ஞானம் என்று கூறுவது போல், இந்த அத்யாயம் முழுவதிலும் ஞானவிஞ்ஞானத்தைப் பற்றிய உபதேசமே நிறைந்திருப்பதால், அத்யாயம் முழுவதும் ஞானவிஞ்ஞான மயமானது என்று அறிய வேண்டும்.

**கேள்வி:** இனிச் சொல்லப் போகின்ற ஞானவிஞ்ஞானங்களைத் தெரிந்து கொண்டு விட்டால் உலகில் தெரிந்து கொள்ளவேண்டியது வேறு ஒன்றும் மீதம் இருக்காது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஞானவிஞ்ஞான அறிவினால் பகவானுடைய ஸமக்ர ஸ்வரூபத்தைப் பற்றிய உணர்வு கிட்டும். இந்தப் பேருலக, ப்ரம்மாண்டங்கள் அடங்கிய ப்ரபஞ்சம் பகவானுடைய ஸ்வரூபத்தின் ஒரு துளி அம்சமே ஆகும். மனிதன் பகவானுடைய ஸமக்ர ரூபத்தைப் பற்றி முழுமையாக அறிந்து கொண்டுவிட்டால், இயல்பாகவே அவன் தெரிந்து கொள்ள வேண்டியது வேறு ஒன்றும் எஞ்சியிராது. பகவான் 10வது அத்யாயத்தின் முடிவில், 'நீ பலவற்றை அறிந்து என்ன பயன்? நான் என்னுடைய தேஜஸின் ஒரு துளியினால் அகில ப்ரபஞ்சத்தையும் தாங்குகிறேன்' என்று கூறுவதையே இங்கும் கூறுகிறார்.

**பொருத்தம்:** தன் ஸமக்ர ஸ்வரூபத்தின் ஞானவிஞ்ஞானங்களைப் பற்றிக் கூறுவதாகச் சொல்லிவிட்டு, பகவான் தன் ஸ்வரூபத்தைத் தத்வரீதியாக அறிவது மிகவும் அரிது என்று கூறுகிறார்—

**मनुष्याणां सहस्त्रेषु कश्चिद्यतति सिद्धये।**
**यततामपि सिद्धानां कश्चिन्मां वेत्ति तत्त्वतः॥ ३॥**

**மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஶ்சித்₃யததி ஸித்₃த₄யே ।**

**யததாமபி ஸித்₃தா₄நாம் கஶ்சிந்மாம் வேத்தி தத்த்வத: ॥ 3 ॥**

**ஸஹஸ்ரேஷு** – ஆயிரக்கணக்கான, **மநுஷ்யாணாம்** – மனிதர்களில், **கஶ்சித்** – யாரோ ஒருவன், **ஸித்₃த₄யே** – என்னை அடைவதற்காக, **யததி** – முயல்கிறான் (ஸாதனை புரிகிறான்). **யததாம்** – (அவ்விதம்) முயல்கின்ற, **ஸித்₃தா₄நாம் அபி** – யோகிகளிலும் கூட, **கஶ்சித்** – (என்னையே மேலான கதியாகக் கொண்ட) யாரோ ஒருவன்தான், **மாம்** – என்னை, **தத்த்வத:** – தத்வரீதியாக (உள்ளபடியே), **வேத்தி** – அறிகிறான்.

ஆயிரக்கணக்கான மனிதர்களில் யாரோ ஒருவன் என்னை அடைவதற்காக முயல்கிறான் (ஸாதனை புரிகிறான்). அவ்விதம் முயல்கின்ற யோகிகளிலும்கூட என்னையே மேலான கதியாகக் கொண்ட யாரோ ஒருவன்தான் என்னைத் தத்வரீதியாக உள்ளபடியே அறிகிறான்.

**கேள்வி:** இங்கு, 'மனிதன்' என்ற சொல்லை உபயோகிப்பதன் கருத்து என்ன?

**பதில்:** மனிதன் என்ற சொல்லால், "இங்கே மனிதப் பிறவி மிகவும் அரிது. அது பகவானுடைய மிகுந்த கருணையினால் கிடைக்கிறது. ஏனெனில் பகவானை அடைவதற்குரிய ஸாதனை புரிய, பிறவியினாலேயே மனிதர்கள் அனைவருக்கும் தகுதி உண்டு. ஜாதி, வர்ணம், ஆசிரமம், தேசம் என்ற எந்தவிதப் பாகுபாடும் இதற்கு இடையூறன்று. தவிரவும் மனிதப்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பிறவியைத் தவிர மற்ற பிறவிகள் எவற்றிலும், அப்பிறவியை அடைந்த ஜீவனுக்குப் புதிதாக ஒரு கர்மம் செய்யத் தகுதி கிடையாது. ஆகவே மற்ற பிறவிகளில் உள்ள ப்ராணிகள் பகவானை அடைய ஸாதனை எதுவும் புரிய முடியாது. விலங்குகள், பறவைகள், புழுக்கள், பூச்சிகள் முதலிய தாழ்ந்த பிறவிகளை அடைந்த எந்த ஜீவனுக்கும் ஸாதனை புரிவதற்கு வேண்டிய சக்தியும், தகுதியும் கிடையா. தேவர்கள் முதலிய பிறவிகளில் சக்தி இருந்தபோதிலும், போகங்களின் மிகுதியினாலும், முக்யமாகத் தகுதியின்மையாலும் அவர்கள் ஸாதனை புரிவதில்லை. அப்படியே விலங்குகளுக்கும், தேவர்களுக்கும் பரமாத்ம ஞானம் ஏற்பட்டாலும், அது பகவானுடைய அல்லது மஹாத்மாக்களுடைய தனிப்பட்ட கருணையின் ப்ரபாவம் (பெருமை) என்றறிய வேண்டும்.

**கேள்வி:** 'ஆயிரக்கணக்கான மனிதர்களில் யாரோ ஒருவன்தான் பகவானை அடைவதற்காக ஸாதனை புரிகிறான்' – இதற்குக் காரணம் என்ன?

**பதில்:** பகவானுடைய அருளின் பயனாக மனித உடல் கிடைத்திருந்தபோதிலும், முந்தைய பிறவிகளின் ஸம்ஸ்காரத்தால் புலன் நுகர்ச்சியில் மிக்க ஈடுபாடு கொண்டு பகவானிடம் ச்ரத்தை, ப்ரேமை முற்றும் இல்லாமல் இருப்பதாலோ அல்லது குறைவாக இருப்பதாலோ பெரும்பாலான மக்கள் இவ்வழியில் தம் கண் பார்வையைக் கூடச் செலுத்துவது இல்லை. ஆயிரக்கணக்கான மனிதர்களுள் பகவானிடத்திலும், சாஸ்த்ரங்களிலும், மஹாபுருஷர்களிடத்திலும் ச்ரத்தையும், பக்தியும் உள்ளவர்கள் முந்தைய புண்யக் குவியலாலும், பகவானுடைய அருளினாலும் ஸத்புருஷர்களின் இணக்கத்தைப் பெறுபவர்கள் போன்ற வெகுசிலரே, இந்த வழியில் ஈடுபாடு கொண்டு முயற்சி செய்கிறார்கள்.

**கேள்வி:** 'பகவானை அடைவதற்காக முயற்சி செய்கின்ற யோகிகளிலும் கூட யாரோ ஒருவன் என்னைத் தத்வரீதியாக அறிகிறான்.' இதற்குக் காரணம் என்ன? எல்லோரும் ஏன் அறிவதில்லை?

**பதில்:** முன்வினை ஸம்ஸ்காரங்கள், ச்ரத்தை, பேரன்பு, ஸத்ஸங்கம், செயற்பாடு இவற்றின் ஏற்றத்தாழ்வினால் எல்லோருடைய ஸாதனைகளும் ஒரே மாதிரியாக அமையும் என்று சொல்ல முடியாது. அஹங்காரம், மமகாரம், ஆசை, பற்று, சேர்க்கை தோஷம் இவற்றினால் பலவித இடையூறுகள் நேரும். ஆகவே மிகச் சிலரே ச்ரத்தையுடனும், பக்தியுடனும் ஸாதனைகளை முழுமையாகச் செய்வார்கள். அதன் பயனாக இதே பிறவியில் பகவானுடைய நேரிடையான அனுபவம் அவர்களுக்குக் கிடைக்கிறது.

**கேள்வி:** 'முயல்கின்றவர்கள்' என்பதோடுகூட 'ஸித்த' என்ற அடைமொழி எந்தக் கருத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது?

**பதில்:** புலன்நுகர்ச்சியில் ஆர்வம் கொண்டு அப்புலன்நுகர்ச்சிப் பொருட்களில் ஆழ்ந்துள்ள மனிதர்களைக் காட்டிலும், பரமாத்மாவை அடைவதாகிற மிக உயர்ந்ததான ஸித்திக்காக முயற்சி செய்கிறவன், ஸித்தபுருஷனே ஆவான் என்பதே இதன் கருத்து என்று கொள்ள வேண்டும்.

**பொருத்தம்:** இதுவரையில், பகவான் தம்முடைய ஸமக்ர ஸ்வரூபத்தின் ஞான விஞ்ஞானத்தைப் பற்றிச் சொல்வதாகக் கூறி, அதன் சிறப்பையும் புகழ்ந்து பேசினார். இனி, ஞானவிஞ்ஞானம் பற்றிய விளக்கத்தைத் தொடங்குவதற்கு முன், முதலாவதாகத் தம்முடைய அபரா, பரா ப்ரக்ருதியின் இலக்கணத்தைக் கூறுகிறார்—

**भूमिरापोऽनलो वायुः खं मनो बुद्धिरेव च।**
**अहङ्कार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा॥४॥**

**अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम्।**
**जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत्॥५॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பூ$_4$மிராபோऽநலோ வாயு: க$_2$ம் மநோ பு$_3$த்$_3$தி$_4$ரேவ ச ।**
**அஹங்கார இதீயம் மே பி$_4$ந்நா ப்ரக்ருதிரஷ்டதா$_4$ ॥ 4 ॥**
**அபரேயமிதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்$_3$தி$_4$ மே பராம் ।**
**ஜீவபூ$_4$தாம் மஹாபா$_3$ஹோ யயேத$_3$ம் தா$_4$ர்யதே ஜக$_3$த் ॥ 5 ॥**

**பூ$_4$மி:** – நிலம், **ஆப:** – நீர், **அநல:** – நெருப்பு, **வாயு:** – காற்று, **க$_2$ம்** – ஆகாசம், **மந:** – மனம், **பு$_3$த்$_3$தி$_4$:** – புத்தி, **அஹங்கார: ச ஏவ** – அஹங்காரமும் (ஆகிய), **மே** – எனது, **இயம்** – இந்த, **ப்ரக்ருதி:** – ப்ரக்ருதி, **இதி** – இவ்வாறு, **அஷ்டதா$_4$** – எட்டு வகையாக, **பி$_4$ந்நா** – பிரிக்கப்பட்டுள்ளது. **இயம் து** – (எட்டு வகையாகப் பிரிக்கப் பட்டுள்ள) இதுவோவெனில், **அபரா** – 'அபரா' அதாவது என் ஜடப்ரக்ருதி. **மஹாபா$_3$ஹோ** – நீண்ட புஜமுடையவனே! **இத: அந்யாம்** – இதிலிருந்து வேறான, **யயா** – எந்த ப்ரக்ருதியினால், **இத$_3$ம்** – இந்த, **ஜக$_3$த்** – உலகம் (முழுவதும்), **தா$_4$ர்யதே** – தாங்கப்படுகிறதோ (அது), **மே** – எனது, **ஜீவபூ$_4$தாம்** – ஜீவரூபமான, **பராம் ப்ரக்ருதிம்** – 'பரா' அதாவது சேதன ப்ரக்ருதி (என்று), **வித்$_3$தி$_4$** – தெரிந்துகொள்.

நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாசம், மனம், புத்தி, அஹங்காரம் ஆகிய எனது இந்த ப்ரக்ருதி எட்டு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. எட்டு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ள இதுவோவெனில் 'அபரா' அதாவது என் ஜடப்ரக்ருதி. நீண்ட புஜமுடையவனே! இதிலிருந்து வேறான எந்த ப்ரக்ருதியினால் இந்த உலகம் முழுவதும் தாங்கப்படுகிறதோ அது எனது ஜீவரூபமான 'பரா' அதாவது சேதன ப்ரக்ருதி என்று தெரிந்துகொள்.

**கேள்வி:** இவ்விடத்தில் 'நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாசம்' என்பதிலிருந்து என்ன அறிந்து கொள்ள வேண்டும்?

**பதில்:** ஐம்பெரும் (ஸ்தூல) பூதங்களுக்கும், ஓசை[§] முதலிய ஐந்து விஷயங்களுக்கும் காரணமான, நுட்பமான ஐம்பெரும் பூதங்களை, ஸாங்க்யம் மற்றும் யோக நூல்கள் 'பஞ்ச தன்மாத்திரைகள்' என்று கூறுகின்றன. இவை ஐந்தையும்தான் இவ்விடத்தில் 'நிலம்' முதலிய பெயர்களால் விளக்குகிறார்.

**கேள்வி:** இங்கு, 'மனம், புத்தி, அஹங்காரம்' என்பனவற்றை எவ்வாறு புரிந்து கொள்ள வேண்டும்?

**பதில்:** மனம், புத்தி, அஹங்காரம் இம்மூன்றும் அந்தக்கரணத்தின் உட்பிரிவுகளே ஆகும். அதனால், இம்மூன்றின் ஒருங்கிணைந்த தொகுப்புத்தான் 'ஸமஷ்டி அந்தக்கரணம்' என்று உணரவேண்டும்.

**கேள்வி:** 13/5ல் வெளிப்படாத ப்ரக்ருதியின் விளைவுகள் என்று இருபத்து மூன்றைக் குறிப்பிடுகிறார். அதன்படி ப்ரக்ருதியை இருபத்து மூன்றாக அல்லவா பிரித்திருக்க வேண்டும்? இங்கு எட்டாகப் பிரித்திருக்கிறாரே, ஏன்?

**பதில்:** ஒலி முதலிய ஐந்து விஷயங்கள், நுட்பமான ஐம்பெரும் பூதங்களின் விளைவுகள், பத்துப் புலன்கள் இவை அந்தக்கரணத்தின் கார்யம். அதனால், அந்தப் பதினைந்து வேறுபாடுகளும், இந்த எட்டு வகைகளிலேயே அடங்கிவிடுகின்றன. அவ்விதமாக அதை இருபத்து மூன்று வகைகளாகவும், இவ்விதமாக எட்டு வகைகளாகவும் வகுத்துக் கூறினாலும் விஷயம் ஒன்றேதான்.

**கேள்வி:** இந்த ப்ரக்ருதியின் பெயர் 'அபரா' என்று ஏன் வைக்கப்பட்டுள்ளது?

---

§ சுவை, ஒளி, ஊறு, ஓசை, மணம் என்ற புலன்களால் நுகரப்படும் விஷயங்கள்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** பதின்மூன்றாவது அத்யாயத்தில் எந்த அவ்யக்த மூல ப்ரக்ருதிக்கு இருபத்து மூன்று விளைவுகள் (கார்யங்கள்) என்று பகவான் சொன்னாரோ, அதனையே இங்கு எட்டு வகையாகப் பிரித்துக் கூறுகிறார். இந்த 'அபரா ப்ரக்ருதி' அறியப்படும் பொருளாகவும், ஜடமாகவும் இருப்பதால், சேதன ஜீவரூபமானதும், அறிகின்றதுமான 'பரா ப்ரக்ருதி'யிலிருந்து முற்றிலும் வேறானது; தாழ்ந்தது. இதுவே உலகத்திற்குக் காரணமாகிறது; இதன் மூலமாகவே ஜீவனுக்குத் தளை ஏற்படுகிறது. அதனால், இதற்குப் பெயர் 'அபரா' ஆகும்.

**கேள்வி:** உயிர் வடிவான சேதன தத்வமோ ஆண்பால். இங்கு அது பரா ப்ரக்ருதி என்று பெண்பாலாக ஏன் கூறப்பட்டிருக்கிறது?

**பதில்:** உண்மையில், ஜீவாத்மாவிடம் ஆண், பெண், அலி என்ற வேற்றுமை ஏதும் இல்லை. இதனைச் சுட்டிக்காட்டுவதற்காகத்தான், அந்த ஒன்றேயான சேதன தத்வத்தைச் சில இடங்களில், 'புருஷன்' *(15/16)*, 'க்ஷேத்ரக்ஞன்' *(13/1)* என்ற ஆண்பால் சொற்களாலும், வேறு இடங்களில், 'அத்யாத்ம' *(7/29, 8/3)* என்ற அஃறிணைச் சொல்லாலும் கூறியிருக்கிறார். அதையே இங்கு 'பரா ப்ரக்ருதி' என்று பெண்பாலில் கூறுகிறார்.

**கேள்வி:** இங்கே, 'ஜகத்' என்ற சொல் எதைக் குறிக்கிறது? மேலும், அது ஜீவரூபமான பரா ப்ரக்ருதியினால் அதாவது சேதன ப்ரக்ருதியினால் தாங்கப்படுகிறது – என்று ஏன் கூறுகிறார்?

**பதில்:** உயிருள்ள எல்லாவற்றினுடைய உடல், புலன்கள், ப்ராணன், புலன்நுகர் பொருட்கள் மற்றும் போகத்துக்கும் இடமாக உள்ள, வெளிப்படையாகத் தெரிகிற, இந்த முழுப்ரக்ருதிக்கும் 'ஜகத்' என்று பெயர். இவ்விதமே, உலக (ஜகத்) வடிவமான ஜடதத்வம், சேதன தத்வத்தினால் வ்யாபிக்கப்பட்டு அதனாலேயே தாங்கப்படுகிறது. ஏனெனில் அது (பரா), இதைக் காட்டிலும் எல்லாவிதத்திலும் உயர்வானது; நுட்பமானது. ஜடதத்வம் சேதனத்துடன் சேராவிடில் இவ்வுலகத்தின் உற்பத்தி, முன்னேற்றம் மற்றும் நிலைகொண்டிருத்தல் என்பன நிகழா. அதனாலேயே இவ்விதம் கூறுகிறார்.

**பொருத்தம்:** பரா மற்றும் அபரா ப்ரக்ருதிகளின் ஸ்வரூபத்தைக் கூறிய பகவான், **'இவ்விரண்டு ப்ரக்ருதிகளும்தான், படைக்கப்பட்டுள்ள அனைத்துச் சராசரங்களுக்கும் காரணம்; இவ்விரண்டு ப்ரக்ருதிகளோடு கூடிய எல்லா உலகத்துக்கும் நானே மஹாகாரணம்'** என்கிறார்—

**एतद्योनीनि भूतानि सर्वाणीत्युपधारय।**
**अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयस्तथा ॥ ६ ॥**

**ஏதத்₃யோநீநி பூ₄தாநி ஸர்வாணீத்யுபத₄ாரய ।**
**அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜக₃த: ப்ரப₄வ: ப்ரலயஸ்தத₂ா ॥ 6 ॥**

**ஸர்வாணி** – எல்லா, **பூ₄தாநி** – உயிரினங்களும், **ஏதத்₃யோநீநி** – இந்த இரண்டு ப்ரக்ருதிகளிலிருந்தும் உண்டானவை (என்றும்), **அஹம்** – நானே, **க்ருத்ஸ்நஸ்ய** – ஸம்பூர்ணமான எல்லா, **ஜக₃த:** – உலகிற்கும், **ப்ரப₄வ:** – உற்பத்தியாகும் இடம், **தத₂ா** – அவ்வாறே, **ப்ரலய:** – ஒடுங்குகின்ற இடம், **இதி** – என்றும், **உபத₄ாரய** – தெரிந்துகொள், அதாவது அகில உலகிற்கும் நானே மூலகாரணம் என்கிறார் பகவான்.

எல்லா உயிரினங்களும் இந்த இரண்டு ப்ரக்ருதிகளிலிருந்தும் உண்டானவை என்றும் நானே ஸம்பூர்ணமான எல்லா உலகிற்கும் உற்பத்தியாகும் இடம், அவ்வாறே ஒடுங்குகின்ற இடம் என்றும் தெரிந்துகொள். அதாவது அகில உலகிற்கும் நானே மூலகாரணம் என்கிறார் பகவான்.


CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** இங்கு, 'ஸர்வாணி' என்ற அடைமொழியோடு கூடிய 'பூதாநி' என்ற சொல் எதைக் குறிக்கிறது? எப்படி அபரா, பரா ஆகிய இரண்டு ப்ரக்ருதிகளும் அவற்றின் பிறப்பிடமாகும்?

**பதில்:** ஸ்தாவரம் மற்றும் ஜங்கமம், அதாவது அசையாதன, அசைவன என்று உயிருள்ள ப்ராணிகள் சிறிதும்-பெரிதுமாக எவ்வளவு உள்ளனவோ, அவை எல்லாவற்றையும் 'பூதாநி' என்ற சொல் குறிப்பிடுகிறது. உயிருடைய எல்லா ப்ராணிகளின் உற்பத்தி, இருப்பு மற்றும் பெருக்கம் இவையெல்லாம் இந்த அபரா (ஜடம்), பரா (சேதனம்) ப்ரக்ருதிகளின் சேர்க்கையினாலேயே ஏற்படுகின்றன. ஆகவே இவற்றின் உற்பத்திக்கு இவையிரண்டுமே காரணம். இதே விஷயம், 13/26ல் 'க்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞ' என்ற பெயரில் கூறப்பட்டிருக்கிறது.

**கேள்வி:** 'ஸம்பூர்ண ஜகத்' எதைக் குறிக்கிறது? 'அதனுடைய தோன்றுமிடமும், ஒடுங்குமிடமும் நானே' என்று பகவான் சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** ஜட-சேதனம் மற்றும் சராசரமாகவுள்ள எல்லா அண்டத்தையும் குறிப்பிடுவது 'ஜகத்' என்ற சொல். இதன் தோற்றம், இருப்பு, லயம் ஆகியவை பகவானாலேயே, பகவானிடமே ஏற்படுகின்றன. மேகங்கள் வானிலேயே பிறக்கின்றன; வானிலேயே இருக்கின்றன; ஆகாயத்திலேயே மறைகின்றன. ஆகாயம்தான் அவற்றின் தோற்றத்திற்குத் தனியொரு காரணமாகவும், ஆதாரமாகவும் இருக்கிறது. அது போலவே, இந்த உலகமனைத்தும் பகவானிடமிருந்தே உற்பத்தியாகின்றன; பகவானிடமே நிலைகொண்டுள்ளன; பகவானிடமே மறைந்து போகின்றன. பகவான்தான் இதற்கு ஒரே பெரும் காரணம்; பெரும் ஆதாரம். இந்த விஷயத்தை 9/4-6களில் தெளிவாக்குகிறார். இங்கு ஒரு விஷயத்தை நினைவில் கொள்ள வேண்டும். பகவான் வானத்தைப் போல ஜடப்பொருளோ, மாறுதலுடைய பொருளோ அல்லர். விளங்க வைப்பதற்காக மட்டுமே இவ்வுதாரணம் எடுத்துக் காட்டப்படுகிறது. உண்மையில், இவ்வுலக வடிவமாகத் தோற்றம் கொள்ளுதல் என்பது அவருக்கு லீலையே.

**பொருத்தம்:** இவ்விதம் பகவானே எல்லா உலகிற்கும் முக்யமான அடிப்படைக் காரணம்; முக்யமான ஆதாரம்; அவருடைய ஸ்வரூபமே இவையெல்லாம்; அவரே எங்கும் நிறைந்திருக்கிறார் என்பதை இனி விளக்குகிறார்—

**मत्तः परतरं नान्यत्किञ्चिदस्ति धनञ्जय।**
**मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव॥७॥**

**மத்த: பரதரம் நாந்யத்கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய ।**
**மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ ॥ 7 ॥**

**தநஞ்ஜய** – அர்ஜுன! **மத்த:** – என்னைக் காட்டிலும், **அந்யத் கிஞ்சித்** – வேறு ஒன்றும், **பரதரம்** – உயர்ந்த காரணம், **ந அஸ்தி** – இல்லை. **இதம் ஸர்வம்** – இவ்வுலகனைத்தும், **ஸூத்ரே** – நூலில், **மணிகணா: இவ** – நூலினாலான மணிகளைப் போல, **மயி** – என்னிடம், **ப்ரோதம்** – கோக்கப்பட்டுள்ளன.

அர்ஜுன! என்னைக் காட்டிலும் வேறு ஒன்றும் உயர்ந்த காரணம் இல்லை. இவ் வுலகனைத்தும் நூலில் நூலினாலான மணிகளைப்போல என்னிடம் கோக்கப்பட்டுள்ளன.

**கேள்வி:** 'என்னைக் காட்டிலும் உயர்ந்த காரணம் வேறு ஒன்றும் இல்லை' – இக்கூற்றின் கருத்து என்ன?

**பதில்:** பரந்த வானம் மேகத்திற்குக் காரணமாகவும், ஆதாரமாகவும் இருக்கிறது. அந்தக் காரணத்தின் விளைவு மேகம், அதே பரந்த வானின் ஸ்வரூபம்தான். உண்மையில், அது தன்னுடைய 'காரணத்திலிருந்து' வேறான பொருள் அன்று. அதுபோலவே, இவ்வுலகத்துக்குக்



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



காரணமாகவும் ஆதாரமாகவும் பரமாத்மா உள்ளதால், இந்த உலகம் அவருடைய ஸ்வரூபமே; அவரிலும் வேறான மற்றொரு பொருள் அன்று. ஆகவே, பரா மற்றும் அபரா ப்ரக்ருதி இரண்டும் எல்லாப் படைப்புக்கும் காரணமாக இருந்தபோதிலும், எல்லாவற்றிற்கும் மூலகாரணம் பரமாத்மாதான்; வேறு எதுவும் இல்லை என்ற கருத்து இங்கே கூறப்படுகிறது.

**கேள்வி:** நூலில் நூலினால் ஆன மணிகளைப்போல இவ்வுலகம் பகவானிடம் எவ்வாறு கோக்கப்பட்டுள்ளது?

**பதில்:** நூல் கயிற்றில் அதே நூலால் முடிச்சுகள் போட்டு அவற்றையே மணிகளாகக் கொண்டு மாலை செய்கிறார்கள். அந்த நூலிலும், நூலினால் ஆன மணிகளிலும் எங்கும் நூல் மட்டுமே நிறைந்துள்ளது. அதேபோல இவ்வுலகனைத்தும் பகவானிடம் கோக்கப்பட்டுள்ளது. பகவான்தான் எல்லாவற்றிலும் நிறைந்துள்ளார் என்பது கருத்து.

**பொருத்தம்:** நூலையும், நூலினால் ஆன மணிகளையும் உதாரணமாகக் காட்டி பகவான், தாம் அனைத்துமாய் விளங்குவதையும், தம்முடைய எங்கும் பரவியிருக்கும் தன்மையையும் நிரூபித்தார். இனி, பின் வருகின்ற நான்கு ச்லோகங்கள் மூலமாக இந்த விஷயத்தையே மிக நல்ல முறையில் தெளிவுபடுத்துவதற்காக, இவ்வுலகின் நிலையான இருப்புக்குக் காரணமான எல்லா வஸ்துக்களின் பெயர்களையும் கூறுகிறார்; முடிவாக, அவையெல்லாமே தம்மிடத்திலேயே ஸாரமாக இழைந்துள்ளன என்கிறார்—

**रसोऽहमप्सु कौन्तेय प्रभास्मि शशिसूर्ययोः।**
**प्रणवः सर्ववेदेषु शब्दः खे पौरुषं नृषु॥८॥**

**ரஸோऽஹமப்ஸு கௌந்தேய ப்ரப₄ாஸ்மி ஶஶிஸூர்யயோ: ।**
**ப்ரணவ: ஸர்வவேதே₃ஷு ஶப்₃த₃: கே₂ பௌருஷம் ந்ருஷு ॥8॥**

**கௌந்தேய** — அர்ஜுன! **அஹம்** — நான், **அப்ஸு** — நீரில், **ரஸ:** — சுவையாகவும், **ஶஶி ஸூர்யயோ:** — சந்த்ரன், சூரியன் இவர்களில், **ப்ரப₄ா** — ஒளியாகவும், **ஸர்வ வேதே₃ஷு** — எல்லா வேதங்களிலும், **ப்ரணவ:** — ஓம்காரமாகவும், **கே₂** — ஆகாசத்தில், **ஶப்₃த₃:** — ஒலியாகவும், **ந்ருஷு** — ஆண்களிடத்தில், **பௌருஷம்** — ஆண்மையாகவும், **அஸ்மி** — இருக்கிறேன்.

அர்ஜுன! நான் நீரில் சுவையாகவும், சந்த்ரன், சூரியன் இவர்களில் ஒளியாகவும், எல்லா வேதங்களிலும் ஓம்காரமாகவும், ஆகாசத்தில் ஒலியாகவும், ஆண்களிடத்தில் ஆண்மை யாகவும் இருக்கிறேன்.

**கேள்வி:** இந்த ச்லோகத்தைத் தெளிவுபடுத்திக் கூறுங்கள்.

**பதில்:** எந்தத் தத்வம் எதற்கு ஆதாரமாக இருக்கிறதோ, எதில் அது நிறைந்துள்ளதோ, அதுவே அதனுடைய இருப்பும், வடிவும் ஆகும். அதனையே அதனுடைய ஸாரம் என்கிறார்கள். இதையொட்டியே பகவான் கூறுகிறார்— அர்ஜுன! நீரின் ஸாரமான சுவைத் தத்வமாக நான் இருக்கிறேன்; சந்த்ர-சூரியர்களின் ஸாரமான ஒளித் தத்வம் நான்தான்; எல்லா வேதங்களின் ஸாரமான ப்ரணவ தத்வமான ஓம்காரம் நானே; ஆகாயத்தின் ஸாரமான சப்த (ஓசை) தத்வம் நானே; ஆண்களின் ஸாரமான ஆண்மையும் நானே.

**पुण्यो गन्धः पृथिव्यां च तेजश्चास्मि विभावसौ।**
**जीवनं सर्वभूतेषु तपश्चास्मि तपस्विषु॥९॥**

**புண்யோ க₃ந்த₄: ப்ருதி₂வ்யாம் ச தேஜஶ்சாஸ்மி விப₄ாவஸௌ ।**
**ஜீவநம் ஸர்வபூ₄தேஷு தபஶ்சாஸ்மி தபஸ்விஷு ॥9॥**


CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ப்ருதி₂வ்யாம்** – மண்ணில், **புண்ய:** – புனிதமான‡, **க₃ந்த₄: ச** – நறுமணமாகவும், **விப₄ாவஸௌ** – நெருப்பில், **தேஜ:** – ஒளியாகவும், **அஸ்மி** – இருக்கிறேன். **ச** – அவ்வாறே, **ஸர்வபூ₄தேஷு** – எல்லா உயிரினங்களிலும், **ஜீவநம்** – உயிராகவும், **தபஸ்விஷு** – தவம் செய்வோர்களிடத்தில், **தப: ச** – தவமாகவும், **அஸ்மி** – இருக்கிறேன்.

மண்ணில் புனிதமான நறுமணமாகவும் நெருப்பில் ஒளியாகவும் இருக்கிறேன். அவ்வாறே எல்லா உயிரினங்களிலும் உயிராகவும் தவம் செய்வோர்களிடத்தில் தவமாகவும் இருக்கிறேன்.

**கேள்வி:** *இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?*

**பதில்:** முந்தைய ச்லோகத்தைத் தொடர்ந்து இங்கேயும், ஒவ்வொரு பொருளிலும் ஸாரரூபமாகத் தாமே நிறைந்துள்ள தன்மையையும், ஆதாரத் தன்மையையும் எடுத்துக்காட்டுகிறார். 'மண்ணின் ஸாரமான மணமும், நெருப்பினுடைய ஸாரமான தேஜஸ் (ஒளி) தத்வமும், படைக்கப்பட்டுள்ள அனைத்து உயிரினங்களுக்கும் ஸாரமான ஜீவன தத்வமும், தவமியற்றுவோரின் ஸாரமான தவத் தத்வமும் நானேதான்' என்கிறார்.

**கேள்வி:** *இங்கு 'கந்த:' என்பதற்கு 'புண்ய:' என்று அடைமொழி கொடுப்பதன் காரணமென்ன?*

**பதில்:** இந்த இடத்தில் 'கந்த:' என்ற சொல், புலன் நுகர் பொருளான மணத்தைக் குறிக்கவில்லை; மண்ணின் காரண வடிவான 'கந்த' தன்மாத்திரையையே குறிக்கிறது என்பதைக் காட்டுவதற்காகவே இப்படி 'புண்ய:' என்ற அடைமொழியைச் சேர்க்கிறார். இவ்விதமே சுவை, ஒலி இவற்றிலும் அறிந்து கொள்ள வேண்டும்.

**கேள்வி:** *'ஸர்வபூத' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? 'ஜீவநம்' என்ற சொல்லின் கருத்து என்ன?*

**பதில்:** 'ஸர்வபூத' என்ற சொல், உயிருள்ள அனைத்துச் சராசர ப்ராணிகளையும் குறிக்கும். உயிருள்ள எல்லா ப்ராணிகளும் எதனால் உயிர்ப்புடன் விளங்குகின்றனவோ, எதனுடைய சக்தியினால் அவை உயிரற்ற பொருட்களிலிருந்து வேறுபட்டுள்ளனவோ, அந்த ப்ராணசக்தியின் பெயர்தான் ஜீவன தத்வம்.

**बीजं मां सर्वभूतानां विद्धि पार्थ सनातनम्।**
**बुद्धिर्बुद्धिमतामस्मि तेजस्तेजस्विनामहम्॥ १०॥**

**பீ₃ஜம் மாம் ஸர்வபூ₄தாநாம் வித்₃தி₄ பார்த₂ ஸநாதநம் ।**
**பு₃த்₃தி₄ர்பு₃த்₃தி₄மதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்விநாமஹம் ॥ 10 ॥**

**பார்த₂** – அர்ஜுன! **ஸர்வபூ₄தாநாம்** – சராசரங்கள் அனைத்திற்கும், **ஸநாதநம்** – நிலையான, **பீ₃ஜம்** – விதை என்று, **மாம்** – என்னை, **வித்₃தி₄** – அறிந்து கொள். **அஹம்** – நான், **பு₃த்₃தி₄மதாம்** – அறிவாளிகளுடைய, **பு₃த்₃தி₄:** – அறிவாகவும், **தேஜஸ்விநாம்** – தேஜஸ் படைத்தவர்களுடைய, **தேஜ:** – தேஜஸாகவும், **அஸ்மி** – இருக்கிறேன்.

அர்ஜுன! சராசரங்கள் அனைத்திற்கும் நிலையான விதை என்று என்னை அறிந்து கொள். நான் அறிவாளிகளுடைய அறிவாகவும், தேஜஸ் படைத்தவர்களுடைய தேஜஸாகவும் இருக்கிறேன்.

---

‡ இங்கு சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தும் அதன் காரணமான ஐந்து தன் மாத்ரைகளைக் குறிக்கிறது. இதை விளக்கவே 'புண்ய:' என்ற அடைமொழியைச் சேர்க்கிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** இங்கு, 'ஸநாதந பீ3ஜம்' என்று எதைக் கூறுகிறார்? அதனைத் தமது ஸ்வரூபம் என்று எக்காரணம் பற்றி பகவான் கூறினார்?

**பதில்:** எது எப்போதும் இருக்கிறதோ, ஒருபோதும் இல்லாமற்போகாதோ, அதை 'ஸநாதநம்' என்கிறார்கள். பகவான்தான் படைக்கப்பட்டுள்ள, சராசரமான, எல்லா ப்ராணிகளுக்கும் பெரும் ஆதாரம்; அவரிடமிருந்தே எல்லாம் உண்டாகின்றன. அதனால் அவர்தாம் எல்லாவற்றிற்கும் 'ஸநாதந பீ3ஜம்' (என்றுமுள்ள வித்து) என்று கூறுகிறார். 9/18ல், இதனையே 'அவிநாஶீ பீ3ஜம்' என்றும், 10/39ல் 'எல்லாப் படைப்புக்கும் வித்து' என்றும் கூறுகிறார்.

**கேள்வி:** 'அறிவாளிகளின் அறிவு, தேஜஸ்விகளின் தேஜஸ் இவை நான்தான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எல்லாப் பொருட்களின் தன்மையைத் தீர்மானிப்பதும், மனதையும், புலன்களையும் அடக்கியாண்டு அவற்றை நடத்திச் செல்வதுமான அந்தக்கரணத்தின் தூய அறிவு என்கிற சக்தியைத்தான் புத்தி என்கிறார். இந்த புத்தி அதிகமிருந்தால் அவனை புத்திமான் என்பார்கள். அப்படிப்பட்ட புத்தி பகவானுடைய அபரா ப்ரக்ருதியின் ஓர் அம்சம். அதனால்தான் 'புத்திமான்களின் ஸாரமான புத்தி தத்வம் நான்தான்' என்கிறார். எல்லா மக்களின் மீதும் அதிகாரம் செலுத்தி அடக்கியாளும் தனித்திறமையை இங்கு தேஜஸ் என்கிறார். அப்படிப்பட்ட திறமையுள்ளவன் 'தேஜஸ்வீ'. அவனுடைய தேஜஸும் பகவானுடைய அபரா ப்ரக்ருதியின் ஓர் அம்சம்தான். ஆகவே 'இவையிரண்டும் என் வடிவங்கள்' என்கிறார்.

**बलं बलवतां चाहं कामरागविवर्जितम्।**
**धर्माविरुद्धो भूतेषु कामोऽस्मि भरतर्षभ॥ ११॥**

**ப3லம் ப3லவதாம் சாஹம் காமராக3விவர்ஜிதம் ।**

**த4ர்மாவிருத்3தோ4 பூ4தேஷு காமோऽஸ்மி ப4ரதர்ஷப4 ॥ 11 ॥**

**ப4ரதர்ஷப4** – பரதகுலச்செம்மலே! **அஹம்** – நான், **ப3லவதாம்** – வலிமை மிக்கவர்களுடைய, **காம ராக3 விவர்ஜிதம்** – ஆசையும், பற்றும் நீங்கப்பெற்ற, **ப3லம்** – வலிமையாக (திறமையாக) இருக்கிறேன். **ச** – மேலும், **பூ4தேஷு** – உயிரினங்களில், **த4ர்ம அவிருத்3த4:** – அறத்திற்கு மாறுபடாத (சாஸ்த்ர ஸம்மதமான), **காம:** – காமமாக, **அஸ்மி** – இருக்கிறேன்.

பரதகுலச்செம்மலே! நான் வலிமை மிக்கவர்களுடைய ஆசையும், பற்றும் நீங்கப்பெற்ற வலிமையாக இருக்கிறேன். மேலும் உயிரினங்களில் அறத்திற்கு மாறுபடாத – சாஸ்த்ர ஸம்மதமான காமமாக இருக்கிறேன்.

**கேள்வி:** இந்த ச்லோகத்தைத் தெளிவுபடுத்திக் கூறுங்கள்.

**பதில்:** காமம், ராகம் (பற்று), அஹங்காரம், கோபம் முதலியவற்றோடு கூடிய பலம் அஸுரபலம் ஆகும். இந்த பலத்தையே 16/18ல் அஸுர ஸம்பத் என்று கூறி, இதனைத் துறக்க வேண்டும் (18/53) என்றும் சொல்கிறார். இவ்விதமே, தர்மத்துக்கு முரணான காமமும் அஸுரத்தனத்தின் முக்ய குணமாக இருப்பதனால் எல்லாவிதத் துன்பங்களுக்கும் அதுவே ஆணிவேர் (3/37); நரகத்தின் நுழைவாயில்; ஆகவே விலக்கத்தக்கது (16/21). காமமும், ராகமும் கூடிய பலத்திலிருந்தும், தர்மத்துக்கு முரணான காமத்திலிருந்தும் முற்றும் வேறான மிகத் தூய பலமும், மிகத் தூய காமமும் ஏற்றுக் கொள்ளத்தக்கவை. பகவான், 'பரதர்ஷப' என்று அழைத்து, 'நீ பரதகுலத் தோன்றல்களில் சிறந்தவன். உன்னிடத்தில் இந்த அஸுரபலமும் இல்லை; அதர்மத்தின் வேராகவும், இகழத்தக்கதுமான எத்தகைய காமமும் இல்லை. உன்னிடம் காமமும், பற்றும் அற்ற தூயதான பலம் இருக்கிறது. தர்மத்துக்கு உடன்பாடான,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மிகத் தூயதான காமம் இருக்கிறது' என்பதை சூசகமாக உணர்த்துகிறார். பலவான்களிடம் உள்ள இப்படிப்பட்ட தூயதான 'பல தத்வமும், உயிருள்ள ப்ராணிகளிடம் உள்ள தூய காம தத்வமும் நானே' என்கிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் மிக மிக முக்யமான பொருட்களின் ஸாரமாக நான் உள்ளேன் என்றும், தாம் எங்கும் நிறைந்திருப்பதாகவும், தாமே எல்லா வடிவங்களாக இருப்பதாகவும் கூறிவிட்டு, இனி முக்குணமயமான உலகத்துக்குத் தாமே மூல காரணம் என்று கூறி, இவ்விஷயத்தை நிறைவு செய்கிறார்—

**ये चैव सात्त्विका भावा राजसास्तामसाश्च ये।**
**मत्त एवेति तान्विद्धि न त्वहं तेषु ते मयि॥१२॥**

**யே சைவ ஸாத்த்விகா ப₄ாவா ராஜஸாஸ்தாமஸாஶ்ச யே ।**
**மத்த ஏவேதி தாந்வித்₃தி₄ ந த்வஹம் தேஷு தே மயி ॥ 12 ॥**

**ச ஏவ** – மேலும்கூட, **யே ப₄ாவா:** – எந்த உணர்வுகள், **ஸாத்த்விகா:** – ஸத்வ குணத்திலிருந்து தோன்றியவையோ, **யே** – எவை, **ராஜஸா:** – ரஜோ குணத்திலிருந்து தோன்றியவையோ, **ச** – அவ்வாறே, **தாமஸா:** – எவை தமோ குணத்திலிருந்து தோன்றியவையோ, **தாந்** – அவற்றை, **மத்த: ஏவ** – என்னிடமிருந்தே தோன்றியவை, **இதி** – என்று, **வித்₃தி₄** – அறிந்து கொள். **து** – ஆனால் (உண்மையில்), **தேஷு** – அவற்றில், **அஹம்** – நானும், **தே** – அவை, **மயி** – என்னிடமும், **ந** – இல்லை.

மேலும் எந்த உணர்வுகள் ஸத்வ குணத்திலிருந்து தோன்றியவையோ, எவை ரஜோ குணத்திலிருந்து தோன்றியவையோ, அவ்வாறே எவை தமோ குணத்திலிருந்து தோன்றியவையோ அவையனைத்தும் என்னிடமிருந்தே தோன்றியவை என்று அறிந்து கொள். ஆனால் உண்மையில் அவற்றில் நானும் அவை என்னிடமும் இல்லை.

**கேள்வி:** ஸாத்விக, ராஜஸ, தாமஸ உணர்வுகள் எதைக் குறிக்கின்றன? அவை 'பகவானிடமிருந்தே தோன்றின' என்பதற்கு என்ன பொருள்?

**பதில்:** மனம், புத்தி, அஹங்காரம், புலன்கள், புலன்களால் நுகரப்படுபவை, தன்மாத்திரைகள், மஹாபூதங்கள், நல்ல–தீய குணங்கள், செயல்கள் என்றெல்லாம் எத்தனை உணர்வுகள் உண்டோ, அவையெல்லாம் ஸாத்விகமாகவோ, ராஜஸமாகவோ, தாமஸமாகவோதான் இருக்கும். இவையெல்லாமே பகவானுடைய அபரா ப்ரக்ருதியின் வெளிப்பாடுகள். அந்த ப்ரக்ருதியும் பகவானுடையதே; வேறானதன்று. பகவானுடைய லீலையினாலேயே எல்லாம் உண்டாகிப் பெருகி மறைகின்றன. இவ்விதம் அறிவதே 'பகவானிடமிருந்து தோன்றின' என்று அறிவதாகும்.

**கேள்வி:** மேலே கூறப்பட்ட முக்குணமயமான உணர்வுகள் பகவானிடமிருந்தே தோன்றுகின்றன என்றால், 'அவை என்னிடமோ, நான் அவற்றிலோ இல்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** வானில் உண்டாகும் மேகத்துக்குக் காரணமும், ஆதாரமும் வானம்தான். ஆனால், வானம் அந்த மேகத்தில் சிறிதளவு கூட ஒட்டிக் கொண்டிருக்கவில்லை. மேகங்கள் வானில் எப்போதும் இருப்பதில்லை என்பதாலும், அநித்யமானவையாதலாலும், உண்மையில் அவற்றுக்கு நிலையான இருப்பு இல்லை. ஆனால், மேகங்கள் இல்லாவிட்டாலும் வானம் எப்போதும் இருக்கிறது. மேகம் இல்லாத இடத்திலும் வானம் இருக்கவே செய்கிறது; அது மேகத்தைச் சார்ந்திருக்கவில்லை. உண்மையில், மேகமும் வானிலிருந்து வேறானதன்று; அதிலேயே, அதிலிருந்தே தோன்றுகிறது. ஆகவே உண்மையில் மேகங்களுக்கு எனத் தனியான இருப்பு இல்லாததால், எந்த ஒரு ஸமயத்திலும் வானமானது மேகங்களில் இல்லை. ஆனால்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அது எப்போதும் தன்னில் தானே நிலைகொண்டுள்ளது. இவ்விதமே, முக்குணமயமான எல்லா உணர்வுகளுக்கும் பகவான் காரணமாகவும், ஆதாரமாகவும் இருக்கிறார் என்றாலும், உண்மையில், அந்த குணங்கள் பகவானிடம் இல்லை; பகவானும் அவற்றில் இல்லை. பகவானோ முற்றிலும், எக்காலத்திலும் குணங்களைக் கடந்து நிற்பவர்; எப்போதும் தம்மில் தாமே நிலைத்திருப்பவர். ஆகவே, 'அவற்றில் நான் இல்லை, என்னில் அவை இல்லை' என்று அவர் கூறுகிறார். இதன் தெளிவான விளக்கத்தை 9/4,5 ச்லோகங்களில் காணலாம்.

பொருத்தம்: 'எல்லா உலகமும் என்னுடைய உருவமே' என்றும், 'என்னால் வ்யாபிக்கப்பட்டிருக்கிறது' என்றும் பகவான் சுட்டிக்காட்டினார். இவ்விதம் எங்கும், முற்றிலும் நிறைந்தும், மிகவும் அருகில் இருந்தும்கூட, பகவானை மக்கள் ஏன் அடையாளம் காண்பதில்லை? இதன் காரணத்தை அறிந்து கொள்வதற்கு ஆவல் தோன்றுகிறது. இப்போது இது குறித்து பகவான் கூறுகிறார்—

**त्रिभिर्गुणमयैर्भावैरेभिः सर्वमिदं जगत्।**
**मोहितं नाभिजानाति मामेभ्यः परमव्ययम्॥ १३॥**

**த்ரிபி₄ர்கு₃ணமயைர்ப₄ாவைரேபி₄: ஸர்வமித₃ம் ஜக₃த் ।**
**மோஹிதம் நாபி₄ஜாநாதி மாமேப்₄ய: பரமவ்யயம் ॥ 13 ॥**

**கு₃ணமயை:** – ஸாத்விக, ராஜஸ, தாமஸ குணங்களின் விளைவுகளான, **ஏபி₄:** – இந்த, **த்ரிபி₄:** – மூன்று (வகையான), **ப₄ாவை:** – உணர்வுகளால், **இத₃ம்** – இந்த, **ஸர்வம் ஜக₃த்** – அகில உலகமும் (ப்ராணி ஸமுதாயமும்), **மோஹிதம்** – மயக்கம் அடைந்துள்ளது. (ஆகையால்), **ஏப்₄ய:** – இம்முக்குணங்களுக்கும், **பரம்** – மேற்பட்டவனும், **அவ்யயம்** – அழிவற்றவனுமான, **மாம்** – என்னை, **ந அபி₄ஜாநாதி** – (இந்த உலகம்) அறிவதில்லை.

ஸாத்விக, ராஜஸ, தாமஸ குணங்களின் விளைவுகளான இந்த மூன்று வகையான உணர்வுகளால் இந்த எல்லா உலகமும் – ப்ராணி ஸமுதாயமும் மயக்கம் அடைந்துள்ளன. ஆகையால் இம்முக்குணங்களுக்கும் மேற்பட்டவனும் அழிவற்றவனுமான என்னை இந்த உலகம் அறிவதில்லை.

**கேள்வி:** 'குணங்களின் விளைவுகளான இந்த மூன்று வகையான உணர்வுகளால், இவ்வுலகமனைத்தும் மயக்கம் அடைந்துள்ளன' – இதன் கருத்து என்ன?

**பதில்:** முந்தைய ச்லோகத்தில் எந்த உணர்வுகள் விளக்கப்பட்டனவோ, அந்த மூன்றுவித உணர்வுகளால் உலகம் மயங்கியுள்ளது என்ற விஷயம் இங்கே கூறப்படுகிறது. 'த்ரிபி:', 'குணமயை:' என்னும் சொற்களால், அந்த எல்லா உணர்வுகளும் (பொருட்கள்), மூன்று குணங்களுக்கேற்ப மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை, குணங்களின் மாற்றுருவங்களே என்பது காட்டப்படுகிறது. இவ்விதமே, 'ஜகத்' (உலகம்) என்ற சொல்லால், உயிருள்ள அனைத்துமே சுட்டிக்காட்டப்பட்டுள்ளன; ஏனென்றால், உயிரற்ற பொருட்கள் மயங்குவது என்பது எங்கும் நடைபெற முடியாதது. ஆகவே, "மனிதன் உட்பட, உலகத்தில் உள்ள, உடல்தாங்கியுள்ள அனைத்து ப்ராணிகளும், தத்தம் மனப்போக்கு, இயற்கை, எண்ணங்களுக்கேற்ப, அநித்யமானவையும், துன்பம் நிறைந்தவையுமான இம்மூன்று குணங்களாலான உணர்வுகளையே என்றுமுள்ளன வென்றும், ஸுகத்திற்குக் காரணங்கள் என்றும் கருதி, இவற்றால் பொய்யாகத் தோற்றுவிக்கப்பட்டுள்ள கவர்ச்சியில், இன்ப வடிவங்களின் மேற்புறத்தில் காணப்படும் பளபளப்பில், வாழ்க்கையின் உன்னத லக்ஷ்யத்தை மறந்து, என்னுடைய (பகவானுடைய) குணம், ப்ரபாவம், தத்வம், ஸ்வரூபம், ரஹஸ்யம் இவற்றைப் பற்றிய சிந்தனையிலும், ஞானத்திலும் ஈடுபாடில்லாமல், நேர் எதிரான உணர்வுகளைத் தவறாகப் பெற்று என்னிடம் அவநம்பிக்கை கொண்டுள்ளார்கள். மூன்று குணங்களின் மாற்றங்களில் சிக்கித் தவிக்கும் காரணத்தால், பொருட்களைக் குவித்து

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வைப்பதையும், இன்பநுகர்ச்சியையும் தவிர, வாழ்க்கையில் வேறொரு கடமையோ, குறிக்கோளோ இருப்பதாக அவர்கள் கருத முடியாத அளவுக்கு அவர்களுடைய அறிவுத்திறன் மழுங்கிப் போயிருக்கிறது" என்பதே, பகவான் இங்கே இப்படிக் கூறுவதன் கருத்து ஆகும்.

**கேள்வி:** 'மூன்று குணங்களுக்கும் அப்பாற்பட்டவனும், அழிவற்றவனுமான என்னை அறிந்து கொள்ளவில்லை' – என்பதற்கு என்ன பொருள்?

**பதில்:** இன்பப் பொருட்களில் மயங்கியுள்ள மனிதர்களின் விவேகம், மூன்று குணங்களோடு கூடியவையும், அழியுந்தன்மையும் கொண்ட பொருட்களின் ஆட்சி எல்லையைத் தாண்டிச் செல்வதில்லை; அதனால்தான் அவர்கள், இவையெல்லாவற்றிற்கும் முற்றிலும் அப்பாற்பட்டவனும், அழிவற்றவனும் ஆன என்னை அறிய முடிவதில்லை என்று பகவான் காட்டுகிறார்.

*15/18ல்*, க்ஷரபுருஷனிலிருந்தும் (அழிவுக்குட்பட்ட ப்ராணிகளிடமிருந்தும்) தாம் முற்றிலும் கடந்து நிற்பவர் என்று சொல்லியிருக்கிறார். அங்கு, 'க்ஷர புருஷன்' (அழிவுக்குட்பட்ட ப்ராணி) என்ற பெயரால் விளக்கப்பட்ட தத்வத்தைத்தான் இந்த இடத்தில் 'அபரா ப்ரக்ருதி' என்றும், 'முக்குணமயபாவம்' என்றும் கூறுகிறார். அங்கு 'அக்ஷர புருஷன்' என்று பேசப்பட்ட அதே தத்வத்தை, இங்கு, 'பரா ப்ரக்ருதி' என்றும், மயங்குகிற ப்ராணி ஸமுதாயம் என்றும் சொல்கிறார். மேலும், அங்கே 'புருஷோத்தமன்' என்று கூறப்பட்டவரை, இங்கே 'மாம்' (என்னை) என்ற சொல்லால் விளக்குகிறார். ஆக, பகவானைப் புருஷோத்தமன் என்று அறிந்து கொள்ளாததுதான், குணங்களுக்கப்பாற்பட்ட அழிவற்ற பகவானை அறியாதது ஆகும்.

**பொருத்தம்: 'அகில ஜீவ ப்ரபஞ்சமும் முக்குண உணர்வுகளில் மயங்கிக் கிடக்கிறது' என்று பகவான் சொன்னார். இதிலிருந்து மீள்வதற்கு வழி என்ன என்று அர்ஜுனன் அறிய விரும்புகிறார். இதைத் தெரிந்து கொண்ட அந்தர்யாமியும், கருணையின் வடிவுமான பகவான் மாயையைக் கடப்பது கடினம் என்று கூறி, கடப்பதற்குரிய உபாயத்தையும் கூறுகிறார்—**

**दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया।**
**मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते॥ १४॥**

**தை₃வீ ஹ்யேஷா கு₃ணமயீ மம மாயா து₃ரத்யயா ।**

**மாமேவ யே ப்ரபத்₃யந்தே மாயாமேதாம் தரந்தி தே ॥ 14 ॥**

**ஹி** – ஏனென்றால், **ஏஷா** – இந்த, **தை₃வீ** – உலகியலுக்கு அப்பாற்பட்ட தெய்விகமான (அதாவது மிகவும் அற்புதமான), **கு₃ணமயீ** – முக்குணமயமான, **மம மாயா** – என்னுடைய மாயை, **து₃ரத்யயா** – கடப்பதற்கு அரிதானது. (ஆனால்), **யே** – எவர்கள், **மாம் ஏவ** – என்னையே (எப்பொழுதும்), **ப்ரபத்₃யந்தே** – புகலாகக் கொள்கிறார்களோ, **தே** – அவர்கள், **ஏதாம்** – இந்த, **மாயாம்** – மாயையை, **தரந்தி** – கடந்து விடுகிறார்கள் (அதாவது உலகியலிலிருந்து கரையேறுகிறார்கள்).

ஏனென்றால் இந்த உலகியலுக்கு அப்பாற்பட்ட தெய்விகமான, மிகவும் அற்புதமான முக்குணமயமான் என்னுடைய மாயை கடப்பதற்கு அரிதானது. ஆனால் எவர்கள் என்னையே எப்பொழுதும் புகலாகக் கொள்கிறார்களோ, அவர்கள் இந்த மாயையைக் கடந்து விடுகிறார்கள் – உலகியலிலிருந்து கரையேறுகிறார்கள்.

**கேள்வி:** மாயை என்பதுடன், 'ஏஷா', 'தைவீ', 'குணமயீ', 'துரத்யயா' என்ற அடைமொழிச் சொற்களை இணைத்திருப்பதற்கும், இது 'மம' (என்னுடையது) என்று சொல்வதற்கும் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** 'ஏஷா' என்ற சொல், கண் முன்னால் காணப்படும் பொருளைச் சுட்டிக்காட்டுவது. இயற்கை, செயல் (விளைவு) வடிவத்தில்தான் கண்ணுக்குப் புலப்படும். முந்தைய ச்லோகத்தில், முக்குணமயமான உணர்வுகள் என்ற பெயரில் ப்ரக்ருதியின் விளக்கத்தைக் கார்யரூபமாகக் கூறினார். அதையே காரணரூபமாக இங்கே 'மாயை' என்ற பெயரில் கூறுகிறார். குணங்களும், குணங்களின் கார்ய வடிவமாக விளங்குவதும், கண்ணுக்குப் புலப்படுகின்றதும், ஜடமானதுமான இவ்வனைத்தும் மாயையிலேயே இருக்கின்றன. ஆதலால், 'குணமயீ' என்று கூறினார். இந்த மாயை, மந்திரவாதி அல்லது அஸுரர்களுடைய மாயையைப் போன்று ஸாதாரணமானதன்று; முற்றிலும் தனித்தன்மையுடைய, மிகவும் விசித்திரமான பகவானுடைய சக்தி. இதனாலேயே, இதை 'தைவீ' என்று கூறுகிறார். மேலும், கடைசியாக இந்த தெய்விக மாயையை, 'என்னுடையது' என்றும், 'கடக்க முடியாதது' என்றும் கூறுவதன் மூலம், 'நான் இதனுடைய தலைவன்; என்னை அடைக்கலமாகக் கொள்ளாமல், மனிதன் இந்த மாயையை எளிதாகக் கடந்துவிட முடியாது' என்னும் விஷயத்தை பகவான் உணர்த்துகிறார். ஆகவே, 'இது கடப்பதற்கு மிகவும் அரியது' எனக் கூறுகிறார்.

**கேள்வி:** 'எவர்கள் என்னையே புகலாகக் கொள்கிறார்களோ' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவான் ஒருவரே தமக்குச் சிறந்த புகல் அளிப்பவராகவும், உயர்ந்த அடைக்கலமாகவும், மிகுந்த அன்புடையவராகவும், அடையத்தக்க சிறந்த பொருளாகவும் உணர்ந்து, அனைத்துமே பகவானுடையவை அல்லது பகவானுக்காகவே ஏற்பட்டவை என்று அறிந்து கொண்டு, எவர்கள் உடல், மனைவி, மக்கள், செல்வம், வீடு, புகழ் முதலியவற்றில் மமகாரத்தையும், பற்றையும் துறந்து, அவையனைத்தையும் பகவானுடைய வழிபாட்டில் பயன்படும் பொருட்களாகச் செய்து, பகவானால் விதிக்கப்பட்டபடி எல்லாம் நடக்கின்றன என மனம் நிறைந்து, பகவானுடைய ஆணைப்படி நடப்பதில் தீவிரமாக ஈடுபட்டு, பகவானையே சிந்தித்து, தங்களை எல்லாவிதங்களிலும், இடைவிடாது பகவானிடமே நிலைநிறுத்துகிறார்களோ, அத்தகையவர்களைத்தான், 'இடைவிடாது பகவானைப் புகலாகக் கொள்பவர்கள்' என்று கூறுகிறார். இதற்குப் பெயர், 'அநந்ய ஶரணாகதி'. இம்முறையில் ஶரணாகதி அடையும் பக்தர்கள்தாம் மாயையைக் கடக்க முடியும்.

**கேள்வி:** 'மாயையைக் கடத்தல்' என்று எதைக் கூறுகிறார்?

**பதில்:** கார்யமாகவும், காரணமாகவும் விளங்கும் அபரா ப்ரக்ருதியின் பெயர்தான் 'மாயை'. மாயையின் தலைவராகிய பகவானிடம் அடைக்கலம் புகுந்து, அவருடைய அருளினால் இந்த மாயையின் ரஹஸ்யங்களை முற்றிலுமாக அறிந்து கொண்டு, இதன் தொடர்பிலிருந்து முழுமையாக விடுபட்டுச் செல்வதும், மாயைக்கு அப்பாற்பட்ட பரமாத்மாவை அடைதலும்தான் மாயையைக் கடத்தல் ஆகும்.

**பொருத்தம்:** 'மாயையைக் கடப்பது கடினம். என்னைப் புகலடைவதுதான் கடப்பதற்கு உரிய உபாயம்' என்று பகவான் சொன்னார். அப்படியானால் மக்கள் இடைவிடாது ஏன் உங்களைப் பூஜிப்பதில்லை - என்ற கேள்விக்குப் பதிலளிக்கிறார்—

**न मां दुष्कृतिनो मूढाः प्रपद्यन्ते नराधमाः ।**
**माययापहृतज्ञाना आसुरं भावमाश्रिताः ॥ १५ ॥**

**ந மாம் து₃ஷ்க்ருதிநோ மூட₄ா: ப்ரபத்₃யந்தே நராத₄மா: ।**
**மாயயாபஹ்ருதஜ்ஞாநா ஆஸுரம் பா₄வமாஶ்ரிதா: ॥ 15 ॥**

**மாயயா** – மாயையினால், **அபஹ்ருத ஜ்ஞாநா:** – ஞானம் அபஹரிக்கப்பட்டவர்களும் (அதாவது அறிவிழந்தவர்களும்), **ஆஸுரம் பா₄வம்** – அஸுரத்தன்மையை, **ஆஶ்ரிதா:** – கைக்கொண்டவர்களும், **நராத₄மா:** – மனிதர்களில் தாழ்ந்தவர்களும், **து₃ஷ்க்ருதிந:** –

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இழிவான செயல்களைப் புரிகின்றவர்களுமான, **மூட₄ா: – அறிவிலிகள், மாம் – என்னை, ந ப்ரபத்₃யந்தே** – வழிபடுவதில்லை (அதாவது அடையவேண்டிய மேலான கதியாகக் கொள்வதில்லை).

மாயையினால் அறிவிழந்தவர்களும், அஸுரத்தன்மையைக் கைக்கொண்டவர்களும், மனிதர்களில் தாழ்ந்தவர்களும், இழிவான செயல்களைப் புரிகின்றவர்களுமான அறிவிலிகள் என்னை வழிபடுவதில்லை. அதாவது அடையவேண்டிய மேலான கதி எனக் கொள்வதில்லை.

**கேள்வி:** இந்த ச்லோகத்தின் கருத்தைத் தெளிவாக்குங்கள்.

**பதில்:** முந்தைய பல பிறவிகளிலிருந்தே பாவத்தைச் செய்து கொண்டிருப்பவர்கள், இப்பிறவியிலும் தெரிந்து கொண்டே பாவங்களில் ஈடுபடுகிறவர்கள் – இத்தகைய இழி தொழில் புரிவோர் பாவிகள். அதுபோல, 'ப்ரக்ருதி என்றால் என்ன? புருஷன் என்பவர் யார்? பகவான் யார்? பகவானுக்கும் ஜீவனுக்கும், ஜீவனுக்கும் பகவானுக்குமிடையே என்ன உறவு?' இந்த விஷயங்களை அறிந்து கொள்ளாதது ஒருபுறம் இருக்க, 'மனிதப் பிறவியின் நோக்கம் பகவானை அடைவது; இறை வழிபாடுதான் தலையாய கடமை' என்பதைக் கூட அறியாமலும், அறிந்து கொள்ள விரும்பாமலும் இருக்கிறார்களே, விவேகமற்ற அறிவிலிகளான மனிதர்கள்! சிந்தனைகளும், செயல்களும் தாழ்ந்து போகவே – இன்பத்தில் பற்று, தவறுதல், சோம்பல் இவை மேலோங்கி இன்ப நுகர்ச்சியிலேயே வாழ்க்கையைப் பாழாக்கிக் கொண்டிருக்கிறார்களே! மேலும், இவற்றை அடையும் நோக்கத்துடன் இடைவிடாமல் இகழத்தக்க, தாழ்ந்த செயல்களில் ஈடுபட்டிருக்கிறார்களே! இத்தகைய 'நராதம' (தாழ்ந்த) மக்கள், மாயையால் அறிவு இழந்தவர்கள்; முற்றிலும் எதிரான உணர்வுகள், நம்பிக்கையின்மை ஆகியவற்றின் ஆதிக்கத்தால் ஆய்ந்தறியும் தன்மையை இழந்து விட்டார்களே! இதன் காரணமாக வேதம், சாஸ்த்ரம், பெரியோர்களின் நல்லுரைகள், பகவான், கர்மபலன், மறுபிறவி இவற்றில் நம்பிக்கை இல்லாமல் வீணான பேச்சுக்களிலும், நாத்திகவாதத்திலும் ஈடுபட்டுப் பிறருக்குத் துன்பம் விளைவிக்கிறார்களே. இத்தகைய அறியாமையில் உழல்வோர், மேலே சொன்ன அத்தனை தீய குணங்களோடு கூடவே, ஆடம்பரம், செருக்கு, தருக்கு, கடுமை, காமம், கோபம், பேராசை, மயக்கம் முதலிய அஸுரத்தனமான உணர்வுகளைக் கைக் கொண்டுள்ளோர் ஆகிய அஸுர இயல்புடைய மூடர்கள் ஒருபோதும் என்னைப் புகலாகக் கொள்வதில்லை என்று பகவான் கூறுகிறார்.

**பொருத்தம்:** **'இழிவான செயல்களைச் செய்யும் அஸுர இயல்புடைய மூடர்கள் என்னைப் புகலாகக் கொள்வதில்லை' என்று, முந்தைய ச்லோகத்தில் பகவான் கூறினார். இப்படிக் கூறியதால், 'பின் எத்தகைய மனிதர்கள், உங்களைப் புகலாகக் கொள்கிறார்கள்?' என்று அறிந்து கொள்ளும் விருப்பம் உண்டாகிறது. இதற்கு பகவான் கூறுகிறார்—**

**चतुर्विधा भजन्ते मां जनाः सुकृतिनोऽर्जुन।**
**आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ॥ १६॥**

**சதுர்வித₄ா ப₄ஜந்தே மாம் ஜநா: ஸுக்ருதிநோऽர்ஜுந ।**
**ஆர்தோ ஜிஜ்ஞாஸுரர்த₂ார்தீ₂ ஜ்ஞாநீ ச ப₄ரதர்ஷப₄ ॥ 16 ॥**

**ப₄ரதர்ஷப₄ அர்ஜுந** – பரதகுலச்செம்மலே அர்ஜுன! **அர்த₂ார்தீ₂** – உலகியல் பொருட்களைப் பெறவேண்டி வழிபடுபவன், **ஆர்த:** – துன்பமடைந்தவன், **ஜிஜ்ஞாஸு:** – எனது பேருண்மையை அறிய ஆவலுடையவன், **ச** – மேலும், **ஜ்ஞாநீ** – மெய்ஞ்ஞானம் பெற்றவன் (ஆகிய), **சதுர்வித₄ா:** – நான்கு விதமான, **ஸுக்ருதிந:** – நற்செயல்கள் செய்கின்றவர்களான, **ஜநா:** – பக்தியுடைய மனிதர்கள், **மாம்** – என்னை, **ப₄ஜந்தே** – வழிபடுகிறார்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பரதகுலச்செம்மலே அர்ஜுன! உலகியல் பொருட்களைப் பெறவேண்டி வழிபடுபவன், துன்பமடைந்தவன், எனது பேருண்மையை அறிய ஆவலுடையவன், மேலும் மெய்ஞ்ஞானம் பெற்றவன் ஆகிய நான்குவிதமான நற்செயல்கள் செய்கின்றவர்களான பக்தியுடைய மனிதர்கள் என்னை வழிபடுகிறார்கள்.

**கேள்வி:** 'ஸுக்ருதிந:' என்ற சொல்லுக்குப் பொருள் என்ன? இது எதனுடைய அடைமொழியாக வந்துள்ளது?

**பதில்:** முந்தைய பிறவிகளில் நற்செயல்கள் செய்து, எவர்களுடைய இயல்பு சீர்திருந்தி நற்கர்மப்போக்குடையதாகவே ஆகிவிட்டதோ, முந்தைய மனப்பதிவுகளின் ப்ரபாவத்தினால் அல்லது மஹான்களின் இணக்கத்தினால், எவர்கள் இப்பிறவியிலும் பகவானுடைய ஆணைப்படி நற்செயல்களையே செய்கிறார்களோ, அவர்களை 'ஸுக்ருதீ' என்கிறார். நற்செயல்களினால் பகவானுடைய ப்ரபாவம், பெருமை இவை பற்றிய ஞானம் ஏற்பட்டுவிடவே பகவானிடம் உறுதியான நம்பிக்கை பெருகுகிறது; உறுதியான நம்பிக்கை ஏற்பட்டதும் வழிபாடு தோன்றுகிறது. ஆகவே, 'ஸுக்ருதிந:' (நற்செயலாற்றுவோர்) என்ற அடைமொழி, நான்குவித பக்தர்களோடும் தொடர்புடையது என்று குறிப்பாகத் தெரிந்து கொள்ளலாம். அதாவது, எக்காரணம் பற்றியதாக இருந்தாலும், பகவானிடம் ஆழ்ந்த நம்பிக்கைக் கொண்டு வழிபாடு செய்யும் எல்லா பக்தர்களும் 'ஸுக்ருதிந:' ஆகிறார்கள்.

**கேள்வி:** 'அர்தார்த்தீ'யான பக்தனின் இலக்கணம் என்ன?

**பதில்:** மனைவி, மக்கள், செல்வம், மதிப்பு, பெருமை, புகழ், ஸ்வர்க ஸுகம் முதலிய இஹலோக, பரலோக போகங்களில் ஏதாவது ஒன்றிலோ, பலவற்றிலோ விருப்பம் உள்ள மனிதன் அந்த ஆசையைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக, பகவான் ஒருவரையே நம்பி ச்ரத்தையுடனும், பகவான் நம் விருப்பத்தைப் பூர்த்தி செய்வார் என்ற நம்பிக்கையுடனும் பகவானைப் புகலாகக் கொள்பவன் 'அர்தார்த்தீ' பக்தன் ஆவான்.

ஸுக்ரீவன், விபீஷணன் போன்றவர்கள் இதற்கு எடுத்துக்காட்டு. இவர்களிலே முக்யமாக த்ருவனை எடுத்துக் கொள்வோம். ஸ்வாயம்புவ மனுவின் புத்ரர் உத்தானபாதருக்கு ஸுநீதி, ஸுருசி என்ற இரண்டு மனைவிகள். ஸுநீதியின் மகன் த்ருவன். ஸுருசியின் மகன் உத்தமன். அரசனுக்கு ஸுருசியிடம் ப்ரியம் அதிகம். ஒரு நாள் குழந்தை த்ருவன் தந்தையிடம் வந்து அவர் மடிமேல் ஏறி அமர விரும்பினான். ஸுருசி அவனைத் தடுத்து இறக்கிவிட்டாள். 'நீ கொடுத்து வைக்காதவன். நீ ஸுநீதி வயிற்றில் தானே பிறந்தாய்! அரியணைமீது அமர வேண்டுமானால் என் வயிற்றில் அல்லவா பிறந்திருக்க வேண்டும்! போ! ஹரியை வழிபடு. அப்பொழுதுதான் உன் விருப்பம் நிறைவேறும்' என்றாள். மாற்றாந்தாயின் அதட்டலுடன் கூடிய செயல்பாட்டினால் த்ருவன் மிகவும் வருத்தமடைந்து அழுதுகொண்டே தாயிடம் சென்றான். நடந்ததைத் தெரிவித்தான். ஸுநீதியும், 'மகனே! உன் தாயார் ஸுருசி நல்லதைத்தான் சொன்னாள். பகவானை வழிபடாமல் உன் விருப்பம் ஈடேறாது' என்றாள். தாயின் சொற்கேட்டு, ராஜ்யத்தை அடையவேண்டுமென்ற பிடிவாதத்துடன் குழந்தை த்ருவன் பகவானைப் பூஜிப்பதற்காக வீட்டிலிருந்து கிளம்பி விட்டான். வழியில் நாரதர் எதிர்ப்பட்டார். அவர் அவனை வீட்டுக்குத் திரும்பிப் போகும்படி அறிவுறுத்தினார். 'நான் உனக்கு ராஜ்யம் தரச் சொல்கிறேன்' என்று சொன்னார். த்ருவன் தன் உறுதியிலிருந்து பிறழவில்லை. அப்போது 'ஓம் நமோ பகவதே வாஸுதேவாய' என்ற பன்னிரண்டு அக்ஷரமுடைய மந்த்ரத்தையும், நான்கு திருக்கரங்களுடைய பகவான் விஷ்ணுவின் திருவடிவத்தை த்யானம் செய்யும் முறையையும் உபதேசம் செய்து ஆசீர்வதித்து அனுப்பினார்.

த்ருவன் யமுனைக் கரையில் மது வனத்தில் தவம் செய்தான். அவனுடைய தவத்தைக் கலைப்பதற்காகப் பலவிதமான பயமுறுத்தல்களும் பலவித ஆசைகளும் காட்டப்பட்டன.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஒன்றுக்கும் அவன் இடம் கொடுக்கவில்லை. அப்போது பகவான் அவனுடைய உறுதியான பக்தியினால் மகிழ்ந்து அவனுக்கு தர்சனம் அளித்தார். நாரதர் அரசனிடம் சென்று இவையனைத்தையும் கூறினார். அரசன் தம் புத்ரன் உத்தமனோடும், இரு மனைவியரோடும் த்ருவனை எதிர் கொண்டு அழைத்து வரச் சென்றார். தவமே வடிவான த்ருவன் எதிரே வந்து கொண்டிருப்பதைக் கண்ட அரசன் யானையை விட்டிறங்கி அவனை மார்புறத் தழுவிக் கொண்டார். பிறகு பெரிய விழா எடுத்து யானை மேல் த்ருவனை அமரச் செய்து, நகரத்திற்கு ஊர்வலமாக அழைத்து வந்தார். த்ருவனுக்கு அரசளித்தார். தாம் வானப்ரஸ்தராகச் சென்றுவிட்டார்.

கேள்வி: ஆர்த்த பக்தனின் இலக்கணம் என்ன?

பதில்: உடலிலோ, மனதிலோ ஏற்படும் வேதனையினாலோ, ஆபத்து, சத்ருபயம், நோய், அவமானம், திருட்டுபயம், கொள்ளையடித்துக் கொலை செய்பவர்களால் பயம், கொடிய விலங்குகளிடையே அகப்பட்டதால் ஏற்பட்ட பயம் இவற்றிலிருந்து விடுபடுவதற்காக, முழு நம்பிக்கையுடன், இதயத்தின் அடித்தளத்திலிருந்து ச்ரத்தையுடன் பகவானைப் பூஜிப்பவன் ஆர்த்த பக்தன்.

ஆர்த்த பக்தர்களில் கஜேந்த்ரன், ஜராஸந்தனிடம் சிறைப்பட்ட அரசர்கள் என்ற பலர் உளர். அவர்களிடையே கற்புக்கரசியான த்ரௌபதியின் பெயர் முக்யமாகப் பேசப்படுகிறது.

த்ரௌபதி த்ருபத ராஜனின் பெண். அவள் யாககுண்டத்தில் பிறந்தவள். அவள் கரிய நிறத்தவளாய் மிக அழகாக இருப்பாள். அதனால் அவளுக்கு 'க்ருஷ்ணா' என்றும் பெயர். த்ரௌபதி நற்குணங்கள் அனைத்தும் படைத்தவள்; சிறந்த பதிவ்ரதை; லக்ஷ்ய மனைவி; பகவானுடைய உண்மையான பக்தை. அவள் ஸ்ரீக்ருஷ்ணனை ஸத் சித் ஆனந்தமயமான பூர்ண ப்ரம்மமாகவே கருதினாள். பகவானும் அவளிடம் தம்முடைய லீலைகளை ஒளிப்பதில்லை. பகவான் சிறு குழந்தையாக ப்ருந்தாவனத்தில் செய்த அனைத்து லீலைகளும், கோபிகளின் பேரன்புக்குக் கட்டுப்பட்டுச் செய்ததெல்லாமும், அந்த கோபியரின் கணவர்கள், புதல்வர்களுக்கெல்லாம் கூடத் தெரியாது. ஆனால் த்ரௌபதிக்குத் தெரியும். அதனால்தான் துகிலுரியப்பட்டபோது அவள் பகவானை 'கோபீஜநப்ரிய' என்று கூவுகிறாள்.

கொடியோனான துச்சாஸனன் துர்யோதனனுடைய ஆணையின்பேரில், ஒற்றைத் துணியுடன் இருந்த த்ரௌபதியை அவைக்கு இழுத்துவந்து பலவந்தமாக அவளுடைய சேலையை இழுக்க ஆரம்பித்தான். யாரும் அவளைக் காப்பாற்ற முன் வரவில்லை. தனக்கு உதவி யாரும் இல்லை என்று உணர்ந்த த்ரௌபதி தனக்கு ஸஹாயம் புரியக்கூடியவர், நெருங்கிய உறவினர் ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாதான் என்று நினைத்தாள். அவள், 'தான் நினைத்தால் போதும், பகவான் வந்து உதவி புரிவார்; தன் கூக்குரலைக் கேட்டால், அவருக்கு எங்கும் இருப்புக் கொள்ளாது' என்று முழுமையாக நம்பினாள். ஓலமிட்டாள்.

> கே₃ாவிந்த₃ த்₃வாரகாவாஸிந் க்ருஷ்ண கே₃ாபீஜநப்ரிய ।
> கௌரவை: பரிபூ₄தாம் மாம் கிம் ந ஜாநாஸி கேஸவ ॥
> ஹே நாத₂ ஹே ரமாநாத₂ வ்ரஜநாத₂ார்திநாஸந ।
> கௌரவார்ணவமக்₃நாம் மாமுத்₃த₄ரஸ்வ ஜநார்த₃ந ॥
> க்ருஷ்ண க்ருஷ்ண மஹாயோகி₃ந் விஸ்வாத்மந் விஸ்வப₄ாவந ।
> ப்ரபந்நாம் பாஹி கே₃ாவிந்த₃ குருமத்₄யேவஸீத₃தீம் ॥

(மஹாப₄ாரதம், ஸப₄ா பர்வம் 67)

ஓ கோவிந்தனே! ஓ த்வாரகையில் வஸிப்பவனே! ஓ க்ருஷ்ணனே! ஓ கோபியர்களுக்கு ப்ரியமானவனே! ஓ கேசவ! கௌரவர்கள் என்னை அவமானப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள் என்பதை நீ அறியவில்லையா? ஓ நாத! ஓ லக்ஷ்மீநாத! ஓ வ்ரஜநாத! துன்பத்தைப் போக்குபவனே! ஓ ஜனார்தன! கௌரவக் கடலில் மூழ்கிக் கொண்டிருக்கும் என்னைக்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



காப்பாற்று. க்ருஷ்ண! ஓ க்ருஷ்ண! மஹாயோகியே! அண்டத்தின் ஆத்மாவாக விளங்குபவனே! அண்டமாக இருப்பவனே! ஓ கோவிந்த! கௌரவர்களின் கையில் சிக்கித் தவிப்பவளும், மிகவும் துன்பத்துடன் உன்னைத் தஞ்சம் அடைந்தவளுமான என்னைக் காப்பாற்று என்று பகவானுடைய உதவியை வேண்டிய த்ரௌபதியின் அழைப்பைக் கேட்டவுடன், உலகநாயகனான பகவானின் உள்ளம் உருகியது.

'த்யக்த்வா ஶய்யாஸநம் பத்₃ப்₄யாம் க்ருபாளு: க்ருபயாப்₄யகா₃த் ।'

'கருணைக்கடலான பகவான், கருணைக்கு ஆட்பட்டுப் படுக்கையை விட்டெழுந்து ஓடினார்.' கௌரவர்களுடைய அரக்கத்தனம் நிறைந்த அவைக்களத்தில் துணிவடிவில் பகவானின் வஸ்த்ராவதாரம் நிகழ்ந்தது. த்ரௌபதியின் ஒரு துகிலிலிருந்து இரண்டாவது, இரண்டாவதிலிருந்து மூன்றாவது – இவ்வாறு, வெவ்வேறு வகையான வண்ணச்சேலைகள் தோன்றத் தொடங்கி, அங்கு ஒரு துணிக்குவியலே உண்டாகிவிட்டது. பேரன்புடைய ஆத்ம பந்துவான பகவான் சரியான நேரத்தில் வந்து, தம்முடைய பக்தையான த்ரௌபதியின் மானத்தைக் காப்பாற்றினார். துச்சாஸனன் களைத்துத் தரையில் உட்கார்ந்துவிட்டான்.

**கேள்வி:** 'ஜிஜ்ஞாஸு' (எனது பேருண்மையை அறிய ஆவலுடைய) பக்தனுக்கு என்ன இலக்கணம்?

**பதில்:** மனைவி-மக்கள், செல்வம், வீடு முதலிய பொருட்களையும், நோய்கள்-துன்பங்கள் முதலியவற்றையும் பொருட்படுத்தாமல், பரமாத்மாவை உண்மையாக அறிய வேண்டும் என்ற ஒரே விருப்போடு, ஒருமித்த மனமுடன் பகவானிடம் பக்தி செலுத்தி *(14/26)*, தனது ஆன்மிக மேன்மையைப் பெற விரும்பும் பக்தனை 'ஜிஜ்ஞாஸு' என்கிறார்.

ஜிக்ஞாஸு வகை பக்தர் கூட்டத்தில் பரீக்ஷித் முதலிய பலரும் உள்ளனர். ஆனால் உத்தவருடைய பெயர் மிகவும் புகழ் வாய்ந்தது. ஸ்ரீமத்பாகவதத்தில் 11வது ஸ்கந்தம் 7வது அத்யாயம் முதல் முப்பது வரை, பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் உத்தவருக்கு மிகவும் மேலான தெய்விகமான ஞானத்தை உபதேசித்திருக்கிறார். உத்தவ கீதை என்ற பெயரால் அது புகழடைந்துள்ளது.

**கேள்வி:** ஞானியான பக்தனுக்கு என்ன இலக்கணம்?

**பதில்:** எவர்கள் பரமாத்மாவை அடைந்து விட்டவர்களோ, எவர்களுடைய நோக்கில் பரமாத்மா மட்டுமே காணப்படுகிறாரோ, பரமாத்மாவைத் தவிர வேறு எதுவுமே இல்லையோ, இவ்விதம் பரமாத்மாவை அடைந்துவிட்டதனால் எவர்களுடைய எல்லா ஆசைகளும் எஞ்சி நிற்காமல் அற்றுப் போய்விட்டனவோ, இப்படிப்பட்ட நிலையில் எவர்கள் இயல்பாகவே பரமாத்மாவை வழிபடுகிறார்களோ, அவர்கள் ஞானிகள் *(12/13-19)*. ஆசைகளற்றும், பகவானைத் தவிர வேறு எதிலும் நாட்டம் இல்லாத மனமுடனும் ப்ரேம ஸாதனை செய்யும் பக்தர்கள் ஞானி பக்தர்கள் என்னும் வகையில் அடங்கியவர்களே. அவர்களுடைய வர்ணனை *9/13,14, 10/3, 15/19* ஆகிய ச்லோகங்களில் காணப்படுகிறது.

ஞானிகளில் சுகாசார்யர், ஸநகாதிகள், நாரதர், பீஷ்மர் முதலானோர் புகழ் பெற்றவர்கள். குழந்தை ப்ரஹ்லாதனும் ஞானியான பக்தன்தான். அவனுக்குத் தாயின் கர்பத்தில் இருக்கும்போதே தேவரிஷி நாரதருடைய உபதேசம் கிடைத்தது. அவன் அஸுர அரசனான ஹிரண்யகசிபுவின் மைந்தன். ஹிரண்யகசிபுவுக்கு பகவானிடம் வெறுப்பு இருந்து வந்தது. ஆனால் அவனுடைய புதல்வன் பகவானுடைய பக்தன். ஹிரண்யகசிபு பலவாறு தன் மகனைத் துன்புறுத்தினான். பாம்புகளைக் கொண்டு கடிக்கச் செய்தான். யானைகளைக் கொண்டு மிதிக்கச் செய்தான். மலையின் உச்சியிலிருந்து தள்ளிவிடச் செய்தான். கடலில் தூக்கி எறியச் செய்தான். நெருப்பில் தள்ளிவிடச் செய்தான். குருமார்கள்கூட அவனைக் கொல்ல முனைந்தார்கள். பகவான் அவனைக் காப்பாற்றிக் கொண்டே வந்தார். பிறகு பகவான் ஸ்ரீநரஸிம்ஹமூர்த்தியாக அவதரித்து ஹிரண்யகசிபுவை வதம் செய்தார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ப்ரஹ்லாதன் அவ்வளவு பயங்கரமான நிலைகளிலும் பயப்படவும் இல்லை; கலங்கவும் இல்லை. இதுதான் அவனுடைய ஞானப்பக்குவத்திற்கு அடையாளம். அவன் குருகுலத்தில் இருந்தபோதே தன்னுடன் படித்த மாணவர்களுக்கு திவ்ய உபதேசம் செய்தான். அதனாலும் அவன் ஞானி என்பது தெரிகிறது. ஸ்ரீமத்பாகவதத்திலும், விஷ்ணு புராணத்திலும் ப்ரஹ்லாதனுடைய கதை அழகாகச் சொல்லப்பட்டிருப்பதைக் காணலாம்.

**கேள்வி:** இங்கு 'ச' என்ற எழுத்து எதை உணர்த்துகிறது?

**பதில்:** அர்த்தார்த்தி, ஆர்த்த, ஜிக்ஞாஸு பிரிவுகளைச் சேர்ந்த பக்தர்களைப் போலல்லாமல் ஞானியினுடைய தனித்தன்மையையும், உயர்வையும், 'ச' என்பதனால் பகவான் குறிப்பிட்டுக் காட்டியிருக்கிறார். 17,18,19வது ச்லோகங்களில் கூறப்படுகின்ற ஞானியின் பெருமையை 'ச' என்பதன் மூலம் இங்கு மிகச் சுருக்கமாகக் கூறுகிறார்.

**கேள்வி:** இந்த நான்குவித பக்தர்களில் ஒருவரைக் காட்டிலும் ஒருவர் சிறந்தவர் என்று எந்த வரிசையில் சொல்லலாம்? ஏன்?

**பதில்:** பகவானிடம் முழு நம்பிக்கை வைத்தவர்கள் எவ்விதமாக வழிபட்டாலும் உத்தமர்கள்தான். அதனால்தான் நால்வரையுமே பகவான் 'ஸுக்ருதீ' என்றும், 18வது ச்லோகத்தில் 'உதாரர்கள்' என்றும் கூறுகிறார். ஆயினும் இங்கே சொல்லப்படுகின்ற முறைப்படி பார்த்தால் அர்த்தார்த்தியைக் காட்டிலும் ஆர்த்தன் சிறந்தவன். அவனைக் காட்டிலும் ஜிக்ஞாஸு சிறந்தவன். அவனைக் காட்டிலும் ஞானி சிறந்தவன். ஏனெனில் அர்த்தார்த்தியான பக்தன் உலகியல் போகங்களை ஸுகமெனக் கருதுகிறான். அவற்றைப் பெறவேண்டி பகவானை வழிபடுகிறான். அவர்கள் பகவானுடைய ப்ரபாவத்தை முழுமையாக அறியாதவர்கள். அவர்களுக்கு பகவானிடம் பூரண ப்ரேமை இல்லை. அதனால்தான் அவர்கள் போகங்களில் விருப்பம் கொள்கிறார்கள். ஆர்த்த பக்தர்கள் ஸுகபோகங்களைக் கருதி பகவானை வரம் கேட்பதில்லை. அர்த்தார்த்தியைக் காட்டிலும் ஆர்த்தனுக்கு பகவானிடம் அதிக ப்ரேமை உண்டு என்பது உண்மைதான். இருப்பினும் அவர்களுடைய ப்ரேமை பகவானிடம் மாத்திரம் இல்லாமல், தங்களுடைய சரீர ஸுகத்திலும், பெருமை, புகழ் இவற்றிலும் பிரிந்துள்ளது. அதனால்தான் அவமானமோ, ஸங்கடமோ நேரும்போது தம்மைக் காப்பாற்ற வேண்டுமென்று பகவானை வேண்டுகிறார்கள். ஜிக்ஞாஸுவான பக்தர்கள் ஸுகத்தையும் எதிர்பார்ப்பதில்லை. உலகியல் விபத்துகளிலிருந்து தம்மைக் காக்கவேண்டும் என்றும் வேண்டுவதில்லை. எப்படியாவது பகவானைப் பற்றி அறிந்து கொண்டுவிட வேண்டும் என்று மட்டும்தான் முயல்கிறார்கள். அவர்களுக்கு உலக போகங்களில் ஆசையில்லாவிட்டாலும் மோக்ஷத்தில் 'ஆசை'யென்று ஒன்று இருக்கிறது. ஆகவே அவனுடைய பக்தி அர்த்தார்த்தி, ஆர்த்த பக்தர்களுடைய பக்தியைக் காட்டிலும் மேலானது; வித்யாஸமானது. ஆயினும் ஞானி பக்தர்களுடைய பக்திக்குச் சற்றுக் குறைவானதுதான். பகவானுடைய ஸமக்ர ஸ்வரூப தத்வத்தை உண்மையாக உணர்ந்த ஞானியான பக்தர்கள் ஒரு தேவையையும் கருதாமல் இயல்பாக பகவானை நிஷ்காமமாகப் பேரன்புடன் எப்பொழுதும் இடைவிடாது வழிபடுகிறார்கள். ஆகவே பக்தர்களுள் அவர்களே தலைசிறந்தவர்கள்.

**கேள்வி:** இங்கு அர்ஜுனனை பகவான் 'பரதகுலச் செம்மலே' என்று அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** 'நீ புண்யசாலி. என்னை வழிபட்டுக் கொண்டே இருக்கிறாயே!' என்று பகவான் கூறுகிறார். இதனால் அர்ஜுனனும் நற்செயலாற்றுபவர்களுள் (ஸுக்ருதிந:) சேர்ந்தவர் என்ற குறிப்புக் கிடைக்கிறது.

**பொருத்தம்: நான்குவிதமான பக்தர்களைப் பற்றிக் கூறிவிட்டு, அவர்களுள் ஞானியான பக்தர்களின் ப்ரேமையைப் புகழ்ந்து, மற்ற பக்தர்களைக் காட்டிலும் அவர்கள் சிறந்தவர்கள் என்று கூறுகிறார்—**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**तेषां ज्ञानी नित्ययुक्त एकभक्तिर्विशिष्यते।**
**प्रियो हि ज्ञानिनोऽत्यर्थमहं स च मम प्रियः॥ १७॥**

**தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த ஏகப₄க்திர்விஸிஷ்யதே ।**

**ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த₂மஹம் ஸ ச மம ப்ரிய: ॥ 17 ॥**

**தேஷாம்** – அவர்களுள், **நித்ய யுக்த:** – எப்பொழுதும் என்னிடமே ஒன்றிவிட்ட, **ஏகப₄க்தி:** – வேறொன்றைச் சாராமல் பக்தி செய்கின்ற, **ஜ்ஞாநீ** – ஞானியான பக்தன், **விஸிஷ்யதே** – மிகவும் சிறந்தவன். **ஹி** – ஏனெனில், **ஜ்ஞாநிந:** – (என்னைத் தத்வரீதியாக அறிகின்ற) ஞானிக்கு, **அஹம்** – நான், **அத்யர்த₂ம்** – மிகவும், **ப்ரிய:** – ப்ரியமானவன். **ஸ: ச** – அவனும், **மம** – எனக்கு, **ப்ரிய:** – (மிகவும்) ப்ரியமானவன்.

அவர்களுள் எப்பொழுதும் என்னிடமே ஒன்றிவிட்ட வேறொன்றைச் சாராமல் பக்தி செய்கின்ற ஞானியான பக்தன் மிகவும் சிறந்தவன். ஏனெனில் என்னைத் தத்வரீதியாக அறிகின்ற ஞானிக்கு நான் மிகவும் இனியவன். அவனும் எனக்கு மிகவும் இனியவன்.

**கேள்வி:** ஞானி என்ற சொல்லுடன், 'நித்யயுக்த:' என்றும், 'ஏகபக்தி:' என்றும் அடைமொழிகள் கொடுக்கப்பட்டிருப்பதன் கருத்து என்ன?

**பதில்:** உலகம், உடல் மற்றும் தன்னையே முற்றிலுமாக மறந்து, அநன்ய பாவத்துடன் எப்போதும் இடைவிடாமல், பகவானிடமே ஒருமித்த மனதோடு நிலைத்துள்ளவரை 'நித்யயுக்த:' (எப்போதும் ஒன்றியிருப்பவர்) என்கிறார். எவ்வித நிமித்தமும் இல்லாமல், அதிக ப்ரேமையை பகவானிடமே செலுத்துபவரை 'ஏகபக்தி:' என்கிறார். பகவானைத் தத்வரீதியாகவும், உண்மையாகவும் அறிந்துள்ள ஞானியாகிற பக்தரிடம், இவையிரண்டு அம்சங்களும் நிறைந்து விளங்குவதால், இந்த அடைமொழிகளைக் கொடுக்கிறார்.

**கேள்வி:** 'ஞானிக்கு நான் மிகவும் இனியவன்; எனக்கு ஞானி மிகவும் இனியவர்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவானுடைய உண்மையான தத்வத்தையும், ரஹஸ்யத்தையும் நன்றாக உணர்ந்துவிட்டவர்; எல்லா இடத்திலும், எல்லாக் காலங்களிலும், எல்லாவற்றிலும் பகவானின் வடிவத்தையே காண்பவர்; பகவானைத் தவிர வேறு எதுவுமே இல்லை என்ற நோக்குடையவர்; பகவானே மிகவும் மேலானவர், மிகவும் அன்புடையவர் என்று உணர்ந்து கொண்டு, பற்றும், விருப்பங்களும் முற்றிலுமாக நீங்கிய மனம்–புத்தியோடு பகவான் ஒருவரிடமே ஒன்றியிருப்பவர் – இவ்விதமாக அநந்ய ப்ரேமையுடன் பகவானிடம் பக்தி செலுத்துபவர்களுக்கு பகவான் எவ்வளவு ப்ரியமானவர் என்று யாரால்தான் சொல்ல முடியும்? எவர்கள், இவ்வுலகிலும், பரலோகத்திலும் உள்ள மிகவும் விரும்பத்தக்க ஸுகத்தைக் கொடுக்கக் கூடியனவும், உலகியல் மனிதர்களின் நோக்கில் கிடைக்கவே முடியாதவை என்று மதிக்கப்படுவனவுமான போகங்களையும், ஸுகம் பெறவேண்டும் என்கிற எல்லா விருப்பங்களையும் பகவானின் பொருட்டுத் துறந்துள்ளனரோ, அவர்களுடைய நோக்கில் பகவானுக்கு எவ்வளவு பெருமை இருக்கிறது என்பதையோ, அவர்களுக்கு பகவான் எவ்வளவு ப்ரியமானவர் என்பதையோ, வேறு எந்த மனிதராலும் கற்பனை கூடச் செய்து பார்க்க முடியாது. அதனால்தான், 'நான் அவர்களுக்கு மிகவும் இனியவன்' என்று பகவான் கூறுகிறார். எவர்களுக்கு பகவான் அளவு கடந்த ப்ரிய மானவரோ, அவர்கள் பகவானுக்கு அளவு கடந்த ப்ரியமானவர்களாகத் தானே இருப்பார்கள்? ஏனெனில், முதலாவதாக பகவான் இயல்பாகவே ப்ரேமை வடிவினர். ‡அவருடைய

‡ ரஸோ வை ஸ: । ரஸꠂ ஹ்யேவாயம் லப்₃த்₄வாநந்தீ₃ ப₄வதி ॥
(தைத்திரீயோபநிஷத்₃ 2/7)

சுவையின் வடிவமே பகவான். இச்சுவையை அனுபவித்துத்தானே மனிதன் ஆனந்தமுள்ளவனாக ஆகிறான்.

-CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ப்ரேமையின் உயர்வை விளக்குவதானால், அவருடைய அன்பு எனும் ரஸக்கடலிலிருந்து ஒரு துளி அன்பைப் பெற்று உலகிலுள்ள எல்லா மக்களும் இன்பம் சுவைப்பவர்களாக ஆகிறார்கள். இரண்டாவதாக, 'எவர்கள் என்னை எவ்விதம் வழிபடுகிறார்களோ, அவர்களை அவ்விதமே நானும் அடைகிறேன்' என்பது பகவானின் முழக்கம். ஆகவே, பகவான் அவர்களிடம் மிகவும் அன்பு பாராட்டினால், அதில் வியப்பதற்கு என்ன இருக்கிறது! அதனால், 'அவர்கள் எனக்கு மிகவும் இனியவர்கள்' என்று பகவான் சொல்கிறார்.

இந்த ச்லோகத்தில் பகவானுடைய குணம், ப்ரபாவம், ரஹஸ்யம், தத்வங்கள் இவற்றை மிக நன்றாக உணர்ந்துள்ள, பகவானை அவ்விதமே அடைந்துவிட்ட ப்ரேம பக்தனின் ப்ரேமை; அநன்ய ப்ரேமை செலுத்தும் மிக உயர்ந்த நிலையிலுள்ள ஸாதகனாகிய பக்தனின் ப்ரேமை இவற்றின் எல்லையை எடுத்துக்காட்டி அவர்களது புகழைப் பாடுகிறார்.

**பொருத்தம்:** ஞானியாகிய பக்தன் எல்லோரைக் காட்டிலும் மேலானவன்; மிகவும் இனியவன் என்று பகவான் கூறினார். 'அப்படியானால், மற்ற பக்தர்கள் உயர்ந்தவர்கள் இல்லையா? அன்புக்குரியவர்கள் இல்லையா?' என்ற ஐயம் எழக்கூடும். இது குறித்து பகவான் கூறுகிறார்—

**उदाराः सर्व एवैते ज्ञानी त्वात्मैव मे मतम्।**
**आस्थितः स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिम्॥ १८॥**

**உதா₃ரா: ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம் ।**

**ஆஸ்தி₂த: ஸ ஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் க₃திம் ॥ 18 ॥**

**ஏதே ஸர்வே** – இவர்கள் எல்லோருமே (மேற்கூறப்பட்ட நால்வருமே), **உதா₃ரா: ஏவ** – சிறந்தவர்கள்தாம். **து** – ஆனால், **ஜ்ஞாநீ** – ஞானியோவெனில், **ஆத்மா ஏவ** – என்னுடைய ஸ்வரூபமே (என்பது), **மே** – என்னுடைய, **மதம்** – கருத்து. **ஹி** – ஏனெனில், **யுக்தாத்மா ஸ:** – என்னிடம் ஒன்றிய மனமும், புத்தியும் கொண்ட ஞானியாகிய பக்தன், **அநுத்தமாம்** – மிகவும் உயர்ந்த, **க₃திம்** – கதியாகிய, **மாம் ஏவ** – என்னையே, **ஆஸ்தி₂த:** – உறுதியாகப் பற்றி நிற்கிறான்.

இவர்கள் எல்லோருமே (மேற்கூறப்பட்ட நால்வருமே) சிறந்தவர்களே. ஆனால் ஞானியோவெனில் என்னுடைய ஸ்வரூபமே என்பது என்னுடைய கருத்து. ஏனெனில் என்னிடம் ஒன்றிய மனமும் புத்தியும் கொண்ட ஞானியாகிய பக்தன் மிகவும் உயர்ந்த கதியாகிய என்னிடமே நிலைபெற்று நிற்கிறான்.

**கேள்வி:** 'இவர்கள் எல்லோருமே சிறந்தவர்களே' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** நான்கு வகையான பக்தர்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கும் ஸந்தர்பம் இது. அவர்களில் ஞானியின் தரத்தைக் குறித்துப் பேச வேண்டியதே இல்லை. அர்த்தார்த்தி, ஆர்த்தன், ஜிக்ஞாஸு எனும் பக்தர்களும் முற்றிலும் பகவானிடம் ஒன்றி நிற்பவர்களே; அவர்களுக்குப் பகவானிடம் உறுதியானதும், மிகச் சிறந்ததுமான நம்பிக்கை இருக்கிறது. 'பகவான் அனைத்து ஆற்றல்களும் படைத்தவர்; அனைத்தையும் அறிந்தவர்; ஸர்வேசுவரர்; மிகுந்த கருணை உடையவர்; மிகச்சிறந்த நண்பர்; நம்முடைய எதிர்பார்ப்புக்களையும், விருப்பங்களையும் அவரால் மட்டுமே நிறைவேற்றி வைக்க முடியும்' என்று, அவர்கள் உறுதியாக நம்புகிறார்கள். இவ்விதம் எண்ணி உணர்ந்து, வேறு எல்லா வகையான பற்றுக்கோடுகளையும் உதறித் தள்ளிவிட்டு, தம்முடைய வாழ்க்கையை பகவானை வழிபடுதல், சிந்தித்திருத்தல், அர்ச்சனை செய்தல், பகவானுக்கு ஸேவை செய்தல் ஆகியவற்றில் ஈடுபடுத்திக் கொண்டுவிட்டார்கள். பகவானிடம் கொண்டுள்ள உறுதியான நம்பிக்கையில் அணுவளவு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



குறையையும் ஏற்படுத்தக் கூடிய எந்தச் செயலிலும் அவர்கள் ஈடுபட மாட்டார்கள். நிறைவேறப் பெறாத அவர்களுடைய ஆசைகளைக் கூட பகவானே நிறைவேற்றி வைக்க வேண்டுமென்றுதான் அவர்கள் நினைப்பார்கள். தான் எதை விரும்பினாலும் அந்தத் தன் கணவன்தான் பெற்றுத் தரவேண்டும் என்றுதானே கற்புடைய மங்கை நினைப்பாள். அதற்காக அவள் வேறொருவரை அணுகுவதில்லை; நம்புவதில்லை; ஏன், பிறர் இருப்பதைக் கூட அறிவதில்லையே! இதைப்போல, அந்த பக்தர்கள் பகவான் ஒருவரையே நம்புகிறார்கள். அதனால்தான், 'அவர்கள் எல்லோரும் சிறந்தவர்கள்' என்று பகவான் சொல்கிறார். அதனாலேயே 23வது ச்லோகத்தில், 'என்னுடைய பக்தர்கள் எப்படி வேண்டுமானாலும் என்னை வழிபடட்டும்; கடைசியில், அவர்கள் என்னையே அடைகிறார்கள்' என்று பகவான் கூறியிருக்கிறார். 9/25லும் பகவானிடம் பக்தி செலுத்துவோருக்கு இதே பயனைக் கூறுகிறார்.

**கேள்வி:** இங்கு 'து' (ஆனால்) என்பதன் கருத்து என்ன?

**பதில்:** நான்குவிதமான பக்தர்களும் மிகவும் மேலானவர்கள். பகவானுக்கு ப்ரியமானவர்கள். ஆனால், இவர்களில் முதல் மூன்று வகையினரைக் காட்டிலும், ஞானியிடம் காணப்படும் தனிச் சிறப்பைத் தெளிவாக எடுத்துக்காட்டுவதற்காகவே 'து' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**கேள்வி:** 'ஞானியோவெனில், என்னுடைய ஸ்வரூபமே; இது என்னுடைய கருத்து' இப்படிக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஞானியாகவுள்ள பக்தனுக்கும், தனக்குமிடையே சிறிதுகூட வேற்றுமை இல்லை என்பதை, இங்கே பகவான் சுட்டிக் காட்டுகிறார். 'பக்தர்கள் இருப்பதால் நான் இருக்கிறேன்; நான் இருப்பதால் பக்தர்கள் இருக்கிறார்கள்' என்பது பகவானின் குறிப்பு. இதனின் கருத்து: பக்தன் பகவானிடையே உள்ள அனன்ய ப்ரேமையே.

**கேள்வி:** 'யுக்தாத்மா' என்ற சொல்லின் பொருள் என்ன? அவர், 'மிகவும் உயர்ந்த கதியாகிய என்னிடமே நிலைபெற்று நிற்கிறான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எவர்களுடைய மனமும், புத்தியும் முழுமையாக பகவானிடமே ஒன்றியிருக்கின்றனவோ, அவர்களை 'யுக்தாத்மா' என்கிறார். இப்படிப்பட்டவர்கள் பகவானை மட்டுமே அனைத்துக்கும் மேலானவராகவும், அடையத்தக்க உயர் அடைக்கலமாகவும் அறிந்து, எப்போதும் இடைவிடாமல், அவரிடமே ஒருமித்து நிலைத்துவிடுவர். அதாவது அவரை அடைந்துவிடுவதுதான் அடையத்தக்க மிக மேலான நிலை என்று உணர்ந்து பகவானிடம் நன்றாக நிலைத்து நிற்பர். இதுதான் பரமனிடம் நன்கு உறுதிபெற நிற்பது ஆகும்.

**பொருத்தம்:** அத்தகைய ஞானியாகவுள்ள பக்தனைக் காண்பது அரிது என்பதை பகவான் கூறுகிறார்—

**बहूनां जन्मनामन्ते ज्ञानवान्मां प्रपद्यते।**
**वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः॥ १९॥**

**ப₃ஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந்மாம் ப்ரபத்₃யதே ।**
**வாஸுதே₃வ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுது₃ர்லப₄: ॥ 19 ॥**

**ப₃ஹூநாம்** – பல, **ஜந்மநாம்** – பிறவிகளுக்குப் (பிறகு), **அந்தே** – கடைசிப் பிறவியில், **ஜ்ஞாநவாந்** – தத்வஞானம் அடைந்த மனிதன், **ஸர்வம்** – அனைத்தும், **வாஸுதே₃வ:** – வாஸுதேவனே, **இதி** – என்று (இவ்வாறு), **மாம்** – என்னை, **ப்ரபத்₃யதே** – புகலாகக் கொள்கிறான். **ஸ:** – அந்த (அத்தகைய), **மஹாத்மா** – மஹாத்மா, **ஸுது₃ர்லப₄:** – மிகமிக அரிதானவன்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பல பிறவிகளுக்குப் பிறகு கடைசிப் பிறவியில் தத்வஞானம் அடைந்த மனிதன் அனைத்தும் வாஸுதேவனே என்று என்னைப் புகலாகக் கொள்கிறான். அத்தகைய மஹாத்மா மிகமிக அரிதானவன்.

**கேள்வி:** இங்கு, 'பஹூநாம் ஜந்மநாமந்தே' (பல பிறவிகளுக்குப் பின் கடைசிப் பிறவியில்) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எந்தப் பிறவியில் மனிதன் பகவானுடைய ஞானி பக்தனாகிறானோ, அதுவே அவனது கடைசிப் பிறவியாகும். ஏனென்றால், இவ்விதம் பகவானைப் பற்றிய உண்மையான அறிவு பெற்ற பிறகு, அவனுக்கு மீண்டும் பிறப்புக் கிடையாது; அதுவே அவனுடைய கடைசிப் பிறப்பாகும்.

**கேள்வி:** 'பல பிறவிகளில் ஸகாமபாவனையோடு (பயனில் விருப்பத்துடன்) பகவானிடம் பக்தி செய்திருந்துவிட்டு, அதற்குப் பிறகு மனிதன் பகவானே அடையத்தக்கவர் என்று கருதும் ஞானி பக்தனாகிறான்' என்று பொருள் கொண்டால் என்ன தவறு?

**பதில்:** இவ்விதமாகப் பொருள் கொண்டால், பகவானுடைய அர்த்தார்த்தி, ஆர்த்த, ஜிக்ஞாஸு ஆகிய பக்தர்களுக்குப் பல பிறவிகள் என்பது நிச்சயம் என்றாகிவிடும். ஆனால், எந்த வகையைச் சேர்ந்தவரானாலும், தம்மையே எல்லா பக்தர்களும் அடைகிறார்கள் என்று ஆங்காங்கே பகவான் கூறுகிறார் (7/23; 9/25). ஆனால் ஓரிடத்திலும் 'பல பிறவிகள்' என்று நிபந்தனை இடவில்லை. ச்ரத்தையிலும், ப்ரேமையிலும் உள்ள குறைவு காரணமாக ஸாதனை தளர்ந்து போனால் பல பிறவிகள் எடுக்கத்தான் வேண்டியிருக்கும். ஆனால், ச்ரத்தை – ப்ரேமையின் அளவு மேலும் அதிகமாகி ஸாதனையில் தீவிரம் ஏற்பட்டால் ஒரே பிறவியில் பகவானை அடைய முடியும். இதில் காலவரையறை எதுவும் இல்லை.

**கேள்வி:** இங்கு 'ஜ்ஞானவாந்' என்ற சொல் யாரைக் குறிப்பிடுகிறது?

**பதில்:** இந்த அத்யாயத்தின் இரண்டாவது ச்லோகத்தில், 'விஞ்ஞானத்தோடு கூடிய எந்த ஞானத்தை அறியவேண்டும்' என்று புகழ்ந்து கூறியிருந்தாரோ, எந்த ப்ரேமையுள்ள பக்தர் அந்த விஞ்ஞானத்தோடு கூடிய ஞானத்தை அடைந்துவிட்டாரோ, மேலும் மூன்றாவது ச்லோகத்தில் 'யாரோ ஒருவன் என்னை உண்மையாக அறிந்து கொள்கிறான்' என்று எவரைக் குறித்துச் சொன்னாரோ, அவரையே 'ஜ்ஞானவாந்' என்று குறிப்பிடுகிறார். அதனால்தான் 18வது ச்லோகத்தில் 'அவன் என் ஸ்வரூபம்' என்று பகவான் கூறியிருக்கிறார்.

**கேள்வி:** 'அனைத்தும் வாஸுதேவனே' என்று பகவானை வழிபடுதல் என்றால் என்ன?

**பதில்:** உலகம் முழுவதும் பகவான் வாஸுதேவனின் வடிவமே; வாஸுதேவனைத் தவிர வேறு எதுவும் இல்லவே இல்லை என்னும் தத்வம் நேரிடையாகவும், உறுதியாகவும் அனுபவத்திற்கு வந்து நிலைத்திருப்பதுதான் 'அனைத்தும் வாஸுதேவன்' என்று வழிபடுவதன் பொருள் ஆகும்.

**கேள்வி:** 'அத்தகைய மஹாத்மா மிகவும் அரிதானவர்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** முதலாவதாக, உலகில் மக்களுக்கு பகவானிடம் ஈடுபாடு ஏற்படுவதில்லை. ஆயிரக்கணக்கானவர்களில் யாரோ ஒருவருக்குத்தான் ஈடுபாடு தோன்றுகிறது. அவரும் தமது இயல்புக்கு வசப்பட்டு, முயற்சி சிதறி, வழிபாட்டைக் கைவிட்டு விடுகிறார். யாரோ ஒருவர் முனைப்புடன் முயற்சி செய்தாலும், ச்ரத்தை–பக்திக் குறைவினால், ஆசைகளின் வெள்ளத்தில் மூழ்கிப் போய், பகவானைப் பற்றிய உண்மையான அறிவை அடைவதில்லை. இதிலிருந்து உலகில் பகவானை உள்ளபடி அறியும் மஹாபுருஷர்கள் மிகச் சிலரே இருப்பார்கள் என்பது நிருபணமாகிறது. அதனால் 'இத்தகைய மஹாத்மா மிகவும் அரிதானவர்' என்பதை அறிந்து கொள்ள வேண்டும். இத்தகைய மஹாத்மாவை ஒருவன் அடைந்துவிட்டால், அவன் பெரும் நன்மையை அடைந்தவன் என்று கருதவேண்டும். தேவரிஷி நாரதர்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



'மஹத்ஸங்க₃ஸ்து து₃ர்லபே₄ர஽க₃ம்யோ஽மோக₄ஶ்ச ।'

(நாரத₃ ப₄க்திஸூத்ரம் 39)

'மஹான்களுடைய ஸங்கம் கிடைத்தற்கரியது; அறிய முடியாத பெருமை உடையது; வீண் போகாதது' என்று கூறியிருக்கிறார்.

பொருத்தம்: பதினைந்தாவது ச்லோகத்தில் அஸுரத்தன்மை கொண்ட அறிவிலிகள் பகவானை வழிபடுவதில்லை என்றும், பதினாறிலிருந்து பத்தொன்பது வரை புண்யசாலிகள் (ஸுக்ருதிந:) பகவானை வழிபடுகிறார்கள் என்றும் சொன்னார். இனி, புண்யசாலிகளாக இருந்தும்கூட, ஆசை வசப்பட்டுத் தத்தம் இயல்புகளுக்கேற்ப வேறு வேறான தெய்வங்களை உபாஸிப்பவர்களைப் பற்றி பகவான் கூறுகிறார்—

**कामैस्तैस्तैर्हृतज्ञानाः प्रपद्यन्तेऽन्यदेवताः ।**
**तं तं नियममास्थाय प्रकृत्या नियताः स्वया ॥ २० ॥**

**காமைஸ்தைஸ்தைர்ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்₃யந்தே஽ந்யதே₃வதா: ।**
**தம் தம் நியமமாஸ்தா₂ய ப்ரக்ருத்யா நியதா: ஸ்வயா ॥ 20 ॥**

**தை: தை:** – அந்தந்த, **காமை:** – போகப் பொருட்களில் ஏற்படும் ஆசையினால், **ஹ்ருத ஜ்ஞாநா:** – ஞானம் அபஹரிக்கப்பட்டவர்கள் (அதாவது அறிவிழந்தவர்கள்), **ஸ்வயா** – தம்முடைய, **ப்ரக்ருத்யா** – இயல்பினால், **நியதா:** – தூண்டப்பட்டு, **தம் தம்** – அந்தந்த, **நியமம்** – நியமங்களை, **ஆஸ்தா₂ய** – கைக்கொண்டு, **அந்ய தே₃வதா:** – மற்ற தேவதைகளை, **ப்ரபத்₃யந்தே** – புகலாகக் கொள்கிறார்கள் (வழிபடுகிறார்கள்).

அந்தந்த போகப் பொருட்களில் ஏற்படும் ஆசையினால் அறிவிழந்தவர்கள் தம்முடைய இயல்பினால் தூண்டப்பட்டு அந்தந்த நியமங்களைக் கைக்கொண்டு மற்ற தேவதைகளைப் புகலாகக் கொள்கிறார்கள் – வழிபடுகிறார்கள்.

**கேள்வி:** *இங்கு, 'தை:' என்ற சொல்லை இருமுறை கூறுவதன் கருத்து என்ன? 'ஆசையினால் அறிவிழத்தல்' என்றால் என்ன?*

**பதில்:** 'தை: தை:' என்றால் அந்தந்த என்று பொருள். 'தை:' என்ற சொல்லை இருமுறை கூறியதன் மூலம், எல்லோருடைய ஆசைகளும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை என்பதைக் காட்டுகிறார். புலன் நுகர்ச்சியில் உள்ள அத்தகைய ஆசையில் மயங்கியுள்ள மனிதர்களிடம், 'நான் யார்? என்னுடைய கடமை என்ன? ஈசுவரனுக்கும், ஜீவனுக்கும் உள்ள உறவு என்ன? எதற்காக மனிதப் பிறவி கிடைத்திருக்கிறது? பிற உடல்களைக் காட்டிலும் இதற்கு என்ன பெருமை' என்ற சிந்தனை வருவதில்லை. போகங்களில் தன்னை இழக்காமல், இறை வழிபாடு செய்வதில்தான் தன்னுடைய ஆன்மிக உயர்வு இருக்கிறது என்ற விவேகம் இருப்பதில்லை. இவ்விதமாக விவேகத்திறன் மழுங்கிப் போவதுதான் 'ஆசையினால் அறிவிழத்தல்' என்பதாம்.

**கேள்வி:** *15வது ச்லோகத்தில் 'மாயயா அபஹ்ருதஜ்ஞாநா:' (மாயையால் அறிவிழந்தவர்கள்) என்று சொல்லப்பட்டவர்களுக்கும், 'தை: தை: காமை: ஹ்ருதஜ்ஞாநா:' (அந்தந்த ஆசைகளால் அறிவிழந்தவர்கள்) என்று இங்கே கூறப்படுகிறவர்களுக்குமிடையே என்ன வேற்றுமை?*

**பதில்:** 15வது ச்லோகத்தில் விவரிக்கப்பட்டவர்களை பகவான், பாபாத்மாக்கள், மூடர்கள், இழிந்த மனிதர்கள், அஸுரத்தன்மை படைத்தவர்கள் என்று சொல்லியிருக்கிறார்; அவர்கள் அஸுர இயல்பு உடையவர்களாதலால் தமோ குணம் மிக்கவர்கள்; நரகத்தில் விழப் போகிறவர்கள் (16/16,19). இங்கு விதவிதமான ஆசைகளால் எவர்களுடைய அறிவு இழக்கப்பட்டுவிட்டதோ, அவர்கள் தேவதைகளை வணங்குகிற பக்தர்கள்; நம்பிக்கை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உடையவர்கள்; தேவலோகத்துக்குப் போகப் போகிறவர்கள் (7/23, 9/25); ராஜஸம் கூடிய ஸாத்விகர்கள். ஆகவே, இருவருக்குமிடையே நிறைய வேற்றுமை இருக்கிறது.

**கேள்வி:** 'ஸ்வயா ப்ரக்ருத்யா' (தம் இயல்பு) என்று எதைக் கூறுகிறார்? 'நியதா:' (அதனால் தூண்டப்பட்டு) என்றால் என்ன?

**பதில்:** பல பிறவிகளில் செய்த வினைகளின் ஸம்ஸ்காரங்கள் உள்ளத்தில் பதிந்து ஸ்வபாவமாக அமைகின்றன. இந்த ஸ்வபாவம் ஒவ்வொரு ஜீவனுக்கும் மாறுபட்டு இருக்கும். அந்தந்த ஸ்வபாவத்திற்கு ஏற்றவாறு அவர்களுக்கு தெய்வ ஈடுபாடு அமையும். பூஜை முறைகளும் மாறும். இதைத்தான் 'இயல்பினால் தூண்டப்பட்டு' என்கிறார்.

**கேள்வி:** 'அந்தந்த நியமங்களைக் கைக் கொண்டு மற்ற தேவதைகளை வழிபடுதல்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** சாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ள சூரியன், சந்த்ரன், அக்னி, இந்த்ரன், மருத், யமன், வருணன் முதலிய தேவதைகளைப் பகவானிடமிருந்து வேறுபட்டவர்களாக எண்ணி, எந்த தேவதையை, எந்த நோக்கம் நிறைவேறவேண்டும் என்பதற்காக, எந்த முறையில், உபாஸனைக்குரிய ஜபம், த்யானம், வழிபாடு, நமஸ்காரம், ந்யாஸம், ஹோமம், வ்ரதம், உபவாஸம் முதலியன செய்யவேண்டும் என்று கூறும் சட்டதிட்டங்களை ஏற்றுக் கடைப்பிடித்து, மிக்க விழிப்புணர்வுடன் அவற்றைக் கட்டிக் காத்தபடியே அந்த தேவதைகளை ஆராதிப்பதைத்தான் 'அந்தந்த நியமங்களைக் கைக் கொண்டு பிற தேவதைகளை வழிபடுவது' என்று கூறுகிறார். ஆசை, இஷ்ட தேவதை ஆகியவற்றின் வேறுபாட்டுக்கேற்ப பூஜை முதலிய நியமங்களில் வேறுபாடு இருப்பதால், 'தம்' என்ற சொல் இருமுறை கையாளப்பட்டிருக்கிறது.

மற்றுமொரு விஷயம்: பகவானிடமிருந்து வேறானவர் என்று கருதிப் பிற தேவதைகளைப் பூஜை செய்வதால்தான், அந்த வேறான தேவதைகளுக்குப் பூஜையாகிறது. அந்தத் தேவதைகளைப் பகவானின் வடிவங்களாகவே உணர்ந்து, பகவானுடைய ஆணைப்படி, பயனில் ஆசையில்லாமல் பகவத்ப்ரீதி என்றே அவர்களைப் பூஜை செய்தால், அந்த பூஜை பிற தேவதைகளுக்கு என்று ஆகாமல் பகவானைப் பூஜை செய்ததாகவே ஆகிவிடும்; அதன் பயனும் பகவானை அடைதல் என்பதாகவே இருக்கும்.

**பொருத்தம்: இனி வரும் இரண்டு ச்லோகங்களில், தேவதையை வழிபடுகிறவர்களுக்கு அவர்களுடைய உபாஸனைக்கான பயன் என்ன என்பதையும், அது எப்படிக் கிடைக்கிறது என்பதையும் விளக்குகிறார்—**

**यो यो यां यां तनुं भक्तः श्रद्धयार्चितुमिच्छति ।**
**तस्य तस्याचलां श्रद्धां तामेव विदधाम्यहम् ॥ २१ ॥**

**யோ யோ யாம் யாம் தநும் ப₄க்த: ஶ்ரத்₃த₄யார்சிதுமிச்ச₂தி ।**
**தஸ்ய தஸ்யாசலாம் ஶ்ரத்₃தா₄ம் தாமேவ வித₃தா₄ம்யஹம் ॥ 21 ॥**

**ய: ய:** – எந்தெந்த, **ப₄க்த:** – ஸகாம பக்தன் (பயனில் விருப்பங்கொண்ட பக்தன்), **யாம் யாம்** – எந்தெந்த, **தநும்** – தேவதையின் ஸ்வரூபத்தை, **ஶ்ரத்₃த₄யா** – ச்ரத்தையுடன், **அர்சிதும்** – பூஜிக்க, **இச்ச₂தி** – விரும்புகிறானோ, **தஸ்ய தஸ்ய** – அந்தந்த பக்தனுக்கு, **ஶ்ரத்₃தா₄ம்** – ச்ரத்தையை, **அஹம்** – நான், **தாம் ஏவ** – அந்த தேவதையிடமே, **அசலாம்** – ஸ்திரமாக (அசையாததாக), **வித₃தா₄மி** – செய்கிறேன்.

எந்தெந்த ஸகாம பக்தன் (பயன்களை அடைய விருப்பங்கொண்ட பக்தன்) எந்தெந்த தேவதையின் ஸ்வரூபத்தை சரத்தையுடன் பூஜிக்க விரும்புகிறானோ, அந்தந்த பக்தனுக்கு ச்ரத்தையை நான் அந்த தேவதையிடமே அசையாததாகச் செய்கிறேன்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'பக்த:' என்னும் சொல்லுடன் 'ய:' என்பதையும், 'தநும்' என்ற சொல்லுடன் 'யாம்' என்பதையும் இருமுறை கையாண்டிருப்பதன் கருத்து என்ன?

**பதில்:** 'ய:' (எவன்) என்பதை இருமுறை கூறியதால் பக்தர்கள் பலவகையினர் என்றும், 'யாம்' (எந்த) என்பதை இருமுறை கூறியதால் தேவதைகள் பலர் என்றும் காட்டப்பட்டிருக்கின்றன. அதாவது, ஸகாம பக்தர்கள் பல வகையாக இருக்கிறார்கள்; அவரவர்கள் விருப்பம், இயல்பின் வேறுபாடுகளால் அவர்களுடைய இஷ்டதேவதைகளும் வெவ்வேறாக இருக்கின்றனர் என்பது கருத்து.

**கேள்வி:** 'தேவதையின் ஸ்வரூபங்களை ச்ரத்தையுடன் பூஜிக்க விரும்புகிறார்கள்' – இதன் உட்கருத்து என்ன?

**பதில்:** 'தேவதைகள் உண்டு' என்று மனதார நம்பி அவற்றினுடைய ப்ரபாவம், குணங்கள், வழிபாட்டு முறைகள் இவற்றிலும், அவற்றினால் கிடைக்கும் பயன்களிலும் முழுமையான நம்பிக்கை கொண்டு, ச்ரத்தையுடன் எந்த தேவதைக்கு எப்படிப்பட்ட உருவ அமைப்புக் கூறப்பட்டுள்ளதோ, அதேமாதிரியாக உலோகம், மரம், மண், கல் முதலியவற்றில் சிலைகளாக வடித்து, அவற்றிலோ, வண்ணப்படங்களிலோ முறைப்படி ஆவாஹனம் செய்கிறார்கள்; அல்லது உள்ளத்தில் அந்த தேவதையின் வடிவத்தைக் கற்பித்து, எந்த மந்திரத்தை, எத்தனை முறை ஜபம் செய்ய வேண்டுமோ, எந்தெந்தப் பொருட்களைக் கொண்டு வழிபாடு செய்ய வேண்டுமோ, விதிமுறைப்படி அவ்விதமே செய்து, தேவதைகளைக் குறித்து அக்னியில் ஹவி சொரிதலாகிய வேள்வியைச் செய்தல், அவர்களை த்யானம் செய்தல், சூரிய–சந்த்ர–அக்னி ஆகிய கண்ணுக்குப் புலப்படும் ப்ரத்யக்ஷ தேவதைகளைப் பூஜித்தல், இவற்றிற்கெல்லாம் நூன்முறைப்படி நமஸ்காரம் முதலியன செய்தல் இவையே, 'தேவதையின் ஸ்வரூபங்களை ச்ரத்தையுடன் பூஜித்தல்' ஆகும்.

**கேள்வி:** 'தாம்' என்ற சொல்லை, 'ச்ரத்தாம்' என்பதுடன் இணைக்காமல், 'தேவதையின் ஸ்வரூபத்தை' (தநும்) உணர்த்துவதாகக் கொள்ளப்பட்டிருப்பது ஏன்?

**பதில்:** ச்லோகத்தின் முதல் வரியில் 'யாம் யாம்' (எந்தெந்த) என்ற சொற்களுக்கு 'தேவதையின் ஸ்வரூபம்' (தநும்) என்ற சொல்லோடு உள்ள தொடர்புக்கேற்றபடி பொருள் செய்வதற்காக, 'தாம்' என்பதும் 'தநும்' என்பதையே தெரிவிப்பதாகக் கொள்வதுதான் பொருத்தமாகப்படுகிறது. 'ச்ரத்தாம்' என்பதுடன் அதை இணைத்துப் பார்த்தாலும், பொருளில் எந்த வேறுபாடும் உண்டாகவில்லை; ஏனென்றால், அந்த ச்ரத்தையும் தேவதையைக் குறித்ததாகவே கொள்ள வேண்டியிருக்கும்.

**கேள்வி:** இங்கு, 'ஏவ' என்பதன் கருத்து என்ன?

**பதில்:** 'எந்த பக்தன், எந்த தேவதையைப் பூஜை செய்ய விரும்புகிறானோ, அவனுடைய அந்த ச்ரத்தையை, அந்த இஷ்டதேவதையிடமே நான் நிலைபெறச் செய்துவிடுகிறேன்' என்ற விஷயத்தை, 'ஏவ' என்ற சொல்லை உபயோகப்படுத்தியதன் மூலம் பகவான் விளக்கிக் காட்டுகிறார்.

**स तया श्रद्धया युक्तस्तस्याराधनमीहते।**
**लभते च ततः कामान्मयैव विहितान्हि तान्॥ २२॥**

**ஸ தயா ஶ்ரத்₃த₄யா யுக்தஸ்தஸ்யாராத₄நமீஹதே ।**

**லப₄தே ச தத: காமாந்மயைவ விஹிதாந்ஹி தாந் ॥ 22 ॥**

**ஸ:** – அந்த மனிதன், **தயா** – அந்த, **ஶ்ரத்₃த₄யா** – ச்ரத்தையுடன், **யுக்த:** – கூடியவனாக, **தஸ்ய** – அந்த தேவதையினுடைய, **ஆராத₄நம்** – பூஜையை, **ஈஹதே** – செய்கிறான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ச** – மேலும், **தத:** – அந்த தேவதையிடமிருந்து, **மயா ஏவ** – என்னாலேயே, **விஹிதாந்** – நிர்ணயம் செய்யப்பட்டுள்ள, **தாந்** – அந்த, **காமாந்** – விரும்பிய போகங்களை, **ஹி** – ஸந்தேஹமின்றி, **லப₄தே** – அடைகிறான்.

அந்த மனிதன் அந்த ச்ரத்தையுடன் கூடியவனாக அந்த தேவதையினுடைய பூஜையை செய்கிறான். மேலும் அந்த தேவதையிடமிருந்து என்னாலேயே நிர்ணயம் செய்யப்பட்டுள்ள அந்த விரும்பிய போகங்களை ஸந்தேஹமின்றி அடைகிறான்.

**கேள்வி:** *இந்த ச்லோகத்தில் பகவான் கூறும் பொருள் என்ன?*

**பதில்:** "நானே உறுதியாக வளர்த்த ச்ரத்தையினால், அந்த தெய்வத்தை அவனது முறைப்படி வழிபடுகிறான். அப்படி வழிபட்டதன் பயனாக அந்த தெய்வத்தின் மூலம் அவன் விரும்பிய ஆசை நிறைவேறுகிறது. அப்படி அவன் பெறும் பயனை நானே முன்னால் தீர்மானித்து விடுகிறேன். என் திட்டத்திற்கு அதிகமாகவோ, குறைத்தோ கொடுப்பதற்கு அந்த தெய்வத்திற்கு அதிகாரம் இல்லை. அரசு நிர்வாஹத்தில் ஒருவன் செய்யும் பணிக்கான வெகுமதியைச் சட்டம் இடம் தரும் அளவுதான் அதற்குப் பொறுப்பான அதிகாரி கொடுக்க முடியும். மற்ற தேவதைகளின் நிலையும் அந்த அதிகாரிகளின் நிலைக்கு நிகரானதுதான்.

**கேள்வி:** *இந்த ச்லோகத்தில் 'ஹிதாந்' என்ற சொல்லை 'காமாந்' என்ற பதத்திற்கு அடைமொழியாக ஏற்றுக் கொண்டு, நன்மை செய்யும் போகங்களைக் கொடுக்கின்றன என்று பொருள் கொண்டால் என்ன தவறு?*

**பதில்:** இப்படிப் பொருள் கொள்வது சரியாகத் தோன்றவில்லை. ஏனென்றால், ச்லோகத்தில் உள்ள 'காம' (ஆசை) என்ற சொல்லால் குறிப்பிடப்படுகிற போக வஸ்துக்கள், உண்மையில் யாருக்கும் நன்மையைச் செய்வன அல்ல.

**பொருத்தம்: இனி, மேலே கூறியபடி பிற தேவதைகளை உபாஸிப்பதால் ஏற்படும் பயன்கள் அழியக் கூடியவை என்றும், பகவானை உபாஸிப்பதால் ஏற்படும் பயனின் பெருமை இன்னது என்றும் எடுத்துக் கூறுகிறார்—**

**अन्तवत्तु फलं तेषां तद्भवत्यल्पमेधसाम्।**
**देवान्देवयजो यान्ति मद्भक्ता यान्ति मामपि॥ २३॥**

**அந்தவத்து ப₂லம் தேஷாம் தத்₃ப₄வத்யல்பமேத₄ஸாம் ।**

**தே₃வாந்தே₃வயஜோ யாந்தி மத்₃ப₄க்தா யாந்தி மாமபி ॥ 23 ॥**

**து** – ஆனால், **அல்பமேத₄ஸாம்** – சிற்றறிவு படைத்தவர்களாகிய, **தேஷாம்** – அவர்களுடைய, **தத்** – அந்த, **ப₂லம்** – பயன், **அந்தவத்** – அழிவுடையதாக, **ப₄வதி** – ஆகிறது. **தே₃வ யஜ:** – (அவ்வாறே வேறு) தேவதைகளைப் பூஜிப்பவர்கள், **தே₃வாந்** – (அந்த) தேவதைகளை, **யாந்தி** – அடைகிறார்கள். (மேலும்), **மத்₃ப₄க்தா:** – என்னுடைய பக்தர்கள் (எவ்விதம் வழிபட்டாலும் முடிவில்), **மாம் அபி** – என்னையே, **யாந்தி** – அடைகிறார்கள்.

ஆனால் சிற்றறிவு படைத்தவர்களாகிய அவர்களுடைய அந்தப்பயன் அழிவுடையதாக ஆகிறது. அவ்வாறே வேறு தேவதைகளைப் பூஜிப்பவர்கள் அந்த தேவதைகளை அடைகிறார்கள். மேலும் என்னுடைய பக்தர்கள் எவ்விதம் வழிபட்டாலும் முடிவில் என்னையே அடைகிறார்கள்.

**கேள்வி:** *15வது ச்லோகத்தில் மூடர்கள் என்று கூறப்பட்டவர்களுக்கும், தேவதைகளை உபாஸிக்கின்ற சிற்றறிவு உள்ளவர்கள் என்று இங்கே கூறப்படுபவர்களுக்கும் என்ன வேற்றுமை? ஏன் இவர்களைச் சிற்றறிவு படைத்தவர்கள் என்று கூறுகிறார்?*

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** 15வது ச்லோகத்தில் சொல்லப்பட்டவர்கள் பக்தியே செய்யாதவர்கள், பாவச் செயலில் ஈடுபடுபவர்கள், அறிவற்றவர்கள், அஸுர ஸ்வபாவம் உள்ளவர்கள். இவர்களை மூடர்கள் என்று சொன்னார். இங்கே கூறப்படும் சிற்றறிவு படைத்தவர்கள் பாவம் செய்பவர்கள் அல்லர். சாஸ்த்ர முறைப்படி தெய்வங்களை (தேவதைகளை) உபாஸிப்பவர்கள், முன் சொன்னவர்களைக் காட்டிலும் மிக உயர்ந்தவர்கள். அஸுர ஸ்வபாவம் உள்ளவர்கள் அல்லர்; மூடர்களும் அல்லர். ஆனால், போகங்களில் ஆசை கொண்டு, பகவானை மற்ற தெய்வங்களைக் காட்டிலும் வேறாக எண்ணி, போக வஸ்துக்களைப் பெறுவதற்காக அந்த தெய்வங்களை உபாஸிக்கிறவர்கள். ஆகவே, உண்மையான பக்தர்களைக் காட்டிலும் தாழ்ந்தவர்கள். அதனால் சிற்றறிவு படைத்தவர்கள். இவர்கள் முழு அறிவுடையவர்களாக இருந்தால் 'எல்லா தெய்வங்களின் வடிவங்களிலும் பகவான்தான் இருக்கிறார்; மற்ற தெய்வங்களைப் பூஜிப்பதெல்லாம் பகவானையே போய்ச் சேருகிறது; பகவான்தான் எல்லா தெய்வங்களுக்கும் ஒரே ஈசுவரன்' (5/29; 9/24) என்பதைப் புரிந்து கொண்டிருப்பார்கள். அவர்களுடைய புத்தி குறைவாக இருப்பதால்தான் மிகப் பெரிய கர்மங்களான வேள்வி முதலியவற்றை மிகவும் சிரமப்பட்டுச் செய்தும்கூட மிகச் சிறியதும், அழியக்கூடியதுமான பயனையே பெறுகிறார்கள். அவர்கள் புத்திமான்களாக இருந்தால் பகவானுடைய ப்ரபாவத்தை அறிந்து பகவானை உத்தேசித்தே இந்த உபாஸனையைப் புரிந்திருப்பார்கள். அல்லது எல்லா தெய்வங்களும் பகவானுடைய ஸ்வரூபம்தான் என்றறிந்து பகவானது உகப்புக்காக அந்தந்த தெய்வங்களை உபாஸித்திருப்பார்கள். அப்படிச் செய்திருந்தால் இவ்வளவு பாடுபட்டதற்குப் பயனாக அந்தப் பெரியதும், மிகவும் அரிதானதுமான 'பகவானை அடைவது' என்ற பயனைப் பெற்று க்ருதக்ருத்யர் (செய்ய வேண்டியதைச் செய்தவர்கள்) ஆகியிருப்பார்களே! இதைச் சுட்டிக்காட்டத்தான் இவர்களைச் சிற்றறிவுடையோர் என்று குறிப்பிட்டார்.

**கேள்வி:** *தெய்வங்களை அடைவது என்றால் என்ன? தெய்வங்களைப் பூஜிப்பவர்கள் அனைவரும் அந்தந்த தெய்வங்களை அடைவார்களா? தெய்வங்களின் உபாஸனையின் பயன் முடிவுள்ளது என்று ஏன் கூறுகிறார்?*

**பதில்:** உபாஸிக்கும் தெய்வத்தின் அண்மையை அடைவது ஸாமீப்யம். தெய்வத்தைப் போன்ற உருவத்தைப் பெறுவது ஸாரூப்யம். அங்குள்ள போகங்களை அனுபவிப்பதுதான் அந்தந்த தெய்வங்களை அடைவது ஆகும். தெய்வ உபாஸனைக்கு மிகச் சிறந்த பயன் இதுதான். ஆனால் அந்த தெய்வத்தை உபாஸிப்பவர்கள் அனைவருக்கும் இந்தப் பயன் கிட்டாது. மனைவி, மக்கள், செல்வம், மதிப்பு, கீர்த்தி முதலிய அற்பமானவையும், நொடியில் அழிபவையுமான பயன்களைக் கருதி, பலர் அந்தந்த தெய்வங்களை உபாஸிப்பார்கள். அவர்கள் அந்தந்த விருப்பங்களை அடையலாம். உலகியல் போகங்களைக் காட்டிலும், அந்த தெய்வத்தின் ப்ரீதியே சிறந்த பயன் என்று கருதி, அந்த தெய்வத்திடம் மிகுந்த ச்ரத்தையுடனும், மிகுந்த பக்தியுடனும் மிகச் சிலர் உபாஸனை செய்து கடைசிக் கணத்தில் அந்த தெய்வத்தையே நினைத்து உயிரைவிட்டால், அவர்கள் அந்த தெய்வ லோகத்திற்குப் போகலாம். அப்படிக் கிடைத்த அந்த தெய்வ லோகமும்; அங்கே பெறும் ஸாமீப்யம், ஸாரூப்யம் முதலிய போகங்களும்கூட ஒரு நாள் அழியக்கூடியவைதான் என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும் என்பதைத்தான் இங்கே அவர்கள் பெறும் பயன் 'முடிவுள்ளது' (அந்தவத்) என்று கூறுகிறார்.

**கேள்வி:** *அப்படியானால் பகவானை அடைவது என்றால் என்ன? பகவானுடைய ஆர்த்தர் முதலிய பக்தர்கள் பகவானை எப்படி அடைவார்கள்? ச்லோகத்தில் 'அபி' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** பகவானுடைய நித்யமானதும், தெய்விகமானதுமான பரமபதத்தில் இடைவிடாது என்றும் பகவானுடைய சமீபத்தில் வாழ்வது அல்லது பகவானுடன் இரண்டறக் கலந்துவிடுவது ஆகிய இரண்டையும் 'பகவானை அடைவது' என்ற சொல்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



குறிக்கும். பகவானுடைய ஞானிகளான பக்தர்களின் பார்வையில் அகில உலகமுமே பகவானுடைய ஸ்வரூபம்தான். ஆகவே, இங்கேயே, இப்பொழுதே அவர்கள் பகவானுடன் வாழ்கிறார்கள். அவர்கள் பகவானை அடைந்து விட்டார்கள். அவர்களைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. ஜிக்ஞாஸுவான பக்தன் பகவானைத் தத்வரீதியாக அறிய விரும்புகிறான். அவனுக்கு பகவானுடைய தத்வ ஞானம் ஏற்பட்டவுடனேயே அவன் பகவானை அடைகிறான். மீதமிருப்பவர்களான அர்த்தார்த்தி, ஆர்த்த பக்தர்கள். இவர்களும்கூட பகவானுடைய க்ருபையாலே பகவானை அடைந்து விடுவார்கள். பகவான் பரம க்ருபாளு ஆயிற்றே! உற்ற நண்பனாயிற்றே! பக்தனுக்கு எவ்விதம் மங்களம் உண்டாகுமோ, எவ்விதம் விரைவில் தம்மிடம் வந்து சேர்வானோ, பகவான் அப்படி அவனை நடத்துகிறார். பக்தனுடைய எந்த ஒரு விருப்பம் நிறைவேறுவதாலோ, எந்த ஒரு ஸங்கடம் தீர்வதாலோ, பக்தனுக்குக் கெடுதி நேருமோ (பக்தன் மோஹவசப்பட்டு, விளைவை அறியாமல் ப்ரார்த்தனை பண்ணினாலும்கூட), பகவான் அந்த விருப்பத்தைப் பூர்த்தி செய்வதும் இல்லை; அந்த ஸங்கடத்தைப் போக்குவதும் இல்லை. எந்த விருப்பத்தைப் பூர்த்தி செய்தால், எந்த ஸங்கடத்தைத் தீர்த்து வைத்தால், பக்தனுக்குத் தம்மிடம் நம்பிக்கையும், பக்தியும் வளருமோ, அந்த விருப்பத்தை நிறைவேற்றுவார். அந்த ஸங்கடத்தைப் போக்குவார். அதனால்தான் பகவானுடைய பக்தர்கள் தம் விருப்பங்களை நிறைவேற்றிக் கொண்டபடியே, தம் ஸங்கடங்களைத் தீர்த்துக் கொண்டபடியே பகவானை அடைந்து விடுகிறார்கள். இதைத்தான் 'அபி' என்ற சொல் குறிக்கிறது

ஒருவன் ஏதோ ஒரு நோக்கத்துடன் பக்தியின் மூலம் பகவானுடன் தொடர்பு கொண்டுவிட்டால், அவன் அதைத் துண்டித்துக் கொள்ள விரும்பினாலும், பகவான் இசைவதில்லை. பகவானது இனிய இயல்பு அத்தகையது. அந்த பக்தியோ எனில் பக்தனின் விருப்பத்தை நிறைவேற்றிய பின்னரும், அவ்விருப்பம் அவனுக்கு ஊறு விளைவிக்குமாயின் அதை நிறைவேற்றாதொழிந்த பின்னரும் கூட அழிவதில்லை. அவனது உள்ளத்தில் ஒளிந்துறைந்து, வாய்ப்பு நேர்ந்ததும் பகவானிடமே இழுத்துக் கொண்டு சென்றுவிடும் தகைமை வாய்ந்தது. ஏதோ ஒரு காரணத்தால் ஒருமுறை ஒருவன் அதைப் பெற்றுவிட்டால், பல பிறவிகள் கழிந்தாலும் அவனுக்கு பகவானைப் பெற்றுத் தரும்வரை அந்த பக்தி ஓய்வதில்லை. இதுவே பக்தியின் பெருமை. மேலும், இப்படி பகவானை அடைந்துவிட்ட பக்தன் பகவானை விட்டுப் பிரிவது என்பது ஒருகாலும் இல்லை. ஆகவே பக்தி, பக்தன், பகவான் மூவரும் ஒன்றேயாகிவிடுகின்றனர்.

**பொருத்தம்: பகவான் இவ்வளவு பேரன்பு கொண்ட அருட்கடலாக இருந்து கொண்டு ஏதாவது ஒருவிதத்தில் தன்னை பக்தி பண்ணினவனைத் தன்னிடம் ஈர்த்துத் தன் ஸ்வரூப ப்ராப்தியை அளிக்கிறார் என்றால், ஏன் எல்லோரும் பகவானை வழிபடுவதில்லை என்ற கேள்விக்கு விடை தருகிறார்—**

**अव्यक्तं व्यक्तिमापन्नं मन्यन्ते मामबुद्धयः ।**
**परं भावमजानन्तो ममाव्ययमनुत्तमम् ॥ २४ ॥**

**அவ்யக்தம் வ்யக்திமாபந்நம் மந்யந்தே மாமபு₃த்₃த₄ய: ।**
**பரம் ப₄ாவமஜாநந்தோ மமாவ்யயமநுத்தமம் ॥ 24 ॥**

**அபு₃த்₃த₄ய:** – அறிவற்றவர்கள், **மம** – என்னுடைய, **அநுத்தமம்** – இணையற்றதும், **அவ்யயம்** – அழிவற்றதும், **பரம்** – மேலானதுமான, **ப₄ாவம்** – தன்மையை, **அஜாநந்த:** – அறிந்து கொள்ளாமல், **அவ்யக்தம்** – மனம், புலன்கள் இவற்றிற்கு அப்பாற் பட்டவனான, **மாம்** – ஸத் சித் ஆனந்தமயமான, பரமாத்மாவான என்னை, **வ்யக்திம்** – கண்களால் காணக்கூடிய தோற்றத்தை, **ஆபந்நம்** – அடைந்தவன் என்று (மனிதனைப்போல பிறப்புள்ளவனாக), **மந்யந்தே** – எண்ணுகிறார்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அறிவற்றவர்கள் என்னுடைய இணையற்றதும், அழிவற்றதும், மேலானதுமான தன்மையை அறிந்து கொள்ளாமல் மனம், புலன்கள் இவற்றிற்கு அப்பாற்பட்டவனான ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவான என்னை மனிதனைப்போல பிறப்புள்ளவனாகக் கண்களால் காணக்கூடிய தோற்றத்தை அடைந்தவன் என்று எண்ணுகிறார்கள்.

**கேள்வி:** இங்கு 'அபுத்தய:' (அறிவற்றவர்கள்) என்ற சொல் எத்தகைய மனிதர்களைக் குறிக்கிறது? 'பகவானுடைய இணையற்ற, அழிவற்ற, உயர்ந்த தன்மையை அறியாதிருத்தல்' என்றால் என்ன?

**பதில்:** பகவானுடைய குணங்கள், ப்ரபாவம், திருநாமம், ஸ்வரூபம், லீலை முதலியவற்றில் நம்பிக்கையற்றவர்கள், மோஹத்திற்கு ஆட்பட்ட புலன்நுகர் பொருட்களால் கவரப்பட்ட, தர்க்கமாகிய வலையில் சிக்குண்ட அறிவுடையவர்கள் இவர்களையே 'அபுத்தய:' (அறிவற்றவர்கள்) என்ற சொல் குறிக்கிறது. இப்படிப்பட்டவர்களுடைய அறிவில், உலகனைத்தும் பகவானுடைய இருவகையான ப்ரக்ருதியின் விரிவாக்கமே என்பதும், அவ்விருவகையான ப்ரக்ருதிகளுக்கும் ஒரே ஆதாரமாக இருப்பதால் பகவானே எல்லோரைக் காட்டிலும் உயர்ந்தவர்; அவரைவிட உயர்ந்தவர் வேறு எவரும் இலர் என்ற விஷயமும் தோன்றுவதே இல்லை. மனதாலும் அறிய முடியாத, சொற்களாலும் கூற முடியாத அவருடைய ஸ்வரூபம், ஸ்வபாவம், உயர்வு, இணையற்ற குணங்கள் ஆகியவை மனிதனுடைய மனம், சொல் மூலமாக உள்ளபடியே அறியவோ, சொல்லவோ முடியாதவை. எல்லையற்ற தம்முடைய கருணை காரணமாகவும், அண்டினோரிடம் உள்ள அன்பு காரணமாகவும், உலகிலுள்ள ப்ராணிகளுக்கு 'ஶரணாகதி' என்னும் ஊன்றுகோலை அளிப்பதற்காகவே, பகவான் தம்முடைய பிறவியின்மை, அழிவின்மை, மஹேசுவர ஸ்வபாவம், செயல்திறன் முதலியவையோடு கூடவே பலவித உருவங்களாக வெளிப்படுகிறார். உலகியலிலிருந்து வேறுபட்ட தம்முடைய லீலைகளால் உலகத்து ப்ராணிகளைப் பரமானந்தப் பேரமைதிக் கடலில் திளைக்கும்படி செய்கிறார். இதுவே, பகவானுடைய நித்யமானதும், உயர்ந்ததும், இணையற்றதுமான தன்மையாக இருக்கிறது. இதனை அறியாதிருத்தலே, 'அவருடைய இணையற்ற அழிவில்லாத பரம தத்வத்தை அறியாதிருத்தல்' ஆகும்.

**கேள்வி:** 'மனதிற்கும், புலன்களுக்கும் அப்பாற்பட்ட என்னை, புலன்களுக்குத் தென்படுபவனாகக் கருதுகிறார்கள்' இதன் கருத்து என்ன?

**பதில்:** பகவானுடைய நிர்குணம், ஸகுணம் ஆகிய இரண்டு உருவங்களுமே நித்யமும், திவ்யமும் ஆகும். சிந்தனைக்கும், உலக இயல்பிற்கும் அப்பாற்பட்ட தெய்விக ஸ்வரூபம், ஸ்வபாவம், ப்ரபாவம், குணங்களோடு கூடியே அவர் மனிதர் முதலான தோற்றங்களில் அவதாரங்களை ஏற்கிறார். மனிதர் முதலிய தோற்றங்களில் அவர் வெளிப்படுவதுதான் அவருடைய 'பிறப்பு'. 'வெளிப்படுகிறார்', 'மறைகிறார்' – அவ்வளவுதான். மறைவதுதான் தம் ஜோதிக்கு (பரமபதம்) எழுந்தருளல் ஆகும். மற்ற ப்ராணிகளைப் போல உடல் எடுத்தல், விடுதல் என்பதாகிய பிறப்பு–இறப்பு அவருக்கு இல்லை. இந்த ரஹஸ்யத்தை அறியாத காரணத்தால், பிறவி எடுப்பதற்கு முன்னால் மற்ற எல்லா ப்ராணிகளும் எங்ஙனம் அவ்யக்தமாக (தோன்றா நிலையில்) இருந்தனவோ, அதாவது அவர்களுக்கு இருப்பு ஏதும் இல்லாதிருந்ததோ, பிறவி எடுத்ததும் அவையே எப்படி இப்போது 'வ்யக்தமாகி' அதாவது இருப்பதாகிவிட்டனவோ, அதே போலத்தான் ஸ்ரீக்ருஷ்ணனும் என அறிவில்லாதவர்கள் எண்ணுகிறார்கள். பிறவிக்கு முன்னால் இல்லாமலே இருந்தவர், இப்போது மதுராபுரியில் பிறந்து வெளிப்படையாகவே கண்ணெதிரில் தெரிகிறார். மற்ற மனிதர்களுக்கும், இவருக்கும் என்ன வேற்றுமை? அதாவது வித்யாஸமே இல்லை. இந்தக் கருத்தையே அறிவில்லாத மனிதர்கள் அவ்யக்தத்திலிருந்து வ்யக்தமாகியிருப்பதாகக் கருதுகிறார்கள் என்று விளக்குகிறார்.

**கேள்வி:** 'அறிவில்லாத மனிதர்கள், அவ்யக்தனான அதாவது நிர்குண–நிராகார பரமேசுவரனாகிய என்னை ஸகுண–ஸாகார மனித வடிவில் வெளிப்படுவதாக எண்ணுகிறார்கள்' – என்று பொருள் கூறினால் என்ன தவறு?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இங்கு இப்படிப் பொருள் கொள்வது பொருந்தாது. பகவானுடைய நிர்குண-ஸகுண, உருவமற்ற-உருவமுள்ள எல்லா ஸ்வரூபங்களும் சாஸ்த்ர ஸம்மதமானவை. பகவானே சொல்கிறார்: 'நான் பிறப்பற்றவன், அழிவற்றவன், பரமாத்மா. என்னுடைய ப்ரக்ருதியான மாயையை ஏறிட்டுக் கொண்டு ஸாதுக்களைக் காப்பதற்காகவும், கொடியோர்களை அழிப்பதற்காகவும், தர்மத்தை நிலைநாட்டுவதற்காகவும் அவ்வப்போது வெளிப்படுகிறேன்' (4/6,7,8). ஆகவே நிர்குணத்திலிருந்து ஸகுண ஸ்வரூபம் வெளிப்படுகிறது என்று நினைப்பவனை புத்தியில்லாதவன் என்று கொண்டால், பகவானின் கூற்றுக்கும், அவதார வாதத்திற்கும், கீதையின் தாத்பர்யத்திற்கும் முரணாகிவிடும்.

**கேள்வி:** 'வ்யக்திமாபந்நம் மாம் அவ்யக்தம் மந்யந்தே' என்று கொண்டு கூட்டி அறிவில்லாத மனிதர்கள், 'வ்யக்திமாபந்நம்' அதாவது மனித வடிவம் கொண்டு புலன்களுக்குப் புலப்படும்படியாக வெளிப்பட்டுள்ள ஸகுண-ஸாகார பகவானாகிய என்னை அவ்யக்தன். அதாவது நிர்குண-நிராகாரன் என்று எண்ணுகிறார்கள் - என்று பொருள் கூறினால் என்ன தவறு?

**பதில்:** இவ்விதம் பொருள் சொல்வதும் சரியாகப்படவில்லை. ஏனென்றால் எந்த பகவான் ஸகுண-ஸாகார வடிவில் தோன்றியுள்ளாரோ, அவரே நிர்குண-நிராகாரரும்கூட. ஆகவே, இந்த உண்மைத் தத்வத்தை அறிந்து கொண்டுள்ள மனிதனை அறிவில்லாதவன் என்று எவ்வாறு சொல்ல முடியும்? 'என்னுடைய அவ்யக்த (நிராகார) வடிவினால், இந்த உலகமனைத்தும் வ்யாபிக்கப்பட்டிருக்கிறது' (9/4) என்று பகவானே புகன்றுள்ளார். ஆதலால், ச்லோகத்தில் என்ன பொருள் சொல்லப்பட்டிருக்கிறதோ, அதுவே சரியானது.

**பொருத்தம்:** **இவ்விதம் மனித வடிவம் கொண்டு தோன்றியுள்ள, அனைத்து ஆற்றல்களும் கொண்ட பகவானை ஒரு ஸாதாரண மனிதனாக மக்கள் ஏன் எண்ணுகிறார்கள்? இதற்கு பகவான் சொல்கிறார்—**

**नाहं प्रकाशः सर्वस्य योगमायासमावृतः।**
**मूढोऽयं नाभिजानाति लोको मामजमव्ययम्॥ २५॥**

**நாஹம் ப்ரகாஶ: ஸர்வஸ்ய யோக₃மாயாஸமாவ்ருத: ।**

**மூடோ₄ऽயம் நாபி₄ஜாநாதி லோகோ மாமஜமவ்யயம் ॥ 25 ॥**

**யோக₃மாயா ஸமாவ்ருத:** – என்னுடைய யோகமாயையால் மறைக்கப்பட்டுள்ள, **அஹம்** – நான், **ஸர்வஸ்ய** – எல்லோருக்கும், **ப்ரகாஶ: ந** – புலப்படுவதில்லை. **அயம்** – இந்த, **மூட₄:** – அறிவற்ற, **லோக:** – மனித ஸமுதாயம், **மாம்** – என்னை, **அஜம்** – பிறப்பற்றவன் என்றும், **அவ்யயம்** – அழிவற்ற பரம்பொருள் என்றும், **ந அபி₄ஜாநாதி** – அறிவதில்லை (நான் பிறப்பு-இறப்பு உள்ளவன் என்றே எண்ணுகின்றனர்).

என்னுடைய யோகமாயையால் மறைக்கப்பட்டுள்ள நான் எல்லோருக்கும் புலப்படுவதில்லை. இந்த அறிவற்ற மனித ஸமுதாயம் என்னைப் பிறப்பற்றவன் என்றும் அழிவற்ற பரம்பொருள் என்றும் அறிவதில்லை. நான் பிறப்பு-இறப்பு உள்ளவன் என்றே எண்ணுகின்றனர்.

**கேள்வி:** 'யோக மாயா' என்ற சொல் எதைக் குறிக்கிறது? 'அதில் மறைக்கப்பட்டுள்ள' என்றால் என்ன பொருள்?

**பதில்:** 4/6ல் பகவான் எதனை 'ஆத்மமாயா' என்று கூறியிருக்கிறாரோ, எந்த யோகசக்தியினால் திவ்ய குணங்களோடு தாமே மனிதன் முதலிய உருவங்களில் வெளிப்பட்டாலும்கூட, உலகப் பார்வையில் பிறவி எடுக்கும் ஸாதாரண மனிதனைப் போலவே காட்சி தருகிறாரோ, அந்த மாயாசக்திக்குப் பெயர்தான் 'யோக மாயா' என்பது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பகல் வேஷக்காரன் வேறொரு வேஷம் போட்டுக் கொண்டு மக்களுக்கு எதிரே வரும்போது தனது உண்மையான உருவத்தை மறைத்துக் கொள்வதைப் போல, பகவான், மனிதன் முதலான வடிவங்களில் அவதாரம் செய்யும்போது, தமது யோகமாயையை நாற்புறங்களிலும் விரித்து, தாம் அதில் மறைந்து கொள்கிறார். இதுவே அவர் யோகமாயையால் தம்மை மறைத்துக் கொள்வதாகும்.

**கேள்வி:** 'நான் எல்லோருக்கும் புலப்படுவதில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவான் யோகமாயையில் ஒளிந்து நிற்கிறார்; ஸாதாரண மனிதனுடைய பார்வை அந்த மாயையாகிற திரைக்கு அப்பால் செல்ல முடியாது. இதன் காரணமாகப் பெரும்பாலான மக்கள், அவரையும் தங்களைப் போன்ற ஸாதாரண மனிதராகவே கருதுகிறார்கள். அதனால்தான், பகவான் அனைவருக்கும் புலப்படுவதில்லை. எவர்கள் பகவானிடம் பேரன்பு கொண்டு அவருடைய திருக்கல்யாண குணங்கள், ப்ரபாவம், ஸ்வரூபம், லீலைகள் இவற்றில் முழுமையான ஈடுபாடும், நம்பிக்கையும் கொள்கிறார்களோ, எவர்களுக்கு பகவான் தம்மை யார் என்று புலப்படுத்த விரும்புகிறாரோ, அவர்களுக்கு மட்டுமே அவர் புலப்படுகிறார்.

**கேள்வி:** ஜீவன் மாயையால் மூடப்பட்டிருக்கிறது என்பது சரி. ஆனால், பகவான் தம் யோகமாயையில் மறைந்திருக்கிறார் என்பதை எப்படி ஏற்றுக் கொள்ள முடியும்?

**பதில்:** 'ஆதவன் மேகங்களால் மறைக்கப்பட்டுள்ளது' என்று கூறுகிறார்கள். ஆனால், உண்மையில் ஆதவன் மறைந்து விடுவதில்லை; மக்களுடைய பார்வையில்தான் மேகத்திரை படுகிறது. உண்மையிலேயே ஆதவன் மறைந்து போயிருந்தால், உலகின் எந்த இடத்திலும் அதனுடைய ஒளி தெரியாது. அது போலவே, பகவான் உண்மையில் மாயையால் மறைக்கப்படுவதில்லை; அப்படி மறைக்கப்பட்டு விடுவாரேயானால், எந்த ஒரு பக்தனுக்கும் அவருடைய உண்மையான காட்சி தோன்றாதே! மூடர்களுக்கு மட்டுமே 'அவர் மறைக்கப்பட்டிருக்கிறார்' என்று சொல்வானேன்? உண்மையில், ஆதவனை உதாரணம் கூறுவதும்கூட பகவானுடைய விஷயத்தில் ஒவ்வாததுதான். ஏனென்றால், எல்லையில்லாத ஒரு வஸ்துவுடன் எல்லைக்குட்பட்ட ஒன்றை ஒப்பிடுவது சரியன்று. மக்களுக்குப் புரிய வைக்க வேண்டும் என்பதற்காகவே இவ்விதம் கூறப்பட்டது.

**கேள்வி:** இங்கு, 'அயம்', 'மூட:' என்ற சொற்களோடு வந்துள்ள 'லோக:' என்பது யாரைக் குறிக்கிறது? அஸுர இயல்புடைய அறிவிலியை (ச்லோ. 15)க் குறிக்கிறதா? போகப் பொருட்களின் மீதான ஆசையினால் அறிவிழந்து, பிற தேவதைகளை வழிபடுகிறவர்களை (ச்லோ. 20)க் குறிக்கிறதா?

**பதில்:** இங்கு 'அயம்' என்ற அடைமொழி இருப்பதால், 'லோக:' (மக்கள்) என்ற சொல், பகவானுடைய பக்தர்களைத் தவிர மிகுந்துள்ள பாவி–புண்யசாலி என்ற பிரிவில்லாமல், அஞ்ஞானத்தில் ஆழ்ந்துள்ள, ஸாதாரண மனிதக் கூட்டத்தையே குறிக்கிறது; எந்த ஒரு தனிப்பிரிவினரையும் அன்று.

**கேள்வி:** 'இந்த அறிவற்ற மனித ஸமுதாயம் என்னைப் பிறப்பற்றவனாகவும், அழிவற்ற பரம்பொருளாகவும் அறிவதில்லை' என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஈடுபாடும், அன்பும் இல்லாத காரணத்தால், பகவானுடைய திருக்குணங்கள், ப்ரபாவம், ஸ்வரூபம், லீலை, ரஹஸ்யம், மஹிமைகள் இவற்றை அறியாத அஞ்ஞானியாகிற பாமர மனிதன் ஸ்ரீக்ருஷ்ணனும் நம்மைப் போலவே மனிதர் என்றும், நம்மைப் போலவே பிறக்கிறார்–இறக்கிறார் என்றும் தவறாக எண்ணுகிறான்' என்பது கருத்து. இவர், பிறப்பு–இறப்பிற்கு அப்பாற்பட்ட நித்ய, ஸத்ய, விஞ்ஞானானந்தச் செறிவான ஸாக்ஷாத் பகவானே என்பது இவர்கள் அறிவுக்கு எட்டுவதில்லை.

**பொருத்தம்:** பகவான், யோகமாயையால் தாம் மறைக்கப்பட்டிருப்பதாகக் கூறினார். கனமான திரைக்கு உள்ளே இருப்பவரை வெளியில் இருப்பவர்கள் காண முடியாதது போலவே, வெளியே இருப்பவர்களையும் உள்ளே இருப்பவர் காண முடியாது தானே! அதுபோல, மக்கள் பகவானை அறியவில்லை என்றால், பகவானும் மக்களை அறிய

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



முடியாது என்பதுதானே சரியாகும்? என்ற கேள்விக்குப் பதிலாக உடனேயே, 'யோகமாயை என்பது எனக்குக் கட்டுப்பட்டது; என்னுடைய சிறப்பான ஆற்றல்; அது என்னுடைய திவ்ய ஞானத்தை மறைக்க முடியாது' என்பதை அடுத்த ச்லோகத்தில் விளக்குகிறார்—

**वेदाहं समतीतानि वर्तमानानि चार्जुन।**
**भविष्याणि च भूतानि मां तु वेद न कश्चन॥ २६॥**

**வேத₃ாஹம் ஸமதீதாநி வர்தமாநாநி சார்ஜுந ।**
**ப₄விஷ்யாணி ச பூ₄தாநி மாம் து வேத₃ ந கஸ்சந ॥ 26 ॥**

**அர்ஜுந** – அர்ஜுன! **ஸமதீதாநி** – முன்பே உயிர் வாழ்ந்து காலமாகிவிட்டவையும், **வர்தமாநாநி ச** – இப்பொழுது இருக்கின்றவையும், **ச** – அவ்வாறே, **ப₄விஷ்யாணி** – இனித் தோன்றப் போகின்றவையும் ஆன, **பூ₄தாநி** – எல்லா உயிரினங்களையும், **அஹம்** – நான், **வேத₃** – அறிவேன். **து** – ஆனால், **கஸ்சந** – எவரும் (ச்ரத்தையும், பக்தியும் இல்லாத எந்த மனிதனும்), **மாம்** – என்னை, **ந வேத₃** – அறிவதில்லை.

அர்ஜுன! முன்பே உயிர் வாழ்ந்து காலமாகிவிட்டவையும், இப்பொழுது இருக்கின்றவையும், அவ்வாறே இனித் தோன்றப் போகின்றவையும் ஆன எல்லா உயிரினங்களையும் நான் அறிவேன். ஆனால் ச்ரத்தையும், பக்தியும் இல்லாத எந்த மனிதனும் என்னை அறிவதில்லை.

**கேள்வி:** இங்கு 'பூதாநி' என்ற சொல் எதைக் குறிக்கிறது? மேலும், 'முன்பு வாழ்ந்து மடிந்துவிட்ட, இப்போது இருக்கின்ற, இனித் தோன்றப் போகின்ற எல்லா உயிரினங்களையும் நான் அறிவேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தேவர்கள், மனிதர்கள், விலங்குகள், பறவைகள், புழுக்கள், பூச்சிகள் என்ற எத்தனை எத்தனை சராசர ப்ராணிகள் உண்டோ அத்தனையையும் சேர்த்து 'பூதாநி' என்று சொல்கிறார். "இவையத்தனையும், இதற்கு முன் கல்பகோடி காலங்களாக ஒவ்வொன்றும் எந்தெந்தப் பிறவிகளை எடுத்தன, எப்படி இருந்தன, அவை என்ன செய்தன, இப்போது எப்படி யாராக எங்கே பிறந்து என்ன செய்து கொண்டிருக்கின்றன, நாளை என்ன ஆகப்போகின்றன – இத்தனையும் நான் அறிவேன்." இப்படிச் சொல்வதுகூட உலகத்தாருக்குப் புரிவதற்காகத்தான். ஏனெனில் பகவானுக்கு இறந்தகாலம், நிகழ்காலம், வருங்காலம் என்ற வேற்றுமைகள் கிடையா. அவருடைய அகண்டமான ஞானத்தில் எல்லாமே, எப்போதுமே நேருக்கு நேரான நிகழ்காலம்தான். உண்மையில் எல்லாக் காலங்களுக்கும் ஆதாரமான மஹாகாலமே அவர்தான். அவருக்குத் தெரியாதது எதுவுமில்லை.

**கேள்வி:** இங்கு 'து' என்பதன் கருத்து என்ன?

**பதில்:** ஜீவர்களை விட பகவானின் அலாதியான சிறப்பைக் காட்டுவதற்காக, 'து' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**கேள்வி:** 'கஸ்சந' என்பது எவரைக் குறிக்கிறது? மேலும் பொருள் கூறும்போது, அதனுடன் கூட, 'ச்ரத்தையும், பக்தியும் இல்லாத மனிதர்' என்பதைச் சேர்த்திருப்பதன் நோக்கம் என்ன?

**பதில்:** இந்த அத்யாயத்தின் 3வது ச்லோகத்தில், 'யாரோ ஒருவன் என்னை உண்மையாக அறிகிறான்' என்று சொல்லியிருக்கிறார். ச்லோகம் 30ல், 'அதிபூதம், அதிதைவம், அதியக்ஞத்தோடு கூடிய என்னை அறிகிறார்கள்' என்றும் பகவான் கூறியிருக்கிறார். இதைத் தவிர, ச்லோகம் 11/54ல், 'அநன்ய பக்தியின் மூலமாக மனிதன் என்னை உள்ளபடி அறிய முடியும்; என்னைப் பார்க்க முடியும்; என்னுள் ஐக்யமாக முடியும்' என்று பகவான் சொல்கிறார். அதனால், 'பகவானுடைய பக்தர்களைத் தவிர, பாமரனான அறிவற்ற

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மனிதர்களில் யாருமே பகவானை அறிந்து கொள்வதில்லை' என்பது இங்கே அறியத்தக்கதாகும். 'கச்சந' என்ற சொல், இத்தகைய மனிதர்களையே குறிக்கிறது. இக்கருத்தைத் தெளிவாகக் கூறுவதற்காகப் பொருள் சொல்லும்போது, 'ச்ரத்தையும், பக்தியும் இல்லாத மனிதர்' என்பது சேர்க்கப்பட்டது. அடுத்து வரும் ச்லோகத்தில், விருப்பு-வெறுப்பிலிருந்து தோன்றும் இரட்டைகளாகிற மயக்கங்கள்தாம், தம்மை அறிய முடியாததற்குக் காரணம் என்று பகவான் கூறுகிறார். இதிலிருந்தும், விருப்பு-வெறுப்பு இல்லாத பக்தர்கள் திருக்கூட்டம் பகவானை அறிய முடியும் என்பது நிரூபணமாகிறது.

**பொருத்தம்:** ஈடுபாடும், பக்தியும் இல்லாத அறிவற்ற மனிதர்களில் ஒருவர்கூட பகவானை அறிவதில்லை. இதற்கான காரணத்தை பகவான் விளக்குகிறார்—

**इच्छाद्वेषसमुत्थेन द्वन्द्वमोहेन भारत।**
**सर्वभूतानि सम्मोहं सर्गे यान्ति परन्तप॥ २७॥**

**இச்சா₂த்₃வேஷஸமுத்தே₂ந த்₃வந்த்₃வமோஹேந ப₄ாரத ।**
**ஸர்வபூ₄தாநி ஸம்மோஹம் ஸர்கே₃ யாந்தி பரந்தப ॥ 27 ॥**

**ப₄ாரத** – பரதகுலத்தோன்றலே! **பரந்தப** – அர்ஜுன! **ஸர்கே₃** – உலகில், **இச்சா₂ த்₃வேஷ ஸமுத்தே₂ந** – விருப்பு, வெறுப்புகளால் உண்டான, **த்₃வந்த்₃வ மோஹேந** – ஸுகம், துக்கம் முதலிய இரட்டைகள் வடிவான மயக்கத்தினால், **ஸர்வபூ₄தாநி** – எல்லா உயிரினங்களும், **ஸம்மோஹம்** – மிகுந்த அறியாமையை, **யாந்தி** – அடைகின்றன.

பரதகுலத்தோன்றலே! அர்ஜுன! உலகில் விருப்பு, வெறுப்புகளால் உண்டான ஸுகம், துக்கம் முதலிய இரட்டைகள் வடிவான மயக்கத்தினால் எல்லா உயிரினங்களும் மிகுந்த அறியாமையை அடைகின்றன.

**கேள்வி:** 'இச்சா-த்வேஷ' என்பது எதைக் குறிக்கிறது? அவற்றிலிருந்து தோன்றும் இரட்டைகள் வடிவான மயக்கம் யாது?

**பதில்:** மனிதனுடைய ஆன்மிக முன்னேற்றப் பாதையில் இடையூறு செய்கின்ற எதிரிகள் (பரிபந்தீ) என்று எவற்றைச் சொல்லியிருக்கிறாரோ (3/34), காமம்-க்ரோதம் என்ற பெயர்களினால் (3/37) எவற்றைப் பாவங்களுக்குக் காரணம் என்றும், மனிதனுக்குப் பகைவர் என்றும் சொல்லியிருக்கிறாரோ, அதே ராகத்வேஷங்களை, இங்கு 'இச்சா' (விருப்பு) என்றும், 'த்வேஷ' (வெறுப்பு) என்றும் பெயர் சூட்டி விளக்கியுள்ளார். இந்த விருப்பு-வெறுப்பு இரட்டையினால் மகிழ்ச்சி-துயரம், ஸுகம்-துக்கம் முதலிய இரட்டைகள் உண்டாகின்றன. இந்த இரட்டைகள் ஜீவனுடைய அறியாமை விலகாமல் உறுதியாக நிலைத்திருப்பதற்குக் காரணமாகின்றன என்பதால், அவற்றிற்கு 'இரட்டைகள் வடிவான மயக்கம்' என்று பெயர்.

**கேள்வி:** 'ஸர்வபூதாநி' என்பது எவற்றைக் குறிக்கிறது? 'அவர்கள் அறியாமையை அடைதல்' என்றால் என்ன?

**பதில்:** உண்மையான ஈடுபாடும், பக்தியும் கொண்டு பகவானை வழிபடுகின்ற பக்தர்களைத் தவிர, மீதமுள்ள அனைத்து மனிதர்களையும் 'ஸர்வபூதாநி' என்ற சொல் குறிக்கிறது. அவர்கள் விருப்பு-வெறுப்பினால் உண்டாகும் மகிழ்ச்சி-துயரம், ஸுகம்-துக்கம் முதலிய மயக்கங்களுக்கு ஆட்பட்டுத் தங்கள் வாழ்க்கையின் உயர்ந்த குறிக்கோளை மறந்து பகவானைச் சிந்தித்தல், வழிபடுதல் இவற்றைச் சிறந்ததாக எண்ணாமல், துன்பத்தையும், அச்சத்தையும் விளைவிக்கக்கூடியவையும், நொடி நேரத்தில் அழிந்து போகின்றவைகளுமான போகங்களையே ஸுகத்திற்குக் காரணமாக எண்ணி, அவற்றைச் சேர்ப்பதிலும், புலன் வழி இன்பங்களை நுகர்வதிலும் தங்களுடைய விலைமதிக்க முடியாத வாழ்க்கையைப் பாழாக்கிக் கொள்கிறார்களே – இதுதான் 'அவர்கள் அறியாமையை அடைதல்' என்பதாகும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொருத்தம்: 'ஸர்வபூதாநி' என்று முன் ச்லோகத்தில் உயிரினங்கள் அனைத்தையும் சேர்த்துக் குறிப்பிடுகிறார். அப்படியானால் இந்த மோஹத்திலிருந்து எவரும் தப்ப முடியாதா? – என்ற ஐயத்தைப் போக்குவதற்காக இங்கே கூறுகிறார்—

**येषां त्वन्तगतं पापं जनानां पुण्यकर्मणाम्।**
**ते द्वन्द्वमोहनिर्मुक्ता भजन्ते मां दृढव्रताः॥ २८॥**

**யேஷாம் த்வந்தகதம் பாபம் ஜநாநாம் புண்யகர்மணாம் ।**

**தே த்₃வந்த்₃வமோஹநிர்முக்தா ப₄ஜந்தே மாம் த்₃ருட₄வ்ரதா: ॥ 28 ॥**

**து** – ஆனால், **புண்யகர்மணாம்** – (பயன் கருதாது) சிறந்த செயல்களைப் புரிகின்ற, **யேஷாம்** – எந்த, **ஜநாநாம்** – மனிதர்களுடைய, **பாபம்** – பாவம், **அந்தகதம்** – நசித்து விட்டதோ, **தே** – அந்த, **த்₃வந்த்₃வ மோஹ நிர்முக்தா:** – விருப்பு, வெறுப்புகளால் உண்டாகிற இரட்டைகள் வடிவமான மயக்கத்திலிருந்து விடுபட்ட, **த்₃ருட₄வ்ரதா:** – உறுதியான நிச்சயத்துடன் கூடிய பக்தர்கள், **மாம்** – என்னை, **ப₄ஜந்தே** – (எல்லா வகைகளிலும்) வழிபடுகிறார்கள்.

ஆனால் பயன் கருதாது சிறந்த செயல்களைப் புரிகின்ற எந்த மனிதர்களுடைய பாவம் நசித்துவிட்டதோ அந்த விருப்பு, வெறுப்புகளால் உண்டாகிற இரட்டைகள் வடிவான மயக்கத்திலிருந்து விடுபட்ட, உறுதியான நிச்சயத்துடன் கூடிய பக்தர்கள் என்னை எல்லா வகைகளிலும் வழிபடுகிறார்கள்.

**கேள்வி:** இந்த ச்லோகத்தில் உள்ள 'து' என்ற சொல்லை ஆள்வதன் கருத்து என்ன?

**பதில்:** ஸாதாரண மக்கட்கூட்டத்திலிருந்து பகவானுடைய சிறந்த பக்தர்களின் தனித்தன்மையை (சிறப்பை) எடுத்துக்காட்டுவது இங்குள்ள 'து' என்ற சொல்லாகும்.

**கேள்வி:** 'பயன் கருதாது சிறந்த செயல்களைப் புரிகின்ற எந்த மனிதர்களுடைய பாவம் நசித்துவிட்டதோ' என்று எவர்களைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** கடந்த பல பிறப்புக்களில் எவர்கள் சாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ள வேள்வி, தானம், தவம் முதலிய உயர்ந்த கர்மங்களைச் செய்து வந்திருக்கிறார்களோ; பகவானிடம் பக்தியையும் செலுத்தி வந்திருக்கிறார்களோ; பழைய ஸம்ஸ்காரங்களினாலும், நல்லோர் சேர்க்கையாலும் இப்பிறப்பிலும் கூடப் பயனில் ஆசையற்று உயர்ந்த கர்மங்களையும், பகவானை வழிபடுதலையும் செய்து வருகிறார்களோ; இழி குணங்கள், இழி செயல்கள் முதலிய எல்லாக் குற்றங்களும் முற்றிலுமாக நசித்துப் போய்விட்டதால், எவர்களுடைய அந்தக்கரணம் புனிதமாகிவிட்டதோ – அத்தகைய மனிதர்களைக் குறிப்பிடுகிறார்.

**கேள்வி:** 'இரட்டைகள் வடிவான மயக்கத்திலிருந்து விடுபடுதல்' என்றால் என்ன?

**பதில்:** விருப்பு–வெறுப்பு இவற்றிலிருந்து தோன்றும் ஸுகம்–துக்கம், மகிழ்ச்சி–துயரம் முதலிய இரட்டைகளின் தொகுப்பு வடிவமான மயக்கத்திலிருந்து முற்றிலும் விடுபட்டிருத்தல் – அதாவது உலகியல் ஸுகம்–துக்கம் முதலியவற்றின் சேர்க்கை–பிரிவு ஏற்படுங்கால் ஒருபோதும், எந்த நிலையிலும் உள்ளத்தினுள்ளே எந்தவிதமான மாற்றமும் இல்லாதிருத்தல்தான் 'இரட்டைகள் வடிவான மயக்கத்திலிருந்து விடுபடுதல்' ஆகும்.

**கேள்வி:** 'த்ருடவ்ரதா:' என்பதன் கருத்து என்ன?

**பதில்:** மனதை சஞ்சலப்படுத்தக்கூடிய பெரிய பெரிய கவர்ச்சிகள் வந்தாலும் சரி, இடையூறுகளும், தீங்குகளும் நேரிட்டாலும் சரி, அவற்றைக் கொஞ்சமும் பொருட்படுத்தாமல், இறைவழிபாட்டின் மூலம் கிடைத்த ஆற்றலால் அவை அனைத்தையும் சக்தி இழக்கச் செய்து, தம்முடைய ஈடுபாட்டை பக்திமயமான சிந்தனைகளிலும் நியமங்களிலும் மிகவும் உறுதியோடு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நிலைபெற்றிருக்கச் செய்து, சிறிதும் அடிபெயராமல் இருக்கிறார்களே – அந்த உறுதியான தீர்மானம் உடைய பக்தர்களை 'த்ருட₄வ்ரதா:' என்கிறார்.

**கேள்வி:** 'என்னை எல்லா வகைகளிலும் வழிபடுகிறார்கள்' என்றால் என்ன?

**பதில்:** பகவான் ஒருவரே எங்கும் நிறைந்தவர்; எல்லாவற்றிற்கும் ஆதாரம்; ஸர்வ வல்லமை படைத்தவர்; எல்லோருக்கும் ஆத்மா; பரம புருஷோத்தமன் என்று உணர வேண்டும். ஒருவன் தன்னுடைய வெளிப்புலன்களையும், உட்புலன்களையும் ச்ரத்தையுடனும், பக்தியுடனும் அவருடைய ஸேவையில் ஈடுபடுத்த வேண்டும். அதாவது புத்தியில் பகவானைப் பற்றிய திண்ணமான அறிவு, மனதில் பகவானுடைய திருக்குணங்கள், ப்ரபாவங்கள், ஸ்வரூபம், லீலைகள், ரஹஸ்யங்கள் இவற்றை நினைப்பது, வாக்கினால் பகவானின் நாமகீர்த்தனம், குணகீர்த்தனம் இவற்றைச் செய்வது, தலையால் வணங்குவது, கைகளால் பூஜிப்பது, ஏழை–எளியவர் வடிவத்தில் பகவானைக் கண்டு அவர்களுக்கு ஸேவை செய்வது, கண்களால் பகவானுடைய மூர்த்திகளையும், க்ஷேத்ரங்களையும் தர்சனம் செய்வது, கால்களினால் ஆலயங்களை வலம் வருவது, புண்ய தீர்த்தங்களில் நீராடுவது, தனக்குரிமையான அனைத்தையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்வது, பகவானுக்காகவே வாழ்வது – இவைதான் எல்லாவிதமாகவும் பகவானை வழிபடுதல் ஆகும்.

**பொருத்தம்:** **இனி பகவானை வழிபடுபவர்கள் வழிபடும் முறையையும், அதன் பயனையும் கூறுகிறார்—**

**जरामरणमोक्षाय मामाश्रित्य यतन्ति ये।**
**ते ब्रह्म तद्विदुः कृत्स्नमध्यात्मं कर्म चाखिलम्॥ २९॥**

**ஜராமரணமோக்ஷாய மாமாஶ்ரித்ய யதந்தி யே ।**
**தே ப்₃ரஹ்ம தத்₃விது₃: க்ருத்ஸ்நமத்₄யாத்மம் கர்ம சாகி₂லம் ॥ 29 ॥**

**யே** – எவர்கள், **மாம்** – என்னை, **ஆஶ்ரித்ய** – ஶரணமடைந்து, **ஜரா மரண மோக்ஷாய** – மூப்பு, மரணம் இவற்றிலிருந்து விடுபடுவதற்காக, **யதந்தி** – முயல்கிறார்களோ, **தே** – அவர்கள், **தத்** – அந்த, **ப்₃ரஹ்ம** – ப்ரம்மத்தையும், **க்ருத்ஸ்நம் அத்₄யாத்மம்** – அத்யாத்மம் முழுவதையும் (ஜீவஸமுதாயத்தையும்), **ச** – அவ்வாறே, **அகி₂லம் கர்ம** – ஸம்பூர்ண கர்மத்தையும், **விது₃:** – அறிந்து கொள்கின்றனர்.

எவர்கள் என்னை ஶரணமடைந்து மூப்பு, மரணம் இவற்றிலிருந்து விடுபடுவதற்காக முயல்கிறார்களோ அவர்கள் அந்த ப்ரம்மத்தையும் அத்யாத்மம் முழுவதையும் (ஜீவ ஸமுதாயத்தையும்) அவ்வாறே ஸம்பூர்ண கர்மத்தையும் அறிந்து கொள்கின்றனர்.

**கேள்வி:** மூப்பு, மரணங்களிலிருந்து விடுபடுவதற்காக பகவானைச் சரணடைந்து முயற்சி செய்வது என்றால் என்ன?

**பதில்:** பிறப்பு ஒழிந்தால் ஒழிய மூப்பு, மரணங்களிலிருந்து மீள முடியாது. ஜீவன் அஞ்ஞானத்தினால் ஏற்பட்ட கர்மபந்தத்திலிருந்து விடுபட்டு பகவானை அடைந்தால்தான் பிறப்பை ஒழிக்கலாம். ஆசைகளனைத்தையும் துறந்து, உறுதியான தீர்மானத்துடன் பகவானை எப்பொழுதும் இடைவிடாமல் வழிபட்டால்தான் பகவானை அடைய முடியும். ஸத்ஸங்கத்தை துணை கொண்டு, பாவங்களை ஒழித்து, அஸுர குணங்களைத் துறத்தால்தான் இத்தகைய வழிபாடு ஸாத்யமாகும்.

இதே அத்யாயத்தில் பகவான் கூறுகிறார்— 'அஸுர ஸ்வபாவம் உள்ள இழிந்தவர்களான; பாவிகளான மூடர்கள் என்னை மேலான கதியாகக் கொள்ளார்' (7/15). தம்மை அறியாததற்குக் காரணம், விருப்பு–வெறுப்புகளால் ஏற்பட்ட ஸுகதுக்க மோஹங்களுக்கு ஆட்பட்டு, அஞ்ஞானத்தில் மூழ்கிவிடுவதேயாகும் (7/27). இத்தகையவர்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



களுடைய மனதில் எப்பொழுதும் பலவிதமான போகங்களின் ஆசைகள்தாம் நிறைந்திருக்கும். இவற்றை அடியோடு அழித்துப் பிறப்பு-இறப்புகளிலிருந்து விடுபட வேண்டும் என்ற எண்ணமே இராது. ஆகவே 7/28ல் பகவானை முழுமையாக அறியத் தகுதி யாருக்கு என்று சொல்லும்போது – பாவமற்றவர்களும், புண்ய கர்மங்கள் செய்கின்றவர்களும், ஸுகதுக்கம் முதலிய இரட்டைகளின் மோஹங்களிலிருந்து மீண்டவர்களும், உறுதியான உள்ளம் படைத்தவர்களுமான பக்தர்களைக் குறிப்பிடுகிறார். இப்படிப் பாவம் அகன்ற மனிதர்களின் உள்ளத்தில்தான் ஜன்ம-மரணச் சுழலிலிருந்து விடுபட வேண்டும்; விரைவில் பகவானை அடைய வேண்டும் என்ற நல்லெண்ணம் உண்டாகும். "எவர்கள் உலகியல் போகங்களைத் துறந்து திடநம்பிக்கையுடன் என்னையே தஞ்சமடைந்து, இடைவிடாது புத்தி, மனம் ஆகியவற்றை ஒரேவிதமாக என்னிடம் ஈடுபடுத்தியுள்ளனரோ, அவர்கள் என்னைச் சரணடைந்து முயற்சி செய்பவர்கள்" என்று பகவான் கூறுகிறார்.

**கேள்வி:** 'தத்' என்பதுடன் கூடிய 'ப்ரஹ்ம' என்ற சொல், எதைக் குறிக்கிறது? 'க்ருத்ஸ்ந' பதத்தோடு கூடிய 'அத்யாத்ம' என்ற சொல் எதைக் குறிக்கிறது? 'அகில' என்ற அடைமொழியோடு கூடிய 'கர்ம' என்ற சொல் எதைக் குறிக்கிறது? இவை எல்லாவற்றையும் அறிந்து கொள்ளுதல் என்றால் எப்படி?

**பதில்:** 'தத்' என்கிற அடைமொழியுடன் கூடிய 'ப்ரஹ்ம' என்ற பதம் நிர்குண-நிராகார, ஸச் சித் ஆனந்தச்செறிவான பரப்ரம்ம பரமாத்மாவைக் குறிக்கிறது. இத்தகைய பரப்ரம்ம பரமாத்ம தத்வத்தை உண்மையாகவே உணர்ந்து, கண்டு அனுபவிப்பதுதான், அதை அறிவது ஆகும். இந்த அத்யாயத்தில் எந்தத் தத்வத்தைப் 'பரா ப்ரக்ருதி' என்று பெயரிட்டு விவரித்துள்ளாரோ, 15வது அத்யாயத்தில் எதை 'அக்ஷரம்' என்று பகவான் சொல்கிறாரோ, அந்த 'ஜீவஸமுதாயம்' முழுவதையும் 'க்ருத்ஸ்நம்' என்ற சொல்லுடன் கூடிய 'அத்யாத்மம்' என்ற பதம் குறிக்கிறது. ஸச் சித் ஆனந்தச்செறிவான ஒரே பரமாத்மாதான் ஜீவர்கள் என்ற பெயரில் பலவித உருவத் தோற்றத்துடனும் காணப்படுகிறார். உண்மையில், ஜீவஸமுதாயம் எனப்படும் முழுமையான 'அத்யாத்மம்' ஸத் சித் ஆனந்தச்செறிவான பரமாத்மாவைத் தவிர வேறானது அன்று. இந்தத் தத்வத்தை அறிந்து கொள்வதுதான் 'அதை அறிந்து கொள்வது' ஆகும். எதிலிருந்து எல்லா உயிரினங்களும், எல்லாச் செயல்களும் உற்பத்தி ஆகின்றனவோ, பக்வானுடைய அந்த ஆதிஸங்கல்பமாகிற 'விஸர்க'த்தின் பெயர் 'கர்மம்' ஆகும். (இது பற்றிய விரிவான விளக்கம் 8/3ன் விரிவுரையில் கொடுக்கப்பட்டிருக்கிறது.) அவ்விதம் பகவானுடைய ஸங்கல்பம் என்பதால், இந்தக் கர்மம் பகவானிடமிருந்து வேறானது அன்று என்றறிவதே 'அகில கர்ம'த்தை அறிவதாகும்.

**साधिभूताधिदैवं मां साधियज्ञं च ये विदुः ।**
**प्रयाणकालेऽपि च मां ते विदुर्युक्तचेतसः ॥ ३० ॥**

**ஸாதி₄பூ₄தாதி₄தை₃வம் மாம் ஸாதி₄யஜ்ஞம் ச யே விது₃: ।**
**ப்ரயாணகாலேऽபி ச மாம் தே விது₃ர்யுக்தசேதஸ: ॥ 30 ॥**

**யே** – எவர்கள், **ஸாதி₄பூ₄தாதி₄தை₃வம்** – அதிபூதம், அதிதைவம் இவற்றோடு கூடியவனாகவும், **ஸாதி₄யஜ்ஞம் ச** – அதியக்ஞத்துடன் கூடியவனாகவும் (அதாவது எல்லாவற்றிற்கும் ஆத்மஸ்வரூபனாகவும் உள்ள), **மாம்** – என்னை, **ப்ரயாணகாலே அபி** – மரணத்தறுவாயிலும் கூட, **விது₃:** – அறிகிறார்களோ, **யுக்த சேதஸ:** – அத்தகைய ஒன்றிய மனதோடு கூடிய, **தே** – அவர்கள், **மாம் ச** – என்னையே, **விது₃:** – அறிகிறார்கள் (அடைகிறார்கள்).

எவர்கள் அதிபூதம், அதிதைவம், அதியக்ஞத்துடன் கூடியவனாகவும் எல்லாவற்றிற்கும் ஆத்மஸ்வரூபனாகவும் உள்ள என்னை மரணத்தறுவாயிலும்கூட அறிகிறார்களோ, அத்தகைய ஒன்றிய மனதோடு கூடிய அவர்கள் என்னையே அறிகிறார்கள் – அடைகிறார்கள்.'



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'அதிபூதம், அதிதைவம், அதியஜ்ஞம்' என்ற சொற்கள் எந்தெந்தத் தத்வங்களைக் குறிக்கின்றன? இவை எல்லாவற்றுடனும் கூடிய ஸமக்ர பகவானை அறிதல் என்றால் எப்படி?

**பதில்:** இந்த அத்யாயத்தில், எதனை 'அபரா ப்ரக்ருதி' என்றும், 15வது அத்யாயத்தில் 'க்ஷரபுருஷன்' என்றும் பகவான் சொல்கிறாரோ, அழியும் இயல்புடைய அந்த அனைத்து ஜடத்தொகுதிக்கும் 'அதிபூதம்' என்று பெயர். 8வது அத்யாயத்தில் எவரை 'ப்ரஹ்மா' என்கிறாரோ, ஸூத்ராத்மாவான அந்த ஹிரண்யகர்பனுக்கு 'அதிதைவம்' என்று பெயர். 9/4–6 ச்லோகங்களில் விவரிக்கப்பட்டுள்ள அந்த எல்லா ப்ராணிகளின் அந்தக்கரணத்திலும் அந்தர்யாமியாக நிறைந்துள்ள பகவானுடைய அவ்யக்த ஸ்வரூபத்துக்கு 'அதியஜ்ஞம்' என்று பெயர்.

29வது ச்லோகத்தில் கூறப்பட்டுள்ள 'ப்ரஹ்மம்' ஜீவக்கூட்டமான 'அத்யாத்மம்', பகவானுடைய ஆதிஸங்கல்பரூபமான 'கர்மம்', மேலே சொல்லப்பட்டபடி ஜடப் பொருட்களான 'அதிபூதம்', ஹிரண்யகர்பனாகவுள்ள 'அதிதைவம்', அந்தர்யாமியாகவுள்ள 'அதியஜ்ஞம்' – இவையெல்லாம் பகவானின் வடிவங்களே. இந்த ஸமக்ர (ஒன்றும் விடுபடாத முழுமையான) வடிவம் பகவானுடையதுதான். இந்த அத்யாயத்தின் துவக்கத்தில் இந்த ஸமக்ர வடிவத்தையே விளக்கப் போவதாகப் பகவான் வாக்குக் கொடுத்திருந்தார். பின்னர், 7வது ச்லோகத்தில் 'என்னிலும் வேறான வேறு உயர்ந்த காரணம் எதுவும் இல்லை' என்றும்; 12வது ச்லோகத்தில் 'ஸாத்விக, ராஜஸ, தாமஸ உணர்வுகள் எல்லாம் என்னிடமிருந்தே தோன்றுகின்றன' என்றும்; 19வது ச்லோகத்தில் 'எல்லாம் வாஸுதேவனே' என்றும் சொல்லி, இதே ஸமக்ர வடிவத்தை விளக்கியுள்ளார். இங்கேயும் மேலே சொல்லியுள்ள சொற்களால் இதை விளக்கியதுடன் அத்யாயம் நிறைவு செய்யப்பட்டுள்ளது. இந்த ஸமக்ரத்தை அறிந்து கொள்வது, அதாவது பரமாணு, நீராவி, மேகம், புகை, தண்ணீர், பனிக்கட்டி ஆகிய எல்லாம் எப்படித் தண்ணீரின் வடிவங்களோ, அதேபோல ப்ரம்மம், அத்யாத்மம், கர்மம், அதிபூதம், அதிதைவம், அதியக்ஞம் – எல்லாம் வாஸுதேவனே என்னும் உண்மை அனுபவம் பெறுவதுதான் ஸமக்ர ப்ரம்மத்தை – அதாவது பகவானை அறிவது ஆகும்.

**கேள்வி:** 'ப்ரயாணகாலே' (மரணத்தறுவாயில்) என்பதுடன் 'அபி' என்ற சொல் சேர்த்திருப்பதன் கருத்து என்ன?

**பதில்:** "எவனொருவன் 'எல்லாம் வாஸுதேவனே' என்பதற்கிணங்க, மேலே சொல்லப்பட்ட முறையில் எனது ஸமக்ர வடிவத்தை முதலில் அறிந்து கொள்கிறானோ, அவனைப் பற்றிச் சொல்வதற்கு என்ன இருக்கிறது? எவர்கள் உயிர் பிரியும் நேரத்தில்கூட என்னை ஸமக்ர வடிவோடு அறிந்து கொள்கிறார்களோ, அவர்களும் என்னை உள்ளபடியே அறிகிறார்கள்; அதாவது என்னை அடைந்து விடுகிறார்கள்" என்கிறார் பகவான். 2ம் அத்யாயத்தின் கடைசியில் 'ப்ராஹ்மீ ஸ்திதி'யின் (ப்ரம்மநிலையின்) பெருமையைச் சொல்லும்போதும், இதேபோல 'அபி' என்ற சொல் சேர்க்கப்பட்டிருக்கிறது.

ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
ज्ञानविज्ञानयोगो नाम सप्तमोऽध्यायः॥ ७॥

**ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத்₃ப₄கவத்₃கீ₃தாஸூபநிஷத்ஸு ப்₃ரஹ்மவித்₃யாயாம் யோக₃ஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே₃ ஜ்ஞாநவிஜ்ஞாநயோகோ₃ நாம ஸப்தமோऽத்₄யாய: ॥ 7 ॥**

**ஓம் தத் ஸத் – ப்ரம்ம வித்யை, யோக ஶாஸ்த்ரம், உபநிஷத் எனப்படும் ஸ்ரீமத்பகவத்கீதையாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலில் 'ஞானவிஞ்ஞானயோகம்' எனப் பெயர் படைத்த ஏழாவது அத்யாயம் நிறைவுற்றது.**


CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

# அத₂ாஷ்டமோऽத்₄யாய:

# எட்டாவது அத்யாயம்

## அக்ஷரப்ரஹ்மயோகம்

**அத்யாயத்தின் பெயர்** 'அக்ஷரம்', 'ப்ரஹ்மம்' – என்ற இரண்டு சொற்களும் பகவானுடைய ஸகுணம், நிர்குணம் என்ற இரண்டு ஸ்வரூபங்களையும் குறிப்பன (8/3,11,21,24). 'ஓம்' என்பது பகவானின் ஒரு திருநாமம். அதையும் 'அக்ஷரம்' என்றும், 'ப்ரஹ்மம்' என்றும் கூறுவார்கள் (8/13). இந்த அத்யாயத்தில் பகவானுடைய ஸகுண-நிர்குண ஸ்வரூபம் பற்றியும், ஓம்காரம் பற்றியும் வர்ணனை வருகிறது. ஆகவே, இந்த அத்யாயத்திற்கு 'அக்ஷரப்ரஹ்மயோகம்' என்று பெயர் வைக்கப்பட்டிருக்கிறது.

**அத்யாயச் சுருக்கம்** ச்லோகம் 1, 2ல் ப்ரம்மம், அத்யாத்மம் முதலியன பற்றிய அர்ஜுனனுடைய ஏழு கேள்விகள் உள்ளன. 3 முதல் 5 வரை இந்த ஏழு கேள்விகளுக்கும் பகவான் சுருக்கமான பதில்கள் கூறி, 6ல் கடைசி நேரத்துச் சிந்தனையின் பெருமையைக் கூறி, 7ல் 'அர்ஜுன! இடைவிடாது என்னைச் சிந்தனை செய்' என்று ஆணையிடுகிறார். 8 முதல் 10 வரையில் யோகமுறைப்படி பக்தியுடன் பகவானுடைய ஸகுண-நிராகார ஸ்வரூப சிந்தனையுடன் உயிர் துறக்கும் முறையையும், அதன் பயனையும் கூறுகிறார். 11 முதல் 13 வரையில் பரமாத்மாவினுடைய நிர்குண ஸ்வரூபத்தின் பெருமையைக் கூறி, உயிர் பிரியும் தருணத்தில் யோகதாரணை மூலம் நிர்குண ப்ரம்மத்தின் ஜபம்-த்யானம் செய்யும் முறை, பயன் இவற்றைக் கூறுகிறார். 14ல் தம்மை அடைவதற்கான எளிய உபாயம் அநன்ய ப்ரேமையுடன் இடைவிடாது சிந்தனை செய்வதுதான் என்றும், 15, 16ல் பகவானை அடைந்துவிட்டால் மறுபிறவி கிடையாது; மற்ற லோகங்களுக்குப் போனால் திரும்பிவர நேரிடும் என்றும் கூறுகிறார். 17 முதல் 19 வரையில் ப்ரம்மாவின் இரவு-பகலின் கால அளவைப் பற்றிச் சொல்லி, ப்ராணிகளின் உற்பத்தி-ப்ரளயம் பற்றியும் வர்ணிக்கிறார். 20ல் அவ்யக்தத்தைக் காட்டிலும் மேலான மற்றொரு ஸநாதனமான அவ்யக்தம் உண்டு என்று கூறி, 21, 22ல் அதற்கு அக்ஷரம், பரமகதி, பரமதாமம், பரமபுருஷன் என்று பெயர் கூறி, அநன்ய பக்திதான் அந்தப் பரமபுருஷனை அடையும் உபாயம் என்கிறார். 23 முதல் 26 வரை சுக்ல க்ருஷ்ண கதிகள், அவற்றின் பயன் இவற்றை விவரித்து, 27ல் இந்த இரண்டு கதிகளை அறிந்த யோகிகளின் பெருமையைக் கூறி, 'நீ அத்தகைய யோகி ஆவாய்' என்று அர்ஜுனனுக்குக் கட்டளையிடுகிறார். 28ல் இந்த அத்யாயத்தில் கூறப்பட்ட தத்வங்களை அறிவதன் பயன் கூறி அத்யாயத்தை நிறைவு செய்கிறார்.

**முன் அத்யாயத்துடன் இவ்வத்யாயத்திற்குப் பொருத்தம்:** ஏழாவது அத்யாயத்தில் முதல் மூன்று ச்லோகங்களில் பகவான் 'என் ஸமக்ரரூப தத்வத்தைக் கேள்' என்று அர்ஜுனனுடைய கவனத்தை ஈர்த்து, 'அதைக்



CC-0.In Public Domain, Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கூறுகிறேன்' என்று சொல்லி, அதை அறிபவரின் பெருமையைக் கூறினார். பிறகு 27வது ச்லோகம் வரை பலவிதங்களில் அந்தத் தத்வத்தை விளக்கி, அதை அறிய முடியாததற்குக் காரணத்தையும் நன்கு எடுத்துக் கூறினார். முடிவில் ப்ரம்மம், அத்யாத்மம், கர்மம், அதிபூதம், அதிதைவம், அதியக்ஞம் இவற்றுடன் கூடிய பகவானுடைய ஸமக்ர ஸ்வரூபத்தை அறிகின்ற பக்தனின் பெருமையைக் கூறி அத்யாயத்தை நிறைவு செய்தார். 29, 30வது ச்லோகங்களில் கூறப்பட்ட ப்ரம்மம், அத்யாத்மம், கர்மம், அதிபூதம், அதிதைவம், அதியக்ஞம் என்ற ஆறு விஷயங்கள், மற்றும் உயிர் பிரியும் போது பகவானை அறிவதன் ரஹஸ்யம் இவற்றை பகவான் எடுத்துரைத்தார். ஆனால், இவற்றை நன்கு புரிந்து கொள்ளாததால், இந்த எட்டாவது அத்யாயத்தின் முதலிரண்டு ச்லோகங்களில் அர்ஜுனன் மேலே சொன்ன ஏழு விஷயங்கள் பற்றித் தெரிந்து கொள்வதற்காக பகவானிடம் ஏழு கேள்விகள் கேட்கிறார்—

अर्जुन उवाच

**किं तद्ब्रह्म किमध्यात्मं किं कर्म पुरुषोत्तम।**
**अधिभूतं च किं प्रोक्तमधिदैवं किमुच्यते॥ १॥**

அர்ஜுந உவாச

**கிம் தத்$_3$ப்$_3$ரஹ்ம கிமத்$_4$யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம ।**
**அதி$_4$பூ$_4$தம் ச கிம் ப்ரோக்தமதி$_4$தை$_3$வம் கிமுச்யதே ॥ 1 ॥**

**அர்ஜுந உவாச** – அர்ஜுனன் சொன்னார்: **புருஷோத்தம** – புருஷோத்தம! **தத்** – அந்த, **ப்$_3$ரஹ்ம** – ப்ரம்மம் (என்பது), **கிம்** – என்ன? **அத்$_4$யாத்மம்** – அத்யாத்மம் (என்பது), **கிம்** – என்ன? **கர்ம** – கர்மம் (என்பது), **கிம்** – என்ன? **அதி$_4$பூ$_4$தம்** – அதிபூதம் (என்ற பெயரால்), **கிம்** – எது, **ப்ரோக்தம்** – அழைக்கப்படுகிறது? **ச** – மேலும், **அதி$_4$தை$_3$வம்** – அதிதைவம் (என்று), **கிம்** – எது, **உச்யதே** – சொல்லப்படுகிறது?

அர்ஜுனன் சொன்னார்: "புருஷோத்தம! அந்த ப்ரம்மம் என்பது என்ன? அத்யாத்மம் என்பது என்ன? கர்மம் என்பது என்ன? அதிபூதம் என்ற பெயரால் எது அழைக்கப்படுகிறது? மேலும் அதிதைவம் என்று எது சொல்லப்படுகிறது?

**கேள்வி:** 'அந்த ப்ரம்மம் என்பது என்ன?' என்று அர்ஜுனன் கேட்பதன் கருத்து என்ன?

**பதில்:** 'ப்ரம்மம்' என்பதற்கு வேதம், ப்ரம்மதேவன், நிர்குண பரமாத்மா, ப்ரக்ருதி, ஓம்காரம் என்று பல பொருள்கள் சொல்லலாம். ஆகவே, இங்கு அவற்றில் 'ப்ரஹ்ம' என்ற சொல் எந்தத் தத்வத்தைக் குறிக்கிறது என்று அறிவதற்காக அர்ஜுனன் இக்கேள்வியைக் கேட்கிறார்.

**கேள்வி:** 'அத்யாத்மம் என்பது என்ன?' – இக்கேள்வியின் பொருள் என்ன?

**பதில்:** உடல், புலன்கள், மனம், புத்தி, ஜீவன், பரமாத்மா முதலிய அநேக தத்வங்களை 'அத்யாத்மம்' என்று கூறுவார்கள். அவற்றில் இங்கு 'அத்யாத்மம்' என்ற சொல்லினால் பகவான் எந்தத் தத்வத்தைப் பற்றிச் சொல்கிறார் என்பதை அறிவதற்காக அர்ஜுனன் இக்கேள்வியைக் கேட்கிறார்.

**கேள்வி:** 'கர்மம் என்பது என்ன?' – என்ற கேள்வியின் கருத்து என்ன?

**பதில்:** 'கர்மம்' என்ற சொல் இங்கு யக்ஞம், தானம் முதலிய மங்கள கார்யங்களைக் குறிக்குமா? எல்லாச் செயல்களையும் குறிக்குமா? ப்ராரப்தம் முதலியவற்றைக் குறிக்குமா



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அல்லது பகவானுடைய படைப்பையா என்ற இவ்விஷயங்களில் தெளிவு பெறுவதற்காக இக்கேள்வி பிறக்கிறது.

**கேள்வி:** 'அதிபூதம் என்று எது சொல்லப்படுகிறது?' என்ற கேள்வியின் கருத்து என்ன?

**பதில்:** 'அதிபூதம்' என்ற சொல்லின் பொருள் ஐந்து மஹாபூதங்களா அல்லது ப்ராணி வர்க்கம் அனைத்துமா அல்லது காணப்படும் பொருட்கள் அனைத்துமா அல்லது வேறு ஏதாவது தத்வத்தைக் குறிக்குமா? இந்த விஷயத்தில் தெளிவு பெறுவதற்காக இவ்விதம் கேட்கப்பட்டது.

**கேள்வி:** 'அதிதைவம் என்று எதைச் சொல்கிறார்கள்?' என்ற கேள்வியின் கருத்து என்ன?

**பதில்:** 'அதிதைவம்' என்றால் இங்கு ஏதாவது அதிஷ்டான தேவதை பற்றிய குறிப்பா, அத்ருஷ்டம் பற்றியதா, ஹிரண்யகர்பனா, ஜீவனா அல்லது வேறொன்றா என்பதை அறிவதற்காகவே இக்கேள்வியைக் கேட்கிறார்.

**கேள்வி:** இங்கு 'புருஷோத்தமன்' என்று பகவானை அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** "நீங்கள் எல்லா மனிதர்களிலும் சிறந்தவராயிற்றே; எல்லாமறிந்தவர்; எல்லா வல்லமைகளையும் படைத்தவர்; எல்லாவற்றையும் ஆண்டு கொண்டிருப்பவர்; எல்லாவற்றிற்கும் ஆதாரம் அல்லவா? ஆகவே, என்னுடைய கேள்விகளுக்குச் சரியான பதில்களை நீங்கள் கூறுவதுபோல வேறு யாரும் கூற முடியாது" என்று அர்ஜுனன் சொல்கிறார்.

**अधियज्ञः कथं कोऽत्र देहेऽस्मिन्मधुसूदन।**
**प्रयाणकाले च कथं ज्ञेयोऽसि नियतात्मभिः॥ २॥**

**அதி₄யஜ்ஞ: கத₂ம் கோऽத்ர தே₃ஹேऽஸ்மிந்மது₄ஸூத₃ந ।**
**ப்ரயாணகாலே ச கத₂ம் ஜ்ஞேயோऽஸி நியதாத்மபி₄: ॥ 2 ॥**

**மது₄ஸூத₃ந** – மதுஸூதன! **அத்ர** – இங்கு, **அதி₄யஜ்ஞ:** – அதியக்ஞன் என்பவர், **க:** – யார்? (மேலும்), **அஸ்மிந்** – இந்த, **தே₃ஹே** – தேகத்தில் (அவர்), **கத₂ம்** – எப்படி இருக்கிறார்? **ச** – மேலும், **நியதாத்மபி₄:** – ஒன்றிய மனதோடு கூடியவர்களால், **ப்ரயாணகாலே** – மரணத்தறுவாயில், **கத₂ம்** – எவ்வாறு, **ஜ்ஞேய: அஸி** – (நீங்கள்) அறியப்படுகிறீர்கள்?

மதுஸூதன! இங்கு அதியக்ஞன் என்பவர் யார்? மேலும் இந்த தேகத்தில் அவர் எப்படி இருக்கிறார்? அவ்வாறே ஒன்றிய மனதோடு கூடியவர்களால் மரணத்தறுவாயில் எவ்வாறு நீங்கள் அறியப்படுகிறீர்கள்?"

**கேள்வி:** இங்கு 'அதியக்ஞன்' விஷயமாக அர்ஜுனனின் கேள்விக்கு என்ன கருத்து?

**பதில்:** 'அதியக்ஞன்' என்ற சொல் யக்ஞத்தினுடைய தனிப்பட்ட தேவதையைக் குறிக்கிறதா? அந்தர்யாமியான பரமேசுவரனைக் குறிக்கிறதா? அல்லது வேறு ஏதாவதொன்றையா? இந்த 'அதியக்ஞம்' என்ற பெயர் கொண்ட தத்வம் மனிதன் முதலான எல்லா ப்ராணிகளின் உடலில் எவ்விதம் உள்ளது? அதற்கு ஏன் 'அதியக்ஞன்' என்று பெயர்? இவற்றைத் தெரிந்து கொள்ள அர்ஜுனன் இக்கேள்வி கேட்கிறார்.

**கேள்வி:** 'நியத ஆத்மபி:' என்ற சொல்லுக்கு என்ன கருத்து? 'மரணத்தறுவாயில் நீங்கள் எவ்விதம் அறியப்படுகிறீர்கள்?' என்று கேட்பதன் கருத்து என்ன?

**பதில்:** பகவான் 7/30ல் 'யுக்தசேதஸ:' என்ற சொல்லால் யாரைக் குறிப்பிடுகிறாரோ, அவரையே இங்கு 'நியத ஆத்மபி:' என்ற சொல்லால் அர்ஜுனன் குறிப்பிட்டுக் கேட்கிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



'யுக்தசேதஸ:' என்று கூறப்படுபவர்கள் மரணத்தறுவாயில் எவ்விதம் உங்களிடம் மனதை ஈடுபடுத்தி உங்களை அறிவார்கள்? அதாவது ப்ராணாயாமம், ஜபம், சிந்தனை, த்யானம், ஸமாதி முதலிய எந்த ஸாதனையினால் உங்களைப் பற்றிய உண்மையான அறிவை அடைய முடியும்? இதை அறிவதற்காகவே அர்ஜுனன் இக்கேள்வி கேட்கிறார்.

**பொருத்தம்: அர்ஜுனனுடைய ஏழு கேள்விகளில் முதலில் ப்ரம்மம், அத்யாத்மம், கர்மம் இவை பற்றிய மூன்று கேள்விகளுக்குப் பதிலை அடுத்த ச்லோகத்தில் வரிசையாகவும், சுருக்கமாகவும் கூறுகிறார்—**

श्रीभगवानुवाच

**अक्षरं ब्रह्म परमं स्वभावोऽध्यात्ममुच्यते ।**
**भूतभावोद्भवकरो विसर्गः कर्मसंज्ञितः ॥ ३ ॥**

ஸ்ரீப$_4$க$_3$வாநுவாச

**அக்ஷரம் ப்$_3$ரஹ்ம பரமம் ஸ்வப$_4$ாவோऽத்$_4$யாத்மமுச்யதே ।**
**பூ$_4$தப$_4$ாவோத்$_3$ப$_4$வகரோ விஸர்க$_3$: கர்மஸம்ஜ்ஞித: ॥ 3 ॥**

**ஸ்ரீப$_4$க$_3$வாநுவாச** – ஸ்ரீபகவான் சொன்னார்: **ப்$_3$ரஹ்ம** – ப்ரம்மம் எனப்படுவது, **பரமம்** – மிக உயர்ந்ததும், **அக்ஷரம்** – அழிவற்றதுமானது. **ஸ்வப$_4$ாவ:** – அதன் ஸ்வரூபம் அதாவது ஜீவாத்மா, **அத்$_4$யாத்மம்** – அத்யாத்மம் (என்ற பெயரால்), **உச்யதே** – அழைக்கப்படுகிறது. **பூ$_4$தப$_4$ாவ உத்$_3$ப$_4$வகர:** – சராசரங்களின் இருப்பை உண்டு பண்ணுகின்ற, **விஸர்க$_3$:** – படைப்பு (த்யாகம்), **கர்ம ஸம்ஜ்ஞித:** – கர்மம் என்ற பெயரால் அழைக்கப்படுகிறது.

**ஸ்ரீபகவான் சொன்னார்: "ப்ரம்மம் எனப்படுவது மிக உயர்ந்ததும் அழிவற்றதுமானது. அதன் ஸ்வரூபம் அதாவது ஜீவாத்மா அத்யாத்மம் என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. சராசரங்களின் இருப்பை உண்டு பண்ணுகின்ற த்யாகம் கர்மம் என்ற பெயரால் அழைக்கப்படுகிறது.**

**கேள்வி:** "'பரமம்', 'அக்ஷரம்' என்பது ப்ரம்மம்" என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 7/29ல் வருகின்ற 'ப்ரஹ்மம்' என்ற சொல் நிர்குணமான, உருவமற்ற, ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவைக் குறிக்கும். வேதத்தையோ, நான்முகனையோ, ப்ரக்ருதியையோ குறிப்பிடாது. எது எல்லாவற்றிலும் சிறந்ததோ, நுண்ணியதோ அதுவே 'பரமம்' ஆகும். 'ப்ரஹ்மம்', 'அக்ஷரம்' என்ற சொற்களால் எந்தத் தத்வங்கள் (எல்லாம்) குறிப்பிடப் படுகின்றனவோ, அவையெல்லாவற்றிலும் சிறந்தது, மேலானது, ஒன்றேயானது ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்மம் – பரமாத்மாதான். அதனால்தான் 'பரமம்', 'அக்ஷரம்' என்ற சொற்கள் இங்கு பரமாத்மாவைக் குறிப்பிடுகின்றன. இந்த பரப்ரம்ம பரமாத்மாவும், பகவானும் ஒரே தத்வம்தான்.

**கேள்வி:** ஸ்வபாவம் 'அத்யாத்மம்' எனப்படும் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஸ்வபாவம்' என்ற ஸம்ஸ்க்ருதச் சொல்லுக்கு (ஸ்வோ+பாவ: = ஸ்வபாவ:) தன்னுடைய இருப்பு என்று பொருள். ஜீவன் உருவிலுள்ள பகவானுடைய சைதன்யத்தின் ரூபமான பராப்ரக்ருதியான ஆத்மதத்வம், 'ஆத்ம' என்ற சொல்லால் கூறப்படுகின்ற உடல், புலன்கள், மனம், புத்தி முதலியவற்றால் ஆன அபரா ப்ரக்ருதியை ஆட்கொள்ளும்போது 'அத்யாத்மம்' எனப்படுகிறது. ஆகவே 7/29ல் பகவான் 'க்ருத்ஸ்நம்' என்ற அடைமொழியோடு சேர்த்து 'அத்யாத்மம்' என்ற சொல்லை உபயோகப்படுத்தும்போது, அதன் பொருள் 'உணர்வுள்ள ஜீவஸமுதாயம்' என்று தெரிந்து கொள்ள வேண்டும். பகவானின் ஓர் அம்சமான உணர்வுள்ள பராப்ரக்ருதி என்பது பகவானைத் தவிர வேறில்லையாதலால், அந்த

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அத்யாத்மம் என்ற பெயர் கொண்ட ஜீவஸமுதாயமும் உண்மையில் பகவானைத் தவிர வேறன்று. அவருடைய ஸ்வரூபமே ஆகும்.

**கேள்வி:** 'சராசரங்களின் இருப்பை உண்டாக்குகின்ற படைப்பு – த்யாகம் என்ற செயலே கர்மம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'பூத' என்ற சொல்லில் அசைவன, அசையாதன ஆகிய எல்லா ப்ராணிகளும் அடங்கும். இந்த ப்ராணிகள் உண்டாவது, வளர்வது எல்லாம் எந்த த்யாகத்தினால் நடைபெறுகின்றனவோ, எது படைப்புக்கும், காப்புக்கும் ஆதாரமோ, அந்த த்யாகத்தின் பெயர்தான் கர்மம். மஹாப்ரளயத்தில் உலகில் உள்ள ப்ராணிகள் அனைத்தும் தத்தம் மனப்பதிவுகளுடன் (ஸம்ஸ்காரங்களுடன்கூட) பகவானிடம் அடங்கிவிடுகின்றன. பிறகு படைப்பின் ஆரம்பத்தில் பகவான் 'நான் ஒருவனே பலவாறாகப் பல்கிப் பெருகுவேன்' என்று ஸங்கல்பிக்கும்பொழுது, அவை மறுபடியும் உண்டாகின்றன. பகவானுடைய இந்த 'ஆதிஸங்கல்பம்'தான் உணர்வற்ற ப்ரக்ருதியின் கருவில் உணர்வுள்ள விதையை விதைப்பது ஆகும். இதுவே ஜட–சேதனக் கூட்டுறவாகும். இதுவே பெரிய விஸர்கம் – த்யாகம். இதிலிருந்தே ப்ராணிகள் பலவாறாகப் பிறக்கின்றன. இதனால்தான் பகவான், **'ஸம்ப₄வ: ஸர்வபூ₄தாநாம் ததோ ப₄வதி பா₄ரத'** (14/3) (எல்லா ப்ராணிகளுடைய உற்பத்தியும் அந்த ஜட–சேதனச் சேர்க்கையில் நடக்கிறது) என்று கூறுகிறார். இதுவே ப்ராணிகளின் இருப்பு என்ற உற்பத்தியாகும். அதனால் பகவானுடைய எந்த ஆதிஸங்கல்பத்தினால் எல்லா ப்ராணிகளும் உண்டாகின்றனவோ, வளர்கின்றனவோ அதன் பெயர் 'விஸர்கம்' என்று தெரிந்து கொள்ளவேண்டும். பகவானுடைய இந்த விஸர்கம் எனப்படும் பெரும் செயலால் ஜடமான செயலற்ற ப்ரக்ருதி, இயக்கமுற்றுச் செயல்புரிவதாகிறது. அதனால் மஹாப்ரளயம் வரை முடிவற்ற கர்மங்களின் இடைவிடாத தொடர் வளர்கிறது. இந்த விஸர்கமே 'கர்மம்' எனக் கூறப்படுகிறது. 7/29ல் இதையே 'அகிலம் கர்ம' என்கிறார். ப்ராணிகளின் இந்த இருப்பை உண்டாக்குகிற இந்த பகவானுடைய பெரிய விஸர்ஜனம் என்ற ஒரு பெரிய ஸமஷ்டி யக்ஞத்திலிருந்து பலவித உலகியல் யக்ஞங்கள் உண்டாயின. அந்த யக்ஞங்களில் எது ஹோமம் செய்யப்படுகிறதோ, அந்த ஹவிஸ்–த்ரவ்யம்கூட 'விஸர்கம்' என்றே அழைக்கப்படுகிறது. அந்த யக்ஞங்களால் ப்ரஜைகள் உற்பத்தி ஆகிறார்கள் என்று மனுஸ்ம்ருதி (3/76) கூறுகிறது—

அக்₃நௌ ப்ராஸ்தாஹுதி: ஸம்யகா₃தி₃த்யமுபதிஷ்ட₂தே ।
ஆதி₃த்யாஜ்ஜாயதே வ்ருஷ்டிர்வ்ருஷ்டேரந்நம் தத: ப்ரஜா: ॥

அதாவது "வேதங்களில் கூறப்பட்ட முறையின்படி அக்னியில் ஹோமம் செய்யப்படும் ஆஹுதி சூரியனைச் சென்றடைகிறது. சூரியன் மூலமாக மழை பொழிகிறது. மழையிலிருந்து உணவும், உணவிலிருந்து உயிரினங்களும் தோன்றுகின்றன."

இந்தக் கர்மம் எனக் கூறப்படும் விஸர்கம் உண்மையில் பகவானுடைய ஆதிஸங்கல்பம். ஆகவே, இது பகவானைத் தவிர வேறன்று.

**பொருத்தம்:** இப்பொழுது பகவான் அதிபூதம், அதிதைவம், அதியக்ஞம் பற்றிய கேள்விகளுக்கு வரிசையாகப் பதில் கூறுகிறார்—

**अधिभूतं क्षरो भावः पुरुषश्चाधिदैवतम्।**
**अधियज्ञोऽहमेवात्र देहे देहभृतां वर ॥ ४ ॥**

**அதி₄பூ₄தம் க்ஷரோ பா₄வ: புருஷஶ்சாதி₄தை₃வதம் ।**
**அதி₄யஜ்ஞோऽஹமேவாத்ர தே₃ஹே தே₃ஹப்₄ருதாம் வர ॥ 4 ॥**

**க்ஷர: பா₄வ:** – தோன்றுவது, அழிவது என்ற நியதியோடு கூடிய பொருட்கள் எல்லாம், **அதி₄பூ₄தம்** – 'அதிபூதம்' ஆகும். **புருஷ:** – ஹிரண்யமயமான புருஷன் அதாவது நான்முக

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ப்ரம்மதேவன், **அதி₂தை₃வதம்** – அதிதைவம் (ஆவார்). **ச** – மேலும், **தே₃ஹப்₄ருதாம் வர** – உடல் பெற்றவர்களிற்சிறந்தவனான அர்ஜுன! **அத்ர** – இந்த, **தே₃ஹே** – உடலில், **அஹம் ஏவ** – வாஸுதேவனான நானே, **அதி₄யஜ்ஞ:** – அந்தர்யாமி உருவிலே அதியக்ஞமாக (இருக்கிறேன்).

தோன்றுவது அழிவது என்ற நியதியோடு கூடிய பொருட்கள் எல்லாம் 'அதிபூதம்' ஆகும். ஹிரண்யமயமான புருஷன் அதாவது நான்முக ப்ரம்மதேவன் 'அதிதைவம்' ஆவார். மேலும் உடல் பெற்றவர்களிற்சிறந்தவனான அர்ஜுன! இந்த உடலில் வாஸுதேவனான நானே அந்தர்யாமி உருவிலே 'அதியக்ஞ'மாக இருக்கிறேன்.

**கேள்வி:** *'க்ஷரபாவ'த்தை அதிபூதம் என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** அபராப்ரக்ருதியும், அதன் பரிணாமத்தால் உண்டாகும் அழியும் தன்மையுடைய தத்வமும், ஒவ்வொரு கணமும் தேய்ந்து கொண்டே இருக்குமாதலால் 'க்ஷரபாவம்' எனப்படுகின்றது. இதையே *13*வது அத்யாயத்தில் க்ஷேத்ரம் (சரீரம்) என்கிறார். *15*வது அத்யாயத்தில் க்ஷரபுருஷன் என்கிறார். இந்த 'க்ஷரபாவம்' என்பது உடல், புலன்கள், மனம், புத்தி, அஹங்காரம், ப்ராணிகள், அவற்றின் போகப்பொருட்கள் என்ற உருவங்களில் கண்கூடாக விளங்குகின்றன. ஜீவன்களை அண்டி இருக்கின்றன. அதாவது ஜீவனாகிய உணர்வுள்ள பராப்ரக்ருதி இவற்றைத் தாங்கி வந்திருக்கிறது. இதுவே 'அதிபூதம்' எனப்படும். ஏழாவது அத்யாயத்தில் பகவான் அபராப்ரக்ருதியையும் தமது ப்ரக்ருதி என்று சொல்லிவிட்டார். ஆகவே, இந்த க்ஷரபாவமும் பகவானுடையதுதான். எனவே, அதுவும் பகவானைத் தவிர வேறன்று. பகவானே, 'ஸத்-அஸத் எல்லாம் நானே' *(9/19)* என்று கூறுகிறார்.

**கேள்வி:** *'ஹிரண்யமயமான புருஷன்' என்று யாரைக் கூறுகிறார்? அவர் எப்படி அதிதைவம் எனப்படுகிறார்?*

**பதில்:** இங்கே வரும் 'புருஷன்' என்ற சொல் முதலில் தோன்றிய ஆதிபுருஷனைக் குறிக்கிறது. இவரையே ஸூத்ராத்மா, ஹிரண்யகர்பன், ப்ரஜாபதி, ப்ரம்மதேவன் என்றெல்லாம் கூறுகிறார்கள். ஜடமாயும், சேதனமாயும் உள்ள உலகம் முழுவதற்கும் ப்ராணனான புருஷன் இவர். எல்லா தேவதைகளும் இவருடைய உறுப்புக்கள். இவர் எல்லாவற்றிலும் ஊன்றி இருப்பவர்; தலைவர்; உண்டாக்குபவர். அதனால் இவர் 'அதிதைவம்' எனப்படுகிறார். பகவான் தாமே அதிதைவம் என்ற வடிவில் வெளிப்படுகிறார். ஆகவே இவரும் பகவானைத் தவிர வேறல்லர்.

**கேள்வி:** *'இவ்வுடலில் நானே அதியக்ஞனாக இருக்கிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** அர்ஜுனன் இரண்டு கேள்விகளைக் கேட்டார். *(1)* அதியக்ஞன் யார்? *(2)* அவர் இவ்வுடலில் எவ்விதம் உறைகிறார்? இரண்டு கேள்விகளுக்கும் சேர்த்து பகவான் ஒரே பதில் கூறினார். பகவான் தாமே எல்லா யக்ஞங்களையும் ஏற்பவர். அவற்றிற்கு உடைமையாளர் *(5/29, 9/24)*. எல்லாப் பயன்களையும் வழங்குபவரும் அவரே *(7/22)*. அதனால் 'நானே அதியக்ஞன்' என்று அவர் கூறுகிறார். 'ஏவ' என்று அழுத்திக் கூறுவதன் பொருள் அதிபூதம், அதிதைவம் இரண்டும் என்னைத் தவிர வேறல்ல என்பதுதான். பகவான் மிகத் தெளிவாக 'நான் அதியக்ஞன்' என்று கூறிவிட்டார். 'இந்த அதியக்ஞன் உடலில் எவ்விதம் உறைகிறார்?' என்ற கேள்விக்கு விடையாக, 'இந்த உடலில்' என்று மட்டும்தான் கோடி காட்டுகிறார். எங்கும் வ்யாபித்திருக்கும் பகவான் உடலில் அந்தர்யாமியாக விளங்குகிறார் என்பதைக் குறிக்கவே, இந்த ச்லோகத்திற்கு அர்த்தம் கூறுமிடத்தில் 'அந்தர்யாமி' என்ற சொல் சேர்க்கப்பட்டுள்ளது. பகவான் எங்கும் நிறைந்து அந்தர்யாமியாக அனைத்துள்ளும் இருக்கிறார். ஆகவே 8/8,10 ச்லோகங்களில் 'திவ்யபுருஷன்' என்றும், 8/20ல் 'ஸநாதனன், அவ்யக்தன்' என்றும், 8/22ல் எங்கும் நிறைந்தவன் என்றும், எல்லாவற்றிற்கும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஆதாரம் என்றும் கூறுகிறார். 9/4ல் கூட அவ்யக்தமாக (வெளிப்படையாக இல்லாமல்) நிறைந்திருப்பதாகக் கூறுகிறார். இங்கு பகவான் தமது அவ்யக்தமான, நுண்ணிய, எங்கும் நிறைந்த ஸ்வரூபத்தையே 'அதியஜ்ஞம்' என்கிறார். மேலும், அது வேறு, தாம் வேறல்லர் என்பதை வலியுறுத்தவே 'அதியக்ஞனும் நானேதான்' என்று விளக்கமாகக் கூறுகிறார்.

**கேள்வி:** 'தேஹப்ருதாம் வர' என்று அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** "நீ என்னுடைய பக்தன். நான் குறிப்பாகச் சொல்வதைக்கூட நீ அறிந்து கொள்வாய். 'அதியக்ஞமும் நானே' என்ற குறிப்பிலிருந்து 'இந்த எல்லாமே நான்தான்' என்று நீ அறிந்து கொள்ளவேண்டும். இப்படி நீ அறிந்து கொள்வது ஒன்றும் பெரிய செயலன்று" என்று சுட்டிக்காட்டுகிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் அர்ஜுனனுடைய ஆறு கேள்விகளுக்குப் பதில் சொல்லிவிட்டு, இப்பொழுது மரணகாலத்தைப் பற்றிய ஏழாவது கேள்விக்கு பகவான் விடையளிக்க ஆரம்பிக்கிறார்—

**अन्तकाले च मामेव स्मरन्मुक्त्वा कलेवरम्।**
**यः प्रयाति स मद्भावं याति नास्त्यत्र संशयः॥५॥**

**அந்தகாலே ச மாமேவ ஸ்மரந்முக்த்வா கலேவரம் ।**

**ய: ப்ரயாதி ஸ மத்₃பா₄வம் யாதி நாஸ்த்யத்ர ஸம்ஶய: ॥ 5 ॥**

**ய:** – எந்த மனிதன், **அந்தகாலே ச** – மரணகாலத்திலும், **மாம் ஏவ** – என்னையே, **ஸ்மரந்** – நினைத்துக் கொண்டு, **கலேவரம்** – சரீரத்தை, **முக்த்வா** – நீத்து, **ப்ரயாதி** – கிளம்புகிறானோ (அதாவது உயிர்விடுகிறானோ), **ஸ:** – அவன், **மத்₃ பா₄வம்** – என் ஸ்வரூபத்தையே, **யாதி** – அடைகிறான், **அத்ர** – இதில் (சிறிது கூட), **ஸம்ஶய:** – ஸந்தேஹம், **ந அஸ்தி** – இல்லை.

மரணகாலத்திலும் எந்த மனிதன் என்னையே நினைத்துக் கொண்டு சரீரத்தை நீத்துக் கிளம்புகிறானோ, அவன் என் ஸ்வரூபத்தையே அடைகிறான். இதில் சிறிதுகூட ஸந்தேஹம் இல்லை.

**கேள்வி:** இங்கு 'அந்தகாலே' என்ற சொல்லுடன், 'ச' என்று சேர்த்துக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கு 'ச' என்பது 'கூட' என்ற பொருளில் உபயோகப்படுத்தப்பட்டுள்ளது. இதனால் மரணகாலத்தின் தனிப்பட்ட பெருமை வெளிப்படுகிறது. அதனால் எவன் எப்போதும், என்னைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறானோ, அவனைப் பற்றிச் சொல்வதற்கு என்ன இருக்கிறது? எவன் இந்த மனிதப் பிறவியின் கடைசிக் கணத்தில் கூட என்னையே நினைத்து உடலை விடுகிறானோ, அவனும் என்னையே அடைகிறான் என்பதே பகவான் கூறும் கருத்து.

**கேள்வி:** இங்கு 'மாம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** 7/1ல் என்னுடைய முழுமையான ஸ்வரூபத்தை வர்ணிப்பேன் என்று கூறினார். 7/30ல் வர்ணித்தார். இங்கு 'மாம்' என்ற சொல் அந்த ஸமக்ர ஸ்வரூபத்தையே குறிப்பிடுகிறது. முழுமை (ஸமக்ர) என்னும்போது பகவானுடைய எல்லா ஸ்வரூபங்களும் அதிலேயே சேர்ந்துவிடுகின்றன. ஆகவே யாராவது, ஏதாவது ஒரு ஸ்வரூபத்தை பகவான் என்ற எண்ணத்தோடு நினைத்தால், அவரும் பகவானையே ஸ்மரிக்கிறார். அதுபோல பகவானுடைய அந்தந்த அவதாரங்களுக்கு வைக்கப்பட்ட திருநாமங்கள், குணங்கள், ப்ரபாவங்கள், லீலைகள் இவை எல்லாமே பகவானை நினைப்பதற்குக் காரணம் ஆகும். அவற்றை நினைவில் வைத்துக் கொள்வதாலேயே பகவானுடைய நினைவும் தாமாகவே வருகிறது. ஆகவே பகவானுடைய

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நாமம், குணங்கள், ப்ரபாவங்கள், லீலா சரித்ரங்கள் இவற்றை நினைப்பதுகூட பகவானை நினைப்பதாகவே ஆகும்.

**கேள்வி:** 'ஏவ' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'மாம்', 'ஸ்மரந்' என்ற இருசொற்களின் நடுவே 'ஏவ' என்ற சொல்லைப் பயன்படுத்துவதன் உட்பொருள் தாய்-தந்தையர், உற்றார்-உறவினர், மனைவி-மக்கள், செல்வம், கௌரவம், புகழ், ஸ்வர்கம் இவை எவற்றையும் சிந்திக்காமல், என்னையே நினைக்கவேண்டும் என்பதாகும். நினைப்பது உள்ளத்தின் வேலை. வேறு சிந்தனைகள் இல்லாமல், அவற்றை முற்றிலும் அகற்றி பகவானையே ஒரேமுனைப்பாகப் பற்றிக் கொண்டிருக்க வேண்டும் என்பதை வற்புறுத்துகிறார் என்பதே.

**கேள்வி:** 'மத்பாவம்' என்று கூறுவதன் கருத்து என்ன? ஸாயுஜ்யம் முதலிய முக்திகளில் எந்த முக்தியை அடைவார் அல்லது நிர்குண ப்ரம்மத்தை அடைவாரா?

**பதில்:** இது ஸாதகனுடைய விருப்பத்தைப் பொறுத்தது. அவனுடைய விருப்பம் எப்படியோ, அதற்கேற்றபடி அவன் பகவத் ஸ்வரூபத்தை அடைவான். கேள்வியில் குறிப்பிடப்பட்ட எல்லா விஷயங்களும் பகவானை அடைவது என்பதில் அடங்கிவிட்டன.

**கேள்வி:** 'இதில் சிறிதும் ஸந்தேஹமில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கடைசிக் காலத்தில் பகவானை நினைப்பவன் எந்த தேசத்தில், எந்த நேரத்தில், எப்படி இறந்தாலும், அவன் நடத்தை எப்படி இருந்தாலும், அவன் பகவானை அடைவது திண்ணம். இதில் சிறிதுகூட ஐயமில்லை.

**பொருத்தம்:** பகவானை நினைத்துக் கொண்டே இறப்பவன் பகவானையே அடைவான் என்று கூறினார். பகவானை நினைப்பது என்ற விஷயத்தில் மட்டும்தான் இந்தக் குறிப்பிட்ட நியதியா அல்லது மற்ற எல்லாவற்றிற்கும் இது பொருந்துமா என்பதற்கு விடை கூறுகிறார்—

**यं यं वापि स्मरन्भावं त्यजत्यन्ते कलेवरम्।**
**तं तमेवैति कौन्तेय सदा तद्भावभावितः॥ ६॥**

**யம் யம் வாபி ஸ்மரந்ப₄ாவம் த்யஜத்யந்தே கலேவரம் ।**

**தம் தமேவைதி கௌந்தேய ஸதா₃ தத்₃ப₄ாவப₄ாவித: ॥ 6 ॥**

**கௌந்தேய** – குந்தியின் மைந்தனே! அர்ஜுன! (இந்த மனிதன்), **அந்தே** – கடைசிக் காலத்தில் (மரணத்தறுவாயில்), **யம் யம்** – எந்தெந்த, **ப₄ாவம் வா அபி** – ஸ்வரூபத்தை **ஸ்மரந்** – சிந்தித்தவண்ணமாய், **கலேவரம்** – சரீரத்தை, **த்யஜதி** – துறக்கிறானோ, **தம் தம் ஏவ** – அந்தந்த ஸ்வரூபத்தையே, **ஏதி** – அடைகிறான். (ஏனெனில் அவன்), **ஸதா₃** – எப்பொழுதும், **தத்₃ப₄ாவ ப₄ாவித:** – அதே சிந்தனையில் இருந்திருக்கிறான்.

குந்தியின் மைந்தனே! அர்ஜுன! இந்த மனிதன் மரணத்தறுவாயில் எந்தெந்த ஸ்வரூபத்தைச் சிந்தனை செய்தவண்ணமாய் சரீரத்தைத் துறக்கிறானோ, அந்தந்த ஸ்வரூபத்தையே அடைகிறான். ஏனெனில் அவன் எப்பொழுதும் அதே சிந்தனையில் இருந்திருக்கிறான்.

**கேள்வி:** இங்கு 'பாவம்' என்ற சொல் எதைக் குறிக்கிறது? அதை நினைப்பது என்றால் என்ன?

**பதில்:** பகவான், தேவதைகள், மனிதர்கள், விலங்குகள், பறவைகள், புழுக்கள், பூச்சிகள், மரங்கள், வீடு, நிலம் முதலிய உணர்வுள்ளவையும் அல்லது ஜடமானவையும் ஆன எவ்வளவு பொருட்கள் உளவோ, அவையெல்லாம் 'பாவம்' எனப்படும். கடைசிக் காலத்தில் எந்த ஸ்வரூபத்தைச் சிந்திக்கிறானோ, அதுவே அதை நினைப்பதாகும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** கடைசிக் காலம் என்றால் எது?

**பதில்:** எந்தக் கடைசிக் கணத்தில் இந்த ஸ்தூல உடலிலிருந்து, ப்ராணன், புலன்கள், மனம், புத்தி இவையடங்கிய ஸூக்ஷ்ம சரீரமுடைய ஜீவாத்மா பிரிகிறதோ, அந்தக் கணத்தைக் கடைசிக் காலம் என்கிறார்.

**கேள்வி:** *13/21*லும், *14/14,15,18*லும் நல்ல அல்லது தீய பிறவிகள் பெறுவதற்கு ஸத்வ, ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்கள் காரணம் என்று பகவான் கூறுகிறார். இங்கே கடைசிக் காலத்தின் நினைவே காரணம் என்கிறார் – இது ஏன்?

**பதில்:** மனிதன் என்னென்ன செயல்களைப் புரிகிறானோ, அவை ஸம்ஸ்காரங்களாக அவனுடைய உள்ளத்தில் பதிந்துவிடுகின்றன. இவ்விதம் எண்ணற்ற கர்ம ஸம்ஸ்காரங்கள் உள்ளத்தில் நிரம்பியிருக்கின்றன. இந்த ஸம்ஸ்காரங்களுக்கு ஏற்றவாறுதான் எந்த நேரத்தில், எந்தத் துணை, நிமித்தமாக அமைகிறதோ, அதன்படி செயலும், நினைவும் உண்டாகின்றன. ஸாத்விகமான கர்மங்கள் அதிகம் செய்வதால் ஸாத்விகமான ஸம்ஸ்காரங்கள் எப்பொழுது குவிகின்றனவோ, அப்பொழுது அவனிடம் ஸத்வகுணம் மேலிடுகிறது. அதற்கு ஏற்றவாறு நினைவும் ஸாத்விகமாக அமைகிறது. இதேபோல அதிகமாக ராஜஸ, தாமஸச் செயல்களைச் செய்வதால் ராஜஸ, தாமஸ ஸம்ஸ்காரங்கள் பெருகிய அவனிடம் ரஜோ குணமும், தமோ குணமும் மேலிடுகின்றன. அதற்கேற்றபடி நினைவும் ராஜஸமாகவும், தாமஸமாகவும் ஏற்படுகிறது. இவ்விதம் கர்மம், குணம், நினைவு மூன்றும் ஒன்றுபடுவதால் இவற்றில் எதை அடுத்த பிறவிக்குக் காரணமாகக் கூறினாலும் ஒரு தவறும் இல்லை. ஏனெனில் எல்லாம் ஒன்றுதானே!

**கேள்வி:** கடைசிக் காலத்தில் தேவர், மனிதர், விலங்கு, மரம் என்ற உயிர் உள்ள பொருட்கள் நினைவுக்கு வந்து அவன் மரித்தால் அந்தந்தப் பிறவிகளை அடைகிறான் என்பது சரி. ஆனால் நிலம், வீடு போன்ற உயிரற்ற ஜடப்பொருட்களை நினைத்துக் கொண்டே மரிப்பவன் எப்படி அவையாகப் பிறப்பான்?

**பதில்:** நிலம், வீடு முதலியவற்றைச் சிந்தித்துக் கொண்டே மரிப்பவன் அவனுடைய குணம், கர்மங்களுக்கேற்றவாறு நல்ல அல்லது தீய பிறவிகளை அடைகிறான். அந்தப் பிறவியில் அவன் கடைசிக் கணத்தின் வாஸனையினால் – தொடர்பினால் அந்த நிலம், வீடு இவற்றைப் பெறுகிறான். அவனுக்கு எப்பிறவி ஏற்பட்டாலும் அப்பிறவியில் அவன் நினைத்த வீடு, நிலம் முதலியவற்றுடன் அவனுக்குத் தொடர்பு ஏற்படும். எப்படி வீட்டிற்குரியவன் வீட்டைத் தனதாக நினைக்கிறானோ, அதுபோலக் கூடுகட்டி வாழும் பறவை கூட்டைத் தனதென்றும், பூமியில் பொந்து பறித்து வாழும் எலி, எறும்பு முதலியவையெல்லாம் அப்பொந்துகளைத் தம்முடையனவாகவும் நினைக்கும். ஆகவே, ஜீவனுக்கு ஒவ்வொரு பிறவியிலும் ஜடப்பொருட்கள் எப்படியாவது கிடைக்கின்றன.

**கேள்வி:** 'ஸதா தத்பாவ பாவித:' என்ற சொற்றொடருக்கு என்ன பொருள்?

**பதில்:** மனிதன் கடைசிக் காலத்தில் எந்த பாவனையை நினைவில் வைத்துக் கொண்டே உடலை விடுகிறானோ, அவன் அதே பிறவியைப் பெறுகிறான் என்ற ஸித்தாந்தம் சரிதான். ஆனால் கடைசிக் காலத்தில் அந்த பாவனை ஏன் வருகிறது என்பதற்குக் காரணம் கூறும் வகையில், 'ஸதா தத்பாவ பாவித:' என்கிறார். அதாவது மனதில் எந்த பாவனை எப்பொழுதும் இருக்கிறதோ, அதுதான் கடைசிக் காலத்திலும் இருக்கும். எப்படி வைத்தியர்கள் ஏதாவது ஒரு மருந்தில் அவ்வப்போது எந்த ரஸத்தை நினைத்து நினைத்து அந்த ரஸத்தை அதற்கு ஊட்டுகிறார்களோ, அதுபோல முன் ஸம்ஸ்காரம் (மனப்பதிவு), சூழ்நிலை, பற்று, ஆசை, பயம், படிப்பு முதலியவற்றின் சேர்க்கையினால் மனிதன் எந்த எண்ணத்தை அடிக்கடி நினைக்கிறானோ, அவனை அந்தச் சிந்தனை ஆட்கொண்டு விடுகிறது. 'இடைவிடாத' என்ற கருத்தை 'ஸதா' என்ற சொல்லால் பகவான் குறிப்பிடுகிறார். அதாவது வாழ்க்கையில் எப்பொழுதும் இடைவிடாது அடிக்கடி வெகுநேரம் எந்த பாவனை அதிகமாகச் சிந்திக்கப்படுகிறதோ, அதன் பழக்கம் திடப்பட்டுவிடுகிறது. இந்த திடமான பழக்கத்தைத்தான் 'ஸதா தத்பாவ பாவித:' என்ற

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



சொல் குறிப்பிடுகிறது. எந்த பாவனையில் திடப்பழக்கம் உள்ளதோ, அதுதான் கடைசி நேரத்தில் இயல்பாக நினைவுக்கு வரும்.

**கேள்வி:** எல்லோருக்கும் கடைசிக் காலத்தில் வாழ்க்கை முழுவதும் அதிகமாகச் சிந்திக்கப்பட்ட பாவனைதான் நினைவுக்கு வருமா?

**பதில்:** பெரும்பாலும் இப்படித்தான். ஆனால் பரத மஹாராஜனுடைய உள்ளத்தில் மான்குட்டியின் நினைவு கடைசி நேரத்தில் வந்ததுபோல, எங்கேயாவது மரணத்தறுவாயில் ஏற்படுகின்ற சிறிது காலத்திய நினைவுகூடப் பழைய பழக்கமான சிந்தனையை அழுத்திவிட்டு, வலிமை பெற்று வெளிப்படக்கூடும்.

**கேள்வி:** 'தத்பாவ பாவித:' என்ற சொல்லை 'தத்பாவ பாவித: கலேபரம் த்யஜதி' என்று வேறுவிதமாகக் கொண்டு கூட்டி மனிதன் கடைசிக் காலத்தில் எந்தெந்த எண்ணங்களை நினைத்துக் கொண்டு உடலை விடுகிறானோ – இடைவிடாது அந்த எண்ணத்திற்கு ஆட்பட்டு அதை அதை அடைகிறான் – என்று கூறினால் என்ன தவறு?

**பதில்:** இதில் தவறு எதுவுமில்லை. மனிதன் மரணத்தின்போது, கடைசி நேரத்தில் நினைக்கும் எண்ணங்களை முழுமையாக அவன் அடைவதில்லை என்பதும் தெளிவாகத் தெரிகிறது. இறந்த பிறகு, நுண்ணியதாக உள்ளத்தில் படிந்துவிட்ட எண்ணத்திற்கு ஆட்பட்டு குறிப்பிட்ட நேரத்தில் அந்த எண்ணத்தை முழுமையாக நினைவில் பெறுகிறான். ஒருவரை நிழற்படம் எடுக்கும்போது எக்கணத்தில் நிழற்படம் எடுக்கப்படுகிறதோ, அக்கணத்தில் அந்த மனிதன் எவ்விதம் இருக்கிறானோ, அவ்விதம்தான் அந்த நிழற்படத்தில் உருவம் பதிகிறது. அதுபோல் கடைசிக் காலத்தில் மனிதன் என்ன எண்ணுகிறானோ, அதே நினைவின் உருவம்தான் நிழற்படத்தைப்போல அவன் உள்ளத்தில் பதிவாகிறது. அதற்குப் பிறகு நிழற்படம்போல மற்ற உதவிப் பொருட்களின் சேர்க்கையினால் அந்த எண்ணம் வலுப்பட்டு அந்த நேரத்தில் ஸ்தூலமாக வெளிப்படுகிறது.

இங்கு உள்ளம்தான் நிழற்படப்பெட்டியின் உள்ளே இருக்கும் படச்சுருள். அதில் ஏற்படும் நினைவுதான் ப்ரதிபிம்பம். வேறு ஸூக்ஷ்ம சரீரத்தைப் பெறுவதுதான் நிழற்படம் எடுப்பது ஆகும். அதனால்தான் நிழற்படம் எடுப்பவர் எல்லோரையும் எச்சரிக்கையாக முகத்தை மலர்ச்சியாக வைத்துக் கொள்ளுங்கள் என்று கூறுகிறார். அதை மதிக்காமல் இங்குமங்கும் பராக்குப் பார்த்தால் நிழற்படத்தில் பதிவு மாறிப் போகிறது. அதுபோல எல்லா ப்ராணிகளையும் நிழற்படம் எடுக்கும் பகவான் மனிதனை இவ்விதம் எச்சரிக்கிறார்— 'உன்னை நிழற்படம் எடுக்கும் நேரம் மிகவும் நெருங்கிவிட்டது. உன் இறுதி நேரம் எப்போது என்று சொல்ல முடியாது. ஆகவே நீ கவனமாக இரு. இல்லாவிட்டால் நிழற்படம் பாழாகிவிடும்.' இங்கு இடைவிடாது பகவானைச் சிந்தனை செய்வதே, கவனமாக இருப்பதற்குப் பொருள். பரமாத்மாவைத் தவிர வேறொன்றைச் சிந்திப்பதுதான் நிழற்படத்தைப் பாழாக்குவதாகும்.

**பொருத்தம்:** மரணத்தறுவாயில் எதை நினைத்துக் கொண்டு மனிதன் மரிக்கிறானோ, அதையே அடைகிறான். எதை வாழ்க்கையில் அதிகமாகச் சிந்திக்கிறானோ, அதுதான் கடைசிக் காலத்தில் நினைவுக்கு வரும். இது தீர்மானம் ஆனபிறகு பகவானை அடையவேண்டும் என்ற விருப்பமுள்ளவன் கடைசி நேரத்தில் பகவானையே நினைத்துக் கொள்வது மிகவும் அவசியம் என்று ஆகிவிட்டது. அந்தக் கடைசி நேரம் திடீரென்று வரலாம். எப்பொழுது வரும் என்று யாருக்கும் தெரியாது. ஆகவே இடைவிடாது பகவானை பஜனம் செய்து கொண்டே யுத்தம் செய்வாயாக! என்று அர்ஜுனனுக்கு ஆணையிடுகிறார்—

**तस्मात्सर्वेषु कालेषु मामनुस्मर युध्य च।**
**मय्यर्पितमनोबुद्धिर्मामेवैष्यस्यसंशयम् ॥७॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**தஸ்மாத்ஸர்வேஷு காலேஷு மாமநுஸ்மர யுத்₄ய ச ।**
**மய்யர்பிதமநோபு₃த்₃தி₄ர்மாமேவைஷ்யஸ்யஸம்ஶயம் ॥ 7 ॥**

**தஸ்மாத்** – ஆகையினால் (அர்ஜுன! நீ), **ஸர்வேஷு** – எல்லா, **காலேஷு** – காலங்களிலும் (இடைவிடாமல்), **மாம்** – என்னையே, **அநுஸ்மர** – (தொடர்ந்து) நினைத்துக் கொண்டிரு! **யுத்₄ய ச** – போரும் புரிவாயாக! (இவ்வாறு), **மயி** – என்னிடத்தில், **அர்பித மந: பு₃த்₃தி₄:** – அர்ப்பணம் செய்யப்பட்ட மனம், புத்தியுடன் கூடியவனாக (நீ), **அஸம்ஶயம்** – ஐயமின்றி, **மாம் ஏவ** – என்னையே, **ஏஷ்யஸி** – அடைவாய்.

ஆகையினால் அர்ஜுன! நீ எல்லாக் காலங்களிலும் இடைவிடாமல் என்னையே தொடர்ந்து நினைத்துக் கொண்டிரு! போரும் புரிவாயாக! இவ்வாறு என்னிடத்தில் அர்ப்பணம் செய்யப்பட்ட மனம், புத்தியுடன் கூடியவனாக நீ ஐயமின்றி என்னையே அடைவாய்.

**கேள்வி:** இங்கு 'தஸ்மாத்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** மேலே சொன்ன இரண்டு ச்லோகங்களின் பொருளுடன் இந்த ச்லோகத்தின் தொடர்பைக் காண்பிப்பதற்காக 'தஸ்மாத்' என்று ஆரம்பிக்கிறார். இந்த சரீரம் நொடியில் அழிவது. ஆயுளை நம்புவதற்கில்லை. ஆகவே, எது அதிகமாகச் சிந்திக்கப்படுகிறதோ, அதுதான் கடைசி நேரத்தில் நினைவுக்கு வரும். அதனால் பகவானை இடைவிடாது சிந்திக்காமல், போகப் பொருட்களைச் சிந்தித்துக் கொண்டே இருந்து உடலைவிட நேர்ந்தால், பகவானை அடைவதற்காக ஏற்பட்ட இந்த மனிதப் பிறவி வீணாகிவிடும். ஆகவே இடைவிடாது பகவானைச் சிந்திக்கவேண்டும்.

**கேள்வி:** அர்ஜுனனிடம், 'எல்லாக் காலங்களிலும் என்னையே தொடர்ந்து நினைத்து கொண்டிரு' என்று பகவான் கூறுவது சரி. 'போரும் புரிவாயாக' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அர்ஜுனன் க்ஷத்ரியர். அவரது ஸ்வதர்மப்படி அவர் யுத்தம் செய்ய வேண்டிய நேரம் வந்துவிட்டது. தர்ம யுத்தம் என்பது க்ஷத்ரியனுடைய வர்ண தர்மம். ஆகவே, இங்கு 'யுத்தம் செய்' என்று கூறுவதற்குப் பொருள் ஒவ்வொருவரும் அவரவர்க்குரிய வர்ணாசிரம தர்மத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதாகும். பகவானுடைய ஆணை என்று நிஷ்காமமாக வர்ணாசிரம தர்மத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதற்காகவே எந்தக் கர்மத்தைச் செய்தாலும், அதனால் உள்ளம் ப்ரிசுத்தம் ஆகிறது. இது தவிர, செய்யவேண்டிய கடமைகளைத் தவறாமல் செய்யத்தான் வேண்டும் என்பதை வலியுறுத்துவதற்குரிய பல முக்யமான காரணங்கள் *3/4* முதல் *3/30* வரை உள்ள ச்லோகங்களில் சொல்லப்பட்டன. அவற்றை ஆராய்ந்தாலும் மனிதன் வர்ணாசிரம தர்மங்களைக் கடைப்பிடித்துத்தான் ஆகவேண்டும் என்பது உறுதியாகும். ஆகவே நிரந்தரமாக பகவானையும் சிந்திக்க வேண்டும். கடமைகளையும் ஆற்றவேண்டும் என்பதைச் சுட்டிக்காட்டவே இங்கே 'போர் புரிவாயாக' என்று கூறுகிறார்.

**கேள்வி:** இங்கு 'ச' என்பதை உபயோகிப்பதற்கு என்ன பொருள்?

**பதில்:** யுத்தம் செய்வது என்பது அடுத்தபடிதான். பகவானை நினைப்பது முக்யம். அதாவது யுத்தம் முதலிய வர்ண தர்மங்களான ஸ்வதர்மங்கள் பயனையும், விதிமுறையையும் பொறுத்துக் குறிப்பிட்ட நேரத்தில் செய்யப்பட வேண்டியவை. அப்படியே செய்துதான் ஆகவேண்டும். ஆனால் பகவானைச் சிந்திப்பது என்பது மனிதன் எப்போதும் இடைவிடாது எந்த நிலையிலும் செய்யவேண்டியதாகும் என்பது பொருள்.

**கேள்வி:** பகவானை இடைவிடாது சிந்திப்பதும், யுத்தம் முதலிய வர்ண தர்மங்களைக் கடைப்பிடிப்பதும் ஒரே நேரத்தில் எப்படி முடியும்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** முடியும். ஸாதகர்களுடைய பாவனை, ஆர்வம், பொறுப்பு இவற்றிற்கேற்றவாறு இதற்கு வெவ்வேறு வழிகள் உள்ளன. எவர் பகவானுடைய குணம், ப்ரபாவம் முதலியவற்றை நன்கு அறிந்தவரோ, அநன்யமான பக்தி உடையவரோ, 'அகில உலகையும் பகவான்தான் படைத்தார், பகவானைத் தவிர வேறெதுவுமில்லை, எல்லாமே பகவானுடைய திருவிளையாடல்' என்று அறிகிறாரோ, ப்ரஹ்லாதன், கோபியர் போன்று ஒவ்வொரு அணுவிலும் பகவானுடைய தர்சனத்தை நேரிடையாகப் பெறுகிறாரோ – அவருக்கு இடைவிடாது பகவானைச் சிந்தனையும் செய்து கொண்டு மற்ற கடமைகளையும் ஆற்றுவது எளிதாகும். போகங்களில் வைராக்யம் ஏற்பட்டு, பகவானிடம் ஊன்றிய ப்ரேமபக்தி உள்ள நிஷ்காம பாவனையுடன், பகவானின் ஆணையாகவே, கருத்தூன்றி வர்ண தர்மங்களைக் கடைப்பிடிப்பவர்களும் இடைவிடாது பகவானுடைய சிந்தனையுடன் அந்தந்தக் கடமைகளை ஆற்றுவார்கள். எப்படி, தன்னுடைய காலடியைக் கவனமாக வைப்பதிலேயே நோக்கமுள்ள ஒரு கழைகூத்தாடிப் பெண் கழையில் ஏறிப் பலவிதமான வித்தைகளைச் செய்து காட்டுகிறாளோ, எப்படி வண்டி ஓட்டும் சக்ரத்தைக் (Steering) கையில் பிடிக்கும் ஓட்டுநர் அதில் முழுக் கவனத்தோடும்கூடப் பிறருடன் பேச்சுக் கொடுத்தாலும் விபத்தைத் தவிர்ப்பதற்காக, அதே சமயம் போகும் வழியிலும் கவனம் செலுத்துகிறாரோ, அதேபோல பகவானை நினைத்துக் கொண்டே வர்ணாசிரம தர்மங்களையும் நல்லமுறையில் ஆற்ற முடியும்.

**கேள்வி:** மனதையும், புத்தியையும் பகவானிடம் அர்ப்பணம் செய்துவிடுவது என்றால் என்ன?

**பதில்:** புத்தியினால் பகவானுடைய குணம், ப்ரபாவம், ஸ்வரூபம், ரஹஸ்யம், தத்வம் இவற்றை அறிந்து கொண்டு மிகுந்த ச்ரத்தையுடனும், உறுதியான நிச்சய புத்தியுடனும், ப்ரேமையுடனும் குணங்கள், ப்ரபாவங்கள் நிறைந்த பகவானை இடைவிடாது சிந்திப்பதுதான் மனதையும், புத்தியையும் பகவானிடம் ஒப்புவிப்பது ஆகும். 6வது அத்யாய முடிவில் 'மத்கதேநாந்தராத்மநா' என்று இதே விஷயத்தைக் கூறியிருக்கிறார்.

**பொருத்தம்: 5வது ச்லோகத்தில் பகவானை நினைத்துக் கொண்டே இறப்பவருடைய கதியை வர்ணித்து, அர்ஜுனனுடைய ஏழாவது கேள்விக்குச் சுருக்கமாகப் பதில் சொன்னார். அதற்கே விரிவான பதில் கூறுவதற்காக, அப்யாஸம் என்ற யோகத்தின் மூலம் மனதை வசப்படுத்தி பகவானுடைய 'அதியக்ஞம்' என்ற ஸ்வரூபத்தை அதாவது ஸகுணமான, உருவமற்ற, தெய்விகமான அவ்யக்த ரூபத்தைச் சிந்திக்கின்ற யோகிகள் கடைசி நேரத்தில் என்ன கதி பெறுவார்கள் என்பதை அடுத்த மூன்று ச்லோகங்களில் கூறுகிறார்—**

**अभ्यासयोगयुक्तेन चेतसा नान्यगामिना ।**
**परमं पुरुषं दिव्यं याति पार्थानुचिन्तयन् ॥ ८ ॥**

**அப்₄யாஸயோக₃யுக்தேந சேதஸா நாந்யகா₃மிநா ।**
**பரமம் புருஷம் தி₃வ்யம் யாதி பார்த₂ாநுசிந்தயந் ॥ 8 ॥**

**பார்த₂** – அர்ஜுன! **அப்₄யாஸ யோக₃ யுக்தேந** – பகவானை த்யானிப்பது என்ற பயிற்சியான யோகத்தில் ஈடுபட்டு, **ந அந்யகா₃மிநா** – வேறு விஷயங்கள்பால் செல்லாத, **சேதஸா** – மனதினால், **அநுசிந்தயந்** – (பகவானையே) சிந்தித்திருக்கும் (மனிதன்), **பரமம்** – மிகவும் உயர்ந்த (ஒளி பொருந்திய), **தி₃வ்யம்** – தெய்விகமான, **புருஷம்** – புருஷனை (அதாவது ஸாக்ஷாத் பரமேசுவரனையே), **யாதி** – அடைகிறான். (இது நியதி).

அர்ஜுன! பகவானை த்யானிப்பது என்ற பயிற்சியான யோகத்தில் ஈடுபட்டு வேறு விஷயங்கள்பால் செல்லாத மனதினால் பகவானையே சிந்தித்திருக்கும் மனிதன் மிகவும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உயர்ந்த ஒளி பொருந்திய தெய்விகமான புருஷனை — ஸாக்ஷாத் பரமேசுவரனையே அடைகிறான். இது நியதி.

**கேள்வி:** இங்கு 'அப்யாஸ யோகம்' என்றால் என்ன? மனதை அந்த அப்யாஸ யோகத்தில் ஈடுபடுத்துவது எப்படி?

**பதில்:** யமம், நியமம், ஆஸனம், ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம், தாரணை, த்யானம் இவற்றைப் பயிற்சி செய்வது அப்யாஸ யோகம் ஆகும். இத்தகைய அப்யாஸ யோகத்தின் மூலம் மனதை நன்கு வசப்படுத்தி இடைவிடாத பயிற்சியில் ஈடுபட்டிருப்பவரை 'அப்யாஸ யோக யுக்த:' என்று சொல்கிறார்.

**கேள்வி:** 'நாந்யகாமீ' என்று எப்படிப்பட்ட மனதைக் கொள்ளவேண்டும்?

**பதில்:** எந்த மனம் ஒரு பொருளைக் குறிப்பாகச் சிந்தித்திருப்பதில் ஈடுபடும்போது ஒருகணம்கூட அதைவிட்டு அகன்று வேறு பொருளை நினைப்பதில்லையோ, தான் ஈடுபட்டிருக்கும் ஒன்றிலேயே தொடர்ந்து ஒருமுனைப்புடன் ஈடுபடுகிறதோ, அந்த மனதை 'நாந்யகாமீ' (வேறுபுறம் போகாதது) என்று கூறுகிறார். இங்கு மனம் பரமேசுவரனிடமே தொடர்ந்து ஈடுபடவேண்டும் என்பது கருத்து.

**கேள்வி:** 'அநுசிந்தநம்' செய்வது என்றால் என்ன?

**பதில்:** பயிற்சியில் ஈடுபட்டு, வேறுபுறம் திரும்பாத மனதில் பரமேசுவரனுடைய உருவமற்ற ஸ்வரூபத்தை இடைவிடாது த்யானம் செய்து கொண்டேயிருப்பது 'அநுசிந்தநம்' ஆகும்.

**கேள்வி:** இங்கு 'பரமம்', 'திவ்யம்' என்ற அடைமொழிகளுடன் கூடிய 'புருஷம்' என்று யாரைக் குறிப்பிடுகிறார்? அவரை அடைவது என்றால் என்ன?

**பதில்:** 8/4ல் 'அதியக்ஞன்' என்றும், 8/22ல் 'பரம புருஷன்' என்றும் சொல்லப்படுகின்ற படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில் புரிகின்றவரும், ஸகுணமானவரும், உருவமற்றவரும், எங்கும் நிறைந்தவரும், அவ்யக்தரானவரும், ஞானஸ்வரூபருமான பகவானை இங்கு 'திவ்ய பரம புருஷன்' என்று கூறுகிறார். அவரை இடையறாது சிந்தனை செய்து செய்து, அவருடைய உண்மை ஸ்வரூபத்தை அறிந்து, அவருடன் ஒன்றி, அவராகவே ஆகிவிடுவதுதான் 'அவரை அடைவ'தாகும்.

**பொருத்தம்:** திவ்ய புருஷனை அடைவது பற்றிக் கூறிவிட்டு, அவருடைய ஸ்வரூபத்தைக் கூறுகிறார்—

**कविं पुराणमनुशासितारमणोरणीयांसमनुस्मरेद्यः ।**
**सर्वस्य धातारमचिन्त्यरूपमादित्यवर्णं तमसः परस्तात् ॥ ९ ॥**

**கவிம் புராணமநுஶாஸிதாரமணோரணீயாம்ஸமநுஸ்மரேத்₃ய: ।**

**ஸர்வஸ்ய தா₄தாரமசிந்த்யரூபமாதி₃த்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் ॥ 9 ॥**

**ய:** — எந்த மனிதன், **கவிம்** — எல்லாமறிந்தவரும், **புராணம்** — அநாதியானவரும் (தொன்மையானவரும்), **அநுஶாஸிதாரம்** — எல்லாவற்றையும் ஆள்பவரும், **அணோ:** — நுண்ணியதைக் காட்டிலும், **அணீயாம்ஸம்** — மிகவும் நுண்ணியவரானவரும், **ஸர்வஸ்ய** — எல்லாவற்றையும், **தா₄தாரம்** — தாங்கிக் காப்பாற்றுபவரும், **அசிந்த்ய ரூபம்** — சிந்தனைக்கெட்டாத வடிவுடையவரும், **ஆதி₃த்யவர்ணம்** — சூரியனைப் போன்று எப்பொழுதும் சைதன்ய ப்ரகாச வடிவானவரும், **தமஸ:** — அவித்யைக்கு, **பரஸ்தாத்** — மிகவும் அப்பாற்பட்டவரும், சுத்த ஸத் சித் ஆனந்தமயமானவருமான பரமேசுவரனை, **அநுஸ்மரேத்** — நினைக்கிறானோ—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



எந்த மனிதன் எல்லாமறிந்தவரும் அநாதியானவரும் (தொன்மையானவரும்) எல்லாவற்றை யும் ஆள்பவரும் நுண்ணியதைக் காட்டிலும் மிகவும் நுண்ணியவரானவரும் எல்லாவற்றையும் தாங்கிக் காப்பாற்றுபவரும் சிந்தனைக் கெட்டாத வடிவுடையவரும் சூரியனைப் போன்று எப்பொழுதும் சைதன்ய ப்ரகாச வடிவானவரும் அவித்யைக்கு மிகவும் அப்பாற்பட்டவரும் சுத்த ஸத் சித் ஆனந்தமயமானவருமான பரமேசுவரனை நினைக்கிறானோ—

**கேள்வி:** இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

**பதில்:** பரம திவ்ய புருஷனுடைய ஸ்வரூபத்தின் பெருமையை ஸ்ரீ பகவான் விளக்குகிறார். அந்தப் பரமாத்மா எப்பொழுதும் எல்லாவற்றையும் அறிந்தவர். நடந்தது, நடப்பது, நடக்கப் போவது, ஸ்தூலமானது, நுண்ணியது, அதற்குக் காரணம் என்று உலகியலில் வெளிப்படையாகவோ, மறைவாகவோ எவையெல்லாம் உண்டோ, அவற்றை யெல்லாம் உள்ளது உள்ளபடி அறிந்தவர்; ஸர்வக்ஞர் (கவிம்); அவர் அறியாதது ஒன்றுமில்லை; அவரே எல்லாவற்றிற்கும் ஆதி; அவருக்கு முன் எதுவும் இருந்ததில்லை, உண்டானதுமில்லை; அவரே எல்லாவற்றிற்கும் காரணம்; எல்லாவற்றிற்கும் பழமையானவர் (புராணம்). அதனால் அவர் ஸநாதனர் – அனாதியானவர்; எல்லாவற்றிற்கும் யஜமானர்; ஸர்வ வல்லமை படைத்தவர்; எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியானவர்; அவரே எல்லாவற்றையும் கட்டுப்படுத்துகிறவர். அவரே எல்லோருடைய நல்லவும், தீயவுமான கர்மங்களின் பயனை வகுத்துக் கொடுப்பவர். அனைத்தையும் அடக்கி ஆள்பவர். ஆகவே அவர் 'அநுசாஸிதாரம்'. இவ்வளவு சக்தி உள்ளவராக இருந்தபோதிலும் மிகவும் நுண்ணியவர். உலகில் நுண்ணியவை எத்தனை உண்டோ அத்தனைக்கும் நுண்ணியதான தத்வம். எங்கும் எப்பொழுதும் நிறைந்திருப்பவர். ஆகவே மிகவும் நுண்ணிய பார்வையுள்ள மனிதர்களுடைய நுண்ணியதற்கும் நுண்ணியதான புத்தியிலேயே அவருடைய அனுபவம் ஏற்படும். ஆகவே மிகமிக நுண்ணியவர். அணுவுக்கும் சிறிதான அணுவானவர் (அணோரணீயாம்ஸம்). இவ்வளவு நுண்ணியவராக இருந்தபோதிலும் பரந்த எல்லா ப்ரம்மாண்டங்களுக்கும் ஆதாரம். எல்லாவற்றையும் தாங்குபவர், காப்பவர், பேணுபவர். ஆகவே அவர் தாதா (ஸர்வஸ்யதாதாரம்). எப்பொழுதும் எல்லாவற்றிலும் நிறைந்து எல்லாவற்றையும் தாங்கிப் போஷித்து வந்தாலும் அவர் அனைத்திற்கும் அப்பாற்பட்டவர்; மனதிற்கும் அப்பாற்பட்டவர்; புலன்களுக்கும் அப்பாற்பட்டவர். ஆகவே சிந்தனைக்கும் அப்பாற்பட்டவர். மனதிற்கும், புத்திக்கும் சிந்தனை செய்யவும், ஆராயவும் எவ்வளவு ஆற்றல் உண்டோ, அதற்கு அடிப்படை ஊற்றே அவர்தான். அவருடைய உயிரூட்டம் பெற்றுத்தான் அவை செயல்படுகின்றன. அவர் இவையெல்லாவற்றையும் இடைவிடாது பார்த்துக் கொண்டிருக்கிறார். இவற்றிற்கு சக்தியை ஊட்டுகிறார். ஆயினும் இவை அவரைப் பார்க்க முடிவதில்லை. இதனால்தான் அவரை 'அசிந்த்யரூபம்' என்கிறார். அப்படியிருந்தாலும் அவர் ஒளிமயமானவர். எப்பொழுதும் எல்லாவற்றிற்கும் ஒளி அளிப்பவர். சூரியன் தானே ஒளிமயமாக இருந்து கொண்டு, தன் ஒளியினால் உலகனைத்தையும் ஒளிமயமாக ஆக்குவதுபோல, ஒளிமயமான பரமபுருஷன் தம்முடைய இடையறாத ஞானமயமான தெய்விகமான ஒளியினால் எப்பொழுதும் எல்லாவற்றையும் தெள்ளென ஒளிமயமாக்குகிறார். இதனால் அவர் சூரியனைப்போல நித்யமானவர், உணர்வுள்ளவர், ப்ரகாசமானவர் – 'ஆதித்யவர்ணம்'. இப்படிப்பட்ட தெய்விகமானதும், நித்யமானதும், எல்லையற்றதுமான, ஞான வடிவான ஒளியே எவருடைய ஸ்வரூபமோ, அவரிடம் அவித்யை, அஞ்ஞானம் என்ற இருள் இருக்கும் என்று கற்பனை கூடச் செய்து பார்க்க முடியாது. ஆதவன் எப்படி இருளை எவ்விதத்திலும், ஒருபொழுதும் பார்ப்பது இல்லையோ, அதுபோலப் பரமாத்மாவின் ஸ்வரூபமும் எப்பொழுதும், எவ்விதத்திலும் அஞ்ஞானம் என்ற இருளுக்கு அப்பாற்பட்டதுதான். அதுமட்டுமன்று. கொடிய இரவின் காரிருளை அகற்றுவதற்கு எப்படி ஆதவனின் முன்னோடியான அருணோதயமே போதுமோ, அப்படியே கொடிய ஸுகபோகங்களில் ஆழ்ந்த மனிதனுடைய அஞ்ஞானம்கூட பகவானுடைய விஞ்ஞானமயமான ஒளியின் ஜ்வலிக்கின்ற கிரணங்கள் பரவத் தொடங்கும் போதே

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மறைந்துவிடுகிறது. ஆகவே அவர் தமஸ்ஸுக்கு – அவித்யைக்கு அப்பாற்பட்டவர் என்கிறது வேதம் (தமஸ: பரஸ்தாத்). இப்படிப்பட்ட சுத்த ஸத் சித் ஆனந்தமயமான பரமேசுவரனையே மனிதன் எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருக்க வேண்டும்.‡

**கேள்வி:** மேலே கூறியபடி பகவான் சிந்தனைக்கப்பாற்பட்டவராக மனதாலும், புத்தியினாலும் நினைத்துப் பார்க்க முடியாதவராயின் அவரை நினைத்துப் பார்க்க வேண்டும் என்று சொல்வது எப்படிப் பொருந்தும்?

**பதில்:** சிந்தனைக்கப்பாற்பட்ட ஸ்வரூபத்தை உண்மையாக மனமும், புத்தியும் எட்ட முடியா என்பது சரியே. ஆயினும், அந்தப் பரமாத்மாவைப் பற்றி இங்கே சொல்லப்பட்டிருக்கிற இலக்கணங்களைத் திரும்பத் திரும்ப நினைத்து மனனம் செய்ய முடியுமே. அப்படி நினைத்து மனனம் செய்வதே அதை ஒருவாறு உணர்வதற்குக் காரணமாகும். இதற்காகத்தான் நினைத்துப் பார்க்க வேண்டுமென்று சொல்கிறார். அதுவும் பொருத்தமானதுதான்.

**பொருத்தம்: பரம திவ்ய புருஷனின் ஸ்வரூபத்தைச் சொல்லிவிட்டு இனி ஸாதனை முறையையும், பயனையும் கூறுகிறார்—**

**प्रयाणकाले मनसाचलेन भक्त्या युक्तो योगबलेन चैव।**
**भ्रुवोर्मध्ये प्राणमावेश्य सम्यक् स तं परं पुरुषमुपैति दिव्यम्॥ १०॥**

**ப்ரயாணகாலே மநஸாசலேந**
**ப₄க்த்யா யுக்தோ யோக₃ப₃லேந சைவ ।**
**ப்₄ருவோர்மத்₄யே ப்ராணமாவேஶ்ய ஸம்யக்**
**ஸ தம் பரம் புருஷமுபைதி தி₃வ்யம் ॥ 10 ॥**

**ப₄க்த்யா யுக்த:** – பக்தியோடு கூடிய, **ஸ:** – அந்த மனிதன், **ப்ரயாணகாலே** – இறக்கும் தறுவாயிலும், **யோக₃ப₃லேந** – யோகத்தின் வலிமையால், **ப்₄ருவோ:** – புருவங்களின், **மத்₄யே** – மத்தியில், **ப்ராணம்** – ப்ராணனை, **ஸம்யக்** – நன்றாக, **ஆவேஶ்ய** – நிலைநிறுத்தி, **ச** – மேலும், **அசலேந** – அசையாத, **மநஸா** – மனதால், **(ஸ்மரந்** – நினைத்துக் கொண்டு), **தம்** – அந்த, **தி₃வ்யம்** – திவ்ய ரூபத்தோடு கூடிய, **பரம்** – மேலான, **புருஷம் ஏவ** – புருஷனான பரமாத்மாவையே, **உபைதி** – அடைகிறான்.

பக்தியோடு கூடிய அந்த மனிதன் இறக்கும் தறுவாயிலும் யோகத்தின் வலிமையால் புருவங்களின் மத்தியில் ப்ராணனை நன்றாக நிலைநிறுத்தி, மேலும் அசையாத மனதால் நினைத்துக் கொண்டு அந்த திவ்ய ரூபத்தோடு கூடிய மேலான புருஷனான பரமாத்மாவையே அடைகிறான்.

**கேள்வி:** இங்கு 'பக்த்யா யுக்த:' என்பதற்கு என்ன கருத்து?

**பதில்:** பகவானிடம் வைக்கும் ப்ரேமையே பக்தி ஆகும். இந்த பக்தியுடன் கூடியவன் 'பக்த்யா யுக்த:' எனப்படுவான். யாரிடம் அன்பு இருக்கிறதோ அவரிடம்

---

‡ ஶ்வேதாஶ்வதரோபநிஷத்தில் இதேபோல ஒரு மந்த்ரம் உள்ளது—

வேத₃ாஹமேதம் புருஷம் மஹாந்தமாதி₃த்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் ।
தமேவ விதி₃த்வாऽதி ம்ருத்யுமேதி நாந்ய: பந்தா₂ா வித்₃யதேऽயநாய ॥ (3/8)

"எவர் பகலவனைப் போல் ஒளிமயமானவரோ, மிகப்பெரியவரோ, அஞ்ஞானத்திற்கு அப்பாற்பட்டவரோ அவரை நான் அறிவேன். அவரை அறிந்து தகுதிபெற்றவன்தான் அஞ்ஞான இருளைக் கடந்து இறவாப் பெருநிலையை அடைகிறான். பரமாத்மாவை அடைவதற்கு வேறு மார்க்கம் கிடையாது."

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பக்தி உண்டாகும். இங்கு 'நிர்குண நிராகார ப்ரம்மமே நான்' என்று எண்ணிச் செய்யப்படும் அஹம்க்ரஹ உபாஸனை கூறப்படவில்லை. அதாவது இங்கு ஞானயோகம் பற்றிய பேச்சு இல்லை. வழிபடுபவன், வழிபாட்டுக்குரியவன் என்ற முறையில் பக்தி பேசப்படுகிறது.

**கேள்வி:** யோகபலம் என்றால் என்ன? புருவங்களின் மத்தி என்பது எது? ப்ராணன்களை அங்கே நிலைநிறுத்துவது என்றால் என்ன? அதை எப்படிச் செய்வது?

**பதில்:** 8/8ல் சொல்லப்பட்ட அப்யாஸ யோகம்தான் (அஷ்டாங்க யோகம்தான்) இங்கே கூறப்படும் யோகம். அந்த யோகத்தின் பயிற்சியினால் உண்டாகும் முறையான ப்ராண ஸஞ்சாரம், ப்ராணனை அடக்குவதுதான் யோக பலம். இரு புருவங்களின் மத்தியில், யோக சாஸ்த்ரத்தில் கூறப்படுகின்ற ஆக்ஞா சக்ரம் உள்ளது. அதுதான் 'புருவ மத்தி' என்ற ஸ்தானம். இந்த ஆக்ஞா சக்ரம் இரண்டு இதழ்களை உடையது என்பார்கள். இதில் முக்கோணமான யோனி இருக்கிறது. அக்னி, சூரியன், சந்த்ரன் ஆகியோர் இந்த முக்கோணத்தில் ஒருங்கே இருக்கிறார்கள். உண்மையறிந்த யோகிகள் உயிரை விடும்போது யோக பலத்தினால் ப்ராணன்களை இங்கே கொண்டு வந்து நிலையாக ஒடுக்கி நிறுத்தி விடுவார்கள். இதுதான் நன்றாக ப்ராணன்களை நிலைநிறுத்துவதாகும். இவ்விதம் ஆக்ஞா சக்ரத்தில் ப்ராணன்களை நிறுத்துவதற்கு, முன் ஸாதனைகள் அவசியமாகும். இந்த ஆக்ஞா சக்ரத்தின் அருகில் ஏழு கோசங்கள் உள்ளன. அவை (1) இந்து, (2) போதினி, (3) நாதம், (4) அர்த்த சந்த்ரிகை, (5) மஹாநாதம், (6) (சந்த்ரன், சூரியன், அக்னிமயமான) கலை, (7) உன்மனீ என்பன. ப்ராணன்களின் வழியாக உன்மனீ கோசத்தை அடைந்த ஜீவன் பரமாத்மாவை அடைவான். பிறகு அவன் வேறொன்றுக்கு ஆட்பட்டுப் பிறப்பு எடுப்பது தடுக்கப்பட்டு விடுகிறது. அவன் பிறவி எடுப்பதில்லை. அப்படியே பிறவி எடுத்தாலும், அது அவனுடைய அல்லது பகவானுடைய விருப்பத்தால் உலகத்திற்கு உபகாரம் செய்வதற்காகவே ஏற்படும்.

இந்த ஸாதனை முறையைப் பயிற்சி செய்து அனுபவம் உள்ள யோகியான மஹாத்மாவிடம் தெரிந்து கொள்ள வேண்டும். ஏதோ ஒரு புத்தகத்தைப் படித்துவிட்டு யோக ஸாதனை புரியக்கூடாது. அதனால் பயன் உண்டாகுமோ, உண்டாகாதோ – தீங்கு உண்டாவதற்கு அதிக வாய்ப்பு உண்டு.

**கேள்வி:** அசையாத மனதிற்கு என்ன இலக்கணம்?

**பதில்:** 8/8ல் கூறப்பட்ட 'நாந்யகாமீ' என்ற சொல்லின் பொருள்தான் அசைவற்ற மனம் என்று கூறுகிறார். த்யானிக்கப்படும் பொருளில் ஊன்றிவிட்ட மனம் அதிலிருந்து சிறிதுகூட நகருவதில்லை; அசைவதில்லை (6/19).

**கேள்வி:** பரம திவ்ய புருஷனுக்கு இலக்கணம் என்ன?

**பதில்:** பரம திவ்ய புருஷனின் இலக்கணத்தை 8, 9 ச்லோகங்களில் காண்க.

**பொருத்தம்:** ஐந்தாவது ச்லோகத்தில் பகவானை நினைத்து மரிப்பவனான ஸாதாரண மனிதனின் கதியைச் சுருக்கமாகச் சொன்னார். 8 முதல் 10 வரை உள்ள ச்லோகங்களில் பகவானுடைய ஸகுணமான உருவமற்ற, 'அதியக்ஞம்' என்ற பெயருடைய, தெய்விகமான அவ்யக்த ஸ்வரூபத்தைச் சிந்திப்பவரான யோகிகளுக்குக் கடைசி நேரத்தில் ஏற்படும் கதியைச் சொன்னார். இங்கு 11 முதல் 13 வரை பரமனான, அக்ஷரனான, நிர்குணனான, உருவமற்ற பரமாத்மாவை உபாஸிக்கின்ற யோகிகளின் கடைசி நேரத்து கதியை வர்ணிப்பதன் பொருட்டு அந்த அக்ஷர ப்ரம்மத்தின் பெருமையைக் கூறி, அதைப் பற்றிச் சொல்கிறேன் என்று ஆரம்பிக்கிறார்—

यदक्षरं वेदविदो वदन्ति विशन्ति यद्यतयो वीतरागाः।
यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत्ते पदं सङ्ग्रहेण प्रवक्ष्ये॥११॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**யத₃க்ஷரம் வேத₃விதே₃ா வத₃ந்தி**
**விஶந்தி யத்₃யதயோ வீதராகா₃: ।**
**யதி₃ச்ச₂ந்தோ ப்₃ரஹ்மசர்யம் சரந்தி**
**தத்தே பத₃ம் ஸங்க்₃ரஹேண ப்ரவக்ஷ்யே ॥ 11 ॥**

**வேத₃வித₃:** – வேதமறிந்த வித்வான்கள், **யத்** – எந்த (ஸத் சித் ஆனந்தமயமான பரமபதத்தை), **அக்ஷரம்** – அழிவில்லாதது (என்று), **வத₃ந்தி** – கூறுகிறார்களோ, **வீதராகா₃:** – பற்று நீங்கிய, **யதய:** – முயற்சியுள்ள ஸந்யாஸிகளான மஹாபுருஷர்கள், **யத்** – எதில், **விஶந்தி** – புகுகிறார்களோ, **யத்** – எந்த (ப்பரமபதத்தை), **இச்ச₂ந்த:** – விரும்புகின்ற (ப்ரம்மசாரிகள்), **ப்₃ரஹ்மசர்யம்** – ப்ரம்மசர்ய நெறியை, **சரந்தி** – கடைப்பிடிக்கிறார்களோ, **தத்** – அந்த, **பத₃ம்** – பரமபதத்தை (ப்பற்றி), **தே** – உனக்கு, **ஸங்க்₃ரஹேண** – சுருக்கமாக, **ப்ரவக்ஷ்யே** – கூறப் போகிறேன்.

வேதமறிந்த வித்வான்கள் எந்த ஸத் சித் ஆனந்தமயமான பரமபதத்தை அழிவில்லாதது என்று கூறுகிறார்களோ, பற்று நீங்கிய முயற்சியுள்ள ஸந்யாஸிகளான மஹாபுருஷர்கள் எதில் புகுகிறார்களோ, எந்த பரமபதத்தை விரும்புகின்ற ப்ரம்மசாரிகள் ப்ரம்மசர்ய நெறியைக் கடைப்பிடிக்கிறார்களோ, அந்தப் பரமபதத்தைப் பற்றி உனக்குச் சுருக்கமாகக் கூறப் போகிறேன்.

**கேள்வி:** *'வேதவித:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?*

**பதில்:** எதிலிருந்து ப்ரம்மத்தைப் பற்றிய அறிவு கிடைக்குமோ, அதை வேதம் என்பார்கள். இந்த வேதம் தற்சமயம் நான்கு ஸம்ஹிதைகளின் வடிவிலும், ஐதரேயம் முதலிய ப்ராம்மணப் பகுதிகளின் வடிவிலும் கிடைக்கிறது. பரப்ரம்மமான பரமாத்மாதான் வேதங்களுக்கு ப்ராணன்; வேதங்களுக்கு ஆதாரம்; வேதங்களுக்குக் கருப்பொருள் *(15/15)*. அந்தத் தாத்பர்யத்தை அறிந்து, அதை அடைவதற்கு ஓயாமல் ஸாதனைகள் புரிந்து முடிவில் அதை அடைந்துவிட்டவர்களான ஞானிகளான மஹாபுருஷர்களை 'வேதவித:' என்ற சொல் குறிக்கிறது. வேதவித் என்றால் வேதங்களின் உண்மையை அறிந்தவர் என்று பொருள்.

**கேள்வி:** *'வேதங்களை அறிந்தவர்களான அவர்கள் எதை அழிவில்லாதது என்று கூறுகிறார்களோ' என்று சொல்வதன் கருத்து என்ன?*

**பதில்:** 'எதை' என்பது ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்மத்தைக் குறிக்கிறது. வேதங்களை அறிந்த ஞானிகளான மஹாபுருஷர்கள்தாம் அந்த ப்ரம்ம ஸம்பந்தமான விஷயத்தில் ஏதாவது கொஞ்சம் சொல்ல முடியும். இதில் வேறு எவருக்கும் தகுதி கிடையாது. அந்த மஹாத்மாக்கள் 'இது அக்ஷரமானது' என்று கூறுகிறார்கள். அதாவது இது மிகப்பெரிய தத்வம். இது எந்த நிலையிலும், எப்பொழுதும், எவ்விதத்திலும் அழிவதில்லை. இது என்றும் அழியாத, ஒரே ரஸமான, ஒரே ஸ்வரூபம் உடையது. 12/3ல் இந்த அவ்யக்தமான அக்ஷரத்தின் உபாஸனையைக் கூறுகிறார். இங்கும் அதையே கூறுகிறார்.

**கேள்வி:** *'வீதராகா:' என்ற அடைமொழியுடன் கூடிய 'யதய:' என்ற சொல்லுக்கு என்ன கருத்து?*

**பதில்:** எப்போதுமே உலகியலில் பற்றற்றவர்கள் வீதராகர்கள். இத்தகைய வீதராகர்களான, தீவிர வைராக்யம் உடைய, பரமாத்மாவை அடையத் தகுதி பெற்றவர்களையும், ப்ரம்மத்தில் நிலைபெற்ற, மிகவும் உயர்தரமான ஸாதனைகளைப் புரிந்த மஹாத்மாக்களான ஸந்யாஸிகளையும் இங்கே 'யதய:' என்ற சொல் குறிப்பிடுகிறது.

**கேள்வி:** *'யத் விஶந்தி' என்பதற்கு என்ன பொருள்?*

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** 'எதில் புகுகிறார்களோ' என்பது இதன் நேரிடையான பொருள். 'யத்' என்பது ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவைக் குறிக்கிறது. "மேலே சொன்ன ஸாதனைகளைப் புரிந்து, ஸாதனைகளின் எல்லையை எட்டிவிட்ட ஸந்யாஸிகள் எதனிடம் இரண்டறக் கலந்து விடுகிறார்களோ" என்று பொருள். இங்கு 'புகுகிறார்கள்' என்பதற்கு 'ஒருவன் வெளியிலிருந்து வீட்டுக்குள் நுழைவதுபோல' என்பது பொருள் அன்று. பரமாத்மா நம் ஸ்வரூபமே என்பதால் அவர் என்றுமே நம்மால் அடையப்பட்டவர்தான். இந்த 'நித்யப்ராப்த தத்வம்' நமக்குக் கிட்டவில்லையே என்ற தவறான எண்ணம் உள்ளது. அவ்வாறுள்ள அவித்யா ஸ்வரூபமான தவறான எண்ணம் அகல்வதே 'அதில் புகுவது' ஆகும்.

**கேள்வி:** 'எந்தப் பரமபதத்தை விரும்புகின்றவர் ப்ரம்மசர்ய நெறியைக் கடைப்பிடிக்கிறார்களோ' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'பரமபதம்' என்பது இங்கு ப்ரம்மத்தைக் குறிக்கிறது. எதன் விஷயமாக வேதங்களை அறிந்த வித்வான்கள் உபதேசிக்கிறார்களோ, பற்றற்றவர்களான ஸந்யாஸிகள் எதில் இரண்டறப் புகுகிறார்களோ, அந்த ப்ரம்மத்தை அடைவதற்காக ப்ரம்மசாரிகள் ப்ரம்மசர்ய வ்ரதத்தைக் கடைப்பிடிக்கிறார்கள். ப்ரம்மசர்யம் என்பதற்கு உண்மையான பொருள், ப்ரம்மத்தில் – அதன் மார்க்கத்தில் ஸஞ்சரிப்பது என்பதே. எந்த ஸாதனை புரிந்து ப்ரம்மத்தை அடையும் மார்க்கத்தில் முன்னோடிகளாக இருக்கிறார்களோ, அவர்களுடைய அந்நடத்தை ப்ரம்மசர்யம் ஆகும். இந்த ஸாதனைகளை ப்ரம்மசர்ய வ்ரதம் என்று கூறுவார்கள் (6/14ன் விரிவுரை காண்க). ப்ரம்மசர்ய ஆசிரமத்தில் உள்ளவர்கள் அந்த ஆசிரம தர்மமாக இந்த வ்ரதத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். ஆயினும் ஸாதாரணமாக எந்த நிலையில் இருந்தாலும் எல்லா ஸாதகர்களும் சக்திக்கேற்றவாறு ப்ரம்மசர்யத்தைக் கட்டாயம் கடைப்பிடிக்க வேண்டும்.

ப்ரம்மசர்யத்தின் முக்யமான குறிக்கோள் விந்துவைக் காப்பதும், அதைப் பரிசுத்தமாக வைத்துக் கொள்வதுவும்தான். அதனால் கர்ம வாஸனைகள் அழிந்து ப்ரம்மத்தை அடைவதில் உதவி கிடைக்கும். மேல் நோக்குடைய விந்து உள்ளவர்களான (ஊர்த்வரேதஸ்கள்) திடமான ப்ரம்மசாரிகளின் வீர்யம் எந்த நிலையிலும் கீழ் நோக்கிச் செல்லாது. ஆகவே அவர்கள் ப்ரம்மத்தின் மார்க்கத்தில் எளிதாக (சிரமமின்றி) முன்னேறுகிறார்கள். இதற்குக் கீழ்நிலையில் உள்ளவர்கள், கீழ் நோக்கான போக்குடைய விந்து உடையவர்கள் ஆயினும் – மனம், சொல், உடல் இவற்றில் புணர்ச்சியை அறவே ஒழித்து அதைக் காப்பாற்றுவார்கள். இதுவும் ஒருவிதத்தில் ப்ரம்மசர்யம்தான். இதைப் பற்றி கருடபுராணம் கூறுகிறது—

கர்மணா மநஸா வாசா ஸர்வாவஸ்த$_2$ாஸு ஸர்வத$_3$ா ।
ஸர்வத்ர மைது$_2$நத்யாகே$_3$ா ப்$_3$ரஹ்மசர்யம் ப்ரசக்ஷதே ॥

(பூர்வக$_2$ண்ட$_3$ம் ஆ. கா. அத்$_4$ 238/6)

எல்லா இடங்களிலும், எல்லாவிதமான நிலைகளிலும் எப்பொழுதும் மனம், சொல், செயல் இவற்றில் புணர்ச்சியை த்யாகம் செய்வதையே ப்ரம்மசர்யம் என்று கூறுவார்கள்.

ஆசிரமப்பாகுபாட்டின் லக்ஷ்யமே ப்ரம்மத்தை அடைவதுதான். ப்ரம்மசர்யம்தான் எல்லாவற்றிற்கும் முதல் ஆசிரமம். அதில் மிகுந்த அக்கறையுடன் ப்ரம்மசர்ய நியமங்களைக் காப்பது அவசியமாகும். இதைத்தான் ப்ரம்மத்தில் இச்சை உள்ளவர்கள் ப்ரம்மசர்யத்தைக் கடைப்பிடிப்பார்கள் என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'இந்த நிலையை உனக்குச் சுருக்கமாகச் சொல்லப் போகிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** முன் சொன்ன வாக்கியங்கள் எந்தப் பரப்ரம்மமான பரமாத்மாவைக் குறிக்கின்றனவோ, அந்த ப்ரம்மம் என்பது யார்? எவ்விதம் ஸாதனை புரிபவர்கள் கடைசி

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நேரத்தில் அதை அடைவார்கள்? – இந்த விஷயத்தை உனக்குச் சுருக்கமாகச் சொல்லப் போகிறேன் என்று பொருள்.‡

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் எதை வர்ணிக்கப் போகிறேன் என்று சொன்னாரோ, அதை அடுத்த இரண்டு ச்லோகங்களில் வர்ணிக்கிறார்—

**सर्वद्वाराणि संयम्य मनो हृदि निरुध्य च।**
**मूर्ध्न्याधायात्मनः प्राणमास्थितो योगधारणाम्॥ १२॥**
**ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन्मामनुस्मरन्।**
**यः प्रयाति त्यजन्देहं स याति परमां गतिम्॥ १३॥**

**ஸர்வத்3வாராணி ஸம்யம்ய மநோ ஹ்ருதி3 நிருத்4ய ச ।**

**மூர்த்4ந்யாதா4யாத்மந: ப்ராணமாஸ்தி2தோ யோகதா4ரணாம் ॥ 12 ॥**

**ஓமித்யேகாக்ஷரம் ப்3ரஹ்ம வ்யாஹரந்மாமநுஸ்மரந் ।**

**ய: ப்ரயாதி த்யஜந்தே3ஹம் ஸ யாதி பரமாம் க3திம் ॥ 13 ॥**

**ஸர்வத்3வாராணி** – புலன்களின் எல்லா வாயில்களையும், **ஸம்யம்ய** – அடைத்து வைத்து (வெளிவிஷயங்கள் புகாமல் தடுத்து நிறுத்தி), **மந: ச** – மனதையும், **ஹ்ருதி3** – இதயத்தில், **நிருத்4ய** – நிலையாக நிறுத்தி (பின் அவ்வாறு வசப்படுத்தப்பட்ட மனதால்), **ப்ராணம்** – ப்ராணனை, **மூர்த்4நி** – உச்சந்தலையில், **ஆதா4ய** – நிலைபெறச் செய்து, **ஆத்மந:** – பரமாத்மா ஸம்பந்தமான, **யோகதா4ரணாம்** – யோக தாரணையில், **ஆஸ்தி2த:** – நிலைத்து நின்று, **ய:** – எவன், **ஓம் இதி** – 'ஓம்' என்னும், **ஏகாக்ஷரம்** – ஒரே எழுத்தான, **ப்3ரஹ்ம** – ப்ரம்மத்தை, **வ்யாஹரந்** – உச்சரித்துக் கொண்டு, **மாம்** – அந்த 'ஓம்' என்ற ஏகாக்ஷரத்தின் பொருளான நிர்குண ப்ரம்மமான என்னை, **அநுஸ்மரந்** – சிந்தித்து கொண்டு, **தே3ஹம்** – இவ்வுடலை, **த்யஜந்** – நீத்து, **ப்ரயாதி** – செல்கிறானோ, **ஸ:** – அந்த மனிதன், **பரமாம் க3திம்** – உயர்ந்த கதியை, **யாதி** – அடைகிறான்.

புலன்களின் எல்லா வாயில்களையும் அடைத்து வைத்து, வெளிவிஷயங்கள் புகாமல் தடுத்து நிறுத்தி, மனதையும் இதயத்தில் நிலையாக நிறுத்திப் பின் அவ்வாறு வசப்படுத்தப் பட்ட மனதால் ப்ராணனை உச்சந்தலையில் நிலைபெறச் செய்து பரமாத்மா ஸம்பந்தமான யோக தாரணையில் நிலைத்து நின்று எவன் 'ஓம்' என்னும் ஒரே எழுத்தான ப்ரம்மத்தை உச்சரித்துக் கொண்டு அந்த 'ஓம்' என்ற ஏகாக்ஷரத்தின் பொருளான நிர்குண ப்ரம்மமான என்னைச் சிந்தனை செய்து கொண்டு இவ்வுடலை நீத்துச் செல்கிறானோ, அந்த மனிதன் உயர்ந்த கதியை அடைகிறான்.

**கேள்வி:** 'எல்லா வாயில்களையும் அடைத்து வைப்பது' என்றால் என்ன?

**பதில்:** காது முதலிய ஐந்து அறிவுப் புலன்கள் மற்றும் வாக்கு முதலிய ஐந்து செயற்புலன்கள் – இந்தப் பத்துப் புலன்கள் மூலம் பொருட்கள் நுகரப்படுவதால் இவற்றை

---

‡ கடோபநிஷத்தில் இதே கருத்து உள்ள ஒரு மந்த்ரம் (1/2/15) வருகிறது—

ஸர்வே வேதா3 யத்பத3மாமநந்தி தபாம்ஸி ஸர்வாணி ச யத்3வத3ந்தி ।

யதி3ச்ச2ந்தோ ப்3ரஹ்மசர்யம் சரந்தி தத்தே பத3ம் ஸங்க்3ரஹேண ப்3ரவீம்யோமித்யேதத் ॥

"எல்லா வேதங்களும் எந்தப் பதத்தை வர்ணிக்கின்றனவோ, எல்லாத் தவங்களும் எதை விளக்குகின்றனவோ, எதில் விருப்பமுள்ள ப்ரம்மசாரிகள் ப்ரம்மசர்யத்தைக் கடைப்பிடிக்கிறார்களோ, அந்தப் பதத்தை உனக்குச் சுருக்கமாகச் சொல்கிறேன். அதுதான் 'ஓம்' என்பது."

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வாயில்கள் என்பார்கள். மேலும் இந்தப் புலன்கள் இருக்குமிடங்களையும் வாயில்கள் என்பார்கள். இந்தப் புலன்களை வெளி போகப் பொருட்களிலிருந்து அகற்றி, அதாவது பார்ப்பது, கேட்பது முதலிய செயல்களை நிறுத்தி, புலன்களை அவற்றின் இருப்பிடங்களிலேயே தடுத்து நிறுத்தி, புலன்களின் போக்கை உள்முகமாகச் செலுத்துவதுதான் புலன்களை அடக்குவது ஆகும். இதையே யோக சாஸ்த்ரத்தில் 'ப்ரத்யாஹாரம்' என்பர்.

**கேள்வி:** இங்கு இதயம் என்பது எந்த இடம்? மனதை இதயத்தில் நிலைநிறுத்துவது என்றால் என்ன?

**பதில்:** கொப்பூழ், தொண்டை இந்த இரண்டு இடங்களுக்கும் இடையே உள்ளது இதயம். இதையே இதயகமலம் என்பர். இங்குதான் மனமும், ப்ராணன்களும் உள்ளன என்று சொல்வார்கள். இங்கும், அங்கும் திரியும் மனதை ஸங்கல்ப-விகல்பங்களிலிருந்து விடுவித்து இதயத்தில் தேக்கி வைப்பதுதான் இதயத்தில் மனதைத் திடமாக வைப்பது ஆகும்.

**கேள்வி:** 'ப்ராணனை உச்சந்தலையில் நிலைபெறச் செய்யவேண்டும்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனதை இதயத்தில் நிலைநிறுத்திய பிறகு ப்ராணனை மேல் நோக்கு நாடியின் மூலம் இதயத்தின் மேலாக எழுப்பி உச்சந்தலையில் நிலைபெறச் செய்யவேண்டும் என்று சொல்கிறார். இப்படிச் செய்வதனால் ப்ராணன்களோடுகூட மனமும் அங்குச் சென்று நிலைபெறும்.

**கேள்வி:** யோக தாரணையில் நிலைத்து நிற்பது என்றால் என்ன? 'யோகதாரணாம்' என்பதோடு 'ஆத்மந:' என்ற சொல்லைச் சேர்ப்பதன் பொருள் என்ன?

**பதில்:** மேலே சொன்னவிதம் புலன்களை அடக்கி மனதையும், ப்ராணன்களையும் உச்சந்தலையில் நன்றாக நிலைநிறுத்துவதுதான் யோகதாரணையில் நிலைத்து நிற்பது என்பதற்குப் பொருள். இந்த யோகதாரணை பரமாத்மாவுடன் தொடர்பு உண்டாக்குவ தாகையால் மற்ற தேவதைகளைப் பற்றியோ, ப்ரக்ருதியின் பொருட்களைப் பற்றியோ தொடர்பு கொள்ளும் தாரணையைப் பற்றிய பேச்சு இல்லை என்பதற்காக 'ஆத்மாவினுடைய' என்ற அடைமொழியைச் சேர்த்துக் கூறினார்.

**கேள்வி:** ஓம்காரத்தை ஒரே எழுத்துடையது என்று கூறுவதன் கருத்து என்ன? இதை 'ப்ரஹ்மம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 10/25 ச்லோகத்திலும் ஓம்காரம் ஓர் எழுத்துடையது (கிராமஸ்ம்யேகமக்ஷரம்) என்று கூறுகிறார். தவிரவும் இது இரண்டற்ற அழியாத பரப்ரம்ம பரமாத்மாவின் பெயர். பெயரும் பெயருக்கு உடையவனும் உண்மையில் வேறல்லர். ஆகவே, அந்த ஓம்காரத்தையே 'ஓர் அக்ஷரம்', 'ப்ரஹ்மம்' என்று சொல்வது உசிதம்தான். கடோபநிஷத் கூறுகிறது—

ஏதத்$_3$த்$_4$யேவாக்ஷரம் ப்$_3$ரஹ்ம ஏதத்$_3$த்$_4$யேவாக்ஷரம் பரம் ।
ஏதத்$_3$த்$_4$யேவாக்ஷரம் ஜ்ஞாத்வா யோ யதி$_3$ச்ச$_2$தி தஸ்ய தத் ॥
(1/2/16)

இந்த அக்ஷரம்தான் ப்ரம்மம். இந்த அக்ஷரம்தான் மேலானது. இந்த அக்ஷரத்தை அறிந்து கொண்டு எவன் எதை விரும்புகிறானோ, அவன் அதை அடைகிறான்.

**கேள்வி:** வாக்கு முதலிய புலன்களையும், மனதையும் தடுத்து நிறுத்தி ப்ராணன்களை உச்சந்தலையில் நிலைநிறுத்திய பிறகு ஓம்காரத்தை உச்சரிப்பது எப்படி?

**பதில்:** இங்கு வாய்விட்டு உச்சரிப்பது என்பது பொருள் அன்று. மனதால் உச்சரிப்பதையே உச்சரிப்பது என்று இங்கே கூறுகிறார்.

**கேள்வி:** இங்கு 'மாம்' (என்னை) என்று யாரைக் குறிப்பிடுகிறார்? அவரை நினைப்பது என்றால் என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இங்கு ஞானயோகியின் கடைசிக் காலத்தைப் பற்றிப் பேசப்படுவதால், 'மாம்' என்பது ஸத் சித் ஆனந்தமயமான, நிர்குணமான, உருவமற்ற ப்ரம்மத்தையே குறிக்கும். 4வது ச்லோகத்தில், "இவ்வுடலில் 'அதியக்ஞும்' நானேதான்" என்று கூறி, பகவான் எவ்விதம் அதியக்ஞுமும், தாமும் ஒன்றெனக் காட்டினாரோ, அதேபோல ப்ரம்மமும், தாமும் ஒன்றுதான் என்று இங்கே காட்டுகிறார்.

**கேள்வி:** மனதினால் ஓம்காரத்தை உச்சரிப்பதும், அதன் பொருளான ப்ரம்மத்தைச் சிந்திப்பதும் ஒரே நேரத்தில் எப்படி நடைபெறும்?

**பதில்:** மனதினால் இந்த இரண்டு செயல்களையும் ஒரே நேரத்தில் நிச்சயம் செய்ய முடியும். பரமாத்மாவின் நாமமான ஓம்காரத்தை மனதால் உச்சரிப்பதும், ப்ரம்மத்தைச் சிந்திப்பதும் ஒரே சமயத்தில் நடைபெறுவதில் ஒரு தடையுமில்லை. மனதால் நாமத்தை உச்சரிப்பது, நாமத்திற்குரிய ப்ரம்மத்தைச் சிந்தனை செய்ய உதவியாகவே அமையும். மஹரிஷி பதஞ்ஜலியும் கூறுகிறார்— "த்யான காலத்தில் ஸவிகல்ப ஸமாதி நிலையில் – நிர்விகல்ப ஸமாதி கூடும் வரை சொல், அதன் பொருள், அப்பொருளையறிதல் என்ற மூன்று வேறுபாடுகளும் தனித்தனியே மனதில் இருக்கின்றன" (யோகதர்ஸநம் 1/41). ஆகவே, எதைச் சிந்திக்கிறோமோ அதைக் குறிப்பிடும் சொல்லும் மனதின் ஸங்கல்பத்தில் இருப்பது இயல்புதான். பதஞ்ஜலி முனிவர் இதையும் கூறுகிறார்—

**தஸ்ய வாசக: ப்ரணவ: । தஜ்ஜபஸ்தத₃ர்த₂ப₄ாவநம் ।**

**(யோகஸூத₃ர்ஸநம் 1/27,28)**

"அதன் பெயர் ப்ரணவம் (ஓம்). அந்த ஓம்காரத்தை ஜபித்துக் கொண்டே அதன் பொருளான பரமாத்மாவைச் சிந்திக்க வேண்டும்."

**கேள்வி:** இங்கு உயர்ந்த கதியை அடைவதென்றால் என்ன?

**பதில்:** நிர்குணமான–நிராகாரமான ப்ரம்மத்திடம் இரண்டறக் கலந்துவிடுவதுதான் பரமகதியை அடைவதாகும். இதையே எப்பொழுதுமே பிறப்பு–இறப்பிலிருந்து விடுபடுவது, முக்தியை அடைவது, நிர்வாண ப்ரம்மத்தை அடைவது என்றெல்லாம் கூறுவார்கள்.

**கேள்வி:** ச்லோகம் 8 முதல் 10 வரை ஸகுணமான–நிராகாரமான ஈசுவரனை உபாஸிப்பதைக் கூறும் இடம், 11 முதல் 13 வரை நிர்குணமான–உருவமற்ற ப்ரம்மத்தின் உபாஸனையைக் கூறும் இடம். இவ்விதம் இங்கு வெவ்வேறான இரண்டு இடங்கள் என்று கொள்வானேன். ஆறு ச்லோகங்களுக்கும் ஒரே விஷயமாகப் பொருள் கொண்டால் என்ன?

**பதில்:** ச்லோகம் 8 முதல் 10 வரை சொல்லப்பட்ட, உபாஸிக்கப்படுகிற பரமபுருஷனை எல்லாம் அறிந்தவர்; எல்லாவற்றையும் அடக்கி ஆள்பவர்; எல்லாவற்றையும் தாங்கிப் போஷிப்பவர்; சூரியனைப்போலத் தானே ஒளிமயமாக விளங்குகிறவர் என்று சொன்னார். இவையெல்லாம் எங்கும் நிறைந்த பகவானின் தெய்விகமான குணங்கள். ஆனால் ச்லோகம் 11 முதல் 13 வரை இவ்விதமான ஓர் அடைமொழி கூடக் கொடுக்கவில்லை. கொடுத்திருந்தாலல்லவா இங்கு நிர்குணமான–உருவமற்ற பரமாத்மாவைப் பற்றிப் பேசுகிறார் என்பதில் ஏதாவது ஐயம் வரக்கூடும்! தவிர அந்த ஸந்தர்பத்தில் (ச்லோகம் 8–10 வரை) உபாஸகன் பக்தியுள்ளவன் என்று குறிப்பிடுகிறார். அதிலிருந்து உபாஸகன் வேறு, உபாஸிக்கப்படும் பகவான் வேறு என்ற பேத உபாஸனை தெரிகிறது. அதன் பயன் தெய்விகமான பரமபுருஷனை (ஸகுண பரமாத்மாவை) அடைவது என்று கூறுகிறார். இங்கே ச்லோகம் 11–13 வரை அபேத உபாஸனை (அதாவது உபாஸிக்கப்படும் தெய்வமும், உபாஸகனும் வேறல்லர் என்ற வர்ணனை). ஆதலால் உபாஸகனுக்கு அடைமொழி ஒன்றும் கொடுக்கப்படவில்லை. இதன் பயன் பரமகதி (நிர்குணப்ரம்மம்) என்றும் கூறுகிறார். தவிர ச்லோகம் பதினொன்றில் புதிய விஷயம் கூறுவதற்கான முன்னுரையைக் கூறுகிறார். மேலும் இரண்டு ஸந்தர்பங்களும் ஒன்றுதான் என்று கொண்டுவிட்டால் யோகம் பற்றிய விளக்கத்தில், கூறியது கூறல் என்கிற குறை ஏற்படும். இக்காரணங்களால் இந்த ஆறு ச்லோகங்களும் ஒரே விஷயத்தைச் சொல்லவில்லை. இரண்டும் வெவ்வேறானவை என்பது தெளிவாகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொருத்தம்: இவ்விதம் ஸகுண-நிராகார பரமாத்மாவினுடைய உபாஸகர்கள், நிர்குண-நிராகாரமான ப்ரம்மத்தினுடைய உபாஸகர்கள் என்ற இரு யோகிகளின் கடைசி நேரத்து கதியைப் பற்றியும், அதன் பயன் பற்றியும் சொன்னார். ஆனால் எவர்கள் முன்பிருந்தே யோகத்தை அப்யாஸம் செய்து மனதை வசப்படுத்தியவர்களோ, அவர்கள்தான் கடைசிக் காலத்தில் இவ்விதமான ஸாதனையைப் புரிய முடியும். ஸாதாரண மனிதர் கடைசி நேரத்தில் ஸகுண-நிராகார ஸ்வரூபத்தையோ, நிர்குண-நிராகார ஸ்வரூபத்தையோ பற்றி ஸாதனை புரிவது கடினமான கார்யம். ஆகவே எளிதாகப் பரமாத்மாவை அடையும் உபாயத்தை அறிய விருப்பம் உண்டானதும், தம்மை எப்பொழுதும் இடைவிடாது நினைப்பதே தம்மை அடைவதற்குரிய எளிய உபாயம் என்று பகவான் கூறுகிறார்—

**अनन्यचेताः सततं यो मां स्मरति नित्यशः।**
**तस्याहं सुलभः पार्थ नित्ययुक्तस्य योगिनः॥ १४॥**

**அநந்யசேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ: ।**
**தஸ்யாஹம் ஸுலப₄: பார்த₂ நித்யயுக்தஸ்ய யோகி₃ந: ॥ 14 ॥**

பார்த₂ – அர்ஜுன! ய: – எவன், அநந்யசேதா: – வேறு சிந்தனையற்று, நித்யஶ: – எப்பொழுதும், ஸததம் – இடைவிடாமல், மாம் – புருஷோத்தமனான என்னை, ஸ்மரதி – நினைக்கிறானோ, தஸ்ய – அந்த, நித்யயுக்தஸ்ய – எப்போதும் இடைவிடாமல் என்னிடம் ஒன்றிவிட்ட, யோகி₃ந: – யோகிக்கு, அஹம் – நான், ஸுலப₄: – எளிதில் அடையக் கூடியவன் (அதாவது அந்த யோகி என்னை எளிதில் அடைய முடியும்).

அர்ஜுன! எவன் வேறு சிந்தனையற்று எப்பொழுதும் இடைவிடாமல் புருஷோத்தமனான என்னை நினைக்கிறானோ, எப்போதும் இடைவிடாமல் என்னிடம் ஒன்றிவிட்ட அந்த யோகி என்னை எளிதில் அடைய முடியும்.

**கேள்வி:** இங்கு 'அநந்யசேதா:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** வேறு எந்தப் பொருளிலும் ஈடுபடாமல், இடைவிடாது அநன்ய ப்ரேமையுடன் பரமப்ரேமியான (பேரன்பே வடிவமான) பரமாத்மாவினிடம் மட்டும் ஈடுபடும் உள்ளம் பெற்றவன் 'அநந்யசேதா:' எனப்படுவான்.

**கேள்வி:** 'ஸததம்', 'நித்யஶ:' என்று இரு சொற்களை உபயோகிப்பதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஸததம்' என்றால் ஒருகணம்கூட இடையீடு இல்லாமல் தொடர்ந்து த்யானம் செய்வது என்று பொருள். 'நித்யஶ:' என்றால் இப்படித் தொடர்ந்து நினைப்பது உயிருள்ளவரை எப்பொழுதும் ஒருநாள் கூட இடைவெளி இல்லாமல் இருக்க வேண்டும் என்று பொருள். இவ்விதம் இரண்டு சொற்களாலும் உயிருள்ளவரை இடைவிடாது பகவானை நினைத்துக் கொண்டே இருக்க வேண்டும் என்ற கருத்து வெளிப்படுகிறது.

**கேள்வி:** இங்கு 'மாம்' என்ற சொல் எதைக் குறிக்கிறது? அதை ஸ்மரிப்பது எப்படி?

**பதில்:** இங்கு நடைபெறுவது எப்பொழுதும் ப்ரேமையுடன் நினைப்பது பற்றிய பேச்சு. 'அவனுக்கு', 'நான்' – என்று (அவன் வேறு, நான் வேறு என்ற கருத்துடன்) பேத உபாஸனையைக் குறிக்கும் சொற்களும் வருகின்றன. ஆகவே இங்கு 'மாம்' என்பது ஸகுணமான உருவமுள்ள பரமாத்மாவைக் குறிக்கும். அதாவது ஸ்ரீக்ருஷ்ணனையே குறிக்கும். ஆனால் விஷ்ணு பகவானையோ, ஸ்ரீராமனையோ அல்லது வேறு எந்த பகவத் ஸ்வரூபத்தையோ இஷ்ட தெய்வமாகக் கொண்டவர்களுக்கு இந்த 'மாம்' என்ற சொல், அந்த அந்த இஷ்ட தெய்வங்களைக் குறிக்கும். அப்படிப் பரம ப்ரேமையுடனும், ச்ரத்தையுடனும் இடைவிடாது பகவானுடைய ஸ்வரூபத்தையோ, நாமம், குணங்கள்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ப்ரபாவங்கள், லீலைகள் முதலியவற்றையோ சிந்தித்துக் கொண்டே இருப்பதே ஸ்மரணம் என்பதாகும்.

**கேள்வி:** இப்படிப்பட்ட பக்தனுக்கு பகவான் எளிதில் அடையக்கூடியவர் என்பது எப்படி?

**பதில்:** அநன்ய பாவனையுடன் பகவானைச் சிந்தித்துக் கொண்டிருக்கும் ப்ரேமை மிகுந்த பக்தன் பகவானுடைய பிரிவை ஒருகணம்கூடப் பொறுக்க மாட்டான். அதுபோல, **'யே யத₂ா மாம் ப்ரபத்₃யந்தே தாம்ஸ்ததை₂வ ப₄ஜாம்யஹம்'** *(4/11)* (எவர்கள் எவ்விதம் என்னை வழிபடுகிறார்களோ, அவர்களை அவ்விதமே அடைவேன்) என்று கூறியபடி பகவானுக்கும் அவர்களுடைய பிரிவு சகிக்க ஒண்ணாதது. பகவானே அப்படிப்பட்ட பக்தனுடன் இணைய வேண்டும் என்று நினைத்த பிறகு அங்கே கடினம் என்ற கருத்துக்கு இடம் ஏது? இதே காரணத்தினால்தான் பகவான் அவர்களுக்கு மிக எளியவன் என்று கூறுகிறார்.

**கேள்வி:** எப்பொழுதும் இடைவிடாது ஸ்மரணம் செய்யும் பக்தனுக்கு பகவான் எளிதில் கிடைப்பார் என்று ஏற்றுக் கொள்வோம். ஆனால் பகவானை எப்பொழுதும் இடைவிடாது ஸ்மரணம் செய்ய முடியுமா?

**பதில்:** பகவானிடத்திலும், பகவானை அடைந்துவிட்ட மஹாத்மாக்களிடத்திலும் மிகுந்த ச்ரத்தையும், பேரன்பும், எப்பொழுதும் இடைவிடாது ஸ்மரிப்பதால் பகவான் எளிதில் கிடைப்பார் என்பதில் முழு நம்பிக்கையும் உள்ளவர்களுக்கு பகவானுடைய க்ருபையால் பகவானுடைய ஸ்மரணம் எளிதாக, இயல்பாக எப்பொழுதும் இடைவிடாமல் அமையும். ஆனால், எவருக்கு ச்ரத்தையும், ப்ரேமையும் இல்லையோ, எவர் பகவானுடைய குண ப்ரபாவங்களை அறிய மாட்டார்களோ, எவர்களுக்கு மஹான்களுடைய தொடர்பு கிடைக்கவில்லையோ, அவர்களுக்கு பகவானுடைய ஸ்மரணம் எப்பொழுதும் இடைவிடாது அமைவது கடினம்தான்.

**பொருத்தம்:** பகவானை எப்பொழுதும் இடைவிடாது சிந்திப்பதால் பகவானை எளிதாக அடைய முடியும் என்று சொன்னார். தொடர்ந்து அவனுக்கு மறுபிறவி கிடையாது என்று கூறி, பகவானை அடைந்துவிட்ட மஹாபுருஷர்களுக்கு எவ்விதத்திலும் பகவானுடைய பிரிவு ஏற்படாது என்றும் சுட்டிக்காட்டுகிறார்—

**मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम्।**
**नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः॥ १५॥**

**மாமுபேத்ய புநர்ஜந்ம து₃:க₂ாலயமஶாஶ்வதம் ।**
**நாப்நுவந்தி மஹாத்மாந: ஸம்ஸித்₃தி₄ம் பரமாம் க₃தா: ॥ 15 ॥**

**பரமாம்** – மிக உயர்ந்த, **ஸம்ஸித்₃தி₄ம்** – ஸித்தியை, **க₃தா:** – அடைந்த, **மஹாத்மாந:** – மஹாத்மாக்கள், **மாம்** – என்னை, **உபேத்ய** – அடைந்துவிட்ட பிறகு, **து₃:க₂ாலயம்** – துன்பங்களுக்கு உறைவிடமானதும், **அஶாஶ்வதம்** – நிலையற்றதுமான (கணத்தில் அழியக் கூடிய), **புநர்ஜந்ம** – மறுபிறவியை, **ந ஆப்நுவந்தி** – அடைவதில்லை.

மிக உயர்ந்த ஸித்தியை அடைந்த மஹாத்மாக்கள் என்னை அடைந்துவிட்ட பிறகு துன்பங்களுக்கு உறைவிடமானதும் நிலையற்றதுமான மறுபிறவியை அடைவதில்லை.

**கேள்வி:** 'மிக உயர்ந்த ஸித்தி' என்றால் எது? 'மஹாத்மா' என்று யாரைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** உயர்ந்த ச்ரத்தையுடனும், ப்ரேமையுடனும் எப்பொழுதும் இடைவிடாது பஜனம், த்யானம் முதலிய ஸாதனைகளைப் புரிந்து கொண்டே ஸாதனையின் எல்லை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நிலையை அடைந்த பிறகு வேறு ஒரு ஸாதனையும் புரியவேண்டியது எஞ்சியிராது. அக்கணமே பகவானுடைய நேரிடையான ஸாக்ஷாத்காரத்தைப் பெற்றுவிடுவார்கள். அந்த மிக உயர்ந்த எல்லையை எய்திய நிலையைத்தான் 'பரம ஸித்தி' என்று கூறுகிறார். எந்த பக்தன் இந்தப் பரம ஸித்தியைப் பெற்றுவிட்டானோ, அந்த ஞானியான பக்தனையே இங்கு மஹாத்மா என்று அழைக்கிறார்.

**கேள்வி:** மறுபிறவி என்றால் என்ன? அது ஏன் துயரங்களின் உறைவிடம், அழியக் கூடியது என்று கூறப்படுகிறது?

**பதில்:** ஜீவன் பரமாத்மாவை அடையாத வரை கர்மத்துக்கு ஆட்பட்டு ஒரு பிறவியைவிட்டு மறுபிறவி எடுப்பது என்பது தவிர்க்க முடியாதது. ஆகவே மரணத்திற்குப் பிறகு, கர்மங்களுக்குக் கட்டுப்பட்டு தேவர்கள், மனிதர்கள், பசு-பக்ஷி முதலிய பிறவிகளில் ஏதோ ஒன்றில் பிறப்பு எடுப்பதே மறுபிறவி ஆகும். அது எந்தப் பிறவியாயிருந்தாலும் துக்கமயம்தான்; அழியக்கூடியதுதான். வாழ்க்கை அழிவது என்பதற்கு அடையாளம் மரணம். ஆனால் வாழ்க்கையில் எவ்வெப்பொருட்களுடன் சேர்க்கை ஏற்படுகிறதோ, அவற்றில் ஒன்றுகூட நிலைத்து நிற்கக் கூடியதன்று. எப்பொழுதும் கூடி இருப்பதுமன்று. இன்று ஸுகம் அளிப்பதாகத் தோன்றும் பொருள் வேறு உருவம் பெற்றுவிட்டாலோ அல்லது அதைப் பற்றிய நம் கருத்து மாறிவிட்டாலோ, அதுவே துக்கத்திற்குச் காரணம் ஆகிறது. வாழ்க்கையில் ஸுகம் அளிப்பது என்று மனிதன் எதைக் கருதுகிறானோ, அந்த வஸ்து அழிந்துவிட்டாலோ அல்லது அதை விட்டுவிட்டுத் தான் மரிக்க நேர்ந்தாலோ அதுவும் துக்கத்தையே அளிக்கிறது. இத்துடன்கூடத் தன்னுடன் இருக்கும் ஒவ்வொரு பொருளும் குறைவு என்று தோன்றினாலோ, தன் நிலையும் தாழ்ந்தது என்ற உணர்வு ஏற்பட்டாலோ, அது அழிந்து போய்விடுமோ என்ற கவலை துன்பத்தைத் தருவதுதான். இப்படி ஸுகம் எனக் காணப்படும் பொருட்களைச் சேர்ப்பதிலும், அனுபவிப்பதிலும், பற்றுக் காரணமாகப் பலவிதமான பாவங்கள் செய்ய நேர்கின்றன. அவற்றின் விளைவாகப் பலவித கஷ்டங்கள், நரகத்தில் யாதனைகள் முதலியன ஏற்படுகின்றன. இவ்விதம் ஒவ்வொரு பிறவியிலும் கருப்பையிலிருந்து தொடங்கி இறப்பு வரை துக்கத்தின் மேல் துக்கம்தான் தொடர்கிறது. ஆகையால் மறுபிறவியைத் துக்கத்தின் தாயகம் (உறைவிடம்) என்று கூறுகிறார். எந்தப் பிறவியில் எந்த போகம் கிடைத்தாலும் அது தொடர்ந்து இருப்பதில்லை. ஆதலால் அதை *அஶாஶ்வதம்* (நிலையற்றது) என்கிறார்.

**கேள்வி:** மேலே சொன்ன மஹாத்மாக்களுக்கு ஏன் மறுபிறவி கிடையாது?

**பதில்:** அநன்ய ப்ரேமிகளான, வேறு எதிலும் ப்ரியம் இல்லாமல் பகவான் ஒருவரிடமே ப்ரியமுள்ளவர்களான அந்த பக்தர்கள் பகவானை அடைந்துவிடுவதால், அவர்களுக்கு மறுபிறவி கிடையாது. எல்லா ஸுகங்களும் நிறைந்து விளங்கும் எல்லையற்ற கடலானவரும், எல்லாவற்றிற்கும் ஆதாரமானவரும், மிகச் சிறந்த புகலானவரும், பரமாத்மாவானவரும், பரமபுருஷனானவருமான பகவான் ஒரு முறை எவருக்குக் கிடைத்து விடுகிறாரோ, அவருக்கு மறுபடியும் எந்த நிலையிலும் பகவானுடைய பிரிவு ஏற்படாது என்பது ஒரு நியமம். ஆகவே பகவானை அடைந்த பிறகு உலகில் பிறவி எடுக்க நேரிடாது என்று கூறுகிறார்.

**பொருத்தம்: பகவானை அடைந்துவிட்ட மஹாத்மாவுக்கு மறுபிறவி கிடையாது என்று சொல்வதால் மற்ற ஜீவர்களுக்கு மறுபிறவி உண்டு என்று ஆகிறது. ஆகவே, எந்த லோகம் வரை சென்ற ஜீவன் திரும்பிவர நேர்கிறது என்பதற்குப் பதில் கூறுகிறார்—**

**आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन।**
**मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते॥ १६॥**

**ஆப்₃ரஹ்மபு₄வநால்லோகா: புநராவர்திநோऽர்ஜுந ।**
**மாமுபேத்ய து கௌந்தேய புநர்ஜந்ம ந வித்₃யதே ॥ 16 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அர்ஜுந** – அர்ஜுன! **ஆப்₃ரஹ்மபு₄வநாத்** – ப்ரம்மலோகம் வரை (உள்ள), **லோகா:** – எல்லா உலகங்களும், **புந: ஆவர்திந:** – அழிந்து உண்டாகும் தன்மையுடையன. (அதாவது அந்த லோகங்களை அடைந்தாலும் திரும்பவும் உலகில் பிறக்க நேரிடும்). **து** – ஆனால், **கௌந்தேய** – குந்தியின் புதல்வனே! **மாம்** – என்னை, **உபேத்ய** – அடைந்த பின்னர், **புநர்ஜந்ம** – மறுபிறவி, **ந வித்₃யதே** – கிடையாது. (ஏனென்றால் நானோ காலத்தைக் கடந்தவன்; இந்த ப்ரம்மலோகம் முதலியன எல்லாம் காலவரைக்குட்பட்டு அழிவன).

அர்ஜுன! ப்ரம்மலோகம் வரை உள்ள எல்லா உலகங்களும் அழிந்து உண்டாகும் தன்மையுடையன. அதாவது அந்த லோகங்களை அடைந்தாலும் திரும்பவும் உலகில் பிறக்க நேரிடும். ஆனால் குந்தியின் புதல்வனே! என்னை அடைந்தபின்னர் மறுபிறவி கிடையாது. ஏனென்றால் நானோ காலத்தைக் கடந்தவன்; இந்த ப்ரம்மலோகம் முதலியன எல்லாம் காலவரைக்குட்பட்டு அழிவன.

**கேள்வி:** இங்கு 'ப்ரம்மலோகம்' என்றால் எது? 'அதுவரை' என்றால் என்ன பொருள்? 'லோகங்கள்' என்று எவற்றைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** நான்முக ப்ரம்மா படைப்பின் ஆரம்பத்தில் பகவானுடைய உந்தித்தாமரையிலிருந்து பிறந்து எல்லாப் படைப்புகளையும் செய்தார். அவரையே ப்ரஜாபதி, ஹிரண்யகர்பர், ஸூத்ராத்மா என்று கூறுவர். அவரை இவ்வத்யாயத்தில் 'அதிதைவம்' என்றும் கூறினார் (8/4). அவர் உறையும் மேல் உலகம் 'ப்ரம்மலோகம்'. 'லோகா:' என்ற சொல் வெவ்வேறு லோகபாலர்களின் இடங்களான 'பூ:', 'புவ:', 'ஸ்வ:' முதலிய உலகங்களையும் குறிக்கிறது. ப்ரம்மலோகத்தை மேல் எல்லையாகக் கொண்டு அதற்குக் கீழுள்ள மற்ற எல்லா உலகங்களையும் சேர்த்து 'அதுவரை' என்ற சொல்லால் குறிப்பிடுகிறார்.

**கேள்வி:** 'புநராவர்திந:' என்று எந்த லோகங்களைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** சென்றடைந்த உயிர்கள் மீண்டும் திரும்பி வரும் இயல்புடைய உலகங்களையும், ஜீவர்கள் முக்திபெற வாய்ப்பற்ற (ஸ்வர்கம், நரகம் முதலான) உலகங்களையும் 'புநராவர்திந:' (அழிந்து உண்டாகும் உலகங்கள்) என்று கூறுகிறார்.

**பொருத்தம்:** ப்ரம்ம லோகம் வரை உள்ள எல்லா உலகங்களும் அழிந்து உண்டாவன என்று சொன்னார். அவை எப்படி அழிந்து உண்டாகின்றன என்று கூறுவதற்காக ப்ரம்மாவின் பகல்–இரவுகளின் எல்லைகளை விவரித்து எல்லா உலகங்களும் ஒரு நாள் அழிபவைதான் என்பதைக் கூறுகிறார்—

**सहस्रयुगपर्यन्तमहर्यद्ब्रह्मणो विदुः ।**
**रात्रिं युगसहस्रान्तां तेऽहोरात्रविदो जनाः ॥ १७ ॥**

**ஸஹஸ்ரயுக₃பர்யந்தமஹர்யத்₃ப்₃ரஹ்மணோ விது₃: ।**
**ராத்ரிம் யுக₃ஸஹஸ்ராந்தாம் தேऽஹோராத்ரவிதோ₃ ஜநா: ॥ 17 ॥**

**ப்₃ரஹ்மண:** – ப்ரம்மாவுக்கு, **யத்** – எது, **அஹ:** – ஒரு பகலோ (அது), **ஸஹஸ்ரயுக₃பர்யந்தம்** – ஓராயிரம் சதுர்யுகங்களைக் காலவரையறையாகக் கொண்டது (என்றும் அவ்வாறே), **ராத்ரிம்** – இரவும், **யுக₃ஸஹஸ்ராந்தாம்** – ஓராயிரம் சதுர்யுகங்களை முடிவாகக் கொண்டது என்றும், (யே – எந்த மனிதர்கள்), **விது₃:** – தத்வரீதியாக அறிகிறார்களோ, **தே ஜநா:** – அந்த யோகியர், **அஹோராத்ரவித₃:** – பகலிரவு என்ற காலத்தின் தத்வத்தை அறிந்தவர்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ப்ரம்மாவுக்கு எது ஒரு பகலோ அது ஓராயிரம் சதுர்யுகங்களைக் காலவரையறையாகக் கொண்டது என்றும், அவ்வாறே இரவும் ஓராயிரம் சதுர்யுகங்களை முடிவாகக் கொண்டது என்றும், எந்த மனிதர்கள் தத்வரீதியாக அறிகிறார்களோ, அந்த யோகியர் பகலிரவு என்ற காலத்தின் தத்வத்தை அறிந்தவர்கள்.

**கேள்வி:** 'ஆயிரம் யுகங்கள்' என்பது எவ்வளவு காலத்தைக் குறிக்கிறது? அது ப்ரம்மாவின் பகல்-இரவு என்ற கணக்கு என்பதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கு 'யுகம்' என்பது தேவயுகத்தைக் குறிப்பிடுகிறது. ஸத்ய (க்ருத) யுகம், த்ரேதாயுகம், த்வாபரயுகம், கலியுகம் என்ற நான்கும் ஒன்று சேர்ந்தால் ஒரு தேவயுகம். தேவர்களுக்கு இது ஒரு யுகம். இது தேவதைகளுடைய யுகம். நம்முடைய காலக்கணக்குப்படி முந்நூற்று அறுபது மடங்கு அதிகமாக விரிந்தது. அதாவது நம்முடைய ஓர் ஆண்டு தேவர்களுக்கு இருபத்து நான்கு மணி நேரமுடைய ஒரு பகல் இரவு. நம்முடைய முப்பது ஆண்டுகள் தேவர்களுக்கு ஒரு மாதம். நம்முடைய முந்நூற்று அறுபது ஆண்டுகள் தேவர்களுக்கு ஓர் ஆண்டு. இப்படிப் பன்னீராயிரம் தேவ வருஷங்கள் சேர்ந்தது ஒரு தேவயுகம். இதையே மஹாயுகம் என்றும், நான்கு யுகம் என்றும் கூறுவர். இந்த எண்ணிக்கையைக் கூட்டினால் நம்முடைய ஆண்டுக் கணக்குப்படி நாற்பத்து மூன்று லட்சத்து இருபதினாயிரம் ஆண்டுகள் ஆகின்றன. தேவ வருஷங்களின் கணக்குப்படி பன்னிரண்டு நூறு தேவ வருஷங்கள் நம்முடைய கலியுகம். இருபத்து நான்கு நூறு தேவ வருஷங்கள் த்வாபரயுகம். முப்பத்தாறு நூறு தேவ வருஷங்கள் த்ரேதாயுகம். நாற்பத்தெட்டு நூறு தேவ வருஷங்கள் ஸத்யயுகம் என்று ஆகிறது. கூட்டிப் பார்த்தால் பன்னீராயிரம் தேவ ஆண்டுகள் ஆகின்றன. இது ஒரு தேவயுகம். இப்படி ஆயிரம் தேவயுகங்கள் ப்ரம்மாவின் ஒரு பகல். அவ்வளவு யுகங்கள் கொண்டது ஓர் இரவு. இதை வேறுவிதமாகவும் கணக்கிட்டுத் தெரிந்து கொள்ளலாம். நம்முடைய யுகங்களின் அளவுகள் இப்படி அமைகின்றன—

| | | |
|---|---|---|
| கலியுகம் | — | 4,32,000 ஆண்டுகள் |
| த்வாபரயுகம் | — | 8,64,000 (கலியுகத்திற்கு இரு மடங்கு) |
| த்ரேதாயுகம் | — | 12,96,000 (கலியுகத்திற்கு மூன்று மடங்கு) |
| ஸத்யயுகம் | — | 17,28,000 (கலியுகத்திற்கு நான்கு மடங்கு) |
| ஆக மொத்தம் | — | 43,20,000 ஆண்டுகள் |

இது ஒரு தேவயுகம். இவ்விதம் ஆயிரம் தேவயுகங்கள் – அதாவது நமது மனித ஆண்டுகளாக நானூற்று முப்பத்திரண்டு கோடி ஆண்டுகள் ப்ரம்மாவுக்கு ஒரு பகல். அதுபோல ஓர் இரவு.

மனுஸ்ம்ருதி முதல் அத்யாயம் 64 முதல் 73வது ச்லோகம் வரை இது தெளிவாக விளக்கப்பட்டிருக்கிறது. ப்ரம்மாவின் ஒரு பகலை கல்பம் அல்லது ஸர்க்கம் என்றும், இரவை ப்ரளயம் என்றும் கூறுவர். இப்படி முப்பது பகலிரவு சேர்ந்தால் ப்ரம்மாவின் ஒரு மாதம். இப்படிப் பன்னிரண்டு மாதங்கள் சேர்ந்தால் ஓராண்டு. இவ்விதம் நூறாண்டுகள் ப்ரம்மாவின் முழு ஆயுள். ப்ரம்மாவின் பகல், இரவு பற்றிச் சொல்லிய பகவான், அவருடைய உலகுக்கும் ஒரு நாள் முடிவுண்டு, அழிவுண்டு. ஆகவே அதுவும் அநித்யம்தான். அதுவே அநித்யமானால் அதற்குக் கீழே உள்ள லோகங்களும், அவற்றில் வாழும் ப்ராணிகளின் உடல்களும் அநித்யம் என்று சொல்லவும் வேண்டுமோ என்று குறிப்பிடுகிறார்.

**கேள்வி:** எவர்கள் ப்ரம்மாவின் பகல், இரவுகளின் தத்வத்தை அறிகிறார்களோ, அவர்கள் பகலிரவு என்ற காலக் கணக்கின் முடிவை அறிந்தவர்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** ப்ரம்மாவின் பகல் இரவுக்கு எல்லை அறிந்தவர்கள் ப்ரம்மலோகமும் அதற்குள் அடங்கிய மற்ற லோகங்களும் அநித்யம்தான் என்று அறிவார்கள். அந்த லோகங்களே அநித்யமென்றால் அங்கே கிடைக்கும் போகங்களும் அநித்யமானவை, அழியக்கூடியவை என்று அறியாரா என்ன? எது அநித்யமோ, அழியக்கூடியதோ, அது நித்யமான ஸுகத்தை அளிக்காது. ஆகவே இவ்வுலக, பரலோக ஸுகங்களில் பற்று வைத்து, அவற்றை அடைவதற்கான முயற்சியைச் செய்வது, மனிதப் பிறவியைத் தவறான பாதையில் செலுத்தி, அதை வீணாக்கி இழப்பது என்பது மிகப்பெரிய மூடத்தனமாகும். மனிதப் பிறவியின் கால அளவோ மிகக்குறைவு (9/33). ஆகவே பகவானை ப்ரேமையுடன் இடைவிடாது சிந்தித்து விரைவில் அடைந்து விடுவதுதான் அறிவுடைமையாகும். மனிதப் பிறவியைப் பயனுள்ளதாக்கும். இவ்விதம் அறிந்தவர்கள் – பகலிரவு என்ற காலதத்வத்தை உணர்ந்தவர்கள் தமது விலைமதிப்பற்ற நேரத்தைப் பயனுள்ளதாக்கி லாபமடைபவர்கள்.

**பொருத்தம்: ப்ரம்மாவின் பகலிரவுகளின் அளவுகளைக் கூறி, அந்தப் பகலின் ஆரம்பத்தில் ப்ராணிகளின் உற்பத்தியும், இரவில் ப்ரளயமும் உண்டாகும் என்று கூறி, எல்லாம் அழிபவை என்றும் நிரூபிக்கிறார்—**

**अव्यक्ताद्व्यक्तय: सर्वा: प्रभवन्त्यहरागमे ।**
**रात्र्यागमे प्रलीयन्ते तत्रैवाव्यक्तसंज्ञके ॥ १८ ॥**

**அவ்யக்தாத்₃வ்யக்தய: ஸர்வா: ப்ரப₄வந்த்யஹராக₃மே ।**

**ராத்ர்யாக₃மே ப்ரலீயந்தே தத்ரைவாவ்யக்தஸம்ஜ்ஞகே ॥ 18 ॥**

**அஹராக₃மே** – ப்ரம்மாவின் பகல் தொடங்கும்போது, **ஸர்வா:** – எல்லாவிதமான, **வ்யக்தய:** – சராசரமான உயிர்த்தொகுதிகளும், **அவ்யக்தாத்** – அவ்யக்தத்திலிருந்து (ப்ரம்மாவின் ஸூக்ஷ்ம சரீரத்திலிருந்து), **ப்ரப₄வந்தி** – வெளிப்படுகின்றன. (மேலும்), **ராத்ர்யாக₃மே** – ப்ரம்மதேவனின் இரவு தொடங்கும்போது, **தத்ர** – அந்த, **அவ்யக்த ஸம்ஜ்ஞகே ஏவ** – அவ்யக்தம் என்ற பெயருள்ள ப்ரம்மாவின் ஸூக்ஷ்ம சரீரத்திலேயே, **ப்ரலீயந்தே** – மறைகின்றன.

ப்ரம்மாவின் பகல் தொடங்கும்போது எல்லாவிதமான சராசரமான உயிர்த் தொகுதிகளும் அவ்யக்தத்திலிருந்து – ப்ரம்மாவின் ஸூக்ஷ்ம சரீரத்திலிருந்து வெளிப்படுகின்றன. மேலும் ப்ரம்மதேவனின் இரவு தொடங்கும்போது அந்த அவ்யக்தம் என்ற பெயருள்ள ப்ரம்மாவின் ஸூக்ஷ்ம சரீரத்திலேயே மறைகின்றன.

**கேள்வி:** இங்கு 'ஸர்வா:' என்ற அடைமொழியுடன் சேர்ந்த 'வ்யக்தய:' என்ற சொல் எவற்றைக் குறிப்பிடுகிறது?

**பதில்:** எந்தப் பொருள் புலன்களுக்கு அகப்படக்கூடிய பருப்பொருளோ அதற்கு 'வ்யக்தி' என்று பெயர். தோன்றிய ப்ராணிகள் எல்லாம் பருப்பொருட்களே. ஆகவே தேவர்கள், மனிதர்கள், பித்ருக்கள், பசு–பக்ஷிகள் முதலிய பிறவிகளில் எத்தனை வ்யக்திகள் – உடல் பெற்றவைகளான ப்ராணிகள் உண்டோ அவையனைத்தும் 'ஸர்வா: வ்யக்தய:' என்ற சொல்லில் அடங்கும்.

**கேள்வி:** 'அவ்யக்தம்' என்றால் இங்கே என்ன பொருள்? ப்ரம்மாவின் பகல் ஆரம்பத்தில் அவ்யக்தத்திலிருந்து வ்யக்திகள் உண்டாகின்றன என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ப்ரக்ருதியின் நுண்ணிய விளைவுதான் ப்ரம்மாவின் நுண்ணிய உடல். அதாவது பருப்பொருட்களான ஐந்து மஹாபூதங்கள் உண்டாவதற்கு முன் நிலை. அந்த நுண்ணிய அபராப்ரக்ருதிக்கு இங்கே 'அவ்யக்தம்' என்று பெயர்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ப்ரம்மாவின் பகல் ஆரம்பிக்கும்போது அதாவது ப்ரம்மா தமது ஆழ்ந்த துயிலிலிருந்து விழித்தெழும் பொழுது, அந்த நுண்ணிய ப்ரக்ருதி விகாரமடைய (விரிவடைய) ஆரம்பிக்கிறது. 'பருப்பொருளாக ஆகிறது.' அப்படிப் பருப்பொருளாக ஆன ப்ரக்ருதியுடன் எல்லா ப்ராணிகளும் தமது கர்மங்களுக்கேற்ற பல வடிவங்களில் இணைந்து கொள்கின்றன. இதுதான் அவ்யக்தத்திலிருந்து வ்யக்திகள் உண்டாகின்றன என்பதற்குப் பொருள்.

**கேள்வி:** இரவு தொடங்குகிறது என்றால் என்ன பொருள்? அவ்யக்தத்திலிருந்து உண்டான வ்யக்திகள் அனைத்தும் அவ்வமயம் அதில் லயமடைகின்றன என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஆயிரம் தேவயுகங்கள் கழிந்தபிறகு எக்கணத்தில் ப்ரம்மா விழிப்பை விடுத்து ஆழ்ந்த தூக்கத்தை மேற்கொள்கிறாரோ, அதுவே அவருடைய இரவின் ஆரம்பம்.

அப்போது பருப்பொருளாக விரிந்த ப்ரக்ருதி நுண்ணிய நிலையை எய்துகிறது. உடல் படைத்த எல்லா ப்ராணிகளும் விதவிதமான உடல்களிலிருந்து விடுபட்டு, ப்ரக்ருதியின் நுண்ணிய உருவில் அடங்கிவிடுகின்றன. இதுதான் அவ்யக்தத்தில் எல்லா வ்யக்திகளும் (ப்ராணிகளும்) லயமடைகின்றன என்பதற்குப் பொருள். ஆத்மா பிறப்பற்றது, அழிவற்றது. அதற்கு உற்பத்தியும் கிடையாது, லயமும் கிடையாது. ப்ரக்ருதியில் அடங்கிய ப்ராணிகளுடன் இணைந்து கொண்டிருக்கும் ப்ரக்ருதியின் நுண்ணிய அம்சம் பருப்பொருளாக விரிவதுதான் உற்பத்தி – பிறப்பு. அந்தப் பருப்பொருள் நுண்ணிய ப்ரக்ருதியில் ஒடுங்குவதுதான் ப்ராணிகளின் லயம்.

**கேள்வி:** இங்கு எந்த அவ்யக்தத்தை ஸூக்ஷ்ம ப்ரக்ருதி என்கிறாரோ, இதற்கும் 9/7,8 ச்லோகங்களில் வர்ணிக்கப்படும் ப்ரக்ருதிக்கும் என்ன வித்யாஸம்?

**பதில்:** உண்மையில் வித்யாஸமில்லை. ஒரே ப்ரக்ருதியின் நிலைமாற்றத்தினால் இரண்டுவிதமாக வர்ணிக்கப்படுகிறது. அதாவது இந்த ச்லோகத்தில் 'அவ்யக்தம்' என்ற பெயரால் அந்த அபரா ப்ரக்ருதியை வர்ணிக்கிறார். 7/4ல் இதையே எட்டுப் பகுதிகளாகப் பிரித்துக் காட்டுகிறார். 9/7,8 ச்லோகங்களில் அதை மூலப்ரக்ருதி என்கிறார். அது விளக்க முடியாத நிலையில் உள்ளது. எட்டுவிதப் பிரிவுக்கு உட்படாதது. இந்த மூலப்ரக்ருதிதான் காரண நிலையிலிருந்து நுண்ணியதாக உருவெடுக்கிறது. அப்படி உருவெடுக்கும்போது எட்டுப் பகுதிகளாகப் பிரிந்து அபராப்ரக்ருதி ஆகிறது.

**பொருத்தம்:** ப்ரம்மாவின் இரவின் ஆரம்பத்தில், எல்லா ப்ராணிகளும் அவ்யக்தத்தில் லயமடைவன. ஆனாலும் அவை பரமாத்மாவை அடையும்வரை மறுபிறவி என்கிற கட்டாயத்திலிருந்து விடுபட மாட்டா. இந்தப் பிறப்பு இறப்புச் சுழலில் சிக்கிக் கொண்டுதான் இருக்கும். அடுத்ததாக பகவான் இதைக் கூறுகிறார்—

भूतग्रामः स एवायं भूत्वा भूत्वा प्रलीयते।
रात्र्यागमेऽवशः पार्थ प्रभवत्यहरागमे ॥ १९ ॥

பூ₄தக்₃ராம: ஸ ஏவாயம் பூ₄த்வா பூ₄த்வா ப்ரலீயதே ।
ராத்ர்யாக₃மேऽவஶ: பார்த₂ ப்ரப₄வத்யஹராக₃மே ॥ 19 ॥

பார்த₂ – அர்ஜுன! ஸ: ஏவ அயம் – அதே இந்த, பூ₄தக்₃ராம: – உயிரினங்களின் கூட்டம், பூ₄த்வா பூ₄த்வா – மீண்டும் மீண்டும் பிறந்து, அவஶ: – தன்வசமின்றி (ப்ரக்ருதியின் வசப்பட்டு), ராத்ர்யாக₃மே – இரவின் தொடக்கக் காலத்தில், ப்ரலீயதே – மறைகிறது. அஹராக₃மே – பகலின் தொடக்கத்தில், ப்ரப₄வதி – (மறுபடியும்) உண்டாகிறது.

அர்ஜுன! அதே இந்த உயிரினங்களின் கூட்டம் மீண்டும் மீண்டும் பிறந்து தன்வசமின்றி ப்ரக்ருதியின் வசப்பட்டு இரவின் தொடக்கக் காலத்தில் மறைகிறது. பகலின் தொடக்கத்தில் மறுபடியும் உண்டாகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** இங்கு 'பூதக்ராம:' என்றால் என்ன? 'ஸ:', 'ஏவ', 'அயம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'பூதக்ராம:' – இது அசைவன, அசையாதன ஆகிய எல்லா ப்ராணிகளையும் குறிக்கும் ஒரு தொகுப்புச் சொல். எந்த ப்ராணிகள் ப்ரம்மாவின் இரவின் ஆரம்பத்தில் அவ்யக்தத்தில் லயமடைகின்றனவோ, முன் ச்லோகத்தில் எவற்றை 'ஸர்வா: வ்யக்தய:' என்று குறிப்பிட்டாரோ, அவையே ப்ரம்மாவின் பகல் ஆரம்பத்தில் மறுபடியும் உண்டாகின்றன என்பது கருத்து. அவ்யக்தத்தில் லயமடைவதால் அவை மோக்ஷத்தை அடையவில்லை. அவற்றின் தனித்தன்மையும் அழியவில்லை. ப்ரம்மாவின் இரவு முடியும்போதே அவை மறுபடியும் தம் குணங்கள், வினைகளுக்கு ஏற்றவாறு ஸ்தூல உடல்களைப் பெற்று வெளிப்படுகின்றன. 'கல்பம் கல்பமாக எது இவ்விதம் திரும்பத் திரும்ப அவ்யக்தத்தில் லயமடைந்து, மறுபடியும் அதிலிருந்தே வெளிப்படுகின்றதோ, அசைவன–அசையாதனவாகிய அந்த ப்ராணிகளின் கூட்டம்தான் உனக்கு நேரிடையாகத் தென்படுகின்றது. புதிது ஒன்றும் தோன்றவில்லை' என்று பகவான் கூறுகிறார்.

**கேள்வி:** 'பூத்வா' என்று இருமுறை கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இவ்விதம் இந்த ப்ராணிவர்க்கம் அநாதிகாலமாக மீண்டும் மீண்டும் உண்டாகி லயமடைந்து வருகிறது என்று பொருள். ப்ரம்மாவின் ஆயுளான நூறு ஆண்டுகள் முடிந்தவுடன் ப்ரம்மாவின் உடலும் மூலப்ரக்ருதியில் லயமடையும். அத்துடன் கூட ப்ராணிவர்க்கமும் அதில் லயமடையும் *(9/7)*. அப்பொழுதும் இதனுடைய சுழல் முடிவுக்கு வருவதில்லை. அதே மாதிரி திரும்பத் திரும்ப மூலப்ரக்ருதியிலிருந்து வெளிப்படுகிறது *(9/8)*. பரமாத்மாவை அடையும்வரை ஒவ்வொரு ப்ராணியும் திரும்பத் திரும்ப இப்படி உண்டாகி, உண்டாகி ப்ரக்ருதியில் லயமடைந்து கொண்டுதான் இருக்கும்.

**கேள்வி:** 'அவஶ:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** 'அவஶ:' என்ற சொல் 'பூதக்ராம:' என்ற சொல்லின் அடைமொழியாகும். தன்வசமிழந்தது, சுதந்திரமிழந்தது, பிறருக்குக் கட்டுப்பட்டது எதுவோ, அது 'அவஶ: ஆகும். அவ்யக்தத்தில் உண்டாகி, மறுபடியும் அவ்யக்தத்தில் லயமடையும் எல்லா ப்ராணிகளும் தமது இயல்புக்கு வசமாகி அதாவது அநாதியாக வந்த வெவ்வேறு குணங்களாலும், வினைகளினாலும் எத்தகைய இயல்பு அமைகிறதோ, அதற்கு வசப்பட்டு விடுவதால் திரும்பத் திரும்பப் பிறந்து இறக்கின்றன. *13/21*ல், ப்ரக்ருதியில் உள்ள மனிதன் ப்ரக்ருதியில் உண்டான குணங்களை – அதாவது ஸுக துக்கங்களைத் துய்க்கிறான். இந்த ப்ரக்ருதியின் சேர்க்கையே நல்லதும், தீயதுமான பிறவிகளை எடுக்கக் காரணமாகிறது என்று பகவான் சொன்னார். ஜீவன் ப்ரக்ருதியிலிருந்து விடுபட்டுப் பரமாத்மாவை அடைந்த பிறகுதான் அவனுக்கு மறுபிறவி கிடையாது என்பது மிகத் தெளிவாகத் தெரிகிறது.

**கேள்வி:** இயல்புக்கு வசப்பட்ட எல்லா ப்ராணிகளும் திரும்பத் திரும்ப உண்டாகின்றனவே, அவற்றைத் தத்தம் குணங்கள், வினைகளுக்கு ஏற்றவாறு சரியான முறையில் உண்டாகச் செய்பவர் யார்? ப்ரக்ருதியா, பரமாத்மாவா, ப்ரம்மாவா அல்லது வேறு யாராவதா?

**பதில்:** இங்கு ப்ரம்மாவின் பகல், இரவு பற்றிய பேச்சு வருவதால், ப்ரம்மாதான் ப்ராணிகளுடைய குணங்கள், வினைகளுக்கு ஏற்றவாறு, உடல்களோடு பொருத்தத்தை அளித்து அடிக்கடி பிறக்க வைக்கிறார் என்று தெரிந்து கொள்ளவேண்டும். மஹாப்ரளயத்திற்குப் பிறகு ப்ரம்மாவும் அழிந்துபோனபிறகு பகவானே மற்றொரு ப்ரம்மாவையும் சேர்த்து எல்லாவற்றையும் படைக்கிறார். பிறகு அந்த ப்ரம்மா தொடர்ந்து எல்லாவற்றையும் படைக்கிறார்.

*9/7–10, 14/3,4* ச்லோகங்களில் படைப்பு முறையைப் பற்றிக் கூறும் இடத்தில் மஹாப்ரளயத்திற்குப் பிறகு பெரும் படைப்பின் (மஹாஸர்கம்) ஆரம்ப காலத்தைப் பற்றிய

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பேச்சு. ஆனால் இங்கு ப்ரம்மாவின் இரவு (ப்ரளயம்) முடிந்து ப்ரம்மாவின் பகலைப் (ஸர்கம்) பற்றிய பேச்சு.

**பொருத்தம்:** ப்ரம்மாவின் இரவின் ஆரம்பத்தில் அவ்யக்தத்தில் எல்லா ப்ராணிகளும் லயமடைகின்றன. பகல் ஆரம்பித்தவுடன் எல்லா ப்ராணிகளும் உண்டாகின்றன என்று சொன்னாரே, அந்த அவ்யக்தம்தான் மிகச் சிறந்ததா, அதற்கும் மேலானது வேறொன்று உண்டா என்ற கேள்விக்குப் பதில் கூறுகிறார்—

**परस्तस्मात्तु भावोऽन्योऽव्यक्तोऽव्यक्तात्सनातनः।**
**यः स सर्वेषु भूतेषु नश्यत्सु न विनश्यति॥२०॥**

**பரஸ்தஸ்மாத்து ப₄ாவோऽந்யோऽவ்யக்தோऽவ்யக்தாத்ஸநாதந: ।**
**ய: ஸ ஸர்வேஷு பூ₄தேஷு நஶ்யத்ஸு ந விநஶ்யதி ॥ 20 ॥**

**து** – ஆனால், **தஸ்மாத்** – அந்த, **அவ்யக்தாத்** – அவ்யக்தத்தைக் காட்டிலும், **பர:** – மிகவும் உயர்ந்த, **அந்ய:** – வேறான அதாவது தனித்தன்மை கொண்ட, **ய:** – எந்த, **ஸநாதந:** – ஶாஶ்வதமான, **அவ்யக்த:** – வெளிப்படாத, **ப₄ாவ:** – பரம்பொருளான பரமாத்மா (உள்ளாரோ), **ஸ:** – அந்த மேலான திவ்ய புருஷன், **ஸர்வேஷு** – எல்லா, **பூ₄தேஷு** – பூதங்களும் (உயிரினங்களும்), **நஶ்யத்ஸு** – அழிந்தபோதிலும், **ந விநஶ்யதி** – அழிவதில்லை.

ஆனால் அந்த அவ்யக்தத்தைக் காட்டிலும் மிகவும் உயர்ந்த, வேறான தனித்தன்மை கொண்ட எந்த ஶாஶ்வதமான, வெளிப்படாத பரம்பொருளான பரமாத்மா உள்ளாரோ அந்த மேலான திவ்யபுருஷன் எல்லா பூதங்களும் (உயிரினங்களும்) அழிந்தபோதிலும் அழிவதில்லை.

**கேள்வி:** இங்கு 'தஸ்மாத் அவ்யக்தாத்' என்ற அவ்யக்தம் எது? அது தவிர வேறான அவ்யக்தம் எது? அதை 'பர:', 'அந்ய:', 'ஸநாதந:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 18வது ச்லோகத்தில் எந்த அவ்யக்தத்தில் எல்லா வ்யக்திகளும் (உயிரினங்கள்) லயமடைகின்றன என்று கூறுகிறாரோ, அதைத்தான் 'அந்த அவ்யக்தத்திலிருந்து' என்று கூறுகிறார். அதிலிருந்து வேறுபட்ட அவ்யக்தத் தத்வத்தைத்தான் 8/4ல் 'அதியக்ஞன்' என்றும், 8/9ல் 'கவி, புராணன்' என்றும், 8/8,10களில் 'பரம திவ்ய புருஷன்' என்றும், 8/22ல் 'பரமபுருஷன்' என்றும், 9/4ல் 'அவ்யக்த மூர்த்தி' என்றும் அழைக்கிறார். முன்னால் கூறப்பட்ட அவ்யக்தத்தைவிட இந்த அவ்யக்தம் மேலானது, வேறானது என்று கூறி, மிகவும் சிறந்தது, வித்யாஸமானது என்பதை நிரூபிக்கிறார். இரண்டும் ஸ்வரூபத்தில் அவ்யக்தங்களானாலும் இரண்டும் ஒரே வகையானவை அல்ல. முதல் அவ்யக்தம் ஜடம்; அழிவது, அறிவுக்கு உட்பட்டது. இந்த இரண்டாவதான அவ்யக்தம் அதாவது பரம்பொருள் உணர்வு (சைதன்யம்) உள்ளவர், அழியாதவர், அறிபவர். முற்கூறிய அவ்யக்தத்திற்கு இவர் யஜமானர், இயக்குபவர், ஆள்பவர். ஆகவே மிகவும் சிறந்தவர், வித்யாஸமானவர். அநாதியாகவும், முடிவற்றவராகவும் இருப்பதால் 'ஸநாதனர்' எனப்படுகிறார்.

**கேள்வி:** 'ஶாஶ்வதமான, அவ்யக்தமான அந்தப் பரம்பொருள் எல்லா பூதங்களும் (உயிரினங்களும்) அழிந்தாலும் அழிவதில்லை' என்ற வாக்கியத்தில் 'எல்லா பூதங்கள் (உயிரினங்கள்)' என்றால் எவை? அவை அழிகின்றன, ஸநாதனனான அவ்யக்தன் அழிவதில்லை என்றால் உண்மையில் என்ன பொருள்?

**பதில்:** ப்ரம்மாவில் ஆரம்பித்து ப்ரம்மாவின் பகலிரவுகளில் உண்டாகி மறைகின்ற – தத்தம் மனம், புலன்கள், உடல்கள், போகப்பொருட்கள் இருக்குமிடங்களோடுகூட எத்தனை சராசர உயிரினங்கள் உண்டோ, அவையெல்லாமே இந்த 'எல்லா பூதங்கள் (உயிரினங்கள்)'

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai




पत्र, पुष्प, फल, जलका ग्रहण

**Trifle offerings accepted**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai




भगवान्‌का विश्वरूपदर्शन

**Lord shows his cosmic body**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai




चार अवस्थाएँ

Four stages

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai




संसार-वृक्ष

**Universe—a tree**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



என்ற சொல்லுக்குப் பொருள். மஹாப்ரளயத்தின்போது ஸ்தூல, ஸூக்ஷ்ம உடல்களைக்கூட இழந்து அவ்யாக்ருதமான மாயை என்ற பெயர் கொண்ட மூலப்ரக்ருதியில் லயமடைகின்றன. இதுவே அவற்றின் அழிவு எனப்படும். அப்போதுகூட அந்த ப்ரக்ருதியை ஆள்பவனான ஸநாதனன், அவ்யக்தன், பரம தெய்விக புருஷனான பகவான் ப்ரக்ருதியுடன் அந்த எல்லா ஜீவர்களையும் தம்மிடம் லயமடையச் செய்து, தாம் மட்டும் தம் மஹிமையிலே நிலைபெற்றவராய் விளங்குகிறார். எல்லா பூதங்களும் (உயிரினங்களும்) அழிந்தாலும் அவர் அழிவதில்லை என்பதற்கு இதுதான் பொருள்.

**பொருத்தம்:** 8/8,10 ச்லோகங்களில் அதியக்ஞனை உபாஸிப்பதன் பயன் பரம தெய்விக புருஷனை அடைவது என்றும், 13வது ச்லோகத்தில் பரம அக்ஷரமான நிர்குண ப்ரம்மத்தின் உபாஸனைக்குப் பயன் பரமகதியை அடைவது என்றும், 14வது ச்லோகத்தில் ஸகுண–ஸாகார பகவானான ஸ்ரீக்ருஷ்ணனை உபாஸிப்பதன் பயன் பகவானை அடைவது என்றும் கூறினார். இவை மூன்றும் எவ்விதத்திலும் வெவ்வேறானவை என்ற ப்ரமை உண்டாகக் கூடாது என்பதற்காக, 'எல்லாம் ஒன்றுதான், அந்த நிலைகளை அடைந்து விட்டால் மறுபிறவி கிடையாது' என்று இனிக் கூறுகிறார்—

**अव्यक्तोऽक्षर इत्युक्तस्तमाहुः परमां गतिम्।**
**यं प्राप्य न निवर्तन्ते तद्धाम परमं मम॥ २१॥**

**அவ்யக்தோऽக்ஷர இத்யுக்தஸ்தமாஹு: பரமாம் க₃திம் ।**
**யம் ப்ராப்ய ந நிவர்தந்தே தத்₃தா₄ம பரமம் மம ॥ 21 ॥**

**அவ்யக்த:** – அவ்யக்தம் (தோன்றாநிலை), **அக்ஷர:** – அக்ஷரம் (அழிவில்லாதது), **இதி உக்த:** – என்று கூறப்பட்ட, **தம்** – அதே 'அக்ஷரம்' என்ற பெயருள்ள அவ்யக்தத் தன்மையை, **பரமாம் க₃திம்** – மிக உயர்ந்த கதி (என்று), **ஆஹு:** – கூறுவர். (அவ்வாறே), **யம்** – எந்த ஸநாதனமான அவ்யக்த நிலையை, **ப்ராப்ய** – அடைந்த பிறகு (மனிதர்கள்), **ந நிவர்தந்தே** – திரும்புவதில்லையோ, **தத்** – அது, **மம** – என்னுடைய, **பரமம் தா₄ம** – பரமபதம்.

அவ்யக்தம் (தோன்றாநிலை), அக்ஷரம் (அழிவில்லாதது) என்று கூறப்பட்ட அதே 'அக்ஷரம்' என்ற பெயருள்ள அவ்யக்தத் தன்மையை மிக உயர்ந்த கதி என்று கூறுவர். அவ்வாறே எந்த ஸநாதனமான அவ்யக்த நிலையை அடைந்த பிறகு மனிதர்கள் திரும்புவதில்லையோ அது என்னுடைய பரமபதம்.

**கேள்வி:** இங்கு 'அவ்யக்தம்', 'அக்ஷரம்' என்ற சொற்கள் யாரைக் குறிப்பிடுகின்றன?

**பதில்:** முன் ச்லோகத்தில் ஸநாதனனான அவ்யக்தன் என்றும், 8, 10வது ச்லோகங்களில் பரம திவ்ய புருஷன் என்றும் கூறப்படுகின்ற அதியக்ஞனையே இங்கு 'அவ்யக்தன்', 'அக்ஷரன்' என்கிறார்.

**கேள்வி:** 'பரமாம் கதிம்' (மிக உயர்ந்த கதி) என்றால் எது?

**பதில்:** 'பரமகதி' என்றால் மோக்ஷம். அதுதான் மிகவும் உயர்ந்தது; அதுதான் அடையத்தக்கது. அதை அடைந்துவிட்ட பிறகு மேலும் அடையவேண்டியது ஒன்றுமில்லை. அதை அடைந்துவிட்டால் எல்லா துக்கங்களும் எக்காலத்திலும் இல்லாமல் அழிந்துவிடும். ஆகவே நிர்குண–நிராகார பரமாத்மாவை 'பரம அக்ஷரம்', 'ப்ரம்மம்' என்று கூறுவர். அந்த ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மம்தான் 'பரமகதி' (8/13) என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'பரம தாம' என்றால் எது? அத்துடன் அவ்யக்தம், அக்ஷரம், பரமகதி எல்லாம் ஒன்று என்று கூறி, அதை அடைந்துவிட்டால் திரும்பி வருவதில்லை என்று கூறுவதன் கருத்து என்ன?



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** பகவானுடைய நித்ய வாஸஸ்தலம் பரமதாமம். அதுதான் ஸத் சித் ஆனந்தமயமான, தெய்விகமான, உணர்வுமயமான பகவானுடைய ஸ்வரூபம்; பகவானைத் தவிர வேறன்று. பகவானுடைய நித்ய வாஸஸ்தலத்தை அடைவது, பகவானாகவே ஆகிவிடுவது, பகவத் ஸ்வரூபத்தை அடைவது என்ற சொற்களில் கருத்து வேற்றுமை ஒன்றும் கிடையாது. அதுபோல அக்ஷரத்தை அடைவது, பரமகதியை அடைவது, பகவானை அடைவது என்ற சொற்களின் கருத்துக்களிலும் உண்மையில் வேற்றுமை கிடையாது. எதை அடைந்துவிட்டால் மனிதன் திரும்பி வரமாட்டானோ, அதுவே என்னுடைய பரமதாமம். அதுவே அவ்யக்தம். அதுவே அக்ஷரம், பரமகதி என்று கூறுகிறார். ஸாதனை வேற்றுமையினால் ஸாதகனின் நோக்கத்தில் பயனில் வேறுபாடுபோலத் தோன்றுகிறது. அதைத்தான் வெவ்வேறு பெயர்களால் கூறினார். உண்மையில் கருத்து வேறுபாடு கிடையாது. எல்லாம் ஒன்றுதான் என்று இங்கே கூறுகிறார்.

**பொருத்தம்: இவ்விதம் ஸநாதனமான, அவ்யக்தமான புருஷனை அடைவதும், பரமதாமமும் ஒன்றுதான் என்று கூறி, அந்த ஸநாதன அவ்யக்த பரமபுருஷனை அடையும் உபாயத்தைக் கூறுகிறார்—**

**पुरुषः स परः पार्थ भक्त्या लभ्यस्त्वनन्यया।**
**यस्यान्तःस्थानि भूतानि येन सर्वमिदं ततम्॥ २२॥**

**புருஷ: ஸ பர: பார்த₂ ப₄க்த்யா லப்₄யஸ்த்வநந்யயா ।**

**யஸ்யாந்த:ஸ்த₂ாநி பூ₄தாநி யேந ஸர்வமித₃ம் ததம் ॥ 22 ॥**

**பார்த₂** – அர்ஜுன! **பூ₄தாநி** – எல்லா உயிரினங்களும், **யஸ்ய** – எந்த, **அந்த:ஸ்த₂ாநி** – பரமாத்மாவினுள் இருக்கின்றனவோ, **யேந** – எந்த ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவினால், **இத₃ம்** – இந்த, **ஸர்வம்** – அகில உலகமும், **ததம்** – பரிபூர்ணமாக நிறைந்து இருக்கிறதோ, **ஸ:** – அந்த ஸநாதன அவ்யக்தனான, **பர: புருஷ: து** – பரம புருஷனோ, **அநந்யயா** – அநன்யமான (வேறு எதிலும் நாட்டமில்லாத), **ப₄க்த்யா** – பக்தியினாலேயே, **லப்₄ய:** – அடையத்தக்கவர்.

அர்ஜுன! எல்லா உயிரினங்களும் எந்த பரமாத்மாவினுள் இருக்கின்றனவோ, எந்த ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவினால் இந்த அகில உலகமும் பரிபூர்ணமாக நிறைந்து இருக்கிறதோ, அந்த ஸநாதன அவ்யக்தனான பரம புருஷனோ வேறு எதிலும் நாட்டமில்லாத பக்தியினாலேயே அடையத்தக்கவர்.

**கேள்வி:** 'எல்லா உயிரினங்களும் எந்தப் பரமாத்மாவிடம் அடக்கமோ', 'எந்தப் பரமாத்மாவினால் இவ்வுலகம் நிறைந்து இருக்கிறதோ' என்ற இரண்டு வாக்கியங்களின் பொருள் என்ன?

**பதில்:** முதல் வாக்கியத்தின் பொருளாவது – எப்படி நிலம், நீர், காற்று, ஒளி என்ற நான்கு பூதங்களும் ஆகாசத்திற்குள்ளடங்கியவையோ, ஆகாசம் மட்டும்தான் அவற்றிற்குக் காரணமோ, ஆதாரமோ அதுபோல எல்லாச் சராசரங்களும், ப்ராணிகளும் – அதாவது அகில உலகமும் பரமாத்மாவிடம் அடக்கம்; பரமாத்மாவில் உண்டானவை; பரமாத்மாவே அவற்றிற்கும் ஆதாரம் – என்பதாகும். இரண்டாவது வாக்கியத்தின் பொருளாவது: எப்படி நிலம், நீர், காற்று, தீ இவற்றை ஆகாசம் உள்ளும், புறமும் சூழ்ந்திருக்கிறதோ, அதுபோல அகில உலகத்தையும் உள்ளும், புறமும் பகவான் சூழ்ந்திருக்கிறார் என்பதாகும். 9/4,5,6 ச்லோகங்களில் இந்த விஷயத்தை விளக்குகிறார்.

**கேள்வி:** 'பர: புருஷ:' என்றால் யார்?

**பதில்:** எங்கும் நிறைந்த அதியக்ஞன் தான் இங்கு பரமபுருஷன். 8/8,9,10 ச்லோகங்களில் கூறப்பட்ட ஸகுண–நிராகாரமான ப்ரம்மத்தின் உபாஸனையைப் பற்றிச் சொல்லும்



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இடத்திலும், 8/20ல் அவ்யக்த புருஷனைப் பற்றிச் சொல்லும் இடத்திலும், இங்கும், அதே உபாஸனைதான் கூறப்படுகிறது. அந்தப் பரமாத்மாவில் எல்லா பூதங்களும் அடங்கி இருப்பதையும், எல்லாவற்றிலும் அவர் நிறைந்திருப்பதையும் கூறுகிறார்.

**கேள்வி:** 8/8 முதல் 10 வரை அவ்யக்த புருஷனைப் பற்றிய உபாஸனை சொல்லியாகிவிட்டதே. மறுபடியும் இரண்டாம் முறை இங்கே சொல்வானேன்?

**பதில்:** ஸந்தேஹமின்றி இரண்டு இடங்களிலும் அவ்யக்த புருஷ உபாஸனையைப் பற்றியே சொன்னாலும், ஒரு வேறுபாடு உண்டு. அங்கு 8/8,9,10 ச்லோகங்களில் யோகிகளின் கடைசிக் காலத்திய ஸாதனைகளையும், அவற்றின் பயனையும் கூறினார். இங்கு பொதுவாக அனைவரும் எப்போதும் கடைப்பிடிக்கக் கூடிய அநன்ய பக்தியையும், அதன் மூலம் பரமாத்மாவை அடைவதையும் பற்றிக் கூறுகிறார். இதற்காகத்தான் அந்த உபாஸனையை இங்கு மறுபடியும் சொல்கிறார்.

**கேள்வி:** 'அநந்ய பக்தி' என்றால் என்ன? அதன் மூலம் பரமபுருஷனை அடைவது எப்படி?

**பதில்:** எல்லாவற்றிற்கும் ஆதாரமானவரும், அந்தர்யாமியானவரும், ஸகல வல்லமைகளும் படைத்தவருமான பரமேசுவரனிடம் எல்லாவற்றையும் ஸமர்பணம் செய்துவிட்டு, அவர் விதித்துள்ள ஏற்பாட்டில் எப்பொழுதும் மிகவும் ஸந்தோஷமாக இருப்பது; எல்லாவிதத்திலும் அநன்ய ப்ரேமையுடன் என்றும் இடைவிடாது அவரையே த்யானம் செய்வது – இதுதான் 'அநந்ய பக்தி'. இந்த அநன்ய பக்தியின் மூலம் ஸாதகன் தன்னுடைய உபாஸனாமூர்த்தியான பரமாத்மாவினுடைய குணங்கள், இயல்புகள், தத்வம் இவற்றை நன்கு அறிந்து கொண்டு அவற்றில் ஆழ்ந்துவிடுகிறான். விரைவில் அவரையே அடையப் பெற்று வாழ்க்கையின் பயனை அடைந்துவிடுகிறான். இதுதான் ஸாதகன் பரமேசுவரனை அடைவதாகும்.

**பொருத்தம்:** அர்ஜுனனுடைய ஏழாவது கேள்விக்கு பகவான் பதில் கூறும்போது கடைசிக் காலத்தில் மனிதன் எவ்விதம் பரமாத்மாவை அடைவான் என்பதை நன்கு விளக்கினார். இதனிடையே பகவானை அடையாவிட்டால் ஜீவன் ப்ரம்மலோகம் வரை சென்றாலும் பிறப்பிறப்புகளிலிருந்து தப்ப முடியாது என்றும் கூறினார். திரும்பிவராப் பெருநிலையை அடைபவன் எந்த வழியாகச் சென்று எப்படி அப்பதவியை அடைகிறான்? அதே மாதிரி புண்யம் தீரும் வரை தங்க நேரிடும் ப்ரம்மலோகம் முதலிய லோகங்களுக்கு எப்படி, எவ்வழியாகப் போகிறான்? அந்த இரண்டு மார்க்கங்களையும் மேலே விளக்குவதற்கு முன்னுரை கூறுகிறார்—

**यत्र काले त्वनावृत्तिमावृत्तिं चैव योगिनः।**
**प्रयाता यान्ति तं कालं वक्ष्यामि भरतर्षभ॥ २३॥**

**யத்ர காலே த்வநாவ்ருத்திமாவ்ருத்திம் சைவ யோகி₃ந: ।**
**ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி ப₄ரதர்ஷப₄ ॥ 23 ॥**

**ப₄ரதர்ஷப₄** – அர்ஜுன! **யத்ர** – எந்த, **காலே** – காலத்தில் (வழியில்), **ப்ரயாதா:** – உடலை நீத்துவிட்டுச் செல்கின்ற, **யோகி₃ந: து** – யோகியர், **அநாவ்ருத்திம்** – திரும்பி வராத பெருநிலையையும், **ச** – மேலும் (எந்த வழியில் செல்கின்ற யோகிகள்), **ஆவ்ருத்திம் ஏவ** – திரும்பி வரும் நிலையையும் (மறுபிறப்பு என்னும் நிலையையும்), **யாந்தி** – அடைகிறார்களோ, **தம்** – அந்த, **காலம்** – காலத்தை (இரண்டு வழிகளையும்), **வக்ஷ்யாமி** – சொல்கிறேன்.

அர்ஜுன! எந்த காலத்தில் (வழியில்) உடலை நீத்துவிட்டுச் செல்கின்ற யோகியர் திரும்பி வராத பெருநிலையையும், மேலும் எந்த வழியில் செல்கின்ற யோகிகள் திரும்பி வரும்



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நிலையையும் (மறுபிறப்பு என்னும் நிலையையும்) அடைகிறார்களோ, அந்தக் காலத்தை (இரண்டு வழிகளையும்) சொல்கிறேன்.

**கேள்வி:** இங்கே 'காலம்' என்றால் என்ன?

**பதில்:** இங்கே 'காலம்' என்றால் மார்க்கம் (வழி) என்று பொருள். காலாபிமானிகளான வெவ்வேறு தேவதைகளின் ஆளுகைக்குட்பட்ட இடத்தையும், எல்லையையும் 'காலம்' என்ற சொல் குறிக்கிறது.

**கேள்வி:** இங்கே 'காலம்' என்பதற்கு நேரம் என்று பொருள் கொண்டால் என்ன தவறு?

**பதில்:** 26வது ச்லோகத்தில் இதையே 'ஶுக்ல', 'க்ருஷ்ண' என்ற இரண்டு கதிகள் என்றும், 27ல் 'ஸ்ருதி' என்றும் கூறுகிறார். அவை இரண்டுக்கும் வழி என்று பொருள். அதுபோல அக்னி, ஒளி, புகை என்ற சொற்களும் நேரத்தைக் குறிக்கும் சொற்களல்ல. ச்லோகங்கள் 24,25லும் கூட 'தத்ர' என்ற சொல்லுக்கு நேரம் என்று பொருள் கொள்ளக் கூடாது. ஆகவே, இங்கே 'காலம்' என்றால் காலாபிமானி தேவதைகளின் மார்க்கம், வழி என்று பொருள் கொள்வதுதான் சரி.

**கேள்வி:** அப்படியானால், உலகத்தினர் பகலிலோ, சுக்லபக்ஷத்திலோ, உத்தராயணத்திலோ மரிப்பது நல்லது என்று ஏன் நினைக்கிறார்கள்?

**பதில்:** அப்படி உலகத்தினர் நினைப்பதும் ஒரு வழியில் சரிதான். ஏனெனில் அந்த நேரங்களில் அந்தந்த காலாபிமானி தேவதைகளின் தொடர்பு உடனடியாக ஏற்படுகிறது. ஆகவே, அந்த வேளைகளில் மரிக்கின்ற யோகிகள் சென்றடைய வேண்டிய இடம் வரை விரைவில் எளிதாகச் சென்றுவிடுகிறார்கள். ஆனால் இரவிலோ, தேய்பிறையிலோ, தக்ஷிணாயனத்தில் உள்ள ஆறு மாதங்களிலோ மரிப்பவர்கள் அர்சிர் மார்க்கத்தின் வழியாகச் செல்வதில்லை என்று நினைக்கக் கூடாது. எந்த நேரத்தில் மரித்தாலும், அவன் எந்த மார்க்கத்தில் செல்லத் தகுதி பெற்றிருக்கிறானோ, அந்த மார்க்கத்தில்தான் செல்ல முடியும் என்று அறிந்து கொள்ளவேண்டும். அர்சிர் மார்க்கத்தில் செல்லத் தகுதி படைத்தவன் இரவில் மரித்தால், அவனுக்குப் பகல் அபிமானி தேவதையின் தொடர்பு பகல் உதயமானவுடன்தான் கிடைக்கும். இதனிடையே அவன் அக்னி அபிமானி தேவதையின் ஆளுகையில் இருப்பான். தேய்பிறையில் மரித்தால், அவனுக்கு வளர்பிறையின் அபிமானி தேவதையின் தொடர்பு வளர்பிறை ஆரம்பத்தின் போதுதான் கிடைக்கும். அதுவரை அவன் பகல் அபிமானி தேவதையின் ஆளுகையில் இருப்பான். அதுபோல தக்ஷிணாயனத்தில் மரித்தால், அவனுக்கு உத்தராயண அபிமானி தேவதையின் தொடர்பு உத்தராயணம் வந்த பிறகுதான் கிடைக்கும். அதுவரை அவன் வளர்பிறையின் அபிமானி தேவதையின் ஆளுகையில்தான் இருப்பான். இவ்வாறு அர்சிர் மார்க்கத்தில் செல்லத் தகுதி பெற்றவனின் கதி சொல்லப்பட்டது. அதுபோல தக்ஷிணாயன மார்க்கத்தில் செல்லக்கூடிய தகுதி பெற்றவன் விஷயத்திலும் தெரிந்து கொள்ளவேண்டும்.

**கேள்வி:** இங்கு 'யோகிகள்' என்ற சொல்லைக் கையாளுவதன் கருத்து என்ன?

**பதில்:** இதே உலகில் ஒரு பிறவியிலிருந்து இன்னொரு பிறவிக்கு மாறுபவர்கள் அல்லது நரகத்திற்குச் செல்பவர்கள் ஆன ஸாதாரணமான மனிதர்களுடைய கதியைப் பற்றி இங்கு ஒன்றும் சொல்லவில்லை. யக்ஞம், தானம், தவம் முதலிய புண்ய கர்மங்களையும், உபாஸனையையும் செய்யும் சிறந்த யோகி புருஷர்களுக்கு உரிய சுக்ல, க்ருஷ்ண மார்க்கங்களில் போகும் வழி பற்றிச் சொல்லப்படுகிறது என்பது பொருள்.

**கேள்வி:** 'ப்ரயாதா:' என்றால் என்ன பொருள்? இங்கு பகவான் எதைச் 'சொல்கிறேன்' என்று கூறுகிறார்?

**பதில்:** 'ப்ரயாதா:' என்றால் போகிறவர்கள் என்று பொருள். கடைசிக் காலத்தில் உடலை நீத்துவிட்டு, மேலுலகம் போகிற மனிதர்களைப் பற்றிக் கூறுவதற்காக இச்சொல் வருகிறது. எந்த வழியில் போகிறவர் திரும்பி வரமாட்டார்? எந்த வழியில் போகிறவர்


CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



திரும்பி வருவார்? இரண்டு வழிகளுடைய வேறுபாடும் என்ன? அவை யாவை? யாருக்கு எந்த மார்க்கத்தில் செல்லத் தகுதி என்பது பற்றியெல்லாம் 'சொல்லப் போகிறேன்' என்கிறார் பகவான்.

**பொருத்தம்: முன் ச்லோகத்தில் இரண்டு மார்க்கங்களைப் பற்றிச் சொல்வேன் என்றார். இங்கு அந்த இரண்டு வழிகளில் எந்த மார்க்கத்தில் போகிறவர் திரும்பி வரமாட்டார் என்பதைக் கூறுகிறார்—**

**अग्निर्ज्योतिरहः शुक्लः षण्मासा उत्तरायणम्।**
**तत्र प्रयाता गच्छन्ति ब्रह्म ब्रह्मविदो जनाः ॥ २४ ॥**

**அக்₃நிர்ஜ்யோதிரஹ: ஶுக்ல: ஷண்மாஸா உத்தராயணம் ।**

**தத்ர ப்ரயாதா க₃ச்ச₂ந்தி ப்₃ரஹ்ம ப்₃ரஹ்மவிதோ₃ ஜநா: ॥ 24 ॥**

**ஜ்யோதி:** – (எந்த வழியில்) ஒளிமயமான, **அக்₃நி:** – அக்னி அபிமான தேவதையாக இருக்கிறாரோ, **அஹ:** – பகலின் அபிமான தேவதை இருக்கிறாரோ, **ஶுக்ல:** – சுக்லபக்ஷ அபிமான தேவதை இருக்கிறாரோ, **உத்தராயணம்** – உத்தராயணத்தின், **ஷண்மாஸா:** – ஆறு மாதங்களின் அபிமான தேவதை இருக்கிறாரோ, **தத்ர** – அந்த மார்க்கத்தில், **ப்ரயாதா:** – இறந்த பிறகு செல்கின்ற, **ப்₃ரஹ்மவித₃:** – ப்ரம்மத்தை அறிந்த, **ஜநா:** – யோகிகளான ஜனங்கள் (மேலே கூறப்பட்ட தேவதைகளால் வரிசையாக அழைத்துச் செல்லப்பட்டு), **ப்₃ரஹ்ம** – ப்ரம்மத்தை, **க₃ச்ச₂ந்தி** – அடைகிறார்கள்.

எந்த வழியில் ஒளிமயமான அக்னி அபிமான தேவதையாக இருக்கிறாரோ, பகலின் அபிமான தேவதை இருக்கிறாரோ, சுக்லபக்ஷ அபிமான தேவதை இருக்கிறாரோ, உத்தராயணத்தின் ஆறு மாதங்களின் அபிமான தேவதை இருக்கிறாரோ, அந்த மார்க்கத்தில் இறந்த பிறகு செல்கின்ற ப்ரம்மத்தை அறிந்த யோகிகளான ஜனங்கள் மேலே கூறப்பட்ட தேவதைகளால் வரிசையாக அழைத்துச் செல்லப்பட்டு ப்ரம்மத்தை அடைகிறார்கள்.

**கேள்வி:** *'ஜ்யோதி:', 'அக்நி:' இந்த இரண்டு சொற்களும் எந்த தேவதையைக் குறிப்பிடுகின்றன? அந்த தேவதையின் ஸ்வரூபம் என்ன? அந்த மார்க்கத்தில் அவருடைய ஆளுகைக்குட்பட்ட இடம் எது? அவர் இவன் விஷயத்தில் என்ன செய்கிறார்?*

**பதில்:** இங்கு 'ஜ்யோதி:' என்ற சொல் 'அக்நி:' என்ற சொல்லுக்கு அடைமொழி. 'அக்நி:' என்றால் அக்னி அபிமானி தேவதை (வெறும் நெருப்பு அன்று). உபநிஷத்துகள் இந்த தேவதையை 'அர்சி:' என்று கூறுகின்றன. இதன் ஸ்வரூபம் திவ்ய ஒளிமயமானது. பூமியின் மேல் கடல் உள்பட உள்ள ப்ரதேசம் இந்த தேவதையின் ஆளுகைக்குட்பட்ட இடம். உத்தராயண மார்க்கத்தில் செல்லத் தகுதி பெற்றவனுக்குப் பகல் அபிமானி தேவதையுடன் தொடர்பு ஏற்படுத்துவது இவருடைய கடமை. உத்தராயண மார்க்கத்தில் செல்கின்ற உபாஸகன் இரவில் உடலைவிட்டால், அவனை இரவு முழுவதும் அக்னி தேவதை தமது ஆளுகையில் வைத்துக் கொண்டு, பகல் விடிந்ததும் பகல் அபிமானி தேவதையிடம் ஒப்படைத்துவிடுவார். பகலில் மரித்தால் உடனேயே பகல் அபிமானி தேவதையிடம் ஒப்படைத்துவிடுவார்.

**கேள்வி:** *'அஹ:' என்றால் எந்த தேவதை? அவர் ஸ்வரூபம் என்ன? அவரது ஆளுகைக்குட்பட்ட இடம் எது? அந்த தேவதை இவன் விஷயத்தில் என்ன செய்கிறார்?*

**பதில்:** 'அஹ:' என்ற சொல் பகல் அபிமானி தேவதையைக் குறிக்கிறது. இவரது ஸ்வரூபம் அக்னி அபிமானி தேவதையைக் காட்டிலும் பல மடங்கு ஒளி மிகுந்தது. பூமிக்கு மேலே ஆகாயத்தில் பூமியின் வாயு மண்டலம் எவ்வளவு பரவியுள்ளதோ, அதுவரை இவரது ஆளுகைக்குட்பட்ட இடம். உத்தராயண மார்க்கத்தில் செல்லும் தகுதிபெற்ற உபாஸகனை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



சுக்லபக்ஷ தேவதையுடன் தொடர்பு கொள்ளச் செய்வது இவர் கடமை. உபாஸகன் ஒருகால் க்ருஷ்ணபக்ஷத்தில் மரித்தால் சுக்லபக்ஷம் வரும்வரை பகல் அபிமானி தேவதை அவனைத் தம் ஆளுகையில் வைத்துக் கொள்கிறார். சுக்லபக்ஷம் பிறந்ததும் சுக்லபக்ஷ அபிமானி தேவதையிடம் ஒப்படைக்கிறார். சுக்லபக்ஷத்திலேயே மரித்தானானால், உடனேயே தமது எல்லை வரை அழைத்துச் சென்று சுக்லபக்ஷ அபிமான தேவதையிடம் ஒப்படைக்கிறார்.

**கேள்வி:** இங்கு 'ஶுக்ல:' என்ற சொல் எந்த தேவதையைக் குறிக்கிறது? அவருடைய ஸ்வரூபம் என்ன? அவருடைய ஆட்சி எது வரை? அவர் கடமை என்ன?

**பதில்:** முன் சொன்னதுபோல 'ஶுக்ல:' என்ற சொல்லுக்கு சுக்லபக்ஷ தேவதை என்று பொருள். இவருடைய ஸ்வரூபம் பகல் அபிமானி தேவதையின் ஒளியைக் காட்டிலும் பல மடங்கு ஒளி மிகுந்தது. பூலோகத்தின் எல்லைக்கு வெளியே அந்தரிக்ஷலோகம் வரை இவரது ஆட்சி. அந்த லோகத்தில் பதினைந்து நாட்கள் ஒரு பகல். பதினைந்து நாட்கள் ஓர் இரவு. உத்தராயண மார்க்கத்தில் செல்லத் தகுதி பெற்றவரைத் தமது எல்லையைக் கடக்கச் செய்து உத்தராயண தேவதையிடம் ஒப்படைப்பது இவர் கடமை. இவரும் முன்னவர்களைப்போலவே தக்ஷிணாயனத்தில் மரித்த ஒரு ஸாதகன் இவருடைய ஆளுகையில் வந்தால் உத்தராயணம் வரும்வரை அவனை வைத்திருந்து, உத்தராயணம் வந்ததும் உத்தராயண தேவதையிடம் ஒப்படைப்பார். உத்தராயணத்திலேயே மரித்து இவரிடம் வந்தால், உடனேயே தம் எல்லை வரை அழைத்துச் சென்று, எல்லையைக் கடத்தி, உத்தராயண அபிமானி தேவதையின் ஆளுகையில் ஒப்படைப்பார்.

**கேள்வி:** 'ஷண்மாஸா உத்தராயணம்' என்ற சொல் எந்த தேவதையைக் குறிக்கிறது? அவர் ஸ்வரூபம் என்ன? கடமை என்ன? அவரது ஆட்சி எது வரை?

**பதில்:** சூரியன் வடதிசை நோக்கிச் செல்லும் ஆறு மாதங்கள் உத்தராயணம் எனப்படும். அந்த உத்தராயண அபிமானி தேவதையை 'ஷண்மாஸா உத்தராயணம்' என்று கூறுகிறார். இவருடைய ஸ்வரூபம் சுக்லபக்ஷ அபிமானி தேவதையைக் காட்டிலும் பலமடங்கு ஒளி மிகுந்தது. அந்தரிக்ஷலோகத்திற்கு மேலே உள்ள உலகங்களில் ஆறு மாதங்கள் ஒரு பகல், ஆறு மாதங்கள் ஓர் இரவு. இது இவருடைய ஆளுகைக்குட்பட்டது. உத்தராயண மார்க்கமாகப் பரமதாமம் செல்லும் தகுதி பெற்றவர்களைத் தம் எல்லையைக் கடத்தி ஸம்வத்ஸர அபிமானி தேவதையிடம் ஒப்படைக்கிறார். சாந்தோக்ய உபநிஷத் *(4/15/5; 5/10/1,2)*, ப்ருஹதாரண்யக உபநிஷத் *(6/2/15)* இவற்றில் ஸம்வத்ஸர அபிமானி தேவதை பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. அதற்கு மேலே, ஸம்வத்ஸர அபிமானி தேவதை அவரை சூரிய லோகத்தில் கொண்டு சேர்க்கிறார். அங்கிருந்து வரிசையாக ஆதித்யாபிமானி தேவதை சந்த்ரன் அபிமானி தேவதையிடமும், அவர் மின்னல் அபிமானி தேவதையிடமும் சேர்ப்பிக்கின்றனர். பகவானுடைய பரமபதத்தைச் சேர்ந்த மானஸ புருஷரும், (அவையோர் ஆகிய) பார்ஷதர்களும் வந்து அவரைப் பரமபதத்திற்கு இட்டுச் செல்கிறார்கள். அப்போது அவர் பகவானிடம் ஒன்றுபடுகிறார். இங்குக் கூறப்படும் சந்த்ரன் நமக்குப் புலப்படும் சந்த்ர உலகமோ, அந்த சந்த்ரனின் அபிமானி தேவதையோ அல்லர் என்பதைக் கவனிக்க வேண்டும்.

**கேள்வி:** இங்கு 'ப்ரஹ்மவித:' என்ற சொல் யாரைக் குறிக்கிறது?

**பதில்:** நிர்குண ப்ரம்ம தத்வத்தையோ, ஸகுணரான பரமாத்மாவின் குணங்கள், ப்ரபாவங்கள், தத்வம், ஸ்வரூபம் இவற்றையோ சாஸ்த்ரங்கள் வாயிலாகவோ, குருநாதர்களுடைய உபதேச வாயிலாகவோ, ச்ரத்தையுடன் நேரிடையான அனுபவம் ஏற்படுவதற்கு முன் அறிந்து கொண்டிருக்கிற உபாஸகர்களையும், நிஷ்காமமாகக் கர்மங்களைச் செய்யும் கர்மயோகிகளையும் 'ப்ரஹ்மவித:' என்ற சொல் குறிக்கும். பரப்ரம்மமான பரமாத்மாவை அடைந்துவிட்ட ஞானி மஹாத்மாக்களைக் குறிப்பிடாது. ஏனெனில் அவர்கள் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் போகிறார்கள் என்று கூறுவது பொருந்தாது. வேதமும் சொல்கிறது— **'ந தஸ்ய ப்ராணா ஹ்யுத்க்ராமந்தி'** (ப்₃ருஹதா₃ரண்யக உப. *4/4/6*) (அவனுடைய ப்ராணன்கள் மேலே கிளம்புவதில்லை). **'அத்ரைவ ஸமவலீயந்தே'** (ப்₃ருஹதா₃ரண்யக உப. *3/2/11*) (இங்கேயே அடங்கிப் போகின்றன). **'ப்₃ரஹ்மைவ ஸந்**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ப்₃ரஹ்மாப்யேதி' (ப்₃ருஹதா₃ரண்யக உப. 4/4/6) (ப்ரம்மமாகவே ஆகி ப்ரம்மத்துடன் இணைந்து விடுகிறான்). ஸகுண ப்ரம்மத்தினுடைய நேரிடை அனுபவம் பெற்ற பக்தன் மேலே சொன்னவாறு பகவானுடைய பரமதாமத்தை அடையலாம். பகவானுடைய ஸ்வரூபத்தில் இரண்டறக் கலந்துவிடலாம். இது அவனுடைய ருசியைப் பொறுத்தது.

**கேள்வி:** *இங்கு 'ப்ரஹ்ம' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? அவரை அடைவது என்றால் என்ன?*

**பதில்:** இங்கு 'ப்ரஹ்ம' என்றால் ஸகுண ப்ரம்மம் என்று பொருள். எப்பொழுதும் அழிவற்றதான அவருடைய நித்யதாமத்தை ஸத்யலோகம், பரமதாமம், ஸாகேதலோகம், கோலோகம், வைகுண்டலோகம், ப்ரம்மலோகம் என்றும் கூறுவர். அங்கே சென்று பகவானை நேரிடையாக தர்சனம் செய்வதுதான் அவரை அடைவது ஆகும். இந்த ப்ரம்மலோகம் 8/16ல் கூறப்பட்ட திரும்பி வரும் தன்மையுடைய ப்ரம்மலோகமன்று.

**பொருத்தம்: இவ்விதம் திரும்பிவாராப் பதவி பெற்றவர்களின் வழியைக் கூறிவிட்டு, அடுத்தபடி எந்த வழியில் போகிறவர்கள் மறுபடியும் திரும்பி வர நேரிடுமோ அந்த வழியைக் கூறுகிறார்—**

**धूमो रात्रिस्तथा कृष्णः षण्मासा दक्षिणायनम्।**
**तत्र चान्द्रमसं ज्योतिर्योगी प्राप्य निवर्तते॥ २५॥**

**தூ₄மோ ராத்ரிஸ்தத₂ா க்ருஷ்ண: ஷண்மாஸா த₃க்ஷிணாயநம் ।**
**தத்ர சாந்த்₃ரமஸம் ஜ்யோதிர்யோகீ₃ ப்ராப்ய நிவர்ததே ॥ 25 ॥**

**தூ₄ம:** – (எந்த மார்க்கத்தில்) புகைக்குரிய தேவதை இருக்கிறாரோ, **ராத்ரி:** – ராத்ரிக்குரிய தேவதை இருக்கிறாரோ, **தத₂ா** – அப்படியே, **க்ருஷ்ண:** – க்ருஷ்ண பக்ஷத்திற்குரிய தேவதை இருக்கிறாரோ, **த₃க்ஷிணாயநம்** – தக்ஷிணாயனத்தின், **ஷண்மாஸா:** – ஆறு மாதங்களுக்குரிய தேவதை இருக்கிறாரோ, **தத்ர** – அந்த மார்க்கத்தில், **யோகீ₃** – பற்றுடன் கர்மங்களைச் செய்கின்ற யோகீ (இறந்தபின் மேற்கூறப்பட்ட தேவதைகளால் வரிசையாக அழைத்துச் செல்லப்பட்டு), **சாந்த்₃ரமஸம்** – சந்த்ரனுடைய, **ஜ்யோதி:** – ஒளியை (ஜ்யோதியை), **ப்ராப்ய** – அடைந்து, **நிவர்ததே** – (ஸ்வர்கத்தில் தன் நற்செயல்களின் பயன்களை அனுபவித்துவிட்டுத்) திரும்பி வருகிறார்.

எந்த மார்க்கத்தில் புகைக்குரிய தேவதை இருக்கிறாரோ, ராத்ரிக்குரிய தேவதை இருக்கிறாரோ, அப்படியே க்ருஷ்ண பக்ஷத்திற்குரிய தேவதை இருக்கிறாரோ, தக்ஷிணாயனத்தின் ஆறு மாதங்களுக்குரிய தேவதை இருக்கிறாரோ, அந்த மார்க்கத்தில் பற்றுடன் கர்மங்களைச் செய்கின்ற யோகி இறந்தபின் மேற்கூறப்பட்ட தேவதைகளால் வரிசையாக அழைத்துச் செல்லப்பட்டு சந்த்ரனுடைய ஒளியை அடைந்து ஸ்வர்கத்தில் தன் நற்செயல்களின் பயன்களை அனுபவித்துவிட்டுத் திரும்பி வருகிறார்.

**கேள்வி:** *'தூம:' என்ற சொல் எந்த தேவதையைக் குறிக்கிறது? அவருடைய ஸ்வரூபம் என்ன? அவருடைய அதிகாரம் எதுவரை? அவருடைய கடமை என்ன?*

**பதில்:** இங்கு 'தூம:' என்ற சொல் புகை அபிமானி தேவதையைக் குறிக்கிறது. அதாவது இருளின் அபிமானி தேவதை. அவர் ஸ்வரூபம் இருள் மயமானது. அக்னி அபிமானி தேவதையைப்போலக் கடல்களுடன் கூடிய பூமியின் எல்லா ப்ரதேசங்களும் அவருடைய ஆட்சிக்குட்பட்டவை. தக்ஷிணாயன மார்க்கத்தில் செல்லத் தகுதிபெற்ற ஸாதகர்களை ராத்ரி அபிமானி தேவதையிடம் கொண்டு சேர்ப்பது இவருடைய கடமை. தக்ஷிணாயன மார்க்கத்தில் செல்லவேண்டிய ஸாதகன் பகலில் இறந்துவிட்டால் பகல் முடியும் வரை தமது ஆளுகையில் வைத்துக் கொண்டிருந்து இரவு வந்ததும் ரார்த்ரி அபிமானி தேவதையிடம்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஒப்படைத்துவிடுவார். அவன் இரவிலேயே இறந்தால் உடனேயே ராத்ரி அபிமானி தேவதையிடம் ஒப்படைத்துவிடுவார்.

**கேள்வி:** 'ராத்ரி:' என்றால் என்ன? அதன் ஸ்வரூபம் என்ன? எல்லை என்ன? கடமை என்ன?

**பதில்:** 'ராத்ரி:' என்றால் ராத்ரி அபிமானி தேவதை என்று பொருள். இவரும் இருள்மயம்தான். பகல் அபிமானி தேவதையைப்போல இவருக்கும் பூமியின் எல்லைவரை ஆட்சி உண்டு. பூமியில் பகல் இருக்கும்வரை பகல் அபிமானி தேவதையின் அதிகாரம். இரவு இருக்கும்வரை இரவு அபிமானி தேவதையின் ஆட்சி. தக்ஷிணாயன மார்க்கத்தில் செல்வதற்குத் தகுதிபெற்ற ஸாதகனை பூமியின் எல்லையைக் கடத்தி, அந்தரிக்ஷலோகத்தில் உள்ள க்ருஷ்ணபக்ஷ அபிமானி தேவதையிடம் ஒப்படைப்பது இவருடைய கடமை. அந்த ஸாதகன் சுக்லபக்ஷத்தில் மரித்தால், அவனை க்ருஷ்ணபக்ஷம் வரும்வரை தம் அதிகாரத்தில் வைத்திருந்து க்ருஷ்ணபக்ஷம் வந்தவுடன் க்ருஷ்ணபக்ஷ அபிமானி தேவதையிடம் ஒப்படைப்பார். க்ருஷ்ணபக்ஷத்திலேயே மரித்தால் உடனேயே க்ருஷ்ணபக்ஷ தேவதையிடம் ஒப்படைத்து விடுவார்.

**கேள்வி:** இங்கு 'க்ருஷ்ண:' என்றால் யார்? அவர் ஸ்வரூபம் என்ன? அவர் அதிகாரம் என்ன? அவர் கடமை என்ன?

**பதில்:** க்ருஷ்ணபக்ஷ அபிமானி தேவதைதான் இங்கு 'க்ருஷ்ண:' என்ற சொல்லுக்குப் பொருள். இவர் ஸ்வரூபமும் இருள்மயம்தான். பூமண்டலத்தின் எல்லையைத் தாண்டி அந்தரிக்ஷ லோகத்தில் இவருடைய ஆட்சி. அங்கே பதினைந்து தினங்கள் ஒரு பகல், பதினைந்து தினங்கள் ஓர் இரவு. அங்கே சுக்லபக்ஷம் இருந்தால் அப்போது சுக்லபக்ஷ அபிமானி தேவதைக்குத்தான் செல்வாக்கு. க்ருஷ்ணபக்ஷம் இருந்தால் க்ருஷ்ணபக்ஷ அபிமானி தேவதையின் செல்வாக்கு. தக்ஷிணாயன மார்க்கம் வழியாக ஸ்வர்கம் செல்லும் ஸாதகர்களை தக்ஷிணாயன அபிமானி தேவதையிடம் கொண்டு சேர்ப்பது இவர் கடமை. தக்ஷிணாயன மார்க்கத்தில் செல்லத் தகுதிபெற்ற ஸாதகன் உத்தராயண காலத்தில் இறந்தால் இவருடைய அதிகாரத்தில் வந்து தக்ஷிணாயனம் வரும்வரை இருந்து, பிறகு தக்ஷிணாயனம் வந்ததும் அந்த தேவதையிடம் செல்கிறான். தக்ஷிணாயனத்திலேயே மரித்தவன் உடனே தக்ஷிணாயன அபிமானி தேவதையிடம் செல்கிறான்.

**கேள்வி:** 'ஷண்மாஸா தக்ஷிணாயனம்' என்று யாரைக் குறிப்பிடுகிறார்? அவர் ஸ்வரூபம் என்ன? அதிகாரம் என்ன? கடமை என்ன?

**பதில்:** சூரியன் தென் திசை நோக்கிச் செல்லும் அந்த ஆறு மாத காலத்திற்கு தக்ஷிணாயனம் என்று பெயர். அந்த தக்ஷிணாயன அபிமானி தேவதையையே இந்தச் சொற்கள் குறிப்பிடுகின்றன. இவரது வடிவமும் இருள் மயம்தான். அந்தரிக்ஷலோகத்திற்கு மேலே உள்ள எல்லா உலகங்களிலும் இவருடைய ஆட்சிதான். இங்கு ஆறு மாதம் பகல், ஆறு மாதம் இரவு. உத்தராயண காலத்தில் உத்தராயண அபிமானி தேவதைக்குத்தான் செல்வாக்கு. தக்ஷிணாயன காலத்தில் தக்ஷிணாயன அபிமானி தேவதைக்குத்தான் செல்வாக்கு. தக்ஷிணாயன மார்க்கம் வழியாக ஸ்வர்கம் செல்லத் தகுதிபெற்ற ஸாதகர்களைத் தம் அதிகாரத்திலிருந்து கரையேற்றி உபநிஷதங்களில் கூறப்படுகின்ற பித்ரு லோக அபிமானி தேவதையின் அதிகாரத்தில் கொண்டு சேர்ப்பது இவர் கடமை. இங்கிருந்து பித்ருலோக அபிமானி தேவதை ஸாதகனை ஆகாச அபிமானி தேவதையிடமும், ஆகாச அபிமானி தேவதை சந்த்ரனுடைய லோகத்திலும் கொண்டு சேர்ப்பர் (சாந்தோக்ய உபநிஷத் 5/10/4; ப்ருஹதாரண்யகம் 6/2/16). சந்த்ரலோகம் என்ற சொல் ப்ரம்மாவின் லோகம்வரை உள்ள லோகங்களைச் சேர்த்துச் சொல்லும் உபலக்ஷணம் ஆகும். இவையெல்லாமே திரும்பவும் பிறவியைக் கொடுக்கக்கூடியவை. இங்கு சந்த்ரலோகம் என்ற சொல்லால் பிறவி தரும் அத்தனை லோகங்களையும் பொருளாகக் கொள்ள வேண்டும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உபநிஷத்துக்களில் வர்ணிக்கப்படுகிற இந்தப் பித்ருலோகம் பதினைந்து நாட்கள் பகலும், பதினைந்து நாட்கள் இரவும் கொண்ட அந்தரிக்ஷலோகத்தில் அடங்கியுள்ள பித்ருலோகமன்று என்பதைக் கவனத்தில் வைக்கவும்.

**கேள்வி:** தக்ஷிணாயன மார்க்கத்தில் செல்பவரை 'யோகீ' என்று ஏன் கூறுகிறார்?

**பதில்:** ஸ்வர்கம் முதலியவற்றிற்காகப் புண்ய கர்மங்கள் செய்பவர்கூட உலகியல் போகங்களைத் துறந்துதான் ஈடுபடுகிறார்கள். ஆகவே, அவர்களையும் யோகிகள் என்று கூற வேண்டும். இவர்களைத் தவிர யோகப்ரஷ்டர்களும் இந்த வழியில் ஸ்வர்கம் சென்று அங்கே சில காலம் தங்கிப் பின் திரும்புகிறார்கள். ஆகவே, அவர்களும் இந்த வழியில் செல்பவர்கள். ஆகையால் அவர்களை யோகிகள் என்று கூறுவது பொருத்தமே. யோகிகள் என்று கூறியபடியால் பாவகர்மங்கள் செய்கின்ற தாமஸ புருஷர்கள் இந்த வழியில் செல்லத்தக்கவர்கள் அல்லர். மேலுலகம் செல்லத்தக்கவாறு சாஸ்த்ர முறைப்படி புண்ய கர்மங்கள் செய்பவர்களே இந்த வழியில் செல்லத்தக்கவர்கள் (2/42,43,44; 9/20,21 முதலியன) என்று தெரிகிறது. இதைக் குறிக்கவே 'யோகீ' என்ற சொல் ஆளப்பட்டுள்ளது.

**கேள்வி:** தக்ஷிணாயன மார்க்கத்தில் செல்லத்தக்க ஸாதகர்கள் சந்த்ரனின் ஜ்யோதியை அடைவார்கள் என்றால் அது என்ன ஜ்யோதி? அதை அடைவது எப்படி?

**பதில்:** சந்த்ரனின் உலகில் அதற்கு அபிமானியான தேவதையின் ஸ்வரூபம் குளுமையான ப்ரகாசம் உடையதாக விளங்குகிறது. அவ்வித ஒளியுடைய ஸ்வரூபத்தைத்தான் இங்கு ஜ்யோதி என்று கூறினார். அந்த சந்த்ரனின் ஜ்யோதியை அடைவது என்றால் அதேபோலக் குளுமையான ஒளியுள்ள ஸ்வரூபத்தை அடைவது என்று பொருள். அங்கே செல்லும் ஸாதகர்கள் அவ்வுலகில் குளுமையான ஒளியுள்ள தெய்விகமான தேவ சரீரத்தைப் பெற்றுத் தங்களுடைய புண்ய கர்மங்களின் பயனான திவ்ய போகங்களை அனுபவிக்கிறார்கள்.

**கேள்வி:** அந்த சந்த்ர ஜ்யோதியைப் பெற்றவன் திரும்பி வருவது என்றால் என்ன பொருள்? அந்த ஸாதகன் அங்கிருந்து எந்த வழியாக எவ்விதம் திரும்பி வருகிறான்?

**பதில்:** அங்கே தங்கியிருக்க வேண்டிய குறிப்பிட்ட காலம்வரை அங்கே தங்கிப் பிறகு மனித உலகம் திரும்புவதுதான், 'திரும்புவது' என்பதற்குப் பொருள். எந்தக் கர்மங்களின் பயனாக ஸ்வர்கமும் அங்குள்ள போகங்களும் கிடைத்தனவோ, அவை முடிந்தவுடன், அதாவது குறைந்தவுடன் அந்த உயிர் கட்டாயமாக அங்கிருந்து திரும்பிவர நேர்கிறது. சந்த்ர லோகத்திலிருந்து ஆகாசத்தையடைந்து வாயுரூபமாக மாறிப் பின் புகையாக மாறுகிறது. புகை-மேகத்துடன் சேர்கிறது. பிறகு ஜலமாக பூமியில் பொழிகிறது. அங்கே கோதுமை, சோளம், எள், நெல் முதலிய விதைகளிலோ, மரங்களின் விதைகளிலோ சேர்கிறது. அதன் வழியாக அந்த உயிர் ஆண் மகனுடைய சுக்லத்தில் சேர்கிறது. அந்த சுக்லம் பெண்ணின் சோணிதத்தில் சேர்கிறது. தன்னுடைய கர்மத்திற்கேற்ற உடல் பெற்றுப் பிறக்கிறது. (சாந்தோக்யம் 5/10/5,6,7; ப்ருஹதாரண்யகம் 6/2/16).

**பொருத்தம்:** இவ்விதம் உத்தராயணம், தக்ஷிணாயனம் என்ற இரண்டு மார்க்கங்களை வர்ணித்து அவை ஶாஶ்வதமானவை என்று கூறி, இந்த விஷயத்தை முடிக்கிறார்—

**शुक्लकृष्णे गती ह्येते जगतः शाश्वते मते ।**
**एकया यात्यनावृत्तिमन्ययावर्तते पुनः ॥ २६ ॥**

**ஶுக்லக்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகத: ஶாஶ்வதே மதே ।**
**ஏகயா யாத்யநாவ்ருத்திமந்யயாவர்ததே புந: ॥ 26 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ஹி** – ஏனென்றால், **ஜகத:** – உலகிற்கு, ஏதே – இந்த இரண்டுவிதமான, **ஶுக்ல-க்ருஷ்ணே** – சுக்ல, க்ருஷ்ண அதாவது தேவயானம், பித்ருயானம் எனப்படும், **கதீ** – வழிகள், **ஶாஶ்வதே** – என்றுமுள்ளனவாக, **மதே** – கருதப்படுகின்றன. (இவற்றுள்), **ஏகயா** – ஒன்றின் வழியாக (அர்ச்சிர் மார்க்கத்தின் மூலம் செல்கிற யோகி), **அநாவ்ருத்திம்** – எதிலிருந்து திரும்பி வர வேண்டியதில்லையோ அந்த பரமகதியை, **யாதி** – அடைகிறான். **அந்யயா** – மற்றொரு வழியாகச் செல்கின்றவன் (தூமமார்க்கத்தில் செல்கின்ற பற்றுடன் கர்மம் செய்கின்ற யோகி), **புந:** – மறுபடியும், **ஆவர்ததே** – திரும்பி வருகிறான் (அதாவது பிறப்பையும் இறப்பையும் அடைகிறான்).

ஏனென்றால் உலகிற்கு இந்த இரண்டுவிதமான சுக்ல, க்ருஷ்ண அதாவது தேவயானம், பித்ருயானம் எனப்படும் வழிகள் என்றுமுள்ளனவாகக் கருதப்படுகின்றன. இவற்றுள் ஒன்றான அர்ச்சிர் மார்க்கத்தின் மூலம் செல்கிற யோகி எதிலிருந்து திரும்பி வர வேண்டியதில்லையோ அந்தப் பரமகதியை அடைகிறான். மற்றொரு வழியாகச் செல்கின்றவன் – தூமமார்க்கத்தில் செல்கின்ற பற்றுடன் கர்மம் செய்கின்ற யோகி மறுபடியும் திரும்பி வருகிறான் – பிறப்பையும் இறப்பையும் அடைகிறான்.

**கேள்வி:** இங்கே 'ஜகத:' என்பது எதைக் குறிக்கிறது? இரண்டு கதிகளுக்கும், அதற்கும் என்ன ஸம்பந்தம்? இவை 'ஶாஶ்வத'மானவை என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேல், கீழ் உலகங்களில் ஸஞ்சரிக்கின்ற எல்லாச் சராசர ப்ராணிகளையும் இங்கு 'ஜகத:' என்று கூறுகிறார். எல்லா ப்ராணிகளும் தகுதி கிடைத்த பின்னர் இரண்டு மார்க்கங்கள் வழியாகவும் செல்ல முடியும். எண்பத்து நான்கு லக்ஷம் பிறவிகளில் மாறி மாறிப் பிறக்கும் ஜீவனுக்கு, எப்பொழுதாவது பகவான் க்ருபை புரிந்து மனிதப் பிறவி அளித்து, தன்னுடைய லோகத்திற்கும், மற்ற தேவதைகளுடைய லோகங்களுக்கும் செல்ல வாய்ப்பு அளிக்கிறார். அந்தச் சமயம் அவன் வாழ்க்கையை நல்லமுறையில் உபயோகப்படுத்தி, இரண்டு வழிகளில் ஏதாவதொன்றில் சென்று அடையத்தக்க ஸ்தானத்தை நிச்சயம் அடைய முடியும். ப்ராணிகள் அனைத்துக்கும் இதே இருவழிகளில் செல்ல ஸம்பந்தம் உண்டு. எல்லா ப்ராணிகளுக்காகவுமே ஏற்பட்ட இந்த இரண்டு வழிகள் எப்பொழுதுமே உள்ளன. ஆகவே, இவற்றை 'ஶாஶ்வதம்' என்றார். மஹாப்ரளய காலத்தில் அகில உலகங்களும் பகவானிடம் லயமடையும் போது இந்த மார்க்கங்களும், இவற்றினுடைய தேவதைகளும் கூட லயமடைவர். ஆனால் மறுபடியும் படைப்பு ஆரம்பித்தவுடன், இவையும் உற்பத்தியாகின்றன. ஆகவே, இவற்றை 'ஶாஶ்வதம்' என்று சொல்வதில் தவறில்லை.

**கேள்வி:** இந்த மார்க்கங்களுக்கு 'ஶுக்ல', 'க்ருஷ்ண' என்று பெயர் வைத்திருப்பதன் கருத்து என்ன?

**பதில்:** பரமாத்மாவினுடைய பரமதாமத்திற்குச் செல்லும் மார்க்கம் ஒளிமயமானது; திவ்யமானது. அதை ஆளும் தேவதைகளும் ஒளிமயமானவர்கள். அதில் செல்லும் ஸாதகர்களுடைய உள்ளங்களிலும் எப்பொழுதும் ஞான ஒளி வீசிக் கொண்டிருக்கும். ஆகவே, அந்த மார்க்கம் 'ஶுக்லம்' (ஒளிமயமானது). ஆனால் ப்ரம்மாவின் லோகம் வரை உள்ள எல்லா தேவலோகங்களுக்கும் செல்லும் மார்க்கம் சுக்ல மார்க்கத்தைக் காட்டிலும் இருண்டது. அதில் வருகின்ற தேவதைகளும் இருண்ட ஸ்வரூபம் உடையவர்கள். அதில் செல்பவர்களும் அஞ்ஞான இருள் சூழ்ந்தவர்கள். ஆகவே, அதற்கு 'க்ருஷ்ணம்' (இருள் மயமானது) என்று பெயர்.

**கேள்வி:** 'அநாவ்ருத்தி' என்றால் என்ன பொருள்? அதை இங்கே உபயோகிப்பதன் கருத்து என்ன?

**பதில்:** எங்கே சென்றால் ஸாதகன் திரும்பி வரமாட்டானோ, அது பகவானுடைய பரமதாமம். அதுவே 'அநாவ்ருத்தி' எனப்படுகிறது. 24வது ச்லோகத்தில் சுக்ல

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மார்க்கத்தில் செல்பவர்களே ப்ரம்மத்தை அடைவார்கள். அதற்குப் பிறகு அவர்களுக்கு மறுபிறவி கிடையாது. ஆகவே, அதை அநாவ்ருத்தி (திரும்பிவராப் பதவி) என்றார். இதைத் தெளிவாகத் தெரிவிப்பதற்காகவே இங்கு 'அநாவ்ருத்தி' எனும் சொல்லை உபயோகித்தார்.

**கேள்வி:** 'புந: ஆவர்ததே' என்றால் என்ன பொருள்?

**பதில்:** க்ருஷ்ண மார்க்கத்தின் வழியே சென்றடையும் எல்லா உலகங்களும் திருப்பிவிடும் இயல்புடையன. அதாவது க்ருஷ்ண மார்க்கத்தில் செல்லும் மனிதன் எந்தெந்த உலகங்களுக்குச் செல்கிறானோ, அவை எல்லாமே அழியக்கூடியவை. ஆகவே, இந்த மார்க்கத்தில் செல்பவன் மனித உலகுக்குத் திரும்பத்தான் வேண்டியிருக்கும்.

**பொருத்தம்:** அடுத்து, அதே இரண்டு மார்க்கங்களில் செல்லும் யோகிகளின் பெருமையைக் கூறி, அர்ஜுனனை, 'யோகி ஆவாயாக!' என்று கூறுகிறார்—

**नैते सृती पार्थ जानन्योगी मुह्यति कश्चन।**
**तस्मात्सर्वेषु कालेषु योगयुक्तो भवार्जुन॥ २७॥**

**நைதே ஸ்ருதீ பார்த₂ ஜாநந்யோகீ₃ முஹ்யதி கஶ்சந ।**

**தஸ்மாத்ஸர்வேஷு காலேஷு யோக₃யுக்தோ ப₄வார்ஜுந ॥ 27 ॥**

**பார்த₂** – பார்த்த! **ஏதே ஸ்ருதீ** – இந்த இரண்டு மார்க்கங்களையும், **ஜாநந்** – தத்வரீதியாக அறிந்த, **கஶ்சந யோகீ₃** – எந்த யோகியும், **ந முஹ்யதி** – மோஹமடைவதில்லை. (அதாவது அவன் பற்றற்ற நிலையிலேயே ஸாதனையைச் செய்வான். ஆசையில் சிக்கிக் கொள்ள மாட்டான்). **தஸ்மாத்** – ஆகையால், **அர்ஜுந** – அர்ஜுன! **ஸர்வேஷு** – எல்லா, **காலேஷு** – காலங்களிலும், **யோக₃யுக்த:** – ஸமபுத்தி என்னும் யோகத்தோடு கூடியவனாக, **ப₄வ** – ஆகிவிடு. (அதாவது எப்பொழுதும் என்னையடைவதற்காகவே ஸாதனைகளைச் செய்பவனாக இரு).

பார்த்த! இந்த இரண்டு மார்க்கங்களையும் தத்வரீதியாக அறிந்த எந்த யோகியும் மோஹமடைவதில்லை. அவன் பற்றற்ற நிலையிலேயே ஸாதனையைச் செய்வான். ஆசையில் சிக்கிக் கொள்ளமாட்டான். ஆகையால் அர்ஜுன! எல்லா காலங்களிலும் ஸமபுத்தி என்னும் யோகத்தோடு கூடியவனாக ஆகிவிடு – எப்பொழுதும் என்னையடைவதற்காகவே ஸாதனைகளைச் செய்பவனாக இரு.

**கேள்வி:** 'ஏதே' என்ற அடைமொழியுடன் கூடிய 'ஸ்ருதீ' என்ற பதத்திற்கு என்ன பொருள்? அதை அறிவது என்றால் எப்படி?

**பதில்:** முன் ச்லோகங்களில் கூறப்பட்ட இரண்டு மார்க்கங்களையும் இவை குறிக்கின்றன. பயனில் பற்றுடன் நல்ல கர்மங்களைச் செய்து தெய்வத்தை உபாஸிக்கும் புண்யாத்மாக்கள் க்ருஷ்ண மார்க்கத்தில் சென்று, தம் கர்மவினையின்படி தேவலோகங்களைப் போய்ச் சேர்கிறார்கள். தம் புண்யங்கள் எஞ்சியில்லாமல் தீர்ந்து போனதும் திரும்பி விடுகிறார்கள் *(9/20,21)*. நிஷ்காமமாக கர்ம உபாஸனைகளைச் செய்பவர்களான கர்மயோகிகளும், தான் கர்த்தா என்ற அபிமானமில்லாத ஸாங்க்ய யோகிகளும் சுக்ல மார்க்கத்தின் வழியே பகவானுடைய பரமதாமத்தை அடைவார்கள். அங்கிருந்து அவர்கள் என்றும் திரும்பி வர வேண்டியதில்லை. இந்த விஷயத்தை ச்ரத்தையோடு நன்றாகத் தெரிந்து கொள்வதுதான், இந்த இரண்டையும் தத்வரீதியாக அறிந்து கொள்வது ஆகும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'யோகீ' என்றால் யார்? 'கஶ்சந' என்று அடைமொழி கொடுப்பதன் கருத்து என்ன? மோஹம் அடைவதில்லை என்றால் என்ன பொருள்?

**பதில்:** கர்மயோகம், த்யானயோகம், பக்தியோகம், ஞானயோகம் முதலிய பகவானை அடையும் உபாயங்களாக எத்தனை யோகங்கள் சொல்லப்பட்டிருக்கின்றனவோ, அந்தந்த யோகங்களில் கூறியபடி முயற்சி செய்யும் ஸாதகர்கள் 'யோகி'கள். அவர்களில் எந்த யோகீ மேலே சொன்ன சுக்ல, க்ருஷ்ண மார்க்கங்கள் இரண்டையும் தத்வரீதியாக அறிகிறாரோ, அவர்தான் மோஹமடைய மாட்டார். இந்த விஷயத்தைத்தான் 'கஶ்சந' (யாரோ ஒருவர்) என்று குறிப்பிடுகிறார். மேலே சொன்ன யோக ஸாதனைகளில் ஈடுபட்டிருந்தால்கூட மனிதர் இந்த மார்க்கங்களைத் தத்வரீதியாக அறிந்து கொள்ளாததால் தம் இயல்புக்கு ஏற்றவாறு இவ்வுலக போகங்களிலோ, பரலோக போகங்களிலோ பற்றுக் கொண்டு ஸாதனைகளிலிருந்து நழுவி விடுவதே மோஹமடைவதாகும். ஆனால், எவர் இந்த இரண்டு மார்க்கங்களையும் தத்வரீதியாக அறிந்து கொண்டு, ப்ரம்மாவின் லோகம் வரை உள்ள எல்லா லோகங்களுடைய போகங்களும் அற்பமானவை என்றும், அழியக்கூடியவை என்றும் உணர்ந்து அவற்றில் ஈடுபடாமல் இடைவிடாது பரமாத்மாவை அடைவிக்கும் ஸாதனங்களிலேயே ஈடுபடுகிறார்களோ, அவர்களே மோஹமடையாதவர்கள்.

**கேள்வி:** 'தஸ்மாத்' என்ற சொல்லின் குறிப்பு என்ன? அர்ஜுனனிடம், 'எப்பொழுதும் யோகத்தில் ஈடுபட்டவனாக இரு!' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவானை அடைவதற்கு உபாயமான ஸாதனை என்ற பெருமை யோகத்திற்கு உண்டு. அந்த யோகத்தில் ஈடுபட்ட யோகி இரண்டு மார்க்கங்களையும் தத்வரீதியாக அறிந்து கொண்டுவிடுகிறபடியால், எந்தவிதமான போகத்திலும் பற்றுக் கொண்டு மோஹித்து விடுவதில்லை. 'ஆகவே, நீயும் எப்பொழுதும் யோகத்தில் ஈடுபட்டவனாக இரு! என்னுடைய ப்ரீதிக்காகவே இடைவிடாது பக்தி ப்ரதானமான கர்மயோகத்தில் ச்ரத்தையுடன் ஈடுபடுவாயாக!' என்று பகவான் கூறுகிறார். 8/7லும் பகவான் இவ்விதமே ஆணையிடுகிறார். ஏனெனில் அர்ஜுனன் இதற்குத் தகுதி பெற்றவன்.

'எக்காலத்திலும் யோகத்தில் ஈடுபட்டவனாக இரு' என்று பகவான் இங்கு அர்ஜுனனிடம் கூறுவதன் கருத்து இதுதான்:– மனிதப் பிறவி குறுகிய காலத்தது. எப்பொழுது மரணம் நேரும் என்பது தெரியாது. தன்னுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு கணத்தையும் ஸாதனையில் ஈடுபடுத்த முயற்சி செய்யாவிட்டால், ஸாதனை இடையிடையே தடைபடும். ஸாதனையில் ஈடுபடாத நேரத்தில் உயிர் பிரிந்தால், அவன் யோகப்ரஷ்டனாகி, மறுபடியும் பிறக்க நேரிடும். ஆகவே பகவானை அடைவதற்காக மனிதன் எப்பொழுதும் இடைவிடாது ஸாதனை புரியவேண்டும்.

**பொருத்தம்:** யோகத்தில் ஈடுபடுமாறு அர்ஜுனனுக்கு பகவான் ஆணையிட்டார். அப்படி யோகத்தில் ஈடுபட்டவனுடைய பெருமையையும், இந்த அத்யாயத்தில் கூறப்பட்ட ரஹஸ்யத்தைப் புரிந்து கொண்டு அதற்கேற்ப ஸாதனை புரிவதன் பயனையும் சொல்லி அத்யாயத்தை முடிக்கிறார்—

वेदेषु यज्ञेषु तपःसु चैव दानेषु यत्पुण्यफलं प्रदिष्टम्।
अत्येति तत्सर्वमिदं विदित्वा योगी परं स्थानमुपैति चाद्यम्॥ २८॥

**வேதே₃ஷு யஜ்ஞேஷு தப:ஸு சைவ**
**தா₃நேஷு யத்புண்யப₂லம் ப்ரதி₃ஷ்டம் ।**
**அத்யேதி தத்ஸர்வமித₃ம் விதி₃த்வா**
**யோகீ₃ பரம் ஸ்தா₂நமுபைதி சாத்₃யம் ॥ 28 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**யோகீ₃** – யோகியானவன், **இத₃ம்** – இந்த ரஹஸ்யத்தை, **விதி₃த்வா** – தத்வரீதியாக அறிந்து, **ச** – மேலும், **வேதே₃ஷு** – வேதங்களை அத்யயனம் செய்வதிலும், **யஜ்ஞேஷு** – யாகங்களைச் செய்வதிலும், **தப:ஸு** – தவம் செய்வதிலும், **தா₃நேஷு** – தானங்கள் செய்வதிலும், **யத்** – எந்த, **புண்யப₂லம்** – புண்யத்தின் பயன் (ஏற்படுமென்று), **ப்ரதி₃ஷ்டம்** – சொல்லப்பட்டிருக்கிறதோ, **தத்** – அந்த, **ஸர்வம்** – எல்லாவற்றையுமே, **ஏவ** – ஐயமின்றி, **அத்யேதி** – கடந்து செல்கிறான். **ச** – மேலும், **ஆத்₃யம்** – என்றுமுள்ள, **பரம் ஸ்த₂ாநம்** – பரமபதத்தை, **உபைதி** – அடைகிறான்.

யோகியானவன் இந்த ரஹஸ்யத்தை தத்வரீதியாக அறிந்து வேதங்களை அத்யயனம் செய்வதிலும், யாகங்களைச் செய்வதிலும், தவம் செய்வதிலும், தானங்கள் செய்வதிலும், எந்த புண்யத்தின் பயன் ஏற்படுமென்று சொல்லப்பட்டிருக்கிறதோ, அந்த எல்லாவற்றையுமே ஐயமின்றி கடந்து செல்கிறான். மேலும் என்றுமுள்ள பரமபதத்தை அடைகிறான்.''

**கேள்வி:** *இங்கே 'யோகீ' என்றால் யார்?*

**பதில்:** பகவானை அடைவதற்குரிய ஸாதனை முறைகள் என்று எவை சொல்லப் பட்டுள்ளனவோ, அவற்றில் எவையேனும் ஒன்றில் ச்ரத்தையுடனும், பக்தியுடனும் இடைவிடாது ஈடுபட்ட மனிதன் 'யோகீ' எனப்படுவான்.

**கேள்வி:** *'இதம்' என்றால் எது? அதைத் தத்வரீதியாக அறிவது என்றால் என்ன?*

**பதில்:** இந்த அத்யாயத்தில் கூறப்பட்ட ரஹஸ்யமான உபதேசம் முழுவதையும் 'இதம்' என்ற சொல் குறிக்கும். இதில் கொடுக்கப்பட்டுள்ள பயிற்சியை அதாவது பகவானுடைய ஸகுண–நிர்குண, உருவமுள்ள–உருவமற்ற ஸ்வரூபத்தின் உபாஸனை, பகவானுடைய குணங்கள், ப்ரபாவம், பெருமை, அவ்வாறே எவ்விதம் ஸாதனை புரிந்தால் பகவானை அடையலாம்; எங்கு சென்றால் திரும்பி வரவேண்டியதில்லை; எங்கு சென்றால் திரும்ப வேண்டி வரும் என்று இந்த அத்யாயத்தில் சொல்லப்பட்டுள்ள விஷயங்களை நன்கு அறிவதுதான் அதைத் தத்வரீதியாக அறிவதாகும்.

**கேள்வி:** *இங்கு வேதம், யக்ஞம், தவம், தானம் என்ற சொற்களுக்கு என்ன பொருள்? அவற்றின் புண்யப் பயன் என்ன? அவற்றைக் கடந்து செல்வது என்றால் என்ன?*

**பதில்:** இங்கு வேதம் என்றால் அங்கங்களுடன் கூடிய நான்கு வேதங்களும், அவற்றை அடி ஒற்றிச் சொல்லும் சாஸ்த்ரங்களும் என்று பொருள். யக்ஞம் என்றால் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட முறைப்படிச் செய்யப்படுகின்ற பூஜை, ஹோமம் முதலியவை. தவம் என்றால் வ்ரதம், உபவாஸம், புலனடக்கம், ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பது முதலிய எல்லாவிதமான ஒழுக்கங்களும் ஆகும். தானம் என்ற சொல், அன்னதானம், கல்வி வழங்குதல், நிலம் வழங்குதல் முதலிய சாஸ்த்ர முறைப்படி செய்யப்படுகின்ற தானங்களையும், பரோபகாரத்தையும் குறிக்கும். ச்ரத்தையுடனும், பக்தியுடனும் பயனில் பற்றுக் கொண்டு வேதம் சாஸ்த்ரங்களைக் கற்பது, யக்ஞம், தானம், தவம் முதலிய புண்ய கர்மங்களைச் செய்வது, இவற்றால் கிடைக்கக்கூடிய புண்யக் குவியலினால் ப்ரம்மலோகம் வரை உள்ள வெவ்வேறு உலகங்களை அடைவது, அங்குள்ள போகங்களை அனுபவிப்பது என்று வேத சாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ள பயன்கள் யாவும் புண்யங்களின் பயனாகும். அப்படி அடையப் பெறும் உலகங்களும், போகங்களும் நொடியில் அழியக்கூடியவை. அநித்யமானவை என்று அறிந்து அவற்றில் பற்றுக் கொள்ளாமல், அவற்றைப் பொருட்படுத்தாமல் எப்பொழுதும் ஒதுங்கி இருப்பதுதான் அவற்றைக் கடத்தலாகும்.

**கேள்வி:** *'ஆத்யம்', 'பரம்', 'ஸ்தாநம்' என்பது எது? அதை அடைவது என்றால் என்ன?*

**பதில்:** இந்த அத்யாயத்தில் பரமதாமம் என்ற பெயரால் குறிப்பிடப்பட்டு, எங்கு சென்றுவிட்டால் மனிதன் திரும்பி இந்த ஸம்ஸார சக்ரத்தில் உழல வேண்டியதில்லையோ,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அதுதான் எல்லாவற்றிற்கும் முதன்மையானது; உயர்ந்தது; மேலான்து. அதுவே 'பரம்', 'ஆத்யம்', 'ஸ்தாநம்' ஆகும். இதைத் தத்வரீதியாக அறிந்து அங்கு போய்ச் சேர்வதே அதை அடைவதாகும். இதுதான் பரமகதியை அடைவது, திவ்ய புருஷனை அடைவது, பரமபதத்தை அடைவது, பகவத் ஸ்வரூபத்தை அடைவது என்றெல்லாம் கூறப்படுகிறது.

ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
अक्षरब्रह्मयोगो नामाष्टमोऽध्याय: ॥ ८ ॥

**ஓம் தத்ஸதி³தி ஶ்ரீமத்ப⁴க³வத்³கீ³தாஸூபநிஷத்ஸு ப்³ரஹ்மவித்³யாயாம் யோக³ஶாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே³ அக்ஷரப்³ரஹ்மயோகோ³ நாமாஷ்டமோऽத்⁴யாய: ॥ 8 ॥**

**ஓம் தத் ஸத் – ப்ரம்ம வித்யை, யோக ஶாஸ்த்ரம், உபநிஷத் எனப்படும் ஸ்ரீமத்பகவத்கீதையாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலில் 'அக்ஷரப்ரஹ்மயோகம்' எனப் பெயர் படைத்த எட்டாவது அத்யாயம் நிறைவுற்றது.**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

# அத₂ நவமோऽத்₄யாய:

# ஒன்பதாவது அத்யாயம்

## ராஜவித்யா ராஜகுஹ்யயோகம்

**அத்யாயத்தின் பெயர்** இந்த அத்யாயத்தில், தாம் செய்த உபதேசம் எல்லா வித்யைகளிலும் தலைசிறந்தது (அரசு) என்றும், மறைத்துப் போற்றப்படவேண்டிய ரஹஸ்யங்களிலும் தலைசிறந்தது (அரசு) என்றும் பகவான் கூறுகிறார். ஆகவே இந்த அத்யாயத்திற்கு 'ராஜவித்யா ராஜகுஹ்யயோகம்' என்று பெயர்.

**அத்யாயச் சுருக்கம்** ச்லோகம் 1, 2ல் பகவான் அர்ஜுனனுக்கு மறுபடியும் விஞ்ஞானத்துடன் கூடிய ஞானத்தைக் கூறுவதாக உறுதிமொழி கூறி, அதன் பெருமையையும் கூறுகிறார். 3ல் இந்த உபதேசத்தில் நம்பிக்கையில்லாவிடில் பிறப்பு-இறப்பு என்ற சுழலில் சிக்க நேரிடும் என்று கூறி, 4 முதல் 6 வரை பகவான் தமது உருவமற்ற ஸ்வரூபம் எங்கும் நிறைந்தது, எதிலும் ஒட்டாதது என்று பகர்ந்து, தமது தெய்விக யோகசக்தியைக் கோடி காட்டி, அந்த ஸ்வரூபத்தில் எல்லாச் சராசரங்களும் அடங்கியுள்ளன என்பதையும் வாயு, ஆகாசம் என்கின்ற உதாரணங்களின் மூலம் நிரூபிக்கிறார். 7 முதல் 10 வரை மஹாப்ரளய காலத்தில் எல்லா ப்ராணிகளும் தமது ப்ரக்ருதியில் லயமடைவது, மறுபடியும் கல்பங்களின் ஆரம்பத்தில் தம்மிடமிருந்து அவற்றை ப்ரக்ருதி மூலமாகப் படைப்பது ஆகிய இவ்விதச் செயல்களைச் செய்தால் கூடத் தாம் ஒன்றிலும் ஒட்டுவதில்லை என்று கூறுகிறார். 11, 12ல் தமது ப்ரபாவத்தை அறியாமல், தம்மை இகழ்வோரை நிந்தித்து, 13, 14ல் தமது ப்ரபாவத்தை அறிந்து கொண்ட அநன்ய பக்தர்கள் வழிபடும் முறையைக் கூறுகிறார். 15ல் ஞான யக்ஞத்தின் மூலம் ஏகத்வ பாவனையுடன் (தானே ப்ரம்மம் என்ற பாவனையுடன்) ப்ரம்மத்தை உபாஸிப்பவர்களான ஞானயோகிகளைப் பற்றியும், விராட் ஸ்வரூபத்திலுள்ள பகவானை, தான் வேறு, பகவான் வேறு என்ற பாவனையுடன் உபாஸிப்பவர்களைப் பற்றியும் கூறுகிறார். 16 முதல் 19 வரை பகவான் தம்முடைய குணங்கள், ப்ரபாவம், விபூதிகள் இவற்றோடு கூடிய ஸ்வரூபத்தை எடுத்துக் கூறி, கார்யமாகவும், காரணமாகவும் உள்ள அகில ப்ரபஞ்சமும் தம் ஸ்வரூபமே என்று கூறுகிறார். 20, 21ல் ஸ்வர்க போகத்திற்காக யக்ஞம் முதலியன செய்பவர்கள் ஸ்வர்கம் சென்று திரும்பி பூமியையடைவதை வர்ணித்து, 22ல் நிஷ்காமமாக எப்போதும் இடைவிடாது சிந்தித்திருக்கும் பக்தர்களின் யோகக்ஷேமங்களைத் தாமே ஏற்று நடத்துவதாக பகவான் உறுதி கூறுகிறார். 23 முதல் 25 வரை மற்ற தேவதைகளை உபாஸிப்பதும் வேறுவிதமாக முறை தவறித்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தம்மையே பூஜிப்பதாகும் என்றும், அது பகவானைத் தத்வரீதியாக உணராமையினால் என்றும் கூறி, அதன் பயன் தேவதைகளை அடைவதாகும் என்றும், தம்மையே உபாஸிப்பதால் தம்மையே அடையலாம் என்றும், 26ல் பகவத் பக்தி எளிமையானது என்றும் கூறி, 27ல் அர்ஜுனனை 'எல்லாக் கர்மங்களையும் எனக்கு அர்ப்பணம் செய்' என்றும், 28ல் அதன் பயன் தம்மை அடைவதுதான் என்றும் கூறுகிறார். 29ல் பகவான் தம்முடைய ஸமபாவனையைக் கூறி, 30, 31ல் தீய நடத்தை உள்ளவன்கூட பகவானை அநன்ய பக்தியோடு உபாஸிப்பதனால் அடையும் பெருமையைச் சொல்கிறார். 32ல் தம்மை ஶரணாகதி செய்து பெண்கள், வைசியர்கள், நான்காம் வர்ணத்தவர் மற்றும் சண்டாளர்களும் பரமகதியை அடையலாம் என்றும் கூறுகிறார். 33, 34ல் புண்யசீலர்களான அந்தணர்கள், ராஜரிஷிகள் ஆகிய பக்தர்களைச் சிறப்பித்துக் கூறி, உடல் அநித்யமானது. ஆகவே, தம்மைச் சரணடைய வேண்டும் என்றும் கூறி, ஶரணாகதியின் ஸ்வரூபத்தை விரிவாக எடுத்துச் சொல்லி, அத்யாயத்தை முடிக்கிறார்.

**முன் அத்யாயத்துடன் இவ்வத்யாயத்திற்குப் பொருத்தம்:** ஏழாவது அத்யாயத்தின் ஆரம்பத்தில் பகவான் விஞ்ஞானத்துடன் கூடிய ஞானத்தை எடுத்துக் கூறுவதாகச் சொன்னார். அதையொட்டி அதை வர்ணித்து, முடிவில் ப்ரம்மம், அத்யாத்மம், கர்மம், அதிபூதம், அதிதைவம், அதியக்ஞம் இவற்றோடுகூடிய பகவானை அறிவது மற்றும் மரணத்தறுவாயில் பகவானைச் சிந்திப்பது ஆகியன பற்றிக் கூறினார். அடுத்து எட்டாவது அத்யாயத்தில் அர்ஜுனன் அந்தத் தத்வங்களைப் பற்றியும், கடைசிக் காலத்திய உபாஸனையைப் பற்றியும் ஏழு கேள்விகள் கேட்டார். அவற்றில் ஆறு கேள்விகளுக்கு பகவான் சுருக்கமாக 3வது, 4வது ச்லோகங்களில் பதில் கூறினார். ஏழாவது கேள்விக்கான பதிலை அந்த அத்யாயத்தின் மீதமுள்ள ச்லோகங்களில் கூறி அத்யாயத்தை முடித்தார். இவ்விதம் ஏழாவது அத்யாயத்தில் ஆரம்பிக்கப்பட்ட விஞ்ஞானத்துடன் கூடிய ஞான வர்ணனை அங்கு விரிவாகக் கூறப்படாதபடியால் அந்த விஷயத்தை நன்கு எடுத்துக் கூறும் நோக்கத்துடன் பகவான் இந்த ஒன்பதாவது அத்யாயத்தை ஆரம்பிக்கிறார். ஏழாவது அத்யாயத்தில் கூறப்பட்ட உபதேசத்துடன் இதற்கு நெருங்கிய தொடர்பு உண்டு என்பதை உணர்த்த முதல் ச்லோகத்தில் 'விஞ்ஞானத்துடன் கூடிய ஞானத்தைப் பற்றிக் கூறுவேன்' என்கிறார்—

श्रीभगवानुवाच

इदं तु ते गुह्यतमं प्रवक्ष्याम्यनसूयवे।
ज्ञानं विज्ञानसहितं यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात्॥ १॥

ஶ்ரீப$_4$க$_3$வாநுவாச

**இத$_3$ம் து தே கு$_3$ஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே ।**
**ஜ்ஞாநம் விஜ்ஞாநஸஹிதம் யஜ்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽஶுப$_4$ாத் ॥ 1 ॥**

**ஶ்ரீப$_4$க$_3$வாநுவாச** – ஶ்ரீபகவான் கூறினார்: **யத்** – எதை, **ஜ்ஞாத்வா து** – அறிந்து கொண்டதாலேயே, **அஶுப$_4$ாத்** – துக்க வடிவான உலகியலிலிருந்து, **மோக்ஷ்யஸே** – விடுதலை பெறுவாயோ, **கு$_3$ஹ்யதமம்** – மிகவும் மறைத்துப் போற்றவேண்டிய, **விஜ்ஞாந ஸஹிதம்** – விஞ்ஞானத்தோடு கூடிய, **இத$_3$ம்** – இந்த, **ஜ்ஞாநம்** – ஞானத்தை, **அநஸூயவே**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



– குற்றம், குறை காணாத இயல்புடைய பக்தனான, தே – உனக்கு, ப்ரவக்ஷ்யாமி – மறுபடியும் நன்றாக விளக்கிக் கூறப்போகிறேன்.

ஸ்ரீபகவான் கூறினார்: "அர்ஜுன! எதை அறிந்து கொண்டதாலேயே துக்க வடிவான உலகியலிலிருந்து விடுதலை பெறுவாயோ மிகவும் மறைத்துப் போற்ற வேண்டிய விஞ்ஞானத்தோடு கூடிய இந்த ஞானத்தை குற்றம், குறை காணாத இயல்புடைய பக்தனான உனக்கு மறுபடியும் நன்றாக விளக்கிக் கூறப்போகிறேன்.

**கேள்வி:** 'அநஸூயவே' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? அர்ஜுனனை 'அநஸூயு' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பண்புள்ளவர்களின் பண்பை மதியாமை, குணங்களில் குற்றம் காண்பது, அவர்களை நிந்திப்பது, அவர்கள் மீது பொய்யான பொல்லாங்கு கூறுவது இவையெல்லாம் 'அஸூயை' ஆகும். இயல்பாகவே இந்த 'அஸூயை' இல்லாதவனை 'அநஸூயு' என்பார்கள்.‡ பகவான் அர்ஜுனனை 'அநஸூயு' என்று கூறுகிறார். "எவனுக்கு என்னிடம் நம்பிக்கை உள்ளதோ, அஸூயையே கிடையாதோ அவன்தான் இந்த அத்யாயத்தில் கூறப்படும் உபதேசத்தைப் பெறத் தகுதியுள்ளவன். இதற்குமாறாக என்னிடம் குற்றம் காண்பவனும், ச்ரத்தை இல்லாதவனும் இந்த உபதேசம் பெறத் தகுதியற்றவன்" என்கிறார். *18/67*ல், 'பகவான் என்னிடம் குற்றம் காண்பவருக்கு இந்த கீதாசாஸ்த்ரத்தைச் சொல்லக் கூடாது' என்று தெளிவாகக் கூறுகிறார்.

**கேள்வி:** இங்கே 'இதம்' என்றால் எது? இனிக் கூறப் போவதாக வாக்களித்த விஞ்ஞானத்துடன் கூடிய ஞானம் என்றால் எது?

**பதில்:** 7,8,9வது அத்யாயங்களில் ப்ரபாவம், பெருமை, ரஹஸ்யங்களுடன் கூடிய நிர்குணமான–நிராகாரத்தின் தத்வம், லீலை, ரஹஸ்யம், பெருமை, ப்ரபாவம் இவற்றுடன் கூடிய ஸகுணமான–உருவமற்றதன் தத்வம்; ஸகுணமான–உருவமுள்ளதன் தத்வம் ஆகிய மூன்றைப் பற்றியும், இவற்றை அறிந்து கொள்வதற்கான உபதேசங்களைப் பற்றியும் எடுத்துக் கூறியுள்ளார். அவை எல்லாவற்றையும் குறிப்பது 'இதம்' என்ற சொல். அதுவே விஞ்ஞானத்துடன் கூடிய ஞானமாகும்.

**கேள்வி:** 'இது மறைத்துப் போற்றிக் காப்பாற்ற வேண்டியவற்றில் சிறந்தது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உலகியலிலும், சாஸ்த்ரங்களிலும் மறைத்துப் போற்றப்பட வேண்டிய ரஹஸ்யங்கள் அனைத்தையும் விட ஸமக்ரரூபியான (முழுமையான ஆளுமை படைத்த) பகவான் புருஷோத்தமனுடைய தத்வம், ப்ரேமை, குணம், ப்ரபாவம், விபூதி, பெருமை இவற்றுடன் கூடிய ஶரணாகதியின் ஸ்வரூபம் மறைத்துக் காக்கப்பட வேண்டியது. இதைத்தான் 'குஹ்யதமம்' என்கிறார். *15/20, 18/64*ல் இது போன்ற வர்ணனையை 'குஹ்யதமம்' என்கிறார்.

**கேள்வி:** 'அஶுபம்' என்றால் என்ன? அதிலிருந்து விடுதலை பெறுவது என்றால் என்ன?

**பதில்:** அனைத்து துக்கங்கள், அவற்றிற்குக் காரணமான செயல்கள், தீய குணங்கள், பிறப்பு–இறப்புக்குக் காரணமான ஸம்ஸார பந்தம் ஆகிய இவையனைத்திற்கும் காரணமான

‡ ந கு$_{3}$ணாந் கு$_{3}$ணிநோ ஹந்தி ஸ்தௌதி மந்த$_{3}$கு$_{3}$ணாநபி ।
நாந்யதோ$_{3}$ஷேஷு ரமதே ஸாநஸூயா ப்ரகீர்திதா ॥

(அத்ரிஸ்ம்ருதி 34)

பண்புள்ளவர்களின் பண்பை மறுக்காமல் ஏற்பது, கொஞ்சம் குணம் இருந்தாலும் அதைக் கொண்டாடுவது, பிறர் குற்றங்களைக் கண்டு அவற்றைப் பேசி மகிழாமல் இருப்பது – இவையே அநஸூயை (பொறாமையற்ற நிலை).

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அஞ்ஞானமே 'அசுபம்' எனப்படுகிறது. இவை எல்லாவற்றிலிருந்தும் இறுதியாக முழுமையாக விடுதலை பெறுவதே – பரமானந்த ஸ்வரூபமான பரமாத்மாவை அடைவதே – அசுபத்திலிருந்து விடுபடுவதாகும்.

**பொருத்தம்:** பகவான் விஞ்ஞானத்துடன் கூடிய ஞானத்தை உபதேசிப்பதாகக் கூறினார். அதில் நம்பிக்கையும், ப்ரேமையும், கேட்பதற்கு ஆவலும், அந்த உபதேசத்தின்படி நடப்பதற்கு மிகுந்த உற்சாகமும் ஊட்டுவதற்காக, அதன் உண்மையான பெருமையை எடுத்துக் கூறுகிறார்—

**राजविद्या राजगुह्यं पवित्रमिदमुत्तमम् ।**
**प्रत्यक्षावगमं धर्म्यं सुसुखं कर्तुमव्ययम् ॥ २ ॥**

**ராஜவித்₃யா ராஜகு₃ஹ்யம் பவித்ரமித₃முத்தமம் ।**
**ப்ரத்யக்ஷாவக₃மம் த₄ர்ம்யம் ஸுஸுக₂ம் கர்துமவ்யயம் ॥ 2 ॥**

**இத₃ம்** – இந்த விஞ்ஞானத்துடன் கூடிய ஞானம், **ராஜவித்₃யா** – அனைத்து வித்யைகளுக்கு அரசு, **ராஜகு₃ஹ்யம்** – மறைத்துப் போற்றப்பட வேண்டியவற்றில் சிறந்தது; **பவித்ரம்** – மிகப் புனிதமானது; **உத்தமம்** – மிகச்சிறந்தது; **ப்ரத்யக்ஷாவக₃மம்** – கண்கூடாக உணர்தற்குரியது; **த₄ர்ம்யம்** – தர்மநெறிக்குட்பட்டது; **கர்தும் ஸுஸுக₂ம்** – கடைப்பிடிப்பதற்கு மிகவும் எளிதானது. (மேலும்), **அவ்யயம்** – அழிவற்றது.

இந்த விஞ்ஞானத்துடன் கூடிய ஞானம் அனைத்து வித்யைகளுக்கும் அரசு; மறைத்துப் போற்றப்பட வேண்டியவற்றில் சிறந்தது; மிகப் புனிதமானது; மிகச்சிறந்தது; கண்கூடாக உணர்தற்குரியது; தர்மநெறிக்குட்பட்டது; கடைப்பிடிப்பதற்கு மிகவும் எளிதானது. மேலும் அழிவற்றது.

**கேள்வி:** இங்கு 'இதம்' என்றால் எது? அதை 'ராஜவித்யா', 'ராஜகுஹ்யம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** முன் ச்லோகத்தில் விஞ்ஞானத்தோடு கூடிய ஞானத்தைப் பற்றிக் கூறுவேன் என்று சொன்னாரே, அதுதான் 'இதம்' என்ற சொல்லின் கருத்து. உலகில் அறிந்து கொள்ளப்பட்டவை, அறிந்து கொள்ளப்படாதவை என எத்தனையோ வித்யைகள் உள்ளன. அவை எல்லாவற்றைக் காட்டிலும் சிறந்தது இது. இந்த வித்யையின் உண்மையான அனுபவத்தைப் பெற்றவனுக்கு மேலும் தெரிந்து கொள்ள வேண்டியது ஒன்றுமில்லை. அதனால்தான் இதை 'ராஜவித்யை' (வித்யைகளுக்கெல்லாம் அரசு) என்று கூறுகிறார். இதில் பகவானுடைய ஸகுணமான-நிர்குணமான, உருவமுள்ள-உருவமற்ற ஸ்வரூபங்களின் தத்வங்களைப் பற்றியும், அவற்றின் குணம், ப்ரபாவம், பெருமை இவை பற்றியும், உபாஸனை முறையைப் பற்றியும், அந்த உபாஸனையின் பயன் பற்றியும் விளக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றன. இவற்றைத் தவிர பகவான் தம்முடைய எல்லா ரஹஸ்யங்களையும் வெளிப்படுத்தி, இந்தத் தத்வத்தை விளக்கிக் கூறி இருக்கிறார். அதாவது, "ஸ்ரீக்ருஷ்ணனாக உன் எதிரில் நிற்கிறேனே, நான்தான் அகில உலகையும் படைப்பவன், மறைப்பவன், எல்லாவற்றிற்கும் ஆதாரம், ஸர்வ வல்லமை படைத்தவன், பரப்ரம்மம், பரமேசுவரன், பரமாத்மா. நீ எல்லாவிதங்களிலும் என்னை சரணமடைவாயாக" என்கிறார். இவ்விதம் மிகவும் மறைத்துப் போற்றத்தக்க ரஹஸ்யமான விஷயம் அர்ஜுனன் போன்ற குற்றம் குறை காணாதவனும், நம்பிக்கையும் ஆர்வமும் கொண்ட பக்தனிடத்தில்தான் வெளியிடத்தக்கது; எல்லோரிடமும் அன்று. ஆகவே இதை 'ராஜகுஹ்யம்' (மறைத்துப் போற்ற வேண்டியவற்றில் சிறந்தது) என்கிறார்.

**கேள்வி:** இதைப் 'பவித்ரம்' என்றும் 'உத்தமம்' என்றும் கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பதில்: நம்பிக்கையுடன் கேட்டுச் சிந்தித்து அதன்படி நடப்பவர்களுடைய அனைத்துப் பாவங்களையும், தீய குணங்களையும் அடியோடு அழித்து, அவர்களை எக்காலத்திலும் பரிசுத்தமாக வைத்திருக்கக்கூடியது இந்த உபதேசம். அவ்வளவு 'பவித்ர'மானது (புனிதமானது). உலகிலுள்ள சிறந்த பொருட்கள் அனைத்திலும் சிறந்தது. ஆகவே 'உத்தம'மானது.

கேள்வி: இதை 'ப்ரத்யக்ஷாவகமம்' என்றும், 'தர்ம்யம்' என்றும் கூறுவதன் கருத்து என்ன?

பதில்: விஞ்ஞானத்தோடு கூடிய இந்த ஞானத்தின் பயன் ச்ராத்தம் முதலிய கர்மங்களின் பயனைப்போலப் புலப்படாததன்று. ஸாதகன் எவ்வளவுக்கெவ்வளவு இதில் முன்னேறுகிறானோ, அவ்வளவுக்கவ்வளவு தீயகுணங்கள், தீய நடத்தைகள், துக்கங்கள் எல்லாம் நாசமடைந்து அவனுக்குப் பரமசாந்தியும், ஸுகமும் நேரிடையான அனுபவத்திற்கு வரும். இந்த ஞானத்தை முழுமையாக அடையப் பெற்ற உடனேயே பரமஸுகத்திற்கும், பரமசாந்திக்கும் இருப்பிடமான, பரமப்ரேமை கொண்ட, பரமதயாளுவான, எல்லோருக்கும் தோழனான ஸாக்ஷாத் பகவானையே அடைந்துவிட முடியும். இதைத்தான் 'ப்ரத்யக்ஷாவகமம்' என்ற சொல் குறிக்கிறது. வர்ண, ஆசிரமங்களுக்கு ஏற்றவாறு எத்தனை விதமான கடமைகள் சொல்லப்பட்டிருக்கின்றனவோ, அவற்றுடன் முரண்படாமல், இயல்பாகவே தர்மமாகவும் இருப்பதால் எல்லாவற்றிலும் சிறந்தது. 'தர்ம்யம்' என்ற சொல்லுக்கு இதுதான் பொருள்.

கேள்வி: 'அவ்யயம்', 'கர்தும் ஸுஸுகம்' என்ற சொற்களுக்கு என்ன பொருள்?

பதில்: பயனில் கருத்துடன் செய்யப்படும் கர்மங்கள் பயனை அளித்துவிட்டு அழிந்துவிடுகின்றன. உலகியல் படிப்பும் ஒரு தடவை படித்த பிறகு, திரும்பத் திரும்பப் பயிலாவிட்டால் மறந்து போய்விடும். ஆனால் பகவானைப் பற்றிய ஞானமும், விஞ்ஞானமும் அதுபோல அழிவதில்லை; மறந்து போய்விடுவதுமில்லை. இதை ஒரு மனிதன் ஒரு தடவை நல்ல முறையில் கற்றுத் தேர்ந்துவிட்டானானால், பிறகு எந்த நிலையிலும் எப்பொழுதும் மறக்க மாட்டான். இதனால் அடையப்பெறும் பயனும் அழியாதது. ஆகவே 'அவ்யயம்' என்று கூறினார். இது இவ்வளவு பெரிய விஷயமாயிற்றே! இதற்கேற்றவாறு நடத்தையைக் கைக்கொண்டு இதை அடைவது மிகவும் கடினமாக இருக்குமோ என்று யாரும் பின்வாங்க வேண்டாம் என்பதற்காகவே பகவான் இது 'கர்தும் ஸுஸுகம்' (கடைப்பிடிப்பதற்கு எளியது) என்று கூறுகிறார். இந்த அத்யாயத்தில் கூறப்பட்ட உபதேசத்தின்படி பகவானிடம் ஶரணாகதி செய்வது மிகவும் எளிது. ஏனெனில் இதற்கு வேறு வெளி ஏற்பாடு ஒன்றும் தேவையில்லை. வருத்திக் கொள்ள வேண்டியதும் இல்லை. இது முற்றிலும் முடிந்த பிறகுதான் பயன் தரும் என்று நினைக்கவேண்டாம். இந்த ஸாதனை ஆரம்பித்த உடனேயே ஸாதகனுக்கு சாந்தியும், ஸுகமும் அனுபவத்தில் வரத் தொடங்கும்.

**பொருத்தம்: விஞ்ஞானத்தோடு கூடிய ஞானத்திற்கு இவ்வளவு பெருமை உள்ளதே! இதற்குரிய ஸாதனையோ இவ்வளவு எளிதாக இருக்கிறதே! பின் எல்லா மனிதர்களும் இதை ஏன் ஏற்கவில்லை என்ற கேள்விக்கு விடையாக ச்ரத்தையின்மைதான் இதற்கு முக்ய காரணம் என்று காட்டுவதற்காக, பகவான் ச்ரத்தையில்லாதவர்களை இகழ்கிறார்—**

**अश्रद्दधानाः पुरुषा धर्मस्यास्य परन्तप।**
**अप्राप्य मां निवर्तन्ते मृत्युसंसारवर्त्मनि ॥ ३ ॥**

**அஶ்ரத்$_3$த$_3$தா$_4$னா: புருஷா த$_4$ர்மஸ்யாஸ்ய பரந்தப ।**
**அப்ராப்ய மாம் நிவர்தந்தே ம்ருத்யுஸம்ஸாரவர்த்மநி ॥ 3 ॥**

பரந்தப – எதிரிகளை வாட்டுபவனே! அஸ்ய – இந்த (மேலே கூறப்பட்ட), த$_4$ர்மஸ்ய – தர்மத்தினுடைய (சிறப்பில்), அஶ்ரத்$_3$த$_3$தா$_4$னா: – நம்பிக்கையற்ற, புருஷா: –

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மனிதர்கள், **மாம்** – என்னை, **அப்ராப்ய** – அடையாமல், **ம்ருத்யு ஸம்ஸார வர்த்மநி** – மரண வடிவான ஸம்ஸார சக்ரத்தில், **நிவர்தந்தே** – சுற்றிக் கொண்டே இருக்கிறார்கள்.

எதிரிகளை வாட்டுபவனே! மேலே கூறப்பட்ட தர்மத்தினுடைய சிறப்பில் நம்பிக்கையற்ற மனிதர்கள் என்னை அடையாமல் மரண வடிவான ஸம்ஸார சக்ரத்தில் சுற்றிக் கொண்டே இருக்கிறார்கள்.

**கேள்வி:** 'இந்த தர்மம்' என்றால் எது? அதில் நம்பிக்கையின்மை என்றால் என்ன?

**பதில்:** முன் ச்லோகத்தில் சொல்லப்பட்ட விஞ்ஞானத்துடன் கூடிய ஞானத்தின் பெருமையைத்தான் இங்கே 'இந்த தர்மம்' என்று கூறுகிறார். இனி அத்யாயத்தின் முடிவு வரை இதைப் பற்றித்தான் கூறப் போகிறார். இந்த ஸந்தர்பத்தில் வர்ணிக்கப்படுகின்ற பகவானுடைய ஸ்வரூபம், ப்ரபாவம், குணங்கள், பெருமை இவற்றையும், அவரை அடையக்கூடிய உபாயங்களையும், அவரை அடைவதால் ஏற்படும் பயனையும் உண்மை என்று கொள்ளாமல், அப்படி நடக்க இயலாது; அதெல்லாம் மனம் போனபடி கூறப்பட்டவை என்று நம்பிக்கைக்கு மாறுபட்ட கருத்துக்களைக் கொள்வதுதான் நம்பிக்கையின்மை ஆகும்.

**கேள்வி:** நம்பிக்கையற்ற மனிதர்கள் எத்தரத்தவர்கள்?

**பதில்:** பகவானுடைய ஸ்வரூபம், குணம், ப்ரபாவம், பெருமை முதலியவற்றில் நம்பிக்கையின்றி, பகவானை அடைவதற்கான பக்தியில் ஒரு ஸாதனையைக்கூடப் புரியாமல், கிடைத்தற்கரிய தன்னுடைய மனிதப் பிறவியை போகங்களை அனுபவிப்பதிலும், அவற்றைப் பெறுவதற்கான பல முயற்சிகளிலும் ஈடுபட்டு, வாழ்வை வீணடிக்கிறார்களே – அந்த நிலையில் உள்ளவர்கள் நம்பிக்கை இல்லாதவர்கள்.

**கேள்வி:** 'நம்பிக்கையற்ற மனிதர்கள் என்னை அடையாமல் மரண வடிவான ஸம்ஸார சக்ரத்தில் சுற்றிக் கொண்டே இருக்கிறார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எண்பத்து நான்கு லக்ஷம் பிறவிகளில் மாறி மாறிப் பிறந்துழலும் ஜீவனுக்கு எப்பொழுதாவது பகவானுடைய க்ருபையால் இந்த ஸம்ஸார சக்ரச் சுழலிலிருந்து விடுபட்டு பகவானை அடைவதற்காக, அருமையான இந்த மானிடப்பிறவி கிடைக்கிறது. ஆனால் அந்தோ! பகவானை அடையச் செய்யும் தகுதியுள்ள, எளிதில் கிடைக்காத இந்த மானிடப்பிறவியைப் பெற்றும்கூட, பகவானுடைய வசனங்களில் நம்பிக்கையில்லாத காரணத்தால், பஜனை, த்யானம் முதலிய ஸாதனைகளைப் புரியாமல், பகவானை அடையாமல், பிறப்பு-இறப்புச் சுழலான இந்த ஸம்ஸார சக்ரத்தில் சிக்கிக் கொண்டு முன்போலவே உழல்கிறார்களே என்கிறார்.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் விஞ்ஞானத்துடன் கூடிய எந்த ஞானத்தைக் கூறுவதாக பகவான் உறுதிமொழி கூறி, அதன் பெருமையைச் சொன்னாரோ, இப்பொழுது அதை முதன்முதலில் ஆரம்பித்து, முதலிரண்டு ச்லோகங்களில் அவ்யக்த ஸ்வரூபத்தையும், அதன் பெருமையையும் கூறுகிறார்—

**मया ततमिदं सर्वं जगदव्यक्तमूर्तिना।**
**मत्स्थानि सर्वभूतानि न चाहं तेष्ववस्थितः ॥ ४ ॥**

*மயா தததமித₃ம் ஸர்வம் ஜக₃த₃வ்யக்தமூர்திநா ।*

*மத்ஸ்த₂ாநி ஸர்வபூ₄தாநி ந சாஹம் தேஷ்வவஸ்தி₂த: ॥ 4 ॥*

**அவ்யக்த மூர்திநா** – உருவமற்ற பரமாத்மாவான, **மயா** – என்னால், **இத₃ம்** – இந்த, **ஸர்வம்** – அனைத்து, **ஜக₃த்** – உலகமும், **ததம்** – (பனிக்கட்டியில் நீர் போல) நிறைந்து உள்ளது. **ஸர்வ பூ₄தாநி ச** – எல்லா உயிரினங்களும், **மத்ஸ்த₂ாநி** – என்னுடைய

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸங்கல்பத்தின் பலத்தினால் நிலைபெற்றுள்ளன. (ஆனால் உண்மையில்), **அஹம்** – நான், **தேஷு** – அவற்றில், **ந அவஸ்தி₂த:** – (நிலைபெற்று) இருக்கவில்லை.

உருவமற்ற பரமாத்மாவான என்னால் இந்த அனைத்து உலகமும் பனிக்கட்டியில் நீர்போல நிறைந்து உள்ளது. எல்லா உயிரினங்களும் என்னுடைய ஸங்கல்பத்தின் பலத்தினால் நிலைபெற்றுள்ளன. ஆனால் உண்மையில் நான் அவற்றில் நிலைபெற்று இருக்கவில்லை.

**கேள்வி:** 'அவ்யக்தமூர்த்தி' என்று பகவானுடைய எந்த ஸ்வரூபத்தைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** 8/4ல் 'அதியக்ஞன்' என்றும், 8/8, 8/10களில் 'பரமதிவ்ய புருஷன்' என்றும், 8/9ல் 'கவி', 'புராணன்' என்றும், 8/20, 8/21களில் 'அவ்யக்த அக்ஷரன்' என்றும், 8/22ல் பக்தியின் மூலம் அடையக்கூடிய 'பரம புருஷன்' என்றும் சொல்லப்பட்டவரும், எங்கும் நிறைந்தவருமான ஸகுணமான–உருவமற்ற அதே ஸ்வரூபம்தான் இங்கே சொல்லப்படும் 'அவ்யக்தமூர்த்தி'.

**கேள்வி:** 'இதம்', 'ஸர்வம்' என்ற அடைமொழியோடு கூடிய 'ஜகத்' என்ற சொல் எதைக் குறிக்கிறது?

**பதில்:** ஜடமாயும், உணர்வுடனும் உள்ள பொருட்கள் அனைத்தையும் கொண்ட முழுமையான ப்ரம்மாண்டத்தைக் குறிக்கிறது.

**கேள்வி:** அவ்யக்த மூர்த்தியான பரமாத்மாவினால் அகில உலகமும் எப்படி நிறைந்து இருக்கிறது?

**பதில்:** காற்று, ஒளி, நீர், மண் இவை ஆகாசத்தினாலும், ஆபரணங்கள் தங்கத்தினாலும், மட்பாண்டங்கள் மண்ணினாலும் நிறைந்துள்ளது போல இந்த அகில உலகமும் இதைப் படைத்த ஸகுண பரமேசுவரனுடைய உருவமற்ற வடிவத்தால் நிறைந்துள்ளது. ஈசோபநிஷத் (1) கூறுகிறது—

**ஈசா வாஸ்யமித₃ம்ஸர்வம் யத்கிஞ்ச ஜக₃த்யாம் ஜக₃த் ।**

'இவ்வுலகில் எத்தனை ஜடசேதனங்களான பொருட்கள் உள்ளனவோ, அவையெல்லாம் ஈசுவரனால் நிறைந்துள்ளன.'

**கேள்வி:** 'ஸர்வபூதாநி' என்றால் எவை? இவையெல்லாம் பகவானிடம் நிலை பெற்றுள்ளன என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உடல், புலன்கள், மனம், புத்தி இவற்றின் அனுபவப் பொருட்கள், சராசர ப்ராணிகள் அனைத்தையும் அவற்றின் இருப்பிடங்களையும் சேர்த்து 'ஸர்வபூதாநி' ஏன்கிறார். பகவான் தமது ப்ரக்ருதியைக் கொண்டு அகில உலகத்தையும் படைத்துக் காத்துத் தம்முள் ஒடுக்கிக் கொள்கிறார். அவரே தமது ஓர் அம்சத்தில் அகில உலகையும் தாங்குகிறார் (10/42). அவர் ஒருவர்தான் எல்லோருக்கும் தஞ்சம்; தலைவர்; இருப்பிடம்; புகலிடம்; தோற்றுவாய்; அவரே இறுதியில் ஒடுங்குமிடம்; எல்லாவற்றையும் திரட்டி வைக்கும் களஞ்சியம் (9/18). இவ்விதம் எல்லாமே தாம் இருப்பதற்கு பகவானைத்தான் சார்ந்திருக்கின்றன. ஆகவே எல்லாம் பகவானிடம் நிலைபெற்றுள்ளன என்று கூறுகிறார்.

**கேள்வி:** அகில சராசரமும் பகவானால் நிறைந்துள்ளது என்றால் 'நான் அவற்றில் இல்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேகங்களில் ஆகாசம் உள்ளதுபோல அகில ப்ரபஞ்சத்தின் உள்ளும், புறமும் ஒவ்வொரு அணுவிலும் பகவான் நிறைந்திருந்தாலும், அவர் அதற்கு அப்பாற்பட்டவர். அதில் ஒட்டாதவர். மேகங்கள் அழிந்துவிட்டால் ஆகாசம் அழிவதில்லை. அதுபோல ப்ரபஞ்சமனைத்தும் அழிந்தாலும் பகவான் அழிவதில்லை. ப்ரபஞ்ச வாஸனையே சிறிதுகூட இல்லாத இடத்தில்கூட பகவான் தம் பெருமையோடு விளங்குகிறார். ஆகவே, பகவான், தாம் படைத்த பொருட்களில் அடங்குவதில்லை. அதாவது தாமே தனியாக என்றும் விளங்குகிறார். இதை விளக்கவே பகவான் இவ்வாறு கூறுகிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'நான் அந்தப் பொருட்களில் இல்லை' என்ற பகவானின் வசனத்திற்குக் கீழே குறிப்பிட்டவாறு பொருள் கொண்டால் என்ன?

(1) கனவில் கனவு காண்பவன், காணப்படும் பொருட்களுக்கும் ஜீவர்களுக்கும் அப்பாலும் தனியாக இருப்பதுபோல அகில உலகமும் பகவானுடைய ஒரு பகுதியானபடியால் பகவான் அவற்றில் நிறைந்திருந்தாலும், அதன் எல்லைக்குள் அடங்கியவர் அல்லர்.

(2) கனவு காண்பவனுக்குக் கனவின்போது எல்லாப் பொருட்களும் உண்மையாகத் தோன்றினாலும், கனவின் விளைவிலோ, பொருட்களிலோ அவனுக்கு ஸம்பந்தம் இருப்பதில்லை. அவனுக்கும், கனவிற்கும் கூட ஸம்பந்தம் இருப்பதில்லை. அவன் கனவிற்கும் அப்பாற்பட்டவன். கனவில் ஒட்டாதவன். கனவிற்கு முன்பும், கனவு காணும் நேரத்திலும், கனவு கலைந்த பிறகும் உள்ளவன். அதுபோல பகவான் எப்பொழுதும் உள்ளவர். அகில ப்ரபஞ்சமும் அழிந்தாலும் அழியாதவர். ப்ரபஞ்சத்தின் தொடர்பேயில்லாத இடத்திலும் அவர் தன் மஹிமையிலேயே இருப்பார். இவ்விதம் அதிலிருந்து முற்றும் அப்பால் ஒட்டாமல் இருக்கிறார். ஆகவே, அவற்றில் பகவான் இல்லை.

(3) கனவில் காணப்படும் பொருட்கள் அத்தனையும் கனவு காண்பவனைத்தவிர வேறல்ல. அவனுடைய ஸ்வரூபமேதான். அவன் அவற்றிற்குள் இல்லை. ஆனால் அவை முழுவதும் அவனேதான். அதுபோல பகவானைத் தவிர வேறல்லாத ப்ரபஞ்சமும் அவருடைய ஸ்வரூபம்தான்; அதுவே அவர்தான்.

'இவ்விதம் ஜகத்திற்கு ஆதாரமானாலும், அதற்கு அப்பாற்பட்டவராகையாலும், ஜகத் அவரேயானபடியாலும், அவர் அதற்குள் இல்லை. ஜகத்தின் ஒவ்வோர் அணுவிலும் நிறைந்திருந்தாலும் உண்மையில் அவற்றில் இல்லை. தாமே தம் மஹிமையில் இருக்கிறார்' என்று பொருள் கொண்டால் என்ன?

**பதில்:** இப்படிச் சொல்வதில் ஒரு தவறுமில்லை. அபேத ஞானத்தின் நோக்கில் இப்படிச் சொல்வது சரிதான். ஆனால் இங்கு அதைக் கூறும் ஸந்தர்பம் இல்லை.

**न च मत्स्थानि भूतानि पश्य मे योगमैश्वरम्।**
**भूतभृन्न च भूतस्थो ममात्मा भूतभावनः॥ ५॥**

**ந ச மத்ஸ்த₂ானி பூ₄தானி பஶ்ய மே யோக₃மைஶ்வரம் ।**

**பூ₄தப்₄ருந்ந ச பூ₄தஸ்தே₂ா மமாத்மா பூ₄தபா₄வந: ॥ 5 ॥**

**பூ₄தானி** – அந்த சராசரங்கள் அனைத்தும், **மத்ஸ்த₂ானி ந** – என்னுள் இருப்பவையல்ல. **மே** – என்னுடைய, **ஐஶ்வரம்** – ஈசுவரத்தன்மையுடைய, **யோக₃ம்** – யோக சக்தியை (சிறப்பை), **பஶ்ய** – பார். **பூ₄தப்₄ருத் ச** – அனைத்து உயிரினங்களையும் தாங்குகின்றவனும், **பூ₄தபா₄வந: ச** – உயிரினங்களை உண்டாக்குகின்றவனுமாக இருந்தபோதிலும், **மம ஆத்மா** – என்னுடைய ஆத்மா (உண்மையில்), **பூ₄தஸ்த₂:** – உயிரினங்களில் நிலைபெற்று, **ந** – இருப்பதில்லை.

அந்த சராசரங்கள் அனைத்தும் என்னுள் இருப்பவையல்ல. என்னுடைய ஈசுவரத் தன்மையுடைய யோக சக்தியைப் பார். அனைத்து உயிரினங்களையும் தாங்குகின்றவனும், உண்டாக்குகின்றவனுமாக இருந்தபோதிலும் என்னுடைய ஆத்மா உண்மையில் உயிரினங்களில் நிலைபெற்று இருப்பதில்லை.

**கேள்வி:** முன் ச்லோகத்தில் எல்லா பூதங்களும் தம்மிடம் உள்ளன என்று பகவான் கூறினார். இங்கே தம்மிடம் இல்லை என்று கூறுகிறாரே. இப்படி முரணாகக் கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



*பதில்:* இப்படி முன்னுக்குப்பின் முரணாகப் பேசுவதன் மூலம் பகவான் அர்ஜுனனுக்குத் தமது ஈசுவரத்தன்மையான யோகசக்தியைக் காட்டுகிறார். "அர்ஜுன! என்னுடைய எங்கும் காண முடியாத யோகசக்தியைப் பார். ஆகாயத்தில் காணப்படும் மேகங்களைப்போல எல்லா ப்ரபஞ்சமும் என்னிடம் இருக்கவும் இருக்கின்றன; இல்லாமலும் உள்ளன. இது ஆச்சர்யமல்லவா? மேகங்களுக்கு ஆதாரம் ஆகாயம்தான். ஆனால் ஆகாயத்தில் எப்பொழுதும் மேகங்கள் இருப்பதில்லை. அவை அநித்யமானபடியால் அவற்றிற்கு நிரந்தரமான இருப்பும் இல்லை. ஆகவே அவை ஆகாயத்தில் இல்லை. இதேபோல இந்த ப்ரபஞ்சம் அனைத்தும் என்னுடைய யோகசக்தியினால் உண்டானவை. நானே இவற்றிற்கு ஆதாரம். ஆகவே இவையெல்லாம் என்னிடம் உள்ளன. ஆனாலும் நான் அவற்றிற்கு முற்றிலும் அப்பாற்பட்டவன். அவை எப்பொழுதும் என்னிடம் இல்லை. என்னைத் தவிரத் தனிப்பட்ட இருப்பும் அவற்றிற்கு இல்லை. மனிதனுடைய நோக்கில் உலகம் என்று ஒன்று இருக்கும்வரை அவை எல்லாம் என்னிடமே உள்ளன. என்னைத் தவிர இவ்வுலகிற்கு வேறு ஆதாரமில்லை. ஆனால் மனிதனுக்கு என்னுடைய தர்சனம் கிடைத்துவிடும்போது, அவன் நோக்கில் என்னைத் தவிர வேறு ஒன்றுமே கிடையாது. அப்பொழுது என்னிடம் இந்த உலகம் இல்லை" என்கிறார் பகவான்.

*கேள்வி:* பகவானின் இந்த முரண்பட்ட வசனத்திற்குக் கீழே வருமாறு கருத்துக் கொண்டால் என்ன?

இவ்வாறு முரண்பாடாகச் சொல்வதன் மூலம் பகவான், தாம் முன் சொன்ன ஸித்தாந்தத்திற்கு வலுவூட்டுகிறார். கனவில் தெரிவதுபோல அகில உலகமும் பகவானுடைய ஸங்கல்பத்தின் ஆதாரத்தில்தான் இருக்கின்றன. உண்மையில் பகவானைத் தவிர அவற்றிற்குத் தனியாக இருப்பு இல்லை. அப்பொழுது இவையெல்லாம் என்னிடம் இல்லை என்று கூறுவது சரிதான். ஆயினும் இத்தனைப் படைப்பும் தெரிகின்றனவே, அது எப்படி? இதன் ரஹஸ்யம் என்ன? இந்த ஸந்தேஹத்தைத் தெளிவிப்பதற்காக பகவான் சொல்கிறார்: "அர்ஜுன! இதுதான் என்னுடைய தனிப்பட்ட யோகசக்தியின் அற்புதச் செயல், இதைப் பார்! எவ்வளவு ஆச்சர்யமாக இருக்கிறது! அகில உலகமும் என்னிடம் காணப்படவும் செய்கின்றன. என்னைத் தவிர வேறு எதுவும் இல்லை." அதாவது, "மனிதநோக்கில் உலகம் என்று ஒன்று இருக்கும்வரை அவையெல்லாம் என்னிடம் உள்ளவை. என்னைத் தவிர இவற்றிற்கு வேறு ஆதாரமில்லை. உண்மையில் நானே அனைத்துமாகவும் இருக்கிறேன். என்னைத் தவிர வேறு ஒன்றுமில்லை. ஸாதகனுக்கு என்னுடைய தர்சனம் கிடைத்த பிறகு அவனுக்கு இது நேரிடையாகத் தெரிந்துவிடுகிறது. அப்போது அவனது நோக்கில் என்னைத் தவிர வேறு ஒரு பொருளும் இல்லை. ஆகவே எல்லா பூதங்களும் உண்மையில் என்னிடம் உள்ளனவல்ல" என்கிறார். (இங்கு முதல் கருத்துக்கும், பின்னால் சொன்ன கருத்துக்கும் நுண்ணிய வேறுபாடு உண்டு. முதல் கருத்து – பகவானுடைய ஆதாரத்தில் ப்ரபஞ்சம் இருந்தாலும் பகவான் அவற்றில் இல்லை என்பது. இரண்டாவது கருத்து – பகவானைத் தவிர ப்ரபஞ்சமே வேறாக இல்லை. ஆயினும் பகவான் ப்ரபஞ்சத்தில் இல்லை என்பது.)

*பதில்:* தவறு ஒன்றுமில்லை. அபேத ஞானத்தின் நோக்கில் இது சரிதான். ஆனால் இங்கே அதைப் பற்றிப் பேசும் ஸந்தர்பம் இல்லை.

*கேள்வி:* 'ஐச்வரம் யோகம்' என்று எதைக் குறிப்பிடுகிறார்? 'இதைப் பார்' என்று இந்த ச்லோகத்தில் எந்தக் கருத்தைக் குறிப்பிடுகிறார்?

*பதில்:* எல்லாவற்றையும் உண்டாக்கி, எல்லாவற்றிலும் நிறைந்து, எல்லாவற்றையும் தாங்கிக் காப்பாற்றுபவராக இருந்தாலும், ஒன்றிலும் ஒட்டாமல் இருக்கிற பகவானுடைய அற்புத சக்தி பகவானைத் தவிர வேறு யாரிடமும் கிடையாது; இருக்கவும் முடியாது. இதைத்தான் 'ஐச்வரம் யோகம்' என்கிறார். இந்த இரண்டு ச்லோகங்களிலும் கூறப்பட்ட எல்லா விஷயங்களையும் சேர்த்துத்தான் பகவான் 'என்னுடைய ஈசுவர யோகத்தைக் காண்பாய்' என்கிறார். அதாவது 'இதைப் பார்' என்று கூறுவது இந்த 'ஐச்வர யோக'த்தைத்தான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'பூதப்ருத்', 'பூதபாவந:' என்றால் என்ன பொருள்? 'மம ஆத்மா' என்று எதைக் குறிப்பிடுகிறார்? 'பூதஸ்த: ந' என்றால் என்ன கருத்து?

**பதில்:** ப்ராணிகளைத் தாங்கிப் போஷிப்பவர் 'பூதப்ருத்'. ப்ராணிகளைத் தோற்றுவிப்பவர் 'பூதபாவந:'. 'மம ஆத்மா' (என் ஆத்மா) என்பது ஸகுணமான உருவமற்ற தன்மையைக் குறிக்கும். பகவானுடைய ஸகுணமானதும் உருவமற்றதுமான ஸ்வரூபத்தின் மூலமே எல்லா ஜகத்தும் உண்டாகின்றன; அவற்றின் தாங்குதலும், போஷணையும் நடைபெறுகின்றன என்பது கருத்து. இவ்வளவு இருந்தாலும் உண்மையில் பகவான் இந்த ப்ரபஞ்சமனைத்துக்கும் அப்பாற்பட்டவர். இதைக் குறிப்பிடத்தான் 'பூதஸ்த: ந' என்று கூறுகிறார்.

**பொருத்தம்:** முன் ச்லோகங்களில் பகவான் ஸமஸ்த ப்ராணிகளும் தம்முடைய அவ்யக்த ரூபத்தினால் நிறைந்திருப்பதாகவும், அதிலேயே நிலைபெற்றிருப்பதாகவும் கூறினார். இந்த விஷயங்களைத் தெளிவாகப் புரிந்து கொள்வதற்காக, உதாரணங்கள் மூலம் இங்கே விளக்குகிறார்—

**यथाकाशस्थितो नित्यं वायुः सर्वत्रगो महान्।**
**तथा सर्वाणि भूतानि मत्स्थानीत्युपधारय॥ ६॥**

**யத₂ாகாஶஸ்தி₂தோ நித்யம் வாயு: ஸர்வத்ரகே₃ா மஹாந் ।**
**தத₂ா ஸர்வாணி பூ₄தாநி மத்ஸ்த₂ாநீத்யுபத₄ாரய ॥ 6 ॥**

**ஸர்வத்ரக₃:** — எங்கும் செல்கின்ற (வீசுகின்ற), **மஹாந் வாயு:** — பெருங்காற்று, **நித்யம்** — எப்பொழுதும், **யத₂ா** — எவ்வாறு, **ஆகாஶஸ்தி₂த:** — ஆகாசத்தில் உள்ளதோ, **தத₂ா** — அவ்வாறே, **ஸர்வாணி** — எல்லா, **பூ₄தாநி** — உயிரினங்களும் (என் ஸங்கல்பத்தில் உண்டாவதால்), **மத்ஸ்த₂ாநி** — என்னிடம் உள்ளன, **இதி** — என்று, **உபத₄ாரய** — அறிந்து கொள்.

எங்கும் வீசுகின்ற பெருங்காற்று எவ்வாறு ஆகாயத்தில் எப்பொழுதும் உள்ளதோ, அவ்வாறே எல்லா உயிரினங்களும் என் ஸங்கல்பத்தில் உண்டாவதால் என்னிடம் உள்ளன என்று அறிந்து கொள்.

**கேள்வி:** இங்கு வாயுவை எங்கும் செல்லக்கூடியது, பெரியது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ப்ராணிகளுக்கும், வாயுவுக்கும் உள்ள ஒப்புமையை எடுத்துக்காட்டுவதற்காக எங்கும் செல்லக்கூடியது, பெரியது என்று கூறுகிறார். எவ்விதம் வாயு எங்கும் ஸஞ்சரிக்குமோ, அதுபோல ப்ராணிகளும் பல பிறவிகளிலும் பிறந்து சுழல்கின்றன. எப்படி வாயு பெரிதாக எங்கும் பரவியிருக்கிறதோ, அதுபோல ப்ராணி வர்க்கமும் மிகவும் விரிந்தது என்று பொருள்.

**கேள்வி:** இங்கு 'நித்யம்' என்று கூறி எப்பொழுதும் வாயு ஆகாசத்தில் இருப்பது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** வாயு ஆகாசத்திலேயே உண்டாவது, அதிலேயே நிலைபெற்று, அதிலேயே லயமடைவது என்பதைக் காட்டுவதற்காகத்தான் 'எப்பொழுதும்' என்கிறார். எல்லா நிலைகளிலும் எப்பொழுதும் வாயுவுக்கு ஆதாரம் ஆகாசம்தான் என்பது குறிப்பு.

**கேள்வி:** 'வாயு ஆகாசத்தில் உள்ளதுபோல எல்லா ப்ராணிகளும் என்னிடம் உள்ளன' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஆகாசத்தைப் போலவே பகவானும் ஒரே சீரானவர், உருவமற்றவர், செயல்புரியாதவர், முடிவற்றவர், ஒட்டாதவர், விகாரமற்றவர், வாயுவைப்போல எல்லாச்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



சராசரங்களும் பகவானிடம் உண்டாகி, நிலைபெற்று, லயமடைவன என்பது கருத்து. வாயுவின் உற்பத்தி, நிலை, லயம் எல்லாம் ஆகாசத்திலேயே நேர்வதால் அது எப்பொழுதும், எந்த நிலையிலும் ஆகாசத்தைவிட்டு வேறாக இருப்பதில்லையே. எப்பொழுதும் ஆகாசத்தில்தானே நிலைபெற்றிருக்கிறது. ஆயினும் ஆகாசத்திற்கு வாயுவுடன்கூட அதன் ஸஞ்சாரம் முதலான விகாரங்களில் சிறிதுகூட ஸம்பந்தம் இல்லையே. ஆகாசம் எப்பொழுதும் வாயுவிற்கு அப்பாற்பட்டதுதானே! அதுபோல ப்ராணிகளின் உற்பத்தி, இருப்பு, அழிவு எல்லாம் பகவானுடைய ஸங்கல்பத்தின் ஆதாரத்தில் ஏற்படுவதால், எல்லா ப்ராணி வர்க்கங்களும் எப்பொழுதும் பகவானிடமே நிலைபெறுகின்றன. ஆயினும் பகவான் அவற்றிற்கு முற்றிலும் அப்பாற்பட்டவர். அவற்றால் பகவானுக்கு எப்பொழுதும் எந்தவிதமான விகாரமும் கிடையாது.

**பொருத்தம்: விஞ்ஞானத்தோடு கூடிய ஞானத்தை விளக்கிக் கொண்டுவரும் பகவான் இதுவரை தம்முடைய உருவமற்ற ஸ்வரூபத்தின் ப்ரபாவத்தையும், தத்வத்தையும் எடுத்துக் கூறுவதற்காக அதன் எங்கும் நிறைந்துள்ள தன்மை, ஒட்டுதலின்மை, விகாரமின்மை ஆகியவற்றைச் சொன்னார். அடுத்துத் தாம் 'பூதபாவனன்' (உயிரினங்களை உண்டுபண்ணு பவன்) என்பதை விளக்குகையில் படைப்பு முதலிய கர்மங்களின் தத்வத்தைத் தெளிவிப்பதற்காக, இரண்டு ச்லோகங்களில் கல்பத்தின் முடிவில் எல்லா ப்ராணிகளும் லயமடைவது; கல்பத்தின் ஆரம்பத்தில் அவை உண்டாவது இவை பற்றிக் கூறுகிறார்—**

**सर्वभूतानि कौन्तेय प्रकृतिं यान्ति मामिकाम्।**
**कल्पक्षये पुनस्तानि कल्पादौ विसृजाम्यहम्॥७॥**

**ஸர்வபூதாநி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம் ।**
**கல்பக்ஷயே புநஸ்தாநி கல்பாதௌ விஸ்ருஜாம்யஹம் ॥ 7 ॥**

**கௌந்தேய** – குந்தியின் மைந்தனே (அர்ஜுன)! **ஸர்வபூதாநி** – எல்லா உயிரினங்களும், **கல்பக்ஷயே** – கல்பங்களின் முடிவில், **மாமிகாம்** – என்னுடைய, **ப்ரக்ருதிம்** – ப்ரக்ருதியை, **யாந்தி** – அடைகின்றன (ப்ரக்ருதியில் தன்மயமாகிவிடுகின்றன). **தாநி** – அவற்றை, **கல்பாதௌ** – கல்பத்தின் ஆரம்பத்தில், **அஹம்** – நான், **புந:** – திரும்பவும், **விஸ்ருஜாமி** – தோன்றச் செய்கிறேன்.

குந்தியின் மைந்தனே அர்ஜுன! எல்லா உயிரினங்களும் கல்பங்களின் முடிவில் என்னுடைய ப்ரக்ருதியை அடைகின்றன – ப்ரக்ருதியில் தன்மயமாகிவிடுகின்றன. அவற்றைக் கல்பத்தின் ஆரம்பத்தில் நான் திரும்பவும் தோன்றச் செய்கிறேன்.

**கேள்வி:** 'கல்பக்ஷயம்' என்பது எந்தக் காலம்?

**பதில்:** ப்ரம்மாவின் ஒரு பகல் 'கல்பம்' என்று சொல்லப்படுகிறது. அதே அளவு நீண்டகாலம் கொண்டது ஓரிரவு. இந்தப் பகல்–இரவு கணக்குப்படி ப்ரம்மாவின் நூறு ஆண்டுகள் நிறைவு பெற்று, என்று அவர் ஆயுள் முடிகிறதோ, அந்தக் காலக் கணக்கைக் குறிப்பிடுகிறது 'கல்பக்ஷயம்' என்ற சொல். அதாவது கல்பங்களின் முடிவு என்று பொருள். இதைத்தான் 'மஹாப்ரளயம்' என்கிறோம்.

**கேள்வி:** 'ஸர்வபூதாநி' என்ற சொல் எதைக் குறிக்கிறது?

**பதில்:** உடல், புலன்கள், மனம், புத்தி, எல்லா போகப்பொருட்கள் இவற்றின் இருப்பிடம் இவையெல்லாவற்றுடன் கூடிய சராசரங்களான ப்ராணிவர்க்கங்கள் என்று பொருள்.

**கேள்வி:** 'ப்ரக்ருதி' என்றால் எது? 'என்னுடைய ப்ரக்ருதி' என்று கூறுவதன் கருத்து என்ன? 'அதை அடைவது' என்றால் என்ன பொருள்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** அகில உலகிற்கும் காரணமான மூலப்ரக்ருதிதான் அது. அதையே 14/3,4களில் 'மஹத்ப்ரஹ்மம்' என்று கூறுகிறார். அதையே 'அவ்யாக்ருதம்' என்றும், 'ப்ரதானம்' என்றும் கூறுவர். அது பகவானின் சக்தியாகையால் 'மாமிகாம்' (என்னுடையது) என்று கூறுகிறார். கல்பங்களின் முடிவில் எல்லா உடல்களும், புலன்களும் மனது, புத்தி, போகப்பொருட்கள், உலகங்கள், ப்ராணிகள் ஆகிய எல்லாமே ப்ரக்ருதியில் ஒடுங்குகின்றன. அதாவது அவற்றின் குணங்கள் ஸம்ஸ்காரங்களுடன் கூடிய காரண சரீரங்கள் உட்பட எல்லாம் மூலப்ரக்ருதியில் ஒடுங்குகின்றன. இதைத்தான் 'எல்லா ப்ராணிகளும் ப்ரக்ருதியை அடைகின்றன' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 8/18,19களில் அவ்யக்தத்திலிருந்து ப்ராணிகள் உண்டாகி அதிலேயே ஒடுங்குகின்றன என்று கூறினாரே. அந்த அவ்யக்தத்திற்கும், இந்த மூலப்ரக்ருதிக்கும் இடையே என்ன வேறுபாடு? அங்குக் கூறப்படும் ஒடுங்குதலுக்கும், இங்குக் கூறப்படும் ஒடுங்குதலுக்கும் என்ன வேறுபாடு?

**பதில்:** அங்கு 'அவ்யக்தம்' என்ற சொல் ப்ரக்ருதியின் உருவமற்ற நுண்ணிய ஸ்வரூபத்தைக் குறிக்கிறது. மூலப்ரக்ருதியையன்று. அந்த அவ்யக்தத்தில் எல்லா ப்ராணிகளும் ஸூக்ஷ்ம சரீரங்களுடன்கூட ஒடுங்குகின்றன. இங்கே மூலப்ரக்ருதியில் காரண சரீரங்களுடனும் கூட எல்லா ப்ராணிகளும் ஒடுங்குகின்றன. அதில் ப்ரம்மா ஒடுங்குவதில்லை; அவர் ஓய்வு கொள்கிறார். இங்கே ப்ரம்மாவும் ஒடுங்குகிறார். இப்படி அந்த ப்ரளயத்திற்கும், இந்த மஹாப்ரளயத்திற்கும் மிகுந்த வேறுபாடு உண்டு.

**கேள்வி:** 7/6ல் 'அகில உலகமும் என்னிடம் ஒடுங்குகின்றன' என்று பகவான் கூறினாரே! இங்கு 'ப்ரக்ருதியில் ஒடுங்குகின்றன' என்று கூறுகிறாரே! இந்த இரண்டில் எது சரி?

**பதில்:** இரண்டுமே சரிதான். இரண்டு இடங்களிலும் ஒரே விஷயத்தைத்தான் கூறுகிறார். ப்ரக்ருதி பகவானது சக்தி என்று முதலிலேயே சொல்லப்பட்டுவிட்டது. சக்தியும், சக்தி படைத்தவனும் வேறல்லவே! ஆகவே ப்ரக்ருதியில் ஒடுங்குதலும், பகவானிடம் ஒடுங்குதலும் ஒன்றுதான். இங்கு ப்ரக்ருதியில் ஒடுங்குகின்றன என்று சொன்னார். ப்ரக்ருதி பகவானுடையது. பகவானிடம் நிலைபெற்றது. ஆகவே பகவான்தான் எல்லாவற்றிற்கும் இறுதியில் ஒடுங்குவதற்கான லயஸ்தானம். ஆக இரண்டு கருத்துக்களும் ஒன்றுதான்.

**கேள்வி:** 'கல்பாதி' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? அப்பொழுது பகவான் எல்லாவற்றையும் படைக்கிறார் என்பதற்கு என்ன பொருள்?

**பதில்:** கல்பங்கள் முடிந்தபிறகு, அதாவது ப்ரம்மாவின் நூறாண்டு ஆயுள் சரியாக முடிந்தபிறகு, மறுபடியும் ஜீவர்களைத் தத்தம் வினைப்பயன்களை அனுபவிக்க வைப்பதற்காகவே, ஜகத்தை விரிவுபடுத்த பகவான் விரும்புகிறார். அந்தக் காலம்தான் 'கல்பாதி'. மஹாஸர்கம் என்ற பெரிய படைப்பின் ஆரம்பம் என்றும் கூறலாம். அவ்வமயம் எல்லா ப்ராணிகளையும் படைப்பதற்காக தம்முடைய ஸங்கல்பத்தினால் ஹிரண்ய கர்பனாகிய ப்ரம்மாவையும், அவருடைய லோகத்தையும் சேர்த்துப் படைக்கிறார். இதுதான் பகவான் எல்லாவற்றையும் படைக்கிறார் என்பதற்குப் பொருள்.

**प्रकृतिं स्वामवष्टभ्य विसृजामि पुनः पुनः।**
**भूतग्राममिमं कृत्स्नमवशं प्रकृतेर्वशात्॥८॥**

**ப்ரக்ருதிம் ஸ்வாமவஷ்டப்₄ய விஸ்ருஜாமி புந: புந: ।**
**பூ₄தக்₃ராமமிமம் க்ருத்ஸ்நமவஶம் ப்ரக்ருதேர்வஶாத் ॥ 8 ॥**

ப்ரக்ருதே: — இயல்பின், **வஶாத்** — ஆற்றலினால், **அவஶம்** — தன் வசமிழந்த, **இமம்** — இந்த, **க்ருத்ஸ்நம்** — அனைத்து, **பூ₄தக்₃ராமம்** — உயிர்த்தொகுதிகளையும், **புந: புந:** — திரும்பத் திரும்ப, **ஸ்வாம்** — என்னுடைய, **ப்ரக்ருதிம்** — ப்ரக்ருதியை,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அவஷ்டப்₄ய** – ஏற்றுக்கொண்டு (அவரவர் வினைக்கேற்றவாறு), **விஸ்ருஜாமி** – படைக்கிறேன்.

இயல்பின் ஆற்றலினால் தன் வசமிழந்த இந்த அனைத்து உயிர்த்தொகுதிகளையும் திரும்பத்திரும்ப என்னுடைய ப்ரக்ருதியை ஏற்றுக்கொண்டு அவரவர் வினைக்கேற்றவாறு படைக்கிறேன்.

**கேள்வி:** 'ஸ்வாம் ப்ரக்ருதிம்' என்றால் எது? 'பகவான் அதை ஏற்றுக் கொண்டு' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** முன் ச்லோகத்தில் மூலப்ரக்ருதியில் எல்லா ப்ராணிகளும் ஒடுங்குவது பற்றிச் சொல்லப்பட்டது. அதைத்தான் இங்கே 'ஸ்வாம் ப்ரக்ருதிம்' (தம் ப்ரக்ருதி) என்று கூறுகிறார். படைப்பு முதலிய செயல்களுக்காக பகவான் தம்முடைய சக்தியாகத் தம்முள் இருக்கும் ப்ரக்ருதியை நினைத்துக் கொள்கிறார். இதைத்தான் 'ஏற்றுக் கொண்டு' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'இமம்', 'க்ருத்ஸ்நம்', 'பூதக்ராமம்' என்றால் எது? அது இயல்பின் ஆற்றலுக்கு வசமாகித் தன்வசம் இழந்தது; மற்றொன்றுக்கு வசப்பட்டது என்றால் என்ன?

**பதில்:** முன் ச்லோகங்களில் 'ஸர்வபூதாநி' என்று குறிப்பிட்டதைத்தான் இங்கே 'இமம் க்ருத்ஸ்நம் பூதக்ராமம்' என்கிறார். ஒவ்வொரு ப்ராணிக்கும் அதனதன் வெவ்வேறு குணங்கள், கர்மவினைகள் இவற்றால் உண்டாகும் ஸ்வபாவங்களே அவற்றின் ப்ரக்ருதியாகும். பகவானின் ப்ரக்ருதி ஸமஷ்டி ப்ரக்ருதியாகும். ஜீவனின் ப்ரக்ருதி அதனதன் தனிப்பட்ட வ்யஷ்டி ப்ரக்ருதியாகும். ஸமஷ்டி ப்ரக்ருதியின் ஓர் அம்சம் வ்யஷ்டி ப்ரக்ருதி எனப்படும். அந்த வ்யஷ்டி ப்ரக்ருதி பந்தத்திற்குக் கட்டுப்படுவதுதான் தன்வசமிழப்பதாகும்.

பகவானைச் சரணடைந்து மனிதன் தன்னைக் கட்டியுள்ள ப்ரக்ருதியின் தளையிலிருந்து தன்னைத் துண்டித்துக் கொள்ள முடியும். அதற்கு வசப்பட வேண்டியதில்லை (7/14). ப்ரக்ருதிக்கு அப்பால் பகவானை நெருங்கி பகவானை அடையலாம்.

**கேள்வி:** 'புந:' என்று இருமுறை கூறுவதன் கருத்து என்ன? அவ்விதமே 'விஸ்ருஜாமி' என்பதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஜீவர்கள் எனது ப்ரக்ருதிக்குக் கட்டுப்பட்டிருக்கும்வரை, நான் அவற்றைத் திரும்பத் திரும்ப இதே போல ஒவ்வொரு கல்பத்தின் ஆரம்பத்திலும் அவற்றின் வெவ்வேறு குணநலன்கள், கர்மவினைகள் ஆகியவற்றிற்கேற்றவாறு பலவிதப் பிறவிகளை எடுக்க வைப்பேன்' என்பதே 'புந: புந: விஸ்ருஜாமி' என்ற தொடருக்குப் பொருள்.

**பொருத்தம்:** இவ்விதம் உலகப்படைப்பு முதலிய செயல்களில் ஈடுபட்டாலும், தாம் அந்தக் கர்மங்களில் ஏன் கட்டுப்படுவதில்லை என்பதை இனி விவரிக்கிறார்—

**न च मां तानि कर्माणि निबध्नन्ति धनञ्जय।**
**उदासीनवदासीनमसक्तं तेषु कर्मसु॥ ९॥**

**ந ச மாம் தாநி கர்மாணி நிப₃த்₄நந்தி த₄நஞ்ஜய ।**
**உத₃ாஸீநவத₃ாஸீநமஸக்தம் தேஷு கர்மஸு ॥ 9 ॥**

**த₄நஞ்ஜய** – அர்ஜுன! **தேஷு** – அந்த, **கர்மஸு** – கர்மங்களில், **அஸக்தம்** – பற்றில்லாமலும், **உத₃ாஸீநவத் ச** – ஒதுங்கியவனைப் போன்றும், **ஆஸீநம்** – இருக்கின்ற, **மாம்** – பரமாத்மாவான என்னை, **தாநி** – அந்த, **கர்மாணி** – செயல்கள், **ந நிப₃த்₄நந்தி** – பந்தப்படுத்துவதில்லை.

அர்ஜுன! அந்தக் கர்மங்களில் பற்றில்லாமலும் ஒதுங்கியவனைப் போன்றுமிருக்கின்ற பரமாத்மாவான என்னை அந்தச் செயல்கள் பந்தப்படுத்துவதில்லை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'அந்தக் கர்மங்கள்' என்றால் எவை? அவற்றில் பகவான் பற்றற்று ஒதுங்கியவரைப்போல இருப்பது எப்படி?

**பதில்:** அகில உலகங்களையும் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றிற்காக பகவான் எப்படியெல்லாம் இயங்குகிறாரோ, அவற்றைச் சுருக்கமாக முன் ச்லோகத்தில் சொன்னார். இங்கே 'அந்தக் கர்மங்கள்' என்ற சொல் அவற்றைக் குறிக்கிறது. பகவானுக்கு அந்தச் செயல்களிலோ, அவற்றின் பயனிலோ எவ்விதமான ஈடுபாடும் கிடையாது. தலைமை மட்டும் தாங்கி ப்ராணிகளின் குணங்களுக்கும், கர்மங்களுக்கும் ஏற்றவாறு உற்பத்தி முதலிய செயல்கள் புரிவதற்கு ப்ரக்ருதியை ஏவிவிட்டு, தனியாக 'தாம் கர்த்தா அல்லர். தமக்கு பக்ஷபாதம் கிடையாது' என்று ஒட்டுதலின்றி இருப்பதைத்தான் ஒதுங்கியவரைப்போல இருப்பதாகக் கூறுகிறார்.

**கேள்வி:** பகவான் தம்மை பற்று இல்லாதவர்; அந்தக் கர்மங்களில் ஒதுங்கியவர் போல உள்ளவர் என்று சொன்ன பிறகு, 'அவை என்னைக் கட்டுப்படுத்துவதில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கர்மத்திலும், அதன் பயனிலும் பற்றற்று, 'தான் கர்த்தா' என்ற பாவனையற்று பக்ஷபாதமின்றி இருப்பதன் காரணமாக, அந்தக் கர்மங்கள் கட்டுப்படுத்துவதில்லை என்கிறார்.

மற்றவர்களுக்கும் பிறப்பு-இறப்பு, மகிழ்ச்சி-துயரம், ஸுகம்-துக்கம் முதலிய கர்மவினைப் பயன்களின் கட்டிலிருந்து விடுபடுவதற்கு இதுவே உபாயம். எவன் இதைத் தத்வரீதியாக உணர்ந்து, இவ்விதம் கர்த்தா என்ற அபிமானமில்லாமல், பயனில் கருத்து இல்லாமல் கடமையை ஆற்றுகிறானோ, அவன் சிரமமின்றி எளிதாகவே இயல்பாக கர்மபந்தத்திலிருந்து விடுபடுவான் – என்பது கருத்து.

**பொருத்தம்:** 'ஒதுங்கியவர் போல இருப்பவர்' என்று கூறி, பகவானிடம் 'கர்த்தா' என்ற அபிமானம் இல்லாமையைச் சுட்டிக் காட்டினார் இப்போது அதைத் தெளிவாக்கும் பொருட்டுக் கூறுகிறார்—

**मयाध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम्।**
**हेतुनानेन कौन्तेय जगद्विपरिवर्तते ॥ १० ॥**

**மயாத்₄யக்ஷேண ப்ரக்ருதி: ஸூயதே ஸசராசரம் ।**
**ஹேதுநாநேந கௌந்தேய ஜகத்₃விபரிவர்ததே ॥ 10 ॥**

**கௌந்தேய** – குந்தியின் மைந்தனே! **அத்₄யக்ஷேண மயா** – தலைவனான என்னால் (என் கண்காணிப்பின் உதவியால்), **ப்ரக்ருதி:** – ப்ரக்ருதியானது, **ஸசராசரம்** – அசைவன, அசையாதன இவற்றோடு கூடிய உலகமனைத்தையும், **ஸூயதே** – தோற்றுவிக்கிறது. **அநேந** – இந்த, **ஹேதுநா** – காரணத்தினால், **ஜகத்** – இந்த ஸம்ஸார சக்ரம், **விபரிவர்ததே** – சுழன்று கொண்டிருக்கிறது.

குந்தியின் மைந்தனே! தலைவனான என் கண்காணிப்பில் ப்ரக்ருதியானது அசைவன, அசையாதன இவற்றோடு கூடிய உலகமனைத்தையும் தோற்றுவிக்கிறது. இந்தக் காரணத்தினால் இந்த ஸம்ஸார சக்ரம் சுழன்று கொண்டிருக்கிறது.

**கேள்வி:** 'என் தலைமையில்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஜகத்தைப் படைப்பது என்ற கார்யத்திற்காக நான் என்னுடைய ப்ரக்ருதிக்கு இருப்பையும், உணர்வையும் ஊட்டுகின்ற தலைவனாக நிற்கிறேன். என்னுடைய தலைமையின் மூலம் ஊக்கம் பெற்று என்னுடைய ப்ரக்ருதிதான் படைப்பு முதலான எல்லாச் செயல்களையும் ஆற்றுகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** பகவானுடைய தலைமையில் ப்ரக்ருதி எவ்விதம் சராசரமனைத்தையும் படைக்கிறது?

**பதில்:** குடியானவன் தான் தலைவனாக இருந்து கொண்டு பூமியில் விதைகளை ஊன்றச் செய்து, பூமிக்கும், விதைக்கும் உறவு உண்டாக்குகிறான். பிறகு அந்த விதைகளின் தன்மைக்கு ஏற்றவாறு விதவிதமான செடிகளை முளைக்கச் செய்கிறான். அதுபோல பகவான் தம் தலைமையில் சேதன வர்க்கம் என்ற விதையை ப்ரக்ருதி என்ற பூமியுடன் ஸம்பந்தப்படுத்துகிறார் (14/3). இவ்விதம் ஜடமும், சேதனமும் சேர்ந்த பிறகு, இந்த ப்ரக்ருதி, ஸமஸ்த சராசரங்களையும் அவற்றின் கர்மவினைகளுக்கு ஏற்றவாறு வெவ்வேறு பிறவிகளில் பிறக்கச் செய்கிறது.

இந்த எடுத்துக்காட்டு விஷயத்தை விளக்குவதற்காகவே கொடுக்கப்படுகிறது. இது பகவான் விஷயத்தில் சரியாகப் பொருந்தாது. ஏனெனில் குடியானவன் சிற்றறிவு படைத்தவன். சிறிதே சக்தி பெற்றவன். ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருப்பவன். தன் சக்தியைக் கொடுத்து பூமியில் ஒன்றும் உண்டு பண்ண முடியாதவன். பகவானோ எல்லாம் அறிந்தவர்; ஸர்வ வல்லமை படைத்தவர்; எங்கும் நிறைந்தவர்; அவருடைய சக்தியையும், இருப்பையும், உணர்வையும் பெற்று ப்ரக்ருதி அகில உலகையும் படைக்கிறது.

**கேள்வி:** அதனால் இந்த ஸம்ஸார சக்ரம் சுழன்று கொண்டிருக்கிறது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'என் தலைமை, ப்ரக்ருதியின் செயல்பாடு இவ்விரண்டினாலும் சராசரங்கள் அனைத்தினுடைய படைத்தல், காத்தல், அழித்தல் முதலிய எல்லாச் செயல்களும் நடைபெறுகின்றன' என்கிறார் பகவான்.

**கேள்வி:** 'நான் அவற்றை வெவ்வேறு உருவங்களில் படைக்கிறேன்' என்று 4/13, 9/8லும், 'சராசரங்கள் அனைத்தையும் ப்ரக்ருதி படைக்கிறது' என்று இங்கும் கூறுகிறாரே. இவ்விதம் இரண்டுவிதமாகக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவான் தாமே படைப்பதாகக் கூறுமிடங்களில் பகவான் தாமே ஒன்றும் செய்வதில்லை; தம்முடைய சக்தியான ப்ரக்ருதியின் மூலம்தான் படைக்கிறார் என்று கொள்ளவேண்டும். ப்ரக்ருதி ஏற்றுக் கொண்டு படைக்கிறது என்று கூறுமிடங்களில் பகவானின் தலைமையில் அவரிடம் உணர்வு பெற்று ப்ரக்ருதி படைக்கிறது என்று கொள்ளவேண்டும். பகவானுடைய உதவியின்றி ஜடப்ரக்ருதி ஒன்றும் செய்ய இயலாது. இதனால்தான் 'நான் என் ப்ரக்ருதியை ஏறிட்டுக் கொண்டு ஜகத்தைப் படைக்கிறேன்' என்று 9/8ல் கூறுகிறார். இங்கே, 'என்னுடைய தலைமையில் ப்ரக்ருதி உலகைப் படைக்கிறது' என்று கூறுகிறார். இரண்டுவிதக் கூற்றுகளும் ஒரே தத்வத்தைத்தான் புலப்படுத்துகின்றன.

**பொருத்தம்:** தம் உறுதிமொழிக்கு இசைய, விஞ்ஞானத்துடன் கூடிய ஞானத்தை விளக்கும் பகவான் ச்லோகம் 4 முதல் 6 வரை ஸகுணமான-நிராகாரமான ஸ்வரூபத்தின் ப்ரபாவத்தைச் சொன்னார். ச்லோகம் 7 முதல் 10 வரை படைப்பு முதலிய எல்லாச் செயல்களிலும் தாம் ஒட்டுவதில்லை என்றும், தமக்கு விகாரம் இல்லை என்றும் சொல்லி, அச்செயல்கள் தெய்விகமானவை என்ற தத்வத்தை விளக்கினார் இங்கு ஸகுணமான-உருவமுள்ள ஸ்வரூபத்தின் மஹிமையையும், அதை பக்தி செய்யும் முறையையும், அதனுடைய குணங்கள், ப்ரபாவங்கள் இவற்றின் தத்வத்தைப் பற்றி விளக்கும் பொருட்டு அடுத்த இரண்டு ச்லோகங்களில் அதன் ப்ரபாவத்தை அறியாத அஸுர ப்ரக்ருதி உடையவர்களை நிந்திக்கிறார்—

अवजानन्ति मां मूढा मानुषीं तनुमाश्रितम्।
परं भावमजानन्तो मम भूतमहेश्वरम्॥ ११ ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அவஜாநந்தி மாம் மூட₄ா மாநுஷீம் தநுமாஸ்ரிதம் ।**

**பரம் ப₄ாவமஜாநந்தோ மம பூ₄தமஹேஸ்வரம் ॥ 11 ॥**

**மம** – என்னுடைய, **பரம்** – மேலான, **ப₄ாவம்** – இயல்பை, **அஜாநந்த:** – அறியாதவர்களான, **மூட₄ா:** – அறிவிலிகள், **மாநுஷீம் தநும்** – மனித உடலை, **ஆஸ்ரிதம்** – தாங்கிக் கொண்டிருக்கும், **பூ₄தமஹேஸ்வரம்** – உயிரினங்களுக்கெல்லாம் தலைவனான, **மாம்** – என்னை, **அவஜாநந்தி** – அற்பமாக நினைக்கிறார்கள் (அவமதிக்கிறார்கள்). (என்னுடைய யோகமாயையினால் உலகமனைத்தையும் காப்பதற்காக மனித உருத்தாங்கி நிலவும் பரமேசுவரனான என்னை ஸாதாரண மனிதன் என்று நினைக்கிறார்கள்).

என்னுடைய மேலான இயல்பை அறியாதவர்களான அறிவிலிகள் மனிதனுடைய உடலைத் தாங்கிக் கொண்டிருக்கும் உயிரினங்களுக்கெல்லாம் தலைவனான என்னை அற்பமாக நினைக்கிறார்கள் – அவமதிக்கிறார்கள். (என்னுடைய யோகமாயையினால் உலகமனைத்தையும் காப்பதற்காக மனித உருத்தாங்கி நிலவும் பரமேசுவரனான என்னை ஸாதாரண மனிதன் என்று நினைக்கிறார்கள்.)

**கேள்வி:** 'பரம் பாவம்' என்று எதைச் சொல்கிறார்? அதை அறியாமல் இருப்பது என்றால் என்ன?

**பதில்:** ச்லோகம் 4 முதல் 6 வரை கூறப்பட்ட 'ஐம்வர யோகம்' என்று எங்கும் நிறைந்த தன்மை, 7/24ல் காணப்படுகின்ற அறிவுக் குறைவு உடையவர்களால் அறிந்து கொள்ள இயலாத மேலான தன்மை முதலிய அந்த பகவானுடைய மிகவும் உத்தமமான ப்ரபாவத்தைதான் இங்கே 'பரம் பாவம்' (மேலான இயல்பு) என்று கூறுகிறார். எல்லாவற்றிற்கும் ஆதாரமாகவும், எங்கும் நிறைந்தவராகவும், ஸர்வவல்லமை படைத்தவராகவும், எல்லாவற்றையும் அழித்து மறுபடியும் உற்பத்தி செய்கிறவராயும் உள்ள பரமாத்மாதான், எல்லா ஜீவர்களுக்கும் அருள்பாலிப்பதற்காக எல்லோருக்கும் தாமே தஞ்சம் அளித்தும், தர்மத்தை நிலைநிறுத்தியும், பக்தர்களைக் கரையேற்றியும், இவ்விதம் பல லீலைகள் புரிவதற்காகத் தம்முடைய யோகமாயையினால் மனித உருவில் அவதரித்திருக்கிறார் (4/6–8). இந்த ரஹஸ்யத்தை அறிந்து கொள்ளாமலும், இதில் நம்பிக்கையில்லாமலும் இருப்பதுதான் 'மேலான இயல்பை அறியாமை' எனப்படும்.

**கேள்வி:** 'மூடா:' என்று எத்தரத்தவரை அழைக்கிறார்? 'அவர்கள் மனித உருவில் வந்த பூத மஹேசுவரனை அவமதிக்கிறார்கள்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** அடுத்து வரும் ச்லோகத்தில் இவர்களை ராக்ஷஸ, அஸுர இயல்பு உடையவர்கள் என்கிறார். 7/15ல் இவர்களை வர்ணிக்கிறார். 16/4லும், 16/7 முதல் 16/20 வரையிலும் இவர்களுடைய பல இலக்கணங்களைக் கூறுகிறார். இத்தகைய ஆஸுரி ஸம்பத் படைத்தவர்களையே இங்கே 'மூடா:' என்கிறார். பகவானுடைய மேலே சொன்ன ப்ரபாவத்தை அறியாத காரணத்தால் ப்ரம்மா முதல் புழு வரையிலான எல்லா ப்ராணிகளுக்கும் தனிப்பெருந்தலைவரான பகவானைத் தன்னைப்போல் ஸாதாரண மனிதராக நினைப்பது, இந்தக் காரணத்தினால் அவருடைய ஆணையை ஏற்று நடக்காமல் இருப்பது, அவர் மீது வரம்பில்லாமல் குற்றம் சாட்டுவது இவையெல்லாம்தான் பகவானை அவமதிப்பதாகும்.‡

‡ பாட்டனாரான பீஷ்மர் துர்யோதனனிடம் ப்ரம்மதேவருக்கும், தேவர்களுக்கும் இடையே ஸ்ரீக்ருஷ்ணனைப் பற்றி நடந்த உரையாடலைக் கூறுகிறார். அதிலிருந்து ஸ்ரீக்ருஷ்ணனுடைய பெருமை தெரிகிறது. ப்ரம்மா, தேவர்களைப் பின்வருமாறு எச்சரிக்கிறார்: "எல்லா உலகங்களையும் ஆள்பவர்; பேரிறைவன்; பகவான் வாஸுதேவன். உங்கள் எல்லோருடைய வழிபாட்டுக்கும் உரியவர். உயர்ந்த வீர்யமுடைய அந்த சங்கு–சக்ர–கதாதாரியான வாஸுதேவனை மனிதனாக நினைத்து எக்காலத்திலும் அவமதிக்கக் கூடாது. அவர்தான் மிகவும் மறைத்துப் போற்றப்படக் கூடியவர். பரமபதம், பரப்ரம்மம், பெரும் புகழுக்குரியவர். அவரே அக்ஷரர்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



मोघाशा मोघकर्माणो मोघज्ञाना विचेतसः।
राक्षसीमासुरीं चैव प्रकृतिं मोहिनीं श्रिताः॥ १२॥

மோக$_4$ாஶா மோக$_4$கர்மாணோ மோகஜ்ஞானா விசேதஸ: ।

ராக்ஷஸீமாஸுரீம் சைவ ப்ரக்ருதிம் மோஹினீம் ஶ்ரிதா: ॥ 12 ॥

**மோக$_4$ாஶா:** – வீணான ஆசையுடையவர்களும், **மோக$_4$கர்மாண:** – பயனற்ற செயல்களைச் செய்பவர்களும், **மோகஜ்ஞானா:** – வீணான அறிவு உடையவர்களுமான (தத்வஞானம் இல்லாத), **விசேதஸ:** – உறுதியற்ற மனமுடைய அறிவிலிகள், **ராக்ஷஸீம் ஆஸுரீம் ச** – அரக்கத் தன்மையையும், அஸுரத் தன்மையையும், **மோஹினீம்** – மோஹத்திற்கு வசப்பட்டுத் துன்புறுத்துவது ஆகிய, **ப்ரக்ருதிம் ஏவ** – இயல்பையே, **ஶ்ரிதா:** – சார்ந்துள்ளார்கள்.

வீணான ஆசையுடையவர்களும், பயனற்ற செயல்களைச் செய்பவர்களும், வீணான அறிவு உடையவர்களுமான – தத்வஞானம் இல்லாத உறுதியற்ற மனமுடைய அறிவிலிகள் அரக்கத் தன்மையையும், அஸுரத் தன்மையையும் மோஹத்திற்கு வசப்பட்டுத் துன்புறுத்துவது ஆகிய இயல்பையே சார்ந்துள்ளார்கள்.

**கேள்வி:** 'மோகாஶா:' என்ற சொல்லுக்குப் பொருள் என்ன?

**பதில்:** வீணான ஆசை உடையவர்களை 'மோகாஶா:' என்பர். பகவானுடைய ப்ரபாவத்தை அறியாதவர்கள், அஸுர ஸ்வபாவம் உள்ளவர்கள் இவ்விதம் வீணான ஆசைகளில் மூழ்கி என்றுமே நிறைவு எய்துவதில்லை *(16/10–12)*. ஆகவே, அவர்கள் 'மோகாஶா:' (வீணான ஆசை உடையவர்கள்).

**கேள்வி:** 'மோககர்மாண:' என்றால் யார்?

**பதில்:** எவர்கள் செய்யும் யாகங்கள், தானம், தவம் முதலிய எல்லாம் வீணானவையோ, அதாவது சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட பயன்களைத் தராவோ, அவர்கள் வீணான செயல் செய்பவர்கள். பகவானிடத்திலும், சாஸ்த்ரங்களிலும் நம்பிக்கையின்றி உலகியலில் பற்றுக் கொண்ட பாமர மக்கள் சாஸ்த்ர முறையைக் கைவிட்டு, ச்ரத்தையின்றி, மனம் போனபடி யக்ஞம் முதலியவற்றைச் செய்கிறார்கள். அந்தக் கர்மங்களுக்கு இவ்வுலகிலோ, மறு உலகிலோ பயன் கிட்டாது. ஆகவே, அவர்கள் வீணான செயல் செய்பவர்கள் *(16/17,23; 17/28)* என்று கூறப்படுகின்றனர்.

**கேள்வி:** 'மோகஜ்ஞானா:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

---

அவ்யக்தர் (அழிவிலா, வெளித் தெரியா நித்யபுருஷர்), ஸநாதனர், பரமதேஜஸ் உடையவர், ஆனந்தமயமானவர், ஸத்யமே உருவானவர். தேவர்கள், இந்த்ரன், மனிதர் யாராக இருந்தாலும் எல்லையற்ற பராக்ரமமுடைய ப்ரபு வாஸுதேவனை மனிதனாக மதித்து அவமரியாதை செய்யக் கூடாது. மூடர்கள் அந்த ஹ்ருஷீகேசனை மனிதன் என்றால், அவர்கள் மனிதப் பதர்கள். எவர்கள் இந்த மஹாத்மாவான யோகேசுவரனை மனித உருவில் வந்தவரைப்போல இழிவு செய்கிறார்களோ, சராசரங்களுக்கெல்லாம் ஆத்மாவான – ஸ்ரீவத்ஸம் என்ற மறுவை அடையாளமாகக் கொண்டவரை, உயர்ந்த தேஜஸ் உடைய் ஸ்ரீபத்மநாபனான பகவானை அடையாளம் கண்டு கொள்ளவில்லையோ, அவர்கள் தாமஸ இயல்புடையோர். கௌஸ்துபம், கிரீடம் தாங்கி பக்தர்களுக்கு அபயமளிக்கும் பகவானை அவமதிப்பவர்கள் பயங்கரமான நரகத்தில் வீழ்வர்."

ஏவம் விதி$_3$த்வா தத்த்வார்த$_2$ம் லோகாநாமீஶ்வரேஶ்வர: ।
வாஸுதே$_3$வோ நமஸ்கார்ய: ஸர்வலோகை: ஸுரோத்தமா: ॥

(மஹா. பீ$_4$ஷ்ம. 66/23)

"தேவர்களில் சிறந்தவர்களே! இவ்விதம் அவருடைய உட்பொருள் பொதிந்த ஸ்வரூபத்தை அறிந்து, எல்லா உலகங்களையும், அவற்றை ஆள்பவர்களையும் ஆள்கிறவரான வாஸுதேவனை நமஸ்கரிக்க வேண்டும்."

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பதில்: எவர்களுடைய அறிவு தத்வப் பொருளின்றி யுக்திக்கும் பொருந்தாமல் வீணாகிவிட்டதோ, அவர்கள் வீணான அறிவு படைத்தவர்கள் (18/22). பகவானுடைய ப்ரபாவத்தை அறியாதவர்களான மனிதர்கள் உலகியல் போகங்கள் உண்மை என்றும், ஸுகமளிப்பவை என்றும் எண்ணி அவற்றிலேயே மூழ்கிவிடுகிறார்கள். அவர்கள் அறிவு மயங்கி, இந்த போகங்களை அனுபவிப்பதே உயர்ந்த ஸுகம்; இவற்றைக் காட்டிலும் வேறு ஸுகம் இல்லை என நினைக்கிறார்கள் (16/11). இக்காரணத்தினால் அவர்கள் உண்மை ஸுகத்தை அடைய முடியாமல் அதை இழக்கிறார்கள். இப்படிப்பட்டவர் தமது பகுத்தறிவைத் தவறான வழியில் உபயோகித்து வீணாக்குகிறார்கள். அவர்களை 'மோகஜ்ஞாநா:' என்கிறார்.

கேள்வி: 'விசேதஸ:' என்ற பதத்தின் கருத்து யாது?

பதில்: எவர்களது மனம் வெளியுலக நாட்டமுடையதாகவும், உலகிலுள்ள பல்வேறு பொருட்களில் ஈடுபாடு கொண்டதால் உறுதியற்றதாகவும் உள்ளதோ, அவர்களை 'விசேதஸ:' என்று கூறுகிறார். அஸுர ஸ்வபாவம் உள்ளவர்களுடைய மனம் ஒவ்வொரு கணமும் பலவிதமான கற்பனைகளில் பறந்து கொண்டே இருக்கும் (16/13-16). இவர்களே நிலையற்ற மனமுடைய அறிவிலிகள்.

கேள்வி: ப்ரக்ருதிக்கு 'ராக்ஷஸீம்', 'ஆஸுரீம்', 'மோஹிநீம்' என்று மூன்று அடைமொழிகள் கொடுத்திருப்பதன் கருத்து என்ன? அதைச் சார்ந்திருப்பவர்கள் என்றால் என்ன?

பதில்: ராக்ஷஸர்களைப் போலக் காரணமின்றிப் பகை கொண்டு, பிறருக்குத் துன்பம் இழைத்துக் கஷ்டப்படுத்தும் இயல்பே 'ராக்ஷஸீ ப்ரக்ருதி'. காமத்தினாலும், பேராசையினாலும் தன் நலத்தைப் பேணுவதற்காகப் பிறருக்குத் துன்பம் இழைப்பது, பிறர் பொருளைப் பறிப்பது இவையெல்லாம் 'ஆஸுரீ ப்ரக்ருதி'. அஜாக்ரதை, மோஹம் இவை காரணமாக ஏதாவது ஒரு ப்ராணிக்கு துன்பம் அளிப்பது 'மோஹிநீ ப்ரக்ருதி'. இப்படிப்பட்ட தீய ஸ்வபாவத்தை விடுவதற்கான முயற்சி செய்யாமல், அதையே மேன்மையானது என நினைத்து அதைத் தொடர்ந்து கடைப்பிடிப்பதுதான் 'அதைச் சார்ந்திருப்பது'. பகவானுடைய ப்ரபாவம் அறியாத மனிதன்தான் இவ்விதம் செய்வான்; அந்த ப்ரக்ருதிகளைச் சார்ந்திருப்பான்.

கேள்வி: 'ஏவ' என்று கூறுவதன் கருத்து என்ன?

பதில்: இத்தகைய அஸுர ப்ரக்ருதியைத்தான் அவர்கள் சார்ந்திருப்பார்கள். தெய்வ ப்ரக்ருதியை எப்பொழுதும் கைக் கொள்ள மாட்டார்கள் என்று பொருள்.

பொருத்தம்: பகவானுடைய ப்ரபாவத்தை அறியாத அஸுர ப்ரக்ருதியுடையவர்களை நிந்தித்துவிட்டு, அடுத்து ஸகுண பக்தியின் தத்வத்தை விளக்குவதற்காக பகவானுடைய ப்ரபாவம் அறிந்தவர்களின் தெய்வ ப்ரக்ருதியைச் சார்ந்திருக்கும் உயர்ந்த நிலையிலுள்ள அநன்ய பக்தர்களின் இலக்கணங்களைக் கூறுகிறார்—

**महात्मानस्तु मां पार्थ दैवीं प्रकृतिमाश्रिताः।**
**भजन्त्यनन्यमनसो ज्ञात्वा भूतादिमव्ययम्॥ १३॥**

**மஹாத்மாநஸ்து மாம் பார்த₂ தை₃வீம் ப்ரக்ருதிமாஸ்ரிதா: ।**
**ப₄ஜந்த்யநந்யமநஸோ ஜ்ஞாத்வா பூ₄தாதி₃மவ்யயம் ॥ 13 ॥**

து — ஆனால், பார்த₂ — அர்ஜுன! தை₃வீம் — தெய்விக, ப்ரக்ருதிம் — இயல்பை, ஆஸ்ரிதா: — கைக்கொண்டவர்களான, மஹாத்மாந: — பெரியோர்கள், மாம் — என்னை, பூ₄தாதி₃ம் — எல்லா உயிரினங்களுக்கும் என்றுமுள்ள நிலைத்த காரணம் என்றும், அவ்யயம் — அழிவற்றவனென்றும், ஜ்ஞாத்வா — அறிந்து, அநந்யமநஸ: — வேறு எதிலும் நாட்டமில்லாத மனதுடன், ப₄ஜந்தி — இடைவிடாது வழிபடுகிறார்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஆனால் அர்ஜுன! தெய்விக இயல்பைக் கைக்கொண்டவர்களான பெரியோர்கள் என்னை எல்லா உயிரினங்களுக்கும் என்றுமுள்ள நிலைத்த காரணம் என்றும், அழிவற்றவனென்றும் அறிந்து வேறு எதிலும் நாட்டமில்லாத மனத்துடன் இடைவிடாது வழிபடுகிறார்கள்.

**கேள்வி:** இங்கு 'து' என்று ஆரம்பிப்பதன் கருத்து என்ன?

**பதில்:** 11,12வது ச்லோகங்களில் தாழ்ந்த அறிவிலிகளைப் பற்றியும், அஸுர இயல்புடைய மனிதர்களைப் பற்றியும் சொன்னார். அவர்களிடமிருந்து முற்றிலும் மாறுபட்ட, உயர்ந்த வகை மனிதர்களைப் பற்றிய வர்ணனைதான் இங்கே வருகிறது. இதுதான் 'து' (ஆனால்) என்பதன் கருத்து.

**கேள்வி:** 'தைவீம் ப்ரக்ருதிம்' என்றால் என்ன பொருள்? 'அதைக் கைக்கொள்வது' என்றால் என்ன?

**பதில்:** 'தேவ' அதாவது பகவானுடைய ஸம்பந்தம் உடையவர். பகவானை அடையச் செய்ய உதவும் ஸாத்விக குணங்களும், நடத்தைகளும் 16/1 முதல் 3 வரை, அபயம் முதலான இருபத்து ஆறு பெயர்களால் வர்ணிக்கப்பட்டுள்ளன. இவையே தெய்விக ப்ரக்ருதி. இவற்றை நன்கு கடைப்பிடிப்பவர்கள் தெய்விக ப்ரக்ருதியைச் சார்ந்தவர்கள்.

**கேள்வி:** இங்கே 'மஹாத்மாந:' என்ற சொல் எந்தத் தரத்திலுள்ள மனிதர்களைக் குறிக்கிறது?

**பதில்:** எவருடைய உள்ளம் பரந்து விரிந்ததோ, அவரே 'மஹாத்மா'. பகவானை அடைவதே தன்னுடைய உயர்ந்த லக்ஷ்யம் என்று எப்பொழுதும் பகவானிடமே ஈடுபட்டிருப்பவர்கள்; நிஷ்காமமாக (பற்றற்று) அநன்ய பக்தி செய்பவர்கள்; (எவ்விதப் பயனையும் எதிர்பார்க்காமல்) பகவத் பக்தியில் திளைத்திருப்பவர்கள்; பகவானை அடையத் தகுதி பெற்றவர்கள் – இவர்களையே இங்கு 'மஹாத்மாந:' என்ற சொல் குறிக்கிறது.

**கேள்வி:** 'மாம்' என்று எந்த ஸ்வரூபத்தைக் குறிக்கிறார்? அது எல்லா ப்ராணிகளுக்கும் பிறப்பிடம், அழிவற்றது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கு 'மாம்' என்று ஸகுண ஸ்வரூபரான புருஷோத்தமனைக் குறிப்பிடுகிறார். அந்த ஸகுண பரமாத்மாவிடமிருந்தே உடல், புலன்கள், மனது, புத்தி, போகப் பொருட்கள், எல்லா உலகங்கள், எல்லாச் சராசரங்களான ப்ராணிகள் இவையெல்லாம் உற்பத்தியாகி, அவரால் காக்கப்பட்டு அவரிடமே ஒடுக்கம் அடைகின்றன (7/6; 9/18; 10/2,4,5,6,8). இந்தத் தத்வத்தை நன்கு அறிந்து கொள்வதுதான் 'பகவான் உயிரினங்களனைத்திற்கும் பிறப்பிடம்' என்பதை அறிவதாகும். அந்த பகவான் பிறப்பற்றவர், அழிவற்றவர். உலகத்தினருக்கு அருள்புரியவே தமது லீலையாக மனிதர் முதலான வடிவங்களில் வெளிப்படுகிறார், மறைகிறார். அவரைத்தான் அக்ஷரம் என்றும், அழிவற்ற பரப்ரம்ம பரமாத்மா என்றும் கூறுகிறார்கள். எல்லா ப்ராணிகளும் அழிந்த பிறகும்கூட பகவான் அழிவதில்லை (8/20). இதை உண்மையாக அறிவதுதான் அவரை 'அவ்யயம்' (அழிவற்றவர்) என்று அறிவதாகும்.

**கேள்வி:** 'அநந்யமநஸ:' என்று எந்த நிலையை எய்தியவர்களைக் குறிப்பிடுகிறார்? அவர்கள் பகவானை எப்படி வழிபடுகிறார்கள்?

**பதில்:** எவர்களுடைய மனம் பகவானைத் தவிர வேறு எந்தப் பொருளிலும் இன்பம் காண்பதில்லையோ, ஒரு கணம்கூட பகவானுடைய நினைவு அகல்வது எவர்களால் பொறுத்துக் கொள்ள முடியாததாகத் தோன்றுகிறதோ, இத்தகைய அநன்ய ப்ரேமையுடைய பக்தர்களை 'அநந்யமநஸ:' என்ற சொல் குறிக்கிறது. அடுத்த ச்லோகத்திலும், 10/9லும் கூறப்படுகிறபடி இத்தகைய பக்தர்கள் இடைவிடாது பகவானை வழிபடுகிறார்கள்.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் சொல்லப்பட்ட பக்தர்கள் எவ்வாறு பூஜிக்கிறார்கள் என்பதைக் கூறுகிறார்—



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**सततं कीर्तयन्तो मां यतन्तश्च दृढव्रताः।**
**नमस्यन्तश्च मां भक्त्या नित्ययुक्ता उपासते॥१४॥**

**ஸததம் கீர்தயந்தோ மாம் யதந்தஶ்ச த்₃ருட₄வ்ரதா: ।**

**நமஸ்யந்தஶ்ச மாம் ப₄க்த்யா நித்யயுக்தா உபாஸதே ॥ 14 ॥**

**த்₃ருட₄வ்ரதா:** – உறுதியான நிச்சயம் கொண்ட பக்தர்கள், **ஸததம்** – இடைவிடாது, **கீர்தயந்த: ச** – என்னுடைய நாமங்களையும் குணங்களையும் கீர்த்தனம் செய்து கொண்டும், **யதந்த: ச** – என்னைப் பெறும் முயற்சியில் ஈடுபட்டுக் கொண்டும், **மாம்** – என்னை (திரும்பத் திரும்ப), **நமஸ்யந்த:** – வணங்கிக் கொண்டும், **நித்யயுக்தா:** – எப்பொழுதும் என்னுடைய த்யானத்திலேயே நிலைத்திருந்தும், **ப₄க்த்யா** – வேறு ஒன்றிலும் நாட்டம் இல்லாத அன்புடன், **மாம்** – என்னை, **உபாஸதே** – வழிபடுகிறார்கள்.

உறுதியான நிச்சயம் கொண்ட பக்தர்கள் இடைவிடாது என்னுடைய நாமங்களையும், குணங்களையும் கீர்த்தனம் செய்து கொண்டும் என்னைப் பெறும் முயற்சியில் ஈடுபட்டுக் கொண்டும் என்னைத் திரும்பத் திரும்ப வணங்கிக் கொண்டும் எப்பொழுதும் என்னுடைய த்யானத்திலேயே நிலைத்திருந்தும் வேறு ஒன்றிலும் நாட்டம் இல்லாத அன்புடன் என்னை வழிபடுகிறார்கள்.

**கேள்வி:** 'த்ருடவ்ரதா:' என்றால் யார்?

**பதில்:** உறுதியான நிச்சயம் கொண்ட பக்தர்கள் 'த்ருடவ்ரதர்கள்'. பகவானிடம் ப்ரேமை கொண்ட பக்தர்களின் தீர்மானம், நம்பிக்கை, ஆராய்ச்சி, கட்டுப்பாடுகள் எல்லாமே உறுதியாக இருக்கும். பெரிய பெரிய விபத்துக்களோ, இடையூறுகளோகூட அவர்களைத் தங்களுடைய ஸாதனையிலிருந்தோ, எண்ணத்திலிருந்தோ தளரச் செய்ய முடியாது. இவர்களை 'த்ருடவ்ரதா:' என்பர்.

**கேள்வி:** 'ஸததம்' என்றால் என்ன? இது 'கீர்தயந்த:' என்ற சொல்லுடன் மட்டும்தான் சேர்கிறதா? 'யதந்த:', 'நமஸ்யந்த:' என்ற சொற்களுடனும் சேர்கிறதா?

**பதில்:** 'ஸததம்' என்றால் 'எப்பொழுதும் இடைவிடாது' என்று பொருள். இது இப்படி உபாஸிக்கிறார்கள் என்ற வினைச்சொல்லுடன் விசேஷமாகச் சேர்கிறது. கீர்த்தனம், நமஸ்காரம் முதலியவை உபாஸனையின் அங்கங்கள். ஆகையாலே அவற்றுடனும் முறைக்கேற்ப இந்தச் சொல் சேரும். பகவானிடம் ப்ரேமை மிகுந்த பக்தர்கள் ஒரு சமயம் கீர்த்தனம் செய்வார்கள். இன்னொரு சமயம் நமஸ்காரம் செய்வார்கள். இல்லையேல் ஸேவை செய்வார்கள். ஆக எப்பொழுதும் பகவானைச் சிந்தித்துக் கொண்டே இடைவிடாது உபாஸனை செய்வார்கள்.

**கேள்வி:** பகவானைக் கீர்த்தனம் செய்வது என்றால் என்ன?

**பதில்:** கதை சொல்வது, விளக்கம் தருவது முதலியவற்றால் பக்தர்களின் முன்னிலையில் பகவானுடைய கல்யாண குணங்கள், ப்ரபாவங்கள், மஹிமை, சரிதம் முதலியவற்றை வர்ணிப்பது; தனியாகவோ, மற்றவர்களுடன் சேர்ந்தோ பகவான் எதிரில் இருப்பதாகக் கருதி ஸ்ரீராம, க்ருஷ்ண, கோவிந்த, ஹரி, நாராயண, வாஸுதேவ, கேசவ, மாதவ, சிவ என்றெல்லாம் புண்ய நாமங்களை ஜபிப்பது; அல்லது உரத்த குரலில் பாடுவது; பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், சரிதம் இவற்றை நம்பிக்கையுடனும், ப்ரேமையுடனும் மெதுவாகவோ, உரத்த குரலிலோ, நின்று கொண்டோ, அமர்ந்து கொண்டோ, வாத்யங்கள், நர்த்தனம் இவற்றுடனோ அல்லது இவை இல்லாமலோ பாடுவது; தெய்விக ஸ்தோத்ரங்கள் மூலமாகவும், துதிப்பாடல்கள் மூலமாகவும் பகவானைப் புகழ்ந்து பாடி ப்ரார்த்தனை புரிவது – இப்படி பகவானுடைய குணங்களைப் போற்றிப் பாடுவதுடன் தொடர்பு கொண்ட எல்லாச் செயல்களுமே 'கீர்தயந்த:' என்ற சொல்லுக்குப் பொருள்.


CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'யதந்த:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** பகவானைப் பூஜிப்பது; எல்லோரையும் பகவத் ஸ்வரூபமாக எண்ணி அவர்களுக்கு ஸேவை புரிவது; பகவானுடைய பக்தர்கள் மூலமாக பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், சரித்ரங்கள் இவற்றைக் கேட்பது; மேலும் பக்திக்கு இன்னும் எவ்வளவு அங்கங்கள் சொற்களால் விளக்கப்படவில்லையோ, அவையெல்லாவற்றிலும் உற்சாகத்துடனும், தீவிரமாகவும், முயற்சியோடும் ஈடுபடுவது – இவையெல்லாம் 'யதந்த:' என்ற சொல்லுக்குப் பொருள்.

**கேள்வி:** பகவானைத் திரும்பத் திரும்ப வணங்குதல் என்றால் என்ன?

**பதில்:** பகவானுடைய திருக்கோயில்களுக்குச் சென்று ச்ரத்தையுடனும், பக்தியுடனும் பகவானுடைய திவ்ய மங்கள விக்ரஹங்களின் முன்னிலையில் உடல் முழுதும் நிலம் தோய ஸாஷ்டாங்கமாக வணங்குவது; தன்னுடைய வீட்டிலேயே பகவானுடைய திருவுருவம், படங்கள், பகவான் பெயர், பகவானுடைய திருவடிகள், பாதுகைகள், பகவானுடைய தத்வம், ரஹஸ்யம், ப்ரேமை, ப்ரபாவம், அவருடைய மதுரமான லீலைகள், இவற்றை வர்ணிக்கும் நூல்கள் – இவையெல்லாவற்றையும் பகவானுடைய ஸ்வரூபம் என மதித்து அல்லது எல்லோருடைய உள்ளத்திலும் பகவான் உறைகிறார் என்ற எண்ணத்தினாலே, எல்லாப் ப்ராணிகளையும்கூட வினயத்துடனும், ச்ரத்தையுடனும், பக்தியுடனும், நாத் தழுதழுக்க மனம், சொல், உடலினால் வணங்குவது – இவையெல்லாம் பகவானை நமஸ்காரம் செய்வதாகும்.

**கேள்வி:** 'நித்யயுக்தா:' என்ற சொல்லுக்குப் பொருள் என்ன?

**பதில்:** நின்றாலும், நடந்தாலும், உட்கார்ந்தாலும், எழுந்தாலும், உறங்கினாலும், விழித்திருந்தாலும், வேறு என்ன செயல் செய்தாலும், அவற்றின் இடையேயும், தனிமையில் உட்கார்ந்து த்யானம் செய்யும்போதும், எப்பொழுதும் இடைவிடாது பகவானைச் சிந்தித்திருப்பவர்கள் 'நித்யயுக்தா:' எனப்படுவர்.

**கேள்வி:** பக்தியுடன் உபாஸிப்பது என்றால் என்ன?

**பதில்:** ச்ரத்தையுடன் கூடிய, வேறொன்றிலும் நாட்டமில்லாத அன்பே பக்தி ஆகும். ச்ரத்தையுடனும், அநன்ய ப்ரேமையுடனும் மேலே கூறப்பட்ட ஸாதனைகளை இடைவிடாது செய்வதுதான் பகவானை பக்தியுடன் உபாஸிப்பது ஆகும்.

**பொருத்தம்:** பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்களை அறிந்த அநன்ய ப்ரேமை கொண்ட பக்தர்களின் வழிபடும் முறையைக் கூறிவிட்டு, அடுத்து பகவான் வேறு வகையினரான உபாஸகர்களின் உபாஸனை முறை பற்றிச் சொல்கிறார்—

**ज्ञानयज्ञेन चाप्यन्ये यजन्तो मामुपासते ।**
**एकत्वेन पृथक्त्वेन बहुधा विश्वतोमुखम् ॥ १५ ॥**

**ஜ்ஞாநயஜ்ஞேந சாப்யந்யே யஜந்தோ மாமுபாஸதே ।**

**ஏகத்வேந ப்ருத₂க்த்வேந ப₃ஹுதா₄ விஸ்வதோமுக₂ம் ॥ 15 ॥**

**அந்யே** – வேறு சில ஞானயோகிகள், **மாம்** – நிர்குணமான உருவமற்ற ப்ரம்மமான என்னை, **ஜ்ஞாநயஜ்ஞேந** – ஞான யக்ஞத்தினால், **ஏகத்வேந** – தான் வேறு என்ற எண்ணமில்லாமல் ஒன்றிய பாவத்தோடு, **யஜந்த: அபி** – வழிபட்டுக் கொண்டும், **ச** – மற்றும் சிலர், **ப₃ஹுதா₄** – பல தோற்றங்களில் விளங்கும், **விஸ்வதோமுக₂ம்** – விராட் ஸ்வரூபம் கொண்ட பரமேசுவரனான என்னை, **ப்ருத₂க்த்வேந** – தன்னிலும் வேறாக எண்ணி, **உபாஸதே** – வழிபடுகிறார்கள்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வேறு சில ஞானயோகிகள் நிர்குணமான உருவமற்ற ப்ரம்மமான என்னை ஞான யக்ஞத்தினால் தான் வேறு என்ற எண்ணமில்லாமல் ஒன்றிய பாவத்தோடு வழிபட்டுக் கொண்டும் மற்றும் சிலர் பல தோற்றங்களில் விளங்கும் விராட் ஸ்வரூபம் கொண்ட பரமேசுவரனான என்னைத் தன்னிலும் வேறாக எண்ணியும் வழிபடுகிறார்கள்.

**கேள்வி:** 'அந்யே' என்றால் யார்?

**பதில்:** மேலே சொன்ன பக்தர் வகையினரிடமிருந்து ஞானயோகிகள் வேறானவர்கள் என்பதைப் பிரித்துக் காட்டுவதற்காக அவர்களை 'வேறு சிலர்' என்று சொல்கிறார். மேற்குறித்த பக்தர்களிடமிருந்து மாறுபட்ட ஞானயோகிகள் இனிச் சொல்லப் போகும் விதத்தில் பகவானை உபாஸிப்பார்கள்.

**கேள்வி:** இங்கு 'மாம்' என்ற சொல்லுக்கு நிர்குணமான-உருவமற்ற ப்ரம்மம் என்று ஏன் பொருள் கொள்ளவேண்டும்?

**பதில்:** ஞானயோகத்தின் மூலம் நிர்குணமான-உருவமற்ற ப்ரம்மத்தைத்தான் உபாஸிக்க முடியும். ஸத் சித் ஆனந்தமயமான நிர்குணமான-உருவமற்ற ப்ரம்மமும், தாமும் ஒன்றே என்று கூறும் முறையில் 'மாம்' என்று குறிப்பிடுகிறார் பகவான். ஆகவே, இங்கு 'மாம்' என்ற சொல்லுக்கு நிர்குணமான-உருவமற்ற ப்ரம்மம் என்று பொருள்.

**கேள்வி:** ஞான யக்ஞத்தின் வடிவம் என்ன? அதன் மூலம் ஒருமையுடன் 'மாம்' என்ற சொல்லுக்குப் பொருளான நிர்குண ப்ரம்மத்தை உபாஸிப்பது எப்படி?

**பதில்:** 3/3ல் ஞானயோகம் என்று சொல்லப்பட்டதே அதுதான் இங்கே 'ஞாநயக்ஞம்' எனப்படுகிறது. அதை அனுஸரித்து உடல், புலன்கள், மனம் இவை மூலம் ஆக்கப்பெறும் எல்லாச் செயல்களும் 'மாயாமயமான குணங்கள் குணங்களில் இயங்குகின்றன' என்றறிந்து, 'தான் கர்த்தா' என்ற அபிமானமில்லாமல் இருப்பது; காணப்படுபவன எல்லாம் கானல்நீர் போலவும், கனவுலகு போலவும் அநித்யமானவை. வெறும் தோற்றங்களே என்று உணர்வது; ஸத் சித் ஆனந்தமயமான நிர்குணமான-உருவமற்ற பரப்ரம்மமான பரமாத்மா ஒன்றைத் தவிர வேறு ஒன்றுக்கும் இருப்பே கிடையாது என்றும், இடைவிடாது அந்த ப்ரம்மத்தைப் பற்றிக் கேட்டும், நினைத்தும், மனதில் பதியவைத்தும், அந்த ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தில் வேற்றுமை பாவமின்றி நிலைத்து நிற்கின்ற பயிற்சி செய்து கொண்டே இருப்பது; ஞானயக்ஞத்தின் மூலம் பூஜை செய்து நிர்குண ப்ரம்மத்தை உபாஸனை செய்வது என்பது இதுதான்.

**கேள்வி:** 'ச' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேலே சொன்னபடி ஞானயக்ஞத்தின் மூலம் பூஜை செய்து உபாஸிப் பவர்களினின்றும் வேறு வகையினரைப் பிரித்துக் காட்டுவதற்காக அந்தச் சொல்லை ஆள்கிறார்.

**கேள்வி:** பல தோற்றங்களில் விளங்கும் பகவானுடைய விராட் ஸ்வரூபத்தைத் தன்னிலும் வேறாக எண்ணி உபாஸனை செய்வது என்றால் என்ன?

**பதில்:** இதற்கு முன் ப்ரம்மத்தைத் தவிர வேறு ஏதுமில்லை என்ற கருத்துடன் கூடிய உபாஸனையைக் கூறினார். இங்கே, மாறாக, அகில உலகமும் அந்த பகவானிடமே உண்டானவை; பகவானே அதில் நிறைந்திருக்கிறார்; பகவானே உலகமாக இருக்கிறார்; ஆகவே சந்த்ரன், சூரியன், அக்னி, இந்த்ரன், வருணன் முதலிய வெவ்வேறு தெய்வங்கள் மற்றும் எல்லா ப்ராணிகளும்கூட பகவானுடைய ஸ்வரூபங்களே என்றறிந்து அவையெல்லா வற்றையும் தன்னுடைய கர்மங்களின் மூலம் தகுந்த விதத்தில் பயனைக் கருதாது ஸேவை, பூஜை செய்வது (18/46) - இதுவே பலதோற்றங்களில் விளங்கும் பகவானுடைய விராட் ஸ்வரூபத்திலிருந்து தன்னை வேறாக எண்ணி உபாஸனை செய்வதாகும்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொருத்தம்: அகில உலகத்தையும் உபாஸிப்பது, எப்படி பகவானை உபாஸிப்பது ஆகும் என்பதை விளக்குவதற்காக, அடுத்து வரும் நான்கு ச்லோகங்களில் அகில உலகமும் என்னுடைய ஸ்வரூபமே என்று விளக்குகிறார்—

अहं क्रतुरहं यज्ञः स्वधाहमहमौषधम्।
मन्त्रोऽहमहमेवाज्यमहमग्निरहं हुतम्॥ १६॥

அஹம் க்ரதுரஹம் யஜ்ஞ: ஸ்வத₄ாஹமஹமௌஷத₄ம் ।
மந்த்ரோऽஹமஹமேவாஜ்யமஹமக்₃நிரஹம் ஹுதம் ॥ 16 ॥

**க்ரது:** – க்ரதுவும், **அஹம்** – நானே, **யஜ்ஞ:** – யக்ஞமும், **அஹம்** – நானே, **ஸ்வத₄ா** – பித்ருயக்ஞமான ச்ராத்தமும், **அஹம்** – நானே, **ஔஷத₄ம்** – ஹோம த்ரவியங்களும், மூலிகைகளும், **அஹம்** – நானே, **மந்த்ர:** – வைதிகக் கர்மங்களில் ஓதப்படும் மந்த்ரமும், **அஹம்** – நானே, **ஆஜ்யம்** – நெய்யும், **அஹம்** – நானே, **அக்₃நி:** – அக்னியும், **அஹம்** – நானே, **ஹுதம்** – ஹோமம் என்ற செயலும், **அஹம் ஏவ** – நானேதான்!

க்ரதுவும் நானே; யக்ஞமும் நானே; பித்ருயக்ஞமான ச்ராத்தமும் நானே; ஹோம த்ரவியங்களும், மூலிகைகளும் நானே; வைதிகக் கர்மங்களில் ஓதப்படும் மந்த்ரமும் நானே; நெய்யும் நானே; அக்னியும் நானே; ஹோமம் என்ற செயலும் நானேதான்!

கேள்வி: இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

பதில்: 'தேவதைகளையும், பித்ருக்களையும் உத்தேசித்துச் செய்யப்படுகின்ற வைதிக கர்மங்கள்‡ அனைத்தும் நானே, ஸ்மார்த்த கர்மங்கள்§ அனைத்தும் நானே, அவற்றின் ஸாதனங்களும் நானே' என்று கூறுகிறார். வேதத்தில் கூறப்படுகிற ச்ரௌத கர்மங்கள் 'க்ரது' எனப்படும். ஸ்ம்ருதியில் கூறப்பட்ட ஐந்து மஹாயக்ஞங்கள் முதலிய கர்மங்கள் 'யஜ்ஞம்' எனப்படும். பித்ருக்களைக் குறித்து அளிக்கப்படும் அன்னம் 'ஸ்வதா' எனப்படும். க்ரது, யாகம், ஸ்வதா இவையனைத்தும் நானே என்று பகவான் கூறுகிறார். யாகத்தில் பயன்படுத்தக் கூடிய பலவிதமான ஸமித்துக்கள், தான்யங்கள், அங்ஙனமே நோய் தீர்க்கக் கூடிய மூலிகைகள் அனைத்துமே பகவான்தான். எந்த மந்த்ரங்களைக் கொண்டு யாகம் முதலிய கர்மங்கள் செய்யப்படுகின்றனவோ, எவை பலர் மூலம் பல நிலைகளிலும் ஜபம் செய்யப்படுகின்றனவோ, அந்த எல்லா மந்த்ரங்களும் பகவானே! யக்ஞத்தில் ஆஹுதி செய்யப்படும் நெய்யும், அன்னமும் பகவானே! கார்ஹபத்யம், ஆஹவனீயம், தக்ஷிணாக்னி ஆகிய மூவகை அக்னியும் பகவானே! செய்யப்படும் யாகமும் பகவானே! அதாவது சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட யாகம், ச்ராத்தம் முதலிய மங்களச் செயல்களில் பயன்படக் கூடிய எல்லாப் பொருட்களும், அவற்றின் தொடர்புடைய மந்த்ரங்களும் மற்றும் வாக்கு முதலிய புலன்களால் ஆற்றப்படும் அத்தனை செயல்களும் எல்லாமே பகவானுடைய ஸ்வரூபம்தான். இந்த விஷயத்தைச் சேர்த்து உறுதிப்படுத்துவதற்காகவே ஒவ்வொரு சொல்லுடனும் 'அஹம்' (நான்) என்ற சொல்லைச் சேர்த்துச் சொல்கிறார். நானே என்று வலியுறுத்திக் கூறுகிறார். பகவானைத் தவிர வேறொன்றும் இல்லை என்பது பொருள். இப்படிப் பலவிதமாகத் தோன்றும் எல்லாமே பகவான்தான். பகவானுடைய தத்வம் புரியாமையால் அவை பகவானாகத் தோன்றாமல் வேறாகத் தோன்றுகின்றன.

‡ வைதிக கர்மம் – வேதங்களில் கூறப்பட்டுள்ள கர்மம்.

§ ஸ்மார்த்த கர்மம் – ஸ்ம்ருதிகளில் கூறப்பட்டுள்ள கர்மம்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**पिताहमस्य जगतो माता धाता पितामहः।**
**वेद्यं पवित्रमोङ्कार ऋक्साम यजुरेव च॥ १७॥**

**பிதாஹமஸ்ய ஜக₃தோ மாதா த₄ாதா பிதாமஹ: ।**

**வேத்₃யம் பவித்ரமோங்கார ருக்ஸாம யஜுரேவ ச ॥ 17 ॥**

***அஸ்ய*** – இந்த, ***ஜக₃த:*** – உலகமனைத்தையும், ***த₄ாதா*** – தாங்குபவனும், கர்மங்களுக்குப் பயனளிப்பவனும், ***பிதா*** – தந்தையும், ***மாதா*** – தாயும், ***பிதாமஹ:*** – பாட்டனாரும், ***வேத்₃யம்*** – அறியத்தக்கவனும், ***பவித்ரம்*** – புனிதமானவனும், ***ஓங்கார:*** – ஓம்காரமும், ***ருக் ஸாம யஜு: ச*** – ருக், ஸாம, யஜுஸ் என்ற மூன்று வேதங்களும், ***அஹம் ஏவ*** – நானேதான்.

இந்த உலகமனைத்தையும் தாங்குபவனும், கர்மங்களுக்குப் பயனளிப்பவனும், தந்தையும், தாயும், பாட்டனாரும், அறியத்தக்கவனும், புனிதமானவனும், ஓம்காரமும், ருக், ஸாம, யஜுஸ் என்ற மூன்று வேதங்களும் நானேதான்.

***கேள்வி:*** *'அஸ்ய ஜகத:' என்றால் எது? பகவான் அதற்குத் தந்தை, தாய், தாங்குபவர், பாட்டனார் என்றால் என்ன பொருள்?*

***பதில்:*** இங்கே 'ஜகத்' என்ற சொல் சராசரங்களான ப்ராணிகளுடன் கூடிய அகில உலகத்தையும் குறிக்கிறது. இந்த அகில உலகமும் பகவானிடம் உற்பத்தியானவை. அவரே மூலகாரணம். ஆகவே பகவான் இவ்வுலகுக்குத் தந்தை, தாய். பகவான் தமது ஓர் அம்சத்தால் அகில உலகையும் தாங்குகிறார் *(10/42)*. அவர்தான் எல்லோருடைய கர்மவினைகளுக்கும் பயன்களைத் தக்கபடி பகுத்து அளிக்கிறார். ஆகவே அவர் தாங்குபவர். உலகைப் படைக்கின்ற ப்ரம்மா முதலிய ப்ரஜாபதிகளை பகவான்தான் படைக்கிறார். ஆகவே அவர் பாட்டனார்.

***கேள்வி:*** *'வேத்யம்' என்றால் எது? பகவான் தம்மை 'வேத்யம்' என்று சொல்லிக் கொள்வதன் கருத்து என்ன?*

***பதில்:*** அறியத்தக்கது 'வேத்யம்'. எல்லா வேதங்களாலும் அறியத்தக்க மிக உயர்ந்த ஒரே தத்வம் பகவான்தான் *(15/15)*. அதனால் தம்மை 'வேத்யம்' என்று பகவான் கூறிக் கொள்கிறார்.

***கேள்வி:*** *'பவித்ரம்' என்றால் என்ன? பகவான் தம்மைப் பவித்ரன் என்று கூறிக் கொள்வதன் கருத்து என்ன?*

***பதில்:*** தானே பரிசுத்தனாக இருந்து பிறருடைய பாவங்களைக் களைந்து அவர்களையும் பரிசுத்தப்படுத்துபவன் 'பவித்ரன்'. பகவான் மிகவும் பவித்ரமானவர். பகவானுடைய தர்சனம், பேச்சு, நினைவு இவற்றால் மனிதன் புனிதன் ஆகிறான். தவிர இவ்வுலகில் உள்ள ஜபம், தவம், வ்ரதம், தீர்த்தம் என்று தூய்மை செய்யக்கூடிய பொருட்களனைத்துமே பகவானுடைய ஸ்வரூபங்கள்தாம். அவற்றில் உள்ள பரிசுத்தப்படுத்தும் சக்தி கூட பகவானுடையதுதான். இந்தக் கருத்தைத்தான் 'பவித்ரம்' (புனிதம்) என்ற சொல் கூறுகிறது.

***கேள்வி:*** *'ஓம்காரம்' யாரைச் சொல்கிறது? பகவான் தம்மை 'ஓம்காரம்' என்று சொல்லிக் கொள்வதன் கருத்து என்ன?*

***பதில்:*** 'ஓம்' பகவானுடைய பெயர். இதை ப்ரணவம் என்றும் கூறுவர். 8/13ல் இதை ப்ரம்மம் என்கிறார். இதை ஓதல் வேண்டுமென்கிறார். இங்கு பெயரும், பெயருக்கு உரியவரும் ஒன்றே என்று கூறும் முறையில் பகவான் தாமே 'ஓம்காரம்' என்று கூறிக் கொள்கிறார்.

***கேள்வி:*** *'ருக்', 'ஸாம', 'யஜு:' மூன்றுக்கும் என்ன பொருள்? பகவான் இவை தமது ஸ்வரூபம் என்று கூறிக் கொள்வதன் கருத்து என்ன?*

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** மூன்று சொற்களும், மூன்று வேதங்களைக் குறிக்கின்றன. வேதங்கள் பகவானிடமிருந்து வெளிப்பட்டவை. எல்லா வேதங்களாலும் அறியப்படுபவர் பகவானே. ஆகவே வேதங்களைத் தம் ஸ்வரூபம் என்று கூறிக் கொள்கிறார்.

**கேள்வி:** 'ச', 'ஏவ' என்ற சொற்களை இடுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ச' என்று இந்த ச்லோகத்தில் கூறப்பட்டவை அனைத்தையும் தொகுக்கிறார். 'ஏவ' என்று பகவானைத் தவிர வேறு பொருளுக்கு இருப்பே இல்லை என்று அவற்றைத் தள்ளிவிடுகிறார். இந்த ச்லோகத்தில் கூறப்பட்ட அனைத்தும் பகவத் ஸ்வரூபம்தான். பகவானைத் தவிர வேறு பொருள் இல்லை என்று பொருள்.

**गतिर्भर्ता प्रभुः साक्षी निवासः शरणं सुहृत्।**
**प्रभवः प्रलयः स्थानं निधानं बीजमव्ययम्॥ १८॥**

**கதிர்ப₄ர்தா ப்ரபு₄: ஸாக்ஷீ நிவாஸ: ஶரணம் ஸுஹ்ருத் ।**

**ப்ரப₄வ: ப்ரலய: ஸ்த₂ானம் நித₄ானம் பீ₃ஜமவ்யயம் ॥ 18 ॥**

**கதி:** – அடையத்தக்க பரமபதம், **ப₄ர்தா** – காத்துப் போஷிப்பவன், **ப்ரபு₄:** – எல்லோரையும் ஆள்பவன், **ஸாக்ஷீ** – நல்லன–தீயன ஆகியவற்றைப் பார்ப்பவன், **நிவாஸ:** – எல்லாவற்றிற்கும் இருப்பிடம், **ஶரணம்** – எல்லாவற்றிற்கும் புகலிடம், **ஸுஹ்ருத்** – கைம்மாறு எதிர்பாராமல் உதவி புரியும் நண்பன், **ப்ரப₄வ: ப்ரலய:** – அகில உலகமும் தோன்றுவதற்கும் ஒடுங்குவதற்குமான காரணம், **ஸ்த₂ானம்** – நிலையாகத் தாங்குமிடம், **நித₄ானம்** – நிதானமும் (அதாவது ப்ரளய காலத்தில் அனைத்து உயிரினங்களும் நுண்ணிய வடிவில் லயமடையும் இடம்), **அவ்யயம்** – அழிவில்லாத, **பீ₃ஜம்** – விதை, (**அஹம் ஏவ** – ஆகிய அனைத்தும் நானே).

அடையத்தக்க பரமபதம், காத்துப் போஷிப்பவன், எல்லோரையும் ஆள்பவன், நல்லன–தீயன ஆகியவற்றைப் பார்ப்பவன், அனைத்திற்கும் இருப்பிடம், எல்லாவற்றிற்கும் புகலிடம், கைம்மாறு எதிர்பாராமல் உதவி புரியும் நண்பன், அகில உலகமும் தோன்றுவதற்கும் ஒடுங்குவதற்குமான காரணம், நிலையாகத் தாங்குமிடம், நிதானம் – ப்ரளய காலத்தில் அனைத்து உயிரினங்களும் நுண்ணிய வடிவில் லயமடையும் இடம், அழிவில்லாத விதை ஆகிய அனைத்தும் நானே!

**கேள்வி:** 'கதி:' என்றால் என்ன?

**பதில்:** அடையத்தக்கது என்று பொருள். எல்லாவற்றிற்கும் மேலான அடையத்தக்க ஒரே பொருள் பகவான்தான். ஆகவேதான் பகவன் தம்மைக் 'கதி' என்று கூறுகிறார். 'பரமபதம்', 'பராகதி', 'பரமகதி', 'அழிவற்ற பதவி' என்ற பெயர்களும் அவருக்குத்தான்.

**கேள்வி:** 'பர்தா' என்றால் என்ன பொருள்?

**பதில்:** காத்து வளர்ப்பவன் 'பர்தா'. அகில உலகையும் காத்துப் பேணி வளர்ப்பவர் பகவான்தான். ஆகவே அவரே 'பர்தா'.

**கேள்வி:** 'ப்ரபு:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** அடக்கி ஆளும் யஜமானர் – 'ப்ரபு'. பகவான்தான் உலகிற்கு ஒரே ப்ரபு; அவர் ஈசுவரர்களுக்கு எல்லாம் ஈசுவரர்; தேவதைகளுக்கெல்லாம் தலைமை பெற்ற பரம தெய்வம்; பதிகளுக்கெல்லாம் தலைமை ஏற்ற பதி; எல்லா புவனங்களுக்கும் ஸ்வாமி; மிகவும் பூஜிக்கத்தக்கவர்; பரமதெய்வம் (ஶ்வேதாஶ்வதர உபநிஷத் 6/7); சூரியன், அக்னி, இந்த்ரன், வாயு, ம்ருத்யு முதலிய எல்லா தெய்வங்களும் இவரிடம் பயந்து தம்முடைய எல்லைக்குள் அடங்கி இருக்கின்றன (கடோபநிஷத் 2/3/3). ஆகவே அவர் 'ப்ரபு'.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ஸாக்ஷீ' என்றால் என்ன பொருள்?

**பதில்:** பகவான் ஒருவரே அகில உலகங்களிலும் உள்ள எல்லா ப்ராணிகளுடைய நல்லவும், தீயவுமான செயல்கள் எல்லாவற்றையும் அறிபவர், காண்பவர். முக்காலங்களிலும் அவர் அறியாதது ஒன்றுமில்லை. அவர் பார்க்காதது ஒன்றும் இல்லை. அவரே அறிவின் எல்லை. ஆகவே அவர் 'ஸாக்ஷீ' எனப்படுகிறார்.

**கேள்வி:** 'நிவாஸ:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** வசிப்பதற்கான இடம் 'நிவாஸம்' ஆகும். எல்லா ப்ராணிகளும் உட்கார்ந்து, எழுந்து, தூங்கி, விழித்து, நடந்து, திரிந்து, பிறந்து, இறந்து எப்பொழுதும்; எவ்விதத்திலும் பகவானிடமே உள்ளன. ஆகவே பகவான் தம்மை 'நிவாஸம்' என்று கூறிக் கொள்கிறார்.

**கேள்வி:** 'ஶரணம்' என்றதன் கருத்து என்ன?

**பதில்:** புகல் அடையும் இடம் 'ஶரணம்'. பகவானைப்போலச் சரணடைந்தவனிடம் பரிவு காட்டுபவர், காப்பவர், வணங்குபவர் தம் துயரங்களைப் போக்குபவர் வேறு ஒருவரும் இலர். வால்மீகி ராமாயணத்தில் பகவான் கூறுகிறார்—

ஸக்ருதே₃வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே ।
அப₄யம் ஸர்வபூ₄தேப்₄யோ த₃தா₃ம்யேதத்₃வ்ரதம் மம ॥

*(6/18/33)*

"'நான் உன்னைச் சார்ந்தவன்' என்று ஒரு முறையாவது கூறி, என்னைச் சரணடைந்து என்னிடமிருந்து அபயம் வேண்டுபவனுக்கு எல்லா ப்ராணிகளிடமிருந்தும் அபயம் அளிப்பேன். இது என் வ்ரதம்." இதனால் பகவான் தம்மை 'ஶரணம்' (புகல் அடையும் இடம்) என்று கூறிக் கொள்கிறார்.

**கேள்வி:** 'ஸுஹ்ருத்' என்றால் என்ன கருத்து?

**பதில்:** ப்ரதி உபகாரத்தை எதிர்பாராமல் ஒரு காரணமுமின்றி இயல்பாகப் பிறருக்கு நன்மையையே நினைத்து ஹிதமானதைச் செய்யும் கருணை உள்ளம் படைத்தவர், ப்ரேமையுடையவர் 'ஸுஹ்ருத்'. காரணமின்றியே பகவான் எல்லா ப்ராணிகளுக்கும் நலன் செய்பவர்; மிகவும் ஹிதத்தை விரும்புபவர்; எல்லோரிடமும் பேரன்பு பூண்டவர்; மிகவும் நெருங்கிய உறவினர்; ஆகவே அவரை 'ஸுஹ்ருத்' என்கிறார். ஐந்தாம் அத்யாயத்தின் முடிவில், 'என்னை எல்லா ப்ராணிகளுக்கும் ஸுஹ்ருத் என்றறிந்தாலே மனிதன் பரமசாந்தியை அடைவான்' *(5/29)* என்று பகவான் கூறுகிறார்.

**கேள்வி:** 'ப்ரபவ:', 'ப்ரலய:', 'ஸ்தாநம்' என்ற மூன்று சொற்களுக்கும் என்ன பொருள்?

**பதில்:** அகில உலகும் உற்பத்தியாகும் இடம் 'ப்ரபவ:', இருப்பிற்கு ஆதாரம் 'ஸ்தாநம்', ஒடுங்குமிடம் 'ப்ரலய:'. இந்த அகில உலகினுடைய ஆக்கல், அளித்தல், அழித்தல் எல்லாம் பகவானுடைய ஸங்கல்பத்தினாலேயே நடைபெறுகின்றன. ஆகையால் அவரை 'ப்ரபவ:', 'ப்ரலய:', 'ஸ்தாநம்' என்று கூறினார்.

**கேள்வி:** 'நிதாநம்' என்றதன் கருத்து என்ன?

**பதில்:** ஒரு பொருளை வெகுநாள் வைத்திருக்குமிடத்திற்கு 'நிதாநம்' என்று பெயர். மஹாப்ரளயத்தில் எல்லா ப்ராணிகளையும் ஒன்று சேர்த்துக் கொண்டு அவ்யக்த ப்ரக்ருதி, பகவானுடைய ஏதோ ஒரு சிறு பகுதியில் அடகு வைக்கப்பட்ட பொருளைப் போல வெகுநாட்கள் செயலற்ற நிலையில் அடங்கி இருக்கிறது. ஆகவே பகவான் தம்மை 'நிதாநம்' (களஞ்சியம்) எனக் கூறுகிறார்.

**கேள்வி:** 'அவ்யயம் பீஜம்' என்றால் எதைக் குறிக்கிறது?

**பதில்:** என்றும் அழியாதது 'அவ்யயம்'. பகவான் சராசரங்களான எல்லா ப்ராணிகளுக்கும் அழிவற்ற காரணம்; வித்து. எல்லாவற்றினுடைய உற்பத்தியும் அவரிடமிருந்துதான் ஏற்படுகிறது. அவரே எல்லாவற்றிற்கும் ஆதாரம். அதனால் தம்மை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அழிவற்ற விதை என்கிறார். 7/10ல் 'ஸநாதந பீஜம்' என்றார். 10/39ல் 'எல்லா பூதங்களுக்கும் விதை' என்கிறார்.

**கேள்வி:** இந்த ச்லோகத்தில் பகவான் 'அஹம்' என்று ஒரு முறைகூடக் கூறவில்லையே. ஏன்?

**பதில்:** மற்ற ச்லோகங்களில் கூறப்படுகின்ற க்ரது, யக்ஞம், ஸ்வதா, ஔஷதம், மந்த்ரம், நெய், ருக், யஜுஸ் முதலிய சொற்கள் தம் இயல்பினாலேயே பகவானிடமிருந்து வேறுபட்ட பொருட்கள்ளைக் கூறுகின்றன. ஆகவே, அவற்றைத் தம் ஸ்வரூபம்தான் என்று அவற்றுடன்கூட 'நான்' என்ற சொல்லைச் சேர்த்துச் சொன்னார். இங்கே கூறப்படும் சொற்கள் எல்லாம் பகவானுக்கே உரிய அடைமொழிகள். மேலும் முன் ச்லோகத்தில் வருகின்ற 'அஹம்' என்ற சொல்லை இங்கே இணைத்தும் பொருள் கூறலாம். ஆகவே, இந்த ச்லோகத்தில் 'அஹம்' என்ற சொல் தேவைப்படவில்லை.

तपाम्यहमहं वर्षं निगृह्णाम्युत्सृजामि च।
अमृतं चैव मृत्युश्च सदसच्चाहमर्जुन॥ १९॥

**தபாம்யஹமஹம் வர்ஷம் நிக்³ருஹ்ணாம்யுத்ஸ்ருஜாமி ச ।**
**அம்ருதம் சைவ ம்ருத்யுஸ்ச ஸத³ஸச்சாஹமர்ஜுந ॥ 19 ॥**

**அஹம்** – நான்தான், **தபாமி** – (சூரியனுடைய வடிவில்) வெப்பம் அளிக்கிறேன். **வர்ஷம்** – மழையை, **நிக்³ருஹ்ணாமி** – உள்ளிழுத்துத் தடுத்து நிறுத்துகிறேன்; **உத்ஸ்ருஜாமி ச** – பொழியவும் செய்கிறேன். **அர்ஜுந** – அர்ஜுன! **அஹம் ஏவ** – நானே, **அம்ருதம் ச** – இறவாப்பெருநிலையும் (ஆவேன்), **ம்ருத்யு: ச** – படைத்தவற்றை அழிக்கும் மஹா காலனும் ஆவேன். **ஸத்** – அழியாததும், **அஸத் ச** – அழியக்கூடியதும், **அஹம்** – எல்லாமே நான்தான் (என்னுடைய ஸ்வரூபம்தான்).

நான்தான் சூரியனுடைய வடிவில் வெப்பம் அளிக்கிறேன்; மழையை உள்ளிழுத்துத் தடுத்து நிறுத்துகிறேன்; பொழியவும் செய்கிறேன். அர்ஜுன! நானே இறவாப்பெருநிலையும் ஆவேன். படைத்தவற்றை அழிக்கும் மஹாகாலனும் நானே ஆவேன். அழியாததும் அழியக்கூடியதும் எல்லாமே நான்தான் – என்னுடைய ஸ்வரூபம்தான்.

**கேள்வி:** 'நானே சூரியனாகி வெப்பம் அளிக்கிறேன்; மழையை உள்ளிழுத்துத் தடுத்து நிறுத்துகிறேன்; பொழியவும் செய்கிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தன்னுடைய கிரணங்களினால் எல்லா உலகிற்கும் வெப்பத்தையும், ஒளியையும் அளிக்கின்றவன்; கடல் முதலிய நீர்நிலைகளிலிருந்து தண்ணீரை ஈர்த்துத் தடுத்து வைத்துக் கொள்பவன்; உலக நன்மையின் பொருட்டு மேகங்களின் வழியாகத் தக்க சமயத்தில் தக்கபடி மழையாகப் பொழிந்து வழங்குபவன் – 'இத்தகைய சூரியனும் என் ஸ்வரூபம்தான்' என்கிறார் பகவான்.

**கேள்வி:** 'அம்ருதம்' என்றால் என்ன கருத்து?

**பதில்:** எதைப் பருகினால் மனிதன் மரணத்திற்கு ஆட்படாமல் அமரன் (இறவாதவன்) ஆகிறானோ, அது 'அம்ருதம்'. தேவலோகத்தில் ஓர் அம்ருதம் உண்டு. அதை அருந்துபவர்களான தேவர்கள் மனிதர்களைப் போல மரணமடைவதில்லை. ஆயினும், அதை அருந்தியதால் அவர்களுக்கு அழிவே கிடையாது என்று சொல்லவும் முடியாது. ஆனால் பகவான் மிகவும் உயர்ந்த அம்ருதம். அவரை அடைந்துவிட்டால் மனிதன் யம பாசத்திலிருந்து என்றும் விடுபடுகிறான். ஆகவே, பகவான் தம்மை 'அம்ருதம்' என்று கூறிக் கொள்கிறார். அதனால்தான் மோக்ஷத்தையும் 'அம்ருதம்' என்கிறார்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ம்ருத்யு' என்றால் யார்? பகவான் ம்ருத்யுவையும் தம் ஸ்வரூபம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எல்லாவற்றையும் அழிக்கும் காலம்தான் 'ம்ருத்யு'. படைப்பு என்ற லீலையை மிகவும் அழகாக நடத்திச் செல்வதில் படைப்பு, மறைப்பு இரண்டும் தேவைப்படுகின்றன. அந்த இரண்டு செயல்களும் லீலா வடிவினரான பகவானுடையனவே. அவர்தான் தக்க சமயத்தில் உலகங்களை அடக்கிக் கொள்வதற்காக மஹாகால வடிவம் எடுத்துக் கொள்கிறார். பகவான் தாமே சொல்கிறார்: 'உலகங்களை அழிப்பதற்காக வளர்ந்து கொண்டிருக்கின்ற மஹாகாலன் நான்' *(11/32)*. ஆகவே, பகவான் 'ம்ருத்யு'வைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** 'ஸத்', 'அஸத்' என்றால் என்ன? அவற்றைத் தம் ஸ்வரூபம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எதற்கு ஒருபொழுதும் அழிவில்லையோ, அந்த அவிநாசியான (அழிவற்ற) ஆத்மாதான் 'ஸத்'. அழியக்கூடிய, அநித்யமான பொருட்கள் அனைத்தும் 'அஸத்'. இவற்றைப் பதினைந்தாம் அத்யாயத்தில் 'அக்ஷர–க்ஷர புருஷர்கள்' என்கிறார். இவையே பகவானுடைய 'பரா–அபரா ப்ரக்ருதிகள்' ஆகும். அந்த ப்ரக்ருதிகளும் பகவானைத் தவிர வேறல்ல. ஆகவே பகவான் தம்மை ஸத் என்றும், அஸத் என்றும் கூறிக் கொள்கிறார்.

**பொருத்தம்:** ச்லோகம் *13* முதல் *15* வரை தமது ஸகுண–நிர்குண, விராட் ஸ்வரூபங்களின் உபாஸனை பற்றிக் கூறி, ச்லோகம் *19* வரை எல்லா உலகமும் தம் ஸ்வரூபமே என்று கூறினார். ஆகவே, இந்த்ரன் முதலான எந்த தேவதைகளை உபாஸித்தாலும், வேறுவிதமாக என்னையே உபாஸித்தது ஆகும். ஆனால் இப்படி அறிந்து கொள்ளாமல் பயனில் கருத்துடன் தனித்தனியாக பாவித்து அந்தந்த தெய்வங்களை உபாஸிப்பவர்கள் என்னை அடையாமல், அழியக்கூடிய பயன்களையே பெறுவார்கள். இனி வரும் இரண்டு ச்லோகங்களில் அந்த உபாஸனையையும், அதன் பயனையும் கூறுகிறார்—

**त्रैविद्या मां सोमपाः पूतपापा यज्ञैरिष्ट्वा स्वर्गतिं प्रार्थयन्ते ।**
**ते पुण्यमासाद्य सुरेन्द्रलोकमश्नन्ति दिव्यान्दिवि देवभोगान् ॥ २० ॥**

**த்ரைவித்₃யா மாம் ஸோமபா: பூதபாபா**
**யஜ்ஞைரிஷ்ட்வா ஸ்வர்க₃திம் ப்ரார்த₂யந்தே ।**
**தே புண்யமாஸாத்₃ய ஸுரேந்த்₃ரலோக–**
**மஶ்நந்தி தி₃வ்யாந்தி₃வி தே₃வபோ₄கா₃ந் ॥ 20 ॥**

**த்ரைவித்₃யா:** – மூன்று வேதங்களிலும் வர்ணிக்கப்பட்டுள்ள முறைகளின்படி பயனை நல்கக்கூடிய கர்மங்களைச் செய்து, **ஸோமபா:** – (யாகத்தில்) ஸோமம் என்ற ரஸத்தை அருந்தி, **பூதபாபா:** – பாவங்கள் அகன்று தூய்மை பெற்றவர்கள், **மாம்** – என்னை, **யஜ்ஞை:** – யாகங்களால், **இஷ்ட்வா** – உபாஸித்து, **ஸ்வர்க₃திம்** – ஸ்வர்கலோகம் அடைவதை, **ப்ரார்த₂யந்தே** – வேண்டுகிறார்கள். **தே** – அவர்கள், **புண்யம்** – புண்யத்தின் பயன் வடிவான, **ஸுரேந்த்₃ரலோகம்** – அமரர் உலகை, **ஆஸாத்₃ய** – அடைந்து, **தி₃வி** – ஸ்வர்கத்தில், **தி₃வ்யாந்** – தெய்விகமான, **தே₃வபோ₄கா₃ந்** – தேவதைகள் அனுபவிக்கும் போகங்களை, **அஶ்நந்தி** – அனுபவிக்கிறார்கள்.

மூன்று வேதங்களிலும் வர்ணிக்கப்பட்டுள்ள முறைகளின்படி பயனை நல்கக்கூடிய கர்மங்களைச் செய்து யாகத்தில் ஸோமம் என்ற ரஸத்தை அருந்தி பாவங்கள் அகன்று தூய்மை பெற்றவர்கள் என்னை யாகங்களால் உபாஸித்து ஸ்வர்கலோகம் அடைவதை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வேண்டுகிறார்கள். அவர்கள் புண்யத்தின் பயன் வடிவான அமரர் உலகை அடைந்து தெய்விகமான – தேவதைகள் அனுபவிக்கும் போகங்களை அனுபவிக்கிறார்கள்.

**கேள்வி:** 'த்ரைவித்யா:', 'ஸோமபா:', 'பூதபாபா:' என்ற மூன்று சொற்களின் பொருள் என்ன? இவை எத்தரத்தவர்களுக்கு அடைமொழிகள் ஆகின்றன?

**பதில்:** ருக், யஜுஸ், ஸாமம் என்ற மூன்று வேதங்களையும் சேர்த்து 'வேதத்ரயீ' அல்லது 'த்ரிவித்யா' என்பார்கள். இந்த மூன்று வேதங்களிலும் கூறப்பட்ட பலவிதமான யக்ஞங்களின் விதிமுறைகளிலும், அவற்றின் பயன்களிலும் பற்றும், ச்ரத்தையும் கொண்டு அவற்றில் கூறிய முறைப்படி பயனைக் கருதிக் கர்மங்களில் ஈடுபடுவர்களை 'த்ரைவித்யா:' என்று அழைக்கிறார். யக்ஞங்களில் ஸோமலதையின் ரஸத்தைப் பருகுவது என்ற விதிமுறை இருக்கிறது. அந்த முறைப்படி ஸோமக்கொடியின் ரஸத்தைப் பருகுகிறவர்கள் 'ஸோமபா:' எனப்படுவர். வேதங்களில் கூறப்பட்ட மேலே சொன்ன யக்ஞங்களை முறை வழுவாது செய்வதால், அவர்கள் ஸ்வர்கம் சேர்வதற்குத் தடையான பாவங்கள் விலகுகின்றன. ஆகவே அவர்களை 'பூதபாபா:' என்கிறார். எல்லா உருவங்களும் பகவான்தான் என்று அறியாமல் வேதங்களில் கூறப்பட்ட கர்ம காண்டத்தில் பற்றும், ச்ரத்தையும் வைத்து, பாவச் செயல்களிலிருந்து தப்பி, ஆனால் பயனில் கருத்துடன் யக்ஞம் முதலிய கர்மங்களைச் செய்பவர்களுக்கு மேலே கூறிய மூன்று அடைமொழிகளும் பொருந்தும்.

**கேள்வி:** 'பூதபாபா:' என்ற சொல்லுக்கு எல்லாப் பாவங்களும் ஒழிந்தவர்கள் என்று பொருள் கூறினால் என்ன?

**பதில்:** அடுத்த ச்லோகத்தில் புண்யங்கள் அழிந்த பிறகு அவர்கள் மனித உலகிற்குத் திரும்பி வருவார்கள் என்று கூறுகிறார். அவர்களுடைய எல்லாப் பாவங்களும் அழிந்திருந்தால் புண்ய கர்மங்கள் தீர்ந்து போனாலும் அதே கணம் அவர்களுக்கு முக்தி கிடைத்திருக்கவேண்டும். பாவம், புண்யம் இரண்டும் அழிந்துவிட்டால் பிறகு பிறப்புக்குரிய காரணம் இல்லை. இந்த நிலையில் திரும்பி வருவது எனும் கேள்வியே எழாது. ஆனால் அவர்கள் திரும்பி வருவார்கள் என்று கூறுகிறார். 'பூதபாபா:' என்பதற்கு ஸ்வர்கத்தை அடைவதில் இடையூறாக நிற்கும் பாவங்கள் மட்டுமே விலகும் என்று மிகவும் பொருத்தமாகப் பொருளுரைக்கப்பட்டது.

**கேள்வி:** இங்கு 'மாம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? யக்ஞங்கள் மூலம் உபாஸிப்பது என்றால் என்ன?

**பதில்:** இங்கு 'மாம்' என்ற சொல்லுக்கு பகவானுடைய அங்கங்களாக அமைந்த இந்த்ரன் முதலிய தேவதைகள் என்று பொருள். சாஸ்த்ர முறைப்படி, ச்ரத்தையுடன் யக்ஞம், பூஜை முதலியவற்றின் மூலம் வெவ்வேறு தெய்வங்களைப் பூஜிப்பதே 'என்னை யக்ஞங்கள் மூலம் உபாஸிப்பது' ஆகும். அதாவது "இந்த்ரன் முதலான தேவர்களும் என்னுடைய அங்கங்களே. அவர்களைப் பூஜிப்பதும்கூட வேறுவிதமாக என்னையே பூஜிப்பது ஆகும். ஆனால் அஞ்ஞானத்தினால், பயனில் கருத்துள்ள மக்கள் இந்தத் தத்வத்தை அறிந்து கொள்வதில்லை. அதனால் அவர்களுக்கு 'என்னை அடைவது' என்ற பயன் கிட்டுவதில்லை" என்கிறார் பகவான்.

**கேள்வி:** 'ஸ்வர்கதிம்' என்றால் எது? அதை வேண்டுவது என்றால் என்ன?

**பதில்:** ஸ்வர்கத்தை அடைவதுதான் 'ஸ்வர்கதி'. வேத முறைப்படியான மேலே கூறப்பட்ட கர்மங்களின் மூலம் தேவர்களைப் பூஜித்து, அவற்றின் பயனாக 'ஸ்வர்கம் செல்லவேண்டும்' என்று வேண்டிக் கொள்வதுதான் ஸ்வர்கத்தை வேண்டுதல் ஆகும்.

**கேள்வி:** 'புண்யம் ஸுரேந்த்ரலோகம்' என்றால் எது? அங்கு 'தேவர்களின் திவ்ய போகங்களை அனுபவிப்பது' என்றால் என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



*பதில்:* யக்ஞம் முதலிய புண்ய கர்மங்களின் பயனாக அடையக்கூடிய இந்த்ரலோகம் முதல் ப்ரம்மலோகம் வரை உள்ள லோகங்களனைத்தையும், 'புண்யம் ஸுரேந்த்ரலோகம்' என்ற தொடர் குறிக்கிறது. 'ஸுரேந்த்ரலோகம்' என்றால் இந்த்ரலோகம்தான் என்றாலும், மேலே சொன்ன எல்லா லோகங்களையும் சேர்த்துக் கூறுவதாகவே பொருள் கொள்ள வேண்டும். அவரவர்களுடைய புண்ய கர்மங்களுக்கு ஏற்றவாறு அந்தந்த லோகங்களுக்குச் சென்று, மனித உலகில் கிடைக்காத ஒளிமயமானவையும், வித்யாஸமானவையுமான தேவ போகங்களை மனம், புலன்களைக் கொண்டு அனுபவிப்பது 'திவ்ய போகங்களை அனுபவிப்பதாகும்'.

ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं क्षीणे पुण्ये मर्त्यलोकं विशन्ति।
एवं त्रयीधर्ममनुप्रपन्ना गतागतं कामकामा लभन्ते॥ २१॥

**தே தம் பு₄க்த்வா ஸ்வர்க₃லோகம் விஶாலம்**
**க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி ।**
**ஏவம் த்ரயீத₄ர்மமநுப்ரபந்நா**
**க₃தாக₃தம் காமகாமா லப₄ந்தே ॥ 21 ॥**

**தே** – அவர்கள், **தம்** – அந்த, **விஶாலம்** – பரந்து விரிந்துள்ள, **ஸ்வர்க₃லோகம்** – ஸ்வர்கலோக ஸுகத்தை, **பு₄க்த்வா** – அனுபவித்துவிட்டு, **புண்யே** – புண்யம், **க்ஷீணே** – தீர்ந்து போனவுடன், **மர்த்யலோகம்** – இறப்புக்குரியதான மண்ணுலகை, **விஶந்தி** – அடைகிறார்கள். **ஏவம்** – இவ்வாறு, **த்ரயீ த₄ர்மம்** – ஸ்வர்கத்தை அடைவதற்கு ஸாதனமானவையும், மூன்று வேதங்களில் கூறப்பட்டவையும், பயனை நல்கக் கூடியவையுமான கர்மங்களை, **அநுப்ரபந்நா:** – சார்ந்திருக்கின்ற, **காமகாமா:** – போகத்தில் பற்றுள்ளவர்கள், **க₃தாக₃தம்** – திரும்பத் திரும்பப் பிறந்து இறத்தலை, **லப₄ந்தே** – அடைகிறார்கள் (அதாவது புண்யத்தினால் ஸ்வர்கத்தையும், புண்யம் தீர்ந்து போவதால் மறுபடியும் மண்ணுலகையும் அடைகிறார்கள்).

அவர்கள் அந்தப் பரந்து விரிந்துள்ள ஸ்வர்கலோக ஸுகத்தை அனுபவித்துவிட்டுப் புண்யம் தீர்ந்து போனவுடன் இறப்புக்குரியதான மண்ணுலகை அடைகிறார்கள். இவ்வாறு ஸ்வர்கத்தை அடைவதற்கு ஸாதனமானவையும், மூன்று வேதங்களில் கூறப்பட்டவையும், பயனை நல்கக் கூடியவையுமான கர்மங்களைச் சார்ந்திருக்கின்ற போகத்தில் பற்றுள்ளவர்கள் திரும்பத் திரும்பப் பிறந்து இறத்தலை அடைகிறார்கள். அதாவது புண்யத்தினால் ஸ்வர்கத்தையும், புண்யம் தீர்ந்து போவதால் மறுபடியும் மண்ணுலகையும் அடைகிறார்கள்.

*கேள்வி: 'ஸ்வர்கலோகம் பரந்து விரிந்தது' என்று கூறுவதன் கருத்து என்ன?*

*பதில்:* ஸ்வர்கலோகம் முதலியவற்றின் விரிவு, அங்குக் கிடைக்கக்கூடிய போகப் பொருட்கள், அவற்றை அனுபவிக்கும் விதங்கள், அந்தப் பொருட்கள் அளிக்கும் ஸுகங்கள், அவற்றை அனுபவிப்பதற்கு வேண்டிய உடல், மனவலிமை, ஆயுள் முதலிய எல்லாமே மனித உலகத்தில் உள்ளதைக் காட்டிலும் மிகவும் அதிகமானவை, பெரியவை. அதையே 'விஶாலம்' (பரந்து விரிந்தது) என்ற சொல் குறிக்கிறது.

*கேள்வி: 'புண்யங்கள் தீர்ந்து போனதும் மனித உலகை அடைவது' என்றால் என்ன?*

*பதில்:* எந்தப் புண்யங்களின் பயனை அனுபவிப்பதற்காக ஜீவனுக்கு ஸ்வர்க லோக வாழ்க்கை கிடைக்கிறதோ, அந்தப் புண்யங்களின் பயன்களை அனுபவித்துத் தீர்ப்பதே 'அவை தீர்ந்து போவ'தாகும். அப்படி ஸ்வர்கத்தில் அனுபவிக்கக் கூடிய புண்ய பயன்கள் தீர்ந்ததும் மீதமுள்ள மற்றப் புண்ய பாவங்களின் பயன்களை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அனுபவிப்பதற்காக மறுபடியும் மனித உலகில் வந்து வீழ்வதே 'மனித உலகை அடைவதா'கும்.

**கேள்வி:** 'த்ரயீதர்மம்' என்றால் எவை? 'அதைச் சார்ந்தவர்கள்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** ருக், யஜுஸ், ஸாமம் என்ற மூன்று வேதங்களில் கூறப்பட்ட ஸ்வர்கம் முதலியவற்றை அடைவதற்கான உபாயங்களை 'த்ரயீதர்மம்' என்கிறார். ஸ்வர்கத்தை அடையச் செய்யக் கூடிய ஸாதனங்களான மேலே சொன்ன தர்மங்களை முறைப்படி கடைப்பிடித்து ஸ்வர்க ஸுகத்தையே எல்லாவற்றிற்கும் மேலானதாகக் கருதி, அதை அடைய விரும்புவதுதான் 'த்ரயீதர்மத்தைச் சார்ந்திருப்பது' ஆகும்.

பகவானுடைய ஸ்வரூப தத்வத்தை அறியாது பயனில் கருத்துள்ள மக்கள் அனந்ய பாவனையுடன் பகவானைச் சரணடைவதில்லை. போகங்களின் விருப்பத்தில் கட்டுப்பட்டு மேலே சொன்ன தர்மத்தை மேற்கொள்கிறார்கள். அந்தக் கர்மங்களின் பயன்களோ அநித்யமானவை. இக்காரணத்தினால் மறுபடியும் இறப்பு உள்ள மனித உலகிற்குத் திரும்ப வேண்டியதாகிறது. ஸ்வர்கத்தைக் கொடுக்கக் கூடிய இந்தத் தர்மங்களைச் சார்வதை விட்டு பகவான் ஒருவரையே சரணடைபவர்கள் ஸாக்ஷாத் பகவானையே அடைந்து எல்லா பந்தங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள். செய்ய வேண்டியதைச் செய்த அத்தகைய மனிதர்கள் மறுபடியும் மனிதப் பிறவி எடுக்க வேண்டியதில்லை.

**கேள்வி:** 'காமகாமா:' என்றால் யார்? இது யாருக்கு அடைமொழி? அவர்கள் 'கதாகதம்' என்பதை அடைவார்கள் என்றால் என்ன?

**பதில்:** காமம் என்றால் உலகியல் போகங்கள். அவற்றில் பற்றுள்ளவர்களை 'காமகாமா:' என்கிறார். மேலே சொன்ன ஸ்வர்கத்தை அடையச் செய்யக் கூடிய ஸாதனங்களான வேதங்களில் கூறப்பட்ட காம்ய கர்மங்களையும், உபாஸனைகளையும் புரிபவர்களுக்கு அடைமொழியாக இது வருகிறது. இத்தகைய மனிதர்கள் தமது கர்மங்களின் பயன்களை அனுபவிப்பதற்காக அடிக்கடி கீழ் உலகங்களுக்கும், மேல் உலகங்களுக்கும் போய் வந்து கொண்டிருப்பதைத்தான் (பிறந்து இறப்பதைத்தான்) 'கதாகதம்' என்று கூறுகிறார்.

**பொருத்தம்:** முதலிரண்டு ச்லோகங்களில் யக்ஞங்கள் மூலமாக தேவதைகளைப் பூஜிப்பவர்களான, பயன் மீது கருத்துள்ள மனிதர்களுக்குப் பயன் மேலுலகு சென்று வருதல் என்று கூறிவிட்டு, அவர்களைக் காட்டிலும் மாறுபட்டவர்களான தமது அனந்ய ப்ரேமை மிகுந்த பக்தர்கள் நிஷ்காமமாக உபாஸனை செய்வதன் பயனாக அவர்களுடைய யோகக்ஷேமத்தைத் தாமே ஏற்றுக் கவனிப்பதாகக் கூறுகிறார்—

**अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते।**
**तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम्॥ २२॥**

**அநந்யாஸ்சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே ।**

**தேஷாம் நித்யாபி₄யுக்தாநாம் யோகக₃க்ஷேமம் வஹாம்யஹம் ॥ 22 ॥**

***அநந்யா:*** – அனன்ய (வேறு எதிலும் நாட்டமில்லாது பகவான் ஒருவரிடமே) ப்ரேமை கொண்டவர்களான, ***யே ஜநா:*** – எந்த பக்தர்கள், ***மாம்*** – பரமேசுவரனான என்னை, ***சிந்தயந்த:*** – த்யானித்துக் கொண்டு, ***பர்யுபாஸதே*** – எவ்விதப் பயனையும் எதிர்பார்க்காமல் உபாஸிக்கின்றனரோ, ***நித்யாபி₄யுக்தாநாம்*** – இடைவிடாது என்னையே நினைத்துக் கொண்டிருக்கின்ற, ***தேஷாம்*** – அவர்களுடைய, ***யோகக₃க்ஷேமம்*** – யோகக்ஷேமத்தை (பகவானை அடைவதற்கான யோகத்திற்குரிய ஸாதனங்களை), ***அஹம்*** – நானே, ***வஹாமி*** – அடையச் செய்கிறேன்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வேறு எதிலும் நாட்டமில்லாது பகவான் ஒருவரிடமே அநன்ய ப்ரேமை கொண்டவர்களான எந்த பக்தர்கள் பரமேசுவரனான என்னை த்யானித்துக் கொண்டு எவ்விதப் பயனையும் எதிர்பார்க்காமல் உபாஸிக்கின்றனரோ, இடைவிடாது என்னையே நினைத்துக் கொண்டிருக்கின்ற அவர்களுடைய யோகக்ஷேமத்தை (பகவானை அடைவதற்கான யோகத்திற்குரிய ஸாதனங்களை) நானே அடையச் செய்கிறேன்.

**கேள்வி:** 'அநந்யா:' என்பது எத்தகைய பக்தர்களுக்கு அடைமொழி?

**பதில்:** உலகியலில் கிடைக்கக்கூடிய எல்லா போகங்களிலும் உள்ள ஆசையைத் துறந்து, பகவான் ஒருவரிடம் மட்டும் அசையாததும், உறுதியானதுமான பேரன்பு பூண்டு, ஒரு கணம்கூட பகவானுடைய பிரிவைப் பொறுக்க முடியாதவர்களான, பகவானைத் தவிர வேறு எந்த தெய்வத்தையும் தொழாது, பகவானையே ஒரே புகலாகவும், பரமகதியென்றும், பரமப்ரேமைக்குரியவர் என்றும் ஈடுபட்டிருப்பவர்களை 'அநந்யா:' (அநன்ய ப்ரேமை கொண்ட) என்ற அடைமொழியால் குறிக்கிறார்.

**கேள்வி:** 'மாம்' என்றால் இங்கே என்ன பொருள்? அவரை த்யானித்துக் கொண்டே பற்றின்றி உபாஸிப்பது என்றால் என்ன?

**பதில்:** இங்கு 'மாம்' என்ற சொல் ஸகுணரான பகவான் புருஷோத்தமனைக் குறிக்கிறது. அவருடைய குணங்கள், ப்ரபாவங்கள், தத்வம், ரஹஸ்யம் இவற்றை அறிந்து, சென்றாலும், இருந்தாலும், உட்கார்ந்தாலும், எழுந்திருந்தாலும், உறங்கினாலும், விழித்திருந்தாலும், தனிமையில் ஸாதனை புரியும்போதும் எக்காலத்திலும் இடைவிடாது தொடர்பு அறுந்து போகாமல் பகவானைச் சிந்தித்துக் கொண்டு அவருடைய ஆணையை ஏற்றுப் பற்றின்றி அவருடைய த்ருப்திக்காகச் செயல்புரிந்து கொண்டே இருப்பதுதான் 'த்யானித்துக் கொண்டே உபாஸிப்பது' ஆகும்.

**கேள்வி:** 'எப்பொழுதும் இடைவிடாது பகவானை சிந்தனை செய்து கொண்டிருக்கும் பக்தர்கள் அவரை அடைவதற்கான யோகத்திற்குரிய யோகக்ஷேமத்தை நானே அடையச் செய்கிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கையில் இல்லாததைப் பெறுவது 'யோகம்'. கிடைத்ததைக் காப்பது 'க்ஷேமம்'. பகவானை அடைவதற்காக அவர்களுக்கு எந்த ஸாதனை கிடைத்திருக்கிறதோ, அதை அனைத்துவிதமான இடையூறுகளிலிருந்தும் மீட்டுக் காப்பதும், எந்த ஸாதனைகள் குறைவாக இருக்கின்றனவோ அவற்றைச் சேர்த்துக் கொடுத்து அவர்கள் தம்மை அடையச் செய்வதும்தான் ப்ரேமை உடைய பக்தர்களுடைய யோகக்ஷேம நிர்வாஹம் ஆகும். பக்தனான ப்ரஹ்லாதனுடைய வாழ்க்கை இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். ஹிரண்யகசிபுவினால் ப்ரஹ்லாதனுடைய ஸாதனைகளில் எத்துணைப் பெரிய இடையூறுகள் ஏற்பட்டனவோ, அவையெல்லாவற்றையும் பகவான் நீக்கி முடிவில் அவனைத் தம்மிடம் சேர்த்துக் கொண்டார்.

**கேள்வி:** பக்தி ஸாதனைகளுக்குரிய யோகக்ஷேமத்தை பகவான் நிர்வஹிக்கிறார் என்பது சரியே. நடைமுறை வாழ்க்கையின் யோகக்ஷேம நிர்வாஹத்தையும் செய்கிறாரா?

**பதில்:** அகில உலகிலும் உள்ள எண்ணிலடங்கா உயிர்களின் யோகக்ஷேமத்தை பகவானே கவனிக்கிறார். அவர்கள் பூஜிக்கிறார்களா, இல்லையா என்பதைப் பொருட்படுத்தாமல் தம் இயல்பாக மிகுந்த நன்மனத்தோடு அகில உலகத்தினுடைய யோகக்ஷேமத்தின் பொறுப்பையும் பகவான் தாமே ஏற்றுக் கொண்டு நடத்தி வருகிறார் என்றால், அநன்ய ப்ரேமை கொண்ட பக்தனின் நடைமுறை வாழ்க்கைப் பொறுப்பையும் ஏற்று நடத்துகிறார் என்று சொல்லவும் வேண்டுமோ? இங்கே முக்யக் கருத்து என்னவென்றால் அநன்ய ப்ரேமை மிகுந்த பக்தர்கள் என்றும் இடைவிடாது பகவானுடைய சிந்தனையில் மட்டும் ஈடுபட்டிருப்பார்கள். பகவானைத் தவிர வேறு எதைப் பற்றியும் சிறிது கூடக் கவலைப்பட மாட்டார்கள். அத்தகையவர்களுடைய முழுப் பொறுப்பையும் பகவான் ஏற்றுக் கொள்கிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தாயையே பற்றிக் கொண்டிருக்கும் சிறு குழந்தைக்குத் தாயாரை மட்டும்தான் தெரியும். தன் பொருட்களைக் காப்பாற்றும் வழியும் தெரியாது. தேவைப்படும் பொழுது அவற்றைப் பயன்படுத்தவும் தெரியாது. அதைப் பற்றிக் கவலைப்படுவதும் இல்லை. தாயார்தான் குழந்தைக்குரிய அத்தனைப் பொருட்களையும் சேர்த்துக் காப்பாற்றி, எப்பொழுது எது குழந்தைக்குத் தேவைப்படும் என்று கவனித்து அப்பொருளைத் தேடிக் கொண்டு வந்து கொடுக்கிறாள். இவ்விதம் என்றும் ஒன்றியுள்ள அநன்ய ப்ரேமை பூண்ட பக்தனுடைய வாழ்க்கையில் உலகியல் வாழ்வுக்கோ, பகவானுடைய உபாஸனைக்கோ தேவையான பொருட்களை பகவானே நிர்ணயிக்கிறார்; அவற்றைக் கொண்டு சேர்க்கிறார்; சேர்த்தவற்றைக் காப்பாற்றியும் கொடுக்கிறார்.

தாயை அண்டியிருக்கும் குழந்தையின் பொறுப்பைத் தாய் ஏற்கிறாள். அந்தக் குழந்தை என்ன கேட்கிறது என்பதைப் பற்றிக் கவனிப்பதில்லை. எதனால் குழந்தைக்கு நன்மை உண்டாகுமோ, அதையே செய்கிறாள். அவளைக் காட்டிலும் மிக அதிகமாக பகவானும் தம்மிடம் ப்ரேமை கொண்ட பக்தனுக்கு எது மிகவும் ஹிதமானதோ, அதைத் தாமே கவனித்து அதையே செய்கிறார். அந்த பக்தர்களுக்கு எப்பொழுது எந்தப் பொருள் தேவைப்படும், எவற்றைக் காப்பாற்றிக் கொடுக்க வேண்டும் என்பதை அவரே நிர்ணயிக்கிறார். அத்தகைய பகவானுடைய நிர்ணயம் மங்களமே நிறைந்ததாக இருக்கும். பகவானே யோகம், க்ஷேமம் இரண்டின் பொறுப்பையும் நிச்சயம் நிர்வஹிக்கிறார். அதில் உலகியல் – ஆன்மிகம் என்றெல்லாம் எவ்விதப் பாகுபாடும் கிடையாது. ஒன்று கிடைத்தது, ஒன்று கிடைக்கவில்லை என்ற பேச்சும் கிடையாது. எந்தப் பொருள் கிடைப்பதாலோ அல்லது இருப்பதாலோ, பகவானை மறந்துவிட்டு மனிதன் விஷய போகங்களில் சிக்கிக் கொள்கிறானோ, எதனால் மனிதர்களுடைய உண்மையான பகவத்ப்ராப்தி ரூபமான யோகக்ஷேமத்திற்கு தடங்கல் உண்டாகிறதோ, அவற்றைக் கிடைக்காமல் செய்வதும், காப்பாற்றாமல் விடுவதும்தான் உண்மையான யோகக்ஷேம நிர்வாஹம் ஆகும். அவ்வாறே எவை இல்லாவிட்டால், எவற்றைக் காப்பாற்றாவிட்டால் பகவானுடைய நினைவுக்கு இடையூறு நேருமோ, பக்தனுடைய உண்மையான நலன் பெருகும் வகையில், அதைக் காக்கும் வகையிலும் இடையூறு நேருமோ, அந்த நன்மைக்குரிய பொருட்களைச் சேர்ப்பதும், காப்பதும்தான் உண்மையான யோகக்ஷேமம் ஆகும்.

அநன்யமாக வேறு எதிலும் நாட்டம் கொள்ளாமல், எப்பொழுதும் தம்மையே நினைத்துக் கொண்டிருக்கின்ற பக்தியுள்ளவனுடைய உண்மையான நலனையும், உண்மையான யோகக்ஷேமத்தின் பாரத்தையும் பகவான் சுமக்கிறார் என்றால், அவனுடைய நலத்திற்கு ஏற்புடைய எல்லாப் பொருட்களையும் சேர்த்துக் காப்பது என்ற குறிக்கோளுடன் பகவான் தாமே உலகியல் பொருட்களாயினும், ஸாதனைக்குரியவையாயினும் அவற்றைத் தேடித் தந்து காப்பாற்றித் தருகிறார் என்று பொருள். இதிலிருந்து நிச்சயம் தெரிந்து கொள்ளவேண்டியது என்னவென்றால் எவன் பகவானையே புகலாகக் கொண்டு, வேறு சிந்தனையின்றி பகவானையே ப்ரேமையுடன் இடைவிடாது சிந்தனை செய்து கொண்டு எல்லாக் கடமைகளையும் ஆற்றுகிறானோ, வேறு எந்த விஷயத்திலும் ஆஸ்யோ, பற்றோ, தேவையோ கொள்வதில்லையோ, அவனுடைய வாழ்க்கையை நிர்வஹிக்கும் எல்லாப் பொறுப்பும் பகவானிடம் உள்ளது. அவர் ஸர்வ வல்லமை படைத்தவர்; எல்லாம் அறிந்தவர்; எல்லாவற்றையும் கவனிப்பவர்; உற்ற நண்பர். அந்த பகவான் தம் பக்தனின் எல்லாவிதமான யோகக்ஷேமத்தையும் நடத்துகிறார். ஆகவே, அதில் ஒருபோதும் தவறே ஏற்படாது. நேர்மாறான விளைவு ஏதும் ஏற்படாது. பகவானால் நடத்தப் பெறும் யோகக்ஷேமம் மிகுந்த ஸுகத்தையும், அமைதியையும், அன்பையும், ஆனந்தத்தையும் அளிக்கவல்லது. பக்தனை வெகுவிரைவில் பகவானிடம் சேர்ப்பதில் மிகவும் உதவியாக இருக்கும். ஆகவே, இங்கு 'யோகம்' என்றால் பகவானை அடைவது என்றும், 'க்ஷேமம்' என்றால் அதற்குரிய ஸாதனைகளைக் காப்பது என்றும் பொருள் கூறப்பட்டது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொருத்தம்: முன் ச்லோகங்களில் பகவான் அகில உலகமும் தம் ஸ்வரூபம் என்று கூறினார். பிறகு யக்ஞங்கள் மூலமாகப் பிற தெய்வங்களுக்குச் செய்யப்படும் பூஜையும் வேறுவிதமாகத் தம்மையே பூஜை செய்வதாகும் என்று கூறினார். ஆனால் அதன் பயன் மேலுலகு சென்று திரும்ப வருதலாகிய சுழலில் சிக்க வைக்கும் என்றும், அநன்ய பக்தனின் உபாஸனை எவ்வாறு பக்தனைத் தம்மையே அடையச் செய்யும் என்றும் விளக்குகிறார்—

**येऽप्यन्यदेवता भक्ता यजन्ते श्रद्धयान्विताः।**
**तेऽपि मामेव कौन्तेय यजन्त्यविधिपूर्वकम्॥ २३॥**

**யேऽப்யந்யதே₃வதா ப₄க்தா யஜந்தே ஶ்ரத்₃த₄யாந்விதா: ।**
**தேऽபி மாமேவ கௌந்தேய யஜந்த்யவிதி₄பூர்வகம் ॥ 23 ॥**

**கௌந்தேய** – அர்ஜுன! **யே ப₄க்தா:** – பயனை எதிர்பார்ப்பவர்களான எந்த பக்தர்கள், **ஶ்ரத்₃த₄யா** – ச்ரத்தையோடு, **அந்விதா: அபி** – கூடியவர்களாக இருந்தபோதிலும், **அந்ய–தே₃வதா:** – மற்ற தேவதைகளை, **யஜந்தே** – வழிபடுகிறார்களோ, **தே அபி** – அவர்களும், **மாம் ஏவ** – என்னையே, **யஜந்தி** – வழிபடுகிறார்கள். (ஆனால் அவர்களுடைய வழிபாடு), **அவிதி₄ பூர்வகம்** – விதிமுறைப்படி உள்ளதன்று (அஞ்ஞானம் நிறைந்தது).

அர்ஜுன! பயனை எதிர்பார்ப்பவர்களான எந்தப் பக்தர்கள் ச்ரத்தையோடு கூடியவர்களாக இருந்தபோதிலும் மற்ற தேவதைகளை வழிபடுகிறார்களோ, அவர்களும் என்னையே வழிபடுகிறார்கள். ஆனால் அவர்களுடைய வழிபாடு விதிமுறைப்படி உள்ளதன்று (அஞ்ஞானம் நிறைந்தது).

**கேள்வி:** 'ஶ்ரத்தயாந்விதா:' என்றால் என்ன பொருள்? இங்கே இந்த அடைமொழி எதற்கு?

**பதில்:** வேதங்களிலும், சாஸ்த்ரங்களிலும் வர்ணிக்கப்படும் தேவதைகள், அவர்களுடைய உபாஸனை, ஸ்வர்கம் முதலிய போகங்களை அடையச் செய்கின்ற அதன் பயன்கள் – இவற்றில் பெருமதிப்பும், நம்பிக்கையும் கொள்பவர்கள் 'ஶ்ரத்தயாந்விதா:' எனப்படுவர். ச்ரத்தையில்லாமல் பகட்டாக யக்ஞம் முதலிய கர்மங்களால் தெய்வங்களைப் பூஜிப்பவர்கள் இத்தரத்தில் சேர்ந்தவர்கள் அல்லர். அவர்கள் அஸுர ப்ரக்ருதியுள்ளவர்களின் தரத்தைச் சார்ந்தவர்களாக இருப்பர்.

**கேள்வி:** இத்தகையவர்கள் மற்ற தெய்வங்களைப் பூஜிப்பது என்றால் என்ன? அது பகவானுடைய விதிமுறையற்ற பூஜையாகும் என்று சொல்வானேன்?

**பதில்:** எந்த ஆசை நிறைவேறுவதற்காக எந்த தெய்வத்தைப் பூஜிக்கலாம் என்று சாஸ்த்ரங்களில் முறை வகுக்கப்பட்டிருக்கிறதோ, அந்த தெய்வங்களை அந்த முறைப்படி, ச்ரத்தையுடன் யக்ஞம் முதலியவைகளைச் செய்து பூஜிப்பதுதான் 'மற்ற தெய்வங்களைப் பூஜிப்பது' ஆகும். எல்லா தெய்வங்களுமே பகவானுடைய அங்கங்கள்தாம். பகவானே எல்லா தெய்வங்களுக்கும் யஜமானன். உண்மையில் பகவான்தான் அந்தந்த தெய்வங்களின் ரூபத்தில் வெளிப்படுகிறார். இந்த உண்மையறியாது அந்த தெய்வங்கள் பகவானிடமிருந்து வேறுபட்டவரென நினைத்து, பயனில் பற்றுடன் அந்த தெய்வங்களைப் பூஜிப்பதுதான் பகவானுக்குச் செய்யும் விதிமுறையற்ற பூஜையாகும்.

**கேள்வி:** மற்ற தெய்வங்களுக்கு எப்படிப் பூஜை செய்தால் பகவானை முறைப்படி பூஜை செய்தது ஆகும்? அதன் பயன் என்ன?

**பதில்:** மற்ற தெய்வங்களும் பகவானுடைய அங்கங்களானதால் எல்லா தெய்வங்களுமே பகவானுடைய ஸ்வரூபங்கள்தாம். இப்படி அறிந்து கொண்டு பகவானை அடைவதற்காக,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நிஷ்காமமாக அந்த தெய்வங்களை சாஸ்த்ர முறைப்படி, ச்ரத்தையுடன் பூஜிப்பது 'அந்த தெய்வங்களைப் பூஜிப்பதன் மூலம் பகவானை முறைப்படி பூஜிப்பது' ஆகும். இதன் பயன் பகவானை அடைவதே.

ரந்திதேவ மஹாராஜன் அதிதிகளையும், தம்மிடம் வந்தவர்களையும் பகவானுடைய ஸ்வரூபம் என்றே மதித்து, தம் பசியைப் பொறுத்துக் கொண்டு, அன்னதானம் செய்து பற்றின்றி பகவானைப் பூஜித்து வந்தார். அதன் பயனாக அவர் பகவானை அடைந்துவிட்டார். அதுபோல், எந்த மனிதனும் தெய்வம், குரு, அந்தணர், தாய்–தந்தையர், அதிதி, தேடி வந்தவர் முதலிய எல்லோரையும் பகவானுடைய ஸ்வரூபம் என்றே நினைத்து, பகவானுடைய த்ருப்திக்காக, அவருடைய ஆணைப்படி, அவர்கள் எல்லோருக்கும் ஸேவை முதலியனவற்றைச் செய்தால், அவர்களுக்குச் செய்த ஸேவை முறைப்படி பகவானுக்குச் செய்த பூஜை ஆகும். அதன் பயன் பகவானை அடைவது ஆகும்.

இந்தத் தத்வத்தைப் புரிந்து கொள்ளாமல் பயனில் பற்றுக் கொண்டு ச்ரத்தையுடனும், ப்ரேமையுடனும் மற்ற தெய்வங்களுக்கான முறையில் செய்யப்படும் வழிபாடு பாவனையில் குறைபாடு உள்ளது ஆகும். உண்மையில் பகவான்தான் எல்லா யக்ஞங்களையும் ஏற்கிறார். எல்லாவற்றிற்கும் அதிபர். எல்லா ஸ்வரூபங்களாகவும் அவரே இருக்கிறார். ஆகவே, மேலே சொன்னவிதம் செய்யப்பட்ட பூஜை, ஸேவைகூட அவரையே சென்றடையும். ஆயினும் செய்கிறவனின் பாவனைக் குறைவினால், அது பகவானுக்கு முறைப்படி செய்த பூஜை ஆகாது. அதனால் அவன் பகவானை அடையமாட்டான்; ஸ்வர்கத்தை அடைவான். பகவத் ஸ்வரூபத்தைச் செவ்வனே அறியாத குறையினால், பயனில் இவ்வளவு பெரிய வேறுபாடு ஏற்படுகிறது.

**பொருத்தம்:** மற்ற தெய்வங்களுக்குச் செய்யப்படும் பூஜை பகவானுக்கு முறைப்படி செய்யப்பட்ட பூஜை ஆகாது. அவ்வாறு வழிபடுபவர்கள் பகவானை அடைதலாகிய உயர்ந்த பயனைப் பெறுவதிலிருந்து எவ்வாறு வஞ்சிக்கப்படுகின்றனர் என்பதை மிகத் தெளிவாக இனி விளக்குகிறார்—

**अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च।**
**न तु मामभिजानन्ति तत्त्वेनातश्च्यवन्ति ते॥ २४॥**

**அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் பே₄ாக்தா ச ப்ரபு₄ரேவ ச ।**
**ந து மாமபி₄ஜாநந்தி தத்த்வேநாதஶ்ச்யவந்தி தே ॥ 24 ॥**

**ஹி** – ஏனெனில், **ஸர்வயஜ்ஞாநாம்** – எல்லா யாகங்களையும், **பே₄ாக்தா ச** – ஏற்றுக் கொள்பவனும், **ப்ரபு₄: ச** – தேவர்களை அடக்கி ஆளும் மஹேசுவரனும், **அஹம் ஏவ** – நானே. **து** – ஆனால், **தே** – அவர்கள், **மாம்** – பரமாத்மாவான என்னை, **தத்த்வேந** – இந்தத் தத்வரீதியில், **ந அபி₄ஜாநந்தி** – அறிவதில்லை. **அத:** – ஆகையால், **ச்யவந்தி** – வீழ்ச்சி அடைகிறார்கள் (அதாவது மீண்டும் பிறவியை அடைகிறார்கள்).

ஏனெனில் எல்லா யாகங்களையும் ஏற்றுக் கொள்பவனும், தேவர்களை அடக்கி ஆளும் மஹேசுவரனும் நானே. ஆனால் அவர்கள் பரமாத்மாவான என்னை இந்தத் தத்வரீதியில் அறிவதில்லை. ஆகையால் வீழ்ச்சி அடைகிறார்கள் (மீண்டும் பிறவியை அடைகிறார்கள்).

**கேள்வி:** பகவான்தான் எல்லா யக்ஞங்களையும் ஏற்பவர். தேவர்களை அடக்கியாளும் மஹேசுவரன் என்று எப்படிக் கூறலாம்?

**பதில்:** இந்த அகில உலகமும் பகவானுடைய விராட் ஸ்வரூபம். ஆகவே வெவ்வேறு யக்ஞங்கள், பூஜைகள் இவற்றை ஏற்பவர்களான எல்லா தெய்வங்களும் பகவானுடைய அங்கங்களே. பகவான்தான் அவர்களுக்கெல்லாம் ஆத்மா *(10/20)*. ஆகவே, அந்த தெய்வங்களின் வடிவங்களில் இருந்து கொண்டு பகவானே எல்லா யக்ஞங்களையும் ஏற்கிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பகவான்தான் தம்முடைய யோக சக்தியின் மூலம் அகில உலகத்தையும் படைத்துக் காத்து ப்ரளயத்தில் ஒடுங்க வைத்து எல்லோரையும் தக்கபடி கட்டுப்பாட்டோடு நடத்துகிறார். அவரே இந்த்ரன், வருணன், யமன், ப்ரஜாபதி, இன்னும் உலகைக் காக்கும் தெய்வங்கள் எல்லோரையும் நியமிக்கிறவர். ஆகவே அவரே உரியவர் – ப்ரபு – மஹேஶ்வரன் (5/29).

**கேள்வி:** இங்கு 'து' என்பதற்குப் பொருள் என்ன?

**பதில்:** இப்படி மேலே சொன்னவாறு இருந்தும்கூட, பகவானுடைய பெருமையை அறிவதில்லையே! இது எத்தகைய அறியாமை! 'து' என்பதன் பொருள் இதுதான்.

**கேள்வி:** 'அவர்கள்' என்று யாரைக் குறிப்பிடுகிறார்? 'அவர்கள் பகவானைத் தத்வரீதியாக அறிவதில்லை' என்றால் என்ன பொருள்?

**பதில்:** முன் ச்லோகத்தில் சொல்லப்பட்டபடி, மற்ற தெய்வங்களைப் பூஜிக்கும்போது பயனில் கருத்துடன், விதிமுறையின்றி பகவானைப் பூஜை செய்கின்ற மனிதர்களை 'அவர்கள்' என்று குறிப்பிடுகிறார். 9/16 முதல் 9/19 வரை கூறப்பட்ட பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், ஸ்வரூபம் இவற்றை அறிந்து கொள்ளாததால் பகவான்தான் எல்லா யக்ஞங்களையும் ஏற்பவர், எல்லா உலகங்களுக்கும் ஈசுவரன் என்பதை அறிவதில்லை. இந்த அறியாமையே, 'பகவானைத் தத்வரீதியாக அறியாமை' என்பதன் பொருள்.

**கேள்வி:** இங்கு 'அத:' என்றால் என்ன பொருள்? வீழ்ச்சியடைகிறார்கள் என்றால் எப்படி?

**பதில்:** பகவானைத் தத்வரீதியாக அறியாத காரணத்தினால் அந்த மனிதர்கள் பகவானை அடைவது என்ற உயர்ந்த பயனைப் பெறாமல் வஞ்சிக்கப்படுகிறார்கள். ஸ்வர்கம் அடைதல் எனும் சிறு பயனையே பெறுகிறார்கள். மேலுலகு சென்று வருதலாகிற அதாவது பிறப்பிறப்பு எனும் சுழலில் சிக்குகிறார்கள்.

**பொருத்தம்: பகவானுடைய பக்தர்கள் பிறப்பிறப்பிற்கு ஆட்பட மாட்டார்கள்; மற்ற தெய்வங்களை உபாஸிப்பவர்கள் பிறப்பிறப்பிற்கு ஆட்படுவார்கள் என்றால் இதற்குக் காரணம் உபாஸிக்கப்படும் தெய்வத்தின் தன்மையிலும், உபாஸகனுடைய பாவனையிலும் இருந்து விளையும் வெவ்வேறான பயன்களே என்று இனிக் கூறுகிறார்—**

**यान्ति देवव्रता देवान्पितॄन्यान्ति पितृव्रताः ।**
**भूतानि यान्ति भूतेज्या यान्ति मद्याजिनोऽपि माम्॥ २५ ॥**

**யாந்தி தே₃வவ்ரதா தே₃வாந்பித்ரூந்யாந்தி பித்ருவ்ரதா: ।**

**பூ₄தாநி யாந்தி பூ₄தேஜ்யா யாந்தி மத்₃யாஜிநோऽபி மாம் ॥ 25 ॥**

**தே₃வவ்ரதா:** – தேவதைகளை வழிபடுபவர்கள், **தே₃வாந்** – தேவதைகளை, **யாந்தி** – அடைகிறார்கள். **பித்ருவ்ரதா:** – பித்ருக்களை வழிபடுபவர்கள், **பித்ரூந்** – பித்ருக்களை, **யாந்தி** – அடைகிறார்கள். **பூ₄தேஜ்யா:** – பூதங்களை வழிபடுபவர்கள், **பூ₄தாநி** – பூதங்களை, **யாந்தி** – அடைகிறார்கள். (ஆனால்), **மத்₃யாஜிந:** – என்னை வழிபடுபவர்கள், **மாம் அபி** – என்னையே, **யாந்தி** – அடைகிறார்கள். (ஆகவே என் பக்தர்களுக்கு மறுபிறவி கிடையாது.)

தேவதைகளை வழிபடுபவர்கள் தேவதைகளை அடைகிறார்கள். பித்ருக்களை வழிபடுபவர்கள் பித்ருக்களை அடைகிறார்கள். பூதங்களை வழிபடுபவர்கள் பூதங்களை அடைகிறார்கள். ஆனால் என்னை வழிபடுபவர்கள் என்னையே அடைகிறார்கள். (ஆகவே என் பக்தர்களுக்கு மறுபிறவி கிடையாது).

**கேள்வி:** 'தேவவ்ரதா:' என்றால் யார்? அவர்கள் தேவர்களை அடைவார்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** தேவதைகளைப் பூஜிப்பது, அந்த பூஜைக்குரிய விதிமுறைகளைக் கடைப்பிடிப்பது, அவர்களின் பொருட்டு யக்ஞம் முதலியவற்றைச் செய்வது, அவர்களுக்குரிய மந்த்ரங்களை ஜபிப்பது, அவர்களுக்காக அந்தணர்களுக்கு விருந்தளிப்பது முதலியவை தேவர்களின் பொருட்டுச் செய்யப்படும் வ்ரதங்கள் ஆகும். இவற்றைக் கடைப்பிடிப்பவர்களை 'தேவவ்ரதா:' என்று கூறுகிறார். இவர்கள் தம் உபாஸனையின் பயனாக அந்த தேவதைகளின் உலகங்களையோ, அவர்களுக்குரிய போகங்களையோ, அவர்களைப் போன்ற வடிவங்களையோ பெறுவார்கள். இதுவே 'தேவர்களை அடைவது' ஆகும்.

**கேள்வி:** *3/11லும், 4/25லும் தெய்வபூஜை மங்களத்திற்குக் காரணமாகும் என்று சொல்லப்பட்டதே! இங்கு 20,21,24களில் அவற்றின் பயன் அநித்யமான ஸ்வர்கத்தை அடைவது; பிறப்பிறப்பாகிய சுழற்சியில் சிக்கிக் கொள்வது என்று கூறுகிறாரே, என்ன காரணம்?*

**பதில்:** மூன்றாவது அத்யாயத்திலும், நான்காவது அத்யாயத்திலும் நிஷ்காமமாக தெய்வ பூஜை செய்வதைப் பற்றிச் சொல்லப்பட்டது. அதன் பயன் பரமகல்யாணம் என்று கூறினார். ஏனெனில் நிஷ்காமமாகச் செய்யப்படும் தேவபூஜை மனதைச் சுத்தப்படுத்துமாதலால், அதன் பயன் பரமகல்யாணம் ஆகும். இங்கோ பயனில் கருத்துடன் செய்யும் பூஜையைப் பற்றிப் பேச்சு. ஆகவே, இதன் பயன் அந்தந்த தெய்வங்களை அடைவதோடு சரியென்று கூறலாம். அதிகமாகப் போனால் அந்த தெய்வங்களின் ஆயுள் வரை அந்த லோகங்களில் வாழ இயலும். பிறகு அவர்கள் திரும்பி வருவது நிச்சயம்.

**கேள்வி:** *'பித்ருவ்ரதா:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? அவர்கள் பித்ருக்களை அடைவார்கள் என்றால் என்ன பொருள்?*

**பதில்:** பித்ருக்களுக்காக, குல முன்னோர்களுக்காக முறைப்படி ச்ராத்தம், தர்ப்பணம் முதலியவை செய்வது, அவர்களுக்காக அந்தணர்களுக்கு அன்னமிடுவது, ஹோமம் செய்வது, ஜபம் செய்வது, ஸ்தோத்ர பாடம் படிப்பது, பூஜிப்பது மேலும் அவர்களுக்காக சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட வ்ரதங்களையும், கட்டுப்பாடுகளையும் கடைப்பிடிப்பது – இவையெல்லாம் பித்ருக்களுக்கான வ்ரதங்கள். இவற்றைக் கைக் கொள்பவர்கள் பித்ருக்களை பூஜிப்பவர்கள். பயனில் பற்றுடன் இந்த வ்ரதங்களைக் கடைப்பிடிப்பவர்கள், இறந்த பிறகு பித்ருலோகம் செல்கிறார்கள். அங்கு பித்ருக்கள்போல வடிவம் பெற்று அவர்கள் அனுபவிக்கும் போகங்களை அனுபவிக்கிறார்கள். இதுதான் பித்ருக்களை அடைவதாகும். இதுவும் அதிகமாகப் போனால், தெய்வங்களான பித்ருக்களின் ஆயுட்காலம்வரை அங்கு இருக்கலாம். பிறகு முடிவில் திரும்பி வரவேண்டியதுதான். அதாவது பிறவி ஏற்படுகிறது.

இப்படியெல்லாம் கூறுவதனால் தேவ பூஜையோ, பித்ரு ச்ராத்தமோ செய்யவேண்டியதில்லை என்று நினைக்கக் கூடாது. தேவர்களுக்கும், பித்ருக்களுக்கும் முறைப்படி தமது வர்ணாசிரம தர்மத்திற்கு ஏற்றவாறு தகுதிப்படி எல்லோரும் கர்மங்களைச் செய்துதான் ஆகவேண்டும். ஆனால் அந்தப் பூஜையைப் பயனில் கருத்து வைத்துச் செய்தால், அதிகமாகப் போனால் அவை முன்பு சொன்னபடி பயனளித்து மறைந்துவிடும். செய்யவேண்டிய கடமை என நினைத்து, பகவானுடைய ஆணையென மதித்து, பகவானுக்குச் செய்யும் பூஜை என நினைத்துச் செய்தால், அது பகவானை அடைதல் என்னும் மிகப் பெரிய பயனை அளிக்கும். ஆகவே தேவ கர்மங்களையும், பித்ரு கர்மங்களையும் செய்யத்தான் வேண்டும். ஆனால் அவற்றை நிஷ்காமமாகச் செய்யவேண்டும் என்பதை முக்யமாக அறியவேண்டும்.

**கேள்வி:** *'பூதேஜ்யா:' என்றால் யார்? அவர்கள் பூதங்களை அடைவார்கள் என்றால் என்ன பொருள்?*

**பதில்:** 'பூதேஜ்யா:' என்பது ப்ரேதங்களையும், பூதங்களையும் பூஜை செய்பவர்களைக் குறிக்கிறது. அந்தப் பூஜைக்குரிய நியமங்களைக் கடைப்பிடித்து, அவற்றிற்காக ஹோமம், தானம் முதலியவற்றைச் செய்தால், அவர்களுக்கு அந்த பூதங்கள், ப்ரேதங்களுக்குரிய வடிவம், போகங்கள் ஆகியன கிடைக்கும். பூதங்களை அடைவது என்பது இதுதான். இப்படி

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பூதங்களையும், ப்ரேதங்களையும் பூஜிப்பது தாமஸ பூஜை ஆகும். அது பிறருக்கு இன்னல் விளைவிக்கும் பயன்களை அளிக்கும். அவற்றைச் செய்யக் கூடாது.

**கேள்வி:** இங்கே 'மத்யாஜிந:' என்றால் யார்? அவர்கள் பகவானை அடைவார்கள் என்றால் எப்படி?

**பதில்:** எவர்கள் பகவானுடைய ஸகுணமான ஆனால் உருவமற்ற அல்லது உருவமுள்ளதான எந்த ஸ்வரூபத்திற்காவது ஸேவை, பூஜை, பஜனம், த்யானம் செய்கிறார்களோ; எல்லாக் கர்மங்களையும் அவருக்கே அர்ப்பணம் செய்கிறார்களோ; பகவானுடைய நாமஜபம் செய்கிறார்களோ; குணகீர்த்தனம் செய்கிறார்களோ – இப்படிப் பலவிதமாக பக்தி ஸாதனை புரிகிறார்களோ, அவர்களை 'மத்யாஜிந:' என்று பகவான் கூறுகிறார். அவர்கள் பகவானுடைய திவ்யலோகத்திற்குச் செல்வார்கள். அவர் பக்கலில் இருப்பார்கள். பகவானுடைய வடிவத்தையும் பெறுவார்கள். பகவானிடமே ஒன்றி விடுவார்கள்.

**கேள்வி:** இந்த வாக்யத்தில் 'அபி' என்ற சொல்லை சேர்ப்பதன் கருத்து என்ன?

**பதில்:** என்னுடைய உருவமற்ற, உருவமுள்ள ஸ்வரூபத்தில், ஏதாவது ஒன்றை நிஷ்காமமாக உபாஸனை புரிபவர்கள் என்னை அடைவார்கள் என்று சொல்லவே வேண்டியதில்லை. ஆனால் பயனில் பற்று வைத்து உபாஸனை செய்பவர்களும் என்னை அடைவார்கள் என்று கூறுவதற்காகவே 'அபி' என்ற சொல்லைச் சேர்க்கிறார்.

**பொருத்தம்: பகவானுடைய பக்திக்கு பகவானையே அடைவது என்ற அரும்பெரும் பயன் இருந்தாலும்கூட, அதன் ஸாதனையில் ஒரு கஷ்டமும் கிடையாது; மிகவும் எளிதானது என்று பகவான் கூறுகிறார்—**

**पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्त्या प्रयच्छति।**
**तदहं भक्त्युपहृतमश्नामि प्रयतात्मनः॥ २६॥**

**பத்ரம் புஷ்பம் ப₂லம் தோயம் யோ மே ப₄க்த்யா ப்ரயச்ச₂தி ।**
**தத₃ஹம் ப₄க்த்யுபஹ்ருதமஶ்நாமி ப்ரயதாத்மந: ॥ 26 ॥**

**ய:** – எவன், **ப₄க்த்யா** – பக்தியோடு, **மே** – எனக்கு, **பத்ரம்** – இலை, **புஷ்பம்** – மலர், **ப₂லம்** – பழம், **தோயம்** – நீர் முதலியவற்றை, **ப்ரயச்ச₂தி** – அர்ப்பணம் செய்கிறானோ, **ப்ரயதாத்மந:** – தூயபுத்தியுடன் பயனை எதிர்பார்க்காமல் ப்ரேமை நிறைந்த அந்த பக்தனுடைய, **ப₄க்த்யுபஹ்ருதம்** – பக்தியுடன் அர்ப்பணம் செய்யப்பட்ட காணிக்கையான, **தத்** – அதை (இலை, மலர் முதலியவற்றை), **அஹம்** – நான் (ஸகுண ஸ்வரூபமாக வெளிப்பட்டு ப்ரியத்துடன்), **அஶ்நாமி** – அருந்துகிறேன்.

எவன் பக்தியோடு எனக்கு இலை, மலர், பழம், நீர் முதலியவற்றை அர்ப்பணம் செய்கிறானோ, தூயபுத்தியுடன் பயனை எதிர்பார்க்காமல் ப்ரேமை நிறைந்த அந்த பக்தனுடைய பக்தியுடன் அர்ப்பணம் செய்யப்பட்ட காணிக்கையான அதை (இலை, மலர் முதலியவற்றை) நான் (ஸகுண ஸ்வரூபமாக வெளிப்பட்டு ப்ரியத்துடன்) அருந்துகிறேன்.

**கேள்வி:** 'ய:' (எவன்) என்ற சொல்லைப் பயன்படுத்துவதன் கருத்து என்ன?

**பதில்:** வர்ணம், ஆசிரமம், ஜாதி என்ற பிரிவுகளில் யாராக இருந்தாலும் சரி, அவருக்கு ஓர் இலை (துளஸி), மலர், பழம், நீர் இவற்றை எனக்கு அர்ப்பணம் செய்யத் தகுதி உண்டு. பலம், வடிவழகு, செல்வம், வயது, ஜாதி, குணம், படிப்பு இக்காரணங்களால் யாரிடமும் உயர்வு, தாழ்வு என்ற வேற்றுமை கிடையாது. ஆனால் அர்ப்பணம் செய்பவர்களுடைய மனோபாவம் முக்யம். விதுரர், சபரி போன்று எப்பொழுதும் எவ்வகையிலும் அவர்கள் சுத்தமாகவும், அன்பு நிறைந்தவர்களாகவும் இருக்கவேண்டும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** பூஜைக்குரிய பல பொருட்களில் இலை, பூ, பழம், நீர் இவற்றை மட்டும் குறிப்பிட்டுச் சொல்வானேன். இவற்றை பக்தியோடு அர்ப்பணம் செய்யவேண்டும் என்றால் எப்படி?

**பதில்:** இங்கு இலை, பூ, பழம், நீர் என்று குறிப்பிடுவதற்குக் காரணம் இவை ஸாதாரண மக்களுக்குக்கூட முயற்சியில்லாமல், ஹிம்ஸையில்லாமல், பணச்செலவு இன்றி ஆயாசமில்லாமல் எளிதில் கிடைக்கக்கூடியவை. இப்படி எந்தப் பொருளையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்யலாம். பகவான் எல்லாவற்றையும் இயல்பாகப் பெற்றவர் (பூர்ணகாமர்). அவர் எந்தப் பொருளையும் எதிர்பார்க்கவில்லை. அவருக்கு ப்ரேமைதான் வேண்டும். என்னைப் போன்ற எளிய ஸாதாரண மனிதன் அர்ப்பணம் செய்கிற சிறிய பொருளைக்கூட பகவான் மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்கிறாரே! அவர் எவ்வளவு பெரியவர் என்ற பாவனை மிகுந்து, ப்ரேமையில் நெகிழ்ந்த மனமுடன், எந்தப் பொருளையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்வதுதான் 'பக்தியுடன் அர்ப்பணம் செய்வது' ஆகும்.

**கேள்வி:** 'ப்ரயதாத்மந:' என்றால் என்ன பொருள்? அப்படி ஏன் கூறவேண்டும்?

**பதில்:** எவருடைய உள்ளம் பரிசுத்தமானதோ, அவர் 'ப்ரயதாத்மா' 'அர்ப்பணம் செய்கிறவருடைய மனோபாவம் சுத்தமாக இல்லாவிட்டால், வெளிப்படையாக எவ்வளவு நல்ல ஆசாரம் உள்ளவரானாலும், எவ்வளவு உயர்ந்த மதிப்புள்ள பொருளை எனக்கு அர்ப்பணம் செய்தாலும், அதை நான் ஏற்கமாட்டேன். துர்யோதனன் அழைப்பை ஏற்றுக் கொள்ளாது, மனோபாவம் சுத்தமாக இருந்த விதுரர் வீட்டுக்குச் சென்று அன்புடன் உணவருந்தினேன்' என்கிறார் பகவான்.

'ஸுதாமா (குசேலர்) கொடுத்த அவலை மிகவும் விருப்பத்துடன் ஏற்றுச் சுவைத்து உண்டேன். த்ரௌபதியின் பாத்திரத்தில் ஒட்டிக் கொண்டிருந்த கீரையை உண்டேன். உலகமே த்ருப்தி அடைந்தது. கஜேந்த்ரன் அர்ப்பணம் செய்த பூவை அவனிருக்கும் இடம் சென்று ஏற்றுக் கொண்டேன். சபரியின் குடிசைக்குச் சென்று அவள் அளித்த கனிகளை ஏற்றுக் கொண்டேன். ரந்திதேவன் அளித்த நீரையும் ஏற்றுக் கொண்டு செய்யவேண்டிய கடமையைச் செய்தவனாக அவனை ஆக்கினேன். இவ்விதம் ஒவ்வொரு பக்தனும் அன்புடன் அர்ப்பணம் செய்வதையும் நான் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்வேன்' என்கிறார்.

இந்த ஸந்தர்பத்திற்குப் பொருத்தமாக இந்த பக்தர்களின் சரித்ரங்களில் நடந்த நிகழ்ச்சிகளைச் சுருக்கமாக விவரிப்போம்.

## விதுரர்

பன்னிரண்டு ஆண்டுகள் காட்டில் வாழ்ந்து ஓர் ஆண்டு தலைமறைவாக இருந்து, கெடுவை முடித்துப் பின்னர்ப் பாண்டவர்கள் துர்யோதனனிடம் தமது ராஜ்யத்தைத் திருப்பிக் கொடுக்குமாறு கேட்டார்கள். துர்யோதனன் ராஜ்யத்தைத் திருப்பித் தர மறுத்துவிட்டான். அப்போது பாண்டவர்களின் சார்பில் பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் தூதராகக் கௌரவர்களிடம் சென்றார். வெளிப்பார்வைக்கு உபசாரம் செய்வது போலக் காட்டிக் கொள்வதற்காக, துர்யோதனன் ஸ்ரீக்ருஷ்ணனுக்குப் பெரிய வரவேற்பு ஏற்பாடு செய்தான். விருந்துக்கு அழைத்தான். ஸ்ரீக்ருஷ்ணன் மறுத்துவிட்டார். துர்யோதனன் அழைப்பை மறுத்ததற்கான காரணத்தைக் கேட்டான். ஸ்ரீக்ருஷ்ணன் பதில் சொன்னார்— "விருந்து இரண்டுவிதமாகும். எங்கே பேரன்பு உள்ளதோ, அங்கு எது கிடைத்தாலும் அதை மகிழ்ச்சியோடு உண்ணலாம். பசியின் கொடுமையால் உயிர் பிரியும் நிலை ஏற்பட்டால் எங்கே எது எந்த மனோபாவத்தில் வழங்கப்பட்டாலும், அதை ஏற்று வயிற்றை நிரப்பலாம். தற்சமயம் இந்த இரண்டு காரணங்களும் இல்லை. உன்னிடம் ப்ரேமை என்ற அம்சமே இல்லை. எனக்கோ பசியேயில்லை" என்றார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸம்ப்ரீதிபோ₄ஜ்யாந்யந்நாநி ஆபத்₃போ₄ஜ்யாநி வா புந: ।
ந ச ஸம்ப்ரீயஸே ராஜந்ந சைவாபத்₃க₃தா வயம் ॥

(மஹா. உத்₃யோக₃ பர்வம் 91/25)

இவ்விதம் சொல்லிவிட்டு, ஸ்ரீக்ருஷ்ணன் அழையாவிருந்தினராக பக்தனான விதுரர் வீட்டிற்குச் சென்றார். பாட்டனார் பீஷ்மர், த்ரோணாசார்யார், க்ருபாசார்யார், பாஹ்லீகர் முதலிய பல பெரியோர்கள் விதுரர் வீட்டிற்குச் சென்று ஸ்ரீக்ருஷ்ணனைத் தம் வீட்டிற்கு அழைத்தனர். பகவான் யாருடைய வீட்டிற்கும் செல்லவில்லை. அவர் விதுரர் வீட்டிலேயே மிகவும் அன்புடன் அளிக்கப்பட்ட பொருட்களை (கூழை) அருந்தி அவரை க்ருதார்த்தர்‡ ஆக்கினார். 'து₃ர்யோத₄நகீ மேவா த்யாகீ₃, ஸாக விது₃ர க₄ர கா₂யோ' (துர்யோதனன் வீட்டு விருந்தை விடுத்து, விதுரர் வீட்டுக் கீரையை உண்டார்) என்ற வசனம் பலருக்கும் தெரியும்.

## ஸுதாமா (குசேலர்)

ஸுதாமா பகவான் ஸ்ரீக்ருஷ்ணனுடைய இளமைக்காலத்து நண்பர். இவரைக் குசேலர் என்றும் கூறுவர். இருவரும் உஜ்ஜயினியில் ஸாந்தீபனி முனிவரின் ஆசிரமத்தில் சேர்ந்து படித்தார்கள். ஸுதாமா வேதங்கள் அறிந்தவர், போகங்களில் பற்றற்றவர், அமைதியுள்ளவர், புலன்களை அடக்கியவர். படிப்பு முடிந்த பிறகு இருவரும் பிரிந்து தத்தம் வீடு சென்றனர்.

ஸுதாமா பரம ஏழை. ஒரு சமயம் தொடர்ந்து பல நாட்கள் இந்த அந்தணக் குடும்பத்தில் அன்னம் என்பது பார்க்கக் கூடக் கிடைக்கவில்லை. பாவம்! பசிக் கொடுமையின் காரணமாக அவர் மனையாளின் முகம் வாட்டமுற்றது. குழந்தைகளின் பரிதாப நிலையைக் கண்டு அவள் உள்ளம் குமுறியது. அவளுக்குத் தெரியும் – த்வாரகைக்கு அதிபதியான ஸ்ரீக்ருஷ்ண பகவான் தம் கணவருக்குத் தோழர் என்று. அவள் பயத்தினால் நடுங்கிக் கொண்டே கணவரிடம் வீட்டு நிலைமையை எடுத்துச் சொல்லி 'த்வாரகை சென்று வாருங்கள்' என்று வேண்டிக் கொண்டாள். அவளுக்குக் கணவரின் பற்றற்ற நிலை தெரியும். அதனால், "ப்ரபோ! உங்களுக்குச் செல்வத்தில் துளிகூட ஆசை கிடையாது என்பது எனக்குத் தெரியும். ஆயினும் பணம் இல்லாமல் இல்லறம் நடத்த முடியாதே! மிகவும் கடினமாயிற்றே! ஆகவே, நீங்கள் உங்களுடைய ப்ரியமான நண்பரைப் பார்க்கப் போவது அவசியம் என்றும், உசிதம் என்றும் எனக்குத் தோன்றுகிறது" என்று சொன்னாள்.

ஸுதாமா நினைத்தார்: 'பாவம், துயரம் தாங்காமல் இவள் கலக்கமுற்றுப் பணத்திற்காக என்னை அங்கு அனுப்ப விரும்புகிறாள்' என்று. இதற்காக நண்பருடைய வீட்டிற்குச் செல்வதில் அவருக்குத் தயக்கம்தான். அவர் சொன்னார்: "பேதையே! பணத்திற்காக நீ என்னை அங்கே அனுப்புகிறாயா? அந்தணன் என்றாவது பணத்திற்கு ஆசைப்படுவானா? பகவானை பஜனை பண்ணுவதுதான் நம்முடைய கடமை. பசி வந்தால் எங்கேயாவது பிச்சை எடுக்கலாமே!"

இதைக் கேட்ட அந்தணரின் மனையாள் சொன்னாள்: "நீங்கள் சொல்வது சரிதான். ஆனால் பிச்சை எடுப்பது கூட நடக்காது போலிருக்கிறதே. என் கந்தல் துணியையும், பசியினால் துடிக்கும் குழந்தைகளின் முகங்களையும் பாருங்கள். எனக்குப் பணம் வேண்டாம். அவரிடம் சென்று ராஜ்யத்தையோ, அளவற்ற செல்வத்தையோ கேளுங்கள் என்று நான் சொல்லவில்லை. கஷ்டமான இந்நிலையில் ஒரு தடவை அவரைப் போய் தர்சித்து வாருங்களேன் என்றுதானே கூறுகிறேன்!" போவதற்கு ஸுதாமா மிகவும் தயங்கினார். முடிவில், இதை ஒரு காரணமாகக் கொண்டு சென்றால், ஸ்ரீக்ருஷ்ணனுடைய பெறுதற்கரிய தர்சனம் கிடைக்குமே என்று நினைத்துப் போவதென்று தீர்மானித்தார். ஆனால் வெறும் கையுடன் போகலாமா? மனைவியிடம் கேட்டார்: 'இனியவளே! ஏதாவது அர்ப்பணம்

‡ க்ருதார்த்தர் – அடைய வேண்டிய பயனை அடைந்தவர்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



செய்யத்தக்க பொருள் வீட்டில் இருந்தால் கொண்டு வா.' கணவர் சொல்வது ந்யாயம்தான். ஆனால் அவளோ பாவம்! என்ன செய்வாள்? வீட்டில் ஒருமணி அரிசி கூடக் கிடையாது. மனையாள் பேசாமல் இருந்துவிட்டாள். ஆனால் ஒன்றும் கொடுக்காவிட்டால், தன் கணவர் கிளம்பமாட்டாரே என்று நினைத்து, அண்டை வீடுகள் நான்கிற்கு மிகவும் தயக்கத்துடன் சென்றாள். அவர்கள் பரிவோடு நான்குபிடி அவல் கொடுத்தனர். அதை ஒரு கந்தல் துணியில் ஒரு சிறு மூட்டையாகக் கட்டி, ஸ்ரீக்ருஷ்ணார்ப்பணம் என்று சொல்லிக் கணவரிடம் கொடுத்தாள்.

ஸுதாமா த்வாரகை சென்றார். விசாரித்துக் கேட்டு கொண்டே பகவானுடைய மாளிகையின் வாசல் வந்து சேர்ந்தார். இந்த விஷயத்தை மஹாகவியான நரோத்தமர் மிகவும் அழகாக வர்ணிக்கிறார். வாயிற்காப்பாளர்கள் ஸுதாமாவை மிகவும் மரியாதையுடன் அங்கேயே உட்கார வைத்துவிட்டுச் செய்தியைச் சொல்வதற்காக ப்ரபுவிடம் சென்று கூறினர்.

எங்கிருந்தோ வந்தார் அவர் ஊரின்பெயர் தெரியவில்லை;
அங்கமெலாம் புழுதி; அரையாடை ஒரே கந்தல்;
தலையில் ஒரு பாகையில்லை; உடம்பிலும் ஓர் ஆடையில்லை;
கால்களோ மிதியடியைக் கண்டதில்லை; ஒல்லியுடல்;
மாளிகையைக் கண்டுகண்டு மருட்சிமிகக் கொள்ளுகிறார்;
ஏழைப்பங்காள! தங்கள் திருப்பெயரைக் கூறுகிறார்;
வாசல்வந்த அந்தணர்தம் பேர்தான் 'ஸுதாமா' என்றார்.

பகவான், 'ஸுதாமா' என்ற பெயரைக் கேட்டதும் தம்மை மறந்தார். படபடப்புடன் எழுந்தார். கிரீடம் அங்கேயே இருந்தது. மேல் பீதாம்பரம் நழுவி விழுந்தது. காலணிகளையும் அணியவில்லை. ஓடோடி வாசலுக்கு வந்தார். பகவான் வெகுதூரத்திலேயே ஸுதாமா வினுடைய பரிதாப நிலையைக் கண்டார்.

ஓடிவந்து பார்த்ததுமே உளமுருகிக் கதறுகிறார்:
'நண்பரே! இத்தனைநாள் வாராமல் இருந்தீரே!
கால்எல்லாம் முள்குத்திக் காயங்கள்உண் டாயினவே!
என்றுரைத்துக் கண்ணீரால் பாதங்களைக் கழுவிவிட்டார்.
பக்கத்தில் குடத்துநீர் பயனின்றி இருந்ததுவே.
மார்போடு அணைத்துஅவரை மாளிகைக்குள் அழைத்துவந்தார்.
சீர்மிகுந்த கட்டில்மிசை அமரவைத்துச் சிறப்புச்செய்தார்.
கமலத் திருக்கரத்தால் திருப்பாத பூசைசெய்தார்.
அமலன்தம் தலைமீதில் அந்நீரைத் தெளித்துக்கொண்டார்.

பிறகு பகவான் தம் அன்புக்குரிய நண்பரின் மேனியில் திவ்ய பரிமளச் சந்தனம் பூசினார். நெற்றியில் கஸ்தூரி குங்குமம் இட்டார். அகர் மணம் நிறைந்த தூபம். நெய் தீபம் எல்லாம் காட்டிப் பூஜை செய்தார். சிறப்பான விருந்தளித்தார். தாம்பூலம் வழங்கினார். அந்தணர் ஸுதாமாவின் மேனி மிகவும் மெலிந்து, அழுக்கடைந்து இருந்தது. மேனி முழுவதும் நரம்புகள் புடைத்திருந்தன. பழைய கந்தல் துணியை உடுத்தி இருந்தார். என்றாலும் மஹாலக்ஷ்மியின் அவதாரமான ருக்மிணிதேவி தன்னுடைய தோழிகள்கூட சேடிகளுடன் ரத்னம் பதித்த பிடியுடைய சாமரங்களைக் கையிலேந்தி, பகவானுடைய உற்ற நண்பர் என்ற முறையில் அந்தப் பரம தரித்திரரான, யாசகம் வாங்க வந்த அந்தணருக்கு மிகுந்த பரிவுடன் அவற்றை வீசினாள். பணிவிடை செய்தாள். பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் ஸுதாமாவின் கைகளைத் தம் கைகளில் கோத்துக் கொண்டு இளமைக் காலத்திய இனிய கதைகளைப் பேச ஆரம்பித்தார்.

நண்பரை ப்ரேமை நிறைந்த பார்வையால் பார்த்துச் சிரித்துக் கொண்டே இவ்வாறு கேட்டார்: "நண்பரே! எனக்கு அளிப்பதற்காக ஏதாவது கொண்டு வந்திருப்பீரே! பக்தர்கள்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அன்புடன் அளிக்கும் சிறிய பொருளையும் நான் பெரிதும் மதிப்பேன். நான் அன்புக்காகத்தான் ஏங்குகிறேன். பக்தியில்லாதவன் கொடுக்கும் விலைமதிக்க முடியாத பொருள் என்னை மகிழ்விப்பதில்லை."

பத்ரம் புஷ்பம் ப₂லம் தோயம் யோ மே ப₄க்த்யா ப்ரயச்ச₂தி ।
தத₃ஹம் ப₄க்த்யுபஹ்ருதமஶ்நாமி ப்ரயதாத்மந: ॥
(ஸ்ரீமத்₃ப₄ாக₃வதம் 10/81/4)

பகவான் இவ்வளவு சொல்லிய பிறகும்கூட ஸுதாமா அவல் பொட்டலத்தை அளிக்கத் துணியவில்லை.

பகவானுடைய எல்லையற்ற அரசுச் செல்வத்தையும், வைபவத்தையும் பார்த்த ஸுதாமா, அவருக்கு அவலைக் கொடுக்க நாணமுற்றார்.

அப்போது எல்லோருடைய உள்ளங்களில் உள்ள விஷயங்களை அறிந்த பகவான், அந்தணர் தம்மிடம் வந்த காரணத்தைத் தெரிந்து கொண்டார். "இவர் என்னுடைய நிஷ்காம பக்தர். அன்புள்ள நண்பர். செல்வம் வேண்டுமென்று ஒரு நாளும் இவர் என்னைப் பூஜித்தவர் அல்லர். இப்பொழுதும் இவருக்கு ஒருவித ஆசையும் இல்லை. தன்னுடைய பதிவ்ரதையான மனைவியின் தூண்டுதலினால் என்னிடம் வந்திருக்கிறார். ஆகவே, இவருக்கு போகங்களையும் கொடுப்பேன், மோக்ஷத்தையும் அளிப்பேன், தேவர்களுக்கும் கிட்டாத அருள் புரிவேன்" என்று எண்ணினார் பகவான்.

இவ்விதம் நினைத்த பகவான், 'இது என்ன?' என்று அவருடைய கக்கத்தில் மறைத்து வைத்திருந்த அவல் பொட்டலத்தைப் பலவந்தமாகப் பற்றி இழுத்தார். பழைய கந்தல் துணியல்லவா! ஆகவே அது கிழிந்துவிட்டது. அவல் நாற்புறமும் சிதறியது. பகவான் மிகவும் ப்ரேமையுடன் நெகிழ்ந்து கூறினார்.

நந்வேதது₃பநீதம் மே பரமப்ரீணநம் ஸகே₂ ।
தர்பயந்த்யங்க₃ மாம் விஶ்வமேதே ப்ருது₂கதண்டு₃லா: ॥
(ஸ்ரீமத்₃ப₄ாக₃வதம் 10/81/9)

'நண்பரே! நீங்கள் எனக்குக் கொடுக்க வேண்டுமென்று அன்புடன் கொண்டு வந்த அவல் என்னை மிகவும் மகிழச் செய்கிறது. இந்த அவல் என்னை மட்டுமன்று. அகில உலகையும் த்ருப்தி அடையச் செய்யுமே!' என்று சொல்லிக் கொண்டே பகவான் அங்கே சிதறிய அவல்களைப் பொறுக்கிப் பொறுக்கி எடுத்து வாயில் போட்டுக் கொண்டு சுவைக்க ஆரம்பித்தார். பக்தன் அன்போடு கொண்டு வந்த காணிக்கையை இவ்விதம் உண்டு பகவான் தமது ஒப்பற்ற ப்ரேமையை வெளியிட்டார்.

சில நாட்கள் மிகவும் ஆனந்தத்துடன் அங்கே தங்கிவிட்டு ஸுதாமா தம் இல்லம் திரும்பினார். இங்கு வீடு அடியோடு மாறி இருந்தது. பகவானுடைய லீலையினால், இடிந்த குடிசை தங்கமாளிகை ஆகிவிட்டது. ஸுதாமா அது பகவானுடைய லீலை என்றறிந்து அதை ஏற்றுக் கொண்டார். அவர் மனதிற்குள் சொல்லிக் கொண்டார்— "தன்யனானேன். என்னுடைய நண்பரான பகவான் இப்படித்தான் யாசகனுக்குச் சொல்லாமல் கொள்ளாமல் மறைத்தே எல்லாம் அளித்து அவனுடைய விருப்பத்தை நிறைவேற்றுகிறார். ஆனால் எனக்குச் செல்வம் வேண்டாமே! எவ்வளவு பிறவிகள் எடுத்தாலும் அவற்றில் ஸ்ரீக்ருஷ்ணனே எனக்கு நண்பராக, துணைவராக, தோழராக அமைய வேண்டும். நான் அவருடைய பக்தனாக இருக்க வேண்டும் என்றுதானே வேண்டிக் கொண்டிருக்கிறேன். எனக்கு இச்செல்வம் வேண்டாமே! எனக்கு ஒவ்வொரு பிறவியிலும் அந்த அநந்த கல்யாண குணங்கள் நிறைந்த பகவானிடம் தூய்மையான பக்தி வேண்டும். அவருடைய பக்தர்களின் சேர்க்கை வேண்டும். அவர் தயவு செய்து செல்வம் கொடுக்காமல் இருந்தால் நல்லது. செல்வம் கர்வத்தைக் கொடுக்கும். அதனால் வீழ்ச்சி ஏற்படும். ஆகவே, பகவான் பின்னால் நேரிடக் கூடியவற்றை அறியாத பக்தனுக்குச் செல்வம், அரசு, ஐசுவர்யம் இவற்றைக் கொடுக்க மாட்டார்."

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸுதாமா வாழ்நாள் முழுவதும் வீட்டில் வாழ்ந்தாலும் பற்றற்ற மனப்பான்மையுடன் வாழ்ந்தார். பகவானை வழிபடுவதிலேயே தம் காலம் முழுவதையும் கழித்தார்.

## த்ரௌபதி

பாண்டவர்கள் வனத்தில் இருந்து கொண்டு தம்முடைய துன்பமயமான நாட்களைக் கழித்து வந்தார்கள். ஆனால் தீய இயல்பின் காரணமாக துர்யோதனனைச் சார்ந்தவர்கள் பாண்டவர்களை அழிக்கும் உபாயத்தையே சிந்தித்துக் கொண்டிருந்தனர். ஒரு சமயம் துர்யோதனன் துர்வாஸ முனிவரை உபசரித்து அவரை மகிழ்வித்து அவரிடம் பின்வருமாறு வரம் கேட்டான்: "தர்மாத்மாவான எங்களுடைய தமையனார் யுதிஷ்டிரர் தம்முடைய ஸஹோதரர்களுடன் காட்டில் வஸிக்கிறார். ஒரு நாள் நீங்கள் உங்களுடைய பதினாயிரம் சீடர்களுடன் கூட அவருக்கு விருந்தினராகப் போக வேண்டும். மேலும் ஒரு வேண்டுகோள். அங்கு எல்லோரும் பகல் உணவு உண்டு, த்ரௌபதி தானும் உண்டு முடித்து இளைப்பாறிக் கொண்டிருக்கும்போது நீங்கள் செல்லவேண்டும்." தன் துஷ்ட நண்பர்களின் ஆலோசனையின்பேரில் துர்யோதனன் இவ்வாறு நினைத்தான்— "த்ரௌபதி சாப்பிட்டு முடித்துவிட்டாளேயானால் சூரியதேவனால் அளிக்கப்பட்ட பாத்திரத்திலிருந்து, அன்றைக்கு அன்னம் மீண்டும் கிடைக்காது. அதனால் சீற்றமே இயல்பாக கொண்ட துர்வாஸர் பாண்டவர்களைச் சபித்துச் சாம்பல் ஆக்கிவிடுவார். அதனால் நம் கார்யம் எளிதாக நிறைவேறும்." நேர்மையான உள்ளம் படைத்த துர்வாஸருக்கு இந்தச் சூது புரியவில்லை. ஆயினும் அவர் அவனுடைய வேண்டுகோளை ஏற்று, காம்யக வனத்தில் பாண்டவர்கள் இருக்கும் இடத்திற்குச் சென்றார். த்ரௌபதி உட்படப் பாண்டவர்கள் எல்லோரும் உண்டுவிட்டு அமைதியாக உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர். இந்நேரத்தில் பதினாயிரம் சீடர்கள் புடைசூழ, துர்வாஸர் அங்கே சென்றார். யுதிஷ்டிரர் தம்பிகளோடு எழுந்திருந்து ரிஷியை வரவேற்று உபசாரம் செய்து 'எல்லோரும் உணவருந்த வேண்டும்' என்று வேண்டிக் கொண்டார். துர்வாஸர் அந்த வேண்டுகோளை ஏற்று, நீராடி விட்டு வருவதாகச் சொல்லி நதிக்கரைக்குச் சென்றார். த்ரௌபதிக்கோ ஓரே கவலை. இந்த விபத்திலிருந்து உற்ற பந்துவான ஸ்ரீக்ருஷ்ணனைத் தவிர அவரிடம் அன்பு கொண்ட பக்தை க்ருஷ்ணைக்கு (த்ரௌபதிக்கு) வேறு யார் உதவி செய்ய முடியும்? அவள் பகவானை மனமார வேண்டினாள்: 'ஹே க்ருஷ்ண! ஹே கோபால! புகலற்றவர்களுக்குப் புகலே! புகலடைந்தவர்களிடம் பரிவுள்ளவனே! இந்த விபத்திலிருந்து நீதான் காக்க வேண்டும்.'

> து$_3$:ஶாஸநாத$_3$ஹம் பூர்வம் ஸப$_4$ாயாம் மோசிதா யத$_2$ா ।
> ததை$_2$வ ஸங்கடாத$_3$ஸ்மாந்மாமுத்$_3$த$_4$ர்துமிஹார்ஹஸி ॥

(மஹா. வந. 263/16)

'முன்பு கௌரவ சபையில் துச்சாஸனன் பிடியிலிருந்து என்னை நீங்கள் மீட்டுக் காத்தீர்களே. அதேபோல இப்போதும் என்னை இந்த ஸங்கடத்திலிருந்து மீட்டுக் காக்கவேண்டும்.' அவ்வமயம் பகவான் த்வாரகையில் ருக்மிணியின் திருமாளிகையில் அவளுடன் அமர்ந்திருந்தார். த்ரௌபதியின் வேண்டுகோள் காதில் விழுந்ததுமே அவளுடைய ஸங்கடத்தைப் புரிந்து கொண்டு, பக்தவத்ஸலனான பகவான் ருக்மிணியை விட்டுவிட்டு, மிகவும் வேகமாக த்ரௌபதியிடம் ஓடோடி வந்தார். சிந்திக்கவொண்ணாத வேகம் கொண்ட பரமேசுவரன் வருவதற்குத் தாமதம் ஆகுமா என்ன? த்ரௌபதியிடம் உடனே வந்து சேர்ந்தார். த்ரௌபதிக்குப் போன உயிர் திரும்பி வந்தது போலிருந்தது. அவள் ஸ்ரீக்ருஷ்ணனை வணங்கினாள். ஏற்பட்டிருக்கும் விபத்தை எடுத்துச் சொன்னாள். பகவான் சொன்னார்: 'அதெல்லாம் பின்பு பேசிக் கொள்ளலாம். எனக்கு மிகவும் பசிக்கிறது. சாப்பிடுவதற்கு ஏதாவது உடனே எனக்குக் கொடு.' த்ரௌபதி சொன்னாள்: "உணவுச் சிக்கலில் சிக்கிக்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கொண்டுதானே உங்களை நினைத்தேன். நான் சாப்பிட்டாகிவிட்டதே! பாத்திரத்தில் ஒன்றுமில்லையே." பகவானுக்கு இது வேடிக்கை. அவர் சொன்னார்:

க்ருஷ்ணே ந நர்மகாலோऽயம் க்ஷுச்ச்₂ரமேணாதுரே மயி ।
ஶீக்₄ரம் க₃ச்ச₂ மம ஸ்த₂ாலீமாநயித்வா ப்ரத₃ர்ஶய ॥

(மஹா. வந. 263/23)

'க்ருஷ்ணே! நெடுக நடந்து வந்ததால் என்னைப் பசி வாட்டுகிறது. இது விளையாடுகிற நேரமன்று. உடனே போ. (சூரியனளித்த) பாத்திரத்தைக் கொண்டுவா. என்னிடம் காண்பி.'

பாவம்! த்ரௌபதி என்ன செய்வாள்? பாத்திரத்தைக் கொண்டு வந்து ஸ்ரீக்ருஷ்ணன் முன் வைத்தாள். ஸ்ரீக்ருஷ்ணன் கூர்ந்து பார்த்தார். பாத்திரத்தில் ஒட்டிக் கொண்டிருந்த ஒரு கீரை இலையைத் தேடி வெளியே எடுத்தார். பகவான் சொன்னார்: 'ஒன்றுமில்லை என்று சொல்லிக் கொண்டிருந்தாயே! இந்தக் கீரை இலையினால் மூவுலகும் த்ருப்தி அடையுமே!' யக்ஞங்களை ஏற்கின்ற பகவான் அந்தக் கீரை இலையை எடுத்து வாயில் போட்டுக் கொண்டு சொன்னார்:

விஶ்வாத்மா ப்ரீயதாம் தே₃வஸ்துஷ்டஶ்சாஸ்த்விதி யஜ்ஞபு₄க் ।

(மஹா. வந. 263/25)

'எல்லா உலகங்களுக்கும் ஆத்மாவான பகவான் யக்ஞங்களை ஏற்பவன், இந்தக் கீரை இலையினால் த்ருப்தி அடையட்டும்.' அடுத்து ஸஹதேவனைக் கூப்பிட்டு, 'போய் ரிஷிகளைச் சாப்பிட அழைத்து வா' என்று அவனிடம் கூறினார். அங்கே நதிக்கரையில் வேறுவிதமான நிலை உருவாகியது. மாத்யாஹ்னிகம் செய்து கொண்டிருந்த ரிஷிகளின் வயிறு நிரம்பிவிட்டன. ஏப்பம் வர ஆரம்பித்துவிட்டது. சீடர்கள் துர்வாஸரிடம் சொன்னார்கள்: 'ஸ்வாமி! எங்களுக்குக் கழுத்துவரை உணவு நிரம்பிவிட்டது. அங்குப் போய் என்ன சாப்பிடுவோம்?' துர்வாஸருக்கும் இதே நிலைதான். அவர் சொன்னார்: "குழந்தைகளே! இங்கிருந்து விரைவில் ஓடிவிடுங்கள். இந்தப் பாண்டவர்கள் சிறந்த தர்மாத்மாக்கள், ஞானிகள், நன்னடத்தை உடையவர்கள். பகவான் ஸ்ரீக்ருஷ்ணனுடைய அநன்ய பக்தர்கள். இவர்கள் நினைத்தால் நெருப்பு, பஞ்சுப்பொதியைப் பொசுக்குவதுபோல் நம் எல்லோரையும் சாம்பல் ஆக்கிவிடலாம். இன்றும் நான் அம்பரீஷன் கதையை மறக்கவில்லை. ஸ்ரீக்ருஷ்ணனைச் சரணடைந்தவர்களிடம் எனக்கு மிகவும் பயம் உண்டு." துர்வாஸருடைய இந்தச் சொற்கேட்டு, சீடர்கள் அங்கிருந்து நாற்புறமும் ஓடிவிட்டனர். ஸஹதேவன் எங்கு தேடியும் எவரையும் காண முடியவில்லை.

பகவான் பாண்டவர்களிடமும், த்ரௌபதியிடமும் சொன்னார்: 'சரி! நான் த்வாரகை சென்று வரட்டுமா? நீங்கள் தர்மாத்மாக்கள். உங்களுக்கு எந்தத் துன்பமும் நேராது.'

தர்மநித்யாஸ்து யே கேசிந்ந தே ஸீத₃ந்தி கர்ஹிசித் ।

(மஹா. வந. 263/44)

## கஜேந்த்ரன்

கஜேந்த்ரன் என்ற யானை திரிகூட மலையில் வசித்து வந்தது. ஒரு நாள் கோடையின் கடுமை தாங்க முடியாமல் பல பெரிய ஆண் யானைகளுடனும், பெண் யானைகளுடனும் ருதுமான் என்ற வருணதேவனுடைய தோட்டத்தில் இருந்த மிகப் பெரிய அழகான தடாகத்தின் கரைக்குச் சென்றது. அந்தத் தடாகத்தில் இறங்கி அமுதம் போன்ற அதன் தண்ணீரை அருந்திவிட்டுப் பெண் யானைகளுடனும், குட்டி யானைகளுடனும் அதில் விளையாட ஆரம்பித்தது. அந்தத் தடாகத்தில் வலிமைமிக்க ஒரு முதலை வசித்து வந்தது. அது கஜேந்த்ரனின் காலைப் பிடித்துக் கொண்டுவிட்டது. கஜேந்த்ரன் தன் முழு பலம் கொண்டு அதனிடமிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள முயன்றது, முடியவில்லை. இப் புறம் யானை; அப் புறம் முதலை. இரண்டும் இழுத்தன. கூட இருந்த யானைகளும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



துதிக்கையோடு துதிக்கையிணைத்து கஜேந்த்ரனை விடுவிப்பதற்காகப் பற்றி இழுத்தன. ஒரு அடிகூட முன்னேற முடியவில்லை. நீண்டகாலம் இந்தப் போராட்டம் நடந்தது. கடைசியில் யானை பலமிழந்து பகவானைச் சரணடைந்தது. அது கதறியது.

ய: கஶ்சநேஶோ ப₃லிநோऽந்தகோரக₃ாத் ப்ரசண்ட₃வேக₃ாத₃பி₄த₄ாவதோ ப்₄ருஶம் ।
பீ₄தம் ப்ரபந்நம் பரிபாதி யத்₃ப₄யாந்ம்ருத்யு: ப்ரத₄ாவத்யரணம் தமீமஹி ॥
(ஸ்ரீமத்₃ப₄ாக₃வதம் 8/2/33)

"மிகுந்த வேகத்தோடு இங்குமங்கும் ஓடிவருகிற, மிக்க வலிமை கொண்ட காலனாகிற கருநாகத்திடம் மிகவும் பயம் கொண்டு ஶரணமடைந்த ஒருவனை எந்தப் பரம்பொருள் காப்பாற்றுகிறாரோ, எவரைக் கண்டு ம்ருத்யுவும் பயந்து ஓடுகிறானோ, அப்படிப்பட்ட பரம்பொருளை ஶரணமடைகிறேன் என்று கதறியது."

மேலும் அந்த கஜேந்த்ரன் மனமுருகி பகவானைத் துதித்தது. பகவான் பக்தனின் கூக்குரலைக் கேட்டு அவனைக் காப்பாற்றும் பொருட்டுப் பரபரப்படைந்தார் என்பதை ஒரு கவி மிகவும் அழகாக வர்ணிக்கிறார்—

பர்யங்கம் விஸ்ருஜந் க₃ணாநக₃ணயந் பூ₄ஷாமணிம் விஸ்மரந்–
நுத்தாநோऽபி க₃த₃ாக₃தே₃தி நிக₃த₃ந் பத்₃மாமநாலோகயந் ।
நிர்க₃ச்ச₂ந்நபரிச்ச₂த₃ம் க₂க₃பதிம் சாரோஹமாணோऽவது
க்₃ராஹக்₃ரஸ்தமதங்க₃புங்க₃வஸமுத்₃த₄ாராய நாராயண: ॥

"நாராயணன் தன் திவ்ய ஆஸனத்திலிருந்து குதித்தார். பார்ஷதர்களைக் கூடக் கவனிக்கவில்லை. (ஜய விஜயர் எனும் காவலர்களைப் பார்ஷதர் என்பர்.) கௌஸ்துப மணியை மறந்தார். எழுந்திருக்கும்போதே கதை எங்கே, கதை எங்கே என்று கூவினார். பக்கத்தில் நின்ற மஹாலக்ஷ்மியையும் பார்க்கவில்லை. மேல் உத்தரீயத்தையும் அணியவில்லை. கருடன் மேல் தாவி ஏறினார். முதலையின் பிடியில் சிக்கிய கஜேந்த்ரனைக் காப்பாற்ற இப்படி விரைந்து வந்த நாராயணன் நம்மைக் காக்கட்டும்."

கருடனின் மேலேறி பகவான் தடாகத்தை வந்தடைந்தார். கருடன் மேல் வரும் பகவானை கஜேந்த்ரன் பார்த்ததுமே துதிக்கையினால் தாமரை மலரை உயரத் தூக்கி மிகவும் துயரத்துடன் பிளிறியது— 'நாராயண! ஆதிமூலமே! எல்லோருக்கும் குருவானவரே! உமக்கு வணக்கம்.'

மிகுந்த ப்ரேமையுடன் பக்தனால் அளிக்கப்பட்ட தாமரைப்பூவை பகவான் ஏற்றார். தம்முடைய ஸுதர்சனச் சக்ரத்தினால் முதலையின் தலையைக் கொய்தார்; கஜேந்த்ரனை விடுவித்தார்.

## சபரி

'சபரி' ஒரு வேடுவப் பெண். தாழ்ந்த குலத்தினள். ஆனால் பகவானிடம் மிகவும் பக்தியுள்ளவள். தன்னுடைய வாழ்நாளின் பெரும்பகுதியை தண்டகாரண்யத்தில் ஒளிந்து மறைந்து ரிஷிகளுக்கு ஸேவை செய்து கழித்தாள். ரிஷிகள் நீராடச் செல்லுகின்ற நேரத்தில் அவர்கள் செல்லும் பாதையைப் பெருக்கி சுத்தப்படுத்துவாள்; கரடுமுரடான தரை மீது மணலைப் பரப்பி அதை ஸமப்படுத்துவாள். காட்டில் இருந்து விறகு வெட்டிக் கொண்டு வந்து ரிஷிகளின் ஆசிரமத்தில் சேர்ப்பாள். மதங்க முனிவர் அவளிடம் க்ருபை கூர்ந்தார். பகவன் நாமத்தை உபதேசித்தார். அவர் (பிறவி நீங்கி) ப்ரம்மலோகம் போகும்போது அவளிடம் சொன்னார்: 'பகவான் ஸ்ரீராமன் உன் குடிலுக்கு வருவார். அவரை தர்சனம் செய்து நீ பிறவிப்பயனை அடைவாய். அதுவரை இங்கேயே இருந்து பகவானை வழிபட்டுக் கொண்டிரு.'

சபரியின் வழிபாடு தொடர்ந்து நடந்து வந்தது. வழிமேல் விழி வைத்து ஸ்ரீராமன் வருகைக்காகக் காத்திருந்தாள் சபரி. எத்தனையோ நாட்கள் சென்றுவிட்டன. அவளுடைய

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஏக்கம் வளர்ந்து கொண்டே இருந்தது. எப்பொழுது ப்ரபு வருவாரோ என்று பொழுதெல்லாம் அவர் வரும் வழியில் பகவானின் திருப்பாதங்களிலே ஒருவேளை முள் குத்திவிடுமோ என பயந்து, வெகுதூரம் வரை அவற்றையகற்றிக் கூட்டி மெழுகிக் கோலம் போட்டு வைப்பாள். பகவான் அமர்வதற்காக மண்ணும், சாணமும் கலந்து, அழகிய மேடையை அமைத்தாள். காட்டிற்குள் சென்று எந்த மரங்களின் பழங்கள் இனிப்பாக இருக்குமோ, அந்த மரங்களின் கனி வகைகளைச் சேர்த்து வைத்தாள். நாட்கள் கடந்தன. ஒவ்வொரு நாளும் இதே வேலை. அவள் ஒரு நாளைக்கு எத்தனை தடவை மேடை அமைப்பாள்! புதிது புதிதாக எவ்வளவு பழங்களைப் பறித்துப் பொறுக்கி வைப்பாள்! ஒரு நாள் பகவான் வந்தேவிட்டார் அவளுடைய குடிலுக்கு! அவள் பிறவிப்பயன் பெற்றுவிட்டாள். கோஸ்வாமி துளஸிதாஸர் ஸ்ரீராமசரிதமானஸத்தில் கூறுகிறார்:

> ஸப$_3$ரீ தே$_3$கி$_2$ ராம க்$_3$ருஹ ஆஏ । முனி கே ப$_3$சந ஸமுஜி ஜிய ப$_4$ாஏ ॥
> ஸரஸிஜ லோசந ப$_3$ாஹு பி$_3$ஸாலா । ஜடா முகுட ஸிர உர ப$_3$நமாலா ॥
> ஸ்யாம கெ$_3$ளர ஸுந்த$_3$ர தோ$_3$உ ப$_4$ாஈ । ஸப$_3$ரீ பரீ சரந லபடாஈ ॥
> ப்ரேம மக$_3$ந முக$_2$ ப$_3$சந ந ஆவா । புநி புநி பத$_3$ ஸரோஜ ஸிர நாவா ॥

(ராமசரிதமாநஸம் ஆரண்யகாண்டம் 34/3-5)

ஸ்ரீராமன் குடிசைக்கு வந்துவிட்டார் என்று கண்டாள் சபரி. முனிவர் சொல் பலித்துவிட்டதே! தாமரைக் கண்கள், நீண்ட கைகள், தலையில் ஜடைமுடி, மார்பில் காட்டுப் பூக்களால் ஆன மாலை. ஒருவன் ச்யாமளன், மற்றவன் சிகப்பு. இரு ஸஹோதரர்களும் அழகானவர்கள். சபரி அவர்களின் பாதங்களில் வீழ்ந்து வணங்கினாள். சபரி ஆனந்தக் கடலில் மூழ்கினாள். ப்ரேமையில் மூழ்கிய அவளது நாத் தழுதழுத்தது. அவள் திரும்பத் திரும்ப அவர்களுடைய புனிதமான சரணங்களில் வீழ்ந்து வணங்கினாள். பிறகு பகவானைப் பூஜித்துப் பழங்களைக் கொண்டு வந்து வைத்தாள். பகவான் அவளுடைய பக்தியை மெச்சி அவளுடைய பூஜையை ஏற்றுக் கொண்டார். அவள் ப்ரேமையுடன் அளித்த பழங்களைச் சுவைத்து உண்டு அவளுக்கு மகிழ்வு ஊட்டினார். அந்தப் பழங்கள் எவ்வளவு சுவையாக இருந்தன என்பதை ஸ்ரீ துளஸிதாஸர் வர்ணிக்கிறார்:

> க$_2$ர, கு$_3$ருக்$_3$ருஹ, ப்ரிய-ஸத$_3$ந, ஸாஸுரே ப$_4$ஈ ஜப$_3$ ஜஹ(ம்) பஹுநாஈ ।
> தப$_3$ தஹ(ம்) கஹி ஸப$_3$ரீ கே ப$_2$லநி கீ ருசி மாது$_4$ரீ ந பாஈ ॥‡

(என் அரண்மனை, குருநாதரின் ஆசிரமம், நண்பர்களின் வீடு, மாமனார் வீடு முதலிய இடங்களில் விருந்து உண்டிருக்கிறேன். ஆனால் இதுவரை எங்கும் ஒருபொழுதும் இந்த சபரியின் பழங்களின் ருசிக்கு நிகரான ருசியைச் சுவைத்ததில்லை என்று ஸ்ரீராமன் கூறுகிறார்.)

## ரந்திதேவர்

'ரந்திதேவன்' என்ற அரசர் ஸங்க்ருதி என்ற அரசரின் புதல்வர். அவர் வீரமும், கருணையும் மிகுந்தவர். ஏழைகளின் துயரைத் துடைப்பதற்காக ரந்திதேவன் தம் செல்வத்தையெல்லாம் தானம் அளித்தார். பிறகு மிகவும் கஷ்டத்துடன் தம் வாழ்க்கையை நடத்தினார். அப்பொழுதுகூட தனக்கு எது கிடைத்தாலும், தான் பட்டினி கிடந்தாலும், அதை ஏழைகளுக்குப் பகிர்ந்து அளித்தார். இவ்விதம் அரசர் ஆண்டியாகி குடும்பத்துடன் வறுமையில் உழன்றார். மிகுந்த துன்பத்தைப் பொறுத்துக் கொண்டார்.

ஒரு சமயம் நாற்பத்தெட்டு நாட்களாக அரசருக்கு உணவு எதுவும் கிடைக்கவில்லை; தண்ணீர் கூடக் கிடைக்கவில்லை. பசியும், தாகமும் மிகுந்த அரசர் சோர்ந்து போய்விட்டார். நாற்பத்தொன்பதாவது நாள் எங்கிருந்தோ அரசருக்கு நெய், பாயஸம், ஹல்வா, நீர் எல்லாம்

‡ இந்த விஷயம் ஸ்ரீராமசரிதமானஸம் முதலிய நூல்களிலிருந்து தொகுக்கப்பட்டது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வந்து சேர்ந்தன. நாற்பத்தெட்டு நாட்களாகத் தொடந்து உண்ணாத களைப்பினால் அரசரும், குடும்பமும் மிகவும் மெலிந்து உடல் வாடி நடுக்கமுற்றிருந்தனர்.

அரசர் குடும்பத்துடன், கிடைத்த உணவைச் சாப்பிட அமரும் நேரத்தில் ஓர் அந்தண அதிதி வந்து சேர்ந்தார். கோடி ரூபாய்கள் ஒருவனிடமிருந்தால், ஒரு லட்ச ரூபாய் தானம் அளிப்பது அவனுக்கு எளிது. ஆனால் பசித்த உடலுடன் அன்னதானம் செய்ய முடியுமா? கடினமான செயல் அல்லவா? ஆனால் எங்கும் ஹரியே நிறைந்திருக்கிறார் என்று உணர்ந்து பக்தி புரியும் ரந்திதேவனுக்கு அது ஸுலபமாக இருந்தது. அவர் அந்த அந்தணரை வரவேற்று ச்ரத்தையுடன் அந்த உணவைப் பரிமாறி விட்டார். அந்தணர் உண்டு மகிழ்ந்து சென்றுவிட்டார்.

பிறகு எஞ்சியிருந்ததைத் தன் குடும்பத்துடன் உண்ணலாம் என்று அமரும்போதே, நான்காம் வர்ணத்தவன் ஒருவன் வந்து சேர்ந்தான். அரசர் அவனை ஹரியாக பாவித்து மீதமிருந்ததை அவனுக்குத் தந்தார். இதற்குள் சில நாய்களையும்கூட அழைத்துக் கொண்டு ஒரு விருந்தாளி வந்து சேர்ந்துவிட்டான். 'ஐயா! நானும், இந்த நாய்களும் மிகவும் பசியால் துடிக்கிறோம். உணவு படையுங்கள்' என்றான்.

ஹரிபக்தரான அரசர் அவனை வரவேற்று உபசரித்து, நாய்களுக்கும்கூட உணவளித்தார். மீதமிருந்த உணவு அனைத்தையும் அவர்களுக்கு வழங்கிவிட்டார்.

மீதமுள்ளது ஒருவனுடைய தாகவிடாய் தீர்க்கக்கூடிய அளவு கொஞ்சம் தண்ணீர்தான். அதை மனைவி மக்களுடன் அருந்தலாம் என அரசர் நினைத்தபோது ஒரு சண்டாளன் வந்து சேர்ந்தான். மிகவும் சோர்ந்த குரலில், 'ஐயா! எனக்கு மிகவும் களைப்பாக இருக்கிறது. இந்தத் தீண்டத்தகாத பிறவிக்குக் கொஞ்சம் தண்ணீர் ஊற்றுங்கள்' என்றான்.

சண்டாளனுடைய உருக்கமான குரலைக் கேட்டு அவனுடைய களைப்பின் தன்மையை உணர்ந்து, மிகவும் கருணையுடன் அவனுக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டே அரசர் அமுதமொழிகளால் பகவானை வேண்டினார்:

**ந காமயேऽஹம் க$_3$திமீஶ்வராத்பராமஷ்டர்த்$_3$தி$_4$யுக்தாமபுநர்ப$_4$வம் வா ।**
**ஆர்திம் ப்ரபத்$_3$யேऽகி$_2$லதே$_3$ஹப$_4$ாஜாமந்தஃஸ்தி$_2$தோ யேந ப$_4$வந்த்யது$_3$ஃக$_2$ாஃ ॥**
**க்ஷுத்த்ருட்ஶ்ரமோ க$_3$ாத்ரபரிஶ்ரமஶ்ச தை$_3$ந்யம் க்லமஃ ஶோகவிஷாத$_3$மோஹாஃ ।**
**ஸர்வே நிவ்ருத்தாஃ க்ருபணஸ்ய ஜந்தோர்ஜிஜீவிஷோர்ஜீவஜலார்பணாந்மே ॥**

**(ஶ்ரீமத்$_3$ப$_4$ாக$_3$வதம் 9/21/12,13)**

"நான் பகவானிடமிருந்து அணிமா முதலிய எட்டு வகை ஸித்திகளோடு கூடிய உயர் நிலையையோ, மேலான மோக்ஷத்தையோ விரும்பவில்லை. உலகில் உள்ள எல்லா ப்ராணிகளின் உள்ளங்களின் நான் புகுந்து அவர்களுடைய துயரத்தையெல்லாம் ஏற்றுக் கொள்ளவேண்டும். அவர்களுடைய துயரங்கள் எல்லாம் தீரவேண்டும்."

இம்மனிதன், தண்ணீர் தாகத்தினால் உயிர்போகும் நிலையில், தன்னைக் காத்துக் கொள்ள என்னிடம் உருக்கத்துடன் தண்ணீர் வேண்டுகிறான். உயிரோடு இருக்க விரும்பும் இந்த எளிய உயிருக்கு, வாழ்வே போன்ற நீரைத் தருவதனால் என்னுடைய பசி, தாகம், களைப்பு, உடல் மெலிவு, இல்லாக் கொடுமை, சோர்வு, சோகம், துன்பம், மயக்கம் ஆகியவையெல்லாம் நீங்கி விட்டன.

இப்படிச் சொல்லி இயற்கையாகவே கருணை நிறைந்த ரந்திதேவன் என்ற அந்த அரசர் தாகத்தினால் தன் உயிர் போகுமோ எனும் நேரத்திலும், சண்டாளனுக்குத் தண்ணீரை மரியாதையுடனும், மகிழ்ச்சியுடனும் அளித்து த்ருப்தி அடைந்தார்.

பயனைக் கருதி பகவானைப் பூஜிக்கும் பக்தர்களுக்குப் பயனளிக்கின்ற மூவுலக நாயகர்களான ப்ரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மும்மூர்த்திகள், ரந்திதேவனைச் சோதிக்கும் பொருட்டு மாயையாக இவ்விதம் அந்தணர் முதலான உருவங்களில் வந்தனர். அரசருடைய உறுதியையும், பக்தியையும் கண்டு அவர்கள் மிகவும் மகிழ்ந்தார்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தம் உண்மை உருவத்துடன் அவர்கள் வெளிப்பட்டு, அரசருக்குக் காட்சி அளித்தார்கள். அரசர் மும்மூர்த்திகளின் தர்சனத்தை ஒருங்கே பெற்று அவர்களை வணங்கினார். அவர்கள் வற்புறுத்தியும்கூட, வரம் கேட்கவில்லை. ஏனெனில் அரசர்தான் எந்தப் பற்றும், ஆசையும் அற்றவராயிற்றே! அவருடைய மனம் பகவானிடமே ஒன்றியிருந்தது. பரமாத்மாவிடம் அநன்ய ப்ரேமை கொண்ட ரந்திதேவன் தம் மனம் முழுவதையும் பகவான் வாஸுதேவனிடம் ஈடுபடுத்தி இருந்தார். பகவானிடம் ஒன்றிவிட்டார். முக்குணமயமான மாயை அவர் எதிரில் கனவுபோல மறைந்துவிட்டது. ரந்திதேவனுடைய குடும்பத்தினரும் அப்படியே நாராயணனே கதி என்று இருந்து யோகிகளின் பரமநிலையைப் பெற்றனர்.

**கேள்வி:** 'பக்த்யுபஹ்ருதம்' என்றால் என்ன? அந்தச் சொல்லைக் கையாண்டதன் கருத்து என்ன?

**பதில்:** மேற்கூறிய இலை, பூ முதலியவற்றை பகவானுக்கு அர்ப்பணம் செய்யும் போது பக்தியுடன் அர்ப்பணம் செய்யவேண்டும். இதையே 'பக்த்யுபஹ்ருதம்' என்ற சொல் குறிக்கிறது. அன்பின்றி அளிக்கப்படுவதை பகவான் ஏற்கமாட்டார். அன்புள்ள இடத்திலிருந்து, அன்போடு அளிக்கப்படும் பொருளை நான் ஏற்றுக் கொண்டு விட்டால், அவனுக்கு உண்மையில் ஆனந்தமே ஏற்படுகிறது. அப்படி ப்ரேமையோடு அளிக்கும்போது அதை ஏற்பது என்பதில் என்ன சிறப்பு இருக்கிறது? புண்யாத்மாக்களான கோபியரின் வீடுகளில் செய்தாற்போல, அந்த பக்தர்களுடைய வீடுகளிலும் புகுந்து நான் அவர்களுடைய பண்டங்களை எடுத்து உண்பேன். எனக்கு ப்ரேமைப் பசிதானே தவிர, உணவுப் பசி கிடையாது என்கிறார் பகவான்.

**கேள்வி:** நான் அருந்துகிறேன் என்பதன் கருத்து என்ன?

**பதில்:** "இவ்விதம் சுத்தமான மனமுடன், அன்புடன் அளிக்கப்படும் பொருட்களை நானே வலியப்போய் அந்த பக்தர்களின் முன் தோன்றி ஏற்பேன். நான் மானிட அவதாரம் எடுக்கும்போது அந்த ஸ்வரூபத்தில் அவர்களிடம் அணுகுவது மட்டுமின்றி, மற்ற சமயங்களிலும் அந்த பக்தர்களின் விருப்பம்போல உருவெடுத்து, அவர்களால் அளிக்கப்படுவனவற்றை ஏற்று அவர்கள் பிறவிப்பயனை அடையச் செய்கிறேன்" என்று பொருள்.

**பொருத்தம்: அப்படியானால் நான் என்ன செய்யவேண்டும் என்று கேட்க விரும்பும் அர்ஜுனனுக்கு அவர் செய்யவேண்டியதைக் கூறுகிறார்—**

**यत्करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत्।**
**यत्तपस्यसि कौन्तेय तत्कुरुष्व मदर्पणम्॥ २७॥**

**யத்கரோஷி யத₃ஶ்நாஸி யஜ்ஜுஹோஷி த₃தா₃ஸி யத் ।**
**யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ மத₃ர்பணம் ॥ 27 ॥**

***கௌந்தேய*** – குந்தியின் மைந்தனே! ***யத்*** – எந்த கர்மத்தை, ***கரோஷி*** – செய்கிறாயோ, ***யத்*** – எதை, ***அஶ்நாஸி*** – உண்கிறாயோ, ***யத்*** – எதை, ***ஜுஹோஷி*** – ஹோமம் செய்கிறாயோ, ***யத்*** – எதை, ***த₃தா₃ஸி*** – தானமளிக்கிறாயோ, ***யத்*** – எந்த, ***தபஸ்யஸி*** – தவம் செய்கிறாயோ, ***தத்*** – அவையனைத்தையும், ***மத₃ர்பணம்*** – எனக்கு அர்ப்பணம், ***குருஷ்வ*** – செய்துவிடு.

குந்தியின் மைந்தனே! எந்தக் கர்மத்தை செய்கிறாயோ, எதை உண்கிறாயோ, எதை ஹோமம் செய்கிறாயோ, எதை தானமளிக்கிறாயோ, எந்தத் தவம் செய்கிறாயோ, அவையனைத்தையும் எனக்கு அர்ப்பணம் செய்துவிடு.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** என்ன கர்மம் செய்கிறாயோ, எதை உண்கிறாயோ, எதை ஹோமம் செய்கிறாயோ, எதை தானமளிக்கிறாயோ, எந்தத் தவம் செய்கிறாயோ – என்ற ஐந்து செய்கைகளின் பொருள் என்ன?

**பதில்:** இந்த ஐந்துக்குள் நாம் செய்யவேண்டியவை அனைத்தையும் அடக்கிவிட்டார் பகவான். யாகம், தானம், தவம் இவற்றோடுகூட அன்றாட ஜீவனத்திற்காகச் செய்யப்படுகின்ற வர்ணம், ஆசிரமம், உலக நடவடிக்கை இவற்றை ஒட்டிய செயல்கள்; இவற்றைத் தவிர சாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ளதான பஜனை, த்யானம் முதலிய எத்தனை கடமைகள் உண்டோ, அவையெல்லாம் 'எக்கர்மம் செய்கிறாயோ' என்பதில் அடங்கும். உடலைப் பேணுவதற்கான உணவு முதலியன அனைத்தும், 'உண்கிறாயோ' என்பதில் அடங்கும். பகவானுக்குச் செய்யும் பூஜை, ஹோமம் முதலியன எல்லாம் 'ஹோமம் செய்கிறாயோ' என்பதில் அடங்கும். மற்றவர்க்குச் செய்யும் உபகாரம் எல்லாம் 'தானம் அளிக்கிறாயோ' என்பதில் அடங்கும். புலனடக்கம், மெய்யடக்கம், மனவடக்கம் முதலியன எல்லாம் 'தவம் செய்கிறாயோ' என்பதில் அடங்கும் *(17/14–17)*.

**கேள்வி:** மேலே சொன்ன எல்லாக் கர்மங்களையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்வது என்றால் என்ன?

**பதில்:** ஸாதாரண மனிதர்களுக்கு அந்தக் கர்மங்களில் மமகாரமும், பற்றும், அவ்வாறே அவற்றின் பயன்களில் ஆசையும் இருக்கும். எல்லாக் கர்மங்களிலும் மமகாரம், பற்று, பயனில் கருத்து இவற்றை த்யாகம் செய்துவிட வேண்டும். அகில ப்ரபஞ்சமும் பகவானுடையதே. என்னுடைய மனம், புத்தி, உடல், புலன்கள் எல்லாமே பகவானுடையவைதாம். நானும் பகவானைச் சார்ந்தவனே. ஆகவே, என்னைக் கருவியாகக் கொண்டு, எந்தக் கர்மங்கள் செய்யப்படுகின்றனவோ, அவையெல்லாம் பகவானுடையனவே. பொம்மலாட்ட பொம்மையை ஆட்டி வைக்கும் ஸூத்ரதாரனைப்போல பகவான்தான் என்னைக் கொண்டு இவையனைத்தையும் செய்து முடிக்கிறார். அவரே இந்த எல்லா ரூபங்களிலும் இருந்து ஏற்கிறார். நான் ஒரு நிமித்தம்தான். இப்படி உணர்ந்து பகவானுடைய ஆணையின்படி பகவானுடைய த்ருப்திக்காகப் பயன் விரும்பாது மேலே சொல்லப்பட்ட கர்மங்களைச் செய்வதே பகவானுக்கு அவற்றை அர்ப்பணம் செய்வதாகும்.

**கேள்வி:** முதலில் வேறு பயனைக் கருதிச் செய்யப்பட்ட கர்மங்களை, பின்பு பகவானுக்கு அர்ப்பணம் செய்வதா? கர்மங்களைச் செய்துகொண்டே இடையிடையே அவற்றை பகவானுக்கு அர்ப்பணம் செய்வதா? கர்மங்களைச் செய்து முடித்தவுடன் பகவானுக்கு அர்ப்பணம் செய்வதா அல்லது கர்மங்களின் பயனையே பகவானுக்கு அர்ப்பணிப்பதா? – இப்படியெல்லாம் செய்வது பகவானுக்கு அர்ப்பணமாகுமா, ஆகாதா?

**பதில்:** இப்படியெல்லாம் செய்வதுகூட பகவானுக்கு அர்ப்பணம்தான். முன்னால் இப்படித்தான் அமையும். போகப் போக மனம் பக்குவப்பட்டு மேலே சொன்னவிதம் பகவானுக்கு முழுமையாக அர்ப்பணம் ஆகும்.

**பொருத்தம்: இப்படி எல்லாவற்றையும் உங்களுக்கு அர்ப்பணம் செய்வதால் என்ன நேரும் என்று தெரிந்து கொள்ளும் ஆவலைப் பூர்த்தி செய்ய பகவான் கூறுகிறார்—**

**शुभाशुभफलैरेवं मोक्ष्यसे कर्मबन्धनैः।**
**सन्न्यासयोगयुक्तात्मा विमुक्तो मामुपैष्यसि ॥ २८ ॥**

**ஶுப₄ாஶுப₄ப₂லைரேவம் மோக்ஷ்யஸே கர்மப₃ந்த₄நை: ।**

**ஸந்ந்யாஸயோக₃யுக்தாத்மா விமுக்தோ மாமுபைஷ்யஸி ॥ 28 ॥**

**ஏவம்** – இவ்வாறு, **ஸந்ந்யாஸயோக₃ யுக்தாத்மா** – செய்வதெல்லாவற்றையும் பகவானுக்கே அர்ப்பணம் செய்வதாகிய ஸந்யாஸ யோகத்தில் ஈடுபட்ட மனதுடைய நீ,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ஶுப₄ அஶுப₄ ப₂லை:** – நல்லவும், தீயவும் ஆன பயன்களாகிய, **கர்மப₃ந்த₄நை:** – கர்மங்களின் கட்டுக்களிலிருந்து, **மோக்ஷ்யஸே** – விடுபடுவாய். **விமுக்த:** – (அவ்வாறு) விடுபட்டு, **மாம்** – என்னையே, **உபைஷ்யஸி** – அடைந்து விடுவாய்.

இவ்வாறு செய்வதெல்லாவற்றையும் பகவானுக்கே அர்ப்பணம் செய்வதாகிய ஸந்யாஸ யோகத்தில் ஈடுபட்ட மனமுடைய நீ நல்லதும், தீயதும் ஆன பயன்களாகிய கர்மங்களின் கட்டுக்களிலிருந்து விடுபடுவாய். அவ்வாறு விடுபட்டு என்னையே அடைந்து விடுவாய்.

**கேள்வி:** 'ஏவம் ஸந்ந்யாஸயோகயுக்தாத்மா' – என்பதன் பொருள் என்ன?

**பதில்:** 'ஏவம்' (இவ்விதம்) என்பதிலிருந்து இந்த 'ஸந்யாஸயோகம்', ஸாங்க்ய யோகத்தை அதாவது ஞானயோகத்தைக் குறிக்காது என்பது தெரிகிறது. ஆனால் முன் ச்லோகத்தில் சொன்னபடி எல்லாக் கர்மங்களையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்வது என்பதே, இங்கு 'ஸந்யாஸயோகம்' என்ற சொல்லின் பொருள். ஆகவே, இத்தகைய ஸந்யாஸயோகத்தில் ஈடுபட்டவனுக்கு மனமும், புத்தியும் முன் ச்லோகத்தில் சொல்லியிருக்கிறபடி எல்லாக் கர்மங்களையும் பகவானுக்கே அர்ப்பணம் செய்வது என்ற கருத்து வேரூன்றிவிடுகிறது. அவன்தான் 'ஸந்ந்யாஸயோகயுக்தாத்மா'.

**கேள்வி:** நல்லதும், தீயதுமான பயன்களாகிய கர்மபந்தத்திலிருந்து விடுபடுவது என்றால் என்ன பொருள்? அவற்றிலிருந்து விடுபட்டு பகவானை அடைவது என்றால் என்ன?

**பதில்:** நல்லதும், தீயதுமான பலவிதமான செயல்களுக்கேற்ப ஸ்வர்கம், நரகம் முதலிய உலகங்களிலும் மற்றும் விலங்கு, பறவை, மனிதர் அடங்கிய உலகங்களிலும் பலவிதமான பிறவிகள் எடுத்து அதனால் இன்ப-துன்பங்களை அனுபவிப்பதுதான், நல்ல-தீய பயன்களாகிய 'கர்மபந்தம்' என்று கூறுகிறார். இவற்றை அனுபவிப்பதே கர்மபந்தத்தில் சிக்கிக் கொள்வது ஆகும். மேலே சொன்னவிதம் எல்லாக் கர்மங்களையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்துவிடுகின்ற மனிதன் கர்மத்தின் பயனாக நேரும் மறுபிறவி, ஸுகதுக்க போகங்கள் இவற்றிலிருந்து விடுபடுகிறான். இதையே கர்மபந்தத்திலிருந்து விடுதலை என்று கூறுகிறார். இறந்த பிறகு பகவானுடைய பரமபதத்தை அடைவதோ, இந்த வாழ்விலேயே பகவானை நேரிடையாக தர்சனம் செய்வதோதான் கர்மபந்தத்திலிருந்து விடுபட்டு பகவானை அடைவது ஆகும்.

**கேள்வி:** முன் ச்லோகத்தில் சொன்னபடி பகவானுக்கு அர்ப்பணம் என்ற கருத்துடன் செயல்படும் மனிதன் தீய கார்யம் செய்யவே மாட்டானே. அவன் தீய பயனிலிருந்து விடுதலை அடைவான் என்று ஏன் கூறுகிறார்?

**பதில்:** இவ்விதம் ஸாதனை புரிவதற்கு முன்னாலும், இதற்கு முன் எடுத்த பல பிறவிகளிலும் மனிதன் எவ்வளவு தீய கார்யங்கள் செய்திருப்பானோ, அவற்றிலிருந்து விடுதலை கிடைக்கும். அது மட்டுமன்று. **'ஸர்வாரம்பா₄ ஹி தோ₃ஷேண தூ₄மேநாக்₃நிரிவா-வ்ருதா:'** எந்தக் கார்யத்திலும் ஏதாவது குறை இருக்கத்தான் செய்யும் – தீயைப் புகை மூள்வதுபோல. ஆகவே விதிக்கப்பட்ட கடமைகளைப் பயனைக் கருதாது செய்தாலும்கூட, பகவானுக்கு அர்ப்பணம் என்று செய்தாலும்கூட, அதிலும் குறையிருக்கலாம். அந்தக் குறைகூட பகவானுக்குக் கர்மங்களை அர்ப்பணம் செய்வதால் தீர்ந்து, அவை பரிசுத்தமாகி அவற்றிலிருந்து விடுதலை பெறுகிறான். இதைத்தான் நல்லதும், தீயதுமான செயல்களின் பயன்களிலிருந்து விடுதலை பெறுவான் என்று கூறுகிறார்.

**கேள்வி:** நல்ல கர்மங்களின் பயன்கூட பந்தப்படுத்தும் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** முன் ச்லோகத்தில் சொன்னபடி எல்லா சுபகர்மங்களும் பகவானுக்கு அர்ப்பணம் செய்யப்படுமானால், அவை பகவானை அடைவதற்கு அனுகூலம் ஆகும். ஆனால் பயனில் கருத்துடன் செய்யப்பட்ட நல்ல கர்மங்கள், இவ்வுலகிலும், பரலோகத்திலும் போகம் என்ற பயனைக் கொடுத்துத்தான் தீரும். எந்தக் கர்மங்களின் பயனாக போகம் கிடைக்குமோ, அவை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மறுபிறவியில் கொண்டு தள்ளும். போகத்தில் விருப்பமும், பற்றுக் கொள்ளுதலும் பந்தப்படுத்துபவையாகவே உள்ளன. ஆகவே, அவற்றின் பயன் பந்தப்படுத்தும் என்று கூறுவது சரிதான். ஆனால், அதற்காக அவற்றைச் செய்யாமல் விட்டுவிடவேண்டும் என்பது பொருள் அன்று. நல்ல கர்மங்களைச் செய்யத்தான் வேண்டும். ஆனால், அவற்றின் பயன் கிடைக்க வேண்டும் என்று ஆசைப்படாமல், பகவானுக்கு அர்ப்பணம் செய்து கொண்டே இருக்கவேண்டும். இப்படிச் செய்தால் அவற்றின் பயன் மனிதனை பந்தப்படுத்தாமல் பகவானை அடையச் செய்யும்.

**பொருத்தம்:** மேலே சொன்னவிதம் 'பகவானை பக்தி செய்பவர்கள்தாம் பகவானை அடையமுடியும்; மற்றவர் அடைய முடியாது' என்றால் பகவானுக்கு பக்ஷபாதம் உண்டு என்ற குறை ஏற்படுமே என்ற ஸந்தேஹம் ஏற்படலாம். இந்த ச்லோகத்தில் அந்த ஸந்தேஹத்தைப் போக்குகிறார்—

**समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति न प्रियः।**
**ये भजन्ति तु मां भक्त्या मयि ते तेषु चाप्यहम्॥ २९॥**

**ஸமோ஽ஹம் ஸர்வபூ₄தேஷு ந மே த்₃வேஷ்யோ஽ஸ்தி ந ப்ரிய: ।**
**யே ப₄ஜந்தி து மாம் ப₄க்த்யா மயி தே தேஷு சாப்யஹம் ॥ 29 ॥**

**ஸர்வபூ₄தேஷு** – எல்லா உயிரினங்களிலும், **அஹம்** – நான், **ஸம:** – ஒரே ஸமமாக நிறைந்துள்ளேன். **மே** – எனக்கு, **த்₃வேஷ்ய:** – வெறுக்கத்தக்கவன் (வேண்டாதவன்), **ந** – இல்லை; **ப்ரிய:** – வேண்டியவன், **ந அஸ்தி** – இல்லை. **து** – ஆனால், **யே** – எவர்கள், **ப₄க்த்யா** – ப்ரேமை கொண்டு பக்தியுடன், **மாம்** – என்னை, **ப₄ஜந்தி** – வழிபடுகிறார்களோ, **தே** – அவர்கள், **மயி ச** – என்னிடமும், **அஹம்** – நான், **தேஷு அபி** – அவர்களிடமும் (காணக்கூடியவனாக இருக்கிறேன்.)

எல்லா உயிரினங்களிலும் நான் ஒரே ஸமமாக நிறைந்துள்ளேன். எனக்கு வெறுக்கத் தக்கவன் – வேண்டாதவன் இல்லை; வேண்டியவன் இல்லை. ஆனால் எவர்கள் ப்ரேமை கொண்டு பக்தியுடன் என்னை வழிபடுகிறார்களோ, அவர்கள் என்னிடமும், நான் அவர்களிடமும் காணக்கூடியவனாக இருக்கிறேன்.

**கேள்வி:** 'நான் எல்லா உயிரினங்களிலும் ஒரே ஸமமாக நிறைந்திருக்கிறேன். எனக்கு வேண்டாதவன், வேண்டியவன் இல்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ப்ரம்மதேவன் முதல் புல் வரை எல்லா ப்ராணிகளிடமும் அந்தர்யாமியாக நான் ஒரே ஸமமாக விளங்குகிறேன். ஆகவே, எனக்கு எல்லோரிடமும் ஸமபாவனைதான். எனக்கு யாரிடமும் விருப்பு–வெறுப்பு கிடையாது. ஆகவே எனக்கு வேண்டியவன், வேண்டாதவன் கிடையாது.' – இம்மனோபாவத்தைத்தான் மேற்கூறிய கூற்றின் மூலம் பகவான் நமக்கு உணர்த்துகிறார்.

**கேள்வி:** பக்தியுடன் பகவானை வழிபடுதல் என்றால் என்ன? 'அவர்கள் என்னிடமும் நான் அவர்களிடமும் காணக் கூடியவனாக இருக்கிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உருவமுள்ளதோ, உருவமற்றதோ பகவானுடைய எந்த ஸ்வரூபத்திலாவது நம்பிக்கையும், ப்ரேமையும், தொடர்ந்த சிந்தனையும் இருக்கவேண்டும். அவருடைய திருநாமம், கல்யாண குணங்கள், ப்ரபாவம், மஹிமை, லீலைகள், சரித்ரங்கள் இவற்றைக் கேட்கவேண்டும். மனதில் துய்த்து உணரவேண்டும். அவர் புகழ் பாடவேண்டும். அவரை வணங்கவேண்டும். இலை, பூ முதலிய பொருட்களுடன் அவருக்கு ப்ரேமையோடு பூஜை செய்யவேண்டும். இப்படிச் செய்து எல்லாக் கர்மங்களையும் அவருக்கே அர்ப்பணம் செய்யவேண்டும். இவையெல்லாம் பக்தியுடன் செய்யப்படும் பகவானுடைய வழிபாடு ஆகும்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



எவன் ஒருவன் இவ்விதம் பகவானைப் பூஜிக்கிறானோ, பகவானும் அவனை அவ்விதமே ஏற்கிறார். அவன் பகவானை மறக்காமல் இருப்பதுபோல, பகவானும் அவனை மறப்பதில்லை. இந்தக் கருத்தை வெளியிடுவதற்காகவே பகவான் கூறுகிறார்: 'அவர்கள் என்னிடம் இருக்கிறார்கள்' என்று. அந்த பக்தர்களின் பரிசுத்தமான மனதில் பகவானுடைய ப்ரேமையே நிறைந்துவிடுகிறது. ஆகவே, அவர்களுடைய உள்ளத்தில் பகவான் நேரிடையாக எப்பொழுதும் அனுபவத்தில் விளங்குகிறார். இதைத்தான் 'நான் அவர்களிடம் வெளிப்படுகிறேன்' என்று கூறுகிறார்.

அதாவது இந்த அத்யாயத்தின் 4,5வது ச்லோகங்களின் கருத்துப்படி பகவானுடைய உருவமற்ற தன்மை சராசரம் முழுவதிலும் நிறைந்திருக்கிறது. எல்லாச் சராசரங்களும் பகவானிடம் எப்பொழுதும் உள்ளன என்றாலும், பகவானுடைய உள்ளத்தில் பக்தர்கள் விளங்குவதற்கும், அவர்களுடைய உள்ளத்தில் நேரிடையாக பகவான் வாசம் செய்வதற்கும், பக்தனின் பக்தியே காரணம் என்று கூறுகிறார். இதையே ஸ்ரீமத்பாகவதம் 9/4/68ல் பகவான் துர்வாஸருக்குக் கூறுகிறார்:

ஸாத₄வோ ஹ்ருத₃யம் மஹ்யம் ஸாதூ₄நாம் ஹ்ருத₃யம் த்வஹம் ।
மத₃ந்யத்தே ந ஜாநந்தி நாஹம் தேப்₄யோ மநாக₃பி ॥

"ஸாதுக்களான பக்தர்களே என் இதயம்; ஸாதுக்களின் இதயமே நான். என்னைத் தவிர அவர்கள் வேறொன்றுமறியார்கள். எனக்கும் அவர்களைத் தவிர வேறு யாரையும் கொஞ்சம்கூடத் தெரியாது."

எங்கும் ஸமமாக ஒளிரும் சூரியனுடைய ப்ரதிபிம்பம் கண்ணாடி முதலிய சுத்தமான பொருட்களில் தெளிவாகத் தெரிகிறது. கட்டைகளில் அதுபோலத் தெரிவதில்லை. அதனால் சூரியனுக்குப் பக்ஷபாதம் இருக்கிறது என்பதில்லை. அதேபோல பகவானும் பக்தர்களுக்குக் காட்சியளிக்கிறார். பிறருக்கு அவ்விதம் காட்சி அளிப்பதில்லை. இதில் பகவானுடைய பக்ஷபாதம் ஒன்றுமில்லை. இது பக்தியின் பெருமை.

**பொருத்தம்: பகவான் பக்தி செய்பவர்களிடம் தம்முடைய ஸமபாவனை எப்படி உள்ளது என்பதை விளக்கிவிட்டு, இனி வரும் இரண்டு ச்லோகங்களில் தீய நடத்தை உள்ளவர்களுக்குக்கூட நிலையான அமைதிக்குரிய வழி தம்மை பக்தி பண்ணுவதுதான் என்று கூறுகிறார்—**

**अपि चेत्सुदुराचारो भजते मामनन्यभाक् ।**
**साधुरेव स मन्तव्यः सम्यग्व्यवसितो हि सः ॥ ३० ॥**

**அபி சேத்ஸுது₃ராசாரோ ப₄ஜதே மாமநந்யப₄ாக் ।**
**ஸாது₄ரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக்₃வ்யவஸிதோ ஹி ஸ: ॥ 30 ॥**

ஸுது₃ராசார: அபி — மிகவும் தீய நடத்தையுள்ளவனானாலும், அநந்யப₄ாக் — வேறு எதிலும் நாட்டமின்றி என் பக்தனாகி, மாம் — என்னை, ப₄ஜதே சேத் — வழிபடுவானேயானால், ஸ: — அவன், ஸாது₄: ஏவ — ஸாது (நல்லவன்) என்றே, மந்தவ்ய: — கருதப்படத்தக்கவன். ஹி — ஏனெனில், ஸ: — அவன், ஸம்யக் வ்யவஸித: — பகவானை பஜிப்பதைக் காட்டிலும் சிறந்தது வேறு இல்லை என்ற நல்ல தீர்மானத்திற்கு வந்தவன்.

மிகவும் தீய நடத்தையுள்ளவனானாலும், வேறு எதிலும் நாட்டமின்றி என் பக்தனாகி என்னை வழிபடுவானேயானால், அவன் ஸாது (நல்லவன்) என்றே கருதப்படத்தக்கவன். ஏனெனில் அவன் பகவானை பஜிப்பதைக் காட்டிலும் சிறந்தது வேறு இல்லை என்ற நல்ல தீர்மானத்திற்கு வந்தவன்.

கேள்வி: 'அபி' என்று கூறுவதன் கருத்து என்ன?



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** 'அபி' என்று கூறுவதன் மூலமாக பகவான் ஸமபாவனையை நன்றாக எடுத்துரைக்கிறார். நல்ல நடத்தையுள்ளவனும், (அறியாமல்) ஸாதாரண பாவம் செய்கிறவனும் என்னைப் புகலாகக் கொண்டு வழிபட்டால் மேன்மையடையலாம். இது பெரிய விஷயமன்று. என்னைப் பூஜிப்பதால் மிகத் தீய நடத்தையுள்ளவன் கூட மேன்மை அடையலாம் என்பது கருத்து.

**கேள்வி:** 'சேத்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அநேகமாகக் கெட்ட நடத்தையுள்ளவர்கள் போகப் பொருட்களிலும், பாவங்களிலும்தான் ஈடுபாடு கொள்வார்கள். என்னிடம் அன்புபூண்டு என்னைப் பூஜிக்க மாட்டார்கள். ஆயினும் ஏதோ ஒரு முன் நல்வினையினால் ஏற்பட்ட மனப்பதிவால் விழிப்பு ஏற்பட்டு, பகவானைப் போற்றும் சூழ்நிலை, சாஸ்த்ரங்களைப் படிப்பது, மஹான்களின் சேர்க்கை இவற்றைப் பெற்று, என்னுடைய குணங்கள், ப்ரபாவங்கள், மஹிமை, ரஹஸ்யம் இவற்றைக் கேள்வியுற்று ஒருகால் அவனுக்கு என்னிடம் நம்பிக்கையும், பக்தியும் ஏற்பட்டுவிட்டால், அவன் தொடர்ந்து என்னை வழிபடத் தொடங்கினால், அவனும் மேன்மை அடைந்துவிடுவான்.

**கேள்வி:** 'ஸுதுராசார:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? அவன் 'அநந்யபாக்' ஆக பக்தி செய்வது எப்படி?

**பதில்:** எவனுடைய நடத்தை மிகவும் கெட்டதோ, எவனுடைய உணவுப் பழக்கங்கள் சீரழிந்துவிட்டனவோ, எவனுடைய ஸ்வபாவம், ருசி முதலியன கெட்ட பழக்கங்களின் காரணமாகத் தன்வசமிழந்து கெட்ட நடவடிக்கைகளை விட்டுவிட முடியவில்லையோ, அவனை 'ஸுதுராசார:' (மிகத் தீய நடத்தையுள்ளவன்) என்கிறார். இத்தகைய மனிதன் பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள் இவற்றைக் கேட்பதாலோ, படிப்பதாலோ, வேறு எந்தக் காரணத்தாலோ பகவானே எல்லாவற்றிற்கும் சிறந்தவர் என்று உணர்ந்து, அந்த பகவான் ஒருவரையே புகலாகச் சரணடைந்து, அவரை எல்லையற்ற நம்பிக்கையுடனும், ப்ரேமையுடனும் இஷ்ட தெய்வமெனப் போற்றினால், அவன் 'அநந்யபாக்' (வேறொன்றையும் கருதாதவன்) ஆகிறான். இவ்விதம் பகவானுடைய பக்தனாகி பகவானுடைய ஸ்வரூபத்தை எவன் நினைக்கிறானோ, எவன் பகவானுடைய நாமம், குணம், மஹிமை, ப்ரபாவங்கள் இவற்றைக் கேட்கிறானோ, மனதில் எப்பொழுதும் நினைத்திருப்பானோ, வாயார ஸங்கீர்த்தனம் செய்கிறானோ, வணங்குகிறானோ, பத்ரம், புஷ்பம் முதலியன அர்ப்பணம் செய்து பூஜிக்கிறானோ, தான் செய்த கர்மங்களை பகவானுக்கு அர்ப்பணம் செய்கிறானோ, அவன் 'அநந்யபாக்' ஆகி பகவானை பூஜிக்கிறான் என்று பொருள்.

**கேள்வி:** 'அவனை ஸாதுவென அறியவேண்டும், அவன் நல்ல முடிவிற்கு வந்தவன், உறுதி உள்ளவன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** என்னுடைய பக்தன் முழுமையாகக் கெட்ட நடவடிக்கைகளை விட்டுவிடவேண்டும் என்று விருப்பம் கொண்டு முயற்சியும் கைக்கொண்டாலும், ஸ்வபாவத்திற்கும், பழக்கத்திற்கும் அடிமையான காரணத்தினால் ஏதோ ஒரு தீய நடவடிக்கையை முழுமையாகக் களைய முடியாதவனாக இருந்தாலும், அவனை துஷ்டன் என்று நினைக்கக் கூடாது. நல்லவன் (ஸாது) என்றே நினைக்க வேண்டும். ஏனெனில் அவன் உறுதியான ஒரு முடிவுக்கு வந்துவிட்டான். என்ன முடிவு? "பகவான் கடையனையும் கைதூக்கி விடுபவர். எல்லோருக்கும் நண்பர். ஸர்வவல்லமை படைத்தவர். மிகவும் கருணை உடையவர். எல்லாம் அறிந்தவர். எல்லோருக்கும் யஜமானர். எல்லோரைக் காட்டிலும் உயர்ந்தவர். இவ்விதம் உணர்ந்து அவரை வழிபடுவதுதான் மனிதப் பிறவியின் தலையாய கடமை. அதனால் எல்லாப் பாவங்களும், பாவ வாஸனைகளும் அடியோடு ஒழியும். பகவானுடைய அருளால் தானாகவே பகவானை அடைவது எனக்குக் கை கூடும்" என்ற உறுதி. இதுவே மிகவும் உயர்ந்த உண்மையான முடிவு. இத்தகைய முடிவுக்கு வந்தவன் என் பக்தன். என்னுடைய பக்தியின் மஹிமையினால் அவன் விரைவிலேயே முழுமையான



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தர்மாத்மா ஆகிவிடுவான். அவனைப் பாவி என்றோ, துஷ்டன் என்றோ நினைக்காமல் ஸாதுவென்றே மதிப்பது ஏற்றது.

**கேள்வி:** 7/15ல், 'தீய நடத்தையுள்ளவர்கள் என்னைப் பூஜிக்க மாட்டார்கள்' என்று பகவான் சொன்னார். இங்கே தீயவர்களின் வழிபாட்டிற்குப் பயன் கூறுகிறார். இந்த முரண்பாட்டுக்கு என்ன விளக்கம்?

**பதில்:** அங்கே கெட்ட நடத்தை உள்ளவர்கள் என்று குறிப்பிடப்பட்டவர்கள் பாவம் செய்பவர்கள் மட்டுமல்லர். அவர்களுக்கு பகவானிடம் நம்பிக்கையும் கிடையாது. பகவானைப் பற்றித் தெரியவும் தெரியாது. பாவச் செயல்களிலிருந்து மீளவேண்டும் என்ற எண்ணமும் கிடையாது. அப்படிப்பட்ட நாஸ்திக மூடர்களுக்கு, மாயையால் அறிவிழந்தவர்கள் என்றும், மனிதப்பதர்கள் என்றும், அஸுரஸ்வபாவம் உடையவர்கள் என்றும் அடைமொழிகள் கொடுத்திருக்கிறார். ஆனால், இங்குக் கூறப்படும் கெட்ட நடத்தையுள்ளவர்கள் பாவங்களிலிருந்து மீள விரும்புகிறார்கள். இவர்களுக்கு பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், ஸ்வரூபங்கள், நாமங்கள் இவற்றில் பக்தியும், நம்பிக்கையும் உள்ளன. இவர்கள், 'பதிதபாவனரானவரும், மிகச்சிறந்த அருளாளருமான பகவான் எல்லோருக்கும் மேலானவர். அவரே நமக்கு இஷ்ட தெய்வம். அவரைப் பூஜிப்பதே மனித வாழ்வின் தலையாய கடமை. அவருடைய க்ருபையினால்தான் நம்முடைய பாவங்கள் அடியோடு அழியும்; அவரையும் அடைய முடியும்' என்ற அசைக்க முடியாத உறுதிக்கு வந்தவர்கள். இதைத்தான் 'ஸம்யக்வ்யவஸித:', 'அநந்யபாக்' என்ற சொற்கள் குறிப்பிடுகின்றன. ஆகவே, இவர்கள் செய்யும் வழிபாடு இயல்பானது. நாஸ்திகர்களுக்கு பகவானிடம் நம்பிக்கையும் கிடையாது. அவர்கள் பக்தி செய்வதற்கே இடமில்லை. ஆகவே பகவானுடைய பேச்சில் முரண்பாடு ஒன்றுமில்லை. வெவ்வேறு ஸந்தர்பங்களில் கூறிய இரண்டும் சரியானவையே.

**क्षिप्रं भवति धर्मात्मा शश्वच्छान्तिं निगच्छति।**
**कौन्तेय प्रतिजानीहि न मे भक्तः प्रणश्यति॥ ३१॥**

**க்ஷிப்ரம் ப₄வதி த₄ர்மாத்மா ஶஶ்வச்சா₂ந்திம் நிக₃ச்ச₂தி ।**

**கௌந்தேய ப்ரதிஜாநீஹி ந மே ப₄க்த: ப்ரணஶ்யதி ॥ 31 ॥**

(ஸ: – அவன்), **க்ஷிப்ரம்** – விரைவிலேயே, **த₄ர்மாத்மா** – தர்மாத்மாவாக, **ப₄வதி** – ஆகிறான். **ஶஶ்வத்** – நிலையான, **ஶாந்திம்** – அமைதியை, **நிக₃ச்ச₂தி** – அடைகிறான். **கௌந்தேய** – அர்ஜுன! **மே** – என்னுடைய, **ப₄க்த:** – பக்தன், **ந ப்ரணஶ்யதி** – அழிவதில்லை (என்ற), **ப்ரதி ஜாநீஹி** – ஸத்யத்தை உறுதியாக அறிந்து கொள்.

அவன் விரைவிலேயே தர்மாத்மாவாக ஆகிறான்; நிலையான அமைதியை அடைகிறான். அர்ஜுன! என்னுடைய பக்தன் அழிவதில்லை என்ற ஸத்யத்தை உறுதியாக அறிந்து கொள்.

**கேள்வி:** மேலே சொன்னவிதம் பகவானைப் பூஜிக்கின்ற பக்தன் விரைவில் தர்மாத்மா ஆகிவிடுவான் என்பது எப்படி? நிலையான அமைதியை அடைவது என்றால் என்ன?

**பதில்:** இதே பிறவியில் மிகவும் விரைவிலேயே எல்லாவிதமான தீய பண்புகளையும், நடத்தைகளையும் துறந்து 16/1–3களில் கூறப்படுகின்ற தெய்வ ஸம்பத்தைப் பெறுவதே – அதாவது பகவானை அடையத் தகுதி பெறுவதே 'விரைவில் தர்மாத்மா ஆவான்' என்பதன் பொருள். எப்பொழுதும் நிலைத்திருக்கும் அமைதி என்பது ஒரு தடவை பெற்றுவிட்டால், அது என்றும் அழியாதது ஆகும். இதை நைஷ்டிகீ சாந்தி (5/12), நிர்வாணபரமா சாந்தி (6/15), பரமா சாந்தி (18/62) என்று கூறுகிறார். பரமாத்மாவை அடைவதே அந்த அமைதியைப் பெறுவதாகும்; நிலையான அமைதியைப் பெறுவதாகும்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ப்ரதி ஜாநீஹி' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? அப்படி இங்கே கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஜ்ஞா' என்ற தாதுவுடன் 'ப்ரதி' என்ற உபஸர்கம் சேர்ந்த சொல்லமைப்பு இது. சூளுரைப்பாயாக (சபதம் செய்) அல்லது 'உறுதியாக, ஸத்யமாக அறிந்து கொள்' என்று பொருள். "அர்ஜுன! என்னிடம் பக்தி செய்வதன் மஹிமை பற்றியும், என்னுடைய பக்தர்களின் மஹிமை பற்றியும் இவ்வாறு கூறினேன். அதில் உனக்குச் சிறிதுகூட ஐயம் வேண்டாம். அவை அப்படியே உண்மை என நம்புவாயாக. உறுதியுடன் மனதில் ஏற்றுக் கொள்வாயாக" என்று கூறுகிறார். இச்சொல்லைக் கையாண்டு இக்கருத்தைத்தான் உணர்த்துகிறார்.

**கேள்வி:** 'என் பக்தன் அழிவதில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ப்ரணச்யதி' என்பது வீழ்வான் என்ற கருத்தைக் கூறும் சொல். பகவானுடைய பக்தன் படிப்படியாக பக்தியில் முன்னேறுவானே தவிர வீழ்ச்சியடையமாட்டான் என்பது பொருள். அதாவது தன்நிலையிலிருந்து நழுவிக் கீழான நிலைக்குப் போய்விடமாட்டான். தாழ்ந்த பிறவியில் பிறப்போ, நரகத்தை அடைவது போன்ற கெட்டநிலையோ அவனுக்கு ஏற்படாது. முன் சொன்னபடி அவன் படிப்படியாகத் தீய பண்புகளையும், தீய நடத்தைகளையும் விட்டொழித்து, விரைவிலேயே தர்மாத்மா ஆகிவிடுவான். நிலையான அமைதியைப் பெறுவான். 'அழிவதில்லை' என்ற சொல்லால் உணர்த்தப்படும் கருத்து இதுதான்.

**கேள்வி:** இதற்கு எந்த பக்தரையாவது உதாரணமாகக் காட்ட முடியுமா?

**பதில்:** பல உதாரணங்கள் உள்ளன:-

## பில்வமங்களர் (லீலாசுகர்)

பக்தி ரஸம் நிரம்பிய 'க்ருஷ்ணகர்ணாம்ருதம்' என்ற நூலை இயற்றிய பில்வமங்களரைப் பற்றி இந்த ஸந்தர்பத்தில் கூறுவோம். தென்னாட்டில் க்ருஷ்ணவேணி நதிக்கரையில் ஒரு கிராமத்தில் ராமதாஸர் என்ற பெயர் கொண்ட பக்தரான அந்தணர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருடைய குமாரர் பில்வமங்களர். நல்ல கல்வியறிவுள்ளவர்; அமைதியான இயல்புடையவர்; நன்னடத்தை அமைந்தவர்; இனிய ஸ்வபாவம் உடையவர். ஆனால் தந்தையைச் சிறுவயதிலேயே இழந்துவிட்டபடியால், தீய சேர்க்கையில் வீழ்ந்து தீய நடவடிக்கைகளைக் கைக்கொண்டார். வேசியின் வீட்டிலேயே பழியாகக் கிடந்தார். இரவு பகலாகப் பாவச் செயல்களில் ஈடுபட்டார். சிந்தாமணி என்ற பெயர் கொண்ட வேசியிடம் மையல் கொண்டிருந்தார். வேசி ஆற்றின் அக்கரையில் குடியிருந்தாள். தந்தையின் ச்ராத்த தினம். அன்று பகல் முழுவதும் தன் வீட்டிலேயே அவர் இருக்க நேர்ந்தது. ஆனால் மனம் முழுவதும் வேசி வீட்டில். ச்ராத்தம் முடிய மாலை நேரம் ஆகிவிட்டது. வேசியின் வீட்டிற்குக் கிளம்பிவிட்டார். உறவினர்கள் 'இன்று தந்தையின் ச்ராத்தம் ஆயிற்றே. அங்கு போகவேண்டாமே' என்று கெஞ்சினார்கள். அவர் கேட்கவில்லை. ஆற்றங்கரைக்கு ஓடினார். புயல் அடித்தது. பெருமழையாகப் பொழிந்தது. ஓடக்காரர்கள் ஓடங்களை மரங்களில் இழுத்துக் கட்டிவிட்டு உட்கார்ந்துவிட்டார்கள். பயங்கரமாக இருட்டிவிட்டது. பில்வமங்களர் ஓடக்காரர்களை வேண்டினார். ஆசை காட்டினார். உயிரைத் துறக்க யார்தான் தயாராக இருப்பார்? இவரது மனதோ வேறு லக்ஷ்யத்தில் இருந்தது. முன்பின் ஆலோசியாமல் வெள்ளத்தில் குதித்துவிட்டார். வெள்ளம் பெருகிவிட்டது. ஏதோ ஒரு பெண்ணின் அழுகிய சடலம் மிதந்து வந்தது. இருட்டில் ஒன்றும் தெரியவில்லை. இவரோ காமவெறியினால் தன்னிலை இழந்து அதை ஏதோ கட்டை என நினைத்துப் பிடித்துக் கொண்டுவிட்டார். அது பிணம் என்பதையோ, அதிலிருந்து வெளி வந்தது நாற்றம் என்பதையோ உணரவில்லை. எப்படியோ தெய்வச் செயலாக அக்கரை சேர்ந்துவிட்டார். ஓடிப்போய் சிந்தாமணியின் வீட்டை அடைந்தார். வீட்டுக்கதவு அடைத்திருந்தது. இவர்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அவசரமோ வியப்புக்குட்பட்டதாகயிருந்தது. சுவர் ஏறிக் குதித்து உள்ளே போய்விடலாம் என நினைத்தார். சுவரில் வழவழவென்று கயிறுபோல் ஒன்று தொங்கியது. அது ஒரு கருநாகம். அதன் தலை சுவரின் உச்சியைப் பிடித்துக் கொண்டிருந்தது. கீழே வால் தொங்கியது. அவர் அந்த வாலைப்பிடித்துக் கொண்டு மேலே ஏறிவிட்டார். பகவானுடைய கருணையால் அந்தப் பாம்பு அவரைக் கடிக்கவில்லை. உள்ளே சென்று சிந்தாமணியை எழுப்பினார். அவரைப் பார்த்ததும் அவள் பதறிப் போய்— 'இந்த பயங்கரமான இரவில் நதியைக் கடந்து பூட்டிய வீட்டில் நீங்கள் எப்படி நுழைந்தீர்கள்?' என வினவினாள். பில்வமங்களர் கட்டையைப் பிடித்துக் கொண்டு நதியைக் கடந்ததாகவும், கயிற்றைப் பிடித்துக் கொண்டு சுவர் ஏறினதாகவும் கூறினார். மழை நின்றிருந்தது. சிந்தாமணி விளக்கைக் கையில் எடுத்துக் கொண்டு வெளியே வந்தாள். சுவரில் கொடிய கருநாகம் தொங்கிக் கொண்டிருந்தது. ஆற்றங்கரையில் பெண்ணின் அழுகிய பிணம் கிடந்தது. பில்வமங்களரும் பார்த்தார். அவர் உடல் நடுங்கியது. சிந்தாமணி அதட்டிக் கூறினாள்— "ஐயா! நீ ப்ராம்மணன்தானே! இன்று உன் தகப்பனாருக்கு ச்ராத்தம் அல்லவா! எலும்பும் சதையும் ஒட்டி வைத்த இந்தக் கூட்டின் மீது உனக்கு இவ்வளவு ஆசையா! உன்னுடைய எல்லா தர்மங்களையும், கர்மங்களையும் இதற்காகத் துறந்துவிட்டாயே! இந்த பயங்கரமான இரவில் பிணத்தைப் பிடித்துக் கொண்டு நதியைக் கடந்து, கருநாகத்தைப் பிடித்துக் கொண்டு சுவர் ஏறிக் குதித்தாயே! இந்த உடலை அழகானது என நினைத்து வந்தாயே! ஒரு நாள் அதுவும் இப்படித்தானே அழுகி நாற்றமடிக்கும். இது என்ன அறியாமை? சீ, இவ்வளவு கீழ்த்தரமான புத்தியா உனக்கு! இவ்வளவு ஆசையை அந்த மனமோஹனன் ச்யாமஸுந்தரன் ஸ்ரீக்ருஷ்ணன் மீது வைத்திருந்தால், அவரைச் சென்றடைவதற்காக இவ்வளவு ஆதங்கத்துடன் ஓடியிருந்தால், இதற்குள் நீ கண்ணனையடைந்து பிறவிப்பயனையே எய்தியிருக்கலாமே!" என்று கூறினாள்.

வேசியின் உபதேசம் மந்த்ரத்தைப் போல வேலை செய்தது. பில்வமங்களரின் இதயவீணை புதிய ஸ்வரங்களை மீட்ட ஆரம்பித்தது. விவேகம் என்ற சுடர் பற்றிக் கொண்டது. அவருடைய மன அழுக்கை எரித்துவிட்டது. மனம் பரிசுத்தமானவுடன் அதில் பகவானிடம் பக்தி நிறைந்து ததும்பியது. கண்களில் நீர் பெருகியது. பகவானிடம் ப்ரேமை பொங்கி வழிந்தது. பில்வமங்களர் சிந்தாமணியின் கால்களைப் பிடித்துக் கொண்டார். 'தாயே! நீ இன்று என் விவேகக் கண்களைத் திறந்து என் வாழ்வைப் பயனுள்ளதாக்கினாய்' என்று துதித்தார். அவளையே குருவாக மனதில் பாவித்து வணங்கினார். பிறகு இரவு முழுவதும் சிந்தாமணி பகவான் ஸ்ரீக்ருஷ்ணனின் லீலைகளை மதுரமான குரலில் பாடினாள். பில்வமங்களர் மனமுருகிக் கேட்டு மெய் மறந்தார். பொழுது விடிந்ததும் உலகிற்கே சிந்தாமணியான ஸ்ரீக்ருஷ்ணனை உள்ளத்தில் நிறைத்துக் கொண்டு பைத்தியம் பிடித்தாற்போல சிந்தாமணியின் வீட்டிலிருந்து கிளம்பினார். பில்வமங்களரின் வாழ்க்கை நாடகத்தின் காட்சி மாறியது. பில்வமங்களர் க்ருஷ்ணவேணி நதிக்கரையில் தவம் செய்து வந்த ஸோமகிரி என்ற மஹாத்மாவை அணுகினார். அவரிடமிருந்து கோபால மந்த்ரத்தை உபதேசம் பெற்றார். பகவானுடைய நாம பஜனையில் ஈடுபட்டார். நாமகீர்த்தனம் செய்து கொண்டே க்ஷேத்ரங்கள்தோறும் சென்று பகவானை தர்சனம் செய்தார். மனதில் பகவானை எப்படியாவது கண்கூடாக தர்சனம் செய்துவிட வேண்டும் என்ற தீவிர ஆசை எழுந்து விட்டது. ஆயினும் தீய இயல்பு அறவே ஒழியவில்லை. தீய பழக்கத்தின் காரணமாகத் தம்மை அடக்கிக் கொள்ள முடியாமல் அவருடைய மனம் மற்றொரு பெண்ணின்பால் ஈர்க்கப்பட்டுவிட்டது. அவளது வீட்டு வாசலில் போய் உட்கார்ந்துவிட்டார். வீட்டின் தலைவன் வெளியே வந்து பார்த்தார். சோகமான முகத்துடன் அந்தணன் ஒருவன் உட்கார்ந்திருப்பதைக் கண்டார். அவர் அங்கே உட்கார்ந்திருக்கும் காரணத்தைக் கேட்டார். பில்வமங்களர் கபடமின்றி மனம் திறந்து பேசினார். நடந்தவை அனைத்தையும் கூறினார்: 'ஐயா! ஒரே ஒரு முறை அந்தப் பெண்ணைக் கண்கள் நிறையப் பார்த்துவிட்டுப் போய்விடுகிறேன். அவளை வெளியே அழையுங்கள்' என்றார். அந்தப் பெண் அந்த வீட்டுத் தலைவனின் மனைவி. அவன் நினைத்தான்: 'இதில் என்ன நஷ்டம்? ஒரு தடவை பார்த்து

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இவன் த்ருப்தி அடையட்டுமே.' நல்ல மனமுடைய அந்த வீட்டுக்காரன் தன் மனைவியை அழைத்து வருவதற்காக உள்ளே சென்றான். இங்கே பில்வமங்களருடைய மனக்கடலில் புயல் வீசியது. பலவிதமாக மனம் கொந்தளித்தது.

பில்வமங்களர்தான் பகவானுடைய பக்தன் ஆகிவிட்டாரே! அவருக்கு வீழ்ச்சி வருமா! பகவான் அவருக்கு அஞ்ஞான இருளைப்போக்கி விவேகக் கண்களைக் கொடுத்துவிட்டார். அவருக்குத் தமது உண்மைநிலை புரிந்துவிட்டது. இதயத்தில் துயரம் மிகுந்தது. 'ஐயோ! என்ன கார்யம் செய்ய நினைத்தோம்' என்று பதறினார். பக்கத்தில் ஒரு வில்வமரம் இருந்தது. அதிலிருந்து இரண்டு முட்களை ஒடித்து எடுத்தார். இதற்குள் வீட்டுக்காரரின் மனைவி வெளியே வந்துவிட்டாள். பில்வமங்களர் அவளைத் திரும்பப் பார்த்தார். மனதில் 'சீ' என்று தோன்றிவிட்டது. 'பாவிக்கண்களே! நீங்கள் இருப்பதால்தானே எனக்கு இப்படி வீழ்ச்சி வர நேர்ந்துவிட்டது?' என்று கூறிக் கொண்டே அந்த வில்வ முட்களால் கண்களைக் குத்திக் கொண்டுவிட்டார். மனச்சஞ்சலத்திற்குக் கண்களே காரணமென நினைத்துக் கண்களைத் தண்டித்துவிட்டார். கண்களிலிருந்து ரத்தம் பெருகியது. பில்வமங்களர் சிரித்துக் கொண்டே ஹரிநாமங்களை உரக்கச் சொல்லி நர்த்தனம் ஆடத் தொடங்கிவிட்டார். வீட்டுக்காரருக்கும், அவருடைய மனைவிக்கும் மிகுந்த மனத்துன்பம் ஏற்பட்டது. அவர்கள் என்ன செய்வார்கள்? பில்வமங்களரின் உள்ளத்தில் இருந்த சிறிது அழுக்கும் அகன்றுவிட்டது. அந்த ஏழைபங்காளனான பகவானை தர்சிக்க வேண்டுமென்ற ஒரே துடிப்புதான் மிகுந்தது.

மிகவும் ப்ரியத்திற்குரிய ஸ்ரீக்ருஷ்ணனைப் பிரிந்து வாழும் கணம்தோறும், ஒளியிழந்த ஊனக்கண்களிலிருந்து கண்ணீர் பெருகிக் கொண்டே இருந்தது. அவருக்குப் பசி தெரியாது; தாகம் தெரியாது; தூக்கம் தெரியாது; விழிப்பு தெரியாது. 'க்ருஷ்ண! க்ருஷ்ண! க்ருஷ்ண!' என்று கூவிக் கொண்டே, எங்கே போகிறோம் என்பது தெரியாமல் கிராமம் கிராமமாகக் காடுகளிலும், மலைகளிலும் அலைந்து திரிந்தார். எந்த ஏழைபங்காளனைக் காண வேண்டுமென்பதற்காக மற்றதைக் கண்ணெடுத்தும் பார்க்கக் கூடாது என்று கண்களை அவித்துக் கொண்டாரோ, எந்த அன்பே வடிவானவரை அடைவதற்காக ஓய்வின்றி அலைந்து திரிந்து கொண்டிருக்கிறாரோ, அவரைச் சந்திக்க ஏன் தாமதம் ஏற்படுகிறது? அதை எப்படி அவர் பொறுப்பார்? இந்த நிலையில் கண்ணன் கவலையற்று இருந்துவிட முடியுமா? ஒரு இடைச்சிறுவனின் உருவத்தில் பகவான் பில்வமங்களரின் அருகில் வந்தார். பக்தனின் மனதைக் கொள்ளை கொள்ளும் தம் தேமதுரத்தீங்குரலால் அவரை அழைத்தார். 'பெரியவரே! உங்களுக்குப் பசி மிஞ்சிப் போயிருக்குமே! நான் கொஞ்சம் பட்சணம் கொண்டு வந்திருக்கிறேன். தண்ணீரும் கொண்டு வந்திருக்கிறேன். சாப்பிடுங்கள்' என்றார். பில்வமங்களரின் உயிர் அந்தத் தேமதுர ஓசையைக் கேட்டதுமே துளிர்த்துவிட்டது. கைகளில் சிறுவன் கொடுத்த இனிப்புப் பண்டம் இருந்தது. மெய் புல்லரித்தது. 'தம்பி! உன் வீடு எங்கே இருக்கிறது? உன் பெயர் என்ன அப்பா? நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்?' என்று கேட்டார்.

சிறுவன் சொன்னான்: 'என் வீடு இதோ அருகில் இருக்கிறது. எனக்கு ஒரு குறிப்பிட்ட பெயரும் கிடையாது. யார் எப்படிக் கூப்பிட்டாலும் நான் ஓடி வருவேன். மாடு மேய்ப்பதுதான் என் வேலை. என்னை யாராவது நேசித்தால், அவரை நானும் நேசிப்பேன்.' பில்வமங்களர் சிறுவனின் இனிமையான சொல் கேட்டு விம்மிதம் அடைந்தார். சிறுவன் போய்க் கொண்டே 'இனி நான் தினந்தோறும் உங்களுக்குச் சாப்பாடு கொண்டு வருகிறேன்' என்று சொன்னான். 'ரொம்ப நல்லது. தம்பி! தினம் வந்து கொண்டிரு' என்று அனுப்பினார். போகும்போது சிறுவன் பில்வமங்களரின் உள்ளத்தையும் திருடிக் கொண்டு போய்விட்டான். தினந்தோறும் வந்து அவருக்கு உணவு அளித்துக் கொண்டிருந்தான்.

தாம் எந்த பகவானைத் தேடிக் கொண்டிருக்கிறோமோ, எவருக்காக இப்படித் துறவியாகத் திரிந்து கொண்டிருக்கிறோமோ, யாருக்காக ஊனக்கண்களை அவித்துக் கொண்டோமோ, அவர்தான் இந்த ஆயர் சிறுவன் என்பது பில்வமங்களருக்குப் புரியவில்லை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அவசரமோ வியப்புக்குட்பட்டதாகயிருந்தது. சுவர் ஏறிக் குதித்து உள்ளே போய்விடலாம் என நினைத்தார். சுவரில் வழவழவென்று கயிறுபோல் ஒன்று தொங்கியது. அது ஒரு கருநாகம். அதன் தலை சுவரின் உச்சியைப் பிடித்துக் கொண்டிருந்தது. கீழே வால் தொங்கியது. அவர் அந்த வாலைப்பிடித்துக் கொண்டு மேலே ஏறிவிட்டார். பகவானுடைய கருணையால் அந்தப் பாம்பு அவரைக் கடிக்கவில்லை. உள்ளே சென்று சிந்தாமணியை எழுப்பினார். அவரைப் பார்த்ததும் அவள் பதறிப் போய்— 'இந்த பயங்கரமான இரவில் நதியைக் கடந்து பூட்டிய வீட்டில் நீங்கள் எப்படி நுழைந்தீர்கள்?' என வினவினாள். பில்வமங்களர் கட்டையைப் பிடித்துக் கொண்டு நதியைக் கடந்ததாகவும், கயிற்றைப் பிடித்துக் கொண்டு சுவர் ஏறினதாகவும் கூறினார். மழை நின்றிருந்தது. சிந்தாமணி விளக்கைக் கையில் எடுத்துக் கொண்டு வெளியே வந்தாள். சுவரில் கொடிய கருநாகம் தொங்கிக் கொண்டிருந்தது. ஆற்றங்கரையில் பெண்ணின் அழுகிய பிணம் கிடந்தது. பில்வமங்களரும் பார்த்தார். அவர் உடல் நடுங்கியது. சிந்தாமணி அதட்டிக் கூறினாள்— "ஐயா! நீ ப்ராம்மணன்தானே! இன்று உன் தகப்பனாருக்கு ச்ராத்தம் அல்லவா! எலும்பும் சதையும் ஒட்டி வைத்த இந்தக் கூட்டின் மீது உனக்கு இவ்வளவு ஆசையா! உன்னுடைய எல்லா தர்மங்களையும், கர்மங்களையும் இதற்காகத் துறந்துவிட்டாயே! இந்த பயங்கரமான இரவில் பிணத்தைப் பிடித்துக் கொண்டு நதியைக் கடந்து, கருநாகத்தைப் பிடித்துக் கொண்டு சுவர் ஏறிக் குதித்தாயே! இந்த உடலை அழகானது என நினைத்து வந்தாயே! ஒரு நாள் அதுவும் இப்படித்தானே அழுகி நாற்றமடிக்கும். இது என்ன அறியாமை? சீ, இவ்வளவு கீழ்த்தரமான புத்தியா உனக்கு! இவ்வளவு ஆசையை அந்த மனமோஹனன் ச்யாமஸுந்தரன் ஸ்ரீக்ருஷ்ணன் மீது வைத்திருந்தால், அவரைச் சென்றடைவதற்காக இவ்வளவு ஆதங்கத்துடன் ஓடியிருந்தால், இதற்குள் நீ கண்ணனையடைந்து பிறவிப்பயனையே எய்தியிருக்கலாமே!" என்று கூறினாள்.

வேசியின் உபதேசம் மந்த்ரத்தைப் போல வேலை செய்தது. பில்வமங்களரின் இதயவீணை புதிய ஸ்வரங்களை மீட்ட ஆரம்பித்தது. விவேகம் என்ற சுடர் பற்றிக் கொண்டது. அவருடைய மன அழுக்கை எரித்துவிட்டது. மனம் பரிசுத்தமானவுடன் அதில் பகவானிடம் பக்தி நிறைந்து ததும்பியது. கண்களில் நீர் பெருகியது. பகவானிடம் ப்ரேமை பொங்கி வழிந்தது. பில்வமங்களர் சிந்தாமணியின் கால்களைப் பிடித்துக் கொண்டார். 'தாயே! நீ இன்று என் விவேகக் கண்களைத் திறந்து என் வாழ்வைப் பயனுள்ளதாக்கினாய்' என்று துதித்தார். அவளையே குருவாக மனதில் பாவித்து வணங்கினார். பிறகு இரவு முழுவதும் சிந்தாமணி பகவான் ஸ்ரீக்ருஷ்ணனின் லீலைகளை மதுரமான குரலில் பாடினாள். பில்வமங்களர் மனமுருகிக் கேட்டு மெய் மறந்தார். பொழுது விடிந்ததும் உலகிற்கே சிந்தாமணியான ஸ்ரீக்ருஷ்ணனை உள்ளத்தில் நிறைத்துக் கொண்டு பைத்தியம் பிடித்தாற்போல சிந்தாமணியின் வீட்டிலிருந்து கிளம்பினார். பில்வமங்களரின் வாழ்க்கை நாடகத்தின் காட்சி மாறியது. பில்வமங்களர் க்ருஷ்ணவேணி நதிக்கரையில் தவம் செய்து வந்த ஸோமகிரி என்ற மஹாத்மாவை அணுகினார். அவரிடமிருந்து கோபால மந்த்ரத்தை உபதேசம் பெற்றார். பகவானுடைய நாம பஜனையில் ஈடுபட்டார். நாமகீர்த்தனம் செய்து கொண்டே க்ஷேத்ரங்கள்தோறும் சென்று பகவானை தர்சனம் செய்தார். மனதில் பகவானை எப்படியாவது கண்கூடாக தர்சனம் செய்துவிட வேண்டும் என்ற தீவிர ஆசை எழுந்து விட்டது. ஆயினும் தீய இயல்பு அறவே ஒழியவில்லை. தீய பழக்கத்தின் காரணமாகத் தம்மை அடக்கிக் கொள்ள முடியாமல் அவருடைய மனம் மற்றொரு பெண்ணின்பால் ஈர்க்கப்பட்டுவிட்டது. அவளது வீட்டு வாசலில் போய் உட்கார்ந்துவிட்டார்.. வீட்டின் தலைவன் வெளியே வந்து பார்த்தார். சோகமான முகத்துடன் அந்தணன் ஒருவன் உட்கார்ந்திருப்பதைக் கண்டார். அவர் அங்கே உட்கார்ந்திருக்கும் காரணத்தைக் கேட்டார். பில்வமங்களர் கபடமின்றி மனம் திறந்து பேசினார். நடந்தவை அனைத்தையும் கூறினார்: 'ஐயா! ஒரே ஒரு முறை அந்தப் பெண்ணைக் கண்கள் நிறையப் பார்த்துவிட்டுப் போய்விடுகிறேன். அவளை வெளியே அழையுங்கள்' என்றார். அந்தப் பெண் அந்த வீட்டுத் தலைவனின் மனைவி. அவன் நினைத்தான்: 'இதில் என்ன நஷ்டம்? ஒரு தடவை பார்த்து

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இவன் த்ருப்தி அடையட்டுமே.' நல்ல மனமுடைய அந்த வீட்டுக்காரன் தன் மனைவியை அழைத்து வருவதற்காக உள்ளே சென்றான். இங்கே பில்வமங்களருடைய மனக்கடலில் புயல் வீசியது. பலவிதமாக மனம் கொந்தளித்தது.

பில்வமங்களர்தான் பகவானுடைய பக்தன் ஆகிவிட்டாரே! அவருக்கு வீழ்ச்சி வருமா! பகவான் அவருக்கு அஞ்ஞான இருளைப்போக்கி விவேகக் கண்களைக் கொடுத்துவிட்டார். அவருக்குத் தமது உண்மைநிலை புரிந்துவிட்டது. இதயத்தில் துயரம் மிகுந்தது. 'ஐயோ! என்ன கார்யம் செய்ய நினைத்தோம்' என்று பதறினார். பக்கத்தில் ஒரு வில்வமரம் இருந்தது. அதிலிருந்து இரண்டு முட்களை ஒடித்து எடுத்தார். இதற்குள் வீட்டுக்காரரின் மனைவி வெளியே வந்துவிட்டாள். பில்வமங்களர் அவளைத் திரும்பப் பார்த்தார். மனதில் 'சீ' என்று தோன்றிவிட்டது. 'பாவிக்கண்களே! நீங்கள் இருப்பதால்தானே எனக்கு இப்படி வீழ்ச்சி வர நேர்ந்துவிட்டது?' என்று கூறிக் கொண்டே அந்த வில்வ முட்களால் கண்களைக் குத்திக் கொண்டுவிட்டார். மனச்சஞ்சலத்திற்குக் கண்களே காரணமென நினைத்துக் கண்களைத் தண்டித்துவிட்டார். கண்களிலிருந்து ரத்தம் பெருகியது. பில்வமங்களர் சிரித்துக் கொண்டே ஹரிநாமங்களை உரக்கச் சொல்லி நர்த்தனம் ஆடத் தொடங்கிவிட்டார். வீட்டுக்காரருக்கும், அவருடைய மனைவிக்கும் மிகுந்த மனத்துன்பம் ஏற்பட்டது. அவர்கள் என்ன செய்வார்கள்? பில்வமங்களரின் உள்ளத்தில் இருந்த சிறிது அழுக்கும் அகன்றுவிட்டது. அந்த ஏழைபங்காளனான பகவானை தர்சிக்க வேண்டுமென்ற ஒரே துடிப்புதான் மிகுந்தது.

மிகவும் ப்ரியத்திற்குரிய ஸ்ரீக்ருஷ்ணனைப் பிரிந்து வாழும் கணம்தோறும், ஒளியிழந்த ஊனக்கண்களிலிருந்து கண்ணீர் பெருகிக் கொண்டே இருந்தது. அவருக்குப் பசி தெரியாது; தாகம் தெரியாது; தூக்கம் தெரியாது; விழிப்பு தெரியாது. 'க்ருஷ்ண! க்ருஷ்ண! க்ருஷ்ண!' என்று கூவிக் கொண்டே, எங்கே போகிறோம் என்பது தெரியாமல் கிராமம் கிராமமாகக் காடுகளிலும், மலைகளிலும் அலைந்து திரிந்தார். எந்த ஏழைபங்காளனைக் காண வேண்டுமென்பதற்காக மற்றதைக் கண்ணெடுத்தும் பார்க்கக் கூடாது என்று கண்களை அவித்துக் கொண்டாரோ, எந்த அன்பே வடிவானவரை அடைவதற்காக ஓய்வின்றி அலைந்து திரிந்து கொண்டிருக்கிறாரோ, அவரைச் சந்திக்க ஏன் தாமதம் ஏற்படுகிறது? அதை எப்படி அவர் பொறுப்பார்? இந்த நிலையில் கண்ணன் கவலையற்று இருந்துவிட முடியுமா? ஒரு இடைச்சிறுவனின் உருவத்தில் பகவான் பில்வமங்களரின் அருகில் வந்தார். பக்தனின் மனதைக் கொள்ளை கொள்ளும் தம் தேமதுரத்தீங்குரலால் அவரை அழைத்தார். 'பெரியவரே! உங்களுக்குப் பசி மிஞ்சிப் போயிருக்குமே! நான் கொஞ்சம் பட்சணம் கொண்டு வந்திருக்கிறேன். தண்ணீரும் கொண்டு வந்திருக்கிறேன். சாப்பிடுங்கள்' என்றார். பில்வமங்களரின் உயிர் அந்தத் தேமதுர ஓசையைக் கேட்டதுமே துளிர்த்துவிட்டது. கைகளில் சிறுவன் கொடுத்த இனிப்புப் பண்டம் இருந்தது. மெய் புல்லரித்தது. 'தம்பீ! உன் வீடு எங்கே இருக்கிறது? உன் பெயர் என்ன அப்பா? நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்?' என்று கேட்டார்.

சிறுவன் சொன்னான்: 'என் வீடு இதோ அருகில் இருக்கிறது. எனக்கு ஒரு குறிப்பிட்ட பெயரும் கிடையாது. யார் எப்படிக் கூப்பிட்டாலும் நான் ஓடி வருவேன். மாடு மேய்ப்பதுதான் என் வேலை. என்னை யாராவது நேசித்தால், அவரை நானும் நேசிப்பேன்.' பில்வமங்களர் சிறுவனின் இனிமையான சொல் கேட்டு விம்மிதம் அடைந்தார். சிறுவன் போய்க் கொண்டே 'இனி நான் தினந்தோறும் உங்களுக்குச் சாப்பாடு கொண்டு வருகிறேன்' என்று சொன்னான். 'ரொம்ப நல்லது. தம்பி! தினம் வந்து கொண்டிரு' என்று அனுப்பினார். போகும்போது சிறுவன் பில்வமங்களரின் உள்ளத்தையும் திருடிக் கொண்டு போய்விட்டான். தினந்தோறும் வந்து அவருக்கு உணவு அளித்துக் கொண்டிருந்தான்.

தாம் எந்த பகவானைத் தேடிக் கொண்டிருக்கிறோமோ, எவருக்காக இப்படித் துறவியாகத் திரிந்து கொண்டிருக்கிறோமோ,. யாருக்காக ஊனக்கண்களை அவித்துக் கொண்டோமோ, அவர்தான் இந்த ஆயர் சிறுவன் என்பது பில்வமங்களருக்குப் புரியவில்லை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஆனால் அச்சிறுவன் அவருடைய உள்ளத்தை முழுமையாக ஆட்கொண்டுவிட்டான். அவருக்கு வேறு எந்தப் பேச்சையும் கேட்க மனம் கொள்ளவில்லை. ஒரு நாள் அவர் நினைத்தார்: 'எத்தனையோ இடையூறுகளைக் களைந்துவிட்டு இவ்வளவு தூரம் வந்துவிட்டேன். எனக்கு இங்கே புதிய இடையூறு முளைத்து விட்டதே! பெண் மோஹத்திலிருந்து மீண்டுவிட்ட எனக்கு இந்தச் சிறுவன்பால் மோஹம் மூண்டுவிட்டதே.' இங்ஙனம் நினைத்திருக்கையில் அன்பு நிறைந்த அச்சிறுவன் அவர் அருகில் வந்து உட்கார்ந்தான். பிறரை மயங்க வைக்கும் தன் இனிய குரலில் சொன்னான்: 'பெரியவரே! வாயை மூடிக் கொண்டு என்ன சிந்திக்கிறீர்! ப்ருந்தாவனம் போகவேண்டுமா?' ப்ருந்தாவனம் என்ற சொல்லைக் கேட்டதுமே பில்வமங்களரின் இதயம் துடித்தது. அடுத்த கணம் தன் இயலாமை அவரை ஏங்க வைத்தது. 'சிறுவா! இந்தக் குருடன் ப்ருந்தாவனத்திற்கு எப்படிப் போவான்?' சிறுவன் சொன்னான்: 'இந்தத் தடியைப் பிடித்துக் கொள்ளுங்கள். நான் அழைத்துப் போகிறேன்.' பில்வமங்களரின் உள்ளம் மலர்ந்தது. அந்தத் தடியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். பகவான் பக்தனை அழைத்துச் சென்றார். கல்லையும், முள்ளையும் விலக்கி, 'இப்படி வாருங்கள். இங்கே திரும்புங்கள். காலைத் தூக்கி வையுங்கள்' என்று இனிமையாகச் சொல்லிக் கொண்டே அழைத்துச் சென்றார் பகவான். என்ன கருணை! எத்துணை சிறந்தது இந்தத் தயாளகுணம்! சற்று நேரம் சென்றது. 'ஐயா! இதோ ப்ருந்தாவனம் வந்துவிட்டது. நான் போகிறேன்' என்றான் சிறுவன். பில்வமங்களர் உடனே தடியை விட்டுவிட்டுப் பையனுடைய கையைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டுவிட்டார். பையன் கையைத் தொட்டதுமே பில்வமங்களரின் உடலில் மின்னல் போன்ற உணர்வு பாய்ந்தது. இருள் மறைந்தது. எங்கும் ஒரே வெளிச்சம். பில்வமங்களருக்குத் தெய்விகப்பார்வை வந்துவிட்டது. சிறுவனின் வடிவில் பகவான் ஸ்ரீக்ருஷ்ணனையே பார்த்துவிட்டார். பில்வமங்களரின் மெய்சிலிர்த்தது. கண்களிலிருந்து நீர் அருவியாய்ப் பெருகியது. பகவானுடைய கையை மேலும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். 'ப்ரபு! இத்தனை நாட்கள் கழித்து இன்றாவது உங்களைக் கண்டு கொண்டேனே! எவ்வளவு அறிவிலி நான்! இனி என்னை விட்டுவிடாதே!' பகவான் சொன்னார்: 'நீ என்னை விடமாட்டாயே!' பில்வமங்களர் சொன்னார்: 'ஒருகாலும் உம்மை விடமாட்டேன். விடவே மாட்டேன்.'

பகவான் வெடுக்கென்று அவருடைய பிடியிலிருந்து தம் கையை விடுவித்துக் கொண்டார். எவருடைய பலத்தின் மூலம் பலம் பெற்ற மாயை அகில உலகத்தையும் ஆட்டிப் படைக்கிறதோ, அந்த பலத்தின் எதிரே அப்பாவி பில்வமங்களரின் கைப்பிடிக்கு ஏது பலம்? ஆனால் ஒன்று. பில்வமங்களர் வேறு ஒரு கயிற்றினால் பகவானைப் பிடித்துக் கட்டிப் போட்டுவிட்டார். அதிலிருந்து விடுபட பகவானால்கூட முடியாது. கையை உதறிவிட்டுப்போன கண்ணனைக் கூவியழைத்தார். 'அடே சிறுவா! ஓடியா போகிறாய்? நினைவில் வைத்துக் கொள்.'

ஹஸ்தமுத்க்ஷிப்ய யாதோऽஸி ப₃லாத்க்ருஷ்ண கிமத்₃பு₄தம் ।
ஹ்ருத₃யாத்₃யதி₃ நிர்யாஸி பௌருஷம் க₃ணயாமி தே ॥

'என் கையைத் தட்டிவிட்டு ஓடிவிட்டாய்! இதில் என்ன ஆச்சர்யம்? என் உள்ளத்திலிருந்து ஓடு பார்க்கலாம். உன் திறமையை மெச்சுகிறேன்.'

பில்வமங்களர் மிகவும் தீய நடத்தை உள்ளவராகத்தான் இருந்தார். ஆனால் பக்தன் ஆகிவிட்டார். வீழ்ச்சியைத் தரக்கூடிய காரணம் கண்முன் வந்தபோதுகூட தப்பிவிட்டார். முடிவில் பகவானையே அடைந்துவிட்டார். வாழ்வின் பயனையே எய்திவிட்டார். ப்ருந்தாவனத்தைச் சென்றடைந்ததுமே அவருக்கு உணர்ச்சிப் பெருக்கு மேலிட்டுவிட்டது. அப்பொழுது அவருடைய இனிமையான வாக்கில் தோன்றியதுதான் 'ஸ்ரீக்ருஷ்ணகர்ணாம்ருதம்'. அதன் முதல் ச்லோகத்தில் சிந்தாமணியைத் தமது குரு என்று கூறி, அவளுக்கு வணக்கத்தைத் தெரிவிக்கிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



சிந்தாமணிர்ஜயதி ஸோமகி₃ரிர்கு₃ருர்மே
ஶிக்ஷாகு₃ருஶ்ச ப₄க₃வாஞ்சி₂கி₂பிச்ச₂மௌளி: ।
யத்பாத₃கல்பதருபல்லவஶேக₂ரேஷு
லீலாஸ்வயம்வரரஸம் லப₄தே ஜயஶ்ரீ: ॥

“என்னுடைய மோஹத்தை அறவே களைந்த சிந்தாமணியும், எனக்கு மந்த்ரத்தை அளித்த ஸோமகிரியும் வாழ்க! தலையில் மயில்பீலி சூடி எனக்கு வழிகாட்டிய ஸ்ரீக்ருஷ்ணன் வாழ்க. பக்தர்களின் விருப்பத்தை நிறைவேறச் செய்யும் ஸ்ரீக்ருஷ்ணனின் திருவடியாகிய கற்பகத்தருவின் தளிர்களில் விளையாடும் விஜயலக்ஷ்மி பக்தனைச் சேர்த்துக் கொண்டுவிட்டோம் என்ற ஸ்வயம்வர ஸுகத்தைப் பெற்று மகிழ்கிறாள்.”

ஸ்ரீசுகதேவரைப்போலவே ஸ்ரீபில்வமங்களரும் பகவான் ஸ்ரீக்ருஷ்ணனுடைய தேனினும் இனிய லீலைகளை அனுபவித்துப் பாடியதால், அவருக்கு ‘லீலாஶுகர்’ என்ற பெயரும் உண்டு.

**பொருத்தம்:** இவ்விதம் நன்னடத்தை, தீய நடத்தை இவற்றின் காரணமாக ஏற்படக்கூடிய பேதபாவனை தம்மிடம் கிடையாது என்று கூறி, இனி வரும் இரண்டு ச்லோகங்களில் உயர்ந்த ஜாதி, தாழ்ந்த ஜாதி இவற்றின் காரணமாக ஏற்படக்கூடிய பேதபாவனையும் தம்மிடம் கிடையாது என்று தெளிவாகக் கூறி, ஶரணாகதி ரூபமான பக்தியின் பெருமையை நன்கு எடுத்துரைத்து, பகவானை வழிபடுமாறு அர்ஜுனனுக்கு ஆணையிடுகிறார்—

मां हि पार्थ व्यपाश्रित्य येऽपि स्युः पापयोनयः ।
स्त्रियो वैश्यास्तथा शूद्रास्तेऽपि यान्ति परां गतिम् ॥ ३२ ॥

மாம் ஹி பார்த₂ வ்யபாஶ்ரித்ய யேऽபி ஸ்யு: பாபயோநய: ।
ஸ்த்ரியோ வைஶ்யாஸ்ததா₂ ஶூத்₃ராஸ்தேऽபி யாந்தி பராம் க₃திம் ॥ 32 ॥

ஹி — ஏனெனில், பார்த₂ — அர்ஜுன! ஸ்த்ரிய: — பெண்கள், வைஶ்யா: — வைசியர்கள், ஶூத்₃ரா: — நான்காம் வர்ணத்தவர்கள், ததா₂ — அவ்வாறே, பாபயோநய: — சண்டாளர் முதலிய இழிந்த பிறவி அடைந்தவர்கள், யே அபி — (அவர்கள்) எவர்களாக, ஸ்யு: — இருந்தாலும், தே அபி — அவர்களும், மாம் — என்னையே, வ்யபாஶ்ரித்ய — தஞ்சமடைந்து, பராம் — மேலான, க₃திம் — பெரும்பேறான மோக்ஷத்தை, யாந்தி — அடைகிறார்கள்.

ஏனெனில் அர்ஜுன! பெண்கள், வைசியர்கள், நான்காம் வர்ணத்தவர்கள் அவ்வாறே சண்டாளர் முதலிய இழிந்த பிறவி அடைந்தவர்கள் எவர்களாக இருந்தாலும், அவர்களும் என்னையே தஞ்சமடைந்து மேலான பெரும்பேறான மோக்ஷத்தை அடைகிறார்கள்.

**கேள்வி:** ‘பாபயோநய:’ என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** முற்பிறவிப் பாவங்களின் காரணமாகச் சண்டாளர் முதலிய குடிகளில் பிறந்தவர்களைப் ‘பாபயோனிகள்’ என்று சொல்கிறார். இவர்களைத் தவிர சாஸ்த்ரங்களின்படி ஹூணர்கள், வேடர்கள், மலைஜாதியினர், மிலேச்சர்கள் முதலானவர்களும் இவ்வகையைச் சேர்ந்தவர்களே! இங்கு அந்தச் சொல் இவர்கள் எல்லோரையும் குறிப்பிடும். பகவானைப் பக்தி செய்வதற்கு எந்த ஜாதியினருக்கும் தடை கிடையாது. தூய்மையான அன்பே அதற்குத் தேவைப்படுகிறது.‡ இத்தகைய

‡ (1) நாஸ்தி தேஷு ஜாதிவித்₃யாரூபகுலத₄நக்ரியாதி₃பே₄த₃: ।
(நாரத₃ப₄க்திஸூத்ரம் 72)

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பிறவிகளில் முற்காலத்திலும், தற்காலத்திலும் மஹாத்மாக்களான இறையடியார்கள் பலர் இருந்திருக்கிறார்கள். அவர்கள் பக்தியின் ப்ரபாவத்தினால் பகவானை அடைந்திருக்கிறார்கள். இவர்களில் வேடுவ குலத்தில் பிறந்த குஹனின் பெயர் மிகவும் ப்ரஸித்தமானது.

## வேடுவர் தலைவன் குஹன்

வேடுவ ஜாதியைச் சேர்ந்த குஹன் ச்ருங்கிபேரபுரத்தில் வேடுவர்களுக்கு அரசனாக இருந்தான். அவன் பகவத் பக்தன். பகவான் ஸ்ரீரகுநாதன் ஸீதாதேவியோடும், லக்ஷ்மணனோடும் வனத்திற்குச் சென்றபோது, இவன் அளித்த வரவேற்பையும், உபசரிப்பையும் ஸ்ரீரகுநாதன் ஏற்றுக் கொண்டார். பகவான் அவனைத் தம் நண்பனாகவே மதித்தார். அதனால் பரதன் அவனை மார்போடு அணைத்துக் கொண்டான்.

करत दंडवत देखि तेहि भगत लीन्ह उर लाइ।
मनहुँ लखन सन भेंट भइ प्रेमु न हृदयँ समाइ॥१९३॥ रामचरितमानस अयोध्याकांड दो० १९३

கரத த₃ண்ட₃வத தே₃கி₂ தேஹி ப₄ரத லீந்ஹ உர லாஇ ।
மநஹு(ம்) லக₂ந ஸந பே₄ண்ட் ப₄இ ப்ரேமு ந ஹ்ருத₃ய(ம்) ஸமாஇ ॥

(வணங்க வந்த குஹனைத் தூக்கி, பரதன் மார்புறத் தழுவிக் கொண்டான். லக்ஷ்மணனைப்போலவே அவனும் ஸஹோதரன் என மதித்து ப்ரேமையினால் இதயத்தில் விம்மிதம் அடைந்தான்.)

**கேள்வி:** 'பாபப்பிறவிகள்' என்ற சொல்லை ஸ்த்ரீ, வைசியர், நான்காம் வர்ணத்தவர் என்ற சொற்களுக்கு அடைமொழியாகச் சேர்த்தால் என்ன தவறு?

**பதில்:** வைசியர்கள் இருபிறவியாளர்களில் சேர்வர். அவர்களுக்கு வேதம் கற்கவும், யாகம் முதலியன செய்யவும் சாஸ்த்ரங்களில் பூரணத்தகுதி கூறப்பட்டுள்ளது. ஆதலால், அவர்களைப் 'பாபப்பிறவிகள்' என்று கொள்ளலாகாது. மேலும் சாந்தோக்ய உபநிஷத் 5/10/7ல் ஜீவர்களுக்கு கர்மத்திற்கேற்ற பயனைக் கூறும்போது இப்படி விளக்கமளிக்கிறது.

தத்₃ய இஹ ரமணீயசரணா அப்₄யாஸோ ஹ யத்தே ரமணீயாம் யோநிமாபத்₃யேரந் ப்₃ராஹ்மணயோநிம் வா க்ஷத்ரியயோநிம் வா வைஶ்யயோநிம் வாத₂ ய இஹ கபூயசரணா அப்₄யாஸோ ஹ யத்தே கபூயாம் யோநிமாபத்₃யேரஞ்–ஶ்வயோநிம் வா ஸூகரயோநிம் வா சாண்ட₃ாளயோநிம் வா ॥

"அந்த ஜீவர்களில் எவர்கள் இவ்வுலகில் நன்னடத்தை உள்ளவர்களோ, அதாவது புண்யாத்மாக்களோ அவர்கள் விரைவிலேயே உயர் பிறவியை – ப்ராம்மண, க்ஷத்ரிய, வைசியப் பிறவிகளில் ஏதாவது ஒன்றை அடைவார்கள். எவர் இவ்வுலகில் தீய நடத்தை உடையவர்களோ, அதாவது பாவச் செயல் புரிபவர்களோ அவர்கள் தாழ்ந்த பிறவிகளில் நாயாகவோ, பன்றியாகவோ, சண்டாளராகவோ பிறப்பார்கள்."

---

'பக்தர்களில் ஜாதி, கல்வி, அழகு, குலம், செல்வம், செயல் பற்றிய வேறுபாடு கிடையாது.'

(2) ஆநிந்த்₃யயோந்யதி₄க்ரியதே பாரம்பர்யாத் ஸாமாந்யவத் ।

(ஶாண்டி₃ல்யப₄க்திஸூத்ரம் 78)

'சாஸ்த்ர முறைப்படி அஹிம்ஸை முதலிய பொதுவான தர்மங்களில் உள்ளதுபோல பக்தியிலும் சண்டாளர் முதலிய ஈனப்பிறவியாளருக்கும் தகுதி உண்டு.'

(3) ப₄க்த்யாஹமேகயா க்₃ராஹ்ய: ஶ்ரத்₃த₄யாऽऽத்மா ப்ரிய: ஸதாம் ।
ப₄க்தி: புநாதி மந்நிஷ்ட₂ா ஶ்வபாகாநபி ஸம்ப₄வாத் ॥

(ஸ்ரீமத்₃பா₄க₃வதம் 11/14/21)

'உத்தவ! ஸாதுக்களுக்கு ப்ரியமான ஆத்மா என்ற முறையில் நான் பக்திக்கும், நம்பிக்கைக்கும் கட்டுப்பட்டுவிடுகிறேன். என் மீதான பக்தி பிறவிச் சண்டாளனையும்கூடப் பரிசுத்தனாக்கிவிடும்.'

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஆகவே பாவப்பிறவிகளில் வைசியர்களைச் சேர்க்கலாகாது. பெண்களின் தரம் என்ன? ப்ராம்மண, க்ஷத்ரிய, வைசியப் பெண்மணிகளுக்குத் தம் கணவர்களுடன்கூட, யாகம் முதலிய வைதிகக் கர்மங்களில் பங்கு கொள்ளத் தகுதி உண்டு. இக்காரணத்தினால் அவர்களைப் பாவப்பிறவிகள் என்று சொல்வதும் சரியாகாது. இங்கு வேறு ஒரு பெரிய ஐயம் உண்டு. பகவானை பக்தி செய்து சண்டாளர் முதலானவர்கூட மேன்மை அடையலாம் என்பது ஸகல சாஸ்த்ர ஸம்மதம் என்னும் போது, இதுவே பக்தியின் பெருமையை விளக்குமானால், பெண் மட்டும் எப்படிப் பாவப்பிறவி ஆவாள்?‡ ஆகவே பாவப்பிறவி என்ற அடைமொழி ஸ்த்ரீ, வைசியர், நான்காம் வர்ணத்தவர் என்ற சொற்களுக்கு அடைமொழி ஆகாது. கீழ்ப்பிறவியாளர்களையே குறிக்கும். இப்படிப் பொருள் கொள்வதுதான் உசிதம்.

ஸ்த்ரீகளிலும், வைசியர்களிலும், நான்காம் வர்ணத்தவரிடமும் சிறந்த பக்தர்கள் இருந்திருக்கிறார்கள். எடுத்துக்காட்டாக மட்டும் இங்கு யாகபத்னிகள், ஸமாதி என்ற வைசியர், ஸஞ்ஜயன் – இவர்களைப் பற்றிச் சிறிது எடுத்துரைப்போம்.

## யாகபத்னிகள்

ப்ருந்தாவனத்தில் சில அந்தணர்கள் யாகம் செய்து கொண்டிருந்தார்கள். பகவானுடைய அனுமதியுடன் அவருடைய நண்பர்கள் அந்தணர்களிடம் சென்று உணவு கேட்டார்கள். யாகம் செய்வதில் முனைந்திருந்த ரிஷிகள் அவர்களுக்கு உணவு கொடுக்காமல் அவர்களை அதட்டி விரட்டி விட்டார்கள். பிறகு சிறுவர்கள் ரிஷிகளுடைய மனைவிமார்களிடம் சென்றனர். ஸ்ரீக்ருஷ்ணன் பெயரைக் கேட்டதுமே அவர்கள் முகங்கள் மலர்ந்தன. உணவுப் பண்டங்களை எடுத்துக் கொண்டு ஸ்ரீக்ருஷ்ணனிடம் ஓடி வந்தனர். அந்தணர் ஒருவர் தம் மனைவியை வெளியே போக அனுமதிக்கவில்லை. அவளை பலவந்தமாகப் பிடித்துத் தள்ளி, உள்ளே வைத்துத் தாளிட்டு விட்டார். அவளுடைய பக்தி பொங்கியது. பகவானைப் பற்றிக் கேட்டறிந்த ஸ்வரூபத்தை த்யானம் செய்துகொண்டே உடலைத் துறந்து அவள் எல்லோருக்கும் முன்னால் பகவானை அடைந்துவிட்டாள். அவளுடைய பக்தி அத்தகையது *(ஸ்ரீமத்பாகவதம் 10/23).*

## ஸமாதி

ஸமாதி என்பவர் த்ருமிணர் என்ற வைசிய செல்வந்தரின் புதல்வர். இவருடைய மனைவியும், புதல்வர்களும் பணப்பேராசையினால் இவரை வீட்டை விட்டு விரட்டிவிட்டனர். இவர் காட்டிற்குச் சென்றார். அங்கு ஸுரதன் என்ற அரசனைச்

---

‡ கிராதஹூணாந்த்$_4$ரபுலிந்த$_3$புல்கஸா ஆபீ$_4$ரகங்கா யவநா: க$_2$ஸாத$_3$ய: ।
யேऽந்யே ச பாபா யது$_3$பாஶ்ரயாஶ்ரயா: ஶுத்$_3$த்$_4$யந்தி தஸ்மை ப்ரப$_4$விஷ்ணவே நம: ॥
(ஸ்ரீமத்$_3$ப$_4$ாக$_3$வதம் 2/4/18)

'பகவத் பக்தர்களை அண்டிய வேடுவர்கள், ஹூணர்கள், மலைஜாதியினர் முதலியவர்கள் மட்டுமின்றி மிகக் கொடிய பாவம் செய்தவர்களும் கூடத் தூய்மையடைந்து விடுவர். அவ்வித சக்தி படைத்த விஷ்ணுவுக்கு நமஸ்காரம்.'

வ்யாத$_4$ஸ்யாசரணம் த்$_4$ருவஸ்ய ச வயோ வித்$_3$யா க$_3$ஜேந்த்$_3$ரஸ்ய கா
கா ஜாதிர்விது$_3$ரஸ்ய யாத$_3$வபதேருக்$_3$ரஸ்ய கிம் பௌருஷம் ।
குப்$_3$ஜாயா: கமநீயரூபமதி$_4$கம் கிம் தத்ஸுதா$_3$ம்நோ த$_4$நம்
ப$_4$க்த்யா துஷ்யதி கேவலம் ந ச கு$_3$ணைர்ப$_4$க்திப்ரியோ மாத$_4$வ: ॥

"வேடனின் நடத்தையில் என்ன மேன்மை உண்டு? த்ருவனுக்கு அப்படி என்ன வயது? கஜேந்த்ரன் கல்வியில் சிறந்தவனா? விதுரர் என்ன உத்தம ஜாதியில் பிறந்தாரா? யது குலத்தலைவர் உக்ரஸேனருக்கு என்ன பராக்ரமம்? கூனிக்குத்தான் என்ன அழகு? அல்லது ஸுதாமாவிடம் என்ன செல்வம்? பகவான் பக்தியினால் மட்டும் மகிழ்கிறார். குணம் முதலிய மற்றவற்றைக் கவனிப்பதில்லை. ஏனெனில் மாதவன் பக்தியினாலேயே மகிழ்பவர்."

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



சந்தித்தார். மந்திரிகளாலும், ஸேனாபதிகளாலும், உறவினர்களாலும் புறக்கணிக்கப்பட்டுக் காட்டுக்கு விரட்டப்பட்டவர் அந்த அரசன். இருவருக்கும் ஒரே நிலை. இருவரும் ஸத் சித் ஆனந்த ஸ்வரூபிணியான தேவியைச் சரணடைந்தார்கள். உலகப்பற்றை அறவே ஒழித்து, பகவதியை ஆராதித்தார்கள். மூன்று ஆண்டுகள் இப்படி இவர்கள் பூஜை செய்தபிறகு பகவதி அவர்களுக்கு தர்சனம் அளித்தாள். வேண்டிய வரங்களைக் கேட்குமாறு பணித்தாள். அரசனின் உள்ளத்தில் இன்னும் போகவாஸனை இருந்தது. அவர் அரச போகத்தை வேண்டினார். ஆனால் ஸமாதியின் உள்ளத்தில் வைராக்யம் இருந்தது. உலகு நொடியில் அழிவது, துன்பமயமானது என்று உணர்ந்திருந்தார். அவர் பகவானுடைய தத்வத்தை அறிய விரும்பினார். பகவதியின் கருணையினால் அவருடைய அஞ்ஞான இருள் அகன்றது. பகவான் மீதான தத்வஞானம் மலர்ந்தது (மார்க்கண்டேய புராணம் 18/93; ப்ரம்ம வைவர்த புராணம், ப்ரக்ருதி கண்டம் 62/63).

## ஸஞ்ஜயன்

ஸஞ்ஜயன் காவல்கணர் என்ற தேரோட்டியின் மகன். மிகவும் அமைதியான இயல்புடையவர்; நன்னடத்தை உடையவர்; ஞானம், விஞ்ஞானம் பெற்றவர்; ஒழுக்கமுடையவர்; பயமற்றவர்; உண்மை பேசுபவர்; புலனடக்கம் படைத்தவர்; தர்மாத்மா; தெளிவாகப் பேசுபவர்; ஸ்ரீக்ருஷ்ணனுடைய பரம பக்தர்; அவருடைய தத்வத்தை அறிந்தவர். அர்ஜுனனுடன் ஸஞ்ஜயனுக்கு இளமை முதல் நட்பு உண்டு. ஆகவே, அர்ஜுனனுடைய அந்தப்புரத்தில் எப்பொழுது வேண்டுமானாலும் ப்ரவேசிக்க அவர் உரிமை பெற்றிருந்தார். ஸஞ்ஜயன் கௌரவர்களின் சார்பாகப் பாண்டவர்களிடம் சென்றபோது அர்ஜுனன் அந்தப்புரத்தில் இருந்தார். அங்கு ஸ்ரீக்ருஷ்ணன், த்ரௌபதி, ஸத்யபாமை ஆகியோரும் இருந்தனர். திரும்பி வந்த பின்னர் ஸஞ்ஜயன் அந்த ஸந்தர்பத்தை மிகவும் அழகாக வர்ணித்திருக்கிறார் (மஹா. உத்யோ. 59).

மஹாபாரத யுத்தத்தின்போது பகவான் ஸ்ரீவேதவ்யாஸர் இவருக்கு தெய்விகப் பார்வை அளித்தார். அதன் பெருமையினால் இவர் இருந்த இடத்திலிருந்தே த்ருதராஷ்ட்ரருக்கு யுத்த நடவடிக்கைகளை எடுத்துச் சொன்னார்.

மஹரிஷியான வ்யாஸர், ஸஞ்ஜயன், விதுரர், பீஷ்மர் போன்ற மிகச் சில பெரியோர்களே ஸ்ரீக்ருஷ்ணனின் உண்மை ஸ்வரூபத்தை அறிந்தவர்கள். த்ருதராஷ்ட்ரர் கேட்டபோது ஸஞ்ஜயன் சொன்னார்: "நான் பெண்டு பிள்ளைகளின் மோஹத்தில் சிக்கிக் கொண்டு அறியாமையில் திளைத்திருக்க மாட்டேன். பகவானுக்கு அர்ப்பணம் செய்யப்படாத எந்தக் கார்யத்தையும் செய்யமாட்டேன். வீணான எந்த தர்மத்தையும் கடைப்பிடிக்க மாட்டேன். தூயதான எண்ணத்தாலும், பக்தியோகத்தாலும் நான் பகவானுடைய உண்மையான ஸ்வரூபத்தை அறிவேன். பகவானுடைய ஸ்வரூபத்தையும், பராக்ரமத்தையும் ஒருவாறு கூறுவேன். பரந்த உள்ளம் படைத்த ஸ்ரீவாஸுதேவனுடைய சக்ராயுதத்தின் நடுப்பகுதி ஐந்து முழம் விஸ்தாரமுடையது. ஆனால் பகவான் நினைத்தால் அது எவ்வளவு பெரியதாகவும் வளரக்கூடியது. ஒளிமயமாக ப்ரகாசிக்கின்ற அந்தச் சக்ரம் எல்லோருடைய ஸாரமான அல்லது ஸாரமற்ற பலம் முழுவதையும் அறிந்து கொள்ளும் வல்லமை பெற்றது. அது கௌரவர்களை அழிக்கவல்லது. பாண்டவர்களுக்கு மிகவும் ப்ரியமானது. மிகுந்த பலம் படைத்த ஸ்ரீக்ருஷ்ணன் லீலையாகவே, பயங்கர ராக்ஷஸர்களான நரகாஸுரன், சம்பராஸுரன், கர்வம் மிகுந்த கம்ஸன், சிசுபாலன் இவர்களை வதைத்தார். எல்லையற்ற, வைபவம் வாய்ந்தவரும், அழகுமிக்கவருமான ஸ்ரீக்ருஷ்ணன், தாம் நினைத்த மாத்திரத்தில் பூமி, ஆகாயம், ஸ்வர்கம் எல்லாவற்றையும் தம்வசப்படுத்துவார். ஒருபுறம் அகில உலகமும், மறுபுறம் ஸ்ரீக்ருஷ்ணன் ஒருவர் மட்டும் மோதுண்டாலும் முடிவில் எல்லோரையும் விஞ்சி, அவர்தான் நிலைத்து நிற்பார். அவர், தாம் விரும்பினால் ஜகத்தைச் சாம்பலாக்கி விடுவார். ஆனால் அவரை அழிக்க அகில உலகத்தாலும் முடியாது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



யத: ஸத்யம் யதோ த₄ர்மோ யதோ ஹ்ரீரார்ஜவம் யத: ।
ததோ ப₄வதி கோ₃விந்தோ₃ யத: க்ருஷ்ணஸ்ததோ ஜய: ॥

(மஹா. உத்₃யோக₃. 68/9)

எங்கு ஸத்யமும், தர்மமும், ஈசுவர விரோதமான கார்யத்தில் வெட்கமும், இதயத்தில் நேர்மையும் இருக்குமோ, அங்கு ஸ்ரீக்ருஷ்ணன் இருக்கிறார். எங்கு ஸ்ரீக்ருஷ்ணனோ, அங்குதான் வெற்றி. இதில் ஸந்தேஹமே இல்லை. எல்லா ப்ராணிகளுக்கும் ஆத்மாவான புருஷோத்தமன் ஸ்ரீக்ருஷ்ணன், விளையாட்டாகவே பூமி, ஆகாயம், ஸ்வர்கம் இவற்றை நடத்திச் செல்கிறார். அந்த ஸ்ரீக்ருஷ்ணன் எல்லா உலகத்தோரையும் மயங்கச் செய்து, பாண்டவர்களைக் கருவியாகக் கொண்டு அதர்மம் நிறைந்தவர்களும் அறிவற்றவர்களுமான உமது புதல்வர்களை அழிக்கப் போகிறார். பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் தம்முடைய ப்ரபாவத்தினால் கால சக்ரத்தையும், உலகச் சக்ரத்தையும், யுகச் சக்ரத்தையும் சுழற்றிக் கொண்டிருக்கிறார். உண்மையைச் சொல்கிறேன். பகவான் ஸ்ரீக்ருஷ்ணன்தான் மஹாகாலர். அவரே ம்ருத்யு. அவரே அசைவன, அசையாதன ஆகியவற்றைக் கொண்ட ஜகத்துக்கெல்லாம் தலைவர். உழவன், விதைகள் விதைத்து, தான் விளைத்த பயிர்களை தான்யக் கதிர்கள் வந்ததும் அறுத்துவிடுவதுபோல மஹாயோகேசுவரனான ஸ்ரீக்ருஷ்ணனும் எல்லா உலகையும் காப்பவராயினும், தாமே தம்முள் எல்லாவற்றையும் அடக்கிக் கொள்ளவும் செய்கிறார். தம்முடைய மஹாமாயையின் ப்ரபாவத்தினால் எல்லோரையும் மதிமயங்கச் செய்கிறார். ஆனால் அவரைச் சரணடைந்தவர்களை மாயைக்கு ஆட்படுத்துவதில்லை.

யே தமேவ ப்ரபத்₃யந்தே ந தே முஹ்யந்தி மானவா: ।

(மஹா. உத்₃யோக₃. 68/15)

இப்படியெல்லாம் ஸஞ்ஜயன் ஸ்ரீக்ருஷ்ணனுடைய நாமம், அதன் அழகான பொருள் இவற்றை த்ருதராஷ்ட்ரருக்கு விளக்கினார். ஸஞ்ஜயனும்கூட மஹாபாரத யுத்தத்தைத் தடுப்பதற்கு மிகவும் முயற்சி செய்தார். அவரால் தடுக்க முடியவில்லை. த்ருதராஷ்ட்ரர் கடைசியில் வனம் சென்றபோது அவரும் கூடச் சென்றார்.

**கேள்வி:** இங்கு 'அபி' என்ற சொல் இரண்டு முறை வருகிறதே. என்ன பொருள்?

**பதில்:** மேல் ஜாதி, கீழ் ஜாதி என்ற காரணத்தினால் தமக்கு ஒருபோதும் யாரிடமும் ஏற்றத்தாழ்வான எண்ணம் கிடையாது என்பதைக் குறிக்கிறார். அந்தணர், க்ஷத்ரியர் இவர்களைக் காட்டிலும் தாழ்ந்தவர் என்று கருதப்படும் பெண், வைசியர், நான்காம் வர்ணத்தவர்களும் இவர்களுக்கும் கீழானவர்களிடம்கூட நான் ஏற்றத்தாழ்வு பாராட்டுவதில்லை. என்னைச் சரணடைந்து என்னைப் பூஜிப்பவர் யாராயினும் அவர்களுக்குப் பரமகதி கிடைக்கும் என்பது நிச்சயம் என்கிறார். 'அபி' என்ற சொல்லை இருமுறை கூறுவதன் கருத்து இதுதான்.

**கேள்வி:** 'பகவானைச் சரணடைவது' என்றால் என்ன?

**பதில்:** பகவானிடம் பூரண நம்பிக்கை வேண்டும். 34வது ச்லோகத்தில் சொன்னபடி பேரன்புடன் எல்லாவிதத்திலும் பகவானைச் சரணடைய வேண்டும். அதாவது பகவான் எப்படி நடத்தினாலும் எப்பொழுதும் மகிழ்ச்சியோடு இருக்கவேண்டும். அவருடைய நாமம், ஸ்வரூபம், குணங்கள், லீலை முதலியவற்றை இடைவிடாது கேட்கவேண்டும்; கீர்த்தனம் செய்யவேண்டும்; நினைக்க வேண்டும். அவரையே தனக்குப் புகல், காப்பாளர், ப்ரபு என்று மதிக்கவேண்டும். நம்பிக்கையுடனும், பக்தியுடனும் பூஜை செய்யவேண்டும். அவரை வணங்க வேண்டும். அவருடைய ஆணையை நிறைவேற்றவேண்டும். எல்லாக் கர்மங்களையும் அவருக்கே அர்ப்பணம் செய்யவேண்டும். இவையெல்லாம் சேர்ந்ததே 'பகவானைச் சரணடைவது' ஆகும்.

**கேள்வி:** இப்படி ஶரணாகதி செய்கிற பக்தன் 'பரம கதி' அடைவான் என்றால் என்ன பொருள்?

**பதில்:** நேரிடையாக பகவானை அடைவதுதான் 'பரம கதி' ஆகும். மேலே சொன்னவிதம் பகவானைச் சரணடைந்தவர்கள் ஆணாயினும், பெண்ணாயினும், எந்த

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இனத்தவராயினும், அவர்கள் பகவானையே அடைவர். 'பரம கதி' அடைவது என்பதன் பொருள் இதுதான்.

किं पुनर्ब्राह्मणाः पुण्या भक्ता राजर्षयस्तथा।
अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम्॥ ३३॥

கிம் புநர்ப்₃ராஹ்மணா: புண்யா ப₄க்தா ராஜர்ஷயஸ்தத₂ா ।
அநித்யமஸுக₂ம் லோகமிமம் ப்ராப்ய ப₄ஜஸ்வ மாம் ॥ 33 ॥

(அங்ஙனமிருக்க), **புண்யா:** – புனிதமான இயல்பு வாய்ந்த, **ப்₃ராஹ்மணா:** – ப்ராம்மணர்கள், **தத₂ா** – அவ்வாறே, **ராஜர்ஷய:** – ராஜரிஷிகள் (ஆகிய), **ப₄க்தா:** – பக்தர்கள் (என்னை ஶரணமடைந்து பரமகதியை அடைகிறார்கள் என்பதில்), **கிம் புந:** – சொல்வதற்கு என்ன உள்ளது? (ஆகையால்), **அஸுக₂ம்** – ஸுகமில்லாததும், **அநித்யம்** – நிலையில்லாததும் ஆன, **இமம்** – இந்த, **லோகம்** – மனித உடலை, **ப்ராப்ய** – அடைந்த (நீ எப்போதும்), **மாம்** – என்னை, **ப₄ஜஸ்வ** – வழிபடுவாயாக.

(அங்ஙனமிருக்க) புனிதமான இயல்பு வாய்ந்த ப்ராம்மணர்கள், அவ்வாறே ராஜரிஷிகள் ஆகிய பக்தர்கள் என்னை ஶரணமடைந்து பரமகதியை அடைகிறார்கள் என்பதில் சொல்வதற்கு என்ன உள்ளது? ஆகையால் ஸுகம் இல்லாததும் நிலையில்லாததுமான இந்த மனித உடலை அடைந்த நீ எப்போதும் என்னை வழிபடுவாயாக.

**கேள்வி:** *'கிம் புந:' – என்பதன் பொருள் என்ன?*

**பதில்:** மேலே சொன்னபடி மிகவும் தீய நடத்தையுள்ளவர்களும் *(9/30)*, சண்டாளர்கள் முதலிய தாழ்ந்த ஜாதிகளில் பிறந்தவர்கள்கூட *(9/32)*, என்னை பக்தி செய்து பரமகதியை அடைவார்கள் எனில், உலக நடைமுறையில் நடத்தையிலும், விவஹாரத்திலும் பரிசுத்தர்களாகவும், பிறவியிலும் உயர்ந்தவர்களாகவும், என்னுடைய பக்தர்களாகவும், புண்யசீலர்களாகவும் உள்ள அந்தணர்களும் மற்றும் ராஜரிஷிகளும் என்னைச் சரணடைந்து பரமகதியைப் பெறுவார்கள் என்பதைச் சொல்லவும் வேண்டுமா – என்பது பொருள்.

**கேள்வி:** *'புண்யா:' என்றால் என்ன பொருள்? இந்தச் சொல் 'ப்ராஹ்மணா:' என்பதற்கு மட்டும் அடைமொழியா? அல்லது 'ராஜர்ஷய:' என்ற சொல்லுக்கும் அடைமொழியா?*

**பதில்:** ஸ்வபாவமும், நடத்தையும் பரிசுத்தமாக உள்ளவர்களை 'புண்யா:' என்று அழைக்கிறார்கள். இந்தச் சொல் 'ப்ராஹ்மணா:' என்ற சொல்லுடன் மட்டும் சேரும். அரசனாகவும் இருந்து ரிஷிகளாகவும் உள்ளவர்கள் இயல்பாகவே பரிசுத்தமான ஸ்வபாவமும், உயர்ந்த நடத்தையும் உள்ளவர்களாகவே இருப்பார்கள். எனவே, அவர்களை 'ராஜரிஷிகள்' என்பார்கள். அவர்களைக் குறிக்க இப்படியோர் அடைமொழி சேர்க்க வேண்டிய அவசியம் இல்லை.

**கேள்வி:** *'பக்தா:' என்ற சொல் எங்கே சேர்கிறது?*

**பதில்:** 'பக்தா:' என்ற சொல் ப்ராம்மணர், ராஜரிஷிகள் இருவருடனும் சேரும். ஏனெனில், அவர்கள் பக்தர்கள் என்ற காரணத்தினால் மட்டும் பரமகதியை அடைகிறார்கள் என்பது குறிப்பு.

ப்ராம்மணர்களிலும், ராஜரிஷிகளிலும் கணக்கற்ற பக்தர்கள் இருந்திருக்கிறார்கள். அவர்களுடைய பெருமையைக் கோடி காட்டும் முறையில் ஸுதீக்ஷ்ண மஹரிஷியைப் பற்றியும், அம்பரீஷ மஹாராஜனைப் பற்றியும் குறிப்பிட்டுக் கூறுவோம்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



## ஸுதீக்ஷ்ணர்

மஹரிஷி ஸுதீக்ஷ்ணர் தண்டகாரண்யத்தில் வஸித்து வந்தார். அவர் அகஸ்த்யரின் சீடர். பெரிய தவசீலர். ஒளிமிக்கவர். பக்தர். துஷ்பண்யன் என்ற ஒரு வைசியன் பாவங்கள் பல செய்து பிசாசாக ஆகிவிட்டான். அவனைக் கடைத்தேற்றினார் (ஸ்கந்த புராணம் ப்ரஹ்மகண்டம் 22). அவர் ஸ்ரீராமபிரானிடம் அநன்ய பக்தி கொண்டவர். பகவான் ஸ்ரீரகுநாதன் ஸீதாதேவியுடனும், தம்பி லக்ஷ்மணனுடனும் தண்டகாரண்யம் வருகிறார் என்று அறிந்து மிகவும் மகிழ்ந்தார். அவருடைய ஆனந்தத்திற்கு எல்லையில்லை. பலவிதமான கற்பனைகள் செய்தார். ப்ரேமையில் மதிமயங்கினார். நான் யார்? என்ன செய்கிறேன்? எங்கே போகிறேன்? இது பாதைதானா? இவையெல்லாம் மறந்துபோய் விட்டன. கொஞ்சம் முன்னே செல்வார். திரும்பி வருவார். மறுபடியும் திரும்பிப் போவார். ப்ரபுவின் குணங்களைப் பாடி நர்த்தனம் ஆடுவார். பகவான் ஸ்ரீராமன் ஒரு மரத்தில் மறைந்து நின்று கொண்டு ஸுதீக்ஷ்ணருடைய அன்புப் பரவசத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். முனிவருடைய மிகுந்த ப்ரேமையைக் கண்டு உலகியல் பயத்தைப் போக்குபவரான ஸ்ரீராமன் அவர் இதயத்தில் தோன்றினார். இதயத்தில் பகவானுடைய தர்சனம் பெற்ற முனிவர் பாதை நடுவிலேயே அப்படியே உட்கார்ந்துவிட்டார். ஆனந்தத்தில் அவரது மெய் சிலிர்த்தது. பிறகு ஸ்ரீராமன் அவர் முன் தோன்றி அவருடைய ப்ரேமை நிலையைக் கண்டு மிகவும் மகிழ்ந்தார்.

அவரைப் பலவாறு எழுப்பிப் பார்த்தார். முனிவர் கண்விழிக்கவில்லை. முனிவருக்கு த்யானத்தில் பகவானுடைய தர்சன ஸுகம் கிடைத்துவிட்டிருந்தது. உடனே ஸ்ரீராமன் அவருடைய இதயத்திலிருந்தும் மறைந்தார். பரபரப்புடன் முனிவர் கண்விழித்தார். தம் எதிரே ஸ்ரீராமன் ஸீதையுடனும், லக்ஷ்மணனுடனும் நீலமேகச்யாமளனாக, அழகாகக் காட்சியளிப்பதைப் பார்த்தார். தவத்தின் பயனைப் பெற்றுவிட்டதால் அவர் வாழ்க்கை பயனுற்றது (ஸ்ரீராமசரிதமானஸம், ஆரண்யகாண்டம்).

## அம்பரீஷன்

ராஜரிஷியான அம்பரீஷன் வைவஸ்தமனுவின் பேரன். நாபாக மஹாராஜனின் வீரகுமாரர். அவர் சக்ரவர்த்தி. ஆனால் இத்தனை ஐசுவர்யமும் கனவில் காணப்படும் பொருட்களைப் போல உண்மையல்ல என்று அவர் அறிந்திருந்தார். ஆகவே, தம் வாழ்க்கை முழுவதையும் பரமாத்மாவின் சரணத்தில் அர்ப்பணம் செய்துவிட்டார். அவருடைய எல்லாப் புலன்களும் மனதோடுகூட எப்பொழுதும் பகவானுடைய ஸேவையிலேயே ஈடுபட்டிருந்தன.

ஒரு ஸமயம் அரசர் ராணியுடன்கூட ஸ்ரீக்ருஷ்ணனின் ப்ரீதிக்காக ஓராண்டு காலம் ஏகாதசி வ்ரதம் பூணுவது என்று ஸங்கல்பம் செய்து கொண்டார். கடைசி ஏகாதசியின் மறுநாள் த்வாதசியன்று பகவானுக்கு முறைப்படி பூஜை பண்ணினார். பாரணை‡ செய்து வ்ரதத்தை முடிக்கவேண்டும்.. அதற்குக் கிளம்பியபோது மஹரிஷி துர்வாஸர் தம் சிஷ்யர்களுடன் வந்து சேர்ந்தார். அரசர் தக்கபடி துர்வாஸரை வரவேற்று உபசரித்துப் பாரணை செய்ய அழைத்தார். முனிவரும் ஏற்றுக் கொண்டார். ஆயினும் நண்பகலில் செய்ய வேண்டிய சூரிய வழிபாட்டிற்காக அவர் யமுனா நதிக்குச் சென்றார். த்வாதசி திதி ஒரு மணி நேரம்தான் மீதமிருந்தது. அதற்குள் பாரணை செய்யாவிட்டால் வ்ரதம் முறிந்துவிடும். அரசர் பெரியோர்களை அண்டி என்ன செய்யலாம் என்று கேட்டார். அவர்கள் சொன்னார்கள்: 'ஸ்ரீஹரியின் பாத தீர்த்தத்தைப் பருகிப் பாரணையை முடிக்கலாம்; தவறில்லை. முனிவர் வந்த பிறகு அவருக்கு போஜனம் செய்வித்த பிறகு நீங்கள் சாப்பிடலாம்.' அப்படியே செய்து, அரசர் துர்வாஸருக்காக வழி மேல் விழி வைத்துக் காத்திருந்தார். துர்வாஸர் தம்முடைய நித்ய கர்மானுஷ்டானங்களை முடித்துக் கொண்டு அரண்மனைக்கு

‡ பாரணை: ஏகாதசி தினத்தன்று உபவாஸம் இருந்து, த்வாதசியன்று காலையில் பகவானுக்குப் பூஜை செய்தபின் உணவருந்துதல்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



எழுந்தருளினார். தம்முடைய தவவலிமையினால் 'அரசர் பாரணை முடித்துக் கொண்டுவிட்டார்' என்று அறிந்தார். அவருக்கு மிகுந்த கோபம் வந்துவிட்டது. புருவம் நெரிந்தது. தவறிழைத்துவிட்டவரைப்போலக் கைகூப்பி எதிரே நிற்கும் அரசரைப் பார்த்து– "ஆஹா! செல்வச் செருக்கினால் குருடாகிவிட்ட கீழ்த்தரமான உனக்கு இவ்வளவு திமிரும், தர்மத்தில் அலக்ஷ்யமும் வந்துவிட்டனவே! நீ விஷ்ணுபக்தன் அல்ல. உன்னையே ஈசுவரனாக நினைத்துக் கொண்டுவிட்டாய். என்னை அதிதி என்று ஏற்றுக் கொண்டுவிட்டு, எனக்கு போஜனம் அளிக்காமல் நீ உண்டுவிட்டாய். இதற்குப் பயனை இப்பொழுதே காட்டுகிறேன்" என்று சொல்லிவிட்டு துர்வாஸர் தமது சடைமுடியிலிருந்து ஒரு முடியை உருவித் தரையில் ஓங்கி அடித்தார். அதிலிருந்து ப்ரளய காலத்தீ போலக் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டு, க்ருத்யை என்ற பெயருள்ள ராக்ஷஸி வெளிப்பட்டாள். அவள் தரையை ஓங்கி மிதித்தபோது பூமி நடுங்கியது. கையில் வாளை வீசிக் கொண்டு அரசரை எதிர்த்துப் புறப்பட்டாள். ஆனால் பகவானிடம் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்ட அரசர் நின்ற இடத்திலேயே நின்று கொண்டிருந்தார். பின்வாங்கவில்லை. அவருக்கு பயமே இல்லை. எங்கும் பகவானே நிறைந்திருக்கிறார் என்று எண்ணுபவருக்கு எதைக் கண்டு பயம் வரும்?

அந்த க்ருத்யை அம்பரீஷனை அணுக முடியவில்லை. பயங்கரமான காட்டுத்தீ கொடிய பாம்பைப் பொசுக்கிவிடுவதுபோல, பகவானுடைய ஸ்ரீஸுதர்சன சக்ரம் அந்த க்ருத்யையைச் சாம்பலாக்கிவிட்டது. பிறகு ஸுதர்சனம் என்ற அந்த பகவானின் சக்ரம் துர்வாஸர்பால் திரும்பியது. துர்வாஸருக்கு பயம்தான். உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு ஓடினார். சக்ரம் அவரைத் துரத்தியது. துர்வாஸர் பத்துத் திசைகளிலும், பதினான்கு உலகங்களிலும் ஓடினார். அவருக்கு எங்கும் புகல் கிடைக்கவில்லை. எவரும் அவருக்கு அபயம் அளிக்கவில்லை. கடைசியில் துர்வாஸர் வைகுண்டம் சென்றார். பகவான் விஷ்ணுவின் சரணங்களைப் பிடித்துக் கொண்டு கதறினார்: "ப்ரபோ! நான் உங்களுடைய பெருமையை அறியாமல் உங்கள் பக்தருக்கு அவமானம் இழைத்துவிட்டேன். என்னை இந்தத் தவறிலிருந்து காப்பாற்றுங்கள். உங்கள் பெயரை ஒருமுறை சொன்னாலே கொடிய நரகத்தில் வீழ்ந்தவர்கூடக் கஷ்டங்களிலிருந்து விடுபடுவார்களே! ஆகவே என் குற்றத்தை மன்னியுங்கள்."

பகவான் சொன்னார்: "அந்தணரே! நான் பக்தனுக்குக் கட்டுப்பட்டவன். எனக்கு சுதந்திரம் கிடையாது. என் பக்தர்கள் எனக்கு மிகவும் ப்ரியமானவர்கள். என் இதயத்தை அவர்கள் முழுமையாக ஆட்கொண்டு விட்டார்கள். என்னையே பரமகதி என்று அடைந்துவிட்ட பரமபக்தர்களான ஸாதுக்களின் முன்னே என்னுடைய ஆத்மாவையும், லக்ஷ்மியையும்கூட பொருளாகக் கொள்ள மாட்டேன். என் நிமித்தம் தம் மனைவி, மக்கள், வீடு, சுற்றம், செல்வம், உயிர், இவ்வுலக போகம், பரலோக போகம் எல்லாவற்றையும் த்யாகம் செய்துவிட்டு என்னையே ஒரே லக்ஷ்யமாக அடைந்துவிட்ட பக்தர்களை எப்படி நான் கைவிட முடியும்? கற்புடைய மனைவி தன்னுடைய இணையற்ற ப்ரேமையினால் தன் கணவனை வசப்படுத்தி விடுவதுபோல, என்னிடம் உள்ளத்தை அர்ப்பணித்துவிட்டு, எங்கும் ஸமபாவனையுடன் பயன் கருதாத சுத்தமான தமது பக்தியினால் என்னை பக்தர்கள் வசப்படுத்திவிடுகிறார்கள். முடிவு காலம் வந்ததும் அழிந்து விடுகின்ற ஸ்வர்கம் முதலிய லோகங்களை அவர்கள் மதிப்பதே இல்லை. என்னுடைய ஸேவைக்கு முன்னே ஸாலோக்யம் (என் உலகில் வாழ்வது), ஸாமீப்யம் (என் அருகில் வாழ்வது), ஸாரூப்யம் (என்னைப்போல உருவம் பெறுவது), ஸாயுஜ்யம் (என்னிடமே ஒன்றிவிடுவது) என்ற மோக்ஷங்களே கிடைத்தாலும் அவர்கள் ஏற்கமாட்டார்களே. என் ப்ரேமைக்கு முன்னே அவையெல்லாம் மிகவும் அற்பமானவை என்று மதிப்பார்களே."

"அந்தணரே! நீர் உம்மைக் காப்பாற்றிக் கொள்ள விரும்பினால், உமக்கு மங்களம் உண்டாக வேண்டுமானால், அந்த மஹாபாக்யவானான அம்பரீஷனிடமே செல்லுங்கள். அவரிடம் மன்னிப்புக் கேளுங்கள். அப்பொழுதுதான் உமக்கு அமைதி கிடைக்கும்" என்று பகவான் இறுதியில் கூறினார். பகவானுடைய ஆணையை ஏற்று துர்வாஸர் திரும்பினார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இங்கே பக்தர்களில் சிறந்த அம்பரீஷனுக்கு விசித்ரமான நிலை. துர்வாஸரைத் துரத்திக் கொண்டு சக்ரம் சென்றதுமுதல் அரசர் துர்வாஸருக்கு ஏற்பட்ட கஷ்டத்தை நினைத்து மிகவும் வருந்தினார். அம்பரீஷன்— "ஐயோ! பாவம் அந்தணர் பசியோடு வந்தாரே! அவருக்கு என் பொருட்டு மரணபயமே வந்துவிட்டதே! எங்கெல்லாமோ ஓடும்படி ஆகிவிட்டதே. இந்த நிலையில் நான் எப்படி உண்ண முடியும்?" என்று எண்ணினார். அதுமுதல் அவர் உண்பதைத் துறந்தார்; நீரருந்தியே உயிரைக் காத்தார். துர்வாஸர் திரும்பி வருவதற்கு முழுதாக ஓராண்டு ஆகிவிட்டது. அம்பரீஷனின் வ்ரதம் குலையவில்லை.

துர்வாஸர் ஓடிவந்து அரசரின் கால்களைப் பிடித்துக் கொண்டார். அரசர் வெட்கத்தினால் குன்றிப் போய்விட்டார். அவர் மிகவும் விநயத்துடன் ஸுதர்சன சக்ரத்தைத் துதித்தார்: "என் உள்ளத்தில் துர்வாஸரைப் பற்றிச் சிறிதுகூட வெறுப்புக் கிடையாது என்பது உண்மையானால் – எல்லா ப்ராணிகளுக்கும் ஆத்மாவான ஸ்ரீபகவான் என்னிடம் கருணை காட்டுவதாக இருந்தால் – ஏ சக்ரமே! நீங்கள் அமைதியடைய வேண்டும். முனிவரை ஸங்கடத்திலிருந்து விடுவிக்க வேண்டும்" என்று வேண்டினார். ஸுதர்சன சக்ரம் அடங்கிவிட்டது. பயம் என்ற தீயில் வெந்து கொண்டிருந்த துர்வாஸரும் மனம் குளிர்ந்தார். அவர் முகத்தில் மகிழ்ச்சியும், நன்றியும் மலர்ந்தன (ஸ்ரீமத்பாகவதம் ஸ்க. 9, அத். 4,5).

**கேள்வி:** 'ஸுகமில்லாததும் இந்த நிலையற்றதுமான மனித உடலைப் பெற்று என்னை வழிபடுவாயாக' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனிதப் பிறவி மிகவும் அரிது. மிகவும் புண்யம் செய்திருந்தாலும்கூட பகவானுடைய க்ருபையின்றிக் கிடைக்காது. அப்படிக் கிடைத்தது கூட பகவானை அடைவதற்காகத்தான். இந்த அருமையான மனிதப் பிறவியைப் பெற்று, மனித வாழ்க்கையின் பயனை அடையாமல் அதை இழந்துவிடுகிறான். பகவானை அடைவதற்காக ஸாதனை புரிபவருக்குத்தான் மனிதப் பிறவி பயனுள்ளதாகிறது. இப்பிறவியில் சிற்றின்பம் தேடுபவன் உண்மையான லக்ஷ்யத்தை அறிந்து கொள்ளாமையால் உண்மையான ஸுகத்தை இழந்துவிடுகிறான். சிற்றின்பம் ஸுகமே அன்று. சிறிதுகூட அதில் ஸுகமில்லை. புலன்கள் மூலம் அடையும் இன்பங்களைப் பெறுவது ஸுகம் என்று மனிதன் நினைத்துவிட்டால் பிறகு திரும்பத் திரும்பப் பற்பல பிறவிகளில் பிறந்து உழல வேண்டியதுதான். அது பெரிய துன்பமல்லவா? ஆகவே, அவற்றை ஸுகம் என்று கருதாமல் எந்த லக்ஷ்யத்திற்காக மனிதப் பிறவி கிடைத்ததோ, அந்த லக்ஷ்யத்தை விரைவில் நிறைவேற்றிக் கொண்டுவிட வேண்டும். இந்த உடல் நொடியில் அழிவது. காலதாமதம் செய்தால் லக்ஷ்யம் ஈடேறாது. அதனால் உலகியல் ஸுகங்கள் வாஸ்தவமானவை என்று எண்ணி, அவற்றில் சிக்கிக் கொள்ளாமல் இருக்க வேண்டும்; சரீரம் நித்யம் என்று எண்ணி பகவானை வழிபடக் காலதாமதம் செய்யக் கூடாது. கவனக்குறைவினால் இந்த மனித ஆயுள் வீணாகிவிட்டால் பிறகு நொந்து பயனில்லை. வேதம் (கேநோபநிஷத் 2/5) கூறுகிறது:

**இஹ சேத$_3$வேதீ$_3$த$_3$த$_2$ ஸத்யமஸ்தி ந சேதி$_3$ஹாவேதீ$_3$ந்மஹதீ விநஷ்டி: ।**

'இந்த மனிதப் பிறவியில் பரமாத்மாவை அறிந்து கொண்டுவிட்டால் நன்று. அறியாவிட்டால் மிகப்பெரிய இழப்பு.'

ஆகவே பகவான் கூறுகிறார்: 'இந்த அருமையான மனிதப் பிறவியைப் பெற்ற நீ எப்பொழுதும் இடைவிடாது என்னை பக்தி செய். கணம்கூட என்னை மறவாதே.'

**கேள்வி:** 'மாம்' என்று யாரைக் குறிப்பிடுகிறார்? பஜிப்பது எப்படி? வழிபடுவாய் என்று ஆணையிடுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கு 'மாம்' என்பது பகவானுடைய ஸகுண ஸ்வரூபத்தைக் குறிக்கும். அடுத்த ச்லோகத்தில் சொல்லப்படுகின்ற முறைப்படி பகவானிடம் ஈடுபடவேண்டும். அதாவது மனம், புத்தி, புலன்கள், உடல் எல்லாவற்றையும் பகவானுக்கே அர்ப்பணம் செய்துவிடுவதே வழிபடுதல் ஆகும். அதனால் பகவானை விரைவில் அடையமுடியும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அடைந்துவிட்டால் மனிதப் பிறவியின் லக்ஷ்யம் நிறைவேறிவிடுகிறது. ஆகவே 'வழிபடு' என்று ஆணையிடுகிறார்.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் பகவான் தம்மைப் பூஜிப்பதன் பெருமையைக் கூறினார். 'பஜனை செய்' என்று அர்ஜுனனுக்குக் கட்டளையிட்டார். எப்படி பஜனை பண்ணி ஶரணாகதி செய்வது என்பதை அடுத்த ச்லோகத்தில் சொல்லி, அத்யாயத்தைத் தலைக்கட்டுகிறார்—

**मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु।**
**मामेवैष्यसि युक्त्वैवमात्मानं मत्परायणः॥ ३४॥**

**மந்மநா ப₄வ மத்₃ப₄க்தோ மத்₃யாஜீ மாம் நமஸ்குரு ।**

**மாமேவைஷ்யஸி யுக்த்வைவமாத்மாநம் மத்பராயண: ॥ 34 ॥**

**மந்மநா:** – என்னிடமே மனம் நிலைபெற்றுள்ளவனாக, **ப₄வ** – ஆகிவிடு; **மத்₃ப₄க்த:** – என் பக்தனாக, (**ப₄வ** – ஆகிவிடு), **மத்₃யாஜீ** – என்னை பூஜிப்பவனாக, (**ப₄வ** – ஆகிவிடு). **மாம்** – என்னை, **நமஸ்குரு** – வணங்கு. **ஏவம்** – இவ்விதம், **ஆத்மாநம்** – மனம், புலன்களோடு கூடிய உடலை, **யுக்த்வா** – (என்னிடம்) ஈடுபடுத்தி, **மத்பராயண:** – என்னையே அடையத்தக்க ஒரே புகலாகக் கொண்டு, **மாம் ஏவ** – என்னையே, **ஏஷ்யஸி** – அடைவாயாக.

என்னிடமே மனம் நிலைபெற்றுள்ளவனாக ஆகிவிடு. என் பக்தனாக ஆகிவிடு. என்னை பூஜிப்பவனாக ஆகிவிடு. என்னை வணங்கு. இவ்விதம் மனம், புலன்களோடு கூடிய உடலை என்னிடம் ஈடுபடுத்தி என்னையே அடையத்தக்க ஒரே புகலாகக் கொண்டு என்னையே அடைவாயாக.

**கேள்வி:** 'பகவானிடம் மனதை நிலைபெறச் செய்வது' என்றால் எப்படி?

**பதில்:** பகவான் ஒருவரே ஸர்வவல்லமை படைத்தவர்; எல்லாம் அறிந்தவர்; எல்லா உலகங்களையும் ஆள்பவர்; எல்லாவற்றையும் கடந்து நிற்பவர்; எல்லாமாகவும் இருப்பவர்; நிர்குணர்; ஸகுணர்; உருவமற்றவர்; உருவம் உள்ளவர்; அழகு, இனிமை, செல்வம் இவற்றின் கடல்; பரம ப்ரேமையே வடிவானவர். இவ்விதம் பகவானுடைய குணம், ப்ரபாவம், தத்வம், ரஹஸ்யம் இவை பற்றிய உண்மையான அறிவு ஏற்பட்டுவிட்டால் ஸாதகனுக்கு ஓர் உறுதி வந்துவிடும். 'பகவான் ஒருவர்தான் நம்முடைய ப்ரேமைக்குரியவர். அப்பொழுது உலகில் உள்ள எந்தப் பொருளும் அழகுடையது என்ற எண்ணம் எஞ்சி நிற்காது.' இந்த நிலையில் உலகியலில் மிகவும் அருமையான ஸுகபோகம்கூட அவனைக் கவராது. இயல்பாகவே இவ்வுலக, பரலோகங்களில் ஸுகம் கிடைக்கின்ற பொருட்களிலிருந்து அவன் விலகிவிடுகிறான். அநன்யமான பரம ப்ரேமையுடனும், நம்பிக்கையுடனும் பகவானையே சிந்திப்பான். ப்ரேமை நிறைந்த இந்த பகவத் சிந்தனையே அவனுக்கு உயிர் வாழ்வதற்கு ஆதாரம் ஆகிறது. ஒரு கணம் பகவானை மறந்தாலும் அவன் துடிதுடித்துப் போவான். இப்படிப்பட்ட ப்ரேமை உள்ளவனைத்தான் இங்கே 'மந்மநா' என்ற சொல் குறிக்கிறது.

**கேள்வி:** 'பகவானுடைய பக்தனாவது' என்றால் என்ன?

**பதில்:** பகவானே பரமகதி. அவரே என் பதி. அவரே யஜமானர். அவரே துணை. அவரே காப்பாளர் என்று நம்பி, அவரிடமே எல்லாப் பொறுப்புக்களையும் ஒப்புவித்து விடவேண்டும்; அவரால் நேர்வது ஒவ்வொன்றையும் ஏற்று மகிழவேண்டும்; அவருடைய ஆணையை ஏற்று நடக்க வேண்டும்; பகவானுடைய நாமம், ஸ்வரூபம், குணம், ப்ரபாவம், லீலை இவற்றைக் கேட்க வேண்டும்; பாடவேண்டும்; மனதார நினைக்கவேண்டும்; மனம், புத்தி, புலன்களை அவற்றிலேயே ஆழ்ந்திருக்கச் செய்யவேண்டும். அவருடைய

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ப்ரீதிக்காகவே ஒவ்வொரு செயலையும் செய்யவேண்டும். இதுதான் பகவானுடைய பக்தன் ஆவது என்பது.

**கேள்வி:** பகவானுக்குப் பூஜை செய்வது என்றால் என்ன?

**பதில்:** பகவானுடைய ஆலயங்களுக்குச் செல்லவேண்டும். அவருடைய மங்களமயமான மூர்த்திக்கு முறைப்படி பூஜை செய்யவேண்டும். ஸௌகர்யம் போலத் தமது வீட்டிலும் இஷ்ட தெய்வத்தைப் படத்திலோ, விக்ரஹத்திலோ முறைப்படி நம்பிக்கையுடனும், ப்ரேமையுடனும் பூஜை செய்யவேண்டும். உள்ளத்திலோ அல்லது வெளியிலோ மனதார பகவானை ஸ்தாபித்து மனதால் உபசாரங்கள் அனைத்தும் செய்து பூஜிக்கவேண்டும். பகவானுடைய அருள்மொழிகளைப் படிக்கவேண்டும். புண்யக்ஷேத்ரங்களுக்குச் செல்லவேண்டும். லீலாஸ்தலங்களில் நடந்த லீலைகளைக் கற்பனை செய்து பார்க்கவேண்டும். லீலைகளைச் சித்தரித்துக் காட்டும் படங்களில் லீலைகளை, நேரே நடப்பதுபோலக் கூர்ந்து காணவேண்டும். பகவானுடைய ஸேவைகளில் ஈடுபடவேண்டும். நிஷ்காமமாக யாகம் முதலியவற்றைச் செய்யவேண்டும். தாய், தந்தை, குரு, அந்தணர், ஸாதுக்கள், மஹாத்மாக்கள் இன்னும் மற்ற ப்ராணிகள் அனைத்தும் பகவானுடைய ஸ்வரூபமே என்று மதித்து அந்தர்யாமியான பகவான் எங்கும் நிறைந்திருக்கிறார் என்று உணர்ந்து, தக்கபடி பூஜிக்கவேண்டும். மரியாதை காட்டவேண்டும். உடலாலும், மனதாலும், செல்வத்தாலும் அவர்களுக்கு மகிழ்ச்சியும், ஹிதமும் அளிக்கும் கார்யங்களில் கபடமின்றி ஈடுபடவேண்டும். இவையெல்லாம் பகவானைப் பூஜிப்பதாகும்.

**கேள்வி:** 'மாம்' என்பது இங்கே யாரைக் குறிக்கிறது? அவரை வணங்குவது என்றால் என்ன?

**பதில்:** பகவானுக்கு ஸகுணம், நிர்குணம், உருவமுள்ளது, உருவமற்றது என்று பல நிலைகள் உண்டு. விஷ்ணுவாக இருந்து உலகைக் காக்கிறார். ப்ரம்மதேவனாக இருந்து எல்லோரையும் படைக்கிறார். ருத்ரனாக இருந்து எல்லாவற்றையும் தம்முள் ஒடுக்கிக் கொள்கிறார். அந்தந்த யுகங்களில் மத்ஸ்யம், கூர்மம், வராஹம், ஸ்ரீநரஸிம்ஹம், ஸ்ரீராமர், ஸ்ரீக்ருஷ்ணன் முதலிய அவதாரங்களை எடுக்கிறார். உலகில் திருவிளையாடல்கள் புரிகிறார். தவிரவும் பக்தர்களின் விருப்பப்படி பல ஸ்வரூபங்களில் வெளிப்படுகிறார். அபயம் அளிக்கிறார். அகில உலகங்களையும் படைப்பவர், அழிப்பவர், விதிப்பவர், எல்லாவற்றிற்கும் ஆதாரமானவர், ஸர்வவல்லமை படைத்தவர், எங்கும் நிறைந்தவர், எல்லாம் அறிந்தவர், எல்லோருக்கும் நண்பர், எல்லா நற்குணங்களும் நிறைந்தவர், பரமபுருஷோத்தமன் என்ற ஸமக்ர பகவத் ஸ்வரூபத்தை இங்கே 'மாம்' என்ற சொல் குறிப்பிடுகிறது.

பரமாத்ம ஸ்வரூபத்தை ஸகுணமாகவும், நிர்குணமாகவும், அவரது மூர்த்தியையும், படத்தையும், அவருடைய சரணங்கள், பாதுகைகள், காலடிச் சுவடுகள் இவற்றுள் ஏதாவது ஒன்றையும், அவரது தத்வங்கள், ரஹஸ்யம், ப்ரேமை, ப்ரபாவம், மதுரமான லீலைகள் இவற்றை எடுத்துரைக்கின்ற நூல்களையும், தாய், தந்தை, அந்தணர், குரு, ஸாதுக்கள், மஹாத்மாக்கள் ஆகியோரையும் உலகில் உள்ள எல்லா ப்ராணிகளையும் பகவானுடைய ஸ்வரூபம் என்றே மதித்து, அவரே அந்தர்யாமியாக அவற்றில் விளங்குகிறார் என்பதை உணர்ந்து நம்பிக்கையுடனும், பக்தியுடனும் மனம், மொழி, மெய்களால் தக்கபடி வணங்குவதே – இங்கு 'நமஸ்குரு' என்ற சொல்லுக்குப் பொருளாகும்.

**கேள்வி:** 'ஆத்மாநம்' என்ற சொல் எதைக் குறிக்கிறது? முன் சொன்னபடி பகவானிடம் இணைப்பது எப்படி?

**பதில்:** மனம், புத்தி, புலன்களுடன் கூடிய உடலே இங்கு ஆத்மா என்ற சொல்லுக்குப் பொருள். இவற்றை முன் கூறியுள்ளபடி பகவானுக்காகவே ஈடுபடுத்துவதே பகவானிடம் இணைப்பது ஆகும்.

**கேள்வி:** 'பகவானையே ஒரே புகலாகக் கொள்வது' என்றால் என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இவ்விதம் எல்லாவற்றையும் பகவானுக்கே ஸமர்ப்பணம் செய்துவிடுவது; பகவானே ஒரே புகல்; எல்லாமே நமக்கு அவர்தான்; அவரே கதி – என்று முழுமையாக ஈடுபடுவதே, அவரை ஒரே புகலாகக் கொள்வதாகும்.

**கேள்வி:** 'ஏவ' என்று வலியுறுத்துவதன் பொருள் என்ன? பகவானை அடைவது என்றால் என்ன?

**பதில்:** 'ஏவ' என்றால் 'என்னை மட்டுமே' (வேறொன்றைச் சிந்தியாது) என்று பொருள். மேலே சொன்னவிதம் ஸாதனை புரிந்தால் பகவானையே அடைந்துவிடலாம். இதில் ஐயமில்லை. இந்த மனிதப் பிறவியிலேயே பகவானை நேரிடையாக தர்சனம் செய்துவிடலாம். பகவானைத் தத்வரீதியாக உணர்ந்து அவரிடம் புகுந்துவிடலாம். பகவானுடைய தெய்விக உலகத்தை அடையலாம். அவர் அண்மையில் இருக்கலாம். அவருடையது போன்ற திருமேனியைப் பெறலாம். இவையெல்லாம் பகவானை அடைவது ஆகும்.

ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
राजविद्याराजगुह्ययोगो नाम नवमोऽध्याय: ॥ ९ ॥

**ஓம் தத்ஸதி₃தி ஸ்ரீமத்₃ப₄க₃வத்கீ₃தாஸூபநிஷத்ஸு ப்₃ரஹ்மவித்₃யாயாம் யோக₃ஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே₃ ராஜவித்₃யா ராஜகு₃ஹ்ய யோகோ₃ நாம நவமோऽத்₄யாய: ॥ 9 ॥**

**ஓம் தத் ஸத் – ப்ரம்ம வித்யை, யோக ஶாஸ்த்ரம், உபநிஷத் எனப்படும் ஸ்ரீமத்பகவத்கீதையாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலில் 'ராஜாவித்யா ராஜகுஹ்யயோகம்' எனப் பெயர் படைத்த ஒன்பதாவது அத்யாயம் நிறைவுற்றது.**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

## அத₂ த₃ஶமோऽத்₄யாய:

# பத்தாவது அத்யாயம்

## விபூதியோகம்

**அத்யாயத்தின் பெயர்** இந்த அத்யாயத்தில் முக்யமாக பகவானது விபூதிகளைப் பற்றிய வர்ணனை இடம் பெறுகிறது. ஆகவே, இந்த அத்யாயத்திற்கு 'விபூதியோகம்' என்று பெயர்.

**அத்யாயச் சுருக்கம்** ச்லோகம் 1ல் பகவான் மறுபடியும் மிகச் சிறந்த உபதேசம் செய்வதாகக் கூறி, 'அதனைக் கேட்பாயாக' என்று அர்ஜுனனிடம் கூறுகிறார். 2, 3ல் யோகம் என்ற சொல்லால் தமது ப்ரபாவத்தை வர்ணித்து, அதை அறிவதன் பயனையும், 4 முதல் 6 வரை விபூதிகளின் சுருக்கமும் கூறி, 7ல் விபூதி, யோகம் இரண்டையும் தத்வரீதியாக அறிவதன் பயன் என்னவென்று கூறுகிறார். 8, 9ல் அறிஞர்களான, அநன்ய ப்ரேமை கொண்ட தம்முடைய பக்தர்கள் பஜனம் செய்யும் முறையையும், 10, 11ல் அதன் பயனையும் கூறுகிறார். 12 முதல் 15 வரை அர்ஜுனன் பகவானைத் துதித்து, 16 முதல் 18 வரை விபூதிகளையும், யோகசக்தியையும் விரிவாகச் சொல்லுமாறு வேண்டுகிறார். 19ல் பகவான் தமது விபூதி அளவற்றது என்றும், அவற்றில் முக்யமானவற்றை உரைப்பதாகவும் கூறி, 20 முதல் 39 வரை விபூதிகளை வர்ணிக்கிறார். 40ல் 'என் விபூதிகள் முடிவற்றவை' என்று கூறி, இந்த ப்ரகரணத்தை முடிக்கிறார். 41, 42ல் யோகம் என்கிற தமது ப்ரபாவத்தை வர்ணித்து அத்யாயத்தை முடிக்கிறார்.

**முன் அத்யாயத்துடன் இவ்வத்யாயத்திற்குப் பொருத்தம்:** ஏழாவது அத்யாயம் முதல் ஒன்பதாவது அத்யாயம் வரை விஞ்ஞானத்தோடு கூடிய ஞானத்தைப் பற்றிக் கூறினார். அவை மிகவும் ஆழ்ந்த கருத்துள்ளவை. ஆகவே, அவற்றை வேறு முறையில் விளக்குவதற்காகப் பத்தாவது அத்யாயத்தைத் துவக்குகிறார். முதல் ச்லோகத்தில், 'முன்புரைத்ததையே மறுபடியும் சொல்கிறேன்' என்று கூறுகிறார்—

श्रीभगवानुवाच

भूय एव महाबाहो शृणु मे परमं वचः।
यत्तेऽहं प्रीयमाणाय वक्ष्यामि हितकाम्यया॥ १॥

ஸ்ரீப₄க₃வாநுவாச

பூ₄ய ஏவ மஹாபா₃ஹோ ஶ்ருணு மே பரமம் வச: ।
யத்தேऽஹம் ப்ரீயமாணாய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா ॥ 1 ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ஶ்ரீப₄க₃வானுவாச** – ஶ்ரீபகவான் சொன்னார்: **மஹாபா₃ஹோ** – நீண்ட புஜமுடையோனே! **அஹம்** – நான், **ப்ரீயமாணாய** – மிகவும் அன்பு கொண்டவனான, **தே** – உனக்கு, **ஹிதகாம்யயா** – உன் நலம் கருதி, **யத்** – எதை, **பூ₄ய: ஏவ** – மீண்டும், **வக்ஷ்யாமி** – கூறுவேனோ, **மே** – என்னுடைய, **பரமம்** – மிக உயரிய பொருள் பொதிந்த, **வச:** – (அந்த) வாசகத்தை, **ஶ்ருணு** – கேள்.

ஶ்ரீபகவான் சொன்னார்: 'நீண்ட புஜமுடையோனே! மிகவும் அன்பு கொண்டவனான உனக்கு உன் நலம் கருதி நான் எதை மீண்டும் கூறுவேனோ, என்னுடைய மிக உயரிய பொருள் பொதிந்த அந்தச் சொற்களைக் கேள்.

**கேள்வி:** 'பூய: ஏவ' என்று பகவான் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'பூய:' என்றால் 'மீண்டும்' என்று பொருள். 'ஏவ' என்றால் 'கூட' என்று பொருள். ஏழாவது அத்யாயம் முதல் ஒன்பதாவது அத்யாயம் வரை நான் சொன்ன விஷயங்களை மீண்டும் வேறு முறையில் சொல்கிறேன் என்று பகவான் கூறுகிறார்.

**கேள்வி:** 'பரமம் வச:' என்பதற்கு என்ன கருத்து? 'அதை மறுபடியும் கேள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மிகவும் மறைத்துப் போற்றப்பட வேண்டிய பரமபுருஷனான பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், தத்வங்கள் இவற்றை உள்ளவாறு தெளிவாக உணர்த்தவல்லதும், பரமாத்மாவை அடையக் காரணமானதுமான உயரிய உபதேசத்தை, 'பரமம் வச:' என்று கூறுகிறார். 'என்னுடைய பக்தியின் தத்வம் மிகவும் நுட்பமானது; ஆழமானது. ஆகவே, அதைப் பற்றித் திரும்பத் திரும்பக் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும். அதாவது மிகுந்த அக்கறையுடனும், ச்ரத்தையுடனும், பேரன்புடனும் மறுபடியும் கேட்க வேண்டும்' என்பது கருத்து.

**கேள்வி:** 'ப்ரீயமாணாய' என்ற அடைமொழியையும், 'ஹிதகாம்யயா' என்ற சொல்லையும் கூறி என்ன கருத்தை விளக்குகிறார்?

**பதில்:** 'ப்ரீயமாணாய' என்ற அடைமொழியில் பகவான், "உனக்கு என்மேல் அளவற்ற அன்பு இருக்கிறது. என்னுடைய சொற்களை அமுதம் போல நினைத்து, மிகுந்த ஆர்வத்துடனும், ச்ரத்தையுடனும் கேட்டுக் கொண்டிருக்கிறாய். ஆகவே எவ்விதத்திலும் ஒன்றையும் குறைக்காமல், நீ கேட்காவிட்டாலும்கூட, மிகவும் மறைத்துப் போற்றத்தக்கவையான என்னுடைய குணங்கள், ப்ரபாவங்கள், தத்வம், ரஹஸ்யம் ஆகியவற்றைப் பல முறை கூறி வருகிறேன். இது என் மீது நீ கொண்டுள்ள அன்பின் விளைவு" என்று உணர்த்துகிறார். 'ஹிதகாம்யயா' என்ற சொல்லின் மூலம், "உன்னுடைய ப்ரேமையானது என்னுடைய மனதில் உனக்கு ஹிதம் செய்யவேண்டுமென்ற எண்ணத்தை ஊன்றிவிட்டது. ஆகவே, நான் இப்போது உனக்கு எது நன்மை பயக்குமோ அதைத்தான் சொல்கிறேன்" என்று உணர்த்துகிறார்.

பொருத்தம்: முதல் ச்லோகத்தில் பகவான் எதைச் சொல்வதாகக் கூறினாரோ, அதைச் சொல்ல ஆரம்பித்து முதல் ஐந்து ச்லோகங்களால் யோகம் என்று சொல்லப்படுகின்ற தம் ப்ரபாவத்தையும், விபூதியையும் சுருக்கமாகக் கூறுகிறார்—

**न मे विदुः सुरगणाः प्रभवं न महर्षयः ।**
**अहमादिर्हि देवानां महर्षीणां च सर्वशः ॥ २ ॥**

**ந மே விது₃: ஸுரக₃ணா: ப்ரப₄வம் ந மஹர்ஷய: ।**
**அஹமாதி₃ர்ஹி தே₃வாநாம் மஹர்ஷீணாம் ச ஸர்வஶ: ॥ 2 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**மே** – என்னுடைய, **ப்ரப₄வம்** – உற்பத்தி அதாவது லீலையாக வெளிப்படுவதை, **ஸுரக₃ணா:** – தேவகணங்கள் (தேவர்கள்), **ந விது₃:** – அறியார்கள்; **மஹர்ஷய:** – மஹரிஷிகளும், **ந (விது₃:)** – அறியார்கள். **ஹி** – ஏனெனில், **அஹம்** – நான், **ஸர்வஶ:** – எல்லா விதங்களிலும், **தே₃வாநாம்** – தேவர்களுக்கும், **மஹர்ஷீணாம் ச** – மஹரிஷிகளுக்கும், **ஆதி₃:** – ஆதி காரணம் ஆவேன்.

என்னுடைய உற்பத்தியை – லீலையாக வெளிப்படுவதை தேவகணங்கள் அறியார்கள். மஹரிஷிகளும் அறியார்கள். ஏனெனில் நான் எல்லா விதங்களிலும் தேவர்களுக்கும் மஹரிஷிகளுக்கும் ஆதி காரணம் ஆவேன்.

**கேள்வி:** இங்கு 'ப்ரபவம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? அதை தேவர்களும், மஹரிஷிகளும் அறியமாட்டார்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஒப்பற்றதான தமது ப்ரபாவத்தினால் உலகினை ஆக்கல், அளித்தல், அழித்தல் இவற்றை நடத்த ப்ரம்மதேவன், விஷ்ணு, ருத்ரன் என்ற தேவர்களின் உருவங்கொண்டும்; துஷ்டர்களை அழித்து பக்தர்களைக் காத்து, தர்மத்தை நிலைநிறுத்தி, பலவிதமான விசித்ரமான லீலைகளின் மூலம் உலகத்தின் ஜீவன்களைக் கடைத்தேற்றுவதற்காக ஸ்ரீராமன், ஸ்ரீக்ருஷ்ணன், மத்ஸ்யம், கூர்மம் முதலிய தெய்விக அவதாரங்களை எடுத்தும்; பக்தர்களுக்கு தர்சனம் அளித்து, அவர்கள் வாழ்வின் பயனைப் பெறுவதற்காக, அவர்கள் விரும்பியபடி பல ஸ்வருபங்களில் முடிவில்லாததும், விதவிதமானதுமான திருவிளையாடல்கள் முடிவின்றித் தொடர்ந்து நடைபெறுவதற்காக அகில ப்ரபஞ்ச ஸ்வரூபமாகவும் வெளிப்படுகிறார் பகவான். 'ப்ரபவம்' என்ற சொல் இதைக் குறிப்பிடுகிறது. 'இந்த அவதார தத்வத்தை தேவர்களோ, மஹரிஷிகளோ அறிவதில்லையென்றால் நான் எந்தெந்த சமயங்களில் எந்தெந்த அவதாரங்களை என்னென்ன காரணங்களுக்காக எடுத்து வெளிப்படுகிறேனோ, அவற்றை ஸாதாரண மனிதர்கள் எவ்வாறு அறிவர்?' என்பது பொருள். புலன்களுக்கு எட்டாத விஷயங்களை அறியவல்ல தேவர்களோ, மஹரிஷிகளோ கூட உண்மையாக அறிய முடியாதே என்று விளக்குகிறார்.

**கேள்வி:** 'ஸுரகணா:' என்றால் யார்? 'மஹரிஷிகள்' யார்?

**பதில்:** சாஸ்த்ரங்களில் கூறப்பட்டவர்களான பதினொரு ருத்ரர்கள், எட்டு வஸுக்கள், பன்னிரண்டு ஆதித்யர்கள், ப்ரஜாபதி, நாற்பத்தொன்பது மருத்துக்கள், அச்வினீ குமாரர்கள், இந்த்ரன் முதலிய அனைவரையுமே 'ஸுரகணா:' (தேவர்கள்) என்ற சொல் குறிக்கும். 'மஹரிஷிகள்' என்றால் ஸப்தரிஷிகள்.

**கேள்வி:** 'தேவர்களுக்கும், மஹரிஷிகளுக்கும் நான் எல்லாவிதத்திலும் ஆதி காரணம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த தேவர்களாலும், மஹரிஷிகளாலும்தான் அகில ப்ரபஞ்சமும் உண்டாகியிருக்கிறது. அவர்கள் எல்லோரும் என்னிடம் உண்டானவர்கள். அவர்களின் உற்பத்திக்கு நானே ‡உபாதான காரணமும், நிமித்த காரணமும் ஆவேன். அவர்களிடம் உள்ள கல்வி, அறிவு, வலிமை, பொலிவு, பெருமை முதலியவைகூட என்னிடமிருந்துதான் கிடைத்தன. ஆகவே, நானே அவர்களுக்கு ஆதி காரணம்.

**यो मामजमनादिं च वेत्ति लोकमहेश्वरम्।**
**असम्मूढः स मर्त्येषु सर्वपापैः प्रमुच्यते॥ ३॥**

‡ பானை உண்டாவதற்குக் களிமண் உபாதான காரணம். சக்ரம், தடி, குயவன் இவை நிமித்த காரணங்கள். அதுபோலவே பகவானே இவ்வுலகின் மூலப்பொருள். அவரே இது உண்டாவதற்கு உதவும் கருவி.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**யோ மாமஜமநாதி₃ம் ச வேத்தி லோகமஹேஸ்வரம் ।**

**அஸம்மூட₄: ஸ மர்த்யேஷு ஸர்வபாபை: ப்ரமுச்யதே ॥ 3 ॥**

**ய:** – எவன், **மாம்** – என்னை (நான்), **அஜம்** – பிறப்பற்றவன் என்றும், **அநாதி₃ம்** – அநாதியானவன் என்றும், **லோகமஹேஸ்வரம் ச** – உலகங்களுக்கெல்லாம் தலைவன் என்றும், **வேத்தி** – தத்வரீதியாக அறிகிறானோ, **மர்த்யேஷு** – மனிதர்களில், **அஸம்மூட₄:** – மிகவும் அறிவாளியான, **ஸ:** – அவன், **ஸர்வபாபை:** – அனைத்துப் பாவங்களிலிருந்தும், **ப்ரமுச்யதே** – விடுபடுகிறான்.

எவன் என்னைப் பிறப்பற்றவன், அநாதியானவன், உலகங்களுக்கெல்லாம் தலைவன் என்று தத்வரீதியாக அறிகிறானோ, மனிதர்களில் மிகவும் அறிவாளியான அவன் பாவங்கள் அனைத்திலிருந்தும் விடுபடுகிறான்.

**கேள்வி:** 'பகவானைப் பிறப்பற்றவர், அநாதியானவர், உலகங்களுக்கெல்லாம் தலைவர் என்றறிவது' என்றால் என்ன பொருள்?

**பதில்:** பகவான் தமது யோகமாயையினால் பலவித உருவங்களில் வெளிப்பட்டாலும்கூடப் பிறப்பற்றவர் (4/6). மற்ற ஜீவர்களைப்போல அவருக்குப் பிறவி கிடையாது. தம்முடைய பக்தர்களுக்கு ஸுகமளிப்பதற்காகவும், தர்மத்தை நிலைநாட்டுவதற்காகவும் பிறப்பதுபோல லீலை புரிகிறார். இவ்விஷயத்தை ச்ரத்தையுடனும், நம்பிக்கையுடனும் நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும். இதில் சிறிதும் ஐயம் ஏற்படக்கூடாது. இதுதான் பகவான் 'பிறப்பற்றவர்' என்று அறிவதாகும். பகவான்தான் எல்லாவற்றிற்கும் முதன்மையானவர். அதாவது அவரே மூல காரணம். அவருக்கும் முற்பட்டவர் எவரும் இல்லை. அவர் நித்யர்; என்றும் உள்ளவர். மற்றப் பொருட்களைப்போல பகவான் இன்ன காலத்தில் பிறந்தார் – இதுதான் ஆரம்பம் என்பவை கிடையா. எப்போது தோன்றினார் என்கிற காலவரையும் இல்லை. எனவே அவர் அநாதியானவர். இதை ச்ரத்தையுடனும், நம்பிக்கையுடனும் சரிவர அறிவதுதான் பகவானை 'அநாதி' என்றறிவதாகும். அதுபோல ஈசுவரன் வகையில் சேர்க்கக்கூடிய இந்த்ரன், வருணன், யமன், ப்ரஜாபதி முதலிய லோகபாலகர்கள் எல்லோருக்கும் பகவான் தலையாய தலைவர். அவர்தான் எல்லோரையும் நியமிக்கிறார்; தூண்டுகிறார்; செய்விக்கிறார்; அழிக்கிறார். எல்லாவிதங்களிலும் எல்லோரையும் தாங்கிப் பேணுகிறார்; காக்கிறார். ஸர்வவல்லமை படைத்தவர் அவர். இவ்விஷயத்தைச் செவ்வனே ச்ரத்தையுடன் ஐயமின்றி அறிவதுதான் பகவானை 'லோக மஹேஸ்வரன்' என்று அறிவதாகும்.

**கேள்வி:** அத்தகைய மனிதனை 'மர்த்யேஷு அஸம்மூட:' என்றும், 'அவன் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடுகிறான்' என்றும் கூறுவதன் பொருள் என்ன?

**பதில்:** மேற்கூறியபடி பகவான் பிறப்பற்றவர், அநாதி, லோக மஹேசுவரன் என்றறிவதன் பயனை இவ்விதம் கூறுகிறார். உலகில் உள்ள மனிதர்களில் மேலே சொன்னவிதம் பகவானுடைய ப்ரபாவத்தைச் சரிவர அறிந்து கொள்பவனே பகவானை உண்மையாக அறிகிறான். பகவானை அவ்வாறு அறிபவனே 'அஸம்மூட:' – அறியாமையற்றவன். மற்ற யாவரும் அறிவிலிகளே. பகவானுடைய தத்வத்தை நன்கு அறிந்து கொள்பவன் இயல்பாகவே அருமையான மனிதப் பிறவியின் விலைமதிப்பற்ற ஆயுளை எல்லாவிதங்களிலும் பகவானுடைய வழிபாட்டிலேயே காலத்தை ஈடுபடுத்துவான் (15/19). உலகியல் பற்றுள்ளவர்களைப்போல போகங்கள் ஸுகத்திற்குக் காரணமென்று நினைத்து, அவற்றில் ஈடுபடமாட்டான். ஆகவே, இப்பிறவியிலும், முற்பிறவிகளிலும் செய்த பாவங்கள் அனைத்திலிருந்தும் அவன் முழுமையாக விடுபட்டு எளிதாகவே பகவானை அடைந்துவிடுவான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



बुद्धिर्ज्ञानमसम्मोहः क्षमा सत्यं दमः शमः।
सुखं दुःखं भवोऽभावो भयं चाभयमेव च॥४॥

अहिंसा समता तुष्टिस्तपो दानं यशोऽयशः।
भवन्ति भावा भूतानां मत्त एव पृथग्विधाः॥५॥

புத்திர்ஜ்ஞானமஸம்மோஹ: க்ஷமா ஸத்யம் தம: ஶம: ।
ஸுகம் து:கம் பவோऽபாவோ பயம் சாபயமேவ ச ॥ 4 ॥
அஹிம்ஸா ஸமதா துஷ்டிஸ்தபோ தானம் யஶோऽயஶ: ।
பவந்தி பாவா பூதாநாம் மத்த ஏவ ப்ருதக்விதா: ॥ 5 ॥

**புத்தி:** – தீர்மானம் செய்யும் திறன், **ஜ்ஞாநம்** – உண்மையான அறிவு, **அஸம்மோஹ:** – மோஹமின்மை, **க்ஷமா** – பொறுமை, **ஸத்யம்** – உண்மை, **தம:** – புலனடக்கம், **ஶம:** – மனவடக்கம், **ஏவ** – அப்படியே, **ஸுகம் து:கம்** – இன்ப, துன்பம், **பவ: அபாவ: ச** – தோன்றுவதும், அழிவதும், **பயம் அபயம் ச** – பயமும், பயமின்மையும், **அஹிம்ஸா** – அஹிம்ஸை, **ஸமதா** – ஸமபாவனை, **துஷ்டி:** – மகிழ்ச்சி, **தப:** – தவம், **தானம்** – தானம் (கொடை), **யஶ:** – கீர்த்தி, **அயஶ:** – அபகீர்த்தி, (**ஏவம்** – இத்தகைய), **பூதாநாம்** – உயிரினங்களுடைய, **ப்ருதக்விதா:** – வெவ்வேறான, **பாவா:** – மனப்பாங்குகள், **மத்த: ஏவ** – என்னிடமிருந்துதான், **பவந்தி** – உண்டாகின்றன.

தீர்மானம் செய்யும் திறன், உண்மையான அறிவு, மோஹமின்மை, பொறுமை, உண்மை, புலனடக்கம், மனவடக்கம், இன்பம் துன்பம், தோன்றுவதும் அழிவதும், பயமும் பயமின்மையும், அஹிம்ஸை, ஸமபாவனை, மகிழ்ச்சி, தவம், தானம், கீர்த்தி, அபகீர்த்தி இத்தகைய உயிரினங்களுடைய வெவ்வேறான மனப்பாங்குகள் என்னிடமிருந்துதான் உண்டாகின்றன.

**கேள்வி:** *'புத்தி:', 'ஜ்ஞாநம்', 'அஸம்மோஹ:' என்ற சொற்கள் எந்தெந்த வெவ்வேறு கருத்துக்களைக் கூறுகின்றன?*

**பதில்:** செய்யத்தக்கது, செய்யத்தகாதது; ஏற்கத்தக்கது, ஏற்கத்தகாதது; நல்லது, கெட்டது இவற்றைப் பகுத்தறிந்து தீர்மானம் செய்யும் மனதின் செயல்பாடே இங்கு 'புத்தி' எனப்படுகிறது.

ஒரு பொருளைப் பற்றிய உண்மையான அறிவு 'ஜ்ஞாநம்' எனப்படும். ஸாதாரணப் பொருள் முதல் பகவான் வரை உள்ள எல்லாவற்றையும் பற்றிய உண்மை அறிவுதான் 'ஜ்ஞாநம்'.

விஷய ஸுகங்களில் ஈடுபட்டவர்கள் நிலையானவை, ஸுகமளிப்பவை போல் தோற்றமளிக்கும் போகங்களை அநித்யமானவை; கணநேரத்தவை; துக்கத்திற்குக் காரணமாக இருப்பவை என்று உணர்ந்து, அவற்றால் மோஹமடையாத மனப்பாங்கு கொள்வதுதான் 'அஸம்மோஹ:' – மோஹமின்மை.

**கேள்வி:** *'க்ஷமா', 'ஸத்யம்' என்றால் என்ன?*

**பதில்:** பிறருக்குக் கெடுதி நினைப்பது, தீங்கு செய்வது, பொருளை அபஹரிப்பது, அவமானம் செய்வது, தாக்குவது, கடுமையாகப் பேசுவது, திட்டுவது, பழிப்பது, கோள் சொல்வது, தீ வைப்பது, விஷம் கொடுப்பது, கொல்வது, நேரிடையாகவோ, மறைமுகமாகவோ அழிவை உண்டாக்குவது முதலிய எவ்வளவு குற்றங்கள் உள்ளனவோ, அவற்றில் ஒன்றையோ, பலவற்றையோ கைக்கொண்டு நமக்குத் தீங்கிழைப்பவர் யாராக இருப்பினும், அவரை எதிர்த்துப் பழிக்குப்பழி வாங்க நமக்குத் திறமை இருந்தாலும் கூடப் பழிவாங்க வேண்டும் என்ற எண்ணம் சிறிதுகூட இல்லாமல் இருப்பது. 'ஐயோ பாவம்!

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இந்தக் குற்றத்திற்கு இவ்வுலகிலோ, பரலோகத்திலோ எதிரிக்குத் தண்டனை கிடைக்க வேண்டாம்' என்று நினைப்பது – இதுதான் 'க்ஷமா' (பொறுமை).

புலன்கள், அந்தக்கரணம் இவற்றின் மூலம் பார்த்து, கேட்டு, உணர்ந்து கொண்ட பொருளை, அவ்வாறே பிறருக்கு விளங்க வைப்பதற்காக இனியமொழியில் எடுத்துச் சொல்வது 'ஸத்யம்' (உண்மை).

**கேள்வி:** 'தம:', 'ஶம:' என்பவை எவற்றைக் கூறுவன?

**பதில்:** போகப் பொருட்களைத் தேடி ஓடுகின்ற புலன்களை அவற்றிலிருந்து தடுத்துத் தன் வசத்தில் உறுதியாக வைத்துக் கொள்வது – அவை போனவழி போகாமல் தடுப்பது – 'தமம்' ஆகும். மனதை நன்றாக அடக்கித் தன் வசத்தில் வைத்துக் கொள்வது 'ஶமம்' ஆகும்.

**கேள்வி:** ஸுகம், துக்கம் என்றால் என்ன பொருள்?

**பதில்:** ப்ரியமானதும், அனுகூலமானதுமான பொருள் வந்து சேர்ந்தாலோ, நாம் விரும்பாத ப்ரதிகூலமான பொருள் நம்மை விட்டு அகன்றாலோ மனதில் ஏற்படுவது ஸுகம். அப்படியே விரும்பியது கைநழுவி, விரும்பாதது வந்து சேர்ந்தால் மனதில் ஏற்படுவது துக்கம். அது ஆதிபௌதிகம் என்றும், ஆதிதைவிகம் என்றும், ஆத்யாத்மிகம் என்றும் மூவகைப்படும். மனிதர், விலங்குகள், பறவைகள், புழுக்கள், பூச்சிகள் இவற்றால் ஏற்படும் கஷ்டம் 'ஆதிபௌதிகம்' எனப்படும். மழையின்மை, அதிக மழை, நிலநடுக்கம், இடிவிழுவது, பஞ்சம் முதலிய தெய்வச் சீற்றத்தால் ஏற்படும் துக்கம் 'ஆதிதைவிகம்' எனப்படும். உடல், புலன்கள், மனம் இவற்றில் ஏற்படும் நோய், கவலை முதலிய கஷ்டங்கள் 'ஆத்யாத்மிகம்' எனப்படும்.

**கேள்வி:** 'பவ:' எது? 'அபாவ:' எது? 'பயம்' எது? 'அபயம்' எது?

**பதில்:** படைப்பின் ஆரம்பத்தில் எல்லாச் சராசரங்களும் உண்டாவது 'பவம்' (தோன்றுவது) எனப்படும். ப்ரளய காலத்தில் மறைந்து போவது 'அபாவம்' (அழிவது) எனப்படும். ஏதோ ஒன்றை இழப்பதால் அல்லது யாராவது இறப்பதால் மனதில் உண்டாவது 'பயம்'. எங்கும் பகவான் நிறைந்திருக்கிறார் என்ற எண்ணத்தின் உறுதியால் எதிலும் பயப்படாமல் இருப்பது 'அபயம்' (பயமின்மை).

**கேள்வி:** 'அஹிம்ஸா', 'ஸமதா', 'துஷ்டி:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** எந்த நேரத்திலும், எந்த ப்ராணிக்கும், எவ்வகையிலும் மனதாலோ, சொல்லாலோ, உடலாலோ சிறிதுகூடத் துன்பம் உண்டாக்காமல் இருப்பது 'அஹிம்ஸா'.

ஸுகம்–துக்கம், லாபம்–நஷ்டம், வெற்றி–தோல்வி, புகழ்ச்சி–இகழ்ச்சி, மானம்–அவமானம், நட்பு–பகைமை என்று எத்தனை செய்கைகள், பொருட்கள், நிகழ்ச்சிகளுக்கு உட்பட்டாலும், அவற்றின் மாறுபாடுகளின் காரணமாக விருப்பு–வெறுப்புகளை அடையாமல் எப்பொழுதும் ஸமபாவனையுடன் இருப்பது 'ஸமதா'.

எது நேர்ந்தாலும் அது ப்ராரப்தத்தின் பயன் என்றோ, தெய்வம் விதித்தது என்றோ அறிந்து எப்பொழுதும் மனமலர்ச்சியுடன் இருப்பது 'துஷ்டி:' (மகிழ்ச்சி).

**கேள்வி:** தவம், தானம், கீர்த்தி, அபகீர்த்தி – இவற்றிற்குத் தனித்தனியாக என்ன பொருள்?

**பதில்:** தனக்கு விதிக்கப்பட்ட தர்மத்தை அனுஷ்டிக்கும்போது ஏற்படும் கஷ்டத்தைப் பொறுப்பது 'தவம்'. தனக்குரிய பொருட்களைப் பிறருடைய நலனுக்காக வழங்குவது 'தானம்'. உலகில் எல்லாரும் நம்மைக் கொண்டாடுவது 'கீர்த்தி'. நம்மை எல்லோரும் இகழ்வது 'அபகீர்த்தி'.

**கேள்வி:** உயிரினங்களுக்கு இவ்விதம் வெவ்வேறான மனப்பாங்குகள் என்னிடமிருந்துதான் உண்டாகின்றன என்பதற்கு என்ன பொருள்?

**பதில்:** வெவ்வேறு ப்ராணிகளுக்கு அவற்றின் இயல்புகளுக்கேற்ப மேலே சொன்னவிதம் எத்தனை மனப்பாங்குகள் உளவோ, அவை என்னிடமிருந்தே உண்டாகின்றன. அதாவது

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



என்னுடைய உதவியினாலும், என்னுடைய சக்தியினாலும், நான் இருப்பதாலும் உண்டாகின்றன.

**கேள்வி:** இந்த இரண்டு ச்லோகங்களில் ஸுகம், பவம் (தோன்றுவது), பயமின்மை, கீர்த்தி என்ற நான்கிற்கும், துன்பம், அழிவது, பயம், அபகீர்த்தி என்ற நான்கு எதிர்மறைச் சொற்கள் கூறப்பட்டன. ஆனால் க்ஷமா, ஸத்யம், தமம், அஹிம்ஸை இவற்றிற்கு ஏன் எதிரிடைச் சொற்கள் கூறப்படவில்லை?

**பதில்:** துக்கம், அழிவது, பயம், அபகீர்த்தி இவையெல்லாம் ப்ராரப்த வினைப்பயனை அனுபவிக்கும் வாயிலாக ஜீவர்களுக்கு உண்டாகின்றன. ஆகவே, இவை நாம் செய்த கர்மங்களுக்குப் பயனளித்து முறைப்படுத்தும் பகவானிடமிருந்து உண்டானவை என்று சொல்வது பொருந்தும். ஆனால் க்ஷமா, ஸத்யம், தமம், அஹிம்ஸை முதலியவற்றிற்கு எதிர்மறையான க்ரோதம், பொய், புலன்களுக்கு அடிமையாவது, ஹிம்ஸை முதலிய தீய குணங்கள் பகவான் அளிப்பவை அல்ல. மாறாக, கீதையில் முன்பு கூறியவாறு இந்தத் தீய குணங்கள், தீய நடத்தை இவற்றுக்கெல்லாம் உற்பத்தி ஸ்தானம் அறியாமையினால் உண்டாகும் காமம் ஆகும் (3/37). இவற்றை வேரோடு களைய வேண்டும் என்று சொல்கிறார். ஆகவே, இங்கு ஸத்யம் முதலியவற்றிற்கு எதிர்மறைகளான சொற்கள் சொல்லப்படவில்லை.

**महर्षयः सप्त पूर्वे चत्वारो मनवस्तथा।**
**मद्भावा मानसा जाता येषां लोक इमाः प्रजाः॥ ६॥**

**மஹர்ஷய: ஸப்த பூர்வே சத்வாரோ மநவஸ்ததா₂ ।**
**மத்₃பா₄வா மாநஸா ஜாதா யேஷாம் லோக இமா: ப்ரஜா: ॥ 6 ॥**

**லோகே** – உலகில், **இமா:** – இந்த, **ப்ரஜா:** – ப்ரஜைகள் அனைவரும், **யேஷாம்** – எவர்களிடமிருந்து, (**ஜாதா:** – உண்டானார்களோ, **தே** – அந்த), **ஸப்த** – ஏழு, **மஹர்ஷய:** – மஹரிஷிகளும், **பூர்வே** – அவர்களுக்கும் முந்தியவர்களான, '**சத்வார:** – ஸனகர் முதலிய நான்கு முனிவர்களும், **ததா₂** – அவ்வாறே, **மநவ:** – ஸ்வாயம்புவர் முதலிய பதினான்கு மனுக்களும், **மாநஸா:** – என் ஸங்கல்பத்தாலேயே, **ஜாதா:** – தோன்றியவர்கள், **மத்₃பா₄வா:** – எல்லோருமே என்னிடம் அன்பும் நம்பிக்கையும் கொண்டவர்கள்.

உலகில் இந்த ப்ரஜைகள் அனைவரும் எவர்களிடமிருந்து உண்டானார்களோ அந்த ஏழு மஹரிஷிகளும், அவர்களுக்கும் முந்தியவர்களான ஸனகர் முதலிய நான்கு முனிவர்களும், அவ்வாறே ஸ்வாயம்புவர் முதலிய பதினான்கு மனுக்களும், என் ஸங்கல்பத்தாலேயே தோன்றியவர்கள் எல்லோருமே என்னிடம் அன்பும் நம்பிக்கையும் கொண்டவர்கள்.

**கேள்வி:** ஏழு மஹரிஷிகளின் இலக்கணம் என்ன? அவர்கள் யார் யார்?

**பதில்:** ஏழு மஹரிஷிகளின் இலக்கணம் வாயுபுராணத்தில் (61/93,94) கூறப்படுகிறது—

ஏதாந் பா₄வாநதீ₄யாநா யே சைத ருஷயோ மதா: ।
ஸப்தைதே ஸப்தபி₄ம்சைவ கு₃ணை: ஸப்தர்ஷய: ஸ்ம்ருதா: ॥
தீ₃ர்கா₄யுஷோ மந்த்ரக்ருத ஈம்வரா தி₃வ்யசக்ஷுஷ: ।
வ்ருத்₃தா₄: ப்ரத்யக்ஷத₄ர்மாணோ கோ₃த்ரப்ரவர்தகாம்ச யே ॥

‡தேவரிஷிகளின் மேற்சொன்ன பண்புகளை அறிந்தவர்கள் ரிஷிகள் எனப்படுவார். இவர்கள் ஏழு பேர். ஸப்தரிஷிகள் என்று அழைக்கப்படுவார்கள். ஏழு நலன்கள்

‡ தேவரிஷிகளின் இலக்கணம் இந்த அத்யாயத்தின் 12,13 ச்லோகங்களின் உரையில் காணலாம்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



படைத்தவர்கள். (1) நீண்ட ஆயுள் உள்ளவர்கள், (2) மந்த்ரம் கண்டவர்கள், (3) ஈசுவரத் தன்மையுடையவர்கள், (4) தெய்விகப் பார்வை படைத்தவர்கள், (5) குணம், கல்வி, ஆயுள் இம்மூன்றிலும் முதிர்ச்சி அடைந்தவர்கள், (6) தர்மத்தைக் கண்டறிந்தவர்கள், (7) கோத்ர முதல்வர்கள். இவர்களிடமிருந்துதான் மக்கள் பெருகினார்கள். தர்மத்திற்கு வரைமுறைகளும் ஏற்பட்டன.‡

இந்த ஸப்தரிஷிகள் ஒவ்வொரு மன்வந்தரத்திலும் வெவ்வேறானவர்கள். இங்கே கூறப்படும் ஸப்தரிஷிகளை மஹரிஷிகள் என்கிறார் பகவான். இவர்கள் பகவானுடைய ஸங்கல்பத்தில் உதித்தவர்கள். இவர்கள் ஸாதாரண ரிஷிகளைக் காட்டிலும் உயர்ந்த தரத்தில் உள்ளவர்கள் என்று குறிக்கிறார். இந்த மன்வந்தர ஸப்தரிஷிகளைப் பற்றி மஹாபாரதம் சாந்தி பர்வத்தில் குறிப்பிட்டுச் சொல்லப்படுகிறது. இவர்களைப் பற்றி பகவான் தேவர்களோடு கூடியிருந்த ப்ரம்மதேவனிடம் கூறுகிறார்—

மரீசிரங்கி₃ராம்சாத்ரி: புலஸ்த்ய: புலஹ: க்ரது: ।
வஸிஷ்ட₂ இதி ஸப்தைதே மாநஸா நிர்மிதா ஹி தே ॥
ஏதே வேத₃விதே₃ா முக்₂யா வேத₃ாசார்யாம்ச கல்பிதா: ।
ப்ரவ்ருத்தித₄ர்மிணம்சைவ ப்ராஜாபத்யே ச கல்பிதா: ॥

(மஹா. சாந்தி. 340/69,70)

“மரீசி, அங்கிரஸ், அத்ரி, புலஸ்த்யர், புலஹர், க்ரது, வஸிஷ்டர் – இவர்கள் உங்களுடைய (ப்ரம்மதேவருடைய) மனதில் உதித்தவர்கள். இவர்கள் வேதம் அறிந்தவர்கள். இவர்களை முக்யமான வேத ஆசிரியர்களாக நியமித்திருக்கிறேன். இவர்கள் உலகியலில் ஈடுபடுவதை தர்மமாக உடையவர்கள். ப்ரஜாபதியின் செயலைச் செய்ய என்னால் நியமிக்கப்பட்டவர்கள்.”

இந்தக் கல்பத்தின் முதல் மன்வந்தரமான ஸ்வாயம்புவ மன்வந்தரத்தின் ஸப்தரிஷிகள் இவர்களே (ஹரிவம்சம் 7/8,9). ஆகவே, இந்த ச்லோகத்தில் ஸப்தரிஷிகள் என்று இவர்களையே கொள்ள வேண்டும்.§

---

‡ ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் ஈடுபட்ட ஸப்தரிஷிகளின் கருத்துக்கள், வாழ்க்கை வரலாறு ஆகியன பின்கண்டவாறு வாயுபுராணத்தில் (61/95–97) கூறப்படுகின்றன—

ஷட்கர்மாபி₄ரதா நித்யம் சாலிநோ க்₃ருஹமேதி₄ந: ।
துல்யைர்வ்யவஹரந்தி ஸ்ம அத்₃ருஷ்டை: கர்மஹேதுபி₄: ॥
அக்₃ராம்யைர்வர்தயந்தி ஸ்ம ரஸைம்சைவ ஸ்வயம்க்ருதை: ।
குடும்பி₃ந: ருத்₃தி₄மந்தோ ப₃ாஹ்யாந்தரநிவாஸிந: ॥
க்ருதாதி₃ஷு யுக₃ாக்₂யேஷு ஸர்வேஷ்வேவ புந: புந: ।
வர்ணாம்ரமவ்யவஸ்த₂ாநம் க்ரியதே ப்ரத₂மம் து வை ॥

இந்த ஸப்தரிஷிகள் (1) வேத சாஸ்த்ரங்களைக் கற்பது, (2) அவற்றைக் கற்பிப்பது, (3) தாம் யக்ஞம் செய்வது, (4) பிறர் மூலம் யக்ஞம் செய்விப்பது, (5) தானம் ஏற்பது, (6) கொடுப்பது என்ற ஆறு கர்மங்களில் எப்போதுமே ஈடுபடுபவர்கள்; ப்ரம்மசாரிகளுக்குக் கற்பிப்பதற்காகத் தம் ஆசிரமத்திலேயே குருகுலம் நடத்துபவர்கள்; மக்கட்பேற்றுக்காகவே இல்லறம் ஏற்று, செந்தழல் ஓம்பும் தகைமையாளர்கள்; அவரவர் வினைப்பயனுக்கேற்றபடி அந்தந்த வர்ணங்களில் பிறந்தவர்களிடம் அந்தந்த முறைப்படி ஸமமாக நடந்து கொள்பவர்கள்; தூய்மையான பொருட்களைத் தாமே சேகரித்து அவற்றைக் கொண்டே வாழ்க்கை நடத்துபவர்கள்; இவர்கள் மனைவி–மக்களுடன் வாழ்பவர்கள்; பசு முதலிய செல்வச்செழிப்பு உடையவர்கள்; உலகியலிலும், அத்யாத்ம நிலையிலும் வாழ்பவர்கள். க்ருதம் முதலிய யுகங்களின் ஆரம்பத்தில் முதன்முதலில் இவர்களே வர்ணாசிரமப் பாகுபாடு வரைமுறைகளை வகுத்தவர்கள்.

§ இந்த ஏழு மஹரிஷிகளும் மிகவும் தேஜஸ் உடையவர்கள்; மதிநலம் படைத்தவர்கள். ப்ரஜைகளை உற்பத்தி செய்வதன் காரணமாக இவர்களையே ஏழு ப்ரம்மதேவர்கள் என்றுகூடச் சொல்வது உண்டு (மஹா. சாந்தி 208/3,4,5) இவர்களுடைய சரித்ரச் சுருக்கம் வருமாறு—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** இங்கு இப்பொழுது நடந்து வரும் வைவஸ்வத மன்வந்தரத்தின் ஏழு ரிஷிகளான விசுவாமித்ரர், ஜமதக்னி, பரத்வாஜர், கௌதமர், அத்ரி, வஸிஷ்டர், கச்யபர் என்பவர்களை எடுத்துக் கொண்டால் என்ன தவறு?

**பதில்:** இந்த ஏழு முனிவர்களில் அத்ரி, வஸிஷ்டர் தவிர மற்ற ஐவரும் பகவானிடமோ, ப்ரம்மதேவரிடமோ உதித்தவர்கள் அல்லர். (ச்லோகத்தில் மானஸ புத்ரர்கள் என்று வருவதால்) இங்கே அவர்களைக் கொள்வது உசிதம் ஆகாது.

**கேள்வி:** 'பூர்வே', 'சத்வார:' என்று எவரைக் கொள்ளவேண்டும்?

**பதில்:** எல்லோருக்கும் முன் தோன்றியவர்களான ஸநகர், ஸநந்தனர், ஸநாதனர், ஸநத்குமாரர் என்னும் நால்வரைக் கொள்ளவேண்டும். இவர்களும் பகவானுடைய ஸ்வரூபமே. ப்ரம்மதேவன் தவம் செய்தபோது (தாமாக) வெளிப்பட்டவர்கள். ப்ரம்மதேவனே சொல்கிறார்—

---

*(1) மரீசி — இவர் பகவானுடைய அம்சாவதாரம் என்று மதிக்கப்படுபவர். இவருக்குப் பல மனைவிகள். அவர்களிலே தக்ஷப்ரஜாபதியின் பெண் ஸம்பூதியும், தர்மர் என்ற அந்தணரின் பெண்ணான தர்மவ்ரதா என்பவரும் முக்யமானவர்கள். இவர்களின் குழந்தைகள்தான் பல்கிப் பெருகின. மஹரிஷி கச்யபர் இவருடைய புத்ரர். ப்ரம்மதேவர் இவருக்குத்தான் பத்மபுராணத்தின் ஒரு பகுதியைச் சொன்னார். அநேகமாக எல்லாப் புராணங்களிலும், மஹாபாரதத்திலும், வேதங்களிலும்கூட இவரைப் பற்றி நிறையச் சொல்லப்பட்டிருக்கிறது. ப்ரம்மதேவன் முதன்முதல் ப்ரம்மபுராணத்தை இவருக்குத்தான் சொன்னார். இவர் எப்பொழுதும் படைத்தல், காத்தல் என்ற செயல்களிலேயே ஈடுபட்டிருந்தார். இவரைப் பற்றி விரிவாக வாயு, ஸ்கந்த, அக்னி, பத்ம, மார்க்கண்டேய, விஷ்ணு புராணங்களிலும், மஹாபாரதத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.*

*(2) அங்கிரஸ் — இவர் மிகவும் தேஜஸ் படைத்த மஹரிஷி. இவருக்கும் பல மனைவிகள். அவர்களில் முக்யமானவர் மூவர். ஒருத்தி மரீசியின் மகள் ஸுரூபா. அவளிடம் ப்ருஹஸ்பதி பிறந்தார். மற்றொருத்தி கர்தம ரிஷியின் பெண் ஸ்வராட். அவளிடம் கௌதமர், வாமதேவர் முதலிய ஐந்து குமாரர்கள் பிறந்தனர். இன்னொருத்தி மனுவின் புத்ரி பத்யா. அவளிடம் விஷ்ணு முதலிய மூன்று குமாரர்கள் பிறந்தார்கள் (வாயுபுராணம், அத்யாயம் 65). அக்னியின் மகளான ஆத்ரேயியிடம் ஆங்கிரஸ் என்ற பல புதல்வர்கள் பிறந்தார்கள் (ப்ரம்மபுராணம்). இன்னும் சில நூல்களில் 'அங்கிரஸுக்கு சுபா என்ற பத்னியிடம் பிறந்தவர் ப்ருஹஸ்பதி' என்று கூறப்படுகிறது (மஹாபாரதம்).*

*(3) அத்ரி — இவர் தென்திசையில் வாழ்பவர். புகழ் பெற்ற அநஸூயாதேவிதான் இவருடைய மனைவி. அவள் கபில பகவானின் ஸஹோதரி; கர்தமர்-தேவஹூதியின் பெண். வனவாஸத்தின்போது பகவான் ஸ்ரீராமசந்த்ரமூர்த்தி இவர்களுடைய உபசாரத்தை ஏற்றுக் கொண்டார். அநஸூயை, லோகமாதா ஸீதாதேவிக்குப் பலவிதமான திவ்யமான மங்கள த்ரவ்யங்களையும், ஆடைகளையும் அளித்து பதிவ்ரதா தர்மத்தை உபதேசித்தாள்.*

*ப்ரம்ம ஞானிகளில் சிறந்தவர் அத்ரி மஹரிஷி. ப்ரம்மதேவர் அவரிடம் மக்களைப் பெருக்குமாறு ஆணையிட்டார். உடனே அத்ரி மஹரிஷி மனைவி அநஸூயையுடன் ருக்ஷம் என்ற மலையின் மேல் தவம் மேற்கொண்டார். அவர்கள் பகவானுடைய பரம பக்தர்கள். கடுமையான தவம் புரிந்தார்கள். தவத்தின் பயனாக பகவானை நேராக தர்சிக்கவேண்டும் என விரும்பினர். உலகமெல்லாம் ஆளும் பகவானை சரணமடைந்து அவருடைய சிந்தனையிலே மூழ்கியிருந்தனர். அப்போது அவர்களுடைய தலையிலிருந்து யோகாக்னி மூண்டது. மூவுலகையும் எரித்தது. அவர்களுடைய தவத்தை மெச்சி ப்ரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மும்மூர்த்திகளும் நேரே வரமளிக்க வந்தார்கள். மும்மூர்த்திகளையும் ஒருங்கே தர்சனம் செய்து மகிழ்ந்தனர் தம்பதிகள். நாத்தழுதழுக்கத் துதித்தனர் மூவரும். "என்ன வரம் வேண்டும்?" என வினவினர். ப்ரம்மா மக்களைப் பெறவேண்டும் என்று ஆணையிட்டாரல்லவா! அதை நினைத்து அத்ரி சொன்னார்— "நான் புத்ரப் பேற்றை வேண்டி பகவானுக்குப் பூஜை செய்தேன். அவரை தர்சனம் செய்ய விரும்பினேன். நீங்கள் மூவர் வந்திருக்கிறீர்கள். உங்களைப் பற்றி நான் கற்பனை செய்யக்கூட இயலாது. உங்களுக்கு எப்படி என் மேல் க்ருபை வந்தது? நீங்களே சொல்லுங்கள்" என்றார். அத்ரியின் சொற்கேட்டு மூவரும் புன்னகை புரிந்து சொன்னார்கள்— "அந்தணோத்தமரே! உங்களுடைய ஸங்கல்பம் ஸத்யமானது. நீங்கள் யாரை த்யானம் செய்தீரோ, அவர்தான் நாங்கள் மூவரும். ஒருவருக்கு மூன்று ஸ்வரூபங்கள் எங்களுடைய அம்சமாக உங்களுக்கு மூன்று புதல்வர்கள் பிறப்பார்கள். நீங்கள் பிறவிப்பயனை அடைந்துவிட்டீர்கள்" என்று சொல்லி மும்மூர்த்திகளும் மறைந்தனர். மூவரும் அவருக்குப் புதல்வர்களாகப் பிறந்தனர் விஷ்ணுவின் அம்சமாக தத்தாத்ரேயர், ப்ரம்மதேவனின் அம்சமாக சந்த்ரன், சிவனின் அம்சமாக துர்வாஸர் த்யானத்தில் கற்பனைகூடச் செய்து பார்க்க முடியாத மும்மூர்த்திகள் அவர்கள். குழந்தைகளாக அவர்கள் மடியில் விளையாடினார்கள். பக்தியின் பெருமை இது (வால்மீகி ராமாயணம் ஆரண்யகாண்டம்; ஸ்ரீமத்பாகவதம் 4வது ஸ்கந்தம்).*

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தப்தம் தபோ விவித₄லோகஸிஸ்ருக்ஷயா மே
ஆதெ₃ள ஸநாத்ஸ்வதபஸ: ஸ சது:ஸநோऽபூ₄த் ।
ப்ராக்கல்பஸம்ப்லவவிநஷ்டமிஹாத்மதத்த்வம்
ஸம்யக்₃ ஜகா₃த₃ முநயோ யத₃சக்ஷதாத்மந் ॥
(ஸ்ரீமத்₃பா₄க₃வதம் 2/7/5)

"நான் பலவிதமாக உலகங்களைப் படைக்கும் விருப்பத்துடன் முதன்முதல் தவம் செய்தேன். அந்த இடையறாத் தவத்திலிருந்து பகவான் தாமே ஸநகர், ஸநந்தனர், ஸநாதனர், ஸநத்குமாரர் என்ற நான்கு 'ஸந' என்ற பெயருள்ள ஸ்வரூபங்களில் வெளிப்பட்டார். முன் கல்பத்தின் முடிவில் ப்ரளயத்தின்போது ஆத்மதத்வ ஞானம் மறைந்துவிட்டது. அதை இவர்கள் மிகவும் நன்றாக உபதேசித்து வெளியிட்டார்கள். அதனால் முனிவர்கள் தம் உள்ளங்களில் ஆத்மதத்வத்தை நேரிலே உணர்ந்தார்கள்."

**கேள்வி:** இதே ச்லோகத்தில் உலகமெங்கும் இவர்களுடைய ப்ரஜைகள்தான் என்றும், ஸநகர் முதலானோர் முதல்வர்கள் என்றும் கூறப்படுகின்றன. ஸநகர் முதலான நால்வரை

---

(4) புலஸ்த்யர் — இவர் தர்மத்தில் மிகவும் நிலைபெற்றவர்; தவசீலர்; தேஜஸ் மிகுந்தவர்; யோகவித்யைக்கு ஆசிரியர்; அதில் கரைகண்டவர். ராக்ஷஸர்களை வதம் செய்வதற்காக பராசர முனிவர் பெரிய யாகம் ஒன்றைச் செய்தார். அப்போது வஸிஷ்டரின் தூண்டுதலினால், புலஸ்த்யர் அந்த யாகம் செய்யவேண்டாம் எனத் தடுத்தார். பராசரர் புலஸ்த்யரின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு யாகம் செய்வதை நிறுத்தினார். அதனால் மகிழ்ந்த புலஸ்த்யர் எல்லா சாஸ்த்ரங்களின் ஞானமும் உமக்குக் கிட்டட்டும் என்று ஆசி அளித்ததார்.

இவருக்கு ஸந்த்யா, ப்ரதீசீ, ப்ரீதி, ஹவிர்பூ என்ற பத்னிகள். இவர்கள் மூலமாக பல புத்ரர்கள் பிறந்தனர். தத்தோலி அதாவது அகஸ்த்யர், நிதாகர் என்ற புகழ் பெற்ற முனிவர்களும் இவருடைய குமாரர்கள். விச்ரவஸ் என்ற ஒரு மகனும் உண்டு. அந்த விச்ரவஸ்ஸின் புதல்வர்கள்தாம் குபேரன், ராவணன், கும்பகர்ணன், விபீஷணன். புராணங்களிலும், மஹாபாரதத்திலும் இவரைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. இவருடைய கதை விஷ்ணு, ப்ரம்மவைவர்த்த, கூர்ம, ஸ்ரீமத்பாகவத, வாயு புராணங்களிலும், மஹாபாரதம் உத்யோகபர்வத்திலும் விரிவாக வருகிறது.

(5) புலஹர் – இவர் செல்வந்தராகவும், ஞானியாகவும் விளங்கிய மஹரிஷி. இவர் ஸநந்தந மஹரிஷியிடமிருந்து பகவானைப் பற்றிய ஞானத்தைப் பெற்றார். அதை கௌதமருக்கு போதித்தார். இவருக்கு தக்ஷப்ரஜாபதியின் பெண் க்ஷமா என்பவளிடமும், கர்தமரின் பெண் கதி என்பவளிடமும் பல குழந்தைகள் பிறந்தன. கூர்ம, விஷ்ணு, ஸ்ரீமத்பாகவத புராணங்களில் இவருடைய கதை வருகிறது.

(6) க்ரது – இவரும் மிகச் சிறந்த தேஜஸ் நிறைந்த மஹரிஷி. இவர் கர்தமரின் பெண் க்ரியையும், தக்ஷபுத்ரி ஸந்நதியையும் மணந்தார். இவர் வாலகில்யர் என்ற அறுபதினாயிரம் முனிவர்களின் தந்தை. அவர்கள் சூரிய பகவானுக்கு எதிர்முகமாக நின்று சூரியனைத் துதித்துக் கொண்டு செல்கிறார்கள். புராணங்களில் பல இடங்களில் அவர்களுடைய கதை வருகிறது. (ஸ்ரீமத்பாகவதம் 4வது ஸ்கந்தம், விஷ்ணுபுராணம் முதல் அம்சம்).

(7) வஸிஷ்டர் – மஹரிஷி வஸிஷ்டருடைய தவம், தேஜஸ், பொறுமை, தர்மம் உலகப் புகழ் பெற்றவை. இவர் பிறப்பு புராணங்களில் பலவிதமாகச் சொல்லப்படுகிறது. ஒவ்வொரு கல்பத்திலும் ஒவ்வொரு விதம் பிறந்தார் என்று கொள்ள வேண்டும். வஸிஷ்டரின் மனைவி பெயர் அருந்ததி. அவ்வுத்தமி மிகச் சிறந்த பதிவ்ரதை. வஸிஷ்டர் சூரிய வம்சத்தின் குல புரோஹிதர். பகவான், ஸ்ரீராமனாக அந்தக் குலத்தில் அவதரிப்பார், அவரை தர்சிக்கலாம் என்ற ஆசையினால் அவர் சூரிய குலத்தின் புரோஹிதப் பதவியை ஏற்றுக் கொண்டார். அந்தக் குலம் தழைத்து ஓங்க ஆவன செய்தார். பகவான் ஸ்ரீராமனைச் சிஷ்யனாகப் பெற்றுத் தம் பிறவிப்பயன் எய்தினார்.

ஒரு நிகழ்ச்சி: ஒரு சமயம் தவம் வலியதா, ஸத்ஸங்கம் வலியதா என்ற ஒரு சர்ச்சை எழுந்தது. இதில் விசுவாமித்ரருக்கும், வஸிஷ்டருக்கும் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. வஸிஷ்டர் சொன்னார்: 'ஸத்ஸங்கமே வலியது.' விசுவாமித்ரர் சொன்னார்: 'தவமே வலியது.' இருவரும் ஒரு தீர்வு காண ஆதிசேஷனிடம் சென்றனர். அவர்களுடைய விவாதத்திற்கான காரணத்தைக் கேட்ட ஆதிசேஷன் சொன்னார்: 'பெரியோரே! நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். என் தலை மீது பூமியின் பாரம் உள்ளது. உங்களுக்குள் ஒருவர் சற்று நேரம் இந்த பாரத்தைச் சுமந்தால், நான் ஆலோசித்து உங்கள் விவாதத்தைத் தீர்த்து வைக்கிறேன்.' விசுவாமித்ரருக்குத் தம் தவவலிமையில் நம்பிக்கை. அவர் தம்து பதினாயிரம் ஆண்டு தவத்தின் பயனைக் கொடுத்துப் பூமியின் பாரத்தை ஏற்க முனைந்தார் ஆனால் அவரால் பூமியைத் தாங்க முடியவில்லை. பூமி நடுங்கியது. அப்போது வஸிஷ்டர் தமது ஸத்ஸங்கத்தின் அரைக்கண நேரத்தின் பயனை அளித்து பூமியை எளிதாகத் தூக்கி வெகுநேரம் தாங்கினார். விசுவாமித்ரர் கேட்டார்: 'இவ்வளவு நாழிகை ஆகிவிட்டதே. இன்னும் நீங்கள் பதில் சொல்லவில்லையே.'

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இங்கே பொருள் கொள்வது சரியில்லையே! ஏனெனில் அவர்களுக்கு ப்ரஜைகளே கிடையாதே!

**பதில்:** ஸநகாதிகள், எல்லோருக்கும் ஞானத்தை அளித்து நிவ்ருத்தி தர்மத்திற்கு ஆசார்யர்களாக விளங்கினார்கள். அவர்களிடம் ஞானம் பெற்ற அனைவரும் சீடர்கள் என்ற முறையில் அவர்களுடைய குழந்தைகளே. ஆகவே ஒரு விரோதமும் இல்லை.

**கேள்வி:** 'மநவ:' என்ற சொல் யாரைக் குறிப்பிடுகிறது?

**பதில்:** ப்ரம்மதேவனுடைய ஒரு நாளில் பதினான்கு மனுக்கள் தோன்றுகிறார்கள். ஒவ்வொரு மனுவினுடைய அதிகார காலத்தையும் மன்வந்தரம் என்று சொல்வோம். எழுபத்தொரு சதுர்யுகங்களுக்குக் கொஞ்சம் அதிகமான காலம் ஒரு மன்வந்தரம். மனித வருஷக் கணக்குப்படி ஒரு மன்வந்தரம் என்பது 30 கோடியே 67 லக்ஷத்து 20 ஆயிரம் ஆண்டுகளுக்குக் கொஞ்சம் அதிகம் என்று ஆகிறது. இதையே தேவ வருஷங்களின் கணக்குப்படி பார்த்தால் 8 லக்ஷத்து 52 ஆயிரம் தேவ வருஷங்களுக்குக் கொஞ்சம் அதிகமாகிறது (விஷ்ணுபுராணம் 1/3).‡ ஒவ்வொரு மன்வந்தரத்திலும் தர்மத்தின்

---

அப்போது சிரித்துக் கொண்டே சேஷ பகவான் சொன்னார்: 'முனிவரே! விவாதத்தின் முடிவுதான் தானாகவே கிடைத்துவிட்டதே. ஸத்ஸங்கத்தின் அரைக்கணப் பயனுக்கு உங்கள் பல்லாயிரம் ஆண்டுத் தவம் ஈடாக முடியவில்லை. நீங்களே சொல்லுங்களேன். எது வலியது?' ஸத்ஸங்கத்தின் பெருமையை அறிந்து இரு முனிவர்களும் த்ருப்தியுடன் திரும்பினர்.

வஸிஷ்டர் 'வஸுஸம்பந்நர்' – அதாவது அணிமா முதலிய ஸித்திகள் கைவரப் பெற்றவர்களிலும், இல்லறத்தோரிலும் மிகச் சிறந்தவர். அதனால்தான் அவருக்கு வஸிஷ்டர் என்று பெயர். காமம், க்ரோதம், லோபம், மோஹம் முதலிய சத்ருக்கள் அவருடைய ஆசிரமத்தையும் நெருங்க முடியாது. தம்முடைய நூறு புத்ரர்களைக் கொன்றுவிட்ட விசுவாமித்ரரிடம் தம்மிடம் தவவலிமை இருந்தும்கூட கோபம் கொள்ளாமல், அவருக்கு எந்தத் தீங்கும் செய்யாது இருந்தவர். சிவபெருமான் இதைக் கண்டு மகிழ்ந்து அவரை அந்தணர்களுக்குத் தலைவர் ஆக்கினார். ஸநாதன தர்மத்தின் மர்மத்தை அறிந்த மிகச் சில பெரியோர்களில் முதன்மை ஸ்தானம் அவருக்கே. இவருடைய வாழ்க்கையைப் பற்றிய விவரம் ராமாயணம், மஹாபாரதம், தேவீபாகவதம், விஷ்ணுபுராணம், மத்ஸ்யபுராணம், வாயுபுராணம், சிவபுராணம், லிங்கபுராணம் முதலிய நூல்களில் காணலாம்.

‡ சூரிய ஸித்தாந்தத்தில் (வானவியல்) மன்வந்தரம் முதலியவற்றின் கணக்குப் பின்வருமாறு:- சூரியன் ஒவ்வொரு ராசியிலும் ஸஞ்சரித்து 12 மாதங்களில் ஒரு சுற்று வருவது ஸௌரமானம் எனப்படும். இந்த ஸௌரமான வருஷங்கள் 43,20,000 – அதாவது தேவ வருஷங்கள் 12,000 கொண்டது – ஒரு நான்கு யுகம் ஆகும். இதை மஹாயுகம் என்பார்கள். இப்படி 71 நான்கு யுகங்கள் காலம் வரை ஒரு மன்வந்தரம் நடைபெறும். ஒவ்வொரு மன்வந்தரத்தின் முடிவிலும் க்ருத யுகத்தின் கால அளவில் அதாவது 17,28,000 வருஷங்கள் ஸந்த்யாகாலம். மன்வந்தரம் கழிந்த பிறகு மாலை நேரம் வந்ததும் எல்லா ப்ரபஞ்சமும் நீரில் மூழ்கிவிடுகின்றன. ஒவ்வொரு கல்பத்திலும் (ப்ரம்மாவின் ஒரு நாளில்) பதினான்கு மன்வந்தரங்கள் தங்கள் தங்கள் மன்வந்த்ர ஸந்தி காலங்களுடன் வருகின்றன இது தவிரக் கல்பத்தின் ஆரம்பத்திலும் ஒரு க்ருதயுகத்தின் கால அளவுப்படி ஸந்தி காலம் வருகின்றது. இவ்விதம் ஒரு கல்பத்தின் பதினான்கு மனுக்களின் காலத்தில் 71 நான்கு யுகங்கள் தவிர, க்ருதயுகத்தின் அளவில் பதினைந்து ஸந்த்யைகள் வருகின்றன. 71 மஹாயுகங்களில், 14 மனுக்களில் 994 மஹாயுகங்கள் ஆகின்றன. க்ருதயுகத்தின் கணக்கில் 15 ஸந்த்யைகள் சேர்த்தால் 6 மஹாயுகங்களுக்கு ஸமமாகின்றன. இவற்றை ஒன்று சேர்த்தால் ஆயிரம் மஹாயுகங்கள் அல்லது ஒரு தேவயுகம் ஆகிறது.

இக்கணக்கைப் பின்வருமாறு புரிந்து கொள்ளலாம்—

| | ஸௌரமானப்படி (அல்லது) மனித வருஷங்கள் | தேவமானப்படி (அல்லது) தேவ வருஷங்கள் |
|---|---|---|
| ஒரு சதுர்யுகம் (மஹாயுகம் அல்லது திவ்யயுகம்) | 43,20,000 | 12,000 |
| 71 சதுர்யுகம் | 30,67,20,000 | 8,52,000 |
| கல்பத்தின் ஸந்தி | 17,28,000 | 4,800 |
| மன்வந்தரங்களின் 14 ஸந்திகள் | 2,41,92,000 | 67,200 |
| ஸந்தியுடன் ஒரு மன்வந்தரம் | 30,84,48,000 | 8,56,800 |
| 14 ஸந்தியுடன் 14 மன்வந்தரங்கள் | 4,31,82,72,000 | 1,19,95,200 |
| கல்பத்தின் ஸந்தியுடன் 14 மன்வந்தரங்கள் அல்லது ஒரு கல்பம் | 4,32,00,00,000 | 1,20,00,000 |

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நெறிமுறைகளை நிலைநாட்டவும், உலகத்தைக் காக்கவும் வெவ்வேறு ஸப்தரிஷிகள் உண்டாகிறார்கள். இப்படி மன்வந்தரம் முடிந்த பிறகு வேறு மனு மாறும்போது அவருடன்கூட ஸப்தரிஷிகள், தேவதைகள், இந்த்ரன், மனுகுமாரர்கள் ஆகியோரும் மாறுகிறார்கள். தற்போது நடைபெறும் கல்பத்தின் மனுக்களின் பெயர்களாவன– (1) ஸ்வாயம்புவ, (2) ஸ்வாரோசிஷ, (3) உத்தம, (4) தாமஸ, (5) ரைவத, (6) சாக்ஷுஷ என்ற ஆறு மன்வந்தரங்கள் நடைபெற்றுவிட்டன. (7) வைவஸ்வத மன்வந்தரம் நடப்பது. (8) ஸாவர்ணி, (9) தக்ஷஸாவர்ணி, (10) ப்ரம்மஸாவர்ணி, (11) தர்மஸாவர்ணி, (12) ருத்ரஸாவர்ணி, (13) தேவஸாவர்ணி, (14) இந்த்ரஸாவர்ணி மந்வந்தரங்கள்§ வரப் போகின்றன. பதினான்கு மனுக்களின் ஒரு கல்பம் முடிந்தவுடன் எல்லா மனுக்களும் மாறுவார்கள்.

**கேள்வி:** இந்த ஏழு ரிஷிகளுக்கு 'மத்பாவா:' என்று அடைமொழி கொடுப்பதன் கருத்து என்ன?

**பதில்:** இவர்கள் அனைவரும் பகவானிடம் அன்பும் நம்பிக்கையும் உடையவர்கள். 'மத்பாவா:' என்பதற்கு இதுதான் பொருள்.

**கேள்வி:** ஏழு ரிஷிகளும், ஸநகர் முதலானோரும் ப்ரம்மதேவனின் மனதில் உதித்தவர்கள் அல்லவா? பகவான் தம் மனதில் உதித்தவர்கள் என்று கூறுகிறாரே. ஏன்?

**பதில்:** இவர்கள் ப்ரம்மதேவனின் மனதில் உதித்தவர்கள்தான். ஆனாலும் உண்மையில் பகவானிடம்தான் உதித்திருக்கிறார்கள். ஏனெனில் பகவான்தான் உலகைப் படைப்பதற்காக நான்முகனின் வடிவு கொண்டு விளங்குகிறார். ஆகவே, ப்ரம்மதேவனின் மனதில் உதித்தவர்களைத் தம் மனதில் உதித்தவர்கள் என்று கூறுகிறார். இதில் ஒரு முரண்பாடும் இல்லை.

**பொருத்தம்:** இவ்விதம் 2,3வது ச்லோகங்களில் பகவானின் யோகத்தை (ப்ரபாவத்தை)ப் பற்றியும், நான்கு முதல் ஆறு வரை அதன் விபூதிகளையும் சொல்லி, அவற்றை அறிவதன் பயனை இனி வரும் ச்லோகத்தில் கூறுகிறார்—

**एतां विभूतिं योगं च मम यो वेत्ति तत्त्वतः।**
**सोऽविकम्पेन योगेन युज्यते नात्र संशयः॥ ७॥**

**ஏதாம் விபூ₄திம் யோக₃ம் ச மம யோ வேத்தி தத்த்வத: ।**
**ஸோऽவிகம்பேந யோகே₃ந யுஜ்யதே நாத்ர ஸம்ஶய: ॥ 7 ॥**

---

ப்ரம்மதேவனின் ஒரு பகலே ஒரு கல்பம். அதே அளவு கொண்டது அவருடைய இரவு. இப்படிப் பகலிரவுகள் சேர்ந்து ப்ரம்மதேவனுக்குப் பேராயுள் நூறு ஆண்டுகள். இதற்குப் பரம் என்று பெயர். தற்போது ப்ரம்மதேவனின் ஆயுளில் பாதி கழிந்துவிட்டது. பரார்தம் (பரத்தின் பாதி) ஆகிவிட்டது. அடுத்த பரார்தம் நடக்கிறது. அதாவது அவருடைய ஆயுளில் 51வது ஆண்டின் முதல் நாள் – அதாவது கல்பம். இந்தக் கல்பத்தில் இதுவரை ஸ்வாயம்புவர் ஆரம்பித்து ஆறு மன்வந்தரங்கள் தத்தம் ஸந்திகளுடன் முடிந்துவிட்டன. கல்பத்தின் ஸந்தி காலங்கள் சேர்த்து 7 ஸந்தி காலங்கள் சென்றுவிட்டன. இப்போது நடந்து வருகிற வைவஸ்த மனுவினுடைய 27 நான்கு யுகங்கள் முடிந்துவிட்டன. இப்போது நடப்பது 28வது நான்கு யுகங்களின் கலியுகத்தின் ஸந்தி காலம் (சூரிய ஸித்தாந்தம், மத்யம அதிகாரம் ச்லோகம் 15 முதல் 24 வரை காண்க).

தற்போது நடைபெறும் கி.பி. 1997க்கு நேராகக் கலியுகத்தில் 5098 ஆண்டு நடைபெறுகிறது. கலியுகத்தின் ஆரம்பத்தில் 36,000 ஆண்டுகள் ஸந்தி காலம் உண்டு. அந்தக் கணக்குப்படி கலியுகத்தின் ஸந்தி நேரத்தில் இன்னும் 30,902 ஸௌரமான ஆண்டுகள் எஞ்சியுள்ளன.

§ ஸ்ரீமத்பாகவதம் 8வது ஸ்கந்தம் 1,5,13 அத்யாயங்களில் இவர்களின் விரிவான செய்தி கிடைக்கும். வெவ்வேறு புராணங்களில் வெவ்வேறு பெயர்கள் காணப்படுகின்றன. இங்கே ஸ்ரீமத்பாகவதத்தின்படி கூறப்பட்டது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ய:** – எவன், **மம** – என்னுடைய, **ஏதாம்** – இந்த, **விபூதிம்** – ஈசுவரத் தன்மையின் விரிவையும், **யோக₃ம் ச** – யோக சக்தியையும், **தத்த்வத:** – தத்வரீதியாக, **வேத்தி** – அறிகிறானோ, **ஸ:** – அவன், **அவிகம்பேந** – அசையாத, **யோகே₃ந** – பக்தியோகத்துடன், **யுஜ்யதே** – கூடியவனாக ஆகிறான். **அத்ர** – இவ்விஷயத்தில், **ஸம்ஶய: ந** – சிறிதளவும் ஐயமில்லை.

எவன் என்னுடைய இந்த ஈசுவரத் தன்மையின் விரிவையும் யோக சக்தியையும் தத்வரீதியாக அறிகிறானோ, அவன் அசையாத பக்தியோகத்துடன் கூடியவனாக ஆகிறான். இவ்விஷயத்தில் சிறிதளவும் ஐயமில்லை.

**கேள்வி:** *'ஏதாம் விபூதிம்' என்று எதைக் குறிப்பிடுகிறார்? இங்கு 'யோகம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? இந்த இரண்டையும் தத்வரீதியாக அறிவது எப்படி?*

**பதில்:** முன் மூன்று ச்லோகங்களில் பகவான் புத்தி முதலிய குணங்களும், மஹரிஷிகளும் தம்மிடம் தோன்றியதாகச் சொன்னார். 7/8ல் ஜலத்தில் ரஸமாக இருக்கிறேன். 9/16ல் நான்தான் க்ரது (யாகமாக) இருக்கிறேன் என்றார். இப்படி எந்தெந்தப் பொருட்களையும், அவற்றின் தன்மைகளையும், தேவதைகளையும் சொன்னாரோ, அவையெல்லாவற்றையும்தான் 'ஏதாம் விபூதிம்' என்ற சொல் குறிக்கிறது.

பகவானுடைய உலகியலுக்கப்பாற்பட்ட சக்தியை தேவதைகளும், மஹரிஷிகளும் கூட முழுமையாக அறியமாட்டார்கள் (10/2,3). பகவான் தாமே ஸாத்விக, ராஜஸ, தாமஸப் பாங்குகளை உண்டு பண்ணும் கருவியாக இருந்தாலும், எப்பொழுதும் அவற்றிலிருந்து தனித்துத்தான் இருக்கிறார். 'அந்தப் பாங்குகள் அவரிடம் இல்லை; அவரும் அவற்றில் இல்லை' (7/12) என்று சொல்லப்படுகிறது. அவருடைய சக்தியினால்தான் உலகம் முழுவதும் உண்டாகி நிலைபெற்று மறைகின்றது. இவற்றைச் செய்து கொண்டே பகவான் அகில உலகையும் ஒரு முறையான வழியில் நடத்தியும் செல்கிறார். அதன் காரணமாகத்தான், "அவர் அகில உலகங்களுக்கும் அரும்பெரும் ஈசுவரன்; எல்லா ப்ராணிகளுக்கும் நண்பர்; எல்லா யக்ஞங்களின் பயன்களையும் அனுபவிப்பவர்; எல்லாவற்றிற்கும் ஆதாரம்; ஸர்வவல்லமை படைத்தவர்" என்று போற்றப்படுகிறார். தம் சக்தியினால், தமது ஒரு சிறு அம்சத்தில் அகில உலகங்களையும் தாங்குகிறார் (10/42). ஒவ்வொரு யுகத்திலும் வெவ்வேறு கார்யங்களுக்காக வெவ்வேறு ஸ்வரூபங்களை எடுத்துக் கொள்கிறார். இவையெல்லாவற்றையும் செய்து கொண்டே எல்லாச் செயல்களிலும், எல்லா உலகங்களிலும் பிறப்பு முதலிய எல்லா விகாரங்களிலும் ஒட்டாமல் தனித்து இருக்கிறார். இதைத்தான் 9/5ல் 'ஐஶ்வர யோகம்' என்று கூறினார். அந்த அத்புத சக்தியைத்தான் இந்த ச்லோகத்தில் 'யோகம்' என்கிறார்.

இவ்விதம் அகில உலகமும் பகவானுடைய படைப்பு. அவருடைய ஒரு சிறு அம்சத்தில் இது உள்ளது. ஆகவே, உலகில் எந்தப் பொருளுக்காவது ஏதாவது சக்தி இருந்தால், ஏதாவது தனிப்பெருமை இருந்தால், அது பகவானுடைய விபூதி. அகில ப்ரபஞ்சமுமே பகவானுடைய விபூதிதான். மேலே சொன்னவிதம் பகவானுடைய விபூதியை அறிந்து கொள்வது – அதாவது பகவான்தான் ஸகல உலகங்களையும் படைப்பவர்; அழிப்பவர்; ஸர்வவல்லமை படைத்தவர்; எல்லாவற்றிற்கும் ஈசுவரன்; எல்லாவற்றிற்கும் ஆதாரம்; மிகவும் தயையுடையவர்; எல்லோருக்கும் நண்பர்; எல்லாவற்றிலும் அந்தர்யாமியாக இருப்பவர் என்று உணர்வதுதான் பகவானுடைய விபூதியையும், யோகத்தையும் தத்வரீதியாக அறிவது ஆகும்.

**கேள்வி:** *'அவிகம்பேந யோகேந' என்றால் என்ன பொருள்? அத்துடன் இணைவது எப்படி?*

**பதில்:** பகவானிடம் ஏற்படும் அநன்ய பக்தி (11/55) என்பது பிறழாத பக்தி (13/10). அதையே பிறழாத பக்தியோகம் (14/26) என்றும் கூறப்படுகிறது. 7/1ல் யோகம் என்று கூறியதையே 9/13,14,34லும், 10/9லும் 'அவிசல பக்தியோகம்' (அசைக்க முடியாத பக்தியோகம்) என்கிறார். அதுதான் இங்கு 'அவிகம்பேந' (அசைக்க முடியாத, திடமான)



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



என்ற அடைமொழியோடு சேர்த்துக் கூறப்பட்ட 'யோகம்' என்பது. அதிலேயே ஒன்றியிருப்பதுதான் அதோடு இணைவது ஆகும்.

**பொருத்தம்:** பகவானுடைய ப்ரபாவம், விபூதிகளின் ஞானம் இவை திடமானதும், நிலைபெற்றதுமான பக்தியோகத்தைக் கொடுக்கும் என்று சொன்னார். அடுத்த இரண்டு ச்லோகங்களில் பக்தியோகம் பெறும் முறையைக் கூறுகிறார்—

**अहं सर्वस्य प्रभवो मत्तः सर्वं प्रवर्तते।**
**इति मत्वा भजन्ते मां बुधा भावसमन्विताः॥ ८॥**

**அஹம் ஸர்வஸ்ய ப்ரப₄வோ மத்த: ஸர்வம் ப்ரவர்ததே ।**
**இதி மத்வா ப₄ஜந்தே மாம் பு₃தா₄ ப₄ாவஸமந்விதா: ॥ 8 ॥**

**அஹம்** — வாஸுதேவனான நானே, **ஸர்வஸ்ய** — அனைத்துலகும், **ப்ரப₄வ:** — தோன்றுவதற்குக் காரணம். **மத்த:** — என்னாலேயே, **ஸர்வம்** — அகில உலகமும், **ப்ரவர்ததே** — இயங்குகிறது, **இதி** — என்று, **மத்வா** — புரிந்துகொணடு, **ப₄ாவ—ஸமந்விதா:** — நம்பிக்கையும், பக்தியும் கொண்ட, **பு₃த₄ா:** — அறிஞர்களான பக்தர்கள், **மாம்** — (பரமேசுவரனான) என்னை, **ப₄ஜந்தே** — இடையறாது உபாஸிக்கிறார்கள்.

வாஸுதேவனான நானே அனைத்துலகும் தோன்றுவதற்குக் காரணம். என்னாலேயே அகில உலகமும் இயங்குகிறது என்று புரிந்து கொண்டு, நம்பிக்கையும் பக்தியும் கொண்ட அறிஞர்களான பக்தர்கள் பரமேசுவரனான என்னை இடையறாது உபாஸிக்கிறார்கள்.

**கேள்வி:** 'பகவானே அனைத்து உலகும் தோன்றுவதற்குக் காரணம் என்றறிவது' என்றால் என்ன?

**பதில்:** அகில உலகமும் பகவானிடமிருந்தே உண்டாகின்றன. ஆகவே பகவான்தான் உலகம் உண்டாவதற்கான உபாதான காரணமும், நிமித்த காரணமும் ஆவார். ஆகவே, அவர் எல்லாவற்றைக் காட்டிலும் சிறந்தவர். இப்படி அறிவதுதான் பகவானை அகில உலகும் தோன்றுவதற்குக் காரணம் என்றறிவது ஆகும்.

**கேள்வி:** 'அகில உலகமும் பகவானால்தான் இயங்குகிறது' என்றறிவது எப்படி?

**பதில்:** பகவானுடைய யோகசக்தியினால்தான் இந்தப் படைப்புச் சக்ரம் சுழல்கிறது. அவருடைய ஆணையின் பலத்தினால்தான் சூரியன், சந்த்ரன், நக்ஷத்ரங்கள், பூமி முதலியவை நியதிப்படி சுழல்கின்றன. அவருடைய ஆணையினால்தான் எல்லா ப்ராணிகளும் தமது கர்மவினைப்படி நல்லதும், தீயதுமான பிறவிகளில் பிறந்து தம்முடைய வினைப்பயன்களை அனுபவிக்கின்றன. இப்படி எல்லாவற்றையும் இயக்குபவராகவும், அடக்கி ஆள்பவராகவும் பகவானை அறிவதுதான் அகில உலகமும் பகவானால் இயங்குகிறது என்று அறிவதன் கருத்து.

**கேள்வி:** 'பாவஸமந்விதா: புதா:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** பகவானிடம் மிகுந்த ப்ரேமையுள்ளவர்கள்; பகவானிடம் அசைக்க முடியாத நம்பிக்கை உடையவர்கள்; பகவானுடைய குணங்கள், அருமை-பெருமைகளை நன்கு உணர்ந்தவர்கள்; அப்படிப்பட்ட புத்திமான்களான பக்தர்களையே 'பாவஸமந்விதா: புதா:' என்ற சொற்றொடர் குறிக்கிறது.

**கேள்வி:** மேலே சொன்னவிதம் அறிந்து பகவானைப் பூஜிப்பது என்றால் என்ன?

**பதில்:** மேலே சொன்னவிதம் பகவான் அகில உலகத்தையும் படைப்பவர்; அழிப்பவர்; நடத்திச் செல்பவர் என்றறிந்து இனிவரும் ச்லோகத்தில் கூறப்படுகிற முறைப்படி உயரிய ச்ரத்தையுடனும், ப்ரேமையுடனும், மனம், புத்தி, புலன்கள் மூலம் இடைவிடாது பகவானை நினைத்து ஸேவை செய்வதே பகவானைப் பூஜிப்பது ஆகும்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



मच्चित्ता मद्गतप्राणा बोधयन्तः परस्परम्।
कथयन्तश्च मां नित्यं तुष्यन्ति च रमन्ति च॥९॥

மச்சித்தா மத்₃க₃தப்ராணா பே₃ாத₄யந்த: பரஸ்பரம் ।

கத₂யந்தஸ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச ॥ 9 ॥

**மச்சித்தா:** – இடைவிடாது என்னிடமே மனம் செலுத்தியவர்களான, **மத்க₃தப்ராணா:** – என்னிடமே உயிரை அர்ப்பணம் செய்தவர்களான பக்தர்கள் (என்னுடைய பக்தியின் விளக்கத்தின் மூலம்), **பரஸ்பரம்** – தங்களுக்குள்ளே (என்னுடைய ப்ரபாவத்தை), **பே₃ாத₄யந்த: ச** – விளக்கிக் கொண்டும், **கத₂யந்த: ச** – என்னுடைய குணங்களையும், ப்ரபாவங்களையும் பேசிக் கொண்டும், **நித்யம்** – எப்பொழுதும், **துஷ்யந்தி** – மகிழ்கிறார்கள். **ச** – மேலும், **மாம்** – (வாஸுதேவனான) என்னிடமே, **ரமந்தி** – இன்புறுகிறார்கள்.

இடைவிடாது என்னிடமே மனம் செலுத்தியவர்களும் என்னிடமே உயிரை அர்ப்பணம் செய்தவர்களுமான பக்தர்கள் என்னுடைய பக்தியின் விளக்கத்தின் மூலம் தங்களுக்குள்ளே என்னுடைய ப்ரபாவத்தை விளக்கிக் கொண்டும் என் குணங்களையும், ப்ரபாவங்களையும் பேசிக் கொண்டும் எப்பொழுதும் மகிழ்கிறார்கள். மேலும் வாஸுதேவனான என்னிடமே இன்புறுகிறார்கள்.

**கேள்வி:** *'மச்சித்தா:' என்றால் என்ன பொருள்?*

**பதில்:** பகவானே தன்னுடைய ப்ரேமைக்குரியவர்; நெருங்கிய நண்பர்; நம்முடையவர்; அவரே அடையத்தக்கவர்; மிகவும் ப்ரியம் உள்ளவர் என்று அறிந்து கொண்டிருப்பதால் அநன்யமாக – வேறு சிந்தனையின்றி, பகவானிடமே லயித்திருப்பது *(8/14, 9/22)*; பகவானைத் தவிர வேறு எந்தப் பொருளிலும் ப்ரேமையோ, பற்றோ, கவர்ச்சியோ கொள்ளாமல் இருப்பது; எப்பொழுதும் பகவானுடைய நாமங்கள், குணங்கள், ப்ரபாவம், லீலைகள், ஸ்வரூபம் இவற்றையே சிந்தித்திருப்பது; சாஸ்த்ரங்களில் விதித்தபடி கடமைகளை ஆற்றுவது; உட்கார்ந்தாலும், எழுந்தாலும், தூங்கினாலும், விழித்தாலும், போனாலும், வந்தாலும், உண்டாலும், அருந்தினாலும், இப்படி நடப்பிலும், த்யானத்திலும் ஒரு கணம்கூட பகவானை மறக்காமல் இருப்பது – இவ்விதம் என்றும் எப்பொழுதும் இடைவிடாத சிந்தனை செய்யும் பக்தர்களை 'மச்சித்தா:' என்கிறார்.

**கேள்வி:** *'மத்கதப்ராணா:' என்றால் என்ன பொருள்?*

**பதில்:** எவர்களுடைய வாழ்க்கை முழுவதும் பகவானுக்கே உரியதோ, எவர்தம் புலன்களின் எல்லா இயக்கங்களும் பகவானுக்கே உரியனவோ, எவர்களுக்கு ஒரு கணம்கூட பகவானை மறப்பது பொறுக்க முடியாததோ, எவர்கள் பகவானுக்காகவே உயிர் வாழ்கிறார்களோ, உண்பது, அருந்துவது, நடப்பது, நிற்பது, தூங்குவது, விழிப்பது எல்லாமே தம்முடைய வசதிக்காக அல்ல; பகவானுக்காகவே என்று எவர்கள் எண்ணுகிறார்களோ, அவர்களை 'மத்கதப்ராணா:' என்றழைக்கிறார்.

**கேள்வி:** *'பரஸ்பரம் போத்யந்த:' என்றால் என்ன பொருள்?*

**பதில்:** பகவானிடம் ச்ரத்தையும், பக்தியும், நம்பிக்கையும், ப்ரேமையும் கொண்டுள்ள பக்தர், தத்தம் அனுபவத்திற்கேற்ப பகவானுடைய குணங்கள், ப்ரபாவம், தத்வம், லீலை, பெருமை, ரஹஸ்யம் இவற்றை ஒருவருக்கொருவர் பலவாறு பரிமாறிக் கொண்டு விளக்கம் பெறுவது என்பது இதன் பொருள்.

**கேள்வி:** *பகவானைப் பற்றிப் பேசுவது என்றால் என்ன?*

**பதில்:** ச்ரத்தையுடனும், பக்தியுடனும் பகவானுடைய திருநாமம், குணங்கள், ப்ரபாவம், லீலை, ஸ்வரூபம் இவற்றை நினைத்துப் பாடுவது, கதைகளின் மூலம் எடுத்துச் சொல்வது,



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பகவானின் புகழைப் போற்றிப் பரவுவது ஆகியவையெல்லாம் பகவானைப் பற்றிப் பேசுவது ஆகும்.

**கேள்வி:** மேலே சொன்னவிதம் எல்லாம் செய்து கொண்டு மகிழ்ந்திருப்பது என்றால் என்ன?

**பதில்:** மேலே கூறிய ஒவ்வொரு செயலாலும் எப்பொழுதும் பரமானந்தத்தை அனுபவிப்பதே 'எப்பொழுதும் மகிழ்ந்திருப்பது' ஆகும். இப்படி மகிழ்ச்சியுடன் இருக்கும் பக்தர்களுடைய மனதில் அமைதி, ஆனந்தம், த்ருப்தி ஏற்படுவதற்கு பகவானுடைய நாமங்கள், குணங்கள், ப்ரபாவங்கள், லீலைகள், திருமேனி இவற்றைக் கீர்த்தனம் செய்தல், கேட்டல், சிந்தித்தல், வாசித்தல், வாசித்துச் சொல்லுதல் – இவையே காரணமாக அமைகின்றன. அவர்கள் மன மகிழ்ச்சியும், ஆத்ம த்ருப்தியும் கொள்வதற்கும், உலகியல் பொருட்களுக்கும் ஒரு தொடர்பும் இராது.

**கேள்வி:** மேலே சொன்னவிதம் இருந்து கொண்டு பகவானிடமே இன்புறுவார்கள் என்றால் என்ன பொருள்?

**பதில்:** பகவானுடைய நாமங்கள், குணங்கள், ப்ரபாவங்கள், லீலைகள், ஸ்வரூபங்கள், தத்வங்கள், ரஹஸ்யங்கள் இவற்றைப் பற்றித் தக்க முறையில் கேட்பது, சிந்திப்பது, பாடுவது, பகவானுடைய விருப்பம், ஆணை, குறிப்பு இவற்றை உணர்ந்து பகவானிடம் மேலும் ப்ரேமை வளரும் முறையில் ஒவ்வொரு செயலிலும் ஈடுபடுவது, மனதின் மூலம் பகவானை எந்நேரமும் இடைவிடாது நேரிடையாகக் காண்பது போல் தன் அண்மையில் பகவான் உள்ளதை உணர்ந்து, இடைவிடாது பேரன்புடன் அவருடைய தர்சனம், திருமேனி தீண்டுதல், அவருடன் பேசுவது, அவருடன் விளையாடிக் கொண்டேயிருப்பது இவைதாம் பகவானிடம் எப்பொழுதும் இன்புற்றிருப்பது ஆகும்.

**பொருத்தம்:** மேலே சொன்னவிதம் வழிபாடு செய்பவர்களுடன் பகவான் எப்படி நடந்து கொள்கிறார் என்பதை இனி இரண்டு ச்லோகங்களில் விளக்குகிறார்—

**तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम्।**
**ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते॥ १०॥**

**தேஷாம் ஸததயுக்தாநாம் பஜ₄தாம் ப்ரீதிபூர்வகம் ।**

**த₃தா₃மி பு₃த்₃தி₄யோக₃ம் தம் யேந மாமுபயாந்தி தே ॥ 10 ॥**

**ஸததயுக்தாநாம்** – த்யானம் முதலியவற்றால் எப்பொழுதும் என்னிடமே ஈடுபடுகின்ற(வர்களும்), **ப்ரீதிபூர்வகம்** – பேரன்போடு, **பஜ₄தாம்** – வழிபடுகின்ற(வர்களுமான), **தேஷாம்** – அந்த (பக்தர்களுக்கு), **யேந** – எந்த (புத்தியோகத்தின் மூலம்), **தே** – அவர்கள், **மாம்** – என்னை, **உபயாந்தி** – அடைவார்களோ, **தம்** – அந்த, **பு₃த்₃தி₄யோக₃ம்** – தத்வஞான வடிவாகிய யோகத்தை, **த₃தா₃மி** – அளிக்கிறேன்.

த்யானம் முதலியவற்றால் எப்பொழுதும் என்னிடமே ஈடுபடுகின்றவர்களும் பேரன்போடு வழிபடுகின்றவர்களுமான அந்த பக்தர்களுக்கு, எந்த புத்தியோகத்தின் மூலம் அவர்கள் என்னை அடைவார்களோ, அந்தத் தத்வஞான வடிவாகிய யோகத்தை அளிக்கிறேன்.

**கேள்வி:** 'தேஷாம்' என்று யாரைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** முன் ச்லோகங்களில் 'புதா:', 'மச்சித்தா:' என்றழைக்கப்பட்டவர்களும், பயனில் விருப்பமற்றவர்களும், பகவானைத் தவிர வேறு புகலற்றவர்களுமான அனன்ய ப்ரேமை கொண்டவர்களையே அந்தச் சொல் குறிக்கும்.

**கேள்வி:** 'ஸததயுக்தாநாம்' என்றால் என்ன பொருள்?



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** முன் ச்லோகத்தில், 'மச்சித்தா:', 'மத்கதப்ராணா:', 'பரஸ்பரம் மாம் போதயந்த:', 'கதயந்த:' என்று பலபடியாகக் குறிப்பிட்ட முறைகள் அனைத்தையும் கைக்கொண்டவர்கள் என்று பொருள்.

**கேள்வி:** 'ப்ரீதிபூர்வகம் பஜதாம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** முன் ச்லோகத்தில் எப்பொழுதும் மகிழ்பவர்கள், என்னிடம் திளைப்பவர்கள் என்று சொன்னதை இந்தச் சொற்கள் குறிப்பிடும். முன் ச்லோகத்தில் வர்ணிக்கப்பட்ட பக்தர்கள், உலகியல் போகங்களுக்காகப் பகவானை வழிபடுகின்றவர்கள் அல்லர். எந்தவிதமான பயனையும் கோராது, நிஷ்காமமாக, வேறொன்றிலும் மனம் கொள்ளாது, ஒருமுகமாக ப்ரேமையுடன் பகவானை (அந்த ச்லோகத்தில் சொன்னபடி) இடைவிடாது பூஜிப்பவர்கள் என்று பொருள்.‡

**கேள்வி:** இப்படிப்பட்ட பக்தர்களுக்கு பகவான் புத்தியோகம் தருகிறாரே. அது என்ன? அதனால் பகவானை அடைவது என்றால் என்ன?

**பதில்:** பக்தர்களுடைய உள்ளங்களில் பகவானுடைய ப்ரபாவம், பெருமை, ரஹஸ்யம், நிர்குண-உருவமற்றதன் தத்வம், லீலா, ரஹஸ்யம், பெருமை இவற்றோடுகூட ஸகுணமான உருவமற்ற, உருவமுள்ள பகவானுடைய தத்வம் இவற்றையெல்லாம் உண்மையாக அறிவதற்கு சக்தி அளிக்கிறாரே, அதுதான் புத்தியோகம் தருவது ஆகும். இதைத்தான் 7,9வது அத்யாயங்களில் விஞ்ஞானத்துடன் கூடிய ஞானம் என்று சொன்னார். இந்த புத்தியோகத்தின் மூலம் பகவானை நேரிடையாக அனுபவிப்பதே பகவானை அடைவது ஆகும்.

**तेषामेवानुकम्पार्थमहमज्ञानजं तमः ।**
**नाशयाम्यात्मभावस्थो ज्ञानदीपेन भास्वता ॥ ११ ॥**

**தேஷாமேவாநுகம்பார்த₂மஹமஜ்ஞாநஜம் தம: ।**
**நாஶயாம்யாத்மப₄ாவஸ்தே₂ா ஜ்ஞாநதீ₃பேந ப₄ாஸ்வதா ॥ 11 ॥**

**தேஷாம்** – அவர்களுக்கு, **அநுகம்பார்த₂ம்** – அருள்புரிவதற்காக, **ஆத்மப₄ாவஸ்த₂:** – (அவர்களுடைய) உள்ளத்தில் நிலைத்து நின்று, **அஹம் ஏவ** – நானே, **அஜ்ஞாநஜம்** – அறியாமையினால் உண்டான, **தம:** – இருளை, **ப₄ாஸ்வதா** – ஒளிமயமான, **ஜ்ஞாந தீ₃பேந** – தத்வஞான வடிவான விளக்கினால், **நாஶயாமி** – அழிக்கிறேன்.

அவர்களுக்கு அருள்புரிவதற்காக அவர்களுடைய உள்ளத்தில் நிலைத்து நின்று அறியாமையினால் உண்டான இருளை ஒளிமயமான தத்வஞான வடிவான விளக்கினால் நானே அழிக்கிறேன்."

**கேள்வி:** 'அந்த பக்தர்களுக்கு அருள்பாலிப்பதற்காகவே நான் தானாக்வே அவர்களுடைய அறியாமையினால் உண்டான இருளைப் போக்குகிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

---

‡ ந நாகப்ருஷ்ட₂ம் ந ச பாரமேஷ்ட்₂யம் ந ஸார்வபெ₄ளமம் ந ரஸாதி₄பத்யம் ।
ந யோக₃ஸித்₃தீ₄ரபுநர்ப₄வம் வா ஸமஞ்ஜஸ த்வா விரஹய்ய காங்க்ஷே ॥
(ஸ்ரீமத்₃ப₄ாக₃வதம் 6/11/25)

"அனந்த கல்யாண குணங்கள் நிரம்பிய பகவானே! உங்களை விட்டுவிட்டு ஸ்வர்கத்திற்கும் மேலான உலகத்தில் வாழ விரும்பவில்லை. ப்ரம்ம பதவியை விரும்பவில்லை. பூமி முழுவதையும் ஆளக் கொடுத்தாலும் விரும்பவில்லை. பாதாள லோக ராஜ்யம் வந்தாலும் வேண்டாம். எட்டுவித மஹாஸித்திகள் கிடைத்தாலும் வேண்டாம். எல்லாவற்றிற்கும் மேலான மோக்ஷமே கிடைத்தாலும் வேண்டாம்."

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பகவானின் புகழைப் போற்றிப் பரவுவது ஆகியவையெல்லாம் பகவானைப் பற்றிப் பேசுவது ஆகும்.

**கேள்வி:** மேலே சொன்னவிதம் எல்லாம் செய்து கொண்டு மகிழ்ந்திருப்பது என்றால் என்ன?

**பதில்:** மேலே கூறிய ஒவ்வொரு செயலாலும் எப்பொழுதும் பரமானந்தத்தை அனுபவிப்பதே 'எப்பொழுதும் மகிழ்ந்திருப்பது' ஆகும். இப்படி மகிழ்ச்சியுடன் இருக்கும் ப்க்தர்களுடைய மனதில் அமைதி, ஆனந்தம், த்ருப்தி ஏற்படுவதற்கு பகவானுடைய நாமங்கள், குணங்கள், ப்ரபாவங்கள், லீலைகள், திருமேனி இவற்றைக் கீர்த்தனம் செய்தல், கேட்டல், சிந்தித்தல், வாசித்தல், வாசித்துச் சொல்லுதல் - இவையே காரணமாக அமைகின்றன. அவர்கள் மன மகிழ்ச்சியும், ஆத்ம த்ருப்தியும் கொள்வதற்கும், உலகியல் பொருட்களுக்கும் ஒரு தொடர்பும் இராது.

**கேள்வி:** மேலே சொன்னவிதம் இருந்து கொண்டு பகவானிடமே இன்புறுவார்கள் என்றால் என்ன பொருள்?

**பதில்:** பகவானுடைய நாமங்கள், குணங்கள், ப்ரபாவங்கள், லீலைகள், ஸ்வரூபங்கள், தத்வங்கள், ரஹஸ்யங்கள் இவற்றைப் பற்றித் தக்க முறையில் கேட்பது, சிந்திப்பது, பாடுவது, பகவானுடைய விருப்பம், ஆணை, குறிப்பு இவற்றை உணர்ந்து பகவானிடம் மேலும் ப்ரேமை வளரும் முறையில் ஒவ்வொரு செயலிலும் ஈடுபடுவது, மனதின் மூலம் பகவானை எந்நேரமும் இடைவிடாது நேரிடையாகக் காண்பது போல் தன் அண்மையில் பகவான் உள்ளதை உணர்ந்து, இடைவிடாது பேரன்புடன் அவருடைய தர்சனம், திருமேனி தீண்டுதல், அவருடன் பேசுவது, அவருடன் விளையாடிக் கொண்டேயிருப்பது இவைதாம் பகவானிடம் எப்பொழுதும் இன்புற்றிருப்பது ஆகும்.

**பொருத்தம்:** மேலே சொன்னவிதம் வழிபாடு செய்பவர்களுடன் பகவான் எப்படி நடந்து கொள்கிறார் என்பதை இனி இரண்டு ச்லோகங்களில் விளக்குகிறார்—

**तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम् ।**
**ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते ॥ १० ॥**

**தேஷாம் ஸததயுக்தாநாம் ப⁴ஜதாம் ப்ரீதிபூர்வகம் ।**

**த₃தா₃மி பு₃த்₃தி₄யோக₃ம் தம் யேந மாமுபயாந்தி தே ॥ 10 ॥**

**ஸததயுக்தாநாம்** – த்யானம் முதலியவற்றால் எப்பொழுதும் என்னிடமே ஈடுபடுகின்ற(வர்களும்), **ப்ரீதிபூர்வகம்** – பேரன்போடு, **ப⁴ஜதாம்** – வழிபடுகின்ற(வர்களுமான), **தேஷாம்** – அந்த (பக்தர்களுக்கு), **யேந** – எந்த (புத்தியோகத்தின் மூலம்), **தே** – அவர்கள், **மாம்** – என்னை, **உபயாந்தி** – அடைவார்களோ, **தம்** – அந்த, **பு₃த்₃தி₄யோக₃ம்** – தத்வஞான வடிவாகிய யோகத்தை, **த₃தா₃மி** – அளிக்கிறேன்.

த்யானம் முதலியவற்றால் எப்பொழுதும் என்னிடமே ஈடுபடுகின்றவர்களும் பேரன்போடு வழிபடுகின்றவர்களுமான அந்த பக்தர்களுக்கு, எந்த புத்தியோகத்தின் மூலம் அவர்கள் என்னை அடைவார்களோ, அந்தத் தத்வஞான வடிவாகிய யோகத்தை அளிக்கிறேன்.

**கேள்வி:** 'தேஷாம்' என்று யாரைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** முன் ச்லோகங்களில் 'புதா:', 'மச்சித்தா:' என்றழைக்கப்பட்டவர்களும், பயனில் விருப்பமற்றவர்களும், பகவானைத் தவிர வேறு புகலற்றவர்களுமான அநன்ய ப்ரேமை கொண்டவர்களையே அந்தச் சொல் குறிக்கும்.

**கேள்வி:** 'ஸததயுக்தாநாம்' என்றால் என்ன பொருள்?



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** முன் ச்லோகத்தில், 'மச்சித்தா:', 'மத்கதப்ராணா:', 'பரஸ்பரம் மாம் போதயந்த:', 'கதயந்த:' என்று பலபடியாகக் குறிப்பிட்ட முறைகள் அனைத்தையும் கைக்கொண்டவர்கள் என்று பொருள்.

**கேள்வி:** 'ப்ரீதிபூர்வகம் பஜதாம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** முன் ச்லோகத்தில் எப்பொழுதும் மகிழ்பவர்கள், என்னிடம் திளைப்பவர்கள் என்று சொன்னதை இந்தச் சொற்கள் குறிப்பிடும். முன் ச்லோகத்தில் வர்ணிக்கப்பட்ட பக்தர்கள், உலகியல் போகங்களுக்காகப் பகவானை வழிபடுகின்றவர்கள் அல்லர். எந்தவிதமான பயனையும் கோராது, நிஷ்காமமாக, வேறொன்றிலும் மனம் கொள்ளாது, ஒருமுகமாக ப்ரேமையுடன் பகவானை (அந்த ச்லோகத்தில் சொன்னபடி) இடைவிடாது பூஜிப்பவர்கள் என்று பொருள்.‡

**கேள்வி:** இப்படிப்பட்ட பக்தர்களுக்கு பகவான் புத்தியோகம் தருகிறாரே. அது என்ன? அதனால் பகவானை அடைவது என்றால் என்ன?

**பதில்:** பக்தர்களுடைய உள்ளங்களில் பகவானுடைய ப்ரபாவம், பெருமை, ரஹஸ்யம், நிர்குண-உருவமற்றதன் தத்வம், லீலா, ரஹஸ்யம், பெருமை இவற்றோடுகூட ஸகுணமான உருவமற்ற, உருவமுள்ள பகவானுடைய தத்வம் இவற்றையெல்லாம் உண்மையாக அறிவதற்கு சக்தி அளிக்கிறாரே, அதுதான் புத்தியோகம் தருவது ஆகும். இதைத்தான் 7,9வது அத்யாயங்களில் விஞ்ஞானத்துடன் கூடிய ஞானம் என்று சொன்னார். இந்த புத்தியோகத்தின் மூலம் பகவானை நேரிடையாக அனுபவிப்பதே பகவானை அடைவது ஆகும்.

**तेषामेवानुकम्पार्थमहमज्ञानजं तमः ।**
**नाशयाम्यात्मभावस्थो ज्ञानदीपेन भास्वता ॥ ११ ॥**

**தேஷாமேவாநுகம்பார்த₂மஹமஜ்ஞாநஜம் தம: ।**
**நாஶயாம்யாத்மப₄ாவஸ்தே₂ா ஜ்ஞாநதீ₃பேந ப₄ாஸ்வதா ॥ 11 ॥**

**தேஷாம்** – அவர்களுக்கு, **அநுகம்பார்த₂ம்** – அருள்புரிவதற்காக, **ஆத்மப₄ாவஸ்த₂:** – (அவர்களுடைய) உள்ளத்தில் நிலைத்து நின்று, **அஹம் ஏவ** – நானே, **அஜ்ஞாநஜம்** – அறியாமையினால் உண்டான, **தம:** – இருளை, **ப₄ாஸ்வதா** – ஒளிமயமான, **ஜ்ஞாந தீ₃பேந** – தத்வஞான வடிவான விளக்கினால், **நாஶயாமி** – அழிக்கிறேன்.

அவர்களுக்கு அருள்புரிவதற்காக அவர்களுடைய உள்ளத்தில் நிலைத்து நின்று அறியாமையினால் உண்டான இருளை ஒளிமயமான தத்வஞான வடிவான விளக்கினால் நானே அழிக்கிறேன்."

**கேள்வி:** 'அந்த பக்தர்களுக்கு அருள்பாலிப்பதற்காகவே நான் தானாகவே அவர்களுடைய அறியாமையினால் உண்டான இருளைப் போக்குகிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

---

‡ ந நாகப்ருஷ்ட₂ம் ந ச பாரமேஷ்ட்₂யம் ந ஸார்வபௌ₄மம் ந ரஸாதி₄பத்யம் ।
ந யோக₃ஸித்₃தீ₄ரபுநர்ப₄வம் வா ஸமஞ்ஜஸ த்வா விரஹய்ய காங்க்ஷே ॥
(ஸ்ரீமத்₃பா₄க₃வதம் 6/11/25)

"அனந்த கல்யாண குணங்கள் நிரம்பிய பகவானே! உங்களை விட்டுவிட்டு ஸ்வர்கத்திற்கும் மேலான உலகத்தில் வாழ விரும்பவில்லை. ப்ரம்ம பதவியை விரும்பவில்லை. பூமி முழுவதையும் ஆளக் கொடுத்தாலும் விரும்பவில்லை. பாதாள லோக ராஜ்யம் வந்தாலும் வேண்டாம். எட்டுவித மஹாஸித்திகள் கிடைத்தாலும் வேண்டாம். எல்லாவற்றிற்கும் மேலான மோக்ஷமே கிடைத்தாலும் வேண்டாம்."

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** 'என்னுடைய பக்தர்கள்பால் அருள்பாலிப்பதற்காகவே நான் தானாகவே அவர்களுடைய (உள்ளத்தில் நிலவும்) அஞ்ஞான இருளைப் போக்குகிறேன். இதற்காக அவர்கள் வேறு ஸாதனை புரிய அவசியமில்லை' என்கிறார் பகவான்.

**கேள்வி:** 'அஜ்ஞாநஜம் தம:' என்றால் என்ன? 'நான் அவர்கள் உள்ளத்திலே இருந்து கொண்டு அதைப் போக்குகிறேன்' என்று பகவான் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தொன்றுதொட்டுப் படிந்துவிட்ட அஞ்ஞானத்தில் தோன்றிய ஆவரண சக்தியினால் பகவானுடைய குணங்கள், ப்ரபாவம், ஸ்வரூபம் இவற்றை உள்ளபடி அறிய முடிவதில்லை. இதைத்தான் 'அஜ்ஞாநஜம் தம:' என்ற சொற்றொடர் குறிக்கிறது. பக்தர்களின் உள்ளத்தில் இருந்து கொண்டு அதை நான் அழிக்கிறேன் என்று சொல்லி, பக்தியின் பெருமையைக் கூறி, வேண்டியவன், வேண்டாதவன் என்ற வேற்றுமை பகவானுக்குக் கிடையாது என்றும் தெளிய வைக்கிறார். நான் எல்லோருடைய உள்ளங்களிலும் அந்தர்யாமியாக எப்பொழுதும் இருக்கிறேன். ஆயினும் உலகத்தினர் நான் உள்ளே இருப்பதை உணர்வதில்லை. அதனால் நான் அவர்களுடைய இருளைப் போக்க முடிவதில்லை. என்னுடைய ப்ரேமை மிகுந்த பக்தர்கள் நான் அந்தர்யாமியாக அவர்களுடைய உள்ளத்தில் இருப்பதை உணர்கிறார்கள். முன் ச்லோகங்களில் சொன்னபடி இடைவிடாது என்னை வழிபடுகிறார்கள். இக்காரணத்தினால் அஞ்ஞானத்தில் உண்டாகும் அவர்களுடைய உள்ளத்தில் உள்ள இருளை நான் எளிதாகப் போக்கிவிடுகிறேன்.

**கேள்வி:** 'பாஸ்வதா ஜ்ஞாநதீபேந' என்று எதைக் குறிப்பிடுகிறார்? அதன் மூலம் அஞ்ஞானத்தினால் உண்டான இருளைப் போக்குவது எப்படி?

**பதில்:** முன் ச்லோகத்தில் புத்தியோகத்தைப் பற்றிச் சொன்னார். அதன் மூலம் ப்ரபாவம், மஹிமை இவற்றுடன் கூடிய நிர்குண-நிராகாரமான தத்வம், லீலை, ரஹஸ்யம், பெருமை, ப்ரபாவம் இவற்றுடன் கூடிய ஸகுண-நிராகார தத்வம், அதுபோல ஸகுண உருவமுள்ளதன் தத்வம் இவற்றை அறிகிறோம். இதைத்தான் 7,9வது அத்யாயங்களில் விஞ்ஞானத்துடன் கூடிய ஞானம் என்ற பெயரிட்டுச் சொன்னார். இவ்விதம் ஸந்தேஹம், தவறான எண்ணம் முதலிய குறைகள் அறவே ஒழிந்த இந்த தெய்விக ஞானத்தைத்தான் இங்கே ஒளிமிகுந்த ஞான தீபம் (பாஸ்வதா ஜ்ஞாநதீபேந) என்கிறார். அதனால் பக்தர்களுடைய உள்ளங்களில் பகவானுடைய தத்வங்களை உள்ளபடி அறிவதற்குத் தடையாக உள்ள அஞ்ஞானத் திரை அறவே விலகிவிடுகிறது. அஞ்ஞான இருள் அழிந்துவிடுகிறது.

**கேள்வி:** இந்த ஞான தீபத்தினால் முதலில் அஞ்ஞானம் அழிகிறதா அல்லது பகவானை அடைவது என்பது நடக்கிறதா?

**பதில்:** ஞான தீப ஒளியினால் அஞ்ஞானம் அழிவது, பகவானை அடைவது என்ற இரண்டும் ஒரே நேரத்தில் நேர்கின்றன. ஆயினும் இதில் எது முன், எது பின் என்று பிரித்துப் பார்த்தோமானால், முதலில் அஞ்ஞான அழிவு; அதே கணம் பகவானுடைய ப்ராப்தி என்று கூறலாம்.

**பொருத்தம்:** ஏழாவது அத்யாயத்தின் முதல் ச்லோகத்தில் தம்முடைய முழுமையான ஸ்வரூபத்தின் ஞானத்தைத் தருகின்ற விஷயத்தைக் கேட்டுக் கொள்ளுமாறு பகவான் அர்ஜுனனுக்கு ஆணையிட்டார். இரண்டாவது ச்லோகத்தில் விஞ்ஞானத்தோடு கூடிய ஞானத்தை எடுத்துச் சொல்லப் போவதாக வாக்களித்து, அதை விவரமாக ஏழாவது அத்யாயத்தில் கூறினார். பிறகு எட்டாவது அத்யாயத்தில் அர்ஜுனனுடைய ஏழு கேள்விகளுக்குப் பதில் சொல்லும் முறையில், அதே விஷயத்தை விளக்கினார். ஆனால் அங்குச் சொன்ன முறை வேறு. ஆகவே ஒன்பதாவது அத்யாயத்தின் ஆரம்பத்தில் 'மறுபடியும் விஞ்ஞானத்தோடு கூடிய ஞானத்தை விவரிக்கிறேன்' என்று ஆரம்பித்து, அதே விஷயத்தைப் பிரிவு, உட்பிரிவுகளுடன் நன்கு விளக்கினார். அதற்குப்பிறகு வேறு முறையில் மறுபடியும் அதைத் தெளிவுபடுத்துவதற்காகப் பத்தாவது அத்யாயத்தில், முதல் ச்லோகத்தில் அதே விஷயத்தைத் திரும்பச் சொல்வதாக வாக்களித்தார். ஐந்து

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ச்லோகங்களில் தமது யோகசக்தியையும், விபூதிகளையும் வர்ணித்தார். 7வது ச்லோகத்தில், அப்படி அறிவதன் பயன் அசையாத பக்தியோகத்தைப் பெறுவதுதான் என்று கூறினார். மேலே 8,9வது ச்லோகங்களில் பக்தியோகத்தினால் பகவானை பக்தி செய்பவர்களின் மனோபாவம், நடத்தை இவற்றை வர்ணித்தார். 10,11வது ச்லோகங்களில் அதன் பயன் அஞ்ஞானத்தினால் உண்டான இருள் விலகி பகவானை அடைவதாகிற புத்தியோகத்தைப் பெறுவது என்று கூறி, அந்த விஷயத்தை முடித்தார். பகவானுடைய விபூதியையும், யோகத்தையும் தத்வரீதியாக அறிவது பகவானை அடைவதற்கு உதவியாக இருக்கும் என்றறிந்த அர்ஜுனன், அடுத்து வரும் ஏழு ச்லோகங்களால் முதலில் பகவானைத் துதித்துவிட்டு, பகவானுடைய யோகசக்தி, விபூதிகள் இவற்றை வர்ணிக்குமாறு வேண்டுகிறார்—

अर्जुन उवाच

परं ब्रह्म परं धाम पवित्रं परमं भवान्।
पुरुषं शाश्वतं दिव्यमादिदेवमजं विभुम्॥ १२॥
आहुस्त्वामृषयः सर्वे देवर्षिर्नारदस्तथा।
असितो देवलो व्यासः स्वयं चैव ब्रवीषि मे॥ १३॥

அர்ஜுந உவாச

பரம் ப்₃ரஹ்ம பரம் தா₄ம பவித்ரம் பரமம் ப₄வாந் ।
புருஷம் ஶாஶ்வதம் தி₃வ்யமாதி₃தே₃வமஜம் விபு₄ம் ॥ 12 ॥
ஆஹுஸ்த்வாம்ருஷய: ஸர்வே தே₃வர்ஷிர்நாரத₃ஸ்ததா₂ ।
அஸிதோ தே₃வலோ வ்யாஸ: ஸ்வயம் சைவ ப்₃ரவீஷி மே ॥ 13 ॥

அர்ஜுந உவாச – அர்ஜுனன் சொன்னார்: ப₄வாந் – நீங்கள், பரம் ப்₃ரஹ்ம – பரப்ரம்மம், பரம் தா₄ம – பரமபதம், பரமம் – மிகவும், பவித்ரம் – புனிதமானவர். (ஏனெனில்), ஸர்வே – எல்லா, ருஷய: – ரிஷிகளும், த்வாம் – உங்களை, ஶாஶ்வதம் – என்றும் உள்ளவர் என்றும், தி₃வ்யம் – தெய்விகமான, புருஷம் – புருஷன் என்றும், ஆதி₃தே₃வம் – முழு முதற்கடவுள் என்றும், அஜம் – பிறப்பற்றவர் என்றும், விபு₄ம் – எங்கும் நிறைந்தவர் என்றும், ஆஹு: – கூறுகிறார்கள். ததா₂ – அவ்வாறே, தே₃வர்ஷி: நாரத₃: – தேவரிஷியான நாரதரும், அஸித: தே₃வல: – ரிஷிகளான அஸிதரும், தேவலரும், வ்யாஸ: ச – மஹரிஷியான வ்யாஸரும்கூட (க்கூறுகிறார்கள்). ஸ்வயம் ஏவ – நீங்களுமே, மே – என்னிடம் (அவ்வாறே), ப்₃ரவீஷி – கூறுகிறீர்கள்.

அர்ஜுனன் சொன்னார்: "நீங்கள் பரப்ரம்மம், பரமபதம், மிகவும் புனிதமானவர். ஏனெனில் எல்லா ரிஷிகளும் உங்களை என்றும் உள்ளவர், தெய்விகமான புருஷன், முழு முதற்கடவுள், பிறப்பற்றவர், நிறைந்தவர் என்று கூறுகிறார்கள். அவ்வாறே தேவரிஷியான நாரதரும், ரிஷிகளான அஸிதரும், தேவலரும், மஹரிஷியான வ்யாஸரும்கூடக் கூறுகிறார்கள். நீங்களுமே என்னிடம் அவ்வாறே கூறுகிறீர்கள்.

கேள்வி: 'நீங்கள் பரப்ரம்மம், பரமபதம், மிகவும் புனிதமானவர்' என்று அர்ஜுனன் கூறுவதன் கருத்து என்ன?

பதில்: எந்த நிர்குண பரமாத்மாவைப் பரப்ரம்மம் என்று கூறுகிறார்களோ, அது உங்களுடைய ஸ்வரூபம்தான். உங்களுடைய நிரந்தரமான ஸ்தானம் ஸத் சித் ஆனந்தமயமானதாகவும், தெய்விகமானதாகவும் உள்ளது. உங்களைத் தவிர வேறாக இல்லாததால் அதுவும் உங்களுடைய ஸ்வரூபமே. உங்களுடைய நாமங்கள், குணங்கள்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ப்ரபாவங்கள், லீலைகள், ஸ்வரூபங்கள் இவற்றைப் பற்றியெல்லாம் கேட்பது, சிந்திப்பது, கீர்த்தனம் செய்வது ஆகியவையெல்லாம் எல்லோரையும் மிகவும் புனிதப்படுத்துபவை. ஆகவே நீங்கள் மிகவும் புனிதமானவர்.

**கேள்வி:** 'ஸர்வே ருஷய:' என்று யாரைக் குறிப்பிடுகிறார்? அவர்கள் உங்களை 'ஸநாதந திவ்ய புருஷர்', 'ஆதிதேவர்', 'விபு', 'அஜந்மா' என்று கூறுகிறார்கள் என்பதன் பொருள் என்ன?

**பதில்:** 'ஸர்வே ருஷய:'‡ என்ற சொற்றொடர் மார்க்கண்டேயர், அங்கிரஸ் முதலான எல்லா ரிஷிகளையும் குறிக்கும். தாம் சொல்வது சரிதான் என்று காட்டுவதற்காக அர்ஜுனன் இந்த ரிஷிகள் கூறுவதைச் சான்றாகக் காட்டுகிறார். அந்த ரிஷிகள் உங்களை "என்றுமுள்ளவர், ஒரே சீரானவர், அழிவு-குறைவு அற்றவர், தெய்விகமானவர், தாமே ப்ரகாசிப்பவர், ஞானமே வடிவானவர், எல்லோருக்கும் முதன்மையான தேவர், பிறப்பற்றவர், தோற்றம் முதலிய ஆறு விகாரமற்றவர், எங்கும் நிறைந்தவர்" என்று கூறுகிறார்கள். ஆகவே நீங்கள் பரப்ரம்மம், பரமபதம், பரிசுத்தமானவர் என்பதில் சிறிதுகூட ஐயமில்லை.§

**கேள்வி:** தேவரிஷியின் இலக்கணம் என்ன? அத்தகைய தேவரிஷிகள் யார்?

**பதில்:** தேவரிஷிகளின் இலக்கணம் வாயுபுராணத்தில் (61/88,90,91,92) கூறப்படுகிறது—

தேவலோகப்ரதிஷ்ட₂ாஸ்ச ஜ்ஞேயா தே₃வர்ஷய: ஶுப₄ா: ॥
தே₃வர்ஷயஸ்தத₂ாந்யே ச தேஷாம் வக்ஷ்யாமி லக்ஷணம் ।
பூ₄தப₄வ்யப₄வஜ்ஜ்ஞாநம் ஸத்யாபி₄வ்யாஹ்ருதம் தத₂ா ॥

---

‡ ருஷித்யேஷ க₃தௌ த₄ாது: ஶ்ருதௌ ஸத்யே தபஸ்யத₂ ।
ஏதத் ஸந்நியதம் யஸ்மிந் ப்₃ரஹ்மணா ஸ ருஷி: ஸ்ம்ருத: ॥
க₃த்யர்த₂ாத்₃ருஷதேர்த₄ாதோர்நாமநிர்வ்ருத்திராதி₃த: ।
யஸ்மாதே₃ஷ ஸ்வயம்பூ₄தஸ்தஸ்மாச்ச ருஷிதா ஸ்ம்ருதா ॥

(வாயுபுராணம் 59/79,81)

'ருஷ்' என்ற வேர்ச்சொல் 'செல்வது' என்பதைக் குறிக்கும். ஆயினும் கேட்பது, ஸத்யம், தவம் என்ற பொருள்களிலும் பயன்படுத்தப்படுகிறது. இவையெல்லாமே எவரிடத்தில் ஒருங்கே உள்ளனவோ, அவருக்கு 'ருஷி' என்று ப்ரம்மா பெயர் வைத்தார். செல்வது என்ற பொருள் உள்ள 'ருஷ்' என்ற வேர்ச்சொல்லிலிருந்து 'ருஷி' என்ற சொல் கிளைத்தது. முதலில் இவர்கள் தாமாகவே உதித்தார்கள். ஆகவே இவர்களை 'ருஷி' என்று கூறினார்கள்.

§ எப்பொழுதும் ஸத்யமே பேசுகின்றவரும் தர்ம வடிவினரானவருமான பாட்டனார் பீஷ்மர் மிகவும் புனிதமானவர். துர்யோதனனுக்கு ஸ்ரீக்ருஷ்ணனின் பெருமையை எடுத்துக் கூறுகையில் இவ்வாறு சொல்கிறார்:

"பகவான் வாஸுதேவன் எல்லா தேவதைகளுக்கும் தேவதை; எல்லோரையும்விடச் சிறந்தவர்; இவரே தர்மம்; தர்மமெல்லாம் அறிந்தவர்; வரம் அருள்பவர்; எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றுபவர்; இவரே படைப்பவர்; இவரே செயலும் செய்பவரும்; தமக்குத் தாமே ப்ரபு; நடந்தது, நடப்பது, நடக்கப்போவது, ஸந்தியை, திக்குகள், ஆகாயம் ஆகிய எல்லாவற்றின் முறைகளையும் இவரே வகுத்தார். மஹாத்மாவும் அழிவற்றவருமான இந்த ப்ரபு ரிஷிகள், தவம், உலகம் இவற்றைப் படைக்கின்ற ப்ரஜாபதியையே படைத்தார். எல்லா ப்ராணிகளுக்கும் மூத்தவரான ஸங்கர்ஷண மூர்த்தியையும் இவர்தான் படைத்தார். எவரை அநந்தர் (முடிவற்றவர்) என்பார்களோ, மிகப்பெரிய பர்வதங்களுடன்கூட பூமி முழுவதையும் எவர் தாங்குகிறாரோ, அந்த ஆதிசேஷனும் இவரிடம்தான் உண்டானார். இவரே வராஹர், நரஸிம்மர், வாமநர் என்ற அவதாரங்களை எடுத்தார். இவரே எல்லோருக்கும் தாயும், தந்தையும் ஆவார். இவரைக் காட்டிலும் சிறந்தவர் யாரும் கிடையாது. இந்த கேசவன் ஒளியே வடிவானவர். எல்லா உலகங்களுக்கும் பாட்டனார். ரிஷிகள் இவரை ஹ்ருஷீகேசன் என்பார்கள். இவரே ஆசார்யர். இவரே பித்ருக்கள். இவரே குரு. இந்த க்ருஷ்ணன் யாரிடம் மகிழ்ச்சி கொள்கிறாரோ, அவர் அழிவற்ற லோகத்தை அடைவார். பயம் மூண்டுவிட்டால், இந்த கேசவனைச் சரணடைந்து துதி செய்துவிட்டால், அந்த மனிதன் பரமஸுகத்தைப் பெறுவான். எவர் ஸ்ரீக்ருஷ்ணனைச் சரணடைகிறார்களோ, அவர்கள் மோஹத்தை அடைய மாட்டார்கள். மிகப் பெரிய பயத்தில் மூழ்கினவர்களை பகவான் ஜனார்தனன் எப்பொழுதும் காப்பாற்றுகிறார்."

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸம்பு$_3$த்$_3$த$_4$ாஸ்து ஸ்வயம் யே து ஸம்ப$_3$த்$_3$த$_4$ா யே ச வை ஸ்வயம் ।
தபஸேஹ ப்ரஸித்$_3$த$_4$ா யே க$_3$ர்பே$_4$ யைம்ச ப்ரணோதி$_3$தம் ॥
மந்த்ரவ்யாஹாரிணோ யே ச ஐம்வர்யாத் ஸர்வக$_3$ாம்ச யே ।
இத்யேதே ருஷிபி$_4$ர்யுக்தா தே$_3$வத்$_3$விஜந்ருபாஸ்து யே ॥

"தேவலோகத்தில் வஸிக்கும் இவர்களை மங்களமான தேவரிஷிகள் என்று அறியவேண்டும். இவர்களைத் தவிர வேறு சில தேவரிஷிகளும் உள்ளனர். இவர்களின் இலக்கணம் கூறுகிறேன். நடந்தது, நடக்கப்போவது, நடப்பது இவற்றை அறிவதுடன் எல்லாவிதங்களிலும் ஸத்யமே பேசுவது தேவரிஷிகளின் இலக்கணம். இவர்கள் இயல்பாகவே மிகுந்த ஞானம் அமையப் பெற்றவர்கள்; தம் இச்சையால் (மாயையால் அன்று) உலகியலில் தொடர்பு கொண்டவர்கள்; தவத்தினால் புகழ் பெற்றவர்கள்; இவர்கள் கருவிலிருக்கும் (ப்ரஹலாதன் போன்ற) குழந்தைக்கும் ஞானம் புகட்ட வல்லவர்கள்; மந்த்ரங்களை உபதேசிப்பவர்கள்; தமது ஈசுவர சக்தியினால் தடையின்றி எங்கும் செல்லக் கூடியவர்கள்; அவர்களை ரிஷிகள் சுற்றிக் கொண்டிருப்பார்கள். அவர்கள் தேவதைகளாகவும், ப்ராம்மணர்களாகவும், அரசர்களாகவும் இருப்பார்கள்."

தேவரிஷிகள் பலர் உளர். அவர்களில் சிலரது பெயரை வாயுபுராணம் தெரிவிக்கிறது—

தே$_3$வர்ஷீ த$_4$ர்மபுத்ரௌ து நரநாராயணாவுபௌ$_4$ ॥
வாலகி$_2$ல்யா: க்ரதோ: புத்ரா: கர்த$_3$ம: புலஹஸ்ய து ।
பர்வதோ நாரத$_3$ம்சைவ கம்யபஸ்யாத்மஜாவுபௌ$_4$ ।
ருஷந்தி தே$_3$வாந் யஸ்மாத்தே தஸ்மாத்$_3$தே$_3$வர்ஷய: ஸ்ம்ருதா: ॥

(வாயுபுராணம் 61/83–85)

"தர்மத்தின் புதல்வர்களான நரன், நாராயணன் என்ற இருவர், க்ரதுவின் புதல்வர்களான வாலகில்யர்கள். புலஹருடைய புதல்வரான கர்தமர், பர்வதர், நாரதர். கச்யபருடைய ப்ரம்மஞானிகளான இரு புதல்வர்கள் அஸிதர், வத்ஸரர். இவர்கள் தேவதைகளை வசப்படுத்திவிட்டபடியால் 'தேவரிஷிகள்' எனப்படுவர்."

**கேள்வி:** தேவரிஷி நாரதர், அஸிதர், தேவலர், வ்யாஸர் இவர்கள் யார்? அர்ஜுனன் முக்யமாக இவர்களுடைய பெயரைக் குறிப்பிடுவானேன்? ஸ்ரீக்ருஷ்ணனின் பெருமையைப் பற்றி இவர்கள் என்ன சொன்னார்கள்?

**பதில்:** தேவரிஷி நாரதர், அஸிதர், தேவலர், வ்யாஸர் இந்த நால்வரும் பகவானுடைய உண்மையான தத்வத்தை அறிந்தவர்கள்; ப்ரேமை கொண்ட பக்தர்கள்; சிறந்த ஞானிகளான மஹரிஷிகள்.‡ இவர்கள் வாழ்ந்த காலத்தில் சிறந்த மஹாபுருஷர்

---

யே ச க்ருஷ்ணம் ப்ரபத்$_3$யந்தே தே ந முஹ்யந்தி மாநவா: ।
ப$_4$யே மஹதி மக்$_3$நாம்ம்ச பாதி நித்யம் ஜநார்த$_3$ந: ॥

(மஹா. பீ$_4$ஷ்ம. 67/24)

‡ நாரதர் என்ற பெயரில் பலர் உண்டு. ஆனால் தேவரிஷி நாரதர் ஒருவர்தான். இவரை பகவானுடைய 'உள்ளம்' என்று கூறுவர். இவர் மிகப்பெரிய தத்வஞானி; ப்ரேமை மிகுந்தவர்; மேல் நோக்கிச் செல்லும் விந்துவை உடைய ப்ரம்மசாரி; பக்திக்கு இவர்தான் முக்யமான ஆசான். உலகிற்கு இவரால் மிகுந்த உபகாரம் ஏற்பட்டது. ப்ரஹ்லாதன், த்ருவன், அம்பரீஷன் முதலான பக்தர்களுக்கு பக்திமார்க்கத்தில் வழிகாட்டியவர். ஸ்ரீமத்பாகவதம், ஸ்ரீமத்ராமாயணம் என்ற அருமையான இரண்டு நூல்கள் இவருடைய அருளால்தான் உலகிற்குக் கிடைத்தன. சுகதேவர் போன்ற சிறந்த ஞானிகளுக்குக்கூட இவர் உபதேசம் செய்திருக்கிறார்.

முற்பிறவியில் இவர் ஒரு வேலைக்காரியின் மகனாக இருந்தார். இவருடைய தாய் மஹரிஷிகளுடைய ஆசிரமங்களைப் பெருக்கி, மெழுகி, சாப்பிட்ட பாத்திரங்களைத் துலக்கிக் கொண்டிருந்தாள். இவருக்கு ஐந்து வயதானபோது தாயாருக்கு திடீரென்று மரணம் ஸம்பவித்தது. இவருக்கு உலக ஸம்பந்தம் நீங்கியது. காட்டில் நுழைந்து ஒரு மரத்தினடியில் அமர்ந்தார். பகவானுடைய ஸ்வரூபத்தை த்யானம் செய்தார். த்யானம் செய்ய இவருடைய மன அலைகள் ஓய்ந்தன. ஒருமுனைப்பு வந்தது. இவர் உள்ளத்தில் பகவான் ப்ரகாசித்தார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



என்றும், ஸத்யம் பேசுபவர்கள் என்றும், மதிக்கத்தக்க பெரியோர்கள் என்றும் கருதப்பட்டார்கள். இதனால் இவர்கள் முக்யமானவர்களாகக் கருதப்படுகிறார்கள். பகவானுடைய மஹிமையை இவர்கள் எப்பொழுதும் பாடிக் கொண்டிருப்பார்கள். பகவானுடைய பெருமைகளைப் பரப்புவதுதான் இவர்களுடைய வாழ்க்கையின் தலையாய பணி. மஹாபாரதத்தில் இவர்களும், மற்ற ரிஷிகளும், மஹரிஷிகளும் பகவானுடைய

---

ஆனால் அது ஒருகணம்தான். தம்முடைய மனமோஹன ஸ்வரூபத்தை இவருக்குக் காட்டியவுடன் பகவான் மறைந்துவிட்டார். இவர் மிகவும் படபடத்தார். மறுபடியும் மனதை நிலைநிறுத்தி பகவானை த்யானம் செய்ய முனைந்தார். ஆனால் பகவானுடைய ஸ்வரூபம் காணக் கிடைக்கவில்லை. அப்பொழுது வான் குரல் கேட்டது— "மகனே! இப்பிறவியில் உனக்கு என் தர்சனம் கிடைக்காது. இவ்வுடல் நீங்கியபின் என்னுடைய பார்ஷதனாக (பணியாளாக) என்னை அடைவாய்." இச்சொற்கேட்டு அவருடைய மனம் ஸமாதானம் அடைந்தது. எப்பொழுது மரணம் வரும் என்று காத்திருந்தார். ஒன்றிலும் பற்றில்லாமல் பூமியை வலம் வந்தார். நேரம் வந்ததும் இவருடைய பூதவுடல் விழுந்தது. கல்பத்தின் முடிவில் பகவானின் ப்ராணனுட்புகுந்தார். அடுத்த கல்பத்தில் ப்ரம்மாவின் மானஸ புத்ரராக மனதிலிருந்து தோன்றினார். அதுமுதல் இடைவிடாத ப்ரம்மசர்ய வ்ரதத்தை மேற்கொண்டு, வீணை வாசித்துக் கொண்டே பகவானுடைய குணகீர்த்தனம் செய்து கொண்டிருக்கிறார் (ஸ்ரீமத்பாகவதம் 1/6).

மஹாபாரதம் ஸபாபர்வம் ஐந்தாவது அத்யாயத்தில் இவ்வாறு கூறப்பட்டிருக்கிறது—

"தேவரிஷி நாரதர் வேதங்கள், உபநிஷத்துக்களின் மர்மம் அறிந்தவர். தேவர்களால் பூஜிக்கப்படுபவர். இதிஹாஸ புராணங்களின் நுட்பம் அறிந்தவர். சென்ற கல்பங்களின் செய்திகள் எல்லாமறிந்தவர். ந்யாயம், தர்மம் இவற்றின் தத்வம் அறிந்தவர். ஶிக்ஷா, கல்பம், வ்யாகரணம், ஆயுர் வேதம் முதலிய வேதாங்கங்களைக் கற்றவர். ஒன்றுக்கொன்று முரணாகத் தோன்றுகின்ற வேத வாக்யங்களை ஒற்றுமைப்படுத்திப் பொருள் கூறுபவர் நல்ல பேச்சாளர். நீதி அறிந்தவர். கற்றதை மறவாதவர். நல்ல நினைவு உள்ளவர். ஞானி. கவி. நல்லது எது, கெட்டது எது என்று பகுத்தறியும் திறமை பெற்றவர். எல்லா ப்ரமாணங்களுக்கும் ஒரே தத்வத்தில் முடிவு காண்பதில் வல்லவர். ந்யாய வசனங்களின் குணதோஷங்களை அறிந்தவர். ப்ரஹஸ்பதி போன்ற வித்வான்களின் ஐயங்களையும் போக்குவதில் வல்லவர். தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் போன்றவற்றின் உண்மையறிந்தவர். அகில ப்ரபஞ்சத்திலும், மூவுலகங்களிலும் எங்கு எது எப்போது நடந்தாலும் எல்லாவற்றையும் யோக பலத்தினால் நேரிலே காண்பவர். ஸாங்க்யம், யோகம் என்ற சாஸ்த்ரங்களின் பிரிவு அறிந்தவர். தேவர்களுக்கும், அஸுரர்களுக்கும்கூட வைராக்யம் புகட்ட வல்லவர். ஸமாதானம், போர் இவற்றின் நுட்பமறிந்தவர். செய்யத்தக்கது, செய்யத்தகாதது இவற்றைப் பிரித்துக் காட்டக் கூடியவர். ஆறுவிதத் திறமைகளை உபயோகிப்பதில் வல்லவர். எல்லா சாஸ்த்ரங்களையும் கற்றறிந்தவர். போர் முறை அறிந்தவர். ஸங்கீத விற்பன்னர். பகவானுடைய ஈடு இணையற்ற பக்தர். வித்யைகளுக்கும், நற்குணங்களுக்கும் உறைவிடம். நல்ல நடத்தைக்கு ஆதர்ச புருஷர். எல்லோருக்கும் நன்மையே செய்பவர். எங்கும் செல்வாக்கு உள்ளவர். உபநிஷத்துக்களிலும், புராணங்களிலும், இதிஹாஸங்களிலும் இவருடைய பவித்ரமான கதைகள் வெகுவாக விரவியிருக்கின்றன."

* * * * *

மஹரிஷி அஸிதரின் புத்ரர் தேவலர். இவர்களைப் பற்றிய வர்ணனை கூர்மபுராணத்தில் (19/1,2,5) இடம் பெறுகிறது—

ஏதானுத்பாத்₃ய புத்ராம்ஸ்து ப்ரஜாஸந்தாநகாரணாத் ।
கஶ்யப: புத்ரகாமஸ்து சசார ஸுமஹத்தப: ॥
தஸ்யைவம் தபதோऽத்யர்த₂ம் ப்ராது₃ர்பூ₄தௌ ஸுதாவிமௌ ।
வத்ஸரஶ்சாஸிதஶ்சைவ தாவுபௌ₄ ப்₃ரஹ்மவாதி₃நௌ ॥
அஸிதஸ்யைகபர்ணாயாம் ப்₃ரஹ்மிஷ்ட₂: ஸமபத்₃யத ।
நாம்நா வை தே₃வல: புத்ரோ: யோக₃சார்யோ மஹாதபா: ॥

"கச்யபர் குலம் தழைப்பதற்காக இந்தப் புத்ரர்களைப் பெற்றுவிட்டு, மேலும் புத்ரர்களைப் பெறவேண்டுமென அருந்தவம் புரிந்தார். அவர் இப்படித் தவம் செய்ததும் அவருக்கு 'வத்ஸரர்' என்றும், 'அஸிதர்' என்றும் இரு குமாரர்கள் பிறந்தனர். இவர்கள் இருவரும் ப்ரம்மஞானிகள்; ப்ரம்மத்தை அறிந்தவர்கள்; உபதேசிப்பவர்கள். ஏகபர்ணா என்ற மனைவி மூலம் அஸிதருக்கு மிகுந்த தவமுடையவரும், யோகாசார்யருமான 'தேவலர்' என்ற வேத விற்பன்னர் பிறந்தார்."

இந்த இருவரும் ருக் வேத மந்த்ரங்களில் பலவற்றைக் கண்டறிந்தவர்கள் தேவலர் பகவான் பரமசிவனைப் பூஜித்து ஸித்தி பெற்றார். இவர்கள் இருவருமே மிகச் சிறந்த பழமையான ரிஷிகள். ப்ரத்யூஷர் என்ற வஸுவுக்குக்கூட தேவலர் என்ற ஒரு குமாரர் உண்டு (ஹரிவம்சம் 3/44).

* * * * *

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பெருமைகளைப் புகழ்ந்து பாடும் பல ஸந்தர்பங்கள் உள்ளன. பகவான் ஸ்ரீக்ருஷ்ணனைப் பற்றி எந்த ரிஷி என்ன சொன்னார் என்பதைச் சுருக்கமாக பீஷ்ம பர்வத்தில் பாட்டனார் பீஷ்மர் வர்ணித்திருக்கிறார்.‡

**கேள்வி:** 'நீங்களும் என்னிடம் கூறுகிறீர்கள்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** 'மேலே சொன்னபடி ரிஷிகள் மட்டும் சொன்னார்கள் என்பது பெரிய விஷயமில்லை. நீங்களே என்னிடம் உங்களுடைய ஒப்பற்ற ப்ரபாவங்களை எடுத்துச் சொல்லி வருகிறீர்கள். இப்பொழுதுகூடச் சொல்கிறீர்கள் *(4/6–9; 5/29; 7/7–12; 9/4–11,16–19; 10/2,3,8)*. ஆகவே, நான் உங்களைப் பரமாத்மாவாகவே எண்ணுவது சரிதான்' என்கிறார் அர்ஜுனன்.

**सर्वमेतदृतं मन्ये यन्मां वदसि केशव।**
**न हि ते भगवन्व्यक्तिं विदुर्देवा न दानवाः॥१४॥**

**ஸர்வமேதத்ருதம் மந்யே யந்மாம் வத₃ஸி கேஶவ ।**
**ந ஹி தே ப₄க₃வந்வ்யக்திம் விது₃ர்தே₃வா ந தா₃நவா: ॥ 14 ॥**

**கேஶவ** – கேசவ! **மாம்** – என்னிடம், **யத்** – எதை, **வத₃ஸி** – கூறுகிறீரோ, **ஏதத்** – இந்த, **ஸர்வம்** – எல்லாவற்றையும், **ருதம்** – உண்மையே என்று, **மந்யே** –

---

ஸ்ரீவேதவ்யாஸர் பகவானுடைய ஓர் அம்சாவதாரம் எனப்படுவார். இவர் ஒரு தீவில் பிறந்தார். அதனால் 'த்வைபாயனர்' (த்வீபம் – தீவு; த்வைபாயனர் – தீவில் பிறந்தவர்) எனப் பெயர் பெற்றார். இவர் கருநிறமுடையவர். ஆகவே 'க்ருஷ்ணத்வைபாயனர்' என்றும் அழைக்கப்பட்டார். இவர் வேதங்களை நான்காகப் பிரித்தார். ஆகவே, இவருக்கு வேதவ்யாஸர் என்ற பெயரும் உண்டு. இவர் பராசரரின் குமாரர். இவருடைய தாயாரின் பெயர் ஸத்யவதி. இவர் பிறந்தவுடனேயே தவம் புரியக் காட்டிற்குச் சென்றுவிட்டார். பகவானுடைய தத்வத்தை முழுமையாக உணர்ந்தவர். இணையற்ற மஹாகவி. இவருடைய ஞானம் எல்லையற்றது. இவர் ஆழம் காணமுடியாத ஞானக்கடல். கல்வியின் எல்லை நிலம். கவித்திறனுக்கும் அப்படியே. வ்யாஸருடைய உள்ளப்பெருக்கும், சொற்பெருக்கும் உலகில் எல்லா ஞானத்தையும் வெளிப்படுத்தின.

ப்ரம்ம ஸூத்ரங்களை பகவான் வ்யாஸர்தான் இயற்றினார். மஹாபாரதம் போன்ற உலகியலுக்கு அப்பாற்பட்ட சிறந்த நூலையும் இயற்றினார். பதினெண் புராணங்களையும், உப புராணங்களையும் இயற்றினார். பாரத நாட்டின் பழைய வரலாறு இதற்குச் சான்று. இன்று அகில உலகமும் வ்யாஸர் அருளிய ஞான ப்ரஸாதத்தைப் பெற்றுத் தத்தம் கடமைகளின் வழி என்னவென்று தேடிச் செல்கிறது.

ஒவ்வொரு த்வாபர யுகத்திலும் வேதங்களைப் பிரிக்கின்ற ஒவ்வொரு வ்யாஸர் உண்டு. இந்த வைவஸ்வத மன்வந்த்ரத்தில் உதித்த பராசர புத்ரரான க்ருஷ்ணத்வைபாயனர் இருபத்து எட்டாவது வ்யாஸர். இவர்தான் தமது முக்ய சிஷ்யரான பைலருக்கு ருக் வேதத்தையும், வைசம்பாயனருக்கு யஜுர் வேதத்தையும், ஜைமினிக்கு ஸாம வேதத்தையும், ஸுமந்துவுக்கு அதர்வண வேதத்தையும் கற்பித்தார். ஸூதகுலத்தில் பிறந்த பெரும் அறிவாளியான ரோமஹர்ஷணருக்கு இதிஹாஸ புராணங்களைக் கற்பித்தார்.

‡ தேவரிஷி நாரதர் கூறுகிறார்: 'பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் எல்லா உலகங்களையும் படைப்பவர் எல்லோர் உள்ளங்களையும் அறிந்தவர். ஸாத்யர்களுக்கும், தேவதைகளுக்கும் எவர்கள் ஈசுவரர்களோ அவர்களுக்கும் மேலானவர்.'

மார்க்கண்டேயர் சொல்கிறார்: 'ஸ்ரீக்ருஷ்ணன் யாகங்களில் யாகஸ்வரூபன், தவங்களில் தவஸ்வரூபன், முக்காலத்திலும் விளங்குபவர்.'

ப்ருகு சொன்னார்: 'இவர் தேவதைகளுக்கும் தேவதை. முன்னைப் பழமைக்கும் பழமையான மஹாவிஷ்ணு.'

வ்யாஸர் சொன்னார்: 'இவர் இந்த்ரனை இந்த்ரனாக்கியவர். தேவதைகள் கொண்டாடும் தெய்வம்.'

அங்கிரஸ் சொன்னார்: 'இவர் எல்லா ப்ராணிகளையும் படைத்தவர்.'

ஸனத்குமாரர்கள் சொன்னார்கள்— "இவருடைய தலை உச்சியில் ஆகாயம், புஜங்களில் பூமி, வயிற்றில் மூவுலகங்கள் உள்ளன. இவர் ஸநாதனரான புருஷர். தவத்தினால் உள்ளத்தூய்மை பெற்ற ஸாதகர்கள் இவரை அறிவார்கள். ஆத்மாவை அறிந்து த்ருப்தி அடைந்த ரிஷிகள்கூட இவரைப் பரம உத்தமன் என்று கொண்டாடுகிறார்கள். யுத்தத்தில் புறமுதுகு காட்டி ஓடாத ராஜரிஷிகளுக்கும்கூட இவர்தான் பரமகதி" (மஹாபாரதம், பீஷ்மபர்வம் 68).

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



எண்ணுகிறேன். **ப₄க₃வந்** – பகவானே! **தே** – உங்களுடைய, **வ்யக்திம்** – திருவிளையாடலுக்காக ஏற்றுக்கொண்ட ஸ்வரூபத்தை, **தா₃நவா:** – அஸுரர்கள், **ந விது₃:** – அறிந்து கொள்ளவில்லை. **தே₃வா: ஹி** – தேவர்கள்கூட, **ந (விது₃:)** – அறிந்து கொள்ளவில்லை.

கேசவ! என்னிடம் எதைக் கூறுகிறீர்களோ, இந்த எல்லாவற்றையும் உண்மையே என்று எண்ணுகிறேன். பகவானே! உங்களுடைய திருவிளையாடலுக்காக ஏற்றுக் கொண்ட ஸ்வரூபத்தை அஸுரர்கள் அறிந்து கொள்ளவில்லை. தேவர்கள்கூட அறிந்து கொள்ளவில்லை.

**கேள்வி:** இங்கே 'கேசவ' என்று அழைப்பதற்கு என்ன பொருள்?

**பதில்:** ப்ரம்மா, விஷ்ணு, மஹேசுவரன் என்ற மூன்று சக்திகளும் முறையே 'க', 'அ', 'ஈஸ' எனப்படுவர். இம்மூவரும் கூடிய ஓர் உருவமே 'கேசவ' என்று ஆகிறது. ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களைச் செய்யும் ஸாக்ஷாத் பரமாத்மா நீங்கள்தாம். இதில் ஸந்தேஹமில்லை என்ற குறிப்பில் 'கேசவ' என்று அழைக்கிறார்.

**கேள்வி:** இங்கு 'ஏதத்', 'யத்' என்ற சொற்கள் பகவானுடைய எந்த வசனங்களைக் குறிப்பிடுகின்றன? 'அவை ஸத்யம் என்று நினைக்கிறேன்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** 7வது அத்யாயம் ஆரம்பம் முதல் இந்த அத்யாயத்தின் 11வது ச்லோகம் வரை பகவான் தம் குணங்கள், ப்ரபாவங்கள், ஸ்வரூபம், மஹிமை, ரஹஸ்யம், ஈசுவரத்தன்மை ஆகியவை பற்றி என்னவெல்லாம் சொன்னாரோ, எவற்றால் ஸ்ரீக்ருஷ்ணன் தம்மைப் பரமாத்மாதான் என்று ஒப்புக் கொள்வதாக உறுதிப்படுத்துகிறாரோ, இந்த எல்லா வசனங்களையும் 'ஏதத்', 'யத்' என்ற சொற்கள் குறிப்பிடுகின்றன. அப்படியே பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் ஸகல ஜகத்திற்கும் கர்த்தா, எல்லாவற்றையும் தம்முள் அடக்கிக் கொள்பவர், எல்லாவற்றிற்கும் ஆதாரம், எங்கும் நிறைந்தவர், ஸர்வ வல்லமை படைத்தவர், எல்லாவற்றிற்கும் முதல்வர், எல்லாவற்றையும் நியமிப்பவர், எல்லோருக்கும் அந்தர்யாமி, தேவர்களுக்கெல்லாம் தேவர், ஸத் சித் ஆனந்தமயமானவர், ஸாக்ஷாத் பூரணமான பரப்ரம்மம்

---

மஹாபாரதம் வனபர்வம் 12வது அத்யாயத்தில், பக்தியில் சிறந்த த்ரௌபதி, அஸிதரும், தேவலரும் கூறுவதையே கூறுகிறாள்: 'ஸ்ரீக்ருஷ்ணன்தான் மக்கள் பிறப்பதற்கு முன்னால் முன்படைப்பில் ப்ரஜாபதியாக இருந்து உலகத்தைப் படைத்தவர்.'

பரசுராமர் சொன்னார்: 'இவரே விஷ்ணு. இவரை யாரும் வெல்ல முடியாது. இவரே யக்ஞம். யக்ஞம் செய்பவரும் இவரே. யக்ஞத்தின் மூலம் உபாஸிக்கப்படுபவரும் இவரே.'

நாரதர் சொன்னார்: 'இவர் ஸாத்ய தேவர்களுக்கும், எல்லா மங்களங்களுக்கும், ஈசுவரர்களுக்கும் ஈசுவரன்.'

'குழந்தைகள் பொம்மைகளை வைத்துக் கொண்டு விளையாடுவதுபோல பகவான், ப்ரம்மா, சிவன், ருத்ரர், இந்த்ரன் முதலானவர்களை வைத்து விளையாடுகிறார்'

இது தவிர மஹாபாரதத்தில் பகவான் வ்யாஸர் கூறுகிறார்: "ஸௌராஷ்ட்ர தேசத்தில் த்வாரகை என்ற புனிதமான நகரம் உள்ளது. அங்கே புராண புருஷோத்தமனான மதுஸூதனன் விளங்குகிறார். அவரே ஸநாதன தர்மத்தின் வடிவம். வேதமறிந்த அந்தணர்களும், ஆத்மஞானிகளும் மஹாத்மாவான ஸ்ரீக்ருஷ்ணன் 'ஸாக்ஷாத் ஸநாதன தர்மமே' என்று கூறுகின்றனர். பகவான் கோவிந்தன் புனிதமானவற்றிற்கெல்லாம் புனிதத்தன்மை அளிப்பவர். புண்யங்களுக்கெல்லாம் புண்யத்தன்மை அளிப்பவர். மங்களங்களுக்கெல்லாம் மங்களத்தன்மை அளிப்பவர். கமலக்கண்ணன் ஸ்ரீக்ருஷ்ணன் மூவுலகில் உள்ள ஸநாதன தேவர்களுக்கெல்லாம் தேவர். அந்த மதுஸூதனன் அக்ஷரன், க்ஷரன், க்ஷேத்ரக்ஞன், பரமேசுவரன், சிந்தனைக்கு அப்பாற்பட்டவர்" (மஹாபாரதம். வனபர்வம் 8/24-27).

ஸ்ரீமத்பாகவதத்தில் தேவரிஷி நாரதர் தர்மராஜர் யுதிஷ்டிரரிடம் சொல்கிறார்: "அரசே! மனிதர்களில் நீங்கள் பெரும் பாக்யசாலி. ஏனெனில் உலகங்களைப் புனிதமாக்கும் முனிவர்கள் உங்கள் வீட்டுவாசலை மிதிக்கிறார்கள் என்றால், அதற்குக் காரணம் ஸாக்ஷாத் பரப்ரம்மம் மனித உருவில் தன்னை மறைத்துக் கொண்டு இங்கே விளங்குகிறது. ஆஹா! மஹாத்மாக்கள் எந்த கைவல்ய நிர்வாண ஸுகத்தின் அனுபவத்தைத் தேடுகிறார்களோ, அந்த பரப்ரம்மம் இந்த ஸ்ரீக்ருஷ்ணன்தான் உங்களுக்கு அன்பன், நண்பன், அம்மான் சேய், பூஜைக்குரியவன், வழிகாட்டி, குருவும்கூட. உங்களைக் காட்டிலும் பாக்யசாலி யார் இருக்க முடியும்? கூறுங்கள் (7/15/75,76)."

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



என்று அறிவதும், அவருடைய உபதேசங்களை ஸத்யமென நம்புவதும், அவற்றில் சிறிதுகூட ஐயப்படாமல் இருப்பதும்தான் அவருடைய வசனங்களை ஸத்யமென ஏற்றுக் கொள்வது ஆகும்.

**கேள்வி:** 'பகவந்' என்று அழைப்பதன் பொருள் என்ன?

**பதில்:** ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் (6/5/74) கூறப்படுகிறது—

**ஐஶ்வர்யஸ்ய ஸமக்₃ரஸ்ய த₄ர்மஸ்ய யஶஸ: ஶ்ரிய: ।**
**ஜ்ஞாநவைராக்₃யயோஶ்சைவ ஷண்ணாம் ப₄க₃ இதீரணா ॥**

"முழுமையான ஈசுவர சக்தி, முழுமையான தர்மம், முழுமையான புகழ், முழுமையான செல்வம், முழுமையான ஞானம், முழுமையான வைராக்யம் இந்த ஆறும் 'பக' எனப்படும். இவற்றைப் பெற்றவர் பகவான்." அதே விஷ்ணுபுராணத்தில் (6/5/78) இப்படியும் கூறப்படுகிறது—

**உத்பத்திம் ப்ரலயம் சைவ பூ₄தாநாமாக₃திம் க₃திம் ।**
**வேத்தி வித்₃யாமவித்₃யாம் ச ஸ வாச்யோ ப₄க₃வாநிதி ॥**

"படைத்தல், அழித்தல், ப்ராணிகளின் தோற்றம், அழிவு, ஞானம், அஞ்ஞானம் இவற்றை அறிந்தவர் 'பகவான்' எனப்படுவார். ஆகவே அர்ஜுனன் ஸ்ரீக்ருஷ்ணனை இந்தக் கருத்தில் அழைக்கிறார். எல்லா ஐசுவர்யங்களும் தம்பால் கொண்ட எல்லாமறிந்த ஸாக்ஷாத் பரமாத்மாதான் ஸ்ரீக்ருஷ்ணன். இதில் சிறிதுகூட ஐயமில்லை."

**கேள்வி:** இங்கு 'வ்யக்திம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? தேவர்களும், தானவர்களும் அறியமாட்டார்கள் என்றால் என்ன கருத்து?

**பதில்:** உலகங்களைப் படைத்தல், காத்தல், அழித்தல் இவற்றைச் செய்வதற்காகவும், தர்மத்தை நிலைநாட்டுவதற்காகவும், பக்தர்களுக்கு தர்சனம் அளிப்பதற்காகவும், அவர்களைக் கடைத்தேற்றுவதற்காகவும், தேவதைகளைக் காப்பதற்காகவும், ராக்ஷஸர்களை அழிப்பதற்காகவும் இப்படிப் பல காரணங்களுக்காக பகவான் வெவ்வேறு லீலாமயமான ஸ்வரூபங்களை எடுத்துக் கொள்கிறார். அவற்றை 'வ்யக்திம்' என்று சொல்கிறார். தமது மாயையினால் பலவித ஸ்வரூபங்கள் எடுத்துக் கொள்ளும் சக்தி படைத்தவர்கள் தானவர்கள். புலன்களுக்கு அகப்படாத பல விஷயங்களை நேரிடையாக அறிபவர்கள் தேவர்கள். அவர்கள்கூட உங்களுடைய தெய்விக லீலாமயமான அவதாரங்களையும், அப்படி அவதாரமெடுக்கும் சக்தியையும், யுக்தியையும், அவற்றின் காரணத்தையும், அந்த லீலைகளின் ரஹஸ்யங்களையும் அறியமாட்டார்கள் என்றால் ஸாதாரண மக்கள் அறிவார்களா?

**स्वयमेवात्मनात्मानं वेत्थ त्वं पुरुषोत्तम।**
**भूतभावन भूतेश देवदेव जगत्पते॥ १५॥**

**ஸ்வயமேவாத்மநாத்மாநம் வேத்த₂ த்வம் புருஷோத்தம ।**
**பூ₄தபா₄வந பூ₄தேஶ தே₃வதே₃வ ஜக₃த்பதே ॥ 15 ॥**

**பூ₄தபா₄வந** – உயிரினங்களைத் தோற்றுவித்தவரே! **பூ₄தேஶ** – உயிரினங்களின் தலைவரே! **தே₃வ தே₃வ** – தேவர்களுக்குத் தேவனே! **ஜக₃த் பதே** – ஜகந்நாயகனே! **புருஷோத்தம** – புருஷோத்தமரே! **த்வம்** – நீங்கள், **ஆத்மநா** – தம்மால், **ஆத்மாநம்** – தம்மை, **ஸ்வயம் ஏவ** – தாமே, **வேத்த₂** – அறியவல்லவர். அதாவது நீங்கள்தான் உங்களை அறியவல்லவர்.

உயிரினங்களைத் தோற்றுவித்தவரே! உயிரினங்களின் தலைவரே! தேவர்களுக்குத் தேவனே! ஜகந்நாயகனே! மனிதர்களில் சிறந்தவரே! நீங்கள்தான் உங்களை அறியவல்லவர்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'பூதபாவந', 'பூதேஶ', 'தேவதேவ', 'ஜகத்பதே', 'புருஷோத்தம' என்று ஐந்துவிதமாக அர்ஜுனன் அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** பகவான் உயிரினங்களனைத்தையும் படைப்பதால், அவரை 'பூதபாவந:' என்றும், அவற்றை ஒரு முறையோடு அடக்கி ஆள்வதால், அவரை 'பூதேஶ:' என்றும், அவரை தேவர்கள் போற்றுவதால், 'தேவதேவ:' என்றும், அகில உலகத்தையும் காப்பாற்றுவதால் 'ஜகத்பதி:' என்றும், க்ஷரத்தையும், அக்ஷரத்தையும் காட்டிலும் உயர்ந்திருப்பதால் 'புருஷோத்தம:' என்றும் சொல்கின்றனர். பகவான் ஜகத்தைப் படைத்தவர்; நடத்திச் செல்பவர்; அனைவராலும் பூஜிக்கத்தக்கவர்; எல்லாவற்றையும் காப்பாற்றுபவர். 'அபரா', 'பரா' ப்ரக்ருதி என்ற க்ஷர, அக்ஷரங்களைக் கடந்து நிற்பவர். ஆகவே 'புருஷோத்தம:' என்ற கருத்தில் அர்ஜுனன் இவ்வைந்து விளிச்சொற்களால் பகவானை அழைக்கிறார்.

**கேள்வி:** 'நீங்களே உங்களை அறிவீர்கள்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** உலகிற்கே நீங்கள் ஆதியானவர். உங்களுடைய குணங்கள், ப்ரபாவங்கள், லீலைகள், பெருமைகள், ஸ்வரூபங்கள் எல்லையற்றவை. இவற்றை வேறொருவர் முழுமையாக அறிய முடியாது. நீங்கள்தான் உங்கள் ப்ரபாவங்களை அறிவீர்கள். அதுவும் மனிதன் தன்னறிவுக்கெட்டியவரை சாஸ்த்ரங்கள் முதலியவற்றின் துணையுடன் தன்னைத் தவிர ஏனைய பொருட்களை அறிந்து கொள்கின்ற முறையிலன்றித் தாங்கள் ஞானமே வடிவு கொண்டவராதலால் சுயமாகவே உங்களை அறிவீர்கள். உங்களிடம் அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்ற வேறுபாடுகள் கிடையா.

**वक्तुमर्हस्यशेषेण दिव्या ह्यात्मविभूतयः ।**
**याभिर्विभूतिभिर्लोकानिमांस्त्वं व्याप्य तिष्ठसि ॥ १६ ॥**

**வக்துமர்ஹஸ்யஶேஷேண திவ்யா ஹ்யாத்மவிபூதய: ।**

**யாபிர்விபூதிபிர்லோகாநிமாம்ஸ்த்வம் வ்யாப்ய திஷ்டஸி ॥ 16 ॥**

**யாபி:** – எந்த, **விபூதிபி:** – விபூதிகளினால் (சிறப்புக்களினால்), **இமாந்** – இந்த, **லோகாந்** – உலகங்களை, **வ்யாப்ய** – வ்யாபித்து, **திஷ்டஸி** – நிற்கிறீர்களோ, **திவ்யா:** – (அந்த) தெய்விகச் சிறப்புடைய, **ஆத்மவிபூதய:** – உங்களுடைய விபூதிகளை (பெருமைகளை), **த்வம் ஹி** – நீங்கள்தான், **அஶேஷேண** – முழுமையாக, **வக்தும்** – கூறுவதற்கு, **அர்ஹஸி** – திறமை வாய்ந்தவர்.

எந்த விபூதிகளினால் – சிறப்புக்களினால் இந்த உலகங்களை வ்யாபித்து நிற்கிறீர்களோ, அந்த தெய்விகச் சிறப்புடைய உங்களுடைய விபூதிகளை – பெருமைகளை நீங்கள்தான் முழுமையாகக் கூறுவதற்குத் திறமை வாய்ந்தவர்.

**கேள்வி:** 'திவ்யா: ஆத்மவிபூதய:' என்று எவற்றைச் சொல்கிறார்? 'அவற்றை முழுமையாக நீங்கள்தான் கூறவல்லவர்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** அகில உலகங்களிலும் பொலிவு, வலிமை, அறிவு, ஐசுவர்யம், குணம், ஆற்றல் இவற்றோடு கூடிய பொருட்களனைத்தும் தெய்விகமான விபூதிகள். இவையெல்லாம் உங்களைச் சார்ந்தவை. ஆகவே, உங்களைத் தவிர வேறு யாரும் இவற்றை முழுமையாக அறிய மாட்டார்கள். உங்களைத் தவிர வேறு யாரும் இவற்றை முழுமையாக வர்ணிக்கவும் திறமை பெற்றவர்கள் அல்லர். ஆகவே க்ருபை செய்து நீங்களே அவற்றை எடுத்துச் சொல்லவேண்டும்.

**கேள்வி:** 'எந்த விபூதிகளினால் இந்த உலகங்களை வ்யாபித்து நிற்கிறீர்களோ' என்றால் என்ன பொருள்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** 'நான் இவ்வுலகில் விளங்கும் உங்களுடைய திவ்ய விபூதிகளை மட்டும் அறிய விரும்பவில்லை. நீங்கள் ஸ்வர்கம் முதலிய மற்றைய எல்லா உலகங்களிலும் என்னென்ன விபூதிகளில் அளாவி இருக்கிறீர்களோ, அவையனைத்தையும் பற்றிக் கேட்க விரும்புகிறேன்' என்று பொருள்.

**कथं विद्यामहं योगिंस्त्वां सदा परिचिन्तयन्।**
**केषु केषु च भावेषु चिन्त्योऽसि भगवन्मया॥ १७॥**

**கத₂ம் வித்₃யாமஹம் யோகி₃ம்ஸ்த்வாம் ஸதா₃ பரிசிந்தயந் ।**

**கேஷு கேஷு ச ப₄ாவேஷு சிந்த்யோऽஸி ப₄க₃வந்மயா ॥ 17 ॥**

**யோகி₃ந்** – யோகேசுவர! **கத₂ம்** – எவ்வாறு, **ஸதா₃** – எப்போதும், **பரிசிந்தயந்** – சிந்தனை செய்து, **அஹம்** – நான், **த்வாம்** – உங்களை, **வித்₃யாம்** – அறிவேன்? **ச** – மேலும், **ப₄க₃வந்** – பகவானே! (நீங்கள்), **கேஷு கேஷு** – எந்தெந்த, **ப₄ாவேஷு** – ஸ்வரூபங்களில், **மயா** – என்னால், **சிந்த்ய:** – த்யானம் செய்யத்தக்கவராக, **அஸி** – விளங்குகிறீர்கள்?

யோகேசுவர! எவ்வாறு எப்போதும் சிந்தனை செய்து நான் உங்களை அறிவேன்? மேலும் பகவானே! நீங்கள் எந்தெந்த ஸ்வரூபங்களில் என்னால் த்யானம் செய்யத்தக்கவராக விளங்குகிறீர்கள்?

**கேள்வி:** இந்த ச்லோகத்தில் அர்ஜுனனுடைய கேள்வியில் அடக்கிய கருத்து என்ன?

**பதில்:** அர்ஜுனன் இந்த ச்லோகத்தில் இரண்டு விஷயங்களைக் கேட்கிறார்.

*(1)* ச்ரத்தையுடனும், ப்ரேமையுடனும் இடைவிடாது நான் உங்களைச் சிந்திக்க வேண்டும். உங்களுடைய குணங்கள், ப்ரபாவங்கள், தத்வங்கள் இவற்றுடன்கூட உங்களை நன்றாக அறிவதற்குரிய உபாயங்களைக் கூறுங்கள்.

*(2)* ஜடமாயும், சேதனமாயும் உலகில் பொருட்கள் எத்தனை உள்ளனவோ, அவற்றில் குறிப்பாக எதை உங்களுடைய ஸ்வரூபமாக பாவித்து மனதை அதில் நிலைநிறுத்த முடியுமோ, அதை விளக்குங்கள். கருத்து என்னவெனில் எந்தெந்தப் பொருட்களை எப்படி இடைவிடாது சிந்தித்தால் எளிதாக, பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், தத்வம், ரஹஸ்யம் இவற்றை அறிய முடியுமோ, அவற்றைப் பற்றி அர்ஜுனன் கேட்கிறார்.

**विस्तरेणात्मनो योगं विभूतिं च जनार्दन।**
**भूयः कथय तृप्तिर्हि शृण्वतो नास्ति मेऽमृतम्॥ १८॥**

**விஸ்தரேணாத்மநோ யோக₃ம் விபூ₄திம் ச ஜநார்த₃ந ।**

**பூ₄ய: கத₂ய த்ருப்திர்ஹி ஶ்ருண்வதோ நாஸ்தி மேऽம்ருதம் ॥ 18 ॥**

**ஜநார்த₃ந** – ஜனார்தன! **ஆத்மந:** – உங்களது, **யோக₃ம்** – யோக சக்தியையும், **விபூ₄திம் ச** – விபூதியையும், **பூ₄ய:** – மீண்டும், **விஸ்தரேண** – விரிவாக, **கத₂ய** – கூறுங்கள். **ஹி** – ஏனெனில் (உங்களுடைய), **அம்ருதம்** – அமுதமொழியை, **ஶ்ருண்வத:** – கேட்கின்ற, **மே** – எனக்கு, **த்ருப்தி:** – த்ருப்தி, **ந அஸ்தி** – ஏற்படவில்லை. (கேட்க வேண்டுமென்ற ஆசை தொடர்ந்து இருந்து கொண்டிருக்கிறது).

ஜனார்தன! உங்களது யோக சக்தியையும் விபூதியையும் மீண்டும் விரிவாகக் கூறுங்கள். ஏனெனில் உங்களுடைய அமுதமொழியைக் கேட்கின்ற எனக்கு த்ருப்தி ஏற்படவில்லை. கேட்க வேண்டுமென்ற ஆசை தொடர்ந்து இருந்து கொண்டிருக்கிறது."

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** இங்கு 'ஜநார்தந' என்று அழைப்பதன் பொருள் என்ன?

**பதில்:** எல்லா மனிதர்களும் தாம் விரும்பிய பொருட்களை எவரிடம் கேட்பார்களோ, அவர் 'ஜநார்தனர்'. உங்களிடம் மனிதர்கள் தாங்கள் விரும்பும் பொருட்களைக் கேட்கிறார்கள். நீங்களும் எல்லோருக்கும் எல்லாவற்றையும் அளிக்க வல்லவர். ஆகவே, நானும் உங்களைக் கேட்கிறேன். தயவு செய்து என் விருப்பத்தையும் பூர்த்தி செய்யுங்கள்.

**கேள்வி:** இங்கு 'யோகம்' என்றும், 'விபூதிம்' என்றும் எவற்றைக் குறிப்பிடுகிறார்? அவ்விரண்டையும் 'மேலும் விரிவாகச் சொல்லுங்கள்' என்றால் என்ன கருத்து?

**பதில்:** பகவான் தாமே இவ்வுலக வடிவில் வெளிப்பட்டுப் பல ஸ்வரூபங்களில் விரிந்திருக்கும், அந்த ஈசுவர சக்தியே இங்கே யோகம் எனக் குறிப்பிடப்படுகிறது. அத்தகைய வெவ்வேறு ஸ்வரூபங்களின் விரிவே 'விபூதிகள்' எனப்படும். 10/7ல் இந்த இரண்டு சொற்களும் வருகின்றன. அங்கு இவற்றிற்குப் பொருள் விளக்கப்பட்டுள்ளது. அதே ச்லோகத்தில் இந்த இரண்டையும் பற்றிய, தத்வபூர்வமான அறிவு அசையாத பக்தியோகத்தை அளிக்கும் என்றும் கூறியாகிவிட்டது. அதனால்தான் அர்ஜுனன் அந்த 'விபூதி', 'யோகம்' பற்றிய ரஹஸ்யங்களை நன்கு அறிந்து கொள்ள விருப்பம் கொண்டு, 'மேலும் விளக்கமாகச் சொல்லுங்கள்' என்று வேண்டுகிறார்.

**கேள்வி:** 'உங்களுடைய அமுதமொழிகளைக் கேட்கின்ற எனக்குப் போதுமென்ற த்ருப்தி ஏற்படவில்லை' என்று அர்ஜுனன் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "உங்களுடைய சொற்களில் அவ்வளவு இனிமை நிறைந்திருக்கிறது. அதிலிருந்து ஆனந்தம் அமுதமாகப் பெருகுகிறது. அதை அள்ளிப் பருகிப் பருகி மனம் த்ருப்தியடையவில்லை. அமுதத்தை எவ்வளவு பருகினாலும் அதற்குமேலும் தாகம் உண்டாகிறது. இதை எப்பொழுதும் பருகிக் கொண்டே இருப்போமே என்று மனம் விழைகிறது. ஆகவே, பகவானே! இதைப் பற்றிச் சொல்லியாகிவிட்டது. நிறையச் சொல்லியாகிவிட்டது. மேலும் சொல்ல என்ன இருக்கிறது என்று நினைக்காதீர்கள். தயவு செய்து இதைப் பற்றிச் சொல்லிக் கொண்டே இருங்கள். இந்த அமுதத்தைப் பொழிந்து கொண்டே இருங்கள்" என்று வேண்டுகிறார் அர்ஜுனன்.

**பொருத்தம்:** **யோகத்தைப் பற்றியும், விபூதிகளைப் பற்றியும் விரிவாகச் சொல்லுமாறு அர்ஜுனன் கேட்டுவிட்டார். பகவான், 'அதன் விரிவு முடிவற்றது. ஆகவே முக்யமான விபூதிகளைப் பற்றிச் சொல்கிறேன்' என்று கூறத் தொடங்குகிறார்—**

श्रीभगवानुवाच

**हन्त ते कथयिष्यामि दिव्या ह्यात्मविभूतयः।**
**प्राधान्यतः कुरुश्रेष्ठ नास्त्यन्तो विस्तरस्य मे॥ १९॥**

ஸ்ரீப₄க₃வாநுவாச

**ஹந்த தே கத₂யிஷ்யாமி தி₃வ்யா ஹ்யாத்மவிபூ₄தய: ।**
**ப்ராத₄ாந்யத: குருஶ்ரேஷ்ட₂ நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே ॥ 19 ॥**

**ஸ்ரீப₄க₃வாநுவாச** – ஸ்ரீபகவான் சொன்னார்: **குருஶ்ரேஷ்ட₂** – குருகுலத்தில் சிறந்தவனே! **ஆத்மவிபூ₄தய:** – என்னுடைய விபூதிகள், **தி₃வ்யா:** – தெய்விகமானவைதான். **ஹந்த** – இப்பொழுது, **தே** – உனக்கு, **ப்ராத₄ாந்யத:** – அவற்றில் முக்யமானவற்றை, **கத₂யிஷ்யாமி** – கூறுகிறேன். **ஹி** – ஏனெனில், **மே** – என்னுடைய, **விஸ்தரஸ்ய** – விரிவுக்கு, **அந்த:** – முடிவு, **ந அஸ்தி** – இல்லை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸ்ரீபகவான் சொன்னார்: "குருகுலத்தில் சிறந்தவனே! என்னுடைய விபூதிகள் தெய்விக மானவைதாம். இப்பொழுது உனக்கு அவற்றில் முக்யமானவற்றைக் கூறுகிறேன். ஏனெனில் என்னுடைய விரிவுக்கு முடிவு இல்லை.

**கேள்வி:** 'குருஸ்ரேஷ்ட' என்று அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** 'நீ குருகுலத்தில் பிறந்த அனைவரிலும் சிறந்தவன். ஆகவே, உனக்கு என் விபூதிகளைக் கேட்கத் தகுதி உண்டு' என்று பொருள்.

**கேள்வி:** 'திவ்யா: ஆத்மவிபூதய:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? 'அவற்றில் முக்யமானவற்றைக் கூறுகிறேன்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** அகில உலகமுமே பகவானுடைய ஸ்வரூபம்தான். ஆகவே எல்லாமே அவருடைய விபூதிகள்தாம். எல்லாவற்றையும் திவ்ய விபூதிகள் என்று சொல்ல முடியாது. எந்தச் சிலவற்றில் பகவானுடைய தேஜஸ், பலம், வித்யை, ஐசுவர்யம், காந்தி, சக்தி ஆகியவை தனிச்சிறப்புடன் மலர்ந்திருக்கின்றனவோ, அவையே திவ்ய விபூதிகள். அந்த திவ்ய விபூதிகள்கூடக் கணக்கில் அடங்கா. அவற்றை முழுவதும் வர்ணிப்பது இயலாத கார்யம். 'அவற்றில் மிகவும் முக்யமானவற்றையே இனி வர்ணிப்பேன்' என்கிறார்.

**கேள்வி:** 'என்னுடைய விரிவுக்கு முடிவு இல்லை' என்றால் என்ன பொருள்?

**பதில்:** சென்ற ச்லோகத்தில் அர்ஜுனன் 'முழுமையாக உங்கள் விபூதிகளை எடுத்துச் சொல்லுங்கள்' என்று கேட்டதற்கு விடை பகர்கிறார்— என் எல்லா விபூதிகளையும் எடுத்துச் சொல்லவே இயலாது. என் மிக முக்யமான விபூதிகளைக்கூடச் சொல்லி முடிப்பது இயலாத செயல்.‡

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் கூறியபடி பகவான் 20 முதல் 39 ச்லோகம் வரை தம்முடைய விபூதிகளை வர்ணிக்கிறார்—

**अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः ।**
**अहमादिश्च मध्यं च भूतानामन्त एव च ॥ २० ॥**

**அஹமாத்மா கு₃டா₃கேஶ ஸர்வபூ₄தாஶயஸ்தி₂த: ।**
**அஹமாதி₃ஶ்ச மத்₄யம் ச பூ₄தாநாமந்த ஏவ ச ॥ 20 ॥**

---

‡ உலகில் கணக்கற்ற பொருட்கள், குணநலன்கள், பலதரப்பட்ட ப்ராணிகள் பெருகிக் கிடக்கின்றன. இவற்றை முறைப்படி நடத்திச் செல்வதற்காக உலகத்தைப் படைத்த பகவான், எவரும் மீற முடியாத கட்டுப்பாடுகளை விதித்து வெவ்வேறுவிதமான உலகப் பொருட்கள், ப்ராணிகள், அவற்றின் தன்மைகள், ப்ராணிகளின் தொகுப்பு, பிரிவுகள் இவற்றை அமைத்திருக்கிறார். அவற்றை அந்தந்த முறைப்படி படைப்பது, காப்பது, மறைப்பது முதலியவற்றைக் கவனிக்க ஒவ்வொரு பிரிவுக்கும் தக்க அதிகாரிகளை நியமித்துள்ளார். ருத்ரர், வஸு, ஆதித்யர், இந்த்ரன், ஸாத்யர்கள், விசுவேதேவர்கள், மருத்துக்கள், பித்ருக்கள், மனுக்கள், ஸப்தரிஷிகள் என்று இந்த அதிகாரிகளுக்கு வெவ்வேறு பெயர்கள் உள. இப்படி உருவமுள்ளதும், உருவமற்றதுமான பல விபூதிகள் பகவானுடையவை.

ஸர்வே ச தே₃வா மநவ: ஸமஸ்தா: ஸப்தர்ஷயோ யே மநுஸூநவஶ்ச ।
இந்த்₃ரஶ்ச யோऽயம் த்ரித₃ஶேஶபூ₄தோ விஷ்ணோரஶேஷாஸ்து விபூ₄தயஸ்தா: ॥

(ஸ்ரீவிஷ்ணுபுராணம் 3/1/46)

(எல்லா தேவதைகளும், எல்லா மனுக்களும், ஸப்தரிஷிகள், மனுவின் புத்ரர்கள், தேவர்களுக்கு அதிபதியான இந்த்ரன் – இவர்கள் அனைவரும் ஸ்ரீவிஷ்ணுவின் விபூதிகள்.)

படைக்கப்பட்ட உயிரினங்களைத் தவிர ஆட்சி செய்வதற்காக ப்ராணிகளின் தொகுப்பு, உட்பிரிவு இவற்றிற்குத் தக்கபடி நியமனங்கள் உள. இப்படிப்பட்ட நியமனங்கள் எல்லாமே பகவானுடைய தேஜஸ், சக்தி, வித்யா, ஞானம், பலம் முதலியவற்றைச் சிறப்பாக ப்ரதிபலிப்பவை. ஆகவே, இவற்றை பகவான் தம் விபூதிகள் என்கிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கு$_3$டா$_3$கேஶ** – அர்ஜுன! **அஹம்** – நான், **ஸர்வபூ$_4$த ஆஶயஸ்தி$_2$த:** – எல்லா உயிரினங்களின் உள்ளத்திலும், **ஆத்மா** – எல்லோருடைய ஆத்மாவாகவும் இருக்கிறேன். **ச** – மேலும், **பூ$_4$தாநாம்** – உயிரினங்களுக்கெல்லாம், **ஆதி$_3$:** – ஆதியாகவும், **மத்$_4$யம் ச** – நடுவாகவும், **அந்த: ச** – முடிவாகவும், **அஹம் ஏவ** – நானே, (**அஸ்மி** – இருக்கிறேன்).

அர்ஜுன! நான் எல்லா உயிரினங்களின் உள்ளத்திலும் ஆத்மாவாக இருக்கிறேன். மேலும் உயிரினங்களுக்கெல்லாம் ஆதியாகவும், நடுவாகவும், முடிவாகவும் நானே இருக்கிறேன்.

**கேள்வி:** 'குடாகேஶ' என்று அழைப்பதன் பொருள் என்ன?

**பதில்:** 'குடாகா' என்றால் தூக்கம். தூக்கத்தை வென்றவன் 'குடாகேசன்'. 'அர்ஜுன! நீ தூக்கத்தை வென்றுவிட்டாய். ஆகவே, என் உபதேசத்தை ஏற்று அஞ்ஞானமான தூக்கத்தையும் வென்றுவிடுவாய்' என்று குறிப்பால் உணர்த்துகிறார்.

**கேள்வி:** 'ஸர்வபூதாஶயஸ்தித: ஆத்மா' என்றால் என்ன? அந்த 'ஆத்மா' நான்தான் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எல்லா ப்ராணிகளுடைய உள்ளத்திலும் உறையும் ஜீவ சைதன்யத்தை பராப்ரக்ருதி, க்ஷேத்ரக்ஞன் (7/5, 13/1) என்றும் கூறுவர். அவன்தான் 'ஸர்வபூதாஶய-ஸ்தித: ஆத்மா' என்ற தொடருக்குப் பொருள் ஆகும். அந்த ஆத்மா பகவானுடைய அம்சமே (15/7). பகவானுடைய ஸ்வரூபமே (13/2). அதனால் அந்த ஆத்மா நான் என்கிறார்.

**கேள்வி:** 'பூதாநாம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? 'அவற்றின் ஆதி, நடு, முடிவு நானே' என்பதன் பொருள் என்ன?

**பதில்:** இயங்குவதும், இயங்காததுமான உடல் படைத்த ப்ராணிகளனைத்தையும் 'பூதாநாம்' என்ற சொல் குறிக்கும். உயிரினங்களனைத்தும் பிறப்பதும், வாழ்வதும், மறைவதும் பகவானாலேயே. அவையனைத்தும் பகவானிடமிருந்தே உண்டாகின்றன; அவரிடமே நிலைபெற்றிருக்கின்றன; ப்ரளயத்தில் அவரிடமே ஒடுங்குகின்றன; பகவான்தான் எல்லாவற்றிற்கும் மூலகாரணம், ஆதாரம். இக்கருத்தைப் புலப்படுத்துவதற்காகவே அந்த எல்லாவற்றிற்கும் 'நானே ஆதி, நடு, முடிவு' என்று கூறுகிறார்.

आदित्यानामहं विष्णुर्ज्योतिषां रविरंशुमान्।
मरीचिर्मरुतामस्मि नक्षत्राणामहं शशी॥ २१॥

---

வாயுபுராணம் எழுபதாவது அத்யாயத்தில் பின்வருமாறு வர்ணனை வருகிறது: "மஹரிஷி கச்யபர் மூலம் மக்கள் படைப்பு ஆரம்பமானது. அப்பொழுது அந்த ப்ரஜாபதி பல்வேறு வகை ப்ராணிகளிலும் முக்யமானவற்றையும், ஆற்றல்மிக்கவற்றையும் தேர்ந்தெடுத்து அந்தந்த இனங்களை வரைமுறைக்குள் கட்டுப்படுத்துவதற்காக அவற்றை அரசர்களாக்கினார். சுக்ராசார்யார் பார்கவ குலத்தாருக்கு; சந்த்ரன் க்ரஹங்கள்-நக்ஷத்ரங்களுக்கு; ப்ருஹஸ்பதி அங்கிரஸ் குலத்தாருக்கு; விஷ்ணு ஆதித்யர்களுக்கு; பாவகர் (அக்னி) வஸுக்களுக்கு; தக்ஷர் ப்ரஜாபதிகளுக்கு; ப்ரஹ்லாதர் தைத்யர்களுக்கு; இந்த்ரன் மருத்துக்களுக்கு; நாராயணன் ஸாத்யர்களுக்கு; சங்கரர் ருத்ரர்களுக்கு; வருணன் நீர்நிலைகளுக்கு; குபேரன் யக்ஷ ராக்ஷஸர்களுக்கு; சூலபாணி பூதபிசாசங்களுக்கு; கடல் நதிகளுக்கு; சித்ரரதன் கந்தர்வர்களுக்கு; உச்சைச்ரவஸ் குதிரைகளுக்கு; சிங்கம் விலங்குகளுக்கு; வ்ருஷபம் (காளைமாடு) கால்நடைகளுக்கு; கருடன் பறவைகளுக்கு; ஆதிசேஷன் விஷப்பாம்புகளுக்கு; வாஸுகி நாகங்களுக்கு; தக்ஷகன் மற்ற பாம்புகட்கும், ஊர்வனவற்றிற்கும்; ஹிமவான் பர்வதங்களுக்கு; விப்ரசித்தி தானவர்களுக்கு; வைவஸ்வதர் பித்ருக்களுக்கு; பர்ஜன்யர் கடல், நதி, மேகங்களுக்கு; காமதேவன் அப்ஸரஸ்களுக்கு, ஸம்வத்ஸரன் பருவங்களுக்கும், மாதங்களுக்கும்; ஸுதாமா கிழக்கு திசைக்கு; கேதுமான் மேற்கு திசைக்கு; வைவஸ்வதமனு எல்லா மனிதர்களுக்கும் அரசர் என்று நியமிக்கப்பட்டனர். இந்த அதிகாரிகள் மூலம் அகில உலக விவஹாரங்களும் செவ்வனே பேணிக்காக்கப்பட்டு வருகின்றன. இந்த அத்யாயத்தில் கூறப்பட்ட விபூதிகள் அவர்களுடன் பெரும்பாலும் ஒத்திருப்பவை."

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ஆதி₃த்யாநாமஹம் விஷ்ணுர்ஜ்யோதிஷாம் ரவிரம்ஶுமாந் ।**
**மரீசிர்மருதாமஸ்மி நக்ஷத்ராணாமஹம் ஶஶீ ॥ 21 ॥**

**அஹம்** – நான், **ஆதி₃த்யாநாம்** – அதிதியின் புதல்வர்களான பன்னிருவர்களுள், **விஷ்ணு:** – விஷ்ணுவாகவும், **ஜ்யோதிஷாம்** – ஒளிர்பவைகளுள், **அம்ஶுமாந்** – கிரணங்களோடு கூடிய, **ரவி:** – சூரியனாகவும், **மருதாம்** – (நாற்பத்தொன்பது) வாயு தேவர்களுள், ‡**மரீசி:** – தேஜஸ் ஆகவும், **நக்ஷத்ராணாம்** – நக்ஷத்ரங்களுள், **ஶஶீ** – (அவற்றின் தலைவனான) சந்த்ரனாகவும், **அஹம் அஸ்மி** – நான் இருக்கிறேன்.

நான் அதிதியின் புதல்வர்களான பன்னிருவர்களுள் விஷ்ணுவாகவும், ஒளிர்பவைகளுள் கிரணங்களோடு கூடிய சூரியனாகவும், நாற்பத்தொன்பது வாயு தேவர்களுள் தேஜஸ் ஆகவும், நக்ஷத்ரங்களுள் அவற்றின் தலைவனான சந்த்ரனாகவும் இருக்கிறேன்.

**கேள்வி:** 'ஆதித்ய:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? அவர்களில் நான் 'விஷ்ணு' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அதிதிக்கு *(1)* தாதா, *(2)* மித்ரன், *(3)* அர்யமா, *(4)* ஶக்ரன், *(5)* வருணன், *(6)* அம்ஶன், *(7)* பகன், *(8)* விவஸ்வான், *(9)* பூஷா, *(10)* ஸவிதா, *(11)* த்வஷ்டா, *(12)* விஷ்ணு என்று பன்னிரண்டு புத்ரர்கள். அவர்கள் 'ஆதித்யர்' எனப்படுவர்.§ இவர்களில் உள்ள விஷ்ணுவே இவர்களுக்கு அரசர். எல்லோரைக் காட்டிலும் சிறந்தவர். ஆதலால் அந்த விஷ்ணு என் ஸ்வரூபம் என்கிறார் பகவான்.

**கேள்வி:** 'ஒளிருபவைகளினிடையே கிரணங்கள் படைத்த சூரியன் நான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** சூரியன், சந்த்ரன், நக்ஷத்ரங்கள், மின்னல், தீ முதலிய ஒளியுள்ள பொருட்களில் முக்யமானது சூரியன். ஆகவே 'ஒளியுள்ளவற்றில் சூரியன் என் ஸ்வரூபம்' என்கிறார்.

**கேள்வி:** 'வாயுதேவதைகளில் மரீசி என்று அழைக்கப்படுகின்ற தேஜஸ் நான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** திதி புத்ரர்கள் நாற்பத்தொன்பது பேர். இந்த நாற்பத்தொன்பது பேரும் திதிதேவி பகவத் த்யானமாகிற நோன்பு நோற்றபோது அந்த தேஜஸினால் உண்டானவர்கள். அந்த

---

‡ நாற்பத்தொன்பது மருத்துக்களின் பெயர் வருமாறு:- ஸத்வஜ்யோதி, ஆதித்யன், ஸத்யஜ்யோதி, திர்யக்ஜ்யோதி, ஸஜ்யோதி, ஜ்யோதிஷ்மான், ஹரிதன், ருதஜித், ஸத்யஜித், ஸுஷேணன், ஸேனஜித், ஸத்யமித்ரன், அபிமித்ரன், ஹரிமித்ரன், க்ருதன், ஸத்யன், த்ருவன், தர்த்தா, விதர்த்தா, விதாரயன், த்வாந்தன், துனி, உக்ரன், பீமன், அபியு, ஸாக்ஷிபன், ஈதருக், அந்யாத்ருக், யாத்ருக், ப்ரதிக்ருதன், ருக், ஸமிதி, ஸம்ரம்பன், ஈத்ருக்ஷன், புருஷன், அந்யாத்ருக்ஷன், சேதஸன், ஸமிதன்; ஸமித்ருக்ஷன், ப்ரதித்ருக்ஷன், மருதி, ஸரதன், தேவன், திசன், யஜுஸ், அநுத்ருக், ஸாமன், மாநுஷன், விசன் *(வாயுபுராணம் 67/123-130)*. கருடபுராணத்திலும், மற்ற புராணங்களிலும் சில பெயர்கள் மாறி வருகின்றன. ஆனால் ஒன்றிலும் 'மரிசி' என்ற பெயர் வரவில்லை. ஆகவே 'மரிசி' என்ற சொல்லுக்கு 'மருத்' என்று பொருள் கொள்ளாமல் அனைத்து மருத்துக்களின் 'தேஜஸ்' அல்லது 'கிரணங்கள்' என்று கொள்ளப்பட்டது.

தக்ஷரின் பெண்ணான மருத்வதியின் புதல்வர்களுக்கும் மருத்கணம் என்ற பெயர் உண்டு (ஹரிவம்சம்). வெவ்வேறு மன்வந்தரங்களில் வெவ்வேறு பெயர்களில் வெவ்வேறு விதமாக இவர்கள் பிறப்பு வர்ணிக்கப்படுகிறது.

§ தா₄தா மித்ரோऽர்யமா ஶக்ரோ வருணஸ்த்வம்ஶ ஏவ ச ।
ப₄கோ₃ விவஸ்வாந் பூஷா ச ஸவிதா த₃ஶமஸ்தத₂ா ॥
ஏகாத₃ஶஸ்தத₂ா த்வஷ்டா த்₃வாத₃ஶோ விஷ்ணுருச்யதே ।
ஜக₄ந்யஜஸ்து ஸர்வேஷாமாதி₃த்யாநாம் கு₃ணாதி₄க: ॥

*(மஹா. ஆதி₃. 65/15,16)*

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தேஜஸினால்தான் அவர்கள் கர்பத்தில் அழியவில்லை.‡ ஆகவே, அவர்களின் தேஜஸை பகவான் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** 'நக்ஷத்ரங்களின் அதிபதியான சந்த்ரன் நான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அசுவினி, பரணி, க்ருத்திகை முதலிய இருபத்தேழு நக்ஷத்ரங்களுக்கும், நக்ஷத்ர மண்டலத்திற்கும் அரசன் சந்த்ரன். ஆகவே, அவன் பகவானின் ப்ரதானமான விபூதி. அவனைத் தம் ஸ்வரூபம் என்கிறார் பகவான்.

**वेदानां सामवेदोऽस्मि देवानामस्मि वासवः।**
**इन्द्रियाणां मनश्चास्मि भूतानामस्मि चेतना॥ २२॥**

**வேத₃ாநாம் ஸாமவேதோ₃ऽஸ்மி தே₃வாநாமஸ்மி வாஸவ: ।**
**இந்த்₃ரியாணாம் மநஶ்சாஸ்மி பூ₄தாநாமஸ்மி சேதநா ॥ 22 ॥**

**வேத₃ாநாம்** – வேதங்களுள், **ஸாமவேத₃:** – ஸாமவேதமாக, **அஸ்மி** – இருக்கிறேன். **தே₃வாநாம்** – தேவர்களுள், **வாஸவ:** – இந்த்ரனாக, **அஸ்மி** – இருக்கிறேன். **இந்த்₃ரியாணாம்** – பொறிப்புலன்களுள், **மந:** – மனதாக, **அஸ்மி** – இருக்கிறேன். **ச** – மேலும், **பூ₄தாநாம்** – உயிரினங்களுள், **சேதநா** – உணர்வாக (அதாவது ஞானசக்தியாக), **அஸ்மி** – இருக்கிறேன்.

வேதங்களுள் ஸாமவேதமாக இருக்கிறேன். தேவர்களுள் இந்த்ரனாக இருக்கிறேன். பொறிப்புலன்களுள் மனதாக இருக்கிறேன். மேலும் உயிரினங்களுள் உணர்வாக – ஞானசக்தியாக இருக்கிறேன்.

**கேள்வி:** 'வேதங்களினிடையே ஸாமவேதம் நான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ருக், யஜுஸ், ஸாம, அதர்வண என்ற நான்கு வேதங்களில் ஸாமவேதம் மிகவும் இனிமையான ஸங்கீதமயமானது. பரமேசுவரனைப் பற்றிய அழகிய துதிகள் கொண்டது. ஆகவே, வேதங்களுக்குள் அதற்கு முக்யத்வம் உண்டு. அதனால் பகவான் அதைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** 'தேவர்களினிடையே இந்த்ரன் நான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

---

‡ கச்யபருடைய பத்னி திதிக்குப் பல புதல்வர்கள் பிறந்து இறந்துவிடவே, அவள் தனது கணவர் கச்யபரை அண்டிப் பணிவிடை செய்தாள். அதனால் மகிழ்ந்த தவசீலர்களில் சிறந்தவரான கச்யபர் அவளுக்கு வரமளித்தார். அப்போது அவள் இந்த்ரனை மாய்க்கக்கூடிய மிகவும் தேஜஸ் உள்ள ஒரு புத்ரன் வேண்டுமென வரம் கேட்டாள். அவ்வரிய வரத்தை அவளுக்களித்த கச்யபர் சில நிபந்தனைகளையும் கூறினார்: "நீ தினந்தோறும் பகவானை த்யானம் செய்யவேண்டும். மிகவும் கட்டுப்பாட்டுடனும் தூய்மையுடனும் நூறு ஆண்டுகள் உன்னுடைய கர்பத்தைக் காப்பாற்ற வேண்டும். அப்படிக் காப்பாற்றினால் உன் கருவிலிருந்து இந்த்ரனை மாய்க்கும் புதல்வன் பிறப்பான்." இந்த்ரனுக்கு இது தெரிந்துவிட்டது. மிகுந்த வினயத்துடன் திதிக்குப் பணிவிடை செய்ய வந்தான். 'அவளுடைய தூய்மை எப்பொழுது கெடும்? அப்போதுதான் ஏதாவது செய்ய முடியும்' என்று காத்திருந்தான். நூறு ஆண்டுகள் முடிவதற்குச் சில நாட்களுக்கு முன்னால் ஒரு நாள் திதி கால்களைக் கழுவிக் கொள்ளாமல் விரிப்பில் படுத்துக் கொண்டாள். உடனே தூக்கம் வந்துவிட்டது. இதுதான் தக்க தருணம் என்று இந்த்ரன் கையில் வஜ்ராயுதம் ஏந்தி அவள் கர்பத்தில் நுழைந்தான். அந்தக் கருவை ஏழு துண்டங்களாக வெட்டினான். வஜ்ராயுதத்தால் அடிபட்டுக் கரு கூச்சலிட்டு அழுதது. இந்த்ரன் 'அழாதே' என்றான். ஏழு துண்டங்களாக்கியும் மரிக்காத அந்தக் கருவைப் பார்த்துக் கோபத்துடன் மறுபடியும் ஒவ்வொன்றையும் ஏழு துண்டங்களாக வெட்டினான். அந்த 49 துண்டுகளும் உயிருடன் இருந்தன. அவை அழியா என்றறிந்தான் இந்த்ரன். அவை மிக வேகமுள்ள மருத்துக்கள் என்ற தேவதைகள் ஆயின. 'மா ரோதீ:' (அழாதீர்கள்) என்று இந்த்ரன் அவற்றைக் கூறினதால், அவை மருத்துக்கள் ஆயின (விஷ்ணுபுராணம், முதல் அம்சம், அத். 21).

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** சூரியன், சந்த்ரன், அக்னி; வாயு முதலிய தேவர்களுக்கெல்லாம் அரசன் இந்த்ரன். ஆகவே பகவான் அவனைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** 'புலன்களினிடையே நான் மனம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** கண், காது, தோல், நாக்கு, மூக்கு, வாக்கு, கை, கால், ஆண்-பெண் குறி, புட்டம், மனம் என்ற பதினொரு புலன்களில் மனம் மற்ற பத்துப் புலன்களையும் ஆள்கிறது; தூண்டுகிறது; நுண்ணியது; உயர்ந்தது. ஆகவே முக்யமானது. அதை பகவான் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** 'உயிரினங்களிடையே நான் உணர்வு' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எல்லா ப்ராணிகளுக்கும் அறியும் திறன் உண்டு. அதன் மூலம் அவை ஸூகதுக்கங்கள் ஆகிய உணர்வுகளைப் பெறுகின்றன. அவை உள்ளத்தின் சிறப்புற்ற செயல் திறன். 13/6ல் இவற்றை க்ஷேத்ரத்தின் விகாரம் (மாறுதலடைந்த வடிவம்) என்று கூறுகிறார். அந்த ஞான சக்திதான் உணர்வு (சேதநா) ஆகும். எல்லா ப்ராணிகளின் அனுபவத்திற்கும் காரணமான சேதனமான உணர்வு முக்யமான சக்தி. அது தம் ஸ்வரூபம் என்கிறார்.

**रुद्राणां शङ्करश्चास्मि वित्तेशो यक्षरक्षसाम्।**
**वसूनां पावकश्चास्मि मेरुः शिखरिणामहम्॥ २३॥**

**ருத்$_2$ராணாம் ஶங்கரஶ்சாஸ்மி வித்தேஶோ யக்ஷரக்ஷஸாம் ।**
**வஸூநாம் பாவகஶ்சாஸ்மி மேரு: ஶிக$_2$ரிணாமஹம் ॥ 23 ॥**

**அஹம்** – நான், **ருத்$_2$ராணாம்** – ருத்ரர்கள் பதினொருவருள், **ஶங்கர:** – பரமசிவனாக, **அஸ்மி** – இருக்கிறேன். **யக்ஷ ரக்ஷஸாம்** – யக்ஷர், ராக்ஷஸர் இவர்களுள், **வித்தேஶ: ச** – செல்வத்திற்கு அதிபதியான குபேரனாகவும், **வஸூநாம்** – எட்டு வஸுக்களில், **பாவக:** – அக்னியாகவும், **ஶிக$_2$ரிணாம்** – சிகரமுடைய மலைகளுள், **மேரு: ச** – ஸுமேரு மலையாகவும், **அஸ்மி** – இருக்கிறேன்.

நான் ருத்ரர்கள் பதினொருவருள் பரமசிவனாக இருக்கிறேன். யக்ஷர், அரக்கர் இவர்களுள் செல்வத்திற்கு அதிபதியான குபேரனாகவும், வஸுக்கள் எண்மருள் அக்னியாக வும், சிகரமுடைய மலைகளுள் ஸுமேரு மலையாகவும் இருக்கிறேன்.

**கேள்வி:** பதினொரு ருத்ரர்கள் யார்? 'அவர்களுள் நான் பரமசிவன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஹரர், பஹூரூபர், த்ரயம்பகர், அபராஜிதர், வ்ருஷாகபி, ஶம்பு, கபர்தீ, ரைவதர், ம்ருகவ்யாதர், ஶர்வர், கபாலீ என்று பதினொரு ருத்ரர்கள்.‡ இவர்களில் ஶம்பு என்ற பரமசிவன் எல்லோருக்கும் தலைவர். மங்களங்களை அளிப்பவர். மங்களமூர்த்தி. அவரைத் தம் ஸ்வரூபம் என்கிறார் பகவான்.

**கேள்வி:** 'யக்ஷராக்ஷஸர்களுள் செல்வத்திற்கு அதிபதியான குபேரன் நான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

---

‡ ஹரஶ்ச ப$_3$ஹூரூபஶ்ச த்ரயம்ப$_3$கஶ்சாபராஜித: ।
வ்ருஷாகபிஶ்ச ஶம்பு$_4$ஶ்ச கபர்தீ$_3$ ரைவதஸ்தத$_2$ா ॥
ம்ருக$_3$வ்யாத$_4$ஶ்ச ஶர்வஶ்ச கபாலீ ச விஶாம்பதே ।
ஏகாத$_3$ஶைதே கதி$_2$தா ருத்$_3$ராஸ்த்ரிபு$_4$வநேஶ்வரா: ॥
(ஹரிவம்ஶம் 1/3/51,52)

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** குபேரன்‡ யக்ஷராக்ஷஸர்களுக்கு அரசர். யக்ஷர்களில் சிறந்தவர். அவர் செல்வத்திற்கு அதிபதி. புகழ் பெற்ற லோகபாலகர். இவரை பகவான் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** எட்டு வஸுக்கள் யார்? 'அவர்களுள் நான் பாவகன் (அக்னி)' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தரன், த்ருவன், ஸோமன், அஹஸ், அநிலன், அநலன், ப்ரத்யூஷன், ப்ரபாஸன் – இவர்கள் எட்டு வஸுக்கள்.§ இவர்களுள் அநலன் (அக்னி) வஸுக்களுக்கு அரசர். தேவதைகளுக்கு ஹவிஸைக் கொண்டு சேர்ப்பவர். தவிர பகவானுக்கே முகம் எனப்படுவார். ஆகவே பாவகர் தம் ஸ்வரூபம் என்கிறார் பகவான்.

**கேள்வி:** 'சிகரமுடைய மலைகளில் நான் ஸுமேரு' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஸுமேரு பர்வதம் நக்ஷத்ரங்களுக்கும், தீவுகளுக்கும் தலைமையகம். அது தங்கம், வெள்ளி, ரத்னங்களின் சுரங்கம் எனக் கருதப்படுகிறது. அதன் கொடுமுடிகள் எல்லாப் பர்வதங்களுடைய கொடுமுடிகளைக் காட்டிலும் உயரமானவை. ஆகவே ஸுமேரு முக்யமானது. அந்த உருவை பகவான் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**पुरोधसां च मुख्यं मां विद्धि पार्थ बृहस्पतिम्।**
**सेनानीनामहं स्कन्दः सरसामस्मि सागरः ॥ २४ ॥**

**புரோத$_4$ஸாம் ச முக்$_2$யம் மாம் வித்$_3$தி$_4$ பார்த$_2$ ப்$_3$ருஹஸ்பதிம் ।**
**ஸேநாநீநாமஹம் ஸ்கந்த$_3$: ஸரஸாமஸ்மி ஸாக$_3$ர: ॥ 24 ॥**

**புரோத$_4$ஸாம்** – புரோஹிதர்களுள், **முக்$_2$யம்** – முக்யமானவரான, **ப்$_3$ருஹஸ்பதிம்** – ப்ருஹஸ்பதி என்று, **மாம்** – என்னை, **வித்$_3$தி$_4$** – அறிந்துகொள். **பார்த$_2$** – அர்ஜுன! **அஹம்** – நான், **ஸேநாநீநாம்** – படைத்தலைவர்களுள், **ஸ்கந்த$_3$: ச** – ஸ்கந்தனாகவும், **ஸரஸாம்** – நீர் நிலைகளுள், **ஸாக$_3$ர:** – கடலாகவும், **அஸ்மி** – இருக்கிறேன்.

புரோஹிதர்களுள் முக்யமானவரான ப்ருஹஸ்பதி என்று என்னை அறிந்துகொள். அர்ஜுன! நான் படைத்தலைவர்களுள் ஸ்கந்தனாகவும், நீர் நிலைகளுள் கடலாகவும் இருக்கிறேன்.

**கேள்வி:** ப்ருஹஸ்பதி தம் ஸ்வரூபம் என்று கூறுவதன் கருத்து என்ன?

---

‡ இவர் புலஸ்த்ய ரிஷியின் பேரன். விச்ரவஸ்ஸின் குமாரன். பரத்வாஜருடைய பெண் தேவவர்ணினியின் வயற்றில் பிறந்தவர். வெகுநாட்களாக இவர் கடுமையான தவம் செய்தார். ப்ரம்மதேவர் ப்ரஸன்னமாகி, 'வரம் கேள்' என்று சொன்னார். 'நான் உலகத்தின் செல்வக் காப்பாளனாக வேண்டும்' என்ற தம் விருப்பத்தைத் தெரிவித்தார். அப்போது ப்ரம்மதேவன் சொன்னார்: 'நானும் நான்காவது லோகபாலரை நியமிக்க விரும்புகிறேன். ஆகவே இந்த்ரன், யமன், வருணன் இவர்களைப்போல நீயும் லோகபாலப் பதவியை ஏற்றுக் கொள்' என்று கூறி, அவருக்கு புஷ்பக விமானத்தை அளித்தார். அதுமுதல் குபேரன் செல்வத்திற்கு அதிபதி ஆனார். இவருடைய மாற்றாந்தாய் கைகஸியின் குமாரர்கள் ராவணன், கும்பகர்ணன், விபீஷணன் (வால்மீகி ராமாயணம், உத்தர, ஸர். 3). நளகூபரன், மணிக்ரீவன் இருவரும் குபேரனுடைய குமாரர்கள். நாரத முனிவரின் சாபத்தினால் அவர்கள் இரு மருதமரமாக ஒட்டிக் கொண்டு இருந்தனர். பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் அந்த மரங்களினிடையே புகுந்து அவர்களை விடுவித்தார் (ஸ்ரீமத்பாகவதம் 10/10).

§ த$_4$ரோ த்$_4$ருவஶ்ச ஸோமஶ்ச அஹஶ்சைவாநிலோऽநல: ।
ப்ரத்யூஷஶ்ச ப்ரப$_4$ாஸஶ்ச வஸவோऽஷ்டௌ ப்ரகீர்திதா: ॥
(மஹா. ஆதி$_3$. 66/18)

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** ப்ருஹஸ்பதி[‡] தேவேந்த்ரனின் குரு. தேவதைகளுக்கும் குல புரோஹிதர். புத்தியிலும், ஞானத்திலும் அனைவரிலும் சிறந்தவர். உலகில் உள்ள புரோஹிதர் அனைவரிலும் முக்யமானவர். அங்கிரஸ் குலத்தைச் சார்ந்தவர்களுக்கு இவர் அரசர் போன்றவர். ஆகவே பகவான் இவரைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** ஸ்கந்தன் யார்? 'ஸேனாபதிகளில் இவர் தம் ஸ்வரூபம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஸ்கந்தனின் மறுபெயர் கார்த்திகேயன். இவருக்கு ஆறு முகங்களும், பன்னிரு கைகளும் உண்டு. சிவபெருமானின் குமாரர்.[§] இவர் தேவர்களின் ஸேனைக்கு அதிபதி. உலகில் உள்ள ஸேனாபதிகளுக்கெல்லாம் இவர் முக்யமானவர். ஆகவே பகவான் இவரைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** 'நீர்நிலைகளில் நான் கடல்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'பூமியில் உள்ள எல்லா நீர்நிலைகளிலும் ஸமுத்ரமே[$] பெரியது. அது தலைமை பெற்றதாகக் கருதப்படுகிறது. ஆகவே ஸமுத்ரம் முக்யமானது. எனவே ஸமுத்ரம் தம் ஸ்வரூபம்' என்கிறார் பகவான்.

**महर्षीणां भृगुरहं गिरामस्म्येकमक्षरम्।**
**यज्ञानां जपयज्ञोऽस्मि स्थावराणां हिमालयः॥ २५॥**

**மஹர்ஷீணாம் ப்₄ருகு₃ரஹம் கி₃ராமஸ்ம்யேகமக்ஷரம் ।**
**யஜ்ஞாநாம் ஜபயஜ்ஞோऽஸ்மி ஸ்த₂ாவராணாம் ஹிமாலய: ॥ 25 ॥**

**அஹம்** – நான், **மஹர்ஷீணாம்** – மஹரிஷிகளுள், **ப்₄ருகு:** – ப்ருகு மஹரிஷியாகவும், **கி₃ராம்** – சொற்களுள், **ஏகம் அக்ஷரம்** – ஓரெழுத்தான ஓம்காரமாகவும், **அஸ்மி** – உள்ளேன். **யஜ்ஞாநாம்** – வேள்விகளனைத்துள்ளும், **ஜபயஜ்ஞ:** – ஜபம் என்ற யக்ஞமாகவும், **ஸ்த₂ாவராணாம்** – அசையாப் பொருட்களுள், **ஹிமாலய:** – இமயமலையாகவும், **அஸ்மி** – இருக்கிறேன்.

நான் மஹரிஷிகளுள் ப்ருகு மஹரிஷியாகவும் சொற்களுள் ஓரெழுத்தான ஓம்காரமாகவும் உள்ளேன். வேள்விகளனைத்துள்ளும் ஜபமாகிய யக்ஞமாகவும் அசையாப் பொருட்களுள் இமயமலையாகவும் இருக்கிறேன்.

**கேள்வி:** மஹரிஷிகள் யாவர்? அவர்களின் இலக்கணங்கள் என்ன?

---

‡ அங்கிரஸின் புத்ரர். மிகவும் ப்ரதாபமுடையவர். ஸ்வாரோசிஷ மன்வந்தரத்தில் ஸப்தரிஷிகளில் முக்யமானவர் ப்ருஹஸ்பதி (ஹரிவம்சம் 7/12; மத்ஸ்ய. 9/8). இவர் பேரறிஞர். வாமனாவதாரத்தில் பகவான் வாமனர் இவரிடமிருந்து வேதங்கள், அதன் அங்கங்கள், உப அங்கங்கள், ஆறு சாஸ்த்ரங்கள், ஸ்ம்ருதி, ஆகமம் முதலிய எல்லாவற்றையும் கற்றார் (ப்ருஹத்தர்மபுராணம் மத்ய. 16/69-73). இவருடைய குமாரர் கசன். சுக்ராசார்யார் இல்லத்தில் தங்கி ஸஞ்ஜீவனி வித்யையைக் கற்றார். இவர் தேவராஜனுக்குப் புரோஹிதர். அவ்வப்போது அவர் இந்த்ரனுக்குச் செய்த உபதேசங்களைத் தெரிந்து கொள்வதால் மனிதனுக்குப் பல நன்மைகள் ஏற்படும். மஹாபாரதம் சாந்திபர்வத்திலும், அநுசாஸனபர்வத்திலும் வரும் இவர் உபதேசித்த கதைகளைப் படிக்க வேண்டும்.

§ சில இடங்களில் அக்னியின் தேஜஸ் மூலம் தக்ஷரின் பெண்ணான ஸ்வாஹாதேவிக்குப் பிறந்தவர் இவர் என்று கூறப்படுகிறது (மஹாபாரதம் வனபர்வம் 223). இவரைப் பற்றி மஹாபாரதத்திலும், மற்ற புராணங்களிலும் விசித்ரமான பல கதைகள் உள்ளன.

$ இங்கு 'ஸமுத்ரம்' என்ற சொல்லால் பகவான் ஸமுத்ரங்கள் அனைத்தையும் குறிக்கிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** மஹரிஷிகள் பலர். அவர்களின் இலக்கணங்களும், முக்யமான பத்து மஹரிஷிகளின் பெயர்களும் வாயுபுராணத்தில் (59/82,83,89,90) கூறப்படுகின்றன—

ஈஶ்வரா: ஸ்வயமுத்$_3$பூ$_4$தா மானஸா ப்$_3$ரஹ்மண: ஸுதா: ।
யஸ்மாந்ந ஹந்யதே மானைர்மஹாந் பரிக$_3$த: புர: ॥
யஸ்மாத்$_3$ருஷந்தி யே தீ$_4$ரா மஹாந்தம் ஸர்வதோ கு$_3$ணை: ।
தஸ்மாந்மஹர்ஷய: ப்ரோக்தா பு$_3$த்$_3$தே$_4$: பரமத$_3$ர்ஶிந: ॥
ப்$_4$ருகு$_3$ர்மரீசிரத்ரிஶ்ச அங்கி$_3$ரா: புலஹ: க்ரது: ।
மநுர்த$_3$க்ஷோ வஸிஷ்ட$_2$ஶ்ச புலஸ்த்யஶ்சேதி தே த$_3$ஶ ॥
ப்$_3$ரஹ்மணோ மானஸா ஹ்யேத உத்$_3$பூ$_4$தா: ஸ்வயமீஶ்வரா: ।
ப்ரவர்தத ருஷேர்யஸ்மாந் மஹாம்ஸ்தஸ்மாந்மஹர்ஷய: ॥

"அளவிட்டுச் சொல்ல முடியாததும், பெருமையுடயதும், எல்லா இடங்களிலும் வ்யாபித்து (நிறைந்து) இருந்தாலும், அனுபவத்திற்கு விஷயமாவதும் 'மஹாந்' எனப்படுகிறது. புத்தி சக்தியைக் கடந்து சென்று, பகவானை அடைந்த சிறந்த ஞானிகள், அந்த மஹானை (பரமேசுவரனை) எல்லாவிதங்களிலும் ஆச்ரயித்து இருப்பவர்கள் மஹரிஷிகள். ('மஹாந்தம் ருஷந்தி இதி மஹர்ஷய:'). ஆகவே மஹரிஷிகள் எனப்படுவர். இவர்கள் ஐசுவர்யம் உடையவர்களாக (ஸித்திகள் கைவரப் பெற்றவர்களாக) விளங்குபவர்கள்; தாமே தோன்றியவர்கள்; ப்ரம்மாவின் மானஸ புத்ரர்கள்; அவர்கள்தம் பெருமையை அளவிட்டுக் கூற முடியாது. ப்ருகு, மரீசி, அத்ரி, அங்கிரஸ், புலஹர், க்ரது, மநு, தக்ஷர், வஸிஷ்டர், புலஸ்த்யர் என்று பத்து மஹரிஷிகள். இவர்கள் அனைவரும் ப்ரம்மாவின் மனதில் தாமாகவே உதித்தவர்கள். ஈசுவர சக்தி படைத்தவர்கள். ஏனெனில் ரிஷி(ப்ரம்மா)யிடமிருந்து ரிஷிகளின் உருவத்தில் மஹானான பகவானே வெளிப்பட்டார். ஆகவே, இவர்கள் மஹரிஷிகள் எனப்படுவர்."

**கேள்வி:** 'மஹரிஷிகளில் ப்ருகு நான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மஹரிஷிகளில் முக்யமானவர் ப்ருகு.‡ இவர் பகவானுடைய பக்தர், ஞானி, தேஜஸ் மிகுந்தவர். ஆகவே பகவான் இவரைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** 'கிராம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? 'ஏகம் அக்ஷரம்' எது? அது பகவானின் ஸ்வரூபம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பொருளை உணர்த்துவது கீ: (சொல்). பொருள் பொதிந்த சொற்களிலெல்லாம் சிறந்தது ஓம்காரம் (8/13). அதாவது ப்ரணவம். ஓம்காரத்தை 'ஓரெழுத்து' என்பர். அது பகவானின் பெயர் (17/23). ப்ரணவத்தை ஜபிப்பவர் பகவானை அடையலாம். பெயரும், பெயருக்குடையவரும் ஒன்றே. ஆகவே பகவான் ப்ரணவத்தைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

---

‡ ப்ரம்மாவின் மானஸ புத்ரர்களில் ப்ருகு முக்யமானவர். ஸ்வாயம்புவம், சாக்ஷுஷம் முதலிய மன்வந்தரங்களில் இவர் ஸப்தரிஷிகளில் ஒருவராக இருந்தவர். இவருடைய வம்சத்தில் தோன்றிய பலர் ரிஷிகளும், மந்த்ரங்களை இயற்றியவர்களும், கோத்ரத்தை ஆரம்பித்து வைத்தவர்களும் ஆவர். மஹரிஷிகளுக்குள் இவருக்குப் பெருமை அதிகம். இவர் தக்ஷரின் பெண் க்யாதியை மணந்தவர். தாதா, விதாதா என்ற இரு புதல்வர்களும், ஸ்ரீ என்ற ஒரு பெண்ணும் இவர் மூலம் அவர்களுக்குப் பிறந்தார்கள். இந்த ஸ்ரீயே பகவான் நாராயணனை மணந்தாள். ச்யவன ரிஷியும் இவருடைய புத்ரர்தான். இவரது புத்ரர்களான ஜ்யோதிஷ்மான், ஸுக்ருதி, ஹவிஷ்மான், தபோத்ருதி, நிருத்ஸுகர், அதிபாஹு என்பவர்கள் வெவ்வேறு மன்வந்தரங்களில் ஏழு ரிஷிகளில் ப்ரதானமானவர்களாக இருந்திருக்கிறார்கள். இவர்களும் மந்த்ரங்களை இயற்றியவர்கள். இந்த ப்ருகு, பகவான் விஷ்ணுவின் மார்பில் உதைத்து பகவானின் ஸாத்விகப் பொறுமையைச் சோதித்தார். இன்றும்கூட பகவான் இந்த ஸ்ரீவத்ஸம் என்கிற ப்ருகுலதையின் (ப்ருகுவால் உதைக்கப்பட்ட) அடையாளத்தை மார்பில் தாங்குகிறார். ப்ருகு முதலான பத்துப் பேர்களில் மநுவைத் தவிர மற்ற ஒன்பது பேரும் மக்களைப் படைத்தவர்கள். ஆகவே ஒன்பது ப்ரம்மாக்கள் என்று புகழ் பெற்றவர். எல்லாப் புராணங்களிலும் ப்ருகுவைப் பற்றிய செய்தி வருகிறது. இவருடைய கதை விஸ்தாரமாக ஹரிவம்சம், மத்ஸ்ய, சிவ, ப்ரம்மாண்ட, தேவீபாகவத, மார்க்கண்டேய, பத்ம, வாயு புராணங்களிலும், மஹாபாரதத்திலும், ஸ்ரீமத்பாகவதத்திலும் வருகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'எல்லா யக்ஞங்களிலும் நானே ஜபயக்ஞம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஜபம் என்ற யக்ஞத்தில் சிறிதுகூட ஹிம்ஸை இல்லை. அது பகவானை நேரில் கொண்டுவந்து நிறுத்துவது. மனுஸ்ம்ருதியில் கூட ஜபயக்ஞம் மிகச் சிறந்தது என்று கூறப்பட்டிருக்கிறது.‡ ஆகவே, எல்லா யக்ஞங்களைக் காட்டிலும் ஜபயக்ஞம் முக்யமானது. அதை பகவான் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** 'அசையாப் பொருட்களில் இமயமலை நான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உறுதியுடன் நிலைத்திருப்பது ஸ்தாவரம் ஆகும். மலைகளெல்லாம் உறுதியுடன் நிலைத்து நிற்பதால் அவை ஸ்தாவரங்கள். அவை எல்லாவற்றிலும் மிக உயர்ந்தது இமயமலை. அது மிகவும் புனிதமான, தவம் செய்யத்தக்க பூமி. முக்தி பெற உதவும் இடம். பகவான், நரநாராயணர் ஆகியோர் அங்குதான் தவம் செய்தார்கள். இமயம் மலையரசன்கூட. ஆகவே பகவான் இமயத்தைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**अश्वत्थः सर्ववृक्षाणां देवर्षीणां च नारदः।**
**गन्धर्वाणां चित्ररथः सिद्धानां कपिलो मुनिः॥ २६॥**

***அஶ்வத்த$_2$: ஸர்வவ்ருக்ஷாணாம் தே$_3$வர்ஷீணாம் ச நாரத$_3$: ।***

***க$_3$ந்த$_4$ர்வாணாம் சித்ரரத$_2$: ஸித்$_3$த$_4$ாநாம் கபிலோ முநி: ॥ 26 ॥***

**ஸர்வ வ்ருக்ஷாணாம்** – மரங்களனைத்துள்ளும், **அஶ்வத்த$_2$:** – அரச மரமாகவும், **தே$_3$வர்ஷீணாம்** – தேவரிஷிகளுள், **நாரத$_3$:** – நாரதராகவும், **க$_3$ந்த$_4$ர்வாணாம்** – கந்தர்வர்களுள், **சித்ரரத$_2$:** – சித்ரரதன் என்ற கந்தர்வனாகவும், **ஸித்$_3$த$_4$ாநாம்** – ஸித்தர்களுள், **கபில: முநி: ச** – கபில முனிவராகவும், **(அஸ்மி** – இருக்கிறேன்).

மரங்களனைத்துள்ளும் அரச மரமாகவும் தேவரிஷிகளுள் நாரதராகவும் கந்தர்வர்களுள் சித்ரரதன் என்ற கந்தர்வனாகவும் ஸித்தர்களுள் கபில முனிவராகவும் இருக்கிறேன்.

**கேள்வி:** 'மரங்களில் அரசமரம் நான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அரசமரம்§ மரங்களுக்கெல்லாம் அரசன்; பூஜிக்கத்தக்கது. ஆகவே பகவான் அதைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** தேவரிஷி என்று யாரைக் குறிப்பிடுகிறார்? 'அவர்களுள் நாரதர் நான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

---

‡ விதி$_4$யஜ்ஞாஜ்ஜபயஜ்ஞோ விஶிஷ்டோ த$_3$ஶபிர்கு$_3$ணை: ।
உபாம்ஶு: ஸ்யாச்ச$_2$தகு$_3$ண: ஸாஹஸ்ரோ மாநஸ: ஸ்ம்ருத: ॥

(மநு. 2/85)

"வேதங்களில் விதிக்கப்பட்ட ஹோமம் முதலிய யக்ஞங்களைக் காட்டிலும் ஜபயக்ஞம் அதாவது மந்த்ரங்களை வாய்விட்டு ஜபிப்பது பத்து மடங்கு உயர்ந்தது. வெளியே தெரியாமல் உதட்டசைவினால் மட்டும் ஜபம் செய்வது நூறு மடங்கு உயர்ந்தது. மனதிற்குள் ஜபம் செய்வது ஆயிரம் மடங்கு உயர்ந்தது."

§ புராணங்களில் அரசமரத்தின் சிறப்பு வெகுவாகக் கூறப்பட்டுள்ளது:

மூலே விஷ்ணு: ஸ்தி$_2$தோ நித்யம் ஸ்கந்தே$_4$ கேஶவ ஏவ ச ।
நாராயணஸ்து ஶாக$_2$ாஸு பத்ரேஷு ப$_4$க$_3$வாந் ஹரி: ॥
ப$_2$லேऽச்யுதோ ந ஸந்தே$_3$ஹ: ஸர்வதே$_3$வை: ஸமந்வித: ॥
ஸ ஏவ விஷ்ணுர்த்$_3$ரும ஏவ மூர்தோ மஹாத்மபி$_4$ ஸேவிதபுண்யமூல: ।
யஸ்யாஶ்ரய: பாபஸஹஸ்ரஹந்தா ப$_4$வேந்ந்ருணாம் காமது$_3$கே$_4$ா கு$_3$ணாட்$_4$ய: ॥

(ஸ்கந்த$_3$புராணம் – நாக$_3$ரக$_2$ண்ட$_3$ம் 247/41,42,44)

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** தேவரிஷிகளின் இலக்கணங்கள் 12,13வது ச்லோகங்களின் உரைகளில் கூறப்பட்டுள்ளன. அவற்றைப் படித்து அறியலாம். இப்படிப்பட்ட தேவரிஷிகளில் நாரதர் மிகச் சிறந்தவர். அவர் பகவானுடைய அநன்ய பக்தர், ஞானி. மந்த்ர சாஸ்த்ரத்தில் தேர்ச்சி பெற்றவர். ஆகவே, பகவான் அவரைத் தம் ஸ்வரூபம் என்கிறார். நாரதரைப் பற்றி 12,13வது ச்லோக அடிக்குறிப்புகளிலிருந்தும் தெரிந்து கொள்ளலாம்.

**கேள்வி:** சித்ரரத கந்தர்வனைத் தம் ஸ்வரூபம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கந்தர்வர் என்பவர் தேவப்பிறவிகளில் ஒரு பிரிவினர். இவர்கள் தேவலோகத்தில் பாடுபவர்கள். வாத்யங்கள் வாசிப்பவர்கள். நாட்டியம், அபிநயம் புரிபவர்கள். ஸ்வர்க லோகத்திலேயே மிகவும் அழகானவர்கள். கவர்ச்சி மிக்கவர்கள். குஹ்யக லோகத்திற்கு மேலே வித்யாதர லோகத்திற்குக் கீழே இந்த கந்தர்வலோகம் உள்ளது. தேவர்கள், பித்ருக்களைப்போலவே இவர்களும் மனித கந்தர்வர்கள், தேவ கந்தர்வர்கள் என இருவகைப்படுவர். மனிதர்களில் புண்யம் செய்து இறந்தவர்களில் சிலர் கந்தர்வ லோகத்தை அடைவார்கள். அவர்கள் மனித கந்தர்வர்கள். கல்பத்தின் ஆரம்பம் முதலே கந்தர்வர்களாக இருப்பவர்கள் தேவ கந்தர்வர்கள். இந்த தேவ கந்தர்வர்கள் இரு வகைப்படுவர். கச்யபரின் மனைவி முனி என்பவளுக்குப் பிறந்தவர் மௌனேயர். மற்றொரு மனைவி ப்ராதாவுக்குப் பிறந்தவர்கள் ப்ராதேயர்கள். இவர்களிடமிருந்துதான் பெரும்பான்மையான அப்ஸரஸ்களும், கந்தர்வர்களும் உண்டானார்கள். பீமஸேனன், உக்ரஸேனன், ஸுபர்ணன், வருணன், கோபதி, த்ருதராஷ்ட்ரன், ஸூரியவர்ச்சஸ், ஸத்யவாக், அர்க்கபர்ணன், ப்ரயுதன், பீமன், சித்ரரதன், ஶாலிஶிரஸ், பர்ஜந்யன், கலி, நாரதன் என்ற பதினாறு தேவகந்தர்வர்கள் மௌனேயர்கள். ஸித்தன், பூர்ணன், பர்ஹிஸ், பூர்ணாயுஸ், ப்ரம்மசாரீ, ரதிகுணன், ஸுபர்ணன், விச்வாவஸு, ஸுசந்த்ரன், பானு, அதிபாஹு, ஹாஹா, ஹூஹூ, தும்புரு இந்தப் பதினான்கு பேர்களும் ப்ராதேயர்கள் (மஹாபாரதம் ஆதிபர்வம் 65). இவர்களில் ஹாஹா, ஹூஹூ, விச்வாவஸு, தும்புரு, சித்ரரதன் ஆகியவர்கள் முக்யமானவர்கள். இவர்களுக்கு அதிபதி சித்ரரதன். அவன் தெய்விக ஸங்கீதத்தில் கரை கண்டவன். மிகவும் தேர்ச்சி பெற்றவன். ஆகவே, அவனை பகவான் தம் ஸ்வரூபம் என்கிறார். இவர்களுடைய சரிதம், அக்னி புராணம், மார்க்கண்டேய புராணம், வாயுபுராணம், மஹாபாரதம் - ஆதி பர்வம் ஆகியவற்றில் காணப்படுகின்றது.

**கேள்வி:** ஸித்தர்கள் யார்? பகவான் எல்லா ஸித்தர்களிலும் கபில முனிவரைத் தம் ஸ்வரூபம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கண்ணிற்குப் புலப்படும் பௌதிக உலகின் மற்றும் கண்ணிற்குப் புலப்படாததான உலகின் எல்லா ஸித்திகளையும் அடையப் பெற்றவர்கள்; தர்மம், ஞானம், ஐசுவர்யம், வைராக்யம் முதலிய நற்பண்புகளை முழுமையாகப் பெற்றவர்கள் இவர்களே ஸித்தர்கள். இப்படி ஆயிரக்கணக்கானவர்கள் உண்டு. அவர்கள் அனைவரிலும் முக்யமானவர் கபிலர். அவர் பகவானுடைய அவதாரம். கர்தமர் என்ற மஹாயோகியின் மனைவி தேவஹூதிக்கு ஞானத்தை உபதேசிப்பதற்காகவே அவர்களுக்குக் குமாரனாகப் பிறந்தவர். அவர் அவதரித்தபோது ப்ரம்மா நேரில் அந்த ஆசிரமத்திற்கு வந்து தேவஹூதியிடம் சொன்னார்:

---

"அரசமரத்தின் வேரில் விஷ்ணு, அடி மரத்தில் கேசவன், கிளைகளில் நாராயணன், இலைகளில் ஹரி, பழங்களில் எல்லா தேவதைகளுடன்கூடிய அச்யுதன் எப்பொழுதும் வஸிக்கிறார்கள். இதில் ஐயமில்லை. இந்த மரத்தின் உருவிலே ஶ்ரீவிஷ்ணு விளங்குகிறார். மஹாத்மாக்கள் அதன் அடியை புண்யஸ்தலம் என்று அடைகிறார்கள். அது ஆயிரம் பாவங்களைப் போக்கும். மனிதர்களின் எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றும்."

தவிர வைத்ய நூல்களில் அரசமரத்தின் சிறப்பு மேலும் கூறப்பட்டிருக்கிறது. அதன் இலைகள், பழங்கள், பட்டைகள் எல்லாமே நோய் நீக்கும் தன்மை பெற்றவை. ரத்தத்தில் ஏற்படும் விகாரங்கள், கபம், வாதம், பித்தம், எரிச்சல், வாந்தி, சோகை, ருசியின்மை, விஷக்கடி, இருமல், விஷ ஜுரம், விக்கல், மார்புவலி, மூக்கு அரிப்பு, பேதி, புழுக்கடி, குஷ்டம், தோல்புண் முதலிய பல நோய்களுக்கும் மருந்தாகின்றன.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அயம் ஸித்₃த₄க₃ணாதீ₄ஶ: ஸாங்க்₂யாசார்யை: ஸுஸம்மத: ।
லோகே கபில இத்யாக்₂யாம் க₃ந்தா தே கீர்திவர்த₄ந: ॥

(ஸ்ரீமத்₃பா₄க₃வதம் 3/24/19)

“இவர் ஸித்தர் கூட்டத்திற்குத் தலைவர். ஸாங்க்ய சாஸ்த்ரக்காரர்கள் இவரைக் கொண்டாடுவார்கள். உலகில் ‘கபிலர்’ என்ற பெயரால் அழைக்கப்பட்டு, உன்னுடைய புகழை வளர்ப்பவராக விளங்குவார்.”

இவர் இயல்பாகவே என்றும் அழியாத ஞானம், ஐசுவர்யம், தர்மம், வைராக்யம் முதலிய நற்பண்புகள் அமைந்தவர். இவருக்கு ஒப்பாரும் மிக்காரும் இலர். ஆகவே பகவான் இவரைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**उच्चैःश्रवसमश्वानां विद्धि माममृतोद्भवम्।**
**ऐरावतं गजेन्द्राणां नराणां च नराधिपम्॥ २७॥**

**உச்சை:ஶ்ரவஸமஶ்வாநாம் வித்₃தி₄ மாமம்ருதோத்₃ப₄வம் ।**
**ஐராவதம் க₃ஜேந்த்₃ராணாம் நராணாம் ச நராதி₄பம் ॥ 27 ॥**

**அஶ்வாநாம்** – குதிரைகளுள், **அம்ருத உத்₃ப₄வம்** – அமுதத்துடன் தோன்றிய, **உச்சை:ஶ்ரவஸம்** – உச்சைஶ்ரவஸ் என்ற குதிரையாகவும், **க₃ஜேந்த்₃ராணாம்** – யானைகளுள், **ஐராவதம்** – ஐராவதம் என்ற யானையாகவும், **நராணாம்** – மனிதர்களுள், **நராதி₄பம் ச** – அரசனாகவும், **மாம்** – என்னை, **வித்₃தி₄** – அறிந்துகொள்.

குதிரைகளுள் அமுதத்துடன் தோன்றிய உச்சைஶ்ரவஸ் என்ற குதிரையாகவும், யானைகளுள் ஐராவதம் என்ற யானையாகவும், மனிதர்களுள் அரசனாகவும் என்னை அறிந்துகொள்.

**கேள்வி:** ‘குதிரைகளில் உச்சை:ஶ்ரவஸ் நான்’ என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அமுதத்திற்காகப் பாற்கடலைக் கடைந்தபோது அமுதத்துடன் கூட வெளிப்பட்டது ‘உச்சை:ஶ்ரவஸ்’ என்ற குதிரை. ஆகவே, இது பதினான்கு ரத்னங்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது. குதிரைகளில் மிகச் சிறந்தது. பகவான் இதைத் தம் ஸ்வரூபம் என்று கூறுகிறார்.

**கேள்வி:** ‘யானைகளில் நான் ஐராவதம்’ என்று பகவான் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** யானைகளில் சிறந்ததை கஜேந்த்ரன் என்பர். இந்த யானைகளிலும் சிறந்தது ஐராவதம். இந்த்ரனின் வாஹனம். யானைகளுக்கு அரசன். இதுவும் உச்சை:ஶ்ரவஸைப் போல அமுதத்துடன் கூடத் தோன்றியதுதான். ஆகவே பகவான் இதைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** ‘மனிதர்களுள் அரசனைத் தம் ஸ்வரூபம்’ என்று பகவான் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட இலக்கணங்களோடு, தர்மத்தில் நிலைபெற்ற அரசன் ப்ரஜைகளைப் பாவங்களிலிருந்து மீட்டு அற வழியில் நடத்திச் செல்வான். எல்லோரையும் காப்பாற்றுவான். ஆகவே, மற்ற மனிதர்களைக் காட்டிலும் அரசன் சிறந்தவன். இத்தகைய அரசனிடம் பகவானுடைய சக்தி ஸாதாரண மனிதர்களிடம் இருப்பதைக் காட்டிலும் அதிகம் இருக்கும். ஆகவே, அரசனை பகவான் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** இங்கு நராதிபன் என்ற சொல்லுக்கு அரசன் என்று பொருள் கொள்ளாமல் மன்வந்தரங்களுக்கு அதிபதியான மனு என்று பொருள் கொண்டால் என்ன தவறு?

‘மநுஷ்யாணாமதி₄பதிம் சக்ரே வைவஸ்வதம் மநும் ।’ (வாயுபுராணம் 70/18)

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



(இந்த மன்வந்தரத்தில் ப்ரஜாபதி வைவஸ்வத மனுவை மனிதர்களுக்கு அதிபதியாக நியமித்திருக்கிறார்.) என்ற சான்று காணப்படுவதால், அவர்தம் காலத்திய மனிதர்களுக்கெல்லாம் அரசரான மனுவை நராதிபன் என்று கருதலாமா?

**பதில்:** இப்படிக் கருதுவதில் தவறு ஒன்றுமில்லை. வைவஸ்வத மனுவும் நராதிபர் என்று அழைக்கப்படலாம்.

**आयुधानामहं वज्रं धेनूनामस्मि कामधुक्।**
**प्रजनश्चास्मि कन्दर्पः सर्पाणामस्मि वासुकिः॥ २८॥**

**ஆயுத₄ாநாமஹம் வஜ்ரம் தே₄நூநாமஸ்மி காமது₄க் ।**

**ப்ரஜநஶ்சாஸ்மி கந்த₃ர்ப: ஸர்பாணாமஸ்மி வாஸுகி: ॥ 28 ॥**

**அஹம்** – நான், **ஆயுத₄ாநாம்** – ஆயுதங்களுள், **வஜ்ரம்** – வஜ்ராயுதமாகவும், **தே₄நூநாம்** – பசுக்களுள், **காமது₄க்** – காமதேனுவாகவும், **அஸ்மி** – உள்ளேன். **ப்ரஜந:** – சாஸ்த்ர முறையில் மகப்பேற்றுக்குக் காரணமான, **கந்த₃ர்ப:** – மன்மதனாக, **அஸ்மி** – இருக்கிறேன். **ஸர்பாணாம்** – ஸர்ப்பங்களுள், **வாஸுகி: ச** – ஸர்ப்பராஜனான வாஸுகியாகவும், **அஸ்மி** – இருக்கிறேன்.

நான் ஆயுதங்களுள் வஜ்ராயுதமாகவும் பசுக்களுள் காமதேனுவாகவும் உள்ளேன். சாஸ்த்ர முறையில் மகப்பேற்றுக்குக் காரணமான மன்மதனாக இருக்கிறேன். ஸர்ப்பங்களுள் ஸர்ப்பராஜனான வாஸுகியாகவும் இருக்கிறேன்.

**கேள்வி:** 'ஆயுதங்களில் நான் வஜ்ராயுதம்' என்று பகவான் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஆயுதங்கள் அனைத்திலும் வஜ்ராயுதம் மிகச் சிறந்தது. ஏனெனில் வஜ்ராயுதத்தில் ததீசி முனிவரின் தவமும், பகவானுடைய தேஜஸ்ஸு᳚ம் சேர்ந்திருக்கின்றன. அது வீணாகாத ஆற்றல் படைத்தது (ஸ்ரீமத்பாகவதம் 6/11/19,20). ஆகவே, பகவான் வஜ்ராயுதத்தைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** 'பால் தரும் பசுக்களில் நான் காமதேனு' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பசுக்களில் சிறந்தது காமதேனு; தெய்விகமானது. தேவதைகள், மனிதர்கள் ஆகிய எல்லோருடைய விருப்பங்களையும் அது நிறைவேற்றக் கூடியது. இதுவும் பாற்கடலைக் கடைந்தபோது வெளிப்பட்டது. ஆகவே, இதை பகவான் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** மன்மதனுக்கு 'ப்ரஜந:' என்ற அடைமொழி சேர்த்துக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'கந்தர்பன்' என்றால் மன்மதன். 'தர்மத்திற்கு அனுகூலமாக மகப்பேற்றுக்கு உதவுகின்ற அந்தக் காமன் என்னுடைய விபூதி' என்கிறார் பகவான். 'நான் தர்மத்திற்கு விரோதமில்லாத காமம்' (7/11) என்று முன்பே மொழிந்திருக்கிறார். மனிதன் கேவலம் சிற்றின்பத்திற்காக மட்டும் உடலுறவை விரும்பும் காமம் தர்மத்திற்கு அனுகூலமானதன்று; விரோதமானது. ஆனால் சாஸ்த்ர விதிப்படி குலம் தழைப்பதற்காகவும், குல தர்மத்தைக் காப்பதற்காகவும் புலன்களை வென்ற மனிதன் ஏற்கும் காமம் ந்யாயமானதுதான், சிறந்ததுதான். ஆகவே, அது பகவானுடைய விபூதிகளில் ஒன்று என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'ஸர்ப்பங்களில் நான் வாஸுகி' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** வாஸுகி ஊரும் ப்ராணிகளுக்கு அரசராகவும், பகவானுடைய பக்தராகவும் இருப்பதால் ஸர்ப்பங்களுள் சிறந்தவராகக் கருதப்படுகிறார். ஆகவே, அவரை பகவான் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**अनन्तश्चास्मि नागानां वरुणो यादसामहम्।**
**पितृणामर्यमा चास्मि यमः संयमतामहम्॥ २९॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அநந்தஶ்சாஸ்மி நாகா₃நாம் வருணோ யாத₃ஸாமஹம் ।**
**பித்ரூணாமர்யமா சாஸ்மி யம: ஸம்யமதாமஹம் ॥ 29 ॥**

**அஹம்** – நான், **நாகா₃நாம்** – நாகங்களுள், **அநந்த:** – ஆதிசேஷனாகவும், **யாத₃ஸாம்** – நீர் வாழ்வனவற்றிற்கும், ஜலதேவதைகளுக்கும் தலைவனான, **வருண: ச** – வருணனாகவும், **அஸ்மி** – இருக்கிறேன். **பித்ரூணாம்** – பித்ரு தேவதைகளுள், **அர்யமா** – அர்யமா என்ற பித்ரு தேவதையாகவும், **ஸம்யமதாம்** – அடக்கி ஆள்பவர்களுள், **யம: ச** – யமனாகவும், **அஹம்** – நான், **அஸ்மி** – இருக்கிறேன்.

நான் நாகங்களுள் ஆதிசேஷனாகவும், நீர் வாழ்வனவற்றிற்கும், ஜலதேவதைகளுக்கும் தலைவனான வருணனாகவும் இருக்கிறேன். பித்ரு தேவதைகளுள் அர்யமா என்ற பித்ரு தேவதையாகவும், அடக்கி ஆள்பவர்களுள் யமனாகவும் இருக்கிறேன்.

**கேள்வி:** *நாகங்களில் ஆதிசேஷன் என்ற நாகத்தைத் தம் ஸ்வரூபம் என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** ஆதிசேஷன் எல்லா நாகங்களுக்கும் அரசர். ஆயிரம் தலை படைத்தவர். பகவானுக்குப் படுக்கையாக ஆகி, அவருக்கு ஸேவை செய்து ஸுகம் அளிப்பவர். அவரை அநன்ய பக்தராக பகவான் ஏற்றுத் தம்முடைய லீலாவதாரங்களின்போது தம்முடன் சேர்ந்து தம்முடைய அவதார லீலைகளில் பங்கு கொள்ள வைத்திருக்கிறார். அவர் பகவானிடமே தோன்றினார் என்றும் கருதப்படுகிறது.‡ ஆகவே சேஷனை பகவான் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** *நீர்வாழ்வனவற்றின் தலைவரான வருணனைத் தம் ஸ்வரூபம் என்று பகவான் கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** வருணன் லோகபாலகரும், தேவதையும் ஆவார். அவர் அனைத்து நீர்வாழ்வனவற்றிற்கும், ஜலதேவதைகளுக்கும் அரசர். பகவானுடைய பக்தர். ஆகவே உயர்ந்தவர். இதனால் வருணனைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** *பித்ருக்களில் அர்யமாவைத் தம் ஸ்வரூபம் என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** கவ்யவாஹன், அநலன், ஸோமன், யமன், அர்யமா, அக்னிஷ்வாத்தன், பர்ஹிஷத் என்று ஏழு பித்ருகணங்கள் உள்ளன.§ இவர்களுள் அர்யமா என்பவர் எல்லா பித்ருக்களிலும் முக்யமானவர், சிறந்தவர். இதனால் பகவான் அவரைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** *அடக்கியாள்பவர்களிடையே யமனைத் தம் ஸ்வரூபம் என்று கூறுவதன் கருத்து என்ன?*

---

‡ **ஶேஷம் சாகல்பயத்₃தே₃வமநந்தம் விஶ்வரூபிணம் ।**
**யோ த₄ாரயதி பூ₄தாநி த₄ராம் சேமாம் ஸபர்வதாம் ॥**
(மஹா. பீ₄ஷ்ம. 67/13)

"இந்த பரமபுருஷன் உலகமாக விரிந்த அநந்தன் என்ற தேவ வடிவம் பெற்ற ஆதிசேஷன் என்ற நாகத்தைப் படைத்தார். அவர் பர்வதங்களோடுகூடிய இந்த பூமியையும், ப்ராணிகளையும் தாங்குகிறார்"

§ **கவ்யவாஹோऽநல: ஸோமோ யமஶ்சைவார்யமா தத₂ா ।**
**அக்₃நிஷ்வாத்தா ப₃ர்ஹிஷத₃ஸ்த்ரயஶ்சாந்த்யா ஹ்யமூர்தய: ॥**
(ஶிவபுராணம் த₄ர்ம. 63/2)

சில இடங்களில் இவர்களுக்கு வேறு பெயர்கள் கூறப்படுகின்றன. ஹரிவம்ஶத்தில் ஸுகாலர், ஆங்கிரஸ், ஸுஸ்வதா, ஸோமபர், வைராஜர், அக்னிஷ்வாத்தர், பர்ஹிஷத் (பூர்வ. அ. 18) என்ற பித்ருக்களின் பெயர்கள் காணப்படுகின்றன. வெவ்வேறு மன்வந்தரங்களில் இப்பெயர்மாற்றம் ஏற்படக் கூடியதே.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** மனித, தேவ உலகங்களில் உள்ள அடக்கி ஆளும் அதிகாரிகளுக்கெல்லாம் தலைவர் யமதர்மராஜன். அவர் அளிக்கும் தண்டனை ந்யாயமாகவும், தர்மமாகவும், நன்மை செய்வதாகவும், பாவத்தைப் போக்குவதாகவும் இருக்கும். இவர் லோகபாலகர். ஞானியான பக்தர். ஆகவே பகவான் இவரைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.‡

**प्रह्लादश्चास्मि दैत्यानां कालः कलयतामहम्।**
**मृगाणां च मृगेन्द्रोऽहं वैनतेयश्च पक्षिणाम्॥ ३०॥**

**ப்ரஹ்லாத₃ஶ்சாஸ்மி தைத்₃யாநாம் கால: கலயதாமஹம் ।**

**ம்ருக₃ாணாம் ச ம்ருகே₃ந்த்₃ரோऽஹம் வைநதேயஶ்ச பக்ஷிணாம் ॥ 30 ॥**

**அஹம்** – நான், **தைத்₃யாநாம்** – தைத்யர்களுள், **ப்ரஹ்லாத₃: ச** – ப்ரஹ்லாதனாகவும், **கலயதாம்** – காலம் கணிப்பவர்களுள், **கால:** – காலமாகவும், **அஸ்மி** – இருக்கிறேன். **அஹம்** – நான், **ம்ருக₃ாணாம்** – விலங்குகளுள், **ம்ருகே₃ந்த்₃ர: ச** – சிங்கமாகவும், **பக்ஷிணாம்** – பறவைகளுள், **வைநதேய: ச** – கருடனாகவும், **(அஸ்மி** – இருக்கிறேன்).

நான் தைத்யர்களுள் ப்ரஹ்லாதனாகவும், காலம் கணிப்பவர்களுள் காலமாகவும், விலங்குகளுள் சிங்கமாகவும், பறவைகளுள் கருடனாகவும் இருக்கிறேன்.

**கேள்வி:** 'அஸுரர்களில் ப்ரஹ்லாதன் நான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** திதியின் வம்சத்தில் பிறந்தவர்கள் தைத்யர்கள் என்ற அஸுரர்கள். அவர்களில் சிறந்தவர் ப்ரஹ்லாதன். நற்பண்புகள் அனைத்தும் படைத்தவர், தர்மாத்மா. பகவானிடம் முழு நம்பிக்கை வைத்தவர், பற்றற்றவர், அநன்ய பக்தர், தைத்யர்களின் அரசர். ஆகவே, பகவான் அவரைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** இங்கு 'காலம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? அதைத் தம் ஸ்வரூபம் என்று பகவான் கூறுவதன் கருத்து என்ன?

---

‡ யமராஜனுடைய அவையில் எவருக்கும் எக்காரணத்தைக் கொண்டும் பக்ஷபாதம் கிடையாது. எந்தவிதமான பரிந்துரையோ, லஞ்சமோ, புகழ்ச்சியோ செல்லுபடியாகாது. அங்கு விதிமுறைகள் மிகவும் கடினமானவை. எந்த அந்தஸ்திற்கும் சலுகை கிடையாது. ஆகவே, அவர் அடக்கி ஆள்பவர்களில் சிறந்தவர். இந்த்ரன், அக்னி, நிர்ருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், ப்ரம்மா, அநந்தன், யமன் என்று பத்து திக்பாலகர்கள் உளர் (ப்ருஹத்தர்மபுராணம் உத்தர. 9). இவர்கள் அகில உலகத் தொகுப்பின் திசைகளனைத்துக்கும் காப்பாளர்கள்.

புண்யாத்மாக்களான ஜீவர்களுக்கு இந்த யமராஜன் இனிய வடிவினராகத் தென்படுவார். ஆனால் பாவிகளுக்குச் சிவந்த கண்களும், கொடிய குரலும், மின்னலைப்போலத் துடிக்கும் நாக்கும், குத்திட்டு நிற்கும் முடிகளும் கொண்டவராக மிகவும் பயங்கரமான, கன்னங்கரேலென்ற உருவத்துடன் கையில் காலதண்டத்துடன் தென்படுவார் (ஸ்கந்தபுராணம் காசிகண்ட பூர்வ. 8/55,56).

இவர் சிறந்த ஞானி. நசிகேதஸ்ஸுக்கு இவர் ஞானம் புகட்டினார் கடோபநிஷத், மஹாபாரதம் அனுசாஸன பர்வம், வராஹபுராணம் இவற்றில் நசிகேதஸ்ஸின் கதை வருகிறது. மிகவும் பெரிய பக்தர். ஸ்ரீமத்பாகவதம் 6/3லும், விஷ்ணுபுராணம் 3/7லும், ஸ்காந்தம், காசிகண்டம் முன்பகுதி அத்யாயம் 8லும், இவர் தம் தூதர்களுக்கு பகவானைப் பற்றியும், பகவந்நாமத்தின் பெருமையைப் பற்றியும் சொல்லி இருக்கிறார். அவசியம் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டியது.

ஆனால் சிற்சில சமயங்களில் இவரையும் விஞ்சி நன்மை செய்பவர்கள் உண்டு. ஸ்கந்தபுராணத்தில் ஒரு கதை. கீர்த்திமான் என்ற சக்ரவர்த்தி பக்தியுள்ளவன். மக்களுக்கு நல்லுபதேசம் செய்து மக்களை நன்னடத்தையிலும், பக்தியிலும் சிறந்தவர்களாக்கிவிட்டான். அந்தப் புண்யத்தினால் அவன் நாட்டில் இருந்த ஜீவர்கள் அனைவரும் நற்கதி பெற்றார்கள். இறந்தவர்கள், உள்ளவர்கள் அனைவரும் பரமாத்மாவை அடைந்தனர். இதனால் புதிய ஜீவர்கள் யமலோகம் போவதே இல்லை. யமலோகம் வேலையற்றுப் போய்விட்டது. யமன் சென்று ப்ரம்மாவிடம் முறையிட்டார். அவர் விஷ்ணுவிடம் அனுப்பினார். ஸ்ரீபகவான் விஷ்ணு சொன்னார்: 'தர்மாத்மாவான கீர்த்திமானுடைய அரசு உள்ளவரை இப்படித்தான் நடக்கும். ஆனால் உலகம் இப்படியே போய்விடாது.' (ஸ்கந்த புராணம், விஷ்ணு. வை. 11/12/13).

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** கணம், நொடி, நாழிகை, மணி, பகல், பக்ஷம், மாதம் முதலிய பெயர்களில் கூறப்படும் நேரத்தைக் குறிக்கிறது 'காலம்' என்ற சொல். கணித வித்யைக்கு ஆதாரமானது. ஆகவே, பகவான் தம்மைக் 'காலம்' என்று கூறிக் கொள்கிறார்.

**கேள்வி:** சிங்கம் கொடிய விலங்கல்லவா! அதைத் தம் விபூதிகளில் ஒன்றாகக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** சிங்கம் விலங்குகளுக்கெல்லாம் அரசன்; மிகுந்த வலிமை படைத்தது; ஆற்றல் மிக்கது; துணிச்சல் நிறைந்தது. ஆகவே, பகவான் அதைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** பறவைகளுள் கருடன் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** விநதையின் குமாரரான கருடன் பறவைகளுக்கெல்லாம் அரசர்; பறவைகளனைத்திலும் உயர்ந்தவர். பகவானுடைய வாஹனம். பகவானுடைய பக்தர். மிகவும் பராக்ரமம் படைத்தவர். ஆகவே, பகவான் கருடனைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**पवनः पवतामस्मि रामः शस्त्रभृतामहम्।**
**झषाणां मकरश्चास्मि स्त्रोतसामस्मि जाह्नवी॥ ३१॥**

**பவந: பவதாமஸ்மி ராம: ஶஸ்த்ரப்₄ருதாமஹம் ।**

**ஜஷாணாம் மகரஶ்சாஸ்மி ஸ்ரோதஸாமஸ்மி ஜாந்ஹவீ ॥ 31 ॥**

**அஹம்** – நான், **பவதாம்** – தூய்மைப்படுத்துபவைகளுள், **பவந:** – காற்றாகவும், **ஶஸ்த்ர ப்₄ருதாம்** – ஆயுதம் தாங்கியவர்களுள், **ராம:** – ஸ்ரீராமபிரானாகவும், **அஸ்மி** – இருக்கிறேன். **ஜஷாணாம்** – மீன் இனங்களுள், **மகர:** – முதலையாகவும், **அஸ்மி** – இருக்கிறேன். **ஸ்ரோதஸாம்** – நதிகளுள், **ஜாந்ஹவீ ச** – பாகீரதியான கங்கையாகவும், **அஸ்மி** – இருக்கிறேன்.

நான் தூய்மைப்படுத்துபவைகளுள் காற்றாகவும், ஆயுதம் தாங்கியவர்களுள் ஸ்ரீராமபிரானாகவும் இருக்கிறேன். மீன் இனங்களுள் முதலையாகவும், நதிகளுள் பாகீரதியான கங்கையாகவும் இருக்கிறேன்.

**கேள்வி:** 'பவதாம்' என்ற சொல்லுக்கு வேகமுடையது என்று பொருள் கூறினால் என்ன தவறு?

**பதில்:** இலக்கணப்படி 'பவதாம்' என்ற சொல்லுக்கு வேகம் என்ற பொருள் கிடைக்காது. ஆயினும் சில உரையாசிரியர்கள் அப்படி உரை கூறுகிறார்கள். அப்படியும் சொல்லலாம். வேகமாகச் செல்பவைகளிலும், தூய்மைப்படுத்துபவைகளிலும் வாயுதான் சிறந்தது. ஆகவே இருவகைகளிலும் சிறப்புண்டு.

**கேள்வி:** இங்கு 'ராமன்' என்று யாரைக் குறிப்பிடுகிறார்? அவரைத் தம் ஸ்வரூபம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கே 'ராம' என்ற சொல் தசரத குமாரனான ஸ்ரீராமனைத்தான் குறிக்கிறது. பகவான் வெவ்வேறு யுகங்களில் வெவ்வேறு லீலைகள் புரிவதற்காக வெவ்வேறு அவதாரங்களை எடுக்கிறார். 'ஸ்ரீராமபிரானுக்கும், எனக்கும் வேற்றுமையே கிடையாது. நானே ஸ்ரீராமபிரானாக அவதரித்தேன்' என்கிறார்.

**கேள்வி:** மீன்களில் முதலையைத் தம் விபூதி என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அனைத்துவிதமான மீன்களிலும் முதலை மிகப் பெரியது, பலம் மிக்கது. இந்தப் பெருமையின் காரணமாக, பகவான் 'மீன்களில் நான் முதலை' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'நதிகளில் நான் கங்கை' என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பதில்: ஜந்ஹு முனிவரின் காதிலிருந்து வெளி வந்ததால் 'ஜாந்ஹவி' என்றும், பகீரதன் அழைத்து வந்ததால் 'பாகீரதீ' என்றும் புகழ்பெற்ற கங்கை நதிகளில் சிறந்தது. ஸ்ரீபகவானுடைய சரணதீர்த்தத்திலிருந்து தோன்றியது. மிகவும் பரிசுத்தமானது.‡ புராணங்களிலும், இதிஹாஸங்களிலும் கங்கையின் பெருமை விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

மேலும் ஒரு சமயம் பகவான் தாமே நீராகப் பெருகி ப்ரம்மாவினுடைய கமண்டலத்தில் கங்கையாக நிறைந்தார். ஆகையால் கங்கை என்பது ப்ரம்மத்தின் ஸ்வரூபம். அதன் பெருமை அளவற்றது.§ ஆகவே, பகவான் கங்கையைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**सर्गाणामादिरन्तश्च मध्यं चैवाहमर्जुन ।**
**अध्यात्मविद्या विद्यानां वादः प्रवदतामहम् ॥ ३२ ॥**

**ஸர்க₃ாணாமாதி₃ரந்தஶ்ச மத்₄யம் சைவாஹமர்ஜுந ।**
**அத்₄யாத்மவித்₃யா வித்₃யாநாம் வாத₃: ப்ரவத₃தாமஹம் ॥ 32 ॥**

**அர்ஜுந** – அர்ஜுன! **ஸர்க₃ாணாம்** – படைப்புகளின், **ஆதி₃:** – ஆரம்பமாகவும், **அந்த: ச** – முடிவாகவும், **மத்₄யம் ச** – நடுவாகவும், **அஹம் ஏவ** – நான்தான் (இருக்கிறேன்). **வித்₃யாநாம்** – வித்யைகளுள், **அத்₄யாத்மவித்₃யா** – ஆத்ம வித்யையாகவும் அதாவது ப்ரஹ்ம வித்யையாகவும், **ப்ரவத₃தாம்** – (ஒருவரோடு ஒருவர்) தர்க்கம் செய்பவர்களுடைய, **வாத₃:** – தத்வத்தைத் தீர்மானம் செய்ய உதவும் வாதமாகவும், **அஹம்** – நானே, **(அஸ்மி** – இருக்கிறேன்).

அர்ஜுன! படைப்புகளின் ஆரம்பமாகவும், முடிவாகவும், நடுவாகவும், நான்தான் இருக்கிறேன். வித்யைகளுள் ஆத்ம வித்யையாகவும் (ப்ரஹ்ம வித்யையாகவும்), தர்க்கம் செய்பவர்களுடைய தத்வத்தைத் தீர்மானம் செய்ய உதவும் வாதமாகவும் நானே இருக்கிறேன்.

---

‡ த₄ாது: கமண்ட₃லுஜலம் தது₃ருக்ரமஸ்ய பாத₃ாவநேஜநபவித்ரதயா நரேந்த்₃ர ।
ஸ்வர்து₄ந்யபூ₄ந்நப₄ஸி ஸா பததீ நிமார்ஷ்டி லோகத்ரயம் ப₄க₃வதோ விஶதே₃வ கீர்தி: ॥
(ஸ்ரீமத்₃பா₄க₃வதம் 8/21/4)

"அரசே! அது ப்ரம்மாவின் கமண்டலத்தில் இருந்த தீர்த்தம். அவர் பகவானுடைய சரணங்களுக்கு அபிஷேகம் செய்தார். அதனால் அது மிகவும் பரிசுத்தமானது. மற்றவற்றைப் பரிசுத்தமாக்கும் தன்மையும் பெற்றது. ஸ்வர்கத்தில் பெருகியபோது ஸ்வர்க கங்கா (மந்தாகினி) என்ற பெயர் பெற்றது. பகவானுடைய புகழைப்போல ஆகாயத்திலிருந்து பூமியில் விழுந்து இன்றும் மூவுலகங்களையும் பரிசுத்தப்படுத்துகிறது."

ந ஹ்யேதத்பரமாஶ்சர்யம் ஸ்வர்து₄ந்யா யதி₃ஹோதி₃தம் ।
அநந்தசரணாம்போ₄ஜப்ரஸூதாயா ப₄வச்சி₂த₃: ॥
ஸந்நிவேஶ்ய மநோ யஸ்மிஞ்ச்₂ரத்₃த₄யா முநயோऽமலா: ।
த்ரைகு₃ண்யம் து₃ஸ்த்யஜம் ஹித்வா ஸத்₃யோ யாதாஸ்தத₃ாத்மதாம் ॥
(ஸ்ரீமத்₃பா₄க₃வதம் 9/9/14,15)

"அநந்தனான பகவானுடைய சரண கமலங்களில் ச்ரத்தையுடன் கூடிய மனதை நிலைக்க வைத்துவிட்ட முனிவர்கள் விரைவிலேயே முக்குணமயமான ப்ரபஞ்சத்தை உதறிவிட்டு, பகவானுடைய ஸ்வரூபத்தை அடைகிறார்கள் என்றால், அந்த பகவானுடைய சரணங்களில் உதித்து, ஸம்ஸார பந்தத்தை அறுத்தெறியும் கங்கையின் பெருமை இங்கே கூறப்படுவதில் ஆச்சர்யப்படத் தேவையில்லை."

§ உலகத்தாயான தாக்ஷாயணி ஸதீ தன் உடலை த்யாகம் செய்தவுடன் பரமேசுவரன் தவத்தில் அமர்ந்தார். அப்போது தேவதைகள் ஜகன்மாதாவைத் துதித்தனர். அவள் வெளிப்பட்டாள். நீங்கள் மறுபடியும் ஸ்ரீசங்கரரை மணம் புரியவேண்டும் என்று வேண்டினர். தேவி– 'நான் இரண்டு வடிவங்களில் ஸுமேருவின் பெண்ணான மேனை தேவியின் கர்பத்தில் மலையரசன் ஹிமவானின் வீட்டில் பிறப்பேன்' என்றாள் முதலில் அவள் கங்கை வடிவத்தில் வெளிப்பட்டாள். தேவர்கள் அவளைத் துதித்து, அவளை தேவலோகத்திற்கு அழைத்துச் சென்றார்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 20வது ச்லோகத்தில் பகவான் தம்மை ப்ராணிகளுக்கு ஆதி, நடு, முடிவு என்று சொன்னார். இங்கு மறுபடியும் படைப்புகளுக்கு ஆதி, நடு, முடிவு என்கிறார். கூறியதைக் கூறல் என்ற குற்றம் வராதா?

**பதில்:** இங்கே கூறியது கூறல் என்ற குற்றமில்லை. அங்கு 'பூத' என்ற சொல் உயிர் உள்ள அனைத்து ப்ராணிகளையும் குறிக்கிறது. இங்கு 'ஸர்கம்' என்ற சொல் ஜடம் (உயிரற்றது), சேதனம் (உயிருள்ளது) ஆகிய எல்லாவற்றையும், மேலும் அனைத்து உலகங்களையும் சேர்த்த படைப்பைக் குறிக்கிறது.

**கேள்வி:** 'கல்விகளினிடையே நான் ஆன்மிகக் கல்வி (ப்ரம்ம வித்யா)' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஆத்மாவைப் பற்றிய அறிவைப் புகட்டும் வித்யை ஆத்மவித்யை; அது ப்ரம்மவித்யை. அதன் மூலம் ஆத்மா என்ற தத்வத்தின் விளக்கம் நமக்கு எளிதில் கிடைக்கிறது. ப்ரம்மத்தின் நேரிடை அனுபவம் கிடைக்கிறது. உலகில் நாம் அறிந்ததும், நாம் அறியாததுமான வித்யைகள் அனைத்துமே இந்த ஆத்மவித்யைக்குத் தாழ்ந்தவைதாம். ஏனெனில் அவற்றினால் அஞ்ஞானம் என்ற கட்டு அறவே அவிழ்வதில்லை. மாறாகக் கட்டு வலுப்படுகிறது. ஆனால், இந்த ஆன்மிக வித்யையினால் அஞ்ஞான முடிச்சு முற்றிலும் அவிழ்கிறது. பரமாத்மாவினுடைய உண்மையான ஸ்வரூபம் நேரிடையான அனுபவத்திற்கு வருகிறது. ஆகவே, இந்த ஆத்மவித்யை எல்லாக் கல்விகளிலும் சிறந்தது. ஆகவே, ஆன்மிகக் கல்வியான இந்த அத்யாத்ம வித்யையை பகவான் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** 'வாதம்' (முடிவான ஸித்தாந்தம்) என்பதை ஒரு விபூதி என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** சாஸ்த்ர சர்ச்சை மூன்று வகைப்படும். அவை:- (1) ஜல்பம், (2) விதண்டா, (3) வாதம். தான் கூறுவது இத்தருணத்திற்கு ஏற்றதா, ந்யாயமானதா என்று பொருட்படுத்தாமல் தான் எடுத்துக் கொண்ட கட்சிக்கு வலுவூட்டுவதற்காகவும், எதிர்க்கட்சியைக் கண்டிப்பதற்காகவும் பேசுவது 'ஜல்பம்' எனப்படும். எதிர்க்கட்சியைக் கண்டிப்பதற்காக மட்டும் பேசுவது 'விதண்டா' எனப்படும். தன் கட்சி, எதிர்க்கட்சி என்று பாராமல் உண்மையைக் கண்டறிவதற்காக, ஒரு நியதிக்குக் கட்டுப்பட்டுச் செய்யப்படும் சர்ச்சை 'வாதம்' ஆகும். ஜல்பத்தினாலும், விதண்டாவினாலும் த்வேஷம், கோபம், ஹிம்ஸை,

---

அங்கே அவள் வடிவம் பெற்று சங்கரருடன்கூடக் கைலாயம் சென்றடைந்தாள். பிறகு ப்ரம்மாவின் ப்ரார்த்தனையை ஏற்று அவருடைய கமண்டலத்தில் ஓர் அம்சத்துடன் மறைந்துவிட்டாள். "அந்தர்த4ாநாம்ப4ாகே3ந ஸ்தி2தா ப்3ரஹ்மகமண்ட3லௌ" – ப்ரம்மதேவன் கமண்டலத்தில் கங்கையை ப்ரம்மலோகம் எடுத்துச் சென்றார். அதன்பின் ஒரு சமயம் பகவான் ஸ்ரீசங்கரர் கங்கையுடன்கூட வைகுண்டம் சென்றார். பகவான் விஷ்ணு அவரை வேண்டிக் கொண்டதன் பேரில் அவர் பாடினார். அவர் பாடின ராகமே பெண் உருவில் வெளித் தோன்றியது. பிறகு மறுபடியும் ஸ்ரீராகம் பாடினார். அந்த ராகமும் பெண் உருவில் வடிவெடுத்தது. அந்த ராகத்தில் மனதைப் பறிகொடுத்த நாராயணன் தாமும் ஒரே ரஸப்ரவாஹமாக உருகிவிட்டார். ப்ரம்மதேவன் நினைத்தார்: 'பரப்ரம்மத்திலிருந்து உண்டான ஸங்கீதம் ப்ரம்மமயம். ப்ரம்மமான ஹரியே இப்பொழுது உருகி ரஸமாகி த்ரவமாகிவிட்டார். ப்ரம்மமயமான கங்கை இந்த ரஸத்தை ஏற்கத்தக்கவள்' என்று ப்ரம்மதேவன் அந்த ப்ரம்ம த்ரவத்தை கமண்டலத்தினால் தொட்டார். தொட்டவுடன் அந்த த்ரவம் முழுவதும் கமண்டலத்தில் உள்ள கங்கையில் கலந்துவிட்டது. உருவமற்ற கங்கை நீராகிவிட்டாள். ப்ரம்மதேவன் திரும்பி ப்ரம்மலோகம் சென்றார். இதன் பிறகு பகவான் வாமனராக அவதாரம் எடுத்து வானுலகம் முழுவதையும் தமது தூய திருவடியால் அளந்த போது ப்ரம்மா தம் கமண்டலத்தில் உள்ள அதே கங்காதீர்த்தத்தினால் பகவானுடைய சரணங்களுக்கு அபிஷேகம் செய்வித்தார். கமண்டலத்தின் ஜலம் பட்டதும் அச்சரணம் அங்கேயே நிலைபெற்றுவிட்டது. பகவான் மறைந்த பிறகுகூட பகவானுடைய அடிச்சுவடு அந்த ஸ்வர்க கங்கையுடன் அங்கேயே இருந்தது. ஆகவே கங்கைக்கு விஷ்ணுபதி என்ற பெயர் வந்தது. அந்தத் திருவடியிலிருந்து உண்டான கங்கையைத்தான், பகீரதன் கடும் தவம் செய்து தம்முடைய முன்னோர்களைக் கரையேற்றுவதற்காகப் பூவுலகிற்குக் கொண்டு வந்தார். பூமியிலும் சிவபெருமான்தான் கங்கையைத் தம் ஜடையில் தாங்கினார். கங்கையின் பெருமையை விளக்குகின்ற, மிக அழகான, நல்ல அறிவுரைகள் அடங்கிய விசித்ரமான கதை விரிவாக ப்ருஹத்தர்மபுராணம், மத்யமகண்டம், 12வது அத்யாயம் முதல் 28வது அத்யாயம் வரை கூறப்பட்டுள்ளது.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கர்வம் முதலிய குற்றங்கள் வளரும். வாதத்தினால் உண்மையின் நிர்ணயமும், நன்மை ஏற்பட வழியும் துலங்கும். ஜல்பத்தையும், விதண்டாவையும் தவிர்க்க வேண்டும். தேவையானால் வாதத்தை ஏற்கலாம். இந்தச் சிறப்பினால் பகவான் வாதத்தைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**अक्षराणामकारोऽस्मि द्वन्द्वः सामासिकस्य च।**
**अहमेवाक्षयः कालो धाताहं विश्वतोमुखः॥ ३३॥**

***அக்ஷராணாமகாரோऽஸ்மி த்₃வந்த்₃வ: ஸாமாஸிகஸ்ய ச ।***

***அஹமேவாக்ஷய: காலோ த₄ாதாஹம் விஸ்₂வதோமுக₂: ॥ 33 ॥***

**அஹம்** – நான், **அக்ஷராணாம்** – எழுத்துக்களுள், **அகார:** – அகாரமாகவும், **ஸாமாஸிகஸ்ய ச** – ஸமாஸம் அதாவது தொகைகளில் அல்லது தொடர்களுள், **த்₃வந்த்₃வ:** – உம்மைத் தொகையாகவும் (த்வந்த்வ ஸமாஸமாகவும்), **அஸ்மி** – இருக்கிறேன். **அக்ஷய:** – அழிவற்ற (முதலும் முடிவுமற்ற), **கால:** – காலமும் (அதாவது காலங்களுக்கெல்லாம் காலமாகவும்), **விஸ்₂வத: முக₂:** – எல்லாப்புறங்களிலும் முகம் கொண்ட விராட் ஸ்வரூபனும், **த₄ாதா** – எல்லாவற்றையும் காத்துப் பேணுபவனும், **அஹம் ஏவ** – நானே!

நான் எழுத்துக்களுள் அகாரமாகவும் ஸமாஸம் அதாவது தொகைகளில் அல்லது தொடர்களுள் உம்மைத் தொகையாகவும் (த்வந்த்வ ஸமாஸமாகவும்) இருக்கிறேன். அழிவற்ற – முதலும் முடிவுமற்ற காலமும் (காலங்களுக்கெல்லாம் காலமாகவும்) எல்லாப்புறங்களிலும் முகம் கொண்ட விராட் ஸ்வரூபனும், எல்லாவற்றையும் காத்துப் பேணுபவனும் நானே!

**கேள்வி:** 'எழுத்துக்களிடையே அகாரம் நான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உயிர், மெய் எழுத்துக்கள் எவ்வளவு உண்டோ, அவை எல்லாவற்றிற்கும் முதலானது 'அ'. அது எல்லா எழுத்துக்களிலும் ஊடுருவி நிற்கிறது. வேதமும் கூறுகிறது: 'அகாரோ வை ஸர்வா வாக்' (ஐதரேய ப்₃ராஹ்மணம் முதல் பகுதி 3/6) – 'சொற்கள் அனைத்தும் அகரமே.' இக்காரணங்களால் அகரம் எல்லா எழுத்துக்களிலும் சிறந்தது. ஆகவே, பகவான் அதைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** எல்லாவிதமான தொகைகளிலும், தொடர்களிலும் த்வந்த்வ ஸமாஸத்தைத் தம் ஸ்வரூபம் என்று பகவான் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** த்வந்த்வ ஸமாஸத்தில்‡ (உம்மைத் தொகையில்) இரண்டு சொற்களுக்கும் முக்யத்வம் உண்டானபடியால், அது மற்ற ஸமாஸங்களைக் காட்டிலும் சிறந்தது. ஆகவே, பகவான் அதைத் தம் விபூதியாக ஏற்கிறார்.

---

‡ ஸம்ஸ்க்ருத இலக்கணப்படி ஸமாஸம் (தொகை, தொடர்கள்) நான்கு வகைப்படும். (1) அவ்யயீபாவம் (இதற்கு நேரான தமிழ்ச்சொல் இல்லை), (2) தத்புருஷ ஸமாஸம் (வேற்றுமைத் தொடர்), (3) பஹுவ்ரீஹி ஸமாஸம் (அன்மொழித் தொகை), (4) த்வந்த்வ ஸமாஸம் (உம்மைத் தொகை). கர்மதாரயம், த்விகு என்ற இரண்டு ஸமாஸங்களும் தத்புருஷ ஸமாஸத்திற்கு உட்பட்டவை.

1) அவ்யயீபாவ ஸமாஸத்தில் (தொடரில்) உள்ள இரண்டு சொற்களில் முதல் சொல்தான் சுட்டிக்காட்டப்படுகிறது. (உ-ம்) 'அதிஹரி' – 'ஹரியினிடத்தில்'. 'அதி' என்ற சொல் 'இடத்தில்' என்ற ஏழாம் வேற்றுமையைக் குறிக்கிறது. இதை விளக்குவதே இங்கு நோக்கம்.

2) 'தத்புருஷ' ஸமாஸத்தில் (தொடரில்) இரண்டாம் சொல் சுட்டிக்காட்டப்படுகிறது. (உ-ம்) 'ஸீதாபதி' – 'ஸீதையின் கணவர்'. இங்கு இரண்டாம் சொல்லான 'கணவர்' சுட்டிக்காட்டப்படுகிறார்.

3) பஹுவ்ரீஹி ஸமாஸத்தில் (தொடரில்) உள்ள சொற்களின் நேர் பொருளைக் குறிக்காமல் வேறொரு பொருள் சுட்டிக்காட்டப்படுகிறது. (உ-ம்) 'பீதாம்பர:' – 'மஞ்சள் ஆடை'. இத்தொடர் பீதாம்பரம் அணிந்த பகவானைச் சுட்டிக்காட்டுகிறது.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** *30வது ச்லோகத்தில் காலம் தம் ஸ்வரூபம் என்றார். அதற்கும் இந்த ச்லோகத்தில் வரும் 'கால'த்திற்கும் என்ன வேற்றுமை?*

**பதில்:** *30வது* ச்லோகத்தில் சொல்லப்பட்ட 'காலம்' என்பது கல்பம், யுகம், ஆண்டு, அயனம், மாதம், நாள், நாழிகை, நிமிஷம் என்ற கணக்குக்கு உட்பட்ட காலம். அது ப்ரக்ருதியின் செயல். (அதாவது சூரிய உதயம், அஸ்தமனம், பகல், இரவு இவற்றைச் சார்ந்தது.) மஹாப்ரளயத்தில் இவை ஒன்றுமே இரா. ஆனால் காலம் உண்டு. ஆகவே நிமிஷம் முதல் கல்பம் வரை உள்ள காலக்கணக்கு அழிவற்றது அன்று. அக்ஷயம் அன்று. இந்த ச்லோகத்தில் குறிப்பிடப்படும் காலம் அழிவற்றது, எப்பொழுதும் உள்ளது, ஆரம்பமற்றது, முடிவற்றது, நித்யமானது. பரமாத்மாவின் நித்யத்வம் என்ற ஸ்வரூபம் அது. ஆகவே, இங்கு 'அக்ஷய:' என்ற அடைமொழி சேர்க்கப்பட்டிருக்கிறது. 30வது ச்லோகத்தில் கூறப்பட்ட 'கால'த்திற்கும், இதற்கும் மிகுந்த வேற்றுமை உண்டு. முன்னது ப்ரக்ருதியின் செயல். பின்னது ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்டது.[§]

**கேள்வி:** 'எல்லாப்புறங்களிலும் முகங்கள் உள்ள விராட் ஸ்வரூபனும், எல்லாவற்றையும் காத்து, போஷிக்கிறவனும் நானே' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இதன் மூலம் விராட் ஸ்வரூபமும், தாமும் ஒன்றுதான் என்பதை வெளியிடுகிறார். அதாவது 'எல்லாவற்றையும் தாங்கிக் காப்பாற்றுகின்றவரும் எங்கும் நிறைந்தவரும் விராட் ஸ்வரூபருமான பரமேசுவரன் நான்தான். என்னைத் தவிர அவர் வேறானவர் அல்லர்' என்பது பொருள்.

**मृत्युः सर्वहरश्चाहमुद्भवश्च भविष्यताम्।**
**कीर्तिः श्रीर्वाक्च नारीणां स्मृतिर्मेधा धृतिः क्षमा॥ ३४॥**

**ம்ருத்யு: ஸர்வஹரஶ்சாஹமுத்₃ப₄வஶ்ச ப₄விஷ்யதாம் ।**
**கீர்தி: ஶ்ரீர்வாக்ச நாரீணாம் ஸ்ம்ருதிர்மேத₄ா த்₄ருதி: க்ஷமா ॥ 34 ॥**

**அஹம்** – நான், **ஸர்வஹர:** – எல்லாவற்றையும் அழிக்கின்ற, **ம்ருத்யு: ச** – மரணதேவதையாகவும், **ப₄விஷ்யதாம்** – இனி உண்டாகப் போகின்றவற்றிற்கு, **உத்₃ப₄வ: ச** – காரணமாகவும், **நாரீணாம்** – மாதர்களுள், **கீர்தி:** – கீர்த்தி தேவியாகவும், **ஶ்ரீ:** – ஶ்ரீதேவியாகவும், **வாக்** – வாக் தேவியாகவும், **ஸ்ம்ருதி:** – ஸ்ம்ருதி தேவியாகவும், **மேத₄ா** – மேதா தேவியாகவும், **த்₄ருதி:** – த்ருதி தேவியாகவும், **க்ஷமா ச** – க்ஷமா தேவியாகவும், **(அஸ்மி** – இருக்கிறேன்**)**.

---

*4) 'த்வந்த்வ' ஸமாஸத்தில் (உம்மைத் தொகையில்)* உள்ள இரண்டு சொற்களுமே ஸமமான முதன்மை பெறுகின்றன. (உ-ம்) 'ராமலக்ஷ்மணௌ' – 'இராம இலக்குவர்கள்'. இங்கு ராமனும், லக்ஷ்மணனும் சேர்த்தே சுட்டிக்காட்டப்படுகின்றனர்.

§ 'காலம்' என்பது மூவகைப்படும். (1) 'ஸமயம்' (நேரம்) என்பதைக் குறிக்கும் காலம். (2) 'ப்ரக்ருதி' என்ற காலம். அதாவது மஹாப்ரளயத்திற்குப் பின்பு ஒருவித விகாரமுமற்ற நிலையில் எவ்வளவு காலம் ப்ரக்ருதி இருக்குமோ, அதுவே 'ப்ரக்ருதியின் ஸாம்யாவஸ்தை'. அதுதான் ப்ரக்ருதி எனப்பட்ட 'காலம்' (3) நித்யமான, என்றும் அழியாத ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவைக் 'காலம்' என்ற சொல் குறிக்கும். 'நேரம்' என்று கூறப்படுகிற, வெளிப்படையாகத் தெரியக்கூடிய காலத்தைக் காட்டிலும், புத்தியினாலும் அறியப்படாத ப்ரக்ருதிரூபமான காலம் நுண்ணியது; உயர்ந்தது. இந்த ப்ரக்ருதிரூப காலத்தைக் காட்டிலும் பரமாத்ம ஸ்வரூபமான 'காலம்' மிகவும் நுண்ணியது; மிகவும் உயர்ந்தது; எல்லாவற்றையும் கடந்தது. உண்மையில் பரமாத்மா தேசம், காலம் இவற்றிற்கு அப்பாற்பட்டவர். ஆனாலும் எங்கு ப்ரக்ருதியையும், அதன் செயலான ப்ரபஞ்சத்தையும் குறிப்பிடுகிறோமோ, அங்கு எல்லாவற்றிற்கும் 'இருப்பு', 'திண்மை' இவற்றைக் கொடுப்பதனால் அவை எல்லாவற்றிற்கும் இருப்பிடமாக விளங்கக் கூடிய, ஸத் சித் ஆனந்தமய, விஞ்ஞான உருவான பரமாத்மாதான் உண்மையான 'காலம்'. எனவே பகவானை 'அக்ஷய' காலம் என்கிறார்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நான் எல்லாவற்றையும் அழிக்கின்ற மரண தேவதையாகவும், இனி உண்டாகப் போகின்றவற்றிற்குக் காரணமாகவும் மாதர்களுள் கீர்த்தி தேவியாகவும், ஸ்ரீதேவியாகவும், வாக் தேவியாகவும், ஸ்ம்ருதி தேவியாகவும், மேதா தேவியாகவும், த்ருதி தேவியாகவும், க்ஷமா தேவியாகவும் இருக்கிறேன்.

**கேள்வி:** *அனைத்தையும் அழிக்கும் 'மரணதேவதை' தம் ஸ்வரூபம் என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** பகவான்தான் ம்ருத்யு என்ற ஸ்வரூபத்தில் வந்து எல்லாவற்றையும் அழிக்கிறார். ஆகவே ம்ருத்யுவைத் தம் ஸ்வரூபம் என்கிறார். 9/19ல் 'ம்ருத்யுவும், அம்ருதனும் (அழியாதவனும்) நான்' என்று கூறியிருக்கிறார்.

**கேள்வி:** *தம்மை இனி உண்டாகப் போகின்றவற்றிற்குக் காரணம் என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** ம்ருத்யுவாக வந்து பகவான் எல்லாவற்றையும் அழிப்பதுபோல, அதாவது அவற்றை உடலிலிருந்து பிரித்து விடுவதுபோல, பகவான்தான் அவற்றை மற்றோர் உடலோடு சேர்த்து வைத்துத் தோன்ற வைக்கிறார். இதைத்தான் 'இனி உண்டாகப் போகும் பொருட்கள் தோன்றுவதற்குக் காரணமும் நானே' என்று கூறுகிறார்.

**கேள்வி:** *'கீர்த்தி, ஸ்ரீ, வாக், ஸ்ம்ருதி, மேதா, த்ருதி, க்ஷமா' – இந்த எழுவர் யார்? இவர்களைத் தம் விபூதி என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** ஸ்வாயம்புவ மனுவின் பெண் ப்ரஸூ³தி என்பவள் தக்ஷ ப்ரஜாபதியை மணந்து கொண்டாள். அவளுக்கு இருபத்து நான்கு பெண்கள் பிறந்தார்கள். கீர்த்தி, மேதா, த்ருதி, ஸ்ம்ருதி, க்ஷமா என்கிற ஐவர் அவர்களில் சிலர். இவர்களில் கீர்த்தி, மேதா, த்ருதி என்ற மூவரும் தர்மர் என்பவரை மணந்தனர். ஸ்ம்ருதி அங்கிரஸ்ஸை மணந்தாள். க்ஷமா புலஹ மஹரிஷியை மணந்தாள். ப்ருகு மஹரிஷியின் பெண் ஸ்ரீ என்கிற மஹாலக்ஷ்மி. தக்ஷன் மகளான க்யாதி என்பவளின் திருவயிற்றில் உதித்தவள். இவள் பகவானான ஸ்ரீவிஷ்ணுவை மணந்தாள். வாக் என்பவள் ப்ரம்மதேவனின் பெண். இந்த ஏழு பெயர்களும் குறிப்பிடும் பண்புகளுக்கு அவர்கள் ஆதார தேவதைகள் ஆவர். ஆகவே இவர்கள் ப்ரபஞ்சத்தில் உள்ள பெண்மணிகளில் சிறந்தவர்கள். எனவே பகவான் இவர்களைத் தம் விபூதிகள் என்கிறார்.

(கீர்த்தி – புகழ்; லக்ஷ்மீ – செல்வம்; வாக் – சொல்லாட்சி; ஸ்ம்ருதி – நினைவாற்றல்; மேதா – நினைவில் உள்ளது தக்க சமயத்தில் வெளிப்படுவது; த்ருதி – தைர்யம், உறுதி; க்ஷமா – பொறுமை)

**बृहत्साम तथा साम्नां गायत्री छन्दसामहम्।**
**मासानां मार्गशीर्षोऽहमृतूनां कुसुमाकरः॥ ३५॥**

**ப்₃ருஹத்ஸாம தத₂ா ஸாம்நாம் க₃ாயத்ரீ ச₂ந்த₃ஸாமஹம் ।**
**மாஸாநாம் மார்க₃ஶீர்ஷோऽஹம்ருதூநாம் குஸுமாகர: ॥ 35 ॥**

**தத₂ா** – அவ்வாறே, **ஸாம்நாம்** – கானம் செய்யத் தகுந்த வேதப் பகுதிகளுள், **ப்₃ருஹத்ஸாம** – ப்ருஹத்ஸாமம் என்ற ஸாமவேதப் பகுதியாகவும், **ச₂ந்த₃ஸாம்** – சந்தங்களுள், **க₃ாயத்ரீ** – காயத்ரீ என்ற சந்தமாகவும், **அஹம்** – நான், (**அஸ்மி** – இருக்கிறேன்). **மாஸாநாம்** – மாதங்களுள், **மார்க₃ஶீர்ஷ:** – மார்கழியாகவும், **ருதூநாம்** – பருவங்கள் ஆறினுள், **குஸுமாகர:** – வஸந்த ருதுவாகவும், **அஹம்** – நான், (**அஸ்மி** – இருக்கிறேன்).



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அவ்வாறே கானம் செய்யத் தகுந்த வேதப் பகுதிகளுள் ப்ருஹத்ஸாமம் என்ற ஸாம வேதப் பகுதியாகவும், சந்தங்களுள் காயத்ரீ என்ற சந்தமாகவும் நான் இருக்கிறேன். மாதங்களுள் மார்கழியாகவும், பருவங்கள் ஆறினுள் வஸந்த ருதுவாகவும் நான் இருக்கிறேன்.

**கேள்வி:** ஸாம வேதத்தைத்தான் 10/22ல் தம் ஸ்வரூபம் என்று கூறிவிட்டாரே! பிறகு மறுபடியும் 'ப்ருஹத்ஸாமம்' தம் ஸ்வரூபம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஸாம வேதத்தில் உள்ள ரதந்தரம் முதலிய ஸாமங்களில் 'ப்ருஹத்ஸாம'‡ என்ற ஸாமம் முக்யமானது; சிறந்தது. ஆகவே, இதன் காரணமாகத்தான் அதைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** 'சந்தங்களில் நான் காயத்ரீ' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** வேதங்களில் 'ருக்' மந்த்ரப் பகுதிகளுக்கு எவ்வளவு சந்தங்கள் உண்டோ, அவற்றில் காயத்ரீ சந்தம்தான் சிறந்தது, முக்யமானது. வேதங்கள், ஸ்ம்ருதிகள், இதிஹாஸங்கள், புராணங்கள், சாஸ்த்ரங்கள் எல்லாவற்றிலும் ஆங்காங்கு காயத்ரியின் பெருமை வெகுவாக நிறைந்து விளங்குகிறது.§ காயத்ரியின் இப்பெருமையைக் கருதி பகவான் அதைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

---

‡ ஸாம வேதத்தில் 'ப்ருஹத்ஸாமம்' என்ற பகுதி நடை அழகு கொண்டது. இதில் பரமேசுவரன் இந்த்ரனாக (மேலானவராக)த் துதிக்கப்படுகிறார். அதிராத்ரயாகத்தில் இதுவே சிறந்த ஸ்தோத்ரம்.

§ காயத்ரியின் பெருமை கீழே குறிப்பிடப்படும் சில மேற்கோள்களினால் விளங்கும்:-

'க$_3$ாயத்ரீ ச$_2$ந்த$_3$ஸாம் மாதேதி ।' *(நாராயணோபநிஷத்$_3$ 34)*

(காயத்ரி எல்லா வேதங்களுக்கும் தாய்.)

ஸர்வவேத$_3$ஸாரபூ$_4$தா க$_3$ாயத்ர்யாஸ்து ஸமர்சநா ।
ப்$_3$ரஹ்மாத$_3$யோऽபி ஸந்த்$_4$யாயாம் தாம் த்$_4$யாயந்தி ஜபந்தி ச ॥

*(தே$_3$வீப$_4$ாக$_3$வதம் 11/16/15)*

(எல்லா வேதங்களின் ஸாரம் என்று கூறுவது காயத்ரீ உபாஸனையைத்தான். ப்ரம்மா முதலான தேவர்களும் ஸந்தி நேரத்தில் காயத்ரியை த்யானித்து ஜபிக்கிறார்கள்.)

க$_3$ாயத்ர்யுபாஸநா நித்யா ஸர்வவேதை$_3$: ஸமீரிதா ।
யயா விநா த்வத$_4$:பாதோ ப்$_3$ராஹ்மணஸ்யாஸ்தி ஸர்வத$_2$ா ॥

*(தே$_3$வீப$_4$ாக$_3$வதம் 12/8/89)*

(எல்லா வேதங்களிலும் காயத்ரி உபாஸனை நித்யம் செய்யப்பட வேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது. அதைக் கைவிட்ட அந்தணனுக்கு வீழ்ச்சி நிச்சயம்.)

அபீ$_4$ஷ்டம் லோகமாப்நோதி ப்ராப்நுயாத் காமமீப்ஸிதம் ।
க$_3$ாயத்ரீ வேத$_3$ஜநநீ க$_3$ாயத்ரீ பாபநாஶிநீ ॥
க$_3$ாயத்ர்யா: பரமம் நாஸ்தி தி$_3$வி சேஹ ச பாவநம் ।
ஹஸ்தத்ராணப்ரத$_3$ா தே$_3$வீ பததாம் நரகார்ணவே ॥

*(ஶங்க$_2$ஸ்ம்ருதி 12/24,25)*

(காயத்ரியை ஜபிக்கின்ற இரு பிறப்பாளன் விரும்பிய லோகத்திற்குச் செல்வான். விருப்பங்கள் எல்லாம் நிறைவேறும். காயத்ரீ வேதத்தின் தாய். காயத்ரீ பாவங்களை அழிக்கவல்லது. இவ்வுலகிலோ, பரலோகத்திலோ தூய்மைப்படுத்துவதற்கு காயத்ரியைவிடச் சிறந்தது எதுவுமே கிடையாது. நரகத்தில் வீழ்பவர்களைக் கைதூக்கிக் கரையேற்றக் கூடியது.)

க$_3$ாயத்ர்யாஸ்து பரம் நாஸ்தி ஶோத$_4$நம் பாபகர்மணாம் ।
மஹாவ்யாஹ்ருதிஸம்யுக்தாம் ப்ரணவேந ச ஸம்ஜபேத் ॥

*(ஸம்வர்தஸ்ம்ருதி 218)*

(பாவங்களைப் போக்குவதில் காயத்ரியைவிடச் சிறந்தது கிடையாது. ப்ரணவத்துடனும், மூன்று வ்யாஹ்ருதிகளுடனும் கூட காயத்ரீ மந்த்ரத்தை ஜபிக்கவேண்டும்.)

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** மாதங்களுள் மார்கழியைத் தம் ஸ்வரூபம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மஹாபாரத காலத்தில் மாதங்களின் கணக்கு மார்கழி முதல் ஆரம்பிக்கும் (மஹா. அனுசாஸந. *106, 109*). ஆகவே மாதங்களில் முதலானது. இந்த மாதத்தில் செய்யப்படும் வ்ரதங்கள், உபவாஸங்கள் மிகுந்த பயன் அளிக்கும் என சாஸ்த்ரங்கள் கூறுகின்றன.‡ புதுநெல் அறுத்து வந்தவுடன் செய்யவேண்டிய யக்ஞம் இந்த மாதத்தில்தான் செய்யவேண்டும். வால்மீகி ராமாயணத்தில் மார்கழி மாதம் ஆண்டின் அணிகலன் என்று கூறப்பட்டிருக்கிறது. இவ்விதம் மற்ற மாதங்களைவிட மார்கழிக்குப் பெருமை அதிகம். ஆதலால் பகவான் அதைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** ஆறு பருவங்களில் வஸந்த ருதுவை பகவான் தம் ஸ்வரூபம் என்பதன் கருத்து என்ன?

**பதில்:** வஸந்த ருது பருவங்களனைத்திலும் சிறந்தது. இது பருவங்களின் அரசன். இப்பருவத்தில் தண்ணீர் இல்லாமலேயே எல்லா மரங்களும் துளிர்க்கின்றன, மலர்கின்றன. இதில் அதிக வெயிலும் இருக்காது, குளிரும் இருக்காது. இந்த ருதுவில் எல்லா ப்ராணிகளும் மகிழ்ச்சியோடு இருக்கும். ஆகவே பகவான் அதைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

द्यूतं छलयतामस्मि तेजस्तेजस्विनामहम्।
जयोऽस्मि व्यवसायोऽस्मि सत्त्वं सत्त्ववतामहम्॥ ३६ ॥

**த்$_3$யூதம் ச$_2$லயதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்விநாமஹம் ।**
**ஜயோऽஸ்மி வ்யவஸாயோऽஸ்மி ஸத்த்வம் ஸத்த்வவதாமஹம் ॥ 36 ॥**

**அஹம்** – நான், **ச$_2$லயதாம்** – வஞ்சகர்களுள் (அவர்களது), **த்$_3$யூதம்** – சூதாட்டமாகவும், **தேஜஸ்விநாம்** – திறமை படைத்தவர்களுடைய, **தேஜ:** – திறமையாகவும், **அஸ்மி** – இருக்கிறேன். **அஹம்** – நான், (**ஜேத்ரூணாம்** – வெற்றி கொள்பவரது), **ஜய:** – வெற்றியாக, **அஸ்மி** – இருக்கிறேன். (**வ்யவஸாயிநாம்** – தீர்மானம் செய்யும் சக்தி உள்ளவர்களின்), **வ்யவஸாய:** – தீர்மானமாகவும், **ஸத்த்வவதாம்** – ஸத்வகுணம் படைத்தவர்களிடம், **ஸத்த்வம்** – ஸத்வகுணமாகவும், **அஸ்மி** – இருக்கிறேன்.

நான் வஞ்சகர்களுள் அவர்களது சூதாட்டமாகவும், திறமை படைத்தவர்களுடைய திறமையாகவும் இருக்கிறேன். நான் வெற்றி கொள்பவரது வெற்றியாக இருக்கிறேன். தீர்மானம் செய்யும் சக்தி உள்ளவர்களின் தீர்மானமாகவும், ஸத்வகுணம் படைத்தவர்களிடம் ஸத்வகுணமாகவும் இருக்கிறேன்.

---

நாஸ்தி க$_3$ங்க$_3$ாஸமம் தீர்த$_2$ம் ந தே$_3$வ: கேஶவாத்பர: ।
க$_3$ாயத்ர்யாஸ்து பரம் ஜப்யம் ந பூ$_4$தம் ந ப$_4$விஷ்யதி ॥
(ப்$_3$ருஹத்$_3$யோகி$_3$யாஜ்ஞவல்க்யர் *10/10*)

*(கங்கைக்கு நிகரான தீர்த்தமில்லை. விஷ்ணு பகவானைவிடச் சிறந்த தெய்வமில்லை. காயத்ரியைவிடச் சிறந்த ஜபிக்கத்தக்க மந்த்ரம் இல்லை. இருந்ததும் இல்லை. இருக்கப் போவதுமில்லை.)*

‡ ஶுக்லே மார்க$_3$ஶிரே பக்ஷே யோஷித்$_3$ப$_4$ர்துரநுஜ்ஞயா ।
ஆரபே$_4$த வ்ரதமித$_3$ம் ஸார்வகாமிகமாதி$_3$த: ॥
(ஸ்ரீமத்$_3$ப$_4$ாக$_3$வதம் *6/19/2*)

*(முதன் முதல் மார்கழி சுக்ல பக்ஷத்தில் தன் கணவர் அனுமதி பெற்று, மனைவி எல்லா விருப்பங்களையும் தரவல்ல இந்த பும்ஸவன வ்ரதத்தை ஆரம்பிக்க வேண்டும்.)*

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** சூதாட்டம் என்பது மிகவும் தகாத விஷயம். சாஸ்த்ரங்கள் இதைத் தடை செய்கின்றன. பகவான் இதைத் தம் ஸ்வரூபம் என்று ஏன் கூறுகிறார்? இது பகவானின் ஸ்வரூபமானால், அதை விளையாடுவதில் என்ன தவறு?

**பதில்:** உலகியலில் உயர்ந்தது; நடுத்தரமானது; தாழ்ந்தது என்று மூன்றுவிதமான ஜீவர்களிலும், பொருட்களிலும் பகவான் நிறைந்திருப்பதால் அவருடைய இருப்பினாலும், ஊக்குவிக்கும் தன்மையினாலும் அவை இயங்குகின்றன. பகவானுடைய இருப்பும், ஆற்றலும் இல்லாத பொருளே உலகில் இல்லை. ஆகவே ஸாத்விகமாகவோ, ராஜஸமாகவோ, தாமஸமாகவோ உள்ள ப்ராணிகளிடமும், பொருட்களிடமும் ஏதாவது ஒரு சிறப்பு, தனித்தன்மை, கவர்ச்சி இருக்குமேயானால், அந்தத் தனிப்பட்ட பொருளில் பகவானுடைய இருப்பும், ஆற்றலும் அதிகமாகத் தென்படுகின்றன. இந்த நோக்கில் பகவான் இந்த அத்யாயத்தில் மிகவும் சுருக்கமாக தேவதைகள், தைத்யர்கள், மனிதர்கள், விலங்குகள், பறவைகள், ஊர்வன முதலிய உயிர் உள்ளவை பற்றியும்; வஜ்ராயுதம், புலன்கள், மனம், கடல் முதலிய ஜடப்பொருட்களைப் பற்றியும்; வெற்றி, தீர்மானம், திறமை, நீதி, ஞானம் முதலிய பண்புகளைப் பற்றியும் கூறுகிறார். சுருக்கமாக எல்லாவற்றையும் பற்றிச் சொல்லியாயிற்று. மிக முக்யமான படைப்புத் தொகுப்புகளைப் பற்றியும் சொல்லியாயிற்று. அதாவது எந்தெந்த ஜீவன், பொருள், செயல், மனப்பண்பு இவற்றை நினைத்தாலும், அவற்றுடன் பகவானுடைய நினைவும் கூடவே இருக்க வேண்டும். இந்த நோக்கின்படி வஞ்சனைச் செயலில் கூடச் சூதாட்டம் தம் ஸ்வரூபம் என்கிறார். இதைச் சிறந்தது என்று கூறி, இதில் ஈடுபடச் செய்யும் நோக்கத்தோடு இவ்வாறு சொல்லவில்லை.

பகவான் மிகவும் கொடிய இயல்பு கொண்டவையும், ஹிம்ஸை செய்பவையுமான சிங்கம், முதலை ஆகியவற்றையும், இயல்பாகவே நாச வேலை செய்யும் நெருப்பையும், எல்லாவற்றையும் அழிக்கும் ம்ருத்யுவையும் தம் ஸ்வரூபங்கள் என்கிறார் என்றால் அதற்கு இதுதான் கருத்து – 'மனிதன் சிங்கத்துடனோ, முதலையுடனோ, நெருப்புடனோ, அறிந்தே மரணதேவதையுடனோ விளையாடினால் என்ன நேருமோ, அது சூதாட்டத்திலும் நேரும்.'

**கேள்வி:** திறமை, வெற்றி, தீர்மானிக்கும் திறன், ஸத்வகுணம் இவற்றைத் தம் ஸ்வரூபங்கள் என்று பகவான் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த நான்கு பண்புகளும் பகவானை அடைய உதவி புரிபவை. ஆகவே, இவற்றைத் தம் ஸ்வரூபங்கள் என்கிறார். திறமையுள்ள ப்ராணிகளிடம் உள்ள திறமையோ, ப்ரபாவமோ அவருடையதுதான் என்று பொருள். மனிதன் அவற்றைத் தன் இயல்பு, தன் சக்தி என்று நினைத்துச் செருக்கடைந்தால் அது தவறு. இதே போன்று வெற்றி அடைகிறவனின் வெற்றியும், தீர்மானம் செய்பவனின் தீர்மானிக்கும் திறனும், ஸாத்விக ஸ்வபாவம் உள்ளவரின் ஸத்வ குணமும் என்னுடையனவே. இவை தன் இயல்பு என்று நினைப்பது அறியாமை.‡ ஆகவே, எந்தெந்தப் பொருட்களில் மேலே சொன்ன இந்த குணங்கள்

---

‡ கேநோபநிஷத்தில் காணப்படும் ஒரு நிகழ்ச்சி. ஒரு சமயம் தேவதைகள் பரமாத்மாவினுடைய பராக்ரமத்தினால் அஸுரர்களை வெற்றி கொண்டார்கள். அவர்களின் புகழும், பெருமையும் உலகெங்கும் பரவிற்று. வெற்றியினால் செருக்கடைந்த தேவதைகள் பகவானை மறந்தனர். 'நாம் வெற்றி பெற்றோம். நம்முடைய பராக்ரமத்தினாலும், புத்தி ஸாமர்த்யத்தினாலும் அஸுரர்களை ஒடுக்கிவிட்டோம். அதனால்தான் உலகம் நம்மைப் பூஜிக்கிறது, கொண்டாடுகிறது' என்று நினைத்தார்கள். தேவர்களின் இந்த இறுமாப்பை ஒழித்து அவர்களை நல்வழிப்படுத்தி உபகாரம் செய்வதற்காகப் பரமாத்மாவான பரப்ரம்மம் தன் லீலையினால் ஓர் அற்புதமான யக்ஷ உருவில் வெளிப்பட்டது. அதைப் பார்த்த தேவர்களுக்குத் தலை சுற்றியது, புத்தி கலங்கியது. தேவதைகள் யக்ஷ ரூபம் தரித்த அந்தப் புருஷனைப் பார்த்து யார் என்று தெரிந்து கொள்வதற்காகத் தங்களுக்கு முதல்வரான அக்னியை அழைத்துக் கூறினார்கள்: 'அக்னிதேவனே! நமக்குள் நீர்தான் அனைவரிலும் அதிகத் திறமை படைத்தவர். நீர் சென்று இந்த யக்ஷ வடிவத்தில் வந்திருப்பவர் யார் என்று தெரிந்து கொண்டு வாரும்.' 'சரி, நான் தெரிந்து கொண்டு வருகிறேன்' என்று அக்னி கிளம்பினார். அந்த யக்ஷன் வடிவை நெருங்க நெருங்க அக்னிக்கு நடுக்கம் எடுத்தது. பேச்சு வரவில்லை. முடிவில் அந்த யக்ஷ வடிவம் கேட்டது– 'நீ யார்?' அக்னிதேவன்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உள்ளனவோ, அங்கெல்லாம் பகவானின் ஆற்றல் அதிகம் என்று உணர்ந்து அதன் சிறப்பை மதிக்கவேண்டும்.

**वृष्णीनां वासुदेवोऽस्मि पाण्डवानां धनञ्जयः।**
**मुनीनामप्यहं व्यासः कवीनामुशना कविः॥ ३७॥**

**வ்ருஷ்ணீநாம் வாஸுதே₃வோऽஸ்மி பாண்ட₃வாநாம் த₄நஞ்ஜய: ।**
**முநீநாமப்யஹம் வ்யாஸ: கவீநாமுஶநா கவி: ॥ 37 ॥**

**அஹம்** – நான், **வ்ருஷ்ணீநாம்** – வ்ருஷ்ணி குலத்தோருள், **வாஸுதே₃வ:** – வாஸுதேவனாகவும் அதாவது உன்னுடைய நண்பனான நானாகவும், **பாண்ட₃வாநாம்** – பாண்டவர்களுள், **த₄நஞ்ஜய:** – அர்ஜுனனாகவும் அதாவது நீயாகவும், **முநீநாம்** – முனிவர்களுள், **வ்யாஸ:** – வேத வ்யாஸராகவும், **கவீநாம்** – கவிஞர்களுள், **உஶநா** – சுக்ராசார்யரான, **கவி: அபி** – கவியாகவும்கூட, **அஸ்மி** – இருக்கிறேன்.

நான் வ்ருஷ்ணி குலத்தோருள் வாஸுதேவனாகவும் (உன்னுடைய நண்பனான நானாகவும்) பாண்டவர்களுள் அர்ஜுனனாகவும் (நீயாகவும்), முனிவர்களுள் வேத வ்யாஸராகவும், கவிஞர்களுள் சுக்ராசார்யரான கவியாகவும் இருக்கிறேன்.

**கேள்வி:** வ்ருஷ்ணிகளில் வாஸுதேவன் என்று கூறுவதன் கருத்து என்ன?

---

சொன்னார்: 'என் பெயர் தெரிந்ததாயிற்றே! நான்தான் அக்னி – ஜாதவேதஸ்.' 'அது சரி அக்னிதேவனே! உன்னிடம் என்ன திறமை உள்ளது? உன்னால் என்ன செய்யமுடியும்?' 'யக்ஷ வடிவே! இந்த பூமியிலும், ஆகாயத்திலும் அசைவனவோ, அசையாதனவோ எதுவாயிருந்தாலும், அவையெல்லாவற்றையும் கொளுத்திப் பொசுக்கிவிடுவேன்.'

ப்ரம்மம் ஒரு காய்ந்த துரும்பை எடுத்துப் போட்டது. 'எங்கே இதை நீ எரி. பார்க்கலாம்.' அக்னிதேவன் தன்னுடைய முழுச் சக்தியையும் உபயோகித்தார். துரும்பில் நெருப்புப் பற்றவில்லை. வெட்கித் தலைகுனிந்து ஒன்றும் பேசாமல் அக்னிதேவன் தேவதைகளிடம் திரும்பிச் சென்றார். 'இந்த யக்ஷன் யார்? என்பதை என்னால் அறிய முடியவில்லை' என்றார்.

பிறகு வாயுதேவன் யக்ஷனிடம் சென்றார். அவருக்கும் அக்னிக்கு நேர்ந்த கதிதான். யக்ஷன் கேட்டது– 'நீ யார்?' வாயு சொன்னார்: "நான்தான் வாயு. என் பெயரும், செயலும் எல்லோருக்கும் தெரியுமே! நான் எங்கும் செல்வேன். பூமியின் மணத்தைத் தாங்கிப் பரப்புவேன். நான் ஆகாயத்திலும் ஸஞ்சரிப்பதால் எனக்கு 'மாதரிச்வா' என்ற பெயரும் உண்டு." யக்ஷன் கேட்டது– 'உன் தனிச்சிறப்பு என்ன?' வாயு சொன்னார்: 'இந்தப் புவியிலோ, ஆகாயத்திலோ எது இருந்தாலும், அதைத் தூக்கிவிடுவேன்.' யக்ஷன் வாயுவின் எதிரில் ஒரு துரும்பைக் கிள்ளிப் போட்டது. 'இதைப் பறக்கவிடு பார்ப்போம்.' வாயு தம் பலம் முழுவதையும் திரட்டி வீசினார். அந்தப் புல் நகரவில்லை. இதைப் பார்த்து வெட்கத்துடன் தேவர்களிடம் திரும்பினார். 'தேவர்களே! இந்த யக்ஷன் யார் என்பதே புரியவில்லை' என்று அவர்களிடம் கூறினார்.

பிறகு இந்த்ரன் யக்ஷனிடம் நேரே சென்றார். தேவர் தலைவன் என்ற இறுமாப்போடு வந்த இந்த்ரனைப் பார்த்த யக்ஷன் மறைந்துவிட்டது. இந்த்ரனின் கர்வத்தை அடக்குவதற்காகவே அவரிடம் பேசவும் இல்லை. இதனிடையில் இந்த்ரன் ஆகாயத்தில் பார்த்தார். ஆகாயத்தில் மிகவும் அழகாக எல்லாவிதமான உத்தம அணிகளும் பூண்டு கொண்டு ஹிமவானின் பெண்ணும் பார்வதிதேவியுமான உமா காட்சி அளித்தாள். இந்த்ரன் வணங்கி அவளிடம் கேட்டார்: 'தாயே! நாங்கள் இப்போது ஒரு யக்ஷனைப் பார்த்தோமே. அது மறைந்துவிட்டதே. அது யார்?' உமாதேவி சொன்னாள்: "அந்த யக்ஷன்தான் ப்ரஸித்தி பெற்ற பரப்ரம்மம். இந்த்ரனே! அவர்தான் அஸுரர்களை வெற்றி கொண்டார். நீங்கள் அவருக்குக் கருவிகளாக இருந்தீர்கள். ப்ரம்மத்தின் வெற்றியினால் உங்களுக்குப் பெருமை வளர்ந்தது. அதனால் உங்களுக்குப் பூஜை நடக்கிறது. நீங்கள் உங்கள் வெற்றியென்றும், உங்கள் பெருமையென்றும் நினைத்தீர்களே, அது வெறும் பொய் கர்வம். இந்த கர்வத்தை விடுங்கள். உலகில் எது நடக்கிறதோ, அது அனைத்தும் ப்ரம்மம் ஒன்று இருப்பதால்தான் நடக்கிறது என்று அறியுங்கள்."

உமையின் சொற்கேட்டு இந்த்ரனின் கண்கள் திறந்தன. கர்வம் அகன்றது. ப்ரம்மத்தின் அளவற்ற சக்தியின் பெருமையை உணர்ந்து இந்த்ரன் திரும்பினார். அக்னிக்கும், வாயுவுக்கும் உபதேசம் செய்தார். அக்னியும், வாயுவும் ப்ரம்மத்தை அறிந்தனர். ஆகவே, இம்மூவரும் தேவர்களுள் சிறந்தவர்கள் ஆனார்கள். இவர்களுள் இந்த்ரன் மிகச் சிறந்தவர். ஏனெனில் அவர்தான் ப்ரம்மத்தை முதலில் அறிந்தவர்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இங்கு பகவான், அவதாரமும் அவதாரம் எடுப்பவனும் ஒன்றே என்பதைச் சுட்டிக்காட்டுகிறார். அவதாரம் எடுக்கும் மூலப்பொருளான நாராயணனும் நானே. அவதாரமெடுத்து உன் முன் நிற்கும் வஸுதேவகுமாரனும் நானே. பிறப்பற்றவரும், அழிவற்றவரும், எல்லா ப்ராணிகளுக்கும் ஆண்டவனானவரும், ஸர்வ வல்லமைகள் படைத்தவரும், பூர்ண ப்ரம்மமான புருஷோத்தமனான நான்தான் இப்போது வஸுதேவ குமாரனாக லீலையில் வெளிப்பட்டுள்ளேன் *(4/6)*. ஆகவே, யாரேனும் என்னை ஸாதாரண மனிதராக நினைத்தால் அவர் பெரும் தவறு செய்தவர் ஆவார்.

**கேள்வி:** 'பாண்டவர்களில் நானே அர்ஜுனன்' என்று பகவான் கூறுவதன் கருத்து என்ன? பாண்டவர்களில் மூத்தவரான யுதிஷ்டிரர்தானே பெரியவர்; பகவானுடைய பக்தர்; தர்மாத்மா.

**பதில்:** ஸந்தேஹமில்லை. யுதிஷ்டிரர்தான் பாண்டவர்களுள் பெரியவர்; பகவானுடைய பக்தர்; தர்மாத்மா. ஆயினும் பாண்டவர்களுள் சிறந்தவர் அர்ஜுனன்தான். நரநாராயண அவதாரம் எடுத்தபோது அர்ஜுனன் நரரூபத்தில் பகவானுடன் இருந்திருக்கிறார். தவிர பகவானுடைய சிறந்த நண்பர். அநன்ய ப்ரேமை உடையவர். ஆகவே அர்ஜுனனைத் தம் ஸ்வரூபமாகச் சொல்கிறார்.‡

**கேள்வி:** 'முனிவர்களில் வேதவ்யாஸர் நான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவானின் ஸ்வரூபத்தையும், வேதம் முதலிய சாஸ்த்ரங்களின் நுட்பங்களையும் சிந்தித்துக் கொண்டிருப்பவர்கள் முனிவர்கள். வேதவ்யாஸர் எல்லா வேதங்களையும் நன்கு ஆராய்ந்து அவற்றை வகைப்படுத்தித் தந்தார். மஹாபாரதம், புராணங்கள் முதலான பல சாஸ்த்ரங்களை இயற்றினார். பகவானுடைய ஓர் அம்சமே வ்யாஸராக அவதரித்தது. அவர் எல்லா நற்பண்புகளும் படைத்தவர். ஆகவே முனிவர் கூட்டத்தில் அவர் முக்யமானவர். ஆகையால் பகவான் அவரைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** 'கவிகளில் சுக்ராசார்யர் நான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கற்றறிந்தவர், மதிநலம் படைத்தவர் கவி ஆவார். சுக்ராசார்யர் ப்ருகுகுலத் தலைவர். எல்லாக் கல்விகளிலும் மிகுந்த தேர்ச்சி பெற்றவர். ஸஞ்ஜீவனி வித்யையை அறிந்தவர். கவிகளுள் முக்யமானவர். ஆகவே பகவான் அவரைத் தம் ஸ்வரூபம் என்றார்.§

---

‡ பகவானே சொல்லியிருக்கிறார்:

நரஸ்த்வமஸி து$_3$ர்த்$_3$த$_4$ர்ஷ ஹரிர்நாராயணோ ஹ்யஹம் ।
காலே லோகமிமம் ப்ராப்தௌ நரநாராயணாவ்ருஷீ ॥
அநந்ய: பார்த$_2$ மத்தஸ்த்வம் த்வத்தஶ்சாஹம் ததை$_2$வ ச ।
நாவயோரந்தரம் ஶக்யம் வேதி$_3$தும் ப$_4$ரதர்ஷப$_4$ ॥

*(மஹா. வநபர்வம் 12/46,47)*

"அடக்கி ஆளப்பட முடியாத அர்ஜுன! நீதான் பகவான் நரன். நானே ஹரிநாராயணன். ஒரு சமயம் நாமிருவரும் நரநாராயணர்கள் என்ற இரு ரிஷிகளாகத் தோன்றினோம். ஆகவே அர்ஜுன! நீ என்னைத் தவிர வேறல்ல. நானும் உன்னைத் தவிர வேறல்ல. பரதகுலச் செம்மலே! நம்மிடையே வேற்றுமை கிடையாது. இது யாருக்கும் தெரியாது, புரியாது."

§ ப்ருகு மஹரிஷிக்கு ச்யவநர் முதலான ஏழு புதல்வர்கள். அவர்களுள் சுக்ரர் முக்யமானவர். இவர் பகவான் சங்கரரைப் பூஜித்து ஸஞ்ஜீவனி வித்யையைக் கற்றார். மூப்பு, மரணமற்ற திடமான உடல் நலம் பெற்றார். சங்கரருடைய அருளினால் யோகவித்யையில் தேர்ச்சி பெற்று யோகாசார்யர் என்ற பதவி பெற்றார். அஸுரர்களுக்கு குருவானார். இவருக்கு காவ்யர் என்றும், கவி என்றும், உசநா என்றும் வேறு பெயர்கள் உண்டு. பித்ருக்களின் மனதில் தோன்றிய பெண் 'கோ' என்பவளை மணந்தார். இவர்களுக்குச் சண்டன், அமர்க்கன் என்ற இரண்டு புதல்வர்கள் உண்டு அவர்களே ப்ரஹ்லாதனுக்கு குரு ஆனார்கள். இவர் பலவித ரஹஸ்யமான அரிய மந்த்ரங்களை அறிந்தவர். பல கல்விகளில் கரை கண்டவர். மிகவும் மதிநுட்பம் படைத்தவர்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



दण्डो दमयतामस्मि नीतिरस्मि जिगीषताम्।
मौनं चैवास्मि गुह्यानां ज्ञानं ज्ञानवतामहम्॥ ३८॥

**த₃ண்டோ₃ த₃மயதாமஸ்மி நீதிரஸ்மி ஜிகீ₃ஷதாம் ।**
**மௌநம் சைவாஸ்மி கு₃ஹ்யாநாம் ஜ்ஞாநம் ஜ்ஞாநவதாமஹம் ॥ 38 ॥**

**த₃மயதாம்** – அடக்குபவர்களின், **த₃ண்ட₃:** – அடக்கும் சக்தியாகவும், **அஸ்மி** – இருக்கிறேன். **ஜிகீ₃ஷதாம்** – வெற்றி பெற விரும்புபவர்களின், **நீதி:** – ந்யாய உணர்வாகவும், **அஸ்மி** – இருக்கிறேன். **கு₃ஹ்யாநாம்** – மறைத்து வைக்கப்பட வேண்டியவற்றை, **மௌநம் ச** – காப்பாற்றுவதான மௌனமாகவும், **ஜ்ஞாநவதாம்** – ஞானிகளுடைய, **ஜ்ஞாநம்** – தத்வஞானமாகவும், **அஹம் ஏவ** – நானேதான், **அஸ்மி** – இருக்கிறேன்.

அடக்குபவர்களின் அடக்கும் சக்தியாக இருக்கிறேன். வெற்றி பெற விரும்புபவர்களின் ந்யாய உணர்வாக இருக்கிறேன். மறைத்து வைக்கப்பட வேண்டியவற்றைக் காப்பாற்றுவதான மௌனமாகவும், ஞானிகளுடைய தத்வஞானமாகவும் நானேதான் இருக்கிறேன்.

**கேள்வி:** 'அடக்குபவர்களின் அடக்கும் சக்தி (தண்டம்) நான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தண்டம் என்பது அடக்கி ஆளும் சக்தி. தர்மத்தை மீறி அதர்மத்தில் தடையின்றி ஈடுபடுகின்ற மனிதர்களின் பாவச் செயல்களைத் தடுத்து நல்வழியில் செலுத்தும். மனிதர்களின் மனம், புலன் முதலியன இந்த அடக்கும் சக்தியின் மூலமாகத்தான் அடக்கப்பட்டு, பகவானை அடைவதில் உறுதுணையாகின்றன. அடக்கும் சக்தியினால் எல்லா ப்ராணிகளும் தத்தம் கடமைகளை நிறைவேற்றுகின்றன. ஆகவே தேவதை, அரசர், ஆட்சியாளர் முதலியவர்கள் ந்யாயப்படி அடக்கி ஆள்கிறார்கள் என்பதால் அவர்களுடைய அடக்கும் சக்தியை பகவான் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** 'வெற்றிபெற விரும்புகிறவர்களின் நீதி என் ஸ்வரூபம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** நீதி என்றால் இங்கு ந்யாயம், முறையானது என்று பொருள். ந்யாயத்தினால்தான் மனிதனுக்கு உண்மையான வெற்றி கிடைக்கும். ஒரு ராஜ்யத்தில் நீதி இல்லையென்றால் – அநீதி விளையாடுகிறது என்றால் – அந்த அரசு விரைவில் அழிந்துவிடும். ஆகவே நீதி அதாவது ந்யாயம் வெற்றிக்கு முக்யமான உபாயம். ஆகவே வெற்றி விரும்புபவர்களின் நீதியைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** 'மௌனம் தம் ஸ்வரூபம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மறைத்துக் காப்பாற்றப்பட வேண்டிய ரஹஸ்யங்களை மௌனத்தினால்தான் காப்பாற்ற முடியும். பேச்சை அடக்காமல் ரஹஸ்யத்தைக் காப்பாற்ற முடியாது. இவ்விதம் மறைத்துக் காக்கவேண்டிய கருத்துக்களைக் காப்பதில் மௌனம் முக்யமானது. ஆகவே பகவான் அதைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** இங்கே 'ஜ்ஞாநவதாம்' என்ற சொல் எவ்வித ஞானிகளைக் குறிக்கிறது? 'அவர்களுடைய ஞானம் என் ஸ்வரூபம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பரப்ரம்மமான பரமாத்மாவின் ஸ்வரூபத்தை அனுபவத்தில் பெற்றவர்களான உண்மையான ஞானிகளை 'ஜ்ஞாநவதாம்' என்ற சொல் குறிக்கிறது. அவர்களுடைய ஞானமே

---

நீதியில் தேர்ச்சி பெற்றவர். இவருடைய 'சுக்ர நீதி' புகழ் பெற்றது. ப்ருஹஸ்பதியின் மகனான கசன் இவரிடம் ஸஞ்ஜீவனி வித்யையைப் பயின்றார். இவருடைய கதைகள் மஹாபாரதம், ஸ்ரீமத்பாகவதம், வாயுபுராணம், ப்ரம்மபுராணம், மத்ஸ்யபுராணம், ஸ்கந்தபுராணம் முதலியவற்றில் விசித்ரமாகவும், அறிவூட்டுவனவாகவும் உள்ளன.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



எல்லா ஞானங்களிலும் சிறந்தது. ஆகவே, அதை பகவான் பரமாத்மாவின் ஸ்வரூபம் என்கிறார். 13/17ல் பகவான் தம்மை ஞான ஸ்வரூபன் என்கிறார்.

**यच्चापि सर्वभूतानां बीजं तदहमर्जुन।**
**न तदस्ति विना यत्स्यान्मया भूतं चराचरम्॥ ३९॥**

**யச்சாபி ஸர்வபூ₄தாநாம் பீ₃ஜம் தத₃ஹமர்ஜுந ।**

**ந தத₃ஸ்தி விநா யத்ஸ்யாந்மயா பூ₄தம் சராசரம் ॥ 39 ॥**

**ச** – மேலும், **அர்ஜுந** – அர்ஜுன! **ஸர்வ பூ₄தாநாம்** – எல்லா உயிரினங்களுக்கும், **யத்** – எது, **பீ₃ஜம்** – விதையோ (அவை தோன்றுவதற்குக் காரணமோ), **தத் அபி** – அதுவும், **அஹம்** – நான்தான். (ஏனெனில்), **மயா விநா** – நான் இன்றி, **யத்** – எது, **ஸ்யாத்** – இருக்கக்கூடுமோ, **தத்** – அத்தகைய, **சராசரம்** – இயங்குவதும், இயங்காததுமான, **பூ₄தம்** – பூதங்கள் (எதுவும்), **ந அஸ்தி** – இல்லை.

மேலும் அர்ஜுன! எல்லா உயிரினங்களுக்கும் எது விதையோ (அவை தோன்றுவதற்குக் காரணமோ) அதுவும் நான்தான். ஏனெனில் நான் இன்றி எது இருக்கக்கூடுமோ அத்தகைய இயங்குவதும், இயங்காததுமான உயிரினம் எதுவும் இல்லை.

**கேள்வி:** இயங்குவதும், இயங்காததுமான எல்லா ப்ராணிகளின் வித்து எது? அதைத் தம் ஸ்வரூபம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இயங்குவதும், இயங்காததுமான எல்லாவிதமான ப்ராணிகளுக்கும் பகவான்தான் ஆதாரம். அவரிடமிருந்துதான் எல்லாம் உண்டாகின்றன. ஆகவே, அவர்தான் அவற்றிற்கு வித்து. அதாவது முக்ய காரணம். 7/10ல் அத்தனை ப்ராணிகளுக்கும் 'ஸநாதந பீஜம்' என்றும், 9/18ல் 'அழிவற்ற விதை' என்றும் சொல்லியிருக்கிறார். ஆகவே, பகவான் அதைத் தம் ஸ்வரூபம் என்கிறார்.

**கேள்வி:** 'நானின்றி இயங்குவதும், இயங்காததுமான பூதங்கள் எதுவுமே கிடையா' என்பதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கு பகவான் தம்முடைய எங்கும் பரந்த தன்மையையும், எல்லா வடிவங்களிலும் உள்ள தன்மையையும் வெளிப்படுத்துகிறார். அசைவதோ, அசையாததோ அனைத்து ப்ராணியும் ஆகி எல்லாமாகி நிற்பவர். இயங்குவதும், இயங்காததுமான எல்லா ப்ராணிகளிலும் வ்யாபித்து இருப்பவர். 'நான் இல்லாத எந்த ப்ராணியும் இல்லை. ஆகவே, எல்லா ப்ராணிகளையும் என் ஸ்வரூபம் என்றும், நான் அவற்றில் நிறைந்திருக்கிறேன் என்றுமறிந்து உன் மனம் எங்கே சென்றாலும், அங்கும் என்னையே நினைப்பாயாக' என்கிறார் பகவான். 10/17ல் அர்ஜுனன், 'உங்களை எந்தெந்த ஸ்வரூபங்களில் சிந்தனை செய்யவேண்டும்?' என்று கேட்டாரல்லவா. அதற்கு இதுதான் விடை.

**பொருத்தம்:** 19வது ச்லோகத்தில் பகவான் தம் விபூதிகள் அனந்தமானவை (முடிவற்றவை) என்று சொல்லி, அவற்றில் முக்யமானவற்றைச் சொல்கிறேன் என்றார். அதன்படி 20 முதல் 39 வரை அவற்றை வர்ணித்தார். மறுபடியும் தம்முடைய விபூதிகள் அளவற்றவை என்று சுட்டிக் காட்டி, விபூதிகள் பற்றிக் கூறுவதை முடிக்கிறார்—

**नान्तोऽस्ति मम दिव्यानां विभूतीनां परन्तप।**
**एष तूद्देशतः प्रोक्तो विभूतेर्विस्तरो मया॥ ४०॥**

**நாந்தோऽஸ்தி மம தி₃வ்யாநாம் விபூ₄தீநாம் பரந்தப ।**

**ஏஷ தூத்₃தே₃ஶத: ப்ரோக்தோ விபூ₄தேர்விஸ்தரோ மயா ॥ 40 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பரந்தப** – எதிரிகளை வாட்டுபவனே! **மம** – என்னுடைய, **தி₃வ்யாநாம்** – தெய்விகமான, **விபூ₄தீநாம்** – விபூதிகளுக்கு (பெருமைகளுக்கு), **அந்த:** – முடிவு, **ந அஸ்தி** – இல்லை. **விபூ₄தே:** – (எனது) விபூதிகளினுடைய, **ஏஷ:** – இந்த, **விஸ்தர: து** – விரிவும் கூட (உனக்காகவே), **உத்₃தே₃ஶத:** – ஒரளவுதான் அதாவது சுருக்கமாகத்தான், **மயா** – என்னால், **ப்ரோக்த:** – கூறப்பட்டது.

எதிரிகளை வாட்டுபவனே! என்னுடைய தெய்விகமான விபூதிகளுக்கு – பெருமைகளுக்கு முடிவு இல்லை. எனது விபூதிகளினுடைய இந்த விரிவும்கூட உனக்காகவே ஒரளவுதான் – சுருக்கமாகத்தான் என்னால் கூறப்பட்டது.

**கேள்வி:** 'என்னுடைய தெய்விகமான விபூதிகளுக்கு முடிவே கிடையாது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** என்னுடைய ஸாதாரண விபூதிகள் ஒருபுறம் இருக்க, என்னுடைய தெய்விக விபூதிகளுக்கும் முடிவு கிடையாது. நீர், நிலம் இவற்றில் பரமாணுக்களை எண்ண முடியாதது போன்றே, என்னுடைய விபூதிகளையும் எண்ணிக் கணக்கிட முடியாது. அவை எத்தனை என்று யாரும் அறியவும் முடியாது. எடுத்துச் சொல்லவும் முடியாது. கணக்கற்ற ப்ரம்மாண்டங்களில் கணக்கற்ற விபூதிகள் உள்ளன. அவற்றைக் கடக்கவும் முடியாது.

**கேள்வி:** இதுவரை சொன்னது இந்த விபூதிகளைப் பற்றிய விரிவின் ஒரு பகுதியின் சுருக்கம்தான் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'நான் உனக்கு என்னுடைய தெய்விக விபூதிகளின் விரிவு பற்றிச் சொன்னதுகூட அவற்றின் ஒரு பகுதிதான். முழுவதும் சொல்வது மிகவும் கடினமான செயல். ஆகவே, இத்துடன் இந்த வர்ணனையை முடித்துக் கொள்கிறேன்' என்கிறார் பகவான்.

**பொருத்தம்:** 18வது ச்லோகத்தில் அர்ஜுனன் பகவானிடம் அவருடைய விபூதிகளையும், யோகசக்திகளையும் வர்ணிக்கும்படி வேண்டினார். அதன்படி பகவான் தம் தெய்விக விபூதிகளைச் சொல்லி முடித்து, இப்பொழுது சுருக்கமாகத் தம் யோகசக்தியையும் எடுத்துக் கூறுகிறார்—

**यद्यद्विभूतिमत्सत्त्वं श्रीमदूर्जितमेव वा ।**
**तत्तदेवावगच्छ त्वं मम तेजोंऽशसम्भवम् ॥ ४१ ॥**

**யத்₃யத்₃விபூ₄திமத்ஸத்த்வம் ஶ்ரீமதூ₃ர்ஜிதமேவ வா ।**
**தத்ததே₃வாவக₃ச்ச₂ த்வம் மம தேஜோம்ஶஸம்ப₄வம் ॥ 41 ॥**

**யத் யத்** – எது எது, **விபூ₄திமத்** – சிறப்புடையதோ, **ஶ்ரீமத்** – ஒளியுடையதோ, **ஊர்ஜிதம் வா** – சக்தி படைத்ததோ, **தத் தத்** – அந்த அந்த, **ஸத்த்வம் ஏவ** – பொருள் எல்லாம், **மம** – என்னுடைய, **தேஜோம்ஶ ஸம்ப₄வம் ஏவ** – ஒளியின் ஒரு பகுதியின் வெளிப்பாடே (என்று), **த்வம்** – நீ, **அவக₃ச்ச₂** – அறிந்துகொள்.

எது எது சிறப்புடையதோ, ஒளியுடையதோ, சக்தி படைத்ததோ அந்த அந்தப் பொருள் எல்லாம் என்னுடைய ஒளியின் ஒரு பகுதியின் வெளிப்பாடே என்று நீ அறிந்துகொள்.

**கேள்வி:** 'யத் யத்', 'விபூதிமத்', 'ஶ்ரீமத்', 'ஊர்ஜிதம்' என்ற அடைமொழிகளுடன் கூடிய 'ஸத்வம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? 'அது பகவானுடைய ஒளியின் ஒரு பகுதியில் தோன்றியது என்று அறிவது' என்றால் என்ன?

**பதில்:** உலகில் ஏதாவது ஒரு ப்ராணியோ அல்லது ஜடப்பொருளோ ஆளுமை படைத்ததாகவோ, அழகு, ஒளி முதலிய குணங்கள் பொருந்தியதாகவோ, பலம்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தேஜஸ், பராக்ரமம் முதலிய மற்ற சக்திகள் படைத்ததாகவோ இருக்குமேயானால், அவையெல்லாவற்றையும் சேர்த்து முன் சொன்ன அடைமொழிகளுடன் கூடிய 'ஸத்வம்' என்ற சொல் குறிக்கிறது என்று கொள்ள வேண்டும். மேலே சொன்ன ஆளுமை, சக்தி, பலம், தேஜஸ் இவையெல்லாமோ அல்லது ஏதாவது ஒன்றோ ஒரு ப்ராணியிடமோ, பொருளிலோ வெளிப்பட்டால், அது பகவானுடைய தேஜஸ்ஸின் அம்சம் என்று அறியவேண்டும். அங்கு பகவானுடைய அம்சம் வெளிப்படுகிறது என்று அறியவேண்டும். மின்சக்தியினால் சில இடங்களில் விளக்கு எரிகிறது. சில இடங்களில் காற்று வீசுகிறது. சில இடங்களில் குழாயில் தண்ணீர் வருகிறது. சில இடங்களில் வானொலிப் பெட்டியில் வெகுதூரத்திலிருந்து வரும் பாட்டு கேட்கிறது. இப்படி வெவ்வேறு இடங்களில் பல செயல்கள் நடைபெறுகின்றன. ஆனால் எங்கெங்கு இப்படிச் செயல்கள் நடைபெறுகின்றனவோ, அங்கெல்லாம் மின்சாரத்தின் சக்திதான் செயல்படுகிறது. உண்மையில் அவையெல்லாம் மின்சார சக்தியின் வெளிப்பாடுதான். அதுபோல் எந்த ப்ராணியிடமோ, பொருளிடமோ ஒரு தனிச்சிறப்பு வெளிப்படுமேயானால், அது பகவானுடைய தேஜஸ்ஸின் ஒரு கீற்றின் வெளிப்பாடு என்று உணரவேண்டும்.

**பொருத்தம்: இவ்விதம் மிகவும் முக்யமான பொருட்களில் தம்முடைய யோகசக்தி வடிவான தேஜஸ்ஸின் பகுதியின் வெளிப்பாட்டை வர்ணித்து, பகவான் அகில உலகமுமே இத்தகைய தம்முடைய யோகசக்தியின் ஒரு பகுதியினால்தான் தாங்கப்படுகின்றது என்று கூறுகிறார்—**

**अथवा बहुनैतेन किं ज्ञातेन तवार्जुन।**
**विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत्॥४२॥**

**அத₂வா ப₃ஹுநைதேந கிம் ஜ்ஞாதேந தவார்ஜுந ।**

**விஷ்டப்₄யாஹமித₃ம் க்ருத்ஸ்நமேகாம்ஸேந ஸ்தி₂தோ ஜக₃த் ॥ 42 ॥**

**அத₂வா** – தவிரவும், **அர்ஜுந** – அர்ஜுன! **ஏதேந** – இந்த (இவ்வாறு), **ப₃ஹுநா ஜ்ஞாதேந** – அதிகம் தெரிந்து கொள்வதால், **தவ** – உனக்கு, **கிம்** – என்ன பயன்? **அஹம்** – நான், **இத₃ம்** – இந்த, **க்ருத்ஸ்நம் ஜக₃த்** – உலகனைத்தையும், **ஏகாம்ஸேந** – எனது யோகசக்தியின் ஓர் அம்சத்தினால், **விஷ்டப்₄ய** – தாங்கிக் கொண்டு, **ஸ்தி₂த:** – இருக்கிறேன்.

தவிரவும் 'அர்ஜுன! இவ்வாறு அதிகம் தெரிந்து கொள்வதால் உனக்கு என்ன பயன்? நான் இந்த அனைத்துலகையும் எனது யோகசக்தியின் ஓர் அம்சத்தினால் தாங்கிக் கொண்டு இருக்கிறேன்.'

**கேள்வி:** இங்கு 'அதவா' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'அதவா' என்றால் 'எனது விபூதிகள் பற்றி இதுவரை கூறிய கருத்தை வேறுவிதமாகக் கூறுகிறேன்' என்று கூறுவதாகப் பொருள். 20 முதல் 39 வரை பகவான் தம்முடைய மிகவும் முக்யமான விபூதிகளை வர்ணித்துவிட்டு, 41ல் தம்முடைய தேஜஸ் ஆகியவை வெளிப்படும் இடங்களைக் குறிப்பிட்டுவிட்டு, இவற்றைத் தவிரத் தமது வேறு தனிச்சிறப்புக் கொண்ட ப்ரபாவத்தை 'தவிரவும்' என்று ஆரம்பித்து இப்பொழுது சொல்கிறார்.

**கேள்வி:** 'இவ்வாறு அதிகம் தெரிந்து கொண்டு உனக்கு என்ன பயன்?' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'நீ கேட்டதால், என்னுடைய மிகவும் முக்யமான விபூதிகளையெல்லாம் உனக்கு எடுத்துச் சொன்னேன். இவ்வளவு மட்டும் அறிந்தால் போதாது. ஸாரத்தை இனிமேல்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உனக்குச் சொல்லப் போகிறேன். இதை நன்றாகக் கவனித்துத் தெரிந்து கொள். அப்பொழுது உனக்குத் தானாகவே எல்லாம் புரியும். அதற்குப் பிறகு நீ அறிய வேண்டியது ஒன்றுமில்லை' என்கிறார் பகவான்.

**கேள்வி:** 'இதம்', 'க்ருத்ஸ்நம்' என்ற அடைமொழிகள் சேர்த்து 'ஜகத்' என்று எதைக் குறிப்பிடுகிறார். அதை பகவான் தம் யோகசக்தியின் ஓர் அம்சத்தினால் தாங்குவதாகக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கு 'இதம் க்ருத்ஸ்நம் ஜகத்' என்ற சொற்றொடர் மனம், புலன்கள், உடல் இவை சேர்ந்த எல்லாச் சராசர ப்ராணிகளும், போகப் பொருட்களும், அனுபவஸ்தானங்களான ஸகல லோகங்களும் ஒருசேர அடங்கிய ப்ரம்மாண்டத்தைக் குறிப்பிடுகிறது. இந்த ப்ரம்மாண்டம் பகவானது ஒரு சிறு அம்சத்தில் அவருடைய யோகசக்தியால் தாங்கப் பெறுகிறது. 'இந்த உலகனைத்தையும் என் யோகசக்தியின் ஓர் அம்சத்தினால் தாங்குகிறேன்' என்பதற்கு இதுதான் பொருள்.

*ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे*
*विभूतियोगो नाम दशमोऽध्याय: ॥ १० ॥*

**ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத்₃ப₄க₃வத்₃கீ₃தாஸூபநிஷத்ஸு ப்₃ரஹ்மவித்₃யாயாம்**
**யோக₃ஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே₃ விபூ₄தியோகோ₃**
**நாம த₃ஶமோऽத்₄யாய: ॥ 10 ॥**

**ஓம் தத் ஸத் – ப்ரம்ம வித்யை, யோக ஶாஸ்த்ரம், உபநிஷத்**
**எனப்படும் ஸ்ரீமத்பகவத்கீதையாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே**
**நிகழ்ந்த உரையாடலில் 'விபூதியோகம்' எனப் பெயர் படைத்த**
**பத்தாவது அத்யாயம் நிறைவுற்றது.**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

## அத₂ ஏகாத₃ஸோऽத்₄யாய:

# பதினொன்றாவது அத்யாயம்

## விஶ்வரூபதர்ஶந யோகம்

**அத்யாயத்தின் பெயர்**

இந்த அத்யாயத்தில் அர்ஜுனனுடைய வேண்டுகோளுக் கிணங்க பகவான் அவருக்கு விசுவரூபதர்சனம் செய்து வைக்கிறார். இந்த அத்யாயத்தில் உள்ள விஷயம் பெரும்பாலும் விசுவரூபத்தைப் பற்றியதாகவும், அதைத் துதிப்பது பற்றியதாகவும் வருகிறது. ஆகவே இந்த அத்யாயத்திற்கு 'விஶ்வரூபதர்ஶநயோகம்' என்று பெயர்.

**அத்யாயச் சுருக்கம்**

இந்த அத்யாயத்தில் ச்லோகம் *1* முதல் *4* வரை அர்ஜுனன் பகவானையும், அவருடைய உபதேசத்தையும் புகழ்ந்து விசுவரூபதர்சனம் தந்தருளுமாறு வேண்டிக் கொள்கிறார். *5* முதல் *8* வரை பகவான் தம்மிடத்தில் தேவதைகள், மனிதர்கள், விலங்குகள், பறவைகள் முதலிய எல்லாச் சராசர ப்ராணிகளையும், இன்னும் பலவிதமான வியக்கத்தக்க காட்சிகள் நிறைந்த அகில உலகையும் பார் என்று கூறி, தெய்விகப் பார்வை அளிப்பதாகச் சொல்கிறார். *9*ல் பகவான் அர்ஜுனனுக்கு விசுவரூபம் காட்டுவதை ஸஞ்ஜயன் எடுத்துக் கூறுகிறார். *10* முதல் *13* வரை அர்ஜுனனுக்களித்த விசுவரூப தர்சனத்தை வர்ணிக்கிறார். *14*ல் அந்த வடிவைப் பார்த்து அர்ஜுனன் வியப்பும், மகிழ்ச்சியும் கொண்டு ச்ரத்தையுடன் பகவானை வணங்கித் துதிப்பதைக் கூறுகிறார். *15* முதல் *31* வரை அர்ஜுனன் விசுவரூபத்தைத் துதிக்கிறார். அதன் ப்ரபாவத்தை வர்ணிக்கிறார். அதில் காணப்படும் காட்சிகளையும் வர்ணிக்கிறார். கடைசியில் பகவானிடம் தம்முடைய உண்மை நிலையை விளங்கக் கூறுமாறு வேண்டுகிறார். *32* முதல் *34* வரை பகவான், தாமே உலகங்களையெல்லாம் அழிக்கும் காலம் என்றும், பீஷ்மர், த்ரோணர் முதலிய எல்லா வீரர்களையும் முன்பே தாம் வதைத்துவிட்டதாகவும் கூறி அர்ஜுனனை உற்சாகப்படுத்துகிறார். 'நீ ஒரு நிமித்தமாக மட்டும் இருந்தால் போதும். யுத்தம் செய்' என்று கட்டளையிடுகிறார். *35*ல் பகவானுடைய சொற்களைக் கேட்டு வியப்பும், பயமும் சூழ்ந்த நிலையில் அர்ஜுனன் பேசும் முறையைச் சொல்கிறார். *36* முதல் *46* வரை பகவானைத் துதித்து, வணங்கி, தம்மைப் பொறுத்தருளுமாறு வேண்டுகிறார். தெய்விகமான சதுர்புஜ ஸ்வரூபத்தின் தர்சனம் தருமாறு வேண்டிக் கொள்கிறார். *47*, *48*ல் பகவான் தம் விசுவரூபத்தின் பெருமையையும், அதை தர்சிப்பதன் அருமையையும் கூறி, *49*ல் அர்ஜுனனுக்கு ஆறுதல் கூறி, சதுர்புஜங்களுடைய ஸ்ரீமந்நாராயணனுடைய ஸ்வரூபத்தைப் பார் என்கிறார். *50*ல் சதுர்புஜ நாராயண ஸ்வரூபத்தைக் காண்பித்துப் பிறகு மனித வடிவில் தோன்றுகிறார். அதைப்பற்றி ஸஞ்ஜயன் வர்ணிக்கிறார். *51*ல் அர்ஜுனன் பகவானுடைய இனிய மனித ஸ்வரூபத்தைக் கண்டு தன்னுணர்வு பெற்றுத் தம் இயல்பை அடைகிறார். *52*, *53*களில் பகவான்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தம்முடைய சதுர்புஜ தர்சனம் கிடைப்பது அரிது என்று கூறுகிறார். 54ல் அந்த ரூபத்தின் தர்சனம், ஞானம், அந்த ஸ்வரூபத்தையே அடைதல் ஆகியவை அநன்ய பக்தியின் மூலம் எளிதாகப் பெற இயலும் என்கிறார். 55ல் அநன்ய பக்தியின் ஸ்வரூபத்தையும், அதன் பயனையும் கூறி அத்யாயத்தை நிறைவு செய்கிறார்.

**முன் அத்யாயத்துடன் இவ்வத்யாயத்திற்குப் பொருத்தம்:** அத்யாயம் 10ல் ச்லோகம் 7 வரை பகவான் தம் விபூதி, யோகசக்தி, அவற்றை அறிவதன் பயன் இவற்றைச் சுருக்கமாகக் கூறி 11 வரை பக்தியோகத்தையும், அதன் பயனையும் கூறினார். 12 முதல் 18 வரை அர்ஜுனன் பகவானைத் துதித்து, அவர்தம் தெய்விகமான விபூதிகளையும், யோகசக்தியையும் பற்றி விரிவாக விளக்க வேண்டுமென வேண்டுகிறார். பகவான் 40வரை தம் விபூதிகளை வர்ணித்து, முடிவில் யோகசக்தியின் ப்ரபாவத்தையும், எல்லா ப்ரம்மாண்டங்களும் தம்முடைய ஒரு பகுதியில் தாங்கப்படுவதையும் கூறி அத்யாயத்தை முடித்தார். இந்த விளக்கத்தைக் கேட்டபின் அர்ஜுனனுக்கு அந்த மஹத்தான வடிவை (எதன் ஒரு பகுதியில் எல்லா உலகமும் நிலைபெற்றிருக்கிறதோ, அவ்வடிவை) நேரில் பார்க்க ஆவல் எழுகிறது. அதற்காக இந்தப் பதினொன்றாவது அத்யாயத்தின் தொடக்கத்தில் முதல் நான்கு ச்லோகங்களில் பகவானையும், அவருடைய உபதேசத்தையும் புகழ்ந்து, தமக்கு விசுவரூப தர்சனம் தருமாறு அர்ஜுனன் வேண்டுகிறார்—

अर्जुन उवाच

**मदनुग्रहाय परमं गुह्यमध्यात्मसंज्ञितम्।**
**यत्त्वयोक्तं वचस्तेन मोहोऽयं विगतो मम॥ १ ॥**

அர்ஜுந உவாச

**மத₃நுக்₃ரஹாய பரமம் கு₃ஹ்யமத்₄யாத்மஸம்ஜ்ஞிதம் ।**
**யத்த்வயோக்தம் வசஸ்தேந மோஹோऽயம் விக₃தோ மம ॥ 1 ॥**

**அர்ஜுந உவாச** — அர்ஜுனன் கூறினார்: **மத் அநுக்₃ரஹாய** — எனக்கு அருள்புரிவதற்காக, **த்வயா** — உங்களால், **பரமம்** — மிக உயர்ந்ததும், **கு₃ஹ்யம்** — மறைத்துக் காப்பாற்றத்தக்கதும், **அத்₄யாத்ம ஸம்ஜ்ஞிதம்** — அத்யாத்மக் கருத்துக்கள் கொண்டதுமான, **யத் வச:** — எந்த உபதேசம், **உக்தம்** — கூறப்பட்டதோ, **தேந** — அதனால், **மம** — என்னுடைய, **அயம்** — இந்த, **மோஹ:** — அஞ்ஞானம், **விக₃த:** — அழிந்தது.

அர்ஜுனன் கூறினார்: "எனக்கு அருள்புரிவதற்காக உங்களால் மிக உயர்ந்ததும் மறைத்துக் காப்பாற்றத்தக்கதும் அத்யாத்மக் கருத்துக்கள் கொண்டதுமான எந்த உபதேசம் கூறப்பட்டதோ அதனால் என்னுடைய இந்த அஞ்ஞானம் அழிந்தது.

**கேள்வி:** 'மத் அநுக்ரஹாய' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பத்தாவது அத்யாயத் தொடக்கத்தில் அன்புக்கடலான பகவான்— 'அர்ஜுன! உனக்கு என்னிடம் பேரன்பு உள்ளது. ஆகவே நான் இந்தச் செய்தியெல்லாம் உன் நன்மைக்காகவே கூறுகிறேன்' என்று கூறித் தம்முடைய உலகியலுக்கு அப்பாற்பட்ட ப்ரபாவத்தை எடுத்துச் சொன்னார். அதைக் கேட்ட அர்ஜுனனுடைய மனதில் நன்றியுணர்ச்சி, மகிழ்ச்சி, அன்பு இவற்றின் அலைகள் எழுந்தன. அவர் இவ்வாறு நினைத்தார்: "ஆஹா! அகில உலகங்களுக்கும் அதிபதியான பகவான் அற்பனான என்னிடம் எவ்வளவு கருணை வைத்துள்ளார்! இந்த அற்பனைத் தம்முடைய பக்தன்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



என்று ஏற்றுக் கொள்கிறார். என்னிடம் தம்முடைய மஹிமை பற்றிய எவ்வளவு அதிரஹஸ்யமான விஷயங்களைத் தெளிவான சொற்களில் எடுத்துச் சொல்லிக் கொண்டே போகிறார்!" இப்பொழுது மஹரிஷிகள் கூறிய விஷயங்கள் எல்லாம் அர்ஜுனனுடைய நினைவுக்கு வந்தன. முழு நம்பிக்கையுடன் பகவானுடைய குணங்களைப் பாடி, மறுபடியும் யோகசக்தியையும், விபூதிகளையும் எடுத்துச் சொல்லும்படி அன்புப் பெருக்குடன் பகவானை வேண்டுகிறார். பகவான் அவருடைய வேண்டுகோளைக் கேட்டுத் தமது விபூதிகளையும், யோகத்தையும் சுருக்கமாக வர்ணிக்கிறார். அர்ஜுனனுடைய உள்ளத்தில் பகவத் க்ருபையால் ஏற்பட்ட அடையாளம் பதிந்தது. இதற்கு முன் உணராத வகையில் பகவானுடைய க்ருபை, தனக்கு ஏற்பட்டதை உணர்ந்த அர்ஜுனன் ஆனந்தத்தில் மெய்மறக்கிறார்.

தன் சொந்த முயற்சி, ஸாதனை, தன்னுடைய தகுதி இவற்றின் நினைவு இருந்துக் கொண்டிருக்கும் வரை ஸாதகனுக்கு பகவத் க்ருபை என்ற பரமலாபம் கிட்டாததுபோல் தோன்றும். பகவானுடைய க்ருபா ப்ரபாவத்தினாலன்றி அவன் தானாகவே ஸாதனையின் உயர்நிலையை அடைய முடியாது. பகவத் க்ருபையாலேதான், 'இது பகவானுடைய க்ருபை' என்பது அவனுக்குப் புரிகிறது. அப்பொழுது 'நடப்பதெல்லாம் பகவானுடைய அருள்' என்று விளங்குகிறது. அவனுக்கு மேலும் நன்றியுணர்ச்சி பெருகுகிறது. அவன் பகவானைக் கூவியழைக்க விழைகிறான்— "ப்ரபுவே! நான் ஒரு தகுதியுமற்றவன். முற்றிலும் உங்கள் கருணையைப் பெறத் தகுதியற்றவன். இவையெல்லாம் உங்கள் அருளின் லீலையே." இவ்விதம் செய்ந்நன்றி நிறைந்த உள்ளத்துடன் அர்ஜுனன் கூறுகிறார்— "ப்ரபுவே! நீங்கள் உங்கள் ப்ரபாவம், பெருமை ஆகியவற்றைக் கூறினீர்களே. அவற்றைக் கேட்பதற்குரிய தகுதி எனக்கு இல்லை. எனக்கு அருள்புரிய வேண்டும் என்று நீங்களாகவே கருதி, மிகவும் மறைத்துக் காப்பாற்ற வேண்டிய இந்த ரஹஸ்யங்களை எனக்கு எடுத்துக் கூறினீர்கள்." இதுதான் 'மதநுக்ரஹாய' என்ற சொல்லின் கருத்து.

**கேள்வி:** 'பரமம், குஹ்யம், அத்யாத்மஸம்ஜ்ஞிதம் வச:' – என்பவை பகவானுடைய எந்த உபதேசத்தைக் குறிக்கின்றன? இந்த அடைமொழிகளின் கருத்து என்ன?

**பதில்:** *10/1ல்* எந்த உயர்ந்த பொருள் பொதிந்த மொழிகளைச் சொல்கிறேன் என்று பகவான் கூறினாரோ, அதற்கேற்ப *11* ச்லோகம் வரை பகவான் கூறிய உபதேசம்; அதற்குப் பிறகு அர்ஜுனனுடைய கேள்விக்குப் பதிலாக *20* முதல் *42* வரை உள்ள ச்லோகங்களில் பகவான் தம்முடைய விபூதிகளையும், யோகசக்தியையும் அறிமுகப்படுத்தினாரே அவை; 7வது முதல் 9வது அத்யாயம் வரை விஞ்ஞானத்துடன் கூடிய ஞானத்தைப் பற்றிக் கூறுகிறேன் என்று சொல்லி, தம்முடைய குணங்கள், ப்ரபாவம், ஐசுவர்யம், ஸ்வரூப தத்வம், ரஹஸ்யம் இவற்றைச் சொன்னாரே, அவையெல்லாம் இங்கே குறிப்பிடப்படும் 'பரமம், குஹ்யம், அத்யாத்மஸம்ஜ்ஞிதம் வச:' என்பதில் அடங்கும்.

எந்தெந்த ஸந்தர்பங்களில் பகவான் தம்முடைய குணங்கள், ப்ரபாவங்கள், தத்வம் இவற்றை நிரூபித்து அர்ஜுனனைத் தம்மைச் சரணடையுமாறு தூண்டி, பின் தெளிவாக "நான் – இதோ உன் முன் நிற்கும் இந்த ஸ்ரீக்ருஷ்ணன்தான் அகில உலகையும் படைத்தவன், ஒடுக்குபவன், நிர்குணமானவன், ஸகுணமானவன், உருவமற்றவன், உருவமுள்ளவன், மாயைக்கு அப்பாற்பட்டவன், ஸர்வ வல்லமை படைத்தவன், எல்லாவற்றிற்கும் ஆதாரமான பரமேசுவரன்" என்று கூறினாரோ, அங்கெல்லாம் அது பெரிதும் மறைத்துக் காப்பாற்றப்பட வேண்டியது என்று பகவானே கூறியிருக்கிறார். ஆகவே, அதே அடைமொழிகளோடு இங்கே அர்ஜுனன் 'தங்களுடைய உபதேசம் மறைத்துப் போற்றிக் காப்பாற்றப்பட வேண்டியதுதான்' என்று திரும்பவும் சொல்கிறார்.

**கேள்வி:** இங்கு 'அயம் மோஹ:' என்பது அர்ஜுனனுடைய எந்த மோஹத்தை – (அறியாமையை)க் குறிக்கிறது? மேலே சொன்ன உபதேசத்தின் மூலம் அந்த அறியாமை அழிகிறது என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பதில்: அர்ஜுனன் பகவானுடைய குணங்கள், ப்ரபாவம், ஐசுவர்யம், ஸ்வரூபம் இவற்றை முழுமையாக அறியாமல் இருந்ததுதான் அவருடைய அறியாமை. தற்பொழுது மேலே சொன்ன உபதேசத்தின் மூலம் பகவானுடைய குணங்கள், ப்ரபாவம், ஐசுவர்யம், ரஹஸ்யம், ஸ்வரூபம் இவற்றைப் பற்றிக் கொஞ்சம் அறிந்து கொண்டார். ஸ்ரீக்ருஷ்ணன் பரமாத்மாதான் என்று புரிந்து கொண்டார். அவருடைய அறியாமை அழிந்ததற்கு இதுவே அடையாளம்.

**भवाप्ययौ हि भूतानां श्रुतौ विस्तरशो मया।**
**त्वत्तः कमलपत्राक्ष माहात्म्यमपि चाव्ययम्॥ २॥**

**ப₄வாப்யயௌ ஹி பூ₄தாநாம் ஶ்ருதௌ விஸ்தரஶோ மயா ।**

**த்வத்த: கமலபத்ராக்ஷ மாஹாத்ம்யமபி சாவ்யயம் ॥ 2 ॥**

**ஹி** – ஏனெனில், **கமலபத்ராக்ஷ** – தாமரைக்கண்ணனே! **மயா** – என்னால், **த்வத்த:** – உங்களிடமிருந்து, **பூ₄தாநாம்** – (எல்லா) உயிரினங்களுடைய, **ப₄வ அப்யயௌ** – உற்பத்தி, லயம் இரண்டும், **விஸ்தரஶ:** – விரிவாக, **ஶ்ருதௌ** – கேட்கப் பட்டன. **ச** – அவ்வாறே, **அவ்யயம்** – அழிவற்ற, **மாஹாத்ம்யம் அபி** – பெருமையும் (கேட்கப்பட்டது).

ஏனெனில் தாமரைக்கண்ணனே! உங்களிடமிருந்து எல்லா உயிரினங்களுடைய உற்பத்தி, லயம் இரண்டும் என்னால் விரிவாகக் கேட்கப்பட்டன. அவ்வாறே அழிவற்ற பெருமையும் கேட்கப்பட்டது.

கேள்வி: நான் உங்களிடம் எல்லா உயிரினங்களின் உற்பத்தி, லயம் இவற்றைப் பற்றி விரிவாகக் கேட்டுக் கொண்டுவிட்டேன் என்று கூறுவதன் கருத்து என்ன?

பதில்: "உங்களிடமிருந்துதான் அனைத்துச் சராசரங்களும் உண்டாகின்றன. நீங்களே அவற்றைக் காப்பாற்றுகிறீர்கள். அவை உங்களிடமே லயமடைகின்றன. இந்த விஷயங்களை உங்கள் வாய்மொழி மூலம் (7வது அத்யாயம் முதல் 10வது அத்யாயம் வரை) விரிவாகப் பலமுறை சொல்லக் கேட்டுக் கொண்டேன்" என்பது கருத்து.

கேள்வி: 'உங்களுடைய அழிவற்ற பெருமையைப் பற்றியும் கேட்டேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

பதில்: 'உயிரினங்களின் உற்பத்தி, அழிவு பற்றி மட்டும்தான் உங்களிடம் கேட்டுக் கொண்டேன் என்பது பொருளன்று. உங்களுடைய அழிவற்ற பெருமையையும் கேட்டறிந்தேன்' என்கிறார். அதாவது இந்த அகில ப்ரபஞ்சத்தைப் படைத்தல், காத்தல், ஒடுக்குதல் ஆகிய முத்தொழில்களைச் செய்தாலும், நீங்கள் கர்த்தா இல்லை. எல்லாவற்றை யும் அடக்கி ஆண்டாலும் அவற்றால் பாதிக்கப்படாமல் ஒதுங்கி நின்று ஸாக்ஷியாக இருப்பவர். எங்கும் நிறைந்திருந்தாலும் உலகிலுள்ள பொருட்களின் சிறப்புக்களிலும், குறைகளிலும் ஒட்டாதவர். நல்லதும்-கெட்டதுமான கர்மங்களுக்கேற்றவாறு ப்ராணிகளுக்கு ஸுகம், துக்கம் என்ற பயன்களை அளித்தாலும், உங்களிடம் தயவின்மையோ, ஓரம்சார்வதோ கிடையாது. ப்ரக்ருதியாகவும், காலமாகவும், லோகபாலகர்களாகவும் வடிவெடுத்து அவற்றை அடக்கி ஆள்பவர். ஸர்வ வல்லமை படைத்தவர் என்ற பெருமைகளைப் பலவாறு கேட்டிருக்கிறேன்

**एवमेतद्यथात्थ त्वमात्मानं परमेश्वर।**
**द्रष्टुमिच्छामि ते रूपमैश्वरं पुरुषोत्तम॥ ३॥**

**ஏவமேதத்₃யதா₂த்த₂ த்வமாத்மாநம் பரமேஶ்வர ।**

**த்₃ரஷ்டுமிச்ச₂ாமி தே ரூபமைஶ்வரம் புருஷோத்தம ॥ 3 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பரமேஶ்வர – பரமேசுவரனே! **த்வம்** – நீங்கள், **ஆத்மாநம்** – உங்களைப் பற்றி, **யதா₂** – எவ்வாறு, **ஆத்த₂** – கூறினீர்களோ, **ஏதத்** – அது, **ஏவம் (ஏவ)** – அப்படியேதான். (ஆனால்), **புருஷோத்தம** – புருஷோத்தம! **தே** – உங்களுடைய, **ஐஶ்வரம் ரூபம்** – ஞானம், ஈசுவரத்தன்மை, சக்தி, பலம், வீர்யம், தேஜஸ் இவற்றோடு கூடிய ஈசுவர ஸ்வரூபத்தை, **த்₃ரஷ்டும்** – கண்கூடாகக் காண்பதற்கு, **இச்ச₂ாமி** – விரும்புகிறேன்.

பரமேசுவரனே! நீங்கள் உங்களைப் பற்றி எவ்வாறு கூறினீர்களோ அது அப்படியேதான். ஆனால் புருஷோத்தம! உங்களுடைய ஞானம், ஈசுவரத்தன்மை, சக்தி, பலம், வீர்யம், தேஜஸ் இவற்றோடு கூடிய ஈசுவர ஸ்வரூபத்தைக் கண்கூடாகக் காண்பதற்கு விரும்புகிறேன்.

**கேள்வி:** 'பரமேஶ்வர', 'புருஷோத்தம' என்று அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** 'பரமேஶ்வரன்' என்றால் பகவான் ஈசுவரர்களுக்கெல்லாம் ஈசுவரன். ஸர்வ வல்லமை படைத்தவர். ஆகவே, நான் காண விரும்பும் ஈசுவர ஸ்வரூபத்தை மிகச் சுலபமாகவே காட்ட நீங்கள் வல்லவர் என்று பொருள். 'புருஷோத்தம' என்றால் நீங்கள் க்ஷரம் (அழிவது), அக்ஷரம் (அழிவற்றது) இவற்றிற்கு அப்பாற்பட்ட ஸாக்ஷாத் பகவான். ஆகவே தயவு செய்து என் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும் என்று பொருள்.

**கேள்வி:** 'நீங்கள் உங்களைப் பற்றி எவ்வாறு கூறினீர்களோ, அது அப்படியேதான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'உங்களுடைய குணம், ப்ரபாவம், தத்வம், ஐசுவர்யம் ஆகியவற்றின் வர்ணனைகளில் கூறப்பட்டவையனைத்தும் உண்மைதான். அவற்றில் எள்ளளவும் எனக்கு ஸந்தேஹமில்லை என்பது கருத்து.

**கேள்வி:** 'ஐஶ்வரம்' என்ற உரிச்சொல்லோடு கூடிய 'ரூபம்' என்ற சொல்லின் பொருள் என்ன? அதைக் காண விரும்புகிறேன் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எல்லையற்றதும், அளவற்றதுமான ஞானம், சக்தி, பலம், வீர்யம், தேஜஸ் முதலிய ஈசுவரனுடைய குணங்களும், ப்ரபாவங்களும் எங்கே வெளிப்படையாகத் தெரியுமோ, அகில ப்ரபஞ்சமும் எவருடைய ஓர் அம்சத்தைப் பற்றிக் கொண்டு நிலைபெறுமோ அத்தகைய ஸ்வரூபம் ஐசுவர ஸ்வரூபம். "இத்தகைய ஸ்வரூபத்தை நான் பார்த்ததில்லை. உங்கள் வாயிலாக அதைப் பற்றி (10/42)க் கேட்டறிந்த பிறகு அதைக் காண வேண்டுமென்ற துடிப்பு என் உள்ளத்தில் உண்டாகிறது. அதன் தர்சனத்தைப் பெற்று நான் வாழ்க்கைப் பயன் எய்த வேண்டுமென்று நினைக்கிறேன்" என்று அர்ஜுனன் கூறுகிறார்.

**கேள்வி:** அர்ஜுனனுக்கு பகவான் கூறியவற்றில் பூரண நம்பிக்கை இருக்குமானால் – அதில் கொஞ்சம்கூட ஸந்தேஹமில்லையானால் – அதைப் பார்த்துத்தான் ஆகவேண்டுமென்ற விருப்பத்தை ஏன் வெளியிடுகிறார்?

**பதில்:** உண்மையே பேசும் இயல்புடைய ஒரு நல்ல மனிதர், தம்மிடம் ஸ்பர்சமணி (தொட்டதைத் தங்கமாக்கும் மணி), சிந்தாமணி (நினைத்ததைத் தரவல்ல ரத்னம்) அல்லது வேறு ஏதாவதொரு அற்புதமான பொருள் இருக்கிறதாகச் சொல்கிறார். அவர் பேச்சில் நம்பிக்கை உண்டு. ஆகவே அப்பொருட்கள் அவரிடம் இருக்கத்தான் இருக்கும். அதில் ஸந்தேஹமில்லை. அவரிடம் இருப்பதைக் கண்ணால் கண்டால்தான் நம்பலாம் என்ற எண்ணமில்லை. ஆனால், அந்த அற்புத வஸ்துவைக் காண வேண்டுமென்ற அவா அத்தகைய பொருளை இதுவரை கண்டதில்லையே என்ற காரணத்தினால் ஏற்படலாம் அல்லவா? அதை அவர் காண்பிக்கலாம் அல்லவா? இதில் நம்பிக்கைக் குறைவு என்று ஒன்றுமில்லை. அதேபோன்று உலகியலுக்கு அப்பாற்பட்ட பகவானுடைய ஸ்வரூபத்தை அர்ஜுனன் இதுவரை பார்த்ததில்லையாதலால், இப்போது பார்க்க வேண்டுமென்ற துடிப்பு இயல்பாக உண்டாகிவிட்டது. அதை வெளியிடுகிறார். அவ்வளவுதான். இதில் நம்பிக்கைக் குறைவு என்று நினைக்க இடமில்லை. நம்பிக்கை உள்ளதால்தான் காணத் துடிக்கிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**मन्यसे यदि तच्छक्यं मया द्रष्टुमिति प्रभो।**
**योगेश्वर ततो मे त्वं दर्शयात्मानमव्ययम्॥ ४॥**

**மந்யஸே யதி₃ தச்ச₂க்யம் மயா த்₃ரஷ்டுமிதி ப்ரபே₄ா ।**

**யோகே₃ஶ்வர ததோ மே த்வம் த₃ர்ஶயாத்மாநமவ்யயம் ॥ 4 ॥**

**ப்ரபோ** – ப்ரபுவே! **மயா** – என்னால், **தத்** – அந்த (ஈசுவர) உருவத்தை, **த்₃ரஷ்டும்** – பார்ப்பதற்கு, **ஶக்யம் இதி** – முடியும் என்று, **யதி₃ மந்யஸே** – நினைப்பீர்களேயானால், **தத:** – அப்பொழுது, **யோகே₃ஶ்வர** – யோகேசுவரரே! **த்வம்** – நீங்கள், **ஆத்மாநம் அவ்யயம்** – உங்களுடைய அந்த அழிவற்ற ஸ்வரூபத்தை, **மே** – எனக்கு, **த₃ர்ஶய** – தர்ஶனம் செய்து வையுங்கள்.

ப்ரபுவே! என்னால் அந்த ஈசுவர உருவத்தைப் பார்ப்பதற்கு முடியும் என்று நினைப்பீர்களேயானால் அப்பொழுது யோகேசுவரரே! நீங்கள் உங்களுடைய அந்த அழிவற்ற ஸ்வரூபத்தை எனக்கு தர்ஶனம் செய்து வையுங்கள்."

**கேள்வி:** 'ப்ரபோ', 'யோகேஶ்வர' என்று அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** நீங்கள் எல்லாவற்றையும் உண்டாக்கிக் காத்து அழிப்பதுடன் அவற்றில் அந்தர்யாமியாக இருந்து அடக்கியாளும் சக்தி படைத்தவர். ஆகவே அப்பேருருவினைக் காண்பதற்கு எனக்குத் தகுதி இல்லையென்றாலும், என்னிடம் கருணை காட்டி உங்களுடைய சக்தியினால் அதைக் காணத் தகுதியுள்ளவனாக நீங்கள் என்னை ஆக்க முடியும். நீங்கள் யோகேசுவரர். எல்லா யோகங்களுக்கும் அதிபதி. நீங்கள் விரும்பினால் எளிதாகவே எனக்கு அந்த ஸ்வரூபத்தைக் காண்பிக்க முடியும். ஸாதாரண யோகிகூடப் பலவிதமாகத் தம்முடைய ஈசுவர சக்தியைக் காண்பிக்கிறார். அப்படியானால் உங்களைப் பற்றிக் கூறுவதற்கென்ன?

**கேள்வி:** 'அந்த ஈசுவர உருவத்தை என்னால் காண முடியுமென்று நீங்கள் நினைப்பீர்களேயானால் எனக்கு தர்சனம் செய்து வையுங்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "உங்களது ப்ரபாவத்தை உங்கள் திருவாயினால் கேட்டறிந்து கொண்டேன். அது உண்மையில் நீங்கள் கூறியபடிதான் உள்ளது. இதில் சிறிதும் ஐயமில்லை. நீங்கள் எனக்கு அதை தர்சனம் செய்து வைக்காவிட்டாலும், உங்களுக்கு அவ்வித சக்தி கிடையாது என்றும் ஆகிவிடாது; என் நம்பிக்கையும் சிறிதுகூடக் குறைந்துவிடாது. ஆனாலும் என் உள்ளத்தில் அந்த ஸ்வரூபத்தைக் காண வேண்டுமென்ற தீவிரமான ஆசை ஏற்பட வேண்டுவது அவசியம். அந்தர்யாமியான நீங்கள் என்னுடைய இந்த ஆசை உண்மையானதா இல்லையா, தீவிரமானதா இல்லையா என்பதைத் தெரிந்து கொண்டால்தான், என்னுடைய ஆசை உண்மையானதென்று நீங்கள் கருதினால்தான் அந்த தர்சனம் பெற நான் தகுதியுள்ளவன் ஆவேன். ஏனெனில், நீங்கள்தான் பக்தர்களின் விருப்பங்களை நிறைவேற்றி வைக்கும் கற்பகதரு. நீங்கள் பக்தர்களது விருப்பத்தைத்தான் கவனிப்பீர்கள்; மற்ற தகுதிகளை அல்ல. ஆகவே, நீங்கள் உசிதம் என்று நினைத்தீர்களானால் அந்த ஸ்வரூபத்தை எனக்குத் தர்சனம் செய்து வைக்க வேண்டும்" என்று வேண்டுகிறார்.

**பொருத்தம்:** மிகவும் ச்ரத்தையுடன் தம்மிடம் மிகவும் அன்பு கொண்ட அர்ஜுனன் இவ்விதம் வேண்டிக் கொண்டதன்பேரில் மூன்று ச்லோகங்களில் பகவான் தம் விசுவரூபத்தை வர்ணித்து, அதைப் பார்க்குமாறு அர்ஜுனனுக்குக் கட்டளை இடுகிறார்—

*श्रीभगवानुवाच*

**पश्य मे पार्थ रूपाणि शतशोऽथ सहस्रशः।**
**नानाविधानि दिव्यानि नानावर्णाकृतीनि च॥ ५॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakṣhmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸ்ரீப₄க₃வாநுவாச

**பஶ்ய மே பார்த₂ ரூபாணி ஶதஶோऽத₂ ஸஹஸ்ரஶ: ।**

**நாநாவித₄ாநி தி₃வ்யாநி நாநாவர்ணாக்ருதீநி ச ॥ 5 ॥**

**ஸ்ரீப₄க₃வாநுவாச** – ஸ்ரீபகவான் கூறினார்: **பார்த₂** – பார்த்த! **அத₂** – இப்பொழுது (நீ), **மே** – என்னுடைய, **ஶதஶ:** – நூற்றுக்கணக்காகவும், **ஸஹஸ்ரஶ:** – ஆயிரக்கணக்காக வும், **நாநாவித₄ாநி ச** – பற்பல விதங்களாகவும், **நாநாவர்ண ஆக்ருதீநி** – பல நிறங்களும், பல உருவங்களும் கொண்டவையாகவும் உள்ள, **தி₃வ்யாநி** – தெய்விகமான (உலகில் காண இயலாத), **ரூபாணி** – உருவங்களை, **பஶ்ய** – பார்.

ஸ்ரீபகவான் கூறினார்: 'பார்த்த! இப்பொழுது நீ என்னுடைய நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் பற்பல விதங்களாகவும் பல நிறங்களும், பல உருவங்களும் கொண்டவையாகவும் உள்ள தெய்விகமான (உலகில் காண இயலாத) உருவங்களைப் பார்.

**கேள்வி:** *இங்கு 'ஶதஶ:' என்றும், 'ஸஹஸ்ரஶ:' என்றும் எண்ணைக் குறிப்பிடும் சொற்களை உபயோகப்படுத்திக் கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** 'என்னுடைய ஸ்வரூபங்கள் எண்ணில் அடங்காதவை' என்பதை இப்படிக் குறிப்பிடுகிறார். 'நான் காண்பிக்கப் போகும் இந்த விசுவரூபத்தில் ஒரே இடத்தில் நீ எண்ணற்ற வடிவங்களைக் காண்பாய்' என்கிறார்.

**கேள்வி:** *'நாநாவிதாநி' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** இச்சொல் பலவித வேறுபாடுகள் உள்ளதை உணர்த்துகிறது. விசுவரூபத்தில் காணப்போகும் வடிவங்களில் ஒவ்வொரு இனத்திலும் பல வடிவங்களைக் காண்பாய். தேவர்கள், மனிதர்கள், ப்ராணிகள் முதலிய எல்லாச் சராசரங்களான ஜீவர்களின் வேறுபாடுகளையும் என் விசுவரூபத்தில் பார் என்று பகவான் கூறுகிறார்.

**கேள்வி:** *'நாநாவர்ணாக்ருதீநி' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** 'வர்ண' என்ற சொல் நீலம், மஞ்சள், சிவப்பு முதலிய நிறங்களையும், 'ஆக்ருதி' என்ற சொல் கால், கை முதலிய அவயவங்களின் அமைப்புகளையும் குறிக்கும். எந்தெந்த வடிவங்களில் நிறங்களாலும், அவயவ அமைப்புகளாலும் பல வேற்றுமைகள் உண்டோ, அவற்றை 'நாநாவர்ணாக்ருதீநி' என்று கூறுகிறார். அப்படி நிறத்திலும், அவயவ அமைப்புகளிலும் எவ்வளவு வேறுபாடுகள் உண்டோ அத்தனையையும் பார்' என்று கூறுகிறார்.

**கேள்வி:** *'திவ்யாநி' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** உலகில் காண்பதற்கரியதும், வியப்பையளிப்பதுமான பொருள் 'திவ்யம்' எனப்படும். என்னுடைய மேனியில் காணப்படுகின்ற வெவ்வேறான, எண்ணற்ற வடிவங்களனைத்தும் தெய்விகமானவை. என் அற்புதமான யோகசக்தியின் மூலம் படைக்கப்பட்டவை; ஆகவே உலகியலுக்கு அப்பாற்பட்டவை; ஆச்சரியமானவை என்கிறார் பகவான்.

**पश्यादित्यान्वसून्रुद्रानश्विनौ मरुतस्तथा ।**

**बहून्यदृष्टपूर्वाणि पश्याश्चर्याणि भारत ॥ ६ ॥**

**பஶ்யாதி₃த்யாந்வஸூந்ருத்₃ராநஶ்விநௌ மருதஸ்தத₂ா ।**

**ப₃ஹூந்யத்₃ருஷ்டபூர்வாணி பஶ்யாஶ்சர்யாணி ப₄ாரத ॥ 6 ॥**

**ப₄ாரத** – பரதகுலத் தோன்றலே அர்ஜுன! **ஆதி₃த்யாந்** – அதிதியின் புத்ரர்களான பன்னிரண்டு ஆதித்யர்களையும், **வஸூந்** – எட்டு வஸுக்களையும், **ருத்₃ராந்** – பதினொரு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ருத்ரர்களையும், **அஸ்விநௌ** – அஸ்வினீ குமாரர்கள் இருவரையும் (மேலும்), **மருத:** – (நாற்பத்தொன்பது) மருத்துக்களையும், **பஸ்ய** – பார். **தத2ா** – அவ்வாறே (மேலும்), **அத்3ருஷ்ட பூர்வாணி** – இதற்கு முன் கண்டிராத, **ப3ஹூநி** – பற்பல, **ஆஸ்சர்யாணி** – ஆச்சர்யமான உருவங்களையும், **பஸ்ய** – பார்.

பரதகுலத் தோன்றலே அர்ஜுன! அதிதியின் புத்ரர்களான பன்னிரண்டு ஆதித்யர்களையும் எட்டு வஸுக்களையும், பதினொரு ருத்ரர்களையும், அஸ்வினீ குமாரர்கள் இருவரையும், நாற்பத்தொன்பது மருத்துக்களையும் பார். அவ்வாறே இதற்கு முன் கண்டிராத பற்பல ஆச்சர்யமான உருவங்களையும் பார்.

**கேள்வி:** 'ஆதித்யர்கள், வஸுக்கள், ருத்ரர்கள், அச்விநீகுமாரர்கள், மருத்துக்கள் இவர்களைப் பார்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேலே சொல்லப்பட்ட சொற்களனைத்தும் பல முக்யமான தேவதைகளைக் குறிப்பிடுகின்றன. இவர்களுடைய பெயர்களைக் குறிப்பிட்டு, தம் விராட் ஸ்வரூபத்தில் காணுமாறு அர்ஜுனனுக்குக் கட்டளையிடுகிறார். ஆதித்யர்கள், மருத்துக்கள் பற்றிய விளக்கம் *10/21*லும், வஸு, ருத்ரர்களைப் பற்றி *10/23*லும் காணலாம். அச்விநீகுமாரர் இருவரும் தேவ வைத்தியர்கள்.‡

**கேள்வி:** 'அத்ருஷ்டபூர்வாணி', 'பஹுநி', 'ஆஸ்சர்யாணி' என்பவற்றின் பொருள் என்ன? இவற்றைப் பார் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'அத்ருஷ்டபூர்வாணி' என்றால் முன்னால் காணப்பெறாதவை என்று பொருள். 'ஆஸ்சர்யாணி' என்றால் பார்த்த மாத்திரத்தில் வியப்பை உண்டாக்குபவை எனப் பொருள். 'பஹுநி' என்றால் 'பல' எனப் பொருள்படும். "இதற்கு முன்பு ஒருபொழுதும் காணப்படாத வியக்கத்தக்க பல ஸ்வரூபங்களைப் பார். இதற்கு முன் ஒருபொழுதும் யாரும் எங்கும் பார்த்திருக்க மாட்டார்கள். இனியும் பார்க்கப் போவதில்லை. அவையெல்லாவற்றையும் என் விராட் ரூபத்தில் நீ பார்" என்று கூறுகிறார்.

**इहैकस्थं जगत्कृत्स्नं पश्याद्य सचराचरम्।**
**मम देहे गुडाकेश यच्चान्यद्द्रष्टुमिच्छसि ॥ ७ ॥**

**இஹைகஸ்த2ம் ஜக3த்க்ருத்ஸ்நம் பஸ்யாத்3ய ஸசராசரம் ।**

**மம தே3ஹே கு3டா3கேஸ யச்சாந்யத்3த்3ரஷ்டுமிச்ச2ஸி ॥ 7 ॥**

**கு3டா3கேஸ** – உறக்கத்தை வெற்றி கொண்ட அர்ஜுன! **அத்3ய** – இப்பொழுது, **இஹ** – இந்த, **மம** – என்னுடைய, **தே3ஹே** – உடலில், **ஏகஸ்த2ம்** – ஒரே இடத்தில், **ஸசர அசரம்** – ஸகல சராசரங்களோடு கூடிய, **க்ருத்ஸ்நம் ஜக3த்** – உலகம் முழுவதையும், **அந்யத் ச** – (அவ்வாறே) மேற்கொண்டு, **யத்** – எதை, **த்3ரஷ்டும்** – பார்க்க, **இச்ச2ஸி** – விரும்புகிறாயோ, (**தத் அபி** – அதையும்), **பஸ்ய** – பார்.

---

‡ இவர்கள் இருவரும் சூரியனுடைய மனைவி ஸம்ஜ்ஞையிடம் பிறந்தவர்கள் என்பர் (விஷ்ணுபுராணம் *3/2/7*. அக்னிபுராணம் *273/4*). மற்றும் சில இடங்களில் இவர்கள் கச்யபரின் புதல்வர்கள் என்றும், அதிதியின் வயிற்றில் பிறந்தவர்கள் என்றும் காணப்படுகிறது (வால்மீகி ராமாயணம், ஆரண்ய காண்டம் *14/14*). இன்னும் சில இடங்களில் ப்ரம்மாவின் காதிலிருந்து பிறந்தவர்களாகச் சொல்லப்பட்டுள்ளது (வாயுபுராணம் *65/57*). இங்கு கூறப்பட்டவை கல்ப வேறுபாட்டிற்கிணங்க மாறுபட்டுள்ளன. இவர்கள் தத்யங்முனி என்பவரிடம் ஞானத்தைப் பெற்றார்கள் (ருக்வேதம் *1/17/116/12*, தேவீபாகவதம் *7/36*). ஶர்யாதி ராஜனின் மகளும், ச்யவந முனிவரின் மனைவியுமான ஸுகன்யையிடம் கருணைகூர்ந்து இவர்கள் குருடராகவும், முதியவராகவும் இருந்த ச்யவநருக்குக் கண்களையும், இளமையையும் அளித்தனர் (தேவீபாகவதம் *7/4/5*). மஹாபாரதம், புராணங்கள், ராமாயணம் இவற்றில் இவர்களைப் பற்றிய கதைகள் அநேக இடங்களில் உள்ளன.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உறக்கத்தை வெற்றி கொண்ட அர்ஜுன! இப்பொழுது இந்த என்னுடைய உடலில் ஒரே இடத்தில் ஸகல சராசரங்களோடு கூடிய உலகம் முழுவதையும் மற்றும் எதை எதைப் பார்க்க விரும்புகிறாயோ அதையும் பார்.

**கேள்வி:** 'குடாகேஶ' என்று அழைப்பதன் பொருள் என்ன?

**பதில்:** 'நீ தூக்கத்தை வெற்றி கொண்டவன். ஆகவே கவனமாக என் ஸ்வரூபத்தை நன்றாகப் பார். எந்தவிதமான ஸந்தேஹமும், தவறான எண்ணமும் உனக்கு ஏற்படாதவாறு பார்' என்பது பொருள்.

**கேள்வி:** 'அத்ய' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'அத்ய' என்றால் 'இப்பொழுது' என்று பொருள். 'என்னுடைய எந்த ஸ்வரூபத்தைக் காண விரும்பினாயோ, அதை உனக்குக் காண்பிக்கச் சற்றுகூடத் தாமதம் செய்ய நான் விரும்பவில்லை. நீ விருப்பத்தை வெளிப்படுத்தியவுடன் உனக்குக் காண்பிக்கிறேன்' என்கிறார் பகவான்.

**கேள்வி:** 'ஸசராசரம் க்ருத்ஸ்நம் ஜகத்' என்று கூறுவதன் கருத்து என்ன? 'இஹ, ஏகஸ்தம்' என்று குறிப்பாகத் தமது எத்திருமேனியில் எவ்விடத்தில் அகில உலகையும் காணலாம் என்று கூறுகிறார்?

**பதில்:** விலங்குகள், பறவைகள், புழுக்கள், பூச்சிகள், தேவர்கள், மனிதர்கள் முதலிய ஸஞ்சரிக்கும் ப்ராணிகள் 'சரங்கள்' எனப்படும். நகராமல் ஒரே இடத்தில் உள்ள மலை, மரம் முதலியன அசரங்கள். அத்தனை ப்ராணிகளையும் அவற்றின் உடல்கள், புலன்கள், அனுபவஸ்தானங்கள், அனுபவப் பொருட்கள் இவற்றோடு கூடிய முழு ப்ரம்மாண்டத்தையும் 'க்ருத்ஸ்நம் ஸசராசரம் ஜகத்' என்கிறார்.

'இஹ' என்பது 'தேஹே' என்பதற்கு அடைமொழி. 'இந்த உடலில்' என்று பொருள். 'தேரோட்டி வடிவத்தில் உன் முன்னால் இந்த ரதத்தில் வீற்றிருக்கும் என்னுடைய இந்த சரீரத்தில் ஓர் அம்சத்தில் அகில உலகமும் இருப்பதைப் பார்' என்கிறார் பகவான். அர்ஜுனனுக்கு பகவான் 10/42ல் 'இந்த அகில ப்ரபஞ்சத்தையும் நான் என்னுடைய ஓர் அம்சத்தில் தாங்குகிறேன்' என்று கூறினார். அதை நினைவூட்டி 'இங்கே உனக்குக் கண் எதிரே காண்பிக்கிறேன்' என்கிறார்.

**கேள்வி:** 'மேலும் எதையாவது நீ காண விரும்பினால் அதையும் பார்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தற்காலம் உள்ள அகில உலகையும் காண்பதைத் தவிர என்னுடைய குணங்கள், ப்ரபாவங்கள் இவற்றை விளக்குகின்ற வேறு ஏதாவது காட்சியையோ; தான் அல்லது மற்றவர்கள் வெற்றி, தோல்விகள் அடைந்ததையோ; அல்லது முன்பு நடந்தனவற்றையோ, இனி நடக்கப் போகின்றவற்றையோ, நடந்து கொண்டிருப்பனவற்றையோ ஆகிய எந்த நிகழ்ச்சிகளைக் காண விரும்பினாலும், அவற்றையும் இப்பொழுதே இந்த மேனியில் ஒரு மூலையில் நேரிலே காண்பாய்.

**பொருத்தம்: இவ்விதம் மூன்று ச்லோகங்களால் பலமுறை தம்முடைய அற்புத ஸ்வரூபத்தைக் காணும்படி கட்டளையிட்ட பிறகும்கூட அர்ஜுனன் பகவானுடைய ஸ்வரூபத்தைப் பார்க்க இயலவில்லை. அப்படிப் பார்க்க முடியாததற்குக் காரணமறிந்த அந்தர்யாமியான பகவான் அர்ஜுனனுக்குத் தெய்விகப் பார்வை அளிக்கும் விருப்பத்தை வெளியிடுகிறார்—**

**न तु मां शक्यसे द्रष्टुमनेनैव स्वचक्षुषा।**
**दिव्यं ददामि ते चक्षुः पश्य मे योगमैश्वरम्॥ ८॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ந து மாம் ஶக்யஸே த்³ரஷ்டுமநேநைவ ஸ்வசக்ஷுஷா ।**

**தி³வ்யம் த³தா³மி தே சக்ஷு: பஶ்ய மே யோக³மைஶ்வரம் ॥ 8 ॥**

**து** – ஆனால், **மாம்** – என்னை (நீ), **அநேந** – இந்த, **ஸ்வசக்ஷுஷா** – உன் ஊனக்கண்களால், **த்³ரஷ்டும்** – பார்ப்பதற்கு, **ஏவ** – ஸந்தேஹமின்றி, **ந ஶக்யஸே** – முடியவே முடியாது. (**அத:** – ஆகையால்), **தே** – உனக்கு, **தி³வ்யம்** – உலகியலுக்கப்பாற் பட்டதான தெய்விகமான, **சக்ஷு:** – பார்வையை, **த³தா³மி** – தருகிறேன். **மே** – என்னுடைய, **ஐஶ்வரம்** – தெய்வத்தன்மை பொருந்திய, **யோக³ம்** – யோகசக்தியை, **பஶ்ய** – பார்.

ஆனால் என்னை நீ இந்த உன் ஊனக்கண்களால் பார்ப்பதற்கு ஸந்தேஹமின்றி முடியவே முடியாது. ஆகையால் உனக்கு உலகியலுக்கப்பாற்பட்டதான, தெய்விகமான பார்வையைத் தருகிறேன். என்னுடைய தெய்வத்தன்மை பொருந்திய யோகசக்தியைப் பார்.''

**கேள்வி:** இங்கு 'து' (ஆனால்) என்று ஆரம்பித்துக் கூறுவதன் கருத்து என்ன? 'நீ உன்னுடைய ஊனக்கண்களால் என்னைப் பார்க்க முடியாது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'என்னுடைய அற்புதமான யோகசக்தியுடன் கூடிய தெய்விக ஸ்வரூபத்தைப் பார்க்க விரும்புகிறாய். நானும் உனக்கு அதைக் காண்பிக்க விரும்புகிறேன். இது மிகவும் மகிழ்ச்சிக்குரிய விஷயம். ஆனால் இந்த ஸாதாரண ஊனக்கண்களால் உலகியலுக்கு அப்பாற்பட்ட ஸ்வரூபத்தை நீ காண இயலாது. அதைக் காண்பதற்கு எந்த சக்தி தேவையோ அது உன்னிடம் இல்லை' என்று பொருள்.

**கேள்வி:** பகவான் அர்ஜுனனுக்கு தெய்விகப் பார்வை அளித்தாரே, அது என்ன?

**பதில்:** பகவான் தம்முடைய விசுவரூபத்தைக் காண்பிப்பதற்காகத் தம்முடைய யோக பலத்தினால் ஒருவிதமான யோகசக்தியை அர்ஜுனனுக்கு அளித்தார். அதன் ப்ரபாவத்தினால் அர்ஜுனனிடம் உலகியலுக்கு அப்பாற்பட்ட ஒரு தனித் திறன் உண்டாயிற்று. அந்த தெய்விகமான ஸ்வரூபத்தைக் காணும் தகுதியைப் பெற்றார். இந்த யோகசக்திக்குத்தான் தெய்விகப் பார்வை என்று பெயர். இத்தகைய தெய்விகப் பார்வையை இதுபோலவே முன்பு வ்யாஸரும் ஸஞ்ஜயனுக்கு அளித்தார்.

**கேள்வி:** 'அர்ஜுனன் ஸமஸ்த ப்ரபஞ்சமும் பகவானுடைய ஸ்வரூபம்தான் என்ற அறிவைப் பெற்றார். அந்த அறிவைத்தான் இங்கே தெய்விகப் பார்வை என்று கூறுகிறார்' என்று இங்கே பொருள் கொண்டால் என்ன தவறு?

**பதில்:** 'ஞானத்தின் மூலம்,காணப்படும் ப்ரபஞ்சம் அனைத்தும் பகவத் ஸ்வரூபம்தான். அதுதான் விசுவரூப தர்சனம். அதைப் பார்ப்பதுதான் தெய்விகப் பார்வை' என்று இங்கு கொள்ள முடியாது. 'அகில உலகத்தையும் நான் என்னுடைய ஓர் அம்சத்தினால் தாங்குகிறேன்' என்ற ஞானத்தை பகவான் பத்தாவது அத்யாய முடிவிலேயே வாய்மொழியாகப் புகட்டிவிட்டார். அர்ஜுனனும் அதை ஏற்றுக் கொண்டுவிட்டார். அப்படி ஏற்றுக் கொண்டபிறகுதான் அர்ஜுனன் பகவானிடம் பலம், வீர்யம், சக்தி, தேஜஸ் இவற்றுடன் கூடிய ஈசுவர ஸ்வரூபத்தை நேரில் காணும் விருப்பத்தைத் தெரிவிக்கிறார். பகவானும் இந்த ஸ்ரீக்ருஷ்ண ஸ்வரூபத்தின் ஒரு பகுதியிலேயே அகில ப்ரபஞ்சத்தையும் காண்பிக்க இருக்கிறார். ஆகவே ஞானத்தின் மூலம் அறியக்கூடிய ஸ்வரூபம் இங்கே சொல்லப்படுகிறது என்று எப்படிக் கொள்ளலாம்?

மேலும் பகவான் விசுவரூபத்தை வர்ணித்திருக்கிறார். அதில் அகில ப்ரபஞ்சத்திலும் இன்று காணப்படுபவை, நாளை காணப்படக் கூடியவையான யுத்த நிகழ்ச்சிகள், அவற்றின் விளைவுகள் எல்லாமே இப்பொழுது கண் முன்னே நிற்கின்றன. எந்த ப்ரபஞ்சத்தில் அர்ஜுனன் நிற்கிறாரோ, அந்த இடம்கூட பகவானுடைய திருமேனியில் காணப்படும் ப்ரபஞ்சத்திலிருந்து தனியாக இருப்பதையும் உணர்கிறார். அப்படி

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இல்லாவிட்டால் விராட் ஸ்வரூபத்தில் ஸ்வர்கம் முதல் பூமி வரையிலும் உள்ள ஆகாயம், திக்குகள் அனைத்தும் வ்யாபித்திருக்கும் ஸ்வரூபத்தைப் பார்த்திருக்க முடியாது. பகவானுடைய அந்த பயங்கரமான ஸ்வரூபத்தைத் தனித்து நின்று பார்த்த அர்ஜுனனுக்கு ஆச்சர்யம், மயக்கம், பயம், ஸந்தாபம், செய்வதறியாமை உண்டாகின்றன. இதிலிருந்தும் பகவான் வாய்மொழியான ஞானத்தின் மூலம் அர்ஜுனனுக்கு ப்ரபஞ்சம் முழுவதும் தம் ஸ்வரூபம் என்று உணர்த்தவில்லை என்றாகிறது. இந்த விஷயம் இப்படியிருந்தால் அர்ஜுனனுக்கு பயம், ஸந்தாபம், மயக்கம், செய்வதறியாமை இவை ஏற்படக் காரணமே இல்லை.

**கேள்வி:** "தற்காலத்தில் வானொலி, தொலைக்காட்சிப் பெட்டி முதலிய கருவிகள் மூலம் வெகுதூரத்தில் உண்டாகும் ஒலியைக் கேட்கிறோம்; காட்சிகளைக் காண்கிறோம். அதுபோல பகவான் அர்ஜுனனுக்கு ஒரு கருவியை அளித்தார். அதைக் கொண்டு அர்ஜுனன் தம் இடத்தில் இருந்தபடியே அகில ப்ரபஞ்ச விஷயங்களையும் இடையூறின்றிப் பார்க்க முடிந்தது. அந்தக் கருவியின் பெயர் தெய்விகப் பார்வை" என்று இந்த ஸந்தர்பத்திற்குப் பொருள் கூறினால் என்ன தவறு?

**பதில்:** வானொலி முதலிய கருவிகளில் எங்கோ நிகழ்வனவற்றின் ஒலியைக் கேட்கலாம், காட்சிகளைக் காணலாம். அவை குறிப்பிட்ட ஓரிடத்தில் ஒரு குறிப்பிட்ட நேரத்தில்தான் அந்நிகழ்ச்சிகள் நடைபெறும். அந்தக் கருவியினால் ஓரிடத்தில் ஒரு நேரத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகளை மட்டும் கேட்கலாம், காணலாம். ஆனால் ஒரே நேரத்தில் ஒரே இடத்தில் அகில ப்ரபஞ்சத்திலும் நடைபெறுகின்ற, நடைபெற்ற, நடைபெறப் போகின்ற அத்தனை காட்சிகளையும் கேட்கவும் முடியாது; காணவும் முடியாது; மனிதர்களின் மனதில் உள்ளவற்றை அந்தக் கருவிகள் காண்பிக்கவும் முடியாது. நடக்கப் போகின்றவற்றைக் காண்பிக்க முடியாது. அர்ஜுனனுக்கு ஒரு கருவி அளித்தார். அதன் மூலம் அர்ஜுனன் விசுவரூபதர்சனம் பெற்றார் என்று கருதக்கூடிய செய்தி ஏதும் இல்லையே? ஆகவே இப்படிக் கொள்வது யுக்திக்குப் பொருந்தாது. வெகுதூரத்தில் நடக்கும் விஷயங்களை நேரிடையாகக் கேட்கச் செய்து, பார்க்கச் செய்து, வானொலி, தொலைக்காட்சிப் பெட்டி முதலிய கருவிகளால் தற்காலத்தில் நம்பிக்கையில்லா மக்களுக்கு எந்த அளவுக்கு உண்மை புகட்ட முடியுமோ, அந்த அளவுக்கு பகவான் கொடுத்த யோகசக்தியின் மூலம் அர்ஜுனன் அவருடைய விசுவரூப தர்சனம் செய்தது என்பது ஒன்றும் பெரிய விஷயமல்லவே. ஆனால் ஒன்றை நினைவு கொள்ளவேண்டும். பகவான் இங்கு மந்த்ரம், தந்த்ரம் போன்ற மாயையினால் அர்ஜுனனுடைய மனத்தை மயக்கவில்லை. இல்லாத பொருட்களை இருப்பதுபோலக் காண்பிக்கவுமில்லை. கனவு போல் எதையும் அர்ஜுனன் பார்க்கவில்லை. அர்ஜுனன் பார்த்த ஸ்வரூபம் (நேரிடையான) ப்ரத்யக்ஷ உண்மை. அதைப் பார்ப்பதற்கு அவருக்குக் கிடைத்த ஸாதனம் பகவானுடைய க்ருபையால் அவர் பெற்ற யோகசக்தி என்ற தெய்விகப் பார்வையே.

**கேள்வி:** 'ஐச்வரம் யோகம்' என்றால் என்ன? 'அதைப் பார்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அர்ஜுனன் பார்த்த காட்சி தெய்விகமானது. பகவான் தம்முடைய யோகசக்தியை வெளிப்படுத்தி அர்ஜுனனுக்குக் காண்பித்தார். அதைப் பார்த்ததனாலேயே பகவானுடைய அற்புத யோகசக்தியின் தர்சனமும் அர்ஜுனனுக்கு ஏற்படுகிறது. ஆகவே 'ஐச்வரம் யோகம்' என்பது பகவானுடைய அற்புதமான யோகசக்தியினாலேயே வெளியிடப்பட்ட பகவானுடைய விராட் ஸ்வரூபம் ஆகும். 'அதைப் பார்' என்று கூறும் பகவான், 'விராட் ஸ்வரூபதர்சனத்தின் மூலம் என்னுடைய யோகசக்தியைப் பார்' என்று காட்டுகிறார்.

பொருத்தம்: **அர்ஜுனனுக்கு தெய்விகப் பார்வை அளித்த பகவான் தம்முடைய தெய்விகமான விராட் ஸ்வரூபத்தைக் காண்பித்த விதத்தை ஐந்து ச்லோகங்களில் ஸஞ்ஜயன் வர்ணிக்கிறார்—**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



सञ्जय उवाच

एवमुक्त्वा ततो राजन्महायोगेश्वरो हरिः ।
दर्शयामास पार्थाय परमं रूपमैश्वरम् ॥ ९ ॥

ஸஞ்ஜய உவாச்

ஏவமுக்த்வா ததோ ராஜந்மஹாயோகே₃ஶ்வரோ ஹரி: ।
த₃ர்ஶயாமாஸ பார்த₂ாய பரமம் ரூபமைஶ்வரம் ॥ 9 ॥

**ஸஞ்ஜய உவாச** – ஸஞ்ஜயன் கூறினார்: **ராஜந்** – அரசே! **மஹாயோகே₃ஶ்வர:** – மஹாயோகேசுவரரான, **ஹரி:** – ஸகல பாவங்களையும் போக்குகின்றவரான ஹரியாகிய பகவான், **ஏவம்** – இவ்வாறு, **உக்த்வா** – சொல்லிவிட்டு, **தத:** – அதற்குப் பிறகு, **பார்த₂ாய** – அர்ஜுனனுக்கு, **பரமம்** – சிறந்ததான, **ஐஶ்வரம்** – ஈசுவர சக்தி கொண்ட, **ரூபம்** – தம் தெய்விக உருவை, **த₃ர்ஶயாமாஸ** – காண்பித்தார்.

ஸஞ்ஜயன் கூறினார்: "அரசே! மஹாயோகேசுவரரான ஸகல பாவங்களையும் போக்குகின்றவரான ஹரியாகிய பகவான் இவ்வாறு சொல்லிவிட்டு, அதற்குப் பிறகு அர்ஜுனனுக்குச் சிறந்ததான ஈசுவர சக்தி கொண்ட தம் தெய்விக உருவைக் காண்பித்தார்.

**கேள்வி:** இங்கு ஸஞ்ஜயன் பகவானுக்கு 'மஹாயோகேஶ்வர:' என்றும், 'ஹரி:' என்றும் இரு அடைமொழிகள் சேர்த்துக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எவர் பெரியதிலும் பெரிய யோகேசுவரரோ அவர் மஹாயோகேசுவரர். ஸகல பாவங்களையும், துன்பங்களையும் போக்குபவர் ஹரி. இந்த அடைமொழிகளைக் கூறி ஸஞ்ஜயன் பகவானுடைய அற்புதமான சக்தி, ஸாமர்த்யங்களைக் குறிப்பிட்டு த்ருதராஷ்ட்ரரை எச்சரிக்கிறார். ஸ்ரீக்ருஷ்ணன் ஸாதாரண மனிதர் அல்லர். அவர் மிகப் பெரிய யோகேசுவரர். எல்லாப் பாவங்களையும், துன்பங்களையும் அழிக்கின்ற ஸாக்ஷாத் பரமாத்மா. அவர் அர்ஜுனனுக்குக் காட்டிய தெய்விக விசுவரூபக் காட்சியை வர்ணித்து இப்பொழுது கூறப் போகிறார். மிகப் பெரிய யோகிகள்கூட அத்தகைய ரூபத்தைக் காட்ட முடியாது. ஸாக்ஷாத் பரமாத்மாதான் காட்ட முடியும்.

**கேள்வி:** 'ரூபம்' என்ற சொல்லுக்கு 'பரமம்', 'ஐஶ்வரம்' என்ற அடைமொழிகள் கொடுப்பதன் கருத்து என்ன?

**பதில்:** தூய்மையானதும், எல்லாவற்றைக் காட்டிலும் சிறந்ததானதும், உலகியலுக்கு அப்பாற்பட்டதுமான பொருளின் தனிச்சிறப்பை உணர்த்துவது 'பரமம்' என்ற சொல். ஈசுவரனுடைய குணங்கள், ப்ரபாவங்கள், தேஜஸ் இவற்றைக் காட்டுகின்ற, பகவானுடைய தெய்விக சக்தியினால் உண்டான ஸ்வரூபம் 'ஐஶ்வரம்' ஆகும். அர்ஜுனனுக்குக் காட்டிய பகவானுடைய விராட் ஸ்வரூபம் உலகியலுக்கு அப்பாற்பட்டது, தெய்விகமானது, மிகச் சிறந்தது, தேஜஸே வடிவானது. ஸாதாரண உலகம் போன்று ஐந்து பூதங்களான பொருட்களின் சேர்க்கை அன்று. பகவான் தம் ப்ரிய பக்தனான அர்ஜுனனுக்கு அருள் புரிந்து தம் அற்புத ப்ரபாவத்தை அவருக்கு உணர்த்துவதற்காகத் தம்முடைய அற்புத யோகசக்தியின் மூலம் அந்த ஸ்வரூபத்தை வெளிப்படுத்தினார். இக்கருத்துக்களைப் புலப்படுத்தவே 'ரூபம்' என்ற சொல்லுக்கு 'பரமம்', 'ஐஶ்வரம்' என்ற இரு அடைமொழிகளை ஸஞ்ஜயன் கொடுத்திருக்கிறார்.

अनेकवक्त्रनयनमनेकाद्भुतदर्शनम् ।
अनेकदिव्याभरणं दिव्यानेकोद्यतायुधम् ॥ १० ॥

दिव्यमाल्याम्बरधरं दिव्यगन्धानुलेपनम् ।
सर्वाश्चर्यमयं देवमनन्तं विश्वतोमुखम् ॥ ११ ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அநேகவக்த்ரநயநமநேகாத்₃பு₄ததர்₃ஶநம் ।**

**அநேகதி₃வ்யாப₄ரணம் தி₃வ்யாநேகோத்₃யதாயுத₄ம் ॥ 10 ॥**

**தி₃வ்யமால்யாம்ப₃ரத₄ரம் தி₃வ்யக₃ந்தா₄நுலேபநம் ।**

**ஸர்வாஶ்சர்யமயம் தே₃வமநந்தம் விஶ்வதோமுக₂ம் ॥ 11 ॥**

**அநேக வக்த்ர நயநம்** – அநேக முகங்களோடும், அநேக கண்களோடும் கூடியவரும், **அநேக அத்₃பு₄த த₃ர்ஶநம்** – பல அற்புதமான காட்சிகள் கொண்டவரும், **அநேக தி₃வ்ய ஆப₄ரணம்** – அநேகவிதமான தெய்விகமான ஆபரணங்களோடு கூடியவரும், **தி₃வ்ய அநேக உத்₃யத ஆயுத₄ம்** – திவ்யமான பற்பல ஆயுதங்களைக் கைகளில் ஏந்தியவரும், **தி₃வ்ய மால்ய அம்ப₃ரத₄ரம்** – தெய்விகமான மாலைகளையும், ஆடைகளையும் அணிந்தவரும், **தி₃வ்ய க₃ந்த₄ அநுலேபநம்** – திவ்யமான வாஸனை த்ரவியங்களைத் தம் உடலில் பூசிக் கொண்டிருப்பவரும், **ஸர்வ ஆஶ்சர்யமயம்** – எல்லாவிதங்களிலும் ஆச்சரிய மயமானவரும், **அநந்தம்** – எல்லையற்றவரும், **விஶ்வத: முக₂ம்** – எல்லாப் புறங்களிலும் முகங்களோடு விளங்குகின்றவரும், விராட் ஸ்வரூபமானவரும் ஆன, **தே₃வம்** – தேவாதி தேவனான பரமேசுவரனை (அர்ஜுனன் கண்டார்).

அநேக முகங்களோடும், அநேக கண்களோடும் கூடியவரும், பல அற்புதமான காட்சி கள் கொண்டவரும் அநேகவிதமான தெய்விகமான ஆபரணங்களோடு கூடியவரும், திவ்யமான பற்பல ஆயுதங்களைக் கைகளில் ஏந்தியவரும், தெய்விகமான மாலைகளையும் ஆடைகளையும் அணிந்தவரும், திவ்யமான வாஸனை த்ரவியங்களைத் தம் உடலில் பூசிக் கொண்டிருப்பவரும், எல்லாவிதங்களிலும் ஆச்சரியமயமானவரும், எல்லையற்றவரும், எல்லாப் புறங்களிலும் முகங்களோடு விளங்குகின்றவரும், விராட் ஸ்வரூபமானவரும் ஆன தேவாதிதேவனான பரமேசுவரனை அர்ஜுனன் கண்டார்.

**கேள்வி:** 'அநேகவக்த்ரநயநம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** பலவிதமான, எண்ணற்ற முகங்களும், கண்களும் உடைய உருவத்தை 'அநேகவக்த்ரநயநம்' என்று சொல்வார்கள். அர்ஜுனன் பார்த்த பகவானுடைய விசுவரூபத்தில் முக்யமான கண்கள் சந்த்ரனும், சூரியனும் என்று கூறப்பட்டுள்ளன (11/19). ஆனால் அதன் உள்ளே எண்ணற்ற வெவ்வேறான முகங்களும், கண்களும் காணப்பட்டன. இதனால்தான் 'பகவான் எண்ணற்ற முகங்களும், நயனங்களும் படைத்தவர்' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'அநேகாத்புததர்ஶநம்' என்றால் என்ன?

**பதில்:** இதற்குமுன் காணக்கிடைக்காததும், விசித்ரமானதும், வியப்பையளிப்பதுமான காட்சி 'அத்புத தர்ஶநம்' எனப்படுகிறது. எண்ணிலடங்காத இத்தகைய அற்புதக் காட்சிகள் அடங்கிய வடிவம் 'அநேகாத்புதர்ஶநம்' எனப்படுகிறது. அந்த விராட் ஸ்வரூபத்தில் உலகியலுக்கப்பாற்பட்டவையும், எண்ணிலடங்காதவையும், விசித்ரமானவையுமான காட்சிகளை அர்ஜுனன் கண்டதைத் தெரிவிக்கிறது இச்சொல்.

**கேள்வி:** 'அநேகதிவ்யாபரணம்' என்பதற்கு என்ன பொருள்?

**பதில்:** பகவானுடைய ஆபரணங்கள் சிறப்புடையவை; ஒளிமயமானவை; உலகியலில் காணக் கிடைக்காதவை. ஆகவே தெய்விகமானவை. அத்தகைய பல ஆபரணங்கள் அணிந்த ஸ்வரூபம் அர்ஜுனன் பார்த்த பகவத் ஸ்வரூபம். அந்த ஸ்வரூபம் பலவிதமான, எண்ணற்ற, ஒளிமிக்க, தெய்விக ஆபரணங்களோடு கூடியிருந்தது. இக்காரணத்தினால்தான் 'பகவாந்' என்ற சொல்லுக்கு இந்த அடைமொழி கொடுக்கப்பட்டிருக்கிறது.

**கேள்வி:** 'திவ்யாநேகோத்யதாயுதம்' என்றால் என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** போருக்குரிய சஸ்த்ரங்களுக்கு ஆயுதங்கள் என்று பெயர். எந்த ஆயுதங்கள் உலகியலுக்கு அப்பாற்பட்டு, ஒளிமயமாக விளங்குகின்றனவோ, அவற்றை தெய்விகம் பொருந்தியவை என்கிறோம். விஷ்ணு பகவானின் சக்ரம், கதை, வில் முதலியன. இவ்விதமான எண்ணற்ற தெய்விக சஸ்த்ரங்களை பகவான் தம் திருக்கரங்களில் ஏந்தியிருக்கிறார் என்பதை 'திவ்யாநேகோத்யதாயுதம்' என்ற சொல் குறிக்கிறது.

**கேள்வி:** 'திவ்யமால்யாம்பரதரம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மிகவும் சிறந்த, ஒளிமயமான மாலைகளையும், ஆடைகளையும் தரித்தவர் என்று பொருள். விசுவரூபம் எடுத்த பகவான் தம்முடைய கழுத்தில் மிகவும் அழகானதும், தேஜோமயமானதும், உலகில் காணப்படாததுமான அபூர்வமான மாலைகளை அணிந்திருக்கிறார். பலவிதமான ஒளிமிக்க, இவ்வுலகிலில்லா ஆடைகளை அணிந்து அழகுற மிளிர்கிறார். ஆகவே இக்கருத்தைக் குறிக்கவே இவ்வடைமொழி கொடுக்கப்பட்டுள்ளது.

**கேள்வி:** 'திவ்யகந்தாநுலேபநம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அவர் பூசியிருப்பது சந்தனம் முதலிய உலகில் காணப்படும் வாஸனை த்ரவ்யம் அன்று. அது முற்றிலும் மாறுபட்ட தனிச்சிறப்பு வாய்ந்த தெய்விக மணம் நிறைந்தது. அதை நுகர்வதற்கே தெய்விக நாசிகள் தேவை. அவருடைய உடல் முழுவதும் இத்தகைய தெய்விக மணம் மிகுந்த மனதைக் கவரும் திவ்யமான வாஸனை த்ரவ்யங்கள் பூசப்பட்டிருப்பதை 'திவ்யகந்தாநுலேபநம்' என்கிறார்.

**கேள்வி:** 'ஸர்வாஸ்சர்யமயம்' என்றால் என்ன?

**பதில்:** பகவானுடைய விராட் ஸ்வரூபத்தில் மேலே குறிப்பிட்டவாறு காணப்பட்ட – முகம், கண்கள், ஆபரணங்கள், ஆயுதங்கள், மாலைகள், ஆடைகள், சந்தனம் – எல்லாமே வியப்பை அளித்தன. ஆகவே அவை ஆச்சர்யமயமானவை என்று கூறப்பட்டன.

**கேள்வி:** 'அநந்தம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எதற்கு எங்கும் முடிவே இல்லையோ, அதற்கு 'அநந்தம்' என்று பெயர். அர்ஜுனன் கண்ட பகவானின் விசுவரூபம் முடிவு காண முடியாத அளவிற்கு நீண்டு அகன்று பரந்திருந்தது. ஆகவே அவரை 'அநந்த:' என்கிறார்.

**கேள்வி:** 'விஸ்வதோமுகம்' என்றால் என்ன?

**பதில்:** அவருடைய முகங்கள் எல்லாத் திசைகளிலும் பரவியிருந்தன. பகவானுடைய விசுவரூபத்தில் காணப்பட்ட எண்ணற்ற முகங்கள் எங்கும் நிறைந்திருந்தன. ஆகவே அவர் 'விஸ்வதோமுக:' எனப்படுகிறார்.

**கேள்வி:** 'தேவம்' என்று கூறுவதன் கருத்து என்ன? அப்படி ஏன் இங்குக் கூறுகிறார்?

**பதில்:** தேவர்கள் ஒளிமிக்கவர்கள்; பூஜிக்கத்தக்கவர்கள். பரம தேஜோமயமான பகவான் ஸ்ரீக்ருஷ்ணனை மேற்கூறிய சிறப்புகளுடன் கூடியவராக அர்ஜுனன் பார்த்தார் என்று ஸஞ்ஜயன் கூறுகிறார்.

**பொருத்தம்: அப்படி விராட் ஸ்வரூபம் எடுத்த பகவானின் ஒளி எப்படி இருந்தது என்பதை இனிக் கூறுகிறார்—**

**दिवि सूर्यसहस्त्रस्य भवेद्युगपदुत्थिता ।**
**यदि भाः सदृशी सा स्याद्भासस्तस्य महात्मनः ॥ १२ ॥**

**தி₃வி ஸூர்யஸஹஸ்ரஸ்ய ப₄வேத்₃யுக₃பது₃த்தி₂தா ।**
**யதி₃ பா₄: ஸத்₃ருஸீ ஸா ஸ்யாத்₃பா₄ஸஸ்தஸ்ய மஹாத்மந: ॥ 12 ॥**

**தி₃வி** – ஆகாயத்தில், **ஸூர்ய ஸஹஸ்ரஸ்ய** – ஆயிரக்கணக்கான சூரியர்கள், **யுக₃பத்** – ஒரே காலத்தில், **உத்தி₂தா** – உதயமானால் (எத்தகைய), **பா₄:** – ப்ரகாசம்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ப₄வேத்** – ஏற்படுமோ, **ஸா** – அந்த ப்ரகாசம், **தஸ்ய மஹாத்மந:** – அந்த விசுவரூப பரமாத்மாவின், **ப₄ாஸ:** – ப்ரகாசத்திற்கு, **ஸத்₃ருஸீ** – நிகராக, **யதி₃ ஸ்யாத்** – ஒருகால் இருக்கக்கூடுமோ!

ஆகாயத்தில் ஆயிரக்கணக்கான சூரியர்கள் ஒரே காலத்தில் உதயமானால் எத்தகைய ப்ரகாசம் ஏற்படுமோ அந்த ப்ரகாசம் அந்த விசுவரூப பரமாத்மாவின் ப்ரகாசத்திற்கு நிகராக ஒருகால் இருக்கக்கூடுமோ!

**கேள்வி:** *பகவானுடைய ஒளிக்கு ஆயிரக்கணக்கான சூரியர்களின் ஒளியை உவமை கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** விராட் ஸ்வரூபம் எடுத்த பகவானின் ஒளிக்கு உவமையே கூற முடியாது என்பது கருத்து. ஆகாயத்தில் ஆயிரம் நக்ஷத்ரங்கள் ஒரே நேரத்தில் உதித்தாலும் சூரியனின் ஒளிக்கு இணையாக முடியாது. அங்ஙனம் ஒரே நேரத்தில் ஆகாயத்தில் ஆயிரம் கதிரவன் உதித்தாலும் அந்த ப்ரகாசம்கூட விராட் ஸ்வரூபனான பகவானுடைய ஒளிக்கு இணையாகாது. காரணம் ஆதவனின் ஒளி அநித்யமானது; பௌதிகமானது; அளவுக்கடங்கியது. விராட் ஸ்வரூபனுடைய ஒளியோ தெய்விகமானது; நித்யமானது; உலகியலுக்கு அப்பாற்பட்டது; அளவற்றது.

**பொருத்தம்:** *ஒளிமயமான பகவானுடைய அந்த அற்புதமான ஸ்வரூபத்தில் அர்ஜுனன் அகில உலகையும் எவ்விதம் கண்டார் என்பதை இனிக் கூறுகிறார்—*

**तत्रैकस्थं जगत्कृत्स्नं प्रविभक्तमनेकधा।**
**अपश्यद्देवदेवस्य शरीरे पाण्डवस्तदा॥ १३॥**

**தத்ரைகஸ்த₂ம் ஜக₃த்க்ருத்ஸ்நம் ப்ரவிப₄க்தமநேகத₄ா ।**
**அபஸ்யத்₃தே₃வதே₃வஸ்ய ஶரீரே பாண்ட₃வஸ்தத₃ா ॥ 13 ॥**

**பாண்ட₃வ:** – பாண்டுபுத்ரனான அர்ஜுனன், **தத₃ா** – அப்பொழுது, **அநேகத₄ா** – பலவிதங்களாக, **ப்ரவிப₄க்தம்** – பிரிந்துள்ள (அதாவது தனித்தனியான), **க்ருத்ஸ்நம்** **ஜக₃த்** – உலகம் முழுவதையும், **தே₃வதே₃வஸ்ய** – தேவதேவனான ஸ்ரீக்ருஷ்ண பகவானுடைய, **தத்ர** – அந்த, **ஶரீரே** – திருமேனியில், **ஏகஸ்த₂ம்** – ஒரே இடத்தில் இருப்பதை, **அபஸ்யத்** – பார்த்தார்.

பாண்டுபுத்ரனான அர்ஜுனன் அப்பொழுது பலவிதங்களாகப் பிரிந்துள்ள, அதாவது தனித்தனியான உலகம் முழுவதையும் தேவதேவனான ஸ்ரீக்ருஷ்ண பகவானுடைய அந்தத் திருமேனியில் ஒரே இடத்தில் இருப்பதைப் பார்த்தார்.

**கேள்வி:** *இங்கு 'ததா' (அப்பொழுது) என்பது எக்காலத்தைக் குறிக்கிறது?*

**பதில்:** அர்ஜுனனுக்கு தெய்விகப் பார்வை அளித்து, தமது தனிப்பட்ட யோகசக்தியுடன் கூடிய விராட் ஸ்வரூபத்தைக் காணுமாறு பகவான் அவருக்குக் கட்டளையிட்டபோது *(11/8)* – என்று பொருள்.

**கேள்வி:** *'ஜகத்' என்ற சொல்லுக்கு 'அநேகதா ப்ரவிபக்தம்', 'க்ருத்ஸ்நம்' என்ற அடைமொழிகள் கொடுப்பதன் கருத்து என்ன?*

**பதில்:** தேவர்கள், மனிதர்கள், விலங்குகள், பறவைகள், புழுக்கள், பூச்சிகள், மரங்கள் முதலிய போகங்களை அனுபவிப்பன; பூமி, ஆகாயம், ஸ்வர்கம், பாதாளம் முதலிய அனுபவஸ்தானங்கள்; எண்ணற்ற போகப்பொருட்கள் இப்படிப் பலவாறாகப் பல கூறுகளாகப் பிரிந்தவற்றையும் ப்ரம்மாண்டம் முழுவதையும் பகவானுடைய திருமேனியில் ஓர் இடத்தில் இருப்பதாகப் பார்த்தார். அதாவது ஏதோ ஓர் அம்சத்தை மாத்திரம் பார்த்தார்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



என்றோ, அந்த ஓரிடத்தில் பலவித வேற்றுமைகள் நிறைந்து வெவ்வேறாகத் தனித்தனியாக இருந்தவற்றை அங்கொன்று இங்கொன்றாக இல்லாமல் சேர்த்துப் பார்த்தார் என்றோ பொருள் அல்ல. ஒவ்வொரு ப்ரம்மாண்டத்தையும் உள்ளது உள்ளவாறே தனித்தனியாகக் கண்டார்.

**கேள்வி:** 'ஏகஸ்தம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பத்தாவது அத்யாயத்தின் முடிவில் பகவான் இந்த அகில ப்ரபஞ்சத்தையும் என்னுடைய ஒரு சிறு பகுதியில் தாங்குகிறேன் என்று கூறினார். அந்த ஒரு சிறு பகுதியில் இப்பொழுது அகில ப்ரபஞ்சத்தையும் அர்ஜுனன் பார்த்தார். இதைத் தெளிவாக விளக்குகிறது 'ஏகஸ்தம்' (ஒரே இடத்தில் உள்ள) என்ற சொல்.

**கேள்வி:** 'தத்ர' (அங்கு) என்ற சொல் எதற்கு அடைமொழி? அதன் பொருள் என்ன?

**பதில்:** இங்கு 'தத்ர' (அங்கு) என்ற சொல் முன்பு செய்யப்பட்ட வர்ணனையோடு தொடர்புடையது. இங்கு தேவாதிதேவரான பகவானுடைய திருமேனிக்கு அடைமொழியாகக் கொள்ளப்பட வேண்டும். தேவர்களுக்கு எல்லாம் தேவனான, எல்லோரையும் விடச் சிறந்தவரான, ப்ரம்மா முதலியோர்களாலும் போற்றத்தக்கவரான பகவான் ஸ்ரீக்ருஷ்ணனின் மேற்கூறப்பட்ட விசுவரூபத்தில் ஸகல அண்டசராசரங்களையும் அர்ஜுனன் ஒரே இடத்தில் கண்டார். 'தத்ர' என்ற சொல்லின் கருத்து இதுதான்.

**பொருத்தம்:** இவ்விதம் அர்ஜுனன் பகவானுடைய விசுவரூபத்தை தர்சனம் செய்தபிறகு என்ன நடந்தது என்பதைக் கூறுகிறார்—

**ततः स विस्मयाविष्टो हृष्टरोमा धनञ्जयः।**
**प्रणम्य शिरसा देवं कृताञ्जलिरभाषत॥ १४॥**

**தத: ஸ விஸ்மயாவிஷ்டோ ஹ்ருஷ்டரோமா த₄நஞ்ஜய: ।**
**ப்ரணம்ய ஶிரஸா தே₃வம் க்ருதாஞ்ஜலிரப₄ாஷத ॥ 14 ॥**

**தத:** – அதன் பிறகு, **விஸ்மய ஆவிஷ்ட:** – வியப்பு மிகுந்து, **ஹ்ருஷ்ட ரோமா** – மெய்சிலிர்த்து, **ஸ: த₄நஞ்ஜய:** – அந்த அர்ஜுனன், **தே₃வம்** – ஒளிமிகுந்த விசுவரூப பரமாத்மாவை (ச்ரத்தையுடனும், பக்தியுடனும்), **ஶிரஸா** – தலையால், **ப்ரணம்ய** – வணங்கி, **க்ருத அஞ்ஜலி:** – கைகூப்பிக் கொண்டு, **அப₄ாஷத** – கூறினார்.

அதன் பிறகு வியப்பு மிகுந்து மெய்சிலிர்த்து அந்த அர்ஜுனன் ஒளிமிகுந்த விசுவரூப பரமாத்மாவை ச்ரத்தையுடனும், பக்தியுடனும் தலையால் வணங்கிக் கைகூப்பிக் கொண்டு கூறினார்."

**கேள்வி:** 'தத:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** 'தத:' என்ற சொல்லுக்கு 'அதற்குப் பிறகு' என்று பொருள். மேலே சொல்லப்பட்ட அற்புதமான ப்ரபாவம் மிகுந்த பகவானுடைய ஸ்வரூபத்தைப் பார்த்த பிறகு அர்ஜுனனுக்கு இந்தவிதமான மாறுதல் ஏற்பட்டது என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'தநஞ்ஜய:' என்ற சொல்லுக்கு 'விஸ்மயாவிஷ்ட:, ஹ்ருஷ்டரோமா' என்ற இரு அடைமொழிகள் கொடுப்பதன் கருத்து என்ன?

**பதில்:** பல அரசர்களை வென்று அர்ஜுனன் செல்வம் கொண்டு வந்ததனால் அவருக்கு 'தநஞ்ஜயன்' என்று பெயர். அவரிடம் தற்போது மகிழ்ச்சியும், ஆச்சரியமும் எழுந்தன என்கிறார். பகவானுடைய அந்த ஸ்வரூபத்தைப் பார்த்ததும் அர்ஜுனன் பெருமகிழ்ச்சி கொண்டார், ஆச்சரியமடைந்தார், புளகாங்கிதமடைந்தார். இதற்குமுன் இவ்வளவு ஈசுவர சக்தி வாய்ந்த பகவானுடைய ஸ்வரூபத்தை அவர் பார்த்ததே இல்லை. உலகியலுக்கு முற்றிலும் மாறுபட்ட இந்த ஸ்வரூபத்தைப் பார்த்தவுடன் அவருடைய உள்ளத்திரையில் பகவானுடைய

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அளவற்ற ப்ரபாவத்தின் ஓர் அம்சம் பதிந்தது. சற்றே பகவானுடைய ப்ரபாவத்தை உணர்ந்தார். அதுவே அவரை எல்லையற்ற வியப்பிலும், மகிழ்ச்சியிலும் ஆழ்த்தியது.

**கேள்வி:** 'தேவம்' என்ற சொல் யாரைக் குறிக்கிறது? 'ஶிரஸா ப்ரணம்ய க்ருதாஞ்ஜலி:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கே 'தேவம்' என்ற சொல் பகவானுடைய ஒளிமயமான விராட் ஸ்வரூபத்தைக் குறிக்கிறது. அளவற்ற ஆச்சரியங்கள் நிறைந்ததும், மிகவும் ஒளிமயமானதும் ஆகிய எல்லையற்ற ஈசுவரத்தன்மை மிளிர்கின்ற மாபெரும் ஸ்வரூபத்தைப் பார்த்தவுடன் அர்ஜுனன் மனதில் பெரும் மாற்றம் உண்டாயிற்று. அவர் மனதில் பகவானிடம் முன்பு வைத்திருந்த நண்பன் என்ற பாவனை உடனேயே அகன்றுவிட்டது. பகவானுடைய பெருமையின் முன்னே தாம் மிகவும் அற்பர் என்பதை உணர்ந்தார். அவ்வளவு பரவசப்பட்டுவிட்டார். பகவான் பூஜிக்கத்தக்கவர் என்ற எண்ணம் அர்ஜுனனுடைய மனதில் விழித்தெழுந்தது. அந்த பாவனை மின்னல்போல் அவர் உடலில் பாய்ந்து அவரைத் தலைவணங்கச் செய்தது; சரணங்களில் விழச் செய்தது; கைகளைக் கூப்ப வைத்தது; மிகவும் வினயத்துடனும், ச்ரத்தையுடனும், பக்தியுடனும் பகவானைத் துதிக்க ஆரம்பித்தார்.

**பொருத்தம்:** மேலே சொன்னவிதம் ஆச்சரியமும், மகிழ்ச்சியும் கொண்ட அர்ஜுனன் பகவானுடைய விசுவரூபத்தில் தோற்றமளிக்கும் காட்சிகளை வர்ணித்து விசுவரூப பகவானைத் துதிக்கிறார்—

*अर्जुन उवाच*

**पश्यामि देवांस्तव देव देहे सर्वांस्तथा भूतविशेषसङ्घान्।**
**ब्रह्माणमीशं कमलासनस्थमृषींश्च सर्वानुरगांश्च दिव्यान्॥१५॥**

அர்ஜுந உவாச

**பஶ்யாமி தே₃வாம்ஸ்தவ தே₃வ தே₃ஹே**
**ஸர்வாம்ஸ்ததா₂ பூ₄தவிஶேஷஸங்கா₄ந் ।**
**ப்₃ரஹ்மாணமீஶம் கமலாஸநஸ்த₂ம்**
**ருஷீம்ஶ்ச ஸர்வாநுரகா₃ம்ஶ்ச தி₃வ்யாந் ॥ 15 ॥**

**அர்ஜுந உவாச** – அர்ஜுனன் கூறினார்: **தே₃வ** – தேவனே! (நான்), **தவ** – உங்களுடைய, **தே₃ஹே** – திருமேனியில், **ஸர்வாந்** – எல்லா, **தே₃வாந்** – தேவர்களையும், **ததா₂** – அவ்வாறே, **பூ₄த விஶேஷ ஸங்கா₄ந்** – அநேக ப்ராணி வர்க்கங்களையும், **கமல ஆஸநஸ்த₂ம்** – தாமரை மலரில் வீற்றிருக்கும், **ப்₃ரஹ்மாணம்** – ப்ரம்மதேவனையும், **ஈஶம் ச** – மஹாதேவனையும், **ஸர்வாந்** – எல்லா, **ருஷீந்** – ரிஷிகளையும், **தி₃வ்யாந் உரகா₃ந் ச** – தெய்விகமான ஸர்ப்பங்களையும், **பஶ்யாமி** – பார்க்கிறேன்.

அர்ஜுனன் கூறினார்: "தேவனே! நான் உங்களுடைய திருமேனியில் எல்லா தேவர் களையும் அவ்வாறே அநேக ப்ராணி வர்க்கங்களையும் தாமரை மலரில் வீற்றிருக்கும் ப்ரம்மதேவனையும் மஹாதேவனையும் எல்லா ரிஷிகளையும் தெய்விகமான ஸர்ப்பங்களையும் பார்க்கிறேன்.

**கேள்வி:** இங்கு 'தேவ' என்று அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** பகவானுடைய தேஜோமயமான அற்புதமான ஸ்வரூபத்தைப் பார்த்து அர்ஜுனனுக்கு பகவானிடத்தில் ச்ரத்தையும், பக்தியும் கூடிய போற்றத் தகுந்த பாவனை ஏற்பட்டதே, அதைக் காண்பிப்பதற்காகவே 'தேவ' என்ற விளிச்சொல் கையாளப்பட்டுள்ளது.

**கேள்வி:** 'தவ தேஹே' என்பதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** 'என் முன்னே இதோ ஸ்ரீக்ருஷ்ணனாக நிற்கிறீர்களே – இந்தத் திருமேனியிலேயே இவையெல்லாவற்றையும் காண்கிறேன்' என்கிறார்.

**கேள்வி:** முன்பேதான் 'உங்களுடைய திருமேனியில் ஸகல, சராசர ப்ராணிகளையும், அவற்றின் வெவ்வேறு கூட்டங்களையும் காண்கிறேன்' என்று சொல்லிவிட்டாரே, பிறகு 'எல்லா தேவதைகளையும் காண்கிறேன்' என்று தனியாகக் கூறுவதற்கு அவசியம் என்ன?

**பதில்:** உலகில் உள்ள ப்ராணிகள் எல்லாவற்றைக் காட்டிலும் தேவதைகள் மிகச் சிறந்தவர்கள் எனக் கருதப்படுகின்றனர். ஆகவே அவர்களைத் தனியாகக் குறிப்பிட்டார்.

**கேள்வி:** ப்ரம்மதேவனும், பரமசிவனும் தேவர்களைச் சேர்ந்தவர்கள் தானே! அவர்களைத் தனியாகக் குறிப்பிடுவானேன்? ப்ரம்மதேவனுக்கு 'கமலாஸநஸ்தம்' என்று அடைமொழி கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ப்ரம்மாவும், சிவனும் தேவர்களுக்கும் தேவர்கள்; ஈசுவரனாகவும் இருக்கிறார்கள். ஆகவே, அவர்களைத் தனியாகக் குறிப்பிட்டார். ப்ரம்மதேவன் பகவான் விஷ்ணுவின் நாபியிலிருந்து வெளிவந்த தாமரை மலர் மீது வீற்றிருக்கிறார் என்று கூறும்போது, 'அவர் உதித்த கமலத்திற்கு ஆதாரமான உங்களுடைய ஸ்ரீமந்நாராயண ஸ்வரூபத்தையும் பார்த்துக் கொண்டிருக்கிறேன்' என்று குறிப்பால் உணர்த்துகிறார்.

**கேள்வி:** 'எல்லா ரிஷிகளையும், தெய்விகமான ஸர்ப்பங்களையும்' என்று தனித்தனியாகக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனித உலகத்திற்குள் எல்லா உயிரினங்களிலும் ரிஷிகள் சிறந்தவர்கள் என்று கருதப்படுகிறார்கள். பாதாள உலகில் தெய்விகமான ஸர்பங்களில் வாஸுகி முதலியவை சிறந்தவை என்று கருதப்படுகின்றன. ஆகவே தனியாகக் குறிப்பிட்டார். இங்கே ஸ்வர்கம், மனித உலகம், பாதாளம் என்று மூன்று உலகங்களிலும் சிறந்தவர்களின் கூட்டத்தைச் சேர்த்துக் கூறி 'மூவுலகங்கள் அடங்கிய எல்லா ப்ரபஞ்சத்தையும் உங்கள் திருமேனியில் பார்க்கிறேன்' என்கிறார் அர்ஜுனன்.

**अनेकबाहूदरवक्त्रनेत्रं पश्यामि त्वां सर्वतोऽनन्तरूपम्।**
**नान्तं न मध्यं न पुनस्तवादिं पश्यामि विश्वेश्वर विश्वरूप॥ १६॥**

**அநேகபா₃ஹூத₃ரவக்த்ரநேத்ரம்**
**பஶ்யாமி த்வாம் ஸர்வதோऽநந்தரூபம் ।**
**நாந்தம் ந மத்₄யம் ந புநஸ்தவாதி₃ம்**
**பஶ்யாமி விஶ்வேஶ்வர விஶ்வரூப ॥ 16 ॥**

**விஶ்வேஶ்வர** – அகில லோக நாயகனே! **த்வாம்** – உங்களை, **அநேக பா₃ஹூ உத₃ர வக்த்ர நேத்ரம்** – எண்ணிலடங்காத கைகள், வயிறுகள், முகங்கள், கண்கள் கொண்டவராகவும், **அநந்தரூபம்** – எண்ணற்ற உருவங்கள் ஏற்றவராகவும், **ஸர்வத:** – எல்லாப் பக்கங்களிலும், **பஶ்யாமி** – பார்க்கிறேன். **விஶ்வரூப** – அகிலாண்டரூபனே! **தவ** – உங்களுடைய, **அந்தம்** – முடிவான எல்லையை, **ந பஶ்யாமி** – பார்க்கவில்லை; **மத்₄யம்** – நடுப்பகுதியையும், **ந** – பார்க்கவில்லை; **புந:** – மேலும், **ஆதி₃ம்** – ஆரம்பத்தையும், **ந (பஶ்யாமி** – பார்க்கவில்லை).

அகில லோக நாயகனே! உங்களை எண்ணிலடங்காத கைகள், வயிறுகள், முகங்கள், கண்கள் கொண்டவராகவும் எண்ணற்ற உருவங்கள் ஏற்றவராகவும், எல்லாப் பக்கங்களிலும் பார்க்கிறேன். அகிலாண்டரூபனே! உங்களுடைய முடிவான எல்லையைப் பார்க்கவில்லை; நடுப்பகுதியையும் பார்க்கவில்லை; மேலும் ஆரம்பத்தையும் பார்க்கவில்லை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'விஸ்வேஸ்வர, விஸ்வரூப' என்று அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** நீங்கள்தான் அகில ப்ரபஞ்சத்தையும் படைத்தவர்; ப்ரளயத்தில் ஒடுக்கிக் கொள்பவரும் நீங்களே. அவரவர்களை அவரவர் கடமைகளில் ஈடுபடச் செய்து எல்லோரையும் ஆள்பவர். இந்த அகில உலகமுமே உண்மையில் உங்களுடைய ஸ்வரூபம்தான். நீங்களே இந்த ப்ரபஞ்சத்திற்கு உபாதான காரணமாகவும், நிமித்த காரணமாகவும் உள்ளவர் என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'அநேகபாஹூதரவக்த்ரநேத்ரம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'தற்சமயம் நான் பார்க்கும் இந்த ஸ்வரூபத்தில் காணப்படும் கைகள், வயிறுகள், முகங்கள், கண்கள் இவற்றிற்கு எண்ணிக்கையே இல்லை போலும். அவற்றை யாரும் எவ்வகையிலும் எண்ணிப் பார்க்க முடியாது' என்று பொருள்.

**கேள்வி:** 'ஸர்வத: அநந்தரூபம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** நான் உங்களை எல்லாப் புறங்களிலிருந்தும் பார்க்கிறேன். தனித்தனியாகப் பலவிதமான எண்ணற்ற ஸ்வரூபங்களோடு இருப்பதைப் பார்க்கிறேன். உங்களுடைய இந்த ஒரே ஸ்வரூபத்தில் பலவிதமான முடிவற்ற ரூபங்கள் நாற்புறமும் எங்கும் பரவியிருப்பது எனக்குத் தென்படுகிறது.

**கேள்வி:** 'உங்களுடைய ஆரம்பம், நடு, முடிவுகளை நான் பார்க்கவில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "இந்த விராட் ஸ்வரூபம் எங்கே ஆரம்பிக்கிறது? எங்கே முடிகிறது என்பதை என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. எங்கிருந்து எதுவரை உங்கள் ஸ்வரூபம் பரவி இருக்கிறது என்பதை அளவிட முடியவில்லை. இப்படி அடி முடி தெரியாத காரணத்தால் நடு எங்கே என்றும் தெரியவில்லை. எனக்கு முன்னும்–பின்னும், இடப்புறமும்–வலப்புறமும், மேலும்–கீழும் நாற்புறமும் எங்கும் எல்லையற்று உங்கள் ஸ்வரூபம் காணப்படுகிறது. எந்தப் பக்கத்திலும் எல்லை எங்கு முடிகிறது என்பதே தெரியவில்லை" என்கிறார்.

**किरीटिनं गदिनं चक्रिणं च तेजोराशिं सर्वतो दीप्तिमन्तम्।**
**पश्यामि त्वां दुर्निरीक्ष्यं समन्ताद्दीप्तानलार्कद्युतिमप्रमेयम् ॥१७॥**

**கிரீடிநம் கூதிநம் சக்ரிணம் ச**
**தேஜோராஸிம் ஸர்வதோ தீ3ப்திமந்தம் ।**
**பஸ்யாமி த்வாம் து3ர்நிரீக்ஷ்யம் ஸமந்தாத்**
**தீ3ப்தாநலார்கத்3யுதிமப்ரமேயம் ॥ 17 ॥**

**த்வாம்** – உங்களை, **கிரீடிநம்** – கிரீடம் தரித்தவராகவும், **கூதிநம்** – கதையோடு கூடியவராகவும், **சக்ரிணம் ச** – சக்ரத்தோடு கூடியவராகவும், **ஸர்வத:** – எங்கும், **தீ3ப்திமந்தம்** – ப்ரகாசிக்கின்ற, **தேஜோராஸிம்** – ஒளிப்பிழம்பாகவும், **தீ3ப்த அநல அர்க த்3யுதிம்** – கொழுந்துவிட்டெரிகின்ற அக்னி, சூரியனுடையது போன்ற ஒளியுடன் கூடியவராகவும், **துர்நிரீக்ஷ்யம்** – பார்க்கக் கூசுகின்றதும், **ஸமந்தாத்** – எங்கும் நிறைந்தது மான, **அப்ரமேயம்** – அளவிட முடியாத ஸ்வரூபத்தை உடையவராய், **பஸ்யாமி** – பார்க்கிறேன்.

உங்களை கிரீடம் தரித்தவராகவும், கதை, சக்ரத்தோடு கூடியவராகவும், எங்கும் ப்ரகாசிக்கின்ற ஒளிப்பிழம்பாகவும், கொழுந்துவிட்டெரிகின்ற அக்னி, சூரியனுடையது போன்ற ஒளியுடன் கூடியவராகவும், பார்க்கக் கூசுகின்றதும் எங்கும் நிறைந்ததுமான அளவிட முடியாத ஸ்வரூபத்தை உடையவராய்ப் பார்க்கிறேன்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'கிரீடிநம், கதிநம், சக்ரிணம்' என்ற சொற்களின் பொருள் என்ன?

**பதில்:** மிகுந்த அழகும், ஒளியும் பொருந்திய கிரீடத்தைத் தலையிலே அணிந்தவர் 'கிரீடீ'. கையிலே கதாயுதத்தைத் தாங்கினவர் 'கதீ'; சக்ராயுதத்தைத் தாங்கினவர் 'சக்ரீ'. இந்த அற்புதமான ஸ்வரூபத்தில்கூட தலையில் தேஜோமயமான கிரீடம் தரித்துக் கொண்டிருப்பதையும் பார்க்கிறேன். கைகளில் கதையையும், சக்ராயுதத்தையும் ஏந்திக் கொண்டவராகப் பார்க்கிறேன் என்று பொருள்.

**கேள்வி:** 'ஸர்வத: தீப்திமந்தம் தேஜோராஶிம்' என்றால் பொருள் என்ன?

**பதில்:** "எவருடைய ஒளி மேலும்-கீழும், உள்ளும்-புறமும் நாற்புறங்களிலும் எங்கும் வீசுகிறதோ அவர் 'தீப்திமாந்' எனப்படுவார். ஒளியின் கற்றைக்கு 'தேஜோராசி' என்று பெயர். உங்களுடைய திருமேனி ஒளியே வடிவாக நாற்புறமும் எங்கும் ப்ரகாசத்தை வீசிக் கொண்டு விளங்குவதாகக் காணப்படுகிறது" என்பதுவே இதன் கருத்து.

**கேள்வி:** 'ஸர்வதோ தீப்திமந்தம்' என்றும், 'தேஜோராசிம்' என்றும் அடைமொழி களைக் கொடுத்த பிறகு அதே பொருளைக் கொடுக்கக் கூடிய 'தீப்தாநலார்கத்யுதிம்' என்ற சொல்லைக் கையாள்வதன் அவசியம் என்ன?

**பதில்:** பகவானுடைய விராட் ஸ்வரூபம் ஒளியுள்ளதாக – வடிவெடுத்த ஒளிப்பிழம்பாக – எப்படி இருந்தது என்பதை உணர்த்த கொழுந்துவிட்டெரியும் நெருப்பையும், சூரியனையும் உவமையாகக் காட்டுகிறார். இப்படிச் சொன்னால் ஓரளவு ஊகிக்க முடியும் என்பது கருத்து. கொழுந்துவிட்டெரியும் அக்னியும், ஒளிமயமான சூரியனும் எப்படி ஒளிப்பிழம்புகளோ, அதுபோல பகவானுடைய இந்த விராட் ஸ்வரூபம் பன்மடங்கு ஒளி பொருந்தியது என்பதை அர்ஜுனன் விளக்குகிறார். கொழுந்துவிட்டெரியும் அக்னி சிறிது இடத்தில்தான் வெளிச்சம் தரவல்லது. சூரியன்கூட ப்ரம்மாண்டத்தின் ஒரு பகுதியில்தான் ஒளி வீசுகிறான். ஆனால் விராட் ஸ்வரூபத்தின் ஒளி அவற்றைக் காட்டிலும் பல மடங்கு ஒளி பொருந்தியதாகக் காட்சி அளிக்கிறது.

**கேள்வி:** 'துர்நிரீக்ஷ்யம்' (பார்க்கக் கூசுகின்றது) என்று சொன்னால் அர்ஜுனன் அதை எப்படிப் பார்த்தார்?

**பதில்:** மிகவும் அற்புதமான ஒளிமிக்கதாக இருந்ததால் ஸாதாரண மானுட ஊனக்கண்கள் அதன் எதிரே விழித்துப் பார்க்க இயலாதன. ஆகவே ஸாதாரண மானிட ஊனக்கண்களின் உதவியினால் காண முடியாதது. ஆனால் அர்ஜுனனுக்குத்தான் பகவான் அந்த ஸ்வரூபத்தைப் பார்க்கத் திறன் படைத்த தெய்விகப் பார்வையை அளித்திருக்கிறாரே. ஆகவே அவரால் பார்க்க முடிந்தது. மற்றவர்களால் பார்க்க முடியாது.

**கேள்வி:** 'ஸமந்தாத் அப்ரமேயம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எந்த அளவுகோலினாலும் அளந்து இவ்வளவுதான் என்று குறிப்பிட முடியாதவாறு எல்லை கடந்ததாகையால் 'அப்ரமேயம்'. எவ்வகையிலும் அளவிட முடியாதது. ஆகவே 'ஸமந்தாத் அப்ரமேயம்'. பகவானுடைய குணங்கள், ப்ரபாவம், சக்தி, ஸ்வரூபம் இவற்றை எவரும், எந்த உபாயத்தினாலும் முழுமையாக அறிந்து கொள்ள இயலாது என்று அர்ஜுனன் கூறுகிறார்.

त्वमक्षरं परमं वेदितव्यं त्वमस्य विश्वस्य परं निधानम्।
त्वमव्ययः शाश्वतधर्मगोप्ता सनातनस्त्वं पुरुषो मतो मे॥ १८॥

த்வமக்ஷரம் பரமம் வேதி₃தவ்யம்
த்வமஸ்ய விஸ்வஸ்ய பரம் நித₄ாநம் ।
த்வமவ்யய: ஶாஸ்வதத₄ர்மகே₃ாப்தா
ஸநாதநஸ்த்வம் புருஷோ மதோ மே ॥ 18 ॥



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**த்வம்** – நீங்கள், **வேதி₁தவ்யம்** – அறியத்தக்க, **பரமம்** – மிக உயர்ந்த, **அக்ஷரம்** – அழிவற்ற பரப்ரம்ம பரமாத்மா; **த்வம்** – நீங்களே, **அஸ்ய** – இந்த, **விஸ்வஸ்ய** – அகில உலகத்திற்கும், **பரம்** – மேலான, **நித₄ானம்** – உறைவிடம்; **த்வம்** – நீங்களே, **ஶாஸ்வத த₄ர்ம கோ₃ப்தா** – நிலையான தர்மத்தைக் காப்பாற்றுபவர்; **த்வம்** – நீங்களே, **அவ்யய:** – அழிவற்றவர்; **ஸநாதந:** – ஶாஸ்வதமான, **புருஷ:** – பரமன் (என்பது), **மே** – என்னுடைய, **மத:** – கருத்து.

நீங்கள் அறியத்தக்க, மிகவுயர்ந்த, அழிவற்ற, பரப்ரம்ம பரமாத்மா; நீங்களே இந்த அகில உலகத்திற்கும் மேலான உறைவிடம்; நீங்களே நிலையான தர்மத்தைக் காப்பாற்றுபவர்; நீங்களே அழிவற்றவர்; ஶாஸ்வதமான பரமன் என்பது என்னுடைய கருத்து.

**கேள்வி:** 'வேதிதவ்யம், பரமம்' என்ற அடைமொழிகளுடன் கூடிய 'அக்ஷரம்' எனும் சொல் யாரைக் குறிக்கிறது? அதன் பொருள் என்ன?

**பதில்:** மோக்ஷத்தை விரும்புகிறவர்கள் எதை அறிய விரும்புகிறார்களோ, எதை அறிவதற்காக ஞானத்தைப் பெற விரும்பும் ஸாதகர்கள் பல ஸாதனைகளைப் புரிகிறார்களோ, 8/3ல் எந்தப் பரம அக்ஷரத்தை ப்ரம்மம் என்று சொன்னாரோ, அந்தப் பரம தத்வத்தை, ஸத் சித் ஆனந்தமயமான நிர்குணமான உருவமற்ற பரப்ரம்மமே அறியத்தக்கதென்றும், 'பரமம் அக்ஷரம்' என்றும் இங்கே கூறுகிறார். 'உங்களுடைய விராட் ஸ்வரூபத்தைப் பார்த்த பிறகு அந்த பரப்ரம்ம பரமாத்மாவான நிர்குண ப்ரம்மம் நீங்கள்தான் என்ற திடநிச்சயம் எனக்கு ஏற்பட்டுவிட்டது' என்கிறார் அர்ஜுனன்.

**கேள்வி:** 'நிதானம்' என்றால் என்ன? பகவான் இந்த ப்ரபஞ்சத்திற்கு ஆதாரம் 'நிதானம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஒரு பொருளை எந்த இடத்தில் வைத்துக் காப்பாற்றுகிறோமோ, அந்த இடம் அந்தப் பொருளுக்கு 'நிதானம்' – ஆதாரம் – உறைவிடம் ஆகும். அர்ஜுனன் பகவானை ப்ரபஞ்சத்திற்கு 'நிதானம்' என்கிறார். 'காரணமாகவும், கார்யமாகவும் விரிந்திருக்கின்ற இந்த ப்ரபஞ்சம் உங்களிடமே நிலைபெற்றிருக்கிறது. நீங்களே இதைத் தாங்குகிறீர்கள். ஆகவே நீங்களே இதற்கு உறைவிடம்' என்கிறார்.

**கேள்வி:** 'ஶாஶ்வததர்மம்' என்பது எது? 'அதைக் காப்பவர்' என்று பகவானைக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அநாதியாக எப்பொழுதுமே தொடர்ந்து வருகிற வைதிக தர்மம் 'ஶாஶ்வததர்மம்' ஆகும். பகவான் அடிக்கடி அவதாரம் எடுத்து அந்த தர்மத்தைத்தான் காக்கிறார். ஆகவே பகவானை 'ஶாஶ்வததர்மகோப்தா' என்கிறார் அர்ஜுனன்.

**கேள்வி:** 'அவ்யய: ஸநாதந: புருஷ:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஒருபொழுதும் அழிவுறாத பொருள் 'அவ்யயம்' எனப்படும். எப்பொழுதும் ஒரே மாதிரி இருப்பது 'ஸநாதநம்' ஆகும். அப்படிப்பட்ட புருஷன் பரமாத்மாதான். அவர் அழிவற்றவர்; உலகைப் படைத்துக் காத்துத் தம்மிடம் ஒடுக்கிக் கொள்பவர்; ஸர்வ வல்லமை பெற்றவர்; எவ்வித மாற்றமும் அற்றவர்; அழிவற்றவர். அத்தகைய பரம புருஷரான பகவான் நீங்கள்தான் என்கிறார் அர்ஜுனன்.

अनादिमध्यान्तमनन्तवीर्यमनन्तबाहुं शशिसूर्यनेत्रम्।
पश्यामि त्वां दीप्तहुताशवक्त्रं स्वतेजसा विश्वमिदं तपन्तम्॥ १९॥



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அநாதி₃மத்₄யாந்தமநந்தவீர்ய-**

**மநந்தப₃ாஹும் ஶஶிஸூர்யநேத்ரம் ।**

**பஶ்யாமி த்வாம் தீ₃ப்தஹுதாஶவக்த்ரம்**

**ஸ்வதேஜஸா விஶ்வமித₃ம் தபந்தம் ॥ 19 ॥**

**த்வாம்** – உங்களை, **அநாதி₃ மத்₄ய அந்தம்** – முதல், நடு, முடிவு அற்றவராகவும், **அநந்தவீர்யம்** – எல்லையற்ற திறமை கொண்டவராகவும், **அநந்தப₃ாஹும்** – எண்ணற்ற தோள்கள் உடையவராகவும், **ஶஶி ஸூர்ய நேத்ரம்** – சந்த்ரன், சூரியன் இவர்களைக் கண்களாகக் கொண்டவராகவும், **தீ₃ப்த ஹுதாஶ வக்த்ரம்** – கொழுந்து விட்டெரியும் தீ போன்ற வாய் உடையவராகவும், **ஸ்வதேஜஸா** – தம்முடைய வெப்பத்தினால், **இத₃ம் விஶ்வம்** – இந்த உலகத்தை, **தபந்தம்** – வாட்டுபவராகவும், **பஶ்யாமி** – பார்க்கிறேன்.

உங்களை முதல், நடு, முடிவு அற்றவராகவும், எல்லையற்ற திறமை கொண்டவராகவும், எண்ணற்ற தோள்கள் உடையவராகவும், சந்த்ரன், சூரியன் இவர்களைக் கண்களாகக் கொண்டவராகவும், கொழுந்து விட்டெரியும் தீ போன்ற வாய் உடையவராகவும், தம்முடைய வெப்பத்தினால் இந்த உலகத்தை வாட்டுபவராகவும் பார்க்கிறேன்.

**கேள்வி:** 16வது ச்லோகத்திலேயே அர்ஜுனன் 'உங்களுடைய முதல், நடு, முடிவுகளைப் பார்க்கவில்லை' என்று கூறிவிட்டாரே. மறுபடியும் 'உங்களை முதல், நடு, முடிவற்றவராகக் காண்கிறேன்' என்பது கூறியது கூறல் என்ற குறை உள்ளதாகத் தோன்றுகிறதே, இப்படிக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அங்கு அர்ஜுனன் பகவானுடைய விராட் ஸ்வரூபம் எல்லையற்றது என்று கூறினார். இங்கு உற்பத்தி முதலிய ஆறு விகாரங்கள் அற்றவர்; மேலும் நித்யமானவர் என்று கூறுகிறார். எனவே 'கூறியது கூறல்' என்ற குற்றம் இல்லை. ஆதி என்ற சொல் உற்பத்தியையும், 'நடு' என்ற சொல் உற்பத்திக்கும், அழிவுக்கும் இடையே நேர்கின்ற இருத்தல், வளர்தல், தேய்தல், மாறுதல் என்ற நான்கு விகாரங்களையும், 'முடிவு' என்ற சொல் அழிவு வடிவான மாறுதலையும் குறிக்கின்றன. இந்த மூன்றும் எவரிடத்தில் இல்லையோ, அவர் 'அநாதிமத்யாந்த:' எனப்படுவார். ஆகவே உண்டாகும் பொருட்களுக்குரிய ஆறு விகார்ரங்கள் (மாறுதல்கள்) அற்றவராக உங்களைப் பார்க்கிறேன் என்று அர்ஜுனன் கூறுகிறார்.

**கேள்வி:** 'அநந்தவீர்யம்' என்றால் என்ன?

**பதில்:** வீர்யம் என்ற சொல் திறமை, பலம், ஒளி, சக்தி முதலியவற்றைக் குறிக்கும். அளவற்ற வீர்யத்தை உடையவன் 'அநந்தவீர்யன்'. பலம், ஒளி, திறமை, சக்தி இவை பகவானிடம் அளவற்று இருப்பதால் பகவானை 'அநந்தவீர்ய:' என்று அர்ஜுனன் கூறுகிறார்.

**கேள்வி:** 'அநந்தபாஹும்' என்றால் என்ன?

**பதில்:** எண்ணிலடங்காத தோள்களை உடையவர் 'அநந்தபாஹு'. இங்கு அர்ஜுனன் பகவானுடைய விசுவருபத்தில் காணுமிடமெங்கும் கணக்கிலடங்காத் திருத்தோள்கள் தெரிகின்றன என்கிறார்.

**கேள்வி:** 'ஶஶிஸூர்யநேத்ரம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உங்களுடைய திருமுகத்தில் கண்கள் இருக்க வேண்டிய இடங்களில் சூரியனையும், சந்த்ரனையும் பார்க்கிறேன் என்று அர்ஜுனன் கூறுகிறார். விராட் ஸ்வரூபத்தில் நாற்புறங்களிலும் பல முகங்களைக் காண்கிறேன். அவற்றில் முக்யமான



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நேர் முகத்தில் சூரியனும், சந்த்ரனுமே கண்களாக விளங்குகிறார்கள் என்பதே கருத்து.

**கேள்வி:** 'தீப்தஹுதாஶவக்த்ரம்' என்றால் என்ன?

**பதில்:** 'ஹுதாஶ:' என்பது அக்னிக்குப் பெயர். நன்கு எரியும் அக்னியை 'தீப்தஹுதாஶ:' என்பர். பகவானுடைய முகம் கொழுந்துவிட்டெரியும் நெருப்பைப்போல் ஒளி வீசுகிறது. வெப்பத்தையும் வெளிப்படுத்துகிறது. உங்களுடைய முக்யமான முகத்தை நாற்புறமும் கொழுந்துவிட்டெரியும் தீயைப்போல வெப்பமும், ஒளியும் உள்ளதாகப் பார்க்கிறேன் என்கிறார்.

**கேள்வி:** 'தம்முடைய வெப்பத்தினால் உலகத்தை வாட்டுபராகவும் பார்க்கிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'நான் இருக்கும் இந்த ப்ரபஞ்சத்தையே நீங்கள் உங்கள் வெப்பத்தினால் பொசுக்கி விடுவீர்கள் போலத் தோன்றுகிறது' என்கிறார் அர்ஜுனன்.

**द्यावापृथिव्योरिदमन्तरं हि व्याप्तं त्वयैकेन दिशश्च सर्वाः।**
**दृष्ट्वाद्भुतं रूपमुग्रं तवेदं लोकत्रयं प्रव्यथितं महात्मन्॥२०॥**

**த்₃யாவாப்ருதி₂வ்யோரித₃மந்தரம் ஹி**
**வ்யாப்தம் த்வயைகேந தி₃ஶஶ்ச ஸர்வா: ।**
**த்₃ருஷ்ட்வாத்₃பு₄தம் ரூபமுக்₃ரம் தவேத₃ம்**
**லோகத்ரயம் ப்ரவ்யதி₂தம் மஹாத்மந் ॥ 20 ॥**

**மஹாத்மந்** – பரமாத்மாவே! **த்₃யாவா ப்ருதி₂வ்யோ:** – விண்ணிற்கும், மண்ணிற்கும் இடையேயுள்ள, **இத₃ம்** – இந்த, **அந்தரம்** – இடைவெளியும், **ஸர்வா:** – எல்லா, **தி₃ஶ: ச** – திசைகளும், **த்வயா ஏகேந ஹி** – உங்கள் ஒருவராலேயே, **வ்யாப்தம்** – நிறைந்திருக்கிறது. **அத்₃பு₄தம்** – உலகியலுக்கு அப்பாற்பட்ட, **இத₃ம்** – இந்த, **தவ** – உங்களுடைய, **உக்₃ரம்** – பயங்கரமான, **ரூபம்** – உருவத்தை, **த்₃ருஷ்ட்வா** – பார்த்து, **லோகத்ரயம்** – மூன்று உலகங்களும், **ப்ரவ்யதி₂தம்** – பயத்தால் மிகவும் நடுங்குகின்றன.

பரமாத்மாவே! விண்ணிற்கும், மண்ணிற்கும் இடையேயுள்ள இந்த இடைவெளியும் எல்லா திசைகளும் உங்கள் ஒருவராலேயே நிறைந்திருக்கின்றன. உலகியலுக்கு அப்பாற்பட்ட இந்த உங்களுடைய பயங்கரமான உருவத்தைப் பார்த்து மூன்று உலகங்களும் பயத்தால் மிகவும் நடுங்குகின்றன.

**கேள்வி:** இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

**பதில்:** இங்கு 'மஹாத்மந்' என்ற விளிச்சொல்லினால், 'பகவானே! ஸமஸ்த உலகிற்கும் நீங்களே மஹாத்மா (மஹாந் ஆத்மா)' என்று கூறி, "உங்களுடைய இந்த விராட்ரூபம் பூமிக்கும் ஆகாயத்திற்குமாக எல்லா திசைகளிலும் பரவியுள்ளது. உங்களுடைய ஸ்வரூபம் இல்லாத இடமே காணப்படவில்லையே. இந்த அற்புதமான, பயங்கரமான உருவத்தைப் பார்த்து தேவருலகம், மனித உலகம், ஆகாயம் இப்படி மூன்று உலகங்களிலும் உள்ள ப்ராணிகள் யாவுமே பயந்து நடுங்குகின்றனவே! அவைகளுடைய நிலை பரிதாபத்துக்கு உரியதாகிறதே" என்கிறார் அர்ஜுனன்.

**अमी हि त्वां सुरसङ्घा विशन्ति केचिद्भीताः प्राञ्जलयो गृणन्ति।**
**स्वस्तीत्युक्त्वा महर्षिसिद्धसङ्घाः स्तुवन्ति त्वां स्तुतिभिः पुष्कलाभिः॥२१॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அமீ ஹி த்வாம் ஸுரஸங்க₄ா விஶந்தி**
**கேசித்₃பீ₄தா: ப்ராஞ்ஜலயோ க்₃ருணந்தி ।**
**ஸ்வஸ்தீத்யுக்த்வா மஹர்ஷிஸித்₃த₄ஸங்க₄ா:**
**ஸ்துவந்தி த்வாம் ஸ்துதிபி₄: புஷ்கலாபி₄: ॥ 21 ॥**

**அமீ ஸுரஸங்க₄ா: ஹி** – (முன்பு நான் பார்த்த) அதே தேவர்களின் கூட்டங்களே, **த்வாம்** – உங்களிடம், **விஶந்தி** – புகுகின்றார்கள். **கேசித்** – சிலர், **பீ₄தா:** – பயந்து போய், **ப்ராஞ்ஜலய:** – கை கூப்பிக் கொண்டு (உங்களுடைய திருநாமங்களையும், கல்யாண குணங்களையும்), **க்₃ருணந்தி** – உச்சரிக்கிறார்கள். **மஹர்ஷி ஸித்₃த₄ ஸங்க₄ா:** – மஹரிஷிகள், ஸித்தர்களுடைய கூட்டங்கள், **ஸ்வஸ்தி** – மங்களம் உண்டாகட்டும், **இதி** – என்று, **உக்த்வா** – கூறி, **புஷ்கலாபி₄:** – அழகான, கருத்து நிறைந்த, உயர்ந்த, **ஸ்துதிபி₄:** – துதிகளால், **த்வாம்** – உங்களை, **ஸ்துவந்தி** – துதிக்கிறார்கள்.

முன்பு நான் பார்த்த அதே தேவர்களின் கூட்டங்களே உங்களிடம் புகுகின்றார்கள். சிலர் பயந்து போய்க் கை கூப்பிக் கொண்டு உங்களுடைய திருநாமங்களையும், கல்யாண குணங்களையும் உச்சரிக்கிறார்கள். மஹரிஷிகள், ஸித்தர்களுடைய கூட்டங்கள், மங்களம் உண்டாகட்டும் என்று கூறி அழகானதும், கருத்து நிறைந்ததும், உயர்ந்ததுமான துதிகளால் உங்களைத் துதிக்கிறார்கள்.

**கேள்வி:** 'அமீ ஸுரஸங்கா:' என்று கூறி, 'அனைவரும் உங்களிடம் புகுகிறார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'நான் தேவலோகம் சென்றிருந்தபோது எந்த தேவர்களைப் பார்த்தேனோ, அவர்களே இங்கே உங்கள் விராட் ஸ்வரூபத்தில் ப்ரவேசிப்பதைப் பார்க்கிறேன்' என்பது கருத்து.

**கேள்வி:** 'பயந்து போய் கைகூப்பிக் கொண்டு எத்தனை பேர் உங்கள் திருநாமங்களையும், கல்யாண குணங்களையும் பாடிக் கொண்டு இருக்கிறார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "பகவானுடைய பயங்கரமான ஸ்வரூபத்தில் எஞ்சியிருந்த பல தேவதைகள் உள்ளே நுழைவதைப் பார்த்த மற்ற தேவதைகள் 'நாம் மட்டும் இனி எத்தனை நேரம் தப்பி இருக்கப் போகிறோம்' என்று பயந்து கைகூப்பி, உங்களுடைய திருநாமங்களையும், கல்யாண குணங்களையும் பாடுகிறார்கள். உங்களை த்ருப்தி செய்வதற்காக முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள்" என்று அர்ஜுனன் இக்கருத்தை உணர்த்துகிறார்.

**கேள்வி:** 'மஹர்ஷிஸித்தஸங்கா:' என்று யாரைக் குறிப்பிடுகிறார்? 'எல்லோருக்கும் மங்களம் உண்டாகட்டும்' என்று கருத்து நிறைந்த துதிகளால் உங்களைத் துதிக்கிறார்கள் – என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மரீசி, அங்கிரஸ், ப்ருகு முதலிய மஹரிஷிகள் அடங்கிய கூட்டங்களும், அறியப்பட்டவர்களும், அறியப்படாதவர்களுமான ஸித்தர்களின் கூட்டங்களும் ஆகிய எல்லோரையும் 'மஹர்ஷிஸித்தஸங்கா:' என்ற சொல் குறிக்கும். அவர்கள் எல்லோரும் சேர்ந்து 'எல்லோருக்கும் மங்களம் உண்டாகட்டும்' என்று பொருள் பொதிந்த அநேக பாடல்களால் உங்களைத் துதிக்கிறார்கள். அவர்கள் உங்களைப் பற்றிய தத்வங்களை அறிந்தவர்கள். ஆகவே உங்களுடைய பயங்கரமான ஸ்வரூபத்தைப் பார்த்துப் பயப்படாத அவர்கள் மிகவும் அழகான கருத்துக்கள் நிரம்பிய துதிப்பாடல்களைப் பாடி, ச்ரத்தையுடனும், பக்தியுடனும் உலகமெங்கும் மங்களம் உண்டாகட்டும் என்று வேண்டிக் கொண்டு அன்புடன் உங்களைத் துதிக்கின்றனர். இதை நான் பார்க்கிறேன். இதுதான் கருத்து.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



रुद्रादित्या वसवो ये च साध्या विश्वेऽश्विनौ मरुतश्चोष्मपाश्च।
गन्धर्वयक्षासुरसिद्धसङ्घा वीक्षन्ते त्वां विस्मिताश्चैव सर्वे॥२२॥

ருத்₃ராதி₃த்யா வஸவோ யே ச ஸாத்₄யா
விஶ்வேঽஶ்விநௌ மருதஶ்சோஷ்மபாஶ்ச ।
க₃ந்த₄ர்வயக்ஷாஸுரஸித்₃த₄ஸங்க₄ா
வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாஶ்சைவ ஸர்வே ॥ 22 ॥

**யே** – எந்த, **ருத்₃ர ஆதி₃த்யா:** – பதினொரு ருத்ரர்களும், பன்னிரண்டு ஆதித்யர்களும், **வஸவ: ச** – எட்டு வஸுக்களும், **ஸாத்₄யா:** – ஸாத்யர்களும், **விஶ்வே** – விஶ்வே தேவர்களும், **அஶ்விநௌ ச** – இரண்டு அஶ்வினீ குமாரர்களும், **மருத: ச** – (நாற்பத்தொன்பது) மருத்துக்களும், **ஊஷ்மபா: ச** – பித்ருக்களின் கூட்டங்களும், **க₃ந்த₄ர்வ யக்ஷ அஸுர ஸித்₃த₄ ஸங்க₄ா:** – கந்தர்வர்கள், யக்ஷர்கள், அஸுரர்கள், ஸித்தர்கள் இவர்களின் கூட்டங்களும், (தே) **ஸர்வே ஏவ** – (அவர்கள்) எல்லோருமே, **விஸ்மிதா:** – ஆச்சரியம் அடைந்தவர்களாய், **த்வாம்** – உங்களை, **வீக்ஷந்தே** – பார்க்கிறார்கள்.

பதினொரு ருத்ரர்களும், பன்னிரண்டு ஆதித்யர்களும், எட்டு வஸுக்களும், ஸாத்யர்களும், விஶ்வே தேவர்களும், இரண்டு அஶ்வினீ குமாரர்களும், நாற்பத்தொன்பது மருத்துக்களும், பித்ருக்களின் கூட்டங்களும், கந்தர்வர்கள், யக்ஷர்கள், அஸுரர்கள், ஸித்தர்கள் இவர்களின் கூட்டங்களும் ஆக அவர்கள் எல்லோருமே ஆச்சரியம் அடைந்தவர்களாய் உங்களைப் பார்க்கிறார்கள்.

**கேள்வி:** 'ருத்ரா:, ஆதித்யா:, வஸவ:, ஸாத்யா:, விஶ்வேதேவா:, அஶ்விநௌ, மருத:' என்று தனித்தனியாகக் கூறப்படும் தேவதைகள் யார் யார்?

**பதில்:** பதினொரு ருத்ரர்கள், பன்னிரண்டு ஆதித்யர்கள், எட்டு வஸுக்கள், நாற்பத்தொன்பது மருத்துக்கள் என்னும் நான்கு வகை தேவதைகளைப் பற்றி *10/21, 10/23* ச்லோகங்களின் உரைகளிலும், அடிக்குறிப்புகளிலும் கூறப்பட்டன. அச்வினீ குமாரர்களைப் பற்றிய விபரம் *11/6*ல் அடிக்குறிப்பில் காணலாம். மநன், அநுமந்தா, ப்ராணன், நரன், யானன், சித்தி, ஹயன், நயன், ஹம்ஸன், நாராயணன், ப்ரபவன் மற்றும் விபு இவர்கள் பன்னிரண்டு ஸாத்ய தேவதைகள்.‡ க்ரது, தக்ஷன், ச்ரவன், ஸத்யன், காலன், காமன், துநி, குருவான், ப்ரபவான், ரோசமானன் இவர்கள் பத்து விஶ்வே தேவர்கள்.§ ஆதித்யர்கள்,

---

‡ மநோঽநுமந்தா ப்ராணஶ்ச நரோ யாநஶ்ச வீர்யவாந் ॥
சித்திர்ஹயோ நயஶ்சைவ ஹம்ஸோ நாராயணஸ்தத₂ா ।
ப்ரப₄வோঽத₂ விபு₄ஶ்சைவ ஸாத்₄யா த்₃வாத₃ஶ ஜஜ்ஞிரே ॥
*(வாயுபுராணம் 66/15,16)*

தர்மருடைய மனைவியும், தக்ஷனின் பெண்ணுமான ஸாத்யா என்பவளுக்கு இந்தப் பன்னிரண்டு ஸாத்யர்கள் பிறந்தார்கள். ஸ்கந்தபுராணத்தில் இவர்களுக்கு மாற்றுப் பெயர்கள் உள்ளன. மநன், அநுமந்தா, ப்ராணன், நரன், அபானன், பக்தி, பயன், அநகன், ஹம்ஸன், நாராயணன், விப, ப்ரபு என்று (ஸ்கந்தபுராணம், ப்ரபாஸ கண்டம் *21/17,18*). மன்வந்தரங்கள் தோறும் பெயர்கள் மாறுபடும் என்பதால் சரிதான்.

§ விஶ்வேதே₃வாஸ்து விஶ்வாயா ஜஜ்ஞிரே த₃ஶ விஶ்ருதா: ।
க்ரதுர்த₃க்ஷ: ஶ்ரவ: ஸத்ய: கால: காமோ து₄நிஸ்தத₂ா ।
குருவாந் ப்ரப₄வாம்ஶ்சைவ ரோசமாநஶ்ச தே த₄ஶ ॥
*(வாயுபுராணம் 66/31,32)*

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ருத்ரர்கள் முதலானவர் எட்டு கணங்கள் (ஸமுதாயம்). அவர்களில் ஸாத்யர்களும், விஶ்வே தேவர்களும் இரண்டு தனிப்பட்ட கணங்கள் (ப்ரம்மாண்டபுராணம் 71/2).

**கேள்வி:** 'ஊஷ்மபா:' என்றால் யார்?

**பதில்:** சூடான உணவு உண்பவர்கள். மனுஸ்ம்ருதி 3/237ல் பித்ருக்கள்‡ சூடான உணவையே உட்கொள்வார்கள் என்று கூறப்பட்டிருக்கிறது.

**கேள்வி:** 'கந்தர்வயக்ஷாஸுரஸித்தஸங்கா:' என்பவர்கள் யார்?

**பதில்:** கச்யபரின் மனைவியரான முநி, ப்ராதா, அரிஷ்டா என்பவர்களிடம் கந்தர்வர்கள் பிறந்தார்கள் என்று கருதப்படுகிறது. இவர்கள் ராகங்களின் ஞானத்தில் நிபுணர்கள், தேவலோகத்திய வாத்யக் கலையிலும், நடனக் கலையிலும் திறமையுடையவர்கள். யக்ஷர்கள் கச்யபரின் மனைவி கஸா என்பவளிடம் பிறந்தவர்கள். பகவான் சங்கரருடைய கணங்களிலும் யக்ஷர்கள் உண்டு. இந்த யக்ஷர்களுக்கும், சிறந்த ராக்ஷஸர்களுக்கும் அதிபதி குபேரன். தேவர்களின் விரோதிகளை தைத்யர்கள் (திதியின் குமாரர்கள்) என்றும், தானவர்கள் (தனுவின் குமாரர்கள்) என்றும் கூறுகிறார்கள். ராக்ஷஸர்களை அஸுரர்கள் என்று அழைக்கிறார்கள். ராக்ஷஸர்களுடைய பிறப்பு பலவிதமானது. கபிலர் முதலானோர் ஸித்த ஜனங்கள். 'கந்தர்வயக்ஷாஸுரஸித்தஸங்கா:' என்ற சொல் இத்தகைய பல தரப்பட்ட ஸமுதாயங்களைக் குறிக்கிறது.

**கேள்வி:** 'இவர்கள் ஆச்சரியம் அடைந்தவர்களாக உங்களைப் பார்க்கிறார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "மேலே சொன்ன தேவதைகள், பித்ருக்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், அஸுரர்கள், ஸித்தர்களின் வெவ்வேறு கூட்டங்கள் வியப்பு மேலிட்டு உங்களுடைய இந்த அற்புதமான ஸ்வரூபத்தைக் காண்கிறார்கள். அதை நான் பர்க்கிறேன்" என்று அர்ஜுனன் கூறுகிறார். இதுதான் கருத்து.

**रूपं महत्ते बहुवक्त्रनेत्रं महाबाहो बहुबाहूरुपादम्।**
**बहूदरं बहुदंष्ट्राकरालं दृष्ट्वा लोकाः प्रव्यथितास्तथाहम्॥२३॥**

**ரூபம் மஹத்தே பஃஹுவக்த்ரநேத்ரம்**
**மஹாபஃாஹோ பஃஹுபஃாஹூருபாதஃம் ।**
**பஃஹூதஃரம் பஃஹுதஃம்ஷ்ட்ராகராலம்**
**த்ஃருஷ்ட்வா லோகா: ப்ரவ்யதிஃதாஸ்ததஃாஹம் ॥ 23 ॥**

**மஹாபஃாஹோ** – நீண்ட புஜங்களுடையவரே! **பஃஹு வக்த்ர நேத்ரம்** – பல முகங்களும், கண்களும் உடைய, **பஃஹு பஃாஹு ஊரு பாதஃம்** – பல கைகள், தொடைகள், திருவடிகளும் உடைய, **பஃஹூதஃரம்** – பல வயிறுகளும் உடைய, **பஃஹு தஃம்ஷ்ட்ரா கராலம்** – பல கோரைப்பற்கள் கொண்டு பயங்கரமான, **தே** – உங்களுடைய, **மஹத்** – பெரிய, **ரூபம்** – உருவத்தை, **த்ஃருஷ்ட்வா** – பார்த்து, **லோகா:** – மக்கள் எல்லோரும், **ப்ரவ்யதிஃதா:** – மிகவும் பயந்து நடுங்கி நிற்கிறார்கள். **ததஃா** – அவ்விதமே, **அஹம் (அபி)** – நானும் (பயந்து நடுங்கி நிற்கிறேன்).

---

தக்ஷனின் பெண், தர்மனின் பத்னி விச்வா என்பவளிடம் இவர்கள் பிறந்தார்கள். மற்ற புராணங்களிலும் மற்ற மன்வந்தரங்களிலும் இவர்களுடைய பெயர்கள் மாறியிருக்கின்றன.

‡ இவர்கள் பெயர் அத். 10/29ன் உரையில் காண்க.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நீண்ட புஜங்களுடையவரே! பல முகங்களும், கண்களும், பல கைகள், தொடைகள், திருவடிகளும், பல வயிறுகளும், பல கோரைப்பற்கள் கொண்டும் பயங்கரமான உங்களுடைய பெரிய உருவத்தைப் பார்த்து மக்கள் எல்லோரும் மிகவும் பயந்து நடுங்கி நிற்கிறார்கள். அவ்விதமே நானும் பயந்து நடுங்கி நிற்கிறேன்.

**கேள்வி:** 16வது ச்லோகத்திலேயே 'நான் உங்களுடைய விராட் ஸ்வரூபத்தில் பல புஜங்களையும், வயிறுகளையும், முகங்களையும், கண்களையும் பார்க்கிறேன்' என்று கூறிவிட்டார். மறுபடியும் அவருக்கு 'பஹு³வக்த்ரநேத்ரம்', 'பஹு³பாஹூ³ருபாதம்', 'பஹூ³தரம்' என்றெல்லாம் அடைமொழிகள் கொடுப்பதன் அவசியம் என்ன?

**பதில்:** 16வது ச்லோகத்தில், அர்ஜு³னன், தாம் மட்டும் அந்த ரூபத்தைப் பார்த்ததைச் சொன்னார். இங்கு அந்த ஸ்வரூபத்தைப் பார்த்து மற்ற லோகங்களில் உள்ளவர்களும், தாமும் கலங்குவதைக் கூறும்போது மறுபடியும் அந்த ரூபத்தை இப்படி வர்ணிக்கிறார்.

**கேள்வி:** மூவுலகத்தோரும் மிகவும் நடுங்குகிறார்கள் என்பது 20வது ச்லோகத்தில் சொல்லப்பட்டுவிட்டது. அதை மறுபடியும் இங்கே கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 20வது ச்லோகத்தில் விராட் ஸ்வரூபத்தின் எல்லையற்ற நீள அகல விஸ்தாரத்தையும், அதன் பயங்கரத் தன்மையையும் கண்டு அதனால் மூவுலகங்களும் நடுங்குவதை மட்டும் கூறினார். இந்த ச்லோகத்தில் அர்ஜு³னன் அந்த விராட் ஸ்வரூபத்தில் பல கைகள், கால்கள், தொடைகள், முகங்கள், கண்கள், வயிறுகள் உள்ளன என்றும், கோரைப்பற்கள் காரணமாக மிகவும் பயங்கரமாக இருப்பதாகவும் சொல்லித் தாமே பயப்படுவதாகக் கூறுகிறார். ஆகவே, கூறியதைக் கூறல் என்ற குற்றமில்லை.

नभःस्पृशं दीप्तमनेकवर्णं व्यात्ताननं दीप्तविशालनेत्रम्।
दृष्ट्वा हि त्वां प्रव्यथितान्तरात्मा धृतिं न विन्दामि शमं च विष्णो॥ २४॥

**நப⁴:ஸ்ப்ருஶம் தீ³ப்தமநேகவர்ணம்**
**வ்யாத்தாநநம் தீ³ப்தவிஶாலநேத்ரம் ।**
**த்³ருஷ்ட்வா ஹி த்வாம் ப்ரவ்யதி²தாந்தராத்மா**
**த்⁴ருதிம் ந விந்த³ாமி ஶமம் ச விஷ்ணோ ॥ 24 ॥**

**ஹி** – ஏனெனில், **விஷ்ணோ** – விஷ்ணுவே! **நப⁴:ஸ்ப்ருஶம்** – வானளாவிய, **தீ³ப்தம்** – ப்ரகாசமான, **அநேகவர்ணம்** – பல வண்ணங்கள் கொண்டு, **வ்யாத்தாநநம்** – மிக விரிந்த வாயும், **தீ³ப்த விஶால நேத்ரம்** – ஒளிமிக்க அகன்ற கண்களும் உடைய, **த்வாம்** – உங்களை, **த்³ருஷ்ட்வா** – பார்த்து, **ப்ரவ்யதி²த அந்தராத்மா** – பயத்தினால் மிகவும் நடுங்கிய மனமுடைய நான், **த்⁴ருதிம்** – தைரியத்தையும், **ஶமம் ச** – அமைதியையும், **ந விந்த³ாமி** – அடையவில்லை.

ஏனெனில் விஷ்ணுவே! வானளாவிய ப்ரகாசமான பல வண்ணங்கள் கொண்டு மிக விரிந்த வாயும், ஒளிமிக்க அகன்ற கண்களும் உடைய உங்களைப் பார்த்து பயத்தினால் மிகவும் நடுங்கிய மனமுடைய நான் தைரியத்தையும் அமைதியையும் அடையவில்லை.

**கேள்வி:** இங்கு 'விஷ்ணுவே' என்று அழைப்பதன் பொருள் என்ன?

**பதில்:** 'ஸ்ரீமஹாவிஷ்ணுவான நீங்கள் பூமியின் பாரத்தைக் குறைப்பதற்காக ஸ்ரீக்ருஷ்ணனாக அவதரித்திருக்கிறீர்கள். என் நடுக்கத்தைத் தீர்ப்பதற்காக இந்த விசுவரூபத்தைச் சுருக்கிக் கொண்டு நீங்கள் விஷ்ணுவாகக் காட்சி அளிக்க வேண்டும்' என்று பொருள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 20வது ச்லோகத்திலேயே ஆகாயத்திற்கும், பூமிக்கும் இடையே எங்கும் வ்யாபித்திருப்பதாகச் சொல்லி பகவானுடைய எல்லையற்ற உயரத்தைச் சொல்லிவிட்டார். மறுபடியும் இங்கு 'நப:ஸ்ப்ருஶம்' (ஆகாயத்தை அளாவி) என்று கூறுவானேன்?

**பதில்:** 20வது ச்லோகத்தில் விராட் ஸ்வரூபத்தின் உயரம், அகலங்கள் இவற்றை வர்ணித்துவிட்டு மூவுலகங்களும் நடுங்குகின்றன என்று சொன்னார். இங்கு பகவானுடைய எல்லையற்ற உயரத்தைக் கண்டு அர்ஜுனன் தம் மனக்கலக்கத்தையும், அதைர்யத்தையும், அமைதியின்மையையும் வெளியிடுகிறார். ஆகவே இங்கு வானளாவி என்று அடைமொழி கொடுக்கிறார்.

**கேள்வி:** 17வது ச்லோகத்தில் 'தீப்திமந்தம்' (ஒளிமிக்கவன்) என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. மறுபடியும் 'தீப்தம்' என்ற அடைமொழி கொடுப்பதன் அவசியம் என்ன?

**பதில்:** அங்கே, தாம் பகவானுடைய ஸ்வரூபத்தைப் பார்த்ததை மட்டும் கூறினார். இங்கு அதைத் தாம் பார்த்து தைர்யத்தையும், அமைதியையும் இழப்பதைப் பற்றிக் கூறுகிறார். ஆகவே அவ்வுருவத்தை 'தீப்தம்' என்று மறுபடியும் வர்ணிக்கிறார்.

**கேள்வி:** அர்ஜுனன், தாம் நடுங்குவதாக 23வது ச்லோகத்தில் சொல்லிவிட்டார். மறுபடியும் 'ப்ரவ்யதிதாந்தராத்மா' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அங்கு நடுக்கமடைந்ததாக மட்டும் கூறினார். இங்கே, தன் நிலைமையை நன்கு வெளிப்படுத்துவதற்காகத் திரும்பவும் இவ்வாறு சொல்கிறார்: நான் நடுக்கம் மாத்திரம் அடையவில்லை. நாற்புறமும் விரவி இருக்கின்ற பல முகங்களையும், ஜொலிக்கின்ற கண்களையும் கொண்ட கோரமான உருவத்தைப் பார்த்து தைர்யத்தையும், அமைதியையும் இழந்து கொண்டிருக்கிறேன் என்று கூறுகிறார்.

दंष्ट्राकरालानि च ते मुखानि दृष्ट्वैव कालानलसन्निभानि।
दिशो न जाने न लभे च शर्म प्रसीद देवेश जगन्निवास॥२५॥

**த₃ம்ஷ்ட்ராகராலாநி ச தே முக₂ாநி**
**த்₃ருஷ்ட்வைவ காலாநலஸந்நிப₄ாநி ।**
**தி₃ஶோ ந ஜாநே ந லபே₄ ச ஶர்ம**
**ப்ரஸீத₃ தே₃வேஶ ஜக₃ந்நிவாஸ ॥ 25 ॥**

**த₃ம்ஷ்ட்ரா கராலாநி ச** – கோரைப் பற்களால் பயங்கரமானவையும், **கால அநல ஸந்நிப₄ாநி** – ப்ரளய காலத்துத் தீ போன்றவையுமான, **தே** – உங்களுடைய, **முக₂ாநி** – திருமுகங்களை, **த்₃ருஷ்ட்வா** – பார்த்து, **தி₃ஶ:** – திசைகள், **ந ஜாநே** – (என்ன என்று) புரியவில்லை. **ச** – மேலும், **ஶர்ம ஏவ** – ஸுகத்தையும், **ந லபே₄** – பெறவில்லை. **தே₃வேஶ** – தேவதேவனே! **ஜக₃ந்நிவாஸ** – ஜகந்நிவாஸனே! **ப்ரஸீத₃** – அருள்புரிய வேண்டும்.

கோரைப் பற்களால் பயங்கரமானதும், ப்ரளய காலத்துத் தீ போன்றவையுமான உங்களுடைய திருமுகங்களைப் பார்த்து திசைகள் என்ன என்று புரியவில்லை. மேலும் ஸுகத்தையும் பெறவில்லை. தேவதேவனே! ஜகந்நிவாஸனே! அருள் புரிய வேண்டும்.

**கேள்வி:** 23வது ச்லோகத்தில் பகவானுடைய விராட் ஸ்வரூபத்திற்கு 'பஹுதம்ஷ்ட்ராகராலம்' (பல கோரைப் பற்களால் பயங்கரமான) என்று அடைமொழி கொடுத்த அர்ஜுனன், மறுபடியும் 'தம்ஷ்ட்ராகராலாநி' (கோரைப் பற்களால் பயங்கரமான) என்று பகவானின் முகத்திற்கு அடைமொழி கொடுப்பதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** அங்கு அந்த ஸ்வரூபத்தில் அர்ஜுனன் தம் நடுக்கத்தை மட்டும் சொன்னார். இங்கே திக்கு திசை புரியாததையும், ஸுகமின்மையையும் உள்ள தம் நிலைமைக்குச் சிறப்பளித்துக் கூறுகிறார். முகத்திலுள்ள கோரைப் பற்களைக் கண்டு உண்டான பயத்தினால் அர்ஜுனன் அவற்றையே இங்கு அடைமொழியாக மறுபடியும் கூறுகிறார்.

**கேள்வி:** 'தேவேஶ', 'ஜகந்நிவாஸ' என்று அழைப்பதன் கருத்து என்ன? 'அருள் புரிய வேண்டும்' என்பதன் கருத்து என்ன?

**பதில்:** முதலிரு சொற்களின் கருத்து: "நீங்கள் எல்லா தேவதைகளுக்கும் யஜமானர் (தேவேஶ). எங்கும் நிறைந்தவர். அகில உலகத்திற்கும் மிகச்சிறந்த ஆதாரம். இவ்விஷயங்களை முன்பு கேட்டிருக்கிறேன். நீங்கள் இப்படிப்பட்டவர் என்ற நம்பிக்கையும் உள்ளது. மேலும் இன்று அந்த உண்மையைக் கண்கூடாகக் கண்டேன். ஆகவே நீங்கள் தேவதேவர்தான். அகில உலகிற்கும் ஆதாரம்தான் என்பதில் எள்ளளவும் ஸந்தேஹமில்லை."

'நீங்கள் அருள் புரிய வேண்டும்' என்று வேண்டுவதன் கருத்து: "உங்களுடைய ப்ரபாவத்தை நேரிடையாகப் பார்த்துவிட்டேன். ஆனால் இந்த விராட் ஸ்வரூபத்தைப் பார்த்த எனக்கு வருந்தத்தக்க நிலை வந்துவிட்டது. என்னுடைய மகிழ்ச்சி, அமைதி, தைர்யம் எல்லாம் போய்விட்டன. நான் எங்கு நிற்கிறேன்? எங்கே பார்க்கிறேன்? என்பதே தெரியவில்லை. தயைபுரியுங்கள். நீங்கள் இந்த விராட் ஸ்வரூபத்தைச் சுருக்கிக் கொண்டு எனக்கு அருள்புரிய வேண்டும்."

अमी च त्वां धृतराष्ट्रस्य पुत्राः सर्वे सहैवावनिपालसङ्घैः।
भीष्मो द्रोणः सूतपुत्रस्तथासौ सहास्मदीयैरपि योधमुख्यैः॥ २६॥
वक्त्राणि ते त्वरमाणा विशन्ति दंष्ट्राकरालानि भयानकानि।
केचिद्विलग्ना दशनान्तरेषु सन्दृश्यन्ते चूर्णितैरुत्तमाङ्गैः॥ २७॥

அமீ ச த்வாம் த்$_4$ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா:
ஸர்வே ஸஹைவாவநிபாலஸங்கை$_4$: ।
பீ$_4$ஷ்மோ த்$_3$ரோண: ஸூதபுத்ரஸ்தத$_2$ாஸெள
ஸஹாஸ்மதீ$_3$யைரபி யோத$_4$முக்$_2$யை: ॥ 26 ॥
வக்த்ராணி தே த்வரமாணா விஶந்தி
த$_3$ம்ஷ்ட்ராகராலாநி ப$_4$யாநகாநி ।
கேசித்$_3$விலக்$_3$நா த$_3$ஶநாந்தரேஷு
ஸந்த்$_3$ருஶ்யந்தே சூர்ணிதைருத்தமாங்கை$_3$: ॥ 27 ॥

த்$_4$ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா: — த்ருதராஷ்ட்ர குமாரர்களான, அமீ — இவர்கள், ஸர்வே ஏவ — அனைவரும், அவநிபால ஸங்கை$_4$: ஸஹ — அரசர்களின் கூட்டங்களோடு கூட, த்வாம் (ப்ரவிஶந்தி) — உங்களிடம் புகுகிறார்கள். பீ$_4$ஷ்ம: — பாட்டனார் பீஷ்மரும், த்$_3$ரோண: ச — த்ரோணாசார்யரும், தத$_2$ா — அவ்விதமே, அஸெள — இந்த, ஸூதபுத்ர: — கர்ணனும், அஸ்மதீ$_3$யை: அபி — நம்மைச் சார்ந்த, யோத$_4$முக்$_2$யை: ஸஹ — முக்யமான போர்வீரர்களுடன்கூட, தே — உங்களுடைய, த$_3$ம்ஷ்ட்ரா கராலாநி — கோரைப் பற்களால் கொடுமையாகவும், ப$_4$யாநகாநி — பயங்கரமாகவும் உள்ள, வக்த்ராணி — வாய்களில், த்வரமாணா: — வேகமாக ஓடி வந்து, விஶந்தி — புகுகிறார்கள். கேசித் — சிலர், சூர்ணிதை: உத்தமாங்கை$_3$: — தூள்தூளான தலைகளுடன், த$_3$ஶந அந்தரேஷு — பல்லிடுக்குகளில், விலக்$_3$நா: — சிக்கியவாறு, ஸந்த்$_3$ருஶ்யந்தே — காணப்படுகிறார்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



த்ருதராஷ்ட்ர குமாரர்களான இவர்கள் அனைவரும் அரசர்களின் கூட்டங்களோடு உங்களிடம் புகுகிறார்கள். பாட்டனார் பீஷ்மரும் த்ரோணாசார்யரும் அவ்விதமே இந்த கர்ணனும் நம்மைச் சார்ந்த முக்யமான போர்வீரர்களுடன்கூட கோரைப்பற்களால் கொடுமையாகவும் பயங்கரமாகவும் உள்ள உங்களுடைய வாய்களில் வேகமாக ஓடி வந்து புகுகிறார்கள். சிலர் தூள்தூளான தலைகளுடன் பல்லிடுக்குகளில் சிக்கியவாறு காணப்படுகிறார்கள்.

**கேள்வி:** 'த்ருதராஷ்ட்ராஸ்ய புத்ரா:' என்பதுடன் 'அமீ', 'ஸர்வே', 'ஏவ' என்கிற சொற்களைச் சேர்ப்பதன் கருத்து என்ன?

**பதில்:** "இப்போது என்னுடன் போர் செய்யத் தயாராக இருக்கும் துர்யோதனன் முதலான த்ருதராஷ்ட்ர குமாரர்கள் அனைவரும் கூட உங்கள் வாயில் நுழைந்து அழிவதைப் பார்க்கிறேன். துர்யோதனாதிகள் நூறு பேர்களில் ஒருவர்கூட மீதமின்றி அனைவரும் நுழைகிறார்கள்" என்று அர்ஜுனன் கூறுவதே இச்சொற்களின் கருத்தாகும்.

**கேள்வி:** 'அவநிபாலஸங்கை: ஸஹ' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'த்ருதராஷ்ட்ரருடைய புதல்வர்கள் மாத்திரம் உங்களுடைய முகத்தில் நுழைவதைப் பார்க்கவில்லை. த்ருதராஷ்ட்ர குமாரர்களோடுகூட அவர்கள் கட்சியில் சேர்ந்து யுத்தம் செய்ய வந்திருக்கும் அரசர்கள்கூடக் கூட்டம் கூட்டமாக உங்கள் முகத்தில் நுழைகிறார்கள்' என்று அர்ஜுனன் கூறுவதே இதன் கருத்தாகும்.

**கேள்வி:** பீஷ்மரையும், த்ரோணரையும் தனியாகக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "பீஷ்மரும், த்ரோணரும் கௌரவப் படையில் மிக முக்யமான முன்னிலை வீரர்கள். அர்ஜுனனுடைய கருத்தில் இவர்கள் தோற்றுப் போவதோ, கொல்லப்படுவதோ மிகவும் கடினமான செயல். அவர்கள் இருவரும்கூட உங்கள் பயங்கரமான முகங்களில் புகுகிறார்கள் என்றால் மற்றவர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா?" என்று கூறுகிறார் அர்ஜுனன்.

**கேள்வி:** 'அஸௌ ஸூதபுத்ர:' (அந்தத் தேரோட்டி மகன்) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கர்ணன் தனக்கு எதிரி என்ற இயற்கையான பகைமை மனப்பான்மை அர்ஜுனனுக்கு உண்டு. கர்ணன் தன் சூரவீரத்தனத்தினால் ஏற்பட்ட கர்வம் காரணமாக மற்றவர்களைத் துச்சமாகக் கருதுகிறான் என்றும் அர்ஜுனனுக்குத் தெரியும். அவன்கூட பகவானுடைய அந்த பயங்கரமான முகங்களில் நுழைந்து அழிகிறான். ஆகவே 'அஸௌ ஸூதபுத்ர:' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'அபி' (கூட) என்று சொல்வானேன்? 'அஸ்மதீயை:, யோதமுக்யை:' என்ற சொற்களோடு 'ஸஹ' என்று சேர்ப்பதற்கு என்ன கருத்து?

**பதில்:** 'அபி' என்ற சொல்லாலும் மற்றும் ச்லோகத்தில் வந்துள்ள மற்ற சொற்களினாலும் பின்வரும் கருத்தைப் பார்த்தன் கூறுகிறார்: 'எதிரணியைச் சேர்ந்த வீரர்கள்தான் பகவானின் திறந்த வாயினுள் புகுந்து மடிகிறார்கள் என்பதில்லை. நம் கட்சியில் உள்ள சிறந்த வீரர்களும் உங்களுடைய பயங்கரமான வாயினுள் நுழைவதைக் காண்கிறேன்.'

**கேள்வி:** 'த்வரமாணா:' என்பது யாருக்கு அடைமொழி? அதன் கருத்து என்ன? 'முகாநி' என்பதோடு வரும் 'தம்ஷ்ட்ராகராலாநி', 'பயாநகாநி' என்ற அடைமொழிகளின் பொருள்கள் என்ன?

**பதில்:** 'த்வரமாணா:' என்னும் அடைமொழி 'முன் ச்லோகத்தில் கூறப்பட்ட இரண்டு கட்சிகளிலும் உள்ள போர்வீரர்களைக் குறிக்கும் அடைமொழி. 'தம்ஷ்ட்ராகராலாநி' என்பது பெரிய பெரிய கோரைப் பற்களோடு கூடிய கோரமான முகங்களைக் குறிக்கிறது. 'பயாநகாநி' என்பது 'கண்டவுடனேயே மிகுந்த அச்சத்தை உண்டு பண்ணுபவை' என்பதைக் காட்டுகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அதாவது, முன் ச்லோகத்தில் இரு கட்சிகளைச் சார்ந்த வீரர்களும் மிகுந்த வேகத்தோடு கோரைப் பற்களால் கோரமாகக் காட்சி தரும் உங்கள் முகத்தில் வேகமாக ஓடிவந்து நுழைவதையும், அழிவதையும் என் கண்களால் காண்கிறேன் என்று கூறுகிறார். இச்சொற்களைக் கையாண்டு அர்ஜுனன் இக்கருத்தைப் புலப்படுத்துகிறார்.

**கேள்வி:** சிலர் தூள்தூளான தலைகளுடன் உங்கள் பல்லிடுக்குகளில் சிக்கியவாறு காணப்படுகிறார்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அவர்கள் உங்கள் முகங்களில் நுழைவதை மாத்திரம் நான் காணவில்லை. மிகவும் பரிதாபமான நிலையில் உள்ள எவ்வளவு பேர்களை நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன். சிலருடைய தலைகள் தூள்தூளாகிவிட்டன. அவர்கள் தலையற்ற அங்கங்களுடன் உங்கள் பற்களில் பரிதாபமாகச் சிக்கிக் கொண்டுள்ளதையும் பார்க்கிறேன். அர்ஜுனன் இக்கருத்தைத்தான் கூறுகிறார்.

**பொருத்தம்:** இரண்டு கட்சிகளின் யுத்தவீரர்கள் பகவானுடைய முகங்களில் வந்து புகுவதை, இனிவரும் முதல் ச்லோகத்தில், 'நதியின் தண்ணீர் கடலில் புகுவதுபோல' என்றும், அதன் பின்னர் இரண்டாவது ச்லோகத்தில், 'விட்டில்பூச்சிகள் பறந்து வந்து நெருப்பில் விழுவது போல' என்றும் இரண்டு உவமைகள் மூலமாகத் தெளிவாக்குகிறார்—

यथा नदीनां बहवोऽम्बुवेगाः समुद्रमेवाभिमुखा द्रवन्ति।
तथा तवामी नरलोकवीरा विशन्ति वक्त्राण्यभिविज्वलन्ति ॥ २८ ॥

**யதா₂ நதீ₃நாம் ப₃ஹவோऽம்பு₃வேகா₃:**
**ஸமுத்₃ரமேவாபி₄முகா₂ த்₃ரவந்தி ।**
**ததா₂ தவாமீ நரலோகவீரா**
**விஶந்தி வக்த்ராண்யபி₄விஜ்வலந்தி ॥ 28 ॥**

**நதீ₃நாம்** – ஆறுகளுடைய, **ப₃ஹவ:** – பற்பல, **அம்பு₃வேகா₃:** – வேகமான நீரோட்டங்கள் (இயற்கையாகவே), **ஸமுத்₃ரம் ஏவ** – கடலையே, **அபி₄முகா₂:** – நோக்கி, **யதா₂** – எவ்வாறு, **த்₃ரவந்தி** – பாய்கின்றனவோ (கடலில் புகுந்து முற்றும் மறைகின்றனவோ), **ததா₂** – அவ்வாறே, **அமீ** – இந்த, **நரலோக வீரா:** – மண்ணுலக வீரர்கள், **அபி₄விஜ்வலந்தி** – தீக்கொழுந்து வீசுகின்ற, **தவ** – உங்களுடைய, **வக்த்ராணி** – வாய்களில், **விஶந்தி** – புகுகிறார்கள் (புகுந்து உங்களிடம் இரண்டறக் கலக்கிறார்கள்).

ஆறுகளுடைய பற்பல வேகமான நீரோட்டங்கள் இயற்கையாகவே கடலையே நோக்கி எவ்வாறு பாய்கின்றனவோ (கடலில் புகுந்து முற்றும் மறைகின்றனவோ), அவ்வாறே இந்த மண்ணுலக வீரர்கள் தீக்கொழுந்து வீசுகின்ற உங்களுடைய வாய்களில் புகுகிறார்கள் (புகுந்து உங்களிடம் இரண்டறக் கலக்கிறார்கள்).

**கேள்வி:** இந்த ச்லோகத்தில், ஆறுகள் கடலில் போய் விழுகின்றன என்று உதாரணம் கூறியும், பகவானுடைய முகங்களில் நுழையும் வீரர்களுக்கு 'நரலோகவீரா:' என்ற அடைமொழியும், முகங்களுக்கு 'அபிவிஜ்வலந்தி' என்ற அடைமொழியும் கொடுப்பதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த ச்லோகத்தில் பகவானை அடைவதற்காக ஸாதனை புரிந்த பீஷ்மர், த்ரோணர் முதலான சிறந்த சூரவீரர்களைப் பற்றிக் கூறுகிறார். தம் விருப்பமின்றியே யுத்தத்தில் வந்து சேர இழுக்கப்பட்டவர்கள் அவர்கள். போரில் இறக்கும் அவர்களும் பகவானை அடையப் போகிறார்கள். இக்காரணம் பற்றியே இவர்களை 'மனித உலக வீரர்கள்' என்று குறிப்பிடுகிறார். இவர்கள் உலகியல் போரில் எப்படிச் சிறந்த

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வீரர்களோ, அதுபோல பகவானை அடைவதற்கான ஸாதனை என்ற ஆன்மிகப் போரிலும், காமம் முதலிய எதிரிகளை வெற்றி கொண்டு மிகவும் வீரத்துடன் யுத்தம் புரிந்தவர்கள். ஆற்றுத் தண்ணீர் இயல்பாகக் கடலை நோக்கி ஓடித் தன்னுடைய பெயர், உருவம் என்ற தனித்தன்மையை இழந்து கடலாகவே ஆகிவிடுவது போல, யுத்தத்தில் இறங்கிய சூரவீரர்களான பக்த ஜனங்கள் பகவானுடைய வாயை நோக்கி ஓடி அவருடன் இரண்டறக் கலந்துவிடுகிறார்கள். இவ்வாறு ஆறு-கடல் உவமையைக் கூறி அர்ஜுனன் விளக்குகிறார்.

'தீக்கொழுந்து வீசுகின்ற முகங்கள்' என்பதன் விளக்கம்: ஆற்று நீர் கடலில் போய் விழுந்து கடல் நீருடன் ஒன்றாகிவிடுகிறது. அதுபோல எல்லாப்புறங்களிலும் ஜோதிமயமாக உள்ள உங்களுடைய முகங்களில் நுழையும் சூரவீரர்களான பக்தர்களும் வெளிப்படையாகத் தோற்றமளிக்கும் தங்களுடைய உடல்களை உங்களுடைய முகங்களில் உள்ள பெரும் ஜோதியில் எரியச் செய்து தாங்களும் ஜோதிமயமாக ஆகி, உங்களுடன் ஒன்றிவிடுகின்றனர்.

**यथा प्रदीप्तं ज्वलनं पतङ्गा विशन्ति नाशाय समृद्धवेगाः।**
**तथैव नाशाय विशन्ति लोकास्तवापि वक्त्राणि समृद्धवेगाः॥२९॥**

**யத₂ா ப்ரதீ₃ப்தம் ஜ்வலநம் பதங்க₃ா**
**விஶந்தி நாஶாய ஸம்ருத்₃த₄வேக₃ா: ।**
**ததை₂வ நாஶாய விஶந்தி லோகாஸ்-**
**தவாபி வக்த்ராணி ஸம்ருத்₃த₄வேகா: ॥ 29 ॥**

**பதங்க₃ா:** – விட்டிற்பூச்சிகள், **ஸம்ருத்₃த₄வேக₃ா:** – வெகுவேகமாக ஓடி வந்து, **ப்ரதீ₃ப்தம்** – கொழுந்துவிட்டு எரியும், **ஜ்வலநம்** – நெருப்பில், **நாஶாய** – (தாம்) அழிவதற்காக, **யத₂ா** – எவ்விதம், **விஶந்தி** – புகுகின்றனவோ, **தத₂ா ஏவ** – அவ்விதமே, **லோகா: அபி** – எல்லா மக்களும், **நாஶாய** – தங்கள் அழிவிற்காக, **ஸம்ருத்₃த₄-வேக₃ா:** – வெகுவேகமாக ஓடி வந்து, **தவ** – உங்களுடைய, **வக்த்ராணி** – வாய்களில், **விஶந்தி** – நுழைகிறார்கள்.

விட்டிற்பூச்சிகள் வெகு வேகமாக ஓடி வந்து கொழுந்துவிட்டு எரியும் நெருப்பில் தாம் அழிவதற்காக எவ்விதம் புகுகின்றனவோ அவ்விதமே எல்லா மக்களும் தங்கள் அழிவிற்காக வெகுவேகமாக ஓடி வந்து உங்களுடைய வாய்களில் நுழைகிறார்கள்.

**கேள்வி:** *எரிகின்ற நெருப்பில் விட்டில்பூச்சிகள் விழுவதை உதாரணமாகக் காட்டி, 'பகவானுடைய முகங்களில் எல்லா மக்களும் போய் விழுகின்றனர்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** இந்த ச்லோகத்தில், முன் ச்லோகத்தில் சொல்லப்பட்ட பக்தர்களிலிருந்து வேறுபட்டவர்களான சொந்த விருப்பத்தோடு போர் புரியும் ஸாதாரண மக்கள் புகுவதைப் பற்றிச் சொல்கிறார். எங்ஙனம் தீயொளியில் மோஹம் கொண்ட விட்டில்பூச்சிகள் அறியாமையால் இறப்பதற்காகவே ஆசையோடு வேகமாகப் பறந்து வந்து நெருப்பில் விழுந்து மடிகின்றனவோ, அங்ஙனமே உங்களுடைய பெருமையை அறியாத இம்மக்கள் மோஹத்தினால் தங்களுடைய அழிவிற்காகவே உங்கள் முகத்தில் நுழைகிறார்கள் என்பது கருத்து.

*பொருத்தம்:* **இரண்டு ஸேனைகளின் வீரர்களும் பகவானுடைய முகங்களில் வந்து நுழைவதை உதாரணங்களுடன் அர்ஜுனன் கூறி, பகவான் அவர்களை எப்படி அழிக்கிறார் என்பதை இனி சொல்கிறார்—**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



लेलिह्यसे ग्रसमानः समन्ताल्लोकान्समग्रान्वदनैर्ज्वलद्भिः ।
तेजोभिरापूर्य जगत्समग्रं भासस्तवोग्राः प्रतपन्ति विष्णो ॥ ३० ॥

லேலிஹ்யஸே க்₃ரஸமாந: ஸமந்தால்—
லோகாந்ஸமக்₃ராந்வத₃நைர்ஜ்வலத்₃பி₄: ।
தேஜோபி₄ராபூர்ய ஜக₃த்ஸமக்₃ரம்
பா₄ஸஸ்தவோக்₃ரா: ப்ரதபந்தி விஷ்ணோ ॥ 30 ॥

ஸமக்₃ராந் – அனைத்து, லோகாந் – உலகங்களையும், ஜ்வலத்₃பி₄: – தீ உமிழ்கின்ற, வத₃நை: – வாய்களால், க்₃ரஸமாந: – விழுங்கிக் கொண்டு, ஸமந்தாத் – எல்லாப் புறங்களிலிருந்தும், லேலிஹ்யஸே – திரும்பத் திரும்ப (நாக்குகளால்)த் துழாவுகிறீர்கள். விஷ்ணோ – விஷ்ணுவே! தவ – உங்களுடைய, உக்₃ரா: – பயங்கரமான, பா₄ஸ: – ஒளிகள், ஸமக்₃ரம் ஜக₃த் – உலகம் முழுவதையும், தேஜோபி₄: – மிகுந்த வெப்பத்தினால், ஆபூர்ய – நிரப்பி, ப்ரதபந்தி – வாட்டுகின்றன.

அனைத்து உலகங்களையும் தீ உமிழ்கின்ற வாய்களால் விழுங்கிக் கொண்டு எல்லாப் புறங்களிலிருந்தும் திரும்பத் திரும்ப நாக்குகளால் துழாவுகிறீர்கள். விஷ்ணுவே! உங்களுடைய பயங்கரமான ஒளிகள் உலகம் முழுவதையும் மிகுந்த வெப்பத்தினால் நிரப்பி வாட்டுகின்றன.

கேள்வி: இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

பதில்: பகவானுடைய மிகப்பெரிய பயங்கரமான ஸ்வரூபத்தைக் கண்டு பயந்த அர்ஜுனன் அந்த பயங்கர ஸ்வரூபத்தை வர்ணிக்கிறார். அந்த பயங்கர ஸ்வரூபத்திலிருந்து நெருப்புக் கொழுந்துவிட்டு எரிவது போன்ற தீ நாக்குகள் அகில உலகங்களையும் துழாவி விழுங்குகின்றன. இருப்பினும் த்ருப்தி அடையாமல் மேலும் மேலும் தீ நாக்குகள் துழாவுகின்றன. அவற்றின் கடுமையான ஒளி மிகுந்த வெப்பத்தில் அகில உலகங்களும் தவிக்கின்றன என்கிறார்.

பொருத்தம்: அர்ஜுனன் மூன்றாவது, நான்காவது ச்லோகங்களில் பகவான் தம் ஈசுவர ஸ்வரூபத்தைக் காண்பிக்க வேண்டுமென்று வேண்டினார். பகவானும் விசுவரூபத்தைக் காட்டினார். அதைப் பார்த்து அர்ஜுனன் பயந்துவிட்டார். உண்மையில் இந்த க்ருஷ்ணன் யார்? இவ்வளவு பயங்கர ஸ்வரூபத்தைக் கொண்டு பகவான் என்ன செய்ய நினைக்கிறார் என்று அறிய விரும்பி இனிக் கேட்கிறார்—

आख्याहि मे को भवानुग्ररूपो नमोऽस्तु ते देववर प्रसीद।
विज्ञातुमिच्छामि भवन्तमाद्यं न हि प्रजानामि तव प्रवृत्तिम् ॥ ३१ ॥

ஆக்₂யாஹி மே கோ ப₄வாநுக்₃ரரூபோ
நமோऽஸ்து தே தே₃வவர ப்ரஸீத₃ ।
விஜ்ஞாதுமிச்ச₂ாமி ப₄வந்தமாத்₃யம்
ந ஹி ப்ரஜாநாமி தவ ப்ரவ்ருத்திம் ॥ 31 ॥

தே₃வவர – தேவர்களில் சிறந்தவரே! உக்₃ரரூப: – பயங்கர வடிவுள்ள, ப₄வாந் – நீங்கள், க: – யார்? மே – என்னிடம், ஆக்₂யாஹி – (தயவு செய்து) கூறுங்கள். தே – உங்களுக்கு, நம: – நமஸ்காரம், அஸ்து – இருக்கட்டும், ப்ரஸீத₃ – (நீங்கள்) அருள் புரியுங்கள். ஆத்₃யம் – ஆதிபுருஷரான, ப₄வந்தம் – உங்களை, விஜ்ஞாதும் – நன்கு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தெரிந்து கொள்ள, **இச்ச₂ாமி** – விரும்புகிறேன். **ஹி** – ஏனெனில், **தவ** – உங்களுடைய, **ப்ரவ்ருத்திம்** – செயலை, **ந ப்ரஜாநாமி** – (என்னால்) புரிந்து கொள்ள முடியவில்லை.

தேவர்களில் சிறந்தவரே! பயங்கர வடிவுள்ள நீங்கள் யார்? என்னிடம் தயவு செய்து கூறுங்கள். உங்களுக்கு நமஸ்காரம். நீங்கள் அருள் புரியுங்கள். ஆதிபுருஷரான உங்களை நன்கு தெரிந்து கொள்ள விரும்புகிறேன். ஏனெனில் உங்களுடைய செயலை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை."

**கேள்வி:** 'பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் தம் யோகசக்தியினால் தமக்கு இந்த விசுவரூபதர்சனம் செய்து வைக்கிறார்' என்று அர்ஜுனனுக்குத்தான் தெரியுமே. பிறகு ஏன் 'பயங்கரமான வடிவம் கொண்ட நீங்கள் யார்?' என்று கேட்கிறார்?

**பதில்:** இந்த பயங்கரமான வடிவம் ஸ்ரீக்ருஷ்ணனுடையதுதான் என்பது அர்ஜுனனுக்குத் தெரியும். இத்தகைய அச்சுறுத்தும் வடிவம் எடுக்கக்கூடிய இந்த ஸ்ரீக்ருஷ்ணன் உண்மையில் யார் என்று அறிந்து கொள்ள விரும்பினார். ஆகவே 'ஆதிபுருஷனான உங்களைப் பற்றி இன்னும் தெளிவாக அறிய விரும்புகிறேன்' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'தேவவர' என்று விளித்து பகவானை வணங்கி, 'நீங்கள் அருள் புரிய வேண்டும்' என்று கேட்பதன் கருத்து என்ன?

**பதில்:** தேவர்களில் தலைசிறந்தவர் 'தேவவரர்'. ஆகவே அர்ஜுனன் ஸ்ரீக்ருஷ்ணன் ஈசுவரன்தான் என்பது தமக்குத் தெரியும் என்பதை வெளிப்படுத்தவே வணங்குகிறார். ஆனாலும், அந்த பயங்கர ஸ்வரூபத்தைக் கண்டு பயப்படுகிறார். ஆகவே 'தயவு செய்து அருள்புரியுங்கள்' என்று வேண்டுகிறார்.

**கேள்வி:** உங்கள் செயலைப் புரிந்து கொள்ள முடியவில்லை என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "உங்களுடைய இந்த பயங்கர ஸ்வரூபத்தில் கௌரவப்படையினரும், எங்கள் படையைச் சார்ந்த அநேகமாக எல்லா வீரர்களுமே கண்ணெதிரில் அழிந்து போவதாகக் காட்டுகிறீர்களே. இதை எதற்குக் காண்பித்தீர்கள்? நீங்கள் அடுத்தாற்போல என்ன செய்யப் போகிறீர்கள் என்ற ரஹஸ்யம் எனக்குத் தெரியவில்லையே. தயவு செய்து இந்த ரஹஸ்யத்தை வெளிப்படுத்துங்கள்" என்று வேண்டுகிறார்.

**பொருத்தம்: அர்ஜுனன் இவ்விதம் கேட்டவுடன், பகவான் பயங்கரமான ஸ்வரூபம் எடுத்துக் கொண்டதன் காரணம் கூறுகிறார்—**

श्रीभगवानुवाच

कालोऽस्मि लोकक्षयकृत्प्रवृद्धो लोकान्समाहर्तुमिह प्रवृत्तः।
ऋतेऽपि त्वां न भविष्यन्ति सर्वे येऽवस्थिताः प्रत्यनीकेषु योधाः॥ ३२॥

ஸ்ரீப₄க₃வாநுவாச

காலோऽஸ்மி லோகக்ஷயக்ருத்ப்ரவ்ருத்₃தோ₄
லோகாந் ஸமாஹர்துமிஹ ப்ரவ்ருத்த: ।
ருதேऽபி த்வாம் ந ப₄விஷ்யந்தி ஸர்வே
யேऽவஸ்தி₂தா: ப்ரத்யநீகேஷு யோத₄ா: ॥ 32 ॥

**ஸ்ரீப₄க₃வாநுவாச** – ஸ்ரீபகவான் கூறினார்: **லோக க்ஷயக்ருத்** – உலகங்கள் அனைத்தையும் அழிக்கின்ற, **ப்ரவ்ருத்₃த₄:** – பெருகி வளர்ந்துள்ள, **கால:** – மஹாகாலனாக,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அஸ்மி** – இருக்கிறேன். **இஹ** – இப்பொழுது, **லோகாந்** – உலகங்கள் எல்லாவற்றையும் **ஸமாஹர்தும்** – ஸம்ஹாரம் செய்வதற்கு, **ப்ரவ்ருத்த:** – முனைந்திருக்கிறேன். **யே** – எந்த, **யோத₄ா:** – போர் வீரர்கள், **ப்ரத்யநீகேஷு** – எதிரிப்படைகளில், **அவஸ்தி₂தா:** – இருக்கின்றார்களோ, (**தே** – அவர்கள்), **ஸர்வே** – எல்லோரும், **த்வாம் ருதே அபி** – நீ போர் புரியாமல் இருப்பினும், **ந ப₄விஷ்யந்தி** – இருக்கப் போவதில்லை. (அதாவது இவர்கள் எல்லோரும் போரில் அழிந்தே போவார்கள்).

**ஸ்ரீபகவான் கூறினார்:**"உலகங்கள் அனைத்தையும் அழிக்கின்ற, பெருகி வளர்ந்துள்ள மஹாகாலனாக இருக்கிறேன். இப்பொழுது உலகங்கள் எல்லாவற்றையும் ஸம்ஹாரம் செய்வதற்கு முனைந்திருக்கிறேன். எந்தப் போர் வீரர்கள் எதிரிப்படைகளில் இருக்கின்றார் களோ, அவர்கள் எல்லோரும் நீ போர் புரியாமல் இருப்பினும் இருக்கப் போவதில்லை – அதாவது இவர்கள் எல்லோரும் போரில் அழிந்தே போவார்கள்.

**கேள்வி:** 'நான் உலகங்களனைத்தையும் அழிக்கின்ற, பெருகி வளர்ந்துள்ள மஹாகாலன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'நீங்கள் யார்?' என்று அர்ஜுனன் கேட்ட முதல் கேள்விக்கு இது பதில். 'நானே அகில உலகத்தையும் படைத்துக் காத்து ஒடுக்கிக் கொள்ளும் ஸாக்ஷாத் பரமேசுவரன். தற்போது எல்லோரையும் ஸம்ஹாரம் செய்யும் மஹாகாலன் என்று என்னை அறிந்து கொள்' என்கிறார் பகவான்.

**கேள்வி:** 'இப்போது நான் இவர்கள் அனைவரையும் ஸம்ஹாரம் செய்வதற்கு முனைந்திருக்கிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்' என்று அர்ஜுனன் கேட்ட கேள்விக்கு இது பதில். 'தற்போது என்னுடைய செயல் எல்லாம் இந்த அனைத்து வீரர்களையும் அழிப்பதே. இதை உணர்த்துவதற்காகத்தான் இந்த விராட் ஸ்வரூபத்தையெடுத்து அதில் எல்லோரும் புகுந்து அழிகின்ற பயங்கரக் காட்சியை உனக்குக் காண்பித்தேன்' என்று பகவான் கூறினார்.

**கேள்வி:** 'நீ போர் புரியாமல் இருப்பினும் உன்னுடைய எதிரிப்படையில் இருக்கின்ற, வீரர்கள் எவரும் பிழைத்திருக்கப் போவதில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "பெரியோர்கள், பெரியப்பா, சிற்றப்பா, அம்மான்மார், உடன்பிறந்தோர் முதலிய உன்னைச் சார்ந்த மக்கள் யுத்தத்திற்குத் தயாராக வந்துவிட்டார்களே என்ற காரணத்தினால் தானே நீ கோழைத்தனமாக யுத்தத்திலிருந்து விலக விரும்புகிறாய்? இது சரியன்று. நீ யுத்தம் புரிந்து இவர்களைக் கொல்லாவிட்டாலும், இவர்கள் தப்பிப் பிழைக்கப் போவதில்லை. இவர்கள் அழிவது நிச்சயம். ஏனெனில் நானே இவர்களை அழிப்பது என்று முனைந்துவிட்டேன். இவர்களைக் காப்பதற்கு வழியே இல்லை. ஆகவே நீ யுத்தத்திலிருந்து விலகக் கூடாது. என்னுடைய கட்டளையை ஏற்று நீ யுத்தம் புரிவதுதான் நன்று" என்று கூறுகிறார்.

**கேள்வி:** பகவானுடைய விராட் ஸ்வரூபத்தில் தம் அணியைச் சார்ந்தவர்களும், எதிரணியைச் சார்ந்தவர்களுமான எல்லா வீரர்களும் அழிவதை அர்ஜுனன் பார்த்திருக்கிறார். பின் பகவான் கௌரவப் படையினரைப் பற்றி மட்டும் சொல்கிறாரே. ஏன்?

**பதில்:** தம் அணியைச் சார்நதவர்களை அர்ஜுனன் கொல்லப் போவதில்லை. ஆகவே அவர்களை அர்ஜுனன் கொல்லாவிட்டாலும் அவர்களும் அழியத்தான் போகிறார்கள் என்று சொல்வது பொருந்தாது. அதனால் கௌரவப் படையினரை மட்டும் குறிப்பிட்டுச் சொல்கிறார். மேலும் அர்ஜுனனை உற்சாகப்படுத்த வேண்டும் என்பதுதான் பகவானுடைய

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நோக்கம். அதற்கு ஏற்றவாறு 'எதிரணி வீரர்கள் அனைவரும் ஒருவிதத்தில் அழிந்தவர்களே. அவர்களை அழிப்பதற்கு நீ பாடுபட வேண்டியதில்லை' என்ற பகவானின் பேச்சு யுக்திக்கு ஏற்றதே

பொருத்தம்: இவ்விதம் அர்ஜுனனுடைய கேள்விக்குப் பதில் சொல்லிவிட்டு, அடுத்து வரும் இரண்டு ச்லோகங்களில், யுத்தம் புரிவதால் எல்லாவிதத்திலும் நன்மைதான் என்று காட்டி யுத்தத்தில் உற்சாகமாக ஈடுபடுவாயாக என்று கட்டளையிடுகிறார்—

तस्मात्त्वमुत्तिष्ठ यशो लभस्व जित्वा शत्रून्भुङ्क्ष्व राज्यं समृद्धम्।
मयैवैते निहताः पूर्वमेव निमित्तमात्रं भव सव्यसाचिन्॥ ३३॥

**தஸ்மாத்த்வமுத்திஷ்ட₂ யஶோ லப₄ஸ்வ**
**ஜித்வா ஶத்ரூந் பு₄ங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்₃த₄ம் ।**
**மயைவைதே நிஹதா: பூர்வமேவ**
**நிமித்தமாத்ரம் ப₄வ ஸவ்யஸாசிந் ॥ 33 ॥**

**தஸ்மாத்** – ஆகவே, **த்வம்** – நீ, **உத்திஷ்ட₂** – எழுந்திரு! **யஶ:** – புகழை, **லப₄ஸ்வ** – பெற்றுக் கொள். **ஶத்ரூந்** – பகைவர்களை, **ஜித்வா** – வென்று, **ஸம்ருத்₃த₄ம்** – தான்யங்களும் செல்வமும் நிறைந்த, **ராஜ்யம்** – அரசை, **பு₄ங்க்ஷ்வ** – அனுபவிப்பாயாக! **ஏதே** – இவர்கள், **பூர்வம் ஏவ** – முன்பே, **மயா** – என்னாலே, **நிஹதா:** – கொல்லப்பட்டிருக்கிறார்கள். **ஸவ்யஸாசிந்** – (இடது கையாலும் அம்பு எய்யும்) அர்ஜுன! **நிமித்தமாத்ரம் ஏவ** – நீ நிமித்த காரணமாக மட்டும், **ப₄வ** – இரு.

ஆகவே நீ எழுந்திரு! புகழைப் பெற்றுக் கொள். பகைவர்களை வென்று தான்யங்களும், செல்வமும் நிறைந்த அரசை அனுபவிப்பாயாக! இவர்கள் முன்பே என்னால் கொல்லப்பட்டிருக்கிறார்கள்! இடது கையாலும் அம்பு எய்யும் அர்ஜுன! நீ நிமித்த காரணமாக மட்டும் இரு.

**கேள்வி:** 'தஸ்மாத் உத்திஷ்ட' (ஆகவே எழுந்திரு) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'நீ யுத்தம் புரியாவிட்டாலும் இவர்கள் உயிர் தப்ப மாட்டார்கள்; இறப்பது உறுதி என்று ஆன பிறகு நீ யுத்தம் புரிவதுதான் உனக்கு எவ்விதத்திலும் நன்மை பயப்பது. ஆகவே நீ யுத்தத்திலிருந்து விலகாதே. உற்சாகமாக நிமிர்ந்து நில்' என்கிறார்.

**கேள்வி:** 'புகழைப் பெறு, பகை வென்று நிறைவான அரச போகத்தை அனுபவி' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'இப்போரில் உனக்கு வெற்றி உறுதி. பகைவர்களை வென்று தனதான்யங்கள் நிறைந்த பேரரசை நீ அனுபவி; அரிய புகழ் பெறு; இந்த வாய்ப்பை நழுவவிடாதே' என்கிறார்.

**கேள்வி:** 'ஸவ்யஸாசிந்' என்று அழைப்பதன் கருத்து என்ன? 'இவர்கள் முன்னாலேயே என்னால் கொல்லப்பட்டவர்களே! நீ நிமித்தமாக மட்டும் இரு' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இடது கையாலும் வில்லிலிருந்து அம்பை எய்பவனுக்கு 'ஸவ்யஸாசீ' என்று பெயர். இப்பெயரால் அழைத்து, "நீ இரு கைகளாலும் அம்பு தொடுப்பதில் வல்லவனாயிற்றே! ஆகவே, இந்த சூர வீரர்களை வெற்றி கொள்வது உனக்கு எம்மாத்திரம்? இவர்களை யுத்தத்தில் நீ அடித்துத்தான் ஆகவேண்டுமென்பதில்லை, எல்லோருமே முன்னாலேயே அடிக்கப்பட்டு விட்டதை நீதான் உன் கண் எதிரில் கண்டாயே!

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நீ அம்பெய்து புகழ் பெறு. ஆகவே, இவர்களைத் தாக்குவதற்குத் தயங்காதே. மாய்ப்பது நான்; நீ ஒரு நிமித்தம்தான்" என்று பகவான் கூறுகிறார்.

இப்படி 'நீ ஒரு நிமித்தம்தான்' என்று கூறுவதற்கு மற்றொரு பொருளும் உண்டு. இவர்களைக் கொல்வதால் பாவம் வருமோ என்ற பயமும் உனக்கு வேண்டாம். ஏனெனில் க்ஷத்ரிய தர்மத்திற்கு ஏற்றவாறு தானாக நேர்ந்த இந்த யுத்தத்தில் இவர்களைக் கொல்வதில் நீ ஒரு நிமித்தமாக மட்டும் இருக்கிறாய். எனவே பாவம் என்ற பேச்சுக்கே இடமில்லை. மாறாக க்ஷத்ரிய தர்மத்தைக் கடைப்பிடித்த புண்யமும் உண்டு. உன் உள்ளத்தில் எந்தவித ஐயமும் கொள்ளாமல் அஹங்காரம், மமகாரங்களைத் துறந்து உற்சாகமாக யுத்தத்தில் ஈடுபடத்தான் வேண்டும். இதுதான் 'நீ நிமித்தமாக மட்டும் இரு' என்று கூறுவதன் கருத்து.

**द्रोणं च भीष्मं च जयद्रथं च कर्णं तथान्यानपि योधवीरान्।**
**मया हतांस्त्वं जहि मा व्यथिष्ठा युध्यस्व जेतासि रणे सपत्नान्॥ ३४॥**

**த்₃ரோணம் ச பீ₄ஷ்மம் ச ஜயத்₃ரத₂ம் ச**
**கர்ணம் தத₂ாந்யாநபி யோத₄வீராந் ।**
**மயா ஹதாம்ஸ்த்வம் ஜஹி மா வ்யதி₂ஷ்ட₂ா**
**யுத்₄யஸ்வ ஜேதாஸி ரணே ஸபத்நாந் ॥ 34 ॥**

**த்₃ரோணம் ச** – த்ரோணரையும், **பீ₄ஷ்மம் ச** – பீஷ்மரையும், **ஜயத்₃ரத₂ம் ச** – ஜயத்ரதனையும், **கர்ணம்** – கர்ணனையும், **தத₂ா** – அவ்வாறே, **மயா** – என்னால், **ஹதாந்** – கொல்லப்பட்ட, **அந்யாந் அபி** – இன்னும் (மற்ற) அநேக, **யோத₄வீராந்** – போர் வீரர்களையும், **த்வம்** – நீ, **ஜஹி** – கொல்வாயாக! **மா வ்யதி₂ஷ்ட₂ா:** – பயப்படாதே! **ரணே** – போரில், **ஸபத்நாந்** – எதிரிகளை, **ஜேதாஸி** – (ஐயமின்றி) வென்றுவிடுவாய். **யுத்₄யஸ்வ** – (ஆகவே) போர் புரிவாயாக!

த்ரோணரையும், பீஷ்மரையும், ஜயத்ரதனையும், கர்ணனையும் அவ்வாறே என்னால் கொல்லப்பட்ட இன்னும் மற்ற அநேக போர் வீரர்களையும் நீ கொல்வாயாக! பயப்படாதே! போரில் எதிரிகளை ஐயமின்றி வென்றுவிடுவாய். ஆகவே போர் புரிவாயாக!"

**கேள்வி:** 'த்ரோணர், பீஷ்மர், ஜயத்ரதன், கர்ணன் இவர்களை மட்டும் குறிப்பிட்டுப் பெயர் சொல்கிறாரே, ஏன்? மற்றுமுள்ள போர் வீரர்கள் என்று யாரைக் குறிப்பிடுகிறார்? இவர்களைத் தானே கொன்றுவிட்டதாகச் சொன்ன பிறகு, மறுபடியும், நீ கொல்வாய்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** த்ரோணாசார்யர் தனுர்வேதத்திலும், மற்ற அஸ்த்ர-சஸ்த்ரங்களை ப்ரயோகம் செய்வதிலும் மிகவும் வல்லவர். போர்க்கலையில் மிகுந்த தேர்ச்சி பெற்றவர். அவர் கையில் ஆயுதங்கள் இருக்கும்வரை அவரை யாரும் வீழ்த்த முடியாது என்ற புகழ் அவருக்கு உண்டு. இக்காரணத்தினால் அவரை வெற்றி கொள்ள முடியாது என அர்ஜுனன் நினைத்தார். மேலும் அவர் தமக்கு குரு. அவரை வதைப்பது மஹாபாவம் என்றும் நினைத்தார். பாட்டனாரான பீஷ்மருடைய வீரம் உலகப் புகழ் பெற்றது. பரசுராமர் போன்ற ஜயிக்கவே முடியாத வீரர்களை அவர் தோற்கடித்திருக்கிறார். மேலும் தமது தந்தையான சந்தனுவிடம் ஒரு வரம் பெற்றிருந்தார். அதன்படி அவராக விரும்பாத வரை யமனால்கூட அவருக்கு மரணம் ஏற்படாது. இக்காரணங்களால் பீஷ்மரை ஒருகாலும் வெற்றி கொள்ள முடியாது என்று நிச்சயமாகத் தெரியும். அத்துடன் அவர் போற்றுதற்குரிய பாட்டனார். 'அவரைத் தம் கையினால் கொல்வது பாவமாகும். பீஷ்மரைக் கொல்ல மாட்டேன்' என்று அர்ஜுனன் பல தடவை சொல்லியிருக்கிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



‡ஜயத்ரதனே ஒரு சிறந்த வீரன். அதோடுகூட பரமசிவ பக்தனான அவன் அவரிடமிருந்து கிடைத்தற்கரிய வரங்களைப் பெற்று யாராலும் வெல்ல முடியாதவனாகிவிட்டான். துர்யோதனனின் ஸஹோதரி துச்சலையை மணந்தபடியால் பாண்டவர்கள் அவனுக்கு மைத்துனர்கள் ஆகிவிட்டனர். இயல்பான நல்ல மனதினாலும், உறவினர் என்ற முறையினாலும் அவனைக் கொல்வதற்குப் பார்த்தன் தயங்கினார்.

கர்ணன் தம்மைக் காட்டிலும் எவ்விதத்திலும் குறைந்த வீரம் உடையவன் அல்லன் என்று அர்ஜுனன் மதித்திருந்தார். உலகமெங்கும் அர்ஜுனனுக்கு ஈடான வீரன் கர்ணன்தான் என்றே பேச்சாக இருந்தது. கர்ணனே பெரிய வீரன். பரசுராமரிடமிருந்தும் அரிதான வில் வித்தைகளைப் பயின்றிருந்தார்.

ஆகவே இந்த நால்வர் பெயர்களையும் தனித்தனியாகக் குறிப்பிட்டார். 'மற்ற வீரர்கள்' என்று கூறி, பகதத்தன், பூரிஶ்ரவஸ், சல்யன் முதலான வீரர்களையும் குறிப்பிட்டார். அவர்களும் சிறந்த வீரர்கள், அவர்களை வெல்வது எளிதன்று என்று அர்ஜுனன் கருதினார். அவர்களையும், தாம் கொன்றுவிட்டதாகக் கூறி, 'நீ யாரையாவது வெல்ல முடியாமல் போகுமோ என்று ஸந்தேஹப்பட வேண்டாம்' என்று பகவான் கூறுகிறார். "இவர்களை நான் கொன்றுவிட்டேன். இந்தப் பெரியோர்களைக் கொன்றால் பாவம் நேருமே என்று பயப்படுகிறாயே. அதுவும் சரியன்று. க்ஷத்ரிய முறைப்படி இந்த வீரர்களைக் கொல்வதற்கு நீ நிமித்தமாக மட்டும் இருப்பதால் உனக்கு எவ்வித பாவமும் நேராது. மாறாக க்ஷத்ரிய தர்மத்தைக் கடைப்பிடித்த பெருமையே சாரும். ஆகவே எழுந்திராய். அவர்களை வெற்றி கொள்வாய்" என்று கட்டளையிடுகிறார்.

**கேள்வி:** 'மா வ்யதிஷ்டா:' (பயப்படாதே) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'என்னுடைய பயங்கரமான ஸ்வரூபத்தைப் பார்த்துவிட்டு நீ இவ்வளவு பயப்படுவதோ, வருந்துவதோ சரியன்று. உன்னுடைய ப்ரிய நண்பனாகவுள்ள அதே ஸ்ரீக்ருஷ்ணன்தான் நான். ஆகவே நீ கொஞ்சம்கூட பயப்படாதே, கலங்காதே' என்பது கருத்து.

**கேள்வி:** 'போரில் ஐயமின்றி இவர்களை வெல்வாய். ஆகவே போர் புரிவாயாக' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அர்ஜுனனுடைய மனதில் இருந்த 'நாம் வெற்றி பெறுவோமா? நம் எதிரிகள் வெற்றி பெறுவார்களா?' (2/6) என்கிற ஐயத்தைக் களையவே பகவான் இவ்வாறு கூறுகிறார்:

---

‡ ஜயத்ரதன் சிந்து தேசத்து அரசன். வ்ருத்தக்ஷத்ரனின் குமாரன். இவன் த்ருதராஷ்ட்ரரின் ஒரே பெண்ணான துச்சலையை மணந்தான். பாண்டவர்கள் வனவாஸம் செய்தபோது, பாண்டவர்கள் இல்லாத சமயத்தில் த்ரௌபதியை அபஹரித்துக் கொண்டு போய்விட்டான். திரும்பி வந்த பீமஸேனன் முதலானோர் செய்தியைக் கேட்டதும் இவனைத் துரத்திக் கொண்டு சென்று த்ரௌபதியை மீட்டு, ஜயத்ரதனையும் பிடித்துக் கொண்டு வந்தனர். யுதிஷ்டிரர் கூறியதன்பேரில் அவனை மொட்டையடித்து விடுத்தனர். குருக்ஷேத்ர யுத்தத்தில் அர்ஜுனன் ஸம்ஸப்தகர்களுடன் போரிட்டபோது இவன் சக்ரவ்யூஹத்தின் நுழைவாயிலில் நின்று யுதிஷ்டிரர், பீமன், நகுலன், ஸஹதேவன் ஆகியோரை தான் சிவபெருமானிடம் பெற்ற வரத்தின் பலத்தினால் தடுத்து நிறுத்திவிட்டான். அதனால், அபிமன்யுவிற்கு உதவுவதற்காக அவர்கள் உள்ளே புக முடியவில்லை. மஹாரதிகள் பலரும் சேர்ந்து அபிமன்யுவைக் கொன்றுவிட்டனர். இதை அறிந்த அர்ஜுனன் 'நாளை சூரியன் மறைவதற்கு முன் ஜயத்ரதனைக் கொல்லாவிட்டால், நான் நெருப்பில் வீழ்ந்து உயிரைவிடுவேன்' என்று சபதம் செய்தார். கௌரவப் படையினர் எப்படியாவது ஜயத்ரதனைக் காப்பாற்றிவிட வேண்டுமென்று மிகவும் முயன்றார்கள். ஆனால் பகவானுடைய ப்ரபாவத்தினால் அவர்கள் முயற்சிகள் அனைத்தும் வீணாயின. சூரியன் மறைவதன் முன் அர்ஜுனன் அவனுடைய தலையைக் கொய்துவிட்டார். ஜயத்ரதனுக்கு ஒரு வரம் உண்டு. அதாவது, 'எவன் அவனுடைய தலையை பூமியில் வீழ்த்துகிறானோ, அக்கணமே அவன் தலை நூறு கூறாக வெடித்துவிடும்' என்று. அதனால் பக்தவத்ஸலனான பகவானின் சொற்படி அர்ஜுனன் தான் கொய்த ஜயத்ரதனின் தலையை மேலாகவே பாணங்களினால் தூக்கிக் கொண்டு போய் ஸமந்தபஞ்சகக் குளக்கரையில் உட்கார்ந்து கொண்டிருந்த ஜயத்ரதனின் தந்தை வ்ருத்தக்ஷத்ரனின் மடியில் விழும்படிச் செய்தார். அவர் அந்தத் தலையை பூமியில் தள்ளினார். அவருடைய தலை நூறு துகள்களாகியது (மஹாபாரதம், த்ரோணபர்வம்).

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



'போரில் நிச்சயம் உனக்கு வெற்றி உண்டு. உற்சாகமாக நீ யுத்தம் செய்துதான் ஆகவேண்டும்' என்று வலியுறுத்துகிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் பகவான் சொன்னதையெல்லாம் கேட்டபிறகு அர்ஜுனனுக்கு எத்தகைய நிலை ஏற்பட்டது? அர்ஜுனன் என்ன செய்தார் என்றறிய ஆவல் ஏற்படும். இதைப் பூர்த்தி செய்ய ஸஞ்ஜயன் கூறுகிறார்—

सञ्जय उवाच

**एतच्छ्रुत्वा वचनं केशवस्य कृताञ्जलिर्वेपमानः किरीटी।**
**नमस्कृत्वा भूय एवाह कृष्णं सगद्गदं भीतभीतः प्रणम्य॥ ३५॥**

ஸஞ்ஜய உவாச

**ஏதச்ச்₂ருத்வா வசநம் கேஶவஸ்ய**
**க்ருதாஞ்ஜலிர்வேபமாந: கிரீடீ ।**
**நமஸ்க்ருத்வா பூ₄ய ஏவாஹ க்ருஷ்ணம்**
**ஸக₃த்₃க₃த₃ம் பீ₄தபீ₄த: ப்ரணம்ய ॥ 35 ॥**

**ஸஞ்ஜய உவாச** – ஸஞ்ஜயன் கூறினார்: **கேஶவஸ்ய** – பகவான் ஸ்ரீகேசவனுடைய, **ஏதத்** – இந்த, **வசநம்** – வசனத்தை, **ஶ்ருத்வா** – கேட்டு, **கிரீடீ** – மகுடம் அணிந்த அர்ஜுனன், **வேபமாந:** – நடுங்கிக் கொண்டே, **க்ருதாஞ்ஜலி:** – கை கூப்பிக் கொண்டு, **நமஸ்க்ருத்வா** – வணங்கி, **பூ₄ய: ஏவ** – மறுபடியும், **பீ₄தபீ₄த:** – மிகவும் பயந்து, **ப்ரணம்ய** – நமஸ்காரம் செய்து, **க்ருஷ்ணம்** – (பகவான்) ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்த்து, **ஸக₃த்₃க₃த₃ம்** – தழுதழுத்த குரலில், **ஆஹ** – கூறினார்.

ஸஞ்ஜயன் கூறினார்: "பகவான் ஸ்ரீகேசவனுடைய இந்த வசனத்தைக் கேட்டு மகுடம் அணிந்த அர்ஜுனன் நடுங்கிக் கொண்டே கை கூப்பிக் கொண்டு வணங்கி மறுபடியும் மிகவும் பயந்து நமஸ்காரம் செய்து பகவான் ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்த்து தழுதழுத்த குரலில் கூறினார்."

**கேள்வி:** *பகவானுடைய சொற்களைக் கேட்டு அர்ஜுனன் பயப்படுவானேன்? உடல் நடுங்குவானேன்?*

**பதில்:** 'பகவான் இவ்வளவு ஆறுதல் கூறிய பிறகும்கூட, அர்ஜுனனுக்கு பகவானுடைய நெடிய பயங்கர ஸ்வரூபத்தைப் பார்த்த பயம் நீங்கவில்லை. நடுங்கிக் கொண்டே அந்த ஸ்வரூபத்தை மறைத்துக் கொள்ளுமாறு அவர் பகவானை வேண்டுகிறார்' என்று கூறுகிறார் ஸஞ்ஜயன்.

**கேள்வி:** *அர்ஜுனனை 'கிரீடீ' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** அர்ஜுனன் தம் தலையில் சூரியனைப்போல ஒளி வீசிக் கொண்டிருந்த தேவேந்த்ரன் அளித்த மகுடத்தை (கிரீடத்தை) எப்போதும் அணிந்திருப்பார். அதனால் அவருக்கு 'கிரீடீ'‡ என்ற ஒரு பெயரும் நிலைத்துவிட்டது.

---

‡ **புரா ஶக்ரேண மே த₃த்தம் யுத்₄யதோ தா₃நவர்ஷபை ।**
**கிரீடம் மூர்த்₄நி ஸூர்யாப₄ம் தேநாஹுர்மாம் கிரீடிநம் ॥**

(மஹா. விராட 44/17)

விராட குமாரனான உத்தரனிடம் அர்ஜுனன் கூறுகிறார்: "முன்பு நான் மிகப் பெரிய தானவர்களுடன் போரிட்டேன். அப்பொழுது தேவேந்த்ரன் மகிழ்ந்து சூரியனைப்போல ஒளி வீசும் கிரீடத்தை என் தலையில் அணிவித்தார். ஆகையால் என்னை எல்லோரும் 'கிரீடீ' என்கிறார்கள்."

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'க்ருதாஞ்ஜலி:' என்று கூறியபின் மறுபடியும் அதே பொருள் கொண்ட 'நமஸ்க்ருத்வா', 'ப்ரணம்ய' என்ற சொற்களைக் கூறுவானேன்?

**பதில்:** பகவானுடைய எல்லையில்லாத ஈசுவரத்தன்மை வாய்ந்த ஸ்வரூபத்தைப் பார்த்த அர்ஜுனனுக்கு அவர் மிக மிகப் போற்றத்தக்கவர் என்ற கருத்து எழுந்தது. அத்துடன் பயமும் சேர்ந்து கொண்டது. ஆகவே கைகளைக் கூப்பிக் கொண்டே திரும்பத் திரும்ப வணங்கி நமஸ்கரித்துத் துதிக்கத் தொடங்கினார்.

**கேள்வி:** 'பூய:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அர்ஜுனன் முன்பே பகவானை ஸ்தோத்ரம் செய்துவிட்டார். பகவான் சொன்னதைக் கேட்டபிறகு மறுபடியும் அதேவிதமாகத் துதிக்கத் தொடங்கினார் என்று பொருள்.

**கேள்வி:** 'ஸகத்கதம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஸகத்கதம்' (தழுதழுக்க) என்ற சொல் வினையெச்சம். அர்ஜுனன் பேசிய விதத்தை உணர்த்தவே இச்சொல் கையாளப்பட்டுள்ளது. அர்ஜுனன் பகவானைத் துதிக்க ஆரம்பித்தபோது, பயத்தினாலும், ஆச்சரியத்தினாலும் அவருடைய உள்ளம் உருகியது; கண்களில் நீர் பெருகியது; தொண்டை அடைத்துக் கொண்டது; ஆகவே, அவர் குரல் தழுதழுத்தது; அவருடைய சொற்கள் குழறின; அன்பு பெருகியது என்று கூறுகிறார்.

**பொருத்தம்: இனி ச்லோகம் முப்பத்தாறு முதல் நாற்பத்தாறு வரை அர்ஜுனனின் துதி, நமஸ்காரம், மன்னிப்புக்கோருதல் இவை வர்ணிக்கப்படுகின்றன. அதில் 'ஸ்தாநே' என்ற சொல்லால் உலகம் எல்லாம் மகிழ்வது பொருத்தம்தான் என்று கூறி, அர்ஜுனன் துதிக்க ஆரம்பிக்கிறார்—**

अर्जुन उवाच

स्थाने हृषीकेश तव प्रकीर्त्या जगत्प्रहृष्यत्यनुरज्यते च।
रक्षांसि भीतानि दिशो द्रवन्ति सर्वे नमस्यन्ति च सिद्धसङ्घाः ॥ ३६ ॥

அர்ஜுந உவாச

**ஸ்தா₂நே ஹ்ருஷீகேஶ தவ ப்ரகீர்த்யா**
**ஜக₃த்ப்ரஹ்ருஷ்யத்யநுரஜ்யதே ச ।**
**ரக்ஷாம்ஸி பீ₄தாநி தி₃ஶோ த்₃ரவந்தி**
**ஸர்வே நமஸ்யந்தி ச ஸித்₃த₄ஸங்க₄ா: ॥ 36 ॥**

**அர்ஜுந உவாச** – அர்ஜுனன் கூறினார்: **ஹ்ருஷீகேஶ** – அந்தர்யாமியான பகவானே! **தவ** – உங்களுடைய, **ப்ரகீர்த்யா** – திருநாமம், குணங்கள், ப்ரபாவம் இவற்றைக் கீர்த்தனம் செய்வதாலேயே, **ஜக₃த்** – உலகம், **ப்ரஹ்ருஷ்யதி** – மிக்க மகிழ்ச்சி அடைகிறது; **அநுரஜ்யதே ச** – அன்பும் கொள்கிறது (அகமகிழ்கிறது); **பீ₄தாநி** – பயந்துபோன, **ரக்ஷாம்ஸி** – அரக்கர்கள், **தி₃ஶ:** – எல்லாத் திசைகளிலும், **த்₃ரவந்தி** – ஓடுகின்றனர்; **ச** – மேலும், **ஸர்வே** – எல்லா, **ஸித்₃த₄ஸங்க₄ா:** – ஸித்தர்களின் கூட்டமனைத்தும், **நமஸ்யந்தி** – வணங்குகிறார்கள். **ஸ்தா₂நே** – (இது எல்லாம்) பொருத்தம்தான்.

அர்ஜுனன் கூறினார்: "அந்தர்யாமியான பகவானே! உங்களுடைய திருநாமம், குணங்கள், ப்ரபாவம் இவற்றைக் கீர்த்தனம் செய்வதாலேயே உலகம் மிக்க மகிழ்ச்சி அடைகிறது; அன்பும் கொள்கிறது (அகமகிழ்கிறது). பயந்துபோன அரக்கர்கள் எல்லாத் திசைகளிலும் ஓடுகின்றனர்; மேலும் ஸித்தர்களின் கூட்டமனைத்தும் வணங்குகிறார்கள். இது எல்லாம் பொருத்தம்தான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ஸ்தாநே' என்ற சொல்லுக்குப் பொருள் என்ன?

**பதில்:** 'ஸ்தாநே' என்றால் உசிதம் என்று பொருள். "உங்களைப் புகழ்ந்து பாடுவது முதலியவற்றால் உலகம் உங்களிடம் அன்பு கொள்கிறது. அதே சமயம் மகிழ்ச்சியும் கொள்கிறது. ராக்ஷஸர்கள் உங்களுடைய அற்புதமான ஸ்வரூபத்தையும், ப்ரபாவத்தையும் பார்த்து பயந்து இங்குமங்கும் ஓடுகிறார்கள்; ஸித்தர்களின் கூட்டங்களும் உங்களை வணங்குகிறார்கள்; இது எல்லாமே தக்கதுதான். இப்படித்தான் இருக்க வேண்டும். ஏனெனில் நீங்கள் ஸாக்ஷாத் பரமேச்வரன் ஆயிற்றே!" என்று அர்ஜுனன் கூறுகிறார்.

**கேள்வி:** 'ப்ரகீர்த்யா' என்றால் என்ன பொருள்? 'அதனால் உலகம் மகிழ்கிறது, அன்பு கொள்கிறது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த ஸந்தர்பத்தில் 'கீர்த்தி' என்னும் சொல் கீர்த்தனத்தைக் குறிக்கிறது. 'ப்ர' என்ற உபஸர்கத்தோடு சேர்ந்து இது, உரக்கக் கீர்த்தனம் செய்வதைக் குறிக்கும். உங்களுடைய நாமம், ரூபம், குணம், ப்ரபாவம், பெருமை இவற்றை உரத்தக் குரலில் கீர்த்தனம் செய்வதால் உலகம் மிகவும் மகிழ்ச்சியடைகிறது. எல்லா ப்ராணிகளும் ப்ரேமையில் தன்வயமிழக்கின்றன என்று பொருள்.

**கேள்வி:** பகவானுடைய விசுவரூபத்தை அர்ஜுனன் மட்டும்தான் பார்த்தாரா அல்லது உலகமே பார்த்ததா? உலகம் முழுவதும் பார்க்கவில்லையானால் 'அவையனைத்தும் மகிழ்ச்சி அடைந்தன, ப்ரேமை கொண்டன, ராக்ஷஸர்கள் பயந்து ஓடினார்கள். ஸித்தர் கூட்டங்கள் வணங்கின' என்று அர்ஜுனன் எவ்வாறு கூறினார்?

**பதில்:** பகவான் அளித்த தெய்விகப் பார்வையால் அர்ஜுனன் மட்டும்தான் பகவானுடைய விசுவரூபத்தைப் பார்த்தார். அகில உலகமும் பார்க்கவில்லை. உலகம் மகிழ்ந்தது, ப்ரேமை மிகுந்தது, ராக்ஷஸர்கள் பயந்து ஓடியது, ஸித்தர்கள் வணங்கியது – இவையெல்லாமே !பகவானுடைய விசுவரூபத்தின் ஒரு பகுதிதான். அர்ஜுனன் அதைத்தான் வர்ணிக்கிறார். வெளி உலகை அன்று. பகவான் காண்பித்த விசுவரூபத்திலேயே இவையனைத்தையும் தாம் கண்டதாக அர்ஜுனன் சொல்கிறார்.

**பொருத்தம்: முன் ச்லோகத்தில் 'ஸ்தாநே' என்ற சொல்லால் ஸித்த புருஷர்கள் பகவானை வணங்கியது உசிதம்தான் என்று கூறிவிட்டு, அடுத்து வரும் நான்கு ச்லோகங்களில் பகவானுடைய ப்ரபாவங்களை எடுத்துக் கூறி, அந்த விஷயத்தை நிரூபித்துக் கொண்டே மீண்டும் மீண்டும் அர்ஜுனன் நமஸ்கரித்ததன் கருத்தைப் புலப்படுத்துகிறார்—**

कस्माच्च ते न नमेरन्महात्मन् गरीयसे ब्रह्मणोऽप्यादिकर्त्रे।
अनन्त देवेश जगन्निवास त्वमक्षरं सदसत्तत्परं यत्॥ ३७॥

**கஸ்மாச்ச தே ந நமேரந்மஹாத்மந்**
**கரீயஸே ப்ரஹ்மணோऽப்யாதிகர்த்ரே ।**
**அநந்த தேவேஶ ஜகந்நிவாஸ**
**த்வமக்ஷரம் ஸதஸத்தத்பரம் யத் ॥ 37 ॥**

**மஹாத்மந்** – மஹாத்மாவே! **ப்ரஹ்மண: அபி** – ப்ரம்மதேவனையே, **ஆதிகர்த்ரே ச** – ஆதியில் படைத்தவராகவும், **கரீயஸே** – (எல்லோரிலும்) மூத்தவராகவும் உள்ள, **தே** – உங்களுக்கு, **கஸ்மாத்** – ஏன், **ந நமேரந்** – நமஸ்காரம் செய்யமாட்டார்கள்? **அநந்த** – முடிவற்றவரே! **தேவேஶ** – தேவதேவ! **ஜகந்நிவாஸ** – ஜகந்நிவாஸ! ஜகத்திற்கு இருப்பிடமானவரே! **யத்** – ஏது, **ஸத்** – ஸத்தாகவும், **அஸத்** – அஸத்தாகவும் உள்ளதோ,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**தத்பரம்** – அவற்றிற்கு மேலான, **அக்ஷரம்** – என்றும் அழியாத, (ஸத் சித் ஆனந்த) பரப்ரம்மமான பரமாத்மா, **த்வம்** – நீங்களே.

மஹாத்மாவே! ப்ரம்மதேவனையே ஆதியில் படைத்தவராகவும் எல்லோரிலும் மூத்தவராகவும் உள்ள உங்களுக்கு ஏன் நமஸ்காரம் செய்யமாட்டார்கள்? முடிவற்றவரே! தேவதேவ! ஜகந்நிவாஸ! – ஜகத்திற்கு இருப்பிடமானவரே! எது ஸத்தாகவும், அஸத்தாகவும் உள்ளதோ அவற்றிற்கெல்லாம் மேலான என்றும் அழியாத, ஸத் சித் ஆனந்த பரப்ரம்மமான பரமாத்மா நீங்களே.

**கேள்வி:** 'மஹாத்மந்', 'அநந்த', 'தேவேஶ', 'ஜகந்நிவாஸ' என்று நான்கு விதமாக விளிப்பதன் கருத்து என்ன?

**பதில்:** இப்படி விளிப்பதன் மூலம், தாம் அவரை வணங்கியது தக்கதுதான் என்பதை அர்ஜுனன் நிரூபிக்கிறார். "நீங்கள் உலகில் உள்ள சராசரங்களுக்கும் ஆத்மா. முடிவற்றவர். உங்களுடைய வடிவம், குணங்கள், ப்ரபாவங்கள் எல்லையற்றவை. தேவதைகளுக்கும் தேவன் நீங்களே! அகில உலகிற்கும் ஆதாரமானவரும் நீங்களே! அகில உலகமும் உங்களிடம் நிலைத்துள்ளது. நீங்கள் அவை முழுவதிலும் வ்யாபித்து இருக்கிறீர்கள். ஆகவே, எல்லோரும் உங்களை வணங்க வேண்டியது எல்லாவிதங்களிலும் உசிதம்தான்" என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'கரீயஸே ப்ரஹ்மணோऽப்யாதிகர்த்ரே' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இச்சொற்களும் பகவானை நமஸ்காரம் செய்ய வேண்டியது உசிதம்தான் என்பதை நிரூபிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளன. "நீங்கள் எல்லோரையும்விடப் பெரியவர், போற்றத்தக்கவர், மிகச் சிறந்தவர். உலகம் என்ன, உலகத்தைப் படைத்த ப்ரம்மாவையே படைத்தவர் நீங்கள். யாவரும் உங்களை வணங்க வேண்டியது பொருத்தம்தான், நமஸ்காரம் செய்ய வேண்டியதுதான். இச்சொற்கள் புலப்படுத்தும் கருத்து இதுதான்.

**கேள்வி:** 'ஸத்; அஸத்; அவற்றிற்கு மேலான அக்ஷரம் எல்லாம் நீங்களே' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எது என்றும் இல்லாமல் போகாதோ அது ஸத். அதுதான் ஆத்மா. அழியக்கூடிய அனைத்தும் அஸத். இவற்றையே ஏழாவது அத்யாயத்தில் பரா, அபராப்ரக்ருதி என்றார்; பதினைந்தாவது அத்யாயத்தில் அக்ஷர, க்ஷர புருஷன் என்றார். இவற்றிற்கும் மேலான பரம அக்ஷரன் (அழியாதவர்) ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மா. 'இவையெல்லாம் நீங்களே. ஆகவே உங்களை நமஸ்காரம் செய்வது எல்லா வகைகளாலும் உசிதம்தான்' என்று கூறுகிறார் அர்ஜுனன். இவ்வாறு கூறுவதன் கருத்து இதுதான்.

त्वमादिदेवः पुरुषः पुराणस्त्वमस्य विश्वस्य परं निधानम्।
वेत्तासि वेद्यं च परं च धाम त्वया ततं विश्वमनन्तरूप॥ ३८॥

**த்வமாதி₃தே₃வ: புருஷ: புராணஸ்–**
**த்வமஸ்ய விஶ்வஸ்ய பரம் நித₄ாநம் ।**
**வேத்தாஸி வேத்₃யம் ச பரம் ச த₄ாம**
**த்வயா ததம் விஶ்வமநந்தரூப ॥ 38 ॥**

**த்வம்** – நீங்கள், **ஆதி₃தே₃வ:** – முழு முதல் தெய்வம்; **புராண:** – ஸநாதனமான, **புருஷ:** – புருஷர். **த்வம்** – நீங்கள், **அஸ்ய** – இந்த, **விஶ்வஸ்ய** – உலகத்திற்கு, **பரம்** – சிறந்த, **நித₄ாநம்** – இருப்பிடம். **வேத்தா ச** – அறிபவராகவும், **வேத்₃யம் ச** – அறியப்படுபவராகவும், **பரம் த₄ாம** – பரமபதமாகவும், **அஸி** – இருக்கிறீர்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அநந்தரூப** – அனந்தஸ்வரூபனே! **த்வயா** – உங்களால், **விஶ்வம்** – உலகனைத்தும், **ததம்** – வ்யாபிக்கப்பட்டுள்ளது.

நீங்கள் முழு முதல் தெய்வம்; ஸநாதனமான புருஷர். இந்த உலகத்திற்குச் சிறந்த இருப்பிடம். அறிபவராகவும் அறியப்படுபவராகவும் பரமபதமாகவும் இருக்கிறீர்கள். அனந்தஸ்வரூபனே! உங்களால் உலகனைத்தும் வ்யாபிக்கப்பட்டுள்ளது.

**கேள்வி:** 'நீங்கள் ஆதிதேவர், ஸநாதனமானவர்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவானைத் துதிக்கின்ற அர்ஜுனன் 'நீங்களே எல்லா தேவர்களுக்கும் முதலான தெய்வம். எப்பொழுதும் இருந்துகொண்டே இருக்கும் ஸநாதனமான நித்யபுருஷனான பரமாத்மா' என்கிறார்.

**கேள்வி:** 'நீங்களே உலகிற்குச் சிறந்த இருப்பிடம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அகில உலகமும் ப்ரளய காலத்தில் உங்களிடமே ஒடுங்குகின்றன. உங்களுடைய ஸ்வரூபத்தின் ஒரு பகுதியில் அவை உள்ளன. நீங்களே உலகிற்குச் சிறந்த இருப்பிடம்.

**கேள்வி:** 'வேத்தா' (எல்லாமறிந்தவர்) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அகில உலகங்களின் இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் இவற்றை உள்ளபடி முழுமையாக அறிபவர் நீங்கள். எல்லாவற்றையும் எப்பொழுதும் பார்த்துக் கொண்டே இருப்பவர். நீங்கள் எல்லாம் அறிந்தவர். உங்களைப்போல ஸகலமும் அறிந்தவர் வேறு எவரும் இல்லை. 'வேத்தா' என்ற சொல்லின் கருத்து இதுதான்.

**கேள்வி:** 'வேத்யம்' (அறியத்தக்கவர்) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எவரை அறிவது மனித வாழ்க்கையின் ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டுமோ, அவரேதான் 'வேத்யம்' எனப்படுவார். 13வது அத்யாயத்தில் 12 முதல் 17வது ச்லோகம் வரை கூறப்படும் 'அறியத்தக்க தத்வமான பரப்ரம்ம பரமேசுவரன் நீங்கள்தாம்' என்பது கருத்து.

**கேள்வி:** 'பரம்தாம' என்றால் என்ன?

**பதில்:** 'முக்தர்கள் (பிறப்பிலிருந்து விடுதலை பெற்றவர்கள்) எந்தப் பரமகதியை அடைகிறார்களோ, எதை அடைந்தபின் மனிதன் திரும்ப வருவதில்லையோ, அந்தப் பரமபதம் நீங்கள்தான்' என்ற உண்மையை அர்ஜுனன் இங்கே உணர்த்துகிறார்.

**கேள்வி:** 'அநந்தரூப' என்று அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** எவருக்கு ஸ்வரூபங்கள் முடிவற்றவையோ, அதாவது எண்ணிலடங்காதவையோ அவர் அநந்தஸ்வரூபன். 'உங்களுடைய ரூபங்கள் எல்லையற்றன; எண்ணற்றன. அவற்றின் எல்லையை அடைந்தவர்கள் யாரும் இல்லை' என்கிறார்.

**கேள்வி:** 'உங்களால் உலகனைத்தும் நிறைந்துள்ளது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'அகில உலகத்தில் உள்ள ஒவ்வொரு அணுவிலும் நீங்கள் ஊடுருவி இருக்கிறீர்கள். நீங்கள் இல்லாத இடமே இல்லை' என்று கூறுகிறார்.

वायुर्यमोऽग्निर्वरुणः शशाङ्कः प्रजापतिस्त्वं प्रपितामहश्च।
नमो नमस्तेऽस्तु सहस्रकृत्वः पुनश्च भूयोऽपि नमो नमस्ते॥ ३९॥

வாயுர்யமோऽக்₃நிர்வருண: ஶஶாங்க:
ப்ரஜாபதிஸ்த்வம் ப்ரபிதாமஹஶ்ச ।
நமோ நமஸ்தேऽஸ்து ஸஹஸ்ரக்ருத்வ:
புநஶ்ச பூ₄யோऽபி நமோ நமஸ்தே ॥ 39 ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**வாயு:** – வாயுதேவனும், **யம:** – யமனும், **அக்₃நி:** – அக்னிதேவனும், **வருண:** – வருணனும், **ஶஶாங்க:** – சந்த்ரனும், **ப்ரஜாபதி:** – மக்களுக்குத் தலைவனான ப்ரம்ம தேவனும், **ப்ரபிதாமஹ: ச** – ப்ரம்மதேவனுக்குத் தந்தையும், **த்வம்** – நீங்களே. **தே** – உங்களுக்கு, **ஸஹஸ்ரக்ருத்வ:** – பல்லாயிரக்கணக்கான முறை, **நம: நம: அஸ்து** – நமஸ்காரங்கள் இருக்கட்டும். **பூ₄ய: அபி** – மீண்டும், **தே** – உங்களுக்கு, **நம:** – நமஸ்காரம். **புந: ச** – திரும்பத் திரும்ப, **நம:** – நமஸ்காரம்.

வாயுதேவனும், யமனும், அக்னிதேவனும், வருணனும், சந்த்ரனும், மக்களுக்குத் தலைவனான ப்ரம்மதேவனும் ப்ரம்மதேவனுக்குத் தந்தையும் நீங்களே. உங்களுக்குப் பல்லாயிரக்கணக்கான முறை நமஸ்காரங்கள். மீண்டும் உங்களுக்கு நமஸ்காரம். திரும்பத் திரும்ப நமஸ்காரம்.

**கேள்வி:** *'வாயு, யமன், அக்னி, வருணன், சந்த்ரன், ப்ரஜாபதியான ப்ரம்மதேவன் எல்லோரும் நீங்களே' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** நான் முன் கூறியுள்ளவர்களும் மற்றும் வணக்கத்திற்குரிய தேவதைகள் எல்லோருமே உங்கள் ஸ்வரூபங்கள்தான். நீங்களே எல்லாவிதங்களிலும் எல்லோராலும் வணங்கத்தக்கவர்.

**கேள்வி:** *'நீங்களே முப்பாட்டனார்' (பாட்டனாருக்கும் தந்தை) என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** எல்லா உலகத்தில் உள்ள ப்ராணிகளையும் படைத்த கச்யபர், தக்ஷர், ஸப்தரிஷிகள் முதலியவர்களுக்குத் தந்தை ப்ரம்மதேவன். இவரே எல்லோருக்கும் பாட்டனார். ப்ரம்மதேவனையும் படைத்தவர் நீங்கள். ஆகவே முப்பாட்டனார். உங்களை வணங்குவது முற்றும் சரிதான்.

**கேள்வி:** *'ஸஹஸ்ரக்ருத்வ:' என்று சொல்லி, மேலும் 'நம: நம:' என்று அடுக்குவதன் கருத்து என்ன?*

**பதில்:** அர்ஜுனனுக்கு பகவானிடம் எப்போதும் உள்ள பெருமதிப்பு, இப்போது உண்டான பயம் இவற்றின் காரணமாக ஆயிரம் தடவைகள் நமஸ்காரங்கள் செய்தும்கூடப் போதும் என்ற மனநிறைவு ஏற்படவில்லை. மேலும் மேலும் நமஸ்காரம் செய்யவேண்டுமென விரும்புகிறார் என்று பொருள்.

**नमः पुरस्तादथ पृष्ठतस्ते नमोऽस्तु ते सर्वत एव सर्व।**
**अनन्तवीर्यामितविक्रमस्त्वं सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः॥४०॥**

**நம: புரஸ்தாத₃த₂ ப்ருஷ்ட₂தஸ்தே**
**நமோऽஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ ।**
**அநந்தவீர்யாமிதவிக்ரமஸ்த்வம்**
**ஸர்வம் ஸமாப்நோஷி ததோऽஸி ஸர்வ: ॥ 40 ॥**

**அநந்தவீர்ய** – அளவற்ற திறமை உடையவரே! **தே** – உங்களுக்கு, **புரஸ்தாத்** – முன்புறமிருந்தும், **அத₂ ப்ருஷ்ட₂த:** – பின்புறமிருந்தும், **நம:** – நமஸ்காரம். **ஸர்வ** – அனைத்துமானவரே! **தே** – உங்களுக்கு, **ஸர்வத: ஏவ** – எல்லாப் புறங்களிலிருந்தும், **நம:** – நமஸ்காரம். **அஸ்து** – இருக்கட்டும், **அமிதவிக்ரம:** – அளவற்ற பராக்ரமம் உடைய, **த்வம்** – நீங்கள், **ஸர்வம்** – உலகனைத்திலும், **ஸமாப்நோஷி** – வ்யாபித்து இருக்கிறீர்கள். **தத:** – எனவே (நீங்களே), **ஸர்வ:** – அனைத்து வடிவாகவும், **அஸி** – இருக்கிறீர்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அளவற்ற திறமை உடையவரே! உங்களுக்கு முன்புறமிருந்தும் பின்புறமிருந்தும் நமஸ்காரம். அனைத்துமானவரே! உங்களுக்கு எல்லாப் புறங்களிலிருந்தும் நமஸ்காரம். அளவற்ற பராக்ரமம் உடைய நீங்கள் உலகனைத்திலும் வ்யாபித்து இருக்கிறீர்கள். எனவே (நீங்களே) அனைத்து வடிவாகவும் இருக்கிறீர்கள்.

**கேள்வி:** 'ஸர்வ' என்று அழைத்து முன்னும், பின்னும் எல்லாப் புறங்களிலிருந்தும் நமஸ்காரம் செய்வதன் கருத்து என்ன?

**பதில்:** "நீங்கள் எல்லோருக்கும் ஆத்மா, எங்கும் நிறைந்தவர், எல்லாமானவர். ஆகவே, உங்களுக்கு முன்புறத்திலும், பின்புறத்திலும்; மேலும், கீழும்; இடப்புறமும், வலப்புறமும் எல்லாப்புறமும் வணங்குகிறேன். உலகில் நீங்கள் இல்லாத இடமே இல்லை. எங்கும் நிறைந்த உங்களை எல்லாப்புறங்களிலும் வணங்குகிறேன்" என்கிறார் அர்ஜுனன்.

**கேள்வி:** 'அமிதவிக்ரம:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "ஸாதாரண மனிதர்களுடைய பராக்ரமத்தைப்போல உங்கள் பராக்ரமம் ஓர் எல்லைக்கு உட்பட்டதன்று. நீங்கள் அளவற்ற பராக்ரமம் உடையவர். நீங்கள் எவ்விதம் ஆயுதங்களை விளையாட்டாக வீசுவீர்களோ, அப்படிப் பிறர் வீசமுடியும் என்று ஒருவரும் கற்பனைகூட செய்ய முடியாது" என்று பொருள்.

**கேள்வி:** 'உலகனைத்தும் நிறைந்து விளங்குகிறீர்கள். எனவே நீங்கள் எல்லாமாகவும் இருக்கிறீர்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** முதலிலேயே அர்ஜுனன் பகவானை 'எல்லாமானவரே!' என்று அழைத்து விட்டார். 'நீங்களே எங்கும் நிறைந்திருக்கிறீர்கள்' என்று மறுபடியும் கூறும்போது 'உலகில் மிகச் சிறிய அணு அளவு இடம்கூட, பொருள் கூட, நீங்கள் இல்லாமல் இல்லை' என்பதை விளக்கிக் கூறுகிறார். 'நீங்களே எல்லாம், உண்மையில் உங்களைத் தவிர உலகில் வேறு பொருள் எதுவுமே இல்லை. இதுவே என் தீர்மானம்' என்கிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் பகவானைத் துதித்து வணங்கியபின் பகவானுடைய குணங்கள், ரஹஸ்யங்கள், பெருமைகள் இவற்றை அறியாததால் சொல்லாலும், செயலாலும் தாம் செய்த பிழைகளைப் பொறுத்தருள வேண்டுமென இரு ச்லோகங்களில் பகவானிடம் அர்ஜுனன் வேண்டுகிறார்—

सखेति मत्वा प्रसभं यदुक्तं हे कृष्ण हे यादव हे सखेति।
अजानता महिमानं तवेदं मया प्रमादात्प्रणयेन वापि॥४१॥
यच्चावहासार्थमसत्कृतोऽसि विहारशय्यासनभोजनेषु।
एकोऽथवाप्यच्युत तत्समक्षं तत्क्षामये त्वामहमप्रमेयम्॥४२॥

ஸகே₂தி மத்வா ப்ரஸப₄ம் யது₃க்தம்
ஹே க்ருஷ்ண ஹே யாத₃வ ஹே ஸகே₂தி ।
அஜாநதா மஹிமாநம் தவேத₃ம்
மயா ப்ரமாதா₃த்ப்ரணயேந வாபி ॥ 41 ॥
யச்சாவஹாஸார்த₂மஸத்க்ருதோऽஸி
விஹாரஶய்யாஸநபோ₄ஜநேஷு ।
ஏகோऽத₂வாப்யச்யுத தத்ஸமக்ஷம்
தத்க்ஷாமயே த்வாமஹமப்ரமேயம் ॥ 42 ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**தவ** – உங்களுடைய, **இத₃ம்** – இந்த, **மஹிமாநம்** – பெருமையை, **அஜாநதா** – அறியாத, **மயா** – என்னால், **ஸகா₂ இதி** – தோழன் என்று, **மத்வா** – எண்ணி, **ப்ரணயேந** – அன்பினாலோ, **ப்ரமாத₃ாத் அபி வா** – அசட்டையினாலோ, **ஹே க்ருஷ்ண** – ஏ க்ருஷ்ண! **ஹே யாத₃வ** – ஏ யாதவ! **ஹே ஸகே₂** – ஏ நண்பனே! **இதி** – என்று, **யத்** – (நன்கு சிந்தித்துப் பார்க்காமல்) எது, **ப்ரஸப₄ம்** – துடுக்காக, **உக்தம் ச** – சிறுபேரழைத்தனவெல்லாம், **அச்யுத** – அச்யுத! **விஹார ஶய்யாஸந போ₄ஜநேஷு** – கேளிக்கைகளின் போதும், படுக்கையில் உறங்கும்போதும், கூட அமரும் போதும், உண்ணும்போதும், **ஏக:** – நீங்கள் தனியாக இருக்கும்போதும், **அத₂வா** – அல்லது, **தத்ஸமக்ஷம் அபி** – அந்த நண்பர்கள் முன்னிலையிலும்கூட, **அவஹாஸார்த₂ம்** – கேலியாகவும், வேடிக்கையாகவும், **யத்** – எந்தவிதமாக, **அஸத்க்ருத: அஸி** – அவமதிக்கப் பட்டிருக்கிறீர்களோ, **தத்** – அந்த எல்லாக் குற்றங்களையும், **அப்ரமேயம்** – நினைத்துப் பார்க்கவே முடியாத மஹிமை கொண்ட, **த்வாம்** – உங்களை, **அஹம்** – நான், **க்ஷாமயே** – பொறுத்தருள வேண்டுகிறேன்.

உங்களுடைய இந்த பெருமையை அறியாத என்னால் தோழன் என்று எண்ணி அன்பினாலோ அசட்டையினாலோ க்ருஷ்ண! யாதவ! நண்பனே! என்று நன்கு சிந்தித்துப் பார்க்காமல் எது துடுக்காகச் சிறுபேரழைத்தனவெல்லாம், அச்யுத! கேளிக்கைகளின்போதும், படுக்கையில் உறங்கும்போதும், கூட அமரும்போதும், உண்ணும் போதும், நீங்கள் தனியாக இருக்கும்போதும் அல்லது அந்த நண்பர்கள் முன்னிலையிலும்கூடக் கேலியாகவும், வேடிக்கையாகவும் எந்தவிதமாக அவமதிக்கப்பட்டிருக்கிறீர்களோ, அந்த எல்லாக் குற்றங்களையும் நினைத்துப் பார்க்கவே முடியாத மஹிமை கொண்ட உங்களை பொறுத்தருள வேண்டுகிறேன்.

**கேள்வி:** 'இதம் மஹிமாநம்' என்று எதைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** விசுவரூபதர்சனம் காண்பித்தபோது அர்ஜுனன் நேரில் கண்ட பகவானுடைய ஈடிணையற்ற, அளப்பரிய ஈசுவரத்தன்மை, கௌரவம், குணங்கள், ப்ரபாவங்கள் இவற்றைத்தான் 'இத்தகைய பெருமை' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'அஜாநதா மயா' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'உங்களுடைய ப்ரபாவத்தை இப்பொழுது நேரில் பார்த்துவிட்டேன். அதன் உண்மையை அறியாதபடியால் நான் உங்களிடம் முறையற்று நடந்து கொண்டிருந்திருக்கிறேன். அறியாமல் நான் செய்த பிழைகளைக் கண்டிப்பாக பொறுத்தருள வேண்டும்' என்று வேண்டுகிறார்.

**கேள்வி:** 'ஸகா இதி மத்வா', 'ப்ரணயேந', 'ப்ரமாதாத்' என்றெல்லாம் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "உங்களுடைய ஒப்பற்ற மஹிமையை அறியாததால் நான் உங்களை எனக்கு ஸமமான நண்பன் என்று நினைத்திருந்தேன். அதனால்தான் பேசும்போது உங்களுக்குரிய கௌரவத்தையும், எல்லோராலும் போற்றுதலுக்குரிய உங்களுடைய பெருமையையும் நினைத்துப் பார்க்கவில்லை. அன்பினாலும், அசட்டையினாலும் நான் மிகப் பெரிய பிழை செய்துவிட்டேன். அரிய பெரிய தேவதைகள், மஹரிஷிகளெல்லாம் உங்கள் சரணங்களில் வீழ்ந்து வணங்குவதைத் தங்களுடைய பாக்யம் என்று கருதுகிறார்கள். அத்தகைய உங்களுடன் நான் சரிஸமமாகப் பழகிவிட்டேன். இதற்காக க்ருபைகூர்ந்து எனக்கு மன்னிப்பு அளிக்க வேண்டும்" என்று வேண்டுகிறார்.

**கேள்வி:** 'ஏ க்ருஷ்ண', 'ஏ யாதவ', 'ஏ நண்ப' என்ற விளிகளோடு 'ப்ரஸபம்' என்ற சொல்லைக் கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** அன்பினாலோ, அசட்டையினாலோ தாம் செய்த பிழைகளை இச்சொற்களின் மூலம் அர்ஜுனன் விளக்குகிறார். "ப்ரபுவே! நீங்கள் எங்கே? நான் எங்கே? நான் இவ்வளவு மூடனாகிவிட்டேனே! மிகவும் கொண்டாடத்தக்க பரமாத்மாவை என் நண்பன் என்று நினைத்துவிட்டேனே! மரியாதைக்குரிய சொற்களால் அழைக்காமல் ‡க்ருஷ்ண, யாதவ, நண்ப என்று ஒருமையில் அலக்ஷ்யமாக, துடுக்காக, அழைத்திருக்கிறேனே! இந்தப் பிழைகளைப் பொறுத்தருளுங்கள்" என்று அர்ஜுனன் வேண்டுகிறார்.

**கேள்வி:** *'அச்யுத' என்று அழைப்பதன் கருத்து என்ன?*

**பதில்:** தன்னுடைய பெருமையிலிருந்தும், நிலையிலிருந்தும் ஒருபொழுதும் வழுவாதவனை 'அச்யுதன்' என்று கூறுவர். நான் நடந்து கொண்ட விதங்களிலும், செயல்களிலும் உங்களை அவமதித்துவிட்டேன். அது என்னுடைய பெரும் பிழை. அதனால், உங்களுடைய பெருமை சிறிதுகூடக் குறைந்துவிடவில்லை. உங்களுடைய பெருமை சிறிதுகூடக் குறைக்குமாறு உலகில் எந்தவிதமான செயலும் நடந்துவிடாது. யாரும் உங்களை அவமதித்துவிட முடியாது. ஏனெனில் நீங்கள் உங்களுடைய நிலையிலிருந்து என்றுமே வழுவாதவர்.

**கேள்வி:** *'யத்', 'ச' என்ற இரு சொற்களைக் கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** முன் ச்லோகத்தில் குறிப்பிடப்பட்ட பிழைகளைத் தவிர அவற்றிலிருந்து வேறுபட்டதான, தாம் நடந்து கொண்ட முறையில் நேரிட்டவையான பிழைகளை மேலும் குறிப்பிடுவதற்காக 'யத்' என்று கூறுகிறார். முன் ச்லோகத்தில் சொன்ன பிழைகள், இந்த ச்லோகத்தில் சொன்ன பிழைகள் எல்லாவற்றையும் சேர்த்துச் சொல்வதற்காக 'ச' என்ற சொல்லை உபயோகிக்கிறார்.

**கேள்வி:** *'அவஹாஸார்தம்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** அன்பினாலோ, அசட்டையினாலோ, விநோதமாகவோ (கேலியாகவோ) பேசிக் கொள்ளும்போது மரியாதை, அவமானம் இவற்றைப் பற்றிய நினைப்பு வருவதில்லை. அன்பிற்குக் கட்டுப்பாடு கிடையாது. அசட்டையினால் தவறு ஏற்படலாம். விநோதமாகப் பேசும்போது சொற்களின் பொருள்களைக் கருதிப் பேசுவதில்லை. அடக்கமாகப் பேசுவதில்லை. ஆனால் பெருமைக்குரிய மனிதர்களிடம் பேசும்போது, இம்மூன்றும் சேர்ந்தோ, தனித்தனியாகவோ அவமானத்திற்குக் காரணம் ஆக முடியும். முன் ச்லோகத்தில் அன்பினாலும், அசட்டையினாலும் செய்த பிழைகளைக் கூறினார். இங்கு விநோதமாக (கேலியாக)ச் சிறுபேரழைத்த தன் பிழைகளைக் குறிப்பிடுகிறார்.

**கேள்வி:** *'விஹாரஶய்யா ஆஸந போஜநேஷு:', 'ஏக:', 'தத்ஸமக்ஷம்', 'அஸத்க்ருதோஸி' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** அர்ஜுனன், தாம் பிழை செய்ததாகக் கருதும் ஸமயங்களைக் குறிப்பிடுகிறார். நாம் இருவரும் சேர்ந்து நடந்து போகும் போதோ, படுக்கையில் படுத்திருக்கும் போதோ, மேல் கீழான இருக்கைகளில் அமர்ந்திருக்கும் போதோ அல்லது ஸமமாக அமர்ந்திருக்கும் போதோ, உண்ணும்போதோ நான் உங்களைப் பல தடவை அலக்ஷ்யமாக நடத்தியிருக்கிறேன்.§ இப்படித் தனிமையில் பிழை செய்திருந்தாலும், பலர் முன்னிலையில்

---

‡ 'ஏ க்ருஷ்ண!' என்று கண்ணபிரானின் கரிய நிறத்தைக் கேலி செய்ததும், 'ஏ யாதவ!' என்று முடிசூட்டிக் கொள்ளும் உரிமையற்ற, கண்ணபிரான் பிறந்த யது குலத்தைக் கேலி செய்ததும், 'ஏ நண்ப!' என்று நண்பனாக ஒருமையில் விளித்ததும் இங்கு உணர்த்தப்படுகின்றன.

§ ஸ்ரீமத்பாகவதத்தில் (1/15/19) அர்ஜுனன் கூறுகிறார்:
ஶய்யாஸநாடநவிகத்த$_{2}$நபே$_{4}$ாஜநாதி$_{3}$ஷ்வைக்யாத்$_{3}$ வயஸ்ய ருதவாநிதி விப்ரலப்$_{3}$த$_{4}$: ॥
ஸக்$_{2}$யு: ஸகே$_{2}$வ பித்ருவத்தநயஸ்ய ஸர்வம் ஸேஹே மஹாந் மஹிதயா குமதேரக$_{4}$ம் மே ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



செய்திருந்தாலும் அவையெல்லாம் மிகத் தவறு என்று இப்போது உணர்கிறேன். அந்த ஒவ்வொரு தவறுக்காகவும் உங்களிடம் மன்னிப்புக் கோருகிறேன்.

**கேள்வி:** 'தத்' என்ற சொல் எதைக் குறிக்கிறது? 'த்வாம்' என்பதோடு 'அப்ரமேயம்' என்ற உரிச்சொல் சேர்த்து 'க்ஷாமயே' என்று கூறுவதற்குப் பொருள் என்ன?

**பதில்:** 41,42வது ச்லோகங்களில் தாம் செய்திருப்பதாகச் சொன்ன பிழைகளை யெல்லாம் பொறுத்தருள வேண்டும் என்று கூறுகிறார். "ப்ரபுவே! உங்களுடைய ஸ்வரூபமும், பெருமையும் சிந்தனைக்கு அப்பாற்பட்டவை. அவற்றை முழுமையாக எவரும் அறிந்து கொள்ள முடியாது. யாருக்காவது சிறிதளவு தெரிந்து இருக்குமேயானால் அதுகூட உங்களுடைய க்ருபையினால்தான் தெரிந்திருக்கும். முன்பு நான் உங்களுடைய பெருமைகளை அறிந்ததில்லை. ஆகவே உங்களை அலக்ஷ்யப்படுத்தி வந்தேன். இன்று உங்கள் அருளினால், உங்கள் பெருமையில் ஏதோ சிறிது தெரிந்து கொண்டேன். உங்கள் பெருமையனைத்தையும் தெரிந்து கொண்டேன் என்று சொல்ல முடியாது. உங்கள் க்ருபை உங்கள் பெருமையை எவ்வளவு காட்டித் தந்ததோ, அத்தனையும்கூட நான் அறிந்து கொண்டேன் என்று சொல்லமுடியாது. ஆயினும் நான் தெரிந்து கொண்ட அளவில் நீங்கள் ஸர்வவல்லமை படைத்த பரமேசுவரன் என்பது தெரிகிறது. அத்தகைய உங்களிடம் எனக்கு ஸமமான நண்பன் என்ற முறையில் நடந்து கொண்டேனே. அந்தப் பிழையைப் பொறுத்தருள வேண்டும். இது போன்ற பிற பிழைகளையும் பொறுத்தருள வேண்டும்" என்று வேண்டுகிறார்.

**பொருத்தம்: இவ்விதம் பிழைகளைப் பொறுக்குமாறு இரு ச்லோகங்களில் வேண்டிக் கொண்ட பிறகு இனிவரும் இரண்டு ச்லோகங்களில் பகவானின் ப்ரபாவத்தை வர்ணித்து, பிழைகளைப் பொறுக்கக் கூடிய தகுதி அவருக்கு உண்டு என்று விளக்கி, தமக்கு முகம் மலர்ந்து அருளவேண்டும் என்றும் வேண்டுகிறார்—**

पितासि लोकस्य चराचरस्य त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान्।
न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यो लोकत्रयेऽप्यप्रतिमप्रभाव ॥ ४३ ॥

**பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய**
**த்வமஸ்ய பூஜ்யஸ்ச குருர்கரீயாந் ।**
**ந த்வத்ஸமோऽஸ்த்யப்யதிக: குதோऽந்யோ**
**லோகத்ரயேऽப்யப்ரதிமப்ரபாவ ॥ 43 ॥**

**த்வம்** — நீங்கள், **அஸ்ய** — இந்த, **சராசரஸ்ய** — அசைவனவும், அசையாதனவும் கொண்ட, **லோகஸ்ய** — உலகத்திற்கு, **பிதா** — தந்தையாகவும், **கரீயாந்** — எல்லோரைக் காட்டிலும் மிகவும் உயர்ந்த, **குரு:** — குருவாகவும், **பூஜ்ய: ச** — போற்றத் தகுந்தவராகவும், **அஸி** — இருக்கிறீர்கள். **அப்ரதிம ப்ரபாவ** — இணையற்ற மஹிமை உடையவரே! **லோகத்ரயே** — மூவுலகிலும், **அந்ய:** — வேறு எவரும், **த்வத்ஸம: அபி** — உங்களுக்கு நிகரானவர்கூட, **ந அஸ்தி** — கிடையாது. (பின்), **அப்யதிக:** — உங்களினும் மேம்பட்டவர், **குத:** — எவ்வாறு இருக்க முடியும்?

"பகவான் ஸ்ரீக்ருஷ்ணனுடன் நான் படுத்து, உட்கார்ந்து, அலைந்து, பேசி, உணவருந்தின நேரங்களில் அவருடன் ஸமமாகப் பழகினேன். 'நண்ப! அடேயப்பா நீ உண்மையே பேசுகிறவன்' என்றெல்லாம் கேலி செய்திருக்கிறேன். ஆனால், மஹாத்மாவான ப்ரபு தமது பெருந்தன்மையினால் தீய புத்தியுடைய என் எல்லாப் பிழைகளையும், ஒருவன் தன் நண்பனுடைய பிழையைப் பொறுப்பது போலவும், தந்தை தனயனுடைய தவறைப் பொறுப்பது போலவும் பொறுத்துக் கொண்டார்."

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நீங்கள் இந்த அசைவனவும், அசையாதனவும் கொண்ட உலகத்திற்குத் தந்தையாகவும், எல்லோரைக் காட்டிலும் மிகவும் உயர்ந்த குருவாகவும் போற்றத் தகுந்தவராகவும் இருக்கிறீர்கள். இணையற்ற மஹிமை உடையவரே! மூவுலகிலும் எவரும் உங்களுக்கு நிகரானவர் கிடையாது. பின் உங்களினும் மேம்பட்டவர் எவ்வாறு இருக்க முடியும்?

**கேள்வி:** 'நீங்கள் இந்தச் சராசரமான உலகிற்குத் தந்தையாகவும், எல்லோரைக் காட்டிலும் உயர்ந்த குருவாகவும், போற்றத்தக்கவராகவும் இருக்கிறீர்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இப்படிக் கூறி, 'நீங்கள் என் பிழைகளைப் பொறுத்தருளக் கடமைப்பட்டவர்' என்று எடுத்துரைக்கிறார் அர்ஜுனன். "பகவானே! இவ்வுலகம் அனைத்தும் உங்களிடம் உண்டாயிற்று. அதனால் நீங்கள் இதற்குத் தந்தை. உலகில் எத்தனை மிகப் பெரிய தேவதைகள் உள்ளனரோ, மஹரிஷிகள், திறமை படைத்த வேறு பெரியோர்கள் உள்ளனரோ, அவர்கள் எல்லோரையும்விடப் பெரியவர் ப்ரம்மதேவன். முதன்முதலில் அவர்தான் உண்டானார். அவரே, என்றும் அழியாத உங்களுடைய தெய்விக ஞானத்தினால் எல்லோருக்கும் அவரவர் தகுதிகளுக்கேற்ற உபதேசங்கள் செய்கிறார். ஆனால் ப்ரபுவே! ப்ரம்மதேவன்கூட உங்களிடமிருந்து தோன்றியவர்தான். உங்களிடமிருந்துதான் அவர் ஞானத்தைப் பெறுகிறார். ஆகவே ஸர்வேசுவர! உலகில் மிகப் பெரும் குருநாதர் எவர் உண்டோ, அவருக்கும் நீங்கள் குரு. அகில உலகமும் எந்த தெய்வங்களையும், மஹரிஷிகளையும் போற்றி வணங்குகின்றதோ, அந்த தெய்வங்கள், மஹரிஷிகள் எல்லோரும் ப்ரம்மதேவன், வஸிஷ்டர் முதலானவர்களை வணங்குகிறார்கள். அந்த ப்ரம்மதேவனும், வஸிஷ்டர் முதலானோரும், ஒரு கணநேரமேனும் உங்களை தர்சித்துப் பூஜை செய்யமாட்டோமா என்று காத்திருக்கிறார்கள். அப்படி ஒரு தருணம் கிடைத்துவிட்டால், அது தங்களுடைய பெரும் பாக்யம் என்று கருதுகிறார்கள். எனவே பூஜிக்கத்தக்கவர்களாலும் பூஜிக்கப்படுபவர் நீங்கள் ஒருவர்தான். ஆகவே, சிறியோனான என்னுடைய பிழைகளைப் பொறுப்பது உங்களுக்கு எவ்வகையிலும் உசிதமானதுதான் என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'அப்ரதிமப்ரபாவ' என்றழைத்து 'மூவுலகிலும் வேறு எவரும் உங்களுக்கு இணையானவர் கிடையாது. பின் உங்களினும் மேம்பட்டவர் எப்படி இருக்க முடியும்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எவருடைய பெருமைக்கு ஈடு இணையில்லையோ, அவர் 'அப்ரதிமப்ரபாவர்' எனப்படுகிறார். "ப்ரம்மாண்டங்கள் அனைத்திலும், சிந்தனைக்கு அப்பாற்பட்ட உங்களுடைய அளவற்ற குணங்களுக்கோ, ஈசுவரத்தன்மைக்கோ, பெருமைக்கோ நிகரானவர் யாருமில்லை. உங்களுக்கு ஈடானவர் நீங்கள்தான். உங்களுக்கு ஈடாக வேறொருவர் இல்லை என்னும்போது உங்களுக்கு மேம்பட்டவர் ஒருவர் உண்டு என்று கற்பனைகூடச் செய்து பார்க்க முடியாது. ஒப்பாரும், மிக்காரும் இலையாய மாமாயன் நீங்கள். இந்த நிலையில் நீங்களே என் பிழைகளைப் பொறுக்காவிட்டால், கருணை வடிவே! வேறு யார் பொறுப்பார்?" என்கிறார் அர்ஜுனன்.

तस्मात्प्रणम्य प्रणिधाय कायं प्रसादये त्वामहमीशमीड्यम्।
पितेव पुत्रस्य सखेव सख्युः प्रियः प्रियायार्हसि देव सोढुम्॥४४॥

தஸ்மாத்ப்ரணம்ய ப்ரணித₄ாய காயம்
ப்ரஸாத₃யே த்₃வாமஹமீஶமீட்₃யம் ।
பிதேவ புத்ரஸ்ய ஸகே₂வ ஸக்₂யு:
ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தே₃வ ஸோடு₄ம் ॥ 44 ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**தஸ்மாத்** – ஆகவே, **ஈட்₃யம்** – துதிக்கத்தக்க, **ஈஸம்** – ஈசுவரனான, **த்வாம்** – உங்களை, **அஹம்** – நான், **காயம்** – என் உடலை, **ப்ரணிதா₄ய** – உங்களுடைய சரணங்களில் நன்கு அர்ப்பணித்து, **ப்ரணம்ய** – நமஸ்கரித்து, **ப்ரஸாத₃யே** – என்னிடம் மகிழ்ச்சி கொண்டவராக இருக்க வேண்டுகிறேன். **தே₃வ** – தெய்வமே! **பிதா** – தந்தை, **புத்ரஸ்ய இவ** – தனயனுடைய (குற்றங்களைப் பொறுப்பது) போலவும், **ஸகா₂** – நண்பன், **ஸக்₂யு: இவ** – நண்பனுடைய (குற்றங்களைப் பொறுப்பது போலவும்) **ப்ரிய:** – கணவன், **ப்ரியாயா:** – தன் அன்புக்குரிய மனைவியினுடைய, (**இவ** – குற்றங்களைப் பொறுப்பது) போலவும், **ஸோடு₄ம் அர்ஹஸி** – (என்னுடைய குற்றங்களனைத்தையும் நீங்கள்) பொறுத்துக் கொள்ளவேண்டும்.

ஆகவே துதிக்கத்தக்க ஈசுவரனான உங்களை நான் என் உடலை உங்களுடைய சரணங்களில் நன்கு அர்ப்பணித்து நமஸ்கரித்து என்னிடம் மகிழ்ச்சி கொண்டவராக இருக்க வேண்டுகிறேன். தெய்வமே! தந்தை தனயனுடைய குற்றங்களைப் பொறுப்பது போலவும், நண்பன் நண்பனுடைய குற்றங்களைப் பொறுப்பது போலவும், கணவன் தன் அன்புக்குரிய மனைவியினுடைய குற்றங்களைப் பொறுப்பது போலவும், என்னுடைய குற்றங்களனைத்தையும் நீங்கள் பொறுத்துக் கொள்ளவேண்டும்.

**கேள்வி:** *'தஸ்மாத்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** முன் ச்லோகத்தில் பகவானுடைய பெருமை மிகுந்த குணநலன்களைக் கூறி, அவற்றின் காரணமாக பகவான் முகம் மலர்ந்து கருணைபுரிய வேண்டும் என்பதற்கான காரணத்தை 'தஸ்மாத்' என்ற சொல் மூலம் அர்ஜுனன் காட்டுகிறார். "உங்களுக்கு இவ்வளவு ப்ரபாவங்கள், பெருமைகள் உள்ளன. என்னைப் போன்ற ஏழை எளியோன், உங்களைச் சரணடைந்தால் அவனிடம் கருணைகாட்டி அருளுவது என்பது உங்கள் இயல்பு என்று அறிவேன். ஆகவே, துணிச்சலுடன் உங்களை வணங்கிக் கேட்கிறேன். என் மீது அன்பு கொண்டு அருள் புரியுங்கள்" என்று வேண்டுகிறார்.

**கேள்வி:** *'த்வாம்' என்ற சொல்லுக்கு 'ஈசம்', 'ஈட்யம்' என்கிற அடைமொழிகளைக் கொடுத்து, 'என் உடலை உங்களிடம் ஒப்படைத்து ஸாஷ்டாங்கமாக நன்கு நமஸ்கரித்து கருணை புரிய உங்களை வேண்டுகிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** எல்லோரையும் அடக்கி ஆள்பவர் 'ஈசன்'; துதிக்கத்தக்க பெருமையுடையவர் 'ஈட்யன்' எனப்படுவார். "இந்த அகில உலகத்தையும் கட்டிக் காக்கும் – இந்த்ரன், சூரியன், வருணன், குபேரன், யமன் உட்பட உலகத்தை அடக்கி ஆள்கின்ற எல்லா தேவதைகளையும், தம்முடைய கட்டுப்பாட்டில் வைத்துக் கொண்டிருக்கிறவர் மஹேசுவரனாகிய நீங்கள் ஒருவரே. உங்களுடைய குணங்கள், கௌரவம், பெருமை மிகவும் விரிந்தன. அகில உலகமும் சேர்ந்து எப்பொழுதுமே உங்களுடைய புகழைப் பாடினாலும் உங்களுடைய பெருமையை முழுமையாக எடுத்துச் சொல்லிவிட்டதாக ஆகாது. ஆகவே, 'துதிக்கத்தக்கவர்' என்றால் அவர் நீங்கள்தான். உங்களைத் துதித்து மகிழ்விக்கப் போதிய ஞானமும், சொல்லாட்சியும் என்னிடம் இல்லை. அறிவற்ற நான் என்ன சொல்லி உங்களைத் துதிப்பேன்? உங்கள் ப்ரபாவத்தைக் கூறுவதாக ஏதாவது சொல்ல ஆரம்பித்தால் அது உங்கள் ப்ரபாவத்தின் நிழலைக்கூடத் தொட முடியாது. நான் செய்யும் துதி உங்கள் பெருமையைக் குறைப்பதாகவேதான் ஆகும். நான் என்னுடைய உடலை ஒரு மரக்கட்டையைப் போல உங்கள் சரணங்களில் வீழ்த்துகிறேன். என்னுடைய உடல் உறுப்புகள் அனைத்தும் உங்கள் திருவடித்துகளில் படியும்படி வணங்குகிறேன். உங்களை மகிழ்விக்க விரும்புகிறேன். உங்களையே அண்டியிருக்கும் என்னை மன்னித்துத் தயவு செய்து பிழைகளை மறந்து எனக்கு அருள்புரியுங்கள்" என்று அர்ஜுனன் வேண்டுகிறார்.

**கேள்வி:** *'தந்தை தனயனின்', 'நண்பன் நண்பனின்', 'கணவன் மனைவியின்' என்று உவமைகள் கூறிப் பிழை பொறுக்கும்படி கூறுவதன் கருத்து என்ன?*

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** 41,42வது ச்லோகங்களில் அசட்டையினாலும், பரிஹாஸம் செய்வதாலும், அன்பினாலும் மனிதர்கள் பிழை செய்கிறார்கள் என்றார். இங்கே அந்த மூன்று உவமைகளையும் எடுத்துக்காட்டி பகவானிடம் அர்ஜுனன் வேண்டுகிறார். 'இந்த முக்காரணங்களால் செய்யப்பட்ட பிழைகளை நீங்கள் பொறுத்தருள வேண்டும்' என்கிறார். 'அறியாமல் அசட்டையினால் தம் தனயன் செய்யும் பிழையைத் தந்தை பொறுத்துக் கொள்வார். விநோதமாகத் தன் நண்பன் செய்யும் பிழையை நண்பன் பொறுத்துக் கொள்வான். அன்பினால் மனைவி செய்யும் பிழையைக் கணவன் பொறுத்துக் கொள்வான்.'

**பொருத்தம்:** இவ்விதம் தம் பிழைகளைப் பொறுத்தருள வேண்டும் என்று பகவானிடம் வேண்டிக் கொண்ட அர்ஜுனன், பகவான் தமது சதுர்புஜ (நான்கு கைகளுடைய) நாராயண ஸ்வரூபத்தைக் காட்டியருளுமாறு அவரிடம் இரண்டு ச்லோகங்களில் வேண்டுகிறார்—

**अदृष्टपूर्वं हृषितोऽस्मि दृष्ट्वा भयेन च प्रव्यथितं मनो मे।**
**तदेव मे दर्शय देवरूपं प्रसीद देवेश जगन्निवास॥४५॥**

**அத்₃ருஷ்டபூர்வம் ஹ்ருஷிதோऽஸ்மி த்₃ருஷ்ட்வா**
**ப₄யேந ச ப்ரவ்யதி₂தம் மநோ மே ।**
**ததே₃வ மே த₃ர்ஶய தே₃வரூபம்**
**ப்ரஸீத₃ தே₃வேஶ ஜக₃ந்நிவாஸ ॥ 45 ॥**

**அத்₃ருஷ்டபூர்வம்** – இதற்கு முன் நான் பார்த்திராத (இந்த ஆச்சரியமான உருவத்தை), **த்₃ருஷ்ட்வா** – பார்த்து, **ஹ்ருஷித:** – மகிழ்ச்சி கொண்டவனாக, **அஸ்மி** – இருக்கிறேன். **மே** – என்னுடைய, **மந:** – மனம், **ப₄யேந** – பயத்தினால், **ப்ரவ்யதி₂தம் ச** – மிகவும் நடுங்கிக் கொண்டும் இருக்கிறது. (ஆகவே நீங்கள்), **தத்** – அந்த, **தே₃வரூபம் ஏவ** – நான்கு கைகளுடன் கூடிய விஷ்ணு ஸ்வரூபத்தையே, **மே** – எனக்கு, **த₃ர்ஶய** – காண்பியுங்கள். **தே₃வேஶ** – தேவதேவனே! **ஜக₃ந்நிவாஸ** – ஜகந்நிவாஸரே! **ப்ரஸீத₃** – திருவருள் புரியுங்கள்.

இதற்கு முன் நான் பார்த்திராத இந்த ஆச்சரியமான உருவத்தை (இப்போது) பார்த்து மகிழ்ச்சி கொண்டவனாக இருக்கிறேன். என்னுடைய மனம் பயத்தினால் மிகவும் நடுங்கிக் கொண்டு இருக்கிறது. ஆகவே நீங்கள் அந்த நான்கு கைகளுடன் கூடிய விஷ்ணு ஸ்வரூபத்தையே எனக்குக் காண்பியுங்கள். தேவதேவனே! ஜகந்நிவாஸரே! திருவருள் புரியுங்கள்.

**கேள்வி:** 'அத்ருஷ்டபூர்வம்' என்பதன் கருத்து என்ன? 'அந்த ஸ்வரூபத்தைப் பார்த்து மகிழ்கிறேன், பயத்தினால் மனதில் கலக்கமும் அடைகிறேன்' என்று அர்ஜுனன் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இதற்கு முன் எந்நாளும் பார்க்கப்படாத பகவானுடைய ஆச்சரியமயமான விசுவரூபத்தை 'அத்ருஷ்டபூர்வம்' என்று சொல்கிறார். 'உலகியலுக்கு அப்பாற்பட்ட உங்களுடைய இந்த ஸ்வரூபத்தில் உங்களுடைய குணங்கள், ப்ரபாவங்கள், ஈசுவரத்தன்மை இவற்றை நினைத்துப் பார்த்து மகிழ்கிறேன். நான் எவ்வளவு பெரிய பாக்யசாலி' என்கிறார். 'ஸாக்ஷாத் பரமாத்மா அற்பனான என்னிடம் தம்முடைய அளவற்ற கருணை, ஒப்பற்ற ப்ரேமை இவற்றைப் பொழிகிறார். உலகியலுக்கு அப்பாற்பட்ட தம்முடைய இந்த ஸ்வரூபத்தைக் காண்பிக்கிறார். ஆனால் கூடவே தம்முடைய பயங்கரமான மூர்த்தியின்பால்



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



என் கண்களை ஈர்க்கும்போது எனது மனம் பயத்தினால் நடுங்குகிறது, மனதில் கலக்கமும் ஏற்படுகிறது' என்கிறார்.

இதைக் காரணமாகச் சொல்லி, 'இந்த ஸ்வரூபத்தை விரைவில் மறைத்துக் கொள்ளுங்கள்' என்று அர்ஜுனன் பகவானை வேண்டுகிறார்.

**கேள்வி:** 'தத் ஏவ' – 'அந்த ஸ்ரீநாராயண ஸ்வரூபத்தையே காண்பியுங்கள்' என்று வேண்டுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'அது' என்பது கண்முன் இல்லாதது. இப்பொழுது பார்த்த விராட் ஸ்வரூபத்திற்கு முன்னால் பார்க்கப்பட்ட அதையே என்று அழுத்திக் கூறி, மற்ற ஸ்வரூபங்கள் வேண்டாம் என்று குறிப்பிடுகிறார். வைகுண்டத்தில் உறையும் திருமாலாக நான்கு திருக்கரங்களோடு நீங்கள் எப்படிக் காட்சி அளிப்பீர்களோ, அந்த சதுர்புஜ ஸ்வரூபத்தில் எனக்கு தர்சனம் தாருங்கள் என்று கூறுகிறார். 'அதை' என்று மட்டும் அர்ஜுனன் கூறியிருந்தால் மனித வடிவில் தாம் முன்னே கண்ட ஸ்ரீக்ருஷ்ண ஸ்வரூபம் என்று பொருள் கொள்ளலாம். ஆனால் தேவரூபம் என்றும் சேர்த்துக் கூறி இருப்பதால் 'மனித உருவம் அல்லாத தெய்விகமான சதுர்புஜ ஸ்வரூபத்தைக் குறிப்பிடுகிறார்' என்பது தெளிவாகிறது.

**கேள்வி:** 'தேவேஶ' என்றும், 'ஜகந்நிவாஸ' என்றும் அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** தேவர்களை அடக்கி ஆள்பவன் 'தேவேசன்'. உலகத்திற்கு ஆதாரமாக உலகம் எங்கும் வ்யாபித்திருப்பவன் 'ஜகந்நிவாஸன்'. 'நீங்கள் எல்லா தெய்வங்களுக்கும் தெய்வம். எல்லாவற்றிற்கும் ஆதாரமானவர். எங்கும் நிறைந்த பரமாத்மா. ஆகவே, நீங்களே உங்களுடைய தேவரூபத்தைக் காட்ட வல்லவர்' என்கிறார் அர்ஜுனன்.

**கேள்வி:** 'ப்ரஸீத' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ப்ரஸீத' என்ற சொல்லுக்கு மகிழ்ச்சி கொள்ளுங்கள் என்பது பொருள். 'விரைவில் இந்த பயங்கர ஸ்வரூபத்தை மறைத்துக் கொண்டு, உங்களுடைய சதுர்புஜ ஸ்வரூபத்தை உடனடியாக நான் தர்சிக்கும்படி அருள்புரியுங்கள்' என்கிறார்.

**किरीटिनं गदिनं चक्रहस्तमिच्छामि त्वां द्रष्टुमहं तथैव।**
**तेनैव रूपेण चतुर्भुजेन सहस्रबाहो भव विश्वमूर्ते ॥ ४६ ॥**

**கிரீடிநம் க₃தி₃நம் சக்ரஹஸ்த–**
**மிச்ச₂ாமி த்வாம் த்₃ரஷ்டுமஹம் ததை₂வ ।**
**தேநைவ ரூபேண சதுர்பு₄ஜேந**
**ஸஹஸ்ரபா₃ஹோ ப₄வ விஶ்வமூர்தே ॥ 46 ॥**

**கிரீடிநம்** – கிரீடம் தரித்தவராகவும், **க₃தி₃நம் சக்ரஹஸ்தம்** – கதாயுதத்தையும், சக்ராயுதத்தையும் கைகளில் ஏந்தியவராகவும், **தத₂ா ஏவ** – அந்த விதமாகவே (அந்த ஸ்வரூபத்திலே), **த்வாம்** – உங்களை, **த்₃ரஷ்டும்** – தர்சிக்க, **அஹம்** – நான், **இச்ச₂ாமி** – விரும்புகிறேன். (அத: – ஆகையால்), **விஶ்வமூர்தே** – விசுவரூபம் கொண்டவரே! **ஸஹஸ்ரபா₃ஹோ** – ஆயிரக்கணக்கான திருக்கரங்களுடையவரே! **தேந ஏவ** – அதே, **சதுர்பு₄ஜேந ரூபேண** – நான்கு கைகள் கொண்ட அந்த ஸ்வரூபத்துடனேயே, **ப₄வ** – தர்சனம் அளியுங்கள்.

கிரீடம் தரித்தவராகவும், கதாயுதத்தையும், சக்ராயுதத்தையும், கைகளில் ஏந்தியவராகவும் உள்ள அந்த ஸ்வரூபத்திலே உங்களை தர்சிக்க நான் விரும்புகிறேன். ஆகையால் விசுவரூபம் கொண்டவரே! ஆயிரக்கணக்கான திருக்கரங்களுடையவரே! அதே நான்கு கைகள் கொண்ட அந்த ஸ்வரூபத்துடனேயே தர்சனம் அளியுங்கள்."



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ததா ஏவ' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மஹாபாரத யுத்தத்தில் பகவான் தாம் ஆயுதம் எடுப்பதில்லை என்று ப்ரதிக்ஞை செய்துவிட்டார். சவுக்கையும், குதிரைகளின் கடிவாளத்தையும் கைகளில் ஏந்தி அர்ஜுனனுடைய ரதத்தில் அமர்ந்து இருந்தார். இந்த இரண்டு திருக்கரங்களோடு கூடிய ஸ்வரூபத்தைக் காண்பதற்கு முன் கைகளில் கதாயுதம், சக்ரம் முதலியவற்றைத் தாங்கிய அந்த சதுர்புஜ ஸ்வரூபத்தைக் காண அர்ஜுனன் விரும்புகிறார். இந்த நோக்கில்தான் 'ததா' எனும் சொல்லோடு 'ஏவ' எனும் சொல்லையும் உபயோகித்துள்ளார்.

**கேள்வி:** 'தேந ஏவ' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** முன் ச்லோகத்தில் கூறப்பட்ட அதே தேவரூபம் என்று பொருள். 'அதே சதுர்புஜ ஸ்வரூபனாக நீங்கள் ஆகவேண்டும்' என்று கூறுகிறார். 'அதே' என்று அழுத்திக் கூறுவதிலிருந்து 'அர்ஜுனன் எப்பொழுதும் பார்த்துக் கொண்டிருக்கும் இரண்டு கைகள் உள்ள ஸ்வரூபத்தைக் குறிப்பிடவில்லை. சதுர்புஜ நாராயண ஸ்வரூபத்தையே காண விரும்புகிறார்' என்பது விளங்குகிறது.

**கேள்வி:** 'சதுர்புஜரூபம்' என்பது ஸ்ரீக்ருஷ்ணனைக் குறித்ததா அல்லது தேவரூபம் என்பதால் பகவான் ஸ்ரீவிஷ்ணுவையா?

**பதில்:** ஸ்ரீவிஷ்ணுவைத்தான் கூறுகிறார். அதற்குச் சில காரணங்களைக் கூறுவோம்—

(1) கண்ணபிரானுக்கு இயல்பாகவே சதுர்புஜ ரூபம் இருக்குமேயானால் 'கதை, சக்ராயுதங்களுடன் கூடிய' என்று குறிப்பிட்டுச் சொல்ல அவசியமில்லை. அர்ஜுனன் பகவானை அவ்விதமே பார்த்துக் கொண்டுதான் இருந்திருக்கிறார். 'சதுர்புஜ ரூபேண ஏவ' என்று கூற வேண்டியதில்லை. 'நான் சற்றுமுன் பார்த்த ஸ்வரூபத்தைக் காண்பியுங்கள்' என்று கூறினாலே போதும்.

(2) முன் ச்லோகத்தில் தேவரூபம் என்ற சொல் வந்திருக்கிறது. இனி 51ல் மனித வடிவம் என்று குறிப்பிட்டுச் சொல்வதிலிருந்து இது தனிப்பட்டது. ஆகவே, தேவரூபம் என்றால் விஷ்ணு ஸ்வரூபம்தான் என்று தெளிவாகிறது.

(3) அடுத்து 50ல் வரும் 'ஸ்வகம் ரூபம்', என்பதோடு 'பூய:' என்றும், 'ஸௌம்யவபு:' என்பதுடன் 'புந:' என்றும் பதங்கள் வருவதால், இங்கு முதலில் சதுர்புஜம் கொண்ட ஸ்வரூபமும், பிறகு இரண்டு கைகளுள்ள மானிட வடிவும் காண்பிக்கப்படுவது தெளிவாகிறது.

(4) இனி 52ல் 'ஸுதுர்தர்சம்' என்று கூறுகிறார். ஆகவே இந்த சதுர்புஜ உருவத்தைக் காண்பது மிகவும் அரிது. தேவர்கள்கூட இந்த ஸ்வரூபத்தைக் காண மிகுந்த ஆவலுடன் இருக்கிறார்கள் என்று கூறுகிறார். ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஸ்வரூபம் இயல்பாகவே சதுர்புஜ ஸ்வரூபமானால் அதை மனிதர்களும் பார்த்திருக்க முடியும். தேவர்கள் பார்க்க மிக ஆவலாக இருக்கிறார்கள் என்று கூறுவது பொருந்தாது. பீஷ்மரும், த்ரோணரும் விசுவரூப பகவானுடைய பற்களிடையே அடிபட்டுச் சூர்ணமாகின்ற பயங்கரமான விசுவரூபத்தைப் பார்க்க தேவர்கள் கூட ஏன் ஆவல் கொள்ள வேண்டும்? ஆகவே, அவர்களும் பகவான் வைகுண்டத்தில் திருக்காட்சி தரும் சதுர்புஜ விஷ்ணு ஸ்வரூபத்தைத்தான் காண விரும்புகிறார்கள் என்பது புலப்படுகிறது.

(5) 48வது ச்லோகத்தில் விராட் ஸ்வரூபத்தின் மஹிமை வேதங்களைக் கற்பதாலோ, யாகத்தின் செய்முறைகளைக் கற்பதாலோ காண முடியாது என்று புகழப்படுகிறது. பிறகு ச்லோகம் 53லும் வேதங்களாலும், தவத்தினாலும் அந்த ஸ்வரூபத்தைக் காண முடியாது என்று கூறுகிறார். இரு இடங்களிலும் ஒரே விராட் ரூபத்தின் மஹிமையைப் பற்றித்தான் பேசுகிறார் எனில் சொன்னதையே திரும்பக் கூறியதாக ஆகும். இதனாலும் மனித வடிவம் காண்பிப்பதற்கு முன்னால் பகவான் அர்ஜுனனுக்கு சதுர்புஜ தேவ ரூபத்தைக் காண்பித்தார் என்பது நிரூபணமாகிறது. அதன் பெருமை 53வது ச்லோகத்தில் கூறப்படுகிறது.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



(6) இதே அத்யாயத்தில் ச்லோகம் 24லும், 30லும் அர்ஜுனன் பகவானை 'விஷ்ணோ' என்று அழைக்கிறார். ஆகவே அவருக்கு விஷ்ணு ஸ்வரூபத்தைக் காணும் விருப்பம் உள்ளது என்பது தெரிகிறது.

இக்காரணங்களினால் அர்ஜுனன் இங்கு 'சதுர்புஜ விஷ்ணு ஸ்வரூபத்தைக் காண்பியுங்கள்' என்று ஸ்ரீக்ருஷ்ணனை வேண்டுகிறார் என்பது தெளிவு.

கேள்வி: 'ஸஹஸ்ரபாஹோ விச்வமூர்தே' என்றழைத்துச் சதுர்புஜனாகக் காட்சி தாருங்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?

பதில்: பகவான் தற்போது ஆயிரம் கைகளுடன் விசுவரூபனாகக் காட்சி அளிக்கிறார். அந்த உருவத்தை மறைத்து, சதுர்புஜனாகக் காட்சி தரும்படி இப்பெயர்களைச் சொல்லியழைத்து பகவானை வேண்டுகிறார்.

**பொருத்தம்: அர்ஜுனனுடைய வேண்டுகோளின்படி பகவான் இனிவரும் இரண்டு ச்லோகங்களில் தம்முடைய விசுவரூபத்தின் மஹிமையையும், அரிய தன்மையையும் வர்ணித்து 49வது ச்லோகத்தில் அர்ஜுனனுக்கு ஆறுதல் அளித்து, 'சதுர்புஜ ஸ்வரூபத்தைப் பார்' என்கிறார்—**

श्रीभगवानुवाच

**मया प्रसन्नेन तवार्जुनेदं रूपं परं दर्शितमात्मयोगात्।**
**तेजोमयं विश्वमनन्तमाद्यं यन्मे त्वदन्येन न दृष्टपूर्वम्॥४७॥**

**ஸ்ரீப₄க₃வாநுவாச**

**மயா ப்ரஸந்நேந தவார்ஜுநேத₃ம்**
**ரூபம் பரம் த₃ர்ஶிதமாத்மயோகா₃த் ।**
**தேஜோமயம் விஶ்வமநந்தமாத்₃யம்**
**யந்மே த்வத₃ந்யேந ந த்₃ருஷ்டபூர்வம் ॥ 47 ॥**

**ஸ்ரீப₄க₃வாநுவாச** – ஸ்ரீபகவான் கூறினார்: **அர்ஜுந** – அர்ஜுன! **ப்ரஸந்நேந** – அனுக்ரஹபூர்வமாய், **மயா** – என்னால், **ஆத்மயோகா₃த்** – என்னுடைய யோகசக்தியினால், **பரம்** – மிகச்சிறந்ததும், **தேஜோமயம்** – ஒளிமயமானதும், **ஆத்₃யம்** – எல்லாவற்றிற்கும் முதலானதும், **அநந்தம்** – முடிவற்றதுமான, **யத்** – எந்த, **மே** – என்னுடைய, **விஶ்வம் ரூபம்** – விராட் ஸ்வரூபம் (பேருரு), **தவ** – உனக்கு, **த₃ர்ஶிதம்** – காட்டப்பட்டதோ, **இத₃ம்** – இந்த விசுவரூபம், **த்வத₃ந்யேந** – உன்னைத் தவிர வேறெவராலும், **ந த்₃ருஷ்டபூர்வம்** – இதற்கு முன் பார்க்கப்படவில்லை.

ஸ்ரீபகவான் கூறினார்: "அர்ஜுன! அனுக்ரஹபூர்வமாய் என்னால் என்னுடைய யோகசக்தியினால் மிகச்சிறந்ததும் ஒளிமயமானதும் எல்லாவற்றிற்கும் முதலானதும் முடிவற்றதுமான உனக்குக் காட்டப்பட்ட என்னுடைய விராட் ஸ்வரூபம் (பேருரு) உன்னைத் தவிர வேறெவராலும் இதற்கு முன் பார்க்கப்படவில்லை.

கேள்வி: 'மயா' என்பதோடு 'ப்ரஸந்நேந' எனும் அடைமொழி தருவதன் கருத்து என்ன?

பதில்: "உன்னுடைய பக்தியினாலும், வேண்டுகோளினாலும் உன்னிடம் மகிழ்ச்சி அடைந்த நான் உன் மீது கருணை கொண்டு என்னுடைய குணங்கள், ப்ரபாவங்கள், தத்வங்களை உனக்குப் புலப்பட வைக்க வேண்டுமென, உலகியலுக்கு அப்பாற்பட்ட என் ஸ்வரூபத்தை நான் உனக்குக் காண்பித்தேன். இந்நிலையில் உனக்கு பயமும், துன்பமும், மோஹமும் ஏற்பட வேண்டியதில்லை. பின் ஏன் பயத்தினால் இப்படி நடுக்கமுறுகிறாய்?" என்கிறார்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ஆத்மயோகாத்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** "இந்த என்னுடைய விராட் ஸ்வரூப தர்சனம் எல்லோருக்கும் எல்லாக் காலங்களிலும் கிடைக்காது. நானாக எப்போது என்னுடைய யோகசக்தியினால் காண்பிக்கிறேனோ, அப்பொழுதுதான் இந்த தர்சனம் கிடைக்கும். அதுவும் என்னிடமிருந்து தெய்விகப் பார்வை பெற்றவனுக்குத்தான் கிடைக்கும்; மற்றவருக்கு அன்று. ஆகவே இந்த விசுவரூப தர்சனம் என்பது கிடைத்தற்கரிய பெரும்பேறு என்று தெரிந்து கொள்" என்கிறார்.

**கேள்வி:** இங்கு 'ரூபம்' என்பதற்கு 'இதம், பரம், தேஜோமயம், ஆத்யம், அநந்தம், விஶ்வம்' என்ற அடைமொழிகள் கொடுப்பதன் கருத்து என்ன?

**பதில்:** இவ்வித அடைமொழிகளால் உலகியலுக்கு அப்பாற்பட்ட, அற்புதமான விராட் ஸ்வரூபத்தினுடைய பெருமையை பகவான் அர்ஜுனனுக்கு உணர்த்துகிறார். "என்னுடைய இந்த ஸ்வரூபம் மிகவும் உயரியது; தெய்விகமானது; எல்லையற்றது; தெய்விகப் பேரொளி பெற்றது; எல்லாவற்றையும் உண்டாக்குவது; எல்லாவற்றிற்கும் முதன்மையானது; எல்லையற்று விரிந்தது. எந்தப் புறத்திலும் இதன் முதலிறுதி காண முடியாது. நீ பார்ப்பதுகூட முழுமையான ஸ்வரூபம் அன்று. என்னுடைய பெரும் ஸ்வரூபத்தின் ஒரு பகுதிதான்" என்று உணர்த்துகிறார்.

**கேள்வி:** 'உன்னைத் தவிர இதற்கு முன் வேறு எவராலும் பார்க்கப்படவில்லை' என்று கூறுகிறாரே, இதற்கு முன் யசோதைக்குத் தம் வாயிலும், கௌரவ மன்றத்தில் பீஷ்மர் முதலானோர் கூடி இருந்தபோதும் தம்முடைய விராட் ஸ்வரூபத்தைக் காண்பித்திருக்கிறாரே!

**பதில்:** யசோதை, பாலக்ருஷ்ணன் வாயில் பார்த்ததற்கும், கௌரவ மன்றத்தில் பீஷ்மர் முதலானோர் பார்த்ததற்கும், இப்பொழுது அர்ஜுனன் பார்ப்பதற்கும் மிகுந்த வேறுபாடுகள் உள. மூன்றும் மூன்றுவிதமாக வெவ்வேறாக வர்ணிக்கப்பட்டுள்ளன. அர்ஜுனன் பார்த்த ஸ்வரூபத்தில் பீஷ்மர், த்ரோணர் முதலானோர் பகவானுடைய கொழுந்துவிட்டெரியும் வாயில் நுழைவது காணப்பட்டது. இத்தகைய விசுவரூபத்தை பகவான் இதற்கு முன் யாருக்கும் காண்பித்ததே இல்லை. ஆகவே பகவான் கூற்றில் ஒரு முரண்பாடும் இல்லை:

न वेदयज्ञाध्ययनैर्न दानैर्न च क्रियाभिर्न तपोभिरुग्रैः।
एवंरूपः शक्य अहं नृलोके द्रष्टुं त्वदन्येन कुरुप्रवीर॥ ४८ ॥

ந வேத₃யஜ்ஞாத்₄யயநைர்ந தா₃நைர்—
ந ச க்ரியாபி₄ர்ந தபோபி₄ருக்₃ரை: ।
ஏவம்ரூப: ஶக்ய அஹம் ந்ருலோகே
த்₃ரஷ்டும் த்வத₃ந்யேந குருப்ரவீர ॥ 48 ॥

**குருப்ரவீர** — அர்ஜுன! **ந்ருலோகே** — மனித உலகில், **த்வத₃ந்யேந** — உன்னைத் தவிர வேறு யாராலும், **ஏவம்ரூப:** — இந்த விசுவரூபம் தாங்கிய, **அஹம்** — நான், **த்₃ரஷ்டும் ந ஶக்ய:** — காணப்பட இயலாதவன்; **வேத₃ யஜ்ஞ அத்₄யயநை:** — வேதங்களையும், யாகத்தின் செயல்முறைகளையும் கற்பதாலோ, **தா₃நை:** — தானங்களாலோ, **ந (த்₃ரஷ்டும் ஶக்ய:)** — காணப்பட இயலாதவன், **க்ரியாபி₄:** — கர்மங்களாலும், **ந (த்₃ரஷ்டும் ஶக்ய:)** — காணப்பட முடியாதவன்; **உக்₃ரை:** — உக்ரமான, **தபோபி₄: ச** — தவங்களாலும்கூட, **ந (த்₃ரஷ்டும் ஶக்ய:)** — காணப்பட முடியாதவன்.

அர்ஜுன! மனித உலகில் உன்னைத் தவிர வேறு யாராலும் இந்த விசுவரூபம் தாங்கிய நான் காணப்பட இயலாதவன்; வேதங்களையும், யாகத்தின் செயல்முறைகளையும் கற்பதாலோ தானங்களாலோ காணப்பட இயலாதவன்; கர்மங்களாலும் காணப்பட முடியாதவன்; உக்ரமான தவங்களாலும்கூடக் காணப்பட முடியாதவன்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'வேதங்களையும், யாகத்தின் செயல்முறைகளையும் கற்பது, தானங்கள் அளிப்பது, கர்மங்களைச் செய்வது, கடுந்தவம் செய்வது இவற்றினாலும் பகவானுடைய விராட் ஸ்வரூபத்தைப் பார்க்க முடியாது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** வேதங்களை முழுவதும் கற்ற ஆசார்யரிடம் வேதங்களின் அங்கங்கள், உப அங்கங்களோடு கூட அவற்றை முறைப்படி கற்பதுதான் 'வேத அத்யயனம்' ஆகும். யக்ஞம் செய்யும் முறைகளில் நிபுணர்களான யக்ஞ வேத்தாவுக்குப் பணிவிடை செய்து, அவர்களிடமிருந்து யாகத்தின் முறைகளைக் கற்றும், அவர்கள் தலைமையில் முறைப்படி ஆற்றப்படும் யக்ஞங்களை நேரிடையாகக் கவனித்தும், யக்ஞம் பற்றிய காரியங்களை நன்கு அறிந்து கொள்வதும் 'யஜ்ஞ அத்யயநம்' ஆகும்.

தனம், ஸம்பத்து, அன்னம், நீர், கல்வி, பசு, நிலம் ஆகிய தன் உடைமைகளைப் பிறரின் மகிழ்ச்சிக்காகவும், நலனுக்காகவும் நிறைந்த மனதுடன் தக்கவருக்குத் தக்கபடி அளிப்பது 'தாநம்' ஆகும்.

வேதங்களிலும், ஸ்ம்ருதிகளிலும் கூறப்பட்ட யக்ஞங்கள் முதலியவற்றைச் செய்வதும், தன்னுடைய வர்ண ஆசிரம தர்மத்தைக் கடைப்பிடிப்பதற்காக சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்வதும் 'க்ரியைகள்' ஆகும்.

க்ருச்ரம், சாந்த்ராயணம் முதலிய வ்ரதங்களை வெவ்வேறு விதமான கடுமையான கட்டுப்பாடுகளுடன் கடைப்பிடிப்பது; மனதையும், புலன்களையும், விவேகத்துடனும், உறுதியுடனும் அடக்கி வைப்பது; தர்மத்தின் பொருட்டு உடலிலும், மனதிலும் ஏற்படும் பலவித கஷ்டங்களைப் பொறுத்துக் கொள்வது; மற்றும் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட வெவ்வேறுவிதமான தவங்களைச் செய்வது இவையெல்லாம் 'உக்ரமான தவங்கள்' ஆகின்றன.

இத்தகைய எல்லா ஸாதனைகளையும் புரிந்தாலும், தம்முடைய விசுவரூப தர்சனம் கிடைத்தல் அரிது என்று கூறி, அதன் பெருமையை விளக்குகிறார். "இவ்விதமான பெருமுயற்சிகளினாலும் பெறுதற்கரிய விசுவரூப தர்சனத்தை நீ பெற்றது என்னுடைய கருணையினாலும், அருளினாலும்தான். அது உன்னுடைய பெரும் பாக்யம். இந்த நேரத்தில் உனக்கு பயமும், கலக்கமும், மோஹமும் உண்டாவது சரியன்று" என்று கூறுகிறார்.

**கேள்வி:** அர்ஜுனனைத் தவிர வேறு யாரும் விராட் ஸ்வரூபத்தைப் பார்க்க முடியாது என்று கூறும்போது 'ந்ருலோகே' (மனித உலகத்தில்) என்று ஏன் கூறுகிறார்? மற்ற உலகங்களில் காண முடியுமா?

**பதில்:** முன் சொன்ன வேத அத்யயனம், தானம், தவம் முதலியன செய்யும் தகுதி மனித உலகில் உள்ளவர்களுக்குத்தான் உண்டு. மனித உடலைப் பெற்றவர்கள்தான் மேலும் புதிதான, விதவிதமான கர்மங்களைச் செய்து உரிமைகளைப் பெற வாய்ப்பு உண்டு. மற்ற உலகங்களெல்லாம் பெரும்பாலும் போக ஸ்தானங்கள்தான். மனித உலகின் பெருமையை எடுத்துக்காட்டவே இங்கே 'மனித உலகில்' என்று கூறுகிறார். மனித உலகிலேயே கூட மேலே கூறப்பட்ட ஸாதனைகள் புரிந்து என் ஸ்வரூபத்தை வேறொருவரும் பார்க்க முடியாதென்றால், மற்ற உலகங்களிலும் ஸாதனை எதுவும் புரியாமலும் யாரும் பார்க்க முடியவே முடியாது என்று சொல்லவும் வேண்டுமா என்று பொருள்.

**கேள்வி:** 'குருப்ரவீர' என்று அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** 'நீ கௌரவர்களில் சிறந்த வீரன். இத்தகைய நீ இவ்விதம் பயப்படுவது அழகன்று. ஆகவே பயப்படாதே' என்கிறார்.

**मा ते व्यथा मा च विमूढभावो दृष्ट्वा रूपं घोरमीदृङ्ममेदम्।**
**व्यपेतभीः प्रीतमनाः पुनस्त्वं तदेव मे रूपमिदं प्रपश्य॥ ४९॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மா தே வ்யதா₂ மா ச விமூட₄பா₄வோ
த்₃ருஷ்ட்வா ரூபம் கோ₄ரமீத்₃ருங்மமேத₃ம் ।
வ்யபேதபீ₄: ப்ரீதமநா: புநஸ்த்வம்
தத₃ேவ மே ரூபமித₃ம் ப்ரபஶ்ய ॥ 49 ॥

ஈத்₃ருக் – இத்தகைய, மம – என்னுடைய, கோ₄ரம் – கோரமான (அச்சுறுத்தும்), இத₃ம் – இந்த, ரூபம் – ஸ்வரூபத்தை, த்₃ருஷ்ட்வா – பார்த்து, தே – உனக்கு, வ்யதா₂ – கலக்கம், மா – வேண்டாம்; விமூட₄பா₄வ: ச – மதிமயக்கமும், மா – வேண்டாம். த்வம் – நீ, வ்யபேதபீ₄: – பயத்தைத் துறந்து, ப்ரீதமநா: – மனமகிழ்ச்சியுடன், தத் ஏவ – அதே, மே – என்னுடைய, இத₃ம் ரூபம் – சங்கு, சக்ர, கதை, பத்மம் இவற்றை நான்கு கைகளிலும் ஏந்தியுள்ள ஸ்வரூபத்தையே, புந: – மறுபடியும், ப்ரபஶ்ய – நன்கு பார்.

இத்தகைய என்னுடைய கோரமான (அச்சுறுத்தும்) இந்த ஸ்வரூபத்தைப் பார்த்து உனக்குக் கலக்கம் வேண்டாம்; மதிமயக்கமும் வேண்டாம். நீ பயத்தைத் துறந்து மனமகிழ்ச்சியுடன் அதே என்னுடைய சங்கு, சக்ர, கதை, பத்மம் இவற்றை நான்கு கைகளிலும் ஏந்தியுள்ள ஸ்வரூபத்தையே மறுபடியும் நன்கு பார்."

கேள்வி: 'இவ்விதமான அச்சுறுத்தும் என்னுடைய இந்த ஸ்வரூபத்தைப் பார்த்து உனக்குக் கலக்கம் வேண்டாம்; மதிமயக்கமும் வேண்டாம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

பதில்: "நான் அருள்கூர்ந்து மிகவும் அரிதான இந்த விராட் ஸ்வரூபத்தை உனக்குக் காண்பித்தேன். அதனால் உன்னுடைய உள்ளத்தில் கலக்கமும், மயக்கமும் ஏற்படுவது தகாது. ஆயினும் இதைப் பார்த்து உனக்கு கலக்கமும், மோஹமும் உண்டாகின்றன. அதனால் என் இந்த ஸ்வரூபத்தை மறைத்துக் கொள்ள வேண்டும் என்கிறாய். உன் விருப்பப்படி உனக்கு ஸுகம் அளிப்பதற்காக நான் இப்போது இந்த ஸ்வரூபத்தை உன் எதிரிலேயே மறைத்துக் கொள்கிறேன். நீ பயந்து மயங்கிக் கலக்கமுற வேண்டாம்" என்கிறார்.

கேள்வி: 'த்வம்' (நீ) என்பதற்கு 'வ்யபேதபீ:' (பயத்தைத் துறந்து), 'ப்ரீதமநா:' (மனமகிழ்ச்சியுடன்) எனும் அடைமொழிகள் கொடுப்பதன் கருத்து என்ன?

பதில்: 'எந்த ஸ்வரூபத்தைப் பார்த்து உனக்கு பயமும், கலக்கமும் ஏற்பட்டதோ, அதை மறைத்துக் கொண்டு நீ விரும்புகின்ற சதுர்புஜரூபத்தில் வெளிப்படுகிறேன். பயம் நீங்கி மகிழ்ச்சியுடன் இரு' என்கிறார்.

கேள்வி: 'ரூபம்' என்பதுடன் சேர்த்துள்ள 'தத்', 'இதம்' எனும் அடைமொழிகளின் கருத்து என்ன? அப்படியே 'புந:' எனும் சொல்லைக் கூறி, அந்த ஸ்வரூபத்தைப் பார் என்று கூறுவதன் கருத்து என்ன?

பதில்: "எந்த சதுர்புஜ தேவரூபத்தை உனக்கு முன்பு காண்பித்தேனோ, எந்த சதுர்புஜ தேவரூபத்தை நீ காண விரும்புகிறாயோ, 'அந்த' ஸ்வரூபம் இதோ உன் முன்னால் இருக்கிறது பார். அந்த விசுவரூபம் மறைந்துவிட்டது. அதன் இடத்தில் விஷ்ணுவின் இந்த சதுர்புஜ ரூபம் வெளிப்பட்டிருக்கிறது. பயம் நீங்கி மகிழ்ச்சியோடு நீ இந்த சதுர்புஜ ரூபத்தைப் பார்" என்கிறார்.

'மறுபடியும்' என்று கூறுவதிலிருந்து பகவான் முன்னரே தம் சதுர்புஜ வடிவத்தைக் காட்டியது தெரிகிறது. அர்ஜுனன் 45,46வது ச்லோகங்களில் கேட்டுக் கொள்வதில் 'தத் ஏவ', 'தேந ஏவ' எனும் சொற்கள் வருவதினின்றும் இவ்விஷயம் தெளிவாகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொருத்தம்: இப்படி, 'சதுர்புஜ ரூபத்தை தர்சனம் செய்வாயாக' என்று அர்ஜுனனுக்கு ஆணையிட்டுவிட்டு பகவான் என்ன செய்தார் என்பதை ஸஞ்ஜயன் த்ருதராஷ்ட்ரரிடம் இனி சொல்கிறார்—

सञ्जय उवाच

**इत्यर्जुनं वासुदेवस्तथोक्त्वा स्वकं रूपं दर्शयामास भूयः।**
**आश्वासयामास च भीतमेनं भूत्वा पुनः सौम्यवपुर्महात्मा ॥५०॥**

ஸஞ்ஜய உவாச

**இத்யர்ஜுநம் வாஸுதே₃வஸ்தததோ₂க்த்வா**
**ஸ்வகம் ரூபம் த₃ர்ஸயாமாஸ பூ₄ய: ।**
**ஆஶ்வாஸயாமாஸ ச பீ₄தமேநம்**
**பூ₄த்வா புந: ஸௌம்யவபுர்மஹாத்மா ॥ 50 ॥**

**ஸஞ்ஜய உவாச** – ஸஞ்ஜயன் கூறினார்: **வாஸுதே₃வ:** – வாஸுதேவனான பகவான், **அர்ஜுநம்** – அர்ஜுனனிடம், **இதி** – இவ்வாறு, **உக்த்வா** – கூறிவிட்டு, **பூ₄ய:** – மறுபடியும், **தத₂ா** – அதேவிதமான, **ஸ்வகம்** – தன்னுடைய, **ரூபம் ச** – (சதுர்புஜ விஷ்ணு) ஸ்வரூபத்தையும், **த₃ர்ஸயாமாஸ** – காண்பித்தார். **புந:** – மறுபடியும், **மஹாத்மா** – மஹாத்மாவான ஸ்ரீக்ருஷ்ணன், **ஸௌம்யவபு:** – இனிய வடிவமாக, **பூ₄த்வா** – ஆகி, **ஏநம்** – இந்த, **பீ₄தம்** – பயந்திருந்த அர்ஜுனனுக்கு, **ஆஶ்வாஸயாமாஸ** – தைரியமூட்டினார்.

ஸஞ்ஜயன் கூறினார்: "வாஸுதேவனான பகவான் அர்ஜுனனிடம் இவ்வாறு கூறிவிட்டு மறுபடியும் அதேவிதமான தன்னுடைய சதுர்புஜ விஷ்ணு ஸ்வரூபத்தையும் காண்பித்தார். மறுபடியும் மஹாத்மாவான ஸ்ரீக்ருஷ்ணன் இனிய வடிவமாக ஆகி பயந்திருந்த அர்ஜுனனுக்குத் தைரியமூட்டினார்."

**கேள்வி:** 'வாஸுதேவ:' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

**பதில்:** பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் வஸுதேவருடைய குமாரராக வெளிப்பட்டிருக்கிறார். மேலும் எல்லோருடைய ஆத்மாவாக எல்லோருடைய உள்ளங்களிலும் உறைகிறார். 'வாஸுதேவ' என்ற சொல்லுக்கு இதுதான் பொருள். ஆகவே, அவரை 'வாஸுதேவன்' என அழைக்கின்றனர்.

**கேள்வி:** 'ரூபம்' என்பதுடன் 'ஸ்வகம்' என்கிற அடைமொழியைக் கூறி, 'தர்ஸயாமாஸ' என்கிற வினைச்சொல்லை உபயோகிப்பதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஸ்வகம் ரூபம்' என்றால் தமது இயல்பான ரூபம் என்று பொருள். விசுவரூபம் காட்டினாரே அதுவும் ஸ்ரீக்ருஷ்ணனின் ஸ்வரூபம்தான். மனித வடிவில் எல்லோருக்கு மிடையே நடமாடுகிறாரே – அந்த ஸ்ரீக்ருஷ்ண வடிவமும் அவருடைய இயல்பான ரூபம்தான். ஆனால், இங்கே 'தம் ரூபம்' என்று கூறுவதற்கு இவை இரண்டிலிருந்தும் வேறுபட்ட ஒரு ஸ்வரூபத்தைக் குறிப்பதாகப் பொருள் கொள்ள வேண்டும். ஏனெனில் விசுவரூபம்தான் அர்ஜுனனுக்குக் காட்டியாகிவிட்டது. அதைக் கண்டு அவர் பயந்து போய்விட்டார். ஆகவே, அதை மறுபடியும் காட்டுவதாகக் கற்பனைகூடச் செய்ய முடியாது. மனித வடிவைக் குறித்துப் பேசுவதற்கு அவசியமும் இல்லை. விசுவரூபத்தை மறைத்துக் கொண்ட பிறகு பகவானுடைய இயல்பான மனித அவதாரத்தில் உள்ள வடிவம் முன்பு இருந்தவாறே அர்ஜுனன் முன்னிலையில் நிற்கத்தான் நிற்கும். 'அதைக் காண்பிக்கிறேன் பார்' என்று கூற வேண்டியதே இல்லை. அர்ஜுனன் தாமாகவே அதைப் பார்த்துவிடுவார். ஆகவே 'இங்கு தம் ரூபத்தைக் காண்பித்தார்' என்று கூறுவதற்குப் பொருள், மனித லீலையாக அவதாரம் செய்த

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



எல்லோருக்கும் காணக் கிடைக்கக் கூடிய ஸ்ரீக்ருஷ்ண வடிவமோ, தமது யோகசக்தியினால் வெளிப்படுத்திய விசுவரூபமோ அல்லாமல் இவை இரண்டினின்றும் வேறான நித்யமாக வைகுண்டத்தில் விளங்குகின்ற பகவானுடைய தெய்விகமான சதுர்புஜ ஸ்வரூபத்தைத்தான் காண்பித்தார் என்றாகிறது. இந்த வடிவையே இங்கு தம் இயல்பான ஸ்வரூபம் என்கிறார். அதைக் காண வேண்டுமென்று அர்ஜுனன் வேண்டினார். அந்த ஸ்வரூபத்தையே பகவானும் காண்பித்தார்.

**கேள்வி:** 'மஹாத்மா' என்றால் என்ன பொருள்? இனிய வடிவம் தாங்கி பயந்து போன அர்ஜுனனைத் தேற்றினார் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எவருடைய ஆத்மா அதாவது ஸ்வரூபம் மிகப் பெருமையுடையதோ அவர் மஹாத்மா. பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் எல்லோருக்கும் ஆத்மா. ஆகவே அவர் மஹாத்மா. அர்ஜுனனுக்கு சதுர்புஜ ரூபத்தையும் காண்பித்தபின் மஹாத்மாவான ஸ்ரீக்ருஷ்ணன் தம் இனிய வடிவை – அதாவது அமைதியான கார்மேகவண்ணனாக அழகிய மானுட வடிவை எடுத்துக் கொண்டு, பயத்தினால் கலங்கிப்போயிருந்த அர்ஜுனனுக்கு தைர்யம் ஊட்டினார் என்று பொருள்.

**பொருத்தம்:** இவ்விதம் தமது விசுவரூபத்தை மறைத்துக் கொண்டு சதுர்புஜ ரூபத்தையும் காட்டிவிட்டுத் தமது இயல்பான மானுட வடிவில் அர்ஜுனனுக்கு ஆறுதல் அளித்தார். அர்ஜுனன் தன்னிலையடைந்து பேச ஆரம்பித்தார்—

अर्जुन उवाच

**दृष्ट्वेदं मानुषं रूपं तव सौम्यं जनार्दन।**
**इदानीमस्मि संवृत्तः सचेताः प्रकृतिं गतः॥५१॥**

அர்ஜுந உவாச

**த்ருஷ்ட்வேதம் மாநுஷம் ரூபம் தவ ஸௌம்யம் ஜநார்தந ।**
**இதாநீமஸ்மி ஸம்வ்ருத்த: ஸசேதா: ப்ரக்ருதிம் கத: ॥ 51 ॥**

**அர்ஜுந உவாச** – அர்ஜுனன் கூறினார்: **ஜநார்தந** – ஜனார்தன! **தவ** – உங்களுடைய, **இதம்** – இந்த, **ஸௌம்யம்** – மிகவும் இனியதான, **மாநுஷம் ரூபம்** – மானுடவடிவை, **த்ருஷ்ட்வா** – பார்த்து, **இதாநீம்** – இப்பொழுது, **ஸசேதா:** – நிலைபெற்ற மனம், **ஸம்வ்ருத்த: அஸ்மி** – கொண்டவனாக ஆகிவிட்டேன். **ப்ரக்ருதிம்** – என் இயல்பான நிலையையும், **கத:** – அடைந்துவிட்டேன்.

அர்ஜுனன் கூறினார்: "ஜனார்தன! உங்களுடைய இந்த மிகவும் இனியதான மானுடவடிவைப் பார்த்து இப்பொழுது நிலைபெற்ற மனம் கொண்டவாக ஆகிவிட்டேன். என் இயல்பான நிலையையும் அடைந்துவிட்டேன்."

**கேள்வி:** 'ரூபம்' என்பதற்கு 'ஸௌம்யம்' (மிகவும் இனிமையான), 'மாநுஷம்' (மானுட) என்கிற அடைமொழிகளைக் கொடுப்பதன் கருத்து என்ன?

**பதில்:** பகவானுடைய மானுட வடிவம் மிகவும் இனியது, அழகானது, அமைதியானது. முன் ச்லோகத்தில் பகவான் இனிய வடிவாக விளங்கினமை சொல்லப்பட்டது. அதுவும் மானுட வடிவைக் குறித்தே அது சொல்லப்பட்டது. இதைத் தெளிவாக் விளக்குவதற்காகத்தான் 'ரூபம்' என்ற சொல்லுக்கு 'ஸௌம்யம்' (மிகவும் இனிமையான), 'மாநுஷம்' (மானுட) என்ற அடைமொழிகள் கொடுக்கப்பட்டன.

**கேள்வி:** 'ஸசேதா: ஸம்வ்ருத்த:', 'ப்ரக்ருதிம் கத:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவானுடைய விசுவரூபத்தைப் பார்த்தபோது அர்ஜுனனுடைய உள்ளத்தில் பயம், நடுக்கம், மோஹம் முதலிய விகாரங்கள் உண்டாயின. அவையனைத்தும் இப்போது

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இல்லை என்பது பொருள். "உங்களுடைய இந்த இனிய ச்யாமஸுந்தர, மதன மோஹன மானுட வடிவைப் பார்த்ததும்தான் என் மனம் நிம்மதியடைந்தது. என்னுடைய மோஹம், குழப்பம், பயம் எல்லாம் போய்விட்டன. நான் இயல்பான நிலைக்கு வந்துவிட்டேன். அதாவது என் மனம், புலன்கள், உடலில் உண்டான பயம், கலக்கம், நடுக்கம் முதலிய பல விகாரங்கள் அனைத்தும் நீங்கிவிட்டன. என் இயல்பான நிலையை அடைந்துவிட்டேன்" என்று கூறுகிறார் அர்ஜுனன்.

**பொருத்தம்:** இவ்விதம் அர்ஜுனனுடைய சொற்களைக் கேட்டு, பகவான் இனிவரும் இரண்டு ச்லோகங்களில் தமது சதுர்புஜ தேவரூப தர்சனமும் கிடைப்பது அரிது என்று கூறி, அதன் பெருமையை விளக்குகிறார்—

*श्रीभगवानुवाच*

**सुदुर्दर्शमिदं रूपं दृष्टवानसि यन्मम।**
**देवा अप्यस्य रूपस्य नित्यं दर्शनकाङ्क्षिणः ॥५२॥**

ஸ்ரீப₄க₃வாநுவாச

**ஸுது₃ர்த₃ர்ஶமித₃ம் ரூபம் த்₃ருஷ்டவாநஸி யந்மம ।**
**தே₃வா அப்யஸ்ய ரூபஸ்ய நித்யம் த₃ர்ஶநகாங்க்ஷிண: ॥ 52 ॥**

**ஸ்ரீப₄க₃வாநுவாச** – ஸ்ரீபகவான் கூறினார்: **மம** – என்னுடைய, **யத்** – எந்த, **ரூபம்** – (சதுர்புஜ) ஸ்வரூபத்தை, **த்₃ருஷ்டவாந் அஸி** – (நீ) இப்போது பார்த்தாயோ, **இத₃ம்** – இது, **ஸுது₃ர்த₃ர்ஶம்** – காண்பதற்கரிதானது. **தே₃வா: அபி** – தேவர்கள்கூட, **நித்யம்** – எப்போதும், **அஸ்ய** – இந்த, **ரூபஸ்ய** – உருவத்தை, **த₃ர்ஶந காங்க்ஷிண:** – காண்பதற்குப் பெருவிருப்பம் கொண்டு இருக்கிறார்கள்.

ஸ்ரீபகவான் கூறினார்:"என்னுடைய எந்த சதுர்புஜ ஸ்வரூபத்தை நீ இப்போது பார்த்தாயோ இது காண்பதற்கரிதானது. தேவர்கள்கூட எப்போதும் இந்த உருவத்தைக் காண்பதற்குப் பெருவிருப்பம் கொண்டு இருக்கிறார்கள்.

**கேள்வி:** *'ரூபம்' என்பதோடு 'ஸுதுர்தர்ஶம்', 'இதம்' என்ற அடைமொழிகள் கருத்து என்ன?*

**பதில்:** தமது சதுர்புஜரூபம் கொண்ட திவ்யமான ரூபத்தின் தர்சனம் கிடைப்பது அரிது என்பதையும், அதன் பெருமையையும் இந்த அடைமொழிகள் கொடுத்து சுட்டிக்காட்டுகிறார். 'இதம்' என்பது அருகில் உள்ளதைச் சுட்டும் சொல். விசுவரூபத்திற்குப் பிறகு இப்பொழுது பார்த்த சதுர்புஜரூபம் என்பது இங்கே குறிப்பு. என்னுடைய சதுர்புஜரூபம் மாயைக்கு அப்பாற்பட்டது. தெய்விக கல்யாண குணங்கள் நிரம்பிய நித்ய ரூபத்தை நீ பார்த்துவிட்டாய். அந்த தர்சனமே மிக அரிது. எவன் என் அநன்ய பக்தனோ, எவனுக்கு எனது பூர்ணமான அருள் இருக்குமோ, அவனுக்குத்தான் இந்த தர்சனம் கிடைக்கும்.

**கேள்வி:** *தேவர்கள்கூட எப்போதுமே இந்த ரூபத்தைத் தர்சிப்பதற்காகப் பெருவிருப்பம் கொண்டவர்களாக இருக்கிறார்கள் என்பதில் 'தேவர்கள்கூட' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** தம்முடைய சதுர்புஜரூப தர்சனம் கிடைப்பது அரிது, எளிதில் கிட்டாதது என்று அதன் பெருமையைக் கூறுகிறார். இந்த ரூபத்தைப் பார்க்க தேவர்களே ஆவல் கொண்டிருந்தும் பார்க்க முடியாமல் இருக்கிறார்களென்றால் மனிதர்களைப் பற்றிக் கேட்க வேண்டுமா?

**नाहं वेदैर्न तपसा न दानेन न चेज्यया।**
**शक्य एवंविधो द्रष्टुं दृष्टवानसि मां यथा ॥५३॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**நாஹம் வேதைர்ந தபஸா ந தா₃நேந ந சேஜ்யயா ।**
**ஶக்ய ஏவம்விதோ₄ த்₃ரஷ்டும் த்₃ருஷ்டவாநஸி மாம் யதா₂ ॥ 53 ॥**

**யதா₂** – எவ்வாறு, **மாம்** – (நீ) என்னை, **த்₃ருஷ்டவாந் அஸி** – பார்த்தாயோ, **ஏவம்வித:** – இவ்விதமான (சதுர்புஜம் கொண்ட), **அஹம்** – நான், **வேதை₃:** – வேதங்களைக் கற்பதால், **த்₃ரஷ்டும்** – காணப்பட, **ந ஶக்ய:** – முடியாதவன்; **தபஸா** – தவத்தினாலும், **ந (த்₃ரஷ்டும் ஶக்ய:)** – காணப்பட முடியாதவன். **தா₃நேந** – தானத்தினாலும், **ந (த்₃ரஷ்டும் ஶக்ய:)** – காணப்பட முடியாதவன். **இஜ்யயா ச** – யாகம் செய்வதாலும், **ந (த்₃ரஷ்டும் ஶக்ய:)** – காணப்பட முடியாதவன்.

எவ்வாறு நீ என்னைப் பார்த்தாயோ இவ்விதமான சதுர்புஜம் கொண்ட நான் வேதங்களைக் கற்பதால் காணப்பட முடியாதவன்; தவத்தினாலும் காணப்பட முடியாதவன்; தானத்தினாலும் காணப்பட முடியாதவன்; யாகம் செய்வதாலும் காணப்பட முடியாதவன்.

**கேள்வி:** 9/27,28களில், 'நீ செய்யும் யாகத்தையும், அளிக்கும் தானத்தையும், செய்யும் தவத்தையும், எதுவானாலும் சரி எனக்கு அர்ப்பணம் செய்துவிடு. அப்படி அர்ப்பணம் செய்வதால் நீ எல்லாக் கர்மங்களிலிருந்தும் விடுபடுவாய், என்னை அடைவாய்' என்று கூறினார். 17/25ல் மோக்ஷத்தை விரும்புபவர்கள் செய்யும் யாகம், தானம், தவம் முதலியவை பயனைக் கருதாது ஆற்றப்படுவதால் அந்த யாகம், தானம், தவமெல்லாம் முக்திக்கும், பகவானை அடைவதற்கும் காரணமாகின்றன என்கிறார். ஆனால், இங்கே 'வேதம் கற்பதால் மட்டும் என்னுடைய சதுர்புஜரூப தர்சனம் கிட்டாது. தவம், தானம், யாகம் இவற்றாலும் கிட்டாது' என்கிறார். இந்த முரண்பாட்டிற்கு எவ்வாறு ஸமாதானம் கூறலாம்?

**பதில்:** இதில் முரண்பாடு ஒன்றுமில்லை. கர்மங்களை பகவானுக்கு அர்ப்பணம் செய்வது அநன்ய பக்தியின் ஓர் அங்கம். ச்லோகம் 55ல் அநன்ய பக்தியைப் பற்றிக் கூறும்போது 'மத்கர்மக்ருத்' (என் பொருட்டுக் கர்மங்களைச் செய்பவன்) என்று கூறுகிறார். மேலும் 54ல், 'அநனய பக்தியின் மூலம் என்னுடைய இந்த ஸ்வரூபத்தைப் பார்ப்பதோ, அறிவதோ, அடைவதோ ஸாத்யம்தான்' என்கிறார். ஆகவே நிஷ்காமமாக, பகவானுக்காக – பகவானுக்கு அர்ப்பணம் செய்யவேண்டும் என்ற கருத்தோடு செய்யப்படுகின்ற – யக்ஞம், தானம், தவம் எல்லாம் பக்திக்கு அங்கங்கள் ஆகின்றபடியால் பகவானை அடையக் காரணங்களாகின்றன. ஆனால் பயனில் கருத்துடன் செய்தால் பகவானை அடையச் செய்ய அவற்றால் இயலாது. முடிவான கருத்து அதுதான். மேலே சொன்ன யாகம் முதலிய கார்யங்கள் இயல்பாகவே பகவானுடைய தர்சனத்தைச் செய்விக்கத் திறன் வாய்ந்தவையல்ல. பகவானுடைய தர்சனமோ ப்ரேமையுடன் பகவானைச் சரணடைந்து நிஷ்காமமாகக் கர்மம் செய்தால் பகவானுடைய கருணையினாலேயே அது கிட்டலாம்.

**கேள்வி:** இங்கு 'ஏவம்வித:', 'மாம் யதா த்ருஷ்டவாநஸி' எனும் சொற்களால் பகவான் தமது எந்த விசுவரூபத்தைக் காண்பித்தாரோ, அந்த விசுவரூபம் வேதங்களைக் கற்பதால் கிட்டாது என்று பகவான் கூறுவதாக வைத்துக் கொண்டால் என்ன தவறு?

**பதில்:** விசுவரூபத்தைப் பற்றிய இதே கருத்து முன்பு ச்லோகம் 48ல் கூறியாகிவிட்டது. மறுபடியும் அதையே திருப்பிக் கூறியதாக ஆகிவிடும். தவிர விசுவரூபத்தை அர்ஜுனனைத் தவிர யாரும் பார்க்க முடியாது என்றும் கூறிவிட்டார். ஆனால், இந்த ஸ்வரூபத்தைப் பார்ப்பதற்கான அடுத்து வரும் ச்லோகத்தில் உபாயத்தையும் கூறுகிறார். ஆகவே முன் சொன்னவாறு பொருள் கொண்டதுதான் சரியானது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பொருத்தம்:** 'முன் சொன்ன உபாயங்களின் மூலம் உங்கள் தர்சனம் கிட்டாது என்றால் பின் எந்த உபாயத்தினால் உங்களை தர்சிக்க முடியும்?' என்ற கேள்விக்கு இந்த ச்லோகத்தில் பதில் கூறுகிறார்—

भक्त्या त्वनन्यया शक्य अहमेवंविधोऽर्जुन।
ज्ञातुं द्रष्टुं च तत्त्वेन प्रवेष्टुं च परन्तप॥५४॥

**பக்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதோ₄ऽர்ஜுந ।**
**ஜ்ஞாதும் த்₃ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥ 54 ॥**

**து** – ஆனால், **பரந்தப** – எதிரிகளை வாட்டுபவனே! **அர்ஜுந** – அர்ஜுன! **ஏவம்வித₄: அஹம்** – இவ்வித சதுர்புஜ ஸ்வரூபமுள்ள நான், **அநந்யயா** – வேறொன்றைப் பயனாகக் கருதாத, **ப₄க்த்யா** – பக்தியினால், **த்₃ரஷ்டும் ஶக்ய:** – கண்கூடாகக் காணப்படக் கூடியவன்; **தத்த்வேந** – தத்வரீதியாக, **ஜ்ஞாதும் (ஶக்ய:) ச** – அறியப்படவும் கூடியவன். **ப்ரவேஷ்டும் ச (ஶக்ய:)** – (எவரும் ஐக்ய பாவத்தால்) என்னிடம் ஒன்றிவிடவும் முடியும்.

ஆனால் எதிரிகளை வாட்டுபவனே! அர்ஜுன! இவ்வித சதுர்புஜ ஸ்வரூபமுள்ள நான் வேறொன்றைப் பயனாகக் கருதாத பக்தியினால் கண்கூடாகக் காணப்படக் கூடியவன்; தத்வரீதியாக அறியப்படவும் கூடியவன். ஐக்ய பாவத்தால் என்னிடம் ஒன்றிவிடவும் முடியும்.

**கேள்வி:** பகவானுடைய திவ்யமான சதுர்புஜரூபத்தைப் பார்ப்பது, அறிவது, அதில் ஐக்யமாவது என்பதெல்லாம் எதனால் ஸாத்யமாகுமோ, அந்த அநன்ய பக்தி என்பது என்ன?

**பதில்:** பகவானிடம் மட்டும் ப்ரேமை கொள்வது (வேறு எங்கும், எதிலும் ப்ரேமை செலுத்தாமல் இருப்பது), மனம், புலன்கள், உடல், செல்வம், மக்கள் எல்லாவற்றையும் பகவானுடையவை என்று கருதி, அவருக்காகவே அவரிடமே அவற்றை அர்ப்பணம் செய்துவிடுவது, அவருடைய ஸேவையிலேயே ஈடுபடுவது – இதுவே அநன்ய பக்தி. இதன் விளக்கம் அடுத்த ச்லோகத்தில் அநன்ய பக்தனுடைய இலக்கணம் கூறுமிடத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

**கேள்வி:** ஸாங்க்யயோகத்தின் மூலமும் பரமாத்மாவை அடையலாம் என்று முன்பு கூறப்பட்டது. இங்கே அநன்யபக்தியினால் மட்டும்தான் பகவானைப் பார்க்க முடியும் என்கிறாரே, ஏன்?

**பதில்:** ஸாங்க்யயோகத்தின் மூலம் நிர்குண ப்ரம்மத்தை அடையலாம் என்று கூறப்பட்டது. அது என்றும் உண்மைதான். ஆனால், அந்த ஸாங்க்யயோகத்தின் மூலம் பகவானுடைய ஸகுணமான உருவமுள்ள சதுர்புஜரூப தர்சனம் கிட்டும் என்று கூற முடியாது. ஸாங்க்யயோகத்தில் ஈடுபட்டவர்களுக்கு பகவான் ஸகுணமான வடிவில் தர்சனம் அளிக்கவேண்டிய கட்டாயம் இல்லை. இங்கு ஸகுணமான பகவானைப் பற்றித்தான் பேச்சு. அந்த ஸ்வரூபத்தைக் காண்பது முதலியவற்றிற்கு அநன்ய பக்திதான் காரணம் என்று கூறுவது பொருத்தம்தான்.

**பொருத்தம்:** அநன்ய பக்தியின் மூலம் பகவானைக் காணுதல், அறிதல், அடைதல் ஆகியவை எளியன என்பதால் அந்த அநன்ய பக்தியின் தன்மை என்னவென்று அறிய ஆவல் உண்டாகிறது. ஆகவே, அடுத்து அநன்ய பக்தனுடைய இலக்கணங்களைக் கூறுகிறார்—

मत्कर्मकृन्मत्परमो मद्भक्तः सङ्गवर्जितः।
निर्वैरः सर्वभूतेषु यः स मामेति पाण्डव॥५५॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**மத்கர்மக்ருந்மத்பரமோ மத்₃ப₄க்த: ஸங்க₃வர்ஜித: ।**
**நிர்வைர: ஸர்வபூ₄தேஷு ய: ஸ மாமேதி பாண்ட₃வ ॥ 55 ॥**

**பாண்ட₃வ** – அர்ஜுன! **ய:** – எவனொருவன், **மத்கர்மக்ருத்** – செய்ய வேண்டிய எல்லாக் கடமைகளையும் என் பொருட்டே ஆற்றுவானோ, **மத்பரம:** – என்னையே அடையத்தக்க. மேலான கதியாகக் கொள்வானோ, **மத்₃ப₄க்த:** – என்னிடம் பக்தி பூண்டவனோ, **ஸங்க₃வர்ஜித:** – பற்றற்றவனோ, **ஸர்வபூ₄தேஷு** – உயிரினங்கள் அனைத்திலும், **நிர்வைர:** – பகைமை இல்லாதவனோ, **ஸ:** – அந்த (அநன்ய பக்தன்), **மாம்** – என்னையே, **ஏதி** – அடைகிறான்.

அர்ஜுன! எவனொருவன் செய்ய வேண்டிய எல்லாக் கடமைகளையும் என் பொருட்டே ஆற்றுவானோ, என்னையே அடையத்தக்க மேலான கதியாகக் கொள்வானோ, என்னிடம் பக்தி பூண்டவனோ, பற்றற்றவனோ, உயிரினங்கள் அனைத்திலும் பகைமை இல்லாதவனோ, அந்த அநன்ய பக்தன் என்னை அடைகிறான்.''

**கேள்வி:** 'மத்கர்மக்ருத்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தன்னலம், மமகாரம், பற்று இவற்றை விடுத்து எல்லாமே பகவானுடையவை என்றறிந்து, தன்னை ஒரு கருவியாக மட்டும் கருதி சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட யாகம், தானம், தவம், உண்பது, அருந்துவது முதலிய செயல்களை நிஷ்காமமாக பகவானுடைய த்ருப்திக்காகவே, பகவானுடைய ஆணைப்படி செய்கிறவன் 'மத்கர்மக்ருத்' எனப்படுவான். அதாவது பகவானுக்காகவே எல்லாக் கடமைகளையும் ஆற்றுபவன்.

**கேள்வி:** 'மத்பரம:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவான்தான் நமக்கு மிகச்சிறந்த புகல். அவரே பரமகதி. அவர்தான் சரணடையத்தக்கவர். எல்லாவற்றிலும் சிறந்தவர். எல்லாவற்றிற்கும் ஆதாரமானவர். ஸர்வ வல்லமை படைத்தவர். எல்லோருக்கும் உற்ற நண்பர். தான் வேறு அவர் வேறு அன்று; என்னுடைய 'உடைமை' என்பது அவரே; தமக்கு நேரும் ஒவ்வொரு செயலும் அவர் ஏற்படுத்தியுள்ள முறைப்படி நிகழ்கிறது என்று புரிந்து கொண்டு, எப்பொழுதுமே முகமலர்ச்சியுடன் எவர் இருக்கிறாரோ, அவர் 'மத்பரம:' அதாவது பகவான் ஒருவரையே புகலாகக் கொண்டவர்.

**கேள்வி:** 'மத்பக்த:' என்பதன் பொருள் என்ன?

**பதில்:** பகவானிடம் அநன்ய ப்ரேமை ஏற்பட்டுவிட்டதால் பகவானிடமே ஒன்றிப்போய் எப்பொழுதும் இடைவிடாது பகவானுடைய நாமம், ரூபம், குணங்கள், ப்ரபாவங்கள், லீலைகள் முதலியவற்றைக் கேட்பது, கீர்த்தனம் செய்வது, த்யானிப்பது முதலியவற்றை எவன் செய்கிறானோ, ஒரு கணம்கூட இவையில்லாமல் மன நிம்மதி கொள்ளமாட்டானோ, பகவானைத் தர்சனம் செய்ய வேண்டுமென்ற தீவிரமான பேராவலுடன் இருக்கிறானோ, அவன் பகவானுடைய பக்தன் ஆவான்.

**கேள்வி:** 'ஸங்கவர்ஜித:' என்றால் என்ன கருத்து?

**பதில்:** உடல், மனைவி, மக்கள், வீடு, செல்வம், குடும்பம், மதிப்பு, பெருமை முதலிய பல போகப் பொருட்கள் இவ்வுலகிலும், பரலோகத்திலும் உள்ளனவே, அந்த ஜட சேதனமான எல்லாப் பொருட்களிலும் சிறிதுகூடப் பற்றற்றவன். பகவானைத் தவிர வேறொன்றிலும் ப்ரேமை இல்லாதவனைத்தான் 'ஸங்கவர்ஜித:' என்ற சொல் குறிக்கிறது.

**கேள்வி:** 'ஸர்வபூதேஷு நிர்வைர:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'அனைத்து ப்ராணிகளும் பகவானுடைய ஸ்வரூபங்களே. எல்லாவற்றிலும் பகவான் ஒருவரே வ்யாபித்திருக்கிறார்' என்றறிந்ததால், யார் எவ்விதத்தில் விரோதமாக

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நடந்து கொண்டாலும், மனதில் ஒரு விகாரமும் அடையாமல் காத்து, எந்த ப்ராணியிடமும் வெறுப்போ, பகைமையோ இல்லாது இருப்பவனை 'ஸர்வபூதேஷு நிர்வைர:' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'ய:', ஸ:' என்பன யாரைக் குறிக்கின்றன? 'அவன் என்னை அடைகிறான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இச்சொற்கள் மேலே சொன்ன இலக்கணங்கள் படைத்தவனான அநன்ய பக்தனைக் குறிக்கின்றன. 54வது ச்லோகத்தில் சொன்னபடி அந்த பக்தன் ஸகுணமான பகவானை நேரில் தர்சனம் செய்கிறான். தத்வரீதியாக நன்கு அறிகிறான். அவரிடமே ஐக்யமாகிறான். மேலே சொன்ன இலக்கணங்கள் உடையவனான அநன்ய பக்தன் பகவானை அடைகிறான் என்பது கருத்து.

ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
विश्वरूपदर्शनयोगो नामैकादशोऽध्याय: ॥ ११ ॥

**ஓம் தத்ஸதிதி ஶ்ரீமத்₃ப₄க₃வத்₃கீ₃தாஸூபநிஷத்ஸு ப்₃ரஹ்மவித்₃யாயாம் யோக₃ஶாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே₃ விஶ்வரூபத₃ர்ஶநயோகோ₃ நாமைகாத₃ஶோऽத்₄யாய: ॥ 11 ॥**

**ஓம் தத் ஸத் - ப்ரம்ம வித்யை, யோக ஶாஸ்த்ரம், உபநிஷத் எனப்படும் ஶ்ரீமத்பகவத்கீதையாகிய ஶ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலில் 'விஶ்வரூபதர்ஶநயோகம்' எனப் பெயர் படைத்த பதினொன்றாவது அத்யாயம் நிறைவுற்றது.**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

# அத₂ த்₃வாத₃ஸோத்₄யாய:

# பன்னிரண்டாவது அத்யாயம்

## பக்தியோகம்

**அத்யாயத்தின் பெயர்** இந்த அத்யாயத்தில் பக்தி செய்வதற்கான பலவிதமான ஸாதனைகளைப் பற்றியும், பகவானை பக்தி செய்வது பற்றியும் கூறி, பக்தர்களின் இலக்கணங்கள் கூறப்படுகின்றன. இதன் ஆரம்பமும், முடிவும் பகவானுடைய பக்தியைப் பற்றியே இருக்கின்றன. மூன்று ச்லோகங்களில் மட்டும் ஞானத்திற்குரிய ஸாதனைகளைப் பற்றிச் சொன்னாலும், பக்தியோகத்தையும், ஞானயோகத்தையும் ஒன்றோடு ஒன்றை ஒப்பிட்டுப் பார்க்கும் முறையில் அவை அமைந்துள்ளன. ஆகவே இந்த அத்யாயத்திற்கு 'பக்தியோகம்' என்ற பெயர் வைக்கப்பட்டுள்ளது.

**அத்யாயச் சுருக்கம்** ஸகுண-ஸாகார (உருவமுள்ள) ஸ்வரூபத்தை உபாஸிப்பவர்கள், நிர்குண-நிராகார ஸ்வரூபத்தை உபாஸிப்பவர்கள் இந்த இருவரில் சிறந்தவர் யார் என்று அர்ஜுனன் முதல் ச்லோகத்தில் கேட்கிறார். இதற்கு பதிலாக, 2ல் பகவான் ஸகுண உருவத்தை உபாஸிப்பவன் சிறந்தவன் என்று கூறுகிறார். 3, 4ல் நிர்குண-நிராகாரமான பரமாத்மாவின் அடைமொழிகளை வர்ணித்து, அந்த உபாஸனையின் பயன் பகவானை அடைவது என்று கூறுகிறார். 5ல் உடலில் பற்றுள்ளவனுக்கு நிர்குண உபாஸனை கடினமானது என்றும், 6, 7ல் 'எல்லாக் கர்மங்களையும் என்னிடம் அர்ப்பணம் செய்துவிட்டு அநன்ய பாவனையுடன் இடைவிடாது ஸகுணமான பரமேசுவரனாக என்னைச் சிந்திக்கும் பக்தர்களை நான் கடைத்தேற்றுகிறேன்' என்றும் கூறுகிறார். 8ல் 'அர்ஜுன! உன் மனம், புத்தி இவற்றை என்னிடம் செலுத்து. அதன் பயனாக என்னை அடைவாய்' என்றும் பகவான் கூறுகிறார். 9 முதல் 11 வரை மேலே சொன்னபடி ஸாதனை புரிய முடியாவிட்டால் 'அப்யாஸ யோகம்' என்பதைச் செய்யுமாறு கூறுகிறார். அதுவும் முடியாவிட்டால் செய்வதையெல்லாம் பகவானுக்காகவே அர்ப்பணம் செய்யுமாறும், அதுவும் முடியாவிட்டால் எல்லாச் செய்கைகளின் பயன்களையும் துறந்துவிடுமாறும் வரிசையாகக் கூறுகிறார். 12ல் செயல்களின் பயனைத் துறப்பதே மிக உயர்வு என்று கூறி, அதன் பயன் அக்கணமே மேலான அமைதி பெறுவது என்றும் கூறுகிறார். பிறகு 13 முதல் 19 வரை தமக்கு ப்ரியமான ஞானி மஹாத்மாக்களின் இலக்கணங்களைக் கூறி, 20ல் அந்த ஞானி மஹாத்மாக்களையே எடுத்துக்காட்டாகக் கொண்டு, ச்ரத்தையுடன் அவர்களைப் பின்பற்றி ஸாதனை புரியும் பக்தர்கள் எனக்கு மிகவும் ப்ரியமானவர்கள் என்று கூறி இந்த அத்யாயத்தை முடிக்கிறார்.

முன் அத்யாயத்துடன் இவ்வத்யாயத்திற்குப் பொருத்தம்: இரண்டாவது அத்யாயத்தில் தொடங்கி ஆறாவது அத்யாயம் வரை ஆங்காங்கே நிர்குண

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ப்ரம்மத்தையும், ஸகுண-ஸாகார பரமாத்மாவையும் வழிபடுதலைப் புகழ்ந்தார். அத்யாயம் ஏழு முதல் பதினொன்று வரை சிறப்பாக ஸகுண-ஸாகார (உருவமுள்ள) பரமாத்மாவின் உபாஸனையின் பெருமையை எடுத்துக் கூறினார். 5/17 முதல் 26 வரை, 6/24 முதல் 29 வரை, 8/11 முதல் 13 வரையிலும், இன்னும் மற்ற இடங்களிலும் நிர்குண-நிராகார உபாஸனையின் பெருமையைக் கூறியிருக்கிறார். கடைசியாக பதினொன்றாவது அத்யாயத்தின் முடிவில், ஸகுண-ஸாகார பகவானிடம் அநன்ய பக்தி செய்வதன் பயன் பகவானை அடைவது என்று கூறி 'மத்கர்மக்ருத்' என்று ஆரம்பிக்கும் கடைசி ச்லோகத்தில் ஸகுண-ஸாகார ஸ்வரூபத்தை பக்தி செய்பவனது சிறப்பைச் சொல்கிறார். அதனால் அர்ஜுனன் நிர்குண-நிராகார ப்ரம்ம உபாஸனையோ, ஸகுண-ஸாகார பகவத் உபாஸனையோ செய்கின்ற இரு வகையினரில் மிகச் சிறந்தவர் யார் என்று அறிய விரும்பி, அதை இங்கே கேட்கிறார்—

अर्जुन उवाच

एवं सततयुक्ता ये भक्तास्त्वां पर्युपासते।
ये चाप्यक्षरमव्यक्तं तेषां के योगवित्तमाः ॥ १ ॥

அர்ஜுந உவாச

ஏவம் ஸததயுக்தா யே ப₄க்தாஸ்த்வாம் பர்யுபாஸதே ।
யே சாப்யக்ஷரமவ்யக்தம் தேஷாம் கே யோக₃வித்தமா: ॥ 1 ॥

**அர்ஜுந உவாச** – அர்ஜுனன் கூறினார்: **யே** – எந்த, **ப₄க்தா:** – வேறொன்றிலும் நாட்டமில்லாமல் உங்களிடம் அன்பு கொண்ட பக்தர்கள், **ஏவம்** – இவ்வாறு, **ஸதத-யுக்தா:** – எப்பொழுதும் உங்களுடைய பஜனையிலும், த்யானத்திலும் ஈடுபட்டு, **த்வாம்** – ஸகுணரூபனான பரமேசுவரனான உங்களை, **பர்யுபாஸதே** – உயர்ந்த நிலையில் வழிபடுகிறார்களோ, **யே ச** – மேலும் எவர்கள், **அக்ஷரம்** – அழிவற்ற ஸத் சித் ஆனந்தமயமான, **அவ்யக்தம் அபி** – உருவமற்ற ப்ரம்மத்தையே, (**பர்யுபாஸதே** – உயர்ந்த நிலையில் வழிபடுகிறார்களோ), **தேஷாம்** – இவ்விரு வகையான உபாஸகர்களிடையே, **யோக₃வித்தமா:** – யோகத்தைச் சிறந்த முறையில் அறிந்தவர்கள், **கே** – யார்?

*அர்ஜுனன் கூறினார்:* "வேறொன்றிலும் நாட்டமில்லாமல் உங்களிடம் அன்பு கொண்ட எந்த பக்தர்கள் இவ்வாறு எப்பொழுதும் உங்களுடைய பஜனையிலும், த்யானத்திலும் ஈடுபட்டு ஸகுணரூபனான பரமேசுவரனான உங்களை உயர்ந்த நிலையில் வழிபடுகிறார்களோ, மேலும் எவர்கள் அழிவற்ற ஸத் சித் ஆனந்தமயமான உருவமற்ற ப்ரம்மத்தையே உயர்ந்த நிலையில் வழிபடுகிறார்களோ இவ்விரு வகையான உபாஸகர்களிடையே யோகத்தைச் சிறந்த முறையில் அறிந்தவர்கள் யார்?"

**கேள்வி:** 'ஏவம்' என்றால் என்ன கருத்து?

**பதில்:** 'ஏவம்' என்ற சொல்லால் முன் அத்யாயத்தில் 55வது ச்லோகத்தில் கூறப்பட்ட அநன்ய பக்தியின் செயல்முறையைக் குறிக்கிறார்.

**கேள்வி:** 'த்வாம்' என்பது யாரைக் குறிக்கிறது? இடைவிடாது பஜனை, த்யானங்களில் ஈடுபட்டு அவரைச் சிறந்த முறையில் உபாஸிப்பது என்பது என்ன?

**பதில்:** 'த்வாம்' என்பது இங்கு ஸ்ரீக்ருஷ்ண பகவானையே குறிக்கும். ஆனாலும் பகவான் எடுத்த ஸகுண அவதாரங்கள் மற்றும் வைகுண்டமாகிய திவ்யதாமத்தில் வீற்றிருக்கும் ஸகுண ஸ்வரூபங்கள் இவற்றை உலகினர் தங்கள் ஈடுபாட்டிற்கேற்பப் பல வடிவங்களாகவும்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பெயர்களிலும் குறிப்பிடுகிறார்களோ, அவையெல்லாவற்றையும் 'த்வாம்' என்ற சொல் குறிப்பிடுகிறது. ஏனெனில் அந்த ஸ்வரூபங்கள் அனைத்தும் ஸ்ரீக்ருஷ்ணனைத் தவிர வேறல்ல. அந்த ஸகுண பகவானை இடைவிடாது சிந்தித்து, மிகுந்த ச்ரத்தையுடனும், ப்ரேமையுடனும் நிஷ்காமமாகப் புலன்கள் எல்லாவற்றையும் அவருடைய ஸேவையில் ஈடுபடுத்த வேண்டும். இதுதான் இடைவிடாது பஜனை, த்யானம் இவற்றில் ஈடுபட்டு அவரைச் சிறப்பாக உபாஸிப்பதாகும்.

**கேள்வி:** 'அக்ஷரம்' என்ற அடைமொழியோடு கூடிய 'அவ்யக்தம்' என்ற சொல் யாரைக் குறிக்கிறது?

**பதில்:** 'அக்ஷரம்' என்ற அடைமொழியோடு கூடிய 'அவ்யக்தம்' என்பது இங்கே குணமற்ற–உருவமற்ற ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தைக் குறிக்கிறது. ஜீவாத்மாவும்கூட அக்ஷரன், அவ்யக்தன்தான் என்றாலும், அர்ஜுனனுடைய கேள்வியின் கருத்து ஜீவாத்மாவை உபாஸிப்பது பற்றி அன்று. ஜீவாத்மாவின் உபாஸனை ஸகுண பகவானை உபாஸிப்பதைக் காட்டிலும் சிறந்ததாக ஆவதில்லை. மேலும் முன் அத்யாயங்களில், ஜீவாத்மாவினுடைய உபாஸனைக்கு இடம் உண்டு என்று கூட பகவான் எங்கும் கூறவில்லை.

**கேள்வி:** 'இவ்விரு வகையான உபாஸகர்களிடையே யோகத்தைச் சிறந்த முறையில் அறிந்தவர் யார்?' என்று கேட்பதன் கருத்து என்ன?

**பதில்:** 'இவ்விரண்டு உபாஸகர்களுமே சிறந்தவர்கள்தான். இதில் ஸந்தேஹமில்லை. ஆயினும் இவ்விருவர்களைச் சீர்தூக்கிப் பார்க்கும்போது எவர் சிறந்தவர் என்பதைச் சொல்லுங்கள்' என்று அர்ஜுனன் கேட்கிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் அர்ஜுனன் கேட்டவுடன் பகவான் ஸகுண–ஸாகாரமான பகவானை வழிபடுபவர்களே சிறந்தவர்கள் என்று கூறுகிறார்—

श्रीभगवानुवाच

**मय्यावेश्य मनो ये मां नित्ययुक्ता उपासते।**
**श्रद्धया परयोपेतास्ते मे युक्ततमा मताः॥ २॥**

ஸ்ரீப₄க₃வானுவாச

**மய்யாவேஶ்ய மநோ யே மாம் நித்யயுக்தா உபாஸதே ।**
**ஶ்ரத்₃த₄யா பரயோபேதாஸ்தே மே யுக்ததமா மதா: ॥ 2 ॥**

**ஸ்ரீப₄க₃வானுவாச** – ஸ்ரீபகவான் கூறினார்: **மயி** – என்னிடத்தில், **மந:** – மனதை, **ஆவேஶ்ய** – ஒருமுகப்படுத்தி, **நித்யயுக்தா:** – எப்பொழுதும் என்னை வழிபடுதலிலும், த்யானம் செய்வதிலும் ஈடுபட்டுள்ள, **யே** – எந்த பக்த ஜனங்கள், **பரயா** – சிறந்த, **ஶ்ரத்₃த₄யா** – ச்ரத்தையுடன், **உபேதா:** – கூடியவர்களாக, **மாம்** – ஸகுணரூபத்தோடு கூடிய பரமேசுவரனான என்னை, **உபாஸதே** – வழிபடுகிறார்களோ, **தே** – அவர்கள், **யுக்ததமா:** – யோகிகளிலேயே மேலானவர் (என்று), **மே** – என்னால், **மதா:** – மதிக்கப்படுவர்.

ஸ்ரீபகவான் கூறினார்: "என்னிடத்தில் மனதை ஒருமுகப்படுத்தி எப்பொழுதும் என்னை வழிபடுதலிலும், த்யானம் செய்வதிலும் ஈடுபட்டுள்ள எந்த பக்த ஜனங்கள் சிறந்த ச்ரத்தையுடன் கூடியவர்களாக ஸகுணரூபத்தோடு கூடிய பரமேசுவரனான என்னை வழிபடுகிறார்களோ அவர்கள், யோகிகளிலேயே மேலானவர்கள் என்று என்னால் மதிக்கப்படுவர்.

**கேள்வி:** பகவானிடம் மனதை ஒருமுனைப்படுத்தி இடைவிடாது அவருடைய பஜனை, த்யானம் இவற்றில் ஈடுபட்டு உபாஸனை செய்வது என்றால் என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** கோபிகைகளைப்போல‡ எந்தச் செயல்களைச் செய்யும்போதும் பேரன்புக்குரிய, ஸர்வ வல்லமை படைத்த, அனைத்துக்கும் அந்தர்யாமியான, அனந்த கல்யாண குணக்கடலான பகவானிடத்தில் மனதை ஈடுப்படுத்தி, அவருடைய குணங்கள், ப்ரபாவங்கள், ஸ்வரூபங்களை எப்பொழுதும் அன்புடன் சிந்தித்து ஈடுபட்டிருப்பதே மனதை ஒரு முனைப்படுத்தி எப்பொழுதும் அவருடைய த்யானத்தில் நிலைபெற்று உபாஸனை செய்வதாகும்.

**கேள்வி:** சிறந்த ச்ரத்தையின் ஸ்வரூபம் எத்தகையது? 'அதோடு கூடியிருப்பது' எது?

**பதில்:** பகவான் இருக்கிறார் என்பதிலும், அவருடைய அவதாரங்களிலும், சொற்களிலும், சக்தியிலும், அவருடைய குணங்கள், ப்ரபாவங்கள், லீலைகள், ஐசுவர்யம் முதலியவற்றிலும் மிகுந்த மரியாதையோடு, நேரில் பார்ப்பதைக் காட்டிலும் அதிக நம்பிக்கை பெற்றிருப்பதே ச்ரத்தையின் ஸ்வரூபமாகும். ப்ரஹ்லாதனைப் போன்று பகவானிடமே பொறுப்புகளை ஒப்புவித்து விடுதலே சிறந்த ச்ரத்தையுடன் கூறயிருப்பதாகும்.

**கேள்வி:** 'அவர்களே யோகிகளில் மேலானவர்' என்று என்னால் மதிக்கப்படுவார்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த வாக்கியத்தினால் பகவான் இரண்டுவிதமான உபாஸகர்களில் தம்மை ஸகுண பரமாத்மாவாக உபாஸிப்பவரே யோகத்தை நன்கு அறிந்தவர் என்பது தம் கருத்து என்று கூறுகிறார்.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் ஸகுண-ஸாகார பகவானை உபாஸிப்பவர்தான் உத்தமமான யோகமறிந்தவர் என்று கூறிவிட்டு, அப்படியானால் நிர்குண-நிராகார ப்ரம்மத்தை உபாஸிப்பவர் சிறந்த யோகமறிந்தவர் ஆகமாட்டாரா என்ற கேள்விக்கு பகவான், பதில் அளிக்கிறார்—

ये त्वक्षरमनिर्देश्यमव्यक्तं पर्युपासते ।
सर्वत्रगमचिन्त्यं च कूटस्थमचलं ध्रुवम् ॥ ३ ॥
सन्नियम्येन्द्रियग्रामं सर्वत्र समबुद्धयः ।
ते प्राप्नुवन्ति मामेव सर्वभूतहिते रताः ॥ ४ ॥

**யே த்வக்ஷரமநிர்தே3ஶ்யமவ்யக்தம் பர்யுபாஸதே ।**
**ஸர்வத்ரக3மசிந்த்யம் ச கூடஸ்த2மசலம் த்4ருவம் ॥ 3 ॥**
**ஸந்நியம்யேந்த்3ரியக்3ராமம் ஸர்வத்ர ஸமபு3த்3த4ய: ।**
**தே ப்ராப்நுவந்தி மாமேவ ஸர்வபூ4தஹிதே ரதா: ॥ 4 ॥**

**து** – ஆனால், **யே** – எவர்கள், **இந்த்3ரியக்3ராமம்** – புலன்களின் தொகுதியை, **ஸந்நியம்ய** – நன்கு அடக்கி, **அசிந்த்யம்** – மனம்–புத்திகளுக்கு அப்பாற்பட்டது;

---

‡ யா தே3ாஹநேऽவஹநநே மத2நோபலேபப்ரேங்கே2ங்க2நார்ப4ருதி3தோக்ஷணமார்ஜநாதெ3ள ।
க3ாயந்தி சைநமநுரக்ததி4யோऽச்ருகண்ட்2யோ த4ந்யா வ்ரஜஸ்த்ரிய உருக்ரமசித்தயாநா: ॥
(ஸ்ரீமத்3பா4க3வதம் 10/44/15)

"பசுவிடம் பால் கறக்கும்போதும், தான்யங்களை உரலில் குத்தும்போதும், தயிர் கடையும்போதும், வீடு மெழுகும்போதும், குழந்தைகளைத் தொட்டிலில் இட்டு ஆட்டும்போதும், அழும் குழந்தையைத் தாலாட்டும்போதும், தண்ணீர் தெளிக்கும்போதும், வீடு பெருக்கும்போதும், பிற கார்யங்கள் செய்யும் போதும் ப்ரேமை நிறைந்த உள்ளத்தோடு கண்களில் நீர் பெருகத் தழுதழுத்த குரலில் ஸ்ரீக்ருஷ்ணனைப் பாடிப் பரவசம் கொண்டு எப்பொழுதும் ஸ்ரீக்ருஷ்ணனிடம் லயித்தவர்களான அந்த வ்ரஜப் பெண்மணிகள் பெரும் பேறு பெற்றவர்கள்!"

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ஸர்வத்ரகம்** – எங்கும் நிறைந்தது; **அநிர்தேஸ்யம் ச** – சொற்களால் விளக்க முடியாத ஸ்வரூபமுடையது என்றும், **கூடஸ்தம்** – என்றும் ஒரேவிதமாக இருப்பது; **த்ருவம்** – நித்யமானது; **அசலம்** – அசையாதது (இயக்கமற்றது); **அவ்யக்தம்** – உருவமற்றது; **அக்ஷரம்** – அழிவற்றது; ஸத் சித் ஆனந்தமானது ப்ரம்மம் என்று, **பர்யுபாஸதே** – எப்பொழுதும் ஒன்றிய பாவனையோடு த்யானம் செய்து உபாஸிக்கிறார்களோ, **ஸர்வ பூதஹிதே** – எல்லா உயிரினங்களின் நன்மையிலேயே, **ரதா:** – ஈடுபாடு கொண்டவர் களான, **ஸர்வத்ர** – எல்லாவற்றிலும், **ஸமபுத்தய:** – ஸமபாவனையுள்ள யோகிகளான, **தே** – அவர்களும், **மாம் ஏவ** – என்னையேதான், **ப்ராப்நுவந்தி** – அடைகிறார்கள்.

ஆனால் எவர்கள் புலன்களின் தொகுதியை நன்கு அடக்கி மனம், புத்திகளுக்கு அப்பாற் பட்டதும், எங்கும் நிறைந்ததும், சொற்களால் விளக்க முடியாததுமான ஸ்வரூபமுடையது என்றும், என்றும் ஒரேவிதமாக இருப்பது, நித்யமானது, அசையாதது, இயக்கமற்றது, உருவமற்றது, அழிவற்றது, ஸத் சித் ஆனந்தமானதே ப்ரம்மம் என்றெல்லாம், எப்பொழுதும் ஒன்றிய பாவனையோடு த்யானம் செய்து உபாஸிக்கிறார்களோ, எல்லா உயிரினங்களின் நன்மையிலேயே ஈடுபாடு கொண்டவர்களான, எல்லாவற்றிலும் ஸமபாவனையுள்ள யோகிகளான அவர்களும் என்னையேதான் அடைகிறார்கள்.

**கேள்வி:** 'அசிந்த்யம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** மனம், புத்தி இவைகட்கு அப்பாற்பட்டவர் (இவற்றால் அறிய முடியாதவர்) என்று பொருள்.

**கேள்வி:** 'ஸர்வத்ரகம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** ஆகாசம் போன்று அங்கிங்கெனாதபடி எங்கும் விரவி இருப்பவர் என்று பொருள்.

**கேள்வி:** 'அநிர்தேஸ்யம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** குறிப்பிட்டு இன்னதெனச் சொல்லப்பட முடியாதவர்; யுக்தியினாலோ, உவமையினாலோ அவருடைய ஸ்வரூபத்தை இன்னதென்று காட்டப்பட முடியாதவர். அதாவது அவர் சொல்லுக்கடங்காதவர் என்று பொருள்.

**கேள்வி:** 'கூடஸ்தம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** எக்காரணத்தாலும் ஒருபோதும் மாறுபடாதவர். எப்போதும் ஒரே தன்மையாக இருப்பவர்.

**கேள்வி:** 'த்ருவம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** நித்யமாகவும், நிச்சயமாகவும் இருப்பது 'த்ருவம்'. எவர் இருக்கிறார் என்பதில் ஐயமே எழவில்லையோ, எவர் எப்பொழுதும் இல்லாமையற்றவரோ, அவரை 'த்ருவம்' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'அசலம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** இங்குமங்கும் அசையாதவர் அதாவது சலனமற்றவர் என்று பொருள்.

**கேள்வி:** 'அவ்யக்தம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** புலன்களுக்குப் புலப்படாதவர், உருவமும் அமைப்பும் அற்றவர் என்று பொருள்.

**கேள்வி:** 'அக்ஷரம்' என்றால் என்ன?

**பதில்:** என்றும் எக்காரணம் பற்றியும் அழிவற்றவர் என்று பொருள்.

**கேள்வி:** இத்தனை அடைமொழிகள் கூறுவதன் கருத்து என்ன? அப்படிப்பட்ட ப்ரம்மத்தைச் சிறந்த முறையில் உபாஸிப்பது எப்படி?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** மேலே சொன்ன அடைமொழிகளால் நிர்குண-நிராகார ப்ரம்மத்தின் இலக்கணங்களை நன்கு எடுத்துரைத்தார். இவ்விதம் பரப்ரம்மத்தை அறிந்து, அதில் இரண்டறக் கலக்கும் பாவனையுடன் எப்போதும் த்யானம் செய்து கொண்டிருப்பதே அவருடைய சிறந்த உபாஸனை ஆகும்.

**கேள்வி:** 'ஸர்வபூதஹிதே ரதா:' என்பதற்குப் பொருள் என்ன?

**பதில்:** விவேகமில்லாதவன் தன்னலத்தையே எப்பொழுதும் கருதுவது போன்று, அந்த நிர்குண உபாஸகர்கள் எல்லா ப்ராணிகளிடத்தும் ஆத்மபாவம் கொண்டமையினால், அவற்றின் நலத்தில் கருத்துடையவர்கள் என்று பொருள்.

**கேள்வி:** 'ஸர்வத்ர ஸமபுத்தய:' என்பதன் கருத்து என்ன?

**பதில்:** மேலே சொன்னவிதம் நிர்குணமான, உருவமற்ற ப்ரம்மத்தை உபாஸனை செய்பவர்களுக்கு எங்கும், எதிலும் வேற்றுமை காணும் எண்ணம் கிடையாது. அகில உலகிலும் ப்ரம்மம் தவிர வேறொன்று இருப்பதாகவே நினைக்க மாட்டார்கள். ஆகவே, அவர்களுக்கு எங்கும் ஸமமான பாவனையே இருக்கும் என்று பொருள்.

**கேள்வி:** 'அவர்கள் என்னையே அடைகிறார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவான் தாமும், ப்ரம்மமும் வேறல்ல என்று கூறுகிறார். மேலும் "மேலே சொன்ன உபாஸனையின் பயனாக நிர்குணப்ரம்மத்தை அடைவது என்பது என்னையே அடைவது ஆகும். ஏனெனில் ப்ரம்மம் என்பது என்னைத் தவிர வேறன்று. நான் ப்ரம்மத்தைத் தவிர வேறல்லன். அந்த ப்ரம்மம் நானேதான்" என்கிறார். இதையே 'ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டாஹம்' *(14/27)* அதாவது 'நான் ப்ரம்மத்தின் நிலையான இடம்' என்று கூறுகிறார்.

**கேள்வி:** இருவருமே பகவானை அடைகிறார்கள் என்றால் இரண்டாவது ச்லோகத்தில் ஸகுண உபாஸகர் சிறந்தவர் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** *11/54*ல் 'அநன்ய பக்தியின் மூலம் மனிதன் என்னைக் காணலாம், தத்வரீதியாக உணரலாம், என்னை அடையலாம்' என்று கூறினார். பரமாத்மாவைத் தத்வரீதியாக உணர்வதும், அடைவதும் இரண்டுமே நிர்குண உபாஸகர்களுக்கு ஒன்றுதான். ஆனால் நிர்குண உபாஸகர்களுக்கு பகவான் தம் ஸகுண ஸ்வரூபத்தை தர்சனம் செய்து வைக்க வேண்டிய கட்டாயமில்லை. ஆனால் ஸகுண உபாஸகர்களுக்கு பகவானுடைய தர்சனமும் கிடைக்கும். ஸகுண உபாஸனையின் சிறப்பு இதுதான்.

**பொருத்தம்: இவ்விதம் நிர்குண உபாஸனையையும், அதன் பயனையும் கூறி, தேஹ அபிமானம் உள்ளவர்களுக்கு நிர்குணப்ரம்மத்தை அடைவது கடினம் என்று கூறுகிறார்—**

**क्लेशोऽधिकतरस्तेषामव्यक्तासक्तचेतसाम् ।**
**अव्यक्ता हि गतिर्दुःखं देहवद्भिरवाप्यते ॥ ५ ॥**

**க்லேஶோऽதி₄கதரஸ்தேஷாமவ்யக்தாஸக்தசேதஸாம் ।**
**அவ்யக்தா ஹி க₃திர்து₃:க₂ம் தே₃ஹவத்₃பி₄ரவாப்யதே ॥ 5 ॥**

**அவ்யக்த ஆஸக்த சேதஸாம்** – ஸத் சித் ஆனந்தமயமான, உருவமற்ற ப்ரம்மத்தில் மனதை ஈடுபடுத்தும், **தேஷாம்** – அந்த மனிதர்களுக்கு, **க்லேஶ:** – ஸாதனையில் உழைப்பு, **அதி₄கதர:** – மிக அதிகமாகும். **ஹி** – ஏனெனில், **தே₃ஹவத்₃பி₄:** – உடலில் பற்றுள்ளவர்களால், **அவ்யக்தா** – உருவமற்ற ப்ரம்ம விஷயமான, **க₃தி:** – மார்க்கம், **து₃:க₂ம்** – மிகுந்த ச்ரமத்துடன், **அவாப்யதே** – அடையப்படுகிறது.

ஸத் சித் ஆனந்தமயமான உருவமற்ற ப்ரம்மத்தில் மனதை ஈடுபடுத்தும் அந்த மனிதர்களுக்கு ஸாதனையில் உழைப்பு அதிகமாகும். ஏனெனில் உடலில் பற்றுள்ளவர்களால் உருவமற்ற ப்ரம்ம விஷயமான மார்க்கம் மிகுந்த ச்ரமத்துடன் அடையப்படுகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'தேஷாம்' எனும் சொல்லுடன் கூடிய 'அவ்யக்தாஸக்தசேதஸாம்' எனும் சொல் யாரைக் குறிக்கிறது? அவர்களுடைய உழைப்பு அதிகம் என்பதன் பொருள் யாது?

**பதில்:** முன் ச்லோகத்தில் வர்ணித்த நிர்குண உபாஸகர்களுடைய மனம் நிர்குணமான, உருவமற்ற, ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்திலேயே ஈடுபட்டிருக்கும். அவர்களையே இங்கு குறிப்பிடுகிறார். அவர்களுக்கு உழைப்பு அதிகம். ஏனெனில் நிர்குண ப்ரம்மத்தின் தத்வம் மிகவும் ஆழ்ந்தது. அவருடைய புத்தி சுத்தமாகவும், ஸ்திரமாகவும், கூர்மையாகவும் இருக்கவேண்டும். அவருக்கு உடலில் அபிமானம் இருக்கக் கூடாது. அவர்தான் அந்த ப்ரம்மத்தை அறிய முடியும். ஸாதாரண மனிதர்களின் அறிவுக்கு அது எட்டாது. ஆகவே நிர்குண உபாஸகர்களுக்கு ஸாதனையின் ஆரம்ப காலத்தில் உழைப்பு அதிகமாகத்தான் இருக்கும்.

**கேள்வி:** 'உருவமற்ற ப்ரம்மத்தை உபாஸிக்கும் மார்க்கம் உடலில் பற்றுள்ளவர்களால் மிகவும் கஷ்டப்பட்டு அடையப்படுகிறது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ச்லோகத்தில் முன்பாதியில் கடினமான உழைப்பு வேண்டுமென்று கூறியதற்கானக் காரணத்தை இப்பொழுது கூறுகிறார். தேஹத்தில் பற்று – 'தான்', 'தனது' என்ற பற்று இருந்தால், நிர்குண ப்ரம்மம் பற்றிய தத்வத்தைப் புரிந்து கொள்வது மிகவும் கடினமாகும். ஆகவே உடலில் பற்றுள்ளவர்கள் அந்த நிலையை எய்துவது மிகவும் கடினமான உழைப்பினால்தான் முடியும் என்பது கருத்து.

**கேள்வி:** இங்கு அவ்யக்த உபாஸனைக்கு அதிக உழைப்பு வேண்டுமென்கிறார். 9/2ல் 'கர்தும்', 'ஸுஸுகம்' எனும் சொற்களால் ஞான விஞ்ஞானம் பெறுவது எளிது என்று கூறி, 4,5,6வது ச்லோகங்களிலும் அந்த அவ்யக்தம் பற்றியே கூறியிருக்கிறார். இந்த இரண்டுக்கும் முரண்பாடு இருப்பதுபோலத் தோன்றுகிறதே. ஏன் இப்படி?

**பதில்:** முரண்பாடு ஒன்றுமில்லை. 9வது அத்யாயத்தில் ஞானம், விஞ்ஞானம் என்ற சொற்கள் ஸகுண ஸ்வரூபமான பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், தத்வங்களைக் குறிப்பாகச் சொல்கின்றன. அங்கு ஸகுணமான உருவமற்ற ப்ரம்மத்தின் உபாஸனைதான் செய்வதற்கு எளிதானது என்று கூறினார். ச்லோகம் 9/4ல் வரும் 'அவ்யக்த' என்ற சொல் ஸகுணமான ஆனால் உருவமற்ற ஸ்வரூபத்தைக் குறிக்கும். அதனால்தான் அந்த ஸ்வரூபம் எல்லா ப்ராணிகளையும் தாங்குவது, காப்பாற்றுவது, எங்கும் நிறைந்தது, எதன் தொடர்புமின்றியே எல்லாவற்றையும் படைப்பது முதலிய செயல்களைச் செய்வது என்றெல்லாம் கூறியிருக்கிறார். இங்கோ நிர்குண-நிராகார ப்ரம்மத்தின் உபாஸனை தேஹாபிமானமுள்ளவர்கட்குக் கடினமானது என்று கூறுகிறார்.

**கேள்வி:** 6/24 முதல் 27 வரை நிர்குண உபாஸனையின் முறையைக் கூறி, 6/28ல் அந்த ஸாதனையைப் புரிந்து கொண்டே எளிதாக பரமாத்மாவை அடைதலாகிய முடிவற்ற ஆனந்தம் பெறலாம் என்று கூறியதற்கும், இதற்கும் ஒன்றுக்கொன்று எப்படிப் பொருந்தும்?

**பதில்:** அங்கு ஸகல பாவங்களும், ரஜோகுணமும், தமோகுணமும் நசித்துப் போய் ப்ரம்மமாக ஆகிவிட்ட மனிதரைப் பற்றிக் கூறுகிறார். தேஹத்தில் பற்றுள்ளவர்களைப் பற்றி அல்ல. ஆகவே, அவர்கள் ஸுகமாக ப்ரம்மத்தை அடைவார்கள் என்று கூறியது சரிதான்.

**கேள்வி:** நிர்குண உபாஸகர்களுக்கு மட்டும்தான் ஸாதனை புரியும் காலத்தில் அதிக உழைப்பு வேண்டுமா? ஸகுண உபாஸகர்களுக்கு வேண்டாமா?

**பதில்:** ஸகுண உபாஸகர்களுக்கு அவ்வளவு உழைப்புத் தேவையில்லை. ஏனெனில் ஸகுணோபாஸனை எளிதானது. மேலும் அவர்கள் பகவானிடமே தங்கள் பொறுப்பை ஒப்படைத்துவிட்டார்கள். அதனால் பகவான் தாமே அவர்களுக்கு எல்லாவிதமான உதவிகளும் செய்வார். அப்படியிருக்கும்போது அவர்களுக்கு என்ன சிரமம்?

**பொருத்தம்: இவ்விதம் நிர்குண-நிராகார உபாஸனையில் தேஹாபிமானிகள் பரமாத்மாவை அடைவது கடினம் என்று கூறி, அதன் பிறகு இரண்டு ச்லோகங்கள்**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மூலமாக ஸகுண பரமேசுவரனுடைய உபாஸனையினாலே பரமாத்மாவை விரைவாகவும், எளிதாகவும் அடையலாம் என்று கூறுகிறார்—

ये तु सर्वाणि कर्माणि मयि सन्न्यस्य मत्पराः ।
अनन्येनैव योगेन मां ध्यायन्त उपासते ॥ ६ ॥

**யே து ஸர்வாணி கர்மாணி மயி ஸந்ந்யஸ்ய மத்பரா: ।**
**அநந்யேநைவ யோகே₃ந மாம் த்₄யாயந்த உபாஸதே ॥ 6 ॥**

**து** – ஆனால், **மத்பரா:** – என்னையே கதியாகக் கொண்ட, **யே** – எந்த பக்தர்கள், **ஸர்வாணி** – எல்லா, **கர்மாணி** – கர்மங்களையும், **மயி** – என்னிடம், **ஸந்ந்யஸ்ய** – ஸமர்ப்பணம் செய்து, **மாம் ஏவ** – ஸகுணமான பரமாத்மாவான என்னையே, **அநந்யேந** – அநன்யமான, **யோகே₃ந** – பக்தியோகத்துடன், **த்₄யாயந்த:** – இடைவிடாது த்யானம் செய்து கொண்டு, **உபாஸதே** – உபாஸிக்கிறார்களோ—

ஆனால் என்னையே கதியாகக் கொண்ட எந்த பக்தர்கள் எல்லாக் கர்மங்களையும் என்னிடம் ஸமர்ப்பணம் செய்து ஸகுணமான பரமாத்மாவான என்னையே அநன்யமான பக்தி யோகத்துடன் இடைவிடாது த்யானம் செய்து கொண்டு உபாஸிக்கிறார்களோ—

**கேள்வி:** 'து' என்ற சொல்லின் அபிப்ராயம் என்ன?

**பதில்:** நிர்குண உபாஸகர்களைவிட ஸகுண உபாஸகர்கள் மாறுபட்டவர்; தனிச்சிறப்புடையவர் என்பதை உணர்த்த 'து' (ஆனால்) என்ற சொல்லைக் கூறுகிறார்.

**கேள்வி:** 'என்னையே அடைக்கலமாகக் கொள்வது' என்றால் என்ன கருத்து?

**பதில்:** "பகவானிடம் தன் பொறுப்பை ஒப்படைத்து, விதவிதமான துக்கங்கள் நேர்ந்தாலும் பக்தனான ப்ரஹ்லாதனைப்போல பயமற்று, கலக்கமற்று, அந்த துக்கங்கள் பகவான் அளித்த பரிசுகள் என்று கருதி, அவற்றை நன்மைகள் என்றே நினைத்து, பகவானையே மிகவும் அன்புள்ளவர் என்றும், பரமகதி என்றும், உற்ற நண்பர் என்றும், எல்லாவிதங்களிலும் சரணடையத்தக்கவர் என்றும் அறிந்து தன்னையே முற்றிலும் பகவானிடம் ஸமர்ப்பணம் செய்துவிடுவது" என்று பொருள்.

**கேள்வி:** 'எல்லாக் கர்மங்களையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்வது' என்றால் என்ன?

**பதில்:** கடமைகளை ஆற்றும்போது தன்னை அடிமையாக நினைத்து பகவானுடைய ஆணையையும், குறிப்பையும் அறிந்து, பொம்மலாட்ட பொம்மையைப்போல எல்லாக் கடமைகளையும் ஆற்றிக் கொண்டே இருப்பது; அப்படி ஆற்றப்பட்ட கடமைகளைத்தான் செய்தோம் என்றோ, அவை தனக்கு உரியவை என்றோ பற்றுக் கொள்ளாமல் இருப்பது; அவற்றின் விளைவுகளில் சிறிதுகூடத் தொடர்பு வைத்துக் கொள்ளாமல் இருப்பது; சாஸ்த்ர முறைப்படி ஆற்றப்படும் ஒவ்வொரு செயலிலும் "நான் நிமித்தம் மாத்திரம்தான். இதைச் செய்ய எனக்கு ஆற்றல் கிடையாது. பகவான்தான் தம் விருப்பப்படி என் மூலம் இந்தக் கார்யங்களை நிறைவேற்றிக் கொள்கிறார்" என்ற பாவனையுடன் இருப்பது என்று பொருள்.

**கேள்வி:** அநன்ய பக்தியோகம் என்பது என்ன? அதன் மூலம் பகவானைச் சிந்தித்துக் கொண்டே அவரை உபாஸிப்பது என்றால் என்ன?

**பதில்:** 'எனக்குப் பரமேசுவரனைத் தவிர வேறு யாருமில்லை. அவரே எனக்கு எல்லாம்' என்றறிந்து பகவானிடம் தன்னலம் கருதாது மிகுந்த ச்ரத்தையுடன், அநன்ய ப்ரேமை செலுத்த வேண்டும். அந்த அநன்ய ப்ரேமையில் தன்னலமோ, அஹம்பாவமோ வேறொன்றைக் கருதும் குறையோ எதுவும் இல்லாது, அது எப்போதும் பூர்ணமாகவும், அசையாததாயும் இருக்கவேண்டும். வேறு பொருட்களில் சிறிதுகூடப் பற்று இருக்கக் கூடாது. அதன் காரணமாக, கணநேரம் பகவானை மறந்தால் கூட, அது பொறுக்கவொண்ணாததாக ஆகிவிட

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வேண்டும். இதுதான் 'அநன்ய பக்தியோகம்.' இவ்விதமான அநன்ய பக்தியின் மூலம் இடைவிடாது பகவானையே சிந்தனை செய்து கொண்டு, அவருடைய குணங்கள், ப்ரபாவங்கள், லீலைகள் இவற்றைக் கேட்பது, கீர்த்தனம் செய்வது, அவருடைய திருநாமங்களை ஓதுவது, ஜபம் செய்வது இவையெல்லாம் உபாஸனை ஆகும்.

तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात् ।
भवामि नचिरात्पार्थ मय्यावेशितचेतसाम् ॥ ७ ॥

தேஷாமஹம் ஸமுத்₄த₄ர்தா ம்ருத்யுஸம்ஸாரஸாக₃ராத் ।
ப₄வாமி நசிராத்பார்த₂ மய்யாவேஶிதசேதஸாம் ॥ 7 ॥

**பார்த₂** – அர்ஜுன! (இவ்விதம்), **மயி** – என்னிடம், **ஆவேஶித சேதஸாம்** – மனதை ஈடுபடுத்தியவர்களான ப்ரேம பக்தி செய்யும், **தேஷாம்** – அவர்களை, **நசிராத்** – சீக்கிரமாகவே, **அஹம்** – நான், **ம்ருத்யு ஸம்ஸார ஸாக₃ராத்** – மரண வடிவான ஸம்ஸாரக் கடலிலிருந்து, **ஸமுத்₄த₄ர்தா** – கரையேற்றுபவனாக, **ப₄வாமி** – ஆகிறேன்.

அர்ஜுன! இவ்விதம் என்னிடம் மனதை ஈடுபடுத்தியவர்களான ப்ரேம பக்தி செய்யும் அவர்களை சீக்கிரமாகவே நான் மரண வடிவான ஸம்ஸாரக் கடலிலிருந்து கரையேற்று பவனாக ஆகிறேன்.

**கேள்வி:** 'தேஷாம்' என்ற பதத்தோடு கூடிய 'மய்யாவேஶிதசேதஸாம்' என்பது யாரைக் குறிக்கிறது?

**பதில்:** முன் ச்லோகத்தில் கூறப்பட்டவர்களான மனதையும், புத்தியையும் எப்பொழுதுமே பகவானிடத்தில் ஈடுபடுத்துகின்ற அநன்ய ப்ரேமை கொண்ட ஸகுண உபாஸகர்களைத்தான் இச்சொல் குறிக்கிறது.

**கேள்வி:** மரண வடிவான ஸம்ஸாரக் கடல் எது? அதிலிருந்து பகவான் விரைவில் மீட்பார் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இவ்வுலகத்தில் உள்ள எல்லா ப்ராணிகளும் மரணத்தின் பிடியில் சிக்கியவை. இங்கே பிறவியெடுக்கும் ஒவ்வொரு ப்ராணியும் ஒரு கணம்கூட ம்ருத்யுவின் பிடியிலிருந்து மீள முடியாது. கடலில் எண்ணற்ற அலைகள் உண்டாவதுபோலக் கரையற்ற இந்த ஸம்ஸாரக் கடலில் பிறப்பு–இறப்பு என்ற அலைகள் எழுந்தவண்ணம் உள்ளன. கடல் அலைகளை எண்ணினாலும் எண்ணிவிடலாம். ஆனால் ஒரு ஜீவன் பகவானை அடைவதற்கு முன் எத்தனைப் பிறவி எடுக்கிறான், மரிக்கிறான் என்பதைக் கணக்கெடுக்க முடியாது. ஆகவே ஸம்ஸாரத்தைப் பெருங்கடல் என்றார்.

மேற்சொன்னவாறு மனதையும், புத்தியையும் பகவானிடம் ஈடுபடுத்தி இடைவிடாது பகவானை உபாஸிப்பவனை பகவான் அதே நேரத்தில் பிறப்பு–இறப்பு என்பதிலிருந்து முற்றிலும் விடுவித்து இங்கேயே தம்மை வந்து சேரும்படி செய்துவிடுகிறார். அல்லது இறந்த பிறகு வைகுண்டத்திற்கு அழைத்துச் சென்றுவிடுகிறார். ஓடக்காரன் பயணியை தன் ஓடத்தில் ஏற்றிக் கொண்டு அவனை அக்கரைக்குக் கொண்டு சேர்ப்பது போல, பக்தி என்ற ஓடத்தில் ஏற்றி பகவான் தாமே ஓடக்காரனாக இருந்து, அவனுடைய ஸகல இன்னல்களையும், கஷ்டங்களையும், விபத்துக்களையும் விலக்கி வெகு விரைவில் அந்த பயங்கரமான ஸம்ஸாரக் கடலிலிருந்து அக்கரை சேர்த்துத் தம்மிடத்திற்கு அழைத்துச் செல்கிறார். இதுதான் மரண வடிவாகிய ஸம்ஸாரக் கடலைக் கடப்பதாகும்.

**பொருத்தம்:** இவ்விதம் முன் ச்லோகங்களில் நிர்குண உபாஸனையைக் காட்டிலும் ஸகுண உபாஸனை எளிது என்று கூறினார். 'ஆகவே அர்ஜுன! மனம், புத்தி இவற்றை ஸகுண உபாஸனையில் செலுத்துவாயாக!' என்று ஆணையிடுகிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



मय्येव मन आधत्स्व मयि बुद्धिं निवेशय।
निवसिष्यसि मय्येव अत ऊर्ध्वं न संशयः॥८॥

மய்யேவ மந ஆதத்ஸ்வ மயி புத்திம் நிவேஶய ।
நிவஸிஷ்யஸி மய்யேவ அத ஊர்த்வம் ந ஸம்ஶய: ॥ 8 ॥

**மயி ஏவ** – என்னிடமே, **மந:** – மனதை, **ஆதத்ஸ்வ** – நிலைநிறுத்து. **மயி (ஏவ)** – என்னிடமே, **புத்திம்** – புத்தியை, **நிவேஶய** – ஈடுபடுத்து. **அத:** – அதற்கு, **ஊர்த்வம்** – பிறகு, **மயி ஏவ** – என்னிடமே, **நிவஸிஷ்யஸி** – வாழ்வாய். **ந ஸம்ஶய:** – (இதில் சிறிதும்) ஐயமில்லை.

என்னிடமே மனதை நிலைநிறுத்து. என்னிடமே புத்தியை ஈடுபடுத்து. அதற்குப் பிறகு என்னிடமே வாழ்வாய். இதில் சிறிதும் ஐயமில்லை.

**கேள்வி:** 'புத்தியையும், மனதையும் பகவானிடம் நிலைநிறுத்துவது' என்றால் என்ன?

**பதில்:** பகவான் அகில சராசரங்களிலும் நிறைந்து விளங்கி எல்லா ப்ராணிகளுடைய இதயத்திலும் வீற்றிருக்கிறார். அவர் தயை, பேரறிவு, இனிய பண்பு, நட்பு முதலிய நற்குணங்களின் கடலாக விளங்குபவர். அப்படிப்பட்ட தெய்விகமான, ப்ரேமமயமான, ஆனந்தமயமான, ஸர்வ வல்லமை படைத்த, எல்லாவற்றிற்கும் உயர்ந்த, ஶரணமடையத்தக்க பரமாத்மாவினுடைய குணங்கள், ப்ரபாவங்கள், லீலைகளின் தத்வம், ரஹஸ்யம் இவற்றை நன்கு அறிந்து மனதை அவரிடமே எப்பொழுதும் அசையாமல், உறுதியாக நிலைபெறச் செய்வதுதான் புத்தியை பகவானிடம் ஈடுபடுத்துவது ஆகும். இவ்வாறு தன் அன்புக்குரிய புருஷோத்தமனான பகவானைத் தவிர வேறு எதிலாவது சிறிது பற்று இருந்தால்கூட அதை விலக்கி, மனதை அவரிடமே ஈடுபடுத்தித் தன்மயமாக்கிவிடுவது; இடைவிடாது மேலே சொன்னவிதம் அவரை நினைத்துக் கொண்டிருப்பது – இதுதான் மனதை பகவானிடமே ஈடுபடுத்துவது ஆகும்.

இவ்விதம் தன் மனதையும், புத்தியையும் பகவானிடம் ஈடுபடுத்துபவன் விரைவிலேயே பகவானை அடைகிறான்.

**கேள்வி:** மனதையும், புத்தியையும் பகவானிடம் செலுத்தினால் பகவானை அடைவது திண்ணமானால், ஏன் அனைவரும் பகவானிடம் மனதையும், புத்தியையும் செலுத்துவதில்லை?

**பதில்:** பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், லீலைகளின் தத்வங்கள், ரஹஸ்யங்கள் இவற்றை அறியாத காரணத்தினால் பகவானிடம் ச்ரத்தையும், ப்ரேமையும் ஏற்படுவதில்லை. அஞ்ஞானத்தினால் உண்டான பற்றின் காரணமாக உலகியல் பொருட்களில் சிந்தனை தொடர்ந்து இருந்துகொண்டே இருக்கிறது. உலகில் பெரும்பாலான மக்களின் நிலை இதுதான். ஆகவே அனைவரும் பகவானிடம் புத்தியையும், மனதையும் செலுத்துவது இல்லை.

**கேள்வி:** அஞ்ஞானத்தில் உண்டான பற்றினால் மக்களுக்கு உலகியல் பொருட்களைப் பற்றி நினைக்கும் தீய பழக்கம் இருந்து கொண்டே இருக்கிறதே, அதை விலக்க என்ன வழி?

**பதில்:** பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், லீலைகளின் தத்வங்கள், ரஹஸ்யங்கள் ஆகியவற்றைத் தெரிந்து கொண்டு, அவற்றை ஏற்கும் பழக்கம் ஏற்பட்டால் இத்தீய பழக்கம் தானாகவே விலகிவிடும்.

**கேள்வி:** பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், லீலைகளின் தத்வஞானம், ரஹஸ்யஞானம் எப்படி ஏற்படும்?

**பதில்:** பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், லீலைகளின் தத்வங்கள், ரஹஸ்யங்கள் இவற்றையெல்லலாம் அறிந்த பெரியோர்களை அணுக வேண்டும். அவர்களுடைய பண்புகளையும், ஒழுக்கங்களையும் பின்பற்ற வேண்டும். உலகியல் போகங்கள், சோம்பல்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தடுமாற்றம் இவற்றைத் துறந்து அவர்கள் காட்டும் வழியில் நம்பிக்கையுடனும், ஈடுபாட்டுடனும் ஸாதனைகள் செய்து பழகினால் அவற்றின் அறிவு ஏற்படும்.

**பொருத்தம்: 'முன் சொன்னவிதம் நான் என் மனதையும், புத்தியையும் பகவானிடம் செலுத்த முடியாவிட்டால் என்ன செய்வது?' என்ற கேள்விக்குப் பதில் கூறுகிறார்—**

**अथ चित्तं समाधातुं न शक्नोषि मयि स्थिरम्।**
**अभ्यासयोगेन ततो मामिच्छाप्तुं धनञ्जय॥ ९॥**

**அத₂ சித்தம் ஸமாத₄ாதும் ந ஶக்நோஷி மயி ஸ்தி₂ரம் ।**
**அப்₄யாஸயோகே₃ந ததோ மாமிச்ச₂ாப்தும் த₄நஞ்ஜய ॥ ९ ॥**

**த₄நஞ்ஜய** – அர்ஜுன! **அத₂** – ஒருகால், **சித்தம்** – மனதை, **மயி** – என்னிடம், **ஸ்தி₂ரம்** – அசையாமல், **ஸமாத₄ாதும்** – நிறுத்தி வைப்பதற்கு, **ந ஶக்நோஷி** – முடியாவிட்டால், **தத:** – அப்போது, **அப்₄யாஸ யோகே₃ந** – பகவந்நாம கீர்த்தனம் (இறைவன் திருநாமம் ஓதுதல்) முதலிய பயிற்சி யோகத்தினால், **மாம்** – என்னை, **ஆப்தும்** – அடைய, **இச்ச₂** – விரும்பு.

அர்ஜுன! ஒருகால் மனதை என்னிடம் அசையாமல் நிறுத்தி வைப்பதற்கு முடியாவிட்டால் அப்போது பகவந்நாம கீர்த்தனம் – இறைவன் திருநாமம் ஓதுதல் முதலிய பயிற்சி யோகத்தினால் என்னை அடைய விரும்பு.

**கேள்வி:** இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

**பதில்:** பகவான் அர்ஜுனனை நிமித்தமாகக் கொண்டு அகில உலகும் நலம் பெற உபதேசம் செய்கிறார். உலகில் எல்லா ஸாதகர்களுக்கும் ஒரேவிதமான இயல்பு இருப்பதில்லை. எனவே ஒரே மாதிரியான ஸாதனை அனைவருக்கும் பயன்படாது. வெவ்வேறு இயல்பு உள்ளவர்களுக்கு வெவ்வேறு ஸாதனைகள் உதவியாக இருக்கும். ஆகவே பகவான் இந்த ச்லோகத்தில் 'நீ மேலே சொன்னவிதம் மனதையும், புத்தியையும் என்னிடம் ஸ்திரமாக நிலைநிறுத்துவது உன்னால் இயலாது என்று நினைத்தாயானால், நீ அப்யாஸ யோகத்தைக் கடைப்பிடித்து என்னை அடைவதற்கு விரும்பவேண்டும்' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'அப்யாஸயோகம்' என்றால் என்ன? அதன் மூலம் பகவானை அடைய விரும்புவது எப்படி?

**பதில்:** பகவானையடைவதற்காகவும், பலவிதமான உத்திகளால் பகவானிடம் மனதை நிலைநிறுத்துவதற்காகவும் அடுத்தடுத்துப் பயிற்சி செய்வதுதான் 'அப்யாஸயோகம்' ஆகும். பகவானுடைய எந்த ஸ்வரூபத்தில், எந்தப் பெயரில், குணங்களில், லீலைகளில் ஸாதகனுக்கு நம்பிக்கையும், ப்ரேமையும் உள்ளதோ, அந்த ஒன்றில் விடாப்பிடியாக மனதை நிலைநிறுத்துவது என்ற பயிற்சி செய்து அதன் மூலம் பகவானை அடைய விரும்ப வேண்டும்.

பகவானிடத்தில் மனதை நிலைக்க வைப்பதற்கு உரிய ஸாதனங்கள் சாஸ்த்ரங்களில் பலவாறு கூறப்பட்டுள்ளன. அவற்றில் சில எல்லோருக்கும் சிறப்பாகப் பயன்படுபவை:-

1. சூரியனுக்கு எதிராக அமர்ந்து கண்களை மூடிக் கொண்டால் மனதில் எங்கும் ஸமமாக ஓர் ஒளி பரவுவது தெரிகிறது. அதைவிட ஆயிரக்கணக்கான மடங்கு ஒளி பகவானிடம் உள்ளது. இவ்விதம் மனதில் சிந்தனை செய்து பரமாத்மாவினுடைய அந்த ஒளிமயமான ஜ்யோதிஸ்வரூபத்தில் மனம் நிலைக்குமாறு அடிக்கடி முயல வேண்டும்.
2. நெருப்புக்குச்சியில் நெருப்பு நிறைந்துள்ளது போன்று, பகவான் எங்கும் நிறைந்திருக்கிறார் என்று புரிந்து கொண்டு மனம் எங்கெல்லாம் துள்ளி ஓடுகிறதோ, அங்கெல்லாம் குணங்களுடனும், ப்ரபாவங்களுடனும் கூடிய

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸர்வ வல்லமை பெற்ற பேரன்புக்குரிய பகவானுடைய ஸ்வரூபத்தைப் பேரன்புடன் திரும்பத் திரும்பச் சிந்திக்க வேண்டும்.

3. மனம் எங்கெங்கு ஓடினாலும் அதைத் தடுத்து நிறுத்தி, பகவான் விஷ்ணு, சிவன், ராமன், க்ருஷ்ணன் முதலிய தம்முடைய மனதில் தோன்றும் இஷ்ட தெய்வத்தினுடைய ஸ்வரூபத்திலோ, வெளியே உள்ள படத்திலோ, உலோகத்தினால் ஆன விக்ரஹத்திலோ, நாமஜபத்திலோ மிகவும் ச்ரத்தையும், அன்பும் கொண்டு, நாமஜபத்தில் திரும்பத் திரும்ப மனதை ஈடுபடுத்த முயற்சி செய்யவேண்டும்.

4. வண்டு ரீங்காரம் செய்வதுபோல ஒரே குரலில் மனதில் ஓம்காரத்தை ஜபம் செய்து கொண்டு அந்த ஒலியில் பரமேசுவரனுடைய ஸ்வரூபத்தை மீண்டும் மீண்டும் சிந்திக்க வேண்டும்.

5. இயல்பாக மூச்சுவிட்டு இழுக்கும்போது பகவானுடைய நாமஜபத்தையும் இடைவிடாது செய்து வரவேண்டும்.

6. பரமாத்மாவினுடைய நாமஜபங்கள், ரூபம், குணம், சரித்ரம், ப்ரபாவம் இவற்றின் ரஹஸ்யங்களை அறிவதற்காக அவற்றைப் பற்றி எடுத்துரைக்கும் தெய்விக நூல்களைத் திரும்பத் திரும்பப் படிக்க வேண்டும்.

7. 4/29ல் சொன்னபடி ப்ராணாயாமம் செய்து பழகவேண்டும்.

இவற்றில் ஏதாவது ஒரு பயிற்சியை ச்ரத்தையுடனும், நம்பிக்கையுடனும், ஈடுபாட்டுடனும் செய்து வந்தால் படிப்படியாக எல்லாப் பாவங்களும், இடையூறுகளும் விலகி, முடிவில் பகவானை அடையலாம். இதற்கு மிகுந்த உற்சாகத்துடனும், மன ஒருமையுடனும் பயிற்சி செய்யவேண்டும். ஸாதகர்களின் நிலை, தகுதி, ஸாதனையின் போக்கு இவற்றின் ஏற்றத்தாழ்வுகளைப் பொறுத்துப் பயன் அடைவது தாமதமாகவோ, விரைவாகவோ நேரும். ஆகவே விரைவில் பயன் ஏற்படாவிட்டால் பயிற்சி கடினம் என்று கருதியோ மனச்சோர்வு கொண்டோ, சோம்பலினாலோ முயற்சியைக் கைவிடலாகாது. குறைக்கவும் கூடாது. மேலும் மேலும் வளர்த்துக் கொள்ளவேண்டும்.

**பொருத்தம்: 'இந்தப் பயிற்சியும் என்னால் செய்ய முடியாவிட்டால் நான் என்ன செய்யவேண்டும்?' என்பதற்குப் பதில் கூறுகிறார்—**

**अभ्यासेऽप्यसमर्थोऽसि मत्कर्मपरमो भव।**
**मदर्थमपि कर्माणि कुर्वन्सिद्धिमवाप्स्यसि॥ १०॥**

**அப்₄யாஸேऽப்யஸமர்தே₂ாऽஸி மத்கர்மபரமோ ப₄வ ।**
**மத₃ர்த₂மபி கர்மாணி குர்வந்ஸித்₃தி₄மவாப்ஸ்யஸி ॥ 10 ॥**

**அப்₄யாஸே அபி** – (இவ்விதமான) பயிற்சியில் கூட, **அஸமர்த₂:** – திறமையற்றவனாய், **அஸி** – இருந்தால், **மத்கர்மபரம:** – எனக்காகவே கடமைகளை ஆற்றுவது என்பதையே மேலான லக்ஷ்யமாகக் கொண்டு, **ப₄வ** – இரு. **மத₃ர்த₂ம்** – என் பொருட்டாகவே, **கர்மாணி** – கடமைகளை, **குர்வந் அபி** – ஆற்றிக் கொண்டே இருந்தாலும், **ஸித்₃தி₄ம்** – என்னை அடைவது என்ற லக்ஷ்யத்தை, **அவாப்ஸ்யஸி** – அடைவாய்.

இவ்விதமான பயிற்சியில்கூடத் திறமையற்றவனாய் இருந்தால் எனக்காகவே கடமைகளை ஆற்றுவது என்பதையே மேலான லக்ஷ்யமாகக் கொண்டு இரு. என் பொருட்டாகவே கடமைகளை ஆற்றிக் கொண்டே இருந்தாலும் என்னை அடைவது என்ற லக்ஷ்யத்தை அடையலாம்.

**கேள்வி: 'இவ்விதமான பயிற்சியில் கூடத் திறமையற்றவனானால்' என்று கூறுவதன் கருத்து என்ன?**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** உன் மனதை என்னிடம் ஈடுபடச் செய்வதோ, மேலே சொன்னபடி பயிற்சி யோகத்தைக் கைக் கொண்டு என்னை அடைவதோ உண்மையில் கடினமன்று. ஆயினும் 'அதுவும் முடியாது' என்று நீ கருதினாலும் கவலை இல்லை. உனக்கு மூன்றாவது உபாயம் கூறுகிறேன். ஒவ்வொருவருடைய ஸ்வபாவமும் மாறுபடுவதால் வெவ்வேறு ஸாதகர்களுக்கு வெவ்வேறு விதமான ஸாதனைகள் உபயோகப்படும்.

**கேள்வி:** 'மத்கர்ம' என்ற சொல் எந்தக் கர்மங்களைக் குறிப்பிடுகிறது? அவற்றில் குறியாக இருப்பது எப்படி?

**பதில்:** 'மத்கர்ம' என்ற சொல் பகவானுக்காகவே ஆற்றப்படும் செயல்களையோ அல்லது அவருடைய ஸேவை, பூஜை ஸம்பந்தமான விஷயங்களையோ. குறிக்கும். இவற்றில் சிறிதுகூடத் தன்னலமோ, மமகாரமோ, பற்றோ இருக்கக்கூடாது. 11/55ல் கூட 'மத்கர்மக்ருத்' எனும் சொல்லில் 'மத்கர்ம' என்ற சொல் வந்துள்ளது. அங்கும் இதன் விளக்கம் தரப்பட்டிருக்கிறது.

பகவான் ஒருவரே நமக்குரிய புகலிடம், அவரே உயரிய கதி. அவரை மகிழ்விப்பதற்காக மிகுந்த ச்ரத்தையுடனும், அநன்ய ப்ரேமையுடனும், மனம், சொல், உடல் இவற்றால் அவருக்குப் பூஜை செய்வது, யாகம், தானம், தவம் முதலிய சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட செயல்களை இடைவிடாது செய்வது - இதுதான் அந்தக் கர்மங்களில் குறியாயிருத்தல் ஆகும்.

**கேள்வி:** 'என் பொருட்டாகவே, கடமைகளை ஆற்றிக் கொண்டே இருந்தாலும்கூட என்னை அடைவது என்ற லக்ஷ்யத்தை அடைவாய்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "இவ்விதம் விதிக்கப்பட்ட கடமைகளை ஆற்றுவது கூட என்னை அடைவதற்குரிய சுதந்திரமான எளிய உபாயம் ஆகும். பஜனை, த்யானம் என்ற ஸாதனைகளைப் புரிபவர்கள் என்னை அடைவது போன்று, எனக்காகக் கடமைகளை ஆற்றினாலும் என்னை அடைந்துவிடலாம். ஆகவே எனக்காகவே கடமைகளை ஆற்றுவது முன் சொன்ன ஸாதனைகளைவிடத் தரத்தில் சிறிதும் தாழ்ந்ததன்று" என்று கூறுகிறார்.

**பொருத்தம்:** 'மேலே சொன்னவிதம், உங்களுக்காகவே கடமைகளை என்னால் ஆற்ற முடியாவிட்டால் என்ன செய்வது?' என்று அறிய அர்ஜுனனுக்கு ஆவல் ஏற்படக்கூடும் என்று இவ்வாறு கூறுகிறார்—

**अथैतदप्यशक्तोऽसि कर्तुं मद्योगमाश्रितः।**
**सर्वकर्मफलत्यागं ततः कुरु यतात्मवान्॥ ११॥**

**அதை₂தத₃ப்யஶக்தோऽஸி கர்தும் மத்₃யோக₃மாஶ்ரித: ।**
**ஸர்வகர்மப₂லத்யாக₃ம் தத: குரு யதாத்மவாந் ॥ 11 ॥**

**மத்₃யோக₃ம்** – என்னை அடைவது என்ற யோகத்தை, **ஆஶ்ரித:** – சார்ந்து நின்று, **ஏதத் அபி** – இதைக்கூட (அப்யாஸ யோகத்தைக்கூட), **கர்தும்** – செய்வதற்கு, **அத₂ அஶக்த: அஸி** – திறமையற்றவனாய் இருந்தால், **தத:** – அப்போது, **யதாத்மவாந்** – மனம், புத்தி முதலியவற்றை அடக்கி வெற்றி கண்டு, **ஸர்வகர்மப₂லத்யாக₃ம் குரு** – செய்கின்ற எல்லாக் கர்மங்களின் பயன்களையும் துறந்துவிடு.

என்னை அடைவது என்ற யோகத்தைச் சார்ந்து நின்று அப்யாஸ யோகத்தைக்கூடச் செய்வதற்குத் திறமையற்றவனாய் இருந்தால் அப்போது மனம், புத்தி முதலியவற்றை அடக்கி வெற்றி கண்டு, செய்கின்ற எல்லாக் கர்மங்களின் பயன்களையும் துறந்துவிடு.

**கேள்வி:** 'என்னை அடைவது என்ற யோகத்தைச் சார்ந்து நின்று மேற்கூறிய ஸாதனையைச் செய்வதிலும் திறமையற்றவனானால்' என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** 'வாஸ்தவத்தில் மேற்கூறியவிதம் பக்தியோடுகூடிய கர்மயோக ஸாதனை புரிவது உனக்குக் கடினமன்று, எளிதுதான். ஆயினும் நீ அதைக் கடினம் என நினைத்தாயானால் நான் வேறுவிதமான உபாயம் கூறுகிறேன்' என்று பொருள்.

**கேள்வி:** 'யதாத்மவாந்' என்று யாரைக் குறிக்கிறார்? அர்ஜுனனை, 'நீ யதாத்மவானாக ஆவாய்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கு 'ஆத்மா' என்ற சொல்லுக்கு மனம், புத்தி, புலன்களுடன் சேர்ந்த உடல் என்று பொருள். மனம், புத்தி, புலன்களுடன் கூடிய உடலை அடக்கி ஆள்பவனே, 'யதாத்மவாந்' ஆவான். மனம், புலன்கள் அவன் வசமாகாவிட்டால் அவை மனிதனை வலுவில் போகங்களை அனுபவிப்பதில் சிக்க வைக்கின்றன. அப்படியாகிவிட்டால் எல்லாக் கர்மங்களின் பயன்களான போகங்களில் ஆசையும், பற்றும் துறப்பது முடியாமல் போகிறது. ஆகவே எல்லாக் கர்மங்களின் பயன்களையும் துறப்பது என்ற ஸாதனை புரியத் தன்னடக்கம் மிகவும் அவசியமானது என்று உணர்ந்து, "நீ 'யதாத்மவாந்' ஆகுக" என்று உபதேசிக்கிறார்.

**கேள்வி:** ச்லோகம் 6 முதல் 10 வரை கூறிய ஸாதனைகளில் 'யதாத்மவாந்' ஆக ஆகுக என்று கூறவில்லையே. ஏன்?

**பதில்:** 6,7,8 ச்லோகங்களில் அநன்ய பக்தி செய்யும் ஸாதகர்களைப் பற்றிக் கூறினார். அந்த அநன்ய ப்ரேமிகளான பக்தர்களுக்கு ஸம்ஸார போகங்களில் பற்றில்லாததால் அவர்களுடைய மனம், புத்தி முதலியவை இயல்பாகவே உலகியலிலிருந்து வைராக்யம் பெறுகின்றன. எனவே, அவர்கள் பகவானிடம் ஈடுபடுவார்கள். ஆகவே, அங்கு 'யதாத்மவாந் ஆக இரு' என்று சொல்லவில்லை.

9வது ச்லோகத்தில் 'அப்யாஸயோக'த்தைப் பற்றிச் சொன்னார். பகவானிடம் மனதையும், புத்தியையும் செலுத்துதற்கான ஸாதனைகள் எல்லாமே அப்யாஸயோகத்தில் அடங்கும். ஆகவே அங்கு 'யதாத்மவாந் ஆகுக' என்று தனியாகச் சொல்ல வேண்டிய அவசியமில்லை.

10வது ச்லோகத்தில் பக்தியுடன் கூடிய கர்மயோகம் விவரிக்கப்பட்டது. அத்தகைய கர்மயோகத்தில் பகவானை அடைக்கலமாகக் கொண்டு செய்யப்படும் கடமைகள் அனைத்தும் பகவானுக்காகவே ஆகின்றன. ஆகவே அங்கும் 'யதாத்மவானாக இரு' என்று தனிப்படக் கூறுவதில் பிரயோஜனம் எதுவுமில்லை. ஆனால் எல்லாக் கர்மங்களின் பயன்களையும் துறக்கவேண்டும் என்று கர்மயோக ஸாதனையையே இங்குக் கூறுகிறார். இங்கு மனதையும், புத்தியையும் தன் வசப்படுத்தாது கார்யம் நடக்காது. ஏனெனில் வர்ணம், ஆசிரமங்களுக்குரிய உலகியல் கடமைகளை ஆற்றும்போது, மனம், புத்தி, புலன்கள் வசத்தில் இல்லாவிடில், அவற்றின் பயன்களை அனுபவிப்பதில் மமகாரம், ஆசை, பற்று ஏற்படுவது இயல்புதான். ஆகவே எல்லாக் கர்மங்களின் பயன்களையும் துறப்பதென்பது முடியாத செயல். இதற்காகவே இங்கு 'யதாத்மவாந்' என்று கூறி, மனம், புத்தி இவற்றைக் கட்டுப்படுத்துவதில் தனிப்பட்ட கவனம் வேண்டும் என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'ஸர்வகர்ம' என்றால் எந்தக் கர்மங்கள்? அவற்றின் பயன்களைத் துறப்பது என்றால் என்ன?

**பதில்:** யாகம், தானம், தவம், ஸேவை, வர்ணாசிரமங்களுக்குத் தக்கவாறு வாழ்க்கைக்கும், உடலைப் பேணுதற்கும் அவசியமான அறநூல்களுக்கேற்ற செயல்களனைத்தும் 'ஸர்வகர்ம' என்பதில் அடங்கும். அந்தக் கர்மங்களைத் தக்கபடி செய்து கொண்டே இவ்வுலகிலோ, பரலோகத்திலோ அவற்றின் விளைபயன்களான அனுபவிக்கக் கூடிய போகங்களில் மமகாரம், பற்று, ஆசை இவற்றை அறவே துறப்பதுதான் 'ஸர்வகர்மபலத்யாகம்' என்பது.

இங்கு நினைவில் வைத்துக் கொள்ள வேண்டியது ஒன்று உண்டு. பொய், கபடம், விபசாரம், ஹிம்ஸை, திருட்டு முதலிய தடுக்கப்பட்ட செயல்கள் 'ஸர்வகர்ம' என்ற சொல்லால் குறிக்கப்படுபவை அல்ல. போகங்களின் ஈடுபாட்டினாலும், ஆசையினாலும் இப்படிப்பட்ட பாவச் செயல்கள் நிகழ்கின்றன. அவற்றின் பயனாக மனிதன்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பலவிதங்களிலும் வீழ்ச்சியடைவான். ஆகவே, அவற்றைச் செய்யவே கூடாது என்று தடுத்திருக்கும்போது அவற்றின் பயன்களை விட்டுவிட வேண்டும் என்று சொல்லவேண்டிய தேவை என்ன?

**கேள்வி:** பகவான் முதலில் மனதையும், புத்தியையும் தம்மிடம் செலுத்த வேண்டும் என்றார்; பிறகு அப்யாஸயோகம் சொன்னார்; பிறகு எனக்காகக் கர்மங்களைச் செய் என்றார்; கடைசியாக எல்லாக் கர்மங்களின் பயன்களையும் துறந்துவிடு என்கிறார். ஒன்று முடியாவிட்டால் அடுத்ததில் ஈடுபடு என்கிறார். இப்படிச் சொன்னது, பயனில் உள்ள வேறுபாட்டைக் கருதியா அல்லது ஒன்றைக் காட்டிலும் அடுத்தது எளிதானது என்று நினைத்தா அல்லது அவரவர் தகுதியை நினைத்தா?

**பதில்:** பயனில் வேறுபாடு என்ற கருத்தில் பகவான் இவ்வாறு சொல்லவில்லை. ஏனெனில் ஸாதனைகள் அனைத்தினுடைய பயனும் பகவானை அடைவதுதான். ஒன்றைக் காட்டிலும் மற்றது எளிது என்ற கருத்துமன்று. ஏனெனில் மேற்சொன்னவற்றில் முதலில் சொன்னதைக் காட்டிலும் அடுத்தது ஸாதனையில் எளிதன்று. ஒருவருக்கு எளிதானது மற்றவருக்குக் கடினமாக இருக்கலாம். ஆகவே இவ்வாறு ஆராய்ந்து பார்த்தால், நான்கு உபாயங்களும் ஸாதகர்களின் தகுதிக்கு ஏற்றவாறு சொல்லப்பட்டன என்றே புலனாகிறது.

**கேள்வி:** இந்த நான்கு ஸாதனைகளில் எவருக்கு எந்த ஸாதனை உபயோகப்படும்?

**பதில்:** ஸகுணமான பகவத் ஸ்வரூபத்தில் உள்ள ப்ரேமை எவருக்கு முக்யமாக உள்ளதோ, எவருக்கு பகவானிடம் இயல்பாகவே ச்ரத்தை உள்ளதோ, பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், ரஹஸ்யங்கள், லீலைகளின் வர்ணனைகள் இவற்றில் எவருக்கு ப்ரியம் உள்ளதோ, அவர்களுக்கு 8வது ச்லோகத்தில் கூறப்பட்ட ஸாதனை எளிதானது; பயன் தரக்கூடியது.

பகவானிடம் இயல்பான ப்ரேமையில்லாவிட்டாலும், ச்ரத்தை இருப்பதால் விடாமுயற்சியோடு ஸாதனை புரிந்து மனதை பகவானிடம் ஈடுபடுத்த விரும்பும் இயல்புள்ள மனிதருக்கு 9வது ச்லோகத்தில் சொல்லப்பட்ட ஸாதனை எளிதாகும், பயன் நல்கும்.

ஸகுணமான பரமாத்மாவிடம் ச்ரத்தையும், அத்துடன் யாகம், தானம், தவம் முதலிய கர்மங்களில் இயல்பாகவே ஈடுபாடும், பகவானுடைய திருஉருவ வழிபாடு முதலியவற்றில் ஈடுபாடும் உள்ளவருக்கு 10வது ச்லோகத்தில் சொல்லப்பட்ட ஸாதனை எளிதாகும், பயனளிக்கும்.

ஸகுண் ஸாகார பகவானிடம் இயல்பான ப்ரேமையும், ச்ரத்தையும் இல்லாவிடினும் ஈசுவரன் எங்கும் உருவமற்று நிறைந்திருக்கிறார் என்று மட்டும் நினைத்து உலகியல் செயல்களிலும், உலக நன்மைக்கான செயல்களிலும் இயல்பாகவே ஈடுபாடு கொண்டு, அந்தக் கர்மங்களில் ச்ரத்தையும், பற்றும் அதிகமிருந்தும்கூட ஒருவருடைய மனம் 9வது ச்லோகத்தில் சொல்லப்பட்ட (பயிற்சி) அப்யாஸயோகத்திலும் ஈடுபட முடியாவிட்டால் அவருக்கு இந்த ச்லோகத்தில் சொல்லப்பட்ட முறை எளிதானது, பயனளிப்பது.

**கேள்வி:** 6வது ச்லோகத்தில் சொல்லப்பட்டவாறு எல்லாக் கர்மங்களையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்வது; 10வது ச்லோகத்தில் சொன்னவாறு பகவானுக்காகவே கடமைகளை ஆற்றுவது; இந்த ச்லோகத்தில் சொன்னவாறு எல்லாக் கர்மங்களின் பயன்களையும் துறப்பது – இந்த மூன்று ஸாதனைகளில் என்ன வேற்றுமை? மூன்றுக்கும் பயன் வேறு வேறா அல்லது ஒன்றா?

**பதில்:** மூன்றுமே கர்மயோகம்தான். அதன் பயனும் பரமனை அடைவதுதான். இம்மூன்றுக்கும் பயனில் வேற்றுமை இல்லை. ஆனால் ஸாதகர்களின் மனோபாவத்திலும், ஸாதனை முறையிலும்தான் மாறுபாடு. ஸகல கர்மங்களையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்வது, பகவானுக்காகவே எல்லாக் கர்மங்களையும் செய்வது – இவையிரண்டிலும் பக்தி முக்யம். எல்லாக் கர்மங்களின் பயன்களையும் துறப்பதில் த்யாகம் முக்யம். இதுவே முக்யமான வேறுபாடு.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மேலும், தன் எல்லாக் கர்மங்களையும் பகவானிடம் அர்ப்பணம் செய்பவன் தனக்குச் செயலாற்றும் திறமை இல்லை; தனது மனம், புத்தி, புலன்கள் எல்லாம் பகவானுடையனவே என்ற உறுதியுடன் பகவானுடைய விருப்பப்படி அவருடைய கைப்பாவை போல் செயல்படுகிறான். பகவான்தான் அவர் விருப்பப்படி தன்னைச் செயல்களில் ஈடுபடுத்து கிறார். அந்தச் செயல்களிலும், அவற்றின் பயன்களிலும் சிறிதுகூடத் தனக்கு ஸம்பந்தமில்லை என்று நினைக்கிறான். அந்த ஸாதகனுக்கு அந்தக் கர்மங்களிலும், அவற்றின் பயன்களிலும் சிறிதுகூட விருப்பு-வெறுப்புக் கிடையா. ப்ராரப்த வசமாக அவனுக்கு ஏற்படும் ஸுக-துக்கங்களைக்கூட பகவானுடைய ப்ரஸாதம் என்று ஏற்று எப்போதும் மகிழ்கிறான். அதனால் அவனுக்கு எதிலும் ஸமபாவனை ஏற்படும். விரைவில் பகவானை அடைவான்.

பகவானுக்காகக் கர்மங்களைச் செய்பவன் முன் சொன்ன ஸாதகனைப் போன்று 'நான் ஒன்றும் செய்யவில்லை பகவான்தான் செய்விக்கிறார்' என்று நினைப்பதில்லை. "பகவான் பெரிதும் என்னால் பூஜிக்கத்தக்கவர்; அவர் எனக்கு மிகவும் அன்பானவர். அவர் எனக்கு நண்பர். அவருக்கு ஸேவை செய்வதும், அவர் ஆணையை நிறைவேற்றுவதும்தான் நான் முக்யமாகச் செய்யவேண்டியவை" என்று நினைக்கிறான். ஆகவே பகவான் எங்கும் நிறைந்திருக்கிறார் என்று அறிந்து, அவருடைய ஸேவைக்காகவே சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட யாகம், தானம், தவம், வர்ணாசிரம முறைப்படியான வாழ்க்கை, உடல் பேணுவதற்கான செயல்கள் மற்றும் இறைவழிபாடு ஆகிய செயல்களில் ஈடுபடுகிறான். அவனது ஒவ்வொரு செயலும் பகவானுடைய ஆணைப்படி பகவானுடைய ஸேவை என்ற கருத்தில் நடைபெறும் *(11/55)*. ஆகவே எல்லாச் செயல்களிலும், அவற்றின் பயன்களிலும் அவனுக்குப் பற்றோ, ஆசையோ இராது. அவன் விரைவில் பகவானை அடைவான்.

ஸகல கர்மங்களின் பயன்களையும் துறப்பவன் தன் செயல் எல்லாம் பகவானின் விருப்பப்படி பகவானால் நடத்தப்படுகின்றன என்று நினைப்பதில்லை. தானே செய்தாலும் பகவானுக்காகவே செய்கிறோம் என்றும் நினைப்பதில்லை. கர்மங்களைச் செய்ய மனிதனுக்குப் பொறுப்புண்டு. அவற்றின் பயன்களில் உரிமையில்லை *(2/47 முதல் 51 வரை)* என்று நினைக்கிறான். ஆகவே எந்தப் பயனையும் கருதாது யாகம், தானம், தவம், ஸேவை, வர்ணாசிரம தர்மங்கள், உடல் பேணுவதற்காக உண்பது முதலியவற்றைச் செய்வதே நமது கடமை என்று கருதி அவற்றின் பயனாக இவ்வுலகிலோ, பரலோகத்திலோ ஏற்படும் போகங்களில் மமகாரம், பற்று, ஆசை இவற்றை அறவே த்யாகம் செய்கிறான் *(18/9)*. அதனால் அவனிடம் விருப்பு-வெறுப்புகள் கிடையா. அவன் பரமாத்மாவை விரைவில் அடைகிறான்.

இவ்விதம் மூன்று ஸாதனைகளுக்கும் பகவானை அடைவது ஒன்றே பயனாயினும் ஸாதகர்களுடைய மனப்பாங்கிலும், அதற்கேற்றவாறு ஸாதனை முறைகளிலும் வேறுபாடுகள் உள்ளதால் மூன்றுவிதமான ஸாதனைகளைத் தனித்தனியாகச் சொன்னார்.

**பொருத்தம்: ச்லோகம் 6 முதல் 8 வரை அநன்ய த்யானத்தைப் பற்றியும், அதன் பயனைப் பற்றியும் கூறினார். 9 முதல் 11 வரை ஒரு ஸாதனை முடியாவிட்டால் வேறு ஸாதனை புரியலாம் என்று கூறி, முடிவாக, 'எல்லாக் கர்மங்களின் பயன்களையும் துறப்பது' என்ற ஸாதனையைக் கூறினார். இங்கே ஒரு ஸந்தேஹம் எழுகிறது. கர்மங்களின் பயன்களை த்யாகம் செய்வது என்ற இந்த ஸாதனை முன் சொன்ன ஸாதனைகளைவிடத் தாழ்ந்ததோ என்று தோன்றுகிறது. அதை விளக்கவே பயனைத் துறப்பதாகிற த்யாகத்தின் பெருமையை அடுத்துக் கூறுகிறார்—**

श्रेयो हि ज्ञानमभ्यासाज्ज्ञानाद्ध्यानं विशिष्यते।
ध्यानात्कर्मफलत्यागस्त्यागाच्छान्तिरनन्तरम् ॥१२॥

**ஶ்ரேயோ ஹி ஜ்ஞாநமப்₄யாஸாஜ்ஜ்ஞாநாத்₃த்₄யாநம் விஶிஷ்யதே ।**
**த்₄யாநாத்கர்மப₂லத்யாக₃ஸ்த்யாகா₃ச்சா₂ந்திரநந்தரம் ॥ 12 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அப்₄யாஸாத்** – (உட்பொருள் அறியாமல் பகவானை அடையும் பொருட்டுச் செய்யும்) சாஸ்த்ரப் பயிற்சியைவிட, **ஜ்ஞாநம்** – சாஸ்த்ரங்கள் மூலம் கிடைக்கும் ஞானம், **ஶ்ரேய:** – சிறந்தது. **ஜ்ஞாநாத்** – அந்த ஞானத்தைக் காட்டிலும், **த்₄யாநம்** – என் ஸ்வரூபத்தை த்யானம் செய்வது, **விஶிஷ்யதே** – சிறந்தது. **த்₄யாநாத்** – த்யானத்தைக் காட்டிலும், **கர்மப₂லத்யாக₃:** – கர்மத்தின் பயனைத் துறப்பது (சாலச் சிறந்தது). **ஹி** – ஏனெனில், **த்₄யாக₃ாத்** – த்யாகத்தின் மூலம், **அநந்தரம்** – உடனேயே (கால இடைவெளியின்றி), **ஶாந்தி:** – மேலான அமைதி, (**பவதி** – உண்டாகிறது).

உட்பொருள் அறியாமல் பகவானை அடையும் பொருட்டுச் செய்யும் சாஸ்த்ரப் பயிற்சியைவிட சாஸ்த்ரங்கள் மூலம் கிடைக்கும் ஞானம் சிறந்தது. அந்த ஞானத்தைக் காட்டிலும் என் ஸ்வரூபத்தை த்யானம் செய்வது சிறந்தது; த்யானத்தைக் காட்டிலும் கர்மத்தின் பயனைத் துறப்பது சாலச் சிறந்தது. ஏனெனில் த்யாகத்தின் மூலம் உடனேயே கால இடைவெளியின்றி மேலான அமைதி உண்டாகிறது.

**கேள்வி:** இங்கு 'அப்யாஸம்' என்றால் எது? 'ஜ்ஞாநம்' என்றால் என்ன? அப்யாஸத்தைக் காட்டிலும் ஞானம் சிறந்தது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கு 'அப்யாஸம்' என்ற சொல் 9வது ச்லோகத்தில் கூறப்பட்ட அப்யாஸ யோகத்தில் வரும் பயிற்சியை மட்டும் குறிக்கும். பயனைக் கருதி ப்ராணாயாமம், மனவடக்கம், ஸ்தோத்ர பாடம், வேத அத்யயனம், பகவந்நாம ஜபம் இவற்றைத் திரும்பத் திரும்பச் செய்து கொண்டே இருப்பது 'பயிற்சி' ஆகும். இதில் விவேகஞானமோ, த்யானமோ, கர்மத்தின் பயனைத் துறப்பதோ எதுவுமே கிடையாது. 9வது ச்லோகத்தில் யோகமாகிய நிஷ்காம மனப்பாங்கு, விவேகஞானம் இவற்றின் பயனாக பகவானை அடைவதற்கு விருப்பம் ஏற்படும் என்று கூறினாரே, அது இதில் இல்லை. ஏனெனில் இவையிரண்டையும் உள்ளடக்கிய அப்யாஸ யோகத்துடன் ஞானத்தை ஒப்பிட்டுப் பார்ப்பதோ, அதைக் காட்டிலும் பயிற்சி இல்லாத ஞானம் சிறந்தது என்று கூறுவதோ பொருந்தாது.

அதேபோல இங்கு ஞானம் என்றால் ஸத்ஸங்கத்தினாலும், சாஸ்த்ரப் படிப்பினாலும் ஏற்படக்கூடிய விவேக ஞானம் என்று பொருள். அதன் மூலம் மனிதன் ஆத்மா, பரமாத்மா இவர்களின் ஸ்வரூபங்களையும் பகவானுடைய குணங்கள், ப்ரபாவம், லீலை இவற்றையும் அறிந்து கொள்கிறான். உலகும், உலகியல் போகங்களும் அநித்யம் என்றும் வேறு ஆன்மிக விஷயங்களையும் தெரிந்து கொள்கிறான். ஆனால் இவற்றுடன் பயிற்சி, த்யானம், கர்மத்தின் பயன்களைத் துறப்பது என்பதெல்லாம் இரா. ஆகவே இவற்றையெல்லாம் தன்னுள் அடக்கிய அந்த ஞானத்துடன் அப்யாஸம், த்யானம், கர்மபலத்யாகம் இவற்றைச் சீர்தூக்கிப் பார்ப்பதோ, அதைக் காட்டிலும் த்யானமோ, கர்மபலத்யாகமோ சிறந்ததெனக் கூறுவதோ பொருந்தாது.

மேலே சொன்ன அப்யாஸம், ஞானம் இரண்டுமே தத்தம் நிலையில் பகவானை அடைவதற்கு உதவுவனவே. ச்ரத்தை, பக்தியுடன் நிஷ்காமபாவனையும் சேர்ந்துவிட்டால் இவையிரண்டுமே பகவானிடம் கொண்டு சேர்த்துவிடும். ஆனால் இவையிரண்டிலும் எது மேல் என்று சீர்தூக்கிப் பார்த்தால் பயிற்சியைக் காட்டிலும் ஞானம் சிறந்தது என்று முடிவாகும். பயிற்சியில்லாத விவேக ஞானம் பகவானை அடையச் செய்வதில் எவ்வளவு உதவி புரியுமோ அவ்வளவு விவேகஞானமற்ற பயிற்சி பகவானை அடையச் செய்வதில் உதவி புரியாது. ஏனெனில் விவேக ஞானம் பகவானை அடைய வேண்டும் என்ற அவாவை உண்டாக்குவதற்குக் காரணம் ஆகிறது. இக்கருத்தை உணர்த்தவே இங்கே பயிற்சியைக் காட்டிலும் ஞானம் சிறந்தது என்று கூறுகிறார்.

**கேள்வி:** இங்கே 'த்யானம்' என்றால் என்ன? அது ஞானத்தைக் காட்டிலும் சிறந்தது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ச்லோகம் 6 முதல் 8 வரை த்யானயோகத்தைப் பற்றிக் கூறப்பட்டது. ஆனால் இங்கு த்யானத்தை மட்டுமே குறிப்பிடுகிறது. அதாவது உபாஸிக்கும் தெய்வம் என்று மதித்துப்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பயனைக் கருதி மனதையும், புத்தியையும் மட்டும் பகவானுடைய உருவமுள்ளதோ, உருவமற்றதோ ஏதாவது ஒரு ஸ்வரூபத்தில் நிலைபெறச் செய்வது – இதுவே இங்கே த்யானம் என்ற சொல்லுக்குப் பொருள். இதில் முன்னே கூறப்பட்ட விவேக ஞானமோ, போகங்களில் பற்றைத் துறப்பது என்ற நிஷ்காமபாவனையோ இருக்காது. அதாவது த்யானயோகத்தில் எல்லாக் கர்மங்களையும் பகவானிடம் அர்ப்பணம் செய்வது, பகவான் ஒருவர்தான் அடையத்தக்கவர் என்ற உறுதி, அநன்ய ப்ரேமையுடன் பகவானை த்யானம் செய்வது எல்லாம் இருக்கும். ஏனெனில் பகவானே எல்லாவற்றிலும் சிறந்தவர் என்று அறிந்து அநன்ய ப்ரேமையுடன் நிஷ்காமமாகச் செய்யப்படும் த்யானயோகத்தில் விவேகஞானம், கர்மபல த்யாகம் இவை அடங்கும். ஆனால் இங்கு கூறப்படும் த்யானத்தில் இவையெல்லாம் இரா. அத்துடன் விவேகஞானத்தைச் சீர்தூக்கிப் பார்ப்பதோ அல்லது அதைக் காட்டிலும் கர்மபல த்யாகம் சிறந்தது என்று கூறுவதோ பொருந்தாது.

முதல் கேள்விக்கு விடையாகக் கூறப்பட்ட விவேகஞானம், சற்று மேலே கூறப்பட்ட த்யானம் இவையிரண்டும்கூட ச்ரத்தை, ப்ரேமையோடு நிஷ்காம ஸம்பந்தத்துடன் செய்யப்பட்டால் பரமாத்மாவை அடையச் செய்துவிடும். ஆகவே இரண்டுமே பகவானை அடைவதற்கு உதவுவனவே. இவையிரண்டிலும் எது மேல் என்று சீர்தூக்கிப் பார்க்கும்போது த்யானம், பயிற்சி இவை அற்ற ஞானத்தைக் காட்டிலும் விவேகமற்ற த்யானம் சிறந்தது என்று நிரூபணமாகிறது. ஏனெனில் பகவானை அடையச் செய்வதில், விவேகஞானமற்ற வெறும் த்யானம் எங்ஙனம் உதவிசெய்யுமோ, அங்ஙனம் த்யானமும், பயிற்சியுமற்ற வெறும் விவேகஞானம் உதவி புரியாது. த்யானத்தின் மூலம் மனம் ஒருமைப்படும்போது மனத்தின் அழுக்கும், சஞ்சலத்தன்மையும் அழிந்துவிடுகின்றன. வெற்றறிவு மன அழுக்கையும், சஞ்சலத் தன்மையையும் போக்காது. இக்கருத்தை உணர்த்தவே, ஞானத்தைக் காட்டிலும் த்யானமே சிறந்தது என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'கர்மபல த்யாகம்' என்றால் என்ன? அது த்யானத்தைக் காட்டிலும் சிறந்தது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 11வது ச்லோகத்தில் கூறப்பட்ட அதே ஸர்வகர்மபலத்யாகம்தான் இங்கும் கூறப்பட்டுள்ளது. இரண்டாவது கேள்விக்குப் பதிலாகக் கூறப்பட்ட த்யானமும் பகவானை அடையச் செய்ய உதவும். ஆனால் மனதில் ஆசையும், பற்றும் அழியாதவரை பரமாத்மாவை அடைவது எளிதன்று. ஆகவே த்யானமில்லாவிட்டாலும் ஸகல செயல்களிலும் பயனையும், பற்றையும் துறப்பது, எப்படி பகவானை அடையச் செய்வதை எளிதாக்குமோ, அப்படிப் பயனில் பற்றைத் துறக்காமல் செய்யும் த்யானத்தில் பகவானை அடைவது எளிதாகாது.

**கேள்வி:** த்யாகத்தின் காரணமாக அமைதி உடனே கிடைக்கிறது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கர்மத்தின் பயனாக இவ்வுலகிலோ, பரலோகத்திலோ கிடைக்கக்கூடிய போகங்களில் மமகாரம், பற்று, ஆசைகளை அறவே ஒழித்துவிட்டால் மனிதன் அக்கணமே பரமாத்மாவை அடைந்துவிடலாம். தாமதத்திற்குக் காரணமில்லை. ஏனெனில் போகப்பற்றுதான் மனிதனைக் கட்டுப்படுத்துகிறது. அது அறுந்துவிட்டால் பகவான் அவனிடமிருந்து மறைந்திருக்க மாட்டார்.

இந்த ச்லோகத்தில் அப்யாஸயோகம், ஞானயோகம், த்யானயோகம், கர்மயோகம் இவற்றைச் சீர்தூக்கிப் பார்க்கவில்லை. ஏனெனில் அந்த ஸாதனைகள் எல்லாவற்றிலும் கர்மங்களின் பயனான போகப் பற்றின் த்யாகம் என்ற நிஷ்காம பாவம் அடங்கி உள்ளது. ஆகவே ஒப்பிட்டுப் பார்க்க முடியாது. கர்மபல த்யாகத்தின் பெருமையைக் கூறுவதற்காக – பயிற்சி, ஞானம், த்யானம் என்ற ஸாதனைகள் உலகியல் சிக்கல்களிலிருந்து பிரிந்து தனிமையில் செய்யப்படுவதாலும் செயல்பாடு என்ற முறையில் ஒன்றைக் காட்டிலும் மற்றது ஸாத்விகமாகவும், துறவு நோக்கத்திலும் இருப்பதால் சிறந்ததாகவும் இருக்கிறது என்று கூறுகிறார். அவற்றைக் காட்டிலும் கர்மபல த்யாகம் என்பதே மனப்பாங்கின் காரணமாகச் சிறந்தது என்று கூறுகிறார். ஏனெனில் ஆன்மிக முன்னேற்றத்தில் செயலைக் காட்டிலும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மனப்பாங்குதான் மிகவும் பெருமையுடையது. (1) வர்ணாசிரமங்களுக்கு ஏற்றவாறு யாகம், தானம், யுத்தம், வியாபாரம், தொண்டு முதலியன; அப்படியே தன்னுடல் பேணுதல் ஆகிய செயல்கள். (2) ப்ராணாயாமம், ஸ்தோத்ர பாடம், வேதம் ஓதுவது, நாமஜபம் முதலியன பயிற்சி வழிச் செயல்கள். (3) ஸத்ஸங்கம், சாஸ்த்ரங்கள் மூலம் ஆன்மிக விஷயங்களை அறிவது இவை ஞானம் பற்றிய செயல். (4) மனதை நிலைநிறுத்துவதற்காக த்யானம் பற்றிய செயல். இவை ஒன்றைவிட மற்றொன்று சிறந்ததானாலும் இவை எல்லாவற்றையும்விடச் சிறந்தது கர்மபல த்யாகம் என்னும் வைராக்யம்தான். ஏனெனில் உலகியலில் வைராக்யமும், பகவானிடம் அநன்ய ப்ரேமையும் இருந்தால்தான் பகவானை அடைய முடியும். இல்லையேல் முடியாது. ஆகவே கர்மபல த்யாகம்தான் சிறந்தது. அது அறநூல்களுக்கேற்ற ஏதேனுமொரு செயலாக இருந்தாலும், பார்க்கும்போது ஸாதாரணச் செயலாகத் தோன்றினாலும் அதுவே மிகச் சிறந்தது.

**பொருத்தம்:** மேலே கூறப்பட்ட ச்லோகங்களில் பகவானை அடைவதற்கு பக்திக்குரிய அங்கங்களான தனித்தனி ஸாதனைகளைக் கூறி, அவை பகவானிடம் கொண்டு சேர்க்கும் என்று கூறினார். அப்படி பகவானை அடைந்தவர்களின் இலக்கணம் என்னவென்றறிய ஆவலுடன் கேள்வி எழுகின்றது. அடுத்த ஏழு ச்லோகங்களில் பகவானை அடைந்துவிட்ட ஞானியான பக்தர்களின் இலக்கணங்களைக் கூறுகிறார்—

**अद्वेष्टा सर्वभूतानां मैत्रः करुण एव च।**
**निर्ममो निरहङ्कारः समदुःखसुखः क्षमी ॥ १३ ॥**

**सन्तुष्टः सततं योगी यतात्मा दृढनिश्चयः।**
**मय्यर्पितमनोबुद्धिर्यो मद्भक्तः स मे प्रियः ॥ १४ ॥**

**அத்₃வேஷ்டா ஸர்வபூ₄தாநாம் மைத்ர: கருண ஏவ ச ।**
**நிர்மமோ நிரஹங்கார: ஸமது₃:க₂ஸுக₂: க்ஷமீ ॥ 13 ॥**
**ஸந்துஷ்ட: ஸததம் யோகீ₃ யதாத்மா த்₃ருட₄நிஶ்சய: ।**
**மய்யர்பிதமநோபுத்₃தி₄ர்யோ மத்₃ப₄க்த: ஸ மே ப்ரிய: ॥ 14 ॥**

**ய:** – எவன், **ஸர்வபூ₄தாநாம்** – எல்லா உயிரினங்களிடமும், **அத்₃வேஷ்டா** – வெறுப்பு இல்லாதவனோ, **மைத்ர:** – தன்னலம் இல்லாமல் எல்லோரிடமும் அன்பு கொண்டவனோ, **கருண: ச** – காரணமின்றி எல்லா ப்ராணிகளிடத்திலும் இரக்கம் காட்டுபவனோ, **ஏவ** – அவ்வாறே, **நிர்மம:** – மமகாரமற்றவனோ, **நிரஹங்கார:** – அஹங்காரமற்றவனோ, **ஸமது₃:க₂ஸுக₂:** – இன்ப–துன்பங்கள் நேரும்போது நிலை மாறாது ஸமமாக இருப்பவனோ, **க்ஷமீ** – பொறுக்கும் இயல்புடையவனோ (அதாவது குற்றம் செய்தவனுக்கும் அபயம் அளிப்பவனோ), **யோகீ₃** – யோகியோ, **ஸததம்** – எப்பொழுதும், **ஸந்துஷ்ட:** – எல்லா விதங்களிலும் த்ருப்தி உள்ளவனோ, **யதாத்மா** – மனம், புலன்களோடு கூடிய உடலைத் தன் வசப்படுத்தியவனோ (மேலும்), **த்₃ருட₄நிஶ்சய:** – என் மீது திடமான நம்பிக்கையுடையவனோ, **மயி** – என்னிடத்தில், **அர்பித மந: புத்₃தி₄:** – மனம், புத்தி இவற்றை அர்ப்பணம் செய்தவனோ, **ஸ:** – அந்த, **மத்₃ப₄க்த:** – என்னுடைய பக்தன், **மே** – எனக்கு, **ப்ரிய:** – ப்ரியமானவன்.

எவன் எல்லா உயிரினங்களிடமும் வெறுப்பு இல்லாதவனோ, தன்னலம் இல்லாமல் எல்லோரிடமும் அன்பு கொண்டவனோ, காரணமின்றி இரக்கம் காட்டுபவனோ, மமகாரமற்றவனோ, அஹங்காரமற்றவனோ, இன்ப, துன்பங்கள் நேரும்போது நிலை மாறாது ஸமமாக இருப்பவனோ, பொறுக்கும் இயல்புடையவனோ அதாவது குற்றம் செய்தவனுக்கும்



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அபயம் அளிப்பவனோ, யோகியோ, எப்பொழுதும் எல்லாவிதங்களிலும் திருப்தி உள்ளவனோ, மனம், புலன்களோடு கூடிய உடலைத் தன் வசப்படுத்தியவனோ, மேலும் என் மீது திடமான நம்பிக்கையுடையவனோ, என்னிடத்தில் மனம், புத்தி இவற்றை அர்ப்பணம் செய்தவனோ, என்னுடைய அந்த பக்தன் எனக்கு ப்ரியமானவன்.

**கேள்வி:** 'ஸர்வபூதாநாம்' என்ற சொல் எதனுடன் சேர்கிறது?

**பதில்:** முக்யமாக இது 'அத்வேஷ்டா' என்ற சொல்லுடன் சேர்கிறது. ஆனால் தொடர்ந்து 'மைத்ர:', 'கருண:' என்ற சொற்களுடனும்கூடச் சேர்கிறது. அதாவது எந்த ப்ராணிகளிடமும் பகைமை பாராட்டாதவர் என்பது மட்டுமல்லர். அவருக்கு இயல்பாகவே ஒரு காரணமும் இன்றியே அவற்றினிடம் நட்பும், கருணையும் உண்டு என்றும் பொருள்.

**கேள்வி:** ஸித்த புருஷர்களுக்கோ அனைவரிடமும் ஸமபாவனை இருக்குமே! அவர்கள் நட்புப் பாராட்டுவார்கள், கருணை கொள்வார்கள் என்று சிறப்பாகச் சொல்வானேன்?

**பதில்:** பக்தி ஸாதனை புரிகிறவர்களிடம் ஆரம்பத்திலேயே நட்பும், கருணையும் சிறப்பாக இருக்கும். ஆகவே அவர்களின் ஸித்தி பெற்ற நிலையிலும், அவருடைய இயல்பிலும், நடைமுறையிலும் இந்த நட்பும், தயையும் இயல்பாகவே இருக்கும். பகவானிடம் காரணமற்ற அளவற்ற கருணை, அன்பு முதலியன இருப்பது போலவே ஸித்தர்களான பக்தர்களிடமும் இவையிருப்பது உசிதம்தான் என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'நிர்மம:', 'நிரஹங்கார:' என்ற இரண்டு இலக்கணங்களின் பொருள் என்ன?

**பதில்:** பகவானுடைய ஞானியான பக்தருக்கு எங்கும் ஸமபாவனை இருக்கும். ஆகவே ஒருவரிடமும் மமகாரம் இருக்காது. தன்னுடலில் 'தான்' என்ற அஹங்காரமும் இருக்காது. ஒரு பயனும் எதிர்பாராது எல்லா ப்ராணிகளிடமும் அன்பு பாராட்டுவார்; இரக்கம் காட்டுவார். அதுதான் அவருடைய சிறப்பு. பகவானுடைய ஸாதக பக்தர்கூட தயவும், பரிவும் காட்டுகிறார். ஆனால் அதில் மமகாரம், அஹங்காரம் முற்றிலும் இல்லை என்று சொல்ல முடியாது.

**கேள்வி:** 'ஸமது:கஸுக:' என்ற சொல்லில் வரும் ஸுகம், துக்கம் என்பவற்றிற்கு இன்ப-துன்பங்கள் என்ற பொருளா? வேறு பொருள் உண்டா? அவற்றில் ஸமமாக இருப்பது என்றால் என்ன?

**பதில்:** இங்கே ஸுகம் என்றால் இன்பம் என்றோ, துக்கம் என்றால் துன்பம் என்றோ பொருள் அன்று. ஸுகம் என்றால் மகிழ்ச்சிக்குக் காரணமாக அமைவது. துக்கம் என்றால் துயரத்திற்குக் காரணமாக அமைவது. அவற்றால் உண்டாவன மகிழ்ச்சியும், துயரமும். அஞ்ஞானியான மனிதனுக்கு இன்பத்தில் விருப்பு வருகிறது. அதைப் பெற்றால் அவன் மகிழ்ச்சி அடைகிறான். துன்பத்தில் வெறுப்பு ஏற்படுகிறது. அதை அடைந்தால் துயரமடைகிறான். ஞானிக்கு ஸுகதுக்கங்களில் விருப்பு-வெறுப்புக் கிடையாது. ஆகவே, எந்த நிலையிலும் அவர் உள்ளத்தில் மகிழ்ச்சியோ, துயரமோ ஏற்படுவதில்லை. வேதத்திலும் கூறப்பட்டுள்ளது— 'ஹர்ஷஶோகௌ ஜஹாதி' (கடோபநிஷத் 1/2/12). அதாவது ஞானியான புருஷன் மகிழ்ச்சி, துயரங்களை அறவே துறந்துவிடுகிறான். ப்ராரப்தத்தின் பயனாக உடலில் நோய் வந்தால் அதனால் வலி என்ற துக்கம் உணரப்படுகிறது. நோய் தீர்ந்தால் வலி போய்விட்டது என்ற உணர்வு ஏற்படுகிறது. ஆனால் அவருக்கு விருப்பு-வெறுப்புகள் இல்லாமையால் மகிழ்ச்சியோ, துயரமோ ஏற்படுவதில்லை. அனுகூலமாகவோ, ப்ரதிகூலமாகவோ எந்த நிகழ்ச்சி நேர்ந்தாலும், நேராவிட்டாலும் அவனுக்கு மகிழ்ச்சியோ, துயரமோ கிடையாது. இதுவே இன்ப துன்பங்களில் ஸமமாக இருப்பது ஆகும்.

**கேள்வி:** 'பொறுமைசாலி' என்றால் யார்? ஞானியான பக்தனை 'பொறுமைசாலி' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தனக்குத் தீங்கிழைப்பவனுக்குத் தண்டனை கொடுக்க வேண்டுமென்று விரும்பாமல் அவனுக்கு அபயம் அளிப்பவனே 'பொறுமைசாலி' ஞானியான பகவத்



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பக்தனுக்கு எல்லையற்ற பொறுமை உண்டு. அவனுக்கு அனைவரும் பகவான்தான் என்ற பாவனை உள்ளதால் என்ன நேர்ந்தாலும் உண்மையாகவே அது பிறரால் ஏற்பட்ட தீங்கு என நினைக்க மாட்டான். ஆகவேதான் அவன் தனக்குத் தீங்கிழைப்பவனுக்குக்கூட அதற்குப் பதிலாக எவ்விதமான தண்டனையும் அளிக்க விரும்புவதில்லை. இந்தக் கருத்தைத்தான் 'பொறுமைசாலி' என்ற சொல் கூறுகிறது. 'க்ஷமா' என்பதற்கு விளக்கத்தை 10/4ல் விஸ்தாரமாகக் கூறியுள்ளார்.

**கேள்வி:** இங்கு 'யோகீ' என்ற சொல் யாரைக் குறிக்கும்? அவர் எப்பொழுதும் எல்லாவிதத்திலும் த்ருப்தியுள்ளவர் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பக்தியோகத்தின் மூலம் பகவானை அடைந்துவிட்ட ஞானியான பக்தர் 'யோகீ' எனப்படுவர். இப்படிப்பட்ட பக்தர் பரமானந்தத்தின் அழிவற்றதும், முடிவற்றதுமான கருவூலமாகிய ஸ்ரீபகவானை நேரில் அனுபவித்து விடுகிறார். ஆகவே எப்பொழுதும் அவர் ஸந்தோஷமாகவே இருக்கிறார். அவருக்கு எந்த நேரத்திலும், எந்த நிலையிலும் உலகியல் பொருள் கிட்டாமையால் மகிழ்ச்சியின்மை ஏற்படாது. அவர் பூர்ணகாமர் (நிறைந்த மனமுடையவர்) ஆகிவிடுகிறார். ஆகவே உலகியல் நிகழ்ச்சியாலும் அவருடைய மனதில் மகிழ்ச்சி இல்லாமல் போவதில்லை. இதுவே அவரது எவ்விதத்திலும் த்ருப்தி உள்ள நிலை.

மனிதனுக்கு ஏற்படும் உலகியல் ஸந்தோஷம் கணநேரம்தான் இருக்கும். அந்த விருப்பம் நிறைவேறினால் மகிழ்ச்சி ஏற்படும். அது குறைந்துவிட்டால் மறுபடியும் மனக்குறை – மகிழ்ச்சியின்மைதான். ஆகவே அவன் எப்போதுமே ஸந்தோஷமாக இருக்க முடியாது.

**கேள்வி:** 'யதாத்மா' என்றால் என்ன பொருள்? இப்படிக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனம், புலன்கள், உடல் இவற்றை வெற்றி கொண்டு தன்வசப்படுத்திவிட்டவர் 'யதாத்மா' எனப்படுவார். பகவானின் ஞானியான பக்தனுடைய மனம், உடல், புலன்கள் எப்பொழுதும் அவருக்குக் கட்டுப்பட்டனவே. அவர் ஒருபொழுதும் மனம், புலன்களின் வழிச் செல்லமாட்டார். அதனால் அவருக்குத் தீய குணமோ, தீய நடத்தையோ ஏற்படாது. இக்கருத்தை உணர்த்தவே 'யதாத்மா' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**கேள்வி:** 'த்ருடநிஶ்சய:' என்ற சொல்லின் பொருள் என்ன?

**பதில்:** புத்தியினால் ஆராய்ந்து பரமாத்மாவினுடைய ஸ்வரூபத்தை நன்கு உணர்ந்தவர், எங்கும் பகவானுடைய காட்சியையே காண்பவர், குணம், செயல், துயரம் இவற்றின் காரணமாகப் பரமாத்மாவின் ஸ்வரூபத்திலிருந்து நழுவாத மனமுடையவர் – அவரை 'த்ருடநிஶ்சய:' (திடமான நம்பிக்கையுடையவர்) என்கிறார்.

**கேள்வி:** பகவானிடம் மனம், புத்தி இவற்றை அர்ப்பணம் செய்வதென்றால் என்ன?

**பதில்:** என்றும் இடைவிடாது பகவானுடைய ஸ்வரூபத்தையே மனதினால் சிந்தித்து, புத்தியினால் அதை உறுதிப்படுத்திக் கொண்டும் பகவத் ஸ்வரூபத்திலேயே மனமும், புத்தியும் லயித்துவிடுவதுதான் பகவானுக்கு இவற்றை அர்ப்பணம் செய்வதாகும்.

**கேள்வி:** 'அந்த என்னுடைய பக்தர் எனக்கு ப்ரியமானவர்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எவருக்கு பகவானிடத்தில் ஒரு காரணமும் இன்றியே அநன்ய பக்தி உள்ளதோ; பகவானிடம் அசையாத உறுதியான நிலை உள்ளதோ; எவருடைய நினைவு ஒரு கணம்கூட பகவானை விட்டு அகலாதோ; எவருடைய மனமும், புத்தியும் பகவானுக்கென அர்ப்பணிக்கப் பட்டனவோ; எவருடைய வாழ்வு, செல்வம், உயிர் அனைத்தும் பகவானுக்கே உரியனவோ; எவர் பகவானின் கைப்பாவையோ அப்படிப்பட்ட ஞானியான பக்தர் பகவானுக்கு ப்ரியமானவர் என்பது கருத்து.

यस्मान्नोद्विजते लोको लोकान्नोद्विजते च यः।
हर्षामर्षभयोद्वेगैर्मुक्तो यः स च मे प्रियः॥ १५॥



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**யஸ்மாந்நோத்₃விஜதே லோகோ லோகாந்நோத்₃விஜதே ச ய: ।**

**ஹர்ஷாமர்ஷப₄யோத்₃வேகைர்முக்தோ ய: ஸ ச மே ப்ரிய: ॥ 15 ॥**

**யஸ்மாத்** – எவனிடமிருந்து, **லோக: ச** – எந்த ஜீவனும், **ந உத்₃விஜதே** – பாதிப்பு அடைவதில்லையோ, **ய:** – எவன், **லோகாத்** – எந்த ஜீவன் மூலமும், **ந உத்₃விஜதே** – பாதிப்படைய மாட்டானோ, **ச** – மேலும், **ய:** – எவனொருவன், **ஹர்ஷ அமர்ஷ ப₄ய உத்₃வேகை₃:** – மகிழ்ச்சி, பொறாமை, பயம், பாதிப்பு முதலியவற்றிலிருந்து, **முக்த:** – விடுபட்டவனோ, **ஸ:** – அந்த பக்தன், **மே** – எனக்கு, **ப்ரிய:** – ப்ரியமானவன்.

எவனிடமிருந்து எந்த ஜீவனும் பாதிப்பு அடைவதில்லையோ, எவன் எந்த ஜீவன் மூலமும் பாதிப்படைய மாட்டானோ, மேலும் எவனொருவன் மகிழ்ச்சி, பொறாமை, பயம், பாதிப்பு முதலியவற்றிலிருந்து விடுபட்டவனோ, அந்த பக்தன் எனக்கு ப்ரியமானவன்.

**கேள்வி:** *'எவரைக் கண்டு எந்த ஜீவனும் பாதிப்படைவதில்லையோ' என்று கூறுவதன் கருத்து என்ன? பக்தர் மனமறிந்து எவருக்கும் பாதிப்பையளிக்க மாட்டாரா அல்லது யாருக்கும் அவரால் பாதிப்பு ஏற்படாதா?*

**பதில்:** எங்கும் அவர் பகவானைப் பார்ப்பதால் பக்தர் மனமறிந்து யாருக்கும் துக்கத்தையோ, உள்ளக் கொதிப்பையோ, பயத்தையோ, பாதிப்பையோ உண்டாக்க மாட்டார். மாறாக, இயல்பாகப் பிறருக்கு ஸேவையும், மேலான நன்மையுமே செய்வார். அதனால் அவரால் யாருக்கும் பாதிப்பு ஏற்படாது. அப்படி யாருக்காவது பாதிப்புத் தவறாக ஏற்பட்டாலும் அதற்குக் காரணம் அவருடைய அஞ்ஞானத்தினால் ஏற்பட்ட விருப்பு, வெறுப்பு, பொறாமை போன்ற குறைபாடுகளே தவிர, அந்த பக்தர் அல்லர். ஏனெனில் தயையும், ப்ரேமையும் உருவெடுத்த அவர் பிறருக்கு இயல்பாக நன்மையே செய்யக்கூடியவர். ஆகவே பரமதயாளுவும், பேரன்பும் கொள்பவருமான (பகவானை அடைந்துவிட்ட) பக்தர் யாருடைய பாதிப்பிற்கும் காரணம் ஆகமாட்டார்.

**கேள்வி:** *பக்தருக்கு மற்ற உயிர்களிடமிருந்து பாதிப்பு ஏன் ஏற்படாது? மற்ற உயிர்கள் அவரைத் துன்புறுத்த மாட்டார்களா? அப்படித் துன்புறுத்தினாலும் அதனால் அவர் பாதிப்படைய மாட்டார் என்று பொருளா?*

**பதில்:** பகவானை அடைந்துவிட்ட ஞானியான பக்தருக்கு எங்கும் ஸமபாவனை இருக்கும். ஆகவே அவர் மனமறிந்து செய்யும் எந்தக் கார்யமும் பிறரிடம் அவர்பால் வெறுப்பை உண்டாக்காது. ஆகவே முக்காலும் எவரும் அவருக்குத் தீங்கிழைக்க விழைய மாட்டார்கள். ஆனாலும் பிறர் தம் செய்கையால் பக்தருக்கு உடலிலோ, மனதிலோ வேதனையை உண்டு பண்ணமாட்டார் என்று சொல்ல முடியாது. அதையும் ஞானியான பக்தர் தம்முடைய ப்ராரப்தத்தினால் விளைந்தது என நினைப்பாரே தவிரப் பிறரால் மூண்டது என்று நினைக்க மாட்டார். அவருக்கு விருப்பு, வெறுப்பு இல்லாமையால் மிகப் பெரிய துயரம் நேர்ந்தாலும் அவர் அசைவதில்லை (6/22). ஆகவே ஞானியான பக்தருக்குப் பிறரால் பாதிப்பு ஏற்படுவதில்லை.

**கேள்வி:** *பக்தருக்குப் பாதிப்பே ஏற்படாது என்று ச்லோகத்தின் முற்பாதியில் கூறிவிட்டார். மறுபடியும் பிற்பாதியில் பாதிப்பிலிருந்து விடுபட்டவர் என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** முற்பாதியில் அவருக்குப் பிறரால் பாதிப்பு உண்டாகாது என்று மட்டும் சொன்னார். ஆனால் தன்னிச்சையின்றித் தானாகவே ஏற்படும் நிகழ்ச்சியினாலும், பொருளினாலும்கூட மனிதனுக்குப் பாதிப்பு ஏற்படலாமே. இதைத்தான் ச்லோகத்தின் பிற்பாதியில் பாதிப்பிலிருந்து விடுபடுகிறார் என்று கூறுகிறார். பக்தருக்கு எவ்விதமாகவும், எந்நேரமும் பாதிப்பு ஏற்படாது என்பது திரண்ட பொருள்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** பக்தர் மகிழ்ச்சியோ, பாதிப்போ கொள்ளமாட்டார் என்பதிலிருந்தே அவருக்கு மனவிகாரம் ஏற்படாது என்றாகிவிட்டது. பிறகு பொறாமை, பயம் இவற்றிலிருந்து விடுபட்டவர் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மகிழ்ச்சி, பாதிப்பு என்ற மனவிகாரங்கள் கிடையா என்று சொல்வதால் மற்ற எந்த விகாரங்களும் ஏற்படா என்று சொன்னதாகாது. பக்தரிடம் எந்த விகாரங்களும் இல்லாமற்போய்விடும். இதை மிகத் தெளிவாகக் கூறுவதற்கே பொறாமை, பயம் – இவையும் இரா என்று கூறுகிறார்.

அதாவது மனிதன் உண்மையில் தான் விரும்பிய பெருமை, மரியாதை, செல்வம் கிடைத்தபோது மகிழ்கிறான். அவ்விதம் பெருமை, மரியாதை, செல்வம் தனக்கு ஸமமாகவோ, அதிகமாகவோ பிறருக்குக் கிடைத்துவிட்டால் அவன் உவக்கவேண்டும். மாறாக அஞ்ஞானத்தினால் உலகத்தவர்களுக்கு இதனால் பொறாமை (அமர்ஷம்) ஏற்படுகிறது. இத்தகைய தன்மை விவேகமுள்ளவர்களிடம் கூடக் காணப்படுகிறது. அதேபோல ஆசை, நீதி, தர்மம் இவற்றிற்குப் புறம்பாகப் பொருட்களைப் பெற்றால் மனதில் ஒரு பாதிப்பு உண்டாகிறது. நீதிக்கும், தர்மத்திற்கும் ஏற்றபடியானாலும் அப்பொருட்கள் துன்பத்தைத் தருமானால் அவை கிடைத்தாலும் அல்லது துன்பம் ஏற்படும் என்ற ஸந்தேகம் ஏற்பட்டாலும் பயம் ஏற்படுகிறது. ஸாதாரண மனிதன் என்ன? விவேகிகூட மரணத்தைக் கண்டு பயப்படுகிறான். ஆனால் பகவானின் ஞானியான பக்தர் எங்கும் பகவானைக் காண்கிறார். அவர் எல்லா நிகழ்ச்சிகளையும் பகவானுடைய லீலை என்றே நினைக்கிறார். ஆகவே அவருக்குப் பொறாமையோ, பாதிப்போ, பயமோ ஏற்படுவதில்லை. அதைத்தான் இங்கே கூறினார்.

**अनपेक्षः शुचिर्दक्ष उदासीनो गतव्यथः।**
**सर्वारम्भपरित्यागी यो मद्भक्तः स मे प्रियः॥ १६॥**

**அநபேக்ஷ: ஶுசிர்த₃க்ஷ உதா₃ஸீநோ க₃தவ்யத₂: ।**
**ஸர்வாரம்ப₄பரித்யாகீ₃ யோ மத்₃ப₄க்த: ஸ மே ப்ரிய: ॥ 16 ॥**

**ய:** – எந்த மனிதன், **அநபேக்ஷ:** – எதையும் எதிர்பார்க்கதவனோ, **ஶுசி:** – அகத்தூய்மையும், புறத்தூய்மையும் உள்ளவனோ, **த₃க்ஷ:** – பிறவிப்பயனை அறிந்தவனோ, **உதா₃ஸீந:** – பக்ஷபாதமற்றவனோ, **க₃தவ்யத₂:** – துக்கங்களிலிருந்து விடுதலை பெற்றவனோ, **ஸர்வ ஆரம்ப₄ பரித்யாகீ₃** – செயல்களனைத்திலும் 'நான் செய்கிறேன்' என்னும் அபிமானத்தை நீக்கியவனோ, **ஸ:** – அந்த, **மத்₃ப₄க்த:** – என் பக்தன், **மே** – எனக்கு, **ப்ரிய:** – ப்ரியமானவன்.

எந்த மனிதன், எதையும் எதிர்பார்க்காதவனோ அகத்தூய்மையும், புறத்தூய்மையும் உள்ளவனோ, பிறவிப்பயனை அறிந்தவனோ, பக்ஷபாதமற்றவனோ, துக்கங்களிலிருந்து விடுதலை பெற்றவனோ, செயல்களனைத்திலும் 'நான் செய்கிறேன்' என்னும் அபிமானத்தை நீக்கியவனோ, அந்த என் பக்தன் எனக்கு ப்ரியமானவன்.

**கேள்வி:** 'எதையும் எதிர்பார்க்காதவனோ' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பரமாத்மாவை அடைந்துவிட்ட பக்தருக்கு எந்தப் பொருளாலும் எவ்விதப் பயனும் இருக்காது. ஆகவே வேறு எதிலும் சிறிதுகூட விருப்பமோ, ஆசையோ முன் பழக்கத்தினால் ஈடுபாடோ இருக்காது. அவர் பூர்ணகாமராகி விடுகிறார். 'எதையும் எதிர்பார்க்காதவர்' என்று கூறுவதன் கருத்து இதுவே.

**கேள்வி:** விருப்பமோ, தேவையோ இல்லாமல் எவரும் எந்தக் கார்யத்திலும் ஈடுபட மாட்டார்கள். செயல் புரியாமல் வாழ்வதும் முடியாது. பின் பக்தரின் வாழ்வு எப்படி நடைபெறும்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** விருப்பமோ, தேவையோ இல்லாவிட்டாலும்கூட, ப்ராரப்தத்தின் விளைவாகச் செயல் நடைபெறும். பக்தருடைய வாழ்வு ப்ராரப்தத்தினால் நடைபெறுகிறது. அதாவது அவருடைய மனம், சொல், உடல் மூலமாக ப்ராரப்தத்திற்கேற்ப எல்லாச் செயல்களும் பற்றுதலோ, விருப்பமோ, திட்டமோ இல்லாமல் இயல்பாக நடைபெறும் *(4/19)*. அதனால் அவரது வாழ்வு நடைபெறுவதில் ஒரு தடையும் இராது.

**கேள்வி:** பகவானுடைய பக்தர் உள்ளும், புறமும் தூய்மையோடு இருப்பார் என்று கூறுவதான அந்தத் தூய்மை எப்படிப்பட்டது?

**பதில்:** பகவானுடைய பக்தர் தூய்மையின் எல்லை நிலமாக இருப்பார். அவருடைய மனம், புத்தி, புலன்கள், அவற்றின் நடைமுறை, உடல் அனைத்துமே மிகவும் பரிசுத்தமாக ஆகிவிடும். அவருடன் பேசினாலும் சரி, அவரை தர்சனம் செய்தாலும் சரி, அவரைத் தொட்டாலும்கூடப் பிறர் பரிசுத்தமாவர். இப்படிப்பட்ட பக்தர் எங்கு இருக்கிறாரோ அந்த இடம் பரிசுத்தம் ஆகும். அவருடைய தொடர்பால் அங்குள்ள சூழ்நிலை, நீர், நிலம் முதலிய எல்லாமே பவித்ரமாகும் (தூய்மையடையும்).

**கேள்வி:** 'தக்ஷ:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** மனிதப்பிறவி பெற்றதற்கான நோக்கம் செவ்வனே நிறைவேறுமாறு நடப்பவரே உண்மையில் திறமைமிக்கவர். அநன்ய பக்தியின் மூலம் சிறந்த அன்பிற்குரியவரும், எல்லோருக்கும் நண்பரும் ஆன பரமாத்மாவை அடைவதே மனிதப்பிறவியின் முக்யமான நோக்கம். அவ்விதம் பகவானை அடைந்துவிட்டவர் ஞானியான பக்தர். ஆகவே அவர்தான் திறமைமிக்கவர்.

**கேள்வி:** 'பக்ஷபாதமற்றவர்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** நீதிமன்றத்திலும், பஞ்சாயத்திலும் ஸாக்ஷி கூறும் போதோ, ஏதாவது பூசலைத் தீர்க்கும்போதோ, இப்படி வேறு ஏதாவதொரு ஒரு ஸந்தர்ப்பம் ஏற்படும்போதோ, தன்னுடைய குடும்பத்தைச் சேர்ந்தவன் என்றோ, தனக்கு வேண்டியவன் என்றோ, நண்பன் என்றோ அல்லது தனக்கு வேண்டாதவன் என்ற வெறுப்பினாலோ அல்லது வேறு எந்தக் காரணத்தினாலோ பொய் ஸாக்ஷி சொல்வது; நீதிக்குப் புறம்பாகத் தீர்ப்புக் கூறுவது; வேறு ஏதாவது நேர்மையற்ற முறையில் ஆதாயம் கருதியோ, பிறருக்குத் துன்பம் விளைவிக்க வேண்டுமென்றோ செயலில் இறங்குவது பக்ஷபாதம் ஆகும். இப்படிச் செய்யாதவர் என்பது இத்தொடரின் பொருள்.

**கேள்வி:** 'பகவானுடைய பக்தர் துக்கங்களிலிருந்து விடுதலை பெற்றவர்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'கதவ்யத:' என்ற சொல்லுக்கு துயரத்தைத் தரக்கூடிய நிகழ்ச்சி நேரும்போதும் துயரமடையாதவர் என்று பொருள். அதாவது அவருடைய உள்ளத்தில் எந்தவிதமான கவலையோ, துக்கமோ, துயரமோ ஏற்படாது. உடலில் நோய் வந்தாலும், மனைவி-மக்களின் பிரிவு நேர்ந்தாலும், செல்வம், வீடு முதலியவற்றை இழந்தாலும் இவை ப்ராரப்தத்தின் விளைவுகள் என்று கொண்டு உள்ளத்தினால் எந்த விகாரமும் அடையாதவர். ஆகவே அவர் துக்கத்திலிருந்து விடுதலை பெற்றவர் ஆவார்.

**கேள்வி:** 'ஸர்வாரம்பபரித்யாகீ' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உலகில் என்ன நேர்ந்தாலும் அது பகவானுடைய லீலை. அவருடைய மாயா சக்தியின் விளையாட்டு. அவர் யாரை எவ்விதம் நடத்த விரும்புகிறாரோ அப்படி நடத்துகிறார். மனிதன் இதை நான் செய்தேன், இது என் திறன் என்று மனதில் வீணே செருக்குக் கொள்கிறான். ஆனால் பகவானுடைய அடியார் இந்த ரஹஸ்யத்தை நன்கு உணர்ந்தவர். ஆகவே அவர் எப்பொழுதும் பகவானுடைய கைப்பாவையாகவே தன்னை பாவிக்கிறார். பகவான் எப்படி ஆட்டி வைக்கிறாரோ அப்படி மனமுவந்து ஆடுகிறார். கொஞ்சம்கூட எதிலும் செருக்குக் கொள்வதில்லை. தானாக ஒன்றும் செய்வதில்லை. உலகோர் பார்வையில் அவர் ஏதோ செயலில் ஈடுபட்டவர் போலத் தோன்றினாலும், அவருக்கு 'நான்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கர்த்தா' என்ற அபிமானமில்லாதபடியால் 'அவர் எல்லாச் செயல்களையும் துறந்தவர்' என்று கூறுகிறார்.

**यो न हृष्यति न द्वेष्टि न शोचति न काङ्क्षति।**
**शुभाशुभपरित्यागी भक्तिमान्यः स मे प्रियः॥ १७॥**

**யோ ந ஹ்ருஷ்யதி ந த்₃வேஷ்டி ந ஶோசதி ந காங்க்ஷதி ।**
**ஶுப₄ாஶுப₄பரித்யாகீ₃ ப₄க்திமாந்ய: ஸ மே ப்ரிய: ॥ 17 ॥**

**ய:** – எவன், **ந ஹ்ருஷ்யதி** –, (எதற்காகவும்) மகிழ்வதில்லையோ, **ந த்₃வேஷ்டி** – (எதையும்) வெறுப்பதில்லையோ, **ந ஶோசதி** – (எதற்காகவும்) துயரப்படுவதில்லையோ, **ந காங்க்ஷதி** – (எதற்கும்) ஆசைப்படுவதில்லையோ, **ய:** – எவன், **ஶுப₄ அஶுப₄ பரித்யாகீ₃** – நல்லதும், தீயதுமான செயல்கள் அனைத்தையும் துறந்தவனோ, **ஸ:** – அந்த, **ப₄க்திமாந்** – (என்னிடம்) பக்தியுள்ளவன், **மே** – எனக்கு, **ப்ரிய:** – ப்ரியமானவன்.

எவன் ஒருபோதும் மகிழ்வதில்லையோ, வெறுப்பதில்லையோ, துயரப்படுவதில்லையோ, எதற்கும் ஆசைப்படுவதில்லையோ, எவனொருவன் நல்லதும், தீயதுமான செயல்கள் அனைத்தையும் துறந்தவனோ, அந்த என்னிடம் பக்தியுள்ளவன் எனக்கு ப்ரியமானவன்.

**கேள்வி:** 'ஒருபோதும் மகிழ்வதில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** விரும்பியது கிடைத்தாலும், விரும்பாதது அகன்றாலும் ப்ராணிகளுக்கு மகிழ்ச்சி உண்டாகும். ஆனால் எது கிடைத்தாலும், எது கைவிட்டுப் போனாலும் உள்ளத்தில் மகிழ்ச்சி என்ற விகாரம் உண்டாகாததால்தான் ஞானியான பக்தர் 'ஒருபோதும் மகிழ்வதில்லை'. பக்தருக்கு ஸர்வ வல்லமை படைத்த, எல்லாவற்றிற்கும் ஆதாரமான, பரம தயாளுவான பகவான்தான் மிகவும் ப்ரியமான பொருள். அது அவருக்குக் கிடைத்துவிட்டது. ஆகவே அவர் எப்பொழுதும் ஆனந்தத்திலேயே மூழ்கி இருக்கிறார். உலகியல் பொருள் ஒன்றிலும் சிறிதுகூட அவருக்கு விருப்பு, வெறுப்பு இல்லை. இக்காரணத்தினால் உலக நோக்கின்படி ஒரு ப்ரியமான வஸ்து அவருக்குக் கிட்டினாலும், ப்ரியமில்லாத வஸ்து கைவிட்டுப் போனாலும் அவர் உள்ளத்தில் சிறிதுகூட மகிழ்ச்சி என்ற விகாரம் ஏற்படாது.

**கேள்வி:** 'பகவானுடைய பக்தர் வெறுப்பதில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவானுடைய பக்தர் அகில உலகும் பகவானுடைய ஸ்வரூபம் என நினைக்கிறார். ஆகவே எந்த ஜீவனிடமும், எந்தப் பொருளிலும், எக்காரணத்தைக் கொண்டும் அவருக்கு வெறுப்பு ஏற்படாது. அவர் உள்ளத்தில் வெறுப்பு என்பதே ஒருபொழுதும் இராது.

**கேள்வி:** 'பகவானுடைய பக்தர் ஒருபொழுதும் வருந்துவது இல்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மகிழ்ச்சியினால் ஏற்படும் விகாரம் இல்லாதது போலவே அவரிடம் சோகத்தினுடைய விகாரமும் இருப்பதில்லை. பொதுவாக எவருக்கும் ப்ரியமில்லாதது வந்து சேர்ந்தாலும், ப்ரியமுள்ளது பிரிந்தாலும் மனதில் துயரம் உண்டாகும். ஆனால் பரமதயாளுவான பகவானுடைய க்ருபையினாலே விளையும் லீலையினால் எது நேர்ந்தாலும், அது பகவானுடைய பக்தருக்கு ப்ரதிகூலமாகாது. பகவானுடைய லீலையின் ரஹஸ்யம் புரிந்தமையால் அவர் எப்பொழுதும் பரமானந்த அனுபவத்திலேயே திளைத்திருப்பார். அவருக்கு சோகம் எது?

மற்றொரு விஷயம். எங்கும் நிறைந்தவரும், எல்லாவற்றிற்கும் ஆதாரமானவருமான பகவான்தான் அவருக்கு மிகமிக ப்ரியமான பொருள். அவர் பகவானை விட்டுப் பிரிவதே இல்லை. ஆகவே உலகியல் பொருட்கள் உண்டாவதாலோ, அழிவதாலோ அவரிடம் எந்தவிதமான மாறுதலையும் ஏற்படுத்தாது. எனவே உலகியல் ரீதியில் ப்ரியமான ஒன்று பிரிவதாலோ, ப்ரியமில்லாதது சேர்வதாலோ அவருக்கு எந்தவிதமான சோகமும் ஏற்படாது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'பகவானுடைய பக்தன் ஒருபொழுதும் எந்தப் பொருளையும் பெற ஆசைப்படுவதில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தனக்கு விருப்பமான பொருள் தன்னிடம் இல்லாததை ஒருவனுடைய மனம் உணரும்போது, அவன் அது தனக்குக் கிட்ட வேண்டும் என எதிர்பார்க்கின்றான். பகவானுடைய பக்தருக்கு ஸாக்ஷாத் பகவானே கிடைத்துவிட்டதால் அவர் எப்பொழுதும் பரமானந்தத்திலும், பரம அமைதியிலும் திளைத்திருப்பார். பூர்ணகாமராகி விடுவார். அவருடைய உள்ளத்தில் இப்பொருள் இல்லையே என்ற எண்ணம் எப்படி வரும்? அவருடைய தேவைகள் எல்லாம் அழிந்துவிட்டனவே. அவர் அசைவற்ற நிலையில் அல்லவா இருக்கிறார்! ஆகவே, அவருடைய உள்ளத்தில் உலகியல் பொருட்களின் எதிர்பார்ப்பு என்பதே இல்லை.

**கேள்வி:** இங்கு 'ஶுபாஶுப' என்ற சொற்கள் எவ்விதக் கர்மங்களைக் குறிக்கின்றன? 'பகவானுடைய பக்தர்கள் அவற்றைத் துறந்தவர்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** யாகம், தானம், தவம், வர்ணாசிரமங்களுக்கேற்ற பிழைப்பிற்கான தொழில், வாழ்க்கைக்கு அவசியமான சாஸ்த்ர முறைப்படியான செயல்கள் எல்லாமே சுபகர்மங்கள். பொய், கபடம், திருட்டு, துன்புறுத்துதல், விபசாரம் முதலிய பாவச் செயல்கள் எல்லாமே அசுபகர்மங்கள். பகவானுடைய ஞானியான பக்தர்கள் இந்த இரண்டுவிதமான கர்மங்களையும் விட்டுவிடுகிறார்கள். எப்படியெனில் அவர்களுடைய உடல், மனம், புலன்களால் செய்யப்படும் சுபகர்மங்கள் எல்லாவற்றையுமே அவர்கள் பகவானுக்கு அர்ப்பணம் செய்து விடுகிறார்கள். அவற்றில் சிறிதுகூட மமகாரம், பற்று, பயனில் விருப்பம் ஆகியவற்றைக் கொள்வதில்லை. ஆகவே இதைக் கர்மம் என்று கொள்ள முடியாது (4/20). விருப்பு, வெறுப்பு இல்லாமையால் அவர்கள் பாவ கர்மங்களைச் செய்யவே மாட்டார்கள். ஆகவே அவர்கள் 'ஶுபாஶுப' கர்மங்களை விட்டவர்கள் ஆகிறார்கள்.

**समः शत्रौ च मित्रे च तथा मानापमानयोः ।**
**शीतोष्णसुखदुःखेषु समः सङ्गविवर्जितः ॥ १८ ॥**

**ஸம: ஶத்ரௌ ச மித்ரே ச தத₂ா மாநாபமாநயோ: ।**
**ஶீதோஷ்ணஸுக₂து₃:கே₂ஷு ஸம: ஸங்க₃விவர்ஜித: ॥ 18 ॥**

**ஶத்ரௌ மித்ரே ச** – (எவன்) பகைவனிடமும், நண்பனிடமும், **மாந அபமாநயோ:** – மதிப்பிலும், அவமதிப்பிலும், **ஸம:** – ஸமபுத்தியுடையவனோ, **தத₂ா** – அவ்விதமே, **ஶீத உஷ்ண ஸுக₂ து₃:கே₂ஷு** – தட்ப–வெப்பம், ஸுக–துக்கங்களாகிற இரட்டைகளில், **ஸம:** – ஸமபுத்தியுடையவனோ, **ச** – மேலும், **ஸங்க₃ விவர்ஜித:** – பற்றற்றவனோ—

எவன் பகைவனிடமும் நண்பனிடமும், மதிப்பிலும் அவமதிப்பிலும் ஸமபுத்தியுடையவனோ, அவ்விதமே தட்ப–வெப்பம், ஸுக–துக்கங்களாகிற இரட்டைகளில் ஸமபுத்தியுடையவனோ, மேலும், பற்றற்றவனோ—

**கேள்வி:** பகவானுடைய பக்தர்தான் யாரிடமும் பகைமை பாராட்டுவதில்லையே – அவருக்குப் பகைவர் யார்? இந்த நிலையில் பகைவனிடமும், நண்பனிடமும் ஸமமாக இருப்பார் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உண்மையிலேயே பக்தருடைய நோக்கில் அவருக்குப் பகைவனோ, நண்பனோ கிடையாது. ஆனாலும் உலகினர், தமது பாவனைக்கேற்றவாறு அறியாமையினால் பக்தரால் தனக்குத் தீங்கு ஏற்படுகிறது என்று நினைத்தோ அல்லது அவருடைய இயல்பு தனக்கு ஏற்ப இராததாலோ அல்லது பொறாமையாலோ, அவரிடம் பகைமை கொள்ளலாம். இவ்வாறே வேறு சிலர் தங்களுடைய பாவனையினால் அவரிடம் நட்பும் கொள்ளலாம். ஆயினும் அகில உலகிலும் எங்கும் பகவானையே காணும் பக்தருக்கு எல்லோரிடமும் ஸமபாவனைதான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அவருடைய நோக்கில் பகைவன் என்றோ, நண்பன் என்றோ சிறிதும் வேற்றுமை இருக்காது. அவர் எல்லோரிடமும் நேயத்துடன் பழகுவார். எல்லோரும் இறைவனது உருவமே என நினைத்து ஸமபாவனையுடன் எல்லோருக்கும் ஸேவை செய்வதே அவரது இயல்பு ஆகும். தன்னை வெட்ட வந்தவனானாலும் சரி, தண்ணீர் ஊற்றுபவனானாலும் சரி, இருவருக்கும் வேற்றுமையின்றி எப்படி மரம் நிழல், பழங்கள், பூக்கள் முதலியவற்றைக் கொடுத்துப் பணி புரிகிறதோ, அதுபோலவே பக்தரும் யாரிடமும் எவ்விதமான வேற்றுமையும் பாராட்ட மாட்டார். பக்தரின் ஸமத்வம் மரத்தைக் காட்டிலும் அதிகச் சிறப்புடையது. பக்தருடைய நோக்கில் பரமேசுவரனைத் தவிர வேறு ஒரு பொருளும் கிடையாதாகையால் வேற்றுமை என்ற ஸந்தேஹமே எழுவதற்கில்லை. ஆகவே அவரை நண்பர்களிடமும், பகைவர்களிடமும் ஸமபுத்தியுடையவர் என்று கூறுகிறார்.

**கேள்வி:** *மதிப்பு–அவமதிப்பு, தட்பம்–வெப்பம், ஸுகம்–துக்கம் என்ற இரட்டைகளிலும் ஸமபுத்தியுடன் இருப்பார் என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** மதிப்பு–அவமதிப்பு, தட்பம்–வெப்பம், ஸுகம்–துக்கம் முதலிய நன்மை பயப்பவை, தீமை பயப்பவை என்ற இரட்டைகள் மனதிலோ, புலன்களிலோ, உடலிலோ ஸம்பந்தப்பட நேரிட்டாலும், பகவானுடைய பக்தரின் உள்ளத்தில் விருப்பு–வெறுப்போ, மகிழ்ச்சி–துயரமோ ஆகிய விகாரம் கொஞ்சம்கூட ஏற்படாது. அவர் எப்பொழுதும் ஒரே சீராக இருப்பார். வேண்டுவன வரவேண்டும் என்றோ, வேண்டாதன அகலவேண்டும் என்றோ நினைக்க மாட்டார். எந்நிலையிலும் அவர் தடுமாற மாட்டார். எங்கும் பகவானையே காண்பதால் அவருடைய உள்ளத்தில் ஏற்றத்தாழ்வே தோன்றாது. இதைத்தான் எல்லாவற்றிலும் ஸமபாவனை உள்ளவர் என்று கூறுகிறார்.

**கேள்வி:** *'ஸங்கவிவர்ஜித:' என்றால் உலகியலிலிருந்து விலகி இருப்பவர் என்று கூறினால் என்ன?*

**பதில்:** உலகியலில் பற்றுதான் மனிதனுடைய எல்லா இன்னல்களுக்கும் மூலகாரணம் புற உலகின் தொடர்பைத் துண்டித்துக் கொண்டால்கூட, மனதில் பற்று இருந்துகொண்டே இருக்குமானால் அந்த த்யாகத்தினால் விசேஷமான பலன் ஏற்படாது. மாறாக மனதில் பற்று நீங்கிவிட்டால், ஜனகர் முதலான அரசர்களைப்போல மமதையும், பற்றுதலுமின்றி புற உலகில் எல்லோருடனும் தொடர்பு இருந்தாலும் ஒரு தீங்கும் நேரிடாது. இந்தப் பற்றைத் துறந்துள்ளவரையே இங்கே உண்மையில் 'ஸங்கவிவர்ஜித:' என்கிறார். 2/57ல் இதே கருத்து வருகிறது. ஆகவே 'ஸங்கவிவர்ஜித:' என்பதற்கு இங்கே கூறப்பட்ட பொருள்தான் சரியானது என்றே தோன்றுகிறது.

**கேள்வி:** *13வது ச்லோகத்தில் பக்தன் எல்லா ப்ராணிகளிடமும் நட்பு பாராட்ட வேண்டுமென்றார். இங்கே எவரிடமும் பற்றுதல் இருக்கக் கூடாது என்கிறாரே. இது முன்னுக்குப்பின் முரணாக இல்லையா?*

**பதில்:** இதில் ஒரு முரண்பாடும் இல்லை. பகவானுடைய பக்தருக்கு எல்லா ப்ராணிகளிடமும் உள்ள அன்பு பற்றுதல் அற்றது – குற்றமற்றது – பரிசுத்தமானது. உலகியலாரின் அன்பில் பற்றுதல் உண்டு. ஆகவே மேல்நோக்காகப் பார்த்தால் முரண் எனத் தோன்றும். உண்மையில் முரண் இல்லை. நட்பு நற்பண்பாகும். அது பகவானிடமும் உள்ளது. பற்று என்பது ஒரு தீய பண்பு. அதுதான் மற்ற துர்குணங்களுக்கு எல்லாம் வேர். ஆகவே அதை விலக்க வேண்டும். அது பகவத் பக்தர்களிடம் எப்படி குடிகொண்டிருக்கும்?

**तुल्यनिन्दास्तुतिर्मौनी सन्तुष्टो येन केनचित्।**
**अनिकेतः स्थिरमतिर्भक्तिमान्मे प्रियो नरः॥ १९॥**

**துல்யநிந்₃தா₃ஸ்துதிர்மௌநீ ஸந்துஷ்டோ யேந கேநசித் ।**
**அநிகேத: ஸ்தி₂ரமதிர்ப₄க்திமாந்மே ப்ரியோ நர: ॥ 19 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**துல்ய நிந்தா₃ ஸ்துதி:** – இகழ்ச்சியையும், புகழ்ச்சியையும் ஸமமாக மதிப்பவனோ, **மௌநீ** – பகவானை எப்பொழுதும் சிந்தித்திருப்பவனோ (மேலும்), **யேந கேநசித்** – எந்தவிதத்தில் உடலைப் பேணுதல் நடைபெற்றாலும், **ஸந்துஷ்ட:** – மகிழ்ச்சி கொள்பவனோ, **அநிகேத:** – வசிக்கும் இடத்தில் எனது என்ற பற்றற்றவனோ, **ஸ்தி₂ரமதி:** – நிலைத்த புத்தியுடையவனோ, **ப₄க்திமாந்** – பக்தியுள்ள, **நர:** – அந்த மனிதன், **மே** – எனக்கு, **ப்ரிய:** – ப்ரியமானவன்.

இகழ்ச்சியையும் புகழ்ச்சியையும் ஸமமாக மதிப்பவனோ, பகவானை எப்பொழுதும் சிந்தித்திருப்பவனோ மேலும் எந்தவிதத்தில் உடலைப் பேணுதல் நடைபெற்றாலும் மகிழ்ச்சி கொள்பவனோ, வசிக்கும் இடத்தில் தனது என்ற பற்றற்றவனோ, நிலைத்த புத்தியுடையவனோ பக்தியுள்ள அந்த மனிதன் எனக்கு ப்ரியமானவன்.

**கேள்வி:** 'பகவானுடைய பக்தர் இகழ்ச்சியையும், புகழ்ச்சியையும் ஸமமாக மதிப்பார்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவானுடைய பக்தருக்குத் தமது பெயரிலோ, தமது உடலிலோ சிறிதுகூட அபிமானமோ, மமகாரமோ கிடையாது. அதனால் அவரைப் புகழ்ந்தாலும் மகிழ மாட்டார், இகழ்ந்தாலும் வருந்தமாட்டார். இரண்டிலும் ஸமமாக இருப்பார். 'எங்கும் பகவான் இருக்கிறார்' என்ற எண்ணத்திலே புகழ்கிறவர்களிடமும், இகழ்கின்றவர்களிடமும் சிறிதுகூட வேற்றுமை பாராட்டாது இருப்பார். இதைத்தான் இகழ்ச்சியிலும், புகழ்ச்சியிலும் ஸமபாவனை உள்ளவர் என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'மௌநீ' என்றால் பேசாதவர் என்றல்லவா பொருள்? இங்கே பகவானை எப்பொழுதும் சிந்தித்திருப்பவர் என்று பொருள் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனிதன் வாயைத் திறந்து மட்டும் பேசுவதில்லை. மனத்தாலும் பேசுகிறான். ஓயாமல் பல விஷயங்களைச் சிந்திப்பதுதான் மனம் பேசுவதாகும். பக்தனுடைய மனதில் பகவானைத் தவிர வேறு நினைவே இருப்பதில்லை. எப்பொழுதும் பகவானுடைய சிந்தனையிலேயே லயித்துவிடுகிறது. இதுதான் உண்மையான மௌனம். வாய்விட்டுப் பேசாமல், மனதில் மற்ற விஷயங்களைச் சிந்திப்பது புறத்தோற்றத்தில் காணப்படும் மௌனம். மனதில் வேறு எண்ணமே இல்லாமல் சொல்லைத் தூயதாகவும், கட்டுப்படுத்தியும் வைத்துக் கொள்ளும் நோக்கத்துடன் செய்யப்படும் வெளிப்படையான மௌனமும் பயன் தரும். இங்கு பகவான் தம்மீது அன்பு கொண்ட பக்தருடைய இலக்கணங்களைக் கூறுகிறார். அவருடைய சொல் இயல்பாகவே பரிசுத்தமாகவும், கட்டுப்பட்டும் இருக்கும். ஆகவே அவர் பேச்சில் மட்டும் மௌனமாக இருக்கிறார் என்று பொருள் அன்று. அவருடைய நா ஓயாமல் பகவந்நாமத்தைச் சொல்லிக் கொண்டிருக்கலாம், குணங்களைப் பாடிக் கொண்டிருக்கலாம். அதனால் உலகிற்கு அரிய நன்மை உண்டு. ஆகவே இங்கு வாய் பேசாமல் இருப்பது என்பது மௌனம் அன்று. தவிர, பகவான் பக்தர்களின் மூலம் தம்முடைய பக்தியை ப்ரசாரமும் செய்வார். ஆகவே நாவடக்கமுள்ளவர்தாம் பகவானுடைய பக்தர். பேசாமலே இருப்பவர் என்று கற்பனை செய்து கொள்ளக்கூடாது. 18/68,69களில் பகவான் கீதையை ப்ரசாரம் செய்பவர்கள் தமக்கு ப்ரியமான கார்யம் செய்கிறார்கள் என்று கூறுகிறார். இந்தப் பெரிய கார்யம் வாய்மூடி மௌனியாக இருந்தால் நடைபெறாது. 17/16ல் மானஸிக தவத்தின் இலக்கணமாக 'மௌநம்' என்ற சொல்லும் வருகிறது. பகவான் 'மௌநம்' என்ற சொல்லுக்கு வாயடக்கம் என்ற பொருளுரைக்க விரும்பியிருந்தால், அதை வாக்கினால் தவம் என்ற ஸந்தர்பத்தில் கூறியிருப்பார். ஆனால் அவ்வாறு கூறவில்லை. ஆகவே முனியின் தன்மை – மனனஶீலம்தான் 'மௌநம்' எனப்படுகிறது. மனனஶீலம் – பகவானையே சிந்தித்திருக்கும் தன்மை எய்தியவர் 'மௌநீ' எனப்படுகிறார். 'பேசக்கூடாது' என்று நாவை வலுக்கட்டாயமாக அடக்கலாம். இது பெருமைக்குரியதன்று. ஆகவே இங்கு 'மௌநம்' என்பதற்கு நாவடக்கம் என்ற பொருள் கொள்ளாமல், மனனஶீலத்தைக் கடைப்பிடிப்பது என்று கொள்வதுதான் சரி. நாவடக்கம் என்பது இதற்குள் தானாகவே அமையும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'யேந கேநசித் ஸந்துஷ்ட:' என்று கூறுவதன் கருத்து என்ன? பகவானுடைய பக்தர்கள் உடல் பேணுவதற்காக எதையும் செய்யக் கூடாதா? எது கிடைக்கிறதோ அதில் த்ருப்தி கொள்ள வேண்டுமா?

**பதில்:** எந்த பக்தர் அநன்ய பாவனையுடன் பகவானுடைய சிந்தனையிலேயே ஈடுபட்டிருக்கிறாரோ, வேறு எந்த எண்ணமும் மனதிலே எவருக்குத் தோன்றுவதில்லையோ, அவர் தமது உடல் பேணுவதற்கான எந்தச் செயலிலும் ஈடுபடாமல் இருப்பதோ, அவருடைய உலகியல் க்ஷேமலாபங்களை பகவான் கவனித்துக் கொள்வதோ நடக்கக் கூடியதுதான். ஆயினும் இங்கு 'கிடைத்ததில் நிம்மதியாக இருப்பவர்' என்று கூறுவதால் நிஷ்காமமாக வர்ணாசிரமங்களுக்கேற்றவாறு – உடல்பேணுவதற்கான ந்யாயமான செய்கைகளைச் செய்யக் கூடாது என்ற தடையில்லை. அப்படிச் செயல்பட்டாலும் ப்ராரப்தத்தின் பயனாக எது கிடைக்கிறதோ, அதில் த்ருப்தி அடைகிறார் என்று பொருள். பகவானுடைய பக்தர்களுக்கு உலகியல் பொருட்கள் வந்தாலும் போனாலும் அக்கறையில்லை. தமக்கு மிகவும் பிடித்த வகையில் பகவானை அடைந்துவிட்டதிலேயே எப்பொழுதும் ஸந்தோஷமாக இருப்பார். ஆகவே வெளிப்பொருட்கள் வருவதாலோ, போவதாலோ அவருடைய ஸந்தோஷத்தில் எவ்வித மாறுபாடும் கிடையாது என்று பொருள். ப்ராரப்த வசமாக ஸுகதுக்கங்களுக்குக் காரணமாக அவருக்கு எது நேர்ந்தாலும், அதில் நிறைவுடன் இருப்பார்.

**கேள்வி:** 'அநிகேத:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தனக்கென்று சொந்த வீடு இல்லாதவர் 'அநிகேதர்'. ஸந்யாஸியான பகவானுடைய ஞானி பக்தர் இல்லற வாழ்வைவிட்டு, முழுமையாக வீடு முதலியவற்றைத் துறந்துவிட்ட பிறகு, எந்த இடத்திலும் பற்றோ, தனது என்ற உரிமையோ கொண்டிருக்க மாட்டார். அவரை 'அநிகேத:' என்கிறார். இவர்களைத் தவிர எவர் தன்னுடைய உடைமையெல்லாம் பகவானுக்கே அர்ப்பணம் செய்துவிட்டு ஒன்றுமில்லாதவர் ஆகிவிட்டாரோ; எவருடைய வீடு, வாசல், உடல், கல்வி, புத்தி எல்லாம் பகவானுடைய உடைமையாகிவிட்டனவோ, அவர் ப்ரம்மசாரி ஆனாலும், இல்லறத்தார் ஆனாலும், வானப்ரஸ்தர் ஆனாலும் 'அநிகேதர்'தான். ஒருவர் உடலில் தன் அஹங்காரத்தையும், மமகாரத்தையும், பற்றையும் விட்டுவிட்டால் உடல் இருந்தாலும் அவரை 'விதேஹர்' என்று கூறுவதுபோல இருக்குமிடத்தில் மமகாரம், பற்று இல்லாமல் அவர் வீட்டில் இருந்தாலும் வீடற்ற அநிகேதர்தான்.

**கேள்வி:** பக்தரை 'ஸ்திரமதி:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவானுடைய நேரிடை தர்சனம் பெற்றவருக்கு எல்லா ஸந்தேஹங்களும் தீர்ந்திருக்கும். பகவானிடம் அவருக்கு திடநம்பிக்கை ஏற்பட்டிருக்கும். அவருடைய உறுதி அசைக்க முடியாதது, தடுமாறாதது. ஆகவே அவர் ஸாதாரண மனிதர்களைப் போலக் காமம், கோபம், லோபம், மோஹம், பயம் முதலிய மனவிகாரங்களுக்கு ஆட்பட்டு தர்மத்திலிருந்தோ, பகவானுடைய ஸ்வரூப சிந்தனையிலிருந்தோ விலகமாட்டார். ஆகவே அவரை 'ஸ்திரமதி:' என்றார். இந்தச் சொல்லைப் பற்றிய சிறப்பான விளக்கம் 2/55 முதல் 72 வரையில் காணலாம்.

**கேள்வி:** ச்லோகம் 13 முதல் 19 வரையிலான ஏழு ச்லோகங்களில் தம்முடைய பக்தர்களின் இலக்கணம் கூறுகின்ற பகவான் 'என்னுடைய பக்தர் எனக்கு ப்ரியமானவர்', 'இத்தகைய பக்தர் எனக்கு ப்ரியமானவர்' என்று திரும்பத் திரும்ப ஐந்து முறை கூறுகிறாரே, அப்படிக் கூறுவதன் கருத்து என்ன?.

**பதில்:** மேலே சொல்லப்பட்ட எல்லா இலக்கணங்களும் பகவானுடைய பக்தர்களுக்குப் பொருந்தும். எல்லாம் சாஸ்த்ர ஸம்மதமானவை; சிறந்தவை. ஆனால் இயல்பு முதலியவற்றின் வேறுபாட்டினால் பக்தர்களுடைய நடைமுறைகளிலும், குணங்களிலும் சிறிது வித்யாஸம் இருக்கலாம். எல்லோரிடமும் எல்லா இலக்கணங்களும் ஒரே மாதிரியாக இருக்கும் என்று கூற முடியாது. ஸமபாவனையும், அமைதியும் எல்லோர்க்கும் பொதுவானவை. விருப்பு–வெறுப்பு, மகிழ்ச்சி–துயரம் முதலிய மனவிகாரங்கள் அவர்களிடம் இரா. ஆகவே

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இந்த ச்லோகங்களில் கூறியதைக் கூறல் என்பது உள்ளது. கவனித்துப் பார்த்தால் இந்த ஐந்து பிரிவுகளிலும் சிலவற்றில் கருத்தாகவும், சிலவற்றில் தெளிவான சொற்களாலும் விருப்பு-வெறுப்புகளின்மை, மகிழ்ச்சி-துயரமின்மை கூறப்பட்டிருக்கும். முதல் பிரிவில் 'அத்வேஷ்டா' என்று கூறி வெறுப்பையும், 'நிர்மம:' என்று விருப்பையும், 'ஸமது:கஸுக:' என்பதால் மகிழ்ச்சி-துயரமின்மையையும் கூறுகிறார். இரண்டாவதில் மகிழ்ச்சி, பொறாமை, பயம், பாதிப்பு இரா என்கிறார். இதிலிருந்து விருப்பு-வெறுப்பு, மகிழ்ச்சி-துயரம் இரா என்பது தானாகவே விளங்குகிறது. மூன்றாவதில் 'அநபேக்ஷ:' என்று விருப்பும், 'உதாஸீந:' என்று வெறுப்பும், 'கதவ்யத:' என்று மகிழ்ச்சி-துயரங்களும் இல்லை என்று கூறுகிறார். நான்காவதில் 'ந காங்க்ஷதி' என்று விருப்பும், 'ந த்வேஷ்டி' என்று வெறுப்பும், 'ந ஹ்ருஷ்யதி' என்று மகிழ்ச்சியும், 'ந ஶோசதி' என்று துயரமும் இல்லை என்கிறார். இவ்விதம் ஐந்தாவதில் 'ஸங்கவிவர்ஜித:', 'ஸந்துஷ்ட:' என்ற சொற்களில் விருப்பு-வெறுப்பும், 'ஶீதோஷ்ண ஸுகது:கேஷு ஸம:' என்பதால் மகிழ்ச்சி-துயரங்களும் இல்லை என்று காட்டினார். 'ஸந்துஷ்ட:' என்ற சொல் இருமுறை வருகிறது. ஆகவே விருப்பு-வெறுப்பற்ற தன்மை, மகிழ்ச்சி-துயரமற்ற தன்மை, ஸமபாவனை, சாந்தி எல்லோருக்கும் அவசியமானவை. மற்ற இலக்கணங்கள் இயல்புக்கு ஏற்றவாறு சிறிது மாறலாம். இந்த வேற்றுமையைக் கொண்டுதான் பகவான் வெவ்வேறு நிலைகளில் பக்தர்களின் இலக்கணத்தைப் பிரித்து இங்கு ஐந்து தடவை தனித்தனியாகச் சொல்லியிருக்கிறார். ஆகவே இவற்றில் ஏதாவது ஒரு நிலையின்படியாவது எல்லா இலக்கணங்களும் எவரிடம் உள்ளனவோ, அவரே பகவானுடைய ப்ரிய பக்தர் என்று கருதவேண்டும்.

**கேள்வி:** *இந்த இலக்கணங்கள் ஸித்தபுருஷர்களுக்கா அல்லது ஸாதகர்களுக்கா?*

**பதில்:** ஆலோசித்துப் பார்த்தால் இவ்விலக்கணங்கள் ஸாதகர்களுக்கு அல்ல; பக்தி யோகத்தின் மூலம் பகவானை அடைந்துவிட்ட ஸித்தபுருஷர்களுக்குத்தான் பொருந்தும் என்று தோன்றுகிறது. ஏனெனில் பகவானை அடையும் உபாயத்தையும், பயனையும் சொல்லியபின்னர் இவ்விலக்கணங்களைக் கூறியிருக்கிறார். தவிரவும் 14/22 முதல் 25 வரை கூறப்போகும் குணாதீதர்களான தத்வமறிந்தவர்களுடைய இலக்கணங்களுடன் இவை ஒத்து இருக்கின்றன. ஆகவே இவை ஸாதகர்களின் இலக்கணங்கள் அல்ல.

**கேள்வி:** *இவையெல்லாம் பக்தியோகத்தின் மூலம் பகவானை அடைந்துவிட்டவர்களின் இலக்கணங்கள் என்று கூறுவதற்கு என்ன காரணம்?*

**பதில்:** இந்த அத்யாயத்தில் பக்தியோகத்தை வர்ணிக்கிறார். இதன் பெயரே பக்தி யோகம்தான். அர்ஜுனனுடைய கேள்வியும், பகவானுடைய பதிலும் உபாஸனையைப் பற்றியதுதான். 'என்னுடைய பக்தன் எனக்கு ப்ரியமானவன்' என்று திரும்பத் திரும்ப பகவான் கூறுகிறார். ஆகவே எவர்கள் பக்தியோகத்தின் மூலம் மிகச் சிறந்த ஸித்தியைப் பெற்றிருக்கிறார்களோ, அவர்களுடைய இலக்கணங்கள்தான் இவையெல்லாம் என்று அறிந்து கொள்ள வேண்டும்.

**கேள்வி:** *கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் இவற்றில் ஏதாவது ஒன்றின் மூலம் மிகச் சிறந்த ஸித்தி பெற்ற பின்பும், அவரவர்களிடையே ஏதாவது வேறுபாடு இருக்குமா?*

**பதில்:** அவர்களுடைய உண்மை நிலையிலும், அடைந்துவிட்ட பரம தத்வத்திலும் ஒரு வேறுபாடும் இருக்காது. ஆயினும் ஸ்வபாவ மாறுபாட்டால் நடைமுறையில் வேற்றுமை காணப்படும். 'ஸத்ருஶம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர்ஜ்ஞானவானபி' (3/33) என்று கூறுவதிலிருந்து ஞானிகளின் நடைமுறையிலும், இயல்பிலும், ஞானம் முதிர்ந்த நிலையிலும்கூட வேறுபாடு இருக்கிறது என்பது தெரிகிறது.

அஹங்காரம், மமகாரம், விருப்பு-வெறுப்பு, மகிழ்ச்சி-துயரம், காமம்-க்ரோதம் முதலிய அஞ்ஞானத்தால் ஏற்பட்ட விகாரங்கள் இன்மையும், ஸமபாவனையும், சாந்தியும் இவை எல்லோரிடமும் ஒரு நிலையாகக் காணப்படுகின்றன. ஆயினும் நட்பும், கருணையும், பக்திமார்க்கத்தின் மூலம் பகவானை அடைந்த பெரியோர்களிடம் சிறப்பாகக்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



காணப்படுகின்றன. உலகியல் ஈடுபாடு, உடல் பேணுதல், கர்மங்கள் செய்தல் இம்மூன்றிலிருந்தும் ஓய்வுற்றிருப்பது, ஞான மார்க்கத்தின் மூலம் மேலான நிலையை எய்திய மஹான்களுக்கு ஒரு சிறப்பாகும். அதுபோல மனதையும், புலன்களையும் முழுமையாக அடக்கிப் பற்றின்றிக் கர்மங்களில் ஈடுபட்டுக் கொண்டே இருப்பது கர்மயோகத்தின் மூலம் பகவானை அடைந்தவர்களிடையே காணப்படும்.

2/55 முதல் 72 வரை உள்ள ச்லோகங்களில் கர்மயோகத்தின் மூலம் பகவானை அடைந்துவிட்டவர்கள் பற்றியும், 14/22 முதல் 25வது வரை ஞானயோகத்தின் மூலம் பரமாத்மாவை அடைந்துவிட்ட குணாதீதர் பற்றியும் கூறப்பட்டுள்ளன. இங்கு 13 முதல் 19 வரை பக்தியோகத்தின் மூலம் பகவானை அடைந்தவர்களின் இலக்கணம் கூறப்பட்டது.

**பொருத்தம்:** பரமாத்மாவை அடைந்துவிட்ட ஸித்த பக்தர்களின் இலக்கணங்களைக் கூறிவிட்டு, அந்த இலக்கணங்களை இலக்காகக் கொண்டு மிகுந்த முயற்சியுடன் அவற்றைக் கைக்கொண்டவர்களும் மிகுந்த ச்ரத்தையுள்ளவர்களும், ஶரணாகதி அடைந்து விட்டவர்களுமான பக்தர்களின் பெருமையைக் கூறி, அவர்கள் தமக்கு மிகவும் ப்ரியமானவர்கள் என்று கூறி அத்யாயத்தைத் தலைக் கட்டுகிறார்—

**ये तु धर्म्यामृतमिदं यथोक्तं पर्युपासते।**
**श्रद्दधाना मत्परमा भक्तास्तेऽतीव मे प्रियाः ॥ २० ॥**

**யே து த₄ர்ம்யாம்ருதமித₃ம் யதோ₂க்தம் பர்யுபாஸதே ।**
**ஶ்ரத்₃த₃தா₄நா மத்பரமா ப₄க்தாஸ்தேऽதீவ மே ப்ரியா: ॥ 20 ॥**

**து** – ஆனால், **யே** – எவர்கள், **ஶ்ரத்₃த₃தா₄நா:** – என்னிடம் நம்பிக்கைக் கொண்டு, **மத்பரமா:** – என்னையே மேலான கதியாகக் கொண்டு, **யதா₂ உக்தம்** – மேலே கூறப்பட்ட, **இத₃ம்** – இந்த, **த₄ர்ம்ய அம்ருதம்** – தர்மமே உருவான அமுதத்தை, **பர்யுபாஸதே** – பயனைக் கருதாது அன்புடன் அனுஷ்டிக்கிறார்களோ, **தே** – அந்த, **ப₄க்தா:** – பக்தர்கள், **மே** – எனக்கு, **அதீவ** – மிகவும், **ப்ரியா:** – ப்ரியமானவர்கள்.

ஆனால் எவர்கள் என்னிடம் நம்பிக்கையோடு என்னையே மேலான கதியாகக் கொண்டு, மேலே கூறப்பட்ட இந்த தர்மமே உருவான அமுதத்தைப் பயனைக் கருதாது அன்புடன் அனுஷ்டிக்கிறார்களோ, அந்த பக்தர்கள் எனக்கு மிகவும் ப்ரியமானவர்கள்."

**கேள்வி:** இங்கு 'து' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ச்லோகம் 13 முதல் 19 வரை பகவானையடைந்த ஸித்த பக்தர்களுடைய இலக்கணம் கூறப்பட்டது. இங்கு உத்தமமான ஸாதக பக்தர்களுடைய பெருமை கூறப்படுகிறது. இவர்கள் ஸித்த பக்தர்களிடமிருந்து வேறுபட்டவர்களானாலும், அந்த ஸித்த பக்தர்களை முன் மாதிரியாகக் கொண்டு அவர்களைப் பின்பற்றிச் செல்கின்றனர். இந்த வேறுபாட்டைக் குறிப்பதற்காகவே 'து' (ஆனால்) என்று ஆரம்பிக்கிறார்.

**கேள்வி:** ச்ரத்தையுடன் கூட பகவானையே புகலாகக் கொண்ட மனிதர்கள் யார்?

**பதில்:** எங்கும் நிறைந்தவரும், ஸர்வ வல்லமை படைத்தவருமான பகவானுடைய அவதாரங்களிலும், சொற்களிலும் அவருடைய குணங்கள், ப்ரபாவங்கள், ஈசுவரத்தன்மை, சரித்திரங்கள் முதலியவற்றிலும் நேரில் கண்டது போன்ற உணர்வுடன் கூடிய நம்பிக்கை கொண்டவர் 'ஶ்ரத்தாவாந்' எனப்படுவார். பரமப்ரேமை பூண்டவராயும், பரமதயாளுவாயும் உள்ள பகவானே கதி என்றும், உயர்ந்த புகல் என்றும், தம் உயிருக்கு ஆதாரமென்றும், எல்லாமே அவர்தான் என்றும் மதித்து, அவரிடமே தம் பொறுப்பை ஒப்படைத்து, அவர் விதித்ததை மனமகிழ்ச்சியுடன், ஒரு மனதுடன் ஏற்றுக் கொண்டிருப்பவர் பகவானைப் புகலாக அடைந்தவர்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** முன் சொன்ன ஏழு ச்லோகங்களில் கூறப்பட்ட பகவானுடைய பக்தர்களின் இலக்கணங்களை தர்மமயமான அம்ருதம் என்றும் பெயரிட்டுக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவானுடைய பக்தர்களின் மேலே கூறப்பட்ட இலக்கணங்கள் உண்மையில் மனிதப்பண்பின் உண்மை இயல்புகள். இவற்றைக் கடைப்பிடித்தால்தான் மனிதப் பிறவிக்குப் பொருள் உண்டு. இவற்றைக் கடைப்பிடிப்பதால் ஸாதகன் எப்பொழுதும் மரணத்தின் பிடியிலிருந்து விடுபடுகிறான். அவன் அம்ருத ஸ்வரூபனான பகவானை அடைகிறான். இதைத் தெள்ளத் தெளியத் தெரிவிப்பதற்காகவே இங்கு இந்த இலக்கணங்களை 'தர்மமயமான அம்ருதம்' என்றும் பெயரிட்டு அழைக்கிறார்.

**கேள்வி:** 'பர்யுபாஸதே' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** நல்லமுறையில், ஒரே முனைப்பாக, பயனைக் கருதாது அன்புடன் மேலே குறிப்பிட்ட இலக்கணங்களை ச்ரத்தையுடன் எப்பொழுதும் 'பேணிவருதல்' என்பதுதான் 'பர்யுபாஸதே' என்று கூறுவதன் கருத்து.

**கேள்வி:** முதலில் ஏழு ச்லோகங்களில் பகவானை அடைந்துவிட்ட ஸித்த பக்தர்களின் இலக்கணம் கூறி, பகவான் அவர்கள் தமக்கு ப்ரியமானவர்கள் என்று கூறினார். இந்த ச்லோகத்தில் ஸித்தர்கள் அல்லாத – ஆனால் இந்த இலக்கணங்களைக் கடைப்பிடிக்கும் ஸாதக பக்தர்கள் தமக்கு மிகவும் ப்ரியமானவர் என்று கூறுகிறார். இதில் என்ன ரஹஸ்யம்?

**பதில்:** ஸித்தர்களான பக்தர்கள் பகவானை அடைந்துவிட்டவர்கள். இவர்களிடம் இந்த இலக்கணங்கள் இயல்பாக அமைந்துவிட்டன. அவர்கள் பகவானுடன் என்றென்றும் ஒன்றிவிட்டார்கள். அவர்களிடம் இப்படிப்பட்ட குணச்சிறப்புகள் இருப்பது பெரிய விஷயமன்று. ஆனால் ஒன்றே குறியான ஸாதக பக்தர்களுக்கு இன்னும் பகவானுடைய தர்சனம் ஏற்படவில்லை. ஆயினும் அவர்கள் பகவானிடம் நம்பிக்கை வைத்து மிகுந்த ச்ரத்தையுடன் உடல், மனம், செல்வம், உடைமைகள் எல்லாவற்றையும் பகவானுக்கே அர்ப்பணம் செய்து அவரைப் பரமகதியாகக் கொண்டு பகவானை தர்சிக்க வேண்டுமென்ற ஒரே கருத்துடன் இடைவிடாது அவரையே நிஷ்காமமாக ப்ரேமையுடன் சிந்தித்துக் கொண்டு, அந்த இலக்கணங்களுக்குத் தக்கபடி தம்முடைய வாழ்க்கையைக் கழிக்க விழைகிறார்கள். நேரில் தர்சனம் கிடைக்காவிட்டாலும்கூட நம்பிக்கையிலேயே இத்துணையளவு பகவானைச் சார்ந்திருப்பது பெருமைக்குரியதல்லவா! ஆகவே இவர்களை பகவான் தமக்கு மிகவும் பிடித்தவர்கள் என்று கூறுகிறார். இத்தகைய அன்புள்ளங்கள் ஆன அடியார்களுக்கு பகவான் தம் நித்ய உறவை அளித்து, அவர்களுக்கு ஸந்தோஷமளிக்காதவரையில் அவர்களுக்குக் கடன்பட்டவராகவே ஆகிறார். இந்த அளவுக்கு பகவானுக்கு அவர்களிடம் மதிப்பு உண்டு. ஆகவே அவர்களை ஸித்த பக்தர்களைக் காட்டிலும் மிகவும் ப்ரியமானவர்கள் என்று கூறுவது பொருத்தம்தான்.

ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
भक्तियोगो नाम द्वादशोऽध्यायः॥ १२॥

**ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத்₃ப₄க₃வத்₃கீ₃தாஸூபநிஷத்ஸு ப்₃ரஹ்மவித்₃யாயாம் யோக₃ஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே₃ ப₄க்தியோகோ₃ நாம த்₃வாத₃ஶோத்₄யாய: ॥ 12 ॥**

**ஓம் தத் ஸத் – ப்ரம்ம வித்யை, யோக ஶாஸ்த்ரம், உபநிஷத் எனப்படும் ஸ்ரீமத்பகவத்கீதையாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலில் 'பக்தியோகம்' எனப் பெயர் படைத்த பன்னிரண்டாவது அத்யாயம் நிறைவுற்றது.**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

## அத₂ த்ரயோத₃ஶோऽத்₄யாய:

# பதின்மூன்றாவது அத்யாயம்

## க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம்

**அத்யாயத்தின் பெயர்** க்ஷேத்ரம் (உடல்), க்ஷேத்ரக்ஞன் (ஆத்மா) இவை ஒன்றுக்கொன்று முற்றிலும் மாறுபட்டவை. அஞ்ஞானத்தினாலேயே இவையிரண்டும் ஒன்றுபோல் தோன்றுகின்றன. க்ஷேத்ரம் ஜடம், விகாரமடைவது, நொடிப் பொழுதே இருப்பது, அழிவது. இதற்கு மாறாக, க்ஷேத்ரக்ஞன் சேதனன், அறிவே வடிவானவன், விகாரமற்றவன், என்றும் உள்ளவன், அழியாதவன். இந்த அத்யாயத்தில் க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் இவற்றின் ஸ்வரூபத்தை மேலே சொன்னவாறு பிரித்துக் காட்டுகிறார். அதனால் இந்த அத்யாயத்திற்கு 'க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞவிபாகயோகம்' என்று பெயர்.

**அத்யாயச் சுருக்கம்** இந்த அத்யாயத்தின் முதல் ச்லோகத்தில், 'க்ஷேத்ரம்' (உடல்), 'க்ஷேத்ரக்ஞன்' (ஆத்மா) இவற்றின் லக்ஷணங்கள் கூறப்படுகின்றன. 2ல் பரமாத்மாவும், ஆத்மாவும் ஒன்றுதான் என்றும், க்ஷேத்ரம் மற்றும் க்ஷேத்ரக்ஞன் இவற்றின் பகுத்தறிவே ஞானம் என்றும் கூறுகிறார். 3ல் விகாரங்களுக்கு உட்படும் க்ஷேத்ரத்தின் ஸ்வரூபம், ஸ்வபாவம், முதலியனவற்றையும், ப்ரபாவங்களுடன் கூடிய க்ஷேத்ரக்ஞனின் ஸ்வரூபத்தையும் விளக்கப் போவதாக பகவான் கூறுகிறான். 4ல் ரிஷிகள், வேதங்கள், ப்ரம்மஸூத்ரம் இவற்றிலிருந்து சான்றுகள் காட்டி, 5, 6ல் விகாரங்களுடன் கூடிய க்ஷேத்ரத்தின் ஸ்வரூபத்தை வர்ணிக்கிறார். 7 முதல் 11 வரை தத்வ ஞானம் பெற ஸாதனங்களான 'அமாநித்வம்' முதலான இருபது ஸாத்விகப் பண்புகளையும், நடத்தைகளையும் வர்ணனை செய்கிறார். அவற்றின் பெயர் 'ஞானம்' என்று கூறி, பிறகு 12 முதல் 17 வரை ஞானத்தின் மூலம் அறியத்தக்க பரமாத்மாவின் ஸ்வரூபத்தை வர்ணித்து, 18ல் இதுவரை கூறப்பட்ட விஷயங்களின் பெயரைக் கூறி, இவற்றை அறிவதன் பயன் பரமாத்ம ஸ்வரூபத்தை அடைவது என்று மொழிகிறார். இதற்குப் பிறகு 'ப்ரக்ருதி', 'புருஷன்' என்ற பெயர்களை விளக்கத் தொடங்கி, 19 முதல் 21 வரை ப்ரக்ருதியின் ஸ்வரூபம், அதன் செயற்பாடு, க்ஷேத்ரக்ஞனின் ஸ்வரூபம் ஆகியவற்றை வர்ணிக்கிறார். 22ல் பரமாத்மாவும், ஆத்மாவும் ஒன்றுதான் என்று கூறி, 23ல் குணங்களுடன் கூடிய ப்ரக்ருதியையும், புருஷனையும் அறிவதன் பயனைக் கூறி, 24, 25ல் பரமாத்மாவை அடைவதற்குரிய வெவ்வேறு உபாயங்களை விளக்குகிறார். 26ல் க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் இவர்களின் சேர்க்கையால், எல்லாவிதமான சராசரங்களும் உண்டாகின்றன என்று கூறி, 27 முதல் 30 வரை பரமாத்மா ஸமமாக எங்கும் நிறைந்திருப்பவர், அழியாதவர், எந்தச் செயலையும் செய்யாதவர் (அகர்தா);

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



எத்தனை கர்மங்கள் நிகழ்கின்றனவோ, அவையெல்லாம் ப்ரக்ருதியின் மூலமாகத்தான் ஏற்படுகின்றன; எல்லாம் பரமாத்ம தத்வத்திலிருந்து விரிவடைந்தவை; அதிலேயே இருப்பவை என்றும் கூறி, இவ்விதம் அறிந்து கொள்வதன் பெருமையையும், பயன்களையும் கூறுகிறார். 31 முதல் 33 வரை ஆத்மாவின் பெருமை, அவன் கர்த்தா அல்லன், எதிலும் ஒட்டாதவன் என்பனவற்றை உதாரணம் மூலம் விளக்கி, இறுதியில் 34வது ச்லோகத்தில் க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் என்பதைப் பகுத்தறிவதன் பயன் பரமாத்மாவை அடைவதே என்று நிரூபித்து அத்யாயத்தை முடிக்கிறார்.

**முன் அத்யாயத்துடன் இவ்வத்யாயத்திற்குப் பொருத்தம்:** பன்னிரண்டாவது அத்யாயத்தின் ஆரம்பத்தில் அர்ஜுனன் ஸகுண உபாஸனை சிறந்ததா, நிர்குண உபாஸனை சிறந்ததா என்ற விஷயத்தைப் பற்றிக் கேட்டார். அதற்குப் பதில் கூறும் வகையில் பகவான் இரண்டாவது ச்லோகத்தில் சுருக்கமாக ஸகுண உபாஸகர்களின் பெருமையைச் சொன்னார். 3 முதல் 5 வரை நிர்குண உபாஸனையின் ஸ்வரூபம், பயன் இவற்றைக் கூறி, தேகப்பற்று உள்ளவர்கள் அதைக் கடைப்பிடிப்பது கடினம் என்று கூறினார். ச்லோகம் 6 முதல் 20 வரை ஸகுண உபாஸனையின் பெருமை, பயன், முறை, பகவானுடைய பக்தர்களின் இலக்கணங்கள் இவற்றைக் கூறி அத்யாயத்தைத் தலைக்கட்டினார். நிர்குண ப்ரம்மத்தின் தத்வம், பெருமை அதை அடைய ஸாதனங்கள் இவற்றை விவரமாகக் கூறவில்லை. ஆகவே நிர்குண-நிராகார ப்ரம்மத்தின் தத்வம், அதாவது ஞானயோகம் பற்றிய தெள்ளிய விளக்கம் கூறுவதற்காகப் பதின்மூன்றாவது அத்யாயத்தை ஆரம்பிக்கிறார். இதில் முதலில் பகவான் க்ஷேத்ரம் (உடல்), க்ஷேத்ரக்ஞன் (ஆத்மா) இவற்றின் இலக்கணங்களைக் கூறுகிறார்—

श्रीभगवानुवाच

**इदं शरीरं कौन्तेय क्षेत्रमित्यभिधीयते।**
**एतद्यो वेत्ति तं प्राहुः क्षेत्रज्ञ इति तद्विदः॥ १॥**

ஸ்ரீப₄க₃வாநுவாச

**இத₃ம் ஶரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபி₄தீ₄யதே ।**

**ஏதத்₃யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்₃வித₃: ॥ 1 ॥**

**ஸ்ரீப₄க₃வாநுவாச** – ஸ்ரீபகவான் கூறினார்: **கௌந்தேய** – அர்ஜுன! **இத₃ம்** – இந்த **ஶரீரம்** – உடல், **க்ஷேத்ரம்** – க்ஷேத்ரம், **இதி** – என்ற பெயரால், **அபி₄தீ₄யதே** – அழைக்கப்படுகின்றது. **ஏதத்** – இதை, **ய:** – எவன், **வேத்தி** – அறிகிறானோ, **தம்** – அவனை, **க்ஷேத்ரஜ்ஞ:** – க்ஷேத்ரக்ஞன், **இதி** – என்று, **தத்₃வித₃:** – தத்வம் அறிந்த ஞானிகள், **ப்ராஹு:** – கூறுகிறார்கள்.

**ஸ்ரீபகவான் கூறினார்:** "அர்ஜுன! இந்த உடல் க்ஷேத்ரம் என்ற பெயரால் அழைக்கப்படுகின்றது. இதை எவன் அறிகிறானோ அவனை க்ஷேத்ரக்ஞன் என்று தத்வம் அறிந்த ஞானிகள் கூறுகிறார்கள்.

**கேள்வி:** *'ஶரீரம்' எனும் சொல்லுடன் 'இதம்' என்ற சொல்லைச் சேர்ப்பதன் கருத்து என்ன? உடலை 'க்ஷேத்ரம்' என்பானேன்?*

**பதில்:** இங்கு 'ஶரீரம்' என்பதோடுகூட 'இதம்' என்ற சொல்லை உபயோகித்துப் பின்வரும் பொருளை உணர்த்துகிறார்: ஆத்மா இவ்வுடலைப் பார்க்கிறான்; அறிகிறான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உடல் பார்க்கப்படும் பொருள். ஆகவே பார்க்கப்படுகிற உடல் பார்க்கிறவனான ஆத்மாவிலிருந்து முற்றிலும் வேறானது. வயலில் விதைக்கப்பட்ட விதை, அதற்குரிய காலத்தில் பயனைத் தருகிறது. அதுபோல இந்த உடலில் விதைக்கப்பட்ட முன் பிறவிகளில் செய்த கர்மங்களின் பதிவுகள் என்னும் விதைகளின் பயன்கள் தக்க சமயத்தில் வெளிப்படுகின்றன. ஆகவே இந்த உடலை க்ஷேத்ரம் என்று கூறுகிறார். (க்ஷேத்ரம் என்றால் வயல் என்ற பொருள் உண்டு.) தவிர, கணந்தோறும் இது அழியும் தன்மையுடையதாக இருக்கிறது. அதனாலும் இதற்கு க்ஷேத்ரம் என்ற பெயர். அதனால்தான் 15வது அத்யாயத்தில் இதை 'க்ஷரபுருஷன்' என்று அழைக்கிறார். இந்த க்ஷேத்ரத்தின் இலக்கணத்தை 13/5ல் சுருக்கமாகக் கூறுகிறார்.

*கேள்வி:* 'இந்த க்ஷேத்ரத்தை அறிபவன் க்ஷேத்ரக்ஞன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

*பதில்:* இங்கு பகவான் காண்கின்றவனான அந்தராத்மாவைக் குறிப்பிடுகிறார். மனம், புத்தி, புலன்கள், ஐம்பெரும் பூதங்கள், புலன்களுக்கு உரிய விஷயங்கள் முதலிய அறிவுக்கு எட்டும், காணப்படும் பொருட்கள் அத்தனையும் ஜடங்கள், அழியக்கூடியவை, மாறுபவை. சேதனனான ஆத்மா இந்தக் காணப்படுபவற்றினின்றும் முற்றிலும் மாறுபட்டவன். இவன் அவற்றை அறிபவன். அவற்றில் ஊடுருவி நிற்பவன். அவற்றைக் கட்டி ஆள்பவன். அதனால் இவனுக்கு க்ஷேத்ரக்ஞன் என்று பெயர். இந்த அறிகின்றவனான சேதனனான ஆத்மாவைத்தான் 7/5ல் 'பராப்ரக்ருதி' என்றும், 8/3ல் அத்யாத்மம் என்றும், 15/16ல் 'அக்ஷரபுருஷன்' என்றும் கூறுகிறார். **இந்த ஆத்மதத்வம் மிகவும் ஆழமானது. ஆகவே அதை வெவ்வேறு ஸந்தர்பங்களில் இதை வெவ்வேறாக பெண்பாலாகவும், ஆண்பாலாகவும், இரண்டுமற்றதாகவும் விளக்குகிறார்.** உண்மையில் ஆத்மா எப்போதும் விகாரமற்றவன்; பால் வேற்றுமை இல்லாதவன்; என்றும் உள்ளவன்; குணமாறுதல்கள் அற்றவன்; சேதனன்; ஞானமே வடிவானவன்.

*கேள்வி:* 'தத்வித:' (தத்வம் அறிந்த ஞானிகள்) என்றால் யார்?

*பதில்:* க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் என்ற இரண்டையும் 'தத்' (அது) எனக் கூறுகிறார். இவையிரண்டையும் நன்றாகப் புரிந்து கொண்டவர் 'தத்வித:' எனப்படுவார். உண்மையறிந்த பெரியோர்கள் இப்படிக் கூறுகிறார்களாதலால், அதில் ஐயப்படத் தேவையில்லை.

*பொருத்தம்:* **இவ்விதம் க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் இவர்களின் இலக்கணத்தைக் கூறி, க்ஷேத்ரக்ஞனும், பரமாத்மாவும் ஒன்றுதான் என்றும் கூறி, ஞானத்தின் இலக்கணத்தை நிரூபிக்கிறார்—**

**क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत।**
**क्षेत्रक्षेत्रज्ञयोर्ज्ञानं यत्तज्ज्ञानं मतं मम॥ २॥**

**க்ஷேத்ரஜ்ஞும் சாபி மாம் வித்₃தி₄ ஸர்வக்ஷேத்ரேஷு ப₄ாரத ।**

**க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோர்ஜ்ஞானம் யத்தஜ்ஜ்ஞானம் மதம் மம ॥ 2 ॥**

**ப₄ாரத** – அர்ஜுன! (நீ), **ஸர்வக்ஷேத்ரேஷு** – எல்லா க்ஷேத்ரங்களிலும் உள்ள, **க்ஷேத்ரஜ்ஞும் அபி** – க்ஷேத்ரக்ஞன் அதாவது ஜீவாத்மாவும், **மாம்** – நானே என்று, **வித்₃தி₄** – தெரிந்துகொள். **ச** – மேலும், **க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோ:** – க்ஷேத்ரத்தைப் பற்றியும், க்ஷேத்ரக்ஞனைப் பற்றியும் அதாவது விகாரத்தோடு கூடிய ப்ரக்ருதியையும், புருஷனையும் பற்றிய, **யத்** – எது, **ஜ்ஞானம்** – தத்வரீதியாக அறியக்கூடிய ஞானமோ, **தத்** – அதுதான், **ஜ்ஞானம்** – ஞானம், **(இதி** – என்பது), **மம** – என்னுடைய, **மதம்** – கருத்து.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அர்ஜுன! நீ எல்லா க்ஷேத்ரங்களிலும் உள்ள க்ஷேத்ரக்ஞன் அதாவது ஜீவாத்மாவும் நானே என்று தெரிந்துகொள். மேலும் க்ஷேத்ரத்தைப் பற்றியும், க்ஷேத்ரக்ஞனைப் பற்றியும் அதாவது விகாரத்தோடு கூடிய ப்ரக்ருதியையும் புருஷனையும் பற்றிய எது தத்வரீதியாக அறியக்கூடிய ஞானமோ அதுதான் ஞானம் என்பது என்னுடைய கருத்து.

**கேள்வி:** 'எல்லா க்ஷேத்ரங்களிலும் க்ஷேத்ரக்ஞன் (ஜீவாத்மா) நானே என்று தெரிந்து கொள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஆத்மாவும், பரமாத்மாவும் ஒன்றுதான் என்று இதனால் தெரிகிறது. உண்மையில் ஆத்மாவுக்கும், பரமாத்மாவுக்கும் இடையே சிறிதுகூட வேற்றுமை கிடையாது. ப்ரக்ருதியின் சேர்க்கையினால் வேற்றுமை இருப்பதுபோலத் தோன்றுகிறது. 2/24,25களில் ஆத்மாவின் ஸ்வரூபத்தை வர்ணிக்கும்போது பயன்படுத்திய சொற்களையே பெரும்பாலும் 12/3ல் நிர்குண-நிராகார பரமாத்மாவின் இலக்கணங்கள் கூறும் போதும் பயன்படுத்துகிறார். 'எல்லா க்ஷேத்ரங்களிலும் (உடல்களிலும்) உள்ள சேதனனான ஆத்மா க்ஷேத்ரக்ஞன். அவன் என் அம்சம் (15/7). ஆகவே அவன் உண்மையில் என்னைத் தவிர வேறல்லன். பரமாத்மாவான நானே ஜீவாத்மாவிலும் வெவ்வேறுவிதமாகத் தோன்றுகிறேன். உருவில் பலவிதமாகத் தோற்றமளிக்கிறேன். இதை நன்றாக அறிந்து கொள்' என்கிறார் பகவான்.

**கேள்வி:** 'எல்லா க்ஷேத்ரங்களிலும் (உடல்களிலும்) க்ஷேத்ரக்ஞனான ஜீவாத்மாவும், நானும் (பரமாத்மா) இருப்பதாக அறிந்து கொள்' என்று பொருள் கூறினால் தவறு என்ன?

**பதில்:** பக்தியை முக்யக் கருத்தாகச் சொல்லும் இடத்தில் இப்படிப் பொருள் கூறுவது பொருந்தலாம். ஆனால் இது ஞானத்தை முக்யமாகப் பேசும் இடம். பக்தியை ஞானத்திற்கு ஸாதனமாகக் கூறுமிடம் இது. இங்கே பக்தி முக்யமன்று. ஆகவே, இங்கு அத்வைதக் கருத்துதான் சரியானது.

**கேள்வி:** 'க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் பற்றிய அறிவுதான் ஞானம். இது என் கருத்து' என்று கூறுவதன் பொருள் என்ன?

**பதில்:** க்ஷேத்ரம் என்பது உண்டாகி அழிவது, ஜடம், அநித்யம், அறிவுக்குட்படுவது, நிலையற்றது, நொடிப்பொழுதில் அழிவது. இதற்குமாறாக க்ஷேத்ரக்ஞனான ஆத்மா நித்யன் (என்றுமுள்ளவன்), சேதனன், அறிபவன், விகாரமற்றவன், சுத்தன், எப்பொழுதும் ஒரேவிதமாக இருப்பவன். ஆகவே இரண்டும் ஒன்றுக்கொன்று முற்றிலும் மாறுபட்டவை. அஞ்ஞானத்தினால் இரண்டும் ஒன்றுபோலத் தோன்றுகின்றன. தத்வரீதியாக இதை உணர்வதுதான் உண்மை ஞானம். இது என் கருத்து. இதில் சிறிதுகூட ஸந்தேஹமோ, குழப்பமோ இல்லை' என்கிறார் பகவான்.

**பொருத்தம்:** க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் பற்றிய முழுமையான அறிவு ஏற்பட்டதும் ஸம்ஸாரத்தைப் பற்றிய தவறான எண்ணம் (மதிமயக்கம்) அழிந்துவிடும். பரமாத்மாவை அடைந்துவிடலாம். ஆகவே க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞனின் ஸ்வரூபத்தை விளக்கிக் கூறுவதாக பகவான் சொல்கிறார்—

तत्क्षेत्रं यच्च यादृक्च यद्विकारि यतश्च यत्।
स च यो यत्प्रभावश्च तत्समासेन मे शृणु ॥ ३ ॥

தத்க்ஷேத்ரம் யச்ச யாத்₃ருக்ச யத்₃விகாரி யதஶ்ச யத் ।
ஸ ச யோ யத்ப்ரப₄ாவஶ்ச தத்ஸமாஸேந மே ஶ்ருணு ॥ 3 ॥

**தத்** – அந்த, **க்ஷேத்ரம்** – க்ஷேத்ரம், **யத்** – எது? **ச** – மேலும், **யாத்₃ருக்** – எத்தகையது? **ச** – அப்படியே, **யத்₃விகாரி** – எந்த விகாரங்களோடு கூடியது? **ச** – மேலும், **யத:** – எதிலிருந்து, **யத்** – எது உண்டாயிற்று? **ச** – மேலும், **ஸ:** – அந்த (க்ஷேத்ரக்ஞன்),

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ய:** – யார்? **ச** – மேலும், **யத்ப்ரப₄ாவ:** – எத்தகைய பெருமை கொண்டவன்? **தத்** – (என்ற) இவையனைத்தையும், **ஸமாஸேந** – சுருக்கமாக, **மே** – என்னிடமிருந்து, **ஶ்ருணு** – கேள்.

அந்த க்ஷேத்ரம் எது? மேலும் எத்தகையது? எந்த விகாரங்களோடு கூடியது? எதிலிருந்து எது உண்டாயிற்று? மேலும் அந்த க்ஷேத்ரக்ஞன் யார்? எத்தகையப் பெருமை கொண்டவன் என்ற இவையனைத்தையும் சுருக்கமாக என்னிடமிருந்து கேள்.

**கேள்வி:** 'க்ஷேத்ரம்' என்பதுடன் 'தத்' என்ற அடைமொழியைச் சேர்ப்பதன் கருத்து என்ன? 'யத்' என்று கூறி பகவான் க்ஷேத்ரத்தினுடைய எந்த விஷயத்தைத் தெளிவாகக் கூறுவதாகக் குறிப்பிடுகிறார்? அது எந்த ச்லோகத்தில் வருகிறது?

**பதில்:** சரீரம் என்று க்ஷேத்ரத்தின் இலக்கணம் முதல் ச்லோகத்தில் கூறப்பட்டதே – அதைத் தெளிவாகக் கூறுவதாக இந்த ச்லோகத்தில் கூறுகிறார். 'யத்' என்ற சொல்லாலே க்ஷேத்ரத்தின் ஸ்வரூபத்தைப் பற்றிக் கூறுவதாக பகவான் கூறினாரே, அது இதே அத்யாயத்தின் ஐந்தாவது ச்லோகத்தில் கூறப்பட்டுள்ளது.

**கேள்வி:** க்ஷேத்ரம் பற்றி 'யாத்ருக்' என்ற சொல்லால் என்ன விஷயத்தை எங்கே கூறுகிறார்?

**பதில்:** 'யாத்ருக்' (எத்தகையது) என்ற சொல்லால் க்ஷேத்ரத்தின் இயல்பைப் பற்றிக் கூறுவதாகச் சொன்னார். அதைப் பற்றி ச்லோகங்கள் 26,27களில் பூதங்களனைத்தும் உண்டாகி அழியக் கூடியவை என்று கூறி விளக்குகிறார்.

**கேள்வி:** 'யத்விகாரி' (எந்த விகாரங்களோடு கூடியது) என்கிற சொல்லால் க்ஷேத்ரத்தின் எந்த விஷயத்தைக் கூறுவதாகக் குறிப்பிடுகிறார்? அது எந்த ச்லோகத்தில் வருகிறது?

**பதில்:** 'யத்விகாரி' என்ற சொல்லால் க்ஷேத்ரத்தின் விகாரங்களை வர்ணிப்பதாகக் கூறுகிறார். அந்த வர்ணனை ஆறாவது ச்லோகத்தில் வருகிறது.

**கேள்வி:** 'யத:', 'ச', 'யத்' (எது) என்ற சொற்களால் க்ஷேத்ரத்தின் விஷயத்தில் எதை விளக்குவதாகக் குறிப்பிடுகிறார்? அதை எங்கே கூறுகிறார்?

**பதில்:** எப்பொருள்களின் தொகுதிக்கு க்ஷேத்ரம் என்று பெயரோ, அதிலிருந்து எப்பொருள் எங்ஙனம் உண்டாகியது என்பதைக் குறிப்பதற்காக 'யத:', 'ச', 'யத்' என்னும் சொற்களைக் கையாள்கிறார். அதனுடைய விளக்கத்தை ச்லோகம் பத்தொன்பதின் பிற்பகுதியிலும், ச்லோகம் இருபதின் முற்பகுதியிலும் கூறுகிறார்.

**கேள்வி:** 'ஸ:' என்ற சொல் யாரைக் குறிக்கிறது? 'ய:' என்ற சொல் மூலம் எதைக் கூறுவதாகக் குறிப்பிடுகிறார்? அது எங்கே கூறப்படுகிறது?

**பதில்:** 'ஸ:' என்றால் க்ஷேத்ரக்ஞன். 'ய:' என்று அவன் ஸ்வரூபத்தைப் பற்றிக் கூறுவதாகக் குறிப்பிடுகிறார். அடுத்து, க்ஷேத்ரக்ஞன் ப்ரக்ருதியில் எவ்வாறு இருக்கிறான் என்பதையும், உண்மை ஸ்வரூபம் எது என்பதையும் சொல்லப் போகிறார். ச்லோகம் 19ல் அவரை 'அநாதி' என்கிறார். 20ல் ஸுகதுக்கங்களை அனுபவிப்பவன் என்கிறார். 21ல் நல்ல–தீய பிறவிகளில் பிறப்பவன் என்கிறார். இவையெல்லாம் ப்ரக்ருதியில் இருப்பவனைக் குறிக்கின்றன. ச்லோகம் 22லும், 27 முதல் 30 வரையிலும் பரமாத்மாவும், அவனும் ஒன்று என்று கூறி, அவரது உண்மை ஸ்வரூபத்தை நிரூபிக்கிறார்.

**கேள்வி:** 'யத்ப்ரபாவ:' (எத்தகைய பெருமையுடையவன்) என்று க்ஷேத்ரக்ஞன் விஷயத்தில் எதைக் கூறுவதாகக் குறிப்பிடுகிறார்? அது எந்த ச்லோகங்களில் வருகிறது?

**பதில்:** க்ஷேத்ரக்ஞனின் ப்ரபாவத்தைக் கூறுவதாகச் சொல்லி அதை 31 முதல் 33 வரை விவரிக்கிறார்.

**பொருத்தம்:** மூன்றாவது ச்லோகத்தில் 'க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் இவற்றின் தத்வங்களைச் சுருங்கக் கேள்' என்று கூறிவிட்டு, இந்த விஷயத்தில் ரிஷிகள், வேதங்கள்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ப்ரம்மஸூத்ரம் இவையே சான்றுகள் என்று கூறி ரிஷிகள், வேதங்கள், ப்ரம்மஸூத்ரங்கள் இவற்றுக்கு உயர்வு அளிக்கிறார்—

ऋषिभिर्बहुधा गीतं छन्दोभिर्विविधैः पृथक्।
ब्रह्मसूत्रपदैश्चैव हेतुमद्भिर्विनिश्चितैः ॥ ४ ॥

ருஷிபி₄ர்ப₃ஹுதா₄ கீ₃தம் ச₂ந்தோ₃பி₄ர்விவிதை₄: ப்ருத₂க் ।
ப்₃ரஹ்மஸூத்ரபதை₃ஸ்சைவ ஹேதுமத்₃பி₄ர்விநிஸ்சிதை: ॥ 4 ॥

(இந்த க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞனுடைய தத்வம்), ருஷிபி₄: — ரிஷிகளால், ப₃ஹுதா₄ — பலவாறு, கீ₃தம் — கூறப்பட்டிருக்கிறது. (மேலும்), விவிதை₄: — பலவிதமான, ச₂ந்தோ₃பி₄: — வேத மந்த்ரங்கள் மூலமாகவும், ப்ருத₂க் — தனித்தனியாகப் பிரித்து, (கீ₃தம் — சொல்லப்பட்டிருக்கிறது). ச — அப்படியே, விநிஸ்சிதை: — நன்கு தீர்மானிக்கப் பட்ட, ஹேதுமத்₃பி₄: — யுக்திகளோடு கூடிய, ப்₃ரஹ்மஸூத்ரபதை₃: ஏவ (கீ₃தம்) — ப்ரம்மஸூத்ரத்தின் பதங்களாலும் கூறப்பட்டிருக்கிறது.

இந்த க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞனுடைய தத்வம் ரிஷிகளால் பலவாறு கூறப்பட்டிருக்கிறது. மேலும் பலவிதமான வேத மந்த்ரங்கள் மூலமாகவும் தனியாகப் பிரித்து சொல்லப் பட்டிருக்கிறது. அப்படியே நன்கு தீர்மானிக்கப்பட்ட யுக்திகளோடு கூடிய ப்ரம்மஸூத்ரத்தின் பதங்களாலும் கூறப்பட்டிருக்கிறது.

**கேள்வி:** 'ரிஷிகளால் பலவாறு சொல்லப்பட்டிருக்கிறது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மந்த்ரம் கண்டவர்கள், சாஸ்த்ரங்களையும், ஸ்ம்ருதிகளையும் இயற்றியவர்கள் ரிஷிகள். இவர்கள் க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞனின் ஸ்வரூபங்களைப் பற்றியும், அவற்றைச் சார்ந்த எல்லா விஷயங்களைப் பற்றியும், தம்முடைய நூல்களிலும், புராண இதிஹாஸங்களிலும் பலவிதங்களில் விரிவாக வர்ணித்திருக்கிறார்கள். அவற்றின் ஸாரத்தை பகவான் மிகச் சில சொற்களில் கூறுகிறார்.

**கேள்வி:** 'விவிதை: சந்தோபி:' (பலவிதமான வேத மந்த்ரங்களால்) என்றால் எவை? 'அவற்றில் பிரித்துச் சொல்லப்பட்டுள்ளது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'விவிதை: சந்தோபி:' என்றால் ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வ வேதம். மற்றும் இந்த நான்கு வேதங்களுடைய ஸம்ஹிதை, ப்ராம்மணம் எனப்படுகின்ற இருபகுதிகள் என்று பொருள். உபநிஷத்துக்கள் அனைத்தும் வேதங்களின் வெவ்வேறு சாகைகளும் இவற்றில் அடக்கம். இவையனைத்திலும் இந்தத் தத்வம் பிரித்துக் கூறப்பட்டிருக்கிறது. க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞனின் விஷயத்தில் பகவான் இங்கே சுருக்கமாக வெளியிட்டிருக்கும் ஸித்தாந்தத்தை அவை பல இடங்களில் பலவிதங்களில் விவரித்துக் கூறுகின்றன என்று பொருள்.

**கேள்வி:** 'விநிஸ்சிதை: ஹேதுமத்பி: ப்ரஹ்மஸூத்ரபதை:' என்று எதைக் குறிப்பிடுகிறார்? இப்படிக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஐயம், திரிபற, உறுதியாகக் கூறப்பட்டவற்றை 'விநிஸ்சிதை:' எனவும் யுக்தியுடன் கூட நிருபிக்கப்பட்டவற்றை 'ஹேதுமத்பி:' என்றும் கூறுகிறார். இந்த அடைமொழிகளுடன் கூடிய 'ப்ரஹ்மஸூத்ரபதை:' என்பது வேதாந்த தர்சனத்தின் 'அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா' என்ற ஸூத்ரரூபமான பதங்களைக் குறிப்பிடுவதாகத் தோன்றுகிறது. ஏனெனில் மேலே சொன்ன இலக்கணங்கள் அவற்றில் நன்றாகக் கூறப்பட்டுள்ளன. ச்ருதிகளிலும், ஸ்ம்ருதிகளிலும் கூறப்பட்ட க்ஷேத்ர, க்ஷேத்ரக்ஞ இலக்கணங்கள் ப்ரம்மஸூத்ரங்களில் யுக்திகளோடு தெளிவாக்கப்பட்டுள்ளன. அதன் ஸாரத்தையும் இங்கே சுருக்கமாகக் கூறுகிறார் பகவான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பொருத்தம்:** இவ்விதம் ரிஷிகள், வேதங்கள், ப்ரம்மஸூத்ரங்களைச் சான்றுகளாகக் காட்டி, மூன்றாவது ச்லோகத்தில் 'யத்' என்று குறிப்பிடப்பட்ட க்ஷேத்ரம் பற்றியும், 'யத்விகாரி' என்று குறிப்பிடப்பட்ட அதன் விகாரங்களைப் பற்றியும் அடுத்த இரண்டு ச்லோகங்களில் விளக்குகிறார்—

**महाभूतान्यहङ्कारो बुद्धिरव्यक्तमेव च।**
**इन्द्रियाणि दशैकं च पञ्च चेन्द्रियगोचराः ॥ ५ ॥**

**மஹாபூ4தாந்யஹங்காரோ பு3த்3தி4ரவ்யக்தமேவ ச ।**
**இந்த்3ரியாணி த3ஶைகம் ச பஞ்ச சேந்த்3ரியகோ3சரா: ॥ 5 ॥‡**

**மஹாபூ4தாநி** – நுண்ணிய ஐம்பெரும் பூதங்களும், **அஹங்கார:** – அஹங்காரமும், **பு3த்3தி4: ச** – புத்தியும், **அவ்யக்தம் ஏவ** – மூலப்ரக்ருதியும், **த3ஶ** – பத்து, **இந்த்3ரியாணி ச** – புலன்களும், **ஏகம் ச** – மனமும், **பஞ்ச இந்த்3ரியகோ3சரா:** – புலன்களுடைய நுகர்பொருட்களான சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தும்—

நுண்ணிய ஐம்பெரும் பூதங்களும் அஹங்காரமும் புத்தியும் மூலப்ரக்ருதியும் பத்துப் புலன்களும் மனமும் புலன்களுடைய நுகர்பொருட்களான சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தும்—

**கேள்வி:** 'மஹாபூதாநி' என்றால் எவை?

**பதில்:** ஸ்தூலமான ஐந்து பெரும்பூதங்கள். ஒலி முதலிய புலன்நுகர் பொருட்கள் – இவற்றிற்குக் காரணமான ஐந்து தன்மாத்ரைகள் அதாவது நுண்ணிய ஐம்பெரும் பூதங்கள். இவற்றை ஏழாவது அத்யாயத்தில் நிலம், நீர், நெருப்பு, வாயு, ஆகாயம் என்று கூறுகிறார். இவ்வைந்தும் இங்கு மஹாபூதங்கள் எனப்படுகின்றன.

**கேள்வி:** 'அஹங்கார:' எனும் பதம் எதைக் குறிக்கிறது?

**பதில்:** அஹங்காரம் ஸமஷ்டி அந்தக்கரணத்தின் ஒரு பிரிவு. அஹங்காரம்தான் ஐந்து தன்மாத்ரைகளுக்கும், மனதிற்கும், எல்லாப் புலன்களுக்கும் காரணம்; மஹத்தத்வத்திலிருந்து

---

‡ ஸாங்க்ய காரிகையிலும், யோக தர்சனத்திலும் கிட்டத்தட்ட இதே மாதிரி வர்ணனைகள் விவரம் காணப்படுகின்றன—

மூலப்ரக்ருதிரவிக்ருதிர்மஹத3ாத்3யா: ப்ரக்ருதிவிக்ருதய: ஸப்த ।
ஷோட3ஶகஸ்து விகாரோ ந ப்ரக்ருதிர்ந விக்ருதி: . புருஷ: ॥

*(ஸாங்க்2யகாரிகா 3)*

படைப்பின் ஆரம்பத்தில் இருந்தது ஒரே ஒரு மூலப்ரக்ருதி. அது எதனுடைய விக்ருதியும் (விகாரமும்) அன்று. மஹத்தத்வம், அஹங்காரம், ஐந்து தன்மாத்ரைகள் (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன) – இவை ஏழும் ப்ரக்ருதிவிக்ருதிகள். இவை ஐந்து பூதங்கள் முதலியவற்றிற்குக் காரணமாவதாலேயே 'ப்ரக்ருதி'. மூலப்ரக்ருதியிலிருந்து உண்டானவையாகையால் 'விக்ருதி'. ஐந்து அறிவுப்புலன்கள், ஐந்து செயற்புலன்கள், மனம், ஐந்து பெரும்பூதங்கள் ஆகப் பதினாறும் விக்ருதிகள். இவை வேறொன்றை உண்டாக்குவதில்லையாதலால் எதற்கும் ப்ரக்ருதி அல்ல. இதில் பதினொரு புலன்களும் அஹங்காரத்தில் உண்டானவை. ஐம்பெரும் பூதங்கள், ஐந்து தன்மாத்ரைகளால் உண்டானவை. ஆனால் புருஷன் (ஆத்மா) எதற்கும் காரணமல்லன். எதிலிருந்தும் உண்டானவனுமல்லன். அவன் எதிலும் ஒட்டாதவன்.

யோகதர்சனம் கூறுகிறது— 'விஶேஷாவிஶேஷலிங்க3மாத்ராலிங்க3ாநி கு3ணபர்வாணி ।' *(2/19)*. விசேஷங்களாவன: ஐந்து ஞானேந்த்ரியங்கள், ஐந்து கர்மேந்த்ரியங்கள், மனம், ஐம்பெரும் பூதங்கள்; அவிசேஷங்களாவன: அஹங்காரம், ஐந்து தன்மாத்ரைகள், லிங்கம் அதாவது மஹத்தத்வம், அலிங்கம் அதாவது மூலப்ரக்ருதி – இந்த இருபத்துநான்கு தத்வங்களும் குணங்களின் நிலைகள். இவற்றை, 'காணப்படுவன' என்று கூறுகிறார்.

யோகதர்சனம் 'த்ருஶ்ய' (காணப்படுவன) என்று கூறுவதை கீதை 'க்ஷேத்ரம்' என்கிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உண்டானது; இதையே அஹம்பாவம் என்றும் கூறுவர். இந்த ஸந்தர்பத்தில் 'அஹங்காரம்' என்ற சொல் அதையே குறிக்கிறது.

**கேள்வி:** 'புத்தி:' என்பது இங்கு எதைக் குறிக்கிறது?

**பதில்:** மஹத்தத்வம் (மஹான்) என்றும், ஸமஷ்டி புத்தி என்றும் சொல்லப்படும் 'புத்தி' என்பது, ஸமஷ்டி அந்தக்கரணத்தின் ஒரு வகை. தீர்மானம்தான் இதன் ஸ்வரூபம். 'புத்தி:' என்ற சொல் இதைத்தான் குறிப்பிடுகிறது.

**கேள்வி:** 'அவ்யக்தம்' என்றால் எது?

**பதில்:** மஹத்தத்வம் முதலிய எல்லாப் பொருட்களுக்கும் காரணமான மூலப்ரக்ருதியை ஸாங்க்ய சாஸ்த்ரத்தில் 'ப்ரதாநம்' என்று அழைப்பர். பகவான் பதினான்காவது அத்யாயத்தில் இதையே 'மஹத்ப்ரஹ்மம்' என்கிறார். 13/19ல் இதை 'ப்ரக்ருதி' என்கிறார். 'அவ்யக்தம்' என்ற சொல் இதையே குறிக்கிறது.

**கேள்வி:** பத்துப் புலன்கள் யாவை?

**பதில்:** வாக்கு, கை, கால், ஆண்-பெண் குறி, புட்டம் இவை ஐந்தும் செயற்புலன்கள். காது, சருமம், கண்கள், நாக்கு, மூக்கு இவை ஐந்தும் அறிவுப்புலன்கள். ஆக இவை பத்துப் புலன்கள். இவற்றிற்குக் காரணம் அஹங்காரம்.

**கேள்வி:** 'ஏகம்' என்று எதைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** ஸமஷ்டி அந்தக்கரணத்தின் ஒரு பகுதியானதும், சிந்திக்கும் சக்தி படைத்ததும், ஸங்கல்ப-விகல்பங்களை இயல்பாகக் கொண்டதுமான மனதை 'ஏகம்' (ஒன்று) என்று கூறுகிறார். இதுவும் அஹங்காரத்தின் செயலே.

**கேள்வி:** 'பஞ்ச இந்த்ரியகோசரா:' என்றால் என்ன?

**பதில்:** அறிவுப்புலன்களால் வெளிப்படையாக அறியப்படுபவையான சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தும் ஐந்து அறிவுப்புலன்களின் நுகர் பொருட்கள்.

**इच्छा द्वेषः सुखं दुःखं सङ्घातश्चेतना धृतिः।**
**एतत्क्षेत्रं समासेन सविकारमुदाहृतम्॥ ६॥**

**இச்ச₂ா த்₃வேஷ: ஸுக₂ம் து₃:க₂ம் ஸங்க₄ாதஸ்சேதநா த்₄ருதி: ।**
**ஏதத்க்ஷேத்ரம் ஸமாஸேந ஸவிகாரமுத₃ாஹ்ருதம் ॥ 6 ॥**

(தத₂ா – அப்படியே), **இச்ச₂ா** – விருப்பு, **த்₃வேஷ:** – வெறுப்பு, **ஸுக₂ம்** – இன்பம், **து₃:க₂ம்** – துன்பம், **ஸங்க₄ாத:** – உடற்கட்டு, **சேதநா** – சைதன்ய சக்தி (மேலும்), **த்₄ருதி:** – உறுதி, **ஸவிகாரம்** – ஆகிய மாறுபாடுகளுடைய, **ஏதத்** – இந்த, **க்ஷேத்ரம்** – க்ஷேத்ரம், **ஸமாஸேந** – சுருக்கமாக, **உத₃ாஹ்ருதம்** – சொல்லப்பட்டது.

அப்படியே விருப்பு, வெறுப்பு, இன்பம், துன்பம், உடற்கட்டு, சைதன்ய சக்தி மேலும் உறுதி ஆகிய மாறுபாடுகளுடைய இந்த க்ஷேத்ரம் சுருக்கமாகச் சொல்லப்பட்டது.

**கேள்வி:** 'இச்சா' என்றால் என்ன?

**பதில்:** எப்பொருள்களை ஸுகத்திற்குக் காரணம் என்றும், துயரம் போக்குவன என்றும் மனிதன் கருதுகிறானோ, அவற்றை அடைவதற்கு ஏற்படும் பற்றோடு கூடிய விருப்பம் 'இச்சை' எனப்படும். இதில் வாஸனை, பேராசை, எதிர்பார்ப்பு, பேராவல், விருப்பம் முதலிய பல வகைகள் உண்டு. இது மனதின் விகாரம். ஆகவே க்ஷேத்ரத்தின் விகாரங்களில் ஒன்றாக இதுவும் எண்ணப்பட்டுள்ளது.

**கேள்வி:** 'த்வேஷம்' என்றால் என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** துயரத்திற்குக் காரணமாகவும், ஸுகத்திற்குத் தடையாகவும் தோன்றும் பகைமையுணர்ச்சி 'த்வேஷம்' அதாவது வெறுப்பு எனப்படுகிறது. இது பகை, பொறாமை, அருவருப்பு, கோபம் என்ற நிலைகளில் வெளிப்படும். இதுவும் மனதின் விகாரமே. ஆகவே இதையும் க்ஷேத்ரத்தின் விகாரம் என்கிறார்.

**கேள்வி:** *'ஸுகம்' என்றால் என்ன?*

**பதில்:** வேண்டிய பொருள் கிடைப்பது; வேண்டாதது விலகுவது; இதனால் உள்ளத்தில் ஏற்படும் மகிழ்ச்சிதான் 'ஸுகம்' (இன்பம்). இதுவும் மனதின் விகாரமானபடியால் க்ஷேத்ரத்தின் விகாரம் எனப்பட்டது.

**கேள்வி:** *'துக்கம்' என்றால் என்ன?*

**பதில்:** வேண்டாதது வந்து சேர்ந்தாலும், வேண்டியது விலகினாலும் ஏற்படும் மனவேதனைதான் 'துக்கம்'. மனதின் விகாரமானபடியால் இதுவும் க்ஷேத்ரத்தின் விகாரம் எனப்பட்டது.

**கேள்வி:** *'ஸங்காத:' என்றால் என்ன?*

**பதில்:** ஐந்து பூதங்களால் உருவாக்கப்பட்ட இந்த உடல் தான் 'ஸங்காதம்' (உடற்கட்டு). இறந்தபிறகு – ஸூக்ஷ்ம சரீரம் பிரிந்த பிறகு, எல்லோர் எதிரிலும் கிடப்பது இந்த ஸ்தூல சரீரம். இதுவும் பூதங்களின் விகாரமானதால் க்ஷேத்ரத்தின் விகாரம்.

**கேள்வி:** *'சேதநா' என்றால் என்ன?*

**பதில்:** உள்ளத்தின் உணரும் சக்தி 'சேதநா'. இதன் மூலம்தான் ஸுகம், துக்கம், மற்ற பொருட்களின் அனுபவங்கள் ஆகிய யாவும் ஏற்படுகின்றன. *10/22*லும் இதைச் 'சேதநா' என்று கூறியிருக்கிறார். இங்கும் 'சேதநா' என்று கூறுகிறார். மனதின் செயல் இது. ஆகவே இதுவும் க்ஷேத்ரத்தின் விகாரமே.

**கேள்வி:** *'த்ருதி:' என்றால் என்ன?*

**பதில்:** *18/33,34,35*களில் நிலைநிறுத்தும் சக்தியின் ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று மூன்று வேறுபாடுகளைக் கூறுகிறார். அதில் ஸாத்விகமான நிலைநிறுத்தும் சக்தியின் ஓர் அம்சமான உறுதியை தைவீஸம்பத் என்று கூறுகிறார் *(16/3)*. அதுதான் இந்த த்ருதி (உறுதி). இதுவும் மனதின் விகாரம். ஆகவே க்ஷேத்ரத்தின் விகாரம்.

**கேள்வி:** *'இவ்வித மாறுபாடுகளுடைய க்ஷேத்ரம் சுருக்கமாகச் சொல்லப்பட்டது' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** இதுவரை விகாரங்களுடன் கூடிய க்ஷேத்ரம் பற்றிய சுருக்கம் கூறப்பட்டது. அதாவது ஐந்தாவது ச்லோகத்தில் க்ஷேத்ரத்தின் ஸ்வரூபமும். ஆறாவதில் அதன் விகாரங்களும் சுருக்கமாகக் கூறப்பட்டன என்று பொருள்.

**பொருத்தம்:** இவ்விதம் க்ஷேத்ரத்தின் ஸ்வரூபத்தையும் அதன் விகாரங்களையும் வர்ணித்த பிறகு இரண்டாவது ச்லோகத்தில் 'க்ஷேத்ர–க்ஷேத்ரக்ஞர் பற்றிய அறிவுதான் ஞானம் என்பது என் கருத்து' என்று கூறி, அந்த ஞானத்தைப் பெறக்கூடிய ஸாதனங்களுக்கும் ஞானம் என்ற பெயரிட்டு, அவற்றை அடுத்த ஐந்து ச்லோகங்களில் கூறுகிறார்—

**अमानित्वमदम्भित्वमहिंसा क्षान्तिरार्जवम् ।**
**आचार्योपासनं शौचं स्थैर्यमात्मविनिग्रहः ॥ ७ ॥**

**அமாநித்வமத₃ம்பி₄த்வமஹிம்ஸா க்ஷாந்திரார்ஜவம் ।**
**ஆசார்யோபாஸநம் ஶௌசம் ஸ்தை₂ர்யமாத்மவிநிக்₃ரஹ: ॥ 7 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அமாநித்வம்** – தற்பெருமையின்மை, **அதம்பித்வம்** – தன்னிடம் இல்லாத நற்குணங்களை இருப்பதாகக் காட்டிக் கொள்ளாமை, **அஹிம்ஸா** – எந்த உயிரினத்தையும், எந்த வகையிலும் துன்புறுத்தாமல் இருத்தல், **க்ஷாந்தி:** – பொறுத்துக் கொள்ளுதல், **ஆர்ஜவம்** – மனம், வாக்கு முதலியவற்றில் நேர்மை, **ஆசார்ய உபாஸநம்** – ச்ரத்தையுடனும், பக்தியுடனும் பெரியோர்களுக்குப் பணிவிடை செய்தல், **சௌசம்** – உள்ளும், புறமும் தூய்மையாக இருத்தல், **ஸ்தைர்யம்** – உள்ளத்தின் உறுதி, **ஆத்மவிநிக்ரஹ:** – மனம், புலன்களோடு கூடிய உடலைக் கட்டுப்படுத்துதல்—

தற்பெருமையின்மை, தன்னிடம் இல்லாத நற்குணங்களை இருப்பதாகக் காட்டிக் கொள்ளாமை, எந்த உயிரினத்தையும், எந்த வகையிலும் துன்புறுத்தாமல் இருத்தல், பொறுத்துக் கொள்ளுதல், மனம், வாக்கு முதலியவற்றில் நேர்மை; ச்ரத்தையுடனும், பக்தியுடனும் பெரியோர்களுக்குப் பணிவிடை செய்தல்; உள்ளும், புறமும் தூய்மையாக இருத்தல், உள்ளத்தின் உறுதி; மனம், புலன்களோடு கூடிய உடலைக் கட்டுப்படுத்துதல்—

**கேள்வி:** 'அமாநித்வம்' என்றால் என்ன?

**பதில்:** தன்னைச் சிறந்தவன், மதிப்பிற்குரியவன், போற்றுதற்குரியவன், மிகப் பெரியவன் என்று நினைத்துக் கொள்வது, மற்றவர் அப்படித் தன்னைப் பெருமைப் படுத்திக் கொண்டாட வேண்டும் என விரும்புவது, தான் விரும்பாவிட்டாலும் பிறர் அப்படிக் கொண்டாடும்போது மகிழ்ச்சியோடு ஏற்பது – இது மாநித்வம் (தற்பெருமை கொள்வது) ஆகும். இவையற்றிருப்பது 'அமாநித்வம்'. இந்த அமாநித்வம் முழுமையாக நிறைந்துவிட்டவனுக்கு மரியாதை, கௌரவம், புகழ், பூஜை முதலியவற்றில் மகிழ்ச்சி இருக்காது என்பது ஒருபுறமிருக்க, அவற்றிலிருந்து ஒதுங்குதலும், விரக்தியும் கூட உண்டாகும்.

**கேள்வி:** 'அதம்பித்வம்' என்றால் என்ன?

**பதில்:** பெருமை, புகழ், கௌரவம், போற்றுதல் இவற்றைப் பெறுவதற்காகவோ, பொருளாசையாலோ, பிறரை ஏமாற்றும் நோக்கத்துடனோ தன்னை தர்மாத்மாவென்றும், கொடை வள்ளல் என்றும், பகவானுடைய பக்தன் என்றும், ஞானி–மஹாத்மாவென்றும் பறைசாற்றிக் கொள்வது; தர்மங்களைக் கடைப்பிடிக்காமலேயே, தாராள மனப்பான்மை இல்லாமலேயே, கொடுக்காமலேயே, பக்தியோக ஸாதனை, உபவாஸம் முதலிய வ்ரதங்களை மேற்கொள்ளாமலேயே அப்படியெல்லாம் இருப்பதுபோலக் காண்பித்துக் கொள்வது (ஆடம்பரம்). இந்த ஆடம்பரமின்மையே 'அதம்பித்வம்' ஆகும். இவ்வாறு ஆஷாடபூதியாக இல்லாத நிலைமயை முழுமையாக அமையப் பெற்றவர். புகழில் கொஞ்சம்கூட விருப்பம் கொள்ளாததால், தம்முடைய உண்மையான தர்ம சிந்தையையும், நற்பண்புகளையும், பக்தி முதலிய நடத்தைகளையும் கூடப் பிறர் காணும்படி வெளிப்படுத்துவதற்குக் கூசுவார் என்றால், இல்லாத பண்புகளை வெளிப்படுத்துவாரா?

**கேள்வி:** 'அஹிம்ஸா' என்றால் என்ன?

**பதில்:** எந்த ப்ராணிக்கும் மனதாலும், சொல்லாலும், செயலாலும் ஒருபொழுதும் ஒருவிதமான துன்பமும் தராமல் இருப்பது 'அஹிம்ஸா' (துன்புறுத்தாமை). மனதில் பிறருக்குத் தீங்கு நினைப்பது, சொற்களால் திட்டுவது, கடுமையாகப் பேசுவது, இகழ்வது, பிறருக்கு வருத்தம் ஏற்படும்படி ஹிதமில்லாததைச் சொல்வது, உடல் உறுப்புகளால் பிறரை அடிப்பது, துன்புறுத்துவது, தீங்கு விளைவிப்பது இவையெல்லாம் ஹிம்ஸைகள். இவையற்றிருப்பது 'அஹிம்ஸா'. அஹிம்ஸையை முழுமையாகக் கடைப்பிடிக்கும் ஸாதகருக்கு எவரிடமும் பகைமையோ, வெறுப்போ இருக்காது. ஆகவே யாருக்கும் அவர் தீங்கு செய்யமாட்டார். பிறருக்குத் துன்பம் விளைவிக்கக்கூடிய எதையும் செய்யமாட்டார். யாரையும் அச்சுறுத்தவும் மாட்டார். 'இத்தகையவர் அருகில் பரஸ்பரம் விரோதபாவம்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கொண்டுள்ள ப்ராணிகளும் தமது இயல்பான பகைமையை விட்டுவிடுகின்றன' என்று பதஞ்ஜலி முனிவர் கூறுகிறார்.‡

**கேள்வி:** 'க்ஷாந்தி:' என்றால் என்ன?

**பதில்:** 'க்ஷாந்தி:' என்றால் பொறுத்துக் கொள்ளல் என்று பொருள். தனக்குத் தீங்கு இழைப்பவனுக்குக்கூடத் தண்டனை கொடுக்க வேண்டுமென மனதில் நினையாமை; அந்தக் குற்றத்திற்காக இவ்வுலகிலோ, பரலோகத்திலோ அவனுக்குத் தண்டனை கிடைக்க வேண்டும் என்றோ, அவனைப் பழிவாங்க வேண்டும் என்றோ நினையாமை; அவன் செய்த தீங்கைத் தீங்கு என்றே நினையாமல், அதை முற்றிலும் மறந்துவிடுவது 'க்ஷமா' (க்ஷாந்தி அல்லது பொறுத்துக் கொள்ளல்). 10/4ல் இதற்கு விரிவான விளக்கம் காணலாம்.

**கேள்வி:** 'ஆர்ஜவம்' என்றால் என்ன?

**பதில்:** மனம், மொழி, மெய்களில் நேரிய நடத்தை என்று பொருள். இத்தன்மை முழுமையாக அமையப் பெற்ற ஸாதகர் அனைவரிடமும் நேர்மையாக நடந்து கொள்வார். கபடமாக நடக்க மாட்டார். அவருடைய நடைமுறையில் மற்றவரைக் கவிழ்க்கும் முயற்சி, சூழ்ச்சி, கபடம் இரா. அவர் உள்ளும், புறமும் எப்போதும் ஒரேமாதிரி நேர்மையாக நடந்து கொள்வார்.

**கேள்வி:** 'ஆசார்யோபாஸநம்' என்றால் என்ன?

**பதில்:** அறிவையும், நல்லுபதேசங்களையும் அளிப்பவர் ஆசார்யர் – குரு. அத்தகைய ஆசார்யரின் அருகில் இருந்து ச்ரத்தையுடனும், பக்தியுடனும் மனம், மொழி, மெய்களால் அவருக்கு எல்லாவிதமான ஸுகமும் தரக்கூடிய ஸேவைகளைச் செய்வது, அடி பணிந்து வணங்குவது, அவர் ஆணைகளை நிறைவேற்றுவது, அவர் மனம் உவக்குமாறு நடந்து கொள்வது – இவையெல்லாம் ஆசார்ய உபாஸனையில் அடங்கும்.

**கேள்வி:** 'ஶௌசம்' என்றால் என்ன?

**பதில்:** தூய்மை என்று பொருள். உண்மையாக, நேர்மையாக உழைத்து ஸம்பாதிக்கும் பொருள் தூய்மையானது. அந்தப் பொருளைக் கொண்டு வாங்கிய உணவு தூய்மையான உணவு. முறையாக நல்லொழுக்கம் பேணுதல் நடத்தையில் தூய்மையாகும். நீர், மண் கொண்டு உடலைச் சுத்தி செய்து கொள்வது உடல் தூய்மை. இவையெல்லாம் வெளிப்புறத் தூய்மை. விருப்பு–வெறுப்பு, வஞ்சனை–சூது முதலிய விகாரங்கள் அற்றிருப்பது உள்ளத்தூய்மை. இப்படி உள்ளும், புறமும் தூய்மை பெறுவது 'ஶௌசம்'.

**கேள்வி:** 'ஸ்தைர்யம்' என்றால் என்ன?

**பதில்:** உறுதியாக இருப்பது 'ஸ்தைர்யம்' எனப்படும். அதாவது மிகப்பெரிய கஷ்டங்களோ, விபத்துகளோ, பயமோ, துயரமோ நேரும்போதும் கலங்காமை; காமம், கோபம், பயம், லோபம் இவற்றினால் தான் செய்யவேண்டிய கடமைகளிலிருந்தும், தர்மத்திலிருந்தும் வழுவாமல் இருப்பது; மனதிலும், புத்தியிலும் சஞ்சலம் கொள்ளாதிருப்பது – இவையெல்லாம் 'ஸ்தைர்யம்' ஆகும்.

**கேள்வி:** 'ஆத்மவிநிக்ரஹ:' என்றால் என்ன?

**பதில்:** இங்கு ஆத்மா என்ற சொல் மனம், புலன்களுடன் கூடிய உடலைக் குறிக்கும். இவற்றை நல்ல முறையில் தன் வசப்படுத்துவது 'ஆத்மவிநிக்ரஹம்'. இந்த ஆத்மவிநிக்ரஹம் முழுமையாக அமையப் பெற்ற ஸாதகருடைய மனம், புத்தி, புலன்களோடு கூடிய உடல், அவர் விரும்பியவாறு செயல்படும். போக விஷயங்களில் திரும்ப அவரைச் சிக்க வைக்காது. இடைவிடாது அவருடைய விருப்பப்படி ஸாதனைகளிலேயே ஈடுபடும்.

‡ அஹிம்ஸாப்ரதிஷ்ட₂ாயாம் தத்ஸந்நிதௌ₄ வைரத்யாக₃ ‌। (யோகத₃ர்ஶநம் 2/35)

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



इन्द्रियार्थेषु वैराग्यमनहङ्कार एव च।
जन्ममृत्युजराव्याधिदुःखदोषानुदर्शनम् ॥८॥

**இந்த்₃ரியார்தே₂ஷு வைராக்₃யமநஹங்கார ஏவ ச ।**
**ஜந்மம்ருத்யுஜராவ்யாதி₄து₃:க₂தோ₃ஷாநுத₃ர்ஶநம் ॥ 8 ॥**

**இந்த்₃ரிய அர்தே₂ஷு** – இவ்வுலக, பரலோக போகங்கள் அனைத்திலும், **வைராக்₃யம்** – பற்றற்ற தன்மை, **ச** – மேலும், **அநஹங்கார: ஏவ** – அஹங்காரம் இல்லாமை, **ஜந்ம ம்ருத்யு ஜரா வ்யாதி₄ து₃:க₂ தோ₃ஷ அநுத₃ர்ஶநம்** – பிறப்பு, இறப்பு, மூப்பு, நோய் இவற்றில் உள்ள துக்கத்தையும், குறைபாடுகளையும் திரும்பத் திரும்பச் சிந்தித்துப் பார்த்தல்—

இவ்வுலக பரலோக போகங்கள் அனைத்திலும் பற்றற்ற தன்மை; மேலும் அஹங்காரம் இல்லாமை; பிறப்பு, இறப்பு, மூப்பு, நோய் இவற்றில் உள்ள துக்கத்தையும், குறைபாடுகளையும் திரும்பத் திரும்பச் சிந்தித்துப் பார்த்தல்—

**கேள்வி:** 'இந்த்ரியார்தேஷு வைராக்யம்' என்றால் என்ன?

**பதில்:** இவ்வுலகிலும், பரலோகத்திலும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் எனும் புலன்கள் வழியாக அனுபவிக்கக் கூடிய பொருட்கள் உள்ளன. அவை உள்ளத்தினாலும், புலன்களாலும் அனுபவிக்கப்படுகின்றன. மனிதன் அஞ்ஞானத்தினால் அவற்றை ஸுகமென நினைக்கிறான். ஆனால் முடிவில் அவை துக்கத்திற்கே காரணமாகின்றன. அவையனைத்திலும் சிறிதுகூடப் பற்றில்லாமல் இருப்பதே புலன்களுக்குரியவற்றில் வைராக்யம் என்பதற்குப் பொருள்.

**கேள்வி:** 'அநஹங்கார:' என்றால் என்ன?

**பதில்:** மனம், புத்தி, புலன்கள், உடல் இவையனைத்திலும் 'நான்' என்ற எண்ணம் வருகிறதே – அதாவது அஞ்ஞானத்தினால் ஆத்மா அல்லாதவற்றில் ஆத்மா என்ற எண்ணம் வருகிறதே – இந்த தேஹ அபிமானம் சிறிதுகூட இல்லாமல் இருப்பதுதான் 'அநஹங்காரம்' எனப்படும்.

**கேள்வி:** 'பிறப்பு, இறப்பு, மூப்பு, நோய் இவற்றில் உள்ள துக்கங்களையும், குறைகளையும் திரும்பத் திரும்பச் சிந்தித்துப் பார்ப்பது' என்றால் என்ன?

**பதில்:** பிறவியில் துன்பம் என்பது கொஞ்ச நஞ்சமன்று. முதலில் வேறு வழியற்ற ஜீவன் தாயின் கர்பத்தில் வெகுநாட்கள் பற்பல கஷ்டங்களை அனுபவிக்கிறது. பிறகு யோனியின் வழியாக வெளிப்படும்போது பொறுக்க முடியாத வேதனையை அனுபவிக்க வேண்டியிருக்கிறது. பலவிதப் பிறவிகளில் திரும்பத் திரும்பப் பிறப்பு எடுப்பதால் பிறவித் துயரங்கள் வந்து கொண்டே இருக்கின்றன. இறக்கும்போதும் மிகுந்த துன்பமுண்டாகிறது. எந்த உடலிலும், வீட்டிலும் வாழ்நாள் முழுவதும் நம்முடையது என்ற பற்று இருக்கிறதோ – அதைக் கட்டாயமாகப் பறி கொடுத்து விட்டுச் செல்ல நேரிடுகிறது. இறக்கும்போது நம்பிக்கை இழந்த கண்களையும், உடல் வேதனையையும் பார்த்தால் அந்நேரத்தில் உடலில் ஏற்படக்கூடிய தொல்லைகளை நன்றாகவே அனுமானிக்க முடியும். வயதான காலத்தில் ஏற்படும் துன்பங்களுக்கும் குறைவில்லை. புலன்கள் தளர்ந்து சக்தி இழந்து விடுகின்றன. உடல் தளர்ந்து போகிறது. மனதிலோ சபலங்கள் அலை மோதுகின்றன. உதவியற்ற நிலை ஏற்படுகிறது. அப்போது ஏற்படும் கஷ்டம் மிக பயங்கரமானது. அவ்வாறே நோய்வாய்ப்படும்போதும் நோயினால் ஏற்படும் வேதனைகள் துன்பமளிக்கின்றன. உடல் பலவீனமடைகிறது. பொறுக்க முடியாத பலவிதமான தொந்தரவுகள் ஏற்படுகின்றன. பிறர் உதவியை நாட வேண்டியிருக்கிறது. தப்புவதற்கு வேறு உபாயமே கிடையாது. இவையெல்லாம்தான் பிறப்பு, இறப்பு, மூப்பு, நோய்களால் ஏற்படக்கூடிய துன்பங்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இந்தத் துன்பங்களைத் திரும்பத் திரும்ப நினைத்துப் பார்ப்பது, சிந்தித்துப் பார்ப்பதுதான் பிறப்பு, இறப்பு, மூப்பு, நோய்கள் இவற்றில் துயரங்களையும், குறைபாடுகளையும் சிந்தித்துப் பார்ப்பது ஆகும்.

ஜீவர்களுக்கு ஏற்படும் இந்தப் பிறப்பு, இறப்பு, மூப்பு, நோய்கள் எல்லாம் பாவங்களின் விளைவுகள். ஆகவே இந்த நான்குமே தோஷமுள்ளவைதான். இதைத் திரும்பத் திரும்ப நினைத்துப் பார்த்து இவற்றின் குறைகளை உணரவேண்டும்.

வாஸ்தவத்தில் சேதனனான ஆத்மா நீங்கலாக இந்த நான்கு குறைபாடுகள் இல்லாத பொருள் உலகில் இல்லவே இல்லை. ஒரு நாள் ஒரு ஜடமான வீடு கட்டப்படுகிறது. அதுதான் அதன் பிறப்பு. எப்படியோ பழுதடைந்துவிடுகிறது. இது அதற்கு ஏற்படும் நோய். உடனே மராமத்துச் செய்ய வேண்டியிருக்கிறது. இதுவே சிகித்ஸை என்பது. அது பழையதாகிவிடுகிறது. இதுதான் மூப்பு. பிறகு மராமத்துச் செய்தும் பயனில்லை. இடிந்து விழுந்துவிடுகிறது. இதுவே இறப்பு. சிறியதோ, பெரியதோ எந்தப் பொருளுக்கும் இதே கதிதான். இப்படித்தான் உலகில் உள்ள ஒவ்வொரு பொருளுக்கும் பிறப்பு, இறப்பு, மூப்பு, நோய் உண்டு என்றறிந்து கொண்டு வைராக்யம் பெறவேண்டும்.

**असक्तिरनभिष्वङ्गः पुत्रदारगृहादिषु।**
**नित्यं च समचित्तत्वमिष्टानिष्टोपपत्तिषु॥ ९॥**

**அஸக்திரநபி₄ஷ்வங்க₃: புத்ரதா₃ரக்₃ருஹாதி₃ஷு ।**

**நித்யம் ச ஸமசித்தத்வமிஷ்டாநிஷ்டோபபத்திஷு ॥ 9 ॥**

**புத்ர தா₃ர க்₃ருஹாதி₃ஷு** – மனைவி, மக்கள், வீடு, செல்வம் இவற்றில், **அஸக்தி:** – பற்றின்மை, **அநபி₄ஷ்வங்க₃:** – தன்னுடையது என்ற எண்ணமின்மை (மமகாரமின்மை), **ச** – அவ்வாறே, **இஷ்ட அநிஷ்ட உபபத்திஷு** – வேண்டியன–வேண்டாதனவற்றை அடையும்போதும், **நித்யம்** – எப்போதுமே, **ஸமசித்தத்வம்** – (உள்ளம் ஒரே மாதிரியாக இருத்தல்) ஸமபாவனையுடன் இருத்தல்—

மனைவி, மக்கள், வீடு, செல்வம் இவற்றில் பற்றின்மை; தன்னுடையது என்ற எண்ணமின்மை – மமகாரமின்மை; அவ்வாறே வேண்டியன–வேண்டாதனவற்றை அடையும்போதும் எப்போதுமே உள்ளம் ஒரே மாதிரியாக இருத்தல் – ஸமபாவனையுடன் இருத்தல்—

**கேள்வி:** 8வது ச்லோகத்தில் புலன்களுக்குரிய பொருட்களில் வைராக்யம் வேண்டுமென்று சொல்லிவிட்டார். அதில் மனைவி, மக்கள், வீடு, செல்வம் முதலியவற்றில் பற்றின்மையும் அடக்கம் ஆயிற்றே. அதை மறுபடியும் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனைவி, மக்கள், வீடு, உடல், செல்வம் முதலியவற்றில் மனிதனுக்குத் தனிப்பட்ட தொடர்பு இருப்பதனால் பெரும்பாலும் இவற்றில் அவனுக்கு மிகுந்த பற்று இருக்கும். புலன்களுக்குரிய ஒலி முதலிய ஸாதாரணப் பொருட்களில் வைராக்யம் வந்த பிறகுகூட இவற்றில் மறைமுகமாகப் பற்று இருக்கத்தான் இருக்கும். இவற்றிலும் பற்று அறவே இருக்கக்கூடாது என்பதை வலியுறுத்தவே மீண்டும் தனிப்படக் கூறுகிறார்.

**கேள்வி:** 'அநபிஷ்வங்க:' என்பதற்கு அஹங்காரமின்மை என்று பொருள் கொள்ளாமல் மமகாரமின்மை என்று ஏன் கூறப்பட்டது?

**பதில்:** அஹங்காரமின்மை என்பது முன் ச்லோகத்தில் 'அநஹங்கார:' என்ற சொல் மூலம் தெளிவாகச் சொல்லியாகிவிட்டது. ஆகவே, இங்கு 'அநபிஷ்வங்க:' என்பதற்கு மமகாரமின்மை என்று பொருள் கூறப்பட்டது. மமகாரத்தினால்தான் (என்னுடையது என்று எண்ணுவதால்தான்) மனிதனுக்கு மனைவி, புதல்வன் முதலியவர்களிடத்தில் நெருக்கமான தொடர்பு ஏற்படுகிறது. அதனால், அவர்களுடைய ஸுகதுக்கங்கள், லாபநஷ்டங்களைத்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தன்னுடையதாகவே பாவித்து ஸந்தோஷத்தையும், துயரத்தையும் அடைகிறான். மமகாரம் அழிந்தால்தானே இவை அழியும்? ஆகவே, இங்கு மமகாரமின்மை என்ற பொருள் கூறப்பட்டது சரிதான்.

**கேள்வி:** 'வேண்டியன, வேண்டாதனவற்றை அடைவது' என்றால் என்ன? அவற்றில் 'ஸமபாவனை' வேண்டும் என்றால் என்ன?

**பதில்:** விரும்பிய மனிதர், செயல், நிகழ்ச்சி, பொருள் இவை வந்து சேர்வதையும், வேண்டாதன அகல்வதையும் எல்லோரும் விரும்புவார்கள். அதுபோல அனுகூலமானவை விலகுவதும், ப்ரதிகூலமானவை வந்து சேர்வதும் விரும்பார்கள். இவற்றில் மகிழ்ச்சியோ, துயரமோ கொள்ளாமையை இவ்விதம் கூறுகிறார். அதாவது அனுகூலமானது வந்து சேர்வதாலும், ப்ரதிகூலமானது விலகுவதாலும் மனம் மகிழ்ச்சியடையக் கூடாது. ப்ரதிகூலமானது சேர்வதாலும், அனுகூலமானது பிரிவதாலும் எவ்விதமான சோகமும், பயமும், கோபமும் கொள்ளக்கூடாது. எப்பொழுதும் விகாரமின்றி ஒரே உணர்ச்சியோடு சீராக இருக்கவேண்டும் என்பதே வேண்டியன-வேண்டாதன இவற்றை அடையும்போது ஸமபாவனை கொள்ளுதல் என்பதாகும்.

**मयि चानन्ययोगेन भक्तिरव्यभिचारिणी।**
**विविक्तदेशसेवित्वमरतिर्जनसंसदि ॥१०॥**

**மயி சாநந்யயோகே₃ந ப₄க்திரவ்யபி₄சாரிணீ ।**
**விவிக்ததே₃ஶஸேவித்வமரதிர்ஜநஸம்ஸதி₃ ॥ 10 ॥**

**மயி** – பரமேசுவரனான என்னிடத்தில், **அநந்யயோகே₃ந** – வேறு எதையும் எண்ணாத யோகத்தின் மூலம், **அவ்யபி₄சாரிணீ ப₄க்தி:** – பிறழாத பக்தி, **ச** – மேலும், **விவிக்த தே₃ஶ ஸேவித்வம்** – தனிமையில் தூய்மையான இடத்தில் வாழும் இயல்பு, **ஜநஸம்ஸதி₃** – உலகியலில் ஈடுபாடு கொண்ட மனிதர்களுடைய கூட்டத்தில், **அரதி:** – விருப்பம் கொள்ளாதிருத்தல்—

பரமேசுவரனான என்னிடத்தில் வேறு எதையும் எண்ணாத யோகத்தின் மூலம் பிறழாத பக்தி; தனிமையில் தூய்மையான இடத்தில் வாழும் இயல்பு; உலகியலில் ஈடுபாடு கொண்ட மனிதர்களுடைய கூட்டத்தில் விருப்பம் கொள்ளாதிருத்தல்—

**கேள்வி:** 'அநந்ய யோகம்' என்றால் என்ன? அதன் மூலம் பகவானிடம் பிறழாத பக்தி செய்வது என்றால் என்ன?

**பதில்:** பகவானே எல்லாவற்றைக் காட்டிலும் சிறந்தவர். அவர்தான் நமக்கு ஸ்வாமி. சரணடையத்தக்கவர், பரமகதி, மேலான புகல், தாய்-தந்தையர், உற்றார்-உறவினர், மிகச்சிறந்த நன்மையைச் செய்பவர், நமக்கே உரியவர், அனைத்துமே அவர்தான். அவரைத் தவிர நமக்கு வேறு யாரும் இல்லை. இந்த எண்ணத்துடன் பகவானுடன் அநன்யமான (வேறொன்றைக் கருதாத) உறவு வைத்துக் கொள்வதே 'அநந்ய யோகம்'. இவ்விதமான யோகத்தினால் பகவானிடம் மட்டும் அசையாத, முழுமையான, தூய அன்பு கொண்டு இடைவிடாது பகவானைப் பற்றி பஜனை, த்யானம் முதலியன செய்து கொண்டே இருப்பதுதான் அநன்யயோகத்தின் வழியே பகவானிடம் பிறழாத பக்தி செய்வது ஆகும்.

இவ்விதம் பக்தி செய்பவர்களிடம் தன்னலமோ, கர்வமோ சிறிதுகூட இராது. உலகியல் பொருட்கள் எவற்றிலும் அவருக்கு என்னுடையது என்ற எண்ணம் இருக்காது. உலகியலில் அவருக்கு பகவானுடையது என்ற உறவுதான் இருக்கும். எவருடனும் தனக்கென வேறு எவ்விதத் தனி உறவும் இருக்காது. எல்லாமே பகவானுடையவை என்றே நினைப்பார். ச்ரத்தையுடனும், ப்ரேமையுடனும், நிஷ்காமமாக இடைவிடாது பகவானையே சிந்தித்துக் கொண்டிருப்பார். அவருடைய எந்தச் செயலும் பகவானுக்காகவே இருக்கும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'விவிக்ததேஶ' என்றால் எந்த இடம்? அதில் வாழ்வது என்றால் என்ன?

**பதில்:** எங்கே எவ்விதமான கூச்சல், சச்சரவு, கூட்டம் இருக்காதோ, எங்கே வேறொருவர் இருக்க மாட்டாரோ, எங்கே இருப்பதால் பிறருக்கு இடையூறோ, கஷ்டமோ ஏற்படாதோ, எங்கே எந்தவிதமான அசுத்தமும் இருக்காதோ, எங்கே கல், முட்கள், குப்பை இராவோ, எங்கே இயற்கை அழகு இருக்குமோ, எங்கே நீர், காற்று, சூழ்நிலை மாசற்றும், தூயதாயும் இருக்குமோ, எங்கே எவ்விதமான நோய்நொடிகளும் வாராவோ, கொடிய விலங்கோ, ஹிம்ஸையோ வராதோ, எங்கே இயற்கையிலேயே ஸாத்விக பாவமே எங்கும் நிலவுமோ, அப்படிப்பட்ட தேவாலயங்கள், தவத்திற்கான ஆசிரமம், கங்கை முதலிய புண்ய நதிக்கரை, புனிதமான காடு, மலை, மலைக்குகை, ஜனநடமாட்டமற்ற தனிமையான இடம் போன்றவை ஞானம் பெறுவதற்கான ஸாதனை புரியத் தகுந்த இடங்களாம். இங்கே வாழ்வதே 'விவிக்த தேஶ ஸேவித்வம்' என்பதன் கருத்து.

**கேள்வி:** 'ஜநஸம்ஸதி' என்று கூறுவதன் கருத்து என்ன? அதில் உறவு கொள்ளாமை என்பது என்ன?

**பதில்:** இங்கு 'ஜநஸம்ஸதி' என்பது வீணான செயல்களில் ஈடுபாடும், புலன்நுகர் பொருட்களில் பற்றும் கொண்ட உலகியல் மனிதர்களின் ஸமுதாயத்தைக் குறிக்கும். இவர்களால் ஸாதனைக்குத் தடை விளையும் என்பதை அறிந்து இவர்களிடமிருந்து தான் விலகியிருப்பது, இவர்களுடன் உறவு கொள்ளாமல் இருப்பது என்பது பொருள். ஸாதுக்கள், மஹாத்மாக்கள், ஸாதகர்கள் இவர்கள் ஸாதனைக்கு உதவி புரிவார்கள். ஆகவே 'ஜநஸம்ஸதி' என்ற சொல் இவர்களைக் குறிப்பதாக நினைக்கக் கூடாது.

अध्यात्मज्ञाननित्यत्वं तत्त्वज्ञानार्थदर्शनम्।
एतज्ज्ञानमिति प्रोक्तमज्ञानं यदतोऽन्यथा॥ ११॥

**அத்₄யாத்மஜ்ஞாநநித்யத்வம் தத்த்வஜ்ஞாநார்த₂த₃ர்ஶநம் ।**
**ஏதஜ்ஜ்ஞாநமிதி ப்ரோக்தமஜ்ஞாநம் யத₃தோऽந்யதா₂ ॥ 11 ॥**

**அத்₄யாத்மஜ்ஞாந நித்யத்வம்** – அத்யாத்ம ஞானத்தில் எப்பொழுதும் நிலைத்து நிற்றல், **தத்த்வஜ்ஞாந அர்த₂த₃ர்ஶநம்** – தத்வஞானத்தின் பொருளான பரமாத்மாவையே தர்சனம் செய்தல், **ஏதத்** – இவையெல்லாம், **ஜ்ஞாநம்** – ஞானம் என்றும், **யத்** – எது, **அத:** – அதனிலும், **அந்யதா₂** – மாறுபட்டதோ, **(தத்** – அது), **அஜ்ஞாநம்** – அஞ்ஞானம், **இதி** – என்றும், **ப்ரோக்தம்** – சொல்லப்பட்டது.

அத்யாத்ம ஞானத்தில் எப்பொழுதும் நிலைத்து நிற்றல்; தத்வஞானத்தின் பொருளான பரமாத்மாவையே தர்சனம் செய்தல் – இவையெல்லாம் ஞானம் என்றும் எது அதனிலும் மாறுபட்டதோ, அது அஞ்ஞானம் என்றும் சொல்லப்பட்டது.

**கேள்வி:** 'அத்யாத்மக்ஞாநம்' என்றால் என்ன? அதில் என்றும் உறுதியுடன் நிற்றல் எப்படி?

**பதில்:** ஆத்மா நித்யன் (என்றுமுள்ளவன்), சேதனன் (அறிவுமயமானவன்), விகாரமற்றவன், அழியாதவன். அவனிடமிருந்து வேறுபட்ட, அழியக்கூடிய, ஜடமான, விகாரமும், மாறுதலும் அடையக்கூடிய, க்ர்ணப்படுபவை அனைத்தும் 'அநாத்மா' எனப்படும். ஆத்மாவுக்கும், அவற்றிற்கும் எவ்வித ஸம்பந்தமுமில்லை. சாஸ்த்ரமும், ஆசார்யரும் கூறும் உபதேசத்தினால் இவ்விதம் ஆத்மதத்வத்தை நன்கு அறிந்து கொள்வதே 'அத்யாத்மஜ்ஞாநம்'. புத்தியில் அதுவே சரி என்று தீர்மானித்து மனதால் அந்த ஆத்மதத்வத்தை எப்பொழுதும் இடைவிடாது சிந்திப்பதே அத்யாத்ம ஞானத்தில் என்றும் உறுதியுடன் நிற்றல் ஆகும்.

**கேள்வி:** 'தத்வ ஞானம்' என்றால் என்ன பொருள்? அதனைப் பார்ப்பது எப்படி?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** தத்வ ஞானம் என்றால் ஸத் சித் ஆனந்தமயமான பூரணமான பரப்ரம்ம பரமாத்மாதான். ஏனெனில், தத்வ ஞானத்தினால் அடையப் பெறுவது அதுதான். அந்த ஸத் சித் ஆனந்தமயமான, குணங்களுக்கு அப்பாற்பட்ட, பரமாத்மாவை, எங்கும் ஸமமாக, என்றும் இடைவிடாது த்யானம் செய்து கொண்டிருப்பதே தத்வஞானத்தின் பொருளான பரமாத்மாவை தர்சனம் செய்வது ஆகும்.

**கேள்வி:** இவையெல்லாம் ஞானம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'அமாநித்வம்' என்று ஆரம்பித்து 'தத்வஜ்ஞாநார்த்தர்ஸநம்' வரை கூறப்பட்டவை அனைத்தும் ஞானம் பெறுவதற்கான ஸாதனங்கள். ஆகவே அவற்றை ஞானம் என்கிறார். இரண்டாவது ச்லோகத்தில் க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் பற்றிய ஞானம்தான் என்னுடைய அபிப்ராயத்தில் ஞானம் என்ற அவருடைய கூற்றிலிருந்து 'சரீரத்தின் பெயர் க்ஷேத்ரம். அதற்குள்ளே இருந்து கொண்டு எல்லாவற்றையும் அறிகிறவன் க்ஷேத்ரக்ஞன். இது நமக்குப் புரிந்துவிட்டது. ஆகவே ஞானம் வந்துவிட்டது' என்று நினைக்கக் கூடாது. உண்மையில் மேலே சொன்ன இருபது ஸாதனங்களின் வாயிலாக க்ஷேத்ர-க்ஷேத்ரக்ஞன் பற்றிய உண்மை ஸ்வரூபத்தை அறிந்தால்தான் அது ஞானம் ஆகும். இந்தச் செய்தியை நன்றாகத் தெரிவிப்பதற்காகத்தான், இங்கு இந்த ஸாதனங்களையும் ஞானம் என்று பெயரிட்டுக் கூறுகிறார். ஆகவே ஞானியிடம் மேலே சொன்ன பண்புகள் முதலில் அமைய வேண்டும். ஆனால் இவையனைத்தும் எல்லா ஸாதகர்களிடமும் ஒரே சமயத்தில் அமையவேண்டும் என்பதில்லை. இவற்றில் அமாநித்வம், அதம்பித்வம் முதலிய பல பண்புகள் எல்லோருக்கும் பயன்படுபவைதான்; அவை அனைவரிடமும் இருக்கத்தான் இருக்கும். இவை தவிர, பிறழாத பக்தி, தனிமையில் வாழ்வது, அத்யாத்ம ஞானத்தில் நிலைத்திருப்பது, தத்வஞானத்தின் பொருளான பரமாத்மாவை தர்சனம் செய்வது ஆகிய இவை அவரவர் ஸாதனை முறை வேறுபாட்டினால் சிறிது சிறிது மாறுபடலாம்.

**கேள்வி:** அதனிலும் மாறுபட்டது அஞ்ஞானம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேலே கூறப்பட்ட அமாநித்வம் முதலிய பண்புகளுக்கு நேர் எதிராக, தற்பெருமையில் ஆசை, ஆஷாடபூதித்தனம், ஹிம்ஸை, கோபம், கபடம், ஏமாற்றும் புத்தி, த்ரோஹம், தூய்மையின்மை, நிலையற்ற புத்தி, சபலம், பற்று, அஹங்காரம், மமகாரம், பக்ஷபாதம் (ஓரம் சார்தல்), ச்ரத்தையின்மை, தீய சேர்க்கை முதலியவை விலக்கத்தக்கவை. இவையெல்லாம் பிறப்பிறப்பிற்குக் காரணமாகின்ற அஞ்ஞானத்தை வளர்க்கக்கூடியவை; ஜீவனை வீழ்த்துபவை; இவையனைத்துமே அஞ்ஞானம்தான். இவற்றை அறவே துறக்கவேண்டும்.

**பொருத்தம்: இவ்விதம் ஞான ஸாதனங்களை 'ஜ்ஞாநம்' என்று பெயரிட்டு விளக்கிய பிறகு, இந்த ஸாதனங்களினால் பெறக்கூடிய ஞானத்தினால் அனுபவிக்கக்கூடிய பொருள் என்ன? அதை அறிவதால் என்ன நேர்கிறது என்ற கேள்வி எழுகிறது. இதற்குப் பதில் கூறுவதற்காக பகவான் அறியத்தக்க பொருளின் ஸ்வரூபத்தை வர்ணிப்பேன் என்றும், அதை அறிவதன் பயன் அம்ருத நிலையை (இறவா நிலையை) அடைவது என்றும் கூறி, இனி ஆறு ச்லோகங்களில் அறியத்தக்க பரமாத்மாவின் ஸ்வரூபத்தை விளக்குகிறார்—**

**ज्ञेयं यत्तत्प्रवक्ष्यामि यज्ज्ञात्वामृतमश्नुते।**
**अनादिमत्परं ब्रह्म न सत्तन्नासदुच्यते॥ १२॥**

**ஜ்ஞேயம் யத்தத்ப்ரவக்ஷ்யாமி யஜ்ஜ்ஞாத்வாம்ருதமஶ்நுதே ।**

**அநாதி₃மத்பரம் ப்₃ரஹ்ம ந ஸத்தந்நாஸது₃ச்யதே ॥ 12 ॥**

**யத்** – எது, **ஜ்ஞேயம்** – அறியப்பட வேண்டியதோ, **யத்** – எதை, **ஜ்ஞாத்வா** – அறிந்து (மனிதன்), **அம்ருதம்** – பரமானந்தத்தை, **அஶ்நுதே** – அடைகிறானோ, **தத்** – அதை, **ப்ரவக்ஷ்யாமி** – விளக்கிக் கூறுவேன். **தத்** – அந்த, **அநாதி₃மத்** – ஆதியில்லாத,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



*பரம் ப்₃ரஹ்ம* – பரப்ரம்மம், *ஸத்* – 'ஸத்' என்றும், *ந உச்யதே* – கூறப்படுவதில்லை. *அஸத்* – 'அஸத்' என்றும், *ந (உச்யதே)* – கூறப்படுவதில்லை.

எது அறியப்பட வேண்டியதோ, எதை அறிந்து மனிதன் பரமானந்தத்தை அடைகிறானோ அதை விளக்கிக் கூறுவேன். அந்த ஆதியில்லாத பரப்ரம்மம் 'ஸத்' என்றும் கூறப்படுவதில்லை. 'அஸத்' என்றும் கூறப்படுவதில்லை.

*கேள்வி: அறியப்பட வேண்டியது என்று எதை பகவான் விளக்க முற்பட்டாரோ, அந்த 'ஜ்ஞேயம்' என்ற சொல் எதைக் குறிப்பிடுகிறது?*

*பதில்:* 'ஜ்ஞேயம்' என்பது அறியப்பட வேண்டிய ஸத் சித் ஆனந்தமயமான, நிர்குணமான, ஸகுணமான ப்ரம்மத்தைக் குறிக்கிறது. ஏனெனில் இந்த ஸந்தர்பத்தில் பகவானே அதை நிர்குணம் என்றும், குணங்களை அனுபவிப்பவர் என்றும் கூறியிருக்கிறார்.

*கேள்வி: 'எதை அறிந்து மனிதன் பரமானந்தத்தை அடைகிறானோ' என்ற அந்த அம்ருத நிலை எது?*

*பதில்:* பரமானந்த ஸ்வரூபமான பரமாத்மாதான் அந்த அம்ருதநிலை (இறவா நிலை). அறியத்தக்க பரமாத்மாவான பரப்ரம்மத்தை அறிவதால் மனிதன் எப்போதும் பிறப்பிறப்பு என்ற உலகியல் தளையிலிருந்து விடுபட்டுப் பரமானந்த ப்ரம்மத்தை அடைந்துவிடுவான். இதைத்தான் பரமகதி என்றும் பரமபதத்தை அடைவது என்றும் கூறுவர்.

*கேள்வி: 'அநாதிமத்' என்றால் என்ன கருத்து?*

*பதில்:* இதே அத்யாயம் 19வது ச்லோகத்தில் பகவான் ப்ரக்ருதியும், ஜீவாத்மாவும் அனாதி, ஆரம்பமற்றவை என்கிறார். இவையிரண்டிற்கும் உரிமையாளராக இருப்பதால் பரப்ரம்மமான புருஷோத்தமன் 'அநாதிமத்' (ஆதியில்லாதவர்) ஆகிறார்.

*கேள்வி: 'பரம் ப்ரஹ்ம' என்ற சொல்லிற்கு என்ன பொருள்?*

*பதில்:* அறியத்தக்கது, நிர்குணமானது, உருவமற்றது. ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாதான் பரம் ப்ரம்மம். ப்ரம்மம் என்ற சொல்லுக்கு வேதம், ப்ரம்மதேவன், ப்ரக்ருதி என்றெல்லாம் பொருள் உண்டு. ஆனாலும் பரப்ரம்மம் என்றால் அறியத்தக்கதான பரமாத்ம தத்வம்தான். வேதம் முதலியவற்றிலிருந்து வேறுபட்டது என்று கூறுவதற்காக 'ப்ரஹ்ம' என்ற சொல்லோடு 'பரம்' என்கிற அடைமொழியைச் சேர்த்துக் கூறுகிறார்.

*கேள்வி: அந்த பரப்ரம்மமான பரமாத்மாவை 'ஸத்' என்றோ, 'அஸத்' என்றோ ஏன் கூற முடியாது?*

*பதில்:* 'ஸத்' என்றால் இருப்பது. சான்றுகளின் மூலம் நிரூபிக்கப்படுவது என்று பொருள். பரப்ரம்மம் இருக்கிறது என்று நிரூபிக்க வேறு சான்று கிடையாது. அது என்றும் உள்ளது, அழிவற்றது. அந்த பரமாத்மா இருப்பதால்தான் மற்றவை இருக்கின்றன. ஆகவே, எந்த உலகியல் சான்றும் பரமாத்மாவை எட்ட முடியாது. வேதம் கூறுகிறது— 'அனைத்தையும் அறிகின்ற அதை எப்படி அறிய முடியும்?' சான்றுகளின் மூலம் நிரூபிக்கக் கூடிய பொருட்களிலிருந்து பரமாத்ம தத்வம் முற்றிலும் மாறுபட்டது. ஆகவே, அதை 'ஸத்' என்று சொல்ல முடியாது. உண்மையில் எது இல்லையோ, அது 'அஸத்' ஆகும். பரமாத்மா இல்லை என்று சொல்ல முடியாதே. அவர் நிச்சயம் இருக்கிறார். அவர் இருப்பதால்தான் மற்றவை இருக்கின்றன. எனவே பரப்ரம்மத்தை 'அஸத்' என்றும் கூற முடியாது. பரப்ரம்மம் 'ஸத்'துக்கும், 'அஸத்'துக்கும் அப்பாற்பட்டது.

*கேள்வி: 9/19ல் பகவான் 'ஸத்'தும் நான்தான், 'அஸத்' தும் நான்தான் என்றார். இங்கோ, அறியத்தக்க பரமாத்மா 'ஸத்'துமில்லை, 'அஸத்'துமில்லை என்கிறார். இந்த முரண்பாட்டுக்கு என்ன பதில்?*

*பதில்:* உண்மையில் முரண்பாடு எதுவுமில்லை. பரமாத்மாவைப் பற்றி 'உள்ளவர்' என்று உடன்பாட்டில் பேசும்போது அவரே உள்ளதெல்லாம் ஆன ப்ரம்மம் என்று

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கூறவேண்டியிருக்கிறது. எதிர்மறையில் 'இல்லாதவர்' என்று பேசும்போது 'அவர் இப்படியுமல்லர், அப்படியுமல்லர். ஆனால் இருக்கிறார்' என்று கூறவேண்டியிருக்கிறது. ஆகவே அங்கு அவர் ஸத்தும், அஸத்தும் நான்தான் என்று கூறுவது சரிதான். உண்மையில் பரப்ரம்மத்தின் இயல்பைச் சொற்களால் இவ்வாறு உள்ளவர் என்றோ, இல்லாதவர் என்றோ உலகியல் மொழியைக் கொண்டு கூற முடியாது. அவரைப் பற்றிச் சொல்லப்படுவதெல்லாம் ஒரு திசை காட்டும் குறிப்புதான். 'அதோ அந்தக் கிளையின் பக்கத்தில் நிலவு தெரிகிறது பார்!' என்று சொல்லும்போது கிளைக்கும், நிலவுக்கும் வெகுதூரம் என்று தெரிந்தே சொல்கிறோமல்லவா. அதுபோல ஒரு குறிப்புக்காட்டத்தான் சொற்கள் உபயோகப்படும். நேராகச் சொல்லிவிட முடியாது. வேதமும் கூறுகிறது— 'யதோ வாசோ நிவர்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ' (தைத்திரீய உபநிஷத் 2/9). 'மனதோடு சொற்கள் எந்தப் பரதத்வத்தை அணுக முடியாது திரும்பிவிடுகின்றனவோ (அதுவே ப்ரம்மம் என்பது).' இதைத் தெளிவாக இங்கே கூறுகிறார்— 'அது ஸத்துமன்று, அஸத்துமன்று' என்று. அதாவது அறியத்தக்க பொருளைக் கூறத்தான் விரும்புகிறேன். ஆனால் அதன் உண்மைப் பொருள் மனதிற்கும், சொல்லுக்கும் அகப்படாதது. ஆகவே அதைப் பற்றி வர்ணிப்பதெல்லாம் அதன் தடஸ்த லக்ஷணம் (புறக்குறிப்பு) மட்டுமே ஆகும்.

**பொருத்தம்: இவ்விதம் அறியத்தக்க தத்வத்தைக் கூறுவதாக ஆரம்பித்துச் சுருக்கமாகக் கூறிவிட்டு, அது ஆழ்ந்த கருத்துடையதாயிற்றே; அதை ஸாதகர்களுக்கு விளங்க வைக்க வேண்டுமே என்ற கருத்தோடு 'எங்கும் நிறைந்தது' என்றெல்லாம் இலக்கணங்கள் கூறி மேலும் விரிவாக வர்ணிக்கிறார்—**

**सर्वतःपाणिपादं तत्सर्वतोऽक्षिशिरोमुखम्।**
**सर्वतः श्रुतिमल्लोके सर्वमावृत्य तिष्ठति॥ १३॥**

**ஸர்வத:பாணிபாத₃ம் தத்ஸர்வதோऽக்ஷிஶிரோமுக₂ம் ।**
**ஸர்வத:ஶ்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்ட₂தி ॥ 13 ॥‡**

**தத்** – அது, **ஸர்வத:** – எங்கும், **பாணி பாத₃ம்** – கைகால்களை உடையது. **ஸர்வத:** – எங்கும், **அக்ஷி ஶிர: முக₂ம்** – கண், தலை, முகங்களோடு கூடியது. **ஸர்வத:** – எங்கும், **ஶ்ருதிமத்** – காதுகளை உடையது. (**யத:** – ஏனெனில் அது), **லோகே** – உலகில், **ஸர்வம்** – அனைத்தையும், **ஆவ்ருத்ய** – வ்யாபித்து, **திஷ்ட₂தி** – நிற்கிறது.

அது எங்கும் கைகால்களை உடையது. எங்கும் கண், தலை, முகங்களோடு கூடியது. எங்கும் காதுகளை உடையது. ஏனெனில் அது உலகில் அனைத்தையும் வ்யாபித்து நிற்கிறது.

**கேள்வி:** 'அது எங்கும் கைகால்களை உடையது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பரப்ரம்மத்திற்கு அதாவது பரமாத்மாவிற்கு எல்லாப்புறங்களிலும் கைகள் உள்ளன. அவருக்கு எங்கு எதை ஸமர்ப்பணம் செய்தாலும் அதை அங்கங்கே எடுத்துக் கொள்வார். அவருக்கு எங்கும் கால்கள் உள்ளன. அவரை எந்த பக்தர் எங்கிருந்து வணங்கினாலும் அங்கே அவர் அதை ஏற்கிறார். ஏனெனில் அவர் ஸர்வ வல்லமை படைத்தவர். ஆகவே அவரால் எங்கும் எந்தப் புலன்களின் செயலையும் செய்ய முடியும். கைக்குரிய எடுக்கும் சக்தியும், காலின் ஸஞ்சார சக்தியும் எங்கும் நிறைந்திருக்கின்றன என்று பொருள்.

**கேள்வி:** 'எங்கும் கண்–தலை–முகங்களோடு கூடியது' என்று கூறுவதன் கருத்து என்ன?

‡ இதே ச்லோகம் இப்படியே ஶ்வேதாஶ்வதர உபநிஷத்தில் காணப்படுகிறது (3/16.)

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இதனாலும் அந்த அறியத்தக்க பொருள் எங்கும் நிறைந்துள்ளது என்பதையே விவரிக்கிறார். அவர் எங்கும் கண்கள் உடையவர். அவரால் பார்க்க முடியாத இடமே உலகில் இல்லை. அவரிடமிருந்து எதுவும் மறைந்திருக்க முடியாது. அவருக்கு எங்கும் தலைகள் உள்ளன. எங்கெல்லாம் பக்தர்கள் அவருடைய தலையில் புஷ்பங்களைப் பொழிய வேண்டுமென விரும்புகின்றனரோ, அங்கெல்லாம் அவருடைய தலை பரவியிருக்கிறது. அவரது தலை இல்லாத இடமே கிடையாது. அவருக்கு எப்புறமும் முகங்கள் உள்ளன. அவருடைய பக்தர் எங்கிருந்து கொண்டு அவர் உண்பதற்காக நைவேத்யம் படைக்கிறார்களோ, அங்கங்கே அவர் அவற்றை ஏற்கிறார். அவருடைய முகம் இல்லாத இடமே கிடையாது. அதாவது அந்த அறியத்தக்க பரம்பொருள் அனைத்தையும் காண்பவர்; அனைத்திற்கும் ஸாக்ஷியானவர்; அனைவருடைய பூஜைகளையும், நைவேத்யங்களையும் ஏற்கும் சக்தியுள்ளவர் ஆவார்.

**கேள்வி:** 'அவருக்கு எப்புறமும் காதுகள் உண்டு' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இதனாலும் அறியத்தக்க பரம்பொருளின் எங்கும் பரவி நிற்கும் தன்மை விளக்கப்படுகிறது. அவர் எந்த திசையில் எந்த ஒலி எழுந்தாலும் கேட்பார். எங்கிருந்து எந்த பக்தர் துதித்தாலும், வேண்டுகோள் விடுத்தாலும் அவர் அதற்குச் செவி சாய்ப்பார் என்று பொருள்.

**கேள்வி:** 'உலகில் அவர் அனைத்தையும் வ்யாபித்து (நீக்கமற நிறைந்து) நிற்கிறார்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அறியத்தக்க பரமாத்மா எங்கும் வ்யாபித்திருக்கிறார் என்பதை இக்கூற்றின் மூலம் முழுமையாக நிரூபிக்கிறார். ஆகாயமானது நீர், நிலம், தீ, காற்று ஆகியவற்றிற்குக் காரணமாவதால், அவையனைத்திலும் நிறைந்துள்ளதுபோல, அறியத்தக்க பரமாத்மாவும் இந்தச் சராசரங்கள், ஜீவன்கள் உள்ளிட்ட அனைத்திற்கும் காரணமாவதால் அனைத்திலும் நிறைந்து விளங்குகிறார். ஆகவே, எல்லாமே அவரால்தான் பரிபூரணமாகி இருக்கின்றன.

**பொருத்தம்:** அறியத்தக்க பரமாத்மாவுக்கு எல்லாப் புறங்களிலும் கை, கால் முதலிய எல்லாப் புலன்களின் சக்திகளும் உள்ளன என மொழிந்து, அந்த ஸ்வரூபம் உலகியலுக்கு அப்பாற்பட்டது என்று விளக்குகிறார்—

**सर्वेन्द्रियगुणाभासं सर्वेन्द्रियविवर्जितम्।**
**असक्तं सर्वभृच्चैव निर्गुणं गुणभोक्तृ च॥ १४॥**

**ஸர்வேந்த்₃ரியகு₃ணாப₄ாஸம் ஸர்வேந்த்₃ரியவிவர்ஜிதம் ।**

**அஸக்தம் ஸர்வப்₄ருச்சைவ நிர்கு₃ணம் கு₃ணபே₄ாக்த்ரு ச ॥ 14 ॥**

**ஸர்வ இந்த்₃ரிய கு₃ண ஆப₄ாஸம்** – எல்லாப் புலன்நுகர் பொருட்களை அறிவது. (ஆனால் உண்மையில்), **ஸர்வ இந்த்₃ரிய விவர்ஜிதம்** – எல்லாப் புலன்களும் அற்றது. **ச** – அப்படியே, **அஸக்தம் ஏவ** – ஒன்றிலும் பற்றற்றது. (ஆனாலும்), **ஸர்வப்₄ருத்** – எல்லாவற்றையும் தாங்குவது, காப்பது. **ச** – மேலும், **நிர்கு₃ணம்** – குணமற்றதாக இருந்தாலும், **கு₃ணபே₄ாக்த்ரு** – குணங்களை அனுபவிப்பது.

எல்லாப் புலன்நுகர் பொருட்களையும் அறிவது. ஆனால் உண்மையில் எல்லாப் புலன்களும் அற்றது. அப்படியே ஒன்றிலும் பற்றற்றது. ஆனாலும் எல்லாவற்றையும் தாங்குவது, காப்பது. மேலும் குணமற்றதாக இருந்தாலும் குணங்களை அனுபவிப்பது.

**கேள்வி:** பரமாத்மா, புலன்கள் நுகர்வனவற்றையெல்லாம் அறிவார். ஆனால் உண்மையில் அவர் புலன்கள் அற்றவர் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அந்த அறியத்தக்க பரமாத்மாவின் ஸகுண ஸ்வரூபம்கூட மிகவும் அற்புதமானது; உலகியலுக்கு அப்பாற்பட்டது என்று பொருள். பதின்மூன்றாவது ச்லோகத்தில் எல்லாப்



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பக்கங்களிலும் கைகால் முதலிய புலன்கள் உள்ளன என்று கூறியதற்கு "அந்தப் பரமாத்மா மற்ற ப்ராணிகளைப்போலப் புலன்கள் உடையவரல்லர். புலன்கள் இருந்தால்தான் பொருட்களை நுகர முடியும் என்பது அவருக்குப் பொருந்தாது. புலன்கள் இல்லாமலேயே அவர் எப்பொருளையும் நுகர முடியும்" என்று பொருள். இதைத்தான் எங்கும் புலன்கள் உள்ளவர் என்றும், புலன்களே அற்றவர் என்றும் கூறுகிறார். வேதம் கூறுகிறது—

அபாணிபாதே₃ா ஜவநோ க்₃ரஹீதா ।
பஶ்யத்யசக்ஷு: ஸ ஶ்ருணோத்யகர்ண: ॥

(ஶ்வேதாஶ்வதரோபநிஷத்₃ 3/19)

பரமாத்மா கையில்லாமல் எடுத்துக் கொள்வார். காலில்லாமல் வேகமாக நடப்பார். கண்ணில்லாமல் பார்ப்பார். காதில்லாமல் கேட்பார். ஆகவே அவருடைய ஸ்வரூபம் உலகியலுக்கு அப்பாற்பட்டது. இதைத்தான் இங்கே வர்ணிக்கிறார்.

**கேள்வி:** 'எதிலும் பற்றற்றவராக இருந்தாலும் எல்லாவற்றையும் தாங்கிக் காக்கிறார்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உலகில் தாய்-தந்தையர் முதலியோர் பாசத்திற்கு ஆட்பட்டுத் தமது குடும்பங்களைக் காக்கின்றனரே, அதே போல, ஆனால் பற்று, பாசமும் இல்லாமலேயே அந்தப் பரப்ரம்மமான பரமாத்மா அனைத்தையும் தாங்கிக் காப்பாற்றுகிறார். அதனால் அவரை எல்லா ப்ராணிகளுக்கும் நண்பர் – காரணமின்றி நன்மை செய்பவர் என்று 5/29ல் கூறினார். அறியத்தக்கவரும், எங்கும் நிறைந்தவரும் ஆன அந்த பரமாத்மா உண்மையில் பாசம் என்ற குற்றத்திற்கு ஆட்பட்டவரல்லர். ஆயினும் ப்ரக்ருதியின் வாயிலாக எல்லோரையும் தாங்கிக் காப்பாற்றுகிறார். இதுதான் அவருடைய உலகியலுக்கு அப்பாற்பட்ட நிலை.

**கேள்வி:** 'குணமற்றவரானாலும் குணங்களை அனுபவிப்பவர்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இதன் மூலமும் பகவான் உலகியலுக்கு அப்பாற்பட்டவர் என்பதை நிரூபிக்கிறார். அவர் எல்லா குணங்களையும் அனுபவிக்கிறார். ஆயினும் மற்ற ஜீவர்களைப்போல ப்ரக்ருதியின் குணங்களில் ஒட்டியவர் அல்லர். உண்மையில் அவர் குணங்களுக்கு அப்பாற்பட்டவர்தான். ஆயினும் ப்ரக்ருதியை ஏற்றுக் கொண்டு எல்லா குணங்களையும், அனுபவிக்கவும் செய்கிறார். இதுதான் அவருடைய உலகியலுக்கு அப்பாற்பட்ட தன்மை.

बहिरन्तश्च भूतानामचरं चरमेव च।
सूक्ष्मत्वात्तदविज्ञेयं दूरस्थं चान्तिके च तत्॥ १५॥

ப₃ஹிரந்தஶ்ச பூ₄தாநாமசரம் சரமேவ ச ।
ஸூக்ஷ்மத்வாத்தத₃விஜ்ஞேயம் தூ₃ரஸ்த₂ம் சாந்திகே ச தத் ॥ 15 ॥ ‡

**பூ₄தாநாம்** – சராசரமான எல்லா ப்ராணிகளினுடைய, **ப₃ஹி:** – புறமும், **அந்த: ச** – உள்ளும் (அது நிறைந்திருக்கிறது). **சரம்** – அசைவன, **அசரம் ஏவ ச** – அசையாதன

---

‡ வேதம் கூறுகிறது—

தத₃ேஜதி தந்நைஜதி தத்₃தூ₃ரே தத்₃வந்திகே ।
தத₃ந்தரஸ்ய ஸர்வஸ்ய தது₃ ஸர்வஸ்யாஸ்ய பா₃ஹ்யத: ॥

(ஈஶோபநிஷத்₃ 5)

அது நடக்கிறது; நடக்காமலும் இருக்கிறது. அது எட்டி உள்ளது; அருகிலும் உள்ளது. அது உலகிற்கு உள்ளே இருப்பது; அதற்கு அப்பாலும் உள்ளது.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வற்றின் வடிவிலும்கூட (அதுவே உள்ளது). **தத்** – அது, **ஸூக்ஷ்மத்வாத்** – நுண்ணியதாக இருப்பதால், **அவிஜ்ஞேயம்** – அறிய முடியாதது. **அந்திகே ச** – மிக அருகிலும், **தூ₂ரஸ்த₂ம் ச** – மிகுந்த தூரத்திலும் இருப்பதும், **தத்** – அதுவே.

சராசரமான எல்லா ப்ராணிகளினுடைய உள்ளும் புறமும் அது நிறைந்திருக்கிறது. அசைவன, அசையாதனவற்றின் வடிவிலும்கூட அதுவே உள்ளது. அது நுண்ணியதாக இருப்பதால் அறிய முடியாதது. மிக அருகிலும் தூரத்திலும் இருப்பதும் அதுவே.

**கேள்வி:** அறியத்தக்க அந்த பரப்ரம்ம பரமாத்மா எல்லா ப்ராணிகளின் உள்ளும், புறமும் நிறைந்திருக்கிறார் என்பது எப்படி?

**பதில்:** கடலில் கிடக்கின்ற பனிக்கட்டியின் உள்ளும், புறமும் எங்கும் நீர் நிறைந்திருப்பது போலவே, எல்லாச் சராசரங்களின் உள்ளும், புறமும் அந்த அறியத்தக்க பரமாத்மா நிறைந்து இருக்கிறார் என்று பொருள்.

**கேள்வி:** 'சரமும், அசரமும்' அவர்தான் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** முதல் வாக்யத்தில் பரமாத்மா சராசரங்களின் உள்ளும், புறமும் நிறைந்திருக்கிறார் என்று சொல்லியாகிவிட்டது. அதிலிருந்து சராசர ப்ராணிகள் அவரிடமிருந்து தனிப்பட்டிருக்குமோ என்று கொள்ளக் கூடாது. இதைத் தெளிவாகக் கூறுகிறார்— சராசரங்கள் அனைத்தும் அவரே என்றும், அவரைத் தவிர வேறல்ல என்றும். அதாவது பனிக்கட்டியின் உள்ளும், புறமும் நீரே உள்ளது. உண்மையில் பனிக்கட்டியும் நீரே, நீரைத் தவிர வேறான பொருள் அல்ல. அதுபோல இந்தச் சராசரமனைத்தும் பரமாத்மாவினுடைய ஸ்வரூபமே. அதைத் தவிர வேறல்ல – என்பது கருத்து.

**கேள்வி:** 'அவர் நுண்ணியவராக இருப்பதால் அறிய முடியாதவர்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அந்த அறியத்தக்க பரம்பொருள் அனைத்துமாகவும் உள்ளது என்று கூறும்போது, 'எல்லாமே அதுதான்' என்றால் பின் ஏன் எல்லோரும் அதை அறிவதில்லை? என்ற கேள்வி எழுகிறது. சூரிய கிரணங்களில் உள்ள பரமாணு வடிவான நீர் ஸாதாரணமாக மக்களின் கண்களுக்குப் புலப்படுவதில்லை. அவர்களுடைய அறிவுக்கு அப்பாற்பட்டது. அதுபோல் எங்கும் நிறைந்த பரமாத்மா, அந்தப் பரமாணு அளவுள்ள நீரைக் காட்டிலும் மிகவும் நுண்ணியவராகையால் ஸாதாரண மனிதர்களின் அறிவுக்கு எட்டாதவர். அதாவது அறிவுக்கு அப்பாற்பட்டவர்.

**கேள்வி:** 'அவர் மிகவும் அருகிலும் உள்ளார், தூரத்திலும் உள்ளார்.' இது எவ்வாறு ஸாத்யமாகும்?

**பதில்:** அகில உலகிலும் உள்ளும், புறமும் பரமாத்மா இல்லாத இடமே இல்லை. ஆகவே அவர் மிக அருகேயும் உள்ளார், மிகத் தொலைவிலும் உள்ளார். மனிதன் எதை அருகில் என்றும், தொலைவில் என்றும் நினைக்கிறானோ, அங்கெல்லாம் எப்பொழுதும் விஞ்ஞான ஆனந்தமயமான பரமாத்மா நிறைந்திருக்கிறார். ஆகவே இந்தத் தத்வத்தை அறிந்த, நம்பிக்கையுள்ள மாந்தருக்குப் பரமாத்மா மிக அருகில் உள்ளார். நம்பிக்கையற்றவருக்கு மிகத் தொலைவில் உள்ளார் என்று பொருள்.

अविभक्तं च भूतेषु विभक्तमिव च स्थितम्।
भूतभर्तृ च तज्ज्ञेयं ग्रसिष्णु प्रभविष्णु च॥ १६॥

**அவிப₄க்தம் ச பூ₄தேஷு விப₄க்தமிவ ச ஸ்தி₂தம் ।**
**பூ₄தப₄ர்த்ரு ச தஜ்ஜ்ஞேயம் க்₃ரஸிஷ்ணு ப்ரப₄விஷ்ணு ச ॥ 16 ॥**

**ஜ்ஞேயம்** – அறியத்தக்க, **தத்** – அந்தப் பரப்ரம்மம், **அவிப₄க்தம் ச** – பிளவு இல்லாமல் ஆகாசத்தைப்போல் எங்கும் ஒரே சீராக நிறைந்திருந்த போதிலும், **பூ₄தேஷு** –



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



சராசரமாகிற ப்ராணிகள் அனைத்திலும், விப₄க்தம் இவ ச – பிரிக்கப்பட்டுத் தனித்தனியாக இருப்பது போன்ற, ஸ்தி₂தம் – தோற்றத்தை அளிக்கிறது. பூ₄தப₄ர்த்ரு – (ஸ்ரீமஹாவிஷ்ணு ஸ்வரூபமாக) ஸகல ப்ராணிகளையும் தாங்கிப் பேணிக் காப்பது. ச – மேலும், க்₃ரஸிஷ்ணு – ருத்ரனுடைய உருவமாக அழிப்பது. ச – அப்படியே, ப்ரப₄விஷ்ணு – ப்ரம்மாவின் உருவமாக எல்லோரையும் படைப்பது.

அறியத்தக்க அந்தப் பரப்ரம்மம் ஆகாசத்தைப்போல் பிளவு இல்லாமல் எங்கும் ஒரே சீராக நிறைந்திருந்த போதிலும் சராசரமாகிற ப்ராணிகள் அனைத்திலும் பிரிக்கப்பட்டுத் தனித்தனியாக இருப்பது போன்ற தோற்றத்தை அளிக்கிறது. ஸ்ரீமஹாவிஷ்ணு ஸ்வரூபமாக ஸகல ப்ராணிகளையும் தாங்கிப் பேணிக் காப்பது. மேலும் ருத்ரனுடைய உருவமாக அழிப்பது. அப்படியே ப்ரம்மாவின் உருவமாக எல்லோரையும் படைப்பது.

**கேள்வி:** பிளவு இல்லாதவராயினும் எல்லா ப்ராணிகளிடமும் பிரிந்து இருப்பவர்போலத் தோற்றமளிக்கிறார் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அறியத்தக்க பரமாத்மா ஒருவர்தான் என்று நிரூபிக்கிறார். ஆகாசம் பிளவற்றது, ஆயினும் வெவ்வேறு குடங்களில் பிரிந்துள்ளதுபோல் காணப்படுகிறது. அதுபோல் பரமாத்மா உண்மையில் பிளவற்றவராயினும், ஸகல சராசர ப்ராணிகளிடமும் க்ஷேத்ரக்ஞ வடிவாகத் தனித்தனிபோலத் தோற்றமளிக்கிறார். இப்படி வெவ்வேறாகத் தெரிவது வெறும் தோற்றமே தவிர, உண்மையில் பரமாத்மா ஒருவர்தான். அவர் எங்கும் நிறைந்திருக்கிறார்.

**கேள்வி:** 'பூதபர்த்ரு', 'க்ரஸிஷ்ணு', 'ப்ரபவிஷ்ணு' என்பனவற்றிற்கு என்ன பொருள்? இவை இங்கு உபயோகப்படுத்தப்பட்டிருப்பதற்கு என்ன கருத்து?

**பதில்:** அனைத்து ப்ராணிகளையும் தாங்கிக் காப்பது 'பூதபர்த்ரு'. எல்லா ப்ராணிகளையும் அழிப்பது 'க்ரஸிஷ்ணு'. எல்லாவற்றையும் உண்டாக்குவது 'ப்ரபவிஷ்ணு'. இம்மூன்று சொற்களாலும் வலியுறுத்தப்படுவது: அந்த ஸர்வ வல்லமை படைத்த, அறியத்தக்க பரமாத்மா அகில சராசர உலகைப் படைத்துக் காத்து அழிப்பவர். ப்ரம்மாவாகப் படைக்கிறார்; விஷ்ணுவாகக் காக்கிறார்; ருத்ரனாக எல்லாவற்றையும் அழிக்கிறார். அந்தப் பரமாத்மாதான் ப்ரம்மா, விஷ்ணு, பரமசிவன் என்ற மூவருமாயுள்ளார்.

ज्योतिषामपि तज्ज्योतिस्तमसः परमुच्यते ।
ज्ञानं ज्ञेयं ज्ञानगम्यं हृदि सर्वस्य विष्ठितम् ॥ १७ ॥

**ஜ்யோதிஷாமபி தஜ்ஜ்யோதிஸ்தமஸ: பரமுச்யதே ।**
**ஜ்ஞாநம் ஜ்ஞேயம் ஜ்ஞாநக₃ம்யம் ஹ்ருதி₃ ஸர்வஸ்ய விஷ்டி₂தம் ॥ 17 ॥**

**தத்** – அந்தப் பரப்ரம்மம், **ஜ்யோதிஷாம் அபி ஜ்யோதி:** – ஒளிகளுக்கெல்லாம் ஒளியானது; **தமஸ:** – மாயைக்கு, **பரம்** – அப்பாற்பட்டது; **ஜ்ஞாநம்** – ஞான வடிவானது; **ஜ்ஞேயம்** – அறியப்பட வேண்டியது; **ஜ்ஞாநக₃ம்யம்** – தத்வ ஞானத்தினால் அடையத்தக்கது; **ஸர்வஸ்ய** – எல்லோருடைய, **ஹ்ருதி₃** – இதயத்திலும், **விஷ்டி₂தம்** – சிறப்பாக விளங்குவது, **உச்யதே** – என்று கூறப்படுகிறது.

அந்தப் பரப்ரம்மம் ஒளிகளுக்கெல்லாம் ஒளியானது; மாயைக்கு அப்பாற்பட்டது; ஞான வடிவானது; அறியப்பட வேண்டியது; தத்வ ஞானத்தினால் அடையத்தக்கது; எல்லோருடைய இதயத்திலும் சிறப்பாக விளங்குவது என்று கூறப்படுகிறது.

**கேள்வி:** 'அந்த பரப்ரம்மம் ஒளிகளுக்கெல்லாம் ஒளி' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** சந்த்ரன், சூரியன், மின்னல், நக்ஷத்ரங்கள் முதலிய எவ்வளவு புற ஒளிகள் உண்டோ, புத்தி, மனம், புலன்கள் முதலிய எவ்வளவு உள் ஒளிகள் உண்டோ, வெவ்வேறு



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உலகங்களிலும், பொருட்களிலும் உறைகின்ற அதிஷ்டான தேவதைகளின் தெய்விக ஒளிகள் எவ்வளவு உண்டோ, அவையனைத்திற்கும் ப்ரகாசமளிப்பவர் அந்த பரமாத்மாதான். அவையனைத்திலும் உள்ள ஒளிச் சக்தி முழுவதும் பரப்ரம்மமான பரமாத்மாவின் ஒளியின் ஒரு திவலைதான். ஆகவே, அவர் ஒளிகளுக்கெல்லாம் ஒளி – அதாவது எல்லாற்றிற்கும் ஒளி அளிப்பவர்; ப்ரகாசப்படுத்துபவர். அவரை ப்ரகாசப்படுத்த வேறொன்றும் கிடையாது.

வேதமும் கூறுகிறது– **'ந தத்ர ஸுர்யோ பாதி ந சந்த்ரதாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோऽயமக்நி: । தமேவ பாந்தமநுபாதி ஸர்வம் தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி ॥'** (கடோபநிஷத் 2/2/15, ஶ்வேதாஶ்வதர உபநிஷத் 6/14). "அங்கு சூரியன் ப்ரகாசிப்பதில்லை. சந்த்ரனும், நக்ஷத்ரங்களும் ஒளிர்வதில்லை. மின்னல் மின்னுவதில்லை. அப்படி இருக்கும்போது இந்த நெருப்பு எங்கே ப்ரகாசிக்கப் போகிறது? அவர் ப்ரகாசிக்கச் செய்வதால் இவையனைத்துமே ப்ரகாசிக்கின்றன. அவர் ஒளியின்மூலம்தான் உலகமே விளங்குகிறது." கீதையிலும் 15/12ல் "எந்த தேஜஸ் சூரியனிடத்தில் இருந்து கொண்டு அகில உலகையும் ப்ரகாசப்படுத்துகிறதோ, எது சந்த்ரனிடமும், அக்னியிடமும் உள்ளதோ, அந்த தேஜஸ் என்னுடையது என்று அறிந்து கொள்" என்று கூறுகிறார்.

**கேள்வி:** இங்கு 'தம:' என்றால் என்ன? அதற்கு அப்பாற்பட்டவர் பரமாத்மா என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கே 'தம:' என்றால் இருளும், அஞ்ஞானமும் ஆகும். அந்தப் பரமாத்மா, தானே ப்ரகாசிப்பவர். ஞானமே வடிவானவர். இருளும், அஞ்ஞானமும் அவர் அண்மையில் இருக்க முடியாது. ஆகவே, அவர் தமஸ்ஸுக்கு (இருளுக்கு) மிகவும் அப்பாற்பட்டவர். அஞ்ஞான இருள் அறவே அற்றவர் என்று பொருள்.

**கேள்வி:** இங்கே 'ஜ்ஞாநம்' என்றால் என்ன? இதை இங்கே கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கே 'ஜ்ஞாநம்' என்பது பரமாத்மாவின் ஸ்வரூபம் ஆகும். அந்தப் பரமாத்மா உணர்வு மயமானவர், அறிவு மயமானவர் என்று பொருள்.

**கேள்வி:** அவரை மறுபடியும் 'ஜ்ஞேயம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஜ்ஞேயம்' (அறியத்தக்கவர்) என்று யாரைக் குறித்துச் சொல்லி இந்த அத்யாயத்தைத் தொடங்கினாரோ, 12வது ச்லோகத்தில், அந்தப் பரமாத்மாவை உணர்வதுதான் உலகில் மனிதப்பிறவியின் ஒரே முக்யமான கடமை. இவ்வுலகில் அறியத்தக்கவர் பரமாத்மா ஒருவர்தான். ஆகவே அந்தப் பரமாத்ம தத்வத்தை அறிவதற்காகவே எல்லோரும் முழுமையாக முயற்சி செய்யவேண்டும். விலைமதிப்பற்ற வாழ்வை வீணே உலகியல் போகங்களில் மூழ்கடித்து நாசமாக்குவது கூடாது என்று பொருள்.

**கேள்வி:** 'ஜ்ஞாநகம்யம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஜ்ஞேயம்' என்று குறிப்பிட்டுப் பரமாத்மாவை அறிவது அவசியமென்று சொன்னார். அவரை அறிய முடியுமா, எப்படி அறிவது என்ற கேள்வி எழுகிறது. அதற்குப் பதில் கூறுகிறார். அவர் ஞானத்தினால் அறியக் கூடியவர். அதாவது முன் சொன்ன அமாநித்வம் முதலிய ஞான ஸாதனங்களின் மூலம் பெற்ற தத்வஞானத்தினால் அறியப்படக் கூடியவர். ஆகுவே, அந்த ஸாதனங்களைக் கொண்டு தத்வஞானம் பெற்றுப் பரமாத்மாவை அறியவேண்டும் என்று பொருள்.

**கேள்வி:** முன் ச்லோகத்தில் பரமாத்மா எங்கும் வ்யாபித்திருக்கிறார் என்று கூறிவிட்டார். இங்கு அனைவரது இதயத்திலும் வீற்றிருக்கிறார் என்று அனைவருடைய இதயங்களில் மட்டும் இருப்பதாகக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அந்தப் பரமாத்மா எங்கும் ஸமமாக நிறைந்திருந்தாலும் இதயங்களில்தான் அவருடைய சிறப்பான வெளிப்பாடு தெரிகிறது. ஆதவனுடைய ஒளி அனைத்து இடங்களிலும் ஸமமாகப் பரவினாலும் கண்ணாடி முதலியவற்றில் நன்றாக ப்ரதிபலிக்கின்றது. பூதக் கண்ணாடியில் அவருடைய தேஜஸ் வெளிப்பட்டு நெருப்பைக்கூட உண்டாக்குகிறதல்லவா! மற்றப் பொருட்களில் அவ்விதம் ஏற்படவில்லையே! அதுபோலப் பரமாத்மாவை உணரும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இடம் இதயம். ஞானியின் இதயத்தில் அவர் நேராக வெளிப்படுகிறார். இதை விளக்குவதற்காகவே இங்கு அனைவருடைய இதயங்களிலும் சிறப்பாக வீற்றிருக்கிறார் என்று கூறுகிறார்.

**பொருத்தம்: இவ்விதம் க்ஷேத்ரம், ஞானம், க்ஞேயம் இவற்றின் ஸ்வரூபத்தைச் சுருக்கமாக விளக்கிவிட்டு இதை அறிவதன் பயனைக் கூறுகிறார்—**

**इति क्षेत्रं तथा ज्ञानं ज्ञेयं चोक्तं समासतः।**
**मद्भक्त एतद्विज्ञाय मद्भावायोपपद्यते ॥ १८ ॥**

**இதி க்ஷேத்ரம் ததா₂ ஜ்ஞாநம் ஜ்ஞேயம் சோக்தம் ஸமாஸத: ।**
**மத்₃ப₄க்த ஏதத்₃விஜ்ஞாய மத்₃பா₄வாயோபபத்₃யதே ॥ 18 ॥**

**இதி** – இவ்விதம், **க்ஷேத்ரம்** – க்ஷேத்ரத்தினுடைய ஸ்வரூபமும், **ததா₂** – அவ்விதமே, **ஜ்ஞாநம்** – ஞானமும், **ஜ்ஞேயம் ச** – அறியவேண்டிய பரமாத்ம ஸ்வரூபமும், **ஸமாஸத:** – சுருக்கமாக, **உக்தம்** – சொல்லப்பட்டன. **மத்₃ப₄க்த:** – என்னுடைய பக்தன், **ஏதத்** – இதை, **விஜ்ஞாய** – தத்வரீதியாக அறிந்து, **மத்₃பா₄வாய** – என்னுடைய ஸ்வரூபத்தை, **உபபத்₃யதே** – அடைகிறான்.

இவ்விதம் க்ஷேத்ரத்தினுடைய ஸ்வரூபமும், அவ்விதமே ஞானமும், அறியவேண்டிய பரமாத்ம ஸ்வரூபமும் சுருக்கமாகச் சொல்லப்பட்டன. என்னுடைய பக்தன் இதைத் தத்வரீதியாக அறிந்து என்னுடைய ஸ்வரூபத்தை அடைகிறான்.

**கேள்வி:** இதுவரை க்ஷேத்ரம், ஞானம், க்ஞேயம் இவற்றை எந்தெந்த ச்லோகங்களில் கூறினார்?

**பதில்:** ச்லோகம் 5,6களில் விகாரங்களுடன் கூடிய க்ஷேத்ரத்தின் ஸ்வரூபம் வர்ணிக்கப்பட்டுள்ளது. 7 முதல் 11 வரை ஞானம் என்ற பெயரால் இருபது ஞான ஸாதனங்களையும், 12 முதல் 17 வரை க்ஞேயத்தையும், அதாவது அறியத்தக்க பரமாத்ம ஸ்வரூபத்தையும் வர்ணித்தார்.

**கேள்வி:** 'மத்பக்த:' என்று கூறுவானேன்? அந்த க்ஷேத்ரம், ஞானம், க்ஞேயம் இவற்றை அறிவது என்றால் என்ன? அதன் மூலம் பகவத் ஸ்வரூபத்தையடைவது என்று எதைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** 'மத்பக்த:' என்றால் பகவானை பஜிப்பது, த்யானம் செய்வது, அவருடைய கட்டளைகளை நிறைவேற்றுவது, அவரை வழிபடுவது, ஸேவை புரிவது – இவ்வாறு பக்தி செய்யும் பக்தர் என்று பொருள். இந்த ஞானமார்க்கத்திலும் என்னைச் சரணடைந்து செல்லும் ஸாதகன் எளிதாகவே பரமபதத்தை அடைவான் என்று கருத்து.

க்ஷேத்ரம் என்பது ப்ரக்ருதியின் விளைவு; ஜடம்; விகாரமடைவது; அநித்யம்; அழிவது என்றறிய வேண்டும். ஞானத்திற்கான வழிமுறைகளை நன்றாகக் கடைப்பிடிக்க வேண்டும். அதன் மூலம் பகவானுடைய நிர்குணமான அல்லது ஸகுணமான ஸ்வரூபத்தை நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும். இதுதான் க்ஷேத்ரம், ஞானம், க்ஞேயம் இவற்றை அறிவது ஆகும். அந்த அறியத்தக்க க்ஞேயமான பரமாத்மாவை அடைவதே பகவானை அடைவதாகும்.

**பொருத்தம்: மூன்றாவது ச்லோகத்தில் பகவான் க்ஷேத்ரத்தைப் பற்றி நான்கு செய்திகள், க்ஷேத்ரக்ஞனைப் பற்றி இரண்டு செய்திகள் – இவற்றைச் சுருக்கமாகக் கூறுகிறேன் என்று அர்ஜுனனிடம் சொன்னார். பிறகு க்ஷேத்ரத்தின் இயல்பு, அதன் விகாரம் சொல்லி, க்ஷேத்ரத்தையும், க்ஷேத்ரக்ஞனையும் தத்வரீதியாக நன்கு அறிந்து கொள்ள உபாயமான ஸாதனங்களைக் கூறினார். பிறகு அறியத்தக்க பரமாத்மாவின் ஸ்வரூபத்தைக் கூறவேண்டிய ஸந்தர்பம் ஏற்பட்டதால் அவற்றையும் கூறினார். ஆனால்**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இதனாலேயே க்ஷேத்ரம் பற்றியும், அதன் இயல்பையும், எக்காரணத்தினால் எது உண்டாகிறது என்பதையும், ப்ரபாவங்களுடன் கூடிய க்ஷேத்ரக்ஞனின் ஸ்வரூபத்தையும் சொன்னதாக ஆகாது. ஆகவே அதையெல்லாம் சொல்வதற்காக மறுபடியும் பகவான் ப்ரக்ருதி, புருஷன் என்ற பகுதியை விளக்க ஆரம்பிக்கிறார். முதலில் ப்ரக்ருதியும், புருஷனும் அனாதி என்றும் எல்லா குணங்களும், விகாரங்களும் ப்ரக்ருதியில் உண்டானவை என்றும் கூறுகிறார்—

**प्रकृतिं पुरुषं चैव विद्ध्यनादी उभावपि।**
**विकारांश्च गुणांश्चैव विद्धि प्रकृतिसम्भवान्॥ १९॥**

**ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்₃த்₄யநாதீ₃ உப₄ாவபி ।**
**விகாராம்ஸ்ச கு₃ணாம்ஸ்சைவ வித்₃தி₄ ப்ரக்ருதிஸம்ப₄வாந் ॥ 19 ॥**

**ப்ரக்ருதிம்** – ப்ரக்ருதியையும், **புருஷம் ச** – புருஷனையும், **உபெ₄ள ஏவ** – இவ்விரண்டையுமே, **அநாதீ₃** – ஆரம்பமற்றதென, **வித்₃தி₄** – அறிந்துகொள். **ச** – மேலும், **விகாராந் ச** – ராகம், த்வேஷம் முதலிய விகாரங்களையும், **கு₃ணாந் அபி** – முக்குணங்களடங்கிய பொருட்கள் அனைத்தையும்கூட, **ப்ரக்ருதிஸம்ப₄வாந் ஏவ** – ப்ரக்ருதியிலிருந்து உண்டானவையே என்று, **வித்₃தி₄** – அறிந்து கொள்.

ப்ரக்ருதியையும் புருஷனையும் – இவ்விரண்டையுமே ஆரம்பமற்றதென அறிந்துகொள். மேலும் ராகம், த்வேஷம் முதலிய விகாரங்களையும் முக்குணங்களடங்கிய பொருட்கள் அனைத்தையும்கூட ப்ரக்ருதியிலிருந்து உண்டானவையே என்று அறிந்து கொள்.

**கேள்வி:** *இந்த ச்லோகத்தில் 'ப்ரக்ருதி' என்றால் எது? 7/4,5களில் 'அபரா ப்ரக்ருதி' என்றும், 13/5ல் க்ஷேத்ரம் என்றும் கூறப்பட்டதற்கும், இந்த ப்ரக்ருதிக்கும் என்ன வேற்றுமை?*

**பதில்:** இங்கு 'ப்ரக்ருதி' என்றால் ஈசுவரனுடைய அனாதியான இயல்பான மூலப்ரக்ருதி என்று பொருள். பதினான்காவது அத்யாயத்தில் இதை மஹத்ப்ரம்மம் என்கிறார். 7/4,5களில் அபராப்ரக்ருதியென்றும், 13/5ல் க்ஷேத்ரமென்றும் இதையே கூறுகிறார். அங்கு அதன் செயலான மனம், புத்தி, அஹங்காரம், ஐம்பெரும் பூதங்கள் முதலியவற்றுடன் கூடிய மூலப்ரக்ருதியைக் கூறினார். இங்கு மூலப்ரக்ருதியை மட்டுமே குறிப்பிடுகிறார்.

**கேள்வி:** *'ப்ரக்ருதி', 'புருஷன்' இரண்டும் ஆரம்பமற்றவை என்று அறிந்து கொள் என்று கூறும்போது, 'ச', 'ஏவ' என்ற சொற்களைச் சேர்த்துக் கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** ப்ரக்ருதியும், புருஷனும் அனாதி என்ற முறையில் இரண்டும் ஸமமானவையேதான். இதை வலியுறுத்தவே 'ச', 'ஏவ' என்ற சொற்களைச் சேர்த்தார். புருஷன் எப்படி அனாதியோ அவ்விதம் ப்ரக்ருதியும் அனாதியே. அதாவது ஜீவனுக்கும் ப்ரக்ருதிக்கும் தொடர்பு எந்த ஒரு காரணத்தால் ஏற்பட்டது என்று விளக்க இயலாது. இடையில் ஏற்பட்டதன்று; அனாதியானது. அதுபோல ஈசுவரனின் சக்தியான மூலப்ரக்ருதியும் அனாதியாக உள்ளது. இவ்விதம் புரிந்து கொள்ளவேண்டும்.

**கேள்வி:** *'விகாராந்', 'குணாந்' என்றால் என்ன? இவையிரண்டும் ப்ரக்ருதியில் உண்டானவை என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** 13/6ல் கூறப்பட்ட விருப்பு–வெறுப்பு, ஸுக–துக்கம் முதலியனவே இங்கு விகாரங்கள் எனப்படுகின்றன. ஸத்வம், ராஜஸம், தாமஸம் என்ற முக்குணங்களும், அவற்றால் உண்டான எல்லா ஜடப்பொருட்களும் 'குணாந்' எனப்படும். இவையிரண்டும் ப்ரக்ருதியில் உண்டானவை என்று கூறுவதிலிருந்து ஸத்வம், ராஜஸம், தாமஸம் என்ற முக்குணங்களின் பெயர்கள் 'ப்ரக்ருதி' அல்ல என்பதைத் தெளிவாக்குகிறார். ஏனெனில் ப்ரக்ருதி அனாதி. படைப்பின் ஆரம்பத்தில் முக்குணங்கள் ப்ரக்ருதியிலிருந்து உண்டானவை (பாகவதம் 2/5/22,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



11/24/5) என்று தெரிந்து கொள்ளவேண்டும். இதைத் தெளிவாகக் கூறுவதற்காகவே 14/5ல் ஸத்வம், ராஜஸம், தாமஸம் என்று முக்குணங்களுக்கும் பெயரிட்டு, முக்குணங்களும் ப்ரக்ருதியில் உண்டானவை என்று கூறுகிறார். இது தவிர 3/5லும், 18/40லும், 13/21லும் குணங்கள் ப்ரக்ருதியில் உண்டானவை என்கிறார். 3/27,29களிலும் குணங்கள் ப்ரக்ருதியின் விளைவுகள் என்கிறார். ஆகவே ஸத்வ, ராஜஸ, தாமஸ குணங்கள், அவற்றின் விளைவுகள் – அனைத்துமே ப்ரக்ருதியில் உண்டானவை; விகாரங்களும் ப்ரக்ருதியிலிருந்து உண்டானவை என்று அறிக.

**பொருத்தம்:** மூன்றாவது ச்லோகத்தில் எதிலிருந்து எது உண்டாயிற்று என்பதற்கு முன் ச்லோகத்தின் பிற்பாதியில் கொஞ்சம் பதில் கூறினார். மேலும் சில விஷயங்களை அடுத்த ச்லோகத்தின் முற்பாதியில் கூறி, பிற்பாதியிலும், 21லும் ப்ரக்ருதியில் உள்ள புருஷனின் ஸ்வரூபத்தை விளக்குகிறார்—

**कार्यकरणकर्तृत्वे हेतुः प्रकृतिरुच्यते।**
**पुरुषः सुखदुःखानां भोक्तृत्वे हेतुरुच्यते॥ २०॥**

**கார்யகரணகர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதிருச்யதே ।**
**புருஷ: ஸுகது₃:க₂நாம் போ₄க்த்ருத்வே ஹேதுருச்யதே ॥ 20 ॥**

**கார்ய கரண கர்த்ருத்வே** – கார்யத்தையும், கரணங்களையும் உண்டு பண்ணும் விஷயத்தில், **ப்ரக்ருதி:** – ப்ரக்ருதி, **ஹேது:** – காரணம் என்று, **உச்யதே** – கூறப்படுகிறது. (மேலும்), **ஸுகது₃:க₂நாம்** – ஸுக–துக்கங்களை, **போ₄க்த்ருத்வே** – அனுபவிப்பதில், **புருஷ:** – ஜீவாத்மா, **ஹேது:** – காரணமென்று, **உச்யதே** – கூறப்படுகிறான்.

கார்யத்தையும், கரணங்களையும் உண்டு பண்ணும் விஷயத்தில் ப்ரக்ருதி காரணம் என்று கூறப்படுகிறது. மேலும் ஸுக–துக்கங்களை அனுபவிப்பதில் ஜீவாத்மா காரணமென்று கூறப்படுகிறான்.

**கேள்வி:** கார்யம், கரணம் என்ற சொற்கள் என்ன தத்வத்தைக் கூறுகின்றன? அவற்றை உண்டாக்குவதில் ப்ரக்ருதிதான் காரணம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஆகாசம், காற்று, நெருப்பு, நீர், மண் என்ற நுண்ணிய ஐம்பெரும் பூதங்கள், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்து புலன் விஷயங்கள் – இவை பத்தும் கார்யங்கள். புத்தி, அஹங்காரம், மனம் இவை மூன்றும் அந்தக்கரணங்கள் – உட்கருவிகள். காது, சருமம், கண், சுவைக்கும் நாக்கு, மூக்கு இவை ஐந்தும் அறிவுப்புலன்கள். வாக்கு, கை, கால், ஆண்–பெண் குறி, புட்டம் இவை ஐந்தும் செயற்புலன்கள். இந்தப் பதின்மூன்றும் கரணங்கள் – கருவிகள் எனப்படும். இந்த இருபத்து மூன்று தத்வங்களும் ப்ரக்ருதியிலிருந்தே உண்டானவை. ப்ரக்ருதிதான் இவற்றிற்கு மூலப்பொருள். ஆகவே ப்ரக்ருதியே இவை உண்டாவதற்குக் காரணம் என்று கூறினார்.

**கேள்வி:** இந்த இருபத்துமூன்றும் ஒன்றிலிருந்து மற்றொன்று எப்படி உண்டாயிற்று?

**பதில்:** ப்ரக்ருதியிலிருந்து மஹத்தத்வம், மஹத்தத்வத்திலிருந்து அஹங்காரம், அதிலிருந்து நுண்ணிய ஐம்பெரும் பூதங்கள், மனம், பத்துப் புலன்கள்; ஐந்து நுண்ணிய மஹாபூதங்களிலிருந்து ஐந்து அறிவுப் புலன்களுக்குரிய ஒலி முதலிய ஸ்தூலமான பொருட்கள் உண்டாகின்றன. ஸாங்க்ய காரிகை 22ல் இதுவே கூறப்படுகிறது—

**ப்ரக்ருதேர்மஹாம்ஸ்ததோऽஹங்காரஸ்தஸ்மாத்₃க₃ணஞ்ச ஷோட₃ஶக: ।**
**தஸ்மாத₃பி ஷோட₃ஶகாத் பஞ்சப்₄ய: பஞ்ச பூ₄தாநி ॥**

அதாவது ப்ரக்ருதியிலிருந்து மஹத்தத்வம் (ஸமஷ்டி புத்தி) – அதாவது புத்தி தத்வம். அதிலிருந்து அஹங்காரம். அதிலிருந்து ஐந்து தன்மாத்ரைகள். மனம், பத்து புலன்கள் –

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



என்று இப்படி பதினாறும் சேர்ந்த ஒரு தொகுதி உண்டாயிற்று. அந்தப் பதினாறு என்ற தொகுதியில் ஐந்து தன்மாத்ரைகளிலிருந்து ஐம்பெரும் ஸ்தூல பூதங்கள் உண்டாயின. ஐந்து தன்மாத்ரைகள் என்பதை ஐந்து நுண்ணிய மஹாபூதங்கள் என்ற பெயரில் கீதையில் கூறப்படுகின்றன. ஐந்து ஸ்தூல பூதங்கள் என்பதை ஐந்து புலன்களின் விஷயங்கள் என்று கூறுகிறார். ஸாங்க்ய காரிகைக்கும், கீதையில் காணும் விளக்கத்திற்கும் இதுதான் வேறுபாடு.

**கேள்வி:** சில கீதா பாடங்களில் 'கார்யகரண' என்ற தொடர் 'கார்யகாரண' என்று காணப்படுகிறதே. அங்கு 'கார்ய', 'காரண' என்ற சொற்களுக்கு என்ன பொருள்?

**பதில்:** ஐந்து அறிவுப்புலன்கள், ஐந்து செயற்புலன்கள், மனம், ஐந்து புலன்களுக்கு உரிய விஷயங்கள் இந்தப் பதினாறும் கார்யம் என்ற சொல்லில் அடங்கும். ஏனெனில் இவை வேறொன்றின் விளைவுகள்; இவை வேறொன்றிற்கும் காரணமாவதில்லை. புத்தி, அஹங்காரம், ஐந்து நுண்ணிய மஹாபூதங்கள் இவை காரணங்கள். ஏனெனில் புத்தி அஹங்காரத்திற்குக் காரணம். இந்த அஹங்காரம் மனம், புலன்கள், ஐந்து நுண்ணிய பூதங்களுக்குக் காரணம். நுண்ணிய ஐம்பெரும் பூதங்களான பஞ்ச தன்மாத்ரைகள், ஐம்புலன்களுக்குப் புலப்படும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய விஷயங்களுக்குக் காரணம்.

**கேள்வி:** அந்தக்கரணத்தில் புத்தி, அஹங்காரம், சித்தம், மனம் என்ற நான்கு பிரிவுகள் உள்ளதாக மற்ற சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. இங்கு மூன்றைத்தானே பகவான் கூறுகிறார். ஏன்?

**பதில்:** பகவான் சித்தத்தையும், மனதையும் வேறுபட்ட இரு தத்வங்களாகக் கருதவில்லை. ஒரே தத்வத்தின் இரண்டு பெயர் என்று கருதுகிறார். ஸாங்க்யமும், யோக சாஸ்த்ரமும் இவ்வாறே கருதுகின்றன. ஆகவே அந்தக்கரணத்திற்கு நான்கு வகைகள் என்று கூறாமல் மூன்று வகைகளை இங்கே கூறினார்.

**கேள்வி:** புருஷன் என்றால் உணர்வுள்ள ஆத்மா என்று பொருள். அவன் எதிலும் ஒட்டாதவன், பரிசுத்தன் என்று கருதப்படுகிறான். ஆனால், இங்கு புருஷனை ஸுகதுக்கங்களை அனுபவிப்பவன் என்று கூறக் காரணம் என்ன?

**பதில்:** ப்ரக்ருதி என்பது ஜடம். அதனால் அது எதையும் அனுபவிக்க இயலாது. புருஷன் ஒட்டாதவன். அவனிடம் உண்மையில் அனுபவிக்கிறவன் என்ற தன்மை கிடையாது. ஆனால் ப்ரக்ருதியுடன் கொண்ட உறவினால்தான் புருஷன் அனுபவிப்பவனாகத் தோற்றமளிக்கிறான். இந்த ப்ரக்ருதி–புருஷ உறவு அனாதியானது. இதனாலேயே புருஷன் ஸுகதுக்கங்களை அனுபவிப்பதற்குக் காரணமாகிறான், நிமித்தமாகிறான். இதைத் தெளிவாக அடுத்த ச்லோகத்தில், 'ப்ரக்ருதியில் உள்ள புருஷன்தான் ப்ரக்ருதியில் உண்டான குணங்களை அனுபவிக்கிறான்' என்று கூறுகிறார். ப்ரக்ருதியிலிருந்து விடுபட்ட புருஷனிடம் அனுபவிப்பவன் என்ற தன்மை சிறிதுகூட இராது.

**पुरुषः प्रकृतिस्थो हि भुङ्क्ते प्रकृतिजान्गुणान्।**
**कारणं गुणसङ्गोऽस्य सदसद्योनिजन्मसु ॥ २१ ॥**

**புருஷ: ப்ரக்ருதிஸ்தே₂ா ஹி பு₄ங்க்தே ப்ரக்ருதிஜாந்கு₃ணாந் ।**
**காரணம் கு₃ணஸங்கோ₃ऽஸ்ய ஸத₃ஸத்₃யோநிஜந்மஸு ॥ 21 ॥**

**ப்ரக்ருதிஸ்த₂: ஹி** – ப்ரக்ருதியில் இருந்து கொண்டுதான், **புருஷ:** – புருஷன், **ப்ரக்ருதிஜாந்** – ப்ரக்ருதியிலிருந்து உண்டான, **கு₃ணாந்** – முக்குணங்கள் நிறைந்த பொருட்களை, **பு₄ங்க்தே** – அனுபவிக்கிறான். (மேலும்), **கு₃ணஸங்க₃:** – அந்த குணங்களுடைய தொடர்பே, **அஸ்ய** – அந்த ஜீவாத்மா, **ஸத்₃ அஸத்₃ யோநி ஜந்மஸு** – நல்லதும், தீயதுமான பிறவிகளில் பிறப்பதற்கு, **காரணம்** – காரணமாகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ப்ரக்ருதியில் இருந்து கொண்டுதான் புருஷன் ப்ரக்ருதியிலிருந்து உண்டான முக்குணங்கள் நிறைந்த பொருட்களை அனுபவிக்கிறான். மேலும் அந்தக் குணங்களுடைய தொடர்பே அந்த ஜீவாத்மா நல்லதும், தீயதுமான பிறவிகளில் பிறப்பதற்குக் காரணமாகிறது.

**கேள்வி:** இங்கு 'ப்ரக்ருதிஜாந் குணாந்' என்று எவற்றைக் கூறுகிறார்? 'ப்ரக்ருதிஸ்த: புருஷ: புங்க்தே' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ப்ரக்ருதியில் உண்டான ஸத்வம், ராஜஸம், தாமஸம் என்ற முக்குணங்கள், இவற்றின் விளைவுகளான ஒலி, தொடுதல், வடிவம், சுவை, மணம் கொண்ட உலகியல் பொருட்களனைத்தும் ப்ரக்ருதியில் உண்டான குணங்கள். ப்ரக்ருதியிலிருந்து உண்டான (1) ஸ்தூலமான, (2) ஸூக்ஷ்மமான, (3) காரணமான மூன்று உடல்களில் ஏதாவது ஒன்றுடனாவது இந்த ஜீவாத்மாவுக்குத் தொடர்பு உள்ளவரை ஜீவாத்மா ப்ரக்ருதியில் உள்ளவன் என்று அழைக்கப்படுகிறான். ஆத்மாவுக்கு ப்ரக்ருதியுடன் தொடர்பு உள்ளவரை அவன் ப்ரக்ருதியின் குணங்களை அனுபவிக்கிறான். ப்ரக்ருதியிலிருந்து விடுபட்ட பிறகு அவன் போக்தா (அனுபவிப்பவன்) எனப்பட மாட்டான். ஏனெனில் உண்மையில் புருஷனின் ஆத்மஸ்வரூபம் எப்போதும் பற்றற்று இருப்பதேயாம்.

**கேள்வி:** 'ஸதஸத்யோநி' என்றால் என்ன? குணங்களின் சேர்க்கை என்றால் என்ன? ஜீவன் இந்த ஸத், அஸத் பிறவிகளில் பிறப்பதற்கு என்ன காரணம்?

**பதில்:** 'ஸதஸத்யோநி' என்றால் நல்லதும், தீயதுமான பிறவி என்று பொருள். மனிதனில் ஆரம்பித்து அவனுக்கு மேலான தேவர் முதலிய பிறவிகள் எத்தனை உண்டோ அவையெல்லாம் நல்ல பிறவிகள் (ஸத்). மனிதனைவிடத் தாழ்ந்தவையான விலங்கு, பறவை, மரம், கொடி முதலிய எத்தனைப் பிறவிகள் உண்டோ அவை எல்லாம் தீய பிறவிகள் (அஸத்). ஸத்வம், ராஜஸம், தாமஸம் இவற்றுடன் ஜீவனுக்குள்ள தொடர்பு அனாதியாகையால், அதன் விளைவாக உலகியல் பொருட்களில் பற்று ஏற்படுவதுதான் குணங்களுடன் சேர்க்கை ஆகும். எவனுக்கு எந்த குணத்துடன் அல்லது அந்த குணத்தின் விளைவுகளான பொருட்களில் பற்று இருக்கிறதோ, அந்த குணத்திற்கேற்ற வாஸனை ஏற்பட்டு, அதற்கேற்ப அவனுக்கு மறுபிறவி கிடைக்கிறது. ஆகவே இங்கு நல்லதும், தீயதுமான பிறவிக்குக் காரணம் குணங்களுடன் ஒட்டுதல் என்று கூறுகிறார்.

**கேள்வி:** 4/13ல் பகவான் குணங்களுக்கும், வினைகளுக்கும் ஏற்றவாறு நான்கு வர்ணங்கள் என்னால் வகுக்கப்பட்டன என்றும், 8/6ல் கடைசியில் மனிதன் எந்த எண்ணத்துடன் இறக்கிறானோ, அதே பிறவியை அடைகிறான் என்றும் கூறினார். இங்கு நல்லதும், தீயதுமான பிறவிகளுக்குக் காரணம் குணங்களின் சேர்க்கை என்கிறார். இம்மூன்றும் எப்படிப் பொருந்தும்?

**பதில்:** நன்கு ஊன்றிப் பார்த்தால் இந்த மூன்றிலும் பொருந்தாமை ஏதும் இல்லை. ஆலோசித்துப் பார்த்தால் மூன்று இடங்களிலும் வெவ்வேறு விதங்களில் குணங்களின் சேர்க்கை நல்லதும், தீயதுமான பிறவிக்குக் காரணம் என்று கூறப்பட்டுள்ளது. (1) பகவான் நான்கு வர்ணங்களின் அமைப்பை குணங்களுக்கும் கர்மங்களுக்கும் ஏற்றவாறே வகுக்கிறார். இதில் ஜீவன்களுக்கு குணங்களின் தொடர்பு இயல்பான காரணமாகிறது. (2) மனிதன் எவ்விதம் கர்மத்தையும், சேர்க்கையையும் கொள்கிறானோ, அதற்கேற்றபடி அவனுக்கு முக்குணங்களில் ஏதாவது ஒன்றில் சிறப்பான பற்று ஏற்படுகிறது; அந்தக் கர்மங்களுக்கு ஏற்றவாறு மனப்பதிவுகள் (ஸம்ஸ்காரங்கள்) அமைகின்றன. அந்த ஸம்ஸ்காரங்களுக்கு ஏற்றவாறு கடைசியில் நினைவு ஏற்படுகிறது. அந்த நினைவுக்கு ஏற்றவாறு நல்ல அல்லது தீய யோனிகளில் அடுத்த பிறவி கிடைக்கிறது. ஆகவே இவற்றில் குணங்களின் சேர்க்கை அடிப்படைக் காரணமாகிறது. (3) இந்த ச்லோகத்தில் தெளிவாகவே குணச்சேர்க்கையே பிறவிக்குக் காரணம் என்கிறார். ஆகவே மூன்று இடங்களிலும் ஒரே விஷயம்தான் கூறப்பட்டுள்ளது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பொருத்தம்:** இவ்விதம் ப்ரக்ருதியில் உள்ள புருஷனின் ஸ்வரூபத்தை வர்ணித்துவிட்டு, ஜீவாத்மாவும், பரமாத்மாவும் ஒன்றுதான் என்று கூறி, ஆத்மாவின் (புருஷன்) குணங்களைக் கடந்த நிலையை வர்ணிக்கிறார்—

**उपद्रष्टानुमन्ता च भर्ता भोक्ता महेश्वरः।**
**परमात्मेति चाप्युक्तो देहेऽस्मिन्पुरुषः परः॥२२॥**

**உபத்₃ரஷ்டாநுமந்தா ச ப₄ர்தா போ₄க்தா மஹேஶ்வர: ।**

**பரமாத்மேதி சாப்யுக்தோ தே₃ஹேऽஸ்மிந்புருஷ: பர: ॥ 22 ॥**

**புருஷ:** — அந்த புருஷனாகிற ஜீவாத்மா, **அஸ்மிந்** — இந்த, **தே₃ஹே** — தேஹத்தில் (நிலைத்து), **அபி** — இருப்பினும், **பர: (ஏவ)** — (உண்மையில்) பரமாத்மாவே, **உபத்₃ரஷ்டா** — (அவரே) ஸாக்ஷியாக இருப்பதால் 'உபத்ரஷ்டா' என்றும், **ச** — மேலும், **அநுமந்தா** — உண்மையான ஒப்புதல் அளிப்பதால் 'அநுமந்தா' என்றும், **ப₄ர்தா** — எல்லோரையும் தாங்குதலாலும், காப்பதாலும் 'பர்த்தா' என்றும், **போ₄க்தா** — ஜீவரூபமாக இருந்து அனுபவிப்பதால் 'போக்தா' என்றும், **மஹேஶ்வர:** — ப்ரம்மா முதலியவர்களுக்கும் தலைவர் ஆனதால் 'மஹேஶ்வரன்' என்றும், **பரமாத்மா இதி ச** — சுத்த ஸத் சித் ஆனந்தமயமாக இருப்பதால் 'பரமாத்மா' என்றும், **உக்த:** — சொல்லப்படுகிறார்.

அந்த புருஷனாகிற ஜீவாத்மா இந்த தேஹத்தில் இருப்பினும் அது உண்மையில் பரமாத்மாவே. ஸாக்ஷியாக இருப்பதால் 'உபத்ரஷ்டா' என்றும், உண்மையான ஒப்புதல் அளிப்பதால் 'அநுமந்தா' என்றும், எல்லோரையும் தாங்குதலாலும், காப்பதாலும் 'பர்தா' என்றும், ஜீவரூபமாக இருந்து அனுபவிப்பதால் 'போக்தா' என்றும், ப்ரம்மா முதலியவர்களுக்கும் தலைவர் ஆனதால் 'மஹேஶ்வரன்' என்றும், சுத்த ஸத் சித் ஆனந்தமயமாக இருப்பதால் 'பரமாத்மா' என்றும் சொல்லப்படுகிறார்.

**கேள்வி:** இந்த தேஹத்தில் இருக்கக்கூடிய புருஷனாகிற ஜீவாத்மா இந்த தேஹத்திலிருப்பினும் உண்மையில் பரமாத்மாவே என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** க்ஷேத்ரக்ஞனுடைய ஸ்வரூபம் முக்குணங்களுக்கு அப்பாற்பட்டது என்பதைக் குறிப்பிடுகிறார். ப்ரக்ருதியில் உண்டான உடல்களால் ஏற்பட்ட உபாதியினால் சேதனமான ஆத்மாவுக்கு அஞ்ஞானத்தினால் ஜீவத்தன்மை ஏற்பட்டுவிட்டது போலத் தோன்றுகிறது. அந்த க்ஷேத்ரக்ஞன் உண்மையில் இந்த ப்ரக்ருதிக்கு முற்றிலும் அப்பாற்பட்டவனான பரமாத்மாதான். ஏனெனில் அந்த பரப்ரம்மமான பரமாத்மாவுக்கும், க்ஷேத்ரக்ஞனுக்கும் உண்மையில் எந்தவிதமான வேற்றுமையும் கிடையாது. உடல் தொடர்பினால்தான் வேற்றுமை தோன்றுகிறது.

**கேள்வி:** இந்த 'ஆத்மாதான் உபத்ரஷ்டா, அநுமந்தா, பர்தா, போக்தா, மஹேஶ்வரன், பரமாத்மா எனப்படுகிறான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஒரே பரமாத்மா வெவ்வேறு காரணங்களினால் வெவ்வேறு பெயர்களால் அழைக்கப்படுகிறார். உண்மையில் ப்ரம்மத்திடம் எந்த வேறுபாடும் கிடையாது. ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்மமே அந்தர்யாமியாக (ஸாக்ஷியாக) இருந்து எல்லோருடைய நல்லதும், தீயதுமான செயல்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறார். அப்போது அவர் 'உபத்ரஷ்டா'. அந்த அந்தர்யாமியிடமே ஒருவன் ஒரு கார்யத்திற்கு அனுமதி கேட்கிறான். ஒப்புதல் கிடைக்கிறது. அப்போது அந்த அந்தர்யாமி 'அநுமந்தா'. அந்த பரமாத்மாவே விஷ்ணுவின் வடிவில் அகில உலகையும் பரிபாலிக்கிறார். அப்போது அவர் 'பர்தா'. அவரே தேவதைகளின் வடிவில் எல்லா யாகங்களிலும் ஹவிர்பாகம் ஏற்கிறார். எல்லா ப்ராணிகளின் வடிவில் எல்லா போகங்களையும் அனுபவிக்கிறார். அப்போது அவர் 'போக்தா'. அவரே அகில லோகபாலர்களையும், ப்ரம்மா முதலான ஈசுவரர்களையும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நியமித்து அவர்கள் மீது ஆட்சி செலுத்துகிறார். அப்போது அவர் 'மஹேஶ்வரன்'. ஆனால் உண்மையில் அவர் முற்றிலும் எல்லாக் குணங்களையும் கடந்தவர். ஆகவே அவர் 'பரமாத்மா' எனப்படுகிறார். இவ்விதம் ஒரே பரப்ரம்ம பரமாத்மாவே வெவ்வேறு காரணங்களால் வெவ்வேறு பெயர்களால் அழைக்கப்படுகிறார். உண்மையில் அவரிடம் ஒரு வேற்றுமையும் இல்லை.

பொருத்தம்: இவ்விதம் குணங்களோடு கூடிய ப்ரக்ருதி, புருஷன் இவற்றின் ஸ்வரூபத்தை வர்ணித்துவிட்டு, அவர்களை உள்ளபடி அறிவதன் பயனைக் கூறுகிறார்—

**य एवं वेत्ति पुरुषं प्रकृतिं च गुणैः सह।**
**सर्वथा वर्तमानोऽपि न स भूयोऽभिजायते॥ २३॥**

**ய ஏவம் வேத்தி புருஷம் ப்ரக்ருதிம் ச கு₃ணை: ஸஹ ।**
**ஸர்வதா₂ வர்தமானோऽபி ந ஸ பூ₄யோऽபி₄ஜாயதே ॥ 23 ॥**

**ஏவம்** – இவ்வாறு, **புருஷம் ச** – புருஷனையும், **கு₃ணை: ஸஹ** – குணங்களோடு கூடிய, **ப்ரக்ருதிம்** – ப்ரக்ருதியையும், **ய:** – எந்த மனிதன், **வேத்தி** – தத்வரீதியாக அறிவானோ, **ஸ:** – அவன், **ஸர்வதா₂** – எல்லாவிதங்களிலும், **வர்தமாந: அபி** – செய்யவேண்டிய கர்மங்களைச் செய்து கொண்டிருந்தால்கூட, **பூ₄ய:** – மறுபடியும், **ந அபி₄ஜாயதே** – பிறப்பதில்லை.

இவ்வாறு புருஷனையும் குணங்களோடு கூடிய ப்ரக்ருதியையும் எந்த மனிதன் தத்வரீதியாக அறிவானோ அவன் எல்லாவிதங்களிலும் செய்யவேண்டிய கடமைகளைச் செய்து கொண்டிருந்தால்கூட மறுபடியும் பிறப்பதில்லை.

**கேள்வி:** இவ்விதம் புருஷனையும் குணங்களோடுகூடிய ப்ரக்ருதியையும் தத்வரீதியாக அறிவது என்றால் என்ன?

**பதில்:** இந்த அத்யாயத்தில் எவ்விதம் புருஷனின் ஸ்வரூபத்தையும், ப்ரபாவத்தையும் வர்ணிக்கிறாரோ, அதன்படி நன்கு அறிந்து கொள்வதுதான் இங்கே குறிப்பிடப்படுவது. அதாவது எத்தனையெத்தனை க்ஷேத்ரக்ஞர்கள் தனித்தனியாகத் தோன்றுகிறார்களோ, அவர்கள் எல்லோரும் ஒரே பரப்ரம்மமான பரமாத்மாவைத் தவிர வேறான ஸ்வரூபங்கள் அல்லர்; பரமாத்மாவேதான்; ப்ரக்ருதியின் தொடர்பினால் க்ஷேத்ரக்ஞர்கள் வெவ்வேறானவர்கள் போன்ற தோற்றம் உண்டாகிறது. உண்மையில் வேற்றுமையே கிடையாது. அந்தப் பரமாத்மா என்றும் உள்ளவர், தூய்மையானவர், அறிவு வடிவானவர், (முக்தர்) விடுபட்டவர், அழிவற்றவர், ப்ரக்ருதிக்கு முற்றிலும் அப்பாற்பட்டவர். இந்த விஷயத்தை ஐயமற உண்மையாக அறிந்து அந்த ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவிடம் என்றும் நிலைபெற்றிருப்பதே, புருஷனைத் தத்வரீதியாக அறிந்து கொள்வது. முக்குணங்கள் ப்ரக்ருதியில் உண்டானவை. இந்த அகில உலகும் ப்ரக்ருதியின் பரவிய நிலை. அது அழிவது, ஜடம், நொடியில் நசித்துப் போவது, அநித்யமானது. இந்த ரஹஸ்யத்தை அறிந்து கொள்வதே குணங்களோடு கூடிய அதன் ப்ரக்ருதியை தத்வரீதியாக அறிந்து கொள்வது ஆகும்.

**கேள்வி:** 'ஸர்வதா வர்தமாந:' என்பதோடு 'அபி' என்று சேர்த்துக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கு மேலே சொன்னபடி புருஷனையும், குணங்களோடு கூடிய ப்ரக்ருதியையும் அறிபவன் அந்தணனாயினும், க்ஷத்ரியனாயினும், வைசியனாயினும், நான்காம் வர்ணத்தவனாயினும், அந்தந்த வர்ணம் மற்றும் ப்ரம்மசர்யம் முதலிய ஆசிரமங்களுக்குரிய சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட எல்லாக் கடமைகளையும் உரிய முறையில் ஆற்றிக் கொண்டு இருந்தால்கூட உண்மையில் அவன் எதுவும் செய்வதில்லை. ஆகவே, அவனுக்கு மறுபிறவி கிடையாது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ஸர்வதா வர்தமாநஃ அபி' என்பதற்குத் தடுக்கப்பட்ட பாவகர்மங்களைச் செய்தாலும் என்று பொருள் கொண்டு, அவனுக்கும் மறுபிறவி கிடையாது என்று சொன்னால் என்ன தவறு?

**பதில்:** ஆத்ம தத்வத்தை அறிந்த ஞானியிடம் காமம், க்ரோதம் முதலிய தோஷங்கள் இரா (5/26). ஆகவே அவர்கள் (சாஸ்த்ரங்களால்) தடுக்கப்பட்ட தீய செயல்களைச் செய்வதற்கு வாய்ப்பே இல்லை. ஆகவே அவர்கள் செய்வதெல்லாம் உலகத்தாருக்கு எடுத்துக்காட்டாக அமைகின்றன (3/21). 'எவ்வகையிலும் கடமைகளைச் செய்து கொண்டிருந்தபோதிலும்கூட' என்பதற்கு 'தீச்செயல்களைப் புரிந்தாலும்' என்று பொருள் கொள்வது சரியன்று. ஏனெனில் பாவச் செயல்களில் மனிதன் ஈடுபடுவதற்குக் காரணம் காமம், கோபம் முதலிய தீய குணங்கள். அர்ஜுனன் கேட்டபோது பகவான் 3/37ல் இதைத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்.

**கேள்வி:** இவ்விதம் ப்ரக்ருதியையும், புருஷனையும் தத்வரீதியாக அறிந்து கொள்பவனுக்கு மறுபிறவி ஏன் கிடையாது?

**பதில்:** ப்ரக்ருதி, புருஷன் இவர்களின் தத்வத்தை அறிந்து கொண்டவுடனேயே புருஷனுக்கு ப்ரக்ருதியின் தொடர்பு அற்றுப் போகிறது. ஏனெனில் ப்ரக்ருதிக்கும், புருஷனுக்கும் உள்ள தொடர்பு உண்மையல்லாதது; கனவு போன்றது; அஞ்ஞானத்தினாலேயே ஏற்பட்டது என்று ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. ப்ரக்ருதி, புருஷன் இவற்றின் முழுமையான ஞானம் ஏற்படும்வரை புருஷனுக்கு, ப்ரக்ருதியுடனும் அதன் குணங்களுடனும் உள்ள உறவு நீடிக்கிறது. திரும்பத் திரும்பப் பல்வேறு யோனிகளில் பிறவிகள் ஏற்படுகின்றன (13/21). ஆகவே இவற்றைத் தத்வரீதியாகப் புரிந்து கொண்ட பிறகு மறுபிறவி ஏற்படாது.

**பொருத்தம்:** இவ்விதம் குணங்களோடு கூடிய ப்ரக்ருதி, புருஷர்களுடைய ஞானத்தின் பெருமையைக் கேட்ட பிறகு, இந்த ஞானம் எப்படிப் பிறக்கும் என்ற ஆவல் தோன்றுகிறது. ஆகவே அடுத்த இரண்டு ச்லோகங்களால் வெவ்வேறு தகுதியுள்ளவர்களுக்குத் தத்வ ஞானத்திற்குரிய வெவ்வேறு ஸாதனங்களை உபதேசிக்கிறார்—

**ध्यानेनात्मनि पश्यन्ति केचिदात्मानमात्मना ।**
**अन्ये साङ्ख्येन योगेन कर्मयोगेन चापरे ॥ २४ ॥**

**த்₄யாநேநாத்மநி பஶ்யந்தி கேசித₃ாத்மாநமாத்மநா ।**
**அந்யே ஸாங்க்₂யேந யோகே₃ந கர்மயோகே₃ந சாபரே ॥ 24 ॥**

**ஆத்மாநம்** – அந்த பரமாத்மாவை, **கேசித்** – சில மனிதர்கள், **ஆத்மநா** – தூய்மை யடைந்த நுண்ணிய புத்தியினால், **த்₄யாநேந** – த்யானத்தின் மூலமாக, **ஆத்மநி** – இதயத்தில், **பஶ்யந்தி** – பார்க்கிறார்கள். **அந்யே** – மற்றும் சிலர், **ஸாங்க்₂யேந யோகே₃ந** – ஞானயோகத்தின் மூலமாகவும், **அபரே** – வேறு சிலர், **கர்மயோகே₃ந ச** – கர்மயோகத்தின் மூலமாகவும், (**பஶ்யந்தி** – பார்க்கிறார்கள்) (அடைகிறார்கள்).

அந்த பரமாத்மாவை சில மனிதர்கள் தூய்மையடைந்த நுண்ணிய புத்தியினால் த்யானத்தின் மூலமாக இதயத்தில் பார்க்கிறார்கள். மற்றும் சிலர் ஞானயோகத்தின் மூலமாகவும், வேறு சிலர் கர்மயோகத்தின் மூலமாகவும் பார்க்கிறார்கள் (அடைகிறார்கள்).

**கேள்வி:** இங்கு 'த்யாநம்' என்றால் என்ன? அதன் மூலம் 'ஆத்மாவினால் ஆத்மாவில் ஆத்மாவைப் பார்ப்பது' என்றால் என்ன?

**பதில்:** 6/11,12,13களில் கூறப்பட்ட முறைப்படி தூய்மையான, தனிமையான இடத்தில் தனக்கேற்ற (வசதியான) ஆஸனத்தில் அசையாமல் அமர்ந்து, புலன்களை அதன் போகப்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொருட்களிலிருந்து மீட்டு, மனதை வசப்படுத்தி, பரமாத்மாவைத் தவிர மற்ற எல்லாவற்றையும் மறந்து இடைவிடாது பகவானைச் சிந்திப்பதே 'த்யாநம்' ஆகும். இவ்விதம் த்யானம் செய்து கொண்டே இருப்பதால் புத்தி தூய்மை பெறுகிறது. அந்தத் தூய, கூரிய புத்தியினால் (ஆத்மாவினால்), இதயத்தில் (ஆத்மாவில்) ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்மமான பரமாத்மாவை (ஆத்மாவை) நேரில் அனுபவிப்பதுதான் 'த்யானத்தின் மூலம் ஆத்மாவினால் ஆத்மாவில் ஆத்மாவைப் பார்ப்பது' என்பதன் பொருள் ஆகும்.

**கேள்வி:** *த்யானத்தின் மூலம் பரமாத்மாவை அடையலாம் என்றால் ஸகுண பரமாத்மாவை த்யானிப்பதாலா, நிர்குண ப்ரம்மத்தையா? உருவமுள்ளதையா, உருவமற்றதையா? த்யானிப்பவன் வேறு, த்யானிக்கப்படும் பரமாத்மா வேறு என்ற முறையிலா? நானே ப்ரம்மம் என்று வேற்றுமையற்ற முறையிலா? இதன் பயனாகக் கிட்டும் ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மநிலை வேற்றுமை உள்ள நிலையிலா, அல்லது வேற்றுமையற்ற (அபேத) நிலையிலா? அதாவது இதன் பயனான பரப்ரம்மநிலை பரம்பொருளுடன் ஸாதகன் ஒன்றி நிற்பதா? இல்லையேல், த்யானம் செய்பவன் தனித்து இருக்கும் நிலையா?*

**பதில்:** இங்கு 22வது ச்லோகத்தில் பரமாத்மா, ஆத்மா என்ற இரண்டும் ஒன்றுதான் என்று கூறியாகிவிட்டது. அதற்கேற்றவாறு புருஷனின் ஸ்வரூபமான ஞானம் என்ற பயனைப் பெறுவதற்கான வெவ்வேறு ஸாதனங்கள் கூறப்பட்டன. ஆகவே இங்கு இவ்விடத்திற்கேற்ப நிர்குணமான, உருவமற்ற பரப்ரம்மத்தை, அபேத உணர்வுடன், தானே அதுவாக த்யானம் செய்யும் முறைதான் கூறப்படுகிறது. அதன் பயனும் தன்னைத் தவிர வேறல்லாத பரமாத்மாவை அடைவதே ஆகும். ஆயினும் தான் வேறு பரமாத்மா வேறு என்ற பேத உணர்வுடன் ஸகுணமான-உருவமுள்ள அல்லது ஸகுண-உருவமற்ற பரமாத்மாவை த்யானம் செய்யும் ஸாதகன்கூட இவ்விதப் பயனை விரும்பினால், அவனும் தன்னைத் தவிர வேறல்லாத (ஐக்யநிலை) நிர்குண-நிராகாரமான ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தை அடைவது ஸாத்யமாகும்.

**கேள்வி:** *'ஸாங்க்யேந', 'யோகேந' என்ற இரண்டு சொற்கள் இரண்டு தனிப்பட்ட ஸாதனங்களைக் கூறுகின்றனவா அல்லது ஒரே ஸாதனத்தைக் குறித்து அடைமொழியுடன் கூறுகிறதா? ஒரே ஸாதனத்தைக் குறிக்குமானால் எதை? அதன் மூலம் ஆத்மாவைக் காண்பது எப்படி?*

**பதில்:** இங்கு இருசொற்களும் ஒரே ஸாங்க்ய யோகத்தைக் குறிப்பிடுகின்றன. இதன் விளக்கம் 2/11 முதல் 2/30 வரை விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. தவிர 5/8,9,13வது ச்லோகங்களிலும், 14/19லும் இன்னும் மற்ற இடங்களிலும் இதைப் பற்றிச் சொல்ல வேண்டிய ஸந்தர்பங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. உலகில் உள்ள பொருட்கள் அனைத்துமே கானல் நீர் போலவும், கனவுப் படைப்பு போலவும் மாயைதான். ஆகவே ப்ரக்ருதியின் விளைவான குணங்கள் யாவும் குணவிளைவுகளில் இயங்குகின்றன என்று புரிந்து கொண்டு மனம், உடல், புலன்களின் மூலம் நடைபெறுகின்ற எல்லாச் செயல்களிலும், 'தான் கர்த்தா' என்ற செருக்கின்றி, எங்கும் நிறை ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவிடம் ஒன்றிய நிலையில் என்றும் நிலைத்திருப்பதும், அந்த ஒன்றான ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவைத் தவிர வேறொன்றிற்கும் 'தனிப்பட்ட இருப்பு' இருப்பதாக மதியாமல் இருப்பதும்தான், ஸாங்க்யயோக ஸாதனை ஆகும். இதன் மூலம் ஆத்மா, பரமாத்மா இரண்டும் ஒன்றே என்ற நேர் அனுபவம் பெற்று, ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மமாகவே ஆகிவிடுவதுதான் ஸாங்க்யயோகத்தின் மூலம் ஆத்மாவில் ஆத்மாவின் தர்சனம் பெறுவதாகும்.

ஸாங்க்யயோகத்திற்குரிய இந்த ஸாதனை, 'ஸாதன சதுஷ்டயம்' என்ற நான்கு ஸாதனங்கள் கைவரப் பெற்றவர்களுக்கே எளிதாக அமையும்.

**கேள்வி:** *அந்த நான்கு ஸாதனங்கள் (ஸாதன சதுஷ்டயம்) யாவை?*

**பதில்:** விவேகம், வைராக்யம், ஷட்ஸம்பத்தி (ஆறுபண்புகள்), மோக்ஷத்தில் நாட்டம் – இவை நான்குமே அந்த நான்கு ஸாதனங்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



## 1. விவேகம்

இவற்றில் முதல் ஸாதனம் விவேகம். ஸத் (உள்ளது), அஸத் (இல்லாதது), நித்யம் (என்றும் உள்ளது), அநித்யம் (அழிவது) என்று பொருட்களைப் பகுத்தறிவதே விவேகம். விவேகம் இவற்றை நன்கு பிரித்துக் காட்டும். அதாவது மெய்ப்பொருளான பரம்பொருளை உள்ளபடியே அறிந்து அனுபவம் பெறுவதே 'விவேகம்' எனப்படும். எல்லா நிலைகளிலும் ஒவ்வொரு பொருளிலும், ஒவ்வொரு கணமும் ஆத்மா எது, ஆத்மா அல்லாதது எது என்று பிரித்து ஆராய்ந்து கொண்டே இருந்தால் இந்த விவேகம் கைகூடும். விவேகம் நன்றாக ஏற்பட்டுவிட்டால் ஸத்-அஸத், நித்யம்-அநித்யமான பொருட்களை, பாலில் பாலையும், நீரையும் பிரித்தறிவதுபோலப் பிரித்தறியும் நேரிடையான அனுபவம் ஏற்படத் தொடங்கும்.

## 2. வைராக்யம்

இதற்கு அடுத்த ஸாதனம் வைராக்யம். விவேகத்தினால் ஸத்-அஸத், நித்யம்-அநித்யம் இவற்றின் பாகுபாட்டை அறிந்து கொண்டபின்னர், அஸத், அநித்யம் இவற்றில் ஈடுபாடு தானாகவே நீங்கிவிடும். இதற்குத்தான் 'வைராக்யம்' என்று பெயர். மனதில் போகங்களின் ஆசையை வைத்துக் கொண்டே மேற்பார்வைக்கு உலகியலில் வெறுப்பும், அருவருப்பும் காட்டுவது வைராக்யமன்று. வைராக்யமென்றால் எதிலும் ஆசை அறவே இருக்கக்கூடாது. உள்ளத்தின் அடித்தளத்தில்கூடப் பற்றற்ற தன்மை இருத்தலே வைராக்யம் எனப்படும். உண்மையான வைராக்யம் படைத்தவருக்கு ப்ரம்மலோகம் வரையிலான போகங்கள் அனைத்திலும் ஆசையோ, பற்றோ சிறிதுகூட இரா. அஸத்தானவையும், அநித்யமானவையுமான பொருட்களை விலக்கி இடைவிடாது ஸத்யமானதும், நித்யமானதுமான பரம்பொருளில் ஈடுபட்டிருப்பர். இதுவே வைராக்யம். இப்படி வைராக்யம் ஏற்படவில்லையென்றால், விவேகத்தில் குறை உள்ளது என்று கருதவேண்டும். விவேகம் முழுமையாக ஏற்பட்டுவிட்டால் வைராக்யம் நிச்சயமாக ஏற்பட்டுவிடும்.

## 3. ஷட்ஸம்பத்தி (ஆறுபண்புகள்)

விவேகத்தினாலும், வைராக்யத்தினாலும் ஸாதகனுக்கு ஆறுவிதமாகப் பகுத்துச் சொல்லக்கூடிய மிகச்சிறந்த மனப்பண்புகள் அமையும். இந்த அரும்பண்புகள் முழுமையாகக் கைகூடாவிட்டால், அதற்குக் காரணம் விவேகம், வைராக்யம் இவற்றின் குறைவுதான் என்று உணரவேண்டும். விவேகமும், வைராக்யமும் முழுமையாக விட்டால் ஸாதகனுக்கு இந்தப் பண்புகள் அமைவது எளிது. இதைத்தான் 'ஷட்ஸம்பத்தி' என்பர். இது ஆறு பிரிவுகள் கொண்டது.

*1) ஶமம்* – மனதை முழுமையாக அடக்கி அசையாமல் அமைதியாக இருக்கச் செய்வது ஶமம். விவேகமும், வைராக்யமும் கனிந்துவிட்டால் இயல்பாகவே மனம் அடங்கிச் சலனமற்று அமைதி பெறும்.

*2) தமம்* – புலன்களை முழுமையாக அடக்கி உள்ளே இழுத்துக் கொண்டு, அவை போகப் பொருட்களில் சுவை காணாமற்செய்வது தமம் எனப்படும்.

*3) உபரதி* – போகப் பொருட்களிலிருந்து உள்ளம் ஓய்ந்து ஒதுங்குதல் உபரதி ஆகும். மனதிற்கும், புலன்களுக்கும் போகப்பொருட்களின் சுவையின் அனுபவம் இல்லாமல் போய்விட்டால் துய்ப்பதை நிறுத்திவிட்டால் இயல்பாகவே ஸாதகனுக்கு போகப் பொருட்களின்பால் மனம் ஓய்ந்துவிடும். வெளிப்படையாக ஓய்வது மட்டுமன்று, மனதின் அடித்தளத்திலிருந்தும் இயல்பாக போகப் பொருட்களிலிருந்து ஓய்வு பெறவேண்டும். பெறுதற்கரிதான ப்ரம்மலோகம் வரை உள்ள ஸுகபோகங்களிலும்கூட மனோவ்ருத்தி செல்லாமல் முற்றிலுமாக மனம் ஓய்ந்திருப்பதற்கு உபரதி என்று பெயர்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



*4) திதிக்ஷா* – இரட்டைகளைப் பொறுத்துக் கொள்வது திதிக்ஷா. தட்ப-வெப்பம், ஸுக-துக்கங்கள், மான-அவமானம் ஆகிய இரட்டைகளைப் பொறுத்துக் கொள்வதும் திதிக்ஷா எனப்படும். ஆயினும் விவேகம், வைராக்யம், சமம், தமம், உபரதி இவை அமைந்த பிறகு ஏற்படும் திதிக்ஷ முற்றிலும் வேறுபட்டதாகவும் தனிச்சிறப்புடையதாகவும் இருக்க வேண்டும். உலகியலில் மேலே சொன்ன இரட்டைகளுக்கு அழிவும் கிடையாது, யாரும் இவற்றிலிருந்து தப்பவும் முடியாது. எப்படியேனும் இவற்றைப் பொறுப்பதும் உயரியது. அதைக்காட்டிலும் இப்படி நேரக்கூடிய இரட்டைகளினின்றும் முற்றிலுமாக விலகி நின்று, ஸாக்ஷியாகி இவற்றைக் காண்பது மிகவும் உயர்ந்த நிலை. இதுவே உண்மையான திதிக்ஷ. இது கை வந்துவிட்டால் தட்பவெப்பமோ, மானஅவமானமோ அவனை அசைக்க முடியாது.

*5) ச்ரத்தை* – ஆத்மா உள்ளது என்பதில் நேரில் கண்டதுபோல் ஏற்படும் பூர்ண நம்பிக்கைதான் ச்ரத்தை. முதலில் சாஸ்த்ரம், குரு, ஸாதனைகள் முதலியவற்றில் நம்பிக்கை ஏற்படவேண்டும். அதன் பிறகு ஆத்மாவில் நம்பிக்கை வளரும். ஆனால் ஆத்மஸ்வரூபத்தில் பூரணமாக நம்பிக்கை வளரும்வரை புத்தி ஒன்றேயான, மாசற்ற, பூர்ணமான, உருவமற்ற, நிர்குணமான ப்ரம்மம் என்ற லக்ஷ்யத்தில் நிலைப்பது ஸாத்யமில்லை.

*6) ஸமாதானம்* – மனதும், புத்தியும் பரமாத்மாவிடம் முழுமையாக ஒருமுகப்பட்டு விடுவது ஸமாதானம். அர்ஜுனன் தம் ஆசார்யர் த்ரோணரின் பரீக்ஷைக்கு உட்பட்டபோது மற்றெதையும் அவர் கவனிக்காது, மரத்தில் வைக்கப்பட்டிருந்த பொம்மைப் பறவையின் கழுத்தை மட்டும் குறி வைத்ததுபோல மனதிற்கும், புத்திக்கும் இடைவிடாது, ஒன்றேயான இலக்காகிய ப்ரம்மதர்சனம் ஏற்பட்டுக் கொண்டே இருப்பது ஸமாதானம் ஆகும். இவை ஆறும் ஷட்ஸம்பத்துக்கள் (பண்புகள்) ஆகும்.

## 4. மோக்ஷத்தில் நாட்டம்

இவ்விதம் விவேகம், வைராக்யம், மற்றும் ஆறு பண்புகளை அடைந்த பிறகு ஸாதகன் இயற்கையாகவே அவித்யையின் பிடியிலிருந்து விடுபட விரும்புகிறான். எல்லாப் பக்கங்களிலிருந்தும் மனதை மீட்டு வேறெதிலும் மனதைச் செலுத்தாமல், பரமாத்மா ஒருவரை நோக்கியே மனதைச் செலுத்துவான். இவ்விதம் பரமாத்மாவைக் குறித்து மனம் வேகமாக ஓடத் தலைப்படுதலே அதாவது தீவிர ஸாதனையே உள்ளத்தின் ஆழத்தில் உள்ள பரமாத்மாவை அடைந்துவிட வேண்டுமென்ற அவனது மிகவும் தீவிரமான ஆசையைக் காட்டுவது. இதுவே முமுக்ஷுத்வம்.

**கேள்வி:** *இங்குக் கூறப்படும் கர்மயோகம் எது? அதன் மூலம் ஆத்மாவில் ஆத்மாவை தர்சிப்பது எப்படி?*

**பதில்:** *2/40* முதல் அத்யாயம் முடிவுவரை பயனுடன் கூறப்பட்ட ஸாதனைதான் கர்மயோகம். அதாவது பற்றையும், செய்த கர்மத்தின் பயனையும் அறவே துறந்து, ஸித்தி, அஸித்தி இவற்றில் ஸமபாவனையுடன், சாஸ்த்ர முறைப்படி, நிஷ்காமமாகத் தனது வர்ண, ஆசிரமத்திற்கு ஏற்றவாறு விதிக்கப்பட்ட எல்லாக் கடமைகளையும் ஆற்றுவது கர்மயோகம். இதன் மூலம் ஸத் சித் ஆனந்தமயமான, பரப்ரம்மமான, பரமாத்மாவிடம் வேறுபாடின்றி ஒன்றிவிடுவதுதான் கர்மயோகம் மூலமாக ஆத்மாவில் ஆத்மாவை தர்சிப்பதாகும்.

**கேள்வி:** *கர்மயோக ஸாதனையின்போது ஸாதகன் தன்னைப் பரமாத்மாவிலிருந்து வேறாக நினைக்கிறான். ஆகவே, அவனுக்குத் தன்னிலிருந்து வேறாகத்தானே ப்ரம்ம தர்சனம் கிடைக்கவேண்டும்? ஒன்றிய ப்ரம்மநிலையை எப்படி இங்கே கூறுகிறார்?*

**பதில்:** ஸாதனை வேளையில் தான் வேறு, ப்ரம்மம் வேறு என்ற பேதபாவனை இருந்தபோதிலும் எந்த ஸாதகன் பயனில் வேற்றுமை கருதுவதில்லையோ, அவனுக்குத் தன்னைத் தவிர வேறில்லாத ப்ரம்மமாகவே ஆகும் நிலை ஏற்படும். இங்குக் கூறப்படும் ஸாதனைகள் அனைத்துமே அபேத பாவனையுடன் ப்ரம்மஞானம் ஏற்படுவது பற்றித்தான். ஆகவே கர்மயோகத்தின் மூலமும் அபேத பாவனையில் பரப்ரம்மநிலையை அடையலாம் என்று கூறப்பட்டது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



अन्ये त्वेवमजानन्तः श्रुत्वान्येभ्य उपासते।
तेऽपि चातितरन्त्येव मृत्युं श्रुतिपरायणाः॥ २५॥

**அந்யே த்வேவமஜாநந்த: ஶ்ருத்வாந்யேப்₄ய உபாஸதே ।**
**தேऽபி சாதிதரந்த்யேவ ம்ருத்யும் ஶ்ருதிபராயணா: ॥ 25 ॥**

**து** – ஆனால், **அந்யே** – வேறு சிலர் (அதாவது மந்த புத்தியுள்ளவர்கள்), **ஏவம்** – இவ்வாறு, **அஜாநந்த:** – அறியாமல், **அந்யேப்₄ய:** – தத்வத்தை அறிந்த பெரியோர் களிடமிருந்து, **ஶ்ருத்வா** – கேட்டு (அதற்கேற்ப), **உபாஸதே ச** – உபாஸனையும் செய்கிறார்கள். **தே ஶ்ருதிபராயணா: அபி** – அவ்வாறு கேட்டறிந்த உபதேசத்தையே மேலான கதியாகக் கொண்டவர்களும், **ம்ருத்யும்** – மரணரூபமாகிய ஸம்ஸாரக் கடலை, **அதிதரந்தி ஏவ** – ஸந்தேஹமின்றிக் கடக்கிறார்கள்.

ஆனால் வேறு சிலர் அதாவது மந்த புத்தியுள்ளவர்கள் இவ்வாறு அறியாமல் தத்வத்தை அறிந்த பெரியோர்களிடமிருந்து கேட்டு அதற்கேற்ப உபாஸனையும் செய்கிறார்கள். அவ்வாறு கேட்டறிந்த உபதேசத்தையே மேலான கதியாகக் கொண்டவர்களும் மரணரூபமாகிய ஸம்ஸாரக் கடலை ஸந்தேஹமின்றிக் கடக்கிறார்கள்.

**கேள்வி:** இங்கு 'து' (ஆனால்) என்பதன் கருத்து என்ன?

**பதில்:** முன் ச்லோகத்தில் கூறப்பட்ட ஸாதகர்களை விடுத்துப் பிற ஸாதகர்களைக் கூறுகிறார் என்று பொருள். முன்பு கூறப்பட்ட ஸாதனைகளை நன்கு அறிந்து பயிலாதவர்கள் எப்படிக் கரையேறுவார்கள் என்பதற்கு இந்த ச்லோகத்தில் பதில் கூறுகிறார்.

**கேள்வி:** 'ஏவம் அஜாநந்த:' என்கிற அடைமொழியுடன் 'அந்யே' எனும் சொல் யாரைக் குறிக்கிறது? அவர்கள் மற்றவர்களிடம் கேட்டு உபாஸிக்கிறார்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** புத்தி கூர்மை இல்லாத காரணத்தால் முன்பு கூறப்பட்ட த்யானயோகம், ஸாங்க்யயோகம், கர்மயோகம் இவற்றில் ஏதாவது ஒன்றைக்கூட நன்கு புரிந்து கொள்ள முடியாதவர்களை 'அந்யே' என்ற சொல் குறிக்கிறது.

ஜபாலா என்பவளுடைய குமாரன் ஸத்யகாமன். அவன் ப்ரம்மத்தை அறியும் விருப்பத்துடன் கௌதமகோத்ரத்தைச் சார்ந்த 'ஹாரித்ருமதர்' என்ற மஹரிஷியிடம் சென்றான். அவனிடம் உரையாடியபிறகு குருநாதர் மிகவும் மெலிந்த பலவீனமான நானூறு பசுக்களைப் பொறுக்கி அவனிடம் ஒப்படைத்து 'நல்ல பிள்ளாய்! இப்பசுக்களின் பின்னே போ' என்று ஆணையிட்டார். குருவின் ஆணையை ஏற்று மிகுந்த நம்பிக்கையுடனும், உற்சாகத்துடனும், மகிழ்ச்சியுடனும் நானூறு பசுக்களையும் காட்டிற்கு ஓட்டிச் சென்றான். அவன் புறப்படும் சமயம் குருவிடம், 'இவற்றை ஆயிரமாகப் பெருக்கின பிறகுதான் திரும்புவேன்' என்று கூறினான். புல்லும், நீரும் மண்டிக்கிடந்த, ஆபத்தொன்றுமில்லாத காட்டில் அவற்றை மேய்த்து ஆயிரமாகப் பெருக்கிக் கொண்டு திரும்பினான். திரும்பி வரும் வழியிலேயே அவனுக்கு ப்ரம்மஞானம் ஏற்பட்டுவிட்டது (சாந்தோக்ய உப. 4/4–9). இவ்விதம் த்த்வமறிந்த ஞானிகளான பெரியோர்களின் ஆணையை ஏற்று மிகுந்த நம்பிக்கையுடனும், நேயத்துடனும் அவர் சொன்னபடி கேட்டு நடத்தலே பிறரிடம் கற்று உபாஸித்தலாகும்.

**கேள்வி:** 'ஶ்ருதிபராயணா:' என்பதன் கருத்து என்ன? 'அபி' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கேட்டறிவதில் கவனமாக இருந்து, அதன்படி ஸாதனை புரிவதில் ஊக்கமும், அன்பும், ப்ரேமையும் கொண்டு ஒருமுனைப்புடன் ஈடுபடுபவர்களை 'ஶ்ருதிபராயணா:' என்கிறார். குறைமதியாளர்கள் கூட, இவ்விதம் பிறரிடம் கேட்டறிந்து உபாஸனை புரிந்து மரணத்தைத் தாண்டிவிடுவார்கள். இதில் சிறிதும் ஐயமில்லை என்றால் முன் கூறியவாறு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மூன்றுவித யோக ஸாதனைகளில் ஏதாவது ஒன்றைக் கடைப்பிடிக்கும் ஸாதகர்கள் மரணத்தைக் கடப்பார்கள் என்று சொல்லவும் வேண்டுமா?

**கேள்வி:** 'ம்ருத்யும் அதிதரந்தி' என்றால் என்ன கருத்து?

**பதில்:** ம்ருத்யு என்பது திரும்பத் திரும்ப ஏற்படும் பிறப்பு-இறப்பு வடிவான ஸம்ஸாரத்தைக் குறிக்கும். மேலே கூறப்பட்ட ஸாதனை புரிபவர்கள் பிறப்பு, இறப்பு என்ற துக்கமயமான ஸம்ஸாரக் கடலிலிருந்து மீண்டு, திரும்பப் பிறப்பு இல்லை என்னும்படியாக ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவை அடைவார்கள். 23வது ச்லோகத்தில் இதைத்தான் மறுபடியும் பிறக்க மாட்டார்கள் என்றும், 24வது ச்லோகத்தில் ஆத்மாவில் ஆத்மாவை தர்சிப்பார்கள் என்றும் கூறினார். அதைத்தான் இங்கே 'மரணரூபமாகிய ஸம்ஸாரக் கடலைக் கடப்பார்கள்' என்று கூறுகிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் பரமாத்மாவைப் பற்றிய தத்வஞானத்திற்குரிய வெவ்வேறு ஸாதனங்களைக் கூறிவிட்டு, மூன்றாவது ச்லோகத்தில் 'யாத்ருக்' என்ற சொல்லால் 'க்ஷேத்ரத்தின் ஸ்வபாவத்தைக் கேள்' என்று கூறியதைத் தொடர்ந்து, பகவான் அடுத்த இரண்டு ச்லோகங்களால் க்ஷேத்ரம் உண்டாகி அழியக்கூடியது என்று அதன் இயல்பைக் கூறி, ஆத்மாவின் உண்மையான தத்வத்தை அறிந்தவனைப் புகழ்ந்து பேசுகிறார்—

**यावत्सञ्जायते किञ्चित्सत्त्वं स्थावरजङ्गमम्।**
**क्षेत्रक्षेत्रज्ञसंयोगात्तद्विद्धि भरतर्षभ॥ २६॥**

**யாவத்ஸஞ்ஜாயதே கிஞ்சித்ஸத்த்வம் ஸ்த₂ாவரஜங்க₃மம் ।**
**க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞஸம்யோக₃ாத்தத்₃வித்₃தி₄ ப₄ரதர்ஷப₄ ॥ 26 ॥**

**ப₄ரதர்ஷப₄** – அர்ஜுன! **யாவத் கிஞ்சித்** – எத்தனை எத்தனை, **ஸ்த₂ாவர–ஜங்க₃மம்** – அசைவன, அசையாதன ஆகிய, **ஸத்த்வம்** – ப்ராணி வர்க்கம், **ஸஞ்ஜாயதே** – உண்டாகின்றதோ, **தத்** – அவையனைத்தும் (நீ), **க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ ஸம்யோக₃ாத்** – க்ஷேத்ரம் (அபராப்ரக்ருதி), க்ஷேத்ரக்ஞன் (பராப்ரக்ருதி) இவர்களுடைய சேர்க்கையால் உண்டானவையென, **வித்₃தி₄** – அறிந்து கொள்.

அர்ஜுன! எத்தனை எத்தனை அசைவன, அசையாதன ஆகிய ப்ராணி வர்க்கம் உண்டாகின்றனவோ அவையனைத்தும் நீ, க்ஷேத்ரம் (அபராப்ரக்ருதி), க்ஷேத்ரக்ஞன் (பராப்ரக்ருதி) இவர்களுடைய சேர்க்கையால் உண்டானதென அறிந்து கொள்.

**கேள்வி:** 'யாவத்', 'கிஞ்சித்', 'ஸ்தாவரஜங்கமம்' – இம்மூன்று அடைமொழிகட்கும் என்ன பொருள்? இம்மூன்று அடைமொழிகளுடன் கூடிய 'ஸத்த்வம்' என்பது எதைக் குறிக்கும்?

**பதில்:** 'யாவத்', 'கிஞ்சித்' என்ற இரு சொற்கள் மூலம் அசைவன, அசையாதன என்று உலகில் ஏத்தனைப் பொருட்கள் உண்டோ அத்தனையையும் சேர்த்துக் கூறுகிறார். தேவர்கள், மனிதர்கள், விலங்குகள், பறவைகள் முதலிய சுற்றித் திரியும் ப்ராணிகள் ஜங்கமங்கள் (அசைவன). மரம், செடி கொடி, மலை முதலியன ஸ்தாவரங்கள் (அசையாதன). இவ்வாறு இம்மூன்று அடைமொழிகளோடு கூடிய 'ஸத்த்வம்' என்ற சொல் சராசர ப்ராணிக் கூட்டம் முழுவதையும் குறிக்கிறது.

**கேள்வி:** இங்கு க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் என்ற சொற்களுக்கு என்ன பொருள்? இவற்றின் சேர்கையால் எல்லா ப்ராணிகளும் உண்டாகின்றன என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 13/5ல் கூறப்பட்ட இருபத்து நான்கு தத்வங்களின் கூட்டே க்ஷேத்ரம் ஆகும். 7/4,5களில் இதை அபராப்ரக்ருதி என்றார். அதுவே க்ஷேத்ரம் எனப்படும். அதை அறிகிறவன் 7/5ல் கூறப்பட்ட பராப்ரக்ருதி – அந்த சேதன தத்வம்தான் க்ஷேத்ரக்ஞன். அந்த 'ப்ரக்ருதியில்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உள்ள' புருஷனுக்கு, ப்ரக்ருதியில் உண்டான வெவ்வேறு நுண்ணியதாகவும், பெரிதாகவும் உள்ள உடல்களுடன் ஸம்பந்தம் ஏற்படுவதே க்ஷேத்ர-க்ஷேத்ரக்ஞர்களின் சேர்க்கை. இச்சேர்க்கையால் வெவ்வேறு பிறவிகளில், வெவ்வேறு வடிவங்களில் ப்ராணிகள் வெளிப்படுவதே அவற்றின் உற்பத்தியாகும்.

**समं सर्वेषु भूतेषु तिष्ठन्तं परमेश्वरम्।**
**विनश्यत्स्वविनश्यन्तं यः पश्यति स पश्यति॥ २७॥**

**ஸமம் ஸர்வேஷு பூ₄தேஷு திஷ்ட₂ந்தம் பரமேஸ்வரம் ।**

**விநஶ்யத்ஸ்வவிநஶ்யந்தம் ய: பஶ்யதி ஸ பஶ்யதி ॥ 27 ॥**

**ய:** – எந்த மனிதன், **விநஶ்யத்ஸு** – அழியக்கூடிய, **ஸர்வேஷு பூ₄தேஷு** – சராசரங்களான அனைத்திலும், **பரமேஸ்வரம்** – பரமேசுவரனான பகவானை, **அவிநஶ்யந்தம்** – அழியாதவராகவும் (மேலும்), **ஸமம்** – எங்கும் ஸமமாக (ஒரே சீராக), **திஷ்டந்தம்** – இருப்பவராகவும், **பஶ்யதி** – பார்க்கிறானோ, **ஸ:** – அவனே, **பஶ்யதி** – உண்மையில் பார்க்கிறவன் ஆவான்.

எந்த மனிதன் அழியக்கூடிய சராசரங்களான அனைத்திலும் பரமேசுவரனான பகவானை அழியாதவராகவும், எங்கும் ஸமமாக இருப்பவராகவும் பார்க்கிறானோ, அவனே உண்மையில் பார்க்கிறவன் ஆவான்.

**கேள்வி:** 'விநஶ்யத்ஸு', 'ஸர்வேஷு' என்ற அடைமொழிகளோடு, 'பூதேஷு' என்கிற பதம் எதைக் குறிக்கிறது? இங்கு இந்த இரண்டு அடைமொழிகள் கொடுப்பதன் கருத்து என்ன?

**பதில்:** மீண்டும், மீண்டும் பிறவி எடுத்து மரிக்கின்ற உயிரினங்கள் அனைத்தின் ஸூக்ஷ்ம, ஸ்தூல சரீரங்களின் சேர்க்கையும், பிரிதலும் பிறத்தல் என்றும், இறத்தல் என்றும் கருதப்படுகிறது. அவையனைத்தையும் இந்த இரண்டு அடைமொழிகளுடன் கூடிய 'பூதேஷு' என்ற சொல் குறிக்கிறது. எல்லா ப்ராணிகளையும் குறிப்பிடுவதற்காக 'ஸர்வேஷு' என்றும், உடல்களின் சேர்க்கையால் அவை அழியும் தன்மை உடையன என்று குறிப்பிடுவதற்காக 'விநஶ்யத்ஸு' என்றும் அடைமொழிகள் கொடுக்கப்பட்டுள்ளன.

இங்கே கவனிக்க வேண்டியது – அழிவது உடலின் தர்மம், ஆத்மாவின் தர்மம் அன்று. ஆத்ம தத்வம் அழிவற்றது, நித்யமானது. அது உடலமைப்பில் வெவ்வேறாகத் தோற்றமளிக்கின்ற எல்லா ப்ராணிகளின் தொகுதிகளிலும் உண்மையில் அந்த ஆத்ம வஸ்து ஒன்றுதான். இதைத்தான் இந்த ச்லோகம் கூறுகிறது.

**கேள்வி:** இங்கு 'பரமேஶ்வரம்' என்றால் என்ன பொருள்? அவர் மேலே சொன்ன எல்லா ப்ராணிகளிடமும் அழியாதவராகவும், ஸமமாகவும் இருப்பதாகக் காண்பது என்றால் என்ன?

**பதில்:** இங்கு 'பரமேஶ்வரம்' என்றால் ப்ரக்ருதிக்கு முற்றிலும் அப்பாற்பட்ட, விகாரமடையாத சேதன தத்வம். அவரை க்ஷேத்ரக்ஞன் என்பதோடு ஒன்றுபடுத்தி 13/22ல் உபத்ரஷ்டா, அநுமந்தா, பர்த்தா, போக்தா, மஹேசுவரன், பரமாத்மா என்ற வெவ்வேறு பெயர்களால் அழைக்கிறார். அந்தப் பரமபுருஷன் உண்மையில் சுத்தன். ஸத் சித் ஆனந்தமயன். ப்ரக்ருதிக்கு முற்றிலும் அப்பாற்பட்டவராயினும் ப்ரக்ருதியின் சேர்க்கையால் அவரை க்ஷேத்ரக்ஞன் என்றும், ப்ரக்ருதியில் உண்டான குணங்களை அனுபவிக்கிறவர் என்றும் கூறுகிறோம். ஆகவே அனைத்து ப்ராணிகளும் உடல்களின் ஸம்பந்தத்தால் அழியக் கூடியன என்று கூறுகிறோம். அந்த அனைத்து உடல்களிலும் அவருடைய உண்மையான அழிவற்றதும், விகாரமுமற்றதான சேதன தத்வம் கலைந்து போகின்ற மேகங்களிடையே ஆகாயம்போல ஸமமாகவும், நித்யமாகவும் காணப்படுகிறது. இதைத்தான் இங்கே 'அந்த

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பரமேசுவரனை அனைத்து ப்ராணிகளிலும் அழியாதவராக ஸமமாக இருப்பதாகக் காண்பது' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'இவ்வாறு எவன் பார்க்கிறானோ அவன் உண்மையில் பார்க்கிறான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இதே ச்லோகத்தில் ஆத்மதத்வம் பிறப்பு, இறப்பு முதலிய விகாரங்கள் எதுவும் அற்றது; எங்கும் ஸமமாக உள்ளது என்று கூறினார். இப்படி நித்யமான, சேதனமான, ஒன்றேயான ஆத்ம தத்வத்தை இவ்விதம் விகாரமற்றதாகவும், அழிவற்றதாகவும், சேர்க்கையற்றதாகவும், எங்கும் ஸமமாக இருப்பதாகவும் காண்பதுதான் உண்மையாகக் காண்பது. உடலோடு ஏற்பட்ட சேர்க்கையினால் இது பிறந்து இறப்பதாகவும், ஸுகதுக்க ஸம்பந்தமுள்ளதாகவும் நினைப்பவன் உண்மையைக் காணவில்லை. அதாவது கண்டும் உண்மையைக் காணாது இருக்கிறான்.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் கூறியபடி பரமேசுவரன் எல்லா ப்ராணிகளிடமும் அழிவற்று ஸமமாக விளங்குகிறார் என்று காண்பவனே உண்மையில் காண்கிறவன் என்று கூறினார். இக்கூற்று பொருளுள்ளது என்று உணர்த்த, அவ்வாறு காண்பதன் பயன் பரமகதியை அடைவதாகும் என்றும் இங்கே கூறுகிறார்—

**समं पश्यन्हि सर्वत्र समवस्थितमीश्वरम्।**
**न हिनस्त्यात्मनात्मानं ततो याति परां गतिम्॥ २८॥**

**ஸமம் பஶ்யந்ஹி ஸர்வத்ர ஸமவஸ்தி₂தமீஶ்வரம் ।**

**ந ஹிநஸ்த்யாத்மநாத்மாநம் ததோ யாதி பராம் க₃திம் ॥ 28 ॥**

**ஹி** – ஏனெனில் (எந்த ஒருவன்), **ஸர்வத்ர** – அனைத்திலும், **ஸமவஸ்தி₂தம்** – ஸமமாக நிலைபெற்றிருக்கும், **ஈஶ்வரம்** – பகவானை, **ஸமம்** – ஸமமாகவே, **பஶ்யந்** – பார்த்துக் கொண்டு, **ஆத்மாநம்** – தன்னை, **ஆத்மநா** – தன்னாலேயே, **ந ஹிநஸ்தி** – அழித்துக் கொள்வதில்லை. **தத:** – அதனால் (அவன்), **பராம் க₃திம்** – பரமகதியை, **யாதி** – அடைகிறான்.

ஏனெனில் எந்த ஒருவன் அனைத்திலும் ஸமமாக நிலைபெற்றிருக்கும் பகவானை ஸமமாகவே பார்த்துக் கொண்டு தன்னைத் தன்னாலேயே அழித்துக் கொள்வதில்லையோ, அதனால் அவன் பரமகதியை அடைகிறான்.

**கேள்வி:** 'ஹி' (ஏனெனில்) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஹி' என்ற சொல் இங்கு 'காரண'த்தைக் காட்டுகிறது. ஆத்மா ஸமமாக எங்கும் நிறைந்திருக்கிறான் என்று காணும் காரணத்தால் அவன் தன்னை அழித்துக் கொள்வதில்லை. பரமாத்மாவை அடைகிறான். அப்படிக் காண்பதே சரியாகக் காண்பதாகும் என்பது கருத்து.

**கேள்வி:** எங்கும் ஸமமாக இருக்கின்ற பரமாத்மாவை ஸமமாகப் பார்த்தல் என்றால் என்ன? இப்படிக் காண்பவன் தன்னைத் தானே அழித்துக் கொள்வதில்லை என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஸத் சித் ஆனந்தமயமான ஒன்றேயான பரமாத்மா எங்கும் ஸமமாக இருக்கிறார். அஞ்ஞானத்தினால் வெவ்வேறு உடல்களில் வெவ்வேறான தன்மை இருப்பது போன்று தோன்றுகிறது. கூர்ந்து நோக்கின் அவரிடம் எந்த வேற்றுமையும் கிடையாது. இந்தத் தத்வத்தை நன்கு புரிந்து கொண்டு நேர் அனுபவம் பெறுவதுதான் 'எங்கும் ஸமமாக இருக்கின்ற பரமாத்மாவை ஸமமாகப் பார்ப்பது' ஆகும். இந்தத் தத்வத்தை அறியாதவன்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸமமாகப் பார்க்கிறான் என்று கூற இயலாது. அவன் எல்லாவற்றிலும் ஏற்றத்தாழ்வைக் காண்பான். ஒன்றைத் தனக்கு உகந்தது, நன்மை செய்வது என்றும், மற்றொன்றைத் தனக்கு வேண்டாதது, தீங்கு செய்வது என்றும் நினைப்பான். தான் மற்றவைகளிடமிருந்து வேறாகத் தனித்திருப்பதாக நினைத்துக் கொள்வான். உடல் பிறக்கும்போது தான் பிறப்பதாகவும், அது அழியும்போது தான் இறப்பதாகவும் நினைக்கிறான். ஆகவே, அவன் பல பிறவிகளில் பிறந்து இறந்து கொண்டே இருக்கிறான். இதுவே தன்னைத் தானே அழித்துக் கொள்வது என்பதாகும். ஆனால் எவன் மேலே கூறியவாறு பரமாத்மாவை ஸமமாக எங்கும் உள்ளவனாகக் காண்கிறானோ, அவன் தன்னைப் பரமாத்மாவைத் தவிர வேறாகக் கருதுவதில்லை. உடல்களுடன் தன்னை ஸம்பந்தப்படுத்திக் கொள்வதுமில்லை. ஆகவே உடல் அழியும்போது தன் அழிவைக் காண்பதில்லை. ஆகையால் அவன் தன்னைத் தானே அழித்துக் கொள்வதில்லை. அவன் இருப்பது ஸர்வக்ஞனான அழிவற்ற ஸத் சித் ஆனந்தமயனான பரப்ரம்மமான பரமாத்மாவுடன் ஒன்றிய நிலை. ஆகவே அவன் பிறப்பு இறப்புகளிலிருந்து நிரந்தரமாக விடுபட்டவன் ஆகிறான்.

**கேள்வி:** 'தத:' என்றால் என்ன? அச்சொல்லுடன் பரமகதியை அடைகிறான் என்று சேர்த்துக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'தத:' என்னும் சொல்லும் காரணத்தைக் காட்டுவது. ஆகவே இங்கு 'தத:' என்று கூறி பரமகதியடைதலைக் கூறுவதன் கருத்து: எங்கும் ஸமபாவனையுடன் ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்துடன் ஒன்றிய நிலையில் நிலைபெற்று இருப்பவன் தன்னைத்தானே அழித்துக் கொள்ளாத காரணத்தினால், அவன் பிறப்பிறப்பிலிருந்து நிரந்தரமாக விடுபட்டுப் பரமகதியை அடைகிறான். எதையடைந்தவன் திரும்ப வரவேண்டியதில்லையோ, எது எல்லா ஸாதனைகளுக்கும் முடிவான பயனோ, அந்தப் பரமபதத்தையடைவதையே இங்கு 'பரமகதியை அடைவது' என்கிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் நித்யமான, விஞ்ஞான ஆனந்தமயமான ஆத்மதத்வத்தை எங்கும் ஸமபாவனையுடன் நோக்குவதன் பெருமையையும், பயனையும் கூறி, அடுத்த ச்லோகத்தில் ஆத்மா கர்த்தா அல்லன் என்று பார்ப்பவனின் பெருமையைக் கூறுகிறார்—

**प्रकृत्यैव च कर्माणि क्रियमाणानि सर्वशः।**
**यः पश्यति तथात्मानमकर्तारं स पश्यति॥ २९॥**

**ப்ரக்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணாநி ஸர்வஶ: ।**

**ய: பஶ்யதி ததா₂த்மாநமகர்தாரம் ஸ பஶ்யதி ॥ 29 ॥**

**ச** – மேலும், **ய:** – எந்த மனிதன், **கர்மாணி** – எல்லாக் கர்மங்களும், **ஸர்வஶ:** – எல்லாவிதங்களிலும், **ப்ரக்ருத்யா ஏவ** – ப்ரக்ருதியினாலேயே, **க்ரியமாணாநி** – செய்யப் படுவனவென்றும், **ததா₂** – மேலும், **ஆத்மாநம்** – ஆத்மாவை, **அகர்தாரம்** – கர்த்தா அல்லன் என்றும், **பஶ்யதி** – பார்க்கிறானோ, **ஸ:** – அவனே, **பஶ்யதி** – உண்மையில் பார்க்கிறவன் ஆவான்.

மேலும் எந்த மனிதன் எல்லாக் கர்மங்களும் எல்லாவிதங்களிலும் ப்ரக்ருதியினாலேயே செய்யப்படுவனவென்றும் மேலும் ஆத்மாவைக் கர்த்தா அல்லன் என்றும் பார்க்கிறானோ அவனே உண்மையைப் பார்க்கிறவன் ஆவான்.

**கேள்வி:** 3/27,28லும், 14/19லும் எல்லாக் கர்மங்களும் குணங்களால் செய்யப்படுகின்றன என்று கூறினார். 5/8,9களில் புலன்கள் அவற்றின் நுகர்பொருட்களிலேயே செயல்படுகின்றன என்றார். இங்கே ப்ரக்ருதிதான் எல்லாவற்றையும் செய்வதாக மொழிகிறார். இப்படி மூன்றுவிதமாகக் கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** ஸத்வம், ராஜஸம், தாமஸம் என்ற மூன்று குணங்களும் ப்ரக்ருதியின் விளைவுகள், புலன்கள், மனம், புத்தி மற்றும் இவற்றின் போகப்பொருட்கள் ஆகியவையெல்லாமே முக்குணங்களின் விரிவுகளே. ஆகவே புலன்கள் புலன்நுகர் பொருட்களில் செயல்படுகின்றன என்றாலும், குணங்கள் குணங்களில் செயல்படுகின்றன என்றாலும், குணங்களால் கர்மங்கள் செய்யப்படுகின்றன என்றாலும், எல்லாக் கர்மங்களும் ப்ரக்ருதியினால் செய்யப்படுகின்றன என்று சொல்வதாகவே ஆகும். உண்மையில் மூன்று இடங்களிலும் ஒரே விஷயம்தான் கூறப்படுகிறது; வேறுபாடு இல்லை. எல்லாவிடத்திலும் கூற வந்தது 'ஆத்மா கர்த்தா அல்லன்' என்ற விஷயம்தான்.

**கேள்வி:** 'ஆத்மா கர்த்தா அல்லன்' என்று காண்பது எப்படி? அப்படிக் காண்பவன்தான் உள்ளதை உள்ளவாறு காண்பவன் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஆத்மா நித்யன், சுத்தன், அறிகிறவன், விடுபட்டவன், எவ்வித விகாரங்களுக்கும் உட்படாதவன். ப்ரக்ருதியுடன் அவனுக்குத் தொடர்பு கிடையாது. ஆகவே, அவன் எந்தக் கர்மத்தையும் செய்வதில்லை. கர்மத்தின் பயனையும் அனுபவிப்பதில்லை. இந்த உண்மையை தன் சொந்த அனுபவத்தின் மூலம் நேராக உணர்வதே, 'ஆத்மா கர்த்தா அல்லன்' என்று உணர்வதாகும். இப்படிக் காண்பவன்தான் உள்ளதை உள்ளவாறு காண்பவன் என்று அவன் பெருமையைக் கூறுகிறார். ஆத்மா என்பது மனம், புத்தி, உடல் இவற்றுடன் சேர்ந்து எல்லாக் கர்மங்களையும் செய்கிறது. அவற்றின் பயனை அனுபவிக்கிறது என்று எவன் நினைக்கிறானோ, அவன் பார்வை மதிமயக்கத்தினால் – ப்ரமையினால் ஏற்பட்டது. ஆகவே அது தவறானது.

**பொருத்தம்:** **இவ்விதம் 'ஆத்மா கர்த்தா அல்லன்' என்று அறிவதன் பெருமையைக் கூறி, 'அது ஒன்றேதான்' என்று காண்பதன் பயனைக் கூறுகிறார்—**

**यदा भूतपृथग्भावमेकस्थमनुपश्यति ।**
**तत एव च विस्तारं ब्रह्म सम्पद्यते तदा ॥ ३० ॥**

**யதா₃ பூ₄தப்ருத₂க்₃பா₄வமேகஸ்த₂மநுபஶ்யதி ।**
**தத ஏவ ச விஸ்தாரம் ப்₃ரஹ்ம ஸம்பத்₃யதே தத₃ா ॥ 30 ॥**

**யதா₃** – எப்பொழுது (இந்த மனிதன்), **பூ₄த ப்ருத₂க்₃பா₄வம்** – சராசரங்கள் அனைத்தினுடைய தனித்தனித் தன்மை, **ஏகஸ்த₂ம்** – பரமாத்மா ஒருவரிடமே நிலைபெற்றிருப்பதாகவும், **தத: ஏவ** – அந்த பரமாத்மாவிடமிருந்தே, **விஸ்தாரம் ச** – ஸகல சராசரங்களும் விரிவடைந்தனவாகவும், **அநுபஶ்யதி** – காண்கிறானோ, **தத₃ா** – அப்பொழுதே (அவன்), **ப்₃ரஹ்ம** – ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவை, **ஸம்பத்₃யதே** – அடைகிறான்.

எப்பொழுது இந்த மனிதன் சராசரங்கள் அனைத்தினுடைய தனித்தனித்தன்மை பரமாத்மா ஒருவரிடமே நிலைபெற்றிருப்பதாகவும், அந்த பரமாத்மாவிடமிருந்தே ஸகல சராசரங்களும் விரிவடைந்தனவாகவும் காண்கிறானோ அப்பொழுதே ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவை அடைகிறான்.

**கேள்வி:** 'பூதப்ருதக்பாவம்' என்றால் என்ன? அது பரமாத்மாவிடமே நிலைபெற்றுள்ளதாகவும், அந்த ஒன்றிலிருந்தே அனைத்தும் விரிவடைந்தன என்றும் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** *13/26ல்* சராசரங்களான அனைத்து உயிரினங்களின் பிறப்பும், க்ஷேத்ர-க்ஷேத்ரக்ஞனின் சேர்க்கையினால் ஏற்பட்டவை என்று கூறினார். *13/27ல்* அந்த ப்ராணிகள் அனைத்திலும் பரமாத்மாவை ஸமமாகப் பார்க்க வேண்டும் என்றார். அந்த ப்ராணிகள் பற்பல என்பதை 'பூதப்ருதக்பாவம்' என்ற சொல் கூறுகிறது. கனவிலிருந்து விழித்தவன்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கனவில் காணப்பட்ட ப்ராணிகளின் பல வகைகளும் தன்னிடமே இருந்ததாகவும், அவற்றின் இனம் தன்னிடமிருந்தே பெருகின என்றும், கனவில் படைக்கப்பட்டவை அனைத்தும் தன்னைத் தவிர வேறல்ல என்றும், நான் ஒருவனே பலவாறாகத் தென்பட்டேன் என்றும் நினைப்பதுபோல எல்லா ப்ராணிகளும் ஒரே பரமாத்மாவிடம் உள்ளவை. அவரிடமிருந்தே அனைத்தும் பெருகின என்று புரிந்து கொண்டவன்தான் சரியாகப் பார்க்கிறவன். இவ்விதம் பார்ப்பதுதான் எல்லாவற்றையும் ஒன்றில் இருப்பதாகப் பார்ப்பது; அந்த ஒன்றிலிருந்தே அனைத்தும் வளர்ந்ததாகப் பார்ப்பது ஆகும்.

*கேள்வி:* இங்கு 'யதா', 'ததா' என்று கூறுவதன் கருத்து என்ன? ப்ரம்மத்தை அடைவதாவது என்ன?

*பதில்:* 'யதா' என்பதும் 'ததா' என்பதும் காலத்தை உணர்த்தும் சொற்கள். மனிதனுக்கு எக்கணம் இந்த ஞானம் பிறக்கிறதோ, அக்கணமே அவன் ப்ரம்மத்தை அடைகிறான் என்று குறிப்பிடுகிறார். ஞானம் பிறந்த அக்கணமே அவன் ப்ரம்மமாகிவிடுகிறான். இதில் சிறிதுகூடக் கால தாமதம் இல்லை. இவ்விதம் ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்துடன் இரண்டறக் கலப்பதுதான் பரமகதியை அடைவது; மோக்ஷத்தை அடைவது; முடிந்த முடிவான ஸுகத்தை அடைவது; சிறந்த அமைதியைப் பெறுவது என்றெல்லாம் கூறப்படுகிறது.

*பொருத்தம்:* இவ்விதம் ஆத்மா எல்லா ப்ராணிகளிடமும் ஸமமாக உள்ளான், விகாரமற்றவன், கர்த்தா அல்லன் என்று சொன்னபிறகு ஒரு ஸந்தேஹம் எழுகிறது: "உடலில் இருந்தாலும் ஆத்மாவில் அதன் தோஷங்கள் ஒட்டுவதில்லை. அகர்த்தாவாகவும் இருக்கிறான். இது எப்படி முடியும்?" இதைத் தீர்ப்பதற்காக, பகவான் மூன்றாவது ச்லோகத்தில் 'யத்ப்ரபாவஸ்ச:' என்று க்ஷேத்ரக்ஞனின் ப்ரபாவத்தைத் தெரிந்து கொள்ளச் சொன்னதன் தொடர்ச்சியாக இங்கு மூன்று ச்லோகங்களால் ஆத்மாவின் ப்ரபாவத்தைக் கூறுகிறார்—

अनादित्वान्निर्गुणत्वात्परमात्मायमव्ययः ।
शरीरस्थोऽपि कौन्तेय न करोति न लिप्यते ॥ ३१ ॥

**அநாதி₃த்வாந்நிர்கு₃ணத்வாத்பரமாத்மாயமவ்யய: ।**
**ஶரீரஸ்தோ₂ऽபி கௌந்தேய ந கரோதி ந லிப்யதே ॥ 31 ॥**

**கௌந்தேய** – அர்ஜுன! **அநாதி₃த்வாத்** – அநாதியானபடியாலும், **நிர்கு₃ணத்வாத்** – நிர்குணமானபடியாலும், **அயம்** – இந்த, **அவ்யய:** – அழிவற்ற, **பரமாத்மா** – பரமாத்மா, **ஶரீரஸ்த₂: அபி** – உடலிலேயே இருந்தபோதிலும் (உண்மையில்), **ந கரோதி** – ஒன்றும் செய்வதில்லை; **ந லிப்யதே** – எதிலும் ஒட்டுவதும் இல்லை.

அர்ஜுன! அநாதியானபடியாலும் நிர்குணமானபடியாலும் இந்த அழிவற்ற பரமாத்மா உடலிலேயே இருந்தபோதிலும் உண்மையில் ஒன்றும் செய்வதில்லை; எதிலும் ஒட்டுவதும் இல்லை.

*கேள்வி:* 'அநாதித்வாத்', 'நிர்குணத்வாத்' என்றால் என்ன பொருள்? இதைக் கூறுவதன் பொருள் என்ன?

*பதில்:* எதற்கு ஆதி (ஆரம்பம்) அதாவது காரணம் எதுவும் இல்லையோ, எது ஒருபோதும் புதிதாக உண்டாகவில்லையோ, எது எப்பொழுதும் உள்ளதோ, அது அனாதி. ப்ரக்ருதியிலிருந்தும், அதனுடைய குணங்களிலிருந்தும் எது எல்லா வகைகளிலும் அப்பாற்பட்டதோ, குணங்கள் அவற்றின் செயல்களில் எச்சமயத்திலும், எந்நிலையிலும் உண்மையான உறவு ஏற்பட்டதில்லையோ, அதை 'நிர்குணம்' என்பார்கள். 'அநாதித்வாத்', 'நிர்குணத்வாத்' என்று ஆரம்பித்து இந்த ஸந்தர்ப்பத்தில் பேசப்படும் அந்த ஆத்மா

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அனாதியானது; நிர்குணமானது (குணமற்றது). ஆகவே அது கர்த்தா அன்று; ஒன்றிலும் ஒட்டாதது; அழிவற்றது; பிறப்பு, இறப்பு முதலிய ஆறு விகாரங்களுக்கு அப்பாற்பட்டது என்று உணர்த்துகிறார்.

**கேள்வி:** 'பரமாத்மா' என்பதுடன் 'அயம்' என்கிற அடைமொழி கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'அயம்' என்பது இதற்கு முன் சொல்லப்பட்ட பல பெருமைகளும் உடைய பரமாத்மாவைக் குறிக்கிறது. 27வது ச்லோகத்தில் பரமேசுவரன் என்றும், 28ல் ஈசுவரன் என்றும், 29ல் ஆத்மா என்றும், 30ல் ப்ரம்மம் என்றும் சொல்லப்பட்டவரே இந்தப் பரமாத்மா. அதாவது இவர்கள் வெவ்வேறல்லர்; ஒருவரேதான் என்று 'அயம்' (இந்த) என்ற அடைமொழி விளக்குகிறது.

**கேள்வி:** 27வது ச்லோகத்தில் பரமேசுவரன், 28ல் ஈசுவரன், 29ல் ஆத்மா, 30ல் ப்ரம்மம், இங்கே பரமாத்மா என்று ஒரே தத்வத்தைக் கூறுவதற்கு ஏன் பல பெயர்கள் கொடுக்க வேண்டும்?

**பதில்:** மூன்றாவது ச்லோகத்தில் பகவான் அர்ஜுனனுக்கு க்ஷேத்ரக்ஞனின் ஸ்வரூபத்தையும், ப்ரபாவத்தையும் கூறுகிறேன் என்றார். பரப்ரம்மமும், க்ஷேத்ரக்ஞனும் ஒன்றுதான். வேறல்லர் என்று கூறி, அதன் உண்மையான ஸ்வரூபத்தை நிரூபிப்பதற்காகவே இங்கு பரமாத்மாவைப் பற்றிய வெவ்வேறு சொற்களையும் அவற்றிற்கான காரணங்களையும் கூறி விளக்கியிருக்கிறார்.

**கேள்வி:** உடலில் இருந்தாலும் ஆத்மா ஏன் கர்த்தா அல்லன்? எப்படி ஒட்டாமல் உள்ளான்?

**பதில்:** உண்மையில் ப்ரக்ருதியின் குணங்களுடனும், அவற்றின் விரிவுகளான புத்தி, மனம், புலன்கள், உடல் இவற்றுடனும் ஆத்மாவுக்குச் சிறிதுகூட ஸம்பந்தமில்லை. ஆத்மா அந்த குணங்களுக்கு அப்பாற்பட்டவன். ஆகாயம் மேகங்களிடையே இருந்தபோதிலும் ஆகாயம் மேகங்களுக்குக் கர்த்தா அன்று. அவற்றுடன் ஒட்டுவதில்லை. அதுபோல ஆத்மா கர்மங்களைச் செய்வதில்லை. உடலுடன் ஒட்டுவதுமில்லை. இதை அடுத்த இரண்டு ச்லோகங்களில் உதாரணங்களுடன் விளக்குகிறார்.

**பொருத்தம்:** உடலில் இருந்தாலும் எப்படி ஆத்மா ஒட்டுவதில்லை என்பதை விளக்குகிறார்—

**यथा सर्वगतं सौक्ष्म्यादाकाशं नोपलिप्यते।**
**सर्वत्रावस्थितो देहे तथात्मा नोपलिप्यते॥ ३२॥**

**யத₂ா ஸர்வக₃தம் ஸௌக்ஷ்ம்யாத₃ாகாஶம் நோபலிப்யதே ।**

**ஸர்வத்ராவஸ்தி₂தோ தே₃ஹே தத₂ாத்மா நோபலிப்யதே ॥ 32 ॥**

**யத₂ா** – எவ்வாறு, **ஸர்வக₃தம்** – எங்கும் நிறைந்த, **ஆகாஶம்** – ஆகாசம், **ஸௌக்ஷ்ம்யாத்** – நுண்ணியதாக இருப்பதால், **ந உபலிப்யதே** – எதிலும் ஒட்டுவதில்லையோ, **தத₂ா** – அவ்வாறே, **தே₃ஹே** – இவ்வுடலில், **ஸர்வத்ர** – எங்கும், **அவஸ்தி₂த:** – நிலைபெற்றிருக்கும், **ஆத்மா** – ஆத்மா, **ந உபலிப்யதே** – (நிர்குணமாக இருப்பதால் உடலின் குணங்களில்) ஒட்டுவதில்லை.

எவ்வாறு எங்கும் நிறைந்த ஆகாசம் நுண்ணியதாக இருப்பதால் எதிலும் ஒட்டுவதில்லையோ அவ்வாறே இவ்வுடலில் எங்கும் நிலைபெற்றிருக்கும் ஆத்மா நிர்குணமாக இருப்பதால் உடலின் குணங்களில் ஒட்டுவதில்லை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** இந்த ச்லோகத்தில் ஆகாசத்தை உதாரணமாகக் காட்டி என்ன கருத்தைக் கூறுகிறார்?

**பதில்:** ஆகாசத்தை உதாரணமாகக் காட்டி ஆத்மா எதிலும் ஒட்டாதவன் என்பது நிரூபிக்கப்பட்டிருக்கிறது. காற்று, நெருப்பு, நீர், நிலம் இவற்றில் எங்கும் ஆகாசம் ஸமமாக நிறைந்திருந்தாலும், அவற்றின் குண தோஷங்களில் ஒட்டாதிருப்பது போன்று ஆத்மா உடலில் எங்கும் வ்யாபித்து இருந்தாலும் மிகவும் நுண்ணியதாகவும், குணங்களுக்கு முற்றும் அப்பாற்பட்டதாகவும் இருப்பதால் புத்தி, மனம், உடல், புலன்களின் குண தோஷங்களில் சிறிது கூட ஒட்டுவதில்லை.

**பொருத்தம்:** உடலில் இருந்தாலும் ஆத்மா ஏன் கர்த்தா அல்லன் என்பதை விளக்குகிறார்—

**यथा प्रकाशयत्येकः कृत्स्नं लोकमिमं रविः।**
**क्षेत्रं क्षेत्री तथा कृत्स्नं प्रकाशयति भारत॥ ३३॥**

**யத₂ா ப்ரகாஶயத்யேக: க்ருத்ஸ்நம் லோகமிமம் ரவி: ।**
**க்ஷேத்ரம் க்ஷேத்ரீ தத₂ா க்ருத்ஸ்நம் ப்ரகாஶயதி ப₄ாரத ॥ 33 ॥**

**ப₄ாரத** – அர்ஜுன! **யத₂ா** – எப்படி, **ஏக: ரவி:** – சூரியன் ஒருவனே, **இமம்** – இந்த, **க்ருத்ஸ்நம் லோகம்** – ப்ரம்மாண்டம் முழுவதையும், **ப்ரகாஶயதி** – ப்ரகாசிக்கச் செய்கிறானோ, **தத₂ா** – அப்படியே, **க்ஷேத்ரீ** – ஆத்மா ஒன்றே, **க்ருத்ஸ்நம் க்ஷேத்ரம்** – க்ஷேத்ரம் முழுவதையும், **ப்ரகாஶயதி** – ப்ரகாசிக்கச் செய்கிறான்.

அர்ஜுன! எப்படி சூரியன் ஒருவனே இந்த ப்ரம்மாண்டம் முழுவதையும் ப்ரகாசிக்கச் செய்கிறானோ அப்படியே ஆத்மா ஒன்றே க்ஷேத்ரம் முழுவதையும் ப்ரகாசிக்கச் செய்கிறான்.

**கேள்வி:** இந்த ச்லோகத்தில் சூரியனை உதாரணமாகக் காட்டி என்ன கருத்தைக் கூறுகிறார்? 'சூரியன் ஒருவன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** சூரியனை உதாரணமாக் காட்டி ஆத்மா கர்த்தா அல்லன் என்றும், சூரியன் ஒருவன் என்பதால் ஆத்மா ஒன்றுதான் என்றும் நிரூபிக்கிறார். ஒரே சூரியன் ப்ரம்மாண்டம் முழுவதையுதும் ப்ரகாசிக்கச் செய்கிறான். அதுபோல் ஆத்மா அனைத்து க்ஷேத்ரங்களையும் அதாவது 5,6வது ச்லோகங்களில் சொல்லப்பட்ட விகாரங்களுடன் கூடிய க்ஷேத்ரங்கள் என்று பெயரிட்டு விளக்கினரே, அந்த ஜட வர்க்கம் அனைத்திற்கும் ஒளியூட்டுகிறான். அவற்றிற்கு இருப்பையும், செயலூக்கத்தையும் கொடுக்கிறான். அப்படியே வெவ்வேறு உள்ளங்களின் தொடர்பால் வெவ்வேறு உடல்களில் அவன் வெவ்வேறு போல வெளித் தோற்றமளிக்கிறான். ஆனாலும் ஆத்மா சூரியனைப்போல க்ஷேத்ரங்களின் செயல்களைச் செய்வதுமில்லை, செய்விப்பதுமில்லை. தான் வேறு மற்றது வேறு என்ற த்வைத பாவனை, பேத பாவனை முதலிய குறைபாடுகள் இல்லாதவன் ஆத்மா. அந்த அழிவற்ற ஆத்மா ஒவ்வொரு நிலையிலும் எப்பொழுதும் சுத்தன், அறிவே வடிவினன், கர்த்தா அல்லன், விகாரமற்றவன், எங்கும் ஸமமானவன், மாசற்றவன்.

**பொருத்தம்: மூன்றாவது ச்லோகத்தில். ஆறு விஷயங்களைக் கூறுவதாக ஆரம்பித்து, அவற்றை வர்ணித்தபின் இந்த அத்யாயத்தில் கூறப்பட்ட விஷயங்களை நன்கு அறிந்து கொள்வதன் பயன் பரமாத்மாவை அடைவதுதான் என்று அத்யாயத்தை நிறைவு செய்கிறார்—**

**क्षेत्रक्षेत्रज्ञयोरेवमन्तरं ज्ञानचक्षुषा।**
**भूतप्रकृतिमोक्षं च ये विदुर्यान्ति ते परम्॥ ३४॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோரேவமந்தரம் ஜ்ஞாநசக்ஷுஷா ।**

**பூதப்ரக்ருதிமோக்ஷம் ச யே விதுர்யாந்தி தே பரம் ॥ 34 ॥**

**ஏவம்** – இவ்விதம், **க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோ:** – க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞன் இவற்றின், **அந்தரம்** – வேறுபாட்டையும், **பூத ப்ரக்ருதி மோக்ஷம் ச** – ப்ரக்ருதி, ப்ரக்ருதியினுடைய செயல்கள் இவற்றிலிருந்து விடுபடுவதையும், **யே** – எவர்கள், **ஜ்ஞாநசக்ஷுஷா** – ஞானக்கண்களால், **விது:** – தத்வரீதியாக அறிகிறார்களோ, **தே** – அந்த மஹாத்மாக்கள், **பரம்** – பரப்ரம்ம பரமாத்மாவை, **யாந்தி** – அடைகிறார்கள்.

இவ்விதம் க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞன் இவற்றின் வேறுபாட்டையும் ப்ரக்ருதி, ப்ரக்ருதியினுடைய செயல்கள் இவற்றிலிருந்து விடுபடுவதையும் எவர்கள் ஞானக்கண்களால் தத்வரீதியாக அறிகிறார்களோ அந்த மஹாத்மாக்கள் பரப்ரம்ம பரமாத்மாவை அடைகிறார்கள்."

**கேள்வி:** *'ஜ்ஞாநசக்ஷுஷா' என்பதன் கருத்து என்ன? அந்த ஞானக்கண்ணின் மூலம் க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞனின் வேறுபாட்டை அறிவது என்றால் என்ன?*

**பதில்:** இரண்டாவது ச்லோகத்தில் பகவான் தம் கருத்துப்படி ஞானம் என்று எதைச் சொன்னாரோ, 15/16ல் எது அஞ்ஞானத்தை அழிக்கும் என்று சொன்னாரோ, எது அமாநித்வம் முதலிய பண்புகளால் கிடைக்கப் பெறுமோ – அந்தத் தத்வ ஞானம்தான் இங்கே ஞானக்கண் மூலம் அடையப்படும் ஞானம் என்று கூறப்படுகிறது.

அந்த ஞானத்தின் மூலம் தத்வரீதியாக நன்கு தெரிந்து கொள்ள வேண்டியன:– "மஹாபூதம் முதலிய இருபத்து நான்கு தத்வங்களின் சேர்க்கையான ஸமஷ்டி உடலே க்ஷேத்ரம் ஆகும்; அது அறியப்படக்கூடியது, மாறுபடக்கூடியது, அழியக்கூடியது, விகாரம் அடைவது, ஜடம், ஏதோ ஒன்றின் விளைவு, அநித்யமானது. ஆனால் க்ஷேத்ரக்ஞன் அதை அறிபவன். சேதனன், விகாரமற்றவன்; கர்த்தா அல்லன். நித்யன், அழிவற்றவன், ஒட்டாதவன், சுத்தன், ஞான வடிவினன், ஒருவனே. இவ்விதம் இரண்டும் மாறுபட்டனவாகையால் க்ஷேத்ரக்ஞன் வேறு, க்ஷேத்ரம் வேறு என்பது ஞானம். க்ஷேத்ரமும், க்ஷேத்ரக்ஞனும் ஒன்றே என்று நினைப்பது அஞ்ஞானத்தின் விளைவே. உண்மையில் க்ஷேத்ரக்ஞனுக்கும், க்ஷேத்ரத்திற்கும் எவ்வித ஸம்பந்தமுமில்லை." இதுதான் ஞானக்கண்ணினால் க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் இவை இரண்டிற்குமுள்ள வேறுபாட்டை அறிந்து கொள்வது ஆகும்.

**கேள்வி:** *'பூதப்ரக்ருதிமோக்ஷம்' என்றால் என்ன? அதை ஞானக்கண்ணால் அறிவது எப்படி?*

**பதில்:** இங்கே பூதம் என்ற சொல் ப்ரக்ருதியின் விளைவுகளாகக் காணப்படும் எல்லாப் பொருட்களையும் குறிப்பிடும். ப்ரக்ருதி அவற்றின் காரணம் ஆகும். ஆகவே ப்ரக்ருதியிலிருந்தும் அதன் விளைவுகளிலிருந்தும் அறவே விடுபடுவதுதான் 'பூதப்ரக்ருதிமோக்ஷம்' ஆகும். மேலே கூறியவாறு க்ஷேத்ர, க்ஷேத்ரக்ஞனின் வேறுபாட்டை அறிவதுடன் க்ஷேத்ரக்ஞன் ப்ரக்ருதியிலிருந்து பிரிந்து நின்று தன்னுடைய உண்மையான பரமாத்ம ஸ்வரூபத்தில் ஒன்றி நிலைத்திருப்பதுதான், ப்ரக்ருதியிலிருந்தும், அதன் விளைவுகளிலிருந்தும் விடுதலை அடைவது என்பது. அதாவது கனவு காணும் மனிதனுக்கு ஏதோ ஒரு காரணத்தினால் விழிப்பு ஏற்பட்டதும், தான் கண்டது கனவு, உண்மையில் விழிப்பு நிலைக்கு வருவதுதான் இந்தத் துயரிலிருந்து மீள்வதற்கு வழி என்ற எண்ணம் தோன்றுகிறது. அவன் உடனே விழித்துக் கொள்கிறான். அதேபோல ஞானயோகியும் க்ஷேத்ர–க்ஷேத்ரக்ஞனின் வேறுபாட்டை உணர்ந்தவுடன், அஞ்ஞானத்தினால் க்ஷேத்ரத்தை உண்மையான பொருள் என்று கருதுவதால்தான் இத்துடன் நமக்குத் தொடர்பு ஏற்பட்டுவிட்டது போலத் தோன்றிக் கொண்டிருக்கிறது. ஆகவே, இதை உதறித் தள்ளி உண்மையான ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்ம ஸ்வரூபத்தில் ஒன்றியிருப்பதே அதிலிருந்து

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



விடுதலையாகும் என்று உணர்கிறார். இதுதான் ப்ரக்ருதியிலிருந்தும் அதன் விளைவுகளிலிருந்தும் விடுதலை பெறுவது என்றறிவதாகும்.

**கேள்வி:** 'இதை அறிபவர்கள் பரமாத்மாவை அடைவார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கே சொன்னவிதம் தத்வ ஞானம் பெற்ற பிறகு அஞ்ஞானத்தோடு காணப்படும ப்ரபஞ்சமும் இல்லாமல் போய்விடும். அக்கணமே அவன் பரமாத்மாவை அடைவான் என்று பொருள்.

ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे क्षेत्रक्षेत्रज्ञविभागयोगो नाम त्रयोदशोऽध्यायः ॥ १३ ॥

**ஓம் தத்ஸதி₃தி ஸ்ரீமத்₃ப₄க₃வத்₃கீ₃தாஸூபநிஷத்ஸு ப்₃ரஹ்மவித்₃யாயாம் யோக₃ஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே₃ க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞ-விப₄ாக₃யோகோ₃ நாம த்ரயோத₃ஶோऽத்₄யாய: ॥ 13 ॥**

**ஓம் தத் ஸத் – ப்ரம்ம வித்யை, யோக ஶாஸ்த்ரம், உபநிஷத் எனப்படும் ஸ்ரீமத்பகவத்கீதையாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலில் 'க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞவிபாகயோகம்' எனப் பெயர் படைத்த பதின்மூன்றாவது அத்யாயம் நிறைவுற்றது.**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

## அத₂ சதுர்த₃ஸோऽத்₄யாய:

# பதினான்காவது அத்யாயம்

## குணத்ரய விபாக யோகம்

**அத்யாயத்தின் பெயர்** இந்த அத்யாயத்தில் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களின் ஸ்வரூபம் அவற்றின் செயல்பாடு, காரணம், சக்தி மற்றும் அவை எவ்விதம் எந்த நிலையில் ஜீவாத்மாவைக் கட்டுப்படுத்துகின்றன? எவ்விதம் அவற்றிலிருந்து விடுபட்டு மனிதன் பரமபதத்தை அடைவான்? இந்த முக்குணங்களைக் கடந்து பரமாத்மாவை அடைந்துவிட்ட மனிதனின் இலக்கணம் என்ன ஆகிய முக்குணங்கள் ஸம்பந்தப்பட்ட விஷயங்களை விளக்குகிறார். முதலில் ஸாதன காலத்தில் ரஜஸ், தமோ குணங்களை விடுத்து ஸாத்விக குணத்தை ஏற்க வேண்டும். கடைசியில் எல்லாக் குணங்களின் ஸம்பந்தத்தையும் முற்றும் விட்டுவிட வேண்டும் என்பதைப் புரிய வைப்பதற்காகவே அந்த மூன்று குணங்களையும் தனித்தனியாகப் பிரித்து வர்ணிக்கிறார். ஆகவே, இந்த அத்யாயத்திற்கு 'குணத்ரயவிபாகயோகம்' என்று பெயர்.

**அத்யாயச் சுருக்கம்** இந்த அத்யாயத்தின் 1, 2வது ச்லோகங்களில் ஞானத்தின் பெருமையை எடுத்துரைப்பதாக உறுதியளிக்கிறார். 3, 4ல் ப்ரக்ருதி-புருஷ ஸம்பந்தத்தால் எல்லா ப்ராணிகளும் உற்பத்தியாகின்ற முறையைக் கூறி, 5ல் ஸத்வ, ரஜஸ், தமோ குணங்கள் ஜீவாத்மாவின் பந்தத்திற்குக் காரணம் எனக் கூறுகிறார். 6 முதல் 8 வரை ஸத்வம் முதலிய முக்குணங்களின் தன்மையையும், அவை ஜீவனைக் கட்டுப்படுத்தும் வகையையும் வரிசையாகச் சொல்லி, 9ல் ஜீவாத்மாவை எந்த குணம் எங்கே சேர்க்கிறது என்று காண்பித்து, 10ல் மற்ற இரண்டு குணங்களையும் அழுத்தி ஏதோ ஒரு குணம் மேலோங்குவது பற்றிக் கூறி, 11 முதல் 13 வரை மேலோங்கிவிட்ட ஸத்வ-ரஜஸ்-தமோ குணங்களின் இலக்கணங்களை வரிசையாகக் கூறுகிறார். 14, 15ல் முக்குணங்களில் ஒவ்வொன்றும் மேலோங்கும்போது, இறப்பவனின் கதியை நிரூபித்து, 16ல் ஸாத்விக, ராஜஸ, தாமஸ கர்மங்களுக்குரிய பயன்களைக் கூறுகிறார். 17ல் ஞானம் உண்டாவதற்கு ஸத்வகுணமும்; பேராசை உண்டாவதற்கு ரஜோகுணமும்; அசட்டை, மயக்கம், அஞ்ஞானம் உண்டாவதற்குத் தமோகுணமும் காரணம் என்று கூறி, 18ல் முக்குணங்களில் ஒவ்வொன்றில் இறக்கும்போதும் ஜீவாத்மாவின் குணங்களுக்கேற்ப கதி ஏற்படும் என்றும், 19, 20ல் எல்லாக் கர்மங்களும் குணங்களால் ஆற்றப்படுகின்றன; ஆத்மா இவற்றிற்கு அப்பாற்பட்டது; கர்த்தா (செய்பவன்) அல்லன் என்று பார்ப்பதன் பயன் மூன்று குணங்களையும் கடந்து நிற்பதன் பயனும் கூறப்படுகின்றன. 21ல் குணாதீதனின் இலக்கணம், நடத்தை,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



குணாதீதன் ஆவதற்குரிய உபாயம் ஆகியவற்றைப் பற்றி அர்ஜுனன் கேட்கிறார். இதற்கு விடையாக 22 முதல் 25 வரை பகவான் குணாதீதனின் இலக்கணங்கள், நடத்தை இவை பற்றிக் கூறி, 26ல் குணாதீதன் ஆவதற்கான உபாயத்தையும் மற்றும் அவ்வாறு குணாதீதன் ஆவதால் ஏற்படும் பயன் ஆகியவற்றையும் வர்ணிக்கிறார். அதற்குப்பின் 27ல் ப்ரம்மம், அம்ருதம், அவ்யயம் முதலிய அனைத்தும் பகவானின் ஸ்வரூபமாகையால், தாமே இவையெல்லாவற்றிற்கும் ஆதாரம் என்று கூறி அத்யாயத்தை முடிக்கிறார்.

**முன் அத்யாயத்துடன் இவ்வத்யாயத்திற்குப் பொருத்தம்:** பதின்மூன்றாவது அத்யாயத்தில் க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் இரண்டின் இலக்கணங்களைக் கூறி, அவற்றை அறிவதுதான் ஞானம் என்றார். அதைத் தொடர்ந்து க்ஷேத்ரத்தின் ஸ்வரூபம், இயல்பு, விகாரம் மற்றும் அதனுடைய தத்வங்கள் உண்டாகும் வரிசை முதலியனவற்றையும், க்ஷேத்ரக்ஞனின் ஸ்வரூபம், ப்ரபாவம் ஆகியவற்றையும் சொன்னார். 19வது ச்லோகம் முதல் ப்ரக்ருதி, புருஷன் – இவை பற்றிக் கூற ஆரம்பித்து குணங்கள் ப்ரக்ருதியில் உண்டாவன என்றும், 21வது ச்லோகத்தில் புருஷன் திரும்பத் திரும்ப நல்ல-தீய பிறவிகளில் பிறப்பதற்கு குணச்சேர்க்கையே காரணம் என்றும் கூறினார். குணங்களின் வெவ்வேறு தன்மை என்ன? இவை ஜீவாத்மாவை எப்படிக் கட்டுப்படுத்துகின்றன? எந்த குணச்சேர்க்கையால் என்ன பிறவி ஏற்படுகிறது? குணங்களிலிருந்து விடுபட என்ன உபாயம்? குணங்களிலிருந்து விடுபட்டவனின் இலக்கணம், நடத்தை என்ன ஆகியவற்றைத் தெரிந்து கொள்ள இயல்பாகவே விருப்பம் ஏற்படுகிறது. இவற்றை விளக்குவதற்காக இப்பதினான்காம் அத்யாயத்தை ஆரம்பிக்கிறார். 13வது அத்யாயத்தில் கூறப்பட்ட ஞானத்தின் விளக்கத்தை 14வது அத்யாயத்தில் விரிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே முதலில் பகவான் இரண்டு ச்லோகங்களில் அந்த ஞானத்தின் பெருமையைக் கூறி, மறுபடியும் வர்ணிப்பதாக உறுதியளிக்கிறார்—

*श्रीभगवानुवाच*

**परं भूयः प्रवक्ष्यामि ज्ञानानां ज्ञानमुत्तमम्।**
**यज्ज्ञात्वा मुनयः सर्वे परां सिद्धिमितो गताः॥ १॥**

*ஸ்ரீப₄க₃வானுவாச*

***பரம் பூ₄ய: ப்ரவக்ஷ்யாமி ஜ்ஞாநாநாம் ஜ்ஞாநமுத்தமம் ।***
***யஜ்ஜ்ஞாத்வா முநய: ஸர்வே பராம் ஸித்₃தி₄மிதோ க₃தா: ॥ 1 ॥***

***ஸ்ரீப₄க₃வானுவாச*** – ஸ்ரீபகவான் சொன்னார்: ***யத்*** – எதை (எந்த ஞானத்தை), ***ஜ்ஞாத்வா*** – அறிந்து, ***ஸர்வே*** – எல்லா, ***முநய:*** – (பரம்பொருளையே சிந்தித்துக் கொண்டிருக்கும்) முனிவர்களும், ***இத:*** – இந்த ஸம்ஸாரத்திலிருந்து (விடுபட்டு), ***பராம்*** – மிக மேலான, ***ஸித்₃தி₄ம்*** – ஸித்தியாகிய பரமாத்மாவை, ***க₃தா:*** – அடைந்திருக்கிறார்களோ, ***ஜ்ஞாநாநாம்*** – ஞானங்களிலேயே, ***உத்தமம்*** – மிகவும் உயர்ந்ததும், ***பரம்*** – மிகச்சிறந்ததுமான, ***(தத்*** – அந்த), ***ஜ்ஞாநம்*** – ஞானத்தை, ***பூ₄ய:*** – மறுபடியும், ***ப்ரவக்ஷ்யாமி*** – சொல்லப் போகிறேன்.

*ஸ்ரீபகவான் சொன்னார்: "எந்த ஞானத்தை அறிந்து பரம்பொருளையே சிந்தித்துக் கொண்டிருக்கும் எல்லா முனிவர்களும் இந்த ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டு மிக மேலான*

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸித்தியாகிய பரமாத்மாவை அடைந்திருக்கிறார்களோ ஞானங்களிலேயே மிகவும் உயர்ந்ததும், மிகச்சிறந்ததுமான அந்த ஞானத்தைப் பற்றி மறுபடியும் சொல்லப் போகிறேன்.

**கேள்வி:** 'ஜ்ஞாநாநாம்' என்றால் எந்த ஞானங்கள்? அவற்றில் இங்கு பகவான் எந்த ஞானத்தைப் பற்றிக் கூறுவதாகச் சொல்கிறார்? மேலும் அந்த ஞானத்தை மற்ற ஞானங்களைவிட உயர்ந்தது; மேலானது என்று ஏன் கூறுகிறார்?

**பதில்:** வெவ்வேறு விஷயங்களைப் புரிய வைப்பதற்காக வேதங்களிலும், ஸ்ம்ருதிகளிலும், புராணங்களிலும் பலவிதமான உபதேசங்கள் உள்ளன. அவையனைத்தையுமே இங்கே 'ஜ்ஞாநாநாம்' என்ற சொல் குறிக்கிறது. அவற்றில் ப்ரக்ருதி-புருஷன் இவற்றின் ஸ்வரூபத்தைப் பிரித்துக் காட்டி, புருஷனுடைய உண்மையான ஸ்வரூபத்தை நேரிடையான அனுபவத்திற்குக் கொண்டு வருவது தத்வ ஞானம். அந்த தத்வத்தை விளக்குவதாகத்தான் பகவான் உறுதி அளிக்கிறார். அது பரமாத்மாவின் ஸ்வரூபத்தை நேரிடையான அனுபவத்திற்குக் கொண்டு வருகிறது. ஜீவாத்மாவை ப்ரக்ருதியின் தளையிலிருந்து விடுவித்து மீண்டும் சிக்காதவாறு பிறப்பிறப்புச் சுழலிலிருந்து விடுவிக்கிறது; முக்தனாகச் செய்கிறது. ஆகவே, அந்த ஞானம் மற்ற ஞானங்களைவிட மிகச் சிறந்தது, மிக உயரியது என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'பூய:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த ஞானம் பற்றிய விளக்கத்தை முன்பே சொல்லியிருக்கிறேன். ஆயினும் மிகவும் ஆழ்ந்ததாகவும், எளிதில் புரியாததாகவும் இருப்பதால் இதை அறிவது கடினம். அதை நன்கு விளங்க வைப்பதற்காகவே, வேறுவிதமாக மறுபடியும் அதையே கூறுகிறேன் என்கிறார்.

**கேள்வி:** 'முநய:' என்றால் யார்? அவர்கள் இந்த ஞானத்தைப் பெற்றபின் அடைந்த அந்த 'பரமஸித்தி' எது?

**பதில்:** ஞானயோக ஸாதனை மூலம் பரமகதியை அடைந்த ஞானிகள் முனிவர்கள் ஆவர். எது 'பரப்ரம்மத்தை அடைவது', 'பரமசாந்தி', 'முடிந்த முடிவான ஸுகம்', 'திரும்பிவாராப்பெருநிலை' முதலிய பல பெயர்கள் பெற்றதோ, எதை அடைந்த பிறகு ஒருவரும் திரும்பி வருவதில்லையோ – முனிவர்கள் அடைந்த அந்த ஸித்திதான் 'பரமஸித்தி' எனப்படும்.

**கேள்வி:** 'இத:' என்பது எதைக் குறிக்கிறது?

**பதில்:** 'இத:' என்பது இந்த ஸம்ஸாரத்தைக் குறிக்கிறது. அந்த முனிவர்கள் இந்தப் பெரிய துக்கமயமான மரணத்தையளிக்கின்ற ஸம்ஸாரத்தின் ஸம்பந்தத்தை என்றைக்கும் நேராதவாறு அறவே அறுத்துக் கொண்டுவிட்டனர் என்று உணர்த்தப்படுகிறது.

**इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः।**
**सर्गेऽपि नोपजायन्ते प्रलये न व्यथन्ति च॥ २॥**

**இத₃ம் ஜ்ஞாநமுபாஸ்ரித்ய மம ஸாத₄ர்ம்யமாக₃தா: ।**
**ஸர்கே₃ऽபி நோபஜாயந்தே ப்ரலயே ந வ்யத₂ந்தி ச ॥2॥**

**இத₃ம்** – இந்த, **ஜ்ஞாநம்** – ஞானத்தை, **உபாஸ்ரித்ய** – அறிந்து பின்பற்றி, **மம** – என்னுடைய, **ஸாத₄ர்ம்யம்** – ஸ்வரூபத்தை, **ஆக₃தா:** – அடைந்துள்ளவர்கள், **ஸர்கே₃** – படைப்பின் தொடக்கத்திலும், **ந உபஜாயந்தே** – (மீண்டும்) பிறப்பதுமில்லை; **ப்ரலயே அபி** – ப்ரளய காலத்திலும், **ந வ்யத₂ந்தி ச** – துன்புறுவதுமில்லை.

இந்த ஞானத்தை அறிந்து பின்பற்றி என்னுடைய ஸ்வரூபத்தை அடைந்துள்ளவர்கள் படைப்பின் தொடக்கத்திலும் மீண்டும் பிறப்பதுமில்லை; ப்ரளய காலத்திலும் துன்புறுவதுமில்லை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ஜ்ஞாநம்' என்பதுடன் 'இதம்' எனும் அடைமொழி எதற்கு? 'அந்த ஞானத்தை அறிந்து பின்பற்றி' என்றால் என்ன?

**பதில்:** 13வது அத்யாயத்தில் ஏற்கனவே கூறப்பட்டதும் இந்த 14வது அத்யாயத்திலும் தொடர்ந்து விளக்கப்படுவதுமான அந்த ஞானத்திற்குத்தான் இந்தப் பெருமை. இதைத் தெளிவுபடுத்துவதற்காகவே, 'இந்த ஞானம்' என்று சுட்டிக்காட்டுகிறார். இந்த ஸந்தர்பத்தில் விளக்கப்படுகிற ஞானமுறையில் ப்ரக்ருதி–புருஷன் இவற்றின் ஸ்வரூபத்தை அறிந்து குணங்களோடு கூடிய ப்ரக்ருதியிலிருந்து எல்லா வகைகளிலும் விலகி, நிர்குணமான, உருவமற்ற, ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவின் ஸ்வரூபத்தில் இரண்டறக் கலப்பதுதான் – இந்த ஞானத்தைத் துணையாகக் கொண்டு அதைக் கடைப்பிடிப்பதாகும்.

**கேள்வி:** பகவானுடைய ஸ்வரூபத்தை அடைவது என்றால் என்ன?

**பதில்:** முன் ச்லோகத்தில் 'பராம் ஸித்திம் கதா:' (மிகச்சிறந்த ஸித்தியை அடைந்துள்ளார்கள்) என்று கூறினார். அதைத்தான் இங்கே 'மம ஸாதர்ம்யமாகதா:' (என் ஸ்வரூபத்தை அடைந்துள்ளார்கள்) என்கிறார். அதாவது பகவானுடைய நிர்குண ஸ்வரூபத்தில் இரண்டறக் கலப்பதுதான் பகவானுடைய ஸ்வரூபத்தை (ஸாதர்ம்யத்தை) அடைவது ஆகும்.

**கேள்வி:** 'பகவானை அடைந்துவிட்டவர் படைப்பின் தொடக்கத்தில் பிறப்பதுமில்லை; ப்ரளய காலத்தில் துன்புறுவதுமில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த அத்யாயங்களில் கூறப்பட்ட ஞானத்தைச் சார்ந்து, அதன்படி ஸாதனைப் புரிந்து, பரப்ரம்மமான பரமாத்மாவின் ஸ்வரூபத்தில் இரண்டறக் கலந்து, முக்தர்களானவர்கள் பெரும் படைப்பின் தொடக்கத்தில் பிறப்பதுமில்லை; ப்ரளய காலத்தில் துன்புறுவதுமில்லை. உண்மையில் ஸ்ருஷ்டியின் தொடக்கம், ப்ரளயம் இவற்றில் அவருக்கு ஸம்பந்தமே கிடையாது. ஏனெனில் நல்ல–தீய பிறவிகளில் பிறப்பதற்கு முக்ய காரணம் குணங்களின் சேர்க்கை. முக்தர்கள் குணங்களுக்கு முற்றிலும் அப்பாற்பட்டவர்கள். ஆகையால் அவர்கள் திரும்பி வருவதில்லை. தோன்றுதல் கிடையாது என்னும்போது அழிவு ஏது?

**பொருத்தம்:** இவ்விதம் ஞானம் பற்றி மறுபடியும் கூறுவதாக ஆரம்பித்து அதன் பெருமையைச் சொல்லி, பகவான் அந்த ஞானத்தை விளக்கத் தொடங்கி, இரண்டு ச்லோகங்களில் ப்ரக்ருதி-புருஷன் இவற்றினிடமிருந்து எல்லா ப்ரபஞ்சங்களும் உற்பத்தியாகின்றன என்று கூறுகிறார்—

**मम योनिर्महद्ब्रह्म तस्मिन्गर्भं दधाम्यहम्।**
**सम्भवः सर्वभूतानां ततो भवति भारत॥ ३॥**

**மம யோநிர்மஹத்ப்₃ரஹ்ம தஸ்மிந்க₃ர்ப₄ம் த₃தா₄ம்யஹம் ।**
**ஸம்ப₄வ: ஸர்வபூ₄தாநாம் ததோ ப₄வதி பா₄ரத ॥ 3 ॥**

**பா₄ரத** – அர்ஜுன! **மம** – என்னுடைய, **மஹத் ப்₃ரஹ்ம** – மஹத் ப்ரம்மம் என்கிற மூலப்ரக்ருதி, **யோநி:** – (அகில சராசரங்களுக்கும்) பிறப்பிடம். **அஹம்** – நான், **தஸ்மிந்** – அந்தப் பிறப்பிடத்தில், **க₃ர்ப₄ம்** – சேதன ஸமுதாயமான உயிரினங்களின் கருவை, **த₃தா₄மி** – வைக்கிறேன். **தத:** – அந்த ஜடசேதன சேர்க்கையிலிருந்து, **ஸர்வபூ₄தாநாம்** – ஸகல சராசரங்களுடைய, **ஸம்ப₄வ:** – உற்பத்தி, **ப₄வதி** – ஏற்படுகிறது.

அர்ஜுன! என்னுடைய மஹத் ப்ரம்மம் என்கிற மூலப்ரக்ருதி அகில சராசரங்களுக்கும் பிறப்பிடம். நான் அந்தப் பிறப்பிடத்தில் சேதன ஸமுதாயமான உயிரினங்களின் கருவை வைக்கிறேன். அந்த ஜடசேதன சேர்க்கையிலிருந்து ஸகல சராசரங்களுடைய உற்பத்தி ஏற்படுகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'மஹத் ப்ரஹ்ம' என்றால் எது? அதை 'மம யோநி:' என்று கூறுவானேன்?

**பதில்:** அகில உலகிற்கும் காரணமானது மூலப்ரக்ருதி. இதை அவ்யக்தம், ப்ரதானம், மஹத் ப்ரஹ்மம் என்றும் கூறுவர். இதன் விளக்கம் 9/7ல் கொடுக்கப்பட்டது. இத்துடன் பரமாத்மாவுக்கு அநாதியான காலம் கடந்த உறவு உண்டு என்பதை 'மம' எனும் சொல்லால் குறிப்பிடுகிறார். 'யோநி:' என்பது உபாதான காரணம் – கருத்தரிக்கும் ஆதார ஸ்தானம் என்று கூறி எல்லா ப்ராணிகளுடைய வெவ்வேறு உடல்களுக்கும் இதுதான் காரணம். இதுவே கருத்தரிக்கும் இடம் என்று காட்டுகிறார்.

**கேள்வி:** இங்கே 'கர்பம்' என்றால் என்ன? அதை 'மஹத் ப்ரஹ்ம' என்ற ப்ரக்ருதியில் வைப்பது என்றால் என்ன?

**பதில்:** 7வது அத்யாயத்தில் 'பரா ப்ரக்ருதி' என்று குறிப்பிடப்பட்ட அந்த சேதனத் தொகுப்புதான் 'கர்பம்'. மஹாப்ரளயத்தின்போது தத்தம் ஸம்ஸ்காரங்களுடன் (மனப்பதிவு களுடன்) கூட ஜீவஸமுதாயம் பரமேசுவரனிடம் அடங்குகின்றது. மஹாஸ்ருஷ்டியெனும் பெரிய படைப்பின் ஆரம்பத்தில் அவற்றிற்கு ப்ரக்ருதியுடன் கூட தனிப்பட்ட தொடர்பு ஏற்படுகிறதே, அதுதான் சேதனத் தொகுப்பின் கர்பத்தை ப்ரக்ருதி என்ற யோனியில் வைப்பதாகும்.

**கேள்வி:** 'தத:' என்றால் என்ன? 'ஸர்வபூதாநாம்' என்றால் எவை? அவற்றின் உற்பத்தி எப்படி நடைபெறுகிறது?

**பதில்:** 'தத:' என்பது ஜடமான ப்ரக்ருதியுடன் சேதனமான ஜீவக்கூட்டத்தைச் சேர்க்கும் பகவானுடைய செயலைக் குறிக்கிறது. தத்தம் கர்மவினைப்பயனுக்கு ஏற்ப தேவர்கள், மனிதர்கள், விலங்குகள், பறவைகள் முதலிய பற்பல பிறவிகளில் உற்பத்தியாகின்ற ப்ராணிகளே 'ஸர்வபூதங்கள்'. மேலே சொன்ன ஜடசேதன இணைப்பிலிருந்து வெவ்வேறு வடிவங்களில் எல்லா ப்ராணிகளும் நுட்பமான வடிவிலிருந்து வெளிப்படுகின்றனவே – அதுதான் அவற்றின் உற்பத்தி. மஹாப்ரளயத்திற்குப் பிறகு மஹத் ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் மேலே சொன்ன இணைப்பிலிருந்து முதன்முதல் ஹிரண்யகர்பனும், அதன்பின் மற்ற சராசரங்களும் உண்டாகின்றனர்.

**सर्वयोनिषु कौन्तेय मूर्तयः सम्भवन्ति याः।**
**तासां ब्रह्म महद्योनिरहं बीजप्रदः पिता॥४॥**

**ஸர்வயோநிஷு கௌந்தேய மூர்தய: ஸம்ப₄வந்தி யா: ।**

**தாஸாம் ப்₃ரஹ்ம மஹத்₃யோநிரஹம் பீ₃ஜப்ரத₃: பிதா ॥ 4 ॥**

**கௌந்தேய** – அர்ஜுன! **ஸர்வயோநிஷு** – பலவிதமான அனைத்துப் பிறப்பிடங் களிலும், **யா:** – எத்தனை, **மூர்தய:** – உருவங்கள் (உடல்கள்) கொண்ட ப்ராணிகள், **ஸம்ப₄வந்தி** – உண்டாகின்றனவோ, **தாஸாம்** – அவை எல்லாவற்றிற்கும், **மஹத் ப்₃ரஹ்ம** – ப்ரக்ருதியே, **யோநி:** – பிறப்பிடம் (கருத்தரிக்கும் தாய்). **அஹம்** –. நான், **பீ₃ஜப்ரத₃:** – விதையளிக்கும், **பிதா** – தந்தை.

அர்ஜுன! பலவிதமான அனைத்துப் பிறப்பிடங்களிலும் எத்தனை உருவங்கள் – உடல்கள் கொண்ட ப்ராணிகள் உண்டாகின்றனவோ, அவை எல்லாவற்றிற்கும் ப்ரக்ருதியே பிறப்பிடம் – கருத்தரிக்கும் தாய். நான் விதையளிக்கும் தந்தை.

**கேள்வி:** 'மூர்தய:' என்றால் எவை? பலவிதமான அனைத்துப் பிறப்பிடங்களிலும் அவை உண்டாகின்றன என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'மூர்தய:' என்ற சொல் தேவர்கள், மனிதர்கள், ராக்ஷஸர்கள், விலங்குகள், பறவைகள் முதலிய பலவகைப்பட்ட வெவ்வேறு நிறங்கள், வடிவங்கள் கொண்ட



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உடல்களுடன் கூடிய அனைத்து ப்ராணிகளையும் குறிக்கும். அந்த தேவர்கள், மனிதர்கள், விலங்குகள், பறவைகள் முதலிய பிறப்பிடங்களில் அந்த ப்ராணிகள் ஸ்தூல உடல்களுடன் பிறவி எடுப்பதே அவற்றின் உற்பத்தி எனப்படும்.

**கேள்வி:** 'அந்த மூர்த்திகளுக்கெல்லாம் விதை அளிக்கும் தந்தை நான். அந்த மஹத் ப்ரம்மம் (ப்ரக்ருதி) தாய்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "அந்த மூர்த்திகளுக்கு உரிய நுண்ணியதாகவும், ஸ்தூலமாகவும் உள்ள உடல்கள் ப்ரக்ருதியின் அம்சத்தினால் உண்டாவன. அவற்றில் உணரும் சக்தி படைத்த ஆத்மா என்னுடைய அம்சம். இவ்விரண்டின் சேர்க்கையினால் எல்லா மூர்த்திகளும் அதாவது உடலுடன் கூடிய அனைத்து ப்ராணிகளும் வெளிப்படுகின்றன. ஆகவே ப்ரக்ருதி அவற்றின் தாய். நான் தந்தை" எனப் பகர்கிறார் பகவான்.

**பொருத்தம்:** 13/21ல் குணங்களின் சேர்க்கையினால் ஜீவன் நல்லதும், தீயதுமான யோனிகளில் பிறக்கிறான் என்று சொன்னார். அதை அனுஸரித்து ஜீவன் வெவ்வேறு யோனிகளில் பிறப்பது பற்றி இங்கு நான்காவது ச்லோகம் முடிய கூறினார். ஆனால் குணங்கள் பற்றிய பேச்சே இல்லை. ஆகவே அந்த குணங்கள் எவை? அவற்றின் சேர்க்கை என்றால் என்ன? எந்த குணச் சேர்க்கையால் நல்ல பிறவி? எந்த குணச் சேர்க்கையால் தீய பிறவி? இவ்விஷயத்தைப் பற்றிக் கூற ஆரம்பித்து ச்லோகம் 5 முதல் 8 வரை அந்த முக்குணங்கள் ப்ரக்ருதியில் உண்டானவை என்றும், அவற்றின் வெவ்வேறு பெயர்களையும் கூறி, அவற்றின் ஸ்வரூபங்கள், அவற்றின் மூலம் ஜீவன் பந்தப்படும் முறை ஆகியவற்றை வரிசையாகத் தனித்தனியாக வர்ணிக்கிறார்—

**सत्त्वं रजस्तम इति गुणाः प्रकृतिसम्भवाः ।**
**निबध्नन्ति महाबाहो देहे देहिनमव्ययम् ॥ ५ ॥**

**ஸத்த்வம் ரஜஸ்தம இதி கு₃ணா: ப்ரக்ருதிஸம்ப₄வா: ।**
**நிப₃த்₄நந்தி மஹாபா₃ஹோ தே₃ஹே தே₃ஹிநமவ்யயம் ॥ 5 ॥**

**மஹாபா₃ஹோ** – அர்ஜுன! **ஸத்த்வம்** – ஸத்வகுணம், **ரஜ:** – ரஜோகுணம், **தம:** – தமோகுணம், **இதி** – என்ற, **ப்ரக்ருதிஸம்ப₄வா:** – ப்ரக்ருதியிலிருந்து உண்டான, **கு₃ணா:** – மூன்று குணங்களும், **அவ்யயம்** – அழிவற்றதான, **தே₃ஹிநம்** – ஜீவாத்மாவை, **தே₃ஹே** – இவ்வுடலில், **நிப₃த்₄நந்தி** – கட்டுகின்றன.

அர்ஜுன! ஸத்வகுணம், ரஜோகுணம், தமோகுணம் என்ற ப்ரக்ருதியிலிருந்து உண்டான மூன்று குணங்களும் அழிவற்றதான ஜீவாத்மாவை இவ்வுடலில் கட்டுகின்றன.

**கேள்வி:** ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் சொற்களைக் கையாள்வதன் கருத்து என்ன? முக்குணங்கள் ப்ரக்ருதியில் உண்டானவை என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** குணங்களின் வேற்றுமை, பெயர், எண்ணிக்கை ஆகியன இங்கே கூறப்படுகின்றன. ஸத்வம், ராஜஸம், தாமஸம் என்று குணங்கள் மூன்று. அவை மூன்றும் ஒன்றுக்கொன்று வேறானவை. ப்ரக்ருதியின் விளைவுகளும், உலகில் உள்ள எல்லா ஜடப்பொருட்களும் இம்மூன்றின் விரிவுதான்.

**கேள்வி:** 'தேஹிநம்' என்கிற சொல்லின் பொருள் என்ன? அவனை 'அவ்யயம்' என்று கூறுவதன் கருத்து என்ன? முக்குணங்கள் இவனை உடலில் கட்டுகின்றன என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உடலில் 'தான்' என்ற அபிமானம் உள்ளவன் தேஹீ. அவனிடம் முக்குணங்களின் தாக்கம் ஏற்படுகிறது. உண்மையில் ஜீவாத்மா எந்நிலையிலும் அழிவற்றவன்; விகாரமற்றவன். ஆகவே அவனுக்கு பந்தம் ஏற்பட முடியாது. தொன்றுதொட்டு வந்துள்ள



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அஞ்ஞானத்தினால் அவன், தான் கட்டுண்டதாக நினைக்கிறான். இம்முக்குணங்களும் தங்களுக்குகந்த வகைகளில் ஜீவனுக்கு போகப் பொருட்களிலும், சரீரங்களிலும் மமகாரம், பற்று, அபிமானம் – இவற்றை உண்டாக்குகின்றன. இதுவே முக்குணங்கள் ஜீவனைக் கட்டுவது என்பதாகும். அதாவது ஜீவாத்மாவிற்கு முக்குணங்களிலிருந்தும் உண்டாகிய சரீரங்களிலும், அவற்றோடு ஒட்டிய பொருட்களிலும் உள்ள அபிமானம், பற்று மற்றும் மமகாரம் இவையே 'தளை' எனப்படும்.

**பொருத்தம்: இனி ஸத்வ குணத்தின் இயல்பையும், அது எப்படி ஜீவாத்மாவைக் கட்டுகிறது என்பதையும் விளக்குகிறார்—**

**तत्र सत्त्वं निर्मलत्वात्प्रकाशकमनामयम्।**
**सुखसङ्गेन बध्नाति ज्ञानसङ्गेन चानघ॥ ६॥**

**தத்ர ஸத்த்வம் நிர்மலத்வாத்ப்ரகாஶகமநாமயம் ।**
**ஸுக₂ஸங்கே₃ந ப₃த்₄நாதி ஜ்ஞாநஸங்கே₃ந சாநக₄ ॥ 6 ॥**

**அநக₄** – பாவமற்றவனே! **தத்ர** – அந்த முக்குணங்களில், **ஸத்த்வம்** – ஸத்வகுணம், **நிர்மலத்வாத்** – தூய்மையானதால், **ப்ரகாஶகம்** – ஒளி கொடுக்கக் கூடியது; (மேலும்), **அநாமயம்** – விகார'மற்றது. (ஆயினும் அது), **ஸுக₂ஸங்கே₃ந** – இன்பத்தில் கொண்ட தொடர்பினாலும், **ஜ்ஞாநஸங்கே₃ந ச** – ஞானத்தில் கொண்ட தொடர்பினாலும் (அபிமானத்தினாலும்), **ப₃த்₄நாதி** – கட்டுகிறது.

பாவமற்றவனே! அந்த முக்குணங்களில் ஸத்வகுணம் தூய்மையானதால் ஒளி கொடுக்கக் கூடியது; மேலும் விகாரமற்றது. ஆயினும் அது இன்பத்தில் கொண்ட தொடர்பினாலும் ஞானத்தில் கொண்ட தொடர்பினாலும் அதாவது (அபிமானத்தினாலும்) கட்டுகிறது.

**கேள்வி:** *'நிர்மலத்வாத்' என்றால் என்ன? 'ஸத்வகுணம் ஒளி கொடுக்கக் கூடியது; விகாரமற்றது' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** ஸத்வகுணம் எவ்வகையிலும் தூய்மையானது. அதில் எவ்விதமான மாசும் கிடையாது. ஆகவே அது ப்ரகாசப்படுத்துகிறது; விகாரமடைவதில்லை. அதனால் உள்ளத்திலும், புலன்களிலும் ஒளி கூடுகிறது. துக்கம், தடுமாற்றம், தீய குணங்கள், தீய நடவடிக்கைகள் அழிகின்றன. சாந்தி கிடைக்கிறது. ஸத்வகுணம் பெருகுமானால் மனதில் சஞ்சலம் தானாக நீங்குகிறது. அவன் ஸம்ஸாரத்தில் வைராக்யமும், ஓய்வும் பெறுகிறான். ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவின் த்யானத்தில் மூழ்குகிறான். அத்துடன் அவனுடைய உள்ளத்திலும், எல்லாப் புலன்களிலும் துக்கமும், சோம்பலும் அகன்று விழிப்புணர்வு வளர்கிறது. 'நிர்மலத்வாத்' என்ற சொல் ஸத்வகுணத்தின் இப்பண்புகளைக் குறிக்கின்றது. 'அது ஒளி கொடுக்கக்கூடியது, விகாரமற்றது' என்பதற்கு இதுதான் பொருள்.

**கேள்வி:** *'அந்த ஸத்வகுணம் ஜீவாத்மாவை இன்பம், ஞானம் இவற்றின் தொடர்பினால் கட்டுகிறது' என்றால் என்ன கருத்து?*

**பதில்:** ஸுகம் என்பதன் இலக்கணங்களை 18/36,37களில் காணலாம். அது ஸாத்விக ஸுகம். அதைப் பெறும்போது 'நான் ஸுகமாக இருக்கிறேன்' என்று அபிமானம் கொண்டு ஜீவாத்மாவுக்கு அந்த ஸுகத்துடன் தொடர்பு ஏற்படுகிறது. அது ஸாதனை வழியில் மேலே செல்லவிடாமல் அவனைத் தடை செய்கிறது. அவன் ஜீவன்முக்த நிலையை அடைய முடிவதில்லை. 'ஸத்வகுணத்தினால் ஏற்பட்ட ஸுகத்தின் தொடர்பினால் மனிதன் பந்தப்படுகிறான்' என்பதன் பொருள் இதுதான்.

ஞானம் என்றால் அறிவாற்றல். அது வெளிப்பட்டால் 'நான் ஞானி' என்று அவனை அபிமானம் கொள்ள வைக்கிறது. அதற்கு மேலே குணாதீத நிலையை அடையவிடாமல்



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தடுக்கிறது. 'ஸத்வகுணம் ஜீவாத்மாவை ஞானத்தினால் கட்டுகிறது' என்பதற்கு இதுதான் பொருள்.

**கேள்வி:** 'அநக' (பாவமற்றவனே) என்று அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** அகம் என்பது பாவம். பாவம் முற்றும் அற்றவன் அனகன் ஆவான். அர்ஜுனன் பாவங்கள் அறவே அற்றவன். 'உனக்கு இயல்பாகவே பாவங்கள் கிடையா. ஆகவே, உனக்கு பந்தம் என்ற பயமில்லை' என்று பகவான் கூறுகிறார்.

**பொருத்தம்:** இனி ரஜோ குணத்தின் இயல்பு; அது ஜீவாத்மாவை எப்படி பந்தப்படுத்துகிறது என்பதைக் கூறுகிறார்—

**रजो रागात्मकं विद्धि तृष्णासङ्गसमुद्भवम्।**
**तन्निबध्नाति कौन्तेय कर्मसङ्गेन देहिनम्॥७॥**

**ரஜோ ராக₃ாத்மகம் வித்₃தி₄ த்ருஷ்ணாஸங்க₃ஸமுத்₃ப₄வம் ।**
**தந்நிப₃த்₄நாதி கௌந்தேய கர்மஸங்கே₃ந தே₃ஹிநம் ॥ 7 ॥**

**கௌந்தேய** – அர்ஜுன! **ராக₃ாத்மகம் ரஜ:** – விருப்பு வடிவாகிற ரஜோகுணம், **த்ருஷ்ணாஸங்க₃ஸமுத்₃ப₄வம்** – ஆசை, பற்று இவற்றில் உண்டானதாக, **வித்₃தி₄** – அறிந்து கொள். **தத்** – அது, **தே₃ஹிநம்** – ஜீவாத்மாவை, **கர்மஸங்கே₃ந** – கர்மங்களிலும் கர்மங்களின் பயன்களிலும் உள்ள தொடர்பால், **நிப₃த்₄நாதி** – கட்டுகிறது.

அர்ஜுன! விருப்பு வடிவாகிற ரஜோகுணம், ஆசை, பற்று இவற்றில் உண்டானதாக அறிந்துகொள். அது ஜீவாத்மாவைக் கர்மங்களிலும், கர்மங்களின் பயன்களிலும் உள்ள தொடர்பால் கட்டுகிறது.

**கேள்வி:** ரஜோ குணம் 'ராகாத்மகம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ரஜோ குணம் தானாகவே விருப்பத்தின் அதாவது பற்றின் மூலமாக வெளிப்படுகிறது. விருப்பம் ரஜோ குணத்தின் வெளிப்படையான தன்மை. ஆகவே அதையே ரஜோ குணம் என்று கொள்ள வேண்டும் என்கிறார்.

**கேள்வி:** இங்கு ரஜோ குணம் ஆசையினாலும், பற்றுதலினாலும் உண்டாகிறது என்கிறார். ஆசை ரஜோ குணத்தினால் உண்டாகிறது என்று 3/37, 14/12வது ச்லோகங்களில் கூறுகிறார். அப்படியானால் ரஜோகுணம் ஆசையின் விளைவா அல்லது ஆசைக்குக் காரணமா?

**பதில்:** ஆசையினாலும், பற்றுதலினாலும் ரஜோ குணம் வளர்கிறது. ரஜோ குணத்தினால் ஆசையும், பற்றும் பெருகுகின்றன. விதையும், மரமும்போல ஒன்றுக்கொன்று தொன்றுதொட்டுத் தொடர்புள்ளவை. இங்கு ரஜோ குணம் விதை. ஆசையும், பற்றும் மரங்கள். விதை மரத்தில்தானே உண்டாகிறது. ஆயினும் மரத்திற்குக் காரணம் விதை. இதைத் தெளிவுபடுத்துவதற்காகத்தான் சில இடங்களில் ரஜோ குணத்திலிருந்து ஆசையின் உற்பத்தி என்றும், சில இடங்களில் ஆசையிலிருந்து ரஜோ குண உற்பத்தி என்றும் சொல்கிறார். இங்கு 'த்ருஷ்ணாஸங்கஸமுத்பவம்' என்ற சொற்றொடருக்கு இரண்டு விதங்களிலும் பொருள் கொள்வது ஏற்புடையதே. ஆசையினாலும், பற்றுதலினாலும் எது நன்றாக வெளிப்படுகிறதோ, அது ரஜோ குணமாகிறது. அப்படியே எதிலிருந்து ஆசையும், பற்றுதலும் தோன்றுகின்றனவோ, அதுதான் ரஜோ குணம் என்று கொண்டோமானால் அப்போது ரஜோ குணம் காரணமாகிறது. மரம் முந்தியது. விதை முந்தியது – ந்யாயப்படி இரண்டுமே சரிதான். ஆகவே இரண்டுவிதமாகவும் இச்சொல்லுக்குப் பொருள் கொள்ளலாம்.

**கேள்வி:** கர்மங்களின் ஸங்கம் என்றால் என்ன? 'அதன் மூலம் ரஜோ குணம் ஜீவனைக் கட்டுகிறது' என்று கூறுவதன் கருத்து என்ன?



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** 'இந்தக் கர்மங்களை நான் செய்கிறேன்' என்று கர்மங்களுக்குத் 'தான் கர்த்தா' என்ற அபிமானம் ஏற்பட்டு, 'இதனால் எனக்கு இந்தப் பயன் கிடைக்கும்' என்று கருதி கர்மங்களுடனும், அவற்றின் பயன்களுடனும் தன் தொடர்பை நிலைநிறுத்திக் கொள்வதுதான் கர்மஸங்கம். இதன் மூலம் ரஜோ குணம் ஜீவாத்மாவை பிறப்பு, இறப்பு வடிவான ஸம்ஸாரத்தில் சிக்க வைக்கிறது. கர்மஸங்கத்தின் மூலம் ஜீவனுக்கு பந்தம் ஏற்படுவது என்பது இதுதான்.

**பொருத்தம்:** இனி, தமோ குணத்தின் ஸ்வரூபம், அது ஜீவாத்மாவை எப்படிக் கட்டுகிறது என்பதைக் கூறுகிறார்—

**तमस्त्वज्ञानजं विद्धि मोहनं सर्वदेहिनाम्।**
**प्रमादालस्यनिद्राभिस्तन्निबध्नाति भारत॥ ८॥**

**தமஸ்த்வஜ்ஞாநஜம் வித்3தி4 மோஹநம் ஸர்வதே3ஹிநாம் ।**
**ப்ரமாத3ாலஸ்யநித்3ராபி4ஸ்தந்நிப3த்4நாதி ப4ாரத ॥ 8 ॥**

**ப4ாரத** – அர்ஜுன! **ஸர்வதே3ஹிநாம்** – உடற்பற்றுடைய எல்லோரையும், **மோஹநம்** – மயக்கக்கூடிய, **தம: து** – தமோகுணமோ, **அஜ்ஞாநஜம்** – அஞ்ஞானத்திலிருந்து உண்டானதாக, **வித்3தி4** – அறிந்துகொள். **தத்** – அது, (**தே3ஹிநம்** – இந்த ஜீவாத்மாவை), **ப்ரமாத3 ஆலஸ்ய நித்3ராபி4:** – வீணான செயல்களில் ஈடுபடுவது, சோம்பல், தூக்கம் இவற்றால், **நிப3த்4நாதி** – கட்டுகிறது.

அர்ஜுன! உடற்பற்றுடைய எல்லோரையும் மயக்கக்கூடிய தமோகுணமோ அஞ்ஞானத்திலிருந்து உண்டானதாக அறிந்துகொள். அது இந்த ஜீவாத்மாவை வீணான செயல்களில் ஈடுபடுவது, சோம்பல், தூக்கம் இவற்றால் கட்டுகிறது.

**கேள்வி:** தமோ குணம் உடல் பற்றுடைய அனைவரையும் மயக்கும் தன்மையுடையது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உள்ளத்திலும், புலன்களிலும் அறியும் சக்தியை இழக்கச் செய்து மயக்கத்தை உண்டாக்குவதையே 'தமோ குணம் உடல் பற்றுடைய அனைவரையும் மயக்கும் தன்மையுடையது' என்னும் சொற்றொடர் குறிக்கிறது. உள்ளத்துடனும், புலன்களுடனும் தொடர்பு கொண்டவர்களும், அவ்வாறே உடலில் தாம், தமது என்ற அபிமானம் கொண்டவர்களுமான அந்த எல்லா ப்ராணிகளும், உறங்கும் சமயம் முதலிய நேரங்களில் உள்ளத்திலும், புலன்களிலும் மயக்கம் உண்டாவதால் தாமே மோஹமடைந்ததாகக் கருதுகிறார்கள். ஆனால் உள்ளம், புலன்களுடன்கூடிய உடலில் அபிமானமற்றவர்களான ஜீவன்முக்தர்கள் அவற்றுடன் தங்களுக்கு எந்தத் தொடர்பும் உள்ளதாகக் கருதுவதில்லை. ஆகவே தமோ குணம் எல்லா தேஹாபிமானிகளையும் மயங்கச் செய்வது என்று கூறுகிறார்.

**கேள்வி:** தமோ குணம் அஞ்ஞானத்தினால் உண்டாவது என்று கூறுவதன் கருத்து என்ன? 17வது ச்லோகத்தில் தமோ குணத்தினால் அஞ்ஞானம் உண்டாகிறது என்று கூறுகிறாரே?

**பதில்:** தமோ குணத்தினால் அஞ்ஞானமும், அஞ்ஞானத்தினால் தமோ குணமும் வளர்கின்றன. இவையிரண்டும் விதை-மரம்போல ஒன்றையொன்று சார்ந்துள்ளன. இதில் அஞ்ஞானம் விதை. தமோ குணம் மரம். ஆகவே ஓரிடத்தில் தமோ குணத்தினால் அஞ்ஞானம் விளைகிறது என்றும், மற்றோரிடத்தில் அஞ்ஞானத்தினால் தமோ குணம் உண்டாகிறது என்றும் கூறுகிறார்.

**கேள்வி:** 'ப்ரமாத', 'ஆலஸ்ய', 'நித்ரா' என்றால் எவை? இவற்றால் தமோ குணம் ஜீவாத்மாவைக் கட்டுகிறது என்பதன் பொருள் என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** புலன்களும், உள்ளமும் வீண் செயல்களில் ஈடுபடுவதும், சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களை ஆற்றாமல் அவற்றை இகழ்வதும் 'ப்ரமாதம்' (மதியாதிருத்தல்). கடமைகளை ஆற்றுவதில் முயற்சி மேற்கொள்ளாமல் இருப்பது 'ஆலஸ்யம்' (சோம்பல்). களைப்பு, ஆழ்ந்த உறக்கம் இவை 'நித்ரா'. இவையனைத்தின் மூலம் தமோ குணம் ஜீவாத்மாவை மோக்ஷ ஸாதனங்களில் ஈடுபடுவதிலிருந்து தடுத்து பிறப்பு—இறப்பு வடிவான ஸம்ஸாரத்தில் கொண்டு சிக்க வைக்கிறது.

**பொருத்தம்:** இவ்விதம் ஸத்வம், ரஜஸ், தமோ குணங்களின் ஸ்வரூபங்களையும், அவை ஜீவாத்மாவைப் பந்தப்படுத்தும் முறைகளையும் கூறி, அவற்றின் இயல்பான செயல்பாட்டைக் கூறுகிறார்—

सत्त्वं सुखे सञ्जयति रजः कर्मणि भारत।
ज्ञानमावृत्य तु तमः प्रमादे सञ्जयत्युत॥ ९॥

**ஸத்த்வம் ஸுகே₂ ஸஞ்ஜயதி ரஜ: கர்மணி ப₄ாரத ।**
**ஜ்ஞாநமாவ்ருத்ய து தம: ப்ரமாதே₃ ஸஞ்ஜயத்யுத ॥ 9 ॥**

**ப₄ாரத** – அர்ஜுன! **ஸத்த்வம்** – ஸத்வகுணம்; **ஸுகே₂** – ஸுகத்தில், **ஸஞ்ஜயதி** – ஈடுபடுத்துகிறது. **ரஜ:** – ரஜோகுணம், **கர்மணி** – செயலில் (ஈடுபடுத்துகிறது). **தம: து** – தமோகுணமோ, **ஜ்ஞாநம்** – ஞானத்தை, **ஆவ்ருத்ய** – மறைத்து, **ப்ரமாதே₃ உத** – கவனமின்மையில் (அதாவது வீணான செயல்களில்), **ஸஞ்ஜயதி** – ஈடுபடுத்துகிறது.

அர்ஜுன! ஸத்வகுணம் ஸுகத்தில் ஈடுபடுத்துகிறது. ரஜோகுணம் செயலில் ஈடுபடுத்துகிறது. தமோகுணமோ ஞானத்தை மறைத்துக் கவனமின்மையில் அதாவது வீணான செயல்களில் ஈடுபடுத்துகிறது.

**கேள்வி:** இங்கே 'ஸுகம்' என்ற சொல் எந்த ஸுகத்தைக் குறிப்பிடுகிறது? ஸத்வ குணம் மனிதனை அதில் ஈடுபடுத்துகிறது என்றால் என்ன?

**பதில்:** இங்கு 'ஸுகம்' என்பது ஸாத்விக ஸுகத்தைக் குறிக்கும் (18/36,37). ஸத்வ குணம் மனிதனை உலகியல் போகங்களிலிருந்தும், அவற்றிற்கான செயல்களிலிருந்தும், கவனமின்மை, சோம்பல், தூக்கம் முதலியவற்றிலிருந்தும் விலக்கி ஆத்மாவைப் பற்றிய சிந்தனைகளில் ஈடுபடுத்தி, ஸாத்விகமான ஸுகத்தில் சேர்க்கிறது. இதுவே அவனை ஸுகத்தில் ஈடுபடுத்துவது ஆகும்.

**கேள்வி:** இங்கு கர்மம் என்றால் என்ன? 'ரஜோ குணம் மனிதனைச் செயல்களில் ஆழ்த்தும்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இவ்வுலகிலும், பரலோகத்திலும் அனுபவிக்கக் கூடிய போகங்கள் என்ற பயனைத் தருகின்றதான சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டுள்ளதாக பயன் கருதிச் செய்யப்படும் கர்மங்களை இங்கே 'கர்மங்கள்' என்று குறிப்பிடுகிறார். பலவிதமான போகங்களில் ஆசையைத் தோற்றுவித்து, அவற்றைப் பெறுவதற்காக மனிதனைக் கர்மங்கள் செய்ய ஊக்குவிப்பதே 'ரஜோ குணம் மனிதனைச் செயல்களில் ஆழ்த்தும்' என்று கூறுவதன் பொருள்.

**கேள்வி:** 'தமோ குணம் மனிதனின் ஞானத்தை மறைத்து, கவனமின்மையில் அவனை ஆழ்த்தும்' என்று கூறுவதன் கருத்து என்ன? இங்கு 'து', 'உத' என்ற சொற்களைப் பயன்படுத்துவதன் நோக்கம் என்ன?

**பதில்:** தமோ குணம் அதிகமாகிவிட்டால் மனிதன் செய்யத்தக்கது எது, செய்யத்தகாதது எது என்று பகுத்துணரும் விவேக சக்தியை இழக்கிறான். சில நேரங்களில் உள்ளமும், புலன்களும் உணர்விழக்க தூக்கத்தில் ஆழ்ந்துவிடுகிறான். இதுதான் தமோகுணம் ஞானத்தை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மறைப்பது ஆகும். கடமைகளை ஆற்றுவதில் கவனம் கொள்ளாமல் வீணான செயல்களில் ஈடுபடுவது கவனமின்மை ஆகும்.

'து' எனும் சொல்லை உபயோகித்துப் பின்வரும் கருத்தைக் கூறுகிறார். தமோ குணம் ஞானத்தை மட்டும் மறைத்து விடுவதில்லை. வேறு செயலையும் செய்கிறது என்று பொருள். 'உத' என்ற சொல்லைப் பயன்படுத்திப் பின்வரும் கருத்தை வெளியிடுகிறார். ஞானத்தை மறைத்து ப்ரமாதத்தில் ஆழ்த்துவதுபோலவே, தூக்கத்திலும், சோம்பலிலும்கூட ஆழ்த்துகிறது என்று பொருள். பகுத்தறிவை மறைக்கும்போது கவனமின்மை உண்டாகிறது. உள்ளத்திலும், புலன்களிலும் உள்ள உணர்வெனும் ஞான சக்தியைக் குறைத்து மழுங்கச் செய்து மறைக்கும்போது சோம்பலும், தூக்கமும் உண்டாகின்றன.

**பொருத்தம்:** ஸத்வம் முதலிய முக்குணங்கள் தமது செயல்களில் ஜீவனை ஈடுபடுத்தும்போது, அவை அப்படிச் செய்ய எவ்வகையில் திறன் படைத்தன என்பதைக் கூறுகிறார்—

**रजस्तमश्चाभिभूय सत्त्वं भवति भारत।**
**रजः सत्त्वं तमश्चैव तमः सत्त्वं रजस्तथा॥ १०॥**

**ரஜஸ்தமஸ்சாபி₄பூ₄ய ஸத்த்வம் ப₄வதி பா₄ரத ।**
**ரஜ: ஸத்த்வம் தமஸ்சைவ தம: ஸத்த்வம் ரஜஸ்தத₂ா ॥ 10 ॥**

*பா₄ரத* – அர்ஜுன! ***ரஜ:*** – ரஜோகுணத்தையும், ***தம: ச*** – தமோகுணத்தையும், ***அபி₄பூ₄ய*** – அடக்கி, ***ஸத்த்வம்*** – ஸத்வகுணம், ***ப₄வதி*** – மேலோங்குகிறது. ***ஸத்த்வம்*** – ஸத்வகுணத்தையும், ***தம: ச*** – தமோகுணத்தையும் (அடக்கி), ***ரஜ:*** – ரஜோகுணம் (மேலோங்குகிறது). ***தத₂ா ஏவ*** – அப்படியே, ***ஸத்த்வம்*** – ஸத்வகுணத்தையும், ***ரஜ:*** – ரஜோகுணத்தையும் (அடக்கி), ***தம:*** – தமோகுணம் (மேலோங்குகிறது).‡

*அர்ஜுன! ரஜோகுணத்தையும், தமோகுணத்தையும் அடக்கி ஸத்வகுணம் மேலோங்குகிறது. ஸத்வகுணத்தையும், தமோகுணத்தையும் அடக்கி ரஜோகுணம் மேலோங்குகிறது. அப்படியே ஸத்வகுணத்தையும், ரஜோகுணத்தையும் அடக்கித் தமோகுணம் மேலோங்குகிறது.*

**கேள்வி:** *ரஜோ குணத்தையும், தமோ குணத்தையும் அழுத்தி ஸத்வ குணம் மேலோங்குவது எப்படி?*

**பதில்:** ரஜோ குண, தமோ குணங்களின் செயலைத் தடுத்து, ஸத்வ குணம் தன் செயலைத் தொடங்கும்போது உடல், மனம், புலன்கள் எல்லாவற்றிலும் ப்ரகாசம், விவேகம், வைராக்யம் ஆகியவை மிகுந்து, அந்த மனிதன் மிகவும் அமைதியாகவும், ஸுகமாகவும் இருக்கிறான். அப்போது ரஜோ குணத்தின் விளைவுகளான பேராசை, செயலில் ஈடுபாடு, போகப்பற்று முதலியனவும் தமோ குண விளைவுகளான தூக்கம், சோம்பல், கவனமின்மை இவையும் தலையெடுக்க மாட்டா. இவ்விதம் மற்ற இரண்டு குணங்களையும் அடக்கி ஸத்வ குணம்

---

‡ குணங்கள் எப்படி வளர்கின்றன என்பதற்கான பத்துக் காரணங்களைக் கூறி ஸ்ரீமத்பாகவதம் விளக்குகிறது—

ஆக₃மோऽப: ப்ரஜா தே₃ஶ: கால: கர்ம ச ஜந்ம ச ।
த்₄யாநம் மந்த்ரோऽத₂ ஸம்ஸ்காரோ த₃ஶைதே கு₃ணஹேதவ: ॥

*(11/13/4)*

சாஸ்த்ரம், நீர், மக்கட்செல்வம், தேசம், காலம், கர்மம், பிறவி, சிந்தனை, மந்த்ரஜபம், ஸம்ஸ்காரம் – இவை பத்தும் குணங்களுக்குக் காரணங்கள் அதாவது குணங்களை வளர்க்கின்றன. மேலே குறிப்பிட்டவை எந்த குணங்கொண்டனவோ, அதனுடைய சேர்க்கை அந்த குணத்தை வளரச் செய்கிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஞானம், ப்ரகாசம், ஸுகம் இவற்றை உண்டாக்குகிறது. இதுதான் ரஜோ குணத்தையும், தமோ குணத்தையும் அழுத்தி ஸத்வ குணம் மேலோங்குவதாகும்.

**கேள்வி:** ஸத்வ குணத்தையும், தமோ குணத்தையும் அழுத்தி ரஜோ குணம் மேலோங்குவது என்றால் என்ன?

**பதில்:** ஸத்வ குணம், தமோ குணம் இவற்றின் செயல்கள் தலைதூக்குவதைத் தடுத்து ரஜோ குணம் தன் இயக்கத்தைத் தொடங்கும்போது, உடல், புலன்கள், உள்ளம் இவற்றில் சஞ்சலம், அமைதியின்மை, பேராசை, போகங்களில் பற்று, பலவிதக் கர்மங்களிலும் பேராவலுடன் ஈடுபாடு முதலியன உண்டாகின்றன. அப்போது ஸத்வ குண விளைவுகளான ப்ரகாசம், விவேக சக்தி, அமைதி இவையில்லாதது போன்ற நிலை உண்டாகிறது. தமோ குண விளைவுகளான தூக்கம், கவனமின்மை, சோம்பல் முதலியனவும் அழுத்தப்படுகின்றன. இதுதான் ஸ்த்வ, தமோ குணங்களை அழுத்தி ரஜோ குணம் மேலோங்குவது ஆகும்.

**கேள்வி:** ஸத்வ, ரஜோ குணங்களை அடக்கித் தமோ குணம் மேலோங்குவது எப்படி?

**பதில்:** ஸத்வ, ரஜோ குணங்களின் செயல்பாடுகளைத் தடுத்துத் தமோ குணம் தன் செயலைத் தொடங்கும்போது, உடல், புலன்கள், உள்ளம் இவற்றில் மோஹம் முதலியன வளர்கின்றன. வீணான செயல்களில் ஈடுபாடு உண்டாகிறது. செயல்பாடுகள் விவேகமற்றதாகின்றன. ஆகையால் ஸத்வ குணத்தின் செயல்களான ஒளியும், அறிவும், ரஜோகுணத்தின் செயல்களான கர்மங்களில் ஈடுபாடு, போகப்பொருட்களை அனுபவிப்பதில் விருப்பம் முதலியனவும் இல்லாதது போலக் காணப்படுகின்றன. அதாவது அவை வெளியில் தெரிவதில்லை. இதுதான் ஸத்வ, ரஜோ குணங்களை அடக்கித் தமோ குணம் மேலோங்குவது ஆகும்.

**பொருத்தம்:** இவ்விதம் மூன்றில் இரு குணங்களை அழுத்தி மூன்றாவதான குணம் பெருகுவதைக் கூறி, ஒவ்வொரு குணமும் பெருகுவதன் இலக்கணம் என்ன என்ற கேள்விக்குப் பதிலாக முதலில் ஸத்வ குணப்பெருக்கத்தின் இலக்கணம் கூறுகிறார்—

**सर्वद्वारेषु देहेऽस्मिन्प्रकाश उपजायते।**
**ज्ञानं यदा तदा विद्याद्विवृद्धं सत्त्वमित्युत ॥ ११ ॥**

**ஸர்வத்₃வாரேஷு தே₃ஹேऽஸ்மிந்ப்ரகாஶ உபஜாயதே ।**
**ஜ்ஞாநம் யதா₃ ததா₃ வித்₃யாத்₃விவ்ருத்₃த₄ம் ஸத்த்வமித்யுத ॥ 11 ॥**

**யதா₃** – எப்பொழுது, **அஸ்மிந்** – இந்த, **தே₃ஹே** – உடலிலும், **ஸர்வத்₃வாரேஷு** – உள்ளத்திலும், புலன்களிலும், **ப்ரகாஶ:** – சைதன்ய சக்தியான ஒளியும், **ஜ்ஞாநம்** – விவேக ஞானமும், **உபஜாயதே** – உண்டாகின்றதோ, **ததா₃** – அப்பொழுது, **ஸத்த்வம் உத** – ஸத்வகுணமே, **விவ்ருத்₃த₄ம்** – மேலோங்கி உள்ளது, **இதி** – என்று, **வித்₃யாத்** – அறிந்து கொள்ளவேண்டும்.

எப்பொழுது இந்த உடலிலும் உள்ளத்திலும், புலன்களிலும் சைதன்ய சக்தியான ஒளியும், விவேக ஞானமும் உண்டாகின்றதோ அப்பொழுது ஸத்வகுணமே மேலோங்கி உள்ளது என்று அறிந்து கொள்ளவேண்டும்.

**கேள்வி:** 'யதா', 'ததா' என்று காலத்தைக் காட்டும் சொற்களைக் கூறி, 'வித்யாத்' என்ற வினைச்சொல்லை உபயோகிப்பதன் கருத்து என்ன?

**பதில்:** ச்லோகத்தில் கூறப்பட்ட இலக்கணங்கள் வெளிப்பட்டு வளரும்போது ஸத்வ குணம் பெருகுகிறது என்று அறியவேண்டும். அப்போது மனிதன் எச்சரிக்கையுடன் தன் மனதை வழிபாடு, த்யானம் இவற்றில் ஈடுபடுத்த வேண்டும். அப்போதுதான் ஸத்வ குண

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உணர்வு நீண்ட நேரம் நிலைத்திருக்கும். அதை அலக்ஷ்யப்படுத்திவிட்டால் விரைவில் ரஜஸ், தமோ குணங்கள் அதை அழுத்திக் கொண்டு தலைதூக்கித் தம் செயல்பாட்டைத் தொடங்கிவிடும்.

**கேள்வி:** 'அஸ்மிந் தேஹே' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'அஸ்மிந்' என்று மனித உடலின் பெருமையைத் தனிப்படுத்திக் கூறுகிறார். மனித உடலில்தான் இந்த ச்லோகத்தில் கூறிய ஸத்வ குணம் பெருகுவதற்குரிய வாய்ப்பு உண்டு. இந்த உடலில் மட்டுமே பெருகும் ஸத்வ குணத்தின் உதவியுடன்தான் மனிதன் மோக்ஷத்தை அடைய முடியும். மற்றப் பிறவிகளில் இந்த வாய்ப்புக் கிடையாது என்று பொருள்.

**கேள்வி:** உடல், புலன்கள், உள்ளம் இவற்றில் சைதன்ய சக்தியான ஒளியும், விவேக ஞானமும் உண்டாகின்றன என்றால் என்ன கருத்து?

**பதில்:** உடலில் உணர்வு, கவலையற்ற நிலை, புலன்களிலும் உள்ளத்திலும் மாசற்ற தன்மை, விழிப்புணர்வின் பெருக்கம் இவையே சைதன்ய ஒளி உண்டாவது என்பதாகும். உண்மை எது, பொய் எது, செய்யத்தக்கது எது, செய்யத்தகாதது எது முதலியவற்றைத் தீர்மானிப்பதில் விவேகம் விழித்திருப்பதுதான் 'ஞானம்' உண்டாவது என்பதாகும். ப்ரகாசமும், விவேக ஞானமும் உண்டாகும்போது இயல்பாகவே உலகியலில் வைராக்யமும், மனதில் ஓய்வும் உண்டாகி வெள்ளம்போல ஸுகமும், அமைதியும் பெருகி வரும். கூடவே விருப்பு-வெறுப்பு, துக்கம், சோகம், கவலை, பயம், சஞ்சலம், தூக்கம், சோம்பல், கவனமின்மை இவை இல்லாதது போல் ஆகிவிடும்.

**பொருத்தம்:** ஸத்வ குணப்பெருக்கத்தின் இலக்கணத்தை இவ்விதம் கூறிவிட்டு, ரஜோ குணப்பெருக்கத்தின் இலக்கணம் கூறுகிறார்—

> लोभः प्रवृत्तिरारम्भः कर्मणामशमः स्पृहा।
> रजस्येतानि जायन्ते विवृद्धे भरतर्षभ॥ १२॥

> **லோப$_4$: ப்ரவ்ருத்திராரம்ப$_4$: கர்மணாமஶம: ஸ்ப்ருஹா ।**
> **ரஜஸ்யேதாநி ஜாயந்தே விவ்ருத்$_3$தே$_4$ ப$_4$ரதர்ஷப$_4$ ॥ 12 ॥**

**ப$_4$ரதர்ஷப$_4$** – அர்ஜுன! **ரஜஸி** – ரஜோகுணம், **விவ்ருத்$_3$தே$_4$** – அதிகமாகும்போது, **லோப$_4$:** – பேராசை, **ப்ரவ்ருத்தி:** – உலகியல் கர்மங்களில் ஈடுபாடு, **கர்மணாம் ஆரம்ப$_4$:** – தன்னலத்தில் பற்றோடு கூடிய கர்மங்களைத் தொடங்குதல், **அஶம:** – அமைதியின்மை, **ஸ்ப்ருஹா** – உலகியல் நுகர்பொருட்களில் பேராவல், **ஏதாநி** – இவையாவும், **ஜாயந்தே** – உண்டாகின்றன.

அர்ஜுன! ரஜோகுணம் அதிகமாகும்போது பேராசை, உலகியல் கர்மங்களில் ஈடுபாடு, தன்னலத்தில் பற்றோடு கூடிய கர்மங்களைத் தொடங்குதல், அமைதியின்மை, உலகியல் நுகர்பொருட்களில் பேராவல் இவையாவும் உண்டாகின்றன.

**கேள்வி:** 'லோப:', 'ப்ரவ்ருத்தி:', 'ஆரம்ப:', 'அசாந்தி:', 'ஸ்ப்ருஹா' இவற்றின் தன்மை என்ன? ரஜோ குணம் பெருகும்போது இவை தோன்றும் என்பது எப்படி?

**பதில்:** செல்வத்தில் உள்ள பேராசை லோபம் ஆகும். இதன் காரணமாக ஒவ்வொரு கணமும் மனிதன் செல்வத்தைப் பெருக்குவது எப்படி என்று சிந்திக்கிறான். செல்வத்தைச் செலவழிக்கத்தக்க தருணம் வந்தால்கூட, அதை த்யாகம் செய்வதில்லை. செல்வத்தை ஸம்பாதிக்கும்போது செய்யத்தக்கது எது, தகாதது எது என்று ஆராய்வதில்லை. பிறருடைய சொத்தின் மீதும் உரிமை செலுத்துவதற்கு விருப்பத்துடன் முனைகிறான். பலவிதச் செயல்களைப் புரிவதற்காக மனதில் உள்ளுணர்வு பெருகுவது 'ப்ரவ்ருத்தி' (கர்மங்களில்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


ஈடுபாடு) ஆகும். அவற்றைப் பயன் கருதிச் செய்வது 'ஆரம்பம்' ஆகும். மனச்சஞ்சலம் 'அமைதியின்மை' ஆகும். உலகியல் பொருட்கள் ஏதாவது ஒன்றில் தனக்கு வேண்டுமென்ற பேராவல் கொள்வது 'ஸ்ப்ருஹா'.

ரஜோ குணம் பெருகினால் மனிதனுடைய உள்ளத்தில் ஸத்வ குண விளைவுகளான ப்ரகாசம், விவேக சக்தி, அமைதி; தமோ குண விளைவுகளான தூக்கம், சோம்பல் ஆகிய இரண்டுவித எண்ணங்களும் தணிந்து விடுகின்றன. பலவித போகங்களின் அவசியம் தோன்றுகின்றது. உள்ளத்தில் பேராசை பெருகுகிறது. பணம் சேர்க்க முனைப்பு ஏற்படுகிறது. அதற்காகப் பலவிதமான முயற்சிகளில் ஈடுபடுவது பற்றி மனதில் புதிய புதிய எண்ணங்கள் தோன்றுகின்றன. மனம் சஞ்சலமடைகிறது. பிறகு அந்த எண்ணங்களுக்கு ஏற்றவாறு செயல்புரிய ஆரம்பிக்கிறான். இவ்விதம் ரஜோ குணப்பெருக்கத்தின்போது லோபம் முதலிய உணர்ச்சிகள் உண்டாகின்றன.

**கேள்வி:** 'பரதர்ஷப' என்று அழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** பரதகுலத்தில் பிறந்தோரில் சிறந்தவனை 'பரதர்ஷப' என்பர். இங்கு அர்ஜுனனை 'பரதர்ஷப' என விளித்து பகவான் 'நீ பரதகுலத்தோரில் ஏறாக (ரிஷபமாக) விளங்குபவன்' என்று குறிப்பிடுகிறார். உன்னிடம் ரஜோ குண விளைவுகளான லோபம் முதலியன இரா என்று குறிப்பிடுகிறார்.

**பொருத்தம்: இவ்விதம் ரஜோ குணப்பெருக்கத்தின் இலக்கணங்களைக் கூறிவிட்டுத் தமோ குணப்பெருக்கத்தின் இலக்கணங்களைத் தொடர்ந்து கூறுகிறார்—**

**अप्रकाशोऽप्रवृत्तिश्च प्रमादो मोह एव च।**
**तमस्येतानि जायन्ते विवृद्धे कुरुनन्दन॥१३॥**

**அப்ரகாஶோऽப்ரவ்ருத்திஶ்ச ப்ரமாதோ₃ மோஹ ஏவ ச ।**
**தமஸ்யேதானி ஜாயந்தே விவ்ருத்₃தே₄ குருநந்த₃ந ॥ 13 ॥**

**குருநந்த₃ந** – அர்ஜுன! **தமஸி** – தமோகுணம், **விவ்ருத்₃தே₄** – அதிகமாகும்போது, **அப்ரகாஶ:** – (அந்தக்கரணங்களிலும், புலன்களிலும்) ஒளியின்மையும், **அப்ரவ்ருத்தி:** – செய்யவேண்டிய கடமைகளில் ஈடுபாடின்மையும், **ப்ரமாத₃: ச** – அசட்டைத்தனம் அதாவது வீண் செயல்களில் ஈடுபாடும், **மோஹ: ச** – தூக்கம் முதலிய அந்தக்கரணங்களின் மயக்கமும் (ஆகிய), **ஏதானி ஏவ** – இவையனைத்தும், **ஜாயந்தே** – உண்டாகின்றன.

அர்ஜுன! தமோகுணம் அதிகமாகும்போது அந்தக்கரணங்களிலும், புலன்களிலும் ஒளியின்மையும், செய்யவேண்டிய கடமைகளில் ஈடுபாடின்மையும், அசட்டைத்தனம் அதாவது வீண் செயல்களில் ஈடுபாடும், தூக்கம் முதலிய அந்தக்கரணங்களின் மயக்கமும் ஆகிய இவையனைத்தும் உண்டாகின்றன.

**கேள்வி:** ஒளியின்மை, ஈடுபாடின்மை, அசட்டைத்தனம், மயக்கம் இவற்றின் தனித்தனித் தன்மைகள் யாவை? தமோ குணப்பெருக்கத்தின் போது இவை உண்டாவன என்றால் கருத்து என்ன?

**பதில்:** புலன்கள் மற்றும் உள்ளத்தில் ஏற்படும் உள்ளொளி (விழிப்பு) 'ப்ரகாஶம்' எனப்படும். அதற்கு மாறாகப் புலன்கள், உள்ளம் இவற்றின் விழிப்பின்மையே ஒளியின்மை ஆகும். இதனால் ஸத்வ குணத்தின் மற்ற இயல்புகளும் இல்லை என்று அறிய வேண்டும். பன்னிரண்டாவது ச்லோகத்தில் கூறப்பட்ட ரஜோ குணத்தின் விளைவான கர்மங்களின் ஈடுபாட்டிற்கு இடையூறான அதாவது செய்யவேண்டிய கடமைகளைத் தொடங்குவதில் ஈடுபாடின்மை 'அப்ரவ்ருத்தி' எனப்படும். இதனால் ரஜோகுணத்தின் மற்ற இயல்புகளும் இல்லையென அறிந்து கொள்ளவேண்டும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளில் அசட்டையும், வீணான செயல்களில் ஈடுபாடும் 'ப்ரமாதம்' எனப்படும். பகுத்தறியும் திறனுக்கு எதிரான மயக்க நிலையும், தூக்கமும் 'மோஹம்' ஆகும்.

தமோகுணம் மேலோங்கும்பொழுது மனிதனின் புலன்களிலும், உள்ளத்திலும் ஒளி இருப்பதில்லை. இதை 'அப்ரகாஶம்' (ஒளியின்மை) என்று கூறுகிறார். எந்தச் செயலும் நல்லது என்று தோன்றாது. வீணாகப் படுத்துக் கொண்டு பொழுதுபோக்குவதிலேயே விருப்பம் இருக்கும். இது 'அப்ரவ்ருத்தி' (ஈடுபாடின்மை) தலையெடுத்தல் ஆகும். உடல் மற்றும் புலன்களால் வீணான செயல்களைச் செய்தல், செய்யவேண்டிய கடமைகளில் அசட்டையாக இருத்தல் இவை ப்ரமாதத்திலிருந்து உண்டானவை. மனம் மயங்குவது, நினைவின்மை, அலுப்பு, கனவு அல்லது ஆழ்ந்த தூக்கம் உண்டாவது, அறியும் திறன் இல்லாமற்போவது இவையெல்லாம் மோஹத்திலிருந்து உண்டானவை. இந்த அனைத்து இயல்புகளும், தமோ குணம் மேலோங்கும்பொழுது உண்டாகின்றன. ஆகவே, இவற்றில் ஏதாவதொன்று தன்னிடம் இருப்பதாகத் தோன்றினாலும், அப்பொழுது தமோ குணம் மேலோங்கிவிட்டது என்று மனிதன் அறியவேண்டும்.

**பொருத்தம்: இவ்விதம் முக்குணப் பெருக்கத்தின் வெவ்வேறு இலக்கணங்களைக் கூறிவிட்டு, இந்த குணங்களில் எந்த குணம் அதிகமாகும்போது மரணம் நேர்ந்தால் எந்த கதி அடைவான் என்பதை அடுத்த இரண்டு ச்லோகங்களில் விளக்குகிறார்—**

**यदा सत्त्वे प्रवृद्धे तु प्रलयं याति देहभृत्।**
**तदोत्तमविदां लोकानमलान्प्रतिपद्यते॥ १४॥**

**யதா₃ ஸத்த்வே ப்ரவ்ருத்₃தே₄ து ப்ரலயம் யாதி தே₃ஹப்₄ருத் ।**
**ததோ₃த்தமவிதா₃ம் லோகாநமலாந்ப்ரதிபத்₃யதே ॥ 14 ॥**

**யதா₃** – எப்பொழுது, **தே₃ஹப்₄ருத்** – இந்த மனிதன், **ஸத்த்வே** – ஸத்வகுணம், **ப்ரவ்ருத்₃தே₄** – பெருகி உள்ளபொழுது, **ப்ரலயம்** – இறப்பை, **யாதி** – அடைகிறானோ, **ததா₃ து** – அப்பொழுதே, **உத்தமவிதா₃ம்** – உயர்ந்த செயல்கள் செய்பவர்களுடைய, **அமலாந்** – நிர்மலமான, **லோகாந்** – ஸ்வர்கம் முதலிய புண்ய உலகங்களை, **ப்ரதிபத்₃யதே** – அடைகிறான்.

எப்பொழுது இந்த மனிதன் ஸத்வகுணம் பெருகி இறப்பை அடைகிறானோ அப்பொழுதே உயர்ந்த செயல்கள் செய்பவர்களுடைய நிர்மலமான ஸ்வர்கம் முதலிய புண்ய உலகங்களை அடைகிறான்.

**கேள்வி:** *'யதா', 'ததா' என்று காலத்தைக் குறிப்பிடுவதற்கு என்ன பொருள்? ஸத்வ குணம் மீதூரும் போது மரணம் அடைவது என்றால் என்ன?*

**பதில்:** 'யதா', 'ததா' என்னும் காலத்தைக் காட்டும் சொற்களைக் கூறி, இங்கு ஒரு மனிதனின் இயல்பான நிலை மற்ற குணங்களில் நிலைபெற்றிருந்தாலும் ஸத்வ குணம் மீதூரும்போது அவன் இறந்தால் அவனுக்கு நேரக்கூடிய கதியை நிரூபணம் செய்கிறார். இத்தகைய மனிதனிடம் முன் மனப்பதிவுகள் முதலிய ஏதேனும் ஒரு காரணத்தினால் ஸத்வ குணம் மேலோங்கி நிற்கும்போது, அதாவது ச்லோகம் 11ல் கூறியுள்ளபடி அவனது உடல் நெடுக, புலன்கள் மற்றும் உள்ளத்தில் 'ஒளி'யும், 'ஞான'மும் உண்டாகியுள்ள போது வெளியில் புலப்படும் இவ்வுடலினின்றும் மனம், புலன்கள், ப்ராணன்களுடன் கூடிய ஜீவாத்மாவின் தொடர்பு அற்றுப் போவதுதான் ஸத்வ குணம் தலைதூக்கியுள்ளபோது மரணம் எய்துதல் ஆகும்.

**கேள்வி:** *'தேஹப்ருத்' என்றால் யார்?*

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** உடலோடு கூடியவன் என்பது பொருள். அதாவது உடலில் 'தான்', 'தன்னுடையது' என்ற அபிமானம் உடையவனுக்குத்தான் மறுபடியும் வெவ்வேறு பிறவிகள் ஏற்படுகின்றன. தேஹாபிமானமற்ற ஜீவன்முக்தரான மஹாத்மாக்களுக்குப் பிறப்பு-இறப்புக் கிடையாது என்பது கருத்து.

**கேள்வி:** *'உத்தமவிதாம் அமலாந் லோகாந்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** ஸத்வ குணம் மேலோங்கும்போது இறப்பவர்கள் செல்லும் லோகங்களில் மாசு இருக்காது. அதாவது தோஷமோ, க்லேசமோ இருக்காது. அந்த லோகங்கள் தெய்விகமானவை, ப்ரகாசமானவை, சுத்தமானவை, ஸாத்விகமானவை என்பதை உணர்த்துவது 'அமலாந்' என்ற அடைமொழி. 'உத்தமவிதாம்' என்னும் சொற்றொடரில் உள்ள 'உத்தம' எனும் சொல் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகள், உபாஸனைகள் இவற்றைக் குறிக்கின்றது. அவற்றை அறிந்தவர்கள், அதாவது நிஷ்காமமாகச் செயல் செய்பவர்களே உயர்ந்த செயல் செய்பவர்கள். அவர்கள் மேலே சொன்ன கர்ம உபாஸனையின் ப்ரபாவத்தினால் அடையும் லோகங்களையே ஸத்வ குணம் மீதூரும்போது இறக்கும் மனிதர்களும் ஸத்வகுணத் தொடர்பினால் அடைவார்கள் என்று கூறுகிறார்.

**रजसि प्रलयं गत्वा कर्मसङ्गिषु जायते।**
**तथा प्रलीनस्तमसि मूढयोनिषु जायते॥ १५॥**

**ரஜஸி ப்ரலயம் க₃த்வா கர்மஸங்கி₃ஷு ஜாயதே ।**

**தத₂ா ப்ரலீநஸ்தமஸி மூட₄யோநிஷு ஜாயதே ॥ 15 ॥**

***ரஜஸி*** – ரஜோகுணத்தின் ஆதிக்கத்தில், ***ப்ரலயம்*** – இறப்பை, ***க₃த்வா*** – அடைந்து, ***கர்மஸங்கி₃ஷு*** – கர்மங்களில் பற்றுள்ள மனிதர்களிடையே, ***ஜாயதே*** – பிறக்கிறான். ***தத₂ா*** – அவ்வாறே, ***தமஸி*** – தமோகுணம் அதிகமாக இருக்கும்போது, ***ப்ரலீந:*** – இறந்தவன், ***மூட₄யோநிஷு*** – புழு-பூச்சி, விலங்கு முதலிய அறிவில்லாத பிறவிகளில், ***ஜாயதே*** – பிறக்கிறான்.

ரஜோகுணத்தின் ஆதிக்கத்தில் இறப்பை அடைந்து கர்மங்களில் பற்றுள்ள மனிதர் களிடையே பிறக்கிறான். அவ்வாறே தமோகுணம் அதிகமாக இருக்கும்போது இறந்தவன் புழு-பூச்சி, விலங்கு முதலிய அறிவில்லாத பிறவிகளில் பிறக்கிறான்.

**கேள்வி:** *ரஜோ குணம் மிகுந்திருக்கும்போது மரிப்பது என்றால் என்ன? கர்மங்களில் பற்றுள்ள மனிதர்கள் யார்? அவர்களிடையே பிறப்பது என்றால் என்ன?*

**பதில்:** ரஜோ குணம் மிகுந்திருக்கும்போது லோபம், ஆசையுடன் கர்மங்களில் ஈடுபாடு முதலிய ராஜஸ எண்ணங்கள் வளர்கின்றன (ச்லோ 12). அப்போது ஸ்தூல சரீரத்தைவிட்டு மனம், புலன்கள், ப்ராணன் இவற்றுடன் கூடிய ஜீவாத்மா பிரிந்தால், அது ரஜோ குண ஆதிக்கத்தின்போது மரணமடைவது ஆகும். கர்மத்திலும், அதன் பயனிலும் பற்றுள்ளவனை 'கர்மஸங்கி' என்கிறார். ஆகவே, மனிதப்பிறவியை அடைவதுதான் கர்மஸங்கிகளிடம் பிறப்பது ஆகும்.

**கேள்வி:** *தமோ குண ஆதிக்கத்தின்போது மரிப்பது என்றால் என்ன? மூட யோனியில் பிறப்பது என்றால் என்ன?*

**பதில்:** தமோ குண ஆதிக்கத்தின்போது ஒளியின்மை, ஊக்கமின்மை, கவனமின்மை முதலிய தாமஸத் தன்மைகள் தலைதூக்குகின்றன (ச்லோ. 13). அப்போது ஸ்தூல சரீரத்தைவிட்டு மனம், புலன்கள், ப்ராணனுடன் கூடிய ஜீவாத்மா பிரிந்தால், அதுதான் தமோ குண ஆதிக்கத்தின்போது மரணமடைவதாகும். புழு, பூச்சி, விலங்கு, பறவை, மரம், கொடி இவை தாமஸ யோனிகள். இவற்றில் பிறப்பதுதான் மூட யோனியில் பிறப்பது ஆகும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பொருத்தம்:** ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களில் ஒவ்வொன்றின் ஆதிக்கத்தின் போது ஏற்படும் மரணத்திற்கு வெவ்வேறு பயன் கூறினார். இவ்விதம் சில சமயங்களில் சில குணங்கள் மேலோங்குவது ஏன் என்பதற்குப் பதில் கூறுகிறார்—

**कर्मणः सुकृतस्याहुः सात्त्विकं निर्मलं फलम्।**
**रजसस्तु फलं दुःखमज्ञानं तमसः फलम्॥ १६॥**

**கர்மண: ஸுக்ருதஸ்யாஹு: ஸாத்த்விகம் நிர்மலம் ப₂லம் ।**
**ரஜஸஸ்து ப₂லம் து₃:க₂மஜ்ஞாநம் தமஸ: ப₂லம் ॥ 16 ॥**

**ஸுக்ருதஸ்ய கர்மண:** – சிறந்த செயலின், **ப₂லம் து** – பயனோ, **ஸாத்த்விகம்** – ஸாத்விகமானது (அதாவது ஸுகம், ஞானம், வைராக்யம் முதலியன கொண்டது), **நிர்மலம்** – தூய்மையானது, **ஆஹு:** – (என்று) சொல்கிறார்கள். **ரஜஸ:** – ராஜஸமான செயலின், **ப₂லம்** – பயன், **து₃:க₂ம்** – துயரமானது. **தமஸ:** – தாமஸச் செயலின், **ப₂லம்** – பயன், **அஜ்ஞாநம்** – அறியாமை (என்று சொல்கிறார்கள்).

சிறந்த செயலின் பயனோ ஸாத்விகமானது – ஸுகம், ஞானம், வைராக்யம் முதலியன கொண்டது; தூய்மையானது என்று சொல்கிறார்கள். ராஜஸமான செயலின் பயன் துயரமானது. தாமஸச் செயலின் பயன் அறியாமை என்று சொல்கிறார்கள்.

**கேள்வி:** 'ஸுக்ருத கர்மங்கள்' எவை? அவற்றின் ஸாத்விகமானதும், தூய்மையானதுமான பயன் என்ன?

**பதில்:** சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டு, பயனில் பற்றற்ற மனோபாவத்துடன் ஆற்றப்பட வேண்டிய ஸாத்விகமான கர்மங்களை 'ஸுக்ருத கர்மங்கள்' என்கிறார். இவ்விதக் கர்மங்களின் ஸம்ஸ்காரத்தினால் உள்ளத்தில் ஞானம், வைராக்யம் முதலிய தூய்மையான எண்ணங்கள் அடிக்கடி தோன்றிக் கொண்டே இருக்கின்றன. இறந்தபிறகு அவன் துன்பமும், தோஷமும் அற்ற ஒளிமயமான உலகத்தை அடைவான். அதுவே சிறந்த செயலின் ஸாத்விகமானதும், தூய்மையானதுமான பயனாகும்.

**கேள்வி:** ராஜஸ கர்மங்கள் எவை? அவற்றின் பயன் துயரமானது என்றால் என்ன?

**பதில்:** போகங்களை அனுபவிக்கும் பொருட்டு 'நான் செய்கிறேன்' என்ற அஹங்காரத்துடன் மிகுந்த முயற்சி எடுத்துக் கொண்டு செய்யப்படும் கர்மங்கள் (18/24) ராஜஸமானவை. இவற்றைச் செய்யும்போது உழைப்பு என்ற துக்கத்தைத் தருகிறது. பின்பும் துக்கத்தைத் தந்து கொண்டே இருக்கிறது. அந்தக் கர்மங்களின் ஸம்ஸ்காரங்களினால் உள்ளத்தில் மேலும் மேலும் போகங்கள், ஆசைகள், லோபம், செயல் ஊக்கம் முதலிய ராஜஸ எண்ணங்கள் எழுகின்றன. அதனால் கலக்கமடைந்த மனதில் அமைதியின்மையும், துயரமும் நிறைகின்றன. அந்தக் கர்மங்களின் பயன்களாக அமையும் போகங்களும், அஞ்ஞானத்தின் விளைவாக ஸுகம்போலத் தோன்றினாலும், உண்மையில் துக்கம்தான். அத்தகைய பயன்களை அனுபவிப்பதற்காக, மேலும் மேலும் பிறப்பு–இறப்புச் சுழலில் சிக்க வேண்டியதாகிறது. அது பெரும் துக்கம். இவ்விதம் ராஜஸ கர்மத்தினால் என்ன பயன் கிடைத்தாலும், அது துக்க வடிவானதுதான்.

**கேள்வி:** தாமஸ கர்மங்கள் எவை? அவற்றின் பயனான அறியாமை என்பது எது?

**பதில்:** ஆலோசியாமல் மனம் போனபடி, அறியாமையால் செய்யப்படும் ஹிம்ஸை முதலிய தவறுகள் நிறைந்த கர்மங்கள் (18/25) தாமஸமானவை. அவற்றின் ஸம்ஸ்காரத்தினால் உள்ளத்தில் மோஹம் பெருகுகிறது. இறந்த பிறகும் தமோ குணப்பெருக்கம் உள்ள ஜடப்பிறவிகளில் பிறக்க நேரிடுகிறது. அதுதான் அதன் பயனான அறியாமை.

**கேள்வி:** குணங்களின் பயனைத்தானே இங்கே சொல்ல வந்தார். நடுவில் கர்மங்களின் பயனைக் கூறுகிறாரே? பொருத்தமாக இல்லையே?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** அப்படியன்று. முன் ச்லோகங்களில் ஒவ்வொரு குணமும் மேலோங்கும்போது மரிப்பதனால் ஏற்படும் வெவ்வேறு பயன்களைக் கூறினார். ஆகவே குணப்பெருக்கத்திற்குக் காரணமான கர்மங்களின் ஸம்ஸ்காரத்தைப் பற்றியும் சொல்ல நேரிடுகிறது. ஆகவே கர்மங்களைப் பற்றிக் கூறினார். அதாவது ஸாத்விகமான, ராஜஸமான, தாமஸமான கர்மங்களின் ஸம்ஸ்காரங்கள் ஒவ்வொரு மனிதனுடைய மனதிலும் உறைகின்றன. எப்போது எந்த ஸம்ஸ்காரம் தலைதூக்குகிறதோ, அப்போது அதற்குரிய ஸாத்விகம் முதலிய எண்ணங்கள் வளர்கின்றன. அதை ஒட்டிப் புதிய கர்மங்களைச் செய்கிறான். கர்மங்களினால் ஸம்ஸ்காரங்கள்; ஸம்ஸ்காரங்களினால் ஸாத்விகம் முதலிய குணங்களின் ஆதிக்கம்; அதை ஒட்டி நினைவு; மரணத்தறுவாயில் ஏற்படும் நினைவுக்கேற்றபடி மறுபிறவி; மறுபடியும் கர்மங்களின் தொடக்கம்; இவ்விதம் இந்தச் சக்ரம் சுழல்கிறது. மரணத்தறுவாயில் ஏற்படும் ஸாத்விகம் முதலிய எண்ணங்களின் பயனின் சிறப்பு பற்றி முன் ச்லோகத்தில் சொல்லப்பட்டதுகூட முன் செய்யப்பட்ட ஸாத்விக, ராஜஸ, தாமஸ கர்மங்களின் தொடர்பினால் ஏற்பட்டதுதான். இதைச் சொல்லத்தான் இந்த ச்லோகம் வந்தது. பொருத்தமற்றதைச் சொல்லவில்லை. குணம், கர்மம் இரண்டின் சேர்க்கையால்தான் நல்லதும், தீயதுமான பிறவிகள் ஏற்படுகின்றன *(4/13)*.

**பொருத்தம்:** *11,12,13*வது ச்லோகங்களில் ஸத்வ, ரஜஸ், தமோ குண ஆதிக்கத்தின் இலக்கணங்களை வரிசையாகக் கூறினார். அப்போது ஏற்படும் மரணத்தின் விளைவுகளையும் தனித்தனியாகக் கூறினார். அதற்கு மேல் ஞானம் முதலியவை உண்டாவது ஸத்வ குணம் முதலியவற்றின் ஆதிக்கத்தினால்தான் என்று ஏன் கூறவேண்டும் என்ற கேள்வி எழுகிறது. விளைவிலிருந்து காரணத்தை அறிகிறோம். ஆகவே ஞானம் முதலிய விளைவிற்கு ஸத்வம் முதலியவை காரணம் என்று விளக்குகிறார்—

**सत्त्वात्सञ्जायते ज्ञानं रजसो लोभ एव च।**
**प्रमादमोहौ तमसो भवतोऽज्ञानमेव च॥१७॥**

**ஸத்த்வாத்ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம் ரஜஸோ லோப₄ ஏவ ச ।**
**ப்ரமாத₃மோஹௌ தமஸோ ப₄வதோऽஜ்ஞாநமேவ ச ॥ 17 ॥**

**ஸத்த்வாத்** – ஸத்வகுணத்திலிருந்து, **ஜ்ஞாநம்** – ஞானம், **ஸஞ்ஜாயதே** – உண்டாகிறது. **ரஜஸ:** – ரஜோகுணத்திலிருந்து, **லோப₄: ஏவ ச** – (ஐயமின்றிப்) பேராசையே (உண்டாகிறது). **தமஸ:** – தமோகுணத்திலிருந்து, **ப்ரமாத₃மோஹௌ ச** – கவனமின்மையும், மதிமயக்கமும், **ப₄வத:** – உண்டாகின்றன. (மேலும்), **அஜ்ஞாநம் ஏவ** – அறியாமையும் (உண்டாகிறது).

ஸத்வகுணத்திலிருந்து ஞானம் உண்டாகிறது. ரஜோகுணத்திலிருந்து ஐயமின்றிப் பேராசையே உண்டாகிறது. தமோகுணத்திலிருந்து கவனமின்மையும், மதிமயக்கமும் உண்டாகின்றன. மேலும் அறியாமையும் உண்டாகிறது.

**கேள்வி:** ஸத்வ குணத்தினால் ஞானம் உண்டாகிறது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஞானம் என்ற சொல் இங்கே உபலக்ஷணம் மட்டுமே. ஸுகம், ப்ரகாசம், அமைதி முதலிய எல்லா ஸாத்விக இயல்புகளும், ஸத்வ குணத்திலிருந்து உண்டானவையே.

**கேள்வி:** ரஜோ குணத்தினால் லோபம் உண்டாகும் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கு லோபம் என்ற சொல்லும் உபலக்ஷண மாத்திரமாகத் தான் கூறப்பட்டிருக்கிறது. அது பேராசை, கர்மங்களில் ஈடுபாடு, பற்று, ஆவல், தன்னலம் கருதிக் கர்மங்களை ஆற்றுவது முதலிய எல்லா ராஜஸ இயல்புகளையும் சேர்த்துக் கூறுகிறது. இவையெல்லாம் ரஜோ குணத்தினால் உண்டாவனவே.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** கவனமின்மை, மதிமயக்கம், அஞ்ஞானம் இவை தமோ குணத்தில் உண்டாகின்றன என்று கூறும்போது, 'ஏவ' என்ற சொல்லைச் சேர்ப்பதன் கருத்து என்ன?

**பதில்:** தமோ குணத்தினால் கவனமின்மை, மதிமயக்கம், அறியாமை மட்டும் உண்டாகவில்லை. தூக்கம், சோம்பல், விழிப்பின்மை, முயற்சியின்மை முதலிய எத்தனை தாமஸ இயல்புகள் உண்டோ, இவையனைத்துமே உண்டாகின்றன என்று பொருள்.

**பொருத்தம்:** ஸத்வம் முதலிய முக்குணங்களின் விளைவுகள், ஞானம் முதலியவை என்று சொன்னார். மேலே ஸத்வ குணத்தில் நிலைத்து நிற்பதற்காகவும், ரஜஸ், தமோ குணங்களை விலக்குவதற்காகவும், அந்தந்த குணங்களில் நிலைபெற்ற மனிதர்களின் வெவ்வேறு கதிகளைக் கூறுகிறார்—

ऊर्ध्वं गच्छन्ति सत्त्वस्था मध्ये तिष्ठन्ति राजसाः।
जघन्यगुणवृत्तिस्था अधो गच्छन्ति तामसाः॥ १८॥

**ஊர்த்₄வம் க₃ச்ச₂ந்தி ஸத்த்வஸ்தா₂ மத்₄யே திஷ்ட₂ந்தி ராஜஸா: ।**
**ஜக₄ந்யகு₃ணவ்ருத்திஸ்தா₂ அதோ₄ க₃ச்ச₂ந்தி தாமஸா: ॥ 18 ॥‡**

**ஸத்த்வஸ்தா₂:** – ஸத்வகுணத்தில் நிலைபெற்ற மனிதர்கள், **ஊர்த்₄வம்** – ஸ்வர்கம் முதலிய உயர்ந்த லோகங்களுக்கு, **க₃ச்ச₂ந்தி** – செல்கின்றனர். **ராஜஸா:** – ரஜோ குணத்தில் நிலைபெற்ற மனிதர்கள், **மத்₄யே** – நடுவில் (அதாவது மனித உலகிலேயே), **திஷ்ட₂ந்தி** – நிற்கின்றார்கள். **ஜக₄ந்ய கு₃ண வ்ருத்திஸ்தா₂:** – தூக்கம், சோம்பல், வீண்செயலில் விருப்பம் முதலிய தாழ்ந்த குணங்களில் நிலைபெற்ற, **தாமஸா:** – தாமஸ குணம் உடைய மனிதர்கள், **அத₄:** – புழு, விலங்கு, பறவை முதலிய தாழ்ந்த பிறவிகளையும், நரகத்தையும், **க₃ச்ச₂ந்தி** – அடைகிறார்கள்.

ஸத்வகுணத்தில் நிலைபெற்ற மனிதர்கள் ஸ்வர்கம் முதலிய உயர்ந்த லோகங்களுக்குச் செல்கின்றனர். ரஜோகுணத்தில் நிலைபெற்ற மனிதர்கள் நடுவில் அதாவது மனித உலகிலேயே நிற்கின்றார்கள். தூக்கம், சோம்பல், வீண்செயலில் விருப்பம் முதலிய தாழ்ந்த குணங்களில் நிலைபெற்ற தாமஸகுணம் உடைய மனிதர்கள் புழு, விலங்கு, பறவை முதலிய தாழ்ந்த பிறவிகளையும், நரகத்தையும் அடைகிறார்கள்.

**கேள்வி:** 'ஊர்த்வம்' என்றால் எந்த இடம்? ஸத்வ குணத்தில் நிலைபெற்றவர் அங்கே போவது என்றால் என்ன?

**பதில்:** மனித உலகிற்கு மேலே எத்தனை உலகங்கள் உண்டோ – 14வது ச்லோகத்தில் உத்தம கர்மங்களை அறிந்து செய்பவர்களின் 'மாசற்ற லோகங்கள்' என்று எதைச் சொன்னாரோ, 6/41ல் 'புண்ய கர்மங்கள் செய்கின்றவர்களின் லோகம்' என்று எதைச் சொன்னாரோ, அவற்றை 'ஊர்த்வம்' என்ற சொல் குறிக்கிறது. ஸாத்விக மனிதன் இறந்த பிறகு அந்த லோகங்களை அடைவான். இதுதான் இங்கு ஸ்வர்கம் முதலிய புண்ய லோகங்களை அடைவார் என்று கூறுவதன் பொருள்.

**கேள்வி:** 'மத்யே' என்றால் எந்த இடம்? அதில் ராஜஸ புருஷர்கள் இருப்பார்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'மத்யே' என்றால் மனித உலகில் என்று பொருள். ராஜஸ மனிதர்கள் இறந்த பிறகு வேறு உலகம் போவதில்லை. இதே உலகில் திரும்பவும் மனிதப் பிறவி பெறுகிறார்கள். இதைத்தான் 'நடுவில் இருப்பது' என்று கூறுகிறார்.

‡ மஹாபாரதம் அச்வமேத பர்வம் 39வது அத்யாயம் 10வது ச்லோகமும் இதற்கொப்ப அமைந்திருக்கிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ஜகந்ய' குணம், அவற்றின் செயல்பாடு இவற்றிற்கு என்ன பொருள்? அவற்றில் நிலைத்திருப்பது என்றால் என்ன? தாமஸ குணம் உடையவர்கள் தாழ்ந்த பிறவியை அடைவார்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஜகந்ய' என்ற சொல்லுக்குத் தாழ்ந்த, இகழத்தக்க என்று பொருள். எனவே 'ஜகந்ய' குணம் என்பது தமோகுணத்தைக் குறிக்கும். அதன் விளைவுகள் கவனமின்மை, விழிப்பின்மை, முயற்சியின்மை, மோஹம், அஞ்ஞானம், தூக்கம் முதலியன. இவற்றில் ஆழ்ந்திருப்பவர்கள் தாமஸர்கள். இந்த தாமஸ மனிதர்கள் இந்த உடலிலிருந்து விடுபட்ட பிறகு புழு, பூச்சி, விலங்கு, பறவை, மரம் முதலிய ஈனப்பிறவிகளில் பிறக்கிறார்கள்; அல்லது ரௌரவம், கும்பீபாகம் முதலிய நரகங்களுக்குச் சென்று பயங்கரமான யமயாதனைகளை அனுபவிப்பார்கள். இதுதான் அவர்கள் தாழ்ந்த பிறவிகளை அடைவதாகும்.

**கேள்வி:** மூன்று குணங்களில் ஒவ்வொன்றும் மேலோங்கி இருக்கும்போது இறப்பவர்கள் அநேகமாக இவ்விதமான வெவ்வேறு பயன்களைப் பெறுவார்கள் என்று 14,15 ச்லோகங்களில் கூறியாகிவிட்டதே. மறுபடியும் கூறுவானேன்?

**பதில்:** அங்கு 'எப்போது', 'அப்போது' என்று காலத்தைக் குறிப்பிட்டார். அதாவது மற்ற இரண்டு குணங்களில் இயல்பான நிலை இருக்கும்போதுகூட மரணகாலத்தில் எந்த குணம் தலைதூக்குகிறதோ அதற்கேற்றபடி அவர்களுக்கு ஏற்படும் கதியில் மாறுதல் உண்டாகும் என்று அங்கு வெவ்வேறு கதிகளைச் சொன்னார். இங்கு இயல்பாகவே எவருக்கு ஸத்வம் முதலிய குணங்கள் அதிகம் இருக்குமோ, அவர்கள் செல்லும் மார்க்கங்களின் வேறுபாட்டை விவரிக்கிறார். ஆகவே கூறியது கூறல் எனும் குற்றம் இல்லை.

**கேள்வி:** ச்லோகம் 15ல் தமோ குணம் மேலோங்கி இருக்கும்போது இறப்பதால் ஏற்படும் பயன், அறிவற்ற பிறவி என்று கூறினார். இங்கு நரகம் முதலியவற்றிற்கும் போவான் என்று ஏன் சொல்ல வேண்டும்?

**பதில்:** அங்கு மரணத்தறுவாயில் தமோகுண ஆதிக்கத்தில் இறக்கும் ஸாத்விக, ராஜஸ மனிதர்கள் அடையக்கூடிய கதியைச் சொன்னார். ஆகவே 'அத:' (கீழே) என்ற சொல்லை உபயோகிக்காமல், 'மூடயோநிஷு' (அறிவற்ற பிறவிகளில்) என்னும் சொல்லைக் கூறினார். ஏனெனில், மனிதர்களுக்கு அந்தந்த குணங்களின் ஆதிக்கத்தினால் அதன் விளைவுக்கேற்ற பிறவி கிடைக்கிறது. உதாரணமாக, ஸத்வ குணத்தில் ஊறிய ராஜரிஷி பரதர் மானாகப் பிறவியெடுத்த கதை நினைவிற்கு வருகிறது. ஆனால் தமோகுணச் செயல்களில் எப்போதும் ஆழ்ந்த தாமஸ மனிதர்களுக்கு நரகம் முதலியன கிடைக்கின்றன. 16/20ல் தாமஸ இயல்பு கொண்டவர்கள் அஸுரப் பிறவிகளைப் பெற்று இன்னும் கீழேயே செல்கிறார்கள் என்றும் பகவான் கூறுகிறார்.

*பொருத்தம்:* 13/21ல் குணங்களின் சேர்க்கைதான் மனிதனுடைய நல்லதும், தீயதுமான மறுபிறவிகளுக்குக் காரணம் என்றார். அதை ஒட்டி இந்த அத்யாயத்தில் ச்லோகம் 5 முதல் 18 வரை குணங்களின் ஸ்வரூபம், அவற்றின் செயல்களினால் கட்டப்பட்ட மனிதனின் கதி முதலியவற்றை விரிவாகச் சொன்னார். ஆகவே முதலில் மனிதன் ரஜஸ், தமோ குணங்களை விட்டுவிடவேண்டும். ஸத்வ குணத்தில் நிலைபெற வேண்டும். பிறகு ஸத்வ குணத்தையும் கடந்து குணாதீதன் ஆகவேண்டும் என்பது இதிலிருந்து தெரிகிறது. அப்படி குணாதீதன் ஆவதற்கான உபாயங்கள், அந்த நிலையின் பயன் இவற்றை இனிவரும் இரண்டு ச்லோகங்களில் கூறுகிறார்—

नान्यं गुणेभ्यः कर्तारं यदा द्रष्टानुपश्यति।
गुणेभ्यश्च परं वेत्ति मद्भावं सोऽधिगच्छति॥ १९॥

நாந்யம் கு₃ணேப்₄ய: கர்தாரம் யதா₃ த்₃ரஷ்டாநுபஶ்யதி ।
கு₃ணேப்₄யஶ்ச பரம் வேத்தி மத்₃பா₄வம் ஸோऽதி₄க₃ச்சதி ॥ 19 ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**யதா₃** – எப்பொழுது, **த்₃ரஷ்டா** – பார்ப்பவன் (ஸமஷ்டி சேதனனான பரமாத்மாவில் ஒன்றி நிற்கும் ஸாக்ஷியான மனிதன்), **கு₃ணேப்₄ய:** – முக்குணங்களைத் தவிர, **அந்யம்** – வேறு ஒருவனை, **கர்தாரம்** – கர்த்தா என்று, **ந அநுபஶ்யதி** – பார்ப்பதில்லையோ, **கு₃ணேப்₄ய: ச** – முக்குணங்களுக்கும், **பரம்** – அப்பாற்பட்ட ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவான என்னை, **வேத்தி** – தத்வரீதியாக அறிகிறானோ, **(தத₃ா** – அப்பொழுது), **ஸ:** – அவன், **மத்₃பா₄வம்** – என் ஸ்வரூபத்தை, **அதி₄க₃ச்சதி** – அடைகிறான்.

எப்பொழுது பார்ப்பவன் – ஸமஷ்டி சேதனனான பரமாத்மாவில் ஒன்றி நிற்கும் ஸாக்ஷியான மனிதன் முக்குணங்களைத் தவிர வேறு ஒருவனைக் கர்த்தா என்று பார்ப்பதில்லையோ, முக்குணங்களுக்கும் அப்பாற்பட்ட ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவான என்னை தத்வரீதியாக அறிகிறானோ, அப்பொழுது அவன் என் ஸ்வரூபத்தை அடைகிறான்.

**கேள்வி:** *காலத்தைக் காட்டும் 'யதா' என்ற சொல்லையும், 'த்ரஷ்டா' (பார்ப்பவன்) என்ற சொல்லையும் ஆண்டு எந்தக் கருத்தை விளக்குகிறார்?*

**பதில்:** மனிதனின் இயல்பான நிலைக்கு முற்றும் மாறுபட்ட நிலையை இங்கே குறிப்பிடுகிறார். ஸாதாரணமாக மனிதன் தன்னை உடலுக்குரியவன், கர்த்தா, அனுபவிப்பவன் என்று நினைக்கிறான். எல்லாக் கர்மங்களுக்கும், அவற்றின் பயன்களுக்கும் தான் ஸம்பந்தமில்லாத வெறும் ஸாக்ஷியே என்று அறிவதில்லை. ஆனால் சாஸ்த்ரங்களைப் படித்து, ஆசார்யரின் உபதேசம் பெற்று, அதன் விவேகத்தினால் தான் ஸாக்ஷிதான் என்று உணர்கிறானே – அந்த நிலையின் விளக்கம் இது.

**கேள்வி:** *'குணங்களைத் தவிர வேறு எவையும் கர்த்தா அன்று என்று காண்பது' என்றால் என்ன?*

**பதில்:** புலன்கள், உள்ளம், ப்ராணன், இவை கேட்பது, பார்ப்பது, உண்பது, சிந்திப்பது, நினைப்பது, படுப்பது, உட்காருவது, மற்ற வேலைகளில் ஈடுபடுவது முதலிய இயல்பான செயல்களில் ஈடுபடும்போதும்கூட, எப்போதுமே நிர்குணமான, உருவமற்ற, ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்துடன் இரண்டறக் கலந்த நிலையில் தான் இருப்பதாக உணரவேண்டும். அப்போது "குணங்கள்தாம் கர்த்தாவே தவிர வேறு எதுவும் கர்த்தா அன்று; குணங்களிலிருந்து தோன்றிய புலன்கள், மனம், புத்தி, ப்ராணன் முதலியவை குணங்களின் விளைவுகளான புலன்களின் விஷயங்களில் செயல்படுகின்றன (5/8,9). ஆகவே குணங்கள் குணங்களில் செயல்படுகின்றன (3/28). எனக்கும், இவற்றிற்கும் ஸம்பந்தமில்லை" என்று அறிகிறான். குணங்களைத் தவிர வேறெதையும் கர்த்தாவாகக் கருதுவதில்லை என்பதற்குப் பொருள் இதுதான்.

**கேள்வி:** *முக்குணங்களுக்கும் முற்றிலும் அப்பாற்பட்டவர் யார்? அவரைத் தத்வரீதியாக அறிவது எப்படி?*

**பதில்:** முக்குணங்களை முற்றும் கடந்தவர், அவற்றின் தொடர்பே இல்லாத ஸத் சித் ஆனந்தமயமான பூரணப்ரம்மம் ஆகிய பரமாத்மாதான். அவரை முக்குணங்களின் தொடர்பு அற்றவராகவும், தான் நிர்குணமான, உருவமற்ற ப்ரம்மத்தைத் தவிர வேறல்லன் என்றும், அந்த ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தைத் தவிர வேறொன்றிற்கு இருப்பே இல்லை என்றும் உணர்வதே எங்கும், எப்பொழுதும் பரமாத்மாவைத் தத்வரீதியாக அறிவதாகும்.

**கேள்வி:** *'இந்நிலைக்குப் பிறகு என்னை அடைவது, அதாவது பகவத் பாவத்தை (ஸ்வரூபத்தை) அடைவது' என்பது என்ன?*

**பதில்:** இந்நிலைக்குப் பிறகு ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்துடன் இரண்டற ஒன்றிவிடுவதே, பகவானின் ஸ்வரூபத்தை அடைவது ஆகும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



गुणानेतानतीत्य त्रीन्देही देहसमुद्भवान्।
जन्ममृत्युजरादुःखैर्विमुक्तोऽमृतमश्नुते ॥२०॥

குணாநேதாநதீத்ய த்ரீந்தேஹீ தேஹஸமுத்பவாந் ।
ஜந்மம்ருத்யுஜராது:கைர்விமுக்தோऽம்ருதமஶ்நுதே ॥ 20 ॥

**தேஹீ** – புருஷன், **தேஹஸமுத்பவாந்** – உடல் தோன்றுவதற்குக் காரணமான, **ஏதாந்** – இந்த, **த்ரீந்** – மூன்று, **குணாந்** – குணங்களையும், **அதீத்ய** – கடந்து, **ஜந்ம ம்ருத்யு ஜரா து:கை:** – பிறப்பு, இறப்பு, மூப்பு இவற்றிலிருந்தும், பிற எல்லாத் துன்பங்களிலிருந்தும், **விமுக்த:** – விடுபட்டு, **அம்ருதம்** – பரமானந்தத்தை, **அஶ்நுதே** – அடைகிறான்.

புருஷன், உடல் தோன்றுவதற்குக் காரணமான இந்த மூன்று குணங்களையும் கடந்து பிறப்பு, இறப்பு, மூப்பு இவற்றிலிருந்தும், பிற எல்லாத் துன்பங்களிலிருந்தும் விடுபட்டுப் பரமானந்தத்தை அடைகிறான்.''

**கேள்வி:** இங்கு 'தேஹீ' என்பதற்கு என்ன பொருள்?

**பதில்:** முதலில் தன்னை தேஹத்திலிருப்பவனாகக் கருதுபவன், குணாதீதனான பிறகு அம்ருதத்தை, அதாவது ப்ரம்மத்தை அடைவான். அதனால் இங்கு 'தேஹீ' என்ற சொல் இக்கருத்தை உணர்த்துகிறது.

**கேள்வி:** 'ஏதாந்', 'தேஹஸமுத்பவாந்', 'த்ரீந்' என்னும் அடைமொழிகளை 'குணாந்' என்ற சொல்லுக்குக் கொடுப்பதன் கருத்து என்ன? குணங்களைக் கடப்பது என்றால் என்ன?

**பதில்:** இந்த அத்யாயத்தில் முக்குணங்களின் ஸ்வரூபத்தைப் பற்றிக் கூறினார். அவை ஜீவாத்மாவை சரீரத்தோடு பிணைக்கின்றன. இவற்றைக் கடந்து செல்வதைப் பற்றி இங்கே கூறுகிறார். 'தேஹ ஸமுத்பவாந்' என்று கூறுவதன் கருத்து வருமாறு: மனம், புத்தி, அஹங்காரம் மற்றும் ஐந்து ஞானேந்த்ரியங்கள், ஐந்து கர்மேந்த்ரியங்கள், ஐம்பெரும் பூதங்கள், ஐம்புலன் நுகர்பொருட்கள் ஆகிய இந்த இருபத்துமூன்று தத்வங்களின் சேர்க்கையானதும், கண்களுக்குத் தோற்றமளிப்பதுமான இந்த உடல் ப்ரக்ருதியில் உண்டான குணங்களின் விளைவு. ஆகவே இவ்வுடலோடு தன்னுடைய தொடர்பை ஒத்துக் கொள்வதுதான் 'குணங்களில் ஒட்டுவது' ஆகும். 'த்ரீன்' (மூன்று) என்ற அடைமொழி கொடுப்பதன் கருத்து: மூன்று வகையான குண வேறுபாடுகள் உள்ளன. இம்மூன்றினுடைய தொடர்பிலிருந்து விடுபட்டால்தான் மோக்ஷம் ஏற்படும். ரஜஸ், தமஸ் இவற்றின் ஸம்பந்தத்திலிருந்து விடுபட்ட பிறகுகூட ஸத்வகுணத் தொடர்பு இருக்குமேயானால் அதுவும் முக்திக்கு இடையூறுதான்; அத்தொடர்பு மறுபிறவிக்கும் காரணமாகும். ஆகவே, அதன் தொடர்பையும் துறக்கவேண்டும். ஆத்மா உண்மையில் ஒன்றிலுமே ஒட்டாதவன். குணங்களுடன் அவனுக்கு எந்த ஸம்பந்தமும் கிடையாது. ஆயினும் தொன்றுதொட்டு வரும் அஞ்ஞானத்தினால் இவற்றுடன் தொடர்புள்ளவனாகக் கருதப்படுகிறான். இந்த ஸம்பந்தத்தை ஞானத்தினால் துண்டித்துக் கொண்டு, தான் நிர்குண-நிராகாரமான ஸத் சித் ஆனந்த ப்ரம்மம் தவிர வேறல்ல; குணங்களுக்கும், தனக்கும் எவ்வித ஸம்பந்தமில்லை என்றறிந்து நேரிடையாகக் காண்பது போன்ற அனுபவம் பெறுவதுதான் 'குணங்களைக் கடப்பது' என்பது.

**கேள்வி:** பிறப்பு, இறப்பு, மூப்பு மற்றும் துன்பங்களிலிருந்து விடுதலை என்றால் என்ன? அதற்குப் பிறகு அம்ருதத்தை அனுபவிப்பது எப்படி?

**பதில்:** பிறப்பு, இறப்பு, இளமை, யௌவனம், மூப்பு இவை உடலுக்கு ஏற்படுபவை. மனக் கவலை, நோய் முதலிய துக்கங்கள் எல்லாம் புலன்கள், மனம், ப்ராணன் என்ற தொகுப்பின் வடிவான உடலில்தான் பரவியுள்ளன. எனவே எவருக்கு உண்மையில்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உடலுடன் சிறிதுகூட ஒட்டுதல் இல்லையோ அப்படிப்பட்டவர் உலகத்தின் பார்வையில் – உடலில் இருந்தாலும்கூட, உடலுக்குரிய இயல்புகளான பிறப்பு, இறப்பு, மூப்பு இவற்றிலிருந்து எப்போதுமே விடுபட்டவர்களே. இவ்விதம் தத்வ ஞானத்தின் மூலம் உடலுடன் எல்லாவிதங்களிலும் ஒட்டுதலை விட்டிருப்பதுதான், பிறப்பு, இறப்பு, மூப்பு மற்றும் துன்பங்களிலிருந்து முழு விடுதலை பெறுவது ஆகும். பிறகு அம்ருதமயமான, ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தை இரண்டற, நேரிடையாக அடைவதுதான் (19வது ச்லோகத்தில் கூறப்பட்டபடி) பகவானை அடைவது ஆகும். அதையே இங்கு அம்ருதத்வத்தை அடைவது என்கிறார்.

**பொருத்தம்: இவ்விதம் உயிருடன் இருக்கும்போதே மனிதர் முக்குணங்களைக் கடந்து அம்ருத நிலை அடைகிறார் என்று பகவான் கூறினார். இந்த ரஹஸ்யத்தைக் கேட்டதும் குணாதீதனுடைய இலக்கணம், நடத்தை, குணாதீதன் ஆவதற்குரிய உபாயம் இவற்றைத் தெரிந்து கொள்ளும் ஆவலினால் அர்ஜுனன் கேட்கிறார்—**

अर्जुन उवाच

**कैर्लिङ्गैस्त्रीन्गुणानेतानतीतो भवति प्रभो।**
**किमाचारः कथं चैतांस्त्रीन्गुणानतिवर्तते ॥ २१ ॥**

அர்ஜுந உவாச

**கைர்லிங்கை₃ஸ்த்ரீந்கு₃ணாநேதாநதீதோ ப₄வதி ப்ரபே₄ா ।**
**கிமாசார: கத₂ம் சைதாம்ஸ்த்ரீந்கு₃ணாநதிவர்ததே ॥ 21 ॥**

**அர்ஜுந உவாச** – அர்ஜுனன் சொன்னார்: **ஏதாந்** – இந்த, **த்ரீந்** – மூன்று, **கு₃ணாந்** – குணங்களையும், **அதீத:** – கடந்த மனிதன், **கை:** – எந்தெந்த, **லிங்கை₃:** – இலக்கணங்களோடு (கூடியவனாக), **ப₄வதி** – இருக்கிறான். **ச** – மேலும், **கிமாசார: (ப₄வதி)** – எத்தகைய நடத்தை உள்ளவனாக (இருக்கிறான். அப்படியே), **ப்ரபே₄ா** – ப்ரபுவே! **கத₂ம்** – எந்த உபாயத்தினால், **ஏதாந்** – இந்த, **த்ரீந்** – மூன்று, **கு₃ணாந்** – குணங்களையும், **அதிவர்ததே** – கடக்கிறான்.

அர்ஜுனன் சொன்னார்: "இந்த மூன்று குணங்களையும் கடந்த மனிதன் எந்தெந்த இலக்கணங்களோடு கூடியவனாக இருக்கிறான்? மேலும் எத்தகைய நடத்தை உள்ளவனாக இருக்கிறான்? அப்படியே ப்ரபுவே! எந்த உபாயத்தினால் இந்த மூன்று குணங்களையும் கடக்கிறான்?"

**கேள்வி:** *'குணாந்' எனும் பதத்தோடு 'ஏதாந்', 'த்ரீந்' எனும் சொற்களைத் திரும்பத் திரும்பச் சேர்த்துக் கூறி என்ன உணர்த்துகிறார்?*

**பதில்:** பகவான் இந்த அத்யாயத்தில் விரிவாக விளக்கம் கூறிய அந்த முக்குணங்களைக் கடக்கும் விஷயத்தைப் பற்றி அர்ஜுனன் கேட்கிறார் என்பது பொருள்.

**கேள்வி:** *'குணங்களைக் கடந்தவனின் இலக்கணங்கள் என்ன?' என்று அர்ஜுனன் கேட்பதன் கருத்து என்ன?*

**பதில்:** அர்ஜுனன் சாஸ்த்ர ரீதியாக குணாதீத புருஷனுடைய இலக்கணங்கள் என்ன என்று கேட்கிறார். இந்தப் பண்புகள் குணாதீதனுக்கு இயற்கையாக அமைபவை. ஸாதகர்கள் முயன்று கைக்கொள்ளத்தக்க லக்ஷ்யப்பண்புகள்.

**கேள்வி:** *'அவர்களின் நடத்தை எத்தகையது?' என்பதன் கருத்து என்ன?*

**பதில்:** குணாதீதன் எப்படி நடந்து கொள்வான்? யாருடன் எப்படிப் பழகுவான்? அவனுடைய நடைமுறை என்ன? அவனுடைய பழக்க வழக்கங்கள் எத்தகையன? இவற்றைத் தெரிந்து கொள்ளவே இந்தக் கேள்வி எழுந்தது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ப்ரபோ' (ப்ரபுவே) என்றழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** பகவான் ஸ்ரீக்ருஷ்ணனான நீங்கள் அகில உலகிற்கும் ஸ்வாமி, கர்த்தா, அழிப்பவர், ஸர்வவல்லமை படைத்த பரமேசுவரன். நீங்கள்தான் இதை விளக்கிக் கூற வல்லவர். ஆகவே நீங்கள்தான் இதை முற்றும் அறிவீர்கள். அதனால் உங்களைக் கேட்கிறேன் என்று பொருள்.

**கேள்வி:** மனிதன் எப்படி இம்முக்குணங்களைக் கடக்கிறான் என்ற கேள்விக்கு என்ன பொருள்?

**பதில்:** குணாதீதனாக எப்படி ஆகலாம்? அதற்குரிய உபாயம் என்ன என்பது கேள்வியின் பொருள். ச்லோ. 19ல் கூறப்பட்ட குணாதீதனாவதற்கான உபாயத்தைக் காட்டிலும் எளிய உபாயம் உண்டா? அதைப் பின்பற்றி மனிதன் விரைவில் எளிதாக முக்குணங்களைக் கடக்க முடியுமா என்பது கருத்து.

**பொருத்தம்: இவ்விதம் அர்ஜுனன் கேட்டதற்கு பகவான் குணாதீதனின் இலக்கணம், நடத்தைப் பற்றிய இரண்டு கேள்விகளுக்கும் இனிவரும் நான்கு ச்லோகங்களில் விடை அளிக்கிறார்—**

श्रीभगवानुवाच

**प्रकाशं च प्रवृत्तिं च मोहमेव च पाण्डव।**
**न द्वेष्टि सम्प्रवृत्तानि न निवृत्तानि काङ्क्षति॥२२॥**

ஸ்ரீப₄க₃வானுவாச

**ப்ரகாஶம் ச ப்ரவ்ருத்திம் ச மோஹமேவ ச பாண்ட₃வ ।**
**ந த்₃வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தானி ந நிவ்ருத்தானி காங்க்ஷதி ॥ 22 ॥**

**ஸ்ரீப₄க₃வானுவாச** – ஸ்ரீபகவான் சொன்னார்: **பாண்ட₃வ** – அர்ஜுன! (எந்த மனிதன்), **ப்ரகாஶம் ச** – ஸத்வகுணத்தின் செயலான ப்ரகாசத்தையும், **ப்ரவ்ருத்திம் ச** – ரஜோ குணத்தின் செயலான செயலூக்கத்தையும், **மோஹம் ஏவ** – தமோகுணத்தின் செயலான மோஹத்தையும், **ஸம்ப்ரவ்ருத்தானி** – அவை வரும்பொழுது (அவற்றை), **ந த்₃வேஷ்டி** – வெறுப்பதில்லையோ, **நிவ்ருத்தானி** – அவை விலகும்போது, **ந காங்க்ஷதி ச** – (அவற்றை) மீண்டும் பெறவும் விரும்புவதில்லையோ—

ஸ்ரீபகவான் சொன்னார்: "அர்ஜுன! எந்த மனிதன் ஸத்வகுணத்தின் செயலான ப்ரகாசத்தையும், ரஜோகுணத்தின் செயலான செயலூக்கத்தையும், தமோகுணத்தின் செயலான மோஹத்தையும், அவை வரும்பொழுது அவற்றை வெறுப்பதில்லையோ, விலகும் போது அவற்றைத் திரும்பப் பெறவும் விரும்புவதில்லையோ—

**கேள்வி:** 'ப்ரகாஶம்' என்றால் என்ன? ஸத்வ குண விளைவுகளில் ப்ரகாசத்தை மட்டும் குறிப்பிட்டு, அது உண்டாவதிலும், மறைவதிலும் எதிர்பார்ப்போ, வெறுப்போ கொள்வதில்லை என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உடல், புலன்கள், உள்ளம் இவற்றில் சோம்பலும், ஜடத்தன்மையுமின்றி லேசாக, நிர்மலமாக, விழிப்புடன் இருப்பதுதான் 'ப்ரகாஶம்'. குணாதீதனுடைய உள்ளத்தில் எப்பொழுதும் ஞானம், அமைதி, ஆனந்தம் இவை நிறைந்து உள்ளன. அவை ஒருபொழுதும் இல்லாமற்போவதேயில்லை. ஆகவே இங்கு ஸத்வ குணங்களின் விளைவுகளில் ப்ரகாசத்தை மட்டும் குறிப்பிட்டார். அவனுடைய உடல், புலன்கள், உள்ளம் இவற்றில் ஸத்வகுணத்தின் ப்ரகாசம் தானாகவே உண்டாகும்போது அவன் அதை வெறுப்பதில்லை. அது மறையும்போது மறுபடியும் வரும் என்று எதிர்பார்ப்பதும் இல்லை. அது தோன்றினாலும், மறைந்தாலும் அவனுடைய நிலை ஒன்றேதான் என்று பொருள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ப்ரவ்ருத்தி' என்றால் என்ன? ரஜோ குண விளைவுகளில் ப்ரவ்ருத்தியை மட்டும் குறிப்பிட்டு அது எழும்போதும், மறையும்போதும், வெறுப்பும், விருப்பும் அடைவதில்லை என்று சுட்டிக்காட்டுவதன் கருத்து என்ன?

**பதில்:** பலவிதமாகக் கர்மங்களைச் செய்யும் ஊக்கமே 'ப்ரவ்ருத்தி' எனப்படும். இது தவிர காமம், லோபம், ஆவல், பற்று அனைத்துமே ரஜோ குண விளைவுகள்தான். இவை குணாதீதனிடம் இருப்பதில்லை. ஆனால் கர்மத்தில் எப்போதாவது ஈடுபட நேரும்போது, அந்தச் செயல்பாடும் குணாதீதனுடைய உடல், புலன்கள் மூலமே நடைபெறுகிறது. அது ப்ரவ்ருத்தி என்பதில் அடங்கிவிடுகிறது. ஆகவே இங்கு ரஜோ குணத்தின் கார்யங்களில் – ப்ரவ்ருத்தியில் மட்டும் பற்றும், வெறுப்பும் இரா என்று கூறினார். அதாவது குணாதீதனின் மனதில் ஏதாவது ஒரு செயல் புரிவதற்கான உணர்வு ஏற்படும்பொழுதோ, உடல் முதலியவற்றால் செய்லாற்றும்பொழுதோ, அதாவது குணாதீதனின் மனதில் ஏதாவது செயல்புரிய வேண்டும் என்று தோன்றும் போதோ அல்லது உடல் முதலியவற்றினால் செயல் ஆற்றும் பொழுதோ, அவன் அதன் மேல் வெறுப்பு அடைவதில்லை. இவ்வாறு நடைபெறாவிட்டாலும், அப்போது அதை விரும்புவதுமில்லை. எந்த உணர்விலும், செய்கையிலும், தோற்றத்திலும், அழிவிலும், எக்காலத்திலும் ஒரே நிலையில் இருப்பான்.

**கேள்வி:** 'மோஹம்' என்றால் என்ன? தமோ குண விளைவுகளில் மோஹம் மட்டும் கிளர்வதிலும், மறைவதிலும் வெறுப்போ, விருப்போ கிடையாது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உள்ளத்தின் மயக்கும் சக்திக்கு 'மோஹம்' என்று பெயர். இதன் விளைவாக மனிதன் களைப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம் இவற்றைப் பெறுகிறான். உடல், புலன்கள், உள்ளம் இவற்றில் ஸத்வ குண விளைவான ப்ரகாசம் மறைந்தது போல் தோன்றும். இது தவிர தமோ குண விளைவுகளான அஞ்ஞானம், கவனமின்மை இவையனைத்தும் குணாதீதனிடம் இருக்கவே மாட்டா. ஏனெனில் அஞ்ஞானம், ஞானத்தின் முன் நிற்காது. கவனமின்மை கர்த்தா இல்லாவிட்டால் எப்படி ஏற்படும்? ஆகவே இங்கு தமோ குண விளைவான 'மோஹ'த்தை மட்டும் குறிப்பிட்டு அது தோன்றினாலும், மறைந்தாலும் விருப்பு–வெறுப்பு இருக்காது என்கிறார். குணாதீதனுடைய உடலில் களைப்பு, கனவு, நல்ல தூக்கம் முதலிய தமோ குண விளைவுகள் ஏற்பட்டால், அதற்காக அவன் வெறுப்பு அடைவதில்லை. அவை விலகினாலும் மறுபடியும் வராதோ என்று ஏங்குவதுமில்லை. இரண்டு நிலைகளிலும் ஒரேவித மனப்பாங்கு கொண்டிருப்பான்.

उदासीनवदासीनो गुणैर्यो न विचाल्यते।
गुणा वर्तन्त इत्येव योऽवतिष्ठति नेङ्गते॥ २३॥

**உதா₃ஸீநவதா₃ஸீநோ கு₃ணைர்யோ ந விசால்யதே ।**

**கு₃ணா வர்தந்த இத்யேவ யோऽவதிஷ்ட₂தி நேங்க₃தே ॥ 23 ॥**

**ய:** – எவன், **உதா₃ஸீநவத் ஆஸீந:** – ஸாக்ஷியைப்போல் இருந்து கொண்டு, **கு₃ணை:** – குணங்களால், **ந விசால்யதே** – அசைக்கப்படுவதில்லையோ (மேலும்), **கு₃ணா: ஏவ** – குணங்களே, **வர்தந்தே** – (குணங்களிலேயே) இயங்குகின்றன, **இதி** – என்று அறிந்துகொண்டு, **ய:** – எவன், **அவதிஷ்ட₂தி** – (ஸத் சித் ஆனந்த பரமாத்மாவிடம் ஒன்றியவனாக) இருக்கிறானோ (மற்றும்), **ந இங்க₃தே** – அதிலிருந்து நிலைகுலைவதில்லையோ—

எவன் ஸாக்ஷியைப்போல் இருந்து கொண்டு குணங்களால் அசைக்கப்படுவதில்லையோ; மேலும் குணங்களே குணங்களிலேயே இயங்குகின்றன என்று அறிந்து ஸத் சித் ஆனந்த பரமாத்மாவிடம் ஒன்றியவனாக இருக்கிறானோ; மற்றும் அதிலிருந்து நிலைகுலைவதில்லையோ—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'உதாஸீநன்' என்று யாரைக் குறிப்பிடுகிறார்? அவனைப்போல இருப்பது என்றால் என்ன?

**பதில்:** எந்த ஸம்பவத்திலும், எந்தப் பொருளிலும், எவ்விதத்திலும் ஸம்பந்தப்படாமல் அதிலிருந்து ஒதுங்கி ஸாக்ஷியைப் போல் இருப்பவன் 'உதாஸீநன்'. முக்குணங்கள், அவற்றின் விளைவுகளான உடல், மனம், புலன்கள் மற்ற எல்லாப் பொருட்கள், நிகழ்ச்சிகள் இவையனைத்திலும் குணாதீதன் எந்தவிதமான தொடர்பும் கொள்ளாமல் இருப்பதால், அவன் ஒதுங்கியவன் போல இருக்கிறான். உண்மையில் அதுகூட ஒரு பேச்சுக்குச் சொன்னதுதான். அதிலும்கூட அவனுக்குத் தொடர்பு கிடையாது. இக்கருத்தைத்தான் 'ஸாக்ஷியைப் போல இருப்பது' என்று கூறினார்.

**கேள்வி:** குணங்களால் அசைக்கப்படுவதில்லை என்றால் என்ன?

**பதில்:** குணங்களுடன் தொடர்பு கொண்ட ஜீவர்களை, அவர்கள் விரும்பாவிடினும், முக்குணங்கள் அவர்களைப் பலவித கர்மங்களிலும், அவற்றின் பயன்களை அனுபவிப்பதிலும் வலுவில் இழுத்துவிடும். ஜீவனை ஸுகமுள்ளவனாகவோ, துக்கமுள்ளவனாகவோ செய்து தடுமாற வைக்கும். பல பிறவிகளில் தள்ளிவிடும். ஆனால் குணங்களின் தொடர்பற்றவனுக்கு குணங்களின் தலையீடு ஒன்றும் இருக்காது. குணங்களின் விளைவுகளான உடல், மனம், புலன்கள் இவற்றின் நிலைகளில் எவ்வித மாற்றம் ஏற்பட்டாலும், பலவிதமான உலகியல் பொருட்கள் வந்து சேர்ந்தாலும், விலகினாலும், அவன் தன் நிலையில் எப்பொழுதும் விகாரமடையாமல் ஒரேவிதமாக இருப்பான். அவன் குணங்களால் அசைக்கப்படுவதில்லை என்பதற்கு இதுதான் பொருள்.

**கேள்வி:** குணங்கள் குணங்களிலேயே இயங்குகின்றன என்றறிந்து நிலைத்திருப்பது எப்படி?

**பதில்:** 3/28ல் 'கு₃ணா கு₃ணேஷு வர்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே' என்று கூறினாரே, அதைத்தான் இங்கே 'கு₃ணா வர்தந்த இதி ஏவ' என்று கூறுகிறார். புலன்கள், மனம், புத்தி, ப்ராணன் முதலிய எல்லாக் கருவிகளும் ஒலி முதலிய நுகர் பொருட்களும் இவையனைத்துமே குணங்களின் விரிவுகள்தான். ஆகவே புலன்கள், மனம், புத்தி இவை அந்தந்த விஷயங்களில் ஈடுபடுவதே 'குணங்கள் குணங்களில் இயங்குகின்றன' என்பதாகும். ஆத்மாவுக்கு அவற்றுடன் தொடர்பு இல்லை. ஆத்மா நித்யன், சேதநன், ஒன்றிலும் எப்பொழுதும் ஒட்டாதவன், ஒரே நிலை உடையவன், ஸத் சித் ஆனந்தமயமானவன். இவ்விதம் அறிந்து நிர்குணமான, உருவமற்ற ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவிடம் இரண்டறக் கலந்து, எப்பொழுதும் நிலைத்திருக்கிறான். அதுதான் குணங்கள் குணங்களில் இயங்குகின்றன என்றறிந்து பரமாத்மாவில் 'நிலைத்திருப்பது' ஆகும்.

**கேள்வி:** 'ந இங்கதே' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ந இங்கதே' என்றால் அசைந்து கொடுப்பதில்லை என்று பொருள். குணாதீதனை குணங்கள் நிலைகுலையச் செய்வதில்லை; அது மட்டுமன்று. அவன் தானாகவே தன்னுடைய நிலையிலிருந்து எப்பொழுதும் விலகுவதில்லை. ஏனெனில் ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்மமான பரமாத்மாவிடம் இரண்டறக் கலந்த பிறகு ஜீவனுக்குத் தனித்தன்மை கிடையாது என்னும்போது யார் நிலை குலைவார்? நிலை குலைவது என்பது எப்படி ஸாத்யமாகும்?

**समदुःखसुखः स्वस्थः समलोष्टाश्मकाञ्चनः ।**
**तुल्यप्रियाप्रियो धीरस्तुल्यनिन्दात्मसंस्तुतिः ॥ २४ ॥**

**ஸமது₃:க₂ஸுக₂: ஸ்வஸ்த₂: ஸமலோஷ்டாஶ்மகாஞ்சந: ।**
**துல்யப்ரியாப்ரியோ தீ₄ரஸ்துல்யநிந்தா₃த்மஸம்ஸ்துதி: ॥ 24 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ஸ்வஸ்த₂:** — எவன் தன் நிலையான ஆத்ம ஸ்வரூபத்தில் இடையறாது நிலைத்து நிற்கிறானோ, **ஸமது₃:க₂ஸுக₂:** — இன்ப-துன்பங்களை ஸமமாகக் கருதுவானோ, **ஸம லோஷ்ட அஶ்ம காஞ்சந:** — மண்ணையும், கல்லையும், பொன்னையும் ஸமமாக மதிப்பானோ, **தீ₄ர:** — ஞானியோ, **துல்ய ப்ரிய அப்ரிய:** — வேண்டியது, வேண்டாதது இரண்டையும் ஒன்றாகவே நினைப்பானோ, **துல்ய நிந்தா₃ ஆத்மஸம்ஸ்துதி:** — இகழ்ச்சியையும், புகழ்ச்சியையும் ஒன்றெனக் கருதுவானோ—

எவன் தன் நிலையான ஆத்ம ஸ்வரூபத்தில் இடையறாது நிலைத்து நிற்கிறானோ; இன்ப-துன்பங்களை ஸமமாகக் கருதுவானோ; மண்ணையும், கல்லையும், பொன்னையும் ஸமமாக மதிப்பானோ; ஞானியோ; வேண்டியது, வேண்டாதது இரண்டையும் ஒன்றாகவே நினைப்பானோ; இகழ்ச்சியையும், புகழ்ச்சியையும் ஒன்றெனக் கருதுவானோ—

**கேள்வி:** *'ஸ்வஸ்த:' என்றால் என்ன கருத்து? இன்ப துன்பங்களை ஸமமாகக் கருதுவது எப்படி?*

**பதில்:** தன்னுடைய உண்மையான ஆத்ம ஸ்வரூபத்தில் நிலைத்து இருப்பவனை 'ஸ்வஸ்த:' என்கிறார். இவன்தான் ஸுகதுக்கங்களில் ஸமமாக இருக்க முடியும். இதற்காகத்தான் 'ஸ்வஸ்த:' என்ற சொல்லை இங்கே உபயோகிக்கிறார். ஸாதாரண மனிதன் ப்ரக்ருதியின் விளைவான ஸ்தூல உடலிலோ, ஸூக்ஷ்ம உடலிலோ, காரண உடலிலோ ஒட்டிக் கொண்டிருப்பான். அவன் 'ஸ்வஸ்தன்' அல்ல (ஆத்மாவில் இருப்பவன் அல்ல). ப்ரக்ருதியில் உள்ளவன். இப்படிப்பட்டவர்கள் ப்ரக்ருதியின் குணங்களை அனுபவிப்பவர்கள் *(13/21)*. இவர்கள் ஸுகதுக்கங்களில் ஸமமாக இருக்க முடியாது. குணாதீதன் ப்ரக்ருதியுடனோ, அதன் விளைவுகளுடனோ தொடர்பு இல்லாதவன். ஆகவே அவன் 'ஸ்வஸ்தன்'. மேலும் அவன் தன்னுடைய ஸத் சித் ஆனந்த ஆத்ம நிலையில் இருப்பவன். ஆகவே உடல், மனம், புலன்கள் இவற்றில் ஸுகதுக்கங்கள் ஏற்பட்டாலோ, விலகினாலோ குணாதீதனுக்கு அவற்றில் ஸம்பந்தம் இல்லாதபடியால், அவற்றால் ஸுகமடைந்தவன் என்றோ, துக்கமடைந்தவன் என்றோ ஆவதில்லை. அவன் எப்பொழுதும் ஒரேவிதமாக இருப்பான். ஸுகதுக்கங்களை அவன் ஸமமாக (ஒரேவிதமாக)க் கருதுவான் என்று கூறுவதன் பொருள் இதுதான்.

**கேள்வி:** *லோஷ்டம், அஶ்மம், காஞ்சநம் இந்த மூன்று சொற்களின் வெவ்வேறு பொருள்கள் என்ன? 'இவற்றில் ஸமபாவனை' என்பது என்ன?*

**பதில்:** லோஷ்டம் - ஒட்டாஞ்சில்; இரும்பின் துரு. அஶ்மம் - கல். காஞ்சநம் - தங்கம். இவற்றில் தங்கம் அடையத்தக்கது, ஒட்டாஞ்சில் தள்ளத்தக்கது என்கிற எண்ணம் இல்லாமலிருக்குமானால் அது ஸமபாவனை எனப்படும். உலகிலுள்ள பொருட்கள் ஒவ்வொன்றிலும் சிறந்தது, நடுத்தரமானது, கீழானது என்ற பாகுபாடு உண்டு. ஆனால், குணாதீதனுக்கு அனைத்தும் ஸமம்தான். அவன் பார்வையில் கானல் நீர்போல எல்லாம் மாயப் பொருட்களே. அவற்றில் வேற்றுமை எண்ணம் கிடையாது.

**கேள்வி:** *'தீரன்' என்றால் யார்?*

**பதில்:** ஞானியை அதாவது ஸ்திதப்ரக்ஞனை 'தீரன்' என்று கூறுகிறார். குணாதீதன் எவ்வளவு பெரிய ஸுகமோ, துக்கமோ வந்தாலும் தன்நிலை குலையமாட்டான் *(6/21,22)*. அவனுடைய புத்தி எப்பொழுதும் ஸ்திரமாக, திடமாக இருக்கும்.

**கேள்வி:** *'ப்ரியம், அப்ரியம்' எவை? இவற்றில் ஸமமாக இருப்பது எப்படி?*

**பதில்:** எப்பொருள் உடல், உள்ளம், புலன், புத்தி இவற்றுக்கு அனுகூலமானதோ, அவற்றைப் பேணுகிறதோ, உதவி செய்கிறதோ, அமைதி தருகிறதோ, அது உலக ரீதியில் 'ப்ரிய'மானது என்று கூறப்படுகிறது. எது ப்ரதிகூலமோ, அழிக்கிறதோ, எதிரானதோ, கஷ்டத்தை விளைவிக்கிறதோ, அது உலக ரீதியில் 'அப்ரிய'மானது. இப்படிப் பலவிதமான பொருட்களிலும், ப்ராணிகளிடமும் உடல், உள்ளம், புலன்கள் இவற்றின் தொடர்பு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஏற்படும்போது, அந்தப் பொருட்களில் சிறிதுகூட பேதபாவனை இல்லாமலிருப்பது. அதுதான் ப்ரிய, அப்ரியங்களில் ஸமமாக இருப்பது.

குணாதீதனுக்குப் புலன்கள், மனதுடன் கூடிய உடலுடன் எந்தவிதமான ஸம்பந்தமும் இருக்காது. ஆகையால், அவற்றுடன் ஸம்பந்தமுள்ள எந்தப் பொருளிலும் அவனுக்கு வேற்றுமை மனப்பாங்கு வராது. ஸாதாரண மனிதனுக்கு விருப்பமான பொருள் கிடைத்தாலும், அப்ரியமான பொருள் தொலைந்தாலும் ஆசையும், மகிழ்ச்சியும் உண்டாகும். விரும்பாத பொருள் வந்து சேர்ந்தாலும், விரும்பிய பொருள் தொலைந்தாலும், வெறுப்பும், துயரமும் உண்டாகும். ஆனால் குணாதீதனுக்கு அத்தகைய நிலை ஏற்படாது. அவன் எப்பொழுதும் விருப்பு-வெறுப்புகள், மகிழ்ச்சி-துயரம் இவற்றுக்கு எவ்வகையிலும் அப்பாற்பட்டவன்.

**கேள்வி:** *'நிந்தா' என்றும், 'ஸ்துதி' என்றும் எதைக் கூறுகிறார்? அவற்றை ஸமமாகக் கருதுவது எப்படி?*

**பதில்:** ஒருவருடைய உண்மையான அல்லது பொய்யான குற்றங்களை எடுத்துக் கூறுவது 'நிந்தை'. நற்பண்புகளை வர்ணிப்பது 'ஸ்துதி' ஆகும். இவற்றின் தொடர்பு பெரும்பாலும் பெயருடனும், சில உடலுடனும் இருக்கும். குணாதீதனுக்குத் தன் பெயரிலோ, தன் உடலிலோ சிறிதும் ஸம்பந்தமில்லாத காரணத்தால் அவனுக்குப் புகழ்ச்சியினாலோ, இகழ்ச்சியினாலோ, மகிழ்ச்சியோ, வருத்தமோ ஏற்படாது. அப்படி இகழ்கிறவனிடமும், புகழ்கிறவனிடமும் கோபமோ, மகிழ்ச்சியோ ஏற்படாது. அவனுக்கு எப்பொழுதும் ஒரே மனப்பாங்குதான். இதுதான் அவனுடைய ஸமநிலை.

**मानापमानयोस्तुल्यस्तुल्यो मित्रारिपक्षयोः ।**
**सर्वारम्भपरित्यागी गुणातीतः स उच्यते ॥ २५ ॥**

**மாநாபமாநயோஸ்துல்யஸ்துல்யோ மித்ராரிபக்ஷயோ: ।**
**ஸர்வாரம்ப₄பரித்யாகீ₃ குணாதீத: ஸ உச்யதே ॥ 25 ॥**

**மாநாபமாநயோ: துல்ய:** – பெருமையையும், சிறுமையையும் ஸமமென நினைப்பானோ, **மித்ர அரிபக்ஷயோ: துல்ய:** – நண்பர் பக்கலிலும், பகைவர் பக்கலிலும் ஸமநோக்குக் கொண்டவனோ, **ஸர்வாரம்ப₄பரித்யாகீ₃** – செயல்களனைத்திலும் 'நான் செய்கிறேன்' (தான் கர்த்தா) என்ற மனப்பான்மையை விட்டவனோ, **ஸ:** – அந்த மனிதன், **குணாதீத:** – முக்குணங்களைக் கடந்தவன், **உச்யதே** – (என்று) கூறப்படுகிறான்.

பெருமையையும், சிறுமையையும் ஸமமென நினைப்பானோ; நண்பர் பக்கலிலும், பகைவர் பக்கலிலும் ஸமநோக்குக் கொண்டவனோ; செயல்களனைத்திலும் 'நான் செய்கிறேன்' – தான் கர்த்தா என்ற மனப்பான்மையை விட்டவனோ, அந்த மனிதன் முக்குணங்களையும் கடந்தவன் என்று கூறப்படுகிறான்.

**கேள்வி:** *பெருமை, சிறுமை இவற்றில் ஸமமாக இருப்பது எப்படி?*

**பதில்:** மானம், அவமானம் எல்லாம் பெரும்பாலும் உடலைத்தான் சாரும். சரீரத்தில் அபிமானம் கொண்டு உலகியலில் பழகுபவன்தான் பெருமை கிடைத்தால் விருப்பமும், சிறுமை நேர்ந்தால் வெறுப்பும் கொள்கிறான். அதனால் பெருமையில் மகிழ்ச்சியும், சிறுமையில் வருத்தமும் ஏற்படுகின்றன. பெருமைப்படுத்துபவனிடம் அன்பும், சிறுமைப்படுத்துபவனிடம் பகைமையும் உண்டாகின்றன. குணாதீதனுக்கு உடலில் எந்தவிதமான ஸம்பந்தமும் இல்லாததால், உடலுக்குப் பெருமை ஏற்பட்டால் அவனுக்கு மகிழ்ச்சியில்லை; சிறுமை ஏற்பட்டால் வருத்தமும் இல்லை. அவனுடைய பார்வையில் எந்த உடலுக்குப் பெருமையும், சிறுமையும் ஏற்படுகிறதோ, எவரால் ஏற்படுகிறதோ, அந்தப் பெருமை-சிறுமைப்படுத்தும் செயல்கள் உட்பட அனைத்துமே கனவு போல மாயை. அந்தப்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பெருமையினாலும், சிறுமைகளினாலும் அவருக்கு சிறிதுகூட விருப்பு–வெறுப்பு, மகிழ்ச்சி–வருத்தம் ஏற்படுவதில்லை. 'பெருமை–சிறுமைகளில் ஸமமாக இருப்பது' என்பது இதுதான்.

**கேள்வி:** நண்பர், பகைவர் பக்கலில் ஸமமாக இருப்பது எப்படி?

**பதில்:** குணாதீதனுக்குத் தன்னைப் பொருத்தவரை யாரிடமும், எந்தப் பொருளிலும் நட்போ, பகையோ இல்லாவிட்டாலும், அதனால் நண்பர் என்றோ, பகைவர் என்றோ யாரும் இல்லாவிட்டாலும், உலகத்தார் தங்கள் மனப்பாங்கின்படி இவனிடம் நட்பும், பகையும் கொள்கிறார்கள். அவர்களை மனதில் கொண்டுதான் நண்பர்களிடமும், பகைவர்களிடமும் ஸமமாக இருப்பான் என்று பகவான் கூறுகிறார். உலகியலில் மக்கள் தம்மிடம் நட்புக் கொண்டவர்களிடமும், அவரைச் சார்ந்தவர்களிடமும், தங்களுடைய நன்மையை விரும்புபவர்களிடமும் தங்களுடையவர் என்று அபிமானம் வைத்து அன்பு காட்டுகிறார்கள். அவர்கள்பால் தங்களுடைய சொத்தைச் செலவழித்துக்கூட உதவி புரிகிறார்கள். தங்களுடன் பகைமை பாராட்டுபவர்களிடமும், அவர்களைச் சார்ந்தவர்களிடமும், அவர்களுக்கு நன்மை செய்பவர்களிடமும் வெறுப்பு கொள்கிறார்கள். அவர்களுக்குத் தீங்கிழைக்க விழைகிறார்கள். அதற்காகத் தம் சக்தியையெல்லாம் பாழாக்குகிறார்கள். குணாதீதன் இவ்வாறு செய்வதில்லை. அந்த இரண்டு வகையினரிடமும் ஸமபாவனையுடன் இருப்பான். அவர்களிடம் வெறுப்பின்றி அனைவருக்கும் நன்மையையே செய்வான். யாருக்கும் தீங்கும் செய்ய மாட்டான். யாரிடமும் பேதபுத்தி கிடையாது. 'நண்பரிடமும், பகைவரிடமும் ஸமமாக இருப்பது' என்று இதைத்தான் பகவான் குறிப்பிடுகிறார்.

**கேள்வி:** 'ஸர்வாரம்ப பரித்யாகீ' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஆரம்பம் என்பது இங்கே செயல்களனைத்தையும் குறிக்கிறது. குணாதீதன் உடல், மனம், புத்தி, புலன்களால் சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட கடமைகளை, ப்ராரப்தத்தை ஒட்டி – உலகத்திற்கு வழிகாட்டும் முறையில் அதாவது உலக மக்களைத் தீய வழியிலிருந்து திருப்பி நல்ல வழியில் ஈடுபடுத்துவது என்ற குறிக்கோளுடன் செய்வான். ஆனால் அந்தக் கர்மங்களில் சிறிதுகூட அவனிடம் 'கர்த்தா' என்ற எண்ணம் இராது. இதுதான் 'ஸர்வாரம்ப பரித்யாகீ' – 'செயல்களனைத்திலும் 'நான் செய்கிறேன்' என்ற மனப்பான்மையை முழுமையாக த்யாகம் செய்பவன்' என்பதன் கருத்து.

**கேள்வி:** 'அவனை குணாதீதன் (முக்குணங்களைக் கடந்தவன்) என்பர்.' இதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த வாக்கியத்தினால் அர்ஜுனனுடைய கேள்விகளில் இரண்டிற்கு பதில் கூறி முடித்தாயிற்று. ச்லோகம் 22 முதல் 25 வரை கூறப்பட்ட இலக்கணங்களோடு கூடியவன் குணாதீதன். இவைதான் குணாதீதனுக்குரிய இலக்கணங்கள், இதுதான் அவனுடைய நடைமுறை. உள்ளத்தில் விருப்பு–வெறுப்பு, வேற்றுமையுணர்வு, மகிழ்ச்சி–வருத்தம், அஞ்ஞானம்–அபிமானம் இவை அறவே ஒழியாதவரை ஒருவனை குணாதீத நிலையை அடையவில்லை என்று அறிய வேண்டும்.

**பொருத்தம்:** இவ்விதம் அர்ஜுனனுடைய இரண்டு கேள்விகளுக்குப் பதில் கூறிவிட்டு, 'குணாதீதன் ஆவதற்குரிய உபாயம் என்ன' என்ற மூன்றாவது கேள்விக்கு பதில் கூறப் போகிறார். 19வது ச்லோகத்திலேயே தன்னைக் கர்த்தா என்று கருதாமல் நிர்குணமான, உருவமற்ற, ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்மத்தில் எப்பொழுதும் இடைவிடாது நிலைத்திருப்பதுதான் உபாயம் என்று கூறினார். அடுத்த நான்கு ச்லோகங்களில் குணாதீதனுக்குரிய இலக்கணங்கள், நடத்தைகளைக் கூறினார். இவற்றையே எடுத்துக்காட்டாகக் கொண்டு பயிற்சி செய்வதும்கூட குணாதீதனாவதற்குரிய உபாயம்தான். ஆயினும் அர்ஜுனன் இவை தவிர வேறு ஏதாவது எளிய உபாயம் உண்டா என்று கேட்பதால், அந்தக் கேள்வியை ஒட்டி பகவான் வேறு எளிய உபாயம் கூறுகிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**मां च योऽव्यभिचारेण भक्तियोगेन सेवते।**
**स गुणान्समतीत्यैतान्ब्रह्मभूयाय कल्पते॥ २६॥**

**மாம் ச யோऽவ்யபி₄சாரேண ப₄க்தியோகே₃ந ஸேவதே ।**
**ஸ கு₃ணாந்ஸமதீத்யைதாந்ப்₃ரஹ்மபூ₄யாய கல்பதே ॥ 26 ॥**

**ச** – மேலும், **ய:** – எவன், **அவ்யபி₄சாரேண** – வேறு எதிலும் நாட்டமில்லாத, **ப₄க்தியோகே₃ந** – (ஒன்றிய) பக்தியோகத்தினால், **மாம்** – என்னை, **ஸேவதே** – (இடைவிடாது) வழிபடுகிறானோ, **ஸ:** – அவன், **ஏதாந்** – இந்த, **கு₃ணாந்** – மூன்று குணங்களையும், **ஸமதீத்ய** – முற்றிலுமாகக் கடந்து, **ப்₃ரஹ்மபூ₄யாய** – ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்மத்தை அடைவதற்கு, **கல்பதே** – தகுதி பெறுகிறான்.

மேலும் எவன் வேறு எதிலும் நாட்டமில்லாமல் ஒன்றிய பக்தி யோகத்தினால் என்னை இடைவிடாது வழிபடுகிறானோ அவன் இந்த மூன்று குணங்களையும் முற்றிலுமாகக் கடந்து ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்மத்தை அடைவதற்குத் தகுதி பெறுகிறான்.

**கேள்வி:** 'அவ்யபிசாரீ பக்தியோகம்' என்றால் என்ன? அதன் மூலம் பகவானை இடைவிடாது வழிபடுவது எப்படி?

**பதில்:** ஒன்றேயான பகவான் ஒருவரே அனைத்திலும் சிறந்தவர். அவரே நம் ஸ்வாமி; சரணடையத்தக்கவர்; பரமகதி; உயர்ந்த புகல்; தாய்–தந்தை; உற்றார்–உறவினர்; மிகுந்த ஹிதம் புரிபவர்; அனைத்துமே அவர்தான்; அவரை விடுத்து, நமக்கு வேறொருவரும் இல்லை என்று அறிந்து, அவரிடம் தன்னலம் பாராட்டாது மிகுந்த நம்பிக்கையும், அதிசய ஆர்வமும் கூடிய அநன்ய ப்ரேமை கொள்ள வேண்டும். எந்த ப்ரேமையில் தன்னலம், அபிமானம், பிறழ்தல் முதலிய குறைபாடுகள் சிறிதுகூட இல்லையோ, எதனால் வேறு எதிலும் எப்பொழுதும், எல்லா வகைகளாலும் பரமனிடமே பக்தன் ஒன்றியிருப்பானோ, சிறிதுகூட பகவானைத் தவிர வேறு பொருளில் கவனம் திரும்பாதோ, எதன் காரணமாக ஒரு கணம்கூட பகவானுடைய நினைவு மறையாதோ, அப்படி மறைவதும் பொறுக்க முடியாததோ, அந்த அநன்ய ப்ரேமைக்குத்தான் பிறழாத, வழுவாத, வேறெதிலும் நாட்டமில்லாத பக்தி என்று பெயர்.

இத்தகைய பக்தியோகத்தின் மூலம் இடைவிடாது பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், லீலைகள் இவற்றைக் கேட்பது, கீர்த்தனம் செய்வது, த்யானம் செய்வது, திருநாமங்களை உச்சரிப்பது, ஜபம் செய்வது, அவருடைய ஸ்வரூப சிந்தனையில் ஆழ்ந்திருப்பது முதலியவற்றைச் செய்து, மனம், புத்தி, உடல் இவற்றையும், அனைத்துப் பொருட்களையும், பகவானுடையவை என நினைத்து, தன்னை வெறும் கருவியாக மட்டுமே மதித்து, அவருடைய ஆணைப்படி அவருடைய ஸேவை என்ற மனப்பாங்குடன் எல்லாச் செயல்களையும் நிஷ்காமமாக (பற்றின்றி) அவருக்காகவே புரிவதுதான் – பிறழாத, வழுவாத வேறெதிலும் நாட்டமில்லாத பக்தியுடன் இடைவிடாது வழிபடுவதாகும்.

**கேள்வி:** 'மாம்' என்பதற்கு இங்கே என்ன பொருள்?

**பதில்:** 'மாம்' எனும் சொல், ஸர்வ வல்லமை படைத்த, அனைவருக்கும் அந்தர்யாமியான, எங்கும் நிறைந்த, எல்லாவற்றிற்கும் ஆதாரமான, அகில உலகையும் படைத்துக் காத்துத் தன்னுள் அடக்கிக் கொள்பவரான, பரமதயாளுவான, அனைவருக்கும் நண்பரான, பரமப்ரேமை கொண்டவரான ஸகுண பரமாத்மாவைக் குறிக்கும்.

**கேள்வி:** 'ஏதாந் குணாந்' என்றால் எவை? மேலே குறிப்பிட்ட மனிதர் அவற்றைக் கடக்கிறார் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஏதாந் குணாந்' என்றால் இந்த அத்யாயத்தில் விளக்கப்பட்டவையான முக்குணங்கள் என்று பொருள். இந்த முக்குணங்கள், அவற்றின் விளைவுகளான உடல், மனம்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



புத்தி, புலன்கள், உலகியல் பொருட்கள் இவற்றில் சிறிதுகூட ஸம்பந்தமற்றிருப்பதுதான் குணாதீத நிலை.

**கேள்வி:** 'ப்ரம்மத்தையடையத் தகுதி பெறுகிறான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனிதன் மேற்குறித்தபடி குணாதீத நிலையை அடைவதுடன், ப்ரம்மத்தை அடையவும் தகுதி பெறுகிறான். அதாவது குணமற்ற, உருவமற்ற, ஸத் சித் ஆனந்தமயமான பூர்ணப்ரம்மத்தை அடைகிறான். ப்ரம்மத்தை அடைந்தவனுக்கு அடையவேண்டியது வேறு ஒன்றும் இல்லை; ப்ரம்மத்துடன் இரண்டறக் கலக்கும் தகுதியைப் பெறுகிறான். உடனே அவனுக்கு ப்ரம்மநிலை கிடைத்துவிடுகிறது.

**பொருத்தம்: ஸகுண ப்ரம்ம உபாஸனையை மேற்கூறியவிதம் செய்வதன் பயன், நிர்குணமான, உருவமற்ற ப்ரம்மத்தை அடைவது என்று கூறினார். 19வது ச்லோகத்திலும் குணாதீத நிலையின் பயன் பகவானுடைய ஸ்வரூபத்தை அடைவது என்று கூறினார். 20வது ச்லோகத்தில் அம்ருத நிலையை அடையலாம் என்று கூறினார். இம்மூன்றின் பயனும் வெவ்வேறானவையா என்ற ஐயம் எழுகிறது. அப்படி அல்ல, எல்லாம் ஒன்றுதான் என்ற கூறி அத்யாயத்தை நிறைவு செய்கிறார்—**

ब्रह्मणो हि प्रतिष्ठाहममृतस्याव्ययस्य च।
शाश्वतस्य च धर्मस्य सुखस्यैकान्तिकस्य च॥ २७॥

**ப்₃ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்ட₂ாஹமம்ருதஸ்யாவ்யயஸ்ய ச ।**

**ஶாஶ்வதஸ்ய ச த₄ர்மஸ்ய ஸுக₂ஸ்யைகாந்திகஸ்ய ச ॥ 27 ॥**

**ஹி** – ஏனெனில், **அவ்யயஸ்ய** – (அந்த) அழிவற்றதான, **ப்₃ரஹ்மண: ச** – பரப்ரம்மத்திற்கும், **அம்ருதஸ்ய ச** – அம்ருத நிலைக்கும், **ஶாஶ்வதஸ்ய த₄ர்மஸ்ய ச** – எப்பொழுதும் இருக்கக்கூடிய தர்மத்திற்கும், **ஐகாந்திகஸ்ய** – வேறுபாடற்ற ஒரே சீரான, **ஸுக₂ஸ்ய** – ஆனந்தத்திற்கும், **ப்ரதிஷ்ட₂ா** – உறைவிடம், **அஹம்** – நானே.

ஏனெனில் அந்த அழிவற்றதான பரப்ரம்மத்திற்கும் இறவாநிலைக்கும் எப்பொழுதும் இருக்கக்கூடிய தர்மத்திற்கும் வேறுபாடற்ற ஒரே சீரான ஆனந்தத்திற்கும் உறைவிடம் நானே.

**கேள்வி:** 'அவ்யயஸ்ய ப்ரஹ்மண:' என்றால் என்ன கருத்து? 'அந்த ப்ரம்மத்திற்கு நானே உறைவிடம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ப்ரஹ்மண:' என்கிற சொல்லோடு 'அவ்யயஸ்ய' என்ற அடைமொழி கூறிப் பின்வரும் கருத்தைத் தெரிவிக்கிறார். இங்கு 'ப்ரஹ்ம' என்ற சொல்லுக்கு ப்ரக்ருதி என்று பொருள் அல்ல. நிர்குணமான, உருவமற்ற பரமாத்மா என்று பொருள். அவருடைய உறைவிடம் நான். இப்படிக் கூறுவதற்கு 'அந்த ப்ரம்மம் ஸகுணமான பரமேசுவரன் ஆகிய என்னைத் தவிர வேறல்ல. நான் அந்த ப்ரம்மம் தவிர வேறல்ல' என்று பொருள். உண்மையில் நான், ப்ரம்மம் என்று இரண்டு பொருட்கள் அல்ல. ஒரே தத்வம்தான். ஆகவே, முன் ச்லோகத்தில் ப்ரம்மத்தை அடைவது என்று கூறப்பட்டது. 'அது என்னை அடைவதுதான்.' ஒரே ப்ரம்மத்தை இவ்வாறு அவரவர் தகுதிக்கேற்றவாறு உபாஸிப்பதற்காக வெவ்வேறு ஸ்வரூபங்களாகக் கூறினார். அவற்றுள் மாயைக்கு அப்பாற்பட்டதும், சிந்தனைக்கும், மனதிற்கும், சொல்லுக்கும் எட்டாததுமான பரமாத்மாவின் நிர்குண ஸ்வரூபமோ ஒன்றுதான். ஆனால் ஸகுண ஸ்வரூபத்தில் உருவமுள்ளது, உருவமற்றது என்ற இரண்டு வகை உண்டு. இந்த ப்ரபஞ்சம் முழுவதிலும் நிறைந்து இருப்பதும், அனைத்துக்கும் ஆதாரமானதும், சிந்தனைக்கப்பாற்பட்டதுமான தமது சக்தியினால் இவையனைத்தையும் தாங்கிப் போஷித்துப் பேணுவதுமான ஸ்வரூபம், பகவானுடைய ஸகுணமான, உருவமற்ற, அவ்யக்த (புலனாகா) ஸ்வரூபம். சிவபெருமான், ஸ்ரீவிஷ்ணு, ஸ்ரீராமன், ஸ்ரீக்ருஷ்ணன் முதலியவை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பகவானுடைய ஸகுணமான, உருவமுள்ள ஸ்வரூபங்கள். இந்த அகில உலகமுமே பகவானுடைய விராட் ஸ்வரூபம்.

**கேள்வி:** 'அம்ருதஸ்ய' என்றால் எது? அந்த 'அம்ருதத்திற்கு நான் உறைவிடம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'அம்ருதம்' என்ற சொல் எது கிடைக்கப் பெற்ற மனிதன் அமர நிலை பெறுகிறானோ, அதாவது பிறப்பு, இறப்பு என்ற ஸம்ஸாரத்திலிருந்து விடுதலை பெறுகிறானோ, அந்த ப்ரம்மத்தைக் குறிக்கிறது. அதற்கும் 'நானே உறைவிடம்' எனக் கூறி, பகவான் தாமே அந்த அம்ருத நிலை என்கிறார். 14/20லும், 13/12லும் கூறப்பட்ட அம்ருதநிலை என்பது என்னை அடைவதுதான் என்று பொருள்.

**கேள்வி:** 'ஶாஶ்வதஸ்ய தர்மஸ்ய' என்றால் என்ன பொருள்? தாம் அந்தத் தர்மத்திற்கு உறைவிடம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தர்மம் நித்யமானது. இதைத்தான் 12/20ல் 'தர்ம்யாம்ருதம்' என்று கூறினார். இங்கே குணாதீதனுக்குக் கூறிய இலக்கணங்கள் சாச்வத தர்மங்கள். இத்தகைய தர்மங்களுக்கு நான் உறைவிடம். அதாவது என்னை அடைவதற்கான காரணங்கள் அவை. ஆதலால் அவையும் என்னுடைய ஸ்வரூபங்களே. ஏனெனில் இந்த தர்மங்களைக் கடைப்பிடிப்பவர்கள் வேறு பயனைப் பெறுவதில்லை; என்னைத்தான் அடைகிறார்கள்.

**கேள்வி:** 'ஐகாந்திகஸ்ய ஸுகஸ்ய' என்றால் என்ன கருத்து? 'அதன் உறைவிடம் நான்' எனக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 5/21ல் 'அக்ஷய ஸுகம்', 6/21ல் 'ஆத்யந்திக ஸுகம்', 6/28ல் 'அத்யந்த ஸுகம்' என்றெல்லாம் கூறப்பட்ட நித்யமான பரமானந்தம்தான் இங்கே கூறப்படுகின்ற 'ஐகாந்திக ஸுகம்'. 'அதற்கு நானே உறைவிடம்' என்றால் 'என்றுமுள்ள அந்தப் பரமானந்தம் நானே. என்னைத் தவிர வேறு பொருளே கிடையாது. ஆகவே அதை அடைவதும், என்னை அடைவதும் ஒன்றுதான்' என்று பொருள்.

ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे गुणत्रयविभागयोगो नाम चतुर्दशोऽध्याय: ॥ १४ ॥

**ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத்₃ப₄க₃வத்₃கீ₃தாஸூபநிஷத்ஸு ப்₃ரஹ்மவித்₃யாயாம்**
**யோக₃ஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே₃ கு₃ணத்ரயவிப₄ாக₃யோகோ₃**
**நாம சதுர்த₃ஶோऽத்₄யாய: ॥ 14 ॥**

**ஓம் தத் ஸத் - ப்ரம்ம வித்யை, யோக ஶாஸ்த்ரம், உபநிஷத்**
**எனப்படும் ஸ்ரீமத்பகவத்கீதையாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே**
**நிகழ்ந்த உரையாடலில் 'குணத்ரயவிபாகயோகம்' எனப் பெயர் படைத்த**
**பதினான்காவது அத்யாயம் நிறைவுற்றது.**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் பரமாத்மநே நம:

## அத₂ பஞ்சத₃ஶோऽத்₄யாய:

# பதினைந்தாவது அத்யாயம்

## புருஷோத்தமயோகம்

**அத்யாயத்தின் பெயர்** இந்த அத்யாயத்தில் அகில ப்ரபஞ்சத்தையும் படைத்துக் காத்துத் தம்முள் ஒடுக்கிக் கொள்பவரும், ஸர்வ வல்லமை படைத்தவரும், அடக்கி ஆள்பவரும், எங்கும் நிறைந்தவரும், அந்தர்யாமியும், பரமதயாளுவும், அனைவருக்கும் தோழரும், ஆதாரமானவரும், சரண்புகத் தக்கவரும், ஸகுண பரமேசுவரனும், புருஷோத்தமனுமான பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், ஸ்வரூபம் இவை வர்ணிக்கப்படுகின்றன. க்ஷரபுருஷன் (க்ஷேத்ரம்), அக்ஷர புருஷன் (க்ஷேத்ரக்ஞன்), புருஷோத்தமன் (பரமாத்மா) இம்மூன்றையும் வர்ணித்து, க்ஷர, அக்ஷரர்களைக் காட்டிலும் புருஷோத்தமன் எவ்விதம் சிறந்தவர், ஏன் அவரைப் புருஷோத்தமன் என்று அழைக்க வேண்டும், அவரைப் புருஷோத்தமன் என்று அறிவதன் சிறப்பு என்ன, அவரை எப்படி அடையலாம் என்ற விஷயங்கள் நன்கு விளக்கப்படுகின்றன. ஆகவே இந்த அத்யாயத்திற்கு 'புருஷோத்தமயோகம்' என்று பெயர்.

**அத்யாயச் சுருக்கம்** இந்த அத்யாயத்தின் ச்லோகங்கள் 1, 2ல் அரச மரமாக உருவகப்படுத்தி ஸம்ஸாரத்தை வர்ணிக்கிறார். 3ல் உலகியல் மரத்தின் முதலும், முடிவும், இருப்பும் காண்பதற்கு அகப்படாதன என்று கூறி, திடமான வைராக்யம் என்ற ஆயுதத்தைக் கொண்டு, அதை வெட்டிவிடு என்று தூண்டுகிறார். 4ல் பரமபதமாகிய பரமாத்மாவை அடைவதற்கு, அந்த ஆதிபுருஷனையே ஶரணம் அடையவேண்டும் என்கிறார். 5ல் அந்த பரமபதத்தை அடைகின்ற மனிதர்களின் இலக்கணம் கூறி, 6ல் அந்தப் பரமபதம் ஒளிமயமானது, அது மறுபிறவியை அளிக்காத தனிப்பெரும் பதம் என்கிறார். பிறகு 7 முதல் 11 வரை ஜீவனின் ஸ்வரூபம், மனம், புலன்களுடன் கூட அவன் ஒருடலிலிருந்து மறுவுடல் போகும் முறை, உடலிலிருந்து கொண்டே புலன்கள், மனம் இவற்றின் உதவியினால் போகங்களைத் துய்த்தல், ஒவ்வொரு நிலையிலும் உள்ள அந்த ஜீவாத்மாவை ஞானியே அறிவார்; மாசுபடிந்த உள்ளம் படைத்தவர் எவ்விதத்திலும் அறியமாட்டார் என்றும் விஷயங்களைக் கூறி, 12ல் அகில உலகங்களுக்கும் ஒளியூட்டும் சூரியனிடமும், சந்த்ரனிடமும் உள்ள ஒளி, பகவானுடைய ஒளியே என்று கூறி, 13, 14களில் பகவானே பூமியில் புகுந்து அனைத்து ப்ராணிகளையும் தாங்குபவராகவும், சந்த்ரனாக அனைத்து உயிரினங்களையும் போஷிப்பவராகவும், வைச்வாநரனாக இருந்து எல்லாவித உணவுகளையும் ஜீரணம் செய்விப்பவராகவும் உள்ளார் என்றும் கூறுகிறார். 15ல் பகவானே அனைவருடைய இதயத்திலும் உள்ளவர். அவர்களின் நினைவு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



முதலியவற்றிற்குக் காரணமானவர். வேதங்கள் அனைத்தாலும் அறியத்தக்கவர். வேதங்களை அறிந்தவர். மேலும் வேதாந்தத்தை ஆக்கியவர் என்று கூறுகிறார். 16ல் பூதங்கள் அனைத்தும் க்ஷரம் என்றும், கூடஸ்தனான ஆத்மா அக்ஷரபுருஷன் என்றும் கூறி, 17ல் அவற்றிலிருந்து வேறுபட்டவரும், எங்கும் நிறைந்தவரும் எல்லாவற்றையும் தாங்கிக் காப்பாற்றுகின்றவரும், அழிவற்றவரும் ஆன பரமாத்மாவை புருஷோத்தமன் என்றும் கூறினார். 18ல் பகவானை புருஷோத்தமன் என்று புகழ்வதற்கான காரணம் கூறி, 19ல் பகவான் ஸ்ரீக்ருஷ்ணனை புருஷோத்தமன் என்று அறிபவர்களின் பெருமையையும், 20ல் மேலே கூறப்பட்ட மிகவும் ரஹஸ்யமான விஷயத்தை அறிந்து கொள்வதன் பெருமையையும் கூறி அத்யாயத்தை முடிக்கிறார்.

**முன் அத்யாயத்துடன் இவ்வத்யாயத்திற்குப் பொருத்தம்:** 14/5 முதல் 14/18 வரை முக்குணங்களின் ஸ்வரூபம், அவற்றின் விளைவுகள், இவற்றின் பந்தப்படுத்தும் தன்மை, அவ்வாறு பந்தப்பட்ட மனிதர்களில் சிறந்தவர், இடைப்பட்டவர், தாழ்ந்தவர் இவர்களின் கதி ஆகியவற்றை விரிவாக வர்ணித்து, 19, 20வது ச்லோகங்களில் அந்த குணங்களைக் கடப்பதற்கான உபாயத்தையும், கடப்பதன் பயனையும் கூறினார். பிறகு அர்ஜுனன் கேட்டதற்கு இணங்க 22 முதல் 25 வரை குணாதீதனுடைய இலக்கணம், நடத்தை இவற்றை வர்ணித்து, 26ல் ஸகுண பரமாத்மாவிடம் பிறழாத பக்தியின் மூலம் குணாதீதனாகி ப்ரம்மத்தை அடையத் தகுதி பெறுவான் என்ற எளிய உபாயத்தைக் கூறினார். அந்தப் பிறழாத பக்தியோகம் என்ற அநன்ய ப்ரேமையை உண்டாக்கும் நோக்கத்துடன் ஸகுணமான, பரமாத்மாவான புருஷோத்தமனுடைய குணங்கள், ப்ரபாவங்கள், ஸ்வரூபம் இவற்றை விளக்கிக் கூறவும், அவ்வாறே குணாதீதன் ஆவதற்குரிய முக்யமான ஸாதனங்களான வைராக்யம், பகவானிடம் சரணாகதி இவற்றை வர்ணிப்பதற்காகவும் பதினைந்தாவது அத்யாயத்தை ஆரம்பிக்கிறார். இங்கு முதலில் உலகியலில் வைராக்யத்தை உண்டாக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் மூன்று ச்லோகங்களில் ஸம்ஸாரம் என்பதை மரமென்று வர்ணித்து, அதை வைராக்யம் என்ற கோடரியினால் வெட்ட வேண்டும் என்கிறார்—

श्रीभगवानुवाच

ऊर्ध्वमूलमधःशाखमश्वत्थं प्राहुरव्ययम् ।
छन्दांसि यस्य पर्णानि यस्तं वेद स वेदवित् ॥ १ ॥

ஸ்ரீப$_4$க$_3$வாநுவாச

**ஊர்த்$_4$வமூலமத$_4$:ஶாக$_2$மஶ்வத்த$_2$ம் ப்ராஹுரவ்யயம் ।**
**ச$_2$ந்த$_3$ாம்ஸி யஸ்ய பர்ணாநி யஸ்தம் வேத$_3$ ஸ வேத$_3$வித் ॥ 1 ॥**

**ஸ்ரீப$_4$க$_3$வாநுவாச** – ஸ்ரீபகவான் கூறினார்: **ஊர்த்$_4$வமூலம்** – ஆதிபுருஷனான பரமேசுவரன் எதற்கு வேரோ, **அத$_4$:ஶாக$_2$ம்** – ப்ரம்மதேவன் எதற்கு முக்ய நடுமரமோ (கீழ்க் கிளையோ), **அஶ்வத்த$_2$ம்** – அந்த ப்ரபஞ்ச உருவமான அரச மரத்தை, **அவ்யயம்** – அழியாதது, **ப்ராஹு:** – (எனக்) கூறுகிறார்கள். (மேலும்), **யஸ்ய** – எந்த அரசமரத்திற்கு, **ச$_2$ந்த$_3$ாம்ஸி** – வேதங்களே, **பர்ணாநி** – இலைகளோ, **த$_2$ம்** – ஸம்ஸாரம் (ப்ரபஞ்சம்) என்ற அந்த அரசமரத்தை, **ய:** – எவர், **வேத$_3$** – (வேருடன் சேர்த்து) தத்வரீதியாக அறிகிறாரோ, **ஸ:** – அவரே, **வேத$_3$வித்** – வேதத்தின் உட்கருத்தை அறிந்தவர் ஆவார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸ்ரீபகவான் கூறினார்: "ஆதிபுருஷனான பரமேசுவரன் எதற்கு வேரோ, ப்ரம்மதேவன் எதற்கு முக்ய நடுமரமோ – கீழ்க் கிளையோ, அந்த ப்ரபஞ்ச உருவமான அரச மரத்தை அழியாதது எனக் கூறுகிறார்கள். மேலும் எந்த அரசமரத்திற்கு வேதங்களே இலைகளோ, ஸம்ஸாரம் (ப்ரபஞ்சம்) என்ற அந்த அரசமரத்தை எவர் வேருடன் சேர்த்துத் தத்வரீதியாக அறிகிறாரோ அவரே வேதத்தின் உட்கருத்தை அறிந்தவர் ஆவார்.

கேள்வி: இங்கு 'அச்வத்தம்' (உலகியல் மரம்) என்று கூறி, அதன் வேர் மேலே உள்ளது என்று கூறுவதன் கருத்து என்ன?

பதில்: 'அச்வத்தம்' என்றால் அரச மரம். அனைத்து மரங்களையும்விடச் சிறந்தது. அதை உருவகமாக வைத்து ஸம்ஸாரத்தை வர்ணிக்கிறார். மூலம் என்றால் காரணம் என்று பொருள். இந்த ஸம்ஸாரம் என்ற மரம் உண்டாகி விரிவாக வளர்ந்தது ஆதிபுருஷனான நாராயணனிடமிருந்துதான். இந்த விஷயம் 15/4லும் மற்ற இடங்களிலும் கூறப்படுகிறது. அந்த ஆதிபுருஷன் பரமேசுவரன், நித்யமானவர், முடிவற்றவர், அனைத்திற்கும் காரணமானவர். ஸகுண ஸ்வரூபமாக அனைத்திற்கும் மேலே தம்முடைய பரமபதத்தில் விளங்குகிறார். ஆகவே அவர் 'ஊர்த்வம்' (மேலே) என்ற பெயரால் அழைக்கப்படுகிறார். இந்த ஸம்ஸார மரம், மாயைக்கு அதிபதியான ஸர்வ வல்லமை படைத்த பரமேசுவரனிடமிருந்து முளைத்தது. வேராகிய பகவான் மேலே பரமபதத்தில் விளங்குவதால் இதை 'ஊர்த்வமூலம்' (வேர் மேலே உள்ளது) என்று கூறுகிறார். மற்ற மரங்களுக்கு வேர் கீழே பூமிக்கடியில் இருக்கும். ஸம்ஸார மரத்திற்கு வேர் மேலே உள்ளது. இதுவே உலகியலுக்கு அப்பாற்பட்ட விஷயம்.

கேள்வி: 'இந்த ஸம்ஸார மரத்திற்குக் கீழே கிளை' என்று கூறுவதன் கருத்து என்ன?

பதில்: ஸம்ஸார மரம் உற்பத்தியானபோது முதன்முதலில் ப்ரம்மதேவன் உண்டாகிறார். ஆகவே ப்ரம்மதேவன் இந்த மரத்தின் முக்ய உறுப்பான நடுமரம் – தண்டு. ப்ரம்மாவின் உலகம் ஆதிபுருஷனான நாராயணனுடைய பரமபதத்திற்குக் கீழே உள்ளது. அதுபோல ப்ரம்மதேவனின் அதிகாரமும், பகவானுடையதைவிடத் தாழ்ந்தது. ப்ரம்மதேவன் அந்த ஆதிபுருஷன் நாராயணனிடமிருந்தே உண்டானவர். அவருடைய ஆணைக்குக் கட்டுப்பட்டவர். ஆகவே இந்த ஸம்ஸார மரத்தின் கிளை கீழே உள்ளது என்று சொன்னார்.

கேள்வி: 'அவ்யயம்', 'ப்ராஹு:' என்ற இவ்விரண்டு சொற்களின் கருத்து என்ன?

பதில்: இந்த ஸம்ஸார மரம் மாறிக் கொண்டே இருப்பது. அநித்யம்; நொடியில் அழியக் கூடியது. ஆனாலும் இதன் தொடர் அநாதிகாலமாக இருந்து வருகிறது. இது எப்பொழுது முடியப் போகிறது என்பதும் தெரியாது. ஆகவே இதை 'அவ்யயம்' (அழியாதது) என்று கூறுகிறார். ஏனெனில், இதற்கு ஆணிவேரான பகவான் ஸர்வ வல்லமை படைத்தவர், நித்யர் (என்றுமுள்ளவர்), அழிவற்றவர். உண்மையில் இந்த ஸம்ஸார மரம் அழிவற்றது அன்று. ஆனால் பின்வரும் மூன்றாவது ச்லோகத்தில் இதன் ஸ்வரூபம் எப்படிக் கூறப்படுகிறதோ, அப்படிக் காணக்கிடைப்பதில்லை என்றும், இதை வைராக்யமென்ற திடமான ஆயுதத்தினால் வெட்ட வேண்டும் என்றும் கூறுகிறார். இந்த ஸம்ஸார மரம் உண்மையில் அழியாததானால் இவ்வாறு கூறுவது பொருந்தாது.

கேள்வி: 'வேதங்கள் இந்த ஸம்ஸார மரத்தின் இலைகள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

பதில்: இலைகள் மரத்தின் கிளைகளில் உண்டாகின்றன. மேலும் மரத்தைக் காத்து வளரச் செய்கின்றன. வேதங்களும் இந்த ஸம்ஸாரம் என்ற மரத்தின் முக்ய நடுமரமான ப்ரம்மாவினிடமிருந்து வெளிப்பட்டவை. வேதத்தில் கூறப்பட்ட கர்மங்களால்தான் ஸம்ஸாரம் வளர்கிறது; காப்பாற்றப்படுகிறது. ஆகவே வேதங்களை இலைகளாக உருவகப்படுத்துகிறார்.

கேள்வி: இந்த ஸம்ஸார மரத்தை அறிபவர்கள் வேதத்தின் உட்கருத்தை அறிந்தவர்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** வேரோடுகூடிய இந்த ஸம்ஸார மரத்தைத் தத்வரீதியாகப் புரிந்து கொள்பவர்களே வேதங்களை அறிந்தவர்கள். அதாவது இந்த ஸம்ஸார மரம் ஸர்வவல்லமை படைத்த பரமாத்மாவின் மாயையில் உண்டானது; உண்டாகி அழியக் கூடியது; நிலையற்றது. ஆகவே இதன் வெளிப்பகட்டில் அகப்பட்டுக் கொள்ளாமல், இதைத் தோற்றுவித்த மாயைக்கு அதிபதியான பரமேச்வரனைச் சரணடைய வேண்டும். இவ்விதம் அறிந்து ஸம்ஸாரத்தில் வைராக்யம் கொண்டு ஓய்வு பெற்று, பகவானைச் சரணடைய வேண்டும். இவ்விதம் சரணடைபவன்தான் வேதங்களை அறிந்து கொண்டவன். 15வது ச்லோகத்தில் எல்லா வேதங்களாலும் அறியப்படுபவன் பகவான்தான் என்று கூறுகிறார். ஸம்ஸார மரத்தின் இந்த ஸ்வரூபத்தை அறிந்தவன் இதிலிருந்து ஓய்வு பெற்று பகவானை ஶரணமடைகிறான். பகவானைச் சரணடைவதுதான் வேதங்களின் பரம தாத்பர்யம். ஆகவே ஸம்ஸார மரத்தை அறிபவன் வேதங்களின் உட்கருத்தை அறிந்தவன் என்று கூறுகிறார்.

**अधश्चोर्ध्वं प्रसृतास्तस्य शाखा गुणप्रवृद्धा विषयप्रवालाः।**
**अधश्च मूलान्यनुसन्ततानि कर्मानुबन्धीनि मनुष्यलोके॥ २॥**

**அத₄ஶ்சோர்த்₄வம் ப்ரஸ்ருதாஸ்தஸ்ய ஶாக₂ா**
**கு₃ணப்ரவ்ருத்₃த₄ா விஷயப்ரவாலா: ।**
**அத₄ஶ்ச மூலாந்யநுஸந்ததாநி**
**கர்மாநுப₃ந்தீ₄நி மநுஷ்யலோகே ॥ 2 ॥**

**தஸ்ய** – அந்த ஸம்ஸாரம் என்ற அரசமரத்தினுடைய, **கு₃ணப்ரவ்ருத்₃த₄ா:** – முக்குணங்கள் என்ற நீரினால் வளர்ந்து, **விஷய ப்ரவாலா:** – புலன்நுகர் பொருட்களின் போகங்கள் என்ற தளிர்களுடன் கூடிய, **ஶாக₂ா:** – தேவ–மனித–விலங்கு முதலிய பிறவி உருவாகிய கிளைகள், **அத₄:** – கீழும், **ஊர்த்₄வம் ச** – மேலுமாக, **ப்ரஸ்ருதா:** – எங்கும் பரவியுள்ளன. (அவ்வாறே), **மநுஷ்யலோகே** – மனிதப் பிறவியில், **கர்மாநுப₃ந்தீ₄நி** – கர்மங்களுக்கு ஏற்றவாறு பிணைக்கின்றவையான, **மூலாநி** – அகந்தை, மமதை, வாஸனை உருவான வேர்களும், **அத₄:** – கீழும், **(ஊர்த்₄வம்) ச** – (மேலுமாக), **அநுஸந்ததாநி** – எல்லா உலகங்களிலும் பரவியுள்ளன.

அந்த ஸம்ஸாரம் என்ற அரசமரத்தினுடைய கிளைகள் முக்குணங்கள் என்ற நீரினால் வளர்ந்து புலன்நுகர் பொருட்களாகிய தளிர்களுடன் கூடி, தேவ–மனித–விலங்கு முதலிய பிறவி உருவாகி, கீழும், மேலுமாக எங்கும் பரவியுள்ளன. அவ்வாறே, மனிதப் பிறவியில் கர்மங்களுக்கு ஏற்றவாறு பிணைக்கின்றவையான அகந்தை, மமதை, வாஸனை உருவான வேர்களும் கீழும், மேலுமாக எல்லா உலகங்களிலும் பரவியுள்ளன.

**கேள்வி:** இந்தக் கிளைகள் குணங்களின் மூலம் வளர்கின்றன என்றும், போகப் பொருட்கள் தளிர்கள் என்றும் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** நல்லதும், தீயதுமான பிறவிகள் குணங்களின் சேர்க்கையால் ஏற்படுகின்றன (13/21). அகில உலகங்களும், ப்ராணிகளின் உடல்களும் முக்குணங்களின் விளைவுகள்தாம். இதை விளக்கவே 'கிளைகள் குணங்களால் வளர்கின்றன' என்று கூறுகிறார். இந்தக் கிளைகளில் விஷயங்கள் என்ற சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் இவையே தளிர்களாக உள்ளன.

**கேள்வி:** ஸம்ஸார மரத்தின் பல கிளைகள் யாவை? அவை கீழும், மேலும் எங்கும் பரவியுள்ளன என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ப்ரம்மலோகம் முதல் பாதாளம் வரை உள்ள எல்லா உலகங்களும், அவற்றில் வாழ்கின்ற எல்லா உயிரினங்களும் இந்த ஸம்ஸார மரத்தின் பல கிளைகள். அவை கீழே

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பாதாளம் வரையிலும் மேலே ப்ரம்மலோகம் வரையிலும் பரவியுள்ளன என்பதுதான் பொருள்.

**கேள்வி:** 'மூலாநி' என்றால் யாவை? அவை கீழும், மேலும் எல்லா உலகங்களிலும் வ்யாபித்து இருக்கின்றன என்று கூறுவதன் கருத்து என்ன? அவை மானிட உலகில் கர்மங்களுக்கேற்றபடி எப்படிப் பந்தப்படுத்துகின்றன?

**பதில்:** வேர்கள் என்பன இங்கே அஞ்ஞானத்தின் அடிப்படையில் ஏற்படுகின்ற அஹங்காரம், மமகாரம், வாஸனையே ஆகும். இம்மூன்றும் ப்ரம்மலோகம் முதல் பாதாளம் வரை எல்லா உலகிலும் வாழ்கின்ற பிறப்பிறப்பிற்குட்பட்ட ப்ராணிகளின் உள்ளங்களிலும் பரவியுள்ளன. அதனால் 'எங்கும் வ்யாபித்துள்ளன' என்று கூறுகிறார். மனித உடலில்தான் கர்மங்கள் செய்யும் பொறுப்பு உள்ளது. ஆகவே அஹங்கார, மமகார வாஸனைகளுடன் மனித உடலால் செய்யப்படுகின்ற கர்மங்கள் பந்தத்திற்குக் காரணமாகின்றன. ஆகையால் இந்த வேர்கள் மனித உலகில் கர்மத்திற்கேற்றபடி பந்தப்படுத்துபவை. மற்ற எல்லாப் பிறவிகளும் போகப்பிறவிகள். அவற்றிற்குக் கர்மம் செய்வதற்கான தகுதி கிடையாது. ஆகவே, அவற்றில் அஹங்காரம், மமகாரம், வாஸனைகள் ஆகிய வேர்கள் இருந்தாலும், அவை கர்மத்திற்கேற்றபடி பந்தப்படுத்துவன அல்ல.

**न रूपमस्येह तथोपलभ्यते नान्तो न चादिर्न च सम्प्रतिष्ठा।**
**अश्वत्थमेनं सुविरूढमूलमसङ्गशस्त्रेण दृढेन छित्त्वा॥ ३॥**

**ந ரூபமஸ்யேஹ ததோ₂பலப்₄யதே**
**நாந்தோ ந சாதி₃ர்ந ச ஸம்ப்ரதிஷ்ட₂ா ।**
**அஶ்வத்த₂மேநம் ஸுவிரூட₄மூல-**
**மஸங்க₃ஶஸ்த்ரேண த்₃ருடே₄ந சி₂த்த்வா ॥ 3 ॥**

**அஸ்ய** – இந்த ஸம்ஸார ரூபமான மரத்தின், **ரூபம்** – ஸ்வரூபம் (எவ்வாறு சொல்லப் படுகிறதோ), **தத₂ா** – அவ்வாறு, **இஹ** – இங்கு (ஆராயுங்கால்), **ந உபலப்₄யதே** – புலப்படுவதில்லை. **(யத:)** – ஏனெனில் அதற்கு, **ஆதி₃: ச** – ஆதியும், **ந** – கிடையாது; **அந்த: ச** – முடிவும், **ந** – கிடையாது; **ஸம்ப்ரதிஷ்ட₂ா** – நிலையான இருப்பும், **ந** – கிடையாது. **(அத:)** – ஆகவே, **ஸுவிரூட₄மூலம்** – அஹங்காரம், மமகாரம், முன்வினை வாஸனை என்ற உறுதியான வேர்கள் கொண்ட, **ஏநம்** – இந்த, **அஶ்வத்த₂ம்** – ஸம்ஸார உருவான அரசமரத்தை, **த்₃ருடே₄ந** – உறுதியான, **அஸங்க₃ஶஸ்த்ரேண** – வைராக்யம் என்ற கோடரியினால், **சி₂த்த்வா** – வெட்டி எறிந்துவிட்டு—

இந்த ஸம்ஸார ரூபமான மரத்தின் ஸ்வரூபம் எவ்வாறு சொல்லப்படுகிறதோ, அவ்வாறு இங்கு ஆராயங்கால் புலப்படுவதில்லை. ஏனெனில் அதற்கு ஆதியும் கிடையாது; முடிவும் கிடையாது; நிலையான இருப்பும் கிடையாது. ஆகவே அஹங்காரம், மமகாரம், முன் வினை வாஸனை என்ற உறுதியான வேர்கள் கொண்ட இந்த ஸம்ஸார உருவான அரசமரத்தை உறுதியான வைராக்யம் என்ற கோடரியினால் வெட்டி எறிந்துவிட்டு—

**கேள்வி:** 'இந்த ஸம்ஸார மரத்தின் ஸ்வரூபம் எவ்வாறு கூறப்பட்டதோ, அவ்வாறு இங்கு அது புலப்படுவதில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஸம்ஸார மரத்தின் ஸ்வரூபம் பற்றி சாஸ்த்ரங்கள் கூறுகின்றவாறோ அல்லது நாம் பார்த்தும், கேட்டும் உள்ளது போன்றோ, அந்த மரம் உண்மையில் தத்வஞானம் பெற்ற பிறகு ஆராய்ந்து பார்த்தால், அவ்வாறு இருக்கக் காணோம். ஆராயும்போது அது அழியக்கூடியது. நொடிப்பொழுதில் மறைவது என்று தெரிய வருகிறது. தத்வஞானம் பெற்ற பிறகு அதன் தொடர்பு அறவே அற்றுவிடுகிறது. தத்வஞானிக்கு அப்படி ஒரு



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸம்ஸாரரூபமான மரமென்பது இருக்கவே முடியாது. இதனால் இதை ச்லோகம் 16ல் 'க்ஷரபுருஷன்' என்கிறார்.

**கேள்வி:** 'இதற்கு முதலும், முடிவும், இருப்பும் கிடையாது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஸம்ஸார மரம் சொற்களால் விளக்க இயலாதது என்று பொருள். அதாவது இந்த ஸம்ஸாரம் கல்பத்தின் ஆதியில் உண்டாகி, கல்பத்தின் முடிவில் மறைந்துவிடுகிறது. இவ்விதம் அதன் ஆதியும், அந்தமும் ப்ரஸித்தமாகத் தெரிந்தாலும்கூட தொடர்ச்சியாகத் தோன்றித் தோன்றி மறையும் இந்தப் பரம்பரை எப்போது தொடங்கியது; எதுவரை தொடரும் என்பது தெரியவில்லை. இருக்கும்போதுகூட, ஒரு கணம் இருந்தாற்போல் மறுகணம் இல்லாது ஒவ்வொரு கணமும் மாறிக் கொண்டே இருக்கிறது. ஆகவே ஸம்ஸார மரத்தின் ஆதி, அந்தம், இருப்பு மூன்றும் புலப்படாதவை என்று கூறுகிறார்.

**கேள்வி:** இந்த ஸம்ஸார மரத்தை 'ஸுவிரூடமூலம்' என்று கூறுவதன் கருத்து என்ன? 'அஸங்கமஸ்த்ரம்' என்ற ஆயுதம் எது? அதனால் ஸம்ஸார மரத்தை வெட்டுவது எப்படி?

**பதில்:** ஸம்ஸார மரத்திற்கு அஞ்ஞானத்தினால் உண்டான அஹங்காரம், மமகாரம் வாஸனைகள் என்ற வேர்கள் அநாதி காலமாக ஊட்டம் பெற்றுக் கொண்டு வந்திருப்பதால் மிக உறுதியாக உள்ளன. அந்த வேர்களை அடியோடு வெட்டி எறியாதவரை இந்த ஸம்ஸார மரத்தை அழிக்க முடியாது. மரத்தை மேலே வெட்டினாலும், அதாவது வெளிப்படையாக உலக ஸம்பந்தத்தை த்யாகம் செய்தாலும் அஹங்கார, மமகார வாஸனைகளை த்யாகம் செய்யாத வரையில் ஸம்ஸார மரத்தை அடியோடு அழிப்பதாகாது. இதைத்தான் அந்த வேர்களை அடியோடு வெட்டி அழிப்பது மிகக் கடினமான செயல் என்கிறார். இதை விளக்குவதற்காகத்தான் அந்த ஸம்ஸார மரம் அழுத்தமான வேர் பிடித்தது என்கிறார். ஸம்ஸாரம் முழுதும் அழிவது, நொடிப்போதே இருப்பது என்பதை விவேகத்தினால் உணர்ந்து, இவ்வுலகிலும், பரலோகத்திலும் மனைவி-மக்கள், செல்வம், வீடு, பெருமை, மதிப்பு, புகழ், ஸ்வர்கம் முதலிய எல்லா போகங்களிலும் ஸுகம், விருப்பம், கவர்ச்சி இவற்றைக் களைந்து, அவற்றில் பற்றற்று இருப்பதுதான் திட வைராக்யம். அதைத்தான் 'அஸங்கமஸ்த்ரம்' (வைராக்யம் என்ற ஆயுதம்) என்கிறார். சராசரமான முழு ஸம்ஸாரத்தைப் பற்றிச் சிந்திப்பதைத் துறந்து அதனிடமிருந்து ஓய்ந்து அஹங்கார, மமகார, வாஸனைகளான வேர்களை இந்த வைராக்ய ஆயுதத்தினால் அடியோடு வெட்டி எறிவதைத்தான், இங்கே 'ஸம்ஸார மரத்தைத் திட வைராக்யம் என்ற கோடரியால் வேரோடு வெட்டுவது' என்று கூறுகிறார்.

**பொருத்தம்: இவ்விதம் வைராக்யம் என்ற ஆயுதத்தினால் ஸம்ஸார மரத்தை வெட்டி எறிந்த பிறகு என்ன செய்யவேண்டும் என்று இனிக் கூறுகிறார்—**

ततः पदं तत्परिमार्गितव्यं यस्मिन्गता न निवर्तन्ति भूयः।
तमेव चाद्यं पुरुषं प्रपद्ये यतः प्रवृत्तिः प्रसृता पुराणी॥ ४॥

**தத: பத₃ம் தத்பரிமார்கி₃தவ்யம்**
**யஸ்மிந்க₃தா ந நிவர்தந்தி பூ₄ய: ।**
**தமேவ சாத்₃யம் புருஷம் ப்ரபத்₃யே**
**யத: ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா புராணீ ॥ 4 ॥**

**தத:** – அதற்குப் பிறகு, **யஸ்மிந்** – எங்கு, **க₃தா:** – சென்ற மனிதர்கள், **பூ₄ய:** – மீண்டும், **ந நிவர்தந்தி** – ஸம்ஸாரத்திற்குத் திரும்பி வருவதில்லையோ, **தத்** – அந்த, **பத₃ம்** – பரமபத ரூபமான பரமேசுவரன், **பரிமார்கி₃தவ்யம்** – நன்கு தேடப்பட வேண்டும். **ச** – மேலும், **யத:** – எந்தப் பரமேசுவரனிடமிருந்து (இந்த), **புராணீ** – பழமையான,



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ப்ரவ்ருத்தி:** – ஸம்ஸார மரத்தின் தொடர்ச்சி, **ப்ரஸ்ருதா** – விரிவு அடைந்துள்ளதோ, **தம் ஏவ ஆத்₃யம் புருஷம்** – ஆதிபுருஷனான அந்த நாராயணனையே, **ப்ரபத்₃யே** – சரணம் அடைகிறேன் (என்ற உறுதியோடு அந்தப் பரமேசுவரனைச் சிந்தித்து த்யானிக்க வேண்டும்).

அதற்குப் பிறகு, எங்கே சென்ற மனிதர்கள் மீண்டும் ஸம்ஸாரத்திற்குத் திரும்பி வருவதில்லையோ, அந்த பரமபத ரூபமான பரமேசுவரன் நன்கு தேடப்பட வேண்டும். மேலும் எந்தப் பரமேசுவரனிடமிருந்து இந்த பழமையான ஸம்ஸார மரத்தின் தொடர்ச்சி விரிவு அடைந்துள்ளதோ ஆதிபுருஷனான அந்த நாராயணனையே சரணம் அடைகிறேன் என்ற உறுதியோடு அந்தப் பரமேசுவரனைச் சிந்தித்து த்யானிக்க வேண்டும்.

**கேள்வி:** அந்தப் பரமபதம் எது? அதைத் தேடுவது என்றால் என்ன?

**பதில்:** இந்த அத்யாயத்தின் முதல் ச்லோகத்தில் ஊர்த்வம் என்றும், 14/26ல் 'மாம்' என்றும், 14/27ல் 'அஹம்' என்றும், இன்னும் பல இடங்களில் பரமபதம், அவ்யய பதம், பரமகதி, பரமதாமம் என்றெல்லாம் கூறப்படுவதை இங்கு 'பரமபதம்' என்கிறார். அந்த ஸர்வவல்லமை படைத்தவரும் அனைத்திற்கும் ஆதாரமானவருமான பரமாத்மாவை அடையவேண்டும் என்ற விருப்பத்தினுடன் திரும்பத் திரும்ப அவருடைய குணங்கள், ப்ரபாவங்கள், ஸ்வரூபம் இவற்றைச் சிந்திப்பது, த்யானத்தில் தொடர்ந்து நிலைத்திருப்பது – இவைதாம் பரமபதத்தைத் தேடுவது ஆகும். 15/3ல் கூறப்பட்ட முறைப்படி விவேகத்தினால் உண்டான வைராக்யத்துடன் ஸம்ஸாரத்திலிருந்து எல்லா வகைகளிலும் ஓய்வு பெற்று மனிதன் அந்தப் பரமபதம் என்னும் பரமாத்மாவை அடைவதற்காகச் சிந்தனை, த்யானம் இவை மூலம் ஆராய வேண்டும் என்று பொருள்.

**கேள்வி:** 'எங்கே சென்ற பின்னர் மனிதர்கள் மறுபடியும் திரும்ப ஸம்ஸாரத்தில் வருவதில்லையோ' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** முன் கூறப்பட்டபடி, 'தேடி அடைய வேண்டிய பரமபதம் நான்தான்' என்று கூறுகிறார். ஸர்வவல்லமை படைத்தவரும், அனைத்திற்கும் ஆதாரமானவரும், அனைத்தையும் தாங்கிப் போஷிக்கின்றவரும் ஆன புருஷோத்தமனை அடைந்த பிறகு மனிதன் திரும்புவதில்லை. அந்த பரமேசுவரனைத்தான் இங்கே பரமபதம் என்று கூறுகிறார். 8/21லும் இது பற்றி விளக்கப்பட்டுள்ளது.

**கேள்வி:** 'எதிலிருந்து பழமையான ஸம்ஸார மரத்தின் தொடர்ச்சி விரிவு அடைந்ததோ' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எந்த ஆதிபுருஷனிடத்திலிருந்து இந்த ஸம்ஸார மரம் தோன்றுதொட்டு தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறதோ, எவரிடம் உண்டாகி விரிவடைந்திருக்கிறதோ அவரையே சரணடைந்துவிட்டால், இந்த ஸம்ஸார மரத்தின் ஸம்பந்தம் அறவே ஒழிந்து ஆதிபுருஷனான பரமாத்மாவை அடைந்துவிடலாம்.

**கேள்வி:** 'தம் ஆத்யம் புருஷம்' என்று யாரைக் குறிப்பிடுகிறார். 'ப்ரபத்யே' எனும் வினைச் சொல்லின் கருத்து என்ன?

**பதில்:** அந்த ஆதிபுருஷன், புருஷோத்தமனான பகவான்தான். அவரை 'ஆத்யம் புருஷம்' என்கிறார். அவரைத்தான் 'தத்பதம்' என்றும் சொன்னார். அவருடைய மாயா சக்தியினால்தான் இந்தப் பழமையான ஸம்ஸார மரம் உண்டாகி விரிவடைந்திருக்கிறது. 'ப்ரபத்யே' என்ற வினைச்சொல்லுக்கு, 'நான் அவரைச் சரணடைகிறேன்' என்று பொருள். பரம பதம் ஆகிய பரமேசுவரனைத் தேடிக் காணவேண்டும் என்றால், அவரையே புகலாகக் கொள்ள வேண்டும் என்பதே பகவான் இங்கு உணர்த்துகிறார். சிறிதுகூட கர்வம் வரவிடாமல் அனைத்துவிதங்களிலும் வேறு புகலே இல்லை என்று ஒன்றேயான பரமாத்மாவிடம் பூர்ண விசுவாஸத்துடன் பொறுப்பை ஒப்படைத்து மேலே கூறியவாறு அவரை நம்பிக்கையுடன் அடைய முயன்று கொண்டிருக்க வேண்டும்.

**கேள்வி:** 'ஏவ' என்று கூறுவதன் கருத்து என்ன?



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பதில்: அவரை அடைவதற்கு அந்தப் பரமாத்மாவையே மரணமடைய வேண்டும் என்பது கருத்து.

பொருத்தம்: மேலே சொன்னவிதம் ஆதிபுருஷனான பரமபதம் என்னும் பரமாத்மாவைச் சரணடைந்து அவரை அடைந்துவிட்டவரின் இலக்கணம் கூறுகிறார்—

निर्मानमोहा जितसङ्गदोषा अध्यात्मनित्या विनिवृत्तकामाः।
द्वन्द्वैर्विमुक्ताः सुखदुःखसंज्ञैर्गच्छन्त्यमूढाः पदमव्ययं तत्॥५॥

நிர்மாநமோஹா ஜிதஸங்க₃தே₃ாஷா
அத்₄யாத்மநித்யா விநிவ்ருத்தகாமா: ।
த்₃வந்த்₃வைர்விமுக்தா: ஸுக₂து₃:க₂ஸம்ஜ்ஞைர்—
க₃ச்ச₂ந்த்யமூட₄ா: பத₃மவ்யயம் தத் ॥ 5 ॥

**நிர்மாநமோஹா:** – தற்பெருமையும், மோஹமும் அகன்றவர்கள், **ஜிதஸங்க₃தே₃ாஷா:** – பற்று என்ற குறைபாட்டை வென்றவர்கள், **அத்₄யாத்மநித்யா:** – பரமாத்ம ஸ்வரூபத்தில் என்றும் நிலைபெற்றவர்கள், **விநிவ்ருத்தகாமா:** – ஆசைகளை முழுமையாக அழித்துக் கொண்டவர்கள், **ஸுக₂து₃:க₂ஸம்ஜ்ஞை:** – இன்பம்—துன்பம் என்ற பெயர் கொண்ட, **த்₃வந்த்₃வை:** – இரட்டைகளிலிருந்து, **விமுக்தா:** – விடுபட்டவர்கள் (ஆகிய), **அமூட₄ா:** – ஞானிகள், **அவ்யயம்** – அழிவற்ற, **தத்** – அந்த, **பத₃ம்** – பரமபதத்தை, **க₃ச்ச₂ந்தி** – அடைகிறார்கள்.

தற்பெருமையும், மோஹமும் அகன்றவர்கள், பற்று என்ற குறைபாட்டை வென்றவர்கள், பரமாத்ம ஸ்வரூபத்தில் என்றும் நிலைபெற்றவர்கள், ஆசைகளை முழுமையாக அழித்துக் கொண்டவர்கள், இன்பம்—துன்பம் என்ற பெயர் கொண்ட இரட்டைகளிலிருந்து விடுபட்டவர்கள் ஆகிய ஞானிகள் அழிவற்ற அந்த பரமபதத்தை அடைகிறார்கள்.

கேள்வி: 'நிர்மாநமோஹா:' என்ற சொல்லின் கருத்து என்ன?

பதில்: 'மாநம்' என்றால் தற்பெருமை, கௌரவம், புகழ் இவையே. 'மோஹம்' என்றால் விவேகமின்மை, விபரீதமான கருத்து, குழப்பம் முதலிய தமோகுண விளைவுகள். இவையிரண்டும் அற்று இருக்கவேண்டும். அதாவது பிறப்பு, பண்பு, செல்வம், கல்வி இவற்றால் தன்னைப் பற்றிச் சற்றுக் கூட உயர்வாக நினைத்துக் கொள்ளாமல் தற்பெருமை, கௌரவம், புகழ் முதலியவற்றிலும், விவேகமின்மை, குழப்பம் முதலிய தமோகுண விளைவுகளிலும் ஸம்பந்தம் சிறிதும் இல்லாதவர்களை 'நிர்மாநமோஹா:' (தற்பெருமை, மோஹம் அகன்றவர்கள்) என்கிறார்.

கேள்வி: 'ஜிதஸங்கதோஷா:' என்ற சொல்லின் கருத்து என்ன?

பதில்: 'ஸங்கம்' என்றால் பற்று. பற்றை மீண்டும் தலைதூக்காதவாறு வென்றுவிட்டவர்கள். இவ்வுலகிலும், பரலோகத்திலும் கிடைக்கக்கூடிய போகங்களில் சிறிதும் பற்றுக் கொள்ள மாட்டார்கள். போகங்களின் தொடர்பு ஏற்பட்டாலும் உள்ளத்தில் விகாரமடையாதவர்கள். இத்தகைய மனிதர்களை 'ஜிதஸங்கதோஷா:' என்று அழைக்கிறார்கள்.

கேள்வி: 'அத்யாத்மநித்யா:' என்றால் யாவர்?

பதில்: 'அத்யாத்மம்' என்றால் பரமாத்ம ஸ்வரூபம். அதில் நிலைபெற்றவர்கள், கணம்கூடப் பரமாத்மாவிடமிருந்து பிரியாதவர்கள். அப்படியே உறுதியாகப் பற்றிக் கொண்டவர்கள் 'அத்யாத்மநித்யா:' எனப்படுவர்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'விநிவ்ருத்தகாமா:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'காமம்' என்பது இங்கு ஆவல், விருப்பம், தேவை, வாஸனை, சபலம் இவற்றை அதிகமாகவோ, குறைவாகவோ, கொண்ட மனதின் செயல்பாடுகள் ஆகும். இந்த எல்லாவிதமான காமங்களும் அறவே அழிந்தவர்கள் – ஆவல், விருப்பம், சபலம் சிறிதுகூட இல்லாதவர்கள் – தம் ஆசைகளை முற்றிலும் அழித்துக் கொண்டவர்கள் 'விநிவ்ருத்தகாமா:' எனப்படுவர்.

**கேள்வி:** ஸுக–துக்கம் என்ற இரட்டை என்றால் என்ன? அதிலிருந்து 'விடுதலை பெறுவது' என்றால் என்ன?

**பதில்:** தட்ப–வெப்பம், வேண்டியது–வேண்டாதது, மானம்–அவமானம், புகழ்ச்சி–இகழ்ச்சி இவ்வித இரட்டைகள் அனைத்தும் ஸுகதுக்கங்களுக்குக் காரணங்கள். ஆகவே இவை இரட்டை என்று கூறப்படுகிறது. இந்த எல்லா இரட்டைகளிலும் சிறிதுகூட ஸம்பந்தம் வைத்துக் கொள்ளக்கூடாது. அதாவது இரட்டைகளில் எது கிடைத்தாலும், பிரிந்தாலும், சிறிதுகூட விருப்பு–வெறுப்பு, மகிழ்ச்சி–துயரம் என்ற விகாரங்களை அடையாமல் இருப்பதுதான் இரட்டைகளிலிருந்து விடுதலை ஆவது. இத்தகைய வர்களைத்தான் ஸுகதுக்க இரட்டைகளிலிருந்து விடுபட்டவர்கள் என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'அமூடா:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** 'அமூடா:' என்றால் எல்லா வகைகளிலும் அஞ்ஞானம் சிறிதுகூட இல்லாதவர்கள், அதாவது ஞானிகளான மஹாத்மாக்கள். முன்னால் சொன்ன எல்லா அடைமொழிகளுக்கும் உரித்தானவர்கள். அதாவது 'தற்பெருமையற்றிருத்தல்' முதலிய எல்லா குணங்களோடும் கூடிய ஞானிகளே பரமாத்மாவை அடைவார்கள் என்று இச்சொல்லின் மூலம் பகவான் உணர்த்துகிறார்.

**கேள்வி:** அழிவற்ற அந்த பரமபதம் எது? அதை அடைவது எப்படி?

**பதில்:** 4வது ச்லோகத்தில் எதை ஆராய்ந்து தேட வேண்டும் என்றும், எந்த ஆதிபுருஷனைச் சரணடைய வேண்டும் என்றும் சொன்னாரோ, அந்த ஸர்வவல்லமை படைத்தவரும், எல்லாவற்றிற்கும் ஆதாரமானவரும் ஆன பரமேசுவரனையே அழிவற்ற பரமபதம் என்ற சொற்றொடர் குறிக்கிறது. அந்த பரமாத்மாவின் மாயையால் வெகுவாக வளர்ந்துள்ள இந்த ஸம்ஸார மரத்திலிருந்து முற்றும் அகன்று பரமாத்மாவின் பரமபதத்தை அடைவதே அழியாப் பெரும் நிலையை அடைவதாகும்.

**பொருத்தம்:** மேலே சொன்ன இலக்கணங்களோடு கூடிய பெரியோர்கள் அடையக்கூடிய அழியாப் பெரும் பதவி பரமாத்மாவின் ஸ்வரூபமான பரமபதமே என்று கூறி, அதன் பெருமையை இனிச் சொல்கிறார்—

न तद्भासयते सूर्यो न शशाङ्को न पावकः।
यद्गत्वा न निवर्तन्ते तद्धाम परमं मम॥ ६॥

**ந தத்$_3$ப$_4$ாஸயதே ஸூர்யோ ந மமாங்கோ ந பாவக: ।**
**யத்$_3$க$_3$த்வா ந நிவர்தந்தே தத்$_3$த$_4$ாம பரமம் மம ॥ 6 ॥‡**

---

‡ வேதமும் கூறுகிறது—
ந தத்ர ஸூர்யோ ப$_4$ாதி ந சந்த்$_3$ரதாரகம் நேமா வித்$_3$யுதோ ப$_4$ாந்தி குதோயமக்$_3$நி: ।
தமேவ ப$_4$ாந்தமநுப$_4$ாதி ஸர்வம் தஸ்ய ப$_4$ாஸா ஸர்வமித$_3$ம் விப$_4$ாதி ॥
(கடே$_2$ாபநிஷத்$_3$ 2/2/15)

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**யத்** – எதை (எந்த பரமபதத்தை), **க₃த்வா** – அடைந்த பிறகு (மனிதர்கள்), **ந நிவர்தந்தே** – ஸம்ஸாரத்திற்குத் திரும்புவதில்லையோ, **தத்** – அந்த (ஸ்வயம் ப்ரகாசமான பரமபதத்திற்கு), **ஸூர்ய:** – சூரியன், **ந பா₄ஸயதே** – ஒளி தருவதில்லை. **ஶஶாங்க:** – சந்த்ரன், **ந** – ஒளி தருவதில்லை. **பாவக:** – அக்னிதேவனும், **ந** – ஒளி தருவதில்லை. **தத்** – அது, **மம** – என்னுடைய, **பரமம் தா₄ம** – மேலான ஸ்தானம் (பரமபதம் ஆகும்).

எதை (எந்த பரமபதத்தை) அடைந்த பிறகு மனிதர்கள் ஸம்ஸாரத்திற்குத் திரும்புவதில்லையோ அந்த ஸ்வயம் ப்ரகாசமான பரமபதத்திற்கு சூரியன் ஒளி தருவதில்லை. சந்த்ரன் ஒளி தருவதில்லை. அக்னிதேவனும் ஒளி தருவதில்லை. அது என்னுடைய மேலான ஸ்தானம் – பரமபதம் ஆகும்.

**கேள்வி:** 'எந்தப் பரமபதத்தை அடைந்த பிறகு மனிதர்கள் ஸம்ஸாரத்திற்குத் திரும்புவதில்லையோ, அது என்னுடைய பரமபதம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** என்னுடைய நித்யதாமம் ஸத் சித் ஆனந்தமயமானது, தெய்விகமானது, சைதன்யம் உடையது, என்னுடைய ஸ்வரூபமே. ஆகவே அது என்னைத் தவிர வேறன்று. என் பரமதாமம் என்றால், என் நித்ய தாமம், என் ஸ்வரூபம், என் தன்மை அவ்வளவும் அது குறிக்கிறது என்கிறார் பகவான். பரமபதம் என்பது அதுதான். எதை அடைந்த பிறகு இந்த ஸம்ஸாரத்துடன் எக்காலத்திலும், எந்த நிலையிலும் மறுபடியும் தொடர்பு ஏற்படாதோ, அதுதான் மாயையைக் கடந்த என்னுடைய பரமபதம், என் ஸ்வரூபம். இதைத்தான் அவ்யக்தம் என்றும், அக்ஷரம் என்றும், பரமகதி என்றும் கூறுகிறார் (8/21). இதையே ப்ருஹஜ்ஜாபால உபநிஷத் (8/6) கூறுகிறது—

**"யத்ர ந ஸூர்யஸ்தபதி யத்ர ந வாயுர்வாதி யத்ர ந சந்த்₃ரமா பா₄தி யத்ர ந நக்ஷத்ராணி பா₄ந்தி யத்ர நாக்₃நிர்த₃ஹதி யத்ர ந ம்ருத்யு: ப்ரவிஶதி யத்ர ந து₃:கா₂நி ப்ரவிஶந்தி ஸதா₃நந்த₃ம் பரமாநந்த₃ம் ஶாந்தம் ஶாஸ்வதம் ஸதா₃ஶிவம் ப்₃ரஹ்மாதி₃வந்தி₃தம் யோகி₃த்₄யேயம் பரம் பத₃ம் யத்ர க₃த்வா ந நிவர்தந்தே யோகி₃ந: ।"**

"எங்கே ஆதவன் சுடுவதில்லையோ, எங்கே காற்று வீசுவதில்லையோ, எங்கே நிலா ஒளிவீசுவதில்லையோ, எங்கே நக்ஷத்ரங்கள் மின்னுவதில்லையோ, எங்கே நெருப்பு எரிப்பதில்லையோ, எங்கே மரணமும், துக்கமும் நுழைவதில்லையோ, எங்கே சென்ற யோகி திரும்புவதில்லையோ, அதுவே எப்பொழுதும் ஆனந்தமயமானதும், பரமானந்தமயமானதும், அமைதியானதும், பழமையானதும், எப்பொழுதும் மங்களமயமானதும், ப்ரம்மா முதலிய தேவர்களும் வணங்குகின்றதும் ஆன யோகிகள் த்யானிக்கின்ற பரமபதம்."

**கேள்வி:** இங்கு 'தத்' எனில் எது? அதை சூரியன், சந்த்ரன், நெருப்பு ஆகியவை ஒளிபெறச் செய்வதில்லை என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'தத்' என்றால் அழியாப் பெரும்பதவி எனப்படுகின்ற பூர்ண ப்ரம்மமான புருஷோத்தமன். அவரை ஆதவனும், நிலவும், நெருப்பும் ப்ரகாசிக்க வைப்பதில்லையென்றால் அவர் இருப்பதை யுக்திகளாலோ, சான்றுகளாலோ நிரூபிக்க முடிவதில்லை. அவர் சிந்தனைக்கு அப்பாற்பட்டவர். சொற்களால் விளக்கப்பட இயலாதவர் என்று பொருள். கண்கள், மனம், வாக்கு முதலிய புலன்களோ இவற்றின் அதிதேவதைகளாக விளங்கி, உலகமனைத்துக்கும் ஒளி தருகின்ற சூரியன், சந்த்ரன், அக்னி ஆகியவர்களோ பரமபதத்தை

---

அந்தப் பூர்ண ப்ரம்மமான பரமாத்மாவை சூரியன் தன் ஒளி கொண்டு விளங்கச் செய்ய முடியாது. நிலவும், விண்மீன்களும், மின்னலும்கூட அந்த ப்ரம்மத்தை விளங்கச் செய்ய முடியாது. அங்ஙனமிருக்க இந்த உலகில் உள்ள அக்னியைப் பற்றி என்ன சொல்ல? அந்த பரமாத்மா ஒளிர்வதனால்தான் மற்ற அனைத்தும் ஒளிபெறுகின்றன. அவருடைய ப்ரகாசத்தினாலேயே மற்றவையனைத்தும் விளங்குகின்றன.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



விளக்க முடியாது. இவை தவிர ப்ரகாசப்படுத்துகின்ற வேறு எதுவும், அனைத்தும் சேர்ந்தும்கூட அந்தப் பரமபதத்தைத் தம் வெளிச்சம் கொண்டு காண்பிக்க சக்தியற்றவையே. ஏனெனில் அவை அந்தப் பரம்பொருளின் ஒளியினாலே, அதனுடைய சைதன்யத்தின் ஒருசிறு அம்சத்தினால் ஒளிர்கின்றன (15/12). தன்னை ஒளிரச் செய்யுமொன்றைத் தான் ஒளிரச் செய்ய இயலாது என்பது யுக்திக்கு ஏற்றதுதான். கண், சொல், மனம் முதலியன எதுவும் அதனருகில்கூடச் செல்ல முடியாது எனும்போது அதை எங்ஙனம் வர்ணிக்க முடியும்? வேதமும் இதைத்தானே கூறுகிறது—

**யதோ வாசோ நிவர்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ ।**

**(ப்₃ரஹ்மோபநிஷத்₃)**

'மனதுடன்கூட வாக்குகளும் எதை எட்டிப் பிடிக்க முடியாமல் திரும்பி விடுகின்றனவோ, அதுவே பூர்ணப்ரம்மம் – பர்மாத்மா.'

அந்த அழியாப் பெரும்பதவி சொல், மனம் முதலியவற்றிற்கு எட்டாதது. அதன் தன்மையைச் சொல்லவோ, விளக்கவோ முடியாது.

**பொருத்தம்:** முதல் மூன்று ச்லோகங்களில் ஸம்ஸார மரம் என்ற பெயரில் க்ஷர புருஷனை விவரித்தார். அதில் ஜீவனாகிய அக்ஷர புருஷன் கட்டுப்படுவதற்குக் காரணம், மனிதப் பிறவியில் அஹங்காரம், மமகாரம், வாஸனைகளுடன் செய்யப்பட்ட கர்மங்கள் என்று சொன்னார். அந்தக் கட்டிலிருந்து விடுபடுவதற்கு உபாயம் ஆதிபுருஷனைச் சரணடைவது என்றார். இப்படிக் கட்டுப்படுகின்ற ஜீவனின் ஸ்வரூபம் என்ன? அவனுடைய உண்மை ஸ்வரூபம் என்ன? அவனை யார் எப்படி அறிவார்? இவற்றை விளக்கும் பொருட்டு முதலில் ஜீவனின் ஸ்வரூபத்தைக் கூறுகிறார்—

**ममैवांशो जीवलोके जीवभूतः सनातनः।**
**मनःषष्ठानीन्द्रियाणि प्रकृतिस्थानि कर्षति ॥ ७ ॥**

**மமைவாம்ஶோ ஜீவலோகே ஜீவபூ₄த: ஸநாதந: ।**
**மந:ஷஷ்டா₂நீந்த்₃ரியாணி ப்ரக்ருதிஸ்தா₂நி கர்ஷதி ॥ 7 ॥**

**ஜீவலோகே** – இவ்வுடலில், **ஸநாதந:** – என்றுமுள்ள, **ஜீவபூ₄த:** – ஜீவாத்மா, **மம ஏவ** – என்னுடைய, **அம்ஶ:** – அம்சமே. **ப்ரக்ருதிஸ்தா₂நி** – (அதுவே) ப்ரக்ருதியில் உள்ள, **மந:ஷஷ்டா₂நி இந்த்₃ரியாணி** – மனம் மற்றும் ஐந்து புலன்களையும், **கர்ஷதி** – ஈர்க்கிறது.

இவ்வுடலில் என்றுமுள்ள ஜீவாத்மா என்னுடைய அம்சமே. அதுவே ப்ரக்ருதியில் உள்ள மனம் மற்றும் ஐந்து புலன்களையும் ஈர்க்கிறது.

**கேள்வி:** 'ஜீவலோகே' என்பது எதைக் குறிக்கிறது? அதிலுள்ள என்றுமுள்ள ஜீவாத்மாவைத் தம் அம்சமென பகவான் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஜீவலோகம்' என்றால் ஜீவாத்மா வசிக்கின்ற 'சரீரம்'. ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற மூன்றுவிதமான உடல்களும் இதில் அடக்கம். இவற்றிலுள்ள ஜீவாத்மா என்றுமுள்ள தம் அம்சம் என்று கூறி, காரண சரீரங்களில் தனித்தனியாக இருக்கின்ற ஜீவ ஸமுதாயத்தை ஸூக்ஷ்ம சரீரங்கள், ஸ்தூல சரீரங்களுடன் இணைத்து நான்தான் இந்த ஸம்ஸாரத்தை உண்டு பண்ணி, இருக்கச் செய்து காத்து வருகிறேன் (14/3,4). ஆகவே, நானே அனைத்திற்கும் மேலான தந்தை. தந்தையின் அம்சம்தானே தனயன்! அதுபோல ஜீவ ஸமுதாயம் என்னுடைய அம்சமே. என் ஸ்வரூபம் எப்படி உணர்வு மயமோ, அதுபோல் உயிர்க்கூட்டமும் (ஜீவ ஸமுதாயமும்) உணர்வு மயம்தான். ஆகவே இவை என் அம்சம். மற்றொன்றின் ஜடத்திற்கு உணர்வு உடைய ஒன்றுதானே உணர்வு உடைய அம்சமாக முடியும்? மற்றொன்றின் ஜடத்திற்கு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அம்சமாக இருக்க முடியாதே! உண்மையில் முழுப்பொருளிலிருந்து அம்சம் வேறல்லவே? என்னைப் போல ஜீவ ஸமுதாயமும் தொன்றுதொட்டு வருவது, நித்யமானது, என்னைத் தவிர வேறன்று. ஆகவே இது என்றுமுள்ளது.

"இது தவிர, அத்வைத ஸித்தாந்தத்தின்படியும் இதுதான் சரியான கருத்து. எங்கும் சீராக நிறைந்து பிரிவின்றி மஹாகாசம் விளங்கினாலும் வீடு, குடம் முதலியவற்றில் பிரிவுற்றதுபோலத் தோன்றுகிறது. இருந்தும் குடம் முதலியவற்றிலுள்ள இடைவெளி, (கடாகாசம்) மஹாகாசத்தின் அம்சம்தான் என்று கொள்கிறோம். அதுபோல நான் பிரிவின்றி எங்கும் ஸமமாக நிறைந்திருந்தாலும், வெவ்வேறு உடல்களின் ஸம்பந்தத்தினால் தனித்தனியாகப் பிரிந்திருப்பது போல் தோற்றமளிக்கிறேன் *(13/16)*. அந்த உடல்களில் உள்ள ஜீவன்களை என்னுடைய அம்சங்களாகவே கருதவேண்டும்" என்கிறார். ஆகவேதான் ஜீவாத்மாவை பகவான் தம் அம்சம் என்று இங்கே கூறுகிறார்.

**கேள்வி:** 'ஏவ' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஜீவன் என்னுடைய அம்சமே. ஆகவே ஸ்வரூபத்தினால் என்னைத் தவிர வேறு அன்று என்று உறுதிப்படுத்துகிறார்.

**கேள்வி:** 'ப்ரக்ருதிஸ்தாநி இந்த்ரியாணி' என்றால் என்ன பொருள்? அவை மனதுடன்கூட ஆறு என்று கூறுவதன் கருத்து என்ன? மனதுடன் கூடிய புலன்கள் பதினொன்று என்று 13/5ல் கூறினர்ரே?

**பதில்:** புலன்கள் ப்ரக்ருதியின் விளைவுகள். ப்ரக்ருதியின் விளைவான உடலே அவற்றிற்கு ஆதாரம். இதைத்தான் ப்ரக்ருதியில் உள்ளவை என்று கூறுகிறார். ஐந்து அறிவுப்புலன்களும், மனதும் ஆக ஆறும்தான் எல்லா போகங்களையும் அனுபவிப்பதில் முக்யமானவை. செயற்புலன்களின் செயல்கூட அறிவுப்புலன்களின் உதவியின்றி நடைபெறாது. அதனால் இங்கு மனதோடு கூடிய புலன்கள் ஆறு என்று கூறினார். என்றாலும் செயற்புலன்களும் இந்த ஆறினில் அடக்கம்தான்.

**கேள்வி:** ஜீவாத்மா மனதோடு கூடிய ஆறு புலன்களை ஈர்க்கிறது என்று கூறுவதன் கருத்து என்ன? ஜீவாத்மா உடலைவிட்டு விலகும்போது செயற்புலன்கள், ப்ராணன், புத்தி இவற்றைச் சேர்த்து எடுத்துப் போகிறான் என்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. இங்கு ஈர்க்கப்படுவது ஆறு புலன்கள் மட்டுமே என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஜீவாத்மா ஒருடலிலிருந்து மறு உடலுக்குப் போகும்போது, முதலில் மனதோடுகூட ஐம்புலன்களை ஈர்த்துச் செல்கிறான். விஷயங்களை அனுபவிப்பதற்கு மனமும், ஐந்து அறிவுப் புலன்களும் முக்யமானதால், 'இவை ஆறையும் ஈர்க்கிறான்' என்று சொன்னார். இங்கு மனம் என்ற சொல் அந்தக்கரணம் என்ற முறையில் புத்தியையும் சேர்த்துக் கூறுகிறது. ஜீவாத்மா மனதோடுகூடப் புலன்களை ஈர்க்கிறானென்றால் ப்ராணன்கள் மூலம்தான் ஈர்க்கிறான். ஆகவே ஐந்து செயற்புலன்களையும், ஐந்து ப்ராணன்களையும் இவற்றுடன் ஈர்த்துச் செல்வதாகக் கொள்ளவேண்டும்.

**பொருத்தம்: ஜீவாத்மா மனதோடுகூடிய ஆறு புலன்களை எப்போது எவ்விதம் எதற்காக ஈர்த்துச் செல்கிறான்? மனதோடு கூடிய புலன்கள் ஆறு எவை என்பதை இனிவரும் இரு ச்லோகங்களில் விளக்குகிறார்—**

शरीरं यदवाप्नोति यच्चाप्युत्क्रामतीश्वरः ।
गृहीत्वैतानि संयाति वायुर्गन्धानिवाशयात् ॥ ८ ॥

**ஶரீரம் யத₃வாப்நோதி யச்சாப்யுத்க்ராமதீஸ்வர: ।**
**க்₃ருஹீத்வைதாநி ஸம்யாதி வாயுர்க₃ந்த₄ாநிவாஶயாத் ॥ 8 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**வாயு:** – காற்று, **ஆஶயாத்** – மணமுள்ள இடத்திலிருந்து, **கந்தா்ந் இவ** – பலவித மணங்களை (இழுத்துச் செல்வது) போல, **ஈஶ்வர: அபி** – உடலை ஆள்பவனான ஜீவாத்மாவும், **யத்** – எந்த உடலை, **உத்க்ராமதி** – விட்டுக் கிளம்புகிறானோ (அதிலிருந்து), **ஏதாநி ச** – மனதோடு கூடிய புலன்களையும், **க்ருஹீத்வா** – எடுத்துக் கொண்டு, **யத் ஶரீரம்** – எந்த உடலை, **அவாப்நோதி** – அடைகிறானோ (அதில்), **ஸம்யாதி** – வந்து சேர்கிறான்.

காற்று மணமுள்ள இடத்திலிருந்து பலவித மணங்களை இழுத்துச் செல்வதுபோல உடலை ஆள்பவனான ஜீவாத்மாவும் எந்த உடலை விட்டுக் கிளம்புகிறானோ, அதிலிருந்து மனதோடு கூடிய புலன்களையும் எடுத்துக் கொண்டு எந்த உடலை அடைகிறானோ அதில் வந்து சேர்கிறான்.

**கேள்வி:** இங்கு 'ஆஶயாத்' என்றால் என்ன? காற்றையும், மணத்தையும் உள்ளிட்ட உதாரணம் எப்படிப் பொருந்துகிறது?

**பதில்:** இங்கு 'ஆஶயம்' என்ற சொல் மணமுள்ள பொருட்களான பூக்கள், சந்தனம், குங்குமப்பூ, கஸ்தூரி முதலியவற்றைக் குறிக்கும். அவற்றிலிருந்து காற்று மணத்தை எடுத்துச் செல்வதுபோல மனதோடு கூடிய புலன்களை எடுத்துச் செல்வது என்ற உதாரணத்தில் 'ஆசயம்' அல்லது 'ஆதாரமாக' உள்ளது ஸ்தூல சரீரம். நறுமணமாக அமைவது ஸூக்ஷ்ம சரீரம். இது எப்படியென்றால் மணமுள்ள மலர் முதலியவற்றின் ஸூக்ஷ்ம அம்சம்தானே மணம்? இங்கு வாயுவின் இடத்தில் உள்ளது ஜீவாத்மா. வாயு மணத்தை ஓரிடத்திலிருந்து பிறிதோர் இடத்திற்கு கொண்டு சேர்ப்பதுபோல், ஜீவாத்மாவும் புலன்கள், மனம், புத்தி, ப்ராணன் இவற்றின் ஸமுதாயமான ஸூக்ஷ்ம உடலை ஒரு ஸ்தூல உடலிலிருந்து பிரித்து மற்றொரு ஸ்தூல உடலில் கொண்டு போய்ச் சேர்க்கிறான்.

**கேள்வி:** 'ஏதாநி' என்றால் எவை? ஜீவாத்மாவை ஈசுவரன் என்று ஏன் கூறுகிறார்?

**பதில்:** மனதோடு கூடிய ஐந்து அறிவுப் புலன்களும் 'ஏதாநி' என்பதில் அடங்கும். மனம் என்பது உபலக்ஷணமாக அந்தக்கரணத்தின் பகுதியான புத்தியையும் குறிக்கிறது. ஐந்து செயற்புலன்களும், ஐந்து ப்ராணன்களும் ஐந்து அறிவுப்புலன்களில் அடக்கம். ஆகவே 'ஏதாநி' என்கிற சொல் இப்பதினேழு தத்வங்களின் ஒன்று சேர்ந்து உருவான ஸூக்ஷ்ம சரீரத்தைக் குறிக்கிறது. ஜீவாத்மாவை 'ஈசுவரன்' என்று கூறுவதிலிருந்து மனம் புத்தியோடு கூடிய எல்லாப் புலன்களையும் கட்டி ஆள்பவர்; தலைவர் என்று கூறுகிறார். இவற்றை ஈர்க்கும் சக்தி படைத்தவர். ஆகவே அவரே ஈசுவரன்.

**கேள்வி:** 'யத்' என்ற சொல்லை இரண்டு தடவை கையாண்டு 'உத்க்ராமதி', 'அவாப்நோதி' என்ற சொற்கள் மூலம் எந்தக் கருத்து சுட்டிக்காட்டப்படுகிறது?

**பதில்:** முதலில் சொன்ன 'யத்' என்பது இந்த ஜீவன் விட்டுவிடுகின்ற சரீரத்தைக் கூறுகிறது. அடுத்து வரும் 'யத்' என்பது ஜீவன் சென்றடைகின்ற சரீரத்தைக் குறிக்கிறது. அதைத்தான் கிளம்புகிறான், சேர்கிறான் என்று கூறுகிறார். சரீரத்தை விட்டுவிடுவதுதான் 'உத்க்ராமதி' என்பதன் பொருள். மறு சரீரத்தை ஈர்த்துக் கொள்வது 'அவாப்நோதி' என்பதன் பொருள்.

**கேள்வி:** ஆத்மாவின் ஸ்வரூபம் இரண்டாவது அத்யாயத்தின் 24வது ச்லோகத்தில் 'அசையாதவன்' என்று கூறப்பட்டிருக்கிறது. இங்கு 'ஸம்யாதி' என்று கூறி, ஓர் உடலைவிட்டு இன்னோர் உடலுக்கு வந்து சேர்கிறான் என்று எப்படிக் கூறுகிறார்?

**பதில்:** ஜீவாத்மா பரமாத்மாவினுடைய அம்சமாதலால் உண்மையில் நித்யமானவன், அசைவற்றவன். அவனுக்கு வருவதும், போவதும் கிடையாதுதான். ஆயினும் ஸூக்ஷ்ம சரீரத்துடன் இவனுக்குத் தொடர்பு இருப்பதால், அதன் வழியாக ஒரு ஸ்தூல சரீரத்திலிருந்து

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மற்றொரு ஸ்தூல சரீரத்திற்கு ஜீவாத்மா போவது போலத் தோற்றம்தான் ஏற்படுகிறது. இதைத்தான் ஓர் உடலிலிருந்து மறு உடலுக்குள் வந்து சேர்கிறான் என்கிறார். 2/22லும் இதைத்தான் கூறினார்.

श्रोत्रं चक्षुः स्पर्शनं च रसनं घ्राणमेव च।
अधिष्ठाय मनश्चायं विषयानुपसेवते ॥ ९ ॥

**ஶ்ரோத்ரம் சக்ஷு: ஸ்பர்ஶநம் ச ரஸநம் க்₄ராணமேவ ச ।**
**அதி₄ஷ்ட₂ாய மநஶ்சாயம் விஷயாநுபஸேவதே ॥ 9 ॥**

**அயம்** – இந்த ஜீவாத்மா, **ஶ்ரோத்ரம்** – காதையும், **சக்ஷு: ச** – கண்ணையும், **ஸ்பர்ஶநம் ச** – சருமத்தையும், **ரஸநம்** – நாக்கையும், **க்₄ராணம் ச** – மூக்கையும், **மந:** – மனதையும், **அதி₄ஷ்ட₂ாய ஏவ** – சார்ந்து கொண்டு (அவற்றின் உதவியுடன்) தான், **விஷயாந்** – புலன்நுகர் பொருட்களை, **உபஸேவதே** – அனுபவிக்கிறான்.

இந்த ஜீவாத்மா காதையும் கண்ணையும் சருமத்தையும் நாக்கையும் மூக்கையும் மனதையும் சார்ந்து கொண்டு அவற்றின் உதவியுடன்தான் புலன்நுகர் பொருட்களை அனுபவிக்கிறான்.

**கேள்வி:** ஜீவாத்மா காது, சருமம், கண், நாக்கு, மூக்கு இந்த ஐந்து புலன்களுடன் கூடிய மனதைச் சார்ந்து இருக்கிறான் எனில் என்ன? இவற்றின் உதவியினால் ஜீவாத்மா போகங்களை அனுபவிக்கிறான் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஜீவாத்மா மனதுடனும், புலன்களுடனும் தனக்குத் தொடர்பிருப்பதாக நினைத்துக் கொள்வதுதான் அவற்றைச் சார்ந்திருப்பதாகும். ஜீவாத்மா இவற்றின் உதவியால் விஷயங்களை நுகர்வதாகச் சொல்வதன் கருத்து என்னவென்றால், உண்மையில் ஆத்மா எந்தக் கர்மத்தையும் செய்வதுமில்லை. அதன் பயனாக எந்த போகத்தையும், ஸுகத்தையும், துக்கத்தையும் அனுபவிப்பதும் இல்லை. ப்ரக்ருதியுடனும், அதன் விளைவுகளுடனும் அஞ்ஞானத்தினால் அநாதிகாலமாக தொடர்ந்து வரும் ஒட்டுதல் உள்ளதே, அதனால்தான் ஜீவாத்மா கர்த்தாவாகவும் (செய்பவனாகவும்), அனுபவிக்கின்றவனாகவும் ஆகியுள்ளான். ப்ரக்ருதியில் உள்ள மனிதன் ப்ரக்ருதியில் உண்டான குணங்களை அனுபவிக்கிறான் என்று 13/21லும் கூறினார். வேதமும் கூறுகிறது: 'ஆத்மேந்த்₃ரியமநோயுக்தம் போ₄க்தேத்யாஹுர்மநீஷிண: ।' (கடோ₂பநிஷத்₃ 1/3/4) 'மனம், புத்தி, புலன்களுடன் கூடிய ஆத்மாவை ஞானிகள் போக்தா என்று கூறுகிறார்கள்.' இதைத்தான் 'ஜீவாத்மா இவற்றின் உதவியால் போகங்களை அனுபவிக்கிறான்' என்று கூறுகிறார்.

**பொருத்தம்:** ஜீவாத்மா முக்குணங்களுக்கு வயப்பட்டவன். ஓர் உடலைவிட்டு மற்றோர் உடலுக்குச் செல்பவன். உடலிலிருந்து கொண்டு போகங்களை அனுபவிப்பவன் என்றார். இப்படிப்பட்ட ஆத்மாவை யார் எப்படி அறிவர், யார் அறிவதில்லை என்பதை இரண்டு ச்லோகங்களில் கூறுகிறார்—

उत्क्रामन्तं स्थितं वापि भुञ्जानं वा गुणान्वितम्।
विमूढा नानुपश्यन्ति पश्यन्ति ज्ञानचक्षुषः ॥ १० ॥

**உத்க்ராமந்தம் ஸ்தி₂தம் வாபி பு₄ஞ்ஜாநம் வா கு₃ணாந்விதம் ।**
**விமூட₄ா நாநுபஶ்யந்தி பஶ்யந்தி ஜ்ஞாநசக்ஷுஷ: ॥ 10 ॥**

**உத்க்ராமந்தம் வா** – (இந்த ஜீவனை) உடலைவிட்டுக் கிளம்பும் பொழுதோ, **ஸ்தி₂தம் வா** – உடலில் இருக்கும்பொழுதோ, **பு₄ஞ்ஜாநம்** – போகங்களை அனுபவிக்கும்பொழுதோ,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**குணாந்விதம் அபி** – முக்குணங்களுடன் கூடியிருக்கும்பொழுதோ, **விமூடா:** – அறிவிலிகள், **ந அநுபஶ்யந்தி** – அறிகிறதில்லை. **ஜ்ஞாநசக்ஷுஷ:** – ஞானக்கண் பெற்றவர்கள்தான் (விவேகமுள்ள ஞானிகள்தான்), **பஶ்யந்தி** – தத்வரீதியாக அறிகிறார்கள்.

இந்த ஜீவனை, உடலைவிட்டுக் கிளம்பும் பொழுதோ, உடலில் இருக்கும்பொழுதோ, போகங்களை அனுபவிக்கும் பொழுதோ, முக்குணங்களுடன் கூடியிருக்கும் பொழுதோ அறிவிலிகள் அறிகிறதில்லை. ஞானக்கண் பெற்றவர்கள்தான் – விவேகமுள்ள ஞானிகள்தான் தத்வரீதியாக அறிகிறார்கள்.

**கேள்வி:** *'குணாந்விதம்' என்பது யாரை? 'அபி' என்பதால் சரீரத்தை விட்டுச் சென்றாலும், சரீரத்திலேயே இருந்தாலும், போகங்களை அனுபவித்தாலும் அஞ்ஞானிகள் அவனை அறிவதில்லை என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** 'குணாந்விதம்' என்ற சொல் குணங்களுடன் தொடர்பு கொண்டுள்ள ப்ரக்ருதியிலுள்ள புருஷனான ஜீவாத்மாவைக் குறிக்கும். 'அபி' என்ற சொல்லைக் கையாண்டு உணர்த்தப்படும் கருத்து இதுவே: அவன் அனைவரது எதிரிலும் உடலை விட்டுச் செல்கிறான். அனைவரது எதிரிலும் உடலிலே வாழ்கிறான். விஷய–இன்பம் துய்க்கிறான். அப்படியிருந்தாலும்கூட அஞ்ஞானிகள் அவனுடைய உண்மை ஸ்வரூபத்தை அறிவதில்லை. இப்படியிருக்க எல்லாச் செயல்களையும் துறந்த குணாதீதனாக இருக்கின்ற ஆத்மாவை அஞ்ஞானிகளான அவர்கள் எப்படிப் புரிந்து கொள்வார்கள்?

**கேள்வி:** *'ஞானக் கண்கள் படைத்த விவேகிகளான ஞானிகள் தத்வரீதியாக அறிகிறார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** விவேகஞானம் என்ற கண் படைத்த விவேகிகளான ஞானிகள் ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தைக் குணங்களுடன் தொடர்பு கொண்டிருக்கும்போதுகூட அறிகிறார்கள். அதாவது உடலை விடும்போதும், உடலில் இருக்கும்போதும், விஷயங்களை அனுபவிக்கும்போதும் ஒவ்வொரு நிலையிலும் அந்த ஆத்மா உண்மையில் ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்டவன், சுத்தன், ஞான வடிவினன், எதிலும் ஒட்டாதவன் என்று புரிந்து கொள்கிறார்கள்.

**यतन्तो योगिनश्चैनं पश्यन्त्यात्मन्यवस्थितम्।**
**यतन्तोऽप्यकृतात्मानो नैनं पश्यन्त्यचेतसः ॥ ११ ॥**

**யதந்தோ யோகிநஶ்சைநம் பஶ்யந்த்யாத்மந்யவஸ்திதம் ।**
**யதந்தோऽப்யக்ருதாத்மாநோ நைநம் பஶ்யந்த்யசேதஸ: ॥ 11 ॥**

**யோகிந:** – யோகிகளும், **யதந்த:** – முயற்சி செய்தே, **ஆத்மநி** – தம் இதயத்தில், **அவஸ்திதம்** – உறைகின்ற, **ஏநம்** – இந்த ஆத்மாவை, **பஶ்யந்தி** – தத்வரீதியாக உணர்கிறார்கள். **ச** – ஆனால், **அக்ருதாத்மாந:** – எவர்கள் தங்கள் உள்ளங்களைத் தூய்மைப்படுத்திக் கொள்ளவில்லையோ, **அசேதஸ:** – அந்த அஞ்ஞானிகள், **யதந்த: அபி** – முயன்றாலும் கூட, **ஏநம்** – இந்த ஆத்மாவை, **ந பஶ்யந்தி** – அறிகிறதில்லை.

யோகிகளும் முயற்சி செய்தே தம் இதயத்தில் உறைகின்ற இந்த ஆத்மாவை தத்வரீதியாக உணர்கிறார்கள். ஆனால் எவர்கள் தங்கள் உள்ளங்களைத் தூய்மைப்படுத்திக் கொள்ளவில்லையோ, அந்த அஞ்ஞானிகள் முயன்றாலும் கூட இந்த ஆத்மாவை அறிகிறதில்லை.

**கேள்வி:** *முயற்சியுள்ள யோகிகள் யாவர்? அவர்கள் தம் இதயத்தில் உள்ள ஆத்மாவைத் தத்வரீதியாக உணர்வார்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?*

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பதில்: எவருடைய உள்ளம் சுத்தமாகவும், அவருடைய வசத்திலும் உள்ளதோ, முன் ச்லோகத்தில் எந்த விவேகமுள்ள ஞானிகள் ஆத்மாவை அறிவார்கள் என்று சொன்னாரோ, எவர் ஆத்ம ஸ்வரூபத்தை அறிவதற்காக இடைவிடாது கேட்பது, சிந்திப்பது, த்யானம் செய்வது என்ற முயற்சிகளைச் செய்கிறார்களோ, அப்படிப்பட்ட உயர்ந்த ஸாதகர்களே 'முயற்சி செய்யும் யோகிகள்'. இந்த ஸந்தர்பத்தில் உடலை ஒட்டி உள்ளத்தில் இருப்பதாகக் கூறப்படுகிற ஜீவாத்மாவினுடைய நித்யமான, சுத்தமான, விஞ்ஞான, ஆனந்தமயமான உண்மை ஸ்வரூபத்தை அறிவதே ஆத்மாவைத் தத்வரீதியாக அறிவதாகும்.

கேள்வி: 'அக்ருதாத்மாந:', 'அசேதஸ:' என்றால் யார்? அவர்கள் முயன்றாலும் ஆத்மாவை அறிய முடியாது என்று கூறுவதன் கருத்து என்ன?

பதில்: உள்ளத்தூய்மையற்றவர்கள் – அதாவது நிஷ்காமமாகக் கர்மங்கள் செய்து எவர்கள் தங்களுடைய மனதைச் சுத்தப்படுத்திக் கொள்ளவில்லையோ, பக்தி முதலிய ஸாதனைகள் மூலம் மனதை ஒருநிலைப்படுத்திக் கொள்ள ஒரு பொழுதும் தகுந்த பயிற்சியைச் செய்யவில்லையோ, இப்படிப்பட்ட மாசுபடிந்த, தடுமாற்றமுள்ள உள்ளமுடையவர்களை 'அக்ருதாத்மா' என்கிறார். எவர்களுடைய உள்ளத்தில் உண்மையை அறியும் சக்தி இல்லையோ, அந்த மூடர்களை 'அசேதஸ:' என்கிறார். மலம், விக்ஷேபம், ஆவரணம் என்ற மும்மலங்கள் உள்ள உள்ளம் படைத்த ராஜஸ, தாமஸ மனிதர்களை இவ்விதம் கூறுகிறார். இவர்கள் எவ்வளவுதான் முயன்றாலும் ஆத்மாவை அறிய முடியாது. ஆகவே இப்படிப்பட்டவர்கள் முதலில் மனதைச் சுத்தப்படுத்திக் கொள்ளவேண்டும். இதைவிட்டு ஆத்மாவை அறிவதற்காக எவ்வளவு சாஸ்த்ரங்கள் படித்தாலும் ஆத்ம தத்வத்தை உணர முடியாது.

கேள்வி: 10வது ச்லோகத்திலேயே மூடர்கள் ஆத்மாவை அறிய மாட்டார்கள். ஞானக்கண் பெற்ற விவேகமுள்ள ஞானிகள்தான் அறிவார்கள் என்று சொன்னார். இங்கே முயற்சியுள்ள யோகிகள் அறிவார்கள். தூய்மையற்ற உள்ளம் படைத்த அஞ்ஞானிகள் அறிய மாட்டார் என்கிறார். இந்த இரண்டிற்குமுள்ள வேறுபாடு என்ன?

பதில்: அங்கு 'விமூடா:' என்பது ஸாதாரண அஞ்ஞானிகளைக் குறிக்கிறது. ஞானக்கண் படைத்தவர் என்பது விவேகமுள்ள ஞானியைக் குறிக்கிறது. இங்கு 'யோகிந:' என்பது அப்படிப்பட்ட விவேகம் படைத்த, ஸத்வ குணம் பொருந்திய, உயர்ந்த நிலையில் உள்ள ஸாதகர்களைக் குறிக்கிறது. 'அசேதஸ:' என்ற சொல் ராஜஸ, தாமஸ மனிதர்களைக் குறிக்கிறது. ஆகவே 10வது ச்லோகத்தில் ஆத்மாவின் ஸ்வரூபத்தை 'அறிதல்' மற்றும் 'அறியாதிருத்தல்' பற்றிச் சொல்லப்பட்டதே, அதைத் தெளிவுபடுத்துவதற்குத்தான் இங்கு 'விவேகமுள்ளவர்கள் முயன்றால் அறியலாம். அஞ்ஞானிகள் முயன்றாலும்கூட அறிய முடியாது' என்று கூறுகிறார். ஆகவே வேறுபாடு ஒன்றுமில்லை.

பொருத்தம்: 6வது ச்லோகத்தின் கருத்தில் இரண்டு ஸந்தேஹங்கள் உண்டாகின்றன. (1) எல்லாவற்றையும் ப்ரகாசிக்கச் செய்யும் சூரியன், நிலவு, நெருப்பு முதலிய ஒளியுள்ள பொருட்கள் பரமாத்மாவை ஏன் ப்ரகாசப்படுத்த முடிவதில்லை? (2) பரமாத்மாவை அடைந்த பிறகு மனிதர் ஏன் திரும்புவதில்லை? இதில் இரண்டாவதற்கு விடையாக ச்லோகம் 7ல் ஜீவாத்மா பரமாத்மாவின் ஸநாதந அம்சம் என்று கூறினார். 11வது ச்லோகம் வரை அவருடைய ஸ்வரூபங்களையும், இயல்புகளையும், நடைமுறைகளையும் விளக்கினார். இப்படி உண்மையான ஸ்வரூபத்தையறிந்தவர்களின் பெருமையைக் கூறி, இப்பொழுது முதல் ஸந்தேஹத்திற்கு பதிலாக 12 முதல் 15 வரை குணங்கள், ப்ரபாவங்கள், ஐசுவர்யம் இவற்றுடன் கூடிய தமது ஸ்வரூபத்தைக் கூறுகிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



यदादित्यगतं तेजो जगद्भासयतेऽखिलम्।
यच्चन्द्रमसि यच्चाग्नौ तत्तेजो विद्धि मामकम्॥ १२॥

**யதா₃தி₃த்யக₃தம் தேஜோ ஜக₃த்பா₄ஸயதேऽகி₂லம் ।**
**யச்சந்த்₃ரமஸி யச்சாக்₃நௌ தத்தேஜோ வித்₃தி₄ மாமகம் ॥ 12 ॥**

**ஆதி₃த்யக₃தம்** – சூரியனில் உள்ள, **யத்** – எந்த, **தேஜ:** – ஒளி, **அகி₂லம்** – அனைத்து, **ஜக₃த்** – உலகையும், **பா₄ஸயதே** – ப்ரகாசிக்கச் செய்கிறதோ, **ச** – மேலும், **யத்** – எந்த ஒளி, **சந்த்₃ரமஸி** – சந்த்ரனிடத்திலும், **யத்** – எது, **அக்₃நௌ** – நெருப்பினிடத்திலும் (உள்ளதோ), **தத்** – அது, **மாமகம்** – என்னுடைய, **தேஜ:** – ஒளியே என்று, **வித்₃தி₄** – தெரிந்து கொள்.

சூரியனில் உள்ள எந்த ஒளி உலகனைத்தையும் ப்ரகாசிக்கச் செய்கிறதோ, மேலும் எந்த ஒளி சந்த்ரனிடத்திலும் நெருப்பினிடத்திலும் (உள்ளதோ), அது என்னுடைய ஒளியே என்று தெரிந்து கொள்.

**கேள்வி:** *'ஆதித்யகதம்' எனும் அடைமொழியோடு கூறப்படும் 'தேஜ:' எனும் சொல் எதைக் குறிக்கிறது? அது 'அகில' உலகையும் ப்ரகாசப்படுத்துகிறது' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** சூரிய மண்டலத்தில் உள்ள பேரொளியை 'ஆதித்யகதம் தேஜ:' என்கிறார். அது அகில உலகையும் ப்ரகாசப்படுத்துகிறது என்றால் ஸ்தூலமான ஸம்ஸாரத்தில் உள்ள எல்லாப் பொருட்களையும் ஒரு சூரியனுடைய ஒளிதான் ப்ரகாசப்படுத்துகிறது என்று பொருள்.

**கேள்வி:** *சந்த்ரனிலும், அக்னியிலும் உள்ள தேஜஸ் என்பது என்ன? இந்த மூன்றிலும் உள்ள தேஜஸ் என்னுடையதுதான் என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** சந்த்ரனில் உள்ள நிலவுதான் சந்த்ரனின் தேஜஸ். அக்னியில் உள்ள ஒளிதான் அக்னியின் தேஜஸ். இவ்விதம் சூரியன், சந்த்ரன் மற்றும் அக்னியில் உள்ள தேஜஸைத் தம் தேஜஸாகக் கூறி பகவான் பின்வரும் கருத்தை விளக்குகிறார். "அந்த மூன்றிலும் எந்த தேவதைகள் இருந்து கொண்டு சூரியன் கண்களுக்கும், சந்த்ரன் மனதிற்கும், அக்னி வாக்குக்கும் ஒளியூட்டுகிறார்களோ, அந்த தேவதைகளின் சக்திகூட என்னுடைய தேஜஸ்ஸின் ஓர் அம்சம்தான்" என்று பொருள். இம் மூன்றிலும் உள்ள தேஜஸ்ஸும் என்னுடையவை என்றால் இம்மூன்றினுடைய தேஜஸ்ஸினால் ப்ரகாசிக்கின்ற எல்லாப் பொருட்களின் ஒளியும் என்னுடைய ஒளியின் ஒரு சிறு துளிதான் என்று சொல்லவும் வேண்டுமா? இதைத்தான் 15/6ல் சூரியனும், சந்த்ரனும், அக்னியும் என் ஸ்வரூபத்தை ப்ரகாசப்படுத்த முடியவில்லை என்று கூறினார்.

गामाविश्य च भूतानि धारयाम्यहमोजसा।
पुष्णामि चौषधीः सर्वाः सोमो भूत्वा रसात्मकः॥ १३॥

**கா₃மாவிஶ்ய ச பூ₄தாநி தா₄ரயாம்யஹமோஜஸா ।**

**புஷ்ணாமி சௌஷதீ₄: ஸர்வா: ஸோமோ பூ₄த்வா ரஸாத்மக: ॥ 13 ॥**

**ச** – மேலும், **அஹம்** – நான், **கா₃ம்** – பூமியிலும், **ஆவிஶ்ய** – உட்புகுந்து, **ஓஜஸா** – என் சக்தியினால், **பூ₄தாநி** – உயிரினங்கள் அனைத்தையும், **தா₄ரயாமி** – தாங்குகிறேன். **ரஸாத்மக:** – ரஸமே வடிவான அதாவது அமுதமே நிறைந்த, **ஸோம:**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ச** – நிலவும், **பூ₄த்வா** – ஆகி, **ஸர்வா:** – அனைத்து, **ஓஷதீ₄:** – பயிர்பச்சைகளையும், மரங்களையும், **புஷ்ணாமி** – போஷிக்கிறேன்.

மேலும் நான் பூமியினுட்புகுந்து என் சக்தியினால் உயிரினங்கள் அனைத்தையும் தாங்குகிறேன். ரஸமே வடிவான அதாவது அமுதமே நிறைந்த நிலவும் ஆகி அனைத்து பயிர் பச்சைகளையும், மரங்களையும் போஷிக்கிறேன்.

**கேள்வி:** 'நானே பூமியிலும் உட்புகுந்து என்னுடைய சக்தியினால் உயிரினங்கள் அனைத்தையும் தாங்குகிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பூமியைப் பொதுவாகச் சொல்லி, உலகத்தையே தாங்கும் சக்தி என்னுடைய ஓர் அம்சமே என்று கூறுகிறார். பூமியிடம் அனைத்தையும் தாங்கும் சக்தி இருப்பதாகத் தோன்றுகிறதே, அதுபோல எந்த ஒன்றில் எதையேனும் தாங்கும் சக்தி உள்ளதோ உண்மையில் அது அதனுடைய சக்தி அன்று; என்னுடைய சக்தியின் ஓர் அம்சமே! இதைத்தான், நானே ஆத்மாவாக பூமியிலும் புகுந்து என்னுடைய பலத்தினால் எல்லா ப்ராணிகளையும் தாங்குகிறேன் என்கிறார்.

**கேள்வி:** 'ரஸாத்மக:' என்ற அடைமொழியுடன் கூடிய 'ஸோம:' என்ற சொல்லின் கருத்து என்ன?

**பதில்:** ரஸமே எதனுடைய ஸ்வரூபமோ அது 'ரஸாத்மகம்'. இங்கு அது சந்த்ரன்தான். இது உள்ளும், புறமும் அமுதம் நிறைந்தது. ஆகவே அது 'ரஸாத்மகம்'. அமுதமயமானது. பொருட்களில் உள்ள ரஸமெல்லாம் சந்த்ரன் கொடுத்ததுதான் என்பது பொருள்.

**கேள்வி:** 'ஓஷதீ:' என்றால் என்ன? நானே சந்த்ரனாக ஆகி எல்லாப் பயிர் பச்சைகளையும், மரங்களையும் போஷிக்கிறேன் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இலை, பூ, பழங்கள் முதலிய எல்லாப் பகுதிகளுடனும் கூடிய மரங்கள், செடி-கொடிகள், புல்-பூண்டுகள், பயிர்-பச்சைகள் என்ற தாவர வகைகள் அனைத்தும் 'ஓஷதிகள்'. 'சந்த்ரனிடமுள்ள நிலவு என்னுடைய ஓர் அம்சம். அதில் உள்ள போஷண சக்தியான ரஸமும் என்னுடைய ஓர் அம்சம். இவ்வாறு சந்த்ரனாக வெளிப்பட்டு நானே எல்லாவற்றையும் போஷிக்கிறேன்' என்கிறார்.

**अहं वैश्वानरो भूत्वा प्राणिनां देहमाश्रितः।**
**प्राणापानसमायुक्तः पचाम्यन्नं चतुर्विधम्॥ १४॥**

**அஹம் வைஶ்வாநரோ பூ₄த்வா ப்ராணிநாம் தே₃ஹமாஶ்ரித: ।**
**ப்ராணாபாநஸமாயுக்த: பசாம்யந்நம் சதுர்வித₄ம் ॥ 14 ॥**

**அஹம்** – நானே, **ப்ராணிநாம்** – எல்லா உயிரினங்களுடைய, **தே₃ஹம்** – உடலில், **ஆஶ்ரித:** – உறைபவனாகி, **ப்ராண அபாநஸமாயுக்த:** – ப்ராண-அபான வாயுக்களுடன் கூடி, **வைஶ்வாநர:** – வைச்வாநரன் என்ற அக்னியாக, **பூ₄த்வா** – ஆகி, **சதுர்வித₄ம்** – நான்கு வகையான, **அந்நம்** – உணவை, **பசாமி** – ஜீரணிக்கிறேன்.

நானே எல்லா உயிரினங்களுடைய உடலில் உறைபவனாகி ப்ராண-அபான வாயுக்களுடன் கூடி வைச்வாநரன் என்ற அக்னியாக ஆகி நான்கு வகையான உணவை ஜீரணிக்கிறேன்.

**கேள்வி:** 'ப்ராணிநாம் தேஹம் ஆஶ்ரித:' எனும் அடைமொழியுடன் கூடிய 'வைஶ்வாநர:' எனும் சொல் யாரைக் குறிக்கிறது? 'நான் ப்ராண, அபான வாயுக்களுடன் கூடி வைஶ்வாநர அக்னியாகி நான்கு வகையான உணவை ஜீரணிக்கிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பதில்: உடலில் உள்ள வெப்பத்தினால் உண்ட உணவு ஜீரணமாகிறது. அப்படி அனைத்து உயிரினங்களின் உடல்களிலும் உள்ள வெப்பத்திற்குக் காரணமான அக்னியின் பெயர்தான் 'வைஶ்வாநரன்'. "எப்படி அக்னியின் ஒளிரும் சக்தி என்னுடையதோ, அதுபோல அக்னியினுடைய வெப்பத்திறன் ஆன ஜீரண சக்தியெனும் பசி விளைவிக்கும் ஆற்றலும் கூட என்னுடைய சக்தியின் ஓர் அம்சம்தான். ஆகவே நானே ப்ராணன், அபானன் என்ற வாயுக்களுடன் கூடி ப்ராணிகளின் உடலில் இருக்கின்ற வைஶ்வாநரன் என்ற அக்னியாக இருந்து கடித்து உண்பது, விழுங்கி உண்பது, நக்கி உண்பது, உறிஞ்சி உண்பது என்ற நால்வகை உணவுகளையும் ஜீரணமாக்குகிறேன். கடித்து உண்ணப்படுபவை சாதம், ரொட்டி முதலியன. விழுங்கி உண்ணப்படுபவை பால், தண்ணீர் முதலியன. நக்கி உண்ணப்படுபவை துவையல், தேன் முதலியன. உறிஞ்சி உண்ணப்படுபவை பாயஸம், கரும்புச்சாறு ரஸம் முதலியன. இந்நான்கு வகை உணவுகளையும் நானே ஜீரணிக்கிறேன்" என்பது கருத்து.

பொருத்தம்: இவ்விதம் 10/41ன் கருத்துப்படி ப்ரகாசப்படுத்தும் சக்தி, தாங்கும் சக்தி, போஷிக்கும் சக்தி, ஜீரணிக்கும் சக்தி முதலிய அனைத்து சக்திகளும் தமது சக்தியின் ஓரம்சமே என்று கூறினார். மின்விசிறி காற்றை வீசுகிறது. மின் விளக்கு ஒளிவிடுகிறது. மின் இயந்திரம் சுழல்கிறது. நீரைச் சுட வைக்கிறோம். ரேடியோவில் ஒலி கேட்கிறது. இவையெல்லாம் மின்சக்தியின் ஓரம்சத்தினால் நடைபெறுகின்றன. அதுபோல "ஆதவன், நிலா, நெருப்பு முதலியன ஒளி தருவதும்; பூமி முதலியவை அனைத்தையும் தாங்குவதும்; சந்த்ரன் அனைத்தையும் போஷிப்பதும்; வைஶ்வாநரன் உணவை ஜீரணிப்பதும் என்னுடைய சக்தியில் ஓரம்சம் பெற்றுத்தான்" என்று கூறினார். இனி, தாமே அனைத்திற்கும் அந்தர்யாமி. அனைத்தும் அறிந்தவன் என்ற தம் இயல்புகளைக் கூறி, அனைத்துமாகவும் தம்மை அறிந்து கொள்ள வேண்டும் என்று கூறுகிறார்—

**सर्वस्य चाहं हृदि सन्निविष्टो मत्तः स्मृतिर्ज्ञानमपोहनं च।**
**वेदैश्च सर्वैरहमेव वेद्यो वेदान्तकृद्वेदविदेव चाहम्॥ १५॥**

**ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி₃ ஸந்நிவிஷ்டோ**
**மத்த: ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநம் ச ।**
**வேதை₃ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்₃யோ**
**வேத₃ாந்தக்ருத்₃வேத₃விதே₃வ சாஹம் ॥ 15 ॥**

அஹம் – நானே, ஸர்வஸ்ய – எல்லா ப்ராணிகளுடைய, ஹ்ருதி₃ – இதயத்திலும், ஸந்நிவிஷ்ட: – அந்தர்யாமியாக இருந்து கொண்டிருக்கிறேன். ச – மேலும், மத்த: – என்னிடமிருந்துதான், ஸ்ம்ருதி: – நினைவும், ஜ்ஞாநம் ச – அறிவும், அபோஹநம் ச – ஐயம்–திரிபுகளிலிருந்து தெளிவும், (ப₄வதி – ஏற்படுகின்றது). ஸர்வை: – எல்லா, வேதை₃: – வேதங்களாலும், அஹம் ஏவ – நானே, வேத்₃ய: – அறியத்தக்கவன். வேத₃ாந்தக்ருத் – வேதாந்தத்தைச் செய்தவனும், வேத₃வித் ச – வேதங்களின் உட்பொருளை அறிந்தவனும், அஹம் ஏவ – நானே.

நானே எல்லா ப்ராணிகளுடைய இதயத்திலும் அந்தர்யாமியாக இருந்து கொண்டிருக்கிறேன். என்னிடமிருந்துதான் நினைவும் அறிவும், ஐயம்–திரிபுகளிலிருந்து தெளிவும் ஏற்படுகின்றன. எல்லா வேதங்களாலும் நானே அறியத்தக்கவன். வேதாந்தத்தைச் செய்தவனும் வேதங்களின் உட்பொருளை அறிந்தவனும் நானே.

கேள்வி: நானே அனைவருடைய இதயங்களிலும் அந்தர்யாமியாக இருக்கிறேன் என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



*பதில்:* நான் எங்கும் ஸமமாக நிறைந்திருந்தாலும், அனைவருடைய உள்ளங்களிலும் அந்தர்யாமியாகச் சிறப்பான இடம் பெற்று விளங்குகிறேன். அதனால் இதயத்தில் கண்டு கொள்ளப்படுகிறேன். என்னைக் கண்டு கொள்ளக்கூடிய இடம் இதயம். அனைவருடைய உள்ளங்களிலும் உள்ளேன் என்று *(13/17, 18/61)* ச்லோகங்களில் கூறுகிறார். 'ஏனெனில் எவருடைய உள்ளம் தூய்மையாகவும், தெளிவாகவும் இருக்கிறதோ, அந்த உள்ளத்தில் நான் கண்கூடாகக் காணப்படுகிறேன்' என்று கூறுகிறார்.

*கேள்வி:* 'ஸ்ம்ருதி:', 'ஞானம்', 'அபோஹநம்' என்ற சொற்களின் பொருள் என்ன? இவை என்னிடம் உண்டாகின்றன என்று கூறுவதன் கருத்து என்ன?

*பதில்:* முன்னால் கண்டு, கேட்டு, அனுபவிக்கப்பட்ட பொருள் அல்லது நிகழ்ச்சி முதலியவற்றை நினைவுகூர்தல் 'ஸ்ம்ருதி' (நினைவு). ஒவ்வொரு பொருளையும் பற்றிய உண்மையை அறியும் திறன் 'ஞானம்'. பொருட்களைப் பற்றிய ஸந்தேஹம், விபரீத எண்ணம் (ஐயம்–திரிபு) போன்ற பல கருத்துக்களை 'ஊஹநம்' என்கிறார். இவற்றைக் களைந்து தெளிவு பெறுவது 'அபோஹநம்'. "இவை மூன்றும் என்னிடமிருந்துதான் கிடைக்கின்றன. அனைவரது உள்ளங்களிலும் அந்தர்யாமியாக விளங்கும் பரமாத்மா நான்தான். அங்கு அனைவருடைய வினைகளுக்கும் ஏற்றவாறு நினைவு, ஞானம், அபோஹனம் இவற்றை மனதில் உண்டாக்குகிறேன்" என்று பொருள்.

*கேள்வி:* 'அனைத்து வேதங்களாலும் அறியத்தக்கவன் நானே' என்று கூறுவதன் கருத்து என்ன?

*பதில்:* ஸர்வ வல்லமை படைத்த பரமேசுவரரான பகவானே எல்லா வேதங்களாலும் விளக்கப்படுபவர். அதாவது கர்மகாண்டம், உபாஸனாகாண்டம், ஞானகாண்டம் என்றெல்லாம் பிரித்துக் கூறப்படுகின்ற அனைத்து வேதங்களுக்கும் முடிவான நோக்கு (லக்ஷ்யம்) உலகியலில் வைராக்யத்தை உண்டு பண்ணி, அந்தந்தத் தகுதியுள்ளவர்களுக்கு அவரைப் பற்றிய ஞானம் ஏற்படச் செய்வதே ஆகும். அவற்றின் மூலம் அவருடைய ஸ்வரூபத்தின் ஞானம் பெறுபவர்தாம் வேதத்தின் உட்பொருளை முறையாக அறிந்தவர். இதற்குமாறாக, உலகியல் போகங்களில் மூழ்கியவர்கள், வேதங்களின் உட்பொருளைச் சரியாக அறிவதில்லை.

*கேள்வி:* வேதாந்தம் என்றால் என்ன? அதை பகவான் தாமே செய்ததாகக் கூறுவதன் கருத்து என்ன? தாமே வேதங்களை அறிந்தவன் என்று கூறுவதன் கருத்து என்ன?

*பதில்:* வேதங்களின் உட்கருத்துக்களை நிர்ணயிப்பது அதாவது அதில் ஏற்படும் ஸந்தேஹங்களை நீக்கிப் பரமாத்மாவினிடம் எல்லாவற்றிற்கும் இணக்கம் காண்பதுதான் வேதாந்தம். "அதைச் செய்தவன் நானே. வேதங்களில் மேலெழுந்தவாறு பார்த்தால் தோன்றும் முரண்பாடுகளை உண்மையாக ஒற்றுமைப்படுத்தி மனிதனுக்கு அமைதி அளிப்பது நானே. வேதங்களை அதாவது அவற்றின் உண்மைப் பொருளை அறிந்தவன் நானே" என்று ஐயமற விளக்குகிறார்.

**பொருத்தம்:** ச்லோகம் *1* முதல் *6* வரை மரம் என்ற உருவகத்தில் ஸம்ஸாரத்தையும், திடவைராக்யத்தினால் அதை வெட்ட வேண்டியதையும், பரமேசுவரனை மரணமடைய வேண்டியதையும், பரமாத்மாவை அடைந்துவிட்டவர்களின் இலக்கணத்தையும், பரமபதம் எனப்படுகின்ற பரமாத்மாவின் பெருமையையும் கூறி, அரசமரமாக உருவகப்படுத்தப்பட்ட க்ஷரபுருஷ ஸம்பந்தமான விஷயத்தைக் கூறி முடித்தார். பிறகு 7வது ச்லோகத்திலிருந்து ஜீவன் எனப்படுகின்ற உபாஸகனான அக்ஷரபுருஷனைப் பற்றிப் பேச ஆரம்பித்து, அவருடைய ஸ்வரூபம், சக்தி, ஸ்வபாவம், நடைமுறை இவற்றை வர்ணித்து, அவரை அறிபவர்களின் பெருமை கூறி *11*வது ச்லோகத்தை முடித்தார். பிறகு *12*வது ச்லோகத்திலிருந்து உபாஸிக்கப்பட வேண்டிய புருஷோத்தமனைப் பற்றிக் கூற

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஆரம்பித்து, 15 வரை அவருடைய குணங்கள், ப்ரபாவங்கள், ஸ்வரூபம் இவற்றை வர்ணித்து முடித்தார். இனி அத்யாயம் முடியும் வரை மேலே சொன்ன மூன்று விஷயங்களையும் தொகுத்துச் சுருக்கமாகக் கூற ஆரம்பித்து, அடுத்த ச்லோகத்தில் க்ஷர–அக்ஷர புருஷர்களின் ஸ்வரூபத்தைக் கூறுகிறார்—

द्वाविमौ पुरुषौ लोके क्षरश्चाक्षर एव च।
क्षरः सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते॥ १६॥

**த்₃வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஸ்சாக்ஷர ஏவ ச ।**
**க்ஷர: ஸர்வாணி பூ₄தாநி கூடஸ்தே₂ாऽக்ஷர உச்யதே ॥ 16 ॥**

**லோகே** – இவ்வுலகில், **க்ஷர: ச** – அழிபவன் என்றும், **அக்ஷர: ஏவ ச** – அழியாதவன் என்றும், **இமௌ த்₃வௌ புருஷௌ** – இந்த இரண்டு வகையான புருஷர்கள் உள்ளனர். (இவர்களில்), **ஸர்வாணி** – எல்லா, **பூ₄தாநி** – உயிரினங்களின் உடலனைத்தும், **க்ஷர:** – அழியக்கூடியது (என்று), **ச** – மேலும், **கூடஸ்த₂:** – இவ்வுடலில் இருக்கும் ஜீவாத்மா, **அக்ஷர:** – அழியாதவன் (என்று), **உச்யதே** – கூறப்படுகின்றது.

இவ்வுலகில் அழிபவன் என்றும் அழியாதவன் என்றும் இரண்டு வகையான புருஷர்கள் உள்ளனர். (இவர்களில்) எல்லா உயிரினங்களின் உடலனைத்தும் அழியக் கூடியது (என்றும்) இவ்வுடலில் இருக்கும் ஜீவாத்மா அழியாதவன் (என்றும்) கூறப்படுகின்றது.

**கேள்வி:** 'இமௌ', 'த்வௌ' என்ற இந்த இரண்டு புருஷர்கள் யார்? ஒருவர் க்ஷரன் என்றும், மற்றவர் அக்ஷரன் என்றும் கூறப்படுவானேன்?

**பதில்:** இந்த அத்யாயத்தில் பேசப்படுபவர் க்ஷரர், அக்ஷரர் என இரு தத்வங்களாக வர்ணிக்கப்படுவர். இக்கருத்தைத் தெரிவிப்பதற்காகவே 'இமௌ', 'த்வௌ' என்ற சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. இந்த இரண்டு தத்வங்களை 7/4,5களில் 'அபரா', 'பரா' ப்ரக்ருதிகள் என்றும், 8/4,3களில் 'அதிபூதம்', 'அத்யாத்மம்' என்றும், 13/1ல் 'க்ஷேத்ரம்', 'க்ஷேத்ரக்ஞன்' என்றும், இந்த அத்யாயத்தில் முதலில் 'அச்வத்தம்', 'ஜீவன்' என்றும் சொல்கிறார். இந்த இரண்டு தத்வங்களைத்தான் இங்கு 'புருஷௌ' என்கிறார். ஒருவரை 'க்ஷரன்' என்றும், மற்றவரை 'அக்ஷரன்' என்றும் கூறி ஒருவர்க்கொருவர் முற்றிலும் மாறுபட்டவர் என்பதை பகவான் விளக்குகிறார்.

**கேள்வி:** 'ஸர்வாணி பூதாநி' என்றால் எவை? 'கூடஸ்த:' என்றால் யார்? அவர்களை எப்படி க்ஷரன், அக்ஷரன் என்று கூறலாம்?

**பதில்:** 'பூதாநி' என்றால் எல்லா ஜீவர்களுடைய ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்கள். 13/1ல் இதை க்ஷேத்ரம் என்று குறிப்பிட்டு 13/5ல் அதனுடைய ஸ்வரூபத்தைப் பற்றிக் கூறினார். அங்கு வர்ணித்தபடி எல்லா ஜட வர்கங்களும் 'ஸர்வாணி பூதாநி' என்ற சொல்லுக்குப் பொருள். இந்த தத்வம் அழியும் தன்மையுடையது; அநித்யமானது. 2/18ல் இந்த தேஹங்கள் முடிவுள்ளன என்றும், 8/4ல் அதிபூதம் என்றும், க்ஷரன் என்றும் இதைத்தான் சொன்னார். 'கூடஸ்தன்' என்றால் எல்லா உடல்களிலும் இருக்கின்ற ஆத்மா என்று பொருள். அவர் எப்பொழுதும் எங்கும் ஒரேவிதம் இருப்பவர். மாறுதல் அற்றவர். ஆகவே 'கூடஸ்தன்' என்று கூறப்படுகிறார். இவருக்கு எந்த நிலையிலும், எப்பொழுதும் குறைவோ, அழிவோ, இல்லாமல் போவது என்பதோ கிடையாது. ஆகவே அக்ஷரன்.

**பொருத்தம்:** இவ்விதம் க்ஷர, அக்ஷர புருஷர்களின் ஸ்வரூபங்களைக் கூறி, அவர்களைவிடச் சிறந்த புருஷோத்தமனான பகவானுடைய ஸ்வரூபத்தையும், புருஷோத்தமனாக விளங்குவதன் காரணத்தையும் இரண்டு ச்லோகங்களில் கூறுகிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः ।
यो लोकत्रयमाविश्य बिभर्त्यव्यय ईश्वरः ॥ १७ ॥

**உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதா₃ஹ்ருத: ।**

**யோ லோகத்ரயமாவிஸ்ய பி₃ப₄ர்த்யவ்யய ஈஸ்வர: ॥ 17 ॥**

**ய:** – எவர், **லோகத்ரயம்** – உலகம் மூன்றிலும், **ஆவிஸ்ய** – உட்புகுந்து, **பி₃ப₄ர்தி** – எல்லோரையும் தாங்கி போஷிக்கிறாரோ (மேலும்), **அவ்யய:** – அழிவற்றவர் (என்றும்), **ஈஸ்வர:** – பரமேசுவரன் (என்றும்), **பரமாத்மா இதி** – பரமாத்மா என்றும், **உதா₃ஹ்ருத:** – அழைக்கப்படுகிறாரோ, **உத்தம: புருஷ: து** – (அந்த) புருஷோத்தமன், **அந்ய:** – (இந்த க்ஷர, அக்ஷர புருஷர்களிடமிருந்து) வேறுபட்டவர்.

எவர் உலகம் மூன்றிலும் உட்புகுந்து எல்லோரையும் தாங்கிப் போஷிக்கிறாரோ, (மேலும்) அழிவற்றவர், பரமேசுவரன், பரமாத்மா என்றும் அழைக்கப்படுகிறாரோ, அந்த புருஷோத்தமன் இந்த க்ஷர, அக்ஷர புருஷர்களிடமிருந்து வேறுபட்டவர்.

**கேள்வி:** 'உத்தம: புருஷ:' என்றால் யார்? 'து', 'அந்ய:' – இவ்விரண்டு சொற்களின் கருத்து என்ன?

**பதில்:** 'உத்தம: புருஷ:' என்பது நித்யர், சுத்தர், ஞான ஸ்வரூபமானவர், விடுபட்டவர், ஸர்வ வல்லமை படைத்தவர் மற்றும் பரம அருளாளர், எல்லா கல்யாண குணங்களும் படைத்தவர், புருஷோத்தமன் ஆகிய பகவானைக் குறிக்கும். முன் சொன்ன க்ஷர, அக்ஷர புருஷர்களைக் காட்டிலும் பகவான் முற்றிலும் தனிப்பட்டவர் என்பதை 'து', 'அந்ய:' என்னும் இரு சொற்களால் குறிக்கிறார். அதாவது முன் சொன்ன க்ஷர-அக்ஷர புருஷர்களிலிருந்து முற்றிலும் வேறுபட்டவர், மிகவும் சிறந்தவர் என்று கருத்து.

**கேள்வி:** 'உலகம் மூன்றிலும் உட்புகுந்து அனைத்தையும் தாங்கிப் போஷிக்கிறார்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இக்கூற்றின் மூலம் புருஷோத்தமனின் இலக்கணம் கூறப்படுகிறது. அவர் எல்லாவற்றிற்கும் ஆதாரமானவர், எங்கும் நிறைந்தவர் பரமாத்மா. அவர் உலகமனைத்திலும் நுழைந்து புருஷர் என்று வர்ணிக்கப்படுகின்ற க்ஷரர், அக்ஷரர்கள் என்ற தத்வங்களைத் தாங்கி, எல்லா ப்ராணிகளையும் காத்துப் பேணுபவர். அவர் முன் சொன்ன இருவரைக் காட்டிலும் வேறானவர். ஆகவே புருஷோத்தமன்.

**கேள்வி:** அவர் அவ்யயன், ஈசுவரன், பரமாத்மா என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இதனாலும் புருஷோத்தமனின் இலக்கணம் கூறப்பட்டது. அவர் மூவுலகங்களிலும் உட்புகுந்திருந்த போதிலும், அவை அழிந்தாலும் அவர் என்றும் அழியாதவர்; என்றும் விகாரமற்றவர்; ஒரே ரஸமயமானவர் (ஆனந்தமயமாக இருப்பவர்); க்ஷரரையும், அக்ஷரரையும் அடக்கி ஆள்பவர்; ஈசுவரன்; ஸர்வ வல்லமை படைத்தவர்; குணாதீதர்; சுத்தர்; அனைத்துக்கும் ஆத்மா. ஆகவே அவரே புருஷோத்தமன்.

க்ஷர, அக்ஷர, ஈச்வர என்ற மூன்று தத்வங்களையும் ஶ்வேதாஶ்வதர உபநிஷத் (1/10) இவ்விதம் வர்ணிக்கிறது—

**க்ஷரம் ப்ரதா₄நமம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநாவீஶதே தே₃வ ஏக: ।**

"ப்ரதானம் என்ற ப்ரக்ருதி க்ஷரம். அதை அனுபவிப்பவர் அழியாத ஆத்மா, அக்ஷரர். இந்த ப்ரக்ருதி, ஆத்மா இரண்டையும் அடக்கி ஆள்பவர் ஒரே தேவர் – புருஷோத்தமன்."

यस्मात्क्षरमतीतोऽहमक्षरादपि चोत्तमः ।
अतोऽस्मि लोके वेदे च प्रथितः पुरुषोत्तमः ॥ १८ ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**யஸ்மாத்க்ஷரமதீதோऽஹமக்ஷராத₃பி சோத்தம: ।**

**அதோऽஸ்மி லோகே வேதே₃ ச ப்ரதி₂த: புருஷோத்தம: ॥ 18 ॥**

**யஸ்மாத்** – எக்காரணத்தினால், **அஹம்** – நான், **க்ஷரம்** – அழியக் கூடிய ஜடவர்க்கத்திற்கு, **அதீத: ச** – அப்பாற்பட்டவனாகவும், **அக்ஷராத் அபி** – அக்ஷரனான (அழியாத) ஜீவாத்மாவைக் காட்டிலும், **உத்தம:** – சிறந்தவனாகவும் உள்ளேனோ, **அத:** – அக்காரணத்தினால், **லோகே** – உலகிலும், **வேதே₃ ச** – வேதத்திலும், **புருஷோத்தம:** – புருஷோத்தமன் என, **ப்ரதி₂த: அஸ்மி** – புகழ் பெற்றுள்ளேன்.

எக்காரணத்தினால் நான் அழியக்கூடிய ஜடவர்க்கத்திற்கு அப்பாற்பட்டவனாகவும், அக்ஷரனான – அழியாத ஜீவாத்மாவைக் காட்டிலும் சிறந்தவனாகவும் உள்ளேனோ அக்காரணத்தினால் உலகிலும் வேதத்திலும் புருஷோத்தமன் எனப் புகழ் பெற்றுள்ளேன்.

**கேள்வி:** இங்கு 'அஹம்' என்ற சொல்லைக் கையாள்வதன் கருத்து என்ன?

**பதில்:** மேலே கூறப்பட்ட இலக்கணங்கள் படைத்த புருஷோத்தமன் நான்தான் என்று பகவான் கூறுகிறார். இவ்விதம் அர்ஜுனனுக்கு மிகச்சிறந்த தனது ரஹஸ்யத்தை வெளியிட்டுச் சொல்கிறார்.

**கேள்வி:** 'க்ஷரனைக்காட்டிலும் அப்பாற்பட்டவன்', 'அக்ஷரனைவிடச் சிறந்தவன் நான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "க்ஷரனைக் காட்டிலும் அப்பாற்பட்டவன் என்றால் நான் க்ஷர புருஷனுடன் தொடர்பற்றவன்; முற்றிலும் மாறுபட்டவன். 13வது அத்யாயத்தில் உடல் என்றும், க்ஷேத்ரமென்றும் கூறப்பட்ட முக்குணங்களின் கூட்டான அழியக்கூடிய ஜடவர்க்கத்தில் சிறிதுகூட ஒட்டாதவன்" என்று பொருள். அக்ஷரனைக் காட்டிலும் சிறந்தவன் என்றால் "க்ஷரத்திற்கு நான் எப்படி அப்பாற்பட்டவனோ, அதுபோல அக்ஷரபுருஷனுக்கும் அப்பாற்பட்டவன் என்று பொருள் அன்று. அக்ஷரபுருஷன் என்னுடைய அம்சமே, அழிவற்றவன், உணர்வுள்ளவன். ஆனால் அவன் ப்ரக்ருதியில் உள்ளவன் என்பதனால், அவனுக்கு நான் மேலானவன். நான் ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்டவன். அதாவது முக்குணங்களிலிருந்து விடுபட்டவன். அவன் சிற்றறிவு படைத்தவன். நான் எல்லாமறிந்தவன். அவன் ஆளப்படுபவன். நான் ஆள்கிறவன். அவன் என்னை உபாஸிக்கிறான். நான் அவனுடைய உபாஸனைக்குரியவன். அவன் சொற்ப வல்லமையே உள்ளவன். நான் ஸர்வ வல்லமை படைத்தவன். ஆகவே எல்லாவிதத்திலும் அவனைக் காட்டிலும் சிறந்தவன் நான்."

**கேள்வி:** 'யஸ்மாத்', 'அத:' என்று கூறி, நான் உலகிலும், வேதத்திலும் புருஷோத்தமன் எனப் புகழ் பெற்றவன் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'அக்காரணங்களால் நான் புருஷோத்தமன் என்பது உறுதியாயிற்று' என்பது பொருள். "மேலே சொன்ன எக்காரணங்களால் நான் க்ஷரனுக்கு அப்பாற்பட்டவனோ, அக்ஷரனைவிடச் சிறந்தவனோ, அதே காரணங்களுக்காக நான் வேதத்திலும், உலகிலும் புருஷோத்தமன் எனப் புகழ் பெற்றேன். அனைவரும் என்னைப் புருஷோத்தமன் என்றழைக்கின்றனர்" என்பது கருத்து.

**பொருத்தம்:** இவ்விதம் பகவானை புருஷோத்தமன் என்று அறிந்தவர்களின் பெருமை, இலக்கணம் இவற்றைக் கூறுகிறார்—

**यो मामेवमसम्मूढो जानाति पुरुषोत्तमम्।**
**स सर्वविद्भजति मां सर्वभावेन भारत॥ १९ ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**யோ மாமேவமஸம்மூடே₄ா ஜாநாதி புருஷோத்தமம் ।**
**ஸ ஸர்வவித்₃பஜதி மாம் ஸர்வப₄ாவேந ப₄ாரத ॥ 19 ॥**

**ப₄ாரத** – பரதகுலத்தோன்றலே! **ய:** – எந்த, **அஸம்மூ₄ட:** – ஞானி, **மாம்** – என்னை, **ஏவம்** – இவ்விதம், **புருஷோத்தமம்** – புருஷோத்தமன் (என்று), **ஜாநாதி** – (தத்வரீதியாக) அறிகிறானோ, **ஸர்வவித்** – எல்லாமறிந்த, **ஸ:** – அவன், **ஸர்வப₄ாவேந** – எல்லாவிதமாக வும், எப்போதும், **மாம்** – வாஸுதேவனும், பரமேசுவரனுமான என்னையே, **ப₄ஜதி** – வழிபடுகிறான்.

பரதகுலத்தோன்றலே! எந்த ஞானி என்னை இவ்விதம் புருஷோத்தமன் (என்று) (தத்வரீதியாக) அறிகிறானோ, எல்லாமறிந்த அவன் எல்லாவிதமாகவும், எப்போதும் வாஸுதேவனும், பரமேசுவரனுமான என்னையே வழிபடுகிறான்.

**கேள்வி:** *'ஏவம்' என்றால் என்ன பொருள்?*

**பதில்:** 'ஏவம்' என்றால் 'மேலே சொன்ன இரு ச்லோகங்களின் கருத்துப்படி' என்று பொருள்.

**கேள்வி:** *'மாம்' என்பது யாரை? அவரைப் புருஷோத்தமனாக அறிவது எப்படி?*

**பதில்:** 'மாம்' என்றால் ஸர்வவல்லமை படைத்த, அனைத்திற்கும் ஆதாரமான, எல்லா ப்ரபஞ்சத்தையும் படைத்துக் காத்துத் தன்னுள் அடக்கிக் கொள்கின்ற அனைவருக்கும் நண்பரான, அனைத்தையும் அடக்கி ஆள்கின்ற, ஸகல கல்யாண குணங்களும் நிறைந்த, பரம அருளாளரான, நல்ல நண்பனான, ஸர்வாந்தர்யாமியான, எங்கும் நிறைந்த பரமேசுவரனான என்னை என்று பொருள். மேலே சொல்லப்பட்ட இரு ச்லோகங்களில் வர்ணிக்கப்பட்டபடி க்ஷர, அக்ஷரர்களைக் காட்டிலும் சிறந்தவர், குணாதீதர், எல்லா குணங்களும் நிறைந்தவர், உருவமுள்ளவர், உருவமற்றவர், வ்யக்தர் (புலன்களுக்குப் புலப்படுபவர்), அவ்யக்தர் (புலன்களுக்குப் புலனாகாதவர்), பரம புருஷன், புருஷோத்தமன் என்று முழு நம்பிக்கையுடன் முழுமையாக ஏற்றுக் கொள்வதுதான் அவரைப் புருஷோத்தமன் என்று அறிவதாகும்.

**கேள்வி:** *'அஸம்மூட:' என்றால் யார்?*

**பதில்:** எவருடைய ஞானமானது ஸந்தேஹம், நேர்மாறாகப் பொருள் கொள்ளுதல் முதலிய குற்றங்கள் அற்றதோ, எவருக்கு மோஹம் சிறிதும் இல்லையோ, அவர் 'அஸம்மூட:' (ஞானி). என்னை ஸாதாரண மனிதனாகக் கருதாமல் ஸர்வவல்லமை படைத்த ஸாக்ஷாத் பரமேசுவரன், புருஷோத்தமன் என்று அறிதலே மெய்ஞ்ஞானமாகும் என்பதை இச்சொல் தெளிவாக்குகிறது.

**கேள்வி:** *'ஸர்வவித்' (எல்லாமறிந்தவன்) என்றால் யார்?*

**பதில்:** அறியத்தக்கவை எல்லாவற்றையும் அறிந்தவன் 'ஸர்வவித்' எனப்படுவான். உலகில் உள்ள எல்லாப் பொருட்களையும் க்ஷரன், அக்ஷரன், புருஷோத்தமன் என்று மூன்று பிரிவுகளாகப் பிரித்துச் சொல்லிவிட்டார். இவற்றில் க்ஷரனையும், அக்ஷரனையும் நன்கு புரிந்து கொண்டு அவர்களைக் காட்டிலும் மிகச் சிறந்த புருஷோத்தமனுடைய தத்வத்தை நன்கு அறிகிறவன்தான் எல்லாம் அறிந்தவன். எல்லாப் பொருட்களையும் உள்ளபடி அறிந்தவன். ஆகவே அவனை 'ஸர்வவித்' என்கிறார்.

**கேள்வி:** *புருஷோத்தமன் என்று பகவானை அறிந்து, அவரை எல்லாவிதமாகவும் பூஜிப்பது எப்படி? 'அவன் என்னை எல்லாமாகவும் வழிபடுகிறான்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** பகவானை புருஷோத்தமன் என்று புரிந்து கொண்டபின் அகில உலகிலும் பற்றை விலக்கி, எல்லா அன்புக்கும் உரியவரான பரமேசுவரனிடமே முழுமையாக அன்பு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



செலுத்துவது, புத்தியின் துணை கொண்டு பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், தத்வம், ரஹஸ்யம், லீலைகள், ஸ்வரூபம், பெருமை முதலியவற்றில் பூரண நம்பிக்கை வைப்பது, அவருடைய திருநாமம், கல்யாணகுணம், ப்ரபாவம், சரித்ரம், ஸ்வரூபம் முதலியவற்றை ச்ரத்தையுடனும், அன்புடனும் மனதில் சிந்திப்பது, காது கொடுத்துக் கேட்பது, நாவினால் கீர்த்தனம் செய்வது, கண்ணாறக் காண்பது, அவருடைய ஆணைப்படி அனைத்தையும் பகவானுடையனவே என்று அறிந்து, எங்கும் அவரே நிறைந்திருக்கிறார் என்றும் உணர்ந்து, ஆற்றவேண்டிய கடமைகளை ஆற்றி எல்லோருக்கும் நன்மை பயக்குமாறு ஸேவை செய்து இன்பமளிப்பது இவைதான் பகவானை எல்லாவிதங்களிலும் வழிபடுவது ஆகும். எல்லாமாகவும் பூஜிக்கிறார் என்று இங்கு கூறி, பகவானை புருஷோத்தமன் என்று அறிந்தவரை அடையாளம் காட்டுகிறார். பகவான் க்ஷரனுக்கு அப்பாற்பட்டவர், அக்ஷரனைவிடச் சிறந்தவர் என்று அறிந்தவர் மேற்கூறியவாறு பகவானையே இடைவிடாது வழிபடுவர். இதுதான் அவரது அடையாளம்.

**பொருத்தம்: இவ்விதம் பகவானை புருஷோத்தமன் என்றறிகின்றவருடைய பெருமையைக் கூறி, இந்த அத்யாயத்தில் கூறப்பட்டவையனைத்தும் மிகவும் ரஹஸ்யமானவையென்றும், அவற்றை அறிவதன் பயனையும் கூறி, அத்யாயத்தை நிறைவு செய்கிறார்—**

**इति गुह्यतमं शास्त्रमिदमुक्तं मयानघ।**
**एतद्बुद्ध्वा बुद्धिमान्स्यात्कृतकृत्यश्च भारत॥ २०॥**

**இதி குஹ்யதமம் ஶாஸ்த்ரமித₃முக்தம் மயாநக₄ ।**
**ஏதத்₃பு₃த்₃த்₄வா பு₃த்₃தி₄மாந்ஸ்யாத்க்ருதக்ருத்யஶ்ச ப₄ாரத ॥ 20 ॥**

**அநக₄** – பாவமற்றவனே! **ப₄ாரத** – அர்ஜுன! **இதி** – இவ்வாறு, **இத₃ம்** – இந்த, **குஹ்யதமம் ஶாஸ்த்ரம்** – மிகவும் ரஹஸ்யமாக மறைத்துப் போற்றத்தக்க சாஸ்த்ரம், **மயா** – என்னால், **உக்தம்** – கூறப்பட்டது. **ஏதத்** – இதை, **பு₃த்₃த்₄வா** – தத்வரீதியாக அறிந்து கொண்ட (மனிதன்), **பு₃த்₃தி₄மாந்** – ஞானியாகவும், **க்ருதக்ருத்ய: ச** – செய்ய வேண்டியதைச் செய்தவனாகவும், **ஸ்யாத்** – ஆகிறான்.

பாவமற்றவனே! அர்ஜுன! இவ்வாறு மிகவும் ரஹஸ்யமாக மறைத்துப் போற்றத்தக்க இந்த சாஸ்த்ரம் என்னால் கூறப்பட்டது. இதைத் தத்வரீதியாக அறிந்து கொண்ட மனிதன் ஞானியாகவும் செய்ய வேண்டியதைச் செய்தவனாகவும் ஆகிறான்."

**கேள்வி:** 'அநக' என்றழைப்பதன் பொருள் என்ன?

**பதில்:** 'அகம்' என்றால் பாவம். பாவமற்றவன் அநகன். 'உன்னிடம் பாவம் இல்லை. உன் உள்ளம் தூய்மையானது. ஆகவே நீ என்னுடைய மிகவும் ரஹஸ்யமான உபதேசத்தைக் கேட்கவும், அதை உள்ளத்தில் நிலைநிறுத்திக் கொள்ளவும் தகுதி பெற்றவன்' என்ற கருத்தில் அர்ஜுனனை பகவான் 'அநக' என்று அழைக்கிறார்.

**கேள்வி:** 'இதி' மற்றும், 'இதம்' என்ற பதத்துடன் 'ஶாஸ்த்ரம்' என்பதில், இந்த அத்யாயத்தை மட்டும் குறிப்பிடுகிறாரா? கீதை முழுவதையுமா?

**பதில்:** இது, இந்தப் பதினைந்தாவது அத்யாயத்தை மட்டும்தான் குறிப்பிடுகிறது. 'இதம் ஶாஸ்த்ரம்' என்று இந்தப் பதினைந்தாவது அத்யாயத்தையும், 'இதி' என்று அதன் முடிவையும் கூறுகிறார். இதில் மதிப்பு ஏற்படவேண்டும் என்பதற்காக இதை சாஸ்த்ரம் என்கிறார்.

**கேள்வி:** இந்த உபதேசம் உத்தமமான ரஹஸ்யம். இது 'என்னால் உனக்குச் சொல்லப்பட்டது' என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இந்த அத்யாயத்தில் ஸகுண பரமாத்மாவின் குணங்கள், ப்ரபாவங்கள், தத்வம், ரஹஸ்யம் இவை முக்யமாகக் கூறப்பட்டன. ஆகவே மிகவும் ரஹஸ்யமாகப் போற்றத்தக்கது. 'நான் யாரிடமும் இவ்விதம் என் குணம், ப்ரபாவம், தத்வம், ஐசுவர்யம் (ஈசுவரத்தன்மை) இவற்றை வெளிப்படுத்துவதில்லை. ஆகவே, நீயும் தகுதியில்லாத யாரிடமும் இந்த ரஹஸ்யத்தைச் சொல்லக் கூடாது. ஸர்வ வல்லமை படைத்த, அனைத்தும் அறிந்த பரமேசுவரன் ஆகிய என்னால் கூறப்பட்டது. இது எல்லா வேதங்களின், சாஸ்த்ரங்களின் 'பரம ஸாரமான விஷயம்' என்பது இங்கே குறிப்பு.

**கேள்வி:** *'இந்த சாஸ்த்ரத்தைத் தத்வரீதியாக அறிவது' என்றால் என்ன? அப்படி அறிந்தவன்தான் ஞானி; செய்யவேண்டியதைச் செய்து முடித்தவன் என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** இவ்வத்யாயத்தில் கூறப்பட்ட பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், தத்வங்கள், ஸ்வரூபம் முதலியவற்றை நன்கு அறிந்து கொண்டு பகவானை முன் சொன்னவிதம் ஸாக்ஷாத் புருஷோத்தமனாகவே அறிவதுதான், 'இந்த சாஸ்த்ரத்தைத் தத்வரீதியாக அறிவது' ஆகும். அப்படி அறிந்தவர் அந்தப் புருஷோத்தமனை நேரிடையாக அடையப் பெறுவர். அதைத்தான் 'ஞானியாவான்' என்று கூறுகிறார். அனைத்துக் கடமைகளையும் முழுமையாக ஆற்றி, எல்லாவற்றின் பயன்களையும் பெறுவதுதான் செய்ய வேண்டியதைச் செய்து முடிப்பது ஆகும்.

*ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे*
*श्रीकृष्णार्जुनसंवादे पुरुषोत्तमयोगो नाम पञ्चदशोऽध्यायः॥ १५ ॥*

**ஓம் தத்ஸதி₃தி ஸ்ரீமத்₃ப₄க₃வத்₃கீ₃தாஸூபநிஷத்ஸு ப்₃ரஹ்மவித்₃யாயாம் யோக₃ஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே₃ புருஷோத்தமயோகோ₃ நாம பஞ்சத₃ஶோऽத்₄யாய: ॥ 15 ॥**

**ஓம் தத் ஸத் – ப்ரம்ம வித்யை, யோக ஶாஸ்த்ரம், உபநிஷத் எனப்படும் ஸ்ரீமத்பகவத்கீதையாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலில் 'புருஷோத்தமயோகம்' எனப் பெயர் படைத்த பதினைந்தாவது அத்யாயம் நிறைவுற்றது.**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

# அத₂ ஷோட₃ஶோऽத்₄யாய:

# பதினாறாவது அத்யாயம்

## தைவாஸுரஸம்பத்விபாகயோகம்

**அத்யாயத்தின் பெயர்** இந்தப் பதினாறாவது அத்யாயத்தில் தெய்வம் என்ற சொல்லுக்கு உரியவரான பரமேசுவரனை அடைவதற்கான நற்பண்புகளும், நன்னடத்தைகளும் விளக்கப்படுகின்றன. அவற்றைக் கடைப்பிடித்தல் தெய்வ ஸம்பத் என்று கூறப்படுகிறது; தீய குணங்களும், தீய நடத்தைகளும் அஸுரர்களுடையவை என்றறிந்து அவற்றைக் களைய வேண்டுமென்பதற்காக அவற்றை 'அஸுர ஸம்பத்' என்று பிரித்துக் காட்டி விரிவாக விளக்குகிறார். ஆகவே, இந்த அத்யாயத்திற்கு 'தைவாஸுரஸம்பத்விபாகயோகம்' என்று பெயர்.

**அத்யாயச் சுருக்கம்** ச்லோகம் *1* லிருந்து *3* வரை தெய்வஸம்பத்தை அடையப் பெற்ற மனிதர்களின் இலக்கணங்களை விரிவாகக் கூறி, 4ல் அஸுர ஸம்பத்தைப் பற்றிய சுருக்கம் தந்து, 5ல் தெய்வ ஸம்பத்தின் பயன் முக்தி, அஸுர ஸம்பத்தின் பயன் பந்தம் என்றும், அர்ஜுனன் தெய்வ ஸம்பத் உடையவன் என்றும் கூறி ஆறுதலளிக்கிறார். 6ல் தெய்வ-அஸுரப் படைப்புகளைக் .குறிப்பிட்டு, 'அஸுர ஸம்பத்தைப் பற்றி விரிவாகத் தெரிந்து கொள்' என்று கூறியுள்ளார். 7 முதல் 20 வரை அஸுர இயல்புடையவர்களின் தீய எண்ணங்கள், தீய குணங்கள், தீய நடத்தைகள், அவர்களுக்கு ஏற்படும் தீய கதிகள் இவற்றை வர்ணிக்கிறார். 21ல் அஸுர ஸம்பத்திற்கு முக்யமான அம்சங்களான காமம், கோபம், லோபம் ஆகியவற்றை நரகத்தின் நுழைவாயில் என்று கூறி. 22ல் அவற்றிலிருந்து விடுபட்ட ஸாதகன் பற்றைத் துறந்து தெய்வ ஸம்பத்துக்குரிய ஸாதனைகள் மூலம் பரமகதியை அடைவான் என்று கூறுகிறார். 23ல் சாஸ்த்ர முறை மீறித் தன்னிச்சையாகக் கர்மங்களைச் செய்பவனை இகழ்ந்து, 24ல் சாஸ்த்ர முறைப்படி கடமைகளை ஆற்றவேண்டுமென்று கூறி அத்யாயத்தை முடிக்கிறார்.

முன் அத்யாயத்துடன் இவ்வத்யாயத்திற்குப் பொருத்தம்: *7/15*லும், *9/11,12*லும் அஸுர, ராக்ஷஸ இயல்புடையவர்கள் என்னைப் பூஜிப்பதில்லை, என்னை அவமதிக்கிறார்கள் என்றார். *9/13, 14*களில் தெய்வ இயல்புடைய பெரியோர்கள் "நான் எல்லா ப்ராணிகளுக்கும் முதன்மையானவன், அழிவற்றவன்' என்றறிந்து அநன்ய ப்ரேமையுடன் எல்லாவிதமாகவும் என்னை இடைவிடாது பூஜிக்கிறார்கள்" என்று சொன்னார். அதற்குள் வேறு விஷயத்தைப் பற்றிச் சொல்ல நேர்ந்துவிட்டபடியால், அங்கு 'தெய்வ ப்ரக்ருதி' என்றால் என்ன,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



'அஸுரப்ரக்ருதி' என்றால் என்ன என்ற இலக்கணம் கூற முடியவில்லை. 15/19ல் 'ஞானியான மஹாத்மா என்னைப் புருஷோத்தமன் என்றறிவார். அவர் என்னையே எல்லாவிதமாகவும் வழிபடுவார்' என்று கூறினார். இதையடுத்து இயல்பாக பகவானைப் புருஷோத்தமன் என்றறிந்து எல்லாவிதங்களிலும் அவரைப் பூஜிக்கின்ற தெய்வ ஸம்பத்துடைய மஹாத்மாக்களைப் பற்றியும், அவரை வழிபடாத அஸுர ப்ரக்ருதியுடையவர்களைப் பற்றியும் அறிய ஆவல் உண்டாகிறது. ஆகவே பகவான் இருவகையாருடைய இலக்கணங்கள், இயல்புகள் பற்றி விரிவாகக் கூறப் பதினாறாவது அத்யாயத்தை ஆரம்பிக்கிறார். இதில் முதல் மூன்று ச்லோகங்களில் தெய்வ ஸம்பத் உள்ள ஸாத்விக புருஷர்களின் இயல்பான இலக்கணங்களை விரிவாக விளக்குகிறார்—

श्रीभगवानुवाच

अभयं सत्त्वसंशुद्धिर्ज्ञानयोगव्यवस्थितिः ।
दानं दमश्च यज्ञश्च स्वाध्यायस्तप आर्जवम् ॥ १ ॥

ஸ்ரீப₄க₃வானுவாச

அப₄யம் ஸத்த்வஸம்ஶுத்₃தி₄ர்ஜ்ஞானயோக₃வ்யவஸ்தி₂தி: ।
தா₃நம் த₃மஶ்ச யஜ்ஞஶ்ச ஸ்வாத்₄யாயஸ்தப ஆர்ஜவம் ॥ 1 ॥

**ஸ்ரீப₄க₃வானுவாச** – ஸ்ரீபகவான் சொன்னார்: **அப₄யம்** – முற்றிலும் அச்சம் நீங்கியவனாக இருத்தல், **ஸத்த்வஸம்ஶுத்₃தி₄:** – அந்தக்கரணம் முற்றிலும் தூய்மை பெற்றிருத்தல், **ஜ்ஞானயோக₃வ்யவஸ்தி₂தி:** – தத்வஞானம் பெறுவதற்காக த்யானயோகத்தில் இடையறாது உறுதியாக நிலைபெற்றிருத்தல், **தா₃நம் ச** – ஸாத்விகமான தானம், **த₃ம:** – புலனடக்கம், **யஜ்ஞ:** – பகவான், தேவதைகள், பெரியோர்கள் ஆகியோருக்குரிய பூஜை, அக்னிஹோத்ரம் முதலிய நற்கார்மங்களைக் கடைப்பிடித்தல், **ஸ்வாத்₄யாய:** – வேதங்களையும், சாஸ்த்ரங்களையும் கற்றல், கற்பித்தல், பகவானுடைய நாம–குண கீர்த்தனம் செய்தல், **தப: ச** – ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பதில் ஏற்படும் துன்பங்களைப் பொறுத்தல், **ஆர்ஜவம்** – உடல், புலன்களுடன் கூடிய அந்தக்கரணங்களின் நேர்மை—

ஸ்ரீபகவான் சொன்னார்: "முற்றிலும் அச்சம் நீங்கியவனாக இருத்தல்; அந்தக்கரணம் முற்றிலும் தூய்மை பெற்றிருத்தல்; தத்வஞானம் பெறுவதற்காக த்யானயோகத்தில் இடையறாது உறுதியாக நிலை பெற்றிருத்தல்; ஸாத்விகமான தானம்; புலனடக்கம், பகவான், தேவதைகள், பெரியோர்கள் ஆகியோருக்குரிய பூஜை; அக்னிஹோத்ரம் முதலிய நற்கார்மங்களைக் கடைப்பிடித்தல்; வேதங்களையும், சாஸ்த்ரங்களையும் கற்றல், கற்பித்தல்; பகவானுடைய நாம–குண கீர்த்தனம் செய்தல்; ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பதில் ஏற்படும் துன்பங்களைப் பொறுத்தல்; உடல், புலன்களுடன் கூடிய அந்தக்கரணங்களின் நேர்மை—

**கேள்வி:** 'அபயம்' என்றால் என்ன?

**பதில்:** தனக்கு ப்ரியமானது பிரியுமோ, வேண்டாதது நேருமோ என்று அஞ்சும் மனப்பான்மைதான் பயம். புகழுக்கு இழுக்கு வருமோ, அவமானம் நேருமோ, ஏச்சு வருமோ, நோய் வருமோ, அரச தண்டனை நேருமோ, பூதம் பிசாசுகள் பிடிக்குமோ, மரணம் நேர்ந்துவிடுமோ என்று அஞ்சுவதெல்லாம் பயம். இவை முற்றிலும் இல்லாமை 'அபயம்'.

**கேள்வி:** 'ஸத்த்வ ஸம்ஶுத்தி:' என்றால் என்ன?

**பதில்:** 'ஸத்வம்' என்றால் உள்ளம். உள்ளத்தில் விருப்பு–வெறுப்பு, மகிழ்ச்சி–துயரம், மமகாரம்–அஹங்காரம், அறியாமை–பொறாமை முதலிய விகாரங்களும், பலவிதக்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



குழப்பமான எண்ணங்களும் இல்லாமல் உள்ளம் முழுமையாக மாசற்றுத் தூய்மையுடன் இருப்பதுதான் 'ஸத்த்வ ஸம்ஶுத்தி:' – உள்ளத்தின் தூய்மை (அகத்தூய்மை).

**கேள்வி:** 'ஜ்ஞாநயோக வ்யவஸ்திதி:' என்றால் என்ன?

**பதில்:** பரமாத்மாவின் ஸ்வரூபத்தை உள்ளபடியே அறிதல் 'ஜ்ஞாநம்'. அதைப் பெறுவதற்காகப் பரமாத்மாவின் த்யானத்திலேயே இடைவிடாது ஈடுபட்டிருப்பதை – 'ஜ்ஞாநயோக வ்யவஸ்திதி:' என்று அழைக்கிறார்கள்.

**கேள்வி:** 'தாநம்' என்றால் என்ன?

**பதில்:** செய்யவேண்டிய கடமை என்ற உணர்வுடன் உரிய இடம், உரிய காலம், தானம் பெறுவதற்கான தகுதி இவற்றை ஆராய்ந்து நிஷ்காமமாக உணவு, உடை, கல்வி, மருந்து முதலியவற்றை வழங்குதல் 'தாநம்' ஆகும் (17/20).

**கேள்வி:** 'தம:' என்றால் என்ன?

**பதில்:** புலன்களைப் போகப் பொருட்களிலிருந்து மீட்டுத் தன்வசத்தில் வைத்துக் கொள்வது தமம்.

**கேள்வி:** 'யஜ்ஞ:' என்றால் என்ன?

**பதில்:** பகவான், தேவதைகள், அந்தணர்கள், மஹாத்மாக்கள், அதிதிகள் (விருந்தினர்), தாய்–தந்தையர், பெரியோர்கள் ஆகியவர்களைப் பூஜிப்பது, ஹோமம் செய்வது, வைசுவதேவம் செய்வது முதலியவை எல்லாம் 'யக்ஞம்' ஆகும்.

**கேள்வி:** 'ஸ்வாத்யாய:' என்றால் என்ன?

**பதில்:** வேதத்தைக் கற்பது; விவேகம், வைராக்யம், பகவானுடைய கல்யாண குணங்கள், ப்ரபாவம், தத்வம், ஸ்வரூபம், தெய்விக லீலைகள் இவை வர்ணிக்கப்படுகின்ற சாஸ்த்ரங்கள், இதிஹாஸங்கள், புராணங்கள் முதலியவற்றைக் கற்பது, கற்பிப்பது; பகவானுடைய நாமகுணகீர்த்தனம் செய்வது – இவையெல்லாம் 'ஸ்வாத்யாயம்' ஆகும்.

**கேள்வி:** 'தப:' என்பது இங்கு எதைக் குறிக்கிறது?

**பதில்:** தனது தர்மத்தைக் கடைப்பிடிப்பதில் ஏற்படும் துன்பத்தைப் பொறுப்பதால் உள்ளத்திலும், புலன்களிலும் ஏற்படும் கஷ்டத்தைப் பொறுத்தல் 'தவம்' ஆகும். பதினேழாவது அத்யாயத்தில் உடல், சொல், மனதால் ஆகக்கூடிய தவங்கள் விளக்கப்படுகின்றன. இங்கே 'தப:' என்ற சொல்லால் குறிப்பிடுவது அதுவன்று. ஏனெனில் அங்கு அஹிம்ஸை, ஸத்யம், தூய்மை, ஸ்வாத்யாயம், நேர்மை முதலிய இலக்கணங்கள் தவத்திற்கு அங்கங்களாகக் கூறப்பட்டுள்ளன. இங்கு அவை தனியாகக் கூறப்படுகின்றன.

**கேள்வி:** 'ஆர்ஜவம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** உடல், புலன்கள், மனம் இவற்றின் நேர்மையே 'ஆர்ஜவம்'.

**अहिंसा सत्यमक्रोधस्त्यागः शान्तिरपैशुनम्।**
**दया भूतेष्वलोलुप्त्वं मार्दवं ह्रीरचापलम्॥ २॥**

***அஹிம்ஸா ஸத்யமக்ரோத₄ஸ்த்யாக₃: ஶாந்திரபைஶுநம் ।***
***த₃யா பூ₄தேஷ்வலோலுப்த்வம் மார்த₃வம் ஹ்ரீரசாபலம் ॥ 2 ॥***

**அஹிம்ஸா** – மனம், மொழி, மெய் இவற்றால் எவர்க்கும், எவ்விதமான தீங்கும் இழையாமை, **ஸத்யம்** – உள்ளம் அறிந்த உண்மையை இனிமையாக எடுத்துரைத்தல், **அக்ரோத₄:** – தனக்குத் தீங்கிழைத்தவரிடமும் கூடக் கோபமின்மை, **த்யாக₃:** – கர்மங்களைச் செய்வதில் 'நான் கர்த்தா' என்ற அபிமானமின்மை, **ஶாந்தி:** – அந்தக்கரணங்களின் ஓய்வு அதாவது அவை அலையாமல் அமைதியாக இருத்தல், **அபைஶுநம்** – ஒருவரையும் குறை,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பழி முதலியன கூறாமை, **பூ₄தேஷு** — உயிரினங்களிடத்தில், **த₃யா** — இயல்பாகத் தோன்றும் பரிவு, **அலோலுப்த்வம்** — புலன்களில் நுகர்பொருள் வந்து சேர்ந்தாலும் அவற்றில் பற்றின்றி இருத்தல், **மார்த₃வம்** — மென்மை, **ஹ்ரீ:** — உலகியல், அறநெறி இவற்றிற்குப் புறம்பான செயல்களில் வெட்கம், **அசாபலம்** — வீணான செயல்களைப் புரியாதிருத்தல்—

மனம், மொழி, மெய் இவற்றால் எவர்க்கும் எவ்விதமான தீங்கும் இழையாமை, உள்ளம் அறிந்த உண்மையை இனிமையாக எடுத்துரைத்தல், தனக்குத் தீங்கிழைத்தவரிடமும் கூடக் கோபமின்மை, கர்மங்களைச் செய்வதில் 'நான் கர்த்தா' என்ற அபிமானமின்மை, அந்தக்கரணங்களின் ஒய்வு அதாவது அவை அலையாமல் அமைதியாக இருத்தல், ஒருவரையும் குறை, பழி முதலியன கூறாமை, உயிரினங்களிடத்தில் இயல்பாகத் தோன்றும் ப்ரிவு, புலன்களில் நுகர்பொருள் வந்து சேர்ந்தாலும் அவற்றில் பற்றின்றி இருத்தல், மென்மை, உலகியல், அறநெறி இவற்றிற்குப் புறம்பான செயல்களில் வெட்கம், வீணான செயல்களைப் புரியாதிருத்தல்—

**கேள்வி:** *'அஹிம்ஸா' என்றால் என்ன?*

**பதில்:** லோபம், மோஹம், கோபம் முதலிய காரணங்களால் எந்த ப்ராணிக்கும் எப்போதும், எங்கும் அதிகப்படியாகவோ, மிதமாகவோ, குறைந்த அளவிலோ எவ்விதத் துன்பத்தையும் தான் இழைப்பது, பிறரைக் கொண்டு இழைக்கச் செய்வது, யாராவது கஷ்டமிழைத்தால் மௌனமாக அதைச் சரி என்று ஏற்பது, இவையெல்லாம் எந்த நிலையிலும் ஹிம்ஸைதான். இப்படிப்பட்ட ஹிம்ஸையை எந்தக் காரணத்திற்காகவும் மனதாலும், வாக்காலும், உடலாலும் இழைக்காமல் இருக்கவேண்டும். அதாவது பிறருக்கு மனதால் தீங்கு நினைக்கக் கூடாது. சொற்களால் யாரையும் திட்டக் கூடாது. கடுமையாகப் பேசக் கூடாது. பிறருக்குத் தீங்கு நேரும்படியாக எதையும் சொல்லக் கூடாது. உடலால் ஒருவருக்கும் தீங்கிழைத்தலோ, துன்பம் தருதலோ கூடாது. இவையெல்லாம் அஹிம்ஸையின் பல பிரிவுகள்.

**கேள்வி:** *'ஸத்யம்' என்றால் என்ன?*

**பதில்:** புலன்களாலும், உள்ளத்தாலும் எதை எப்படிக் காண்கிறானோ, கேட்கிறானோ, அனுபவிக்கிறானோ, அதை மற்றவர்களுக்குத் தெரிவிக்கும்போது அவ்வாறே கபடமின்றி உள்ளபடியே முடிந்தவரை அன்பும், இனிமையும் நிறைந்த சொற்களால் சொல்வது 'ஸத்யம்' ஆகும்.

**கேள்வி:** *'அக்ரோத:' என்பது என்ன?*

**பதில்:** இயல்பிலேயே உள்ள குறையினாலோ அல்லது பிறராலோ ஏதாவது அவமானமோ, தீங்கோ, ஏச்சோ, மனதிற்கிசையாத செயலோ நடந்தால், தீய சொற்களைக் கேட்க நேர்ந்தால் அல்லது யாராவது தவறாக நடந்து கொண்டால் மனதில் விளையும் வெறுப்புடன் கூடிய கொந்தளிப்பு அகக் கோபம் ஆகும். அதற்குப் பிறகு உடலிலும், மனதிலும், முகத்திலும், கண்களிலும் ஏற்படக்கூடிய படபடப்பு, துடிப்பு, கண் சிவப்பது அனைத்தும் அதிகரித்த கோபத்தின் ஸ்வரூபம் ஆகும். உள்ளக் கொதிப்பும், அப்படிக் கொதிப்பு ஏற்படுத்தும் மனப்பான்மையும் க்ரோதம் ஆகும். இவை அறவே இல்லாமை 'கோபமின்மை' ஆகும்.

**கேள்வி:** *'த்யாகம்' என்றால் என்ன?*

**பதில்:** குணங்கள், குண விளைவுகளில் உள்ளனவே தவிர எனக்கும் கர்மங்களுக்கும் ஸம்பந்தமில்லை என்ற எண்ணத்துடன் நான் பகவானின் கைப்பாவை. பகவான்தான் தம் விருப்பப்படி என் சொல், செயல், எண்ணங்களால் எல்லாக் கார்யங்களையும் செய்விக்கிறார். நானே தானாக எதையும் செய்யத் திறமையற்றவன். மற்றும் நான் செய்வதும் இல்லை என்ற உணர்வுடன் கர்த்தா என்ற அபிமானத்தைக் களைவதுதான் த்யாகம். இது தவிர, கடமைகளை ஆற்றும்போது அவற்றில் மமகாரம், ருசி, பயனில் கருத்து, தன்னலம் இவற்றை ஒழிப்பதும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



'த்யாகம்' எனப்படும். இப்படி ஆத்மாவின் மேன்மைக்கு ஒவ்வாத பொருட்கள், எண்ணங்கள், செயல்கள் முழுவதையும் விட்டுவிடுவது 'த்யாகம்' ஆகும்.

**கேள்வி:** 'சாந்தி' என்றால் என்ன?

**பதில்:** உலகியலைப் பற்றி அறவே சிந்தனையற்று, பதற்றமில்லாது மனதில் ஏற்படும் ஸாத்விகத் தெளிவே 'சாந்தி' (அமைதி) எனப்படும்.

**கேள்வி:** 'அபைசுநம்' என்றால் என்ன?

**பதில்:** பிறரிடம் குற்றம் குறை காண்பது; அவற்றை மக்களிடம் வெளிப்படுத்துவது; பிறரை ஏசுவது; கோள் சொல்வது – இதெல்லாம் 'பைசுநம்' ஆகும். இவை அறவே அற்றிருப்பது 'அபைசுநம்' (குறை கூறாமை).

**கேள்வி:** 'எல்லா உயிரினங்களிடமும் இயல்பாகத் தோன்றும் பரிவு' என்பது என்ன?

**பதில்:** எந்த ப்ராணியாவது துன்பப்படுவதைக் கண்டால் எவ்விதத்தில் தன்னலம் கருதாது அதன் துன்பத்தைத் தீர்ப்பது, எவ்விதத்தில் அதை ஸுகப்படுத்துவது என்ற எண்ணமே தயை. பிறருக்குத் தீங்கு விளைவிக்காமல் இருப்பது அஹிம்ஸை. பிறருக்கு ஸுகம் ஊட்டுவது தயை. இதுதான் அஹிம்ஸை, தயை இரண்டுக்கும் உள்ள வேற்றுமை.

**கேள்வி:** 'அலோலுப்த்வம்' என்றால் என்ன?

**பதில்:** புலன்கள் போகப் பொருட்களை அணுகும்போது அவற்றில் பற்று ஏற்படுவதும், பிறர் போகத்தை அனுபவிக்கும்போது அதைப் பார்த்துத் தனக்கும் அது வேண்டுமென மனதில் ஆவல் கொள்வதும் 'லோலுப்த்வம்'. இது அறவே இல்லாமை 'அலோலுப்த்வம்' ஆகும்.

**கேள்வி:** 'மார்தவம்' என்றால் என்ன?

**பதில்:** உள்ளம், உரை, செயல் இவற்றில் கடுமையின்றி மிகவும் மென்மையாக இருப்பது 'மார்தவம்'.

**கேள்வி:** 'ஹ்ரீ:' என்றால் என்ன?

**பதில்:** வேதம், சாஸ்த்ரம், உலகியல் நடப்பு இவற்றிற்குப் புறம்பாகச் செயல்படாமல் இருக்கவேண்டும் என்ற மனஉறுதி இருந்துவிட்டால், அதற்கு எதிராகச் செயல்பட நேரும்போது ஏற்படும் கூச்சம்தான் 'ஹ்ரீ:' (வெட்கம்).

**கேள்வி:** 'அசாபலம்' என்றால் என்ன?

**பதில்:** கைகால்களை ஆட்டுவது, துரும்பைக் கிள்ளுவது, பூமியைக் கிளறுவது, கருத்தில்லாமல் உளருவது, பயனில்லாத விஷயங்களைச் சிந்தித்துக் கொண்டிருப்பது இப்படிக் கைகால்கள், சொல், மனம் இவை வீணாக இயங்குவது சபலம் ஆகும். இதையே தடுமாற்றம் என்றும் கூறுவர். இது இல்லாமலிருப்பது 'அசாபலம்'. அதாவது வீணான செயல்கள் புரியாதிருத்தல்.

**तेजः क्षमा धृतिः शौचमद्रोहो नातिमानिता ।**
**भवन्ति सम्पदं दैवीमभिजातस्य भारत ॥ ३ ॥**

**தேஜ: க்ஷமா த்₄ருதி: சௌசமத்₃ரோஹோ நாதிமாநிதா ।**

**ப₄வந்தி ஸம்பத₃ம் தை₃வீமபி₄ஜாதஸ்ய ப₄ாரத ॥ 3 ॥**

**தேஜ:** – பொலிவு, **க்ஷமா** – பொறுமை, **த்₄ருதி:** – உறுதி (தாரணாசக்தி), **சௌசம்** – புறத்தூய்மை, **அத்₃ரோஹ:** – எவரிடமும் பகைமை பாராட்டாமை, **ந அதிமாநிதா** – தான் மதிக்கத்தக்கவன் என்று செருக்குக் கொள்ளாமை (இவையெல்லாம்), **ப₄ாரத** – அர்ஜுன! **தை₃வீம் ஸம்பத₃ம்** – தெய்விக ஸம்பத்துடன் (மனப்பாங்குடன்), **அபி₄ஜாதஸ்ய** – பிறந்தவர்களின் (இலக்கணங்கள்), **ப₄வந்தி** – ஆகும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொலிவு, பொறுமை, உறுதி – தாரணாசக்தி, புறத்தூய்மை, எவரிடமும் பகைமை பாராட்டாமை, தற்பெருமை கொள்ளாமை இவையெல்லாம் அர்ஜுன! தெய்விக ஸம்பத்துடன் – மனப்பாங்குடன் பிறந்தவர்களின் இலக்கணங்கள் ஆகும்.

**கேள்வி:** 'தேஜஸ்' என்றால் என்ன?

**பதில்:** சான்றோர்களின், பிறரை நல்வழிப்படுத்தும் சிறந்த சக்தி தேஜஸ் ஆகும். சிறந்த மனிதர்களின் எதிரில் போகத்தில் விருப்பமுள்ள, தாழ்ந்த மனப்பான்மையுடைய மனிதர்கூட பெரும்பாலும் தீய செயல்களில் ஈடுபடாமல், அவர்கள் சொற்படி நல்ல கர்மங்களில் ஈடுபடுவார்கள். இதுவே (பெரியோர்களின்) 'தேஜஸ்' (பொலிவு) ஆகும்.

**கேள்வி:** 'க்ஷமா' என்பது எத்தன்மையைக் குறிப்பிடுகிறது?

**பதில்:** தனக்குத் தீங்கிழைத்தவர்களுக்கு எவ்விதமான தண்டனையும் வழங்கவோ, வழங்க வைக்கவோ எண்ணம் இல்லாதிருத்தல். அவர்களைப் பழிவாங்கும் எண்ணமோ, அவர்கள் செய்த குற்றத்தைத் குற்றமென்றே கருதாமல் அதை உடன் மறந்துவிடுவது பொறுமை அல்லது 'க்ஷமா' ஆகும். கோபமின்மையில் கோபமற்று இருப்பது மட்டும்தான் உண்டு. ஆனால் பொறுமையில் ந்யாயமாகக் கொடுக்கப்படவேண்டிய தண்டனை தரும் ஆசை கூட துறக்கும் குணமும் அடங்கியுள்ளது. இதுதான் கோபமின்மைக்கும், பொறுமைக்கும் உள்ள வேறுபாடு.

**கேள்வி:** 'த்ருதி' என்றால் என்ன பொருள்?

**பதில்:** பெரிய பெரிய ஆபத்துக்கள், பயம், துயரம் வந்தாலும் சிறிதுகூடக் கலங்காமை. காமம், க்ரோதம், பயம், லோபம் முதலியவற்றினால், எவ்வகையிலும் சிறிதுகூடத் தனது தர்மத்தினின்றும், கடமையினின்றும் வழுவாமல் இருப்பது 'த்ருதி' (உறுதி) ஆகும்.

**கேள்வி:** 'சௌசம்' என்று எதைக் குறிக்கிறார்?

**பதில்:** உண்மையுடன் நேர்மையான வ்யவஹாரத்தின் மூலம் கிடைக்கும் செல்வம் சுத்தமானது. அந்த சுத்தமான செல்வத்தினால் அடையப்பட்ட உணவுப் பொருள் சுத்தமானது. எவ்விதத்திலும் தக்க முறையில் நடந்து கொள்வது சுத்தமான நடத்தை. நீர், மண் இவற்றால் உடலைச் சுத்தி செய்து கொள்வது உடல் சுத்தி. இவையெல்லாம் புறத்தூய்மை. இதைத்தான் 'சௌசம்' என்கிறார். உள்ளத்தூய்மை (அகத்தூய்மை) என்பது 'ஸத்த்வஸம்ஶுத்தி:' என்று முதல் ச்லோகத்திலேயே கூறியாகிவிட்டது.

**கேள்வி:** 'அத்ரோஹ:' என்றால் என்ன?

**பதில்:** தன்னிடம் பகை காட்டும் ப்ராணிகளிடத்திலும் சிறிதுகூட வெறுப்போ, பகையோ கொள்ளாமை 'அத்ரோஹம்' எனப்படும்.

**கேள்வி:** 'ந அதிமாநிதா' என்றால் என்ன?

**பதில்:** தான் சிறந்தவன், பெரியவன், போற்றுதலுக்குரியவன் என்று நினைப்பது; மற்றும் மரியாதை, புகழ், கௌரவம், பூஜை இவற்றில் பெரும் விருப்பம் கொள்வது; விருப்பமில்லாவிட்டாலும் அவை கிடைத்தால் பெரிதும் மகிழ்வது இவைதான் 'அதிமாநிதா' (தன்னைப் பற்றிப் பெருமையாக நினைப்பது) ஆகும். இவை அறவே இல்லாமல் இருப்பது 'ந அதிமாநிதா' ஆகும். அதாவது செருக்குக் கொள்ளாமை.

**கேள்வி:** 'தைவீஸம்பத்' என்று எதைச் சொல்கிறார்கள்?

**பதில்:** தேவன் என்பது பகவானின் பெயராகும். அவருக்கு உரியனவாயும், அவரை அடைவதற்கான ஸாதனங்களாகவும் உள்ள நற்பண்புகள், நன்னடத்தைகள் அனைத்தும் 'தெய்வ ஸம்பத்துக்கள்' ஆகும். தெய்விக ஸ்வபாவம், இயல்பு என்றும் இதற்குத்தான் பெயர்.

**கேள்வி:** 'இவை தெய்வ ஸம்பத்து உள்ளவர்களுடைய இலக்கணங்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இவ்வத்யாயத்தின் முதல் ச்லோகத்தில் ஆரம்பித்து, இந்த ச்லோகத்தின் முன் பாதி வரை இரண்டரை ச்லோகங்களில், 26 இலக்கணங்கள் கொண்ட தெய்வ ஸம்பத் என்னும் நற்பண்புகள், நன்னடத்தைகள் கூறப்பட்டன. இந்த இலக்கணங்கள் எவரிடம் இயல்பாக உள்ளனவோ அல்லது ஸாதனைகள் மூலம் அடையப் பெற்றனவோ, அவர் தெய்வ ஸம்பத் படைத்தவர்.

**பொருத்தம்:** இவ்விதம் ஏற்கத்தக்க தெய்விக ஸம்பத் உள்ள மனிதரின் இலக்கணங்களைக் கூறிவிட்டு, தவிர்க்கத்தக்க 'அஸுர ஸம்பத்' உடைய மனிதரின் இலக்கணங்களைச் சுருக்கமாகக் கூறுகிறார்—

**दम्भो दर्पोऽभिमानश्च क्रोधः पारुष्यमेव च।**
**अज्ञानं चाभिजातस्य पार्थ सम्पदमासुरीम्॥ ४॥**

**தம்பே₄ா த₃ர்போऽபி₄மாநஸ்ச க்ரோத₄: பாருஷ்யமேவ ச ।**

**அஜ்ஞாநம் சாபி₄ஜாதஸ்ய பார்த₂ ஸம்பத₃மாஸுரீம் ॥ 4 ॥**

**பார்த₂** – அர்ஜுன! **த₃ம்ப₄:** – டாம்பீகமும் (பகட்டு, ஆடம்பரம்), **த₃ர்ப:** – இறுமாப்பும், **அபி₄மாந: ச** – தற்பெருமையும், **க்ரோத₄: ச** – கோபமும், **பாருஷ்யம் ச** – கடுமையும், **அஜ்ஞாநம் ஏவ** – அஞ்ஞானமுமே, **ஆஸுரீம் ஸம்பத₃ம்** – அஸுரப் பண்புடன், **அபி₄ஜாதஸ்ய** – பிறந்தவர்களுடைய (இலக்கணங்கள் ஆகும்).

அர்ஜுன! டாம்பீகமும் (பகட்டு, ஆடம்பரம்), இறுமாப்பும், தற்பெருமையும், கோபமும், கடுமையும், அஞ்ஞானமுமே அஸுரப் பண்புடன் பிறந்தவர்களுடைய இலக்கணங்கள் ஆகும்.

**கேள்வி:** 'தம்பம்' என்றால் என்ன?

**பதில்:** மதிப்பு, தற்பெருமை, போற்றுதல், கௌரவம் இவற்றிற்காகவோ, செல்வத்தின் பேராசையாலோ, பிறரை ஏமாற்றும் எண்ணத்தினாலோ, தன்னை தர்மாத்மா, பகவானுடைய பக்தன், ஞானி, மஹாத்மா என்றெல்லாம் பறைசாற்றிக் கொள்வது; பகட்டாக தர்ம அனுஷ்டானம் செய்வது; கொடையாளிபோலக் காட்டிக் கொள்வது; பக்தி, வ்ரதம், உபவாஸம், யோகஸாதனை என்றெல்லாம் புரிவதாகக் காட்டிக் கொண்டு, எப்படியேனும் தன் கார்யத்தைச் சாதித்துக் கொள்வது 'தம்பம்' (பகட்டு) ஆகும்.

**கேள்வி:** 'தர்பம்' என்றால் என்ன?

**பதில்:** கல்வி, செல்வம், குடும்பம், ஜாதி, வயது, வலிமை, ஐசுவர்யம் முதலியவற்றினால் கர்வம் கொள்ளுதல்; பிறரைத் தாழ்வானவர் என்று கருதி அவர்களை அவமதிப்பது இவை 'தர்பம்' (இறுமாப்பு) எனப்படும்.

**கேள்வி:** 'அபிமானம்' என்றால் என்ன?

**பதில்:** தான் சிறந்தவன், பெரியவன், போற்றுதற்குரியவன் என்று நினைத்துத் தனக்கு வரும் பெருமை, புகழ், பெயரெல்லாம் தனக்குரியவைதான் என்று அவற்றை விரும்புவது, இவற்றைப் பெற்று மகிழ்வது 'அபிமானம்' (தற்பெருமை) ஆகும்.

**கேள்வி:** 'க்ரோதம்' என்றால் என்ன?

**பதில்:** தீய பழக்கத்தினாலோ, சினம் கொள்வார் சேர்க்கையாலோ, பிறர் தன்னை அவமதித்தாலோ, ஒதுக்கினாலோ, தூற்றினாலோ, மனதிற்கு விரோதமான கார்யம் நடந்தாலோ, பிறர் ஏச்சைக் கேட்டாலோ, பிறரால் ஏற்படும் தீமையைக் கண்டாலோ அல்லது இது போன்ற ஏதாவது ஒரு காரணத்தினாலோ உள்ளத்தில் ஏற்படும் வெறுப்புடன் கூடிய கொதிப்பு; அதனால் மனதில் ஏற்படும் பழிவாங்கும் எண்ணம்; உதடு துடிப்பது, முகம் பயங்கரமாக தோற்றம் ஆவது, கண் சிவப்பது, புத்தி பிசகி என்ன செய்வது என்று

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



விவேகமில்லாமல் நடப்பது முதலியவற்றில் ஏதோ ஒரு வகையில் கொதிப்புறுவதே 'க்ரோதம்' (கோபம்) எனப்படும்.

**கேள்வி:** 'பாருஷ்யம்' என்றால் என்ன?

**பதில்:** மென்மை சிறிதும் இன்மை அல்லது கடுமை – இதுதான் 'பாருஷ்யம்'. ஒருவரைத் திட்டுவது, கடுமையாகப் பேசுவது, கேலி செய்தல் ஆகியவை சொற்களால் ஏற்படும் கடுமை. பணிவின்மை உடலால் செய்யப்படும் கடுமை. பொறுமையும், தயவுமின்றிப் பழிவாங்கவும், கொடுமைப்படுத்தவும் எண்ணுவது மனதின் கடுமை.

**கேள்வி:** 'அஜ்ஞானம்' என்றால் இங்கே என்ன பொருள்?

**பதில்:** உண்மை எது, பொய் எது, தர்மம் எது, அதர்மம் எது என்ற உண்மை துலங்காமை; அவை பற்றிய தவறான தீர்மானம் செய்வது 'அஜ்ஞானம்' எனப்படும்.

**கேள்வி:** 'ஆஸுரீஸம்பத்' என்றால் என்ன? 'அஸுர ஸம்பத் உடையவனின் இலக்கணங்கள் இவை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவான் இருக்கிறார் என்பதை ஏற்காமல் பகவானிடம் பகை கொண்ட நாஸ்திகர் 'அஸுரர்'. இத்தகையோரிடம் குவிந்திருக்கும் தீய பண்புகள், தீய நடத்தைகள் 'அஸுர ஸம்பத்துகள்'. இவையனைத்தும் அஸுர ஸம்பத்தோடு கூடிய மனிதர்களின் லக்ஷணங்கள். இந்த ச்லோகத்தில் அஸுர ஸம்பத்தின் தன்மை சுருக்கமாகக் கூறப்பட்டது. இவையனைத்துமோ அல்லது ஏதேனும் ஒன்றோ, சிலவோ இருந்தாலும் அவன் அஸுர ஸம்பத்துடையவன் என்று பொருள்.

**பொருத்தம்:** இவ்விதம் தெய்வ ஸம்பத், அஸுர ஸம்பத் உடையவர்களின் இலக்கணங்களை வர்ணித்து, அவற்றின் பயன் என்னவென்றும் கூறி, அர்ஜுனனுக்கு 'நீ தெய்வ ஸம்பத் உடையவன்' என்று ஆறுதல் அளிக்கிறார்—

**दैवी सम्पद्विमोक्षाय निबन्धायासुरी मता।**
**मा शुचः सम्पदं दैवीमभिजातोऽसि पाण्डव॥५॥**

**தைவீ ஸம்பத்₃விமோக்ஷாய நிப₃ந்த₄யாஸுரீ மதா ।**

***மா ஶுச: ஸம்பத₃ம் தை₃வீமபி₄ஜாதோऽஸி பாண்ட₃வ ॥ 5 ॥***

**தை₃வீ ஸம்பத்** – தெய்விகப் பண்பு, **விமோக்ஷாய** – மோக்ஷத்திற்கும், **ஆஸுரீ** – அஸுரப் பண்பு, **நிப₃ந்த₄ாய** – பந்தத்திற்கும் (காரணமாகும் என்று), **மதா** – கருதப்படுகிறது. **பாண்ட₃வ** – அர்ஜுன! **தை₃வீம் ஸம்பத₃ம்** – (நீ) தெய்வப் பண்புடன், **அபி₄ஜாத: அஸி** – பிறந்திருக்கிறாய். **மா ஶுச:** – ஆகவே வருந்தாதே!

தெய்விகப் பண்பு மோக்ஷத்திற்கும் அஸுரப் பண்பு பந்தத்திற்கும் காரணமாகும் என்று கருதப்படுகிறது. அர்ஜுன! நீ தெய்வப் பண்புடன் பிறந்திருக்கிறாய். ஆகவே வருந்தாதே!

**கேள்வி:** 'தெய்வ ஸம்பத் முக்திக்குக் காரணம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ச்லோகம் 1 முதல் 3 வரை வர்ணிக்கப்பட்ட ஸாத்விகப் பண்புகள், நடத்தைகள் இவற்றின் தொகுப்பான தெய்வ ஸம்பத் என்பது மனிதனை ஸம்ஸாரப் பிணைப்பிலிருந்து அறவே விடுவித்து, ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவுடன் சேர்த்து வைக்கும் என வேதங்களாலும், சாஸ்த்ரங்களாலும், பெரியோர்களாலும் மதிக்கப்படுகிறது.

**கேள்வி:** 'அஸுர ஸம்பத் பந்தத்தை ஏற்படுத்தும்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ரஜோ குணமும், தமோ குணமும் கலந்துள்ள சேர்க்கையில் தமோ குணம் முக்யமாக இருக்கும்போது தீய பண்புகள், தீய நடத்தைகள் இவற்றின் தொகுப்பு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உண்டாகிறது. இவை அஸுர ஸம்பத்துக்கள். இது பற்றி 4வது ச்லோகம் சுருக்கமாகக் கூறுகிறது. மனிதனை ஸம்ஸாரத்தில் சிக்க வைக்கும். அவனைக் கீழ்நிலைக்குக் கொண்டு செல்லும். வேதங்களும், சாஸ்த்ரங்களும் இவ்வாறே கருதுகின்றன. பெரியோர்களின் கருத்தும் இதுவே.

**கேள்வி:** 'நீ தெய்வப் பண்புடன் பிறந்திருக்கிறாய், ஆகையால் வருந்தாதே' என்று அர்ஜுனனைப் பார்த்துக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கு பகவான் அர்ஜுனனுக்கு இவ்விதம் ஆறுதல் கூறுகிறார்: "நீ இயல்பாகவே தெய்வ ஸம்பத்துடன் பிறந்திருக்கிறாய். உன்னிடம் தெய்வப்பண்புகளின் இலக்கணங்கள் குடி கொண்டுள்ளன. இந்த தெய்வ ஸம்பத் ஸம்ஸாரச் சூழலிலிருந்து விடுவிப்பது. ஆகவே உனக்கு மங்களம் ஏற்படுவதில் சிறிதுகூட ஐயமில்லை. எனவே, நீ வருந்த வேண்டியதில்லை."

**பொருத்தம்:** இவ்வத்யாயத் தொடக்கத்திலும், இதற்கு முன்பும் தெய்வ ஸம்பத் பற்றி விரிவாகக் கூறினார். ஆனால் அஸுர ஸம்பத் பற்றி மிகவும் சுருக்கமாகத்தான் சொன்னார். இப்பொழுது அஸுர ஸம்பத் உடையவர்களின் இயல்பு, நடத்தை இவற்றின் விரிவான வர்ணனைக்கு பகவான் முன்னுரை கூறுகிறார்—

**द्वौ भूतसर्गौ लोकेऽस्मिन्दैव आसुर एव च।**
**दैवो विस्तरशः प्रोक्त आसुरं पार्थ मे शृणु॥ ६॥**

**த்₃வௌ பூ₄தஸர்கௌ₃ லோகேऽஸ்மிந்தை₃வ ஆஸுர ஏவ ச ।**

**தை₃வோ விஸ்தரஶ: ப்ரோக்த ஆஸுரம் பார்த₂ மே ஶ்ருணு ॥ 6 ॥**

**பார்த₂** – அர்ஜுன! **அஸ்மிந் லோகே** – இவ்வுலகில், **தை₃வ:** – தெய்வப் பண்புடையது என்றும், **ஆஸுர: ச** – அஸுரப் பண்புடையது என்றும், **பூ₄தஸர்கௌ₃** – உயிரினங்களின் படைப்பு அதாவது மனித ஸமுதாயங்கள், **த்₃வௌ ஏவ** – இருவகையாகவே உள்ளன. **தை₃வ:** – தெய்வப் பண்புடையவனைப் பற்றி இதுவரை, **விஸ்தரஶ:** – விரிவாக, **ப்ரோக்த:** – விளக்கப்பட்டுவிட்டது. **ஆஸுரம்** – அஸுர இயல்புடையவர்களைப் பற்றியும் (விரிவாக), **மே** – என்னிடம், **ஶ்ருணு** – கேட்டுக் கொள்.

அர்ஜுன! இவ்வுலகில் தெய்வப் பண்புடையது என்றும், அஸுரப் பண்புடையது என்றும் உயிரினங்களின் படைப்பு அதாவது மனித ஸமுதாயங்கள் இருவகையாகவே உள்ளன. தெய்வப் பண்புடையவனைப் பற்றி இதுவரை விரிவாக விளக்கப்பட்டுவிட்டது. அஸுர இயல்புடையவர்களைப் பற்றியும் விரிவாக என்னிடம் கேட்டுக் கொள்.

**கேள்வி:** 'பூதஸர்கௌ' என்பதற்கு மனித ஸமுதாயங்கள் என்று ஏன் பொருள் கொள்ளவேண்டும்?

**பதில்:** 'ஸர்கம்' என்றால் படைப்பு, 'பூதஸர்கம்' என்றால் ப்ராணிகளின் படைப்பு என்றுதான் பொருள். இங்கு, 'இவ்வுலகில்' என்று மனித உலகையே சுட்டிக் காண்பிக்கிறார். இந்த அத்யாயத்திலும் மனிதர்களின் இலக்கணங்கள்தான் கூறப்படுகின்றன. அதனால்தான் 'பூதஸர்கௌ' என்பதற்கு மனித ஸமுதாயம் என்று பொருள் கூறப்பட்டது.

**கேள்வி:** மனித ஸமுதாயம் இரு வகையாகவே உள்ளது என்று வலியுறுத்திக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனித ஸமுதாயம் பல தரப்பட்டதாயினும் முக்யமாக இருவகைப்படும். எல்லா வேற்றுமைகளும் இவ்விரண்டிலேயே அடங்கும் என்பது பொருள்.

**கேள்வி:** 'ஒன்று தெய்வப் பண்புடையது. மற்றொன்று அஸுரப் பண்புடையது' என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** மனித ஸமுதாயத்தில் ஸாத்விகமானவர்கள் தெய்வ இயல்புடையவர்கள். ரஜோ குணம் கலந்த தமோ குணம்மிக்கவர்கள் அஸுர இயல்புடையவர்கள். 'ராக்ஷஸீ', 'மோஹினீ' இயல்புடையவர்களும் அஸுர இயல்புள்ளவர்களுள் அடக்கம்.

**கேள்வி:** 'தெய்வப் பண்புடையவர்கள் பற்றி விரிவாகச் சொல்லியாகிவிட்டது. அஸுர இயல்புடையவர்களைப் பற்றியும் கேட்டுக் கொள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த அத்யாயத்தின் ஆரம்பம் முதல் மூன்றாவது ச்லோகம் வரையிலும், தவிர மற்ற அத்யாயங்களிலும்கூட, தெய்வ இயல்புடைய மனித ஸமுதாயத்தின் இயல்பு, நடத்தை, நடைமுறை ஆகியன விரிவாகச் சொல்லப்பட்டுவிட்டன. 'அஸுர இயல்புடையவர்களின் தன்மை, நடத்தை, நடைமுறை பற்றிச் சுருக்கமாகத்தான் சொன்னேன். அவற்றை முற்றிலும் விட்டொழிக்க வேண்டும். ஆகையால் அதையும் விரிவாகத் தெரிந்து கொள்' என்று கூறுகிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் அஸுர இயல்புடைய மனித ஸமுதாயத்தின் இலக்கணங்களைக் கவனித்துக் கேட்கும்படி அர்ஜுனனை எச்சரிக்கை செய்து தொடர்ந்து கூறுகிறார்—

**प्रवृत्तिं च निवृत्तिं च जना न विदुरासुराः।**
**न शौचं नापि चाचारो न सत्यं तेषु विद्यते॥७॥**

**ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச ஜநா ந விது₃ராஸுரா: ।**

**ந ஶௌசம் நாபி சாசாரோ ந ஸத்யம் தேஷு வித்₃யதே ॥7॥**

**ஆஸுரா:** – அஸுர இயல்புடைய, **ஜநா:** – மக்கள், **ப்ரவ்ருத்திம் ச** – செய்யத்தக்கதில் ஈடுபடுவது பற்றியும், **நிவ்ருத்திம் ச** – செய்யத்தகாததிலிருந்து விலகுவது பற்றியும், **ந விது₃:** – அறியார்கள். (ஆகவே), **தேஷு** – அவர்களிடம், **ஶௌசம்** – புறத்தூய்மை, அகத்தூய்மை (இரண்டும்), **ந** – இல்லை; **ஆசார: ச** – நன்னடத்தையும், **ந** – இல்லை; **ஸத்யம் அபி** – உண்மை பேசுவதும் கூட, **ந வித்₃யதே** – இல்லை.

அஸுர இயல்புடைய மக்கள் செய்யத்தக்கதில் ஈடுபடுவது பற்றியும், செய்யத்தகாததிலிருந்து விலகுவது பற்றியும் அறியார்கள். ஆகவே அவர்களிடம் புறத்தூய்மை, அகத்தூய்மை இரண்டும் இல்லை; நன்னடத்தையும் இல்லை; உண்மை பேசுவதும் கூட இல்லை.

**கேள்வி:** அஸுர இயல்புடைய மக்கள் செய்யத்தக்கதில் ஈடுபாடு கொள்வது பற்றியும், செய்யத்தகாததிலிருந்து விலகுவது பற்றியும் அறியார் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இவ்வுலகிலும், பரலோகத்திலும் உண்மையான மேன்மையை விளைவிக்கும் கர்மம் செய்யத்தக்கது. அவன் அச்செயலைச் செய்ய முற்பட வேண்டும். தீமை விளைவிக்கும் கர்மம் செய்யத்தகாதது. அதிலிருந்து விலகவேண்டும். அஸுர ஸ்வபாவம் உடையவர் இது செய்யத்தக்கது என்று அறிந்து ஈடுபடுவதையும், செய்யத்தகாதது என்றறிந்து அதிலிருந்து விலகுவதையும் அறியமாட்டார்கள். மனதில் தோன்றுகிறபடி நடப்பார்கள்.

**கேள்வி:** 'அவர்களிடம் ஶௌசம், ஆசாரம், ஸத்யம் இரா' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அகத்தூய்மை, புறத்தூய்மை இரண்டும் 'ஶௌசம்' எனப்படும். 13/7ன் உரையில் இது விளக்கப்பட்டது. தூய்மையைத் தரத்தக்க கர்மங்கள் 'ஆசாரம்' எனப்படும். கபடமின்றிப் பிறருக்கு நன்மை பயக்கின்ற உண்மையைப் பேசுவது 'ஸத்யம்'. 16/2ல் இது விளக்கப்பட்டது. அஸுர இயல்பு உள்ளவர்களிடம் இம்மூன்றில் ஒன்றுகூட இராது. மாறாகப் புனிதமின்மை, தீய நடத்தை, பொய் பேசுதல் இவையே இருக்கும் என்பது கருத்து.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** இந்த ச்லோகத்தின் பிற்பாதியில் மும்முறை 'ந' என்று கூறி, மறுபடியும் 'அபி' என்ற சொல்லைச் சேர்த்து எதை விளக்குகிறார்?

**பதில்:** அஸுரஸ்வபாவம் உள்ளவர்களிடம் தூய்மை இராது. அதோடுகூட நன்னடத்தையும் இராது. உண்மை பேசுவதும் கூட இருக்காது என்பது கருத்து.

**பொருத்தம்:** **அஸுர இயல்புடையவர்களிடம் விவேகம், மௌசம், நன்னடத்தை இரா என்று கூறி, இனி அவருடைய நாஸ்திகத் தன்மையையும் விளக்குகிறார்—**

**असत्यमप्रतिष्ठं ते जगदाहुरनीश्वरम्।**
**अपरस्परसम्भूतं किमन्यत्कामहैतुकम्॥ ८॥**

**அஸத்யமப்ரதிஷ்ட₂ம் தே ஜக₃தா₃ஹுரநீஶ்வரம் ।**

**அபரஸ்பரஸம்பூ₄தம் கிமந்யத்காமஹைதுகம் ॥ 8 ॥**

**ஜக₃த்** – உலகம், **அப்ரதிஷ்ட₂ம்** – ஆதாரமற்றது; **அஸத்யம்** – முற்றிலும் பொய்யானது; **அநீஶ்வரம்** – ஈசுவரன் அற்றது; **அபரஸ்பரஸம்பூ₄தம்** – தானாகவே, வெறும் ஆண்–பெண் உறவினாலேயே உண்டானது. (ஏவ – ஆகவே), **காமஹைதுகம்** – காமத்தையே அடிப்படையாகக் கொண்டதுதான். **அந்யத்** – இது தவிர வேறு, **கிம்** – என்ன (என்று), **தே** – அஸுர குணம் படைத்தவர்கள், **ஆஹு:** – கூறுகிறார்கள்.

உலகம் ஆதாரமற்றது; முற்றிலும் பொய்யானது; ஈசுவரன் அற்றது; தானாகவே, வெறும் ஆண்–பெண் உறவினாலேயே உண்டானது. ஆகவே காமத்தையே அடிப்படையாகக் கொண்டதுதான். இது தவிர வேறு என்ன என்று அஸுர குணம் படைத்தவர்கள் கூறுகிறார்கள்.

**கேள்வி:** இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

**பதில்:** இந்த ச்லோகத்தில் மனம் போனபடி வளரும் அஸுர ப்ரக்ருதி உடையவர்களுடைய கற்பனையை வர்ணிக்கிறார். அவர்கள் பின்வருமாறு நினைக்கிறார்கள்: "இந்தச் சராசரமான உலகிற்கு ஆதாரம் பகவானோ, தர்ம–அதர்மமோ அல்ல. இவ்வுலகம் எப்பொழுதும் இருக்கக்கூடியதும் அன்று. பிறப்புக்கு முன்னும், இறந்த பின்னும் ஜீவன் என்பது இருப்பதில்லை. அதைப் படைப்பவனும் கிடையாது. ஸ்ருஷ்டியில் ஏற்பாட்டைச் செய்தவரும் யாருமில்லை. அடக்கி ஆள்பவனான ஈசுவரனும் கிடையாது. இந்தச் சராசர உலகம் ஆண், பெண் உறவினால் மட்டுமே உண்டானது. ஆகவே காமம்தான் ப்ரபஞ்சத்திற்குக் காரணம். இதைத் தவிர வாழ்வில் வேறு பயன் கிடையாது."

**பொருத்தம்:** **இப்படி நாஸ்திகக் கொள்கை உள்ளவர்களின் இயல்பு, நடத்தைப் பற்றி இனி நான்கு ச்லோகங்களில் கூறுகிறார்—**

**एतां दृष्टिमवष्टभ्य नष्टात्मानोऽल्पबुद्धयः।**
**प्रभवन्त्युग्रकर्माणः क्षयाय जगतोऽहिताः॥ ९॥**

**ஏதாம் த்₃ருஷ்டிமவஷ்டப்₄ய நஷ்டாத்மாநோऽல்பபு₃த்₃த₄ய: ।**

**ப்ரப₄வந்த்யுக்₃ரகர்மாண: க்ஷயாய ஜக₃தோऽஹிதா: ॥ 9 ॥**

**ஏதாம்** – இந்த, **த்₃ருஷ்டிம்** – தவறான கருத்துக்களை, **அவஷ்டப்₄ய** – பற்றிக் கொண்டு, **நஷ்டாத்மாந:** – எவர்களுடைய இயல்பு சீரழிந்துவிட்டதோ, **அல்பபு₃த்₃த₄ய:** – எவர்களுடைய புத்தி மந்தமாகிவிட்டதோ, **அஹிதா:** – எவர்கள் அனைவருக்கும் தீமையையே நினைப்பவர்களோ, **உக்₃ரகர்மாண:** – கொடுமையான செயல்கள் புரிகின்றவர்களோ (அவர்கள்), **ஜக₃த:** – உலக, **க்ஷயாய** – நாசத்திற்காகவே, **ப்ரப₄வந்தி** – முனைகிறார்கள்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இந்தத் தவறான கருத்துக்களைப் பற்றிக் கொண்டு எவர்களுடைய இயல்பு சீரழிந்து விட்டதோ, எவர்களுடைய புத்தி மந்தமாகிவிட்டதோ, எவர்கள் அனைவருக்கும் தீமையையே நினைப்பவர்களோ, கொடுமையான செயல்கள் புரிகின்றவர்களோ அவர்கள் உலக நாசத்திற்காகவே முனைகிறார்கள்.

**கேள்வி:** 'இந்தத் தவறான கருத்துக்களைப் பற்றிக் கொண்டு' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அஸுர இயல்புடையவர்களுடைய எல்லாச் செயல்களும் இந்த நாஸ்திக வாதத்தின் அடிப்படையில் எழுந்தவை என்று பொருள்.

**கேள்வி:** 'நஷ்டாத்மாந:', 'அல்பபுத்தய:', 'அஹிதா:', 'உக்ர கர்மாண:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** நாஸ்திகக் கொள்கையாளர்கள் 'ஆத்மா' என்ற ஒன்று உள்ளதாக ஏற்பதில்லை. உடலையே நான் என நினைத்து உலகியலையே உண்மை என நம்புபவர்கள். அதனால் அவர்களுடைய இயல்பு சீரழிந்து விடுகிறது. நல்ல செயல்களில் அவர்களுக்கு ஈடுபாடு ஏற்படுவதில்லை. அவர்களுடைய புத்தியும் பெரிதும் மழுங்கிவிடுகிறது. எதையும் சிற்றின்ப நோக்கில் தீர்மானிப்பவர்கள். எதையும் ஸுகபோகங்களுக்காகவே செய்பவர்கள். அவருடைய மனம் எப்பொழுதும் பிறருக்குத் தீமை செய்வதைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கும். அதனால் தமக்கும் தீமையையே வரவழைத்துக் கொள்வார்கள். எண்ணம், சொல், செயல்களால் சராசர ஜீவன்களை அச்சுறுத்துவதும், துன்பம் இழைப்பதும், நாசம் செய்வதுமான மிகப் பெரும் பயங்கரமான செயல்களில் ஈடுபடுவார்கள்.

**கேள்வி:** 'அவர்கள் உலக நாசத்திற்காகவே முனைகிறார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேலே சொல்லப்பட்ட வகையினர் தம் வாழ்வில் புத்தி, மனம், சொல், உடல் இவற்றால் எவற்றைச் செய்தாலும், அவையெல்லாம் சராசரமான உலகிற்குத் துன்பம் விளைவிப்பதாகவே – நாசம் அளிப்பதாகவே அமையும். இதைத்தான் அவர்களுடைய திறமையெல்லாம் உலக நாசத்திற்கே பயன்படும் என்கிறார்.

**काममाश्रित्य दुष्पूरं दम्भमानमदान्विाः ।**
**मोहाद्गृहीत्वासद्ग्राहान्प्रवर्तन्तेऽशुचिव्रताः ॥१०॥**

**காமமாஸ்ரித்ய து₃ஷ்பூரம் த₃ம்ப₄மாநமத₃ாந்விதா: ।**

**மோஹாத்₃க்₃ருஹீத்வாஸத்₃க்₃ராஹாந்ப்ரவர்தந்தேऽஶுசிவ்ரதா: ॥ 10 ॥**

**த₃ம்ப₄மாந மத₃ாந்விதா:** – ஆடம்பரம், தற்பெருமை, மதம் (திமிர்) இவற்றுடன் கூடியவர்களாக, **து₃ஷ்பூரம்** – (எவ்வகையிலும்) பூர்த்தி செய்யமுடியாத, நிறைவேறாத, **காமம்** – ஆசையை, **ஆஸ்ரித்ய** – பற்றிக் கொண்டு, **மோஹாத்** – அஞ்ஞானத்தினால், **அஸத்₃க்₃ராஹாந்** – பொய்யான கருத்துக்களை, **க்₃ருஹீத்வா** – ஏற்றுக் கொண்டு, **அஶுசிவ்ரதா:** – தூய்மையற்ற செயல்களையே மேற்கொண்டு, **ப்ரவர்தந்தே** – (உலகியலில்) நடந்து கொள்கிறார்கள்.

ஆடம்பரம், தற்பெருமை, மதம் (திமிர்) இவற்றுடன் கூடியவர்களாக, எவ்வகையிலும் பூர்த்தி செய்ய முடியாத நிறைவேறாத ஆசையைப் பற்றிக் கொண்டு, அஞ்ஞானத்தினால் பொய்யான கருத்துக்களை ஏற்றுக் கொண்டு, தூய்மையற்ற செயல்களையே மேற்கொண்டு உலகியலில் நடந்து கொள்கிறார்கள்.

**கேள்வி:** 'தம்பமாநமதாந்விதா:' என்றால் யாவர்?



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Srī V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** மதிப்பு, செல்வம், போற்றுதல், புகழ் முதலியவற்றைத் தான் ஸாதித்துக் கொள்வதற்காக எதை எப்படிச் செய்தால் பெருமை என்ற தோற்றம் ஏற்படுமோ, உண்மையில் இவற்றை அளிக்கக் கூடிய பண்புகள் தன்னிடம் இல்லாவிட்டாலும் இருப்பதாகக் காட்டிக் கொள்ளுகிற மனப்பான்மை 'தம்பம்' ஆகும். தனக்கு ஏதோ பெருமை உள்ளதாகக் கர்வம் கொள்வது 'மாநம்'. அழகு, குணம், ஜாதி, செல்வம், கல்வி, பதவி, பணம், மக்கட்செல்வம் இவற்றினால் ஏற்படும் திமிர் 'மதம்' ஆகும். அஸுர இயல்பு உடையவர்களுக்கு இந்த ஆடம்பரம், தற்பெருமை, மதம் உண்டு என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'துஷ்பூரம் காமம்' என்பது என்ன? அதை மேற்கொள்ளுதல் என்று எதைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** உலகியலில் விதவிதமான போகங்களை அனுபவிக்க வேண்டும் என்ற விருப்பம் இருக்கும். ஆனால் அது எவ்விதத்திலும் நிறைவேறாமல் போகலாம். அதுதான் நிறைவேறாத ஆசை. எவ்வளவு அனுபவித்தாலும் போதாது என்று மேலும் அவற்றை நிறைவேற்றிக் கொள்ள மனதில் பிடிவாதம் கொள்வதுதான் அதை மேற்கொள்ளுதல் ஆகும்.

**கேள்வி:** 'அஞ்ஞானத்தினால் பொய்யான கருத்துக்களை ஏற்றுக்கொள்வது' என்றால் என்ன?

**பதில்:** அஞ்ஞானத்திற்கு ஆட்பட்டு, சாஸ்த்ரங்களுக்கு விரோதமான முடிவுகளைக் கற்பனை செய்து கொண்டு அவற்றைப் பிடிவாதமாக ஏற்றுக் கொள்வது என்று பொருள்.

**கேள்வி:** 'அஶுசிவ்ரதா:' என்றால் என்ன கருத்து?

**பதில்:** அவர்களின் உணவு–நடையுடை பாவனை, பழக்க–வழக்கம், கொடுக்கல்–வாங்கல், தொழில்–வாணிகம் இவையனைத்துமே சாஸ்த்ர முறை மீறி இருக்கும். அத்தகையவர்களைத்தான் தூய்மையற்ற செயல்களையே மேற்கொண்டவர்கள் என்கிறார்.

**கேள்வி:** 'ப்ரவர்தந்தே' என்றால் என்ன பொருள்?

**பதில்:** 'அஞ்ஞானத்தினால் மேலே கூறப்பட்ட தீய நடவடிக்கைகளில் ஈடுபடுவார்கள்; உலகில் தம் விருப்பப்படி நடந்து கொள்வார்கள்' என்று பொருள்.

**चिन्तामपरिमेयां च प्रलयान्तामुपाश्रिताः ।**
**कामोपभोगपरमा एतावदिति निश्चिताः ॥ ११ ॥**

**சிந்தாமபரிமேயாம் ச ப்ரலயாந்தாமுபாஶ்ரிதா: ।**
**காமோபபோ₄க₃பரமா ஏதாவதி₃தி நிஶ்சிதா: ॥ 11 ॥**

**ப்ரலயாந்தாம்** – மரணகாலம் வரை தொடர்கின்ற, **அபரிமேயாம்** – எண்ணற்ற, **சிந்தாம்** – கவலைகளை, **உபாஶ்ரிதா:** – பற்றிக் கொண்டு, **காமோபபோ₄க₃பரமா: ச** – போகங்களை அனுபவிப்பதையே நாட்டமாகக் கொண்டவர்களாகவும், **ஏதாவத்** – ஸுகமெல்லாம் இவ்வளவுதான், **இதி நிஶ்சிதா:** – என்ற தீர்மானம் கொண்டவர்களாகவும் இருக்கிறார்கள்.

மரணகாலம் வரை தொடர்கின்ற எண்ணற்ற கவலைகளைப் பற்றிக்கொண்டு போகங்களை அனுபவிப்பதையே நாட்டமாகக் கொண்டவர்களாகவும் ஸுகமெல்லாம் இவ்வளவுதான் என்ற தீர்மானம் கொண்டவர்களாகவும் இருக்கிறார்கள்.

**கேள்வி:** 'மரண காலம் வரை தொடர்கின்ற எண்ணற்ற கவலைகளைப் பற்றிக் கொண்டு' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அஸுர இயல்புடைய மனிதர்கள் போக ஸுகத்திற்காக இத்தகைய எண்ணற்ற கவலைகளுக்கு ஆட்படுகிறார்கள். வாழ்வு முழுவதும் அவை தொடர்கின்றன, முடிவதில்லை.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கடைசி மூச்சு வரை இருந்து கொண்டு, எண்ணிக்கையோ, எல்லையோ காண முடியாதவாறு வளர்ந்துவிடுகின்றன.

**கேள்வி:** 'போகங்கள் நுகர்வதையே நாட்டமாகக் கொண்டு இவ்வளவுதான் ஸுகம் என்றும் எண்ணுகிறார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** போகங்களை நுகர்வதும், உலகியல் பொருட்களைச் சேர்ப்பதும், அவற்றை அனுபவிப்பதும்தான் அவர்தம் வாழ்க்கைக் குறிக்கோள். அதிலேயே ஆழ்ந்து விடுவார்கள். ஸுகம் என்பது போகங்களை அனுபவிப்பதுதான் என்று முடிவு செய்துவிடுவார்கள்.

**आशापाशशतैर्बद्धाः कामक्रोधपरायणाः ।**
**ईहन्ते कामभोगार्थमन्यायेनार्थसञ्चयान् ॥ १२ ॥**

**ஆஶாபாஶஶதைர்ப₃த்₃தா₄: காமக்ரோத₄பராயணா: ।**
**ஈஹந்தே காமபோ₄கா₃ர்த₂மந்யாயேநார்த₂ஸஞ்சயாந் ॥ 12 ॥**

***ஆஶா பாஶ ஶதை:*** – ஆசையாகிற நூற்றுக்கணக்கான கயிறுகளால், ***ப₃த்₃தா₄:*** – பிணைக்கப்பட்டவர்களாக, ***காம க்ரோத₄ பராயணா:*** – ஆசையையும், சினத்தையுமே பற்றுக்கோடாகக் கொண்டு, ***காமபோ₄கா₃ர்த₂ம்*** – சிற்றின்ப போகங்களை அனுபவிப்பதற்காக, ***அந்யாயேந*** – நீதிக்குப் புறம்பான முறைகளில், ***அர்த₂ஸஞ்சயாந்*** – செல்வம் முதலியவற்றைத் திரட்டுவதிலேயே, ***ஈஹந்தே*** – முயற்சி செய்கிறார்கள்.

ஆசையாகிற நூற்றுக்கணக்கான கயிறுகளால் பிணைக்கப்பட்டவர்களாக ஆசையையும், சினத்தையுமே பற்றுக்கோடாகக் கொண்டு சிற்றின்ப போகங்களை அனுபவிப்பதற்காக நீதிக்குப் புறம்பான முறைகளில் செல்வம் முதலியவற்றைத் திரட்டுவதிலேயே முயற்சி செய்கிறார்கள்.

**கேள்வி:** 'ஆசைகளாகிற நூற்றுக்கணக்கான கயிறுகளால் பிணைக்கப்பட்டு' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அஸுரத்தன்மை படைத்தவர்களின் மனதில் சிற்றின்ப போகங்களைப் பற்றிப் பலவித கற்பனைகள் தோன்றுகின்றன. அக்கற்பனைகளில் எழுந்த அந்த ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காகப் பற்பல ஆசைகளில் ஈடுபடுவார்கள். அவர்கள் மனம் ஒரு நேரம் ஏதோ ஒரு பொருளிலும், மறுநேரம் வேறு ஒன்றிலும் இழுக்கப்படுகிறது. இப்படி ஆசைத்தளைகள் பல இறுக்கிக் கொள்வதால் அவர்கள் அவற்றிலிருந்து விடுபடுவதில்லை. இதுதான் பல ஆசைக் கயிறுகளால் பிணைக்கப்பட்டு என்பதன் பொருள்.

**கேள்வி:** 'காமக்ரோதபராயணா:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** அந்த ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காக பகவானையோ, மற்ற தெய்வத்தையோ நாடுவதும் இல்லை அல்லது நல்ல கர்மத்தையோ, நல்ல எண்ணத்தையோ கைக்கொள்வதுமில்லை. காமத்தையும், க்ரோதத்தையும் மட்டும் பற்றிக் கொள்கிறார்கள். இதைத்தான் காமத்திற்கும், க்ரோதத்திற்கும் ஆட்பட்டவர்கள் என்கிறார்.

**கேள்வி:** 'சிற்றின்ப போகங்களுக்காகவே நீதிக்குப் புறம்பான முறைகளில் செல்வம் சேர்க்கிறார்கள்' என்றால் என்ன கருத்து?

**பதில்:** சிற்றின்பங்களை நுகரவேண்டும் என்பதற்காகக் காமத்திற்கும், கோபத்திற்கும் ஆட்பட்டு, திருட்டுப் புரட்டு, கொள்ளை, பொய், கபடம், வஞ்சனை, பகட்டு, அடிதடி, நயவஞ்சகம், சூதாட்டம், ஏமாற்று வேலை, விஷம் வைப்பது, பொய் வழக்குத் தொடுப்பது, அச்சுறுத்துவது போன்ற நெறிமுறைகளுக்குப் புறம்பான முறைகள் மூலம் பிறருடைய செல்வத்தைக் கவர்வதுதான் ஸுகபோகத்திற்காக நீதிக்குப் புறம்பான முறையில் செல்வம் சேர்ப்பது என்பதன் கருத்து.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொருத்தம்: இந்த நான்கு ச்லோகங்களில் அஸுரத்தன்மை படைத்தவர்களின் இலக்கணங்கள், நடத்தை பற்றிச் சொன்னார். இனி வரும் நான்கு ச்லோகங்களில் அஹங்காரம், மமகாரம், மோஹம் இவை மேலிட்டு அவர்கள் தீட்டும் திட்டங்களை விவரித்து, அவற்றால் அவர்கள் வீணாக அழிவதை விளக்குகிறார்—

इदमद्य मया लब्धमिमं प्राप्स्ये मनोरथम्।
इदमस्तीदमपि मे भविष्यति पुनर्धनम्॥ १३॥

இத3மத்3ய மயா லப்3த4மிமம் ப்ராப்ஸ்யே மநோரத2ம் ।
இத3மஸ்தீத3மபி மே ப4விஷ்யதி புநர்த4நம் ॥ 13 ॥

மயா — என்னால், அத்3ய — இன்று, இத3ம் — இது, லப்3த4ம் — அடையப்பட்டது. (மேலும்), இமம் — இந்த, மநோரத2ம் — விருப்பத்தையும், ப்ராப்ஸ்யே — பூர்த்தி செய்து கொள்வேன் (அடைந்துவிடுவேன்). மே — எனக்கு, இத3ம் — இவ்வளவு, த4நம் — செல்வம், அஸ்தி — உள்ளது. புந: அபி — மேலும், இத3ம் — இவ்வளவு, ப4விஷ்யதி — கிடைக்கப் போகிறது என்று அவர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

என்னால் இன்று இது அடையப்பட்டது. மேலும் இந்த விருப்பத்தையும் பூர்த்தி செய்து கொள்வேன். எனக்கு இவ்வளவு செல்வம் உள்ளது. மேலும் இவ்வளவு கிடைக்கப் போகிறது என்று அவர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

கேள்வி: இந்த ச்லோகத்தின் கருத்து என்ன?

பதில்: 'மநோரதம்' என்றால் மனைவி–மக்கள், செல்வம், நிலம், வீடு, மதிப்பு, பெருமை முதலிய மனதில் இருக்கக்கூடிய விருப்பங்கள். அஸுரத்தன்மை படைத்தவர்கள் அஹங்காரம் மேலிட்டுப் பலவிதமாக மனக்கோட்டை கட்டுவர் – "நான் விரும்பிய இந்தப் பொருளை நானாகவே என் சொந்த முயற்சிகளினால் அடைந்து விட்டேன். அடுத்து மனம் விரும்புகிற மற்றொரு பொருளையும் என் முயற்சியினால் அடைந்தே தீருவேன். என்னிடம் இவ்வளவு செல்வமும், அதிகாரமும் சேர்ந்துவிட்டன. இனி இவ்வளவு சேர்ந்துவிடும்" என்றெல்லாம் மேலும் திட்டம் தீட்டுவர்.

असौ मया हतः शत्रुर्हनिष्ये चापरानपि।
ईश्वरोऽहमहं भोगी सिद्धोऽहं बलवान्सुखी॥ १४॥

அஸௌ மயா ஹத: ஶத்ருர்ஹநிஷ்யே சாபராநபி ।
ஈஶ்வரோऽஹமஹம் போ4கீ3 ஸித்3தோ4ऽஹம் ப3லவாந்ஸுகீ2 ॥ 14 ॥

அஸௌ — இந்த, ஶத்ரு: — பகைவன், மயா — என்னால், ஹத: — கொல்லப்பட்டான். ச — மேலும், அபராந் அபி — மற்றவர்களையும், அஹம் — நான், ஹநிஷ்யே — கொல்வேன். அஹம் — நானே, ஈஶ்வர: — ஈசுவரன். போ4கீ3 — செல்வத்தை அனுபவிப்பவன். அஹம் — நான், ஸித்3த4: — எல்லா ஸித்திகளையும் பெற்றவன்; ப3லவாந் — வலிமை மிக்கவன்; ஸுகீ2 — ஸுகமுடையவன்.

இந்தப் பகைவன் என்னால் கொல்லப்பட்டான். மேலும் மற்றவர்களையும் நான் கொல்வேன். நானே ஈசுவரன். செல்வத்தை அனுபவிப்பவன். எல்லா ஸித்திகளையும் பெற்றவன்; வலிமை மிக்கவன்; ஸுகமுடையவன்.

கேள்வி: 'என்னால் இந்தப் பகைவன் கொல்லப்பட்டான். மற்ற பகைவர்களையும் கொல்வேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** சிற்றின்பமே வாழ்க்கையின் குறிக்கோள் என்று நினைக்கும் அஸுரத் தன்மை படைத்தவர்கள் காமத்திற்கும், கோபத்திற்கும் ஆட்பட்டவர்கள். ஈசுவரன், தர்மம், கர்மபலன் இவற்றில் சிறிதுகூட நம்பிக்கை அற்றவர்கள். அதனால் அஹங்கார மதம் பிடித்து 'உலகில் என் வழியில் குறுக்கே நிற்க எவனால் இயலும்? என்னுடன் பகைத்துக் கொண்டு எவன் உயிர் வாழ முடியும்' என்று நினைக்கிறார்கள். இப்படிக் கோபமும், கர்வமும் மிகுந்து கொடுமையாகப் பேசுவார்கள். "அவ்வளவு பெரிய பலசாலி, உலகப் புகழ் பெற்ற பெருமையுடையவன் இருந்தானே, அவன் என்னிடம் பகை பாராட்டினான். அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கும்போதே நான் அவனை யமபுரிக்கு அனுப்பிவிட்டேன். அது மட்டுமல்ல. இனி என்னை எவன் பகைத்துக் கொண்டாலும், அவன் எவ்வளவு பலசாலியாக இருந்தாலும் அவனை மிக எளிதாக கொன்று தீர்த்து விடுவேன்" என்பார்கள் – இதுதான் கருத்து.

**கேள்வி:** 'நானே ஈசுவரன். நானே செல்வத்தை அனுபவிப்பவன். நானே எல்லா வெற்றிகளையும் பெற்றவன். வலிமைமிக்கவன். ஸுகமுடையவன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இப்படியெல்லாம் கூறுவதற்குக் காரணம் அஹங்காரமும், தற்பெருமையும். அதனால் 'உலகில் என்னைக் காட்டிலும் பெரியவன் யார்? யாரை வேண்டுமானாலும் நான் கொல்வேன். காப்பாற்றுவேன். எவனையும் தூக்கி எறிவேன். அரவணைப்பேன்' என்று நினைக்கிறார்கள். மேலும் கர்வம் தலைக்கேறிக் கூறுவார்கள். "அடே! நான் முற்றிலும் சுதந்திரம் உள்ளவன். அனைத்தும் என் கையில் அடக்கம். என்னைக் காட்டிலும் அதிகப் பணக்காரன் யார்? அனைத்து ஐசுவர்யங்களும் படைத்தவன் நானே! அனைத்து ஈசுவரர்களுக்கும் ஈசுவரன் நானே. பரமபுருஷனே நான்தான். அனைவரும் என்னையே வணங்கவேண்டும். வெறும் செல்வத்தைக் குவித்து வைத்தவன் மட்டுமல்ல. அந்த ஐசுவர்யத்தை அனுபவித்துக் கொண்டும் இருக்கிறேன். எனக்கு எந்தவிதத்திலும் தோல்வியே கிடையாது. நான் கை உயர்த்தினால் அங்கு வெற்றி என்னைத் தொடரும். என் வாழ்க்கை முழுவதிலும் நான் நினைத்ததெல்லாம் எனக்குக் கிடைத்துவிட்டன. நாளை என்ன நடக்கப் போகிறது என்பதும் எனக்குத் தெரியும். என்னிடம் எதையும் யாரும் ஒளிக்க முடியாது. இது மட்டுமன்று. நான் மிகவும் பலசாலி. என் உடல் வலிமையும், மன வலிமையும் உதவியாகப் பெற்று, அதன் மூலம் மற்றவரும் உலகினையே வெற்றி கொள்ளமுடியும். ஆகவே நான் ஸுகமாக இருக்கிறேன். உலகில் உள்ள ஸுகங்கள் என் காலடியில் காத்திருக்கின்றன, காத்துக் கொண்டுமிருக்கும்" என்ற ரீதியில் அமைந்த ஆணவம் நிறைந்தவர்களின் பேச்சைக் குறிப்பிடுகிறார் பகவான்.

**आढ्योऽभिजनवानस्मि कोऽन्योऽस्ति सदृशो मया।**
**यक्ष्ये दास्यामि मोदिष्य इत्यज्ञानविमोहिताः॥ १५॥**
**अनेकचित्तविभ्रान्ता मोहजालसमावृताः।**
**प्रसक्ताः कामभोगेषु पतन्ति नरकेऽशुचौ॥ १६॥**

**ஆட்₄யோऽபி₄ஜநவாநஸ்மி கோऽந்யோऽஸ்தி ஸத்₃ருஶோ மயா ।**
**யக்ஷ்யே த₃ாஸ்யாமி மோதி₃ஷ்ய இத்யஜ்ஞாநவிமோஹிதா: ॥ 15 ॥**
**அநேகசித்தவிப்₄ராந்தா மோஹஜாலஸமாவ்ருதா: ।**
**ப்ரஸக்தா: காமபே₄ாகே₃ஷு பதந்தி நரகேऽஶுசௌ ॥ 16 ॥**

**ஆட்₄ய:** – (நான்) செல்வந்தன், **அபி₄ஜநவாந்** – பெரிய குடும்பத்தை உடையவன் (ஆக), **அஸ்மி** – இருக்கிறேன். **மயா** – எனக்கு, **ஸத்₃ருஶ:** – நிகரானவன், **அந்ய: க:** – வேறு எவன், **அஸ்தி** – இருக்கிறான்? **யக்ஷ்யே** – யாகம் செய்யப் போகிறேன்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**தா₃ஸ்யாமி** – தானம் அளிக்கப் போகிறேன், **மோதி₃ஷ்யே** – இன்பத்தில் திளைக்கப் போகிறேன். **இதி** – என்று இவ்விதம், **அஜ்ஞாநவிமோஹிதா:** – அஞ்ஞானத்தினால் மயக்கமுற்று, **அநேகசித்தவிப்₄ராந்தா:** – பலவிதமாகத் திரிகின்ற மனமுடையவர்களாக, **மோஹ ஜால ஸமாவ்ருதா:** – மோஹ வலையில் சிக்கியவர்களாக, **காமபோ₄கே₃ஷு** – விஷய போகங்களில், **ப்ரஸக்தா:** – ஈடுபட்டவர்களான (அஸுர குணமுடையவர்கள்), **அஶுசௌ நரகே** – தூய்மையற்ற பாழ்நரகத்தில், **பதந்தி** – வீழ்கிறார்கள்.

நான் செல்வந்தன்; பெரிய குடும்பத்தை உடையவன்; எனக்கு நிகரானவன் வேறு எவன் இருக்கிறான்? யாகம் செய்யப் போகிறேன்; தானம் அளிக்கப் போகிறேன்; இன்பத்தில் திளைக்கப் போகிறேன் என்று இவ்விதம் அஞ்ஞானத்தினால் மயக்கமுற்றுப் பலவிதமாகத் திரிகின்ற மனமுடையவர்களாக மோஹ வலையில் சிக்கியவர்களாக விஷய போகங்களில் ஈடுபட்டவர்களான அஸுர குணமுடையவர்கள் தூய்மையற்ற பாழ்நரகத்தில் வீழ்கிறார்கள்.

**கேள்வி:** *'நான் பணம் படைத்தவன்; சுற்றம் படைத்தவன். எனக்கு நிகர் யார்?' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** இதனால் செல்வம், சுற்றம் காரணமாக அஸுரத்தன்மை படைத்தவர்களுக்கு ஏற்படும் கர்வம் தெளிவாக்கப்படுகிறது. அஸுரத்தன்மை படைத்தவர்கள் அஹங்காரம் மிகுந்து நம்முடைய செல்வமென்ன? நம்முடைய சுற்றமென்ன? நண்பர்கள், உறவினர்கள், துணைவர்கள், பின் பற்றுபவர்கள், கூட இருப்பவர்கள் எத்தனை பேர்! ஒரு குரல் கொடுத்தால் எண்ணற்ற மனிதர்கள் நமக்குத் துணைவரத் தயாராக இருக்கிறார்கள். இவ்வளவு செல்வமும், ஆள்கட்டும் உள்ள நமக்கு நிகரானவர் யார்? ஒருவருமில்லை என்று நினைப்பார்கள்.

**கேள்வி:** *'யாகம் செய்வேன், தானம் அளிப்பேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** அவர்களுக்கு யாகம் செய்வது பற்றியும், தானம் கொடுப்பது பற்றியும் எவ்வளவு தற்பெருமை உள்ளது என்பது இதன் மூலம் விளங்குகிறது. அஸுரத்தனம் படைத்தவர் உண்மையில் ஸாத்விகமாக யாகம் செய்வதோ, தானம் அளிப்பதோ இல்லை; அப்படிச் செய்ய விரும்புவதும் இல்லை. பிறரிடம் தம் பெருமையைக் காட்டிக் கொள்வதற்காகவே யாகம், தானம் என்று பறைசாற்றிக் கொண்டு தற்பெருமையை வெளிப்படுத்துகிறார்கள். 'நாம் இந்த யாகம் செய்வோம். தாராளமாக தானம் அளிப்போம். நம்மைப்போல தானம் அளிப்பவரோ, யாகம் செய்பவரோ யார்' என்று பறைசாற்றுவார்கள்.

**கேள்வி:** *'நான் இன்பத்தில் திளைப்பேன்' என்றால் என்ன பொருள்?*

**பதில்:** இதன் மூலம் தம் ஸுகம் பற்றி அவர்களுக்கு உள்ள பெருமை உண்மையன்று என்று சுட்டிக்காட்டப்படுகிறது. விதவிதமாகத் தற்பெருமையைப் பறைசாற்றிக் கொண்டு, 'ஆஹா! எத்தகைய ஆனந்தம் ஏற்படப் போகிறது! நாம் ஆனந்தத்தில் திளைக்கப் போகிறோம்' என்று கூறுவார்கள்.

**கேள்வி:** *'அஞ்ஞானத்தில் மயக்கமுற்று' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** அந்த அஸுர இயல்பு கொண்டவர்கள் 13வது ச்லோகத்திலிருந்து இதுவரை கூறப்பட்ட அஹங்கார வடிவான அஞ்ஞானத்தில் பெரிதும் மூழ்கியிருப்பார்கள் என்று கூறுகிறார்.

**கேள்வி:** *'அநேகசித்தவிப்ராந்தா:' என்றால் யார்?*

**பதில்:** அஸுரத்தன்மை படைத்தவர்களுடைய உள்ளம் பல விஷயங்களில் பல மாறுபட்ட கருத்துக்கள் உடையதாகக் குழம்பியிருக்கும். ஒன்றிலும் உறுதியான கருத்து இருக்காது. அவர்கள் சஞ்சலப்பட்டுக் கொண்டே இருப்பார்கள். இங்கு அஸுரத்தன்மை படைத்தவர்களுடைய சித்தத்தின் நிலையை எடுத்துக் கூறுகிறார்.

**கேள்வி:** *'மோஹஜாலஸமாவ்ருதா:' என்று கூறுவதன் கருத்து என்ன?*

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** வலையில் சிக்கிக் கொண்ட மீன்களைப்போல மோஹம் என்ற வலையில் வீழ்ந்தவர்கள் அவிவேகம் எனும் மோஹ மாயவலையில் சிக்குண்டு அதனால் சூழப்பட்டு வெளியே வர இயலாமல் இருப்பார்கள் என்பது கருத்து.

**கேள்வி:** 'காமபோகேஷு ப்ரஸக்தா:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அஸுரத்தன்மை படைத்தவர்கள் சிற்றின்ப போகமே வாழ்க்கையின் ஒரே குறிக்கோள் என்று அதையே நினைத்துக் கொண்டு இருப்பார்கள். அதிலேயே அவருடைய முழு ஈடுபாடும் செல்லும்.

**கேள்வி:** 'அவர்கள் தூய்மையற்ற பாழ் நரகத்தில் வீழ்கிறார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேலே கூறப்பட்ட நிலையில் உள்ளவர்கள் சிற்றின்ப போகத்திற்காகப் பற்பல பாவங்களைச் செய்வார்கள். அவற்றின் பயனை அனுபவிப்பதற்காக மலம், மூத்திரம், ரத்தம், கொழுப்பு முதலிய நாற்றமுடைய பொருட்கள் நிறைந்ததும் துன்பம் தருவதுமான கும்பீபாகம், ரௌரவம் போன்ற பயங்கர நரகங்களில் வீழ்வர். அஸுர இயல்பு உடையவர்களுக்கு ஏற்படும் இழிந்த நிலை வர்ணிக்கப்படுகிறது.

**பொருத்தம்:** பதினைந்தாவது ச்லோகத்தில் பகவான் 'நான் யக்ஞங்கள் செய்வேன்' என்று அவர்கள் கூறுவார்கள் என்று கூறினார். அப்படி, அவர்கள் செய்யும் யக்ஞத்தைப் பற்றி இங்கு கூறுகிறார்—

**आत्मसम्भाविताः स्तब्धा धनमानमदान्विताः।**
**यजन्ते नामयज्ञैस्ते दम्भेनाविधिपूर्वकम्॥ १७॥**

**ஆத்மஸம்ப₄ாவிதா: ஸ்தப்₃த₄ா த₄நமாநமத₃ாந்விதா: ।**
**யஜந்தே நாமயஜ்ஞைஸ்தே த₃ம்பே₄நாவிதி₄பூர்வகம் ॥ 17 ॥**

**ஆத்மஸம்ப₄ாவிதா:** – தன்னைத் தானே உயர்ந்தவனாக நினைத்துக் கொள்பவர்களும், **ஸ்தப்₃த₄ா:** – கர்வமுடையவர்களும், **த₄ந மாந மத₃ அந்விதா:** – செல்வம், தற்பெருமை, செருக்கு உடையவர்களுமான, **தே** – அவர்கள், **நாமயஜ்ஞை:** – பெயரளவில் யாகம் என்ற செயல்களால், **த₃ம்பே₄ந** – ஆடம்பரமாக, **அவிதி₄பூர்வகம்** – சாஸ்த்ர விதிகளை மீறி, **யஜந்தே** – யாகம் செய்கிறார்கள்.

தன்னைத் தானே உயர்ந்தவனாக நினைத்துக் கொள்பவர்களும் கர்வமுடையவர்களும் செல்வம், தற்பெருமை, செருக்கு உடையவர்களும் ஆன அவர்கள் பெயரளவில் யாகம் என்ற செயல்களால் ஆடம்பரமாக சாஸ்த்ர விதிகளை மீறி யாகம் செய்கிறார்கள்.

**கேள்வி:** 'ஆத்மஸம்பாவிதா:' என்றால் யார்?

**பதில்:** தன்னைத்தானே எல்லா விஷயங்களிலும் மிகச் சிறந்தவன். அனைவரது மதிப்புக்கும் உரியவன். உயர்ந்த நிலையில் வைத்துப் போற்றத்தக்கவன் என்று நினைத்துக் கொள்பவர்களை 'ஆத்மஸம்பாவிதா:' என்று கூறுவர்.

**கேள்வி:** 'ஸ்தப்தா:' என்றால் யார்?

**பதில்:** 'ஸ்தப்தா:' என்றால் கர்வத்தின் காரணமாக மரியாதைக்குரியவர்களிடம் கூடப் பணிவுடன் நடந்து கொள்ளாதவர்கள் என்று பொருள்.

**கேள்வி:** 'தநமாநமதாந்விதா:' என்றால் யார்?

**பதில்:** 'தநமாநமதாந்விதா:' என்றால் செல்வம், தற்பெருமை, செருக்குப் பிடித்துப் பித்துக் கொண்டலைபவர்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'பெயரளவில் யாகம் என்ற செயல்களால் ஆடம்பரமாக சாஸ்த்ர விதிகளை மீறி யாகம் செய்கிறார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேற்குறித்த இலக்கணம் படைத்த அஸுரத்தன்மையுள்ளவர்கள் யக்ஞம் செய்வார்களேயானால், அது முறையற்றதாக இருக்கும். பெயர்தான் யக்ஞம். நம்பிக்கை சிறிதுமின்றி பகட்டுடன் உலகிற்குப் பெரிதாகக் காட்டிக் கொள்வதற்காக, யக்ஞம் என்று ஏதோ செய்வார்கள். இது தாமஸமான வேள்வி. இதனால் இவர்கள் தாழ்ந்த கதியை அடைவார்கள். நரகத்தில் வீழ்வார்கள். தாமஸ வேள்வி பற்றிய விளக்கம் 17/13ல் காணலாம்.

**பொருத்தம்:** அஸுரத்தனமுடையவர்கள் செய்யும் யக்ஞம் பற்றிக் கூறிவிட்டு, அவர்கள் தீய கதி அடைவதற்குக் காரணமான இயல்புகளை வர்ணிக்கிறார்—

**अहङ्कारं बलं दर्पं कामं क्रोधं च संश्रिताः ।**
**मामात्मपरदेहेषु प्रद्विषन्तोऽभ्यसूयकाः ॥ १८ ॥**

**அஹங்காரம் ப₃லம் த₃ர்பம் காமம் க்ரோத₄ம் ச ஸம்ஸ்ரிதா: ।**
**மாமாத்மபரதே₃ஹேஷு ப்ரத்₃விஷந்தோऽப்₄யஸூயகா: ॥ 18 ॥**

**அஹங்காரம்** – அஹங்காரத்தையும், **ப₃லம்** – உடல் வலிமையையும், **த₃ர்பம்** – கர்வத்தையும், **காமம்** – ஆசையையும், **க்ரோத₄ம் ச** – கோபம் முதலியவற்றையும், **ஸம்ஸ்ரிதா:** – கைக்கொண்டு, **அப்₄யஸூயகா:** – பிறரை இகழ்கின்றவர்களாக, **ஆத்ம–பரதே₃ஹேஷு** – தன் உடலிலும், பிற உடல்களிலும் உள்ள, **மாம்** – (அந்தர்யாமியான) என்னை, **ப்ரத்₃விஷந்த:** – வெறுப்பவர்களாகவும், **(ஸந்தி** – உள்ளனர்).

அஹங்காரத்தையும் உடல் வலிமையையும் கர்வத்தையும் ஆசையையும் கோபம் முதலியவற்றையும் கைக்கொண்டு பிறரை இகழ்கின்றவர்களாகத் தம் உடலிலும், பிற உடல்களிலும் உள்ள அந்தர்யாமியான என்னை வெறுப்பவர்களாகவும் உள்ளனர்.

**கேள்வி:** 'அஹங்காரம், பலம், கர்வம், காமம், கோபம் முதலியவற்றைக் கைக்கொண்டு' என்றால் என்ன பொருள்?

**பதில்:** அஸுரத்தனம் படைத்தவர்கள் அஹங்காரத்திற்கு ஆளாகி, 'நாமே ஈசுவரன். எல்லா போகங்களையும் அனுபவிக்கிறோம். நாமே முயற்சி கைகூடியவர்கள், பலமுடையவர்கள், இன்பம் துய்ப்பவர்கள், நம்மால் செய்ய முடியாதது என்ன?' என்று சொல்வார்கள். திமிர் பிடித்துப் போய்ப் பிறரிடம் பகை கொண்டு அவர்களை மிரட்டி அடித்துப் புரட்டி ஆபத்தில் தள்ளுவார்கள். தம் திமிரினால் யாரையும் மதிக்க மாட்டார்கள். கர்வம் தலைக்கேறிப் போய் "நாமே செல்வம் படைத்தவர்கள். சுற்றம் பெருத்தவர்கள். நமக்கு நிகர் யார்?" என்று அலைவார்கள். காமம் மிகுந்து பலவிதத் தீச்செயல்களைப் புரிவர். நமக்கு எதிராக எவனாவது நமக்கு வேண்டாததைச் செய்தால் அவனை அடித்துப் போடுவோம் என்று கோபம் மிகுந்து சூளுரைப்பார்கள். இவ்விதம் அஹங்காரம், பலம், கர்வம், காமம், க்ரோதம் மிகுந்து போய் அதனால் மனம் போனபடி விதவிதமாகக் கற்பனை கொண்டு பிதற்றுவார்கள். அவர்கள் எது செய்தாலும் இந்தக் குறைகளின் தூண்டுதலினால், இவற்றின் துணை கொண்டுதான் செய்வார்கள். ஈசுவரன், தர்மம், சாஸ்த்ரம் எதையும் ஏற்க மாட்டார்கள்.

**கேள்வி:** இங்கு 'ச' என்னும் சொல் ஏன் கொடுக்கப்பட்டுள்ளது?

**பதில்:** அஸுரத்தனம் படைத்தவர்கள் அஹங்காரம், பலம், கர்வம், காமம், க்ரோதம் இவற்றிற்கு மட்டுமல்லாது ஆடம்பரம், பேராசை, மோஹம் முதலிய பிற பல குறைகளுக்கும் ஆட்படுவார்கள் என்று பொருள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'அப்யஸூயகா:' என்பதன் கருத்து என்ன?

**பதில்:** பிறரிடம் குற்றம் குறை காண்பது, குறை கண்டபின் அவர்களை நிந்திப்பது, அவர்களுடைய நற்பண்புகளைக் குறைத்துப் பேசுவது, நற்பண்புகளைக் குற்றமாக எடுத்துச் சொல்வது ஆகியனவெல்லாம் அஸூயை ஆகும். அஸுரத்தனம் படைத்தவர்கள் இப்படிச் செய்வார்கள். ஸாதாரண மனிதர்களை மட்டுமல்ல. பகவானையும், ஸாதுக்களையும்கூடக் குற்றம் சாட்டுவார்கள். இவர்களை 'அப்யஸூயகா:' என்கிறார்.

**கேள்வி:** 'அஸுர இயல்புடைய மனிதர்கள் தன்னுடலிலும், பிறர் உடல்களிலும் உள்ள அந்தர்யாமியான என்னை வெறுக்கிறவர்களாக உள்ளனர்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அஸுர ஸ்வபாவம் உடையவர்கள் பிறரிடம் பகைமை பாராட்டி அவர்களுக்குப் பலவிதங்களிலும் தீங்கிழைப்பார்கள். தாமும் கஷ்டப்படுவார்கள். அவர்கள் என்னையே வெறுக்கிறார்கள். ஏனெனில் அவர்களிடமும், பிறரிடமும் அனைவரது உள்ளத்திலும் நான் தானே அந்தர்யாமியான பரமேசுவரனாக இருக்கிறேன். எவரிடமும் பகைமை பாராட்டுவது, வெறுப்புக் கொள்வது, கொடுமை செய்வது, இன்னல் விளைவிப்பது இவையெல்லாம் தன்னிடமும், பிறரிடமும் உள்ள பரமாத்மாவான என்னிடம் வெறுப்புக் கொள்வதாகும்.

**பொருத்தம்: இவ்விதம் 7 முதல் 18 வரை அஸுர ஸ்வபாவம் உள்ளவர்களின் தீயகுணங்கள், தீய நடத்தைகள் பற்றிக் கூறிவிட்டு, அவற்றைத் தவிர்க்கும் புத்தி வேண்டும் என்பதற்காக அடுத்த இரு ச்லோகங்களில் அப்படிப்பட்டவர்களைக் கடுமையாக இகழ்ந்து, அவர்கள் தீய கதி அடைவார்கள் என்று கூறுகிறார்—**

**तानहं द्विषतः क्रूरान्संसारेषु नराधमान्।**
**क्षिपाम्यजस्रमशुभानासुरीष्वेव योनिषु॥ १९॥**

**தாநஹம் த்₃விஷத: க்ரூராந்ஸம்ஸாரேஷு நராத₄மாந் ।**

**க்ஷிபாம்யஜஸ்ரமஶுப₄நாஸுரீஷ்வேவ யோநிஷு ॥ 19 ॥**

**த்₃விஷத:** – (என்னை) வெறுப்பவர்களும், **அஶுப₄ாந்** – பாவம் செய்பவர்களும், **க்ரூராந்** – கொடியவர்களும், **நராத₄மாந்** – மனிதர்களில் கடையவர்களுமான, **தாந்** – அவர்களை, **அஹம்** – நான், **ஸம்ஸாரேஷு** – உலகியல் சுழல்களில், **அஜஸ்ரம்** – மீண்டும் மீண்டும் தொடர்ந்து, **ஆஸுரீஷு** – அஸுர, **யோநிஷு ஏவ** – பிறவிகளிலேயே, **க்ஷிபாமி** – தள்ளி விடுகிறேன்.

என்னை வெறுப்பவர்களும் பாவம் செய்பவர்களும் கொடியவர்களும் மனிதர்களில் கடையவர்களுமான அவர்களை நான் உலகியல் சுழல்களில் மீண்டும் மீண்டும் தொடர்ந்து அஸுரப் பிறவிகளிலேயே தள்ளி விடுகிறேன்.

**கேள்வி:** 'த்விஷத:', 'அஶுபாந்', 'க்ரூராந்', 'நராதமாந்' என்ற நான்கு அடைமொழிகளோடு கூடிய 'தாந்' என்னும் சொல் எவரைக் குறிக்கிறது? அடைமொழிகளின் கருத்து என்ன?

**பதில்:** மேற்கூறிய அடைமொழிகளுடன் கூடிய 'தாந்' என்னும் சொல் முன் ச்லோகங்களில் கூறப்பட்ட அஸுரப்பாங்குடைய மனிதர்களைக் குறிக்கிறது. அவர்களுடைய தீயகுணங்களும், தீய செய்கைகளுமே அவர்கள் கீழ்நிலையை அடைவதற்குக் காரணம் என்பதை மேற்குறித்த நான்கு அடைமொழிகளும் காட்டுகின்றன. அதாவது அவர்கள் அனைவருடனும் பகை கொண்டு, பலவிதமான தீய நடத்தைகளால் ஸமுதாயத்தைப் பாழாக்குவார்கள். கருணையின்றி மிகக் கொடிய கர்மங்களைச் செய்வார்கள். காரணமின்றிப்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பிறருக்குத் தீங்கிழைக்கும் கீழ்நிலை மனிதர்களாக ஆவார்கள். ஆகவே, நான் அவர்களை அஸுரப் பிறவிகளான ஈனப்பிறவிகளில் திரும்பத் திரும்பத் தள்ளுகிறேன் என்று பொருள்.

**கேள்வி:** அஸுரப் பிறவிகள் எவை?

**பதில்:** சிங்கம், புலி, பாம்பு, தேள், பன்றி, நாய், காக்கை முதலிய விலங்குகள், பறவைகள், புழு-பூச்சிப் பிறவிகள் அனைத்தும் அஸுரப் பிறவிகள்.

**கேள்வி:** 'அஜஸ்ரம்', 'ஏவ' என்றால் என்ன?

**பதில்:** மீண்டும் மீண்டும் தொடர்ந்து லக்ஷக்கணக்கான அஸுரப் பிறவிகளில் வீழ்த்தப்படுவார்கள். தேவர், பித்ருக்கள், மனிதப் பிறவிகள் கிடைக்காமல் நிச்சயமாக விலங்கு, பறவை முதலிய ஈனப்பிறவிகளிலேயே உழல்வார்கள் என்று பொருள்.

**आसुरीं योनिमापन्ना मूढा जन्मनि जन्मनि।**
**मामप्राप्यैव कौन्तेय ततो यान्त्यधमां गतिम्॥२०॥**

**ஆஸுரீம் யோநிமாபந்நா மூட₄ா ஜந்மநி ஜந்மநி ।**

**மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யத₄மாம் க₃திம் ॥ 20 ॥**

**கௌந்தேய** – அர்ஜுன! **மூட₄ா:** – அந்த அறிவிலிகள், **மாம்** – என்னை, **அப்ராப்ய ஏவ** – அடையாமலேயே, **ஜந்மநி ஜந்மநி** – ஒவ்வொரு பிறவியிலும், **ஆஸுரீம்** – அஸுர இயல்புள்ள, **யோநிம்** – பிறவியை, **ஆபந்நா:** – அடைகிறார்கள். **தத:** – அதைக் காட்டிலும், **அத₄மாம்** – மிகத்தாழ்ந்த, **க₃திம்** – நிலையை, **யாந்தி** – எய்துகிறார்கள். (அதாவது கோரமான நரகங்களை அடைகிறார்கள்).

அர்ஜுன! அந்த அறிவிலிகள் என்னை அடையாமலேயே ஒவ்வொரு பிறவியிலும் அஸுர இயல்புள்ள பிறவியை அடைகிறார்கள். அதைக் காட்டிலும் மிகத்தாழ்ந்த நிலையை எய்துகிறார்கள். அதாவது கோரமான நரகங்களை அடைகிறார்கள்.

**கேள்வி:** மேற்கூறப்பட்ட அஸுரப் பண்புடைய அறிவிலிகளுக்கு பகவானை அடைவது இருக்கட்டும்! நற்கதியே கிடைக்காது, அஸுரப்பிறவிதான் கிடைக்கும் என்னும்போது பகவான் 'மாம் அப்ராப்ய' (என்னை அடையாமல்) என்று கூறுவானேன்?

**பதில்:** மனிதப் பிறவி பெற்ற ஜீவனுக்கு பகவானை அடையும் தகுதி உண்டு. அத்தகுதியைப் பெற்றும் இதை மறந்து எம்பெருமானை அடையும் தெய்விக வழியை விடுத்து, அஸுரப் பண்புகளைக் கைக்கொள்பவன் மனிதப் பிறவி என்ற நல்ல வாய்ப்பைப் பெற்றும் எம்பெருமானை அடைவதில்லை. அதாவது, மனிதப் பிறவியைப் பாழாக்கிக் கொள்கிறான். இங்கே கருணாமூர்த்தியான பகவான் ஜீவனின் இந்த நிலையைக் கண்டு இரக்கத்துடன் 'மனிதப் பிறவி பெற்றும் அஸுரப் பண்புகளைக் கைக்கொண்டு மனிதப் பிறவிக்கு மட்டும் உரிமையாக உள்ள பகவானை அடைவது என்னும் லக்ஷ்யத்தை அடையாமல், வாழ்க்கையைப் பாழடித்துக் கொள்ளாதே' என்று எச்சரிக்கிறார்.

**கேள்வி:** 'ஒவ்வொரு பிறப்பிலும் அஸுரப் பிறவிதான் பெறுகிறார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** லக்ஷக்கணக்கான பிறவிகள் எடுப்பினும் அஸுரப் பிறவிகள்தான் அமையும். உயர்ந்த பிறவிகள் கிடைக்காது என்று பொருள்.

**கேள்வி:** 'அதைக்காட்டிலும் மிகத் தாழ்வான நிலை எய்துவர்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அஸுரத்தன்மை படைத்தவர்கள் லக்ஷக்கணக்கான அஸுரப் பிறவிகள் எடுத்து, அதன் பிறகு அவற்றைக் காட்டிலும், தாழ்வான, துயரமே மிகுந்த கும்பீபாகம்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மஹாரௌரவம், தாமிஸ்ரம், அந்ததாமிஸ்ரம் முதலிய கோர நரகங்களில் வீழ்வார்கள் என்று பொருள்.

**பொருத்தம்:** அஸுரத்தன்மை படைத்த மனிதர்கள் தொடர்ந்து அஸுரப் பிறவிகளிலும், கோர நரகத்திலும் வீழ்ந்து உழல்வார்களானால் அவர்களுக்கு இத்திய கதியிலிருந்து தப்பி பகவானை அடைய என்ன உபாயம் என்பதற்கு விடையாக இனி வரும் இரு ச்லோகங்களில், எல்லாத் தீய நிலைகளுக்கும் காரணமான அஸுரத் தன்மையின் மூன்றுவித தோஷங்களைக் களைவதுதான் தம்மை அடையும் வழி என்று கூறுகிறார்—

**त्रिविधं नरकस्येदं द्वारं नाशनमात्मनः ।**
**कामः क्रोधस्तथा लोभस्तस्मादेतत्त्रयं त्यजेत् ॥ २१ ॥**

**த்ரிவித₄ம் நரகஸ்யேத₃ம் த்₃வாரம் நாஶநமாத்மந: ।**
**காம: க்ரோத₄ஸ்தத₂ா லோப₄ஸ்தஸ்மாதே₃தத்த்ரயம் த்யஜேத் ॥ 21 ॥**

**காம:** – காமமும், **க்ரோத:** – கோபமும், **தத₂ா** – அவ்வாறே, **லோப₄:** – பேராசையும் ஆகிய, **இத₃ம்** – இந்த, **த்ரிவித₄ம்** – மூன்று வகையான, **நரகஸ்ய** – நரகத்தின், **த்₃வாரம்** – நுழைவாயில், **ஆத்மந:** – ஆத்மாவை, **நாஶநம்** – நாசம் செய்யக் கூடியது. அதாவது இழிந்த நிலையில் தள்ளக் கூடியது. **தஸ்மாத்** – ஆகவே, **ஏதத் த்ரயம்** – இம்மூன்றையும், **த்யஜேத்** – விட்டுவிட வேண்டும்.

காமம், கோபம், பேராசை ஆகிய இந்த மூன்று வகையான நரகத்தின் நுழைவாயில் ஆத்மாவை நாசம் செய்யக் கூடியது. அதாவது இழிந்த நிலையில் தள்ளக் கூடியது. ஆகவே இம்மூன்றையும் விட்டுவிட வேண்டும்.

**கேள்வி:** 'காமம், கோபம், பேராசை இவை நரக வாயில்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனைவி, மக்கள் முதலிய ஸகல போகங்களிலும் உள்ள ஆசையின் பெயர் 'காமம்'. இந்தக் காமத்திற்கு ஆட்பட்டு மனிதர்கள் திருட்டு, விபசாரம், உண்ணத்தகாததை உண்பது முதலிய பலவிதப் பாவங்களைச் செய்கிறார்கள். மனம் விரும்பியது நடக்காமல் அதற்கு மாறுபட்டு நடந்தால் மனம் உணர்ச்சி வசப்பட்டு கொந்தளிப்பு அடைகிறது. அதுதான் 'கோபம்'. கோபத்திற்கு ஆட்பட்டு மனிதன் ஹிம்ஸை, பழிவாங்குதல் முதலிய பலவித பாவங்களைச் செய்கிறான். செல்வம் முதலியவற்றை மேலும் மேலும் சேர்க்க வேண்டுமென்ற பேராசைதான் 'லோபம்'. லோபிகள் பொருளைத் தக்க நேரத்தில் த்யாகம் செய்ய மாட்டார்கள். பதிலாக அந்யாயமாகச் செல்வத்தை ஸம்பாதித்துச் சேர்ப்பார்கள். பின் பொய், புரட்டு, கபடம், நம்பிக்கை த்ரோஹம் முதலிய மிகக் கொடிய பாவங்களில் ஈடுபடுவார்கள். பாவங்களின் பயனாக 'தாமிஸ்ரம்', 'அந்த தாமிஸ்ரம்' முதலிய நரகங்களில் வீழ்வார்கள். ஆகவே இவை மூன்றையும் நரக வாயில் என்று கூறினார்.

**கேள்வி:** 'காமம், கோபம், பேராசை இவை ஆத்மாவை நாசம் செய்பவை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஆத்மா' என்றால் இங்கு ஜீவாத்மா ஆகும். ஜீவாத்மாவுக்கு அழிவே கிடையாது. ஆகவே ஆத்மநாசம் என்றால் ஜீவனுக்கு வீழ்ச்சி என்று பொருள். மனிதன் காம, க்ரோத, லோபங்களுக்கு ஆட்படும்போது அவனுடைய சிந்தனை ஓட்டம், செயல் முறைகள் தாழ்ந்து போகும். காம, க்ரோத, லோபங்கள் காரணமாக அவன் உடல் சீர் குலையும். மனம் கெட்ட எண்ணங்களில் பாயும். அறிவு மழுங்கிப் போகும். செயல்களெல்லாம் குற்றமுள்ளவை ஆகும். இவற்றின் பயனாகத் தற்போதைய மானிடப் பிறவியில் ஸுகம்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அமைதி, தூய்மை அனைத்தும் பாழாகும், துன்பமயமாகும். இறந்த பிறகும் அஸுரப் பிறவியோ, நரகமோ கிடைக்கும். இப்படி இம்மூன்றும் ஆத்மாவுக்கு அழிவைத் தருகின்றன என்று கூறுகிறார்.

**கேள்வி:** *'ஆகவே இவற்றை விட்டுவிட வேண்டும்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** எல்லாத் தீமைகளுக்கும் மூலகாரணமான மோஹத்தினால் உண்டாகும் காமம், கோபம், பேராசை – இவையே மனிதனை கீழே படுகுழியில் கொண்டு தள்ளக் காரணமானவை என்று தீர்ந்த பிறகு அவற்றைக் கொடிய விஷமெனக் கருதி உடனே முழுமையாகத் துறக்க வேண்டும்.

**एतैर्विमुक्तः कौन्तेय तमोद्वारैस्त्रिभिर्नरः।**
**आचरत्यात्मनः श्रेयस्ततो याति परां गतिम्॥ २२॥**

**ஏதைர்விமுக்த: கௌந்தேய தமோத்₃வாரைஸ்த்ரிபி₄ர்நர: ।**
**ஆசரத்யாத்மந: ஶ்ரேயஸ்ததோ யாதி பராம் க₃திம் ॥ 22 ॥**

**கௌந்தேய** – அர்ஜுன! **ஏதை:** – இந்த, **த்ரிபி₄:** – மூன்று, **தமோத்₃வாரை:** – நரக வாயில்களிலிருந்தும், **விமுக்த:** – விடுபட்ட, **நர:** – மனிதன், **ஆத்மந:** – தன்னுடைய, **ஶ்ரேய:** – மேன்மைக்குரிய, **ஆசரதி** – (செயலைப்) புரிகிறான். **தத:** – அதன் மூலமாக, **பராம் க₃திம்** – பெரும்பேற்றை, **யாதி** – அடைகிறான் (அதாவது என்னை அடைகிறான்).

அர்ஜுன! இந்த மூன்று நரக வாயில்களிலிருந்தும் விடுபட்ட மனிதன் தன்னுடைய மேன்மைக்குரிய செயலைப் புரிகிறான். அதன் மூலமாகப் பெரும்பேற்றை அடைகிறான் – அதாவது என்னை அடைகிறான்.

**கேள்வி:** *'இந்த மூன்றும் நரக வாயில்கள்' என்றால் என்ன பொருள்? இவற்றிலிருந்து விடுபட்டவனை மனிதன் என்று கூறுவானேன்?*

**பதில்:** முன் ச்லோகத்தில் காமம், கோபம், பேராசை இம்மூன்றும் நரகத்தின் வாயில்கள் என்றார். அதைத்தான் இங்கே 'தமோத்வாரை:' என்று கூறுகிறார். தாமிஸ்ரம், அந்ததாமிஸ்ரம் முதலிய நரகங்கள் இருள்மயமானவை. அஞ்ஞான இருளினால் உண்டான தீய குணங்களின் பயனாக, தீய நடவடிக்கைகளின் பயனாக அவைகளை அடைய நேரிடுகிறது. அவற்றில் உழன்று ஜீவன்கள் அறியாமை, துன்பம் என்ற இருட்டாலேயே சூழப்படுகிறார்கள். ஆகவே அவற்றை 'தமஸ்' (இருட்டு) என்கிறார். காமம், க்ரோதம், லோபம் இந்த மூன்றும் நரகத்தின் நுழைவாயில்கள். அதாவது நரகம் செல்வதற்குக் காரணங்கள். ஆகவே அவற்றிற்கு தமோ த்வாரங்கள் என்று பெயர். இந்த மூன்று நரக வாயில்களை மிதிக்காதவர்தான் முக்தர், விடுபட்டவர். அவர்தான் தம் மேன்மைக்குரிய ஸாதனைகளைப் புரிய முடியும். மனிதப் பிறவி பெற்று இவ்விதம் மேன்மைக்கான ஸாதனை புரிபவன்தான் உண்மையில் 'நரன்' (மனிதன்) என்று கூறுகிறார்.

**கேள்வி:** *தம் மேன்மைக்குரிய செயல் எது?*

**பதில்:** காமம், கோபம், பேராசை இவற்றுக்கு ஆட்பட்டவர்கள் தமக்குத் தாமே வீழ்ச்சியை ஏற்படுத்திக் கொள்கிறார்கள். படுகுழியில் வீழ்கிறார்கள். இவற்றிலிருந்து விடுபட்டவர்கள் தம் மேன்மைக்குரிய செயல்களைச் செய்கிறார்கள். ஆகவே காமம், கோபம், பேராசை இவற்றை விடுத்து, சாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ள நற்பண்புகள், நன்னடத்தைகளான தெய்வ ஸம்பத்தை நிஷ்காமமாகக் கடைப்பிடிப்பதுதான் மேன்மைக்குரிய செயல் ஆகும்.

**கேள்வி:** *'இதனால் பெரும் பேற்றை அடைகிறான்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** மேலே சொன்னவிதம் காமம், கோபம், பேராசை இவையாக விரிந்த அஸுரத்தன்மையை அறவே விடுத்து, நிஷ்காமமாக தெய்வ ஸம்பத்தைக் கைக் கொள்ளும் மனிதர் பரமகதியை அடைகிறார்கள். அதாவது பரமாத்மாவை அடைந்து விடுகிறார்கள்.

**பொருத்தம்:** மேலே சொன்ன தெய்வ ஸம்பத்தைக் கைக்கொள்ளாமல் தமக்குத் தெரிந்தபடி கர்மங்களைச் செய்து கொண்டிருந்தால் அவருக்கு பரமகதி கிடைக்குமா, கிடைக்காதா என்பதற்கு பதில் கூறுகிறார்—

**यः शास्त्रविधिमुत्सृज्य वर्तते कामकारतः।**
**न स सिद्धिमवाप्नोति न सुखं न परां गतिम्॥ २३॥**

**ய: ஶாஸ்த்ரவிதி₄முத்ஸ்ருஜ்ய வர்ததே காமகாரத: ।**
**ந ஸ ஸித்₃தி₄மவாப்நோதி ந ஸுக₂ம் ந பராம் க₃திம் ॥ 23 ॥**

**ய:** — எவன், **ஶாஸ்த்ரவிதி₄ம்** — சாஸ்த்ர முறையை, **உத்ஸ்ருஜ்ய** — துறந்து, **காமகாரத:** — தன் மனம் போனபடி, **வர்ததே** — நடந்து கொள்கிறானோ, **ஸ:** — அவன், **ஸித்₃தி₄ம்** — வெற்றியை, **ந அவாப்நோதி** — அடைவதில்லை. **பராம் க₃திம்** — பெரும்பேற்றை (மேலான நிலையை), **ந (அவாப்நோதி)** — அடைவதில்லை. **ஸுக₂ம்** — ஸுகத்தையும், **ந (அவாப்நோதி)** — அடைவதில்லை.

எவன் சாஸ்த்ர முறையைத் துறந்து தன் மனம் போனபடி நடந்து கொள்கிறானோ, அவன் வெற்றியை அடைவதில்லை. பெரும்பேற்றை — மேலான நிலையை அடைவதில்லை. ஸுகத்தையும் அடைவதில்லை.

**கேள்வி:** 'சாஸ்த்ர முறையைத் துறந்து தன் மனம் போனபடி நடப்பது' என்றால் என்ன பொருள்?

**பதில்:** வேதம், வேதங்களை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்ட ஸ்ம்ருதிகள், புராணங்கள், இதிஹாஸங்கள் அனைத்திற்கும் சாஸ்த்ரம் என்று பெயர். அஸுரத்தன்மைக்குரிய நடைமுறைகளை விட்டுவிடுவது பற்றியும், தெய்வ ஸம்பத்துக்குரிய நற்பண்புகள், ஆசாரங்கள் இவற்றைக் கடைப்பிடிப்பது பற்றியும் விளக்கும் ஞானம் இந்த சாஸ்த்ரங்களில்தான் கிடைக்கும். செய்யத்தக்கது எது? செய்யத்தகாதது எது என்று போதிக்கின்ற சாஸ்த்ரங்களை ஒதுக்கிவிட்டுத் தனது புத்திக்கு எது நல்லதென்றுபடுகிறதோ, அதைத் தன் மனம் போனபடி மதிப்பு, புகழ் இவற்றிற்கு ஆசைப்பட்டுத் தன் விருப்பப்படி செய்வதுதான் சாஸ்த்ர முறைகளை மீறி மனம் போனபடி நடப்பது ஆகும்.

**கேள்வி:** 'இவ்விதம் நடப்பவர்கள் வெற்றி, ஸுகம், பெரும்பேறு இவற்றை அடைவதில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** சாஸ்த்ர முறையை மீறுபவனுடைய செயல் சாஸ்த்ரத்தால் தடுக்கப்பட்டதாகையால் பாவம் ஆகும்; வீழ்ச்சிக்குக் காரணமாகும். அவர்களைப் பற்றி இங்கு பேச்சே இல்லை. ஆனால் தம் புத்திக்குச் சரி என்று தோன்றியதை, ஏதோ ஓர் ஆசையினால் உந்தப்பட்டுத் தம் மனம் போனபடி செய்வதால் — சாஸ்த்ர முறையை ஒதுக்கிவிட்டுச் செய்வதால் அப்படிச் செய்கிறவர்களுக்கு எவ்விதப் பயனும் கிடைக்காது என்று சொல்லும்போது பரமபதம் கிடைக்காது என்று சொல்லவும் வேண்டுமா? அவர்களுக்கு உலக ஸம்பந்தமான அணிமா முதலிய ஸித்திகளும், ஸ்வர்கம் போவது என்ற ஸித்தியும் கூட கிடைக்கா. உலகில் ஸாத்விக ஸுகமும் கிடைக்கா என்பது கருத்து.

**பொருத்தம்:** சாஸ்த்ர முறை மீறி மனம் போன்படி செய்யப்படும் கர்மங்கள் பயனற்றவை என்றால் அப்போது என்ன செய்யவேண்டும் என்பதை விளக்குகிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



तस्माच्छास्त्रं प्रमाणं ते कार्याकार्यव्यवस्थितौ।
ज्ञात्वा शास्त्रविधानोक्तं कर्म कर्तुमिहार्हसि ॥ २४ ॥

**தஸ்மாச்சா₂ஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்யவ்யவஸ்தி₂தௌ ।**

**ஜ்ஞாத்வா ஶாஸ்த்ரவித₄ாநோக்தம் கர்ம கர்துமிஹார்ஹஸி ॥ 24 ॥**

**தஸ்மாத்** – ஆகவே, **தே** – உனக்கு, **இஹ** – இவ்வுலகில், **கார்ய அகார்ய வ்யவஸ்தி₂தௌ** – செய்யத்தக்கது, செய்யத்தகாதது (எது) என்று நிர்ணயிப்பதில், **ஶாஸ்த்ரம்** – சாஸ்த்ரம்தான், **ப்ரமாணம்** – சான்றாகும். **(ஏவம்** – இவ்வாறு), **ஜ்ஞாத்வா** – தெரிந்து கொண்டு, **ஶாஸ்த்ர வித₄ாந உக்தம்** – சாஸ்த்ர முறைகளில் சொல்லப்பட்டிருக்கும், **கர்ம** – கர்மங்களை, **கர்தும் அர்ஹஸி** – ஆற்றக்கடவாய்.

ஆகவே உனக்கு இவ்வுலகில் செய்யத்தக்கது, செய்யத்தகாதது எது என்று நிர்ணயிப்பதில் சாஸ்த்ரம்தான் சான்றாகும். இவ்வாறு தெரிந்து கொண்டு சாஸ்த்ர முறைகளில் சொல்லப் பட்டிருக்கும் கர்மங்களை ஆற்றக்கடவாய்.''

**கேள்வி:** *'செய்யத்தக்கது, செய்யத் தகாதது என்ற தீர்மானம் செய்வதற்கு சாஸ்த்ரம்தான் சான்று' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** எதைச் செய்யவேண்டும், எதைச் செய்யக்கூடாது என்ற ஒழுங்கு முறைகள் வேதங்களிலும், வேதங்களின் ஆதாரத்தில் தோன்றிய ஸ்ம்ருதிகளிலும், புராண இதிஹாஸங்களிலும், சாஸ்த்ரங்களிலும் சொல்லப்படுகின்றன. ஆகவே இந்த விஷயத்தில் மனிதன் தன் மனம் போனபடி நடக்காமல் சாஸ்த்ரங்களின் முடிவை ஏற்றுக் கொள்ளவேண்டும். சாஸ்த்ரங்கள் விதித்தவற்றைச் செய்தே தீரவேண்டும். தடை செய்தவற்றைச் செய்யவே கூடாது.

**கேள்வி:** *'இவ்விதமறிந்து நீ சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட கடமையை ஆற்றக் கடவாய்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** இவ்விதம் சாஸ்த்ரங்களைச் சான்று என்று மதித்து சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட கடமைகளை முறைப்படி ஆற்றவேண்டும். தடுக்கப்பட்டவற்றைச் செய்யக்கூடாது. சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட மங்களமான கடமைகளையும் நிஷ்காமமாக (பற்றற்றுத்)தான் செய்யவேண்டும். அப்படிச் செய்தால்தான் அவை பகவானை அடைய உதவும் என்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன.

ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे दैवासुरसम्पद्विभागयोगो नाम षोडशोऽध्यायः ॥ १६ ॥

**ஓம் தத்ஸதி₃தி ஶ்ரீமத்₃ப₄க₃வத்₃கீ₃தாஸூபநிஷத்ஸு ப்₃ரஹ்மவித்₃யாயாம் யோக₃ஶாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே₃ தை₃வாஸுரஸம்பத்₃விப₄ாக₃யோகோ₃ நாம ஷோட₃ஶோऽத்₄யாய: ॥ 16 ॥**

**ஓம் தத் ஸத் – ப்ரம்ம வித்யை, யோக ஶாஸ்த்ரம், உபநிஷத் எனப்படும் ஶ்ரீமத்பகவத்கீதையாகிய ஶ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலில் 'தைவாஸுரஸம்பத்விபாகயோகம்' எனப் பெயர் படைத்த பதினாறாவது அத்யாயம் நிறைவுற்றது.**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

# அத₂ ஸப்தத₃ஶோऽத்₄யாய:

# பதினேழாவது அத்யாயம்

## ஶ்ரத்தாத்ரயவிபாகயோகம்

**அத்யாயத்தின் பெயர்**

இந்தப் பதினேழாவது அத்யாயத்தின் ஆரம்பத்தில் அர்ஜுனன் ச்ரத்தையில் உறுதி பெற்றவர்களின் நிஷ்டை (நிலை) பற்றிக் கேட்கிறார். அதற்கு விடையாக பகவான் மூன்றுவிதமான ச்ரத்தைகளைப் பற்றியும், ச்ரத்தைக்கேற்ப அமையும் புருஷனின் ஸ்வரூபத்தைப் பற்றியும் கூறுகிறார். பிறகு பூஜை, யக்ஞம், தவம் முதலியவற்றில் ச்ரத்தைக்கு உள்ள தொடர்பைக் குறிப்பிட்டுக் கடைசியில் ச்ரத்தையில்லாதவர்களின் செயல்கள் வீண் என்று கூறி முடிக்கிறார். இவ்விதம் இந்த அத்யாயத்தில் மூன்றுவித ச்ரத்தைகளைப் பகுதி பகுதியாகப் பிரித்துக் கூறுவதால் இதற்கு 'ஶ்ரத்தாத்ரயவிபாகயோகம்' என்று பெயர்.

**அத்யாயச் சுருக்கம்**

ச்லோகம் 1ல் அர்ஜுனன் சாஸ்த்ர முறைகள் மீறி, ஆனால் ச்ரத்தையுடன் யாகம் செய்பவர்களின் நிலை பற்றிக் கேட்கிறார். இதற்கு விடையாக பகவான் 2ல் குணங்களுக்கு ஏற்ப ஏற்படும் மனிதனுடைய இயல்பான மூன்றுவித ச்ரத்தைகளைப் பற்றிக் கூறுகிறார். 3ல் ச்ரத்தைக்கு ஏற்பவே அமையும் மனிதனின் ஸ்வரூபம் பற்றிக் கூறி, 4ல் ஸாத்விக, ராஜஸ, தாமஸ ச்ரத்தையுடைவர்கள் முறையே தேவர், யக்ஷ-ராக்ஷஸர், பூத-ப்ரேதங்களைப் பூஜிப்பவர்கள் எனக் கூறுகிறார், 5, 6ல் சாஸ்த்ர முறைகளை மீறிக் கொடிய தவம் செய்பவர்களை இகழ்கிறார். 7ல் 'உணவு, யாகம், தவம், தானம் இவற்றின் வேறுபாடு பற்றிக் கேட்பாயாக' என்று அர்ஜுனனுக்குக் கட்டளையிட்டு, 8 முதல் 10 வரையில் ஸாத்விக, ராஜஸ, தாமஸ உணவுகளைப் பற்றி வர்ணிக்கிறார். 11 முதல் 13 வரையில் முறையே ஸாத்விக, ராஜஸ, தாமஸ யாகங்களின் இலக்கணங்களையும், 14 முதல் 16 வரையில் உடல், சொல், மனம் இவற்றின் தவங்களின் ஸ்வரூபங்களைப் பற்றிக் கூறி, 17ல் ஸாத்விகத் தவத்தின் இலக்கணம் கூறுகிறார். 18, 19ல் ராஜஸ, தாமஸ தவங்களின் இலக்கணகளை வரிசையாகக் கூறி, 20 முதல் 22 வரையில் ஸாத்விக, ராஜஸ, தாமஸ தானங்களின் இலக்கணம் கூறுகிறார். 23ல் 'ஓம் தத் ஸத்' என்பதன் பெருமை, 24ல் 'ஓம்', 25ல் 'தத்', 26, 27ல் 'ஸத்' இவற்றை விளக்கிக் கூறுகிறார். 28ல் ச்ரத்தையின்றிச் செய்யப்படும் யாகம், தானம், தவமெல்லாம் வீணே. இம்மைக்கோ, மறுமைக்கோ பயனற்றவை. அவை 'அஸத்' என்று கூறி அத்யாயத்தை நிறைவு செய்கிறார்.

**முன் அத்யாயத்துடன் இவ்வத்யாயத்திற்குப் பொருத்தம்:** பதினாறாவது அத்யாயத்தின் ஆரம்பத்தில் பகவான் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கடமைகளும், குணங்களும் நிஷ்காமமாகக் கடைப்பிடிக்கப்பட்டால் அது தெய்வ ஸம்பத் என்று கூறினார். சாஸ்த்ர விரோதமான குணங்களும், செயல்களும் அஸுர ஸம்பத் என்றும், அஸுரத்தன்மை படைத்தவர்கள் நரகத்தில் வீழ்வர் என்றும் கூறினார். காமம், க்ரோதம், லோபம் இவைதான் அஸுரத்தன்மையின் முக்யமான இழிந்த குணங்கள். இவைதான் நரகத்தின் நுழைவாயில்கள். இவற்றைத் துறந்து ஆத்மாவின் மேன்மைக்காக ஸாதனைகள் புரிபவர் பரமகதியை அடைவர் என்றார். பிறகு சாஸ்த்ர முறைகளை மீறி, மனம் போனபடி, தனக்குத் தோன்றியதே சரி என்று நினைத்து, அந்தக் கர்மங்களைச் செய்வதால் பயன் கிடைக்காது. ஸித்திக்காகப் புரிந்த அச்செயல்கள் ஸித்தியைக் கொடுக்கமாட்டா. ஸுகத்திற்கான செயல்கள் ஸுகத்தை அளிக்கா. பரமகதியோ கிடைக்கவே கிடைக்காது என்று கூறினார். ஆகவே செய்யத்தக்கது எது, செய்யத்தகாதது எது என்பதை சாஸ்த்ரங்களின் மூலம் தெரிந்து கொண்டு, நிஷ்காமமாகக் கடமைகளை ஆற்றவேண்டும் என்றார். அதனால் அர்ஜுனன் "சாஸ்த்ர முறை மீறித் தான்தோன்றியாகச் செய்வது வீணே. ஆயினும் சாஸ்த்ர முறைகளை அறியாததால் அல்லது வேறு ஏதோ காரணத்தினால் சாஸ்த்ர முறையை மீறினாலும், யக்ஞம், பூஜை முதலிய நற்கர்மங்களை ஆர்வத்துடன் செய்பவர்களின் நிலை என்ன?" என்பதைத் தெரிந்து கொள்ள பகவானிடம் கேட்கிறார்—

अर्जुन उवाच

**ये शास्त्रविधिमुत्सृज्य यजन्ते श्रद्धयान्विताः।**
**तेषां निष्ठा तु का कृष्ण सत्त्वमाहो रजस्तमः ॥ १ ॥**

அர்ஜுந உவாச

**யே ஶாஸ்த்ரவிதி₄முத்ஸ்ருஜ்ய யஜந்தே ஶ்ரத்₃த₄யாந்விதா: ।**
**தேஷாம் நிஷ்ட₂ா து கா க்ருஷ்ண ஸத்த்வமாஹோ ரஜஸ்தம: ॥ 1 ॥**

*அர்ஜுந உவாச* – அர்ஜுனன் சொன்னார்: **க்ருஷ்ண** – க்ருஷ்ண! **யே** – எவர்கள், **ஶாஸ்த்ரவிதி₄ம்** – சாஸ்த்ர விதிமுறைகளை, **உத்ஸ்ருஜ்ய** – மீறி, **ஶ்ரத்₃த₄யா** – ச்ரத்தையால், **அந்விதா:** – உந்தப்பட்டு, **யஜந்தே** – தெய்வங்களை வழிபடுகிறார்களோ, **தேஷாம்** – அவர்களுடைய, **நிஷ்ட₂ா து** – நிலைதான், **கா** – என்ன? **ஸத்த்வம்** – ஸத்வகுணமுடையதா, **ஆஹோ** – அல்லது, **ரஜ:** – ரஜோகுணமுடையதா (அல்லது), **தம:** – தமோகுணமுடையதா?

அர்ஜுனன் சொன்னார்: "க்ருஷ்ண! எவர்கள் சாஸ்த்ர விதிமுறைகளை மீறி ச்ரத்தையால் உந்தப்பட்டு தெய்வங்களை வழிபடுகிறார்களோ, அவர்களுடைய நிலைதான் என்ன? ஸத்வ குணமுடையதா, ரஜோகுணமுடையதா அல்லது தமோகுணமுடையதா?"

**கேள்வி:** சாஸ்த்ர விதியை மீறுவது பற்றி 16/23லிலேயே சொல்லியாகிவிட்டதே. இங்கும் சொல்கிறாரே? இரண்டுக்கும் ஒரே கருத்துதானா அல்லது வேறுபாடு உண்டா?

**பதில்:** வேறுபாடு நிச்சயம் உண்டு. அங்கு சாஸ்த்ரங்களை அலக்ஷ்யம் செய்து, முறை மீறுவது பற்றிய பேச்சு. இங்கு சாஸ்த்ர முறைகளை அறியாத காரணத்தால் முறை மீறுவது பற்றிய விஷயம். அங்கு சாஸ்த்ரங்களுக்கு மதிப்பு இல்லை. தான்தோன்றித்தனமாகத் தனக்கு நல்லதென்று தோன்றுவதைச் செய்கிறான். அதைத்தான் 'வர்ததே காம காரத:' என்கிறார். இங்கு 'யஜந்தே ஶ்ரத்தயாந்விதா:' (ச்ரத்தையோடு கூடியவர்கள்) என்கிறார். ஆகவே இவர்களுக்கு ச்ரத்தை இருக்கிறது. ச்ரத்தை (ஈடுபாடு) இருக்குமிடத்தில் அலக்ஷ்யம் இருக்க முடியாது. இருக்கும் நிலை, சூழ்நிலை ப்ரதிகூலமாக இருப்பதாலோ, போதிய

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நேரமின்மையாலோ, பாடுபட முடியாததாலோ, சாஸ்த்ரப் பயிற்சியின் குறைபாட்டினாலோ சாஸ்த்ர முறைகளில் முழுமையான ஞானம் இல்லை. இந்த அறியாமை காரணத்தினால் சாஸ்த்ர முறைகளை விட்டுவிடுகிறார்கள்.

**கேள்வி:** 'நிஷ்டா' என்றால் என்ன?

**பதில்:** இங்கு 'நிஷ்டா' என்றால் நிலை என்று பொருள். மூன்றாவது ச்லோகத்தில் இந்தக் கேள்விக்குப் பதில் கூறும்போது பகவான் இவன் ச்ரத்தையே உருவானவன். எவனுக்கு எந்தவித ச்ரத்தை உள்ளதோ அவன் அப்படிப்பட்டவன். அதுதான் அவன் நிலை என்கிறார். ஆகவே அந்த நிலைதான் நிஷ்டை என்பது.

**கேள்வி:** 'அவனுடைய நிஷ்டை ஸாத்விகமா? ராஜஸமா? தாமஸமா?' என்று கேட்பதன் கருத்து என்ன?

**பதில்:** 16/6ல் பகவான், தெய்வத்தன்மை உடையவர்களைப் பற்றியும், அஸுரத்தன்மை உடையவர்களைப் பற்றியும் கூறினார். தெய்வத்தன்மை உடையவர்கள் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளை நிஷ்காமமாக ஆற்றுகிறார்கள். அதன் மூலம் மோக்ஷத்தை அடைகிறார்கள். அஸுரத்தன்மை உள்ளவர்களில் தாமஸ குணமுள்ளவர்கள் பாவங்களைப் புரிகிறார்கள். அதன் காரணமாக ஈனப்பிறவிகளில் பிறக்கிறார்கள். நரகத்தை அடைகிறார்கள். தமோ குணம் கலந்த ராஜஸ குணம் உடையவர்கள் சாஸ்த்ர விதிகளை விடுத்துத் தமக்குத் தோன்றியவாறு நல்ல கார்யங்களைச் செய்கிறார்கள். அவர்களுடைய நல்ல கர்மங்களுக்குப் பயன் கிடையாது. ஆனால் பாவ கர்மங்களின் பயனை அவர்கள் அனுபவித்துத்தான் ஆகவேண்டும் என்றெல்லாம் சொன்னார். அர்ஜுனனுக்கு தெய்வ, அஸுரத்தன்மை உள்ளவர்கள் பற்றிய விஷயம் நன்கு புரிந்தது. ஆனால் அறியாமல் சாஸ்த்ர முறைகளை மீறினாலும் ச்ரத்தையுடன் பூஜை முதலியவற்றைச் செய்கிறார்களே, அவர்களின் இயல்பு என்ன? அவர்கள் தெய்வ ஸம்பத் உடையவர்களா, அஸுரத்தன்மை படைத்தவர்களா? இதைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளவே அர்ஜுனன் இவர்களின் நிலை ஸாத்விகமா, ராஜஸமா, தாமஸமா? இவர்கள் தெய்வ ஸம்பத் உடையவர்களா, அஸுர ஸம்பத் உடையவர்களா என்று வினவுகிறார்.

**கேள்வி:** மேலே கூறியதிலிருந்து உலகில் ஐந்துவிதமான மனிதர்கள் உள்ளனர் என்பது தெரிகிறது.

1. சாஸ்த்ர முறைகளையும் கடைப்பிடிப்பவர்கள், ச்ரத்தையும் உடையவர்கள்.
2. சாஸ்த்ர முறைகளை ஓரளவு கடைப்பிடிப்பவர்கள். ஆனால் ச்ரத்தையில்லாதவர்கள்.
3. ச்ரத்தை உண்டு. ஆனால் சாஸ்த்ர முறைகளைக் கடைப்பிடிக்க இயலாதவர்கள்.
4. சாஸ்த்ர முறைகளைக் கடைப்பிடிக்காமல், ச்ரத்தையும் இல்லாது இருப்பவர்கள்.
5. சாஸ்த்ரங்களை அலக்ஷ்யம் செய்து சாஸ்த்ர முறைகளை மீறுபவர்கள்.

இந்த ஐந்து வகையினரின் தன்மை என்ன? அவர்கள் அடைவது எதை? அவர்களைப் பற்றிய விவரம் கீதையில் எங்கெங்கே வருகிறது?

**பதில்:** (1) முதல் வகையினர் – ச்ரத்தையும் இருந்து சாஸ்த்ர விதிமுறைகளையும் கடைப்பிடிப்பவர்கள். இவர்கள் இருவகைப்படுவர். 1. நிஷ்காமமாகக் கடமைகளை ஆற்றுபவர்கள், 2. பயனை எதிர்பார்த்துக் கர்மங்களைச் செய்பவர்கள். நிஷ்காமமாகக் கடமைகளை ஆற்றும் தெய்வ ஸம்பத்தோடு கூடியவர்கள் ஸாத்விகமான மனிதர்கள். மோக்ஷத்தை அடைவர். 16/1–3, 17/11,14,17,20களில் இவர்களைப் பற்றி முக்யமாகக் கூறுகிறார். பயனைக் கருதிக் கர்மங்களைச் செய்பவர்கள் ஸத்வ குணம் கலந்த ரஜோ குணம் உள்ளவர்கள் ராஜஸ மனிதர்கள். ஸித்தியையும், ஸுகத்தையும், ஸ்வர்கம் முதலிய லோகங்களையும் அடைவர். 2/42–44, 4/12, 7/20–22, 9/20,21,23களில் இவர்களுடைய வர்ணனைகள் உள்ளன.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



(2) சாஸ்த்ர முறைகளை ஓரளவு கடைப்பிடித்து யாகம், தானம், தவம் முதலியவற்றை ச்ரத்தையின்றிச் செய்பவர்களின் கர்மங்கள் அஸத், பயனற்றவை. அவற்றால் இவ்வுலகிலோ, பரலோகத்திலோ அவர்களுக்கு ஒரு நன்மையும் கிடையாது. இதைப் பற்றி இதே அத்யாயத்தில் 28வது ச்லோகத்தில் கூறுகிறார்.

(3) அறியாமல் சாஸ்த்ர முறைகளை விடுத்து – ஆனால் ச்ரத்தையுடன் செய்பவர்கள். ச்ரத்தை உள்ளதைப் பொறுத்து ஸாத்விகர்களாகவும், ராஜஸர்களாகவும், தாமஸர்களாகவும் இருப்பார்கள். தம் இயல்புக்கேற்றவாறு அததற்கான கதியை அடைவார்கள். 17/2–4களில் இவர்களைப் பற்றிக் கூறுகிறார்.

(4) சாஸ்த்ரங்களிலும் மதிப்பு இல்லை. ச்ரத்தையும் இல்லை. இவர்கள் காமத்திற்கும், கோபத்திற்கும், பேராசைக்கும் வசப்பட்டு பாவ வாழ்க்கை வாழ்கிறார்கள். இப்படிப்பட்ட அஸுரத்தன்மை படைத்தவர்கள் நரகத்தில் வீழ்வார்கள், ஈனப்பிறவிகளில் பிறப்பார்கள். 7/15, 9/12, 16/7–20, 17/5,6,13களில் இவர்களைப் பற்றிக் கூறுகிறார்.

(5) சாஸ்த்ரங்களை அலக்ஷ்யப்படுத்தித் தமக்கு நல்லதென்று தோன்றியதைச் செய்யும் தான்தோன்றிகள் – சாஸ்த்ரங்களில் தடுக்கப்பட்டவற்றைச் செய்யும் அந்த தாமஸ புருஷர்கள் நரகவாசம் முதலிய தாழ்ந்த நிலையை அடைவார்கள். இவர்களைப் பற்றிய வர்ணனை 4வது கேள்வியின் பதிலில் வந்துள்ளது. ஆனால் தான்தோன்றித்தனமாக நல்ல கர்மங்களைச் செய்கின்ற, அந்த ரஜோ குணம் மேலிட்ட தாமஸர்கள் சாஸ்த்ர முறையை மீறியதால் எத்தகைய பயனும் அவர்களுக்குக் கிடைப்பதில்லை (16/23). இவர்கள் பாவ கர்மங்கள் செய்வதால் ஈனப்பிறவியில் பிறப்பார்கள். நிச்சயமாக நரகத்தில் வீழ்வார்கள்.

இந்த ஐந்து கேள்விகளின் பதில்களில் குறிப்பிடப்பட்ட ச்லோகங்களைத் தவிர, இன்னும் மற்ற இடங்களிலும் இவர்களைப் பற்றிச் சொல்லியிருக்கிறார். அவை அனைத்தையும் இங்கே சுட்டிக் காட்டவில்லை.

**பொருத்தம்:** அர்ஜுனனுடைய கேள்விக்கு பகவான் அடுத்த இரண்டு ச்லோகங்களில் சுருக்கமாகப் பதில் கூறுகிறார்—

श्रीभगवानुवाच

**त्रिविधा भवति श्रद्धा देहिनां सा स्वभावजा।**
**सात्त्विकी राजसी चैव तामसी चेति तां शृणु॥ २॥**

ஸ்ரீப₄க₃வானுவாச

**த்ரிவித₄ா ப₄வதி ஶ்ரத்₃த₄ா தே₃ஹிநாம் ஸா ஸ்வப₄ாவஜா ।**
**ஸாத்த்விகீ ராஜஸீ சைவ தாமஸீ சேதி தாம் ஶ்ருணு ॥ 2 ॥**

**ஸ்ரீப₄க₃வானுவாச** – ஸ்ரீபகவான் சொன்னார்: **தே₃ஹிநாம்** – மனிதர்களுக்கு, **ஸ்வப₄ாவஜா** – அறநெறி முறையின்றி இயல்பாக உண்டான, **ஸா ஶ்ரத்₃த₄ா** – அந்த ச்ரத்தை, **ஸாத்த்விகீ** – ஸாத்விகமானது, **ச** – மேலும், **ராஜஸீ** – ராஜஸமானது, **ச** – மேலும், **தாமஸீ** – தாமஸமானது, **இதி** – என இவ்வாறு, **த்ரிவித₄ா ஏவ** – மூன்றுவிதமாகவே, **ப₄வதி** – இருக்கிறது. **தாம்** – அதனை (நீ), (**மத்த:** – என்னிடமிருந்து), **ஶ்ருணு** – கேள்.

ஸ்ரீபகவான் சொன்னார்: "மனிதர்களுக்கு அறநெறி முறையின்றி இயல்பாக உண்டான அந்த ச்ரத்தை ஸத்வகுணமுடையது, ரஜோகுணமுடையது, தமோகுணமுடையது என்று மூன்றுவிதமாகவே இருக்கிறது. அதனை நீ என்னிடமிருந்து கேள்.

**கேள்வி:** 'தேஹிநாம்' என்று யாரைக் குறிப்பிடுகிறார்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** தேஹத்தில் பற்றுடையவர்களை – நான் என்ற அபிமானம் உடையவர்களான ஸாதாரண மனிதர்களைக் குறிப்பிடுகிறார்.

**கேள்வி:** 'ஸா', 'ஸ்வபாவஜா' என்ற சொற்கள் எத்தகைய ச்ரத்தையைக் குறிப்பன?

**பதில்:** சாஸ்த்ர முறைகளைக் கடைப்பிடிக்காமல், ஆனால் ச்ரத்தையுடன் யாகம், பூஜை முதலியன செய்யும் மனிதர்களின் ச்ரத்தையைக் குறிக்கின்றன. அந்த ச்ரத்தை சாஸ்த்ர ஞானத்தால் ஏற்பட்டது அல்ல. இயல்பாக வந்தது. அதைத்தான் 'ஸ்வபாவஜா' என்கிறார். சாஸ்த்ரங்களைக் கற்பதாலும், கேட்பதாலும் ஏற்படும் ச்ரத்தை 'சாஸ்த்ரஜா' எனப்படும். முற்பிறவிகளிலும், இப்பிறவியிலும் இதுவரை செய்யப்பட்ட கர்மங்களின் மனப்பதிவினால் – ஸம்ஸ்காரத்தினால் ஏற்பட்ட இயல்பான ச்ரத்தை 'ஸ்வபாவஜா' எனப்படும்.

**கேள்வி:** ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்ற மூவகை குணங்களுடன் 'இதி' (இவ்வாறு) என்ற சொல்லைச் சேர்ப்பதன் கருத்து என்ன?

**பதில்:** ஸாத்விகமாகவும், ராஜஸமாகவும், தாமஸமாகவும் ஆக மூன்றுவிதமாகத்தான் அந்த ச்ரத்தை இருக்கும் என்று பொருள்.

सत्त्वानुरूपा सर्वस्य श्रद्धा भवति भारत।
श्रद्धामयोऽयं पुरुषो यो यच्छ्रद्धः स एव सः ॥ ३ ॥

**ஸத்த்வாநுரூபா ஸர்வஸ்ய ஶ்ரத்₃தா₄ ப₄வதி பா₄ரத ।**

**ஶ்ரத்₃தா₄மயோऽயம் புருஷோ யோ யச்ச்₂ரத்₃த₄: ஸ ஏவ ஸ: ॥ 3 ॥**

**ப₄ாரத** – பாரத! **ஸர்வஸ்ய** – எல்லா மனிதர்களுக்கும், **ஶ்ரத்₃தா₄** – ச்ரத்தை, **ஸத்த்வாநுரூபா** – அவர்களுடைய மனப்பாங்குக்கு ஏற்றவாறு, **ப₄வதி** – அமைகிறது. **அயம் புருஷ:** – இந்த மனிதன், **ஶ்ரத்₃தா₄மய:** – ச்ரத்தையே உருவானவன். (**அத:** – ஆகையினால்), **ய:** – எந்த மனிதன், **யத் ஶ்ரத்₃த₄:** – எந்த ச்ரத்தையோடு கூடியவனோ, **ஸ:** – அவன், **ஸ: ஏவ:** – அந்த ச்ரத்தையின் தன்மையுடையவனே.

பாரத! எல்லா மனிதர்களுக்கும் ச்ரத்தை அவர்களுடைய அந்தக்கரணத்துக்கு ஏற்றவாறு அமைகிறது. இந்த மனிதன் ச்ரத்தையே உருவானவன். ஆகையினால் எந்த மனிதன் எந்த ச்ரத்தையோடு கூடியவனோ அவன் அந்த ச்ரத்தையின் ஸ்வரூபமே.

**கேள்வி:** எல்லா மனிதர்களும் என்றால் என்ன பொருள்?

**பதில்:** முன் ச்லோகத்தில் சொன்னபடி உடலை நான் என்று நினைக்கும் உடற்பற்றுடைய மாந்தர் அனைவரும் என்று பொருள். யாருக்கு எவ்வித ச்ரத்தையுண்டோ, அவன் அதற்கேற்ப இருப்பான் என்று இதே ச்லோகத்தில் அடுத்தாற்போலக் கூறுகிறார். உடற்பற்றுடையவனைப் பற்றித்தான் இப்படிச் சொல்ல முடியுமே தவிர குணாதீதனான ஞானியைப் பற்றி அன்று.

**கேள்வி:** முன் ச்லோகத்தில் ச்ரத்தை இயல்பாக அமைவது என்றார். இங்கு மனப்பாங்குக்கு ஏற்றவாறு என்கிறாரே – என்ன கருத்து?

**பதில்:** மனிதன் ஸாத்விக, ராஜஸ, தாமஸ கர்மங்களைச் செய்கிறான். அவன் புரியும் செயலுக்கேற்ப, இயல்பு அமைகிறது. இயல்பு உள்ளத்தில் உறைவது. ஆகவே இயல்புக்கேற்றபடி என்றாலும், மனப்பாங்கிற்கேற்றபடி என்றாலும் ஒன்றுதான்.

**கேள்வி:** புருஷனை மேலானவன் அதாவது குணாதீதன் என்று 13/22ல் கூறினார். இங்கே ச்ரத்தையே உருவானவன் என்கிறாரே – என்ன கருத்து?

**பதில்:** உண்மையில் புருஷனின் உண்மை நிலை குணங்களுக்கு அப்பாற்பட்டதுதான். ஆனால் இங்கே கூறப்படுவது ப்ரக்ருதிக்குள் இருக்கின்ற அதாவது ப்ரக்ருதியில் உண்டான

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



முக்குணங்களால் கட்டுண்டவர்களைப் பற்றித்தான். குணத்தினால் ஏற்படும் மாறுபாடுகள் ப்ரக்ருதியில் உள்ளவனுக்குத்தான் உண்டு. குணங்களைக் கடந்தவனுக்கு குண மாறுபாடுகளைக் கற்பனைகூடச் செய்ய முடியாது. ஒவ்வொருவனுக்கும் அவனுடைய மனப்பாங்குக்கு ஏற்றவாறு ஸாத்விகமாகவோ, ராஜஸமாகவோ, தாமஸமாகவோ ச்ரத்தை ஏற்படும். அதுதான் அவன் நிலை. யாருக்கு எவ்விதம் ச்ரத்தையோ அவன் அப்படிப்பட்டவன். ச்ரத்தை, நிஷ்டை, தன்மை இவற்றை ஒன்றாக்கி பகவான் அர்ஜுனனுடைய கேள்வியான 'அவன் நிலை என்ன?' என்பதற்குப் பதில் கூறிவிட்டார்.

**பொருத்தம்:** ச்ரத்தைக்கேற்றவாறு மனிதனுக்கு நிஷ்டை ஏற்படுகிறது என்று சொன்னார். அவர்களை எப்படி அடையாளம் கண்டு கொள்வது என்பதற்கு இனி பதில் கூறுகிறார்—

**यजन्ते सात्त्विका देवान्यक्षरक्षांसि राजसाः ।**
**प्रेतान्भूतगणांश्चान्ये यजन्ते तामसा जनाः ॥ ४ ॥**

**யஜந்தே ஸாத்த்விகா தே₃வாந்யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா: ।**

**ப்ரேதாந்பூ₄தக₃ணாம்ஶ்சாந்யே யஜந்தே தாமஸா ஜநா: ॥ 4 ॥**

**ஸாத்த்விகா:** — ஸத்வகுணம் நிறைந்த மனிதர்கள், **தே₃வாந்** — தேவர்களை, **யஜந்தே** — வழிபடுகிறார்கள். **ராஜஸா:** — ரஜோகுணமுடையவர்கள், **யக்ஷரக்ஷாம்ஸி** — யக்ஷர்களையும், அரக்கர்களையும் (வழிபடுகிறார்கள்). **அந்யே** — மற்ற, **தாமஸா:** — தாமஸகுணமுடைய, **ஜநா:** — மக்கள், **ப்ரேதாந் பூ₄தக₃ணாந் ச** — ப்ரேத பூதங்களையும், **யஜந்தே** — வழிபடுகிறார்கள்.

ஸத்வகுணம் நிறைந்த மனிதர்கள் தேவர்களை வழிபடுகிறார்கள். ரஜோகுணமுடையவர்கள் யக்ஷர்களையும், அரக்கர்களையும் வழிபடுகிறார்கள். மற்ற தாமஸகுணமுடைய மக்கள் ப்ரேத பூதங்களை வழிபடுகிறார்கள்.

**கேள்வி:** ஸாத்விகர்கள் தேவர்களை வழிபடுகிறார்கள் என்றால் என்ன பொருள்?

**பதில்:** விளைவைப் பார்த்தால் காரணம் துலங்கும் – இந்த ந்யாயத்தின்படி, பூஜிக்கப்படும் தெய்வங்கள் ஸாத்விகமானவையானால் பூஜிப்பவனும் ஸாத்விகனாக இருப்பான். எப்படி தெய்வமோ அப்படியே அதன் பூஜாரி என்பது பழமொழி. ஆகவே தேவதைகளைப் பூஜிப்பவர்கள் ஸாத்விக நிலையில் உள்ளவர்கள். சூரியன், சந்த்ரன், அக்னி, வாயு, இந்த்ரன், வருணன், யமன், அச்வினீ குமாரர்கள், விச்வேதேவர்கள் முதலானவர்கள் சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட தேவதைகள். இந்த தேவதைகளைப் பூஜிப்பது என்ற கர்மம் ஸாத்விகமானபடியால் அவற்றைப் பூஜை செய்பவனும் ஸாத்விகனாகிறான். ஆனால் அந்த ஸாத்விக பூஜையையும் நிஷ்காமமாகச் செய்பவனே, முழுமையான ஸாத்விகன்.

**கேள்வி:** ராஜஸர்கள் யக்ஷ–ராக்ஷஸர்களைப் பூஜிக்கிறார்கள் என்றால் என்ன?

**பதில்:** தேவதைகளை வழிபடுவோர் ஸாத்விகர்கள் என்று சொன்ன அடிப்படையில், யக்ஷ–ராக்ஷஸர்களைப் பூஜிப்பவர்கள் ராஜஸர்கள். யக்ஷர்கள் என்றால் குபேரன் முதலியவர்கள். ராக்ஷஸர்கள் என்றால் ராஹு, கேது முதலியவர்கள்.

**கேள்வி:** தாமஸ மனிதர்கள் பூத–ப்ரேத கணங்களைப் பூஜிக்கிறார்கள் என்றால் என்ன கருத்து?

**பதில்:** இறந்த பிறகு, பாவ கர்மங்களின் பயனாகச் சிலர் காற்று வடிவத்தில் அலைவார்கள். அவர்களே பூத, ப்ரேத, பிசாசர்கள். அவர்களைப் பூஜிப்பவர்கள் தாமஸர்கள்.

**கேள்வி:** இவர்களுக்கு எந்தவிதமான கதி ஏற்படுகிறது?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** 'மனம் போல மாங்கல்யம்' என்பது பழமொழி. தேவதைகளைப் பூஜிப்பவர்கள் தேவலோகத்தை அடைவார்கள். யக்ஷ-ராக்ஷஸர்களைப் பூஜிப்பவர்கள் யக்ஷ-ராக்ஷஸர்களின் நிலையை அடைவார்கள். பூத, ப்ரேத, பிசாசங்களைப் பூஜிப்பவர்கள் அவர்களின் உருவம், குணம், நிலை முதலியவற்றைப் பெறுவார்கள். 9/25ல் இதையே அறுதியான முடிவாகக் கூறி இருக்கிறார்— 'யாந்தி தே₃வவ்ரதா தே₃வாந்', 'பூ₄தாநி யாந்தி பூ₄தேஜ்யா:' என்று.

**பொருத்தம்:** சாஸ்த்ர முறையை அறியாததால் அதைவிடுத்து மூன்றுவிதமான இயல்பான ச்ரத்தையுடன் யாகம் முதலியவற்றைச் செய்கின்றவர்களைப் பற்றிக் கூறினார். சாஸ்த்ர முறைகளை அலக்ஷ்யத்தினால் – ச்ரத்தையின்மையினால் விட்டவர்களைப் பற்றிக் கூறவில்லை. ச்ரத்தையும் இல்லை. சாஸ்த்ர முறைகளை மதிப்பதுமில்லை. மனம் போனபடி கடுமையான தவம் செய்கிறார்களே. அவர்கள் எத்தரத்தவர் என்பதை இனி இரண்டு ச்லோகங்களில் விளக்குகிறார்—

**अशास्त्रविहितं घोरं तप्यन्ते ये तपो जनाः।**
**दम्भाहङ्कारसंयुक्ताः कामरागबलान्विताः॥५॥**

**அஶாஸ்த்ரவிஹிதம் கோ₄ரம் தப்யந்தே யே தபோ ஜநா: ।**
**த₃ம்ப₄ாஹங்காரஸம்யுக்தா: காமராக₃ப₃லாந்விதா: ॥ 5 ॥**

**யே** – எந்த, **ஜநா:** – மனிதர்கள், **அஶாஸ்த்ரவிஹிதம்** – சாஸ்த்ர விதிமுறைகளை விடுத்து (மனம் போனபடி), **கோ₄ரம்** – கொடிய, **தப:** – தவம், **தப்யந்தே** – செய்கிறார்களோ, **த₃ம்ப₄ அஹங்கார ஸம்யுக்தா:** – டாம்பீகம், அஹங்காரம் இவற்றோடு, **காம ராக₃ ப₃ல அந்விதா:** – பேராசை, விருப்பம் மற்றும் உடல் வலிமை இவற்றின் மீது கர்வமும் கொண்டுள்ளார்களோ—

எந்த மனிதர்கள் சாஸ்த்ர விதிமுறைகளை விடுத்து, மனம் போனபடி கொடிய தவம் செய்கிறார்களோ, டாம்பீகம், அஹங்காரம் இவற்றோடு பேராசை, விருப்பம் மற்றும் உடல் வலிமை இவற்றின் மீது கர்வமும் கொண்டுள்ளார்களோ—

**கேள்வி:** *சாஸ்த்ர முறைகளைக் கடைப்பிடிக்காமல் கொடிய தவம் புரிவது என்றால் என்ன?*

**பதில்:** எவ்விதத் தவங்களைச் செய்ய சாஸ்த்ரங்களில் விதிமுறை கூறப்படவில்லையோ, எவ்விதத் தவங்களில் சாஸ்த்ர முறை பின்பற்றப்படவில்லையோ, எவற்றில் பலவிதமான ஆடம்பரங்களோடு உடலுக்கும், புலன்களுக்கும் கொடுமைகள் இழைக்கப்படுகின்றனவோ, எவை பார்ப்பதற்கே பயங்கரமாக இருக்குமோ, அவை சாஸ்த்ர முறை மீறிய கொடிய தவங்கள் எனப்படும்.

**கேள்வி:** *இவ்விதத் தவம் செய்பவர்கள் டாம்பீகம், அஹங்காரம் கொண்டவர்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** இவ்விதமாக, சாஸ்த்ரத்திற்கு முரண்பட்ட, பயங்கரமான தவம் செய்பவர்களிடம் ச்ரத்தை இராது. உலகத்தினரை ஏமாற்றி அவர்களை ஆட்டிப் படைப்பதற்காகப் பகட்டான வேஷதாரிகளே இப்படிச் செய்வார்கள். அவர்களுக்கு எப்போதும் அஹங்காரம் அதிகம் இருக்கும். இதனால்தான் அவர்களை டம்பம், அஹங்காரம் மிகுந்தவர்கள் என்று கூறுகிறார்.

**கேள்வி:** *இவர்கள் பேராசை, விருப்பம், உடல் வலிமை இவற்றில் கர்வம் உள்ளவர் என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** அவர்களுக்கு உலகியல் போகங்களில் பேராசை இருக்கும். அவர்களின் உள்ளத்தில் பலவித போகங்களைப் பற்றிய ஆசை இடைவிடாது வளர்ந்து கொண்டே

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இருக்கும். 'நாம் விரும்பியதை அடைந்தே தீருவோம். நமக்கு உடல் வலிமை உள்ளது. நமது விருப்பத்திற்குத் தடை போட எந்த சக்தியால் முடியும்?' என்று திமிர் பிடித்து அலைவார்கள். இதைக் கருத்தில் கொண்டுதான் அவர்களைப் பேராசை, பற்று, வலிமை இவற்றால் கர்வம் உள்ளவர் என்று கூறினார்.

**कर्शयन्तः शरीरस्थं भूतग्राममचेतसः ।**
**मां चैवान्तःशरीरस्थं तान्विद्ध्यासुरनिश्चयान् ॥ ६ ॥**

**கர்ஶயந்த: ஶரீரஸ்த₂ம் பூ₄தக்₃ராமமசேதஸ: ।**
**மாம் சைவாந்த:ஶரீரஸ்த₂ம் தாந்வித்₃த்₄யாஸுரநிஶ்சயாந் ॥ 6 ॥**

**ஶரீரஸ்த₂ம்** – உடல் உருவில் உள்ள, **பூ₄தக்₃ராமம் ச** – பூத ஸமுதாயத்தையும், **அந்த:ஶரீரஸ்த₂ம்** – உள்ளத்தில் உறையும், **மாம் ஏவ** – பரமாத்மாவான என்னையும், **கர்ஶயந்த:** – துன்புறுத்துகிறார்களோ, **தாந்** – அந்த, **அசேதஸ:** – அறிவிலிகளை (நீ), **ஆஸுரநிஶ்சயாந்** – அஸுரப் பண்புடையவர்கள் என, **வித்₃தி₄** – அறிந்து கொள்.

உடல் உருவில் உள்ள பூத ஸமுதாயத்தையும், உள்ளத்தில் உறையும் பரமாத்மாவான என்னையும் துன்புறுத்துகிறார்களோ, அந்த அறிவிலிகளை நீ அஸுரப் பண்புடையவர்கள் என அறிந்து கொள்.

**கேள்வி:** *உடல் உருவில் உள்ள 'பூத ஸமுதாயம்' என்பது எது?*

**பதில்:** ஐம்பெரும் பூதங்கள், மனம், புத்தி, அஹங்காரம், பத்துப் புலன்கள், ஐந்து புலன்களுக்குரிய விஷயங்கள் ஆக இந்த இருபத்து மூன்றின் கூட்டத்தை 'பூத ஸமுதாயம்' என்கிறார். 13/5ல் இவற்றை க்ஷேத்ரம் என்றார்.

**கேள்வி:** *'இந்த பூத ஸமுதாயத்தையும், உள்ளத்தில் உள்ள பரமாத்மாவான என்னையும் துன்புறுத்துபவர்கள்' எனக் கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** சாஸ்த்ரங்களுக்கு முரணாக மனம் போனபடி கொடிய தவம் செய்பவர்கள், பலவிதமான பயங்கரமான நடைமுறைகளினால் மேலே சொன்ன பூத ஸமுதாயத்தை, அதாவது உடலை வருத்தி மெலியவும், பலமற்றதாகவும் செய்கிறார்கள். அது மட்டுமல்ல. தமது கடுமையான நடவடிக்கைகளினால் உள்ளத்தில் உறைகின்ற பரமாத்மாவுக்கும் வருத்தத்தை உண்டாக்குகிறார்கள். இது எப்படியென்றால், அனைவரது உள்ளங்களிலும் ஆத்மாவாகப் பரமாத்மா இருக்கிறார். ஆகவே ஒருவன் தனக்கோ அல்லது ஏதேனும் ஆத்மாவுக்கோ தீங்கு இழைத்துக் கொண்டால்கூட அது பரமாத்மாவுக்குச் செய்த தீங்கே ஆகும். ஆகவே பூத ஸமுதாயத்திற்கும், பரமாத்மாவிற்கும் அவன் தீங்கிழைக்கிறான் என்பது கருத்து.

**கேள்வி:** *'அசேதஸ:' என்றால் என்ன?*

**பதில்:** சாஸ்த்ரங்களுக்கு முரணான நடத்தை உடையவர்கள், புரிந்து கொள்ளும் திறன் இல்லாதவர்கள். ஆவரணம் (திரை) என்ற மாசினால் அறிவு மறைக்கப்பட்டவர்கள், மூடர்கள், அறிவிலிகள் என்று பொருள்.

**கேள்வி:** *'இப்படிப்பட்டவர்கள் அஸுரப் பண்புடையவர்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** மேலே சொன்னவிதம் சாஸ்த்ர முறை மீறிக் கடும் தாமஸத் தவம் செய்பவர்கள் பகட்டு உடையவர்களாகவும், அஹங்காரம் கொண்டவர்களாகவும் இருக்கிறார்கள். பதினாறாவது அத்யாயத்தில் கூறப்பட்டபடி அஸுரத்தன்மை படைத்த இவர்களைத்தான் இங்கே 'ஆஸுரநிஶ்சயா:' என்கிறார்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பொருத்தம்:** இயல்பாக மூன்றுவித ச்ரத்தையுடையவர்களுடைய, கொடுமையான தவமியற்றுபவர்களுடைய இலக்கணங்களைக் கூறிவிட்டு, ஸாத்விகத்தை ஏற்கவேண்டும். ராஜஸ, தாமஸங்களைத் துறக்க வேண்டும் என்பதற்காக உணவு, யாகம், தவம், தானம் இவற்றில் ஸாத்விக, ராஜஸ, தாமஸ வேற்றுமைகளைத் தெரிந்து கொள்ளுமாறு அர்ஜுனனிடம் கூறுகிறார்—

**आहारस्त्वपि सर्वस्य त्रिविधो भवति प्रियः।**
**यज्ञस्तपस्तथा दानं तेषां भेदमिमं शृणु॥ ७॥**

**ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய த்ரிவிதோ₄ ப₄வதி ப்ரிய: ।**
**யஜ்ஞஸ்தபஸ்ததா₂ தா₃நம் தேஷாம் பே₄த₃மிமம் ஶ்ருணு ॥ 7 ॥**

**ஆஹார: அபி** – உணவும், **ஸர்வஸ்ய** – எல்லோருக்கும் (தத்தம் இயல்புக்கு ஏற்றவாறு), **த்ரிவித₄:** – மூன்று வகையில், **ப்ரிய:** – பிடித்ததாக, **ப₄வதி** – உள்ளது. **து** – மேலும், **ததா₂** – அவ்வாறே, **யஜ்ஞ:** – யாகமும், **தப:** – தவமும், **தா₃நம்** – தானமும் (மூவகைப்படும்). **தேஷாம்** – அவற்றின், **இமம் பே₄த₃ம்** – தனித்தன்மை கொண்ட இந்த வேறுபாட்டை (நீ என்னிடமிருந்து), **ஶ்ருணு** – கேட்டுக் கொள்.

உணவும் எல்லோருக்கும் தத்தம் இயல்புக்கு ஏற்றவாறு மூன்று வகைகளில் பிடித்ததாக உள்ளது. மேலும் அவ்வாறே யாகமும் தவமும் தானமும் மூவகைப்படும். அவற்றின் தனித்தன்மை கொண்ட இந்த வேறுபாட்டை (நீ என்னிடமிருந்து) கேட்டுக் கொள்.

**கேள்வி:** 'அபி' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எவ்விதம் ஒருவனுடைய ச்ரத்தையும், வழிபாடும் ஸாத்விகமாகவும், ராஜஸமாகவும், தாமஸமாகவும் அமையுமோ, அதுபோல உணவும் மூவகைப்படும் என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'ஸர்வஸ்ய' என்றால் என்ன பொருள்?

**பதில்:** எல்லா மனிதர்களுக்கு என்று பொருள். உணவு என்பது உயிரினங்களனைத்திற்கும் பொது எனினும் இங்கு மனிதர்களின் உணவைப் பற்றித்தான் பேச்சு.

**கேள்வி:** உணவு முதலியவற்றைப் பற்றி அர்ஜுனன் கேட்கவே இல்லையே? பின் ஏன் பகவான் உணவு முதலியவற்றைப் பற்றிப் பேசுகிறார்?

**பதில்:** மனிதன் எவ்வகை உணவு உண்கிறானோ, அதற்கேற்றபடி அவன் உள்ளப்பாங்கு அமையும். உள்ளப்பாங்குக்கு ஏற்றபடி ச்ரத்தை அமையும். உணவு சுத்தமாக இருந்தால் அதனால் அமைந்த உள்ளப்பாங்கு சுத்தமாக இருக்கும். 'ஆஹாரஶுத்₃தௌ₄ ஸத்த்வஶுத்₃தி₄:' (7/26/2) என்கிறது சாந்தோக்ய உபநிஷத். உள்ளம் சுத்தமாக இருந்தால் எண்ணங்கள், மனப்பாங்கு, ச்ரத்தை முதலிய குணங்களும், செயல்களும் சுத்தமாக அமையும். அதற்காகத்தான் இங்கே உணவைப் பற்றிக் கூறுவது அவசியமாகிறது. மேலும் பூஜை, யாகம் முதலியவற்றை அனைவரும் செய்வதில்லை. ஆனால் அனைவரும் உணவு உண்கிறார்கள். தேவர்களையோ, யக்ஷ-ராக்ஷஸர்களையோ, பூத-ப்ரேத-பிசாசங்களையோ பூஜிப்பதைக் கொண்டு மனிதர்களை ஸாத்விக, ராஜஸ, தாமஸர்களாகப் பிரிப்பதைப் போன்றே, உணவு விஷயத்திலும் ஸாத்விக, ராஜஸ, தாமஸ உணவுகளின் ருசியின் அடிப்படையில் மனிதர்களை மூன்றுவிதமாகப் பிரிக்கலாம். இதற்காகத்தான் இங்கே 'ப்ரிய:' என்ற சொல்லைக் கையாண்டு தனிப்படச் சுட்டிக் காட்டுகிறார். ஆகவே உணவுக் கோணத்திலிருந்தும் அவர்களை அடையாளம் கண்டு கொள்ளலாம். ஸாத்விக உணவுகளை ஏற்கவேண்டும்; ராஜஸ, தாமஸ உணவுகளை விலக்க வேண்டும் என்பதற்காக மூவகை உணவுகளின் வேறுபாட்டைக் கூறுகிறார். இதே மாதிரி யாகம், தானம், தவம் ஆகிய விஷயங்களிலும் உண்ணும் உணவு எத்தகைய மாறுபாடுகளை உண்டாக்குகிறது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் 'உணவு, யாகம், தவம், தானம் இவற்றின் வேறுபாட்டைக் கேட்டுக் கொள்' என்று கூறினார். அதன்படி ஏற்கத்தக்க ஸாத்விக உணவைப் பற்றி இனிக் கூறுகிறார்—

**आयु:सत्त्वबलारोग्यसुखप्रीतिविवर्धना: ।**
**रस्या: स्निग्धा: स्थिरा हृद्या आहारा: सात्त्विकप्रिया: ॥ ८ ॥**

**ஆயு:ஸத்த்வப₃லாரோக்₃யஸுக₂ப்ரீதிவிவர்த₄னா: ।**

**ரஸ்யா: ஸ்நிக்₃தா₄: ஸ்தி₂ரா ஹ்ருத்₃யா ஆஹாரா: ஸாத்த்விகப்ரியா: ॥ 8 ॥**

**ஆயு: ஸத்த்வ ப₃ல ஆரோக்₃ய ஸுக₂ ப்ரீதி விவர்த₄னா:** – ஆயுள், அறிவு, வலிமை, உடல் நலம், இன்பம், அன்பு இவற்றை வளர்க்கின்றவையாகவும், **ரஸ்யா:** – ரஸம் உள்ளவையாகவும், **ஸ்நிக்₃தா₄:** – நெய்ப்புடையவையாகவும், **ஸ்தி₂ரா:** – உடலில் நீண்ட நேரம் தங்குபவையாகவும், **ஹ்ருத்₃யா:** – இயல்பாகவே மனதிற்குப் பிடித்தவையாகவும் (இருக்கக் கூடிய), **ஆஹாரா:** – உணவு வகைகள், **ஸாத்விகப்ரியா:** – ஸத்வகுணமுடையவர்களுக்கு விருப்பமானவை.

ஆயுள், அறிவு, வலிமை, உடல் நலம், இன்பம், அன்பு இவற்றை வளர்க்கின்றவையாகவும், ரஸம் உள்ளவையாகவும், நெய்ப்புடையவையாகவும், உடலில் நீண்ட நேரம் தங்குபவையாகவும், இயல்பாகவே மனதிற்குப் பிடித்தவையாகவும் இருக்கக் கூடிய உணவு வகைகள் ஸத்வகுணமுடையவர்களுக்கு விருப்பமானவை.

**கேள்வி:** ஆயுள், அறிவு, வலிமை, உடல் நலம், இன்பம், அன்பு இவற்றை வளர்ப்பவை என்றால் என்ன? அவற்றை வளர்க்கின்ற உணவு வகைகள் யாவை?

**பதில்:** (1) ஆயுள் என்றால் வயது அதாவது வாழ்க்கையாகும். ஆயுளை வளர்ப்பது என்றால் ஆயுட்காலத்தை நீட்டித்தல் என்று பொருள்.

(2) ஸத்வம் என்றால் அறிவு. அறிவு மாசற்றதாகவும், கூர்மையாகவும், உண்மையாகவும், நுணுக்கமாகவும் அமைவது அறிவை வளர்ப்பதாகும்.

(3) பலம் என்றால் நல்ல செயல்களை நல்லபடி ஆற்றி அவை பயனளிக்க வகை செய்யும் மன ஆற்றலும், உடல் ஆற்றலும். இப்படி உட்புற வலிமையையும், புற வலிமையையும் ஊக்கம் பெருக்குவது வலிமையை வளர்ப்பதாகும்.

(4) மனதும், உடலும் நோயற்று இருப்பது உடல் நலத்தை வளர்ப்பதாகும்.

(5) இதயத்தின் மகிழ்ச்சி, ஸாத்விக த்ருப்தி, புஷ்டி, முகத்திலும், உடலிலும் தூய்மையான எண்ணம் காரணமாக ஏற்படும் ஆனந்தமலர்ச்சி இவைதான் இன்பம். இவற்றை வளர்ப்பது இன்பத்தின் வளர்ச்சி.

(6) மனப்பாங்கு அன்பு மிகுந்து இருப்பதும், அவ்வன்பினால் உடலில் ஏற்படும் புல்லரிப்பு முதலிய அடையாளங்களும் வெளிப்படுவது அன்பின் வளர்ச்சியாகும்.

மேலே சொன்ன ஆயுள், அறிவு, வலிமை முதலியவற்றை வளர்க்கும் உணவு வகைகளான பால், நெய், கீரை, பழம், சர்க்கரை, கோதுமை, சோளம், கடலை, பச்சைப்பயறு, அரிசி முதலியவை ஸாத்விக உணவுகள். இவற்றைக் குறிப்பிடுவதற்காகத்தான் உணவுக்கு இந்த இலக்கணம் கூறினார்.

**கேள்வி:** அந்த உணவு எப்படிப்பட்டதாக இருக்கும்?

**பதில்:** 'ரஸ்யா:', 'ஸ்நிக்தா:', 'ஸ்திரா:', 'ஹ்ருத்யா:' என்று பகவான் இதை விளக்குகிறார்.

(1) பால், சர்க்கரை முதலியவை இனிப்புச் சுவை மிகுந்தவை 'ரஸ்யா:'.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



*(2)* வெண்ணெய், நெய், ஸாத்விகமான விதைகளிலிருந்து பிழியப்படும் எண்ணெய். இந்த நெய்ப்பு உடைய பொருட்களை 'ஸ்நிக்தா:' என்று கூறுவர்.

*(3)* எந்த உணவுகளின் ஸாரம் வெகுநேரம் உடலில் தங்கி அதற்கு பலம் ஊட்டுமோ, அவை 'ஸ்திரா:'.

*(4)* அழுகாமலும், அசுத்தமில்லாமலும் இருந்து, பார்த்ததுமே மனதில் ஸாத்விகமான ஆவலை உண்டு பண்ணக்கூடிய உணவு வகைகள் 'ஹ்ருத்யா:'.

**கேள்வி:** 'ஆஹாரா:' என்றால் என்ன கருத்து?

**பதில்:** கடித்துத் தின்னப்படுவன, மென்று தின்னப்படுவன, நாக்கால் நக்கி உண்ணப்படுவன, உறிஞ்சி அருந்தப்படுவன என்று உணவு நால்வகைப்படும். இவையெல்லாம் ஆஹாரங்கள்தாம். *15/14*ல் விளக்கம் காண்க. அங்கு இந்த நால்வகை உணவுகளைப் பற்றியும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

**கேள்வி:** முன் ச்லோகத்தில் உணவு மூவகை எனக் கூறினார். இங்கே 'ஸாத்விகர்களுக்கு ப்ரியமானவை' என்று உணவை உண்ணும் மனிதர்களின் அடிப்படையில் அந்த வேறுபாட்டைக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மனிதர்களின் குணங்களுக்கேற்றவாறு அவரவர்க்கு அந்தந்த குணம் அமைந்த உணவு பிடிக்கும். ஆகவே மனித குணத்தைச் சொல்லும்போது ஆஹாரத்தைப் பற்றிய விஷயம் தானே வந்து விட்டது. மனிதனை அவனுக்குப் பிடித்த உணவிலிருந்தே அடையாளம் காண முடியும் என்று கூறும் நோக்கில் இங்கே இவ்விஷயங்களெல்லாம் கூறப்படுகின்றன.

**பொருத்தம்:** ஏற்கத்தக்க, ஸாத்விகர்களுக்குரிய உணவைக் கூறிவிட்டு, அடுத்த இரண்டு ச்லோகங்களில் விலக்கப்பட வேண்டிய ராஜஸர்கள், தாமஸர்களுக்கு பிடித்தமான உணவை வகைப்படுத்துகிறார்—

**कट्वम्ललवणात्युष्णतीक्ष्णरूक्षविदाहिनः ।**
**आहारा राजसस्येष्टा दुःखशोकामयप्रदाः ॥ ९ ॥**

**கட்வம்லலவணாத்யுஷ்ணதீக்ஷ்ணரூக்ஷவித₃ாஹிந: ।**

**ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா து₃:க₂ஶோகாமயப்ரத₃ா: ॥ ९ ॥**

**கடு அம்ல லவண அத்யுஷ்ண தீக்ஷ்ண ரூக்ஷ வித₃ாஹிந:** – கசப்பு, புளிப்பு, உவர்ப்பு, மிக்க சூடு, காரம் இவற்றுடன் கூடிய வறண்ட, எரிச்சல் உண்டு பண்ணக் கூடிய மற்றும், **து₃:க₂ ஶோக ஆமயப்ரத₃ா:** – துன்பம், கவலை, நோய் இவற்றை உண்டாக்கக் கூடிய, **ஆஹாரா:** – உணவு வகைகள், **ராஜஸஸ்ய** – ரஜோ குணமுடையவனுக்கு, **இஷ்டா:** – விருப்பமானவை.

கசப்பு, புளிப்பு, உவர்ப்பு, மிக்க சூடு, காரம் இவற்றுடன் கூடிய வறண்ட, எரிச்சல் உண்டு பண்ணக் கூடிய மற்றும் துன்பம், கவலை, நோய் இவற்றை உண்டாக்கக் கூடிய உணவு வகைகள் ரஜோகுணமுடையவனுக்கு விருப்பமானவை.

**கேள்வி:** கசப்பு, புளிப்பு, உவர்ப்பு, மிக்க சூடு, காரம் உள்ள உணவுடன் மற்றும் வறண்ட, எரிச்சல் உண்டு பண்ணக்கூடிய உணவுகள் எவை?

**பதில்:** வேம்பு, பாகற்காய் இவை கசப்பானவை. சிலர் மிளகு முதலிய உறைப்புகளையும் இதிலே சேர்ப்பார்கள். ஆனால் உறைப்பு என்ற சொல் தனியாகச் சொல்லப்படுகிறது. கசப்பும் இதில் சேரலாம். ஆனால் 'கடு' என்பதற்கு இங்கே பொருள் கசப்பு என்று பிரித்துக் கூறப்பட்டுள்ளது. புளி முதலியவை புளிப்பானவை. பலவகை உப்புகள் உவர்ப்பானவை. அதிகச் சூடான பொருட்கள் உஷ்ணமானவை. மிளகாய் வற்றல் முதலியவை உறைப்பு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உள்ளவை. உலையில் வறுக்கப்பட்ட தான்யங்கள் வறண்ட உணவில் வருவன. சிறுகுடுகு இவையெல்லாம் எரிச்சலை உண்டு பண்ணக் கூடியவை.

**கேள்வி:** 'து:கஶோகாமயப்ரதா:' என்றால் என்ன?

**பதில்:** உண்ணும்போது தொண்டையை வருத்தக் கூடியவை; நாக்கு, கடைவாய் இவற்றில் எரிச்சல்; பற்களுக்குக் கூச்சம்; மெல்லும்போது வலி; கண்களில் நீர், மூக்கில் நீர், விக்கல் முதலிய துன்பங்களை உண்டு பண்ணக் கூடியவை – இவற்றை துக்கங்கள் என்கிறார். உண்ட பிறகு ஏன் உண்டோம் என்று வருந்துவது துன்பம். உண்டதனால் வயிற்றில் ஏற்பட்ட வலி முதலிய நோய்களை 'ஆமயம்' என்பார்கள். இவ்விதம் கசப்பான, புளிப்பான, கெட்டியான உணவுகளை உண்பதால் துன்பம், கவலை, நோய் முதலியன உண்டாகின்றன. இவற்றை 'து:கஶோகாமயப்ரதா:' என்கிறார். இவற்றை விலக்க வேண்டும் என்பது கருத்து.

**கேள்வி:** இவை ராஜஸ குணமுடையவனுக்குப் பிடிக்கும் என்றால் என்ன பொருள்?

**பதில்:** மேலே சொன்ன உணவு வகைகள் ராஜஸர்களுக்குப் பிடித்தமானபடியால் அந்த உணவுகள் ராஜஸமானவை. இவ்வித உணவுகளில் ருசியுள்ளவர்கள் ரஜோகுணம் அமைந்தவர்கள்.

**यातयामं गतरसं पूति पर्युषितं च यत्।**
**उच्छिष्टमपि चामेध्यं भोजनं तामसप्रियम्॥ १०॥**

**யாதயாமம் க₃தரஸம் பூதி பர்யுஷிதம் ச யத் ।**

**உச்சி₂ஷ்டமபி சாமேத்₄யம் போ₄ஜநம் தாமஸப்ரியம் ॥ 10 ॥**

**யத்** – எந்த, **போ₄ஜநம்** – உணவு, **யாதயாமம்** – அரைவேக்காடு ஆனதோ, **க₃தரஸம்** – ரஸமற்றதோ, **பூதி** – துர்நாற்றமுடையதோ, **பர்யுஷிதம்** – பழையதோ, **ச** – மேலும், **உச்சி₂ஷ்டம் ச** – உண்டு மிகுந்ததோ, **அமேத்₄யம் அபி** – தூய்மையும் அற்றதோ, **(தத்** – அந்த உணவு), **தாமஸப்ரியம்** – தாமஸகுணமுடையவர்களுக்கு விருப்பமானது.

எந்த உணவு அரைவேக்காடு ஆனதோ, ரஸமற்றதோ, துர்நாற்றமுடையதோ, பழையதோ, மேலும் உண்டு மிகுந்ததோ, தூய்மையும் அற்றதோ அந்த உணவு தாமஸகுணமுடையவர்களுக்கு விருப்பமானது.

**கேள்வி:** 'யாமம்' என்றால் மூன்று மணி நேரங்கொண்ட கால அளவு. 'யாதயாமம்' என்றால் உணவு தயாராகி ஒரு யாமம் ஆகிவிட்டது என்றுதான் பொருள். அதை விட்டு அரைவேக்காடு என்று ஏன் பொருள் கூறவேண்டும்? அரைவேக்காடுடையதை உணவு என்று எப்படிச் சொல்லலாம்?

**பதில்:** அடுத்தாற்போல 'பர்யுஷிதம்' என்று கூறுகிறார். அது நேற்றைய பழையதைக் குறிக்கும். 'யாதயாமம்' (நேரம் கடந்தது) என்பதற்கும் அதே பொருள் கூறிவிட்டால், 'பர்யுஷிதம்' என்ற சொல் பொருளற்றதாகிவிடும். ஒரு நாழிகை ஆனதுகூட யாதயாமம் என்னும்போது ஓரிரவு முன்னால் சமைத்ததுகூட யாதயாமம் என்று சொல்லவும் வேண்டுமா? ஆகவே, அதைப் பர்யுஷிதம் என்ற சொல்லே கூறும்போது யாதயாமம் என்ற சொல்லுக்கு அரைவேக்காடு என்று கூறுவதுதான் பொருத்தம். அரைவேக்காடு என்றால் பழங்கள் பழுப்பதற்குப் போதிய நேரம் கொடுக்கப்படாததுபோலப் பக்குவம் ஆவதற்குப் போதிய நேரம் கொடுக்கப்படாமையால் உணவு அரைவேக்காடு ஆகிறது.

**கேள்வி:** 'கதரஸம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** தீ அதிகமானதால் அல்லது காற்றுப்பட்டதால், இல்லையேல் பருவம் கடந்துவிட்டதால் சாறுடன் கூடிய பொருட்களின் சாறு வற்றி உலர்ந்து போவதை 'கதரஸம்' என்கிறார். காய்ந்து போன ஆரஞ்சுப்பழம், கரும்பு முதலியன.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'பூதி' என்றால் என்ன?

**பதில்:** சில பண்டங்கள் இயல்பாகவே துர்நாற்றமுடையவை. வெங்காயம், பூண்டு முதலியன. சில பண்டங்களைச் சமைத்தால் துர்நாற்றம் ஏற்படும். இவை பூதி எனப்படும்.

**கேள்வி:** 'பர்யுஷிதம்' என்றால் எந்த உணவுப் பண்டங்கள்?

**பதில்:** முதல் நாள் சமைக்கப்பட்டப் பொருள் 'பர்யுஷிதம்'. இரவு கழிந்தால் உணவுப் பண்டங்களில் மாறுதல் ஏற்படும். அவற்றை உண்டால் நோய் உண்டாகும். பழங்களை மரங்களிலிருந்து பறித்த பிறகு வெகுநாட்கள் வைத்திருந்தால் அழுகிவிடும். இவை 'பர்யுஷிதங்கள்' எனப்படும்.

**கேள்வி:** 'உச்சிஷ்டம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** தானோ, பிறரோ உண்ட பிறகு எஞ்சிய உணவு 'உச்சிஷ்டம்' எனப்படும்.

**கேள்வி:** 'அமேத்யம்' என்பது எப்படி உணவைக் குறிக்கும்?

**பதில்:** புலால், முட்டை முதலியவை ஹிம்ஸையினால் பெறப்பட்டவை; கள், சாராயம் முதலிய தவிர்ப்பதற்குரிய, போதையூட்டும் பொருட்கள் இயல்பிலேயே அசுத்தமானவை; சேர்க்கையினால் அசுத்தமானவை; அசுத்தமான பொருளுடனோ, இடத்திலோ, பாத்திரத்திலோ, மனிதனுடனோ சேர்ந்ததாலோ அசுத்தமானவை; அந்யாயமாகவும், அதர்மமாகவும் ஸம்பாதிக்கப்பட்ட பொருட்களினால் வாங்கப்பட்டவை இவையனைத்தும் 'அமேத்யம்' எனப்படும். இவை தெய்வ பூஜையிலும் தடை செய்யப்பட்டவை.

**கேள்வி:** 'அபி', 'ச' என்ற சொற்களை ஆண்டு என்ன கருத்தைக் கூறுகிறார்?

**பதில்:** இன்னும் மேலே உள்ள சொற்களால் குற்றம் குறை கொஞ்சமாகவோ, அதிகமாகவோ உள்ள தாமஸப் பொருட்களையும் சேர்த்துக் கூறுகிறார். பங்கி, கஞ்சா, அபின், புகையிலை, சிகரெட், பீடி, அர்க்கம் (எருக்கு), ஆஸவம் (சாராயம்) மற்றும் தூய்மையற்ற மருந்துகள் ஆகியவை தமோ குணத்தைப் பெருக்குபவை. இவையனைத்துமே தாமஸப் பண்டங்கள்.

**கேள்வி:** இப்படிப்பட்ட பொருட்கள் தாமஸர்களுக்குப் பிடித்தமானவை என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேற்கூறிய இலக்ஷணங்கள் உள்ள பொருட்கள் தாமஸமானதாலேயே, தாமஸ குணமுடையவர்கள் இவ்விதப் பொருட்களையே விரும்பி உண்கிறார்கள். இதுதான் அவர்களுக்கு அடையாளம்.

**பொருத்தம்:** இவ்விதம் உணவு பற்றிய மூன்று வகைகளைக் கூறி, இனி யாகங்கள் மூவகைப்படும் என்று கூறுமுகத்தான் முதலில் ஏற்கக்கூடிய ஸாத்விக யாகத்தின் இலக்கணம் கூறுகிறார்—

अफलाकाङ्क्षिभिर्यज्ञो विधिदृष्टो य इज्यते।
यष्टव्यमेवेति मनः समाधाय स सात्त्विकः॥ ११ ॥

அப₂லாகாங்க்ஷிபி₄ர்யஜ்ஞோ விதி₄த்₃ருஷ்டோ ய இஜ்யதே ।
யஷ்டவ்யமேவேதி மந: ஸமாத₄ாய ஸ ஸாத்த்விக: ॥ 11 ॥

**ய:** – எது, **விதி₄த்₃ருஷ்ட:** – சாஸ்த்ரங்களுக்கு உட்பட்ட, **யஜ்ஞ:** – யாகமோ, **யஷ்டவ்யம் ஏவ** – செய்யப்படவேண்டிய கடமைதான், **இதி** – என்று, **மந:** – மனதை, **ஸமாத₄ாய** – ஒருநிலைப்படுத்தி, **அப₂லாகாங்க்ஷிபி₄:** – பயனில் பற்றற்றவர்களால், **இஜ்யதே** – செய்யப்படுகின்றதோ, **ஸ:** – அது, **ஸாத்த்விக:** – ஸாத்விகமான யாகம்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



எந்த யாகம் சாஸ்த்ரங்களுக்கு உட்பட்டதோ, செய்யப்படவேண்டிய கடமைதான் என்று மனதை ஒருநிலைப்படுத்திப் பயனில் பற்றற்றவர்களால் செய்யப்படுகின்றதோ அது ஸாத்விகமான யாகம்.

**கேள்வி:** 'விதித்ருஷ்ட:' என்றால் என்ன? இங்கே இந்த அடைமொழி இடுவதன் கருத்து என்ன?

**பதில்:** வேதங்களிலும், ஸ்ம்ருதிகளிலும் எந்தெந்த வர்ணத்தாரும், ஆசிரமத்தாரும் தனித்தனியே எந்தெந்த யாகம்தான் செய்யலாம் என்ற விதிகள் உள்ளன. அவரவர்கள் அதையதை ஏற்று ஆற்றுவதுதான் ஸாத்விக யாகம் ஆகும். சாஸ்த்ரங்களை மீறி மனம் போனபடி செய்வது ஸாத்விக யாகமன்று.

**கேள்வி:** 'யஜ்ஞம்' என்றால் எது?

**பதில்:** தேவதைகளின் பொருட்டு நெய் முதலிய பொருட்களை அக்னியில் ஹோமம் செய்வது, வேறுவழிகளிலும் மற்றப் பொருட்களை அர்ப்பணம் செய்து, அவர்களைத் தக்கபடி பூஜிப்பது இவையெல்லாம் 'யக்ஞம்' ஆகும்.

**கேள்வி:** யக்ஞம் செய்வது கடமையே என்று மனதை ஒருநிலைப்படுத்திச் செய்யப்படும் யாகம்தான் ஸாத்விகம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பயனில் விருப்பம் இல்லையெனில் கர்மத்தைச் செய்ய அவசியமென்ன என்று நினைத்து, மனிதன் யாகங்களைச் செய்ய முனையமாட்டான். செய்துதான் ஆகவேண்டும் என்ற மன உறுதியுடன் செய்யப்படும் யாகத்தை பகவான் ஸாத்விகம் என்கிறார். ஏனென்றால், அந்தந்த வர்ண, ஆசிரமங்களுக்குரிய கடமைகளை சாஸ்த்ரம் விதித்துள்ளது. அவற்றைச் செய்துதான் ஆகவேண்டும். சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட இத்தகைய கடமையை ஆற்றாமல் இருப்பது பகவானின் ஆணையை மீறுவது ஆகும் என்று மனதில் உறுதிபூண்டு நிஷ்காமமாகச் செய்யப்படும் யக்ஞம்தான் ஸாத்விக யக்ஞம் ஆகும்.

**கேள்வி:** 'அபலாகாங்க்ஷிபி:' என்ற சொல் எத்தகைய கர்த்தாவைக் குறிக்கிறது? அவர்கள் செய்கின்ற யாகம் ஸாத்விகம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** யாகத்தின் மூலம் மனைவி-மக்கள், செல்வம், வீடு, மதிப்பு, பெருமை, புகழ், வெற்றி, ஸ்வர்கம் இவற்றைப் பெறுவதற்காகவோ, தமக்கு ஏற்படக் கூடிய இன்னல்களைத் தவிர்ப்பதற்காகவோ, இவ்வுலகத்திலோ, பரலோகத்திலோ ஸுக போகத்திற்காகவோ, துன்பத்தை விலக்கிக் கொள்வதற்காகவோ அல்லது இது போன்ற வேறு பயனிலோ சிறிதும் விருப்பம் கொள்ளாது யாகம் செய்வோர் 'பயனை எதிர்பாராதவர்:' (6/1) எனப்படுவர். அத்தகையோர் புரியும் வேள்வி ஸாத்விகமானது என்று கூறி, பயனை எதிர்பார்ப்பவர் செய்யும் யாகம் நெறிப்படி அமைந்தாலும்கூட அது முழுமையாக ஸாத்விகம் ஆகாது. ஸாத்விகம் முழுமையாக அமைய வேண்டுமானால் பயனை எதிர்பார்ப்பதை த்யாகம் செய்வது மிகவும் அவசியம் ஆகும் என்று வலியுறுத்தப்படுகிறது.

**பொருத்தம்:** **இனி ராஜஸ யாக இலக்கணம் பற்றிக் கூறுகிறார்—**

**अभिसन्धाय तु फलं दम्भार्थमपि चैव यत्।**
**इज्यते भरतश्रेष्ठ तं यज्ञं विद्धि राजसम्॥ १२॥**

***அபி₄ஸந்த₄ாய து ப₂லம் த₃ம்ப₄ார்த₂மபி சைவ யத் ।***

***இஜ்யதே ப₄ரதஸ்ரேஷ்ட₂ தம் யஜ்ஞம் வித்₃தி₄ ராஜஸம் ॥ 12 ॥***

**து** – ஆனால், **ப₄ரதஸ்ரேஷ்ட₂** – அர்ஜுன! **த₃ம்ப₄ார்த₂ம் ஏவ** – பகட்டுக்காகவோ, **ச** – அல்லது, **ப₂லம் அபி** – பயனையும், **அபி₄ஸந்த₄ாய** – கருத்தில் கொண்டோ,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**யத்** – எந்த யாகம், **இஜ்யதே** – செய்யப்படுகிறதோ, **தம்** – அந்த, **யஜ்ஞம்** – யாகத்தை, **ராஜஸம்** – ராஜஸம் என்று, **வித்₃தி₄** – தெரிந்து கொள்.

ஆனால் அர்ஜுன! பகட்டுக்காகவோ அல்லது பயனைக் கருத்தில் கொண்டோ எந்த யாகம் செய்யப்படுகிறதோ அந்த யாகத்தை ராஜஸம் என்று தெரிந்து கொள்.

**கேள்வி:** 'து' (ஆனால்) என்பதன் கருத்து என்ன?

**பதில்:** ஸாத்விக யாகத்திலிருந்து இது வேறுபட்டது என்பதைச் சுட்டிக்காட்டுகிறார்.

**கேள்வி:** பகட்டுக்காக யாகம் செய்வதென்றால் என்ன?

**பதில்:** யாகம் செய்வதில் ச்ரத்தை கிடையாது. ஆயினும் உலகத்தார் தன்னை வேள்வியில் மிகவும் ஈடுபாடுள்ளவன் என்று மதிக்கவேண்டும், புகழ வேண்டும் என்ற குறிக்கோளுடன் செய்வது பகட்டுக்காக யாகம் செய்வது ஆகும்.

**கேள்வி:** பயனை எதிர்பார்த்து யாகம் செய்வதென்றால் என்ன?

**பதில்:** மனைவி–மக்கள், செல்வம், வீடு, மதிப்பு, புகழ், பெருமை, வெற்றி, ஸ்வர்கம் முதலியவற்றைப் பெற்று இவ்வுலக, பரலோக ஸுகபோகங்களை அனுபவிக்கவும், வேண்டாதது ஏதோ விலக வேண்டும் என்றும் பயன் கருதித் திட்டமிட்டுச் செய்யப்படும் யாகம் என்று பொருள்.

**கேள்வி:** 'ஏவ', 'அபி', 'ச' என்ற சொற்களின் கருத்து என்ன?

**பதில்:** பயனைக் கருதிச் செய்யப்படும் யாகம் சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டு ச்ரத்தையுடன் செய்யப்பட்டாலும்கூட ராஜஸம்தான். பகட்டாகச் செய்வதும் ராஜஸம்தான். இந்த இரண்டு குற்றங்களும் உள்ள யாகம் ராஜஸமானது என்று சொல்லவும் வேண்டுமா?

**பொருத்தம்:** அடுத்து தாமஸ யக்ஞத்தின் இலக்கணம் கூறி, அது எவ்வகையிலும் தவிர்க்கப்பட வேண்டியது என்று எடுத்துக் காட்டுகிறார்—

**विधिहीनमसृष्टान्नं मन्त्रहीनमदक्षिणम्।**
**श्रद्धाविरहितं यज्ञं तामसं परिचक्षते॥ १३॥**

**விதி₄ஹீநமஸ்ருஷ்டாந்நம் மந்த்ரஹீநமத₃க்ஷிணம் ।**
**ஶ்ரத்₃த₄ாவிரஹிதம் யஜ்ஞம் தாமஸம் பரிசக்ஷதே ॥ 13 ॥**

**விதி₄ஹீநம்** – சாஸ்த்ர முறை வழுவியும், **அஸ்ருஷ்டாந்நம்** – அன்னதானமளிக்கப் படாமலும், **மந்த்ரஹீநம்** – மந்த்ரம் இல்லாமலும், **அத₃க்ஷிணம்** – தக்ஷிணை கொடுக்கப் படாமலும் (மேலும்), **ஶ்ரத்₃த₄ா விரஹிதம்** – ச்ரத்தை இல்லாமலும் செய்யப்படுகின்ற, **யஜ்ஞம்** – யாகத்தை, **தாமஸம்** – தாமஸம் என்று, **பரிசக்ஷதே** – கூறுகிறார்கள்.

சாஸ்த்ர முறை வழுவியும் அன்னதானமளிக்கப்படாமலும், மந்த்ரம் இல்லாமலும், தக்ஷிணை கொடுக்கப்படாமலும் மேலும் ச்ரத்தை இல்லாமலும் செய்யப்படுகின்ற யாகத்தைத் தாமஸம் என்று கூறுகிறார்கள்.

**கேள்வி:** 'விதிஹீநம்' ஆன யாகம் எது?

**பதில்:** சாஸ்த்ரத்தில் கூறப்படாத, சாஸ்த்ரக் கட்டுப்பாடுகளை மீறிய, சாஸ்த்ர முறைகளை அவமதித்து மனம் போனபடி செய்யப்படுகின்ற யாகம் 'விதிஹீநம்' ஆகும்.

**கேள்வி:** 'அஸ்ருஷ்டாந்நம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** வேதியர்களுக்கோ, மற்றவர்களுக்கோ உணவளிக்கப்படாத, அன்னதானம் இல்லாத யாகம் 'அஸ்ருஷ்டாந்நம்' ஆகும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'மந்த்ரஹீநம்' என்றால் என்ன?

**பதில்:** சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட மந்த்ரங்கள் முறைப்படி உச்சரிக்கப்படாமல் விதிமுறைப்படி சடங்குகள் இயற்றப்படாத, அலக்ஷ்யமாகத் தப்பும், தவறுமாக மந்த்ரங்கள் சொல்லப்படுகின்ற யாகம் 'மந்த்ரஹீநம்' எனக் கருதப்படும்.

**கேள்வி:** 'அதக்ஷிணம்' என்றால் என்ன கருத்து?

**பதில்:** யக்ஞம் செய்விப்பவர்களுக்கும், இன்னும் அங்கு வந்திருக்கும் அந்தணர்களுக்கும் தக்ஷிணை கொடுக்காமல் செய்யப்படும் யாகம் 'அதக்ஷிணம்' ஆகும்.

**கேள்வி:** 'ஶ்ரத்தாவிரஹிதம்' என்றால் என்ன கருத்து?

**பதில்:** உண்மையான ச்ரத்தையின்றிப் பெருமை, மதிப்பு, திமிர், மோஹம், பகட்டு, அஹங்காரம் இவற்றின் தூண்டுதலினால் செய்யப்படும் யாகம் 'ஶ்ரத்தாவிரஹிதம்'.

**பொருத்தம்: இவ்விதம் மூவகை யக்ஞங்களின் இலக்கணங்களைக் கூறி, தவத்தின் இலக்கணம் கூறமுற்பட்டு நான்கு ச்லோகங்களில் ஸாத்விகத் தவத்தின் இலக்கணங்களைச் சொல்லும் முன் முதலில் உடல் தவத்தின் ஸ்வரூபம் என்னவென்று கூறுகிறார்—**

**देवद्विजगुरुप्राज्ञपूजनं शौचमार्जवम्।**
**ब्रह्मचर्यमहिंसा च शारीरं तप उच्यते॥ १४॥**

**தே₃வத்₃விஜகு₃ருப்ராஜ்ஞபூஜநம் ஶௌசமார்ஜவம் ।**
**ப்₃ரஹ்மசர்யமஹிம்ஸா ச ஶாரீரம் தப உச்யதே ॥ 14 ॥**

**தே₃வ த்₃விஜ கு₃ரு ப்ராஜ்ஞ பூஜநம்** – தெய்வங்கள், அந்தணர்கள், பெரியோர்கள், ஞானிகள் இவர்களைப் பூஜித்தலும், **ஶௌசம்** – தூய்மையும், **ஆர்ஜவம்** – நேர்மையும், **ப்₃ரஹ்மசர்யம்** – ப்ரம்மசர்யமும் (புலனடக்கம்), **அஹிம்ஸா ச** – அஹிம்ஸையும், **ஶாரீரம்** – உடலால் செய்யக்கூடிய, **தப:** – தவம் என்று, **உச்யதே** – சொல்லப்படுகிறது.

தெய்வங்கள், அந்தணர்கள், பெரியோர்கள், ஞானிகள் இவர்களைப் பூஜித்தலும், தூய்மையும், நேர்மையும், ப்ரம்மசர்யமும், அஹிம்ஸையும் உடலால் செய்யக்கூடிய தவம் என்று சொல்லப்படுகிறது.

**கேள்வி:** தேவர்கள், அந்தணர்கள், பெரியோர்கள், ஞானிகள் என்பவர்கள் யாவர்? அவர்களைப் பூஜிப்பது எப்படி?

**பதில்:** ப்ரம்மதேவன், மஹாதேவன், சூரியன், சந்த்ரன், துர்கை, அக்னி, வருணன், யமன், இந்த்ரன் முதலியோர் சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட தேவதைகள். சாஸ்த்ரங்களில் இவர்களைப் பூஜிக்கும் முறை கூறப்பட்டுள்ளது. இவர்கள் தேவர்கள். த்விஜர் என்றால் இருபிறப்பாளர்கள். ப்ராம்மண, க்ஷத்ரிய, வைசியர்கள் – இரு பிறப்பாளர்கள். ஆனாலும் இங்கு அந்தணரையே 'த்விஜ' என்ற சொல் குறிப்பிடுகிறது. ஏனெனில் சாஸ்த்ரங்களில் அனைவராலும் அந்தணர்களே பூஜிக்கத்தக்கவர்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'குரு' என்றால் தாய்–தந்தையர், ஆசார்யர், வயது முதிர்ந்தோர், தன்னைக் காட்டிலும் வர்ணத்திலும், ஆசிரமத்திலும், வயதிலும் மூத்தவர் என்று பொருள். 'ப்ராஜ்ஞ' என்றால் பரமாத்மாவை நன்கு அறிந்து உணர்ந்த மஹாத்மாக்களான ஞானிகள் என்று பொருள். இவர்களைத் தக்கபடி மரியாதை தந்து உபசரித்து வணங்குவது, நிலத்தில் உடல்தோயப் பணிந்து நமஸ்காரம் செய்வது, இவர்களின் சரணங்களை நீர் விட்டு அலம்புவது, இவர்களுக்குச் சந்தனம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்யம் முதலியவை அர்ப்பணம் செய்வது, இவர்களுக்குத் தகுந்தபடி பணிவிடை செய்வது, இவர்களுக்கு ஸுகமளிப்பதற்குரிய உபசாரம் புரிவது இவையெல்லாம் பூஜையாகும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ஶௌசம்' என்பது என்ன?

**பதில்:** இங்கே 'ஶௌசம்' என்ற இந்தச் சொல் உடல் தூய்மையை மட்டுமே குறிக்கிறது. சொல்தூய்மை பற்றி 17/15லும், மனத்தூய்மை பற்றி 17/16லும் தனியாகக் கூறுகிறார். தண்ணீர், மண் இவற்றைக் கொண்டு உடலைச் சுத்தம் செய்து தூயதாக வைத்துக் கொள்வது, உடலால் ஆற்றப்படும் எல்லாச் செய்கைகளிலும் துய்மையாக இருப்பது 'ஶௌசம்' (16/3).

**கேள்வி:** 'ஆர்ஜவம்' என்பது என்ன?

**பதில்:** 'ஆர்ஜவம்' என்றால் நேர்மை என்று பொருள். உடலினால் ஆற்றப்படும் தவம் பற்றிய விளக்கத்தில் வரும் இச்சொல்லிற்கு இங்கே உடல் வளையாமல், கூனாமல், இயல்பாக நிமிர்ந்து இருப்பது என்பது பொருள் என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

**கேள்வி:** 'ப்ரஹ்மசர்யம்' என்றால் என்ன கருத்து?

**பதில்:** உடலுறவு கொள்ளாமை, திடமாக வீர்யத்தைக் காப்பது என்பனவெல்லாம் இதில் அடக்கம்.

**கேள்வி:** 'அஹிம்ஸா' என்றால் என்ன பொருள்?

**பதில்:** உடலினால் எந்த உயிருக்கும், எவ்விதத் தீங்கும், எந்நேரத்திலும் சிறிதுகூட விளைவிக்காமை 'அஹிம்ஸா' எனப்படும்.

**கேள்வி:** இவையெல்லாம் 'உடல் தவம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** மேற்குறித்த செயல்கள் உடலால் ஆற்றப்படுவன. இவை புலன்கள் அடங்கிய உடலில் உள்ள மாசுகள் அனைத்தையும் அகற்றி உடலைத் தூய்மைப்படுத்துவன. எனவே 'உடல் தவம்' என்பது இச்செயல்களைக் குறிப்பிடும்.

**பொருத்தம்:** அடுத்து, சொல் பற்றிய தவத்தைப் பற்றிக் கூறுகிறார்—

**अनुद्वेगकरं वाक्यं सत्यं प्रियहितं च यत्।**
**स्वाध्यायाभ्यसनं चैव वाङ्मयं तप उच्यते॥ १५॥**

**அநுத்₃வேக₃கரம் வாக்யம் ஸத்யம் ப்ரியஹிதம் ச யத் ।**

**ஸ்வாத்₄யாயாப்₄யஸநம் சைவ வாங்மயம் தப உச்யதே ॥ 15 ॥**

**யத்** – எது, **அநுத்₃வேக₃கரம்** – பிறர் மனதைப் புண்படுத்தாமல், **ப்ரியஹிதம்** – இனிமையும், நலனும் அளிக்கக் கூடியதாகவும், **ஸத்யம் ச** – உண்மையாகவும் இருக்குமோ (அந்த), **வாக்யம் ச** – பேச்சும், **ஸ்வாத்₄யாய அப்₄யஸநம் ஏவ** – வேத சாஸ்த்ரங்களை ஓதுதலும், பகவானுடைய நாம கீர்த்தனமும், **வாங்மயம்** – வாக்கினால் செய்யக்கூடிய, **தப:** – தவம் என்று, **உச்யதே** – கூறப்படுகிறது.

எது பிறர் மனதைப் புண்படுத்தாமல் இனிமையும், நலனும் அளிக்கக் கூடியதாகவும், உண்மையாகவும் இருக்குமோ, அந்தப் பேச்சும், வேத சாஸ்த்ரங்களை ஓதுதலும், பகவானுடைய நாம கீர்த்தனமும் வாக்கினால் செய்யக்கூடிய தவம் என்று கூறப்படுகிறது.

**கேள்வி:** 'அநுத்வேககரம்', 'ஸத்யம்', 'ப்ரியஹிதம்' என்ற அடைமொழிகளின் பொருள் என்ன? 'வாக்யம் ச' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எந்தச் சொல் எவர் மனதையும் புண்படுத்தாதோ, நிந்தை, கோள் சொல்லுதல் முதலிய குற்றம் சிறிதும் அற்றதோ, அது 'அநுத்வேககரம்'. எதை எப்படிப் பார்த்தோமோ, கேட்டோமோ, அனுபவித்தோமோ, அதை அப்படியே பிறருக்குத் தெரிவிப்பதற்காக நடந்தபடியே சொல்வது 'ஸத்யம்'. கேட்பவர் விரும்புமாறும், மேலும் கடுகடுப்பு, கடுமை, குத்திக் காட்டுவது, அலக்ஷ்யமாக இருத்தல், அவமதிப்பு முதலிய குறைகளின்றி எவ்விதத்திலும்



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அன்பாகவும், இனிமையாகவும், நேர்மையாகவும், அமைதியாகவும் அமையும் சொல் 'ப்ரியம்' ஆகும். அனைவருக்கும் நலன் பயக்கின்றதும், ஹிம்ஸை, த்வேஷம், பொறாமை, பகை ஆகியவையற்றதும், அன்பு, கனிவு, மங்களம் ஆகியன நிறைந்ததுமான சொல் 'ஹிதம்' ஆகும். மனதைப் புண்படுத்தாத, ஸத்யமான, ப்ரியமான, ஹிதமான சொற்களும், சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட மாசற்ற பேச்சும், சொல்வழித்தவம் ஆகும். மேற்குறித்த நற்பண்புகளில் ஏதோ ஒன்று இல்லாவிடினும், அது முழுமையான சொல் வழித் தவம் ஆகாது.

**கேள்வி:** 'ஸ்வாத்யாய அப்யஸநம்' என்றால் என்ன கருத்து?

**பதில்:** தகுதிக்கேற்றபடி அவரவர்களுக்குரிய வேதங்கள், வேதாங்கங்கள், ஸ்ம்ருதி, புராணம், ஸ்தோத்ரம் முதலியவற்றைப் படிப்பது; பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், நாமங்கள் இவற்றை ஓதுதல்; கீர்த்தனம் செய்தல் ஆகியவை 'ஸ்வாத்யாய அப்யஸநம்' ஆகும்.

**கேள்வி:** இவையெல்லாம் வாக்கினால் செய்யக்கூடிய தவம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேற்குறித்த பண்புகள் அனைத்தும் வாக்குடன் தொடர்பு கொண்டவை. வாக்கின் மாசுகளை நீக்கி, மனதையும், பேச்சையும் புனிதமாக்கும் தன்மை கொண்டவை. ஆகவே இவை வாக்கினால் செய்யக் கூடிய தவம் எனப்படுகின்றன.

**பொருத்தம்:** மனத்தவம் பற்றி இனிக் கூறுகிறார்—

**मनःप्रसादः सौम्यत्वं मौनमात्मविनिग्रहः ।**
**भावसंशुद्धिरित्येतत्तपो मानसमुच्यते ॥ १६ ॥**

**மந:ப்ரஸாத₃: ஸௌம்யத்வம் மௌநமாத்மவிநிக்₃ரஹ: ।**
**ப₄ாவஸம்ஶுத்₃தி₄ரித்யேதத்தபோ மாநஸமுச்யதே ॥ 16 ॥**

**மந:ப்ரஸாத₃:** – மனமகிழ்ச்சி, **ஸௌம்யத்வம்** – அமைதியான இயல்பு, **மௌநம்** – பகவானை இடைவிடாது சிந்தித்திருக்கின்ற இயல்பு, **ஆத்மவிநிக்₃ரஹ:** – மனவடக்கம், **ப₄ாவஸம்ஶுத்₃தி₄:** – உள்ளத்தூய்மை, **இதி ஏதத்** – இவையெல்லாம், **மாநஸம்** – மனதால் ஆற்றக்கூடிய, **தப:** – தவம், **உச்யதே** – எனப்படுகின்றன.

மனமகிழ்ச்சி, அமைதியான இயல்பு, பகவானை இடைவிடாது சிந்தித்திருக்கின்ற இயல்பு, மனவடக்கம், உள்ளத்தூய்மை இவையெல்லாம் மனதால் ஆற்றக்கூடிய தவம் எனப்படுகின்றன.

**கேள்வி:** 'மந:ப்ரஸாத:' என்றால் என்ன கருத்து?

**பதில்:** மனத் தூய்மையும், மனமகிழ்ச்சியும் 'மந:ப்ரஸாத:' எனப்படும். வருத்தம்–பயம்; கவலை–சோகம்; கலக்கம்–ஆத்திரம் முதலிய குறைகளின்றித் தூய்மை, தெளிவு, முகமலர்ச்சி, கொண்டதும், அறிவுத்திறன் வாய்ந்ததுமான மனப்பாங்கே 'மந:ப்ரஸாத:' (மனத்தெளிவு) ஆகும்.

**கேள்வி:** 'ஸௌம்யத்வம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** கடுகடுப்பு, பொறாமை, ஹிம்ஸை, பழிவாங்குவது, கொடுமை, இரக்கமின்மை முதலிய மனதில் கொதிப்பு விளைவிக்கக்கூடிய குறைபாடுகள் அற்று மனம் எப்பொழுதும் அமைதியாகவும், குளிர்ந்தும் இருப்பது 'ஸௌம்யத்வம்' எனப்படுகிறது.

**கேள்வி:** 'மௌநம்' என்றால் என்ன?

**பதில்:** மனம் எப்பொழுதும் பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், தத்வம், ஸ்வரூபம், லீலை, நாமங்கள் இவற்றைச் சிந்திப்பது அல்லது ப்ரம்மத்தைப் பற்றி ஆராய்வது இவையெல்லாம் 'மௌநம்' ஆகும்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ஆத்மவிநிக்ரஹ:' என்றால் என்ன கருத்து?

**பதில்:** மனதின் சஞ்சலத்தை அறவே ஒழித்து, அதை நிலையாக நன்கு தன்னுடைய வசத்தில் வைத்துக் கொள்வதே 'ஆத்மவிநிக்ரஹ:' (மனவடக்கம்) ஆகும்.

**கேள்வி:** 'பாவஸம்ஶுத்தி:' என்றால் பொருள் என்ன?

**பதில்:** உள்ளத்தில் விருப்பு–வெறுப்பு, காம–க்ரோதம், லோப–மோஹம், திமிர், பிறர் மேன்மை பொறுக்காமை, பகை, அருவருப்பு, அலக்ஷ்யம், பொறாமை, ஸஹிப்புத்தன்மையின்மை, பதற்றம், வீணான கவலை, தனக்கு உண்மையாக ஹிதமானதில் விரோதம், தீங்கு நினைப்பது முதலிய தீய மனப்பாங்குகள் ஒழிந்து, நேர்மாறான தயவு, பொறுமை, அன்பு, பணிவு முதலிய அனைத்து நற்பண்புகளும் என்றும் மலர்ந்திருப்பது 'பாவஸம்ஶுத்தி:' (உள்ளத்தூய்மை) ஆகும்.

**கேள்வி:** இவை யாவும் மனதால் ஆற்றக்கூடிய தவம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இவை மனதின் தொடர்பு கொண்டவை. மனதில் உள்ள எல்லா மாசுகளையும் நீக்கி மிகவும் பரிசுத்தமாக்குபவை. ஆகவே இவை மனதால் ஆற்றக்கூடிய தவம் எனப்படும்.

**பொருத்தம்:** அடுத்து ஸாத்விகத் தவத்தின் இலக்கணம் கூறுகிறார்—

**श्रद्धया परया तप्तं तपस्तत्त्रिविधं नरैः।**
**अफलाकाङ्क्षिभिर्युक्तैः सात्त्विकं परिचक्षते॥ १७॥**

**ஶ்ரத்₃த₄யா பரயா தப்தம் தபஸ்தத்த்ரிவித₄ம் நரை: ।**
**அப₂லாகாங்க்ஷிபி₄ர்யுக்தை: ஸாத்த்விகம் பரிசக்ஷதே ॥ 17 ॥**

**அப₂லாகாங்க்ஷிபி₄:** – பயனில் கருத்தில்லாத, **யுக்தை:** – யோகிகளான, **நரை:** – மனிதர்களால், **பரயா ஶ்ரத்₃த₄யா** – மிகுந்த நம்பிக்கையுடன், **தப்தம்** – செய்யப்படுகின்ற, **தத்** – அந்த, **த்ரிவித₄ம்** – மனம், மொழி, மெய் இவற்றால் ஆற்றப்படுகின்ற மூன்றுவிதமான, **தப:** – தவம், **ஸாத்த்விகம்** – ஸாத்விகமானது என்று, **பரிசக்ஷதே** – சொல்லப்படுகிறது.

பயனில் கருத்தில்லாத யோகிகளால் மிகுந்த ச்ரத்தையுடன் செய்யப்படுகின்ற மனம், மொழி, மெய் இவற்றால் ஆற்றப்படுகின்ற அந்த மூன்றுவிதமான தவம் ஸாத்விகமானது என்று சொல்லப்படுகிறது.

**கேள்வி:** 'அபலாகாங்க்ஷிபி:', 'யுக்தை:' என்ற அடைமொழிகளுடன் 'நரை:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இவ்வுலகம் அல்லது பரலோகத்தைச் சேர்ந்த எந்தவிதமான ஸுகபோகத்தையோ, துயரம் தீரவேண்டுமென்ற பயனையோ, ஒருபொழுதும், எக்காரணம் கொண்டும் விரும்பாதவன் 'அபலாகாங்க்ஷீ' எனப்படுகிறான். எவனுடைய மனம், புத்தி, புலன்கள் பற்றற்று அடங்கித் தூய்மையாக இருப்பதால் எப்பொழுதும், எந்தவிதமான போகம் கிடைத்தாலும் நிலைகுலைவதில்லையோ, கொஞ்சம்கூட ஆவல் கொள்வதில்லையோ, அவன் 'யுக்தன்' (யோகீ) எனப்படுகிறான். இப்படி நிஷ்காமமாக இருப்பதன் அவசியத்தை இந்த அடைமொழிகளால் குறிப்பிட்டு, மேலே சொன்ன மூன்றுவிதத் தவங்களையும் பயன் கருதாது கடைப்பிடிப்பவன் முழுமையாக ஸாத்விகத்தன்மை பெற்றவனாவான் என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'பரயா ஶ்ரத்தயா' என்பது எதை? அத்துடன் மூன்றுவிதத் தவங்களை ஆற்றுவது எப்படி?



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** மேற்குறித்த தவங்கள் பற்றி சாஸ்த்ரங்களில் என்னென்ன பெருமை, ப்ரபாவம், ஸ்வரூபம் கூறப்பட்டுள்ளனவோ, அவற்றில் கண்களால் நேராகக் காணப்படுவதில் கொள்ளும் நம்பிக்கையை விட, அவற்றை உயர்ந்தவை என்றும் கருதி அதிகமான நம்பிக்கையை வைப்பது 'பரம ஶ்ரத்தை' ஆகும். இத்தகைய ச்ரத்தையுடன் கூட மிகப் பெரிய தடைகள், இன்னல்கள் வந்தாலும், கலங்காமல் ஆர்வத்துடனும், உற்சாகத்துடனும் மேற்குறித்த தவங்களை மிகுந்த நம்பிக்கையுடன் ஆற்றுவதுதான் முழு ஈடுபாட்டுடன் தவம் ஆற்றுவது ஆகும்.

**கேள்வி:** 'தத்', 'தப:', 'த்ரிவிதம்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** மனம், மொழி, மெய் பற்றிய மேலே சொல்லப்பட்ட தவங்களே ஸாத்விகமானவை ஆகும். இவற்றிலிருந்து வேறுபட்ட, வேறுவிதமான, மனம், மொழி, மெய் மூலம் ஆற்றப்படும் தவங்கள் சாஸ்த்ரங்களில் விதிக்கப்படாதவை, கோரமானவை என்று *17/5*ல் விளக்கப்பட்டன. அவை ஸாத்விகத் தவங்கள் ஆகா. *14,15,16*களில் கூறப்பட்ட மனம், மொழி, மெய் இவற்றால் ஆற்றப் பெறுகின்ற தவங்கள் இயல்பாகவே ஸாத்விகமானவைதாம். ஆயினும் அவற்றை இந்த ச்லோகத்தில் சொன்ன மனப்பாங்குடன் கடைப்பிடித்தால்தான் முழுமையான ஸாத்விகம் ஆகும்.

**பொருத்தம்:** ராஜஸ தவத்தின் இலக்கணம் கூறுகிறார்—

**सत्कारमानपूजार्थं तपो दम्भेन चैव यत्।**
**क्रियते तदिह प्रोक्तं राजसं चलमध्रुवम्॥ १८॥**

**ஸத்காரமாநபூஜார்த₂ம் தபோ த₃ம்பே₄ந சைவ யத் ।**
**க்ரியதே ததி₃ஹ ப்ரோக்தம் ராஜஸம் சலமத்₄ருவம் ॥ 18 ॥**

**யத் தப:** – எந்தத் தவம், **ஸத்கார மாந பூஜார்த₂ம்** – பாராட்டுதலையும், பெருமையையும், போற்றுதலையும் குறிக்கோளாகக் கொண்டோ, **ச ஏவ** – மற்றும் தன்னலம் கருதும் இயல்பினாலோ, (வா – அல்லது), **த₃ம்பே₄ந** – பகட்டிற்காகவோ, **க்ரியதே** – செய்யப்படுகிறதோ, **அத்₄ருவம்** – பயன் தருமா, தராதா என்ற நிச்சயமில்லாத, **சலம்** – அழியக்கூடிய, உறுதியற்ற பயன் தரும், **தத்** – அந்தத் தவம், **இஹ** – இங்கு, **ராஜஸம்** – ராஜஸம், **ப்ரோக்தம்** – எனக் கூறப்படுகிறது.

எந்தத் தவம் பாராட்டுதலையும், பெருமையையும், போற்றுதலையும் குறிக்கோளாகக் கொண்டதோ, மற்றும் தன்னலம் கருதும் இயல்பினாலோ, ஆடம்பரத்திற்காகவோ செய்யப்படுகிறதோ, பயன் தருமா தராதா என்ற நிச்சயமில்லாத, அழியக்கூடிய, உறுதியற்ற பயன் தரும் அந்தத் தவம் இங்கு ராஜஸம் எனக் கூறப்படுகிறது.

**கேள்வி:** 'யத் தப:' (எந்தத் தவம்) என்பதன் குறிப்பு என்ன?

**பதில்:** சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட வ்ரதம், உபவாஸம், அடக்கம் முதலிய தவங்களைப் பிறர் கொண்டாடுவதற்காகவும், பெருமைக்காகவும், போற்றுதலுக்காகவும் அனுஷ்டித்தால் அவை ராஜஸத் தவம் என்ற வகையில் சேரும் என்பதை பகவான் இங்கே கூறுகிறார்.

**கேள்வி:** பாராட்டுதலையும், பெருமைமையும், போற்றுதலையும் குறிக்கோளாகக் கொண்ட தவம் என்பது என்ன? 'ச', 'ஏவ' என்ற சொற்கள் எதைக் குறிப்பிடுகின்றன?

**பதில்:** நாம் தவம் செய்கிறோம் என்பது வெளியிலே பரவுவதால் உலகில் இந்த மனிதர் பெரிய தபஸ்வி. இவருக்கு ஈடு இணை கிடையாது; மிகச் சிறந்தவர் என்று உலகம் கொண்டாடுகிறது. இதுதான் 'பாராட்டு'. ஒருவரைத் தபஸ்வி என்று கருதி வரவேற்று, உபசாரம் செய்து, அவர்முன் வணங்கி நின்று வரவேற்புப் பத்திரம் படிப்பது முதலியன செய்து மரியாதை காட்டுவது 'பெருமைப்படுத்துவது' ஆகும். அவருக்கு ஆரத்தி எடுத்து,



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கைகால் கழுவிப் பூக்களால் அர்ச்சிப்பது முதலிய பதினாறு வகை உபசாரங்களுடன் பூஜை செய்வது, அவர் ஆணையை ஏற்று நடத்துவது, இவையாவும் போற்றுதலாகும்.

இந்தப் பெருமைகளைப் பெறுவதற்காக உலகியல் நடைமுறையிலோ அல்லது சாஸ்த்ர முறைப்படியோ தவம் செய்வதுதான், கௌரவம், மரியாதை, போற்றுதலுக்காகத் தவம் செய்வது ஆகும். அதுபோல் தன்னலம் கருதிச் செய்யப்படும் தவம் வேறு எதுவானாலும் அதுவும் ராஜஸத் தவமே என்பதை 'ச', 'ஏவ' என்ற சொற்கள் விளக்குகின்றன.

**கேள்வி:** ஆடம்பரத்திற்காகவே செய்யும் தவம் எப்படிப்பட்டது?

**பதில்:** தவத்தில் உண்மையான ஈடுபாடு கொள்ளாத போதும், உலகத்தினரை ஏமாற்றி ஏதோ ஒரு வகையான தன்னலத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக, தபஸ்விபோல வேஷம் போட்டுக் கொண்டு உலகியல் முறையாலோ, சாஸ்த்ர முறைப்படியோ வெளிப்பகட்டாகச் செய்யப்படும் தவமே ஆடம்பரமாகச் செய்யப்படும் தவம் ஆகும்.

**கேள்வி:** தன்னலம் கருதி ஆடம்பரமாகச் செய்யும் தவம் ராஜஸமா அல்லது தன்னலம் மட்டும் கருதிச் செய்யப்படுவதுதான் ராஜஸமா?

**பதில்:** தன்னலம் கருதிச் செய்யப்படும் எதுவும் ராஜஸம்தான். அதுவும் ஆடம்பரத்துடன் செய்தால் கேட்பானேன்?

**கேள்வி:** ராஜஸத் தவம் பயன் தருமோ, தராதோ என்பதில் நிச்சயம் இல்லை. அளித்தாலும் உறுதியற்ற பயன்தான் தரும் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எந்தப் பயனை அடைவதற்காகத் தவம் அனுஷ்டிக்கப்படுகிறதோ, அந்தப் பயன் கிட்டுவது நிச்சயமில்லையானால், அது 'அத்ருவம்' எனப்படும். அப்படிக் கிடைக்கும் பயனும் நிலைக்காமல் அழிந்தே தீருமானால், அது உறுதியற்ற பயன் என்று அழைக்கப்படுகிறது.

**பொருத்தம்: இனி முற்றிலும் தவிர்க்கப்பட வேண்டிய தாமஸத் தவத்தின் இலக்கணம் கூறுகிறார்—**

**मूढग्राहेणात्मनो यत्पीडया क्रियते तपः।**
**परस्योत्सादनार्थं वा तत्तामसमुदाहृतम्॥ १९॥**

**மூட₄க்₃ராஹேணாத்மநோ யத்பீட₃யா க்ரியதே தப: ।**
**பரஸ்யோத்ஸாத₃நார்த₂ம் வா தத்தாமஸமுத₃ாஹ்ருதம் ॥ 19 ॥**

**யத் தப:** – எந்தத் தவம், **மூட₄க்₃ராஹேண** – முரட்டுப் பிடிவாதத்தினால், **ஆத்மந:** – மனம், மொழி, மெய்களுக்கு, **பீட₃யா** – துன்பம் இழைப்பதற்காகவோ, **வா** – அல்லது, **பரஸ்ய** – பிறருக்கு, **உத்ஸாத₃நார்த₂ம்** – தீங்கு இழைப்பதற்காகவோ, **க்ரியதே** – செய்யப்படுகிறதோ, **தத்** – அந்தத் தவம், **தாமஸம்** – தாமஸம், **உத₃ாஹ்ருதம்** – எனப்படும்.

எந்தத் தவம் முரட்டுப் பிடிவாதத்தினால் மனம், மொழி, மெய்களுக்குத் துன்பம் இழைப்பதற்காகவோ அல்லது பிறருக்குத் தீங்கு இழைப்பதற்காகவோ செய்யப்படுகிறதோ அந்தத் தவம் தாமஸம் எனப்படும்.

**கேள்வி:** 'யத் தப:' என்றால் எந்தத் தவம்?

**பதில்:** 17/5,6களில் விளக்கப்பட்ட தவம் சாஸ்த்ர முறை மீறியது, மனிதனின் கற்பனையில் உதித்தது, கோரமானது, இயல்பாகவே தாமஸம். பகட்டாகக் காட்டிக் கொள்வதற்காக கால்களை மரக்கிளைகளில் கட்டித் தலைகீழாகத் தொங்குவது, இரும்பு முட்களின் மேல் உட்கார்வது முதலிய கொடிய செயல்களைக் கெட்ட நோக்கத்துடன் துன்பங்களைப் பொறுத்துக் கொண்டு செய்வது தாமஸத் தவம் என்று இங்கே குறிப்பிடப்படுகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'மூடக்ராஹம்' என்றால் என்ன? அதன்படி தவம் செய்வது எப்படி?

**பதில்:** தவத்தின் உண்மை இலக்கணங்களை அறிந்து கொள்ளாமல், மூடத்தனத்தால் எதையோ தவம் என்று நினைத்துக் கொண்டு, அதைச் செய்வதாக முரட்டுப் பிடிவாதம் செய்வது 'மூடக்ராஹம்' ஆகும். இந்தப் பிடிவாதத்தினால் மனம், மொழி, மெய்களில் ஏற்படும் துன்பங்களைப் பொறுத்துக் கொள்கிற தாமஸச் செயலைத் தவம் என்று எண்ணிச் செய்வது முரட்டுப் பிடிவாதத்தோடு செய்யும் தவம் ஆகும்.

**கேள்வி:** 'ஆத்மந: பீடயா' என்பதன் பொருள் என்ன?

**பதில்:** மனம், மொழி, மெய் இம்மூன்றையும் இங்கே 'ஆத்மா' என்று குறிப்பிடுகிறார். இவற்றிற்கு ஏற்படும் துன்பத்தை 'ஆத்மந: பீடயா' என்றார். இவையனைத்திற்குமோ அல்லது இவற்றில் ஏதாவது ஒன்றுக்கோ, தகாத துன்பத்தை உண்டாக்கி சாஸ்த்ர முறைகளை மீறிச் செய்யப்படும் தவம் ஆத்மாவுக்குத் துன்பம் விளைவிக்கும் தவம் ஆகும்.

**கேள்வி:** பிறருக்குத் தீங்கு விளைவிக்கும் தவம் என்றால் என்ன?

**பதில்:** பிறர் செல்வத்தைக் கவர்வது அல்லது அழிப்பது, அவர்களுடைய குலத்தை அழிப்பது, வேறு பலவிதத்தில் பிறருக்குக் கொடுமை விளைவிப்பது என்ற கருத்துடன் தன் மனம், மொழி, மெய் இவற்றை வருத்திக் கொள்வதுதான் பிறருக்குத் தீங்கு விளைவிக்கும் தவம் என்பதன் பொருள்.

**கேள்வி:** 'வா' (அல்லது) என்று எதைக் கூறுகிறார்?

**பதில்:** மேற்குறித்த இலக்கணங்களில் ஒன்று இருந்தால்கூட அது தாமஸத் தவம்தான் என்பதைச் சுட்டிக்காட்டுகிறார்.

**பொருத்தம்:** மூன்றுவிதத் தவங்களின் இலக்கணம் வகுத்தபின், தானத்தின் மூன்று வகைகளை விளக்குவதற்காக, முதலில் ஸாத்விக தானத்தின் இலக்கணம் பற்றிக் கூறுகிறார்—

दातव्यमिति यद्दानं दीयतेऽनुपकारिणे।
देशे काले च पात्रे च तद्दानं सात्त्विकं स्मृतम्॥ २०॥

**தா₃தவ்யமிதி யத்₃தா₃நம் தீ₃யதேऽநுபகாரிணே ।**
**தே₃ஶே காலே ச பாத்ரே ச தத்₃தா₃நம் ஸாத்த்விகம் ஸ்ம்ருதம் ॥ 20 ॥**

**தா₃தவ்யம்** – தானம் செய்வது தம் கடமை, **இதி** – எனக் கருதி, **யத் தா₃நம்** – எந்த தானம், **தே₃ஶே ச** – உரிய இடத்திலும், **காலே ச** – உரிய காலத்திலும், **பாத்ரே** – தகுதியானவருக்கும், **அநுபகாரிணே** – தனக்கு ப்ரதி உபகாரம் செய்யாதவர் ஆயினும் அவருக்கும், **தீ₃யதே** – தன்னலமின்றிக் கொடுக்கப்படுகிறதோ, **தத்** – அத்தகைய, **தா₃நம்** – தானம், **ஸாத்த்விகம்** – ஸாத்விகம் என்று, **ஸ்ம்ருதம்** – கருதப்படுகிறது.

தானம் செய்வது தம் கடமை எனக் கருதி எந்த தானம் உரிய இடத்திலும் உரிய காலத்திலும் தகுதியானவருக்கும், தனக்கு ப்ரதி உபகாரம் செய்யாதவர் ஆயினும் அவருக்கும் தன்னலமின்றிக் கொடுக்கப்படுகிறதோ, அத்தகைய தானம் ஸாத்விகம் என்று கருதப்படுகிறது.

**கேள்வி:** 'தாதவ்யம் இதி' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஸத்வ குணம் முழுமை பெற வேண்டுமானால் அங்கு நிஷ்காம பாவனை முக்யமான அம்சமாக இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்திக் கூறுகிறார் பகவான். வர்ணம், ஆசிரமம், நிலை, சூழ்நிலை இவற்றை மனதில் கொண்டு, சாஸ்த்ர முறைப்படி தானம் செய்வது – தனக்கு உரிமையான பொருளைத் தன் சக்திக்கேற்றவாறு பிறருடைய நலத்திற்காகச் செலவிடுவது மனிதனின் முக்ய கடமையாகும். அவன் அப்படிச் செய்யாவிடில்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அவன் மனிதத் தன்மையிலிருந்து வீழ்ச்சி அடைவான். எம்பெருமானது நலம் பயக்கும் ஆணையை மீறியவன் ஆவான். ஆகவே கொடுக்கத்தான் வேண்டும் என்று தானாகவே மனப்பூர்வமாக, இவ்வுலக, பரலோக நன்மைகளை எதிர்பாராது செய்யப்படும் தானம்தான் ஸாத்விகத் தானம் ஆகும்.

**கேள்வி:** இங்கு தேசம், காலம் என்று எதைக் குறிப்பிடுகிறார்?

**பதில்:** எந்த நேரத்தில், எந்த இடத்தில், எந்தப் பொருள் தேவைப்படுமோ, அந்த இடத்தில், அந்த நேரத்தில், அப்பொருளைப் பெறுபவருக்கு நன்மை ஏற்படும்படி, தானம் செய்ய வேண்டும். எந்த இடத்தில், எந்த நேரத்தில் பஞ்சம் ஏற்பட்டு மக்கள் துன்பப்படுகிறார்களோ, அங்கே போய் அந்த மக்களுக்கு வேண்டிய அன்னம், நீர் வழங்குவதுதான் தக்க இடத்திலும், தக்க நேரத்திலும் தானம் செய்வது ஆகும். அது புண்யதீர்த்த ஸ்தலமாக இல்லாமலும் இருக்கலாம், புண்ய காலமாக இல்லாமலும் இருக்கலாம். இது தவிர குருக்ஷேத்ரம், ஹரித்வார், மதுரா, காசி, ப்ரயாகை, நைமிசாரண்யம் முதலிய தீர்த்த ஸ்நான இடங்கள்; க்ரஹணம், பௌர்ணமி, அமாவாஸ்யை, ஸங்க்ராந்தி, ஏகாதசி முதலிய புண்ய காலங்கள் – இவையே பொதுவாக தானம் செய்யத்தக்க இடங்கள், நேரங்கள் என்று சாஸ்த்ரங்கள் சிறப்பாகக் கூறுகின்றன. அவை அவ்வாறே தகுந்த இடங்களும், காலங்களும்தான். இதைத்தான் உரிய இடம், உரிய காலம் என்று இங்கே குறிப்பிடுகிறார்.

**கேள்வி:** 'பாத்ரம்' (தகுதியானவர்) என்றால் யார்?

**பதில்:** எவரிடம், எந்த நேரத்தில் அவருக்கு மிகவும் தேவைப்படும் பொருள் இல்லையோ, அந்த இடத்தில், அந்த நேரத்தில் அவர் அப்பொருளைத் தானம் பெறத்தக்கவர் ஆகிறார். பசி தாகத்தினால் வாடுபவருக்கு உணவு, நீர்; ஆடையற்றவனுக்கு ஆடை; ஏழைக்குப் பணஉதவி; நோயுற்றவருக்கு மருந்து; துன்பப்படும் அநாதைக்கு உதவி; பயத்தில் மூழ்கியவனுக்கு அபயம் அளித்து தைர்யம் ஊட்டுதல் – இப்படிப்பட்டவர்கள் அததற்கு உரியவர்கள் என்று இங்கே பொருள். துன்பப்படுகிறவர்கள் தகுந்த பாத்ரமா என்று அறிந்து கொள்ள ஜாதி, குலம், நேரம், இருக்கும் இடம் இவற்றைக் கொண்டு ஆராய வேண்டியதில்லை. அவர்கள் இருக்கும் துன்ப நிலையே பாத்ரத்தகுதியாகும். இவை தவிர சிறந்த நடத்தையுள்ள அந்தணர்களும், அறிஞர்களும், உத்தமமான ப்ரம்மசாரிகளும், வானப்ரஸ்தர்களும், ஸந்யாஸிகளும், ஸேவையே வ்ரதமாகக் கொண்ட தொண்டர்களும், சாஸ்த்ரம் விதிக்கும் பொருட்களையோ, அவரவர் தேவைக்கேற்பப் பணத்தையோ, பண்டத்தையோ தானமாகப் பெறத் தகுதி பெற்றவர்கள்.

**கேள்வி:** 'அநுபகாரிணே' என்று ஏன் கூறுகிறார்? தனக்கு உபகாரம் செய்தவருக்கு ஏதாவது கொடுப்பது கூடாதா? அது ராஜஸ தானமா?

**பதில்:** தனக்கு உபகாரம் செய்தவருக்கு உதவி செய்வதோ, ஸேவை செய்வதோ, அவருக்கு முடிந்தவரை ஸுகமளிப்பதற்கு முயற்சி செய்வதோ மனிதனின் கடமைதான். கடமை மட்டுமன்று. உபகாரம் செய்தவருக்கு உதவி செய்யாமல் நல்ல மனிதர் இருக்கமாட்டார். உண்மையான உபகாரத்திற்குப் பதிலுபகாரம் செய்து, அதைத் தீர்த்துவிடுவது என்பது அதை அவமானப்படுத்துவது போன்றதாகும் என்று அவருக்குத் தெரியும். ஏனெனில் உண்மையான உதவிக்கு பதிலுதவி செய்து அதைத் தீர்த்துவிட முடியாது. ஆனால் தமது த்ருப்திக்காக அவருக்கு ஏதாவது உதவி செய்கிறார். எத்தனை செய்தாலும் அவருடைய நினைப்பில் அது கொஞ்சமே. செய்நன்றி அவரை அழுத்திக் கொண்டே இருக்கும். ஸ்ரீராமசரிதமானஸத்தில் இராமபிரான் ஹனுமானிடம் கூறுகிறார்—

ஸுநு கபி தோஹி ஸமாந உபகாரீ ।
நஹி(ம்) கோஉ ஸுர நர முநி தநு தாரீ ॥
ப்ரதி உபகார கரௌ(ம்) கா தோரா ।
ஸந்முக$_2$ ஹோஇ ந ஸகத மந மோரா ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



"வானரத் தோழனே! கேள். உன்னைப்போல உபகாரம் செய்தவன் தேவனோ, மனிதனோ, முனிவரோ உடல் படைத்த வேறு எவருமோ இல்லை. உனக்கு என்ன பதிலுதவி செய்துவிட முடியும்? என் மனதுகூட உன் முன்னே நிற்க முடியாது."

**ஸ்ரீ**மத்பாகவதத்தில் பகவான் **ஸ்ரீ**க்ருஷ்ணன் கோபியர்களுக்குத் தம்மைத் திராக்கடனாளியெனக் கூறிக் கொள்கிறார். இந்த நிலையில் உபகாரம் செய்பவர்களுக்கு ஏதோ கொஞ்சம் கொடுப்பது தகாததும் அன்று; ஒருகாலும் ராஜஸமுமன்று. ஆனால் அது 'தானம்' என்ற வகையில் சேராது. அது செய்ந்நன்றியை வெளிப்படுத்துவதற்குரிய ஓர் இயல்பான செயலே ஆகும். அதை தானம் என்று கருதுபவர் உண்மையில் அப்படி உபகாரம் செய்தவரை அவமதிக்கிறார். உபகாரிக்கு உதவி செய்யத் தயங்குபவர் செய்ந்நன்றி கொன்றவர். ஆகவே தனக்கு உபகாரம் செய்தவருக்கு உதவி செய்யத்தான் வேண்டும்.

இங்கே பதிலுதவி செய்யாதவருக்கும் தானம் கொடுக்க வேண்டும் என்று கூறுவதற்குப் பொருள் – தானம் செய்பவர் தானம் பெறுபவரிடமிருந்து சிறிதுகூட பதிலுதவி எதிர்பார்க்கக் கூடாது. எவரிடமிருந்து தன்னலத்தை எதிர்பார்க்கும் எண்ணம் தானம் செய்பவன் மனதில் துளிக்கூட இல்லையோ, அவருக்கு தானம் அளிக்க வேண்டும். அதுதான் ஸாத்விக தானம் ஆகும். இதனால் கொடுப்பவனுடைய தன்னல மனப்பான்மையைத் தடுப்பது முக்யக் கருத்து.

**பொருத்தம்:** **இனி ராஜஸ தானத்தின் இலக்கணம் கூறுகிறார்—**

**यत्तु प्रत्युपकारार्थं फलमुद्दिश्य वा पुनः।**
**दीयते च परिक्लिष्टं तद्दानं राजसं स्मृतम्॥ २१॥**

**யத்து ப்ரத்யுபகாரார்த₂ம் ப₂லமுத்₃தி₃ஶ்ய வா புந: ।**
**தீ₃யதே ச பரிக்லிஷ்டம் தத்₃தா₃நம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ 21 ॥**

**து** – ஆனால், **யத்** – எந்த (தானம்), **பரிக்லிஷ்டம் ச** – மன வருத்தத்தோடும், **ப்ரத்யுபகாரார்த₂ம் வா** – கைம்மாறு கருதியோ, **ப₂லம் உத்₃தி₃ஶ்ய புந:** – பயனைக் கருத்தில் கொண்டோ, **தீ₃யதே** – கொடுக்கப்படுகிறதோ, **தத்** – அந்த, **தா₃நம்** – தானம், **ராஜஸம்** – ராஜஸம், **ஸ்ம்ருதம்** – எனப்படும்.

ஆனால் எந்த தானம் மன வருத்தத்தோடும் கைம்மாறு கருதியோ, பயனைக் கருத்தில் கொண்டோ கொடுக்கப்படுகிறதோ அந்த தானம் ராஜஸம் எனப்படும்.

**கேள்வி:** 'து' (ஆனால்) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கு ஸாத்விக தானத்திலிருந்து ராஜஸ தானத்தைப் பிரித்துக் காட்டுவதற்காக 'து' (ஆனால்) என்று ஆரம்பிக்கிறார்.

**கேள்வி:** மனவருத்தத்துடன் தானம் அளிப்பது என்றால் என்ன?

**பதில்:** ஒருவர் கொடுத்துத்தான் ஆகவேண்டும் என்று பழி கிடக்கலாம், அடம்பிடிக்கலாம், பயமுறுத்தலாம். பெரிய மனிதர் அல்லது செல்வாக்கு உள்ளவர் மூலம் கட்டாயப்படுத்தலாம். அப்போது மனமின்றி மனதில் துயரமும், கஷ்டமும் பட்டுக் கொண்டு வேறு வழியின்றித் தானம் கொடுப்பது மனவருத்தத்துடன் கொடுப்பது ஆகும்.

**கேள்வி:** கைம்மாறு எதிர்பார்த்து தானம் அளிப்பது என்றால் என்ன?

**பதில்:** வழக்கமாக உதவிகள் செய்பவருக்களிக்கும் தானமும், எதிர்காலத்தில் தன் கார்யம் நிறைவேற வகை செய்பவருக்கு எதிர்பார்ப்புடன் அளிக்கப்படும் தானமும் உண்மையான தானமன்று. அவை முன் பணம் தருவது போன்றதே. தனக்கு வேண்டியவரா, தன் உறவினருக்கு வேண்டியவரா, தானம் பெறுபவரால் ஏதேனும் ஒரு பயன் பெற வழி உண்டா, கொடை பெறும் நிறுவனத்தால் ஆதாயம் பெறலாமா என்றெல்லாம் தன்னலம் சார்ந்த கணக்குப் போட்டுத் தானம் செய்வது கைம்மாறு எதிர்பார்த்துக் கொடுப்பதாகும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** பயனைக் கருத்தில் கொண்டு தானம் கொடுப்பது என்றால் என்ன?

**பதில்:** மரியாதை, பெருமை, புகழ், ஸ்வர்கம் முதலிய இஹ-பரலோகங்களில் உள்ள போகங்களை அடைவதற்காகவோ, நோய் தீரவேண்டுமென்றோ ஒரு குறிப்பிட்ட பொருளை ஒருவருக்கோ, ஒரு நிறுவனத்திற்கோ அளிப்பது பயன் கருதிக் கொடுப்பதாகும். சிலர் ஒரு தானம் கொடுத்துவிட்டுப் பல பயன்களைப் பெற விரும்புகிறார்கள். அதாவது:-

*(1)* இவருக்கு தானம் கொடுத்தால் அவர் அதை மதிப்பார். தக்க தருணத்தில் நல்ல கார்யமோ, தீய கார்யமோ நமக்குத் துணையாக இருப்பார்.

*(2)* புகழ் ஏற்படும், பெருமை வளரும், நம்மைக் கொண்டாடுவார்கள்.

*(3)* பத்திரிகைகளில் பெயர் வரும். பலருக்கும் நாம் பணக்காரர் என்று விளம்பரம் ஆகும். அதனால் நமது தொழில் பெருகும். சலுகைகள் கிடைக்கும். மேன்மேலும் நாம் செல்வம் சேர்க்க இயலும்.

*(4)* நல்ல புகழ் ஏற்பட்டுவிட்டால் நமது பெண்-பிள்ளைகளுக்குப் பெரிய இடங்களில் ஸம்பந்தம் கிடைக்கும். அதனால் மேலும் பலவிதமான சொந்த நலன்களை சாதித்துக் கொள்ளலாம்.

*(5)* தானம் செய்தால் பரலோகத்தில் பல மடங்கு பயன் பெறலாம் என்பது சாஸ்த்ரங்களுக்கு ஏற்புடையதே.

இவ்விதமெல்லாம் கணக்குப் போட்டு மனிதன் 'தானம்' என்ற புண்யத்தின் பெருமையை மிகவும் குறைத்துவிடுகிறான்.

**கேள்வி:** ச்லோகத்தில் 'வா', 'புந:', 'ச' என்று வரும் சொற்களுக்கு என்ன கருத்து?

**பதில்:** மேலே கூறப்பட்ட மூன்றுவித தானங்களில் எந்தவிதம் தானம் செய்தாலும், அது ராஜஸமாகும் என்று பொருள்.

**பொருத்தம்:** இனித் தாமஸ தானத்தின் இலக்கணம் கூறுகிறார்—

**अदेशकाले यद्दानमपात्रेभ्यश्च दीयते।**
**असत्कृतमवज्ञातं तत्तामसमुदाहृतम्॥ २२॥**

**அதே₃ஶகாலே யத்₃தா₃நமபாத்ரேப்₄யஶ்ச தீ₃யதே ।**
**அஸத்க்ருதமவஜ்ஞாதம் தத்தாமஸமுதா₃ஹ்ருதம் ॥ 22 ॥**

**யத்** – எந்த, **தா₃நம்** – தானம், **அஸத்க்ருதம்** – மரியாதையின்றி, **அவஜ்ஞாதம்** – இகழ்ச்சியோடு, **அதே₃ஶகாலே ச** – தகாத இடத்திலும், தகாத காலத்திலும், **அபாத்ரேப்₄ய:** – தகுதியற்றவர்களுக்கு, **தீ₃யதே** – கொடுக்கப்படுகிறதோ, **தத்** – அது, **தாமஸம்** – தாமஸம், **உதா₃ஹ்ருதம்** – எனப்படுகிறது.

எந்த தானம் மரியாதையின்றி இகழ்ச்சியோடு தகாத இடத்திலும், தகாத காலத்திலும் தகுதியற்றவர்களுக்குக் கொடுக்கப்படுகிறதோ அது தாமஸம் எனப்படுகிறது.

**கேள்வி:** மரியாதையின்றிச் செய்யப்படும் தானத்தின் தன்மை என்ன?

**பதில்:** தகுதியுள்ள மனிதர் தானம் பெற வருங்கால், அவரை ஆதரவுடன் வணங்கி, நலம் விசாரித்து, அன்புடன் பேசி, அமர வைத்து உபசரிக்காமல் கடுகடுப்புடன் கொடுக்கப்படும் தானமே மரியாதையின்றிக் கொடுக்கப்படும் தானம் ஆகும்.

**கேள்வி:** இகழ்ச்சியோடு கொடுப்பது என்றால் என்ன?

**பதில்:** அலக்ஷ்யமாகவும், கடுமையாகவும் பேசி, மிரட்டி, இனிமேல் இந்தப் பக்கம் வரக்கூடாது என்று எச்சரித்துக் கேலி செய்து சொல்லாலோ, உடலாலோ, குறிப்பாலோ அவமானம் செய்து கொடுக்கப்படும் தானம் இகழ்ச்சியோடு கொடுக்கப்படும் தானம் ஆகும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** தானம் கொடுக்கத்தகாத நேரம், இடம் எது? அப்போது அங்கு தந்த தானத்தைத் தாமஸம் என்று ஏன் சொல்லவேண்டும்?

**பதில்:** எந்த இடத்தில், எந்த நேரத்தில் கொடுப்பது தேவையற்றதோ அல்லது கொடுக்கக்கூடாது என்ற சாஸ்த்ரத் தடை உள்ளதோ அப்படிப்பட்ட இடமும், காலமும் தானத்திற்குத் தடை செய்யப்பட்டவை. மிலேச்ச தேசத்தில் பசுவை தானமளிப்பது, க்ரஹண ஸமயத்தில் கன்னிகாதானம் செய்வது முதலியன. அப்படிக் கொடுத்தால் நரகம் அடைய நேரிடும். ஆகவே அது தாமஸம்.

**கேள்வி:** தானம் பெறத்தகாதவர் யார்? அவருக்குக் கொடுப்பது 'தாமஸம்' என்பானேன்?

**பதில்:** எவருக்கு தானம் பெற அவசியமில்லையோ, எவருக்கு அளிப்பது சாஸ்த்ரங்களில் தடுக்கப்பட்டிருக்கிறதோ – அதாவது தர்மம் செய்வதாகக் காட்டிக் கொள்பவன், ஆஷாடபூதி, கபட வேஷம் போட்டிருப்பவன், பிறருக்கு ஹிம்ஸை செய்பவன், வசை பாடுபவன், பிறர் வாழ்க்கையைக் கெடுத்துத் தன் நன்மையிலேயே குறியானவன், போலி வணக்கம் தெரிவிப்பவன், கள், புலால் முதலிய உண்ணத் தகாத பொருட்களை உண்பவன், திருடுபவன், விபசாரம் செய்பவன், சூதாடுபவன் ஏமாற்றுபவன், நாஸ்திகன் – இவர்கள் தானம் பெறத்தக்கவர் அல்லர். இவருக்கு தானம் கொடுப்பது வீணே. கொடுப்பவன் நரகத்தை அடைய நேரும். ஆகவே அது தாமஸம். ஆனால் இங்கு பசித்தவனுக்கோ, ஆடையற்றவனுக்கோ, நோயாளிக்கோ, கஷ்டப்படுபவனுக்கோ உணவு, நீர், ஆடை, மருந்து முதலியன கொடுப்பது தடுக்கப்படவில்லை.

**பொருத்தம்: இவ்விதம் ஸாத்விகமான யாகம், தானம், தவம் முதலியன செய்யத்தான் வேண்டும். ராஜஸ, தாமஸ வகைகளை விலக்க வேண்டும் என்பதற்காக அவற்றை மூன்றுவிதமாகப் பிரித்துச் சொன்னார். இப்போது ஸாத்விகமான யக்ஞம், தானம், தவம் இவற்றை ஏன் செய்யவேண்டும்? பகவானுடன் அவற்றிற்கு என்ன தொடர்பு? அப்படி ஸாத்விகமான யக்ஞம், தானம், தவம் இவற்றில் ஏதாவது குற்றம் குறை ஏற்பட்டால், அதைப் பூர்த்தி செய்வது எப்படி என்பதை அடுத்ததாக விளக்க ஆரம்பிக்கிறார்—**

ॐ तत्सदिति निर्देशो ब्रह्मणस्त्रिविधः स्मृतः।
ब्राह्मणास्तेन वेदाश्च यज्ञाश्च विहिताः पुरा॥ २३॥

**ஓம் தத்ஸதி₃தி நிர்தே₃ஶோ ப்₃ரஹ்மணஸ்த்ரிவித₄: ஸ்ம்ருத: ।**
**ப்₃ராஹ்மணாஸ்தேந வேதா₃ஶ்ச யஜ்ஞாஶ்ச விஹிதா: புரா ॥ 23 ॥**

**ஓம்** – ஓம், **தத்** – தத், **ஸத்** – ஸத், **இதி** – என்று, **த்ரிவித₄:** – மூன்றுவிதமாக, **ப்₃ரஹ்மண:** – ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தினுடைய, **நிர்தே₃ஶ:** – பெயர், **ஸ்ம்ருத:** – மொழியப்பட்டுள்ளது. **தேந** – அந்த ப்ரம்மத்தினால், **புரா** – படைப்பின் ஆரம்பத்தில், **ப்₃ராஹ்மணா:** – ப்ராம்மணர்களும், **வேதா₃: ச** – வேதங்களும், **யஜ்ஞா: ச** – வேள்விகளும், **விஹிதா:** – படைக்கப்பட்டன.

ஓம் தத் ஸத் என்று மூன்றுவிதமாக ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தினுடைய பெயர் மொழியப்பட்டுள்ளது. அந்த ப்ரம்மத்தினால் படைப்பின் ஆரம்பத்தில் ப்ராம்மணர்களும், வேதங்களும், வேள்விகளும் படைக்கப்பட்டன.

**கேள்வி:** ப்ரஹ்மம் அதாவது ஸர்வ வல்லமை படைத்த பரமாத்மாவுக்குப் பல பெயர்கள் உள்ளபோது, இங்கே 'ஓம்', 'தத்', 'ஸத்' என்கிற இம்மூன்று பெயர்களை மட்டும் குறிப்பிடுவானேன்?

**பதில்:** பரமாத்மாவின் 'ஓம்', 'தத்', 'ஸத்' என்ற இந்த மூன்று பெயர்கள் வேதங்களில் முக்யமென மதிக்கப் பெற்றிருக்கின்றன. யக்ஞம், தானம், தவம் முதலிய புண்ய கர்மங்களுடன்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இந்த நாமங்களுக்கு நெருங்கிய தொடர்பு உண்டு. ஆகவே, இந்த மூன்று நாமங்களை மட்டுமே இங்கே குறிப்பிடுகிறார்.

**கேள்வி:** 'தேந' என்பது மூன்று நாமங்களைக் குறிக்கிறதா? இம்முப்பெயர் கொண்ட பரமாத்மாவைக் குறிக்கிறதா?

**பதில்:** இம்முப்பெயர் கொண்ட பரமாத்மாவைத்தான் குறிக்கிறது.

**கேள்வி:** 3/10ல் யக்ஞத்துடன்கூட எல்லா ப்ரஜைகளும் ப்ரம்மாவிடமிருந்து உண்டாயின என்று கூறினார். இங்கு ப்ராம்மணர் முதலானோர் பரமாத்மாவிடம் உண்டாயினர் என்று கூறுகிறார். என்ன கருத்து?

**பதில்:** ப்ரஜாபதியான ப்ரம்மதேவனும் பரமாத்மாவிடமிருந்தே தோன்றியவர்தான். அந்த ப்ரஜாபதியிடமிருந்து வேதங்களும், யாகங்களும், ப்ராம்மணர்களும் உண்டாயினர். ஆகவே சில இடங்களில் பரமாத்மாவிடமிருந்து என்றும், மற்றும் சில இடங்களில் ப்ரஜாபதியிடமிருந்து என்றும் கூறுகிறார். ஆனால் செய்தி ஒன்றுதான்.

**கேள்வி:** ப்ராம்மணர், வேதம், யாகம் என்று யார் யாரைக் கொள்ளவேண்டும்? 'புரா' என்றால் எப்போது?

**பதில்:** ப்ராம்மணர் என்ற சொல் ப்ராம்மணர் முதலான எல்லா வருணத்து ப்ரஜைகளையும், வேதம் என்ற சொல் நான்கு வேதங்களையும், யக்ஞம் என்ற சொல் யக்ஞம், தானம், தவம் முதலிய சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகள் அனைத்தையும், 'புரா' என்ற சொல் படைப்பின் தொடக்க காலத்தையும் குறிக்கின்றன.

**கேள்வி:** பரமாத்மாவின் மூன்று நாமங்களைக் கூறி பரமாத்மாவிடமிருந்து படைப்பின் ஆரம்பத்தில் ப்ராம்மணர் முதலானோர் உண்டாயினர் என்று கூறுவதன் பொருள் என்ன?

**பதில்:** கர்த்தா, கர்மம், கர்மத்தின் விதிமுறைகள் முதலிய எல்லாம் தோன்றிய தற்கிடமான பரமாத்மாவைக் கூறுவது ஓம், தத், ஸத் என்ற மூன்று நாமங்கள். ஆகவே இவற்றை உச்சரித்தால் கர்மம் செய்யும் வகையில் ஏற்படும் குற்றங்கள், குறைகள் நீங்கிக் கர்மம் முழுமை பெறும். ஆகவே ஒவ்வொரு கர்மத்தை ஆரம்பிக்கும் போதும் 'ஓம்' என்று ஆரம்பித்து, முடிக்கும்போது 'ஓம்', 'தத்', 'ஸத்' என்று சொல்வது அவசியமாகும்.

**பொருத்தம்:** பரமாத்மாவினுடைய ஓம், தத், ஸத் என்ற நாமங்கள், யாகம், தானம், தவம் இவற்றுடன் எப்படித் தொடர்பு கொண்டுள்ளன என்ற கேள்வியை விளக்குவதற்காக, அடுத்து 'ஓம்' என்பது பற்றிக் கூறுகிறார்—

**तस्मादोमित्युदाहृत्य यज्ञदानतपःक्रियाः ।**
**प्रवर्तन्ते विधानोक्ताः सततं ब्रह्मवादिनाम् ॥ २४ ॥**

**தஸ்மாதோ₃மித்யுதா₃ஹ்ருத்ய யஜ்ஞதா₃நதப:க்ரியா: ।**
**ப்ரவர்தந்தே விதா₄நோக்தா: ஸததம் ப்₃ரஹ்மவாதி₃நாம் ॥ 24 ॥**

**தஸ்மாத்** – ஆகையினால், **ப்₃ரஹ்மவாதி₃நாம்** – வேதம் ஓதும் பெரியோர்களுடைய, **விதா₄நோக்தா:** – சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டுள்ள, **யஜ்ஞ தா₃ந தப: க்ரியா:** – வேள்வி, தானம், தவம் முதலிய கர்மங்கள், **ஸததம்** – எப்பொழுதும், **ஓம் இதி** – 'ஓம்' என்கிற பரமாத்மாவின் திருப்பெயரை, **உதா₃ஹ்ருத்ய** – உச்சரித்துக் கொண்டே, **ப்ரவர்தந்தே** – தொடங்கப்படுகின்றன.

ஆகையினால் வேதம் ஓதும் பெரியோர்களுடைய சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டுள்ள வேள்வி, தானம், தவம் முதலிய கர்மங்கள் எப்பொழுதும் 'ஓம்' என்கிற பரமாத்மாவின் திருப்பெயரை உச்சரித்துக் கொண்டே தொடங்கப்படுகின்றன.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'தஸ்மாத்' என்று காரணம் காட்டி வேத மந்த்ரங்களை ஓதும் பெரியவர்கள் செய்கின்ற சாஸ்த்ர முறைப்படியான கர்மங்கள், எப்போதுமே ஓம்காரத்துடன் ஆரம்பிக்கப்படுகின்றன என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இதன் மூலம் பகவான் முக்யமாக நாமத்தின் பெருமையை எடுத்துக் காட்டுகிறார். எந்தப் பரமாத்மாவிடமிருந்து இந்த யக்ஞங்கள் முதலியன உண்டாயினவோ, அவருடைய நாமம் 'ஓம்' என்று சொல்லப்படுகிறது. அந்த 'ஓம்' என்ற சொல்லை உச்சரிப்பதால் எல்லாக் கர்மங்களின் செயற்குற்றங்குறைகளும் அகல்கின்றன. அவை பரிசுத்தமாகவும், மங்களமளிப்பனவாகவும் ஆகின்றன. இதுதான் பரமாத்மாவின் நாமத்தின் எல்லையற்ற பெருமை. ஆகவே வேதம் ஓதுபவர்கள் அதாவது வேதம் ஓதிக் கர்மங்கள் செய்யத் தகுதி பெற்ற அறிஞர்களான ப்ராம்மணர், க்ஷத்ரியர், வைசியர்கள் செய்யும் யக்ஞம், தானம், தவம் முதலிய எல்லா சாஸ்த்ர முறைப்படியான மங்களமான கர்மங்களும் 'ஓம்' என்று ஓதியே ஆரம்பிக்கப்படுகின்றன. அவர்கள் ஒருபொழுதும் எந்த மங்கள கார்யத்தையும் 'ஓம்' என்னும் பகவானுடைய பரிசுத்தமான நாமத்தைச் சொல்லாமல் செய்வதில்லை. ஆகவே அனைவரும் இவ்விதமே செய்ய வேண்டும்.

**பொருத்தம்:** இவ்விதம் 'ஓம்' என்பதன் பயனை எடுத்துரைத்துவிட்டுத் தொடர்ந்து பரமேசுவரனுடைய 'தத்' என்ற பெயரை விளக்குகிறார்—

**तदित्यनभिसन्धाय फलं यज्ञतपःक्रियाः ।**
**दानक्रियाश्च विविधाः क्रियन्ते मोक्षकाङ्क्षिभिः ॥ २५ ॥**

**ததி₃த்யநபி₄ஸந்த₄ாய ப₂லம் யஜ்ஞதப:க்ரியா: ।**
**தா₃நக்ரியாஸ்ச விவித₄ா: க்ரியந்தே மோக்ஷகாங்க்ஷிபி₄: ॥ 25 ॥**

**தத்** – 'தத்' என்று அழைக்கப்படுகின்ற பரமாத்மாவுக்கே எல்லாம் உரியன, **இதி** – என்ற உணர்வுடன், **ப₂லம்** – பயனை, **அநபி₄ஸந்த₄ாய** – விரும்பாமல், **விவித₄ா:** – பலவிதமான, **யஜ்ஞதப:க்ரியா:** – வேள்வி, தவம் ஆகிய செயல்களும், **தா₃நக்ரியா: ச** – தானமாகிய கர்மங்களும், **மோக்ஷகாங்க்ஷிபி₄:** – மோக்ஷமாகிய நலன் நாடும் நல்லோரால், **க்ரியந்தே** – செய்யப்படுகின்றன.

'தத்' என்று அழைக்கப்படுகின்ற பரமாத்மாவுக்கே எல்லாம் உரியது என்ற உணர்வுடன் பயனை விரும்பாமல் பலவிதமான வேள்வி, தவம் ஆகிய செயல்களும் தானமாகிய கர்மங்களும் மோக்ஷமாகிய நலன் நாடும் நல்லோரால் செய்யப்படுகின்றன.

**கேள்வி:** 'தத் இதி' என்பதன் பொருள் என்ன?

**பதில்:** 'தத்' என்றால் பரமாத்மா. அவரை நினைப்பதைக் குறிப்பது 'தத் இதி' என்பது. மங்களத்தை விரும்பும் மனிதர்கள் ஒவ்வொரு கர்மத்தையும் செய்யும்போது பகவானுடைய 'தத்' என்ற நாமத்தை நினைத்துக் கொண்டே "எந்தப் பரமாத்மாவிடமிருந்து இந்த அகில ப்ரபஞ்சமும் உண்டாயிற்றோ, அவருக்கே அனைத்தும் உரியது. அவருடைய பொருட்களால் அவருடைய ஆணைப்படி அவருக்காகவே என் மூலம் கர்மங்கள் நடக்கின்றன. நான் ஒரு நிமித்தம் (கருவி) மட்டும்தான்" என்ற எண்ணத்துடன் அஹங்கார, மமகாரங்களை அறவே த்யாகம் செய்து விடுகிறார்கள்.

**கேள்வி:** மோக்ஷத்தை விரும்புகின்ற ஸாதகர்கள் செய்கின்ற கர்மங்கள் பயனில் கருத்தின்றிச் செய்யப்படுகின்றன என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மோக்ஷத்தை விரும்புகின்ற ஸாதகர்கள் பயனை எதிர்பார்ப்பதில்லை என்றால் விதிக்கப்பட்ட கடமைகளை ஆற்றும் ஸாமான்ய நிலையிலுள்ள வேதம் ஓதுபவர்கள் பயனை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



விரும்பாமல் இருப்பதும் இல்லை. அஹங்கார, மமகாரங்களை விடுவதுமில்லை. ஆனால் மங்களத்தை விரும்புகின்றவர் – பரமாத்மாவை அடைவதைத் தவிர வேறு ஒரு தேவையும் இல்லாதவர்கள் எல்லாக் கர்மங்களையும், அஹங்கார–மமகாரங்களையும், பற்று, பயனில் கருத்து இவற்றையும் அறவே த்யாகம் செய்து, பரமாத்மாவுக்காகவே அவருடைய ஆணைப்படி செய்கிறார்கள் என்று பொருள். இதனால் பயனில் கருத்தை த்யாகம் செய்வதன் பெருமையை பகவான் விளக்குகிறார்.

**பொருத்தம்:** **இவ்விதம் 'தத்' என்ற நாமம் கூறுவதன் பயன் கூறி, பரமாத்மாவினுடைய 'ஸத்' என்ற நாமத்தைக் கூறுவதன் பயனை அடுத்து வரும் இரண்டு ச்லோகங்களில் கூறுகிறார்—**

**सद्भावे साधुभावे च सदित्येतत्प्रयुज्यते।**
**प्रशस्ते कर्मणि तथा सच्छब्दः पार्थ युज्यते॥ २६॥**

**ஸத்₃பா₄வே ஸாது₄பா₄வே ச ஸதி₃த்யேதத்ப்ரயுஜ்யதே ।**

**ப்ரஶஸ்தே கர்மணி ததா₂ ஸச்ச₂ப்₃த₃: பார்த₂ யுஜ்யதே ॥ 26 ॥**

**ஸத்** – 'ஸத்', **இதி** – என்ற, **ஏதத்** – பகவானுடைய பெயர், **ஸத்₃பா₄வே** – உண்மை என்ற கருத்திலும், **ஸாது₄பா₄வே ச** – நல்லெண்ணம் என்ற கருத்திலும், **ப்ரயுஜ்யதே** – உபயோகப்படுத்தப்படுகிறது. **ததா₂** – அங்ஙனமே, **பார்த₂** – அர்ஜுன! **ப்ரஶஸ்தே** – உயர்ந்த மங்களமான, **கர்மணி** – கர்மத்திலும், **ஸத் ஶப்₃த₃:** – 'ஸத்' என்ற சொல், **யுஜ்யதே** – உபயோகிக்கப்படுகிறது.

'ஸத்' என்ற பகவானுடைய பெயர் உண்மை என்ற கருத்திலும் நல்லெண்ணம் என்ற கருத்திலும் உபயோகப்படுத்தப்படுகிறது. அங்ஙனமே அர்ஜுன! உயர்ந்த மங்களமான கர்மத்திலும் 'ஸத்' என்ற சொல் உபயோகிக்கப்படுகிறது.

**கேள்வி:** 'ஸத்பாவம்' என்றால் என்ன? பரம்பொருளை 'ஸத்' எனக் கூறுவானேன்?

**பதில்:** 'ஸத்பாவம்' என்றால் நித்யமானது. எப்பொழுதுமே உண்மையாக உள்ள அந்த அழிவற்ற தத்வத்தைக் குறிக்கிறது. அதுதான் பரமாத்மாவின் ஸ்வரூபம். அதனால் அவர் 'ஸத்' என்று அழைக்கப்படுகிறார்.

**கேள்வி:** 'ஸாதுபாவம்' என்றால் என்ன? அப்பொருளில் பகவானின் பெயரான 'ஸத்' ஏன் உபயோகப்படுத்தப்படுகிறது?

**பதில்:** உள்ளத்தின் எண்ணம் சுத்தமாகவும், சிறந்ததாகவும் இருந்தால் அது ஸாது பாவம் எனப்படும். பகவானை அடைவதற்கு அது காரணமாக இருக்கிறது. ஆகையால் அதில் பரமேசுவரனுடைய 'ஸத்' என்ற பெயர் கையாளப்பட்டுள்ளது.

**கேள்வி:** 'ப்ரஶஸ்த கர்மம்' எது? அதை ஏன் 'ஸத்' என்று கூறவேண்டும்?

**பதில்:** சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட மங்கள கர்மம்தான் 'ப்ரஶஸ்த கர்மம்' (சிறந்த கர்மம்) ஆகும். அதை நிஷ்காமமாக ஆற்றினால் அது பரமாத்மாவை அடைவதற்குக் காரணம் ஆகும். ஆகவே அதை 'ஸத்' என்று சொல்லி, அந்தக் கர்மம் 'ஸத் கர்மம்' என்கிறோம்.

**यज्ञे तपसि दाने च स्थितिः सदिति चोच्यते।**
**कर्म चैव तदर्थीयं सदित्येवाभिधीयते॥ २७॥**

**யஜ்ஞே தபஸி தா₃நே ச ஸ்தி₂தி: ஸதி₃தி சோச்யதே ।**

**கர்ம சைவ தத₃ர்தீ₂யம் ஸதி₃த்யேவாபி₄தீ₄யதே ॥ 27 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**யஜ்ஞே** – வேள்வியிலும், **தபஸி ச** – தவத்திலும், **தா₃நே ச** – தானத்திலும், **(யா** – எந்த), **ஸ்தி₂தி:** – உறுதி நிலை இருக்கிறதோ, **(ஸா) ஏவ** – (அது) கூட, **ஸத் இதி** – 'ஸத்' என்றே, **உச்யதே** – கூறப்படுகிறது. **ச** – மேலும், **தத₃ர்தீ₂யம்** – அந்த பரமாத்மாவின் பொருட்டுச் செய்யப்படுகின்ற, **கர்ம** – செயல், **ஏவ** – நிச்சயமாக, **ஸத் இதி** – 'ஸத்' என்றே, **அபி₄தீ₄யதே** – அழைக்கப்படுகிறது.

வேள்வியிலும், தவத்திலும், தானத்திலும் எந்த உறுதி நிலை இருக்கிறதோ அது கூட 'ஸத்' என்றே கூறப்படுகிறது. மேலும் பரமாத்மாவின் பொருட்டுச் செய்யப்படுகின்ற அந்தச் செயல் நிச்சயமாக 'ஸத்' என்றே அழைக்கப்படுகிறது.

**கேள்வி:** *வேள்வி, தவம், தானம் என்ற சொற்கள் எத்தகைய வேள்வி, தவம், தானங்களைக் குறிக்கின்றன? 'ஸ்திதி' என்றால் என்ன? அதை 'ஸத்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** ஸாத்விகமான வேள்வி, தானம், தவங்களை இங்கே குறிப்பிடுகிறார். அவற்றில் ச்ரத்தையும், ப்ரேமையும் கூடிய ஆஸ்திகப் பண்பு இருந்தால், அது நிஷ்டை என்றும் கூறுப்படும். அதையே இங்கே 'ஸ்திதி' என்கிறார். இப்படிப்பட்ட உறுதி நிலை பரமாத்மாவை அடைவதற்குக் காரணம் ஆகும். ஆகவே அதை 'ஸத்' என்கிறார்.

**கேள்வி:** *'ததர்தீயம் கர்ம' என்றால் எது? அதை 'ஸத்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** பகவானுடைய ஆணையின்படி அவருக்காகவே செய்யப்படுவதும், தன்னலம் சிறிதுகூட இல்லாததுமான கர்மம் 'ததர்தீயம்' (பகவானுக்காகவே புரிவது) எனப்படும். இப்படிப்பட்ட கர்மம் கர்த்தாவினுடைய உள்ளத்தைத் தூய்மைப்படுத்தி, அவன் பரமாத்மாவை அடையும்படி செய்கிறது. ஆகவே அது 'ஸத்' எனப்படும்.

**கேள்வி:** *'ஏவ' என்ற சொல்லுக்கு என்ன பொருள்?*

**பதில்:** அப்படிப்பட்ட கர்மம்தான் 'ஸத்'; இதில் சிறிதும் ஐயமில்லை; மற்றக் கர்மங்களின் பயன் அநித்யமானபடியால், அவை 'ஸத்' ஆகா என்று கூடவே சுட்டிக்காட்டுகிறார்.

**பொருத்தம்: இவ்விதம் ச்ரத்தையோடு சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட வேள்வி, தவம், தானங்களின் பெருமையைக் கூறி, சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட கடமைகளை ச்ரத்தையின்றிச் செய்தால் என்ன பயன் என்ற வினாவுக்குப் பதில் கூறி அத்யாயத்தை நிறைவு செய்கிறார்—**

अश्रद्धया हुतं दत्तं तपस्तप्तं कृतं च यत्।
असदित्युच्यते पार्थ न च तत्प्रेत्य नो इह॥ २८॥

**அஶ்ரத்₃த₄யா ஹுதம் த₃த்தம் தபஸ்தப்தம் க்ருதம் ச யத் ।**
**அஸதி₃த்யுச்யதே பார்த₂ ந ச தத்ப்ரேத்ய நோ இஹ ॥ 28 ॥**

**பார்த₂** – அர்ஜுன! **அஶ்ரத்₃த₄யா** – ச்ரத்தையின்றிச் செய்யப்படுகின்ற, **ஹுதம்** – ஹோமமும், **த₃த்தம்** – அளிக்கப்படுகின்ற தானமும் (அவ்வாறே), **தப்தம்** – செய்யப்படும், **தப: ச** – தவமும், **யத் க்ருதம்** – செய்யப்பட்ட மங்கள கர்மங்களும், **அஸத் இதி** – 'அஸத்' என்று, **உச்யதே** – சொல்லப்படுகின்றன. (எனவே), **தத்** – அவை, **இஹ** – இந்த உலகிலும், **நோ** – நன்மை பயவாதவை. **ப்ரேத்ய ச** – இறந்த பிறகும், **ந** – நன்மை பயவாதவை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அர்ஜுன! ச்ரத்தையின்றிச் செய்யப்படுகின்ற ஹோமமும், அளிக்கப்படுகின்ற தானமும், அவ்வாறே செய்யப்படும் தவமும், செய்யப்பட்ட மங்கள கர்மங்களும் 'அஸத்' என்று சொல்லப்படுகின்றன. எனவே அவை இந்த உலகிலும் நன்மை பயவாதவை. இறந்த பிறகும் நன்மை பயவாதவை.

**கேள்வி:** ச்ரத்தையின்றிச் செய்யப்படும் வேள்வி, தானம், தவம் மற்றும் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட மற்ற மங்கள கர்மங்கள் அனைத்துமே 'அஸத்'தான் என்று கூறுவதன் கருத்து என்ன? இவை இவ்வுலகிலும், பரலோகத்திலும் பயன் தரா என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "வேள்வியோ, தானமோ, தவமோ, மற்ற நற்செயல்களோ, ச்ரத்தையுடன் செய்யப்பட்டால்தான் உள்ளத்தைத் தூய்மைப்படுத்தும். இவ்வுலகிலும், பரலோகத்திலும் பயன் தரும். ச்ரத்தையில்லாமல் செய்யப்படும் மங்கள கர்மங்கள் வீணே. ஆகவே, அவை 'அஸத்'. இவ்வுலகிலும், பரலோகத்திலும் அவை பயன் தரா" என்று கூறினார்.

**கேள்வி:** 'யத்க்ருதம்' என்ற சொல்லுக்குத் தடை செய்யப்பட்ட பாவ கர்மம் என்றும் பொருள் கூறினால் என்ன தவறு?

**பதில்:** தடை செய்யப்பட்ட கர்மங்களைச் செய்வதற்கு ச்ரத்தை தேவையில்லை. அவற்றின் பயனும்கூட ச்ரத்தையுடன் செய்தால்தான் விளையும் என்பதில்லை. சாஸ்த்ரங்கள், பெரியோர்கள், பகவான் இவர்களிடம் முழுமையான ச்ரத்தை இல்லாதவர்களும் பாவச் செயல்களுக்கு (துக்கரூபமான) பயன் ஏற்பட்டே தீரும் என்பதில் நம்பிக்கையில்லாதவர் களும்தான் தடுக்கப்பட்ட தீயசெயல்களைப் புரிவார்கள். அவர்களுக்குக் கட்டாயம் துக்கரூபமான பயன் ஏற்பட்டே தீரும். ஆகவே இங்கு 'யத்க்ருதம்' என்பதற்குப் பாவச் செயல்கள் என்ற பொருள் இல்லை. இதைத் தவிர, யக்ஞம், தானம், தவம் என்ற சொற்களுடன் கூடக் கூறப்படும் 'யத்க்ருதம்' என்ற சொல் அதே தரத்தைச் சார்ந்த செயல்களையே குறிக்கும். இவ்வுலகிலோ, பரலோகத்திலோ நன்மை விளைவிக்காது என்று கூறுவது கூடப் பாவ கர்மங்களுக்குப் பொருத்தமாகாது. அவை எப்பொழுதும் துன்பங்களையே விளைவிக்குமாதலால் நன்மை தருவதைப் பற்றி நினைத்துக்கூடப் பார்க்க முடியாது. ஆகவே, ச்ரத்தையில்லாமல் செய்யப்படும் நல்ல கர்மங்களைப் பற்றித்தான் இந்த ஸந்தர்பத்தில் பேசப்படுகிறது. தீய கர்மங்களைப் பற்றிய பிரஸ்தாபம் இங்கே இல்லை.

ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे श्रद्धात्रयविभागयोगो नाम सप्तदशोऽध्याय: ॥ १७ ॥

ஓம் தத்ஸதி₃தி ஸ்ரீமத்₃ப₄க₃வத்₃கீ₃தாஸூபநிஷத்ஸு ப்₃ரஹ்மவித்₃யாயாம்
யோக₃ஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே₃
ஶ்ரத்₃த₄ாத்ரய விப₄ாக₃ யோகோ₃ நாம ஸப்தத₃ஶோऽத்₄யாய: ॥ 17 ॥

ஓம் தத் ஸத் – ப்ரம்ம வித்யை, யோக ஶாஸ்த்ரம், உபநிஷத் எனப்படும் ஸ்ரீமத்பகவத்கீதையாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலில் 'ஶ்ரத்தாத்ரயவிபாகயோகம்' எனப் பெயர் படைத்த பதினேழாவது அத்யாயம் நிறைவுற்றது.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:

# அதா₂ஷ்டாத₃ஶோऽத்₄யாய:

# பதினெட்டாவது அத்யாயம்

## மோக்ஷஸந்ந்யாஸயோகம்

**அத்யாயத்தின் பெயர்** பிறப்பு, இறப்பு என்ற உலகியல் தளையிலிருந்து என்றும் விடுபட்டுப் பரமானந்த ஸ்வரூபமான பரமாத்மாவை அடைவதே மோக்ஷம் ஆகும். இவ்வத்யாயத்தில், பகவான் முன்பு கூறப்பட்ட எல்லா அத்யாயங்களுடைய ஸாரத்தையும் சுருங்கக் கூறி, மோக்ஷத்திற்கு உபாயமான ஸாங்க்யயோகத்திற்கு 'ஸந்யாஸம்' என்றும், கர்மயோகத்திற்கு 'த்யாகம்' என்றும் பெயர் சூட்டிப் பிரிவு-உட்பிரிவுகளுடன் சிறந்ததொரு விளக்கம் தருகிறார். 'ஸாக்ஷாத் மோக்ஷமாகிய பரமாத்மாவிடம் எல்லாக் கர்மங்களையும் ஒப்படைத்துவிடு அல்லது த்யாகம் செய்து விடு' (18/66) என்று கூறி, உபதேசத்தை முடிக்கிறார். இதனாலும் இவ்வத்யாயத்திற்கு 'மோக்ஷஸந்ந்யாஸயோகம்' என்று பெயர்.

**அத்யாயச் சுருக்கம்** முதல் ச்லோகத்தில் அர்ஜுனன் ஸந்யாஸம், த்யாகம் இவற்றின் தத்வம் பற்றிக் கேட்கிறார். 2, 3ல் பகவான் இவ்விஷயத்தில் மற்ற அறிஞர்களின் கருத்தை விளக்குகிறார். 4, 5ல் அர்ஜுனனுக்கு த்யாகம் என்பது பற்றித் தம் கருத்தைக் கேட்குமாறு கூறி, 'கடமைகளை ஆற்றாமல் துறத்தலாகாது. அது சரியன்று' என்கிறார். 6ல் த்யாகம் என்பதில் தமது திண்ணமான கருத்தைக் கூறி, அது மற்றைய கருத்துக்களைக் காட்டிலும் சிறந்தது என்கிறார். 7, 8, 9களில் வரிசையாகத் தாமஸ, ராஜஸ, ஸாத்விக த்யாகங்களின் இலக்கணங்களையும், 10, 11ல் ஸாத்விக த்யாகியின் இலக்கணத்தையும் கூறுகிறார். 12ல் த்யாகியின் பெருமையை நன்கு விளக்கி த்யாகம் என்ற தலைப்பை முடிக்கிறார். பிறகு 13 முதல் 15 வரை 'ஸாங்க்யம் (ஸந்யாஸம்) பற்றித் தெரிந்து கொள்' என அர்ஜுனனிடம் கூறி, ஸாங்க்ய முறைப்படிக் கர்மங்கள் நிறைவேறுவதற்கு அதிஷ்டானம் முதலிய ஐந்து காரணங்களை விவரிக்கிறார். 16ல் சுத்தனான ஆத்மாவைக் கர்த்தா என்று கருதுபவனை இழித்துக் கூறி, 17ல் கர்த்தா என்ற அபிமானமின்றிக் கர்மத்தைச் செய்பவனைப் புகழ்கிறார். 18ல் கர்மத்தைச் செய்யத் தூண்டுவன பற்றியும், கர்மத்தின் தொகுப்பைப் பற்றியும் கூறுகிறார். 19ல் ஞானம், கர்மம், கர்த்தா என்பன மூவகைப்படும் என்று முன்னுரை கூறி, 20 முதல் 28 வரை வரிசையாக அவற்றின் ஸாத்விக, ராஜஸ, தாமஸ வேறுபாடுகளை வர்ணிக்கிறார். 29ல் புத்தியும், த்ருதியும் மூவகைப்படும் என்று ஆரம்பித்து, 30 முதல் 35 வரை வரிசையாக அவற்றின் ஸாத்விக, ராஜஸ, தாமஸ வேறுபாடுகளை விளக்குகிறார். 36 முதல் 39 வரை ஸுகம் ஸாத்விகம், ராஜஸம், தாமஸமென மூவகைப்படும் என்கிறார். 40ல் குணங்கள் பற்றிய விஷயத்தை முடித்து, அகில உலகமும் முக்குணங்களுக்கு ஆட்பட்டது என்கிறார். 41ல் நான்கு வர்ணத்தாரின்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இயல்பான கர்மங்கள் பற்றிக் கூறத் தொடங்கி, 42ல் அந்தணர்களுடையவும், 43ல் க்ஷத்ரியர்களுடையவும், 44ல் வைசியர்களுடையவும், நான்காம் வர்ணத்தவருடையவுமான இயல்பான கர்மங்களை வர்ணிக்கிறார். 45ல் தத்தம் வர்ண தர்மங்களைக் கடைப்பிடிப்பதாலேயே பரமஸித்தியைப் பெறலாம் என்றும், 46ல் அதன் விதிமுறையையும் கூறுகிறார். 47, 48ல் ஸ்வதர்மமே சிறந்தது; அதை விடவே கூடாது என்கிறார். 49ல் மறுபடியும் ஸந்யாஸயோகம் பற்றிச் சொல்ல ஆரம்பித்து, ஸந்யாஸத்தினால் பரமஸித்தியைப் பெறலாம் என்று கூறுகிறார். 50ல் ஞானத்தின் உயர்ந்த நிலையைக் கூறுவதாகச் சொல்கிறார். 51 முதல் 55 வரை பயனுடன் கூடிய ஞான நிஷ்டையை விளக்குகிறார். 56 முதல் 58 வரை பக்தியை முதன்மையாகக் கொண்ட கர்மயோகத்தின் பெருமையையும், பயன்களையும் எடுத்துக்காட்டி, அர்ஜுனனிடம் 'அதையே கடைப்பிடிப்பாயாக; அதைக் கைவிட்டால் தீமை நேரும்' என்கிறார். 59, 60ல் ப்ரக்ருதியின் வலிமை காரணமாக இயல்பான செயல்களைத் துறக்க இயலாது என்று கூறுகிறார். 61, 62ல் 'பரமாத்மாதான் அனைத்தையும் அடக்கி ஆள்பவர், ஸர்வாந்தர்யாமி, எல்லா வகையிலும் அவரைத் தஞ்சமடைவாயாக' என்று ஆணையிடுகிறார். 63ல் அந்த விஷயத்தை முடித்து, அர்ஜுனனிடம் தாம் சொன்னவற்றையெல்லாம் ஆராய்ந்து, 'உன் விருப்பப்படி நடந்து கொள்' என்று பகர்ந்து, 64ல் 'இதுவரை கூறப்பட்ட கீதை முழுமையின் ஸாரமானதும், மறைத்துப் போற்றத்தக்க, உயர்ந்த ரஹஸ்யமுமானதை மறுபடியும் சொல்கிறேன் கேள்' என்கிறார். 65, 66ல் அநன்ய சரணாகதி என்ற மிகவும் ரஹஸ்யமான உபதேசத்தை, அதன் பயனுடன் எடுத்துக் கூறி, அர்ஜுனனிடம் 'என்னையே தஞ்சமடைவாய்' என மொழிந்து உபதேசத்தை முடிக்கிறார். 67ல் நான்குவிதமான தகுதியற்றவர்களைக் குறிப்பிட்டு, அவர்களுக்கு கீதையை உபதேசம் செய்யலாகாது என்றும், 68, 69ல் தகுதியுள்ளவர்களுக்கு கீதையை ப்ரசாரம் செய்பவர்களின் பெருமையையும், 70ல் கீதையைப் படிப்பதன் பெருமையையும் கூறுகிறார். 71ல் ச்ரத்தையுடன் கீதையைக் காதால் கேட்பதன் பெருமையையும் கூறுகிறார். 72ல் பகவான் அர்ஜுனனைப் பார்த்து 'ஒருமுகப்பட்ட மனதுடன் கேட்டாயா? மோஹமழிந்ததா?' என்று வினவுகிறார். 73ல் அர்ஜுனன் 'என் மோஹம் அழிந்தது; ஞானஒளி வந்து விட்டது; ஐயம் தீர்ந்தது; உங்கள் கட்டளையை நிறைவேற்றுவேன்' என்று விடையிறுக்கிறார். 74 முதல் 77 வரை ஸஞ்ஜயன் ஸ்ரீக்ருஷ்ண-அர்ஜுன ஸம்வாத ரூபமான கீதாசாஸ்த்ர உபதேசத்தின் பெருமையைப் போற்றி, அதையும், பகவானுடைய விசுவரூபத்தையும் திரும்பத் திரும்ப நினைத்துத் தாம் ஆச்சரியமும், ஆனந்தமும் அடைவதாகக் கூறுகிறார். 78ல் பகவான் ஸ்ரீக்ருஷ்ணனும், அர்ஜுனனும் எவர் தரப்பில் உள்ளனரோ, அவருக்கு வெற்றி முதலியன உறுதி என்ற முழக்கத்துடன் அத்யாயம் நிறைவு பெறுகிறது.

**முன் அத்யாயத்துடன் இவ்வத்யாயத்திற்குப் பொருத்தம்:** இரண்டாவது அத்யாயத்தில் பதினொன்றாவது ச்லோகம் முதல் கீதோபதேசம் துவங்கியது. அது முதல் முப்பது வரை பகவான் ஞானயோகம் பற்றிக் கூறினார். இடத்திற்கேற்ப க்ஷத்ரிய தர்மத்தின் நோக்கில், யுத்தம் செய்வதுதான் தக்கது என்று கூறினார். முப்பத்தொன்பது முதல், அத்யாய முடிவு வரை கர்மயோகத்தை உபதேசித்தார். பிறகு மூன்றாவது அத்யாயம் முதல் பதினேழாவது அத்யாயம் வரை சில இடங்களில் ஞானயோக வழியிலும், சில இடங்களில் கர்மயோக வழியிலும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பகவானை அடைவதற்குரிய பல ஸாதனங்களை எடுத்துரைத்தார். இவ்வளவையும் கேட்ட பிறகு அர்ஜுனன் இந்த அத்யாயத்தில் எல்லா அத்யாயங்களின் ஸாரத்தையும் அறிந்து கொள்வதன் பொருட்டு, பகவானிடம் ஸந்யாஸம் அதாவது ஞானயோகம், த்யாகம் அதாவது பயனில் விருப்பத்தைத் துறப்பதாகிய கர்மயோகம் இவற்றின் தத்வங்களைத் தனித்தனியாக நன்கு தெரிந்து கொள்ளும் ஆவலை வெளியிடுகிறார்—

अर्जुन उवाच

**सन्न्यासस्य महाबाहो तत्त्वमिच्छामि वेदितुम्।**
**त्यागस्य च हृषीकेश पृथक्केशिनिषूदन॥ १॥**

அர்ஜுந உவாச

**ஸந்ந்யாஸஸ்ய மஹாபா₃ஹோ தத்த்வமிச்ச₂ாமி வேதி₃தும் ।**
**த்யாக₃ஸ்ய ச ஹ்ருஷீகேஶ ப்ருத₂க்கேஶிநிஷூத₃ந ॥ 1 ॥**

**அர்ஜுந உவாச** – அர்ஜுனன் சொன்னார்: **மஹாபா₃ஹோ** – நீண்ட புஜங்கள் உடையவரே! **ஹ்ருஷீகேஶ** – அந்தர்யாமியே! **கேஶிநிஷூத₃ந** – கேசியை வதைத்த வாஸுதேவனே! **ஸந்ந்யாஸஸ்ய** – ஸந்யாஸம் பற்றிய, **த்யாக₃ஸ்ய ச** – த்யாகம் பற்றிய, **தத்த்வம்** – தத்வத்தை, **ப்ருத₂க்** – தனித்தனியாக, **வேதி₃தும்** – அறிந்து கொள்ள, **இச்ச₂ாமி** – விரும்புகிறேன்.

அர்ஜுனன் சொன்னார்: "நீண்ட புஜங்கள் உடையவரே! அந்தர்யாமியே! கேசியை வதைத்த வாஸுதேவனே! ஸந்யாஸம், த்யாகம் இவை பற்றிய தத்வங்களைத் தனித்தனியாக அறிந்து கொள்ள விரும்புகிறேன்."

**கேள்வி:** இங்கு 'மஹாபாஹோ', 'ஹ்ருஷீகேஶ', 'கேஶிநிஷூதந' என்ற மூன்று விளிச்சொற்களின் கருத்து என்ன?

**பதில்:** அர்ஜுனன் பகவானை இவ்விதம் விளித்து, 'நீங்கள் ஸர்வ வல்லமை படைத்தவர், அனைவருக்கும் அந்தர்யாமி, எல்லாக் குறைகளையும் களையும் ஸாக்ஷாத் பரமாத்மா' என்று தம் உள்ளத்தை வெளியிடுகிறார். "நான் அறிய விரும்புவதை நீங்கள் நன்கு அறிவீர்கள். என் வேண்டுகோளைச் சற்று ஆலோசித்து, எப்படிக் கூறினால் உண்மையை முழுமையாக நான் தெரிந்து கொள்வேனோ, என் ஐயங்கள் அனைத்தும் தீருமோ, அவ்விதம் நீங்கள் விளக்குங்கள்" என்று வேண்டுகிறார்.

**கேள்வி:** 'நான் ஸந்யாஸம் பற்றிய, த்யாகம் பற்றிய தத்வத்தைத் தனித்தனியாக அறிய விரும்புகிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "ஸந்யாஸ (ஞான) யோகத்தின் தன்மை என்ன? அதற்கு எத்தகைய மனப்பாங்கு, கர்மங்கள் உதவி செய்யும்? தடை செய்வன எவை? உபாஸனையுடன் கூடிய ஸாங்க்யயோகம், தனிப்பட்ட ஸாங்க்யயோகம் இவற்றிற்கான ஸாதனைகள் எப்படிச் செய்யப்படுகின்றன? பயனில் உள்ள பற்றை த்யாகம் செய்வது என்னும் கர்மயோகத்தின் தன்மை என்ன? கர்மயோகத்திற்கு மட்டுமுரிய ஸாதனை என்ன? எது செய்தால் இதற்கு உதவியாகும்? எது தடையாகும்? பக்தி கலந்த கர்மயோகம் என்பது என்ன? பக்தியை முக்யமாகக் கொண்டு கர்மயோகம் ஆற்றுவது எப்படி? உலகியல் கர்மங்களையும் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களையும் செய்து கொண்டு பக்தி கலந்த கர்மயோகத்திற்கும் பக்தியையே ப்ரதானமாகக் கொண்ட கர்மயோகத்திற்கும் எவ்வித ஸாதனை தேவை? – இந்த எல்லா விஷயங்களைப் பற்றியும் நான் நன்கு அறிந்து கொள்ள விரும்புகிறேன். இது தவிர, இந்த இரண்டுவித ஸாதனைகளின் தனித்தனி இலக்கணங்களையும், ஸ்வரூபங்களையும் அறிய விரும்புகிறேன்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தயவு செய்து நீங்கள் இரண்டிற்கும் தனித்தனியாக எனக்கு விளக்கம் தரவேண்டும். ஒன்றிலொன்று கலந்துவிடக் கூடாது. இரண்டிற்குமுள்ள வேறுபாடு எனக்கு நன்றாகப் புரியவேண்டும்" என்று அர்ஜுனன் கேட்க விரும்புகிறார்.

**கேள்வி:** மேற்குறித்த ஸந்யாஸம், த்யாகம் இவற்றின் தத்வங்களைத் தெளிவாக்க எந்தெந்த ச்லோகங்களில் எங்ஙனம் விளக்குகிறார்?

**பதில்:** *18/13* முதல் *18/17* வரை ஸந்யாஸ (ஞான) யோகம் பற்றிக் கூறுகிறார். *18/19* முதல் *18/40* வரை கூறப்படுகிற ஸாத்விக மனப்பாங்கும், கர்மங்களும் இந்த (ஞானயோக) ஸாதனைக்கு உதவியாகும்; ராஜஸ, தாமஸமானவை இதற்கு இடையூறு ஆகும் என்றும், *18/50* முதல் *18/55* வரை உபாஸனையுடன் கூடிய ஸாங்க்யயோகத்தின் விதிமுறையையும், பயனையும், *18/17*ல் தனிப்பட்ட ஸாங்க்யயோகத்தின் ஸாதனை முறையையும் கூறுகிறார்.

இவ்விதம் *18/6*ல் பயனில் உள்ள பற்றை த்யாகம் செய்வதான கர்மயோகத்தின் தன்மையையும், *18/9*ல் ஸாத்விக த்யாகம் என்ற பெயரில் தனிப்பட்ட கர்மயோக ஸாதனை முறையையும், *18/47*, *18/48*களில் ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பது இந்த ஸாதனைக்கு உதவியாகும் என்றும், *18/7*, *18/8*களில் கூறப்படுகிற தாமஸ, ராஜஸ த்யாகங்கள் இதற்கு இடையூறு என்றும் கூறுகிறார். *18/45*, *18/46*களில் பக்தி கலந்த கர்மயோகத்தையும், *18/56* முதல் *18/66* வரை பக்தியை முக்யமாகக் கொண்ட கர்மயோகத்தையும் கூறுகிறார். *18/46*ல் உலகியல் மற்றும் சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட கர்மங்களைச் செய்து கொண்டே, பக்தி கலந்த கர்மயோக ஸாதனை புரியும் முறையைக் கூறுகிறார். *18/57*ல் பகவான் பக்தி ப்ரதானமான கர்மயோக ஸாதனை முறையைக் கூறுகிறார்.

**பொருத்தம்:** இவ்விதம் அர்ஜுனன் கேட்டதற்கேற்ப பகவான் தமது உறுதியான கருத்தைக் கூறுவதற்கு முன், ஸந்யாஸம், த்யாகம் இவை பற்றிய மற்ற அறிஞர்களின் வெவ்வேறு கருத்துக்களை இரண்டு ச்லோகங்களில் கூறுகிறார்—

श्रीभगवानुवाच

**काम्यानां कर्मणां न्यासं सन्न्यासं कवयो विदुः ।**
**सर्वकर्मफलत्यागं प्राहुस्त्यागं विचक्षणाः ॥ २ ॥**

ஸ்ரீப₄க₃வானுவாச

**காம்யாநாம் கர்மணாம் ந்யாஸம் ஸந்ந்யாஸம் கவயோ விது₃: ।**

**ஸர்வகர்மப₂லத்யாக₃ம் ப்ராஹுஸ்த்யாக₃ம் விசக்ஷணா: ॥ 2 ॥**

**ஸ்ரீப₄க₃வானுவாச** – ஸ்ரீபகவான் சொன்னார்: **கவய:** – சில பண்டிதர்கள், **காம்யாநாம்** – விரும்பிய பொருளைப் பெறுவதற்காகச் செய்யப்படும், **கர்மணாம்** – காம்ய கர்மங்களை, **ந்யாஸம்** – துறத்தலை, **ஸந்ந்யாஸம்** – ஸந்யாஸம் என்று, **விது₃:** – அறிகிறார்கள். (மற்றும் சில), **விசக்ஷணா:** – ஆராய்ச்சியாளர்கள், **ஸர்வகர்மப₂ல த்யாக₃ம்** – கர்மங்கள் அனைத்தினுடைய பயனையும் துறத்தலையே, **த்யாக₃ம்** – த்யாகம் என்று, **ப்ராஹு:** – கூறுகிறார்கள்.

ஸ்ரீபகவான் சொன்னார்: பண்டிதர்கள், விரும்பிய பொருளைப் பெறுவதற்காகச் செய்யப்படும் காம்ய கர்மங்களைத் துறத்தலை ஸந்யாஸம் என்று அறிகிறார்கள். மற்றும் சில ஆராய்ச்சியாளர்கள் கர்மங்கள் அனைத்தினுடைய பயனையும் துறத்தலையே த்யாகம் என்று கூறுகிறார்கள்.

**கேள்வி:** 'காம்ய கர்மங்கள்' என்றால் எவை? 'சில பண்டிதர்கள் அவற்றை விடுவதே ஸந்யாஸம் என்கிறார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** மனைவி–மக்கள், செல்வம் மற்றும் ஸ்வர்கம் முதலிய விருப்பமான பொருட்களைப் பெறுவதற்காகவும், நோய் நொடிகள் முதலிய வேண்டாதன விலகுவதற்காகவும், யாகம், தானம், தவம், உபாஸனை முதலிய மங்கள கர்மங்களை சாஸ்த்ரங்கள் விதிக்கின்றன. 'இந்தப் பயன் வேண்டுமானால் இந்தக் கர்மத்தைச் செய்ய வேண்டும். அந்தப் பயன் வேண்டாமென்றால் அந்தக் கர்மத்தைச் செய்யவேண்டுவதில்லை' என்று கூறுகின்றன. இந்த மங்கள கர்மங்களே காம்ய கர்மங்கள்.

'அறிஞர்கள் பலர் இங்கே சொன்ன காம்ய கர்மங்களைச் செய்யாமல் த்யாகம் செய்வதே ஸந்யாஸம் என்று கருதுகின்றனர்' என்கிறார் பகவான். இக்கூற்றில் அறிவாளிகள் பலரும் கர்மங்களை ஆற்றாமல் துறந்துவிடுதலையே ஸந்யாஸம் எனக் கருதுவதை பகவான் குறிப்பிடுகிறார். அவர்கள் கருத்துப்படி காம்ய கர்மங்களைச் செய்யாமல் விட்டுவிட்டு, தவிர்க்கமுடியாத, தவிர்க்கக் கூடாத, நித்ய–நைமித்திக கர்மங்களையும், அந்தந்தக் காலத்தில் செய்யவேண்டிய கர்மங்களையும் மட்டும் முறைப்படி செய்பவர்களே ஸந்யாஸிகள் ஆவார்கள்.

**கேள்வி:** 'ஸர்வகர்ம' என்ற சொல்லுக்குப் பொருள் என்ன? அவற்றின் பயனைத் துறப்பது என்றால் என்ன? 'சில ஆராய்ச்சியாளர்கள் கர்மங்கள் அனைத்தின் பயன்களையும் துறப்பதே த்யாகம் என்கிறார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவானிடம் ஈடுபாடு, தேவர்களை வழிபடுதல், பெற்றோர் முதலிய பெரியோர்களுக்குச் செய்யும் பணிவிடை, வேள்வி, தானம், தவம், வர்ண–ஆசிரமங்களுக்கு ஏற்றவாறு வாழ்வுக்குரிய செயல்கள், உடலைப் பேணுதற்கு வேண்டிய உணவு ஆகியவை பற்றி சாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ள கடமைகள் யாவும் 'ஸர்வகர்ம' என்ற சொல்லில் அடங்கும். எந்த வர்ணத்தில், எந்த ஆசிரமத்தில் உள்ளவனுக்கு எந்தக் கடமைகளை சாஸ்த்ரங்கள் விதிக்கின்றனவோ, எவற்றைச் செய்யாவிட்டால் நீதி, தர்மம், கர்மம் இவற்றின் தொடர் அறுந்து போகுமோ, அவையெல்லாம் 'ஸர்வகர்மங்கள்' என்ற தொடரில் அடங்கும். இவற்றைச் செய்வதன் மூலம் பெறக்கூடிய மனைவி–மக்கள், செல்வம், மரியாதை, பெருமை, புகழ், ஸ்வர்கம் முதலிய இவ்வுலக, பரலோக போகங்கள் அனைத்திலும் ஆசையைத் துறந்து, இந்தக் கர்மத்திற்கு இந்தப் பயன் உண்டு என்று நினைத்துக்கூடப் பார்க்காமல் இருப்பதே அனைத்துக் கர்மங்களின் பயன்களையும் துறப்பதாகும்.

'ஆராய்ச்சியாளர்கள் பலர் கர்மங்கள் அனைத்தின் பயன்களையும் துறப்பதே த்யாகம் என்கிறார்கள்' என்று குறிப்பிடும் பகவான் எது நித்யம், எது அநித்யம் என்று தீர விசாரித்து அறியக்கூடிய மனிதர்கள், மேற்கூறியவாறு எல்லாக் கர்மங்களின் பயன்களையும் துறந்து கடமைகளை ஆற்றுவது மட்டுமே த்யாகம் என்று நினைக்கிறார்கள். ஆகவே அவர்கள் அதே பாவனையில் செய்யப்பட வேண்டிய அனைத்துக் கர்மங்களையும் செய்து கொண்டே இருக்கிறார்கள் என்ற கருத்தை வெளியிடுகிறார்.

**त्याज्यं दोषवदित्येके कर्म प्राहुर्मनीषिणः।**
**यज्ञदानतपःकर्म न त्याज्यमिति चापरे॥ ३॥**

**த்யாஜ்யம் தோ₁ஷவதி₃த்யேகே கர்ம ப்ராஹுர்மநீஷிண: ।**
**யஜ்ஞதா₃நதப:கர்ம ந த்யாஜ்யமிதி சாபரே ॥ 3 ॥**

**ஏகே மநீஷிண:** – சில அறிஞர்கள், **கர்ம** – கர்மங்கள் அனைத்தும், **தோ₃ஷவத்** – குற்றமுடையவை. ஆகவே, **த்யாஜ்யம் இதி** – துறக்கப்பட வேண்டியவை என்று, **ப்ராஹு:** – சொல்கிறார்கள். **ச** – மேலும், **அபரே** – இன்னும் சிலர், **யஜ்ஞ தா₃ந தப: கர்ம** – வேள்வி, தானம், தவம் என்கிற கர்மங்கள், **ந த்யாஜ்யம்** – துறக்கத் தகுந்தன அல்ல, **இதி** – என்று, (**ஆஹு:** – கூறுகிறார்கள்).

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



சில அறிஞர்கள் கர்மங்கள் அனைத்தும் குற்றமுடையவை, ஆகவே துறக்கப்பட வேண்டியவை என்று சொல்கிறார்கள். இன்னும் சிலர் வேள்வி, தானம், தவம் என்கிற கர்மங்கள் துறக்கத்தகுந்தன அல்ல என்று கூறுகிறார்கள்.

**கேள்வி:** 'சில அறிஞர்கள் கர்மங்கள் என்றாலே குற்றமுள்ளவை. ஆகவே அவை துறக்கப்பட வேண்டியவை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எச்செயலைச் செய்தாலும், அதில் ஏதாவது ஒரு பாவம் ஏற்பட்டுத்தான் தீரும். ஆகவே சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகள்கூடக் குற்றமற்றவை என்று கூற முடியாது. இதையே கருத்தில் கொண்டு பகவான் மேலே சொல்கிறார்: **'ஸர்வாரம்ப₄ா ஹி தோ₃ஷேண தூ₄மேநாக்₃நிரிவாவ்ருதா:'** *(18/48)*. 'செயல்கள் அனைத்திலுமே, தீயைப் புகை சூழ்வதுபோல் குற்றங்கள் சூழ்ந்திருக்கும்.' ஆகவே மங்களத்தை விரும்புகின்ற மனிதன் நித்யம், நைமித்திகம், காம்யம் என்ற எல்லாக் கர்மங்களையும் செய்யாமல் விட்டுவிட வேண்டும்; அதாவது ஸந்யாஸ ஆசிரமத்தை ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று கற்றறிந்த சில பெரியோர் கூறுவர்.

**கேள்வி:** 'மற்றும் சிலர் வேள்வி, தானம், தவம் முதலிய கர்மங்கள் தள்ளத் தகுந்தன அல்ல என்று கூறுகிறார்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கற்றோர்களில் பெரும்பாலோரின் கருத்துப்படி வேள்வி, தானம், தவம் முதலிய கர்மங்களில் உண்மையில் குற்றம் குறைகள் இரா. அந்தக் கர்மங்களுக்காக ஆற்றப்படும் செய்முறையில் ஏதாவது தவிர்க்க முடியாத ஹிம்ஸை முதலிய பாவங்கள் ஏற்படுவதைக் காண்கிறோம். ஆனால் அவை உண்மையில் பாவமல்ல. ஏனெனில் அவை சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டவை. ஆகவே வேள்வி, தானம், தவம் முதலிய கர்மங்கள் மனிதனைத் தூய்மைப்படுத்துகின்றன. எனவே மேன்மையடைய விரும்பும் மனிதன், சாஸ்த்ரங்களில் தடுக்கப்பட்டவற்றைத்தான் துறக்க வேண்டுமே தவிர, சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டவற்றைச் செய்யாமல் விடக்கூடாது என்பது கருத்து.

**பொருத்தம்:** **இவ்விதம் ஸந்யாஸம், த்யாகம் பற்றிக் கற்றோர்களின் வெவ்வேறு கருத்துக்களைக் கூறி, பகவான் த்யாகம் என்பதில் தம் தீர்மானத்தை எடுத்துக் கூற ஆரம்பிக்கிறார்—**

**निश्चयं शृणु मे तत्र त्यागे भरतसत्तम।**
**त्यागो हि पुरुषव्याघ्र त्रिविधः सम्प्रकीर्तितः ॥ ४ ॥**

**நிஸ்சயம் ஶ்ருணு மே தத்ர த்யாகே₃ ப₄ரதஸத்தம ।**
**த்யாகோ₃ ஹி புருஷவ்யாக்₄ர த்ரிவித₄: ஸம்ப்ரகீர்தித: ॥ 4 ॥**

**புருஷவ்யாக்₄ர** – மனிதர்களில் சிறந்தவனே! **ப₄ரதஸத்தம** – அர்ஜுன! **தத்ர** – ஸந்யாஸம், த்யாகம் இவை இரண்டிலும் முதலில், **த்யாகே₃** – த்யாகத்தைப் பற்றி நீ, **மே** – என்னுடைய, **நிஸ்சயம்** – கொள்கையை, **ஶ்ருணு** – கேள். **ஹி** – ஏனெனில், **த்யாக:** – த்யாகம் (ஸாத்விக, ராஜஸ, தாமஸம் என்ற பிரிவுகளோடு), **த்ரிவித₄:** – மூன்றுவிதமாக, **ஸம்ப்ரகீர்தித:** – கூறப்பட்டுள்ளது.

மனிதர்களில் சிறந்தவனே! அர்ஜுன! ஸந்யாஸம், த்யாகம் இவை இரண்டிலும் முதலில் த்யாகத்தைப் பற்றி நீ என்னுடைய கொள்கையைக் கேள். ஏனெனில் த்யாகம் ஸாத்விக, ராஜஸ, தாமஸம் என்ற பிரிவுகளோடு மூன்றுவிதமாகக் கூறப்பட்டுள்ளது.

**கேள்வி:** இங்கு வரும் 'பரதஸத்தம', 'புருஷவ்யாக்ர' என்னும் அடைமொழிகளின் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பதில்: பரதகுலத்தோரில் மிகச் சிறந்தவன் 'பரதஸத்தமன்'. மனிதர்களில் சிங்கத்திற்கு ஒப்பான வீரமுடையவன் 'புருஷவ்யாக்ரன்'. இவ்விரு அடைமொழிகளினால் பகவான் அர்ஜுனனை, 'பரத குலத்தோரில் உத்தமன்' என்றும், 'மஹாவீரன்' என்றும் சுட்டிக்காட்டுகிறார். ஆகவே மேலே கூறப்படுகின்ற மூவகை த்யாகங்களில், 'தாமஸ, ராஜஸ த்யாகங்களை விடுத்து, ஸாத்விகமான த்யாகம் செய்து, கர்மயோகத்தில் ஈடுபடத் திறமை படைத்தவன் நீ' என்கிறார்.

கேள்வி: 'தத்ர' என்று கூறுவதன் கருத்து என்ன?

பதில்: 'தத்ர' என்றால் மேலே கூறப்பட்ட த்யாகம், ஸந்யாஸம் என்ற விஷயங்களில், என்று பொருள். அர்ஜுனன் 'ஸந்யாஸம், த்யாகம் இவற்றின் தத்வங்களைக் கூறுங்கள்' என்று பகவானை வேண்டினார். அவ்விரண்டில், முதலாவதாக பகவான் த்யாகத்தின் தத்வத்தைப் பற்றி மட்டும் எடுத்துக் கூற விழைகிறார். அர்ஜுனன் 'இரண்டையும் பற்றித் தனித்தனியாகக் கூறுங்கள்' என்று கேட்டார். அதற்கு மறுப்புக் கூறாமல் பகவான் 'த்யாகத்தைப் பற்றிக் கூறுகிறேன்' என்று கூறுவதன் மூலம் ஸந்யாஸம் பற்றிப் பிறகு கூறுவதாகக் குறிப்பால் உணர்த்துகிறார்.

கேள்வி: 'த்யாகம் பற்றிய என் கொள்கையைக் கேட்டுக் கொள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

பதில்: "அர்ஜுன! நீ அறிந்து கொள்ள விரும்பிய இரண்டு விஷயங்களைப் பற்றிய பிறரது கருத்துக்களைக் கூறிவிட்டேன். இனி நான் என் கருத்துப்படி அவற்றில் ஒன்றான த்யாகம் பற்றிய தத்வத்தை நன்கு விளக்க ஆரம்பிக்கிறேன். நீ கவனமாகக் கேள்" என்கிறார்.

கேள்வி: 'த்யாகம் (ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என) மூன்றுவிதமாகக் கூறப்பட்டுள்ளது' என்று கூறுவதன் கருத்து என்ன?

பதில்: பகவான் சாஸ்த்ரங்களுக்கு மதிப்புக் கொடுக்க வேண்டும் என்பதற்காகத் தமது கருத்து சாஸ்த்ர ஸம்மதமானது என்று கூறுகிறார். 'சாஸ்த்ரங்கள் மூவகை த்யாகங்களைக் கூறுகின்றன. அவற்றை நான் உனக்கு நன்றாக விளக்குவேன்' என்கிறார்.

பொருத்தம்: இவ்விதம் 'த்யாகம் பற்றிக் கவனமாகத் தெரிந்து கொள்' என்று கூறிய பகவான் அர்ஜுனனிடம் த்யாகத்தின் தன்மை பற்றிக் கூறுவதற்காக, முதல் இரண்டு ச்லோகங்களில் சாஸ்த்ரங்களால் விதிக்கப்பட்ட மங்கள கர்மங்களைச் செய்யும் விஷயத்தில் தம் தீர்மானத்தைக் கூறுகிறார்—

**यज्ञदानतपःकर्म न त्याज्यं कार्यमेव तत्।**
**यज्ञो दानं तपश्चैव पावनानि मनीषिणाम्॥५॥**

**யஜ்ஞதா₃நதப:கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத் ।**
**யஜ்ஞோ தா₃நம் தபஶ்சைவ பாவநாநி மநீஷிணாம் ॥ 5 ॥**

**யஜ்ஞதா₃நதப:கர்ம** – வேள்வி, தானம், தவம் என்னும் கர்மங்கள், **ந த்யாஜ்யம்** – துறக்கத்தக்கவையல்ல. **தத்** – அவை, **கார்யம் ஏவ** – கட்டாயம் செய்யப்பட வேண்டியவையே. (ஏனெனில்), **யஜ்ஞ:** – வேள்வியும், **தா₃நம் ச** – தானமும், **தப: ஏவ** – தவமும் (இம்மூன்றுமே), **மநீஷிணாம்** – அறிவுடைய மனிதர்களை, **பாவநாநி** – பரிசுத்தப்படுத்தக் கூடியவை.

வேள்வி, தானம், தவம் ஆகிய கர்மங்கள் துறக்கத்தக்கனவல்ல. அவை கட்டாயம் செய்யப்பட வேண்டியவைதான். ஏனெனில் வேள்வியும் தானமும் தவமும் இம்மூன்றுமே அறிவுடையவர்களைப் பரிசுத்தப்படுத்தக் கூடியவை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'வேள்வி, தானம், தவம் ஆகிய கர்மங்கள் துறக்கத்தக்கவையல்ல. கட்டாயம் செய்யப்பட வேண்டியவைதாம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்துதான் ஆகவேண்டும். சாஸ்த்ரங்களில் வர்ண, ஆசிரமங்களுக்கு ஏற்ப அவரவருக்கு எக்கர்மம் விதிக்கப்பட்டிருக்கிறதோ – எவர் எப்போது, எவ்விதம், வேள்வி செய்யவேண்டும், தானம் அளிக்க வேண்டும், தவம் செய்ய வேண்டும் என்று விதிக்கப்பட்டிருக்கிறதோ, அவர் அவற்றைச் செய்யாமல் விடக் கூடாது. அதாவது சாஸ்த்ர விதியைப் புறக்கண்ிக்கக் கூடாது. ஏனெனில் அப்படிப் புறக்கணித்தால் நன்மை இல்லாமல் கட்டாயம் தீமைதான் ஏற்படும். ஆகவே மனிதன் கர்மங்களைக் கட்டாயம் செய்துதான் ஆகவேண்டும். அவற்றை எப்படிச் செய்யவேண்டும் என்பது பற்றி அடுத்த ச்லோகத்தில் கூறுகிறார்.

**கேள்வி:** 'மநீஷிணாம்' என்றால் யார்? 'வேள்வி, தானம், தவம் இவை அவர்களைப் பரிசுத்தப்படுத்தக் கூடியவை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** வர்ணாசிரமங்களுக்கு ஏற்றவாறு எவருக்கு, எந்தக் கர்மம் விதிக்கப் பட்டிருக்கிறதோ, சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டுள்ள அந்தக் கர்மங்களை சாஸ்த்ர முறைப்படி, அதற்குண்டான பிரிவு–உட்பிரிவுகளுடன் பற்றற்று நன்கு செய்கின்ற, மோக்ஷத்தில் நாட்டமுள்ள புத்திமான்களை 'மநீஷிண:' என்ற சொல் குறிப்பிடுகிறது. அவர்கள் செய்கின்ற யாகம், தானம், தவம் முதலிய எக்கர்மங்களும் தளைகள் ஆகமாட்டா. மாறாக அவை அவர்களுடைய உள்ளங்களைத் தூய்மைப்படுத்தும். ஆகவே மனிதன் நிஷ்காமமாக யாகம், தானம், தவம் முதலிய கர்மங்களைத் தவறாமல் செய்துதான் ஆகவேண்டும். இதைத்தான் இங்கே யாகம், தானம், தவம் முதலிய கர்மங்கள் அறிவுடையோரைத் தூய்மைப்படுத்துவன என்று கூறுகிறார்.

**एतान्यपि तु कर्माणि सङ्गं त्यक्त्वा फलानि च।**
**कर्तव्यानीति मे पार्थ निश्चितं मतमुत्तमम्॥ ६॥**

**ஏதாந்யபி து கர்மாணி ஸங்க₃ம் த்யக்த்வா ப₂லாநி ச ।**

**கர்தவ்யாநீதி மே பார்த₂ நிஸ்சிதம் மதமுத்தமம் ॥ 6 ॥**

**பார்த₂** – (ஆகையால்) பார்த்த! **ஏதாநி** – இந்த வேள்வி, தானம், தவம் என்ற கர்மங்களும், **து** – அவ்வாறே, **(அந்யாநி)** – மற்ற, **கர்மாணி அபி** – செய்ய வேண்டிய கடமைகளும், **ஸங்க₃ம்** – பற்றையும், **ப₂லாநி ச** – பயன்களையும், **த்யக்த்வா** – துறந்து, **கர்தவ்யாநி** – கட்டாயமாகச் செய்யப்பட வேண்டும், **இதி** – என்பது, **மே** – என்னுடைய, **நிஸ்சிதம்** – தீர்மானமான, **உத்தமம்** – உயர்ந்த, **மதம்** – கருத்து.

ஆகையால் பார்த்தனே! இந்த வேள்வி, தானம், தவம் என்ற கர்மங்களும், அப்படியே மேலும் செய்யவேண்டிய கடமைகளும், பற்றையும் பயன்களையும் த்யாகம் செய்து கட்டாயமாகச் செய்யப்பட வேண்டியன என்பது என்னுடைய தீர்மானிக்கப்பட்ட உயர்ந்த கொள்கை.

**கேள்வி:** 'ஏதாநி' என்றால் எந்தக் கர்மங்கள்? 'து', 'அபி' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேற்கூறிய வேள்வி, தானம், தவம் முதலிய கர்மங்களை 'ஏதாநி' என்ற சொல் குறிக்கிறது. இவற்றைத் தவிரத் தாய்–தந்தையர், பெரியோர்களுக்கு ஸேவை; வர்ணாசிரமங்களுக்கு ஏற்றவாறு வாழ்க்கை நடத்துவதற்குரிய செயல்கள்; உடல் பேணுவதற்கான செயல்கள் ஆகிய கர்மங்கள் அனைத்தையும் ஒன்று சேர்க்கின்றன 'து', 'அபி' என்ற சொற்கள்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'இவை பற்றையும், பயன்களையும் த்யாகம் செய்து கட்டாயமாகச் செய்யப்பட வேண்டியவை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கடமைகளை மமகாரமும், பற்றுமின்றி, அதனால் கிடைக்கக்கூடிய இவ்வுலகத்திய, பரலோகத்திய போகங்கள் என்ற பயன்களில் எவ்விதப் பற்றும், ஆசையுமின்றிச் செய்யவேண்டும். மோக்ஷத்தில் விருப்புக் கொண்டவர்கள் காம்ய கர்மங்களையும், தடுக்கப்பட்ட கர்மங்களையும் அறவே விலக்கவேண்டும் என்பதையும் அறியவேண்டும்.

**கேள்வி:** 'இது என்னால் உயர்ந்தது எனத் தீர்மானிக்கப்பட்ட கொள்கை' என்று கூறுவதன் கருத்து என்ன? முன்பு கூறிய கற்றோர்களின் கருத்துக்களைக் காட்டிலும் பகவானின் கருத்தில் என்ன சிறப்பு?

**பதில்:** இவ்விதம் கர்மம் செய்பவன் எல்லாக் கர்மத்தளைகளிலிருந்தும் விடுபட்டுப் பரமபதத்தை அடைவான். கர்மங்களுக்கும், அவனுக்கும் எவ்விதத் தொடர்பும் இராது. தம் கருத்துப்படி இதற்குத்தான் த்யாகம் என்று பெயர். இதுதான் தம்மால் தீர்மானிக்கப்பட்ட உயர்ந்த கொள்கை என்கிறார் பகவான்.

மேலே கூறப்பட்ட கற்றோர்களின் கருத்துக்களில் த்யாகம், ஸந்யாஸம் இவற்றின் இலக்கணங்கள் முழுமையாகக் கூறப்படவில்லை. ஏனெனில் காம்ய கர்மங்களைச் செய்யாமல் த்யாகம் செய்தபோதிலும், மற்ற நித்ய நைமித்திக கர்மங்களிலும், அவற்றின் பயன்களிலும் மனிதனுக்கு மமகாரம், பற்று, ஆசை ஆகியவை உள்ளதால், அவை பந்தத்திற்குக் காரணங்களாகின்றன. எல்லாக் கர்மங்களின் பயன்களிலும் உள்ள விருப்பத்தைத் துறந்தாலும், அவற்றில் மமகாரம், பற்று தங்கி இருப்பதால், அவையும் பந்தத்திற்குக் காரணமாகும். அஹங்காரம், மமகாரம், பற்று, ஆசைகளை அறவே த்யாகம் செய்யாமல், எல்லாக் கர்மங்களிலும் ஏதாவது குற்றம் குறை இருக்கத்தான் செய்யும் என்று கருதி அவசியம் செய்யவேண்டிய கர்மங்களை ஆற்றாமல் விட்டாலும் மனிதன் கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெற முடியாது. ஏனெனில் அவன் விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்யத் தவறிய குற்றத்திற்காளாவான். ஆகவே யக்ஞம், தானம், தவம் இவற்றைத் தவறாமல் செய்யவும் வேண்டும்; ஆனால் அவற்றில் பற்றையும், அவற்றின் பயன்களில் நோக்கத்தையும் துறக்காவிட்டால் அவை பந்தத்திற்குக் காரணமாகும் என்பதையும் புரிந்து கொள்ள வேண்டும். ஆகவே கற்றோர்கள் கூறிய இலக்கணங்களுக்குட்பட்ட ஸந்யாஸமும், த்யாகமும் மனிதனை பந்தத்திலிருந்து விடுவிக்க முடியாது. பகவான் கூறியபடி எல்லாக் கர்மங்களிலும் மமகாரம், பற்று, பயனில் விருப்பம் இவற்றை த்யாகம் செய்வதுதான் முழுமையான த்யாகம் ஆகும். அதன் மூலம்தான் கர்மபந்தம் முற்றிலும் அழிந்துவிடும். ஏனெனில் கர்மம் இயல்பாக பந்தப்படுத்துவதில்லை. அத்துடன் மமகாரம், பற்று, பயனில் விருப்பம் இவை சேர்ந்தால்தான் பந்தப்படுத்தும். இதுவே பகவானது கொள்கையின் சிறப்பு.

பொருத்தம்: **இவ்விதம் தம் தீர்மானமான கருத்தைக் கூறிவிட்டு பகவான் சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட தாமஸ, ராஜஸ, ஸாத்விகம் என்ற மூன்றுவித த்யாகங்களில் ஸாத்விக த்யாகம்தான் உண்மையான த்யாகம்; அதையே செய்யவேண்டும்; மற்ற இரண்டும் உண்மையான த்யாகங்களல்ல; அவற்றைச் செய்யக்கூடாது என்பதை விளக்குவதற்காகவும், தம் கருத்து சாஸ்த்ரங்களுக்கு ஒத்தது என்று காட்டுவதற்காகவும், மூன்று ச்லோகங்களில் வரிசையாக மூவித த்யாகங்களின் இலக்கணங்கள் கூறத் தொடங்கி, முதலில் தாழ்ந்ததான தாமஸ த்யாகத்தின் இலக்கணத்தைக் கூறுகிறார்—**

**नियतस्य तु सन्न्यासः कर्मणो नोपपद्यते।**
**मोहात्तस्य परित्यागस्तामसः परिकीर्तितः॥७॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**நியதஸ்ய து ஸந்ந்யாஸ: கர்மணோ நோபபத்₃யதே ।**

**மோஹாத்தஸ்ய பரித்யாக₃ஸ்தாமஸ: பரிகீர்தித: ॥ 7 ॥**

(விலக்கப்பட்ட கர்மங்களும், பயனை எதிர்பார்த்துச் செய்யும் கர்மங்களும் துறக்கப்பட வேண்டியனவே.) **து** – ஆனால், **நியதஸ்ய** – விதிக்கப்பட்ட, **கர்மண:** – கர்மத்தை, **ஸந்ந்யாஸ:** – செய்யாமல் விடுதல், **ந உபபத்₃யதே** – தகாது. (ஆகையால்), **மோஹாத்** – அறியாமையினால், **தஸ்ய பரித்யாக₃:** – அதை த்யாகம் செய்தல், **தாமஸ:** – தாமஸ த்யாகம் என்று, **பரிகீர்தித:** – சொல்லப்படுகிறது.

(விலக்கப்பட்ட கர்மங்களும், பயனை எதிர்பார்த்துச் செய்யப்படும் கர்மங்களும் துறக்கப்பட வேண்டியனவே.) ஆனால் விதிக்கப்பட்ட கர்மத்தைச் செய்யாமல் விடுதல் தகாது. ஆகையால் அறியாமையினால் அதை த்யாகம் செய்தல் தாமஸ த்யாகம் என்று சொல்லப்படுகிறது.

**கேள்வி:** *'நியதஸ்ய கர்மண:' என்றால் என்ன கர்மம்? அதைச் செய்யாமல் விட்டால் என்ன தவறு?*

**பதில்:** வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை இவற்றிற்கேற்ப மனிதனுக்கு யாகம், தானம், தவம், கற்பது, கற்பிப்பது, உபதேசம் செய்வது, போரிடுவது, மக்களைக் காப்பது, பசுக்களைக் காப்பது, உழுது பயிரிடுவது, வியாபாரம் செய்வது, பணிவிடை செய்வது, உண்பது, அருந்துவது முதலிய பல கர்மங்களைக் கட்டாயமாகச் செய்யத்தான் வேண்டும் என சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. இவையெல்லாம் விதிக்கப்பட்ட கர்மங்கள். இவற்றைச் செய்யாமல் விடும் மனிதன் தன் கர்மங்களை ஆற்றாதபடியால், பாவத்திற்கு ஆளாகிறான். ஏனெனில் இவனால் தொன்றுதொட்டு வருகின்ற செயலில் தொடர்ச்சி அற்றுப் போகிறது. உலகெங்கும் குழப்பம் ஏற்படுகிறது *(3/23,24)*. ஆகவே விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்யாமல் விடுவது உகந்ததன்று.

**கேள்வி:** *'அறியாமையினால் அதை த்யாகம் செய்தல் தாமஸ த்யாகம்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** தனது வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை இவற்றிற்கேற்றவாறு சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்யாமல் துறப்பதுதான் மோக்ஷத்திற்குக் காரணம் என்ற தவறான எண்ணத்தினால், அவற்றை விட்டுவிடுவது அறியாமை காரணமாகச் செய்யப்படும் தாமஸ த்யாகம். ஏனெனில் மோஹம் தமோ குணத்திலிருந்து உண்டாவது *(14/13,17)*. அதுபோல தாமஸ குணம் மனிதர்களின் வீழ்ச்சிக்குக் காரணம் *(14/18)*. ஆகவே, மேற்கூறிய த்யாகம் மனிதனைத் தளையிலிருந்து விடுவிக்காது. மாறாகப் பாவத்திற்குக் காரணமாவதால் வீழ்ச்சியைத் தரும்.

**பொருத்தம்:** தாமஸ த்யாகத்தை விளக்கிவிட்டு, இனி ராஜஸ த்யாகத்தின் இலக்கணத்தைக் கூறுகிறார்—

**दुःखमित्येव यत्कर्म कायक्लेशभयात्त्यजेत्।**
**स कृत्वा राजसं त्यागं नैव त्यागफलं लभेत्॥८॥**

**து₃:க₂மித்யேவ யத்கர்ம காயக்லேஶப₄யாத்த்யஜேத் ।**

**ஸ க்ருத்வா ராஜஸம் த்யாக₃ம் நைவ த்யாக₃ப₂லம் லபே₄த் ॥ 8 ॥**

**யத் கர்ம** – எது செய்ய வேண்டிய கர்மமோ, (**தத்** – அதை), **து₃:க₂ம் ஏவ** – துன்பம், **இதி** – என்றே நினைத்து, **காயக்லேஶப₄யாத்** – உடல் நோகுமே என்ற பயத்தினால்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**த்யஜேத்** – (ஒருவன்) செய்யாமல் விடுவானேயானால், **ஸ:** – அவன், **ராஜஸம்** – ராஜஸ, **த்யாக₃ம் க்ருத்வா** – த்யாகத்தைச் செய்து, **த்யாக₃ப₂லம்** – த்யாகத்துக்குரிய பயனை, **ந லபே₄த் ஏவ** – எவ்விதத்திலும் அடையவே மாட்டான்.

எது செய்ய வேண்டிய கர்மமோ அதைத் துன்பம் என்றே நினைத்து உடல் வருந்துமே என்ற பயத்தினால் ஒருவன் செய்யாமல் விடுவானேயானால் அவன் ராஜஸ த்யாகத்தைச் செய்து த்யாகத்திற்குரிய பயனை அடையவே மாட்டான்.

**கேள்வி:** 'யத் கர்ம' என்று எதைக் குறிப்பிடுகிறார்? 'அவற்றைத் துன்பம் என்று நினைத்து, உடல் வருந்துமே என்ற பயத்தினால் செய்யாமல் விடுவது' என்றால் என்ன பொருள்?

**பதில்:** ஏழாவது ச்லோகத்தின் உரையில் கூறப்பட்ட, சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்கள் அனைத்தையும் 'யத் கர்ம' என்ற சொல் குறிக்கிறது. அவற்றைச் செய்வதில் மனம், உடல், புலன்களுக்கு சிரமம் ஏற்படுகிறது; பலவித இடையூறுகள் வருகின்றன; பல பொருட்களைச் சேர்க்க வேண்டியுள்ளது; உடலின் ஓய்வை விட்டுவிட வேண்டியுள்ளது; வ்ரதம், உபவாஸம் இருந்து துன்பத்தைப் பொறுத்துக் கொள்ள வேண்டியுள்ளது; பலவிதமான கட்டுப்பாடுகளுக்கு உட்பட வேண்டியுள்ளது. இக்காரணங்களால் எல்லாக் கர்மங்களுமே துன்பமயமானவைதாம் என்று எண்ணி, மனம், உடல், புலன்களுக்கு சிரமத்தைத் தவிர்க்க வேண்டுமானால், ஓய்வாக இருக்க வேண்டுமானால், சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட யாகம், தானம், தவம் ஆகிய கர்மங்களைச் செய்யாமல் விடவேண்டியதுதான். இதுதான் 'இவை துன்பமானவை என்று நினைத்து, உடலுக்கு சிரமம் ஏற்படும் என்ற பயத்தினால் த்யாகம் செய்வது' ஆகும்.

**கேள்வி:** 'இவ்விதம் ராஜஸ த்யாகத்தைச் செய்து த்யாகத்தின் பயனை அடையவே மாட்டான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இவ்வித எண்ணத்தினால், விதிக்கப்பட்ட கர்மங்களைத் துறந்து ஸந்யாஸம் மேற்கொள்வது ராஜஸமாகும். ஏனெனில் மனம், உடல், புலன்களுக்கு ஓய்வு தேடுவது என்ற பற்று ரஜோ குணத்தின் வெளிப்பாடு. ஆகவே, இவ்வித த்யாகம் செய்பவன் உண்மையான த்யாகத்தின் பயனான, கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெற்றுப் பரமாத்மாவை அடைய மாட்டான். ஏனெனில் மனம், உடல், புலன்களில் அவனுக்கு மமகாரமும், பற்றும் உள்ளவரையில் கர்மபந்தத்திலிருந்து விடுதலை கிடைக்காது. ஆகவே, இந்த ராஜஸ த்யாகம் பெயரளவில்தான் த்யாகம்; உண்மையான த்யாகமன்று. ஆதலால், மேன்மையை விரும்பும் ஸாதகன் இவ்வித த்யாகத்தைச் செய்யக் கூடாது. அவன் த்யாகத்தின் பயனை அடையமாட்டான் என்பது மட்டுமின்றி, விதிக்கப்பட்ட கர்மங்களை ஆற்றாமல் விட்ட பாவத்தையும் அடைவான்.

**பொருத்தம்:** இனி உயர்தரமான ஸாத்விக த்யாகத்தின் இலக்கணம் கூறுகிறார்—

कार्यमित्येव यत्कर्म नियतं क्रियतेऽर्जुन।
सङ्गं त्यक्त्वा फलं चैव स त्यागः सात्त्विको मतः॥ ९॥

**கார்யமித்யேவ யத்கர்ம நியதம் க்ரியதேऽர்ஜுந ।**

**ஸங்க₃ம் த்யக்த்வா ப₂லம் சைவ ஸ த்யாக₃: ஸாத்த்விகோ மத: ॥ 9 ॥**

**அர்ஜுந** – அர்ஜுன! **நியதம் யத் கர்ம** – சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட எந்த கர்மம், **கார்யம் இதி ஏவ** – கட்டாயம் செய்யப்படத்தான் வேண்டும் என்று கருதி, **ஸங்க₃ம்** – பற்றையும், **ப₂லம் ச** – பயனையும், **த்யக்த்வா** – விடுத்து, **க்ரியதே** – செய்யப்படுகிறதோ,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ஸ: ஏவ** – அதுவே, **ஸாத்த்விக:** – ஸாத்விகமான, **த்யாக₃:** – த்யாகம் என்று, **மத:** – மதிக்கப்படுகிறது.

அர்ஜுன! சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட எந்தக் கர்மம் கட்டாயம் செய்யப்படத்தான் வேண்டும் என்று கருதிப் பற்றையும் பயனையும் விடுத்துச் செய்யப்படுகிறதோ அதுவே ஸாத்விகமான த்யாகம் என்று மதிக்கப்படுகிறது.

**கேள்வி:** இங்கு 'நியதம் கர்ம' என்றால் எது? 'கடமை என்று கருதி, அதில் பற்றையும், பயனையும் விடுத்துச் செய்யப்படும் கர்மம்' என்றால் என்ன?

**பதில்:** வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை இவற்றிற்கேற்ப மனிதன் கர்மங்களைக் கட்டாயம் செய்யத்தான் வேண்டும் என்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. இதன் விளக்கம் ஆறாவது ச்லோகத்தில் கூறப்பட்டது. அவையெல்லாம் விதிக்கப்பட்ட கர்மங்கள் ஆகும். விலக்கப்பட்ட கர்மங்களும், காம்ய கர்மங்களும் 'நியத கர்மங்கள்' என்பதில் அடங்கா என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும். மேற்கூறியவாறு நியத கர்மங்களைச் செய்யத்தான் வேண்டும். இவற்றைச் செய்யாமல் விடுவது, பகவானின் ஆணையை மீறுவதாகும். இந்த எண்ணத்துடன் அந்தக் கர்மங்களிலும், அவற்றின் பயன்களான இவ்வுலக மற்றும் பரலோக போகங்களிலும் மமகாரம், பற்று, ஆசை இவற்றை அறவே ஒழித்து, உற்சாகத்துடன் அவற்றை முறைப்படி ஆற்றவேண்டும். இதுவே கடமை என்று கருதிப் பற்றையும், பயனையும் துறந்து செய்வதாகும்.

**கேள்வி:** 'இவ்விதம் கர்மங்களை ஆற்றுவதுதான் ஸாத்விக த்யாகம்' என்று கூறுவதன் கருத்து என்ன? ஏனெனில் இது கர்மங்களின் த்யாகம் அல்லவே. கர்மங்களின் செயல்பாடு என்றல்லவா ஆகிறது?

**பதில்:** கர்மங்களை ஆற்றுவது என்ற கர்மயோகத்தை, ஸாத்விக த்யாகம் என்று கூறுவதன் மூலம், கட்டாயம் செய்யவேண்டும் என்று சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்யாது இருந்துவிடாமல் (அதாவது செய்து கொண்டு), அதிலும், அதன் பயனிலும், பற்றையும், ஆசையையும் முழுமையாக விடுவதே உண்மையான த்யாகம் என்பது பகவானின் கருத்து. கர்மங்களின் பயனாகக் கிட்டும் இவ்வுலக, பரலோக போகங்களில் பற்றையும், ஆசையையும் விடாமல், ஏதோ ஓர் உந்துதலினால் விதிக்கப்பட்ட கர்மங்களை ஆற்றாமல் விட்டுவிடுவது உண்மையான த்யாகமன்று. ஏனெனில் த்யாகத்தின் விளைவாகக் கர்மங்களின் தொடர்பு அறவே அறுந்துவிட வேண்டும். இந்த விளைவு எப்போதும் மமகாரம், பற்று, ஆசைகளை விட்டால்தான் ஏற்படும். வெறுமனே கர்மங்களைச் செய்யாமல் விட்டுவிட்டால் மட்டும் ஏற்படாது. ஆகவே, கர்மங்களில் பற்றையும், பயனில் விருப்பத்தையும் த்யாகம் செய்வதுதான் ஸாத்விக த்யாகம்.

**பொருத்தம்: மேற்கூறியவாறு ஸாத்விக த்யாகம் செய்பவன் விலக்கப்பட்டவற்றையும், காம்ய கர்மங்களையும் செய்யாமல் த்யாகம் செய்வதிலும், ஆற்றவேண்டிய கர்மங்களைச் செய்வதிலும் எவ்வித மனப்பாங்குடன் இருக்கவேண்டும் என்பதை விளக்குவதற்காக ஸாத்விக த்யாகியின் முதிர்ந்த நிலையின் இலக்கணத்தைக் கூறுகிறார்—**

न द्वेष्ट्यकुशलं कर्म कुशले नानुषज्जते।
त्यागी सत्त्वसमाविष्टो मेधावी छिन्नसंशयः॥१०॥

**ந த்₃வேஷ்ட்யகுஶலம் கர்ம குஶலே நாநுஷஜ்ஜதே ।**
**த்யாகீ₃ ஸத்த்வஸமாவிஷ்டோ மேத₄ாவீ சி₂ந்நஸம்ஶய: ॥ 10 ॥**

(எந்த மனிதன்), **அகுஶலம் கர்ம** – நன்மைப் பயக்காத கர்மத்தை, **ந த்₃வேஷ்டி** – வெறுப்பதில்லையோ (மேலும்), **குஶலே** – நன்மைப் பயக்கும் கர்மத்தில், **ந அநுஷஜ்ஜதே**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



– பற்றுக் கொள்வதில்லையோ (அந்த), **ஸத்த்வஸமாவிஷ்ட:** – சுத்தமான ஸத்வகுணம் நிறைந்தவனே, **சி₂ந்நஸம்ஶய:** – ஸந்தேஹம் நீங்கப் பெற்றவன், **மேத₄ாவீ** – அறிஞன், **த்யாகீ₃** – உண்மையான த்யாகியும் ஆவான்.

எந்த மனிதன் நன்மைப் பயக்காத கர்மத்தை வெறுப்பதில்லையோ, மேலும் நன்மை பயக்கக்கூடிய கர்மத்தில் பற்றும் கொள்வதில்லையோ அந்த சுத்தமான ஸத்வகுணம் நிறைந்தவன்தான் ஸந்தேஹம் நீங்கப் பெற்றவனும், அறிஞனும், உண்மையான த்யாகியும் ஆவான்.

**கேள்வி:** 'அகுஶலம் கர்ம' என்றால் எது? 'ஸாத்விக த்யாகி அதை வெறுப்பதில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** சாஸ்த்ரங்களால் விலக்கப்பட்ட பாவ கர்மங்களும், காம்ய கர்மங்களும் நன்மையளிக்காததால் 'அகுஶலம் கர்மம்' எனப்படும். ஏனெனில் பாவ கர்மங்கள் மனிதனைப் பலவிதமான ஈனப்பிறவிகளிலும், நரகத்திலும் கொண்டு தள்ளுபவை. காம்ய கர்மங்கள் பயனையனுபவிப்பதற்காக மறுபிறவியைத் தருபவை. இவ்விதம் இரண்டுமே பந்தத்திற்குக் காரணமாவதால் 'அகுஶலம்' எனப்படுகின்றன; அதாவது நன்மை பயக்காத கர்மங்கள். ஸாத்விக த்யாகிக்கு அவற்றினிடம் வெறுப்பு இராது. இக்கூற்றின் கருத்து – என்றுமே விருப்பு–வெறுப்பு இராத ஸாத்விக த்யாகி விலக்கப்பட்ட கர்மங்களையும், காம்ய கர்மங்களையும் துறப்பது வெறுப்பினால் அன்று; அவற்றைத் துறப்பது மனிதனின் கடமை என்ற கருத்தில், உலகுக்கு வழிகாட்டுவதற்காகவே அவற்றை த்யாகம் செய்கிறான்.

**கேள்வி:** 'குஶலே' என்றால் எந்தக் கர்மம்? 'ஸாத்விக த்யாகி அவற்றில் பற்றுக் கொள்வதில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட நித்ய–நைமித்திகக் கடமைகளான வேள்வி, தானம், தவம் முதலிய நன்மை பயக்கும் கர்மங்களும், வர்ணாசிரமங்களுக்கு ஏற்ப அமைந்த மற்றைய கடமைகளும் குஶல கர்மங்கள். நிஷ்காமமாகச் செய்யப்படும் இவை மனிதனுடைய முன்வினைப்பயன்களான பாவங்களை அழித்துக் கர்மபந்தத்திலிருந்து விடுதலை அளிப்பதால், இவை குஶல கர்மங்கள். ஸாத்விக த்யாகி இவ்விதமான குஶல கர்மங்களில் பற்றுக் கொள்வதில்லை. மங்கள கர்மங்களை முறைப்படி ஆற்றினாலும்கூட, பற்றுடன் செய்வதில்லை. சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களை ஆற்றத்தான் வேண்டும் என்ற கருத்துடன் மமகாரம், பற்று, பயன்களில் விருப்பமின்றி, உலகத்திற்கு வழிகாட்ட வேண்டி அக்கர்மங்களைச் செய்கிறான்.

**கேள்வி:** 'இவ்விதம் சுத்தமான ஸத்வகுணம் நிறைந்தவன்தான் ஐயமற்றவனும், அறிஞனும், உண்மையான த்யாகியும் ஆவான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இவ்விதம் விருப்பு–வெறுப்பின்றிக் கடமை என்றே கர்மங்களை ஏற்கவும், துறக்கவும் செய்பவன் தூயதான ஸத்வ குணமுடையவன்; ஐயமற்றவன். அவன் இந்தக் கர்மயோகம் என்ற ஸாத்விக த்யாகமே ஒருவனை ஐயமின்றிக் கர்மபந்தத்திலிருந்து விடுவித்துப் பரமபதத்தில் கொண்டு சேர்க்கும் ஸாதனம் என்பதில் உறுதி படைத்தவன். ஆகவே அவன் அறிஞனும், உண்மையான த்யாகியும் ஆவான்.

**பொருத்தம்: முன் ச்லோகத்தில் ஸாத்விக த்யாகிதான் – அதாவது நிஷ்காமமாகக் கடமைகளை ஆற்றுபவனான கர்மயோகியே உண்மையான த்யாகி என்றார். விலக்கப்பட்ட கர்மங்களையும், காம்ய கர்மங்களையும் செய்யாமல் விடுவதுபோல எல்லாக் கர்மங்களையும் செய்யாமல் விடுபவனும் உண்மையான த்யாகி ஆகலாமே! நிஷ்காமமாகக் கர்மங்களைச் செய்பவன்தான் உண்மையான த்யாகி என்று ஏன் சொல்ல வேண்டும் என்பதற்குப் பதில் கூறுகிறார்—**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



न हि देहभृता शक्यं त्यक्तुं कर्माण्यशेषतः।
यस्तु कर्मफलत्यागी स त्यागीत्यभिधीयते॥११॥

**ந ஹி தே₃ஹப்₄ருதா ஶக்யம் த்யக்தும் கர்மாண்யஶேஷத: ।**
**யஸ்து கர்மப₂லத்யாகீ₃ ஸ த்யாகீ₃த்யபி₄தீ₄யதே ॥ 11 ॥**

**ஹி** – ஏனெனில், **தே₃ஹப்₄ருதா** – உடல்பெற்ற மனிதன் யாராலும், **அஶேஷத:** – முற்றிலும், **கர்மாணி** – கர்மங்கள் அனைத்தையும், **த்யக்தும்** – துறந்துவிடுவது, **ந ஶக்யம்** – ஸாத்யமன்று. **(தஸ்மாத்** – ஆகையால்), **ய:** – எவன், **கர்மப₂லத்யாகீ₃** – கர்மத்தின் பயனைத் துறக்கிறானோ, **ஸ: து** – அவனே, **த்யாகீ₃** – த்யாகம் செய்தவன், **இதி** – என்று, **அபி₄தீ₄யதே** – சொல்லப்படுகிறான்.

ஏனெனில் உடல்பெற்ற மனிதன் யாராலும் முற்றிலும் கர்மங்கள் அனைத்தையும் த்யாகம் செய்வது ஸாத்யமன்று. ஆகையால் எவன் கர்மத்தின் பயனைத் துறக்கிறானோ அவனே த்யாகம் செய்தவன் என்று சொல்லப்படுகிறான்.

**கேள்வி:** 'தேஹப்ருதா' என்று கூறுவதன் கருத்து என்ன? 'அவ்னால் முற்றிலும் கர்மங்களனைத்தையும் துறப்பது முடியாது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** உடலைப் பேணிக் காக்கும் இயல்பு கொண்ட மனித ஸமுதாயமனைத்தையும் குறிப்பது 'தேஹப்ருத்' எனும் சொல். உடல் பெற்ற எவருமே செயல் புரியாமல் இருக்க முடியாது (3/5). ஏனெனில் செயல் புரியாமல் உடலைப் பேணுவதுகூட முடியாதது (3/8). ஆகவே எந்த ஆசிரமத்தில் உள்ளவனாயினும், உயிருள்ளவரை தனது சூழ்நிலைக்கேற்ப உண்பது, அருந்துவது, உறங்குவது, உட்கார்ந்திருப்பது, போவது, வருவது, பேசுவது என்று ஏதாவது செய்து கொண்டுதான் இருக்க வேண்டியுள்ளது. ஆகவே முழுமையாக ஒரு செயலிலும் ஈடுபடாமல் இருப்பது என்பது ஸாத்யமன்று.

**கேள்வி:** 'கர்மபலத்யாகி' என்பவன் யார்? 'கர்மபலத்தின் பயனைத் துறப்பவனே உண்மையான த்யாகி' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கர்மத்திலும், அதன் பயனிலும் மமகாரம், பற்று, ஆசைகள் இவற்றைத் துறந்து, சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டுள்ள கடமைகளை ஆற்றுகின்ற கர்மயோகிதான் 'கர்மபல த்யாகி'. ஆகவே கர்மங்களின் பயனைத் துறப்பவனே த்யாகி. மனிதரனைவரும் ஏதாவது செயல் செய்து கொண்டிருக்கத்தான் வேண்டியுள்ளது. ஒன்றும் செய்யாமல் இருக்க முடியாது. விலக்கப்பட்ட கர்மங்களையும், காம்ய கர்மங்களையும் விடுத்து அவசியமான, சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்து, அவற்றில் பற்று, பயனை எதிர்பார்த்தல், ஆசை இவை ஏதுமின்றி இருப்பவன்தான் உண்மையான த்யாகி.

வெளிப்படையாகப் புலன்களை அடக்கிவிட்டு, மனதில் போகங்களை நினைத்திருப்பவன் த்யாகி அல்லன். அஹங்காரம், மமகாரம், பற்று இவற்றை விடாமல் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட வேள்வி, தானம், தவம், கடமைகள் இவற்றை முற்றிலும் செய்யாமல் விடுபவனும் த்யாகி அல்லன்.

**பொருத்தம்:** 'கர்மத்தின் பயனை த்யாகம் செய்பவன்தான் த்யாகி' என்று முன் ச்லோகத்தில் சொன்னார். இங்கே ஓர் ஐயம் எழுகிறது. கர்மத்தின் பயனை விரும்பாவிட்டாலும் கர்மம் தன் பயனை அளித்தே தீருமே! அப்போதுதானே அது அழியும்! விதைக்கப்பட்ட விதை தக்க தருணத்தில் மரமாக முளைக்கத்தானே செய்யும்! ஆகவே செய்யப்பட்ட கர்மத்தின் பயனை ஒருவன் அனுபவித்துத்தானே ஆகவேண்டும். அவன் எப்படி த்யாகி ஆவான்? எவ்வாறு அவன் கர்மபந்தத்திலிருந்து விடுபடுவான் – என்பதற்கு பதில் கூறுகிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**अनिष्टमिष्टं मिश्रं च त्रिविधं कर्मणः फलम्।**
**भवत्यत्यागिनां प्रेत्य न तु सन्न्यासिनां क्वचित्॥ १२॥**

**அநிஷ்டமிஷ்டம் மிஶ்ரம் ச த்ரிவித₄ம் கர்மண: ப₂லம் ।**
**ப₄வத்யத்யாகி₃நாம் ப்ரேத்ய ந து ஸந்ந்யாஸிநாம் க்வசித் ॥ 12 ॥**

**அத்யாகி₃நாம்** – கர்மத்தின் பயனைத் துறக்காத மனிதர்களுக்கு, **கர்மண:** – கர்மத்தினுடைய, **இஷ்டம்** – நல்லதும், **அநிஷ்டம்** – தீயதும், **மிஶ்ரம் ச** – அவ்விரண்டும் கலந்ததுமான, (**இதி** – என்ற), **த்ரிவித₄ம்** – மூன்றுவிதமான, **ப₂லம்** – பயன், **ப்ரேத்ய** – இறந்தபின், **ப₄வதி** – (கட்டாயமாகக்) கிடைக்கின்றது. **து** – ஆனால், **ஸந்ந்யாஸிநாம்** – கர்மபயனைத் துறந்த மனிதர்களுக்கு (அக்கர்மங்களுடைய பயன்), **க்வசித் ந** – ஒருபோதும் ஏற்படாது.

கர்மத்தின் பயனைத் துறக்காத மனிதர்களுக்குக் கர்மத்தினுடைய நல்லதும், தீயதும் மேலும் இரண்டும் கலந்ததுமான மூன்றுவிதமான பயன் இறந்தபின் கட்டாயமாகக் கிடைக்கின்றது. ஆனால் கர்மபயனைத் துறந்த மனிதர்களுக்குக் கர்மங்களுடைய பயன் ஒருபோதும் ஏற்படாது.

**கேள்வி:** 'அத்யாகிநாம்' என்றால் யார்? அவர்களுக்குக் கிடைக்கும் நல்லதும், தீயதும் மற்றும் இரண்டும் கலந்ததுமான மூவகைப் பயன்கள் எவை? அவை இறந்தபின் கிடைக்கின்றன என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தாம் செய்யும் கர்மங்களிலும், அவற்றின் பயன்களிலும், மமகாரம், பற்று, ஆசை இவற்றைத் துறக்காதவர்களும், பற்றுடனும், பயனை எதிர்பார்த்தும் கர்மங்களனைத்தையும் செய்பவர்களுமான ஸாதாரண பாமர மனிதர்களை இங்கே 'அத்யாகீ' என்று குறிப்பிடுகிறார்.

அவர்கள் செய்யும் மங்கள கர்மங்களின் பயன்களாக விளையும் மேலுலக–இவ்வுலக போகங்கள் நல்ல பயன்கள். அவர்கள் செய்கின்ற பாவங்களினால் ஏற்படுகின்ற விலங்கு, பறவை, புழு, பூச்சி, மரம் முதலிய இழிபிறவிகளும், நரகமும், மற்றவிதமான துக்கங்களும் தீய பயன்கள். மனிதப்பிறவியில் சிலசமயம் நல்ல போகங்களும், சிலசமயம் துன்பங்களும் நேர்வது இரண்டும் கலந்த பயன்.

இவ்விதம் கர்மங்களின் பயன்கள் மூவகைப்படும். இம்மூவகைப் பயனும், அவர்களுக்கு மரணத்திற்குப் பிறகுக் கட்டாயம் நேரும்; அவற்றை அனுபவிக்காமல் அந்தக் கர்மங்கள் தீரா. பல பிறவிகளில் அந்த நல்ல, தீய பயன்கள் தொடரலாம். ஆகவே அத்தகைய மனிதர்கள் ஸம்ஸார சக்ரத்தில் உழல்வார்கள்.

**கேள்வி:** இறந்த பிறகு பயன் கிடைக்கும் என்றால், அந்தக் கர்மங்களின் பயன்கள் இப்பிறவியில் உயிர் உள்ளபோதே கிடைக்கா என்று பொருளா?

**பதில்:** இப்பிறவியில் பெரும்பாலும் மனிதர்களுக்கு முற்பிறவியின் வினைப்பயன் களாகிய ப்ராரப்தங்களின் அனுபவம்தான் ஏற்படும். புதிய கர்மங்களின் பயன்களை மிகக் குறைவாகவே நுகர நேரும். ஆகவே, ஒரு மனிதப்பிறவியின் செய்வினைப் பயன்களைப் பல பிறவிகளில் அனுபவிக்க நேரிடும் என்பதைக் குறிப்பிடவே, இங்கே 'மரணத்திற்குப் பிறகு' என்று கூறுகிறார். மரணத்திற்குப் பிறகு அப்பயன்களை அனுபவிக்க நேரிடும் என்பது பொருள்.

**கேள்வி:** 'து' (ஆனால்) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கர்மத்தின் பயன்களைத் துறக்காதவர்களைக் காட்டிலும் கர்மத்தின் பயனைத் துறப்பவர்கள் மிகவும் சிறந்தவர்கள்; வேறுபட்டவர்கள் என்று குறிக்கத்தான் 'து' (ஆனால்) என்ற சொல் இடம் பெறுகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ஸந்ந்யாஸிநாம்' என்றால் இங்கே யார்? 'அவர்களுக்குக் கர்மங்களின் பயன் கிடையாது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கர்மங்களிலும், அவற்றின் பயன்களிலும் மமகாரம், பற்று, ஆசை இவற்றைத் துறந்தவர்கள்; *18/10*ல் கூறப்பட்ட த்யாகி என்ற தகுதி படைத்தவர்கள்; *6/1*ல் ஸந்யாஸி என்றும், யோகி என்றும் குறிக்கப்பட்டவர்கள்; *2/51*ல் அநாமயபதம் பெறத்தக்கவர் என்று கூறப்பட்டவர் – இவர்களே இங்கே கூறப்படும் ஸந்யாஸிகள்.

ஆகவே ஸந்யாஸிகளின் கர்மங்களுக்குப் பயன் ஒருபோதும் நேர்வதில்லை. த்யாகிகள் எத்தனை கர்மங்களைச் செய்தாலும், அவை வறுக்கப்பட்ட விதைகள் போலப் பயன் தரும் திறனற்றவை. இவ்விதம் யக்ஞத்தின் பொருட்டு நிஷ்காமமாகச் செய்யப்படும் கர்மங்கள் முன்வினைகளான நல்லவையும், தீயவையுமான கர்மங்களனைத்தையும் பயன் தராதவாறு அழித்துவிடும் *(4/23)*. இக்காரணத்தினால் இப்பிறவியிலும், முற்பிறவிகளிலும் செய்யப்பட்ட அவர்களுடைய எந்தக் கர்மத்திற்கும் எந்தவிதமான பயனும், எந்த நிலையிலும் இப்பிறவியிலேயோ, இறந்த பிறகோ உண்டாகாது. அவர்கள் கர்மத்தளையிலிருந்து விடுபடுவார்கள்.

**பொருத்தம்:** முதல் ச்லோகத்தில் அர்ஜுனன் ஸந்யாஸம் பற்றியும், த்யாகம் பற்றியும் தனித்தனியாகத் தெரிந்து கொள்ள விரும்பினார். அதற்கு பதில் கூற முற்பட்ட பகவான் *2,3*வது ச்லோகங்களில் கற்றோர் கருத்துக்களை எடுத்துச் சொல்லி, பிறகு தம் கருத்துப்படி ச்லோகம் *4* முதல் *12* வரை த்யாகம் என்ற கர்மயோகத்தின் தத்வத்தை நன்கு விளக்கினார். இனி ஸந்யாஸம் என்ற ஸாங்க்யயோகத்தின் தத்வத்தை எடுத்துக் கூறுவதற்குமுன் ஸாங்க்ய ஸித்தாந்தத்தின்படி கர்மங்கள் நிறைவேறுதற்கான ஐந்து காரணங்களைக் கூறுகிறார்—

**पञ्चैतानि महाबाहो कारणानि निबोध मे।**
**साङ्ख्ये कृतान्ते प्रोक्तानि सिद्धये सर्वकर्मणाम्॥ १३॥**

**பஞ்சைதாநி மஹாபா₃ஹோ காரணாநி நிபோ₃த₄ மே ।**
**ஸாங்க்₂யே க்ருதாந்தே ப்ரோக்தாநி ஸித்₃த₄யே ஸர்வகர்மணாம் ॥ 13 ॥**

**மஹாபா₃ஹோ** – அகன்ற தோள் படைத்தவனே! **ஸர்வகர்மணாம்** – எல்லாக் கர்மங்களும், **ஸித்₃த₄யே** – நிறைவேறுதற்பொருட்டு, **ஏதாநி** – இந்த, **பஞ்ச காரணாநி** – ஐந்து காரணங்கள், **க்ருதாந்தே** – கர்மங்களின் முடிவிற்கான வழியைக் கூறும், **ஸாங்க்₂யே** – ஸாங்க்ய சாஸ்த்ரத்தில், **ப்ரோக்தாநி** – கூறப்பட்டன. **(தாநி** – அவற்றை நீ), **மே** – என்னிடமிருந்தே, **நிபோ₃த₄** – நன்கு அறிந்து கொள்.

அகன்ற தோள் படைத்தவனே! எல்லாக் கர்மங்களும் நிறைவேறுதற்கு இந்த ஐந்து காரணங்கள் கர்மங்களின் முடிவிற்கான உபாயத்தைக் கூறும் ஸாங்க்ய சாஸ்த்ரத்தில் கூறப்பட்டன. அவற்றை நீ என்னிடமிருந்து நன்கு அறிந்து கொள்.

**கேள்வி:** 'ஸர்வகர்மணாம்' என்றால் எவை? அவை நிறைவேறுதல் என்பது யாது?

**பதில்:** சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட, சாஸ்த்ரங்களால் விலக்கப்பட்ட – ஆக எல்லாச் செயல்களையும் 'ஸர்வகர்மணாம்' என்ற சொல் குறிப்பிடுகிறது. கர்மத்தைச் செவ்வனே செய்து முடிப்பதுதான் நிறைவேறுதல் ஆகும்.

**கேள்வி:** 'ஸாங்க்யே க்ருதாந்தே' என்றால் என்ன? 'அதில் எல்லாக் கர்மங்களும் நிறைவேறுவதன் பொருட்டு ஐந்து காரணங்கள் கூறப்பட்டுள்ளன. அவற்றை என்னிடமிருந்து அறிந்து கொள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** 'க்ருத' என்றால் கர்மம். அதைச் செய்து முடிக்க சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட வழிமுறை 'க்ருதாந்தம்'. 'ஸாங்க்யம்' எனில் ஞானம் என்று பொருள். பரமாத்மா இதன் மூலம் நன்கு அறியப்படுகிறார் என்பது பொருள். (ஸம்யக் க்₂யாயதே ஜ்ஞாயதே பரமாத்மாऽநேநேதி ஸாங்க்₂யம் தத்வஜ்ஞாநம்.) சாஸ்த்ரத்தில் தத்வஞானத்திற்கு ஸாதனமான ஞானயோகம் பற்றிக் கூறுவதை 'ஸாங்க்யம்' என்கிறார். ஞானயோகம் பற்றி நன்றாக விளக்கி, அதன்படி ஸகல கர்மங்களும் ப்ரக்ருதியின் செயல்கள். ஆத்மா ஒருபோதும் கர்த்தா அல்லன் என்றும், கர்த்தா அல்லாதவன் செய்வது கர்மம் அன்று என்றும் நிரூபிக்கும் சாஸ்த்ரம் ஸாங்க்ய சாஸ்த்ரம்.

ஆகவே, "இந்த ஸாங்க்ய சாஸ்த்ரத்தில் எல்லாக் கர்மங்களும் நிறைவேறுவதற்கு ஐந்து காரணங்கள் கூறப்படுகின்றன. அவற்றை நீ நன்றாகத் தெரிந்து கொள். அதாவது ஆத்மா கர்த்தா அல்லன் என்று நிரூபிப்பதற்காக மேற்குறித்த ஞானயோகம் பற்றிக் கூறும் சாஸ்த்ரத்தில் எல்லாக் கர்மங்களும் நிறைவேற, ஐந்து காரணங்கள் கூறப்படுகின்றனவே – அந்த ஐந்து காரணங்களும் ஒன்று சேர்வதால்தான் எல்லாக் கர்மங்களும் நிறைவேறுகின்றன. அவற்றை உனக்குக் கூறுவோம். நீ கவனமாகக் கேட்டுக் கொள்" என்கிறார் பகவான்.

**பொருத்தம்:** இப்போது அந்த ஐந்து காரணங்களைக் கூறுகிறார்—

**अधिष्ठानं तथा कर्ता करणं च पृथग्विधम्।**
**विविधाश्च पृथक्चेष्टा दैवं चैवात्र पञ्चमम्॥ १४॥**

**அதி₄ஷ்டா₂நம் தத₂ா கர்தா கரணம் ச ப்ருத₂க்₃வித₄ம் ।**
**விவித₄ாஶ்ச ப்ருத₂க்சேஷ்டா தை₃வம் சைவாத்ர பஞ்சமம் ॥ 14 ॥**

**அத்ர** – கர்மங்களின் ஸித்தியைப் பெறும் விஷயத்தில், **அதி₄ஷ்டா₂நம் ச** – கர்மம் செய்கின்ற உடலும், **கர்தா ச** – செய்கிறவனும், **ப்ருத₂க்₃வித₄ம்** – தனித்தனியான, **கரணம் ச** – இந்த்ரியங்களும், அதன் உபகரணங்களும், **விவித₄ா:** – பலவிதமான, **ப்ருத₂க்** – தனித்தனியான, **சேஷ்டா:** – செயல்களும், **தத₂ா ஏவ** – அவ்வாறே, **பஞ்சமம்** – ஐந்தாவதாக, **தை₃வம்** – தெய்வமும் (காரணமாகும்).

கர்மங்கள் நிறைவேறும் விஷயத்தில் கர்மம் செய்கிற உடலும், செய்கிறவனும், தனித்தனியான இந்திரியங்களும், அதன் உபகரணங்களும் பலவிதமான தனித்தனியான செயல்களும், அவ்வாறே ஐந்தாவதாக தெய்வமும் காரணமாகும்.

**கேள்வி:** 'அதிஷ்டாநம்' என்றால் என்ன?

**பதில்:** 'அதிஷ்டாநம்' என்றால் கருவிகளுக்கும், செயல்களுக்கும் ஆதாரமான உடல் என்பது பொருள். யாகம் முதலிய கர்மங்களைச் செய்யும் இடமான யக்ஞ பூமியையும் குணத்தை அனுஸரித்து இரண்டாவது பொருளாக எடுத்துக் கொள்ளலாம்.

**கேள்வி:** 'கர்தா' என்றால் இங்கே என்ன பொருள்?

**பதில்:** ப்ரக்ருதிக்கு உட்பட்ட புருஷன் என்று பொருள். *13/21*ல் இவனை 'போக்தா' என்றார். *3/27*ல் இவனை 'அஹங்கார விமூடாத்மா' என்றார். இவனே கர்த்தா (செயல் செய்கிறவன்).

**கேள்வி:** 'ப்ருதக்விதம்', 'கரணம்' என்றால் என்ன?

**பதில்:** மனம், புத்தி, அஹங்காரம் முதலியவை உடலின் உள்ளேயுள்ள கரணங்கள். இவை தவிர, ஐந்து அறிவுப்புலன்களும், ஐந்து செயற்புலன்களும் ஆகப் பத்தும் புறக் கரணங்கள். இவை தவிர, யாகம் முதலிய கர்மங்களில் உபயோகப்படுகின்ற கரண்டி போன்ற ஸ்ருக், ஸ்ருவங்கள் ஆகியவையும் வெளிக்கருவி என்ற சொல்லில் அடங்கும்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இவ்விதம் வெவ்வேறு செயல்களில் வெவ்வேறு கருவிகள் உபயோகப்படுகின்றனவே, அவையனைத்தையும் 'ப்ருதக்விதம்', 'கரணம்' என்ற சொற்கள் குறிப்பிடுகின்றன.

**கேள்வி:** 'விவிதா:, ப்ருதக், சேஷ்டா:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** ஓரிடத்திலிருந்து வேறு இடத்திற்குப் போதல்; கைகால்களை இயக்குதல்; மூச்சு இழுத்துவிடுதல்; உடலைச் சுருக்குதல்; விரித்தல்; கண்களை மூடித் திறத்தல்; மனதில் உண்டாகும் ஸங்கல்பம், விகல்பம் – இப்படி ஏற்படும் பலவிதமான, தனித்தனியான செயல்களனைத்தையும் சேர்த்துக் கூறுவன 'விவிதா:, ப்ருதக், சேஷ்டா:' என்ற சொற்கள்.

**கேள்வி:** இங்கே தெய்வம் என்றால் யார்? அவர் ஐந்தாவது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** நல்லதும், தீயதுமான முன்வினைப் பயன்களின் பதிவுகளை இங்கே 'தெய்வம்' என்கிறார். ப்ராரப்தமும் இதனுள் அடக்கம். பலர் இதை 'அத்ருஷ்டம்' என்றும் கூறுவர். முன் ச்லோகத்தில் ஐந்து காரணங்களைக் கூறினாரே, அவற்றில் முதலில் நான்கைத் தனியாகச் சொல்லிவிட்டு தெய்வம் என்பதை ஐந்தாவதாகக் கூறி, எண்ணிக்கை முற்றுப் பெறுகிறது என்று காட்டுகிறார்.

**शरीरवाङ्मनोभिर्यत्कर्म प्रारभते नरः।**
**न्याय्यं वा विपरीतं वा पञ्चैते तस्य हेतवः॥ १५॥**

**ஶரீரவாங்மநோபி₄ர்யத்கர்ம ப்ராரப₄தே நர: ।**

**ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ: ॥ 15 ॥**

**நர:** – மனிதன், **ஶரீர வாக் மநோபி₄:** – மனம், மொழி, மெய்களால், **ந்யாய்யம் வா** – சாஸ்த்ரங்களில் கூறப்பட்டபடியோ அல்லது, **விபரீதம் வா** – அதற்கு முரணாகவோ, **யத் கர்ம** – எந்தச் செயலை, **ப்ராரப₄தே** – செய்கிறானோ, **தஸ்ய** – அதற்கு, **ஏதே** – இந்த, **பஞ்ச** – ஐந்தும், **ஹேதவ:** – காரணங்கள்.

மனிதன் மனம், வாக்கு, உடலினால் சாஸ்த்ரங்களுக்கு இசைந்தவாறோ அல்லது அதற்கு முரணாகவோ எந்தச் செயலை செய்கிறானோ அதற்கு இந்த ஐந்தும் காரணங்கள்.

**கேள்வி:** 'நர:' என்றால் யார்? அப்படிக் கூறுவானேன்?

**பதில்:** நரன் எனில் மனிதன். மனித உடலில்தான் ஜீவன் புண்ய பாவ கர்மங்களைப் புதிதாகச் செய்கிறான். ஏனைய பிறவிகள் போகப் பிறவிகள். முற்பிறவியின் வினைப்பயன்களே அங்கே அனுபவிக்கப்படுகின்றன. புதிய கர்மம் ஒன்றையும் செய்ய அவற்றுக்குத் தகுதியில்லை.

**கேள்வி:** 'ஶரீரவாங்மநோபி:' என்ற சொல்லில் வரும் ஶரீரம், வாக், மனம் என்ற இவற்றிற்கு என்ன பொருள்? அவ்வாறு கூறுவானேன்?

**பதில்** இங்கு உடல் என்றால் சொல்லைத் தவிர மற்ற எல்லாப் புலன்களுடனும் கூடிய ஸ்தூல உடல் என்று பொருள். 'வாக்' என்றால் சொல். மனம் என்றால் உள்ளம் என்று கொள்ள வேண்டும். மனிதன் செய்யும் புண்ய-பாவங்களனைத்தையும் சாஸ்த்ரமறிந்தவர் காயிகம், வாசிகம், மானஸிகம் (உடலை ஒட்டியவை, சொல்லை ஒட்டியவை, உள்ளத்தை ஒட்டியவை) என்று மூன்றுவிதமாகப் பிரித்துக் கூறுவர். இவை மூன்றினாலும் ஏற்படும் எல்லா நல்லதும், தீயதுமான கர்மங்களைச் சேர்த்துக் குறிப்பிடுகிறார்.

**கேள்வி:** 'ந்யாய்யம்' என்றால் என்ன?

**பதில்:** வர்ண, ஆசிரம, ப்ரக்ருதி, சூழ்நிலை என்ற பாகுபாட்டிற்கேற்ப அவரவருக்கு விதிக்கப்பட்ட கடமைகளை சாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ளவாறு செய்யவேண்டும். அதாவது யாகம், தானம், தவம், கற்பது, போரிடுவது, உழுது பயிரிடுவது, பசுக்களைக் காப்பது,



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வியாபாரம் செய்வது, பிறருக்கு ஸேவை செய்வது முதலிய எல்லாக் கடமைகளையும் சேர்த்து 'ந்யாய்யம்' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'விபரீதம்' என்று எந்தக் கர்மத்தைக் கூறுகிறார்?

**பதில்:** வர்ணம், ஆசிரமம், இயற்கை, சூழ்நிலை இவற்றுக்கேற்ப எவர் எதைச் செய்யக் கூடாது என சாஸ்த்ரங்கள் தடுக்கின்றனவோ, எவை நீதிக்கும், தர்மத்திற்கும் புறம்பானவையோ, அத்தகைய பொய் பேசுதல், திருடுதல், விபசாரம், ஹிம்ஸை, குடிப்பழக்கம், உண்ணத்தகாததை உண்பது முதலிய எல்லாப் பாவ கர்மங்களையும் சேர்த்து 'விபரீதம்' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'யத் கர்ம' என்றால் எவை? அவற்றிற்கு இவை ஐந்தும் காரணம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'யத் கர்ம' என்றால் மனம், சொல், உடலினால் செய்யப்படும் புண்ய-பாவச் செயல்கள் அனைத்தும் ஆகும். அவற்றின் பயன்களை இப்பிறவியிலும், மறுபிறவியிலும் அனுபவிக்க வேண்டியிருக்கும். இந்த ஐந்தும் சேராமல் எச்செயலும் கார்யமும் நடைபெறாது. எல்லாப் புண்ய-பாவச் செயல்களும், இவ்வைந்தும் ஒருங்கிணைந்தால்தான் நடைபெறும். இவற்றில் ஒன்று இல்லாவிட்டாலும் செயல் நடைபெறாது. ஆகவே கர்த்தா என்ற அபிமானம் இல்லாமல் செய்யப்படுவது கர்மம் அன்று. இவ்விஷயம் 18/17ல் கூறப்பட்டுவிட்டது.

**பொருத்தம்:** இவ்விதம் ஸாங்க்யயோக ஸித்தாந்தப்படி எல்லாக் கர்மங்களும் ஸித்தி பெற அதிஷ்டானம் முதலிய ஐந்து காரணங்களைக் கூறி, உண்மையில் ஆத்மாவுக்குக் கர்மங்களுடன் ஸம்பந்தமில்லை. அவன் சுத்தன், விகாரமற்றவன், அகர்த்தா என்று விளக்குவதற்காக ஆத்மாவைக் கர்த்தா என்று நினைப்பவனை நிந்திக்கிறார்—

**तत्रैवं सति कर्तारमात्मानं केवलं तु यः।**
**पश्यत्यकृतबुद्धित्वान्न स पश्यति दुर्मतिः॥ १६॥**

**தத்ரைவம் ஸதி கர்தாரமாத்மாநம் கேவலம் து ய: ।**
**பஶ்யத்யக்ருதபு₃த்₃தி₄த்வாந்ந ஸ பஶ்யதி து₃ர்மதி: ॥ 16 ॥**

**து** – ஆனால், **ஏவம் ஸதி** – இங்ஙனம் இருக்க, **ய:** – எந்த மனிதன், **அக்ருதபு₃த்₃தி₄த்வாத்** – புத்தித் தூய்மை இல்லாமையினால், **தத்ர** – கர்மங்களைச் செய்வதில், **கேவலம்** – தூயதான, **ஆத்மாநம்** – ஆத்மாவையே, **கர்தாரம்** – செய்பவனாக, **பஶ்யதி** – காண்கிறானோ, **ஸ:** – அந்த, **து₃ர்மதி:** – தூய்மையற்ற புத்தியுடைய அஞ்ஞானி, **ந பஶ்யதி** – உண்மையைப் புரிந்து கொள்ளவில்லை.

ஆனால் இங்ஙனம் இருக்க, எந்த மனிதன் புத்தியில் தூய்மை இல்லாமையினால் கர்மங்களைச் செய்வதில் தூயதான ஆத்மாவையே செய்பவனாகக் காண்கிறானோ, அந்தத் தூய்மையற்ற புத்தியுடைய அஞ்ஞானி உண்மையைப் புரிந்து கொள்ளவில்லை.

**கேள்வி:** 'ஏவம் ஸதி' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எல்லாக் கர்மங்களும் நடப்பதற்கு, முன் சொன்ன உடல் முதலிய ஐந்துதான் காரணம்; ஆத்மாவுக்கு அந்தக் கர்மங்களில் ஸம்பந்தமில்லை; ஆகவே ஆத்மாவை 'கர்த்தா' என்பது எவ்விதத்திலும் சரி அன்று; உண்மை இவ்விதம் இருக்க உலகத்தினர் அறியாமையினால் தம்மைக் கர்த்தா என்று நினைப்பது எவ்வளவு வியப்புக்குரிய விஷயம்! என்பது கருத்து.

**கேள்வி:** 'அக்ருதபுத்தித்வாத்' என்பதன் கருத்து என்ன?



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** ஸத்ஸங்கம் மற்றும் நல்ல சாஸ்த்ரங்களைப் பயிலுதல், விவேகம், ஆராய்ச்சி, புலனடக்கம், மனவடக்கம் முதலிய ஆன்மிக ஸாதனங்களால் புத்தியைத் தூயதாக்கிக் கொள்ளாத பாமரனும், அஞ்ஞானியுமான மனிதனை 'அக்ருதபுத்தி' என்கிறார். அதனால்தான் அவன் ஆத்மாவைக் கர்த்தா என்று நினைக்கிறான். அதாவது உண்மையில் ஆத்மாவுக்குக் கர்மத்தில் எவ்வித ஸம்பந்தமும் இல்லாவிடினும், புத்தியில் விவேக சக்தி இன்மையாலும், அறியாமையினாலும், மனிதன் ஆத்மாவைக் கர்த்தா என நினைக்கிறான்.

**கேள்வி:** 'கேவலம் ஆத்மாநம்' என்றால் என்ன?

**பதில்:** 'கேவலம்' எனும் அடைமொழியால் ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபம் காண்பிக்கப்படுகிறது. ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபம் 'கேவலம்' அதாவது முற்றிலும் தூய்மையானது; மாறுதலற்றது; எதிலும் ஒட்டாதது. வேதங்களும் **'அஸங்கோ$_3$ ஹ்யயம் புருஷ:'** (ப்$_3$ருஹதா$_3$ரண்யக உபநிஷத்$_3$ 4/3/15,16) 'இவ்வாத்மா உண்மையில் ஒட்டுதல் இல்லாதவன்' என்று சொல்கின்றன. ஆகவே ஒட்டாத ஆத்மாவுக்குக் கர்மங்களுடன் ஸம்பந்தத்தை ஒட்ட வைத்து, அவனைக் கர்த்தா என்று நினைப்பது முற்றிலும் உண்மைக்கு முரணானது.

**கேள்வி:** 'ஸ: துர்மதி:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேலே கூறியவாறு ஆத்மாவைக் கர்த்தா என்று நினைப்பவனின் புத்தி தூய்மையற்றது; ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை அறியும் சக்தி அதற்கு இல்லை; ஆகவே அவன் துர்மதி; அவன் உண்மையை அறியமாட்டான்; 13/29ல் கூறியவாறு எல்லாக் கர்மங்களும் ப்ரக்ருதியின் லீலை; ஆத்மா முற்றிலும் கர்த்தாவே அல்லன் என்று அறிபவன்தான் உள்ளதை உள்ளபடி அறிபவன். இதற்குமாறாக, ஆத்மாவைக் கர்த்தா என்று நினைப்பவன் அஞ்ஞானத்தினாலும், அஹங்காரத்தினாலும் குழம்பியவன் (3/27). ஆகவே அவன் புரிந்து கொண்டது சரி அன்று; தவறானது.

**கேள்வி:** 18/14ல் கர்மங்கள் நிறைவேறுவதற்காகக் கூறப்பட்ட காரணங்கள் ஐந்தில் அதிஷ்டானம் முதலிய நான்கு மட்டும் ப்ரக்ருதியில் உண்டானவை. ஐந்தாவதான கர்த்தா மட்டும் ப்ரக்ருதிக்கு உட்பட்ட புருஷன் என்று வருகிறது. ஆனால் இங்கே ஆத்மா கர்த்தா அல்லன். ஒட்டுதலில்லாதவன் என்று கூறுகிறார். இதன் கருத்து என்ன?

**பதில்:** உள்ளபடி பார்த்தால் ஆத்மா நித்யன், சுத்தன், அறிவுருவானவன், விகாரமற்றவன், ஒட்டுதலில்லாதவன். ப்ரக்ருதியுடனும், அதில் உண்டான பொருட்களுடனும், கர்மங்களுடனும் அவனுக்கு ஒரு ஸம்பந்தமும் கிடையாது. ஆயினும் தொன்றுதொட்டு வந்துள்ள அஞ்ஞானத்தினால் ஒட்டுதலில்லாத ஆத்மா, ப்ரக்ருதியுடன் ஸம்பந்தம் உள்ளது போலத் தோன்றுகிறான். ஆகவே, ப்ரக்ருதி செய்கின்ற செயல்களில் வாஸ்தவமற்ற அபிமானம் கொண்டு 'தானே' அவற்றின் கர்த்தாவாக ஆகிறான். இவ்விதம் கர்த்தாவாக ஆன மனிதன்தான் 'ப்ரக்ருதிஸ்தன்' (ப்ரக்ருதியில் நிலைபெற்றவன்) எனப்படுகிறான். அந்த ப்ரக்ருதியின் மூலம் விளைகின்ற செயல்களுக்கு அவன் கர்த்தா ஆகும் பொழுதுதான், அவன் செய்வது 'கர்மம்' என்று பெயர் பெறுகிறது. அந்தக் கர்மம் பயன் தருவதாகின்றது. ஆகவே அந்த 'ப்ரக்ருதிஸ்தனான' ஜீவன் நல்லதும், தீயதுமான பிறவிகளில் பிறந்து, அந்தக் கர்மங்களின் பயன்களை அனுபவிக்க நேரிடுகிறது (13/21). ஆகவே 14வது ச்லோகத்தில் கர்மத்தின் ஸித்திக்குக் காரணமாகக் கூறப்பட்ட ஐந்தில் ஒரு காரணம் கர்த்தா எனப்படுகிறது. அது ப்ரக்ருதியில் உள்ள புருஷன். இங்கே ஆத்மா – கேவலன், அதாவது ஒட்டுதல் இல்லாதவன், தூய்மையானவன் – என்று அவன் தன்மை விளக்கப்படுகிறது. அவன் கர்த்தா அல்லன் என்ற உண்மை தெளிவாக்கப்படுகிறது. ஆத்மாவின் உண்மை ஸ்வரூபத்தை அறிந்தவனுடைய செயல்களில் செயலின் ஐந்தாவது காரணமான 'கர்த்தா' என்பது இருக்காது. ஆகவே, அவன் செய்வது கர்மம் என்ற பெயர் பெறாது. இதைத்தான் அடுத்த ச்லோகத்தில் விளக்குகிறார்:



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொருத்தம்: ஆத்மா முற்றிலும் தூயவன், விகாரமற்றவன், அகர்த்தா என்று விளங்க வைப்பதற்காக ஆத்மாவை 'கர்த்தா' என்று நினைப்பவனை நிந்தித்தார். இனி ஆத்மாவின் உண்மை நிலையை அறிந்து, அவன் கர்த்தா அல்லன் என்று மதிக்கிறவனைப் புகழ்கிறார்—

**यस्य नाहङ्कृतो भावो बुद्धिर्यस्य न लिप्यते।**
**हत्वापि स इमाँल्लोकान्न हन्ति न निबध्यते॥ १७॥**

**யஸ்ய நாஹங்க்ருதோ ப₄ாவோ புத்₃தி₄ர்யஸ்ய ந லிப்யதே ।**

**ஹத்வாபி ஸ இமாந்லோகாந்ந ஹந்தி ந நிப₃த்₄யதே ॥ 17 ॥**

**யஸ்ய** – எந்த மனிதனுடைய (உள்ளத்தில்), **அஹங்க்ருத:** – நான் செய்கிறேன் (என்னும்), **ப₄ாவ:** – எண்ணம், **ந** – இல்லையோ (அப்படியே), **யஸ்ய** – எவனுடைய, **புத்₃தி₄:** – புத்தி, **ந லிப்யதே** – உலகியல் பொருட்களிலும், செயல்களிலும் ஒட்டுவதில்லையோ, **ஸ:** – அவன், **இமாந் லோகாந்** – இவ்வுலகங்கள் அனைத்தையும் (மக்கள் அனைவரையும்), **ஹத்வா அபி** – கொன்றாலும், **ந ஹந்தி** – (உண்மையில்) கொல்வதில்லை. (மேலும்), **ந நிப₃த்₄யதே** – பாவத்தினால் தளைப்படுவதும் இல்லை.

எந்த மனிதனுடைய உள்ளத்தில் நான் செய்கிறேன் என்னும் எண்ணம் இல்லையோ, அவ்வாறே எவனுடைய புத்தி உலகியல் பொருட்களிலும், செயல்களிலும் ஒட்டுவதில்லையோ, அவன் இந்த உலகங்கள் அனைத்தையும் (மக்கள் அனைவரையும்) கொன்றாலும் உண்மையில் கொல்வதில்லை. மேலும் பாவத்தினால் தளைப்படுவதும் இல்லை.

**கேள்வி:** 'யஸ்ய' என்று யாரைக் குறிப்பிடுகிறார்? 'நான் செய்கிறேன் என்ற எண்ணமில்லை' என்றால் என்ன பொருள்?

**பதில்:** எல்லாக் கர்மங்களும் ப்ரக்ருதியின் விளையாட்டுகள் என்றறிகின்ற ஸாங்க்யயோகியை 'யஸ்ய' என்ற சொல் குறிக்கிறது. அவன் உடலே 'நான்' என்ற அபிமானம் கொள்ளமாட்டான். அவனுக்கு 'நான்' என்ற எண்ணத்தின் தொடர்பால் ஏற்படும் கர்த்தா என்ற எண்ணமும் இருக்காது. அதாவது மனம், உடல், புலன்களால் செய்யப்படும் எல்லாச் செயல்களிலும் 'இந்தக் கர்மத்தை நான் செய்தேன். இது நான் செய்யவேண்டியது' என்பது போன்ற எண்ணம் சிறிதுகூட இருக்காது. அதையே இங்கே 'நான் கர்த்தா' என்ற எண்ணம் இல்லாமல் இருத்தல் எனக் கூறப்படுகிறது.

**கேள்வி:** புத்தி ஒட்டுவதில்லை என்றால் என்ன பொருள்?

**பதில்:** கர்மங்களிலும், அவற்றின் பயன்களான மனைவி, மக்கள், செல்வம், வீடு, மானம், பெருமை, ஸ்வர்க ஸுகம் ஆகிய இவ்வுலக-பரலோக போகப் பொருட்களிலும், மமதையும், பற்றும், ஆசையும் இல்லாமை; எந்தக் கர்மத்துடனும், அதன் பயனுடனும் தனக்கு ஸம்பந்தமில்லை என்ற கருத்து; அவையெல்லாம் கனவில் காணப்படும் செயல்கள், போகங்கள் போல் கணநேரம் தோன்றி மறைபவை; கற்பனை செய்யப்பட்டவை என்று உணர்வதால், உள்ளத்தில் அவற்றின் பதிவு ஏற்படாமை – இவைதான் புத்தி ஒட்டிக் கொள்வதில்லை என்பதன் கருத்து.

**கேள்வி:** 'அவன் இந்த உலகங்கள் அனைத்தையும் கொன்றாலும் உண்மையில் கொல்வதில்லை. பாவத்தினால் தளைப்படுவதுமில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேற்கூறியவாறு ஆத்மாவின் ஸ்வரூபத்தை நன்றாக அறிவதால் அஞ்ஞானத்தினால் உண்டான அஹம்பாவம் அறவே அழிகிறது. மனம், புத்தி, உடல், புலன்களில் அஹங்கார, மமகாரங்கள் அறவே இல்லாமற்போய்விடுவதால் அவற்றால் செய்யப்படும் கர்மங்களிலும், அவற்றின் பயன்களிலும் சிறிதுகூட ஸம்பந்தமில்லை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



என்றாகிறது. அத்தகைய ஸாங்க்ய யோகி, மனம், புத்தி, புலன்களால் உலகத்திற்கு வழிகாட்டியாக, ப்ராரப்தத்தின் உந்துதலால் கர்மங்களைச் செய்கிறார். அவையெல்லாம் சாஸ்த்ர ஸம்மதமானவையாகவும், உலகிற்கு ஹிதமளிப்பவையாகவுமே உள்ளன. ஏனெனில் அஹங்காரம், மமகாரம், ருசி, தன்னலம் – இவையில்லையென்றான பிறகு, பாவச் செயல் புரியக் காரணமே கிடையாது. ப்ராரப்த வசமாக ஒருவனுக்கு நெருப்பினாலோ, காற்றினாலோ, நீரினாலோ மரணம் ஏற்பட்டால், அந்த நெருப்போ, காற்றோ, நீரோ உண்மையில் அவனைக் கொன்றதாகக் கூற இயலாது. அந்தக் கர்மத்தினால் அவை தளைப்படுவதுமில்லை. அதுபோன்று மேற்கூறிய ஸாங்க்ய யோகி, ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிக்கும்போது, யக்ஞம், தானம், தவம் முதலிய புண்ய கர்மங்களைச் செய்தாலும் அவன் கர்த்தா ஆவதில்லை; பயன்கள் அவனைத் தளைப்படுத்துவதுமில்லை என்று சொல்லவும் வேண்டுமா? ஆனால் க்ஷத்ரிய தர்மத்தின்படியும், ஏதோ காரணத்தினாலும், தகுதி பெற்று, எல்லா ப்ராணிகளையும் கொடுமையாகக் கொல்ல நேர்ந்தாலும், அவற்றிற்கு அவன் கர்த்தா அல்லன். அவற்றின் பயன்கள் அவனைத் தளைப்படுத்துவதில்லை. உலக நோக்கில் கர்மங்களனைத்தையும் செய்வதுபோலத் தோன்றினாலும், அவனை அக்கர்மங்கள் எவையும் பந்தப்படுத்துவதில்லை.

பகவான் அகில உலகையும் படைத்துக் காத்துத் தம்முள் ஒடுக்கிக் கொள்வது என்ற பல கார்யங்களைச் செய்தாலும் உண்மையில் அவர் கர்த்தா அல்லர் *(4/13)*. அந்தச் செயல்களில் அவருக்கு ஒரு ஸம்பந்தமுமில்லை *(4/14, 9/9)*. அதுபோல ஸாங்க்யயோகியும் மனம், புத்தி, புலன்களின் மூலம் உண்டாகும் எந்தச் செயலிலும் தொடர்புறுவதில்லை. அவன் உள்ளம் மிகவும் தூய்மையானது. அஹங்காரம், மமகாரம், பற்று, தன்னலம் ஆகியவை அவனது உள்ளத்திலிருந்து நீங்கிவிட்டபடியால் மனம், புத்தி, புலன் இவற்றின் மூலம் விருப்பு-வெறுப்புகளோ, அஞ்ஞானத்தின் விளைவுகளான திருட்டு, விபசாரம், பொய் பேசுதல், ஹிம்ஸை, கபடம், கர்வம் முதலிய பாவ கர்மங்களோ ஏற்படுவதில்லை. அவனுடைய எல்லாக் கர்மங்களும் வர்ணம், ஆசிரமம், சூழ்நிலை இவற்றுக்கேற்ப சாஸ்த்ர ஸம்மதமானவை. அதற்காக அவன் முயற்சி செய்ய வேண்டியதே இல்லை. அவனுடைய இயல்பே அவ்வாறு ஆகிவிடுகிறது.

**பொருத்தம்: இவ்வாறு ஸந்யாஸம் (ஞானயோகம்) பற்றிய தத்வத்தை விளக்குவதற்காக, ஆத்மா கர்த்தா அல்லன் என்பதைக் கூறி, அதற்கேற்பக் கர்மத்தின் பிரிவுகளை நன்கு விளங்கச் செய்வதற்காக, கர்மத்தின் தூண்டுதல், கர்மத்தின் தொகுப்பு – இவை பற்றிக் கூறுகிறார்—**

**ज्ञानं ज्ञेयं परिज्ञाता त्रिविधा कर्मचोदना।**
**करणं कर्म कर्तेति त्रिविधः कर्मसङ्ग्रहः॥ १८॥**

**ஜ்ஞாநம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா த்ரிவித₄ா கர்மசோத₃நா ।**
**கரணம் கர்ம கர்தேதி த்ரிவித₄: கர்மஸங்க்₃ரஹ: ॥ 18 ॥**

**பரிஜ்ஞாதா** – அறிபவன், **ஜ்ஞாநம்** – அறிவு, **ஜ்ஞேயம்** – அறியப்படுவது, **த்ரிவித₄ா** – இம்மூன்றும் (ஒன்று சேர்ந்து), **கர்மசோத₃நா** – கர்மத்தைத் தூண்டுவன. (மேலும்), **கர்தா** – செயல் புரிபவன், **கரணம்** – கரணம் (மனம், புத்தி, புலன்கள்), **கர்ம** – செயல், **இதி த்ரிவித₄:** – என்ற மூன்றும், **கர்மஸங்க்ரஹ:** – கர்மத்தின் தொகுப்பு (அதாவது இம்மூன்றும் ஒன்று சேர்வதாலேயே கர்மம் உண்டாகிறது).

அறிபவன், அறிவு, அறியப்படுவது – இம்மூன்றும் (ஒன்று சேர்ந்து) கர்மத்தைத் தூண்டுவன; மேலும் செயல் புரிபவன், கரணம் (மனம், புத்தி, புலன்கள்) மற்றும் செயல் என்ற மூன்றும் கர்மத்தின் தொகுப்பு (அதாவது இம்மூன்றும் ஒன்று சேர்வதாலேயே கர்மம் உண்டாகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ஜ்ஞாதா', 'ஜ்ஞாநம்', 'ஜ்ஞேயம்' என்ற மூன்று சொற்கள் எந்த, எந்த தத்வங்களைக் குறிப்பிடுகின்றன? அவை மூன்றும் கர்மத்தைத் தூண்டுவன என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஒரு பொருளின் உண்மையான ஸ்வரூபம் என்ன என்று தீர்மானிப்பவன் 'ஜ்ஞாதா' (அறிபவன்). அவன் மனதின் எந்தச் செயல்பாட்டால் பொருளின் உண்மை ஸ்வரூபத்தைத் தீர்மானம் செய்கிறானோ, அந்த மனப்பாங்கிற்கு 'ஜ்ஞாநம்' (அறிவு) என்று பெயர். எந்தப் பொருளின் உண்மையான தன்மை இதுதான் என்று உறுதி செய்யப்படுகிறதோ, அப்பொருள் 'ஜ்ஞேயம்' (அறியப்படும் பொருள்). இவை மூன்றும் கர்மத்தைத் தூண்டுவன. அதாவது இம்மூன்றும் சேர்ந்தால்தான் மனிதன் செயல்பட முனைகிறான். ஏனெனில் தகுதி பெற்ற மனிதன் ஞானம் என்ற மனதின் செயல்பாட்டு மூலம், இன்ன இன்ன பொருட்களைக் கொண்டு, இந்த இந்த முறையில், இந்த இந்தக் கர்மங்களை நான் செய்யவேண்டும் என்று தீர்மானிக்கிறான். அப்பொழுதுதான் அவனுக்குச் செயல் ஊக்கம் ஏற்படுகிறது.

**கேள்வி:** 'கர்த்தா', 'கரணம்', 'கர்மம்' இம்மூன்று சொற்களும் தனித்தனியாக எந்தத் தத்வங்களைக் கூறுகின்றன? இம்மூன்றும் கர்மத்தின் தொகுப்பு என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பார்ப்பது, கேட்பது, அறிவது, நினைப்பது, உண்பது, அருந்துவது முதலிய கர்மங்களனைத்தையும் செய்கின்ற, ப்ரக்ருதியில் உள்ள மனிதன்தான் 'கர்த்தா'. அவனுடைய மனம், புத்தி, புலன்களின் மூலமே மேற்கூறிய எல்லாச் செயல்களும் நடைபெறுகின்றன. ஆகவே அவை 'கரணங்கள்' (கருவிகள்) எனப்படும். மேற்கூறிய செயல்கள் அனைத்தும் 'கர்மம்' ஆகும். இவ்விதம் மூன்றும் ஒன்று சேர்வதே கர்மத்தின் தொகுப்பு. இம்மூன்றும் இணைந்தே கர்மம் நிறைவேறுகிறது என்பது இங்கே கூறப்படுகிறது. ஏனெனில் மனிதன், தானே கர்த்தா ஆகி, தன்னுடைய மனம், புத்தி, புலன் இவற்றின் மூலம் செயல் புரிந்து, ஒரு கார்யத்தைச் செய்கிறான். அப்போதுதான் கர்மம் நிறைவேறுகிறது. இவ்விதமின்றி எந்தக் கர்மமும் நிறைவேறா. 14வது ச்லோகத்தில் கர்மத்தின் ஸித்திக்குக் காரணமாகக் கூறப்பட்ட அதிஷ்டானம் முதலிய ஐந்து காரணங்களில் அதிஷ்டானம், தெய்வம் தவிர, இங்கே கூறப்பட்ட மற்ற மூன்றும் கர்மத்தின் தொகுப்பு என்ற பெயர் பெறும். அந்த ஐந்தில் இந்த மூன்று காரணங்கள்தான் முக்யமானவை.

பொருத்தம்: **இவ்விதம் ஸாங்க்யயோகத்தின் தீர்ந்த முடிவான கர்மத்தின் தூண்டுதல், கர்மத்தின் அமைப்பு பற்றிக் கூறிவிட்டுத் தத்வ ஞானத்திற்கு உதவியான ஸாத்விகத் தன்மையை ஏற்றுக்கொள்ளச் செய்வதற்காகவும், அதற்கு விரோதமான ராஜஸ, தாமஸத் தன்மைகளை விலக்கிக் கொள்ளச் செய்வதற்காகவும், மேற்குறித்த கர்மத்தூண்டுதல், கர்மங்களின் அமைப்பு என்ற பெயர் கொண்ட ஞானம் முதலியவற்றில் ஞானம், கர்மம், கர்த்தா இவற்றின் ஸாத்விக, ராஜஸ, தாமஸ வேற்றுமைகளை வரிசையாகச் சொல்லப் போகிறேன் என்று கூறுகிறார்—**

ज्ञानं कर्म च कर्ता च त्रिधैव गुणभेदतः।
प्रोच्यते गुणसङ्ख्याने यथावच्छृणु तान्यपि॥ १९॥

ஜ்ஞாநம் கர்ம ச கர்தா ச த்ரிதை₄வ கு₃ணபே₄த₃த: ।
ப்ரோச்யதே கு₃ணஸங்க்₂யாநே யத₂ாவச்ச்₂ருணு தாந்யபி ॥ 19 ॥

கு₃ணஸங்க்₂யாநே — குணங்களின் எண்ணிக்கையைக் கூறும் ஸாங்க்ய சாஸ்த்ரத்தில், ஜ்ஞாநம் — ஞானமும், கர்ம ச — செயலும், கர்தா ச — செய்பவனும், கு₃ணபே₄த₃த: — குணங்களின் வேற்றுமையினால், த்ரித₄ா ஏவ — மும்மூன்றாகவே, ப்ரோச்யதே —

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



சொல்லப்படுகின்றன. **தாநி அபி** – அவற்றையும் (நீ என்னிடமிருந்து), **யத₂ாவத்** – உள்ளபடி, **ஶ்ருணு** – கேட்டுக் கொள்.

குணங்களின் எண்ணிக்கையைக் கூறும் ஸாங்க்ய சாஸ்த்ரத்தில் ஞானமும், செயலும், செய்பவனும் குணங்களின் வேற்றுமையினால் மும்மூன்றாகவே சொல்லப்படுகின்றன. அவற்றையும் நீ என்னிடமிருந்து உள்ளவாறு கேட்டுக் கொள்.

**கேள்வி:** *'குணஸங்க்யாநே' என்பது எதைக் குறிக்கிறது? 'அதில் குணவேறுபாடு காரணமாக மும்மூன்றாகச் சொல்லப்படும் ஞானம், கர்மம், கர்த்தா இவை பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** ஸத்வம், ராஜஸம், தாமஸம் என்ற முக்குணங்களின் ஸம்பந்தத்தினால் எல்லாப் பொருட்களிலும் தனித்தனியான வேறுபாடுகளைக் கணக்கிடுகின்ற சாஸ்த்ரம் 'குணஸங்க்யாநம்' எனப்படும். 'குணவேறுபாடு காரணமாக விளைந்த மும்மூன்றுவிதமாக அதில் கூறப்பட்ட ஞானம், கர்மம், கர்த்தா என்பனவற்றைக் கேள்' என்று கூறி, அந்த சாஸ்த்ரத்திற்கு மதிப்பு கொடுக்கிறார் பகவான். இனிக் கூறப்போகும் விஷயத்தைக் கவனத்துடன் கேட்குமாறு அர்ஜுனனுக்கு எச்சரிக்கை செய்கிறார்.

இங்கு ஒன்று கவனிக்க வேண்டும். ஞாதாவும் (அறிபவன்), கர்த்தாவும் வெவ்வேறல்லர். அதனால் பகவான் ஞாதாவின் வேற்றுமையைத் தனியாகக் கூறவில்லை. கரணத்தின் வேற்றுமையை புத்தியின் வேற்றுமை என்றும், த்ருதியின் வேற்றுமை என்றும், ஞேயத்தின் (அறியப்படுவதன்) வேற்றுமையை ஸுகம் என்ற பெயராலும் இனிக் கூறப் போகிறார். ஆகவே முன்பு கூறிய ஆறு பொருட்களில், மூன்றின் வேற்றுமையையே முதலில் கூறுவதாகக் குறிப்புக் காண்பிக்கிறார்.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் சொன்னபடி ஞானம், கர்மம், கர்த்தாக்களின் ஸாத்விக, ராஜஸ, தாமஸ வேற்றுமையை வரிசையாகச் சொல்வதாகக் கூறினாரே, அதை அனுஸரித்து, முதலில் ஸாத்விக ஞானத்தின் இலக்கணம் கூறுகிறார்—

**सर्वभूतेषु येनैकं भावमव्ययमीक्षते ।**
**अविभक्तं विभक्तेषु तज्ज्ञानं विद्धि सात्त्विकम् ॥ २० ॥**

**ஸர்வபூ₄தேஷு யேனைகம் ப₄ாவமவ்யயமீக்ஷதே ।**
**அவிப₄க்தம் விப₄க்தேஷு தஜ்ஜ்ஞானம் வித்₃தி₄ ஸாத்த்விகம் ॥ 20 ॥**

**யேந** – எந்த ஞானத்தினால் (மனிதன்), **விப₄க்தேஷு** – தனித்தனியான, **ஸர்வ-பூ₄தேஷு** – உயிரினங்கள் அனைத்திலும், **ஏகம்** – ஒன்றேயானதும், **அவ்யயம்** – அழியாததுமான, **ப₄ாவம்** – பரமாத்மாவின் இருப்பை, **அவிப₄க்தம்** – எங்கும் ஒரே சீராக பிரிவற்றதாக, **ஈக்ஷதே** – பார்க்கிறானோ, **தத்** – அந்த, **ஜ்ஞாநம்** – ஞானத்தை (நீ), **ஸாத்த்விகம்** – ஸாத்விகம் என்று, **வித்₃தி₄** – அறிவாயாக.

எந்த ஞானத்தினால் மனிதன் தனித்தனியான உயிரினங்கள் அனைத்திலும் ஒன்றேயானதும், அழிவற்றதுமான பரமாத்மாவின் இருப்பைப் பிரிவற்றதாக (எங்கும் ஸமமாக உள்ளதாக)ப் பார்க்கிறானோ அந்த ஞானத்தை ஸாத்விகம் என்று அறிவாயாக.

**கேள்வி:** *'யேந' என்று எதைக் குறிப்பிடுகிறார்? அதன் மூலம் தனித்தனியான உயிரினங்கள் அனைத்திலும், ஒன்றேயான அழிவற்ற பரமாத்மாவின் இருப்பைப் பிரிவின்றிப் பார்ப்பது என்.று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** ஸாங்க்யயோக ஸாதனையின் மூலம் ஏற்படும் அனுபவத்தை 'யேந' என்ற சொல் குறிப்பிடுகிறது. இதைப் பற்றி *6/29*லும், *13/27*லும் கூறி இருக்கிறார். ஆகாசத்தின்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தத்வமறிந்தவன் குடம், வீடு, குஹை, ஸ்வர்கம், பாதாளம் மற்றும் எல்லாப் பொருட்களுடனும் கூடிய அகில ப்ரம்மாண்டமெங்கும் ஒரே ஆகாசம் என்ற தத்வத்தையே பார்ப்பதுபோல், ஸம்ஸாரத்தில் வெவ்வேறாகத் தோன்றுகின்ற எல்லாச் சராசர ப்ராணிகளிடத்திலும் அந்த அனுபவத்தின் மூலம் ஒன்றேயான இரண்டற்ற, அழிவற்ற, விகாரமற்ற, ஞான வடிவான, பரமாத்மாவின் இருப்பைப் பிரிவின்றி, ஸமமாக எங்கும் நிறைந்திருப்பதாகப் பார்க்க வேண்டும். அதாவது உலக நோக்கில் வெவ்வேறாகத் தோன்றினாலும், சராசரங்களும், தானும் அழியாத பரமாத்மா தவிர வேறல்ல என்று அறிவதுதான் தனித்தனியான உயிரினங்களனைத்திலும் ஒன்றேயான அழியாத பரமாத்மாவின் இருப்பைப் பிரிவற்றதாகப் பார்ப்பதாகும்.

**கேள்வி:** 'அந்த ஞானத்தை நீ ஸாத்விக ஞானம் என்றறிவாயாக' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இவ்விதமான உண்மை அனுபவம்தான் உண்மையான ஸாத்விக ஞானம் அல்லது உண்மையான ஞானம் எனக் கூறுகிறார். ஆகவே, மேன்மையை விரும்பும் மனிதன் இதை அடைய முயலவேண்டும். இது தவிர உலகியல் அறிவெல்லாம் பெயரளவில்தான் ஞானமே தவிர உண்மையில் ஞானமன்று.

**பொருத்தம்:** அடுத்து ராஜஸ ஞானத்தின் இலக்கணம் கூறுகிறார்—

**पृथक्त्वेन तु यज्ज्ञानं नानाभावान्पृथग्विधान्।**
**वेत्ति सर्वेषु भूतेषु तज्ज्ञानं विद्धि राजसम्॥२१॥**

**ப்ருத$_2$க்த்வேந து யஜ்ஜ்ஞாநம் நாநாப$_4$ாவாந்ப்ருத$_2$க்$_3$வித$_4$ாந் ।**

**வேத்தி ஸர்வேஷு பூ$_4$தேஷு தஜ்ஜ்ஞாநம் வித்$_3$தி$_4$ ராஜஸம் ॥ 21 ॥**

**து** – ஆனால், **யத்** – எந்த, **ஜ்ஞாநம்** – ஞானத்தின் மூலமாக மனிதன், **ஸர்வேஷு பூ$_4$தேஷு** – உயிரினங்கள் அனைத்திலும், **ப்ருத$_2$க்$_3$வித$_4$ாந்** – தனித்தனியான, **நாநா பா$_4$வாந்** – விதவிதமான இருப்புக்களை, **ப்ருத$_2$க்த்வேந** – தனித்தனியாக, **வேத்தி** – அறிகிறானோ, **தத்** – அந்த, **ஜ்ஞாநம்** – ஞானத்தை (நீ), **ராஜஸம்** – ராஜஸம் என்று, **வித்$_3$தி$_4$** – அறிந்துகொள்.

ஆனால் எந்த ஞானத்தின் மூலமாக மனிதன் உயிரினங்கள் அனைத்திலும் தனித் தனியான, விதவிதமான இருப்புக்களைத் தனித்தனியாக அறிகிறானோ, அந்த ஞானத்தை ராஜஸம் என்று அறிந்துகொள்.

**கேள்வி:** உயிரினங்கள் அனைத்திலும் தனித்தனியான, விதவிதமான இருப்புகளைத் தனித்தனியாக அறிவது என்றால் என்ன?

**பதில்:** புழு, பூச்சி, விலங்கு, பறவை, மனிதன், அரக்கன், தேவர்கள் முதலான உயிரினங்களனைத்திலும், அவற்றின் உருவ அமைப்பின் வேறுபாட்டைக் கொண்டும், இயல்பின் வேற்றுமையைக் கொண்டும் ஆத்மா அநேகம் என்றும், தனித்தனியானது என்றும், அதாவது ஒவ்வோர் உடலிலும் உள்ள ஆத்மா தனிப்பட்டது; ஓர் ஆத்மாவுக்கும், மற்றோர் ஆத்மாவுக்கும் வேறுபாடு உண்டு; இவ்வாறு பல ஆத்மாக்கள் உண்டு என்றும் நினைப்பதுதான் எல்லா ப்ராணிகளிலும் விதவிதமான, வெவ்வேறான பல இருப்புகளைத் தனித்தனியரக அறிவது ஆகும்.

**கேள்வி:** 'அந்த ஞானம் ராஜஸமானது என்றறிந்து கொள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேலே சொன்ன அனுபவம்தான் ராஜஸ ஞானம். அதாவது பெயரளவில்தான் ஞானம். உண்மையான ஞானமன்று. ஆகாச தத்வத்தை உணராத ஒருவன் வெவ்வேறு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



குடங்களிலும், கட்டிடங்களிலும் தனித்தனியாகப் பிரிந்து ஆகாசம் உள்ளது; அதில் உள்ள நறுமணம், துர்நாற்றங்களுடன் ஆகாசத்திற்கு ஸம்பந்தம் உண்டு என்றெண்ணி, ஒவ்வொன்றும் வெவ்வேறானது என்று நினைக்கிறான். ஆனால் அது தவறான கருத்து ஆகும். அதுபோல ஆத்மதத்வத்தை அறியாததால் பல்வேறு உயிரினங்களின் உடல்களிலும் தனித்தனியாகப் பல ஆத்மாக்கள் உள்ளன என்று நினைப்பதும் ப்ரமைதான்.

**பொருத்தம்:** இனி தாமஸ ஞானத்தின் இலக்கணம் கூறுகிறார்—

**यत्तु कृत्स्नवदेकस्मिन्कार्ये सक्तमहैतुकम्।**
**अतत्त्वार्थवदल्पं च तत्तामसमुदाहृतम्॥ २२॥**

**யத்து க்ருத்ஸ்நவதே₃கஸ்மிந்கார்யே ஸக்தமஹைதுகம் ।**

**அதத்த்வார்த₂வத₃ல்பம் ச தத்தாமஸமுத₃ாஹ்ருதம் ॥ 22 ॥**

**து** – ஆனால், **யத்** – எந்த ஞானம், **ஏகஸ்மிந் கார்யே** – ப்ரக்ருதி காரியத்தின் விளைவான உடல் ஒன்றையே, **க்ருத்ஸ்நவத்** – அனைத்தும் என்று, **ஸக்தம்** – பற்றுக் கொண்டுள்ளதோ, **தத்** – அது, **அஹைதுகம்** – யுக்திக்குப் பொருந்தாதது; **அதத்த்வார்த₂வத்** – உண்மைப் பொருளை உணர்த்தாதது; **அல்பம் ச** – அற்பமானது. (ஆகவே), **தாமஸம்** – தாமஸம் என்று, **உத₃ாஹ்ருதம்** – கூறப்படுகிறது.

ஆனால் ப்ரக்ருதியின் காரியத்தின் விளைவான உடல் ஒன்றையே அனைத்தும் என்று பற்றுக் கொண்டுள்ள எந்த ஞானம் உண்டோ அது யுக்திக்குப் பொருந்தாதது; உண்மைப் பொருளை உணர்த்தாதது; அற்பமானது. ஆகவே அந்தக் கருத்து தாமஸம் என்று கூறப்படுகிறது.

**கேள்வி:** 'து' (ஆனால்) என்பதன் கருத்து என்ன?

**பதில்:** முன்பு கூறப்பட்ட ஸாத்விக ஞானம், ராஜஸ ஞானம் இவற்றைக் காட்டிலும் மிகவும் தாழ்ந்தது இது என்று காட்டுவதற்காக, 'து' (ஆனால்) என்ற சொல்லைக் கையாள்கிறார்.

**கேள்வி:** 'எந்த ஞானம் ப்ரக்ருதி காரியத்தின் விளைவான உடலே அனைத்தும் என்று பற்றுக் கொண்டதோ' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தாமஸ ஞானத்தின் முக்ய இலக்கணத்தை இவ்வாறு கூறுகிறார். உண்மைக்குப் புறம்பான அறிவினால், மனிதன் ப்ரக்ருதியின் விளைவான உடலையே தன் ஸ்வரூபம் என நினைத்து, நொடியில் அழியக்கூடிய உடலே நமக்கு எல்லாம் என்று அதில் பற்றுக் கொள்கிறான். அதாவது அது ஸுகம் அடைந்தால் தான் இன்பமடைந்ததாகவும், அது துன்பம் அடைந்தால் தான் துன்புற்றதாகவும், அது அழிந்தால் எல்லாமே அழிந்துவிட்டதாகவும் நினைக்கிறான். உடலைத் தவிர ஆத்மா வேறொன்று உண்டு, அது எங்கும் நிறைந்தது என்ற அறிவு இல்லையெனில், அந்த நினைப்பு உண்மையில் ஞானமே அன்று. ஆகையால் இந்த ச்லோகத்தில் பகவான் ஞானம் என்ற சொல்லையே பயன்படுத்தவில்லை. இந்த விபரீதமான எண்ணம் உண்மையில் அஞ்ஞானம்தான்.

**கேள்வி:** 'இந்த ஞானத்தை யுக்திக்குப் பொருந்தாதது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இவ்வித நினைப்பு விவேகமுள்ளவனுக்கு ஏற்படாது. சிறிது அறிவுள்ளவன்கூட ஆலோசித்துப் பார்த்தால் ஜடமான உடலுக்கும், சேதனனான ஆத்மாவுக்கும் உள்ள வேற்றுமையை அறிவான். ஆகவே யுக்தியும், விவேகமும் உள்ள இடத்தில் இந்தத் தவறான எண்ணம் நிலைக்காது.

**கேள்வி:** 'இந்த ஞானம் உண்மைப் பொருளை உணர்த்தாதது, அற்பமானது' என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இவ்வித நினைப்பினால் ஏற்படும் அறிவு உண்மையன்று. பொருளின் உண்மை ஸ்வரூபத்தை உணர்த்தக்கூடிய ஞானமுமன்று. இந்த விபரீதமான எண்ணம் மிக அற்பமானது. எனவே தவிர்க்கப்பட வேண்டியது.

**கேள்வி:** அது தாமஸம் எனப்படும் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேற்குறித்த இலக்கணம் உள்ள விபரீத ஞானம் தாமஸமானது. மிகுந்த தமோ குணம் படைத்தவர்களே இவ்வாறு நினைப்பார்கள். அவர்களுடைய எண்ணம் இவ்வாறே அமையும். ஏனெனில் தமோ குணத்தின் விளைவு அஞ்ஞானம் என்று முன்பே கூறியிருக்கிறார்.

**பொருத்தம்:** இனி ஸாத்விக கர்மத்தின் இலக்கணம் கூறுகிறார்—

**नियतं सङ्गरहितमरागद्वेषतः कृतम्।**
**अफलप्रेप्सुना कर्म यत्तत्सात्त्विकमुच्यते॥ २३॥**

**நியதம் ஸங்கரஹிதமராகத்வேஷத: க்ருதம் ।**
**அபலப்ரேப்ஸுநா கர்ம யத்தத்ஸாத்த்விகமுச்யதே ॥ 23 ॥**

**யத்** – எந்த, **கர்ம** – செயல், **நியதம்** – சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டுள்ளதோ, **ஸங்கரஹிதம்** – நான் செய்கிறேன் என்ற அபிமானம் இன்றி, **அபலப்ரேப்ஸுநா** – பயனைக் கருதாத மனிதனால், **அராகத்வேஷத:** – விருப்பு–வெறுப்பின்றி, **க்ருதம்** – செய்யப்படுகிறதோ, **தத்** – அச்செயல், **ஸாத்த்விகம்** – ஸாத்விகம், **உச்யதே** – எனப்படுகிறது.

எந்தச் செயல் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டுள்ளதோ, 'நான் செய்கிறேன்' என்ற அபிமானம் இன்றிப் பயனில் விருப்பம் கொள்ளாத மனிதனால் விருப்பு–வெறுப்பின்றிச் செய்யப்படுகிறதோ அச்செயல் ஸாத்விகம் என்று கூறப்படுகிறது.

**கேள்வி:** 'நியதம் கர்ம' என்றால் எந்தக் கர்மம்? 'நியதம்' என்று கூறுவானேன்?

**பதில்:** வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை இவற்றுக்கு ஏற்ப எந்த மனிதனால் எந்தக் கர்மங்கள் கட்டாயம் செய்யப்படவேண்டியவை என்று சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட அந்தக் கர்மங்களான வேள்வி, தானம், தவம் மற்றும் உயிர் வாழ்வதற்காகவும், உடலைப் பேணுவதற்காகவும் செய்யக் கூடிய உயர்ந்த செயல்களே இங்கே கூறப்படும் 'நியத கர்மங்கள்'. சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட நித்ய–நைமித்திக கர்மங்களே ஸாத்விக கர்மங்கள். காம்ய கர்மங்களோ, விலக்கப்பட்ட கர்மங்களோ ஸாத்விகம் அல்ல என்பதை 'நியதம்' என்ற சொல் குறிப்பிடுகிறது.

**கேள்வி:** 'ஸங்கரஹிதம்' என்ற அடைமொழியின் கருத்து என்ன?

**பதில்:** இங்கு 'ஸங்க' என்றால் பற்றென்று பொருள் அன்று. அதை 'அராகத்வேஷத:' என்ற சொல்லால் தனியே கூறுகிறார். ஆகவே செய்யப்படுகின்ற கர்மங்களுக்கு, 'தான் கர்த்தா' என்ற அபிமானம் கொண்டு, அவற்றுடன் ஸம்பந்தம் ஏற்படுத்திக் கொள்வதுதான் ஸங்கம். கர்மங்களில் இவ்விதம் ஸம்பந்தம் ஏற்படுத்திக் கொள்ளாமல், 'நான் கர்த்தா. இந்த உடல்தான் நான்' என்ற அபிமானமில்லாமல் செய்யப்படுவதுதான் 'ஸங்கரஹித'மான கர்மம். ஆகவே, மேலே கூறப்பட்ட, சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்கள்கூட, 'நான் செய்கிறேன்' என்ற அபிமானமின்றிச் செய்யப்படுமேயானால்தான் அவை ஸாத்விகம். இல்லாவிட்டால் அவை ஸாத்விகம் என்றழைக்கப்படமாட்டா.

**கேள்வி:** 'அபலப்ரேப்ஸுநா' என்றால் யார்? அத்தகையவனால் விருப்பு–வெறுப்பின்றிச் செய்யப்படும் செயல் எத்தகையது என்று கூறுகிறார்கள்?

**பதில்:** கர்மங்களின் பயனாக இவ்வுலகிலோ, பரலோகத்திலோ கிடைக்கும் போகங்கள் அனைத்திலும் மமகாரமும், பற்றும் இல்லாமையால், சிறிதுகூட அவற்றில் ஆவல்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கொள்ளாமை; என்ன செய்தாலும் அதன் மூலம் தன் சொந்த நலத்தை நிறைவேற்றிக் கொள்ள விரும்பாமை; தனக்கு ஒரு பொருள் தேவை என்ற நினைப்பே இல்லாமை; இத்தகைய தன்னலம் கருதாத மனிதன் 'அபலப்ரேப்ஸு' எனப்படுவான். இத்தகையவனால் செய்யப்படுகின்ற கர்மங்களில் கர்த்தா என்ற விருப்போ, வெறுப்போ இருப்பதில்லை. அதாவது அத்தகையவனால் விருப்பு–வெறுப்பின்றி, உலகத்திற்கு எடுத்துக்காட்டாகச் செய்யப்படும் செயல்களையே விருப்பு–வெறுப்பின்றிச் செய்யப்படும் கர்மம் என்று கூறுகிறார்.

**கேள்வி:** அந்தக் கர்மம் ஸாத்விகம் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எந்தக் கர்மத்தில் மேலே கூறப்பட்ட இலக்கணங்கள் எல்லாம் முழுமையாகப் பொருந்துமோ, அதுதான் முழுமையான ஸாத்விக கர்மம். மேலே குறிப்பிட்ட இலக்கணங்களில் ஏதேனும் ஒன்று குறைந்தாலும், அந்தக் கர்மம், ஸாத்விகத் தன்மையில் அந்த அளவு குறைவுள்ளதுதான். ஸத்வ குணத்தினாலும், ஸாத்விக கர்மத்தினாலும்தான் ஞானம் உண்டாகும். ஆகவே பரமாத்மாவின் தத்வத்தை அறிய விரும்புகின்ற மனிதர்கள் மேற்கூறியவாறு ஸாத்விகமான கடமைகளை ஆற்றவேண்டும். ராஜஸ, தாமஸ கர்மங்களில் ஈடுபட்டுக் கர்மத்தளைகளில் அகப்பட்டுக் கொள்ளக்கூடாது என்பதை இங்கே புரிந்து கொள்ளவேண்டும்.

**கேள்வி:** இங்கே கூறப்படும் ஸாத்விக கர்மத்திற்கும், 18/9ல் கூறப்பட்ட ஸாத்விக த்யாகத்திற்கும் என்ன வேறுபாடு?

**பதில்:** இந்த ச்லோகத்தில் ஸாங்க்ய நிஷ்டையின் நோக்கில் ஸாத்விக கர்மத்தின் இலக்கணம் கூறப்படுகிறது. அதற்காகத்தான் 'ஸங்கரஹிதம்' என்பதன் மூலம் கர்த்தா என்ற அபிமானம் இல்லாமையும், 'அராகத்வேஷத:' என்பதன் மூலம் விருப்பு–வெறுப்பு இல்லாமையும் சுட்டிக்காட்டப்பட்டன. ஆனால் 18/9ல் கர்மயோகத்தின் நோக்கில் செய்யப்படும் கர்மங்களில் பற்றையும், பயனில் கருத்தையும் த்யாகம் செய்வதுதான் ஸாத்விக த்யாகம் எனப்பட்டது. ஆகவே, அங்கு 'நான் கர்த்தா' என்ற அபிமானமின்மை கூறப்படவில்லை. ஆனால் கடமைகள் என்று கருதிச் செய்யத்தான் வேண்டுமென்று கர்மங்களைச் செய்யுமாறு வற்புறுத்தப்பட்டது. இதுதான் வேற்றுமை. இரண்டிற்கும் பயன் தத்வ ஞானத்தின் மூலம் பரமாத்மாவை அடைவதுதான். ஆகவே உண்மையில் இங்கே வேற்றுமை கிடையாது. அநுஷ்டிக்கும் முறையில் தான் வேறுபாடு.

**பொருத்தம்:** இங்கு ராஜஸ கர்மத்தின் இலக்கணம் கூறுகிறார்—

**यत्तु कामेप्सुना कर्म साहङ्कारेण वा पुनः।**
**क्रियते बहुलायासं तद्राजसमुदाहृतम्॥ २४॥**

**யத்து காமேப்ஸுநா கர்ம ஸாஹங்காரேண வா புந: ।**
**க்ரியதே பஹுலாயாஸம் தத்ராஜஸமுதாஹ்ருதம் ॥ 24 ॥**

**து** – ஆனால், **யத்** – எந்த, **கர்ம** – செயல், **பஹுலாயாஸம்** – கடுமையான உழைப்பினால் செய்யக் கூடியதோ, **புந:** – அப்படியே, **காமேப்ஸுநா** – போகங்களை விரும்புகின்றவனாலோ, **வா** – அல்லது, **ஸாஹங்காரேண** – அஹங்காரமுடையவனாலோ, **க்ரியதே** – செய்யப்படுகிறதோ, **தத்** – அந்தச் செயல், **ராஜஸம்** – ராஜஸம், **உதாஹ்ருதம்** – எனப்படுகிறது.

ஆனால் எந்தச் செயல் கடுமையான உழைப்பினால் நிறைவேறக் கூடியதோ அவ்வாறே போகப் பயனில் கருத்துடையவனாலோ அல்லது அஹங்காரமுடையவனாலோ செய்யப்படுகிறதோ அந்தச் செயல் ராஜஸம் எனப்படுகிறது.

**கேள்வி:** 'பஹுலாயாஸம் கர்ம' என்றால் எது? இந்த அடைமொழியின் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** சில கர்மங்களில் பலவிதமான க்ரியைகள் நிறைய விதிக்கப்படுகின்றன. உடலில் நான் என்ற அபிமானம் உள்ளதால் மனிதன் அக்கர்மங்களைச் சுமையாக நினைக்கிறான். எனவே மிகவும் முயற்சியுடனும், கஷ்டத்துடனும் செய்கிறான். இத்தகைய காம்ய கர்மங்களையும், உலகியல் செயல்பாடுகளையும் இங்கே 'பஹுலாயாஸம்' என்ற சொல்லால் குறிப்பிடுகிறார். இதன் மூலம் ஸாத்விக கர்மத்திற்கும் ராஜஸ கர்மத்திற்கும் உள்ள வேறுபாட்டைத் தெளிவாகப் பிரித்துக் காண்பிக்கிறார். ஸாத்விக கர்மம் செய்பவனுக்கு உடலில் 'தான்' என்ற அஹங்காரம் கிடையாது; கர்மங்களைப் புரியும் கர்த்தா நான் என்ற எண்ணமும் இராது. ஆகவே அவன் எதைச் செய்தாலும், உடலின் சோர்வோ, துன்பமோ மனதிற்குத் தெரிவதில்லை. ஆகவே, அவை கடினமான உழைப்போடு கூடியனவாக ஆகா. ஆனால் ராஜஸ கர்மத்தைச் செய்பவன், உடலில் தான் என்ற அஹங்காரம் கொள்வதால் உடல் உழைப்பினால் உடலுக்கு ஏற்படும் தளர்ச்சியையும், துன்பத்தையும் தானே அனுபவிப்பதாக நினைக்கிறான். ஆகவே ஒவ்வொரு செயலிலும் அவனுக்கு உழைப்பின் சிரமம் தெரிகிறது. மேலும் ஸாத்விக கர்மங்களைச் செய்பவன், சாஸ்த்ர முறைப்படியோ, உலக நோக்கிலோ வந்தமைந்த கடமைகளை மட்டும் ஆற்றுகிறானே தவிர, அவனால் கர்மங்கள் பெருகுவதில்லை. ஆனால் ராஜஸ கர்மம் செய்பவன் பற்றும், ஆசையும் கொண்டு, ஒவ்வொரு நாளும் புதுப்புதுக் கர்மங்களைச் செய்து பெருக்கிக் கொள்கிறான். அதனாலும் அவன் செய்பவையனைத்தும் பல்கிப் பெருகுவதால் அவற்றை 'பஹுலாயாஸம்' என்று கூறி, மிகுந்த கடின உழைப்பைத் தருகின்ற அத்தகைய கர்மங்களை ராஜஸம் என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'காமேப்ஸுநா' என்றால் யார்?

**பதில்:** புலன்கள் மூலம் அனுபவிக்கும் போகங்களில் மமகாரமும், பற்றும் கொண்டு, இடைவிடாது விதவிதமான போகங்களில் ஆசை கொள்பவன், செய்வதையெல்லாம், மனைவி, மக்கள், செல்வம், வீடு, மரியாதை, பெருமை, புகழ் என்ற இவ்வுலக-பரலோக போகங்களுக்காகவே செய்கிறான். 'காமேப்ஸு' தன்னலத்திலேயே நாட்டமுள்ள அத்தகைய மனிதனைக் குறிக்கிறது.

**கேள்வி:** 'வா' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** போகங்களை அடைவதற்காகச் செய்யப்படும் கர்மங்களும் ராஜஸம்தான். போகங்களில் விருப்பமில்லாவிட்டாலும், அஹங்காரத்துடன் செய்யப்படும் கர்மமும் ராஜஸம்தான். போக ஆசை, அஹங்காரம் இரண்டும் ஒருங்கே உள்ளவன் செய்வது ராஜஸம்தான் என்று சொல்லவும் வேண்டுமா? ஆனால் இவற்றில் ஒரு குறையோடு கூடி இருந்தாலும் அத்தகைய மனிதன் செய்யும் கர்மமும் ராஜஸம்தான் என்று வேறுபடுத்திக் காண்பிக்கிறார்.

**கேள்வி:** 'ஸாஹங்காரேண' என்பது யாரைக் குறிக்கிறது?

**பதில்:** உடலில் 'தான்' என்ற அஹங்காரம் கொண்டு, அஹங்காரத்துடன் ஒவ்வொரு செயலும் புரிந்து, 'இந்தச் செயலைச் செய்தவன் நான்தான். என்னைப்போல யார் உண்டு? நான் இதைச் செய்வேன், அதைச் செய்வேன்' என்ற எண்ணம் கொண்ட, வாய் வீச்சாளனை ஸாஹங்காரன் (அஹங்காரமுடையவன்) என்கிறார்.

**கேள்வி:** அந்தச் செயல் ராஜஸம் எனப்படும் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேற்குறித்த மனப்பாங்குடன் செய்யப்படும் கர்மம் ராஜஸம்; அதன் பயன் துக்கம் (14/16); ரஜோ குணம் கர்மங்களில் ஒட்டிக் கொள்வதால் மனிதனைப் பந்தப்படுத்துகின்றது (14/7); ஆகவே வீடுபேறு பெற விரும்புபவன் இத்தகைய கர்மங்களைச் செய்யக் கூடாது என்பது கருத்து.

**பொருத்தம். இனி தாமஸ கர்மத்தின் இலக்கணம் கூறுகிறார்—**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



अनुबन्धं क्षयं हिंसामनवेक्ष्य च पौरुषम्।
मोहादारभ्यते कर्म यत्तत्तामसमुच्यते॥ २५॥

**அநுப₃ந்த₄ம் க்ஷயம் ஹிம்ஸாமநவேக்ஷ்ய ச பௌருஷம் ।**

**மோஹாத₃ரப்₄யதே கர்ம யத்தத்தாமஸமுச்யதே ॥ 25 ॥**

**யத் கர்ம** – எந்தச் செயல், **அநுப₃ந்த₄ம்** – விளைவையும், **க்ஷயம்** – இழப்பையும், **ஹிம்ஸாம்** – துன்பத்தையும், **பௌருஷம் ச** – திறமையையும், **அநவேக்ஷ்ய** – ஆராயாமல், **மோஹாத்** – வெறும் அஞ்ஞானத்தினால், **ஆரப்₄யதே** – தொடங்கப்படுகிறதோ, **தத்** – அந்த கர்மம், **தாமஸம்** – தாமஸம், **உச்யதே** – என்று கூறப்படுகிறது.

எந்தச் செயல் விளைவையும் இழப்பையும் துன்பத்தையும் திறமையையும் ஆராயாமல் வெறும் அஞ்ஞானத்தினால் தொடங்கப்படுகிறதோ அந்தக் கர்மம் தாமஸம் என்று கூறப்படுகிறது.

**கேள்வி:** *விளைவு, இழப்பு, துன்பம், திறமை இவற்றை ஆராய்வது என்றால் என்ன? ஆராயாமல் அஞ்ஞானத்தினால் கர்மம் தொடங்கப்படுவது என்றால் என்ன?*

**பதில்:** எந்தக் கர்மத்தையும் ஆரம்பிப்பதற்கு முன் 'எண்ணித் துணிக கருமம்' என்கிறார். இச்செயலினால் ஏற்படக்கூடிய எதிர்கால விளைவு என்ன? எவ்விதமான ஸுகம் ஏற்படும்? என்ன துன்பம் நேரும் என்று அதன் விளைவைச் சிந்திக்க வேண்டும். இந்தக் கார்யத்திற்கு இவ்வளவு தொகை செலவழியும்; இவ்வளவு வலிமை கொண்டு செயலாற்ற வேண்டும்; இவ்வளவு நேரம் ஆகும்; இந்த அளவு தர்மத்திற்குக் குறைவு ஏற்படும்; மேலும் என்னென்ன கேடுகள் விளையும் என்று இழப்புகள் பற்றியும் யோசிக்க வேண்டும். இச்செயலால் இவர்க்கும், ப்ராணிகளுக்கும் இங்ஙனமே துன்பம் நேரும், இவர்க்கோ, ப்ராணிக்கோ உயிர்க் கேடு விளையும் என்று துன்பத்தைப் பற்றியும் யோசிக்க வேண்டும். இந்தக் கார்யம் செய்ய இவ்வளவு திறமை வேண்டுமே, அது நம்மிடம் உள்ளதா என்று திறமை பற்றியும் ஆலோசிக்க வேண்டும். இவ்விதம் விளைவு, இழப்பு, துன்பம், திறமை – இவை பற்றியோ, இவற்றில் ஏதாவது ஒன்றைப் பற்றியோ கூட ஆராயாமல், 'எது நடக்குமோ நடக்கட்டும், பார்ப்போம்' என்று தகாத துணிவோடு, அஞ்ஞானத்தினால் ஒரு செயலை ஆரம்பித்து விடுவதுதான் விளைவு, இழப்பு, துன்பம், திறமைகளை ஆலோசியாமல் அஞ்ஞானத்தினால் செய்ய ஆரம்பிப்பது என்பதாகும்.

**கேள்வி:** *அது தாமஸ கர்மம் எனப்படும் என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** இவ்விதம் ஆலோசியாமல் தொடங்கப்படும் செயல் தாமஸ குணத்தின் செயலான மோஹத்தினால் ஆரம்பிக்கப்படுவது. ஆகவே அது தாமஸம் எனப்படுகிறது. தாமஸ கர்மத்தின் பயன் அஞ்ஞானம்; அதாவது பன்றி, நாய், மரம் முதலிய அறிவற்ற பிறவிகளில் பிறப்பு அல்லது நரகத்தை அடைவது *(14/18)* என்று சொல்லப்பட்டுள்ளது. ஆகவே மேன்மையை விரும்புபவன் ஒரு நாளும் இவ்விதக் கர்மத்தைச் செய்யக் கூடாது.

பொருத்தம்: **இனி ஸாத்விக கர்த்தாவின் இலக்கணம் கூறுகிறார்—**

मुक्तसङ्गोऽनहंवादी धृत्युत्साहसमन्वितः।
सिद्ध्यसिद्ध्योर्निर्विकारः कर्ता सात्त्विक उच्यते॥ २६॥

***முக்தஸங்கோ₃ऽநஹம்வாதீ₃ த்₄ருத்யுத்ஸாஹஸமந்வித: ।***

***ஸித்₃த்₄யஸித்₃த்₄யோர்நிர்விகார: கர்தா ஸாத்த்விக உச்யதே ॥ 26 ॥***

***முக்தஸங்க₃:*** – பற்றற்றவனாகவும், ***அநஹம்வாதீ₃*** – நான் என்ற அஹங்காரச் சொல்லைக் கூறாதவனாகவும், ***த்ருதி உத்ஸாஹ ஸமந்வித:*** – உறுதியும், ஊக்கமும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உடையவனாகவும், **ஸித்தி₄ அஸித்த்₄யோ:** – செயல் கைகூடுதல், கைகூடாமை இவற்றில், **நிர்விகார:** – மகிழ்ச்சி, துயரம் முதலிய மாறுபாடற்றவனாகவும் இருக்கின்ற, **கர்தா** – அந்த கர்த்தா, **ஸாத்த்விக:** – ஸாத்விகன், **உச்யதே** – என்று கூறப்படுகிறான்.

பற்றற்றவனாகவும், நான் என்ற அஹங்காரத்தைக் காட்டும் சொல்லைக் கூறாதவனாகவும், உறுதியும், ஊக்கமும் உடையவனாகவும், செயல் கைகூடுதல், கைகூடாமை இவற்றில் மகிழ்ச்சி, துயரம் முதலிய மாறுபாடற்றவனாகவும் இருக்கின்ற அந்த கர்த்தா ஸாத்விகன் எனப்படுகிறான்.

**கேள்வி:** *'முக்தஸங்க:' என்றால் யார்?*

**பதில்:** கர்மங்களிலும், அதன் பயன்களான எல்லா போகங்களிலும் சிறிதும் பற்று வைத்துக் கொள்ளாதவன்; அதாவது மனம், உடல், புலன்களால் ஆற்றப்படும் எல்லாச் செயல்களிலும், அவற்றின் பயன்களான பெருமை, மானம், புகழ், மனைவி, மக்கள், செல்வம், வீடு முதலிய இவ்வுலக, பரலோக போகங்கள் அனைத்திலும் சிறிதுகூட மமகாரம், பற்று, ஆசையற்றவனே 'முக்தஸங்க:' எனப்படுகிறான்.

**கேள்வி:** *'அநஹம்வாதீ' என்றால் என்ன பொருள்?*

**பதில்:** மனம், புத்தி, உடல், புலன்கள் எனும் பொருளனைத்தும் ஆத்மா அல்ல என்ற உண்மையைத் தெரிந்து கொண்டுவிட்டதாலும், எந்த ஒரு செயலிலும் 'நான் கர்த்தா' என்ற அபிமானம் வைக்காத காரணத்தாலும் அஸுரஸ்வபாவம் உடையவர்கள் போல, நான் இந்த ஆசையை நிறைவேற்றிக் கொண்டுவிட்டேன்; இதை நிறைவேற்றிக் கொள்வேன்; நானே ஈசுவரன்; நானே அனுபவிக்கிறவன்; நான் பலம்மிக்கவன்; நான் ஸுகப்படுகிறேன்; என்னைப் போல வேறு யார் உண்டு? நான் யக்ஞம் செய்வேன்; தானமளிப்பேன் *(16/13–15)* என்று அஹங்காரத்துடன் பேசாதவன். மாறாக நேர்மையுடன் அபிமானமற்றுப் பேசுபவன். அவனே 'அநஹம்வாதீ'. நான் என்ற அஹங்காரச் சொல்லைக் கூறாதவன் என்று பொருள்.

**கேள்வி:** *'த்ருத்யுத்ஸாஹஸமந்வித:' என்றால் யார்? 'த்ருதி', 'உத்ஸாஹம்' என்றால் எவை? இவற்றை உடையவனின் இலக்கணங்கள் யாவை?*

**பதில்:** சாஸ்த்ரங்களில் ஸ்வதர்மம் என்று விதிக்கப்பட்ட கர்மங்களை ஆற்றும்போது, எவ்வளவு பெரிய இடையூறுகள் நேர்ந்தாலும், அச்செயல்களைக் கைவிடாது முயற்சியுடன் உறுதியோடு செய்வது 'த்ருதி' ஆகும். அப்படிக் கர்மங்களைச் செய்யும்போது அவை சரிவர நிறைவேறாவிட்டாலும்கூட 'எனக்குப் பயனை அடைய விருப்பம் இல்லை. நான் எதற்காகக் கர்மம் செய்யவேண்டும்?' என்று அலக்ஷ்யம் செய்யாது ச்ரத்தையுடன் செய்யவேண்டும். அதாவது செயலின் பயனை அடைந்தவனுக்கு ஒப்பாகவும், பயனை எதிர்பார்த்துச் செயலாற்றுபவனைப் போன்றும் ச்ரத்தையுடன் செய்யவேண்டும். அதுவே 'உத்ஸாஹம்' (உற்சாகமாக இருப்பது). இவ்விரண்டு பண்புகளும் அமைந்தவன் எவ்வளவு பெரிய இடையூறுகள் நேர்ந்தாலும், தன் கடமையிலிருந்து வழுவ மாட்டான். மேலும் மிகுந்த ஊக்கத்துடன் எல்லா இடையூறுகளையும் கடந்து, தனது கடமைகளை விடாப்பிடியாக, உறுதியுடன் ஆற்றுவான். இதுதான் அவனுடைய இலக்கணம்.

**கேள்வி:** *'ஸித்த்யஸித்த்யோ: நிர்விகார:' என்றால் யார்?*

**பதில்:** ஸாதாரண மனிதன் தன் விருப்பம் நிறைவேறுவதற்கு ஒரு ஸாதனம் என்று ஒரு கர்மத்தில் பற்றுக் கொண்டு, அதைச் செய்து முடித்தால் அதில் அவனுக்குப் பெருமகிழ்ச்சி ஏற்படுகிறது. ஏதாவது இடையூறு ஏற்பட்டு அச்செயல் நிறைவேறாமல் தடைப்பட்டால், அவனுக்கு மிகுந்த வருத்தம் ஏற்படுகிறது. இவ்விதம் செயல் கைகூடுதல்–கைகூடாமை இவற்றினால் உள்ளத்தில் இன்னும் பலவித மாற்றங்கள் ஏற்படுகின்றன. அஹங்காரம், மமகாரம், பற்று, பயனில் கருத்து இவை இல்லாமையினால், அவ்வாறு கர்மம் செய்பவன் கர்மம் நிறைவேறினாலும் மகிழ்ச்சி அடைவதில்லை; அது இடையூறினால் தடைப்பட்டாலும் வருத்தம் அடையாமல் இரு வேறு சூழ்நிலைகளிலும் ஸமமாக, ஒரே மாதிரியாக இருப்பான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இவ்வாறு எவ்வித மனவிகாரங்களும் இன்றி, செயல் நிலையிலும், முடிவு நிலையிலும் ஸமமான மனப்பாங்கு உடையவனை 'ஸித்தி, அஸித்திகளில் மாறுபாடற்றவன்' என்கிறார்.

**கேள்வி:** 'அந்தக் கர்த்தா ஸாத்விகன் எனப்படுவான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேற்குறித்த பண்புகள் முற்றிலும் நிரம்பப் பெற்றவன் முழுமையான ஸாத்விகன். அவற்றில் ஏதேனும் ஒரு பண்பு குறைந்தாலும், அவன் அந்த அளவு ஸாத்விகத்தன்மை குறைந்தவனே. இத்தகைய ஸாத்விக மனப்பாங்கு பரமாத்மாவைப் பற்றிய தத்வ ஞானத்தைத் தெளிவு படுத்தும். ஆகவே முக்தியை விரும்புபவன் ஸாத்விக கர்த்தாவாக ஆக வேண்டும்.

**பொருத்தம்:** ராஜஸ கர்த்தாவின் இலக்கணம் கூறுகிறார்—

**रागी कर्मफलप्रेप्सुर्लुब्धो हिंसात्मकोऽशुचिः ।**
**हर्षशोकान्वितः कर्ता राजसः परिकीर्तितः ॥ २७ ॥**

**ராகீ₃ கர்மப₂லப்ரேப்ஸுர்லுப்₃தே₄ா ஹிம்ஸாத்மகோऽஶுசி: ।**

**ஹர்ஷஶோகாந்வித: கர்தா ராஜஸ: பரிகீர்தித: ॥ 27 ॥**

***ராகீ₃*** – பற்றுடன் கூடியவன், ***கர்மப₂லப்ரேப்ஸு:*** – செயலின் பயனை விரும்புபவன், ***லுப்₃த₄:*** – பேராசையுள்ளவன், ***ஹிம்ஸாத்மக:*** – பிறரைத் துன்புறுத்தும் தன்மை கொண்டவன், ***அஶுசி:*** – தூய்மையற்ற நடத்தையுள்ளவன், ***ஹர்ஷஶோகாந்வித:*** – மகிழ்ச்சியாலும், துயரத்தாலும் பாதிக்கப்படுபவன். (இத்தகைய), ***கர்தா*** – கர்த்தா, ***ராஜஸ:*** – ராஜஸன், ***பரிகீர்தித:*** – என்று அழைக்கப்படுகிறான்.

பற்றுடன் கூடியவன், செயலின் பயனை விரும்புபவன், பேராசையுள்ளவன், பிறரைத் துன்புறுத்தும் தன்மை கொண்டவன், தூய்மையற்ற நடத்தையுள்ளவன், மகிழ்ச்சியாலும் துயரத்தாலும் பாதிக்கப்படுபவன் – இத்தகைய கர்த்தா ராஜஸன் என்று அழைக்கப்படுகிறான்.

**கேள்வி:** 'ராகீ' என்றால் யார்?

**பதில்:** கர்மங்களிலும், அவற்றின் பயன்களான இவ்வுலக-பரலோக போகங்களிலும், மமகாரமும், பற்றும் உள்ளவன் – அதாவது எது செய்தாலும் அதிலும், அதன் பயனிலும் பற்று உள்ளவன் – 'ராகீ'.

**கேள்வி:** 'கர்மபலப்ரேப்ஸு:' என்றால் யார்?

**பதில்:** கர்மங்களின் பயன்களான மனைவி, மக்கள், செல்வம், வீடு, கௌரவம், மரியாதை, புகழ் முதலிய இவ்வுலக-பரலோக போகங்கள் எல்லாவற்றிலும் விருப்பம் கொண்டு, எந்தக் கர்மத்தைச் செய்தாலும், அந்த போகங்களை அடைவதற்காகவே செய்வான். தன்னலத்திலேயே குறியாயுள்ள இத்தகைய மனிதர்களை 'கர்மபலப்ரேப்ஸு:' என்னும் சொல் குறிக்கிறது.

**கேள்வி:** 'லுப்த:' என்றால் யார்?

**பதில்:** செல்வம் முதலிய பொருட்களில் ஆசை கொண்டு, ந்யாயமாகச் செலவு செய்ய வேண்டிய ஸந்தர்பங்களிலும் தன் சக்திக்கேற்றவாறு பொருளைச் செலவு செய்யத் தயங்குபவன்; ந்யாயம் எது, அந்யாயம் எது என்று ஆராயாமல் எப்பொழுதும் பொருளைச் சேர்ப்பதிலேயே பேராசை பிடித்துப் பிறருடைய சொத்தையும் கவர்ந்து கொள்ளும் அளவுக்குப் பேராசை கொண்டு அவ்வாறே செயல்படுபவன் 'லுப்த:' (பேராசை பிடித்தவன்) எனப்படுவான்.

**கேள்வி:** 'ஹிம்ஸாத்மக:' என்றால் யார்?

**பதில்:** எந்த விதத்திலாவது பிறருக்குத் துன்பம் செய்வதே இயல்பாக உடையவன்; தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக விருப்பு-வெறுப்புடன் செயல் புரிபவன்;

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அதனால் பிறருக்கு ஏற்படும் கஷ்டத்தைச் சிறிதும் மதியாதவன்; தன் ஸுகம், தன் போகம் இவற்றிற்காகப் பிறருக்குத் துன்பம் அளிப்பவன் – இவ்வாறு துன்பம் தருவதிலேயே ஈடுபட்ட மனிதன் 'ஹிம்ஸாத்மக:' எனப்படுவான்.

**கேள்வி:** 'அஶுசி:' என்றால் யார்?

**பதில்:** உடல் தூய்மையும், நன்னடத்தையும் அற்றவன். அதாவது சாஸ்த்ர முறைப்படி நீர், மண் இவை கொண்டு உடலையும், உடைகளையும் தூய்மைப்படுத்திக் கொள்ளாதவன், மேலும் மற்றவர்களுடன் உரிய முறையில் நடந்து கொண்டு நன்னடத்தை பேணாது இருப்பவன். போகங்களை அனுவிப்பதற்காக உடல் தூய்மையையும், நல்லொழுக்கத்தையும் விட்டவன் 'அஶுசி:' (தூய்மையற்ற நடத்தையுடையவன்) ஆவான்.

**கேள்வி:** 'ஹர்ஷஶோகாந்வித:' என்றால் யார்?

**பதில்:** செயலிலும், அதன் பயனிலும் விருப்பு–வெறுப்புக் கொண்டுள்ளமையினால், ஒவ்வொரு செயல் புரியும்போதும், ஒவ்வொரு நிகழ்ச்சியிலும், அதற்கேற்ப, சில சமயம் மகிழ்ச்சியும், சில சமயம் துயரமும் அடைபவன். இவ்வாறு மனதில், மகிழ்ச்சியும், துயரமும் தோன்றிக் கொண்டே இருக்கும் மனிதனை 'ஹர்ஷஶோகாந்வித:' என்கிறார்.

**கேள்வி:** அந்தக் கர்த்தா 'ராஜஸன்' எனப்படுவான் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேற்குறித்த எல்லாவிதமான மனப்பாங்குகளுடனோ, அவற்றில் சிலவற்றுடனோ செயல் புரிபவன் 'ராஜஸ கர்த்தா'. இத்தகைய 'ராஜஸ கர்த்தா' பிறவிகள் பல எடுத்து மரித்துக் கொண்டவண்ணமே இருப்பான். ஸம்ஸார சக்ரத்திலிருந்து விடுபட மாட்டான். எனவே முக்தியை விரும்புபவன் ராஜஸ கர்த்தாவாக இருக்கக் கூடாது.

**பொருத்தம்:** தாமஸ கர்த்தாவின் இலக்கணம் கூறுகிறார்—

**अयुक्तः प्राकृतः स्तब्धः शठो नैष्कृतिकोऽलसः।**
**विषादी दीर्घसूत्री च कर्ता तामस उच्यते॥ २८॥**

**அயுக்த: ப்ராக்ருத: ஸ்தப்₃த₄: ஶடோ₂நைஷ்க்ருதிகோऽலஸ: ।**
**விஷாதீ₃ தீ₃ர்க₄ஸூத்ரீ ச கர்தா தாமஸ உச்யதே ॥ 28 ॥**

**அயுக்த:** – கட்டுப்படுத்தப்படாத மனமும், புலன்களும் உடையவனும், **ப்ராக்ருத:** – அறிவு முதிர்ச்சியடையாதவனும், **ஸ்தப்₃த₄:** – கர்வமுடைய்வனும், **ஶட:** – வஞ்சகமுடையவனும், **நைஷ்க்ருதிக:** – பிறருடைய வாழ்க்கையைக் கெடுப்பவனும், **விஷாதீ₃** – கவலை கொண்டவனும், **அலஸ:** – சோம்பேறியும், **தீ₃ர்க₄ஸூத்ரீ ச** – காலம் கடத்துபவனுமான, **கர்தா** – கர்த்தா, **தாமஸ:** – தாமஸன் (என்று), **உச்யதே** – கூறப்படுகிறான்.

கட்டுப்படுத்தப்படா மனமும், புலன்களும் உடையவனும், அறிவு முதிர்ச்சியடையாதவனும் கர்வமுடையவனும், வஞ்சகனும், பிறருடைய வாழ்க்கையைக் கெடுப்பவனும், கவலை கொண்டவனும், சோம்பேறியும், காலம் கடத்துபவனுமான கர்த்தா தாமஸன் என்று கூறப்படுகிறான்.

**கேள்வி:** 'அயுக்த:' என்றால் யார்?

**பதில்:** மனமும், புலன்களும் தன்வசப்படாமல், அவற்றிற்கு அடிமைப்பட்டுள்ளவன்; நம்பிக்கையும், ஆஸ்திகபாவமும் இல்லாதவன் 'அயுக்த:' (கட்டுப்படாத மனமுடையவன்) எனப்படுவான்.

**கேள்வி:** 'ப்ராக்ருத:' என்றால் யார்?

**பதில்:** எவ்விதத்திலும் முறையான பயிற்சி பெறாதவன், குழந்தையைப் போன்ற பேதை, தான் என்ன செய்யவேண்டுமென்றே அறியாதவன் (16/7), உள்ளமும், புலன்களும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



சீர்படாதவன் – இத்தகைய பண்படாத இயல்பிலேயே அறிவு முதிர்ச்சியடையாதவன் 'ப்ராக்ருத:' எனப்படுகிறான்.

**கேள்வி:** 'ஸ்தப்த:' என்றால் யார்?

**பதில்:** மிகக் கொடுமையான இயல்புடன் சிறிதுகூடப் பணிவும் இல்லாமல், எப்போதும் கர்வம் பிடித்து அலைபவன், பிறர் எவரையும் மதியாதவன் – இத்தகைய கர்வம் மிக்கவன் 'ஸ்தப்த:' எனப்படுவான்.

**கேள்வி:** 'ஶட:' என்றால் யார்?

**பதில்:** சூழ்ச்சியினால் பிறரை ஏமாற்றுபவன்; வெறுப்பை மறைத்துக் கொண்டு, மறைமுகமாகப் பிறருக்குத் தீங்கு செய்பவன்; மனதிற்குள் பிறருக்குத் தீங்கு செய்வதற்காகவே திட்டம் தீட்டுபவன் – இத்தகைய கள்ளத்தனமுடையவனை 'ஶட:' என்கிறார்.

**கேள்வி:** 'நைஷ்க்ருதிக:' என்றால் யார்?

**பதில்:** பிறர் வாழ்வைப் பலவாறும் கெடுப்பவன், பிறர் பிழைப்பிற்கு இடைஞ்சல் செய்பவன் – இப்படிப்பட்ட இயல்பு உடையவன் 'நைஷ்க்ருதிக:' எனப்படுகிறான்.

**கேள்வி:** 'அலஸ:' என்றால் யார்?

**பதில்:** இராப்பகல் எப்பொழுதும் படுத்துக் கொண்டே இருக்கும் இயல்பு கொண்டவன்; சாஸ்த்ர விதிப்படியோ அல்லது உலகியலிலோ உரிய கடமைகளை ஆற்றாதவன்; உத்ஸாஹமற்றவன்; உள்ளத்திலும், புலன்களிலும் சோம்பல் நிறைந்தவன் – இவ்வாறு சோம்பித் திரிபவன் 'அலஸ:' எனப்படுகிறான்.

**கேள்வி:** 'விஷாதீ' என்றால் யார்?

**பதில்:** பகல், இரவு எப்பொழுதும் வருந்திக் கொண்டு முடிவற்ற கவலையே கொண்டவன் (16/11). இவ்வாறு கவலையே குடிகொண்டவன் 'விஷாதீ' எனப்படுகிறான்.

**கேள்வி:** 'தீர்கஸூத்ரீ' என்றால் யார்?

**பதில்:** தொடங்கிய செயலை முடிக்காமலேயே இன்று செய்வோம், நாளை செய்துவிடலாம், பிறகு செய்தால் போயிற்று என்று ஒத்திப் போட்டுக் கொண்டே போகிறவன்; ஒரே நாளில் ஆவதைப் பல காலம் தள்ளிக் கொண்டு காலத்தை வீணாக்குபவன்; ஒரு வேலையையும் செய்து முடிக்காமல் காலம் கடத்தும் வீணன் 'தீர்கஸூத்ரீ' (காலம் கடத்துபவன்) எனப்படுவான்.

**கேள்வி:** 'இத்தகைய கர்த்தா தாமஸன் எனப்படுவான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேற்குறித்த இழி குணங்கள் முற்றும் தமோ குணத்தின் விளைவுகள். மேலே இத்தகைய இழி குணங்கள் அனைத்தும் இருந்தாலும், சில இருந்தாலும் அவனை 'தாமஸ கர்த்தா' என்று அறியவேண்டும். தாமஸர்கள் வீழ்ச்சி அடைவார்கள் (14/18). பலவிதமான விலங்கு, பறவை, புழு, பூச்சிகளாக ஈனப்பிறவிகளில் பிறப்பார்கள் (14/15). ஆகவே மேன்மை விரும்புபவர், தம்மிடம் தாமஸப் பண்புகள் ஒன்றும் தலையெடுக்காமல் தங்களைக் காத்துக் கொள்ளவேண்டும்.

**பொருத்தம்:** இவ்விதம் தத்வஞானத்திற்கு உதவியாக உள்ள ஸாத்விகத் தன்மையைப் பெறுவதற்காகவும், அதற்கு மாறான ராஜஸ, தாமஸத் தன்மைகளை விலக்குவதற்காகவும், கர்மத்தின் தூண்டுதல், கர்மங்களின் அமைப்பு ஆகியவற்றில் ஞானம், கர்மம், கர்த்தா இவற்றின் ஸாத்விக, ராஜஸ, தாமஸ வேறுபாடுகளை வரிசையாகக் கூறி, அடுத்ததாக புத்தி, த்ருதி இவற்றின் ஸாத்விக, ராஜஸ, தாமஸமென்னும் மூவகைகளைக் கூற ஆரம்பிக்கிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**बुद्धेर्भेदं धृतेश्चैव गुणतस्त्रिविधं शृणु।**
**प्रोच्यमानमशेषेण पृथक्त्वेन धनञ्जय॥२९॥**

**புத்₃தே₄ர்பே₄த₃ம் த்₄ருதேஸ்சைவ கு₃ணதஸ்த்ரிவித₄ம் ஸ்ருணு ।**
**ப்ரோச்யமாநமஸேஷேண ப்ருத₂க்த்வேந த₄நஞ்ஜய ॥ 29 ॥**

*த₄நஞ்ஜய – அர்ஜுன! (இப்பொழுது நீ), கு₃ணத: ஏவ – குணங்களுக்கேற்பவே, பு₃த்₃தே₄: – புத்திக்கும், த்₄ருதே: ச – மன உறுதிக்கும் (ஏற்படக் கூடிய), த்ரிவித₄ம் – மூன்றுவிதமான, பே₄த₃ம் – பாகுபாட்டை, அஸேஷேண – முழுமையாகவும், ப்ருத₂க்த்வேந – பகுதி பகுதியாகவும், (மயா – என்னால்), ப்ரோச்யமாநம் – கூறப்போவதை, ஸ்ருணு – கேள்.*

*அர்ஜுன! இப்பொழுது நீ முக்குணங்களுக்கேற்பவே புத்திக்கும் மன உறுதிக்கும் ஏற்படும் மூன்றுவிதமான பாகுபாட்டை முழுமையாகவும் தனித்தனியாகவும் நான் கூறப்போவதைக் கேள்.*

**கேள்வி:** இந்த ச்லோகத்தில் 'புத்தி', 'த்ருதி' என்ற சொற்கள் எந்தத் தத்வத்தைக் குறிக்கின்றன? குணங்களுக்கு ஏற்றவாறு அவை மும்மூன்றுவிதமாக வேறுபடும் என்பதை முழுமையாகவும் தனித்தனியாகவும் கூறுகிறேன் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இங்கு 'புத்தி' என்றால் தீர்மானம் செய்யும் தனித்திறன். இதையே உள்ளம் (அந்தக்கரணம்) என்றும் கூறுகிறார். 20,21,22வது ச்லோகங்களில் கூறப்பட்ட ஞானத்தின் மூன்று வேறுபாடுகள் புத்தியில் விளைபவை; ஞானம் புத்தியிலிருந்து உண்டாகும்; அதாவது ஞானம் புத்தியின் செயல்பாடாகவே உள்ளது. மேலும் இந்த புத்திதான் அந்த ஞானம் தோன்றுவதற்குக் காரணம். 18வது ச்லோகத்தில் ஞானம் என்பது கர்மத்தைத் தூண்டுவனவற்றுள் ஒன்றாக வருகிறது. புத்தியின் ஏற்புத் திறன் கர்ம அமைப்பில் 'கரணம்' என்றும் கூறப்பட்டது. இதுதான் ஞானத்திற்கும், புத்திக்கும் உள்ள வேறுபாடு. இங்கே கர்மத்தின் அமைப்பில் விளக்கப்பட்ட கரணங்களின் ஸாத்விக, ராஜஸ, தாமஸப் பிரிவுகளை நன்கு விளக்குவதற்காகத் தலையாய கரணம் (கருவி) ஆகிய புத்தியின் மூன்று வேற்றுமைகளைக் கூறுகிறார்.

'த்ருதி' என்றால் தாங்கும் சக்தி – அதாவது உறுதி. இதுவும் புத்தியின் செயல்பாடுதான். மனிதன் எந்தக் கார்யத்தையும், கருத்தையும் இந்த த்ருதி என்ற சக்தியினால்தான் உறுதியுடன் தாங்குகிறான். ஆகவே இதுவும் கரணம் என்பதில் அடக்கப்பட்டுள்ளது. 26வது ச்லோகத்தில் ஸாத்விக கர்த்தாவின் இலக்கணத்தில் த்ருதி என்ற சொல் வருகிறது. ஆகவே த்ருதி என்பது ஸாத்விகமாகத்தான் இருக்கும் என்று எண்ண வாய்ப்பு உள்ளது. ஆனால் உண்மை அதுவன்று. அந்த 'உறுதி'யும் மூவகைப்படும் என்று இங்கே அந்த மூன்று வகைகளை விவரிக்கிறார்.

"குணங்களுக்கு ஏற்றவாறு புத்தியும், உறுதியும் மும்மூன்று வகைப்படும். இதை முழுமையாகப் பிரித்துச் சொல்கிறேன். புத்தி தத்வமும், த்ருதி தத்வமும் ஸத்வ, ரஜஸ், தமோ குண வேறுபாட்டினால் மூவகை இலக்கணங்களால் பிரித்தறியப்பட வேண்டியவை. அதன் மூலம் ஸாத்விக புத்தியையும், ஸாத்விக உறுதியையும் ஏற்றுக் கொள்ளவேண்டும். ராஜஸ, தாமஸமான புத்தியையும், த்ருதியையும் (உறுதியையும்) விட்டுவிட வேண்டும். இவற்றின் இலக்கணங்கள் அனைத்தையும் கவனமாகக் கேட்டுத் தெரிந்து கொள்" என்கிறார் பகவான்.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் புத்தி, உறுதி இவற்றின் ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்ற மூவகை வேற்றுமைகளைக் கூறுவதாகச் சொன்னதை அடுத்து, இங்கு ஸாத்விக புத்தியின் இலக்கணம் கூறுகிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**प्रवृत्तिं च निवृत्तिं च कार्याकार्ये भयाभये।**
**बन्धं मोक्षं च या वेत्ति बुद्धिः सा पार्थ सात्त्विकी ॥ ३० ॥**

**ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச கார்யாகார்யே ப₄யாப₄யே ।**

**ப₃ந்த₄ம் மோக்ஷம் ச யா வேத்தி பு₃த்₃தி: ஸா பார்த₂ ஸாத்த்விகீ ॥ 30 ॥**

**பார்த₂** – அர்ஜுன! **யா** – எந்த (புத்தி), **ப்ரவ்ருத்திம்** – ப்ரவ்ருத்தி மார்க்கத்தையும், **நிவ்ருத்திம் ச** – நிவிருத்தி மார்க்கத்தையும், **கார்யாகார்யே** – செய்யத்தகுந்தவற்றையும், செய்யத்தகாதனவற்றையும், **ப₄யாப₄யே ச** – பயத்தையும், பயமின்மையையும், **ப₃ந்த₄ம் ச** – தளையையும், **மோக்ஷம்** – மோக்ஷத்தையும் (விடுதலையையும்), **வேத்தி** – உண்மையாக அறிகிறதோ, **ஸா பு₃த்₃தி:** – அந்த புத்தி, **ஸாத்த்விகீ** – ஸாத்விகமானது.

அர்ஜுன! எந்த புத்தி ப்ரவிருத்தி மார்க்கத்தையும், நிவிருத்தி மார்க்கத்தையும், செய்யத் தகுந்தது, செய்யத்தகாதது என்பதையும், பயத்தையும், பயமின்மையையும், தளையையும், மோக்ஷத்தையும் உண்மையாக அறிகிறதோ அந்த புத்தி ஸாத்விகமானது.

**கேள்வி:** 'ப்ரவ்ருத்தி மார்கம்' என்று எதை அழைக்கிறார்கள்? அதை உண்மையாக அறிவது எப்படி?

**பதில்:** இல்லறம், வானப்ரஸ்தம் முதலிய ஆசிரமங்களில் இருந்து கொண்டு மமகாரம், பற்று, அஹங்காரம், பயன் விழைதல் இவற்றைத் துறந்து, பரமாத்மாவை அடைவதற்காக அவரை உபாஸிப்பதும், சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட யக்ஞம், தானம், தவம் முதலிய மங்கள கர்மங்களைப் புரிவதும், தனது வர்ண, ஆசிரம தர்மத்திற்கு ஏற்றவாறும், தன் பிழைப்பிற்கும், உடல் பேணுவதற்கும் தேவையான உண்பது, அருந்துவது முதலிய செயல்களை நிஷ்காமமாகச் செய்வதும், இவையனைத்தும் பரமாத்மாவை அடையச் செய்யும் மார்க்கம் அதாவது ப்ரவ்ருத்தி மார்க்கம். ஜனகர், அம்பரீஷர் போன்ற அரசர்களும், வஸிஷ்டர், யாக்ஞவல்க்யர் முதலான ரிஷிகளும் அறிந்தவாறு நன்கு அறிந்து கொண்டு, அதற்கு ஏற்ப நடப்பதுதான் ப்ரவ்ருத்தி மார்க்கத்தை உண்மையாக அறிவதாகும்.

**கேள்வி:** 'நிவ்ருத்தி மார்கம்' என்றால் என்ன? அதை உள்ளபடியே அறிவது எப்படி?

**பதில்:** எல்லாக் கர்மங்களையும், போகங்களையும் உள்ளும், புறமும் அறவே துறந்து, ஸந்யாஸ ஆசிரமத்தில் இருந்து கொண்டு, பரமாத்மாவை அடைவதற்காக, எல்லாவித உலகியல் சிக்கல்களிலிருந்தும் விரக்தி அடைந்து, ஒதுங்கி நின்று அஹங்காரம், மமகாரம், பற்று இவற்றை விலக்கிப் புலனடக்கம், மனவடக்கம், பொறுமை முதலிய வழிகளைக் கைக் கொண்டு இடைவிடாது பகவானைப் பற்றிக் கேட்பது, சிந்திப்பது, த்யானம் செய்வது அல்லது பஜனை பண்ணுவது, நினைந்துருகுவது, கீர்த்தனம் செய்வது முதலியவற்றிலேயே ஈடுபட்டிருப்பது பரமாத்மாவை அடையச் செய்யும் நிவ்ருத்தி மார்க்கம் (உலகியல் செயலிலிருந்து ஒய்வு பெறுதல்). ஸ்ரீஸநகாதி நால்வர், நாரதர், ரிஷபதேவர், சுகாசார்யர் ஆகியோர் போன்று, இதைப் பற்றிய உண்மையறிந்து, அதன்படி நடப்பது நிவ்ருத்தி மார்க்கத்தை உள்ளபடியே அறிவதாகும்.

**கேள்வி:** செய்யத்தக்கது எது? செய்யத்தகாதது எது? இவற்றை உள்ளபடி அறிவது என்றால் என்ன?

**பதில்:** வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை, இருக்கும் இடம், நேரம் இவற்றிற்கு ஏற்ப எந்த நேரத்தில் எதைச் செய்ய வேண்டுமோ, அதுவே அவனுக்கு அப்போது செய்யத்தக்கது ஆகும். எந்த நேரத்தில் எவன் எதைச் செய்யக்கூடாதோ அல்லது அவன் அதைச் செய்யாமல் விடுவதே உசிதமோ, அது அவனால் செய்யத்தகாதது ஆகும். இந்த

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இரண்டையும் நன்கு அறிந்து கொள்ளவேண்டும். அதாவது ஏதாவது செய்ய நேர்ந்தால் இது ஒருவன் செய்யத் தகுந்ததா, செய்யத்தகாததா என்ற விஷயத்தில் உள்ளபடி தீர்மானம் செய்யவேண்டும் என்பது கருத்து.

**கேள்வி:** 'பயம்' என்றால் என்ன? 'அபயம்' என்றால் என்ன? இவற்றின் பொருளை அறிவது என்றால் எப்படி?

**பதில்:** துயரமளிக்கக் கூடிய ஏதாவது ஒரு பொருளோ, நிகழ்ச்சியோ நேர்ந்தால் அல்லது நேரும் என்று தோன்றினால், அப்பொழுது மனிதனுடைய உள்ளத்தில் தோன்றும் கலக்கமும், நடுக்கமும் பயம் (அச்சம்). இதற்கு மாறாக பயமற்று இருப்பதே அபயம் ஆகும். பயம் என்பது என்ன? அபயம் என்பது என்ன? மனிதனுக்கு எக்காரணத்தினால் பயம் ஏற்படுகிறது? அந்த பயம் நீங்கி அவன் அபய நிலையை அடைவது எப்படி என்பதை நன்கு அறிந்து பயமற்று இருப்பதே – இவற்றின் உண்மையை அறிவதாகும்.

**கேள்வி:** பந்தம் என்றால் என்ன? மோக்ஷம் என்றால் என்ன?

**பதில்:** நல்லதும், தீயதுமான கர்மங்களைச் செய்து கொண்டே இருப்பதால், அவற்றுடன் ஸம்பந்தப்பட்ட ஜீவன், தொன்றுதொட்டு இடைவிடாது தன் வசமிழந்து பிறப்பு, இறப்பு என்ற சுழலில் அகப்பட்டுக் கொள்வதே பந்தம் (தளை) எனப்படும். ஸத்ஸங்கத்தில் சேர்ந்து கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் முதலிய ஸாதனங்களில் ஏதாவது ஒன்றைக் கைக் கொண்டு பகவானுடைய அருளால் எல்லாவிதமான நல்லவும், தீயவுமான கர்மங்களின் கட்டிலிருந்தும் விடுபட்டு, பகவானை அடைவதுதான் மோக்ஷம் (விடுதலை).

**கேள்வி:** 'பந்தத்தையும், மோக்ஷத்தையும் உண்மையாக அறிவது' என்றால் என்ன?

**பதில்:** பந்தம் (தளை) என்றால் என்ன? எதனால் ஜீவனுக்குத் தளை ஏற்படுகிறது? எதனால் இந்தத் தளை மேலும் மேலும் இறுகுகிறது – இவ்விஷயங்களைப் பற்றி நன்கு தெரிந்து கொள்வதுதான் பந்தத்தைப் பற்றி அறிவதாகும். எந்தெந்த உபாயங்களால் மனிதன் தளையிலிருந்து விடுபட முடியும்? இவற்றை நன்கு அறிவதுதான் மோக்ஷத்தை (விடுதலையை) உள்ளபடி அறிவதாகும்.

**கேள்வி:** 'அந்த புத்திதான் ஸாத்விகம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எந்த புத்தியால் மேற்குறித்த விஷயங்களில் சரியான தீர்மானத்திற்கு வர முடிகிறதோ, இவற்றில் எந்த ஒன்றைப் பற்றியும் தீர்மானத்திற்கு வருவதில் அதற்குத் தவறுதலோ ஸந்தேஹமோ ஏற்படாதோ, தீர்மானிக்க வேண்டிய விஷயத்தில் உண்மையான தீர்மானத்தைச் செய்கிறதோ, அந்த புத்தி ஸாத்விகம் ஆகும். இவ்வாறு ஸாத்விக ஆராய்ச்சி செய்யக் கூடிய புத்தி, மனிதனை ஸம்ஸாரத் தளையிலிருந்து விடுதலை பெறச் செய்து பரமபதத்தை அடையச் செய்கிறது. ஆகவே மேன்மையை விரும்புகிறவன் தன் புத்தியை ஸாத்விகமாக ஆக்கிக் கொள்ள வேண்டும்.

**பொருத்தம்:** இனி ராஜஸ புத்தியின் இலக்கணம் கூறுகிறார்—

**यया धर्ममधर्मं च कार्यं चाकार्यमेव च।**
**अयथावत्प्रजानाति बुद्धिः सा पार्थ राजसी॥ ३१॥**

**யயா த₄ர்மமத₄ர்மம் ச கார்யம் சாகார்யமேவ ச ।**
**அயத₂ாவத்ப்ரஜாநாதி பு₃த்₃தி₄: ஸா பார்த₂ ராஜஸீ ॥ 31 ॥**

**பார்த₂** – பார்த்த! **யயா** – (மனிதன்) எந்த புத்தியினால், **த₄ர்மம் ச** – தர்மத்தையும், **அத₄ர்மம் ச** – அதர்மத்தையும், **கார்யம் ச** **அகார்யம் ஏவ** – செய்யத்தகுந்த கார்யத்தையும், செய்யத்தகாத கார்யத்தையும் கூட, **அயத₂ாவத்** – உள்ளபடியன்றி, **ப்ரஜாநாதி** – அறிகிறானோ, **ஸா** – அந்த, **பு₃த்₃தி₄:** – புத்தி, **ராஜஸீ** – ராஜஸம் எனப்படும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பார்த்த! மனிதன் எந்த புத்தியினால் தர்மத்தையும் அதர்மத்தையும் செய்யத்தகுந்த கார்யத்தையும், செய்யத்தகாத கார்யத்தையும்கூட உள்ளவாறு இல்லாமல் அறிகிறானோ அந்த புத்தி ராஜஸம் எனப்படும்.

**கேள்வி:** தர்மம் என்றால் என்ன? அதர்மம் என்றால் என்ன? 'இவற்றை உள்ளபடி அறியாதிருத்தல்' என்றால் என்ன?

**பதில்:** அஹிம்ஸை, ஸத்யம், இரக்கம், அமைதி, ப்ரம்மசர்யம், மன அடக்கம், புலனடக்கம், பொறுமை மற்றும் வேள்வி, தானம், தவம், கற்பது-கற்பிப்பது, மக்களைக் காப்பது, உழுது பயிரிடுவது, பசுக்களைக் காப்பது, ஸேவை புரிவது என்று வர்ணாசிரம தர்மத்திற்கேற்ப அடிப்படையில் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட நற்செயல்களைக் கடைப்பிடித்தால், இவ்வுலகிலும், பரலோகத்திலும் ஸுகம் கிடைக்குமென சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. அச்செயல்களும், பிறருக்கு நன்மை பயக்கும் செயல்களும் தர்மம்‡ எனப்படும். இங்ஙனம் பொய், கபடம், திருட்டு, விபசாரம், ஹிம்ஸை, கர்வம், உண்ணத்தகாததை உண்பது முதலிய பாவச் செயல்கள் எத்தனை உண்டோ, எவற்றின் பயன் துக்கம் என்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றனவோ, அவையெல்லாம் அதர்மம். எந்த நேரத்தில் எந்தச் சூழ்நிலையில் எந்தக் கர்மம் தர்மமாகும், எந்தக் கர்மம் அதர்மமாகும் என்று நன்கு ஆராய்ந்து தீர்மானிப்பதில் புத்தி மழுங்கிப் போவதோ, ஸந்தேஹப்படுவதோதான் தர்ம-அதர்மங்களை உள்ளபடி அறியாதிருத்தல் ஆகும்.

**கேள்வி:** கார்யம் என்றால் என்ன? அகார்யம் என்றால் என்ன? தர்மத்திற்கும், அதர்மத்திற்கும், செய்யத்தக்கதற்கும், செய்யத்தகாததற்கும் என்ன வேறுபாடு? 'அவற்றை உள்ளபடி அறியாதிருத்தல்' என்றால் என்ன?

---

‡ சாஸ்த்ரங்களில் தர்மத்தின் பெருமை வெகுவாகக் கூறப்பட்டுள்ளது. ப்ருஹத்தர்ம புராணம் கூறுகிறது:-

இந்த உலகைக் காக்கின்ற தர்மம் என்ற காளைக்கு நான்கு கால்கள் உண்டு. ஸத்ய (க்ருத) யுகத்தில் நான்கு கால்களும் முழுமையாக இருக்கும். த்ரேதாயுகத்தில் மூன்றும், த்வாபரயுகத்தில் இரண்டும், கலியில் ஒரே காலும் இருக்கும். தர்மத்தின் நான்கு கால்களாவன – ஸத்யம், தயை, அமைதி, அஹிம்ஸை.

ஸத்யம் த$_3$யா தத$_2$ா ஶாந்திரஹிம்ஸா சேதி கீர்திதா ।
த$_4$ர்மஸ்யாவயவாஸ்தாத சத்வார: பூர்ணதாம் க$_3$தா: ॥

(அ) ஸத்யத்தில் பன்னிரண்டு பிரிவுகள் உண்டு.

அமித்$_2$யாவசநம் ஸத்யம் ஸ்வீகாரப்ரதிபாலநம் ।
ப்ரியவாக்யம் கு$_3$ரோ: ஸேவா த்$_3$ருட$_4$ம் சைவ வ்ரதம் க்ருதம் ॥
ஆஸ்திக்யம் ஸாது$_4$ஸங்க$_3$ஶ்ச பிதுர்மாது: ப்ரியங்கர: ।
ஶுசித்வம் த்$_3$விவித$_4$ம் சைவ ஹ்ரீரஸஞ்சய ஏவ ச ॥

1. அமித்யாவசநம் – பொய் கூறாமை.
2. ஸத்யம் – வாய்மை.
3. ஸ்வீகாரப்ரதிபாலநம் – ஏற்றுக் கொண்டதைச் செய்து முடித்தல்.
4. ப்ரியவாக்யம் – இன்சொல்.
5. குரோ: ஸேவா – பெரியோர்களுக்குப் பணிவிடை செய்தல்.
6. த்ருடம் ச ஏவ வ்ரதம் க்ருதம் – வ்ரதம் பூண்டால் உறுதியுடன் கடைப்பிடித்தல்.
7. ஆஸ்திக்யம் – தெய்வ நம்பிக்கை.
8. ஸாதுஸங்கஶ்ச – இறைவனடியாரிடம் இணக்கம்.
9. பிதுர் மாது: ப்ரியங்கர: – தாய்-தந்தையரின் விருப்பத்தை நிறைவேற்றுதல்.
10. ஶுசித்வம் த்விவிதம் ச ஏவ – அகத்தூய்மையும், புறத்தூய்மையும்.
11. ஹ்ரீ: – தீய கார்யத்தில் வெட்கம்.
12. அஸஞ்சய ஏவ ச (அபரிக்ரஹம்) – தேவைக்கதிகமாக ஏற்றுக் கொள்ளாமை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை, இடம், நேரம் இவற்றிற்கு ஏற்ப மனிதனால் செய்யப்பட வேண்டிய கர்மங்கள் சாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ளன. அவையே செய்யத்தகுந்த செயல்கள். எவற்றை சாஸ்த்ரங்கள் செய்யக்கூடாதெனத் தடைவிதிக்கின்றனவோ, அவற்றைச் செய்யக்கூடாது. அவை அகார்யம் – செய்யத்தகாதன. சாஸ்த்ரங்களில் தடை செய்யப்பட்ட பாவ கர்மங்கள் எல்லோருக்குமே முற்றிலும் செய்யத்தகாதவைதாம். ஆனால் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட நல்ல கர்மங்களில்கூட சிற்சில பேருக்குச் செய்யத்தக்கவை, வேறு சிலருக்குச் செய்யத்தகாதவை என்று உண்டு. எடுத்துக்காட்டாக, நான்காம் வர்ணத்தவரின் கடமை ஸேவை செய்தல். யாகம் செய்தல், வேதம் ஓதுதல் முதலியன அவர்களால் செய்யத்தகாதவை. ஸந்யாஸிகள் விவேகம், வைராக்யம், புலன் அடக்கம், மன அடக்கம் இவற்றிற்குரிய ஸாதனைகளைச் செய்யவேண்டும்; யாகம், தானம் இவற்றைச் செய்யக்கூடாது. இவை அவர்களால் செய்யத்தகாதவை. ப்ராம்மணனுக்கு யாகம் செய்வது, செய்விப்பது, தானம் ஏற்பது, கொடுப்பது, வேதம் ஓதுவது, ஓதுவிப்பது இவை செய்யத்தக்கன; பிற தொழில்கள் செய்யத்தகாதன. வைசியனுக்கு உழுது பயிரிடுதல், பசுவைக் காப்பது, வியாபாரம் செய்தல் முதலியன செய்யத்தக்க செயல்கள்; தானம் ஏற்பது தகாத செயல். இவ்வாறு ஸ்வர்கம் அடைய விரும்புபவர்களுக்குக் காம்ய கர்மங்கள் செய்யத்தக்க செயல்கள். மோக்ஷம் விரும்புவோர்க்கு அவை செய்யத்தகாத செயல்கள். வைராக்யமுள்ள ப்ராம்மணனுக்கு ஸந்யாஸம் மேற்கொள்வது செய்யத்தக்க செயல்; போகத்தில் பற்றுள்ளவனுக்கு ஸந்யாஸம் செய்யத் தகாத செயல். இதிலிருந்து சாஸ்த்ரங்களில் கூறப்பட்டதனாலேயே அவை அனைவரும் செய்ய வேண்டிய கர்மங்கள் ஆகமாட்டா என்பது தெளிவாகிறது. இவ்விதம் தர்மம் சிலர் செய்ய வேண்டியதாகவும், சிலர் செய்ய வேண்டாததாகவும் கூட இருக்கும். இதுதான்

---

*(ஆ) தயை என்பது ஆறுவிதமாகும்.*

பரோபகாரோ த$_3$ாநம் ச ஸர்வத$_3$ா ஸ்மிதப$_4$ாஷணம் |
விநயோ ந்யூநதாப$_4$ாவஸ்வீகார: ஸமதாமதி: ||

1. பரோபகார: – பிறர்க்கு உதவி.
2. தாநம் – தானம் (கொடை).
3. ஸர்வதா ஸ்மித பாஷணம் – எப்பொழுதும் இன்முகத்துடன் பேசுதல்.
4. விநய: – பணிவு.
5. ந்யூநதா பாவஸ்வீகார: – தன்னை எளியவன் என எண்ணுதல்.
6. ஸமதாமதி: – ஸமபாவனை.

*(இ) சாந்தி; = (அமைதி)க்கு முப்பது இலக்கணங்கள் உண்டு.*

அநஸூயால்பஸந்தோஷ இந்த்$_3$ரியாணாம் ச ஸம்யம: |
அஸங்க$_3$மோ மௌநமேவம் தே$_3$வபூஜாவிதௌ$_4$ மதி: ||
அகுதஶ்சித்$_3$ப$_4$யத்வம் ச க$_3$ாம்பீ$_4$ர்யம் ஸ்தி$_2$ரசித்ததா |
அரூக்ஷப$_4$ாவ: ஸர்வத்ர நி:ஸ்ப்ருஹத்வம் த்$_3$ருட$_4$ா மதி: ||
விவர்ஜநம் ஹ்யகார்யாணாம் ஸம: பூஜாபமாநயோ: |
ஶ்லாக$_4$ா பரகு$_3$ணேऽஸ்தேயம் ப்$_3$ரஹ்மசர்யம் த்$_4$ருதி: க்ஷமா ||
ஆதித்$_2$யம் ச ஜபோ ஹோமஸ்தீர்த$_2$ஸேவாऽऽர்யஸேவநம் |
அமத்ஸரோ ப$_3$ந்த$_4$மோக்ஷஜ்ஞாநம் ஸந்ந்யாஸப$_4$ாவநா ||
ஸஹிஷ்ணுதா ஸு$_3$து$_3$:கே$_2$ஷு அகார்பண்யமமூர்க$_2$தா: |

1. அநஸூயா – பிறர் குற்றம் பாராமை.
2. அல்பஸந்தோஷ: – சிறிது பெறினும் மகிழ்தல்.
3. இந்த்ரியாணாம் ச ஸம்யம: – புலன் அடக்கம்.
4. அஸங்கம: – போகங்களில் பற்றின்மை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தர்மம்—அதர்மம்; செய்யத்தக்கது—செய்யத்தகாதது ஆகியவற்றின் வேறுபாடு. ஏதாவது ஒரு செயலைச் செய்யவோ, செய்யாமல் விட்டுவிடவோ நேரும் ஸமயத்தில் இக்கார்யம் என்னால் செய்யத்தக்கது அல்லது செய்யத்தகாதது என்றோ, என்னால் எக்கார்யம் எங்ஙனம் செய்யப்படவேண்டும் அல்லது ஏன் செய்யப்பட வேண்டாம் என்றோ, சரியாகத் தீர்மானிப்பதில், புத்தி செய்வதறியாது திகைக்கிறது. அதுதான் செய்ய வேண்டியது, செய்யக் கூடாதது பற்றி உள்ளபடி அறியாமை ஆகும்.

கேள்வி: 'அத்தகைய புத்தி ராஜஸம் ஆகும்' என்று கூறுவதன் கருத்து என்ன?

பதில்: தர்மம் எது, அதர்மம் எது, செய்யத்தக்கது எது, செய்யத்தகாதது எது என்பதில் சரியாகத் தீர்மானம் செய்யத் திறமையற்ற புத்தி மற்றும் இதுபோன்ற வேறு விஷயங்களிலும் சரியாகத் தீர்மானம் செய்யும் திறமையற்ற புத்தி, ரஜோகுணத் தொடர்பினால் விவேகத்தில் நிலை கொள்ளாது தடுமாறுகிறது; சலனமடைகிறது. ஆகவே அது ராஜஸ புத்தி ஆகும். ராஜஸ எண்ணத்தின் விளைவு துன்பம் ஆகும். ஆகவே மேன்மையை விரும்புபவன் ஸத்ஸங்கத்தில் சேர்ந்து, நல்ல நூல்களைப் படித்து, நல்லாராய்ச்சிகளைச் செய்து, புத்தியில் உள்ள ராஜஸப் பண்புகளை விலக்கி, ஸாத்விகத் தன்மையை உண்டு பண்ணி வளர்க்க வேண்டும்.

பொருத்தம்: இனி தாமஸ புத்தியின் இலக்கணம் கூறுகிறார்—

**अधर्मं धर्ममिति या मन्यते तमसावृता।**
**सर्वार्थान्विपरीतांश्च बुद्धिः सा पार्थ तामसी ॥ ३२ ॥**

---

5. மௌனம் – பயனில பேசாமை.
6. ஏவம் தேவ பூஜாவிதௌ மதி: – மேலும் தெய்வ வழிபாட்டில் ஈடுபாடு.
7. அகுதச்சித்பயத்வம் ச – எதிலும் பயமின்மை.
8. காம்பீர்யம் – மன ஆழம்.
9. ஸ்திரசித்ததா – ஒருநிலைப்பட்ட மனம்.
10. அருக்ஷபாவ: – கடுகடுப்பின்மை.
11. ஸர்வத்ர நிஸ்ப்ருஹத்வம் – எதிலும் பற்றின்மை.
12. த்ருடா மதி: – உறுதியான புத்தி.
13. விவர்ஜநம் ஹி அகார்யாணாம் – செய்யத்தகாதனவற்றைச் செய்யாமல் இருத்தல்.
14. ஸம: பூஜாபமானயோ: – போற்றினும் தூற்றினும் ஒரே நிலை.
15. ச்லாகா பரகுணே – பிறர் நற்பண்பைப் பாராட்டுவது.
16. அஸ்தேயம் – திருடாமை.
17. ப்ரஹ்மசர்யம் – ப்ரம்மசர்யம்.
18. த்ருதி: – மன உறுதி.
19. க்ஷமா – பொறுமை.
20. ஆதித்யம் ச – விருந்தோம்பல்.
21. ஜப: – பகவன் நாமஜபம்.
22. ஹோம: – ஹோமம் செய்வது.
23. தீர்த்தஸேவா – க்ஷேத்ரங்களுக்கு யாத்திரை போவது.
24. ஆர்யஸேவநம் – பெரியோர்களுக்குப் பணிவிடை செய்வது.
25. அமத்ஸர: – பொறாமையின்மை.
26. பந்தமோக்ஷஜ்ஞானம் – தளை–விடுதலை பற்றிய அறிவு.
27. ஸந்ந்யாஸ பாவநா – துறவு மனப்பான்மை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அத₄ர்மம் த₄ர்மமிதி யா மந்யதே தமஸாவ்ருதா ।**
**ஸர்வார்த₂ாந்விபரீதாம்ஸ்ச பு₃த்₃தி₄: ஸா பார்த₂ தாமஸீ ॥ 32 ॥**

**பார்த₂** — அர்ஜுன! **யா** — எந்த (புத்தி), **தமஸா** — தமோகுணத்தினால், **ஆவ்ருதா** — சூழப்பட்டு, **அத₄ர்மம்** — அதர்மத்தை, **த₄ர்மம் இதி ச** — தர்மம் என்றும், **ஸர்வார்த₂ாந்** — எல்லாப் பொருட்களையும், **விபரீதாந்** — அவற்றின் உண்மைத் தன்மை அறியாமல் மாறுபட்டவையாக, **மந்யதே** — நினைக்கிறதோ, **ஸா** — அந்த, **பு₃த்₃தி₄:** — புத்தி, **தாமஸீ** — தாமஸமானது.

அர்ஜுன! எந்த புத்தி தமோகுணத்தினால் சூழப்பட்டு அதர்மத்தை தர்மம் என்றும், எல்லாப் பொருட்களையும் அவற்றின் உண்மைத் தன்மைக்கு மாறாகவும் நினைக்கிறதோ அந்த புத்தி தாமஸமானது.

**கேள்வி:** 'அதர்மத்தைத் தர்மமென்றும், தர்மத்தை அதர்மமென்றும் நினைப்பது' என்றால் என்ன?

**பதில்:** கடவுளை இகழ்வது; தேவதைகளை இகழ்வது; சாஸ்த்ரங்களை எதிர்ப்பது; தாய்-தந்தையர், பெரியோர்களை அவமானப்படுத்துவது; வர்ணாசிரம தர்மத்திற்கு மாறாக நடப்பது; த்ருப்தியின்மை; வீண் ஆடம்பரம், கபடம், விபசாரம், பொய் பேசுவது, பிறருக்குத் தீங்கு விளைவிப்பது, தகாததை உண்பது, மனம் போனபடி நடப்பது, பிறர் பொருளைக் கவர்வது முதலிய விலக்கப்பட்ட பாவச் செயல்களை தர்மம் என்று நினைப்பதுதான் அதர்மத்தைத் தர்மமென நினைப்பதாகும்.

---

28. ஸஹிஷ்ணுதா ஸுது:கேஷு — பெருந்துன்பங்களையும் பொறுப்பது.

29. அகார்ப்பண்யம் — சிறு மதியின்மை.

30. அமூர்க்கதா: — பிடிவாதமின்மை.

(ஈ) அஹிம்ஸை ஏழு வகைப்படும்.

அஹிம்ஸா த்வாஸநஜய: பரபீட₃ாவிவர்ஜநம் ।
ஶ்ரத்₃த₄ா சாதித்₂யஸேவா ச ஶாந்தரூபப்ரத₃ர்ஶநம் ॥
ஆத்மீயதா ச ஸர்வத்ர ஆத்மபு₃த்₃தி₄: பராத்மஸு: ।

அஹிம்ஸா — அஹிம்ஸை என்பது,

1. ஆஸநஜய: — அசையாமல் உட்கார்ந்திருப்பது.
2. பரபீடாவிவர்ஜநம் — பிறருக்கு மனதால், உடலால், சொல்லால் துன்பம் இழைக்காமை.
3. ஶ்ரத்தா ச — ச்ரத்தை.
4. ஆதித்யஸேவா ச — விருந்தோம்பல்.
5. ஶாந்தரூப ப்ரதர்ஶநம் — அமைதியாக மலர்ந்த முகத்துடன் இருப்பது.
6. ஆத்மீயதா ச — அனைவரையும் தன்னைச் சார்ந்தவர் என்று நினைப்பது.
7. ஸர்வத்ர ஆத்மபுத்தி: பராத்மஸு — எங்கும் மன்னுயிரைத் தன் உயிராய்ப் பேணுவது.

இந்த நான்கு பாதங்களுடனும் கூடியது தர்மம். இந்த தர்மத்தைச் சிறிதளவேனும் கடைப்பிடித்தாலும் மிகுந்த மேன்மை பெறலாம். இதற்கு மாறாக நடந்தால் தீங்கு நேரிடும்.

யத₂ா ஸ்வல்பமத₄ர்மம் ஹி ஜநயேத் து மஹாப₄யம் ।
ஸ்வல்பமப்யஸ்ய த₄ர்மஸ்ய த்ராயதே மஹதோ ப₄யாத் ॥
(ப்₃ருஹத்₃த₄ர்மபுராண, பூர்வக₂ண்ட₃ம் 1/47)

'சிறிது அதர்மம்கூடப் பெரும் பயத்தை உண்டு பண்ணுவதுபோலச் சிறிது தர்மமும் மிகுந்த பயத்திலிருந்து காப்பாற்றும்.'

இந்த நான்கு பாதங்களுடைய தர்மத்தோடு கூடத் தத்தம் வர்ணாசிரமங்களுக்கு ஏற்ப கர்மங்களை ஆற்றவேண்டும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மற்றும் உறுதி, பொறுமை, மன அடக்கம், திருடாமை, உள்ளும், புறமும் தூய்மை, புலனடக்கம், நல்லறிவு, நற்கல்வி, ஸத்யம், கோபமின்மை, இறைவழிபாடு, தெய்வ உபாஸனை, சாஸ்த்ரங்களைக் கற்பது, வர்ணாசிரமங்களுக்கு ஏற்ப நடப்பது, தாய்-தந்தையர், பெரியோர் ஆணையை நிறைவேற்றுவது, நேர்மை, ப்ரம்மசர்யம் (சிற்றின்ப வேட்கையின்மை), ஸாத்விகமான உணவு, அஹிம்ஸை, பரோபகார சிந்தை முதலிய சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட புண்ய கர்மங்களை அதர்மம் என நினைப்பதுதான் தர்மத்தை அதர்மமென்று கொள்வது ஆகும்.

**கேள்வி:** 'மற்ற எல்லாப் பொருட்களையும் அவற்றின் உண்மைத் தன்மைக்கு மாறாக நினைப்பது' என்றால் என்ன பொருள்?

**பதில்:** அதர்மத்தைத் தர்மமென நினைப்பதுபோலவே, செய்யத்தகாததைச் செய்யத்தக்கது என்றும், துன்பத்தை ஸுகம் என்றும், அநித்யத்தை நித்யமென்றும், தூய்மையற்றதைத் தூய்மையானது என்றும், கேடு விளைவிப்பதை நன்மையென்றும் நினைக்கும் மாறுபட்ட எண்ணமெல்லாம் மற்றப் பொருட்களை உண்மைக்கு மாறாக அறிவது என்பதில் அடங்கும்.

**கேள்வி:** 'அந்த புத்தி தாமஸமானது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தமோகுணத்தில் ஆழ்ந்துவிட்டபடியால், புத்தியின் பகுத்துணரும் ஆற்றல் முழுமையாக மழுங்கி விட்டது போல் ஆகிறது. அதனால் ஒவ்வொரு விஷயத்தையும் முற்றிலும் உண்மைக்கு மாறாகவே முடிவு செய்துவிடுகிறது. அந்த புத்தியே தாமஸமாகும். இவ்வித புத்தி மனிதனைக் கீழ்நிலையில் வீழ்த்திவிடும். ஆகவே மேன்மையை விரும்புபவன் இத்தகைய விபரீதமான தாமஸ புத்தியை விட்டுவிட வேண்டும்.

**பொருத்தம்:** அடுத்து ஸாத்விக உறுதியின் இலக்கணம் கூறுகிறார்—

**धृत्या यया धारयते मनःप्राणेन्द्रियक्रियाः।**
**योगेनाव्यभिचारिण्या धृतिः सा पार्थ सात्त्विकी॥ ३३॥**

**த்₄ருத்யா யயா த₄ாரயதே மந:ப்ராணேந்த்₃ரியக்ரியா: ।**
**யோகே₃நாவ்யபி₄சாரிண்யா த்₄ருதி: ஸா பார்த₂ ஸாத்த்விகீ ॥ 33 ॥**

**பார்த₂** – அர்ஜுன! **யயா** – எந்த, **அவ்யபி₄சாரிண்யா** – பகவானைத் தவிர வேறு எந்த விஷயத்திலும் சிந்திக்காத, **த்₄ருத்யா** – உறுதியினால் (மனிதன்), **யோகே₃ந** – த்யான யோகத்தின் மூலம், **மந: ப்ராண இந்த்₃ரியக்ரியா:** – மனம், ப்ராணன், புலன்கள் இவற்றினுடைய செயல்களை, **த₄ாரயதே** – நிலைநிறுத்துகிறானோ, **ஸா த்₄ருதி:** – அந்த உறுதி, **ஸாத்த்விகீ** – ஸாத்விகமானது.

அர்ஜுன! பகவானைத் தவிர வேறு எந்த விஷயத்திலும் சிந்திக்காத எந்த உறுதியினால் மனிதன் த்யான யோகத்தின் மூலம் மனம், ப்ராணன், புலன்கள் இவற்றினுடைய செயல்களை நிலைநிறுத்துகிறானோ அந்த உறுதி ஸாத்விகமானது.

**கேள்வி:** 'அவ்யபிசாரிண்யா த்ருத்யா' என்றால் என்ன பொருள்? 'அதோடு கூடிய த்யானயோகத்தின் மூலம் மனம், ப்ராணன், புலன்கள் இவற்றின் செயல்களை நிலை நிறுத்துதல்' என்றால் என்ன கருத்து?

**பதில்:** செயல், எண்ணம் அல்லது கருத்து இவற்றைத் திடமான உறுதியுடன் கடைப்பிடிக்கும் சக்தி எதுவோ, எதன் மூலம் உறுதியுடன் கடைப்பிடிக்கும் எந்தச் செயலும், எண்ணம் அல்லது கருத்தும் இடையறாமல் காப்பாற்றப்படுகின்றனவோ, மேலும் எது அவற்றை நீண்டகாலம் நிலைத்திருக்கச் செய்கிறதோ, அதுவே 'த்ருதி' என்று அழைக்கப்படுகிறது. ஆனால் எதுவரை மனிதன் வெவ்வேறு நோக்கங்களுடன், பல்வேறு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



விஷயங்களை ஏற்றுக் கொள்கிறானோ, அதுவரை இதன் நிலைகுலையாமை என்ற குறை நீங்கிவிடப் போவதில்லை. எனினும் எப்போது மனிதன் தனது உறுதியான லக்ஷ்யத்தை நிலைநிறுத்துகிறானோ, அப்போது 'நிலைகுலையாமை' ஏற்பட்டுவிடுகிறது.

ஸாத்விக 'த்ருதி'யின் ஒரே ஒரு குறிக்கோள் பரமாத்மாவை அடைவதே. அதனால்தான் இது 'நிலைகுலையாமை' என்று கூறப்படுகிறது. இங்ஙனம் திடமாகக் கடைப்பிடிக்கும் சக்தியே 'அவ்யபிசாரிண்யா' என்ற அடைமொழியால் பெறப்படும் கருத்தாகும். இவ்வாறு திடமாகக் கடைப்பிடிக்கும் சக்தியினால், பரமாத்மாவை அடைவதற்காக த்யானயோகத்தின் மூலம் மனம், ப்ராணன் மற்றும் புலன்களின் செயல்பாடுகளை நிலைகுலையாமல் பரமாத்மாவிடம் செலுத்துவதே மேலே கூறப்பட்ட 'த்ருதி'யினால் த்யானயோகத்தின் மூலம் மனம், ப்ராணன் மற்றும் புலன்களின் செயல்பாடுகளை உறுதியாக நிலைநிறுத்துவதாகும்.

**கேள்வி:** 'அந்த உறுதி ஸாத்விகம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எந்த உறுதி பரமாத்மாவை அடைவது என்ற ஒரே நோக்கத்தில் எப்பொழுதும் ஸ்திரமாக உள்ளதோ, அந்த லக்ஷ்யத்திலிருந்து சிறிதும் விலகுவதில்லையோ, எதற்கு வெவ்வேறு நோக்கங்கள் கிடையாவோ, அந்த உறுதியின் மூலம் மனிதன் பரமாத்மாவை அடைவதற்காக மனம், புலன்கள் முதலியவற்றைப் பரமாத்மாவிடம் ஈடுபடுத்துகிறான். எக்காரணம் கொண்டும் போக விஷயங்களில் பற்றுக் கொள்ளவிடாமலும், சஞ்சலத்திற்கு இடங்கொடாமலும், எப்பொழுதும் மனம், புலன்களைத் தன் வசத்தில் வைத்துக் கொள்கிறான். இந்த உறுதிதான் ஸாத்விக த்ருதி ஆகும். இத்தகைய உறுதி விரைவில் ஸாதகனைப் பரமாத்மாவிடம் சேர்க்கும். ஆகவே மேன்மையை விரும்புபவன் தனது உறுதியை எப்பொழுதும் ஸாத்விகமாக வைத்துக் கொள்ளவேண்டும்.

**பொருத்தம்:** இனி ராஜஸ உறுதியின் இலக்கணம் கூறுகிறார்—

**यया तु धर्मकामार्थान्धृत्या धारयतेऽर्जुन।**
**प्रसङ्गेन फलाकाङ्क्षी धृतिः सा पार्थ राजसी॥ ३४॥**

**யயா து த₄ர்மகாமார்த₂ாந்த்₄ருத்யா த₄ாரயதேऽர்ஜுந ।**

**ப்ரஸங்கே₃ந ப₂லாகாங்க்ஷீ த்₄ருதி: ஸா பார்த₂ ராஜஸீ ॥ 34 ॥**

**து** – ஆனால், **பார்த₂** – ப்ருதையின் மைந்தனே! **அர்ஜுந** – அர்ஜுன! **ப₂லாகாங்க்ஷீ** – பயனில் கருத்துடைய மனிதன், **யயா த்₄ருத்யா** – எந்த உறுதியினால், **ப்ரஸங்கே₃ந** – மிகுந்த பற்றோடு, **த₄ர்மகாமார்த₂ாந்** – அறம், இன்பம், பொருள்களை, **த₄ாரயதே** – அடைவதிலேயே உறுதியாக இருக்கிறானோ, **ஸா த்₄ருதி:** – அந்த உறுதி, **ராஜஸீ** – ராஜஸமானது.

ஆனால் ப்ருதையின் மைந்தனே! அர்ஜுன! பயனில் விருப்பமுடைய மனிதன் எந்த உறுதியினால் மிகுந்த பற்றோடு அறம், பொருள், இன்பம் அடைவதிலேயே உறுதியாக இருக்கிறானோ அந்த உறுதி ராஜஸமானது.

**கேள்வி:** 'பலாகாங்க்ஷீ' என்றால் யார்? அவன் உறுதியின் மூலம் மிகுந்த பற்றுடன் அறம், பொருள், இன்பம் இம்மூன்றையும் அடைவதிலேயே உறுதியாக இருக்கிறான் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கர்மங்களின் பயன்களான இவ்வுலக-பரலோகத்திலுள்ள வெவ்வேறுவிதமாக போகங்களை அனுபவிக்கும் ஆசையுள்ள மனிதன் 'பலாகாங்க்ஷீ' (பயனில் விருப்பமுடையவன்) எனப்படுகிறான். தனது தாரணை சக்தி(உறுதி)யின் மூலம், மிகுந்த ஈடுபாட்டுடன் தர்மத்தைக் கடைப்பிடிப்பதே உறுதியுடன் தர்மத்தைக் கடைப்பிடிப்பது ஆகும். அதுபோல்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



செல்வம் முதலிய பொருள்களையும், அவற்றால் கிடைக்கக்கூடிய போகங்களையுமே வாழ்க்கையின் லக்ஷ்யம் என நினைத்து அவற்றில் உள்ள மிகுந்த பற்றின் காரணமாக அவற்றையே பிடித்துக் கொண்டு இருப்பதுதான் ராஜஸ த்ருதியின் மூலம் பொருள், இன்பங்களில் உள்ள உறுதியை நிலைநிறுத்துதல் ஆகும்.

**கேள்வி:** அந்த உறுதி ராஜஸமானது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஒருவன் தனது உறுதியின் மூலம் மோக்ஷ ஸாதனங்களைச் சற்றும் கவனியாமல் மேற்கூறியவாறு தர்ம, அர்த்த, காமங்களை அடைவதிலேயே ஸ்திரமாக இருக்கிறான் என்றால், அவனுடைய த்ருதி, ரஜோகுண ஸம்பந்தம் உள்ளது என்று பொருள். ஆகவே அந்த (உறுதி) த்ருதி ராஜஸமாகும். ஏனெனில் பற்றும், ஆசையும் ரஜோ குணத்தின் விளைவுகள். இத்தகைய உறுதி மனிதனைக் கர்மங்களின் மூலமாகத் தளைப்படுத்தும். ஆகவே மேன்மையை விரும்பும் மனிதன் தன்னுடைய உறுதி ராஜஸமாக ஆகவிடாமல் ஸாத்விகமாக ஆக்கப் பாடுபட வேண்டும்.

**பொருத்தம்: இனி தாமஸ உறுதியின் இலக்கணம் கூறுகிறார்—**

**यया स्वप्नं भयं शोकं विषादं मदमेव च।**
**न विमुञ्चति दुर्मेधा धृतिः सा पार्थ तामसी॥ ३५॥**

**யயா ஸ்வப்நம் ப₄யம் ஸோகம் விஷாத₃ம் மத₃மேவ ச ।**

**ந விமுஞ்சதி து₃ர்மேத₄ா த்₄ருதி: ஸா பார்த₂ தாமஸீ ॥ 35 ॥**

**பார்த₂** – பார்த்த! **து₃ர்மேத₄ா:** – தீய புத்தி கொண்டவன், **யயா (த்₄ருத்யா)** – எந்த உறுதியினால், **ஸ்வப்நம்** – தூக்கத்தையும், **ப₄யம்** – அச்சத்தையும், **ஸோகம்** – கவலையையும், **விஷாத₃ம் ச** – துயரத்தையும், **மத₃ம் ஏவ** – செருக்கையும் கூட, **ந விமுஞ்சதி** – விடாமல் உறுதியுடன் பற்றுகிறானோ, **ஸா த்₄ருதி:** – அந்த உறுதி, **தாமஸீ** – தாமஸமானது.

பார்த்த! தீய புத்தி கொண்டவன் எந்த உறுதியினால் தூக்கத்தையும், அச்சத்தையும், கவலையையும், துயரத்தையும், செருக்கையும் விடாமல் உறுதியுடன் பற்றுகிறானோ அந்த உறுதி தாமஸமானது.

**கேள்வி:** 'துர்மேதா:' என்றால் யார்? அப்படிச் சொல்வானேன்?

**பதில்:** மிக மந்தமாகவும், மாசு நிறைந்ததாகவும் உள்ள புத்தியுடையவன்; உள்ளத்தில் எப்போதும் பிறருக்கு என்ன தீங்கு செய்யலாம் என்ற சிந்தை உடையவன்; இங்ஙனம் தீய எண்ணமுடையவனை 'துர்மேதா:' என்கிறார். இத்தகையவனுடைய உறுதி தாமஸமானது என்று குறிப்பிடவே 'துர்மேதா:' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'ஸ்வப்னம்', 'பயம்', 'சோகம்', 'விஷாதம்', 'மதம்' என்ற சொற்களின் பொருள் என்ன? உறுதியுடன் இவற்றை விடாமல் பிடித்துக் கொள்வது என்றால் என்ன?

**பதில்:** மனம், புலன்கள் தமோகுணத்தில் ஆழ்ந்துவிட்டபோது, வெளிப்படையாக எதுவும் செய்ய முடியாமல், மழுங்கி இருக்கச் செய்கிற உறக்கம், அயர்வு முதலியன அனைத்தும் 'ஸ்வப்னம்' ஆகும். செல்வம் முதலியன அழிந்துவிடுமோ? மரணம் வருமோ? துன்பம் வருமோ? ஸுகம் போய் விடுமோ – என்றெல்லாம் – வேண்டியது அகலுமோ, வேண்டாதது நேருமோ என்ற ஸந்தேஹத்தினால் தோன்றுகின்ற கவலையும், படபடப்புமே 'பயம்'. மனதில் ஏற்படும் பலவிதமான தீய கவலைகளே 'சோகம்' எனப்படும். அவற்றால் புலன்களில் ஏற்படும் தாபமே 'விஷாதம்' (துயரம்) எனப்படுவது. இது சோகத்தின் வெளிப்பாடு. செல்வம், உறவினர், வலிமை காரணமாக ஏற்படுகின்ற விவேகமற்ற, விளைவு என்ன ஆகும் என்று ஆராயாமல் நெடுநோக்கின்றிச் செயல்பட வைக்கும் பித்துக் கொண்ட நிலை அல்லது மதம் பிடித்தநிலை தான் 'மதம்'. இது கர்வம், செருக்கு, பித்து நிலை என்றும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பெயர் பெறும். இவற்றையும் இன்னும் தவறு, கவனமின்மை முதலிய இதர தாமஸத் தன்மைகளையும் உள்ளத்திலிருந்து அகற்றாமல், அவற்றிலேயே மூழ்கியிருப்பதே உறுதியுடன் இவற்றை விடாமல் பிடித்துக் கொள்வது என்பதன் பொருள்.

**கேள்வி:** 'அந்த உறுதி தாமஸம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** துறக்கத்தக்க மேற்குறித்த தாமஸத் தன்மைகளை எந்த உறுதியின் காரணமாக மனிதன் விடாமல் பிடித்துக் கொண்டிருக்கிறானோ அதாவது உள்ளத்தில் இவையே இயல்பாக அமைந்துவிட்டனவோ, அந்த உறுதி தாமஸம் ஆகும். இது எல்லாத் தீங்குகளுக்கும் காரணமாகும். ஆகவே, மேன்மையை விரும்புபவன் இவற்றை விரைவில் அடியோடு விட்டுவிட வேண்டும்.

**பொருத்தம்: இவ்விதம் ஸாத்விக புத்தி மற்றும் ஸாத்விக உறுதிகளை மேற்கொண்டு, ராஜஸ, தாமஸமான புத்தியையும், த்ருதியையும் விட்டுவிட வேண்டுமென்பதற்காக புத்தியையும், உறுதியையும் மும்மூன்று வகையாகப் பிரித்துக் கூறி, இனி மனிதன் செய்யும் கர்மங்களனைத்துக்கும் இலக்கான அந்த ஸுகமும் ஸாத்விக, ராஜஸ, தாமஸம் என்று மூவகைப்படும் எனக் கூற முற்பட்டு, முதலில் ஸாத்விக ஸுகத்தின் இலக்கணங்களை விவரிக்கிறார்—**

सुखं त्विदानीं त्रिविधं शृणु मे भरतर्षभ।
अभ्यासाद्रमते यत्र दुःखान्तं च निगच्छति ॥ ३६ ॥

यत्तदग्रे विषमिव परिणामेऽमृतोपमम्।
तत्सुखं सात्त्विकं प्रोक्तमात्मबुद्धिप्रसादजम् ॥ ३७ ॥

**ஸுக₂ம் த்விதா₃நீம் த்ரிவித₄ம் ஶ்ருணு மே ப₄ரதர்ஷப₄ ।**
**அப்₄யாஸாத்₃ரமதே யத்ர து₃:கா₂ந்தம் ச நிக₃ச்ச₂தி ॥ 36 ॥**
**யத்தத₃க்₃ரே விஷமிவ பரிணாமேऽம்ருதோபமம் ।**
**தத்ஸுக₂ம் ஸாத்த்விகம் ப்ரோக்தமாத்மபு₃த்₃தி₄ப்ரஸாத₃ஜம் ॥ 37 ॥**

**ப₄ரதர்ஷப₄** – பரதகுலச் செம்மலே! **இதா₃நீம்** – இப்பொழுது, **த்ரிவித₄ம்** – மூன்றுவிதமான, **ஸுக₂ம் து** – ஸுகம் பற்றியும் (நீ), **மே** – என்னிடம், **ஶ்ருணு** – கேள். **யத்ர** – எந்த ஸுகத்தில் (ஸாதகனான மனிதன்), **அப்₄யாஸாத்** – பஜனை, த்யானம், ஸேவை முதலிய பயிற்சியினால், **ரமதே** – இன்புறுகிறானோ, **து₃:கா₂ந்தம் ச** – துன்பத்தின் முடிவையும், **நிக₃ச்ச₂தி** – அடைகிறானோ, **யத்** – எந்தவிதமான ஸுகம், **அக்₃ரே** – ஸாதனையின் தொடக்கத்தில், **விஷம் இவ** – விஷத்தைப்போலத் தோன்றினாலும், **தத்** – அது, **பரிணாமே** – விளைவில், **அம்ருதோபமம்** – அம்ருதத்துக்கு ஒப்பாக ஆகும். (**அத:** – ஆகவே), **தத்** – அது, **ஆத்ம பு₃த்₃தி₄ ப்ரஸாத₃ஜம்** – பகவான் பற்றிய தெளிவான அறிவினால் ஏற்படக்கூடியது. **தத் ஸுக₂ம்** – அந்த ஸுகம், **ஸாத்த்விகம்** – ஸாத்விகம், **ப்ரோக்தம்** – எனப்படுகிறது.

பரதகுலச் செம்மலே! இப்பொழுது மூன்றுவிதமான ஸுகம் பற்றியும் நீ என்னிடம் கேள். எந்த ஸுகத்தில் ஸாதகனான மனிதன் பஜனை, த்யானம், ஸேவை முதலிய பயிற்சியினால் இன்புறுகிறானோ, துன்பத்தின் முடிவையும் அடைகிறானோ அந்த ஸுகம் ஸாதனையின் தொடக்கத்தில் விஷத்தைப்போலத் தோன்றினாலும் விளைவில் அம்ருதத்துக்கு ஒப்பாக இருக்கும். ஆகவே பகவான் பற்றிய தெளிவான அறிவினால் ஏற்படக்கூடிய அந்த ஸுகம் ஸாத்விகம் என்று கூறப்படுகிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'இப்பொழுது மூன்றுவிதமான ஸுகம் பற்றியும் என்னிடம் கேள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "இதுவரை உனக்கு ஞானம், கர்மம், கர்த்தா, புத்தி, உறுதி இவற்றின் ஸாத்விக, ராஜஸ, தாமஸ வேறுபாடுகள் பற்றிச் சொன்னேன் அல்லவா? அதுபோல ஸாத்விக ஸுகம் பெறுவதற்காகவும், ராஜஸ, தாமஸ ஸுகங்களை விலக்குவதற்காகவும் உனக்கு அவற்றைப் பிரித்துச் சொல்கிறேன். கவனமாகக் கேள்" என்று பொருள்.

**கேள்வி:** 'யத்ர' என்று எந்த ஸுகத்தைக் குறிப்பிடுகிறார்? 'பயிற்சியினால் இன்புறுகிறான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** நல்ல அமைதியான மனமுடைய யோகிக்குக் கிடைக்கக்கூடிய உத்தமமான ஸுகத்தையே (6/27) இந்த 'யத்ர' என்ற சொல் குறிக்கிறது. இவ்வுலக-பரலோக போகங்கள் அனைத்தும் அழியக்கூடியவை என்றறிந்து அவற்றில் பற்றை அகற்றி, பரமாத்ம ஸ்வரூபத்திலேயே சிந்தனை மேற்கொள்ளப் பயிற்சி செய்து கொண்டிருக்கும் (5/21) ஸாதகனுக்குத்தான் இத்தகைய ஸுகம் கிடைக்கும். ஸாதனை புரியாமல் இத்தகைய ஸுகம் கிடைக்காது. இதைத்தான் பயிற்சியினால் இன்புறுகிறான் என்கிறார்.

**கேள்வி:** 'எந்த ஸுகம் பெற்றால் துன்பத்தின் முடிவையும் அடைகிறானோ' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த ஸுகத்தில் திளைத்துக் கொண்டிருப்பவன் ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் ஆகிய எல்லாவிதமான துக்கங்களின் தொடர்பிலிருந்தும் விடுபட்டு விடுகிறான். அந்த ஸுகத்தின் அனுபவத்தின் பயன் ஒப்பற்ற ஸுக வடிவமே ஆன ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவை அடைவது என்று கூறப்படுகிறது (5/21,24; 6/28). இதுவே ஸாத்விக ஸுகம்.

**கேள்வி:** 'அக்ரே' என்றால் என்ன பொருள்? 'ஸாத்விக ஸுகம் விஷம்போலத் தோன்றும்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஒருவன் ஸாத்விக ஸுகத்தின் பெருமையைப் பற்றிக் கேட்டு, அதை அடைய விருப்பம் கொண்டு, அதற்கு உபாயமான விவேகம், வைராக்யம், புலனடக்கம், மன அடக்கம், பொறுமை முதலிய ஸாதனைகளைப் புரியும் நேரத்தைக் குறிப்பிடுகிறது 'அக்ரே' என்ற சொல். வீட்டில் உள்ளவர்கள் கல்வியின் பெருமை பற்றிச் சொல்வதையெல்லாம் கேட்டு ஒரு சிறுவன் படிக்க ஆரம்பிக்கிறான். ஆனால் அதன் பெருமையை முற்றிலும் அனுபவத்தில் பெறாததால், கல்வி பயிலும்போது, தொடக்கத்தில் விளையாட்டுக்களை விட்டுவிட்டுப் படிப்பில் ஈடுபடுவது மிகவும் துன்பமாகவும், கடினமாகவும் இருப்பதாகத் தோன்றுகிறது. அதுபோல ஸாத்விக ஸுகத்தைப் பெறுவதற்காகப் பயிற்சியில் இறங்கியவனுக்கு போகங்களைத் துறந்து புலன்களை அடக்கி விவேகம், வைராக்யம், புலனடக்கம், மன அடக்கம், பொறுமை முதலிய ஸாதனைகளைக் கடைப்பிடிப்பது மிகுந்த சிரமம் நிறைந்ததாகவும், துன்பத்தைத் தருவதாகவும் தோன்றுகிறது. இதைத்தான் ஆரம்ப காலத்தில் ஸாத்விக ஸுகம் விஷம் போன்று தோன்றுகிறது என்றார்.

**கேள்வி:** 'அந்த ஸுகம் முடிவில் அமுதத்திற்கொப்பானது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஸாத்விக ஸுகத்தைப் பெறுவதற்காக ஸாதனை புரியும்போது, ஸாதகனுக்கு அந்த த்யானத்தினால் உண்டாகும் ஸுகம் அனுபவத்திற்கு வர ஆரம்பித்தவுடன், அது அமுதம்போலத் தோன்றுகிறது. அப்போது உலகியல் ஸுக போகங்களனைத்தும் அவனுக்கு அற்பமாகவும், மதிப்பற்றவையாகவும், துக்கமயமானவையாகவும் தோன்றிவிடுகின்றன.

**கேள்வி:** 'அது பகவானைப் பற்றிய தெளிவான அறிவினால் ஏற்படக் கூடியது, ஆகவே ஸாத்விகம் எனப்படுகிறது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** . மேற்கூறியவாறு பயிற்சி செய்து கொண்டே, இடைவிடாது பரமாத்மாவை த்யானம் செய்வதால், அதன் பயனாக உள்ளம் தூய்மையடைந்த பிறகு இந்த ஸுகம்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அனுபவத்திற்கு வருகிறது. ஆகவேதான் இந்த ஸுகத்தை பகவானைப் பற்றிய தெளிவான அறிவினால் ஏற்படக் கூடியது என்று கூறுகிறார். இந்த ஸுகம் ஸாத்விகமானது; இதுவே உயர்ந்த ஸுகம்; ராஜஸ, தாமஸ ஸுகங்கள் உண்மையில் ஸுகங்களே அல்ல; பெயரளவிலேதான் அவை ஸுகங்கள்; அவற்றின் விளைவு துக்கம்தான். ஆகவே மேன்மையை விரும்புபவர் ராஜஸ, தாமஸ ஸுகங்களில் சிக்கிக் கொள்ளாமல் ஸாத்விக ஸுகத்திலேயே எப்பொழுதும் திளைத்துக் கொண்டிருக்க வேண்டும்.

**பொருத்தம்: இனி ராஜஸ ஸுகத்தின் இலக்கணம் கூறுகிறார்—**

**विषयेन्द्रियसंयोगाद्यत्तदग्रेऽमृतोपमम्।**
**परिणामे विषमिव तत्सुखं राजसं स्मृतम्॥ ३८॥**

**விஷயேந்த்₃ரியஸம்யோகா₃த்₃யத்தத₃க்₃ரேऽம்ருதோபமம் ।**

**பரிணாமே விஷமிவ தத்ஸுக₂ம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ 38 ॥**

**யத் ஸுக₂ம்** – எந்த ஸுகம், **விஷய இந்த்₃ரிய ஸம்யோகா₃த்** – புலன்களும் அவற்றால் நுகரப்படும் பொருட்களும் சேர்வதால், (ப₄வதி – உண்டாகிறதோ), **தத்** – அந்த ஸுகம், **அக்₃ரே** – தொடக்கத்தில் (அனுபவிக்கும் காலத்தில்), **அம்ருத உபமம்** – அமுதத்துக்கொப்பாகத் தோன்றினாலும், **பரிணாமே** – முடிவில், **விஷம் இவ** – நஞ்சுக்கு ஒப்பாகும். **(அத:** – ஆகையால்), **தத்** – அந்த ஸுகம், **ராஜஸம்** – ராஜஸம் என்று, **ஸ்ம்ருதம்** – கூறப்படுகிறது.

எந்த ஸுகம் போகப் பொருட்களில் புலன்கள் திளைப்பதால் உண்டாகிறதோ, அந்த ஸுகம் தொடக்கத்தில் அனுபவிக்கும் காலத்தில் அமுதத்துக்கொப்பாகத் தோன்றினாலும் விளைவில் நஞ்சுக்கு ஒப்பாகும். ஆகையால் அந்த ஸுகம் ராஜஸம் என்று கூறப்படுகிறது.

**கேள்வி:** இங்கு 'அக்ரே' என்பது எந்தக் காலத்தைக் குறிக்கிறது? 'அப்போது புலன்களும், போகப் பொருட்களும் ஒன்று சேரும்போது உண்டாகும் ஸுகம் அமுதத்திற்கு ஒப்பாகத் தோன்றும்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ராஜஸ ஸுகத்தை அனுபவிப்பதற்காக மனிதன் மனதையும், புலன்களையும் போகப் பொருட்களில் ஈடுபடுத்த ஆரம்பிக்கும் அந்நேரத்தை 'அக்ரே' என்ற சொல் குறிக்கிறது. இந்த ஸுகம், புலன்கள் போகப் பொருட்களைத் தீண்டுவதால் ஏற்படுகிறது. ஒருவன் இவ்வாறு மனதையும், புலன்களையும் போகப் பொருட்களில் ஈடுபடுத்தும்வரை அந்த ஸுகத்தின் அனுபவம் இருந்து கொண்டிருக்கிறது. அந்த ஸுகத்தில் உள்ள பற்றின் காரணமாக அது அப்போது மிகவும் இன்பமாகத் தோன்றுகிறது. அப்போது அவன் எதிரில் காணாத எந்த ஸுகத்தையும் பொருட்படுத்த மாட்டான். ஆகவே அனுபவிக்கும் நேரத்தில் அது அமுதமாகத் தோன்றுகிறது.

**கேள்வி:** 'ராஜஸ ஸுகம் விளைவில் நஞ்சுக்கு ஒப்பாகும்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இந்த ராஜஸ ஸுகத்தின் விளைவு விஷம்போலத் துன்பத்தை அளிக்கும். அது ஸுகம் போன்று தோன்றுகிறதே தவிர உண்மையைக் கூறுமிடத்து அது ஸுகம் அன்று. ஸுகம் என நினைத்துப் போகப் பொருட்களை மனமும், புலன்களும் பற்றுடன் அனுபவிப்பதால், அந்த அனுபவம் மனதில் ஸம்ஸ்காரமாகப் பதிந்து விடுகிறது. அதனால் அவ்வகையான ஸுகங்களை அனுபவிக்க வேண்டுமென்று ஆசை பெருக்கிறது. மேலும் அந்தப் ஆசைக்கு வசப்பட்டுப் பலவிதமான பாவச் செயல்களைச் செய்துவிடுகிறான். அந்தப் பாவத்தின் பயனை அனுபவிப்பதற்காகப் புழு, பூச்சி, விலங்கு, பறவைகளாக ஈனப்பிறவிகளில் பிறக்க நேரிடுகிறது. கொடும் நரகங்களில் பயங்கரமான துன்பங்களை அனுபவிக்க நேர்கிறது.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



போகங்களில் பற்றுப் பெருகப் பெருக, அவை கிடைக்காவிட்டால் அவை கிடைக்கவில்லையே என்ற துன்பம் ஏற்படுகிறது. அவை கை நழுவிவிட்டால் அவை போய்விட்டனவே என்ற வருத்தம் உண்டாகிறது. தன்னிடம் உள்ள செல்வத்தையும், ஸுகத்தையும் காட்டிலும் பிறரிடம் அதிக ஸுகத்தையும், செல்வத்தையும் கண்டால், அவர்களிடம் பொறாமை ஏற்படுகிறது. ஸுகபோகம் அனுபவித்த பிறகு உடல் களைத்துப் போய் பலம், வீர்யம், புத்தி, ஒளி மழுங்கிவிடுகின்றன; ஆற்றல் குறைந்துவிடுகிறது; சோர்ந்து போய்ப் பேரின்னல்களுக்கு ஆளாகிறான். இவ்வாறு இன்னும் பற்பல துன்பத்தைத் தரும் விளைவுகள் நேர்கின்றன. ஆகவே புலன்களும், போகப் பொருட்களும் ஒன்று சேர்வதால் உண்டாகும் இந்த ஸுகம் கணநேர ஸுகம்; உண்மையில் துக்கமே. ஆனாலும் நோயுற்றவன் நப்பாசையினால், பின்னால் நேரக்கூடிய துன்பத்தை நினையாது, உடலுக்கு ஒவ்வாத பொருளை அருந்தி, நோய் அதிகமாகிவிட மேலும் துன்புறுகிறான் அல்லது இறந்தே போகிறான். ஒளியின் கவர்ச்சியினால் ஈர்க்கப்பட்டு விட்டிற்பூச்சி தானாகவே எங்கிருந்தோ வந்து கண்ணில் படும் ஒளியை இன்ப நுகர்வு என்றெண்ணி, விளக்கின் சுடரைச் சுற்றிச் சுற்றி வந்து கடைசியில் எரிபட்டுப் பொசுங்கிவிடுகிறது. அதுபோல, போகப் பொருட்களில் ற்றுள்ள மனிதன் விளைவை ஆலோசியாமல், ஸுகமென நினைத்து, போகப் பொருட்களில் ஈடுபட்டு முடிவில் பலவிதமான, பயங்கரமான துன்பங்களை அனுபவிக்கிறான்.

*கேள்வி:* 'அந்த ஸுகம் ராஜஸம்' எனப்படும் என்று கூறுவதன் கருத்து என்ன?

*பதில்:* மேற்கூறிய இலக்கணங்கள் கொண்ட ஸுகமாகத் தோன்றும் கணநேர ஸுகம், போகத்தில் உள்ள பற்றினால்தான் ஸுகம் போலத் தோற்றமளிக்கிறது. பற்று என்பது ரஜோகுணத்தின் விளைவு; அது ராஜஸமானது. அது மனிதனைப் பந்தப்படுத்தும் (14/7). ஆகவே மேன்மையை விரும்புபவர் இவ்வித ஸுகத்தில் சிக்கிக் கொள்ளக் கூடாது.

*பொருத்தம்:* இங்கு தாமஸ ஸுகத்தின் இலக்கணம் கூறுகிறார்—

**यदग्रे चानुबन्धे च सुखं मोहनमात्मनः।**
**निद्रालस्यप्रमादोत्थं तत्तामसमुदाहृतम्॥ ३९॥**

**யத₃க்₃ரே சாநுப₃ந்தே₄ ச ஸுக₂ம் மோஹநமாத்மந: ।**
**நித்₃ராலஸ்யப்ரமாதே₃ாத்த₂ம் தத்தாமஸமுதா₃ஹ்ருதம் ॥ 39 ॥**

**யத் ஸுக₂ம்** – எந்த ஸுகம், **அக்₃ரே ச** – அனுபவிக்கும் காலத்திலும், **அநுப₃ந்தே₄ ச** – பின்விளைவிலும், **ஆத்மந: மோஹநம்** – ஆத்மாவை மயக்கமடையச் செய்கிறதோ, **நித்₃ரா ஆலஸ்ய ப்ரமாத₃ உத்த₂ம்** – உறக்கம், சோம்பல், கவனமின்மை இவற்றிலிருந்து தோன்றும், **தத்** – அந்த ஸுகம், **தாமஸம்** – தாமஸம் என்று, **உதா₃ஹ்ருதம்** – கூறப்படுகிறது.

எந்த ஸுகம் அனுபவிக்கும் காலத்திலும், விளைவிலும் ஆத்மாவை மயக்கமடையச் செய்கிறதோ தூக்கம், சோம்பல், கவனமின்மை இவற்றிலிருந்து தோன்றும் அந்த ஸுகம் தாமஸம் என்று கூறப்படுகிறது.

*கேள்வி:* உறக்கம், சோம்பல், கவனமின்மை இவற்றில் உண்டாகும் ஸுகம் என்றால் என்ன? 'அது அனுபவிக்கும் காலத்திலும், விளைவிலும் ஆத்மாவை மயங்கச் செய்கிறது' என்று கூறுவதன் கருத்து என்ன?

*பதில்:* உறக்கத்தின் போது மனம், புலன்கள் இவற்றின் செயல்கள் நின்று விடுகின்றன; களைப்பினால் ஏற்படும் துன்பம் இல்லாமல் போகிறது; மனம், புலன்களுக்கு ஓய்வு கிடைக்கிறது; அதனால் அது ஸுகம் போலத் தோன்றுகிறது; அதைத்தான் தூக்கத்தினால் ஏற்படும் ஸுகம் என்கிறார். துயில் நீடிக்கும்வரை அந்த ஸுகம் இருக்கும். எப்பொழுதும் இராது. ஆகவே கணநேரத்தில் அழியக் கூடியது. இது மட்டுமின்றி, அப்போது மனம், புத்தி,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



புலன்கள் எல்லாம் உணர்வின்றி இருப்பதால், எதையும் அனுபவிக்கும் திறன் இருக்காது. ஆகவே அந்த ஸுகம் அனுபவ நேரத்தில் ஆத்மாவுக்கோ, மனதிற்கோ, புலன்களுக்கோ, அவற்றை உடையவனுக்கோ மயக்கத்தை ஏற்படுத்துகிறது. இந்த ஸுகத்தில் பற்று வைப்பதன் விளைவாக, மனிதன் அஞ்ஞானமயமான மரமாகவோ, மலையாகவோ ஜடப்பிறவி எடுப்பான். ஆகவே, முடிவிலும் அது ஆத்மாவிற்கு மோஹத்தைத்தான் அளிக்கிறது.

அதுபோல எல்லாச் செயல்களையும் துறந்து செயலற்றிருக்கும்போது மனம், புலன்கள், உடல் சிரமப்படாமல் இருப்பதால் ஓய்வு போலத் தோற்றமளிக்கிறது. அது சோம்பலில் உண்டாகிய ஸுகத்தோற்றம். அதுவும் தூக்கத்தில் ஏற்படும் ஸுகம்போலவே மனம், புலன்களில் அறிவொளியின்றி அந்த நேரத்திலேயேகூட மயக்கநிலையில் வைத்திருக்கும். அது முடிவில் மோஹம் மற்றும் பற்றின் காரணமாக, உணர்வற்ற ஜடப்பிறவிகளாகப் பிறக்கச் செய்யும். ஆகவே விளைவிலும் மயக்கம் தருவதே ஆகும்.

மனதை மகிழ்வுறச் செய்வதற்காக, பற்றின் வசப்பட்டுச் செய்யப்படுகின்ற வீணான செயல்களையும், அஞ்ஞானத்தினால் கடமைகளை அலக்ஷ்யம் செய்து செய்யாமல் விட்டுவிடுவதையும் ப்ரமாதம் (கவனமின்மை) என்கிறார். மனமகிழ்ச்சிக்காக வீணான செயல்களில் ஈடுபடுவதிலும், கடமைகளைப் புறக்கணிப்பதனால் உழைப்பிலிருந்து தப்புவதிலும், அறியாமையினால் ஸுகம் போலத் தோற்றமளிப்பது கவனமின்மையினால் ஏற்படும் ஸுகம். மனிதன் தன் மன மகிழ்ச்சிக்காக வீணான செயல்களில் ஈடுபடும்போது, செய்யத்தக்கது–செய்யத்தகாதது பற்றிய அறிவு சிறிதும் இருப்பதில்லை; விவேகமிருப்பதில்லை; அறிவு மங்குகிறது. அறிவு மழுங்கி விடுவதால் செய்யவேண்டியதில் அசட்டை ஏற்படுகிறது. இந்த அசட்டையினால் ஏற்பட்ட ஸுகம், அனுபவ வேளையில் ஆத்மாவை மயக்கி வைத்திருக்கிறது. மேற்குறித்த வீணான செயல்களில் அஞ்ஞானத்தினாலும், பற்றினாலும் ஈடுபடும்போது, பொய், கபடம், ஹிம்ஸை முதலிய பாவச் செயல்களுடையதும், கடமைகளைச் செய்யாமல் விட்ட பாவத்தினுடையதுமான பயனை அனுபவிப்பதற்காகப் பன்றி, நாய் முதலிய ஈனப்பிறவிகளில் பிறக்கவும், நரகத்தை அடையவும் நேரிடுகிறது. விளைவிலும் ஆத்மாவை மயங்க வைக்கிறது.

*கேள்வி:* 'அந்த ஸுகம் தாமஸமானது' என்று கூறுவதன் கருத்து என்ன?

*பதில்:* உறக்கம், சோம்பல், கவனமின்மை இவை தமோகுணத்தின் விளைவுகள் (14/17). இவற்றால் ஏற்படும் ஸுகமும் தாமஸமே. உறக்கம், சோம்பல், வீணான செயல்களில் ஈடுபாடு முதலியவற்றை ஸுகம் என நினைக்கச் செய்து தமோ குணம் மனிதனைப் பந்தப்படுத்துகிறது (14/8). ஆகவே மேன்மையை விரும்புகிறவன் நொடிப்பொழுதே இருக்கின்றதும், மோஹத்தை அளிக்கின்றதும், ஸுகம்போலத் தோற்றமளிக்கின்றதும் ஆன தாமஸ ஸுகத்தில் சிக்கிக் கொள்ளக் கூடாது.

**பொருத்தம்: இவ்வாறு பதினெட்டாவது ச்லோகம் முதல் முக்யமான பொருட்களின் ஸாத்விக, ராஜஸ, தாமஸ என்றுள்ள மும்மூன்று வேறுபாடுகளைச் சொல்லி முடித்து, பகவான் படைப்பில் உள்ள எல்லாப் பொருட்களும் முக்குணங்களால் ஆனவையே என்று சொல்கிறார்—**

न तदस्ति पृथिव्यां वा दिवि देवेषु वा पुनः।
सत्त्वं प्रकृतिजैर्मुक्तं यदेभिः स्यात्त्रिभिर्गुणैः॥४०॥

**ந தத₃ஸ்தி ப்ருதி₂வ்யாம் வா தி₃வி தே₃வேஷு வா புந: ।**
**ஸத்த்வம் ப்ரக்ருதிஜைர்முக்தம் யதே₃பி₄: ஸ்யாத்த்ரிபி₄ர்கு₃ணை: ॥ 40 ॥**

**ப்ரக்ருதிஜை:** – இயற்கையில் உண்டான, **ஏபி₄:** – இந்த, **த்ரிபி₄:** – மூன்று, **கு₃ணை:** – குணங்களிலிருந்தும், **முக்தம்** – விடுபட்டதாக, **யத்** – எந்த, **ஸத்த்வம்** – ப்ராணி **ஸ்யாத்** – இருக்குமோ, **தத்** – அந்த, (**ஸத்த்வம்** – ப்ராணி), **ப்ருதி₂வ்யாம்**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**வா** – நில உலகிலோ, **தி³வி வா** – வானிலோ, **தே³வேஷு** – தேவதைகளிலோ, **புந:** – இவற்றைத் தவிர வேறு இடத்திலோ, **ந அஸ்தி** – இல்லை.

ப்ரக்ருதியில் உண்டான இந்த மூன்று குணங்களிலிருந்து விடுபட்டதாக எந்த ப்ராணியும் நில உலகிலோ, ஆகாயத்திலோ, வானவர்களிலோ, அல்லது இவற்றைத் தவிர வேறு இடத்திலோ (எங்கும்) இல்லை.

**கேள்வி:** இங்கு 'ப்ருதிவ்யாம்', 'திவி', 'தேவேஷு' என்று தனித்தனியாக எதைக் குறிப்பிடுகிறார்? 'புந:' என்பதற்கு என்ன பொருள்?

**பதில்:** 'ப்ருதிவ்யாம்' என்ற சொல் இம்மண்ணுலகிலும், அதற்குக் கீழே பாதாளம் வரை உள்ள உலகங்களிலும் உள்ள சராசரப் பொருட்கள் அனைத்தையும் குறிப்பிடுகிறது. 'திவி' என்ற சொல் பூமிக்கு மேலே வானவெளியில் உள்ள எல்லா ப்ராணிகளையும், பொருட்களையும் சேர்த்துக் கூறுகிறது. 'தேவேஷு' என்ற சொல் தேவர்கள் அனைவரையும், அவர்களது பல்வேறு உலகங்களையும், அவற்றின் தொடர்புடைய பொருட்களையும் கூறுகிறது. இவை தவிர, படைப்புகள் அனைத்திலும் உள்ள பொருட்கள், ப்ராணிகள் ஆகிய எல்லாவற்றையும் 'புந:' என்ற சொல் குறிக்கிறது.

**கேள்வி:** ஸத்வம் என்றால் என்ன? ப்ரக்ருதியில் உண்டான முக்குணங்களிலிருந்தும் விடுபட்ட ஸத்வம் எதுவுமே இல்லை என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஸத்வம் என்பது அனைத்துப் பொருட்களையும், ப்ராணிகளையும் குறிக்கும் சொல். முக்குணங்களும் அற்ற பொருள் ப்ரக்ருதியில் உண்டான எதுவுமே இல்லை. இக்கூற்றின் கருத்து – அனைத்துப் பொருட்களும் ப்ரக்ருதியில் உண்டான ஸத்வம், ராஜஸம், தாமஸம் ஆகிய மூன்று குணங்களின் விளைவுகளே. ப்ரக்ருதியில் உண்டான குணங்களின் தொடர்பினாலேயே ப்ராணிகள் பலவிதமான பிறவிகளில் பிறக்கின்றன *(13/21)*. ஆகவே மண்ணிலும், விண்ணிலும், தேவலோகங்களிலும், மற்ற இடங்களிலும் இருக்கும் பொருட்கள், ப்ராணிகள் அனைத்திலும், ஒன்றுகூட முக்குணத் தொடர்பு பெறாததோ அல்லது முக்குணங்களுக்கு அப்பாற்பட்டதோ கிடையாது. ஏனெனில் ஜடப்பொருட்கள் அனைத்தும் குணங்களின் விளைவுகள். ஆகவே அவை குணமயமானவையே. ப்ராணிகள் அனைத்துக்கும் அந்த குணங்களுடனும், குணங்களின் விளைவுகளான பொருட்களுடனும் தொடர்பு உண்டு. ஆகவே அவையெல்லாமே முக்குணங்களோடு கூடியவைதான்.

**கேள்வி:** படைப்புக்குள் அடங்கினவன் தானே குணாதீதனான புருஷனும்! அப்படியிருக்க முக்குண ஸம்பந்தமில்லாத ப்ராணி ஒன்று கூடக் கிடையாது என்று எப்படிச் சொல்லலாம்?

**பதில்:** ஸாதாரண உலக மக்களின் நோக்கில் குணாதீதனும் படைப்புக்கு உட்பட்டவன்தான். ஆனால் குணாதீதனது நோக்கிலிருந்து பார்க்கும்போது படைப்பு என்பதே கிடையாது. அந்தப் படைப்புக்குள்ளோ, உடலிலோ அவன் இருப்பதில்லை. அவன் பரமாத்மாவிடம் எப்பொழுதும் இரண்டறக் கலந்து நிற்பவன். ஆகவே அவன் பரமாத்ம ஸ்வரூபம். அவனை ஸாதாரண ப்ராணிகளுடன் சேர்த்துப் பேசக் கூடாது. இருப்பினும் மனம், புத்தி, புலன்களின் தொகுப்பான உடலுடன் கூடியவன் என்ற வகையில் அவன் உலகத்தாரால் கண்கூடாகக் காணப்படுவதால் அவனை ப்ராணியென்று சொன்னால் மறுப்பதற்கு இடமில்லை. ஏனெனில், அவனது அந்த உடல், குணங்களின் தொகுப்புதானே? ஆகவே; அந்தப் பார்வையில் அவனை குணங்களுக்கு அப்பாற்பட்டவன் என்று எப்படிக் கூறமுடியும்? அதனால் படைப்புக்குள் முக்குணங்களுடன் ஸம்பந்தமற்ற ஜீவனோ, பொருளோ ஒன்றும் கிடையாது என்ற கூற்றை மறுக்க இயலாது.

**பொருத்தம்: இந்த அத்யாயத்தின் முதல் ச்லோகத்தில் அர்ஜுனன் ஸந்யாஸம், த்யாகம் இவற்றைத் தனித்தனியாகத் தெரிந்து கொள்ள விரும்பினார். அவற்றைத் தெளிவிப்பதற்காக முதலில் இவ்விஷயத்தில் கற்றோர்களின் கணிப்பைக் கூறிவிட்டு**



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ச்லோகம் 4 முதல் 12 வரை தம்முடைய கருத்துப்படி பகவான் த்யாகம், த்யாகி இவர்களின் இலக்கணம் கூறினார். பிறகு 13 முதல் 17 வரை ஸந்யாஸத்தின் (ஸாங்க்ய) ஸ்வரூபத்தை விளக்கி, ஸந்யாஸத்திற்கு உதவுவதான ஸத்வ குணத்தை ஏற்கவேண்டும் என்றும், அதற்கு எதிரான ராஜஸ, தாமஸ குணங்களை விட்டுவிட வேண்டும் என்றும், 18 முதல் 40 வரை குணங்களுக்கு ஏற்ப ஞானம், கர்மம், கர்த்தா முதலிய மிக முக்யமானவற்றின் வேறுபாடுகளை விளக்கினார். இறுதியில் படைப்பு அனைத்துமே குணங்களுடன் கூடியதுதான் என்றும் கூறி அந்த விஷயத்தை நிறைவு செய்தார்.

த்யாகத்தைப் பற்றிக் கூறும்போது விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்யாமல் விடுவது உசிதமன்று (18/7) என்றும், விதிக்கப்பட்ட கடமைகளை ஆற்றி அவற்றில் பற்றையும், பயனில் கருத்தையும் த்யாகம் செய்வதுதான் உண்மையான த்யாகம் (18/9) என்றும் பகவான் கூறினாரே தவிர, யாருக்கு எந்தக் கர்மம் விதிக்கப்பட்டது என்பதை அங்கே கூறவில்லை. ஆகவே இனி, சுருக்கமாக நியத கர்மங்களின் தன்மை, த்யாகம் என்ற பெயரால் அழைக்கப்படுகின்ற கர்மயோகத்தில் பக்தியின் ஒத்துழைப்பு, அதன் பயன் பரமஸித்தி பெறுதல் ஆகிய அனைத்தையும் கூறப் போகிறார். அதற்காக த்யாகம் என்ற கர்மயோகத்தைப் பற்றிக் கூற ஆரம்பித்து, ப்ராம்மணர் முதலிய நான்கு வர்ணத்தவரின் இயல்புக்கு ஏற்றவாறு விதிக்கப்பட்ட கடமைகளைக் கூற முற்படுகிறார்—

**ब्राह्मणक्षत्रियविशां शूद्राणां च परन्तप।**
**कर्माणि प्रविभक्तानि स्वभावप्रभवैर्गुणैः॥ ४१॥**

**ப்₃ராஹ்மணக்ஷத்ரியவிஶாம் ஶூத்₃ராணாம் ச பரந்தப ।**
**கர்மாணி ப்ரவிப₄க்தாநி ஸ்வப₄ாவப்ரப₄வைர்கு₃ணை: ॥ 41 ॥**

**பரந்தப** – எதிரிகளை வாட்டுபவனே! **ப்₃ராஹ்மண க்ஷத்ரியவிஶாம்** – ப்ராம்மணன், க்ஷத்ரியன், வைசியன் இவர்களுடைய, **ஶூத்₃ராணாம் ச** – மற்றும் நான்காம் வர்ணத்தவர்களுடைய, **கர்மாணி** – கர்மங்கள், **ஸ்வப₄ாவப்ரப₄வை:** – இயல்பிலிருந்து உண்டான, **கு₃ணை:** – குணங்களுக்கு ஏற்ப, **ப்ரவிப₄க்தாநி** – பிரிக்கப்பட்டிருக்கின்றன.

எதிரிகளை வாட்டுபவனே! ப்ராம்மணன், க்ஷத்ரியன், வைசியன் இவர்களுடைய மற்றும் நான்காம் வர்ணத்தவர்களுடைய கர்மங்கள் இயல்பிலிருந்து உண்டான குணங்களுக்கு ஏற்பப் பிரிக்கப்பட்டிருக்கின்றன.

**கேள்வி:** ப்ராம்மணர், க்ஷத்ரியர், வைசியர்களைச் சேர்த்தும் நான்காம் வர்ணத்தவரைத் தனியாகவும் குறிப்பிடுவதன் கருத்து என்ன?

**பதில்:** முதல் மூவரும் இரு பிறப்பாளர்கள். மூவருக்கும் முப்புரி (பூணூல்) உண்டு. வேதம் கற்கவும், வேள்வி முதலிய கர்மங்களைச் செய்யவும் தகுதி உண்டு. ஆகவே அவர்களைச் சேர்த்துக் கூறினார். நான்காம் வர்ணத்தவர் இரு பிறப்பாளர் அல்லர். அவர்கள் முப்புரி தரிக்க வேண்டுமென்றோ, வேதங்களைக் கற்க வேண்டுமென்றோ நியதி இல்லை. வேள்வி முதலான வைதிக கர்மங்களில் அவர்களது பங்கு குறிப்பிடப்படவில்லை. ஆகவே அவர்களைப் பிரித்துக் கூறினார்.

**கேள்வி:** 'ஸ்வபாவப்ரபவை: குணை:' என்று கூறுவதன் கருத்து என்ன? அந்த குணங்களுக்கேற்ப மேற்குறித்த நான்கு வர்ணத்தவருக்கும் கர்மங்கள் பிரிக்கப்பட்டிருக்கின்றன என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ப்ராணிகள் பல பிறவிகளில் செய்த கர்மங்களின் ஸம்ஸ்காரங்களால் (மனப் பதிவுகளால்) அமைகிறதே, அவற்றின் பெயர் இயல்பு. அந்த இயல்புக்கு ஏற்பவே உள்ளத்தில் ஸத்வம், ராஜஸம், தாமஸம் என்ற முக்குணங்களின் செயல்பாடுகள்


CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஏற்படுகின்றன. இதைத்தான் 'ஸ்வபாவப்ரபவை: குணை:' என்ற சொற்கள் கூறுகின்றன. குணங்களைப் பொறுத்து நான்கு வர்ணங்களுக்கும் கர்மங்கள் பிரிக்கப்பட்டுள்ளன என்று கூறுவதன் கருத்து யாதெனில் குணங்கள் செயல்படுவதற்கேற்ப மனிதர்கள், ப்ராம்மணர் முதலிய வர்ணங்களில் பிறக்கிறார்கள். அந்த குணங்களுக்கு ஏற்றவாறே சாஸ்த்ரங்களில் நான்கு வர்ணத்தாருடைய கடமைகள் பிரிக்கப்பட்டுள்ளன. ஸத்வகுண இயல்புகளே அதிகமுள்ளவன் ப்ராம்மணனாகப் பிறக்கிறான். அவனுக்குப் புலன் அடக்கம், மன அடக்கம் முதலியவை இயல்பான கர்மங்கள் எனக் கூறப்பட்டுள்ளன. ஸத்வகுணம் கலந்த ரஜோகுணம் மிகுந்தவன் க்ஷத்ரியனாகப் பிறக்கிறான். அவனுக்கு சூரவீரத்தனம், துணிவு – இவை தலையாய கர்மங்களாக அமைகின்றன. தமோகுணம் கலந்த ரஜோகுணம் மிகுந்தவன் வைசியனாகப் பிறக்கிறான். உழுது பயிரிடுதல், பசுக்களைக் காப்பது முதலியவை அவனுக்கு இயல்பான கர்மமாக ஆகிறது. ரஜோகுணம் கலந்த தமோகுணம் மிகுந்தவன் நான்காம் வர்ணத்தில் பிறக்கிறான். அதன் காரணமாக அவன் மூவர்ணத்தாருக்கும் பணிவிடை செய்யும் இயல்பு படைத்தவன் ஆகிறான். இது பற்றி 4/13 உரையில் விரிவாகக் கூறப்பட்டது.

**பொருத்தம்: முன் ச்லோகத்தில் கூறிய முன்னுரைப்படி முதலில் ப்ராம்மணனின் இயல்பான கர்மங்களைக் கூறுகிறார்—**

**शमो दमस्तपः शौचं क्षान्तिरार्जवमेव च।**
**ज्ञानं विज्ञानमास्तिक्यं ब्रह्मकर्म स्वभावजम्॥४२॥**

**ஶமோ த₃மஸ்தப: ஶௌசம் க்ஷாந்திரார்ஜவமேவ ச ।**

**ஜ்ஞாநம் விஜ்ஞாநமாஸ்திக்யம் ப்₃ரஹ்மகர்ம ஸ்வபா₄வஜம் ॥ 42 ॥**

**ஶம:** – மனவடக்கமும், **த₃ம:** – புலனடக்கமும், **தப:** – தர்மத்தைக் கடைப்பிடிப்பதற்காக மேற்கொள்ளப்படும் தவமும் (துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளுதலும்), **ஶௌசம்** – அகத்தூய்மை, புறத்தூய்மையும், **க்ஷாந்தி:** – பிறர் குற்றம் பொறுத்தலும், **ஆர்ஜவம்** – மனம், புலன், உடல் இவற்றின் நேர்மையும், **ஆஸ்திக்யம்** – வேதம், சாஸ்த்ரம், கடவுள், பரலோகம் முதலியவற்றில் ச்ரத்தையும், **ஜ்ஞாநம் ச** – வேதங்களையும், சாஸ்த்ரங்களையும் கற்றலும், கற்பித்தலும், **விஜ்ஞாநம் ஏவ** – பரமாத்ம தத்வத்தை அனுபவம் மூலம் உணர்வதும்தான், **ஸ்வபா₄வஜம் ப்ரஹ்மகர்ம** – ப்ராம்மணர்களுக்குரிய இயல்பான கர்மங்கள் ஆகும்.

மனவடக்கமும், புலனடக்கமும், ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பதற்காகத் துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளுதலும், அகத்தூய்மை, புறத்தூய்மையும், பிறர் குற்றம் பொறுத்தலும் மனம், புலன், உடல் இவற்றில் நேர்மையும் வேதம், சாஸ்த்ரம், கடவுள், பரலோகம் இவற்றில் நம்பிக்கையும், வேதங்களையும், சாஸ்த்ரங்களையும் கற்றலும், கற்பித்தலும் பரமாத்ம தத்வத்தை அனுபவிப்பதும்தான் ப்ராம்மணர்களுக்கு இயல்பாகவே உண்டான கர்மங்கள்.

**கேள்வி:** 'ஶமம்' என்றால் என்ன?

**பதில்:** உள்ளத்தைத் தன்வசப்படுத்திக் கலங்காமல் அமைதியாக வைத்துக் கொள்வதும் உலகியல் போகங்களின் சிந்தனைகளைத் துறப்பதும் 'ஶமம்' (மனவடக்கம்) எனப்படும்.

**கேள்வி:** 'தமம்' என்றால் என்ன?

**பதில்:** எல்லாப் புலன்களையும் தன் வசப்படுத்தி, அவ்வாறு வசப்படுத்தப்பட்ட புலன்களை வெளிப் பொருட்களில் நாட்டம் கொள்ளாமல் தடுத்துப் பரமாத்மாவை அடைவதற்கான உபாயங்களில் முனைய வைப்பது 'தமம்' ஆகும்.

**கேள்வி:** 'தவம்' என்றால் இங்கு என்ன பொருள் கொள்ள வேண்டும்?



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பதில் ஏற்படும் துன்பங்களைப் பொறுப்பது, அதாவது அஹிம்ஸை முதலிய சிறந்த வ்ரதங்களைக் கைக்கொள்வது, போகப் பொருட்களைத் துறந்து எளிமையாக இருப்பது, ஏகாதசி முதலிய உபவாஸங்களை ஏற்பது, தனித்துக் காட்டில் வாழ்வது, இவையெல்லாம் 'தவம்' ஆகும்.

**கேள்வி:** *'மௌசம்' என்றால் என்ன?*

**பதில்:** *16/3*ல் 'மௌசம்' என்பதை விளக்கும்போது வெளித்தூய்மை பற்றிக் கூறினார். *16/1*ல் 'ஸத்வ ஶுத்தி' என்ற பெயரில் உள்ளத்தூய்மை பற்றிய விளக்கம் கூறினார். இவை இரண்டையும் சேர்த்து இங்கே 'மௌசம்' என்று குறிப்பிடுகிறார். *13/7*லும் கூட, இந்த மௌசம் பற்றியே விளக்கம் கூறப்பட்டது. மனம், உடல், புலன்களையும், அவற்றின் செயல்களையும் தூயனவாக வைத்துக் கொள்ளவேண்டும். எவ்விதமான மாசும் நேராமல் பார்த்துக் கொள்ளவேண்டும். இதுவே மௌசம்.

**கேள்வி:** *'க்ஷாந்தி:' என்றால் என்ன?*

**பதில்:** பிறரால் இழைக்கப்படும் தவறுகளைப் பொறுத்துக் கொள்வது 'க்ஷாந்தி' எனப்படும். *10/4*ன் உரையில் 'க்ஷமா' என்ற பெயராலும், *13/7*ல் 'க்ஷாந்தி:' என்ற பெயராலும் இதற்கு நன்றாக விளக்கம் கூறப்பட்டது.‡

**கேள்வி:** *'ஆர்ஜவம்' என்றால் என்ன?*

**பதில்:** மனம், உடல், புலன்களால் நேர்மையைக் கடைப்பிடிப்பது. அதாவது மனம் எந்தத் தீய பிடிவாதமும் கொள்ளக் கூடாது. மனம் போலவே புலன்களும் இயங்க வேண்டும். உடலில் எந்தவிதமான நேர்மையற்ற இயக்கங்களும் வளரக் கூடாது. இவையனைத்தும் 'ஆர்ஜவம்' (நேர்மை) என்பதில் அடங்கும்.

**கேள்வி:** *'ஆஸ்திக்யம்' என்றால் என்ன?*

---

‡ ஒரு ஸமயம் காதியின் குமாரரான மஹாராஜா விசுவாமித்ரர் வஸிஷ்ட மஹரிஷியுடைய ஆசிரமத்திற்குச் சென்றார். அவருடன்கூடப் பெரிய படை சென்றது. 'நந்தினி' என்ற பெயருள்ள காமதேனுவின் அருளினால் வஸிஷ்டர் அரசனுக்கும், படைகளுக்கும் விதவிதமான உணவுப் பண்டங்களை நல்ல முறையில் விருந்தாக அளித்தார். ரத்னங்கள், ஆடைகள், அலங்காரப் பொருட்கள் ஆகியவை அளித்தார். விசுவாமித்ரர் உள்ளத்தில் அந்தப் பசு தமக்கு வேண்டுமென்ற பேராசை பிறந்தது. வஸிஷ்டரிடம் பசுவை வேண்டினார். வஸிஷ்டர் 'விண்ணவர், விருந்தினர், தென்புலத்தார் இவர்களைப் பூஜிக்கவும், யாகம் செய்யவும் உதவியாக நான் இப்பசுவை வைத்துக் கொண்டிருக்கிறேன். ஆகவே இதைத் தர இயலாது' என்று கூறிவிட்டார். விசுவாமித்ரர் தமது படை பலத்தையும், ஆயுத பலத்தையும் பற்றிய கர்வம் மிகுந்து, வலுவில் நந்தினியை ஓட்டிப் போய்விடலாம் என நினைத்தார். நந்தினி அழுது கொண்டே வஸிஷ்டரைப் பார்த்து, 'பெரியீர்! விசுவாமித்ரரின் ஈவிரக்கமில்லாப் படையாட்கள் என்னைக் கொடுமையாகக் கம்பினாலும், தார்க்குச்சியினாலும் துன்புறுத்துகிறார்களே! நீங்கள் இந்தக் கொடுமையைப் பார்த்துக் கொண்டு வாளாவிருக்கிறீர்களே!' என்று கூறியது.

வஸிஷ்டர் சொன்னார்—

க்ஷத்ரியாணாம் ப$_3$லம் தேஜோ ப்$_3$ராஹ்மணாநாம் க்ஷமா ப$_3$லம் ।
க்ஷமா மாம் ப$_4$ஜதே யஸ்மாத்$_3$க$_3$ம்யதாம் யதி$_3$ ரோசதே ॥

(மஹா. ஆதி$_3$பர்வம் 175/28)

'க்ஷத்ரியர்களுக்கு வலிமை வீரம். அந்தணர்களுக்கு வலிமை பொறுமை. நான் பொறுமையை இழக்கமாட்டேன். உனக்கு விருப்பம் இருந்தால் நீ அவருடன் போகலாம்.'

நந்தினி சொல்லிற்று– 'நீங்கள் என்னைக் கைவிடவில்லையானால் எவராலும் என்னை பலவந்தமாக இழுத்துச் செல்ல முடியாது.'

வஸிஷ்டர் சொன்னார்– 'நான் உன்னைக் கைவிடவில்லை. என்னிடம் நீ இருக்க விரும்பினால் இரு.'

உடனே நந்தினி அச்சமூட்டும் பேருருவம் எடுத்தது. அதனுடைய வாலிலிருந்து தீக்கொழுந்து வீசியது; பிறகு கொடிய ம்லேச்சர்கள் உண்டானார்கள். விசுவாமித்ரரின் படையாட்கள் உறுதியிழந்தனர். நந்தினியின் வீரர்கள் விசுவாமித்ரருடைய படை வீரன் ஒருவனைக் கூடக் கொல்லவில்லை. அவர்கள் பயத்திலேயே ஓடிவிட்டனர். விசுவாமித்ரர் தன்னையே காத்துக் கொள்ள முடியாமல் தவித்தார். அவருக்கு ஒரே ஆச்சர்யம். அவர் சொன்னார்–

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** வேதம், சாஸ்த்ரம், கடவுள், பரலோகம் இவை உண்மையானவை என்ற நம்பிக்கை கொள்ளுதல். வேத சாஸ்த்ரங்களையும், பெரியோர்களுடைய சொற்களையும் உள்ளபடியே மதித்தல். ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பதில் உறுதியான நம்பிக்கை வைத்தல். இவைதான் 'ஆஸ்திக்யம்' என்பதன் இலக்கணம்.

**கேள்வி:** 'ஜ்ஞாநம்' என்றால் என்ன?

**பதில்:** வேத சாஸ்த்ரங்களை ச்ரத்தையுடன் கற்றுத் தேர்ந்து கற்பிப்பதுடன், அவை கூறும் உபதேசங்களை நன்கு அறிந்து கொள்வதுதான் இங்கே 'ஜ்ஞாநம்' என்ற சொல்லுக்குப் பொருள்.

**கேள்வி:** 'விஜ்ஞாநம்' என்றால் என்ன?

**பதில்:** வேத சாஸ்த்ரங்களில் கூறப்பட்டபடியும், பெரியோர்களின் உபதேசப்படியும் ஸாதனைகள் புரிந்து பரமாத்மாவை உள்ளபடி நேரில் கண்டு அனுபவிப்பதுதான் 'விஜ்ஞாநம்'.

**கேள்வி:** இவையாவும் ப்ராம்மணனுக்கு இயல்பாகவே உண்டான கர்மங்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ப்ராம்மணனிடம் பெரும்பாலும் ஸத்வகுணம் மட்டுமே அதிகமாக இருக்கும். அதன் காரணமாக அவனுக்கு மேலே சொன்னவற்றில்தான் இயல்பான ஈடுபாடு இருக்கும். அவனுடைய இயல்பு மேலே சொன்ன கர்மங்களைச் செய்யத்தக்கவாறு அமையும். ஆகவே மேலே சொன்ன கர்மங்களைச் செய்வதில் அவனுக்குச் சிறிதுகூடக் கஷ்டம் இருக்காது. இந்தக் கடமைகளில் பல ஸாமான்ய தர்மங்களும் கூறப்பட்டுள்ளன. ஆகவே க்ஷத்ரியர் முதலிய மற்ற வர்ணத்தவர்களுக்கு இவை இயல்பான கடமைகள் அல்லனவாயினும், பரமாத்மாவை அடைவதற்கு அனைவருக்கும் தகுதி இருப்பதால், அவர்கள் பெருமுயற்சி செய்தாவது இந்த ஸாமான்ய தர்மங்களைக் கடைப்பிடிக்க வேண்டும்.

**கேள்வி:** மனுஸ்ம்ருதியில் ப்ராம்மணர்களுக்கு வேதங்களைக் கற்பது, கற்பிப்பது, தாமே யக்ஞம் செய்வது, பிறருக்குச் செய்விப்பது, தானம் ஏற்பது, தாமே பிறர்க்குக் கொடுப்பது என்று ஆறு கடமைகள் கூறப்பட்டுள்ளன.‡ ஆனால் இங்கு ஶமம், தமம் என்று பொதுவான

---

**திக்$_4$ப$_3$லம் க்ஷத்ரியப$_3$லம் ப்$_3$ரஹ்மதேஜோப$_3$லம் ப$_3$லம் ।**

*(மஹா. ஆதி$_3$பர்வம் 175/44)*

'க்ஷத்ரியனுடைய பராக்ரமம் எம்மட்டு? உண்மையில் அந்தணனின் தேஜஸின் வலிமைதான் வலிமை.' பிறகு சாபத்தினால் ராக்ஷஸனாகிவிட்ட கல்மாஷபாதன் என்ற அரசன் விசுவாமித்ரரால் தூண்டப்பட்டு, வஸிஷ்டருடைய புதல்வர்கள் அனைவரையும் கொன்றுவிட்டான். ஆயினும் வஸிஷ்டர் பழிவாங்கும் எண்ணம் கொள்ளவில்லை; பொறுமை இழக்கவில்லை.

வால்மீகி ராமாயணத்தில் இந்நிகழ்ச்சி சொல்லப்படுகிறது. பிறகு விசுவாமித்ரர் அரசைத் துறந்து பெரும் தவம் செய்தார். ஆயிரக்கணக்கான ஆண்டுகள் செய்த கடுந்தவத்தின் பயனாக முதலில் ராஜரிஷியாகி, பின் மஹரிஷியாகிக் கடைசியில் ப்ரம்மரிஷியாக உயர்ந்தார். தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்க, பொறுத்தருளும் பண்பு கொண்ட வஸிஷ்டரும் அவரை ப்ரம்மரிஷியாக ஏற்றுக் கொண்டார். முடிவில் தர்மாத்மாவான விசுவாமித்ரரும் உத்தமமான ப்ராம்மண நிலையைப் பெற்று, மந்த்ரஜபம் செய்பவர்களில் சிறந்தவரான ப்ரம்மரிஷி வஸிஷ்டரைப் பூஜித்தார்.

**விச்வாமித்ரோऽபி த$_4$ர்மாத்மா லப்$_3$த்$_4$வா ப்$_3$ராஹ்மண்யமுத்தமம் ।**
**பூஜயாமாஸ ப்$_3$ரஹ்மர்ஷிம் வஸிஷ்ட$_2$ம் ஜபதாம் வரம் ॥**

*(வால்மீகி ராமாயணம் 1/65/27)*

‡ **அத்$_4$யாபநமத்$_4$யயநம் யஜநம் யாஜநம் தத$_2$ா ।**
**த$_3$ாநம் ப்ரதிக்$_3$ரஹம் சைவ ப்$_3$ராஹ்மணாநாமகல்பயத் ॥**

*(மநுஸ்ம்ருதி 1/88)*

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மனித தர்மங்களைக் கூட ப்ராம்மணர்களுக்கு என்று கூறுகிறாரே! இப்படிக் கூறுவதன் கருத்து என்ன?

*பதில்:* இங்கே கூறப்பட்ட கடமைகள் எல்லாம் ஸாத்விகமானவை. ஆதலால் ப்ராம்மணர்களுக்கு இயல்பாகவே இவற்றோடு நெருங்கிய தொடர்பு உண்டு. ஆகவே ப்ராம்மணர்களுடைய இயல்பான கடமைகளில் இவற்றையும் சேர்த்துச் சுருக்கமாகக் கூறுகிறார். இவை தவிர மனுஸ்ம்ருதி முதலியவற்றில் இன்னும் பல கடமைகள் கூறப்பட்டுள்ளன. அவற்றையும் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

*பொருத்தம்:* **ப்ராம்மணர்களுக்குரிய இயல்பான கடமைகளைக் கூறிவிட்டு, அடுத்து க்ஷத்ரியர்களுக்குரிய இயல்பாக உண்டான கர்மங்களைக் கூறுகிறார்—**

**शौर्यं तेजो धृतिर्दाक्ष्यं युद्धे चाप्यपलायनम्।**
**दानमीश्वरभावश्च क्षात्रं कर्म स्वभावजम्॥४३॥**

**ஶௌர்யம் தேஜோ த்$_4$ருதிர்த$_3$ாக்ஷ்யம் யுத்$_3$தே$_4$ சாப்யபலாயநம் ।**

**த$_3$ாநமீஶ்வரப$_4$ாவஶ்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம் ॥ 43 ॥**

**ஶௌர்யம்** – சூரவீரத்தனமும், **தேஜ:** – தேஜஸ்ஸும், **த்$_4$ருதி:** – உறுதியும், **த$_3$ாக்ஷ்யம் ச** – திறமையும், **யுத்$_3$தே$_4$ அபி அபலாயநம்** – போரில் புறங்காட்டாமையும், **த$_3$ாநம்** – கொடையும், **ஈஶ்வரப$_4$ாவ: ச** – ஆளும் தன்மையும், **க்ஷாத்ரம்** – க்ஷத்ரியர்களுக்குரிய, **ஸ்வப$_4$ாவஜம்** – இயல்பான, **கர்ம** – கர்மங்கள் ஆகும்.

சூரவீரத்தனமும், தேஜஸ்ஸும், உறுதியும், திறமையும், போரில் புறங்காட்டாமையும், கொடையும், ஆளும் தன்மையும் க்ஷத்ரியர்களுக்கு இயல்பாக உண்டான கர்மங்கள்.

*கேள்வி:* 'ஶௌர்யம்' என்றால் என்ன?

*பதில்:* வலிமையுள்ளோர்களிலும் மிகப்பெரு வலிமை பொருந்திய எதிரியையும் ந்யாயமான முறையில் எதிர்த்துத் தாக்குவதில் பயமின்மை; ந்யாயமாகப் போராடுவதில் எப்பொழுதும் உற்சாகத்துடன் இருப்பது; யுத்தத்தின்போது ஸாஹஸத்துடனும், பெருமிதத்துடனும் துணிந்து நின்று போரிடுதல் இவைதான் 'ஶௌர்யம்'. பாட்டனார் பீஷ்மரின் வாழ்க்கை இதற்கு மிகச்சிறந்த எடுத்துக்காட்டு.‡

---

‡ இளமையிலிருந்தே ப்ரம்மசர்ய வ்ரதத்தை மேற்கொண்ட பாட்டனார் பீஷ்மரிடம் க்ஷத்ரியர்களுக்குரிய எல்லா குணநலன்களும் காணப்பட்டன. அவர் க்ஷத்ரியர்களுக்குப் பகைவர் என்று புகழ் பெற்ற பகவான் பரசுராமரிடம் வில்வித்தை கற்றார். காசிராஜனின் பெண் அம்பையை பீஷ்மர் மணந்து கொள்ள பரசுராமர் தம் செல்வாக்கைப் பயன்படுத்தி அவரை மிகவும் வற்புறுத்தினார். அப்போது பீஷ்மர் தமது ஸத்யத்தைக் காக்க வேண்டும் என்பதற்காக மிகுந்த பணிவுடன் அதற்கு உடன்பட ஒரேயடியாக மறுத்தார். பரசுராமர் பீஷ்மரின் சொற்களை ஏற்காமல், அவரை அதட்டத் தொடங்கினார். அப்பொழுது பீஷ்மர் தெளிவாகச் சொன்னார்: "பயந்து போயோ, மனம் கனிந்தோ, செல்வப் பற்றினாலோ, ஆசைக்கு வசப்பட்டோ நான் க்ஷத்ரிய தர்மத்திலிருந்து வழுவ மாட்டேன். நான் உறுதியோடு காக்கும் வ்ரதம் இது. பரசுராமரே! 'பல ஆண்டுகளாகப் பல முறை நான் ஒருவனாகவே எல்லா க்ஷத்ரியர்களையும் போரிட்டு வென்றிருக்கிறேன்' என்று உலகத்தினர் முன்பு வீரம் பேசுகிறீர்களே. அது பற்றி என்னிடம் கேளுங்கள். அப்படி நீங்கள் யுத்தம் செய்தபோது பீஷ்மன் பிறக்கவில்லை. பீஷ்மனைப்போன்று இன்னொரு க்ஷத்ரியனும் பிறக்கவில்லை. நீங்கள் வெறும் பதர்களிடம்தான் உங்களுடைய வீரத்தைக் காட்டியிருக்கிறீர்கள். க்ஷத்ரியர்களில் திறம் மிகுந்தவர்கள் என்னவோ அதன் பின்னர்தான் பிறந்திருக்கிறார்கள் போலும்! பரசுராமரே! இப்போது நிச்சயமாக யுத்தத்தில் உமது கர்வத்தை அடக்குவேன்."

ந ப$_4$யாந்நாப்யநுக்ரோஶாந்நார்த$_2$லோப$_4$ாந்ந காம்யயா ।
க்ஷாத்ரம் த$_4$ர்மமஹம் ஜஹ்யாமிதி மே வ்ரதமாஹிதம் ॥
யச்சாபி கத்த$_2$ஸே ராம ப$_3$ஹுஶ: பரிவத்ஸரே ।
நிர்ஜிதா: க்ஷத்ரியா லோகே மயைகேநேதி தச்ச்$_2$ருணு ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'தேஜஸ்' என்றல் என்ன?

**பதில்:** எந்த சக்தியின் ப்ரபாவத்தினால் பிறருடைய பயமுறுத்தலுக்கு ஆளாக நேரினும், எந்த ஒரு கடமையிலிருந்தும் மனிதன் தவறுவதில்லையோ, நீதிக்கு எதிராகச் செயல்படுவதிலும் பயப்படுகிறார்களோ, அந்த சக்திக்கு 'தேஜஸ்' என்று பெயர். இதையே 'ப்ரதாபம்' என்றும், 'ப்ரபாவம்' (துணிவு) என்றும் சொல்கிறார்கள்.

**கேள்வி:** 'த்ருதி:' என்றால் என்ன?

**பதில்:** மிகப் பெரும் இடுக்கண்கள் நேர்ந்தாலும், போர்க்களத்தில் உடலில் பலமான காயங்கள் ஏற்பட்டாலும், தன் புதல்வர்களும், பேரன்களும் மரித்தாலும், எல்லாச் சொத்துக்களும் அழிந்துவிட்டாலும், எவ்விதமான மிகப் பேராபத்துக்கள் வந்தாலும் கலங்காமல், ஒருவன் தனது கடமையிலிருந்து வழுவாமல் முறைப்படியான தன் கடமைகளில் ஈடுபட்டிருப்பதுதான் 'த்ருதி' (உறுதி) எனப்படும்.

**கேள்வி:** 'தாக்ஷ்யம்' என்றால் என்ன?

---

*ந தத$_3$ா ஜாதவாந் பீ$_4$ஷ்ம: க்ஷத்ரியோ வாபி மத்$_3$வித$_4$: ।*
*பஶ்சாஜ்ஜாதாநி தேஜாம்ஸி த்ருணேஷு ஜ்வலிதம் த்வயா ॥*
*வ்யபநேஷ்யாமி தே த$_3$ர்பம் யுத்$_3$தே$_4$ ராம ந ஸம்ஶய: ।*

*(மஹா. உத்$_3$யோக$_3$. 178)*

பரசுராமருக்கு மிகுந்த கோபம் வந்துவிட்டது. போர் மூண்டது. தொடர்ந்து இருபத்து மூன்று நாட்கள் பயங்கரமான போர் தொடர்ந்தது. பரசுராமரால் பீஷ்மரைத் தோல்வியுறச் செய்ய முடியவில்லை. முடிவில் நாரதர் முதலிய முனிவர்களும், பீஷ்மரின் தாயாரான கங்காதேவியும் நடுவில் வந்து நிற்கவே, பரசுராமர் வில்லை விடுக்க யுத்தம் முடிந்தது. பீஷ்மர் போரிலிருந்து புறங்காட்டவும் இல்லை; ஆயுதத்தை முதலில் கைவிடவுமில்லை (மஹா. உத்யோக. 185).

பதினெட்டு நாட்கள் நடந்த மஹாபாரதப் போரில், தொடர்ந்து முதல் பத்து நாட்களுக்கு பீஷ்மர் ஒருவரே கௌரவப் படைத்தலைவராக நின்று விளங்கினார். எஞ்சிய எட்டு நாட்களில் எத்தனையோ படைத்தலைவர்கள் மாறினார்கள்.

பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் 'மஹாபாரதப் போரில் ஆயுதம் எடுக்க மாட்டேன்' என்று சபதம் பூண்டிருந்தார். ஆனால் 'எப்படியாவது ஸ்ரீக்ருஷ்ணனை ஆயுதம் எடுக்க வைப்பேன்' என்று பீஷ்மர் சூளுரைத்ததாகச் சொல்வர். மஹாபாரதத்தில் இந்தக் கதை இவ்வடிவில் இல்லாதிருப்பினும் ஸூர்தாஸர் பீஷ்மரின் ப்ரதிக்ஞையை இவ்வாறு வர்ணிக்கிறார். "இன்று நான் ஸ்ரீஹரியை ஆயுதம் எடுக்க வைக்காவிட்டால் என்னை கங்கா புத்ரன் என்று சொல்லிக் கொள்ள வெட்கப்படுவேன். சந்தனுவின் குமாரன் என்றும் சொல்லிக் கொள்ள மாட்டேன். குதிரைகளை மாய்ப்பேன்; அனுமனைக் கொடியில் தாங்கிய ரதத்தைத் தூள் துளாக்குவேன். இப்படி நான் செய்யாமற்போனால் பகவான் மேல் ஆணையாக, ஒரு க்ஷத்ரியனுக்குரிய உயர்வான இடம் எனக்குக் கிடைக்காமற்போவதாக. பாண்டவர் ஸேனையின் முன்னே சென்று இரத்த ஆற்றைப் பெருக்குவேன். இப்படிச் செய்யாமல் புறமுதுகு காட்டிப் போர்க்களத்திலிருந்து உயிரோடு நான் திரும்பமாட்டேன்."

*ஆஜ ஜோ ஹரிஹி ந ஸஸ்த்ர க$_3$ஹாஊ(ம்) ।*
*தௌ லாஜௌ க$_3$ங்க$_3$ா ஜநநீ கோ, ஸாந்தநு ஸுத ந கஹாஊ(ம்) ॥*
*ஸ்யந்த$_3$ந க$_2$ண்டி$_3$ மஹாரத$_2$ க$_2$ண்டெ$_3$ள(ம்), கபித்$_4$வஜ ஸஹித டு$_3$லாஊ(ம்) ।*
*இதீ ந கரௌ(ம்) ஸபத$_2$ மோஹி ஹரி கீ, க்ஷத்ரிய க$_3$திஹி ந பாஊ(ம்) ॥*
*பாண்ட$_3$வத$_3$ல ஸநமுக$_2$ ஹ்வை த$_4$ாஊ(ம்), ஸரிதா ருதி$_4$ர ப$_3$ஹாஊ(ம்) ।*
*ஸூரத$_3$ாஸ ரநபூ$_4$மி விஜய பி$_3$ந, ஜியத ந பீட்$_2$ தி$_3$க$_2$ாஊ(ம்) ॥*

நடந்தது என்னவாயினும் மஹாபாரதத்தில் பின்வருமாறு வருகிறது: மூன்றாம் நாள் போரில் பீஷ்மர் பயங்கரமாகப் போரிட்டார். பகவான் கோபமுற்றுக் குதிரைக் கடிவாளங்களைக் கையிலிருந்து வீசிவிட்டு, ஸூர்யனைப்போல ஒளிர்கின்ற தமது சக்ராயுதத்தைச் சுழற்றிக் கொண்டே ரதத்திலிருந்து குதித்தார். ஸ்ரீக்ருஷ்ணன் இப்படிச் சக்ராயுதம் தாங்கி வருவதைப் பார்த்து அனைவரும் உரத்தகுரலில் 'ஹா ஹா' என்று கூக்குரல் இட்டனர். பகவான் ப்ரளய காலப் பெருந்தீ போல பீஷ்மரை நோக்கி விரைந்தார். ஸ்ரீக்ருஷ்ணன் இப்படிச் சக்ரம் தாங்கித் தம்மை நோக்கி ஓடி வருவதைப் பார்த்து மஹாத்மா பீஷ்மர் சிறிதும் பயப்படவில்லை. அசைந்து கொடாது, தம்முடைய வில்லை டங்காரம் செய்துவிட்டுக் கூறினார்: "தேவதேவ! ஜகந்நிவாஸ! மாதவ! சக்ரபாணியே! எழுந்தருளுங்கள். உங்களை வணங்குகிறேன். அனைவருக்கும் தஞ்சம் அளிப்பவரே! நீங்கள் பலங்கொண்டு இந்தச் சிறந்த ரதத்திலிருந்து என்னைக் கீழே வீழ்த்துங்கள். கண்ணபிரானே! இன்று நான்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** ஒருவர்க்கொருவர் சண்டையிடும்போது அவர்களிடையே ந்யாயம் செய்து வைப்பது; தான் என்ன செய்ய வேண்டுமென்பதைத் தீர்மானித்துக் கொள்வது; அதன்படி செயல்படுவது; போர் புரிவதிலும், நண்பர், பகைவர் இரண்டுமல்லாதவருடன் தக்கபடி நடந்து கொள்வது ஆகிய செயல்களில் திறமையுடன் நடந்து கொள்வது 'தாக்ஷ்யம்' ஆகும்.

**கேள்வி:** 'போரில் புறங்காட்டாமை' என்றால் என்ன?

**பதில்:** போர் புரியும்போது சமாளிக்க முடியாது எந்த இன்னல்கள் நேர்ந்தாலும் புறமுதுகு காட்டி ஓடாமை; எந்த நிலையிலும் ந்யாய முறையில் எதிர்த்தாக்குதல் செய்து தன் சக்தியை உபயோகித்து, உயிரை மதியாமல், போரில் துணிந்து நிற்பது 'புறமுதுகு காட்டாமை' ஆகும். இந்த தர்மத்தை உணர்ந்த வீரச்சிறுவன் அபிமன்யு, ஆறு மஹாரதிகளுடன் தனி ஒருவனாகப் போர் புரிந்து உயிர் துறந்தான். ஆயினும் ஆயுதங்களை நழுவ விடவில்லை (மஹா. த்ரோண. 49/22). பிற்காலத்தில்கூட ராஜஸ்தானத்தின் சரித்ரத்தில் இத்தகைய பல உதாரணங்களைக் காணலாம். வீரர்களான ராஜ புத்ரர்கள் போரில்

---

உங்கள் திருக்கரங்களால் அடிபட்டு இறந்தால் எனக்கு இவ்வுலகிலும், பரலோகத்திலும் மேன்மையே கிடைக்கும். ஆயர் தலைவா! நீங்களே என்னைக் கொல்ல ஓடி வருகிறீர்களே. இதனால் மூவுலகிலும் என் மதிப்பு உயர்ந்துவிட்டது."

பின்னால் ஓடி வந்த அர்ஜுனன், பகவானின் திருவடிகளைப் பிடித்துக் கொண்டு, எப்படியோ திருப்பி அழைத்துச் சென்றார் (மஹா. பீஷ்ம. 59). இக்கருத்தையே அழகுற விளக்கும் பின்வரும் ஸ்ரீமத்பாகவத ச்லோகங்களைக் காண்க:

ஸ்வநிக$_3$மமபஹாய மத்ப்ரதிஜ்ஞாம்ருதமதி$_4$ கர்துமவப்லுதோ ரத$_2$ஸ்த$_2$: ।
த்$_4$ருத ரத$_2$சரணோऽப்$_4$யயாச்சலத்$_3$கு$_3$ரஹரிரிவ ஹந்துமிப$_4$ம் க$_3$தோத்தரீய: ॥
ஶித விஶிக$_2$ ஹதோ விஶீர்ணத$_3$ம்ஶ: க்ஷதஜபரிப்லுத ஆததாயிநோ மே ।
ப்ரஸப$_4$மபி$_4$ஸஸார மத்$_3$வத$_4$ார்த$_2$ம் ஸ ப$_4$வது மே ப$_4$கவாந் க$_3$திர் முகுந்த$_3$: ॥

(ஸ்ரீமத்$_3$ப$_4$ாக$_3$வதம் 1/9/37,38)

ஒன்பதாவது நாள் யுத்தத்தில் பீஷ்மர் பாண்டவ ஸேனையைக் கலங்க அடிப்பதைப் பார்த்தார் ஸ்ரீக்ருஷ்ண பகவான். குதிரையின் கடிவாளங்களை விட்டெறிந்துவிட்டுக் கையில் குதிரைச் சவுக்கை மட்டும் எடுத்துக் கொண்டு பீஷ்மரை நோக்கி ஓடினார். பகவானுடைய வீர்யத்தினால் ஒவ்வொரு அடிவைப்பிலும் பூமி பிளந்து விடும்போல் ஆகிவிட்டது. கௌரவ வீரர்கள் பயந்துவிட்டார்கள். 'பீஷ்மர் சாகப்போகிறார், சாகப்போகிறார்' என்று கூவினார்கள். யானை மீது பாய்ந்து ஏறும் சிங்கம்போலத் தம்மை நோக்கி ஓடி வரும் ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்த்து பீஷ்மர் சிறிதுகூடக் கலங்கவில்லை. தம் வில்லை நிமிர்த்திக் கொண்டு சொன்னார்.

"தாமரைக்கண்ணனே! தேவ தேவ! உங்களுக்கு வணக்கம். ஸாத்வத குல திலகமே! வருக! வருக!! இப்பெரும் போரில் என்னை இன்று வீழ்த்தி வீரகதியை அருளுங்கள். பாவமற்றவரே! ஸ்ரீக்ருஷ்ண! தேவ தேவ! யுத்தத்தில் உங்கள் திருக்கரங்களால் மரணத்தைத் தழுவும் எனக்கு எவ்விதத்திலும் மிகுந்த மேன்மையே கிடைக்கும். கோவிந்த! இந்தப் போரில் மூவுலகும் கொண்டாடும்படியாக என்னைப் பெருமைப்படுத்தி விட்டீர்கள். பாவமற்றவரே! உங்களுக்கு நான் அடிமை; மனமார என்னைத் தாக்குங்கள்."

ஏஹ்யேஹி புண்ட$_4$ரீகாக்ஷ தே$_3$வதே$_3$வ நமோऽஸ்து தே ।
மாமத்$_3$ய ஸாத்த்வதஶ்ரேஷ்ட$_2$ பாதயஸ்வ மஹாஹவே ॥
த்வயா ஹி தே$_3$வ ஸங்க்$_3$ராமே ஹதஸ்யாபி மமாநக$_4$ ।
ஶ்ரேய ஏவ பரம் க்ருஷ்ண லோகே ப$_4$வதி ஸர்வத: ॥
ஸம்ப$_4$ாவிதோऽஸ்மி கோ$_3$விந்த$_3$ த்ரைலோக்யேநாத்$_3$ய ஸம்யுகே$_3$ ।
ப்ரஹரஸ்வ யதே$_2$ஷ்டம் வை த$_3$ாஸோऽஸ்மி தவ சாநக$_4$ ॥

(மஹா. பீ$_4$ஷ்ம. 106/64–66)

அர்ஜுனன் ஓடிப்போய் பகவானுடைய கையைப் பிடித்துக் கொண்டார். அப்படியும் பகவான் நிற்கவில்லை. அர்ஜுனனையும் இழுத்துக் கொண்டு மேலே சென்றார். முடிவில் 'ஆயுதம் தொடுவதில்லை' என்ற பகவானது ப்ரதிக்ஞையை அர்ஜுனன் நினைவுறுத்தி, ஸத்யத்தின் மீது ஆணையிட்டு 'நான் பீஷ்மரைக் கொல்வேன்' என்று உறுதியாகச் சொன்ன பிறகுதான் பகவான் திரும்பினார்.

பத்தாவது நாள் கடுமையான போர் நடந்தது. பீஷ்மர் தம் மரணத்தைப் பற்றி நினைக்க ஆரம்பித்தார். அப்பொழுது வானிலிருந்து ரிஷிகளும், வஸுக்களும் பீஷ்மரைப் பார்த்துக் கூறினர்: 'அப்பனே! நீ

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தோல்வியுற்றாலும், பகைவர்களுக்குப் புறங்காட்டவில்லை; தனியாகவே, நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான எதிரிகளுடன் போரிட்டு உயிர் துறந்திருக்கின்றனர்.

**கேள்வி:** 'கொடை' என்றால் என்ன?

**பதில்:** தன்னுடைய உடைமையைத் தாராள மனமுடன் அவசியம் நேரும்போது தக்க பாத்திரங்களுக்கு வழங்குவதுதான் 'கொடை' (தானம்) (17/20).

**கேள்வி:** 'ஈச்வரபாவ:' என்றால் என்ன கருத்து?

**பதில்:** மேலாண்மையின் மூலம் மக்கள் அந்யாயமாக நடப்பதைத் தடுத்து அவர்களை நல்ல வழியில் ஈடுபடச் செய்வது, தவறு செய்பவர்களைத் தண்டிப்பது, மக்களைக் கொண்டு தன்னுடைய ஆணையை நேரிய முறையில் செயல்படுத்துவது, மக்கள் அனைவருக்கும் நலம் பயப்பது எது என்று ஆராய்ந்து தன்னலம் பாராட்டாமல் அன்புடன் தன் புதல்வர்களைப்போல அவர்களைக் காப்பது, பராமரிப்பது ஆகிய யாவும் ஆளுமை அல்லது ஈசுவரத்தன்மை ஆகும்.

---

நினைப்பதுதான் எங்கள் விருப்பமும்.' பிறகு சிகண்டிக்கு எதிராக அம்பு தொடுப்பதில்லை என்ற காரணத்தினால் இளமை தொட்டே ப்ரம்மசாரியான பீஷ்மர், அர்ஜுனனுடைய பாணங்களுக்கு இலக்காகி அம்புப்படுக்கையில் வீழ்ந்துவிட்டார். விழும்போது சூரியன் தக்ஷிணாயனத்தில் இருப்பதைப் பார்த்தார். ஆகவே அவர் உடனே உயிர் துறக்கவில்லை. கங்காதேவி, அன்னப்பறவைகளின் உருவில் மஹரிஷிகளை அவரிடம் அனுப்பினாள். பீஷ்மர் சொன்னார்: 'நான் உத்தராயணத்தில் சூரியன் ப்ரவேசிக்கும் வரை உயிர் வாழ்வேன். தக்க நேரத்தில் உயிரை விடுவேன்.' பீஷ்மருடைய உடலில் அர்ஜுனனுடைய பாணம் தைக்காத இடம் இரண்டு அங்குலம்கூட இல்லை. (மஹா. பீஷ்ம. 119). தலை மட்டும் கீழே தொங்கிற்று. அவர் தலையணை வேண்டுமென்றார். துர்யோதனன் முதலானோர் மிகமென்மையான தலையணைகளைக் கொண்டு வந்தனர். பீஷ்மர் சிரித்தார். 'வீரர்களே! இத்தலையணைகள் வீரனின் படுக்கைக்கு உகந்தவையல்ல.' அர்ஜுனனைப் பார்த்துக் கூறினார்– 'குழந்தாய்! எனக்குத் தக்க தலையணை கொடு.' அர்ஜுனன் மூன்று அம்புகளை பூமியில் எய்து அவற்றினால் பீஷ்மரின் தலையைத் தூக்கி அமர்த்தினான். அவ்வம்புகள் தலையணைகளாகப் பயன்பட்டன. பீஷ்மர் மிகுந்த மகிழ்ச்சி கொண்டார். "நீண்ட புஜமுடையோனே! க்ஷத்ரிய தர்மத்தில் நிலைபெற்ற வீரனான க்ஷத்ரியன் போரில் அம்புப் படுக்கையில் உயிர் விடும் நேரத்தில் இப்படித்தான் படுக்க வேண்டும்" என்று கூறினார்.

ஏவமேவ மஹாபா₃ஹோ த₄ர்மேஷு பரிதிஷ்ட₂தா ।
ஸ்வப்தவ்யம் க்ஷத்ரியேணாஜௌ ஶரதல்பக₃தேந வை ॥

(மஹா. பீ₄ஷ்ம. 120/49)

பீஷ்மர் காயமுற்று அம்புப் படுக்கையில் படுத்திருந்தார். உடல் நோகாமல் அம்புகளை வெளியே எடுக்கும் திறமை வாய்ந்த அறுவை சிகிச்சை மருத்துவர்கள் அழைக்கப்பட்டனர். இதைக் கண்ட பீஷ்மர் 'க்ஷத்ரியன் அடையவேண்டிய உத்தமநிலை எனக்குக் கிடைத்துவிட்டது. இங்கே மருத்துவர்களுக்கு என்ன வேலை?' என்றார் (மஹா. பீஷ்ம. 120).

காயங்களினால் பீஷ்மர் உடல் மிகுந்த வேதனையுற்றது. அவர் குளிர்ந்த நீர் வேண்டுமென்றார். மக்கள் குடங்களில் குளிர்ந்த நீர் எடுத்துக் கொண்டு ஓடி வந்தனர். பீஷ்மர் சொன்னார்: 'சரப் படுக்கையில் கிடக்கிறேன். உத்தராயணத்திற்காகக் காத்திருக்கிறேன். இப்போது நீங்கள் என்ன கொண்டு வருகிறீர்கள்?' முடிவில் அர்ஜுனனை அழைத்துக் கூறினார்: 'மகனே! என் வாய் உலர்ந்துவிட்டது. நீதான் எனக்கு நீர் வார்க்கச் சக்தி படைத்தவன்' என்றார். அர்ஜுனன் ரதத்தில் ஏறிக் காண்டீவத்தை எடுத்து வந்து நாணேற்றினார்; பீஷ்மருடைய வலதுபுறத்தில் பூமியில் பர்ஜன்ய அஸ்த்ரத்தை (நீர் கொண்டு வரும் அஸ்த்ரம்) எய்தார். அக்கணமே பூமியிலிருந்து குபுகுபுவென்று அமுதம் போல மணமுள்ள நீர் பெருகிப் பாய்ந்து வந்து பீஷ்மரின் வாயில் வீழ்ந்தது. பீஷ்மர் அந்த நீரைப் பருகி த்ருப்தி அடைந்தார் (மஹா. பீஷ்ம. 121).

மஹாபாரத யுத்தம் முடிந்த பிறகு யுதிஷ்டிரர் ஸ்ரீக்ருஷ்ண பகவானை அழைத்துக் கொண்டு பீஷ்மரிடம் சென்றார். ப்ரம்மஞானம் படைத்த சிறந்த ரிஷிகள் அனைவரும் அங்கே வந்து கூடினர். பீஷ்மர் பகவானை வணங்கித் துதித்தார். ஸ்ரீக்ருஷ்ணன் பீஷ்மரிடம் சொன்னார்: 'உத்தராயணம் வருவதற்கு இன்னும் பல நாட்கள் உள்ளன. இதற்கிடையே நீங்கள் கற்ற தர்ம சாஸ்த்ரம் அனைத்தையும் யுதிஷ்டிரருக்கு விளக்கி, அவருடைய வருத்தத்தைப் போக்குங்கள்' என்றார். பீஷ்மர் சொன்னார்: "ப்ரபோ! என் உடல் அம்புகள் மூலமாக ஏற்பட்ட காயங்களால் வேதனைப்படுகிறது. மனமும், புத்தியும் சஞ்சலம் அடைந்திருக்கின்றன. பேசுவதற்குச் சக்தியில்லை. அடிக்கடி மயக்கம் வருகிறது. உங்கள் க்ருபையினால்தான் இதுவரை உயிரோடு இருக்கிறேன். உலகத்திற்கே குருவான உங்கள் எதிரே சீடனின் நிலையில் உள்ள நான் சொல்வது பணிவற்ற செயலாகும். என்னால் எதுவும் சொல்ல இயலாது. என்னை மன்னியுங்கள்." அன்பினால் நீர் ததும்பிய கண்களுடன் பகவான் குரல் தழுதழுத்துக் கூறினார்: "பீஷ்மரே! உங்களுடைய களைப்பு, மயக்கம், விடாய், வேதனை, பசிக்கொடுமை, மோஹம் எல்லாம்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'இவையெல்லாம் க்ஷத்ரியர்களுக்கு இயல்பாக உண்டான கர்மங்கள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** க்ஷத்ரியர்களுடைய இயல்பான குணத்தில் ஸத்வகுணம் கலந்த ரஜோகுணம் மிகுந்திருக்கும். இதனால் மேற்கூறிய கடமைகளில் அவர்களுக்கு இயல்பான நாட்டம் இருக்கும்; இவற்றைக் கடைப்பிடிப்பதில் அவர்களுக்கு எவ்விதக் கஷ்டமும் இராது. இந்தக் கடமைகளில் உறுதி, தானம் முதலிய ஸாமான்ய தர்மங்களும் அடங்கும். அவற்றைச் செய்வதில் எல்லோருக்கும் தகுதி இருப்பதால் மற்ற வர்ணத்தைச் சேர்ந்தவர்களுக்கு அதர்மம் அல்லது பரதர்மம் ஆகமாட்டா; ஆனால் இவை அவர்களுக்கு இயல்பான கர்மங்கள் அல்ல. அதனால் முயற்சி செய்தே அவர்களால் இவை பெறக் கூடியவை ஆகும்.

**கேள்வி:** மனுஸ்ம்ருதியில் மக்களைக் காப்பது, தானமளிப்பது, வேள்வி செய்வது, வேதங்களைக் கற்பது, போகங்களில் ஈடுபடாமை என்று க்ஷத்ரிய தர்மம் சுருங்கக் கூறப்பட்டுள்ளது.‡ இங்குப் பெரும்பாலும் வேறு தர்மங்களைக் கூறுகிறாரே. ஏன்?

---

என்னுடைய க்ருபையினால் நொடியில் அகலும்; உங்கள் உள்ளத்தில் ஞானம் மலர்ச்சி அடையும்; உங்கள் புத்தி திடமான தீர்மானத்துடன் ஒளிரும்; மனம் நித்யமான ஸத்வ குணத்தில் நிலைபெறும்; நீங்கள் தர்மத்தையோ, வித்யையோ பற்றி எது சிந்தித்தாலும் அதை உங்கள் புத்தி முறையாக வெளிப்படுத்தும்." ஸ்ரீக்ருஷ்ணன் மேலும் சொன்னார்: 'என்னுடைய பக்தரின் புகழ் மேலும் பரவ வேண்டும் என்பதற்காகத்தான் நானே நேரில் உபதேசம் செய்யாமல் உங்களை உபதேசம் செய்ய வைக்கிறேன்.'

பகவானுடைய க்ருபையால் பீஷ்மருடைய உடல் வேதனைகளெல்லாம் நொடியில் மறைந்தன. அவருடைய உள்ளம் தெளிவுற்றது. புத்தி முற்றிலும் ப்ரகாசமடைந்தது. ப்ரம்மசர்யமும், அனுபவமும், பகவானிடம் பக்தியும் மிளிர, ஆழம் காண முடியாத ஞானம் பெற்ற பீஷ்மர் பத்து நாட்கள் போரிட்டது போல அதே உற்சாகத்துடன் யுதிஷ்டிரருக்கு தர்மத்தின் அனைத்துப் பிரிவுகள் பற்றியும் விரிவாக உபதேசம் செய்தார். சோகத்தில் தவித்த யுதிஷ்டிரரது உள்ளத்தை அமைதி கொள்ளச் செய்தார். (மஹாபாரதம் சாந்தி பர்வம், அநுசாஸந பர்வம்).

ஐம்பத்தெட்டு நாட்கள் அம்புப் படுக்கையில் படுத்திருந்து, சூரியன் உத்தராயணத்தில் புகுந்தவுடன் பீஷ்மர் உயிர் துறப்பது எனத் தீர்மானித்து பகவானிடம் சொன்னார்: "க்ருஷ்ண! தேவதேவ! தேவர்களாலும், அஸுரர்களாலும் வணங்கப் பெறுபவரே! த்ரிவிக்ரம! சங்கு, சக்ர, கதாயுதங்களைத் தாங்கியவரே! உங்களை வணங்குகிறேன். வாஸுதேவ! நீங்கள்தான் ஹிரண்யகர்பன், பரமபுருஷன், சூரியன், விராட் புருஷன், ஜீவன், அணுவானவர், பர்மாத்மா, ஸநாதநன். தாமரைக் கண்ண! புருஷோத்தம! என்னைக் கைதூக்கி விடுங்கள். ஸ்ரீக்ருஷ்ண! வைகுண்ட! புருஷோத்தம! உடலை உகுக்க எனக்கு உத்தரவு கொடுங்கள். நான் சிற்றறிவு கொண்ட துர்யோதனனுக்குப் பல முறை அறிவுரை கூறினேன். எங்கே க்ருஷ்ணனோ அங்கேதான் தர்மம். எங்கே தர்மமோ அங்கேதான் வெற்றி.

யத: க்ருஷ்ணஸ்ததோ த$_4$ர்மோ யதோ த$_4$ர்மஸ்ததோ ஜய: ।

அறிவற்ற அவன் என் அறிவுரையை மதிக்கவில்லை. நான் உங்களை நன்கு அடையாளம் கண்டு கொண்டேன். புராண புருஷனான, ஸாக்ஷாத் ஸ்ரீநாராயணனான நீங்களே ஸ்ரீக்ருஷ்ணனாக அவதரித்திருக்கிறீர்கள். எனக்கு உத்தரவு கொடுங்கள். உடலைத் துறந்து விடுகிறேன். க்ருஷ்ண! உங்கள் கட்டளை பெற்று உயர் கதியை அடைவேன்."

ஸ மாம் த்வமநுஜாநீஹி க்ருஷ்ண மோக்ஷ்யே களேப$_3$ரம் ।
த்வயாஹம் ஸமநுஜ்ஞாதோ க$_3$ச்சே$_2$யம் பரமாம் க$_3$திம் ॥
(மஹா. அநு. 167/45)

பகவான் அனுமதி அளித்தார். அப்போது ஸ்ரீபீஷ்மர் யோகம் செய்து, மூச்சை அடக்கி, மெதுவாக ப்ராணனை மேலே எழுப்பத் தொடங்கினார். ப்ராண வாயு ஒவ்வொரு உறுப்பையும் விட்டுவிட்டு மேலே எழுந்தது. அதே கணத்தில் பீஷ்மரின் உடலில் அங்கங்கிருந்து அம்புகள் வெளிவந்தன; புண்கள் மறைந்தன; உடலில் ஒரு விழுப்புண்கூட இல்லை. ப்ராணன் உச்சந்தலையில் ப்ரம்மரந்த்ரத்தைப் பிளந்து கொண்டு மேலே வெளியேறியது. உலகத்தினர் பார்த்துக் கொண்டிருக்கும் போதே, ப்ரம்மரந்த்ரத்திலிருந்து வெளிப்பட்ட தேஜஸ் விண்ணில் மறைந்தது.

‡ ப்ரஜாநாம் ரக்ஷணம் தா$_3$நமிஜ்யாத்$_4$யயநமேவ ச ।
விஷயேஷ்வப்ரஸக்திஸ்ச க்ஷத்ரியஸ்ய ஸமாஸத: ॥
(மநுஸ்ம்ருதி 1/89)

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இங்கு க்ஷத்ரியர்களின் இயல்பான குணங்களுக்கு நெருங்கிய தொடர்புடைய கர்மங்களைக் கூறுகிறார். ஆகவே மனுஸ்ம்ருதியில் கூறப்பட்ட மக்களைக் காப்பது, தானம் அளிப்பது இரண்டும் இயல்புகளானமையால் இங்கே எடுத்துக் கூறப்பட்டன. ஆனால் மற்ற கடமைகளைப் பற்றி விரிவாகச் சொல்லவில்லை. ஆகவே இவை தவிரக் கூடுதலாக மற்ற இடங்களில் க்ஷத்ரியர்களுக்கு உரியனவாகக் கூறப்பட்டுள்ள கடமைகளையும் இங்கே சேர்த்துக் கொள்ள வேண்டும்.

**பொருத்தம்: இவ்விதம் க்ஷத்ரியர்களுக்கு உரிய இயல்பான கர்மங்களைக் கூறிவிட்டு, இனி வைசியர்களுக்கும், நான்காம் வர்ணத்தவருக்கும் உரிய இயல்பான கர்மங்களை எடுத்துரைக்கிறார்—**

**कृषिगौरक्ष्यवाणिज्यं वैश्यकर्म स्वभावजम्।**
**परिचर्यात्मकं कर्म शूद्रस्यापि स्वभावजम्॥ ४४॥**

**க்ருஷிகௌ₃ரக்ஷ்யவாணிஜ்யம் வைஶ்யகர்ம ஸ்வப₄ாவஜம் ।**
**பரிசர்யாத்மகம் கர்ம ஶூத்₃ரஸ்யாபி ஸ்வப₄ாவஜம் ॥ 44 ॥**

**க்ருஷி கௌ₃ரக்ஷ்ய வாணிஜ்யம்** – உழவு செய்தலும், பசுக்களைக் காப்பதும், பொருட்களை வாங்கி விற்பதில் ஸத்யத்தைக் கடைப்பிடித்தலும், **வைஶ்யகர்ம ஸ்வப₄ாவஜம்** – வைசியர்களுக்குரிய இயல்பான கர்மங்கள் ஆகும். (அவ்வாறே), **பரிசர்யாத்மகம்** – மக்கள் அனைவருக்கும் ஸேவை புரிதல், **ஶூத்₃ரஸ்ய அபி** – நான்காம் வர்ணத்தவர்களுக்கு, **ஸ்வப₄ாவஜம் கர்ம** – இயல்பான கர்மம் ஆகும்.

உழவு செய்தலும், பசுக்களைக் காத்தலும், பொருட்களை வாங்கி விற்பதில் நேர்மையாக வியாபாரம் செய்தலும் வைசியர்களுக்கு இயல்பாக உண்டான கர்மங்கள். அப்படியே மக்கள் அனைவர்க்கும் ஸேவை புரிதல் நான்காம் வர்ணத்தவர்களுக்கு இயல்பாக உண்டான கர்மம்.

**கேள்வி:** 'உழவு செய்தல்' என்றால் என்ன?

**பதில்:** ந்யாயப்படி, தனக்குக் கிடைத்த நிலத்தில் விதை விதைத்துக் கோதுமை, வரகு, கடலை, பாசிப்பயறு, உளுந்து, நெல், சோளம், கொள், மஞ்சள், மல்லி முதலிய உணவு தான்யங்களையும், பஞ்சு மற்றும் மூலிகையின் பலவகைகளையும், தேவர்களுக்கும், மனிதர்களுக்கும், பசுக்களுக்கும் பயன்படும் பிற புனிதமான பொருட்களையும் விளைவித்தல் 'க்ருஷி' (வேளாண்மை – உழவு) ஆகும்.

**கேள்வி:** பசுக்களைக் காப்பது என்றால் என்ன?

**பதில்:** நந்தர் முதலான கோபர்கள் போல், பசுக்களைத் தமது வீட்டில் வைத்துக் கொள்வது; காடுகளில் மேய்ப்பது; வீட்டில் தீனி போடுவது; தண்ணீர் காட்டுவது, புலி முதலிய கொடிய விலங்குகளிலிருந்து காப்பது, அவற்றிடமிருந்து கிடைக்கும் பால், தயிர், வெண்ணெய் முதலியவற்றைத் தேவையுள்ளவர்களுக்கு வழங்குவது, அவற்றிற்குப் பண்டமாற்றாகப் பொருள் பெற்று இல்லறம் நடத்துவதுடன் பசுக்களையும் முறையாகக் காப்பது ஆகியவைதான் பசு பராமரிப்பு. கால் நடைகளில் பசு மிகச் சிறந்தது. மனிதர் அனைவருக்கும், எல்லா ப்ராணிகளையும்விட அதிகமாக உதவி செய்வது பசுதான். ஆகவே பகவான் இங்கு பசுபாலனம் (பொதுவாகக் கால்நடைகளின் பராமரிப்பு) என்று கூறாமல் கோரக்ஷா என்று குறிப்பாகச் சொல்கிறார். ஆகவே மனிதருக்கு உதவும் எருமை, ஒட்டகம், குதிரை, யானை முதலிய ப்ராணிகளைக் காப்பதும் வைசியர்களின் கடமைதான். ஏனைய கால்நடைகளைக் காப்புதைக் காட்டிலும் பசுவைக் காப்பது நிச்சயமாக முதன்மையான கடமையாகும்.

**கேள்வி:** நேர்மையான வாணிபம், அதாவது, பொருட்களை வாங்குவது, விற்பது என்பதில் ஸத்யத்தைக் கடைப்பிடித்தல் என்றால் என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



*பதில்:* மனிதர்களுக்கும், தேவர்களுக்கும், பசுக்களுக்கும், பறவைகளுக்கும், மற்ற ப்ராணிகளுக்கும் தேவையான எல்லாத் தூய பொருட்களையும் தர்மமான, ந்யாயமான விலை கொடுத்து வாங்குவது, விற்பது, தேவைக்கு ஏற்றவாறு ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குக் கொண்டு சேர்த்து மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வது – இதுதான் வாங்குவது–விற்பது என்ற வியாபாரம். இவ்வாறு வாணிபம் செய்வதில் பொருட்களை வாங்கும்போதும், விற்கும்போதும் எடை, அளவு, எண்ணிக்கைகளைக் கூட்டிக் குறைத்தல்; பொருட்களை மாற்றிக் கொடுத்தல்; கலப்படம் செய்தல், நல்ல பொருளை வைத்துக் கொண்டு மோசமானவற்றைக் கொடுத்தல், தரக்குறைவான பொருளைக் கொடுத்து நல்ல பொருளைக் கொள்ளுதல், லாபம், தரகு, கமிஷன் இவற்றை ஒப்புக் கொண்ட விகிதத்துக்குக் கூடுதலாக எடுத்துக் கொள்வதால் பொய், பித்தலாட்டம், திருட்டு, வன்முறை முதலிய அந்யாய வழிகளில் இறங்கிப் பிறர் பொருட்களையும், சொத்தையும் கவர்ந்து கொள்ளுதல் இவை வாணிபத்திலுள்ள குற்றங்கள். இக்குற்றங்களை விலக்கி ந்யாயமான முறையில் தூயதான பொருட்களை வாங்கி விற்கவேண்டும். இதுதான் நெறி தவறா (ஸத்யமான) வாணிபம். துலாதாரன்‡ என்ற வியாபாரி இவ்வாறு வாணிபம் செய்ததாலேயே ஸித்தி பெற்றார்.

**கேள்வி:** *இவை வைசியர்களுக்கு இயல்பாக உண்டான கர்மங்கள் என்று கூறுவதன் கருத்து என்ன?*

*பதில்:* வைசியரின் இயல்பில் தமோகுணம் கலந்த ரஜோகுணம் மிகுந்திருக்கும். ஆகவே மேற்குறித்த கர்மங்களில் அவர்களுக்கு இயல்பாக ஈடுபாடு உண்டாகிறது. அந்தக் கர்மங்களுக்கேற்றபடி இயல்பும் அமைந்துவிடுகிறது. அதனால் அவற்றைக் கடைப்பிடிப்பது கடினமாக இராது.

**கேள்வி:** *மனுஸ்ம்ருதியிலோ மேலே சொன்ன கடமைகள் தவிர யாகம் செய்வது, வேதம் கற்பது, தானம் கொடுப்பது, வட்டி வாங்குவது என்ற நான்கு கடமைகளும் கூடுதலாகக் கூறப்பட்டுள்ளனவே.§ ஏன் அவற்றை இங்கே கூறவில்லை?*

*பதில்:* வைசியனுடைய இயல்புடன் விசேஷமான தொடர்புடைய கடமைகளை மட்டும்தான் இங்கே கூறுகிறார். யக்ஞம் முதலிய நற்செயல்கள் இருபிறப்பாளர்கள் அனைவர்க்கும் பொதுவானவை. அவற்றை வைசியனுடைய (தனிப்பட்ட) இயல்பான கடமைகள் என்று கூற முடியாது. வட்டி வாங்குவது என்பது வைசியர்களின் கடமைகளில் பிறவற்றைவிடத் தாழ்ந்த ஒன்று. ஆகவே அதை இயல்பான கடமை என்று சொல்லவில்லை. இவை தவிரப் புலனடக்கம், மன அடக்கம் முதலிய மோக்ஷ ஸாதனங்கள் அனைவருக்கும்

---

‡ காசியில் துலாதாரன் என்ற ஒரு வணிகர் இருந்தார். மிகவும் தவசீலர், தர்மாத்மா. ந்யாயம், ஸத்யம் என்ற நெறி நின்று பண்டங்களை வாங்கி விற்று வியாபாரம் செய்து கொண்டிருந்தார். ஜாஜலி என்ற ஓர் அந்தணர் கடற்கரையில் கடுந்தவம் செய்து வந்தார். அவருடைய சடைமுடியில் குருவிகள் கூடுகள் கட்டிவிட்டன. இதனால் தனது தவத்தில் அவருக்கு கர்வம் மிகுந்துவிட்டது. ஒரு நாள் வானில் குரல் கேட்டது: 'ஜாஜலியே! நீர் துலாதாரன் போல அவ்வளவு தர்மசீலர் அல்லர். அவர் உம்மைப்போல கர்வப்படுவதில்லை.' ஜாஜலி காசிக்கு வந்தார். துலாதாரனைப் பார்த்தார். அவர் பழம், கிழங்கு, பல சரக்கு, நெய் முதலிய பொருட்களை விற்றுக் கொண்டிருந்தார். துலாதாரன் ஜாஜலியை வரவேற்று உபசரித்து வணங்கினார். மேலும் சொன்னார்: 'நீங்கள் கடற்கரையில் பெரும் தவம் செய்திருக்கிறீர்கள். உங்கள் சடைமுடியில் குருவிகள் குஞ்சு பொரித்துவிட்டன. அதனால் உமக்குக் கர்வம் அதிகமாகிவிட்டது. நீர் அசரீரி கேட்டு இங்கே வந்திருக்கின்றீர். சொல்லும்! நான் உங்களுக்கு என்ன ஸேவை செய்யட்டும்?' துலாதாரனுக்கு இவ்வளவும் தெரிந்திருப்பது கேட்டு ஜாஜலி பெரும் வியப்புக் கொண்டார். துலாதாரனைக் கேட்டார். துலாதாரன் தர்மநுணுக்கங்களை அழகாக எடுத்துச் சொன்னார். ஜாஜலி துலாதாரனின் வாயிலாக தர்மத்தின் ரஹஸ்யமறிந்து பெரிதும் அமைதி அடைந்தார். மஹாபாரதம் சாந்திபர்வம் *261* முதல் *264* அத்யாயம் வரை இந்த அழகான கதை உள்ளது.

§ பஶூநாம் ரக்ஷணம் த$_{3}$ாநமிஜ்யாத்$_{4}$யயநமேவ ச ।
வணிக்பத$_{2}$ம் குஸீத$_{3}$ம் ச வைஶ்யஸ்ய க்ருஷிமேவ ச ॥
(மநுஸ்ம்ருதி *1/90*)

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொதுவானபடியால் வைசியருடைய ஸ்வதர்மத்திற்கு வேறானவை அல்ல; ஆனால் அவற்றில் வைசியர்களுக்கு இயல்பான ஊக்கம் இராது. ஆகவே அவற்றை இயல்பான கடமைகளில் சேர்க்கவில்லை.

**கேள்வி:** 'பரிசர்யாத்மகம்' அதாவது மக்கள் அனைவருக்கும் ஸேவை செய்தல் என்பது என்ன?

**பதில்:** மேற்குறித்த இருபிறப்பாளருக்கு அதாவது ப்ராம்மணர்கள், க்ஷத்ரியர்கள், வைசியர்களுக்கு ஸேவை செய்வது, அவர்களுடைய ஆணையை நிறைவேற்றுவது, வீடுகளில் நீர் நிரப்புவது, ஸ்நானத்திற்கு வகை செய்து வைப்பது, அவர்களுடைய வாழ்க்கைப் பணிகளில் வசதி செய்து கொடுப்பது, அவர்களுடைய அன்றாட வேலைகளில் முறைப்படி உதவி செய்வது, பசுக்களைப் பராமரிப்பது, அவர்களுடைய பொருட்களைக் காப்பது, துணி துவைப்பது, முடி திருத்துவது முதலிய அத்தனை ஸேவைகளையும் செய்து மகிழ்விப்பது அல்லது அவர்களுக்குத் தேவையான கருவிகளைத் தன் தொழில் திறமையால் தயார் செய்து கொடுத்து தன் வாழ்க்கையைக் கழிப்பது – இவையெல்லாமே 'பரிசர்யை' ஆகும்.

**கேள்வி:** 'இது நான்காம் வர்ணத்தவருக்கு இயல்பாக உண்டான கர்மமாகும்' என்று கூறுவதன் கருத்து என்ன? 'அபி' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** நான்காம் வர்ணத்தவருக்கு ரஜோ குணம் கலந்த தமோ குணம் மிகுதியாக இருக்கும். அதனால் அவர்களுக்கு மேற்குறித்த கடமைகளில் இயல்பான ஊக்கம் இருக்கும். அந்தக் கர்மங்கள் அவர்களின் இயல்புக்கு ஏற்ப உள்ளபடியாலே அவர்களுக்குக் கடினமாக இரா. மற்ற வர்ணத்தாருக்கு எப்படி அவரவர் இயல்புக்கு ஏற்பக் கடமைகள் உள்ளனவோ, அவ்விதமே நான்காம் வர்ணத்தவருக்கும்கூட இந்த ஸேவை என்ற ஒன்றுதான் இயல்பானதாகும்.‡ மேலும் பிற வர்ணத்தவர்க்குத் தொண்டு செய்தலே அவர்களது ஒரே கடமை என்பதை இங்கே வலியுறுத்துகிறார். ஆகவே அது அவர்களுக்கு இயல்பானதால் எளிதுமாகும்.§

---

‡ மனுஸ்ம்ருதி *(1/91)* கூறுகிறது: நான்காம் வர்ணத்தவருக்கு பகவான் ஒரு கடமையைத்தான் விதித்தார் குறை காணாமல் மூவர்ணத்தாருக்கும் ஸேவை செய்வதே அது.

ஏகமேவ து ஶூத்${}_3$ரஸ்ய ப்ரபு${}_4$: கர்ம ஸமாதி${}_3$ஶத் ।
ஏதேஷாமேவ வர்ணாநாம் ஶுஶ்ரூஷாமநஸூயயா ॥

§ இக்காலத்தில் வர்ணப் பாகுபாடு என்பது அதிகாரம் இருந்த மக்களால் தங்கள் தன்னலம் கருதி அமைக்கப்பட்ட திட்டம் என்று கூறுகிறார்கள். ஆனால் ஆலோசித்துப் பார்த்தால் ஸமுதாயம் என்ற உடலின் சீரான அமைப்புக்குத் தேவையானதே வர்ணதர்மம் என்பது புலனாகும். இது மனிதன் வகுத்த திட்டமேயன்று. வர்ணதர்மத்தை பகவான் படைத்தார். பகவானே சொல்கிறார்: 'சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் கு${}_3$ணகர்மவிப${}_4$ாக${}_3$ஶ: ।' *(4/13)*.

குணங்கள் கர்மங்களின் பிரிவுப்படி நான்கு வர்ணங்கள்: வேதியர், வேந்தர், வணிகர், வேளாளர் என்ற திட்டம் என்னால் படைக்கப்பட்டது. தெய்விக நோக்குப் படைத்தவர்களும், முக்காலம் உணர்ந்தவர்களுமான பாரத நாட்டு மஹரிஷிகள் பகவான் வகுத்த ஸத்யமான இத்திட்டத்தை நேர்முகமாகப் பெற்றார்கள். அந்த முறையில் ஸமுதாயத்தை அமைத்து, வரைமுறைகள் வகுத்து, அமைதியும், நன்னடத்தையும், ஸுகமும், கடமையில் ஈடுபாடும், தன்னலமின்மையும், மேன்மையும் வளர்ந்தோங்குமாறு காத்து வந்தார்கள். ஸமுதாய நல்லிணக்கத்திற்காக மனிதர்களிடையே இந்த நான்குவிதப் பாகுபாடு எல்லா நாடுகளிலும், எல்லாக் காலங்களிலும் இருந்தே வந்துள்ளது. ஆனால் இது இந்த ரிஷிகளின் நாட்டில் சிறப்பாக அமைந்துவிட்டது போல வேறெங்கும் அமையவில்லை.

ஸமுதாயத்தில் தர்மம் நிலைத்து நிற்கவும் அதைக் காப்பதற்கும் ஸமுதாய வாழ்க்கை சீராக அமைவதற்கும், ஸமுதாய வாழ்க்கை முறை தடைபடாமல் நடைபெறுவதற்கும், அப்படித் தடை ஏற்பட்டால் அவ்வப்போது தடையை நீக்கிச் சீரமைப்பதற்கும், செயல் ஓட்டத்தில் சுழல்கள் வராமல் தீர்ப்பதற்கும், தடுமாற்றம் ஏற்பட்டால் தீர்க்கவும், தர்மஸங்கடம் ஏற்பட்டால் உரிய தீர்ப்பு அளிப்பதற்கும், ஒரு செம்மைப்படுத்தப்பட்ட, மாசற்ற அறிவு வேண்டும். தர்மத்தையும், தர்மத்தில் வேரூன்றிய ஸமுதாயத்தையும் உலகியல் ஆக்கிரமிப்பிலிருந்து மீட்டுக் காப்பதற்கு புஜபல பராக்ரமம் வேண்டும். புத்தியும், புஜபல பராக்ரமமும் செவ்வனே செயல்படச் செல்வமும், உணவும் வேண்டும். மேலே சொன்ன தேவைகள் பூர்த்தியாக உடல் உழைப்புத் தேவை.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொருத்தம்: இவ்விதம் நான்கு வர்ணத்தாருடைய இயல்பான கடமைகளைச் சொல்லிவிட்டு, பக்தியுடன் கூடிய கர்மயோகத்தின் தன்மையையும், பயனையும் கூறுவதற்காக அக்கடமைகளை எவ்விதம் கடைப்பிடித்தால் மனிதன் பெருமுயற்சியின்றிப் பரமஸித்தியைப் பெறலாம் என்பதை அடுத்த இரண்டு ச்லோகங்களில் விளக்குகிறார்—

**स्वे स्वे कर्मण्यभिरतः संसिद्धिं लभते नरः ।**
**स्वकर्मनिरतः सिद्धिं यथा विन्दति तच्छृणु ॥ ४५ ॥**

**ஸ்வே ஸ்வே கர்மண்யபி$_4$ரத: ஸம்ஸித்$_3$தி$_4$ம் லப$_4$தே நர: ।**
**ஸ்வகர்மநிரத: ஸித்$_3$தி$_4$ம் யத$_2$ா விந்த$_3$தி தச்ச்$_2$ருணு ॥ 45 ॥**

**ஸ்வே ஸ்வே கர்மணி** – தத்தம் (இயல்பான) கர்மங்களில், **அபி$_4$ரத:** – முழு முனைப்புடன் ஈடுபட்டிருக்கும், **நர:** – மனிதன், **ஸம்ஸித்$_3$தி$_4$ம்** – பகவானை அடைதலாகிற ஸித்தியை, **லப$_4$தே** – அடைகிறான். **ஸ்வகர்மநிரத:** – தன்னுடைய இயல்பான கர்மங்களில்

---

அதனால்தான் ஸமுதாயம் என்ற உடலுக்கு ப்ராம்மணன் தலை, க்ஷத்ரியர்கள் புஜங்கள், வைசியர்கள் தொடைகள், வேளாளர் ஊன்றி நிற்கும் கால்கள். ஸமுதாயம் என்னும் உடலின் நான்கு முக்யமான உறுப்புகளே இந்நான்கு பிரிவும். இவை ஒன்றுக்கொன்று உதவி செய்து கொண்டு இருப்பதால் ஸமுதாயம் நன்கு பேணப்பட்டு வாழ்கிறது. இதில் அவமானமோ, தாழ்வு மனப்பான்மையோ ஒன்றும் இல்லை. இவற்றில் எதையும் சிறிது கூடச் சிறுமைப்படுத்துவது இயலாது. உயர்ந்தது, தாழ்ந்தது என்ற கற்பனைக்கும் இடமில்லை. அவரவர் நிலையிலும் அவரவர் செயலுக்கு ஏற்பவும் நான்குமே சிறந்தவை. ப்ராம்மணன் அறிவு பலத்தாலும், க்ஷத்ரியன் புஜ பலத்தாலும், வைசியன் செல்வ பலத்தாலும், வேளாளர் மக்கள் பெருக்கத்தாலும் அல்லது உழைப்பு பலத்தாலும் உயர்ந்தவர்கள். நால்வரும் ஸமுதாயத்திற்கு முழு ஒத்துழைப்புத் தரவேண்டியவர்கள்தான். இவர்கள் பிறவியும் ஒரே பகவானுடைய உடலிலிருந்துதான் உண்டானது. ப்ராம்மணன் பகவானின் திருமுகத்திலிருந்தும், க்ஷத்ரியன் புஜத்திலிருந்தும், வைசியன் தொடையிலிருந்தும், வேளாளன் திருவடிகளிலிருந்தும் பிறந்தனர். திருவடிகள் பகவானுடைய அவயவங்களில் மிகவும் சிறப்பாகப் பூஜிக்கத்தக்கவை அல்லவா! தாழ்ந்தவை அல்லவே.

ப்$_3$ராஹ்மணோऽஸ்ய முக$_2$மாஸீத்$_3$ ப$_3$ாஹூ ராஜந்ய: க்ருத: ।
ஊரூ தத$_3$ஸ்ய யத்$_3$ வைச்ய:பத்$_3$ப்$_4$யாம் ஶூத்$_3$ரோ அஜாயத ॥

(ருக்$_3$வேத$_3$ம் 10/90/12)

இவர்களிடையே உள்ள அவரவருடைய பலம், இவர்களுடைய தன்னலம் பேணுவதற்காகவோ, பிறரை அழுத்தி அதிகாரம் செலுத்துவதற்காகவோ ஏற்படவில்லை. ஸமுதாயம் என்ற உடலுக்கு அவசியமான இந்த உறுப்புகளுக்குத் தகுதிக்கேற்ப கடமைகள் பிரித்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. தர்மத்தைச் சீராக நடத்திச் செல்வதே அவர்கள் பொறுப்பு. உயர்வு தாழ்வின்றித் தகுதிக்கேற்ப கடமைகள் பிரிந்திருப்பதால் ஒரு சக்தி ஸமநிலை அமைந்துள்ளது. ஒருவர் மற்றவரைத் தாழ்வாக நினைப்பதற்கே இடமில்லை. ஒருவர் மற்றவரை அலக்ஷ்யம் செய்ய இயலாது. ஒருவர் மற்றவர்க்குரிய பொறுப்புக்களில் தலையிடவும் இயலாது. இப்படிக் கடமைப் பிரிவும், தகுதியுமான திடமான அடிப்படையின் மீது எழுப்பப்பட்ட வர்ணதர்மம் சீராக அமைக்கப்பட்டிருக்கிறது. ஆகவே சக்தி ஸமநிலை தானாகவே இயங்குகிறது. பகவானும், தர்மங்களை வரையறுத்த ரிஷிகளும், ஒவ்வொரு வர்ணத்திற்கும் உரிய கடமைகளைத் தனித்தனியாகத் தெளிவாக வகுத்து, அவரவர்கள் தமக்குரிய கடமைகளை இடையூறின்றி நிறைவேற்ற வழிமுறை அமைத்துக் கொடுத்து, ஸ்வதர்மத்தை முழுமையாகக் கடைப்பிடிப்பதில் சக்தி ஸமநிலைக்குத் தடை ஏற்படாதவாறு அமைத்திருக்கிறார்கள்.

ஐரோப்பாவில் உள்ள நாடுகளிலும், இதர நாடுகளிலும் இவ்விதம் மனித ஸமுதாயத்தில் இயற்கையிலேயே நான்கு பிரிவுகள் இருந்தும் வரையறுத்த ஒழுங்குமுறைகள் அமைக்காததால் சக்திஸமநிலை உருவாகவில்லை. சில ஸமயம் அறிவுடையவர்கள் தங்களை அறிவின் பலத்தால் படை பலத்தை அடக்கிவிடுகிறார்கள். சிலஸமயம் பொதுமக்கள் செல்வ பலத்தைக் குலைத்துவிடுகிறார்கள். பாரத நாட்டு வர்ணக்கட்டுப்பாட்டில், இத்தகைய மோதல்கள் ஏற்படாதவாறு தனித்தனிப் பணிகள் வகுக்கப்பட்டுள்ளன.

ரிஷிகளின் பணியில் மலர்ந்த வர்ண தர்மப் பாகுபாட்டில் ப்ராம்மணனின் நிலை மிக முக்யமானது. அவன் ஸமுதாய தர்மத்தை வகுத்துத் தருபவன். அவன் ஆக்கித் தரும் விதிமுறைகளை அனைவரும் ஏற்றுக் கொள்கின்றனர். அவன் அனைவருக்கும் குருவாகவும், வழிகாட்டியாகவும் இருக்கலாமே தவிர, செல்வம் சேர்க்கக் கூடாது; தண்டனை அளிக்கக் கூடாது. உல்லாச வாழ்க்கையில் ஈடுபடக்கூடாது. தன்னலம் என்பதே அவனுடைய வாழ்க்கையில் இருக்கக்கூடாது. செல்வமோ, ஆளுமையோ, பதவியோ தூசிக்கு நிகர் எனக் கருதிப் பழம், கிழங்குகளை உண்டு, குடும்பத்துடன் நகரத்துக்கு அப்பால் கிராமங்களில், காடுகளில் வாழவேண்டும். இரவு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஈடுபடுபவன், **யதா₂** – எப்படி கர்மங்களைச் செய்து, **ஸித்₃தி₄ம்** – பரம ஸித்தியை, **விந்த₃தி** – அடைகிறானோ, **தத்** – அந்த முறையை (நீ), **ஶ்ருணு** – கேள்.

**தத்தம் இயல்பான கடமைகளில் முழு முனைப்புடன் ஈடுபட்டிருக்கும் மனிதன் பகவானை அடைதலாகிற ஸித்தியை அடைகிறான். தன்னுடைய இயல்பான கடமையில் கருத்துடையவன் தன் செயலை எப்படிச் செய்து பரமநிலையை அடைகிறானோ அந்த முறையை நீ கேள்.**

**கேள்வி:** இங்கு 'ஸ்வே' என்ற சொல்லை 'ஸ்வே ஸ்வே' என்று இரண்டு தடவை கூறுவதன் கருத்து என்ன? 'ஸம்ஸித்தி' என்றால் என்ன?

**பதில்:** எவனுக்கு எது இயல்பான கடமையோ, அதைக் கடைப்பிடிப்பதாலேயே அவன் பரமபதத்தை அடைவான் என்பது பகவான் இங்கே நமக்குணர்த்தும் கருத்தாகும். அதாவது ப்ராம்மணன் புலனடக்கம், மன அடக்கம் முதலியவற்றாலும்; க்ஷத்ரியன் தோள்வலிமையாலும், மக்களைக் காப்பதாலும், தானங்கள் அளிப்பதாலும்; வைசியன் வேளாண்மை முதலியவற்றினாலும் என்ன பயன் பெறுகிறானோ, அதே பயனை

---

பகல் தவம், தர்ம ஸாதனை, ஞான வளர்ச்சியில் ஈடுபட்டுப் புலனடக்கம், மன அடக்கம், ஸஹிப்புத்தன்மை, பொறுமை முதலிய பண்புகளை வளர்த்துக் கொண்டு மஹத்தான தபோ பலத்தினால் கிடைத்தற்கரிய ஞானக்கண்கள் பெற்று உண்மைகளை அறிவொளியினால் கண்கூடாக அறிந்து சற்றும் தன்னலம் கருதாது, தான் கண்ட உண்மைகளை நன்னடத்தையும், நேர்மையும் கொண்டவர்களைக் கொண்டு ஸமுதாயத்திற்கு வழங்க வேண்டும். இதற்கு ஒரு கைம்மாறும் விரும்பக் கூடாது, ஏற்கவும் கூடாது. ஸமுதாயம் தானாக முன் வந்து ஏதாவது வழங்கினாலோ அல்லது பிக்ஷை எடுத்துக் கிடைத்தாலோ ஒழிய உரிமையென ஸமுதாயத்தில் எதையும் கொள்ளக் கூடாது. இவ்வாறு ப்ராம்மணன் எளிமை பொருந்திய த்யாகமயமான ஆதர்ச வாழ்க்கை நடத்தவேண்டும்.

க்ஷத்ரியன் ஸமுதாயத்தை ஆண்டு சீராக நடத்தவேண்டும். தவறிழைத்தவனைத் தண்டிக்கவேண்டும். நன்னடத்தை உள்ளவனுக்கு வெகுமதி அளிக்க வேண்டும். தமது ஆளுமைத் திறத்தால் தீயோர்கள் தலைதூக்காதவாறு அடக்கி, தர்மத்தையும், ஸமுதாயத்தையும் கொடியவர்கள், திருடர்கள், கொள்ளைக்காரர்கள், பகைவர்கள் இவர்களிடமிருந்து காப்பாற்ற வேண்டும். க்ஷத்ரியன் தண்டனை அளிக்கலாம். ஆனால் அதற்குரிய சட்டத்தை அவன் தானாக இயற்ற மாட்டான். ப்ராம்மணர்கள் வகுத்த சட்டத்தின்படி நடக்க வேண்டும்; வரிவசூலிக்க வேண்டும்; வசூலித்த வரியை மக்கள் நலனுக்காகச் சரிவரச் செலவழிக்க வேண்டும். விதிக்கப்பட்ட சட்டத்தை நடைமுறையில் அமுல்படுத்தி, அதைப் பேணிக் காப்பது அவன் கடமை. சட்டத்தை இயற்றுதல் ப்ராம்மணனின் வேலை. பொது நிதியம் வைசியனிடம் உள்ளது. க்ஷத்ரியன் சட்டப்படி நிர்வாகம் செய்து பாதுகாப்பவன் மட்டுமே.

செல்வத்திற்கு ஆதாரமாகிய வியாபாரம், பசுக்கள், தான்யங்கள் இவை வைசியர்கள் கையில் இருக்கவேண்டும். வைசியன் செல்வத்தை ஸம்பாதிக்கலாம், பெருக்கலாம். ஆனால் அந்தச் செல்வம் அவனுக்காக மட்டுமன்று. அதை ஸமுதாய நன்மைக்காகச் செலவழிக்க ப்ராம்மணன் முறை வகுக்கிறான். அந்தச் செல்வத்தை க்ஷத்ரியன் காத்துக் கொடுக்கிறான். நாட்டின் ஆளுகையில் வைசியனுக்கு அதிகாரமும் கிடையாது, பொறுப்பும் கிடையாது. அவனுக்குத் தேவையும் இல்லை. ப்ராம்மணனோ, க்ஷத்ரியனோ வியாபாரத்திலோ, செல்வம் சேர்ப்பதிலோ தலையிடுவதில்லை. தன்னலத்திற்காகச் செல்வத்தைக் கையாள்வதுமில்லை; காத்து உதவுகிறார்கள். மாறாக அவர்களுடைய புத்தி பலத்தாலும், புஜ பலத்தாலும் வைசியர்களிடம் இருக்கும் நாட்டின் செல்வத்தைக் காத்து வியாபாரமும், செல்வமும் பெருக, நன்கு நடைபெற அவர்கள் உதவ வேண்டும். இதில் அவர்களுக்கு மனக்கசப்புக்கு இடமில்லை. வைசியன், நிறைந்த மனதுடன் ப்ராம்மணர், க்ஷத்ரியரின் முக்யத்வத்தை ஏற்றுக் கொள்கின்றான். அவ்வாறு செய்வதன் அவசியத்தையும் உணர்கிறான். அதுதான் அவனுக்கு நன்மை அளிப்பது. மகிழ்ச்சியுடன் அரசனுக்கு வரி அளிக்கிறான். ப்ராம்மணனுக்கு ஸேவை புரிகிறான். நான்காமவரின் தேவைகள் அனைத்தையும் பூர்த்தி செய்கிறான். முறைப்படி மரியாதையுடன் உண்ண உணவு, உடுக்க உடை வழங்குகிறான்.

இங்கே எஞ்சியிருப்பவன் வேளாளன். வேளாளர்கள்தான் ஸமுதாயத்தில் பெரும்பாலோர். அவர்களுக்கு உடல் வலிமை அதிகம். மனோபலம் சிறிது குறைவாக இருக்கலாம். அதனால் உடல் உழைப்பு செய்யவேண்டிய பணியாக அவர்களுக்கு விதிக்கப்பட்டது. ஸமுதாயத்திற்கு உடல் உழைப்பு அதிகம் தேவைப்படுகிறது. இந்த உடல் உழைப்பு மற்ற வர்ணத்தாருக்கு விதிக்கப்பட்ட கடமைகளை விடச் சற்றும் தாழ்ந்ததன்று. இவர்களின் உழைப்பின் அடிப்படையில்தான் மற்றவர்களின் வாழ்க்கை சீராக நடக்கிறது. கால்களின் பலத்தில்தானே உடலே நடக்கிறது? அதுபோல மற்ற மூவரும் இவர்களைத் தங்கள் ப்ரியமான உறுப்புக்களாகக் கருதுகிறார்கள். இவர்கள் உழைப்புக்குத் தேவையான செல்வத்தை வைசியர்கள் அளிக்க வேண்டும். க்ஷத்ரியர்கள் இவர்களை எல்லாவிதத்திலும் காக்க வேண்டும். அந்தணர் அவருடைய ஆன்மிக உயர்வுக்கு வழிகாட்டுதல் வேண்டும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வேளாளர் ஸேவா தர்மத்தினால் பெறுவர். ஆகவே எவனுக்கு எது இயல்பான கடமையோ, அதுவே அவனுக்கு மிகுந்த மேன்மை அளிக்கும். மேன்மை அடைவதற்காக ஒருவன் வேறு வர்ணத்தவரின் கர்மங்களை ஏற்றுக் கொண்டு ஆற்றவேண்டிய அவசியம் இல்லை.

இங்கே 'ஸம்ஸித்தி' என்றால் உள்ளத்தூய்மை என்றோ, ஸ்வர்கத்தை அடைவதென்றோ, அணிமா முதலிய ஸித்திகளைப் பெறுவதென்றோ பொருள் அன்று. அது இங்கே பரமஸித்தியைக் குறிக்கிறது. பரமகதியை அடைவது, சாசுவத நிலையை அடைவது, பரமபதத்தை அடைவது, ப்ரம்ம நிர்வாணத்தை அடைவது ஆகியவையெல்லாம் இதேதான். இது தவிர ப்ராம்மணனுடைய இயல்பான கர்மங்களில் ஞானமும், விஞ்ஞானமும் உள்ளன. அவற்றின் பயன் பரமகதி அல்லாது வேறு ஒன்று என்பது ஏற்புடையதன்று.

**கேள்வி:** இங்கு 'நர:' என்றால் யார்? தத்தம் கடமைகளில் ஈடுபட்டவர் பரமஸித்தியை அடைவர் என்று கூறுவதன் கருத்து என்ன?

---

பகவானை அடைவதற்குரிய வழியையும் காட்ட வேண்டும். தன்னலம் கருதி, மற்ற வர்ணத்தார் இவர்கள் பணியை ஏற்றுச் செய்ய முனையக் கூடாது. தன்னலத்திற்கு ஆட்பட்டு அவர்களிடம் வேலை வாங்கக் கூடாது. தாழ்ந்தவர் என்று கருதக் கூடாது. இவர்களைப் பிறர் தகாத முறையில் நடத்தலாகாது. தனக்காக மட்டும் வாழவேண்டும். பிறருக்கு உபகாரம் செய்யக் கூடாது என்று நினைத்தால் மனித ஸமுதாயம் வாழவே முடியாது. தனி மனிதனும் வாழ முடியாது. ஒருவருக்கொருவர் உதவி செய்துதான் ஆகவேண்டும். தன் மேன்மை பிறர் மேன்மையுடன் கூடத்தான் பெருக வேண்டும். பிறர் மேன்மையடைந்தால்தான் தன் மேன்மை நிலைக்கும். பிறரை நசுக்கினால் தானும் நசுங்க நேரிடும் என்பதை உணரவேண்டும். பெரும்பாலோர் நான்காம் வர்ணத்தவரை இவ்வாறு மதித்தால் அவர்கள் ஸந்தோஷப்படுவார்கள். ஸமுதாயமும் ஸந்தோஷமாக இருக்கும். நால்வரில் ஒருவரையொருவர் அடக்குவதோ, அவமானப்படுத்துவதோ தகாது.

ஒரு குடும்பத்தில் நான்கு ஸஹோதரர்கள் ஒன்றுபட்டு, குடும்பத்தின் மேன்மைக்காக ஒற்றுமையாக, உயர்ந்த முறையில் அவரவர் திறனுக்கு ஏற்ப ஒத்துழைத்து, பிரித்துத் தரப்பட்டுள்ள தத்தம் கடமைகளை உவப்புடன் நிறைவேற்றுகிறார்கள். குடும்பம் தழைத்தோங்குகிறது. அதுபோல ப்ராம்மணன் தர்மத்தைக் கடைப்பிடித்தும், க்ஷத்ரியன் புஜ பலத்தினால் காத்தும், வைசியன் செல்வத்தைப் பெருக்கியும், நான்காம் வர்ணத்தவர் உழைத்தும், ஒருவருக்கொருவர் உதவியாக நன்மை செய்து ஸமுதாய சக்தியை வளர்க்கிறார்கள். அனைவருக்கும் ஒரேவிதமான கடமைகள் இல்லை. அவற்றில் ஏற்றத் தாழ்வு இருப்பதாகக் கருதுவதில்லை. அதனால் சக்தி ஸமநிலை வளர்கிறது. தர்மம் மேன்மேலும் தழைக்கிறது. இதுதான் வர்ண தர்மத்தின் தன்மை தனிச்சிறப்பு.

இவ்விதம் குணங்களுக்கும், கடமைகளுக்கும் ஏற்ப வர்ணப்பிரிவினை ஏற்பட்டிருக்கிறது என்றால் தமக்குத்
தோன்றிய கர்மங்களைச் செய்து தமது வர்ணநிலையை மாற்றிக் கொள்ளலாம் என்பது பொருள் அன்று.
வர்ணத்தின் அடிப்படை பிறப்பு. அதன் தன்மையைக் காப்பதில் வர்ணத்தின் கர்மம் முதல் இடம் வகிக்கிறது.
ஆகவே 'பிறப்பு, கர்மம் இரண்டுமே வர்ண அமைப்புக்குத் தேவைதாம். தானாக ஒரு கர்மத்தை ஏற்றுக்
கடைப்பிடித்து இந்தக் கர்மத்தை நான் ஆற்றுவதால் தான் இன்ன வர்ணத்தைச் சேர்ந்தவன்' என்று சொல்லிக்
கொள்பவர் உண்மையில் வர்ண தர்மத்தை மதிக்கவில்லை. செயலுக்கு ஏற்ப ஒருவனுடைய வர்ணத்தைத்
தீர்மானிப்பது என்று ஆரம்பித்தால் ஒரு நாளில் அவன் எத்தனை தடவை வர்ணத்தை மாற்றுவான் என்று
கணக்கிட முடியாது. அப்பொழுது ஸமுதாயத்தில் ஒரு பிணைப்போ, கட்டுப்பாடோ இருக்க முடியாது. எல்லா
வகைகளிலும் குழப்பம்தான் மிஞ்சும். பாரத நாட்டு வர்ண தர்மத்தில் இவ்விதக் குழப்பத்திற்கு இடமில்லை.
தான் மேற்கொள்ளும் செயல் மூலம் ஒருவன் வர்ணத்தை ஏற்பது சரியானால், போரின் போது ப்ராம்மணனுக்குரிய
கர்மத்தைச் செய்யத் துணிந்த அர்ஜுனனை கீதையில் பகவான் 'க்ஷத்ரிய தர்மத்தைக் கடைப்பிடி' என்று
சொல்லியிருக்க மாட்டார். மனிதன் முன்வினைப்பயனால் ஏற்பட்ட நல்லதும், தீயதுமான ஸம்ஸ்காரத்தினால்
வெவ்வேறு வர்ணங்களில் பிறப்பு எடுக்கிறான். எந்த வர்ணத்தில் எவன் பிறக்கிறானோ, அவன் அந்த வர்ணத்திற்கு
உரிய கர்மங்களை ஆற்றவேண்டும். அது அவனுடைய ஸ்வதர்மம். ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பதுதான் அவனுக்கு
மேன்மை தரும். ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பதில் மரணம் ஏற்பட்டால்கூட அவனுக்கு அது மேன்மைதான்.
இதைத்தான் 'ஸ்வதர்மே நிதநம் ச்ரேய:' என்கிறார் பகவான். அத்தோடு பிறர் தர்மம் அச்சம் அளிக்கும்
என்றும் கூறுகிறார். இதுதான் சரி. ஏனெனில் எல்லா வர்ணங்களும் தமக்குரிய கடமைகளை ஆற்றுவதாலேயே
ஸமுதாயத்தின் சக்தி ஸமநிலை காக்கப்படுகிறது. அப்பொழுதுதான் ஸமுதாய தர்மம் காக்கப்பட்டு, வளர்ச்சி
ஏற்படும். ஸ்வதர்மத்தை விடுவதும், பரதர்மத்தைக் கைக்கொள்வதும் தனி மனிதனுக்கும், ஸமுதாயத்திற்கும் கேடு
விளைவிக்கும். பல்வேறு காரணங்களினால் பாரத நாட்டின் இந்த வர்ணக் கட்டுப்பாடு இப்போது
தளர்ந்துவிட்டது என்பது வருந்தத்தக்கது. இப்போது எவருக்கும் தமது வர்ண தர்மத்தில் பிடிப்பு இல்லை.
அனைவரும் தான்தோன்றித்தனமாக நடந்து கொள்கிறார்கள். அதன் தீய பயனைக் கண்கூடாகக் காண்கிறோம்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** இங்கு 'நர:' என்ற சொல் நான்கு வர்ணத்தவர்களில், ஒவ்வொரு வர்ணத்தையும் சார்ந்த ஒவ்வொரு மனிதனையும் குறிக்கிறது. அவன் தன்னுடைய கர்மங்களில் ஈடுபடுவதால் பரமஸித்தியை அடைவான் என்று சொல்வதிலிருந்து, மனிதனாகப் பிறந்தவர் அனைவருக்கும் மோக்ஷம் அடையத் தகுதி உண்டு என்று உணர்த்துகிறார். தவிர பரமாத்மாவை அடைவதற்குத் தன்னுடைய கர்மங்களை ஆற்றாமல் துறந்து விடுவது தேவையன்று. பரமாத்மாவை அடைவதை லக்ஷ்யமாகக் கொண்டு அவரவர் தமது வர்ணாசிரமத்துக்கு ஏற்ற கர்மங்களை எப்பொழுதும் ஆற்றிக் கொண்டே இருந்தாலே மனிதன் பரமாத்மாவை அடைந்துவிடலாம் (18/56) என்றும் உணர்த்துகிறார்.

**கேள்வி:** 'தனது இயல்பான கர்மங்களில் கருத்துடையவன் செயலை எப்படிச் செய்து பரமஸித்தியை அடைகிறான் என்பதைக் கூறுகிறேன் கேள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ச்லோகத்தில் முற்பாதியில் அவரவர் தத்தம் கர்மங்களை ஆற்றினால் பரமஸித்தியை அடையலாம் என்று கூறினார். கர்மம் என்பது மனிதனைத் தளைகளுக்கு உட்படுத்துமே. அதில் முழுமையாக ஈடுபட்டவன் பரமஸித்தியை எப்படி அடைவான் என்ற ஸந்தேஹம் எழுகிறது. அதைத் தீர்ப்பதற்காக, 'அந்தக் கர்மங்களில் ஈடுபட்டு பரமபதத்தை அடையும் உபாயத்தை நான் அடுத்த ச்லோகத்தில் சொல்கிறேன். கவனமாகக் கேள்' என்கிறார்.

**यतः प्रवृत्तिर्भूतानां येन सर्वमिदं ततम्।**
**स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः॥४६॥**

**யத: ப்ரவ்ருத்திர்பூ₄தாநாம் யேந ஸர்வமித₃ம் ததம் ।**
**ஸ்வகர்மணா தமப்₄யர்ச்ய ஸித்₃தி₄ம் விந்த₃தி மாநவ: ॥ 46 ॥**

**யத:** – எந்தப் பரமபொருளிலிருந்து, **பூ₄தாநாம்** – ஸகல ப்ராணிகளும், **ப்ரவ்ருத்தி:** – உண்டாயினவோ, **யேந** – எந்தப் பரமாத்மாவினால், **இத₃ம் ஸர்வம்** – இந்த உலகம் முழுமையும், **ததம்** – வ்யாபிக்கப்பட்டுள்ளதோ, **தம்** – அந்தப் பரமாத்மாவை, **ஸ்வகர்மணா** – தன்னுடைய இயல்பான கர்மங்களினால், **அப்₄யர்ச்ய** – வழிபட்டு, **மாநவ:** – மனிதன், **ஸித்₃தி₄ம்** – பரம ஸித்தியை, **விந்த₃தி** – அடைகிறான்.

எந்தப் பரம்பொருளிலிருந்து ஸகல ப்ராணிகளும் உண்டாயினவோ, எந்த பரமாத்மாவினால் இந்த உலகம் முழுமையும் நிறைந்துள்ளதோ, அந்த பரமாத்மாவைத் தன்னுடைய இயல்பான கடமைகளினால் வழிபட்டு மனிதன் பரம ஸித்தியை அடைகிறான்.

**கேள்வி:** 'எந்தப் பரம்பொருளிலிருந்து ப்ராணிகள் அனைத்தின் உற்பத்தியும் ஏற்பட்டதோ, எந்தப் பரமாத்மாவினால் இந்த உலகம் முழுவதும் நிறைந்துள்ளதோ' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** தத்தம் கர்மங்களைச் செய்து, பகவானைப் பூஜிப்பதன் முறையைக் கூறுவதற்கு முன் பகவானின் குணங்கள், ப்ரபாவங்கள், சக்தி இவற்றுடன் அவர் எங்கும் நிறைந்திருப்பதைக் கவனிக்குமாறு சுட்டிக்காட்டுகிறார். மனிதன் தனது தனிப்பட்ட ஒவ்வொரு கர்மங்களையும் ஆற்றும்போது "அகில உலகமும் சராசரங்களான ப்ராணிகளுடன்கூட பகவானிடமே உண்டாயிற்று. அவரே எங்கும் நிறைந்திருக்கிறார். தமது யோகமாயையினால் உலகம் என்ற உருவில் வெளிப்பட்டிருக்கிறார். ஆகவே உலகமே அவர் வடிவம்தான்" என்று நினைத்துக் கொண்டே செய்யவேண்டிய கர்மங்களைச் செய்யவேண்டும். பகவான் எங்கும் நிறைந்திருக்கிறார் என்ற விஷயம் 9/4ன் உரையில் விரிவாக விளக்கப்பட்டது.

**கேள்வி:** 'தனது இயல்பான கர்மங்களினால் அந்த பகவானை வழிபடுதல்' என்று கூறுவதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


**பதில்:** பகவான் இவ்வுலகைப் படைத்து, காத்து, அழித்துத் தமக்குள் ஒடுக்கிக் கொள்கிறார். ஸர்வ வல்லமை படைத்தவர். எல்லாவற்றிற்கும் ஆதாரம். எல்லாவற்றையும் தூண்டுபவர். எல்லாவற்றிற்கும் ஆத்மா. அந்தர்யாமி. எங்கும் நிறைந்தவர். அகில உலகமும் அவரது படைப்பே. தாமே தமது யோகமாயையினால் உலகமாக வெளிப்படுகிறார். ஆகவே அகில உலகமும் பகவானைச் சார்ந்தது. என்னுடைய உடல், மனம், புத்தி, புலன்கள், நான் செய்யும் யக்ஞம், தானம் முதலிய எனது வர்ணத்திற்கு விதிக்கப்பட்ட கர்மங்கள் இவையனைத்துமே பகவானுடையன. நானும் பகவானைச் சார்ந்தவனே. எல்லா தேவதைகளுக்கும், பிற ப்ராணிகளுக்கும் அவர் ஆத்மா ஆவதால் எல்லாக் கர்மங்களின் பலன்களையும் அனுபவிக்கிறார் (5/29). மிகுந்த ச்ரத்தையுடனும், நம்பிக்கையுடனும் இதை உணர்ந்து, எல்லாக் கர்மங்களிலும் மமகாரம், பற்றுதல், பயனில் கருத்து ஆகியவற்றை முற்றிலும் த்யாகம் செய்து, பகவானின் ஆணைப்படி, அவருடைய த்ருப்திக்காகவே நம்முடைய இயல்புக்கேற்ற கர்மங்கள் மூலம் உலகிற்கு ஸேவை செய்வதுதான் – அதாவது எல்லா ப்ராணிகளுக்கும் ஸுகத்தை அளிப்பதற்காகத் தன்னலத்தைத் துறந்து நமது கர்மங்களை ஆற்றுவதுதான் தத்தம் இயல்பான கர்மங்களின் மூலம் பகவானைப் பூஜிப்பது ஆகும்.

**கேள்வி:** 'மேற்கூறியவாறு தனது கடமைகளை ஆற்றி பகவானைப் பூஜிப்பவன் பரமஸித்தியை அடைகிறான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எந்த ஒரு மனிதனும், அவன் எந்த வர்ணம், எந்த ஆசிரமத்தைச் சார்ந்தவனாயினும் தனது கடமைகளை ஆற்றி பகவானைப் பூஜித்துப் பரமஸித்தியான பரமாத்மாவைப் பெற முடியும். பரமாத்மாவை அடைவதற்கு எல்லோருக்கும் ஸமமான உரிமை உண்டு. தனது புலனடக்கம், மன அடக்கம் முதலிய கடுமையான கட்டுப்பாடுகளில் வாழ்ந்து தமது கடமைகளைச் செய்து பகவானுக்கு அர்ப்பணம் செய்து பகவானைப் பூஜித்து ப்ராம்மணன் எந்தப் பரமபதத்தை அடைவானோ, க்ஷத்ரியனும் தனது சூரவீரம் நிறைந்த கர்மங்களால் மக்களைக் காத்து, அதன் மூலம் பகவானைப் பூஜித்து, அந்தப் பரமபதத்தை அடைவான். அதேவிதம் விவசாயம் செய்து, பசுக்களைக் காத்து, வியாபாரம் முதலிய கர்மங்களைச் செய்து பகவானைப் பூஜிக்கும் வைசியனும், அதே பரமபதத்தை அடைவான். மக்களுக்கு ஸேவை செய்து அதன் மூலம் பகவானைப் பூஜிக்கும் வேளாளனும், அதே பரமபதத்தை அடைவான். ஆகவே மேலே சொன்ன மனப்பாங்குடன் தன்னுடைய கர்மங்களை ஆற்றுவதன் மூலமாக பகவானைப் பூஜை செய்வது என்ற பயிற்சியை மேற்கொள்ள வேண்டும். கர்மத்தளைகளிலிருந்து விடுபட்டுப் பரமாத்மாவை அடைவதற்கு இதுவே எளிய உபாயம்.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் மனிதன் தனது இயல்பான கர்மங்களை ஆற்றுவதே பகவானுக்குச் செய்யும் பூஜை. அதைச் செய்து பரமஸித்தியைப் பெறலாம் என்று கூறினார். க்ஷத்ரியன் தனது போர் முதலிய கர்மங்கள் கொடியவை என்று கருதி, ப்ராம்மணர்களைப்போலக் கற்பிப்பது முதலிய அமைதியான அவற்றைச் செய்யாமல், கடமைகள் மூலம் தன் வாழ்க்கையை நடத்திப் பரமாத்மாவை அடைய முயற்சி செய்வதோ, அதுபோல வைசியனும், நான்காம் வர்ணத்தவனும் 'மற்ற வர்ணத்தாரின் கடமைகளே சிறந்தவை, என் கடமைகள் தாழ்ந்தவை' என நினைத்து, அவற்றை விட்டுவிட்டு, மற்ற வர்ணத்தாரின் வாழ்க்கை முறையைக் கைக்கொண்டு பரமாத்மாவை அடைய முயல்வதோ, சரியா, தவறா என்ற ஸந்தேஹம் ஏற்படுகிறது. எனவே பிறருடைய கர்மங்களைக் காட்டிலும் தனக்கு விதிக்கப்பட்ட கர்மங்களே சிறந்தவை. தன் கர்மங்களைவிடக் கூடாது என்று இனிக் கூறுகிறார்—

श्रेयान्स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात्।
स्वभावनियतं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम्॥ ४७॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ஶ்ரேயாந்ஸ்வத₄ர்மோ விகு₃ண: பரத₄ர்மாத்ஸ்வநுஷ்டி₂தாத் ।**
**ஸ்வப₄ாவநியதம் கர்ம குர்வந்நாப்நோதி கில்பி₃ஷம் ॥ 47 ॥**

**ஸ்வநுஷ்டி₂தாத்** – நல்ல முறையில் கடைப்பிடிக்கப்பட்ட, **பரத₄ர்மாத்** – பிறருடைய தர்மத்தைக் காட்டிலும், **விகு₃ண: (அபி)** – குணக்குறை உள்ளதாயினும், **ஸ்வத₄ர்ம:** – தன்னுடைய தர்மம், **ஶ்ரேயாந்** – உயர்ந்தது. **(யஸ்மாத்** – ஏனெனில்), **ஸ்வப₄ாவ-நியதம்** – இயல்புக்கேற்ப விதிக்கப்பட்ட, **கர்ம** – தன்னுடைய கர்மங்களை, **குர்வந்** – செய்கிற மனிதன், **கில்பி₃ஷம்** – பாவத்தை, **ந ஆப்நோதி** – அடைய மாட்டான்.

நன்கு முறைப்படி கடைப்பிடிக்கப்பட்ட பிறருடைய தர்மத்தைக் காட்டிலும், குணக்குறை உள்ளதாயினும், தன்னுடைய தர்மம் உயர்ந்தது. ஏனெனில் இயல்புக்கேற்ப விதிக்கப்பட்ட தன்னுடைய கடமையைச் செய்கிற மனிதன் பாவத்தை அடைய மாட்டான்.

**கேள்வி:** 'ஸ்வநுஷ்டிதாத் பரதர்மாத்' என்றால் என்ன பொருள்? 'அதைவிடக் குணக்குறையுள்ளதாயினும் தன் தர்மம் உயர்ந்தது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஒரு நற்செயலைக் குறைபாடு இல்லாமல் நன்கு முழுமையாகச் செய்வது என்பதை ஸ்வநுஷ்டிதம் (ஸு அநுஷ்டிதம்) என்ற சொல் குறிக்கிறது. ஆனால் இந்த ச்லோகத்தில், ஸ்வதர்மம் என்ற சொல்லுடன் 'குணமற்ற – சிறப்பற்ற' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டிருக்கிறது. இதனால், பரதர்மம் என்பதுடன் 'குணம் நிறைந்த' என்ற அடைமொழியைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். இதன் கருத்து என்னவென்றால், எந்தக் கர்மமானது குணம் நிறைந்ததாக இருந்து முழுமையாகச் செய்யப்பட்டுவிட்டதோ அது, அதைச் செய்தவருக்கு விதிக்கப்படாமல், வேறு யாருக்கோ விதிக்கப்பட்டிருக்கிறது என்றால் அத்தகைய கர்மத்தையே, இங்கு 'ஸ்வநுஷ்டிதாத்' (நன்கு செய்யப்பட்ட) என்ற சொல்லுடன் கூடிய 'பரதர்மாத்' என்ற சொல் குறிக்கிறது. வைசியர்களுக்கோ, க்ஷத்ரியர்களுக்கோ விதிக்கப்பட்ட கர்மங்களைக் காட்டிலும் ப்ராம்மணர்களுக்கு விதிக்கப்பட்ட கடமைகளில் அஹிம்ஸை முதலான நற்பண்புகள் அதிகம் உள்ளன. அதுபோல இல்லறத்தாரைக் காட்டிலும் ஸந்யாஸிகளுக்கு விதிக்கப்பட்ட கடமைகளிலும் நற்பண்புகள் நிறையவே உள்ளன. அதுபோல நான்காம் வர்ணத்தவருக்கு விதிக்கப்பட்ட ஸேவா தர்மத்தைக் காட்டிலும் வைசியர், க்ஷத்ரியர்களுக்கு விதிக்கப்பட்ட கடமைகளில் சில சிறப்பு அம்சங்கள் உள்ளன. ஆயினும் குணமுள்ள பரதர்மங்களைக் காட்டிலும் குணமற்ற–சிறப்பற்ற ஸ்வதர்மமே சிறந்தது. தன் கணவன் பார்ப்பதற்கு அழகில்லாதவனாகவும், குணமில்லாதவனாகவும் இருந்தாலும், அவனுக்குப் பணிவிடை செய்வதுதான் மனைவிக்கு மங்களத்தைத் தரக் கூடியது. அதுபோல் மேற்பார்வைக்குக் குணமற்றதுபோலத் தோன்றினாலும், அதைக் கடைப்பிடிப்பதில் சில அம்சங்களில் குறைகள் ஏற்பட்டாலும், எவருக்கு எந்தக் கர்மம் விதிக்கப்பட்டதோ, அதுவே அவருக்கு மேன்மை தரும்.

**கேள்வி:** 'ஸ்வதர்மம்' என்றால் எது?

**பதில்:** வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை இவற்றிற்கேற்ப எந்த மனிதனுக்கு எந்தக் கர்மம் விதிக்கப்பட்டுள்ளதோ, அது அவனுக்கு 'ஸ்வதர்மம்'. பொய், கபடு, களவு, ஹிம்ஸை, ஏமாற்றுவது, விபசாரம் முதலிய தடை செய்யப்பட்ட பாவச் செயல்கள் எவருக்கும் ஸ்வதர்மம் ஆகமாட்டா. அதுபோலக் காம்ய கர்மங்களை யாவரும் செய்துதான் ஆகவேண்டும் என்ற கட்டாயமும் இல்லை. ஆகவே, அவை எவருடைய ஸ்வதர்மத்திலும் சேரமாட்டா. இவற்றைத் தவிர எந்த வர்ணத்தாருக்கு, எந்த ஆசிரமத்தாருக்கு எனத் தனிப்பட்ட தர்மங்கள் கூறப்பட்டிருக்கின்றனவோ, எவற்றில் மற்ற வர்ண ஆசிரமத்தவருக்குத் தகுதி இல்லையோ, அவை அந்தந்த வர்ண ஆசிரமத்தவருக்குத் தனித்தனியே 'ஸ்வதர்மம்' ஆகும். இருபிறப்பாளர்களுக்குப் பொதுவாக விதிக்கப்பட்ட கடமைகளாகிய வேதம் கற்பது, யாகம் செய்வது முதலியன இருபிறப்பாளர்களுக்கே உரிய கடமைகள். எல்லா வர்ண ஆசிரமத்தின் ஆண்–பெண்பாலருக்கும் உரிமையுள்ள பகவத் பக்தி, உண்மை பேசுவது, தாய்–தந்தையருக்குத்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தொண்டு புரிவது, புலன்களை வசப்படுத்தி வைத்துக் கொள்வது, ப்ரம்மசர்யம் மேற்கொள்வது, பணிவு முதலிய ஸாமான்ய தர்மங்கள் எல்லோருக்கும் ஸ்வதர்மங்கள் ஆகும்.

**கேள்வி:** 'விகுண: ஸ்வதர்ம:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** 'விகுணம்' என்றால் குணங்களில் குறை என்று பொருள். க்ஷத்ரியர்களுக்குப் போர்புரிவது, கொடியவர்களுக்குத் தண்டனை அளிப்பது முதலியன ஸ்வதர்மங்கள். அவற்றில் அஹிம்ஸை, அமைதி இவை குறைவு என்பது தெரிகிறது. இவ்வாறு வைசியனுக்குரிய விவசாயம் முதலிய கடமைகளிலும் ஹிம்ஸை முதலிய சில குறைபாடுகள் உள்ளன. இப்படிப் பார்க்கும்போது ப்ராம்மணனுக்குரிய அமைதியே நிறைந்த கடமைகளைக் காட்டிலும் இவர்களுக்கு விதிக்கப்பட்ட கடமைகளில் குணம் குறைவாகவோ, முற்றிலும் இல்லாததாகவோ தெரிகிறது. அதுபோல நான்காம் வர்ணத்தவரின் கடமைகள் க்ஷத்ரிய, வைசியர்களின் கடமைகளைக் காட்டிலும் தரக் குறைவாக இருக்கின்றன. இது தவிர அந்தக் கடமைகளை ஆற்றுவதில் ஏதாவது விட்டுப் போனாலும் அதுவும் குறைபட்ட கர்மம்தான். மேலே சொன்னவிதம் ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பதில் குற்றம் குறை இருந்தாலும், அது பரதர்மத்தைக் காட்டிலும் சிறந்ததுதான். இதைக் குறிப்பிடவே 'விகுண: ஸ்வதர்ம:' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'ஸ்வபாவநியதம் கர்ம' என்றால் எது? அதைச் செய்பவன் பாவத்தை அடைய மாட்டான் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எந்த வர்ணத்தில், எந்த ஆசிரமத்தில் உள்ளவனுக்கு எந்த தர்மம் அவனுடைய இயல்புக்கு ஏற்ப, சாஸ்த்ரங்களால் விதிக்கப்பட்டிருக்கிறதோ, அது அவனுக்கு 'ஸ்வபாவநியதம் கர்மம்'. மேற்கூறிய ஸ்வதர்மம்தான் இது. அவற்றைப் புரிவதால் மனிதன் பாவம் செய்தவனாக ஆகமாட்டான் என்பதன் பொருள் – அந்த கர்மங்களை முறைப்படி கடைப்பிடிக்கும்போது தவிர்க்க முடியாதபடி, தான் அறியாதவாறு ஹிம்ஸை முதலிய பாவங்கள் செய்ய நேரிட்டாலும் அவை ஒட்ட மாட்டா. பிறருடைய தர்மத்தைச் சிறிதுகூட ஹிம்ஸை முதலிய குறைகள் இல்லாமல் செய்தாலும் பிறர் பிழைப்பைக் கெடுப்பது முதலிய பாவங்கள் வந்து சேரும். ஆகவே குற்றமற்ற, குணம் பொருந்திய பரதர்மத்தைக் காட்டிலும் குற்றம் குறையுள்ள ஸ்வதர்மம் சாலச் சிறந்தது.

**सहजं कर्म कौन्तेय सदोषमपि न त्यजेत्।**
**सर्वारम्भा हि दोषेण धूमेनाग्निरिवावृताः ॥ ४८ ॥**

**ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோ₃ஷமபி ந த்யஜேத் ।**
**ஸர்வாரம்ப₄ா ஹி தோ₃ஷேண தூ₄மேநாக்₃நிரிவாவ்ருதா: ॥ 48 ॥**

**கௌந்தேய** – குந்தியின் புதல்வனே! **ஸதோ₃ஷம் அபி** – குறை உள்ளதாயினும்; **ஸஹஜம் கர்ம** – தனக்குரிய இயல்பான கர்மங்களை, **ந த்யஜேத்** – விட்டுவிடலாகாது. **ஹி** – ஏனெனில், **தூ₄மேந அக்₃நி: இவ** – புகையால் சூழப்பட்ட தீ போல், **ஸர்வாரம்ப₄ா:** – எல்லாச் செயல்களும் (ஏதோ ஒரு வகையில்), **தோ₃ஷேண** – குறையினால், **ஆவ்ருதா:** – சூழப்பட்டுள்ளன.

குந்தியின் மைந்தனே! குறை உள்ளதாயினும் தனக்குரிய இயல்பான கடமையை விட்டுவிடலாகாது. ஏனெனில் புகையால் சூழப்பட்ட தீ போல் எல்லாச் செயல்களும் ஏதோ ஒரு வகையில் குறையினால் சூழப்பட்டுள்ளன.

**கேள்வி:** 'ஸஹஜம் கர்ம' என்றால் என்ன? குறை உள்ளதாயினும் தனக்குரிய இயல்பான கடமையை விடக் கூடாது என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலைக்கேற்ப எவனுக்கு எந்தக் கர்மம் விதிக்கப்பட்டுள்ளதோ, அவனுக்கு அதுதான் 'ஸஹஜம் கர்மம்' (ஸ்வதர்மம் என்று பொருள்).

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இந்த அத்யாயத்தில் ஸ்வதர்மம், ஸ்வகர்மம், நியதகர்மம், ஸ்வபாவ நியதகர்மம், ஸ்வபாவஜ கர்மம் என்றெல்லாம் கூறப்படுவது இந்த 'ஸஹஜம் கர்மம்' (தனக்குரிய இயல்பான கடமை) தான்.

இயல்பான கர்மங்களில் குற்றம் குறைகள் இருந்தாலும், அவற்றைவிட்டுவிடலாகாது என்று சொல்வதன் மூலம், பின்வரும் கருத்தை வலியுறுத்துகிறார்:— நல்ல குணங்கள் பொருந்திய இயல்பான கர்மங்களை விட்டுவிடலாகாது என்பதைச் சொல்லவே வேண்டியதில்லை. எந்தக் கர்மங்களிலாவது பொதுவாக ஹிம்ஸை என்று நினைக்கக்கூடிய குற்றங்கள் கலந்திருந்தாலும், அவை சாஸ்த்ரப்படியும், ந்யாயமாகவும் அவர்களுக்கு விதிக்கப்பட்டு விட்டபடியால் உண்மையில் குற்றமுள்ளவை அல்ல. அந்தக் கர்மங்களைச் செய்துதான் ஆகவேண்டும். செய்யாமல் விட்டுவிடக்கூடாது. அவற்றைச் செய்வதால் பாவம் ஏற்படாது. மாறாக, செய்யாமல் விட்டால்தான் பாவம் நேரிடும்.

**கேள்வி:** 'ஹி' என்று கூறி எல்லாச் செயல்களும் புகையால் சூழப்பட்ட தீ போல் குறையினால் சூழப்பட்டுள்ளன என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அதற்குக் காரணம் கூறுகிறார் 'ஹி' என்று; அதற்கு ஏனெனில் என்று பொருள். நெருப்பில் புகை சூழ்ந்துதான் இருக்கும். ஏனெனில் நெருப்பில்லாமல் புகையாது. அதுபோல எந்தக் கர்மத்தைச் செய்ய ஆரம்பித்தாலும் ஏதாவது குற்றம்குறை இருக்கத்தான் இருக்கும். செயல் என்றால் சிறிதாவது பிறருக்கு ஹிம்ஸை நேரிடத்தான் செய்யும். ஸந்யாஸ ஆசிரமத்தில்கூட உடல் தூய்மை, ஸ்நானம், பிக்ஷை எடுப்பது முதலிய கர்மங்களில் ஒரு சிறு அம்சமாவது ஹிம்ஸையுமுள்ளது. ப்ராம்மணன் செய்யக்கூடிய யக்ஞம் முதலிய விரிவான கர்மங்களிலும் பலவிதமாகச் சிறு உயிர்களுக்கு ஹிம்ஸை ஏற்படத்தான் செய்கிறது. பொதுவாகப் பார்க்கப் போனால் எந்த வர்ண ஆசிரம தர்மத்திலும் குற்றம் குறை இல்லாமல் இருக்க முடியாது. ஒருவனும் கர்மம் செய்யாமலும் இருக்க முடியாது (3/5). ஆகவே ஸ்வதர்மத்தைச் செய்யாமல்விட்டால் கூட ஏதாவது ஒரு செயலை மனிதன் செய்து கொண்டுதான் இருப்பான். எதைச் செய்தாலும் அதுவும் குற்றம் குறையுள்ளதாகவே இருக்கும். ஆகவே இந்தச் செயல் தாழ்ந்தது, குற்றமுள்ளது என்று கண்டு கொண்டு மனிதன் ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிக்காமல் இருக்கக் கூடாது. ஆனால் அவற்றில் மமகாரம், பற்றுதல், பயனில் கருத்து என்ற குறைகள் வராமல் த்யாகம் செய்து, அவற்றை முறைப்படி செய்யவேண்டும். இப்படிச் செய்வதால் மனதில் தூய்மை ஏற்பட்டு விரைவில் பகவானை அடைய முடியும்.

**பொருத்தம்:** அர்ஜுனன் அறிய விரும்பியபடி த்யாகம், ஸந்யாஸம் இவற்றைப் பற்றிய தத்வத்தை அறிவுறுத்துவதற்காக, ச்லோகம் 4 முதல் 12 வரை த்யாகம் பற்றியும், 13 முதல் 40 வரை ஸந்யாஸம் என்ற ஸாங்க்யயோகம் பற்றியும் கூறினார். 41 முதல் இதுவரை கர்மயோகம் என்ற வடிவிலுள்ள த்யாகத்தின் தத்வத்தைக் கூற ஆரம்பித்து, இயல்பான கர்மத்தின் தன்மையையும், அது தவிர்க்க முடியாதது என்றும், கர்மயோகத்தில் பக்தி எவ்விதம் உதவியாக உள்ளது என்பதையும் எடுத்துச் சொல்லி, அதன் பயன் பகவானை அடைவது என்றும் கூறினார். ஆயினும் ஸந்யாஸம் பற்றிக் கூறியபோது ஸந்யாஸத்தின் பயன் பற்றிச் சொல்லவில்லை. அதுபோலக் கர்மம் செய்வதில் கர்த்தா என்ற அபிமானத்தைத் துறந்து, உபாஸனையுடன் கூடிய ஸாங்க்யயோகத்தை எப்படிக் கடைப்பிடிப்பது என்றும் கூறவில்லை. ஆகவே உபாஸனையுடன்கூட விவேக வைராக்யத்துடன் தனிமையில் இருந்து ஸாதனை புரிவதன் முறை, அதன் பயன் இவற்றைக் கூறுவதற்காக மறுபடியும் ஸாங்க்யயோகம் பற்றிக் கூற ஆரம்பிக்கிறார்—

असक्तबुद्धिः सर्वत्र जितात्मा विगतस्पृहः।
नैष्कर्म्यसिद्धिं परमां सन्न्यासेनाधिगच्छति ॥ ४९ ॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**அஸக்தபு₃த்₃தி₄: ஸர்வத்ர ஜிதாத்மா விக₃தஸ்ப்ருஹ: ।**

**நைஷ்கர்ம்யஸித்₃தி₄ம் பரமாம் ஸந்ந்யாஸேநாதி₄க₃ச்ச₂தி ॥ 49 ॥**

**ஸர்வத்ர** – எங்கும், **அஸக்தபு₃த்₃தி₄:** – பற்றற்ற புத்தியுடைய, **விக₃தஸ்ப்ருஹ:** – ஆசை அற்றவனான, **ஜிதாத்மா** – உள்ளத்தை அடக்கிய மனிதன், **ஸந்ந்யாஸேந** – ஸாங்க்ய யோகத்தினால், **பரமாம் நைஷ்கர்ம்யஸித்₃தி₄ம்** – கர்மத்தளைகளிலிருந்து முற்றும் விடுபட்ட பெருநிலையை, **அதி₄க₃ச்ச₂தி** – அடைகிறான்.

எங்கும் பற்றற்ற புத்தியுடைய, ஆசை அற்றவனான, உள்ளத்தை அடக்கிய மனிதன் ஸாங்க்ய யோகத்தினால் கர்மத்தளைகளிலிருந்து முற்றும் விடுபட்ட பெருநிலையை அடைகிறான்.

**கேள்வி:** *'ஸர்வத்ர அஸக்தபுத்தி:, விகதஸ்ப்ருஹ:, ஜிதாத்மா' என்ற சொற்களுக்குத் தனித்தனியாக என்ன பொருள்? இந்த அடைமொழிகளை இங்கே ஏன் கூறுகிறார்?*

**பதில்:** எவனுக்கு மனம், புலன்களுடன் கூடிய உடலிலும், அதன் மூலம் நிறைவேற்றப்படுகின்ற கர்மங்களிலும், எல்லா போகங்களிலும், சராசரங்கள் நிரம்பிய அகில உலகிலும் பற்றுதல் முற்றிலும் அற்றுவிட்டதோ, எவனுடைய மனமும், புத்தியும் எதனாலும் சிறிது கூட ஈடுபாடு கொள்ளவில்லையோ, அவனை 'ஸர்வத்ர அஸக்தபுத்தி:' (பற்றற்ற புத்தியுடையவன்) என்கிறார். எவனுக்குச் சிறிதுகூட ஆசையில்லையோ, உலகியல் பொருள் எதையும் எவன் பொருட்படுத்துவதில்லையோ (பெரியதாகக் கருதுவதில்லையோ), அவனை 'விகதஸ்ப்ருஹ:' (ஆசையற்றவன்) என்கிறார். எவன் புலன்களையும், மனதையும் தன் வசத்தில் வைத்திருக்கிறானோ, அவனை 'ஜிதாத்மா' (உள்ளத்தையடக்கியவன்) என்கிறார். ஸந்யாஸயோகத்தில் ஈடுபடுகிறவனுடைய தகுதி பற்றி, இம்மூன்று அடைமொழிகளும் கூறுகின்றன. மேலே சொன்ன மூன்று பண்புகள் படைத்தவன்தான் ஸாங்க்யயோகத்தின் மூலம் பரமாத்மாவைப் பற்றிய உண்மையான அறிவைப் பெறுவான்.

**கேள்வி:** *இங்கே 'ஸந்ந்யாஸேந' என்ற சொல் எந்த ஸாதனையைக் குறிக்கிறது? 'பரமாம் நைஷ்கர்ம்யஸித்திம்' என்றால் எது? ஸந்யாஸத்தின் மூலம் அதை அடைகிறான் என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** ஸந்யாஸம் என்றால் இங்கே ஞானயோகம் என்று பொருள். ஸாங்க்யயோகம் என்றும் கூறுகிறார்கள். ச்லோகம் 51 முதல் 53 வரை இது பற்றிக் கூறுகிறார். இதன் பயனாகக் கர்மத்தளையிலிருந்து அறவே விடுபட்டு ஸத் சித் ஆனந்தமயமான, விகாரமற்ற பரமாத்மாவினுடைய உண்மையான அறிவை அடைவதே 'பரமாம் நைஷ்கர்ம்யஸித்தி' என்ற சொல்லுக்குப் பொருள். மேற்கூறிய ஸாங்க்யயோகத்தின் மூலம் பரமாத்மாவின் உண்மை அறிவைப் பெறுவதுதான் ஸந்யாஸத்தின் மூலம் இந்த ஸித்தியைப் பெறுவது.

**பொருத்தம்:** **மேற்கூறிய ச்லோகத்தில் பரம நைஷ்கர்ம்ய ஸித்தியைத் தரவல்ல, அந்த ஸந்யாஸத்தின் (ஸாங்க்யயோகத்தின்) தன்மை என்ன? அதன் மூலம் எந்த முறையில் ஸித்தியைப் பெற்று, ப்ரம்மத்தை அடையலாம் என்ற விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுமாறு பகவான் அர்ஜுனனுக்கு எழுச்சியூட்டுகிறார்—**

सिद्धिं प्राप्तो यथा ब्रह्म तथाप्नोति निबोध मे।
समासेनैव कौन्तेय निष्ठा ज्ञानस्य या परा॥५०॥

**ஸித்₃தி₄ம் ப்ராப்தோ யதா₂ ப்₃ரஹ்ம ததா₂ப்நோதி நிபோ₃த₄ மே ।**

**ஸமாஸேநைவ கௌந்தேய நிஷ்டா₂ ஜ்ஞாநஸ்ய யா பரா ॥ 50 ॥**

**ஜ்ஞாநஸ்ய** – ஞானயோகத்தினுடைய, **பரா நிஷ்டா₂** – உயர்ந்த நிலை, **யா** – எதுவோ அந்த, **ஸித்₃தி₄ம்** – நைஷ்கர்ம்ய ஸித்தியை, **ப்ராப்த:** – அடைந்த மனிதன்,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**யத₂ா** – எப்படி, **ப்₃ரஹ்ம** – ப்ரம்மத்தை, **ஆப்நோதி** – அடைகிறானோ, **தத₂ா** – அந்த முறையை, **கௌந்தேய** – குந்தியின் புதல்வனே! **ஸமாஸேந ஏவ** – சுருக்கமாகவே, **மே** – என்னிடமிருந்து, **நிபோ₃த₄** – அறிந்து கொள்.

ஞானயோகத்தினுடைய எந்த உயர்ந்த நிலை உண்டோ அந்த நைஷ்கர்ம்ய ஸித்தியை அடைந்த மனிதன் ப்ரம்மத்தை எப்படி அடைகிறானோ அந்த முறையை, குந்தியின் புதல்வ! சுருக்கமாகவே என்னிடமிருந்து அறிந்து கொள்.

**கேள்வி:** 'பராநிஷ்டா' என்றால் என்ன?

**பதில்:** ஞானயோகத்தின் இறுதியான உயர்ந்த நிலை என்று பொருள். அதையே பராபக்தி, தத்வ ஞானம் என்றும் கூறுகிறார். அதுதான் ஸாதனைகளின் எல்லை. ஞானயோக ஸாதனைகளை எல்லாம் ஒன்று சேர்த்து 'ஞானநிஷ்டா' என்கிறார். அவற்றின் பயனாக ஏற்படும் தத்வஞானம்தான் 'பராநிஷ்டா'. அதாவது ஞானத்தின் உயர்ந்த நிலை.

**கேள்வி:** இங்கே 'ஸித்தி' என்றால் என்ன?

**பதில்:** முன் ச்லோகத்தில் கூறப்பட்ட நைஷ்கர்ம்ய ஸித்திதான் அது. 54வது ச்லோகத்தில் பராபக்தி என்று வர்ணிக்கப்படுகிறதே, அதையே இங்கு 'ஸித்தி' என்ற சொல் குறிக்கிறது.

**கேள்வி:** 'யதா' என்றால் என்ன பொருள்?

**பதில்:** தூய உள்ளம் படைத்த தகுதியுள்ள மனிதன், ஞானத்தின் பராநிஷ்டையை (அதாவது உயர்ந்த நிலையினை), பரப்ரம்ம பரமாத்மாவை அடையும் முறையை – பிரிவுகள், உட்பிரிவுகளோடு கூடிய ஞானயோக முறையை – 'யதா' என்ற சொல் குறிக்கிறது.

**கேள்வி:** மேலே சொன்ன ஸித்தியைப் பெற்றவன் ப்ரம்மத்தை எப்பொழுது அடைவான்?

**பதில்:** ஸித்தி பெற்ற பிறகு ப்ரம்மத்தை அடைவதில் தாமதம் இராது. அக்கணமே நேரும்.

**கேள்வி:** ப்ரம்மம் என்றால் எது? அதை அடைவது என்றால் என்ன?

**பதில்:** நித்யமான, விகாரமற்ற, நிர்குணமான, உருவமற்ற, ஸத் சித் ஆனந்தமயமான, பூர்ண ப்ரம்மமான பரமாத்மாவைத்தான் இங்கே ப்ரம்மம் என்ற சொல் குறிக்கிறது. ப்ரம்மத்தை அடைவது என்றால் தத்வ ஞானத்தின் மூலம், 55வது ச்லோகத்தில் விளக்கியவாறு இரண்டற அதனுடன் ஐக்யமாகி விடுவது என்று பொருள்.

**கேள்வி:** 'ததா' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? 'அதை என்னிடமிருந்து சுருக்கமாகவே அறிந்து கொள்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'யதா' என்ற சொல்லால் குறிக்கப்பட்ட விதிமுறையே 'ததா' என்ற சொல்லால் உணர்த்தப்படுகிறது. 'இதை விரிவாக நான் இங்கே சொல்லவில்லை. சுருக்கமாகச் சொல்கிறேன். கவனமாகக் கேள். இல்லாவிட்டால் புரிந்து கொள்ளமாட்டாய்' என்கிறார் பகவான்.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் கூறிய முன்னுரைப்படி மூன்று ச்லோகங்களில் பல பிரிவுகளுடன் கூடிய ஞானயோகத்தை விவரிக்கிறார்—

बुद्ध्या विशुद्धया युक्तो धृत्यात्मानं नियम्य च।
शब्दादीन्विषयांस्त्यक्त्वा रागद्वेषौ व्युदस्य च॥ ५१॥

विविक्तसेवी लघ्वाशी यतवाक्कायमानसः।
ध्यानयोगपरो नित्यं वैराग्यं समुपाश्रितः॥५२॥

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**अहङ्कारं बलं दर्पं कामं क्रोधं परिग्रहम्।**
**विमुच्य निर्ममः शान्तो ब्रह्मभूयाय कल्पते॥५३॥**

**புத்₃த்₄யா விஶுத்₃த₄யா யுக்தோ த்₄ருத்யாத்மாநம் நியம்ய ச ।**
**ஶப்₃தா₃தீ₃ந்விஷயாம்ஸ்த்யக்த்வா ராக₃த்₃வேஷௌ வ்யுத₃ஸ்ய ச ॥ 51 ॥**
**விவிக்தஸேவீ லக்₄வாஶீ யதவாக்காயமாநஸ: ।**
**த்₄யாநயோக₃பரோ நித்யம் வைராக்₃யம் ஸமுபாஶ்ரித: ॥ 52 ॥**
**அஹங்காரம் ப₃லம் த₃ர்பம் காமம் க்ரோத₄ம் பரிக்₃ரஹம் ।**
**விமுச்ய நிர்மம: ஶாந்தோ ப்₃ரஹ்மபூ₄யாய கல்பதே ॥ 53 ॥**

**விஶுத்₃த₄யா** – தெளிந்த, **புத்₃த்₄யா யுக்த:** – அறிவுடன் கூடியவனாகவும், **லக்₄வாஶீ** – எளிய, ஸாத்விக, அளவான உணவு அருந்துபவனாகவும் உள்ளவன், **ஶப்₃தா₃தீ₃ந்** – ஒலி முதலிய, **விஷயாந்** – புலன்நுகர் பொருட்களை, **த்யக்த்வா** – துறந்து, **விவிக்தஸேவீ** – தூய்மையான இடத்தில் தனித்திருந்து, **த்₄ருத்யா** – ஸாத்விகமான உறுதியோடு, **ஆத்மாநம்** – உள்ளத்தையும், புலன்களையும், **நியம்ய** – அடக்கி, **யதவாக்காயமாநஸ:** – மனம், வாக்கு, உடல் இவற்றைத் தன்வசப்படுத்தியவனாகவும், **ராக₃த்₃வேஷௌ** – விருப்பு–வெறுப்புகளை, **வ்யுத₃ஸ்ய** – முற்றிலும் அழித்து, **வைராக்₃யம்** – திடமான வைராக்யத்தை, **ஸமுபாஶ்ரித: ச** – அடைந்தவனாகவும், **அஹங்காரம்** – அஹங்காரத்தையும், **ப₃லம்** – வலிமையையும், **த₃ர்பம்** – கர்வத்தையும், **காமம்** – காமத்தையும், **க்ரோத₄ம் ச** – கோபத்தையும், **பரிக்₃ரஹம்** – சொத்து சேர்த்தலையும், **விமுச்ய** – நீக்கி, **நித்யம்** – எப்பொழுதும், **த்₄யாநயோக₃பர:** – த்யானயோகத்தில் ஈடுபட்டிருந்து, **நிர்மம:** – மமகாரமற்று, **ஶாந்த:** – சாந்தியோடு கூடியவனாக உள்ளவன், **ப்₃ரஹ்மபூ₄யாய** – ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்மத்தில் இரண்டறக் கலப்பதற்கு, **கல்பதே** – தகுதி பெறுகிறான்.

தூய்மையான அறிவுடன் கூடிய எளிய, ஸாத்விக, அளவான உணவு அருந்துபவனாக ஒலி முதலிய புலன்நுகர் பொருட்களைத் துறந்து தூய்மையான இடத்தில் தனித்திருந்து ஸாத்விகமான உறுதியோடு உள்ளத்தையும், புலன்களையும் அடக்கி மனம், வாக்கு, உடல் இவற்றைத் தன்வசத்தில் நிறுத்தி விருப்பு–வெறுப்புகளை முற்றிலும் அழித்து, திடமான வைராக்யத்தை அடைந்தவனாகவும், அஹங்காரத்தையும், வலிமையையும், கர்வத்தையும், காமத்தையும், கோபத்தையும், சொத்து சேர்த்தலையும் நீக்கி, எப்பொழுதும் த்யான யோகத்தில் நிலைத்திருந்து, மமகாரமற்று, சாந்தியோடு கூடியவனாக உள்ளவன் ஸத் சித் ஆனந்தமயமான பரப்ரம்மத்தில் இரண்டறக் கலப்பதற்குத் தகுதி பெறுகிறான்.

**கேள்வி:** 'விஶுத்த புத்தி' என்றால் எது? அத்துடன் கூடியவன் என்றால் என்ன பொருள்?

**பதில்:** முன்வினைப்பயனான பாவப் பதிவுகள் ஏதுமற்ற மனம் 'விஶுத்த புத்தி' இவ்விதத் தூய மனமுடையவன் விஶுத்த புத்தியுடன் கூடியவன்.

**கேள்வி:** 'லக்வாஶீ' என்றால் என்ன பொருள்?

**பதில்:** ஸாதனைக்கு உதவியாக, எளிதில் ஜீர்ணமாகக் கூடிய ஸாத்விகப் பொருட்களை (17/8)த் தன்னுடைய இயல்புக்கும், தேவைக்கும், சக்திக்கும் ஏற்றவாறு அளவோடு உண்பவன் (6/17) 'லக்வாஶீ'.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'ஒலி முதலிய புலன்நுகர் போகப் பொருட்களைத் துறந்து தூய்மையான இடத்தில் தனித்திருந்து' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எல்லாப் புலன்களாலும் நுகரக் கூடிய போகப் பொருட்கள் அனைத்தையும் துறந்து, அதாவது அவற்றை நுகர்வதில் தன் வாழ்க்கையின் அருமையான நேரத்தைக் கழிக்காமல், எப்பொழுதும் ஸாதனை புரிவதற்குகந்த தூய காற்று வசதி, மக்கள் சந்தடியில்லாத சூழ்நிலை உள்ள நதிக்கரையோ, கோவிலோ, காடோ, மலைக்குகையோ, பெருக்கி மெழுகிச் சுத்தப்படுத்தப்பட்ட துப்புரவான இடமோ இருந்தால், அங்கு வஸிக்கவேண்டும். இதுதான் ஒலி முதலிய போகப் பொருட்களைத் துறந்து தனிமையில் இருப்பது என்பதன் பொருள்.

**கேள்வி:** 'ஸாத்விகமான உறுதியோடு உள்ளத்தையும், புலன்களையும் அடக்கி, மனம், மொழி, மெய் இவற்றைத் தன் வசத்தில் நிறுத்துவது' என்றால் என்ன கருத்து?

**பதில்:** *18/33*ல் கூறப்பட்ட இலக்கணமுடைய தாரணா சக்தி ஸாத்விகமானது. உறுதியான தாரணையினால் உள்ளம் அலைபாயாதவாறு, உலகியல் போகங்களைச் சிந்திக்காமல் செய்து, புலன்கள் உலகியல் போகங்களை நுகராமல் பார்த்துக் கொள்வது என்று பொருள். இப்படி மனம், புலன்கள், உடல் ஆகியவற்றை அடக்கித் தன்வசப்படுத்த வேண்டும். அவை தன்னிச்சைப்படி செயல்பட்டால் புத்தியைச் சிதற அடித்துவிடும். அதைத் தடுக்க வேண்டும். இதுதான் மனம், மொழி, மெய் இவற்றைத் தன் வசத்தில் வைத்துக் கொள்ள வேண்டும் என்று கூறுவதன் பொருள்.

**கேள்வி:** 'விருப்பு-வெறுப்புகளை முற்றிலும் அழித்து, திடமான வைராக்யத்தை அடைவது' என்றால் என்ன?

**பதில்:** புலன்களில் ஒவ்வொரு பொருள் பற்றியும் விருப்போ, வெறுப்போ மறைந்து இருக்கும். இவைதான் ஸாதகர்களின் பெரும் பகைவர்கள் *(3/34)*. ஆகவே இவ்வுலக, பரலோக போகங்களிலோ, ப்ராணிகளிடமோ, பொருட்களிலோ, செயல்களிலோ, நிகழ்ச்சிகளிலோ சிறிதுகூட விருப்போ, வெறுப்போ கொள்ளாது இருப்பதே விருப்பு-வெறுப்புகளை முற்றிலும் அழிப்பதாகும். இவ்விதம் விருப்பு-வெறுப்புகளை ஒழித்துப் பற்றற்று வைராக்யத்துடன் எப்பொழுதும் மூழ்கி இருக்க வேண்டும் என்று பொருள்.

**கேள்வி:** 'அஹங்காரம், உடல் வலிமை, கர்வம், காமம், கோபம், சொத்து சேர்த்தல் இவற்றை நீக்கி த்யானயோகத்தில் இடைவிடாது ஈடுபட்டிருப்பது' என்றால் என்ன பொருள்?

**பதில்:** உடலிலோ, புலன்களிலோ, மனதிலோ உள்ள 'நான்' என்ற நினைப்பு அஹங்காரம் எனப்படும். இதன் காரணமாகத்தான் மனமும், புத்தியும், உடலும் செய்கின்ற கார்யங்களுக்குத் தான் கர்த்தா என்று மனிதன் நினைக்கிறான். ஆகவே இந்த தேஹாபிமானத்தை அறவே துறப்பதுதான் அஹங்காரத்தை த்யாகம் செய்வதாகும். அந்யாயமாகப் பிறர் மேல் வலுவில் ஆதிக்கம் செலுத்த முயல்வது உடல் வலிமை ஆகும். இவ்வித முரட்டுத் தனம் கொண்ட தீய செயலைத் துறப்பது பலத்தை த்யாகம் செய்வதாகும். செல்வம், உறவுமுறை, படிப்பு, பிறப்பு, உடல் வலிமை இவற்றை நினைத்துப் பெருமிதங்கொள்ளுதல் கர்வம் ஆகும். இதை முற்றும் விலக்க வேண்டும். இவ்வுலக பரலோக போகங்களை அனுபவிக்க வேண்டும் என்ற ஆசை காமம் ஆகும். அதை அறவே துறப்பதே காமத்தை த்யாகம் செய்வதாகும். நமது மனத்திற்கு ஒவ்வாதபடி நடக்கிறவர்களிடமோ, நீதிக்கு விரோதமாக நடக்கிறவர்களிடமோ உள்ளத்தில் ஓர் எரிச்சல் ஏற்படுகிறது. உடனே கண்கள் சிவந்து விடுகின்றன; உதடு துடிக்கிறது; உள்ளத்தில் அனல் வீசுகிறது; முகம் விகாரமடைகிறது. இதுதான் க்ரோதம். இதைத் துறக்கவேண்டும். எந்த நிலையிலும் இது ஏற்படாமல் அமைதி காக்க வேண்டும். இத்தகைய உணர்ச்சிகள் ஒருபோதும் தலையெடுக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இதுதான் க்ரோதத்தை த்யாகம் செய்வதாகும். உலகியல் போக வஸ்துக்களைச் சேர்த்து வைத்துக் கொள்வது பரிக்ரஹம் (சொத்துச் சேர்த்தல்) ஆகும். அவற்றைத் துறக்க வேண்டும். இதுதான் குறிப்பாக பரிக்ரஹ த்யாகம் ஆகும். இதை வேறுவிதமாகச் சொல்வதனால், உலகியல் போகங்களை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அனுபவிப்பதற்காகச் சேர்த்து வைப்பதும், என் சொத்து என்று நினைப்பதும் ஒருவிதத்தில் பரிக்ரஹம்தான். இந்தச் சொத்து சேர்த்தலையும் துறக்கவேண்டும்.

இவ்விதம் எல்லாவற்றையும் துறந்து, முன்பு கூறியவாறு ஸாத்விக உறுதி நிலை (த்ருதி)யின் மூலம் மனம், புலன்களின் செயல்களைத் தடுத்து நிறுத்தி, ஒருவித எழுச்சியும் இல்லாமல் பார்த்துக் கொண்டு, என்றும் இடைவிடாது ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்துடன் இரண்டற்ற நிலையில் சிந்திப்பதும் (6/25), எழுந்தாலும், உட்கார்ந்தாலும், உறங்கினாலும், விழித்தாலும், நீராடும்போதும், உண்ணும்போதும், தவிர்க்க முடியாத எந்தக் கார்யத்தில் ஈடுபட்டாலும் இடைவிடாது எப்பொழுதும் பரமாத்ம ஸ்வரூபத்தைச் சிந்தித்திருப்பதும், அதுவே எல்லாவற்றைக் காட்டிலும் மேலான கடமை என்று அறிவதும்தான், த்யானயோகத்தில் ஈடுபட்டிருப்பது ஆகும்.

**கேள்வி:** மமகாரமற்றிருத்தல் என்றால் என்ன?

**பதில்:** மனம், புலன்களுடன் கூடிய உடலிலும், மற்ற எல்லா ப்ராணிகளிடமும், செயல்களிலும், எல்லா போகங்களிலும், என் ஜாதி, என் குலம், என் தேசம், என் வர்ணம், என் ஆசிரமம் என்ற மமதை இல்லாமல் இருக்கவேண்டும். பொருள், செயல், உயிரினம் ஆகியவற்றில், 'இது என்னுடையது, இது மற்றவனுடையது' என்ற வேற்றுமை காணும் எண்ணம் இருக்கக் கூடாது. இதுதான் மமகாரமற்றிருப்பது ஆகும்.

**கேள்வி:** 'ஶாந்த:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** மேலே சொன்ன ஸாதனைகளின் பயனாக எவனுடைய உள்ளத்தில் கலக்கம் அறவே ஒழிந்து, அதனால் அசையாத அமைதி நிலவுகிறதோ, ஸாத்விகமான முகமலர்ச்சி ஏற்படுகிறதோ, அத்தகைய அமைதி கொண்ட மனிதனை 'ஶாந்த:' என்கிறார்.

**கேள்வி:** 'மேற்குறித்த அடைமொழிகளுக்கு உரிய மனிதன் ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தில் இரண்டறக் கலப்பதற்குத் தகுதி பெறுகிறான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேற்கூறியவாறு ஸாதனை புரிபவன் இந்த ஸாதனைகள் முற்றிய பிறகு ப்ரம்ம ஸ்வரூபத்தை அடையத் தகுதி பெறுகிறான். மேலும் அக்கணமே அவன் ப்ரம்மத்தோடு ஐக்யமாகி விடுகிறான் (ப்ரம்ம நிலையை எய்துகிறான்). அதாவது அவனுடைய பார்வையில் ஆத்மா வேறு, பரமாத்மா வேறு அன்று. தானே ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மம் என்ற திடநிலை ஏற்படுகிறது. அப்போது அகில உலகத்திலும் தான் இருப்பதாகவும், அகில உலகமும் தன்னிடம் இருப்பதாகக் கற்பிக்கப்பட்டதாகவும் காண்கிறான் (6/29).

**பொருத்தம்: இவ்விதம் பிரிவு, உட்பிரிவுகளுடன் கூடிய ஸந்யாஸம் அதாவது ஸாங்க்யயோகத்தின் ஸ்வரூபம் பற்றிக் கூறி, அந்த ஸாதனைகளின் மூலம் ப்ரம்மமாகிவிட்ட யோகியின் இலக்கணங்களையும், அந்த ஞானயோகியின் 'பராநிஷ்டா' என்பதான பராபக்தியை அடைவதையும் கூறுகிறார்—**

**ब्रह्मभूतः प्रसन्नात्मा न शोचति न काङ्क्षति।**
**समः सर्वेषु भूतेषु मद्भक्तिं लभते पराम्॥५४॥**

**ப்₃ரஹ்மபூ₄த: ப்ரஸந்நாத்மா ந ஶோசதி ந காங்க்ஷதி ।**
**ஸம: ஸர்வேஷு பூ₄தேஷு மத்₃ப₄க்திம் லப₄தே பராம் ॥ 54 ॥**

**ப்₃ரஹ்மபூ₄த:** – ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தில் ஒன்றிய, **ப்ரஸந்நாத்மா** – மனத்தெளிவுடைய யோகி, **ந ஶோசதி** – (எதற்கும்) வருந்துவதில்லை, **ந காங்க்ஷதி** – (எதையும்) எதிர்பார்ப்பதில்லை. **ஸர்வேஷு பூ₄தேஷு** – அனைத்து ப்ராணிகளிடமும், **ஸம:** – ஸமபாவனையோடு இருந்துகொண்டு, **பராம் மத்₃ப₄க்திம்** – என் மீதான (உயர்ந்த) பரா பக்தியை, **லப₄தே** – பெறுகிறான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தில் ஒன்றிய மனத்தெளிவுடைய யோகி எதற்கும் வருந்துவதில்லை, எதையும் எதிர்பார்ப்பதில்லை. அனைத்து ப்ராணிகளிடமும் ஸமபாவனை யோடு இருந்துகொண்டு என்னுடைய உயர்ந்த பரா பக்தியைப் பெறுகிறான்.

**கேள்வி:** 'ப்ரஹ்மபூத:' என்ற சொல் எந்த நிலையைச் சார்ந்த யோகியைக் குறிக்கிறது?

**பதில்:** ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தில் இரண்டறக் கலந்து விட்டவனுக்கு அந்த ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தைத் தவிர வேறொரு பொருளுக்கு 'இருப்பு' (ஸத்தா) என்பதே கிடையாது. **'அஹம் ப்₃ரஹ்மாஸ்மி'** (ப்₃ருஹத₃ாரண்யகம் 1/4/10) – நான் ப்ரம்மமாக இருக்கிறேன், **'ஸோ஽ஹமஸ்மி'** – அந்த ப்ரம்மம் நானே என்ற மஹாவாக்யங்களுக்கு ஏற்பப் பரமாத்மாவை அடைந்து நிரந்தரமாக அசையாத நிலை பெற்ற ஸாங்க்ய யோகியை 'ப்ரஹ்மபூத:' என்ற சொல் குறிக்கிறது. 5/24லும், 6/27லும் இந்நிலையைச் சார்ந்தவர்களை 'ப்ரஹ்மபூத:' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'ப்ரஸந்நாத்மா' என்றால் யார்?

**பதில்:** புனிதமாகவும், தெளிவாகவும், அமைதியுடனும், எப்போதும் தூய்மையுடனும், மகிழ்ச்சியுடனும் விளங்கும் மனம் படைத்தவர் 'ப்ரஸந்நாத்மா'. ப்ரம்மமாகிவிட்டவருடைய பார்வையில் ஒரே ஸத் சித் ஆனந்தமயமான ப்ரம்மத்தைத் தவிர வேறு ஒரு பொருளுக்கும் ஸத்தா (இருப்பு) என்பது இல்லாமையால், அவருடைய மனம் எப்பொழுதும் தெளிந்திருக்கும். ஒருபொழுதும், எதற்காகவும் கலக்கம் அடைவதில்லை.

**கேள்வி:** 'ப்ரம்மத்தில் ஒன்றிய யோகி வருந்துவதில்லை. எதையும் எதிர்பார்ப்பதில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இவ்விதம் கூறுவதன் மூலம் ப்ரம்மமாகிவிட்ட யோகியை அடையாளம் காட்டுகிறார். ப்ரம்மமாகிவிட்டவர் எங்கும், எதிலும் 'ப்ரம்மம்' என்ற புத்தி கொண்டவராதலின் உலகியல் பொருள் எதுவும் அவருக்கு வேறாகவோ, கவர்ச்சியுள்ளதாகவோ, தன்னுடையது என்றோ தோன்றுவதில்லை. ஆகவே உடல் உட்பட எதனுடன் எது வந்து சேர்ந்தாலும், எது பிரிந்தாலும், அவரிடம் எத்தகைய மாறுதலும் ஏற்படுவதில்லை. ஆகவே, எந்த நிலையிலும் அவர் சிறிதுகூடக் கவலையோ, வருத்தமோ கொள்வதில்லை. அவர் ஆசைகள் எல்லாம் நிறைவேறப் பெற்றவர் (பூர்ணகாமன்). ஏனெனில் எந்தப் பொருளும் ப்ரம்மம் தவிர வேறில்லையாதலால் அவர் எதையும் விரும்புவதில்லை.

**கேள்வி:** 'ஸர்வேஷு பூதேஷு ஸம:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அந்த ப்ரம்மமாகிவிட்ட யோகி எல்லா ப்ராணிகளையும் ஸமமாகப் பார்ப்பார் என்று பொருள். எந்த ப்ராணியையும் தன்னிலும் வேறாக நினைப்பதில்லை. அவருக்கு எதிலுமே வேற்றுமை காணும் எண்ணம் இராது. அத்தகைய ஸமபாவனையுள்ளவரை 6/29ல் **'ஸர்வத்ர ஸமத₃ர்ஶந:'** என்று கூறினார்.

**கேள்வி:** 'பராம் மத்பக்திம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஞானயோகத்தின் பயன் இதுதான். ஞானயோகத்தினால் பெறக்கூடிய மிக உயர்ந்த நிலை 'பராநிஷ்டை'. தத்வஞானம் என்றும் இதைக் கூறுவர். இந்தப் பராபக்தி பரமாத்மாவின் உண்மை ஸ்வரூபத்தை நேரில் காணச் செய்து, அதனுடன் இரண்டறக் கலந்துவிடச் செய்கிறது.

**பொருத்தம்:** இப்படி ப்ரம்மமாகிவிட்ட யோகி பராபக்தியை அடைவதாகக் கூறிய பின்னர், அதன் பயனையும் கூறுகிறார்—

**भक्त्या मामभिजानाति यावान्यश्चास्मि तत्त्वतः।**
**ततो मां तत्त्वतो ज्ञात्वा विशते तदनन्तरम्॥ ५५॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ப₄க்த்யா மாமபி₄ஜாநாதி யாவாந்யஶ்சாஸ்மி தத்த்வத: ।**
**ததோ மாம் தத்த்வதோ ஜ்ஞாத்வா விஶதே தத₃நந்தரம் ॥ 55 ॥**

**ப₄க்த்யா** – அந்த பராபக்தியின் மூலம் (அவன்), **மாம்** – பரமாத்மாவான என்னை, **(அஹம்) ய: ச** – நான் யார் என்றும், **யாவாந் அஸ்மி** – எத்தன்மையானவன் என்றும், **தத்த்வத:** – உண்மையில் உள்ளது உள்ளபடியே, **அபி₄ஜாநாதி** – தத்வரீதியாக அறிகிறான். **தத:** – அந்த பராபக்தியின் மூலம், **மாம்** – என்னை, **தத்த்வத: ஜ்ஞாத்வா** – தத்வரீதியாக அறிந்து, **தத₃நந்தரம்** – அக்கணமே, **விஶதே** – என்னிடம் ஐக்யமாகிறான்.

அந்தப் பராபக்தியின் மூலம் அவன் பரமாத்மாவான என்னை யார் என்றும் எத்தன்மையானவன் என்றும் உண்மையில் உள்ளது உள்ளபடியே தத்வரீதியாக அறிகிறான். அந்தப் பராபக்தியின் மூலம் என்னைத் தத்வரீதியாக அறிந்து அக்கணமே என்னிடம் ஐக்யமாகிறான்.

**கேள்வி:** 'பக்த்யா' என்றால் என்ன பொருள்?

**பதில்:** முன் ச்லோகத்தில் 'பராம் மத்பக்திம்' என்றும், 18/50ல் ஞானத்தின் 'பராநிஷ்டா' என்றும் கூறிய தத்வ ஞானத்தையே இங்கே 'பக்த்யா' என்று எடுத்துக்காட்டுகிறார். இதுதான் ஞானயோகம், பக்தியோகம், கர்மயோகம், த்யானயோகம் முதலிய எல்லா ஸாதனைகளுக்கும் உரிய பயன். இதன் மூலமாக ஸாதகன் பரமாத்மாவின் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்து, அவரை அடைகிறான். இப்படி எல்லா ஸாதனைகளுக்கும் பயன் ஒன்றுதான் என்று உணர்த்தவே இந்த ஞானயோகம் பற்றிக் கூறும் ஸந்தர்பத்தில் 'பக்த்யா' என்ற சொல்லை உபயோகிக்கிறார்.

**கேள்வி:** 'இந்த பக்தியின் மூலம் நான் யார்? எத்தன்மையானவன்? என்று உண்மையில் உள்ளது உள்ளபடியே அறிகிறான்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இந்தப் பராபக்தி என்ற தத்வ ஞானத்தை அடையும் பொழுதே, அந்த யோகி அந்த தத்வ ஞானத்தின் மூலம் என் உண்மையான ஸ்வரூபத்தை உள்ளபடி அறிகிறான். என்னுடைய நிர்குண–நிராகார ரூபம் என்ன? ஸகுண–நிராகார ரூபம் என்ன? ஸகுண–ஸாகார ரூபம் என்ன? உருவமற்ற நான் எப்படி உருவத்தைப் பெறுகிறேன்? பிறகு, மறுபடியும் எப்படி உருவமற்றவனாக ஆகிறேன் என்பனவற்றை அறிந்த பின்னர், அவன் அறிய வேண்டியது ஏதும் எஞ்சியிராது. எனவே அவனுடைய பார்வையில் எவ்வித வேற்றுமையும் கிடையாது. இவ்விதம் ஞானயோக ஸாதனையின் மூலம் அடையப்பெறும் நிர்குணமான உருவமற்ற ப்ரம்மமும், ஸகுணமான உருவமுள்ள ப்ரம்மமும் ஒன்றுதான் என்பதைக் குறிப்பிடுவதற்காகத்தான், இந்த ஞானயோகம் பற்றிக் கூறும் ஸந்தர்பத்தில் ப்ரம்மம் என்று சொல்வதற்குப் பதிலாக 'மாம்' (என்னை) என்ற சொல்லை உபயோகிக்கிறார்.

**கேள்வி:** 'தத:' என்றால் என்ன பொருள்?

**பதில்:** 'தத:' என்ற சொல் இங்கே காரணத்தைக் காட்டுகிறது. பரமாத்மாவின் ஸ்வரூபஞானம் பெற்றவுடனேயே பரமாத்மாவை அடைந்துவிடுகிறான். அங்கே கால இடைவெளி இல்லை. 'அதே கணத்தில்' என்று பொருள். ஆகவே 'தத:' என்ற சொல்லுக்கு 'அதற்குப் பிறகு' என்ற பொருள் கொள்ளப்படவில்லை. எதைப் பற்றிக் கூறுகிறாரோ, அதன் காரணமாக என்று பொருள். மேலும் இங்கு 'அறிந்து' என்ற சொல்லோடு, அதன் காரணத்தையும் காட்ட வேண்டியுள்ளதால் 'தத:' என்ற சொல்லிற்கு ச்லோகத்தின் முதல் பாதியில் வர்ணிக்கப்பட்ட 'பராபக்தியின் காரணமாக' என்று பொருள் கொள்ளவேண்டும்.

**கேள்வி:** 'ததநந்தரம்' என்ற சொல்லுக்கு 'அதே கணம்' என்று எப்படிப் பொருள் கூறலாம்? 'ததநந்தரம் விஶதே' என்றால் முதலில் பகவானைப் பற்றிய உண்மையான ஞானம் பெறவேண்டும். அதன் பிறகு பகவானிடம் ஐக்யமடைய வேண்டும் என்றுதானே பொருள் வரும்?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** அப்படி அன்று. 'ஜ்ஞாத்வா' (அறிந்து கொண்டு) என்று கூறியதும், ஒரு கால இடைவெளி நேரிடுவதாக ஐயம் தோன்றுமே. அதைத் தவிர்ப்பதற்காகவே, இங்கு 'ததநந்தரம்' என்ற சொல் உபயோகப்படுத்தப்பட்டுள்ளது. கருத்து என்னவென்றால், பகவானைப் பற்றிய தத்வ ஞானத்தைப் பெறுதல்; அவருடன் ஐக்யமடைதல்; இவற்றிற்கு இடையே கால இடைவெளி ஏதும் இல்லை. இரண்டும் ஒரே நேரத்தில் நிகழ்கின்றன. பகவானுடைய ஸ்வரூபத்தைப் பற்றி உண்மையாக (உள்ளவாறு) அறிதல் என்பதும், அவருடன் ஐக்யமாவதும் – இவை இரண்டும் ஒரே நேரத்தில் நிகழ்கின்றன. இதற்காகத்தான் 'அந்தரம் ந = அநந்தரம்' என்று கூறப்படுகிறது. பகவான் எல்லாவற்றின் ஆத்ம ஸ்வரூபம் என்பதால் உண்மையில் யாருக்கும் கிட்டாதவர் அல்லர். ஆகவே அவரைப் பற்றிய உண்மையான ஸ்வரூப ஞானம் ஏற்பட்டதுமே அவரை அடைந்ததாகிறது. இக்கருத்தைத் தெரிவிப்பதற்காகவே இங்கு 'ததநந்தரம்' என்ற சொல்லுக்கு 'அக்கணமே' என்று பொருள் கூறப்பட்டிருக்கிறது. ஏனென்றால் 'ஜ்ஞாத்வா' என்ற சொல்லாலேயே ஒரு கால இடைவெளி உணர்த்தப்படுகிறது. அந்த இடைவெளியைத் தெரிவிப்பதற்கு 'ததநந்தரம்' என்றும் சொல்ல அவசியமில்லையே.

**பொருத்தம்: இவ்விதம் அர்ஜுனனின் விருப்பத்திற்கு இணங்க, த்யாகம், அதாவது கர்மயோகம் பற்றிய தத்வத்தையும், ஸந்யாஸம் அதாவது ஸாங்க்யயோகம் பற்றிய தத்வத்தையும் தனித்தனியாகப் பிரித்துக் கூறி, இந்த விஷயத்தை இத்துடன் நிறைவு செய்தார். ஆனால் இவை இரண்டில் இப்போது அர்ஜுனன் கடைப்பிடிக்க வேண்டிய ஸாதனம் எது என்று கூறவில்லை. அர்ஜுனன் பக்தியை முக்யமாகக் கொண்ட கர்மயோகத்தை ஏற்கவேண்டும் என்பதற்காக, பக்தி ப்ரதானமான கர்மயோகத்தின் பெருமையைக் கூறுகிறார்—**

**सर्वकर्माण्यपि सदा कुर्वाणो मद्व्यपाश्रयः।**
**मत्प्रसादादवाप्नोति शाश्वतं पदमव्ययम्॥५६॥**

**ஸர்வகர்மாண்யபி ஸதா₃ குர்வாணோ மத்₃வ்யபாஸ்ரய: ।**
**மத்ப்ரஸாதா₃த₃வாப்னோதி ஶாஸ்வதம் பத₃மவ்யயம் ॥ 56 ॥**

***மத்₃வ்யபாஸ்ரய:*** – என்னையே புகலாகக் கொண்ட கர்மயோகி, **ஸர்வகர்மாணி** – எல்லாக் கர்மங்களையும், **ஸதா₃** – எப்பொழுதும், **குர்வாண: அபி** – செய்து கொண்டிருப்பினும், **மத்ப்ரஸாதா₃த்** – எனது அருளால், **ஶாஸ்வதம்** – என்றுமுள்ளதும், **அவ்யயம்** – அழியாததுமான, **பத₃ம்** – பரமபதத்தை, **அவாப்னோதி** – அடைகிறான்.

என்னையே புகலாகக் கொண்ட கர்மயோகி எல்லாக் கர்மங்களையும் எப்பொழுதும் செய்து கொண்டிருப்பினும் எனது அருளால் நிலையான என்றுமுள்ள அழியாத பரமபதத்தை அடைகிறான்.

**கேள்வி:** 'மத்வ்யபாஸ்ரய:' என்றால் யார்?

**பதில்:** எல்லாக் கர்மங்களையும், அவற்றின் பயன்களான எல்லா போகங்களையும் சார்ந்து நிற்காமல் அவற்றைத் துறந்து பகவானையே புகலாக அடைபவன்; தனது மனம், புலன்களுடன் கூடிய உடலையும், அதனால் ஆற்றப்படும் எல்லாச் செயல்களையும், அவற்றின் பயன்களையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்து, அவற்றில் மமகாரம், பற்றுதல், ஆசைகளை விலக்கி, பகவானையே தஞ்சமென அடைபவன்; பகவானே நாம் அடையத்தக்க சிறந்த புகல், ஒரே ப்ரியவஸ்து, பகவானே நமக்கு மிகுந்த ஹிதத்தைக் கருதுபவர், நமக்கு ஆதாரம், நமக்கு எல்லாமே அவர்தான் என்று அவர் முறைப்படுத்திய விதிமுறைகளை மனதார ஏற்றுக் கொள்பவன்; எந்த உலகியல் பொருள் வந்து சேர்ந்தாலும், விட்டுப் பிரிந்தாலும் எந்த நிகழ்ச்சியிலும், ஒருபொழுதும் மகிழ்ச்சியோ, துயரமோ அடையாதவன்; பகவானையே எப்போதும் நம்பியுள்ளவன்; எதைச் செய்தாலும் பகவானுடைய ஆணைப்படி அவருடைய

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



த்ருப்திக்காகவே செய்து, நாம் ஒரு கருவிதான். அவருடைய உந்துதலினால், அவரிடமிருந்து சக்திபெற்று, அவர் ஆட்டுவித்தபடி ஆடுகிறோம். பகவானுக்கு நாம் அடிமை என்று நினைப்பவன்; இவ்வாறான பக்தியை முதன்மையாய்க் கொண்ட கர்மயோகியை இங்கே 'மத்வ்யபாஶ்ரய:' (என்னையே புகலாகக் கொண்ட கர்மயோகி) என்கிறார்.

**கேள்வி:** 'ஸர்வகர்மாணி' என்ற சொல் எந்தக் கர்மங்களைக் குறிக்கிறது?

**பதில்:** அவரவர் வர்ணத்துக்கும், ஆசிரமத்திற்கும் ஏற்ப சாஸ்த்ரங்களில் செய்யத்தான் வேண்டுமென விதிக்கப்பட்ட கடமைகளை 'ஸர்வகர்மாணி' என்ற சொல் குறிக்கிறது. இவற்றை 'நியதம் கர்ம', 'ஸ்வபாவஜம் கர்ம' என்று முன்பே குறிப்பிட்டிருக்கிறார். பகவானுடைய ஆணைக்கும், உந்துதலுக்கும் இசைவான செயல்கள் அனைத்துமே இங்கு 'ஸர்வகர்மாணி' என்று கூறப்படுகின்றன.

**கேள்வி:** 'அபி' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'அபி' என்ற சொல்லின் மூலம் பக்தி ப்ரதானமான கர்மயோகியின் பெருமை கூறப்பட்டுள்ளது. கர்மயோகம் எளிதில் செய்யக்கூடியது என்றும் காட்டப்பட்டுள்ளது. ஸாங்க்யயோகி எல்லா உடைமைகளையும், போகங்களையும் அறவே துறந்து, தனிமையான இடம் சென்று, இடைவிடாது பரமாத்ம த்யானத்தைத் தொடர்ந்து பழகி, பகவானை அடைகிறான். ஆனால் பகவானையே புகலாகக் கொண்டுவிட்ட கர்மயோகி, தனது வர்ணாசிரமத்திற்கேற்பக் கடமைகளைச் செய்து கொண்டே இருந்தாலும் பகவானை அடைந்துவிடுகிறான். இருவருக்கும் பயனில் எவ்வித வேறுபாடும் கிடையாது.

**கேள்வி:** 'ஶாஶ்வதம்', 'அவ்யயம்' என்ற அடைமொழிகளுடன் கூடிய 'பதம்' என்ற சொல் எதைக் குறிக்கிறது? 'பக்தி ப்ரதானமான கர்மயோகி பகவானுடைய அருளால் அதனை அடைகிறான்' என்றால் என்ன பொருள்?

**பதில்:** எப்பொழுதுமே இருந்து கொண்டிருப்பதும், எந்த ஒரு காலத்திலும் இல்லாமல் போய் விடாததுமான ஸத் சித் ஆனந்த பூர்ண ப்ரம்மமான, ஸர்வ வல்லமை படைத்த, எல்லாவற்றிற்கும் ஆதாரமான பகவானைத்தான் மேற்குறித்த அடைமொழிகளோடு கூடிய 'பதம்' என்ற சொல் குறிப்பிடுகிறது. அதுவே அடையத்தக்க மேலான பரம்பொருள் என்பதைக் காட்டவே பகவான் 'பதம்' என்ற பெயரால் அழைக்கப்படுகிறார். 18/45ல் பகவானை அடைதலாகிற ஸம்ஸித்தியை அடைவது என்றும், 18/46ல் ஸித்தியை அடைவதென்றும், 18/55ல் 'மாம்' என்ற சொல்லால் பரமாத்மாவையே அடைவது என்றும் கூறியதையே, இங்கு 'ஶாஶ்வதம்', 'அவ்யயம்' என்ற அடைமொழிகளோடு கூடிய 'பதம்' என்ற சொல்லின் பொருளான பகவானை அடைவது என்று கூறுகிறார். வெவ்வேறு பெயர்களால் ஒரே தத்வத்தைத்தான் கூறுகிறார். பக்தி ப்ரதானமான கர்மயோகம் செய்பவனின் உள்ளத்து உணர்ச்சி கண்டு, கருணைகூர்ந்து அவனுக்கு அதிசயமான அருள்பாலித்து, பகவான் தாமே அவனுக்குப் பரா பக்திரூபமான புத்தியோகத்தை அருள்கிறார் (10/10). அந்த புத்தியோகத்தின் மூலம் பகவானுடைய இயல்பான ஸ்வரூபத்தை அறிந்து அந்த பக்தன் பகவானிடம் ஒன்றிவிடுகிறான். ஸத் சித் ஆனந்தமயமான பரமாத்மாவிடம் ஐக்யமாகிவிடுகிறான். இதுதான் பரமபதத்தை அடைவது என்பதன் பொருள்.

**பொருத்தம்:** இவ்விதம் பக்தி ப்ரதானமான கர்மயோகியின் பெருமையைக் கூறிவிட்டு, அர்ஜுனனைப் பார்த்து 'நீ கர்மயோகி ஆவாயாக' என்று கட்டளையிடுகிறார்—

**चेतसा सर्वकर्माणि मयि सन्न्यस्य मत्परः।**
**बुद्धियोगमुपाश्रित्य मच्चित्तः सततं भव॥५७॥**

**சேதஸா ஸர்வகர்மாணி மயி ஸந்ந்யஸ்ய மத்பர: ।**
**பு₃த்₃தி₄யோக₃முபாஶ்ரித்ய மச்சித்த: ஸததம் ப₄வ ॥ 57 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**ஸர்வகர்மாணி** – எல்லாக் கர்மங்களையும், **சேதஸா** – மனப்பூர்வமாக, **மயி** – என்னிடம், **ஸந்ந்யஸ்ய** – அர்ப்பணம் செய்து (அப்படியே), **பு₃த்₃தி₄யோக₃ம்** – ஸமபுத்தியாகிற யோகத்தை, **உபாஸ்ரித்ய** – கடைப்பிடித்து, **மத்பர:** – என்னையே அடைக்கலமாகக் கொண்டு மேலும், **ஸததம்** – எப்பொழுதும், **மச்சித்த:** – என்னிடம் உள்ளம் பதித்தவனாக, **ப₄வ** – இருப்பாயாக.

எல்லாக் கர்மங்களையும் மனப்பூர்வமாக என்னிடம் அர்ப்பணம் செய்து, அப்படியே ஸமபுத்தியாகிற யோகத்தைக் கடைப்பிடித்து, என்னையே அடைக்கலமாகக் கொண்டு மேலும் எப்பொழுதும் என்னிடம் உள்ளம் பதித்தவனாக இருப்பாயாக.

**கேள்வி:** *'எல்லாக் கர்மங்களையும் மனப்பூர்வமாக எனக்கு அர்ப்பணம் செய்து' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** அவனவனுடைய மனம், புத்தி, உடலையும், அவற்றின் மூலம் செய்யப்படும் கர்மங்களையும், உலகியலில் கிடைக்கும் எல்லாப் பொருட்களையும் பகவானுடையவை என்றறிந்து, அவை எல்லாவற்றிலும் மமகாரம் (தன்னுடையது என்ற எண்ணம்), பற்று, ஆசைகள் இவற்றை அறவே துறந்து, "எனக்கு எதையும் செய்யச் சக்தி கிடையாது. பகவானே எல்லாவிதமான சக்திகளையும் எனக்கு அளித்து என் மூலம் தம் விருப்பப்படி எல்லாச் செயல்களையும் செய்ய வைக்கிறார்! நான் எதையும் செய்யவில்லை" என்று அறிந்து, பகவானுடைய ஆணைப்படி அவருக்காகவே, அவருடைய தூண்டுதலினால், அவர் எப்படிச் செய்விக்கிறாரோ அப்படி ஒரு கருவியாக இருந்து, அவருடைய கைப்பாவை போலச் செய்து கொண்டிருப்பதுதான் பகவானிடம் நம் செயல்களை அர்ப்பணம் செய்வது ஆகும்.

**கேள்வி:** *புத்தியோகம் என்றால் என்ன? அதைக் கடைப்பிடித்தல் என்றால் என்ன?*

**பதில்:** செயலின் வெற்றி-தோல்வி, ஸுகம்-துக்கம், லாபம்-நஷ்டம் இவற்றிலும், உலகியல் பொருட்கள் அனைத்திலும், ப்ராணிகளிடமும் ஸமபாவனை கொள்வதுதான் புத்தியோகம். ஆகவே எது நடந்தாலும் அது பகவானின் திருவுள்ளம், அவரது ஆணையால்தான் நிகழ்கிறது என்று கருதி, எல்லாப் பொருட்களிலும், எல்லா ப்ராணிகளிலும், எல்லா நிகழ்ச்சிகளிலும் விருப்பு-வெறுப்பு, மகிழ்ச்சி-துயரம் முதலிய பேதபாவனை இன்றி எப்பொழுதும் ஸமபாவனையுடன் இருப்பதுதான் மேற்கூறிய புத்தியோகத்தைக் கடைப்பிடிப்பது ஆகும்.

**கேள்வி:** *'பகவானை அடைக்கலமாகக் கொள்வது' என்றால் என்ன?*

**பதில்:** பகவான் ஒருவரே அடையத்தக்க மிகச்சிறந்த லக்ஷ்யம், புகலிடம். அவர் நமது நலனில் அக்கறை கொண்டவர், மிகவும் இனியவர், நம்மைத் தாங்குபவர் என்று அறிந்து, அவர் கட்டளையை ஏற்று மகிழ்வது. அவரை அடையும் ஸாதனங்களில் ஈடுபட்டிருப்பது – இவைதான் பகவானே தஞ்சம் என்றிருப்பது ஆகும்.

**கேள்வி:** *'எப்பொழுதும் பகவானிடம் உள்ளத்தைப் பதிய வைத்தவனாக இருத்தல்' என்றால் என்ன?*

**பதில்:** மனதையும், புத்தியையும் நிலையாக பகவானின் நினைவிலேயே வைத்திருப்பது; பகவானைத் தவிர வேறு எதிலும் சிறிதுகூட ஆசை கொள்ளாமல், அநன்ய ப்ரேமையுடன், இடைவிடாது பகவானையே சிந்தித்து இருப்பது; கணம்கூட பகவானை மறப்பதை ஸஹியாமை; உட்கார்ந்தாலும், எழுந்திருந்தாலும், நடந்தாலும், திரிந்தாலும், உண்ணும்போதும், அருந்தும்போதும், உறங்கினாலும், விழித்திருந்தாலும் ஆக எச்செயல்களைச் செய்யும்போதும் எப்போதும் இடைவிடாது மனதில் பகவானைக் கண்டு கொண்டே இருப்பது; இதுதான் பகவானிடம் உள்ளத்தைப் பதிய வைத்தவனாக இருத்தலாகும். *9/34*லும், *18/65*லும் 'மந்மநா பவ' என்று கூறியிருப்பதும் இதே கருத்தில்தான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பொருத்தம்:** இவ்விதம் பகவான் அர்ஜுனனை, 'பக்தி ப்ரதானமான கர்மயோகி ஆவாய்' என்று ஆணையிட்டு, அந்த ஆணைப்படி நடப்பதன் பயன் கூறி, அவ்வாறு நடக்கத் தவறினால் நேரும் மிகப் பெரும் தீமையையும் எடுத்துக் காட்டுகிறார்—

**मच्चित्तः सर्वदुर्गाणि मत्प्रसादात्तरिष्यसि।**
**अथ चेत्त्वमहङ्कारान्न श्रोष्यसि विनङ्क्ष्यसि॥५८॥**

**மச்சித்த: ஸர்வது₃ர்கா₃ணி மத்ப்ரஸாத₃ாத்தரிஷ்யஸி ।**

**அத₂ சேத்த்வமஹங்காராந்ந ஶ்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி ॥ 58 ॥**

**மச்சித்த:** – (மேற்கூறியபடி) என்னிடமே உள்ளம் பதித்தவனாக, **த்வம்** – நீ, **மத்ப்ரஸாத₃ாத்** – எனது அருளால், **ஸர்வது₃ர்கா₃ணி** – எல்லா இன்னல்களையும், **தரிஷ்யஸி** – எளிதாகக் கடந்து விடுவாய். **அத₂** – மேலும், **அஹங்காராத்** – அஹங்காரத்தின் காரணமாக (என்னுடைய சொற்களை), **ந ஶ்ரோஷ்யஸி சேத்** – கேளா விட்டால், **விநங்க்ஷ்யஸி** – அழிந்து போவாய் (அதாவது பெரும்பேறு பெறமாட்டாய்).

(மேற்கூறியபடி) என்னிடமே உள்ளம் பதித்தவனாக நீ எனது அருளால் எல்லா இன்னல்களையும் எளிதாகக் கடந்து விடுவாய். மேலும் அஹங்காரத்தின் காரணமாக என்னுடைய சொற்களைக் கேளாவிட்டால் அழிந்து போவாய். அதாவது பெருநிலை பெறமாட்டாய்.

**கேள்வி:** 'என்னிடம் உள்ளம் பதித்தவனாக, நீ என்னுடைய அருளால் எல்லா இன்னல்களையும் எளிதாகக் கடந்துவிடுவாய்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** முன் ச்லோகத்தில் கூறியபடி, "கர்மங்கள் அனைத்தையும் எனக்கு அர்ப்பணம் செய்து, என்னையே தஞ்சம் புகுந்து, என்னிடமே இடையறாது மனதைச் செலுத்தின பிறகு நீ வேறொன்றும் செய்ய வேண்டுவது இல்லை. என்னுடைய க்ருபையினால் உன்னுடைய இவ்வுலக, பரலோகத் துயரங்கள் அனைத்தும் எளிதில் விலகிவிடும். உன்னிடம் எவ்விதமான தீய குணங்களும், தீய நடவடிக்கைகளும் இரா. பிறப்பு, இறப்பு என்ற பெரும் துன்பங்களிலிருந்து முழுமையாக விடுபட்டு, என்றுமுள்ள ஆனந்தமயமான பரமேசுவரனான என்னையே அடைந்துவிடுவாய்" என்கிறார்.

**கேள்வி:** 'அத சேத்' என்றால் என்ன பொருள்? 'அஹங்காரத்தின் காரணமாக என் சொற்களைக் கேளாவிடில் அழிந்து போவாய்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "நீ என்னுடைய பக்தன், இனிய நண்பன். ஆகவே என்னுடைய ஆணையைத் தவறாமல் ஏற்றுக் கொள்வாய். ஆயினும் உன்னை எச்சரிக்கிறேன். என் ஆணையைக் கடைப்பிடிப்பதால் பெருத்த நன்மை ஏற்படுவதுபோல, மீறுவதால் மிகுந்த தீமையும் விளையும். ஆகவே நீ அஹங்காரத்திற்கு ஆட்பட்டு உன்னை புத்திசாலி என்றும், திறமையுள்ளவன் என்றும் நினைத்துக் கொண்டு என் சொற்களைக் கேளாதிருந்து விட்டால், என் ஆணைப்படி நடக்காமல், மனம் போனபடி நடந்தால், நீ அழிந்து போவாய். பிறகு உனக்கு இவ்வுலகிலோ, பரலோகத்திலோ உண்மையான ஸுகமும், அமைதியும் கிடைக்கா. உன் கடமையிலிருந்து வழுவி இப்பொழுது உள்ள நிலையிலிருந்து வீழ்ச்சி அடைவாய்" என்று எச்சரிக்கிறார்.

**கேள்வி:** பகவான் முன்பே அர்ஜுனனைத் தம் பக்தன் (4/3) என்று கூறியிருக்கிறார். 'என் பக்தன் அழிய மாட்டான், வீழ்ச்சியடைய மாட்டான்' (9/31) என்றும் சொல்லியிருக்கிறார். இங்கே 'நீ அழிந்து விடுவாய், அதாவது, நீ வீழ்ச்சி அடைவாய்' என்கிறார். இம்முரண்பாட்டிற்கு என்ன ஸமாதானம்?



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** மேற்குறித்த வாக்கியத்தில் 'சேத்' (ஒருகால்) என்ற சொல்லை உபயோகப்படுத்தி, இந்த முரண்பாட்டிற்கான ஸமாதானத்தை பகவானே அளித்திருக்கிறார். கருத்து என்னவென்றால், பகவானுடைய பக்தனுக்கு ஒருகாலும் வீழ்ச்சி ஏற்படாது என்பது முற்றிலும் உண்மை. அர்ஜுனன் பகவானுடைய உயர்ந்த பக்தன் என்பதும் உண்மை. ஆகவே அவர் பகவானுடைய சொல்லைக் கேட்காமலோ, அவருடைய ஆணையைக் கடைப்பிடிக்காமலோ ஒருபோதும் இருக்கமாட்டார். ஆனால் அப்படியிருந்தும், அஹங்காரத்திற்காட்பட்டு பகவானுடைய ஆணையைப் பொருட்படுத்தாவிட்டால், அவரை பகவானுடைய பக்தன் என்று கருத இயலாது. ஆகவே, அவருக்கு வீழ்ச்சி ஏற்படும் என்பது யுக்திக்குப் பொருத்தமானதுதான்.

**பொருத்தம்:** **அஹங்காரத்தின் வசப்பட்டு பகவானது ஆணையை ஏற்காததால் ஏற்படும் அழிவு பற்றி முன் ச்லோகத்தில் கூறப்பட்டது. அதனை உறுதிப்படுத்துவதற்காக இனி வரும் இரண்டு ச்லோகங்களால் அர்ஜுனனுடைய கருத்துக்களிலுள்ள குறைகளைச் சுட்டிக் காட்டுகிறார்—**

**यदहङ्कारमाश्रित्य न योत्स्य इति मन्यसे।**
**मिथ्यैष व्यवसायस्ते प्रकृतिस्त्वां नियोक्ष्यति॥५९॥**

***யத₃ஹங்காரமாஸ்ரித்ய ந யோத்ஸ்ய இதி மந்யஸே ।***
***மித்₂யைஷ வ்யவஸாயஸ்தே ப்ரக்ருதிஸ்த்வாம் நியோக்ஷ்யதி ॥ 59 ॥***

***யத் அஹங்காரம்*** – எந்த அஹங்காரத்தின், ***ஆஶ்ரித்ய*** – வசப்பட்டு (நீ), ***ந யோத்ஸ்யே*** – 'நான் யுத்தம் செய்யமாட்டேன்', ***இதி*** – என்று, ***மந்யஸே*** – நினைக்கிறாயோ, ***தே*** – உன்னுடைய, ***ஏஷ:*** ***வ்யவஸாய:*** – இந்தத் தீர்மானம், ***மித்₂யா*** – பொய்யானது. ***(யத:)*** – ஏனெனில் (உன்னுடைய), ***ப்ரக்ருதி:*** – இயல்பு, ***த்வாம்*** – உன்னை, ***நியோக்ஷ்யதி*** – வலுவில் போரில் ஈடுபடுத்தும்.

எந்த அஹங்காரத்தின் வசப்பட்டு நீ 'நான் யுத்தம் செய்யமாட்டேன்' என்று நினைக்கிறாயோ உன்னுடைய இந்தத் தீர்மானம் பொய்யானது. ஏனெனில் உன்னுடைய இயல்பு உன்னை வலுவில் போரில் ஈடுபடுத்தும்.

**கேள்வி:** 'எந்த அஹங்காரத்தின் வசப்பட்டு நீ, நான் யுத்தம் செய்யமாட்டேன் என்று நினைக்கிறாயோ'–இந்த வாக்கியத்தின் கருத்து என்ன?

**பதில்:** பகவான் 2/3ல் 'யுத்தம் புரிவாயாக' என்று ஆணையிட்டார். 2/9ல் அர்ஜுனன் 'யுத்தம் புரியமாட்டேன்' என்றார். இப்படி பகவானுடைய ஆணையை மீறினார் என்பதை அவருக்கு நினைவூட்டி பகவான் மேற்கூறியவாறு கூறுகிறார்: "நீ யுத்தம் செய்யமாட்டேன் என்கிறாயே. அது வெறும் அஹங்காரத்தின் குரல். யுத்தம் செய்யாமல் இருப்பது உன் கையில் இல்லை. இவ்விதம் அஞ்ஞானத்தினால் உண்டான அஹங்காரத்திற்கு ஆட்பட்டு உன்னை அறிவாளியென்றும், திறன் படைத்தவனென்றும், சுதந்திரனென்றும் நினைத்துக் கொண்டு, இந்தக் கார்யத்தை நான் இப்படித்தான் செய்வேன். இந்தக் கார்யத்தைச் செய்யமாட்டேன் என்று கூறுவது சற்றும் உசிதமன்று."

**கேள்வி:** 'இந்தத் தீர்மானம் பொய்யானது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'உன்னுடைய இந்தத் தீர்மானம் நிலைக்காது. உன்னால் யுத்தம் புரியாமல் இருக்க முடியாது. ஏனெனில் நீ சுதந்திரன் அல்லன். ப்ரக்ருதிக்கு ஆட்பட்டவன்' என்று பகவான் கூறுகிறார்.

**கேள்வி:** இங்கு 'ப்ரக்ருதி' என்றால் எது? 'அது உன்னை வலுவில் போரில் ஈடுபடுத்தும்' என்று கூறுவதன் கருத்து என்ன?



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



*பதில்:* முன் பல பிறவிகளில் செய்த கர்மங்களின் ஸம்ஸ்காரம் (மனப்பதிவு) இப்பிறவியில் உனக்கு இயல்பாக அமைந்திருக்கிறது. அந்தப் பதிவுகளின் தொகுப்பைத்தான் இங்கே 'ப்ரக்ருதி' என்று கூறுகிறார். இதை ஸ்வபாவம் என்றும் கூறுவர். இந்த இயல்புக்கு ஏற்றவாறு மனிதன் வெவ்வேறு கர்மங்களுக்குத் தகுதி பெற்று, ஸமுதாயத்தில் பிறவி எடுக்கிறான். அந்த இயல்புப்படி வெவ்வேறு மனிதர்களுக்கு வெவ்வேறு கர்மங்களில் ஈடுபாடு உண்டாகிறது. "எந்த ஸ்வபாவத்தின் காரணமாக நீ க்ஷத்ரிய குலத்தில் பிறந்தாயோ, அந்த ஸ்வபாவம், நீ விரும்பாவிட்டாலும் உன்னை வலுவிலே யுத்தத்தில் ஈடுபடுத்தி விடும். தகுதி பெற்ற பிறகு வீர உணர்ச்சியுடன் யுத்தம் செய்வதுதான் முறை. யுத்தத்திற்குப் பயந்து பின்வாங்குவது முறையன்று. இது உனக்கு இயல்பான கடமை. இதைச் செய்யாமல் நீ இருக்க முடியாது. நீ யுத்தம் செய்துதான் ஆகவேண்டும்," க்ஷத்ரியன் என்ற முறையில் அர்ஜுனனுக்கு இங்கே சொன்ன உபதேசம் மற்ற வர்ணத்தாரும் அவரவர்களுடைய இயல்பான கர்மங்களை ஆற்றவேண்டும் என்பதற்கும் பொருந்தும்.

**स्वभावजेन कौन्तेय निबद्धः स्वेन कर्मणा।**
**कर्तुं नेच्छसि यन्मोहात्करिष्यस्यवशोऽपि तत्॥ ६०॥**

**ஸ்வப₄ாவஜேந கௌந்தேய நிப₃த்₄த: ஸ்வேந கர்மணா ।**

**கர்தும் நேச்ச₂ஸி யந்மோஹாத்கரிஷ்யஸ்யவஶோऽபி தத் ॥ 60 ॥**

**கௌந்தேய** – குந்தியின் மைந்தனே! **யத்** – எந்தச் செயலை (நீ), **மோஹாத்** – அறிவு மயங்கியதன் காரணமாக, **கர்தும்** – செய்வதற்கு, **ந இச்ச₂ஸி** – விரும்பவில்லையோ, **தத் அபி** – அதையும், **ஸ்வேந** – உன்னுடைய, **ஸ்வப₄ாவஜேந** – இயல்பில் உண்டான, **கர்மணா** – கர்மவினையினால், **நிப₃த்₄த:** – கட்டப்பட்டு, **அவஶ:** – உன் வசம் இழந்து, **கரிஷ்யஸி** – செய்யப் போகிறாய்.

குந்தியின் மைந்தனே! நீ மயக்கத்தின் காரணமாக எந்தச் செயலைச் செய்வதறகு விரும்பவில்லையோ அதையும் உன்னுடைய இயல்பான கர்மவினையினால் கட்டப்பட்டு உன் வசம் இழந்து செய்யப் போகிறாய்.

**கேள்வி:** 'கௌந்தேய' (குந்தியின் மைந்தனே) என்றழைப்பதன் கருத்து என்ன?

**பதில்:** அர்ஜுனனின் தாயான குந்தி சிறந்த வீராங்கனை. பாண்டவர்களை யுத்தம் செய்ய உற்சாகம் கொள்ளச் செய்யும் நோக்கத்துடன் அவள், ஸ்ரீக்ருஷ்ணனின் மூலம் செய்தி சொல்லி அனுப்பினாள். பகவான் இங்கு அர்ஜுனனை 'குந்தியின் மைந்தனே!' என்றழைத்து, 'நீ வீரத்தாயின் புதல்வன் அல்லவா! நீயும் சூரவீரன் ஆயிற்றே. ஆகவே உன்னால் யுத்தம் புரியாமல் இருக்க முடியாதே' என்று சுட்டிக்காட்டுகிறார்.

**கேள்வி:** 'அறிவு மயங்கியதன் காரணமாக நீ எந்தச் செயலைச் செய்ய விரும்பவில்லையோ' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** நீ க்ஷத்ரியன். யுத்தம் செய்வது உனது இயல்பான கடமை. அது உனக்குப் பாவச் செயல் அன்று. ஆகவே, நீ அதைச் செய்ய விரும்பாமல் இருப்பது சிறிதும் உசிதமன்று. இதற்குப் பிறகும்கூட, ந்யாயமாக உனக்கு வாய்த்திருக்கின்ற யுத்தம் என்ற இயல்பான கடமையைச் செய்ய நீ விரும்பவில்லையானால் அதற்குக் காரணம் அறிவு மயங்கியதுதான் (விவேகமின்மைதான்). வேறு தக்க காரணம் இருக்க முடியாது.

**கேள்வி:** 'அதையும் நீ உன்னுடைய இயல்பான கர்மவினையினால் கட்டப்பட்டு உன் வசமிழந்து செய்யத்தான் போகிறாய்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "போர் புரிவது உன்னுடைய இயல்பான கடமை. அதற்கு நீ கட்டுப்பட்டிருக்கிறாய். அதற்கும், உனக்கும் நெருங்கிய பிணைப்பு உண்டு. ஆகவே, உனக்கு



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



விருப்பமில்லாவிட்டாலும், அது உன்னை பலாத்காரமாகத் தன்பால் இழுத்துச் செல்லும். நீ உன் இயல்புக்குக் கட்டுப்பட்டு, அதைச் செய்யத்தான் வேண்டியிருக்கும். எனவே எனது ஆணைக்கேற்ப (18/57ல் கூறியபடி) நீ அதைச் செய்வாயானால் கர்மத்தளையிலிருந்து விடுபட்டு, என்னை அடைவாய். இல்லையெனில், விருப்பு-வெறுப்பாகிய வலையில் சிக்கிப் பிறப்பு-இறப்பு என்ற உலகியல் கடலில் உழன்று கொண்டே இருப்பாய்" என்கிறார் பகவான்.

ஆற்று வெள்ளத்தில் அடித்துக் கொண்டு போய்விடும் மனிதன் ஆற்றோட்டத்தில் எதிர் நீச்சல் போட்டு நதியைக் கடக்க முடியாமல் தன் அழிவைத் தேடிக் கொள்கிறான். படகு அல்லது தெப்பத்தின் துணை கொண்டோ, நீந்தியோ நீரின் மேற்பரப்பிலேயே, ஆற்று ஓட்டத்தின் வழியிலேயே செல்பவன் ஆற்றை எளிதில் கடந்து கரை சேர்கிறான். அவ்விதமே இயற்கையின் ஓட்டத்தில் சிக்கிய மனிதன் இயற்கையோடு மோதுகிறான்; அதாவது செய்ய வேண்டிய கடமைகளான கர்மங்களைப் பிடிவாதமாக த்யாகம் செய்து அந்த இயற்கையைக் கடக்க முடியாமல் அதிலேயே மேலும் சிக்கிக் கொள்கிறான். பகவான் அல்லது கர்மயோகத்தின் துணை கொண்டு அல்லது ஞானயோகத்திற்கு ஏற்பத் தன்னை இயற்கைக்கு மேலே உயர்த்திக் கொண்டு ப்ரக்ருதியோடு ஒட்டிக் கர்மங்களைச் செய்து வருபவன் கர்மத்தளையிலிருந்து விடுபட்டு இயற்கையைக் கடந்து செல்கிறான். அதாவது பரமாத்மாவை அடைந்து விடுகிறான்.

பொருத்தம்: முன் ச்லோகத்தில் செயலில் ஈடுபடுவதில் மனிதன் இயல்புக்குக் கட்டுப்பட்டவன் என்று கூறினார். ஆனால் ப்ரக்ருதி அதாவது இயல்பு ஜடமாயிற்றே. அது எப்படி மனிதனைத் தன் வசப்படுத்தும் என்பதற்கு பகவான் பதில் கூறுகிறார்—

**ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति।**
**भ्रामयन्सर्वभूतानि यन्त्रारूढानि मायया॥ ६१॥**

**ஈஸ்வர: ஸர்வபூ₄தாநாம் ஹ்ருத்₃தே₃ஶேऽர்ஜுந திஷ்ட₂தி ।**

**ப்₄ராமயந்ஸர்வபூ₄தாநி யந்த்ராரூட₄ாநி மாயயா ॥ 61 ॥**

**அர்ஜுன** – அர்ஜுன! **யந்த்ராரூட₄ாநி** – உடல் என்கிற யந்திரத்தில் ஏற்றி வைக்கப் பட்ட, **ஸர்வபூ₄தாநி** – அனைத்து ப்ராணிகளையும், **ஈஸ்வர:** – அந்தர்யாமியாகிய பகவான், **மாயயா** – தம்முடைய மாயையினால் (அவரவர்கள் கர்மவினைக்கேற்றவாறு), **ப்₄ராமயந்** – சுழலச் செய்து கொண்டு, **ஸர்வபூ₄தாநாம்** – அனைத்து ப்ராணிகளுடைய, **ஹ்ருத்₃தே₃ஶே** – இதயத்தில், **திஷ்ட₂தி** – வீற்றிருக்கிறார்.

அர்ஜுன! உடல் என்கிற யந்திரத்தில் ஏற்றி வைக்கப்பட்ட அனைத்து ப்ராணிகளையும் அந்தர்யாமியாகிய பகவான் தன்னுடைய மாயையினால் அவரவர்கள் கர்மவினைக்கேற்ற வாறு சுழலச் செய்து கொண்டு அனைத்து ப்ராணிகளுடைய இதயத்திலும் வீற்றிருக்கிறார்.

கேள்வி: இங்கு உடலை யந்த்ரம் என்று உருவகப்படுத்துவதன் நோக்கமென்ன? 'ஈசுவரன் எல்லா ப்ராணிகளின் இதயத்திலும் வீற்றிருக்கிறார்' என்று கூறுவதன் கருத்து என்ன?

பதில்: ரயில் வண்டி முதலிய வாஹனங்களில் அமர்ந்த மனிதன், தானே நகர்வதில்லையாயினும் வாஹனம் செல்லும்போது அவனும் சென்று கொண்டுதான் இருக்கிறான். அதுபோல உடலில் உறையும் ஆத்மா அசைவற்றவன். அவனுக்கும், உடல் ஆற்றும் செயல்களுக்கும் எவ்வித ஸம்பந்தமுமில்லை. இருப்பினும் தொன்றுதொட்டு வரும் அஞ்ஞானத்தினால், உடலுடன் ஏற்பட்ட பிணைப்பு காரணமாக உடலின் செயல்கள் எல்லாம் ஆத்மாவின் செயல்கள் என்று நினைக்கிறான். இதைத்தான் இந்த யந்த்ர உருவகம் சுட்டிக்காட்டுகிறது.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



யந்த்ரத்தை ஓட்டுபவனும் அந்த வாஹனத்தில் அமர்ந்துதான் ஓட்டுகிறான். அதுபோல எல்லா ப்ராணிகளின் உள்ளங்களிலும் இருக்கின்ற பரமாத்மா அந்தந்த ப்ராணிகளின் இதயத்தில் இருந்து கொண்டே அவ்வவற்றின் வினைக்கு ஏற்றபடி அவற்றை நடத்திச் செல்கிறார். ஆகவே பகவானின் எந்த ஓர் அமைப்பிலும் சிறிதுகூடத் தவறுதல் ஏற்பட முடியாது. ஏனெனில் ஸர்வ வல்லமை படைத்த, எங்கும் நிறைந்த, எல்லாம் அறிந்த பகவான் அவரவர்களுடைய கர்மவினைகளை நன்கு அறிவார். பகவான் எல்லா உயிர்களின் இதயத்திலும் இருக்கிறார் என்று கூறியதன் கருத்து இதுதான்.

**கேள்வி:** 'யந்த்ராரூடாநி பூதாநி' என்றால் என்ன பொருள்? பகவான் தமது மாயையினால் அவர்களைச் சுழல வைக்கிறார் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'யந்த்ராரூடாநி பூதாநி' என்ற சொற்றொடர் உடல் என்ற யந்த்ரத்தில் உறையும் ப்ராணிகளனைத்தையும் குறிப்பிடுகிறது. அந்த ப்ராணிகள் அனைத்தும் அவற்றின் முன்வினைப் பயன்களை அனுபவிப்பதற்காகத் திரும்பத் திரும்பப் பல பிறவிகள் எடுத்து வெவ்வேறு பொருட்களோடும், செயல்களோடும், ப்ராணிகளோடும் கூடவும் பிரியவும் நேர்கிறது. அவரவர் ஸ்வபாவத்திற்கு ஏற்றவாறு செயல்களில் திரும்பவும் ஈடுபடவும் நேர்கிறது. இப்படியெல்லாம் அந்தந்த ப்ராணிகளைத் தமது மாயையினால் சுழல வைக்கிறார் பகவான்.

**கேள்வி:** செயல் ஆற்றுவதிலும், ஆற்றாமல் இருப்பதிலும் மனிதனுக்குச் சுதந்திரம் உண்டா அல்லது வேறொன்றுக்குக் கட்டுப்பட்டு அவன் செயலைச் செய்யவேண்டுமா? வேறொன்றுக்குக் கட்டுப்பட்டுச் செய்கிறான் என்று சொன்னால், அப்படிக் கட்டுப்படுத்தும் வேறொன்று எது? ப்ரக்ருதியா? ஸ்வபாவமா? பகவானா? ஏனெனில் சில இடங்களில் மனிதன் கர்மங்களைச் செய்யும் பொறுப்புடையவன் என்று சொல்லி, அவன் செயல் செய்ய முனைவதற்குச் சுதந்திரம் அளிக்கிறார் (2/47). சில இடங்களில் மனிதன் ப்ரக்ருதிக்கு ஆட்பட்டுச் செயல் புரிகிறான் (3/33) என்று கூறுகிறார். மற்றும் பகவானுடைய கட்டுப்பாட்டில் இருக்கிறான் (10/8) என்றும் கூறுகிறார். இதே அத்யாயத்தில் 59,60வது ச்லோகங்களில் மனிதன் ப்ரக்ருதிக்கும், இயல்புக்கும் ஆட்பட்டவன் என்று கூறுகிறார். இந்த ச்லோகத்தில் பகவானுக்கு ஆட்பட்டவன் என்று கூறுகிறார். ஆகவே இதைத் தெளிவாக விளக்க வேண்டும்.

**பதில்:** செயல் ஆற்றுவதிலும், ஆற்றாமல் இருப்பதிலும் மனிதன் வேறொன்றுக்கு ஆட்பட்டவன்தான். அதனால்தான் ஒரு கணம்கூட மனிதன் ஒன்றும் செய்யாமல் இருக்க முடியாது (3/5) என்று கூறினார். மனிதனுக்குக் கடமைகளை விதித்து, அவற்றை ஆற்ற மனிதனுக்குத் தகுதி உண்டு என்று கூறியபோதுகூட, தன் விருப்பப்படி செய்யலாம் (செயல் புரிய சுதந்திரம் உள்ளவன்) என்று சொல்லவில்லை; ஆனால் வேறொன்றுக்குக் கட்டுப்பட்டவன் என்றுதான் சொல்கிறார். ஏனெனில், கர்மங்களை த்யாகம் செய்ய அவன் இயலாதவன் என்று காட்டுகிறார். இப்பொழுதுதான் மனிதன் எதனுடைய அதிகாரத்திற்குக் கட்டுப்பட்டுச் செயல் புரிகிறான் என்ற கேள்வி எழுகிறது. இதற்கு விடை மனிதன் ப்ரக்ருதிக்கு – இயல்புக்கு – பகவானுக்கு ஆட்பட்டுச் செயல் புரிகிறான் என்பதுதான். இம்மூன்றும் ஒன்றையேதான் குறிப்பிடுகின்றன. ப்ரக்ருதி, இயல்பு இரண்டுக்கும் பொருள் ஒன்றுதான். பகவானோ தமக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை என்ற நிலையில் – அதாவது ஒன்றிலும் ஒட்டாமல், ப்ராணிகளை அவரவர் இயல்புக்கு ஏற்பத் தமது மாயா சக்தியின் மூலம் அந்தந்தக் கர்மங்களில் ஈடுபடுத்துகிறார். ஆகவே பகவானுக்குக் கட்டுப்பட்டு என்று சொன்னால் இயல்புக்கேற்றவாறு என்று சொல்வதுபோலத்தான். இயல்புக்கேற்றவாறு என்று சொன்னாலும் பகவானுக்குக் கட்டுப்பட்டு என்று சொல்வதுபோலத்தான். ஏனெனில் இயல்பு என்பதை அடக்கியாள்பவர் பகவான்தானே! எனவே மனிதன் இயல்பிற்குக் கட்டுப்பட்டவன் என்றால் பகவானுக்குக் கட்டுப்பட்டவன் என்றுதானே பொருள்.

அப்படியானால் அவன் மேன்மை அடைதற்கான வழி என்ன? இதைச் செய், அதைச் செய்யாதே என்றெல்லாம் வகுத்துக் கூறும் அறநூல்கள் எதற்கு? இதற்கு விடை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



யாதெனில், செய்யத்தக்கவை-தகாதவை என்ற விதிகளை வகுக்கின்ற அறநூல்கள், மனிதனை அவனுடைய இயல்புக்கு ஏற்ற செயல்களிலிருந்து தடுப்பதற்கோ, அவனுடைய இயல்புக்கு மாறான செயல்களைச் செய்விப்பதற்கோ ஏற்பட்டவை அல்ல; ஆனால், அந்தக் கர்மங்களைச் செய்வதில் ஏற்படும் விருப்பு-வெறுப்புகளுக்காட்பட்டு அவன் அநீதி இழைத்துவிடாமல், ந்யாயமாக ஆற்றவேண்டிய கடமைகளில் அவனை ஈடுபடுத்துவதற்காகத்தான் அவை ஏற்பட்டுள்ளன. ஆகவே மனிதன் செயல்கள் புரிவதில் இயல்புக்குக் கட்டுப்பட்டவனாயினும், அந்த இயல்பைச் சரியான வழியில் திருத்திக் கொள்வதில் எவ்விதக் கட்டுப்பாட்டுக்கும் அடங்கியவன் அல்லன். ஆகவே ஒருவன் சாஸ்த்ரம் மற்றும் பெரியோர்களின் உபதேசங்களால் விவேகம் பெற்று, ப்ரக்ருதியை ஆட்டிப் படைக்கின்ற, ஸர்வ வல்லமை படைத்த பகவானைத் தஞ்சம் அடைந்து, விருப்பு-வெறுப்புகளைத் துறந்து, சாஸ்த்ர முறைப்படி, ந்யாயமாகத் தன்னுடைய இயல்புக்கு ஏற்ற கர்மங்களைப் பயனில் விருப்பமின்றிச் செய்து, தன் வாழ்க்கையைக் கழிக்கத் தொடங்கினால் அவன் மேன்மை அடைய முடியும்.

**பொருத்தம்:** முன் ச்லோகத்தில் மனிதன் கடமைகளை ஆற்றாமல் விடுவதற்கு சுதந்திரம் பெற்றவனல்லன். தன் இயல்புக்கு ஆட்பட்டு இயல்பான செயல்களைப் புரியத்தான் நேர்கிறது; ஏனெனில் எல்லோருக்கும் அந்தர்யாமியான (உள்ளத்தில் உறைகின்ற), ஸர்வ வல்லமை படைத்த பகவான் தாமே எல்லா ப்ராணிகளின் உள்ளங்களிலும் இருந்து கொண்டு அவர்களின் இயல்புக்கு ஏற்றவாறு அவற்றைச் சுழல வைக்கிறார்; அவருடைய உந்துதலை யாரும் மீற முடியாது என்று கூறினார். அப்படியானால் கர்மத்தளையிலிருந்து விடுபட்டுப் பரமசாந்தியை அடைய மனிதன் என்ன செய்யவேண்டும் என்பதை அர்ஜுனனுக்கு அவருடைய கடமையைக் கூறுவதன் மூலம் இனி உணர்த்துகிறார்—

**तमेव शरणं गच्छ सर्वभावेन भारत।**
**तत्प्रसादात्परां शान्तिं स्थानं प्राप्स्यसि शाश्वतम्॥ ६२॥**

**தமேவ ஶரணம் க₃ச்ச₂ ஸர்வபா₄வேந பா₄ரத ।**

**தத்ப்ரஸாதா₃த்பராம் ஶாந்திம் ஸ்தா₂நம் ப்ராப்ஸ்யஸி ஶாஶ்வதம் ॥ 62 ॥**

**பா₄ரத** – பரதகுலத் தோன்றலே! (நீ), **ஸர்வபா₄வேந** – எல்லா வகைகளாலும், **தம் ஏவ** – அந்த பரமேசுவரனையே, **ஶரணம் க₃ச்ச₂** – தஞ்சம் அடைவாயாக! **தத்ப்ரஸாதா₃த்** – அந்தப் பரமாத்மாவின் அருளினால் நீ, **பராம்** – உயர்ந்த, **ஶாந்திம்** – அமைதியையும், **ஶாஶ்வதம் ஸ்தா₂நம்** – நிலையான பரமபதத்தையும், **ப்ராப்ஸ்யஸி** – அடைவாய்.

பரதகுலத் தோன்றலே! நீ எவ்வகையிலும் அந்தப் பரமேசுவரனையே தஞ்சம் அடைவாயாக! அந்தப் பரமாத்மாவின் அருளினால் நீ உயர்ந்த அமைதியையும், நிலையான பரமபதத்தையும் அடைவாய்.

**கேள்வி:** 'தம்' என்று யாரைக் குறிப்பிடுகிறார்? 'எவ்வகையிலும் அவரையே தஞ்சமடைவாய்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எல்லா வல்லமைகளும் படைத்த, எல்லாவற்றிற்கும் ஆதாரமான, எல்லாவற்றையும் தூண்டுகின்ற, எல்லோருக்கும் அந்தர்யாமியான, எங்கும் நிறைந்த பரமாத்மாவைத்தான் முன் ச்லோகத்தில் எல்லா ப்ராணிகளின் உள்ளங்களிலும் உறைவதாகச் சொன்னார். அவரைத்தான் 'தம்' என்ற சொல் குறிக்கிறது. தனது மனம், புத்தி, புலன்கள், ப்ராணன்கள், அனைத்துச் செல்வம், சுற்றம் எல்லாவற்றையும் அவருக்கே அர்ப்பணம் செய்து, அவர் பொறுப்பில் எல்லாவற்றையும் விட்டுவிட்டு, அவரைச் சார்ந்து இருப்பதுதான் எல்லாவிதங்களிலும் பகவானைத் தஞ்சம் அடைவதாகும்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அதாவது பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், தத்வம், ஸ்வரூபம் இவற்றை உறுதியான ச்ரத்தையுடன் நிச்சயம் செய்து கொண்ட பகவான்தான் அடையத்தக்கவர், பரமகதி, பெரும் புகல், அவரே எல்லாம் என்று அறிந்து கொண்டு அவரையே தனக்கு யஜமானராகவும், பராமரிப்பவராகவும், தூண்டுபவராகவும், காப்பாளராகவும் தமக்கு மிகுந்த நன்மை செய்பவராகவும் மதித்து, அவரையே சார்ந்து எல்லாவிதப் பொறுப்புகளையும் அவரிடம் ஒப்புவித்துவிட்டு, பயமின்றி இருக்க வேண்டும். எல்லாமே பகவானுடையதுதான். பகவான் எங்கும் நிறைந்தவர். எல்லாச் செயல்களிலும் மமகாரம், அபிமானம், பற்றுதல், ஆசை இவற்றைத் துறந்து, பகவானுடைய ஆணைப்படி தனது கடமையாற்றுதல் மூலம் எல்லா ப்ராணிகளின் உள்ளங்களிலும் உள்ள பரமாத்மாவுக்கு ஸேவை செய்ய வேண்டும். எவ்விதமான துக்கமோ, ஸுகமோ நேரிட்டாலும், அது பகவானளித்த வெகுமதி என்று மனமுவந்து ஏற்று இன்புற்றிருக்கவேண்டும். பகவான் வகுத்தளித்த நிலைகளில் சிறிதும் மனவருத்தம் கொள்ளாது மரியாதை, புகழ், அந்தஸ்தில் உள்ள பெருமை இவற்றைத் துறந்து, பகவானைத் தவிர வேறு எந்த உலகியல் பொருளிலும் 'எனது' என்ற பற்றுதல் கொள்ளாமல் இருக்கவேண்டும். மிகுந்த நம்பிக்கையுடனும், அநன்யமான ப்ரேமையுடனும், பகவானுடைய திருநாமம், கல்யாணகுணங்கள், ப்ரபாவம், லீலைகள், தத்வம், ஸ்வரூபம் இவற்றை எப்போதும் இடைவிடாது கேட்கவேண்டும், சிந்திக்க வேண்டும், சொல்ல வேண்டும். இவ்வித மனப்பாங்கு, செயல்கள் எல்லாமே பகவானைத் தஞ்சமடைவதில் அடங்கும்.

**கேள்வி:** 'பரமாத்மாவின் அருளினால் உயர்ந்த அமைதியையும், நிலையான பரமபதத்தையும் அடைவாய்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேற்கூறியவாறு பகவானைத் தஞ்சம் அடைந்துவிட்ட பக்தனிடத்தில் பரமதயாளுவும், சிறந்த நண்பரும், ஸர்வ வல்லமை படைத்தவருமான பரமாத்மாவினுடைய எல்லையற்ற க்ருபையின் வெள்ளம் பெருகும். அது அவனுடைய அனைத்துத் துயரங்களையும், தளைகளையும் அறவே அடித்துக் கொண்டு போய்விடும். இவ்விதம் பக்தன் துயரங்கள், தளைகள் அனைத்தும் நீங்கப் பெற்று, எப்பொழுதும் பரமானந்தத்தைப் பெறுகிறான். ஸத் சித் ஆனந்தமயமான பூரணப்ரம்மமான, ஸநாதன பரமாத்மாவை அடைகிறான். பரமாத்மாவினுடைய க்ருபையால் பரமசாந்தியைப் பெற்று, நிலையான பரமபதத்தை அடைவான் என்பதற்கு இதுதான் பொருள்.

**பொருத்தம்:** இவ்வாறு 'அந்தர்யாமியான பரமாத்மாவைத் தஞ்சமடைவாயாக' என்று அர்ஜுனனுக்கு ஆணையிட்டு, பகவான் தம் உபதேசத்தை நிறைவு செய்கிறார்—

**इति ते ज्ञानमाख्यातं गुह्याद्गुह्यतरं मया।**
**विमृश्यैतदशेषेण यथेच्छसि तथा कुरु ॥६३॥**

**இதி தே ஜ்ஞாநமாக்₂யாதம் கு₃ஹ்யாத்₃கு₃ஹ்யதரம் மயா ।**
**விம்ருஶ்யைதத₃ஶேஷேண யதே₂ச்ச₂ஸி தத₂ா குரு ॥ 63 ॥**

**இதி** – இவ்வாறு, **கு₃ஹ்யாத் கு₃ஹ்யதரம்** – மறைபொருளுக்கெல்லாம் மறை பொருளான, **ஜ்ஞாநம்** – ஞானம், **மயா** – என்னால், **தே** – உனக்கு, **ஆக்₂யாதம்** – கூறப்பட்டது. (இப்பொழுது நீ), **ஏதத்** – ரஹஸ்யமான இந்த ஞானத்தை, **அஶேஷேண** – முழுமையாக, **விம்ருஶ்ய** – நன்கு ஆராய்ந்து, **யத₂ா** – எப்படி, **இச்ச₂ஸி** – விரும்புகிறாயோ, **தத₂ா** – அப்படியே, **குரு** – செய்.

இவ்வாறு மறைபொருளுக்கெல்லாம் மறைபொருளான ஞானம் என்னால் உனக்குக் கூறப்பட்டது. இப்பொழுது நீ ரஹஸ்யமான இந்த ஞானத்தை முழுமையாக நன்கு ஆராய்ந்து எப்படி விரும்புகிறாயோ அப்படியே செய்.

**கேள்வி:** 'இதி' என்பதன் பொருள் என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** 'இதி' என்பது இங்கு உபதேசத்தின் முடிவைக் காட்டுகிறது. 2/11 முதல் இதுவரை பகவான் பேசியதெல்லாவற்றையும் குறிக்கிறது.

**கேள்வி:** இங்கே 'ஜ்ஞாநம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? அது 'குஹ்யாத் குஹ்யதரம்' (மறைபொருளுக்கெல்லாம் மறைபொருள்) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவான் 2/11 முதல் இதுவரை அர்ஜுனனுக்குத் தம்முடைய குணங்கள், ப்ரபாவம், தத்வம், ஸ்வரூபத்தின் ரஹஸ்யம் ஆகியவற்றை நன்கு உணர்த்துவதற்காகச் சொன்னவையனைத்தும் 'ஜ்ஞாநம்' என்ற சொல்லுக்குப் பொருள். அத்தனை உபதேசங்களும் பகவானுடைய நேர் ஞானத்தைத் தரவல்லவை. ஆகவே அவை 'ஜ்ஞாநம்' எனப்படும். உலகியலிலோ, சாஸ்த்ரங்களிலோ எத்தனையோ மறைத்துப் போற்றப்பட வேண்டிய ரஹஸ்யங்கள் இருக்கலாம். அவை எல்லாவற்றிலும் பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், ஸ்வரூபம் இவற்றின் உண்மை அறிவைப் புகட்டக் கூடிய உபதேசம் மேலும் சிறப்பாக மறைத்துப் போற்றப்பட வேண்டியது ஆகும். ஆகவே இவ்வுபதேசத்தின் பெருமையையும், தகுதியற்றவர்களுக்கு இந்த உபதேசத்தை வெளியிடக் கூடாது என்பதையும் உணர்த்துவதற்காக 'மறைபொருளுக்கெல்லாம் மறைபொருளான ஞானம்' என்ற அடைமொழி கூறப்பட்டிருக்கிறது.

**கேள்வி:** 'மயா தே ஆக்யாதம்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'பரமாத்மாவான என்னுடைய குணங்கள், ப்ரபாவங்கள், ஸ்வரூபம் இவற்றின் தத்வம் பற்றி எப்படி எந்த அளவு என்னால் கூறமுடியுமோ, அப்படி அந்த அளவு வேறொருவரால் கூற முடியாது' என்பதை 'மயா' (என்னால்) என்ற சொல் குறிக்கிறது. ஆகவே என்னால் பகரப்பட்ட இந்த ஞானம் மிகச் சிறப்பு வாய்ந்தது. 'தே' என்ற சொல்லால் 'நீ இந்த ஞானத்தைப் பெறத்தக்கவன் என்று உன்னை மதித்து, உன் மேன்மை கருதி உனக்குச் சொல்கிறேன்' என்று கூறுகிறார். 'ஆக்யாதம்' என்பதனால் 'நான் சொல்ல வேண்டுமென நினைத்த அளவு சொல்லி முடித்துவிட்டேன். சொல்ல வேண்டியது இனி மீதம் ஒன்றுமில்லை' என்று குறிப்பிடுகிறார்.

**கேள்வி:** 'ரஹஸ்யமான இந்த ஞானத்தை முழுமையாக நன்கு ஆராய்ந்து எப்படி விரும்புகிறாயோ, அப்படிச் செய்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 2/11ல் ஆரம்பித்து பகவான் அர்ஜுனனுக்கு ஸாங்க்யயோகம், கர்மயோகம் ஆகிய இரு ஸாதனை முறைகளுக்கு உரியபடி ஆங்காங்கே (2/18,37; 3/30; 8/7; 11/34) ஸ்வதர்மமாகிய யுத்தம் புரிவது கடமையென்றும், தம்மைப் புகல் அடையுமாறும் கூறினார். பின் இந்த அத்யாயத்தில் அவர் விரும்பிக் கேட்டபடி ஸந்யாஸம், த்யாகம் (யோகம்) இவை பற்றிய தத்வங்களை உள்ளபடி தெரிவித்துவிட்டு 18/56,57களில் பக்தி ப்ரதானமான கர்மயோகத்தின் பெருமையைக் கூறினார். 'என்னைத் தஞ்சமடைவாயாக' என்று ஆணையிட்டார். இவ்வளவு சொன்ன பிறகும்கூட அர்ஜுனனிடமிருந்து அறிவுரைகளை ஏற்றுக் கொண்டதற்கான அறிகுறி ஒன்றும் தென்படாமையினால் தம் ஆணையை ஏற்று நடப்பதால் விளையும் மிகச் சிறந்த பயனைக் கூறினார். அதை மதிக்காவிடில் ஏற்படும் தீமை பற்றியும் எச்சரித்தார். இதற்கும் பதில் கிடைக்காததால் மறுபடியும் அர்ஜுனனை எச்சரிக்கும் முறையில் 'பரமாத்மாதான் அனைவரையும் தூண்டி விடுபவர்; உள்ளத்தில் உறைபவர். அவரைத் தஞ்சமடைவாயாக' என்று கூறினார். இதற்குப் பிறகும் அர்ஜுனனிடமிருந்து பதில் வராமற்போகவே இந்த ச்லோகத்தின் முதல் பாதியில், 'நான் சொல்ல வேண்டியதெல்லாம் சொல்லியாகிவிட்டது' என்று உபதேசத்தை முடித்துக் கொள்கிறார். 'இந்த உபதேசம் மிகச் சிறந்தது. இதை நன்கு ஆராய்ந்து முடிவில் உன் விருப்பப்படி செய்' என்றும் கூறுகிறார். 'உனக்கும் கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் முதலிய பலவிதமான ஸாதனைகளை உபதேசித்துவிட்டேன். அவற்றில் எந்த ஸாதனை உனக்கு நல்லதென்று தோன்றுகிறதோ, அதைச் செய். அல்லது வேறு ஏதாவது உனக்குச் சரியென்று தோன்றினால் அவ்வாறும் செய்யலாம்' என்பது கருத்து.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பொருத்தம்: இவ்விதம் உபதேசம் முழுவதும் பற்றி ஆராய்ந்து, தன் கடமைகளைத் தீர்மானித்துக் கொள்ளும்படி அர்ஜுனனிடம் கூறிய பின்னரும், அர்ஜுனன் எவ்விதப் பதிலும் கூறவில்லை. அவர், தன்னைத் தகுதியில்லாதவன் என்றும், கடமையைத் தீர்மானிக்க முடியாதவன் என்றும் எண்ணி, மனம் வெதும்பி, மலைத்து நிற்கவே, எல்லோர் உள்ளத்தையும் அறிந்த அந்தர்யாமியான பகவான், அவன்பால் தாமாகவே கருணை கொண்டு கீதையின் ஸாரத்தை உபதேசிக்கும் நோக்கத்துடன் சொல்லத் தொடங்குகிறார்—

**सर्वगुह्यतमं भूयः शृणु मे परमं वचः।**
**इष्टोऽसि मे दृढमिति ततो वक्ष्यामि ते हितम्॥६४॥**

**ஸர்வகு₃ஹ்யதமம் பூ₄ய: ஶ்ருணு மே பரமம் வச: ।**
**இஷ்டோऽஸி மே த்₃ருட₄மிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம் ॥ 64 ॥**

**ஸர்வகு₃ஹ்யதமம்** – மறைபொருளுக்கெல்லாம் மறைபொருளான, **மே** – என்னுடைய, **பரமம்** – மேலான ரஹஸ்யமான, **வச:** – உரையை, **பூ₄ய:** – மீண்டும், **ஶ்ருணு** – கேள். **மே** – எனக்கு, **த்₃ருட₄ம்** – (நீ) மிகவும், **இஷ்ட:** – உற்ற நண்பனாக, **அஸி** – இருக்கிறாய். **தத:** – ஆகையால், **ஹிதம் இதி** – மேலான நன்மை பயக்கும் என்ற கருத்தோடு இந்த உரையை (நான்), **தே** – உனக்கு, **வக்ஷ்யாமி** – கூறுவேன்.

மறைபொருளுக்கெல்லாம் மறைபொருளான என்னுடைய மேலான ரஹஸ்யமான உரையை மீண்டும் கேள். எனக்கு நீ மிகவும் உற்ற நண்பனாக இருக்கிறாய். ஆகையால் மேலான நன்மை பயக்கும் என்ற கருத்தோடு இந்த உரையை நான் உனக்குக் கூறுவேன்.

**கேள்வி:** *'ஸர்வகுஹ்யதமம் பரமம் வச:' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** இதுவரை பகவான் சொன்னவை எல்லாமே மறைத்துப் போற்ற வேண்டியவைதாம். பகவானே ஆங்காங்கே பரமகுஹ்யம், உத்தம ரஹஸ்யம் என்றெல்லாம் இந்த உபதேசத்திற்குப் பெயர் சூட்டியிருக்கிறார். அந்த உபதேசங்கள் அனைத்திலும் பகவான் எங்கெல்லாம் முக்யமாக தம்முடைய குணங்கள், ப்ரபாவங்கள், ஸ்வரூபம், பெருமை, ஆளுமை ஆகியவற்றை வெளிப்படுத்தியுள்ளாரோ, அதாவது நானே எங்கும் நிறைந்தவன், எல்லாவற்றிற்கும் ஆதாரம், நான் ஸர்வ வல்லமை படைத்தவன், ஸாக்ஷாத் ஸகுண நிர்குண பரமாத்மா என்று தாமே கூறி 'என்னை வழிபாடு செய், என்னைத் தஞ்சமடை' என்றெல்லாம் கூறியிருக்கிறாரோ, அவையெல்லாம் மிக மிக மறைத்துப் போற்றப்பட வேண்டியனவே. 9/1ல் 'குஹ்யதமம்' என்றும், 9/2ல் 'ராஜகுஹ்யம்' என்றும் அடைமொழி கொடுத்திருக்கிறார். ஏனெனில் அந்த அத்யாயத்தில் பகவான் தம்முடைய குணங்கள், ப்ரபாவங்கள், ஸ்வரூபம், ரஹஸ்யம், ஆளுமை இவை பற்றி விளக்கமாகக் கூறி, அர்ஜுனனை 'என்னை வழிபாடு செய், என்னைத் தஞ்சமடை' என்றும் தெள்ளத் தெளிவாகக் கூறியிருக்கிறார். அதேபோல பத்தாவது அத்யாயத்திலும், மறுபடியும் சரணாகதி பற்றிக் கூற ஆரம்பிக்கும்போது 'பரமம் வச:' என்கிறார். இங்கும் 'ஸர்வகுஹ்யதமம் பரமம் வச:' என்கிறார். 'நான் இதுகாறும் கூறிய மிகவும் மறைத்துப் போற்றப்பட வேண்டிய உபதேசங்கள் அனைத்திலும் அருமையாகப் போற்றிக் காக்கப்பட வேண்டிய பெருமை மிகுந்த விஷயத்தை அடுத்து வரும் இரண்டு ச்லோகங்களில் உனக்குக் கூறுவேன்' என்கிறார்.

**கேள்வி:** *'அவ்வுபதேசத்தை மறுபடியும் கேள்' என்று கூறுவதன் கருத்து என்ன?*

**பதில்:** "இப்போது நான் சொல்லப் போவதை முன்பே கூடக் கூறியிருக்கிறேன் (9/34; 12/6,7; 18/56,57). ஆனால் நீ அதை மனதில் நன்கு நிலைநிறுத்திக் கொள்ளவில்லை. ஆகவே மிக விழுமிய அவ்வுபதேசத்தைப் பிற உபதேசங்களிலிருந்தும் வேறுபடுத்தி, மறுபடியும் கூறப்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



போகிறேன். கவனமாகக் கேட்டு மனதில் நிலைநிறுத்திக் கொள்" என்ற கருத்தைத் தெரிவிப்பதற்காக, அவரை 'மீண்டும் கேட்பாயாக' என்று சொல்லத் தொடங்குகிறார்.

**கேள்வி:** 'த்ருடம் இஷ்ட:' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 63வது ச்லோகத்தில், தானாகவே தன் விருப்பப்படி ஆராய்ந்து எது தம் கடமை என்று தீர்மானிக்கும்படி அர்ஜுனனிடம் பகவான் கூறிவிட்டார். அந்தப் பொறுப்பை அவர் தம் மேல் சுமத்திக் கொள்ளவில்லை. இதைக் கேட்டதும் அர்ஜுனனுடைய உள்ளத்தில் வருத்தம் ஏற்பட்டது. 'ஏன் இப்படிச் சொல்கிறார்? எனக்கு பகவானிடத்தில் நம்பிக்கை இல்லையா? நான் பகவானின் பக்தன் இல்லையா? அன்பன் இல்லையா' என்று கலங்கினார். அதைப் பார்த்து அர்ஜுனனுடைய வருத்தத்தை நீக்கும் பொருட்டு 'த்ருடம் இஷ்ட:'. 'நீ எனக்கு மிகவும் ப்ரியமானவன். உனக்கும், எனக்கும் உள்ள பாசப் பிணைப்பு அசையாதது, உறுதி மிகுந்தது. ஆகவே நீ எவ்விதத்திலும் வருந்தாதே' என்று உற்சாகமூட்டுகிறார்.

**கேள்வி:** 'ஆகையால் மேலான நன்மை பயக்கும் என்ற கருத்தோடு இந்த உரையைக் கூறுவேன்' என்று கூறுவதன் பொருள் என்ன?

**பதில்:** "நீ எனக்கு மிகவும் நெருங்கிய அன்பன் என்பதால் உனக்கு ஹிதத்தை உபதேசிக்கப் போகிறேன். உன்னிடமிருந்து எதையும் ஒளிக்காமல், மறைத்துப் போற்றப்பட வேண்டியவற்றில் மிகச் சிறந்ததானவற்றை உனக்காகவே, உன் மேன்மையின் பொருட்டு, உன்னிடம் வெளிப்படுத்துகிறேன். இப்பொழுது நான் சொல்லப் போவது உனக்கு மிகவும் நன்மை பயப்பதாக இருக்கும்" என்கிறார்.

**பொருத்தம்:** மிகவும் மறைத்துப் போற்றத்தக்கதைக் கூறுவதாக முன் ச்லோகத்தில் சொன்னபடி, அதை இங்கே கூறுகிறார்—

**मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु।**
**मामेवैष्यसि सत्यं ते प्रतिजाने प्रियोऽसि मे ॥६५॥**

**மந்மநா ப$_4$வ மத்$_3$ப$_4$க்தோ மத்$_3$யாஜீ மாம் நமஸ்குரு ।**
**மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜாநே ப்ரியோ஽ஸி மே ॥ 65 ॥**

(அர்ஜுன! நீ), **மந்மநா:** – என்னிடமே மனதைச் செலுத்துபவனாக, **ப$_4$வ** – ஆவாய். **மத்$_3$ப$_4$க்த: (ப$_4$வ)** – என்னிடமே பக்தி கொண்டிரு. **மத்$_3$யாஜீ (ப$_4$வ)** – என்னையே வழிபடு. (மேலும்), **மாம்** – என்னையே, **நமஸ்குரு** – வணங்கு. **(ஏவம்)** – இப்படிச் செய்வதால் (நீ), **மாம் ஏவ** – என்னையே, **ஏஷ்யஸி** – அடைவாய். (இதை நான்), **தே** – உனக்கு, **ஸத்யம் ப்ரதிஜாநே** – ஸத்ய ப்ரதிக்ஞை செய்கிறேன். **(யத:)** – ஏனெனில் (நீ), **மே** – எனக்கு, **ப்ரிய:** – இனியவனாக, **அஸி** – இருக்கிறாய்.

அர்ஜுன! நீ என்னிடமே மனதைச் செலுத்து. என்னிடமே பக்தி கொண்டிரு. என்னையே வழிபடு. என்னையே வணங்கு. இப்படிச் செய்வதால் நீ என்னையே அடைவாய். இதை நான் உனக்கு உண்மையென உறுதி கூறுகிறேன். ஏனெனில் நீ எனக்கு மிகவும் அன்புக்குரியவனாக இருக்கிறாய்.

**கேள்வி:** 'பகவானிடம் சித்தத்தை நிலைநிறுத்துவது' என்றால் என்ன?

**பதில்:** பகவான் ஸர்வ வல்லமை படைத்தவர். எல்லாவற்றிற்கும் ஆதாரமானவர். எல்லாம் அறிந்தவர். எல்லோருக்கும் அந்தர்யாமி. எங்கும் நிறைந்தவர். எல்லோரையும் ஆள்பவர். அதிசயிக்கத்தக்க ஸௌந்தர்யம், மாதுர்யம், ஐசுவர்யம் (அழகு, இனிமை, ஆளுமை) முதலிய நற்பண்புகளின் ஆழம் காணமுடியாத கடல் என்றறிந்து அநன்யமான ப்ரேமையுடன் சஞ்சலமின்றி, மனதை பகவானிடம் நிலைத்து நிற்கச் செய்யவேண்டும். கணம்கூட பகவானை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



மறந்து விடுவது பொறுக்க முடியாமல் போக வேண்டும். இதுதான் பகவானிடம் சித்தத்தை நிலைநிறுத்துவது ஆகும். இதன் விளக்கம் 9/34ல் காண்க.

**கேள்வி:** 'பகவானுடைய பக்தனாக ஆவது' என்றால் என்ன?

**பதில்:** பகவானையே நமக்கு யஜமானர், போஷிப்பவர், காப்பாளர், பரமகதி, புகல் என்றறிந்து எப்பொழுதும் அவருக்கே அடிமையாக ஆகவேண்டும்; சிறிதுகூடத் தன் சுதந்திரம் கொண்டாடக் கூடாது; எவ்விதத்திலும் அவரையே நம்பி இருக்கவேண்டும். அவர் எதை விதித்தாலும் அதை ஏற்று மகிழ்ச்சியாக இருக்கவேண்டும். அவருடைய ஆணையை எப்பொழுதும் நிறைவேற்ற வேண்டும். அவரிடம் அளவற்ற நம்பிக்கை பூண்டு, அநன்ய ப்ரேமை செலுத்தவேண்டும். இதுதான் பகவானுடைய பக்தனாவதன் அடையாளம்.

**கேள்வி:** 'பகவானை வழிபடுவது' என்றால் என்ன?

**பதில்:** 9/26ல் கூறியவாறு புஷ்பம், துளஸி முதலியவற்றைக் கொண்டு ச்ரத்தையுடனும், பக்தியுடனும், ப்ரேமையுடனும் பகவானுடைய திவ்ய மூர்த்தியைப் பூஜை செய்யவேண்டும். மனதில் பகவானை எழுந்தருளச் செய்து மனதால் உபசாரங்கள் செய்து பூஜிக்கவேண்டும். அவருடைய திவ்ய மொழிகளையும், அவருடைய லீலாக்ஷேத்ரங்களையும், அவருடைய திருவுருவத்தையும் பலவாறாக எல்லாவிதங்களிலும் மதிப்பு அளித்துக் கொண்டாட வேண்டும். எல்லாவற்றிலும் பகவான் வீற்றிருப்பதாக மதித்து, எல்லா ப்ராணிகளையும் பகவானாகவே நினைத்துப் போற்றவேண்டும். அவரவர்க்குத் தக்கபடி பணிவிடை, மரியாதை செய்து பெருமைப்படுத்துதல் வேண்டும். இவையெல்லாம் பகவானை ஆராதிப்பதில் உள்ளடங்கியன. 9/26லிருந்து 9/28; 9/34 ச்லோக உரையில் விளக்கம் காணலாம்.

**கேள்வி:** இங்கு 'மாம்' என்பது யாரைக் குறிப்பிடுகிறது? 'அவரை வணங்குவது' என்றால் என்ன?

**பதில்:** பகவானுக்கு ஸகுணம், நிர்குணம் என்றும், உருவமற்றது, உருவமுள்ளது என்றும் எண்ணற்ற ஸ்வரூபங்கள் உள்ளன. இதோ அர்ஜுனன் முன்னிலையில் ஸ்ரீக்ருஷ்ண வடிவத்தில் அமர்ந்து கீதையை உபதேசம் செய்கிறார். இராமபிரானாக அவதரித்து உலகில் தர்மத்தின் வரைமுறையை வகுத்துக் காண்பித்தார். நரஸிம்மமூர்த்தியாக அவதரித்து பக்த ப்ரஹ்லாதனைக் காத்தருளினார். அத்தகைய ஸர்வ வல்லமை படைத்த, அனந்த கல்யாண குணங்கள் நிறைந்த, எல்லோருக்கும் அந்தர்யாமியான, எல்லாவற்றிற்கும் ஆதாரமான, புருஷோத்தமனான பகவானைத்தான், 'மாம்' என்ற சொல் குறிக்கிறது.

அவருடைய ஏதாவது ஒரு ஸ்வரூபத்தையோ, சித்ரத்தையோ, திருவடிச் சின்னங்களையோ, பாதுகைகளையோ, அவருடைய குணங்கள், ப்ரபாவங்கள், தத்வம் ஆகியவற்றை எடுத்துக் கூறுகின்ற சாஸ்த்ரங்களையோ, நெடுஞ்சாண்கிடையாக விழுந்து நமஸ்காரம் செய்யவேண்டும். எல்லா ப்ராணிகளையும் பகவானுடைய ஸ்வரூபம் என மதித்து, அனைத்தையும் வணங்க வேண்டும். இதுதான் பகவானை நமஸ்கரிப்பதாகும். 9/34ன் உரையில் இதன் விளக்கம் காண்க.

**கேள்வி:** 'இப்படிச் செய்வதால் நீ என்னையே அடைவாய்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேற்கூறியவாறு ஸாதனை புரிந்து முடிவில் நீ தவறாமல் ஸத் சித் ஆனந்தமயமான ஸர்வ வல்லமை படைத்த பகவானான என்னையே அடைவாய். இதில் ஸந்தேஹமே வேண்டாம். பகவானை அடைவது என்பதன் விளக்கமும் 9/34 உரையில் காணலாம்.

**கேள்வி:** 'நான் உனக்கு ஸத்ய ப்ரதிக்ஞை செய்கிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** அர்ஜுனன் பகவானுடைய ப்ரியமான பக்தன், உற்ற நண்பன். ஆகவே அவர் மீது ப்ரேமையும், தயையும் கொண்டு, அவருக்குத் தம்மிடம் (பகவானிடம்) திடமான நம்பிக்கை வளர வேண்டும் என்ற எண்ணத்தினாலும், அர்ஜுனனை நிமித்தமாகக் கொண்டு,

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



தகுதிபெற்ற மற்ற பக்தர்களுடைய நம்பிக்கையைத் திடப்படுத்துவதற்காகவும் பகவான் மேலே சொன்னவாறு சபதம் செய்கிறார். அதாவது மேலே சொன்னவிதம் ஸாதனை புரிகின்ற பக்தர் தம்மை வந்து அடைவர். இதில் நம்பிக்கை கொண்டு மனிதன் அத்தகைய ஸாதனைகள் புரிய மேலும் மேலும் முயற்சி செய்யவேண்டும் என்பது கருத்து.

**கேள்வி:** 'நீ எனக்கு அன்பன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இவ்வாறு கூறுவதன் மூலம் தாம் ப்ரதிக்ஞை செய்து கூறுவதன் காரணத்தை பகவான் விளக்குகிறார். "நீ எனக்கு மிகவும் ப்ரியமானவன் என்ற காரணத்தால் நான் ப்ரதிக்ஞை செய்கிறேன். உன்னிடம் எனக்கு அளவு கடந்த ப்ரேமை உண்டு. அந்த ப்ரேமைக்கு வசப்பட்டு, உன்னுடைய நம்பிக்கையைத் திடப்படுத்துவதற்காக, உனக்கு நான் உறுதி கூறுகிறேன். இல்லாவிடில் இவ்விதம் ப்ரதிக்ஞை செய்ய அவசியமே எனக்கு இல்லை."‡

**கேள்வி:** இந்த ச்லோகத்தில் பகவான் நான்கு ஸாதனைகளைக் கூறுகிறார். இந்த நான்கையும் கடைப்பிடித்தால் தான் பகவானை அடைய முடியுமா அல்லது இவற்றில் ஏதாவது ஒன்றைக் கடைப்பிடித்தாலும் போதுமா?

**பதில்:** நான்கு ஸாதனைகளையும் முற்றிலுமாகக் கைக்கொண்டவர்க்கு பகவானை அடைய முடியும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? ஆயினும் இவற்றில் ஏதாவது ஒன்றைக் கைக் கொண்டாலும் பகவானை அடைந்துவிடலாம். பகவான் தாமே 8/14ல் 'என்னை அநன்யமாகச் சிந்தித்தால்தான் என்னை அடைவது ஸுலபம்' என்று கூறியிருக்கிறார். 7/23லும், 9/25லும் தம்முடைய பக்தன் தம்மை அடைவான் என்கிறார். 9/26–28லும், 18/46லும் 'என்னை வழிபட்டு என்னை அடைந்துவிடலாம்' என்று கூறினார். ஆனால் இந்த ஸாதனைகளில் ஒன்றில் குறிப்பாக ஈடுபட்டவருக்கு மற்ற ஸாதனைகள் தாமாகவே வந்து சேர்ந்துவிடும். ச்ரத்தையும், பக்தியும் இந்த நான்கிலுமே பொதுவாக உள்ளவைதாம்.

---

‡ இத்தகைய மஹாத்மாவான அர்ஜுனனுக்காக பகவான், தாமே திருவாய் மலர்ந்தருளி இந்த கீதையெனும், தெய்விக உபதேசத்தைச் செய்திருக்கிறார் என்றால் அந்த அர்ஜுனனுடைய பெருமையை யாரால் கூறமுடியும்? இந்த க்ருஷ்ணன் ஸாக்ஷாத் ஸ்ரீநாராயணன். இந்த அர்ஜுனன் நரன். நாராயணனும், நரனும் ஒருயிர், ஈருடலான ஒரே தத்வம்.

ஏஷ நாராயண: க்ருஷ்ண: ப₂ால்கு₃நச்ச நர ஸ்ம்ருத: ।
நாராயணோ நரச்சைவ ஸத்த்வமேகம் த்₃விதா₄ க்ருதம் ॥

(மஹா. உத்₃யோக₃. 49/20)

இங்கே அர்ஜுனனிடம் பகவானுக்கு எவ்வளவு ப்ரேமை உண்டு என்பதைச் சுருக்கமாகக் கூறுவோம். அதிலிருந்து அர்ஜுனன் பகவானிடம் எவ்வளவு பக்தியும், ப்ரேமையும் உடையவர் என்பது தெளிவாகும்.

காட்டிலும், நீராட்டத்திலும், அரசவையிலும், வேள்வியின் போதும் எல்லாக் கார்யங்களிலுமே ஸ்ரீக்ருஷ்ணன் பெரும்பாலும் அர்ஜுனனுடன் கூட இருந்திருக்கிறார். அந்தப்புரம் வரை உள்ளே சென்று, புனிதமான, தூய ப்ரேமையுடன், தயக்கமின்றி, எல்லாக் காட்சிகளையும் பரஸ்பரம் காணக் கூடிய அளவுக்கு அவர்களிடையே பிணைப்பு இருந்தது. ஸஞ்ஜயன் பாண்டவர்களைச் சந்தித்துவிட்டுத் திரும்பி வந்து த்ருதராஷ்ட்டிரரிடம் கூறினார்: "ஸ்ரீக்ருஷ்ணன், அர்ஜுனன் இவர்களிடையே தனித்தன்மை கொண்ட பேரன்பு நிலவுவதை நான் கண்ணாரக் கண்டேன். நான் அவர்கள் இருவர்களுடனும் பேசுவதற்காக மிகவும் பணிவுடன் அவர்களுடைய அந்தப்புரம் சென்றேன். அங்கு அந்த இரண்டு மஹாபுருஷர்களும் உயர்ந்த ஆடைகளையும், ஆபரணங்களையும் அணிந்து கொண்டு விலைமதிப்பற்ற இருக்கைகளில் அமர்ந்திருக்கக் கண்டேன். அர்ஜுனனுடைய மடியில் ஸ்ரீக்ருஷ்ணனுடைய திருவடிகள். த்ரௌபதி, ஸத்யபாமா இவர்களுடைய மடியில் அர்ஜுனனுடைய இரண்டு கால்களும் இருந்தன. என்னைப் பார்த்ததும் தம் காலடியில் கிடந்த ஸ்வர்ணபீடத்தை என்பால் நகர்த்தி அமரச் சொன்னார். நான் மரியாதையுடன் அதைத் தொட்டு விட்டுத் தரையில் அமர்ந்தேன்" என்கிறார்.

காட்டில் பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் பாண்டவர்களைக் காணச் சென்றிருந்தார் பேச்சு வாக்கில் ஸ்ரீக்ருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார் "அர்ஜுன! நீ என்னுடையவன்; அப்படியே நான் உன்னுடையவன். என்னைச் சார்ந்தவர் உன்னைச் சார்ந்தவரே அதாவது என்னிடமுள்ள பொருட்களில் உனக்கு உரிமை இருக்கிறது. உன்னிடம் பகைமை கொண்டுள்ளவன் என் பகைவன்; உனக்குத் துணை நிற்பவன் எனக்கும் அப்படியே.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



सर्वधर्मान्परित्यज्य मामेकं शरणं व्रज।
अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः॥६६॥

**ஸர்வத$_4$ர்மாந்பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ ।**

**அஹம் த்வா ஸர்வபாபேப்$_4$யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச: ॥ 66 ॥**

**ஸர்வத$_4$ர்மாந்** – தர்மங்கள் அனைத்தையும் அதாவது செய்யவேண்டிய கர்மங்கள் அனைத்தையும், **பரித்யஜ்ய** – (என்னிடம்) அர்ப்பணம் செய்துவிட்டு, **மாம் ஏகம்** – ஸர்வ வல்லமை பொருந்திய, எல்லாவற்றிற்கும் ஆதாரமான, பரமேசுவரனான என் ஒருவனையே, **ஶரணம் வ்ரஜ** – சரணடைவாயாக! **அஹம்** – நான், **த்வா** – உன்னை, **ஸர்வ–பாபேப்$_4$ய:** – பாவங்கள் அனைத்திலிருந்தும், **மோக்ஷயிஷ்யாமி** – விடுவிப்பேன், **மா ஶுச:** – வருந்தாதே!

தர்மங்கள் அனைத்தையும் அதாவது கடமைகள் அனைத்தையும் என்னிடம் அர்ப்பணம் செய்துவிட்டு ஸர்வ வல்லமை பொருந்திய, எல்லாவற்றிற்கும் ஆதாரமான, பரமேசுவரனான என் ஒருவனையே சரணடைவாயாக! நான் உன்னைப் பாவங்கள் அனைத்திலிருந்தும் விடுவிப்பேன். வருந்தாதே!

**கேள்வி:** 'ஸர்வதர்மாந்' என்பது எந்த தர்மங்களைக் குறிக்கும்? 'அவற்றை அர்ப்பணம் செய்வது' என்றால் என்ன?

**பதில்:** வர்ணம், ஆசிரமம், இயல்பு, சூழ்நிலை இவற்றிற்கேற்ப எந்த மனிதனுக்கு சாஸ்த்ர முறைப்படி எந்தெந்த கர்மங்கள் விதிக்கப்பட்டுள்ளனவோ, அவையே

---

மமைவ த்வம் தவைவாஹம் யே மதீ$_3$யாஸ்தவைவ தே ।
யஸ்த்வாம் த்$_3$வேஷ்டி ஸ மாம் த்$_3$வேஷ்டி யஸ்த்வாமநு ஸ மாமநு ॥

*(மஹா. வநபர்வம் 12/45)*

பீஷ்மர் பாண்டவர்களின் ஸேனைகளை அழித்து வருகிறார். ஒன்பது நாட்கள் கழிந்துவிட்டன. அன்றிரவு
யுதிஷ்டிரர் மிகவும் கவலையோடு பகவானிடம் கூறினார்: "ஸ்ரீக்ருஷ்ண! நெருப்பில் விட்டில் பூச்சிகள் தாமே
போய் விழுந்து மடிவதுபோல நாம் பீஷ்மருடன் போரிட்டுக் கொண்டிருக்கிறோம். என்ன செய்யலாம் என்று
சொல்லுங்கள்." அப்போது பகவான் யுதிஷ்டிரருக்கு ஆறுதல் கூறுகிறார்: "நீங்கள் கவலைப்பட வேண்டாம்.
நீங்கள் ஆணையிட்டால் நானே பீஷ்மரை வதைத்து விடுகிறேன். நீங்கள் நிச்சயமாக நம்புங்கள். அர்ஜுனன்
பீஷ்மரை வதைத்துவிடுவான். எனக்கும், அர்ஜுனனுக்கும் உள்ள ப்ரேம பாசம்தான் உங்களுக்குத் தெரியுமே!
அரசே! உமது ஸஹோதரன் என்னுடைய உற்ற நண்பன், உறவினன், சீடன். அர்ஜுனனுக்காக என்னுடைய
சரீரத்தின் சதையையும் வெட்டிக் கொடுப்பேன் ஆண் சிங்கமான அர்ஜுனனும் என் பொருட்டுத் தன் உயிரையும்
தருவான். எங்கள் இருவரில் ஒருவருக்கு இன்னல் வந்தாலும் மற்றவர் கைதூக்கி விடுவது என்று எங்களுக்குள்
ஓர் ஒப்பந்தம் (மஹா. பீஷ்மபர்வம் *107/33.34*) உள்ளது."

தவ ப்$_4$ராதா மம ஸகா$_2$ ஸம்ப$_3$ந்தீ$_4$ ஶிஷ்ய ஏவ ச ।
மாம்ஸாந்யுத்க்ருத்ய தா$_3$ஸ்யாமி பா$_2$ல்கு$_3$நார்தே$_2$ மஹீபதே ॥
ஏஷ சாபி நரவ்யாக்$_4$ரோ மத்க்ருதே ஜீவிதம் த்யஜேத் ।
ஏஷ ந: ஸமயஸ்தாத தாரயேம பரஸ்பரம் ॥

பகவான் ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்குமிடையே எவ்வளவு சிறந்த நட்புரிமை இருந்தது என்பது
இதிலிருந்து தெரிகிறது.

கர்ணனுக்கு இந்த்ரனிடமிருந்து ஒரு சக்தி ஆயுதம் கிடைத்திருந்தது. அதன் வீச்சு வீண் போகாது. "யார்
மீது இதன் வீச்சுப்பட்டாலும் அவன் அழிந்தே போவான் ஆனால் அதை ஒரே ஒரு முறை மட்டுமே
உபயோகிக்கலாம்" என்று இந்த்ரன் சொல்லியிருந்தான் கர்ணன் அதை அர்ஜுனன் மீது வீசுவது என்று
ஒதுக்கி வைத்திருந்தான். துர்யோதனன் முதலியோர் அர்ஜுனன் மீது அந்த சக்தி ஆயுதத்தை வீசி
மாய்த்துவிடுமாறு கர்ணனை அடிக்கடி தூண்டிக் கொண்டிருந்தனர் அர்ஜுனன் மீது அதை வீசிவிடுவது
என்று முனைந்துதான் இருந்தான் கர்ணன் ஆனால் அர்ஜுனன் எதிர்ப்பட்டவுடன் தேரோட்டியாக அமர்ந்திருந்த
கண்ணபிரான் கர்ணன் மீது தம் மாயையை விரித்து விடுவார் சக்தியை வீசவேண்டும் என்பது கர்ணனுக்கு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



'ஸர்வதர்மாந்' என்பதற்குப் பொருள். 12/6ல் 'ஸர்வாணி கர்மாணி' என்றும், 18/57ல் 'ஸர்வகர்மாணி' என்றும் இதையே கூறினார். அந்த ச்லோகங்களின் உரைகளில் விளக்கப்பட்டபடி பகவானிடம் அவற்றை அர்ப்பணம் பண்ணுவதுதான் 'த்யாகம்'. இந்த அத்யாயத்தில் த்யாகம் பற்றிக் கூறும்போது, ஏழாவது ச்லோகத்தில் விதித்துள்ள கடமைகளை ஆற்றாமல் விட்டுவிடுவது முறையாகாது. மதிமயக்கத்தினால் அப்படி த்யாகம் செய்வது தாமஸ த்யாகம் ஆகும் என்று தெளிவாகக் கூறியிருக்கிறார். ஆகவே இங்கு 'பரித்யஜ்ய' என்ற சொல்லுக்குக் கர்மங்களைச் செய்யாமல் விடுவது என்று பொருள் கொள்ளக் கூடாது.

மேலும் க்ஷத்ரிய தர்மமான போரைத் துறக்கக் கூடாது; எல்லாக் கர்மங்களையும் பகவானுக்கே அர்ப்பணம் செய்து போர் புரியவேண்டும் என்று ஆங்காங்கே பகவான் அர்ஜுனனுக்கு ஆணையிட்டிருக்கிறார் (3/30, 8/7, 11/34). கீதை முழுவதையும் கேட்டுக் கொண்ட பிறகு 18/73ல் அர்ஜுனன் 'கரிஷ்யே வசநம் தவ' (உங்கள் சொற்படி நடப்பேன்) என்று கூறி ஸ்வதர்மமான போரில் இறங்கிவிடுகிறார். ஆகவே, இங்கு எல்லாக் கர்மங்களையும் பகவானிடம் ஸமர்ப்பணம் செய்வதுதான் அதாவது எல்லாமே பகவானுடையதுதான் என்ற கருத்துடன் மனம், உடல், புலன்கள் மூலம் ஆற்றப்படும் கடமைகளிலும், அவற்றின் பயன்களான அனைத்துப் போகங்களிலும், மமகாரம், பற்றுதல், அபிமானம், ஆசை இவற்றை அறவே துறந்து விடுவதுதான் பகவானுக்காகவே பகவானுடைய ஆணையின் தூண்டுதலால், அவர் செய்விக்கிறபடி – ஆட்டுவிப்பவன் கைப்பாவை போலச் செயல்படுவதுதான் – எல்லா தர்மங்களையும் அர்ப்பணம் செய்வதாகும். அவற்றை உள்ளபடியே செய்யாமல் விடுவது அன்று.

---

மறந்துவிடும். இதனிடையே பீமஸேனனின் குமாரனான கடோத்கசன், ராக்ஷஸ மாயையைக் கொண்டு கௌரவ ஸேனைக்கு பயங்கரமாகப் பெரும் நாசம் விளைவித்தான். துர்யோதனன் முதலானோர் மிகவும் பயந்தனர். எல்லோருமாகக் கர்ணனை அழைத்து வேண்டினர். "இந்த்ரனின் சக்தியைக் கொண்டு முதலில் இவனைக் கொன்றுவிடு. அப்போதுதான் நாம் தப்பிப் பிழைக்கலாம். இந்நள்ளிரவில் நம் அனைவரையும் இவ்வரக்கன் அழித்துவிட்டால், அர்ஜுனனை வதைப்பதற்காக என்று ஒதுக்கப்பட்ட சக்தி ஆயுதத்தினால் நமக்கு என்ன பயன் ஏற்படப் போகிறது?" ஆகவே கர்ணன் அந்த சக்தியை கடோத்கசன் மேல் வீச வேண்டியதாயிற்று. கடோத்கசன் அடிபட்டு இறந்தான். கடோத்கசன் இறந்ததைப் பார்த்து பாண்டவர்கள் அனைவரும் துயரத்தில் ஆழ்ந்தனர். ஆனால் பகவானுக்கு மட்டும் மிகவும் மகிழ்ச்சி. அவர் மகிழ்ச்சி கட்டுக்கடங்காமல் அர்ஜுனனை இழுத்து மார்புறத் தழுவிக் கொண்டார். பிறகு ஸாத்யகியிடம் சொன்னார்: "ஸாத்யகியே! போரின்போது நான்தான் கர்ணனுடைய அறிவை மயங்கச் செய்திருந்தேன். அதனால்தான் அவன் இது வரை அர்ஜுனன் மீது சக்தியை வீசவில்லை. அர்ஜுனனை மாய்க்கத்தக்க அந்த சக்தி கர்ணனிடம் இருந்தவரை எனக்குக் கவலைதான். இந்தக் கவலையினால் எனக்கு இரவுத் தூக்கமே போய்விட்டது. மனதில் மகிழ்ச்சியே இல்லை. வீண்போகாத அந்த சக்தி இன்று வீணாயிற்று. அர்ஜுனன் யமன் வாயிலிருந்து தப்பினான் என்று நான் எண்ணுகிறேன். இதைப் பார். என் தாய் தந்தையராகட்டும், நீங்களாகட்டும், உற்றார்-உறவினர் அனைவரும் ஆகட்டும், என்னுடைய உயிரே ஆகட்டும், அர்ஜுனனைக் காட்டிலும் பெரிதன்று. நான் இந்தப் போரில் அர்ஜுனனைக் காப்பது எவ்வளவு அவசியம் என்று நினைக்கிறேனோ. அவ்வளவு வேறு யாரைப் பற்றியும் நினைக்கவில்லை. மூவுலக அரசாட்சியைக் காட்டிலும் கிடைத்தற்கரிய ஒரு பொருள் இருக்குமேயானால், அதைக்கூட அர்ஜுனனை விட்டுவிட்டு அதைப் பெற விரும்ப மாட்டேன். இப்பொழுது அர்ஜுனனுக்கு மறுபிறவி கிடைத்தாற்போல ஆகிவிட்டது. இதைப் பார்த்த எனக்குப் பெருமகிழ்ச்சி ஏற்படுகிறது."

த்ரைலோக்யராஜ்யாத்3யத்கிஞ்சித்3பு4வேத3ந்யத்ஸுது3ர்லப4ம் ।
நேச்சே2யம் ஸாத்வதாஹம் தத்3விநா பார்த2ம் த4நஞ்ஜயம் ॥
அத: ப்ரஹர்ஷ: ஸுமஹாந் யுயுதா4நாத்3ய மேபு4வத் ।
ம்ருதம் ப்ரத்யாக3தமிவ த்3ருஷ்ட்வா பார்த2ம் த4நஞ்ஜயம் ॥

(மஹா த்3ரோண 182/44,45)

ஸ்ரீக்ருஷ்ணனுக்கும், அர்ஜுனனுக்கும் உள்ள புகழ்பெற்ற நட்பின் பெருமையை துர்யோதனனே ஓரிடத்தில் கூறினான்— "ஸ்ரீக்ருஷ்ணன் அர்ஜுனனுடைய ஆத்மா. அர்ஜுனன் ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஆத்மா. அர்ஜுனன் எது சொன்னாலும் அதைச் செய்தே தீருவார் ஸ்ரீக்ருஷ்ணன். இதில் சிறிதுகூட ஐயமில்லை. ஸ்ரீக்ருஷ்ணன் அர்ஜுனனுக்காக திவ்யலோகத்தைக் கூட இழப்பார் அதேபோல அர்ஜுனனும் ஸ்ரீக்ருஷ்ணனுக்காக உயிரையும் விட்டுவிடுவார்."

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**கேள்வி:** 'இவ்விதம் எல்லா தர்மங்களையும், என்னிடம் அர்ப்பணம் செய்து விட்டுப் பரமேசுவரன் என் ஒருவனையே சரணடைவாயாக' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** மேலே சொன்னவிதம் எல்லாக் கர்மங்களையும் பகவானுக்கே அர்ப்பணம் செய்துவிட்டு *12/6*லும், *9/34*லும், *18/57*லும் சொன்னபடி பகவானையே அடையத்தக்க பரமகதியாகவும், பரம ஆதாரமாகவும், பரம ப்ரியனாகவும், மிகவும் ஹிதத்தை விரும்புபவராகவும், சிறந்த நண்பராகவும், தனக்கே சொந்தமானவராகவும், பர்த்தாவாகவும், யஜமானராகவும், காப்பாளராகவும் மதித்துப் போற்றி, அமர்ந்தாலும், எழுந்தாலும், உண்ணும்போதும், அருந்தும்போதும், அலைந்தாலும், திரிந்தாலும், உறக்கத்திலும், விழிப்பிலும், எவ்விதத்திலும் அவருடைய ஆணைகளை நிறைவேற்றி மிகுந்த நம்பிக்கையுடன், அநன்ய ப்ரேமையுடன் என்றும் இடைவிடாது அவரை நினைத்திருக்க வேண்டும். அவர் விதித்த நிலைமைகளில் எப்போதும் ஸந்தோஷமாக இருக்கவேண்டும். இவ்விதம் ப்ரஹ்லாதன்போல பகவான் ஒருவரையே சார்ந்திருத்தலே பரமேசுவரன் ஒருவரையே சரணமடைவதாகும்.

**கேள்வி:** 'நான் உன்னைப் பாவங்கள் அனைத்திலிருந்தும் விடுவிப்பேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** நல்ல கர்மமானாலும் சரி, தீய கர்மமானாலும் சரி, அவற்றின் பயனாகத் தளைகள் ஏற்படத்தான் செய்யும். அந்தத் தளைகளின் காரணமாக மனிதன் பல பிறவிகளில், பல யோனிகளில் சுழல வேண்டியிருக்கும். இக்கர்மத்தளைகளைத்தான் இங்கே பாவம் என்று குறிப்பிடுகிறார். அத்தளைகளிலிருந்து விடுவிப்பதுதான் பாவங்களிலிருந்து விடுவிப்பது ஆகும். *3/31*ல் 'கர்மபி$_4$ முச்யந்தே' என்றார். *12/7*ல் 'ம்ருத்யுஸம்ஸாரஸாக$_3$ராத் ஸமுத்$_3$த$_4$ர்தா

---

ஆத்மா ஹி க்ருஷ்ண: பார்த$_2$ஸ்ய க்ருஷ்ணஸ்யாத்மா த$_4$நஞ்ஜய: ॥
யத்$_3$ ப்$_3$ரூயாத$_3$ர்ஜுந: க்ருஷ்ணம் ஸர்வம் குர்யாத$_3$ஸம்ஶயம் ।
க்ருஷ்ணோ த$_4$நஞ்ஜயஸ்யார்தே$_2$ ஸ்வர்க$_3$லோகமபி த்யஜேத் ॥
ததை$_2$வ பார்த$_2$: க்ருஷ்ணார்தே$_2$ ப்ராணாநபி பரித்யஜேத் ।

(மஹா. ஸப$_4$ா. 52/31–33)

ஸ்ரீக்ருஷ்ணனுக்கும், அர்ஜுனனுக்கும் உள்ள லக்ஷ்ய அன்புக்கு இன்னும் பல உதாரணங்கள் சொல்லலாம். இவற்றை மஹாபாரதத்திலும், ஸ்ரீமத்பாகவதத்திலும் ஆங்காங்கே காணலாம்.

அர்ஜுனனுடைய இந்தச் சிறப்பான ப்ரேமையின் ப்ரபாவம் கண்ணனை ரஹஸ்யங்களுள்ளும் மிக ரஹஸ்யமான ஞானத்தை மட்டும் சொல்ல வைக்கவில்லை. அதைக் காட்டிலும் மிகமிக ரஹஸ்யமான தம்முடைய புருஷோத்தம ஸ்வரூபத்தையும் அவனுக்கு முன்னே காண்பிக்க வைத்தது. அது மட்டுமன்று. பரமபதமான வைகுண்டத்தில் பகவானுக்கு ஸேவை செய்யும் எந்தப் பெரும் பேற்றினைப் பெறுவதற்காகப் பெருமை படைத்த ப்ரம்மஞானிகள் துடித்துக் கொண்டிருக்கிறார்களோ, அந்தப் பெரும்பேறு அர்ஜுனனுக்குக் கிடைத்தது. ஸ்வர்கம் சென்ற பிறகு யுதிஷ்டிரர் தெய்விக உடல் பெற்று வைகுண்டம் சென்றார். பகவான் ஸ்ரீகோவிந்தன் அங்கு பரப்ரம்ம வடிவில் விளங்குகிறார்; அவருடைய வடிவம் ஒளிப்பிழம்பாய்த் திகழ்கிறது; அவரருகில் சக்ரம் முதலிய தெய்விக சஸ்த்ரங்களும், கோரமான பிற அஸ்த்ரங்களும் தெய்விக புருஷ சரீரம் தாங்கி அவருக்கு ஸேவை செய்து கொண்டிருக்கின்றன. மிகுந்த தேஜஸ் உடைய அர்ஜுனனும் அங்கே பகவானுக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தார். இந்தக் காட்சியை அங்கு யுதிஷ்டிரர் பார்த்தார்.

ததர்ஶ தத்ர கோ$_3$விந்த$_3$ம் ப்$_3$ராஹ்மேண வபுஷாந்விதம் ॥
தீ$_3$ப்யமாநம் ஸ்வவபுஷா தி$_3$வ்யைரஸ்த்ரைருபஸ்தி$_2$தம் ।
சக்ரப்ரப்$_4$ருதிபி$_4$ர்கோ$_4$ரைர்தி$_3$வ்யை: புருஷவிக்$_3$ரஹை: ॥
உபாஸ்யமாநம் வீரேண ப$_2$ால்கு$_3$நேந ஸுவர்சஸா ।

(மஹா. ஸ்வர்க$_3$ா. 4/2–4)

கீதையின் தத்வத்தை நன்கு கேட்டுக் கற்று மனதில் பதிய வைத்துக் கொண்டால் இந்தப் பரமபாக்யம் கிடைக்கும் என்பது கருத்து. இப்படிப் புலனடக்கம், மனவடக்கம் கொண்ட த்யாக புருஷரான, மஹா ஞானியான, பகவானுடைய அன்புக்குரிய நண்பனும், ஸேவகனும், சீடனுமான அர்ஜுனனுக்கு இந்தப் பெரும்பேறு கிடைத்தது முற்றிலும் உசிதம்தான்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ப₄வாமி' என்றார். 18/58ல் 'மத்ப்ரஸாத₃ாத் ஸர்வது₃ர்க₃ாணி தரிஷ்யஸி' என்றார். அதையே இங்கே 'நான் உன்னை ஸகல பாவங்களிலிருந்தும் விடுவிக்கிறேன்' என்று கூறுகிறார்.

**கேள்வி:** 'மா ஶுச:' (நீ வருந்தாதே) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவான் அர்ஜுனனுக்கு ஆறுதல் கூறி, கீதோபதேசத்தை நிறைவு செய்கிறார். 2/11ல் 'அசோச்யாந்' என்று ஆரம்பித்து, 'மா ஶுச:' என்று முடிக்கிறார். 'நீ என்னைச் சரணடைந்தாய் (2/7). இப்போது முழுமையாக என்னைச் சரணடைந்து, சோகத்தை முற்றிலும் துறந்து, எவ்விதக் கவலையும் கொள்ளாது, எப்பொழுதும் பரமேசுவரனான என்னையே சார்ந்து இரு.' இவ்விதம் சோகத்தை அறவே களைவதும், பகவானை அடைவதும்தான் கீதையின் முக்யக் கருத்து.

**பொருத்தம்:** இவ்விதம் பகவான் கீதையின் உபதேசத்தை நிறைவு செய்து, இனி அந்த உபதேசத்தைக் கற்பிப்பது, கற்பது முதலியவற்றின் பெருமைகளை எடுத்துச் சொல்லும் பொருட்டு, முதலில் தகுதியற்றவர்களின் இலக்கணங்களைக் கூறி, அவர்களுக்கு கீதோபதேசம் செய்யக் கூடாது என்கிறார்—

**इदं ते नातपस्काय नाभक्ताय कदाचन।**
**न चाशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति॥ ६७॥**

**இத₃ம் தே நாதபஸ்காய நாப₄க்தாய கத₃ாசந ।**
**ந சாஶுஶ்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோঽப்₄யஸூயதி ॥ 67 ॥**

**தே** – உனக்கு (கூறப்பட்ட), **இத₃ம்** – இந்த ரஹஸ்யமான கீதோபதேசத்தை, **கத₃ாசந** – ஒருபோதும், **அதபஸ்காய** – தவம் இல்லாதவனுக்கு, **ந வாச்யம்** – சொல்லக்கூடாது. **அப₄க்தாய ச ந** – பக்தியில்லாதவனுக்கும் சொல்லக்கூடாது. **அஶுஶ்ரூஷவே ச ந** – கேட்க விரும்பாதவனுக்கும் சொல்லக்கூடாது. **ய:** – எவன், **மாம்** – என்னிடம், **அப்₄யஸூயதி** – குறை காண்கிறானோ, (**தஸ்மை** – அவனுக்கு ஒருபொழுதும்), **ந** – சொல்லக்கூடாது.

உனக்குக் கூறப்பட்ட இந்த ரஹஸ்யமான கீதோபதேசத்தை ஒருபோதும் தவம் இல்லாதவனுக்குச் சொல்லக்கூடாது. பக்தியில்லாதவனுக்கும் சொல்லக்கூடாது. கேட்க விரும்பாதவனுக்கும் சொல்லக்கூடாது. எவன் என்னிடம் குறை காண்கிறானோ அவனுக்கு ஒருபொழுதும் சொல்லக்கூடாது.

**கேள்வி:** 'இதம்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? 'தவம் இல்லாதவனுக்கு ஒருபோதும் சொல்லக் கூடாது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'இதம்' என்றால் இந்த கீதாசாஸ்த்ரம் என்று பொருள். இரண்டாவது அத்யாயம் 11வது ச்லோகம் முதல் 18/66 வரை அர்ஜுனனுக்கு பகவான் தம் குணங்கள், ப்ரபாவங்கள், ரஹஸ்யம், ஸ்வரூபம், தத்வம் இவற்றைத் தெரிவிப்பதற்காகச் செய்த உபதேசம் எல்லாம் 'இதம்' என்பதற்குப் பொருள். இதை யாருக்கு போதிக்கலாம்? அவருக்கு என்ன தகுதி இருக்கவேண்டும் என்பதைத் தீர்மானிப்பதற்காக, நான்கு வகையான மாசு உள்ளவர்களுக்கு உபதேசம் செய்யக்கூடாது என்று பகவான் தடை விதிக்கிறார். முதலாவதாக, தவம் செய்யாதவனுக்கு கீதோபதேசம் செய்யக்கூடாது என்கிறார்.

"இந்த கீதாசாஸ்த்ரம் மிகவும் மறைத்துப் போற்றப்பட வேண்டிய நூல். நீ என்னிடம் மிகவும் அன்புள்ள பக்தனாகவும், தெய்விக ஸம்பத் நிறைந்தவனாகவும் இருப்பதால் நீ உபதேசம் பெறத்தக்கவன் என்றும், உன் மேன்மையைக் கருதியும், உனக்கு உபதேசம் செய்தேன். எவனொருவன் ஸ்வதர்மத்தைக் கடைப்பிடித்து ஒழுகுவது என்ற தவம் செய்யாதவனோ, உலகியல் போகங்களில் உள்ள பற்றினால் உலகியல் சிற்றின்ப வேட்கைக்கு

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஆட்பட்டு ஸ்வதர்மத்தைக் கைவிட்டுப் பாவ கர்மங்களில் ஈடுபடுகிறானோ, அத்தகையவனுக்கு என்னுடைய குணங்கள், ப்ரபாவங்கள், தத்வங்கள் நிறைந்த இந்த சாஸ்த்ரத்தைச் சொல்லக் கூடாது. ஏனெனில் அவன் இதைப் புரிந்து கொள்ள முடியாது. இந்த உபதேசத்திற்கும், எனக்கும் மரியாதை இராது" என்கிறார் பகவான்.

**கேள்வி:** 'பக்தியில்லாதவனுக்கும் ஒருபொழுதும் இதை உபதேசம் செய்யக் கூடாது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இப்படிச் சொல்வதன் மூலம், பக்தி இல்லாத மனிதனுக்கு மேலே சொன்ன உபதேசத்தைச் சொல்வதைத் தடுக்கிறார். பரமாத்மாவான என்னிடம் எவனுக்கு நம்பிக்கையும், ப்ரேமையும், மதிப்பும் இல்லையோ, எவன் தன்னையே பெரியவனாக நினைத்துக் கொண்ட நாஸ்திகனோ, அத்தகையவனுக்கும் மிகவும் மறைத்துப் போற்றப்பட வேண்டிய இந்த கீதாசாஸ்த்ரத்தைச் சொல்லக் கூடாது. அவன் இதைக் கேட்டு விட்டு, இதன் கருத்துக்கள் புரியாத காரணத்தால் மனதில் ஏற்றுக் கொள்ளமாட்டான் என்கிறார்.

**கேள்வி:** 'அஶுஶ்ரூஷவே' என்றால் என்ன பொருள்? 'அவனுக்கும் சொல்லக்கூடாது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** எவனுக்கு இந்த கீதா சாஸ்த்ரத்தைக் கேட்டறிந்து கொள்ள விருப்பமில்லையோ, அவனை 'அஶுஶ்ரூஷவே' என்ற சொல் குறிக்கிறது. அவனுக்கு உபதேசம் செய்வதைத் தடுக்கிறார். ஒருவன் ஸ்வதர்மத்தை நன்கு கடைப்பிடித்து வரலாம். அவனுக்கு கீதாசாஸ்த்ரத்தைக் கேட்டறிவதில் ச்ரத்தையும், ப்ரேமையும் இல்லாததால், கேட்க விருப்பமில்லாவிடில் மறைத்துப் போற்றப்பட வேண்டிய கீதையை அவனுக்கும் உபதேசம் செய்யக் கூடாது. அவனுக்கு இதைக் கேட்டுச் சலிப்பு ஏற்படலாம். அதனால் ஏற்றுக் கொள்ள முடியாது. ஆகவே என் உபதேசத்திலும், என்னிடத்திலும் அலக்ஷ்யம் ஏற்பட்டுவிடும் என்கிறார்.

**கேள்வி:** 'என்னிடம் குறை காண்பவனுக்கு ஒருபோதும் இதைச் சொல்லவே கூடாது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "உலகை உய்விப்பதற்காக ஸகுண ஸ்வரூபமாக வெளிப்பட்டுள்ள பரமாத்மாவான என்னிடம், யார் குறை காண்கிறார்களோ, என்னுடைய குணங்களைக் குற்றமாகக் கருதி என்னை நிந்திக்கிறார்களோ – அத்தகையவருக்கு எந்த நிலையிலும் இந்த கீதையை உபதேசிக்கக் கூடாது. என்னுடைய குணங்களிலும், ப்ரபாவங்களிலும், ஆளுமையிலும் அவர்களுக்கு ஏற்படும் பொறாமையின் காரணமாக இவ்வுபதேசத்தைக் கேட்டு முன்னிலும் அதிகமாக என்னை அவமதித்துப் பாவத்தைச் சேர்த்துக் கொள்வார்கள்" என்று எச்சரிக்கிறார்.

**கேள்வி:** இந்த நான்கு குற்றங்களும் சேர்ந்தாற்போல் இருப்பவர்களுக்குத்தான் இதைச் சொல்லக் கூடாதா? அல்லது ஒன்று, இரண்டு, மூன்று குற்றமிருந்தாலும்கூடச் சொல்லக் கூடாதா?

**பதில்:** இந்த நான்கு குறைகளில் ஒன்றுகூட இல்லாதவர்தாம் இந்த உபதேசம் பெற முற்றிலும் தகுதி பெற்றவர் ஆவர். இவரைத் தவிர ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பதில் சற்றுக் குறை இருந்தாலும், மற்ற மூன்று குறைகள் இல்லாவிட்டால் அவருக்கும் இதைக் கேட்கத் தகுதியுண்டு. ஸ்வதர்மம் என்ற தவம் செய்யாவிட்டாலும், பகவானிடம் பூரணபக்தி இல்லாவிட்டாலும், கீதையைக் கேட்க வேண்டும் என்று விருப்பம் இருந்துவிட்டால் அவர் ஓரளவு தகுதி பெற்றவர்தான். ஆனால் பகவானிடமே குற்றம், குறை காண்பவனுக்கும், அவரை இகழ்பவனுக்கும் கீதையைக் கேட்கச் சற்றும் தகுதி கிடையாது. அவனுக்கு ஒருபோதும் சொல்லக்கூடாது.

**பொருத்தம்:** இவ்விதம் கீதை உபதேசம் பெறத்தகாதவரின் இலக்கணங்களைக் கூறிவிட்டு, அடுத்து வரும் இரண்டு ச்லோகங்களால் தம் பக்தர்களுக்கு இதை உபதேசம் செய்வதன் பயனையும், பெருமையையும் கூறுகிறார்—

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



य इमं परमं गुह्यं मद्भक्तेष्वभिधास्यति।
भक्तिं मयि परां कृत्वा मामेवैष्यत्यसंशयः॥ ६८॥

**ய இமம் பரமம் கு₃ஹ்யம் மத்₃ப₄க்தேஷ்வபி₄த₄ாஸ்யதி ।**

**ப₄க்திம் மயி பராம் க்ருத்வா மாமேவைஷ்யத்யஸம்ஶய: ॥ 68 ॥**

**ய:** – எந்த மனிதன், **மயி** – என்னிடம், **பராம் ப₄க்திம்** – உயர்ந்த ப்ரேமை மிகுந்த பக்தியை, **க்ருத்வா** – செய்து, **இமம் பரமம்** – இந்த உயர்ந்த, **கு₃ஹ்யம்** – ரஹஸ்யமான கீதா சாஸ்த்ரத்தை, **மத்₃பக்₄தேஷு** – என்னுடைய பக்தர்களுக்கு, **அபி₄த₄ாஸ்யதி** – சொல்வானோ, (ஸ: – அவன்), **மாம் ஏவ** – என்னையே, **ஏஷ்யதி** – அடைகிறான், **அஸம்ஶய:** – இதில் ஸந்தேஹமில்லை.

எந்த மனிதன் என்னிடம் உயர்ந்த ப்ரேம பக்தியைச் செய்து இந்த உயர்ந்த ரஹஸ்யமான கீதா சாஸ்த்ரத்தை என்னுடைய பக்தர்களுக்குச் சொல்லுவானோ அவன் என்னையே அடைகிறான். இதில் ஸந்தேஹமில்லை.

**கேள்வி:** 'இமம் பரமம் குஹ்யம்' என்பதன் பொருள் என்ன?

**பதில்:** 'இமம்' என்ற சொல் இங்கு கீதோபதேசத்தைக் குறிக்கிறது. இந்த உபதேசம் மனிதனை ஸம்ஸாரத்தளைகளிலிருந்து விடுவித்து, பரமாத்மாவையே அடையச் செய்வதாகையால் மிகவும் சிறந்தது, மறைத்துக் காப்பாற்றப்பட வேண்டியது என்பதை பரமம், குஹ்யம் என்ற சொற்கள் காட்டுகின்றன.

**கேள்வி:** 'மத்பக்தேஷு' என்ற சொல்லின் பொருள் என்ன? இங்கு இச்சொல்லை உபயோகித்துக் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** பகவானிடம் நம்பிக்கை உள்ளவர்களையும், அதாவது பகவான் அகில உலகையும் படைத்துக் காத்து வருகிறார், ஸர்வ வல்லமை படைத்தவர், அனைவரையும் ஆள்பவர் – என்றுணர்ந்து அவரிடம் ப்ரேமை கொள்பவர்களையும், பகவானுடைய குணங்கள், ப்ரபாவங்கள், லீலைகள், தத்வம் பற்றிக் கேட்க ஆர்வம் கொண்ட உள்ளம் படைத்தவர்களையும், அப்படியே கேட்டதும் மலர்ச்சி அடைபவர்களையும் 'மத்பக்தேஷு' என்ற சொல் குறிக்கிறது. இங்ஙனம் கூறி கீதை கேட்கத் தகுதி பெற்றவர்கள் யார் என்பதை நிர்ணயிக்கிறார். என் பக்தனிடம் முன் ச்லோகத்தில் கூறப்பட்ட நான்கு குறைகளும் தாமாகவே இல்லாமல் போகும். என் பக்தன்தான் இதற்குத் தகுதியானவன். மனிதர்கள் அனைவரும் எந்த வர்ணத்தவராயினும், ஜாதியைச் சேர்ந்தவராயினும் என் பக்தராக முடியும் (9/32). ஆகவே வர்ணம் அல்லது ஜாதியின் காரணமாக எவரும் இதற்குத் தகுதியற்றவராகார்.

**கேள்வி:** 'என்னிடம் உயர்ந்த ப்ரேம பக்தி கொண்டு பக்தர்களிடத்தில் இவ்வுபதேசத்தைச் செய்ய வேண்டும்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ஒருவன் தானாகவே பகவானிடம் அல்லது அவருடைய மொழிகளில் மிகுந்த நம்பிக்கைக் கொண்டு, பகவானுடைய திருநாமங்கள், கல்யாண குணங்கள், லீலைகள், ப்ரபாவம், ஸ்வரூபம் இவற்றை நினைத்த அளவிலேயே அவருடைய ப்ரேமையில் மனமுருகி, பகவானுடைய மகிழ்ச்சிக்காக மட்டுமே நிஷ்காமமாக, மேலே கூறப்பட்ட பக்தர்களிடையே இந்த கீதாசாஸ்த்ரத்தைப் பற்றி விரிவுரையாற்ற வேண்டும். அதாவது பகவானுடைய பக்தர்களுக்கு கீதையின் மூல ச்லோகங்களைக் கற்பிக்க வேண்டும். அவற்றை விளக்கிப் பொருள் கூற வேண்டும். சரியாக உச்சரித்துப் படிக்கும்படிச் செய்ய வேண்டும். அவற்றின் கருத்துக்களை நயம்பட உரைக்கவேண்டும். கேட்பவர்களின் ஐயங்களைத் தீர்க்கவேண்டும். கீதையின் உபதேசங்களை அவர்கள் உள்ளத்தில் பதிய வைக்கவேண்டும். கீதையின் உபதேசத்தின்படி வாழ்க்கை நடத்துவதற்குரிய மன உறுதியை அவர்களிடம் ஏற்படுத்த

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வேண்டும். இவையெல்லாம் பகவானிடம் பரமப்ரேமை பூண்டு, பகவானுடைய பக்தர்களிடையே கீதை உபதேசம் செய்வதில் அடங்குபவை.

**கேள்வி:** 'அவர் என்னையே அடைவார். இதில் ஸந்தேஹமில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** என்னிடம் பக்தி செய்ய வேண்டும் என்ற ஒரே குறிக்கோளுடன் நிஷ்காமமாக என்னுடைய கருத்துக்களைத் தெரிந்து கொள்ள ஆர்வம் கொண்ட பக்தர்களிடையே இந்த கீதையை விளக்கி ப்ரசாரம் செய்பவர் என்னையே அடைவார். இதில் சிறிதுகூட ஸந்தேஹமில்லை. அதாவது இதுவே என்னை அடைவதற்குரிய முடிவான உபாயம். இந்த கீதா சாஸ்த்ரத்தை தகுதியுள்ளவர்களுக்கு எடுத்துரைத்து, இதை ப்ரசாரம் செய்வது, என்னை அடைய விரும்பும் (தகுதியுள்ள) பக்தர்களின் இன்றியமையாத கடமை. என்னை அடைய விருப்பம் உடைய தகுதியுள்ள பக்தர்கள் இந்த கீதா சாஸ்த்ரத்தைப் பிறருக்கு எடுத்துரைப்பதையும், இதை ப்ரசாரம் செய்வதையும் தவறாமல் செய்ய வேண்டும்.

**न च तस्मान्मनुष्येषु कश्चिन्मे प्रियकृत्तमः।**
**भविता न च मे तस्मादन्यः प्रियतरो भुवि॥६९॥**

**ந ச தஸ்மாந்மநுஷ்யேஷு கஶ்சிந்மே ப்ரியக்ருத்தம: ।**
**ப₄விதா ந ச மே தஸ்மாத₃ந்ய: ப்ரியதரோ பு₄வி ॥ 69 ॥**

**தஸ்மாத்** – அந்த பக்தனைக் காட்டிலும், **மே** – எனக்கு, **ப்ரியக்ருத்தம:** – மிகவும் ப்ரியமான கார்யத்தைச் செய்யக் கூடியவன், **மநுஷ்யேஷு** – மனிதர்களில், **கஶ்சித் ச ந** – வேறு எவனுமில்லை. **ச** – அப்படியே, **பு₄வி** – பூமியில், **தஸ்மாத்** – அவனைக் காட்டிலும், **மே** – எனக்கு, **ப்ரியதர:** – மிக ப்ரியமான, **அந்ய:** – வேறொருவன், **ந ப₄விதா** – இருக்கப் போவதில்லை.

அந்த பக்தனைக் காட்டிலும் எனக்கு மிகவும் ப்ரியமான கார்யத்தைச் செய்யக் கூடியவன் மனிதர்களில் எவனுமில்லை. அப்படியே பூமியில் அவனைக் காட்டிலும் எனக்கு மிகவும் ப்ரியமானவன் வேறொருவன் இருக்கப் போவதில்லை.

**கேள்வி:** 'தஸ்மாத்' என்பது யாரைக் குறிக்கிறது? 'அவரைக் காட்டிலும் எனக்கு ப்ரியமான கார்யம் செய்பவர் மனிதருள் எவருமே கிடையாது' என்று கூறுவதன் கருத்தென்ன?

**பதில்:** 'தஸ்மாத்' என்பது இங்கு முன் ச்லோகத்தில் கூறியபடி கீதா சாஸ்த்ரத்தை பகவத் பக்தர்களிடம் விளக்குபவரான, கீதாசாஸ்த்ரத்தின் மர்மம் அறிந்த, மிகுந்த ச்ரத்தையுள்ள ப்ரேமை கொண்ட பகவத் பக்தரைக் குறிக்கிறது. அவரைக் காட்டிலும் எனக்கு ப்ரியமான கார்யம் செய்பவர் மனிதர்களுள் ஒருவரும் இலர். யாகம், தானம், தவம், ஸேவை, பூஜை, ஜபம், த்யானம் ஆகியவையனைத்துமே எனக்கு ப்ரியமான கார்யங்கள்தாம். என் கருத்துக்களை என் பக்தர்களிடையே விளக்குவது இவையனைத்திலும் மேலானது. இச்செயலுக்கு நிகராக நான் உகக்கும் செயல் உலகில் வேறொன்றும் கிடையாது. இக்காரணத்தினால் என் கருத்துக்களை ச்ரத்தையுடனும், பக்தியுடனும் பக்தர்களிடையே விளக்குகிற என்னிடம் ப்ரேமை கொண்ட பக்தரே எனக்கு அனைவரிலும் இனியவர். அவரிலும் இனியவர் வேறொருவர் இல்லை. ஏனெனில் அவர் தன்னலத்தை அறவே துறந்து நான் உவக்கும் கார்யத்தை மட்டுமே செய்கிறார். ஆகவே அவர் எனக்கு மிகவும் ப்ரியமானவர்.

**கேள்வி:** 'பூமியில் அவரைக் காட்டிலும் எனக்கு மிகவும் ப்ரியமானவர் வேறொருவர் இருக்கப் போவதுமில்லை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இச்சமயத்தில், இவரைக் காட்டிலும் எனக்கு ப்ரியமானவர் இல்லை என்பது மட்டுமன்று. ஆனால், இவரைக் காட்டிலும் அதிக ப்ரியமுடையவர் தோன்றலாம்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



என்பதும் நிகழக் கூடியது அன்று. இதைக்காட்டிலும் நான் உகக்கும் மேலான கார்யம் எதுவும் இல்லை என்று சொன்ன பிறகு எந்த ஸாதனை புரிபவனும், அவரைக் காட்டிலும் எனக்கு இனியவன் ஆகிவிட முடியாது. ஆகவே என்னை அடைவதற்கான ஸாதனங்கள் அனைத்திலும் சிறந்தது, 'பக்தியுடன் என் பக்தர்களிடையே இந்த கீதா சாஸ்த்ரத்தைப் பரப்புவதுதான்.' இதை நன்கு புரிந்து கொண்டு என் பக்தர்கள் இதைச் செய்ய வேண்டும் என்று பகவான் அறிவிக்கிறார்.

பொருத்தம்: இவ்விதம் மேலே சொன்ன இரண்டு ச்லோகங்களில் கீதா சாஸ்த்ரத்தை ச்ரத்தையுடனும், பக்தியுடனும் பகவத் பக்தர்களிடையே பரப்புவதன் பயனையும், பெருமையையும் கூறினார். இதை அனைவரும் செய்ய முடியாதே; இதற்குத் தகுதி பெற்றவர் மிகச் சிலரே. ஆகவே கீதா சாஸ்த்ரத்தைக் கற்பதன் பெருமையைக் கூறுகிறார்—

**अध्येष्यते च य इमं धर्म्यं संवादमावयोः।**
**ज्ञानयज्ञेन तेनाहमिष्टः स्यामिति मे मतिः॥ ७०॥**

**அத்₄யேஷ்யதே ச ய இமம் த₄ர்ம்யம் ஸம்வாத₃மாவயோ: ।**
**ஜ்ஞாநயஜ்ஞேந தேநாஹமிஷ்ட: ஸ்யாமிதி மே மதி: ॥ 70 ॥**

**ய:** – எந்த மனிதன், **இமம்** – இந்த, **த₄ர்ம்யம்** – தர்மம் நிறைந்த, **ஆவயோ:** – நம் இருவருடைய, **ஸம்வாத₃ம்** – உரையாடல் வடிவிலுள்ள கீதா சாஸ்த்ரத்தை, **அத்₄யேஷ்யதே** – கற்றறிகிறானோ, **தேந ச** – அவனாலும், **அஹம்** – நான், **ஜ்ஞாநயஜ்ஞேந** – ஞான வேள்வியினால், **இஷ்ட: ஸ்யாம்** – வழிபட்டவனாக ஆவேன், **இதி** – என்பது, **மே மதி:** – என்னுடைய கருத்து.

எந்த மனிதன் இந்த தர்மமயமான நம் இருவருடைய உரையாடலான கீதா சாஸ்த்ரத்தைக் கற்பானோ அவனாலும் நான் ஞான வேள்வியினால் வழிபட்டவனாக ஆவேன் என்பது என்னுடைய கருத்து.

**கேள்வி:** 'இமம் தர்ம்யம் ஆவயோ: ஸம்வாதம்' என்ற சொற்றொடரில் 'இமம்' என்ற அடைமொழி எதைக் குறிக்கிறது? 'தர்ம்யம்' என்ற அடைமொழி கொடுப்பதன் கருத்து என்ன?

**பதில்:** அர்ஜுனனுக்கும், ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் இடையே கேள்வி பதில் வடிவில் அமைந்தது இந்த கீதாசாஸ்த்ரம். இதை 68வது ச்லோகத்தில் 'பரமம் குஹ்யம்' என்று கூறினார். இதற்கு இங்கே நம்மிடையே நடந்த தர்மம் நிறைந்த உரையாடல் என்று அடைமொழி கொடுக்கிறார். பரமாத்மாவான என்னால் கூறப்பட்ட சாஸ்த்ரம் இது. ஆகவே இதில் கூறப்பட்ட உபதேசங்கள் முழுவதிலும் தர்மங்கள் ஊடும், பாவுமாக நிறைந்துள்ளன. ஒரு சொல்கூட தர்மத்திற்கு முரணாகவோ, வீணானதாகவோ இல்லை. ஆகவே இதில் கூறப்பட்ட தர்மங்களை ஏற்றுக் கடைப்பிடிக்க வேண்டியது மக்களின் மிகச் சிறந்த கடமை என்கிறார்.

**கேள்வி:** கீதாசாஸ்த்ரத்தைக் கற்பது என்றால் என்ன கருத்து?

**பதில்:** கீதையின் உட்பொருள் அறிந்த பகவானுடைய பக்தர்களிடம் இந்த சாஸ்த்ரத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்வது; இதைத் தினந்தோறும் பாராயணம் செய்வது; இதன் பொருள் விளக்கத்தைப் படிப்பது; அதை ஆராய்வது; இதன் பொருள் அறிந்த பக்தர்களிடமிருந்து இதன் பொருளைத் தெரிந்து கொள்ள முயல்வது. இந்தப் பயிற்சி எல்லாமே கீதாசாஸ்த்ரத்தைக் கற்பது என்பதில் அடங்கும்.

ச்லோகங்களின் பொருளைப் புரிந்து கொள்ளாமல் கீதையைப் படிப்பது, அன்றாடம் பாராயணம் செய்வது, இவற்றைக் காட்டிலும் அதன் பொருளையும் சேர்த்தே படிப்பதும், பொருளுணர்ந்து நித்யபாராயணம் செய்வதும் மிகச் சிறந்தவை. அவ்விதமே பொருளைப்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



புரிந்து கொண்டு படிக்கும்போதோ, பாராயணம் செய்யும்போதோ, ப்ரேமையில் மூழ்கி மெய்சிலிர்த்திருத்தல் அதனிலும் சிறந்தது.

**கேள்வி:** 'அவனாலும் நான் ஞான யக்ஞத்தினால் வழிபட்டவனாகிறேன் என்பது என் கொள்கை' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** கீதா சாஸ்த்ரத்தைக் கற்றுக் கொள்ளும் மனிதனுக்கு எனது ஸகுண ஸ்வரூபம், நிர்குண ஸ்வரூபம், உருவமுள்ள ஸ்வரூபம், உருவமற்ற ஸ்வரூபம் பற்றிய தத்வங்களின் உண்மை அறிவு நன்றாக ஏற்பட்டுவிடும். ஆகவே எவர் ஒருவர் எனது தத்வம் அறிந்து கொள்வதற்காக இந்த கீதா சாஸ்த்ரத்தைப் படிக்கிறாரோ, அவர் ஞான யக்ஞம் செய்து என்னைப் பூஜிக்கிறார் என்று ஏற்றுக் கொள்வேன். இந்த ஞான யக்ஞமானது பொருட்களைக் கொண்டு அக்னியில் ஆஹுதி செய்யும் த்ரவ்ய யக்ஞத்தைவிட மிகவும் சிறந்ததெனக் கருதப்பட்டது (4/33). ஏனெனில் எல்லா ஸாதனைகளுக்கும் முடிவான பயன் பகவானுடைய தத்வத்தை நன்கு அறிந்து கொள்வதுதான். அந்தப் பயன் இந்த ஞான யக்ஞத்தின் மூலம் எளிதாகக் கிட்டுகிறது. ஆகவே மேன்மையை விரும்பும் மனிதன் முழு மனத்துடன் கீதையைப் பயில வேண்டும்.

**பொருத்தம்: இவ்விதம் கீதாசாஸ்த்ரத்தைக் கற்பதன் பெருமை கூறி, மேலே சொன்னவிதம், கற்பதற்குச் சக்தியில்லாத மனிதர்களுக்கு இதைக் கேட்பதால் உண்டாகும் பயனைக் கூறுகிறார்—**

**श्रद्धावाननसूयश्च शृणुयादपि यो नरः।**
**सोऽपि मुक्तः शुभाँल्लोकान्प्राप्नुयात्पुण्यकर्मणाम्॥ ७१ ॥**

**ஶ்ரத்த₄ாவாநநஸூயஶ்ச ஶ்ருணுயாத₃பி யோ நர: ।**
**ஸோऽபி முக்த: ஶுப₄ாம்ல்லோகாந்ப்ராப்நுயாத்புண்யகர்மணாம் ॥ 71 ॥**

**ய: நர:** – எந்த மனிதன், **ஶ்ரத்₃த₄ாவாந்** – நம்பிக்கையுடனும், **அநஸூய: ச** – குறை காணாதவனாகவும், **ஶ்ருணுயாத் அபி** – (இந்த கீதா சாஸ்த்ரத்தை) கேட்கவாவது செய்கிறானோ, **ஸ: அபி** – அவனும், **முக்த:** – பாவங்களிலிருந்து விடுபட்டு, **புண்யகர்மணாம்** – புண்ய கார்யங்கள் செய்யும் சிறந்த மனிதர்கள் அடையும், **ஶுப₄ாந் லோகாந்** – சிறந்த புண்ய உலகங்களை, **ப்ராப்நுயாத்** – அடைவான்.

எந்த மனிதன் நம்பிக்கையுடனும் குறை காணாதவனாகவும் இந்த கீதா சாஸ்த்ரத்தைக் கேட்கவாவது செய்வானோ அவனும் பாவங்களிலிருந்து விடுபட்டுப் புண்ய கார்யங்கள் செய்யக்கூடிய மனிதர்கள் அடையும் சிறந்த புண்ய உலகங்களை அடைவான்.

**கேள்வி:** இங்கே 'நர:' என்று குறிப்பாகச் சொல்வதன் பொருள் என்ன?

**பதில்:** இந்த கீதாசாஸ்த்ரத்தை ச்ரத்தையுடன் கேட்பதற்குக்கூட ருசி இல்லாத உள்ளம் படைத்தவன் மனிதன் என்று கூறத்தக்கவன் அல்லன். அவன் பெற்ற மனிதப்பிறவி வீணே. ஆகவே அவன் மனித உருவத்தில் உயிர் வாழும் விலங்கு. ஆகவே கீதையைக் கற்கும் ருசி படைத்தவன்தான் 'நர:' (மனிதன்) என்றாகிறது.

**கேள்வி:** 'நம்பிக்கையுடன், குறை காணாதவனாக இந்த கீதா சாஸ்த்ரத்தைக் கேட்பது' என்றால் என்ன கருத்து?

**பதில்:** பகவான் ஒருவர் இருக்கிறார் என்பதிலும் அவருடைய குணப்ரபாவங்களிலும் நம்பிக்கைக் கொண்டு, அவ்விதமே, இந்த கீதாசாஸ்த்ரம் பகவானுடைய திருவாய் மொழியே என்றும், இதில் சொல்லப்பட்டுள்ள அனைத்தும் உண்மையே என்றும் உறுதியாக ஏற்று, இதனை விரித்துக் கூறுகிறவரிடம் நம்பிக்கை வைத்து, ப்ரேமையுடனும், விருப்புடனும் கீதையின் மூல பாராயணத்தையோ, பொருள் விளக்கத்தையோ கேட்பதுதான்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ச்ரத்தையுடன் கீதா சாஸ்த்ரத்தைக் கேட்பது ஆகும். மேலும், இதைக் கேட்கும்போது பகவானிடமோ, பகவானுடைய சொற்களிலோ எவ்விதக் குற்றம், குறை காணாமலும், கீதையை எவ்விதத்திலும் அவமதிக்காமலும், குற்றம் காணும் நோக்கம் இல்லாமலும் இதைக் கேட்கவேண்டும்.

**கேள்வி:** 'ஶ்ருணுயாத் அபி' (கேட்கவாவது செய்வானோ) என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** ச்ரத்தையோடு கீதாசாஸ்த்ரத்தைக் காதால் கேட்பவன்கூடப் பாவங்களிலிருந்து விடுபடுகிறான் என்றால், 68வது ச்லோகத்தில் கூறியபடி, இந்த கீதாசாஸ்த்ரத்தைப் பிறருக்குக் கற்பிப்பவர்; 70வது ச்லோகத்தில் கூறியபடி, தானே பாராயணம் செய்பவர் – இவர்களைப் பற்றிச் சொல்லவா வேண்டும்? இதை ச்ரத்தையோடு கேட்க மட்டும் செய்பவரும் பாவங்களிலிருந்து விடுபடுகிறார். ஆகவே, இதனைப் பிறருக்குக் கற்பிக்கவோ, தானாகவே கற்றுக் கொள்ளவோ முடியாதவரும் கூட இதை அவசியம் கேட்கவாவது செய்ய வேண்டும்.

**கேள்வி:** இப்படிக் கேட்பவர் பாவங்களிலிருந்து விடுபட்டுப் புண்ய கர்மங்கள் செய்யும் சிறந்த மனிதர்கள் அடையும் சிறந்த புண்ய உலகங்களை அடைவர் என்றால் என்ன கருத்து? 'அவரும்' என்று 'உம்மை' கொடுப்பதன் கருத்து என்ன?

**பதில்:** விலங்கு–பறவை முதலிய தாழ்ந்த பிறவிகளில் பிறப்பதற்கும், நரகத்தில் வீழ்வதற்கும் காரணமாக, முந்தைய பல பிறவிகளில் செய்யப்பட்ட பாவ கர்மங்கள் அனைத்திலிருந்தும் விடுபட்டு, இந்த்ரலோகம் முதல் பகவானுடைய பரமபதம் வரையில் உள்ள சிறந்த மேலுலகங்களில் தத்தம் ப்ரேமைக்கும், ச்ரத்தைக்கும் ஏற்றவாறு வாழ்தல்தான், பாவத்திலிருந்து விடுபட்டுப் புண்ய கர்மங்களைச் செய்தவர்கள் அடையும் மேலான புண்ய உலகங்களை அடைவது ஆகும்.

அவனும் அடைவான் என்று சொல்வதன் மூலம், இந்த கீதாசாஸ்த்ரத்தைக் கற்பிக்கவோ, தானாகவே கற்கவோ இயலாவிட்டாலும், உளமார்ந்த ச்ரத்தையுடன் கேட்பவர்கூடப் பாவங்களின் விளைவுகளிலிருந்து விடுபட்டு விடுவர்; விலங்கு, பறவை முதலிய பிறவிகளில் மறுப்படியும் உழல நேரிடாது; நரகம் புகவேண்டாம். உத்தம கர்மங்கள் செய்பவர்கள் அடையும் உயர்ந்த லோகங்களைச் சென்றடையலாம் என்பது கருத்து.

**பொருத்தம்:** இவ்விதம் கீதாசாஸ்த்ரத்தைச் சொல்வது, படிப்பது, கேட்பது இவற்றின் பெருமை கூறிய பிறகு, அனைத்தையும் அறிந்தவராயினும் அர்ஜுனனுக்கு விழிப்பூட்டுவதற்காக, அவனுடைய நிலையைப் பற்றிக் கேட்கிறார்—

**कच्चिदेतच्छ्रुतं पार्थ त्वयैकाग्रेण चेतसा।**
**कच्चिदज्ञानसम्मोहः प्रनष्टस्ते धनञ्जय॥ ७२॥**

**கச்சிதே₃தச்ச்₂ருதம் பார்த₂ த்வயைகாக்₃ரேண சேதஸா ।**
**கச்சித₃ஜ்ஞாநஸம்மோஹ: ப்ரநஷ்டஸ்தே த₄நஞ்ஜய ॥ 72 ॥**

**பார்த₂** – பார்த்த! **ஏதத்** – இந்த கீதா சாஸ்த்ரம், **த்வயா** – உன்னால், **ஏகாக்₃ரேண சேதஸா** – ஒருமுகப்படுத்தப்பட்ட மனதோடு, **கச்சித் ஶ்ருதம்** – கேட்கப்பட்டதா? (மேலும்), **த₄நஞ்ஜய** – அர்ஜுன! **தே அஜ்ஞாநஸம்மோஹ:** – அஞ்ஞானத்தினால் உண்டான உன் மோஹம், **கச்சித் ப்ரநஷ்ட:** – அழிந்துவிட்டதா?

பார்த்த! இந்த கீதா சாஸ்த்ரம் உன்னால் ஒன்றுபட்ட மனதோடு கேட்கப்பட்டதா? அர்ஜுன! அஞ்ஞானத்தினால் உண்டான உன் மோஹம் அழிந்துவிட்டதா?"

**கேள்வி:** இங்கே 'ஏதத்' என்ற சொல் எதைக் குறிக்கிறது? இது ஒருமுகப்படுத்தப்பட்ட மனதோடு கேட்கப்பட்டதா என்று கேட்பதன் கருத்து என்ன?

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



**பதில்:** *2/11* முதல் *18/66* வரை பகவான் அர்ஜுனனுக்கு எந்த திவ்ய உபதேசம் செய்தாரோ, மிகவும் மறைத்துப் போற்றிக் காப்பாற்றப்பட வேண்டிய அந்த உபதேசத்தை 'ஏதத்' என்ற சொல் குறிக்கிறது. அதன் பெருமையை வெளிப்படுத்தவே பகவான் இங்கு அர்ஜுனனைப் பார்த்து மேலே சொன்ன கேள்வி கேட்கிறார். "என்னுடைய உபதேசம் கிடைத்தற்கு மிக அரிது. நான் ஒவ்வொரு மனிதனிடமும் 'நான்தான் பரமாத்மா. என்னைச் சரணடைவாயாக' என்றெல்லாம் சொல்லிக் கொண்டிருக்கமாட்டேன். ஆகவே நான் கூறியதையெல்லாம் நீ உன்னிப்பாகக் கேட்டறிந்து கொண்டாயல்லவா? கவனக்குறைவாக இருந்திருந்தாயானால், நீ மிகப் பெரிய தவறு செய்தவனாவாய்" என்று உணர்த்துவதுதான் பகவானுடைய கருத்து.

**கேள்வி:** 'அஞ்ஞானத்தினால் உண்டான உன் மோஹம் அழிந்ததா?' என்று கேட்பதன் கருத்து என்ன?

**பதில்:** "நீ கவனமாகக் கேட்டிருந்தால் அதற்கு நிச்சயம் பயன் உண்டு. நீ மோஹத்திற்கு ஆட்பட்டு தர்மம் இன்னது என்று தெரியாமல் குழம்பி இருக்கிறாய் *(2/7)* என்று சொன்னாயே! உனக்கு விதிக்கப்பட்ட கடமையை ஆற்றுவது பாவம் *(1/36)* என்று கருதினாயே! செய்ய வேண்டிய எல்லாக் கடமைகளையும் செய்யாமல் விட்டுவிட்டுப் பிச்சை எடுத்துப் பிழைப்பேன்; அதுவே சிறந்த வழி *(2/5)* என்று சொன்னாயே! அந்த மோஹத்தின் காரணமாகச் சுற்றத்தைக் கொல்லவேண்டுமே *(1/45-47)* என்று பயந்து கலங்கினாயே! நான் என்ன செய்யவேண்டும் என்று முடிவு எடுக்க முடியவில்லையே *(2/6,7)* என்று கலங்கினாயே! இப்படி உன்னுடைய அஞ்ஞானத்தினால் ஏற்பட்ட மோஹமெல்லாம் அழிந்துவிட்டதா, இல்லையா? என்னுடைய உபதேசத்தைக் கவனமாகக் கேட்டிருந்தாயானால் அந்த மோஹம் அழிந்திருக்க வேண்டுமே! அந்த மோஹம் இன்னும் அழியவில்லையானால், நீ உபதேசத்தை ஒருமுனைப்புடன் கேட்கவில்லை என்றாகிறது" என்கிறார் பகவான்.

மனிதன் இந்த கீதாசாஸ்த்ரத்தை மிகவும் ச்ரத்தையுடனும், கவனத்துடனும் ஒரு முனைப்புடன் கற்க வேண்டும். அஞ்ஞானத்தினால் ஏற்பட்ட மோஹம் அழியவில்லை என்றால் நாம் இன்னும் கீதாசாஸ்த்ரத்தைச் சரிவரக் கற்கவில்லை என்று உணர வேண்டும். மறுபடியும் ச்ரத்தையுடனும், விவேகத்துடனும் கீதையின் கருத்துக்களைச் சிந்தித்தறிய வேண்டும் என்ற உபதேசம் பகவானுடைய இந்த இரண்டு கேள்விகளிலும் அடங்கியிருக்கிறது.

**பொருத்தம்:** இவ்விதம் பகவான் கேட்டவுடன் அர்ஜுனன் பகவானுக்கு நன்றி தெரிவிக்கும் நோக்கத்துடன் தம் நிலையை வர்ணிக்கிறார்—

अर्जुन उवाच

**नष्टो मोहः स्मृतिर्लब्धा त्वत्प्रसादान्मयाच्युत।**
**स्थितोऽस्मि गतसन्देहः करिष्ये वचनं तव॥७३॥**

அர்ஜுந உவாச

**நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர்லப்₄த₄ா த்வத்ப்ரஸாத₃ாந்மயாச்யுத ।**
**ஸ்தி₂தோऽஸ்மி க₃தஸந்தே₃ஹ: கரிஷ்யே வசநம் தவ ॥ 73 ॥**

**அர்ஜுந உவாச** – அர்ஜுனன் சொன்னார்: **அச்யுத** – அச்யுத! **த்வத்ப்ரஸாத₃ாத்** – உங்கள் அருளால், (மம) **மோஹ:** – எனது மோஹம், **நஷ்ட:** – அழிந்தது. (மேலும்), **மயா** – என்னால், **ஸ்ம்ருதி:** – ஞான ஒளி, **லப்₄த₄ா** – பெறப்பட்டது. (இப்பொழுது நான்), **க₃தஸந்தே₃ஹ:** – ஸந்தேஹமற்றவனாக, **ஸ்தி₂த: அஸ்மி** – உறுதியாக இருக்கிறேன். (ஆகையால்), **தவ வசநம்** – உங்கள் ஆணையை, **கரிஷ்யே** – நிறைவேற்றுவேன்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அர்ஜுனன் சொன்னார்: 'அச்யுத! உங்கள் அருளால் எனது மோஹம் அழிந்தது. மேலும் என்னால் ஞான ஒளி பெறப்பட்டது. இப்பொழுது நான் ஸந்தேஹமற்றவனாக உறுதியாக இருக்கிறேன். ஆகையால் உங்கள் ஆணையை நிறைவேற்றுவேன்.'

**கேள்வி:** இங்கு பகவானை 'அச்யுத' என்றழைப்பதன் பொருள் என்ன?

**பதில்:** 'தாங்கள் விகாரமற்ற ஸாக்ஷாத் பரப்ரம்மம், பரமாத்மா, ஸர்வவல்லமை படைத்தவர், அழிவற்றவர், பரமேசுவரர். இதை நான் இப்பொழுது நன்கு அறிந்து கொண்டேன்.' இதுதான் 'அச்யுத' என்றழைப்பதன் கருத்து.

**கேள்வி:** 'உங்கள் அருளால் எனது மோஹம் அழிந்தது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இவ்விதம் கூறுவதன் மூலம் அர்ஜுனன் தம் நன்றியைத் தெரிவித்து, "நீங்கள் எனக்கு இந்த தெய்விக உபதேசம் செய்து மிகுந்த கருணை காட்டியுள்ளீர்கள். அஞ்ஞானத்தினால் ஏற்பட்ட என்னுடைய மோஹம் உங்களுடைய உபதேசத்தைக் கேட்டதனால் அறவே அழிந்துவிட்டது. அதாவது முன்பு உங்கள் குணங்கள், ப்ரபாவங்கள், ஆளுமை, ஸ்வரூபம் இவற்றின் உண்மை தெரியாததால் மோஹமடைந்து, உங்கள் அறிவுரையை மதித்து நடக்க நான் தயாராக இல்லை (2/9). உற்றார்-உறவினரின் அழிவுக்கு பயந்து சோகத்திற்கு ஆட்பட்டேன் (1/28 முதல் 47 வரை). அந்த மோஹம் இப்போது அறவே அழிந்துவிட்டது" என்கிறார்.

**கேள்வி:** 'என்னால் ஞானஒளி பெறப்பட்டது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "எனது அஞ்ஞானத்தினால் ஏற்பட்ட மோஹம் அழிந்தவுடன், எனது உள்ளத்தில் தெய்விக ஞானத்தின் ஒளி வீசுகிறது. அதனால் எனக்கு உங்களுடைய குணங்கள், ப்ரபாவங்கள், ஆளுமை, ஸ்வரூபம் பற்றிய முழுமையான ஞானம் ஏற்பட்டுவிட்டது. உங்களுடைய ஸமக்ரரூபத்தை நேராகக் காணும்பேறு எனக்குக் கிடைத்துவிட்டது. நான் அறிந்து கொள்ள வேண்டியது இனி ஒன்றுமில்லை" என்கிறார் அர்ஜுனன்.

**கேள்வி:** 'ஸந்தேஹம் நீங்கி நான் உறுதியாக இருக்கிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "இப்போது உங்களுடைய குணங்கள், ப்ரபாவங்கள், ஆளுமை, ஸகுண-நிர்குண நிலை, உருவமற்ற-உருவமுள்ள நிலை. தர்மம் எது, அதர்மம் எது, செய்யவேண்டியது என்ன, செய்யத்தகாதது என்ன என்ற விஷயங்களில் எனக்குச் சிறிதுகூட ஐயமில்லை. எல்லா ஸந்தேஹங்களும் தீர்ந்துவிட்டன. என் மனம் சஞ்சலம் நீங்கித் தெளிவாகிவிட்டது" என்கிறார் அர்ஜுனன்.

**கேள்வி:** 'உங்கள் ஆணையை நிறைவேற்றுவேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "உங்கள் க்ருபையால் நான் செய்யவேண்டியதைச் செய்தவன் ஆனேன். நான் செய்ய வேண்டிய கடமையில் மீதமொன்றுமில்லை. உங்கள் சொற்படி உலகத்திற்கு வழிகாட்டும் முறையில், வெறும் நிமித்தமாக இருந்து, நீங்கள் எப்படிச் செய்விக்கிறீர்களோ, அவ்வண்ணமே விளையாட்டாகச் செய்து முடிப்பேன்" என்கிறார் அர்ஜுனன்.

**பொருத்தம்: இவ்விதம் த்ருதராஷ்ட்ரர் கேட்டதற்கு விடையாக, ஸஞ்ஜயன் ஸ்ரீக்ருஷ்ண-அர்ஜுனர்களின் உரையாடல் வடிவான இந்த கீதாசாஸ்த்ரத்தை எடுத்துச் சொல்லி, அந்த கீதாசாஸ்த்ரத்தைப் பூர்த்தி செய்யும் முறையில் த்ருதராஷ்ட்ரருக்கு கீதையின் பெருமையை இரண்டு ச்லோகங்களில் விளக்குகிறார்—**

सञ्जय उवाच

**इत्यहं वासुदेवस्य पार्थस्य च महात्मनः।**
**संवादमिममश्रौषमद्भुतं रोमहर्षणम्॥ ७४॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸஞ்ஜய உவாச

**இத்யஹம் வாஸுதே₃வஸ்ய பார்த₂ஸ்ய ச மஹாத்மந: ।**
**ஸம்வாத₃மிமமஶ்ரௌஷமத்₃பு₄தம் ரோமஹர்ஷணம் ॥ 74 ॥**

**ஸஞ்ஜய உவாச** – ஸஞ்ஜயன் சொன்னார்: **இதி** – இவ்வாறு, **அஹம்** – நான், **வாஸுதே₃வஸ்ய** – பகவான் ஸ்ரீவாஸுதேவருக்கும், **மஹாத்மந: பார்த₂ஸ்ய ச** – மஹாத்மாவான பார்த்தனுக்குமிடையே (நிகழ்ந்த), **இமம்** – இந்த, **அத்₃பு₄தம்** – அற்புதமான உட்பொருள் கொண்ட, **ரோமஹர்ஷணம்** – புல்லரிக்கக் கூடிய, **ஸம்வாத₃ம்** – உரையாடலை, **அஶ்ரௌஷம்** – கேட்டேன்.

ஸஞ்ஜயன் சொன்னார்: "இவ்வாறு நான், பகவான் ஸ்ரீவாஸுதேவருக்கும் மஹாத்மாவான பார்த்தனுக்கும் இடையே நிகழ்ந்த இந்த அற்புதமான உட்பொருள் கொண்ட புல்லரிக்கக் கூடிய உரையாடலைக் கேட்டேன்.

**கேள்வி:** 'இதி' என்பது எதைக் குறிக்கிறது?

**பதில்:** 'இதி' என்பது கீதோபதேசம் நிறைவு பெற்றதைக் குறிக்கிறது.

**கேள்வி:** பகவானை 'வாஸுதேவன்' என்றும், பார்த்தனை 'மஹாத்மா' என்றும் அடைமொழிகளுடன் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இதன் மூலம் ஸஞ்ஜயன் கீதையின் பெருமையைப் புகழ்கிறார். நர ரிஷியின் அவதாரமான மஹாத்மா அர்ஜுனன் கேட்பதற்கு, எல்லா ப்ராணிகளின் உள்ளங்களிலும், அந்தர்யாமியாகவும், எங்கும் நிறைந்தவராகவும் உள்ள பரமாத்மாவான, வாஸுதேவனான, பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் இதை உபதேசிக்கிறார். ஆகவே எவ்வளவு பெருமை இதற்கு! வேறு எந்த சாஸ்த்ரமும் இதற்கு ஈடு இணை ஆக முடியாது! இது எல்லா சாஸ்த்ரங்களுக்கும் ஸாரம் ஆயிற்றே!‡

**கேள்வி:** 'அத்புதம் ரோமஹர்ஷணம்' என்ற அடைமொழிகளுடன் 'ஸம்வாதம்' என்று சொல்வதன் கருத்து என்ன?

**பதில்:** மஹாத்மாவான அர்ஜுனன் கேட்க, ஸாக்ஷாத் பரமாத்மா திருவாய் மலர்ந்தருளிய இந்த உபதேசம் மிகவும் அற்புதமானது, ஆச்சரியமானது, தனிச்சிறப்புடையது. இதன் மூலம் மனிதன் பகவானுடைய தெய்விகமான, உலகியலுக்கப்பாற்பட்ட குணங்கள், ப்ரபாவங்கள், ஆளுமையுடன் கூடிய ஸமக்ர ரூபத்தின் (முழு ஸ்வரூபத்தின்) முழுமையான ஞானம் கிடைக்கப் பெறுகிறான். மனிதன் இதை எவ்வளவு நுட்பமாகக் கேட்கிறானோ, அறிகிறானோ, அதற்கேற்ப மகிழ்ச்சியும், ஆச்சரியமும் பெற்று மெய்சிலிர்ப்பு அடைகிறான். உடல் முழுவதும் புல்லரிக்கிறது என்று கூறுகிறார் அர்ஜுனன்.

**கேள்வி:** 'நான் கேட்டேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'இந்த அற்புதமானதும், ஆச்சரியமானதும் ஆன உரையாடலை நேரிடையாகக் கேட்கும் வாய்ப்பினைப் பெற்ற என் பேற்றை என்னென்று சொல்வேன்' என்று விம்மிதம் அடைகிறார் ஸஞ்ஜயன்.

---

‡ **கீ₃தா ஸுகீ₃தா கர்தவ்யா கிமந்யை: ஶாஸ்த்ரஸங்க்₃ரஹை: ।**
**யா ஸ்வயம் பத்₃மநாப₄ஸ்ய முக₂பத்₃மாத்₃விநி:ஸ்ருதா ।**
(மஹா. பீ₄ஷ்ம. 43/1)

"கீதையையே கருத்தூன்றிக் கேட்பது, கீர்த்தனம் செய்வது, கற்பது, கற்பிப்பது, மனனம் செய்வது, பொருளை மனதில் நிலைநிறுத்திக் கொள்வது ஆகியவற்றைச் செய்தால் வேறு நூல்களைப் படிக்க அவசியமே இல்லை. ஏனெனில் இது எம்பெருமான் பத்மநாபரது திருமுகத் தாமரையினின்றும் வெளியானதன்றோ!"

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



व्यासप्रसादाच्छ्रुतवानेतद्गुह्यमहं परम्।
योगं योगेश्वरात्कृष्णात्साक्षात्कथयतः स्वयम्॥७५॥

**வ்யாஸப்ரஸாத₃ாச்ச்₂ருதவாநேதத்₃கு₃ஹ்யமஹம் பரம் ।**

**யோக₃ம் யோகே₃ஶ்வராத்க்ருஷ்ணாத்ஸாக்ஷாத்கத₂யத: ஸ்வயம் ॥ 75 ॥**

**வ்யாஸப்ரஸாத₃ாத்** – ஸ்ரீவ்யாஸ பகவானுடைய அருளினால் (தெய்விகப் பார்வை பெற்று), **அஹம்** – நான், **பரம் கு₃ஹ்யம்** – உயர்ந்த ரஹஸ்யமான, **ஏதத்** – இந்த, **யோக₃ம்** – யோகத்தை, **கத₂யத:** – (அர்ஜுனனுக்குச்) சொல்லிக் கொண்டிருக்கும்போதே, **ஸ்வயம் யோகே₃ஶ்வராத்** – ஸாக்ஷாத் யோகேசுவரனான, **க்ருஷ்ணாத்** – பகவான் ஸ்ரீக்ருஷ்ணனிடமிருந்தே, **ஸாக்ஷாத்** – நேராக, **ஶ்ருதவாந்** – கேட்டேன்.

ஸ்ரீவ்யாஸ பகவானுடைய அருளினால் தெய்விகப் பார்வை பெற்ற நான் உயர்ந்த ரஹஸ்யமான இந்த யோகத்தை, அர்ஜுனனைக் குறித்துச் சொல்லுகின்ற ஸாக்ஷாத் யோகேசுவரனான பகவான் ஸ்ரீக்ருஷ்ணனிடமிருந்து நேரிடையாகக் கேட்டேன்.

**கேள்வி:** 'வ்யாஸப்ரஸாதாத்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இதன் மூலம் ஸஞ்ஜயன் வ்யாஸருக்குத் தம் நன்றியைத் தெரிவிக்கிறார். "பகவான் வ்யாஸர் க்ருபை புரிந்து, எனக்கு தெய்விகப் பார்வை வழங்கி, வெகுதூரத்தில் நடக்கும் நிகழ்ச்சிகளைக் கிட்ட நின்று பார்ப்பது போலக் காண வைத்தார். அங்கு நடந்த தெய்விகமான இந்த உரையாடலைக் கேட்க வைத்து, அதை அறிந்து கொள்ளும் அறிவாற்றலையும் வழங்கினார். அதன் காரணமாகத்தான் நான் பகவானின் தெய்விக உபதேசத்தை நேரிடையாகக் கேட்கும் பேறு பெற்றேன். இல்லாவிட்டால் எனக்கு இந்த வாய்ப்பு எப்படிக் கிட்டும்?".

**கேள்வி:** 'ஏதத்' என்ற சொல் எதைக் குறிக்கிறது? 'பரம், குஹ்யம், யோகம்' என்று அடைமொழிகளை ஆள்வதன் கருத்து என்ன?

**பதில்:** 'ஏதத்' என்ற சொல் ஸ்ரீக்ருஷ்ணனுக்கும், அர்ஜுனனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலாக அமைந்திருக்கும் இந்த கீதாசாஸ்த்ரத்தைக் குறிக்கிறது. இது மிகவும் சிறந்தது என்பதைப் 'பரம்' என்ற சொல் கூறுகிறது. 'குஹ்யம்' என்றால் மறைத்துப் போற்றப்பட வேண்டியது என்று பொருள். தகாதவருக்கு இதை வெளியிடலாகாது. இந்த சாஸ்த்ரத்தில் பகவானை அடைவதற்கு உபாயங்களான – கர்மயோகம், ஞானயோகம், த்யானயோகம், பக்தியோகம் என்ற ஸாதனைகள் விளக்கப்பட்டுள்ளன. இதை ச்ரத்தையுடன் படிப்பதுகூட பகவானை அடைவதற்கு ஸாதனமாவதால், ச்ரத்தையுடன் செய்யப்படும் கீதாசாஸ்த்ர பாராயணமும் 'யோகம்' எனப்படுகிறது.

**கேள்வி:** 'மேலே சொன்ன அடைமொழிகளுடன் கூடிய இந்த உபதேசத்தை, ஸ்ரீக்ருஷ்ணன் அர்ஜுனனுக்குச் செய்து கொண்டிருக்கும்போதே யோகேசுவரரான ஸ்ரீக்ருஷ்ணனிடமிருந்து நேரிடையாகக் கேட்டேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "நான் இப்போது உங்களுக்குச் சொன்ன இந்த கீதாசாஸ்த்ரம் யாரோ ஒருவரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டதன்று. எல்லா யோகசக்திகளுக்கும் தலைவரான ஸர்வவல்லமை படைத்த பகவான் ஸ்ரீக்ருஷ்ணனின் திருமுகத்தாமரையிலிருந்து, அவர் அர்ஜுனனுக்குச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே, நான் நேராகக் கேட்டது" என்று த்ருதராஷ்ட்ரருக்கு கீதையின் தனிப்பெருஞ்சிறப்பைக் கூறுகிறார்.

**பொருத்தம்: இவ்விதம் மிகவும் அரிதான கீதாசாஸ்த்ரத்தைக் கேட்பதன் பெருமையை வெளியிட்டு, ஸஞ்ஜயன் தம் நிலையை விளக்குவதன் மூலம் அவ்வுபதேசத்தை நினைத்துப் பார்ப்பதன் பெருமையைக் கூறுகிறார்—**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



राजन्संस्मृत्य संस्मृत्य संवादमिममद्भुतम्।
केशवार्जुनयोः पुण्यं हृष्यामि च मुहुर्मुहुः॥७६॥

**ராஜந்ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ஸம்வாத₃மிமமத்₃பு₄தம் ।**

**கேஶவார்ஜுநயோ: புண்யம் ஹ்ருஷ்யாமி ச முஹுர்முஹு: ॥ 76 ॥**

***ராஜந்*** – அரசே! ***கேஶவார்ஜுநயோ:*** – பகவான் ஸ்ரீக்ருஷ்ணனுக்கும், அர்ஜுனனுக்குமிடையே நடந்த, **இமம்** – இந்த ரஹஸ்யமான, **புண்யம்** – நன்மையளிக்கும், **அத்₃பு₄தம் ச** – அற்புதமான, **ஸம்வாத₃ம்** – உரையாடலை, **ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய** – நினைத்து நினைத்து (நான்), **முஹுர்முஹு:** – மீண்டும் மீண்டும், **ஹ்ருஷ்யாமி** – மகிழ்கிறேன்.

அரசே! பகவான் ஸ்ரீக்ருஷ்ணனுக்கும், அர்ஜுனனுக்குமிடையே நடந்த இந்த ரஹஸ்யமான நன்மை தரக்கூடிய அற்புதமான உரையாடலை நினைத்து நினைத்து நான் மீண்டும் மீண்டும் மகிழ்கிறேன்.

**கேள்வி:** 'புண்யம், அத்புதம்' என்ற இரண்டு அடைமொழிகளின் கருத்து என்ன?

**பதில்:** பகவான் ஸ்ரீக்ருஷ்ணனுக்கும், அர்ஜுனனுக்கும் இடையே நடந்த இந்த தெய்விகமான உரையாடலான கீதாசாஸ்த்ரம் கற்பவர், கற்பிப்பவர், கேட்பவர், சிந்திப்பவர், விளக்குபவர்களான மனிதர்கள் அனைவரையும் தூய்மைப்படுத்துகிறது. அவர்களுக்கு மேன்மை அளிக்கிறது. இது பகவானுடைய ஆச்சரியமயமான குணங்கள், ப்ரபாவங்கள், ஆளுமை, தத்வம், ரஹஸ்யம், ஸ்வரூபம் இவற்றை அற்புதமாக விளக்குகிறது. ஆகவே இது மிகவும் தூய்மையானது, உலகியலுக்கு அப்பாற்பட்டது, தெய்விகமானது என்பது கருத்து.

**கேள்வி:** 'இதை நினைத்து நினைத்து, மீண்டும் மீண்டும் நான் மகிழ்ந்து கொண்டேயிருக்கிறேன்' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** இவ்விதம் ஸஞ்ஜயன் தம் நிலையை விளக்கி, கீதோபதேசத்தை நினைவுகூர்வதன் பெருமையை வெளியிடுகிறார்– "பகவான் செய்த உபதேசம் என் உள்ளத்தை வெகுவாகக் கவர்ந்துவிட்டது. எனக்கு வேறு எதுவுமே உயர்வாகத் தோன்றவில்லை. என் உள்ளத்தில் மீண்டும் மீண்டும் பகவானுடைய உபதேசமே ஒலித்துக் கொண்டிருக்கிறது. அந்தக் கருத்துக்களில் எல்லையற்ற மகிழ்ச்சியைக் காண்கிறேன். ப்ரேமையிலும், மகிழ்ச்சியிலும் நான் திளைத்துக் கொண்டிருக்கிறேன்."

**பொருத்தம்:** இவ்விதம் கீதையை நினைத்தலின் பெருமையைக் கூறி, ஸஞ்ஜயன் தம் நிலையை விளக்குகையில் பகவானின் விசுவரூப தர்சனத்தை நினைத்தலின் பெருமையையும் வெளியிடுகிறார்–

तच्च संस्मृत्य संस्मृत्य रूपमत्यद्भुतं हरेः।
विस्मयो मे महान् राजन्हृष्यामि च पुनः पुनः॥७७॥

**தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ரூபமத்யத்₃பு₄தம் ஹரே: ।**

**விஸ்மயோ மே மஹாந்ராஜந்ஹ்ருஷ்யாமி ச புந: புந: ॥ 77 ॥**

***ராஜந்*** – அரசே! **ஹரே:** – பகவான் ஸ்ரீஹரியின், **அதி அத்₃பு₄தம்** – மிகவும் அற்புதமான, **தத் ரூபம் ச** – அந்தத் திருஉருவையும், **ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய** – நினைந்து நினைந்து, **மே** – என்னுடைய மனதில், **மஹாந் விஸ்மய:** – பெருவியப்பு (உண்டாகிறது). **ச** – மேலும், **(அஹம்)** – நான், **புந: புந:** – மேலும் மேலும், **ஹ்ருஷ்யாமி** – மகிழ்ச்சி அடைகிறேன்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அரசே! பாவங்கள் அனைத்தையும் போக்கக் கூடிய பகவான் ஸ்ரீஹரியின் மிகவும் அற்புதமான, அழகான அந்தத் திருஉருவையும் நினைந்து நினைந்து என்னுடைய மனதில் பெருவியப்பு உண்டாகிறது. மேலும் நான், மேலும் மேலும் மகிழ்ச்சி அடைகிறேன்.

**கேள்வி:** பகவானுடைய ஹரிநாமத்தின் பொருள் என்ன?

**பதில்:** பகவான் ஸ்ரீக்ருஷ்ணனுடைய குணங்கள், ப்ரபாவங்கள், லீலைகள், ஆளுமை, மஹிமை, நாமங்கள், ஸ்வரூபங்கள் இவற்றைக் கேட்பது, நினைப்பது, கீர்த்தனம் செய்வது, காண்பது, தொட்டுப் பார்ப்பது ஆகியவையெல்லாம் மனிதனுடைய பாவங்களையெல்லாம் அறவே அழிக்கின்றன. அவர்களுடன் எவ்விதமாவது தொடர்பு கொண்டுள்ளவர்களின் பாவங்களையும், அஞ்ஞானத்தையும், துயரத்தையும் ஹரிநாமம் ஹரணம் செய்கிறது. பக்தர்களுடைய மனதையும் கவரக்கூடியது. ஆகவே பகவானை 'ஹரி' என்கின்றனர்.

**கேள்வி:** 'தத்' என்றும், 'அதி அத்புதம்' என்றும் அடைமொழிகளுடன் கூடிய ரூபம் என்ற சொல், பகவானுடைய எந்த உருவத்தைக் குறிக்கிறது?

**பதில்:** மிகவும் ஆச்சரியமயமானதும், தெய்விகமானதுமான எந்த விசுவரூபத்தை அர்ஜுனனுக்குக் காட்டி அருளினாரோ, எந்த விசுவரூபத்தின் பெருமையை பகவானே 11/47,48ல் எடுத்துச் சொன்னாரோ, அந்த விராட் ஸ்வரூபத்தைத்தான் 'தத் அதி அத்புதம்' என்ற அடைமொழிகளுடன் கூடிய ரூபம் என்ற சொல் குறிக்கிறது.

**கேள்வி:** 'அந்த ரூபத்தை நினைந்து நினைந்து எனக்குப் பெருவியப்பு உண்டாகிறது' என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** "பகவானுடைய அந்த ஸ்வரூபமானது என் உள்ளத்திலிருந்து அகலவே இல்லை; அதனை நான் மேலும் மேலும் நினைத்துக் கொண்டேயிருக்கிறேன். பகவானுடைய அதிசயமானதும், அரிதானதுமான அந்த தெய்விக வடிவத்தின் தர்சனம் எனக்கு எப்படிக் கிடைத்தது என்று மிகவும் வியப்புண்டாகிறது. இந்த ஸ்வரூபத்தின் தர்சனம் கிடைக்கக் கூடிய அளவுக்கு, எனக்குப் புண்யமே இல்லையே! ஆஹா! பகவானுடைய அவ்யாஜ கருணைதான் என்னுடைய பாக்யத்திற்குக் காரணம். மற்றும், அந்த ஸ்வரூபத்தின் மிக அதிசயமான காட்சிகளையும், ஸம்பவங்களையும் நினைத்து நினைத்து, எனக்குப் பேராச்சரியம் உண்டாகிறது. ஆஹா! பகவானுக்குத்தான் எவ்வளவு விசித்திரமான யோக சக்தி!" என்கிறார் ஸஞ்ஜயன்.

**கேள்வி:** 'நான் மேலும் மேலும் மகிழ்ச்சி அடைகிறேன் என்று கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** 'பெரு வியப்படைவது மட்டுமின்றி, நினைத்து நினைத்து மகிழ்ச்சியும் அடைகிறேன். ப்ரேமையில் திளைக்கிறேன். என்னுடைய ஆனந்தத்திற்கு எல்லையே கிடையாது' என்கிறார் ஸஞ்ஜயன்.

**பொருத்தம்:** இவ்விதம் தமது நிலையை வர்ணித்து, கீதை உபதேசம், பகவானின் அற்புதமான திருமேனி தர்சனம் இவற்றின் நினைவின் பெருமை கூறி, ஸஞ்ஜயன் த்ருதராஷ்ட்ரரிடம், பாண்டவர்களுக்குப் போரில் வெற்றி நிச்சயமாக ஏற்படப் போகிறது என்று சுட்டிக்காட்டும் முறையில் கீதைக்கும், இந்த அத்யாயத்திற்கும் மங்களம் கூறுகிறார்—

**यत्र योगेश्वरः कृष्णो यत्र पार्थो धनुर्धरः।**
**तत्र श्रीर्विजयो भूतिर्ध्रुवा नीतिर्मतिर्मम ॥ ७८ ॥**

**யத்ர யோகே₃ஶ்வர: க்ருஷ்ணோ யத்ர பார்தோ₂ த₄நுர்த₄ர: ।**
**தத்ர ஸ்ரீர்விஜயோ பூ₄திர்த்₄ருவா நீதிர்மதிர்மம ॥ 78 ॥**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



(ஹே ராஜந் – அரசே!) இங்கு நான் என்ன சொல்லப் போகிறேன்? **யத்ர** – எங்கு, **யோகே₃ஸ்வர:** – யோகேசுவரனான, **க்ருஷ்ண:** – பகவான் ஸ்ரீக்ருஷ்ணனும், **யத்ர** – எவ்விடத்தில், **த₄நுர்த₄ர:** – காண்டீவம் ஏந்திய, **பார்த₂:** – அர்ஜுனனும் (இருக்கிறார்களோ), **தத்ர** – அவ்விடத்தில், **ஸ்ரீ:** – மஹாலக்ஷ்மியும், **விஜய:** – வெற்றியும், **பூ₄தி:** – ஐசுவர்யமும், **த்₄ருவா நீதி:** – நிலைத்த நீதியும் (இருக்கும்), **(இதி)** – என்பது, **மம மதி:** – என்னுடைய உறுதியான கருத்து.

அரசே! இங்கு நான் என்ன சொல்லப் போகிறேன்? எங்கு யோகேசுவரனான பகவான் ஸ்ரீக்ருஷ்ணனும் எவ்விடத்தில் காண்டீவம் ஏந்திய அர்ஜுனனும் இருக்கிறார்களோ, அவ்விடத்தில் மஹாலக்ஷ்மியும், வெற்றியும், ஐசுவர்யமும், நிலைத்த நீதியும் இருக்கும் என்பது என்னுடைய கொள்கை.''

**கேள்வி:** ஸ்ரீக்ருஷ்ணனை யோகேசுவரன் என்றும், அர்ஜுனனை வில்லாளி என்றும் ஸஞ்ஜயன் கூறுவதன் கருத்து என்ன?

**பதில்:** த்ருதராஷ்ட்ரரின் உள்ளத்தில் ஸமாதானத்தில் விருப்பம் ஏற்படுத்தும் நோக்கத்துடன் ஸ்ரீக்ருஷ்ணனுடையதும், அர்ஜுனனுடையதும் ஆன தனிப்பட்ட பெருமைகளைக் கூறும் அடைமொழிகளைச் சேர்த்துக் கூறியதன் மூலம், போரில் பாண்டவர்களுக்கு வெற்றி உறுதி என்பதைத் தெளிவாக ஸஞ்ஜயன் வெளிப் படுத்துகிறார். "பகவான் எல்லா யோகசக்திகளையும் ஆட்டிப் படைப்பவர். தம்முடைய யோகசக்தியினால் ஒரு கணத்தில் அகில உலகையும் படைத்துக் காத்துத் தம்முள் அடக்கிக் கொள்ளும் திறமை பெற்றவர். அவர் ஸாக்ஷாத் ஸ்ரீநாராயணன். பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் தாமாகவே தர்மராஜனான யுதிஷ்டிரருக்கு உதவி செய்ய வந்திருக்கிறாரென்றால் யுதிஷ்டிரருடைய வெற்றியில் எப்படி ஸந்தேஹம் இருக்க முடியும்? அர்ஜுனனும் நரரிஷியின் அவதாரம்; பகவானுடைய உற்ற நண்பர்; காண்டீவம் என்ற வில்லேந்தியவர்; வீரபுருஷர். அவரும் தமையனார் யுதிஷ்டிரரின் வெற்றிக்குக் கச்சை கட்டிக் கொண்டிருக்கிறார். ஆகவே, இன்று யுதிஷ்டிரருக்கு ஸமமாக வேறு யார் இருக்க முடியும்? சூரியன் இருக்குமிடத்தில் ஒளியும் உண்டு என்று சொல்லவும் வேண்டுமா? அதுபோல யோகேசுவரனான ஸ்ரீக்ருஷ்ணனும், வில்லாளியான அர்ஜுனனும் இருக்கும் இடத்தில் முழுமையான செல்வம், அனைத்து ஐசுவர்யம், அசைக்க முடியாத நீதி இவையெல்லாம் கூடியிருக்கும். தர்மம் இருக்கும் இடத்தில் வெற்றி நிச்சயம். ஆகவே பாண்டவர்களின் வெற்றியில் எவ்வித ஐயமும் இல்லை. நீங்கள் இப்பொழுதும் உங்களுடைய நலனை விரும்பினால், உங்கள் புதல்வர்களுக்கு அறிவுரை கூறிப் பாண்டவர்களுடன் ஸமாதானம் செய்து கொள்ளுங்கள்" என்று சொல்லி மங்களம் கூறுகிறார் ஸஞ்ஜயன்.

ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
मोक्षसन्यासयोगो नामाष्टादशोऽध्याय: ॥ १८ ॥

**ஓம் தத்ஸதி₃தி ஸ்ரீமத்₃ப₄க₃வத்₃கீ₃தாஸூபநிஷத்ஸு ப்₃ரஹ்மவித்₃யாயாம் யோக₃ஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே₃ மோக்ஷஸந்ந்யாஸயோகோ₃ நாமாஷ்டாத₃ஶோऽத்₄யாய: ॥ 18 ॥**

**ஓம் தத் ஸத் – ப்ரம்ம வித்யை, யோக ஶாஸ்த்ரம், உபநிஷத் எனப்படும் ஸ்ரீமத்பகவத்கீதையாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலில் 'மோக்ஷ ஸந்ந்யாஸ யோகம்' எனப் பெயர் படைத்த பதினெட்டாவது அத்யாயம் நிறைவுற்றது.**

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஸ்ரீமத்பகவத்கீதை ஆனந்த சின்மயனான, ஆறுவித ஐசுவர்யம் நிறைந்த, சராசரமெல்லாம் வணங்குகின்ற, பரம புருஷோத்தமன் ஸாக்ஷாத் பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் திருவாய் மலர்ந்தருளியதாகும். இது அளவற்ற ரஹஸ்யங்கள் நிறைந்தது. பேரருளாளரான ஸ்ரீக்ருஷ்ணனுடைய க்ருபையினால் தான் ஓரளவாவது இதன் ரஹஸ்யம் துலங்குகிறது. கீதை கற்பவர் பரம ச்ரத்தையையும், ப்ரேம மயமான தூய பக்தியையும் தம் உள்ளத்தில் கொண்டு, பகவத்கீதையை மனனம் செய்யவேண்டும். எவர் இப்படிச் செய்கிறாரோ, அவருக்குத்தான் பகவத் க்ருபையின் நேரிடை அனுபவம் வாய்க்க, கீதையின் ஸ்வரூபத்தில் ஓர் ஒளிக்கீற்றினால் வெளிச்சம் பெறமுடியும். ஆகவே தம் மேன்மையை விரும்புகிற ஆண்களும், பெண்களும், தலைசிறந்த பக்தரான அர்ஜுனனை முன்னோடியாகக் கொண்டு, முதலில் தமக்கு அர்ஜுனனைப் போன்று தெய்விக ஸாத்விக ஸம்பத்துகளைப் பெற்றுக் கொண்டு. நம்பிக்கையுடனும், பக்தியுடனும் கீதையைக் கேட்பது, மனனம் செய்வது, படிப்பது முதலியன மேற்கொண்டு, பகவானின் ஆணைப்படி முனைப்புடன் ஸாதனைகளில் ஈடுபடவேண்டும். இவ்விதம் செய்து வருபவர்களுக்கு உள்ளத்தில் தினந்தோறும் பரமானந்தத்தை அளிக்கக்கூடிய இணையற்ற தெய்விகக் கருத்துக்களின் எழுச்சிகள் தோன்றும். அவர்கள் முற்றிலும் தூய்மையான உள்ளம் பெற்று, பகவானுடைய, உலகியலுக்கு அப்பாற்பட்ட கருணாமுதத்தின் ரஸத்தை அனுபவித்து, விரைவில் பகவானையே அடைந்துவிடுவார்கள்.



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

॥ ஸ்ரீஹரி: ॥

# ஸ்ரீமத் பகவத்கீதை மங்கல ஆரத்தி

வாழிய பகவத் கீதை வாழி!
திருமால் இதய கமலத் துள்ளே
திகழும் புனித அழகி வாழி! (வாழிய)

கர்ம ரகசியம் விண்டு ரைத்துக்
காம வேட்கை களையும் செல்வி
தத்துவ ஞான ஒளியைப் பரப்பும்
பிரும்ம வித்யா வடிவே வாழி! (வாழிய)

மாசைப் போக்கும் புண்ய மூர்த்தி
அசையா பக்தி அளித்திடு வாயே!
அவனே புகலாம் என்னும் மர்மம்
புகட்டி எமக்கு நலனருள் வாயே! (வாழிய)

விருப்பு வெறுப்பு முற்றும் அகன்று
மகிழ்ச்சி வெள்ளம் எங்கும் பொங்க
அச்சம் நீங்கி உலகக் கடலை
கடக்க உதவும் இன்பத் தோணி (வாழிய)

அரக்கத் தனமும் அஞ்ஞான விருளும்
அழிந்து எங்கும் தெய்வப் பண்புகள்
மலரச் செய்யும் மாலவன் தேவீ! (வாழிய)

சமத்துவம் தியாகம் இதனை விளக்கும்
அரியே! அருளிய அமுத வாக்கே!
சாஸ்திரம் எல்லாம் திரட்டித் தரும்நீ
வேத நாயகி கருணை முகிலே! (வாழிய)

கண்ணன் கழலிணை நண்ணும் பக்தி
ஊட்டி எம்மை ஏற்றருள் வாயே! (வாழிய)

(வடபுலத்தில் இராமாயணம், பாகவதம், இராமசரிதமானஸம், கீதை போன்ற கிரந்தங்களைப் பாராயணம் செய்து முடிக்கையில், அனைவருமாகச் சேர்ந்து இது போன்ற ஆரத்தி கீதம் பாடி நிறைவு செய்வார்கள். இங்கே உள்ளது பகவத்கீதைக்கு வழங்கும் ஆரத்தியின் கருத்தைக் கூறும் தமிழ் வடிவம்.)

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

॥ ஸ்ரீஹரி: ॥

# கீதா பிரஸ்ஸின் அறிவுரை நல்கும் நூல்கள்

| | Code No. | பக்கங்கள் | |
|---|---|---|---|
| 1. | 127 | 96 | பயனுள்ள கதைகள் |
| 2. | 365 | 96 | பசுப் பராமரிப்பின் நற்பயன்கள் – கதைகள் |
| 3. | 423 | 64 | கர்ம ரஹஸ்யம் |
| 4. | 466 | 64 | ஸத்ஸங்கத்தின் ஸாரமான தத்வங்கள் |
| 5. | 499 | 32 | நாரத பக்தி ஸூத்ரம் |
| 6. | 536 | 72 | கீதை கற்பதன் பயன்கள் |
| 7. | 550 | 64 | திருநாமஜபத்தின் மஹிமை |
| 8. | 551 | 64 | தூய்மையான உணவுப் பழக்கம் |
| 9. | 553 | 192 | குடும்பத்தில் எப்படி இருக்க வேண்டும்? |
| 10. | 568 | 88 | சரணாகதி |
| 11. | 569 | 64 | உருவ வழிபாடு |
| 12. | 591 | 128 | மஹாபாவத்திலிருந்து உன்னைக் காத்துக் கொள் – பிள்ளைகளின் கடமைகள் |
| 13. | 601 | 96 | பகவான் ஸ்ரீகிருஷ்ணன் |
| 14. | 606 | 32 | மிக உயர்ந்த நிலையை அடைவதற்கான வழி |
| 15. | 607 | 32 | எல்லோருக்கும் மேன்மை எப்படி ஏற்படும்? |
| 16. | 608 | 96 | பக்தராஜ ஹனுமான் |
| 17. | 609 | 32 | மஹாபாரதத்திலுள்ள ஸாவித்ரி–ஸத்யவான் கதைகள் |
| 18. | 642 | 96 | ஸ்ரீகிருஷ்ணனின் நண்பரான உத்தவரின் கதை |
| 19. | 643 | 96 | பகவான் உறையும் ஐந்து இடங்கள் |
| 20. | 644 | 64 | சுசீலா – ஓர் லக்ஷ்யப் பெண்மணி |
| 21. | 645 | 96 | மஹாபாரதத்திலுள்ள நள–தமயந்தி கதைகள் |
| 22. | 646 | 96 | பல்சுவைக் கதைகள் |
| 23. | 647 | 32 | கண்ணன் (சித்திரக் கதை) |
| 24. | 648 | 32 | ஸ்ரீகிருஷ்ணன் ,, |
| 25. | 649 | 32 | கோபால் ,, |
| 26. | 650 | 32 | மோஹன் ,, |
| 27. | 655 | 112 | ஒன்றே செய்மின்! நன்றே செய்வீர்!! |
| 28. | 741 | 64 | மஹாத்மா விதுரர் |
| 29. | 742 | 48 | கருக்கலைப்பு சரியா? தவறா? |
| 30. | 792 | 48 | முக்கியமான எச்சரிக்கை |
| 31. | 805 | 32 | தாய்மையின் அவல நிலை |
| 32. | 850 | 128 | மஹான்களுடைய அமுத மொழிகள் |
| 33. | 952 | 128 | மஹான்களின் மணி மொழிகள் |
| 34. | 953 | 128 | மஹான்களின் சீரிய உபதேசம் |
| 35. | 1007 | 224 | கடையோனுக்கும் கடவுட்காட்சி |
| 36. | 1110 | 128 | ஆயிரம் அமுதத் துளிகள் |
| 37. | 1117 | 112 | நாட்டின் இன்றைய நிலையும், அதன் விளைவுகளும் |
| 38. | 1134 | 64 | கீதையின் பெருமையை விளக்கும் கதைகள் |
| 39. | 1243 | — | உண்மையான சுகம் |
| 40. | 1246 | 96 | பக்த சரித்திரம் |
| 41. | 1289 | 80 | சாதனை நெறி |
| 42. | 1353 | 176 | ராமாயணத்தில் முக்கிய பாத்திரங்கள் |
| 43. | 1354 | 160 | மஹாபாரதத்தில் முக்கிய பாத்திரங்கள் |
| 44. | 1480 | 144 | செயல்கள் அனைத்தும் பகவானுக்கே |
| 45. | 1481 | 144 | பகவானை நேரில் காண வழி |
| 46. | 1482 | 144 | பக்தி யோகம் |

படம் (ஹிந்தி) ஜய ஸ்ரீராம் (எழுத்தில் ராமாயணம்)

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

கீதை கங்கையைக் காட்டிலும் சிறந்தது. சாஸ்திரங்களோ கங்கையில் நீராடுவதன் பயன் முக்தி என்கின்றன. கங்கையில் நீராடுபவன் முக்தியை மட்டுமே பெறலாம். பிறரைக் கரையேற்ற இயலாது. ஆனால், கீதையாகிற கங்கையிலே மூழ்கி எழுபவன், தானும் முக்தி பெற்றுப் பிறரையும் முக்தி பெற வைக்கிறான். கங்கை, பகவானின் திருவடித் தாமரையிலே தோன்றினாள். ஆனால், கீதையோ பகவானின் திருமுகத் தாமரையினின்றும் தோன்றியது. கங்கையோ தன்னைத் தேடி வந்து நீராடுபவனையே முக்திப் பெறச் செய்கிறது. ஆனால், கீதையோ வீடுதோறும் சென்று அங்குள்ளோருக்கு முக்தி வழியைக் காட்டுகிறது. ஆகவே, கீதை கங்கைக் காட்டிலும் சிறப்புடைத்து.

கீதை, காயத்ரியை விடவும் சிறந்தது. காயத்ரியை ஜபிப்பவன் முக்தி பெறுகிறான். உண்மைதான், அவன் மட்டும்தானே! ஆனால், கீதையைப் பாராயணம் செய்வோன் தானும் வீடுபேறு பெற்று, பிறனும் வீடுபேற்று பெற அருளுகிறான். முக்தியளிக்கும் பகவானே அவனைச் சார்ந்தவனாகும்போது, முக்தியைப் பற்றிக் கூற என்ன உளது? அவனுடைய திருவடித்துகள்களிலே கிடக்கிறது முக்தி. முக்தியெனும் சத்திரத்தையே திறந்து வைக்கிறான்.

பகவானைவிட கீதை பெருமை யுடைத்து எனினும் ஒக்கும். பகவான் கூறுவதையே கேட்போமே!

**கீதாஸ்ரயேऽஹம் திஷ்டாமி**
**கீதா மே சோத்தமம் க்ருஹம் ।**
**கீதாஜ்ஞாநமுபாஸ்ரித்ய**
**த்ரீந்லோகாந் பாலயாம்யஹம் ॥**
**(வாயுபுராணம்)**

'கீதையை அண்டித்தானே நானே இருக்கிறேன்! அதுதான் எனது உயரிய மாளிகை. அதன் துணை கொண்டுதானே மூவுலகையும் காக்கிறேன்.'

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

அநந்யாஶ்சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே ।
தேஷாம் நித்யாபி$_4$யுக்தாநாம் யோக$_3$க்ஷேமம் வஹாம்யஹம் ॥

ISBN 81-293-0058-3




கீதா பிரஸ், கோரக்பூர் — 273005.

☎ : (0551) 2334721, Fax : 2336997




CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,